# நீர்க்கோலம் - 1

*பாயிரம்*

**ஆட்டன்**

கதிரவனே, விண்ணின் ஒளியே

நெடுங்காலம் முன்பு

உன் குடிவழியில் வந்த

பிருகத்பலத்வஜன் என்னும் அரசன்

பன்னிரு மனைவியரையும் நூறு மைந்தரையும்

காவல்செறிந்த அரண்மனையையும்

எல்லை வளரும் நாட்டையும்

தன் மூதாதையரின் நீர்க்கடன்களையும்

தன் பெயரையும்

துறந்து காடேகி

முனிவர் செறிந்த தவக்குடில்களில் வாழ்ந்து

உன்னை தவம்செய்தான்.

ஒளி என்னும் உன் இயல்பை மட்டுமே தன் சொல்லென்றாக்கி

பிறசொற்களனைத்தையும் அவன் நீத்தான்.

அச்சொல்லில் நீ எழுந்தாய்.

அவன் புலரிநீராடி நீரள்ளி தொழுது கரைஎழுந்தபோது

நீர்ப்பரப்பு ஒளிவிட நீ அதில் தோன்றினாய்.

‘மைந்தா வேண்டியதை கேள்!’ என்றாய்.

‘நான் நீயென ஒளிவிடவேண்டும்’ என்றான் அரசன்.

புன்னகைத்து அவன் தோளைத் தொட்டு

‘ஒளியென்பதும் சுமையே என்றறிக!’ என்றாய்.

அவன் விழிகளை நோக்கி குனிந்து

‘ஒளிகொண்டவன் தன் ஒளியால் மறையவேண்டியவன்

ஒளியன்றி பிறிதொன்றை கேள்!’ என்றாய்.

‘ஒளியன்றி ஏதும் அடைவதற்கில்லை’ என்றான்.

அருகே நீரருந்திய யானை ஒன்றைச் சுட்டி நீ சொன்னாய்

‘அந்த யானை விழிகளுக்கு அப்பாற்பட்ட

வெண்வடிவொன்றின் கருநிழல்

இந்த வெண்கொக்கின் மெய்வடிவும் கரியது.

ஒவ்வொன்றும் பிறிதொன்றே என்றறிக!

என் வடிவே இருள்

பகலின் மறுபக்கமாகிய இரவும் எனதே’

திகைத்து நின்ற அரசனின் கைகளைப்பற்றி

'உன் மறுவடிவை காட்டுகிறேன் வருக'

என அழைத்துச் சென்றாய்.

சுனையின் நீர்ப்பரப்பில் தன் பாவை ஒன்றை கண்டான்.

அலறிப்புடைத்து கரையேறி ஓடி

நின்று நடுங்கி 'எந்தையே, இது என்ன?" என்று கூவினான்.

'அவனே நீ, நீ அவன் நிழல்' என்றாய்.

அவ்வுருவம் உடலுருகி வழிந்துகொண்டிருந்தது.

உடைந்த மூக்குடன் சிதைந்த செவிகளுடன் பாசிபிடித்து

நீரடியில் கிடக்கும் கைவிடப்பட்ட கற்சிலை என.

'என் இறையே, ஏன் நான் அவ்வண்ணமிருக்கிறேன்?"

என்று அரசன் கூவினான்.

'இங்கு நீ செய்தவற்றால் அவ்வண்ணம் அங்கு.

அங்கு அவன் செய்தவற்றால் இவ்வண்ணம் இங்கு.

பொலியும் உடல் அவனுக்குரியது.

கருகும் அவன் உடலே நீ ஈட்டியது' என்றாய்.

'எங்கிருக்கிறான் அவன்? எங்கிருக்கிறேன் நான்?' என்று

நெஞ்சு கலுழ கூவினான் அரசன்.

‘இங்குள்ள நீ மைந்தருக்குத் தந்தை

அங்குள்ள நீ தந்தையரின் மைந்தன்’ என்றாய்.

கண்ணீருடன் கைநீட்டி அரசன் கோரினான்

‘மைந்தர் தந்தையின் பொருட்டு துயர்கொள்ள

அது பழியன்று, ஊழ்.

மைந்தரால் தந்தையர் துயர்கொண்டால்

பழியென்பது பிறிதொன்றில்லை.’

புன்னகைத்து நீ சொன்னாய்

‘நீ அவ்வுருவை சூடுக, அவனுக்கு உன் உரு அமையும்.’

‘அவ்வாறே, ஆம் அவ்வாறே’ என்றான் அரசன்.

ஆம் ஆம் ஆம் என்றது தொலைவான் பறவை ஒன்று.

நீர் இருள சுனை அணைந்தது.

குளிர்காற்றொன்று வந்து சூழ்ந்து செல்ல

மீண்டு தன்னை உணர்ந்த அவன் தொழுநோயுற்றவனானான்.

விரல்கள் மடிந்திருந்தன.

செவிகளும் மூக்கும் உதிர்ந்துவிட்டிருந்தன.

தடித்த உதடுகளிலிருந்து சொல்லெழவில்லை.

விரல் மறைந்த கால்களைத் தூக்கி வைத்து

மெல்ல நடந்து தன் குடிலை அடைந்தான்.

வேள்விச்சாலையிலும் நூலோர் அவையிலும்

அவனை புறந்தள்ளினர்.

அருந்தவத்தோரும் அவனைக்கண்டு முகம் சிறுத்தனர்.

அவன் முன் நின்று விழிநோக்கக் கூசினர் மானுடர்.

இல்லறத்தோர் அவனுக்காக ஈயவில்லை.

எந்த ஊரிலும் அவன் காலடிபடக்கூடவில்லை.

உருகியுதிரும் உடலுக்குள்

அவன் முற்றிலும் தனித்தமைந்தான்.

ஈட்டுவதும் இன்புறுவதும்

இன்றென்றும் இங்கென்றும் உணர்ந்து ஆடுவதும்

உடலே என்று அறிந்தான்.

உடலென்று தன்னை உணர்வதில்லை அகம்

என்று அன்று தெளிந்தான்.

நாளும் அந்த நீர்நிலைக்குச் சென்று குனிந்து

தன் ஒளி முகத்தை அதில் நோக்கி உவகை கொண்டான்.

பின்பு ஒவ்வொரு நீர்ப்பரப்பிலும்

தன் முகமும் அம்முகமும் கொள்ளும் ஆடலை

அமர்ந்து நோக்கிக்கொண்டிருந்தான்.

தன் முகம் முழுத்து அதுவென்றாக

அம்முகம் உருகி தானென்றாக

எது எம்முகமென்று மயங்கி நெளிய

முகமென்றாவது தருணமே என்றறிந்தான்.

சுடர்முகத்தோனே

ஒருநாள் புலரியில் விண்ணுலாவ எழுந்த நீ

உன் தேவியரை துணைக்கழைத்தாய்.

இளிவரலுடன் விலகினர் அரசியர்.

'துயரன்றி அங்கு ஏதுள்ளது?' என்றாள் பிரபை.

'தனியரன்றி பிறரை கண்டதில்லையே' என்றாள் சரண்யை.

'அந்தியில் குருதிவழிய மீள்வதே உங்கள் நாள்

என்று அறியாதவளா நான்?' என்றாள் சங்க்யை.

'இருளில் ஒளிகையில் நானல்லவா துணை?' என்றாள் சாயை.

மறுத்துரைக்க சொல்லின்றி

உருகி எழும் ஒளியுடலுடன்

எழுபுரவித் தேரேறி நீ விண்ணில் எழுந்தாய்.

என்றும்போல் சுமைகொண்ட துயருற்ற

தனித்த தவித்தமைந்த முகங்களையே

தொட்டுத்தொட்டுச் சென்றபோது

மாறா புன்னகை கொண்ட முகமொன்றைக் கண்டாய்.

உடல்கரையும் தொழுநோயாளனின் உடலில்.

வியந்து மண்ணிறங்கி அருகணைந்தாய்.

‘இருநிலையை அறிந்த அரசனல்லவா நீ?

சொல்க, எங்கனம் கடந்தாய் துயரை?’ என்றாய்.

‘விண்ணொளியே, வாழ்க!’ என்று அரசன் வணங்கினான்.

‘வருக!’ என அருகிருந்த சுனைக்கு அழைத்துச் சென்றான்.

நீர்ப்பரப்பை நோக்கி குனிந்து

அலைகளில் எழுந்த தன் முகங்களை

கழற்சிக்காய்களென்று இரு கைகளில் எடுத்து

வீசிப் பிடித்து எறிந்து பற்றி ஆடலானான்.

சுழன்று பறக்கும் முகங்களுக்கு நடுவே

கணமொரு முகம் கொண்டு நின்றிருந்தான்.

அவனை வணங்கி நீ சொன்னாய்

‘அரசமுனிவனே, என்னுடன் எழுக!

நான் அன்றாடம் சென்றடையும் அந்திச்செம்முனையில்

மங்காப்பொன் என உடல்கொண்டு அமைக!

நாளும் துயர்கண்டு நான் வந்தணையும்போது

இறுதியில் தோன்றும்

தோற்றம் உமதென்றாகுக!’

உடல் சுடர்ந்தபடி பிருகத்பலத்வஜன் விண்ணிலேறி அமர்ந்தான்.

அந்திச் செவ்வொளியில் முகில்களில் உருமாறுபவன்

நீர்களில் கோலமாகின்றவன்

பறவைகளால் வாழ்த்தப்படுபவன்

முதல் அகல்சுடரால் வணங்கப்படுபவன்

அவன் வாழ்க!

கதிரவனே, அழிவற்ற பேரொளியே,

நீரிலாடும் கோலங்கள் நீ.

விண்ணிலாடுவதும் மண்ணிலாடுவதும்

சொல்லிலாடுவதும் பொருளில் நின்றாடுவதும்

பிறிதொன்றல்ல.

உன்னை வணங்குகிறேன்.

இச்சிறு பனித்துளியில் வந்தமர்க!

இந்தச் சிறுபூச்சியின் சிறகில் சுடர்க!

இப்பெருங்கடலை ஒளியாக்குக!

அவ்வான்பெருக்கை சுடராக்குக!

ஆம், அவ்வாறே ஆகுக!

# நீர்க்கோலம் - 2

## 1. குருதிச்சாயல்

புலர்காலையில் காலடிச் சாலையின் ஓரமாக கட்டப்பட்டிருந்த வழிவிடுதி ஒன்றிலிருந்து பாண்டவர்களும் திரௌபதியும் கிளம்பினார்கள். முந்தையநாள் இரவு செறிந்த போதுதான் அங்கே வந்துசேர்ந்திருந்தனர். அது அரசமரத்தின்

அடியில் கட்டப்பட்டிருந்த சிறிய மரப்பட்டைக்கூரையிடப்பட்ட மண் கட்டடம். வழியருகே அது விதர்ப்ப அரசன் அமைத்த விடுதி என்பதைச் சுட்டும் அறிவிப்புப்பலகை அரசமுத்திரையுடன் அமைந்திருந்தது. செம்மொழியிலும் விதர்ப்பத்தின் கிளைமொழியிலும் எழுதப்பட்டிருந்த அறிவிப்புக்குக் கீழே மொழியறியா வணிகர்களுக்காக குறிவடிவிலும் அச்செய்தி அமைந்திருந்தது.

அது ஆளில்லா விடுதி. உயரமற்ற சோர்ந்த மரங்களும் முட்புதர்களும் மண்டிய காட்டை வகுந்து சென்ற வண்டிப்பாதையில் ஒருபொழுதுக்குள் அணையும்படி அரசன் அமைத்த பெருவிடுதிகள் இருந்தன. அங்கே நூறுபேர் வரை படுக்கும்படி பெரிய கொட்டகைகளும் காளைகளையும் குதிரைகளையும் இளைபாற்றி நீர்காட்டும் தொட்டிகளும் அவற்றை கட்ட நிழல்பந்தலும் அமைக்கப்பட்டிருந்தன. சில விடுதிகளில் பத்து அடுமனையாளர்கள்வரை இருந்தனர். எப்போதும் உணவுப்புகை கூரைமேலெழுந்து விடுதியின் கொடி என நின்றிருந்தது. பறவைகள் கூடணைந்த மரம்போல அவ்விடுதிகள் ஒலியெழுப்பிக்கொண்டிருந்தன. பிரிந்து விலகிய சிறிய கிளைப்பாதைளில்தான் பேணுநர் இல்லாமல் விடுதிகள் மட்டுமே அமைந்திருந்தன. அப்பாதைகளில் பலநாட்களுக்கு ஒருமுறையே எவரேனும் சென்றனர்.

பாண்டவர்கள் பெரும்பாலும் பெருஞ்சாலைகளை தவிர்த்து கிளைப்பாதைகளிலேயே நடந்தார்கள். தொலைவிலேயே உயர்மரம் ஏறி நோக்கி பெருஞ்சாலையில் எவருமில்லை என்பதை பீமன் உறுதிசெய்த பின்னரே அவற்றில் நடக்கத் தலைப்பட்டனர். கிளைச்சாலைகளிலும் காலடிகளை தேர்ந்து வழிச்செலவினர் இருக்கிறார்களா என்பதை பீமன் அறிந்தான்.

எவரையும் சந்திப்பதை அவர்கள் தவிர்த்தனர். அவர்களை சொல்லினூடாக அறிந்தவர்களே ஆரியவர்த்தமெங்கும் இருந்தனர். அனைவரிடமிருந்தும் விலகிவிடவேண்டுமென்று தருமன் ஆணையிட்டிருந்தார். "நானிலம் போற்றும் புகழ் என்று சூதர் சொல்லலாம். தெய்வங்களின் புகழைவிடவும் பெரியது இப்புவி. நாம் எவரென்றே அறியாத மானுடர் வாழும் நிலங்களை அடைவோம். எளியவர்களாக அங்கிருப்போம். அது மீண்டுமொரு பிறப்பு என்றே நமக்கு அறிவை அளிப்பதாகட்டும்."

இமயமலைச்சாரலில் இருந்து அவர்கள் கிளம்பி ஆறு மாதங்கள் கடந்துவிட்டிருந்தன. மலையிலிருந்து திரிகர்த்த நாட்டின் நிகர்நிலத்துக்கு இறங்கினர். திரிகர்த்த நாட்டின் பெரும்பகுதி கால்தொடாக் காடுகளாகவே இருந்தமையால் அவர்கள் விழிமுன் நிற்காமல் அதைக் கடந்து உத்தர குருநாட்டுக்குள் வரமுடிந்தது. அங்கே விரிந்த மேய்ச்சல் நிலங்களில் கன்றுகள் பகலெல்லாம் கழுத்துமணி ஒலிக்க மேய்ந்தன. ஆயர்களின் குழலோசை காட்டின் சீவிடுகளின் ஒலியுடன் இணைந்து கேட்டுக்கொண்டிருந்தது. மணியோசைகள் பெருகி ஒழுகத்தொடங்குகையில் கன்றுகள் குடிதிரும்புகின்றன என்று உணர்ந்து அதன் பின்னர் நடக்கத் தொடங்கினர்.

இருளுக்குள் சிற்றூர்களை கடந்து சென்றனர். பீமன் மட்டும் கரிய கம்பளி ஆடையால் உடலைமூடி மரவுரியை தலையில் சுற்றிக்கட்டி ஊர்களுக்குள் நுழைந்து "சுடலைச் சிவநெறியன். மானுட முகம் நோக்கா நோன்புள்ளவன். என்னுடன் வந்த ஐவர் ஊரெல்லைக்கு வெளியே நின்றுள்ளனர். கொடை அளித்து எங்கள் வாழ்த்துக்களை பெறுக! இவ்வூரைச் சூழ்ந்த

கலி அகல்க! களஞ்சியங்களும் கருவயிறுகளும் கன்றுகளும் பொலிக! சிவமேயாம்! ஆம், சிவமேயாம்!” என்று கூவினான். அவன் இரண்டாவது சுற்று வரும்போது வீடுகளுக்கு முன்னால் அரிசியும் பருப்பும் வெல்லமும் வைக்கப்பட்டிருந்தன. அவன் அவற்றை தன் மூங்கில்கூடையில் கொட்டி எடுத்துக்கொண்டு திரும்பிவந்தான்.

இரவில் காட்டுக்குள் அனல்மூட்டி அவற்றை சமைத்து உண்டு சுனைநீர் அருந்தினர். பகல் முழுவதும் சோலைப்புதர்களுக்குள் ஓய்வெடுத்தனர். இரவுவிலங்குகள் அனைத்தையும் விழியொடு விழி நோக்க பழகினர். பகலொளி விழிகூசலாயிற்று. அயோத்தியை அடைந்தபோது அவர்களின் தோற்றமும் கடுநோன்பு கொள்ளும் சிவநெறியர்களைப்போலவே ஆகிவிட்டிருந்தது. சிவநெறியர்களுடன் சேர்வது பின்னர் எளிதாயிற்று. எவரென்று எவரையும் உசாவாது தானொன்றே ஆகி தன்னை கொண்டுசெல்லும் தகைமை கொண்டிருந்த சிவநெறியர்களுடன் எவராலும் நோக்கப்படாமல் செல்ல அவர்களால் இயன்றது. கங்கைக் கரையோரமாக காசியை அடைந்தனர். கங்கைக்கரைக் காடுகளில் சிவநெறியினரின் சிறுகுடில்களில் தங்கி மேலும் சென்றனர்.

கங்கையைக் கடந்து சேதிநாட்டை அடைந்தபோது மற்றொரு உரு கொண்டனர். சடைகொண்ட குழலும் தாடியும் கொண்டு மரவுரியாடை அணிந்து கோலும் வில்லும் தோல்பையும் கொண்டு நடக்கும் அவர்களை எவரும் அறிந்திருக்கவில்லை. மேகலகிரி அருகே மலைப்பாதையைக் கடந்து விந்தியமலைச்சாரலை அடைந்தபோது மீண்டும் மானுடரில்லா காட்டுக்குள் நுழைந்தனர். விந்தியமலையின் பன்னிரு மடிப்புகளை ஏறி இறங்கி மீண்டும் ஏறிக் கடந்து

குண்டினபுரிக்குச் செல்லும் வணிகப்பாதையில் ஒரு மானுடரைக்கூட முகம் கொள்ளாமல் அவர்களால் செல்லமுடிந்தது.

கோடைக்காலமாதலால் விந்தியமலைகளின் காடுகள் கிளைசோர்ந்து இலையுதிர்த்து நின்றன. காற்றில் புழுதி நிறைந்திருந்தது. குரங்குகளின் ஒலியைக்கொண்டே நீரூற்றுகள் இருக்குமிடத்தை உய்த்தறிய முடிந்தது. கனிகளும் கிழங்குகளும் அரிதாகவே கிடைத்தன. எதிர்ப்படும் விலங்குகளெல்லாம் விலாவெலும்பு தெரிய மெலிந்து பழுத்த கண்களும் உலர்ந்த வாயுமாக பெருஞ்சீற்றம் கொண்டிருந்தன. பன்றிகள் கிளறியிட்ட மண்ணை முயல்கள் மேலும் கிளறிக்கொண்டிருந்தன. யானைகளின் விலாவெலும்புகளை அப்போதுதான் தருமன் பார்த்தார். “நீரின்றியமையாது அறம்” என்று தனக்குள் என முணுமுணுத்துக்கொண்டார்.

விடுதியின் முகப்பில் சுவரில் எழுதப்பட்டிருந்த சொற்களைக் கொண்டு தாழ்க்கோல் இருக்கும் கூரைமடிப்பை அறிந்து அதை எடுத்து பீமன் கதவை திறந்தான். நெடுநாட்களாக பூட்டிக்கிடந்தமையால் உள்ளிருந்த காற்று இறந்து மட்கிக்கொண்டிருந்தது. பின்கதவையும் சாளரங்களையும் திறந்தபோது புதுக்காற்று உள்ளே வர குடில் நீள்மூச்சுவிட்டு உயிர்ப்படைந்தது. அருகே கிணறு இருப்பதைக் கண்ட பீமன் வெளியே சென்று அதற்குள் எட்டிப்பார்த்தான். ரிப் ரிப் என ஒலிகேட்க மரங்களில் குரங்குகள் அமர்ந்திருப்பதை கண்டான். அன்னைக்குரங்கு அவன் கண்களைக் கண்டதும் “நல்ல நீர்தான்...” என்றது. “ஆம்” என்றான் பீமன். “நீ எங்களவனா?” என்றாள் அன்னை. “ஆம், அன்னையே” என்றான் பீமன்.

அப்பால் நின்றிருந்த ஈச்சைமரத்திலிருந்து ஓலைவெட்டி இறுக்கிப்பின்னி தோண்டி செய்தான். ஈச்சைநாராலான கயிற்றில் அதைக் கட்டி இறக்கி நீரை அள்ளினான். குரங்குகள் குட்டிகளுடன் அவனருகே வந்து குழுமின. "நான்... நான் நீர் அருந்துவேன்" என்றபடி ஒரு குட்டி பிசிறிநின்ற தலையுடன் பாய்ந்துவர இன்னொன்று அதன் வாலைப்பற்றி இழுத்தது. அதனிடம் "அப்பால் போ!" என்றது தாட்டான் குரங்கு. "நீ எப்படி இப்படி பெரியவனாக ஆனாய்?" என்று பீமனிடம் கேட்டது. பீமன் புன்னகையுடன் நீரை அதற்கு ஊற்ற அது "குழந்தைகளுக்குக் கொடு!" என்றது.

பீமன் இலைத்தொன்னைகள் செய்து அதில் நீரூற்றி வைத்தான். குட்டிகள் முட்டிமோதி அதை அருந்தின. அன்னையரும் அருகே வந்து நீர் அருந்தத் தொடங்கின. அப்பால் இலந்தை மரத்தடியில் அமர்ந்திருந்த ஐவரும் அதை நோக்கிக்கொண்டிருந்தார்கள். பீமன் நீரை தொன்னையில் கொண்டுசென்று தருமனுக்கு அளித்தான். "பெருங்குரங்கு இன்னமும் அருந்தவில்லை" என்றார் தருமன். "குடி அருந்திய பின்னரே அது அருந்தும்" என்றான் பீமன். "அவன் அருந்தட்டும். இக்காட்டின் அரசன் அவன். அவன் மண்ணுக்கு நாம் விருந்தினர். முறைமைகள் மீறப்படவேண்டியதில்லை" என்றார் தருமன்.

தாட்டான் குரங்கும் நீர் அருந்திய பின்னரே தருமன் நீரை கையில் வாங்கினார். மும்முறை நீர்தொட்டு சொட்டி "முந்தையோரே, உங்களுக்கு" என்றபின் அருந்தினார். ஒரு மிடறு குடித்தபின் திரௌபதிக்கு கொடுத்தார். அவள் அதை வாங்கி ஆவலுடன் குடிக்கத் தொடங்கினாள். பாண்டவர்கள் நால்வரும் நீர் அருந்திய பின்னர் பீமன் நீரை அள்ளி

நேரடியாகவே வாய்க்குள் விட்டுக்கொண்டான். கடக் கடக் என்னும் ஒலியை குரங்குகள் ஆவலுடன் நோக்கின. “இன்னொருமுறை காட்டுங்கள்” என குட்டி ஒன்று ஆர்வத்துடன் அருகே வந்து கோரியது. பீமன் அதன்மேல் நீரைச் சொட்டி புன்னகை செய்தான்.

நீரை அள்ளித்தெளித்ததும் குடில் புத்துணர்ச்சி கொண்டது. பின்னறைக்குள் உறிகளில் அரிசியும் பருப்பும் உப்பும் உலர்காய்களும் இருந்தன. கலங்களை எடுத்து வைத்து நீர்கொண்டுவந்து ஊற்றினான் பீமன். மூங்கில் பெட்டிகளில் மரவுரிகளும் ஈச்சைப்பாய்களும் இருந்தன. அவற்றைக் கொண்டுவந்து விரித்ததும் தருமன் அமர்ந்தார். நகுலனும் சகதேவனும் மல்லாந்து படுக்க வாயிலருகே சுவர்சாய்ந்து அமர்ந்த அர்ஜுனன் மடியில் வில்லை வைத்துக்கொண்டான்.

வெளியே ஓசையெழுந்தது. பீமன் அங்கே நான்கு யானைகள் வந்து நின்றிருப்பதை கண்டான். “நீர் போதுமான அளவுக்கு உள்ளதா, மந்தா?” என்றார் தருமன். “அருந்துவதற்கு போதும்” என்றான் பீமன். “அருந்தும் நீரில் குளிக்கலாகாது” என்று சொன்னபின் தருமன் விழிகளை மூடிக்கொண்டார். திரௌபதி உரைகல்லை உரசி அனலெழுப்பி அடுப்பை பற்றவைத்தாள். பானையில் நீரூற்றி உலையிட்டாள். அடுமனைப்புகை அதை இல்லமென்றே ஆக்கும் விந்தையை பீமன் எண்ணிக்கொண்டான். நெடுநாட்களாக அவர்கள் அங்கே தங்கியிருப்பதைப்போல உளமயக்கெழுந்தது.

வெளியே சென்று நிலத்திலிருந்த பள்ளமான பகுதியை தெரிந்து அங்கே குழி ஒன்றை எடுத்தான். அதன்மேல் இலைகளையும் பாளைகளையும் நெருக்கமாகப் பரப்பி அது அழுந்திப்படியும்பொருட்டு கற்களைப்பரப்பி மண்ணிட்டு

மூடியபின் அதன்மேல் கிணற்றுநீரை அள்ளி நிறைத்தான். யானைகள் துதிக்கையால் நீரை அள்ளி வாய்க்குள் சீறல் ஒலியுடன் செலுத்தி நீள்மூச்சுவிட்டு அருந்தின. நீர்ச்சுவையில் அவற்றின் காதுகள் நிலைத்து நிலைத்து வீசின. அடுமனையிலிருந்து திரௌபதி எட்டிப்பார்த்து “உணவு, இளையவரே” என்று சொல்லும்வரை அவன் நீர் இறைத்துக்கொண்டிருந்தான்.

பாண்டவர்கள் உள்ளே உணவுண்டுகொண்டிருந்தனர். அவனுக்கு அடுமனையிலேயே தனியாக இலைகளைப் பரப்பி உணவை குவித்திருந்தாள். அவன் அமர்ந்ததுமே குரங்குகள் வந்து சூழ்ந்துகொண்டன. “குழந்தைகளுக்கு மட்டும் போதும்” என்று தாட்டான் ஆணையிட்டது. குட்டிகள் வந்து பீமனைச் சூழ்ந்து அமர்ந்து சோற்றில் கைவைக்க முயன்று வெப்பத்தை உணர்ந்து முகம் சுளித்தன. ஒன்று சினத்துடன் பீமனின் காலை கடித்தது. ஒரு பெண்குட்டி பீமனின் மடியில் ஏறி சாதுவாக அமர்ந்துகொண்டிருந்தது. அதன் காதுகள் மலரிதழ்கள்போல ஒளி ஊடுருவும்படி சிவப்பாக இருந்தன. மென்மயிர் உடலும் மலர்ப்புல்லி போலவே தோன்றியது.

முதல்பிடி சோற்றை அள்ளி உள்ளங்கையில் வைத்து ஊதி ஆற்றியபின் அதன் வாயில் ஊட்டினான் பீமன். அது வாய்க்குள் இருந்து சோற்றை திரும்ப எடுத்து உற்று நோக்கி ஆராய்ந்தபின் அன்னையிடம் “சுவை” என்றது. அன்னை பற்களைக் காட்டி “உண்” என்றது. “தந்தையே தந்தையே” என்று அழைத்த குட்டிக்குரங்கு ஒன்று அவன் தாடையைப் பிடித்து திருப்பி “நான் மரங்களில் ஏறும்போது... ஏறும்போது...” என்றது. இன்னொரு குட்டி “இவன் கீழே விழுந்தான்” என்றது. “போடா” என்று முதல்குட்டி அவனை கடிக்கப்போக இருவரும் வாலை

விடைத்தபடி பாய்ந்து குடிலின் கூரைமேல் தொற்றி ஏறிக்கொண்டார்கள்.

“நீங்கள் குறைவாகவே உண்கிறீர்கள், இளையவரே” என்றாள் திரௌபதி. “எனக்கு இது போதும்... நான் நாளை ஏதேனும் ஊனுணவை உண்டு நிகர்செய்கிறேன். சுற்றத்துடன் உண்ட நாள் அமைந்து நெடுங்காலமாகிறது” என்றான் பீமன். திரௌபதி சிரித்து “அன்னையருக்கும் பசி இருக்கிறது. நீங்கள் வற்புத்தவேண்டுமென விழைகிறார்கள்” என்றாள். பீமன் நகைத்து “பெரும்பசி கொண்டவன் தாட்டான்தான். தனக்கு பசியையே தெரியாது என்று நடிக்கிறான்” என்றான். இருட்டு வந்து சூழ்ந்துகொண்டது. காட்டின் சீவிடு ஒலி செவிகளை நிறைத்தது.

குரங்குகள் அவர்களின் குடிலைச் சுற்றியே அமர்ந்துகொண்டன. பீமன் திண்ணையிலேயே வெறும்தரையில் படுத்து துயில்கொண்டான். அவனருகே இரு குட்டிக்குரங்குகள் படுத்தன. “நான் நான்” என்று நாலைந்து குட்டிகள் அதற்காக சண்டையிட்டன. “சரி, எல்லாரும்” என்றான் பீமன். அவன் மார்பின்மேல் அந்தப் பெண்குட்டி குப்புற படுத்துக்கொண்டது. அதைக் கண்டு மேலுமிரு குரங்குகள் அதனருகே தொற்றி ஏற அது பெருஞ்சினத்துடன் எழுந்து பற்களைக் காட்டி சீறியது. ஏறியவை இறங்கிக்கொண்டன. நகுலன் நகைத்து “எல்லா குடிகளிலும் தேவயானிகள் பிறக்கிறார்கள்” என்றான்.

அப்பால் அதை நோக்கிக்கொண்டிருந்த தருமன் “நம் மைந்தர் நலமுடன் இருக்கிறார்களா, நகுலா?” என்றார். “ஆம், மூத்தவரே. திரிகர்த்த நாட்டில்தான் இறுதியாக செய்தி வந்தது” என்றான். சகதேவன் “அபிமன்யூ வில்லுடன் வங்கம் கடந்து சென்றிருக்கிறான். உடன் சதானீகனும் சுதசோமனும்

சென்றிருக்கிறார்கள். பிரதிவிந்தியன் நூல்நவில்வதற்காக துரோணரின் குருநிலையில் இருக்கிறான். சுருதகீர்த்தியும் சுருதகர்மனும் அவனுடன் உள்ளனர்" என்றான். தருமன் பெருமூச்சுவிட்டபடி "நலம் திகழ்க!" என வாழ்த்தினார்.

அவர்கள் துயிலத்தொடங்கினர். இருளுக்குள் தருமனின் நீள்மூச்சு ஒலித்தது. பின்னர் நகுலனும் சகதேவனும் நீள்மூச்செறிந்தனர். இருளுக்குள் மூச்செறிந்து மார்பில் கிடந்து துயில்கொண்டிருந்த பைதலை மெல்ல அணைத்தபடி ஒருக்களித்த பீமன் மீண்டும் அவர்களின் நீள்மூச்சுகளை கேட்டான். அவர்கள் மூச்செறிந்தபடி புரண்டுபுரண்டு படுத்துக்கொண்டிருந்தார்கள். பீமன் அர்ஜுனனின் பெருமூச்சு கேட்கிறதா என்று செவிகூர்ந்தான். நெடுநேரம். அர்ஜுனன் இருளுக்குள் மறைந்துவிட்டவன் போலிருந்தான். அவன் எங்கிருக்கிறான்? உடல் உதிர்த்து எழுந்து சென்றுவிட்டிருக்கிறானா? பின்னர் அவன் அர்ஜுனனின் நீள்மூச்சை கேட்டான். அது அவனை எளிதாக்கியது. பிறிதொரு நீள்மூச்சுடன் அவன் புரண்டுபடுத்தான். துயிலுக்குள் ஆழ்ந்துசெல்லும்போதுதான் திரௌபதியின் நீள்மூச்சை கேட்கவேயில்லை என நினைவுகூர்ந்தான்.

வெயில் வெண்ணொளி கொண்டு மண்ணை எரிக்கத் தொடங்குவதற்கு முன்பே பாதித்தொலைவை கடந்துவிடலாமென்று எண்ணியிருந்தனர். ஆனால் மிக விரைவிலேயே சூரியன் தழலென மாறிவிட்டிருந்தான். கூழாங்கற்கள் அனல்துண்டுகளென்றாயின. மணல்பரப்புகள் வறுபட்டவை என கொதித்தன. புல்தகிடிகளை தேடித்தேடி காலடி வைத்து செல்லவேண்டியிருந்தது. அவர்களின் கால்கள் பன்னிரு ஆண்டுகாலம் கற்களிலும் முட்களிலும் பட்டு

தேய்ந்து மரப்பட்டைகளென ஆகிவிட்டிருந்தன. ஆயினும்கூட அங்கிருந்த வெம்மை அவர்களை கால்பொத்திக்கொண்டு விரைந்து நிழல்தேடச் செய்தது.

கானேகிய முதனாட்களில் ஒருமுறை பீமன் மரப்பட்டையால் மிதியடிகள் செய்து திரௌபதிக்கு அளித்தான். கூர்கற்களில் கால்பட்டு கண்ணீர் மல்கி நின்றிருக்கும் திரௌபதியைக் கண்டு அவன் அவளை பல இடங்களில் சுமந்துகொண்டு வந்திருந்தான். கொல்லைப்பக்கம் கலம் கழுவிக்கொண்டிருந்த அவள் முகம் மலர்ந்து அதை வாங்கி "நன்று... இவ்வெண்ணம் எனக்கு தோன்றவேயில்லை" என்றாள். அப்பால் விறகுகளை வெட்டிக்கொண்டிருந்த நகுலன் கோடரியைத் தாழ்த்தி புன்னகை செய்தான். குடில்திண்ணையில் அமர்ந்திருந்த தருமன் நோக்கை விலக்கி மெல்லிய குரலில் "காடேகலென்பது தவம். நாம் அறத்தால் கண்காணிக்கப்படுகிறோம்" என்றார். திரௌபதி விழிதாழ்த்தி கையால் மிதியடியை விலக்கிவிட்டு குடிலுக்குள் திரும்பிச்சென்றாள். பீமன் கசப்புடன் அதை நோக்கிவிட்டு வெளியே சென்று காட்டுக்குள் வீசினான்.

வழிநடையின் வெம்மையும் புழுதியும் கொண்டு அவர்கள் விரைவிலேயே களைப்படைந்தார்கள். புழுதிநிறைந்த காற்று மலைச்சரிவில் சருகுத்துகள்களுடன் வந்து சுழன்று வீசிக்கொண்டிருந்தது. அவர்களின் குழல்கள் புழுதிபரவி வறண்டு நார் போலிருந்தன. வியர்வை வழிந்த உடல்களுடன் களைப்பால் நீள்மூச்சுவிட்டு அவ்வப்போது நிழல்தேடி நின்றும் பொழுதடைவதைக் கண்டு எச்சரிக்கை கொண்டு மீண்டும் தொடங்கியும் அவர்கள் சென்றனர்.

திரௌபதி தன் மரவுரியாடையின் நுனியை எடுத்து தலைக்குமேல் போட்டு முகத்தை மூடி புழுதிக்காற்றை தவிர்த்தாள். சூழ்ந்திருந்த காடும் அப்பால் தெரிந்த மலைகளும் நோக்கிலிருந்து மறைந்து கால்கீழே நிலத்தில் ஒரு வாள்பட்டு காய்ந்த நீள் வடு எனத் தெரிந்த மண்சாலையை மட்டுமே அவளால் பார்க்கமுடிந்தது. அதில் விழுந்து எழுந்து விழுந்து சென்ற பீமனின் காலடிகள் மட்டுமே அசைவெனத் தெரிந்தன. ஓயாது பேசும் வாய் ஒன்றின் நா என அவ்வசைவு. வருக வருக என அழைக்கும் கைபோல. நினைத்து நினைத்து நெடுங்காலமாகி நினைப்பொழிந்த உள்ளம் எளிதில் வாய்த்தது அவளுக்கு.

நெடுவழி நடக்கும்போது ஒரு சொல்லும் அவர்கள் பேசிக்கொள்ளவில்லை. நிழலை அடைந்ததும் திரௌபதி தோல்பையிலிருந்த நீரை வாய்பொருத்தி அருந்திவிட்டு வெறும்தரையிலேயே உடல்சாய்த்து படுத்துக்கொண்டாள். நடக்கையில் வியர்வை புழுதியைக் கரைத்தபடி முதுகில் வழிந்தது. புருவங்களில் தேங்கி பின் துளித்துச் சொட்டி வாயை அடைந்து உப்புக் கரித்தது. நிழலில் அமர்ந்தாலும் நெடுநேரம் உடல்வெம்மை தணியவில்லை. இளங்காற்றும் வெப்பம் கொண்டிருந்தது. அமர்ந்தபின் மேலும் வியர்வை எழுவதாகத் தோன்றியது. பின்னர் உடல்குளிர்ந்தபோது கண்கள் மெல்ல சொக்கி துயிலில் ஆழ்ந்தன. எழுந்தபோது புழுதியும் வியர்வையின் உப்புமாக உடலில் ஒட்டியது.

அவளைச் சூழ்ந்து பாண்டவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் நோக்காமல் அமர்ந்திருந்தனர். நீரை அருந்துகையில் மட்டும் விழிகள் தொட்டன. அவ்வப்போது எவரேனும் அசைகையில் பிறர் திரும்பிப் பார்த்தார்கள். பிறர் முகங்கள் தோல்கருகி

உதடுகள் உலர்ந்து புல்லின் வேர்த்தொகைபோல தாடியும் மீசையும் சலிப்புற்ற கண்களுமாக தெரிவதைக் கண்டு தங்கள் உருவத்தை உணர்ந்துகொண்டார்கள்.

கிளம்பும் முடிவை எப்போதும் தருமன்தான் எடுத்தார். அவர் எழுந்ததும் பீமன் தன் கைகளை விரித்து சோம்பல் முறித்தபின் நீர்நிறைந்த தோல்பையையும் உணவும் ஆடைகளும் கொண்ட பையையும் தோளிலேற்றிக்கொண்டான். அர்ஜுனன் நோக்கு மட்டுமாக மாறிவிட்டிருந்தான். நகுலனும் சகதேவனும் தங்களுக்குள் விழிகளாலும் தொடுகையாலும் ஓரிரு சொற்களாலும் உரையாடிக்கொண்டு பின்னால் வந்தார்கள்.

மீண்டுமொரு நிழலில் அவர்கள் அமர்ந்தபோது பீமன் திரௌபதியின் கால்களை பார்த்தான். குதிகால்வளைவு நெருக்கமாக வெடித்து உலர்களிமண்ணால் ஆனதுபோலத் தெரிந்தது. விரல்களின் முனைகளும் முன்கால் முண்டுகளும் காய்த்து விளாங்காய் ஓடுபோலிருந்தன. அவன் கைநீட்டி அவள் கால்களை தொட்டான். மரவுரியை முகத்தின்மேல் போட்டு துயின்றுகொண்டிருந்த திரௌபதி கனவுகண்டவள்போல புன்னகைத்தாள். அவன் அவள் கால்களை தன் கைகளால் அழுத்தி நீவினான். பின்னர் எழுந்துசென்று பசைகொண்ட பச்சிலைகளை எடுத்துவந்து சாறுபிழிந்து அவள் கால்களில் பூசி விரல்களால் நீவத் தொடங்கினான். புழுதி விலகியதும் இலைகளால் அழுந்த துடைத்தான். காய்த்த காலின் தோலில் முட்கள் குத்தியிறங்கி முனையொடிந்திருந்தன. அவன் நீண்ட முள் ஒன்றை எடுத்துவந்து முட்களை அகழ்ந்து எடுக்கத் தொடங்கினான். ஒவ்வொரு முள்ளையாக எடுத்து சுட்டுவிரல்முனையில் வைத்து நோக்கி வியந்தபின் வீசினான். முட்களை

எடுக்கும்தோறும் முட்கள் விரல்முனைக்கு தட்டுப்பட்டுக்கொண்டே இருந்தன.

அவனை பாண்டவர் நால்வரும் கூர்ந்து நோக்கிக்கொண்டிருந்தார்கள். அர்ஜுனனின் விழிகள் சுருங்கி உள்ளே நோக்கு கூர்முனை என ஒளிகொண்டிருப்பதை பீமன் கண்டான். பெரிய முட்களை உருவி எடுத்த இடங்களில் இருந்து குருதி கசியத் தொடங்கியது. சற்றுநேரத்தில் அவள் உள்ளங்கால் குருதியால் சிவந்து தெரிந்தது. பீமன் பச்சிலைச்சாற்றை ஊற்றி கைகளால் வருடிக்கொண்டிருந்தான். குருதி நின்றபின் அவன் பெருமூச்சுவிட்டு கால்மடித்து அமர்ந்தான். நகுலனும் சகதேவனும் பெருமூச்சுவிட்டனர். அர்ஜுனன் முனகுவதுபோல ஏதோ ஒலியெழுப்பி வில்லுடன் எழுந்து சென்றான். பீமன் தருமனின் பெருமூச்சை எதிர்பார்த்தான். நீண்டநேரத்திற்குப்பின் "எந்தையரே..." என்றார் தருமன்.

✿விதர்ப்ப நாட்டில் சௌபர்ணிகை என்னும் சிற்றாற்றின் கரையில் மூங்கில்புதர் சூழ்ந்த சோலைக்குள் அமைந்திருந்த தமனரின் தவக்குடிலுக்கு பின்மாலைப்பொழுதில் பாண்டவர்களும் திரௌபதியும் வந்து சேர்ந்தார்கள். திரௌபதியை பீமன் ஒரு நார்த்தொட்டில் அமைத்து தன் முதுகில் அமரச்செய்து தூக்கிக்கொண்டு வந்தான். தொலைவிலேயே குருநிலையின் காவிக்கொடியை அர்ஜுனன் கண்டு சுட்டிக்காட்டினான்.

அங்கு செல்வதற்கான பாதை பொன்மூங்கில்காடுகளுக்கு நடுவே வளைந்து சென்றது. மூங்கில்புதர்களுக்குள் யானைக்கூட்டங்கள் நின்றிருந்தன. அவை பீமனை ஆழ்ந்த

ஒலியால் யார் என வினவின. பீமன் அதே ஒலியில் தன்னை அறிவித்தான். அன்னை யானை “நன்று, செல்க!” என வாழ்த்தியது. காலடியில் ஒரு நாகம் வளைந்து சென்றது. சௌபர்ணிகையில் மிகக் குறைவாகவே நீர் ஓடியது. சிறிய பள்ளங்களில் ஒளியுடன் தேங்கிய நீர் ஒரு விளிம்பில் மட்டும் வழிந்தெழுந்து வளைந்து சென்று இன்னொரு சிறுபள்ளத்தை அணுகியது. ஆற்றுக்குள் மான்கணங்கள் நீர் அருந்திக்கொண்டிருந்தன. காலடியோசை கேட்டு அவை திடுக்கிட்டு தலைதூக்கி செவிகோட்டி விழித்து நோக்கி உடலதிர்ந்தன.

தமனரின் குடிலில் அவரும் நான்கு மாணவர்களும் மட்டுமே இருந்தனர். அவர்கள் சென்ற பொழுதில் தமனர் மாணவர்களுடன் மரநிழலில் அமர்ந்து இன்சொல்லாடிக்கொண்டிருந்தார். கைகூப்பி அருகணைந்த தருமனைக் கண்டதுமே தமனர் கைகூப்பியபடி எழுந்து அருகே வந்தார். “பாண்டவர்களுக்கும் தேவிக்கும் என் சிறுகுடிலுக்கு நல்வரவு” என்றார். தருமன் முகமன் சொல்லி அவரை வணங்கினார். பீமனின் தோளிலிருந்து இறங்கி நின்ற திரௌபதி நிலையழிந்து அவன் தோளை பற்றிக்கொண்டாள்.

“இங்கு நான் எந்த நல்லமைவையும் தங்களுக்கு அளிக்கவியலாது. கடுநோன்புக்கென்றே இக்காட்டுக்கு வந்தேன்” என்றார் தமனர். “ஆனால் குளிக்க சௌபர்ணிகையில் நீர் உள்ளது. போதிய உணவும் அளிக்கமுடியும்.” தருமன் சிரித்து “அவ்விரண்டும் மட்டுமே இப்புவியில் நாங்கள் விழையும் பேரின்பங்கள்” என்றார். “வருக!” என தமனர் அவர்களை அழைத்துச்சென்றார். அவர் அளித்த குளிர்நீரையும் கனிகளையும் அவர்கள் மரநிழலில் அமர்ந்து உண்டனர்.

திரௌபதி எழுந்து தமனரின் குடிலருகே சௌபர்ணிகையில் இருந்த ஆழ்ந்த கயத்தை பார்த்தாள். “இயல்பாக உருவான மணற்குழி அது. யானைமூழ்கும்படி நீர் உள்ளது அதில். நல்ல ஊற்றுமிருப்பதனால் நீர் ஒழிவதே இல்லை” என்றார். திரௌபதி “நான் நீராடி நெடுநாட்களாகின்றன” என்றாள். “நீராடி வருக, அரசி!” என்றார் தமனர். “அதற்குள் இங்கே தங்களுக்கு நல்லுணவு சித்தமாக இருக்கும்.” திரௌபதி “நீராடுவதையே மறந்துவிட்டேன் என்று தோன்றுகிறது” என்றாள். பீமன் “வருக!” என அவள் கையை பிடித்தான். “இன்று நான் உன் நீராட்டறை ஏவலன்.” அவள் மெல்லிய உதட்டுவளைவால் புன்னகைத்து முன்னால் நடக்க மரவுரிகளை வாங்கிக்கொண்டு பீமன் பின்னால் சென்றான்.

செல்லும் வழியிலேயே சௌபர்ணிகை நோக்கி ஓடியிறங்கிய சிற்றோடைகளின் கரையிலிருந்து தாளியிலைகளைக் கொய்து தன் கையிலிருந்த மூங்கில்குடலையில் நிறைத்துக்கொண்டே சென்றான். மணல் சரிந்து ஆற்றை நோக்கி இறங்கிய பாதையில் கால்வைத்ததும் திரௌபதி “பஞ்சுச் சேக்கைபோல” என்றாள். பீமன் புன்னகை செய்தான். வெண்மணலில் பகல் முழுக்க விழுந்த வெயிலின் வெம்மை எஞ்சியிருந்தது. ஆனால் அதுவும் கால்களுக்கு இனிதாகவே தெரிந்தது.

கயத்தின் கரையில் மான்கூட்டங்களும் நான்கு காட்டெருமைகளும் நீர் அருந்திக்கொண்டிருந்தன. பீமன் புலிபோல ஓசையெழுப்பியதும் அவை அஞ்சி செவிகூர்ந்தன. உடல்விதிர்க்க நின்று நோக்கியபின் அவன் அணுகியதும் சிதறிப் பரந்தோடின. “அரசியின் குளியல். அது தனிமையிலேயே நிகழவேண்டும்” என்றான் பீமன் சிரித்தபடி.

“புலியல்ல குரங்கு என்று கண்டதும் அவை மீண்டு வரப்போகின்றன” என்றாள் திரௌபதி தானும் சிரித்துக்கொண்டு.

கயத்தின் நீர் மெல்ல சுழன்றுகொண்டிருந்தது. ஒளியவிந்த வானின் இருள்நீலம் அதை இருளச்செய்திருந்தது. “இச்சுனைக்கு மகிழநயனம் என்று பெயரிட்டிருக்கிறார்கள்” என்றான் பீமன். அவள் “ஆம், பொருத்தமானது” என்றாள். மேலாடையை கழற்றிவிட்டு இடையில் அணிந்த மரவுரியுடன் நீரில் இறங்கினாள். “ஆ… ஆ…” என ஓசையிட்டாள். “என்ன?” என்றான் பீமன். “எரிகிறது” என்றாள். “உடலெங்கும் நுண்ணிய விரிசல்களும் புண்களும் இருக்கும். கோடையால் அமைந்தவை. நீர் அவற்றுக்கு நன்மருந்து” என்றான் பீமன்.

அவள் நீரில் திளைத்துக்கொண்டிருந்ததை நோக்கியபடி பீமன் தாளியிலைகளுக்குள் கற்களைப் போட்டு கைகளால் பிசைந்து கூழாக்கினான். அவள் குழல் நீரில் அலையடித்து நீண்டது. சிறுமியைப்போல சிரித்தபடி கைநீட்டி நீரில் துள்ளி விழுந்தாள். நீர்ப்பரப்பின்மேல் கால் உந்தி எழுந்து அமைந்து வாயில் நீர் அள்ளி நீட்டி கொப்பளித்தாள். சிரித்தபடி “இன்குளிர்நீர்… மண்ணில் பேரின்பம் பிறிதில்லை என்று உணர்கிறேன்” என்றாள். “வா, தாளிப்பசை பூசிக்கொள். குழலில் அழுக்கும் புழுதியும் விலகட்டும்” என்றான் பீமன்.



அவள் நுங்கின் வளைந்த மென்பரப்பென ஒளிர்ந்த எழுமுலைகளிலிருந்து நீர் வழிய எழுந்து அருகே வந்தாள். அவன் "அமர்க!" என்றான். அவள் அவன் முன் குழல்காட்டி அமர அவன் அவள் குழல்பெருக்கை கைகளால் அள்ளி ஐந்தாக பகுத்தான். ஐம்புரிச்சாயல் நீரில் நனைந்து கரிய விழுதுகளாக சொட்டிக்கொண்டிருந்தது. தாளியிலை விழுதை அள்ளி அதில் பூசினான்.

அவள் "என்ன மணம்?" என்று திரும்பிப்பார்த்தபின் அவன் கைகளை பற்றினாள். அவனுடைய வலக்கை வாளால் என

வெட்டுபட்டு குருதி வழிந்துகொண்டிருந்தது. "என்ன ஆயிற்று?" என்றாள். "தாளியை கூழாங்கற்களை இட்டு பிசைந்தேன். அதில் ஒன்று கூரியது" என்றான் பீமன். பின்னர் சிரித்தபடி "குழலுக்கு குருதி நன்று" என்றான்.

# நீர்க்கோலம் - 3

### 2. பிறிதோன்

தமனரின் குருநிலையில் நூலாய்வுக்கும் கல்விக்குமென தனிப்பொழுதுகள் ஒதுக்கப்பட்டிருக்கவில்லை. அவருடைய நான்கு மாணவர்களும் எப்போதும் அவருடன்தான் இருந்தனர். விழித்திருக்கும் பொழுதெல்லாம் அவர் அவர்களுடன் உரையாடிக் கொண்டிருந்தார். அவர் கற்பிப்பதுபோல தோன்றவில்லை. சிலசமயம் நகையாடுவதுபோல, சிலசமயம் கதைகள் சொல்வதுபோல, அவ்வப்போது தனக்குள் என பேசிக்கொள்வதுபோலவே இருந்தது. இரவில் அவர்கள் அவருடைய குடிலிலேயே படுத்துக்கொண்டனர். ஒருவன் விழித்திருக்க பிறர் அவருக்கு பணிவிடை செய்தபின் அவர் துயின்றதும் தாங்களும் துயின்றனர்.

வேதமுடிபுக் கொள்கை சார்ந்த குருநிலை என்பதனால் வேள்விச்சடங்குகளோ நோன்புகளோ திருவுருப் பூசனை முறைமைகளோ அங்கு இருக்கவில்லை. "வழிபடுவது தவறில்லை. ஒன்றை வழிபட பிறிதை அகற்ற நேரும். மலர்கொய்து சிலையிலிடுபவன் மலரை சிலையைவிட சிறியதாக்குகிறான்" என்றார் தமனர். "தூய்மை பிழையல்ல. தூய்மையின்பொருட்டு அழுக்கென்று சிலவற்றை விலக்குதலே பிழை." குருநிலைக்குள் குடில்கள் மட்டுமே இருந்தன.

“இங்கிருத்தல், இக்கணத்தில் நிறைதல், இதற்கப்பால் யோகமென்று பிறிதொன்றில்லை” என்றார் தமனர்.

முதற்புலரியில் எழுந்து சௌபர்ணிகையின் கயத்தில் நீராடி அருகிருந்த வெண்மணல் மேட்டின்மீது ஏறிச்சென்று கதிரெழுவதை நோக்கி விழிதிறந்து கைகள் கட்டி அமர்ந்திருப்பதன்றி ஊழ்கமென்று எதுவும் அவர் இயற்றவும் இல்லை. “கற்பவை ஊழ்கத்தில்தானே நம் எண்ணங்கள் என்றாகின்றன? ஊழ்கமில்லாத கல்வி பொருளற்றது என்றல்லவா நூல்கள் சொல்கின்றன?” என்று தருமன் கேட்டார்.

“ஆம். அறிவது அறிவாவது ஊழ்கத்திலேயே. ஆனால் ஊழ்கமென்பது அதற்கென்று விழிமூடி சொல்குவித்து சித்தம் திரட்டி அமர்ந்திருக்கையில் மட்டும் அமைவதல்ல. சொல்லப்போனால் அம்முயற்சிகளே ஊழ்கம் அமைவதை தடுத்துவிடுகின்றன. நாம் நோக்குகையில் நம் நோக்கறிந்து அப்பறவை எச்சரிக்கை கொள்கிறது. இந்த மரத்தைப்போல காற்றிலும் ஒளியிலும் கிளைவிரித்து நம் இயல்பில் நின்றிருப்போமென்றால் அச்சமின்றி அது வந்து நம்மில் அமரும். நூல் நவில்க! அன்றாடப் பணிகளில் மூழ்குக! உண்க! உறங்குக! சூழ்ந்திருக்கும் இக்காட்டின் இளங்காற்றையும் பறவை ஒலிகளையும் பசுமை ஒளியையும் உள்நிறைத்து அதிலாடுக! இயல்பாக அமையும் ஊழ்கத்தருணங்களில் நம் சொற்கள் பொருளென்று மாறும். வாழ்வதென்பது ஊழ்கம் வந்தமைவதற்கான பெரும் காத்திருப்பாக ஆகட்டும். அதுவே என் வழி” என்றார் தமனர்.

மிகச் சிறியது அக்குருநிலை. தமனரும் மாணவர்களும் தங்குவதற்கான குடிலுக்கு வலப்பக்கமாக விருந்தினருக்கான இரு குடில்கள் இருந்தன. நெடுங்காலமாக அங்கு எவரும்

வராததனால் அணுகி வரும் மழைக்காலத்தை எண்ணி விறகுகளைச் சேர்த்து உள்ளே அடுக்கி வைத்திருந்தனர். பாண்டவர்கள் நீராடி வருவதற்குள் மூன்று மாணவர்கள் அவ்விறகுகளை வெளியே கொண்டு வந்து அடுக்கி குடில்களை தூய்மை செய்தனர். நீர் தெளித்து அமையச் செய்திருந்தபோதிலும்கூட உள்ளே புழுதியின் மணம் எஞ்சியிருந்தது. கொடிகளில் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்த ஈச்சம் பாய்களை எடுத்து உதறி விரித்தனர். மரவுரிகளையும் தலையணைகளையும் பரப்பினர்.

தமனரின் முதல் மாணவனாகிய சுபகன் உணவு சமைத்துக்கொண்டிருந்தான். அருகே நின்று தமனர் அவனுக்கு உதவினார். நீராடி வந்த திரௌபதி அவர்கள் சமைத்துக்கொண்டிருந்த கலத்தைப் பார்த்து “இவ்வுணவு போதாது” என்றாள். தமனர் திரும்பி நோக்கி “இளைய பாண்டவரைப்பற்றி அறிந்திருந்தேன். ஆகவேதான் ஐந்து மடங்கு உணவு சமைக்க வேண்டுமென்று எண்ணினேன்” என்றார். திரௌபதி “பத்து மடங்கு” என்று சொல்லி புன்னகைத்துவிட்டு ஆடைமாற்றும் பொருட்டு குடிலுக்குள் சென்றாள். பீமன் தன் நீண்ட குழலுக்குள் கைகளைச் செலுத்தி உதறி தோளில் விரித்திட்ட பின் “விலகுங்கள் முனிவரே, நானே சமைத்துக் கொள்கிறேன். இது எனக்கு இனிய பணி. எளியதும் கூட” என்றான்.

“எனது மாணவன் உடனிருக்கட்டும். சமையற்கலையை அவன் சற்று கற்றுக்கொண்டால் உண்ணும்பொழுதும் எனக்கு ஊழ்கம் கைகூடலாம்” என்றார் தமனர் சிரித்தபடி. “உண்பது ஒரு யோகம்” என்றான் பீமன். “ஆம், நல்லுணவைப்போல சூழ்ந்திருக்கும் புவியுடன் நல்லுறவை உருவாக்குவது

பிறிதில்லை என நான் எப்போதும் இவர்களிடம் சொல்வதுண்டு” என்றார் தமனர். பீமன் அடுதொழிலை தான் ஏற்றுக்கொண்டான். அரிசியும் உலர்ந்த கிழங்குகளும் இட்டு அன்னம் சமைத்தான். பருப்பும் கீரையும் சேர்த்த குழம்பு தனியாக கலத்தில் கொதித்தது. ஒருமுறைகூட அவன் விறகை வைத்து திருப்பி எரியூட்டவில்லை. வைக்கையிலேயே எரி வந்து அதற்காக காத்திருப்பதுபோலத் தெரிந்தது. “எரியடுப்பில் இப்படி விறகடுக்கும் ஒருவரை பார்த்ததில்லை” என்றான் சுபகன். “அனல் அங்கே வாய்திறந்திருக்கிறது. அதில் விறகை ஊட்டினேன்” என்றான் பீமன்.

அவர்கள் அனைவரும் அமர பீமன் பரிமாறினான். அவர்கள் உண்டபின் பீமன் உண்ணுவதை தமனரின் மாணவர்கள் சூழ்ந்து நின்று வியப்புடனும் உவகைச் சொற்களுடனும் நோக்கினர். பெரிய கவளங்களாக எடுத்து வாயிலிட்டு மென்று உடல் நிறைத்துக்கொண்டிருந்தான். அப்பால் குடில் திண்ணையில் அமர்ந்திருந்த தமனர் தன்னருகே அமர்ந்திருந்த தருமனிடம் “பெருந்தீனிக்காரர்கள் உணவுண்கையில் நம்மால் நோக்கி நிற்க முடியாது. அது ஒரு போர் என்று தோன்றும். உயிர் வாழ்வதற்கான இறுதித் துடிப்பு போலிருக்கும். இது அனலெழுவதுபோல, இனிய நடனம்போல இருக்கிறது. ஒவ்வொரு அசைவும் தன் முழுமையில் நிகழ்ந்துகொண்டிருக்கிறது” என்றார். தருமன் “ஆம். இளையோன் எதையும் செம்மையாக மட்டுமே செய்பவன்” என்றார். மெல்ல புன்னகைத்து “கதையுடன் களம் புகும்போதும் அழகிய நடனமொன்றில் அவன் இருப்பது போலவே தோன்றும்” என்றார்.

உணவுக்குப்பின் அவர்கள் நிலவின் ஒளியில் சௌபர்ணிகையின் கரையில் இருந்த மணல் அலைகளின்மேல் சென்று அமர்ந்தனர். எட்டாம் நிலவு அகன்ற சீன உளி போல தெரிந்தது. நன்கு தீட்டப்பட்டது. முகில்களை கிழித்துக்கொண்டு மெல்ல அது இறங்கிச்சென்றது. முகிலுக்குள் மறைந்தபோது மணற்பரப்புகள் ஒளியழிந்து வெண்நிழல்போலத் தோன்றின. முகில் கடந்து நிலவெழுந்து வந்தபோது அலைகளாகப் பெருகி சூழ்ந்தன.

“இனி எங்கு செல்வதாக எண்ணம்?” என்று தமனர் கேட்டார். அவ்வினா ஒவ்வொருவரையும் தனித்தனியாக வந்து தொட்டதுபோல அவர்கள் திரும்பிப்பார்த்தனர். திரௌபதி தன் சுட்டுவிரலால் மென்மணலில் எதையோ எழுதியபடி தலைகுனிந்து அமர்ந்திருந்தாள். தருமன் அவளை சில கணங்கள் பொருளில்லாது நோக்கிவிட்டு திரும்பி “இப்போதைக்கு இலக்கென்று ஏதுமில்லை. எங்கள் கானேகலின் பன்னிரண்டு ஆண்டுகள் முடிந்துவிட்டன. ஓராண்டு எவர் விழியும் அறியாது இருந்தாகவேண்டுமென்பது எங்கள் நோன்பு” என்றார்.

“ஆம், நிமித்த நூலின்படி அது வியாழவட்டத்தின் முழுமைஎச்சம். ஹோரை பன்னிரண்டில் ஒன்று” என்றார் தமனர். “பூசக முறைப்படி உங்களுடன் இணைந்துள்ள காட்டுத்தெய்வங்களை அகற்றுவதற்காக! உருமாறிக் கரந்த உங்களை அவை ஓராண்டுகாலம் தேடியலையும். உங்கள் ஆண்டு அவற்றுக்கு நாள்.” தருமர் சற்று சிரித்து “இப்பன்னிரு ஆண்டுகளில் நாங்கள் அடைந்தவையும் அறிந்தவையும் எழுபிறவிக்கு நிகர். அணுகியுற்ற தெய்வங்கள் பல. அவை

எங்களை விட்டாலும் நாங்கள் விடுவோமென எண்ணவில்லை” என்றார்.

“அஸ்தினபுரியின் அரசரின் எண்ணம் பிறிதொன்று என எண்ணுகிறேன்” என்றார் தமனர். “நீங்கள் காட்டிலிருந்தபோதும்கூட ஒவ்வொருநாளும் மக்கள் உள்ளத்தில் வாழ்ந்தீர்கள். அங்கு நீங்கள் கண்ட முனிவரைப்பற்றியும் வென்ற களங்களைப்பற்றியும் ஒவ்வொருநாளும் இங்கு கதைகள் வந்துகொண்டிருந்தன. அனைவரிடமிருந்தும் மறைந்தீர்கள் என்றால் இறந்தீர்கள் என்றே சொல்லிப்பரப்ப முடியும். அவ்வண்ணம் பேச்சு அவிந்ததே அதற்குச் சான்றாகும்.”

“ஆம், எவருமறியாமல் தங்கும்போது எங்களால் படைதிரட்ட முடியாது, துணைசேர்க்க இயலாது. குழிக்குள் நச்சுப்புகையிட்டு எலிகளைக் கொல்வதுபோல கொன்றுவிட்டால் அனைத்தும் முடிந்துவிடும்” என்றான் பீமன். “கொல்வதும் புதைப்பதும் வெவ்வேறாகச் செய்யவேண்டியதில்லை அல்லவா?” தமனர் ஏதோ சொல்ல நாவெடுக்க தருமன் “அவன் எப்போதும் ஐயுறுபவன், முனிவரே” என்றார். “அவரது ஐயம் பிழையும் அல்ல” என்றார் தமனர்.

“பாரதவர்ஷத்தில் பிறர் அறியாமல் நாங்கள் இருக்கும் இடம் ஏதென்று கண்டடைய முடியவில்லை. பிறந்த முதற்கணம் முதல் சூதர் சொல்லில் வாழத்தொடங்கிவிட்டோம். எங்கள் கதைகளை நாங்களே கேட்டு வளர்ந்தோம். செல்லுமிடமெங்கும் நாங்களே நிறைந்திருப்பதையே காண்கிறோம்” என்றான் நகுலன். தமனர் புன்னகையுடன் தன் தாடியை நீவியபடி “உண்மை. நெடுங்காலத்துக்கு முன் நான் தமிழ்நிலத்துக்குச் சென்றிருந்தேன். அங்கு வழியம்பலம்

ஒன்றில் இரவு தங்குகையில் தென்புலத்துப் பாணன் ஒருவன் தென்மொழியில் கிருஷ்ண துவைபாயன வியாசரின் பாடல்களைப் பாடுவதை கேட்டேன். உங்கள் புகழ் இலாத இடமென்று பாரதவர்ஷத்தில் ஏதுமில்லை” என்றார்.

தருமன் கசப்புடன் “ஆம். ஆகவேதான் காடுகளை தேடிச் செல்கிறோம். மனிதர்களே இல்லாத இடத்தில் மொழி திகழாத நிலத்தில் வாழ விழைகிறோம்” என்றார். “எந்தக் காட்டில் வாழ்ந்தாலும் தனித்து தெரிவீர்கள். அஸ்தினபுரியின் அரசர் தன் ஒற்றர்களை அனுப்பி மிக எளிதில் உங்களை கண்டடைய முடியும்” என்று தமனர் சொன்னார். “ஆம். நானும் அதையே எண்ணினேன்” என்றான் சகதேவன். “மனிதர்கள் மறைந்துகொள்ள மிக உகந்த இடம் மனிதச் செறிவே” என்றார் தமனர். “உங்கள் முகம் மட்டும் இருக்கும் இடங்கள் உகந்தவை அல்ல. உங்கள் முகம் எவருக்கும் ஒரு பொருட்டாகத் தோன்றாத இடங்களுக்கு செல்லுங்கள்.”

“அங்கு முன்னரே எங்கள் கதைகள் சென்றிருக்கும் அல்லவா?” என்றார் தருமன். “செல்லாத இடங்களும் உள்ளன. காட்டாக, நிஷத நாட்டை குறிப்பிடுவேன்” என்று தமனர் சொன்னார். “நிஷதர்கள் வேதத்தால் நிறுவப்பட்ட ஷத்ரியகுடியினர் அல்ல. விதர்ப்பத்திற்கு அப்பால் தண்டகாரண்யப் பெருங்காட்டில் பிற தொல்குடிகளை வென்று முடிகொண்ட பெருங்குடி அவர்கள். பதினெட்டாவது பரசுராமர் அவர்களின் மூதாதையாகிய மகாகீசகனுக்கு அனல்சான்றாக்கி முடிசூட்டி அரசனாக்கினார். அவன் அனல்குலத்து ஷத்ரியனாகி ஏழுமுறை படைகொண்டுசென்று பன்னிரு ஷத்ரியகுடிகளை அழித்தான். அவன் கொடிவழியில் வந்த விராடனாகிய உத்புதன்  இன்று அந்நாட்டை ஆள்கிறான்.”

“நிஷதத்தின் அரசர்கள் தங்கள் நாட்டிற்குள் பிற ஷத்ரியர்களின் புகழ் பாடும் சூதர்கள் எவரையும் விட்டதில்லை. எனவே உங்கள் கதைகள் எதுவும் அங்கு சென்று சேர்ந்ததுமில்லை. நிஷத அரசனின் மைத்துனன் கீசகன் தன்னை பாரதவர்ஷத்தின் நிகரற்ற தோள்வீரன் என்று எண்ணுகிறான். அவன் குடிகள் அவ்வாறே நம்ப வேண்டுமென்று விழைகிறான். எனவே உங்களைக் குறித்த சொற்கள் எதுவுமே அவ்வெல்லைக்குள் நுழைய அவன் ஒப்பியதில்லை. மாற்றுருக்கொண்டு நீங்களே நுழையும்போது அவனால் உங்களை அறியவும் முடியாது.”

“அவன் எங்களை அறிந்திருப்பான் அல்லவா?” என்று தருமன் கேட்டார். “ஆம். நன்கறிந்திருப்பான். இளமை முதலே உங்கள் ஐவரையும், குறிப்பாக பெருந்தோள் பீமனை பற்றிய செய்திகளையே அவன் எண்ணி எடுத்து சேர்த்துக் கொண்டிருக்கிறான். அவன் உள்ளத்தில் ஒவ்வொரு கணமும் நீங்களே வாழ்கிறீர்கள். ஆனால் நேரில் நீங்கள் சென்றால் அவனால் உங்களை அடையாளம் காண முடியாது. ஏனெனில் அவனறிந்தது அச்சத்தால், தாழ்வுணர்ச்சியால் பெருக்கப்பட்ட வடிவத்தை. மெய்யுருவுடன் நீங்கள் செல்கையில் இத்தனைநாள் அவன் உள்ளத்தில் நுரைத்துப் பெருகிய அவ்வுருவங்களுடன் அவனால் உங்களை இணைத்துப்பார்க்க இயலாது. அரசே, நெடுநாள் எதிர்பார்த்திருந்த எவரையும் நாம் நேரில் அடையாளம் காண்பதில்லை” என்றார் தமனர்.

தருமன் “ஆம், அவ்வாறு நிகழ வாய்ப்புள்ளது” என்றார். “மாற்றுரு கொள்வதென்பது ஒரு நல்வாய்ப்பு” என்றார் தமனர். “பிறந்த நாள் முதல் நீங்கள் குலமுறைமைகளால் கல்வியால் கூர்தீட்டப்பட்டீர்கள். காட்டுக்குள் அக்கூர்மையைக் கொண்டு வென்று நிலைகொண்டீர்கள். இன்று பன்னிருநாட்கள் உருகி

பன்னிரு நாட்கள் கரியுடன் இறுகி இருபத்துநான்கு நாட்கள் குளிர்ந்துறைந்த வெட்டிரும்பு என உறுதி கொண்டிருக்கிறீர்கள். உங்களை நீங்களே முற்றிலும் துறப்பதற்குரியது இந்த வாழ்வு. நீங்கள் என நீங்கள் கொண்ட அனைத்தையும் விலக்கியபின் எஞ்சுவதென்ன என்று அறிவதற்கான தவம்.”

“மாற்றுரு கொள்வது எளிதல்ல” என்றார் தமனர். “உடல்தோற்றத்தை மாற்றிக்கொள்ளலாம். உள்ளத்தை மாற்றிக்கொள்ளாவிட்டால் விழிகள் மாறாது. உடலில் அசைவுகளென வெளிப்படும் எண்ணங்கள் மாறாது. உள்ளே மாறாது வெளியே மாறியவனை தொலைவிலிருந்து நோக்கினால் மற்போரில் உடல்பிணைத்து திமிறிநிற்கும் இருவரை பார்த்ததுபோலத் தோன்றும்.” தருமன் “நாம் நமக்குரிய மாற்றுருவை கண்டுபிடிக்கவேண்டும், இளையோனே” என்று சகதேவனிடம் சொன்னார்.

“மாற்றுருவை வெளியே இருந்து கொண்டுவந்து அணியமுடியாது” என்றார் தமனர். “அவ்வுரு உங்கள் உள்ளே முன்னரும் இருந்துகொண்டிருக்கவேண்டும். உங்கள் விழியிலும் உடலசைவிலும் அதுவும் வெளிப்பட்டுக்கொண்டிருக்கவேண்டும். அரசே, மானுட உடலில் ஓர் ஆளுமை மட்டுமே குடியிருப்பதில்லை. ஒரு மரத்தில் பல தெய்வங்கள் என நம்முள் பலர் உள்ளனர். ஒருவரை நாம் நம்பி மேலெழுப்பி பிறர்மேல் அமரச்செய்கிறோம். அவருக்கு பிறரை படையும் ஏவலும் ஆக்குகிறோம். அவ்வாறு நம்முள் உள்ள ஒருவரை மேலெழுப்புவதே மிகச் சிறந்த மாற்றுருக்கொள்ளல்.”

“அவரும் நம்முருவே என்பதனால் நாம் எதையும் பயிலவேண்டியதில்லை. அடக்கப்பட்டு

ஒடுங்கியிருந்தவராதலால் அவர் வெளிப்படுகையில் முழுவிசையுடன் பேருருக்கொண்டே எழுவார். அவரை எழுப்பியபின் அவருக்கு நம் பிறவுருக்களை ஒப்புக்கொடுத்தால் மட்டும் போதுமானது.” தமனர் தொடர்ந்தார் “அவர் நமக்கு ஒவ்வாதவராக முதல்நோக்கில் தோன்றலாம். ஏனென்றால் அவ்வெறுப்பையும் இளிவரலையும் உருவாக்கி அதை கருவியெனக் கொண்டே நாம் அவரை வென்று ஆள்கிறோம். அவரைச் சூடுவதென்பது முதற்கணத்தில் பெருந்துன்பம். சிறு இறப்பு அது. ஆனால் சூடியபின் அடையப்பெறும் விடுதலை பேருவகை அளிக்கக்கூடியது. ஒருமுறை அவ்வுருவைச் சூடியவர் பின்னர் அதற்கு திரும்பிச்சென்றுகொண்டேதான் இருப்பார்.”

அவர்களின் விழிகள் மாறின. “அவை எது என உங்களை நீங்களே கேட்டுக்கொள்ளவேண்டியதில்லை. ஏனென்றால் நீங்கள் வென்று கடந்தது அது. வெறுத்து ஒதுக்கியது. உங்களுக்கு அணுக்கமானவர்கள் அதை அறிந்திருப்பார்கள். அதை அவர்களும் விலக்கிக்கொண்டேதான் இருப்பார்கள். அதை விலக்காமல் நீங்கள் அளிக்கும் உங்கள் உருவை அவர்கள் முழுதேற்க முடியாது. அதை முழுதேற்காமல் உங்களுடன் நல்லுறவும் அமையாது. ஆனால் எவருக்கும் எந்த மானுடருடனும் முழுமையான நல்லுறவு அமைவதில்லை. ஏனென்றால் எவரும் பிறர் தனக்களிக்கும் அவர் உருவை முழுமையாக நம்பி ஏற்பதில்லை” என்று தமனர் சொன்னார்.

“அவர்கள் உங்களை வெறுக்கும்போது, கடுஞ்சினம் கொண்டு எழும்போது நீங்கள் அளித்த உருவை மறுத்து பிறிதொன்றை உங்கள்மேல் சூட்டுவார்கள். அது உங்களை சினமூட்டும் என்பதனால் அதை ஒரு படைக்கருவியென்றே

கைக்கொள்வார்கள். உங்களை சிறுமைசெய்யும் என்பதனால் உங்களை வென்று மேல்செல்வார்கள். அது என்ன என்று அவர்களிடம் கேளுங்கள். அதுவே உங்கள் மாற்றுரு” என்றார் தமனர். “அல்லது அவர்களின் கனவில் நீங்கள் எவ்வண்ணம் எழுகிறீர்கள் என்று கேளுங்கள்.” அவர்கள் அமைதியின்மை அகத்தே எழ மெல்ல அசைந்தனர். தருமன் “ஆனால்...” என்று ஏதோ சொல்லத் தொடங்கினார்.

“இது நோன்பு. நோன்பென்பது துயரைச் சுவைத்தல்” என்றார் தமனர். “அவர்கள் சூட்டும் அவ்வடிவை மாற்றுருவென்று சூடினால் அவ்வுருவில் முழுதமைவீர்கள். எவரும் ஐயுறாது எங்கும் மறைய முடியும். பன்னிரு ஆண்டுகள் ஆற்றிய தவத்தின் முழுமை இது. இது கலைந்தால் மீண்டும் அடிமரம் தொற்றி ஏறவேண்டியிருக்கும்.” தருமன் “ஆனால் வேண்டும் என்றே நம் மீது பொய்யான உருவம் ஒன்றை சுமத்துவார்களென்றால் என்ன செய்வது?” என்றார். “அவர்கள் சொல்லும்போதே நாம் அறிவோம் அது மெய்யென்று” என்றார் தமனர். “சினம்கொண்டு வாளை உருவினோமென்றால் அதுவே நாம்.” சிரித்து “அணுக்கமானவர்கள் அவ்வாறு பொருந்தா உருவை நமக்களிக்க மாட்டார்கள். ஏனென்றால் அவர்களால் நம்மை அவ்வாறு உருக்காணவே இயலாது.”

தருமன் பெருமூச்சுவிட்டுக்கொண்டு தலைகுனிந்து அமர்ந்திருந்தார். “உங்கள் உருவை தெரிவுசெய்க! அதன்பின்னர் நிஷதத்திற்குச் செல்லும் வழியென்ன என்று நான் சொல்கிறேன்” என்றபின் தமனர் எழுந்து தன் மாணவர்களுக்கு தலையாட்டிவிட்டு நடந்தார்.

நிலவொளியில் அறுவரும் ஒருவரை ஒருவர் நோக்காமல் அமர்ந்திருந்தார்கள். “அறுவரும் இன்று காய்ந்து கருமைகொண்டு மாற்றுருதான் சூடிக்கொண்டிருக்கிறோம்” என்றார் தருமன். பீமன் “அது இக்காட்டில். நிஷதத்திற்குள் நுழைந்தால் மீண்டும் நாம் நகரியர் ஆகிவிடுவோம். பதினைந்து நாட்களில் நம் அரசத்தோற்றம் மீளும். குரலும் உடலசைவும் அவ்வண்ணமே ஆகும். எவை மாறவில்லை என்றாலும் ஒரேநாளில் விழிகள் மாறிவிடும்” என்றான். “ஏன் நாம் அரண்மனைக்கு செல்லவேண்டும்?” என்றார் தருமன் எரிச்சலுடன். “மூத்தவரே, வேறெங்கும் நம் தோற்றம் தனித்தே தெரியும்” என்றான் நகுலன்.

“சரி, அப்படியென்றால் அவர் சொன்னதுபோலவே மாற்றுரு கொள்ளப்போகிறோமா என்ன?” என்றார் தருமன். “ஆம், அது ஒன்றே வழி என எனக்குப்படுகிறது. அஸ்தினபுரி நம்மை அப்படி தப்பவிடாது. இயன்றதில் முழுமையை அடைந்தாகவேண்டும். இல்லையேல் மீண்டும் பன்னிரு ஆண்டுகள்” என்றான் சகதேவன். “என்ன சொல்கிறாய்? நாம் சூடவேண்டிய மாற்றுருவை பிறர் சொல்லவேண்டுமா?” என்று தருமன் கேட்டார். “நமக்குள் என்ன மந்தணம்? நாம் நம்மை நன்கறிவதற்கான தருணம் இது என்று கொள்ளலாமே” என்றான் பீமன். சகதேவன் புன்னகைத்து “எளியவர்களின் மாற்றுருக்கள் அவர்களின் முதன்மையுருவிலிருந்து பெரிதும் வேறுபடாதென்று எண்ணுகிறேன். மாமனிதர்களின் பெருந்தோற்றத்தின் அளவு அவர்களின் முதலுருவுக்கும் இறுதியுருவுக்குமான இடைவெளிதான் போலும்” என்றான்.

“சொல் தேவி, நம் இளையோன் சூடவேண்டிய தோற்றம் என்ன?” என்றான் பீமன். திரௌபதி ஏறிட்டு சகதேவனை

நோக்கியபின் தலையசைத்தாள். “சொல்!” என்றான் பீமன் மீண்டும். “இவர் யார்? எளிய கணியன். நயந்துரைத்து பரிசில் பெற்று மகிழ்ந்திருக்கும் சிறியோன். பிறிதொன்றுமல்ல” என்றாள் திரௌபதி. சகதேவன் “ஆனால்...” என நாவெடுத்தபின் “ஆம்” என்றான். “சொல்க, அவர் எவர்?” என்று திரௌபதி பீமனிடம் கேட்டாள். “அவன் சூதன். குதிரைச்சாணி மணம் விலகா உடல்கொண்டவன். சவுக்கடி முதுகில் விழும்போது உடல்குறுக்க மட்டுமே தெரிந்தவன்” என்றான் பீமன். “மூத்தவரே...” என்று நகுலன் வலிமிகுந்த குரலில் அழைத்தான். “சொல், நீ பிறிதென்ன? பாண்டவன் என்றும் இந்திரப்பிரஸ்தத்தின் இளவரசன் என்றும் நீ நடிக்கிறாய் அல்லவா?” என்றான் பீமன்.

நகுலன் சினத்துடன் “அவ்வண்ணமென்றால் நீங்கள் யார்? சொல்க, நீங்கள் யார்? நான் சொல்கிறேன். அடுமடையன். அடிதாங்கி தலைக்கொள்ளும் அடிமை. அரண்மனைப் பெண்டிருக்கு முன் வெற்றுடல் காட்டி நடமிடும் கீழ்க்களிமகன்” என்றான். பீமனின் உடல் நடுங்கியது. கைகள் பதறியபடி மணலில் உலவி ஒரு கை மணலை அள்ளி மெல்ல உதிர்த்தன. “சொல்க, மூத்தவரே நான் யார்?” என்று அர்ஜுனன் கேட்டான். பீமன் திடுக்கிட்டு நோக்கி “மூத்தவர் சொல்லட்டும்” என்றான். “இங்கு நாம் ஒருவர் குருதியை ஒருவர் அருந்தவிருக்கிறோமா?” என்றார் தருமன். “சொல்லுங்கள், மூத்தவரே” என்றான் பீமன்.

“இல்லை” என்று தருமன் தலையசைத்தார். மெல்லிய குரலில் திரௌபதி “நான் சொல்கிறேன்” என்றாள். அனைவரும் அவளை நோக்கி திரும்பினர். “பேடி. பெண்டிருக்கு நடனம் கற்பிக்கும் ஆட்டன். ஆணுடலில் எழுந்த பெண்.” அர்ஜுனன் உரக்க

நகைத்து “அதை நான் அறிவேன். அது நான் அணிந்த உருவமும்கூட” என்றான். தருமன் தளர்ந்து “போதும்” என்றார். “சொல்லுங்கள் மூத்தவரே, திரௌபதி யார்?” என்றான் அர்ஜுனன். தருமன் “வேண்டாம்” என்றார். “சொல்க, தேவி யார்?” என்றான் பீமன். மெல்லிய குரலில் “சேடி” என்றார் தருமன். “சமையப்பெண்டு. நகம் வெட்டி காலின் தோல் உரசி நீராட்டி விடுபவள். தாலமேந்துபவள்.”

பெருமூச்சுடன் பாண்டவர் அனைவரும் உடல் அமைந்தனர். திரௌபதி “நன்று” என மணலை நோக்கியபடி சொன்னாள். ஆனால் அவள் உடல் குறுகி இறுக்கமாக இருப்பதை காணமுடிந்தது. பின்னர் அவள் மணலை வீசிவிட்டு செல்வதற்காக எழுந்தாள். “அமர்க தேவி, மூத்தவரின் உரு என்ன என்பதை அறிந்துவிட்டு செல்வோம்” என்றான் அர்ஜுனன். “அதை நாம் செய்யவேண்டாம்” என்றான் நகுலன். “ஆம்” என்றான் சகதேவன். பீமன் “இல்லை, அதுவும் வெளிப்பட்டால்தான் இந்த ஆடல் முழுமையடையும்” என்றான். “சொல்க, தேவி!” என்றான் அர்ஜுனன்.

“சொல்கிறேன், நான் சொல்வதில் நால்வரில் எவருக்கு மாற்றுக்கருத்து இருந்தாலும் இதை பிழையென்றே கொள்வோம்” என்றாள் திரௌபதி. “சொல்க!” என்றான் அர்ஜுனன். நால்வரும் அவளை நோக்கினர். பதைப்புடன் மணலை அள்ளியபடி தலைகுனிந்து அமர்ந்திருந்தார் தருமன். “சகுனி” என்றாள் திரௌபதி. “நாற்களத் திறவோன். தீயுரை அளிப்போன். அரசனின் ஆழத்திலுறையும் ஆணவத்தையும் கீழ்மையையும் கருக்களாக்கி ஆடுவோன்.”



“இல்லை” என்றபடி தருமன் பாய்ந்தெழுந்தார். “இது வஞ்சம். என் மேல் உமிழப்படும் நஞ்சு இது.” ஆனால் அவர் தம்பியர் நால்வரும் அமைதியாக இருந்தனர். “சொல்... இதுவா உண்மை?” என்று தருமன் கூவினார். ஐவரும் சொல்லில்லாமல் நோக்கி அமர்ந்திருக்க “இல்லை! இல்லை!” என்றார். பின்னர் தளர்ந்து மணலில் விழுந்து “தெய்வங்களே” என்றார்.

# நீர்க்கோலம் - 4

**3. மெய்மைக்கொடி**

“நிஷதமும் விதர்ப்பமும் ஒருவரை ஒருவர் வெறுத்தும் ஒருவரின்றி ஒருவர் அமையமுடியாத இரு நாடுகள்” என்றார் தமனர். “விந்தியமலையடுக்குகளால் அவை ஆரியவர்த்தத்திலிருந்து பிரிக்கப்பட்டுள்ளன. மகாநதியாலும் தண்டகப்பெருங்காடுகளாலும் தென்னகத்திலிருந்து அகற்றப்பட்டுள்ளன. நீண்ட பொது எல்லை. தவிர்க்கவே முடியாத வணிகப்புழக்கம். நிஷதத்தின் காடுகள் பாரதவர்ஷத்தின் எந்த நாட்டையும்விட பன்னிரு மடங்கு மிகையானவை. அவர்களோ காட்டாளரின் வழிவந்தவர்கள். வடக்கே சர்மாவதியின் கரைகளில் இருந்து தெற்கே சென்ற நிஷாதர்களின் முதற்குலம் அவர்கள் என சொல்லொன்று உண்டு. வணிகப்பொருட்களை அளித்து மலைப்பொருட்களை வாங்கிவரும் வணிகர்களால்தான் விதர்ப்பம் வாழ்கிறது.”

“விதர்ப்பம் ஷத்ரிய குருதிமரபு கொண்டது. யாதவர்களின் குருதிவழியான போஜர்களுக்கும் அவர்களுடன் ஓர் உறவுண்டு என்பார்கள். அவர்கள் கடக்க விரும்பும் அடையாளம் அது” என்று தமனர் தொடர்ந்தார். “விதர்ப்ப மன்னர் பீஷ்மகரின் மகள் ருக்மிணி இன்று இளைய யாதவரின் அரசி.” தருமன் “ஆம், தங்கையைக் கவர்ந்தவர் என்பதனால் இளைய யாதவர்மேல் பெருஞ்சினம் கொண்டிருக்கிறான் பட்டத்து இளவரசன் ருக்மி. அச்சினத்தாலேயே அவன் துரியோதனனுடன் இணைந்திருக்கிறான்” என்றார். “அவன் மகதத்தின் ஜராசந்தனுக்கும் சேதிநாட்டின் சிசுபாலனுக்கும் அணுக்கனாக இருந்தான்” என்றான் பீமன்.

“ஆம், அதையெல்லாம்விட பெரியது ஒன்றுண்டு. விதர்ப்பத்தின் குருதியில் உள்ள குறையைக் களைந்து தங்களை மேலும் தூய ஷத்ரியர்களாக ஆக்கிக்கொள்ள அவர்கள் எண்ணியிருந்தனர். இப்பகுதியில் நிஷத நாட்டவருடன் அவர்கள் தீர்க்கவேண்டிய கடன்களும் சில இருந்தன. ருக்மிணி பேரழகி என்றும், நூல்நவின்றவள் என்றும் பாரதவர்ஷம் அறிந்திருந்தது. முதன்மை ஷத்ரிய அரசர்கள் எவரேனும் அவளை மணம்கொள்வார்கள் என்றும் அதனூடாக விதர்ப்பம் தன் குறையை சூதர் நாவிலிருந்தும் அரசவை இளிவரல்களிலிருந்தும் அழிக்கலாம் என்றும் அவர்கள் கனவுகண்டனர். அது நிகழவில்லை. இளைய யாதவர் அவளை கவர்ந்து சென்றார். ஷத்ரியப் பெருமையில்லாத யாதவர். முன்னரே யாதவக்குருதி என இருந்த இழிவு மேலும் மிகுந்தது. ருக்மியின் சினம் இளைய யாதவருடன் அல்ல, அவனறியாத பலவற்றுடன். அவை முகமற்றவை. எட்டமுடியாதவை. முகம்கொண்டு கையெட்டும் தொலைவிலிருப்பவர் யாதவர். ஆகவே அனைத்துக் காழ்ப்பையும் அத்திசைநோக்கி திருப்பிக்கொண்டிருக்கிறான்” என்றார் தமனர்.

“விதர்ப்பம் அழகிய நாடு. பெருநீர் ஒழுகும் வரதாவால் அணைத்து முலையூட்டப்படுவது. வடக்கே முகில்சூடி எழுந்த மலைகளும் காடுசெறிந்த பெருநிலவிரிவுகளும் கொண்டது. அரசென்பதையே அறியாமல் தங்கள் சிற்றூர்களில் குலநெறியும் இறைமரபும் பேணி நிலைகொண்ட மக்கள் வாழ்வது. மலைத்தொல்குடிகளிலிருந்து திரண்டுவந்த குலங்கள் இவை. ஆரியவர்த்தம் கண்ட போர்களும் பூசல்களும் இங்கு நிகழ்ந்ததில்லை. இங்கு ஒவ்வொருவருக்கும் தேவைக்குமேல் நிலம் உள்ளது. எனவே காற்றுபோல் ஒளியைப்போல்

நீரைப்போல் நிலத்தையும் இவர்கள் அளவிட்டதோ எல்லைவகுத்துக்கொண்டதோ இல்லை. இவர்களுக்கு தெய்வம் அள்ளிக்கொடுத்திருப்பதனால் இவர்களும் தெய்வங்களுக்கும் பிற மானுடருக்கும் அள்ளிக்கொடுத்தார்கள்" என்றார் தமனர்.

"அத்துடன் ஒரு பெரும் வேறுபாடும் இங்குள்ளது" என்றார் தமனர். "ஆரியவர்த்தம் படைகொண்டு நிலம்வென்ற அரசர்களால் வென்று எல்லையமைக்கப்பட்டது. அவர்களின் ஆணைப்படி குடியேறிய மக்களால் சீர் கொண்டது. இது ஆரியவர்த்தத்தின் அணையாத பூசல்களைக் கண்டு கசந்து விலகி தெற்கே செல்லத்துணிந்த முனிவர்களால் உருவாக்கப்பட்டது. வெல்வதற்கு நிகராக கொடுப்பதற்கும் பேணும் அனைத்தையும் கணப்பொழுதில் விட்டொழிவதற்கும் அவர்கள் மக்களை பயிற்றுவித்தார்கள்."

"ஆனால் அத்தனை ஓடைகளும் நதியை நோக்கியே செல்கின்றன" என்று தமனர் தொடர்ந்தார். "குடித்தலைமை அரசென்றாகிறது. அரசுகள் பிற அரசை நோக்கி செல்கின்றன. வெல்லவும் இணையவும். பின்பு நிகழ்வது எப்போதும் ஒன்றே."

தருமன் "ஆம், இப்போது விதர்ப்பம் நன்கு கட்டுப்படுத்தப்படுகிறது என்பதை எல்லை கடந்ததுமே உணர்ந்தேன். எல்லைகள் நன்கு வகுத்து அடையாளப்படுத்தப்பட்டுள்ளன. வணிகச்சாலைகள் காவல்படைகளால் முழுமையாக கண்காணிக்கப்படுகின்றன. பாலங்களும் சாவடிகளும் உரிய இடங்களிலெல்லாம் அமைந்துள்ளன. அனைத்து இடங்களிலும் விதர்ப்பத்தின் கொடி பறக்கிறது" என்றார்.

பீமன் "இங்கே விளைநிகுதி உண்டா?" என்றான். "விரிந்துப்பரந்த நாடுகள் எதிலும் விளைநிகுதி கொள்ளப்படுவதில்லை. அந்நிகுதியை கொள்ளவோ திரட்டவோ கொண்டுவந்துசேர்க்கவோ பெரிய அரசாளுகைவலை தேவை. சிறிய நாடுகளில் அவற்றை உருவாக்கிக்கொள்ளலாம். மகதம் போன்ற தொன்மையான நாடுகளில் அவை காலப்போக்கில் தானாகவே உருவாகி வந்திருக்கும். விதர்ப்பத்தின் பெரும்பகுதி நிலத்திற்கு சாலைகளோ நீர்வழிகளோ இல்லை. இங்கு பேசப்படும் மொழிகள் பன்னிரண்டுக்கும் மேல். தொல்குடிகள் எழுபத்தாறு. இதன் எல்லைகள் இயற்கையாக அமைந்தவை."

"எனவே ஆட்சி என்பது அதன் குடிகளுக்கு பெரும்பாலும் தெரியாமலேயே நிகழ்ந்தது. வணிகப்பாதைகளிலும் அங்காடிகளிலும் சுங்கநிகுதி மட்டுமே கொள்ளப்பட்டது. அதுவே அரசுதிகழ்வதற்கு போதுமானதாக இருந்தது" என்றார் தமனர். "ஆனால் இன்று ருக்மி இந்நாட்டை ஒரு பெரிய கைவிடுபடைப்பொறி என ஆக்கிவிட்டிருக்கிறான். கௌண்டின்யபுரி இன்று இரண்டாம் தலைநகர். ஏழு பெருங்கோட்டைகளால் சூழப்பட்ட போஜகடம் என்னும் நகர் ருக்மியால் அமைக்கப்பட்டு தலைநகராக்கப்பட்டது. வரதாவின் கரையில் அமைந்திருப்பதனாலேயே பெருங்கோட்டைகளை கௌண்டின்யபுரியில் சேற்றுப்பரப்பில் அமைக்கமுடியாதென்று கலிங்கச் சிற்பிகள் சொன்னார்கள்."

தமனர் தொடர்ந்தார் "இளைய யாதவரிடம் தோற்று மீசையை இழந்து சிறுமைகொண்டபின் பல ஆண்டுகாலம் அவன் எங்கிருக்கிறான் என்றே தெரியவில்லை. சிவநெறியனாக ஆகி தென்னகத்திற்குச் சென்றான் என்கின்றனர். இமயமலைகளில் தவம் செய்தான் என்றும் சொல்லப்படுகிறது. அவன்

மீண்டபோது யோகி போலவே தெரிந்தான். முகத்தில் செந்தழல் என நீண்ட தாடி. கண்களில் ஒளிக்கூர். சொற்கள் நதியடிப்பரப்பின் குளிர்ந்த கற்கள். இளைய யாதவரின் குருதியில் கைநனைத்தபின் திரும்பி கௌண்டின்யபுரிக்குள் நுழைந்து அங்கு மூதன்னையர் முன் முடிகளைந்து பூசனைசெய்யவிருப்பதாக அவன் வஞ்சினம் உரைத்திருக்கிறான்.”

“இங்கிருந்த ஒவ்வொன்றையும் அவன் மாற்றியமைத்தான். என்ன செய்யவேண்டும் என நன்கறிந்திருந்தான். முதலில் ஆயிரக்கணக்காக சூதர்கள் கொண்டுவரப்பட்டனர். இன்றுள்ள விதர்ப்பம் என்னும் நாடு அவர்களின் சொற்களால் உருவாக்கப்பட்டது. அதன் எல்லைகள் வரையறை செய்யப்பட்டன. அதன் அழகும் தொன்மையும் தனிப்பெருமையும் வகுக்கப்பட்டன. ஒவ்வொரு நாளுமென தங்கள் நாடு வளர்ந்து விரிவதை மக்கள் கண்டனர். தாங்கள் கண்டறியாத நிலங்களெல்லாம் தங்களுக்குரியவையே என்னும் பெருமிதம் அவர்களை உளம்விம்மச்செய்தது.”

“கண்டறிந்த நிலமும் நீர்களும் மலைகளும் பயன்பாட்டால் மறைக்கப்பட்ட அழகுகொண்டவை. காணாத நிலமும் நீர்களும் மலைகளும் அழகும் பெருமையும் மட்டுமே கொண்டவை. எனவே தெய்வத்திருவுக்கள் அவை. அறிந்த மண்ணில் வேட்டையும் வேளாண்மையும் திகழவேண்டும் என்று வேண்டித் தொழுத குடிகள் அறியாத மண் என்றும் அவ்வாறே பொலியவேண்டுமென்று தொழுது கண்ணீர் மல்குவதை ஒருமுறை சுத்கலக் குடிகளின் படையல்நிகழ்வொன்றில் கண்டேன். புன்னகையுடன் வாழ்த்தி அங்கிருந்து மீண்டேன்” என்றார் தமனர். “காமத்தை விட, அச்சங்களை விட,

கனவிலெழும் திறன் மிகுந்தது நிலமே. கனவுநிலம் மாபெரும் அழைப்பு. என்றுமிருக்கும் சொல்லுறுதி. தெய்வங்களும் மூதாதையரும் வாழ்வது. அதன்பொருட்டு மானுடர் எதையும் இழப்பார்கள். கொல்வார்கள், போரிட்டு இறப்பார்கள். மனிதர்களுக்கு கனவுநிலமொன்றை அளிப்பவனே நாடுகளை படைக்கிறான்."

"ஆனால் நிலம் ஒன்றென்று ஆக அதன் நுண்வடிவென வாழும் அனைத்தையும் இணைத்தாகவேண்டும். ருக்மியின் சூதர் அதை செய்தனர். விதர்ப்பநிலத்தின் தெய்வங்களும் மூதாதையரும் தொல்லன்னையரும் மாவீரரும் ஒவ்வொரு குடிச்சொல்மரபில் இருந்தும் கண்டெடுக்கப்பட்டு பெருங்கதைகளாக மீள்மொழியப்பட்டனர். மாபெரும் கம்பளம்போல கதைகள் ஒன்றுடன் ஒன்று பின்னி முடையப்பட்டு ஒற்றைப்படலமென்றாயின. கன்றுகளுக்குப் பின்னால் பசுக்கள் செல்வதுபோல கதைகளுக்குப் பின்னால் சென்றது நிலம். கன்றுகளைக் கட்டியபோது காணாச்சரடால் தானும் கட்டுண்டது."

"சபரகுடிகளின் தெய்வமாகிய மாகன் துந்துபகுடிகளின் தெய்வமாகிய தாபையை மணந்தார். சிபிரகுடிகளின் யானைத் தெய்வமான காளகேது அஸ்வககுடிகளின் மூதாதையான தாமஸரின் ஊர்தியாகியது. ஒவ்வொரு நாளும் அக்கதைகள் புதுவடிவு கொள்வதன் விந்தையை எண்ணி எண்ணி மலைத்திருக்கிறோம். ஒரு கதையின் வளர்ச்சியைக் கண்டு திகைத்து அதைப்பற்றி பேசியபடி இன்னொரு ஊருக்குச் சென்றால் ஐந்தே நாளில் அக்கதை மேலுமொரு வடிவு கொண்டிருக்கும்" என்றார் தமனர். "கதைகள் ஒன்றிணைந்தபோது தெய்வங்கள் இணைந்தன.

குலவரலாறுகள் இணைந்தன. குருதிமுறைகள் ஒன்றாயின. மக்கள் ஒற்றைத்திரளென்றானபோது நிலம் ஒன்றானது.”

“நிலம் குறித்த பெருமை ஒவ்வொருவர் நாவிலும் குடியேறியபோது அதை வெல்ல நான்கு திசைகளிலும் எதிரிகள் சூழ்ந்திருப்பதாக அச்சம் எழுந்தது. பின்னர் எதிரிகள் பேருருக்கொள்ளத் தொடங்கினர். இரக்கமற்றவர்களாக, எங்கும் ஊடுருவும் வஞ்சம் கொண்டவர்களாக, இமைக்கணச் சோர்விருந்தாலும் வென்றுமேற்செல்லும் மாயம் கொண்டவர்களாக அவர்கள் உருமாறினர். எதிரிகள் மீதான வெறுப்பும் அச்சமும் அத்தனை குடிகளையும் ஒன்றெனக் கட்டி ஒரு படையென தொகுத்தது. எங்கும் எதிலும் மாற்றுக்கருத்தில்லாத ஒற்றுமை உருவாகி வந்தது. ஆணையென ஏது எழுந்தாலும் அடிபணியும் தன்மையென அது விளைந்தது.”

“நாடே ஒரு படையென்றாகியமை அரசனை மேலும் மேலும் ஆற்றல்கொண்டவனாக ஆக்கியது. செங்கோலை சற்றேனும் ஐயுறுபவர்கள் அக்கணமே எதிரியின் உளவுநோக்கிகள் என குற்றம் சாட்டப்பட்டனர். அவர்களைப் பழித்து வதைத்து கொன்று கொண்டாடினர் அவர்களின் குருதியினரும் குடியினரும். அவையெல்லாம் எதிரிகள்மேல் கொள்ளும் வெற்றிகள் என உவகையளித்தன. முதற்பாண்டவரே, எதிரிகளை அறிந்தவர்கள் பின் அவர்களில்லாமல் வாழ முடிவதில்லை. ஒவ்வொரு கணமும் சிதறிப்பரவும் நம்மை எதிரி எல்லைகளில் அழுத்தி ஒன்றாக்குகிறான். நம் ஆற்றல்களை முனைகொள்ளச் செய்கிறான். நம் எண்ணங்கள் அவனை மையமாக்கி நிலைகொள்கின்றன. எளியோருக்கு

தெய்வம் எதிரிவடிவிலேயே எழமுடியும். அவர்களின் ஊழ்கம் வெறுப்பின் முழுமையென்றே நிகழமுடியும்” என்றார் தமனர்.

“பெரும்படையை இன்று ருக்மி திரட்டியிருக்கிறான். அப்பெரும்படைக்குத் தேவையான செல்வத்தை ஈட்டும்பொருட்டு விரிவான வரிக்கோள் முறைமையை உருவாக்கியிருக்கிறான்” என்று தமனர் சொன்னார். “ஐவகை வரிகள் இன்று அரசனால் கொள்ளப்படுகின்றன. சுங்கவரி முன்பே இருந்தது. ஆறுகளிலும் ஏரிகளிலும் இருந்து நீர்திருப்பிக் கொண்டுசெல்லும் ஊர்களுக்கு நீர்வரி. விளைவதில் ஏழில் ஒரு பங்கு நிலவரி. மணவிழவோ ஆலயவிழவோ ஊர்விழவோ கொண்டாடப்படுமென்றால் பத்தில் ஒரு பங்கு விழாவரி. எல்லைகடந்துசென்று கொள்ளையடித்து வருபவர்களுக்கு கொள்வதில் பாதி எல்லைவரி.”

“விந்தை!” என்றார் தருமன். “அவ்வரி தென்னகத்தில் பல மலைக்குடிகளின் அரசுகளில் உள்ளதே” என்றார் தமனர். “பல குடிகளின் செல்வமே மலைக்குடிகளை கொள்ளையடித்து ஈட்டுவதுதான்.” பீமன் “அது அரசனே கொள்ளையடிப்பதற்கு நிகர்” என்றான். “ஆம், கொள்ளையடித்து தன் எல்லைக்குள் மீள்பவர்களுக்கு காப்பளிக்கிறார்கள் அல்லவா?” என்றான் நகுலன். “விதர்ப்பம் கொள்ளையடிப்பது இரண்டு நாடுகளின் நிலங்களுக்குள் புகுந்தே. தெற்கே நிஷதநாட்டின் எல்லைகள் விரிந்தவை. பல மலைகளில் அரசப்பாதுகாப்பென்பதே இல்லை. கொள்ளையடிக்கப்பட்ட மக்கள் சிறுகுடிகளாகவும் சிற்றூர்களாகவும் சிதறிப்பரந்தவர்கள். கிழக்கே சியாமபுரியும் அரசமையம் கொள்ளாத நாடுதான்.”

“விதர்ப்பத்தின் வஞ்சம் இளைய யாதவருடன். எனவே நமக்கு எதிர்நிலைகொள்வதே ருக்மியின் அரசநிலை. ஆகவே நிஷதத்திற்குச் சென்று அவர்களின் நட்பை வென்றெடுப்பதே நமக்கு நலம்பயக்கும்” என்றான் சகதேவன். “ஆம், அவர்கள் ஷத்ரியர்களை அஞ்சுகிறார்கள். இன்று ஷத்ரியர்கள் என்றே உங்களையும் எண்ணுவார்கள். நீங்கள் ஷத்ரியர்களால் எதிர்க்கப்படுபவர்கள், இளைய யாதவரின் சொல்லுக்காக களம் நிற்பவர்கள் என்பதை அவர்களுக்கு தெரிவிக்கவேண்டும். அவர்களுடன் ஒரு குருதியுறவு உருவாகுமென்றால் அது மிக நன்று” என்றார் தமனர். தருமன் “ஆம், அதையே எண்ணிக்கொண்டிருக்கிறேன்” என்றார்.

“நான் அதைக் கூறுவது ஏனென்றால் நிஷாதர்கள் தென்காடுகளெங்கும் விரவிக்கிடக்கும் பெருங்குலங்களின் தொகை. அவர்களில் அரசென அமைந்து கோல்சூடியவை நான்கு. வடக்கே நிஷாதர்களின் அரசாக ஹிரண்யபுரி வலுப்பெற்றுள்ளது. நிஷாத மன்னன் ஹிரண்யதனுஸின் மைந்தன் ஏகலவ்யன் மகதத்தில் எஞ்சிய படைகளை தன்னுடன் சேர்த்துக்கொண்டு ஆற்றல் மிக்கவனாக ஆகியிருக்கிறான். மைந்தனை இழந்த சேதிநாட்டு தமகோஷனின் ஆதரவை அடைந்துவிட்டிருக்கிறான். விதர்ப்பத்திற்கு அவன் இன்னும் சில நாட்களில் அரசவிருந்தினனாக வரவிருக்கிறான். விதர்ப்பமும் ஹிரண்யபுரியும் அரசஒப்பந்தம் ஒன்றில் புகவிருப்பதாக செய்தி வந்துள்ளது” என்றார் தமனர்.

“தென்னகத்தில் ஆற்றல்மிக்க நிஷாதகுலத்தவரின் அரசு நிஷதமே. முன்பு கிரிப்பிரஸ்தம் என்று அழைக்கப்பட்டது அவர்களின் பெருநகராகிய விராடபுரி. நிஷாதர்களின்

எழுபத்தெட்டு தொல்குலங்களில் பெரியது சபரர் குலம். அவர்கள் அஸனிகிரி என்றழைக்கப்பட்ட சிறிய மலையைச் சுற்றியிருந்த காடுகளில் வாழ்ந்தனர். கோதைவரி மலையிறங்கி நிலம்விரியும் இடம் அது. நாணலும் கோரையும் விரிந்த பெருஞ்சதுப்பு நிலத்தில் மீன்பிடித்தும் முதலைகளை வேட்டையாடியும் அவர்கள் வாழ்ந்தனர். தண்டபுரத்திலிருந்து படகுவழியாக வந்து அவர்களிடம் உலர்மீனும் முதலைத்தோலும் வாங்கிச்சென்ற வணிகர்களால் அவர்கள் மச்சர்கள் என்றழைக்கப்பட்டனர்.”

“கடல்வணிகம் அவர்களை செல்வந்தர்களாக்கியது. வணிகர்களிடமிருந்து அவர்கள் செம்மொழியை கற்றனர். பெருமொழியின் கலப்பால் அவர்களின் மொழி விரிந்தது. மொழி விரிய அதனூடாக அவர்கள் அறிந்த உலகும் பெருகியது. மலைவணிகர்களிடமிருந்து அவர்கள் புதிய படைக்கலங்களை பெற்றனர். அவற்றைக்கொண்டு பிற நிஷாதர்களை வென்று அரசமைத்தனர். அந்நாளில்தான் பதினெட்டாவது பரசுராமர் தென்னகப் பயணம் வருவதை அறிந்து மகாகீசகர் அவரை தேடிச்சென்றார், சப்தபதம் என்னும் மலைச்சரிவிலிருந்த அவரைக் கண்டு அடிபணிந்தார். அவர் கோரிய சொல்லுறுதிகளை அளித்து நீர்தொட்டு ஆணையிட்டார். அவர் மகாகீசகரை நிஷாதர்களின் அரசனாக அமைத்து அனல்சான்றாக்கி முடிசூட்டினார். அவர் அக்னிகுல ஷத்ரியராக அரியணை அமர்ந்து முடிசூட்டிக்கொண்டார்.”

“பரசுராமர் கோரிய சொல்லுறுதிகள் இன்றும் அக்குடிகளை கட்டுப்படுத்தும். ஒரு தருணத்திலும் அந்தணர்களுக்கு எதிராக படைக்கலம் ஏந்தலாகாது, அந்தணர்களை எதிர்ப்பவர்களுக்கு எதிராக அச்செய்தி கேள்விப்பட்டதுமே படைகொண்டு

எழவேண்டும், ஷத்ரியர்களுக்கு கப்பம் கட்டி அடிமைப்படலாகாது, போரில் எக்குடியையும் முற்றழிக்கலாகாது, ஒரு போரிலும் பெண்களும் குழந்தைகளும் பசுக்களும் கொல்லப்படக்கூடாது, நீர்நிலைகளை அழிப்பதோ எரிபரந்தெடுத்தலோ கூடாது" என்றார் தமனர். "பரசுராமர் அளித்த இந்திரனின் சிலையுடன் மகாகீசகர் அஸனிமலைக்கு மீண்டார்."

"அஸனிமலையின் உச்சியில் ஆலயம் அமைத்து சபரர்கள் வழிபட்டுவந்த அஸனிதேவன் என்னும் மலைத்தெய்வத்தின் அதே வடிவில் மின்படையை ஏந்தியிருந்தமையால் இந்திரனை அவர்களால் எளிதில் ஏற்கமுடிந்தது. அஸனிகிரியின் மேல் இருந்த குடித்தெய்வங்களில் முதன்மையாக இந்திரன் நிறுவப்பட்டான். அஸனிமலையில் ஏழு பெருவேள்விகளை மகாகீசகர் நிகழ்த்தினார். நாடெங்குமிருந்து அனல்குலத்து அந்தணர் திரண்டுவந்து அவ்வேள்விகளில் அமர்ந்தனர். நூற்றெட்டு நாட்கள் அஸனிமலைமேல் வேள்விப்புகை வெண்முகில் என குடை விரித்து நின்றிருந்தது என்கின்றன கதைகள்."

"அதன் பின் நிஷதகுலத்து வேந்தர்கள் ஆண்டுதோறும் வேள்விகளை நிகழ்த்தும் வழக்கம் உருவாகியது. நாடெங்கிலுமிருந்து அந்தணர் அந்த மலைநோக்கி வரலாயினர். அஸனிகிரி கிரிப்பிரஸ்தம் என்று பெயர்பெற்றது" என்று தமனர் சொன்னார். "மெல்ல அனைத்துக் குலங்களையும் சபரர் வென்றடக்கினர். குலத்தொகுப்பாளராகிய சபரர்களின் தலைவனை விராடன் என்று அழைத்தனர்.

பலநூற்றாண்டுகள் கிரிப்பிரஸ்தம் இந்திரபுரி என புகழ்பெற்றிருந்தது. பின்னர் காலத்தில் அழிந்தது. சபரர்கள்

மீண்டும் இரண்டாம் கீசகர் தலைமையில் எழுந்து குடிகளைத் தொகுத்து விராடக்கூட்டுறவை உருவாக்கினர். அதன்பின்னர் விராடபுரி என்னும் பெருநகர் கிரிப்பிரஸ்த மலையின் கீழ் உருவாகி வந்தது கோதையின் கரையில் மச்சர்களின் ஊர் அது.மீன்மணமில்லாத மலர்களும் அங்கில்லை என்றுதான் கவிஞர்கள் பாடுகிறார்கள்."

"ஆம், அங்கு செல்வதே எங்கள் முடிவு. நாங்கள் நாளைப்புலரியில் கிளம்புகிறோம்" என்றார் தருமன். அவர்கள் சௌபர்ணிகையின் மணல்கரையில் அமர்ந்திருந்தார்கள். தமனருடன் அவருடைய மாணவர்கள் இருவர் மட்டுமே இருந்தனர். இருவர் உணவு சமைத்துக்கொண்டிருந்தனர். சௌபர்ணிகையின் சிறிய பள்ளங்களில் தேங்கிய நீர் பின்அந்தியின் வான்வெளிச்சத்தில் கருநீலத்தில் கண்ணொளி என மின்னியது நீலக்கல் அட்டிகை ஒன்று வளைந்து கிடப்பது போலிருந்தது. நீர் சுழித்த கயம் அதன் சுட்டி. திரௌபதி அதை நோக்கியபடி அமர்ந்திருந்தாள். அவள் எதையாவது கேட்டாளா என்பது ஐயமாக இருந்தது.



“செல்வோம், இன்னும் சற்றுநேரத்தில் வழிமறையும்படி இருட்டிவிடும்” என்று தமனர் எழுந்தார். தருமனும் உடன் எழ பீமன் மட்டும் கைகளை முழங்கால்மேல் கட்டியபடி அமர்ந்திருந்தான். அர்ஜுனனும் உடன் நடக்க நகுலனும் சகதேவனும் பின்னால் சென்றார்கள். தருமன் “மந்தா, வருக!” என்றார். பீமன் எழுந்துகொண்ட பின்னர் திரௌபதியை தோளில் தட்டி “வா” என்றான். அவள் சூரியன் மறைந்தபின்னர் கரியநீருக்குள் வாள்முனைபோல் தெரிந்த தொடுவானை

நோக்கியபடி மேலும் சிலகணங்கள் அமர்ந்திருந்தபின் நீள்மூச்சுடன் எழுந்தாள்.

அவர்கள் நடக்கையில் பீமன் "முனிவரே, தங்கள் அரசுசூழ்தல் வியப்பளிக்கிறது" என்றான். தருமன் திடுக்கிட்டு திரும்பிப்பார்த்து "மந்தா" என்றார். "ஆம், என் அரசியல் தெளிவானது. நான் எந்நாட்டுக்கும் குடியல்ல. ஆனால் இளைய யாதவர் போரில் வெல்லவேண்டுமென்று விழைகிறேன்" என்றார். "ஏன்?" என்று பீமன் கேட்டான். "ஒரு போர் வரவிருக்கிறது. அதை தவிர்க்கமுடியாது. அதில் எது வெல்லும் என்பதே இன்றுள்ள முழுமுதல் வினா. வேதமுடிபுக்கொள்கை வெல்லவேண்டும். அதன் உருவம் இளைய யாதவர். அவரது படைக்கலங்கள் நீங்கள்."

அவர்கள் மணல்மேல் நடக்கையில் தமனர் சொன்னார் "நான் சாந்தீபனி குருநிலையில் கற்றவன் என அறிந்திருப்பீர்கள். வேதக்கனியே என் மெய்மை. அந்த மரம் மூத்து அடிவேர் பட்டுவிட்டதென்றால் அக்கனியிலிருந்து அது புதுப்பிறப்பு கொண்டு எழட்டும். இனி இப்பெருநிலத்தை வேதமுடிபே ஆளட்டும்." தருமன் "ஒவ்வொருவரும் தங்கள் கொள்கையை அவ்வாறு சொல்லக்கூடுமல்லவா?" என்றார். "ஆம், அது இயல்பே. வேதமுடிபுக்கொள்கையே பாரதவர்ஷமெனும் பெருவிரிவுக்கு உகந்தது என நான் எண்ணுவது ஒன்றின்பொருட்டே" என்றார் தமனர்.

நின்று திரும்பி சௌபர்ணிகையை சுட்டிக்காட்டி "அதோ அச்சிற்றொழுக்கு போன்றது அது என சற்று முன் எண்ணினேன். ஒரு குழியை நிறைக்கிறது. பின் பெருகி வழிந்து பிறிதொரு குழிநோக்கி செல்கிறது. பாரதவர்ஷம் பல

குடிகளால் ஆனது. அவர்கள் வாழ்ந்து அடைந்த பற்பல கொள்கைகள். அக்கொள்கைகளின் உருவங்களான ஏராளமான தெய்வங்கள். அனைத்தையும் அணைத்து அனைத்தையும் வளர்த்து அனைத்தும் தானென்றாகி நின்றிருக்கும் ஒரு கொள்கையே இங்கு அறமென நிலைகொள்ளமுடியும். பரசுராமர் அனல்கொண்டு முயன்றது அதற்காகவே. இளையவர் சொல்கொண்டு அதை முன்னெடுக்கிறார்."

"வேலின் கூரும் நேரும் அல்ல கட்டும் கொடியின் நெகிழ்வும் உறுதியுமே இன்று பாரதவர்ஷத்தை ஆளும் கொள்கையின் இயல்பாக இருக்கமுடியும்" என்றார் தமனர். "நிஷாதர்களும் அரக்கர்களும் அசுரர்களும் தங்களுடைய அனைத்தையும் கொண்டுசென்று படைத்து வணங்கும் ஓர் ஆயிரம் முகமுள்ள தெய்வம். அனைத்தையும் அணைத்து ஏந்திச்செல்லும் கங்கை. அது வேதமுடிபே. அது வேதங்கள் அனைத்திலும் இருந்து எழுந்த வேதம். வேதப்பசுவின் நெய் என்கின்றனர் கவிஞர்."

"சில தருணங்கள் இப்படி அமைவதுண்டு" என்று தனக்குத்தானே என தமனர் சொன்னார். "நானும் நிலையா சித்தத்துடன் துயருற்று அலைந்தேன். பெரும்போர் ஒன்றின் வழியாகத்தான் அக்கொள்கை நிலைகொண்டாகவேண்டுமா என்று. இத்தெய்வம் அத்தகைய பெரும்பலியை கோருவதா என்று. அது ஒன்றே நிலைகொள்ளவேண்டும் என்றால், பிறிதொரு வழியே இல்லை என்றால் அதை ஊழென்று கொள்வதே உகந்தது என்று தெளிந்தேன்."

"அது தோற்றால் இங்கு எஞ்சுவது நால்வேத நெறி மட்டுமே. இங்கு முன்னரிடப்பட்ட வேலி அது. மரம் வளர்ந்து காடென்றாகிவிட்டபின் அது வெறும் தளை. இன்று தொல்பெருமையின் மத்தகம்மேல் ஏறி ஒருகணுவும்

குனியாமல் செல்லவிரும்பும் ஷத்ரியர் கையிலேந்தியிருக்கும் படைக்கலம் அது. அது வெல்லப்பட்டாகவேண்டும். இல்லையேல் இனிவரும் பல்லாயிரமாண்டுகாலம் இந்நிலத்தை உலராக்குருதியால் நனைத்துக்கொண்டிருக்கும். இப்போர் பெருங்குருதியால் தொடர்குருதியை நிறுத்தும் என்றால் அவ்வாறே ஆகுக!”

இருளுக்குள் அவர் குரல் தெய்வச்சொல் என ஒலித்தது. “சுனையிலெழும் இன்னீர் என எழுகின்றன எண்ணங்கள். ஒழுகுகையில் உயிர்கொள்கின்றன. துணைசேர்ந்து வலுவடைகின்றன. பெருவெள்ளமெனப் பாய்ந்து செல்கையில் அவை புரங்களை சிதறடிக்கவும் கூடும். அதன் நெறி அது. பாண்டவர்களே, வேதமுடிபுக் கொள்கை அனைத்துக் களங்களிலும் வென்றுவிட்டது. இனி வெல்ல குருதிக்களம் ஒன்றே எஞ்சியிருக்கிறது.”

நீள்மூச்சுடன் அவர் தணிந்தார். “இன்று நான் முயல்வதுகூட அக்களம் நிகழாமல் அதை வெல்லக்கூடுமா என்றே. இளைய யாதவரின் கொடிக்கீழ் ஷத்ரியர் அல்லாத பிறர் அனைவரும் கூடுவார்கள் என்றால், அவரது ஆற்றல் அச்சுறுத்துமளவுக்கு பெருகும் என்றால் அப்போர் நிகழாதொழியக்கூடும். ஆனால்…” என்றபின் கைகளை விரித்து “அறியேன்” என்றார். அவர் நடக்க பாண்டவர்கள் இருளில் காலடியோசைகள் மட்டும் சூழ்ந்து ஒலிக்க தொடர்ந்து சென்றனர்.

# நீர்க்கோலம் - 5

**4. கலிமுகம்**

விடைபெறுவதற்காக முதற்புலரியில் பாண்டவர்களும் திரௌபதியும் தமனரின் குடிலுக்குள் சென்றார்கள். அவர் அப்போதுதான் துயிலெழுந்து முகம் கழுவிக்கொண்டிருந்தார். அவர்களைக் கண்டதும் “இப்பொழுதிலேயா? நீராடி உணவருந்தி கிளம்பலாமே?” என்றார். “நாங்கள் நடந்து செல்லவிருக்கிறோம். பெருங்கோடை. சூரியன் சினப்பதற்குள் பாதி தொலைவைக் கடந்து சோலை ஒன்றை கண்டடைந்துவிடவேண்டும்” என்றார் தருமன். “ஆம், அதுவும் மெய்யே. நான் நடந்து நெடுநாட்களாகின்றது” என்றார் அவர்.

வணங்கி முறைமைச்சொற்கள் உரைத்து எழுகையில் நகுலன் “நிஷத நாட்டுக்கும் விதர்ப்பத்திற்கும் இடையே பிறிதொரு பூசல்முனை உள்ளது என்றீர்களே? அதைப்பற்றி பேசக் கூடவில்லை. நேற்று பின்னிரவில்தான் அதைப்பற்றி எண்ணினேன்” என்றான். ”அது அனைவரும் அறிந்த கதைதான். ஸ்ரீசக்ரரின் நளோபாக்யானம் என்னும் காவியம் சூதர்களால் பாடப்படுகிறது, கேட்டிருப்பீர்கள்” என்றார் தமனர். “ஆம், அரிய சில ஒப்புமைகள் கொண்ட காவியம்” என்றார் தருமன். “நிஷத மன்னனாகிய நளன் விதர்ப்ப நாட்டு இளவரசியாகிய தமயந்தியை மணந்து இன்னல்கள் அடைந்து மீண்ட கதை அது. அதற்கு இரு நாடுகளிலும் வெவ்வேறு சொல்வடிவங்கள் உள்ளன” என்றார் தமனர்.

தருமன் “ஆம், நானே இரு வடிவங்களை கேட்டுள்ளேன்” என்றார். “அதை வைத்து நான் சொல்வதற்கும் ஒன்றுள்ளது. சொல்லப்படாத ஏதோ எஞ்சுகிறதென்று நானும் உணர்ந்துகொண்டிருந்தேன். அக்கதையை ஏதேனும் வடிவில் கேளாமல் நீங்கள் விதர்ப்பத்தை கடக்கவியலாது. அக்கதையுடன் நான் சொல்லும் சொற்களையும்

இணைத்துக்கொள்ளுங்கள். உருவென்பது ஓர் ஆடையே. உருவமைந்து அறிவதன் எல்லையை மாற்றுருவெடுத்து கடக்கலாம். பிறிதொன்றென ஆகாமல் எவரும் பிறிதெதையும் அடையவியலாது" என்றார் தமனர்.

அவர்கள் அவரை தாள்தொட்டு சென்னிசூடி நற்சொல் பெற்று கிளம்பினர். குருநிலையிலிருந்து கிளம்பி நெடுந்தொலைவுவரை தருமன் ஒரு சொல்லும் உரைக்கவில்லை. முதல் இளைப்பாறலின்போது பீமன் அவர்களுக்கு குடிக்க நீர் அளித்தபின் அருகே ஊற்றிருப்பதை குரங்குகளிடம் கேட்டறிந்து நீர்ப்பையுடன் கிளம்பிச்சென்றான். நகுலன் "ஆடைதான் என்றால் எதை அணிந்தால் என்ன?" என்றான். அவன் எண்ணங்கள் சென்ற திசையிலேயே பிறரும் இருந்தமையால் அச்சொற்கள் அவர்களுக்கு புரிந்தன. "ஆடைகளை உடலும் நடிக்கிறது" என்று தருமன் சொன்னார்.

"நாம் நிஷாதர்களின் விராடபுரிக்கு செல்லத்தான் போகிறோமா?" என்றான் சகதேவன். "வேறு வழியில்லை. எண்ணிநோக்கி பிறிதொரு இடம் தேர இயலவில்லை" என்றார் தருமன். "நாம் இடர்மிக்க பயணத்தில் உள்ளோம். இதை மேலும் நீட்டிக்கவியலாது. விதர்ப்பத்திலோ மற்ற இடங்களிலோ நம்மை எவரேனும் கண்டுகொள்வதற்கான வாய்ப்புகள் ஏராளம். உண்மையில் காசியில் என்னை ஒற்றர் சிலர் கண்டுகொண்டனர் என்றே ஐயுறுகிறேன்." சகதேவன் மேலே நோக்கி "அதற்குள் உச்சி என வெயிலெழுந்துவிட்டது. பறவைகள் நிழலணையத் தொடங்கிவிட்டன" என்றான். "மண்ணுக்குள் நீர் இருந்தால் கதிர்வெம்மை கடுமையாக இருக்காது. ஆழ்நீர் இறங்கிமறைகையிலேயே இந்த வெம்மை" என்றான் நகுலன்.

மணியோசை கேட்க அவர்கள் திரும்பிப் பார்த்தார்கள். சூதர்குடி ஒன்று வண்ண ஆடைகளுடன் பொதிகளையும் இசைக்கலன்களையும் சுமந்தபடி நடந்து வந்தது. ஆண்கள் மூவர், இரு பெண்களும் இரு சிறுவரும். ஒருத்தி கையில் நடைதிகழா மைந்தன். அவர்களில் ஒருவனின் தோளில் ஒரு குட்டிக்குரங்கு இருந்தது. ஆண்களில் இருவர் மூங்கில்கூடைகளில் கலங்களையும் பிற குடிப்பொருட்களையும் அடுக்கி தலையில் ஏற்றியிருந்தனர். “சூதரா, குறவரா?” என்றான் சகதேவன். “சூதர்களே. குறவர்களுக்கு துணியில் தலைப்பாகை அணிய உரிமை இல்லை” என்றார் தருமன்.

அவர்கள் தொலைவிலேயே பாண்டவர்களை பார்த்துவிட்டிருந்தனர். அருகே வந்ததும் அவர்களின் தலைவன் முகமன் சொல்லி வணங்கினான். அவர்கள் தருமனை முனிவர் என்றும் பிறரை மாணவர்கள் என்றும் எண்ணினர். திரௌபதியை முனிவர்துணைவி என்று எண்ணி முதல் முகமன் அவளுக்குரைத்த சூதன் “நாங்கள் கலிங்கச்சூதர். விதர்ப்பத்திற்கு செல்கிறோம். தேன் நிறை மலர்களென நற்சொல் ஏந்திய முகங்களைக் காணும் பேறுபெற்றோம்” என்று முறைமைச்சொல் உரைத்தான். தருமன் அவர்களை “நலம் சூழ்க!” என வாழ்த்தினார்.

“என் பெயர் பிங்கலன். இது என் குடி. என் மைந்தர் இருவர். அளகன், அனகன். மைந்தர்துணைவியர் இருவர். சுரை, சௌபை. கதை பாடி சொல் விதைத்து அன்னம் விளைவிப்பவர்” என்றான். சகதேவன் “குரங்குகளை சூதர்கள் வைத்திருப்பதில்லை” என்றான். “ஆம், ஆனால் விதர்ப்பத்தைக் கடந்தால் நாங்கள் செல்லவேண்டியவை நிஷாதர்களின்

ஊர்கள். மீன்பிடிக்கும் மச்சர்கள். வேட்டையாடும் காளகர்கள். அவர்களில் பலருக்கு எங்கள் மொழியே புரியாது. பாடிப்பிழைக்க வழியில்லாத இடங்களில் இக்குரங்கு எங்களுக்கு அன்னமீட்டித் தரும்” என்றான் முதுசூதன் பிங்கலன்.

“நாங்கள் விதர்ப்பத்தைக் கடந்து நிஷதத்திற்குள் செல்லவிருக்கிறோம்” என்றார் தருமன். “நீங்கள் ஷத்ரியர் அல்லவென்றால் அங்கு செல்வதில் இடரில்லை. ஷத்ரியரும் அவர் புகழ்பாடும் சூதரும் அவ்வெல்லைக்குள் நுழைந்தால் அப்போதே கொல்லப்படுவார்கள்” என்றான் அளகன். “நாங்கள் அந்தணர்” என்று தருமன் சொன்னார். “இவர் கைகளின் வடுக்கள் அவ்வாறு காட்டவில்லையே” என்றான் அனகன். “போர்த்தொழில் அந்தணர் நாங்கள். நியோகவேதியர் என எங்கள் குடிமரபை சொல்வதுண்டு” என்று சகதேவன் சொன்னான்.

அவர்களை ஒருமுறை நோக்கியபின் விழிவிலக்கி “மாற்றுருக்கொண்டு நுழையாமலிருப்பதே நன்று. ஏனென்றால் மாற்றுருக்கொண்டு நிஷதத்திற்குள் நுழையும் ஷத்ரிய ஒற்றரை அவர்கள் பன்னிரு தலைமுறைகளாக கண்டுபிடித்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களின் படையினர் அனைவருக்குமே மாற்றுரு கண்டடையும் நுண்திறன் உண்டு” என்றான் பிங்கலன். “நிஷதத்தின் படைத்தலைவன் அரசியின் தம்பியாகிய கீசகன். தோள்வல்லமையில் பீமனுக்கு நிகரானவன் அவன் என்கிறார்கள். கடுந்தொழில் மறவன். தன்னைப்போலவே தன் படையினரையும் பயிற்றுவித்திருக்கிறான். அஞ்சுவதஞ்சுவர் அவனை ஒழிவது

நன்று" என்றாள் சுரை. "ஆம், அறிந்துள்ளோம்" என்று தருமன் சொன்னார்.

"பசி கொண்டிருக்கிறீர்கள் என்றால் எங்களிடமுள்ள அன்னத்தில் சிறிது உண்ணலாம். அந்தணர் என்பதனால் எங்கள் கை அட்ட உணவை ஏற்பீர்களோ என ஐயுறுகிறோம்" என்றான் பிங்கலன். "போர்த்தொழில் அந்தணர் ஊனுணவும் உண்பதுண்டு" என்றார் தருமன். "நன்று, இதை நல்வாழ்த்தென்றே கொள்வேன்" என்றபின் பிங்கலன் விரியிலைகளை பறித்துவந்தான். சுரை மூங்கில் கூடையில் இருந்த மரக்குடைவுக்கலத்தில் இருந்து அன்ன உருளைகளை எடுத்து அவற்றில் வைத்து அவர்களுக்கு அளித்தாள். வறுத்த தினையை உலர்த்திய ஊனுடன் உப்புசேர்த்து இடித்து உருட்டிய உலரன்னம் சுவையாக இருந்தது. "நீர் அருந்தினால் வயிற்றில் வளர்வது இவ்வுணவு" என்றான் பிங்கலன். "அத்துடன் உண்டபின் கைகழுவ நீரை வீணடிக்கவேண்டியதில்லை என்னும் நல்வாய்ப்பும் உண்டு."

சாப்பிட்டபின் தருமன் "கதை என எதையேனும் சொல்லக்கூடுமோ, சூதரே?" என்றார். "பாடவேண்டாம். செல்லும் வழியில் சொல்லிவந்தால் போதும்." பிங்கலன் முகம் மலர்ந்து "கதை பாடாமல் தொண்டை சிக்கியிருக்கிறது. வழிநடைவிலங்குகளிடம் சொல்லத்தொடங்கலாமா என்று எண்ணிக்கொண்டிருந்தேன். எந்தக் கதை?" என்றான். "விதர்ப்பினியாகிய தமயந்தியின் கதை" என்றார் தருமன். "ஆம், விதர்ப்பத்திற்குள் நுழைகையில் சொல்லவேண்டியதுதான்... நன்று" என்றபின் திரும்பி தோளிலிட்டிருந்த குறுமுழவை எடுத்து அதன் தோல்வட்டத்தில் கையோட்டி மெல்ல

தட்டிவிட்டு “சாரஸ்வத நாட்டின் பேரரசன் வேனனின் கதையை பாடுக, நாவே!” என்றான்.

நால்வகை நிலமும் மூவகை அறங்களால் பேணப்பட்ட அந்நாட்டை அவன் தன் தந்தையிடமிருந்து பெற்றான். சரஸ்வதி நதிக்கரையில் நாணல்புதர் ஒன்றுக்குள் ஊணும் துயிலும் ஒழித்து அருந்தவம் செய்து பிரம்மனை தன் முன் அழைத்தான் வேனன். அவன் முன் தோன்றிய படைப்பிறைவன் “உன் தவம் முதிர்ந்தது. அரசனே, விழைவதென்ன சொல்” என்று வேண்டினான். “தொட்டவை பொன்னென்றாகும் பெற்றி, சுட்டியவற்றை ஈட்டும் ஆற்றல், எண்ணியவை எய்தும் வாழ்வு. இம்மூன்றும் வேண்டும், இறைவா” என்றான் வேனன்.

பிரம்மன் நகைத்து “அரசே, தெய்வங்களாயினும் அவ்வண்ணம் எதையும் அருளவியலாது. இப்பெருவெளியில் ஒவ்வொன்றும் பிறிதொன்றால் நிகர்செய்யப்பட்டுள்ளது என்று அறிக! உனக்களிப்பதை அவர்கள் பிறிதெங்கோ வைக்கவேண்டும்” என்றான். “அதை நான் அறியவேண்டியதில்லை. நான் விழைவது இந்நற்சொல். அதை அருள்க தெய்வங்கள்” என்றான் வேனன். “உன் முற்பிறவியில் ஈட்டியிருக்கவேண்டும். அல்லது வருபிறவியில் நிகர்வைக்கவேண்டும். வெட்டவெளியில் விளையும் கனியொன்றில்லை, உணர்க!” என்றான் பிரம்மன். “நான் பிறிதொன்றும் வேண்டவில்லை. என் தவம் வீண் என்று சொல்லி செல்க!” என்றான் வேனன். “செய்யப்பட்டுவிட்ட தவம் உருக்கொண்ட பொருளுக்கிணையானது. எதன்பொருட்டும் அது இல்லை என்றாவதில்லை” என்றான் பிரம்மன்.

“நான் விழைவன பிறிதெவையும் அல்ல” என்று சொல்லி வேனன் விழிமூடி அமர்ந்தான். “நீ விழைவன அனைத்தையும் அளிப்பவன் ஒரு தெய்வம் மட்டுமே. அவன் பெயர் கலி. காகக்கொடி கொண்டவன். கழுதை ஊர்பவன். கரியன். எண்ணியதை எல்லாம் அளிக்கும் திறன் கொண்டவன். அவனை எற்கிறாயா?” என்றான் பிரம்மன். “ஆம், ஏற்கிறேன்” என்றான் வேனன். “அவ்வண்ணம் ஒரு தெய்வமிருக்கிறது என்றால் இதுவரை முனிவரும் அரசரும் அவனை எண்ணி ஏன் தவமிருக்கவில்லை? அவன் அருளால் ஏன் மானுடர் மண்ணுலகை முழுதும் வெல்லவில்லை? அதை எண்ணி நோக்கமாட்டாயா?” என்றான் பிரம்மன்.

“அவர்கள் என்னைப்போல் கடுந்தவம் செய்திருக்கமாட்டார்கள். எனக்கிணையான பெருவிழைவு கொண்டிருக்கமாட்டார்கள். அத்தெய்வத்தின் அருளால் உலகாளப்போகும் முதல் மானுடன் நான் என்பதே ஊழ்” என்றான் வேனன். புன்னகைத்து “நன்று, அவ்வண்ணமே ஆகுக!” என்று சொல்லி பிரம்மன் உருமறைந்தான்.

பிரம்மனின் இடக்கால் கட்டைவிரல் பெருகி எழுந்து கரிய உருக்கொண்ட தெய்வமென வேனனின் முன் நின்றது. அக்கொடிய உரு கண்டு அஞ்சி அவன் கைகூப்பினான். “என்னை விழைந்தவர் எவருமிலர். உன் ஒப்புதலால் மகிழ்ந்தேன். உன் விருப்பங்கள் என்ன?” என்றான் கலி. பன்னிரு கைகளிலும் படைக்கலங்களுடன் எரியென சிவந்த விழிகளுடன் நிழலில்லா பேருருக்கொண்டு எழுந்து நின்றிருந்த கலியனின் முன் தலைவணங்கிய வேனன் தன் விழைவுகளை சொன்னான். “அளித்தேன்” என்றான் கலி.

“ஆனால் என் நெறி ஒன்றுண்டு. நீ கொள்வனவெல்லாம் உன்னுடையவை அல்ல என்று உன் உள்ளம் எண்ணவேண்டும். நீ கொடுப்பவை எல்லாம் என்னுடையவை என்ற எண்ணம் இருக்கவேண்டும். கொடுத்த கையை நீரூற்றி மும்முறை முழுதுறக் கழுவி கொடையிலிருந்து நீ விலகிக்கொள்ளவேண்டும். ஒருமுறை ஒருகணம் உன் எண்ணம் பிழைக்குமென்றால் உன்னை நான் பற்றிக்கொள்வேன். நான் அளித்தவற்றை எல்லாம் ஐந்துமடங்கென திரும்பப்பெறுவேன். அழியா இருள்கொண்ட ஆழுலகுக்கு உன்னை என்னுடன் அழைத்துச்செல்வேன். ஆயிரம் யுகங்கள் அங்கு நீ என் அடிமையென இருந்தாகவேண்டும்.” வேனன் “அவ்வாறே இறையே. இது என் ஆணை!” என்றான்.

அரண்மனை மீண்ட வேனன் அரியணை அமர்ந்து செங்கோல் தாழாது ஆண்டான். எதிரிகளனைவரையும் கொடுங்காற்று சருகுகளை என வென்று ஒதுக்கினான். மண்ணில் புதைந்துள்ள பொன்னெல்லாம் அவன் கருவூலத்திற்கு வந்தன. மானுடர் எண்ணும் நலன்கள் எல்லாம் அவன் கைநீட்ட அருகமைந்தன. நல்லாட்சியால் பெரும்புகழ் கொண்டான். புகழ் சொல்லில் பற்றி எரிந்தேறும் நெருப்பு. நாள்தோறும் அவன் புகழ் அவனை வந்தடைந்துகொண்டிருந்தது. அவன் கொடைத்திறனும் வில்திறனும் நகர்ப்பெருமையும் குடிப்பெருமையும் அவன் செவிகளில் அறுபடாது ஒலித்து அவையே அவன் எண்ணப்பெருக்கென்றாயின. பிறிதொன்றை எண்ணாது அதிலமர்ந்தான்.

அந்த ஆணவத்தால் அவன் அறிவிழந்தான். வெல்பவன் வெற்றிக்கு நிகராக தெய்வங்களின் மறுதட்டில் வைப்பது

அடக்கத்தை. முனிவர்களே, வெற்றியின் நிழல் ஆணவம். வெற்றி நாள் என சுருங்கும், ஆணவம் கணமெனப் பெருகும். கொள்பவை எல்லாம் தன் திறனாலேயே என்று வேனன் எண்ணலாலான். கொடுப்பவை தன் கருணையால் என்று மயங்கினான்.

அவன் அரண்மனைக்கு வெளியே வாயிலின் இடப்பக்கம் கலியின் சிலை நிறுவப்பட்டிருந்தது. அக்கற்சிலையில் கண்கள் மூடியிருக்கும்படி செதுக்கப்பட்டிருந்தன. நாள்தோறும் அச்சிலைக்கு நீராட்டும் மலராட்டும் சுடராட்டும் காட்டி படையலிட்டு வணங்குவது அரசனின் வழக்கம். அன்றொருநாள் வறியவன் ஒருவனுக்கு பொற்கொடை அளித்தபின் கைகழுவுகையில் அவன் விரல்முனை நனையவில்லை. நாள்தொறும் அவ்வாறு கைநனைத்துக் கொண்டிருந்தமையால் அவன் அதை பொருட்படுத்தவில்லை.

கற்சிலையின் பூசகர் மலர்மாலையுடன் திரும்பி நோக்கியபோது சிலையின் விழிகள் திறந்திருப்பதைக் கண்டு அஞ்சி அலறினார். நீரூற்றிய ஏவலன் அப்பால் செல்ல திரும்பி நோக்கிய அமைச்சர் கருநிழலொன்று அரசனின் கைவிரல் நுனியைத் தொட்டு படர்ந்தேறுவதைக் கண்டார். "அரசே!" என அவர் அஞ்சி அழைத்தபோது "என்ன?" எனத் திரும்பிய அரசனின் விழிகள் மாறியிருந்தன. அவன் உடலசைவும் சிரிப்பும் பிறிதொருவர் என காட்டின. அப்போது நகருக்குள் பசுக்கள் அஞ்சி அலறல் குரலெழுப்பின. காகக்கூட்டங்கள் முகில்களைப்போல வந்து நகரை மூடி இருளாக்கின. நரித்திரள்கள் நகருக்கு வெளியே ஊளையிட்டன. வானில் ஓர் எரிவிண்மீன் கீறிச்சென்றதைக் கண்டனர் குடிகள்.

கொடிய தொற்றுநோய் என குடியிருப்பதை உண்பதே கலியின் வழி. வேனன் ஆணவமும் கொடும்போக்கும் கொண்டவன் ஆனான். அந்தணரை தண்டித்தான், குடிகளை கொள்ளையிட்டான். எதிரிகளை சிறுமை செய்தான். மூதாதையரை மறந்தான். தெய்வங்களை புறக்கணித்தான். நாள்தோறும் அவன் தீமை பெருகியது. நச்சுவிழுந்த காடென்று கருகியழிந்தது சாரஸ்வதம். அங்கு வாழ்ந்த மலைத்தெய்வங்களும் கானுறைத்தெய்வங்களும் அகன்றபோது நீரோடைகள் வறண்டன. தவளைகள் மறைந்தபோது மழைமுகில்கள் செவிடாகி கடந்து சென்றன. வான்நீர் பெய்யாத நிலத்தில் அனல் எழுந்து சூழ்ந்தது.

அந்தணரும் முனிவரும் சென்று அவனுக்கு அறிவுரை சொன்னார்கள். நற்சொல் உரைத்த முனிவரை கழுவிலேற்றி அரண்மனைக்கு முன் அமரச்செய்தான். அந்தணரை பூட்டிவைத்து உணவின்றி சாகவைத்தான். சினம்கொண்டு எழுந்த மக்கள் அந்தணரை அணுகி அறம் கோரினர். அவர்களை ஆற்றுப்படுத்தியபின் அந்தணர் ஆவதென்ன என்று தங்கள் குலத்து முதியவரான சாந்தரிடம் வினவினர். நூற்றிருபது அகவை எய்தி நெற்றுபோல உலர்ந்து இல்லத்தின் திண்ணையில் அமர்ந்திருந்த சாந்தர் சீவிடுபோல ஒலித்த சிறுகுரலில் “அரசன் கோல் இவ்வாழியின் அச்சு. சினம்கொண்டு அச்சை முறித்தால் சுழல்விசையாலேயே சிதறிப்போகும் அனைத்தும். தீய அரசன் அமைந்தது நம் தீவினையால் என்றே கொள்வோம். தெய்வம் முனிந்தால் பணிந்து மன்றாடுவதன்றி வேறேது வழி?” என்றார்.

குழம்பி ஒருவரை ஒருவர் நோக்கிய அந்தணரிடம் “கொடியோன் என்றாலும் அவன் நம் குடி அரசன். அவனை

அழித்தால் பிற குடியரசனை நாம் தலைமேல் சூடுவோம். மான்கணம் சிம்மத்தை அரசனாக்குவதற்கு நிகர் அது” என்றார் சாந்தர். “ஆம் மூத்தவரே, ஆணை” என்றனர் இளையோர். அச்சொல்லை அவர்கள் குடிகளிடம் கொண்டுசென்றனர். ஒவ்வொரு நாளும் ஒரு குடிக்குழு சென்று வேனனிடம் முறையிடுவதென்று முடிவெடுத்தனர். அவன் காலை துயிலெழுகையில் அரசமுற்றத்தில் நின்று தங்கள் துயர்சொல்லி கூச்சலிட்டனர். அவர்களை குதிரைகளை அனுப்பி மிதிக்கவைத்தான். கொதிக்கும் எண்ணையை அவர்கள்மேல் ஊற்றினான். சிறையிலிட்டான். சாட்டையால் அடித்தான். கொன்று தொங்கவிட்டான்.

விழிநீர் சொட்டச்சொட்ட வேனனால் ஆளப்பட்ட புவி வெம்மைகொண்டது. அனைத்து மரங்களையும் அது உள்ளிழுத்துக்கொண்டது. திருப்பப்பட்ட மான்தோல் என நிறம் வெளுத்து வெறுமையாயிற்று. புவிமகள் பாதாளத்தில் சென்று ஒளிந்துவிட்டாள் என்றனர் நிமித்திகர். அறம் மீள்வதறிந்தே அவள் இனி எழுவாள் என்றார்கள். புவியன்னை ஒரு கரிய பசுவென்றாகி இருளில் உலவுவதை விழியொளியால் கண்டனர் கவிஞர்.

ஒருநாள் பட்டினியால் உடல்மெலிந்த அன்னை ஒருத்தி பாலின்றி இறந்த பைங்குழவி ஒன்றை எடுத்துக்கொண்டு அவன் அரண்மனை முற்றத்தில் வந்து நின்றாள். “கொடியவனே, கீழ்மகனே, வெளியே வா! குழவி மண்ணுக்கு வருவது அன்னையை நம்பி. அன்னை வாழ்வது குடியை நம்பி. குடி கோலை நம்பி. குழவிக்கு உணவுதேடி உண்ணும் கையையும் காலையும் அருளாத தெய்வங்கள் மானுடம் மீது இட்ட ஆணை என்ன என்று அறிவாயா? பசித்து ஒரு குழந்தை

இறக்கும் என்றால் அக்குடியின் இறுதி அறமும் முன்னரே வெளியேறிவிட்டதென்று பொருள். அக்குடி மண்மீது வாழும் தகுதியை இழந்துவிட்டது. அக்குடியில் பிறந்த நானும் இனி உயிர்வாழலாகாது. எரிக அனல்…” என்று கூவி தன் கையிலிருந்த கத்தியால் ஒரு முலையை அறுத்து அரண்மனை முன் வீசினாள். குருதி பெருக்கியபடி அங்கே விழுந்து இறந்தாள்.

அது நிகழ்ந்த அக்கணம் திண்ணையில் சாந்தர் முனகுவதை கேட்டார்கள் அந்தணர். ஓடி அவர் அருகே சென்று என்ன என்று வினவினர். “எழுக குடி. ஆணும் பெண்ணும் படைக்கலம் கொள்க! குருதியாடாத எவரையும் இனி குடியெனக் கொள்ளாதொழிக! நகரை நிறையுங்கள். பெருகிச்சென்று அரண்மனை புகுந்து அரசனையும் அவனை ஏற்பவர்களையும் கொன்றுகுவியுங்கள். அவர்களின் குருதியால் நகர்க்காவல் தெய்வங்களை மும்முறை கழுவுங்கள். வேனனைக் கொன்று அவன் வலக்கால்தொடைத்தசையை எடுத்து அதை மட்டும் அரசனுக்குரிய முறையில் எரியூட்டுங்கள். எஞ்சிய உடலை துண்டுகளாக ஆக்கி காட்டுக்குள் கூவியலையும் காகங்களுக்கும் நரிகளுக்கும் உணவாக்குங்கள். அரசனின் முதல் மைந்தனை அரசனாக்குங்கள். அவன் தன் தந்தைக்கு எரியூட்டட்டும். அவனே சென்று பாதாளத்தில் அலையும் புவிமகளை மீட்டு வரட்டும்” என்றார். மூச்சிரைக்க மெல்ல தளர்ந்து கைதூக்கி வாழ்த்தி “ஆம், அவ்வாறே ஆகுக!” என்றார்.

அச்சொல் அரைநாழிகைக்குள் நகருக்குள் பரவியது. கடலலை போன்று ஓசைகேட்டபோது வேனன் திகைத்து சாளரம் வழியாக வெளியே நோக்கினான். நகரம் எரிபுகையால் நிறைந்திருப்பதைக் கண்டு வெளியே ஓடி தன்

மெய்க்காவலரிடம் எழுபவர்களை கொன்றழிக்க ஆணையிட்டான். அந்தப் போர் ஏழு நாழிகை நேரம் நிகழ்ந்தது. கணந்தோறும் பெருகிய குடிபடைகளுக்கு முன் அரசப்படைகள் அழிந்தன. அவர்களின் குருதியை அள்ளி அரண்மனையெங்கும் வீசி கழுவினர். வேனன் தன் வாளுடன் ஆட்சியறை விட்டு வெளியே ஓடிவர அவன் குடிகளில் இளையோர் எழுவர் அவனைச் சூழ்ந்து வெட்டி வீழ்த்தினர். அவன் தொடைத்தசையை வெட்டியபின் துண்டுகளாக்கி காட்டில் வீசினர். அவன் உடலை உண்ட நரிகள் ஊளையிட்டபடி காட்டின் ஆழத்திற்குள் ஓடி மறைந்தன. காகங்கள் வானில் சுழன்று கூச்சலிட்டபின் மறைந்தன.



வேனனின் பெயர்மைந்தன் பிருதுவை அந்தணர் அரசனாக்கினார்கள். தாதையின் தொடையை எரியூட்டியபின் அவன் வாளுடன் சென்று புவியன்னையை மீட்டுவந்தான். அறம்திகழ தெய்வங்கள் மீள வேள்வி பெருகியது. வறுநிலத்தில் பசுமை எழுந்து செறிந்தது. ஒழியா அன்னக்கலம் என அன்னையின் அகிடு சுரந்தது. பிருதுவின் மகளென வந்து வேள்விச்சாலையில் புகுந்து அவன் வலத்தொடைமேல் அமர்ந்தாள் புவி. ஆகவே கவிஞரால் அவள் பிருத்வி என அழைக்கப்பட்டாள். அவள் வாழ்க!

பிங்கலன் சொன்னான் “முனிவரே, மாணவரே, இனிய விழிகள்கொண்ட தேவியே, கேளுங்கள். வேனனின் உடலில் இருந்து கலி அந்த நரிகளின் நெஞ்சிலும் காகங்களின் வயிற்றிலும் பரவியது. அவை அலறியபடி காடுகளுக்குள் சென்றன. காட்டுப்புதர்களுக்குள் பதுங்கியிருந்த நரிகள் புல்கொய்யவும் கிழங்கும் கனியும் தேரவும் வந்த கான்குடிப் பெண்களை விழிதொட்டு உளம் மயக்கி வென்று புணர்ந்தன. அவர்களின் கருக்களில் இருந்து நரிகளைப்போல் வெள்விழி கொண்ட, நரிகளின் பெரும்பசி கொண்ட மைந்தர்கள் பிறந்தனர். அவர்கள் மிலேச்சர்கள் என்றழைக்கப்பட்டனர்.”

“வேனனின் ஊன் உண்ட காகங்கள் பறந்து காடுகளுக்குள் புகுந்தன. அங்கே தொல்குடிகள் தங்கள் நுண்சொல் ஓதி தெய்வங்களைத் தொழுகையில் அருகே கிளைகளில் அமர்ந்திருந்து தங்கள் குரலை ஓயாமல் எழுப்பின. கனவுகளில் அந்நுண்சொற்களில் காகங்களின் ஒலியும் இணைந்தன. அவர்களின் தெய்வங்களுடன் காகங்களும் சென்றமைந்தன. காகங்களை வழிபடுபவர்கள் நிஷாதர் என்றழைக்கப்பட்டனர். நிஷாதர்களின் தெய்வநிரையில் முதல்தெய்வம் கலியே. ஆகவே அவர்கள் கலியர் என்றழைக்கப்பட்டனர். நிஷாதகுலத்தின் தென்னகக்கிளையே நிஷத நாடென்கின்றனர் நூலோர்.”

“இது விதர்ப்பத்தினர் விரும்பும் கதை அல்லவா?” என்று சகதேவன் கேட்டான். “ஆம், இதையே இங்கே பாடுகிறோம்” என்றான் பிங்கலன். தருமன் சிரித்து “மறுபக்க கதையை சொல்க! நிஷதரின் சொற்களால்” என்றார். “மறுபக்கத்தை கேட்கப் புகுந்தால் அனைத்துக் கதைகளும் அசைவிழந்துவிடும், முனிவரே” என்றான் பிங்கலன். உடலெங்கும் நீர்வழிய

தோல்பையைச் சுமந்தபடி பீமன் அப்பால் வருவதைக் கண்டு “ஆ, அவர் மிலேச்சர்” என்றான். “அவன் என் மாணவன். பால்ஹிக நாட்டவன்” என்றார் தருமன். “அவர்கள் பெருந்தோளர்கள், அறிந்திருப்பீர்.” பிங்கலன் “இத்தகைய பேருடல் கீசகருக்கு மட்டுமே உரியதென்று எண்ணியிருந்தோம்” என்றான். அவன் மைந்தர்களும் பீமனையை கூர்ந்து நோக்கினர்.

“நெடுநேரமாயிற்று, செல்வோம்” என்றார் தருமன். “சூதர் நிஷதநாட்டின் கதையை சொல்லிக்கொண்டிருந்தார்.” பீமன் “நன்று” என்றான். “சொல்லிக்கொண்டே செல்லலாம். கதை இருக்கும்வரை வழித்துணைக்கு தெய்வங்கள் தேவையில்லை என்பார்கள்” என்றார் தருமன்.

# நீர்க்கோலம் - 6

**5. கரியெழில்**

விதர்ப்பத்தை நோக்கி செல்லும் பாதையில் நடக்கையில் தருமன் சொன்னார் “நாங்கள் இன்பத்துறப்பு நோன்பு கொண்டவர்கள், சூதரே. இன்னுணவு உண்பதில்லை. மலர்சூடுவதில்லை. எனவே செவ்வழியே செல்வதும் எங்களுக்கு விலக்கப்பட்டுள்ளது. செல்வர் முகம் காண்பதும் நெறிப்பிழைவு என்றே கொள்ளப்படும்.” பிங்கலன் புன்னகைத்தபடி “நல்ல நோன்பு, முனிவரே. ஆனால் செல்வர் முகம் காண மறுப்பது துன்பத்துறப்பு அல்லவா?” என்றான். தருமன் புன்னகைத்து “கதையை தொடர்க!” என்றார்.

அவர்கள் பெரும்பாதையிலிருந்து கிளைபிரிந்து குறுங்காடு வழியாகச் சென்ற ஒற்றையடிப்பாதையில் நடந்தனர். ஒருவர் பின் ஒருவரென்றே அங்கே நடக்கமுடிந்தது. வில்லுடன் அர்ஜுனன் முன்னால் செல்ல பிங்கலனின் மைந்தர் தொடர்ந்தனர். தருமனுக்குப் பின்னால் திரௌபதி நடந்தாள். அவர்களுக்குப் பின்னால் பிங்கலன் கதை சொன்னபடி செல்ல நகுலனும் சகதேவனும் பிங்கலனின் குடிமகளிரும் நடந்தனர். இறுதியாக பீமன் சூதர்களின் குழந்தைகளை தோளிலேற்றியபடி வந்தான்.

பிங்கலன் கதையை தொடர்ந்தான். விந்தியமலைகளுக்கு அப்பால் குடியேறிய நிஷாதர்கள் காகங்களை குடித்தெய்வமென கொண்டிருந்தார்கள். அன்னையரும் மூதாதையரும் மின்கதிர்தேவனும் காற்றின் தெய்வங்களும் நிரையமர்ந்த அவர்களின் கோயில்களில் இடது வாயிலின் எல்லையில் காகத்தின் மீதமர்ந்த கலிதேவனின் சிலை கண்கள் மூடிக்கட்டிய வடிவில் அமர்ந்திருந்தது. கலியே அவர்களின் முதன்மைத்தெய்வம். அத்தனை பலிகளும் கொடைகளும் கலிதேவனுக்கே முதலில் அளிக்கப்பட்டன. கலியின் சொல்பெற்றே அவர்கள் விதைத்து அறுத்தனர். மணந்து ஈன்றனர். இறந்து நினைக்கப்பட்டனர்.

ஆண்டுக்கொருமுறை கலிதேவனுக்குரிய ஆடிமாதம் கருநிலவுநாளில் அவன் கண்களின் கட்டை பூசகர் அவிழ்ப்பார். அந்நாள் காகதிருஷ்டிநாள் என்று அவர்களால் கொண்டாடப்பட்டது. அன்று காலைமுதல் கலிதேவனுக்கு வழிபாடுகள் தொடங்கும். கள் படைத்து கரும்பன்றி பலியிட்டு கருநீல மலர்களால் பூசெய்கை நிகழ்த்துவார்கள். இருள்விழித் தேவனின் முன் பூசகர் வெறியாட்டுகொண்டு நிற்க அவர்களின்

காலடியில் விழுந்து துயர்சொல்லி கொடைகோருவார்கள் குடிகள். அந்தி இருண்டதும் அனைவரும் தங்கள் இல்லங்களுக்குள் சென்று கதவுகளை மூடிக்கொள்வார்கள். பூசகர் பின்னின்று கலியின் கண்கட்டை அவிழ்த்தபின் பந்தங்களைப் பற்றியபடி ஓடிச்சென்று தன் சிறுகுடிலுக்குள் புகுந்துகொள்வார். பின்னர் முதல்நிலவுக்கீற்று எழுவதுவரை எவரும் வெளியே நடமாடுவதில்லை. கலி தன் விழி முதலில் எவரைத் தொடுகிறதோ அவர்களை பற்றிக்கொள்வான் என்பது வழிச்சொல்.

எவரும் இல்லத்திலிருந்து வெளியே வரப்போவதில்லை என்றே எண்ணியிருப்பார்கள். ஆனால் ஆண்டுதோறும் ஒருவர் வெளிவந்து கலியின் நோக்கு தொட்டு இருள் சூடி அழிவது தவறாமல் நிகழ்ந்தது. கலி வந்து நின்ற நாள்முதல் ஒருமுறையும் தவறியதில்லை. கலிநிகழ்வின் கதைகளை மட்டும் சேர்த்து பூசகர் பாடிய குலப்பாடல் ஆண்டுதோறும் நீண்டது. அவ்வரிசையில் அரசகுடிப் பிறந்தவர்கள் எழுவர் இருந்தனர். அவர்கள் கலியடியார் என்றழைக்கப்பட்டனர். “கலி தன்னை விரும்பி அணுகுபவர்களை மட்டுமே ஆட்கொள்ளமுடியும் என்ற சொல்பெற்றவன்” என்றனர் மூத்தோர். “விழைந்து கலிமுன் தோன்றுபவர் எவர்?” என்றனர் இளையோர்.

“மைந்தரே, ஆக்கத்தையும் அழகையும் இனிமையையும் விழைவது போலவே மானுடர் அழிவையும் இழிவையும் கசப்பையும் தேடுவதுண்டு என்று அறிக! சுவைகளில் மானுடர் மிகவிழைவது இனிப்பை அல்ல, கசப்பையே. சற்று இனிப்போ புளிப்போ உப்போ கலந்து ஒவ்வொரு நாளும் மானுடர் கசப்பை உண்கிறார்கள். நாதிருந்தும் சிற்றிளமை வரைதான் இனிப்பின்

மேல் விழைவு. பின் வாழ்நாளெல்லாம் கசப்பே சுவையென்று உறைக்கிறது” என்று மறுமொழி இறுத்தார் மூத்த நிமித்திகர் ஒருவர். ஊழ்வினை செலுத்திய தற்செயலால், அடக்கியும் மீறும் ஆர்வத்தால், எதையேனும் செய்துபார்க்கவேண்டுமென்ற இளமைத்துடிப்பால், எனையென்ன செய்ய இயலும் என்னும் ஆணவத்தால், பிறர்மேல் கொண்ட வஞ்சத்தால், அறியமுடியாத சினங்களால் அக்குடிகளில் எவரேனும் கலியின் கண்ணெதிரே சென்றனர். அனைத்தையும்விட தன்னை அழித்துக்கொள்ளவேண்டும் என்று உள்ளிருந்து உந்தும் விசை ஒன்றால்தான் பெரும்பாலானவர்கள் அவன் விழி எதிர் நின்றனர்.

கலி விழியைக் கண்டவன் அஞ்சி அலறி ஓடிவந்து இல்லம்புகும் ஓசை கேட்கையில் பிறர் ஆறுதல் கொண்டனர். “எந்தையே, இம்முறையும் பலி கொண்டீரா?” என்று திகைத்தனர். கலி கொண்டவன் ஒவ்வொருநாளும் நிகழ்வதை எதிர்நோக்கி சிலநாட்கள் இருந்தான். சூழ இருந்தவர் நோக்காததுபோல் நோக்கி காத்திருந்தனர். ஒன்றும் நிகழாமை கண்டு ஒன்றுமில்லை என்று அவர்கள் உணரும்போது ஒன்று நிகழ்ந்தது. அவன் அழிந்த பின்னர் அவர்கள் எண்ணிச்சூழ்ந்தபோது அவன் அதுவரை வாழ்ந்த வாழ்க்கையின் விளைவாகவும் உகந்த முடிவாகவுமே அது இருப்பதை கண்டார்கள். “கலி பழி சுமப்பதில்லை” என்றனர் பூசகர். “கலி கண் பெறுபவன் அத்தருணம் நோக்கியே அத்தனை செயல்களாலும் வந்துகொண்டிருந்தான்.”

வீரசேனனுக்கு மைந்தனில்லாமையால் நிஷாத குலமுறைப்படி சினந்த நாகங்களுக்கும் மைந்தர்பிறப்பைத் தடுக்கும் கானுறை தெய்வங்களுக்கும் பூசனை செய்து கனிவு

தேடினான். மூதன்னையருக்கும் மூத்தாருக்கும் பலிகள் கொடுத்தான். எட்டாண்டுகள் நோன்பு நோற்றும் குழவி திகழாமை கண்டு சோர்ந்திருந்தான். ஒருமுறை தன் குலத்தின் ஆலயத்திற்குச் சென்று பூசனைமுறைகள் முடித்து திரும்பும்போது இடப்பக்கம் வீற்றிருந்த கலியின் சிலையை பார்த்தான். சிலகணங்கள் நோக்கி நின்றபின் "நான் நம் தெய்வங்களில் முதன்மையானவராகிய கலியிடம் மட்டும் ஏன் கோரவே இல்லை, அமைச்சரே?" என்றான்.

அமைச்சராகிய பரமர் பணிவுடன் "கலியிடம் எவரும் எதையும் கோருவதில்லை, அரசே" என்றார். "ஏன்?" என்றான் வீரசேனன். "கோருவன அனைத்தையும் அளிக்கும் தெய்வம் அது. ஆனால் முழுமுதல் தெய்வம் அல்ல. பெருவெளியின் வெறுமையை நிறைத்துள்ளது சொல்லப்படாத சொல். அச்சொல்லில் ஒரு துளியை அள்ளி பொருளும் உயிருமாக்கி அளிக்கின்றனர் பிரம்மனும் விண்ணோனும் சிவனும் அன்னையும். கலியால் அவ்வண்ணம் சொல்லள்ள இயலாது. இங்குள்ள ஒன்றை எடுத்து உருமாற்றி நமக்களிக்கவே இயலும். துலாவின் மறுதட்டிலும் நம்முடையதே வைக்கப்படும்" என்றார் பரமர்.

"ஆயினும் கோருவது வந்தமையும் அல்லவா?" என்றான் வீரசேனன். "ஆம் அரசே, ஐயமே வேண்டியதில்லை. பெருந்தெய்வங்கள் அருந்தவம் பொலிந்த பின்னரே கனிபவை. அத்துடன் நம் ஊழும் அங்கு வந்து கூர்கொண்டிருக்கவேண்டும். கலியை கைகூப்பி கோரினாலே போதும்" என்றார் பரமர். ஒருகணம் கலி முன் தயங்கி நின்றபின் அரசன் "கருமையின் இறையே, எனக்கு அருள்க! என் குலம் பொலிய ஒரு மைந்தனை தருக!" என்று வேண்டினான். பெருமூச்சுடன் மூன்றுமுறை நிலம்தொட்டு வணங்கிவிட்டு இல்லம்

மீண்டான். அன்றிரவு அவன் கனவில் எட்டு கைகளிலும் பாசமும் அங்குசமும் உழலைத்தடியும் வில்லும் நீலமலரும் காகக்கொடியும் அஞ்சலும் அருளலுமாகத் தோன்றிய கலி “நீ கோரியதைப் பெறுக!” என்றான்.

விழிகசியும்படி மகிழ்ந்து “அடிபணிகிறேன், தேவே” என்றான் வீரசேனன். “உனக்கு ஒரு மைந்தனை அருள்வேன். அக்கணத்தில் எங்கேனும் இறக்கும் ஒருவனின் மறுபிறப்பென்றே அது அமையும்” என்றான் கலி. “அவ்வாறே, கரியனே” என்றான் வீரசேனன். “அவன் என் அடியவன். எந்நிலையிலும் அவன் அவ்வாறே ஆகவேண்டும். என்னை மீறுகையில் அவனை நான் கொள்வேன்” என்றபின் கலி கண்ணாழத்துக் காரிருளுக்குள் மறைந்தான். விழித்தெழுந்த வீரசேனன் தன் அருகே படுத்திருந்த அரசியை நோக்கினான். அவள்மேல் நிழல் ஒன்று விழுந்திருந்தது. அது எதன் நிழல் என்று அறிய அறையை விழிசூழ்ந்தபின் நோக்கியபோது அந்நிழல் இல்லை. அவள் முகம் நீலம் கொண்டிருந்தது. அறியா அச்சத்துடன் அவன் அன்றிரவெல்லாம் அவளை நோக்கிக்கொண்டிருந்தான்.

மறுநாள் கண்விழித்த அவன் மனைவி உவகைப்பெருக்குடன் அவன் கைகளை பற்றிக்கொண்டு “அரசே, நான் ஒரு கனவு கண்டேன். எனக்கு மைந்தன் பிறக்கவிருக்கிறான்” என்றாள். “என்ன கனவு?” என்றான் வீரசேனன். “எவரோ எனக்கு உணவு பரிமாறுகிறார்கள். அறுசுவையும் தன் முழுமையில் அமைந்து ஒன்றை பிறிதொன்று நிகர்செய்த சுவை. அள்ளி அள்ளி உண்டுகொண்டே இருந்தேன். வயிறு புடைத்து வீங்கி பெரிதாகியது. கை ஊன்றி எழுந்தபோது தெரிந்தது நான் கருவுற்றிருக்கிறேன் என்று. எவரோ என்னை அழைத்தார்கள்.

நான் வெளியே வந்து பார்த்தேன். கரிய புரவி ஒன்று வெளியே நின்றிருந்தது. அதன் மேல் ஏறிக்கொண்டு விரைந்தேன். ஒளிமட்டுமே ஆன சூரியன் திகழ்ந்த வானில் குளிர்காற்று என் குழலை அலைக்க சென்றுகொண்டே இருந்தேன்."

நிமித்திகர் அதைக் கேட்டதுமே சொல்லிவிட்டனர் "அரசாளும் மைந்தன். கரிய தோற்றம் கொண்டவன்." பத்துமாதம் கடந்து அவள் அவ்வண்ணமே அழகிய மைந்தனை பெற்றாள். அந்நாளும் தருணமும் கணித்த கணியர் "இறுதிவரை அரசாள்வார். பெரும்புகழ்பெற்ற அரசியை அடைந்து நன்மக்களைப் பெற்று கொடிவழியை மலரச்செய்வார்" என்றனர். குழவிக்கு ஓராண்டு நிறைகையில் அரண்மனைக்கு வந்த தப்தக முனிவர் "அரசே, இவன் கருக்கொண்ட கணத்தில் இறந்தவன் உஜ்ஜயினியில் வாழ்ந்த முதுசூதனாகிய பாகுகன். அவனுடைய வாழ்வின் எச்சங்கள் இவனில் இருக்கலாம். திறன் கொண்டிருப்பான், இறுதியில் வெல்வான்" என்றார்.

மைந்தனுக்கு தன் மூதாதை பெயர்களில் ஒன்றை வைக்க வீரசேனன் விழைந்தான். ஆனால் கலிதேவனின் முன் மைந்தனைக் கிடத்தியபோது பூசகன்மேல் வெறியாட்டிலெழுந்த கலிதேவன் "இவன் இங்கு நான் முளைத்தெழுந்த தளிர். என் முளை என்பதனால் இவனை நளன் என்றழையுங்கள்" என்று ஆணையிட்டான். ஆகவே மைந்தனுக்கு நளன் என்று பெயரிட்டார்கள். மலையிறங்கும் அருவியில் ஆயிரம் காதம் உருண்டுவந்த கரிய கல் என மென்மையின் ஒளிகொண்டிருந்தான் மைந்தன். இரண்டு வயதில் சேடியருடன் அடுமனைக்குச் சென்றபோது அடம்பிடித்து இறங்கி சட்டுவத்தை கையில் எடுத்து கொதிக்கும் குழம்பிலிட்டு சுழற்றி முகம் மலர்ந்து நகைத்தான். மூன்று வயதில் புரவியில்

ஏறவேண்டும் என அழுதவனை மடியிலமர்த்தி தந்தை முற்றத்தை சுற்றிவந்தார். சிறுவயதிலேயே தெரிந்துவிட்டது அவன் அடுதொழிலன், புரவியறிந்தவன் என்று.

வளர்ந்து எழுந்தபோது பாரதவர்ஷத்தில் நிகரென எவரும் இல்லாத அடுகலைஞனாகவும் புரவியின் உள்ளறிந்தவனாகவும் அவன் அறியப்படலானான். நிஷாதருக்கு கைபடாதவை அவ்விரு கலைகளும். காட்டில் சேர்த்தவற்றை அவ்வண்ணமே சுட்டும் அவித்தும் தின்று பழகியவர்கள் அவர்கள். சுவை என்பது பசியின் ஒரு தருணம் மட்டுமே என்றுதான் அவர்கள் அறிந்திருந்தனர். அவர்களுக்கு உண்பதென்பது தன் உடலை நாவில் குவித்தல் என்று அவன் கற்பித்தான். உடலுக்குள் உறைவது, இப்புவியை அறிவதில் முதன்மையானது சுவைத்தலே என்று தெரியச்செய்தான். அன்னை முலையை சுவைத்ததுபோல் புவியிலுள்ள அனைத்தையும் அறிக என்று அறிவுறுத்தினான்.

உண்ணுதலின் நிறைவை நிஷதகுடிகள் உணர்ந்தனர். ஒவ்வொரு சுதியையும் தனித்தனியாகக் கேட்டு ஓசையிலுள்ள இசையை உணர்வதுபோல அறுசுவை கொண்ட கனிகளையும் காய்களையும் மணிகளையும் உப்புகளையும் அறிந்தபின் சுதி கலந்து பண்ணென்றாவதன் முடிவற்ற மாயத்தை அறிந்து அதில் திளைத்து ஆழ்ந்தனர். சுவை என்பது பருப்பொருள் மானுட ஞானமாக கனிவதே. சுவை என்பது இரு முழுமைகள் என தங்களை அமைத்துக்கொண்டு இங்கிருக்கும் பொருட்கள் ஒன்றையொன்று அறியும் தருணம். சுவையால் அவை இணைக்கப்படுகின்றன. எனவே சுவைவெளியே அவை ஒன்றென இருக்கும் பெருநிலை. பொருள்கள் புடைத்தெழுந்து கடுவெளி புடவியென்றாகிறது. கடுவெளியில் பொருளின்

முதலியல்பென தோன்றுவது சுவை. இன்மை இருப்பாகும் அத்தருணமே சுவை. சுவையே பொருளென்றாகியது. பொருளை சுவையென்றாக்குபவன் புடவியை பிரம்மம் என்று அறிபவன்.

நளன் கைபட்ட பொருளனைத்தும் தங்கள் சுவையின் உச்சத்தை சூடி நின்றன. அவன் சமைப்பவற்றின் சுவையை அடுமனை மணத்திலேயே உணர்ந்தனர் நிஷதத்தின் குடிகள். பின்னர் அடுமனையின் ஒலிகளிலேயே அச்சுவையை உணர்ந்தனர். அவனை நோக்குவதே நாவில் சுவையை எழுப்புவதை அறிந்து தாங்களே வியந்துகொண்டனர். அவன் பெயர் சொன்னாலே இளமைந்தர் கடைவாயில் சுவைநீர் ஊறி வழிந்தது. அவன் சமைத்தவற்றை உண்டு நகர்மக்களின் சுவைக்கொழுந்துகள் கூர்கொண்டன. எங்கும் அவர்கள் சுவை தேடினர். ஆகவே சமைப்பவர்கள் எல்லாருமே சுவைதேர்பவர்களென்றாயினர்.

நிஷதத்தின் உணவுச்சுவை வணிகர்களின் வழியாக எங்கும் பரவியது. அங்கு அடுதொழில் கற்க படகிலேறி வந்தனர் அயல்குடிகள். அடுமனைகளில் தங்கி பொருளுடன் பொருள் கலந்து பொருளுக்குள் உறைபவை வெளிவரும் மாயமென்ன என்று கற்றனர். அது கற்பதல்ல, கையில் அமரும் உள்ளம் மட்டுமே அறியும் ஒரு நுண்மை என்று அறிந்து அதை எய்தி மீண்டனர். நாச்சுவை தேர்ந்தமையால் நிஷதரின் செவிச்சுவையும் கூர்ந்தது. சொற்சுவை விரிந்தது. அங்கே சூதரும் பாணரும் புலவரும் நாள்தோறும் வந்திறங்கினர். முழவும் யாழும் தெருக்களெங்கும் ஒலித்தன. நிஷதகுடிகள் குன்றேறி நின்று திசைமுழுக்க நோக்குபவர்கள் போல

ஆனார்கள். தொலைவுகள் அவர்களை அணுகி வந்தன. அவர்களின் சொற்களிலெல்லாம் பொருட்கள் செறிந்தன.

விழிச்சுவை நுண்மைகொள்ள விழியென்றாகும் சித்தம் பெருக அவர்களின் கைகளில் இருந்து கலை பிறந்தது. எப்பொருளும் அதன் உச்சநிலையில் கலைப்பொருளே. நிஷதத்தின் கத்திகள் மும்மடங்கு கூரும் நிகர்வும் கொண்டவை. அவர்களின் கலங்கள் காற்றுபுகாதபடி மூடுபவை. அவர்களின் ஆடைகள் என்றும் புதியவை. அவர்களின் பொருட்கள் கலிங்க வணிகர்களின் வழியாக தென்னகமெங்கும் சென்று செல்வமென மீண்டு வந்து கிரிப்பிரஸ்தத்தை ஒளிரச்செய்தன. தென்னகத்தின் கருவூலம் என்று அந்நகரை பாடலாயினர் சூதர்.

நிஷதமண்ணுக்கு புரவி வந்தது எட்டு தலைமுறைகளுக்கு முன்னர் கலிங்க வணிகர்களின் வழியாகத்தான். கிரிசிருங்கம் பெருநகரென்று உருவானபோது படைவல்லமைக்கும் காவலுக்கும் புரவிகளின் தேவை உணரப்பட்டபோது அவற்றை பெரும்பொருள் கொடுத்து வாங்கினர். உருளைக் கூழாங்கற்கள் நிறைந்த அந்த மண்ணில் அவை கால்வைக்கவே கூசின. படகுகளில் நின்று அஞ்சி உடல்சிலிர்த்து குளம்பு பெயர்க்காமலேயே பின்னடைந்தன. அவற்றை புட்டத்தில் தட்டி ஊக்கி முன்செலுத்தினர். கயிற்றை இழுத்து இறக்கி விட்டபோது கால்களை உதறியபடி மூச்சு சீறி தரைமுகர்ந்தன. அவற்றைத் தட்டி ஊக்கி கொட்டகைகளுக்கு கொண்டுசென்றனர்.

அவை அந்நிலத்தை ஒருபோதும் இயல்பென உணரவில்லை. எத்தனை பழகிய பின்னரும் அவை அஞ்சியும் தயங்கியும்தான் வெளியே காலெடுத்து வைத்தன. ஆணையிட்டு, தட்டி, குதிமுள்ளால் குத்தி அவற்றை ஓட்டியபோது பிடரி சிலிர்த்து

விழியுருட்டி கனைத்தபின் கண்மூடி விரைவெடுத்தன. கற்களில் குளம்பு சிக்கி சரிந்து காலொடிந்து புரவிகள் விழுவது நாளும் நிகழ்ந்தது. அதன் மேல் அமர்ந்து ஓட்டுபவன் கழுத்தொடிந்து மாய்வதும் அடிக்கடி அமைந்தது. எனவே புரவியில் ஏறுபவர்கள் அஞ்சியும் தயங்கியுமே ஏறினர். அவர்களின் உளநடுக்கை புரவிகளின் நடுக்கம் அறிந்துகொண்டது. புரவிகளும் ஊர்பவரும் இறக்கும்தோறும் நிஷதபுரியில் புரவியூர்பவர்கள் குறைந்தனர். புரவியில்லாமலேயே செய்திகள் செல்லவும் காவல் திகழவும் அங்கே அமைப்புகள் உருவாயின. பின்னர் புரவிகள் நகரச்சாலைகளில் அணிநடை செல்வதற்குரியவை மட்டுமே என்னும் நிலை அமைந்தது.

நளன் எட்டு வயதில் ஒரு புரவியில் தனித்து ஏறினான். கொட்டகையில் தனியாக கட்டப்பட்டிருந்த கரிய புரவியின் அருகே அவன் நின்றிருந்தான். சூதன் அப்பால் சென்றதும் அவன் அதை அணுகி முதுகை தொட்டான். அச்சமும் அதிலிருந்து எழும் சினமும், கட்டற்ற வெறியும் கொண்டிருந்த காளகன் என்னும் அப்புரவியை கட்டுகளில் இருந்து அவிழ்த்து சிறுநடை கொண்டுசெல்வதற்குக்கூட அங்கே எவருமிருக்கவில்லை. தசைப்பயிற்சிக்காக அதன்மேல் மணல்மூட்டைகளைக் கட்டி சோலையில் அவிழ்த்துவிட்டு முரசறைந்து அச்சுறுத்துவார்கள். வெருண்டு வால்சுழற்றி அது ஓடிச் சலித்து நிற்கும். அதுவே பசித்து வந்துசேரும்போது பிடித்துக்கட்டி தசையுருவிவிட்டு உணவளிப்பார்கள்.

சிறுவனாகிய நளன் அதன் கட்டுகளை அவிழ்த்து வெளியே கொண்டுசெல்வதை எவரும் காணவில்லை. அவன் அதன்மேல் சேணம் அணிவித்துக் கொண்டிருந்தபோதுதான் சூதன் அதை

கண்டான். “இளவரசே...” என்று கூவியபடி அவன் பாய்ந்தோடி வந்தான். அதற்குள் நளன் புரவிமேல் ஏறிக்கொண்டு அதை கிளப்பிவிட்டான். அஞ்சி தயங்கி நின்ற காளகன் பின்னர் கனைத்தபடி பாய்ந்து வெளியே ஓடியது. நெடுந்தொலைவு சென்றபின்னர்தான் தன்மேல் எவரோ இருக்கும் உணர்வை அடைந்து சினம்கொண்டு பின்னங்கால்களை உதைத்து துள்ளித்திமிறி அவனை கீழே வீழ்த்த முயன்றது. கனைத்தபடி தன்னைத்தானே சுழற்றிக்கொண்டது.

நளன் அதற்கு முன் புரவியில் ஏறியதில்லை. ஆனால் புரவியேறுபவர்களை கூர்ந்து நோக்கியிருந்தான். புரவியேற்றம் பயில்பவர்களை சென்று நோக்கி நின்றிருப்பது அவன் வழக்கம். சேணத்தை அவன் சரியாக கட்டியிருந்தான். கடிவாளத்தை இறுகப்பற்றி கால்வளைகளில் பாதம்நுழைத்து விலாவை அணைத்துக்கொண்டு அதன் கழுத்தின்மேல் உடலை ஒட்டிக்கொண்டான். துள்ளிக் கனைத்து காட்டுக்குள் ஓடிய புரவி மூச்சிரைக்க மெல்ல அமைதியடைந்தது. மரக்கிளைகளால் நளன் உடல் கிழிபட்டு குருதி வழிந்தது. ஆனால் அவனால் அப்புரவியுடன் உளச்சரடால் தொடர்பாட முடிந்தது. அதை அவன் முன்னரே அறிந்திருந்தான்.

“நான் உன்னை ஆளவில்லை. இனியவனே, நான் உன்னுடன் இணைகிறேன். நாம் முன்னரே அறிவோம். நீ என் பாதி. என் உடல் நீ. உன் உயிர் நான். நீ புல்லை உண்ணும்போது நான் சுவையை அறிகிறேன். உன் கால்களில் நான் அறிவதே மண். உன் பிடரிமயிரின் அலைவில் என் விரைவு. நீ என் பருவடிவம். நம் உள்ளங்கள் ஆரத்தழுவிக்கொண்டவை. இனியவனே, என்னை புரவி என்றுணர்க! உன்னை நான் நளன் என்று அறிவதைப்போல” புரவி விழியுருட்டிக்கொண்டே

இருந்தது. நீள்மூச்செறிந்து கால்களால் நிலத்தை தட்டியது. அவன் அதன் கழுத்தைத் தட்டி “செல்க!” என்றான்.

அது அஞ்சுவது கூழாங்கற்களையும் பாறையிடுக்குகளையும்தான் என அவன் அறிந்தான். அதன் கால்கள் கூசுவதை அவன் உள்ளம் அறிந்தது. சிலகணங்களுக்குப்பின் அவன் கூழாங்கற்களை தான் உணரத்தொடங்கினான். இடுக்குகளை அவன் உள்ளம் இயல்பாக தவிர்த்தது. அதை புரவியும் அறிந்தது. அதன் பறதி அகன்றது. அவர்கள் மலைச்சரிவுகளில் பாய்ந்தனர். புல்வெளிகளை கடந்தனர். கோதையின் பெருக்கில் நீராடியபின் மீண்டும் ஓடிக்களித்தனர். புரவியாக இருப்பதன் இன்பத்தை காளகன் உணர்ந்தது.



திரும்பி அரண்மனை முற்றத்திற்கு வருகையில் அவனை எதிர்பார்த்து அன்னையும் தந்தையும் அமைச்சரும் காவலரும் பதைப்புடன் காத்திருந்தனர். அவனைக் கண்டதும் அன்னை அழுதபடி கைவிரித்து பாய்ந்துவந்தாள். அவன் புரவியிலிருந்து இறங்கியபோதே தெரிந்துவிட்டது, அவன் புரவியை வென்றுவிட்டான் என்று. வீரர்கள் பெருங்குரலில் வாழ்த்தினர். எங்கும் வெற்றிக்கூச்சல்கள் எழுந்தன. அவன் புரவியை வென்ற கதை அன்று மாலைக்குள் அந்நகரெங்கும் பேசப்பட்டது. மாலையில் அவன் காளகன் மேல் ஏறி நகரில்

உலா சென்றபோது குடிகள் இருமருங்கும் பெருகிநின்று அவனை நோக்கி வியந்து சொல்லிழந்தனர். எழுந்து வாழ்த்தொலி கூவினர்.

காளகனிடமிருந்து அவன் புரவியின் உடலை கற்றான். புரவியின் மொழி அதன் தசைகளில் திகழ்வதே என்றறிந்தான். அத்தனை புரவிகளுடனும் அவன் உரையாடத் தொடங்கினான். அவை அவனூடாக மானுடரை அறியலாயின. மிக விரைவிலேயே கிரிப்பிரஸ்தத்தில் புரவித்திறனாளர் உருவாகி வந்தனர். உருளைக்கற்களை புரவிக்குளம்புகள் பழகிக்கொண்டன. எந்தக் கல்லில் காலூன்றுவது எந்த இடைவெளியில் குளம்பமைப்பது என்பதை குளம்புகளை ஆளும் காற்றின் மைந்தர்களாகிய நான்கு மாருதர்களும் புரிந்துகொண்டனர்.

கிரிப்பிரஸ்தத்தின் புரவிப்படை பெருகியதும் அது செல்வமும் காவலும் கொண்ட மாநகர் என்றாயிற்று. செல்வம் பெருகும்போது மேலும் செல்வம் அங்கு வந்துசேர்கிறது. காவல் கொண்ட நகர் கரை இறுகிய ஏரி. தென்னகத்தில் இருந்த மதுரை, காஞ்சி, விஜயபுரி போன்ற நகர்களை விடவும் பொலிவுடையது கிரிப்பிரஸ்தம் என்றனர் கவிஞர். நிஷாதகுலத்தில் நளனைப்போல் அரசன் ஒருவன் அமைந்ததில்லை என்று குலப்பாடகர் பாடினர். அவன் கரிய எழிலையும் கைதிகழ்ந்த கலையையும் விண்ணில் விரையும் பரித்திறனையும் பற்றி எழுதப்பட்ட பாடல்கள் சூதர் சொல்லில் ஏறி பாரதவர்ஷமெங்கும் சென்றன.

கலியருளால் பிறந்த மைந்தன் அவன் என்று அன்னையும் தந்தையும் நளனுக்கு அறிவுறுத்திக்கொண்டே இருந்தனர். நாள்தோறும் முதற்கருக்கலில் அவன் நீராடி கரிய ஆடை

அணிந்து நீலமலர்களுடன் சென்று கலிதேவனை வணங்கி மீண்டான். வெல்வதெல்லாம் கலியின் கொடை என்றும் இயற்றுவதெல்லாம் அவன் இயல்வதால் என்றும் எண்ணியிருந்தான். ஒவ்வொரு முறை உணவுண்ணும்போதும் முதற்கவளத்தை அருகே வந்தமரும் காகத்திற்கு வழங்கினான். ஒவ்வொரு இரவும் கலியின் கால்களை எண்ணியபடியே கண்மூடித் துயின்றான்.

“எண்ணியது நிகழும் என்ற பெருமை கதைகளுக்கு உண்டு” என்றான் பிங்கலன். “ஆகவே அஞ்சுவது அணுகாமல் கதைகள் முடிவதில்லை. ஒரு பிழைக்காக காத்திருந்தான் கலிதேவன். ஒற்றை ஒரு பிழை. முனிவரே, பிழையற்ற மானுடர் இல்லை என்பதனால்தான் தெய்வங்கள் மண்ணிலிறங்க முடிகிறது. பிழைகள் அவை புகுந்து களம் வந்து நின்றாடச்செய்யும் வாயில்கள்.” தருமன் “ஆம்” என்றார். சகதேவன் “நளன் செய்த பிழை என்ன?” என்றான்.

“பொன், மண், பெண் என மூன்றே பிழைக்கு முதற்பொருட்கள். ஆனால் அவற்றை பிழைமுதல் என்றாக்குவது ஆணவம்தான்” என்றான் பிங்கலன். “வேனனை வென்றது. விருத்திரனை, ஹிரண்யனை, மாபலியை, நரகனை அழித்தது. ஆணவமே மண்ணில் பெருந்தெய்வம் போலும்” என்ற பிங்கலன் கைமுழவை முழக்கி “ஆம்! ஆம்! ஆம்!” என்றான்.

# நீர்க்கோலம் - 7

**6. முதல்மலர்**

நிஷத நாட்டு இளவரசனாகிய நளன் தன் பதின்மூன்றாவது வயதில் கோதாவரிக் கரையில் தாழைப்புதருக்குள் ஆடையின்றி நீராடிக்கொண்டிருந்த பெண் உடலொன்றின் காட்சியால் தன்னை ஆண் என உணர்ந்தான். அன்றுவரை அவன் அன்னையர் சூழ்ந்த அகத்தளத்தில் முதிரா மைந்தனாக விளையாடி வந்தான். அன்று தன் உடலை அச்சத்துடனும் அருவருப்புடனும் அறிந்து அங்கிருந்து விலகி ஓடி அப்பாலிருந்த நாணல் புதர்களுக்குள் ஒளிந்துகொண்டான். அந்த இழிச்சுமையிலிருந்து தன்னுள் உறையும் ஆத்மாவை பிரித்தெடுத்துவிடவேண்டும் என்று விழைந்தவன்போல அங்கு தவித்து எண்ணங்களில் உழன்று வெளிவர முடியாது பகல் முழுக்க அமர்ந்திருந்தான்.

அந்தி இருட்டியபின் எழுந்த காட்டின் ஒலியால் அஞ்சி சிறு பூச்சிகளின் கடியால் துன்புற்று எழுந்து நகர் நோக்கி சென்றான். சில கணங்களே நோக்கிய அக்காட்சி கண்முன் கற்சிலையென நிறுத்தப்பட்டதுபோல விலக்க முடியாததாக, எட்டி தொட்டுவிட முடிவதாக எப்படி நிலைகொள்கிறதென்று அவனுக்கு புரியவில்லை. எத்திசையில் திரும்பி ஓடினாலும் தன்னுள் இருந்து எழுந்து அது முன்நிற்கும் என்று உணர்ந்தபோது தலையை கையால் அறைந்துகொண்டு அழவேண்டுமென்று தோன்றியது.

அந்தி விளக்குகள் ஒளிரத் தொடங்கியிருந்த நகரத்திற்குள் நுழைந்து கையில் பூக்குடலைகளுடனும் நெய்க்கிண்ணங்களுடனும் ஆலயங்களுக்குள் சென்றுகொண்டிருந்த பெண்களை பார்த்தான். ஒவ்வொருவரும் ஆடையின்றி திரிவதுபோல் தோன்ற விதிர்த்து தலைகுனிந்து விழிகள் நிலம் நோக்க நடந்தான். ஒவ்வொரு அடிக்கும் அவன்

உடல் வாள் புண் பட்ட புரவியென சிலிர்த்து குளிர்ந்துகொண்டிருந்தது. ஆனால் பெண்களின் ஒவ்வொரு சிறு ஒலியையும் அவன் செவிகள் கேட்டன. காலடிகள் ஆடைஒலிகள் அணியொலிகள் மட்டுமல்லாது கைகள் தொடையில் உரசிக்கொள்வதும் தொடைகள் தொட்டுக்கொள்வதும்கூட. அனைத்து ஒலிகளும் காட்சிகளாக மாறின.

விழிகளை நோக்காமல் அரண்மனைக்குள் நுழைந்து ஓசையின்றி தன் தனியறைக்குள் புகுந்து மஞ்சத்தில் படுத்து மரவுரியால் உடலை போர்த்திக்கொண்டான். துயில் ஒன்றே அவன் விழைந்தது. தவிப்புடன் அதை நோக்கி செல்ல முயலும்தோறும் மேலும் விழிப்பு கொண்டான். எழுந்து கதவைத் திறந்து வெளியே ஓடி மீண்டும் இருள் செறிந்த காடுகளுக்குள் நுழைந்து புதைந்துவிட வேண்டுமென்று ஒருகணம் வெறிகொண்டான். பெருமூச்சுவிட்டுக்கொண்டு படுக்கையில் புரண்டான்.

அவன் திரும்பி வந்ததை அகத்தளத்தில் எவரும் அறியவில்லை. முன்னிரவில் அவனைத் தேடி வந்த அவன் அன்னை அறைக்கதவைத் திறந்து உள்ளே பார்த்தபோது மரவுரிக்குள் இருந்து வெளியே நீண்ட, தூக்கில் தொங்குபவனின் காற்றில் தவிக்கும் கால்களைப்போல நெளிந்துகொண்டிருந்த அவன் பாதங்களை பார்த்தாள். உள்ளே வந்து முகத்தை மூடியிருந்த அம்மரவுரியை பிடித்திழுத்து "தனியாக வந்து படுத்து என்ன செய்கிறாய்? எழு, உணவருந்த வேண்டாமா?" என்று அவன் தோளை தட்டினாள்.

திடுக்கிட்டு எழுந்து அவளைப் பார்த்த அக்கணமே மறுபுறம் சுருண்டு முழங்காலில் முகம் புதைத்துக்கொண்டான் நளன்.

அன்னை அவனைப் பற்றிப் புரட்டி “சொல், என்ன ஆயிற்று உனக்கு? உடல் நலமில்லையா?” என்றாள். “ஆம்” என்றபின் மீண்டும் சுருண்டுகொண்டான். அவள் அவன் நெற்றியில் கைவைத்தபின் “ஆம், அனல் தெரிகிறது. நான் சென்று மருத்துவரை வரச்சொல்கிறேன்” என்று கதவைத் திறந்து வெளியேறினாள்.

அக்கணமே அவன் தன் மேலாடையை எடுத்து அணிந்துகொண்டு கதவைத் திறந்து வெளியே இறங்கி படிகளினூடாக ஓசையின்றி காலெடுத்து வைத்து முற்றத்தை வந்தடைந்தான். விண்மீன்கள் மண்டிய வானை நிமிர்ந்து பார்த்தான். அப்போது உணர்ந்த விடுதலை எரியும் தோல்மீது குளிர்தைலம் பட்டதுபோல் இருந்தது. நகரத்தெருக்களினூடாக இருளின் பகுதிகளில் மட்டும் ஒதுங்கி நடந்து வெளியேறி மீண்டும் காட்டை அடைந்தான்.

அவன் கண்ட காடு முன்பொருபோதும் அறிந்திராததாக இருந்தது. நிழல்கள் வெவ்வேறு அழுத்தங்களில் ஒன்றின்மேல் ஒன்றென பதிந்து உருவான பெருவெளி. மரங்கள் அவ்விருளுக்குள் புதைந்து நின்றிருந்தன. கரிய மைக்குள் கரிய வண்டுகளென விலங்குகள் ஊர்ந்தன. சற்று விழி தெளிந்தபோது அவன் விலங்குகளின் விழிஒளிகளை கண்டான். அவற்றினூடாகப் பறந்த மின்மினிகளை. நீர்த்துளிகளின் வானொளியை. அவை செலுத்திய அறியா நோக்கை.

மின்னும் விழிகளினாலான காட்டை நோக்கியபடி ஆலமரத்தினடியில் குளிருக்கு உடம்பை ஒடுக்கி இரவெலாம் அமர்ந்திருந்தான். காலையில் முதல்கதிர் அவனைத் தொட்டபோதுதான் அங்கு துயின்றுவிட்டிருப்பதை உணர்ந்தான். பனி விழுந்து அவன் உடல் நனைந்து நடுங்கிக்கொண்டிருந்தது.

காய்ச்சல் எழுந்து உதடுகள் உலர்ந்து கண்கள் கனன்றன. எழுந்து நின்றபோது கால்கள் தள்ளாடி மீண்டும் அவ்வேர் மீதே விழுந்தான். அங்கிருந்து திரும்பி நகருக்குள் செல்ல தன்னால் முடியாது போகலாம் என்ற எண்ணம் இறப்பு அணுகி வருகிறதோ என்ற ஐயமாக மாறியது. அவ்வெண்ணம் அச்சத்தை அளிக்கவில்லை. இவையனைத்திலுமிருந்து விடுதலை என்னும் ஆறுதலே தோன்றியது.

இவை அனைத்தையும் இழந்து அறியாது எங்கோ செல்வது. முற்றிலும் இன்மையென்றாவது. இன்மையென்றால் வானம். கற்பூரத்தையும் நீரையும் உலரவைத்து உறிஞ்சிக்கொள்வது. ஒவ்வொன்றையும் வெறுமையென்றாக்கி தன்னுள் வைத்துக் கொள்வது. வானம் என்று எண்ண அவன் உடல் அச்சம்கொண்டு நடுங்கலாயிற்று. பின் அவன் அழத்தொடங்கினான். தனக்குத்தானே என விசும்பி அழுதபடி அங்கு கிடந்தான்.

மீண்டும் விழித்துக்கொண்டபோது உச்சிப்பொழுது கடந்துவிட்டிருந்தது. உணவும் நீருமிலாது நலிந்த உடலுக்குள் அனல் ஒன்று கொதித்தபடி குருதிக் குழாய்களினூடாக ஓடியது. உதடுகளை நாவால் தொட்டபோது மரக்கட்டையை தொடும் உணர்வு ஏற்பட்டது. கையூன்றி எழுந்து நிற்க முயன்று கால்தளர்ந்து மீண்டும் விழுந்தான். ஆம். இதுதான் இறப்பு. இன்றிரவுக்குள் என்னை விலங்குகள் தின்றுவிட்டிருக்கக்கூடும். தேடி வருபவர்கள் என் வெள்ளெலும்புகளை இங்கு கண்டெடுப்பார்கள். எஞ்சுவது ஏதுமில்லை. எஞ்சாமல் ஆதலென்பது வானில் மறைதல். இருந்ததோ என்று ஐயுற வைக்கும் நீர்த்தடம். இருந்ததேயில்லை என்று ஆகும் கற்பூரத்தின் வெண்மை.

மீண்டும் கையூன்றி எழத்தொடங்கி நிலைகுலைந்து கீழே விழுந்தான். மீண்டும் மயங்கித் துயின்று பின்னர் விழித்தபோது அவன் முன் வெண்தாடிச் சுருள்கள் நெஞ்சில் படர வெண்குழல் கற்றைகளைச் சுருட்டி நெற்றியில் முடிச்சிட்டிருந்த முதியவர் ஒருவர் கனிந்த விழிகளுடன் நோக்கிக்கொண்டிருந்தார். கைகளைத் தூக்கி 'வணங்குகிறேன், உத்தமரே' என்றுரைக்க அவன் விரும்பினான். உதடுகள் ஒன்றுடனொன்று ஒட்டியிருந்தமையால் மெல்லிய அசைவு மட்டுமே எழுந்தது. விரல்கள் விதிர்த்து பின் அடங்கின.

அவர் தன் கையில் இருந்த நீரை அவன் முகத்தில் மீண்டும் மீண்டும் அறைந்து விழிகளை துடைத்தார். தலையை சற்றே ஏந்தி சுரைக்குடுவையில் இருந்து குளிர்நீரை மெல்ல ஊட்டினார். நீரை நோக்கி இழுக்கப்பட்டதுபோல் சென்றது அவன் வாய். அவன் உடலின் அனைத்துத் தசைகளும் நீருக்காக தங்களை ஏந்திக்கொண்டன. குளிர்நீர் வாயிலிறங்கி தொண்டைக்குள் இறங்குவதை உணர்ந்தான். நூற்றுக்கணக்கான உலை முனைகளில் அனல் அவிந்தது. உடல் குளிர்ந்ததும் மெல்ல நடுக்குற்றது. அவர் தன் தோற்பையிலிருந்து கனிந்த மாங்கனி ஒன்றை எடுத்து அவனுக்களித்து "உண்ணுக!" என்றார்.



அவன் அதை வாங்கி இரு கைகளாலும் பிடித்து குரங்குகளைப்போல கடித்து மென்று உண்டான். தான் உண்ணும் ஒலியை ஈரச்சேற்றில் நீர்த்துளி விழும் ஒலிபோல கேட்டுக்கொண்டிருந்தான். நூற்றுக்கணக்கான சர்ப்பங்கள் நெளிந்து பின்னி முட்டி மோதி அதை கவ்வி விழுங்குவதுபோல உடற்தசைகள் அக்கனியை வாங்கி உண்டன. உண்டு முடித்ததும் அவர் மீண்டும் நீரருந்தச் சொன்னார். “எழுந்தமர்க! சுட்ட கிழங்கொன்று

வைத்திருக்கிறேன். குடல் உணவுக்குப் பழகியபின் அதை உண்ணலாம்” என்றார்.

அவன் எழுந்தமர்ந்தபோது விழிகளில் ஒளி வந்திருந்தது. நாவில் ஈரமும் தசைகளில் நெகிழ்வும். எண்ணங்கள் மீது சித்தம் கட்டுப்பாட்டை அடைந்திருந்தது. “என் பெயர் அசனன். இக்காட்டில் வாழ்பவன். இருபத்தெட்டாண்டுகளாக ஏழ்புரவியில் விண்ணளப்போனை எண்ணி தவம் செய்பவன்” என்றார் முனிவர். அவன் அவர் கால்களைத் தொட்டு தலை அணிந்து “என் பெயர் நளன். கிரிப்பிரஸ்தத்தின் இளவரசன்” என்று சொன்னான். “ஆம். தாங்கள் யாரென்பதை கைகளில் அணிந்திருக்கும் முத்திரைக் கணையாழிகளிலிருந்து கண்டுகொண்டேன்” என்று அசனர் சொன்னார். “ஏன் இங்கு வந்தீர்? வழி தவறிவிட்டீரா?”

“இல்லை. நான் என் உடலை தொலைக்க விழைந்தேன். எங்கேனும் முற்றாக இதை மறைத்துவிட்டு மீள முயன்றேன்” என்றான் நளன். “உடலை உதிர்ப்பதா? உடலைக் கட்டியிருப்பது உயிரல்ல, ஊழ். அது விடுபடவேண்டுமென்றால் அம்முடிச்சுகள் அவிழவேண்டாமா?” என்று அவர் புன்னகையுடன் சொன்னார். அவன் கண்களை மூடிக்கொண்டு அதுவரையிலான தனது எண்ணங்களை தொகுத்துக்கொள்ள முயன்றான்.

மீண்டும் நீரருந்தக் கொடுத்தபின் சுட்ட கிழங்கை அவன் உண்ணும்படி அளித்தார் முனிவர். கிழங்கை உண்டு மீண்டும் நீரருந்தி சற்று முகங்கழுவியதும் உடலில் ஆற்றல் ஊறிவிட்டிருப்பதை உணர்ந்தான். வேர் ஒன்றைப் பற்றியபடி மெல்ல எழுந்து நிற்க முடிந்தது. “வருக!” என்று அவன் தோளைப்பற்றி அவர் அழைத்துச்சென்றார். “இங்கு கோதையின் கரையில் நாணற்காட்டிற்குள் எனது சிறுகுடில் அமைந்துள்ளது.

என்னுடன் எவருமில்லை. இன்று பகல் உடன் தங்குக! மாலை நானே உம்மை அரண்மனைக்கு கொண்டு சேர்ப்பேன்” என்றார்.

அசன முனிவருடன் சென்று அவரது குளிர்ந்த சிறுநாணல் குடிலுக்குள் மண் தரையில் விரிக்கப்பட்ட நாணல் பாயில் படுத்துக்கொண்டான் நளன். “சொல்க, சொல்வதற்குரியவை என்று உமக்குத் தோன்றினால்” என்றார் அசனர். அவன் கண்களை மூடி பேசாமலிருந்தான். “நன்று, சொல்லத் தோன்றுகையில் தொடங்குக! அதுவரை எனது தனிமையில் நானிருக்கிறேன்” என்றபடி அவர் எழுந்து சென்றார். வெளியே அவர் நாணல்களை வெட்டிக்கொண்டு வருவதை, அவற்றை சீராக நறுக்கி நிழலில் காய வைப்பதை வாயிலினூடாக நோக்கியபடி அவன் படுத்திருந்தான்.

எவரிடமேனும் இதை சொல்லவேண்டுமா என்றெண்ணினான். எப்போதேனும் சொல்லத்தான் போகிறோம் என்று தோன்றியது. அப்படியெனில் இவரிடமன்றி பிறிதெவரிடம் சொல்லக்கூடும் என்ற மறுஎண்ணம் வந்தது. இந்தக் காட்டில் இவரை நான் சந்திக்க வேண்டுமென்பதே ஊழ் போலும். இவரிடம் இதை சொல்ல வேண்டுமென்பதே ஆணை. அவன் சுவர் பற்றி எழுந்து வெளியே வந்து குடில் முகப்பிலிடப்பட்ட மரத்தண்டின்மேல் அமர்ந்துகொண்டு “நான் கூற விழைகிறேன், முனிவரே” என்றான்.

“கூறுக, உரிய சொல்லாக்குவது மட்டுமே உணர்வுகளை வென்று செல்வதற்கான வழி. புரிந்துகொள்ளப்படாமலிருக்கையிலேயே அவை உணர்வுகள். புரிந்துகொள்ளப்பட்டவுடன் அவை கருத்துக்கள். உணர்வுகளுக்கு மாற்றும் விளக்கமும் இல்லை. கருத்துகளுக்கு அவை உண்டு” என்று அசன முனிவர் சொன்னார். அத்தகைய

சொற்களை அவன் கல்விச்சாலையில் வெறும் பாடங்களென கேட்டிருந்தான். அன்று அவை வாழ்க்கை எனத் திரண்டு நேர்முன் நின்றிருப்பதுபோல் தோன்றின.

“இப்புவியெங்கும் நாமுணர்ந்து இருப்புகொண்டிருக்கும் அனைத்துப் பொருட்களும் கருத்துகளே. கருத்துகளாக மாறி மட்டுமே பொருட்கள் நம்மை வந்தடைய முடியும். அப்பால் அவை கொள்ளும் மெய்ப்பொருண்மை என்ன என்று ஒருபோதும் நாம் அறியக்கூடுவதில்லை. பொருட்களை கலந்தும் விரித்தும் நாம் உருவாக்கிக் கொண்டிருக்கும் கருத்துகளின் தொகை அலைபெருகிச்செல்லும் ஒழுக்கையே வாழ்வென்கிறோம். அவ்வாழ்வின் நினைவுப்பதிவையே எஞ்சுவதெனக் கொள்கிறோம். நீர் சொல்லத்தொடங்குவது அதில் ஒரு சிறு குமிழி மட்டுமே என்றுணர்க” என்றார் அசனர்.

ஒருகணம் உளமெழுந்து அக்கருத்தைத் தொட்டதுமே அதுவரை கொண்டிருந்த உணர்வுகளனைத்தும் பொருளற்று சிறுத்து விழிக்கெட்டாதபடி மறைவதைக் கண்டு வியந்தான். சொல்லவேண்டியதில்லை என்றுகூட தோன்றியது. பெருமூச்சுடன் “ஆம்” என்றான். பின்னர் புன்னகைத்தபின் “வெற்றாணவம். வேறொன்றுமில்லை. அதனாலேயே அதை இத்தனை பெருக்கிக்கொண்டேன்” என்றான். “சொல்க, இனி சொல்வது எளிதாகும்” என்றார் அசனர். அவன் முதலிரு சொற்களுக்குள்ளேயே அதை வெறும் வேடிக்கை என்றுணர்ந்தான். நகையாட்டும் தற்களியாட்டுமாக அவ்வுணர்வுகளை சொல்லி முடித்தான்.

உரக்க சிரித்து முனிவர் சொன்னார் “நன்று, காமத்தைப்பற்றி பேச உகந்த வழி என்பது அதை இளிவரலாக மாற்றி முன்வைப்பதே.” அவன் “ஆம், ஒரு புன்னகைக்கு அப்பால்

அதில் பொருளேதுமில்லை” என்றான். அவர் “என்னிடம் கேட்க வினாவேதும் உள்ளதா? நான் விளக்க புதிர் எஞ்சியுள்ளதா?” என்றார். “இல்லை, எடுத்து வகுத்துச் சொன்னதுமே நானே அனைத்தையும் உணர்ந்துவிட்டேன்” என்றான் நளன். “திரும்பிச் செல்க! இனி உமக்கு இவ்வண்ணம் அரண்மனை துறந்து காடேகல் நிகழ்வது மிகவும் பிந்தியே. அன்று பிற வினாவொன்று உடனிருக்கும். வேறுவகை துயர் சூழ்ந்து வரும். அன்றும் இச்சொல்லையே எண்ணிக் கொள்க!” என்றார் முனிவர்.

“தங்கள் நற்சொற்கொடை என்றே இதை கொள்கிறேன்” என்றான் நளன். “இளைஞரே, ஒன்றுணர்க! உமது உடலில் முளைத்துள்ள காமம் என்பது இங்குள்ள ஒவ்வொரு புல்லிலும் புழுவிலும் பூச்சியிலும் விலங்கிலும் எழும் உயிரின் முகிழ்வு. முளைத்தெழ, பெருக, திகழ விரும்பும் அதன் இறையாணை. கட்டற்று அது பெருகுவதே இயல்பு. ஈரமுள்ள இடத்திலெல்லாம் புல்விதைகள் முளைக்கின்றன. ஆனால் மானுட சித்தம் அதன்மேல் ஒரு ஆணையை விடுத்தாக வேண்டும். உம் ஆணை இது எனக் கொள்க!” அசனர் சொன்னார்.

“நீர் அடையவிருக்கும் பெண் எங்கோ பிறந்து முழுமை நோக்கி வந்துகொண்டிருக்கிறாள். அவளுக்காக உமது உயிர்விசை இங்கு காத்திருக்கிறது. தனக்குரிய பெண்ணை கண்டடைகையில் அவளே முதல் பெண்ணென ஒருவன் உணர்வான் என்றால் நல்லூழ் கொண்டவன். அவளுக்கு முன் தூயவனென்றும் தகுதியானவனென்றும் உணரமுடிவதுபோல் பேரின்பம் எதுவுமில்லை. உடல் கொண்ட காமம் மிகச்

சிறிதென்றுணர்க! உளம் நிறையும் காமம் தெய்வம் இறங்கி வந்தாடும் களியாட்டு. உம்மில் அது திகழ்க!”

அன்று மாலை அரண்மனைக்குத் திரும்பியபோது நளன் பிறிதொருவனாக இருந்தான். இளங்காளை என நடையில் தோள்நிமிர்வில் நோக்கில் ஆண்மை திகழ்ந்தது. சொல்லில் அறிந்தவனின் உள்அமைதி பொருந்தியிருந்தது. அவனைக் கண்டதுமே அன்னை அவன் பிறிதொருவனாகிவிட்டான் என்று எண்ணினாள். முதல் முறையாக அவன் முன் விழிதாழ்த்தி “எங்கு சென்றிருந்தாய்?” என்று தாழ்ந்த குரலில் கேட்டாள். அவள் குரலில் எழுந்த பெண்மையை உணர்ந்து கனிந்த தொனியில் “காட்டிற்கு” என்றபின் “எனக்கொன்றும் ஆகவில்லை, அன்னையே. நான் நீராட விரும்புகிறேன்” என்றான்.

“நன்று” என்றபின் அவள் விலகிச் சென்றாள். தன் அணுக்கச்சேடியும் மைந்தனின் செவிலியுமான பிரபையிடம் “அவன் முற்றிலும் மாறிவிட்டிருக்கிறான். நேற்றிரவு என்ன நிகழ்ந்ததென்று அறிய விரும்புகிறேன்” என்றாள். “என்ன நிகழ்ந்தது என்று எண்ணுகிறீர்கள்?” என்றாள் பிரபை. “அவன் பெண்ணை அறிந்திருக்கக்கூடும்” என்றாள் அவள். “அது நன்றல்லவா?” என்றாள் சேடி. “பெண்ணை முதலில் அறிபவன் தகுதியான ஒருத்தியிடம் அதை அறியவேண்டும். ஏனென்றால் முதல் அறிதலிலிருந்து ஆண்களால் மீள முடிவதில்லை” என்றாள் அரசி.

“ஆண்களுக்கு காமத்தில் தேடலென்பதே இல்லை. கடந்து போதல் மட்டுமே அவர்களுக்கு அளிக்கப்பட்டுள்ளது. அகன்ற ஒவ்வொன்றும் பெரிதாகும் என்பது நினைவின் நெறி. எனவே

அவன் உள்ளத்தில் இந்த முதல் அறிதலே பேருருக்கொண்டு நிற்கும். நாள் செல்ல வளரும். இனி வரும் உறவனைத்தையும் இந்த முதல் அறிதலைக் கொண்டே அவன் மதிப்பிடுவான். இது நன்றன்று எனில் அவன் காமங்கள் அனைத்தும் நன்றென்று ஆகாது. இது சிறுமையுடையது என்றால் இப்பிறவியில் சிறு காமமே அவனுக்கு உரித்தாகும்" என்றாள் அன்னை.

தாழ்ந்த விழிகளுடன் தன்னுடன் என அவள் சொன்னாள் "பெண்கள் நற்காமத்தை தேடிக்கொண்டிருக்கிறார்கள். எனவே காமத்துடன் அவர்கள் வளர்கிறார்கள். முதற்காமம் அவர்களுக்குள் சுருங்கி உடைந்த கைவளையென, உடுத்து மறந்த சிற்றாடையென எங்கோ நினைவுக்குள் கிடக்கும். தனக்குரியவனை சென்றடைந்தவள் ஒருபோதும் நினைவுகளை நோக்கி திரும்பமாட்டாள். தன்னை அதற்கு முற்றும் ஒப்படைப்பாள். பிறிதொன்றிலாதிருப்பாள். நிறைந்து குறையாமல் ததும்பாமல் திகழ்வாள்."

"பெண்களைப்பற்றி நாம் கவலை கொள்ள வேண்டியதில்லை. அறிவதும் ஆய்வதுமாகச் செல்லும் அவர்களால் தம்மை மீட்கவும் திருத்தவும் இயலும். ஆண்களைக் குறித்தே பெற்றோர் எச்சரிக்கை கொள்ளவேண்டும். ஆனால் அரச குடியிலோ பிற குலங்களிலோ எவரும் அதைப்பற்றி கவலை கொள்வதில்லை. எதிர்பாரா நிகழ்வுகளின் ஆடல்வெளிக்கு மைந்தரை எதுவும் கற்பிக்காமல் திறந்துவிடுகிறார்கள். நானும் அதையே செய்துவிட்டேன் என்று அஞ்சுகிறேன்" என்றாள் அரசி.

"முன்னர் நூறுமுறை அதை எண்ணியதுண்டென்றாலும் என் மைந்தனை இளஞ்சிறுவனென்று எண்ணும் அன்னையின் அறியாமையைக் கடந்து என்னால் செல்ல முடியவில்லை.

நேற்று முன்தினம் அவன் அறைக்கதவைத் திறந்து உள்ளே நுழைந்து பார்த்தபோதே மைந்தன் இளைஞனாகிவிட்டிருந்ததை உணர்ந்தேன். அதை அத்தருணத்திலும் ஒத்திப்போட விழைந்ததனால் எதைச் சொல்வது என்றறியாமல் பொருளற்ற பேச்சை உதிர்த்துவிட்டு மீண்டு வந்தேன். வரும்போதே என் உள்ளத்தின் ஆழம் சொல்லிவிட்டது, அவன் ஆண் என்று. ஆகவேதான் உன்னை அழைத்து அவனிடம் பேசச் சொன்னேன். அதற்குள் அவன் கிளம்பிச் சென்றுவிட்டான்.”

“செவிலியே, சென்றவனல்ல மீண்டு வந்திருப்பவன். அவன் அடைந்த பெண் யார் என்பதை மட்டும் அறிந்து வருக!” என்றாள் அரசி. பிரபை சிரித்து “ஒருநாளில் ஒருவனை முற்றாக மாற்றி அனுப்புவது மானுடப் பெண்ணால் இயல்வதா என்ன? அது கானக அணங்காகவே இருக்கக்கூடும்” என்றாள். “நகையாடாதே! நான் அவனை எண்ணி துயர் கொள்கிறேன். சென்று அவனிடம் சொல்லாடிவிட்டு வா” என்றாள் அன்னை.

செவிலி அவன் அறைக்கு வந்தபோது அவன் நீராடி உடைமாற்றி அணிகள் சூடிக்கொண்டிருந்தான். தொலைவிலேயே அவனைக் கண்டதும் செவிலியின் நடை தளர்ந்தது. முலைகளுக்குமேல் மென்மலர்போல் அவள் எடுத்துச் சூடிய சிறுமைந்தனல்ல அவன் என்றுணர்ந்தாள். எனவே மிகையான இயல்பு நடையுடன் அருகே வந்து உரக்க நகைத்து “எங்கு சென்றிருந்தாய், மைந்தா? அன்னை உன்னை எண்ணி நேற்றும் முன்தினமும் துயருற்றிருந்தார்” என்றாள். அவன் அவள் விழிகளை நோக்கி “காட்டுக்குச் சென்றிருந்தேன். அங்கு அசனமுனிவரைப் பார்த்தேன்” என்றான்.

“அவரா? முன்பு இங்கு நிமித்திகராக இருந்தார். பித்தரென்றும் தனியரென்றும் இங்குளோர் அவரை நகையாடினர். ஒருநாள்

நிமித்த நூல்கள் அனைத்தையும் எரித்து அதில் ஒரு கிள்ளு நீறெடுத்து நெற்றியிலிட்டு கிளம்பிச்சென்றார் என்றார்கள்” என்றாள் பிரபை. பின்னர் “காட்டில் பிற எவரை சந்தித்தாய்?” என்றாள். அவ்வினாவை உடனே உணர்ந்து திரும்பி “பெண்கள் எவரையும் அல்ல” என்றான். நெஞ்சில் நிறைந்த விடுதலை உணர்வுடன் “நான் அதை கேட்கவில்லை” என்றாள் செவிலி.

சிரித்து “அதை கேட்க எண்ணினீர்கள்” என்றான் நளன். “சரி, கேட்டுவிட்டேன்” என்றாள் பிரபை. “அதற்கே மறுமொழியுரைத்தேன். பெண்கள் எவரையும் அணுகவில்லை” என்றான். “ஆனால் பெண்களைக் குறித்து ஒரு வரியை அடைந்திருக்கிறாய். அது என்ன?” என்று செவிலி கேட்டாள். “காமம் ஓர் அருமணி. அதை சூடத் தகுதி கொண்டவர்களுக்கே அளிக்கவேண்டும். அதுவரை அதை காத்து வைத்திருக்க வேண்டும். கருவூலத்தில் நிகரற்ற மணி ஒன்றுள்ளது என்ற தன்னுணர்வே பெருஞ்செல்வம். கரந்திருக்கும் அச்செல்வத்தை பணமென்றாக்கி நூறு நகரங்களில் புழங்க முடியும். அதைத்தான் உணர்ந்தேன்” என்றான் நளன்.

“அதை அவர் சொன்னாரா?” என்றாள் செவிலி. “அவர் சொல்லவில்லை. இவை என் சொற்கள்” என்றபின் அவள் இரு தோள்களிலும் கைவைத்து கண்களுக்குள் நோக்கி “பிறகென்ன அறிய வேண்டும், அன்னையே?” என்றான். அவள் விழிகள் தாழ்த்தி புன்னகைத்து “ஏதுமில்லை” என்றாள். முதல் முறையாக இத்தொடுகையை தன் உள்ளம் ஏன் இத்தனை உவகையுடன் எதிர்கொள்கிறது? முதல் முறையாக அவன் முன் ஏன் நடை துவள்கிறது? ஏன் குரலில் ஒரு மென்மை கூடுகிறது?

“அரசவைக்குச் செல்கிறாயா?” என்று கேட்டாள். “ஆம், நெடுநாளாயிற்று சென்று” என்றபின் அவன் “வருகிறேன்,

அன்னையே” என்று சொல்லி காத்து நின்ற பாங்கனுடன் சேர்ந்துகொண்டான். அவன் செல்வதை நோக்கி தோற்றம் மறைவது வரை விழியிமைக்காது நின்றபின் சிலம்புகள் ஒலிக்க இடைநாழியில் துள்ளி ஓடி மூச்சிரைக்க அரசியிடம் சென்ற செவிலி “அவன் பெண்ணென்று எவரையும் அறியவில்லை. தன்னையே அறிந்திருக்கிறான், அரசி” என்றாள்.

# நீர்க்கோலம் - 8

**7. அலையன்னம்**

ஒவ்வொரு நாளும் ஒரு முகமேனும் நளனின் கண்முன் வந்துகொண்டிருந்தது. அறியாது வந்து விழிமுட்டி பதைத்து விலகிக்கொள்பவை. மறைவிலிருந்து மெல்லிய அசைவென வெளிப்பட்டு நோக்குரசி இமை தாழ்த்தி முகம் சிவக்க அகல்பவை. உரக்க பேசி கண் திருப்பி உள்ளம் அளித்து மீள்பவை. ஒன்றுமறியாப் பேதையென முன் வந்து நின்று குதலைச் சொல்லெடுப்பவை. இதற்கெல்லாம் அப்பால் நான் என்று நடித்து ஏதேனும் உரைத்து ஒசிந்து செல்பவை. ஓவியத்தில் எழுதப்படுபவை. சூதர் சொற்களால் தீட்டப்படுபவை. ஒவ்வொரு முகத்தையும் இதுவா இதுவேதானா என்று அணுகி அன்று பிறிதொன்று என்று அகன்று கொண்டிருந்தான்.

அவன் தேடுவதை விழிகளே காட்டியமையால் அவன் முன் தோன்றுபவர்கள் பெருகிக்கொண்டிருந்தனர். முகங்களே முகங்களை மறைக்கும் அலையென்றாக எவர் முகமும் அவனுள் நிலையாமலாயிற்று. நிஷத அரசின் இளவரசனுக்கு துணைவியாவதென்பது அக்குடிப் பெண்கள் அனைவருக்கும்

கனவாக இருந்தது. சூழ்ந்திருந்த சிறு ஷத்ரிய நாடுகளுக்கோ நிஷதர்களின் செல்வமும் படைவல்லமையும் அவர்களை பெரும் ஷத்ரிய அரசுகளின் படைக்கலங்களிலிருந்து காக்கும் கோட்டை. நாளுமொரு தூது வீரசேனனின் அவைக்கு வந்துகொண்டிருந்தது.

"உன் மணமகளை தெரிவு செய்து சொல்க!" என்று அரசி நளனிடம் சொன்னாள். "நான் அவளை இன்னமும் காணவில்லை. கண்டதும் அறிவேன் என்று எண்ணுகின்றேன்" என்றான். "அவள் எவ்வண்ணம் இருக்க வேண்டும் என்று சொல். அதை எண்ணி உரைத்து ஒற்றரையும் சூதரையும் அனுப்பி தேடச்சொல்கிறேன்" என்று அரசி கேட்டாள். "உண்மையிலேயே அவள் எவ்வண்ணம் இருப்பாளென்று எனக்கு தெரியவில்லை. நான் பார்த்த பல இளவரசிகள் பேரழகிகள். செல்வம் திகழும் நாடுகளுக்குரியவர்கள். நூல் கற்றவர்களும் பலர். நற்குடிப்பண்புகள் கொண்ட முகங்களே மிகுதி. இவற்றுக்கு அப்பால் நான் தேடுவதென்னவென்று நானறியேன்" என்று நளன் சொன்னான்.

சலிப்புடன் அன்னை "எதை தேடுகிறாய் என்று அறியாவிட்டால் உனக்குரிய பெண் உன் முன்னால் வந்தால்கூட உணராது கடந்து செல்லவே நேரும்" என்றாள். "முன்னரே கடந்துவிட்டிருக்கவும் கூடும்" என்று செவிலி பிரபை சொன்னாள். "அவ்வண்ணம் நானும் அஞ்சுகிறேன். எனினும் என்னுள் இருக்கும் உள்ளுணர்வொன்று சொல்கிறது, முதல் நோக்கிலேயே அவளை என்னால் கண்டடைய முடியும் என்று" என்றான் நளன். "இறுதியில் இரு காலில் எழுந்த குரங்கொன்று அமையும்" என்று சீற்றத்துடன் சொல்லிவிட்டு அன்னை எழுந்து சென்றாள். செவிலி அவள் செல்வதை நோக்கிவிட்டு

இளநகையுடன் “அரம்பையர் அமைந்தாலும் அன்னைக்கு அவ்வண்ணமே தோன்றும்” என்றாள்.

ஆவணித் திருவிழாவின்போது கங்கநாட்டுச் சூதன் ஒருவன் தன் துணைவியுடன் நிஷத நாட்டுக்கு வந்தான். அரண்மனையில் பெருந்தோள் ராமன் நீள்விழி சீதையை வில் முறித்து மணந்த தொல்கதையை அவன் சொன்னான். கதை முடிந்து பரிசில் பெற்று அனைவரும் பிரிந்து செல்ல தன் விறலியுடன் அவனும் முழவும் யாழும் பூட்டி கட்டி இடைநாழியில் நடந்துகொண்டிருந்தான். அரண்மனைத் தோட்டத்தில் இருந்த அணிச்சுனையில் நீந்திக்கொண்டிருந்த அன்னங்களில் ஒன்று கழுத்தை வளைத்துத் திருப்பி அவர்களைப் பார்த்தது. வியந்து இரு கைகளையும் நீட்டி விறலி கூச்சலிட்டாள். பின்னர் பாய்ந்து தன் கொழுநனின் கையை பற்றிக்கொண்டு “அவ்வோவியத்தில் திகழும் அதே அன்னம்போல் அல்லவா?” என்றாள்.

அவளுக்குப்பின் வந்துகொண்டிருந்த பிரபை “எந்த ஓவியத்தில்?” என்று கேட்டாள். “மண்ணில் திகழ்ந்த பெண்டிரிலேயே பேரழகியின் ஓவியம். உடனிருப்பது வெண்ணிற அன்னம். அவள் உள்ளம் அது என்று உணர்த்துவது அக்காட்சித்திறம்” என்றாள் விறலி. “காட்டுக!” என்று ஆர்வத்துடன் அருகணைந்தாள் செவிலி. “அந்த ஓவியத்திரைச்சீலை விதர்ப்பத்தில் எனக்கு அளிக்கப்பட்டது, அன்னையே. ஷத்ரிய அரண்மனைகளில் மட்டும் அதை காட்டும்படி ஆணை” என்றான் சூதன். “இவள் நாவடக்கமில்லாதவள்” என அவளை கடிந்தான். “அச்சொல் கேட்டபின் நான் பார்க்காமலிருக்க இயலாது” என்றாள் செவிலி.

“பொறுத்தருள வேண்டும், அன்னையே. ஷத்ரிய அரசருக்கன்றி பிறருக்கு அதை காட்ட இயலாது” என்றான் சூதன். “எங்கள் இளவரசர் மணப்பெண் நாடுகிறார். அவருக்கு காட்டலாம்” என்று செவிலி சொன்னாள். “நிஷத குடியில் ஒருபோதும் ஷத்ரியப் பெண் வந்து குடியமையப்போவதில்லை. தங்களிடம் இச்சித்திரத்தை காட்டுவதற்கு எனக்கு ஒப்புதலும் இல்லை” என்றபின் தலைவணங்கி சூதன் திரும்பி நடந்தான். அவனுடன் சென்ற விறலி “நாம் ஆணைகளை மீறமுடியாது. அதை மென்மையாக சொல்ல வேண்டியதுதானே? ஏன் இத்தனை கடுமை?” என்றாள்.

அப்போது எதிர்த்திசையில் படியேறி வந்த நளன் செவிலியிடம் “அன்னையே, அரசி தன் அணியறைக்கு சென்றுவிட்டார்களா?” என்றான். விறலி அவனை நோக்கி வியந்து இரு கைகளாலும் நெஞ்சைப் பற்றியபடி நின்றாள். “அணியறையில் இருக்கிறார்கள். ஆனால் தாங்கள் சென்று பார்க்கலாம்” என்றாள் செவிலி. தலைவணங்கி நளன் மறுவாயிலினூடாக சென்று மறைய மூச்சொலியுடன் திரும்பிய விறலி “இவர் யார்?” என்றாள். செவிலி “நான் இவரைக் குறித்தே உரைத்தேன். எங்கள் இளவரசர் நளன்” என்றாள். “இந்திரனுக்கு நிகரான பேரழகுடன் இருக்கிறார். இவர் நிஷத குடியில் பிறந்தவரா?” என்றாள் விறலி. செவிலி சற்றே சினத்துடன் “அவர் அணிந்திருந்த முத்திரைக் கணையாழியை வாங்கி காட்டவா?” என்று கேட்டாள்.

விறலி சிற்றடி ஒலிக்க விரைந்து சென்று தன் கணவனின் தோளிலிருந்த மான்தோல் பொதியைப்பற்றி இழுத்து தரையிலிட்டு பதறும் கைகளால் அதன் முடிச்சுகளை அவிழ்த்து உள்ளே மடித்து சுருட்டப்பட்டிருந்த பட்டுத்துணி

திரைச்சீலையை எடுத்து விரித்தாள். கிளர்ந்த குரலில் “இதுதான் விதர்ப்ப இளவரசியின் ஓவியம். இளவரசரிடம் காட்டுக!” என்றாள். “என்ன செய்கிறாய்? அறிவில்லையா உனக்கு?” என்று சினந்தபடி விறலியின் கைகளைப் பற்றினான் சூதன். “சீ! கையை எடு, அறிவிலியே! விதர்ப்பத்தின் இளவரசிக்கு ஊழ் தெரிவு செய்த மணமகன் இவரே. இதுகூடவா தெரியவில்லை உனக்கு? கற்ற காவியங்கள் கண்களில் ஒளியாக அமையவில்லையா?” என்றாள் விறலி.

குழப்பத்துடன் திரும்பி நளன் சென்ற வழியை பார்த்துவிட்டு “ஆம். ஒருகணம் எனக்கும் அவ்வாறே தோன்றியது. மூன்று தெய்வங்களும் நினைத்தாலும் பிறிதொன்று அமையாது” என்றான் சூதன். “அவ்வண்ணமெனில் என்ன ஐயம்?” என்றபின் திரும்பி செவிலியிடம் “சென்று அளியுங்கள் இந்தச் சித்திரத்தை. அவர் மணக்கவிருக்கும் பெண் இவர். பிறிதொருத்தியுமல்ல. இது சொல்லில் சுடர்கொண்ட விறலியின் கணிப்பு” என்றாள். உணர்வு மேலிட கண்கலங்கி கைகூப்பி “கலைமகளை வணங்குகிறேன். என்றும் உங்கள் சொல் திகழ்க!” என்றபின் செவிலி அந்த ஓவியத்தை வாங்கிக்கொண்டாள்.

பிரபை நடக்க முடியாமல் தளர்ந்து அவ்வப்போது நின்று மூச்சு வாங்கி அரசியின் அணியறைக்குள் சென்றாள். அங்கே அரசியின் குழல் சுருள்களை இரு சேடியர் அவிழ்த்து விரித்து நீட்டிக்கொண்டிருக்க எதிரே சுவர் சாய்ந்து நின்று நகைச்சொல் ஆடிக்கொண்டிருந்த நளனைக் கண்டு அருகணைந்து “அரசே, கங்கவிறலி அளித்த சித்திரம் இது. இதில் இருப்பவளே தங்கள் அரியணைத் துணைவி” என்று சொன்னாள். “என்ன? என்ன?”

என்று நளன் பதற “இது சொல்நின்ற விறலியின் கூற்று. அவர்கள் உரைத்தவை பிழைப்பதில்லை” என்றாள் பிரபை.

நளன் “இந்த முகத்தை நீங்கள் பார்த்துவிட்டீர்களா, அன்னையே?” என்றான். “இல்லை. முதலில் நீங்களே பார்க்கவேண்டும் என்று எண்ணினேன்” என்றாள் செவிலி. அதை வாங்கி விரித்து நோக்கிய நளன் ஒருகணம் விழிநிலைக்க பின் முகம் பதறி, அலைவுறும் கைகளால் அதைச் சுருட்டி திருப்பி அளித்தான். “என்ன?” என்று அரசி கேட்டாள். “இல்லை” என்று அவன் சொன்னான். “சொல், என்ன எண்ணுகிறாய்?” என்றாள் அரசி. “தெரியவில்லை, ஒருகணம் என் நெஞ்சு நடுங்கியது” என்றான். “அவ்வண்ணமெனில் அவளேதான்” என்றாள்.

“இல்லை, அது ஒரு இனிய எண்ணமாக இல்லை அன்னையே. நிலைகுலைவாக அறியா துயராக, அச்சமாக அவ்வுணர்வு எழுகிறது” என்றான். “ஆம், அது எப்போதும் அவ்வாறுதான். நாம் அறிந்தவையே இனியவை. புதியவை அனைத்தும் அச்சத்தையும் நிலைகுலைவையும் உருவாக்குகின்றன” என்றபடி அரசி ஓவியத்தை விரித்து நோக்கினாள். அவள் முகம் மலர்ந்து புன்னகையில் பற்கள் ஒளிவிட்டன. செவிலியிடம் திரும்பி அந்த ஓவியத்தை திருப்பிக் காட்டி “இவள்தான்” என்றாள். செவிலி அருகே வந்து பீடத்தைப் பற்றியபடி குனிந்து நோக்கி “அழகின் முழுமை. பேரரசுகளை ஆளும் மணிமுடியை சூடியிருப்பவள் போலிருக்கிறாள். சிம்மாசனத்திலன்றி பிறிதெங்கும் அமர முடியாத நிமிர்வு” என்றாள்.

நளன் “ஆம், அன்னையே. நான் அஞ்சுவது அதையே. இப்போது தெளிவாகிறது. நான் எண்ணியிருந்த பெண் எளியவள்,

இனியவள். இவளோ விண்ணாளும் இந்திரனின் அருகமைந்தவள் போலிருக்கிறாள். சினமும் ஆணவமும் சொல்கூர்மையும் கொண்டவள். இவள் எனக்குரிய பெண்ணென்றல்ல, நான் இவளுக்குரிய ஆணல்ல என்று தோன்றுகிறது" என்றான். அரசி "அதற்காக நீ அஞ்சவேண்டியதில்லை. பெண் எப்போதும் ஆணுக்கு படிந்தவளாக இருக்கவேண்டுமென்பதில்லை. தொல்புகழ் தேவயானி யயாதியை தன் மைந்தனென ஒக்கலில் வைத்திருந்தாள் என்கின்றன நூல்கள். இவள் விழிகளும் தோளகலமும் குருநகரியை ஆண்ட தேவயானியைப் போலவே காட்டுகின்றன" என்று சொன்னாள்.

மீண்டும் ஓவியத்தைப் பார்த்தபின் "ஆம். ஆனால் ஓவியம் பிறிதொன்றையும் சொல்ல விழைகிறது. ஆகவேதான் மென்தூவி அன்னமொன்றையும் வரைந்தான். நோக்குக, அவள் கைகள் அதன் வெண்ணிற மென்மை மேல் தொட்டனவோ என வருடிச் செல்கின்றன. அதன் கழுத்து வளைவுக்கென அவள் உடல் வளைந்துள்ளது. மிடுக்கும் நிமிர்வும் கொண்டவளாயினும் உள்ளூர அன்னம்போல் நெகிழ்ந்து கனிந்தவள் என்கிறான் ஓவியன்" என்றாள் அரசி. நளன் "நானறியேன். என் உள்ளம் மீண்டும் தயங்குகிறது. என்னால் முடிவெடுக்க இயலவில்லை" என்றபின் அறைவிட்டு வெளியே சென்றான்.

அவனுக்குப் பின்னால் சென்ற செவிலி "இளவரசே, இந்த ஓவியத்தை எடுத்துச் செல்லுங்கள். உங்களுடன் இருக்கட்டும் இது" என்றாள். "வேண்டாம்" என்று சொல்லி நளன் வெளியேறினான்.

செல்லும் வழியிலேயே நளன் “இவளல்ல. ஆம், இவளல்ல” என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான். உறையுருவிய ஒளிர்வாள்போல் இருக்கிறாள். இவள் ஒளி அனல். நெளிவு நாகம். இவள் முகவடிவும் புன்னகையும் என்னை நோக்கி வந்த தூண்டில். இத்தருணத்தில் எண்ணி விலகாவிடில் பெருந்துன்பங்களை நோக்கியே செல்வேன். விலகாது பின்னின்று உந்துவது எது? காமமா? ஆம், அதைவிட ஆணவம். இவ்வழகுக்கு நான் தகுதியற்றவனா என்றெழும் என் ஆழம். தான் எவரென்று உணர்ந்திருப்பவன் துயர்களை தவிர்க்கக் கற்றவன். நெறிநூல்கள் அனைத்திலும் மீள மீள கற்ற வரி அது. என்னை நான் மிகையாக உருவாக்கிக் கொண்டாலொழிய இவளுக்கு கணவனாக அரியணையில் அருகிருக்க இயலாது.

ஆம், என் திறன் குடி அரசு அனைத்தும் இவள் காலடியில் ஒரு சிற்றரசென நிற்பதற்கு மட்டுமே உரியவை. இவள் அல்ல. நன்று, இத்தருணத்தில் இப்படி ஒரு முடிவை எடுக்க எனக்குத் தோன்றியது. தூண்டில் கண்டதுமே அஞ்சி விலகும் அறிவுடைய மீனென்றானேன். நன்று, இவளல்ல. அவ்வளவுதான். இனி சொல்லில்லை. இனி உளநிலையழிவில்லை.

தன் மஞ்சத்தறைக்குச் சென்று பீடத்தில் அமர்ந்து சுவடியொன்றை எடுத்துப் புரட்டி அதிலிருந்த எழுத்துகளை பொருளின்றி வாசித்துச் சென்றபோது இவளல்ல இவளல்ல என்ற சொல் எங்கோ ஒலித்துக்கொண்டிருப்பதைப்போல் இருந்தது. நீர் சொட்டுவதுபோல. பின் சுவடியை மூடி வைத்துவிட்டு எழுந்து சாளரத்தினூடாகத் தெரிந்த விண்மீன்களை பார்த்தான். அறைக்குள்ளிருந்த சுடர் அமைதியின்மையை அளிக்க அதை அணைக்கும்பொருட்டு

அருகே வந்தான். இருட்டில் தனித்திருக்க முடியாதென்றெண்ணி மீண்டும் சாளரத்தருகே சென்றான். நடுங்கிக்கொண்டிருந்த விண்மீன்களை சிலகணங்களுக்கு மேல் நோக்க இயலவில்லை. திரும்பி நின்றபோது சுடரொளி அசைய நெளிந்துகொண்டிருந்த அறை மேலும் அலைக்கழிவை அளித்தது.

மேலாடையை வீசி சுடரை அணைத்தபின் மஞ்சத்தில் படுத்து மரவுரியை எடுத்து தலைக்குமேல் போர்த்திக்கொண்டான். கண்களை மூடிக்கொண்டு மிக அருகிலென அந்த ஓவியத்தை பார்த்தான். இவளல்ல, இவளல்ல. இவளல்லவெனில் ஏன் இவளை எண்ணிக் கொண்டிருக்கிறேன்? தேடாமலேயே எனை நோக்கி வந்திருப்பதனாலேயே இது பெரும் பொறி. மறுமுனையில் யார்? ஊழ்! விளையாடும் தெய்வங்கள்! ஆனால் அவள் விழிகள் ஒரு சொல்லை அரைக்கணத்தில் என்னிடம் சொல்லிவிட்டன. இத்தனை நாள் நான் எதிர்நோக்கி இருந்தது அச்சொல்லை. பிறிதொன்றை அவள் விழிகள் சொல்லியிருக்க முடியாது. ஏனெனில் அவள்தான்...

கையால் சேக்கையை ஓங்கி அறைந்தபடி எழுந்து அமர்ந்தான். என்ன எண்ணிக் கொண்டிருக்கிறேன்? எனக்குள் புகுந்து என் எண்ணங்களை ஆட்டுவிப்பது எந்த இருள்தெய்வம்? இப்படுக்கையில் படுத்திருக்கும் என்னை சூழ்ந்து நின்று குனிந்து நோக்கிக் கொண்டிருக்கின்றனவா மானுடத்தை ஆட்டுவிக்கும் பெருவிசைகள்? அகலத் துடிப்பதே அணுகும் அசைவென்றாகி எந்த ஊழ்முனை நோக்கி சென்று கொண்டிருக்கிறேன்?

எழுந்து இருளில் விரைந்தோடி மீண்டும் அசனமுனிவரின் புற்குடிலுக்குள் சென்று அமர்ந்துவிட வேண்டுமென்று

தோன்றியது. இல்லை, அதற்கு தேவையில்லை. நான் முடிவெடுத்துவிட்டிருக்கிறேன். அது அவளல்ல. அந்தச் சூதனையும் துணைவியையும் ஓவியத்துடன் உடனே நகர்விட்டு செல்ல ஆணையிடப்போகிறேன். நாளை காலையிலேயே வேட்டைத் துணைவருடன் காட்டுக்கு செல்வேன். களிறுகளுக்குப்பின் பாய்வேன். புலித்தோல் கொண்டு மீள்வேன். அப்போது இந்த நாள் தொலைநினைவாக மாறியிருக்கும்.

இந்த நாளென்ன, இவ்விரவுதான். இவ்விருள்தான். ஆயிரங்காலட்டைபோல் கணம் கணம் என்று மெல்ல நகரும் இக்கரிய இரவு. இதை கடந்துவிட்டால் போதும். இதை கடக்க முடியவில்லையெனினும் குகைப்பாதையின் மறுஒளிபோல் முதற்கதிரெழுவதை கண்டுவிட்டால் போதும். அனைத்தும் முடிந்துவிடும். ஓரிரவைக் கடப்பது இத்தனை அரிதா என்ன? ஓரிரவுக்குள் ஒருவன் நூறுமுறை பிறந்து எழ முடியுமா என்ன? உள்ளமென்பது பெருவதை. நாழியிலிருந்து நாழிக்கு சொட்டும் மணற்பருக்கள். ஒன்றையொன்று முட்டி மோதி ஓசையின்றி அவை பொழிந்துகொண்டிருக்கின்றன. நிறையா நாழி. குறையா பெருநாழி.

எழுந்து சென்று மது கொணரச் சொல்லி அருந்தினாலென்ன என்று எண்ணினான். அதுவரை அருந்தியதில்லை. மது அருந்துவது ஒரு தோல்வி. இச்சிறு தருணத்தை கடக்க இயலாத எளியோன் என்று என்னை சேடியர் முன் அறிவித்தல். இரவெல்லாம் இங்கு இவ்வெண்ணங்களுடன் இருந்தால் காலையில் எனக்குள் சொற்பெருக்கே இருக்கும். பெருக்கல்ல, குவியல். புயல் வந்து சென்ற நகரம்போல் பெருஞ்சிதறல். எழுந்து சால்வையை அணிந்தபடி வெளியே

சென்றான். காவலர்கள் தலைவணங்கி படைக்கலம் தாழ்த்த படியிறங்கி வெளியே சென்று முற்றத்தில் நின்றிருந்த புரவியை எடுத்துக்கொண்டு சாலைக்கு சென்றான். பிறிதொரு புரவியில் தொடர முயன்ற மெய்க்காவலனை கையசைத்து தடுத்தான்.

நகரை விட்டு வெளியேறி குறுங்காட்டைக் கடந்து கோதையின் கரையிலமைந்த அசனரின் குடிலை அடைந்தான். புரவியை நிறுத்திவிட்டு நாணல் நடுவே சென்ற பாதையில் நடந்தான். நீரொளிர்வுடன் நெளிந்து கடந்து சென்றன நாகங்கள். தவளைகளின் இடைவிடாத ஓசை சூழ்ந்திருந்தது. குடில் முற்றத்தில் தருப்பைப்பாயில் கால்மடித்து விண்மீன்களை நோக்கி அமர்ந்திருந்த அசனரை தொலைவிலேயே கண்டான். இரவில் அவர் துயில்வதில்லை என்று முன்பே அறிந்திருந்தான். சென்று அவரை கலைக்கலாமா என்று எண்ணிக்கொண்டிருக்கையிலேயே அவர் திரும்பி அவனிடம் வரும்படி கைகாட்டினார்.

அருகே சென்று கால்தொட்டு சென்னி சூடி அப்பால் அமர்ந்தான். புன்னகையுடன் “பார்த்துவிட்டீரா?” என்றார். “ஆம்” என்றான். ஏன் அதை சொன்னோம் என்று உணர்ந்ததும் “ஆனால்…” என்றான். “அதை நான் முன்னரே புரிந்துகொண்டேன்” என்றார் அசனர். அவன் “ஆனால்… அவள் பேரரசி. முடிமன்னர்கள் தலை தாழ்த்தும் அடி கொண்டவள். எனக்குரியவளல்ல” என்றான். “உமக்குரியவள் அல்ல என்று முடிவெடுக்க வேண்டியவது நீரல்ல” என்று அவர் சொன்னார். “நான் அலைக்கழிவேன், பெருந்துயருருவேன்” என்றான் நளன். “ஏன்?” என்று அவர் கேட்டார்.

அவன் தயங்கி “அவளை நான் மணந்தால் இப்புவியிலுள்ள ஆண்கள் அனைவரும் பொறாமை கொள்வார்கள். பெருங்குடிமன்னர்கள், சக்ரவர்த்திகள், ஏன் விண்ணகத் தெய்வங்களுமே என் மேல் சினம் கொள்வார்கள்” என்றான். “ஆம்” என்றார் முனிவர். உள்ளிலெழுந்த ஐயத்துடன் “அப்படி ஒருத்தி என்னைத் தேடி வருவாளென்று முன்னர் அறிந்திருந்தீர்களா?” என்றான். அவர் புன்னகையுடன் “யாரென்று அறிந்திருக்கவில்லை, எப்படிப்பட்டவள் என்று அறிந்திருந்தேன்” என்றார். “நீங்கள் அதற்கென காத்திருக்க வேண்டுமென்று ஆணையிட்டது அதனால்தான்.”

“நான் எப்படி அப்பேராற்றலை எதிரியெனக் கொள்வேன்? எளிய நிஷாதன் நான்” என்றான். “ஒன்று மட்டும் உரைக்கிறேன். எது நிகழினும் நீங்கள் முற்றழிய மாட்டீர்கள். உம் மைந்தர் இப்புவி ஆள்வார்கள்” என்றார் அசனர். ஒருகணத்தில் தன் உள்ளம் அமைதி கொண்டதை எண்ணி வியந்தான். அஞ்சியது அதைத்தானா? அவரை நோக்கிக்கொண்டிருந்தான். “நீர் விழைந்தாலும் அஞ்சி விலகினாலும் அவளே உமக்குரியவள்” என்றார் அசனர். “யார் அவள்?” அவன் “விதர்ப்ப மன்னனின் மகள் தமயந்தி” என்றான்.

“அவள் எவள் என்று அறிக! அவள் உள்ளம் கவர்ந்து கைக்கொள்க! உம் அரியணையில் அவள் அமர்கையில் உம் குடியும் ஷத்ரியர்களுக்கு நிகரென அமையும். உம் மூதாதையர் உளம் மகிழ்வார்கள்” என்றார் அசனர். நளன் “அது என் கடமையெனில் அதன்பொருட்டு எதையும் இயற்றுகிறேன். ஆனால் நான் விழைந்தால் தொல்குடி ஷத்ரியர்களின் விதர்ப்ப நாட்டின் இளவரசியை எப்படி வென்றெடுக்க இயலும்? அது வீண் கனவென்றே முடியக்கூடும்” என்றான். அசனர் “நீங்கள்

அவளை அடைவீர்கள். அவளை வெல்க! அவளுக்குரியவனாக உம்மை ஆக்கிக் கொள்க!” என்றார்.

சில கணங்களுக்குப்பின் அவன் நீள்மூச்சுடன் மெல்ல தோள் தளர்ந்து “ஆம்” என்றான். பின்னர் முனிவர் ஒன்றும் பேசவில்லை. விண்மீன்களை நோக்கியபடி ஊழ்கத்திலென அமர்ந்திருந்தார். பெருமூச்சுவிட்டு உடல் கலைந்து மீண்டும் அமர்ந்தபடி அன்றிரவை அவன் கழித்தான். இளம்புலரியில் அரண்மனைக்கு மீண்டு வந்து மகளிர் மாளிகைக்கு சென்றான். அங்கு சேடியுடன் அமர்ந்திருந்த அன்னையை அணுகி வணங்கி “அன்னையே, நான் அவளை மணக்கிறேன். அவளே நான் காத்திருந்த பெண்ணென்று உறுதி கொண்டேன்” என்றான்.

அன்னை நகைத்து “நன்று, நேற்றே இவள் இதை சொன்னாள். எனக்குத்தான் சற்று ஐயமிருந்தது” என்றாள். பிரபை அந்த ஓவியச்சுருளை எடுத்து அளித்து “இன்று காலை தாங்கள் வந்து கேட்கும்போது அளிப்பதற்காக வைத்திருந்தேன், இளவரசே. இது அவள் ஓவியம். நோக்கி நோக்கி உயிர் அளியுங்கள்” என்றாள். புன்னகையுடன் அதை வாங்கிக்கொண்டு தலைவணங்கி அவன் தன் அறைக்கு மீண்டான்.

தமயந்தியைப்பற்றி அனைத்துச் செய்திகளையும் நளன் ஒற்றர்களையும் சூதர்களையும் கொண்டு உசாவி அறிந்தான். விதர்ப்பத்தின் பேரரசர் பீமகரின் மகள். பீமகருக்கு மூன்று பட்டத்தரசியர். மூவருக்குமென ஒரு மகளே பிறந்தாள். எனவே அவளை மணம் கொள்பவன் விதர்ப்பத்திற்கும் அரசனாவான். மகதத்திற்கும் கலிங்கத்திற்கும் விதர்ப்பத்தின் பெருநிலங்களின்மேல் விருப்பிருந்தது. கலிங்க அரசன் சூர்யதேவனின் இரண்டாவது மைந்தன் அர்க்க தேவனை

அவளுக்கு மணமகனாக்க அங்குளோர் திட்டமிட்டிருந்தனர். மகத மன்னன் தன் மைந்தன் ஜீவகுப்தனை தமயந்தியை மணம் கொள்ளும்படி அறிவுறுத்தியிருந்தான். மாளவ மன்னன் விஷ்ணுகுப்ஜனும் அயோத்தி மன்னன் லக்ஷ்மணனும் பலமுறை அவளுக்காக தூதனுப்பியிருந்தனர்.

பேரரசர்களின் தூதை ஏற்று மணமுடித்து அனுப்புவதா அவளுக்கென மணத்தன்னேற்பு ஒன்றை நிகழ்த்துவதா என்று பீமகர் குழம்பிக் கொண்டிருந்தார். பேரரசர் எவருடைய தூதை ஏற்றாலும் பிறர் அதை சிறுமைப்படுத்தலாக எண்ணக்கூடும். அவர்களின் படைமுனிவின் வல்லமையை விதர்ப்பம் தாங்கவேண்டும். மணத்தன்னேற்பு ஒன்றை அமைத்து பேரரசரை விருந்தினராக அழைத்து நடத்தி முடிப்பதற்கான உளவமைப்பும் அமைச்சுத் திறனும் தன் நகருக்குண்டா என்று அவர் அஞ்சிக்கொண்டிருந்தார். அக்குழப்பத்திலேயே நாள் கடக்க தமயந்தி மேலும் முதிர்ந்து அழகுகொண்டாள். அச்சொல்லாடலின் வழியாகவே பாரதவர்ஷத்தின் அரசர் அனைவரிடமும் அவள் கைபற்றும் விழைவு ஓங்கி எழுந்தது.

இரு கைகளிலும் வாளேந்தி புரவி மேல் பாய்ந்து சென்று போரிடுபவள். இரு கைகளிலும் எழுத்தாணி ஏந்தி இருவர் சொல்லும் நூல்களை இரு ஏடுகளில் எழுதும் திறன் கொண்டவள். யாழ் நரம்பை ஏழுமுறை சுண்டியதுமே சூதன் எண்ணிய பண் எது என்று சொல்லும் நுண்மை கொண்டவள். முடிசூடி அரியணை அமர்ந்து நாளும் நெறி சொல்பவள். தன் குரலுக்கு மாற்றெழாது நிறுத்தும் விழி கொண்டவள்.

அவள் பிறந்த அன்றே நிமித்திகர் நாள் கணித்து தருணம் சூழ்ந்து தேவயானி பிறந்த அதே நற்பொழுதில் அவளும் மண் நிகழ்ந்திருக்கிறாள் என்றனர். தேவயானி மீண்டும் மண்ணில்

எழுவாள் என்று முன்னர் முனிவர் வருங்குறி உரைத்திருந்ததை நினைவுறுத்தி இவள் அவளே என்றனர். தென்னகத்தில் எழவிருக்கிறது பாரதத்தை ஆளும் மணிமுடி ஒன்று. அதைச் சூடுபவள் அவள். வலமிருந்து அம்மணிமுடியை வாளேந்திக் காக்கும் ஒருவன் இனி எழவேண்டும். அது வங்கனா கலிங்கனா மாளவனா என்பதே வினா.

மேலும் மேலும் ஓவியங்கள் நளனை வந்தடைந்துகொண்டிருந்தன. அனைத்து ஓவியங்களிலும் அவள் வெண்ணிற அன்னப்பறவையை அணைத்தபடியும், வருடியபடியும் இருந்தாள். அவள் அரண்மனையெங்கும் சிறு சுனைகளும் அவற்றில் அன்னப்பறவைகளும் நிறைந்துள்ளன என்றார் சூதர். அன்னத்துடன் ஆடுவதே அவள் விழையும் விளையாட்டு. நீரின் அலைகள் அதன் கழுத்தில் முதுகில் சிறகில் வாலில் நிகழ்கின்றன. "அன்னத்தின் இயல்பென்று அவளில் உள்ளதென்ன?" என்று நளன் கேட்டான். "எத்தகைய அலைகளிலும் உலையாது ஒழுகும் நேர்த்தி" என்றான் சென்று கண்டு வந்த சூதன். "ஆம், அவளே எனக்குரியவள். நான் அலையடங்கிய கணமே இல்லை" என்றான்.

# நீர்க்கோலம் - 9

### 8. அன்னங்கள்

தமயந்தியின் இயல்புகளை நளனிடம் நாளுக்கொரு செய்தி என சொல்லிக்கொண்டிருந்தனர் ஒற்றர். எளிதில் சினப்பவள், சினந்தமையாலேயே கனிபவள். மாற்றுச்சொல் பொறுக்காதவள். நிகர் வைக்க ஒப்பாதவள். மகளிர்மன்றுகளை

வெறுப்பவள். சேடியரன்றி பிற பெண்டிர் அவளுடன் சொல்லாடவே இயல்வதில்லை. பின்னர் நுண்செய்திகள் வரலாயின. தன் உடலில் கால்நகங்களையே அவள் முதன்மையாக நோக்கினாள். ஒவ்வொருநாளும் அதை சமையப்பெண்டுகள் நீவியும் சீவியும் வண்ணமிட்டனர். அவை புலியின் விழிகள்போல் வெண்ணிற ஒளி மிளிரவேண்டுமென அவள் விழைந்தாள். ஆடைகளில் அவள் தோள்சரியும் பீதர்நாட்டு மென்பட்டாடையை விரும்பினாள். மணிகளில் அனலென எரியும் செவ்வைரத்தை.

வண்ணங்களில் குருதி. சுவைகளில் காரம். இசையில் செம்பாலை. மணங்களில் தாழை. விலங்குகளில் வேங்கை. ஊர்திகளில் கரும்புரவி. படைக்கலங்களில் எட்டடி நீளமுள்ள கலிங்கத்து எடைவாள். “பெண்கள் விழையும் எவையுமில்லை, இளவரசே” என்றான் ஒற்றன். நளன் அவளை தன்னருகே எப்போதுமிருப்பவளாக உணரலானான். பின்னர் அவளைப்பற்றி புதிய எதையுமே அவனிடம் சொல்லவியலாதென்று அவர்களும் உணர்ந்தனர். காதல்துணைவியுடன் கூடியிருப்பவனின் விழிவிரிவும் மாறா நகையும் அவன் முகத்தில் திகழ்ந்தன.

அவன் எண்ணுவதை உணர்ந்த மூத்த அமைச்சர் பூர்ணசந்திரர் நிஷாதர்களைப்பற்றி விதர்ப்பத்தினர் எண்ணுவதென்ன என்று உசாவிவர ஒற்றர்களை அனுப்பினார். அவர்கள் வந்து சொன்ன சொற்கள் நளனை நிலைகுலையச் செய்தன. நிஷாதர் வேனனின் குருதியினர். கலியின் குலத்தினர். காகத்தை தெய்வமெனக் கொண்டவர்கள். கரிய நிறத்தினர். எனவே எந்த அவையிலும் இருளெனச் சூழ்பவர்கள் என்று விதர்ப்பத்தின் தொல்கவிஞர் சம்புகர் பாடிய கவிதையை குண்டினபுரியில்

அறியாத எவருமில்லை என்றார்கள் ஒற்றர்கள். “உயரப் பறந்தாலும் காகம் கழுகென்று கருதப்படுவதில்லை, இளவரசே” என்றார் பூர்ணசந்திரர்.

“இளவரசி எண்ணுவதென்ன என்று அறிந்துவா” என்று ஏழு பெண் ஒற்றர்களை நளன் அனுப்பினான். அடுமனையாளர்களாகவும் சமையப்பெண்டிராகவும் தமயந்தியின் அரண்மனைக்குள் புகுந்து மூன்று மாதம் அவளுடன் உறைந்து சொல்லாடிவிட்டு அவர்கள் செய்தி அனுப்பினர். நிஷாதர் காகத்தை வணங்குவதும் கலியின் குடிகள் என்றிருப்பதுமே இளவரசியிடம் ஒவ்வாமையை உருவாக்குகிறது என்று அவர்கள் சொன்னபோது நளன் முகவாயை வருடியபடி எண்ணத்திலாழ்ந்தான். “நாம் கலியை விலக்கியாகவேண்டும்” என அவன் பின்னர் சொன்னபோது “என்ன சொல்கிறீர்கள், இளவரசே?” என பூர்ணசந்திரர் திகைத்தார். “அரசி இங்கு வரட்டும். அதன்பின் நாம் மீண்டும் கலியை நிறுவுவோம். இது ஓர் சூழ்ச்சி மட்டுமே” என்றான் நளன். “இளவரசே…” என அவர் சொல்லத்தொடங்க கையமர்த்தி “வேறு வழியில்லை” என்று அவன் அவரை நிறுத்தினான்.

ஆனால் பேரரசர் வீரசேனர் சினம்கொண்டு கூவியபடி “தன் குலதெய்வத்தை ஒரு பெண்ணின் பொருட்டு விலக்குகிறானா? மூடன், அடைவது வரைதான் பெண்ணுக்கு மதிப்பு. அவளை ஆறுமாதங்களில் அவன் கடப்பான். அதன்பின் தான் செய்தவற்றுக்காக எண்ணி எண்ணி நாணுவான்” என்றார். “நான் ஒப்பமாட்டேன். ஒருபோதும் இது நிகழாது” என்றார். அன்று மாலை அவரை தனியறையில் வந்து சந்தித்த நளன் “நான் முடிவுசெய்துவிட்டேன், தந்தையே. நம் அடையாளத்தை கலியிடமிருந்து மாற்றவிருக்கிறேன்” என்றான்.

“முழுமையாகவா? நீ அரசுசூழ்தல் என்றல்லவா சொன்னதாக அறிந்தேன்” என்றார் வீரசேனர். “ஆம், ஆனால் பிறகு எண்ணிப்பார்க்கையில் ஒருமுறை அடையாளத்தை மாற்றிக்கொண்டபின் அதை மீட்கவியலாது என அறிந்தேன்” என்றான்.

“நான் ஏற்க மாட்டேன்” என்றார் வீரசேனர். “நீங்கள் அப்படி சொன்னதை அறிந்தேன். அதன்பொருட்டே வந்தேன். நான் எண்ணியது நிகழும். இல்லையேல் உடனே இளவரசுப் பட்டத்தை துறந்து காடேகுகிறேன். இதில் சொல்மாறுபாடே இல்லை” என்றான் நளன். “நீ சொல்வதென்ன என்று புரிகிறதா? மைந்தா, நான் வாழ்வை அறிந்தவன். கடந்தபின் நோக்கி அறிவதே மெய்யறிவு. நான் இன்று காமத்தை கடந்துள்ளேன். சொல்வதை கேள். கொள்வதற்குமுன் பெண்ணுக்காக நாம் எதையெல்லாம் இழக்க சித்தமாக உள்ளோமோ அதுவே நாம் அவளுக்கு அளிக்கும் விலை. அதை அறிந்தபின்னரே அவள் தன்னை அளிப்பாள். விலை கூடும்தோறும் அளிப்பவனின் விலை குறைகிறது என்பதே அதிலுள்ள ஆடல்.”

“அவள் யாரென்று நானும் அறிவேன்” என்று வீரசேனர் சொன்னார். “ஆயினும் நீ மிகை விலை அளிக்கிறாய். ஆண் எந்தப் பெண்ணுக்காகவும் தன் அடையாளத்தை விலையாக கொடுக்கலாகாது. அதை அளித்தபின் அவள் முன் அவன் வெறும் உடலென்று நிற்பான். நீ இன்று செய்வதற்காக பின்னர் வருந்துவாய்.” நளன் “நான் அளிக்கும் விலை அவளுக்காக மட்டும் அல்ல. அவள் என்பது எனக்கு அரசியோ பெண்ணோ அல்ல” என்றான். “நான் சொல்வதை கேள்” என்றார் வீரசேனர் அவன் தோளை நோக்கி கை நீட்டி. அவன் விலகி “உங்கள்

முடிவை சொல்லுங்கள். நான் நாளை புலரியில் இங்கிருக்க வேண்டுமா வேண்டாமா என முடிவெடுக்கவேண்டும்” என்றான்.

சீற்றத்துடன் “நான் உன்னை இந்நாட்டை ஆளும்பொருட்டே பெற்றேன்” என்றார் வீரசேனர். “அதனாலென்ன? காளகக்குடியில் பிறந்த உங்கள் பிறமைந்தன் புஷ்கரன் இருக்கிறான். அவனை அரசனாக்குக!” என்றான் நளன். “நீ அறிவாய், உன் புரவித்திறன் இன்றி இந்நாடு வாழமுடியாது என.” நளன் “ஆம், ஆனால் நான் விரும்புவதுபோல இந்நாடு அமையாதென்றால் இக்கணமே இதை துறந்துசெல்வேன்” என்றான். அவர் சோர்வுடன் “நீ துறக்கவேண்டியதில்லை. நான் துறக்கிறேன். நான் அரசுநீத்து கானேகுகிறேன். உன் விருப்பப்படி நீயே இதை ஆள்க!” என்றார். “அம்முடிவை நாளை அறிவியுங்கள்” என்றான் நளன். “ஆம், எனக்கு வேறு வழியில்லை. என் கண்முன் குலதெய்வத்தை நீ துறப்பதை நான் ஏற்கமுடியாது. கானேகியபின் நீ செய்யும் செயல்கள் எவற்றுக்கும் நான் பொறுப்பாகமாட்டேன்” என்றார் வீரசேனர்.

“ஆனால் ஒன்று மட்டும் சொல்லவிழைகிறேன். நீ நாகமணியுடன் நாகத்தை வாங்கியிருக்கிறாய்” என்ற வீரசேனர் அவன் செல்லலாம் என கையசைத்தார். நளன் தலைவணங்கி வெளியே நடந்தான்.

மறுநாளே நளனுக்கு முடிசூட்டிவிட்டு வீரசேனர் காட்டுக்கு சென்றார். முடிசூடி அமர்ந்தபின் முதல் ஆணையிலேயே கிரிபிரஸ்தத்தின் உச்சியில் இருந்த நிஷாதர்களின் குடித்தெய்வங்களின் ஆலயத்திலிருந்து கலியின் சிலையை எடுத்துச்சென்று மலைச்சரிவின் தெற்குமூலையில் இருந்த இருண்ட சோலைக்குள் நிறுவும்படி நளன் வகுத்தான்.

ஆலயத்தில் இருந்த காகச் சிலைகள் அனைத்தையும் அங்கே கொண்டுசென்று வைத்தான். கலியின் சிலையை அகற்றுவதை குடிகள் உணராதிருக்கும்பொருட்டு ஆலயத்தை முழுமையாக சீர்திருத்தி அமைத்தான். அந்தணரை அமர்த்தி வேள்விகளை நிகழ்த்தி பூசனைமுறையையும் மாற்றியமைத்தான்.

ஆனால் அது போதாதென்று அச்செயல் முடிந்ததுமே அவன் உணர்ந்தான். மக்கள் கலியை வழிபட காட்டுக்கு செல்லத் தொடங்கினர். கலியையும் காகத்தையும் வழிபடுபவர்கள் என்னும் முகத்தை மாற்ற என்ன செய்யலாம் என்று அமைச்சர் பூர்ணசந்திரரிடம் கேட்டான். “முன்னரே நமக்கு பரசுராமர் இந்திரனை அருளியிருக்கிறார். இங்கு நிகழும் வேள்விகள் அனைத்திலும் அனல்குலத்து வேதியர் இந்திரனுக்கு அவியளித்து வழிபடுகின்றனர். மாகேந்திரம் என்னும் வேள்வி ஒன்றுள்ளது. இந்திரனை முதன்மையாக நிறுத்தும் அதை இங்கே இயற்றுவோம். பாரதவர்ஷத்தின் அந்தணர்குலம் அனைத்தையும் இங்கு வரச்செய்வோம்” என்றார் அமைச்சர்.

படைத்தலைவன் பத்மன் “ஆம் அரசே, அந்தணர் அதை சொல்லில் நிறுத்தட்டும். எளியோர் அதை விழியால் நோக்கவேண்டும். விருத்திராசுரனை கொல்லும்பொருட்டு தவம் செய்த இந்திரன் கிரிப்பிரஸ்தத்தின் உச்சியில் வந்து தங்கி தன் படைக்கலன்களை கூர்தீட்டிச் சென்றானென்பது நம் அவைக்கவிஞர் குந்தலர் உருவாக்கிய காவியம். கிரிப்பிரஸ்தத்தில் இந்திரன் வாழ்ந்த நாட்களைப்பற்றி மேலும் பன்னிரு காவியங்கள் இயற்றப்படட்டும். அவற்றை சூதர் தங்கள் சொல்களில் நிறுத்தட்டும். கதைகளைப்போல் வல்லமை கொண்டவை பிறிதில்லை” என்றான்.

நளன் அவையின் மூலையில் சித்திர எழினி பற்றி நின்ற முதுசூதன் அங்கதனை அழைத்து “மூத்த சூதரே சொல்க, தங்கள் எண்ணமென்ன?” என்றான். “வேள்வியிலும் கதையிலும் நிற்பதற்கு நிகராக விழிகளிலும் நிற்கவேண்டும், அரசே. கிரிப்பிரஸ்தத்தின் உச்சியில் நூறடி உயரத்தில் இந்திரனுக்கு ஒரு சிலை அமைப்போம். இந்திரகிரி என்று இந்நகர் அழைக்கப்படட்டும். கோதாவரியின் நீர் விரிவில் செல்லும் அத்தனை படகுகளிலும் இந்திரன் முகம் தெரியட்டும். நாம் இந்திரகுடியினர் என்பது எவரும் சொல்லாமலேயே நிறுவப்பட்டுவிடும்” என்றார். “ஆம், அதை இயற்றுவோம்” என்றான் நளன்.

நளனின் ஆணைக்கேற்ப அமைச்சர்களே நேரில் சென்று அழைக்க கலிங்க நாட்டிலிருந்து ஏழு சிற்பியர்குலங்கள் பரிசில்களும் அரசவரிசைகளும் அளிக்கப்பட்டு வந்துசேர்ந்தனர். அவர்கள் தங்குவதற்கென்று கிரிப்பிரஸ்தத்தின் இடதுபக்கத்தில் நூற்றெட்டு மாளிகைகள் அடங்கிய சிற்பியர் தெரு ஒன்று அமைக்கப்பட்டது. அவர்களுக்கு பணிவிடை செய்யும் ஏவலரும் குடிகாக்கும் காவலரும் தங்குவதற்கான ஐநூற்று ஐம்பது இல்லங்கள் அத்தெருவைச் சூழ அமைக்கப்பட்டு அச்சிற்றூருக்கு சிலாபிரஸ்தம் என்று பெயர் சூட்டப்பட்டது.

நிமித்திகர் குறித்த நன்னாளில் தலைமைச் சிற்பியான மகாருத்ரன் இந்திரனின் சிலை அமைப்பதற்கான இடத்தை தெரிவு செய்தான். புற்களும் உயரமற்ற புதர்களும் மட்டும் மண்டிய உச்சியில் அவன் சுட்டிய இடத்தில் தோண்டி மண்ணை அகற்றியபோது உருக்கி ஊற்றிய இரும்பென ஒற்றைப்பாறை தட்டுப்பட்டது. பின்னர் அவர்கள் கிரிப்பிரஸ்தத்தில் குன்றைச் சூழ்ந்திருந்த நிஷதக்காடுகளை

துழாவிதேடி மேற்கு எல்லையில் மண்ணுக்கு அடியில் நான்கடி ஆழத்தில் புதைந்து கிடந்த ஒற்றைக்கருங்கல் பாறையை கண்டடைந்தனர். அதை உளியால் அவன் தொட்டபோது வெண்கல மணியோசை எழுந்தது. மரங்களை வெட்டி மண்ணை அகற்றி அப்பாறையை வானம் நோக்கச் செய்தனர். அதில் செங்குழம்பால் இந்திரனின் சிலையின் நீளத்தையும் அகலத்தையும் சூத்ராகியாகிய தாண்டவர் வரைந்தார்.

உளியால் தடமிட்டு துளைநிரை அமைத்து அதில் காய்ந்த மரத்தை அடித்து இறுக்கி நீரூற்றி உப்பச்செய்தனர். பிளந்து மயிர்க்கோடென விரிசல் ஓடித்தெரிந்த பாறையை உளி வைத்து நெம்பி மேலும் பிளந்து அதில் நெம்புகோல்களை செலுத்தி பிரித்து எடுத்தனர். வடம்கட்டி தூக்கி மேலெடுத்தபோது அந்த வடிவிலேயே இந்திரனை கண்டுவிட்ட சிற்பிகள் “விண்ணாளும் தேவனுக்கு வாழ்த்து! இடிமின்னல் ஏந்தியவனுக்கு வாழ்த்து! நிகரிலா செல்வம் சூடியவனுக்கு வாழ்த்து” என்று குரலெழுப்பினர்.

உருளைத்தடிகளின்மீது ஏற்றப்பட்டு அத்திரிகளாலும் குதிரைகளாலும் இழுக்கப்பட்டு குன்றின்மேலேற்றி கொண்டுவரப்பட்டது நெடும்பாறை. எட்டு மாதம் அதில் சிற்பிகள் விழுந்த மரத்தில் விளையாடும் அணில்கள் என தொற்றி அமர்ந்து உளியோசை முழக்கினர். கொத்திக் கொத்தி உளிகள் வெட்டி குவித்த கற்சில்லுகள் இருபுறமும் எழுந்தன. வலக்கையில் மின்படையும் இடக்கையில் தாமரை மலரும் ஏந்தி ஏழடுக்கு முடி சூடி நின்றிருக்கும் இந்திரனின் பெருஞ்சிலை திரையென மூடியிருந்த கற்பரப்பை விலக்கி மேலெழுந்தது.

சித்திரை மாதம் முழுநிலவு நாளில் மண்ணுக்குள் இருந்த பாறையில் வெட்டிய எட்டடி ஆழமுள்ள குழியில் கற்சிலையின் கீழ்ப்பீடம் இறக்கி நிறுத்தப்பட்டு உருக்கிய இரும்பு அவ்விடைவெளியில் ஊற்றி குளிர வைக்கப்பட்டபோது சிலை ஒன்றென அப்பாறையில் பொருந்தியது. சிலை நிறுவும் நாளுக்கு மூன்று மாதம் முன்னரே கிரிப்பிரஸ்தத்தில் வேள்விகள் தொடங்கியிருந்தன. நிஷதபுரியிலிருந்து கிளம்பிச் சென்ற தூதர்கள் பாரதவர்ஷமெங்கும் குடியிருந்த வைதிகர் குலங்கள் அனைத்தையும் அங்கு வேள்விகள் இயற்றும் பொருட்டு அழைத்தனர். தயங்கியவர்களுக்கு மேலும் பொன் பரிசுகளும் சொல்லளிக்கப்பட்டன. ஒவ்வொருநாளும் கோதாவரியில் படகுகளில் வைதிகர்குடிகள் தர்ப்பைகளும் கங்கைநீர்க்குடங்களுமாக வந்திறங்கிக்கொண்டிருந்தனர்.

குன்றைச் சூழ்ந்து எட்டு இடங்களில் அமைந்த வேள்விப்பந்தலில் ஒருகணமும் ஓயாமல் வேதச்சொல் முழங்கியது. அவிப்புகை எழுந்து கிரிப்பிரஸ்தத்தின் காலடியில் முகிலென தேங்கி காற்றில் கிளைபிரிந்து உலைந்தது. வைதிகர் குலங்கள் பதினெண்மர் வேதம் ஓதி கங்கையின் நீர் கொண்டு முழுக்காட்டி இந்திரனை அச்சிலையில் நிறுவினர். அருமணிகளும் பொன்நாணயங்களும் பட்டும் மலரும் குங்குமமும் களபமும் மஞ்சளும் முழுக்காட்டி இந்திரனை மகிழ்வித்தனர். ஏழு நாட்கள் நகரம் விழவுக்கோலம் கொண்டது. கலையாடலும் காமக் களியாடலும் ஒழிவின்றி நிகழ்ந்தன.

கிழக்கே விழிநோக்கி கோதையின் பெருக்கின் அலையொளி முகத்தில் நெளிய நின்றிருந்த பெருஞ்சிலை நகர் மக்களின் உள்ளங்களை விரைவிலேயே மாற்றியமைத்தது. தாங்கள்

இந்திரனை வழிபடும் தொல்குடிகளில் ஒருவர் என்று ஓரிரு மாதங்களிலேயே அவர்கள் நம்பத் தலைப்பட்டனர்.
சூதர்கதைகள் சொல்லிச் சொல்லி சொல்பவராலும் கேட்பவராலும் ஏற்கப்பட்டன. அவர்கள் கலியை முழுமையாகவே மறந்தனர்.



கோதையின் நீர் விரிவில் படகில் சென்றுகொண்டிருந்த வணிகர்கள் தொலைவிலேயே மரங்களுக்கு மேல் எழுந்து நின்ற மணிமுடிசூடிய பெருமுகத்தைக் கண்டு கைவணங்கினர்.
கிரிப்பிரஸ்தம் இந்திரகிரி என்று விரைவிலேயே பெயர்

மாற்றம் பெற்றது. அம்மக்கள் இந்திரனை வணங்குபவர்கள் என்றும் அறியப்படலாயினர். இந்திரனுக்கு மலர்களும் படையலுமாக நாளும் நிஷத குலங்கள் மலையேறி வந்து ஓங்கிய சிலையின் பெருங்காலடிகளில் படையலிட்டு பூசை செய்து வணங்கி மீண்டனர்.

இந்திரபுரியின் தலைவனின் பெருமையும் அதன் நகரின் அழகும் நடுவே ஓங்கி நின்றிருந்த விண்முதல்வனின் சிலையின் மாண்பும் நளன் அனுப்பிய சூதர்கள் வழியாக ஒவ்வொரு நாளும் தமயந்தியின் செவிகளுக்கு சென்றுகொண்டிருந்தன. நளனின் ஒற்றர்கள் அவள் சேடியரை இல்லங்களில் சென்று பார்த்து பரிசில்கள் அளித்து அச்சொல்லை தருணம் அமையும்போதெல்லாம் அவளிடம் அளிக்கும்படி பணித்தனர். முதலில் அவள் அதை எவ்வகையிலும் உளம் கொள்ளவில்லை. பின்பு எப்போதோ ஒருமுறை தன்னிடம் அப்பெயர் வழக்கத்திற்கு மாறாக மிகுதியாக சொல்லப்படுவதை உணர்ந்தாள். அத்தருணத்திலேயே அது ஏன் என்றும் எவ்வாறென்றும் அறிந்தாள்.

இளிவரலுடன் புன்னகைக்கவே அவளுக்கு தோன்றியது. நிஷதபுரியின் அரசன் நளனைப்பற்றி அவள் ஒற்றர்கள் அவளிடம் முன்பே சொல்லியிருந்தனர். அவளைவிட எட்டு ஆண்டு இளையவனாகிய அவன் பிறப்பையே அவள் கேட்டிருந்தாள். அன்று கேட்டவற்றில் சூதர்குலத்து முதியோன் ஒருவனின் மறுபிறப்பென்று நிமித்திகர்கள் அவனை வகுத்ததையே அவள் நினைவில் கொண்டிருந்தாள். “அடுமனையாளன், புரவித்திறவோன். நன்று” என்று தன் சேடியிடம் இகழ்ச்சியில் வளைந்த உதடுகளுடன் சொன்னாள்.

“அரசமுறைப்படி அவர் செய்வதில் பிழையொன்றுமில்லை, இளவரசி. பாரதவர்ஷத்தின் அனைத்து அரசர்களும் அவர்களின் வெற்றியையும் அழகையும் புகழையும் உங்கள் செவிகளுக்கு கொண்டுவருவதற்கு முயன்றுகொண்டுதான் இருக்கிறார்கள்” என்றாள் சேடி.

“ஆம், அவர்கள் பேரரசர்கள். என்றேனும் ஒருநாள் என் கைபற்ற தங்களால் இயலுமென்று கனவுகாண அவர்களுக்கு வாய்ப்புள்ளது. இவனோ இங்கு என் அரண்மனையின் அடுமனையாளனாக ஆகவேண்டுமெனினும்கூட நான் ஏழு முறை உளம் சூழவேண்டிய நிஷாதன். இப்படி ஓர் எண்ணம் அவன் உள்ளத்தில் எழுந்ததே என்னை இழிவு செய்கிறது” என்றாள் தமயந்தி. “நிலவு மண்ணில் விழியுள்ள அனைவருக்காகவும்தான்” என்று சொல்லி சேடி நிறுத்திக்கொண்டாள்.

“இளவரசி, அவர் தன் தந்தையை மறுத்து கானேகச் செய்தார். பாரதவர்ஷத்தின் பெருவேள்விகளைச் செய்து நகர் நடுவே மாபெரும் இந்திரன்சிலை ஒன்றை நிறுவியிருக்கிறார்” என்றாள் சேடி. அவள் விழிகாட்ட இன்னொருத்தி இந்திரன் சிலையின் ஓவியச்சுருளை அவளிடம் காட்டினாள். “மாபெரும் சிலை என்றால்...” என்றாள் தமயந்தி. சேடி “நூறடி உயரம் என்கிறார்கள்” என்றாள். “நூறடியா?” என்றபின் அவள் அச்சுருளை விரித்து சிலையை ஒருமுறை நோக்கியபின் “கலிங்கச் சிற்பிகள். நன்று” என்றாள். சுருட்டி அப்பாலிட்டபின் தன் குழல்சுருள்களை திருத்தி அமைத்துக்கொண்டிருந்த அணிப்பெண்டிரின் தொடுகைக்கேற்ப அசைந்தமர்ந்து விழிமூடிக்கொண்டாள்.

“இளவரசி, அவர் தங்களுக்கு அளிக்கும் மதிப்பு அது. நம்மை நயந்துவரும் பேரரசர்களை எண்ணி நோக்குங்கள். அவர்கள் தங்களின் பொருட்டு எதையேனும் இழக்கிறார்களா? பிறிதொரு அரசையே அவர்கள் முதன்மையாக எண்ணி கணக்கிடுகிறார்கள். ஒவ்வொரு அசைவும் பிறிதொன்றால் நிகர்செய்யப்பட நெடுநாட்களாக நிகழ்கிறது இந்த ஆடல். ஆண்டுகள் சென்று உங்கள் அகவையும் மிகுந்துவிட்டது. உண்மையிலேயே இவர்களில் எவருக்கேனும் உங்கள்மேல் காதலிருந்திருந்தால் படைகொண்டுவந்து உங்களை வென்று சென்றிருக்கலாம். அவர்களுக்கு நீங்கள் தேவையில்லை. உங்களை பிறிதொருவர் கொள்ளலாகாதென்பதே அவர்களின் திட்டம்” என்றாள் சேடி.

“ஆகவே...?” என்றாள் தமயந்தி. “ஆகவே, நாம் பேரரசர்களின் விழைவையும் வெறும்காதலர்களின் விழைவையும் வேறிட்டு நோக்கவேண்டும்” என்றாள் சேடி. “இந்த நிஷாதனை நான் எவ்வண்ணம் நோக்கவேண்டும்?” என்று ஏளனப் புன்னகையுடன் தமயந்தி கேட்டாள். “இவர் விழைவை மட்டுமே நோக்குங்கள். நான் சொல்வது அதையே” என்று சேடி சொன்னாள். “இவர் விழைவில் ஒரு துளி அரசர் எவருக்கேனும் இருப்பின் அவரை கைப்பற்றுங்கள்.” தமயந்தி உதட்டைச் சுழித்து அணிப்பெண்டிடம் “மெல்ல” என்றபின் கண்களை மூடிக்கொண்டாள்.

அவ்வெண்ணத்திற்கப்பால் அவனுக்கு தன் உள்ளத்தில் இடமில்லை என்றே எண்ணியிருந்தாள். ஆனால் அன்றிரவில் அவன் தன் உள்ளத்தில் ஏன் எழுகிறான் என்று அவள் வியந்தாள். எண்ணத்துணியாத ஒன்றை எண்ணியவன் என்பதாலா? அவ்வெண்ணம் கொள்ளும்படி தன்னில் அவன்

எதை உணர்ந்தான்? அவன் குடியில் சூதர்கள் நாளும் அவனைச் சூழ்ந்தமர்ந்து புகழ் பாடுகிறார்களா? நிமித்திகர்கள் நாள் கணித்து ஏதேனும் உரைத்துவிட்டார்களா? எண்ண எண்ண அவ்விந்தையே அவளை ஆட்கொண்டது. இருமுறை அவளை அறியாமலேயே புன்னகைத்தாள்.

மறுநாள் அவள் சேடியிடம் "நிஷத அரசன் என்னை தன் அரசி என்று எண்ணுவதற்கு எதை அடிப்படையாக கொண்டிருக்கிறான்?" என்றாள். சேடி புன்னகைத்து "ஒருநாள் மட்டுமாவது உங்கள் உளம்திகழ்ந்துவிட்டார் அல்லவா? இதுவே முதற்சான்று" என்றாள். சினத்துடன் "போடி" என்று தமயந்தி விழிதிருப்பி "நான் கேட்டதற்கு பதில் சொல்" என்றாள். "படைவல்லமை" என்றாள் சேடி. "விதர்ப்பத்தை விடவா?" என்று அவள் கேட்டாள். "ஆம் அரசி. இன்று விதர்ப்பத்தை விடவும் ஆற்றல் கொண்ட நாடுதான் நிஷதம். கோதை ஒரு வணிகப்பெருவழியாகி அவர்களுக்கு பொன்னை கொட்டுகிறது. அப்பொன்னைக் காத்து நிற்கும் வாள் வல்லமை அவர்கள் படைகளுக்கு இருக்கிறது. நிஷதரின் புரவிப்படையை இன்று சூழ்ந்துள்ள அத்தனை நாடுகளுமே அஞ்சுகின்றன" என்றாள் இன்னொரு சேடி.

எண்ணத்தின் மெல்லிய புரளல் ஒன்றை உணர்ந்து அவள் தலையசைத்து அத்தருணத்தை கடந்தாள். அணிச்சோலையில் அமைந்த சுனைக்கரையில் அன்னங்களை நோக்கிக் கொண்டிருந்தவள் எழுந்து "நான் அரசவைக்கு செல்ல வேண்டும். அணிப்பெண்டிரை என் அறைக்கு அனுப்பிவை" என்றபின் நடந்தாள். அவளிடமிருந்து கூலமணி பெற்று உண்டுகொண்டிருந்த அன்னங்கள் கழுத்தை வளைத்து தலைதூக்கி கூவியழைத்தன. திரும்பி புன்னகையுடன்

அவற்றை நோக்கியபின் செல்லக் குரலில் “இப்போதல்ல, உச்சிப் பொழுதுக்குப் பிறகு” என்றாள்.

நீரிலிருந்து சிறகடித்து எழுந்து கரைவந்த அன்னம் ஒன்று துடுப்புக்கால் வைத்து, பின்புடைத்த சங்கை ஆட்டி, நாகக்கழுத்தை நீட்டி, செவ்வலகை கூர்த்தபடி அவளை நோக்கி வந்தது. அவள் சிரித்து “செல்க! உச்சிப்பொழுதுக்குப்பின்...” என்று அதை கைவீசி விலக்கினாள். அது கூவியபடி அவளுக்குப் பின்னால் நடக்க மேலும் இரு அன்னங்கள் எழுந்து அதை தொடர்ந்தன. “செல்க... செல்க...” என கைகாட்டியபடி அவள் ஓடி இடைநாழியை அடைந்தாள். அங்கு நின்று நோக்கியபோது அவை தலைநீட்டி அவளையே நோக்கி நின்றிருக்கக் கண்டாள்.

# நீர்க்கோலம் - 10

### 9. ஊசலின் தாளம்

அரசவையில் புலவர்களுடன் அமர்ந்து நூலாய்கையில், அவைப்பணிகள் முடித்து நீராட்டறைக்குச் சென்று உடலை சேடியரிடம் அளித்துவிட்டு அமர்ந்திருக்கையில், அணிபுனைந்து மஞ்சத்தறைக்கு செல்லும்போது, அவ்வப்போது அவன் எண்ணமே வந்து கொண்டிருந்தது. ஏதோ ஒரு கணத்தில் மீள மீள வரும் அவன் எண்ணம் அவளை சினம் கொள்ளச் செய்தது. திட்டமிட்டு ஓர் ஆண் தன்னை ஒரு பெண்ணுள்ளத்தில் செலுத்திவிடமுடியுமென்றால் பெண் உள்ளமென்பது வென்று கைகொள்ளத்தக்க வெறும் பொருள்தானா? அப்படி வலைவீச முடியுமென்று ஒருவன் தன்னைப்பற்றி எண்ணுவதே சிறுமையல்லவா?

அம்முயற்சிக்கு ஆற்றவேண்டிய மறுவினையென்பது ஒருகணமும் அவனை எண்ணாமல் இருப்பது. அவன் பெயரை முழுமையாகவே மறந்து போவது. ஆனால் அது அவளால் இயலும் என்று தோன்றவில்லை. எண்ணம் எழுவதற்கும் உதிர்வதற்கும் காலப்பெருக்கை ஆளும் தெய்வமொன்றின் ஆணை தேவை. மானுடரால் அதை செய்ய முடியாது. அவ்வெண்ணத்தை உதறும்பொருட்டு அவள் வெவ்வேறு பணிகளில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டாள். மூன்று நூல்களை ஒரே தருணத்தில் பயின்றாள். இருபொழுது களம் சென்று படைக்கலம் ஆடினாள். அவையில் நீட்டி வைக்கப்பட்ட இடர் மிக்க வழக்குகளை எடுத்து ஆய்ந்தாள். இருந்தெண்ண பொழுது எஞ்சாதபடி தன் நாட்களை நிறைத்தாள். அன்னங்களுடன் அமையும் தருணங்களும் குறைந்தன.

அவ்வலைகளால் ஆழத்தை மறைக்கவும் இயன்றது. ஆயினும் பொழுது இருண்டபின் துயில்கொள்ளும் பொருட்டு சேடியர் ஆடையும் அணியும் களைய பீடத்தில் அமர்ந்து விழிமூடும்போது காத்திருந்ததுபோல் வந்து அவளை பற்றிக்கொண்டது அவ்வெண்ணம். பின்னர் அவள் உதற உதற அருகிலெங்கோ இருந்தது. அதை மறைக்க அவள் சேடியருடன் மிகையாக சொல்லாடினாள். சிரித்தும் சினந்தும் சொல் சூழ்ந்தாள். மஞ்சத்தில் துயிலும்பொருட்டு படுத்து படுக்கையில் சுடர்மணி நின்ற அகல்விளக்கின் மங்கிய ஒளியில் இறுதியாக தன்னை உணர்கையில் இயல்பாக உடனிருந்தது அவ்வெண்ணம். பின்னர் அதை விலக்கும்பொருட்டு புரண்டு படுப்பதும் எழுந்தமர்வதும் இருளில் எழுந்து வான்நோக்கி மீன்களை நோக்கி சலிப்பதும் இடைநாழியில் நடந்து களைத்து மீள்வதும் விழிஓயும் வரை நூல் பயின்று படுப்பதும் அறியாது

துயின்று எழும்போது அவ்வெண்ணம் உடனிருப்பதைக் கண்டு சினப்பதுமாக அவள் நாட்கள் சென்றன.

அவளுக்குள் இருந்த விழைவே ஈர்த்து வந்ததுபோல் ஒவ்வொரு நாளும் அவனைப்பற்றிய செய்தி வந்துகொண்டிருந்தது. அல்லது முன்பும் வந்துகொண்டிருந்தவற்றில் இன்று அவள் உள்ளம் அவற்றை தொட்டுத் தேர்ந்தது. இந்திரனின் பெருநகரின் நடுவே இந்திரசிலையின் முகத்தைமட்டும் தனித்தெடுத்து வரைந்த ஓவியத்தை அவள் முன் காட்டிய சூதர் “இன்று பாரதவர்ஷத்தின் பெருஞ்சிலை இதுவே, இளவரசி” என்றார். அதை கையில் வாங்காமல் “நன்று, கருவூலத்தில் அது இருக்கட்டும்” என்றாள். “என்றேனும் நாம் அதைவிட பெருஞ்சிலை அமைக்கும்போது அளவுகளை அறிய பயன்படும்.” சூதர் தலைவணங்கி “அவ்வண்ணமே” என்றார்.

அன்றும் மறுநாளும் அத்திரைச்சீலையே அவள் எண்ணத்தில் எழுந்துகொண்டிருந்தது. பின்னர் சேடியை அழைத்து எடுத்து வரச்சொல்லி தனிமையில் அமர்ந்து அதை விரித்துப் பார்த்தாள். நோக்குகையில் ஏதோ ஒன்று விழிமறைக்க அது மங்கலாகியது விழி விலகுகையில் உளம் கூர்ந்து அதை இழைவரி தெளிய நோக்கியது. அதை பார்த்துக் கொண்டிருக்கையில் எங்கோ முன்பு அதை கண்டிருந்த நினைவெழுந்தது. சுருட்டி பீடத்தில் வைத்தபின் புருவம் சுளித்து ‘யார், எவர் முகம் அது?’ என்று தன்னுள் உசாவிக்கொண்டாள். அவளுள் அமர்ந்து அழியாது ஒலித்து அவைநிகழ்வின் ஊடாக வந்து சென்றது அவ்வெண்ணம்.

ஒருகணத்தில் அவள் உணர்ந்து கொண்டாள் அது அவன் முகம், வெவ்வேறு தருணங்களில் சேடியர் காட்ட அவள்

ஓரவிழியால் ஒருகணம் நோக்கி விலக்கியது. ஐயத்துடன் எழுந்து சென்று அச்சுருளை எடுத்து விரித்து இந்திரனின் முகத்தை பார்த்தாள் அவன் முகமேதான். திட்டமிட்டு அவன் அதை உருவாக்கி இருக்கிறான் என்று முதல் கணம் தோன்றியது. அவ்வாறல்ல என்று பின் சித்தம் உணர்ந்தது. சிற்பியர் ஒருபோதும் அரசனின் ஆணைகளுக்கு கட்டுப்படுபவர்களல்ல. அவர்களின் கைகளை இயக்குவது கற்பனையில் குடிகொள்ளும் தெய்வங்களே. அத்தெய்வங்கள் அவன் முகமே இந்திரனுக்குரியது என்று சொல்லியிருக்கின்றன போலும்.

அவள் அவன் முகத்தை மீண்டும் பார்க்க விழைந்தாள். தன் உளமயக்கு அல்ல என்று தெளிவதற்காக மட்டுமே என்று சொல்லிக்கொண்டாள். சேடியரிடம் அத்திரைச்சீலையை கொண்டுவரும்படி ஆணையிட தயக்கமாக இருந்தது. வாழ்வில் முதல் முறையாக தயக்கம் என்பதை அவள் உணர்ந்தாள். உள்ளம் வெளித் தெரிவதற்கு அஞ்சி உள்ளத்தால் பொத்திக் கொள்ளும் அச்செயலை அவள் முன்பு செய்ததே இல்லை. அவள் உள்ளத்தில் பிறரறியாது எதையும் கரந்ததில்லை. அவள் விழையாத எதுவும் இதழ்களிலும் முகத்திலும் வந்ததுமில்லை.

கரந்து வைத்திருந்த அவ்வெண்ணம் அவள் உடல்அசைவுகளை முழுமையாக மாற்றியது. சேடியரின் முகம் நோக்கி விழியெடுக்க இயலாதவளானாள். அவர்களிலிருந்து தனித்திருக்க விழைந்தாள். அவளில் நிகழ்ந்த அம்மாற்றத்தை சேடியர் உடனேயே உணர்ந்தனர். “இளவரசி ஏன் நம் விழிகளையே நோக்க மறுக்கிறார்?” என்று ஒருத்தி இன்னொருத்தியிடம் கேட்டாள். “ஆம், நானும் அதை நோக்கினேன், அவர் தோள்கள் குறுகியிருக்கின்றன” என்றாள்

இன்னொருத்தி. கேட்டு நின்ற முதிய சேடி புன்னகைத்து "இளவரசி காதல் கொண்டிருக்கிறாள்" என்றாள். இளம் சேடி திகைப்புடன் "எவரிடம்?" என்றாள். "அதை அறியேன். எவரிடமோ காதல் கொண்டிருக்கிறாள். ஐயமே இல்லை. பெண்டிர் தங்களிடமே மறைக்க விரும்புவதும் அது மட்டுமே. உலகத்திடமே மறைக்க முடியாததும் அதுவே" என்றாள் முதிய சேடி. இளம் பெண்கள் வாய்பொத்தி சிரித்தனர். அவர்கள் வியந்து அதனால் விலக்கி அதனூடாகவே அஞ்சிய ஒருத்தி பெண்ணென்றாகி அவர்களைப்போல் மாறியதன் உவகையை அவர்கள் கொண்டாடினர்.

நிலை கொள்ளாது தன் தனித்த அறையிலும் ஒளி விழுந்துகிடந்த இடைநாழியிலும் அன்னங்கள் மிதந்து சுழன்ற சுனைக்கரைகளிலும் மலர்கள் பூத்துப்பரவிய அணிக்காட்டிலும் எங்கென்றறியாதவள்போல தனித்து உலவும் அவளை சாளரங்களினூடாக நோக்கி ஒருவரையொருவர் விழிதொட்டு புன்னகைத்தனர். மறுநாள் தமயந்தி இயல்பாக செல்வதுபோல் கருவூலத்தில் நுழைந்து காப்பாளரிடம் ஓவியங்கள் அனைத்தையும் கொண்டுவரச்சொல்லி ஒவ்வொன்றாக பார்த்தாள். ஒவ்வொரு உடல்அசைவையும் நூறு முறை எண்ணியே இயற்றினாள். அவ்வெண்ணத்துடன் உடல் முரண்படவே விந்தையானதோர் நெளிவே அவளில் ஒளிவிட்டது. பெண் உடலை அறியாத முதிய காப்பாளரும்கூட என்ன நிகழ்கிறது அரசிக்குள் என்று எண்ணும்படி வெளிப்படையாக அமைந்திருந்தது அது.

அரண்மனை வரைபடங்களில் சிற்றாலயங்களின் ஓவியங்களை ஒவ்வொன்றாக எடுத்துப்பார்த்து அப்பால் வைத்தாள். கோட்டைகள் சிலைகள் என பார்த்துச்சென்று இயல்பாக

“அயல்நாட்டு அரசர்களின் படங்கள் எங்கே?” என்று அவள் கேட்டாள். மகதனையும் கலிங்கனையும் அங்கனையும் வங்கனையும் பார்த்துச் சென்ற கைகள் பதறத் தொடங்கின. மேலுதடு வியர்க்க முலைகள் எழுந்தமைந்தன. அவளை நோக்கிக்கொண்டிருந்த முதிய காப்பாளர் ‘ஆம், பிறிதொன்றுமல்ல’ என்றார் தனக்குள். அவள் கழுத்து நரம்பொன்று பதற உதடுகள் எழுந்தமைய விரித்துப்பார்த்த அந்த ஓவியம் எவருடையது என்று அறியவேண்டுமென்று விழைந்தார். அவள் அதை மட்டும் எடுத்து சுருட்டிக்கொண்டு “நன்று” என்று திரும்பிச் சென்றாள்.

அவளது நடைவிரைவைக்கண்டு எழுந்து பின்னால் நோக்கி நின்றார். அந்த ஓவியம் எந்த அரசனுடையதென்று எளிதில் கண்டுபிடித்துவிட முடியும் என்று ஏன் அவளுக்கு தோன்றவில்லை என்று வியந்தார். எஞ்சியவற்றை எடுத்துநோக்கி அது நிஷத மன்னன் நளனுடையது என்று அறிந்ததும் “மெய்யாகவா...? இதுவும் நிகழுமா இப்புவியில்...?” என்றார். பின்னர் மெல்ல தளர்ந்து பீடத்தில் அமர்ந்து “ஆம். இவ்வாறுதான் எப்போதும் நிகழ்கிறது. மானுடரைக்கொண்டு புதிய நாடகங்களை இயற்றவே தெய்வங்கள் விரும்புகின்றன” என்று சொல்லிக்கொண்டார்.

எவரிடமும் அதை சொல்லலாகாது என்று தனக்கு ஆணையிட்டுக்கொண்டாலும் அன்றிரவே தன் முதிய துணைவியை அழைத்து “அது நிஷத மன்னன் நளன்” என்றார். அவள் வாய்பொத்தி “என்ன சொல்கிறீர்கள்?” என்று கேட்க “எவரிடமும் சொல்லாதே. நானறிவேன். இளவரசி அவன் ஓவியத்தை எடுத்துகொண்டு சென்றாள்” என்றார். “அது அவன்மேல் உள்ள காதலினால் என்று எப்படி அறிவீர்கள்?

நஞ்சூட்டி அவனை கொல்லும்பொருட்டாகக்கூட இருக்கலாமே...?” என்றாள். “நான் கண்ணும் செவியும் மழுங்கிய முதியவன். ஆனால் இளமையில் தானறிந்த இளம்பெண்ணை எந்த ஆணும் மறப்பதில்லை. அவள் உடலிலும் விழிகளிலும் வந்த அந்நிகழ்வு காதல் என்றறியவில்லை என்றால் நான் வாழ்ந்ததில்லையென்றே பொருள்” என்றார் முதியவர்.

மறுநாளே குண்டினபுரி முழுக்க நளனே பேசுபொருளானான். அரண்மனையில் பெண்டிர் மந்தண ஒலியில் ஒருவரோடொருவர் “அவனா...? கரியவன்” என்றார்கள். “அடுமனைத் திறன் கொண்டவன். இனி அரசவை உணவுக்கு தாழ்வில்லை” என்று பேசி வாய்பொத்தி சிரித்துக்கொண்டனர். “அழகன்... அதில் ஐயமில்லை” என்றனர். “யார் பார்த்தது அவ்வோவியத்தை?” என்றாள் ஒருத்தி. “நான் பார்த்தேன். அவன் வடிவிலேயே நகர் மையத்தில் இந்திரன் சிலை எழுந்துள்ளது என்று எனக்குத் தோன்றியது” என்றாள் இன்னொருத்தி. “அவனேதான்” என்றாள் பிறிதொருத்தி. பட்டு கசங்கும் ஒலியில் அவன் பெயர் ஒலித்துக்கொண்டே இருந்தது அகத்தளத்தில்.

மகளிர் எவருக்கும் அது சினமூட்டவில்லை. அரசியின் உள்ளம் இயல்பெனச் சென்று படிந்தது என்ற செய்தியே அவர்களையும் நளனை ஏற்க வைத்தது. காவலரும் பிறரும் முதற்கணம் நிஷாதனா என வியந்தாலும் பின்னர் அவனுடன் தங்களை இணைத்துக்கொண்டார்கள். குடிப்பெருமையையும் தொல்பெருமிதத்தையும் கடந்து நிஷாதனை தங்கள் அரசனாக எண்ணிக்கொள்ளவும் செய்தது அந்த உளம்புகுதல்.

தமயந்தி மட்டும் அதை அறிந்திருக்கவில்லை. தன் அறைக்குள் கதவை தாழிட்டுவிட்டு மஞ்சத்தில் படுத்து அந்த முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் எண்ணியிருந்த

உள்ளக்காதலனின் முகமல்ல. சிறிய உருவம். கரிய கூர்முகம். அவன் ஒரு பறவை போன்றிருப்பதாக அவளுக்குத் தோன்றியது. அவளைவிட இளையவன். தன்னருகே நின்றால் உயரம் குறைந்தவனாக, தன் தோளைவிட சிறிய தோள்கொண்டவனாக அவன் இருக்கக்கூடும். அவளை வென்று வளைக்கும் பெருங்கைகள் கொண்டவனல்ல. அவளுக்கு நேர்நின்று வில்லோ வாளோ சுழற்றும் திறன் கொண்டவனல்ல. எவ்வகையிலும் அவனல்ல அவள் எண்ணியிருந்தவன்.

ஆனால் அவனையே எண்ணிக்கொண்டிருக்கிறாள். பெண்ணுள்ளம் கவரும் மாயங்களை நிஷதரும் அசுரரும் அறிவார்கள் என்று கேட்டிருந்தாள். அழகியரை தங்கள் மாயத்தால் கவர்ந்து செல்லும் அரக்கர்களின் கதைகள் நூறு. அவ்வண்ணம் இருக்குமோ இதுவும்? தன் உள்ளத்தில் அவன் செலுத்திய மாயச்சொல்லொன்று தூண்டில் முள்ளென குத்தியிருக்குமோ? மீண்டும் மீண்டும் அவ்வெண்ணத்தைச் சென்றடைவது பிறிதெவரோ ஒருவரா?

அன்றிரவு ஒரு தருணத்தில் அவ்வெண்ணத்தின் சுழலிலிருந்து ஒருகணமும் தான் மீளவில்லை என்று உணர்ந்தபோது எண்ணியிரா கணம் ஒன்றில் சினம் மூண்டெழ அவள் அந்த ஓவியத்தைக் கிழித்து சாளரத்தினூடாக வெளியே வீசினாள். இல்லை, இக்கணமே அவனை மறப்பேன், இனி ஒரு போதும் அவனை நினைக்க மாட்டேன், இதை என் மூதன்னையர் முன் ஆணையிடுவேன். என் குருதியால் உறுதிகொள்வேன்.

தன் மேலாடையை எடுத்து அணிந்தபின் பீடத்திலிருந்து உடைவாளை எடுத்துக்கொண்டு கதவைத் திறந்து வெளியே செல்லப்போனாள். உள்ளம் மூதன்னையரின் ஆலயத்தை

அடைந்துவிட்டிருந்தது. கதவுநிலையைக் கடந்தபோது தன் அறைக்குள் ஒரு சிறகோசையை கேட்டாள். திகைத்து தயங்கி நின்று அறைக்குள் பார்த்தபோது அன்னப்பறவை ஒன்று தன் அறைக்குள் தரையில் நின்றிருப்பதை கண்டாள். அவள் அரண்மனையின் அன்னங்கள் அனைத்தையும் அவள் அறிந்திருந்தாள். அது எங்கிருந்தோ வந்தது என்று தோன்றியது.

அருகணைந்து முழந்தாளிட்டு குனிந்து அதை பார்த்தாள். நெடுந்தொலைவு பறந்து அது வந்திருப்பது தெரிந்தது. கழுத்தை வளைத்து அலகை சற்றுத் திறந்து மூச்சிரைத்துக் கொண்டிருந்தது. அது எங்கிருந்து வந்ததென்று அவள் உள்ளம் நன்கறிந்திருந்தது.

தமயந்தியின் மணத்தன்னேற்பை நிகழ்த்தலாமென்று பீமகர் முடிவெடுக்கவேண்டிய நெருக்கடி ஏற்பட்டது. பல ஆண்டுகளாக ஒரு முள்முனையிலிருந்து பிறிதொரு முள்முனைக்கு தத்தளித்து தாவிக்கொண்டிருந்தார். தமயந்தி திருமணத்திற்குரிய அகவையைக் கடந்து நெடுங்காலமாகிறதென்பதை அவள் அன்னை ஒவ்வொரு நாளும் அரசனுக்கு சொல்லிக்கொண்டிருந்தாள். ஒருமுறை கவலையுடன் “ஆம். உடனே முடித்துவிடவேண்டியதுதான்” என்பார். பிறிதொரு முறை எரிச்சலுடன் “நான் என்ன செய்வது? ஒவ்வொரு அமைச்சரும் ஒவ்வொன்றை சொல்கிறார்கள். எந்த முடிவெடுத்தாலும் எவருடைய வாளோ எனக்கெதிராக எழப்போகிறது” என்பார். சில தருணங்களில் சினந்தெழுந்து “அவள் தலையை வெட்டி வீசிவிட்டு அமைதியாக நாடாள்கிறேன். என் குடிக்கு பிறந்த தீச்சொல்லென இவள் இங்கு வாழ்கிறாள்” என்பார்.

அரசி சினத்துடன் “என்ன பேசுகிறீர்கள் என்று உணர்ந்திருக்கிறீர்களா? பேரரசர்களின் முடி பணியும் அடி என்று அவளை நிமித்திகர்கள் சொல்கிறார்கள். நம் குடியில் எழுந்த அருமணி அவள்” என்றாள். “ஆம். ஆனால் அருமணி விளைந்த நாகத்தை குழி தேடிப்பிடித்து வெளியே இழுத்து கொன்று மணியை கவர்ந்து செல்வார்கள்” என்றார் பீமகர். “எளிய பெண்ணொருத்தியைப் பெற்றிருந்தால் போதும்.

எவருமறியாமல் அவள் இங்கு இருந்திருந்தால் இத்தருணத்தில் அவள் மைந்தனே முடியேற்கும் அகவை அடைந்திருப்பான். படைபலமும் செல்வமும் குடிவல்லமையும் இல்லாத அரசனின் அரண்மனையில் அவள் பிறந்தது…” என்றபின் “கூரை மேலிட்ட நெருப்பு என அவள் என் குடியை அழித்துக்கொண்டிருக்கிறாள்” என்றார்.

“ஏன் இத்தனை அல்லாடல்? நம் முடிவை நாம் எடுப்போமே?” என்றாள் அரசி. “நூறுமுறை உன்னிடம் சொல்லிவிட்டேன். மகற்கொடை மறுப்பென்பது ஒரு எளிய செயல் அல்ல. பேரரசர்கள் அதை போருக்கான அறைகூவலாகவே எடுத்துக்கொள்ளவேண்டுமென்று தொல்மரபு உள்ளது. மகற்கொடை மறுக்கப்பட்டவன் வாளாவிருந்தால் அஞ்சினான் என்று இழிபெயரை சூடுவான். மகற்கொடை மறுப்பு என்று ஒரு காவிய வடிவை உருவாக்கி சிறிய அரசர்கள் அனைவரையும் கழுமுனைகளில் கொண்டு அமர வைத்திருக்கிறார்கள் இழிபிறவிகளாகிய புலவர்கள்” என்றார் பீமகர்.

அரசி முன்னரே பல கோணங்களில் அதை அறிந்திருந்தாலும்கூட ஒவ்வொரு முறை கேட்கும்போதும் பெருந்துயருற்று “ஆம். ஆனால் அவளை அவ்வாறு படைத்த விண்ணாற்றல்கள் அதற்கொரு வழி கண்டிருக்கும். அவள் சக்ரவர்த்தினியாவாள் என்றுரைத்த நிமித்திகர் அறிந்திருப்பார்கள் அதை” என்றாள். “நிமித்திகர்கள் என்ன சொல்ல முடியும்? அவளுக்கான கொழுநன் முன்னரே பிறந்துவிட்டான் என்கிறார்கள். எங்கிருக்கிறான் என்றால் ஊழ் அவனை கொண்டுவந்து நிறுத்தும் என்கிறார்கள். ஊழை எதிர்கொள்ள வேண்டும். ஊழுக்கு எதிர்நிற்றல் என்பது…” கசப்புடன் நகைத்து “அது காரிருளுக்குள் மதவேழத்தை

எதிர்கொள்வதுபோல என்று ஒரு கூற்று உண்டு” என்றார் பீமகர்.

ஆனால் சில நாட்களுக்குள் அமைச்சர்கள் நால்வர் அவருடைய தனியறையில் வந்து சந்தித்தனர். இரவுணவுக்குப்பின் வெற்றிலை மென்றபடி இசைக்கலைஞர் யாழிசைப்பதை ஆர்வமில்லாமல் கேட்டபடி அமர்ந்திருந்தார் பீமகர். தலை மதுமயக்கில் அவ்வப்போது சரிந்துகொண்டிருந்தது. அரசி அருகே தரையில் விரித்திட்ட மரவுரித்தலையணைகளும் உருளைத் திண்டுகளும் துணையிருக்க அரைத்துயிலில் சரிந்துகொண்டிருந்தாள். சூதர்கள் வழக்கமாக வாசிப்பதை கைபோக்கில் வாசித்துக்கொண்டிருந்தார்கள். ஏவலன் வந்து அமைச்சர்களின் வரவை அறிவித்தான்.

அமைச்சர்களின் வருகை பீமகரை சற்று குழப்பியது. ஒருகணம் எண்ணியபின் கையசைத்து சூதர்களை வெளியே செல்லும்படி பணித்தார். அவர்கள் தங்கள் யாழ்களையும் முழவுகளையும் பொதிந்து எடுத்துக்கொண்டு தலைவணங்கி வெளியேறியபின் அமைச்சர்களை உள்ளே வரச்சொன்னார். அவர்கள் உள்ளே வந்து துயில் கலைந்து என்னவென்று அறியாமல் பார்த்த அரசியை வியப்புடன் நோக்கியபின் தலைவணங்கினர். பீமகர் “அமர்க!” என்றார். அவருக்கு முன் இடப்பட்டிருந்த மென்சேக்கை பீடத்தில் அவர்கள் அமர்ந்தனர்.

அமைச்சர் முகங்களில் கவலை தெரிவதைக் கண்டபின் பீமகர் திரும்பி அரசியிடம் “நீ சென்று துயில்க! நான் இவர்களிடம் பேசிவிட்டு வந்துவிடுகிறேன்” என்றார். வாயைத் துடைத்து “இளவரசியின் செய்தியென்றால் நான் கேட்கிறேனே” என்றாள் அரசி. “இல்லை அரசி, இது எல்லைப்போர் குறித்து” என்றார்

அமைச்சர். “நன்று” என்றபின் அவள் சேடியின் தோள்பற்றி வெளியே சென்றாள்.

அரசி சென்றபின் அக்கதவை மெல்ல மூடிவிட்டு வந்தமர்ந்த அமைச்சர் பாஸ்கரர் “பொறுத்தருள்க, அரசே! இது இளவரசியை பற்றித்தான்” என்றார். “சொல்க!” என்றார் பீமகர். “கலிங்க மன்னர் படைகொண்டு வந்து நம் இளவரசியை கவர்ந்து செல்லக்கூடும். நம்புதற்குரிய ஒற்றுச்செய்தி இன்று மாலை வந்துள்ளது” என்றார். படபடப்பை மறைக்க விரல்களைக் கோத்து நெஞ்சில் வைத்தபடி வெறுமனே நோக்கினார் பீமகர். அதற்குள் ஓர் ஏப்பம் வந்து மதுநாற்றத்தை அறையில் பரப்பியது.

“மாளவனுக்கு நாம் இளவரசியை கொடுக்கவிருப்பதாக ஒரு செய்தி கலிங்கத்துக்கு சென்றிருக்கிறது. எத்தருணத்திலும் அது நிகழும் என்பதனால் முந்திக்கொள்ள வேண்டுமென்று எண்ணுகிறார் கலிங்கர்” என்றார் அமைச்சர் பாஸ்கரர். இன்னொரு அமைச்சர் மதுரர் “அவருக்கு வேறு வழியில்லை. இன்று கலிங்கத்தின் இரு துறைமுகங்களையும் வந்தணையும் பொருட்களின் பெரும்பகுதி விதர்ப்பப் பெருநிலத்திலிருந்து திரட்டப்படுவது. விதர்ப்பம் மாளவத்தின் ஆட்சிக்கு செல்லுமென்றால் இப்பொருட்களனைத்தும் மாளவத்தின் துறைமுகங்களுக்கே செல்லும்” என்றார்.

“ஆம். ஏற்கெனவே அவர்களுக்குள் அந்தப் போட்டி இருந்தது” என்றார் பீமகர். “நம்மை யார் கொன்று உண்பது என நம் கண்முன்னரே பூசலிட்டுக்கொண்டார்கள்.” அமைச்சர் மதுரர் “கலிங்கர் படைகொண்டு வருகிறார் என்றால் ஐந்து நாட்களுக்கு மேல் நமது படை எதிர்த்து நிற்கமுடியாது. கலிங்கரின் படைகள் பெருவல்லமை கொண்டவை. பீதர் நாட்டு

படைக்கலங்களாலும் தென்னகத்து வில்லவர்களாலும் செறிவூட்டப்பட்டவை” என்றார். பீமகர் “நாம் என்ன செய்வது...?” என்றபின் கசப்புடன் நகைத்து “கலிங்கன் படைகொண்டு வரட்டும். நாம் பணிந்து கப்பம் கட்டுவோம். நம் மகளை அவன் சிறைபிடித்து செல்லட்டும். அதன் பின் போரிடுபவர் எவரானாலும் கலிங்கனுடன் அல்லவா அதை செய்யவேண்டும்?” என்றார்.

“இது வீண்பேச்சு, அரசே. விதர்ப்பம் இதுவரை எவருக்கும் கப்பம் கட்டாத தனியரசாகவே இருந்து வந்துள்ளது. தனியரசாக இருக்கும் வரைதான் உண்மையில் மதிப்பும் பாதுகாப்பும். ஒருமுறை ஒரு நாட்டுக்கு கப்பம் கட்டிய அரசு மீண்டும் பிறிதொரு நாட்டுக்கு கப்பம் கட்டுவதாகவே மாற முடியும். அது எவருக்கேனும் கப்பம் மறுத்து தனிக்கொடி நாட்டுவதை தங்களுக்கெதிரான அறைகூவலாகவே முடியுடை மன்னர் அனைவரும் எண்ணுவார்கள். இத்தருணத்தில் எளிய அச்சங்களால் நாம் தலை தாழ்வோமென்றால் நம் குலம் எழுவதற்கு பற்பல தலைமுறைகள் ஆகலாம். ஒருபோதும் எழமுடியாமலும் போகலாம்” என்றார் அமைச்சர் மதுரர்.

“கப்பம் கட்டுவது எளிய அரசியல் செயல் மட்டுமல்ல. நாம் கப்பம் கட்டும்போதே நமது படைகளின் குடிகளின் தன்மதிப்பை அழிக்கிறோம். தங்கள் நகர் மீதும் முடி மீதும் அவர்கள் கொண்டிருக்கும் பெருமிதம் இல்லாமலாகும். நம் பொருட்டு உயிர் துறக்க படைகளும் குடிகளும் சித்தமாக மாட்டார்கள். அவ்வுணர்வை வரலாற்றைக் கடந்து கால் வைத்துச் செல்லும் வீரன் ஒருவன் தூண்டினாலொழிய மாற்றவோ வெல்லவோ இயலாது” என்றார் அமைச்சர் சதகர்.

பீமகர் எரிச்சலுடன் “என்னதான் செய்யச் சொல்கிறீர்கள்? கலிங்கன் படைகொண்டு வந்தால் அடிபணிந்து நகர் காத்து ஒளிவதன்றி வேறென்ன செய்ய முடியும் என்னால்...” என்றார். “அதற்கு முன் நாம் இளவரசியின் மணத்தன்னேற்பை அறிவிப்போம்” என்றார் மதுரர். “என்ன சொல்கிறீர்கள்? குண்டினபுரியில் இன்று பேரரசர்கள் வந்து தங்குமளவுக்கு இடமுள்ளதா? அவர்களுக்கான பாதுகாப்பை நம்மால் செய்யமுடியுமா? அதை எண்ணித்தானே இத்தனை ஆண்டுகாலம் மணத்தன்னேற்பை ஒத்திப்போட்டோம்?” என்றார் பீமகர்.

“ஆம். ஆனால் இப்போது வேறு வழியில்லை. இன்னும் இருநாட்களுக்குள் கலிங்க மன்னர் படையுடன் புறப்பட்டுவிடுவார். படை எழுச்சியை அவர் முரசறைந்துவிட்டால் ஒழிவது இழிவென்று எண்ணுவார். அதற்குள் மணத்தன்னேற்பு அழைப்போலை அவருக்கு சென்றுவிட்டதென்றால் அதை நாம் தவிர்க்க முடியும்” என்றார் பாஸ்கரர். “இங்கா...? மணத்தன்னேற்பா...?” என்றார் பீமகர். “ஆம். பிறிதொரு வழியில்லை. பேரரசர்கள் வரட்டும். போர் நிகழுமென்றால் அவர்களுக்குள் குருதி சிந்திக்கொள்ளட்டும். எதுவாக இருந்தாலும் இத்தருணத்தில் எவருக்கும் அடிபணியாமல் கடந்து போக பிறிதொரு வழியில்லை. இனி எண்ணுவதற்கொன்றுமில்லை, அரசே” என்றார் மதுரர்

பீமகர் “நன்று! அதையே செய்வோம்” என்றார். “இப்போதே தாங்கள் ஆணையிட்டால் நன்று” என்றார் இளைய அமைச்சர் கல்விதர். “இப்போதே ஆணை எழுதவேண்டுமா?” என்று எரிச்சலுடன் பீமகர் கேட்க “ஆணைகளை எழுதிக்கொண்டு வந்துவிட்டோம். தாங்கள் இலச்சினை இட்டுவிட்டால்

இன்றிரவே தூதுப்பறவைகள் கிளம்பும். நாளை மறுநாள் கலிங்கத்திற்கும் மகதத்திற்கும் மாளவத்திற்கும் செய்தி சென்று சேரும்” என்றார் பாஸ்கரர்.

படபடப்புடன் “எப்போது மணத்தன்னேற்பு?” என்றார் பீமகர். “வரும் ஆவணி முழுநிலவு நாள். இன்னும் பதினாறு நாட்களே உள்ளன” என்றார் மதுரர். “பதினாறு நாட்களுக்குள் அவர்கள் தங்குவதற்கான பாடிவீட்டை அமைப்பதற்கே நேரமில்லையே...?” என்று பீமகர் கேட்டார். “வேண்டியதில்லை. இங்குள்ள பெருவணிகர் இல்லங்களை ஒழித்து அவர்களை சிறுவீடுகளுக்கு போகச் சொல்வோம். அரசர்கள் இல்லங்களில் தங்கட்டும்.” தயக்கத்துடன் “அது இழிவு” என்று சொன்னார் பீமகர். “ஆம். ஆனால் தோற்று கப்பம் கட்டுவதைவிட நன்று” என்றார் பாஸ்கரர்

பீமகர் சீற்றத்துடன் “என்னை என்ன செய்ய சொல்கிறீர்கள்? இச்சிறு நாட்டின் அரசனானது எனது தவறல்ல” என்றார். பின்னர் நீள்மூச்செறிந்து “இதை பெருநாடாக்கும் துணிவும் எனக்கில்லை” என்றபின் “இம்மகளைப் பெற்றதற்காக இத்தருணத்தில்...” என்று கையசைத்தார். எண்ணங்கள் ஒருநிலை கொள்ளாமல் உடல் தவித்த பின் “இலச்சினைகளை நீங்களே வைத்து அறிவிப்பை வெளியிடுங்கள். செய்வதென்ன என்று முடிவெடுத்துக் கொள்ளுங்கள். இனி எதையும் என்னை கலந்து பேசவேண்டியதில்லை” என்றார். எழுந்து சால்வையைத் திருத்தி மறுபக்கம் இருந்த சிறுவாயிலினூடாக வெளியே சென்றார்.

தலைவணங்கி அமைச்சர்கள் தங்களுக்குள் மெல்லிய குரலில் உரையாடியபடி வெளியேறினர். அரசியிடம் சென்று நிகழ்ந்ததை சொல்ல வேண்டுமென்றுதான் வெளியே வந்தார்

பீமகர். ஆனால் அவள் நன்றாக துயின்று வழிந்துகொண்டிருப்பாள் என்று எண்ணியபோது சலிப்பாக இருந்தது. தன் தனிமஞ்சத்தறைக்குச் சென்று அமர்ந்தபின் ஏவலரை அழைத்து மது கொண்டுவரும்படி ஆணையிட்டார். ஏழு கோப்பை மதுவை அருந்தியபின் உடலில் வெம்மையும் தளர்வும் நிறைய மெதுவாக எழுந்து மஞ்சத்தில் படுத்தார்.

சேற்றுக்குள் புழு நெளிவதுபோல மணத்தன்னேற்பைக் குறித்த எண்ணங்கள் அவருள் நிகழ்ந்தன. என்ன நிகழ்கிறது? விதர்ப்பத் தலைநகரியில் போரா? என்ன வேண்டுமானாலும் நிகழட்டும் என்று எங்கிருந்தோ பிறிதொரு குரல் ஒலித்தது. “ஆம்” என்றபடி புரண்டுபடுத்து சேக்கையை உடலால் கவ்வியபடி அவர் துயின்றார்.

# நீர்க்கோலம் - 11

## 10. படைகொளல்

விதர்ப்பத்தின் இளவரசி தமயந்திக்கு மணத்தன்னேற்பு அறிவிக்கப்பட்டிருக்கும் செய்தியை பிற மன்னர்கள் அறிவதற்கு முன்னரே நளன் அறிந்தான். அவனிடம் அதை சொன்ன ஒற்றன் “திடீரென்று எடுக்கப்பட்ட முடிவு, அரசே. அன்றைய நாள் அந்தி வரை அப்படி ஓர் எண்ணமே அரண்மனையில் இருக்கவில்லையென்று உறுதியாக நான் அறிவேன். அந்தி மயங்கியபின் ஏதோ செய்தி வந்திருக்கிறது. முன்னிரவில் அரசரை சென்று பார்த்து ஓலையில் இலச்சினை வாங்கி உச்சிக்குள் ஓலைகளை அனுப்பிவிட்டார்கள். மகதருக்கு அனுப்பப்பட்ட ஓலையைத்தான் நான் பார்க்க முடிந்தது. அத்தருணத்திலேயே நான் கிளம்பி இங்கு வந்தேன்” என்றான்.

தன் தனியறையில் சாளரத்தருகே நின்றிருந்த நளன் சில கணங்கள் வெளியே தெரிந்த கோதையின் பெருக்கை நோக்கி நின்றபின் “அதில் ஐயமேதும் இல்லையல்லவா?” என்று கேட்டான். “ஏனென்றால் அரசாடலில் அப்படி பல நுண்சூழ்ச்சிகள் நிகழ்வதுண்டு. அது எவரையோ ஏமாற்றுவதற்கான முயற்சியாக இருக்கலாம். ஒருவேளை நம்மை கூட.”

ஒற்றன் “இல்லை” என்றபின் புன்னகைத்து “அத்தகைய நுண்ணிய அரசாடலைச் செய்யும் திறன் கொண்ட எவரும் குண்டினபுரியில் இன்றில்லை” என்றான். நளனும் புன்னகைத்து “நன்று” என்றபின் திரும்பிவந்து மஞ்சத்தில் அமர்ந்து கால் நீட்டி உடல் தளர்த்தி கைகளை மார்பில் கட்டிக்கொண்டான். எண்ணம் பெருகியொழுக தலைதாழ்த்தி அரைவிழி மூடி தன்னுள் மூழ்கினான்.

அவன் முன் நின்றிருந்த ஒற்றன் நெடுநேரம் அவனை நோக்கி நின்றபின் மெல்ல கனைத்து “நாம் செய்வதற்கொன்றே உள்ளது, அரசே” என்றான். “சொல்!” என்றான் நளன். “இளவரசி உங்கள்மேல் காதல் கொண்டிருக்கிறார் என்பதில் ஐயமில்லை. இன்றே கிளம்பினால் சிறியதோர் புரவிப்படையுடன் சென்று இளவரசியை கவர்ந்துகொண்டு வரமுடியும். நம்முடன் அவர் கிளம்பி வருவார் என்பதிலும் எனக்கு எண்ணமாற்றில்லை.”

நளன் “ஆம். முதலில் எனக்கும் அதுவே தோன்றியது. ஆனால் பெண் கவர்தல் என்பது நேரடியாகவே போருக்கான அறைகூவல்” என்றான். “இன்று கலிங்கமும் மாளவமும் மகதமும் இணைந்து படைகொண்டு வந்தால் நிஷதநாடு இரண்டு நாட்களுக்கு மேல் போர்முனையில் நின்றிருக்க முடியாது” என்றான் “அனல்குலத்து ஷத்ரியர் அனைவரும்

தங்கள் எதிரிகள் என்பதை ஷத்ரியர் நன்கறிவார்கள். தங்கள் பூசல்களை விடுத்து ஒருங்கிணைய முடியாததனால்தான் நம்மை அவர்கள் விட்டுவைத்திருக்கிறார்கள். இது அவர்கள் ஒருங்கிணைவதற்கான உகந்த தருணமாக நம்மால் அளிக்கப்படலாகாது.”

“ஆனால்…” என்று அமைச்சர் கருணாகரர் ஏதோ பேசத் தொடங்க “மணத்தன்னேற்பு நிகழட்டும். அதில் இளவரசி என்னை மாலையணிவித்து வேட்பாளென்றால் அதன் பின்னர் அதன்பொருட்டு என்னிடம் போருக்கு முரசறைய நூல்நெறி ஒப்பாது” என்றான் நளன். “அத்துடன் கலிங்கமும் மாளவமும் மகதமும் இன்று அவர்களைவிட தொன்மையான ஷத்ரியர்களிடம் மோதிக்கொண்டிருக்கின்றனர். இவர்களை இன்று எழுந்து வந்தவர்கள், தொல்நெறியறியாதவர்கள் என்று பண்டைய பதினாறுகுடி ஷத்ரியர்கள் ஏளனம் செய்கிறார்கள். அதன் பொருட்டு இவர்கள் அந்தணர்குடிகளை தங்கள் அரசுகளில் உருவாக்கி வேள்விகளை நாளும் நிகழ்த்துகிறார்கள். தாங்கள் செய்யும் ஒவ்வொன்றும் அந்தணர் அவையின் ஒப்புதல் பெற்றே என்று அனைத்து அறிவிக்கைகளிலும் குறிப்பிடுகிறார்கள். மணத்தன்னேற்பில் பெண்ணை கொண்டுசென்ற ஒருவன்மேல் அதன்பொருட்டு போர்தொடுக்க அந்தணர் அவைகள் ஒருபோதும் ஒப்பா.”

குழப்பத்துடன் “ஆம்” என்றார் கருணாகரர். தானும் மெல்லிய குழப்பத்துடன் எழுந்து அறைக்குள் கைகளை பின்னால் கட்டியபடி நடந்து சாளரத்தின் வழியே வெளியே சற்று நேரம் நோக்கி நின்று திரும்பி “ஆம். வேறு வழியில்லை. நாம் மணத்தன்னேற்பில் பங்குகொள்வதே ஒரே வழி” என்றான். கருணாகரர் “நமக்கு அழைப்பில்லை” என்று சற்றே சலிப்புடன்

சொன்னார். “அவ்வழக்கம் இல்லை. விதர்ப்பம் இன்றுவரை நம்மை ஓர் அரசாக எண்ணியதே இல்லை. ஆனால் நூல் நெறிகளின்படி அழைக்கப்படாமலும் மணத்தன்னேற்பில் கலந்து கொள்ளலாம். முடிசூடி கொடியேந்திய பெருங்குடி ஷத்ரியர்களை மட்டுமே முறைப்படி அழைக்க வேண்டுமென்பது வழக்கம். மணத்தன்னேற்புகளில் அரக்கரும் அசுரரும்கூட கலந்து கொள்ளலாம் என்று பண்டைய நூல்கள் சொல்கின்றன” என்றான் நளன். “நாம் செல்வதற்கு நூலொப்புதல் உண்டு.”

பின்னர் தனக்குத்தானே என “நாம் செல்வதை அவர்கள் எப்படி எடுத்துக்கொள்வார்கள் என்று தெரியவில்லை. நான் அவள் உள்ளத்தில் இடம் பெற்றது இன்னமும் விதர்ப்பனுக்கு தெரியாது அல்லவா?” என்றான் நளன். “விதர்ப்பத்தில் மக்களிடையே அந்தப் பேச்சு சில நாட்களாக இருக்கிறது. அமைச்சரும் அரசரும் அதை அறியாதிருக்கமாட்டார்கள்” என்றான் ஒற்றன்.

நளன் நகைத்து “ஆனால் நான் மிகச் சிறியவன் என்பதனாலேயே அவர்கள் அதை நம்பமாட்டார்கள். வீணாக விரும்பி ஏளனத்துக்குள்ளாகும் பொருட்டே நான் நண்ணுவதாக எண்ணுவார்கள். அவ்வெண்ணமே நமது காப்பு. கலிங்கனும் மகதனும் மாளவனும் வங்கனும் யானைக்காலடியில் ஊரும் எறும்பென்று நம்மை கருதுவதனாலேயே நாம் எதிர்ப்பற்றவர்கள். நாம் நச்சுநா கொண்டு கடிக்கும்வரை விழிகளுக்குத் தெரியாத நாகம்” என்றான்.

அவனுக்குள் திட்டம் உருக்கொள்ள குரல் எழுந்தது. “அணிபடைகளும் அகம்படியும் இல்லாமல் எளிமையாக மணத்தன்னேற்புக்கு செல்லலாம். மணத்தன்னேற்பில்

பங்கெடுப்பதை நிகழ்வுக்கு சில நாழிகைக்கு முன்னர் அறிவித்தால் போதும். அரசர்களுக்கு அடிபணியும் பரிசுகளுடன் சென்று அனைவரையும் ஒருமுறை கண்டு வணங்கிவிட்டால் நாம் அரசவையில் அமரும் வாய்ப்புக்கென வந்த எளியோர் என எண்ணுவார்கள் விதர்ப்பர். நிஷாதர்கள், அசுரர்களின் சிறுகுடிகள் அவ்வாறு மணிமுடி சூடுதல் முதலிய ஷத்ரியப் பெருவிழவுகளுக்குச் சென்று அவையமர்ந்து மீள்வது வழக்கம்தான். ஓர் அரசவையில் அமர்தல் தங்களவர்கள் நடுவே சிறு அரசகுடியென மதிப்பு கொள்ளுதல்தான் என்று அவர்கள் அறிந்திருக்கிறார்கள்."

"ஆம். உண்மையில் ஒருமுறை அப்படி சென்று வருவது அவர்களின் குடிகளையும் அவர்களின் எதிர்குலங்களையும் அவர்கள் அரச ஆதரவுகொண்டவர்கள் என எண்ணவைக்கிறது. ஒரு நிஷத குடித்தலைவன் சென்று வங்கனையும் கலிங்கனையும் மகதனையும் கண்டு பரிசளித்து வணங்கி மீள்வதே பிற குடிகளுக்குமேல் ஒரு கொடி உயரத்தை அளிக்கிறது" என்றார் கருணாகரர். "ஆம். அதன் பொருட்டே நாம் செல்கிறோம். அவ்வாறே அவர்கள் எண்ணட்டும். அதுவே நமது வழியென்றாகட்டும்" என்றான் நளன்.

மறுநாள் அமைச்சர்கள் கூடிய அவையில் அவன் தன் திட்டத்தை சொன்னபோது அமைச்சர்களும் படைத்தலைவர்களும் ஒருங்கே எழுந்து எதிர்ப்புக் குரலெழுப்பினர். படைத்தலைவன் வஜ்ரகுண்டலன் "என்ன செய்கிறோமென்று எண்ணிச் சூழ்ந்துள்ளீர்களா, அரசே? நாம் செல்வது எளிது. அங்கு மணத்தன்னேற்பில் பலரில் ஒருவராக சென்று நிற்பதும் இயல்வதே. ஒருவேளை விதர்ப்ப இளவரசி தங்கள் கழுத்தில் மாலை சூட்டவும் கூடும். ஆனால் அதே

நூல்நெறிகளின்படி அங்கு மணத்தன்னேற்புக்கு வந்திருக்கும் அரசர்கள் அனைவருக்கும் குண்டினபுரியின் எல்லை வரை உங்களை துரத்தி வரவும் கொன்று இளவரசியை சிறைபிடிக்கவும் உரிமை உண்டு. அந்நகரியின் எல்லைக்குள் உங்களை எவர் வேண்டுமென்றாலும் போருக்கு அழைக்கலாம்” என்றான்.

நளன் “மெய், அங்கிருந்து மிக விரைவாக நகரெல்லையைவிட்டு நீங்குவதற்கான ஒருக்கங்களை செய்த பிறகே நான் மணத்தன்னேற்புக்கு சென்று நிற்கவேண்டும்” என்றான். ஒற்றன் “குண்டினபுரியின் தெருக்கள் மிகக் குறுகியவை. சேற்றுப்பரப்புக்குமேல் மரத்தரை அமைந்தவை. வரதாவின் கரையிலமைந்த அந்நகரம் ஒரு குன்றுமேலிருந்து பலபடிகளாக கீழிறங்கி நதிக்கரைச் சதுப்பு வரை வரும் அமைப்பு கொண்டது. தெருக்களெல்லாமே படிக்கட்டுகள்தான். தேர்களில் விரைய அங்கே இயலாது. புரவிகள் மட்டுமே பாயமுடியும்” என்றான்.



நளன் முகம் மலர்ந்து “ஆம், அதைத்தான் நானும் எண்ணினேன். அந்நகரின் வரைபடத்தை பலமுறை பார்த்தேன். அந்நகரில் எங்கும் அகன்ற தேர்ச்சாலை இல்லை. வரதாவின் பெருக்கினூடாகவே அவர்கள் தங்கள் வணிகப்பயணங்களை நிகழ்த்துகிறார்கள்” என்றான். “நகரை எவரும் தொடராமல் விரைந்து கடக்கும் வழி ஒன்று உள்ளது” என்றபின் எழுந்து மான்தோல் சுருளை விரித்து நகரின் வரைவு ஒன்றை காட்டினான். “அந்நகரின் அனைத்துத் தெருக்களும் படிக்கட்டுகளைப்போல் உள்ளன. கலிங்கர்களுக்கோ

மகதர்களுக்கோ படிக்கட்டுகளில் துணிந்து தாவும் புரவிகள் இல்லை. நமது புரவிகளை நாம் தாவுவதற்கு பயிற்றுவித்திருக்கிறோம்.”

“அங்குள்ள மிகச் சிறந்த படிக்கட்டு ஒன்றை நான் காட்ட விழைகிறேன்” என்று நளன் சுட்டிக்காட்டினான். “அங்குள்ள இல்லங்கள் அனைத்தும் பட்டைக்கற்களை கூரைகளென அமைத்து அவற்றின்மேல் களிமண் நிறைத்து மலர்ச்செடிகள் நட்டு வளர்க்கப்பட்டவை. படிகளாக இறங்கும் பூங்காக்களால் ஆனது அந்நகர் என்று கவிஞர் பாடுகிறார்கள். அக்கூரைகள் மேல் பாய்ந்தே நாம் நகரை கடக்கமுடியும். அவர்களின் காவல்மாடங்கள், வில்லவர்மேடைகள் அனைத்தும் தெருக்களையே இலக்குகொண்டவை. கூரைமேல் பாய்பவர்களை நோக்கி வேலோ அம்போ தொடுக்க அவர்களுக்கு அமைப்பே இல்லை.”

அந்தக் காட்சி உள்ளத்திலெழுந்து அவர்களனைவரையும் ஓசையழிந்து அமையச்செய்தது. நகர்க்காவல் அமைச்சர் சுக்தர் “ஆம், நல்ல வழி அதுவே” என பொதுவாக சொன்னார். ஆனால் அது நளனால்கூட எளிதில் இயல்வதல்ல என்று தோன்றியது அவருக்கு. “குண்டினபுரிக்குத் தெற்கே உருளைக்கற்கள் மட்டுமே நிறைந்த பாதை உள்ளது. அதனூடாக நாம் வருவோமென்றால் எந்தப் புரவிப்படையும் நம்மை தொடர இயலாது” என்றான் ஒற்றன். “ஆம். அதுவே நமது வழி” என்று நளன் சொன்னான். பேச்சு முடிந்தது. எவ்வகையிலோ அது நிகழ்ந்துவிடும் என்னும் எண்ணம் அனைவருக்கும் எழுந்தது. எதிர்காலம் நிகழத்தொடங்க அவர்கள் அமைதியில் விழிநிலைத்து அமர்ந்திருந்தனர்.

மெல்ல அசைந்து கலைந்த அமைச்சர் கருணாகரர் “தாங்கள் மணமகனாக அவை நிற்கையில் உடைவாள் தாங்கி அருகே நிற்க வேண்டியது யாரென்பதையும் இப்போதே முடிவு செய்துகொள்ளலாம். நமது குடிகளுக்குள் பின்னர் அது ஒரு பேச்சென்று ஆகவேண்டாம்” என்றார். “ஏனென்றால் இது ஒரு பெருநிகழ்வு. இது சூதர்களால் பாடப்படும். தொல்கதையாக நம் குடிகளில் நிலைகொள்ளும். உங்களுக்கு இணையாகவே அவரும் பாடப்படுவார்.” பின்னர் தாழ்ந்த குரலில் செயற்கையான இயல்புடன் “எண்ணியிராது ஏதேனும் நிகழ்ந்தால் உங்கள் மைந்தர் அகவை எய்துவது வரை அவரே அரசுப்பொறுப்பேற்கவேண்டும் என நீங்கள் கருதுவதாகவும் அதற்கு பொருளுண்டு” என்றார்.

நளன் திரும்பி நோக்க இளைய அமைச்சரான நீரவர் “உடன்குருதியினன் உடைவாள் தாங்க வேண்டுமென்பது நெறி” என்றார். நளன் “பிறகென்ன, என் இளையோன் புஷ்கரன் உடைவாள் ஏந்தட்டும்” என்றான். அவர்கள் முகங்களில் மிகச் சிறிய மாறுதலொன்று வந்தது. கருவூல அமைச்சர் ஸ்ரீதரர் “நன்று! அதுவே முறை” என்றார். பின்னர் அதே குரல் தொடர “தங்கள் தந்தைக்கு நிஷதர்களின் பன்னிரு குடிகளின் துணைவியரில் பிறந்த மைந்தர்களில் அவரே மூத்தவர். ஆனால் அவர் காளகுடியைச் சேர்ந்தவர் என்பதை மறக்க வேண்டியதில்லை” என்றார்.

அவரை கூர்ந்து நோக்கி நளன் “நீங்கள் சொல்ல வருவதை உங்கள் முழு எண்ணத்துடன் புரிந்துகொண்டேன், அமைச்சரே” என்றான். “ஆம். தாங்கள் உணர்ந்துவிட்டீர்கள் என்று எனக்குத் தெரிகிறது. ஆனால் பிறர் உணர நான் சொல்ல வேண்டியுள்ளது” என்றார் அமைச்சர். “நிஷத குடியில்

முதன்மையானது நமது குடி. இந்நகரம் தோன்றிய காலம் முதல் நாமே ஆண்டுவருகிறோம். பிற குடிகள் நம் தலைமையை ஏற்றுக்கொண்டவை.” அவர் சித்தம் பிழையாக சொல்லிவிடலாகாது என எண்ணி எண்ணி சொல்லெடுப்பது தெரிந்தது. “பாரதவர்ஷம் முழுக்க குடித்தொகைகளால் உருவான நாடுகளில் எண்ணிக்கையும் வடிவ அளவும் வல்லமையும் மிகுந்த முதன்மைக் குடியே ஆட்சி அமைப்பது வழக்கம். அவர்களுக்கு என்றும் எதிர்நிலையாக அமைவது இரண்டாவது பெருங்குடியே. அது இயல்பு. ஏனென்றால் அறமும் உணர்வுகளும் தனிமனிதர்களுக்குரியவை. குடிகளும் குலங்களும் ஆற்றலையும் வெற்றியையும் மட்டுமே நாடுகின்றன.”

“அந்த எதிர்ப்பு இருக்குமென்பதை உணர்ந்து அதன் பொருட்டே ஆட்சி செய்யும் முதற்குடியின் அரசர்கள் இரண்டாவது பெருங்குடியின் பெண்ணையே இணையரசியாக ஏற்றுக்கொள்கிறார்கள். தன் குடியிலிருந்தே பட்டத்தரசியை கொள்கிறார்கள். நம் அரசரும் அவ்வாறே செய்தார். மணிமுடி நம் குடிக்குள் இருக்கையில் பிற அனைத்திலும் அரண்மனையிலும் அவையிலும் படையிலும் இரண்டாமிடம் அக்குடிக்குரியது” என ஸ்ரீதரர் தொடர்ந்தார்.

“உண்மையில் இப்படி இரண்டாமிடம் அளிப்பதே அவர்களை விழைவுகொண்டவர்களாக ஆக்குகிறது. இரண்டாமிடத்தில் அமைந்து அவர்கள் ஆட்சியின் ஆற்றலை, அதன் இன்பங்களை, அதன் வழியாக உருவாகும் மதிப்பை அறிந்துகொண்டிருக்கிறார்கள். அயல்நாட்டு அரசர்களுக்கும் பெருவணிகர்களுக்கும் அவர்களும் அறிமுகமாகிறார்கள்.

சூதர்கள் அவர்களையும் புகழ்கிறார்கள். அந்தச் சுவை ஒரு துளி அறிந்தபின் ஒழிவது இயலாது."

"ஆனால் இரண்டாமிடத்தை அவர்களுக்கு அளிக்காமல் நாம் ஆளவும் முடியாது. ஆகவே சிம்மத்தை நம் குருதியையே கொடுத்து பழக்கி நாளும் உடன் வைத்திருப்பவர்களாகிறோம்" என்றார் ஸ்ரீதரர். "அரசே, அதை வெல்ல நாம் செய்வதற்கிருப்பது ஒன்றே. நம் எதிரியை அவன் ஆற்றலை பிரித்து நம்முடனேயே வைத்திருப்பது. காளகுடியை எட்டு படைப்பிரிவுகளாக்கி நம் எல்லையில் நிறுத்தியிருக்கிறோம். இன்றுவரை அக்குடியிலிருந்து அரசருக்கெதிராக ஒரு குரல்கூட எழுந்ததில்லையென்றாலும் அவர்களின் மூத்தோர் மன்றுகளில் என்றும் நமக்கு இரண்டாமிடமா என்றொரு குரல் எப்போதும் எழுவதை நாம் அறிவோம்."

"புஷ்கரனை நாம் இப்பின்னணியில் நோக்கவேண்டும். புஷ்கரன் தங்களைப்போலவே வீரர் என்று அக்குடி உணரத்தொடங்கிய காலம் முதல் அக்குரல் வலுத்து வருகிறது. அவர் வீரமும் அறிவும் தமையனாகிய உங்களால் பயிற்றுவிக்கப்பட்டதென்பதை இன்று நாம் அவர்களிடம் சொல்ல முடியாது. அது அவர் முதுமூதாதை செங்கானகத்துத் துஞ்சிய காளகர் கோசிகரின் ஆற்றலின் குருதித்தொடர்ச்சி என அவர்கள் நம்புகிறார்கள்."

அனைவர் முகங்களும் அச்சொற்களுக்கு ஆதரவாக மாறியிருந்தன. "ஆனால் அவனை நானறிவேன். அயோத்தியின் ராமனுக்கு இளவல்போல அவன் எனக்கு ஆட்பட்டவன்" என்றான் நளன். "உண்மை. இன்று அவரது உள்ளம் அவ்வண்ணமே உள்ளது. ஆனால் அது எப்போதும் அவ்வண்ணம் இருக்கவேண்டுமென்பதில்லை. அவ்வாறு

மானுட உள்ளங்கள் மாறாநிலை கொண்டிருந்தமைக்கு வரலாற்றுச் சான்றுகளேதும் இல்லை” என்றார் அமைச்சர் ஸ்ரீதரர். “அவர் குடி அவரை சூழ்ந்துள்ளது. அவர்கள் பேசும் சொற்களே அவர் எண்ணமாக மாறி உள்ளே நிறைகிறது. உள்ளும் புறமும் என சூழ்ந்திருப்பவை உண்மையில் நம் சுற்றத்தின் எண்ணங்களே.”

“மீன் நீரை எதிர்த்து போராட முடியுமா? சில மீன்களால் இயலக்கூடும். அது அத்தனை எளிதல்ல, அரசே. ஓர் அரசன் தெய்வச்சொல்போல தன்னுள் மீண்டும் மீண்டும் சொல்லிக்கொள்ள வேண்டிய நுண்சொல் ஒன்று ‘மனிதர்கள் ஆற்றல் அற்றவர்கள், மனிதர்கள் எங்கோ ஒரு முனையில் முழுமையாக தோற்பவர்கள்’. எப்போதும் நின்று தெய்வங்களுக்கு இணையாக தலைதூக்கி எழும் மானுடர் உண்டு. அவர்கள் தலைமுறைகளுக்கு ஒருவர் மட்டுமே.”

நளன் “ஆனால் தம்பி என அவன் இருக்க பிறிதொருவன் வாள் சூடுவது அவனை சிறுமைப்படுத்துவது போலல்லவா?” என்றான். “ஆம், அப்படி எண்ண வாய்ப்புள்ளது. எண்ணாவிடிலும் அதை ஒரு ஐய விதையாக அவர் உள்ளத்தில் சிலர் தூவவும் கூடும்” என்றார் அமைச்சர் ஸ்ரீதரர். “நமது எல்லையில் கிழக்கிலிருந்து கலிங்கத்துப் படைகள் வந்து தாக்கக்கூடும் என்ற எண்ணத்தை உருவாக்குவோம். புஷ்கரன் தலைமையில் படையொன்றை கிழக்கெல்லையை நோக்கி அனுப்புவோம். எதிர்பாரா செய்தி கிடைத்து உடன் முடிவெடுத்து விரைவாக கிளம்பிச் செல்வதுபோல் நாம் விதர்ப்பத்துக்கு செல்வோம். அங்கு பிறிதொரு துணையின்றி நின்றபொழுதில் அப்போது தோன்றியதென நம் படைத்தலைவர்கள் எவரேனும் வாளேந்தி உங்கள் அருகே நிற்கட்டும்” என்றார் ஸ்ரீதரர்.

“அவ்வாறு வாளேந்துபவன் ஓர் எளிய படைத்தலைவனாகவே இருக்கவேண்டும். அங்கே நிகழும் போரில் அவன் கொல்லப்படவும் வேண்டும். அவனுக்கு நாம் நடுகல் நாட்டி படையலிட்டு நம் பெருவீரன் என கொண்டாடுவோம். ஆனால் அங்கு சூடிய வாளுடன் அவன் அரசுகோரி ஒருபோதும் வரக்கூடாது” என்றான் வஜ்ரகுண்டலன். அவர்கள் அதை முன்னரே எண்ணித்தெளிந்திருந்தனர் என்பதை அமைச்சர்களின் முகக்குறிகள் காட்டின.

நளன் அமைச்சரை நோக்கியபடி சில கணங்கள் அமர்ந்திருந்தான். பின்பு புன்னகைத்து “புஷ்கரனாக நான் இருந்தால் இச்சூழ்ச்சியை உணர்ந்துகொள்வேனா என்று எண்ணினேன். உடனடியாக தெளிவாக புரிந்துகொள்வேன் என்று தோன்றியது. பின்னர் இதையொட்டிய என் உணர்வுகள் என்னவாக இருக்கும் என்று சூழ்ந்தேன். மூத்தவனால் நான் கைவிடப்படுகிறேன் என்றே எண்ணுவேன். ஐயத்திற்குரியவனாகிறேன் என உணர்பவனே முதல் எதிரியாகிறான். அது அவன் ஆண்மையை, நேர்மையை, அவன் கொண்ட அன்பை சிறுமைசெய்வது. உச்சவெறுப்பென்பது புறக்கணிக்கப்பட்ட அன்பின் மாற்றுரு.”

“நான் அவ்வெண்ணத்தை அவனுக்கு கொடுக்கலாகாது. அவன் எனக்கு இலக்குவனென்றால் நான் அவனுக்கு ராமனாக இருந்தாக வேண்டும். அவனே வந்து எனது உடைவாளை தாங்குக!” என்றான் நளன். அவன் இறுதியாக சொல்லிவிட்டான் என்னும் எண்ணம் அனைவருக்கும் எழ அவர்கள் தலைவணங்கினர். நளன் எழுந்து “எனக்குரிய புரவியை தெரிவுசெய்ய நானே வருகிறேன். நம் வெற்றி நாம் தெரிவுசெய்யும் புரவியிலேயே உள்ளது. விதர்ப்பினிக்கும்

நிகரான ஒரு புரவி தேவை” என்றான். “அவர்கள் தங்கள் அளவுக்கு புரவித்திறன் கொண்டவர்களா என்று தெரியவில்லை” என்றார் அமைச்சர். “என் திறன்களை அவள் பெற்றுக்கொள்வாள். அதற்கான தருணம் அது” என்றான் நளன்.

அவர்கள் செல்வதற்காக எழுந்தபோது அமைச்சர் கருணாகரர் “பிறிதொன்றும் நான் சொல்லவேண்டும்” என தயங்கினார். “நாம் இந்திரனை நிறுவியது ஒரு அரசுசூழ்தலாகவே. உண்மையில் நம் தெய்வம் கலியே. கிளம்பும்போது நம் தெய்வத்திற்கு பலியும் பூசனையுமிட்டு செல்வதே உகந்தது.” நளன் “வேண்டியதில்லை. நாம் செய்வன நம் உள்ளத்தையும் மாற்றியமைக்கின்றன. வென்று எழுந்து நிற்கும் இந்திரனை வழிபட்டபின் கருமைகொண்டு ஒடுங்கிய கலியை வணங்க என் உள்ளம் ஒப்பவில்லை. நாம் கலியிலிருந்து விடுபட்டாகவேண்டும், அமைச்சரே. அன்றேல் ஒருபோதும் நம்மால் மெய்யான ஷத்ரியர்களாக ஆகமுடியாது. பரசுராமர் நமக்களித்த செய்தி அதுவே” என்றான்.

“ஆனால் கலி…” என சொல்லவந்த கருணாகரரை கையமர்த்தி “கலிக்குரிய பூசனைகள் செய்யப்படட்டும். நான் வழிபட முடியாது. இந்திரனை வணங்கிவிட்டு கிளம்புவதே என் திட்டம்” என்றான் நளன். தலைவணங்கி “அவ்வண்ணமே ஆகுக, அரசே!” என்றார் கருணாகரர்.

# நீர்க்கோலம் - 12

**11. இளநாகம்**

படைத்தலைவன் வஜ்ரகுண்டலனிடம் எல்லைகளை காத்து நிற்கும் பொறுப்பை அளித்து தலைமை அமைச்சர் கருணாகரரிடம் அரசுப்பொறுப்பை ஒப்படைத்தபின் மூன்று சிற்றமைச்சர்களும் சிறுகாவல்படையும் உடன்வர நளன் விதர்ப்பத்திற்கு கிளம்பினான். எல்லை ஊரான சம்பகிரியில் இருந்து முந்தையநாள் இரவே கிளம்பி வந்து சேர்ந்துகொண்ட புஷ்கரன் உடன் வந்தான். நளன் அழைத்ததுமே மூத்தவனை பார்க்கும் ஆவலுடன் அவன் கிளம்பியிருந்தான். பொறுப்பான அரசுப்பணிகள் எதுவும் அதுவரை அவனுக்கு அளிக்கப்பட்டதில்லை என்பதனால் அதுவும் வெறுமனே உடன் செல்லும் அரசப்பணி என்றே எண்ணியிருந்தான்.

நகர் விட்டு வெளியே செல்வதுவரை அவனிடம் செல்லும் நோக்கமென்ன என்று சொல்லியிருக்கவில்லை. கிரிப்பிரஸ்தத்தின் எல்லையை கடந்த பின்னரே சிற்றமைச்சர் ஸ்ரீதரர் அவனிடம் அதை சொன்னார். அவன் முதலில் அதை சரிவர புரிந்துகொள்ளவில்லை. “நாம் விதர்ப்பத்திற்குச் சென்று அரசரிடம் பேசப்போகிறோமா?” என்று கேட்டுக்கொண்டிருக்கையிலேயே அவனுக்கு புரிந்துவிட்டது. மூச்சுத் திணற முகம் சிவக்க பேச்சை நிறுத்திவிட்டான். கிளர்ச்சியடைந்த முகத்துடன் அவன் தமையனை நோக்கிவந்து “நாம் விதர்ப்பத்தின் இளவரசியை கைப்பற்றச் செல்கிறோமா? சற்று முன் அமைச்சர் ஸ்ரீதரர் சொன்னார்” என்றான்.

“ஆம்” என்று நளன் சொன்னான். “நன்று மூத்தவரே, தாங்கள் அவரை மணம் கொள்ளக்கூடுமென்று நான் நெடுநாட்களாக எண்ணியிருந்தேன். இச்செய்தியை வெவ்வேறு சொற்களில் முன்னரே சொல்லி கேட்டுவிட்டேன். அதை நம் குடியின் வெறும் விழைவென்றே எண்ணினேன். தங்கள் அழகையும்

ஆற்றலையும் கண்டு நமது குடிகள் கொள்ளும் பெருவிழைவு இயல்புதான் என கருதினேன். விதர்ப்பத்தின் இளவரசி தங்களை ஏற்றுக்கொண்டாரென்று கேட்டபோது முதல் கணம் அது என்னை திகைக்க வைத்தது. பின்னர் வேறெப்படி இயலுமென்று தோன்றியது” என்றான்.

என்ன பேசுவதென்று தெரியவில்லை அவனுக்கு. ஆனால் பேசாமலும் இருக்க முடியவில்லை. நாணம் கொண்டவன்போல கண்களில் நீர்மை படர உரக்க சிரித்துக்கொண்டு “தங்கள் ஓவியம் ஒன்றை கண்டபின் எந்த இளவரசியும் பிறிதொரு முடிவை எடுக்க முடியாது” என்றான். நளன் புன்னகைத்து “நன்று” என்றபின் எழுந்து காத்து நின்றிருந்த தன் புரவி நோக்கி சென்றான். அவனுக்குப் பின்னால் உடல் பதற நடந்து வந்த புஷ்கரன் “இதில் என்னையும் சேர்த்துக்கொண்டதற்கு நான் தங்களுக்காக உயிர் கொடுக்க வேண்டும், மூத்தவரே. நாளை இந்நிகழ்வை காவியங்கள் பாடும். அதில் என் பெயரும் இருக்கும். நான் வாள் கற்றதும் புரவி தேர்ந்ததும் இதற்காகவே என்று இப்போது உணர்கிறேன்” என்றான்.

நளன் “பார்ப்போம்” என்று புன்னகையுடன் சொன்னான். அவன் தன் புரவியில் ஏறிக்கொண்டு மூத்தவன் பின்னால் விரைந்தபடி “அங்கு போர் நிகழும் அல்லவா? மூத்தவரே, தாங்கள் இளவரசியை கைப்பற்றி புரவியில் விரைந்து கடந்து செல்லுங்கள். நான் என் படைவீரர்களுடன் எதிர்த்து வருபவர்களை செறுத்து நிறுத்துகிறேன். அக்களத்தில் நான் உயிர் துறப்பேன்” என்றவன் கை தூக்கி “ஆம், இப்போது எனக்கு தெரிகிறது. நான் உயிர் துறப்பேன். என்னைப்பற்றி சூதர்கள் பாடுவார்கள். என் பெயரில் காவியங்கள் எழும். தங்களின்

பொருட்டு உயிர் துறந்தேன் என்ற பெருமை என் குலத்தை தலை நிமிரச்செய்யும்” என்றான்.

“மூடன்போல் பேச வேண்டியதில்லை” என்று அவன் தோளில் தட்டி நளன் சொன்னான். பின்னால் வந்த ஸ்ரீதரரிடம் “இளமை ஒருவகை மடமை. ஆனால் சில தருணங்களில் அதைப் பார்க்க அழகாகத்தான் இருக்கிறது” என்றான். புஷ்கரன் “நான் என்ன செய்யவேண்டும்? சொல்லுங்கள்…” என்றான். “நீ என் உடைவாள் தாங்கி அருகே நில். ஆம், இத்தருணத்தை நமது சூதர்கள் பாடுவார்கள். நீ என் உடைவாள் தாங்கினாய் என்ற செய்தி அதிலிருக்கும்” என்றான் நளன். “ஆம்” என்ற பின் அவன் உடைந்து குரல் நெகிழ கண்கள் கசிய தலைகுனிந்தான். “நான்…” என்றபின் மேலும் சொல்லெடுக்க முடியாமல் இரு கைகளாலும் விழிகளை அழுத்தி திரும்பிக்கொண்டான். “செல்வோம்” என அமைச்சர்கள் சொன்னபின் நளன் புரவியை விரைந்தோடச் செய்தான்.

புஷ்கரனால் நிலைகொண்டு புரவிமேல் அமரமுடியவில்லை. திரும்பி சிற்றமைச்சர்களிடம் “அங்கு போர் நிகழுமல்லவா? பதினாறு தொல்குடி ஷத்ரியர்கள் வந்திருக்கிறார்கள் என்றார்கள். எட்டு பேரரசர்கள். நால்வர் எதிரிகள். போர் நிகழாமலிருக்காது. நான் எவரிடம் போர்புரிவது?” என்றான். “அதை அங்கு சென்று பார்ப்போம். தாங்கள் சற்று அமைதியாக வரமுடியுமா?” என்றார் ஸ்ரீதரர். “போர் நிகழும். அதில் ஐயமேயில்லை. நான் அவரிடம் சொல்லிவிட்டேன். அவர் இளவரசியுடன் செல்கையில் நான் எதிர்த்து வருபவர்களை தடுத்து நிறுத்தி போரிடுவேன். என்னுடன் வரவேண்டியவர்களிடம் அனைத்தையும் பேசிவிடுகிறேன்.

அவர்களில் எவரும் எஞ்சப்போவதில்லை. புகழ் ஒன்றே அவர்கள் ஈட்டுவதாக இருக்கும்” என்றான் புஷ்கரன்.

“இதுவும் நாம் அங்கு சென்று நிலைமையை நோக்கி முடிவெடுக்க வேண்டியது. இப்போதே இத்தனை கிளர்ந்தெழுந்தால் நம் உடல்நிலைதான் பாதிக்கப்படும்” என்றார் சிற்றமைச்சரான சூக்தர். “ஆம், இப்போதே முடிவெடுக்க வேண்டியதில்லை. ஆனால் என்னால் வேறெதையும் எண்ண முடியவில்லை” என்றான் புஷ்கரன். “அங்கு வேறு ஏதாவது இளவரசி இருந்தால் நீங்கள் கவர்ந்து வரலாம். அதைப்பற்றி எண்ணுங்கள்” என்றான் காவலர்தலைவன் வஜ்ரகீர்த்தி. அதிலிருந்த பகடியை புரிந்துகொள்ளாமல் புஷ்கரன் அவர்களை உளக்கொந்தளிப்புடன் மாறி மாறி நோக்கினான்.

இன்னொரு சிற்றமைச்சரான நாகசேனர் “அரசிக்கு இளையவர்கள் இல்லையே?” என்றார். “இருப்பார்கள். பட்டத்தரசிக்கு பிறக்காத பெண்டிர்” என்று வஜ்ரகீர்த்தி சொன்னான். அவர்களின் விழியாடலைக்கூட உணராத புஷ்கரன் “ஆம், அங்கு அழகான பெண்கள் பிறர் இருந்தால் எனக்கென நான் கவர்ந்து வர எண்ணுகிறேன். அதுவும் காவியத்தில் இடம் பெறட்டும். பெண் கவர்ந்து வருவதென்பது எவ்வளவு சிறந்தது என்பதை நூல்களை படிக்கும்போதுதான் உணர்ந்தேன். கவர்ந்த பெண்ணையே மணக்க வேண்டும் என்று நெடுநாட்களாக நான் எண்ணியிருந்தேன்” என்றான். அவர்கள் ஒருவரை ஒருவர் நோக்கி புன்னகைத்துக்கொண்டனர்.

புரவியை குளம்போசை விரைந்தொலிக்க ஓடவிட்டு நெடுந்தொலைவு முன்னால் சென்று அதே விரைவில் திரும்பி வந்தான். வால்சுழற்றி அது பாய உடல் முன்னால் செலுத்தி அம்புபோல் காற்றில் ஊடுருவ அருகே வந்து சுழன்று நின்று

மூச்சிரைத்தபடி “ஏன் இத்தனை மெதுவாக செல்கிறோம்?” என்றான். “எத்தனை மெதுவாக சென்றாலும் ஒரு நாளுக்குள் சென்றுவிடும் தொலைவில்தான் குண்டினபுரி உள்ளது, இளவரசே” என்றார் நாகசேனர்.

“நாம் முன்னரே செல்வது நல்லதல்லவா?” என்றான் புஷ்கரன். “முன்னரே செல்லலாம். ஆனால் அரசர்கள் வந்துசேரத் தொடங்கியபின்னர் செல்வதுதான் நன்று. முதலாவதாக சென்று நின்றால் அங்கே பந்தல் கட்டவும் தண்ணீர் அள்ளி நிரப்பவும் நம்மிடம் சொல்லிவிடுவார்கள்” என்றார் ஸ்ரீதரர் சற்று எரிச்சலுடன். புஷ்கரன் உவகைப்பெருக்குடன் “ஆம். உண்மையிலேயே நாம் அதை செய்யலாம். பந்தல் கட்டுபவர் போலவும் தண்ணீர் அள்ளி நிரப்புபவர் போலவும் சென்று அங்கிருக்கும் தனிச் செய்திகளை நாம் அறிந்துகொள்வோம். முன்பு வங்க நாட்டு சம்புகன் அவ்வாறு மாற்றுருக்கொண்டு கலிங்கத்துக்கு வந்து இளவரசியை கவர்ந்து சென்றதாக சூதர் பாடி கேட்டிருக்கிறேன்” என்றான்.

இரு கைகளையும் அசைத்தபடி “நான் இதுவரை மாற்றுருக்கொண்டதே இல்லை, அமைச்சரே. மாற்றுருக்கொண்டு செல்வது மிகச் சிறந்த ஒன்று. ஏனென்றால் அப்போது நாம் இன்னொருவராக இருக்கிறோம். நம்மை சந்திப்பவர்கள் அனைவரும் நம்மிடம் ஏமாந்துகொண்டே இருக்கிறார்கள். நாம் மாற்றுருக்கொள்வோமா, மூத்தவரே?” என்றான். நளன் புன்னகைத்து “ஆம், பெரும்பாலும் நாம் மணம்கொண்டு திரும்பியதும் சிலகாலம் மாற்றுருக்கொள்ள வேண்டிருக்கும்” என்றான். அதிலிருந்த எள்ளல் அனைவரையும் சிரிக்கச் செய்தது.

ஆனால் புஷ்கரன் அதே உளப்பெருக்குடன் “எந்த மாற்றுருவை நாம் கொள்வோம்? என்னால் மிகச் சிறப்பாக மலைக்குறவனாக நடிக்க முடியும்” என்றான். “தாங்கள் நடிக்கவே வேண்டியதில்லை. இயல்பாகவே அவ்வசைவுகள் உங்களிடம் இருக்கின்றன” என்றார் நாகசேனர். அவர் அத்துமீறிவிட்டார் என பிறர் உணர்ந்தனர். காளகர்களை குறவர் என சொல்லும் வழக்கம் பிற குடிகளிடம் உண்டு. ஆனால் புஷ்கரன் சிரித்தபடி “ஆம், நாங்கள் குறவர்குடிகளைப் போன்றவர்களே. நான் மலைக்குறவனாக செல்லும்போது என்னை மலைக்குறவனென்றே எல்லாரும் நினைக்கிறர்கள் என்பார் கூஷ்மாண்டர்” என்றான்.

பகல் முழுக்க அவன் குண்டினபுரியில் ஆற்றப்போகும் வீரச்செயல்களை சொல்லிச் சொல்லி வளர்த்துக் கொண்டிருந்தான். பல நூறு முறை நடித்து ஒரு கட்டத்தில் அவை அனைத்தும் இறந்த காலம் என அவனுக்கு ஆயிற்று. ஒவ்வொரு சிறு நுட்பத்துடனும் அவன் இதுவரை பார்த்திராத அந்நகரைப்பற்றி பேசிக்கொண்டு வந்தான். அதன் தொன்மையான அகன்ற தெருக்கள். அங்கே புழுதி கிளப்பி பறந்து வரும் தேர்கள். புரவியில் அமர்ந்தபடியே காதுவரை நாண் இழுத்து அம்புகளை பறக்கவிட்டு அவன் வீழ்த்தும் வீரர்கள் அலறியபடி விழுந்து தரையில் துடிக்கிறார்கள். சகடம் உடைந்த தேர்கள் தெருக்களில் சிதறுகின்றன. அலறல்கள், குருதிமணம்.

அவனுடைய போர்த்திறனை உப்பரிகைக்கு ஓடிவந்து தூண்மறைந்து நின்று நோக்கி நெஞ்சில் கைவைக்கிறார்கள் அழகிய பெண்டிர். நீள்விழிகள் அவனை தொடுகின்றன. அம்புகள் பெண்கள் மேல் பட்டுவிடக்கூடாதென்பதில் அவன்

மிகுந்த உளக்கூர் கொண்டிருக்கிறான். தெருக்களில் அவன் விரைகிறான். அவனுக்குப் பின்னால் சருகுச்சுழல்போல் குண்டினபுரியின் வீரர்கள் வருகிறர்கள். தெற்குக்கோட்டைமேல் அவன் புரவியில் இருந்து பாய்ந்து ஏறுகிறான். அங்கிருந்த காவல் மாடத்தில் நின்றிருந்த வீரர்களை வாளால் வெட்டி வீழ்த்தி மாடத்தில் இருந்த தொலைவில்லை கையிலெடுத்து நீண்ட அம்புகளால் துரத்தி வருபவர்களை வீழ்த்துகிறான்.



அவர்கள் உடைந்த தேர்களும் கால் முறிந்த குதிரைகளுமாக தெருக்களில் குவிய அவர்களுக்குப் பின்னால் வந்தவர்கள்

அதனால் அணைக்கட்டடப்பட்டு நிறுத்தப்படுகிறார்கள். அங்கிருந்து எழுந்த அம்புகள் எதுவும் அவனை வந்து அடையவில்லை. உரக்க நகைத்தபடி கோட்டையின் மறுபக்கம் குதித்து அங்கே காத்து நின்றிருந்த புரவிமேல் ஏறி விரைகிறான்.

புரவி காட்டில் அம்பென இலைப்புதர் தழைப்பினூடாக ஊடுருவிச் செல்கையில் மரங்களின் தழைப்புக்குள் ஒளிந்திருந்த ஒற்றன் நச்சு தோய்த்த அம்பை அவன் முதுகில் எய்கிறான். முதுகில் அம்பு பட்டு ஓடிவந்து நிலத்தில் விழுந்து துடித்து 'மூத்தவரே!' என்று சொல்லி முனகியபடி அவன் உயிர் துறக்கிறான்.

அவனது உடலை அப்புரவி சுற்றிச் சுற்றி வர அதைக் கண்டு 'இளவரசே...' என்று கூவியபடி திரும்பி வந்த அவன் வீரர்களையும் எதிரிகள் கொன்றனர். அவன் உடலை பீமகரின் படைவீரர்கள் கோட்டைக்குள் திரும்ப கொண்டு சென்றனர். அவன் உடலின் தலையை வெட்டி தொங்கவிடவேண்டும் என படைவீரர்கள் கொதித்தபோது கலிங்கமன்னன் சூரியதேவனும் மாளவமன்னனும் உரத்த குரலில் 'அவன் தூயவீரன்! நின்று போரிட்டு களம்பட்டவன். அவனை ஷத்ரியனுக்குரிய முறையில் சிதையேற்றுவோம். விண்ணிலிருந்து தேவர் இறங்கிவந்து அவன் உயிரை கொண்டு செல்வார்கள்' என்றார்கள். 'ஆம்! ஆம்!' என்று படைவீரர்கள் அனைவரும் தங்கள் வாள்களையும் ஈட்டிகளையும் உயரே தூக்கி குரலுயர்த்தினர்.

பீமகர் 'ஆம், இம்மாவீரனை முறைப்படி சிதையேற்றுவோம். அங்கு அவனுக்கு ஒரு நடுகல் அமைப்போம். குண்டினபுரியின் மண்ணில் இவன் விழுந்தது நமக்கு பெருமை' என்றார்.

அவனுடைய உடலை ஊர்வலமாக கொண்டுசென்றனர். அதைத் தொடர்ந்து பல்லாயிரம் படைவீரர்கள் உருவிய வாளுடன் நடந்தனர். அதில் கலிங்கனும் அங்கனும் வங்கனும் மாளவனும் கலந்துகொண்டனர். முடிமன்னர்கள் கைதூக்கி வாழ்த்த அவன் உடல் சந்தனச் சிதையில் ஏற்றப்பட்டு அவனுடைய மைந்தன் என சொல்பூண்ட இளஞ்சிறுவன் ஒருவனால் எரியூட்டப்பட்டது. 'மாவீரன் விண்புகுந்தான்! அவன் வாழ்க!' என்று பெருங்குரல் எழுந்தது.

விண்ணில் அப்புகழ் சென்று தொட்டபோது இளந்தூறல் விழுந்தது. பொன்னிற ஒளி மரங்கள்மேல் பொழிந்து இலைகளை ஒளிகொள்ளச் செய்தது. தேவர்கள் வந்து அவனை கொண்டு சென்றதைக் கண்டதாக சூதர்கள் பாடலாயினர். அவன் புகழை குண்டினபுரியில், கிரிப்பிரஸ்தத்தில், பின்னர் பாரதவர்ஷத்தில் அனைத்துப் பகுதிகளிலும் சூதர்கள் பாடினர். விதர்ப்ப விஜயம் என்று ஒரு காவியத்தை புலவர் ஒருவர் எழுதினார். அதில் அவன் பிறப்பிலிருந்து இறப்பு வரை நிகழ்ந்தவை அனைத்தும் சொல்லப்பட்டிருந்தது. அவன் மண் நிகழ்ந்தபோது ஏழு நிமித்திகர் 'இவன் நிஷதகுடியின் மாவீரன். தன் குடியின் பெருமை காக்க உயிர்துறப்பான்' என்று வரும்பொருள் உரைத்ததை முதல் படலத்திலேயே ஆசிரியர் சொல்லியிருந்தார்.

விதர்ப்பத்தின் இளவரசியை நிஷதபுரியின் அரசன் மணந்தபோது முதல் சில மாதங்கள் நிகழ்ந்த சிறு பூசல்களுக்குப்பின் இரு நாடுகளும் நிகர்நிலையில் நின்று ஒப்பந்தம் இட்டன. அதற்கு அவனுடைய பெருவீரமே முதன்மைத் தூண்டுகோலாக அமைந்தது. இரு படைகளும் புதிய ஆடைகள் சூடி ஒளிர் படைக்கலன்களுடன் ஒன்று

கலந்து விழவு கொண்டாடின. சூல் கொண்ட வயிற்றுடன் தமயந்தி யானைமேல் அமர்ந்து குண்டினபுரிக்குள் நுழைந்தாள். மாளிகைகளிலும் உப்பரிகைகளிலும் தெருக்களிலும் கூடிய கூட்டம் அவளை வாழ்த்தி ஆரவாரம் செய்தது.

குண்டினபுரியின் கோட்டைவாயிலை அடைந்த அவள் 'முதலில் நான் தென்திசை சென்று என் குலக்கொழுந்தின் நடுகல்லுக்கு மாலையிட்டு வணங்கிய பின்னரே நகர் நுழைவேன். அது என் வஞ்சினம்' என்றாள். 'ஆம், அவ்வாறே ஆகுக!' என்றார் பீமகர். யானையிலிருந்து இறங்கி தென்திசைக் காடுகளுக்குச் சென்று அங்கு சிவந்த மலர்கள் சூழ நின்றிருந்த அவனது நடுகல்லில் செங்காந்தள் மலர்மாலையணிவித்து கள்ளும் ஊனும் படைத்து அவளும் நளனும் வணங்கினர். பின்னர் அங்கிருந்து அவன் நினைவாக துயர் மிகுந்த காலடிகளை எடுத்து வைத்து குண்டினபுரிக்குள் நுழைந்தனர்.

இரவில் விதர்ப்பத்தின் எல்லையில் சோலைமரத்தடியில் அமர்ந்திருந்த புஷ்கரன் நெஞ்சு உருகி கண்ணீர்விட்டான். ஊறி ஊறி வந்த மூக்கை உறிஞ்சி துடைத்துக்கொண்டான். அவ்வோசை அத்தனை உரக்க எழுமென்று அவன் எண்ணவில்லை. அருகே துயின்று கொண்டிருந்த அமைச்சர்களை திடுக்கிட்டு திரும்பிப் பார்த்தான். பின்னர் தன் மேலாடையால் தன் முகத்தை அழுத்தி துடைத்தான். தொலைவில் படைக்கலமேந்தி காவல் நின்றிருந்த வீரன் தன்னை திரும்பிப் பார்ப்பதை அறிந்து முகம் திருப்பிக்கொண்டு சால்வையால் முகத்தை நன்கு மூடி படுத்தான்.

இனிய வெம்மையான எண்ணங்கள். எத்தனை இனிமையான எண்ணங்களிவை! இவையெல்லாம் நிகழுமா? இவற்றில் ஒரு துளி நிகழ்ந்தால்கூட வாழ்க்கை எத்தனை பொருளுள்ளது.

காமம் நிறைந்த எண்ணங்களில்கூட அவன் அடையாத அகக்கிளர்ச்சி. அவனால் படுத்திருக்கமுடியவில்லை. நெஞ்சில் குருதி நிறைந்து கொப்பளித்தது. எழுந்து நெஞ்சிலும் தலையிலும் அறைந்து ஓலமிடவேண்டும்போலத் தோன்றியது. கைகளை விரித்தபடி ஓடி சுற்றிவர வேண்டும். தலையை மரங்களில் முட்டி மோதி உடைக்க வேண்டும்.

இந்த எழுச்சியுடன் இவ்விரவை தன்னால் கடக்க முடியாது. இனிய எண்ணங்கள். இதைப்போன்ற இன்னொரு நாள் எனக்கு அமையப்போவதில்லை. ஆனால் இனிப்பும் ஒரு தவிப்பே. அது அமையும்போது முடிய வேண்டுமென்றுதான் உளம் தவிக்கிறது. எழுந்து சென்று விண்மீன்களை நோக்கி இடையில் கைவைத்து நின்றான். விண்மீன்கள் மண்ணை துழாவிக்கொண்டிருக்கின்றன. அவை இங்கு வாழ்ந்து அருஞ்செயல் இயற்றி விண்புகுந்தவர்களின் ஆத்மாக்கள். அவர்களில் ஒருவர் இங்கிருக்கிறார் என்று அவர்கள் அறிந்தால்...

அறிந்திருப்பார்கள். ஏனெனில் அங்கு காலமில்லை. நிகழ்வதும் வருவதும் அங்கு ஒன்றே. அவர்களைப் பொறுத்தவரை ஒருவேளை முன்னரே அவன் அங்கு சென்றுவிட்டிருக்கலாம். எழுச்சியுடைய எண்ணங்கள். எத்தனை ஒழுங்கற்றவை! ஒழுங்கற்றவையே விசை கொண்டவை. ஒழுங்கென்பதே விசையை அணைகட்டுதல். இவர்கள் இங்கு துயின்றுகொண்டிருக்கிறார்கள். எழுந்து இப்போதே விரைந்து குண்டினபுரிக்குள் நுழைந்தால் என்ன? விண்மீன்களை நோக்கி அவன் நீள்மூச்செறிந்தான்.

குண்டினபுரியின் தோற்றமே புஷ்கரனை சோர்வுறச் செய்தது. விதர்ப்பத்தின் எல்லையை நெருங்குந்தோறும் உளக்கொப்பளிப்புடன் அவன் புரவிமேல் கால்வளையங்களில் குதி ஊன்றி எழுந்து நின்று தொலைவு வரை நோக்கிக்கொண்டிருந்தான். "வந்துவிட்டோமா? வந்துவிட்டோமா, அமைச்சரே?" என்று திரும்பத் திரும்ப உசாவினான். "வரும்போது காவல்மாடம் தெரியும், இளவரசே" என்றான் வஜ்ரகீர்த்தி. "காவல்மாடங்கள் மரங்களுக்கு மேல்தான் தெரிவது வழக்கம் என்று அமைச்சர் சொன்னார். மிகப் பெரிய காவல்மாடம் என்று கேள்விப்பட்டேன்" என்றான் புஷ்கரன். "எங்கு கேள்விப்பட்டீர்கள்?" என்று ஸ்ரீதரர் சினந்து நோக்க "நூல்களில்" என்று அவன் விழிவிலக்கினான். "எந்த நூலில்?" என அவர் மேலும் கேட்டார். புன்னகைத்து "பல நூல்கள். எனக்கு நினைவில் இல்லை" என்றான்.

ஸ்ரீதரர் சலிப்புடன் தலையசைத்து திரும்பிக்கொள்ள புஷ்கரன் "காவல்மாடங்களை உயரமாக வைப்பதுதான் பேரரசுகளின் வழக்கம்" என்றான். "விதர்ப்பம் பேரரசு அல்ல" என்றார் அமைச்சர். "ஆனால் தொன்மையான அரசு அல்லவா?" என்று புஷ்கரன் மீண்டும் கேட்டான். எவரும் மறுமொழி சொல்லவில்லை. "அவர்களின் கோட்டையும் பெரிது என கேள்விப்பட்டேன்" என்றான். அதற்கும் எவரும் மறுமொழி சொல்லவில்லை. "அவர்களின் படைவல்லமையும் மிகைதான்" என்றான். அவனை எவரும் கேட்டதாகவே தெரியவில்லை.

ஒரு காவலன் "அதோ!" என்றான். திரும்பிப்பார்த்துவிட்டு "எங்கே?" என்றான் புஷ்கரன். "அதோ, நீங்கள் பார்ப்பதுதான் காவல் மாடம்" என்றான் காவலன். மரங்களுக்குமேல் மூன்று மரக்கிளைகளை இணைத்து கட்டப்பட்டிருந்த சிறிய

மரக்குடிலைக் கண்ட புஷ்கரன் “அதுவா? குறவர் அமைக்கும் ஏறுமாடம்போல் அல்லவா இருக்கிறது?” என்றான். “அதுவேதான். காவலுக்கு இது போதும்” என்றார் அமைச்சர். “மகதத்தின் காவல் மாடத்தின்மேல் கழுகுகள் கூடுகட்டும் என்று கேட்டிருக்கிறேனே?” என்றான் புஷ்கரன். “அந்தச் சூதனுக்கு தங்க நாணயத்தை அளித்திருப்பீர்களே?” என்று ஒருவன் கேட்க மற்றவர்கள் புன்னகைத்தனர்.

அருகே நெருங்குந்தோறும் புஷ்கரன் நம்பமுடியாதவனாக ஒருவர் மாற்றி ஒருவரையாக நோக்கிக்கொண்டிருந்தான். அவர்கள் தன்னுடன் விளையாடுகிறார்கள் என்றே அவன் எண்ணினான். “இத்தனை சிறிதாக இருக்கிறதே?” என்று இறுதியில் நளனிடம் கேட்டான். “விதர்ப்பம் எளிய காவல் படையும் அதைவிட எளிய நகரும் கொண்ட அரசு, இளையோனே” என்றான் நளன். அவன் மெய்யாகவே சொல்கிறான் என்பதை முகத்திலிருந்து உணர்ந்துகொண்டு மெல்ல புரவிமேல் அமர்ந்து கடிவாளத்தை தளரப்பற்றி நோக்கியபடி வந்தான் புஷ்கரன்.

மூங்கில்களை இணைத்துக்கட்டிய சிறுவேலி ஒன்றே விதர்ப்பத்தின் எல்லையாக இருந்தது. அதுவும்கூட பாதையை மட்டுமே மறித்தது. இருபுறமும் காடு திறந்தே கிடந்தது. “எல்லையில் கோட்டையென ஏதுமில்லையா?” என்று அவன் கேட்டான். அதற்கு எவரும் மறுமொழி சொல்லவில்லை. “ஆம், ஒரு நாட்டின் எல்லை முழுக்க கோட்டை கட்டி காக்க முடியாதுதான்” என அவனே சொல்லிக்கொண்டான். எல்லைக்காவலன் வந்து தலைவணங்கி முகமன் சொல்லி “தங்கள் வருகை குறித்த செய்தி முன்னரே வந்தது, நிஷாத அரசே. இந்நகருக்கு தங்கள் வரவு சிறப்புறுக!” என்றான்.

குண்டினபுரிக்குச் செல்லும் பாதை மண்ணாலானதாக இருந்தது. புரவிக்குளம்புகள் கிளறிப்புரட்டிய மண்ணில் மீண்டும் குளம்புகள் விழும்போது சேற்றில் கல் விழுவதுபோல் ஓசையெழுந்தது. இருபுறமும் விரிந்திருந்த உயரமற்ற மரங்களாலான குறுங்காட்டுக்குள் புரவிக்குளம்படி ஓசைகள் எதிரொலிக்க பறவைகள் கலைந்தெழுந்து ஓசையிட்டன. புஷ்கரன் "வண்டிப்பாதை கூட இல்லை" என்றான். "வண்டிகள் செல்வதில்லை" என்றான் காவலன். "ஏன்?" என்று புஷ்கரன் கேட்டான். "நமக்கும் விதர்ப்பத்துக்கும் இடையே வணிகத் தொடர்புகள் இல்லை. நமது வணிகம் அனைத்தும் கோதாவரி வழியாகவே. விதர்ப்பம் மறுபுறம் மகாநதியினூடாகவே வணிகம் செய்கிறது" என்றான் நளன்.

"ஆம், அதை நானே வரைபடத்தில் பார்த்தேன்" என்று புஷ்கரன் சொன்னான். அவனுடைய ஏமாற்றம் மெல்ல விலகத் தொடங்கியது. சிறிய நாடென்றால் மேலும் நன்று, முழுநாட்டையே அவன் தன் வில்லால் வெல்வான். ஒரு நாட்டை முற்றாக வென்ற தனிவீரன் என அவனைப்பற்றி சூதர் பாடுவார்கள். விருத்திரன் நகரியை தனித்துச் சென்று அழித்த இந்திரனைப்போல. மீண்டும் அவன் உள்ளம் விம்மத்தொடங்கியது.

# நீர்க்கோலம் - 13

### 12. சகடத்திருமை

அந்திப்பொழுதில்தான் அவர்கள் குண்டினபுரியை சென்றடைந்தனர். அதன் புறக்கோட்டை வாயில் இரண்டு ஆள் உயரமே இருந்தது. அடித்தளம் மட்டுமே கற்களால் கட்டப்பட்டு

அதன்மேல் மண்ணாலான சுவர் அமைந்திருந்தது. பசுவின் வயிறென வளைந்து நீண்டு சென்ற அச்சுவர் சில இடங்களில் தாவிக் கடக்குமளவே உயரமிருந்தது. அதன்மேல் மழைக்காலத்தில் வளர்ந்த புல் வெயிலில் காய்ந்து இளமஞ்சள் நிறத்தில் காற்றிலாடியது. கோட்டை வாயிலின்மேல் அமைந்த காவல்மாடம் ஈச்சை ஓலையால் கூரையிடப்பட்டிருந்தது. கோட்டைக்குள்ளிருந்த மரத்தாலான மூன்றடுக்குக் காவல்மாடத்தின் உச்சியில் நடுவே வடுவுடன் கரிய தோல் பரவிய இரு முரசுகளுடன் காவல் படையினர் நால்வர் அமர்ந்திருந்தனர்.

கோட்டையை பழுது பார்க்கவோ முரசுகளை சீரமைக்கவோ மரச்சட்டங்களில் வண்ணம் பூசவோ அவர்கள் முயலவில்லையென்று தெரிந்தது. முந்தைய மழைக்காலத்தில் சேறாக இருந்த சாலை புழுதியாக மாறிவிட்டிருந்தது. அவ்வழியில் மிகச் சிலரே கோட்டைக்குள் சென்றுகொண்டிருந்தனர். நளன் “நாம் முன்னரே வந்துவிட்டோமா?” என்று கேட்டான். “இல்லை, அரசே. சாலை வழியாக இந்நகருக்குள் புகுபவர் மிகச் சிலரே. சாலைவழி காட்டுக்குள் குளம்புப்பாதையாக மாறிவிடுகிறது. எனவே வரதாவினூடாக படகுகளில் வருவார்கள்” என்றார் ஸ்ரீதரர்.

பொதி சுமந்த அத்திரிகளும் கழுதைகளும் தலையாட்டி மணியோசை எழுப்பியபடி சென்றன. கோட்டை வாயிலில் அவை ஒன்றுடன் ஒன்று முட்டி தயங்கி நின்றன. சிறுவணிகர்கள் மரத்தாலான தங்கள் சுங்க இலச்சினைகளைக் காட்டி ஒப்புதல்கொண்டு உள்ளே சென்றனர். அங்கே மிகச்சிலரே இருந்தமையால் நெடுநேரம் காத்திருக்கவேண்டியிருந்தது. நிஷதநாட்டின் கொடியை அவர்கள் பொருட்டாக நினைக்கவில்லை. “நம்மை எதிர்கொள்ள அரசகுடியில் எவரும் வரவில்லை” என்றான் புஷ்கரன். அவனுக்கு எவரும் மறுமொழி சொல்லவில்லை.

நளன் கோட்டையை நெருங்கியதும் கோட்டைக்காவலன் இறங்கி வந்து அவன் கொடியைப் பார்த்ததும் குழம்பி பின் தலை வணங்கி எந்த உணர்ச்சியுமின்றி மரபான முகமன் சொன்னான். நளன் மறுமுகமனுரைத்து உள்ளே சென்ற பின் “அவன் நோக்கில் நம்மை அவன் விரும்பவில்லையென்று தெரிகிறதே?” என்றான். ஸ்ரீதரர் “ஆம் அரசே, சில நாட்களுக்குள்ளாகவே குண்டினபுரியின் மக்களின் மனநிலை

முற்றிலும் மாறிவிட்டது. நெடுநாட்களாக இளவரசிக்கு திருமணம் ஆகாதிருந்தபோது தங்களையும் அவரையும் நினைத்து அவர்கள் மகிழ்ந்ததுண்டு. இன்று தன்னேற்புக்கு கலிங்கனும் மாளவனும் மகதனும் வருகிறார்கள் என்று தெரிந்தபின் அவர்களில் ஒருவரே தங்கள் அரசியை கொள்ள வேண்டுமென்று எண்ணுகிறார்கள். தங்கள் வரவை எவரும் இங்கு விரும்புவதற்கு வழியில்லை" என்றார்.

குண்டினபுரியின் தெருக்கள் முழுக்க யானைத்தோல் இழுத்து கட்டப்பட்ட கூடாரங்கள் தோள்முட்டி நெருங்கி பரவியிருந்தன. அவற்றில் படைவீரர்களே தங்கியிருந்தனர். "பாடிவீடுகள் அமைக்காமல் கூடாரங்களில் வீரர்களை தங்கவைத்திருக்கிறார்கள். அவர்களின் இல்லங்களை விருந்தினருக்கு அளிப்பார்கள்போலும்" என்றார் நாகசேனர். வணிகர்களின் கடைகள் ஓரளவிற்கே இருந்தன. "இங்கு கடை வீதி மிகவும் சிறியது. வரதாவின் கரையோரமாக வணிகர்களின் பண்டகசாலைகள் உள்ளன" என்று ஸ்ரீதரர் சொன்னார்.

"எந்த வகையிலும் ஒரு மணநிகழ்வுக்கு இந்நகரம் சித்தமாகவில்லை. மணம்நாடி அணுகும் அரசர்களுடன் இணைந்து வரும் படைகளுக்கு பொருள் வழங்கும் கடைகளோ அவர்களை தங்கவைக்க கூடாரங்களோ இருப்பதாக தெரியவில்லை" என்று நளன் சொன்னான். வஜ்ரகீர்த்தி "ஆம், ஓராண்டுகாலம் எடுத்துக்கொண்டு அனைத்தையும் அமைத்தாலும் இவர்களால் சரியாக நிகழ்த்த முடியாது. ஓரிரு நாட்களில் முடிவெடுத்து அமைத்திருக்கிறார்கள். இங்கு பெருங்குழப்பமே நிகழவிருக்கிறது" என்றான். நளன் "அவ்வாறல்ல. பல தருணங்களில் நிகழ்வுகள் தாங்களே முட்டி

மோதி ஓர் ஒழுங்கை கண்டுகொள்ள வாய்ப்புள்ளது நாம் விரும்பியபடி அவற்றை அமைக்க முயல்கையில் மட்டுமே குழப்பங்கள் எழுகின்றன” என்றான்.

அவர்கள் முதல் அரணின் காவல்மாடத்தை அடைந்தபோதுதான் விதர்ப்பத்தின் ஆயிரத்தவர்களில் ஒருவனாகிய ருத்ரன் தன் இரு உதவியாளர்களுடன் வந்து வணங்கி “நிஷத அரசர்க்குரிய தங்குமிடம் ஒருக்கப்பட்டுள்ளது. வருக!” என்றான். அவன் உடல் மொழியிலும் குரலிலும் வணங்காமை இருந்தது. முகமன் உரைத்து அவனுடன் செல்கையில் ஸ்ரீதரர் “ஒரு துணையமைச்சரை அனுப்பும் மதிப்பை விதர்ப்பம் அளித்திருக்கலாம்” என்றார். நளன் புன்னகையுடன் “தாழ்வில்லை, சில ஆண்டுகளுக்குப்பின் நம் மைந்தன் இங்கே கோல்சூடி அமர்வான்” என்றான். ஸ்ரீதரர் புன்னகை செய்தார்.

அவர்களுக்கு ஒதுக்கப்பட்டிருந்த இல்லம் சூதர்களின் தெருவில் அமைந்திருந்தது. தலைமைக் கணியரான ஜீமுதரின் இல்லம் அது. அவர் அதன் வாயிலில் கைகூப்பி நின்றிருந்தார். அவர்கள் புரவிகளில் இருந்து இறங்கியதும் அவர் முகம் மலர்ந்தபடி அணுகி “கிரிப்பிரஸ்தத்தின் அரசர் என் இல்லத்தில் கால்வைத்தது என் மூத்தோரின் நல்லூழ்ப்பயன். என் பிந்தையோருக்கு நான் அளிக்கும் கொடை. இத்தருணம்போல என் வாழ்க்கையில் இனி ஒரு பெருநிகழ்வு வரப்போவதில்லை” என்றார். உணர்வெழுச்சியால் அவர் குரல் தழைந்தது.

நளன் அவரை வணங்கி “தாங்கள் முதற்கணியர் ஜீமுதர் என்று எண்ணுகிறேன்” என்றான். “தங்களுக்கு என் பெயர் எப்படி தெரியும்? எண்ணவே இல்லை” என்றார் ஜீமுதர்.

“திறனுடையோரை நான் அறிந்து வைத்திருப்பேன். இங்கிருந்து செல்வதற்குள் அடுமனைத்தலைவர் வீசிகரையும் புரவிச்சாலை தலைவர் சுப்ரரையும் சந்திக்க விழைகிறேன்” என்றான். அவர் பேருவகையுடன் “தங்கள் நாவால் பெயர் சொன்னீர்கள் என்றறிந்தால் அவர்கள் நெஞ்சுருகி இறக்கவும் கூடும்... பாரதவர்ஷத்தின் அடுமனைத்திறனாளர்களில் முதல்வர் தாங்களே என அறியாதவர் எவர்? புரவிகளின் தெய்வமாகிய ஹயக்ரீவரின் வடிவம் நீங்கள் என்று சூதர் சொல்லி கேட்டிருக்கிறேன்” என்றார்.

அவர் கைகளை பற்றிக்கொண்டு “நாம் இன்றிரவு பேசுவோம்... நான் எங்கும் செல்வதாக இல்லை” என்றான் நளன். அவர் கூப்பிய கையை பிரிக்காமலேயே நளனை தன் இல்லத்திற்குள் அழைத்துச்சென்றார். சிறிய இல்லமாயினும் அதை நன்கு தூய்மைசெய்து அணிக்கோலமிட்டு அழகுறுத்தியிருந்தார். அவரது இளையோரும் மைந்தரும் இல்லமகளிரும் சிறுவரும் புத்தாடைகளுடன் வாயிலின் இருபக்கமும் கைகூப்பி நின்றனர். நளன் வாயிலை அடைந்ததும் அவர்கள் வாழ்த்தொலி கூவினர். மூதாட்டி ஒருத்தி நிறைகுடமும் பொலிமுறமும் ஏந்தி எதிரே வந்தாள். நளன் வலக்கால் எடுத்து வைத்து உள்ளே நுழைந்தபோது பெண்கள் குரவையிட்டார்கள்.

நீராடி ஓய்வெடுக்க அமர்ந்தபோது நாகசேனர் “சூதர் மனையை நமக்காக தெரிவுசெய்ததில் அவர்களின் வஞ்சம் ஒளிந்துள்ளது, அரசே” என்றார். “ஆம், அதை இதற்கு அப்பால் அவர்களால் காட்டமுடியாது” என்றான் நளன். உரக்க நகைத்து “நான் விரும்பிய மறைவிடமும் இதுவே” என்றான். புஷ்கரன் “நாம் அரண்மனைகளில் தங்கவைக்கப்படுவோம் என எண்ணினேன்” என்றான். அவனை அனைவரும் திரும்பி நோக்கினர்.

“அவ்வாறு வழக்கமில்லையா?” என்றான். ஸ்ரீதரர் வெறுமனே புன்னகைமட்டும் செய்தார். நளன் “நாம் அரண்மனைக்குச் செல்ல சற்று பிந்தும், இளையோனே” என்றான். தான் எதையோ புரிந்துகொள்ளவில்லை என உணர்ந்த புஷ்கரன் “ஆம்” என்றான்.

நளன் ஓய்வெடுக்க புஷ்கரன் வெளியே சென்று குண்டினபுரியை சுற்றிப்பார்த்துவிட்டு வந்தான். அந்நகர் முதல்நோக்கில் மிகச் சிறிதாக இருந்தது. சுற்றச்சுற்ற வளர்ந்து விரிந்தது. அதன் ஒவ்வொரு தெருவையும் மாளிகையையும் அவன் நினைவில் நிறுத்திக்கொள்ள முயன்றான். அவற்றை அவன் மறக்கவே கூடாது என சொல்லிக்கொண்டான். அவற்றை சூதர் எப்படி பாடுவார்கள்? ஆனால் அதற்கு முன் அங்குள்ள பாதுகாப்பு ஏற்பாடுகளை அவன் சரியாக உளப்பதிவு செய்துகொள்ளவேண்டும். வீரர்களின் எண்ணிக்கைகளை, படைக்கலங்களை, காவல்கோட்டங்களை. தப்பிச்செல்ல ஒன்றுக்கு மேற்பட்ட வழிகளை கண்டு வைக்கவேண்டும். ஏதோ ஒரு சாலையில் அவன் வாளுடன் திரும்பி நிற்கக்கூடும். வெட்டுண்டு மண்ணில் விழுந்து கிடக்கக்கூடும்.

அவன் உடல் முதல்முறையாக அவ்வெண்ணத்தை உணர்ந்து சிலிர்ப்படைந்தது. அச்சம் வயிற்றில் குளிராக, எடையாக அழுத்த அவன் அதை வேறு எவரேனும் உணர்கிறார்களா என்று திரும்பிப்பார்த்தான். எண்ணங்கள் உடலுக்குள்ளேயே இருப்பது எத்தனை நல்லது! இறந்துவிட்டான் என்றால் அவன் புகழ்ப்பெயராக எஞ்சுவான். நடுகல்லாக நீடிப்பான். ஆனால் இந்த எண்ணங்களுடன் இவ்வுணர்வுகளுடன் இருக்கமுடியாது. முற்றிலும் இல்லாமலாகிவிடுவான். அப்பால் என்ன? இருளா?

விண்ணுலகா? ஆழமா? அறியமுடியாமை. அவன் உடல் மீண்டும் சிலிர்த்தது.

ஏன் இறக்கவேண்டும்? நான் இன்னும் எதையும் நுகரவில்லை. பெண்? ஓரிருமுறை. ஆனால் நான் விரும்பும் பெண், என்னை அடையும் தகுதிகொண்டவள் இன்னும் என் கண்ணெதிரே வரவில்லை. எங்கோ அவள் கனிந்து ஒளிகொண்டபடி இருக்கிறாள். நான் வெல்லப்போகும் களங்கள் பெறப்போகும் சொற்கள் அனைத்தும் அறியாவெளியில் உருத்திரள்கின்றன. நான் சாவதைப்பற்றியே ஏன் எப்போதும் எண்ணிக்கொள்கிறேன்? களம்படுபவன் பெரியோன். அவனை மூதாதையர் வாழ்த்துகின்றனர். உண்மை, ஆனால் வென்று வாழ்பவனுக்கே அரசலட்சுமி அளிக்கப்படுகிறாள். அவன் குலமே வாழ்கிறது. அவர்களுக்கு அவன் தெய்வம்.

ஆம், சாகவேண்டியதில்லை. செறுத்து நின்று போரிட்டு வெல்லவேண்டியவன் அவன். உண்மை, அவன் வெல்பவன் மட்டுமே. சாகவேண்டியவர்கள் எளிய படைவீரர்கள். அரசர்கள் வாளுடன் முன்னின்று போரிடுவதில்லை. அவர்கள் களம் அமைத்து கருநிலைகளை அமைத்தபிறகு பின் அமைந்து போர் சூழ்பவர்கள். அவர்கள் மானுடரை வைத்து ஆடுபவர்கள். கருக்கள் அல்ல, கைகளே பேரரசர்கள்.

அவன் திரும்பி வந்தபோது நகருக்குள் சென்றிருந்த காவலர்கள் திரும்பி வந்து நளனுக்கு செய்தியறிவித்துக்கொண்டிருந்தார்கள். மகதனும் வங்கனும் கலிங்கனும் மாளவனும் முன்னரே வந்துவிட்டிருப்பதை வஜ்ரகீர்த்தியின் காவலன் நளனிடம் சொன்னான். “எவருக்கும் தனியாக பாடிவீடுகள் எதுவும் அமைக்கப்படவில்லை, அரசே. கலிங்க அரசரையும் வங்க அரசரையும்கூட பெருவணிகர்களின்

இல்லங்களிலேயே தங்க வைத்திருக்கிறார்கள். அவர்களுடைய காவல் படைகள் திறந்தவெளியில் தோல்கூடாரங்களில்தான் தங்கியிருக்கின்றன” என்றான்.

நளன் ஸ்ரீதரரை நோக்கி புன்னகைத்து “வங்கப்படைகளும் கலிங்கப்படைகளும் ஒருவரையொருவர் விழிநோக்கும் தொலைவில் போரின்றி தங்கியுள்ளது இதுவே முதல் முறையாக இருக்கக்கூடும். சாளரம் வழியாக நோக்கினேன், சற்று அப்பால் மகதனின் கொடி பறக்கிறது. பாரதவர்ஷத்தில் ஒரு போரற்ற பொன்னுலகம் பிறந்துவிட்டதோ என்ற மயக்கத்தை நான் அடைந்தேன்” என்றான். ஸ்ரீதரர் “ஒவ்வொன்றும் இயல்வதற்கு வாய்ப்புள்ள அத்தனை பிழைகளுடனும் நிகழ்கின்றன. நெடுங்காலம் பொறுத்திருந்து செய்யப்படும் செயல் சில சமயம் முழுமையாக அமையும். பெரும்பாலும் ஆர்வம் குன்றி சிதறிப்போகும்” என்றார்.

நளன் நாகசேனரை அழைத்து “மாமன்னர்கள் அனைவருக்கும் நமது குலவழக்கப்படி பரிசுகளை அளித்து வணங்கி மீள்வோம்” என்றான். புஷ்கரன் குழப்பத்துடன் “நாம் இங்கு அவர்களுடன் போட்டியிட வந்திருக்கிறோம். அவர்களை வென்று மகள்கொள்ளும் பொருட்டு. அவர்களைச் சென்று கண்டு பணிந்து கொடையளித்து மீள்வதற்கு இங்கு எந்தத் தேவையுமில்லை” என்றான். “ஆம், முறைப்படி தேவையில்லை. நாம் நிஷாதர், பேரரசர்களின் கருணை எப்போதும் நமக்குத் தேவை” என்றான் நளன். “கருணையா? நாம் அவர்களை வாள்முனையில் வெல்லப்போவதில்லையா?” என்று புஷ்கரன் உரக்க கேட்டான். “வாள்முனை தேவையென்றால் உறை மீளட்டும். அதுவரை அவர்களின் கருணையே நம்மிடம்

இருக்கட்டும்” என்றபின் நளன் ஆவன செய்யும்படி நாகசேனரிடம் சொல்லிவிட்டு எழுந்து சென்றான்.

புஷ்கரன் சினத்துடன் “என்ன நிகழ்கிறது? நாம் எதற்காக இங்கு வந்துள்ள அரசர்களைச் சென்று பார்த்து வணங்கி மீளவேண்டும்?” என்றான். ஸ்ரீதரர் “அது சூழ்ச்சி மட்டுமே, இளவரசே” என்றார். “நாம் இளவரசியை மணம் கொள்ளக்கூடும் என்று அவர்கள் எண்ணவே கூடாது. இங்கு நாம் வந்தது பேரரசர்களைக் கண்டு முறைமை செய்து அவர்களின் கருணையைப் பெறுவதற்காக மட்டுமே என்று அவர்கள் எண்ணலாம். இங்கு வந்துள்ள சிறிய அரசர்கள் எல்லோரும் அதையே செய்வார்கள். நாம் அதை செய்யவில்லையென்றால் ஐயத்திற்கிடமாகும். அவர்கள் இங்கு வந்ததுமே சூதர்கள் நாவில் விதர்ப்ப இளவரசியையும் நிஷத அரசரையும் குறித்து உலவும் கதைகளை தாங்களும் கேட்டிருப்பார்கள்” என்றார்.

“சூழ்ச்சியா?” என்று முகம் மலர்ந்த புஷ்கரன் “ஆம், நாம் அவர்களை ஏமாற்றுகிறோம் அல்லவா?” என்றான். பின் உரக்க நகைத்து “நாம் சென்று பணிந்து நிற்கையில் அவர்களுக்குத் தெரியாது, அவர்கள் நாடி வந்ததை கவர்ந்து செல்லப்போகும் வீரர்கள் நாம் என்று. நான் செல்கிறேன். கலிங்கனைக் கண்டு முழந்தாளிட்டு பணிந்து சொல்கிறேன், கடல்சூழ் கலிங்கத்தை ஆளும் பேரரசரே, உங்கள் அளிக்கொடை தேடி வந்துள்ள எளிய மலைநிஷாதன் நான், உங்கள் காலடிகளை என் தலையில் மணிமுடியென சூட விரும்புகிறேன் என்று. என் உடைவாளை உருவி அவர் காலடியில் தாழ்த்தி எனது வீரமும் உயிரும் உங்கள் பணிக்கே அளிக்கிறேன் என்று வஞ்சினம் உரைக்கிறேன். அவன் நம்பிவிடுவான். ஐயமே வேண்டாம். இவற்றை சிறப்பாக என்னால் செய்ய முடியும். மூத்தவரிடம்

சொல்லுங்கள், திறைக்கொடையுடன் நானும் சில அரசர்களை பார்க்கிறேன் என்று” என்றான்.

ஸ்ரீதரர் புன்னகைத்து “பேரரசர்களான அங்கனையும் வங்கனையும் கலிங்கனையும் மாளவனையும் அரசர்கள் சென்று பார்ப்பதுதான் முறைமை. மேலும் இங்கு அரசர்கள் வந்துகொண்டே இருக்கிறார்கள். நீங்களும் நானும் சென்று பார்க்கவேண்டிய பலர் உள்ளனர்” என்றார். புஷ்கரன் முகம் சுருங்கி “நான் கலிங்கனையோ மாளவனையோதான் சென்று பார்க்க விரும்புகிறேன். அவர்களைத்தானே நான் நாளை களத்தில் சந்திக்கப்போகிறேன்? பின்பு நான் திறையுடன் சென்று அவர்களைச் சந்தித்து மீண்ட காட்சியும் சூதர்களால் திறம்பட நடிக்கப்படும் அல்லவா?” என்றான்.

“தாங்கள் சென்று பார்க்கவில்லையென்றாலும் அதை திறம்பட நாடகமாக்கும்படி சொல்லிவிடலாம்” என்றார் ஸ்ரீதரர். அருகில் நின்ற நாகசேனர் புன்னகையுடன் வேறு பக்கம் திரும்ப புஷ்கரன் ஆவலுடன் ஸ்ரீதரர் கையை பற்றிக்கொண்டு “மெய்யாகவா? உண்மையில் நிகழவில்லை என்றாலும் எழுதச்சொல்லிவிடலாமா...?” என்றான். “மெய்யாகவே சொல்லிவிடலாம். அதிலென்ன ஐயம்? ஆனால் நீங்கள் ஏதேனும் ஓர் அரசரை சந்திக்கவேண்டும். அது மகதனைத்தான் என்று சொன்னால் யார் மறுக்கப்போகிறார்கள்?”

“மகதனை சந்திப்பதுதான் எனக்கு உகந்தது. ஆயினும் மூத்தவரின் ஆணைப்படி நிகழட்டும்” என்று புஷ்கரன் சொன்னான். “ஏனென்றால் நான் அவருக்கு கட்டுப்பட்டவன். அவரை காத்து நிற்கவிருப்பவன். அமைச்சரே, இப்போது நான் செய்தவை என்ன தெரியுமா? நகரை மும்முறை சுற்றிவந்து அத்தனை படைசூழ்கையையும் என் உள்ளத்தில்

பதியச்செய்திருக்கிறேன். உரிய தருணத்தில் எனக்கு பிறந்த மண்ணுக்கு நிகராக இந்த நகரம் அறிமுகமாகியிருப்பதைக் கண்டு நீங்களே வியப்படைவீர்கள்.”

புஷ்கரன் தனது தோற்றத்தை சிறிய ஆடிமுன் நின்று திரும்பி நோக்கிக்கொண்டிருந்தான். ஒவ்வொரு முறை நோக்குகையிலும் உவகையும் நிறைவும் எழுந்தது. சில கணங்களுக்குள் குறையொன்று தென்பட்டது. பதற்றம் கொண்டு அணிச்சேவகரை அழைத்து கூச்சலிட்டான். அவர்கள் அதை செம்மை செய்ததும் நிறைவடைந்து மீண்டும் ஆடி முன் சுழலத்தொடங்கினான். பீதர் நாட்டு பொன்னூல் பணி செறிந்த பட்டாடையும், பொன்வளையங்களிட்ட பட்டு அரைக்கச்சையும், மார்பில் மாலைகளும் ஆரங்களும் சரப்பொளியும், விரிந்த தோளணிகளும் அணிந்திருந்தான். தலையில் நிஷதநாட்டு இளவரசனுக்குரிய காக்கை இலச்சினை பொறித்த தலைப்பாகையும் அதில் வலப்பக்கமாக நின்று காற்றில் குலைந்த செம்பருந்தின் இறகும் சூடியிருந்தான்.

அவன் உருவம் அவன் நோக்கில் ஓவியத்தில் தென்படுவதுபோல் இருந்தது. சுவரில் நின்று காலத்திற்கப்பால் எங்கிருந்தோ நோக்கிக்கொண்டிருக்கும் மூதாதையரின் ஓவியங்களை அவன் கிரிப்பிரஸ்தத்தின் அரண்மனையில் கண்டதுண்டு. ஒவ்வொரு ஓவியத்தின் முன்னாலும் நின்று அவ்விழிகளை நேருக்கு நேர் சந்தித்து அவர்கள் சொல்லி நிற்கும் அச்சொல் என்ன என்று எண்ணியபடி பகல் கடத்தியதுண்டு. இப்போது அவ்வோவியங்களில் ஒன்றாக தான் ஆகிவிட்டதுபோலத் தோன்றியது. காலவெளிக்கப்பாலிருந்து இடவலமாக திரும்பித் தெரியும் உலகை நோக்கி வியந்து கொண்டிருப்பதாக.

திரும்பி அருகே நின்ற ஏவலர்களிடம் தன் முகக்குறியால் தன் கச்சையை ஏற்றிக் கட்டும்படி சொன்னான். அவர்களுக்கு அது புரியவில்லை. மீண்டும் இருமுறை முகக்குறி காட்டியபோதும் அணியன் வெறுமனே தலைவணங்க மட்டுமே செய்தான். ஆம், இப்போது என் சொற்கள் இவர்களுக்கு கேட்காது. நான் ஓவியங்கள் வரையப்பட்ட திரைச்சீலைக்கு அப்பால் இருக்கும் ஆடியுலகில் வாழ்கிறேன். விருத்திரனும் ஹிரண்யனும் மாவலியும் வாழும் உலகில். இவர்கள் என்னை படையலிட்டு மலர்செய்கை செய்து மட்டுமே அணுகமுடியும். சன்னதம் கொண்டெழுபவர்களினூடாகவே நான் இவர்களுக்கு ஆணை பிறப்பிக்க முடியும்.

அவ்வெண்ணத்தில் முகம் விரிய தன் குழலை நீவி அழுத்தியபடி சாளரம் வழியாகத் தெரிந்த வரதாவின் பெருக்கை நோக்கி புன்னகைத்தான். ஸ்ரீதரர் வந்து நின்று “கிளம்புவோமா, அரசே? பொழுதாகிவிட்டது…” என்றார். “தேர்கள் ஒருங்கிவிட்டனவா?” என்று புஷ்கரன் கேட்டான். “நமக்கு ஒரு தேர் மட்டுமே அனுப்பப்பட்டுள்ளது” என்றார் ஸ்ரீதரர். “அரசரும் தாங்களும் அதில் செல்லலாம். நாங்கள் மெல்ல நடந்தே அங்கு வந்துவிடுவோம்” என்றார். “அமைச்சர்கள் நடந்து வருவதா…?” என்று புஷ்கரன் சினத்துடன் கேட்க கண்களைச் சிமிட்டி “அரசுசூழ்தல்” என்றார் ஸ்ரீதரர்.

புஷ்கரன் புன்னகைத்து “ஆம், நாம் எளியவர்களாக தோற்றமளிக்க வேண்டும். நன்று!” என்றான். அவர்கள் படியிறங்கி முற்றத்திற்கு வந்தபோது நளன் தன் முழு அரசத்தோற்றத்தில் அமைச்சரும் காவலரும் சூழ நின்றுகொண்டிருந்தான். புஷ்கரன் அருகே சென்று தலைவணங்கி “வணங்குகிறேன், மூத்தவரே. இத்தருணத்தை

இனி நம் குலதெய்வங்கள் ஆளட்டும். தங்களை வெற்றி தேவி உடனிருந்து வாழ்த்தட்டும்” என்றான். “நன்று! நீயும் உடனிரு” என்றபின் அவன் ஸ்ரீதரரிடம் “சரியான சொற்களை சொல்லக் கற்றுவிட்டிருக்கிறான் அல்லவா?” என்றான்.

ஸ்ரீதரர் அவனை ஒருமுறை நோக்கியபடி புன்னகைத்து “அணிக்கோலமும் மிகச் சிறப்பாக இருக்கிறது. மணத்தன்னேற்புகளில் அவையமரச் செல்வதற்கும் தகுதியடைந்துவிட்டார்” என்றார். புஷ்கரன் நாணி “என்ன சொல்கிறீர்கள்?” என்று சிரித்தான். நளன் அவன் தோளில் கைவைத்து “வருக, இளையோனே” என்றான்.

அவர்கள் தேரிலேறிக்கொண்டதும் ஸ்ரீதரர் “நீங்கள் தெற்கு வாயிலுக்குத்தான் செல்லவேண்டியிருக்கும், அரசே” என்றார். புஷ்கரன் “கிழக்கு வாயிலில்தானே அரசர்கள் நுழைவார்கள்?” என்றான். “அது ஷத்ரிய அரசர்களுக்கு. பிறர் தெற்கு வாயிலினூடாகத்தான் உள்ளே நுழைய ஒருங்கு செய்யப்பட்டுள்ளது” என்றார் நாகசேனர். “பிறர் என்றால்…?” என்றான் புஷ்கரன். “பிறர் என்று அவர்கள் வகுத்த குடிகள்” என்றார் ஸ்ரீதரர். “நாம் குடிகளிலொருவராக இங்கு கப்பம் கட்ட வரவில்லை. அரசகுடியாக வந்திருக்கிறோம்” என்று புஷ்கரன் உரக்க சொன்னான். “அரசுசூழ்தல், இளவரசே” என்றார் ஸ்ரீதரர்.

புஷ்கரன் சினத்துடன் “அரசுசூழ்தல் என்றாலும் நமது முறைமையை அவர்கள் பொருட்படுத்தவில்லை. நம்மை அரசராகவே எண்ணவில்லை” என்றான். அவன் தோளில் தட்டி “எண்ணவைக்கும் பொருட்டுதானே நாம் இங்கு வந்துள்ளோம், இளையோனே?” என்றான் நளன். அவன் கையசைக்க தேர் கிளம்பும்படி ஸ்ரீதரர் ஆணையிட்டார். தேருக்குள் அமர்ந்து

இருவரும் திரைகளை மூடிக்கொண்டனர். நளன் தேர்த்தட்டில் சாய்ந்தமர்ந்து கைகளை மார்பில் கட்டிக்கொண்டான்.

புஷ்கரன் நின்றபடி “எதை எண்ணிக்கொண்டிருக்கிறீர்கள், மூத்தவரே?” என்றான். “இவர்களின் தேர்கள் மிகத் தொன்மையானவை. தேர்த்தட்டு அமையும் எடைவிற்களை இன்னும் இவர்கள் கண்டடையவில்லை. இரு சக்கரங்களுக்கு இடையே ஒத்திசைவு இருக்கவேண்டுமென்பதையும் புரிந்துகொள்ளவில்லை. ஆகவே புரவியின் ஆற்றல் முழுக்க தேரின் பிழையான அசைவுகளுக்காக சிதறடிக்கப்படுகிறது” என்றான் நளன்.

“இதையா எண்ணிக்கொண்டிருக்கிறீர்கள்?” என்றான் புஷ்கரன். “ஆம். ஏன்?” என்றான் நளன். “விதர்ப்ப இளவரசியைப்பற்றி எண்ணிக்கொண்டிருப்பீர்கள் என்று நினைத்தேன். அல்லது நிகழவிருக்கும் போரைப்பற்றியாவது...” “அவற்றைப் பற்றி எண்ணுவதில் என்ன பயன்? எண்ணித்துணிந்த பின் தானே இங்கு கிளம்பி வந்துள்ளோம்?” என்றான் நளன். “இருப்பினும்...” என்ற புஷ்கரன் “என்னால் நேற்றிரவு ஒரு கணம்கூட அவ்வெண்ணத்தை விட்டு விலக முடியவில்லை, மூத்தவரே. பிறிதொன்றை எண்ணாமல் இரவெல்லாம் இந்தச் சிறிய இல்லத்தின் இடைநாழிகளில் சுற்றிவந்துகொண்டிருந்தேன்” என்றான்.

“ஆம், உனது காலடியோசை கேட்டது” என்றான் நளன். “நானும் அப்பருவத்திலிருந்திருக்கிறேன். அதை கடந்து வந்துவிட்டேன்.” “கடந்து வந்துவிட்டீர்கள் என்றால்?” என்றான் புஷ்கரன். “இத்தகைய நிகழ்வு உங்களை கிளற வைப்பதில்லையா?” சிரித்து “இல்லை” என்றான் நளன். “ஏன்?” என்று வியப்புடன் கேட்டபடி அவன் பீடத்தின் மேல்வளைவை பற்றியபடி குனிந்து

“இவை அரிய நிகழ்வுகளல்லவா? வரலாற்றின் திருப்புமுனைகள் அல்லவா?” என்றான். “இளையோனே, நாம் வாழ்ந்து சலித்து முதிரும்போது இவையனைத்துமாகிய இவ்வொழுக்கிலுள்ள தற்செயல்களின் பொருளின்மையே நம்மில் எஞ்சுகிறது. ஒரு மாபெரும் இளிவரல் நாடகம்போல அனைத்தும் தோற்றமளிக்கத் தொடங்குகின்றன. அவை வியக்கவும் நகைக்கவும் வைக்கின்றன, கிளர்ந்தெழச் செய்வதில்லை.”

“பொருளின்மைதான் எஞ்சுவது என்றால் அதில் வியப்பதற்கு என்ன?” என்றான் புஷ்கரன். “பல்லாயிரம் பொருளின்மைகள் கூடி உருவாகும் ஒத்திசைவு. அந்த ஒத்திசைவினூடாக தெரியவரும் மையப்பொருள். அது வெறும் தோற்றமே எனக் காட்டும் ஆழ்பொருள். அது ஒரு துளிமட்டுமே என விரியும் மெய்ப்பொருள். அது வெறும் வியப்பு, வேறொன்றுமல்ல” என்று நளன் சொன்னான். “தாங்கள் அதை அறிந்துவிட்டீர்களா, முற்றாக?” என்று புஷ்கரன் கேட்டான். “அறிந்துளேன், உணர்ந்து கடக்கவில்லை. அறிந்ததனால் இத்தருணத்தில் கிளர்ச்சியடையாமலிருக்கிறேன். உணர்ந்திருந்தேனானால் பற்றின்றி ஈடுபட்டிருப்பேன்” என்றான் நளன்.

“இளையோனே, இன்று வெற்றியை விழைகிறேன், தோல்வியை அஞ்சுகிறேன். சிறுமையை விலக்கி பெருமை கொள்ள நினைக்கிறேன். இந்த அலைக்கழிப்பு இந்த கணத்தின் அமைதிக்கு அடியில் ஓடிக்கொண்டிருக்கிறது. இவ்விரு நிலையால் என் சொல்லும் செயலும் சிதறடிக்கப்படுகின்றன. நான் இறங்கி அவைக்களத்தில் நடந்து செல்லும்போது என் உடலின் எளிய அசைவைக்கொண்டே முனிவர்கள் நான் இரண்டாக பகுக்கப்பட்டிருக்கிறேன் என்று உணர்வார்கள். இந்த

தேரைப்போல எனது ஆற்றலும் ஒத்திசைவின்மையால் வீணாகிக்கொண்டிருக்கிறது” என்றான் நளன்.

# நீர்க்கோலம் - 14

### 13. அவைநிற்றல்

✿விதர்ப்பத்தின் அரண்மனை மிகச் சிறியதென்று முன்னரே உரையாடல்களில் இருந்து புஷ்கரன் அறிந்துகொண்டிருந்தான். விதர்ப்பத்திற்கு வரும் வழியில் சுனைக்கரையில் ஓய்வெடுக்கையில் அவர்கள் பேசுவதை கேட்டுக்கொண்டிருந்தான். “இத்தகைய பெருநிகழ்வை அங்கெல்லாம் எப்படி நிகழ்த்த இயலுமென்று தெரியவில்லை” என்றார் ஸ்ரீதரர். “அது தொன்மையான அரண்மனை அல்லவா?” என்று அவன் கேட்டபோது “தொன்மையான அரண்மனைகள் அனைத்துமே மிகச் சிறியவை” என்றார் நாகசேனர். “ஆனால் தொன்மையான காலங்களில் அனைத்து நிகழ்வுகளும் பெரிதாக அல்லவா நிகழ்ந்திருக்கின்றன?” என்று அவன் கேட்க நாகசேனர் “அவையெல்லாம் தொன்மையான நிகழ்வுகள், அரசே. மரங்கள் வளர்வதைப்போல நிகழ்வுகளும் வளர்ந்து பெரிதாகின்றன” என்றார்.

“அது எப்படி?” என்று கேட்டபின் அவர் தன்னை ஏளனம் செய்கிறார் என்றெண்ணி “சொல்லிப் பெருக்குகிறார்கள் என்கிறீர்களா?” என்றான். “எவரும் அதை பெருக்குவதில்லை. அவை பெருகிக்கொண்டே இருக்கின்றன” என்றபின் நாகசேனர் “பழைய அரண்மனைகளைச் சுற்றி பெரிய முற்றங்கள் இருக்கும். இரண்டு அரண்மனைகளுக்கு நடுவே செண்டுமுற்றம் நன்கு பெரியது என்கிறார்கள். அங்கே விழவை

நிகழ்த்தத் திட்டமிட்டிருக்கிறார்கள் என்று எண்ணுகிறேன்” என்றார். “மணத்தன்னேற்புக்கு பந்தல் தேவையல்லவா? இவர்களால் அவ்வளவு பெரிய முற்றத்தை நிரப்பி பந்தலிட இயலுமா என்ன?” “இயன்றிருக்கக்கூடும். அவர்கள் இத்தனை விரைவாக நிகழ்வை ஒருங்கிணைத்திருப்பதனால் பந்தலமைக்க பொழுதிருக்காது. நமது ஒற்றர்கள் சென்றபோது அம்முற்றத்தில் ஒரு தூண் கூட நட்டிருக்கவில்லை” என்று நாகசேனர் சொன்னார்.

புஷ்கரன் எண்ணிய காட்சி உலைந்தது. “திறந்தவெளியில் எப்படி மணத்தன்னேற்பு வைக்க முடியும்?” என்றான். “ஏன்?” என்று நாகசேனர் கேட்டார். “விண்ணிலிருந்து கந்தர்வர்களோ தேவர்களோ வந்து அரசர்களுடன் கலந்துகொள்ளக்கூடுமல்லவா?” என்றான் புஷ்கரன். “வாய்ப்புண்டு. அவ்வாறு விண்ணிலிருந்து எவரேனும் வந்து இளவரசியை கொண்டு சென்றாலும் நன்றுதானோ?” என்றார் நாகசேனர். அவர்கள் தன் சொல்லை ஒரு பொருட்டாக எண்ணவில்லை என்று தோன்றவே புஷ்கரன் சினத்துடன் திரும்பி தன் புரவியை நோக்கி சென்றான்.

ஆனால் நளனுடன் தேரில் அமர்ந்து செல்கையில் தொலைவில் அரண்மனையைப் பார்த்ததும் புஷ்கரன் உணர்வெழுச்சியடைந்தான். அது அவன் எண்ணியதையும்விட மிகச் சிறியதாகவே இருந்தது. அமைச்சர்கள் பலவாறாக சொல்லிய பின்னரும்கூட முகடுகளின் நிரைகளும் உப்பரிகைகளும் சாளரங்களும் கொண்ட ஏழடுக்கு மாளிகையை அவன் எதிர்பார்த்திருந்தான். ஆனால் ஒரு ஆள் உயரமுள்ள செங்கல் சுவரால் வளைக்கப்பட்ட அவ்வரண்மனை இரண்டு முகடுகள் கொண்டதாக இருந்தது. உப்பரிகைகளே

இல்லை. மரச்சட்டமிடப்பட்ட ஏழு சிறு சாளரங்கள் பெருமுற்றத்தை நோக்கி திறந்திருந்தன. முகப்பு முற்றம் மிகப் பெரிதாக அமைந்து அவ்வரண்மனையை மேலும் சிறிதென பின்னுக்கு தள்ளியது. ஆனால் முதல்கணத்தில் இதுவா என்ற எண்ணம் எழுந்தபின் இங்குதான், இங்குதான் என அவன் உள்ளம் துள்ளத்தொடங்கியது.

செங்கல் பரப்பப்பட்ட முற்றம் நெடுங்காலம் புழக்கத்திலிருந்து கருமை கொண்டிருந்தது. அதில் நடக்கும் வழிகள் தேய்ந்து செந்நிற புண்வரிகள் எனத் தெரிந்தன. முன்னரே வந்துவிட்டிருந்த அரசர்களின் தேர்களும் பல்லக்குகளும் புரவிகளும் நிறைந்து வண்ணம் குழம்பி கொடிகளின் அலைவில் விந்தையான சோலை ஒன்று காற்றில் ததும்புவதாகத் தோன்றியது. தேர் சகட ஒலி மாறுபட அரண்மனை முகப்பை அடைந்ததுமே புஷ்கரன் பதற்றத்துடன் தேரின் நிலைத்தூணைப் பற்றியபடி வெளியே பார்த்தான். அவன் மொத்த உடலும் அருவிக்குக் கீழே நிற்பதுபோல் அதிர்ந்துகொண்டிருந்தது. விழுந்துவிடக்கூடாதென்ற எண்ணமே அவன் சித்தத்தை நிறைத்திருந்தது.

விதர்ப்பத்தின் சிற்றமைச்சர் ஒருவர் வந்து தேருக்கு கீழே நின்று பணிந்து முகமனுரைக்க நளன் புஷ்கரனை பார்த்தான். புஷ்கரன் மெல்ல நடுங்கிக்கொண்டிருப்பதைக் கண்டு புன்னகையுடன் அவன் தோளில் கைவைத்து “வெளியே சென்று முறைமைச்சொற்களை சொல்க!” என்றான். “ஆம், ஆம்” என்றான் புஷ்கரன். “இறங்குக!” என்றான் நளன். “என்ன?” என்று புஷ்கரன் கேட்டான். “இறங்கு, இளையோனே” என்று சொன்னதும் பதறி விழுவதுபோல தேரிலிருந்து பாய்ந்திறங்கி தரையில் நின்றான். விதர்ப்பத்தின் சிற்றமைச்சர் சௌபர்ணிகர்

அவனுக்கான முறைமைச்சொற்களைச் சொல்லி தலைவணங்கினார். விழித்துக்கொண்டவன்போல திடுக்கிட்டு சுற்றும் நோக்கியபின் "வணங்குகிறேன், உத்தமரே" என்றான். வேறெந்த சொல்லும் எண்ணத்தில் எழவில்லை.

நளன் கைகூப்பியபடி தேரிலிருந்து இறங்கி சௌபர்ணிகரை நோக்கி முகமனும் வாழ்த்தும் உரைத்தான். அவர் அவனை மும்முறை வணங்கி "நிஷதத்தின் அரசரையும் இளவரசரையும் மணம்சூழ் முற்றத்திற்கு வரவேற்கிறோம்" என்றார். நளன் தன் உடைவாளை எடுத்து புஷ்கரனிடம் நீட்ட புஷ்கரன் திரும்பி "இதை நான் இடையில் அணியவேண்டுமா, கையில் உருவிப் பற்றிக்கொள்ள வேண்டுமா, மூத்தவரே?" என்றான். "இடையில் அணிந்துகொள்க! எனது வலப்பக்கமாக நின்றிரு. இனி நீ எச்சொல்லும் உரைக்க வேண்டியதில்லை" என்று தாழ்ந்த குரலில் நளன் சொன்னான்.

புஷ்கரன் விழிகளை சுழலவிட்ட பிறகு "மற்ற அரசர்களின் அணுக்கர்கள் வாளை உருவி கையில் பற்றியிருக்கிறார்கள்" என்றான். "ஆம், சிலர் அப்படி செய்கிறார்கள்" என்றான் நளன். "நானும் வாளை உருவிக்கொள்கிறேனே?" என்றான் புஷ்கரன். "அவர்கள் அரசகுடி அணுக்கர்கள் அல்ல" என்றபின் நளன் முன்னால் நடந்தான். புஷ்கரன் ஓரிரு எட்டு நடந்தபின் ஓடிவந்து சேர்ந்துகொண்டு "நம் அமைச்சரும் பிறரும் உடனில்லையா?" என்றான். "அவர்கள் பெருங்குடிகளின் நிரையிலிருப்பார்கள். நாம் செல்லப்போவது அரசநிரைக்கு" என்றான். "அரசநிரை கிழக்கு வாயிலில் அல்லவா?" என்றான் புஷ்கரன். நளன் மறுமொழி சொல்லவில்லை.

புஷ்கரன் நீள்மூச்சுடன் தன்னை எளிதாக்கிக்கொண்டு நாற்புறமும் விழிகளை ஓட்டியபடி நடந்து வந்தான். நடுவே

தரையிலிருந்த சிறுகுழியில் கால்புரள நிலை தடுமாறினான். அனிச்சையாக நளன் திரும்பிப்பார்க்க பதறி எட்டு வைத்து அருகே சென்று இணையாக நடந்தான். அப்பால் பெருமுற்றம் முழுக்க ஷத்ரியர்களின் தேர்களே நின்றிருந்தன என்று கொடிகளிலிருந்து தெரிந்தது. அவர்களின் அமைச்சர்கள் பட்டு மஞ்சலிலும் அரசகுடிப் பெண்டிர் வெள்ளிப் பல்லக்குகளிலும் வந்திருந்தனர். படைத்தலைவர்கள் வந்த புரவிகள் பளபளக்கும் இரும்புக் கவசங்கள் அணிந்திருந்தன. கவசம் பூண்ட காவலர்கள் அப்புரவிகளின் அருகே நிரை வகுத்து நின்றிருந்தனர். உலோகக் கவசங்களின் நீரொளி நெளிவுகளில் வண்ணங்கள் கலங்கின.

தெற்கு வாயில் அருகே இரு நிரையாக நின்றிருந்த அணிக்காவலர் தலைவணங்கி அவர்களை அணுகிய சுதமகுலத்து சிற்றரசனையும் அவனது இரு அணுக்கர்களையும் அழைத்துச் சென்றனர். அவர்களுக்குப்பின் நளன் சென்றதும் மீண்டும் அதே முகமனும் வாழ்த்தும் உரைக்கப்பட்டது. சிற்றமைச்சர்கள் வணங்கி உள்ளே அனுப்ப நிமித்திகன் "நிஷதர் நளன் அவைபுகுகிறார்" என்று உரக்க அறிவித்தான். புஷ்கரன் "என்ன இது?" என சொல்ல வாயெடுக்க நளன் விழிகளால் அவனை தடுத்தான். அவைக்கு உள்ளே நின்றிருந்த அறிவிப்பு நிமித்திகன் அதை ஏற்று முழங்குவதை புஷ்கரன் கேட்டான்.

அவையில் நிமித்திகர்களின் அறிவிப்பொலியும் அரசர்கள் அவைபுகும் சங்கொலியும் அங்கு நிறைந்திருந்தவர்களின் பேச்சொலியும் சேர்ந்த கார்வை நிறைந்திருந்தது. அந்த ஒலி அவன் அடிவயிற்றை கலங்கச் செய்தது. அது அச்சமா பதற்றமா எதிர்பார்ப்பா என்று அவனுக்குத் தெரியவில்லை. ஆனால் பிறிது எத்தருணமும் தன்னை அத்தனை

கிளர்த்தியதில்லை என்று தோன்றியது. இது வரலாற்றுத் தருணம். அவனை உலகம் அறியப்போகும் இடம் இந்தக் களம். நளன் தாழ்ந்த குரலில் “நேர்நோக்கி நட” என்றான். “ஆம்” என்றபின் அவன் இறுக்கமாக உடலை அமைத்து நோக்கை நேராக திருப்பியபடி நடந்தான். இருவரும் மணத்தன்னேற்பு வளாகத்திற்குள் நுழைந்தனர்.

நீள்வட்ட வடிவில் அமைக்கப்பட்டிருந்த அந்த அரங்கிற்குமேல் பந்தலில்லாமல் வான் திறந்திருந்தது. கிழக்கு வாயிலினூடாக வந்து ஷத்ரியர்கள் அவையமர்ந்து தங்கள் இருக்கை நிரைகளை நிறைத்துக்கொண்டிருந்தார்கள். மேற்கு வாயிலினூடாக விதர்ப்ப அரச குடியினரும் பிறரும் வந்துகொண்டிருப்பதை அறிவிப்புகள் காட்டின. வடக்கு வாயிலினூடாக அந்தணர்கள் உள்ளே தங்கள் குருமரபின் கொடிகளுடன் அறிவிப்பு பெற்று உள்ளே வந்தனர். தெற்கு வாயிலினூடாக வந்த பெருவணிகர்களும் குடித்தலைவர்களும் அவைக்குள் இட்டுச்சென்று அமரவைக்கப்பட்டனர். அப்பாலிருந்த நான்கு சிறுவாயில்கள் வழியாகவும் விதர்ப்பத்தின் குடிகள் பெருகிவந்து சூழ்ந்து முகங்களாக நிறைந்துகொண்டிருந்தார்கள். அவர்கள் ஒருவரை ஒருவர் நெருக்கி உரத்த குரலில் ஒருவரையொருவர் அழைத்தும் பேசியும் சிரித்துக்கொண்டிருந்த ஓசையும் வெளியே திரண்டிருந்த வீரர்களின் ஆணைகளும் சகட ஒலிகளும் கலந்த முழக்கம் தன் தோலை முரசுப்பரப்பென அதிரச் செய்வதை புஷ்கரன் உணர்ந்தான்.

நளனை இட்டுச்சென்ற அவைநிலை சிற்றமைச்சர் “தங்கள் பீடம்” என்று ஒன்றை சுட்டிக்காட்டினர். திகைப்புடன் திரும்பிப் பார்த்த புஷ்கரனை நோக்கி விழியமர்த்தியபின் நளன் அந்த

எளிய பீடத்தில் சென்று அமர்ந்துகொண்டான். அதில் அவனுடைய கொடியோ குடிச்சின்னமோ இருக்கவில்லை. அவனுக்கு வலப்பக்கமும் இடப்பக்கமும் இரு மச்சர் குடித்தலைவர்கள் அமர்ந்திருந்தனர். எளிய தோலாடை அணிந்து தலைப்பாகைக்குமேல் பறவை இறகுகளைச் சூடி தங்கள் குலஇலச்சினை கொண்ட வளைகோல்களுடன் அமர்ந்திருந்தவர்கள் அரைக்கணம் நளனை திரும்பி நோக்கியபின் விழிகளை விலக்கிக்கொண்டனர்.

நளன் அருகே சிறுபீடத்தில் அமர்ந்த புஷ்கரன் “இது அரசர்களுக்கான நிரை அல்ல, மூத்தவரே” என்றான். “ஆம்” என்றான் நளன். “அப்படியென்றால் தாங்கள் எழுந்து இளவரசியை கோர முடியாது” என்றான் புஷ்கரன். நளன் “பார்ப்போம்” என்றான். “இளவரசி மாலையுடன் அவை நுழைகையில் எதிரில் நிரைநின்றிருக்கும் மணவேட்பர்களில் ஒருவராக தாங்கள் இருக்கமுடியாது” என்றான் புஷ்கரன் மீண்டும். விழிகளைத் தாழ்த்தி மீண்டும் “பார்ப்போம்” என்று நளன் சொன்னான். புஷ்கரன் பெருமூச்சுவிட்டு தன் உடலை தளர்த்தியபடி அவையை நோக்கத்தொடங்கினான்.

❀புஷ்கரனால் அவைநிகழ்வுகளை முழுமையாக நோக்கமுடியவில்லை. ஏதேனும் ஒரு நிகழ்வை அவன் கூர்ந்து நோக்கத் தொடங்கியதுமே அதில் முழுமையாக ஈடுபட்டு நெடுநேரம் கழித்து பிறிதொரு அசைவாலோ ஒலியாலோ விழித்துக்கொண்டு அங்கு தன் நோக்கை திருப்பினான். அங்கிருந்தவர்களிலிருந்து நோக்கை விலக்க அவனுக்கு பிறிதொன்று தேவைப்பட்டது. தான் எதையும் நோக்கவில்லை என்ற எண்ணமே பதற்றத்தை அளிக்க அவன் மேலும் மேலும் அலைபாய்ந்தான். வேதியர் குழு கூடிநின்று எதையோ

பேசிக்கொண்டதை, அனல்கொடைக்கான ஏற்பாடுகளைச் செய்வதில் அவர்கள் அடைந்த பல வகையான குழப்பங்களை நோக்கியவன் விதர்ப்பத்தின் அமைச்சர்கள் கூட்டமாக எங்கோ ஓடுவதை நோக்கி திரும்பினான். அயோத்தியின் அரசன் மாளவனை வணங்கியதும் எழுந்த ஓசை அத்திசை நோக்கி அவனை இழுத்தது.

நிமித்திகன் மேடையேறி வெள்ளிக்கோலை தூக்க அமைதி பரவியபோது அவன் கலிங்கனை நோக்கிக்கொண்டிருந்தான். கலிங்கனின் மணிமுடியில் இருந்த செந்நிற வைரம் அனலென மின்னிக்கொண்டிருந்தது. நெல்லிக்காய் அளவிருக்கும் அது என அவன் எண்ணிக்கொண்டிருக்கையில் நிமித்திகனின் அறிவிப்பு ஒலித்தது. அவன் நிமித்திகனின் மிகப் பெரிய தலைப்பாகையையும் தொண்டைமுழை அசைவதையும் நோக்கிக்கொண்டிருக்கையில் பேரிகைகள் முழங்க கொம்புகள் பிளிறி இணைந்தன. அவன் இசைச்சூதர்களை நோக்கினான். ஒவ்வொருவரும் அரசர்களைப்போல ஆடையணிந்திருந்தனர். நகைகள் அசைவுகளில் ஒளிவிட்டன. "என்ன ஒரு வெறி! பித்தர்களைப்போல. ஆனால் அனைத்து ஓசையும் இணைந்து ஒன்றென ஒலிக்கின்றது" என எண்ணி அவன் விழிதிருப்பியபோது விதர்ப்பன் தன் அரசியுடன் அரியணையில் அமர்ந்துவிட்டதை கண்டான்.

பீமகர் களைத்திருந்தார். கண்களைச் சுற்றி மெல்லிய தசைவளையங்கள் தொங்கின. உதடுகள் உள்மடிந்திருந்தன. அரசியும் துயிலில் இருப்பவள்போல் தோன்றினாள். அமைச்சர்கள் பதற்றத்துடன் அரசரிடம் ஏதோ கேட்டபின் திரும்பி ஓடினர். படைத்தலைவன் வந்து குனிந்து ஏதோ சொன்னான். இன்னொருவனிடம் அவன் ஆணையிட அவன்

விரைந்து அகன்றான். பீமகர் ஓர் அமைச்சரை அழைத்து ஏதோ கடிந்துகொண்டார். அரசி அடிக்கடி தன் மேலாடையை சீரமைத்தாள். ஒவ்வொன்றும் பிழையாகவும் குழப்பங்களுடனும் நடந்துகொண்டிருப்பதை காணமுடிந்தது. "எதையும் முழுமையாக திட்டமிடவில்லை இவர்கள்... வெளியே நகரம் இடிந்து விழுந்ததுபோல கலைந்தே கிடக்கும்" என அவன் எண்ணினான். குனிந்து நளனிடம் "ஆணையிட எவருமில்லை என எண்ணுகிறேன்" என்றான். "ஆணையிட பலர் இருக்கிறார்கள்" என்றான் நளன்.

அமைச்சர் மேடையேறி அரச நிகழ்வுகளை அறிவித்தார். அது தொலைவிலிருந்த அவர்களுக்கு கேட்கவில்லை. குரல்பெருக்கவைக்க எந்த அமைப்பும் செய்யப்படவில்லை. காலைவெயில் ஏறிக்கொண்டிருந்தது. இப்படியே போனால் இவர்கள் எரியும் உச்சிவெயிலில்தான் மணத்தன்னேற்பை நிகழ்த்துவார்கள் என்று புஷ்கரன் எண்ணிக்கொண்டான். விதர்ப்பத்தின் எட்டு தொல்குடித் தலைவர்கள் அரசரை வாழ்த்தி தங்கள் கோல்களை அவர் காலடியில் தாழ்த்தினர். அந்தணர் எழுவர் அரசரை கங்கை நீர் தெளித்து தூய்மை செய்ததும் பொற்தாலத்தில் கொண்டுவரப்பட்ட விதர்ப்பத்தின் மணிமுடியை குடித்தலைவர்கள் எடுத்து அரசருக்கு அணிவித்தனர். முரசுகளும் கொம்புகளும் ஓசையிட்டு சூழ விதர்ப்ப குடிகளின் வாழ்த்துக்கள் அலையலையாக ஒலித்தன. அந்தணர் அரசரை வேதம் ஓதி அரிமலரிட்டு வாழ்த்தினர்.

தொடக்கத்தில் இருந்த ஆர்வம் விலக புஷ்கரன் சலிப்புடன் சாய்ந்து அமர்ந்தான். பீமகரும் அரசியும் ஏழு முனிவர்களின் கால்களை கழுவிய நீரை தலைமேல் தெளித்துக்கொண்டனர். வைரங்களும் பொன்மணியும் கலந்த அரிசியை ஏழு

அந்தணர்களுக்கு அளித்து வாழ்த்து கொண்டனர். ஏழு புலவர்களுக்கு பொன் எழுத்தாணியும் ஏழு சூதர்களுக்கு பொன்வளையலும் பரிசளித்தனர். ஒவ்வொரு செயலுக்கும் முரசுகள் நடைமாற்றி ஓசையிட வாழ்த்தொலிகள் எழுந்தன. சடங்குகள் முடிந்து அனைவரும் சென்று அமர்ந்ததும் நிமித்திகர் மணநிகழ்வு நடைபெறப்போவதை அறிவித்தார். மூத்த அமைச்சர் எழுந்து மணத்தன்னேற்பின் நெறிகள் தொன்மையான மகாவாருணஸ்மிருதியின் அடிப்படையில் அமைந்திருப்பதாக அறிவித்து அவற்றை விளக்கினார்.

முதுசூதன் ஒருவன் மேடைமேல் ஏறி வணங்கி ஓங்கிய மணிக்குரலில் விதர்ப்ப இளவரசி தமயந்தியின் சிறப்புகளை சொல்லத்தொடங்கினான். எல்லா பாடல்களிலும் தேவியரைப்பற்றி சொல்லப்படும் சொற்களாகவே அவை ஒலித்தன. விதர்ப்ப அரசகுடியின் பதினெட்டு மூதன்னையர் நிரையின் பெயர்களைச் சொல்லி தமயந்தியின் பெயர் ஏழாவது மூதன்னையாகிய தமையின் நீட்சி என்றும் அம்மூதன்னையரின் வடிவென எழுந்த அவளை மணப்பவரே விதர்ப்பத்தின் மணிமுடிக்குரிய மைந்தனின் தந்தை என்றும் அறிவித்தான். புஷ்கரன் திரும்பி நளனை பார்த்தான். உறைந்த முகத்துடன் அவன் நோக்கி அமர்ந்திருந்தான். முதுசூதன் தமயந்தி அவைபுகவிருப்பதை அறிவித்ததும் அவை பெருங்குரலில் வாழ்த்தொலி எழுப்பியது.

அனைவரும் ஒரு திசையை நோக்குவதை தன்னருகே அமர்ந்திருந்தவர்களின் விழிகளிலிருந்தே புஷ்கரன் உணர்ந்தான். அவன் அத்திசை நோக்கி விழிசெலுத்துவதற்குள் தமயந்தி அவைக்குள் நுழைந்துவிட்டிருந்தாள். விதர்ப்பத்தின் கொடியுடன் மார்புக் கவசமும் தலையில் இறகுமுடியும்

அணிந்த சேடி முன்னால் வர, மங்கலத் தாலங்களுடன் ஏழு அணிப்பரத்தையர் தொடர்ந்துவந்தனர். அவையில் நின்றிருந்த இசைச்சூதர் மங்கல இசையெழுப்பினர். தமயந்தியை பார்ப்பதற்காக அனைத்துத் தலைகளும் வெவ்வேறு வகையில் அசைவதை நோக்கி புஷ்கரனின் விழிகள் திரும்பின. அவனருகே அமர்ந்திருந்த மச்சர்கள் அவர்களின் மொழியில் ஏதோ சொன்னார்கள். அது அவன் மொழிபோல ஒலித்து, சொற்கள் வேறாக இருந்தன. அவன் மீண்டும் திரும்பியபோது தமயந்தியை கண்டான். வாழ்த்தொலிகளே காற்றாகச் சென்று அவள் அணிந்திருந்த இளநீலப் பட்டாடையை அலையடிக்கச் செய்வதாகத் தோன்றியது.

அவள் அவன் அதுவரை பார்த்திருந்த பெண்கள் அனைவரிலிருந்தும் முற்றிலும் மாறுபட்டிருப்பதாக முதல் எண்ணம் எழுந்தது. அது என்ன என்று அவன் எண்ணத்தை ஓட்டி சலித்து மீண்டும் அவளையே நோக்கினான். கருஞ்சிலைபோல பளபளக்கும் தோல்நிறம். தோழியர் அனைவரைவிடவும் அவள் உயரமாக இருந்தாள். அவள் திரும்பியபோது கன்னவளைவிலும் கழுத்திலும் ஒளி மின்னியது. தோள்கள். அவன் நெஞ்சு படபடத்தது. திரும்பி நளனை நோக்கிவிட்டு சில கணங்கள் கழித்து மெல்ல விழி திருப்பி அவளை மீண்டும் நோக்கினான். அவள் தோள்கள் மாமல்லர்களுக்குரியவை போல அகன்று பணைத்திருந்தன. இடைக்குக் கீழும் அவ்வாறு விரிந்திருக்கவில்லை என்றால் அவளிடம் பெண்மையே இல்லை என்று ஆகிவிட்டிருக்கும். அவள் மிக நேராக நடந்தாள். அவன் தன் நெஞ்சோசையை அனைத்து ஒலிகளுக்கும்மேல் கேட்டான். அதுதான் அவளை தனித்துக் காட்டுகிறது. இடை ஒசிகிறது. பெரிய தொடைகள்

ஆடைக்குள் எழுந்தமைகின்றன. ஆனால் அலையற்ற நீரில் செல்லும் அன்னம்போல அவள் நடந்தாள்.

அவன் அவையிலமர்ந்திருந்த அரசர்களை பார்த்தான். அனைவர் விழிகளும் அவளை நோக்கி நிலைகொண்டிருந்தன. மகதன் மெல்ல அசைந்து மீசையை இடக்கையால் நீவினான். அவர்கள் ஒருவரை ஒருவர் ஓரவிழியால் நோக்கிக்கொண்டிருந்தனர் போலும். அவ்வசைவால் கலைந்து கலிங்கனும் அசைந்தமர்ந்தான். வங்கன் தன் குழலை அள்ளி தோளுக்குப்பின் சரித்தான். கலிங்கன் மெல்ல சரிந்து தன்னருகே அமர்ந்திருந்த மைந்தனிடம் ஏதோ சொன்னான். அவன் தலையசைத்தான். தமயந்தி அவைநடுவே வந்து நின்று மூன்று திசைகளையும் நோக்கி கைகூப்பி வணங்கினாள். அமைச்சர் அவளருகே சென்று அவள் செய்யவேண்டியவற்றை சொல்ல அவள் பீமகரையும் அரசியையும் வணங்கிவிட்டு தனக்கான பீடத்தில் அமர்ந்தாள்.

வைதிகர்கள் மேடையேறிச் சென்று வேதம் ஓதி கங்கை நீர் தெளித்து அவளை தூய்மைப்படுத்தினர். குடிமூத்தவர் அரிமலரிட்டு வாழ்த்த அவள் அவர்களை வணங்கி மலர்கொண்டாள். மூதன்னையர் அவளுக்கு நெற்றியில் குங்குமம் இட்டு வாழ்த்துரைத்தபோது சேடியர் குரவையிட்டனர். புஷ்கரன் அதற்குள் சலித்துவிட்டிருந்தான். நிஷதத்திலும் அன்றாடம் அவன் அரசநிகழ்ச்சிகளில் கலந்துகொள்வதுண்டு. குலக்குழு வழிபாட்டுச் சடங்குகள் நீளமானவை. ஆனால் அவை இதைப்போல சலிப்பை அளிப்பதில்லை. அவற்றுடன் உணர்வுபூர்வமான ஈடுபாடில்லை என்றால் இப்படி சலிக்குமோ? ஆனால் இச்சடங்குகள் அனைத்தும் ஏறத்தாழ ஒன்றுபோலிருக்கின்றன. அனைவரும்

ஏதோ ஒரு காலகட்டத்தில் ஒன்றாக இருந்திருக்கவேண்டும் என அவன் எண்ணிக்கொண்டான்.

குடிமூத்தார் மூவர் கொண்டுவந்து நீட்டிய தாலத்தில் இருந்து செம்மலர்மாலை ஒன்றை அரசரும் அரசியும் சேர்ந்து கைதொட்டு எடுத்து தமயந்தியின் கையில் அளித்தனர். புஷ்கரன் அவள் அந்த மாலையை கையிலேந்தியபடி இரு படிகளில் கால் வைத்து இறங்குவது வரை ஒன்றையும் எண்ணவில்லை. ஒரு கணத்தில் அதுதான் மணமாலை என உணர்ந்ததும் அவன் உடல் மெய்ப்பு கொண்டது. நெஞ்சு உறைந்து கல்லென்றாகி அதற்குள் சொற்களும் மூச்சும் சிக்கிக்கொண்டன. நளன் அவனை அழைப்பதை சில கணங்களுக்குப் பின்னர்தான் அவன் அறிந்தான். செவிகுனித்து "ஆணையிடுங்கள், மூத்தவரே" என்றான். நளன் சொன்னது அவனுக்கு கேட்கவில்லை. "என்ன?" என்றான்.

"நான் எழுந்து வெளியேறும் வாயிலருகே சென்று நிற்பேன். இளவரசி இந்த இடத்துக்கு வந்ததும் நீ என் உடைவாளுடன் சென்று அவையில் நில். இது நிஷதமன்னனின் உடைவாள் என்று சொல். அவள் என் உடைவாளுக்கு அந்த மாலையை சூட்டுவாள். நீ உடைவாளை உருவிக்கொண்டு அவையில் நின்று தொடர்பவர்களை செறு. உன்னுடன் வஜ்ரகீர்த்தியும் சேர்ந்துகொள்வான். அவைக்குள் காவலர் வாள் உருவமாட்டார்கள். ஆகவே அரசர்களை மட்டும் நீ சிறுபொழுது எதிர்கொண்டால் போதும். இளவரசி ஓடி என்னருகே வருவாள். நான் அவளை அழைத்துக்கொண்டு வெளியே செல்வேன். முற்றத்தில் நாகசேனர் என் புரவிகளுடன் காத்திருப்பார்" என்றான் நளன். அவன் தன் நெஞ்சிடிப்பை முதன்மையாக கேட்டுக்கொண்டிருந்தான். "நான் அவையில் நின்றிருக்க

வேண்டுமா?” என்றான். “ஆம், என்ன நிகழ்கிறதென்பதை அரசர்கள் உணர்வதற்குள் நான் அவை நீங்கிவிடவேண்டும். என் புரவியை சென்றடைந்துவிட்டால் எவரும் என்னை பிடிக்கமுடியாது” என்றான் நளன்.

“ஆனால் அரசர்கள் பெருந்திறல் வீரர்கள்… நான் தனியாக எப்படி?” என்றான் புஷ்கரன். “அஞ்சவேண்டியதில்லை. இளைஞர்களை அவர்கள் கொல்லமாட்டார்கள். அவர்களுக்கு அறைகூவல் விட்டவன் நீயும் அல்ல” என்றான் நளன். “அச்சமில்லை” என்றான் புஷ்கரன். “அவர்கள் விரைவில் என்னை வீழ்த்திவிடுவார்கள்” என்று விழிகளை விலக்கியபடி சொன்னான். “எனக்குத் தேவை மிகச் சிறிய பொழுது. முற்றத்தை அடையவேண்டும். சூதர்கள் புரவிகளை கொட்டகைக்கு கொண்டுசெல்லும் குறுக்கு வழி ஒன்றுள்ளது. அதனூடாக நான் இந்நகரின் கூரைகளுக்குமேல் ஏறிவிடுவேன்.”

மூச்சை ஊதி ஊதி விட்டு நெஞ்சிலிருந்த கல்லை கரைக்க முயன்றபடி புஷ்கரன் “ஆனால்…” என்றான். “செல்…” என்றான் நளன். “நீ கோரிய வரலாற்றுத் தருணம் இது.” புஷ்கரன் “ஆம்” என்றான். “அவள் காசிமன்னனை கடந்துவிட்டாள்” என்றான் நளன். புஷ்கரனால் எதையுமே பார்க்கமுடியவில்லை. நோக்கு நிலைக்காமல் அத்தனை காட்சிகளும் ஒற்றை அசைவுப்பரப்பென கலந்த வெளி அவன் முன் நின்றது. “செல்” என்றபின் நளன் எழுந்து நடந்து விலகினான். அத்தனை விழிகளும் தமயந்திமேல் இருந்தமையால் எவரும் அவனை நோக்கவில்லை. தமயந்தி மிக மெல்ல நடந்துவந்தாள். கண்ணுக்குத் தெரியாத ஒழுக்கு ஒன்றில் மிதந்துவரும் அன்னம். நான் இப்போது எழவேண்டும். என் குரல் இத்தனை

பெரிய அவையில் ஓங்கி ஒலிக்கவேண்டும். என் குரலை மகதனும் கலிங்கனும் மாளவனும் கேட்பார்கள்.

ஆனால் அவனால் அசையமுடியவில்லை. கால்கள் குளிர்ந்திருக்க தொடைகள் மட்டும் துள்ளிக்கொண்டிருந்தன. ஏன் எனக்கு இந்தப் பொறுப்பை அளிக்கிறார்? என்னை அவையில் அவர்கள் வெட்டிப்போடக்கூடும். ஆம், அதுதான் நிகழவிருக்கிறது. மகதனின் அணுக்கப்படைகள் மிக அருகே உள்ளன. தேர்ந்த போர்வீரர்கள் அவர்கள். நாலைந்துபேர் பாய்ந்து வந்தால் அவன் என்ன செய்யமுடியும்? ஏன் வஜ்ரகீர்த்தியை அனுப்பியிருக்கக் கூடாது? தமயந்தி மாளவனைக் கடந்தபோது அவையில் வியப்பொலி எழுந்தது. அங்கனையும் வங்கனையும் அவள் கடந்தாள். மாளவனைக் கடந்தபோது கலிங்கமன்னன் சூரியதேவன் புன்னகையுடன் மைந்தன் அர்க்கதேவனிடம் ஏதோ சொல்ல அவன் சிரித்தான். அவள் கலிங்கனையும் கடந்து நடந்தபோது அவர்கள் திகைப்புடன் பீடங்களின் பிடியைப் பற்றியபடி அமர்ந்திருந்தனர். மகதத்தின் வேளக்காரப்படையினர் சொல்லில்லா உவகைக் குரலெழுப்பினர். அவள் மகதனை ஏற்கவிருக்கிறாள் என எண்ணிய மக்களின் குரல்களும் கலைவொலியாக எழுந்தன.

புஷ்கரனால் எழ முடியவில்லை. கையில் இறுகப் பற்றியிருந்த உடைவாளின் பிடி வியர்வையில் வழுக்கியது. எழுந்தால் அதை நழுவவிட்டுவிடுவோம். எழுந்தால் காலூன்ற முடியாமல் விழுந்துவிடவும்கூடும். அவன் விழிகளுக்கு முன் நீருக்குள் தெரிவதுபோல அக்காட்சி நெளிந்தது. அவள் மகதனை கடந்தபோது அவை முழுக்க எழுந்த வியப்போசை பெரிய முழக்கமாக சூழ்ந்தது. அவந்தியின் அரசன் அவள் தன்னை நோக்கி வருகிறாள் என எண்ணி எழுந்தான். அவள்

அவனையும் கடந்துசெல்ல கூர்ஜரன் தன்னை நோக்கியா என வியந்து அருகிருந்த அமைச்சரை நோக்கினான். அத்தருணத்தில் நளன் வலக்கையை தூக்கி “நான் நிஷத அரசனாகிய நளன். இளவரசிக்கு முன் மணம்கோள் சொல்லுடன் நிற்கிறேன்” என்று கூவியபடி அவைக்குச் சென்று சேதிநாட்டரசனுக்கும் காமரூபனுக்கும் நடுவே நின்றான்.

புஷ்கரன் உடல் நடுங்கிக் குறுக கண்களை மூடியபடி தன் பீடத்தில் அமர்ந்திருந்தான். அவன் கையுடன் சேர்த்து உடைவாளும் அதிர்ந்துகொண்டிருந்தது. அவனைச் சூழ்ந்து பலவகையான குரல்கள் ஏதேதோ கூவின. “இளவரசே, கிளம்புக!” என நாகசேனரின் குரல் கேட்டது. அவன் எழுந்து நோக்கியபோது தமயந்தி தன் மணமாலையை நளன் தோளில் அணிவித்துவிட்டிருப்பதை கண்டான். நளன் அவள் வலக்கையை பற்றிக்கொள்ள அவள் நிமிர்ந்த தலையுடன் அவனுக்கு இடமாக நின்றாள். வஜ்ரகீர்த்தி உருவிய வாளுடன் ஓடிவந்து நளன் அருகே நின்றான்.

ஷத்ரிய அரசர்கள் பெரும்பாலானவர்கள் பீடங்களிலிருந்து எழுந்து நின்றனர். ஆனால் மகதனும் கலிங்கனும் மாளவனும் அசையாமல் நோக்கி அமர்ந்திருந்தனர். அவர்கள் ஏதேனும் சொல்லக்கூடும் என பிறர் எதிர்பார்த்தனர். பீமகர் திகைப்புடன் இரு கைகளும் விரிந்து அசைவழிந்து நிற்க திறந்த வாயுடன் அரசமேடையில் எழுந்து நின்றார். அவரது அமைச்சர்களும் அவரைப்போலவே சமைந்துவிட்டிருந்தனர். அரசி பீமகரின் தோளைப்பற்றி உலுக்கி ஏதோ சொன்னாள். நளன் மகதனை நோக்கியபடி தானும் திகைத்து நின்றான்.

மகதன் எழுந்து “நன்று, நான் விதர்ப்பினி ஓர் ஷத்ரியப்பெண் என எண்ணியே மணம்கொள்ள வந்தேன். அவள் உள்ளத்தால்

நிஷாதகுலத்தவள் என அவைமுன் அறிவித்துவிட்டாள். தனக்குரியவனை அவள் அடைந்துள்ளாள். அவளை வாழ்த்துகிறேன்” என்றபின் செல்வோம் என அமைச்சர்களிடம் கைகாட்டியபடி திரும்பினான். அவைநிறைந்திருந்த ஷத்ரியர்கள் வேண்டுமென்றே உரக்க நகைத்தனர். மாளவன் “நிஷாதனே, உன் பெண்ணுடன் ஒருநாள் அரண்மனைக்கு வா. உனக்கு அன்னமும் ஆடையும் பரிசிலாக அளிக்கிறோம்” என்றான்.

நளன் தன் உடைவாளை ஓங்கி தரையில் அறைந்த மணியோசை சிரிப்பொலியை வெட்டி அமைதியை உருவாக்கியது. “நான் அனல்குலத்து ஷத்ரியனாகிய நளன். இந்திரகிரியின் அரசன். இங்குள்ள அத்தனை அரசர்களையும் அறைகூவுகிறேன். ஆண்மையுள்ள எவரும் என்னுடன் போரிட்டு இவளை கைக்கொள்ளலாம்” என்றான். “நிஷாதர்களுடன் ஷத்ரியர் நிகர்நின்று போரிடும் வழக்கமில்லை, மூடா. உன்னை தெரிவுசெய்த இழிமகளை இனி ஷத்ரியர் எவரும் அரசியென ஏற்கப்போவதுமில்லை” என்றான் மாளவன். வங்கன் “ஆம், செல்க! உனக்கு உயிர் பரிசளிக்கப்பட்டுள்ளது” என்றான்.

நளனின் கையிலிருந்த வாள் பாம்பின் நாவென துடிப்பதை புஷ்கரன் கண்டான். அவன் மேலும் ஏதோ சொல்ல வாயெடுக்கையில் பீகமர் “முறைப்படி நீ பெண்கொண்டாய். உன்னை இங்கு எவரும் அறைகூவவும் இல்லை. நீ செல்லலாம்” என்றார். தமயந்தி நளன் கையை பற்றியபடி “செல்வோம்” என்றாள். அவர்கள் இரு பக்கமும் விலகி வழிவிட்ட குடிகள் நடுவே நடந்தனர். உடல் சினத்தால் நடுங்கிக்கொண்டிருக்க நளன் நடந்தான். அவன் கையைப்

பற்றியபடி தமயந்தி தலைதூக்கி அசைவற்ற தோள்களுடன் சென்றாள். வஜ்ரகீர்த்தி உருவிய வாளுடன் தொடர்ந்தான்.

நாகசேனர் புஷ்கரனின் தோளைத் தொட்டு “செல்வோம், இளவரசே” என்றார். “நான்...” என புஷ்கரன் பேசத்தொடங்க “அனைத்தும் எளிதாகவே முடிந்துவிட்டன. பிறகு பேசுவோம்” என்றார் அவர். அவன் கையில் இருந்த வாளை நோக்கினான். அதை வீசிவிட்டுச் செல்லவேண்டும் என எழுந்த எண்ணத்தை அடக்கினான். சூழ்ந்திருந்த விழிகளிலெல்லாம் நகைப்பு இருப்பதாகத் தோன்றியது. ஆனால் அவனை அங்கு எவருக்கும் தெரியாது. அவன் ஆற்றத் தவறியதென்ன என்றும் தெரியாது. அவன் தலைநிமிர்ந்து விழிகளைச் சுழற்றியபடி நடந்தான். ஆனால் முற்றம்வரை செல்வதற்குள் அம்முயற்சியாலேயே களைப்புற்று தோள்தளர்ந்து பெருமூச்சுவிட்டான்.

# நீர்க்கோலம் - 15

### 14. அணிசூடுதல்

❀“நெடுங்காலம் காத்திருந்து அடையப்பட்ட மணவுறவுகள் பெரும்பாலும் நிலைப்பதில்லை” என்று பிங்கலன் சொன்னான். “ஏனென்றால் மானுடர் அறியும் காலமென்பது இழப்புகளின் அறுபடா தொடர். உலகியலில் இழப்புகளைக் கொண்டுதான் பெறுபவை அளவிடப்படுகின்றன. இங்கு ஒருவன் பெறுவது எதுவாக இருப்பினும் அது இழந்தவற்றுக்கு ஈடல்ல. ஏனென்றால் இழந்தவை வளர்கின்றன. பெறுபவை சுருங்குகின்றன.” தருமன் “தவம் என்பது காத்திருப்பது அல்லவா?” என்றார். “ஆம், தவமிருந்து பெறவேண்டியது இவ்வுலகு சாராததாகவே இருக்கவேண்டும். பெருநிலை,

மெய்யறிவு, மீட்பு. இங்கு எய்துவனவற்றை தவமிருந்து அடைந்தவன் ஏமாற்றத்தையே சென்றடைவான்.”

சற்றுநேரம் அவர்கள் தங்கள் எண்ணங்களை தொடர்ந்தவர்களாக தலைகுனிந்து அமர்ந்திருந்தனர். தருமன் மணலில் சிறு குச்சியால் ஏதோ வரைந்து அழித்தபடி இருந்த திரௌபதியை நோக்கினார். அவள் கன்னம் அப்பால் ஓடிய ஓடையின் நீரொளியில் மெல்லிய அலையசைவு கொண்டிருந்தது. இமைசரிந்த விழிகளின் நீர்மை மின்னியது. பிங்கலன் “பன்னிரு ஆண்டுகள் நளன் தமயந்திக்காக தவமிருந்தான் என்கின்றன கதைகள்” என்று தொடர்ந்தான். “தன் பதினைந்தாவது அகவையில் அவன் அவளைப் பற்றி அறிந்தான். இருபத்தேழாம் அகவையில் அவளை மணத்தன்னேற்பில் கைப்பற்றி அழைத்து வந்தான்.”

தமயந்தி நளனைவிட எட்டாண்டு மூத்தவள். பதினெட்டு ஆண்டுகள் அவள் அரசியென ஓர் அரியணையில் அமர்வதற்காக காத்திருந்தாள். பீமகரின் அவையில் அவளே அரசியைப்போல் அமர்ந்து அரசுநடத்தினாள். அவை எண்ணுவதற்கு முன்னரே எண்ணவேண்டிய அனைத்தையும் எண்ணிக் கடந்து முற்றுச்சொல்லுடன் அமர்ந்திருப்பாள் என அமைச்சர் அறிந்திருந்தனர். பாரதவர்ஷத்தின் பெருநிலவிரிவை ஒற்றை விழியசைவால் ஆளும் ஆற்றல்கொண்டவள் என கவிஞர் பாடினர். படைநடத்தவும் புரம்வென்று எரிபரந்தெடுக்க ஆணையிடவும் அவளால் இயலுமென்றனர்.

அவள் பதினெட்டாண்டு அகவை முதிர்ந்து மணநிலை கொண்டபோது அவளுக்கென வரும் மாமன்னர் யார் என்ற பேச்சே விதர்ப்பத்தில் ஓங்கி ஒலித்தது. அதற்கேற்ப வங்கமும் கலிங்கமும் மாளவமும் அவந்தியும் அவளை பெண்கோரின.

மகதம் முன்னெழுந்து வந்தபோது பாரதவர்ஷத்தை ஆளவிருக்கிறாள் என்றே அவைக்கவிஞர் பாடினர். ஆனால் ஒவ்வொரு மணமுயல்வும் பிறிதொன்றுடன் முட்டி அசைவிழந்தது. ஒவ்வொரு ஏமாற்றமும் நகரில் அலரென்றாகி அணைந்து மீண்டும் ஒரு எதிர்பார்ப்பென்றாகியது. என்ன நிகழ்கிறதென்றே எவருக்கும் புரியவில்லை. அரசியல்சூழ்ச்சியா, கோள்கள் கணிப்பை கடந்தாடுகின்றனவா? தெய்வங்களின் சூழ்ச்சியேதானா?

பெருநிலத்தை உரிமைகொண்ட கன்னியை கைத்தலம் பற்ற பேரரசர்கள் அனைவருமே விழைந்தனர் என்பது மெய். அவ்விழைவை கண்டமையாலேயே அவர்களின் அரசியரும் அவ்வரசியரின் குலங்களும் அம்முயற்சியைக் கடந்து எண்ணி வருவதை கணித்து அஞ்சினர். தமயந்தி எவருக்கு அரசியானாலும் அந்தக் கோலும் கொடியும் அவளாலேயே ஏந்தப்படுமென அவர்கள் அறிந்திருந்தனர். அவளை பிறிதொரு மாமுடிமன்னர் கொள்ளலாகாதென்பதில் ஒவ்வொரு மாமன்னரும் கருத்தூன்றினர். அவள்மேல் மாமன்னர்கள் குறி கொண்டிருக்கிறார்கள் என்ற பேச்சால் சிறுமன்னர்கள் ஒதுங்கிக்கொண்டனர்.

காத்திருக்கையில் பெண் பெருகிக்கொண்டே இருக்கிறாள். அவளுக்காக இழந்தவையும் ஆற்றியவையும் அவள் மதிப்பென்றாகின்றன. விழைபவன் அவளுக்காக தன்னை உருமாற்றிக்கொண்டே இருக்கிறான். தான் என பிறந்தவையும் தன்னவை என உணர்ந்தவையும் தன்னிலை என ஆனவையும் ஆன அனைத்தும் அவ்வண்ணம் உருப்பெற்றபின் அவளன்றி அவனுக்கு உலகமென்று ஒன்றில்லை என்றாகிறது. தன் குடிக்குறிகளையும் குலதெய்வத்தையும் அவளுக்காக

மாற்றிக்கொண்ட நளன் பன்னிரு ஆண்டுகள் அவளை அன்றி பிறிதொரு பெண்வடிவை எண்ணியதுமில்லை. அவன் எண்ணங்களும் உணர்வுகளும் மட்டுமல்ல நோக்கும் சொல்லும் அசைவுகளும் கூட அவளுக்காகவே திரண்டிருந்தன.

அவன் பிறிதொன்றிலாதோனாக இருந்தான். அவளுடைய ஓவியத்திரைகளுடன் வாழ்ந்தான். நோக்கப்படுகையில் அழகாகாத பொருளென ஏதுமில்லை புவியில். விழைவுகொள்கையில் அவை பேரழகு கொள்கின்றன. முனிவர்களே, பொருளென இங்கு வந்து சூழ்ந்துள்ளது நாம் என்றுமறியா பிறிதொன்று. அது தன் முழுமையில் தான் நிறைந்து அமர்ந்துள்ளது. விழையும் மானுடன் அதன் தவத்தை தொட்டு எழுப்புகிறான். அது விழித்தெழுந்தால் கணம்தோறும் வளர்ந்து பேருருக்கொண்டு தானே உலகென்றாகி சூழ்ந்துகொள்கிறது. நம்மை ஒக்கலில் வைத்துக்கொள்கிறது. தன் உடலில் ஒரு சிறுநகையென சூடிக்கொள்கிறது.

தமயந்தி தவமிருந்தது மணிமுடிக்காக. சந்திரகுலத்துப் பேரரசி தேவயானியின் நாளில் பிறந்தவள். இந்திராணியின் மண்ணுரு. நினைவறிந்த நாள்முதல் அவள் தன் வலப்பக்கத்தில் ஒரு பேரரசனை உணர்ந்துகொண்டிருந்தாள். அவள் வளருந்தோறும் அவ்வுருவம் மாறிக்கொண்டிருந்தது. முதன்முதலாக கலிங்க இளவரசன் அருணவர்மனின் ஓவியத்தை பார்த்தபோது ‘இவனா?’ என்ற எண்ணமே எழுந்தது. அத்தனை ஷத்ரிய இளவரசர்களையும்போலத்தான் அவனும் இருந்தான். உடைவாளை உறையுடன் ஊன்றியபடி அணிமுடி சூடிய தலையை மிடுக்காகத் திருப்பி. குடிப்பிறப்பின், படைப்பயிற்சியின், செல்வத்தின், இளமையின் நிமிர்வு. நிமிர்வுக்கு அப்பால் அவனிடம் ஒன்றுமில்லை.

அணிகலன்களை சற்றுநேரம் கூர்ந்து நோக்கினால் உருவாகும் விழிவெறுமையை அடைந்தாள்.

பின்னர் அந்த ஓவியத்தை அவள் நோக்கவே இல்லை. ஆனால் அந்த முகத்தை நினைவில் மீண்டும் மீண்டும் எழுப்பிக்கொண்டாள். தன் கற்பனையைத் தொட்டு அதை மீட்டி உயிர்கொடுத்தாள். ஏதோ ஒரு தருணத்தில் அவன் விழிகள் புன்னகை சூடின. “நீ ஒரு ஆண். அரசனென முடிசூடி அமரவேண்டியவன்” என்று அவள் அவனிடம் சொன்னாள். “நீ எனக்கு அளிக்கவிருப்பவற்றால் எனக்குரியவன் ஆகிறாய். முற்றளிக்கையில் நீ நிறைவுகொள்வாய்.”

மறுநாள் அவளிடம் அன்னை கேட்டபோது “ஓர் அரசனை நான் மணமுடித்தாகவேண்டும் என்பது நெறி. அவன் உருவப்பிழையோ குடிக்குறைவோ அற்றவனாக அல்லாமலிருப்பின் வேறென்ன நோக்கவேண்டும்?” என்றாள். அன்னை அவள் சொல்வதை புரிந்துகொள்ளாமல் நோக்க “இவனை ஏற்பதில் எனக்கு மறுப்பில்லை. அரசர்களில் பிறிதொரு இயல்புடையவன் இல்லை” என்றாள். அன்னை சினத்துடன் “அத்தனை கன்னியருக்கும் உரிய ஆணவம்தான் இது. இளமையில் தங்களை விண்ணிறங்கி மண்ணில் நின்றிருக்கும் தேவகன்னியரென எண்ணிக்கொள்கிறார்கள். அத்தனை ஆண்களையும் சுட்டுவிரலால் தட்டி வீசுவார்கள். அவர்கள் மண்ணிறங்க சற்று காலமாகும்” என்றாள்.

அவள் புன்னகையுடன் “நான் தட்டிவீசவில்லை, அன்னையே” என்றபின் எழுந்துகொண்டாள். அன்னை சினம்கொண்டு “அமர்ந்து பேசு… நீ அரசி அல்ல, நீ சொல்வதை சொன்னபின் பேச்சு முடிந்துவிட்டது என எழுந்து செல்ல. நான் அரசி, தெரிந்துகொள்” என்றாள். தமயந்தி மீண்டும் அமர்ந்துகொண்டு

“சரி, அப்படியென்றால் நீங்கள் சொல்லுங்கள்” என்றாள். “என்ன சொல்ல? நீதான் எல்லாவற்றையும் சொல்லிவிட்டாயே” என்றாள் அரசி. “அதைத்தானே நானும் சொன்னேன்” என்றபின் அவள் புன்னகையுடன் எழுந்து நடந்தாள். அரசி “தருக்கி எழுபவர்களை தெய்வங்கள் குனிந்து நோக்குகின்றன. களத்தில் மேலுயர்ந்த தலையே அம்புக்கு இலக்கு” என்றாள். “அரசனின் தலை மேலேதான் நின்றிருக்கவேண்டும், இல்லையேல் அவனால் களத்தை முழுமையாக நோக்கமுடியாது, அன்னையே” என்றபின் அவள் நடந்து சென்றாள்.

அந்த மணப்பேச்சு பாதியில் முறிந்தது. அருணவர்மன் கோசலத்தின் மித்ரையை மணந்து வடகலிங்கத்தின் அரசனாக முடிசூடிக்கொண்டான். அவள் உளம்சோர்ந்திருப்பாள் என எண்ணி அரசி அவளிடம் வந்து “அவன் ஒருபோதும் பேரரசனாக இயலாது. அவன் தந்தை சூரியவர்மனுக்கு நீண்ட வாணாள் என நிமித்திகர் சொல்லியிருக்கிறார்கள்” என்றாள். அவள் சிரித்தபடி “அவனுக்காக நான் எவ்வகையிலும் துயருறவில்லை, அன்னையே. எனக்கு அவனும் பிற முடிமன்னரும் நிகரானவர்களே. மாளவத்தின் அரசனின் செய்தி வந்துள்ளது என்று அமைச்சர் சற்று முன் சொன்னார். அவன் ஓவியத்தை நான் பார்த்தேன். எனக்கு வேறுபாடே தெரியவில்லை” என்றாள்.

அன்னை அவளை சில கணங்கள் கூர்ந்து நோக்கிவிட்டு “சில தருணங்களில் நீ அனைவரையும் எள்ளிநகையாடிக்கொண்டிருக்கிறாய் என்று தோன்றுகிறது” என்றாள். அவள் புன்னகைத்து “நான் நகையாடுவதே இல்லை” என்றாள். அன்னை பெருமூச்சுடன் “இது அரசியல்சூழ்ச்சி. சூரியவர்மனின் பட்டத்தரசி பிரபாவதி சேதிநாட்டவள். அவள்

இளையோன் சந்திரவர்மன் கலிங்கத்திலேயே படைத்தலைவனாக இருக்கிறான். அவர்கள் நம்மை விரும்பவில்லை” என்றாள். “அரசகுடி திருமணங்கள் எல்லாமே அரசுசூழ்தல்கள்தானே?” என்றாள் தமயந்தி. அரசி எண்ணியிராத சீற்றத்துடன் “இது அரசியல் அல்ல. அவள் உன்னை விரும்பவில்லை. நீ ஆணவம் நிறைந்தவள் என அவளுக்கு சொல்லப்பட்டிருக்கிறது” என்றாள். தமயந்தி “அதை நான் பிறந்ததுமே நிமித்திகர் சொல்லிவிட்டார்கள் அல்லவா?” என்றாள். “ஆம், உன் ஆணவமே உனக்கு எதிரி. அனைவரும் அஞ்சுவது அதையே. முள்ளம்பன்றிபோல உன் உடலில் அது சிலிர்த்து நிற்கிறது” என்றபின் ஆடையும் அணியும் ஒலிக்க அரசி திரும்பிச்சென்றாள்.

நாள் செல்லச்செல்ல முதுசெவிலியரின் முகங்களில் அவளைக் கண்டதுமே மெல்லிய கழிவிரக்கம் எழலாயிற்று. சேடிப்பெண்களின் விழிகளுக்குள் ஒரு ஏளனம் ஒளிவிடுவதை அவள் எளிதில் கண்டாள். அரசர் அவ்வப்போது சலிப்புடன் ஓரிரு சொற்கள் சொல்லும்போது திரும்பிப்பாராமலேயே அவையில் அவளைச் சூழ்ந்து அமர்ந்திருக்கும் அத்தனை பெண்களின் முகங்களையும் அவளால் காணமுடிந்தது. அவள் அவர்களை எவ்வகையிலும் பொருட்படுத்தவில்லை. அது அவளுடைய நடிப்பு என அவர்கள் எண்ணினர்.

ஆனால் அவளுக்கு அணுக்கமானவர்கள் அவள் உண்மையிலேயே எதையும் பொருட்டாக எண்ணவில்லை என்று கண்டு வியந்தனர். அவள் ஆணவத்தால் அரணிடப்பட்ட அறியாமையில் வாழ்வதாக பேசிக்கொண்டார்கள். “ஆம், பேரரசிக்குரிய பிறவிகொண்டவள். விழிமலைக்கும் அழகி. ஆனால் மூப்பு அதையெல்லாம் நோக்குவதில்லை. அவள்

கண்களுக்குக் கீழே மென்தசைவளையங்கள் இழுபட்டுள்ளன. முகவாய்க் கோடுகள் அழுத்தமாகின்றன. தாடையின் தசை சற்று தளர்ந்துள்ளது. கழுத்தின் வரிகள் ஆழ்கின்றன. தோளில் பொன்வரிகள் எழுகின்றன. அகவை அவளை இழுத்துச்செல்கிறது. அதை அவள் என்றோ ஒருநாள் தன்னை நோக்கும் ஆண்மகன் ஒருவனின் விழிகளில் உணர்வாள். அன்று உளம் உடைந்து சிறுப்பாள். அதுவரை இந்த ஆணவம் அவளை காக்கட்டும்" என்றாள் முதுசெவிலி ஒருத்தி. அவள் ஒவ்வொரு முறையும் பேரரசர்களால் துறக்கப்படும்போது சேடியர் உள்ளங்களின் ஆழத்திலிருந்து உவகைகொள்ளும் ஒரு பெண் அச்சொற்களைக் கேட்டு முதல்முறையாக அஞ்சினாள். பெண்ணென்று தன்னை உணரும் உடல்கள் அனைத்தும் அஞ்சியாகவேண்டிய ஒழியாத் தெய்வம்.

நிஷாத மன்னன் நளனின் விழைவை அரண்மனை மகளிர் அறிந்தபோது முதலில் திகைப்படைந்தாலும் விரைவிலேயே அது உகந்ததே என்று எண்ணத் தலைப்பட்டமைக்கு அந்த அச்சமும் விளைவான சோர்வுமே அடிப்படையாயின. விதர்ப்பமும் நிஷதமும் இரு அருகமை நாடுகள். அவை ஒரே நிலமாக இணையமுடியும். முதுசெவிலி ஒருத்தி மட்டும் ஆற்றாமையுடன் "பேரரசர்கள் தேடிவந்த கன்னி" என்றாள். "ஆம், ஆனால் அவர்கள் எவரும் அவளுக்காக துணிந்து படைகொண்டு எழவில்லை" என்றாள் இன்னொரு செவிலி. "அதற்கு நம் அரசரும்தான் பொறுப்பு. ஒவ்வொரு முறை ஒரு மன்னர் மணமுடிக்க சித்தமாகும்போதும் இன்னொருவரின் படைநீக்கம் நிகழும். அஞ்சி சொல்லை பின் எடுத்துக்கொள்பவர் இவரே" என்றாள் முதற்செவிலி. "இனி பேச ஏதுமில்லை. நம் இளவரசியின் நிமிர்வை அவர்களால் ஏற்கமுடியாதென்று உறுதியாகிறது. இவளருகே வாளேந்தி

நின்றிருக்கும் ஒருவனையே ஊழ் தேடிக்கொண்டிருந்ததுபோலும். அந்நிஷதன் முப்புரமெரித்தவள் காலடியின் சிம்மம்” என்றாள்.

அப்பேச்சை அவளிடம் இளஞ்சேடி சொன்னபோது அதைத்தான் தானும் எண்ணினோமா என அவள் தனக்குத்தானே கேட்டுக்கொண்டாள். முதல் புறக்கணிப்புக்குப்பின் எப்படி அவன் தன்னுள்ளத்தில் வளர்ந்தான்? தன்னை முழுமையாக அவள்முன் வைத்துவிட்டிருப்பதை அவன் காட்டினான். பிறந்து எழுந்த இடத்திலிருந்து ஒவ்வொன்றாகத் துறந்து அவன் அவளை நோக்கி வந்துகொண்டிருந்தான். அந்த அன்னம் தன் அறைக்குள் வந்த நாளை அவள் நினைவுகூர்ந்தாள். இளம்புன்னகையுடன் அவள் சோலையில் அமர்ந்திருக்கையில் அன்னை அருகே வந்தாள். அவள் எழுந்து தலைவணங்க அருகே கல்பீடத்தில் அமர்ந்தாள். அவள் என்ன சொல்லவந்திருக்கிறாள் என்பதை நன்குணர்த்தியது முகம். தமயந்தி புன்னகை புரிந்தாள்.

“இத்தனை நாள் தெரியாத எதையோ அஞ்சி இந்த மணத்தன்னேற்பை தவிர்த்து வந்தோம். அமைச்சரவையைக் கூட்டி சொல்கேட்டால் ஆளுக்கொன்று சொல்வார்கள். ஷத்ரியர்பகை சூழும் என்ற சொல் உன் தந்தையை நடுங்கச்செய்யும், அனைத்திலிருந்தும் பின்வாங்கிவிடுவார். இன்று ஓர் இடர்ச்சூழலில் பாய்ந்து நெடுநாள் அஞ்சிநின்றதை மிக எளிதாக செய்துகொண்டிருக்கிறோம்” என்றாள் அன்னை. “முதலையை அஞ்சியவனுக்கு நீச்சல் கைவருவதுபோல என்பார்கள்.” தமயந்தி புன்னகை செய்தாள்.

“நாளை மறுநாள் உன் மணத்தன்னேற்பு என அறிந்திருப்பாய். நாம் அஞ்சிய முடிமன்னர் அனைவரும் வருகிறார்கள் என

செய்தி வந்துள்ளது. நீ எவரை வேண்டுமென்றாலும் தெரிவுசெய்யலாம்” என்றாள் அன்னை. “ஆம்” என்றாள் தமயந்தி. “உன் தந்தையின் விருப்பம் நீ கலிங்கனை தெரிவுசெய்யவேண்டும் என்பது. அர்க்கதேவன் அனைத்து வகையிலும் உனக்கு பொருத்தமானவன். கலிங்கம் நம் அணுக்கநாடு. அதன் துறைமுகங்களுடன் நாம் கொண்டுள்ள காடுகளும் இணைந்தால் மாபெரும் நாடு ஒன்று உருவாகக்கூடும் என்கிறார்கள் அமைச்சர்கள்.” தமயந்தி புன்னகை மட்டும் செய்தாள்.

எப்போதும்போல அப்புன்னகை அன்னையை சினம்கொள்ளச் செய்தது. “நான் உன் புன்னகையின் பொருளை அறிவேன். நீ அந்த நிஷதனை நினைத்திருக்கக் கூடும். அவனுக்கு அவைக்கு அழைப்பே இல்லை. அவன் வந்தாலும் அவைநிற்கவைக்கும் எண்ணம் அரசருக்கு இல்லை. அவன் எவ்வகையிலும் உனக்குரியவன் அல்ல. ஷத்ரியப் பெண்ணாகப் பிறந்தாய். நிஷாதனின் மைந்தரைப் பெற்றால் நம் குடிக்கு இழிவு.” தமயந்தி சீண்டும் சிரிப்புடன் “அவர்கள் அனல்குலத்து ஷத்ரியர். பிருகுவின் வழிவந்த பார்க்கவ ராமனால் முடியளிக்கப்பட்டவர்கள்” என்றாள்.

“அதெல்லாம் அவர்கள் சொல்லிக்கொள்வது… அப்படிப் பார்த்தால் அத்தனை கிராதர்களும் தங்களை அரசர்கள் என்றே சொல்லிக்கொள்கிறார்கள்” என்றாள் அன்னை. “இருபத்தேழு தலைமுறைகளுக்கு முன்பு நாமும் கிராதர்களாகவே இருந்தோம்” என்றாள் தமயந்தி. “எவர் சொன்னது? அதெல்லாம் வெறும் கதை” என்று அன்னை சினந்து கூவினாள். “அப்படியே இருந்தாலும் நம் முன்னோர் ராஜசூயங்களும் அஸ்வமேதங்களும் ஆற்றி அடைந்த இடம் இது… அத்தனை

ஷத்ரியர்களும் வேர்பிடித்துப்போனால் கிராதர்களும் அசுரர்களும்தான்.” தமயந்தி “நிஷதர்களும் அவற்றை எல்லாம் ஆற்றலாமே?” என்றாள். “அப்படி என்றால் நீ அவ்வெண்ணத்தையே கொண்டிருக்கிறாய் அல்லவா? நிஷாதனை மணக்கவிருக்கிறாயா?” என்றாள் அரசி. “நான் எம்முடிவையும் எடுக்கவில்லை. பேச்சுக்காக சொன்னேன்” என்றாள் தமயந்தி.

அன்னை தணிந்து “ஆம், நான் உன்னை அறிவேன். அருணவர்மனை நீ மணந்திருந்தால் என்ன ஆகியிருக்கும்? பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்னரே கைம்பெண் ஆகியிருப்பாய். அவன் பீதர்களுடனான போரில் கொல்லப்பட்டான். இப்போது மணிமுடிக்குரியவனாக இருப்பவன் அர்க்கதேவன். ஆற்றல்மிக்கவன்… அவனை மணமுடித்தால் அனைத்தும் ஒழுங்குக்கு வந்துவிடும். நீ உன் நலம் நாடி எம்முடிவையும் எடுக்கக் கூடாது. நாட்டுக்காகவே ஷத்ரியர் வாழவேண்டுமென்பது ஸ்மிருதிகளின் கூற்று” என்றாள். அவள் புன்னகைத்தாள்.

அவர்கள் தனித்திருந்த முதல்நாள் நிலவிரவில் நளன் அவளிடம் அதைத்தான் கேட்டான். “நீ அர்க்கதேவனை தேர்ந்தெடுப்பாய் என்றே அனைவரும் எண்ணியிருந்தனர். எவ்வகையில் எண்ணி நோக்கினாலும் அதுவே அரசியலாடலில் சிறந்த முடிவு.” அவள் கைகளைப்பற்றி தன் கைகளுக்குள் வைத்தபடி “நீ எளிய பெண்ணல்ல, ஒவ்வொரு சொல்லிலும் அரசியலாடுபவள் என்றார்கள்” என்றான். அவள் புன்னகையுடன் “நான் ஏன் அம்முடிவை எடுத்தேன் என நீங்கள் எண்ணுகிறீர்கள்?” என்றாள். “என் காதலின்பொருட்டு என்று

எண்ணவே நான் விரும்புகிறேன்” என்றான் நளன். “ஆம், அதற்காகவே” என்றாள் தமயந்தி.

“நீ இதை எனக்காக சொல்கிறாய். இதுதான் அரசியல்சொல்” என்று அவன் சொன்னான். “பிறகு என்ன சொல்லவேண்டும்? நிஷதநாட்டை நான் அடைந்ததன் நலன்களை சொன்னால் நிறைவடைவீர்களா?” என்றாள். “விளையாடாதே” என்றான் நளன். “நான் என்ன சொல்லவேண்டுமென எதிர்பார்க்கிறீர்கள்?” என்றாள். “இது என்ன வினா?” என்று அவன் சினந்தான். அவள் அவன் பின்னிழுத்துக்கொண்ட கைகளைப் பற்றியபடி “நான் சொல்லவா?” என்றாள். “சொல்” என்னும்போதே அவன் முகம் சிவந்துவிட்டது. “நீங்கள் நெடுங்காலம் காத்திருந்து என்னை அடைந்தீர்கள். உங்களை முழுக்க எனக்கு உகந்தவராக ஆக்கிக் கொண்டிருக்கிறீர்கள். அந்த முழுப் படையலுக்கு மறுதுலாத்தட்டில் நான் எதை வைப்பேன் என்று அறிய விழைகிறீர்கள்.”

மூச்சுத்திணற “இதென்ன வணிகமா?” என்றான் நளன். “வணிகம் என்றால் என்ன? மானுட உறவுகளை பொருளில் நடித்துப் பார்ப்பதுதானே?” என்றாள் தமயந்தி. “கூரிய சொற்கள் எனக்கு சலிப்பை அளிக்கின்றன. நாம் இங்கு அரசியலாடவா வந்துள்ளோம்?” என்றான் நளன். “நீங்கள் கேட்டதனால் சொல்கிறேன்” என்றாள் தமயந்தி. “கேட்க விருப்பமில்லை என்றால் சொல்லவில்லை” என அவள் புன்னகைக்க அவன் சினம் கொண்டு “நான் என்ன உன் சொல்லை அஞ்சுகிறேன் என நினைக்கிறாயா? சொல்” என்றான். “நான் மறுதுலாத்தட்டில் என்னை முற்றிலும் படைக்கவேண்டும் என எதிர்பார்க்கிறீர்கள்.”

“இல்லை” என்று அவன் சொன்னான். “ஆம், அதை நீங்கள் உள்ளாழத்தில் கொண்டுள்ள நம்பிக்கையின்மை கரையும்படி

கண்ணீருடன் சொல்லவேண்டுமென விழைகிறீர்கள். இப்போது நான் என்னை குழைத்து உங்கள் காலடியில் சாந்தெனப் பூசினால் கரைந்து விழிநீர் உகுப்பீர்கள். என்மேல் பேரன்பு கொள்வீர்கள். எனக்கென அனைத்தையும் அள்ளி வைப்பீர்கள். ஆனால் சின்னாட்களில் மீண்டும் அந்த ஐயம் எழும். மீண்டும் இந்த நாடகம் தேவைப்படும். இது நிகழ்ந்துகொண்டே இருக்கவேண்டும், வாழ்நாள் முழுக்க." நளன் அவளை கூர்ந்து நோக்கிக்கொண்டிருந்தான். அவள் அவனை நோக்கி கனிவுடன் புன்னகை செய்து "ஆனால் நான் உங்களுக்காக தவம் செய்யவில்லை" என்றாள்.

"ஆம்" என்றதுமே சோர்வு வந்து அவனை பற்றிக்கொண்டது. தலைகுனிந்து "நீ விழைந்தது என்னை அல்ல" என்றான். "இல்லை என நான் மறுக்கவேண்டுமென உங்கள் உள்ளம் விரும்புகிறது. அதை நான் பொய்யாக சொல்லப்போவதில்லை. நான் ஒருபோதும் ஆணுக்காக விழைந்ததில்லை. எளிய மானுடனுக்காக தவம் செய்வேன் என எண்ணவும் இயலவில்லை." நளன் சீற்றத்துடன் "ஏன், எளிய மானுடப்பெண் அல்லவா நீ?" என்றான். "ஆம், மானுடப்பெண். ஆகவே என்னுள் எழும் நிறைவின்மைக்கு இன்னொரு மானுடன் விடையாக இயலாது" என்றாள் தமயந்தி.

"உனக்கு என்னதான் வேண்டும்?" என்று அவன் சீற்றத்துடன் கேட்டான். "தெரியவில்லை" என்றாள். "எனக்கே தெரியாத ஒன்றை முழு உளவிசையுடன் கணமொழியாது இப்பெருவெளியிடம் வேண்டிக்கொண்டிருக்கிறேன்." அதற்குமேல் அவனுக்கு சொல்ல ஏதுமிருக்கவில்லை. கைகள் இரண்டும் இயல்பாகவே விலகிவிட்டிருந்தன. மீண்டும் நீண்டு அவை ஒன்றை ஒன்று தொட நெடுந்தொலைவு பயணம்

செய்யவேண்டுமென்றும் முற்றிலும் அயலான ஒன்றென அதிர்வுடனும் ஒவ்வாமையுடனும்தான் அத்தொடுகை நிகழுமென்றும் தோன்றியது,

“அன்னத்தை ஏன் அனுப்பினீர்கள்?” என்று அவள் கேட்டாள். அவன் முகம் அக்கணமே மலர்ந்தது. “உன்னையும் அன்னத்தையும் என்னால் பிரித்துப்பார்க்க முடியவில்லை. உன்னுள் உள்ள மிக மென்மையான ஒன்றின் வடிவம் அது என்று தோன்றியது. இங்கு நானும் அன்னங்களை வளர்க்கலானேன். அன்னத்தூவியை மிக மெல்ல தொட்டு நீவும்போது உன்னை மிக அணுக்கமாக உணர்கிறேன் என்று தோன்றியது” என்றான். முகம் சிவக்க மூச்சுதிணற குரல் கம்ம “நான் அன்றிரவு தனித்திருந்தேன். அதுநாள் வரை எண்ணி எண்ணிக் குவித்தவை எல்லாம் அன்றிரவு கூர்கொண்டுவிட்டன. அன்றிரவு முழுக்க அந்த அன்னத்திடம் பேசினேன்” என்றான்.

“பேசினீர்களா?” என்று அவள் கன்னங்களில் குழிகள் விழ சிரித்தாள். “மெய்யாகவே பேசினேன். விழிநீர் உகுத்தேன். பின்னர்…” என்று திணறி சொல்லை அடக்கியபின் கைகளை விரித்தான். “சொல்லுங்கள்” என்றாள். “என் விழிநீரை கைகளில் தொட்டு எடுத்து அதற்கு நீட்டினேன். அது அலகுநீட்டி அத்துளியை பருகியது.” அவள் வளையல்கள் ஒலிக்க கைதட்டி சிரித்துவிட்டாள். “சிரிக்கத்தக்கதுதான். ஆனால் அன்று எனக்கு அத்தருணம்…” என நளன் திணறினான். “என்ன செய்தீர்கள்?” என்றாள்.

“அழுதுகொண்டே இருந்தேன். காலையில் என் நெஞ்சு ஒழிந்துகிடந்தது. பல ஆண்டுகாலமாக சேர்ந்த சொற்கள் ஒன்றுகூட எஞ்சவில்லை. அத்தனை வெறுமையையும்

விடுதலையையும் நான் அறிந்ததே இல்லை. என்னருகே என்னிலிருந்து வெளியே வந்து நின்ற என் உணர்வுகள் என அது நின்றிருந்தது. ஒற்றனை அழைத்து அந்த அன்னத்தை உன் அறைக்குள் விட்டுவிடவேண்டும் என ஆணையிட்டேன்." அவள் "ஓ" என்றாள். "நீ அதைக் கண்டதுமே அறிந்துகொண்டாய் என ஒற்றன் சொன்னான். அதை நெஞ்சுடன் தழுவிக்கொண்டாய் என்றான்."

"ஆம்" என்றாள். அவன் தாழ்ந்த குரலில் "ஏன்?" என்றான். "அது நீங்கள் அல்லவா?" என்றாள். "ஆம்" என்றான். அவர்களின் கைகள் இயல்பாக நீண்டு தழுவிக்கொண்டிருந்தன. "என்னை முதன்முதலாக பார்த்தபோது என்ன நினைத்தாய்?" என்று கேட்டான். அவள் புன்னகை செய்தாள். "ஏன்?" என்றான். "உலகின் மிகத் தொன்மையான வினா போலும் இது." அவன் "இருக்கலாம், சொல்" என்றான். "மிக இளையவர் என்று" என்றாள். "ஏன்?" என்று அவன் கேட்டான். அவள் அவ்வாறு சொன்னது ஏன் தன் உள்ளத்தை கிளர்ந்தெழச் செய்கிறது என்று வியந்துகொண்டான். "நான் மூத்தவள் என்பதனால்தான்" என்றாள். அவன் சற்று சினந்து "சொல்" என்றான். "ஓவியங்களில் தெரிவது முகங்களின் ஒரு காட்சி மட்டுமே" என அவள் சொன்னாள். "பன்னிரண்டு ஆண்டுகாலம் நீங்கள் ஒரே உணர்வில் நின்றுவிட்டீர்கள். அகவை மிக அகன்று நின்றுள்ளது."

அவன் உணர்வுமீதூர "ஆம், நான் பிறிதெதையும் எண்ணாமல் பன்னிரண்டு ஆண்டுகள் வாழ்ந்திருக்கிறேன். இந்நகரையும் என் குடியையும் என் உணர்வுகளுக்கேற்ப இழுத்துவந்தேன்" என்றான். "அரசனை குடிகள் தொடர்வது வழக்கம்தானே?" என்றாள். அச்சொல்லின் பொருளின்மையை உணர்ந்து அவள்

விழிகளை அவன் ஏறிட்டுநோக்கியபோது அவை காமம் கொண்டிருப்பதை கண்டான். அவன் உடல் மெல்ல அதிரத் தொடங்கியது. விழிகளை விலக்கிக்கொண்டு “நான் பிறிதெதையும் நினைக்கவில்லை” என பொருளற்ற சொற்றொடர் ஒன்றை தானும் சொன்னான். அவள் கைகள் அவன் தோளில் படர உடல் அவன் மேல் ஒட்டியது. “உம்” என அவள் முனகியது அவன் காதில் ஒலித்தது.

அன்று முயக்கத்தினூடாக அவள் அவனிடம் “அன்னம் போலிருக்கிறீர்கள்” என்றாள். “நானா?” என்றான் அவன். “ஆம், அது நூறு வளைவுகளின் ஆயிரம் நெகிழ்வுகளின் உடல்கொண்டது.” அவன் “ஆம்” என்றான். “அன்று அறையில் உங்கள் அன்னத்தைப் பார்த்ததும் அதைத்தான் எண்ணிக்கொண்டேன்” என்றாள் தமயந்தி.

# நீர்க்கோலம் - 16

## 15. கைக்கொளல்

✿ஆணும் பெண்ணும் கொள்ளும் உறவு நூற்றுக்கணக்கான சிறு பிணக்குகளினூடாக நாளும் நாளுமென துளித்துளியாக வரையறுக்கப்படுகிறது. முதல்நாள் பின்னிரவில் கைபிணைத்து உடலொட்டிக் கிடக்கையில் தமயந்தி நளனிடம் “நமது அரசில் சுங்கம் எப்படி கணக்கிடப்படுகிறது?” என்று கேட்டாள். அவன் அவள் தோளில் முகம்புதைத்து உடலோய்ந்து கிடந்தான். உதடுகள் அழுந்தியிருந்தமையால் “ம்?” என்று குழறினான். அவள் மீண்டும் கேட்டாள். “என்ன?” என்றான். அவள் அவன் முகத்தைப் பிடித்து விலக்கி “நம் அரசில் சுங்கம் எப்படி கணக்கிடப்படுகிறது?” என்றாள்.

“நெடுங்காலமாக இங்கே நிலவும் முறைமைப்படிதான்” என்றான் நளன். “அது என்ன என்றுதான் கேட்கிறேன். பெரும்பாலான தொல்குடிகளின் ஊர்களில் அவர்களின் ஊருக்குள் நுழையும் வணிகர்களுக்கு அவர்களின் ஊர்திகளைப்பொறுத்து சுங்கம் கொள்ளப்படுகிறது.” அவன் “ஆம், இங்கும் அப்படித்தான். தலைச்சுமைக்கு அரைப்பணம். அத்திரிகளுக்கும் கழுதைகளுக்கும் ஒருபணம். வண்டிகளுக்கு இரண்டு” என்றான். “அதைத்தான் அறிய விரும்பினேன். அந்தப் பொதிகளில் என்ன பொருள் இருந்தாலும் பொருட்டல்ல அல்லவா?” என்றாள். “பொதிகளை அவிழ்த்துப் பார்க்கமுடியுமா?” என்றான் நளன். “முடியும். பொருள்களின் மதிப்பை ஒட்டி சுங்கம் வகுக்கப்படுமென்றால் வணிகர்கள் அவர்களே பொருட்களை அவிழ்த்துக்காட்டும்படி கட்டிக்கொள்வார்கள். ஏனென்றால் உள்ளே வரும் பொருட்களில் பெரும்பகுதி உப்பு போன்ற மதிப்புக்குறைவான பொருட்களாகவே இருக்கும். எஞ்சிய பொருட்களை மட்டும் நாம் கண்காணித்தால்போதும்” என்றாள்.

குரல் கூர்மைகொள்ள “சுங்கநிகுதியை இரண்டாகப் பிரித்து மறுபாதியை விற்பனை செய்யுமிடத்தில் கடைக்காணமாக பெறவேண்டும். இரண்டு கணக்குகளும் நிகராக அமையும் என்றால் சுங்கம் கட்டப்படாத பொருளை அங்காடியில் விற்கமுடியாது” என்றாள் தமயந்தி. நளன் சலிப்புடன் “ஆம்” என்றபின் மல்லாந்து படுத்தான். அவனால் அவள் சொல்லும் எதிலும் உளம்நிலைக்க முடியவில்லை. அதுவரை அவனைச் சூழ்ந்திருந்த அவள் உடலின் மென்மையும் மணமும் அவள் பேசப்பேச பிறிதொன்றாவதை உணர்ந்தான்.

அவள் அவனருகே ஒருக்களித்து தன் முலைகள் அவன் தோளில் படிய அவனை அணைத்து “வருபொருளுக்கு நிகுதி சுமத்துவது பிழையான வழக்கம். அந்தப் பணம் அப்பொருளை வாங்கும் நம்மிடமே மிகைவிலையென கொள்ளப்படும். செல்பொருளுக்கு நிகுதி சுமத்துவதே உகந்தது. அது நாம் விற்கும்பொருள்மேல் மிகைவிலையென்றாகி நம் மதிப்பை கூட்டும். வருபொருளுக்கு நிகுதி இல்லையேல் மேலும் பொருள் இங்கே வரும். இங்கு விற்கப்படும் பொருளின் விலைக்கு இணையாக நம்மிடம் பொருள்கொண்டு சென்றாலொழிய வணிகர்களுக்கு வரவுப்பொருள் மிகாது. எனவே நம் பொருட்கள் அவர்களால் மேலும் கொள்ளப்படும்” என்றாள்.

அவன் அவள் மீதிருந்த கையை விலக்கியபடி “இதையெல்லாம் சொல்வது எளிது. செய்வது கடினம். அத்தனை வணிகர்களையும் வழிகளில் செறுத்து நிறுத்தி சுங்கம் கொள்ளுமளவுக்கு நம்மிடம் ஊழியர்கள் இல்லை. கோட்டைவாயிலில் மட்டுமே இன்று சுங்கம் கொள்ளப்படுகிறது” என்றான். “அதுவும் பிழை. கோட்டைவாயிலில் வண்டிகளின் நீள்நிரையே உருவாகும். சுங்கம் கொள்வதற்கு வாயிற்காவலர்களை அமைத்தல் தவறு. அவர்கள் பொருளின் மதிப்பறியாதவர்கள். பொறுமையிழப்பார்கள். கடுஞ்சொல் எடுப்பார்கள். அதைவிட ஒரு கட்டத்தில் எதையும் நோக்காமல் உள்ளே அனுப்பவும் தொடங்கிவிடுவார்கள். சென்று நோக்குங்கள், பெருவணிகர்கள் நம் வாயிற்காவலர் பொறுமையிழந்த பின்னரே உள்ளே வரத்தொடங்குவர்” என்றாள் தமயந்தி.

நளன் தலையை வெறுமனே ஆட்டினான். இருளில் அவன் முகத்திலெழுந்த எரிச்சல்குறிகளை அவள் காணவில்லை. “நிகுதிகொள்ள எப்போதும் வணிகர்களையே பொறுப்பிலமர்த்தவேண்டும். ஆனால் அவர்கள் மாறாப் பொருளுக்கு பணியாற்ற மாட்டார்கள். பணியாற்றும்தோறும் வருபொருள் வளருமென்றால்தான் செயலூக்கம் கொள்வார்கள். நிகுதிகோளில் அவர்களுக்கு நூறிலிரண்டு பங்கு என்று அறிவிப்போம். நிகுதி பலமடங்கு பெருகுவதை காண்பீர்கள்.” நளன் ஒன்றும் சொல்லாமல் கைகளை மார்பில் கட்டியபடி இருளை நோக்கிக் கிடந்தான்.

அவன் மார்பை தன் விரல்களால் நீவி மென்மயிர்ப்பரப்பை சுழற்றியபடி “நீங்கள் எண்ணுவதைவிட கூடுதலாக இங்கே வணிகம் நிகழ்கிறது. நகருக்குள் நான் நுழைந்ததுமே அதைத்தான் நோக்கினேன்” என்றாள். நளன் “கடைகளில் விரிந்துள்ள பொருட்களை நானும் நோக்குவதுண்டு” என்றான். “இன்னமும் இங்கே வெளிப்படையாக நிகுதி அறிவிக்கப்படவில்லை. ஆகவே அவர்கள் பொருட்களை கடைபரப்பவில்லை. ஆனால் வணிகர்கள் எக்குலத்தவர் என்று நோக்குங்கள். முதற்குலத்து வணிகர் பெரும்பொருள் இல்லையேல் இங்கு வரமாட்டார்கள்.”

நளன் ஒருகணத்தில் பற்றிக்கொண்ட சினத்துடன் “நீ என்ன இந்நகரின் கணக்கராகவா வந்தாய்?” என்றான். உணர்வுமாறுபாடில்லாமல் “கணக்கறியாதவர் நாடாளமுடியாது” என்றாள் அவள். “கணக்கு நோக்க இங்கு அமைச்சர்கள் இருக்கிறார்கள்” என்றான் நளன். “இல்லை, அவர்கள் நிஷதகுலத்தவர். பாரதவர்ஷத்தில் எங்கும்

தொல்மலைக்குடிகள் வணிகத்தில் சிறந்ததாக வரலாறில்லை” என்றாள்.

நளன் எழுந்து அமர்ந்து “என்ன சொல்ல வருகிறாய்? கணக்கறியாத மூடர், காட்டுமானுடர், அதைத்தானே?” என்றான். “நான் அப்படி சொல்லவில்லை. ஆனால் இங்கு இன்றிருக்கும் நிகுதிமுறை மலைச்சிறுகுடியினருக்குரியது என்றேன்.” நளன் உரக்க “ஆம், மலைச்சிறுகுடியினரே. என் அன்னையர் கல்லணிகளை அணிபவர். என் தந்தையர் காட்டுமலர்களை தலையிலணிபவர். நாங்கள் மீன்வேட்டும் காட்டில் அலைந்தும் வாழ்பவர்… நான் மறுக்கவில்லை. நீ மணந்திருப்பது கான்மகனை. முடிசூடி வந்திருப்பது காட்டுக்குலமொன்றின் அரசியாக…” என்றான்.

அவள் சற்றும் சினம்கொள்ளாமல் “ஆம், அதை அறிவேன். ஆனால் நீங்கள் பரசுராமரால் அனல்குலத்து ஷத்ரியர் என்றானீர்கள் என அறிந்திருந்தேன்” என்றாள் தமயந்தி. “ஏன், ஐயமிருக்கிறதா?” என்றான் நளன். “இல்லை. ஷத்ரியர்களாக ஆனீர்கள். ஆகவே ஷத்ரியர்களின் அனைத்து வழிகளையும் கைகொள்ளுங்கள் என்கிறேன். நிகுதிகொள்வதே ஷத்ரியனை ஆற்றல்மிக்கவனாக ஆக்குகிறது” என்றாள்.

மேற்கொண்டு பேசமுடியாமல் நளன் உடல்நடுங்கினான். எழுந்து தன் மிதியடியை போட்டுக்கொண்டு வெளியே செல்லப்போனான். அவள் அவன் கையை எட்டிப்பற்றி “என்ன சினம்?” என்றாள். “உன் நோக்கில் நாங்கள் எவர் என இப்போது தெரிகிறது” என்றான் நளன். “ஏன் சற்றுமுன் தெரியவில்லையா?” என்றாள் அவள். அக்குரலில் இருந்த காமம் அவன் உளநிலையை மாற்றியது. அவன் உடல் தளர்வதை கையே வெளிக்காட்ட அவள் அவனை பற்றி

இழுத்து அருகே மஞ்சத்தில் விழச்செய்தாள். “என்ன சினம் இது? சிறுவனைப்போல?” என்றாள்.

“உன் கைகள் மல்லர்களுக்குரியவை” என்றான் அவன். “நான் கதை பயின்றவள்.” அவன் அவள் தோள்களை தன் முகத்தால் வருடியபடி “கற்சிலைபோல” என்றான். “நீங்கள் இதை விரும்பவில்லையோ?” என்றாள். “ம்?” என்றான் நளன். “விரும்பவில்லையா?” என செவியில் கேட்டாள். “இதைத்தான் விரும்பினேன்” என்றான் நளன். அவள் சிரிப்பு அவன் தலைக்குள் என ஒலித்தது.

அவன் காமத்தின் இயல்பை அவள் முதல்முறையிலேயே உணர்ந்துகொண்டிருந்தாள். தயங்கியபடி ஓரத்து ஓட்டத்தில் கால்நனைத்து கூசி நகைத்து மெல்ல இறங்கி மையப்பெருக்கில் பாய்ந்து மூழ்கித் திளைத்து மகிழ்பவன். அவனை அவள் சிறுமகவென தன் முலைகளின்மேல் சூடிக்கொண்டாள். இடைமேல் ஏந்தினாள். கைகளில் ஊசலாட்டினாள். தன் சுழிப்பிலும் பெருக்கிலும் அலைகளிலும் அமிழ்த்தி வைத்திருந்தாள். பிறிதொன்றையும் அவன் வேண்டவில்லை என்பதை மெல்ல அறிந்துகொண்டாள்.

முதற்புலரியில் அவள் எழுந்து குழல்முடியும் ஓசைகேட்டு அவன் விழித்துக்கொண்டான். “என்ன இப்போதேவா?” என்றான். “கருக்கல் முரசு ஒலிக்கிறது” என்றாள். “அது காவலர் இடம் மாறுவதற்காக. காதலர்களுக்கல்ல” என்றான். “இன்று நான் முதல்முறையாக அவையமரவிருக்கிறேன். குடித்தலைவர்களும் பெருவணிகர்களும் வருகிறார்கள். அவர்களனைவரையும் நான் சற்றேனும் முன்னரே அறிந்திருக்கவேண்டும். ஆகவே அமைச்சர்களையும்

ஒற்றர்களையும் என்னை வந்து நோக்கும்படி சொன்னேன்” என்றாள் தமயந்தி.

“அதை மெல்ல செய்யலாம். முதல்நாள் சில எளிய சடங்குகளுடன் முடித்துவிடலாம்” என்றான் நளன். “நான் எதையும் ஒத்திப்போடுவதில்லை” என்றாள் தமயந்தி. “நான் ஒத்திப்போடுவதுண்டு” என நளன் சிறுசீற்றம் தெரிய சொன்னான். “அரசர்கள் கடமைகளால் கட்டப்பட்டவர்கள், நான் அரசி” என்றாள் தமயந்தி. “நீ சொல்லும் ஒவ்வொரு சொல்லும் என்னை சிறுமை செய்கிறது” என்று கூவியபடி எழுந்து அமர்ந்தான் நளன். “நான் என் உளமுணர்ந்ததை சொல்கையில் அதை சிறுமை என்று உணர்கிறீர்கள் என்றால் பிழை என்னுடையதல்ல” என்றாள். “பிழை என்னுடையதா?” என்றான் நளன் சினத்துடன் எழுந்துகொண்டு. “அவ்வாறு நீங்கள் உணரக்கூடும் என நினைக்கிறேன்” என்றாள் தமயந்தி.

அவர்கள் விழிநோக்கி ஒரு கணம் நின்றனர். அவள் விழிகளில் சினம் இல்லை, சிறிய சிரிப்பு மட்டும்தான் இருந்தது. விழிதிருப்பி “நான் வெற்றுச்சடங்குகளுக்கு என்னை அளித்ததில்லை. அவைநிகழ்வுகள் மாறா ஒழுங்குடன் தலைமுறைகளாக நிகழ்பவை” என அவன் சொன்னான். “நீங்கள் இளையவர். வீரர். உங்கள் விளையாட்டரங்கில் மகிழ்ந்திருங்கள். உங்கள் இளமையில் ஒரு பகுதியை எனக்கு அளியுங்கள்” என்றாள். அக்குரலில் அவனை சிலிர்க்கவைக்கும் அணுக்கம் இருந்தது.

அவன் திரும்பி அவளை நோக்கி புன்னகைத்து “அதற்குத்தான் இங்கே இரு என்றேன்” என்றான். அவள் உதடுகளை மடித்து சிரித்தபடி “ஆனால் அதற்கு பொழுதிருக்கிறது. அப்போது...” என்றபின் அவன் காதைப்பிடித்து மெல்ல ஆட்டி “அதுவரை

நல்ல குழந்தையாக இருக்கவேண்டும் என்ன?” என்றாள். அவன் “போடி” என்றான். அவள் புன்னகையுடன் வெளியே சென்றாள்.

முதல்நாளிலேயே அவையினர் கண்டுகொண்டனர், நிஷதநாட்டை ஆளப்போகிறவர் எவர் என. தமயந்தி நகர்நுழைந்தபோதே அவர்களின் பெண்டிர் அதை அறிந்துவிட்டிருந்தார்கள். நிஷதபுரியின் பட்டத்துயானையாகிய அங்காரகனின் மத்தகத்தில் அமைந்த பொன்பூசப்பட்ட அம்பாரிமேல் வலக்கையில் வெண்தாமரை மலரும் இடக்கையில் பொன்னாலான வாளும் ஏந்தி அவள் அமர்ந்திருந்தாள். தலையில் நளன் அவளுக்காக முன்னரே சமைத்து கருவூலத்தில் வைத்திருந்த மூன்றடுக்கு மணிமுடி அசைவுகளில் அருமணிகள் ஒளிவிட அமைந்திருந்தது. உடலெங்கும் மின்னிய அணிகளும் பொன்னுருகி சுழன்றுவழிந்ததுபோன்ற பட்டாடையுமாக அவள் விண்ணிலிருந்து இன்னமும் மண்ணுக்கு வராதவள் போலிருந்தாள்.

“இந்திராணியின் மண்வடிவம்!” என்றனர் மூதன்னையர். “தேவயானியின் விழித்திறம் கொண்டவள்!” என்றனர் நிமித்திகர். “உருமாற்றி திருமகளாக எழுந்த கொற்றவை!” என்றனர் சூதர். அவளை ஏந்திவந்த யானை கோட்டைக்குள் நுழைந்ததும் அதன் மணம் பெற்ற பிடியானைகள் இரண்டு கொட்டிலில் நின்று பிளிறின. தொடர்ந்து நகரமே ஒரு பிடி என மாறி பேரோசை எழுப்பியது. நகர்த்தெருக்களினூடாக அவள் அமர்ந்திருந்த அம்பாரிமேடை ஊசலாடியபடி சென்றபோது அரிமலர் மழை பொழிந்தது. வாழ்த்தொலிகள் அமையும்தோறும் மேலும் பொங்கின.

அமைச்சர்கள் இருவர் தாலத்தில் கொண்டுவந்த அரசமகுடத்தை குலமூத்தார் இருவர் எடுத்து அவள் தலையில் சூட்டினர். குலமூத்தார் ஒருவர் அளித்த செங்கோலை பெற்றுக்கொண்டு அவள் அரியணையில் அமர்ந்ததும் வைதிகர் கங்கைநீர் தெளித்து வேதம் ஓதி அவளை வாழ்த்தினர். அவை குரவையும் வாழ்த்தொலியுமாக மலர்தூவியது. ஒவ்வொரு சடங்கிலும் அவள் புன்னகை மாறா முகத்துடன் ஈடுபட்டாள். கருங்கல்லில் வடித்த சிலைமுகம் என தெரிந்தாள். அவை நிகழ்வுகளை அமைச்சர் அறிவித்ததும் அவள் ஒவ்வொரு குடித்தலைவரையும் பெயர்சொல்லி அழைத்து முறைமைச் சொல்லுடனும் உண்மையான வணக்கத்துடனும் செய்திகளை கேட்டறிந்தாள்.

தாங்கள் சொல்வன அனைத்தும் அவளுக்கு முன்னரே தெரிந்திருந்தது என்னும் உளமயக்கை அவர்கள் அடைந்தார்கள். ஒவ்வொன்றையும் மிக விரைவாக சிறு அலகுகளாகப் பிரித்து அதன் மிக எளிய வடிவை சென்றடைந்தாள். அங்கிருந்தே தீர்வுகளை அடைந்து சுருக்கமான சொற்றொடர்களில் அதை முன்வைத்தாள். ஒவ்வொரு முறையும் குடித்தலைவர்களை நற்சொற்களில் பாராட்டினாள். அந்தப் பாராட்டு மிகையாகுமென்றால் அவள் அவர்களின் செய்கைகளை மறுஅமைப்பு செய்யவிருக்கிறாள் என்றே பொருள் என அவர்கள் புரிந்துகொண்டார்கள்.

தீர்க்ககுலத்தலைவர் சாமர் “எங்கள் குடிகள் மலையடுக்குகளுக்கு அப்பால் சிற்றூர்களில் சிதறி வாழ்பவர்கள், அரசி. அவர்களுக்கு இந்திரபுரியின் காவல் என ஏதும் அளிக்கப்படவில்லை. ஆகவே அவர்களிடம் நாம் நிகுதி கொள்வதும் அறமல்ல” என்றார். “நிகுதி என்பது அரசன்

அளிக்கும் கோல்காவலுக்கான ஊதியம் என்கின்றன நூல்கள்.” தமயந்தி புன்னகையுடன் “ஆம், ஆனால் அவர்கள் நம் குடிகள் என தங்களை சொல்லிக்கொள்கிறார்கள். அச்சொல்லே அவர்களுக்கான காப்பென்றாகிறது. அவர்களின் குடிப்பூசல்களில் நாம் நீதி வழங்குகிறோம்” என்றாள். “குடித்தலைவரே, தங்கள் சொல் கூர்மையுடையது. ஆனால் நூல்நெறிகளின்படி அரசன் கொள்ளும் வரி என்பது அவன் அளிக்கும் நீதியின்பொருட்டே.”

முதல்நாளிலேயே நிகுதிமுறையில் மாறுதல் வேண்டுமென்பதை அவள் அவையில் முன்வைத்தாள். குடித்தலைவர்கள் எழுந்து அது எவ்வகையிலும் உகந்ததல்ல என்று கூவினர். “நம் தொல்குடியினரே இங்கே கோதையின் பெருக்கில் செல்லும் படகுகளில் நிகுதியும் வாரமும் பெற்றுவந்திருக்கிறார்கள். அரசி, இங்குள்ள அத்தனை வணிகர்களும் என்றேனும் இங்கு வந்துசேர்ந்தவர்களே. அவர்களிடம் வரிகொள்ளும் பொறுப்பை அளிப்பதென்பது எங்கள் குலத்திற்கு இழிவென்றே கருதப்படும்” என்றார் மச்சர்குலத்தலைவர் விகிர்தர்.

“அவர்கள் நம் ஏவலர்கள். துலாகொள்ளும் உரிமையை மட்டும் அவர்களுக்கு அளிப்போம்” என்றாள் தமயந்தி. “அவர்களுக்கு காவல்நிற்க எங்கள் குடிகள் செல்லவேண்டுமா என்ன?” என்றார் விகிர்தர். “என்ன செய்யலாம்? அவர்களுக்கே வேல்கொள்ளும் உரிமையையும் அளித்துவிடலாமா?” என்றாள் தமயந்தி. அவர் “அதெப்படி?” என திகைக்க “விகிர்தரே, தங்கள் சொற்களை வணங்குகிறேன். பொன்னோ துலாவோ அல்ல வேலும் வாளுமே மெய்யான அரசு. அது என்றும் அனல்குலத்து ஷத்ரியர்களான நம் குடிகளிடம் மட்டுமே இருக்கும். வாளும்

வேலும் நம்மிடமிருக்கையில் அவர்களிடமுள்ள துலா என்பதும் இவர்களிடமுள்ள மேழி என்பதும் வேழத்தின் மத்தகத்திலமர்ந்து விளையாடும் சிறுபுட்களைப்போல. அவை வேழத்தில் அமர்ந்து ஊரவில்லை, வேழத்திற்கு அவை பணிவிடை செய்கின்றன" என்றாள்.

அக்கணமே அந்தணர் உள்ளத்தை உணர்ந்து அவர்களை நோக்கி திரும்பி "அந்தணர் அந்த வேழத்தின் மத்தகம் சூடும் பொன்னாலான அம்பாரி. அதிலமர்ந்துள்ளது அறத்தின் தெய்வம்" என்றாள். "ஆம், அரசியின் சொல் மெய்மைகொண்டது" என்றார் மூத்த அந்தணரான பிரபர். அவையினர் ஒருவரோடொருவர் பேசிக்கொண்ட ஓசையால் கூடம் முழங்கியது. "நாம் மன்றுகூடி முடிவெடுத்தபின் அவைமுன் இதை பேசியிருக்கலாம், அரசி" என்றார் அமைச்சர். தமயந்தி புன்னகை செய்து "இல்லை, அவையினர் தங்கள் எண்ணங்களனைத்தையும் சொல்லி முடிக்கட்டும். இம்முடிவை நாம் எடுத்ததாக அவர்கள் எண்ணலாகாது, அவர்கள் எடுத்ததாகவே இருக்கவேண்டும். ஏனென்றால் நாளும் நிகழவேண்டிய ஒரு செயல் நிகுதிகொள்ளல்" என்றாள்.

அவள் அவை நீங்கியபோது மூத்த குடியினர் அனைவரும் எழுந்து கைகூப்பி நின்றனர். அவள் விலகியதுமே மலர்ந்த முகத்துடன் "ஆள்வதென்பது என்ன என்று இன்று அறிந்தோம். அது ஆயிரமிதழ் தாமரைமேல் திருமகள் என அமர்ந்திருப்பது மட்டுமே" என்றார் சகரகுலத்தலைவரான பிஞ்ஞுகர். "புன்னகையை படைக்கலமாக ஏந்தியவர். நம் அன்னை ஒருத்தி அமர்ந்து ஆள்வதைப்போலவே உணர்ந்தோம்" என்றார் சூக்தகுலத்தலைவர் முக்தர்.

வணிகர்கள் மட்டும் ஒருவரை ஒருவர் நோக்கியபடி எண்ணம்சூழ்ந்து நடந்தனர். பெருவணிகரான குபேரர் "ஒட்டுமொத்தமாக நோக்கினால் நாம் நிகுதி பெருக்கவேண்டியிருக்கும்" என்றார். மூத்த வணிகரான ரத்னர் "ஆம். அரசு வலுக்கொள்ளும்தோறும் நிகுதி வீங்குமென்பது வணிகநெறி. ஆனால் வலுக்கொள்ளும் அரசு வணிகத்தையும் பெருக்கும்" என்றார். "முதலில் இது நமக்கு எதிரானதே. ஆனால் நீள்காலத்தில் நலம்பயப்பது. இன்று நாம் கரந்துசெய்யும் வணிகத்தை கரம் அளித்து திறந்து ஆற்றப்போகிறோம். கரந்து செய்வதற்கு ஓர் எல்லை உள்ளது. இனி அதை நாம் கடக்கலாம்" என்றார். அவர்கள் அவரைச்சூழ்ந்து நடந்து சென்றார்கள்.

"அரசிக்கு நாம் அளிக்கும் நிகுதிச்செல்வம் படைக்கலமென்றாக வேண்டும். அவர் கலிங்கத்தை வென்று அதன் துறைமுகங்களை கைப்பற்றினார் என்றால் நம் கருவூலங்கள் நிறைந்து வழியும்" என்றார் ரத்னர். "கலிங்கத்தையா?" என வணிகர் கூவினர். "ஐயமே வேண்டியதில்லை. அரசி கலிங்கத்தை வெல்வார். வெல்லவேண்டுமென நாம் அவரிடம் சொல்வோம். வஞ்சத்தால் போரிடுவதல்ல அரசரின் வழி. பொருள்நோக்கில் படையெடுப்பதே அவர்களுக்குரியது. அரசி அறியாதது அல்ல அது" என்றார் ரத்னர்.

✿அந்தியில் அரசரும் அரசியும் அமரும் பேரவை கூடுவதற்கு முன்பாக அமைச்சர் மூவர் வந்து தமயந்தியை சந்தித்தனர். அவள் ஓய்வுக்குப்பின் நீராடி நீண்ட குழலை தோள்களில் விரித்திட்டு வெண்ணிற பட்டாடையை போர்த்திக்கொண்டிருந்தாள். நெற்றியிலும் வகிடிலும் குங்குமம் அணிந்திருந்தாள். அமைச்சர்கள் அவளை அக்கோலத்தில்

கண்டதும் சொல்மறந்தனர். “அமர்க!” என்றதும் கனவிலென அமர்ந்தனர். நாகசேனர் “குருதிசூடிய கொற்றவை போல...” என்று எண்ணிக்கொண்டார்.

முகமன்களை உரைத்ததும் கருணாகரர் தணிந்த குரலில் “அரசி அறியாதது அல்ல. இக்குடியின் முதற்தெய்வமென்றிருந்தது கலி. தங்களின்பொருட்டு இந்நகரை அரசர் மாற்றியமைத்தார். இதன் குன்றின்மேல் இந்திரனின் பெருஞ்சிலை எழுந்தது. கலி தென்றிசைச் சோலைக்குள் சென்றமைந்தது. அரசனைத் தொடர்வதே குடிகளின் வழி. ஈராண்டுகளுக்குள்ளாகவே இந்நகரில் கலிவழிபாடு மறைந்தது. இந்திரனுக்குரிய விழவுகளை அரசே பெருஞ்செலவில் முன்னெடுத்தமையால் இளையோர் உள்ளமெல்லாம் அங்கே சென்றமைந்தது” என்றார்.

“ஆனால் தெய்வங்கள் மறைவதே இல்லை. தென்றிசைச் சோலையில் அமர்ந்த கலியை வழிபடுவதை ஒருநாளும் நிஷதகுடிகள் கைவிடவில்லை. பிறர் அறியாமல் செல்கிறார்கள். ஓசையும் திரளுமின்றி வழிபடுகிறார்கள். இன்றும் இந்நகர்மக்களின் உள்ளத்தை கலிதெய்வமே ஆள்கிறது” என கருணாகரர் தொடர்ந்தார். “குலமுறைப்படி தங்களை மணந்து நகர்புகுந்ததுமே அரசர் அங்குதான் சென்றிருக்கவேண்டும். ஆனால் இந்திரனின் ஆலயத்திற்குத்தான் சென்றீர்கள். அங்கே வைதிகமுறைப்படி அனல்கொடையும் இந்திரனின் அடிகளுக்கு பூசெய்கையும் நிகழ்ந்தது. அதை பிழையெனச் சொல்லவில்லை. பெருவிழவென நிகழ்த்தவேண்டும் என்றோ பலிகொடைகள் ஆற்றவேண்டும் என்றோகூட நான் சொல்லவில்லை. குடிகளின் விருப்பப்படி இருவரும் கலிதெய்வத்தின்

அடிதொழுது மலர்கொண்டு அதன்பின் அரியணையில் வீற்றிருந்தால் நன்று.”

நாகசேனர் “அரசருடன் கானேகிய அரசி தன் தூதரிடம் சொல்லி அனுப்பியது இது” என்றார். தமயந்தி அவர்களை நோக்கியபோது விழிகளில் ஒரு மங்கல் இருந்தது. அவள் உள்ளம் எங்கே செல்கிறதென அறியக்கூடவில்லை. பின்னர் மெல்லிய குரலில் அவள் “அரசரிடம் உசாவினீர்களா?” என்றாள். “இல்லை, அரசி. அவர் என்ன முடிவெடுப்பார் என எங்களால் எண்ணக்கூடவில்லை. அவர் உங்கள் எண்ணத்தையே நாடுவார். ஆகவே உங்களிடம் வந்தோம்” என்றார் நாகசேனர்.

“நான் என் விழைவென இதை முன்வைக்கமுடியாது” என்றாள் தமயந்தி. “ஆம், அதை அறிவோம். ஆனால் நீங்கள் உளம்கோணப்போவதில்லை என்பதை அவர் உணர்ந்தால்போதும்” என்றார் கருணாகரர். “அவர் என்னிடம் அதை சொல்வார் என்றால் எனக்கு மறுப்பில்லை என்கிறேன்” என்றாள் தமயந்தி. “அது போதும், அரசி. இது பேரரசியின் விழைவு. மூதரசர் உளம்விலகி கானேகிவிட்டார். ஆனால் அவர் முடிதுறந்து சென்றது கலியை நாம் துறந்தமையால்தான் என நாடறியும். மூதரசர் இன்னும் மக்கள் உள்ளங்களில் வாழ்கிறார்” என்றார் கருணாகரர். “ஆம், குறிப்பாக அவர்களின் குற்றவுணர்ச்சி அவரை வளரச்செய்யும்” என்றாள் தமயந்தி.

“அரசர் தங்களின்பொருட்டே தந்தை சொல் மீறி தெய்வத்தை அகற்றினார் என்பார்கள். தாங்கள் வந்த பின்னரும் அது நீடித்தால் என்றோ ஒருநாள் தாங்களே நிஷதரின் குலதெய்வத்தை அகற்றியவர் என்றே சொல் உருவாகும். அந்தச் சினம் நம் குடிகளின் உள்ளங்களுக்குள் ஆழ்நஞ்சென உறையும். ஏதேனும் தருணத்தில் முளைக்கவும்கூடும்.

தெய்வங்களை குடிகள் ஒருபோதும் முற்றாக விட்டுவிடுவதில்லை, தேவி" என்றார் கருணாகரர். "ஆம்" என்று சொல்லி புன்னகைத்து "நன்று செய்க!" என்றாள் தமயந்தி.

அவர்கள் வந்துசென்ற சற்றுநேரத்திலேயே நளன் அகத்தளத்திற்கு வந்தான். அப்போது அவள் அணிபுனைந்துகொண்டிருந்தாள். அணிச்சேடியர் அவனைக் கண்டதும் தலைவணங்கி விலகினர். அவன் அவளை நோக்கியபடி எண்ணிவந்த சொற்கள் அனைத்தும் உதிர்ந்து அகல வெற்றுள்ளத்துடன் நின்றான். அவள் அவன் வருவதை காலடியோசையிலேயே அறிந்தாள். அவ்வறிதல் அவள் உடலில் மிகச் சிறிய அசைவைக்கூட உருவாக்கவில்லை. அவன் தோன்றியதும் விழிகள் மட்டும் திரும்பி அவனை தொட்டுச்சென்றன. அவன் அவளுடைய அந்த கலைவின்மையைக் கண்டு மேலும் அழுத்தமாக தன்னை முன்வைக்க உளம் உந்தப்பெற்றான். அந்த அகவிசையால் அவன் உடல் மெல்ல விதிர்த்தது. அவளுடைய அடுத்த விழியசைவுக்காக அவன் அங்கே கணம் கணமாக காத்து நின்றான். அவள் குழல் அமைத்த முதுசேடியை ஆடியில் நோக்கி செல்லும்படி கையசைவால் பணித்தாள். மேலாடையை மீண்டும் ஒருமுறை சீரமைத்தாள். கணையாழியை இணைத்த பொற்சரத்தை இழுத்துவிட்டு மீண்டும் ஒருமுறை ஆடியில் நோக்கிவிட்டு அவனைப் பார்த்து புன்னகைசெய்தாள். அவன் பொறுமையின்மையின் உச்சிவரை வந்து அப்புன்னகையால் குளிர்ந்து மீண்டும் கீழிறங்கினான். என்ன சொல்வதென்று அறியாமல் "அவை நிகழ்வுகள் தொடங்கவிருக்கின்றன" என்றான். அவை என்ற சொல்லை பிடிப்பற்றாகக் கொண்டு "அமைச்சர்கள் வந்தனர்" என்றான். அரசுசூழ்தல் அவளுக்கு உகந்தது என உள்ளம் உணர்ந்திருந்தது.

அவளை மகிழ்விக்கும்பொருட்டு ஏதேனும் சொல்ல விரும்பினான். “கலிதெய்வத்திற்கு ஒரு பூசெய்கை முடித்து அவையேறலாம் என்றார்கள். பெரிய விழாவாக அல்ல. சிறிய அளவில். அரசமுறைச் சடங்காக…” என்றான். அவன் முடிப்பதற்குள் அவள் “அரசர்கள் சடங்குகள் எதையும் மந்தணமாக செய்யமுடியாது” என்றாள். “ஆம்” என்றதுமே அவன் உள்ளம் சோர்வடைந்தது. “எனக்கு கலியை வணங்குவதில் மறுப்பேதுமில்லை” என்று அவள் சொன்னாள். அவன் குழப்பத்துடன் “ஆம், அதை அறிவேன்” என்றான்.

“ஆனால் பெருந்தெய்வங்களை வழிபடுபவர்களே பேரரசுகளை உருவாக்குகிறார்கள்” என்றாள் தமயந்தி. ஆடியில் நோக்கி காதோரம் தொங்கிய பொற்சரடு ஒன்றை சீரமைத்தபடி “தெய்வங்களை வானோக்கி கண்டுகொள்ளலாம். தான் வாழும் மண்நோக்கியும் கண்டுகொள்ளலாம். அறியாத ஆழங்களிலும் கண்டுகொள்ளலாம். வான்தெய்வங்கள் விழைவுகளை பெருக்குகின்றன. மண்தெய்வங்கள் பற்றை வளர்க்கின்றன. ஆழத்து தெய்வங்கள் அச்சத்தை எழுப்புகின்றன. பேரரசர்கள் பெருவிழைவுகளால் மட்டுமே ஆனவர்கள்” என்றாள்.

“நான் வானாளும் இந்திரனை மட்டுமே வழிபடுகிறேன்” என்றான் நளன். தமயந்தி “நான் நீங்கள் எத்திசை தேரவேண்டும் என சொல்லவில்லை. முடிவு உங்களுடையது” என்றாள். “நான் முடிவுசெய்து நெடுநாட்களாகின்றன. எனக்கு ஊசலாட்டமே இல்லை” என்றான் நளன். புன்னகையுடன் தமயந்தி எழுந்துகொண்டு “செல்வோம்” என்றாள்.

# நீர்க்கோலம் - 17

## 16. பசுந்தளிர்ப்புள்

விதர்ப்பத்தின் எல்லையை காட்டுப்பாதையினூடாக பாண்டவரும் திரௌபதியும் கடந்துசென்றனர். காட்டு விலங்குகளின் கால்களால் வரையப்பட்டு வேடர்களால் தீட்டப்பட்ட அப்பாதையில் எல்லைக்காவல் என ஏதுமிருக்கவில்லை. ஒருவர் பின் ஒருவரென காலடியோசை சூழ்ந்தொலிக்க உடலெங்கும் விழிக்கூர்மை பரவியிருக்க சொல்லற்றவர்களென நடந்து சென்றனர். வெண்வடுவென குறுக்கே கடந்துசென்ற நீரிலாத ஓடைதான் விதர்ப்பத்தின் எல்லை என்று முன்னரே அவர்களுக்கு விடைசொல்லி அகன்றிருந்த பிங்கலனும் குழுவினரும் உரைத்திருந்தனர். "அதற்கு அப்பாலும் அதே காடுதான். ஷத்ரியர்களின் காட்டுக்கும் நிஷாதர்களின் காட்டுக்கும் எந்த வேறுபாடுமில்லை" என்றான் பிங்கலன்.

தருமன் அவர்களை வணங்கி தன் கையிலிருந்து ஒரு வெள்ளி நாணயத்தை அளித்தார். அதை பெற்றுக்கொண்டு விழிகளில் ஒற்றிய பிங்கலன் "நல்வழி சூழ்க! எது தொடரினும் இறுதியில் வெற்றி உடனிருக்க தெய்வங்கள் அருள் புரிக!" என்றான். "நீங்கள் எங்களை உணர்ந்துவிட்டீர்கள் என்று இக்கதையின் போக்கிலேயே உணர்ந்துகொண்டேன், சூதரே" என்றார் தருமன். "ஆம். இக்கதையினூடாக ஏழைச்சூதன் பாரதவர்ஷத்தை ஆளப்போகும் சக்ரவர்த்தியிடம் சொல்ல வேண்டிய அனைத்தையும் சொல்லிவிட்டேன்" என்றான் பிங்கலன். "அவற்றை நான் முழுதுணரவில்லை. உணரும்படி அமையட்டும்" என்றார் தருமன்.

பிங்கலன் கைகூப்பி தலைவணங்க “ஒருநாள் நாம் மீண்டும் சந்திப்போம், சூதரே” என்றார் தருமன். “ஆம், அது தாங்கள் மாபெரும் வேள்விகள் முடித்து கருவூலம் ஒழியும்படி ஏழு வகைக் கொடைகளையும் அளிக்கும் பெருநாளாக இருக்கும். அங்கு இந்த யாழும் முழவும் வந்துநிற்கும். என் குரல் என் கொடிவழியினர் நாவில் ஒலிக்கும்” என்றான் பிங்கலன். சில கணங்கள் சொல்லற்ற அமைதியில் நின்றுவிட்டு தருமன் நீள்மூச்சுடன் “தங்கள் சொல் திகழட்டும்” என்று உரைத்தார். அவர்கள் வணங்கி திரும்பி காட்டுக்குள் நுழைவதுவரை பிங்கலனும் அவன் குடியினரும் அங்கே நோக்கி நின்றிருந்தனர்.

பிங்கலன் சொன்ன நளதமயந்தி கதையினூடாக உளம் அலைய நீள்தொலைவு அகன்றபின் பீமன் “இந்தக் கதையில் முழுக்க மாற்றுரு கொள்வதைப்பற்றியே பிங்கலர் பாடியதாக எனக்குத் தோன்றியது” என்றான். “ஆம், பிறிதொன்றென ஆகி அறியும் மெய்மைகளைப்பற்றி” என்றார் தருமன். “அதற்கு மேலும் அவர் உரைத்தார். அதை இன்று நாம் உணர முடியாது. அவர் அளித்தது உடன் வளரும் ஒரு கதையை. வருவனவற்றினூடாக மீண்டு வந்து தொட்டு எடுத்துக்கொள்ள வேண்டியதுதான்.”

சிறிது நேரத்திற்குப் பிறகு பீமன் “நாம் முற்றிலும் காட்டு வழியாக விதர்ப்பத்தை கடக்க முடியாது, மூத்தவரே. எங்கோ ஊர்களை கடந்தே ஆகவேண்டும். விதர்ப்பம் காடுகளை அழித்து இரு திசையிலும் பெருகி வளர்ந்திருக்கிறது. கிழக்கு திசைக்கு நகர்ந்து சென்றால் ஆளில்லாத மேய்ச்சல் நிலங்களையும் ஆயர் சிற்றூர்களையும் கடக்கலாம். இவ்வழி சென்றால் நாம் குண்டினபுரியின் புற எல்லை வழியாக செல்ல

வேண்டியிருக்கும்” என்றான். தருமன் “அதைத்தான் நானும் எண்ணிக்கொண்டிருந்தேன்” என்றார். “ஆளில்லாத நிலமென்று ஒன்று இல்லை. ஆயர்கள் விரிநிலத்தை விழிகளால் கணக்கிட்டு வைக்க கற்றவர்கள் அவர்களின் நிலங்களினூடாக அறியாமல் எவரும் கடந்து செல்வது இயலாது.”

“அங்கு நாம் ஐவரும் ஒன்றாகவே செல்ல இயலும். ஐவரும் தேவியும் என்பதே நம்மை அறியச்செய்யும். நம்மை காணும் முதற்சூதர் நமது வரவை அறிவார். அவரது சொல் நம்மை சூழ்ந்துகொண்டதென்றால் எங்கும் ஒளிய இயலாது” என்றார் தருமன். அவர்கள் அவர் மேலும் சொல்வதற்காக காத்து நிற்க “நாம் குண்டினபுரியினூடாகவே செல்வோம்” என்று தருமன் சொன்னார்.

“நாம் மும்முறை இந்நகரத்திற்குள் முன்பு வந்திருக்கிறோம்” என்று பீமன் சொன்னான். “ஆம், அது இளையோராக. இளைய யாதவன் விதர்ப்பினியை பெண்கொண்ட பின்னர் நமக்கும் இந்நாட்டிற்கும் தொடர்பென ஏதும் இருந்ததில்லை. இவர்கள் நம்மைப்பற்றி தீட்டிவைத்திருக்கும் பதினான்கு ஆண்டு பழைய உளஓவியம் ஒன்றே இங்குள்ளது. அதிலிருந்து நாம் நெடுந்தொலைவு அகன்று வந்துவிட்டோம். நம்மை பிறருக்குக் காட்டுவது இன்று ஐவர் எனும் அடையாளமே. அதை கலைப்போம். நானும் நகுலனும் தனியாக செல்கிறோம். சகதேவன் அர்ஜுனனை துணைக்கொள்ளட்டும். தேவி பீமனுடன் செல்லட்டும். மூன்று தனி வழிகள் தேர்வோம்” என்றார் தருமன்.

“குண்டினபுரிக்கு அப்பால் நிஷதநாடு செல்லும் காட்டின் தொடக்கத்தில் மீண்டும் சந்திப்போம். அங்கு புரந்தர முனிவர் முன்பு தங்கியிருந்த குருநிலை ஒன்றுள்ளது. இன்று

அவர்களுடைய மாணவர்களே அங்கிருக்கிறார்கள். அது வேதமுடிபுக்கொள்கையை ஏற்ற குருநிலை. நம் மந்தணத்தை அவர்கள் காப்பார்கள்” என்றார் தருமன். “அங்கு ஒருங்கு கூடுவோம். எவர் முதலில் வந்தாலும் பிறருக்காக அங்கு காத்திருக்க வேண்டும்.”

அர்ஜுனன் “நன்று, மூத்தவரே. ஆனால் ஒரு சிறு மாற்றம். தங்களுடன் நான் வருகிறேன்” என்றான். தருமன் ஏதோ சொல்ல வாயெடுக்க பீமன் “ஆம், அவன் வருவதே உங்களுக்குக் காப்பு, மூத்தவரே” என்றான். “நீங்கள் அரசர். நாங்கள் உங்களுக்காக மெய்க்காவல் சூளுறை கொண்டவர்கள்.” அக்குரலிலிருந்த உறுதியால் தருமன் “ஆகுக” என்றார். பின்னர் சில கணங்களுக்குப்பின் “இளையோர் இருவரும் தனித்து வருவதா?” என்றார். “இது சிறுபயணமே. அவர்கள் தனித்து வருவதில் இடரொன்றுமில்லை” என்றான் அர்ஜுனன். “இளையவனே, சிற்றன்னையின் மைந்தர்கள் அவர்கள். மறைந்த அன்னைக்கு நாம் மூவரும் அளித்த சொல் அவர்களின் காப்பு” என்றார் தருமன்.

“நான் பொறுப்பேற்றுக்கொள்கிறேன்” என்று பீமன் சொன்னான். தருமன் நோக்க “நான் தேவியுடன் வரும்போது இளையவரை எப்போதும் என் பார்வையில் வைத்திருப்பேன்.” என அவன் சொன்னான். “நன்று! உன் சொல்லை நம்பி அவர்களை நான் ஒப்படைக்கிறேன்” என்று தருமன் சொன்னார். பீமன் “நாம் தனித்தனியாகச் செல்வது பிறிதொருவகையிலும் நன்று. சேர்ந்து செல்கையில் ஐவரும் ஓருள்ளமாகவே திகழ்கிறோம்” என்றான்.

விதர்ப்பத்தின் காடு இலைகள் உதிர்ந்து சோர்ந்து நின்ற உயரமற்ற மரங்களும், குற்றிலை செறிந்த முட்புதர்களும் கலந்து பரவி சருகுகள் காற்றில் ஓசையுடன் அலைய ஊடே காலடி ஓசைக்கு விதிர்த்து துள்ளிப்பாயும் மான்களின் சலசலப்புடன் சூழ்ந்திருந்தது. பாம்புகளும் கீரிகளும் கடந்தோடும் கலைவோசையும் தலைக்குமேல் எழுந்து சிறகடித்துக் கூவிய பறவைகளின் கூச்சல்களுமாக அவர்களிடம் அது சொல்லாடியது. அதன் சீவிடு ஒலி சுழன்று சுழன்று உடன்வந்தது. நிழலிலும் மண்ணிலிருந்து எழுந்த வெம்மையின் அலைகள் உடலை தாக்கின. அந்திவரை நடப்பதற்குள் மூன்று மரநிழல்களில் அமர்ந்து நீர் அருந்தி ஓய்வெடுக்க வேண்டியிருந்தது.

இரவில் தங்குவதற்குரிய பாறை ஒன்றை பீமன் நெடுமரமொன்றின் மேலேறி நோக்கி கண்டடைந்தான். அங்கு சென்றதும் காட்டுக்குள் இறங்கி உலர் விறகு சேர்த்து வந்தான். பிளந்து நின்ற பாறையின் இடுக்குக்குள் வெளியே ஒளிதெரியாமல் அனல் மூட்டி தேடிக்கொண்டுவந்த கிழங்குகளையும் காய்களையும் நான்கு முயல்களையும் சுட்டு அவர்களுக்கு உணவு அளித்தான். பின்னர் புகையெழுந்த அடுப்பை மணலிட்டு முற்றாக மூடினான். அவர்கள் உணவுண்டதுமே விழிசோர்ந்து துயில்நாடலானார்கள்.

பாறை உச்சிவெயிலின் வெம்மை கொண்டிருந்தது. காடெங்கும் பரவிய குளிருக்கு அது இனிய அணைப்புபோலிருந்தது. திரௌபதியை நடுவே படுக்க வைத்து சுற்றிலும் ஐவரும் படுத்துக்கொண்டனர். விழிகள் திறந்து விண்மீன் வெளியை நோக்கியிருக்க வலக்கையருகே அம்பும் இடக்கையருகே வில்லுமாக அர்ஜுனன் படுத்திருந்தான். மறுஎல்லையில்

அலுப்போசையுடன் தன் பெரியஉடலை சாய்த்த பீமன் “நாளை உச்சிக்குள் நாம் விதர்ப்பத்தின் மையச் சாலையை சென்றடையக்கூடுமல்லவா?” என்றான். அர்ஜுனன் “ஆம்” என்றான். “நாளை காலை பிரிகிறோம்” என்றான் பீமன் மீண்டும். அர்ஜுனன் “ஆம்” என்றான்.

பீமன் பேச விழைந்தான். “விதர்ப்பத்தில் பெருநிகழ்வேதோ எழுகிறது போலும். பகலெல்லாம் தொலைவில் சாலையினூடாக புரவிகளும் வண்டிகளும் சென்றுகொண்டிருப்பதை கண்டேன்” என்றான். அர்ஜுனன் “குண்டினபுரி இன்று விதர்ப்பத்தின் வணிகத்தலைநகர் மட்டுமே. ருக்மி போஜகடகத்திற்கு தன் தலைநகரை மாற்றிக்கொண்டபின் அவன் தந்தை பீஷ்மகர் சில காலம் இந்நகரை ஆண்டார். பின்னர் அவரும் போஜகடகத்திற்கே தன் அரண்மனையை மாற்றிக்கொண்டார். குண்டினபுரியில் நடந்த அரசப்பெருவிழாக்கள் அனைத்தும் போஜகடகத்திற்கு இடம் பெயர்ந்தன. அதை நிகர் செய்யும் பொருட்டு ஆண்டுக்கு எட்டு பெருஞ்சந்தைகள் இங்கு கூடும்படி அமைத்திருக்கிறான். முதுவேனில் காலத்து சந்தை இன்னும் சில நாட்களில் இங்கு கூடவிருக்கிறது” என்றான்.

“ஆனால் சாலைகளில் செல்லும் கவச வீரர்களை காண்கையில் சந்தை நிகழ்வு மட்டும் என்று எண்ணத்தோன்றவில்லை” என்றான் பீமன். “ஆம், நானும் அதை பார்த்தேன். முதுவேனிற் சந்தையை ஒட்டி பிறிதேதோ அரச நிகழ்வொன்று நடைபெற உள்ளது. ஆனால் பேரரசர்களின் வருகை எதுவுமல்ல. அத்தனை பெரிய ஏற்பாடுகள் தெரியவில்லை. சிறிய அரசநிகழ்வுதான்” என்று அர்ஜுனன் சொன்னான். “எதுவாயினும் வழிகளில் காவல்

நிறைந்திருக்கும். முகங்களை கூர்ந்து நோக்குவார்கள். சந்தைக்குச் செல்லும் அயல்முகங்களின் திரள் மட்டுமே நமது காப்பு" என்று பீமன் சொன்னான். அர்ஜுனன் "ஆம்" என்றான்.

தங்கள் உரையாடலை திரௌபதி கேட்டுக்கொண்டிருப்பதை இருவரும் உணர்ந்தனர். பிறருடைய துயில்மூச்சுக்கள் ஒலித்துக்கொண்டிருந்தன. பீமன் இருமுறை கோட்டுவாயிட்டான். "சென்றுகொண்டே இருக்கிறோம். எங்கும் நிலைக்க முடியுமா இனிமேல் என்றுகூட எண்ணிக்கொண்டேன்" என்றவன் இருமுறை புரண்டுபடுத்தான். சற்று நேரத்திலேயே அவன் உரக்க குறட்டை விட்டு துயில் கொள்ளலானான்.

திரௌபதி தாழ்ந்த குரலில் "இளையவரே..." என்றாள். அர்ஜுனன் "சொல், தேவி" என்றான். "மாற்றுரு கொள்வது அத்தனை கடினமானதா?" என்றாள் திரௌபதி. அர்ஜுனன் "நீ மாற்றுரு கொண்டதே இல்லையா?" என்றான். இருளுக்குள் திரௌபதி சற்று நேரம் அமைதியாக இருந்தாள். பின்பு "உடலுக்குள் நாம் கொள்ளும் உருவங்களனைத்தும் நம் புறத்தோற்றத்தால் ஒருங்கிணைக்கப்பட்டுள்ளன. புறத்தோற்றம் மாறுபடும்போது நம்முள் என்ன நிகழுமென்று அறியும்பொருட்டே கேட்டேன்" என்றாள்.

அர்ஜுனன் "நாம் புறத்தோற்றத்தை மாற்றிக்கொள்கையில் அதுவல்ல நாம் என்று உள்ளிருப்பது முரண்டுகிறது. நான் பிறிது என்று சொல்லிக்கொண்டே இருக்கிறது. ஆனால் நம்மை சூழ்ந்திருப்பவை அனைத்தும் நம் தோற்றமே நாமென நம்மிடம் மீளமீள கூறுகின்றன. நமது இருப்பும் இடமும் அவ்வாறு வரையறுக்கப்படுகின்றன. என்ன நிகழ்கிறதென்று நாம் அறியாதிருக்கையிலேயே நம்முள் இருப்பது மாறிவிடுகிறது.

பிறகெப்போதோ ஒருமுறை அது நினைவுகளில் இருந்து தன் முந்தைய வடிவை கண்டெடுத்து அதை கனவென அணிந்து திரும்பிப்பார்க்கையில் துணுக்குறுகிறது, எப்படி மாறினோம் என்று” என்றான்.

“அக்கணத்திலெழுவது ஒரு பெரும் அச்சம் மட்டுமே. நாம் இனிமேல் மீள முடியாதோ என்று. உண்மையில் அக்கணமே நாம் கொண்டிருக்கும் தோற்றத்தை உரித்து வீசிவிடவேண்டுமென்று வெறியெழும். அதை கடப்பது எளிதல்ல” என்றான் அர்ஜுனன். திரௌபதி “நாம் நமது தோற்றமல்ல, பிறிதொருவர் என்பதை வெளிக்காட்டிக்கொண்டே இருக்கும் உந்துதல் ஏற்படுமா?” என்றாள். “ஆம், அது தொடக்க நாட்களில்தான். நீங்கள் பார்ப்பதல்ல நான் என்று நாம் சொல்லிக்கொண்டே இருப்போம். ஆனால் அது எவ்வகையிலும் நமது மாற்றுருவை கலைப்பதில்லை” என்றான் அர்ஜுனன்.

“ஏன்?” என்றாள் திரௌபதி. “நாம் கொண்ட மாற்றுரு ஓர் ஆளுமையாக பிறரால் அறிந்து வரையறுக்கப்படும் தொடக்கப்பொழுது அது. அந்த மீறல் குரலும் நமது ஆளுமையின் ஒரு பகுதியென்றே எண்ணப்படும்.” மெல்ல சிரித்தபின் “நீ சூடப்போகும் பெயரென்ன?” என்றான் அர்ஜுனன். திரௌபதி “சைரந்திரி என்ற பெயர் எனக்குத் தோன்றியது” என்றாள். வியப்புடன் “எப்போது?” என்றான் அர்ஜுனன். “சற்று முன் விதர்ப்பத்தின் எல்லையில் நுழையும்போது நான் என் மாற்றுருவை நோக்கி ஒவ்வொரு அடியாக வைத்து நெருங்கிக்கொண்டிருக்கிறேன் என்று தோன்றியது. பெயரில்லாமல் அந்த மாற்றுருவை என்னால் கற்பனை செய்யமுடியவில்லை. என்ன பெயரிடலாம் என்று உள்ளத்தில் துழாவியபோது இப்பெயர் அகப்பட்டது.”

அர்ஜுனன் “இது எவருடைய பெயர்?” என்றான். “இதுவா? இளமையில் எனக்கொரு தோழி இருந்தாள். அவள் பெயர் அது” என்றாள். “அவள் இப்போது என்ன செய்கிறாள்?” என்று அர்ஜுனன் கேட்டான். “இப்போது அங்கு நிஷத நாட்டில் எனக்காக காத்திருக்கிறாள்” என்றாள் திரௌபதி. அவன் புரிந்துகொண்டு சிரித்தான். “என்னுடன் இருந்த மரப்பாவைக்கு நான் அந்தப் பெயரை இட்டேன். அது நான் கேட்ட ஏதோ ஒரு கதையில் இருந்த வனதேவதையின் பெயர். இளங்குழந்தையாகவே அவளை நான் கற்பனை செய்திருந்தேன். இன்று என்னுடன் அவளும் வளர்ந்திருக்கிறாள்” என்றாள். “என்ன கதை அது?” என்றான் அர்ஜுனன்.

“இன்று அக்கதை தெளிவாக நினைவில்லை. நான் அதை இப்போது தோன்றுவதுபோல் புனைந்து சொல்லமுடியும்” என்றாள் திரௌபதி. “அரசுரிமைப் பூசலால் காசி நாட்டின் இளவரசியை ஒற்றர்கள் தூக்கிக்கொண்டு சென்று விட்டார்கள். அவளுக்கு இரண்டு வயது. அவள் பெயர்தான் சைரந்திரி. நஞ்சூட்டப்பட்டு துயின்றுகொண்டிருந்த அவளை கொல்லும்பொருட்டு காட்டு வழியாக கொண்டுசென்று கொண்டிருக்கையில் அவர்களில் இருவரை நச்சுப்பாம்புகள் கடித்துவிடுகின்றன. குழந்தையை நிலத்திலிட்டுவிட்டு அவர்கள் இறந்துவிடுகிறார்கள்.” அர்ஜுனன் பேசாமலிருக்க “கேட்கிறீர்களா?” என்றாள். “ஆம்” என்றான்.

“மறுநாள் குழந்தை விழித்தெழுந்து நோக்கியபோது படமெடுத்த பாம்புகள் சூழ்ந்த அடர்காட்டுக்குள் தன்னை உணர்ந்தது. பசித்து அழுதபடி எழுந்து சென்றபோது பசுங்கிளைகளுக்குமேல் ஒரு பச்சைநிறமான இலைதாவிப் புள்ளாக சென்றுகொண்டிருந்த

கானகத்தெய்வம் ஒன்று அவளை பார்த்தது. அவள் அழுகையைக் கண்டு அது தன்னை அவளுடைய மாற்றுரு வடிவமாக ஆக்கிக்கொண்டு கீழிறங்கி அவளை நோக்கி வந்தது. தன்னைப்போன்ற இளந்தோழியைக் கண்டதும் இளவரசி முகம் மலர்ந்ததாள். இருவரும் தழுவிக்கொண்டார்கள். கைகோத்தபடி காட்டுக்குள் சென்றனர். இளவரசியை மரங்களில் தாவவும் உச்சி மரங்களில் சென்று கனிகளைப் பறித்து உண்ணவும் நிலவு பொழியும் இரவுகளில் மரக்கிளைகளில் அமர்ந்து வான் நோக்கி பாடவும் அந்தத் தோழி கற்பித்தாள். இளவரசி அங்கே அழகிய கன்னியாக வளர்ந்தாள்."

"இளவரசி இறக்கவில்லை என்பதை நிமித்திகர்களின் குறிப்புகளிலிருந்து அறிந்த அரசர் ஒற்றர்களை அனுப்பி காடுகளெங்கும் தேடினார். அங்கு இறந்துகிடந்த இரண்டு எலும்புக்கூடுகளில் இளவரசி அணிந்திருந்த நகைகள் இருப்பதை ஒற்றர்கள் கண்டனர். அந்தக் காட்டில் தேடியபோது இளங்கன்னியாக மரக்கிளைகளில் பச்சைக்கிளிபோல பறந்தலைந்த இளவரசியை கண்டனர். அவள் தோற்றத்திலிருந்தே காசி நாட்டில் மறைந்த குழவிதான் அவள் என்று கண்டடைந்தனர். அவர்களைக் கண்டு அவளும் ஆவலுடன் கீழே வந்தாள். அவளை தங்களுடன் அரண்மனைக்கு வரும்படி அழைத்தனர். காட்டுக்குள் இருப்பது தனக்கு உவப்பானதென்றும் அவர்கள் கூறும் அந்நகரத்தை நினைவுகூர இயலவில்லை என்றும் அவள் சொன்னாள். அவர்கள் மன்றாடியும் அவள் அவர்களுடன் செல்லவில்லை. அவளை பிடித்துச்செல்ல அவர்கள் முயன்றபோது உச்சி மரக்கிளை நோக்கி பாய்ந்து இலைத்தழைப்புக்குள் மறைந்துவிட்டாள்."

“அவர்கள் திரும்பிச்சென்று அரசரிடம் செய்தியை கூறினர். அரசர் தன் துணைவியுடன் காட்டுக்கு வந்து மரக்கிளைகளை நோக்கிக் கூவி அவளை அழைத்தார். அவள் அன்னை இளம்வயதில் அவளை அழைக்கும் பெயரை சொல்லி கண்ணீருடன் விளித்தாள். அப்பெயரைக் கேட்டு நினைவுகொண்டு மரக்கிளைகளிலிருந்து கிளிபோல பறந்து இறங்கிய இளவரசி அன்னையை உடனே அடையாளம் கண்டுகொண்டாள். கைகளை நீட்டியபடி ஓடிவந்து அன்னையை தழுவிக்கொண்டாள். தந்தை அவள் தோள்களைப் பற்றியபடி விம்மி அழுதார். எங்களுடன் வந்துவிடு மகளே, நீயில்லாமல் நாங்கள் வாழமுடியவில்லை என்று அன்னை அழைத்தாள். அன்னையைப் பிரிய உளமில்லாமல் இளவரசி அதற்கு ஒப்புக்கொண்டாள்.”

“அவர்கள் இளவரசியை நகருக்கு அழைத்துச் சென்றார்கள். குடிபடைகள் கூடி உவகைப்பேரொலி எழுப்பி வாழ்த்த இளவரசி நகர் புகுந்தாள். அவையில் பொன்னும் மணியும் இழைத்த அரியணையில் அமர்ந்து குலமுறைமைகளை ஏற்றுக்கொள்கையில் அவள் ஒளிமிகுந்த காட்டையும் பசுமை அலையடிக்கும் மர உச்சிகளையும் தன்னுள் கண்டுகொண்டிருந்தாள். அவளுக்கு அந்த அவையும் நன்கு தெரிந்ததாக இருந்தது. அப்பால் காடு மேலும் அணுக்கமாக தோன்றியது.”

“அன்றிரவு அவள் தன் பட்டுமஞ்சத்தில் துயில் இல்லாமல் புரண்டுகொண்டிருந்தாள். சாளரம் வழியாக வெளியேறி மீண்டும் காட்டுக்குள் சென்றுவிட்டாலென்ன என்று எண்ணினாள். ஆனால் அன்னையும் தந்தையும் தன்னை காணாமல் துயருறுவார்கள் என்ற எண்ணம் அவளை தடுத்தது.

நூறு முறை உளத்தால் கிளம்பியும் அவளால் உடலை எழுப்ப முடியவில்லை. சாளர விளிம்பில் அமர்ந்து அப்பால் தெரிந்த விண்மீன்களையும் மரக்கூட்டங்களின் நிழலசைவுகளையும் கண்டு கண்ணீர் விட்டு அழுதுகொண்டிருக்கையில் இருளுக்குள் ஒரு சிறகடிப்பை கேட்டாள். ஒரு பச்சைக்கிளி அவள் முன் வந்து அமர்ந்தது.”

“அது யாரென்று அவள் உடனே உணர்ந்துகொண்டாள். அதை கையிலெடுத்து ‘என்னைத் தேடி வந்தாயா?’ என்றாள் சைரந்திரி. ‘ஆம், நான் உன்னைப் பிரிந்து அக்காட்டில் இருக்க இயலாது’ என்றாள் காட்டணங்கு. ‘நீ உன் அன்னையை நோக்கி கைநீட்டியபடி கண்ணீருடன் சென்றதை பார்த்தேன். உன் பின்னால் நானும் அதைப்போல கைவிரித்து ஓடிவந்தேன். நீ அதை பார்க்கவில்லை’ என்றாள். ‘என்னால் இங்கு இருக்க இயலாது. நானும் வருகிறேன். நாம் மீண்டும் காட்டுக்கு சென்றுவிடுவோம்’ என்றாள் சைரந்திரி. ‘இல்லை அக்காட்டில் நீ இனி வாழமுடியாது’ என்றாள் காட்டணங்கு.”

“சைரந்திரி ‘அக்காடின்றி என்னால் இங்கும் வாழ முடியாது’ என்றாள். ‘அந்தக் காட்டை நான் உனக்காக கொண்டு வந்திருக்கிறேன். என்னுடன் வா’ என்று இளவரசியை காட்டணங்கு அழைத்தாள். இளவரசி அவளைத் தொட்டதும் தானும் ஒரு பச்சைக்கிளியாக மாறினாள். இருவரும் பறந்து அரண்மனை சோலைக்குள் நுழைந்தனர். நிலவு பெருகி இலை நுனிகளில் ததும்பிய மரக்கூட்டங்களுக்கு நடுவே இரு கிளிகளும் விடியும் வரை பறந்தலைந்தன. புலர்வதற்கு முன் மீண்டும் மஞ்சத்தறைக்கு இருவரும் திரும்பி வந்தனர். ‘என்னை உன் வளர்ப்புக்கிளியாக ஒரு கூண்டுக்குள் வைத்துக்கொள். எவருமறியாத இரவுகளில் என்னை மீட்டெடு’

என்று காட்டணங்கு சொன்னாள். சைரந்திரி அந்தப் பச்சைக்கிளியை ஒரு புற்கூண்டில் அடைத்து தன் மஞ்சத்தறைக்குள்ளேயே வைத்துக்கொண்டாள்.”

“எப்போதும் அன்று மலர்ந்த இளம்பசுந்தளிர்போல அக்கிளி அவளுடன் இருந்தது. வேண்டும்போது அதை தொட்டு உயிர்ப்பிக்க அவளால் இயன்றது” என்று திரௌபதி சொன்னாள். அர்ஜுனன் நெடுநேரம் ஒன்றும் சொல்லவில்லை. பின்னர் “உருமாற்றம் உனக்கு அத்தனை கடினமாக இருக்காதென்று எண்ணுகிறேன்” என்றான்.

# நீர்க்கோலம் - 18

**17. முகமுன்முகம்**

✿மறுநாள் காலையில் முதலிருள் பொழுதிலேயே அர்ஜுனனும் தருமனும் பிறரிடம் விடைபெற்றுக் கிளம்பி காட்டுக்குள் சென்று மறைந்தனர். பீமன் அப்பால் துணைநிற்க திரௌபதி கண்ணீர் என ஊறி வழிந்த மலையிடுக்கு ஒன்றில் இலைகோட்டி நீர் அள்ளி உடலில் ஊற்றி நீராடினாள். குழல்கற்றைகளை ஐந்தாகப் பகுத்து தோளில் விரித்திட்டு அவள் மீண்டு வந்தபோது நகுலனும் சகதேவனும் விடைபெறும்பொருட்டு காத்து நின்றிருந்தனர். திரௌபதியின் பின்னால் வந்த பீமன் இளையவரைக் கண்டதும் “கிளம்பிவிட்டீர்களா?” என்றான். “ஆம், மூத்தவரே” என்றான் நகுலன். “நாங்கள் இருவரும் சூதர்களாக செல்லவிருக்கிறோம். எங்கள் பெயர்களை சுதன் அனுசுதன் என்று கூறலாமென்று இருக்கிறோம். எங்களைக் குறித்து செய்திகள் அப்பெயரில் உங்களை வந்தடையட்டும்.”

“நன்று!” என்று பீமன் தலையசைத்தான். பீமனை வணங்கி திரௌபதியிடம் தலையசைவால் விடைபெற்று அவர்கள் இருவரும் சென்றனர். “நாமும் கிளம்பவேண்டியதுதான்” என்றான் பீமன். “உனக்கு உணவு கொண்டுவைத்திருக்கிறேன். அருந்து!” திரௌபதி பெருமூச்சுடன் உணவருந்த அமர்ந்தபோது “நீ இன்னமும் பிங்கலரின் கதையில் இருந்து மீளவில்லை” என்றான் பீமன். “ஆம்” என்றாள் திரௌபதி. “எங்கிருக்கிறாய்?” என்றான் பீமன். “தமயந்தியின் காட்டில்.” பீமன் புன்னகை செய்து “அது இந்தக் காடுதான்…” என்றான்.

கதிரெழத் தொடங்கவில்லையெனினும் வானொளி காட்டிற்குள் விழிதுலங்கச் செய்திருந்தது. கிளம்பும்போது திரௌபதி அவர்கள் வந்த வழியை திரும்பிப் பார்த்தாள். பீமன் “செல்வோம்” என்றான். அவள் தலையசைத்தாள். பீமன் தண்ணீர் குடுவையும் கிழங்குகளும் கனிகளும் நிரம்பிய கூடையை தோளிலேற்றிக்கொண்டு நடந்தான். தனது மாற்றாடையை சுருட்டிக் கட்டிய மரவுரி மூட்டையை கையிலெடுத்தபடி திரௌபதி அவனுடன் சென்றாள். இருவரும் ஒருவரோடொருவர் உரையாடாமலேயே நடந்தனர்.

சற்று கடந்தபின் அந்த அமைதியால் உளம் அழுத்தப்பட்ட பீமன் “இன்னும் சிறிது தொலைவுதான்” என்றான். “ஆம், ஓசைகள் கேட்கின்றன” என்று திரௌபதி சொன்னாள். “நான் தோள்வலி வித்தை காட்டும் பால்ஹிக ஷத்ரியனாகவும் நீ என் துணைவியாகவும் அங்கு தோற்றமளிப்போம்” என்றான். அவள் புன்னகைத்து “முதல் மாற்றுரு” என்றாள். “ஒரு சிறு பயிற்சி” என்று பீமன் சொன்னான். “இங்கு நம்மை கூர்ந்து நோக்காதவர்களுக்கு முன் மாற்றுரு கொள்வோம். இது நம்மை

நாமே மறைத்துக்கொள்ளல் மட்டும்தான். மாற்றிக்கொள்வதல்ல.”

“தாங்கள் இதற்குமுன் மாற்றுரு கொண்டதுண்டா?” என்று திரௌபதி கேட்டாள். “எல்லா நகரங்களிலும் மாற்றுரு கொண்டு செல்பவனாகவே என்னை உணர்கிறேன்” என்று பீமன் நகைத்தான். திரௌபதி “உடலை பிறிதொன்றாகக் காட்டுவதைக் குறித்து சொன்னேன்” என்றாள். “ஆம், நானும் அதைத்தான் சொன்னேன். நகரங்களில் என் உடலை நான் பிறிதொன்றாக காட்டுகிறேன்” என்றான். திரௌபதி “இந்த உரையாடல் எங்கும் செல்லப்போவதில்லை” என்றாள். பீமன் “ஆம்” என்றபின் சற்று கழித்து “இளையோர் இருவரும் இங்கு மிக அருகேதான் இருக்கிறார்கள்” என்றான்.

“எப்படி தெரியும்?” என்று திரௌபதி கேட்டாள். “என் உள்ளம் சொல்கிறது. எப்போதும் நானிருக்கும் இடத்தை என் சித்தம் சென்று தொடும் பெரிய வட்டமாகவே உணர்கிறேன். அவ்வட்டத்திற்குள் இருப்பனவும் வருவனவும் செல்வனவும் ஒவ்வொரு கணமும் எனக்கு தெரிந்துகொண்டிருக்கும். இளவயதில் இது என்ன என்று வியந்துள்ளேன். பின்னர் அறிந்தேன், இது குரங்குகளின் தன்னுணர்வு” என்றான் பீமன். “மானுடரின் உளவட்டம் பெரிது. அது வாழ்வட்டத்தை சிறிதாக்கிவிடுகிறது. நான் என் உளவட்டத்தைச் சுருக்கி நிகழ்வட்டத்தை நிலைநிறுத்திக்கொள்கிறேன்.” உரக்க நகைத்து “ஆகவே நீ இப்போது இருப்பதுபோல நான் கதையுலகில் கால் வைத்து நடப்பதில்லை” என்றான்.

அவர்கள் மையச்சாலைக்கு வந்தபோது பெரிய தலைப்பாகைகளுடன் புத்தாடையணிந்த சூதர்களின் குழு ஒன்று இசைக்கருவிகளும் தோல்மூட்டைகளுமாக சென்று

கொண்டிருந்தது. அவர்களின் குடிப்பொருட்களை ஏந்திய இரு அத்திரிகளை இளம் சூதர்கள் கயிற்றைப் பிடித்து நடத்திச் சென்றனர். ஓர் அத்திரியின் மீது நிறைவயிற்றுடன் விறலி ஒருத்தி எதையோ மென்றபடி ஒருக்களித்தவள்போல அமர்ந்திருந்தாள். பிறிதொன்றில் இரு குழந்தைகளுடன் அன்னை விறலி அமர்ந்திருந்தாள். அவள் வாயிலிட்டு மென்ற எதையோ தன் குழவியின் வாய்க்குள் துப்பினாள். அது வாய் வழிய அதை குதப்ப இன்னொரு குழவி வாய் நீட்டி கைகளை வீசியபடி குருவிக்குஞ்சுபோல எம்பியது.

அவர்கள் மலர்ந்த முகத்துடன் ஒருவருக்கொருவர் நகையாடியபடி சென்றனர். இருபொதி சுமந்த எட்டு அத்திரிகளுடன் வணிகர்களின் குழு அவர்களைத் தொடர்ந்து சென்றது. தோளில் தோல் மூட்டைகளை ஏந்திய இளம் வணிகர்கள் புழுதி படிந்த கால்களும் கலைந்து காற்றிலாடிய குழல்கற்றைகளுமாக சிரித்துப் பேசிக்கொண்டு நடந்தனர். இருமருங்கும் ஐயத்துடன் விழிகள் சுழல வேலேந்திய காவலர்கள் நால்வர் அவர்களைக் காத்து உடன் சென்றனர். வணிகர் குழுவுக்குப் பின்னால் திரௌபதியும் பீமனும் சென்று சேர்ந்துகொண்டனர்.

ஒரு காவல்வீரன் “எங்கு செல்கிறீர்கள், மல்லரே?” என்றான். “குண்டினபுரியின் வேனிற்சந்தைக்கு. நான் மற்போர் வித்தைகள் காட்டுபவன். இவள் என் துணைவி” என்றான் பீமன். “நீர் ஷத்ரியரா?” என்று ஒருவன் கேட்டான். “ஆம்” என்றான் பீமன். அவர்களிருவரும் அவனை கூர்ந்து நோக்கியபின் ஒருவன் “ஆனால் மிலேச்சர்களின் குருதி உம் உடலில் உண்டு என்பதில் ஐயமில்லை” என்றான். பீமன் நகைத்து “எனது குருதியை நான் இன்று வரை பார்த்ததில்லை” என்றான்.

அவர்கள் நகைத்து “அதுவரைக்கும் நன்று” என்றனர். “எது உம் ஊர்?” என்றான் இன்னொருவன். “பால்ஹிக நாடு” என்றான் பீமன். “அங்கே மிலேச்சகுருதி அற்றவர்கள் அரிது” என்றான் வணிகன்.

பெருஞ்சாலையில் மேலும் மேலும் மக்கள் வந்து சேர்ந்துகொண்டிருந்தனர். சிறுவணிகர்கள், மலைப்பொருட்களை சந்தைக்கு கொண்டு செல்லும் கானகர், சந்தைக்கு குடிப்பொருள் வாங்கச்செல்லும் சிற்றூர்குழுக்கள். அனைவருமே உரத்த குரல்களுடன் சிரித்து பேசிக்கொண்டனர். சிரிப்பு எழுந்துவிட்டால் எல்லா பேச்சும் சிரிப்பூட்டுவதே என பீமன் எண்ணிக்கொண்டான். மகிழ்ச்சியாக இருப்பதை பிறருக்கு அறிவிப்பதே சிரிப்பு. மகிழ்ச்சி என்பதே ஒருவகை வெளிப்பாட்டு முறையா? அவன் புன்னகையுடன் தருமனை எண்ணிக்கொண்டான். அவர் சொன்ன சொற்றொடரா அது?

ஒவ்வொரு வழிச்சந்தியிலும் வந்தவர்களை சென்றவர்கள் புதுமழைநீரை நதி என அலையெழுந்து சந்தித்தனர். ஒருவரை ஒருவர் கூவி அழைத்து அறிமுகம் புதுக்கினர். முறைமைச்சொல் அழைத்து உறவு அறிவித்தனர். நெடுங்காலத்துக்குப்பின் கண்டவர் ஓடிச்சென்று தோள்தழுவி குலநலம் உசாவினர். எவரும் அவர்களை தனித்துப் பார்க்கவில்லையென்பது பீமனுக்கு தெரிந்தது. அச்சாலையில் முற்றிலும் அயல் முகங்கள் தெரிவது வழக்கமென்று தோன்றியது.

விதர்ப்பத்தின் முதல் காவலரண் தொலைவில் தெரிந்தது. அங்கு நான்கு நிரைகளாக வண்டிகளையும் அத்திரிகளையும் நிறுத்தி கூர்நோக்கி குலமும் குடியும் ஊரும் அடையாளங்களும் தேர்ந்து சுங்கம் கொண்டு அப்பால்

அனுப்பினர் காவலர். பணிக்காவலர்களுக்குமேல் எழுந்த பீடத்தில் விதர்ப்பத்தின் அரசமுத்திரை கொண்ட வெள்ளிக்கோலுடன் நின்ற தலைமைக்காவலனின் செந்நிறத் தலைப்பாகை உயர்ந்து தெரிந்தது. அத்திரிகளும் வண்டிகளும் ஒன்றன்பின் ஒன்றாக சென்று இணைந்துகொண்டன. நடந்து சென்றவர்களின் நிரை எறும்பு வரிசைபோல சாலையிலிருந்து விலகி தனித்து தெரிந்த காவல் கொட்டகை ஒன்றுக்குள் நுழைந்து மறுபக்கம் வெளியே சென்றது.

பீமன் விழிகளால் திரௌபதியிடம் எச்சரிக்கை காட்டிவிட்டு அந்நிரையில் இயல்பாக சென்று நின்றான். நிரையில் நின்றவர்கள் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டே இருந்தனர். அவர்கள் காவல் கொட்டகைக்குள் நுழைய அரை நாழிகை நேரம் ஆயிற்று. உள்ளே இருந்த காவலர்கள் ஒருவருக்கொருவர் உரத்த குரலில் நகையாடியபடி தங்கள் அலுவல்களைப்பற்றிய பகடிகளைப் பேசியபடி ஒவ்வொருவராக அழைத்து முகங்களை கூர்ந்து நோக்கியபடி ஓரிரு வினாக்களைத் தொடுத்து பெயர்களை பதிவு செய்து அப்பால் அனுப்பினர். பீமன் உள்ளே சென்றபோது ஒருவன் உரத்த குரலில் “குண்டினபுரியை அவனுக்கே அளித்துவிடலாம். பழைய ஆடைகளை நாம் நிஷாதர்களுக்கு அளிப்பதில்லையா?” என்றான்.

முதிய வீரன் ஒருவன் “போதும், இது அரசசெவிகளில் விழுந்துவிட்டால் இதுவும் நிகழக்கூடும். நிஷாதர்கள் நமது தலைமேல் அமர்ந்து நம்மை கால்களால் ஆள்வதற்கு ஒரு வாய்ப்பு எழும்” என்றான். பிறிதொருவன் உரக்க “யாதவன்மேல் சினம் கொண்டு நிஷாதர்களை தூக்கிச் சுமப்பது நல்ல அரசாடல்” என்றான். பீமன் முன் நின்ற இளம் காவலன் அவன்

உடலை நோக்கியபின் “தடியா, எந்த ஊர் உனக்கு?” என்றான் “பால்ஹிக நாடு. ஷத்ரியன், என் பெயர் வலவன்” என்றான் பீமன்.

அவனை ஏறிட்டு நோக்கியபின் எண்ணியிராப் பொழுதில் அவன் தோளை ஓங்கிக் குத்தி “பெருமல்லர் என்று எண்ணுகிறேன்” என்றான். “ஆம், பாறைகளை தூக்கி வித்தை காட்டுவேன். தாங்கள் விரும்பினால் இந்த பீடத்தை தூக்கிக் காட்டுகிறேன்” என்றான் பீமன். பீடத்தின் மேல் நின்றிருந்த முதிய தலைமைக்காவலனை பார்த்தபின் “பீடத்தில் நிற்பவரோடு தூக்க முடியுமா?” என்றான் காவலன். “ஆம்” என்றபடி பீமன் தூக்கப்போனான். அவன் தோளைத் தட்டி “நன்று! நன்று! நீ தூக்கக்கூடும். இது யார்?” என்றான் காவலன். “இது என் தேவி” என்றான்.

அவன் அவளை மேலும் கூர்ந்து நோக்கி “கரியவள், அழகி” என்றான். பின் அவளிடம் “உன் பெயர் என்னடி?” என்று கேட்டான். “சைரந்திரி” என்று அவள் சொன்னாள். “நீ என்ன வித்தை காட்டுவாய்?” என்றான் அவன். பின்னால் நின்ற ஒருவன் “இரவில் அவனை அவள் சுமப்பாள். அந்த வித்தைக்காகவே கூட்டிச் செல்கிறான். வேறென்ன?” என்று சொல்ல காவலர் அனைவரும் வெடித்து நகைத்தனர். பீமன் விரிந்த மூடச்சிரிப்புடன் “ஆம் வீரர்களே, அவள் என்னை தூக்குவதுண்டு” என்றான். திரௌபதி தலைகுனிந்து நின்றாள். “ஏன் கூந்தலை அவிழ்த்திட்டிருக்கிறாள்? கிளிகள் கூடுகட்டப்போகின்றன” என்றான் ஒருவன். “பால்ஹிக நாட்டு வழக்கம் இது. நாங்கள் குழல்கட்டுவதில்லை” என்று பீமன் சொன்னான்.

அதற்குள் பின்பக்கம் கிராதர்கள் நால்வர் கூடைகளில் அடைக்கப்பட்ட குரங்குக் குட்டிகளுடன் வந்து நின்றனர். அவர்களை திரும்பி நோக்காமலே “செல்க!” என்று கையைக் காட்டிய காவலன் “கூடையில் என்ன, உங்கள் மைந்தரா?” என்றான். “ஆம் வீரரே, விதர்ப்பத்தின் படைகளில் சேர்த்துவிட வந்திருக்கிறோம்.” வீரன் உரக்க “சிரிப்பா? சிரிக்கும் வாய்களை கிழித்து விரிப்பேன். மூடப்பதர்களா…” என்றான். “நாங்கள் சிரிக்கவில்லை, எங்கள் குரங்குகள்தான் சிரிக்கின்றன” என்றான் ஒரு கிராதன். “வாயை மூடு, குரங்கே” என்றான் முதிய காவலர்தலைவன்.

மறுபக்கம் வந்ததும் பீமன் விழிகளால் திரௌபதியை சந்தித்தான். அவள் முகத்தில் உணர்வு மாறுதல் ஏதும் தெரியவில்லை. “இனி எவரும் கேட்கமாட்டார்கள் என நினைக்கிறேன். இந்த நெரிசலில் நீந்தியே நாம் குண்டினபுரியை கடந்துவிடமுடியும்” என்றான் பீமன். திரள்நெரிவாகச் சென்ற மக்களில் ஒரு பகுதி பிரிந்து அப்பாலிருந்த சோலை நோக்கி செல்வதை பீமன் கண்டான். “அங்கு என்ன உள்ளது?” என்று கேட்டான். “விதர்ப்பத்தின் மூதன்னையர் ஆலயம். வணிகம் செய்பவர்கள் அங்கு சென்று செப்புக் காசுகளை காணிக்கையிட்டுச் செல்வது வழக்கம்” என்றான் ஒரு முதியவன்.

பீமன் திரௌபதியை நோக்க ‘சென்று பார்த்துவிட்டுச் செல்வோம்’ என்பதுபோல் அவள் தலையசைத்தாள். கிளைச்சாலை சென்று நுழைந்த சோலை உயரமற்று தாழ்ந்த கிளைகள் கொண்ட தழை மரங்களாலானதாக இருந்தது. தரையெங்கும் சருகுகள் உதிர்ந்து கிடந்தன. அவற்றின்மேல் சிற்றுயிர்கள் சலசலத்தோடின. அச்சோலையில் குடியிருக்கும்

மான்கள் மக்களைக்கண்டு அஞ்சாமல் தலைதூக்கி நோக்கியபடி நின்றிருந்தன. சோலைக்குள் உடுக்கோசையும் முழவோசையும் மணியொலியும் கேட்டுக்கொண்டிருந்தன.

சோலை நடுவே சற்றுத் தாழ்வான பகுதியில் மூதன்னையரின் ஆலயம் அமைந்திருந்தது. மரத்தாலான கூரையிடப்பட்ட அரைவட்ட வடிவமான நீண்ட ஆலயநிரையின் கருவறைகளில் உயர்ந்த பீடங்களில் அமர்ந்திருந்த அன்னையரின் சிலைகளை தொலைவிலிருந்தே காண முடிந்தது. பன்னிரு அன்னையரின் கருவறை வாயில்களும் பொதுமுற்றம் நோக்கி திறந்திருந்தன. அதன் நடுவே இருந்த இடையளவு உயரம் கொண்ட அகன்ற பலிபீடத்தில் வழிபடச் சென்றிருந்தவர்களின் கையிலிருந்த மலரையும் கனிகளையும் வாங்கி வைத்து படையல் வைக்க பூசகர்கள் எண்மர் நின்றிருந்தனர். எண்மர் படையலிட்ட பொருட்களை எடுத்து அப்பால் கூடைகளில் வைக்க அதை ஊழியர்கள் சகடப்பலகைகளில் ஏற்றி தள்ளிக்கொண்டு சென்றனர். பீடம் ஒழிந்து நிறைந்து ஒழிந்துகொண்டிருந்தது.

மக்கள் நிரையாகச் சென்று பன்னிரு அன்னையரின் முன்னும் நின்று தொழுது அப்பால் சென்றனர். நிஷாதர்களும் கிராதர்களும் மலைமக்களும் வணிகர்களும் பலிபீடத்தின் மீது வைத்த காணிக்கைகளை நீட்டி “இங்கு!” “இதோ!” “காணிக்கைகளை பெறுங்கள், பூசகர்களே” என்றெல்லாம் கூவிக்கொண்டிருந்தனர். ஒருவரை ஒருவர் தோள்களால் உந்தியும் தள்ளியும் முன்னால் செல்ல முந்தினர். கூப்பிய கைகளுடன் முதல் அன்னையின் ஆலயத்தருகே சென்று நின்று திரௌபதி வணங்கினாள். அவளுக்குப் பின்னால் நின்றபடி உள்ளே அமர்ந்திருந்த அன்னையை பீமன் நோக்கினான்.

ஆலயவாயிலில் நின்றிருந்த பூசகர் உரத்த குரலில் “லோபாமுத்திரை! விதர்ப்ப குலத்தின் முதலன்னை. உலகு புரக்கும் அம்மையையும் அப்பனையும் அருகிருந்து வணங்கும் அகத்தியனின் அறத்துணைவி. அன்னையை வணங்குக! அருகிருந்து அருளும் அகத்தியரை வணங்கி அருள் பெறுக!” என்று கூவினார். பூசெய்கைகள் செய்பவர்கள் மலரும் செப்புக்காசும் கொண்ட தாலங்களை நீட்ட அவற்றைப் பெற்று உள்ளே சென்று மலராட்டும் நீராட்டும் சுடராட்டும் முடித்து மலரை திருப்பி அளித்தார் பூசகர்.

ஒவ்வொரு ஆலய முகப்பிலும் நின்று வணங்கி பன்னிரண்டாவது ஆலயத்தை அடைந்தனர். பூசகர் “விதர்ப்ப குலத்தெழுந்த பேரரசி. ஒரு கோல் கீழ் பாரத நிலத்தை ஆண்டவள். விதர்ப்பகுலப் பேரரசர் பீமகர் மகள். பேரரசர் நளன் மணந்த மங்கை, தமயந்தி” என்று கூவினார். “வணங்கி அருள் கொள்க! உங்கள் செல்வியர் விழிகளில் தெய்வமெழுக!”

தமயந்தியின் கற்சிலை இரண்டடி உயரமிருந்தது. விரித்த குழல் தோளுக்குப்பின் பரவியிருக்க நிமிர்ந்த முகம் நிலைகொண்ட நோக்குடன் அறியாச்சொல் ஒன்றை இதழ்களில் நிறுத்தி காலத்திற்கு அப்பால் அமர்ந்திருந்தது. பணைத்த பெரும் தோள்கள். ஒரு கால் மடித்த அரையோக அமர்வு. கழல்கள். காலுக்குக்கீழ் கைக்கூப்பிய வடிவில் கலிதேவன் அமர்ந்திருந்தான். அவன் இரு தோள்களிலும் காகங்கள். திரௌபதி கைகூப்பி விழிகள் நிலைகொள்ள தமயந்தியை நோக்கியபடி நின்றாள். மேலும் மேலும் வந்து கொண்டிருந்த நிரை அவளை முட்டி சென்றுகொண்டிருக்க ஆற்றொழுக்கில் கட்டப்பட்ட படகென அவள் உடல் அசைந்துகொண்டிருந்தது.

பீமன் அவள் தோளைத் தட்டி “செல்வோம்” என்றான். “ஆம்” என்று அவள் விழித்து “செல்வோம்” என்றாள். மீண்டும் நிரையில் இணைந்து நடந்து பெரும் சாலையை அடைந்தார்கள். பீமன் அவளிடம் “காலடியில் கலி. வெற்றி கொண்டுவிட்டாள்” என்றான். திரௌபதி புன்னகைத்தாள்.

குண்டினபுரிக்குச் செல்லும் சாலை மேலும் மேலும் காட்டு வழிகள் வந்திணைய மக்கள் பெருகி ஒரு படைநகர்வென சென்று கொண்டிருந்தது. “எட்டு பெருஞ்சந்தைகளில் முதுவேனிற்சந்தையே மிகப் பெரிது” என்று அவனருகே வந்த முதிய கானகன் சொன்னான். “அங்கு எதையும் வாங்கலாம் என்கிறார்கள். காட்டிலிருந்து குரங்குக் குட்டிகளை பிடித்துச்சென்று பழக்கி அங்கு கொண்டுசென்று விற்கின்றனர் கிராதர். பழகிய குரங்குகளுக்கு பொன் விலையளிக்கிறார்கள். அவற்றை கலிங்க மாலுமிகள் விரும்பி வாங்குகிறார்கள்.” வியப்புடன் “எதற்கு?” என்றான் பீமன். “அவர்களின் கலங்களுக்கு மேலே ஆயிரமிதழ் தாமரைபோல எழுந்திருக்கும் பாய்களைக் கட்டவும் அவிழ்க்கவும் இக்குரங்குகள் மிக உதவியானவை. சில பெருங்கலங்களில் ஐம்பது குரங்குகள் வரை பயணம் செய்கின்றன” என்றான் ஒருவன்.

“சில குரங்குகள் பல முறை பீதர் நாடு சென்று வந்தவை என்கிறார்கள்” என்றான் ஓர் இளைஞன். “ஆண்டுக்கு ஒரு முறை மலையிறங்கி இந்தச் சந்தைக்கு வந்து செல்வதே நமக்கு வாழ்வின் பெருநிகழ்வாக இருக்கிறது” என்றார் அப்பால் பிறிதொருவர். “நன்கு பழக்கிவிட்டால் எனது குரங்குகள் மாலுமிகள் இல்லாமலேயே கலம் நடத்தும்” என்றான் குரங்குப்பெட்டியுடன் சென்ற கிராதன். “ஆம், மேலும் சற்று பழக்கினால் அவை பீதர் நாடு சென்று வணிகம் செய்தே

மீளக்கூடும்” என்றான் அப்பாலிருந்த இளைஞனொருவன். “அடுத்தமுறை வருகையில் பீதர்களின் மைந்தர்கள் குரங்குகளைப்போல வடம் தொற்றி ஏறுவார்கள்.”

பெருநகைப்பு எழுந்து பரவியது. ஒவ்வொருவரும் ஏதேனும் சொல்லி நகைக்க விரும்பினர். எதுவும் நகையாடலாக மாறிக்கொண்டிருந்தது. அனைவரும் உவகையில் ததும்பிக்கொண்டிருந்தார்கள். பெண்கள் பறவைகளைப்போல உடலெங்கும் நிலைகொள்ளாமல் திகழ தோழியரையும் குழவியரையும் கூவியழைத்தனர். ஒவ்வொன்றையும் விந்தையென குழந்தைகளுக்கு சுட்டிக்காட்டி அகவலோசை எழுப்பினர். கிளர்ச்சியடைந்த கோழிகளைப்போல முதிய பெண்கள் தலையை நீட்டி தாடையை அசைத்தனர்.

பீமன் திரௌபதியிடம் “சந்தையைப்போல இம்மக்களுக்கு மகிழ்வு கொடுப்பது பிறிதில்லை. செல்லுமிடமெல்லாம் சந்தையைத்தான் விரும்பிப் பார்க்கிறேன். தாங்கள் கொண்டிருக்கும் ஒவ்வொன்றுக்கும் நிகர்மதிப்பு பிறிதொன்றுள்ளது என்று இவர்கள் கண்டுகொள்வது சந்தையில்தான். சந்தையில் ஒவ்வொரு மலைமகனும் தனது நூற்றுக்கணக்கான நிகர்மாற்றுக்களை கண்டடைகிறான். இதோ கையில் அரக்குடன் செல்லும் இவன் விரும்பினால் ஒரு படைக்கலத்தை வாங்கலாம். ஒரு புலித்தோலை, ஒரு பொதி வெல்லத்தை, ஒரு மரவுரியைக்கூட வாங்கிக்கொள்ளலாம். உலகம் அவ்வாறு அவன் தொடும் தொலைவில் வந்து சூழ்ந்துகொள்வது இங்குதான்” என்றான்.

திரௌபதி “ஆம், பொருள் ஒவ்வொன்றும் ஒரு புது வாழ்வு. சற்று முன் நான் நரித்தோல் ஆடையொன்றை பார்த்தேன். ஒரு கணம் அதை அணிந்து ஒரு கிராதப்பெண்ணாக வாழ்ந்து

மீண்டேன்" என்றாள். தொலைவில் கொம்போசை எழுந்தது. நான்கு புரவிகள் கூட்டத்தை வகுந்தபடி குளம்போசையுடன் அணுகுவது தெரிந்தது. "விலகிக்கொள்! படைவீரர்கள்... அவர்கள் நம்மை பார்க்கலாகாது" என்று பீமன் திரௌபதியிடம் சொன்னான். "ஆம்" என்றபடி திரௌபதி கூட்டத்திற்குள் புகுந்து விலகி பெரிய நுணா மரத்தின் பின்னே பாதி உடல் மறைத்துக்கொண்டாள். அவளருகே முழுதுடலும் மறைத்தபடி பீமன் நின்றான்.

புரவிகள் பாய்ந்துசென்ற வழி நீரிலெழுந்த கோடுபோல அலையலையாக பின்பக்கம் விரிந்து அகன்றது. அது ஒரு பாதையாக மாற அதனூடாக மேலும் மேலும் புரவிகள் வந்தன. அவற்றில் மாட்டுத்தோல் கவசமணிந்த விதர்ப்ப வீரர்கள் உறையணிந்த கையிலேந்திய நீண்ட ஈட்டிகளுடன் அமர்ந்திருந்தனர். ஒருவன் தன் கொம்பை வாயில் பொருத்தி மும்முறை ஊத தொலைவில் அதை கேட்டு மீண்டும் ஒரு கொம்பூதி பிளிறல் ஓசை எழுப்பினான். கொம்பொலிகளின் தொடர் மிக அப்பால் சென்று மறைந்தது. "அரச ஊர்வலமா?" என்று திரௌபதி கேட்டாள். "அரசரல்ல... ஆனால் அரசனுக்கு நிகரானவன்" என்றான் பீமன்.

குண்டினபுரியின் வீரர்நிரைகளுக்குப் பின்னால் நிஷாதர்கள் படைநிரை ஒன்று மாட்டுத்தோல் கவசங்களும் இரும்பாலான தலையணிகளும் முனை ஒளிரும் ஆளுயர ஈட்டிகளுமாக சீர்நடையிட்டு வந்தது. அதற்குப் பின்னால் வெண்புரவி மீது ஒருவன் விற்கொடியை ஏந்தி வந்தான். "யாருடையது அக்கொடி?" என்றாள் திரௌபதி. "விற்கொடி மன்னர்கள் பலருக்கும் உரியதுதான். இதை நான் பார்த்ததில்லை. அதன் கீழ் ஒரு மீன் உள்ளது" என்றான் பீமன். முரசு வைக்கப்பட்ட

தட்டுவண்டி ஒன்றை இரு புரவிகள் இழுத்துச்சென்றன. அதில் நின்றிருந்த முரசுக்காரன் குறுந்தடியைச் சுழற்றி அதை முழக்கினான். தொடர்ந்து வந்த திறந்த தேரில் ஏழு மங்கலச் சூதர்கள் குறுமுழவுகளும் யாழும் கைமணிகளும் ஏந்தி அமர்ந்திருந்தனர்.

அதற்குப்பின் மூன்று காவல்தேர்கள் தொடுத்த விற்களை ஏந்திய வில்லவர்கள் நாற்புறமும் நின்றிருக்க வந்தன. அதற்குப்பின் பட்டுத் திரைச்சீலைகள் பறக்கும் அரசத்தேர் ஒன்று வந்தது. அதன் மீதும் அந்த விற்கொடி பறந்துகொண்டிருந்தது. “ஆம், ஓர் அரசன். நான் இதுவரை அறிந்திராதவன்” என்றான் பீமன். திரௌபதி “அவர் நிஷாத அரசர். அப்புரவி வீரர்கள் நிஷாதர்கள். நான்கு விரல்களால் அம்பு தொடுத்து பிடித்திருக்கிறார்கள்” என்றாள். பீமன் திரும்பி அவளை நோக்க “நிஷாதர்களில் விற்கொடி கொண்டவன் ஏகலவ்யன் மட்டுமே” என்றாள்.

பீமன் “ஆம்” என்று வியப்புடன் உரக்க சொன்னான். “நால்விரல் விற்கோள்... எப்படி இதை அறியத் தவறினேன்? ஏகலவ்யன்!” என்றான். அரசுத்தேர் அவர்களை அணுகி கடந்துசென்றது. அதன் பறக்கும் திரைகளினிடையே உள்ளே அரியணையில் உடைவாளை மடியில் சார்த்தி கைகளைக்கட்டி கண்களை மூடி சாய்ந்திருந்த ஏகலவ்யன் முகத்தை பீமன் கணநேர வாள்வீச்சுபோல மின்ன பார்த்தான். தேர் சென்று மறைந்ததும் புழுதி கிளப்பியபடி படைக்கலமேந்திய புரவி வீரர்களின் நிரை சென்றது.

“ஏகலவ்யனை ருக்மி தன் கோலுக்கு நிகரான கோலேந்திய மன்னராக ஏற்றுக்கொண்டிருக்கிறான். விந்தைதான்... இதைத்தான் அங்கு பேசிக்கொண்டார்கள்” என்றான் பீமன். “ஆம்,

இன்று களத்தில் இளைய யாதவருக்கு எதிராக முழு வஞ்சம் கொண்டு நிற்பவர்கள் இவர்கள் இருவருமே. இவர்கள் இருவரும் இணைவது இயல்பானது" என்றாள் திரௌபதி. பீமன் துயருடன் "மீண்டும் வஞ்சங்களின் உலகுக்குள் நுழைகிறோம். விட்டு வந்த காடு எத்தனை இனியதென்று எண்ணிக்கொள்கிறேன்"என்றான்.

# நீர்க்கோலம் - 19

### 18. அரவுக்குறை

புரந்தர முனிவரின் குருநிலையிலிருந்து பாண்டவர்கள் ஐவரும் திரௌபதியும் தனித்தனியாக கிளம்பி நிஷத நாட்டிற்குள் செல்வது நன்று என்று தருமன் சொன்னபோது பீமன் உரத்த குரலில் "நானும் தேவியும் இணைந்தே செல்கிறோம். அல்லது நம்மில் ஒருவர் தேவியுடன் இருக்கட்டும். இதுவரை நாம் அவளை தனியாக விட்டதில்லை" என்றான். தருமன் முகம் சுருங்க "நானும் அதை எண்ணினேன். அவள் இதுவரை மாற்றுரு கொண்டதே இல்லை. தன் புதிய உருவுடன் விழிகளுக்குமுன் அவள் இறங்கிச் செல்லட்டும். இங்கிருந்து நிஷத அரண்மனை வரை சென்று சேர்வது தன்னை உருமாற்றிக்கொள்வதற்கான பயிற்சியாக அமையும்" என்றார்.

பீமன் மீண்டும் சொல்லெடுப்பதற்குள் திரௌபதி "அரசர் கூறுவதே உகந்தது என்று நானும் எண்ணுகிறேன். என் புதிய முகத்தை நான் தனித்தே பயில விரும்புகிறேன்" என்றாள். பீமன் "ஆனால்..." என்று சொல்லத் தொடங்க "சைரந்திரி ஆணை அறியாத கன்னி. உங்களை கணவனென

எண்ணமாட்டாள், இளையவரே” என்றாள் திரௌபதி. பீமன் அவள் சொன்னதை முழுக்க உள்வாங்காமல் சிலகணங்கள் நோக்கிவிட்டு “நீ அவ்வண்ணம் எண்ணினால் நன்று” என்றான். “தன்னை காத்துக்கொள்ள அவள் பழகட்டும், இளையோனே” என்றார் தருமன். பீமன் தலையசைத்தான்.

குருகுலத்தின் முற்றத்தில் எரிந்த எண்ணெய் விளக்கின் ஒளிவட்டத்திற்கு அப்பால் மடியில் வில்லுடன் அமர்ந்திருந்த அர்ஜுனன் “நாம் அரண்மனைக்குத்தான் சென்றாக வேண்டும் என ஏன் எண்ணுகிறோம்?” என்றான். சகதேவன் “நேற்று மாலை அதை மூத்தவர் என்னிடம் கேட்டார். நாம் அரண்மனையில் மட்டும்தான் மறைந்திருக்க முடியும். குடிகளுடன் நம்மால் கலக்க முடியாது. நமது உடல்மொழியும் விழியொளியும் சொற்களும் சில நாட்களிலேயே நம்மை வேறுபடுத்திக் காட்டிவிடும்” என்றான். “ஆனால் அரண்மனை என்பது அவ்வாறு வேறுபட்டவர்கள் மட்டும் சென்று சேரும் ஓரிடம். அவ்வேறுபாடு அங்கு ஒரு தனித் தகுதியாக கருதப்படும்.”

தருமன் “அதை இளையவன் சொன்னபோது நானும் முழுதுணர்ந்தேன், இளையோனே. பாரதவர்ஷத்தில் நீள்குழலை கால்வரை விரித்திட்டு செல்லும் வேறொரு பெண் இருக்க வாய்ப்பில்லை” என்றார். அர்ஜுனன் “மெய்” என்றபின் எழுந்து “நாம் ஒவ்வொருவரும் எவ்வடிவில் செல்லப்போகிறோம் என்பதை முடிவு செய்துவிட்டோம். எப்படி எங்கு சந்திப்பதென்பதை வகுத்துக்கொள்வோம்” என்றான்.

“நாம் ஒருவரோடொருவர் எவ்வகையிலும் தொடர்புகொள்ள வேண்டியதில்லை” என்றார் தருமன். “குங்கன் என்ற பெயரில் அரசரின் சூதுத் தோழனாகவும் மதியுரைப்பவனாகவும் சென்று

சேரவிருக்கிறேன். எனது நூலறிவு அதற்கு உதவும். அங்கிருக்கையில் உங்கள் ஐவரையும் நான் கண்காணிக்கவும் இயலும். அதுவன்றி நம்மிடையே எவ்வித சொல் ஊடாட்டும் தேவையில்லை. ஒவ்வொருவரும் அவரவர் பாதையில் சென்று அங்கு வாழ்வோம். நாம் தனித்திருக்கையிலும் ஐவர் என்றே நம் உள்ளம் எண்ணுகிறது. நம் அசைவுகளில் எஞ்சிய நால்வர் எவ்வண்ணமோ வெளிப்படுகிறார்கள். ஐவரில் இருந்து உதிர்ந்து ஒருவரென்று ஆகாமல் நாம் மாற்றுரு கொள்ள இயலாது, இளையோரே."

சகதேவன் "ஆம்" என்றான். தருமன் திரௌபதியிடம் "நீ அரசியின் அடையாளத்தை துறக்கலாம். எங்கள் துணைவியென்னும் அடையாளமே துறக்கக் கடினமானது. கன்னியென்றாகி சைரந்திரியென மாறி அதிலிருந்து விடுபட்டாயென்றால் முற்றிலும் பிறிதொருத்தியென்றாவாய்" என்றார். பின்னர் புன்னகையுடன் "ஒருவேளை மீண்டு வர விரும்பாதவளும் ஆகக்கூடும்" என்றார். திரௌபதி புன்னகையுடன் "நான் முயல்கிறேன்" என்றாள். அவர்கள் ஐவருமே அவள் முகத்தை திரும்பி நோக்கி விழிவிலக்கினர்.

சற்றுநேரம் கழித்து சகதேவன் "நாளை கருக்கிருட்டிலேயே நான் இங்கிருந்து கிளம்பலாம் என்று எண்ணுகின்றேன், மூத்தவர்களே" என்றான். "அரிஷ்டநேமி என்னும் பெயரை எனக்கு நான் சூட்டியுள்ளேன். தென்னாட்டுக் கணியர்கள் அமணர்களாகவோ ஆசீவகர்களாகவோதான் இருக்கிறார்கள். ஆகவே ஐயமெழாது." நகுலன் "கிரந்திகன் என்று என்னை சமைத்துக்கொண்டிருக்கின்றேன். தேர்த்தொழிலும் புரவிநுட்பமும் தேர்ந்தவன், சௌவீரர்களின் நாட்டிலிருந்து வந்தவன்" என்றான். பீமன் புன்னகைத்து "ஆம். உன் முகத்தில்

மத்ர நாட்டு வண்ணமும் கூர்மையும் உள்ளது. சௌவீரனன்றி பிற எந்த அடையாளமும் உனக்கு பொருந்துவதல்ல” என்றான். நகுலன் “மாற்றுரு கொள்வதற்குக்கூட குறைந்த வாய்ப்புகளையே நம் உடல் வழங்குகிறது” என்றான்.

“வலவன் என்ற பெயரில் அடுமனை புகுவேன். அங்கு மல்லன் என்றும் அறியப்படுவேன்” என்றான் பீமன். “மேலும் குறுகுகிறது மாற்றுருவின் எல்லை. தோள்களை மறைக்கமுடியாது. வயிற்றை பேணியாகவேண்டும்” என்றான் நகுலன் சிரித்தபடி. அவர்களின் நோக்குகளனைத்தும் அர்ஜுனனை நோக்கி திரும்பின. அர்ஜுனன் “எனது காண்டீபத்தை இங்கு எங்கேனும் விட்டுவிட்டு செல்லவேண்டும்” என்றான். “ஆம், அது இருக்கும் வரை நீ விஜயன்” என்றார் தருமன். “இதுவரை வில்லை நீங்கியதில்லை. வில்லில்லாதபோது என்னிலெஞ்சுவது என்ன என்று அறியும் ஒரு தருணம் இது. நன்று” என்றபடி அர்ஜுனன் எழுந்தான். “என்ன பெயர் சூடவிருக்கிறாய்?” என்றார் தருமன். “பிரஹன்னளை” என்றான் அர்ஜுனன். “நீண்ட நாணல் என்று பொருள். நாணலின் குழைவு என்னில் கூடவேண்டும். முதிர்கையில் அம்பென கூர்கொண்டு இலக்கு தேர்வது அது.” சகதேவன் “நளனில் இருந்து அப்பெயரை எடுத்துக்கொண்டீர்கள் என எண்ணினேன்” என்றான். அர்ஜுனன் புன்னகைத்தான்.

சிலகணங்களுக்குப்பின் தருமன் “அத்தோற்றத்தில் என் முன்னால் வருவதை கூடுமானவரை தவிர்த்துவிடு” என்றார். அர்ஜுனன் “அத்தோற்றத்தில் ஆடியை நோக்கலாகாது என்று சற்று முன்பு வரை எண்ணிக்கொண்டிருந்தேன். ஆடியில் நோக்கி நோக்கித்தான் நான் அதுவாக முடியுமென்று இப்போது தோன்றுகிறது. மூத்தவரே, உங்கள் முன் தோன்றி உங்கள் விழிகளால் முற்றேற்கப்படுகையிலேயே நான் அதுவாக

ஆவேன்” என்றான். தருமன் நீள்மூச்சுடன் “இது ஒரு தவக்காலமென்றே தோன்றுகிறது. இதில் உழன்று மறுகரை தொடுகையில் நாம் அறியக்கூடுவன அனைத்தையும அறிந்திருப்போம். அதைவிட துறக்க வேண்டியன அனைத்தையும் துறந்திருப்போம்” என்றார்.

சகதேவன் “நாம் மீண்டும் சந்தித்து விடைபெறப்போவதில்லை, மூத்தவரே” என்று எழுந்து சென்று தருமன் காலடிகளைத் தொட்டு சென்னி சூடினான். “அப்பெயர் சூட ஏன் தோன்றியது இளையோனே?” என்றார் தருமன். “நான் என்றும் அப்பெயரிலிருந்து விலகியதில்லை, மூத்தவரே” என்றான் சகதேவன். “இவையனைத்திலிருந்தும் நான் ஆற்ற வேண்டியதை முடித்துவிட்டேன் என்றால் இங்கிருந்து கிளம்பி அப்பெருந்தவத்தார் வாழ்ந்த ரைவதமலைக்கே செல்வேன். அவர் இருந்த குகைக்குள் சென்றமர்வேன். ஆற்றியவை அடைந்தவை அனைத்தையும் இன்மை செய்து அவரேறிய முழுமையின் ஒரு துளியையேனும் நானும் அடைவேன்.” தருமன் உளம் கனிந்து அவன் தோளில் கைவைத்து “நீ அதுவாவாய், இளையோனே” என்றார்.

இரவில் தங்கள் குடிலுக்குச் சென்றதும் சகதேவன் நகுலனிடம் விடைபெற்றுக்கொண்டான். இயல்பான குரலில் “புலரியில் நாம் சந்திக்கப் போவதில்லை” என்றான். நகுலன் குழப்பமாக “ஏன்? நானும் உடனிருக்க நீ விடைபெற்றாலென்ன?” என்றான். “நான் சூடிக்கொண்ட பெயருக்கேற்ப கிளம்பிச் செல்லவிருக்கிறேன், மூத்தவரே” என்றான் சகதேவன். நகுலன் சிலகணங்களுக்குப் பின்னால் “இளையோனே, அவ்வாறு முற்றறுத்து கிளம்பிச் செல்ல மானுடருக்கு இயலுமா என்ன?” என்றான். சகதேவன்

“இயன்றிருக்கிறது. நேமிநாதர் அவ்வாறு கிளம்பிச் சென்றார்” என்று சொன்னான்.

“ஆம். ஆனால் மெல்ல அவரை கதையென திருவுருவென மாற்றி நம்புவதற்கு அப்பால் எங்கோ வைத்துவிட்டார்கள். தெய்வமென அவரை நம்பலாம். மானுடரென ஏற்பது கடினம்” என்றான் நகுலன். சகதேவன் “அறியேன். ஆனால் இந்தப் பெயருடன் அவரென சிறிது காலம் என்னை நடிக்கலாமென்றிருக்கிறேன். அதனூடாக ஒரு சிறு சாயல் என்மீது படியுமென்றாலும் நான் ஈட்டும் பெருஞ்செல்வம் அது என்றே கொள்வேன்” என்றான். “நன்று சூழ்க!” என்றான் நகுலன்.

இரவு உணவுண்டபின் சகதேவன் நகுலன் அருகே படுத்துக்கொண்டான். ஒரு சொல்லும் உரையாடாமல் ஒருவரை ஒருவர் உணர்ந்தபடி அவர்கள் நெடுநேரம் படுத்திருந்தனர். பின்னர் சகதேவனின் துயிலோசையைக் கேட்டபடி நகுலன் தன் எண்ணங்களுடன் தனித்து விழித்திருந்தான். புலரியில் இவனை நான் பார்க்கப் போவதில்லை. அன்னையைப் பிரிந்த நாள் முதல் ஒருபோதும் பிரிந்திராதவன். நெடுநாள் பிரிவல்ல. விரைவிலேயே மீண்டும் ஒரே இடத்தில் சந்திக்கப் போகிறவர்கள். ஆனால் அன்று அவன் பிறிதொருவனாக இருப்பான். நானும் பிறிதொருவனாக இருப்பேன். இரு அயல் முகங்கள் ஒன்றையொன்று கண்டுகொள்ளும். ஒருவரையொருவர் வரைந்து எடுக்கும் அவர்கள் எவராக இருப்பார்கள்?

விந்தையான அவ்வெண்ணத்தை எண்ணி அவனே புன்னகைத்துக்கொண்டான். விடியும்வரை துயிலப்போவதில்லை என்றுதான் தோன்றியது. ஆனால் சகதேவனின் சீரான மூச்சு அவனையும் துயிலுக்கு

ஆற்றுப்படுத்தியது. எப்போதுமே அவனுடைய உணர்வுகள் சகதேவனின் உணர்வுகளின் நிழலாட்டம் போலவே நிகழ்ந்தன. அல்லது தன் நிழல் அவன். கரிய உடலுக்கு வெண்ணிழல். இருவரும் சேர்ந்தே அடைவது வழக்கம். தனக்கென ஓர் உணர்வு உருவானதே இல்லையா? பின்னோக்கிச் சென்று தேடத்தேட அத்தனை உணர்வுகளிலும் இருவராகவே இருந்ததுதான் நினைவுக்கு வந்தது. சினம், துயர், உவகை அனைத்தும். ஏன் தனிமையைக்கூட. எண்ணத்தை ஓட்டும்தோறும் மிக தனிப்பட்ட ஓர் எல்லைக்குச் சென்று அவன் திடுக்கிட்டு பின்வாங்கிக்கொண்டான்.

ஓராண்டு தனிமையில் இருக்கவேண்டும். பாதியாக. உள்ளத்தால். உடலாலும் கூடத்தான். புரண்டு புரண்டு படுத்து அதைக் குறித்தே எண்ணிக்கொண்டிருந்தான். தன் பெயர் என்ன? கிரந்திகன். நூலோன். ஏன் அப்பெயரை தெரிவு செய்தேன்? அவன் அகம் ஒரு சிலிர்ப்பை அடைந்தது. அது அவனைவிட சகதேவனுக்கே பொருத்தமான பெயர். அவனுக்குத்தான் நான் பெயர் சூட்டியிருக்கிறேன். அவனைத்தான் நடிக்கப்போகிறேன். என்னுள் இருக்கும் நான் வெண்ணிற உடல்கொண்டவன். அவனுக்குள் கரிய சகதேவன் வாழ்கிறானா என்ன? நாளை அங்கே அரிஷ்டநேமிக்குள் கிரந்திகனும் கிரந்திகனுக்குள் அரிஷ்டநேமியுமென வாழவிருக்கிறோமா?

சலிப்புடன் மீண்டும் புரண்டு படுத்தான். இல்லை, அப்பெயரை நான் முழுமையாக ஓர் ஆளுமையாக ஆக்கிக்கொள்ள முடியும். அவன் இல்லாத ஓர் உடல், உள்ளம். புரவிகள் தேர்கள் சூதர்பெண்கள். அவ்வாழ்க்கையில் ஒரு சொல்லைக்கூட நான் இவனிடம் சொல்லப்போவதில்லை. ஓர்

எண்ணத்தைக்கூட இவனுடன் இணைத்துக்கொள்ளப் போவதில்லை. ஆம், அதை முயன்றாகவேண்டும். தனித்திருக்க முடியுமா என்று அறிந்தாகவேண்டும். நான் என எஞ்சுவதென்ன என்று. ஒருவேளை போரில்... மெய்ப்பு கொண்டு அவன் உடலை இறுக்கிக்கொண்டு சிலகணங்கள் உறைந்தான். பின்னர் தன்னை மீட்டுக்கொண்டு தொடர்ந்தான். ஒருவேளை அவன் இறந்து நான் எஞ்சினால் எவ்வண்ணம் இருப்பேன் என பயின்றாகவேண்டும். காட்டுக்குச் சென்று மரத்தடி ஒன்றில் அமர்ந்து தவம்செய்து உயிர்விடுவதற்காவது எனக்கென ஏதும் எஞ்சுமா என்று பார்க்கவேண்டும். ஒரு விதையேனும்.

எஞ்சாமலிருக்காது. எவரும் ஆழத்தில் தனியர்களே. ஒரு துளித் தனிமை, தன்னுணர்வின் ஓர் அணு அங்கே எஞ்சியிருக்கும். அதை வளர்த்தெடுக்க முடியும். அந்த எண்ணம் மெல்ல தித்திக்கத் தொடங்கியது. முற்றிலும் தனியாக நடக்கும் அவனை அவனே நோக்கிக்கொண்டிருந்தான். அந்த உருவம் நிழலற்றிருந்தது. தயங்கி காலெடுத்து நீரா நிலமா என்றறியாததுபோல் நடந்தது. பின்னர் கைகளை வீசியது. தலை தூக்கி வானை நோக்கியது. கைகளில் காணாச்சிறகுகள் எழுகின்றன. அதன் கால்கள் தரையிலிருந்து தென்னித் தென்னி எழத்தொடங்குகின்றன. பஞ்சை மென்காற்றென சூழ்வானம் அதை அலைக்கழிக்கவும் தாலாட்டவும் தொடங்குகிறது. அவன் அதை உள்ளக் கிளர்ச்சியுடன் நோக்கிக்கொண்டிருந்தான். ஆனால் எங்கோ அறியாது ஒரு திடுக்கிடலை உள்ளம் அடைந்தது. உடல் பதறத் தொடங்கியது. அவன் திரும்பிப் படுத்து பெருமூச்சுவிட்டான்.

ஆனால் இவன் கிளம்பிச் செல்கிறான். கிளம்பிச் செல்லுதல் என்னும் கனவு நெடுங்காலம் உள்ளூர இருந்திருக்கிறது. இந்தப்

பெயரையே முன்னர் தெரிவு செய்து வைத்திருந்திருக்கிறான் போலும். நெடுங்காலம் இதை ஒரு கரவுப் படைக்கலம்போல கூர்முனையை வருடிக்கொண்டிருந்திருக்கிறான். ஒரு நச்சுச் சிமிழ்போல பட்டில் பொதிந்து வைத்திருந்திருக்கிறான். நாளை இருளில் அவன் கிளம்பிச்செல்வது என்னிடமிருந்தா? தான் என தனித்து இருக்க அவனால் இயலுமா? ஒருமுறை பிரிந்த எதுவும் கூடுவதே இல்லை என்பதே பொருள்களின் இயல்பென்று அவன் கற்றிருந்தான். அவ்வாறென்றால் இதுவே இறுதி இரவு. அவன் இருளுக்குள் சகதேவனை கூர்ந்து நோக்கினான். இவன் நாளை இருளில் கிளம்புவது என்னிடம் விடைபெற இயலாதென்று அஞ்சித்தானா? எழுந்து அவன் முன் எரியும் விழிகளுடன் நான் நின்றால் எப்படி கிளம்பிச்செல்வான்? தொப்புள்கொடி அறுத்த குருதி சொட்ட விலகுவானா என்ன?

விழித்தெழுந்தபோது அவன் அடைந்த முதலெண்ணமே அருகே சகதேவன் இருக்கிறானா என்பதுதான். கைநீட்டி தேடாமலேயே இல்லையென்று உணர்ந்து நெஞ்சு திடுக்கிட எழுந்து அமர்ந்தான். அவன் படுத்திருந்த ஈச்சையோலைப்பாய் சுருட்டி வைக்கப்பட்டிருந்தது. சகதேவன் எப்படி அகன்றிருப்பான் என்று தன் உள்ளத்தில் எண்ணி நிகழ்த்திக்கொள்ள நகுலன் முயன்றான். அவ்வெண்ணத்தையே அகம் மறுத்தது. எழுந்து இருட்டு அடர்ந்துகிடந்த சூழ்சோலையை நோக்கிக்கொண்டிருந்தான். விழி தெளிந்தபோது மரங்களின் கருங்குவைகளும் இலைகளின் விளிம்புகளும் உருவாகி வந்தன. விண்மீன்கள் சரிந்த வானம் இலைத்தழைப்புகளினூடாக துலங்கியது. காற்றே இல்லை. ஒவ்வொன்றும் அசைவற்று ஓவியச் சுவரென சமைந்திருந்தன. நகுலன் நீள்மூச்செறிந்தான்.

❀கருக்கிருட்டிலேயே குருநிலையிலிருந்து வெளியேறி சோலைக்குள் புகுந்து விண்மீன்களைக்கொண்டு திசைதேர்ந்து தென்மேற்காக சகதேவன் நடந்தான். இருட்டு நரைத்து விழி துலங்க வண்ணங்களும் வடிவங்களும் கொண்டு புலரி எழுந்தது. முகில்களின் விளிம்புகளில் கசிந்த வெளிச்சம் மண்ணை தெளிய வைத்தபோது கோதாவரிக்குச் செல்லும் சிற்றாறு ஒன்றின் கரையை அவன் அடைந்தான். அங்கு படித்துறை ஒன்றில் நீர்மருதமரத்தின் வேர்மடிப்புக்குள் அமர்ந்திருந்த முதிய நாவிதனை அணுகி அவனருகே அமர்ந்து "முழுமுடி களைதல்" என்றான். அவன் விழிகள் மாறுபட "தாங்கள் அமணர்த்துறவு கொள்ளப்போகிறீர்களா, உத்தமரே?" என்றான். "ஆம்" என்றான் சகதேவன். "வடக்குநோக்கி அமருங்கள், அதுவே மரபு" என்றான் நாவிதன். சகதேவன் வடக்குநோக்கி மலரமர்வில் கால்மடித்து அமர்ந்துகொண்டான்.

நாவிதன் "என் பெயர் சங்கன். நான் இதுவரை நூற்றுக்கணக்கான அமணர்களுக்கு முழுமழிப்பு செய்துள்ளேன்" என்றான். தன் தோல்பையை எடுத்து கத்தியையும் தேய்ப்புக் கல்லையும் எடுத்து பரப்பினான். படிகாரக்கல் பளிங்குபோல ஒளியுடன் இருந்தது. பனையோலையைப் போன்றிருந்த தேய்ப்புக் கல்லில் கத்தியை தீட்டிவிட்டு சொரசொரப்பான உள்ளங்கையிலதை மீள மீள நீவியபின் சகதேவனின் உச்சித்தலையில் வைத்து "அருகர் புகழ் ஓங்குக!" என்றழைத்துக் கொண்டு கீழ்நோக்கி இழுத்தான். சுருள்முடிக் கற்றையொன்று சகதேவனின் மடியில் உதிர்ந்தது. காட்டுத்தீயில் எரிந்த சருகின் கரிச்சுருள் போல.

மேலும் மேலுமென குழல்கற்றைகள் மடியில் விழுந்தன. காக்கைச் சிறகுகள். காய்ந்த வாகைநெற்றுக்கள். மடியில்

கோழிக்குஞ்சுகள் கிடப்பது போலிருந்தது. உயிரின் நுண்துடிப்பு கொண்டது, முற்கணம் வரை நான் என எண்ணுகையில் இணைந்திருந்தது. இன்று பிறிதொன்று. அவன் அதை உதறினான். மண்ணில் விழுந்து கிடந்தது. இப்போதே மட்கத் தொடங்கிவிட்டிருக்கும். ஓரிரு நாட்களுக்குள் நாற்றம் கொள்ளும். நாள் சென்றபின் தோண்டிப் பார்த்தால் உப்பென்று எஞ்சும்.

தன் முடியில் அத்தனை நரை இருப்பதை சகதேவன் அப்போதுதான் உணர்ந்தான். தலையை மழித்து முடித்ததும் நீர் அள்ளித்தெளித்து படிகாரத்தைக் கொண்டு வருடினான். மெல்லிய எரிச்சலுடன் வெறுந்தலையை உணர்ந்தான். காற்று அவன் தலையின் தோல் வளைவை தடவிச்சென்றது. தேவையே அற்ற இத்தனை எடையை தன்னுணர்வே இல்லாமல் தலையில் தாங்கியிருக்கிறோம் என்று எண்ணியபோது புன்னகை வந்தது. ஒவ்வொரு கணமும் முடியின்மையை தலையில், முகத்தில் தாடையில் உணர்ந்தான். ஆடைகளைந்த உடலின் விடுதலை போலிருந்தது.

“எழுந்து நில்லுங்கள், உத்தமரே” என்றான் நாவிதன். அவன் எழுந்து நின்றபோது அவன் இடையணிந்த ஆடையை நாவிதன் களைந்து அப்பாலிட்டான். அறியாது திடுக்கிட்டு கையால் அதைப் பற்ற “ஆடை களைவதே அமணத்தின் முதல்படி, உத்தமரே” என முதுநாவிதன் கரிய பற்களைக்காட்டிச் சிரித்தபடி சொன்னான். “ஆம்” என அவன் திணறியபடி சொன்னான். “முழுதுடல்” என்றான் நாவிதன். “நீங்கள் தேர்ந்த போர்வீரர் என நினைக்கிறேன்.” சகதேவன் “படைக்கலம் பயின்றுள்ளேன்” என்றான். நாவிதனின் கத்தி அவன் உடல்மேல்

வருடிச்சென்றது. தூரிகை ஓர் ஓவியத்தை வரைந்தெடுப்பதுபோல அவனை அது தீட்டியது. அவன் உருவம் காற்றில் திரண்டு வந்தபடியே இருந்தது.

“தங்களுக்கு உடன்பிறந்தார் உள்ளனரா, உத்தமரே?” என்றான் நாவிதன். “இல்லை” என்றான் சகதேவன். “இறந்துவிட்டனரா?” என்றான். “ஆம்” என்றான் சகதேவன். “உங்கள் தொப்புள் காட்டுகிறது, இரட்டையர் நீங்கள் என்று. அவர் எப்படி மறைந்தார்?” சகதேவன் சிலகணங்களுக்குப்பின் பெருமூச்சுடன் தன்னைப் பெயர்த்து “போரில்” என்றான். நாவிதன் அவன் முழங்கால்களை மழித்துக்கொண்டிருந்தான். “எவருடனான போரில்?” என்றான். “என்னுடன்” என்றான் சகதேவன். நாவிதன் ஏறிட்டுப் பார்த்தான். கையில் கத்தி கூர் ஒளிர நின்றிருந்தது. “அருகர் அடி பணிக! விடுதலை கொள்க!” என்றபின் அவன் மீண்டும் மழிக்கத்தொடங்கினான். தன் உடலைச் சூழ்ந்து பறந்த காற்றை சகதேவன் உணர்ந்தான்.

சகதேவன் விராடபுரிக்கு பின்னுச்சிப்பொழுதில் சென்று சேர்ந்தான். இடையில் மரவுரி ஆடை அணிந்து முண்டனம் செய்த தலையுடன் கையில் கப்பரையுடன் நடந்த அவனை அருகநெறி வணிகர் வணங்கி தங்களுடன் சேர்த்துக்கொண்டனர். ஒரு பொழுது உணவை உண்டு வெறும் மண்ணில் படுத்து உறங்கி அவன் அவர்களுடன் சென்றான். வணிகர்களில் சிலர் விராடபுரியை அப்போதும் கிரிப்பிரஸ்தம் என்றே சொன்னார்கள். “ஒரு காலத்தில் அந்த மலையின் பெயர் அஸனிகிரி. பின்னர் பரசுராமர் அளித்த இந்திரனின் சிலையை அங்கே நிறுவி அதை கிரிப்பிரஸ்தம் என்றழைத்தனர். நள மாமன்னர் நிறுவிய மாபெரும் இந்திரன் சிலை அங்கிருந்ததாகச் சொல்கிறார்கள். அப்போது அது

இந்திரகிரி என்று பெயர் பெற்றது. அன்று மலைவணிகத்தின் மையம் இந்நகர்” என்றார் மூத்தவணிகரான பூர்ணசந்திரர்.

“நள மாமன்னருக்குப்பின் நிஷதகுடிகள் ஒருவரோடொருவர் போரிட்டு ஆற்றல் அழிந்தனர். கீழிருந்து சதகர்ணிகள் பெருகிவந்து அவர்களை வென்றனர். நிஷாதர்கள் சிதறிப்பரந்து பதினெட்டு பெருங்குடிகளாகவும் எழுபத்தி நான்கு சிறுகுடிகளாகவும் ஆகி சதகர்ணிகளுக்கு கப்பம் கட்டலானார்கள். நிஷாதர்களில் பெரியதான சபரர்குடி கிரிப்பிரஸ்தத்தின் கீழே கோதையின் கரையில் மீன்பிடிக்கும் மச்சர்குடியாக நீடித்தது. நூறாண்டுகளுக்குப்பின் அக்குடியில் பிறந்த இரண்டாவது மகாகீசகர் மீண்டும் பிற குலங்களை இணைத்துக்கொண்டு விராடநிஷதசம்யோகம் என்னும் அமைப்பை உருவாக்கினார். அவர்களின் ஊர் இந்திரனின் குன்றுக்குக் கீழே விராடபுரி என்னும் நகரமாக உருவாகி வந்தது. இன்று தென்னகத்தின் மிகத் தொன்மையான பெருநகர் இது. மலைவணிக மையமாகவும் திகழ்கிறது” என்றார் இன்னொரு வணிகரான நாகநாதர்.

விராடபுரி அவ்வளவு பெரியதாக இருக்கும் என்று சகதேவன் எதிர்பார்த்திருக்கவில்லை. முதற்காவல்கோட்டத்தைக் கண்டதுமே அவன் வியப்படைந்தான். மகதத்தின் காவல்மாடங்களுக்கு நிகராக பன்னிரு அடுக்குகளுடன் உச்சிமாடத்தில் ஏழு பெருமுரசுகளுடன், அதற்கடுத்த மாடத்தில் அம்பு தொடுக்கப்பட்ட விற்பொறிகளுடன் நின்றிருந்தது. அதன் கீழே சென்ற அகன்ற சாலை மரப்பாளங்கள் சீராக அடுக்கப்பட்டு சேறும் புழுதியும் எழாது உறுதிப்படுத்தப்பட்டிருந்தது. அதன்மேல் சகடங்களும்

குளம்புகளும் செல்லும் ஓசை அறுபடாது எழுந்துகொண்டிருந்தது.

விராடபுரியை சுற்றிச்சென்ற கோட்டை பனைமர உயரமான கல்லடுக்குக்குமேல் செங்கல்கட்டு கொண்டிருந்தது. அதன்மேல் முகப்புமுற்றத்தை நோக்கியபடி பன்னிரு காவல்மாடங்கள் மழையில் கரிந்த மரக்கூரைகளுடன் மாலைவெயிலில் ஒளிகொண்டு மின்னிச் சரிந்திருந்தன. அங்கு நின்றிருந்த காவலர்களின் வேல்முனைகளும் இரும்புக் கவசங்களும் மின்னின. எட்டு நிரைகளாக தேர்களும் வண்டிகளும் அத்திரிகளும் புரவிகளும் தலைச்சுமையர்களும் கால்நடையர்களும் உள்ளே சென்றுகொண்டிருந்தனர். ஒவ்வொரு நிரையும் வெவ்வேறு சுங்கச்சாவடிகளுக்குள் நுழைந்து மறுபக்கம் வெளியேறின.

சுங்கக்காவலன் சகதேவனைப் பார்த்ததும் ஒருகணம் விழி சுருங்கினான். “நீர் ஷத்ரியரா?” என்றான். “ஆம், படைக்கலம் பயின்றவன்” என்றான் சகதேவன். மேலும் சில கணங்கள் நோக்கியபின் அவன் திரும்பி முதிய தலைமைக்காவலனிடம் ஏதோ சொன்னான். அவன் “மூடா, அவர் முகமே காட்டுகிறதே. நூலறிந்தவர், அறமுணர்ந்தவர், இங்கிருப்பினும் எக்கணமும் கடந்துசெல்லக்கூடியவர்” என்றபின் சகதேவனிடம் “உத்தமரே, எளியவனின் வணக்கத்தை பெற்றுக்கொள்க!” என்றான். “நலம் திகழ்க! அருகனருள் சூழ்க!” என்றான் சகதேவன். “தங்கள் பெயர் என்ன என்றறியலாமா?” என்றான் முதிய தலைமைக்காவலன். “அரிஷ்டநேமி என்னும் பெயரை சூடிக்கொண்டிருக்கிறேன்” என்றான் சகதேவன்.

சகதேவனின் அருகே நின்ற நாகநாதர் “அனைத்து நெறிநூல்களையும் கற்றிருக்கிறார். கணித்தொழில் சிறந்தவர்.

அரசர் இவரை சந்திப்பது நன்று” என்றார். அவன் தலைவணங்கி “அவ்வாறே நானும் எண்ணுகிறேன். உத்தமரே, இவரை உங்களுக்கு அணுக்கனாக அனுப்புகிறேன். எங்கள் அரண்மனை புகுந்து அரசரை சந்திக்க உளம்கொள்ளவேண்டும்” என்றான். சகதேவன் “அவ்வண்ணமே ஆகுக!” என்றான். நாகநாதர் “தங்கள் சொல்சூழ்திறம் விராடபுரியின் அரசருக்கு நலமுரைக்கட்டும், உத்தமரே. இத்தனை தூரம் எங்களுடன் தாங்கள் வந்தமைக்கு நாங்கள் நல்வினை ஈட்டியிருக்கிறோம்” என்றார்.

துணைவந்த வீரனுடன் சகதேவன் விராடபுரியின் தெருக்களினூடாக நடந்தான். ஆரியவர்த்தத்தின் பெருநகர் ஒன்றுக்கு நிகராக சீராக நிரைகொண்ட ஏழ்மாட அடுக்குகளும் இரு மருங்கும் அணித்தோரணத் தூண்களும் நகர் முழுமையையும் நோக்கும்படி அமைந்த காவல்மாடங்களுமாக விரிந்துகொண்டே சென்றது விராடபுரி. வணிகத்தெருக்களில் வண்ணக் கொப்பளிப்பென நகர்மக்கள் நெருக்கியடித்தனர். விலைக்கூவல்களும் கொள்குரல்களும் உசாவலோசைகளும் கலங்களும் பொருட்களும் முட்டியும் இழுபட்டும் எழுப்பும் அரவங்களும் கலந்து செவிநிறைத்தன.

தெருமுனைகள் முழுக்க அன்னசாலைகள் நிறைந்திருந்ததை சகதேவன் கண்டான். அது உணவுண்ணும் பொழுதல்ல என்றாலும் கூட்டம் செறிந்து உண்ணொலி பெருகி எழுந்துகொண்டிருந்தது. அவை இரவலர்க்கும் அயலவருக்கும் மட்டும் உரியவை அல்ல என்று தெரிந்தது. அங்கே நகர்மக்களும் அன்னசாலைகளில்தான் கூடி உண்கிறார்கள் எனத் தோன்றியது. ஆரியவர்த்தத்தின் நகர்களில் விழவுக்காலங்களில் மதுக்களியாட்டின்போது மட்டுமே திகழும் உவகை அங்கே தெரிந்த அத்தனை முகங்களிலும்

நிறைந்திருந்தது. வெண்மலர்கள் செறிந்த தேக்குக்காடுபோல நகர்த்திரள் சிரிப்புகளாலானதாக இருந்தது.

அரண்மனைக் கோட்டையை அடைந்தபோது நெடுங்காலம் கடந்துவிட்டதைப்போல உணர்ந்தான். நகரம் என்பது காலப்பரப்பாக மாறியது. முகங்கள், இடங்கள், ஒலிகள் ஒன்றை ஒன்று கவ்வி நீண்டு சுற்றிச்சுற்றி ஒரு கண்டாக ஆகி நிற்பது. அரண்மனைக் கோட்டை வாயிலில் காவலன் அவனை சிற்றமைச்சர் தைவதரிடம் அழைத்துச்சென்றான். அவர் எழுந்து கைகூப்பி வணங்கி "அடிகள் முன் நிற்கும் பேறு பெற்றேன். எங்கள் அரசரை திருவிழி நோக்க உளமருளவேண்டும்" என்றார். "அவ்வாறே ஆகுக!" என்றான் சகதேவன்.

விராடபுரியில் வேதமாமுனிவர்களுக்கு நிகரான வணக்கம் அருகநெறியினருக்கு இருப்பதை சகதேவன் உணர்ந்தான். அவனை அரண்மனை அமைச்சர் முக்தர் எதிர்கொண்டு வரவேற்று கொண்டுசென்றார். "அரசவை கூடியிருக்கிறது, உத்தமரே. தாங்கள் அரசரைக் கண்டு அருட்சொல் உரைத்த பின்னர் தங்களுக்குரிய குடிலுக்குச் செல்லலாம். தாங்கள் விரும்பிய வண்ணம் அனைத்தும் இங்கே அமைத்தளிப்பதை எங்கள் நல்லூழாகக் கருதுவோம்" என்றார்.

அமைச்சர்களும் குடித்தலைவர்களும் கூடிய அவையில் அவன் வரவறிவிக்கப்பட்டதும் காவலன் அழைத்துச்செல்ல சகதேவன் உள்ளே நுழைந்தான். அவையினர் எழுந்து நின்று "அருகனடிகளுக்கு தலை தாழ்த்துகிறோம்" என்று வணக்கச் சொல்லுரைத்தனர். அரியணையில் அமர்ந்திருந்த மகாவிராடரான தீர்க்கபாகுவும் பட்டத்தரசி சுதேஷ்ணையும் எழுந்து "அருகனடி தொழுகிறோம், உத்தமரே" என்று கைகூப்பி வணங்கினர். தலைமையமைச்சர் விருதர் வணங்கி

முகமனுரைத்து அழைத்துச்சென்று அரியணைக்கு வலப்பக்கம் அருகநெறியினர் அமர்வதற்காக அமைக்கப்பட்டிருந்த சாணிபூசப்பட்ட மண்திண்டில் அமரச்செய்தார்.

“அடிகள் இவ்வவைக்கு எழுந்தருளியதனால் அருள்பெற்றோம். கருணைச்சொல் பெறக் காத்திருக்கிறோம்” என்றான் விராடன். சகதேவன் “அரசே, நான் அருகநெறியை ஏற்று சிலநாட்களே ஆகின்றன. நான் அதுவாக முனையும் எளியவன் மட்டுமே. அதற்கப்பால் நான் யாரென்று கேட்கவேண்டியதில்லை. இந்த வணக்கங்கள் அனைத்தும் இந்த உருவுக்கும் இவ்வுருகொண்டு இங்கு அமைந்து நிறைந்தவரும் திகழ்பவருமான அருகநெறியினருக்கே என்று கொள்கிறேன்” என்றான். விராடன் “ஆம், தங்கள் சொல்லை தலைக்கொள்கிறோம்” என்றான்.

“தாங்கள் கணியர் என்றார்கள். நல்லூழாக தாங்கள் அவை நுழையும்போது என் மகளைக் குறித்தே பேசிக்கொண்டிருந்தோம். அவள் வருவாழ்வை கணித்துரைக்கவேண்டும்” என்றாள் அரசி சுதேஷ்ணை. “ஆம்” என்றான் சகதேவன். அரசி திரும்பி தன்னருகே நின்ற சேடியிடம் “இளவரசியை வரச் சொல்க!” என்றாள். அவள் பட்டுத்திரைக்குப் பின்னால் சென்று அங்கு அமர்ந்திருந்த இளவரசியை அழைத்துக்கொண்டு வந்தாள். “என் மகள் உத்தரை, வரும் ஆவணியில் பதினெட்டு அகவை நிறைகிறது” என்றாள் அரசி.

உத்தரை ஆலிலை வடிவ முகமும், நீண்டு வளைந்த விழிகளும் சிறிய குமிழ் மூக்கும் சற்றே மேலெழுந்து வளைந்த சிவந்த சிற்றிதழ்களும் கொண்டிருந்தாள். மின்னும் கரியநிற உடல். வெண்பட்டாடை அணிந்திருந்தாள். வலச்சரிவுக் கொண்டையில் முத்துச்சரம் சுற்றி கழுத்தில்

வெண்முத்து ஆரம் அணிந்திருந்தாள். கைகளில் சங்கு வளையல்கள். சிலம்புகளின் மென்சிணுங்கல் சொல்லழிந்து விழிகள் விரிந்து அமர்ந்திருந்த அவையில் தெளிவாக ஒலித்தது. அவள் வந்து கைகூப்பி நின்றாள். காற்றிலாடிய ஆடையில் அவள் உடலே மெல்லிய மலர்க்கொடி என துவள்வதாகத் தோன்றியது.

"அவள் பிறவிநூலை தங்களிடம் அளிக்கிறேன், உத்தமரே" என்றாள் சுதேஷ்ணை. "வேண்டியதில்லை, முகக்குறிகளே போதும்" என்றான் சகதேவன். "ஆவணி மாதம் ஆயில்யம் நாளில் ஞாயிற்றுக்கிழமை முதற்பொழுதின் முதல்நாழிகை ஏழாவது மணியில் பிறந்தாள். பிறந்த பொழுதுக்கு சற்றுமுன் அரண்மனை அகத்தளத்தில் நாகம் ஒன்று விழிப்பட்டது."

"ஆம்" என்றாள் அரசி கைகூப்பியபடி. "நன்றும் தீதும் உண்டு அரசி. பெருங்குலம் ஒன்றுக்கு திருமகளாவாள். பெருவீரனை மணப்பாள். அவள் வயிற்றில் பிறக்கும் மகன் பாரதவர்ஷத்தின் சக்ரவர்த்தி என்றமைவான். அவன் கொடிவழியினர் பாரதவர்ஷத்தை முழுதாள்வார்கள். இந்நிலம் இங்கு உள்ளளவும் இவள் பெயரும் இவள் குடிநிரையினர் புகழும் இங்கு பேசப்படும். இமய மலைகளைப்போல கங்கை நதியைப்போல முக்கடல் முனையைப்போல" என்றான் சகதேவன். அரசியின் கண்கள் கலங்கிவிட்டன.

"ஆனால் அரவுக்குறை கொண்டது இவள் பிறவிநூல். என்றும் இவளுடன் நாகவஞ்சம் தொடரும்" என்றான் சகதேவன். அரசி கூப்பிய கைகள் நடுங்க "அதற்கு மாற்றுசூழ இயலுமா, கணிகரே?" என்றாள். "இல்லை, ஊழ் மருந்தற்ற நோய்" என்றான் சகதேவன். "நாகம் இப்புடவி நெசவின் ஊடுபாவுகளில் ஓடும் அழியாச்சரடு." பெருமூச்சுடன் "இறையருள் சூழ்வோம்.

வேறேது செய்ய இயலும்?” என்றான் விராடன். “ஆம், மூதன்னையர் அருளட்டும்” என்றாள் அரசி. விராடன் “உத்தமரே, இங்கு அரண்மனைச் சோலையின் குடிலில் தாங்கள் விரும்பும் காலம் வரை உறைக! உங்கள் சொற்கள் எங்களுக்கு பாதை வெளிச்சமாகுக!” என்றான். “நன்று சூழ்க!” என சகதேவன் வாழ்த்தினான்.

# நீர்க்கோலம் - 20

### 19. புறமெழுதல்

சகதேவன் தங்கியிருந்த சிறுகுடில் விராடநகரியின் தென்மேற்கு மூலையில் இருந்த பிருங்கவனம் என்னும் சோலைக்குள் அமைந்திருந்தது. நகருக்குள் வரும் தவத்தார் தங்குவதற்கான இடமாக அது நீண்ட காலமாக உருவாகி வந்திருந்தது. நகரிலிருந்து எந்த ஒலியும் அதை அடையவில்லை. நகரத்தின் தெற்குச் சுற்றுப்பாதையில் இருந்து பிரிந்த ஒற்றையடிப்பாதை இருபுறமும் எழுந்த மலர்ப்புதர்களின் நடுவே கொடியென வளைந்துசென்று அந்தச் சோலையின் வெளிவட்டமாக அமைந்த இலந்தை, நாவல், அத்தி, மா, பலா என்னும் பழ மரக்கூட்டங்களுக்குள் நுழைந்தது. பின்னர் இருள்நீலச் சுனைக்குள் இறங்கி மறையும் ஓடைபோல குளிர்ந்த நிழலுக்குள் புதைந்தது.

எப்போதும் ஏதேனும் ஒரு பழ மரம் கனிவு செறிந்திருக்கும்படி அந்தச் சோலை திட்டமிடப்பட்டிருந்தமையால் தலைக்குமேல் பறவைகளும் குரங்குக் கூட்டங்களும் எப்போதும் ஒலியெழுப்பி நிறைந்திருந்தன. கோதையின் மேல்வளைவில் இருந்து வெட்டித் திருப்பி கொண்டுவரப்பட்ட நீரோடை எட்டு

கிளைகளாகப் பிரிந்து அச்சோலைக்குள் நுழைந்து மேலும் பதினெட்டு சிற்றோடைகளாக ஆகி வழிந்தோடி மீண்டும் ஒன்றென்றாகி அப்பாலிறங்கி அருவியெனக் கொட்டி கோதை நோக்கி சென்றது. அந்நீரோடைகளின் ஓசை காட்டின் இலைப்பசுமையின் இருளுக்குள் எப்போதும் சூழ்ந்திருந்தது.

வேர்முனைகளின் செறிவாலும் நாணல்களாலும் வரம்பிடப்பட்ட நீரோடைகளில் நீர் காற்றைப்போல வண்ணமில்லாமல் நெளிவு மட்டுமேயாக சென்றுகொண்டிருந்தது. ஒவ்வொரு குடில்தொகையும் ஓர் ஓடையின் அருகே பிறவற்றை முற்றிலும் அறியாதபடி கட்டப்பட்டிருந்தது. அடர்காட்டில் தனித்துவிடப்பட்ட தவநிலை எனத் தோன்றினாலும் அத்தனை குடில்களும் அரச ஏவலர்களால் நன்கு பேணப்பட்டிருந்தன. சிவப்படிவர்கள், விண்ணவனின் அடியார்கள், வேதியர், அருகநெறியினர் என அனைத்து வகையினரும் அங்கே தங்கியிருந்தனர். அவர்களின் இடங்கள் வெவ்வேறாக வகுக்கப்பட்டு கொடிகளாலும் மரங்களில் கட்டப்பட்ட துணியடையாளங்களாலும் சுட்டி அளிக்கப்பட்டிருந்தன.

அருகநெறியினருக்கான தவக்குடில்களின் இடது ஓரமாக அமைந்திருந்த சகதேவனின் சிறுகுடிலின் முன்னால் ஒளியுடன் நீரோடை எழுந்து வளைந்து விழுந்து ஒழுகியது. முந்தையநாள் அந்தி சாய்ந்த பின்னர்தான் அவன் அங்கே வந்தான். அப்போது அந்த நீர்வளைவு இருளுக்குள் நிற்கும் புதரில் ஒரு வெண்மலர் இதழ் கொண்டிருப்பதுபோல தெரிந்தது. ஓசை காடெங்கும் நிறைந்திருந்தமையால் அது நீர் என சித்தம் உணரவில்லை. அவனை அங்கே விட்டுவிட்டு அனைவரும் சென்றபின் முற்றத்தில் அமர்ந்து சூழ்ந்திருந்த

காட்டை கேட்டுக்கொண்டிருந்தபோது ஒரு கணத்தில் நீரோசை வந்து அந்த நீரிதழுடன் இணைய அது நீரென்று தன்னை காட்டியது.

இதழ்மலர்ந்த நீரின் அருகேதான் அவன் அதன்பின் எப்போதும் அமர்ந்திருந்தான். நண்பகலில் நான்கு நாழிகைப்பொழுது மட்டுமே துயின்றான். இரவெல்லாம் விழித்திருந்து விண்மீன்களை நோக்கிக்கொண்டிருந்தான். புலரியிலும் அந்தியிலும் பொழுது எழுவதையும் அமைவதையும் கணம் கணமென பார்த்தான். இரவுவானம் மாபெரும் சூதுக்களம் எனத் தோன்றியது. காய்களை அறியாக் கைகள் நீக்கி வைத்து ஆடிக்கொண்டிருந்தன. முதலில் அவற்றின் அசைவை பின் அதன் இசைவை அவன் அறிந்தான். ஒரு கட்டத்தில் ஆட்டம் தெளிவுறத் தொடங்கியது. பின் அதன் சூழ்வுகளை உய்த்தறிந்தான். ஆடுபவன் ஒருவனே என்றும் தன் இரு கைகளாலும் இரு நிலை எடுத்து தனக்குத்தானே வென்றும் தோற்றும் அவன் ஆடுவதையும் கண்டான். அவன் எண்ணங்களையும் தயக்கங்களையும்கூட அவனால் காணமுடிந்தது. ஒரு அசைவைக்கூட விடமுடியாதவனாக அவன் நெஞ்சுகூர்ந்து விழிநிலைக்க வானை நோக்கிக்கொண்டிருந்தான்.

அவனிடம் தங்கள் பிறவிநூலைக் காட்டி ஊழணைவு உசாவும்பொருட்டு ஒவ்வொருநாளும் அரசகுடியினரும் பெருவணிகர்களும் வேளிர்களும் வந்துகொண்டிருந்தார்கள். ஒவ்வொரு பிறவிநூலையும் தனித்தனியாக கணித்து வருந்திறன் உரைத்து அனுப்பினான். பின்னர் தனக்குள் அவற்றை ஒன்றுடன் ஒன்று இணைத்துப்பின்னிப் பரப்பி ஒரு வலையென்றாக்கினான். வானிலெழுந்த களத்தின் கரு

நகர்வுகளுடன் இணைத்து அதை முடிவிலியாக ஆக்கிக்கொண்டான். அவனுள் மும்முகம் அழிந்து காலம் ஒற்றைப்பரப்பென்று நிலைகொண்டு அலையடித்தது.

ஒவ்வொரு முகத்திலும் வான்முழுமையின் ஆடலை அவன் கண்டான். அவர்களைக் கண்டதுமே அவன் முகம் மலர்ந்து கண்களில் சிரிப்பு ஒளிவிட்டது. நன்றையும் தீதையும் ஒன்றென்றே எண்ணி அவன் சொல்கோத்தான். துயர்கொள்பவர்களை பெருங்கருணையுடன் தொட்டு "எதிலும் பொருளில்லை என்று உணர்க! நாமறியும் பொருளென்று ஏதுமில்லை என்று அதற்குப் பொருள்" என்றான். "ஒப்புக்கொடுத்தலும் இயைந்திருத்தலுமன்றி வென்று நிலைகொள்ள, எஞ்சாது கடந்துசெல்ல வேறுவழியென்று ஏதுமில்லை மானுடனுக்கு" என்றான்.

அவன் சொற்களை அருமணி என நெஞ்சில் சூடி திரும்பிச்சென்றனர் மக்கள். அவன் புன்னகை தெய்வச்சிலைகளில் மட்டுமே திகழ்வது என்று சொல்லிக்கொண்டனர். "அனைத்துமறிந்தவன் ஏதுமறியாதவனின் சிரிப்பை அடையும் மாயமே ஞானமெனப்படுகிறது" என்றார் அவைக்கவிஞராகிய சிந்தூரர். "அவர் அமர்ந்திருக்கும் நிலம் வேர்களால் ஆனது. அவர்மேல் குவிந்த வானமும்தான்" என்றார் முதுசூதரான கண்டிதர். அவனை அவர்கள் விராடபுரி வாழவந்த மெய்ப்படிவர் என்று வணங்கினர்.

வேதச்சொல்லை கடமையெனக் கொண்ட அந்தணர்களுக்கு உலகியலின்பொருட்டு நிமித்தநூல் நோக்க நெறியொப்பு இல்லை என்பதனால் வைதிகர் அவனை அணுகவில்லை. ஆனால் விராடபுரியில் பிற நகரிகளைவிட கூடுதலாகாவே

வேளாப்பார்ப்பனர் இருந்தனர். அவர்கள் மணியொளி நோக்கவும் பட்டுநிலை கணிக்கவும் பயின்றிருந்தார்கள். படைக்கலத்திறன் முதல் வேளாண்நெறி ஈறாக பிற திறத்தோர் அறிந்த கலைகளையும் அறிவுகளையும் செம்மொழியில் நூல்களாக யாத்தனர். அதற்கு அரசக்கொடை நிறைய அளிக்கப்பட்டது. அங்கே நாளொரு நூல் என அறிவு பெருகியதை சகதேவன் கண்டான்.

பிறநாடுகளில் அந்தணரின் முதற்தொழில் வேதமே என்றும் அதை வழுவுவோர் வீழ்ந்தவர் என்றும் எண்ணப்பட்டனர். வேளாப்பார்ப்பனர்களுக்கு கோட்டைக்கு வெளியே வடக்குப்பக்கம் தனியான பார்ப்புச்சேரிகள் அமைக்கப்பட்டன. நன்னாட்களிலும் விழவுகளிலும் அவர்கள் நகர்புகுவது தடுக்கப்பட்டது. முடிசூடி அமர்ந்த அரசனின் அவையில் அவர்கள் தோன்றுவது விலக்கப்பட்டது. பிறர் அறியாத உலகொன்றில் அவர்கள் வாழ்ந்து மறைந்தனர். அறியா உலகென்பதனாலேயே அது ஐயத்துடனும் அச்சத்துடனும் நோக்கப்பட்டது. அந்த விலக்கமே அரண் என அமைந்து பிறர் விழிகளிலிருந்து காக்க நாளடைவில் அவர்களும் இயல்பான மந்தணத்தன்மை கொண்டனர்.

அந்த மந்தணத்தன்மையாலேயே அவர்களிடம் நிழல்படர்ந்த மெய்மைகளும் இருள்மூடிய நுண்திறன்களும் வளரத் தலைப்பட்டன. எளிய மானுடர் அறியாது உலவும் படிவர்களும் அறிஞர்களும் அவர்களை நாடி வந்தனர். விழிகடந்து உளமறியும் கலை, உளம்பற்றி உருமாற்றி விளையாடும் கலை, புறப்பொருளை அகத்தால் ஆக்கி மறைக்கும் கலை என மாயக்கலைகள் அவர்களால் பயிலப்பட்டன. எரியுறையும் மருந்துகள், புயலை கருக்கொண்ட வேதியங்கள்

அவர்களிடமிருந்தன. மின்னலையும் இடியையும் அவர்களால் தங்கள் மடியில் கட்டி எடுத்துச்செல்ல முடிந்தது. கற்பாறையை உருகச்செய்யும் கொடுநஞ்சுகளை, வெட்டிரும்பை தளிரென்று நெகிழச்செய்யும் குளிர்ந்த அனல்களை அவர்கள் கைக்கொண்டிருந்தனர்.

அவர்கள் மீது அச்சம் மிகுந்து மக்கள் துயர்சொன்னால் அவர்கள் அக்கணமே விலகிச் சென்றாகவேண்டும் என்று அரசர்கள் ஆணையிட்டார்கள். அவர்களேகூட எந்த அறிகுறியும் இல்லாமல் கிளம்பிச் செல்வதுமுண்டு. வேளாப்பார்ப்பனருக்கு நாடேதுமில்லை என்ற சொல் அவர்களை ஆண்டது. அவர்களுக்கு பிரஹஸ்பதியும் சுக்ரரும் முதலாசிரியர்கள். கணாதரும், பரமேஷ்டியும், அஜித கேசகம்பளரும் நெறியுரைத்த முன்னோடிகள். அவர்களின் மொழி ஒவ்வொரு சொல்லும் திருகிக்கொண்டு ஒலியும் பொருளும் மாறுபட பிறர் அறியமுடியாததாக இருந்தது. அவர்களின் நூல்கள் முற்றிலும் மந்தண எழுத்துக்களில் எழுதப்பட்டன. மக்கள் பேசும் மொழியை அவர்களின் நா உரைக்கையில்கூட அவர்களில் ஒருவர் கேட்டால் அது பிறிதொரு பொருள் அளித்தது. அவற்றுடன் விரலசைவும் கண்சுழல்வும் இணைந்து மூன்றாம் மொழியொன்றை உருவாக்கியது. மானுடரை அறியாத வேறு தெய்வங்களால் புரக்கப்படும் மக்கள் அவர்கள் என்றனர் மூத்தோர்.

விராடபுரியில் வேளாப்பார்ப்பனர் வைதிகப்பார்ப்பனரைவிட மதிக்கப்பட்டனர். செல்வமும் குடிப்பெருமையும் கொண்டு நகர்நடுவே அவர்கள் வாழ்ந்தனர். அரண்மனைக்கு வலப்பக்கமாகப் பிரியும் பெருவீதி அவர்களுடையது. அங்கே இரு பக்கமும் வெண்முகில்கள்போல மாடக்குவைகள் எழுந்த

மாளிகைகளில் அவர்கள் வாழ்ந்தனர். முற்றங்களில் அவர்கள் ஊரும் பல்லக்குகளும் மஞ்சல்களும் காத்திருந்தன. அவர்கள் பயிலும் துறைக்கு ஏற்ப வாயில்களில் கொடிகள் பறந்தன. அவர்களின் குடிக்குறிகள் வாயில்களில் பொறிக்கப்பட்டிருந்தன. அவர்களின் அறிவுத்துணை நாடி அணைந்தவர்களும் மாணாக்கர்களாக நண்ணியவர்களும் வாயில்களில் காத்திருந்தனர்.

வேளாப்பார்ப்பனர்களின் தலைவரான வஹ்னர் தன் நான்கு மாணாக்கர்களுடன் சகதேவனை பார்க்க வந்தார். அவருடைய வருகையை அரண்மனைக்காவலன் வந்து அறிவிக்க சகதேவன் எழுந்து கைகூப்பி நின்று அவர்களை வரவேற்றான். நீரோடையருகே அவன் முன்னால் வெறும் மண்ணில் அமர்ந்துகொண்ட வஹ்னர் “தங்களைக்குறித்து ஊரெங்கும் பேச்சு பரவியிருக்கிறது, உத்தமரே. இருமுறை தங்களை முறைப்படி சந்தித்து வணங்கியிருக்கிறேன். இம்முறை நேரில் வந்து பணியும் நல்லூழ் அமைந்தது” என்றார். சகதேவன் புன்னகை புரிந்து அது என் நல்லூழ் என நெஞ்சில் கைவைத்து செய்கை காட்டினான். “நான் வந்திருப்பது தங்கள் கணித்தொழிலுக்கு நெறிகளென எவையெல்லாம் உள்ளன என்று அறியும்பொருட்டே” என்றார் வஹ்னர். “தாங்கள் விரும்பினால் அவற்றை நூல்வடிவாகத் தொகுக்க நான் சித்தமாக உள்ளேன்.”

“சூரியதேவரின் பிருஹதாங்கப்பிரதீபமே என் முதல் நூல். வேதாங்கமான நிமித்த மெய்யறிவுக்கு அதுவே தொடக்கம் என அறிந்திருப்பீர்கள். பிரஸ்னதாசரின் உத்தராங்கஸ்வரூபம், சிபிரரின் ககனஸ்வரூபம், தௌம்ரரின் அஷ்டாத்யாயி போன்ற நாநூறு நூல்கள் உள்ளன. அவற்றிலிருந்தே என்

நிமித்தநூலறிவை நான் அடைந்தேன்” என்றான் சகதேவன். “ஆம், அந்நூல்களை நிமித்திகம் கற்கும் அனைவருமே அடிப்படையாகக் கொள்கிறார்கள். ஆனால் அதிலிருந்து முன்சென்று நீங்கள் நிகழ்த்தும் நுண்ணிய உய்த்துணர்தல் ஒன்று உண்டு என அறிகிறோம். அதை நீங்கள் எவ்வகையிலேனும் அறிநெறிகளாக, சொற்கூட்டுகளாக ஆக்கமுடியும் என்றால் அதை நூலென்று ஆக்கி தலைமுறைகளுக்கு அளித்துச்செல்ல விழைகிறோம்” என்றார் வஹ்றனர்.

சகதேவன் திகைத்து “ஆம், நான் எல்லைகளுக்கு அப்பால் செல்லும்போதே என் நுண்ணறிவை அடைகிறேன்” என்றான். “ஆனால் அதை மொழியென்று ஆக்கவியலுமா நெறியென்று வகுத்துரைக்கலாகுமா என ஐயுறுகிறேன்” என்றான். “அருகநெறியினரே, அறிதலென இங்குள்ள அனைத்தும் அவ்வாறு நுண்மையென அறியப்பட்டவையே. அவற்றை மொழியிலேறிச்சென்று தொட்டுவிடவும் அள்ளி வைக்கவும் முடியுமென்பதன் சான்றுகளே இங்குள்ள நூல்கள் அனைத்தும். தன் உளம் கவர்ந்த பெண்ணின் அழகைச்சொல்ல முதலில் முயன்றவனும் இதே திகைப்பைத்தான் அடைந்திருப்பான். பல்லாயிரம் காவியங்களுக்கு அப்பாலும் சொல்வதற்கு ஒவ்வொரு பெண்ணிலும் தனியழகு என ஒன்று எஞ்சியிருப்பதனால்தான் காவியங்கள் இன்னும் எழுதப்படுகின்றன” என்றார் வஹ்றனர்.

“உணர்ச்சிகளும் தத்துவமும் நுண்ணுணர்வும் மட்டும் அல்ல, ஒரு கல்லின் இயல்பை சொல்வதுகூட மொழியை அதன் எல்லைவிட்டு உருகிமீறவும் சிறகுகொண்டு பறந்தெழவும் செய்வதே ஆகும். நுண்மை ஒன்றை பருமையால்

உணர்த்துவதற்கென்று உருவானதே மொழி. எதையும் மொழியால் சொல்லிவிட முடியும் என்பதனாலேயே அது வாழ்கிறது. முழுக்க சொல்லிவிட முடியாதென்பதனாலேயே அது வளர்கிறது” என்றார் வஹ்னர். “நான் முயல்கிறேன். இனி என் அறிதல்முறையை சொற்களாலும் தொடர முயல்கிறேன்” என்றான் சகதேவன்.

“உத்தமரே, பாரதவர்ஷத்தின் மெய்யறிஞர்கள் காலத்தை, கடுவெளியை, அறிதலை, இருத்தலை, இன்மையை தங்கள் மொழியால் சொல்லமுயன்றனர். நூல்களென ஆக்கி தொகுத்தனர். அந்த மெய்மைக்கு அவர்கள் அளித்த இடத்தை நம்மைச் சூழ்ந்துள்ள உலகை அறியும் ஆய்வுக்கு அளிக்கவில்லை. வேளாப்பார்ப்பனர் என்பது ஒரு குலப்புறனடை என்றே பாரதவர்ஷத்தில் கற்றறிந்தார்கூட நம்புகிறார்கள். அது ஒரு கொள்கை நிலை என்றறிக! அறியமுடியாததை நோக்கி அறிவை எய்து விளையாடும் வீண்செயலை முற்றாகத் தவிர்த்து திரும்பிக்கொண்டவர்கள் நாங்கள். இங்கு சூழ்ந்துள்ள பொருட்களே நாம் அறியக்கூடிய மெய்மை. அப்பொருட்களுடன் நாம் கொண்டுள்ள உறவு துயரற்றதாகுதலே விடுதலை. நோய், பசி, மிடிமை எனும் மூன்றையும் வெல்லுதல் மட்டுமே மீட்பு என நாங்கள் நம்புகிறோம்” என்றார் வஹ்னர்.

“நாங்கள் பரசுராமரின் பிருகுகுலத்தில் தோன்றியவர்கள். அனற்குடி அந்தணர். வேதமென்னும் பாறையை புணையென்று தழுவிக்கொள்ளும் அறியாமையிலிருந்து எங்களை விடுவித்தது இங்கு எழுந்த பெரும்பஞ்சம். பரசுராமர் அளித்த வேதத்துடன் இங்கே வந்த எங்கள் மூதாதை ஜஹ்னர் இங்கே மக்கள் பிடியுணவுக்காக போரிட்டுச் சாவதை கண்டார்.

வெறித்த கண்களுடன் கைவிரித்து வானோக்கி இரந்தபடி இறந்துகிடந்த குழந்தைகளைக் கண்டபோது அவருள் அனல் பற்றிக்கொண்டது. அன்னமும் மருந்தும் அரணும் ஆகாத அறிதலேதும் உளமயக்கே என அவர் அறைகூவினார். அன்று எங்கள் மூதாதையர் வேதம் ஒழிந்தனர். பொருளை அறியும் நோக்கு கொண்டனர்.”

“ஜஹ்னர் இங்குள்ள பன்னிரு கிழங்குகளையும் இருபது கீரைகளையும் நஞ்சுநீக்கி சமைத்து உண்ணும் வழிகளை கண்டடைந்தார். பஞ்சம் நீங்கி குடிகள் எழுந்ததும் வேளாண்மை செய்யவும் மீன் பிடிக்கவும் புதிய வழிமுறைகளைக் கண்டறிந்து சொன்னார். அன்றுமுதல் இங்கே வேளாப்பார்ப்பனரின் குமுகம் ஒன்று உருவாகி அரசர்களால் பேணப்படுகிறது. இங்குள்ள அரசே எங்களால் உருவாக்கப்பட்டதுதான்” என்றார் வஹ்னர். “நிஷாதர்களின் முதற்பேரரசர் மகாகீசகர் எங்களுக்கு கிரிப்பிரஸ்தத்தின் கிழக்குச்சரிவில் தெரு அமைத்துக்கொடுத்தார். அவர் கொடிவழிவந்த நளமாமன்னரின் ஆட்சியின்போதுதான் நாங்கள் முழுவளர்ச்சி அடைந்தோம்.”

“நளமாமன்னரா?” என்று சகதேவன் வியப்புடன் கேட்டான். “ஆம், அனைத்து மானுட அறிவையும் நூல்களென ஒருங்கிணைக்கும்படி எங்களை ஏவியவர் அவரே” என்றார் வஹ்னர். “இளமையில் அவர் தன் குலதெய்வமாகிய கலியை துறந்தார். இந்திரனை தன் குன்றின்மேல் நிறுவி நகரத்தை இந்திரபுரி என்று பெயர்மாற்றம் செய்தார். அனைத்தையும் அவர் இயற்றியது விதர்ப்பத்தின் இளவரசி தமயந்தியை மணக்கும்பொருட்டே என்கிறார்கள்.” சகதேவன் “ஆம், அவ்வாறுதான் கதைகள் சொல்கின்றன” என்றான். “அது

உண்மையென்றிருக்கலாம். ஏனென்றால் மிக விரைவிலேயே அவர் அரசியிடமிருந்து விலகி அதே உளவிரைவுடன் எங்களை நோக்கி வந்தார்” என்று வஹ்றனர் புன்னகைத்தார். சகதேவனும் சிரித்தான்.

“பெண்பற்று தளர்வது மண்பற்று வளர்வது என்பது சொல்” என்றார் வஹ்றனர். தேவியின்மேல் மாளாக்காதல்கொண்டு பன்னிரண்டு ஆண்டுகாலம் தவமிழைத்தார் நளமாமன்னர். அவருக்காக தன்னை முழுமையாக மாற்றிக்கொண்டார். மணம் முடித்த நான்காண்டு காலம் அவர் ஒழுகும் நீரடியில் குளிர்ந்துறைந்த பாறை என அவர் காதலில் ஆடிக்கிடந்தார். பிறிதொரு நினைவில்லாமல் அகத்தளத்திலேயே வாழ்ந்தார். அரசப்பொறுப்பை முழுமையாக அரசியே எடுத்துக்கொண்டார். அரசர் ஆண்டுக்கொருமுறை இந்திரவிழவின் கொலுமேடையில் மட்டுமே அமரக் கண்டனர் குடிகள்.”

அரசி தன் மாயத்தால் அவரை சித்தமில்லாது ஆழ்த்தி வைத்திருந்தார். அவருக்கு இரு மைந்தர் பிறந்தனர். அதைக்கூட அரசர் அறிந்ததாகத் தெரியவில்லை என்று நகையாடினர் சேடியர். ஒருமுறைகூட அரசர் மைந்தரை எடுத்து மார்பின் மீதிட்டு கொஞ்சவில்லை. அவர்களின் அகவையும் பெயரும்கூட அவருக்கு தெரிந்திருக்கவில்லை. அரசநிகழ்வுகளில் அக்குழவியரை சேடியர் அருகே கொண்டுவருகையில் திகைத்தவர்போல நோக்கி அறியாது பின்னடி எடுத்து வைத்தார். “மைந்தரை கொள்க, அரசே!” என முதுசெவிலி குழந்தைகளை நீட்டினால் நடுங்கும் கைகளுடன் வாங்கிவிட்டு மூச்சுத்திணற திருப்பி அளித்தார்.

அரசர் காமத்தில் நெஞ்சழிந்தார் என்கின்றன கதைகள். அது காமம் எனில் ஆம். ஆனால் காமம் என்பது ஒற்றை

உணர்வல்ல. வென்றுநிற்பதென்றும் அடிபணிந்தமைவது என்றும் கொன்று உண்பதென்றும் சுவைக்கப்பட்டழிவதென்றும் அது ஒவ்வொருவரிலும் ஒன்று. அரசர் கொண்ட காமம் அரசியின் உடல் மேல் அல்ல. அவர் சூடிய பெண்மையெழில்கள்மீதும் அல்ல. அவரில் திகழந்த மூன்று தெய்வங்கள் மீதுதான். சொல்மகளும் கொற்றவையும் திருமங்கையும் ஒவ்வொரு கணமும் மாறிமாறி குடிகொள்ளும் மானுட உருவென்றிருந்தார் அரசி. அனல் என பெண்ணில் கணம் ஒரு தோற்றம் கூடி அழிந்து உருக்கொள்ளும் விந்தையில் வீழ்ந்த ஆண்மகன் எளிதில் மீள்வதில்லை.

அவர் எப்போதும் ஓர் அரியணையில் செங்கோல் சூடி முடியணிந்து அமர்ந்திருக்கும் நிமிர்வு கொண்டிருந்தார். விழிதிரும்பினால் அங்கு நின்றிருப்பவர் அறியாது தோள் ஒடுக்கி தலைவணங்கும் பெற்றி திகழ்ந்தது அவரில். எளிய செண்பக மலர் ஒன்றைக்கண்டு 'அய்யோ' என கைகளால் கன்னம் பொத்திக் கூச்சலிட்டு வியப்பவளில் எழுபவள் பீமகர் பெற்று மடிமீதிருந்து இறக்கிவிடாத இளஞ்சிறுமி. நிலவொளியில் விழிமுனை நீர்மை கொண்டு ஒளிர கனவில் சமைந்திருப்பவள் அணுகமுடியாத பிறிதொருத்தி. 'வேண்டாமே' என காமத்தில் கன்னம் சிவக்க குரல் குழைபவள் ஒருத்தி. மறுகணமே அன்னையென்றாகி மடியிலேற்றிக்கொள்பவளும் அவளே.

ஆனால் ஒருநாள் ஒரு கணத்தில் அவர் அரசியிடமிருந்து விலகிவிட்டிருப்பதை தானே அறிந்தார். அதற்கு நெடுங்காலம் முன்னரே அவ்விலகல் தொடங்கிவிட்டிருந்தது. அதை ஆழம் அறிந்திருந்தது என அப்போது தெரிந்தது. அதன்மேல் முதலில் எரிந்தாடலாகவும் பின்னர் நெகிழும் சொற்களாகவும் மெல்ல

வழக்கமான நிகழ்வுகளாகவும் அவருள் திகழ்ந்த காமத்தை அள்ளி அள்ளிச் சொரிந்து அவரே அறியாமல் மூடிவைத்திருந்தார். ஒவ்வொரு நாளும் ஒரு துளியென அவர் உளம் மாறிக்கொண்டிருந்தது.

அரண்மனையில் இருந்து குதிரைக்கொட்டில்கள் வழியாக நோக்குநடை செல்லத் தொடங்கினார். இளம்புரவிகளுடன் ஆடினார். கருவுற்ற புரவிகளை புரந்தார். காலை எழுந்ததும் கொட்டில் நோக்கி வந்தார். இரவு படுக்கும்போது நோயுற்ற புரவி ஒன்றை எண்ணிக்கொண்டு விழிசோர்ந்தார். அடுமனையில் சென்று அனல்நோக்கினார். அவர்களுடன் மடைத்தொழில் நுட்பங்களை பேசினார். ஒருநாள் அடுப்பிலேற்றிய உருளியில் கொதித்துக் குமிழியிட்ட வெல்லப்பாகின் முன் இன்கனித் துண்டுகளுடன் நின்றிருக்கையில் உணர்ந்தார் அவர் அரண்மனை விட்டு வெளியே வரும்போது அரசி துயின்றுகொண்டிருந்தார் என்று. அவர் துயின்றபின்னரே முந்தையநாள் படுக்கைக்குச் சென்றதை நினைவுகூர்ந்தார். அப்போது தெரிந்தது அவர் தனக்கு நெடுந்தொலைவில் எங்கோ இருப்பது.

அவ்வெண்ணம் வந்ததுமே ஒவ்வொன்றும் உருமாறலாயிற்று. சூடிய சொற்கள் அனைத்தையும் உதறிவிட்டு வந்து முன்நின்றது நெடுநாள் உடனிருந்த ஒன்று. உள்மறந்து புறத்திலாழ்ந்தார். மீண்டும் அடுதிறனரும் புரவியறிஞரும் என்றானபோதுதான் வேளாப்பார்ப்பனரைப் பற்றி அவர் அறிந்தார். தேர்ச்சகடத் தொழில் குறித்து சக்ரவாஹிகம் என்னும் சிற்பநூல் இருப்பதை முதுசூதர் பாலிகர் வழியாக அறிந்து எங்களைத் தேடி வந்தார். மானுட அறிதல்கள்

அனைத்தையும் நாங்கள் நூல்களெனத் தொகுப்பதை அறிந்து மகிழ்ந்து எங்களை பரிசளித்து ஊக்குவித்தார்.

“பின் எங்களில் ஒருவரென்றே அவர் உடனிருந்தார். புரவிநுட்பங்களைப் பற்றிய அவருடைய அஸ்வரஹஸ்யம் என்னும் நூலும் அடுமனைக்கலை குறித்த நளபாகம், நளரசனா, நளபதார்த்தமாலிகா என்னும் மூன்று பெருநூல்களும் எங்கள் முன்னோடிகளால் யாக்கப்பட்டன” என்றார் வஹ்னர். “எங்கள் குடிகள் நடுக்காலத்தில் இங்கிருந்து சிதறி தென்னாடுகளில் குடியேறின. மீண்டும் நிஷாத அரசு விராடபுரி என திரண்டெழுந்தபோது இது எங்கள் நாடு என உணர்ந்து மீண்டு வந்தோம். இன்று தென்னாட்டில் நூறு நகர்களிலாக நாங்கள் பரவி வாழ்கிறோம். அமணநெறிக்கு அணுக்கமானவர்களாக இருக்கிறோம். எங்களில் பல குடிகள் அமணர்களாகவே ஆகியும் விட்டனர்” என்றார் வஹ்னர்.

“நாங்கள் தொழில்களும் கலைகளும் பயில்வதில்லை. தொழிலர் கலைஞர்களின் அறிதல்களைக் கேட்டறிந்து தொகுக்கிறோம். வேளாண்மை, ஆபுரத்தல், மீன்கொள்ளல், கலம்கட்டுதல் என நாங்கள் அனைத்துத் துறைகளையும் அறிந்து ஒற்றை மெய்மையென ஆக்க முயல்கிறோம். தச்சுத்தொழில், சிற்பத்தொழில், மருத்துவம் போன்ற துறைகளில் பல்லாயிரம் நூல்களை உருவாக்கியிருக்கிறோம். யானைகளைப்பற்றி மட்டும் எண்பத்தெட்டு நூல்கள் எங்களிடமிருக்கின்றன” என்றார் வஹ்னர். “அனைத்து நூல்களும் ஒரே மொழியில் ஒரே இடத்தில் வந்தமையும்போது அனைத்து அறிதல்களையும் ஒன்றெனப் பிணைக்கும் நெறிகளை நோக்கி செல்லமுடிகிறது. விண்மீன் உதிர்வதற்கும்

விளைநலம் பெருகுவதற்கும் என்ன உறவு என்று நோக்கமுடிகிறது.”

சகதேவன் “என் அறிதல்கள் அனைத்தையும் அளிக்கிறேன், உத்தமரே. அவை நூலாகட்டும். மானுட அறிவின் பெருக்கில் அதுவும் துளியென்றாகட்டும்” என்றான். “எது வண்ணத்துப்பூச்சியின் சிறகை அசைக்கிறதோ அதுவே விண்மீனை பறக்க வைக்கிறது என்று ஓர் எண்ணம் இன்று என்னுள் எழுந்தது. அதுவே தொடக்கமென்றாகட்டும்.” வஹ்னர் “வணங்குகிறேன், கணியரே” என்று கைகூப்பினார்.

# நீர்க்கோலம் - 21

### 20. பொய்ப்புரவி

❀சகதேவனுக்குப்பின் ஏழு நாட்கள் கடந்து நகுலன் விராடநகரியை சென்றடைந்தான். அரண்மனையின் குதிரைக்கொட்டிலில் தோலாடையும் கையில் சவுக்குமாக வந்து அவன் பணிந்து நின்றபோது தொலைவிலிருந்து அவனைக் கண்ட புரவிகள் திரும்பி நோக்கின. இரு வெண்புரவிகள் கொட்டில் அழியினூடாக தலைநீட்டி பெருமூச்சுவிட்டு மெல்ல கனைத்தன. ஒரு குட்டி வாயில் கவ்விய புல் தொங்கியாட அவனை நோக்கி துள்ளி வந்து தயங்கி நின்று பிடரிமயிர் சிலிர்த்து ‘ம்ரெ?’ என்றது. இன்னொரு பெரிய பெண்குட்டி அதற்குப் பின்னால் வந்து நின்று “வந்துவிடு. அங்கெல்லாம் செல்லக்கூடாது தெரியுமா?” என்றது.



உடனே சிறியகுட்டி அவனை நோக்கி தாவி வந்து அருகே அணைந்து 'நான் சும்மாதானே வந்தேன்?' என்னும் நடிப்புடன் வேறுபக்கம் திரும்பி விழியுருட்டி பின்னால் நோக்கி நின்றது. நகுலன் அருகே சென்று அதன் முதுகை தொட முயல துள்ளி விலகியது. அவன் கையை எடுத்துக்கொண்டு வேறுபக்கம் திரும்பி நின்றபோது அது சற்று அருகே வந்தது.

அதன் தமக்கை "வந்துவிடு... அம்மாவிடம் சொல்லிவிடுவேன்" என்றது. "போடி" என்றபின் குட்டி நகுலனை அணுகி அவன்

தொடையை தன் தலையால் முட்டியது. அவன் அதன் பிடரிமயிரை கையில் கொத்தாக அள்ளிப்பிடித்து மெல்ல உலுக்கினான். அது “நான் புல் தின்பேன்” என்று புல்லை மென்றுகாட்டியது. ஆனால் பல் நிலைக்காத வாயிலிருந்து எச்சில்கோழையுடன் புற்சரம் நழுவியது.

கொட்டில்சூதர் எட்டிப்பார்த்து “யார்?” என்றார். “நான் கிரந்திகன். அயலூர் சூதன். தலைமைச்சூதரை பார்க்கும்பொருட்டு வந்தேன்” என்றான். “உள்ளே வருக!” என்றார் அவர். அவன் அருகே செல்ல “நானும் வருவேன்” என்று குட்டி கூடவே வந்தது. “வேண்டாம். அவர்கள் கெட்டவர்கள். வந்துவிடு” என்றது தமக்கை. குட்டி அதை திரும்பிப்பார்க்கவில்லை. நகுலன் கொட்டகை வாயிலில் சென்று கைகட்டி நிற்க தமக்கையும் வந்து அவனருகே நின்றது. அவன் திரும்பிப்பார்க்காமலிருக்கவே “ர்ர்ப்?” என்று கூப்பிட்டது. அவன் திரும்பி புன்னகைத்து அதன் அடிக்கழுத்தை வருடினான். அது தலையைச் சிலுப்பி “நான் விரைந்து ஓடுவேன்” என்றது.

கொட்டில்சூதர் “என் பெயர் நாமன். இங்கே இருபதாண்டுகளாக பணிபுரிகிறேன்... உன் ஊர் எது? குடிப்பெயர் என்ன?” என்றார். “நான் சௌவீர நாட்டான். பிரபவகுடிப் பிறந்தவன். அங்கிருந்து அயலூர் காணும்பொருட்டு கிளம்பினேன்.” அவர் “ஏன்? ஊரில் என்ன இடர்?” என்றார். “என் உடன்பிறந்தான் பிரிந்து அகன்றான். அவனின்றி என்னால் அங்கு இருக்கமுடியவில்லை. அவனைத் தேடி நானும் கிளம்பினேன்” என்றான் நகுலன்.

“நீங்கள் இரட்டையரா?” என்றார் நாமர். “ஆம்.” அவர் புன்னகைத்து “ஏனோ அப்படி தோன்றியது. ஒரு சிலையின் இடப்பக்கத்தை மட்டும் பார்த்ததுபோலிருக்கிறது உன்னைக்

கண்டால்” என்றார். நகுலன் புன்னகைத்தான். “இரட்டையரில் ஒருவர் பிரிந்தால் பிறிதொருவர் வாழ்வது கடினம். நீ அவனை சந்திக்க வேண்டுமென்று வாழ்த்துகிறேன்” என்றார் நாமர். “ஆம், இங்கே பணியாற்றிக்கொண்டு இவ்வட்டாரங்களில் தேடலாமென நினைக்கிறேன்” என்றான் நகுலன்.

கொட்டிலின் தலைமைச்சூதர் சுதமர் இருமியபடி வந்தார். நகுலன் தலைவணங்கினான். “நீர் எங்கு புரவிக்கலை பயின்றீர்?” என்றார் சுதமர். “சௌவீரத்தில். என் குடி எழுபது தலைமுறைகளாக புரவித்தொழில் செய்வது” என்றான் நகுலன். “நீர் தேர்ந்தவர்…” என அவர் நகுலனை கூர்ந்து நோக்கினார். “இங்கிருப்பவரில் எவரும் உம்மளவு புரவியை அறிந்தவர்களல்ல…” நகுலன் தலைவணங்கினான். அவர் திரும்பி நாமரிடம் “பத்மை இவரருகே நின்றிருப்பதை பாரும். இளைய பெண்புரவிகள் ஒருவரை நம்ப பல மாதங்களாகும்” என்றார். நாமர் அப்போதுதான் வியப்புடன் அந்தப் பெண்குட்டியை பார்த்தார். அது நகுலனின் தோலாடையின் முனையை சப்பிக்கொண்டிருந்தது.

“நீர் போர்த்தொழிலும் கற்றவர், உமது கைகள் சொல்கின்றன. அதை எண்ணியே ஐயுறுகிறேன்” என்றார் சுதமர். நகுலன் “எங்களூரில் சூதர்களுக்கு போர்த்தொழிலும் தேவை. நாங்கள் வாழ்வது அரைப்பாலையில். போர்த்தொழிலறியா சூதன் புரவிகளை பாதுகாக்க இயலாது. எங்கள் நாட்டில் செல்வமென்றால் அது புரவி மட்டுமே” என்றான். அவர் ஐயத்துடன் “நீர் ஷத்ரியர் அல்லவா?” என்றார். “இல்லை, சூதன் மட்டுமே” என்றான் நகுலன். “நீர் இங்கே பணிபுரியலாம். எங்களுக்கு தேர்வலர்கள் புரவித்தொழிலர்கள் எப்போதும் தேவை. எங்கள் ஆற்றலே எங்களிடமிருக்கும் புரவிப்படைதான்.

மாமன்னர் நளன் காலம் முதலே நாங்கள் புரவித்திறன் வழியாகத்தான் இந்நிலப்பகுதியை ஆள்கிறோம்" என்றார் சுதமர். "ஆம், அவரைப்பற்றி கேள்விப்பட்டிருக்கிறேன்" என்றான் நகுலன்.

"அவருடைய புரவிநூலை அறிவீரா?"" என்றார் சுதமர். "எந்நூலை?" என்றான் நகுலன். "அவர் ஆக்கியதாக இன்றிருப்பது ஒரு நூல் மட்டுமே. அஸ்வரஹஸ்யம், ஆயிரத்தெட்டு ஈரடிகள் கொண்டது" என்றார் சுதமர். "இல்லை. போர்ப்புரவிகளைக் குறித்த துரகாவபோதம் என்னும் நூலும் நளமாமன்னரால் இயற்றப்பட்டுள்ளது. அதை இங்குள்ளோர் மறந்துவிட்டனர் என நினைக்கிறேன். அதன் ஒரு வடிவத்தை நான் காசியில் கற்றேன். சொற்தேர்வும் செய்யுளமைப்பும் நளமாமன்னருடையது அது என காட்டுகின்றன. அதற்கு பிருகத்பலர் எழுதிய பாயிரமும் அதை நளன் எழுதியதை உறுதிசெய்கிறது" என்றான் நகுலன்.

சுதமர் திகைத்துப்போய் சில கணங்கள் நோக்கியபின் "நன்று. அந்நூலை உங்களிடமிருந்து பாடம்கேட்க விழைகிறேன். இக்குதிரைக்கொட்டிலையே நீங்கள் ஆளலாம், சௌவீரரே" என்றார். "நான் தங்களுக்குக் கீழே பணியாற்றவே வந்தேன். நான் கடந்துசெல்பவன்" என்றான் நகுலன். "வருக…" என அவர் அவனை அழைத்துச்சென்றார். "நள மாமன்னரின் புரவித்திறனே உருளைக்கற்கள் சிதறிப்பரவிய இக்குறுங்காட்டை நாடென்றாக்கியது. அவர் அடைந்த மெய்மை ஒன்றே. இங்குள்ள நிலத்திற்கு ஏற்ப புரவியூர்பவர்களின் விழிகளை தேர்ச்சி பெறச்செய்ய அவர் முதலில் முயன்றார். ஆனால் புரவிகளின் கால்கள் அதைவிட எளிதாக அத்தேர்ச்சியை அடைவதை அவர் கண்டுகொண்டார்" என்றார் சுதமர்.

“எந்தச் சூழலுக்கும் புரவியைப் பழக்குவதே சிறந்த வழி என்பதுதான் நளநெறி. புரவியை இரண்டு மாதம் முதல் கால்பழக்கத் தொடங்கவேண்டும். அது விழுந்தால் அடிபடாத அகவையில். புரவிகளைப் பழக்குவதற்குரிய வழிமுறைகளைத்தான் அஸ்வரஹசியத்தில் இரண்டாம் பகுதியில் எட்டு பாதங்களிலாக அவர் விளக்குகிறார். முதல் பகுதியின் மூன்று பாதங்கள் புரவிகளின் குலங்களையும் குடிகளையும் உடற்சுழிகளையும் பிறவியியல்புகளையும் விளக்குகின்றன” என அவர் தொடர்ந்தார்.

“ஆனால் எங்கள் குலம் சிதறிப்பரவியபோது புரவியறிவு தேங்கியது. இரண்டாம் மகாகீசகர் இந்நகரை அமைத்தபோது மீண்டும் புரவித்தொழிலை வளர்த்தெடுக்க ஆணையிட்டார். நளமாமன்னரின் காலத்தில் இங்கே தேரப்பட்ட புரவிகளுடன் இங்குறைந்தவர்கள் கீழ்நிலங்களுக்கு சென்றுவிட்டிருந்தனர். அப்புரவிகள் கால்மறந்துவிட்டிருந்தன. இங்கு நகர் அமைந்தபின் மூத்த சூதரான கூர்மர் இங்குள்ள காடுகளில் வாழும் புரவிகளின் குட்டிகளை பிடித்துவந்து பழக்குவதே எளிதென்று கண்டுகொண்டார். நளனின் கலையை அவர் குடிகள் மறந்துவிட்டிருந்தனர். அவர் பயிற்றுவித்த புரவிகளின் தலைமுறை தங்கள் கால்களில் நினைவுவைத்திருந்தது. அவ்வாறு உருவானதே இன்றுள்ள புரவிப்படை.”

“எங்கள் புரவிதேரும் கலையை ஷத்ரியர் அறியலாகாதென்பதில் நாங்கள் கூர் கொண்டிருக்கிறோம். அரசர் விராடரின் மாற்றிலா ஆணை அதை அறைகூவுகிறது. ஆகவேதான் ஷத்ரியரையோ அயல்சூதரையோ நாங்கள் இங்கு நுழைய ஒப்புவதில்லை” என்றார் சுதமர். “ஆனால் ஏன் உம்மை உள்ளே விட ஒப்புகிறோம் என்று நீர் கேட்கலாம். நீர் அறியாத

ஒன்று புரவியிலிருக்கும் என தோன்றவில்லை. அப்படி ஒன்றுண்டு என்றால் புரவிகளே வந்து உம்மிடம் அவற்றை சொல்லிவிடக்கூடும். உம்மை அகற்றுவதைவிட அணுக்கமாக வைத்திருப்பதும் நீர் அறிந்தவற்றை கற்று எம்மை மேம்படுத்திக்கொள்வதுமே நன்றென்று தோன்றுகிறது. அதையே எங்கள் படைத்தலைவர் கீசகரும் விரும்புவார்."

"கீசகரைப்பற்றி கேள்விப்பட்டிருக்கிறேன்" என்றான் நகுலன். "அரசியின் இளையவர். மகாகீசகரின் குருதிவழி வந்தவர். நீங்கள் அறிந்திருப்பீர்கள், இங்கே உண்மையான செங்கோல் இருப்பது கீசகரிடம்தான்" என்றார் சுதமர். "நான் மிகையாகப் பேசுகிறேன் என எண்ணுகிறீர்கள் என அறிவேன். மிகையாகப் பேசுவது என் வழக்கம். பொதுவாக குதிரைச்சூதர் மிகையாகப் பேசுவார்கள். நாளெல்லாம் அவர்கள் குதிரைகளுடன் தனித்திருப்பார்கள். குதிரையுடன் பேசத்தொடங்கினாலொழிய அவர்களால் இந்தத் தனிமையை கடக்கவியலாது. அதில் பழகிப்போனால் எதிர்நிற்பவர்களின் செவியை எண்ணாமல் பேசிக்கொண்டிருக்க இயலும். நான் குதிரைக்கொட்டிலுக்குள் நுழைந்து எழுபதாண்டுகளாகின்றன. எந்தை என் ஐந்து வயதில் என் கையில் சேணத்தை அளித்தார்… வருக! உம்மை இங்கேயே தங்கவைக்கிறேன். புரவித்தொழிலருக்கு அவற்றின் சாணியும் நீரும் நறுமணமே என்று அறிவேன்…"

அவர் நகுலனை அழைத்துச்சென்று அவன் தங்கவேண்டிய அறையை காட்டினார். அவர்களுக்குப் பின்னால் இரு குதிரைக்குட்டிகளும் வந்தன. தமக்கை வெளியே நின்றுகொள்ள தம்பி உள்ளே வந்து சுற்றிலும் மோப்பம் பிடித்து "நல்ல இடம்தான்" என்றது. "உள்ளே சிறுநீர் கழிக்கப்போகிறது" என்றார் நாமர். "கழிக்காது, அதற்குத் தெரியும்" என்றான் நகுலன்.

“மாலை எங்கள் இளவரசர் புரவிபழக வருவார்... நீர் அவரை சந்திக்கலாம்” என்றார் சுதமர். நகுலன் வியப்புடன் “மிக இளையவரா இளவரசர்? மூத்தவர் என்றார்கள்” என்றான். நாமர் “உள்ளத்தால் இளையவர்” என்றார். சுதமர் சிரித்தபடி “ஆம், ஆனால் அரண்மனைப் பெண்டிருக்கு மாற்றுக்கருத்து உள்ளது” என்றார்.

நகுலன் நெடுந்தொலைவு நடந்த களைப்புகொண்டிருந்தான். உணவுண்டதுமே படுத்து ஆழ்ந்து உறங்கினான். மாலையில் புரவிகளின் ஓசைகேட்டு விழித்துக்கொண்டான். அறைக்குள் ஒரு மூலையில் குட்டிக்குதிரை சுருண்டு தூங்கிக்கொண்டிருந்தது. அதன் வாய் தரையில் ஊன்றியிருக்க எச்சில் வழிந்து மண்ணில் ஊறியிருந்தது. வெளியே அதன் தமக்கை நின்றபடி தலைதாழ்த்தி எச்சில் குழாய் வழிந்து துளி சிலந்திபோல அசைந்தாட அரைத்துயிலில் நின்றிருந்தது. அவன் எழுந்த ஓசைகேட்டு அது திடுக்கிட்டு “ப்ரே” என்றது. உள்ளே குட்டி எழுந்து “ம்ம்ம்” என்றபின் முன்னால் சென்று சுவரில் தலையை முட்டி அப்படியே நின்று துயிலில் ஆடியது. ஏழெட்டு சூதர்கள் புரவிகளின் கடிவாளத்தைப் பிடித்தபடி ஓடுவதை நகுலன் கண்டான்.

ஓடிவந்த நாமர் “இளவரசர் வந்துவிட்டார்” என்றார். “ஏன் இத்தனை குதிரைகளை கொண்டுசெல்கிறார்கள்?” என்றான் நகுலன். “அவர் பல குதிரைகளை கேட்பார். எதை கொண்டுசென்றாலும் சினம் கொள்வார்... வருக!” என்றார் நாமர். நகுலன் விரைந்து கொட்டிலை ஒட்டியிருந்த சூதர்களுக்கான அடுமனைக்குச் சென்று கைகால் முகம் கழுவி அவர்கள் அளித்த இன்கிழங்குக் கூழை அருந்திவிட்டு முகப்புமுற்றத்திற்கு சென்றான். அங்கே முன்னரே

குதிரைச்சூதர்களும் பல உயரங்களிலான குதிரைகளும் நின்றிருந்தன. அப்பால் ஒரு தேர் செந்நிறப் பட்டுத்திரைகள் காற்றிலாட நின்றிருந்தது.

காவலர்களுக்கு நடுவே பீடத்தில் அமர்ந்திருந்த மெலிந்த உடல்கொண்ட இளைஞனை நகுலன் தொலைவிலேயே பார்த்தான். பார்த்ததுமே புன்னகைக்க வைக்கும் ஒன்று அவனிடமிருந்தது. தசையமைப்பால் அவனை அழகன் என்றே சொல்லிவிடமுடியும். சிவந்த நீள்வட்ட முகம். பெண்களுடையவை எனத் தோன்றிய உதடுகள். புகைப்படிவு போன்ற மீசை. பச்சைநரம்போடிய நீண்ட கைகள். அவன் முகத்திலிருந்த ஒரு சிணுக்கம்தான் அந்தப் புன்னகையை உருவாக்குகிறது என நகுலன் புரிந்துகொண்டான். எதையோ கேட்டுப்பெற முயன்று மறுக்கப்பட்ட குழந்தையின் தோற்றம்.

“இதுவல்ல, இதுவல்ல, மூடா” என அவன் சொல்லிக்கொண்டிருந்தான். அவன் பெயர் உத்தரன் என்பதை நகுலன் நினைவுகூர்ந்தான். “என் காலணிகள் இவை அல்ல… நான் சொல்கிறேன்” என்றான். “நேற்று அணிந்தவை இவைதான், இளவரசே” என்றான் சூதன். “நேற்று இவை இப்படி இறுக்கமானவையாக இல்லை” என்றான் உத்தரன். “நான் சற்று இறுக்கிக் கட்டுகிறேன். நேற்று இவை இருமுறை கழன்றன. நீங்கள் சினம்கொண்டீர்கள்.” உத்தரன் “ஆம், ஆனால் இன்று என் கால்கள் வலிக்கின்றன. ஆ, என் விரல்கள்!” என்றான். “மெதுவாக” என்றார் அருகே நின்றிருந்த சுதமர்.

அவனை நோக்கி “யார் இவன்?” என்றான் உத்தரன். “சௌவீரநாட்டை சேர்ந்தவன். புரவிதேர்ந்தவன்” என்றார் சுதமர். “இன்றுதான் இங்கு வந்திருக்கிறான்.” நகுலன் “என் பெயர் கிரந்திகன்” என்றான். “நன்று, புரவித்தொழிலை இங்குபோல நீ

எங்கும் கற்றுக்கொள்ள இயலாது. இது நிஷதர்களின் தொன்மையான புரவித்தொகை, அறிந்திருப்பாய்" என்றான் உத்தரன். "ஆம்" என்றான் நகுலன். "இவற்றை பிறநாட்டார் அணுகவியலாது. நாங்கள் பிறரை அணுகவிடுவதுமில்லை" என்றபின் உத்தரன் கையில் சவுக்குடன் எழுந்துகொண்டான். "எங்கே என் புரவி?" சுதமர் கைகாட்ட ஒரு சிறிய புரவியை கொண்டுவந்து நிறுத்தினான் சூதன்.

"என்ன விளையாடுகிறீர்களா? இது குதிரையா அத்திரியா? இதன்மேல் நான் ஏறவேண்டுமா? மூடர்களே, குதிரையை கொண்டுவருக!" என்றான் உத்தரன். சுதமர் பணிவுடன் "நேற்று கொண்டுவந்த புரவி பெரிதென்று சொன்னீர்கள்" என்றார். "அதை பெரிதென்றா சொன்னேன்? மூடா, பெரிதென்றா சொன்னேன்? சொல், நான் என்ன சொன்னேன்? சொல்!" உத்தரன் சுதமரை நோக்கி கைநீட்டி "நீ புரிந்துகொண்டதை சொல்லாதே, நான் சொன்னதை சொல்" என்றான். சுதமர் "தாங்கள் சொன்னது..." என இழுக்க "அதன் சேணம் சரிவர அமைக்கப்படவில்லை என்றேன். பிறிதொன்றைக் கொண்டுவர ஆணையிட்டேன்" என்றான்.

"சேணம் சரிவர அமைத்து அதை கொண்டுவருக!" என்றார் நாமர். "அது வேண்டியதில்லை. சேணத்தை அதுவே சரித்துக்கொள்கிறது. நன்கு பழகாத புரவி. பிறிதொன்று வருக!" என்றான் உத்தரன். சுதமர் கைகாட்ட நடுத்தரமான ஒரு மாந்தளிர் நிறப் புரவியை சூதன் கொண்டுவந்தான். "இதுவும் சிறிய புரவிதான். ஆனால் பயின்றதுபோலத் தோன்றுகிறது" என்றபடி உத்தரன் தன் கையை அதை நோக்கி நீட்ட அது கனைத்தபடி கால்களை உதைத்து வால் சுழற்றி பின்னால் தாவியது. "என்ன இது? இது பயிலாத குதிரையா?" என்றான்

உத்தரன். “இளவரசே, நீங்கள் அதன் விலாநோக்கி கைநீட்டினீர்கள். புரவிகள் அதை விரும்புவதில்லை” என்றான் சூதன். அவனை நோக்கி சவுக்கை ஓங்கிய உத்தரன் “எனக்கு நீ புரவி கற்றுத்தருகிறாயா? நான் யாரென்று அறிவாயா? நான் யாரென்று தெரியுமா உனக்கு? சொல்!” என்றான்.

அவன் தலைகுனிந்து நிற்க “நீங்கள் நளமாமன்னரின் குருதிவழி வந்தவர்” என்றான் இன்னொரு சூதன். முகம் மலர்ந்த உத்தரன் “ஆம், அதை கவிஞர் பாடுகிறார்கள். புரவிகளுக்கு என்னைத் தெரியும்... எனக்கு புரவிகளை அதைவிட நன்கு தெரியும்” என்றபடி அந்தப் புரவியை நோக்கி சென்றான். அது விலா சிலிர்த்தது. அவன் தயங்கி மெல்ல கைநீட்ட “கைநீட்ட வேண்டாம், இளவரசே” என சுதமர் மெல்லிய குரலில் சொன்னார். அவன் கையை சட்டென்று இழுத்துக்கொள்ள புரவி சற்று துள்ளி விலகி மூச்சு சீறியது.

“மூடா!” என்றான் உத்தரன். “கையை சட்டென்று இழுக்கலாகாது, இளவரசே” என்றார் நாமர். உத்தரன் அவரை நோக்கி சவுக்கை ஓங்கி “எனக்கே கற்றுத்தருகிறாயா? என்னிடமே புரவிபற்றி பேசுகிறாயா?” என்றான். “தங்களுக்குத் தெரியாதது அல்ல... இந்தப் புரவி...” என்று சுதமர் சொல்லத் தொடங்க “வேறு புரவி வருக... நன்கு பயின்ற புரவி” என்றான் உத்தரன். நகுலன் அங்கு நின்ற பெரிய கரிய புரவியின் கடிவாளத்தைப்பற்றி அதன் முகத்தை வருடியபடி அருகே கொண்டுவந்து “ஏறுக, இளவரசே!” என்றான்.

சுதமர் திகைப்புடன் “இதுவா? இது... இது இன்று நல்ல நிலையில் இல்லை” என்றார். “நன்றாகவே உள்ளது. இளவரசர் ஏறலாம்” என்றான் நகுலன். “கரிய குதிரை... சுழிகள் பொருத்தமானவையாக இல்லை... மேலும்” என்றான் உத்தரன்.

“ஏறுங்கள், இளவரசே!” என்றான் நகுலன். “இல்லை, அந்த வெண்புரவி வருக. நான் கரிய புரவிகளை பொதுவாக விரும்புவதில்லை” என்றான் உத்தரன். “சற்று முயன்றுபாருங்கள்” என்றான் நகுலன். உத்தரன் ஐயத்துடன் சுதமரை நோக்க அவர் வேறெங்கோ விழிதிருப்பினார். “நாமர் அந்தக் கடிவாளத்தை பிடிக்கட்டும்” என்றான் உத்தரன். “நானே பற்றிக்கொள்கிறேன்” என்றான் நகுலன். “இன்று நெடுநேரமாகிறது. அந்த சிறிய குதிரையை கொண்டுவருக! முதலில் வந்த குதிரை… அது சிறிதாக இருந்தாலும் துடிப்பானது” என்றான் உத்தரன்.

அப்புரவியை அருகே கொண்டுவந்து “தொட்டுப்பாருங்கள், இளவரசே!” என்றான் நகுலன். உத்தரன் அஞ்சியபடி கைநீட்டி புரவியின் விலாவை தொட்டான். அவன் கை நீண்டபோது அப்பகுதி விதிர்த்தது. முன்வலக்கால் குளம்பை எடுத்து அமைத்தபின் புரவி பெருமூச்சுவிட்டது. நகுலன் அதன் முகவாயின் பெருநரம்புகளை வருடிக்கொண்டே இருந்தான். “காலை குதிவளையத்தில் வையுங்கள்” என்றான் நகுலன். “நான் இன்னமும் என் காலுறையை மாட்டவில்லை” என்றான் உத்தரன். “எடுத்து வையுங்கள், இளவரசே” என்றான் நகுலன்.

“ஒரு காலை வைக்கிறேன்…. அதன்பின் அந்தக் குதிரையில்…” என்றபடி காலை தூக்கி வளையத்தில் வைத்த உத்தரனை அவன் முற்றிலும் எதிர்பாராதபடி பின்பக்கத்தைப்பற்றி உந்தி மேலேற்றி அவன் மறுகாலைப்பிடித்து சுழற்றி அப்பாலிட்டான் நகுலன். “என்ன செய்கிறாய்? மூடா! என்ன செய்கிறாய்…? அய்யோ” என உத்தரன் கூவினான். “குதிவளையத்தில் கால்நுழையுங்கள்” என்றான் நகுலன் “எங்கே? எங்கே?” என்றான் உத்தரன் பதறி திரும்பி இறங்க முயன்றவனாக. நகுலன்

அந்தக் காலை பிடித்து வளையத்திலிட்டு “கடிவாளத்தை பற்றிக்கொள்க!” என்றான். “வேண்டாம், வேண்டாம்... இந்தப் புரவி அஞ்சுகிறது” என்றான் உத்தரன்.

“செல்க!” என நகுலன் புரவியின் மூக்கை வருடினான். “இந்தப் புரவி அஞ்சுகிறது... வேண்டியதில்லை... என்னை இறக்கிவிடு... என் ஆணை! இப்போதே...” உத்தரன் கூவிக்கொண்டிருக்கையிலேயே புரவி பெருநடையிட்டு முன்னால் சென்றுவிட்டது. “வேண்டாம்... வேண்டாம்” என்று உத்தரன் கூவினான். “கடிவாளத்தை விடாதீர்கள். குதிகாலை உருவாதீர்கள். முன்குனிந்து அமர்ந்திருங்கள்” என்று நகுலன் உரக்க கூவினான். “வேண்டாம், வேண்டாம்... போதும் பயணம்... இந்தப் புரவி கெட்டது” என்று உத்தரன் கூவியபடி கண்களை இறுகமூடி கடிவாளத்தை பற்றிக்கொண்டான்.

“விடாதீர்கள், இளவரசே!” என்றபின் மிக மெல்ல சீழ்க்கையடித்தான் நகுலன். புரவி காதுகளை பின்னால் சரித்து வால்சுழற்றி எம்பி குளம்பறைய விழுந்து கால்கள் சகடவிளிம்புகளாக சுழன்றுபறக்க விரைந்தோடியது. “விழுந்துவிடுவார்... விரைந்து பின்னால் செல்லுங்கள்” என்று சுதமர் நடுங்கும் குரலில் சொன்னார். “விழமாட்டார்” என்றான் நகுலன். “சூதனே, அவருக்கு எட்டாண்டுப் பயிற்சிக்குப் பின்னரும் புரவிக்கலை சற்றும் தெரியாது. கடிவாளமும் குதிவளையமும் நிலைகொள்ளாது” என்றார் சுதமர். “ஆம், அறிவேன். ஆனால் புரவியிடம் சொல்லியிருக்கிறேன். அது அவரை காத்து அழைத்துச்சென்று மீளும்” என்றான் நகுலன்.

“அதனிடமே சொல்லமுடியுமா?” என்றார் சுதமர். “ஏன் உங்களிடம் சொல்லமுடிகிறதே?” என்றான் நகுலன். புரவி கண்ணிலிருந்து மறைந்தது. “இத்தனை விரைவாக சென்ற

பின்னரும் அவர் விழவில்லை! பெருவியப்பு!” என்றார் நாமர். “இதற்குள் மண்டை உடைந்திருக்கும் என நினைத்தேன்” என்றான் ஒரு சூதன். அவர்கள் மெல்ல இயல்படைந்தனர். “விழுவதென்றால் அது கிளம்பிய தருணத்திலேயே விழுந்திருப்பார்” என்றார் சுதமர். “ஆம், இத்தனை தொலைவுக்கு சென்றுவிட்டார்” என்றார் நாமர். தொலைவில் புரவி தெரிந்தது. குளம்புகள் விழியிலிருந்து மறையும்படி பறக்க அது காற்றில் மிதந்து வந்தது.

“நேர்கொண்ட வருகை. இடவலம் நிகர்கொண்ட சுழியமைந்த சீருடல்” என்றான் நகுலன். “ஆம், இங்குள்ள புரவிகளில் முதன்மையானது” என்றார் நாமர். “அந்தப் புரவியின் பெயர் காரகன். சற்று கடுமையான உள்ளம் கொண்டது. அவர் பயிற்சி முடித்து கிளம்பும்போது பிற புரவிகளை கொண்டுசென்றுவிடுவோம். அந்தப் புரவியை மட்டும் அழைத்தபடி ஒரு சூதன் அவர் பின்னால் சாலைவரை செல்வான். அதில் அவர் பயிற்சி செய்வதாக ஊரார் நினைக்கவேண்டுமென அவர் எண்ணுகிறார்” என்றார் சுதமர். “ஆனால் ஊராருக்கே தெரியும், அவரால் கன்றுக்குட்டிமேல்கூட அமர இயலாதென்று.”

காரகன் உருப்பெருக அணுகி வந்து விரைவழிந்து குளம்புகள் தாளம் நிலைக்க மூச்சிரைத்தபடி நின்று நகுலனை அணுகி அவன் தோள்மேல் தன் பெரிய தலையை வைத்தது. கடைவாயில் வெள்ளிநூல்வலை என தொங்கிய நுரை அவன் தோள்மேல் சொட்டியது. புரவிமேல் அப்போதும் உடலை இறுக்கி பற்களை கிட்டித்து கடிவாளத்தை முறுகப்பற்றி கால்களை அணைத்து விழிமூடி அமர்ந்திருந்தான் உத்தரன்.

“இளவரசே” என்றார் சுதமர். “ஆ” என விழித்துக்கொண்டு அவன் விழப்போனான். நகுலன் அவன் கால்களை பற்றிக்கொண்டான்.

உத்தரன் நிலைகொண்டபின் திரும்பிப்பார்த்து அதிர்ந்தான். புரவி நின்றுகொண்டிருப்பதை அப்போதுதான் உணர்ந்தவன்போல கீழே குதிக்க முயன்றான். நகுலன் அவன் கால்களைப்பற்ற அவன் மெல்ல இறங்கி நின்று தரையில் புரவியின் விசை எஞ்சிய உடல் நிலைகொள்ளாமல் தள்ளாடினான். நகுலன் அவன் தோளை பற்றிக்கொண்டான். அவனால் அப்போதும் என்ன நிகழ்ந்தது என்று தெளிவுற முடியவில்லை. திரும்பி தன்னருகே வியர்வைத் துளிகள் வழிய நின்றிருந்த கரிய புரவியை பார்த்தான். ஒரு கணத்தில் அனைத்தும் விளங்கிவிட “என்ன நின்றுகொண்டிருக்கிறீர்கள்? புரவியின் கால்களை உருவி விடுங்கள்... அத்தனை விரைவாக ஓடியபின் அது இளைப்பாறவேண்டாமா?” என்றான்.

“விரைவாக ஓடியபின் உடனே புரவியை உருவுவது...” என சுதமர் தொடங்க நகுலன் “நீர் காட்டியபின் கொட்டிலில் கட்டுக! நானே வருகிறேன்” என்று சொல்லி கடிவாளத்தை சூதன் ஒருவனிடம் அளித்தான். “நல்ல புரவி... என் உளவிரைவை கூடுமானவரை எட்ட முயன்றது” என்றான் உத்தரன். “ஆம், இன்னும் கொஞ்சம் தங்களிடம் பழகினால் மேலும் விரைவை எட்டும்” என்றான் நகுலன். உத்தரன் ஓரக்கண்ணால் அவனை நோக்கியபடி “ஆம், சிலநாட்கள் போகட்டும். அதன்பின் மீண்டும் அதற்கு பயிற்சி கொடுப்போம்” என்றான்.

மெல்ல பீடத்தில் சென்றமர்ந்த உத்தரன் “மூடா! என் காலணிகளை கழற்று” என காலை நீட்டினான். “இன்னும்கூட ஒரு சிலமுறை சுற்றியிருக்கலாம். பொழுதில்லை. அவையில் பணிகள் பல எஞ்சியிருக்கின்றன” என்றான். சூதன் அவன்

காலணிகளை கழற்ற “குதிமுள்ளால் குத்தி அதை ஊக்கினேன். நல்ல புரவி, என் நோக்கத்தை புரிந்துகொண்டது” என்றான். நகுலன் “நாளை இன்னொரு புரவியில் செல்வோம், இளவரசே” என்றான். “நாளை என்றால்…” என அவன் இழுக்க “நான் இங்கிருப்பேன்” என்றான் நகுலன்.

அந்தச் சொற்குறிப்பைக் கேட்டு விழிதூக்கி அவனை நோக்கி உடனே திரும்பிக்கொண்டு “நீர் உடனிரும். நானறிந்த புரவிக்கலையை நீர் கற்றுக்கொள்வதில் எனக்கு மகிழ்ச்சியே” என்றான் உத்தரன். “அது என் நல்லூழ்” என்று நகுலன் சொன்னான். உத்தரன் எழுந்துகொண்டு நகுலன் தோளில் தட்டி “நன்று… உமக்கு நான் ஒரு பொற்கங்கணத்தை அளிக்க ஆணையிடுகிறேன். அதை அணிந்துகொள்ளும். இளவரசனுக்குரிய புரவித்துணைவன் என்றால் அவனைப் பார்த்ததுமே பிறர் அறியவேண்டும்” என்றான் உத்தரன்.

அவன் சென்றதும் சுதமர் “விந்தை!” என்றார். “என்ன விந்தை? இவர் புரவிக்கு ஆணையிட்டார். புரவி அதை கேட்டது” என்றார் நாமர். “புரவியிடம் எப்படி பேசினீர்?” என்றார் சுதமர். நகுலன் புன்னகையுடன் “நாம் புரவிகளுக்கு பயிற்சி கொடுக்கவேண்டும் அல்லவா?” என்றான்.

# நீர்க்கோலம் - 22

### 21. புரவியின் இரவு

இரவில் துயில்விழித்துக்கொள்வது முதலில் தன் வலக்கைதான் என்பதை நகுலன் உணர்ந்திருந்தான். அது சென்று இன்மையை உணர்ந்து திடுக்கிட்டு அவனை

எழுப்பியது. அந்த விதிர்ப்புடன் தன்னை உணர்ந்து நெஞ்சின் ஓசையை கேட்டபடி அத்துடிப்பு இருளை அதிரவைப்பதை திறந்த விழிகளால் நோக்கியபடி சற்று நேரம் படுத்திருந்தான். பின்பு பெருமூச்சுடன் எழுந்து அமர்ந்து இரவின் நீளிசை ஒலியை, தொலைவுக்காற்றின் அணுகலோசையை கேட்டான். எழுந்து எலும்புகள் ஒடியும் சுள்ளிபோல் ஒலிக்க உடலை நெளித்து மெல்ல காலடி வைத்து வெளியே வந்து நின்றான்.

அவன் விழித்துக்கொண்டதை உணர்ந்த குட்டிப்புரவி காதரன் தான் படுத்திருந்த மூலையிலிருந்து மெல்ல அசைந்து எழுந்து நான்கு கால்களில் நின்றபடி முன்னும் பின்னும் ஆடியது. கனவில் அது அன்னையிடம் பாலருந்தியது வாயை சப்புக்கொட்டும் ஒலியிலிருந்து தெரிந்தது. அவன் முற்றத்திற்கு வந்தபோது அங்கு நின்றுகொண்டிருந்த அதன் தமக்கை பத்மை அரைத்துயிலில் அவன் காலடியோசையைக் கேட்டு இரு காதுகளையும் அசைத்தபின் வால் சுழற்றி முனகியது. கொட்டில்களில் நின்றுதூங்கியும் அசைபோட்டும் புல்மென்றும் கொண்டிருந்த புரவிகளில் பல குளம்புகளை மிதித்து ஓசையெழுப்பியும் அழிகளை காலால் தட்டியும் நீள்மூச்சு விட்டும் அவனை அறிந்துகொண்டதை தெரிவித்தன.

காரகன் இருளுக்கு அப்பால் மெல்ல கனைத்தது. கைகளைக் கட்டியபடி வான்சரிவெங்கும் நிறைந்திருந்த விண்மீன்களை நோக்கிக்கொண்டு அவன் நின்றிருந்தான். காற்று உடலைத் தழுவி ஆடையை பறக்கச்செய்து கடந்துசென்றது. எழுந்து வெளிவந்தபோது அதே விசையில் நடந்து தெற்குச்சோலைக்குச் சென்று சகதேவனை பார்ப்பதாகவே தன் உடலை இயக்கிய உள்ளத்தின் ஆழம் எண்ணியிருந்ததை அப்போது உணர்ந்தான். தன்னுணர்வு கொண்டதுமே அதை

அணையிட்டிருந்தான். ஆயினும் உடலில் மெல்லிய உந்துதல் ஒன்று எஞ்சியிருந்தது. அதை வெல்வதுபோல அவன் கைகளை மேலே தூக்கி உடலை நெளித்து முனகிக்கொண்டான்.

இப்போது சகதேவன் அங்கு விழித்திருப்பான். தன் குடில் முற்றத்தில் அமர்ந்து விண்மீன் பெருக்கை விழியிமைக்காது நோக்கிக்கொண்டிருப்பான். அந்த கோடி விண்மீன்களில் ஒன்றெனக் கூட தன் பெயரோ முகமோ அவன் சித்தவெளியில் எழப்போவதில்லை. அத்தனை எளிதாக அவனால் வெட்டிக்கொண்டு செல்ல முடிந்திருக்கிறது. முன்பெப்போதோ முற்றிலும் அகன்றுவிட்டிருந்தவனைப் பற்றி உடன்நிறுத்தியது தன் அன்பு மட்டுமாக இருக்கலாம். இல்லை... மூத்தவர்களின் அன்பினாலும் அவன் கட்டுண்டிருக்கிறான். அவன் உள்ளத்தில் தருமனின் இடம் இறைநிகர் கொண்டது. உதிர்ந்து சருகான பின் சிலந்தி வலையில் சிக்கி மரத்துடனிருக்கும் இலைபோல் இருந்திருக்கிறான்.

நகுலன் நீள்முச்சுடன் அங்கிருந்த சிறிய கல்லொன்றில் அமர்ந்தான். தொலைவில் காரகன் மீண்டும் குரலெழுப்பியது. தன் ஒவ்வொரு அசைவையும் தனித்தனியாக அது அறிகிறது. இப்போது அதன் சிறிய செவிகள் குவிந்தும் மடிந்தும் ஒலிதேர்ந்துகொண்டிருக்கும். உருளைக்கல் விழிகள் அசைய வாய்திறந்து மூக்குத்துளைகள் அகன்று அசைய அவனை உணர்ந்துகொண்டிருக்கும். தன் உள்ளத்தின் ஒரு பகுதியை முழுமையாகவே அவனுக்கு அளித்திருக்கிறது. எங்கு எதை செய்துகொண்டிருந்தாலும் அவனுடன் பிரியாது இணைந்திருக்கிறது. புரவிகள் எப்போதும் அப்படித்தான். அவற்றால் எந்த உறவுகளையும் துண்டித்துக்கொள்ள இயலாது.

அன்பின் வலையிலிருந்து விடுவித்துக்கொள்ளும் ஆற்றலுள்ள ஒரே உயிரினம் மானுடன்.

மீண்டும் நீள்மூச்சுவிட்டான். சகதேவன் கிளம்பிச்சென்ற அன்று முதற்கணம் எழுந்த பெரும் பதைப்பை அடக்கி நீள்மூச்சுடன் அமர்ந்து விடியலை நோக்கிக்கொண்டிருந்தான். நீராடவேண்டும் என எண்ணி எழுந்து மரவுரியை எடுக்க அறைக்குள் நுழைந்தபோதுதான் அங்கே இருந்த இன்மை வந்து அறைந்தது. பதறி வெளியே ஓடி சகதேவனின் காலடிகளை அடையாளம் கண்டு காட்டினூடாக தொடர்ந்து சென்றான். நன்கறிந்த காலடிகள் அவை என்பதை அப்போதுதான் உணர்ந்தான். எப்போது இதை தனித்து நோக்கினோம்? எப்போதுமே நோக்கிக்கொண்டிருந்தோம் போலும். ஒருவன் கூர்ந்து நோக்காமலேயே நன்கறிந்திருப்பது தன் உடலைத்தான். அது என் உடலும்கூடவா?

காட்டின் எல்லை வரை சென்றபோது அவன் விரைவழிந்தான். அப்படி தொடர்ந்து செல்வதில் இருக்கும் தன்னிழிவை உணர்ந்து சரிந்து கிடந்த மரம் ஒன்றின் மேல் அமர்ந்து மேலும் சென்ற கால்சுவடுகளை நோக்கிக்கொண்டிருந்தான். விட்டு ஓடுபவனை துரத்திச் செல்கிறேன்... நாணின்றி, நயமின்றி அவனுக்கு பெருந்துயரொன்றை இழைக்கிறேன். இன்றுவரை அவன் துயருறும் எதையும் செய்ததில்லை. அவன் உள்ளம் கொள்ளும் அத்தனை அசைவுகளையும் அக்கணமே தன் உள்ளமும் அறிந்திருந்தது. அவனை தனித்து எண்ணியதேயில்லை. அவன் உடனிருந்ததுகூட இல்லை. அவனாகவும் நான் இருந்தேன்.

தொலைவில் தனித்து நடந்து செல்லும் அவனை உளவிழிகளால் நோக்கினான். அவன் தோள்கள் அகன்றிருந்தன.

இரு கைகளும் சிறகுகளாகி கால்கள் மண்ணை மெல்லத் தொட்டு தொட்டு உந்த நடப்பதா பறப்பதா என உடல் மயங்க கணந்தோறும் என காட்சி சுருங்கி அகன்றான். இந்த உள ஓவியம் பலமுறை எழுந்துவிட்டது. இன்று நெடுங்காலம் முன்பு நிகழ்ந்ததை நினைவுகூர்வதுபோலிருக்கிறது. ஓர் அறியாக்கணத்தில் அவன் சகதேவனென்றாகி அங்கிருந்து திரும்பிப் பார்த்தான். ஒடுங்கிய தோள்களுடன் குறுகி அமர்ந்திருக்கும் தன்னை நோக்கி புன்னகைத்து திரும்பிக் கொண்டான். அக்காட்சி அவன் உள்ளத்தை உருகச் செய்தது. தனிமையில் அமர்ந்து மெல்லிய கேவல்கள் ஒலிக்க விழிநீர் தாடியிலும் நெஞ்சிலும் உதிர அவன் ஏங்கி அழுதான். பின்னர் நெஞ்சு எடையின்மையை உணர எழுந்து நின்றான்.

மரவுரியால் முகத்தை துடைத்தபோது மீசையிலும் தாடியிலும் இருந்த துளிகள் வியப்புறச் செய்தன. எத்தனை அழுதிருக்கிறேன்! இத்தனை விழிநீர் இதற்குமுன் எப்போதாவது சிந்தினேனா? இந்த விழிநீர் சிந்தப்படவேண்டியதுதான். பிறந்த கணம் முதல் பிரியாதிருந்த ஓர் உறவின் முடிவு இது. இன்னும் சிலநாட்களில் மீண்டும் அவனை சந்திப்பேன். சொல்லாடுவேன், தோள் தழுவுவேன், உடனமர்வேன். ஆனால் மீண்டும் இரட்டையராக இருக்கப்போவதில்லை. இடையே நுழைந்துள்ளது கூரிய குளிர்ந்த வாள் ஒன்று.

இந்நாள் என்றும் நினைவில் நிற்கக்கூடியது. இன்றுடன் என்றுமென நான் எண்ணியிருந்த ஒன்று முடிவுக்கு வருகிறது. அப்படி வேண்டுமென்றே எண்ணிக்கொள்வதையே விந்தையென அவன் உணர்ந்தான். எஞ்சியுள்ள நீர்த்துளிகளை உலுக்கி உதிர்க்க விழையும் காற்றுபோல மிச்சமில்லாது

உலரும்பொருட்டு அவ்வெண்ணத்தை அவனே உருவாக்கிக்கொள்கிறான். உள்ளம் நெகிழ்வுகொள்ளவில்லை, விழிநீர் எஞ்சியிருக்கவுமில்லை. வெறும் நீள்மூச்சுகள்தான் எழுந்துகொண்டிருந்தன.

திரும்ப வேண்டும். ஒன்றும் நிகழாததுபோல் உள்ளத்தை இறுக்கிக்கொள்ள வேண்டும். முகமும் உடலும் இயல்புடன் திகழவேண்டும். மூத்தவர்கள் கேட்கும்போது எண்ணி அடுக்கிய சொற்களால் மறுமொழியிறுக்க வேண்டும். அவன் தன் ஆடையை சீரமைத்துக்கொண்டு திரும்பியபோது இரு காலடித்தொடர்களை கண்டான். அவ்விரட்டைக் காலடிகளில் எது தன்னுடையதென்று அவனால் அறிய முடியவில்லை. ஒன்றுடன் ஒன்று பின்னி ஒற்றைச் சரடென்றாகி புலரிஈரம் படிந்த காட்டுப்புழுதியின்மேல் அவை நீண்டு கிடந்தன. அவற்றின் மேல் மீண்டும் கால்வைக்க அஞ்சி சற்று அப்பால் நடந்து அவன் திரும்பி வந்தான். அவை அவனுக்கு இணையாக மறுதிசைக்கு சென்றுகொண்டிருந்தன.

வழியிலேயே சிறுசுனையொன்றைக் கண்டு நீரள்ளி உடல்மேல் விட்டு குளித்தான். விரல்களால் ஈரக்குழலை தோளில் பரப்பியபடி குடிலுக்கு மீண்டான். அந்தச் சிறு அசைவின் தாளம் தன் எண்ணங்களுக்கொரு ஒழுங்கை அளிப்பதைக் கண்டான். தன் அறைக்குள் நுழையவிருந்தவன் அறியாது தயங்கி வெளித்திண்ணையில் அமர்ந்தான். முற்றத்தில் வெயில் ஒளிகொண்டிருந்தது. கூழாங்கற்களின் நிழல்கள் குறுகிக்கொண்டிருந்தன. காலையுணவுக்கு என குருநிலையின் இளம்மாணவன் வந்து அழைத்தபோது நெஞ்சில் கைகளைக் கோத்து வானத்தை நோக்கி முற்றிலும் தன்னை இழந்து

அமர்ந்திருந்தவன் திடுக்கிட்டு விழித்துக்கொண்டு “ஆம்” என்று எழுந்தான்.

தன்னையறியாமலேயே சகதேவனை அழைக்க குடிலுக்குள் திரும்பிய கணம் அனல் சுட சித்தம் விழித்து திரும்பிக்கொண்டான். “நன்று… வருகிறேன்” என்று மாணவனிடம் சொன்ன தன் குரல் அடைத்துப்போய் வேறெவரோ என ஒலிப்பதைக் கேட்டான். நடந்தபோது தன் உடல் ஏன் அருகே அவனை உணர்கிறது என்று வியந்தான். தன் ஒவ்வொரு அசைவும் அருகே நிகழும் அவன் உடல் அசைவுடன் இணங்கியதுபோல நிகழ்வதை அகன்று நின்று கண்டான். அது தன் உளமயக்கா? இல்லை, உண்மையிலேயே தன் உடலில் ஒரு தன்னுணர்வின் இறுக்கம் வலப்பக்கம் இருக்கிறது. அங்கு அவன் இருந்துகொண்டிருக்கிறான். இன்மையென்று.

பீமன் தொலைவில் அவனைக் கண்டதுமே சகதேவன் கிளம்பிச் சென்றுவிட்டதை உய்த்தறிந்தான். அவன் சென்றமர்ந்ததும் கோட்டிய கமுகுப்பாளையில் இன்கூழையும் சுட்ட கிழங்கையும் காய்கறிகளையும் கொண்டுவந்து வைத்தான். அவன் எதுவும் கேட்கமாட்டான் என்பதை நகுலனும் உணர்ந்திருந்தான். தலைகுனிந்து சொல்லின்றி அவன் உண்டான். மொழியில்லாதபோது ஒவ்வொரு ஒலியும் பிறிதொரு மொழியின் சொல்லென ஒலிக்கும் விந்தை. மெல்லும் ஒலி, உணவை அள்ளும் ஒலி, ஆடைச் சரசரப்பு, அப்பால் காற்றிலாடிய உறியின் கயிற்று முனகல், தொலைவில் கன்றொன்றின் குரல். அதை ஓட்டிச் சென்ற மாணவனின் மழுங்கிய பேச்சொலி.

அர்ஜுனனும் தருமனும் உள்ளே வந்தபோது பீமனின் விழிகளில் இருந்தே செய்தியை உணர்ந்துகொண்டனர். அவர்களும் ஒன்றும் சொல்லவில்லை. இருவரும் நீராடி ஈரம் உலர்ந்துகொண்டிருந்த உடலுடன் அமர்ந்தனர். அவர்கள் உடலிலிருந்து எழுந்த நீராவியை தன் காதுமடல்களில் அவனால் உணரமுடிந்தது. பெருமூச்சுவிட்டபடி விழிதூக்கி அவர்களைப் பார்த்து தலைவணங்கி முகமன் உரைத்தான். தருமன் வழக்கமான சொற்களில் வாழ்த்துரை அளித்தார். அவர்களுக்கு பீமன் காலையுணவு அளிக்க ஆழ்ந்த மொழியிலா வெளி சூழ அவர்களும் அதை அருந்தினர். உண்டு முடித்தபின் எழுந்து மூத்தவர்களுக்கு தலைவணங்கி மீண்டும் குடிலுக்கு வந்தான்.

ஏழு நாட்களுக்குப்பின் அவன் கிளம்பிச்செல்ல வேண்டுமென்பது அவர்கள் முன்னரே வகுத்துக்கொண்ட நெறி. ஏழு நாட்கள் இங்கிருக்க வேண்டும். ஒவ்வொரு அசைவுக்கும் உடன் அவன் இல்லை என்பதை பழக்க வேண்டும். இருப்பென்பது இனி பாதியே. அதற்குள் சுழன்றுவரும்படி சித்தத்திற்கு கற்பிக்க வேண்டும். அது மிக எளிது. உடல் வற்புறுத்தல்களுக்கு இணங்குவது. உடல் பருப்பொருளால் ஆனது என்பது எத்தனை உகந்தது! அதை பருப்பொருட்களால் ஆள முடியும். உடலை நடிக்காதிருக்க இயலாத உள்ளத்தை அளித்த தெய்வங்கள் பெருங்கருணை கொண்டவை. கன்றைத் தொடர்கிறது பசு. கன்று கயிற்றால் இழுக்கப்படுகிறது.

இரண்டு நாட்கள்தான் அவன் குருநிலையில் இருந்தான். தன்னை வெல்லும்பொருட்டு கடும் உடலுழைப்பை தனக்கே அளித்துக்கொண்டான். எரியும் வெயிலில் நின்று குருநிலைக்குத் தேவையான விறகுகளை வெட்டி அடுக்கினான்.

காவடியைத் தோளிலேற்றி மலைச்சரிவில் இறங்கிச்சென்று சுனையிலிருந்து நீர் மொண்டு வந்து மரத்தொட்டிகளை நிரப்பினான். காட்டுக்குள் அலைந்து கிழங்குகள் தேர்ந்துவந்து தோலுரித்து வெட்டி வெயிலிலிட்டு உலரவைத்து பானைகளில் சேர்த்து உள்ளே வைத்தான். அத்தனைக்குப் பிறகும் உள்ளம் அலைந்து திரிய நெடும்பொழுது எஞ்சியிருந்தது.



இரண்டாம் நாள் உள்ளத்தின் ஏதோ மூலையில் இருந்து ஒரு சிறு எரிச்சல் எழுந்து வந்தது. இத்தனை சார்ந்திருக்கிறோமா? இவ்வளவு தொலைவுக்கு கடன் கொண்டிருக்கிறோமா?

தனியாக நின்று ஒருகணமும் எண்ணாதபோது தவமென்று ஒன்று தனக்கு அமையவே போவதில்லையா? இங்கு நான் இவ்வண்ணம் இருக்கையில் எங்கோ அவன் தன்னை முற்றிலும் மறந்து முழுமை கொண்டிருக்கிறான். அதில் ஐயமே இல்லை. அக்காலடிகளைத் தொடர்ந்து செல்லும்போது அவன் உள்ளம் உணர்ந்தது அதுதான். தயங்காது, கணமும் நிலைக்காது சென்று கொண்டிருந்தன அவை.

அவ்வெண்ணமே எரிச்சலை மேலும் வளர்த்தது. அவன் ஒரு முழுமையென்றாகி நிற்க அதனுள் நுழைவதற்கு வழி தேடி முட்டி முட்டித் தவித்து சுற்றி வரும் வெறும் பூச்சியா நான்? நான் தேடுவதற்கு பிரிதொன்றில்லையா? அதை சினமென வஞ்சமென பெருக்கிக் கொண்டான். ஆம், நான் ஒரு முழுமை. அதை அறியும் தருணம் இது. இக்கணம் முழுமையற்றிருக்கலாம். அறுபட்ட முனைகள் துடித்துத் தவிக்கலாம். ஆனால் நான் சென்று சேரும் ஓர் இடமுண்டு அங்கு முழுமைகொண்டு காலத்தால் கலைக்க முடியாத அமைதி கொள்வேன். இந்த மலைமுடிகளைப்போல. இதைச் சூழ்ந்திருக்கும் தொடுவானின் வளையத்தைப்போல.

அவன் கிளம்பியபோது பீமன் “ஏழு நாட்களுக்குப்பின் நீ சென்று சேர்வதாக அல்லவா உடன்பாடு, இளையோனே?” என்றான். நகுலன் அவன் விழிகளைத் தவிர்த்து “ஏழு நாட்களுக்குப் பின்னரே அங்கு சென்று சேர்வதாக இருக்கிறேன், மூத்தவரே” என்றான். மேலும் ஒரு சொல் கேட்காமல் பீமன் திரும்பிக்கொண்டான். தருமனிடமும் அர்ஜுனனிடமும் விடைபெறும்போதும் அவர்கள் அவன் எங்கு செல்லப்போகிறான் என்று கேட்கவில்லை. அவனிடம் எதுவும்

கேட்கத் தேவையில்லாததுபோல் உடலிலேயே அத்துயர் கணமொழியா தத்தளிப்பென வெளிப்பட்டுக்கொண்டிருந்தது.

நகுலன் தான் நடந்துகொண்டிருப்பதை சற்று பிந்தியே உணர்ந்தான். எங்கு செல்கிறோம் என்பதும் அவன் கால்களுக்கு தெரிந்திருந்தது. செல்லச்செல்ல உள்ளம் விரைவுகொள்ள உடல் தளர்ந்து தொலைவு முடிவிலாது நீண்டது. பல இடங்களில் நின்று பெருமூச்சுவிட்டுக்கொண்டு மீண்டும் நடந்தான். தெற்குச்சோலையில் காவலென ஏதுமிருப்பதில்லை. அங்கே மேயும் மான்கள் அவன் காலடியோசையில் வெருண்டு கலைந்தன. அவன் காலடியோசை எங்கோ வேறெவரோ அணுகிவருவதுபோல எதிரொலித்தது. தொலைவில் அவன் அருகநெறியினருக்குரிய குடில்களை கண்டுவிட்டான். மேற்கொண்டு காலெடுத்து வைக்க அஞ்சியவன்போல அங்கேயே ஒரு மகிழமரத்தடியில் நின்றான்.

முதல்நாள் அவன் அங்கே வந்தபோது அங்கு நின்றுதான் சகதேவனை சந்தித்தான். ஒருநாள் மட்டுமே அவனால் கிரந்திகன் என்னும் மாற்றுருவை அணியமுடிந்தது. அன்று பகலிலேயே அவன் சகதேவன் அருகநெறியினனாக வந்து தெற்குச்சோலையில் தங்கியிருப்பதை தெரிந்துகொண்டான். அதை கேட்டறிய விழைந்து வினாதொடுக்கையில் அவன் உள்ளம் பதறி நெஞ்சோசை உடலெங்கும் கேட்டது. அங்கே அன்றாடம் வருபவர்களைப்பற்றி கேட்டான். பின்னர் நிமித்திகர்களை, கணியர்களை. “என் இளையோன் எங்கிருக்கிறான் என்று சொல்லும் ஒரு நற்கணியனை காணவிழைகிறேன்” என்றான். எந்த விழிகளிலாவது ஐயம் தெரிகிறதா என அவன் நோக்கு தேடிச்சென்றது. அவர்கள் எதையும் உணரவில்லை. அவ்வாறு உணர வாய்ப்பும் இல்லை.

தன்னுள் வாழும் கரவு உலகெங்கும் கரந்தவற்றை தேடுபவனாக ஆக்கிவிட்டிருக்கிறது.

நாமர்தான் சகதேவனைப்பற்றி சொன்னார். "சொல் காலத்தைக் கடந்து மலைமுடிகளுக்கு மேலே பறக்கும் புள் என ஆவதை அவரிடம்தான் பார்க்கமுடியும். அருகநெறியினர்..." என்றார். அருகநெறியினர் தங்கும் சோலையை பிறிதொருவனிடமிருந்து அறிந்தான். அந்தி இருண்டதுமே கிளம்பிச் சென்றுவிடவேண்டும் என உள்ளம் துடித்தாலும் அறியா இடத்தில் இரவில் செல்லவேண்டியதில்லை என தன்னை அடக்கினான். கடிவாளத்திற்கு இணங்கா புரவிக்குட்டி என உள்ளம் எழுந்தபடியே இருந்தது.

கருக்கிருட்டிலேயே கொட்டில் விழித்துக்கொண்டது. புரவிகள் பேணுநரை அழைத்து கனைக்கத் தொடங்கின. அவர்கள் துயில்மாறா விழிகளுடன் எழுந்து வந்து அவற்றை அவிழ்த்து வெளியே கொண்டுசென்று நீர்த்தொட்டிகளின் அருகே கட்டிவிட்டு கொட்டில்களிலிருந்து சாணியை வழித்து கூடைகளில் ஏற்றி வண்டிகளில் வைத்து கொண்டுசென்று உரக்குழிகளில் கொட்டினர். கொட்டில் தரையை தூய்மை செய்தபின் புரவிகளை குளிப்பாட்டுவதற்காக மலைச்சுனைக்கு கொண்டுசென்றனர். நீர் அருந்தி தாடையில் வழிய நிமிர்ந்து மூச்சுவிட்ட புரவிகள் குளிருக்கு உடல் சிலிர்த்தபடி தலையை அசைத்துக்கொண்டும் காதுகளைக் கூர்ந்து இருளொலிகளை கேட்டுக்கொண்டும் மெல்லிய குரலில் பிற குதிரைகளுடன் பேசிக்கொண்டும் சென்றன.

நகுலன் காரகனையும் அவன் பொறுப்பிலிருந்த வேறு எட்டு புரவிகளையும் அவிழ்த்துக்கட்டி கொட்டிலை தூய்மை செய்தான். புரவிகளின் சாணியும் சிறுநீரும் சேர்ந்து குழம்பிய

மணம் நெஞ்சுக்கு இனிதாக இருந்தது. நெடுநாட்களாக அதை இழந்திருந்தோம் என எண்ணிக்கொண்டதும் உவகை எழுந்தது. உவகை அல்ல அது என எண்ணிக்கொண்டான். ஒரு நிறைவு. ஒன்றை அதற்குரிய சரியான இடத்தில் வைத்துவிட்டால் எழும் பொருத்த உணர்ச்சி. அவனுடன் காதரனும் வந்து தொழுவத்திற்குள்ளேயே குறுக்கே நடந்தது. அவன் கைகளுக்குள் புகுந்தது. பின்னாலிருந்து முட்டித்தள்ளியது. பத்மை வெளியே நின்றபடி “அப்படியெல்லாம் செய்யக்கூடாது தெரியுமா?” என்றது. பின்னர் அதுவும் உள்ளே வந்து பெரிய குதிரை எஞ்சவிட்டுச் சென்றிருந்த புல்லை முகர்ந்து ஒருவாய் கவ்விக்கொண்டது.

புரவிகளை குளிப்பாட்ட அவன் அழைத்துச்சென்றபோது உடன் இரு குட்டிகளும் வந்தன. “ஓடாதே… ஓடாதே” என்று பத்மை இளையவனை எச்சரித்தபடியே வந்தது. காரகனின் கால்களுக்குக் கீழே காதரன் வந்தபோது அது எரிச்சலுடன் அசையாமல் நின்றது. நகுலன் காதரனை தள்ளி அப்பால் விட்டான். ஆனால் கால்களுக்கு அடியில் வந்ததுமே அன்னைமுலை நினைவுக்கு வந்த காதரன் மீண்டும் மீண்டும் காரகனின் கால்கள் நடுவே வந்து அண்ணாந்து நக்க முயன்றது. இன்னொரு பெண்குதிரை “இங்கே வா, செல்லமே” என்றது. காதரன் அதை பார்த்துவிட்டு “மாட்டேன். இங்கேதான் இருப்பேன்” என்றது.

புரவிகளை நீராட்டுவதற்கு சோலைக்குள் சிறிய சுனையைத்தான் அமைத்திருந்தனர். காட்டிலிருந்து வழிந்து வந்த நீரோடை அதில் வந்து சேர்ந்து மறுபக்கம் தளும்பிச் சென்றது. அஸ்தினபுரியில் நீராட்டுவதுபோல குதிரைகளை நீரில் இறக்கி நீந்தவிட்டு கழுவவில்லை. கரையில் நிறுத்தி

சிறிய மரக்குடுவைகளில் நீர் அள்ளிக் கொண்டுவந்து எங்கெல்லாம் சாணி உலர்ந்திருக்கிறதோ அங்கு மட்டும் தெளித்தனர். சாணி ஊறியதும் அதைமட்டும் புல்வேரால் உரசித்தேய்த்துக் கழுவியபின்னர் பலாத்தோல் போன்றிருந்த மரத்தாலான மென்முள்தூரிகையால் அவற்றின் உடலை பலமுறை சீவினர். தோல் பளபளப்பாக ஆனபின்னர் மரவுரியை நீரில் தோய்த்து ஒருமுறை நீவித்துடைத்துவிட்டு மீண்டும் நாய்த்தோலால் நீவினர்.

“நீராட்டுவதில்லையா?” என்றான் நகுலன். “இல்லை, நீங்கள் புரவிகளை நீராட்டுவீர்களா என்ன? சௌவீரத்திலும் புரவிகளை நீராட்டுவதில்லை என்றுதானே கேள்விப்பட்டேன்?” என்றார் கபிலநிறமான பெரிய புரவியை நீவிக்கொண்டிருந்த கச்சர். “ஆம், ஆனால் கங்கைக்கரையில் நீராட்டுகிறார்கள்” என்றான் நகுலன். “இங்கே புரவிகளை நீராட்டவேண்டியதில்லை என்பதை வகுத்தவர் நளமாமன்னர். நீராட்டப்படாத புரவிகளை ஈக்களும் உண்ணிகளும் குறைவாகவே அணுகுகின்றன” என்றார் கச்சர். “பிறந்ததுமுதலே நீராட்டவில்லை என்றால் அவற்றின் உடலில் அரிய நறுமணம் ஒன்று உருவாகிவருகிறது. எப்போதேனும் புதுமழையில் அவை நனைகையில் புதுமழையில் மண் எழுப்பும் அதே இனியமணம் எழுவதை நீர் அறியவேண்டும்... தெய்வமெழுவதுபோலிருக்கும்.”

“ஆம், புரவிகளின் வியர்வையில் உள்ள எண்ணை அவற்றின் தோலுக்கும் முடிக்கும் காப்பு” என்றான் நகுலன். “அதை கழுவிக்களைந்தால் தொடர்ந்து வேறு பூச்சுக்கள் தேவையாகும்.” கச்சர் “எந்த தோலெண்ணையும் நாங்கள் இங்கே பூசுவதில்லை. அந்தியில் கொட்டிலில் புகையிடுவோம். அதுகூட மணமற்ற வெற்றுச் சருகுப்புகைதான்.

குளிப்பாட்டப்படாத புரவியை அருகே முகர்ந்துணர நேர்ந்த மற்ற புரவிகள் கொள்ளும் உணர்வுத்தூண்டலை நான் பார்த்திருக்கிறேன். ஒருமுறை களத்திலேயே விதர்ப்பத்தின் புரவி போர்மறந்து கனைத்தபடி அருகணைந்தது.”

அவன் புரவிகளை உடலுருவி இளைப்பாற்றி கொண்டுவந்தபோது பயிற்சிக்காக படைவீரர்கள் சிறிய குழுக்களாக வந்திருந்தனர். படைத்தலைவர் சக்தபுஜனும் பன்னிரு துணைப்படைத்தலைவர்களும் நான்கு நாழிகை நேரம் புரவிகளில் குறுங்காட்டை சுற்றிவந்தனர். கோட்டைக்காவலர்தலைவன் கோசனும் அவனுடைய துணைவர்களும் வேறு இடத்தில் பயிற்சி செய்தனர். ஒவ்வொரு நிரையாக பயிற்சி முடிந்து மீள களைத்து நுரைதள்ள வியர்வை வழிந்து ஆவியெழ நின்ற புரவிகளை மரநிழல்களில் கட்டி புல்லுண்ண வைத்துவிட்டு கொட்டிலுக்கு வந்தான்.

காலைவெயில் ஏறிவிட்டிருந்தது. குதிரைச்சூதர்களின் அன்றைய பணி முடிந்துவிட்டிருந்தது. பெரும்பாலானவர்கள் ஆங்காங்கே அமர்ந்து வெற்றிலைத் தாலத்தை நடுவே வைத்து எடுத்து மென்றபடி பேசிக்கொண்டிருந்தனர். சிரிப்பொலிகளும் பூசலோசைகளும் எழுந்தன. சிலர் வட்டும் ஏணிநாகமும் ஆடினர். சிலர் மரநிழல்களில் பாய்விரித்துப் படுத்து எஞ்சிய துயிலைத் தொடர்ந்தனர். அவன் அவர்களை நோக்கி புன்னகைத்தபடி ஒருசில சொற்கள் உரைத்தபடி சுற்றிவந்தான். பின்னர் அவர்கள் நோக்கில் சிக்காமல் நழுவி வெளியே வந்தான்.

வடபுலத்துச் சாலையில் அவ்வேளையில் மக்கள் சென்றுவரத் தொடங்கிவிட்டிருந்தனர். கையில் சவுக்குடன் சென்ற அவனை

எவரும் தனிப்பட்டு நோக்கவில்லை. தென்புலத்திற்கு வந்து சோலையைக் கண்டடைந்தான். உள்ளே நுழைந்தபின்னர் குறிகளைக்கொண்டு எளிதில் வழிகண்டுபிடிக்க முடிந்தது. அருகநெறியர்களின் இடத்தைத் தேர்ந்து அந்த மகிழமரத்தடி வரை வந்தான். அதன்பின் கால்கள் பெயரவில்லை. எண்ணம் அங்கிருந்து எழுந்து நூறுமுறை பறந்து அப்பால் தெரிந்த அமணர்குடில்களை அடைந்து சுற்றி மீண்டுகொண்டிருந்தது. கால்கள் வேர்கொண்டவைபோல அவன் அங்கேயே நின்றுகொண்டிருந்தான்.

காலடியோசை கேட்டு அவன் திடுக்கிட்டுத் திரும்பியபோது சகதேவனை மிக அருகே கண்டான். விழுந்துவிடுவோம் என அஞ்சியவனாக நடுங்கும் கையை நீட்டி மரத்தை தொட்டான். பற்றிக்கொள்ள முடியாதபடி அது சற்று அப்பாலிருக்கவே கால் தடுமாறினான். சகதேவன் அவனை நேர்விழிகளால் நோக்கினான். எவரோ என்ற முகத்துடன் "அருகனருள் சூழ்க!" என்று கைதூக்கி வாழ்த்திவிட்டு அவனைக் கடந்து அப்பால் சென்றான். அவன் துவராடை அணிந்து கையில் ஒரு கொப்பரையை வைத்திருந்தான். நகுலன் அவனுக்குப் பின்னால் எழுந்து கூச்சலிட்ட நெஞ்சுடன் அசையாமல் நின்றிருந்தான். பெருமுரசொன்று ஓசையே இல்லாமல் அதிர்ந்துகொண்டிருந்தது.

பின்னர் அவன் திரும்பி வருவதை கண்டான். நெடுந்தொலைவில் இலைகளுக்கு நடுவே அவன் உடல் அசைவைக் கண்டதுமே நெஞ்சு பதற அவன் எழுந்து நின்றான். சகதேவன் அவன் இல்லாத பிறிதொரு உலகில் மெல்ல நடந்துவந்தான். அவன் முகம் முன்பு நகுலன் அறிந்தது அல்ல என்று தோன்றியது. விழிகள் மேலும் சிலவற்றை

நோக்குகின்றன. முகநடிப்பு வேறு சிலருடன் உரையாடுகிறது. அவன் நகுலனை அணுகி “அருகனடி பணிக!” என வாழ்த்திவிட்டு கடந்துசென்றான். மென்காற்று ஒன்று தன்னியல்பாக ஆடைகலைத்து குழல் அலைத்து தாண்டிச்செல்வதுபோல.

நகுலன் தன் உள்ளத்தில் ஒரு சொல்லும் எழாமையை உணர்ந்தான். அவன் குடில்முற்றத்தை அடைந்து அங்கே ஓடைக்கரையில் கால்மடித்து அமர்வதை நோக்கிக்கொண்டு நெடுநேரம் நின்றிருந்தான். கொட்டில் கடமைகள் நினைவில் எழ நீள்மூச்சுடன் திரும்பிச்சென்றான். செல்லும்வழியில் மீண்டும் சகதேவன் முகம் நினைவிலெழுந்தது. அவன் எப்போதுமே அம்முகத்துடன்தான் இருந்தான் என்பதை அப்போது உணர்ந்தான்.

மகிழமரத்தடியில் இருள்செறிந்திருந்தது. அதற்கு விழிபழகியபோது அப்பால் நீரோடையின் வெண்ணிற வளைவின் ஒளி தெரிந்தது. அவ்வொளியே சகதேவனை மெல்லிய கோட்டுருவாக தோற்றுவிக்கப் போதுமானதாக இருந்தது. அவன் விண்மீன்களை நோக்கிக்கொண்டு அமர்ந்திருந்தான். நகுலன் பெருமூச்சுடன் அசைந்து நின்று கைகளை நெஞ்சுடன் கட்டிக்கொண்டான். அவனை நோக்கியபடி தோளை மரத்தில் சாய்த்து தானும் நின்றிருந்தான்.

# நீர்க்கோலம் - 23

**22. களிற்றுப்புரவி**

✿உத்தரனின் அரண்மனைக்கு நகுலன் சென்றுசேர்ந்தபோது உச்சிப்பொழுது ஆகியிருந்தது. அவன் ஓய்வெடுத்துக்கொண்டிருந்தபோது உத்தரனின் ஏவலன் வந்து இளவரசனின் அழைப்பை சொன்னான். “உடனே வரும்படியா?” என்றான் நகுலன். “ஆம், அவருடைய எல்லா ஆணைகளும் உடனே கடைபிடிக்கப்படவேண்டியவையே” என்றான் ஏவலன். நகுலன் ஆடைமாற்றிக்கொண்டு கிளம்பினான். ஏவலன் முன்னரே சென்றுவிட்டிருந்தமையால் தனியாக அரண்மனையை அடைந்தான். அங்கே வாயிற்காவலனுக்கு அவனை தெரிந்திருக்கவில்லை. அவன் வரவிருப்பது அறிவிக்கப்பட்டிருக்கப்படவுமில்லை. “புரவிச்சூதர்கள் அரண்மனைக்குள் செல்லும் வழக்கமில்லை” என்று காவலன் மறுத்துவிட்டான்.

“நான் இளவரசரால் அழைக்கப்பட்டவன்” என்று நகுலன் சொன்னான். “அதற்குச் சான்றாக ஏதேனும் உள்ளதா?” என்றான் காவலன். “என்னை அழைக்கவந்த ஏவலனின் பெயர் சுசரிதன்” என்றான் நகுலன். “இங்கே அப்படி எவருமில்லை” என்றபின் காவலன் திரும்பிக்கொண்டான். நகுலன் அங்கேயே நின்றிருந்தான். காவலன் அவனை திரும்பிப்பார்க்கவே இல்லை. சற்றுநேரம் கழித்து பிறிதொரு காவலன் வந்து “யார்?” என்று கேட்டான். அனைத்தையும் கேட்டறிந்தபின் “இங்கே ஏவலர்கள் பலர் சுசரிதன் என்ற பேரில் உள்ளனர்” என்றபடி திரும்பிச்சென்றான்.

மீண்டும் ஒருவன் வந்து முதலில் இருந்தே அனைத்தையும் கேட்டறிந்தான். அவனும் சென்றபின் முதியவர் ஒருவர் வந்து “யார்? என்ன வேண்டும்?” என்றார். பலர் எந்த கேள்விக்கும் எதிர்நில்லாமல் உள்ளே சென்றுகொண்டும்

மீண்டுகொண்டுமிருந்தனர். காவலர் கூடத்தில் பலர் துயின்றுகொண்டிருந்தனர். முதிய அமைச்சர் ஒருவர் அவ்வழி செல்ல அவரிடம் "இவரை இளவரசர் வரச்சொல்லியிருக்கிறார்" என்றான் ஒரு காவலன். "நீர் யார்? சூதரா?" என்று அமைச்சர் கேட்டபோது மீண்டும் அனைத்தையும் நகுலன் சொன்னான். "இளவரசர் பலரை அழைக்கிறார். ஏன் என்று எவருக்கும் தெரியாது" என்றபின் அவர் கிளம்பிச்சென்றார்.

மாலைமயங்கும் பொழுதில் சுசரிதன் கையில் ஒரு கலத்துடன் வெளியே செல்வதை நகுலன் கண்டான். அருகே ஓடிச்சென்று "சுசரிதரே" என்று அழைத்தான். ஏவலனால் அவனை அடையாளம் காணமுடியவில்லை. "நீர் யார்?" என்றான். அவன் விளக்கியதும் "நீர் ஏன் இங்கே நிற்கிறீர்? நான் உம்மிடம் இளவரசரை பார்க்க வரும்படி சொன்னது உச்சிவேளையில் அல்லவா?" என்றான். "என்னை உள்ளே விட மறுத்தார்கள்" என்றான் நகுலன். "நீர் ஏன் அவர்களிடம் கேட்கிறீர்? நேராக உள்ளே செல்லவேண்டியதுதானே?" என்றான் சுசரிதன். "ஆனால்..." என நகுலன் தயங்க "உள்ளே செல்லும்..." என்றபின் சுசரிதன் வெளியே சென்றான்.

நகுலன் உள்ளே சென்றபோது காவலர்கள் எதுவும் கேட்கவில்லை. எவரும் அவனை அடையாளம் கண்டதாகவே தெரியவில்லை. அவன் அரண்மனையின் முற்றத்தை அடைந்தான். அங்கே ஒரு பெரிய அண்டா புரண்டு வாய்திறந்து கிடந்தது. எவருடையதோ மேலாடை படிகளில் விழுந்திருந்தது. பெரிய தூண்கள் நிரைநின்றிருந்த இடைநாழியினூடாக நிழலொளியில் நடந்தான். அறைகளுக்குள் அமைச்சர்கள் சிலர் பேசிக்கொண்டிருந்தனர். இடைநாழி மூலையில் காவலர்கள் படைக்கலங்களை சாற்றிவைத்துவிட்டு பேசிச்

சிரித்துக்கொண்டிருக்க ஒருவன் மட்டும் ஆர்வமில்லாமல் நகுலனை நோக்கிவிட்டு விழிவிலக்கிக்கொண்டான்.



நகுலன் உள்ளறைகளுக்கு சென்றான். எல்லா அறைகளிலும் எவரோ சிலர் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தனர். எவருமே ஒரு சொல்கூட அவனிடம் கேட்கவில்லை. அங்கே அவ்வழக்கமே இல்லை எனத் தெரிந்தது. அவன் படியேறி முதல் தட்டுக்குச் சென்று அங்கிருந்த இடைநாழியில் நடந்தபோது பெண்களின் சிரிப்பொலிகள் கேட்டன. அவன் தயங்கி நின்றான். கூடவே கேட்ட ஆண்குரல் உத்தரனுடையதென்று தெரிந்தது. அவன்

புன்னகையுடன் ஒரு கணம் நின்றபின் அந்த அறைநோக்கி சென்றான்.

அறைக்குள் உத்தரன் உரத்த குரலில் “மிகப்பெரிய புரவி. காரகன் என்று பெயர். அவன் இதுவரை ஒரே ஒருவரை மட்டிலுமே தன்மேல் ஏற விட்டிருக்கிறான்... ஆனால்” என்றான். “அய்யோ” என்றாள் ஒரு பெண். நகுலன் கதவைத் திறந்து “இளவரசரை வணங்குகிறேன். என்னை தாங்கள் வரச்சொன்னதாக ஏவலன் சொன்னான்” என்றான். உத்தரன் சினத்துடன் “நானா? உன்னையா?” என்றான். “தாங்கள்தான்” என்றான் நகுலன். “மூடா, நான் எதற்கு உன்னை வரச்சொல்லவேண்டும்?” என்று உத்தரன் சொன்னதும் நகுலன் தலைவணங்கி “இன்று இன்னொரு கரும்புரவிதான் வேண்டும் என்று நீங்கள் சொன்னதாகச் சொன்னான். காரகன் நீங்கள் வருவீர்கள் என்று காத்திருக்கிறது. பிறரை அது அணுகவிடுவதில்லை” என்றான்.

உத்தரன் “ஆம், அதைத்தான் சொல்ல விழைந்தேன்” என்றபின் பெண்களை நோக்கி “எனக்கு உண்மையில் புரவிகளை கொஞ்சுவது பிடிக்காது. புரவி என்பது ஆண்மகன். சொல்லப்போனால் அரசன். நமக்கும் அதற்குமிடையே உருவாகவேண்டியது நிகரான நட்பு” என்றான். “அரசி என்றால்?” என்று ஒரு பெண் கேட்க பிறர் வாய்பொத்தி சிரித்தனர். “காதலா?” என்று இன்னொருத்தி கேட்டாள். மீண்டும் சிரிப்பு. அவர்களெல்லாருமே எளிய சேடிப்பெண்கள் என்று தெரிந்தது. உத்தரன் “ஆம், காதலேதான்... அதன்மேல் ஊர்வது காமம்” என்றான். “அய்யய்யோ” என்று அவர்கள் சிரித்து ஆர்ப்பரித்தனர். “எப்படி என்று சொல்கிறேன்...” என்றான் உத்தரன். “அய்யோ,

வேண்டாம்... வேண்டாம்” என்று ஒருத்தி செயற்கையாக கூச்சலிட்டு சிரித்துக்கொண்டே எழுந்து ஓடினாள்.

அழகில்லாத பெண்கள் தங்களை அழகிகளாக எண்ணிக்கொண்டு செய்யும் நடிப்புகளின் பிறழ்வு நகுலனை கூசவைத்தது. அவன் விழிகளை திருப்பிக்கொண்டதையே ஒருவகை பாராட்டாக எடுத்துக்கொண்டு உத்தரன் மேலும் குலாவத் தொடங்கினான். ஒருத்தியின் காதில் ஏதோ சொல்ல அவள் “சீ” என அவன் கையை அடித்தாள். “என்னடி? என்னடி?” என்றாள் இன்னொருத்தி. “நான் சொல்கிறேன்” என்றான் உத்தரன். “விலகுங்கள்... எனக்குத் தெரியும் என்ன என்று” என்றாள் அவள். “என்ன?” என்றான் உத்தரன். “தெரியும், போங்கள்!” அவன் அவள் கொண்டையைப் பிடித்து உலுக்கி “சொல்” என்றான். அவள் அவன் காதில் ஏதோ சொல்ல அவன் வெடித்துச் சிரித்தான்.

நகுலன் “தாங்கள் புரவி ஏறுவதற்குரிய பொழுது அணைகிறது, இளவரசே” என்றான். அக்குரலில் இருந்த மாற்றத்தால் சற்று திடுக்கிட்ட உத்தரன் “ஆம்” என்றபின் எழுந்து மேலாடையை அணிந்துகொண்டு “நான் சிலவற்றை இவனிடம் பேசவேண்டியிருக்கிறது... நாம் மீண்டும் பார்ப்போம். பாகீரதியிடமும் பிரகதியிடமும் இரவில் வரச்சொல்லுங்கள். அவர்களிடம் நான் ஒன்று சொல்லியிருந்தேன்” என்றான். அவர்கள் வளையொலியும் அணியொலியுமாக எழுந்து ஆடைதிருத்திக்கொண்டார்கள். அவர்களில் ஒருத்தி வெளியே செல்லும்போது நகுலனை கூர்ந்து நோக்கிவிட்டுச் சென்றாள். நகுலன் ஒருகணம் தன்னை அவள் தெரிந்துகொண்டுவிட்டாளா என ஐயுற்றான். அவள் சென்ற பின்னர் அந்நோக்கை திரும்ப எடுத்தபோதுதான் அது வேறு என தெரிந்தது. அடுத்து

பிறிதொருத்தியும் நோக்கிச் சென்றாள். அவளுக்கு முந்தையவள் அளித்த நோக்கின் பொருள் தெரிந்திருந்தது என அதன்பின் புரிந்தது.

உத்தரன் நடந்துகொண்டே “நான் உம்மை உச்சிப்பொழுதில் வரச்சொன்னேன் என நினைவு” என்றான். “நான் உச்சிப்பொழுதிலேயே வந்துவிட்டேன். காவலர் உள்ளே வரவிடவில்லை” என்றான் நகுலன். “நான் அழைத்தேன் என்று சொல்வதற்கென்ன?” என்றான் உத்தரன். “சொன்னேன்” என்றான் நகுலன். உத்தரன் அதை அப்படியே விட்டுவிட்டு “நான் உமக்கு கங்கணம் அளிப்பதாக சொன்னேனே! அதை அமைச்சர்கள் அளிக்கவில்லையா?” என்றான். “தாங்கள் எவரிடம் ஆணையிட்டீர்கள்?” என்றான் நகுலன். “மூடர்கள்” என்று சொன்ன உத்தரன் “நீர் என் அணுக்கப் புரவிக்காரர். நீர் இல்லாமல் நான் இனிமேல் புரவியேறமாட்டேன்” என்றான். “இங்கே எவருக்கும் புரவித்தொழில் தெரியவில்லை...”

அவர்கள் ஓர் அறைக்குள் நுழைந்தனர். உத்தரன் பீடத்தில் சென்று அமர்ந்துகொண்டு சால்வையைச் சுழற்றி மடிமேல் அமைத்தான். நகுலன் அருகே கைகட்டி நின்றான். “உம் உடல் சிறியதென்றாலும் கூரியது” என்றான் உத்தரன். உரக்க நகைத்து “உம் மேல் உமிழவேண்டும் என்று தோன்றுகிறது. ஏன் தெரியுமா?” என்றான். நகுலன் “தெரியாது, இளவரசே” என்றான். “மேலோர் அவ்வாறு இழிசினர் மேல் உமிழும் வழக்கம் சதகர்ணிகளிடம் உண்டு என்று என்னிடம் சொன்னார்கள்” என்றான் உத்தரன். நகுலன் புன்னகை செய்தான். “நான் எதற்கு உம்மை வரச்சொன்னேன்?” என்றான் உத்தரன். “தெரியவில்லை, இளவரசே” என்றான் நகுலன்.

“எதற்கு?” என முகவாயைத் தடவியபின் அருகே இருந்த பீடத்திலிருந்து ஓர் பட்டுச்சுருளை எடுத்து ஆர்வமில்லாமல் பிரித்துப்பார்த்தான். அவன் முகம் மலர்ந்தது. அதை நகுலனிடம் காட்டி “இவர் யாரென்று தெரிகிறதா?” என்றான். நகுலன் “இல்லை, இளவரசே” என்றான். “இவர்தான் பேரரசர் புஷ்கரர். நிஷதநாட்டை தன் ஆற்றலால் அடக்கி ஆண்டவர். புரவிப்பெருவீரர்… அவரது ஓவியங்கள் அனைத்திலும் நீண்ட பெருவாளுடனும் கரிய புரவியுடனும்தான் இருக்கிறார்” என்றான். “ஆம், பெரிய புரவி” என்றான் நகுலன். “அதன்பெயர்தான் காரகன். அதைத்தான் இந்தப் புரவிக்கும் வைத்திருக்கிறார்கள்” என்றான் உத்தரன். “இதை என் அரசப்புரவியாக வைத்துக்கொள்ளலாமென்னும் எண்ணம் எனக்கிருக்கிறது.”

“இன்னும் இலக்கணம் ஒத்த கரும்புரவி ஒன்றை நாம் வாங்கலாம். அதற்கு காரகன் என்று பெயரிடலாம்” என்றான் நகுலன். “ஆனால் அது நம் பேச்சை கேட்குமா?” என்றான் உத்தரன். “கேட்கும்படி செய்யலாம்” என்று நகுலன் சொன்னான். உத்தரன் “நான் சில வழிகளை உரைக்கிறேன். நீர் அவற்றை முறையாக கடைபிடித்தால்போதும். அதையும் பழக்கிவிடலாம். உண்மையில் நான் சொல்வதை புரிந்துகொள்ளும் புரவிச்சூதர்கள் கிடைக்கவில்லை என்பதே என் சிக்கலாக இதுநாள்வரை இருந்துவந்தது” என்றான். நகுலன் “நாம் நீண்ட உடைவாள் ஒன்றையும் செய்விக்கவேண்டும்” என்றான். உத்தரன் ஓரக்கண்ணால் நோக்கிவிட்டு “என்னிடம் பல வாள்கள் உள்ளன” என்றான். “மேலும் பெரிய வாள் தேவை. ஏனென்றால் புரவியில் போர்முகம் செல்லும்போது வாள் நீளமாக இருந்தாகவேண்டும்.” உத்தரன் “ஆனால் எடையுள்ள உடைவாள் என்றால்…” என இழுக்க நகுலன் “எடையை

புரவிதானே சுமக்கவிருக்கிறது?” என்றான். “ஆம், அது தெரியும்” என்றான் உத்தரன்.

மெல்ல இயல்புநிலைக்கு வந்த உத்தரன் “நான் வரும் செண்டுவெளி விழாவில் புரவியூர்ந்து சில போர்விளையாட்டுக்களை காட்டலாமென எண்ணியிருக்கிறேன்” என்றான். “செய்யலாம், நான் உடனிருக்கிறேன். தங்களுடன் இருந்தேன் என்னும் பெருமை எனக்கும் என் குடிக்கும் எதிர்காலத்தில் நற்பெயரென நிலைக்குமல்லவா?” என்றான் நகுலன். “ஆம், நான் உமக்கு அளிக்கும் பெருங்கொடை அதுவே” என்றான் உத்தரன். “மாமன்னர் புஷ்கரர் புரவியூர்தலில் தேர்ந்தவர் என்கிறார்கள். அவரைப்பற்றி எழுதப்பட்ட புஷ்கரவிலாசம் என்னும் நூலை நீர் அறிந்திருக்கமாட்டீர்.” நகுலன் “இல்லை, இளவரசே” என்றான்.

“நளன் புரவித்தொழில் தேர்ந்தவர் என்கிறார்கள். அது சூதர்கள் எழுதிய கதை. ஏனென்றால் புஷ்கரரிடமிருந்து நளன் அரசை கைப்பற்றிக்கொண்டார். அதன்பின் நிகழ்ந்த அனைத்தையும் மாற்றி எழுதச்செய்தார். நிகழ்ந்ததே வேறு. அதை மறைக்கப்பட்ட இந்நூலில் காணலாம். புஷ்கரர் மணந்தது கலிங்கமன்னர் சூரியதேவனின் மகள் சாயைதேவியை என அறிந்திருப்பீர்.” நகுலன் “இல்லை” என்றான். “கலிங்க இளவரசியின் மைந்தனாகிய ஆதித்யதேவர் தென்கலிங்கத்தை ஆண்டார். அவரது நூல்நிலையில் இச்சுவடி இருந்தது. எனக்கு ஒரு சூதர் கொண்டுவந்து தந்தார்” என்றான் உத்தரன். “நளன் புரவிகளைப் பழக்குபவர் மட்டுமே. புரவியூரும் கலை என்பது வேறு. அது போர்க்கலை அல்லவா?”

“ஆம்” என்றான் நகுலன். “புஷ்கரர் போர்வீரர். இங்கே நளன் அரசராக இருந்த அந்நாட்களில் கிரிப்பிரஸ்தத்தில்

ஆண்டுதோறும் புரவியூர்தலில் பலதரப்பட்ட போட்டிகள் நிகழ்ந்தன. புரவித்திறனாளர்களுக்கு பெரும்பரிசில்களும் அளிக்கப்பட்டன. அதில் பாரதவர்ஷத்தின் அனைத்து நாடுகளிலிருந்தும் புரவித்திறனோர் கலந்துகொள்ளும்படி அறைகூவப்பட்டது. அவ்வாறு வரும் புரவிவீரர்களில் எவரேனும் நிஷாதர்களை வென்றால் அவர்கள் இங்கேயே நீடிக்கும்படி செய்யப்பட்டனர். அவ்வாறு பெருந்திறல் வீரர்கள் அனைவருமே இங்கே வாழலாயினர். இங்கு அவர்களுக்கு அளிக்கப்பட்ட செல்வம் அத்தகையது.”

“செல்வம் அல்ல, தனக்கு நிகரான திறனுள்ளவர்களைக் கண்டால் அவர்கள் அருகிருந்து அகல திறனாளர்களால் இயலாது. பிறரை எண்ணவே சித்தம் ஒருங்காது” என்றான் நகுலன். “இருக்கலாம். நாளடைவில் இங்கு நிகழும் போட்டியை அனைத்து நாடுகளும் நோக்கலாயின. சூதர்களும் புலவர்களும் அவ்விழவுக்காக நெடுந்தொலைவிலிருந்தெல்லாம் வந்தனர். நளன் புரவிக்கலையில் வெறிகொண்டவராக ஆனார். இரவும் பகலும் கொட்டிலிலேயே தங்கினார். புரவிக்கலைஞர்களுடன் உரையாடினார். அரசியையும் மைந்தரையும் அவர் நோக்குவதே அரிதாகியது என்கிறார்கள் கதையாளர்கள். ஏனென்றால் பாரதவர்ஷத்தின் நிகரற்ற புரவிக்கலைஞர் என அவரே அறியப்படவேண்டுமென்ற விழைவு அவரை கொடுந்தெய்வம் பலிவிலங்கை என ஆட்கொண்டிருந்தது.”

நகுலன் “எந்தக் கல்வியும் கொடுந்தெய்வமென்று தோள்மேல் ஏறியாகவேண்டும்” என்றான். அவன் சொன்னது புரியாமல் சிலகணங்கள் வெறுமனே நோக்கிவிட்டு “அன்று இங்கு ஒரு செண்டுவெளிக் களியாட்டு நிகழ்ந்தது. பன்னிரு நாடுகளைச்

சேர்ந்த நூற்றெட்டு புரவிவீரர்கள் கலந்துகொண்டனர். புரவிகளில் முன்பு எவரும் எண்ணியிருக்காத அரிய திறன்களை அவர்கள் காட்டினர். ஒவ்வொரு கலையிலும் அவற்றில் முதல் திறனாளர் செய்து நிறுத்திய இடத்தில் இருந்து தொடங்கி மேலும் நிகழ்த்தி நிஷதபுரியின் மக்களை களிவெறி கொள்ளச்செய்தார் நளன். அத்தருணத்தில் தன் கரியபுரவியில் புஷ்கரர் களம் நுழைந்தார். அவரைக் கண்டதும் மக்கள் பலமடங்கு வாழ்த்தொலி எழுப்பினர். நளன் முகம் கூம்பியது. ஆனால் தமயந்தியின் முகம் மலர்ந்தது" என்றான்.

கண்களைச் சிமிட்டியபடி உத்தரன் சொன்னான் "கவிஞர்கள் தெளிவாகச் சொல்வதில்லை. ஆனால் தமயந்திக்கு புஷ்கரர் மேல் ஓர் ஆவலிருந்தது என்பதை வரிகளின் வண்ணங்களினூடாக நாம் உய்த்துணர முடியும். தமயந்தியின் முகமலர்வை நளன் கண்டார். அவருடைய ஏவலர் அவருடைய முகக்குறியை கண்டு அருகணைந்தனர். அவர்களுக்கு அவர் கரவுச்சொற்களால் ஆணையிட்டார். அவர்கள் அதை ஏற்று களத்தில் புஷ்கரரின் புரவித்துணைவர்களென உடன் சென்றாடினர்."

"புஷ்கரர் அன்றுவரை புரவித்திறனர்கூட எண்ணியிராத திறன்களை காட்டினார். காற்றில் ஒருவர் வீசிஎறிந்த நீர்ச்சரடை பிறிதொரு கலத்தை கையிலேந்தி புரவியில் பாய்ந்து சென்று ஒரு துளி சிந்தாமல் வானிலிருந்து மீண்டும் கலத்தில் பிடித்தெடுத்தார். எய்த அம்புக்கு நிகராகச் சென்று அம்பு சென்று தைக்கும் முன் கைகளால் அதை பற்றினார். கையில் சுடரெழுந்த அகலுடன் புரவியில் பாய்ந்துசென்று ஏழுமுறை சுழன்றுவந்தார். சுடர் அசையவேயில்லை" என

உத்தரன் தொடர்ந்தான். “புஷ்கரரின் புரவித்திறன் கண்டு வாழ்த்தவும் மகிழவும் மறந்து நின்றிருந்தனர் குடிகள்.”

“இறுதி நிகழ்வே பரியேறுதலின் உச்சம்” என்று உத்தரன் சொன்னான். “ஒருவன் இரும்புக் கேடயம் ஒன்றை திருப்ப அதன் ஒளி மண்ணில் விழுந்து சுழன்ற அதே விரைவில் புரவியில் உடன்பாய்ந்தார் புஷ்கரர். அவருடன் சென்ற புரவித்துணைவர்களில் ஒருவன் தன் காலால் அவர் புரவியின் தொடையிடுக்கை மிதித்தான். நரம்பு சுளுக்கவே புரவி காலிடறிச் சரிந்தது. சிட்டுக்குருவி என புரவி மேலிருந்து பாய்ந்து தரையில் நின்று தன்னைக் கடந்துசென்று விழுந்த புரவியை நோக்கினார் புஷ்கரர். அவரைத் தொடர்ந்துவந்த புரவித்துணைவன் ஒருவன் விரைவழிய இயலாததுபோல் நடித்து தன் புரவிக்கால்களால் அவரை மிதித்துக்கொல்ல முயன்றான். ஆனால் புஷ்கரரின் விழிகளை அறிந்திருந்த புரவி அவர் அருகே வந்து நின்று தலைதாழ்த்தியது.”

“மக்களின் கூச்சல் எழுவதைக்கண்டு நளன் விரைந்து அருகே ஓடிவந்து பதறி இளையோன் தோளைத்தழுவி நலமுசாவினார். நிகழ்ந்ததை உணர்ந்த பின்னரும் தமையன்மீது கொண்ட பற்றினால் புஷ்கரர் தலைகுனிந்து களத்திலிருந்து விலகிச்சென்றார். மக்களுக்கு உண்மை தெரிந்துவிட்டதென்றாலும் அயலவர் முன் அதை காட்டவேண்டாமென்று அமைதி காத்தனர். அதன்பின் தொடர்ந்து நிகழ்ச்சிகள் நடந்தன என்றாலும் எவரும் வாழ்த்தொலியோ உவகைமுழக்கோ எழுப்பவில்லை. அரியணையில் அமர்ந்திருந்த தமயந்தி சற்றுநேரத்திலேயே எழுந்து சென்றுவிட்டார். இறுதியில் இந்திரனுக்குப் பூசனை

நிகழ்ந்தபோது குடிகளில் நாலில் ஒருபங்கினரே அங்கிருந்தனர்.”

“மறுநாள்முதல் நகரில் அனைவரும் அதைப்பற்றி பேசலாயினர். அரசுகொள்ள நளனுக்கு உரிமையில்லை என்றும் புஷ்கரரே தகுதியானவர் என்றும் கிரிப்பிரஸ்தத்தின் இளையோர் சொல்லத்தொடங்கினர். மூத்தவர் அதை விலக்கினாலும் மெல்ல அச்சொல் நிலைகொண்டது. பின்னர் மக்கள் நளனை விலக்கி புஷ்கரரை அரசரென ஏற்றமைக்கு தொடக்கம் இந்நிகழ்வே” என்றான் உத்தரன். “நாம் இந்நிகழ்வை மீண்டும் மக்களிடம் கொண்டுசென்றாகவேண்டும். புஷ்கரவிலாசத்தை ஒரு இசைநாடகமாக அமைக்கும்படி நான் சூதர்களிடம் சொல்லியிருக்கிறேன். இசைநாடகம் நடந்தபின் மறுநாள் செண்டுவெளி நிகழ்வு. நான் நீள்வாளுடன் கரும்புரவி மேலேறி களம் புகுவேன்.”

நகுலன் “நன்று. தங்களை புஷ்கரர் என்றே மக்கள் நினைப்பார்கள்” என்றான். உத்தரன் உரக்க நகைத்து “ஆம், அவரை நாம் இழிவிலிருந்து மீட்டாகவேண்டும்” என்றான். குரலைத் தாழ்த்தி “உம்மிடம் சொல்வதற்கென்ன? எனக்கும் கலிங்க அரசரின் மகளைத்தான் மணம் பேசிக்கொண்டிருக்கிறார்கள்” என்றான். “கலிங்க அரசரின் மகளா?” என்றான் நகுலன். “முதிய பேரரசர் ருதாயுவுக்கு எட்டு மகளிர். எண்மருக்கும் மணமாகி அவர்களின் மகளிரும் மண அகவை எய்தியிருப்பதாகக் கேள்விப்பட்டேன்” என்றான். “ஆம். ருதாயுவின் துணைவியரில் ஒருவரான சௌமினிதேவியின் மகள். இவர்கள் தென்கலிங்கத்தில் ரிஷபவனத்தில் வாழ்கிறார்கள்” என்றான் உத்தரன்.

“ரிஷபவனமா? அது நிஷாதர்களின் நாடல்லவா?” என்றான் நகுலன். “நிஷாதர்களில் இருந்து கலிங்க அரசர் மணந்த அரசிதான் சௌமினிதேவி” என்றான் உத்தரன். “நான் சொல்லவருவது என்னவென்றால் கலிங்க இளவரசியை நான் மணக்கையில் என்னை அவர்கள் புஷ்கரருடன் ஒப்பிடுவார்கள். எங்களுக்கிடையே ஒற்றுமைகள் மிகுந்தபடியே வருகின்றன.” “ஆம் இளவரசே, நானும் அவ்வண்ணமே எண்ணுகிறேன்” என்றான் நகுலன். அவனை ஓரக்கண்ணால் நோக்கிவிட்டு “ஆகவே பார்ப்போர் அஞ்சும் பெரிய புரவி ஒன்றை எனக்கென சமைப்பது உம் பணி. தேவையான பொன்னை கருவூலத்திலிருந்து என் பெயர் சொல்லி பெற்றுக்கொள்ளும்” என்றான் உத்தரன்.

நகுலன் “ஆணை” என்று தலைவணங்கினான். “அதை எவ்வண்ணம் இயற்றுவதென்பதை நானே வந்து அவ்வப்போது உமக்கு கற்பிக்கிறேன்” என்றான் உத்தரன். “என் பேறு அது” என மீண்டும் நகுலன் தலைவணங்கினான்.

“கருவூலத்தைக் காப்பவர் கீசகர். உத்தரரின் அன்றாடச் செலவுகளுக்கே பலமுறை அமைச்சர்கள் சென்று கேட்டால்மட்டுமே பொன் அளிக்கப்படுகிறது” என்று சுதமர் சொன்னார். “பொன்னோ பொருளோ அவரிடமிருந்தால் அரைநாழிகையில் சேடிப்பெண்கள் வாங்கிக்கொண்டு சென்றுவிடுவார்கள். இப்போதெல்லாம் அவர் அரண்மனைக்கு சேடிகளை கீசகரே அனுப்பிவிடுகிறார். அவர்களுக்கு இளவரசர் அளிக்கும் பரிசுகளை திரும்பப்பெற்றுக்கொண்டு அவர்களுக்குரிய ஊதியத்தை அளித்துவிடுகிறார்.” நகுலன் புன்னகைத்தான்.

“நீர் கருவூலத்திற்கெல்லாம் சென்று மதிப்பிழக்க வேண்டாம் என்பதனால் சொன்னேன்” என்றார் சுதமர். நகுலனுக்குப் பின்னால் நின்றிருந்த குட்டிக்குதிரை அவன் முதுகின்மேல் தன் முழு எடையையும் சாய்த்தது. சுதமர் நாமரிடம் “அதை அப்பால் கொண்டுசெல்லும். எப்போது நோக்கினாலும் இவர் மேலேயே ஒட்டிக்கொண்டு நிற்கிறது” என்றார். நகுலன் “நிற்கட்டுமே” என்றான். “குழந்தையை கையிலேயே வைத்திருந்தால் கைச்சூட்டில் தேம்பிவிடும் என்பார்கள். குதிரைக்கும்தான் அந்நெறி” என்றார் சுதமர். அப்பால் நின்ற பத்மை “ர்ர்” என்றது. “இதுவேறு. எந்நேரமும் இளையவனுடனேயே இருக்கிறது. தானே ஒன்றுமே செய்வதில்லை” என்றார் சுதமர்.

“புஷ்கரரை ஏன் மீட்டெடுக்க நினைக்கிறார்?” என்றார் நாமர். “அவரும் கலிங்கமகளை மணக்கவிருக்கிறாராம்” என்றான் நகுலன். சுதமர் ஓசையுடன் சிரித்து “கலிங்கமகளையா? நாட்டையே கையில் வைத்திருக்கும் கீசகருக்கு சின்னஞ்சிறு வாகடரின் குலமகளை கேட்டோம். சென்ற தூதனின் கையில் ஒரு தேங்காயையும் கொஞ்சம் கொள்ளையும் கொடுத்து அனுப்பிவிட்டார்கள். அவர்கள் இல்லங்களில் நிஷாதர் இரக்கச் செல்கையில் அதைத்தான் அளிப்பார்களாம்” என்றார். அவர் சிரித்த ஓசையைக் கேட்டு மகிழ்ந்த காதரன் முன்னால் வந்து அவரை ஆவலுடன் பார்க்க பத்மை “அங்கெல்லாம் செல்லாதே” என்றது. “போடி” என்று காதரன் தமக்கையிடம் சொல்லிவிட்டு இன்னொருமுறை அவர் சிரிக்கக்கூடும் என நோக்கியது.

“புஷ்கரரைப்பற்றி இங்கு எவருக்கும் சொல்லத் தேவையில்லை. சொல்வழியாக நிலைகொண்ட தொல்கதைகள் பலவாறாக அவரை சொல்கின்றன. வென்றோருக்கு நிகராக

தோற்றோர் வரலாற்றில் வாழ்வதில்லை. ஆனால் சான்றோருக்கும் நிகராக இழிந்தோர் வாழ்கிறார்கள்” என்றார் சுதமர். அவர்கள் அமர்ந்திருந்த கொட்டகைக்கு வெளியே நின்றிருந்த இரு புரவிகளை சூதன் ஒருவன் அவிழ்த்துக் கொண்டுசென்றான். முதற்குதிரை கட்டு அவிழ்ந்ததுமே கால்களை உதறிக்கொண்டு வாலகற்றி சிறுநீர் ஊற்றியது. அதை முகர்ந்து உதட்டைச் சுளித்து பற்கள் தெரிய ரீரீரீ என ஓசையிட்டபடி இரண்டாவது குதிரை சென்றது.

அதை ஆர்வத்துடன் நோக்கிய காதரன் பத்மையிடம் “நாம் அவர்களுடன் செல்வோமா?” என்று கேட்டது. பத்மை “அதெல்லாம் தவறு” என்றது. “நான் செல்கிறேன்” என்றபடி காதரன் நான்கு கால்களையும் ஒன்றாகச் சேர்த்து தூக்கி துள்ளி அப்புரவிகளுக்குப் பின்னால் செல்ல “ஓடாதே” என்றபடி பத்மை பின்னால் சென்றது. “குட்டிகள் ஓட விரும்புகின்றன” என்றார் நாமர். “அதிலும் இந்த ஆண்குதிரைக்குட்டிகள்… அவை எப்போதும் குதிரையேறுகளையே நாடிச்செல்கின்றன. நேற்று சூரனின் குளம்புகளுக்கு இடையே சென்றுவிழுந்தது. நான் சரியான தருணத்தில் காப்பாற்றவில்லை என்றால் கூழாக ஆகியிருக்கும்.”

சுதமர் “இன்றுவரை எந்த களிற்றுப்புரவியும் குட்டிகளை மிதித்துக்கொன்றதில்லை” என்றார். “ஆம், ஆனால் தற்செயலாக நிகழலாமே? சூரன் பழைய படைக்குதிரை. அதன் குளம்புகளின் எடை தெரியும் அல்லவா? சமீப காலமாக அது ஓடுவது குறைவு. ஆகவே எடை ஏறிக்கொண்டே செல்கிறது” என்றார் நாமர். “தமையனுக்கு அடங்கிய இளையோன் என்று அவரை நளன் எண்ணியதாகவே கதைகள் சொல்கின்றன” என்றான் நகுலன்.

“ஆம், அவர் அவ்வாறுதான் இருந்தார். ஏனென்றால் பிறிதொன்று சொல்லி அவரை வளர்க்கவில்லை மூத்தோர்” என்றார் சுதமர். “ஆனால் நகர்மூலையில் கலி காத்திருந்தது. நச்சுக்கல்லைப்பற்றி கேட்டிருப்பீர்கள். இங்கு விரிந்திருக்கும் பலகோடி கூழாங்கற்களில் ஏதோ ஒன்று அது. எவ்வகையிலும் அதை நாம் கண்டடைய முடியாது. ஆனால் அதை மிதித்ததுமே நம் நரம்புகளில் நஞ்சு ஊறிவிடும். பிறகு அந்தக் காலை வலியிலாது ஊன்ற இயலாது. நஞ்சு ஊறி உடலை வெல்லும். உயிருடன் அதுவும் பிரிந்துசெல்லும்.”

“கலியின் வஞ்சம் இந்திரபுரியை தொடர்ந்துகொண்டிருந்தது. அதை அரசர் நளனோ பேரரசி தமயந்தியோ அறியவில்லை. அமைச்சர் அறிந்திருந்தனர். நிமித்திகர் சொல்லிக்கொண்டுமிருந்தனர். சூதரே, வெற்றியைப்போல வீழ்ச்சியை அளிப்பது பிறிதொன்றுமில்லை. எளிய சூதனாக இந்தக் கொட்டிலுக்குள் அமர்ந்து வெளியே என் விழிகாண நிகழ்ந்து முடிந்த வாழ்க்கையை நோக்குகையில் வெற்றி என்பதே தோல்விக்கென தெய்வங்கள் சமைப்பதோ என்னும் ஐயம் எனக்கு உருவாகிறது” என்று சுதமர் சொன்னார்.

# நீர்க்கோலம் - 24

### 23. அன்னமும் காகமும்

“நள மாமன்னர் பேரரசி தமயந்தியின் சொல்பணிந்தவராக, அணிக்கூண்டுப் பறவையென இருந்தபோது எவரும் எதையும் உணரவில்லை. அவர் அவளிடமிருந்து விடுபட்டு அவளை முற்றிலும் மறந்தவர்போல் புரவிப்போர்க்கலையில் ஈடுபட்டு நிகரற்ற படையொன்றை அமைத்தபோதுதான் அனைத்தும்

தொடங்கின” என்றார் சுதமர். “அரசி தமயந்தி அரசுசூழ்தலில் குருநகரியின் தொல்லரசி தேவயானியைப் போன்றவர் என்கின்றனர் புலவர். அரசரோ களத்தில் தேவர்தலைவனுக்கு நிகரானவர். அவர் புரவிகள் விண்ணில் பறப்பவை என்று சூதர்பாடல்கள் பாடுகின்றன.”

புன்னகையுடன் “உண்மையிலேயே அவரது புரவிப்படைகள் பல களங்களில் வானிலிருந்து பறந்து இறங்கியிருக்கின்றன. அந்த அதிர்ச்சியாலேயே பலமடங்கு பெரிய படைகளை வென்றுள்ளன” என்றார் சுதமர். “அதன் சூழ்ச்சி என்ன என்று எங்களுக்குத் தெரியும். அவர் மிக எளிதாக மடித்துக் கொண்டுசென்று தவளையின் நாக்குபோல கணத்தில் நீட்டி விரிக்கத் தக்க பலகையடுக்குகளாலான பாலம் ஒன்றை அமைத்திருந்தார். செறிந்த மரக்கூட்டங்களுக்குமேல் கிளையிலைத் தழைப்புமீதே அதை விரித்து அதன் வழியாக புரவிகளை பாய்ந்து செல்லச் செய்தார். உறுதியற்ற பரப்பில் புரவிகள் குளம்புகளை ஊன்றுவதில்லை. நளன் தன் புரவிகளை அதற்கு பழக்கியிருந்தார்.”

“அவர் புரவிகளுடனேயே வாழ்ந்தவர்” என நாமர் சொன்னார். “இன்று இரட்டை லாடம் அவர் பெயரால் நளத்திராணகம் என்றே அழைக்கப்படுகிறது.” நகுலன் “ஆம், இங்குள்ள லாடங்களை நோக்கினேன்” என்றான். சுதமர் சொன்னார் “சௌவீரரே, புரவிகளுக்கு விரல்நுனி நகமே குளம்பாகியிருக்கின்றது. அவை கல்லிலும் உலோகங்களிலும் பட்டு கூச்சமோ வலியோ அடையும்போதே குதிரை விரைவழிகிறது. அதற்காகவே லாடங்கள் அறையப்படுகின்றன. புரவியின் குளம்புகளை செவியணி குழையின் வடிவம் கொண்டவை என்கின்றன நூல்கள். முன்பக்கம் அது நீள்வட்ட

வளைவுகொண்ட எலும்பு. பின்பக்கம் திறந்திருக்கும் இடைவெளியை கடுந்தசையும் மெல்லெலும்பும் மூடியிருக்கும். புரவிகள் ஓடும்போது உடல்விசையாலும் எடையாலும் குளம்பின் நீள்வட்டம் சற்றே அகன்று பின்பக்க இடைவெளியில் வலி எழுகிறது. அதன்பொருட்டே குளம்பு வளைவை ஒன்றென இறுக்கிப் பிணைக்கும் அரைவட்ட லாடம் அறையப்படுகிறது.”

“ஆனால் இங்கே நிஷதமண்ணில் ஒற்றை லாடம் குதிரைகளை கூழாங்கற்களில் வழுக்கச் செய்தது” என சுதமர் தொடர்ந்தார். “ஆகவே இங்கு இரட்டை லாடம் ஒன்றை நளன் வடிவமைத்தார். நீள்அரைவட்ட லாடத்திற்கு மாற்றாக குளம்பின் நீள்வளைவின் இரு பக்கவாட்டிலும் ஒன்றை ஒன்று நோக்கிய இரு பிறைகள்போன்ற வடிவில் அறையப்படும் இரு  தனித்தனியான லாடங்கள் அவை. நன்கு அகன்ற பிறைவடிவங்கள் என்பதனால் குதிரையின் கால்கள் நிலையற்ற பரப்புகளில்கூட ஊன்றிக்கொள்ள முடியும். அக்குளம்புகளில் ஒன்று நிலைகொண்டாலே போதும் குதிரை நிகர்நிலை அடைந்துவிடும். இன்று அத்தகைய லாடங்களை நம் புரவிகள் அணிவதில்லை. ஏனென்றால் நாம் இன்று புரவிகளுடன் வானில் பறப்பதில்லை.”

அரசி தமயந்தி நளனை தன் தாழாப் படைக்கலமாகக் கொண்டு முப்புரம் எரித்த கலையமர்ச்செல்வி என பிறநாடுகள்மேல் படைசூழ்ந்தார். அஸ்மாகர்களையும் குண்டலர்களையும் வாகடர்களையும் சவரர்களையும் கோயர்களையும் கடபர்களையும் வென்றார். கலிங்கம் மீது படைகொண்டுசென்று தென்னகத் தலைநகராகிய தண்டபுரத்தை கைப்பற்றினார். ஒவ்வொரு நாளும் அவர் படைகள் கொண்ட ஒரு

வெற்றிச்செய்தி இந்திரபுரியை வந்தடைந்தது. வென்றவர்களை அரசி அழிக்கவில்லை. அவர்களை அணைத்து தன்னுடன் இணைத்துக்கொண்டார். நீரோடை செல்லச்செல்ல விரிவதுபோல அவர் படை பெருகியது.

அவரை அஞ்சிய மாளவனும் மகதனும் வங்கனும் கலிங்கனும் அவந்தியின் உஜ்ஜயினியில் கூடி கடந்தகாலப் பூசல்களை மறந்து ஒருங்கிணைந்தனர். வரும் போர்களில் எல்லாம் ஒற்றைப் படையுடன் நின்று போர்புரிவதாக ஓலைச்சாத்திட்டு அரசறிவிப்புகளை வெளியிட்டனர். அதையும் தனக்கு உகந்ததாக மாற்றிக்கொண்டார் அரசி. அவரை நளன் மணம்கொண்டதும் சினம்கொண்ட பீமகர் அவருக்கோ அவர் மைந்தருக்கோ விதர்ப்பத்தின் முடியுரிமை இல்லை என அறிவித்தார். அவருக்கு பிற குலங்களைச் சேர்ந்த மகளிரில் பிறந்த மைந்தர் எவரையேனும் இளவரசர்களாக அறிவிக்கலாமென்று அமைச்சர்கள் கூறினர். வடகிழக்கு எல்லையான மேக்கலகிரியின் மலைக்குடிகளான ஃபீலர்களின் குலத்தலைவர் மகளை மணந்து அதில் ஏழு மைந்தர்களை அவர் பெற்றிருந்தார். மூத்த மைந்தன் தண்டன் போர்க்கலைகளில் தேர்ந்து படைநடத்தும் திறன் கொண்டிருந்தான். சேதிநிலத்தைச் சேர்ந்த பைகர் குலத்தலைவர் மகளில் பன்னிரு மைந்தர் இருந்தனர். அவர்களில் மூத்தவனாகிய தமன் ஆற்றல்மிக்கவன் என்று அறியப்பட்டான்.

இருவரில் ஒருவரை இளவரசனாக பட்டம்சூட்டலாமென்று அவருக்கு அமைச்சர்கள் சொல்லுரைத்தனர். அவர் வழக்கம்போல ஒவ்வொன்றையும் எண்ணி எண்ணி தயங்கி அவர்களுக்கு விழைவளித்து ஏமாற்றி மீண்டும் விழைவை

மூட்டி ஒத்திப்போட்டுக் கொண்டிருந்தார். அக்குலங்களில் முடிவிழைவு எப்போதுமிருந்ததில்லை. ஆனால் மூட்டப்பட்டபோது அது எழுந்தது. பின் அடங்க மறுத்தது. அவர்கள் படைக்கலங்கள் திரட்டவும் படையென ஆகவும் முயன்றனர். அவர்களின் தூதர்கள் மாறிமாறி பீமகரை வந்தடைந்தபடியே இருந்தனர்.

அந்நாளில்தான் வடபுலத்தரசர்களின் படைக்கூட்டு குறித்த செய்தி வந்தது. அப்படைநிலை வடமேற்கின் அவந்தியை மையம் கொண்டதாகையால் எதையும் எண்ணாமல் உடனே பைகர் குலத்துத் துணைவியின் மகன் தமனை பீமபலன் என்ற பேரில் இளவரசனாக அறிவித்தார் பீமகர். செய்தியறிந்த வடகிழக்கின் ஃபீலர்கள் சினம் கொண்டனர். அவர்களை மகதர்கள் கையிலெடுத்துக் கொள்ளக்கூடும் என அமைச்சர்கள் அச்சுறுத்தவே அவர்களில் பிறந்த மைந்தன் தண்டனை பீமத்துவஜன் என்ற பெயரில் இன்னொரு இளவரசனாக அறிவித்தார். இருவரில் எவர் பட்டத்து இளவரசர் என்று அறிவிப்பதை முடிவில்லாது ஒத்திப்போட்டு அந்நெருக்கடி முற்றும்தோறும் மேலும் மதுவருந்தி பகல்துயில் கொள்ளலானார்.

இவ்வாறு மகதக்கூட்டுக்கு எதிராக நாட்டை வலுப்படுத்த முயன்று நாட்டை இருகூறாகப் பகுத்து போர்நிலைவரை கொண்டுசென்றார். எல்லையில் இரு குடிகளின் படைகளும் பல சிறுபூசல்களில் ஈடுபட்டிருந்தன. விளைவாக வணிகம் வீழ்ச்சியடைந்தது. சந்தைகள் வெறுமைகொள்ளவே மக்கள் வறுமை நோக்கி சென்றனர். வறுதி பல இடங்களில் தலைகாட்டலாயிற்று. வளம் குறித்த விழைவே மக்களை அரசை ஏற்கவைக்கிறது. வறுதி குறித்த அச்சம்

கொடுங்கோலனை வாழ்த்தச் செய்கிறது. விதர்ப்பமக்கள் தமயந்தியை எண்ணி ஏங்கலானார்கள்.

ஒவ்வொரு நாளும் அரசியின் வெற்றிச்செய்திகள் அவர்களுக்கு வந்துகொண்டிருந்தன. நிஷதகுலத்தவனை மணந்தார் என அவரை அரசுநீக்கம் செய்துவிட்டு வேறு மலைக்குடிகளுக்கு முடிசூட்டவிருப்பதன் பொருளின்மையைப்பற்றி தெருக்களிலேயே ஏளனக் குரல்கள் எழுந்தன. “அவர் எளிய அரசமகள் அல்ல, பாரதத்தை ஆளும் கொற்றவை. நளனை ஏன் அவர் தேர்ந்தார் என்பதை அவர்கள் இன்று பெற்றுக்கொண்டிருக்கும் வெற்றிகளே காட்டுகின்றன. அன்று அவையில் நெளிந்தமர்ந்திருந்த மகதனும் கலிங்கனும் இன்று அஞ்சி ஒளிந்திருக்கிறார்கள்” என்றனர். “பாரதவர்ஷத்தை அவர் முற்றாளும்போது குண்டினபுரி அதன் தலைநகராக இருந்திருக்கக்கூடும். அறிவிலியாகிய பீமகரும் அமைச்சர்களும் அதை நமக்கு மறுத்தனர்.”

இருவரில் மூத்தவனாகிய பைகர்குலத்து இளவரசன் தமன் நுண்ணுணர்வுகொண்டவன். நிலைமையை உய்த்தறிந்ததும் அவன் தன் குடித்தலைவர் எண்மருடன் இந்திரபுரிக்குச் சென்று தமக்கையைப் பணிந்து தனக்கு முறையே உரிமைகொண்ட மணிமுடியை பெற்றுத்தரும்படி கோரினான். அரசி தமயந்தி அதை ஏற்று தன் புரவிப்படையுடன் வந்து பெருவெள்ளம் என நகரைச் சூழ்ந்து கைப்பற்றினார். உண்மையில் போரே நிகழவில்லை. அவர் படைகளுடன் வருகிறார் என்று கண்டதுமே விதர்ப்பத்தின் படைகள் கொடிகளும் பாவட்டாக்களும் ஏந்தியபடி வரவேற்புமுரசோசையும் வாழ்த்தொலிகளுமாக சென்று அவரை எதிர்கொண்டு பணிந்து அழைத்துவந்தனர். முடியரசி நகர்க்கோலம் செல்வதுபோல

அவர் அணிபுனைந்த களிற்றின்மேல் ஏறி அமர்ந்து குண்டினபுரியின் தெருக்களில் சென்றார். இருபுறமும் கூடியிருந்த நகர்மக்கள் மலரும் மஞ்சளரிசியும் பொழிந்து களிவெறி கொண்டு வாழ்த்தொலி எழுப்பி கைவீசி ஆடை சுழற்றி நடனமிட்டு அவரை வரவேற்றனர். முகில்மேல் செல்லும் இந்திராணிபோல அவர் தெரிந்தார் என்றனர் புலவர்.

அவரை அரண்மனை முகப்பில் அவர் அன்னையான பட்டத்தரசி அமைச்சர்களுடன் வந்துநின்று மங்கலத்தாலம் ஏந்தி மலரும் சுடரும் காட்டி வரவேற்றார். பீமகர் சினம்கொண்டு தன் அறையிலேயே இருந்தார். “அவள் என்னை சிறைப்பிடிக்கட்டும். அவள் மணந்த நிஷாதன் முன் கொண்டுசென்று கைபிணைத்து நிறுத்தட்டும். நான் ஒருபோதும் அந்த நிஷாதைக்கு பணியப்போவதில்லை” என்று அவர் சொன்னார். “அரசே, அரசியின் உள்ளம் இப்போது எப்படி இருக்கிறதென்று நாம் அறியோம். தன் படைகளை ஒளிந்திருந்து காட்டுநெருப்பெழுப்பி அழித்த சூடககுலத்தின் அரசனை அவர் நகர்நடுவே உடலில் திரிசுற்றி நெய்யூற்றி எரித்தார் என்கிறார்கள். பேரரசுகளை ஆள்பவர்கள் மெல்ல மெல்ல தெய்வங்களின் உளநிலையை அடைகிறார்கள். மறுசொல் கேட்க ஒவ்வாதவர்களாக, பெருங்கருணையும் கொடுஞ்சினமும் கொண்டவர்களாக மாறுகிறார்கள்” என்றார் அமைச்சர்.

“நான் முழுமையாக தோற்றுவிட்டேன். இனி எஞ்சியிருப்பது இறப்பு ஒன்றே. தந்தையைக் கொன்று அவள் தன் நிஷாதத்தன்மையை நிறுவிக்கொள்ளட்டும்” என்றார் பீமகர். அரசியின் மன்றாட்டையும் அவர் ஏற்கவில்லை. முட்ட மது அருந்தி எழமுடியாமல் மஞ்சத்திலேயே கிடந்தார். தமயந்தி

நேராக அவருடைய அறைக்குச் சென்று “தந்தையே, என் பிழை பொறுத்தருள்க! நீங்கள் ஆணையிடும் எப்பிழைநிகருக்கும் ஒருக்கமாக உள்ளேன்” என்று சொல்லி அவர் கால்களில் தலைவைத்து வணங்கினார். உளமுருகிய பீமகர் மகள் தலையில் கைவைத்து கண்ணீர்விட்டார். “நீ என் குலத்தின் விளக்கு. நான் எளிய களிமகன். என் கோழையுள்ளத்தால் என் குடிகளுக்கு இயற்றிய பிழைகளுக்கெல்லாம் உன்னால் நிகர்செய்தேன்” என்றார்.

அன்று முழுக்க மதுவுண்டு களித்து சிரித்துக்கொண்டும் அழுதுகொண்டும் இருந்த பீமகரை கைத்தாங்கலாக அழைத்துச்சென்று அரியணை அமர்த்தினர். அவர் முடிதொட்டுக் கொடுக்க குண்டினபுரியின் இளவரசனாக தமன் முடிசூட்டிக்கொண்டான். அவனும் அவன் இளையவன் தமனனும் தமயந்தியின் கால்களை சென்னிசூடி எப்போதும் அவர் படைத்துணைவராக அமைவோமென சொல்லுறுதி கொண்டனர். மடியில் குழவிகளான இந்திரசேனனும் இந்திரசேனையும் அமர்ந்திருக்க விதர்ப்பத்தின் அரியணையில் பேரரசி என தமயந்தி அமர்ந்து அந்த மணிமுடியை சூட்டிக்கொண்டார்.

அங்கிருந்து அவர் படைகொண்டு ஃபீலர்களை நோக்கி சென்றார். நிஷதர்களின் புரவிப்படைகளைக் கண்டதுமே தண்டன் மேற்கே பின்வாங்கலானான். அவன் அவந்தியுடன் சேர்ந்துகொள்ளலாகாது என்று உணர்ந்த தமயந்தி அவன் எண்ணியிராத தருணமொன்றில் தானே படைகொண்டுசென்று அவனை சூழ்ந்து வென்று சிறைப்பிடித்தார். ஆனால் அஞ்சியபடி அவைக்கு வந்த அவனை தன் இளையோன் என்று ஏற்று பரிசளித்து வாழ்த்தினார். அவனை இரண்டாம்

இளவரசன் என அறிவித்து முடிசூட்டினார். அவனுக்காக போஜகிருகம் என்னும் ஆயர்சிற்றூரில் கோட்டை ஒன்றைக் கட்டி போஜகடகம் என்று பெயரிட்டு அவனை அங்கே அமர்த்தினார். இரு உடன்பிறந்தாரும் தமக்கையின் இரு கைகளென ஆயினர்.

அதன்பின் அவர் இந்திரபுரிக்கு திரும்புவார் என அனைவரும் எண்ணியபோது அங்கிருந்தே படையெடுத்துச் சென்று அவந்தியை வென்று அதன் அரசன் பிரபாவர்மனை அடிபணியச் செய்தார். அவ்வெற்றியால் அஞ்சி நிலைகுலைந்திருந்த மாளவ அரசன் விஷ்ணுகுப்ஜனை நளனின் முதன்மைப் படைத்தலைவன் வஜ்ரகீர்த்தி வென்று மீண்டான். மகத மன்னன் ஜீவகுப்தன் அவளை அஞ்சி தன் படைகளை எல்லைகளில் நிறுத்திவிட்டு ராஜகிருகத்தை கைவிட்டு வடஎல்லையில் அமைந்த பாடலிக்குச் சென்று ஒடுங்கியிருந்தான். அரசர்கள் அனைவரின் கனவிலும் நளனின் பறக்கும் புரவிகளே தோன்றிக்கொண்டிருந்தன.

மாளவத்தின் தாமிர வயல்களை தமயந்தி முழுமையாக கைப்பற்றியமையால் கலிங்கத்தின் துறைநகரான தாம்ரலிப்தியின் வணிகம் ஒழியத் தொடங்கியது. பொருள் இழந்து சோர்ந்து சிதறுண்டிருந்த கலிங்கனை நளனின் படைத்தலைவன் சிம்மவக்த்ரன் தெற்கிலும் நளன் மேற்கிலும் ஒரே சமயம் தாக்கினர். கலிங்கமன்னன் அர்க்கதேவன் தோல்வியடைந்து வங்கம் நோக்கி சென்றான். வங்கமன்னன் பகசேனனின் படைகள் வந்து உடன் இணைந்துகொண்டன. அவர்களை தாம்ரலிப்திக்கு அருகே இருந்த புண்டரவனம் என்னும் குறுங்காட்டில் நளன் படைகள் சந்தித்து முறியடித்தன. பின்வாங்கிச் சென்ற அப்படைகளுடன் மகதப்

படைகள் இணைந்துகொள்ள கங்கைக்கரையின் முக்தவனம் என்னும் இடத்தில் இறுதிப்போர் நிகழ்ந்தது. வடபுலப் படைகளை நளன் முழுமையாக தோற்கடித்து மூன்று மன்னர்களையும் வென்றார்.

மகதமன்னன் ஜீவகுப்தனையும் கலிங்கமன்னன் அர்க்கதேவனையும் வங்கமன்னன் பகசேனனையும் ஒரே சங்கிலியில் கட்டி தன் முன் இழுத்துவரச் செய்தார் நளன். அவர் அமர்ந்திருந்த பீடத்தின் முன் சோர்ந்து நின்றிருந்த அவர்களை இருபுறமும் கரும்புரவிகளைக் கட்டி இழுத்து இரண்டாகக் கிழிக்கும்படி ஆணையிட்டார். அதை தவிர்க்கவேண்டும் என்றால் அவருடன் தனிவாட்போரிட அவர்கள் ஒப்பவேண்டும் என்றார். மகதமன்னன் ஜீவகுப்தன் உறுதியாக மறுத்துவிட்டான். “உன்னுடன் வாள்கோத்தல் குலமிலாச் செயல் என்று எந்தை அவையில் சொன்னார். தந்தையிடமிருந்து மைந்தன் பெறுவது குலத்தை மட்டுமே. நான் அதை எந்நிலையிலும் இழக்கமாட்டேன்” என்றான். அவனது இரு கைகளிலும் இரு வடங்கள் கட்டப்பட்டு இருமுனையிலும் மூன்று புரவிகள் கட்டப்பட்டன. அவை அவனை இழுத்துக் கிழிக்க அவன் கதறி உடல் அதிர்ந்து துடித்தான். ஒவ்வொருமுறை புரவிகள் நிற்கும்போதும் “வாளேந்துவாயா?” என்று கொடுந்தொழிலன் கேட்க “இல்லை... என் குலமே முதன்மையானது” என்றான் மகதன்.

முழுப்பகலும் அவனை இழுத்து எலும்புகளை உடைத்து தசைகளை கிழித்தனர். இரு துண்டுகளாகி அவன் உடல் கிடந்து துடிப்பதைக் கண்டு வங்கனும் கலிங்கனும் “நாங்கள் வாளேந்துகிறோம்” என கூவினர். அவர்களுக்கு அவை நடுவிலேயே வாள் அளிக்கப்பட்டது. அவர்களை ஒரே

சுழற்றலில் வாள்தெறிக்கச் செய்து வீழ்த்தி அவர்களின் தலையை மும்முறை காலால் உதைத்தார் நளன். அவர்களை முடியும் மீசையும் மழித்து யானை மேலேற்றி நகர்வலம் வரச்செய்து திருப்பி அனுப்பினார். அவர்கள் தங்கள் இளமைந்தர்களை அரசர்களாக முடிசூட்டியபின் கான் புகுந்தனர்.

அரசர்களை நளன் சிறுமை செய்ததை தமயந்தி ஏற்கவில்லை. அவரே நேரில் சென்று கலிங்கத்திலும் வங்கத்திலும் மகதத்திலும் இளவரசர்களுக்கு முடிசூட்டிவைத்து அன்னையின் இடத்தில் இருந்து அரிமலரிட்டு வாழ்த்தினார். அவர்களை தன் மைந்தர்களாக ஏற்றுக்கொள்வதாக அவர் விடுத்த திருமுகம் பாரதவர்ஷத்தின் அரசர்களிடையே பரவி அவரை மதிப்புக்குரியவராக ஆக்கியது. "காக்கும் கருணைகொண்டவளுக்கு வெல்லும் உரிமையும் உண்டு" என்று அயோத்தியின் அரசன் ரிதுபர்ணன் சொன்ன வரியை சூதர்கள் சொல்லி பரப்பினர். சேதிநாட்டரசன் சுபாகு அவருக்கு காணிக்கைகள் அனுப்பியபோது அதை தன் உடன்பிறந்தானின் கொடை என ஏற்பதாக அவர் அறிவித்தார்.

தமயந்தி நதிக்கரைச் சேற்றில் வாழ்ந்த மச்சர்களையும் மலைமடிப்புகளுக்குள் வாழ்ந்த அசுரர்களையும் கொள்ளையடித்து அலையும் சூரர்களையும் வென்றார். அவருடைய வெற்றிகள் அவர் வெல்லப்பட முடியாதவர் என்னும் எண்ணத்தை உருவாக்கின. அதுவே அவரை மேலும் வெற்றிபெறச் செய்தது. "அதன்பின் அவருடைய தூதர்கள் சென்ற நாடுகள் அனைத்தும் அவருக்கு வாள்தாழ்த்தி கப்பத்தை அனுப்பிவைத்தன. பாரதவர்ஷத்தின் முதன்மைச் சக்ரவர்த்தினி என அவர் அறியப்பட்டார். அதன்பின்னரே

நிஷாதகுலங்களுக்குள் ஐயமும் அச்சமும் உருவாகத் தொடங்கியது” என்றார் சுதமர்.

“தங்களில் ஒன்றென்றிருந்த சபரர்குலம் மேலும் மேலும் வலுப்பெற்று பாரதவர்ஷத்தின் அரசகுடிகளில் முதலிடம் பெறுவதை அவர்களின் உள்ளத்தின் இருண்ட ஆழம் ஏற்றுக்கொள்ள மறுத்தது. இரவில் விழித்துக்கொள்கையில் பகலில் அவர்களை ஆட்சிசெய்த அனைத்து தெய்வங்களும் விலக இருளை ஆளும் தெய்வங்களே உள்ளும் புறமும் ஓலமிட்டன. சினமும் ஆற்றாமையும் துயரும் கொண்டு அவர்கள் புரண்டு புரண்டு படுத்தனர், நெடுமூச்செறிந்து எழுந்தமர்ந்தனர். இரவின் நீளம் தாளாமல் தன்னைச் சினந்தனர். கழிவிரக்கம் கொண்டு விழிசிந்தினர்.

இரண்டாவது பெருங்குலமான காளகர்களே பெரிதும் துயருற்றிருந்தனர். காளககுலத்து இளவரசனாகிய புஷ்கரன்மேல் அவர்கள் வைத்திருந்த நம்பிக்கை அவன் தமயந்தியின் திருமணத்தின்போது உடைவாளுடன் அசையாமல் அமர்ந்திருந்த செய்தியுடன் சேர்ந்து அழிந்தது. என்றோ ஒருநாள் நளனின் கொடையால் அல்லது படைகளை நிகர்செய்யவேண்டிய அரசியல் தேவையால் அவன் தனக்கென ஒரு நகரைப் பெற்று முடிசூடி ஆட்சிசெய்யக்கூடும் என்ற எதிர்பார்ப்பு அவர்களுக்குள் இருந்தது. அவன் தெற்கே சிம்பர்களுடனான போரில் தொடையில் வேல்பட்டு பல மாதங்கள் படுக்கையில் கிடந்தபோது அது முழுமையாக இல்லாமலாகியது.

அந்தச் சோர்வு தமயந்திமேல் கசப்பாக ஆகியது. அவர் வெற்றிமேல் வெற்றி கொண்டபோது அது வளர்ந்தது. அவர்கள் தங்கள் குடியினனாகிய நளனை வெறுக்க விழையவில்லை.

ஆகவே தமயந்தியே புஷ்கரனை சிறுமைசெய்து எல்லைகளில் நிறுத்தியிருக்கிறார் என்று எண்ணத்தலைப்பட்டனர். அந்நாளில்தான் தமயந்தி தன் இரண்டாம் இளையோனுக்கு போஜகடகத்தை அமைத்து முடியளித்தார். அதை அவர் புஷ்கரனுக்கும் செய்யலாமே என்ற எண்ணம் ஒருபோதும் எந்த அவையிலும் ஒலிக்காமல் ஒவ்வொரு நாளும் பேசப்பட்டுக் கொண்டிருந்தது. “விதர்ப்பினியின் வெற்றிக்கென காளகர்கள் ஏன் குருதி சிந்தவேண்டும்?” என்று எந்த உரையாடலிலும் எவரோ ஒருவர் கேட்க பிறிதொருவர் அதை கூரிய குரலில் அடக்கினார்.

புஷ்கரன் போர்முனைகளில் இருந்து உறுதியாக தெரிந்துகொண்டான், அவனால் போர்செய்ய இயலாது என. போர்க்கு முன் அவன் உள்ளம் கிளர்ந்தெழுந்தது. வென்று புகழ்சூடுவதற்காக அவன் உள்ளத்தில் கனவுகள் பெருகின. போர்முனையில் அவ்வெண்ணங்களுக்கெல்லாம் அடியிலிருந்து பிறிதொருவன் எழுந்து வந்தான். கோழையும் தன்னலத்தை மட்டுமே எண்ணுபவனுமாகிய ஒருவன். பின்னர் அவன் உணர்ந்துகொண்டான், அந்த ஆழ்ந்திருக்கும் ஆளுமையே தன்னுடையது என்று. நினைவறிந்த நாள்முதல் தன்னையன்றி எதைப் பற்றியும் எண்ணியதில்லை என்று. வெற்றி, புகழ் என அவன் உருமாற்றிக்கொள்வன எல்லாம் வெறும் தன்னலம் மட்டுமே என.

அதை அவன் சிருங்கபேரத்தில் கால் உடைந்து கிடந்த படுக்கையில்தான் ஐயமில்லா அறிவென்றாக்கிக் கொண்டான். அத்தெளிவு அவனை முழுமையாக மாற்றியது. அதுவே தான் என்றறிந்ததுமே அதை முழுமையாக பிறரிடமிருந்து மறைத்துக்கொள்ளவேண்டும் என்றும் புரிந்துகொண்டான்.

அவன் விழிகள் இளைஞனின் நகைப்பொளியை இழந்து எச்சரிக்கை நிறைந்த மங்கலை அடைந்தன. நிலைக்காமல் குமிழியிடும் பேச்சு எண்ணிச் சொட்டும் சொற்களென்றாகியது. பிறர் பேசும்போது சொல்லுக்கு அப்பால் சென்று அவர்களின் முகங்களை நோக்கிக்கொண்டிருக்கலானான். அன்றுவரை அவன் அறியாத ஒரு மொழியில் பிறிதொரு உரையாடல் நிகழ்வதை அறிந்தான்.

அதன் பின்னரே அவன் முழுமையான படைக்கலப் பயிற்சிக்கும் புரவிப் பயிற்சிக்கும் தன்னை ஒப்புக்கொடுத்தான். முன்பு பயிற்சிக்குச் சென்ற சிலநாட்களிலேயே வாளால் நீர்க்குமிழிகளை வெட்டவேண்டும் என்றும் புரவியால் ஓடைகளைக் கடந்து தாவவேண்டும் எனவும் முயன்றவன் அடிப்படைகளை பொறுமையாக கற்றுக்கொள்ளலானான். அந்தக் கல்வி அவனை உறுதியானவனாக ஆக்குவதை அவன் குலத்தவர் கண்டனர். மீண்டும் அவன்மேல் நம்பிக்கை கொள்ளலாயினர்.

அந்நம்பிக்கையை உறுதிசெய்யும்பொருட்டே அவன் செண்டுவெளி புரவிவிளையாட்டில் தன் புரவியுடன் வந்து கலந்துகொண்டான். விழாவில் நிகழ்த்துவதற்காக புரவியில் பாய்ந்தபடியே அம்புகளை எய்து ஒன்றன்மேல் ஒன்றென தைக்கவைக்கும் முறை ஒன்றை ஓராண்டாக எவருமறியாமல் பயின்றிருந்தான். செண்டுவெளியில் அவனும் புரவியாட விழைவதாகச் சொன்னபோது நளன் நகைத்து "நீயா? செண்டுவெளியிலா?" என்றார். தமயந்தி புன்னகையுடன் "அவர் பயிற்சி எடுத்திருப்பார்" என்றார். நளன் "நன்று" என்று மீண்டும் புன்னகைத்தார்.

தமயந்தியின் புன்னகையால் அவன் துன்புற்றான். இரவெல்லாம் துயிலாமல் நிலையழிந்து அரண்மனையில் சுற்றிவந்தான். புலரியில் எழுந்து புரவியுடன் ஆற்றங்கரை முற்றத்திற்குச் சென்று அவ்வித்தையை பன்னிருமுறை பயின்ற பின்னர் செண்டுவெளிக்கு வந்தான். அவன் வந்தபோது அங்கே விழா உச்சம்கொண்டிருந்தது. வேசரநாட்டு பரிவீரனாகிய சௌமித்ரன் புரவியில் எரியும் அனல் வளையங்களினூடாக தாவினான். நிறுத்தப்பட்ட எட்டு வேல்முனைகளை மறிகடந்தான். அவனுக்கு வாழ்த்தொலிகள் எழுந்தமைந்தபோது கைகளைத் தூக்கியபடி புஷ்கரன் உள்ளே நுழைந்தான்.

அவனைக் கண்டதும் காளகர்கள் வாழ்த்துக்கூச்சலிட்டனர். ஆனால் மற்ற குடிகளிடமிருந்து ஏளனக்கூவல்கள் எழுந்தன. நிமித்திகன் நிகழவிருப்பதை அறிவித்ததும் காளகர் சற்று அஞ்சி ஓசையடங்க பிறர் நகைக்குரலெடுத்தனர். தன் புரவியில் ஒருமுறை முற்றத்தைச் சுற்றிவந்தபின் புஷ்கரன் வில்லிழுத்து அம்பைத் தொடுத்தான். அந்த அம்பு சென்று தைத்ததும் அதன்மேல் அடுத்த அம்பைத் தொடுக்க அவன் நாணை இழுத்தபோது வில்லின் கீழ்முனை புரவியின் விலாவை முட்டியது. அது முன்னரே கூடியிருந்தவர்களின் ஓசையால் அஞ்சி உடல்விதிர்த்துக்கொண்டிருந்தது. அவன் பயின்ற புரவி அல்ல அது. அது களைத்திருந்தமையால் பிறிதொரு கரிய புரவியை நாகசேனர் அவனுக்கு அளித்திருந்தார். விலாவில் பட்ட தொடுகையை குதிமுள் என எண்ணி புரவி எகிறிப் பாய்ந்தது. இரு கையையும் விட்டு வில்லும் அம்புமாக அமர்ந்திருந்த புஷ்கரன் அந்த எதிர்பாரா விசையில் தடுமாறி புரவியிலிருந்து களமுற்றத்தில் விழுந்தான். அவன் கையிலிருந்த அம்பின் பின்கூர் அவன் வயிற்றில் பாய்ந்தது.

நளன் “பிடியுங்கள்!” என்று கூவ சிம்மவக்த்ரனும் அவன் துணைவர்களும் ஓடிவந்து அவனைத் தூக்கி வலைமஞ்சத்திலிட்டு உள்ளே கொண்டுசென்றனர். “அடுத்த வீரன் களம் புகுக!” என்று ஆணையிட்டுவிட்டு நளன் எழுந்து உள்ளே சென்றார். உண்மையில் அவர் அவ்வாறு பதறியபடி உள்ளே சென்றதுதான் பிழையாகியது. இளவரசனுக்கு உயிர்க்காயம் என்று காளகர்கள் எண்ணினர். அவர்கள் கொண்ட அச்சமும் பதற்றமும் பிறருக்கு வெளிக்காட்டா இளிவரலென்றாகியது.

புஷ்கரனுக்கு மிக மெல்லிய புண்ணே பட்டிருந்தது. நளன் செல்வதற்குள் மருத்துவர் அம்பை உருவி குருதி நிறுத்தி கட்டுபோட்டுவிட்டிருந்தார். அவனருகே குனிந்த நளன் “என்ன ஆயிற்று?” என்று பதற “ஒன்றுமில்லை. நாளையே எழுந்துவிடுவார்” என்றார் மருத்துவர். “குதிரை தவறாக புரிந்துகொண்டுவிட்டது” என்றான் காவலன். “குதிரையை நாமும் தவறாக புரிந்துகொள்ளக்கூடாது” என்றார் நாகசேனர் புன்னகையுடன். நளன் மேலும் ஏதோ கேட்க சுருங்கிய முகத்துடன் புஷ்கரன் கண்களை மூடிக்கொண்டான். அதை வலி என எண்ணிய நளன் அவன் தலையைத் தொட்டு “நன்று, ஓய்வெடுக்கட்டும்” என்றபின் மீண்டும் களத்திற்கு மீண்டார்.

நிஷாதர்களின் புரவிப் போர்த்திறன் அயலவர் முன் மாற்றுக் குறைந்துவிடலாகாதென்பதனால் நளன் அன்று அவர்கள் எவரும் தங்கள் மிகைக்கதைகளில் கூட அறிந்திராத புரவித்திறன்களை காட்டினார். இழுத்துக் கட்டிய சரடின்மேல் அவர் புரவி பாய்ந்தோடியதைக் கண்டு களத்தோர் ஓசையழிந்தனர். பின் வாழ்த்தொலிகள் சுவர்கள் அதிர எழுந்து அலையடித்தன.

அந்த ஓசையை புஷ்கரன் பகல் முழுக்க கேட்டுக்கொண்டிருந்தான். தன் உதடுகளை அவன் இறுகக் கடித்திருந்தான். அதை வலியால் என எண்ணிய மருத்துவர் அவனுக்கு அகிபீனா புகை அளித்தார். ஆனால் அவன் விழிகள் சிவக்க முகம் அனல்கொள்ள மேலும் விழிப்பையே அடைந்தான். திறந்திருந்த நீர்படிந்த கண்களுக்கு அப்பால் அவன் அவர்கள் அறியாத எதையோ கண்டுகொண்டிருந்தான்.

“அன்றிரவு அவனை கலி அணுகியதாக கதைகள் சொல்கின்றன” என்றார் சுதமர். “இரவில் அவன் ஒரு காளைமாட்டின் ஓசையை கேட்டான். பலமுறை அது குரலெழுப்பிய பின்னரே அது ஒரு சொல் என்று உணர்ந்தான். அச்சொல் புரியத் தொடங்கியதும் திகைத்து எழுந்து வெளியே செல்ல முயன்றான். அவன் கால் மருந்துகளால் உறைந்திருந்தது. அதை மரக்கட்டைபோல இழுத்தபடி வெளியே சென்றபோது அங்கே ஓர் உருவம் நின்றிருப்பதை கண்டான். மனிதர்களை விட உயரமானது. இரு கைகளும் விரிந்து எழுந்திருந்தன. அதற்கு எருதுத்தலை இருப்பதை பின்னர்தான் கண்டான். அதை நோக்கியபடி அவன் இருளில் நின்றுகொண்டிருந்தான்.”

# நீர்க்கோலம் - 25

### 24. கரவுக்கானகம்

✿விராடபுரிக்கு வடக்கே மலைச்சரிவில் கோதையை நோக்கி இறங்கும் தப்தை, ஊர்ணை என்னும் இரு காட்டாறுகளுக்கு நடுவே இருந்த செழித்த சிறுகாடு அரசகுடிகளின் வேட்டைக்கும் களியாட்டுக்குமென ஒதுக்கப்பட்டிருந்தது. அங்கு வேடர்களோ வேட்டையர்களோ நுழைவது தடுக்கப்பட்டிருந்தது. மாமன்னர் நளனின் ஆட்சிக்காலத்தில் இரு ஆறுகளிலிருந்தும் நூற்றுக்கணக்கான சிற்றோடைகளை வெட்டி ஒன்றுடன் ஒன்று பின்னிக் கலந்து உருவாக்கப்பட்ட அந்த ஈரநிலத்தில் மலர்மரங்களும் கனிமரங்களும் கொண்டு ஒரு அணிக்காடு அமைக்கப்பட்டது. பின்னர் காலத்தால் மறக்கப்பட்டு விராடபுரி உருவானபோது சுவடிகளிலிருந்து கண்டடையப்பட்டு மீட்டெடுக்கப்பட்டது அது.



தப்தோர்ணம் சிறு யானைக்கன்று சினம் கொண்ட வேழம் என்றாவதுபோல செறிந்த பச்சை நுரைக்குவியலென வானின் கீழ் நின்றிருந்தது. வெய்கதிர்க் கொடிகள் நுழைந்திறங்கமுடியாத பச்சை இருள் நிறைந்த அந்த அடர்வுக்குள் வாழ்ந்திருந்த யானைகளும் கரடிகளும் சிறுத்தைகளும் அரசப்படையினரால் வேட்டையாடப்பட்டும் துரத்தப்பட்டும் முழுமையாக அகற்றப்பட்டன. விழிக்கினிய மான்களும் முயல்களும் அன்னங்களும் மயில்களும் கிளிகளும் கொண்டுவந்து நிரப்பப்பட்டன. ஓடைக்கரைகளில்

அரசகுடியினர் தங்குவதற்குரிய கொடிமண்டபங்களும் கிளை விரித்த மரங்களின் கவர்களில் இரவு துயில்வதற்குரிய ஏறுமாடங்களும் அமைக்கப்பட்டன.

அங்கு விண்ணுலாவிகளான கந்தர்வர்களும் தேவர்களும் வந்திறங்கி நிலவிலாடி நீர்விளையாடி இசைமுழக்கி மலர்ப்பொடி சூடி புலரிக் கதிரெழுவதற்கு முன் மீள்வதாக கவிஞர்கள் பாடினர். அங்கு நிகழ்ந்தவை என பல தெய்வக்கதைகள் சூதர்களால் பாடப்பட்டன. பின்னர் அந்நகரின் இனிய கரவு எண்ணம்போல அந்தக் காடு மாறியது. அந்நகர் குறித்த அனைத்துக் கவிதை வரிகளிலும் அக்காடு தொற்றி வந்தது. அவ்வரிகளில் உணர்த்தப்பட்ட சொல்லாப்பொருளை விராடநாட்டுக் குடிகள் ஒவ்வொருவரும் இளமையிலேயே உணர்ந்திருந்தனர். தங்கள் ஆழத்துக் கனவுகளில் அவர்கள் அங்கே உலவினர். அங்கு அறிந்து திளைத்தவற்றை ஒருபோதும் அவர்கள் பகிர்ந்ததில்லை. அங்கு ஆற்றியவற்றை அவர்களின் நாக்கு அவர்களின் செவிக்கு உரைப்பதில்லை என்றும் அங்கு அவர்களின் ஒரு விழி பார்த்ததை பிறிதொரு விழிக்கு காட்டுவதில்லையென்றும் சூதர்கள் பாடினர்.

விராடபுரியின் ஒவ்வொருவரும் உடல் முதிர்ந்து உளம்வற்றி உட்கரந்தவை அணுவெனச் சுருங்கி இறப்பு நோக்கி கிடக்கையில் ஓசையின்றி உலர்ந்த உதடுகள் அசைந்து சொல்லும் சொற்களில் ஒன்று அக்காட்டின் பெயர். அவர்கள் தெற்கு நோக்கிச் செல்கையில் பதைக்கும் உயிரென பின்தொடர்ந்து செல்லும் எஞ்சிய விழைவுகள் அவர்கள் சிதையிலெரிந்து நீரென்றும் புகையென்றுமாகி புடவியில் கலந்த பின்னர் நீள்மூச்சுடன் திரும்பி அந்தப் பசுங்காட்டுக்கே சென்றன. அங்கு தாங்கள் வாழ்ந்து கண்டெடுத்து கரந்துவைத்த

ஒவ்வொன்றையும் தேடிச்சென்று தொட்டுத் தொட்டு மீண்டன. எதையும் எடுத்து வெயிலுக்கும் காற்றுக்கும் காட்ட அப்போதும் அவை துணிவுகொள்ளவில்லை. அவை விரலறியா யாழுக்குள் காத்திருக்கும் இசை என கரந்து அங்கிருந்தன.

நாற்பத்தொன்றாவது நாள் விண்ணிலிருந்து குளிர் காற்றுகள் என மூதாதையர் இறங்கி வந்து அவர்களை கைபற்றி மேலெடுத்தனர். மண்ணில் அவர்களின் கொடிவழியினர் வைத்த அன்னமும் நீரும் அவர்களை கீழிருந்து உந்தி மேலேற்றின. முதல் வானில் நின்று இறுதியாக நோக்கி விலகிச் செல்கையில் அக்காட்டையே அவர்கள் கூர்ந்தனர். அவ்விறுதி விழைவே மீண்டும் புவிப்பிறப்பென சொட்டி முளைக்க வைத்தது அவர்களை.

தப்தோர்ணம் ஒருவராலும் பார்க்கப்படாமல் விராடபுரியின் உள்ளங்களை ஆட்சி செய்தது. சொல்லில் எழுந்தவை சொல்லை உண்டு வளர்ந்து சூழ்வதன் முடிவிலா மாயங்கள் தப்தோர்ணத்தை வரைந்தன. அக்காட்டின் எல்லைகளுக்கு வெளியே அதற்குள் நுழையும் பன்னிரண்டு கைவழிகளின் தொடக்கத்திலும் விராடமன்னன் அமைத்த காவல் மேடைகளில் வில்லில் தொடுத்த அம்புகளுடன் வீரர்கள் நோக்கியிருந்தனர்.

பின்புலரியின் வெள்ளி வெளிச்சத்தில் தொலைவில் பல்லக்குகளின் குவைமுகடுகள் ஆயர்பெண்களின் பால்குட நிரை என ஒளியுடன் அசைவதைக் கண்ட காவலன் ஒருவன் எழுந்து விழிமேல் கைவைத்து கூர்ந்து நோக்கியபின் தன் இடையிலிருந்த கொம்பை எடுத்து மும்முறை ஊதினான். அதற்கு மறுமொழியாக பல்லக்கு நிரையின் காவலர்தலைவன் ஊதிய கொம்பு இளவரசி உத்தரையும் சேடியரும்

கானாடுவதற்கு வந்து கொண்டிருப்பதை அறிவித்தது. பிறிதொரு கொம்பூதி மறுமொழி அளித்தபின் இளவரசியின் வருகையை பிறகாவல் மாடங்களுக்கு அறிவிக்கும் பொருட்டு நூலேணியில் தொற்றி காவல் மாடம் அமைந்திருந்த மரத்தின் ஏழாவது கவருக்குச் சென்று அங்கிருந்த சிறிய மரத்தட்டின்மீது நின்றபடி நீள்கொம்பை வாயில் பொருத்தி அடிவயிற்றிலிருந்து காற்றெடுத்து மூன்று முறை பிளிறலோசை எழுப்பினான். அவ்வோசைக்கு எதிர்வினையாக அடுத்த காவல் மாடம் ஆம் ஆம் ஆம் என்றது.

அச்செய்தி அனைத்து காவல் மாடங்களுக்கும் சென்று சேர்ந்தபோது எதுவும் நிகழா நாள்காவலில் ஒவ்வொரு புலரியிருளலும் பிறிதொன்றே என காலத்தை அளாவிய காவலர்கள் முகம் மலர்ந்தனர். எட்டாவது மாடத்தின் காவலர் தலைவன் நிகும்பன் "இக்காட்டிற்குள் இதற்கு முன் இளவரசி வந்தது ஏழாண்டுகளுக்கு முன்பு. அன்று அவருக்கு வயது பதினொன்று. நாகமொன்றைக் கண்டு அஞ்சி அன்று அவருக்கு வலிப்புநோய் வந்தது. அதன்பின் இங்கு வந்ததே இல்லை" என்றான். "நாகமா?" என்றான் ஒருவன். "நீரில் இறங்கி அலையிலாடிய வேர் அது என தெரிந்தபோது இளவரசியின் வலிப்பு உச்சம்கொண்டிருந்தது" என்றான் நிகும்பன்.

மூத்த காவலனாகிய கிரணன் "அன்று இந்தக் காட்டின் கந்தர்வர்களும் கின்னரர்களும் அவரை பார்த்திருக்க மாட்டார்கள். வண்ணத்துப்பூச்சிகளையும் பொன்வண்டுகளையும் மட்டுமே பார்த்துவிட்டு திரும்பிச் சென்றிருப்பர்" என்றான். "ஏன்?" என்று இளங்காவலன் முக்தன் கேட்டான். கிரணன் அவனை நோக்கி சிரித்து "மலர்களில் நீ இதழ்களை மட்டுமே பார்க்கிறாய். கந்தர்வர்களும் கின்னரர்களும் பெண்களில்

பெண்மையழகை மட்டுமே பார்க்கிறார்கள்” என்றான். பிற காவலர்கள் சிரிக்க அவர்களை மாறி மாறி நோக்கியபின் முக்தன் “அதில் என்ன பிழை?” என்றான். “பிழையேதுமில்லை என்றுதான் சொன்னேன்” என்றான் முதியவன். மீண்டும் காவலர் சிரித்தனர்.

குடிகாரர்களுக்குள்ள விழிகளும் நரம்புகள் புடைத்த தளர்ந்த உடலும் கொண்டிருந்த சூதனாகிய சர்விதன் “இளையோனே, பெண்களின் குழலுக்கு நீளத்தையும் ஒளியையும், விழிகளுக்கு மலர்வையும், உதடுகளுக்கு செம்முழுப்பையும் அளிப்பவர்கள் கந்தவர்கள். அவர்களின் உடலில் முலைகள் கனிந்தெழுவதும் இடை மெலிந்து ஒழிவதும் தொடை பெருத்து விரிவதும் அவர்களால்தான். அது பனைச்சாறு நிறைந்த கலத்தில் ஒரு கிண்ணம் பழைய கள்ளை உறைகுத்தி மூடி வைப்பதுபோல. கன்னியருக்குள் நேற்று வரை வாழ்ந்த கன்னியர் கொண்ட கனவுகளின் ஒரு கைப்பிடி ஊற்றப்படுகிறது. பின்பு சுவைதுழாவும் நாக்குகளுடன் கின்னரரும் கந்தர்வர்களும் சூழ்ந்து நின்று காத்திருக்கிறார்கள். கன்னியின் இனிமை நொதித்து வெறிதிகழ் கள்ளென்றாகி மூடியைத் திறந்து நுரைத்தெழுகிறது. அவ்வெண்புன்னகையைக் கண்டு அவர்கள் மகிழ்ச்சிக் குரலெழுப்புகிறார்கள். அவர்கள் அவளில் பெய்து விளைய வைப்பவை அனைத்தும் அவர்கள் நுகர்வதற்குரியவைதான்” என்றான்.

“திரும்பத் திரும்ப இக்கதைகளைக் கேட்டு சலித்திருக்கிறேன்” என்றபடி முக்தன் எழுந்தான். “கன்னியர் கந்தர்வர்களால் புணரப்படுகிறார்கள் என்றால் ஆண்கள் எதற்கு?” என்றான். கிரணன் உரக்க நகைத்து “கந்தர்வர்களுக்கு உடல் ஏது? அவர்கள் காமம் கொண்ட ஆணுடலில் புகுந்து பெண்களை

அடைகிறார்கள்” என்றான். “ஆண்கள் பெண்களை அடைவதேயில்லையா?” என்றான் முக்தன். “அடைவதுண்டு. மைந்தரைப்பெற்று வளர்ப்பதுண்டு. ஆணும் பெண்ணும் கொள்ளும் எளிய காமமே இங்கு நம்மைச் சூழ்ந்து மிகுதியும் நிகழ்கிறது. ஆணுடலிலும் பெண்ணுடலிலும் கூடி தெய்வங்கள் அடையும் காமம் பிறிதொரு இடத்தில் பிறிதொரு முறையில் நிகழும் வேள்வி.”

“அப்பெற்றி கொள்ளும் மானுட உடல்கள் சிலவே. அதைப் பெற்றபின் அக்கணமே அதிலிருந்து விலகி அதை சுடரெனப் பேணி நிறைவடையும் தகைமை கொண்டவர் மிகச் சிலர். பிறர் அதை தங்கள் எளிய உடல்களில் மீண்டும் நிகழ்த்த எண்ணி முயன்று ஏமாற்றம் கொண்டு சினந்து மேலும் கீழிறங்கி விலங்குகளென்றாகி மாய்கிறார்கள்” என்றான் சர்விதன். “பல்லாயிரம் சிப்பிகளில் ஒன்றில் மட்டும் முத்து விளைவதுபோல. இறைநிகழ்ந்த காமம் தவம் நிறைந்த முனிவரின் சித்தத்திற்கு நிகரானது.”

“வெறுங்கதை. ஒருபோதும் நாம் நமது மெய்யான உவகைகளை அடைவதில்லை. இதோ, மூன்றாண்டுகளாக இக்காவல் மாடத்துடன் நான் கட்டப்பட்டிருக்கிறேன். எனது தந்தை கோட்டையில் ஒரு காவல் மாடத்துடன் கட்டப்பட்டிருந்தார். அங்கு இல்லத்தில் நம் மகளிர் அடுமனைகளுடன் கட்டப்பட்டிருக்கின்றனர். கட்டுத்தறியில் சுற்றிச் சுற்றி வந்து சூழ்ந்திருக்கும் பெருங்கானகமொன்றை கனவு காண்கிறோம். அப்பால் பெரிய வட்டமென தொடுவான் வேலி” என்றான் முக்தன் கசப்புடன் துப்பியபடி. “நமக்கு அனைத்தும் கனவுகளிலேயே அளிக்கப்பட்டுள்ளது.

கனவுகளிலேயே நம் உச்சமும் நிகழமுடியுமென்று சூதர்கள் நம்மிடம் சொல்கிறார்கள்” என்றான்.

குடிகாரச்சூதன் நகைத்து “அது மெய். ஆனால் அதனுடன் இணைத்துக்கொள்ள வேண்டியது இரண்டு. அரசர்களும் முனிவர்களும்கூட கட்டுத்தறியில் சுற்றிவருபவர்களே. மானுடராகப் பிறந்த அனைவருக்கும் அவர்கள் ஈட்டி எய்தி நிறைய வேண்டிய அனைத்தும் கனவுகளிலேயே உள்ளன” என்றான். முக்தன் அவனை ஒருகணம் பார்த்துவிட்டு சலிப்புடன் முகம் சுளித்தான். “நீ விரும்பினால் அக்கனவுகளில் ஒரு மிடறை என்னிடமிருந்து அருந்தலாம். இது சூதர்களின் கனவு உறைகுத்தப்பட்ட இன்கடுங்கள்” என்றான் சர்விதன். முக்தன் சினத்துடன் திரும்பி நூலேணியில் இறங்கி கீழே சென்றான். “மிக இளையோன். ஏதுமறியாதவன்” என்றான் கிரணன். “இளமை தனக்கு முடிவிலா வாய்ப்புகள் உள்ளது என்னும் மாயையால் வாழ்த்தப்பட்டிருக்கிறது” என்றான் சர்விதன்.

முக்தன் கீழிறங்கி அந்த அணிக்காட்டின் தளிர்களையும் மலர்களையும் நோக்கியபடி நின்றான். எங்குமுள்ளன தளிர்களும் மலர்களும். இக்காட்டிற்குள் அவை ஒவ்வொன்றும் சொற்களும் அணிகளுமாக நிற்கின்றன. இங்குள்ள ஒவ்வொன்றும் பொருள் கொண்டதாகின்றன. இது முன்பெப்போதோ கவிஞர் சொல்லில் எழுப்பி பின்னர் தெய்வங்களால் மண்ணில் இயற்றப்பட்டது என்கின்றனர். சொல்திரண்ட பெருங்காவியமென ஒற்றை மெய்மையை உணர்த்தி நிற்கிறது என்கின்றன.

இரண்டாண்டுகளாக அக்காட்டின் எல்லையினூடாக அவன் சுற்றி வந்தும் கூட ஒருமுறையேனும் உள்ளே சென்றதில்லை.

அதன் மேல் தெற்குக் காற்று அலையெழுப்பிச் சுழன்று வருவதைக் கண்டதுண்டு. நிலவு குளிர்ந்து இறங்கி சூழ்வதை, பனிவெண்மை மூடி காடு முற்றிலும் மறைவதை, அனைவரும் துயில முழங்கால் கட்டியமர்ந்து முழு இரவும் நோக்கி அமர்ந்ததுண்டு. முதற்புலரி ஒளியில் இலைநுனிகள் வேல்கூர் கொள்வதை, மலர்கள் அனலென பற்றிக்கொள்வதை, சுனைகள் விழிதிறப்பதை பார்த்து நிற்கையில் ஒருமுறையேனும் அனைத்துத் தளைகளையும் உடைத்துக்கொண்டு அதற்குள் இறங்கிச் செல்லவேண்டுமென்று தோன்றியதுண்டு.

“அது தடை செய்யப்பட்டுள்ளது” என்று அவன் தோழனாகிய தீர்க்கன் சொன்னான். “அரசத்தடை மட்டுமல்ல, தெய்வங்களின் தடையும் கூட. அரசத்தடையை மீறி அதற்குள் சென்ற பல குடிகளுண்டு. அவர்கள் அனைவரும் சித்தம் பிறழ்ந்து சிரிப்பும் அழுகையும் என கொந்தளிக்கும் நிலையிலேயே மீட்கப்பட்டுள்ளனர். அவர்களை அரசர்கள் தண்டித்ததில்லை. இங்கிருக்கும் தெய்வங்கள் ஆணையிடுவதென்ன என்பதை பிறர் அறியட்டும் என்பதற்காகவே அவர்கள் விட்டு வைக்கப்படுவார்கள்.”

“நமது தெருவிலேயே பத்தாண்டுகளுக்கு முன்பு ஒருவர் இருந்தார். பதறும் விழிகளுடன் சிரித்தும் அழுதும் கொப்பளித்தபடி கைகளை வீசி நடனமிட்டபடி தெருக்களை சுற்றி வருவார். சற்றேனும் சித்தம் மீள்கையில் மது தேடி அலைவார். குடித்து மூக்கு வழிவார சாலையோரத்தில் கிடக்கையில் புரியாத மொழியில் எதையோ சொல்லி கைசுட்டுவார். அந்தப் பெரும் பித்து அவ்வாறே உறைந்து நிற்க ஒருநாள் தெருமுனையில் இறந்து கிடந்தார். காட்டின் களி மயக்கால் கொல்லப்பட்டவர் அவர் என்று என் தந்தை எனக்கு

சுட்டிக்காட்டி சொன்னார்” என்றான். “அங்கு செல்வது அடாது என்றார் எந்தை. ஆயிரம் கைகளால் அது நம்மை அள்ளி இழுக்கையில் அன்னையை தந்தையை குடியை குலத்தை எண்ணி ஒழிய வேண்டும் என்றார். நான் அது ஏன் நம்மை இழுக்கிறதென்று தந்தையிடம் கேட்டேன். ஏனெனில் நாம் அங்கிருந்துதான் வந்துள்ளோம் என்று தந்தை சொன்னார்” என்றான் தீர்க்கன்.

காட்டின் எல்லையென அமைந்த ஊர்ணையின் உயர்ந்த கரையின் நீர்மருத மரங்களின் வேர்களினூடாக தாவிச் சென்றுகொண்டிருக்கையில் முக்தன் அச்சொற்களை நினைவு கூர்ந்தான். அங்கிருந்துதான் கிளம்பி இருக்கிறோமா என்ன? ஒரு கணம் ஏதோ அயல் தொடுகையென உளம் சிலிர்க்க அவன் திரும்பிப் பார்த்தான். மலைகளை முலைகளாகக்கொண்டு கோதையை ஆடையென அணிந்து நீரோடைகள் நரம்புகளென பின்னிப்பரவியிருக்க மல்லாந்து கிடந்த அந்நிலமகளின் தொடைஇடை சிறுகருங்காடு என்று அது அவனுக்கு தோற்றமளித்தது. ஓயா ஊற்றுகள் சதுப்பென அமைந்த நிலத்திற்கு மேல் எழுந்த வறனுறல் அறியா பசுஞ்சோலை.

மூன்றாவது காவல்மாடத்தை அடைந்தபோது மேலிருந்து தீர்க்கன் கையசைத்து அழைத்தான். முக்தன் இரு கைகளையும் வாய் அருகே குவித்து “என் பணி முடிந்தது” என்றான். “மேலே வா!” என்று தீர்க்கன் கூவினான். முக்தன் தொங்கவிடப்பட்டிருந்த வடத்தைப்பற்றி அதன் முடிச்சுகளில் கால்வைத்து விரைந்தேறி காவல் மாடத்தை அடைந்தான். அங்கு இருவர் வாய்திறந்து எச்சில் கோடுகள் பாறையின் காய்ந்த ஓடைகளென வெளுத்துத்தெரிய

துயின்றுகொண்டிருந்தனர். தீர்க்கன் “நேற்றிரவு எனக்கு துயில் நீக்கப்பணி” என்றான். “இவர்கள் விழித்தெழவில்லையா?” என்று அவன் கேட்டான். “நேற்று மாலையே கள்ளருந்தத் தொடங்கினர். நள்ளிரவில் ஒருமுறை விழித்துக்கொண்டு மீண்டும் அருந்தினர். வெயில் முகத்தில் படத்தொடங்கிவிட்டது. உண்மையில் இப்போதுதான் ஆழ்துயிலுக்குள் சென்றிருப்பர். எனக்கு வேறு வழியில்லை” என்று தீர்க்கன் சொன்னான்.

கைகளை நெளித்து சோம்பல் முறித்து “நான் காலைக்கடன்களை கழிக்க வேண்டும். சற்று உணவருந்த வேண்டும்” என்றான் தீர்க்கன். “சென்று வரவேண்டியதுதானே? இவ்வேளையில் ஒரு காவல் மாடத்தில் எவருமில்லையென்றால் என்ன?” என்றான் முக்தன். “இங்கு நான் பணிக்கு வந்து ஒன்றரை ஆண்டுகளாகின்றன. இன்றுவரை இக்காட்டிற்குள் எவரும் நுழைந்ததில்லை. கீசகர் நான் இங்கு வருவதற்கு மூன்று மாதங்களுக்கு முன்புதான் வேட்டைக்கு வந்தார் என்கிறார்கள். நான் எதையும் பார்த்ததில்லை” என்றான் தீர்க்கன் சலிப்புடன். “காட்டிற்கு காவலிடப்பட்டிருப்பது பாரதவர்ஷத்திலேயே இங்குதான் என்று எண்ணுகின்றேன். ஆனால் எப்படியாயினும் இது அரசப்பணி. ஆணையிடப்பட்டதை நாம் நிறைவேற்றியே ஆகவேண்டும்.”

முக்தன் “ஆம். அந்த உணர்வுக்கு பழகியிருக்கிறோம்” என்றான். “இன்று காலை நானும் இந்த வீண்நடிப்பை ஏன் தொடரவேண்டும், இவர்களைத் துயிலவிட்டு கீழிறிங்கிச் சென்று நீராடி உணவுண்டு நிழலில் சற்று ஓய்வெடுப்போம் என்றுதான் எண்ணினேன். அவ்வெண்ணம் எழுந்த சில கணங்களுக்குள்ளேயே இளவரசி கான்நுழையும் கொம்போசை

எழுந்தது” என்றான் தீர்க்கன். “அதைத்தான் நானும் எண்ணிக்கொண்டேன். இத்தனை ஆண்டுகளுக்குப்பின் இது என்ன ஒரு புதிய நிகழ்வு?” என்றான் முக்தன். “இவர்கள் நிமித்திகர்களை நம்பியே வாழ்பவர்கள். இளவரசி இந்நாளில் இத்தனை பொழுது இந்தக் காட்டில் கழிப்பது நன்று என்று ஏதேனும் நிமித்திகன் சொல்லியிருக்கக்கூடும்” என்றான் தீர்க்கன்.

முக்தன் “இங்கு அவர்கள் என்ன செய்யப்போகிறார்கள்?” என்றான். “நீராடலாம். மலராடை புனைந்து விளையாடலாம். இங்கிருந்தே பார்த்தாயல்லவா? எத்தனை அழகிய சுனைக்கரைகள், ஓடைமருங்குகள், மலர்ச்சோலைகள்!” முக்தன் “விந்தைதான். இத்தனை அழகிய இடம் பெரும்பாலும் எவராலும் பார்க்கப்படாமல் நிகழ்ந்துகொண்டிருக்கிறது. இங்கு மலரும் கோடிக்கணக்கான மலர்கள் எவ்விழிகளாலும் பார்க்கப்பட்டிருப்பதில்லை” என்றான். தீர்க்கன் நகைத்து “மூடா, மண்ணில் விரியும் மலர்களில் மிக மிகச் சிலவே மானுடரால் பார்க்கப்படுகின்றன. அழகுணர்வுடன் விழிகளால் மலர்கள் பார்க்கப்படாமல் உதிர்வதை எண்ணி வருந்திய ஏதோ கவிஞன்தான் கந்தர்வர்களையும் கின்னரர்களையும் கற்பனை செய்தான். நலம் நோக்கப்படாத ஒரு மலர்கூட உதிர்வதில்லை என்று கவிதை யாத்தான்.”

முக்தன் “நீ கீழே சென்று வா. நான் அமர்ந்திருக்கிறேன்” என்றான். “உன் சலிப்பை புலரியில் என்மேல் ஏற்றிவிடுவாய்.” தீர்க்கன் நகைத்து “மீண்டும் ஒரு கொம்பொலி எழக்கூடுமென்று எதிர்பார்த்திருக்கிறேன்” என்றான். “ஏன்?” என்றான் முக்தன். “இளவரசி உள்ளே சென்றிருக்கிறார். அங்கு கொடிமண்டபங்களும் தளிர்க்குடில்களும் ஏறுமாடங்களும்

என்ன நிலையில் இருக்கின்றன என்று அறியோம். அவற்றைப் பேணுவதற்கு பணிக்கப்பட்டுள்ள ஏவலர்கள் எழுபது பேர். இங்கு நான் காவலுக்கு அமர்ந்தபின் ஒருவரைக்கூட பார்த்ததில்லை. பெரும்பாலும் உள்ளே சென்றதுமே சினங்கொண்டு கூச்சலிடப்போகிறார். குடில்களில் முயல்களும் மான்களும் இருக்கும். ஏறுமாடங்களில் மலைப்பாம்புகள் துயிலக்கூடும்” என்றான்.

முக்தன் நகைத்தபடி “நன்று... அவர்கள் தேடிவருவது அங்கு அரண்மனையில் இல்லாத சிலவற்றைத்தானே? நீ சென்று வா” என்றான். தீர்க்கன் எழுந்து கைகளை விரித்து மீண்டும் நன்றாக நெளிந்து “அமர்ந்திருக்கையில் நம் உடல் பிறிதொன்றாகிறது. அதனுள் நீர்கள் உறைந்து நார்போலாகின்றன” என்றான். பின்னர் கைகளை வீசி “புதையல் காக்கும் பாம்புகளைப்போல ஒரு பணி” என்றான். முக்தன் “அச்சொல்லையே இங்கு உரைக்கலாகாது. இளவரசி நாகப்பிழை கொண்டவர் என்கிறார்கள். இப்போது வந்துள்ள அமணக் கணியனும் அதையே சொல்லியிருக்கிறான்” என்றான். “சொல்லாதபோது மேலும் ஆற்றல்பெறுவதே நாகம், அறிவாயா?” என்றான் தீர்க்கன். “அது வேர்களில் விழுதுகளில் கொடிகளில் வால்களில் ஓடைகளில் எல்லாம் தன்னை தோன்றச்செய்யும் மாயம் கொண்டது.”

சிரித்துக்கொண்டே அவன் இறங்கிச்சென்ற பின்னர் கைகளை முழங்கால் மேல் வைத்து கால் மடித்தமர்ந்து முக்தன் காட்டை நோக்கிக் கொண்டிருந்தான். ஏன் காட்டை பார்க்கவேண்டும்? காவலனாக நான் பார்க்க வேண்டியது இதன் வெளிப்பக்கத்தைத்தான். இணையாக ஓடும் ஊர்ணையின் அலைகளை, இதைக் கடந்து யானையோ கரடியோ

வருகின்றனவா என்று. எதிரிப்படைவீரர்களின் படைக்கலன்களின் ஒளி எங்கேனும் திரும்புகின்றதா என்று. ஆனால் வந்த நாள் முதல் பெரும்பாலான தருணங்களில் காட்டை நோக்கியே திரும்பியிருக்கிறேன். எதுவோ என்னில் பிழையென உள்ளது.

அவன் தொலைவில் இலைத்தழைப்புகளுக்கு நடுவே அசைவுகளை கண்டான். எழுந்து நின்று கூர்ந்து பார்த்தபோது அங்கு சுனையின் கரையில் தேர்கள் நின்றிருப்பது தெரிந்தது. உத்தரையும் அவள் சேடியரும் ஆற்றுக்கரையில் ஆடைமாற்றி இளைப்பாறிவிட்டு காவலர் தொடர காட்டுக்குள் சென்று மறைந்தனர். பொன்னிறப் பட்டாடைகள் அணிந்த அவர்களின் உருவங்கள் மிகச்சிறிய வண்டுகள்போல மின்னி ஊர்ந்து மறைந்தன. பின்னர் தேர்களைத் திருப்பி காட்டின் எல்லையைக் கடந்து ஆற்றின் கரையில் இருந்த மரநிழல்களில் அணைத்து நிறுத்தினர். புரவிகள் அவிழ்க்கப்பட்டு இளைப்பாறும் பொருட்டு விடப்பட்டன. தேரோட்டிகளும் ஏவலர்களும் ஆங்காங்கே நிழலில் அமர்ந்து ஓய்வு கொள்ளத்தொடங்கினர்.

காட்டிற்குள் அப்பெண்கள் மட்டும் தனியாகச் செல்கிறார்கள் என்று எண்ணியபோது அவனுள் சிறிய அமைதியின்மை உருவாகியது. கதைகள் சொல்லும் கந்தர்வர்களையும் கின்னரர்களையும் உள்ளூர தானும் நம்புகிறேனா என்று கேட்டுக்கொண்டான். கந்தர்வர்களையல்ல என்று தானே சொல்லிக்கொண்டான். இக்காட்டிற்குள் அஞ்சுவதற்கென ஏதுமில்லை. நச்சுப்பாம்புகள்கூட. பாம்புகளை தேடித்தேடி அழித்திருக்கிறார்கள். பாம்பு கடக்க முடியாதபடி சுற்றிலும் நீர்

வேலியிட்டிருக்கிறார்கள். மிஞ்சி பாம்பு வருமென்றால் வேட்டையாட கீரிகளை வளர்த்து நிரப்பியிருக்கிறார்கள்.

தன் நிலையழிவை விந்தையென உணர்ந்தபடி அவன் எழுந்தான். ஒருமுறை உடல் விரித்து சோம்பல் முறித்தான். எப்படியும் ஒரு பாம்பு எஞ்சிவிடும் என்று எங்கோ ஏதோ சூதர் பாடலில் கேட்ட வரி நினைவுக்கு வந்தது.

"எனது பெரிய தந்தை கருவூலத்தில் காவலராக இருந்தார். அவருக்கு மணமாகவில்லை. குடியில்லாமையால் எங்களுடன்தான் இருந்தார். ஒவ்வொரு நாளும் பெரிய தோல் மூட்டைகளில் பொன் நாணயங்கள் உள்ளே வந்துகொண்டும் வெளியே சென்றுகொண்டும் இருக்கும். ஆண்டுக்கு மூன்று வெள்ளி நாணயங்களை ஊதியமாகப்பெற்று நாற்பதாண்டுகாலம் பணியாற்றி முதிர்ந்து இறந்தார்" என்றான் தீர்க்கன். "இந்த அணிக்காட்டின் காவலனாக நான் வந்தபோது பெரியதந்தையைத்தான் எண்ணிக்கொண்டேன்." முக்தன் புன்னகை செய்தான். அவர்கள் இருவரும் மட்டும் காவல்மாடத்தின்மேல் அமர்ந்திருந்தார்கள். உச்சிவெயில் எழுந்து அமைய இலைவாடும் மணம் காட்டின் மீதிருந்து வந்துகொண்டிருந்தது.

பெரியதந்தை இறப்புமஞ்சத்தில் என்னிடம் தன் இறுதி விழைவை சொன்னார். ஒரு பொன் நாணயத்தையாவது கையில் வைத்து பார்க்கவேண்டும் என்று. நான் ஓடிச்சென்று என் தந்தையிடம் சொன்னேன். "காவலர்களுக்கேது பொன் நாணயம்?" என்றார் அவர். "ஆனால் இறுதிவிழைவு... அதை நிறைவேற்றுவது நம் கடமை" என்றார் என் அன்னை. என் தாய்மாமன் "நம் குலக்கோவிலில் வீற்றிருக்கும் மூதாதையர் காலடியில் பொன்நாணயங்கள் வைக்கப்பட்டுள்ளன. பூசகரிடம்

சொல்லி ஒன்றை பெற்றுகொண்டு வந்து அவரிடம் அளிப்போம். அதை தொட்டபின் இறக்கட்டும். தீட்டு கழித்து திரும்ப வைத்துவிடுவோம்" என்றார்.

நான் ஓடிச்சென்று ஆலயத்துப் பூசகரிடம் தாய்மாமன் சொன்னபடி கோரிக்கையை சொன்னேன். பொன்நாணயங்களை மூதாதையரின் காலடியிலிருந்து பெயர்த்தெடுக்க இயலாது என்று அவர் மறுத்துவிட்டார். நான் உண்மையில் அப்போதுதான் அவை பொன் நாணயங்கள் என்றே அறிந்தேன். கொன்றை மலரிதழ் அளவுக்கு சிறிய மஞ்சள் நாணயங்கள் மூதாதையரின் இரு கால்களுக்கும் நடுவே களிமண் பீடத்தில் பதிக்கப்பட்டிருந்தன. அங்கிருந்த இருவரிடம் பெரியதந்தையின் இறுதி விழைவு என்று சொன்னேன். அவர்களும் சினத்துடன் பொன்நாணயங்களை பெயர்த்தெடுப்பது மூதாதையரை சிறுமைப்படுத்துவது என்றார்கள். ஒருவர் சினமும் இளக்காரமுமாக "வேல் தாங்கி காவல்நின்ற மறவனுக்கு பொன் நாணயம் மேலென்ன விழைவு? அடுத்த பிறவியில் வைசியனாகப் பிறக்க திட்டமிடுகிறானா என்ன?" என்றார். பிறர் வேண்டுமென்றே உரக்க நகைத்தனர். அழுதபடி நான் திரும்பி வந்தேன்.

எந்தையிடம் சொன்னபோது "ஆம், நான் அதை எண்ணினேன்" என்றார். என் தாய்மாமன் எப்போதும் ஒரு படி கடந்து சென்று எண்ணுபவர். "ஒரு வெள்ளி நாணயம் கொடுங்கள்" என்றார். வெள்ளி அரைநாணயம் ஒன்றை எடுத்து மஞ்சளை அம்மியில் உரசி அவ்விழுதை அதில் நன்கு பூசி இருமுறை துடைத்து அன்னையிடம் அளித்தார். "விளக்கை சற்று தாழ்த்திவிட்டு இதை பொன் நாணயம் என்று அவர் கையில் கொடு" என்றார்.

என் அன்னை தயங்கினாள். “கொடு! அன்றி ஏங்கி அவர் உயிர் துறக்கக்கூடும்” என்றார் தாய்மாமன்.

அன்னை தயங்கிய காலடிகளுடன் சென்று பெரியதந்தை அருகே மண்டியிட்டு “மூத்தவரே, தாங்கள் கோரிய பொன்நாணயம்” என்றாள். இறுதி மயக்கத்திலும் அவர் உடல் ஒருமுறை விதிர்த்தது. வலது கால் இழுபட்டுத் துடித்தது. இரு கைகளையும் மலரவைத்து பல்லில்லாத வாயில் உதடுகள் படபடக்க “எங்கே?” என்றார். வலக்கையில் அந்த வெள்ளி நாணயத்தை வைத்தார் அன்னை. விழிகளை சரித்து ஒருமுறை அவர் அதை பார்த்தார். அந்த முகத்தில் விரிந்த புன்னகையை நான் ஒருபோதும் மறக்கமாட்டேன். ஆம் என்பதுபோல் இருமுறை தலையசைத்தபின் விழிகளை மூடிக்கொண்டார். சிறகுதிர்ந்து விழுந்த வண்டுகள்போல இருவிழிகளும் அசைந்தன.

அவரின் உடல் ஓய்ந்ததை நான் திகைத்தவன்போல நோக்கி நின்றேன். தந்தை பதறியபடி “அந்த வெள்ளி நாணயத்தை எடுத்துவிடு, உடனடியாக” என்றார். தாய்மாமன் “ஏன்?” என்று கேட்க “இப்போது அவர் மானுடரல்ல. இப்போது அவருக்குத் தெரியும்” என்றார். திகைத்தவர்போல தாய்மாமன் காலடி வைத்து வெளியே சென்று நின்றார். அன்னை பெரியதந்தையின் மூடிய விரல்களைப் பிரித்து அந்த நாணயத்தை எடுக்க முயன்றாள். இறுதி மூர்ச்சையில் அவர் தன் கைகளை முறுக்கிப் பற்றியிருந்தார். தாய்மாமன் அறைக்கு வெளியே நின்றபடி “சற்று போகட்டும்… உடல் தளரட்டும். நரம்புகள் இன்னும் இறக்கவில்லை” என்றார். “இல்லை இல்லை எடுத்துவிடு” என்றார் தந்தை.

அந்தத் தருணத்தின் அழுத்தத்தை தாள முடியாமல் நான் பின்னால் நகர்ந்து சுவரோடு ஒண்டிக்கொண்டேன். "முடியவில்லை. இறுகப்பற்றியிருக்கிறார்" என்றாள் அன்னை. தந்தை முன்னால் சென்று குனிந்து அவ்விரல்களைப் பிடித்து ஒடிப்பதுபோல விரித்து நாணயத்தை எடுத்தார். அவர் கைகளில் மஞ்சள் படிந்திருந்தது. பொன் நாணயம் மீண்டும் வெள்ளியென்றாகியிருந்தது. "அதை எங்கேனும் வீசிவிடுங்கள்" என்றாள் அன்னை. "இல்லை. அது இங்கிருக்கலாகாது. இங்கிருந்தால் அவர் மீண்டும் இங்குதான் வருவார்" என்று தந்தை சொன்னார். "இதை நாம் வடக்குக் காட்டில் வீசிவிடலாம்" என்று தாய்மாமன் சொன்னார். "என்ன சொல்கிறாய்?" என்று தந்தை கேட்க "அவர் அங்குதான் செல்வார்" என்றார்.

என் தாய்மாமன் அப்போது இந்தக் காட்டின் காவலராக இருந்தார். அந்த நாணயத்தை ஒரு சிறு மரக்குலுக்கையில் போட்டு குலதெய்வத்தின் கோயிலில் ஒரு மூலையில் கொண்டு ஒளித்து வைத்தார். மூத்ததந்தையை சிதையேற்றி நீராடி ஊண்நீத்து துயிலொழிந்து மறுநாள் பாலூற்றி நினைப்பொழிந்தபின் அந்தச் சிமிழை எடுத்து வந்து தன் காவல் மாடத்தில் நின்றபடி மும்முறை தலைக்கு மேலே சுழற்றி உள்ளே வீசினார். இந்தக் காட்டில் எங்கோதான் அது இருக்கிறது.

முக்தன் சிரித்தபடி "ஆம். அப்படி ஒரு வழக்கம் இங்குண்டு. இறந்தவர்களுக்குரியவை என்று கருதப்படும் பொருட்களை இங்கு கொண்டு வீசுகிறார்கள்" என்றான். தீர்க்கன் "சில நாட்களுக்குப்பின் என் அன்னைக்கு ஒரு கனவு வந்தது. பூத்துச் செறிந்த அணிக்காடொன்றுக்குள் அவள்

சென்றுகொண்டிருக்கிறாள். இலைகளை விலக்கி புதர்களைக் கடந்து. தரையெங்கும் மஞ்சள் மலர்கள் பொழிந்து மூடியிருக்கின்றன. அந்த மலர்களை கைகளால் அகற்றி அகற்றி அவள் எதையோ தேடினாள். ஓர் இடத்தில் கொன்றைமலரொன்று கைக்கு சிக்கியது. கையில் எடுத்தபோது அது மலரல்ல உலோகம் என்று தெரிந்தது. ஒளிக்காக அங்குமிங்கும் திருப்பி அதை பார்த்தாள். கூர்ந்து நோக்க நோக்க அது மங்கலடைந்துகொண்டே சென்றது. ஆனால் கைகள் சொல்லின அது பொன் நாணயம் என்று.

விழித்துக்கொண்டதும் ஓடிவந்து தந்தையை உலுக்கி எழுப்பி அக்கனவை சொன்னாள். திண்ணையில் படுத்திருந்த தாய்மாமன் எழுந்து வந்து "ஆம், அது பொன்னாகிவிட்டது" என்றார். அவர்கள் மூவரும் உரக்க நகைத்து பேசிக்கொண்டிருந்தனர். பாயில் எழுந்தமர்ந்து நான் அவர்களின் உவகையை பார்த்துக்கொண்டிருந்தேன். பெரியவர் இறந்து பன்னிரு நாட்களுக்கு அவர்களை பேரெடையென ஏறி அழுத்திக்கொண்டிருந்த ஒன்று எழுந்து மறைந்ததன் விடுதலையை கொண்டாடிக்கொண்டிருந்தார்கள்.

அவர்கள் இருவரும் சிலகணங்கள் சொல்லின்றி வேறேங்கோ விழிநட்டு அமர்ந்திருந்தார்கள். தீர்க்கன் எழுந்து "இன்றிரவும் எனக்கே காவல்பணி… நான் சற்று துயில்கிறேன்" என்றான். "நான் விழித்திருக்கிறேன். நீ துயில்கொள்" என்றான் முக்தன்.

# நீர்க்கோலம் - 26

**25. அழியாநாகம்**

✿முக்தன் பகல் முழுக்க அந்தக் காவல்மேடையில் அமர்ந்து வெயில் பரவிய காட்டின் இலைப்பரப்பின் அலைகளை பார்த்துக்கொண்டிருந்தான். எப்போதாவதுதான் புல்லிடைவெளிகளிலும் திறந்த பாறைகள் மீதும் இளவரசியின் சேடிகளிலொருத்தி வண்ணச் சிறுபூச்சியெனத் தோன்றி சிறகு என ஆடை பறக்க சுழன்று மீண்டும் மறைந்தாள். அவர்கள் அக்காட்டுக்குள் நிகழ்ந்துகொண்டிருக்கும் பல்லாயிரம் உயிர்ச்செயல்பாடுகளில் ஒன்றெனக் கலந்துவிட்டது போலவே மேலிருந்து நோக்கியபோது தோன்றியது. வண்ணத்துப்பூச்சிகளைப்போல, பொன்வண்டுகளைப்போல, புள்ளிமான்களையும் குழிமுயல்களையும் துள்ளும் வெள்ளிமீன்களையும் போல.

ஒவ்வொரு நாளும் காவல்மாடத்தின் உச்சியில் அமர்ந்து காட்டின் பசுமையை பார்த்துக்கொண்டிருக்கையில் தன் கற்பனையால் அவன் கீழே நிகழ்வனவற்றை தீட்டி விரித்துக்கொள்வதுண்டு. இலைத்தழைப்பின்மீது எழுந்து அமர்ந்து சுழன்ற பறவைகளை, உச்சிக்கிளையில் வந்திருந்து கதிரெழுவதையும் வீழ்வதையும் நோக்கி ஊழ்கத்தில் அமர்ந்திருக்கும் கருங்குரங்குகளை, கிளைகளுடன் ஒட்டி தேன்கூடுபோல அமர்ந்திருக்கும் மரநாய்களை, கம்பத்தில் கயிற்றில் இழுக்கப்படும் கொடி மேலேறுவதுபோல வந்துகொண்டிருக்கும் தேவாங்குகளை, உச்சிக்கிளை வரை வந்து வானம் நோக்கி மண்விழி சிமிட்டித் திகைக்கும் பழஉண்ணிகளை, காற்றிலாடும் கிளைநுனிகளில் இருந்து தெறிக்கும் நீர்த்துளிகள்போல பறக்கும் அணில்களை அவன் விழிகள் தவறவிடுவதில்லை.

“இங்கு கிடைப்பது எப்போதும் வெள்ளிதான் அங்கிருக்கையில், பின் மீள்கையில் அது பொன்னென்றாகிறது” என்றொரு முறை அவன் தீர்க்கனிடம் சொன்னான். அவன் புன்னகையுடன் “நீ சூதர்பாடல்களை நிறைய கேட்கிறாய். பிழையில்லை… கேட்டவற்றை நினைவில் கொள்ளலாகாது” என்றான். “ஏன்?” என்று அவன் கேட்டான். “நதியென்பது நீர்ப்பெருக்கே. ஆனால் முகில்களும் இலைத்தழைப்புகளின் பாவைகளும் மூடியதாகவே அது எப்போதும் நம் கண்களுக்குப் படுகிறது. காடென்றும் விண்ணென்றும் நாம் அவற்றை ஒருபோதும் மயங்குவதில்லை” என்றான். “இதுவும் பிறிதொரு சூதர் சொல் போலிருக்கிறது” என்று முக்தன் புன்னகைத்தான்.

அங்கு அவர்கள் என்ன விளையாடுவார்கள் என்று முக்தன் எண்ணிக்கொண்டான். நகர்களில் அவர்கள் ஆடும் பலவகையான ஆடல் உண்டென்று அவன் கண்டிருக்கிறான். பட்டுநூல் சுருள்களை எறிந்தாடும் மலர்ப்பந்தாடல். ஒலிக்கும் அரிமணியுருளைகளை ஒருவர் மேல் ஒருவர் எறிந்து ஆடும் மணிப்பந்து. நீர்ப்பரப்பின் மீது சுரைக்காய்க் குடுவைகளை வீசி எறிந்தும் நீந்திப் பற்றியும் ஆடும் அலைப்பந்து. மரங்கள்மேல் கொடிகளைக் கட்டி பற்றித் தொங்கி ஆடி ஒருவரை ஒருவர் துரத்தும் குரங்காடல். அவையனைத்திலும் ஆடுநெறிகள் உண்டு. வெற்றி தோல்வியை வகுப்பதற்கென்று அமைந்தவை அவை. வெற்றி என ஒன்று இருப்பதனால் அதுவே உவகையென்று ஆகிறது. தோல்வி துயரமென்றும் தேர்ச்சி ஆற்றலென்றும் தவறுதல் வீழ்ச்சி என்றும்.

இக்காட்டிற்குள் வருகையில் அந்நெறிகளனைத்தையும் துறந்துவிடவேண்டும். அக்கணங்களில் எது தோன்றுகிறதோ அதை செய்யவேண்டும். மரங்களிலிருந்து நீருக்கு தாவலாம்,

புல்வெளிகளில் ஓடி கால்தடுக்கி விழுந்துருளலாம். அனைவரும் வெல்லும் ஓர் ஆடல். உவகையன்றி பிறிதில்லாத ஒரு களியாட்டு. அதை இப்பெண்டிருக்கு எவரேனும் கற்றுக்கொடுத்திருப்பார்களா? அங்கு நெறி வகுக்கப்பட்ட ஆடல் சலித்துத்தான் இங்கு வருகிறார்கள். இங்கு நெறிகளை அவர்கள் உதறிவிட்டாலே போதும். பிற அனைத்தும் கைகூடிவிடும். விளையாடுவதற்கு மனிதர்களுக்கு எவரும் கற்றுத்தர வேண்டியதில்லை. மனிதர்கள் குரங்கெனவும் முயலெனவும் மானெனவும் மீன் எனவும் அணில் எனவும் புள்ளெனவும் தாங்கள் மாறக் கற்றவர்கள். பிற எவ்வுயிரும் பிறிதொரு இருப்பென உளம் மாறுவதில்லை. மானுடன் அவ்வாறு மாறக் கற்றபின்னரே அவன் இன்று கொண்டிருக்கும் அனைத்தையும் அறிந்தான். ஊர்களை அரசுகளை குடிகளை அறிவை தவத்தை.

என்ன எண்ணிக்கொண்டிருக்கிறோம் என்று உணர்ந்தபோது அவன் புன்னகைத்தான். எப்போதும் மூத்தவர்கள் அவனிடம் சொல்வது அதுதான். ஒரு காவலனாக பணிபுரியும் தகுதியை காவலனுக்கு மீறிய கல்வியாலும் எண்ணங்களாலும் இழந்தவன் அவன். ஒதுக்கு உன் எண்ணங்களை. காவலன் வெறும் கண். படைக்கலத்துடன் நுண்சரடால் பிணைக்கப்பட்ட கண் மட்டுமே அவன். ஆம், கண்ணென்றே இங்கிருப்பேன். நாள் செல்லச்செல்ல என் உடலில் கண் மட்டுமே செயல்படும். பிற அனைத்தும் அணைந்து இருளும். முதுகாவலர் அப்படித்தான் இருக்கிறார்கள். கண்களுக்கு அப்பால் காட்சியை அள்ளிக்கொள்ளும் ஏதுமில்லை.

தொலைவில் ஓர் அலறலைக் கேட்டு அவன் திடுக்கிட்டு எழுந்தான். முதல் மெய்யுணர்விலேயே அது இளவரசியின் குரல் என்று அவனுக்கு எப்படி தோன்றியது என்பதை

பிறிதொரு உள்ளத்துள் வியந்தான். அவள் தோழியர் கூவிக் கலைவதை சிலர் அங்குமிங்கும் ஓடுவதை காணமுடிந்தது. அவன் செய்ய வேண்டியதென்ன என்பதை சில கணங்களுக்குள் சித்தம் ஆணையிட கயிற்றுப்படிகளில் கால் தொற்றி ஏறி முரச மேடையை அடைந்து முழவுத்தடியை எடுத்து "இளவரசிக்கு இடர்... இளவரசிக்கு இடர்..." என்று அறையத் தொடங்கினான். அவ்வொலி கேட்டு மேலும் பல இடங்களில் முரசுகள் முழங்கின. காவலர் படையொன்று அம்புகளும் விற்களும் வேல்களும் ஏந்தி ஆணைக்கூச்சல்களுடன் அணிக்காட்டின் வெளிமுற்றத்திலிருந்து ஒன்றையொன்று தொடர்புகொண்டு சரடென நீண்டு வலையென வளைந்து காட்டுக்குள் சென்றது.

இறங்கி அவர்களுடன் செல்லவேண்டுமென்று அவன் விழைந்தாலும் காவல்சாவடியை விட்டுச்செல்லக்கூடாதென்ற கடமையை எண்ணி அங்கு நின்று தொலைகூர்ந்தான். அக்காட்டுக்குள் என்ன நிகழ்ந்திருக்கக் கூடும்? அங்கு கொலை விலங்குகளோ நச்சு நாகங்களோ இல்லை. ஆனால் காட்டில் எதுவும் நஞ்சாகலாம். நஞ்சு பிறப்பது கொம்புகளில், பற்களில், நகங்களில், அலகுகளில், கொடுக்குகளில், முட்களில், கற்களில், வேர்களில், மலர்களில் என நூற்றெட்டு இடங்களில். நாகத்தின் நச்சுப்பல் என ஒவ்வொன்றும் ஏதோ ஒரு முனையில் நஞ்சு கொண்டுள்ளன என்று அவன் கற்றிருந்தான். என்ன நிகழ்கிறதென்று தெரியாமல் அங்குமிங்கும் தெரிந்த அசைவுகளை விழியால் தொட்டு அறிய முயன்றபடி காவல் மாடத்திலேயே சுற்றி வந்தான்.

படையின் வலை காட்டுக்குள் ஊடுருவிச்சென்று மறைந்தது. தீர்க்கன் "என்ன? என்ன நிகழ்கிறது?" என்றபடி மேலேறி வந்து

“என்ன நிகழ்ந்தது?” என்று உரத்த குரலில் கேட்டான். “அறியேன்... நானும் நோக்குகிறேன்” என்றான் முக்தன். மதுமயக்கு தெளிந்த மூத்த காவலன் அவன் பின்னால் வந்து “இளவரசியின் குரலல்லவா அது?” என்றான். தொடர்ந்து ஏறிவந்த பிறிதொரு காவலன் “கந்தர்வர்கள். ஐயமே இல்லை. இப்படைகள் சென்று எவரிடம் போரிடப்போகின்றன?” என்றான். “கந்தர்வர்களாயினும் போர் புரிந்து இறப்பது காவலர்களின் கடன்” என்றான் தொடர்ந்து ஏறிவந்த பிறிதொருவன்.

“நான் சென்று பார்க்கிறேன்” என்றபடி முக்தன் நூல்படிகளில் ஊர்ந்தவனாக இறங்கினான். “அதற்கு உனக்கு ஆணையில்லை” என்றான் தீர்க்கன். “ஆம். ஆயினும் இத்தருணத்தில் இங்கு வாளாவிருக்க என்னால் இயலாது” என்றபடி அவன் கீழிறிங்கி காட்டுக்குள் செல்லும் பாதையில் நுழைந்தான். பாதை முனையில் ஒருகணம் திகைத்து நின்று பின்னர் அருகிலிருந்த நீண்ட வேலை கையிலெடுத்துக்கொண்டு உள்ளே புகுந்தான். அதன் கூர்விளிம்பால் முட்செடிகளை வெட்டி அகற்றியபடியும் சிறிய புதர்களை அதன் கோலை ஊன்றி தாவிக்கடந்தும் பாறைகளிலும் விழுந்த மரங்களிலும் காலூன்றி உள்ளே சென்றான். முற்றிலும் திசைமறக்கச் செய்யும் நிழலிருளுக்குள் செல்ல அங்கு கேட்ட பெண்களின் குரல்களே வழிகாட்டின. மீண்டும் மீண்டும் பசுந்தழைகள் அவன் முன் சரிந்து வழிமறிக்க கிழித்துக் கிழித்து முடிவிலாமல் சென்றுகொண்டே இருப்பதுபோல் தோன்றியது.

பின்னர் ஒரு சதுப்பு வளையத்தை அடைந்தபோது அங்கு தேங்கி நின்றிருந்த வெயிலொளியில் கண்கூசி விழி தாழ்த்தி ஒருகணம் நின்றான். குரல்களின் கலவை வந்து செவிசூழ நிமிர்ந்து நோக்கியபோது ஒரு பெண் இளவரசியை கைகளில்

தூக்கியபடி வர அவளுக்குப் பின்னால் மற்ற பெண்கள் அலறியும் அழுது அரற்றியும் ஓடி வருவதைக் கண்டான். மறு எல்லையிலிருந்து ஒரே தருணத்தில் தோன்றிய விராடநாட்டுப் படைவீரர்கள் முள்ளம்பன்றி சிலிர்த்துக்கொள்வதுபோல் நூற்றுக்கணக்கான அம்பு முனைகளாக எழுந்தனர்.

காவலர்தலைவன் வேலை நீட்டியபடி "யார் நீ? அரசியை கீழே விடு" என்றான். அவளுக்குப் பின்னால் ஓடி வந்த சேடி "இளவரசியை நாகம் ஒன்று தீண்டியது. இப்புதியவள் அந்த நச்சை முறித்து இளவரசியை காத்தாள். இளவரசி இன்னமும் மயக்கில் இருக்கிறார்" என்றாள். இளவரசியை கையில் வைத்திருந்தவள் "அஞ்சுவதற்கு ஏதுமில்லை" என்றாள். அவளுக்குப் பின்னால் வந்த பிறிதொருத்தி காட்டுக்கொடியில் கட்டி சுருட்டி பொதிபோல் மாற்றப்பட்டிருந்த பெரிய நாகத்தை நீண்ட கழியொன்றின் நுனியில் கட்டித் தூக்கி வந்தாள். அது அப்பொதிக்குள் உடல் நெளிய வெட்டி எடுக்கப்பட்ட நெஞ்சுக்குலையின் இறுதி உயிரசைவுபோல் தோன்றியது.

வேலை தாழ்த்தாமல் "யாரிவள்? எப்படி உள்ளே வந்தாள்?" என்றான் காவலர்தலைவன். "நான் ஒரு அயலூர்ப்பெண். இவ்வழி சென்றேன். மலை உச்சியிலிருந்து இக்காட்டைக் கண்டபோது இது தவம் செய்ய உகந்ததென்று எண்ணி இங்கு வந்தேன்" என்றாள் இளவரசியை கையில் ஏந்தியிருந்தவள். இளங்கருமை நிறம் கொண்டிருந்தாள். வெண்செந்நிறத்தில் பட்டாடை சுற்றி கல்மாலைகளும் ஒளிரும் மணிக்குண்டலங்களும் அணிந்திருந்தாள். அவள் குரல் பெருங்குடம் கொண்ட யாழின் முதல் தந்திபோல இனிய கார்வை கொண்டிருந்தது.

“தவமா? இங்கென்ன தவம்?” என்று மேலும் ஐயத்துடன் கேட்டபடி தலைவன் முன்னால் வந்தான். “நான் ஆட்டக்கலை தேர்ந்தவள். அதையே தவமென கொண்டிருக்கிறேன். அதில் முழுமை அடையும்பொருட்டு இங்கு வந்தேன்” என்றாள் அந்தப் பெண். “இளவரசியை கீழே விடு. இரு கைகளையும் விரித்தபடி பின்னால் செல்” என்றபடி தலைவன் வேலை நீட்டிக்கொண்டு முன்னால் வர எண்ணியிராக் கணமொன்றில் ஒரு கையால் இளவரசியைச் சுழற்றி தோளுக்கு மேல் கொண்டு சென்று மறுகையால் அவ்வேல் முனையைப்பற்றி சற்றே வளைத்து அதன் கீழ் நுனியால் காவலர் தலைவனின் நெஞ்சுக்குழியில் ஓங்கிக் குத்தி அவனை மல்லாந்து விழச்செய்தாள். பிற படைவீரர்களின் விற்கள் நாணொலி எழுப்பியதும் வேலைத் திருப்பி அதன் நுனியை தலைவன் கழுத்தில் வைத்து “வேண்டியதில்லை. வில் தாழ்த்துக! இளவரசியையும் உங்கள் தலைவனையும் இழக்க வேண்டாம்” என்றாள்.

தேள்கொடுக்கென விழியறியா விரைவில் நிகழ்ந்து முடிந்த அவள் கைத்திறனைக் கண்டு வியந்த வீரர்கள் ஒருவரை ஒருவர் நோக்கினர். கீழே கிடந்த தலைவன் மூச்சொலியுடன் “வில் தாழ்த்துக!” என்றான். பின் “நீ எவராயினும் இளவரசிக்கு தீங்கிழைத்தால் இங்கிருந்து அகல முடியாது” என்றான். “தீங்கிழைப்பவள் அவளை காப்பாற்ற வேண்டியதில்லை, மூடா!” என்றபடி அவள் முன்னால் நடந்தாள். அவளைச் சூழ்ந்து இறுகி கூர்கொண்டு நின்ற அம்புகளுடன் வீரர்கள் உடன் சென்றனர். இளவரசியின் கால்கள் நடையில் அசைய வெண்பரல் சிலம்பு குலுங்கும் ஒலி அவர்களின் காலடியோசையுடன் சேர்ந்து எழுந்தது.

அணிக்காட்டுக்கு வெளியே ஆற்றின் கரையில் நின்றிருந்தவர்கள் இளவரசியைத் தூக்கியபடி வந்த அவளைக் கண்டு வியப்பொலியுடன் மேலும் சூழ்ந்து கொண்டனர். இளவரசியை மென்மணலில் படுக்க வைத்து திரும்பி “அந்த பாம்பை கொணர்க!” என்றாள். கொடிகளில் கட்டப்பட்டு நெளிந்துகொண்டிருந்த பாம்பை வாங்கி அதன் முடிச்சுகளை அவிழ்த்தாள். சீறி படம் தூக்கி எழுந்த அதன் விரைவை மிஞ்சும் கைத்திறனுடன் அதன் கழுத்தை பற்றிக்கொண்டாள். அது வால்சொடுக்கி வளைந்து அவள் கைகளைச் சுற்றியது. அருகிருந்த இலையொன்றை பறித்து கோட்டிக்கொண்டாள். நாகத்தின் வாய்க்கு அடியில் சுருங்கி விரிந்துகொண்டிருந்த நச்சுப்பையை கட்டை விரலால் அழுத்தி சொட்டும் இளமஞ்சள் சீழ் போன்ற நஞ்சை இலைக்குமிழியில் எடுத்தாள்.

இயல்பாக கைசுழற்றி அந்தப் பாம்பை நீர்ப்பரப்பில் எறிந்தாள். நீர்மேல் அது சாட்டை சொடுக்கென நெளிந்து பின் ஒளிரும் பரப்பின்மேல் தலையை மட்டும் வெளியே நீட்டி சுட்டுவிரல்கோடு செல்வதுபோல் நீந்தி அகன்றது. அருகிருந்த மூங்கில் குவளையை எடுத்து அதில் நதிநீரை அள்ளி அந்த நஞ்சை அதில் கலந்து கொண்டு வந்தாள். இளவரசியின் தலையைத் தூக்கி தன் மடியில் வைத்தாள். அவள் விழிகள் பாதி விரிந்து வெண்மை காட்டின. உலர்ந்த உதடுகள் வெண்பல்முனைகளால் கடிக்கப்பட்டிருந்தன. இடையிலிருந்த சிறுகத்தியை எடுத்து இறுகியிருந்த அவள் பற்களுக்கு நடுவே செலுத்தி நெம்பிப் பிளந்து திறந்து அந்நச்சுக்கலவை நீரை ஊட்டினாள். மூன்றுமுறை அதை அருந்தியபின் மூச்சுவாங்கினாள் உத்தரை. மேலும் இருமுறை அவள் அந்நீரை ஊட்டினாள். இமைகளைத் திறந்து கண்களுக்குள்ளும் காதுகளிலும் மூக்கிலும் நச்சுநீரை சொட்டினாள்.

மணலைக் குவித்து தலை சற்று மேலே தூக்கி நிற்கும்படி செய்து படுக்கவைத்தபின் “இன்னும் சற்று நேரத்தில் எழுந்துவிடுவார். அஞ்சுவதற்கொன்றுமில்லை” என்றாள். இளவரசி ஒருமுறை விக்கி நுரையை வாயுமிழ்ந்தாள். சேடியர் அருகே நின்று அவள் வாயை நீரால் கழுவினர். மீண்டுமொரு முறை அவள் வாயுமிழ்ந்தாள். அவள் காலில் நாகம் கடித்த இடத்திற்கு மேல் காட்டுக்கொடியால் கட்டப்பட்டிருந்த முடிச்சை அவிழ்த்து சற்று தள்ளி மீண்டும் கட்டினாள். கடிவாயை குறுக்கு நெடுக்காக அம்பு முனையால் கிழித்திருந்தாள். அதிலிருந்து வழிந்த குருதியை அவள் பிழிந்திருந்த பச்சிலைச்சாறு நிணமென்றும் நீரென்றும் தெளியவைத்திருந்தது.

இளவரசியின் கண்கள் அகன்று பின் விரிசலிட்டு திறந்தன. ஒளிக்குக் கூசி மீண்டும் மூடிக்கொண்டபோது இரு முனைகளிலும் நீர் வழிந்தது. பின்னர் ஓசைகளால் தன்னுணர்வு கொண்டு கைகளை ஊன்றி அமர்ந்து சுற்றும் நோக்கினாள். “அஞ்சவேண்டியதில்லை, இளவரசி. தாங்கள் நலமுடனிருக்கிறீர்கள்” என்று அவள் சொன்னாள். “யார் நீ?” என்று இளவரசி கேட்டாள். “என் பெயர் பிருகந்நளை. ஆடற்கலை தேர்ந்தவள். ஆடற்தவத்தின்பொருட்டு இக்காட்டுக்குள் வந்தேன். நாகம் தீண்டி தாங்கள் எழுப்பிய குரல் கேட்டு வந்து காப்பாற்றினேன்” என்றாள். “நான் நாகர்களுடன் இருந்திருக்கிறேன். அவர்களின் நச்சு முறிகளை அறிவேன்.”

உத்தரை “நாகர்களுடன் நீ எதற்கு இருந்தாய்?” என்றாள். புன்னகைத்து “ஆடற்கலையை நெளியும் நாகங்களிடம் அன்றி வேறெங்கு கற்றுக்கொள்ள முடியும், இளவரசி?” என்று அவள்

கேட்டாள். “நீ ஆண்மை கலந்தவள் போலிருக்கிறாய்” என்றாள் உத்தரை. “ஆம், நான் இருபாலினள்” என்று அவள் சொன்னாள். சுற்றி நின்றவர்களில் மெல்லிய உடலசைவாக வியப்பு வெளிப்பட்டது. முக்தன் அதை முன்னரே தன் அகம் அறிந்திருந்ததை உணர்ந்தான்.

காவலர்தலைவன் “இளவரசி, தாங்கள் அரண்மனைக்கு திரும்பலாம். தேரிலேயே படுத்து ஓய்வெடுத்தபடி செல்லலாம். அங்கு மருத்துவர்கள் சித்தமாக இருக்கும்படி சொல்கிறேன்” என்றான். “ஆம்” என்றபடி உத்தரை எழுந்து தோழியரின் தோள் பற்றி நின்றாள். “சற்று தலைசுற்றும். விழிநோக்கு அலையடிக்கும். பொழுதுசெல்ல மெல்லிய வெப்பமும் உடலில் தோன்றும். அஞ்சவேண்டியதில்லை” என்றாள் பிருகந்நளை. உத்தரை தேரை நோக்கி நடந்தாள். படியில் கால்வைத்த பின்னர் திரும்பி “நீயும் அரண்மனைக்கு வருக!” என்றாள். “ஆம், வருகிறேன். தங்கள் நஞ்சுமுறி மருந்துகள் மூலிகைகள் சிலவற்றை இக்காட்டிலிருந்து எடுத்தாக வேண்டியிருக்கிறது” என்றாள் பிருகந்நளை.

தேர் சென்றதும் காவலர்தலைவன் “இளவரசியின் உயிர்காத்தமைக்காக நாங்கள் உனக்கு கடன்பட்டிருக்கிறோம்” என்றான். “அதற்கான வாய்ப்பு அமைந்தது” என்றாள் பிருகந்நளை. அவள் திரும்பி முக்தனை நோக்கி “நீர் காவலரா?” என்றாள். “ஆம்” என்றான். “என்னுடன் காட்டுக்குள் வருக!” என்றாள். அவன் உடன் சென்றபடி “நாகங்களே இல்லாத காடென்றால் நாகமுறி மருந்துமட்டும் எப்படி முளைக்கிறது?” என்றான். பிருகந்நளை புன்னகைத்தபோது அம்முகத்திலெழுந்த அழகைக்கண்டு அவன் உளம் மலர்ந்தான். அவள் “நன்று,

இளைஞரே! எந்தக் காடும் நாகமெழ வாய்ப்புள்ள ஒன்றே” என்றாள்.

❀காட்டுக்குள் புகுந்து பச்சிலைகளையும் சில வெண்காளான்களையும் பறித்து இலைப்பொதிக்குள் கட்டிக்கொண்டு வெளியே வந்த பிருகந்நளை முக்தனிடம் “தங்களிடம் புரவிகள் இருக்கின்றனவா, வீரரே?” என்றாள். “ஆம், காவல் புரவிகள் உள்ளன. என் பணி முடிந்தது. இனி சின்னாள் நான் ஊருக்குச் செல்ல முடியும்” என்றான். “என்னுடன் வருக! நான் அரண்மனைக்குச் செல்ல விரும்புகிறேன்” என்றாள். அவன் இன்னொரு புரவியை பெற்றுக்கொண்டு வந்ததும் பிருகந்நளை அதில் ஏறிக்கொண்டாள். அவன் வியந்து நோக்க ஓரவிழியில் நோக்கி “என்ன?” என்றாள். “இத்தனை இயல்பாக புரவி மேல் ஏறும் ஒருவரை பார்த்ததில்லை” என்றான் முக்தன். “இத்தனைக்கும் இது புரவிகளின் நாடென்று பெயர் பெற்றது.”

பிருகந்நளை புன்னகைத்து “சௌவீரமும் புரவிகளின் நாடே. இங்கு புரவிகள் சிட்டுக்களைப்போல. அங்கு அவை செம்பருந்துகள்” என்றாள். “ஆம், சௌவீரம் பெரும்பாலையும் மலைச்சரிவுகளும் கொண்டது என்று அறிந்திருக்கிறேன்” என்று முக்தன் சொன்னான். “அங்கு புரவியே கால்களென்றான மக்கள் வாழ்கிறார்கள்” என்றாள் பிருகந்நளை. அவர்கள் காட்டுப்பாதையில் இணையாகச் சென்றனர். பிருகந்நளையின் புரவி தன் மேல் எடையில்லாததுபோல சீரான தாளத்துடன் முன்னால் சென்றது. அவன் மீண்டும் வியப்புடன் திரும்பிப்பார்க்க “காவடியின் நெறியேதான். இருபுறமும் எடை நிகரென்றாகும் தோளில் எடை குறைவாக இருக்கிறது. உடலை முற்றிலும் சமன் செய்கையில் புரவிக்கு முழு விடுதலை அளிக்கிறோம்” என்றாள். “புரவிக்கலையை நீங்கள் ஏன் பயில

வேண்டும்?” என்றான் அவன். “நடனம், போர், புரவியூர்தல் மூன்றும் ஒரு கலையின் மூன்று முகங்கள்தான். உடலை பயிற்றுவித்து முற்றிலும் நேர்நிலையும் சீரமைவும் கொள்ளச் செய்தல்” என்றாள் பிருகந்நளை.

அவர்கள் விராடநகரியின் கோட்டைக்குள் நுழைந்தபோது முன்னரே அவளைப்பற்றி கேட்டிருந்த வீரர்கள் கோட்டை வாயிலில் கூடி நின்று முட்டி மோதியபடி வியப்புடனும் உவகையுடனும் நோக்கினர். ஒரு முதியவர் “இருபாலினத்தவரில் இப்படி ஓர் அழகியை பார்த்ததில்லை” என்றார். அருகிலிருந்த சூதர் “இருபாலினமே தேவர்களுக்குப் பிடித்த மானுட உடல். பெரும்பாலான இருபாலினத்தோர் ஆணின் அழகின்மையும் பெண்ணின் அழகின்மையும் கலந்தவர்கள். சிலரில் இரு அழகுகளும் இருக்கும். ஒத்திசைவின்மையால் அவை அழகின்மையென்றாகியிருக்கும். ஒருடலில் ஈரழகுகளும் நிகரென அமைந்து முற்றிலும் ஒத்திசைவு கொண்டிருந்தால் அதுவே மானுடப்பேரழகாகும்” என்றார். “ஆம், பூசகர் இதைச் சொல்லி கேட்டிருக்கிறேன். இப்போதுதான் விழியால் பார்த்தேன்” என்றான் ஓர் இளைஞன். “இருபாலினத்தவர் இரு பக்கமும் நிகர்செய்யப்பட்ட காவடிகளைப்போல” என்று அப்பால் ஒரு குரல் எழுந்தது.

தன்மேல் இருந்த நோக்குகள் எதையும் பிருகந்நளை அறிந்ததுபோல் தோன்றவில்லை. சற்றே கள்மயக்கில் இருப்பதைப்போல் சிவந்த நீண்ட விழிகள். காற்றிலாடும் மரக்கிளையில் சிறகு குலையாமல் அமர்ந்திருக்கும் சிட்டுபோல தன்னியல்பான புரவியூர்தல். கலையும் ஆடையையும் குழலையும் சீரமைப்பதில் பயின்ற அசைவின் ஆடலழகு. நகரினூடாக அவள் சென்றபோது மாளிகைகள்

அனைத்திலும் பெண்கள் முண்டி அடித்து ஒருவரையொருவர் உடலுரசிக்கொண்டு செறிந்தனர். “அவ்வுடலில் எதை பார்க்கிறோம்? பெண்ணையா? ஆணையா?” என்று ஒருத்தி கேட்டாள். “ஆண்கள் பெண்களையே நோக்குவர். பெண்கள் ஆணுடலையும் பெண்ணுடலையும் நோக்குவார்கள். இரண்டிலும் அவர்கள் மகிழும் அழகுகளுண்டு. இரண்டும் ஓருடலில் அமைந்திருக்கையில் நோக்கு விலக்குவதெப்படி?” என்றாள் விறலி ஒருத்தி.

“அவர்களில் அழகென வெளிப்படுவது எது?” என்று ஒருத்தி கேட்டாள். “பெண்ணின் உச்ச அழகென்பது பெண்ணென்ற அசைவுகொண்டு ஆண் இயல்பு வெளிப்படுவது. ஆணில் அவ்வண்ணம் பெண் வெளிப்படுவது. இவள் ஒருகணம் ஆணென்றும் மறுகணம் பெண்ணென்றும் ஒழியாத ஆடலொன்றை ஒவ்வொரு அசைவிலும் நிகழ்த்திச்செல்கிறாள்” என்றாள் விறலி.

அவர்கள் அரண்மனையின் மைய முகப்பை அடைந்ததும் முக்தன் பிருகந்நளையிடம் “நான் காவல் வீரன். இதற்கப்பால் வருவதற்கு எனக்கு ஒப்புதல் இல்லை” என்றான். “வருக, நான் அழைத்துச் செல்கிறேன்” என்று பிருகந்நளை சொன்னாள். அவன் அஞ்ச “என் ஆணையை ஏற்காதவர்களை நான் பார்த்ததே இல்லை, காவலரே. வருக!” என்று புன்னகைத்தாள். அவன் பிறிதொரு எண்ணமில்லாமல் அவளுடன் சென்றான். முதற்காவல்நிலையிலேயே உத்தரையின் இளமருத்துவன் ஒருவன் அவளைக் காத்து நின்றிருந்தான். “தங்களை மருத்துவர்கள் அங்கு அழைத்து வரச்சொன்னார்கள். இளவரசி நலமடைந்துவிட்டார். ஆயினும் கடித்த பாம்பும் நச்சு நிறைந்தது. நாளையோ பின்னாளிலோ நரம்புகள்

அதிர்வுகொள்ளக்கூடும். பேச்சோ விரலசைவோ குறைகொள்ள வாய்ப்புண்டு என்கிறார்கள்.”

“ஆம், அதற்காகவே இம்மருந்துளை கொண்டு வந்தேன்” என்றாள் பிருகந்நளை. திரும்பி முக்தனிடம் “வருக!” என்று சொல்லிவிட்டு உள்ளே சென்றாள். அவன் அவள் இடையின் அழகிய உலைவை, தோள்களின் அசைவை, கைவீசலை நோக்கி விழி பிறிதொன்றை அறியாமல் உடன்சென்றான். இளமருத்துவன் அவளை இட்டுச்சென்றான். இடைநாழிகளைக் கடந்து சிறுசோலை ஒன்றுக்கு அப்பாலிருந்த மருத்துவநிலைக்கு அவர்கள் சென்று சேர்ந்தார்கள். காவலர் இருவர் நின்றிருப்பதைக் கண்டு இளமருத்துவன் “அரசர் வந்திருக்கிறார் போலும்” என்றான். “நீங்கள் வெளியே நில்லுங்கள். நான் சென்று கேட்டு வருகிறேன்” என உள்ளே சென்றான். அவள் அடிமரத்தில் கொடி என இயல்பாக அத்தூணில் சாய்ந்து நின்றாள். இளமருத்துவன் அவர்களை உள்ளே அழைத்தான். உள்ளே விராடரும் அரசியும் பீடங்களில் அமர்ந்திருக்க நடுவே தாழ்ந்த மஞ்சத்தில் மான்தோல்மேல் உத்தரை படுத்திருந்தாள்.

பிருகந்நளை கைகுவித்து இடை வளைத்து வணங்கி “விராடப் பேரரசரை வணங்கும் பேறு பெற்றேன். நான் சௌவீர நாட்டைச் சேர்ந்த பிருகந்நளை. ஆடற்கலை தேர்ந்தவள். கலைதேரும்பொருட்டு எப்போதும் சென்றுகொண்டிருக்கிறேன்” என்றாள். அவர் தன் பழுத்த விழிகளால் அவளை நோக்கியபின் “உன்னைப்பற்றி சொன்னார்கள்” என்றார். “என் மகளை காப்பாற்றியதற்காக நான் உன்மேல் அன்புகொண்டிருக்கிறேன். நீ விழைவதை கோரலாம்.” பிருகந்நளை “நான் விழைவது இங்குள்ள ஆடற்கலைகளை கற்றுத்தேர்ந்தபின்

விட்டுச்செல்வதை மட்டுமே” என்றாள். “நன்று, அரண்மனையிலேயே நீ தங்கலாம்” என்றார் விராடர்.

அரசி “இவளுக்கு நாகக்குறை உண்டு என நிமித்திகர் பலர் சொல்லியிருந்தனர். இங்கு வந்த புதிய கணியர் அதற்கு மாற்றே இல்லை என்றார். அதையும் மீறி காட்டுக்குச் சென்றிருக்கிறாள். நல்லூழாக ஒன்றும் நிகழவில்லை” என்றாள். “நாகம் காட்டில்தான் இருக்கிறதென்றில்லை” என்றாள் பிருகந்நளை. “ஆம், அதைத்தான் நானும் சொன்னேன். அவள் பேரரசரைப் பெறுவாள் என ஊழ்நெறி உள்ளது என்றார் அமணக் கணியர். அவ்வூழ் அவளை காக்கும்” என்றார் விராடர். “ஊழை நம்பி இருப்பவர் அரசர் அல்ல” என்றாள் அரசி. “என்ன சொல்கிறாய்? நான் ஊழை நம்பி இருக்கிறேனா?” என அவர் சினத்துடன் அரசியை நோக்கி திரும்ப பிருகந்நளை “அரசரைப்பற்றி நான் நன்கறிவேன். தங்கள் வீரத்தையும் நெறியையும் உணர்ந்தே இந்நாட்டுக்குள் வந்தேன்” என்றாள்.

முகம் மலர்ந்த விராடர் “நீ இங்கு விரும்புவதை கற்கலாம். இவள்கூட ஆடல் கற்கிறாள். நீ அறிந்தவற்றை இவளுக்கு கற்பிக்கலாம்” என்றார். அரசி “இளவரசிக்கு எதற்கு ஆடல்? அவளை மணக்கவிரும்பி கலிங்கத்திலிருந்தே ஓலை வந்துள்ளது” என்றாள். “ஓலையா? கலிங்கத்திலிருந்தா? அவர்கள் நம்மை கொல்லைப்பக்கம் கூடையுடன் வந்து நிற்பவர்கள் என்கிறார்கள்” என்றார் விராடர் சினத்துடன். “உங்களை அப்படி சொல்வார்கள்போலும். எங்கள் குலமென்ன என்று அவர்களுக்குத் தெரியும்” என்றாள் அரசி. ஊடே புகுந்த மருத்துவர் சினம்கொண்டு பேசத்தொடங்கிய அரசரைக் கடந்து “இளவரசி சற்று ஓய்வெடுக்கவேண்டும். இவள் கொண்டுவந்த மருந்துகளை எப்படி அளிப்பதென்று பார்க்கிறேன்” என்றார்.

“ஆம், அதை நோக்குக!” என விராடர் எழுந்துகொண்டார். பிருகந்நளையிடம் “அவைக்கு வந்து நான் அளிக்கும் பரிசிலை பெற்றுக்கொள்க!” என்றார். அரசி “அகத்தளத்திற்கும் வா. நானும் உனக்கு பரிசில் அளிக்கவேண்டும்” என்றாள். விராடர் “கலிங்கத்தைப்பற்றி எதன் அடிப்படையில் சொன்னாய்?” என்றார். “என் இளையோன் சொன்னான்” என்றாள் அரசி. “உன் இளையோனுக்கு ஏதும் தெரியாது. அரசுசூழ்தலென்பது உண்டு கொழுத்து தோள்பெருப்பதல்ல.” அவர்கள் பேசியபடி விலகிச்செல்ல புன்னகையுடன் மருத்துவர் பிருகந்நளையை நோக்கி “காய்ச்சல் உள்ளது. இம்மருந்துகள் அதை தடுக்குமா?” என்றார். “ஆம், நாளையே இளவரசியை முன்பென மீட்டுவிடும் இவை” என்றாள் பிருகந்நளை.

# நீர்க்கோலம் - 27

### 26. நிலைக்கோள்

புலரிக்கு முன்னர் முக்தன் சென்றபோதே பிருகந்நளை அணிபுனைந்து முடித்திருந்தாள். அவள் தங்கியிருந்த மூன்று அறைகள் கொண்ட சிறிய இல்லத்தின் முகப்பு வாயில் மூடப்பட்டிருந்தது. முக்தன் மூன்று முறை “தேவி” என்றழைத்தான். வாயில் உள்ளிருந்து திறக்கப்படும் ஓசையே அவளென்று அவனுக்கு காட்டியது. அவ்வோசையிலேயே அவள் முழுஉருவத்தைப் பார்த்து அதிர்வுகொண்ட அவன் உள்ளம் படபடக்கலாயிற்று.

இளஞ்செந்நிறப் பட்டாடையும் ஆரங்களும் குழைகளும் கொண்டைச்சரங்களுமாக முழுதணிக்கோலத்தில் தோன்றிய பிருகந்நளை “வருக, வீரரே!” என்றாள். முந்தைய நாள் இரவே

அணிபுனைந்து அவனுக்காகக் காத்திருந்தவள் போலிருந்தாள். வெளியே அப்போதும் இருள் விலகியிருக்கவில்லை. இரவுச்சீவிடு நிலைக்கவில்லை. அவன் தன் இல்லத்திலிருந்து கிளம்பியபோது புரவியின் வெண்ணிறப் பிடரிமயிர்கூட தெரியாத கருக்கிருட்டு இருந்தது.

அவன் அவள் உடலில் இருந்து எழுந்த புதுமலர்களின் மணத்தையும் நீராடி ஈரம் முழுதுலராத உடலின் நீராவி கலந்த வியர்வையின் மணத்தையும் முகர்ந்தபடி உள்ளே சென்றான். ஆடை சரசரக்க கைவளைகளும் சிலம்பணிகளும் கழுத்தணிகளும் ஒலிக்க அவனுக்குப் பின்னால் வந்து "முன்னரே வந்துவிட்டீர்கள், வீரரே" என்றாள். அவன் திணறலுடன் "ஆம்" என்றான். "அமருங்கள். அருந்துவதற்கு ஏதேனும் கொண்டுவருகிறேன்" என்றாள். முக்தன் அவள் உடலிலிருந்து விழிகளை விலக்கி "நான் இல்லத்தில் இன்கூழும் அப்பங்களும் அருந்திவிட்டுத்தான் வந்தேன்" என்றான். அவள் மெல்ல சிரித்து "என் கையால் ஒரு குவளை இன்கடுநீர் அருந்தலாம். இது அன்னைகைச்சமையல் அல்ல. இதன் சுவை வேறு" என்றாள்.

அவள் சொன்னதென்னவென்று புரியாமலேயே முகம் சிவந்து குரல் பதற "ஆம், உண்மை" என்றான் முக்தன். விழிகள் பிறிதொரு மொழியில் ஒரு சொல்லுதிர்த்தனவென நொடிக்க அவள் எழுந்து சிலம்புகளும் கைவளைகளும் ஒலிக்க உள்ளே சென்றாள். மெல்ல அசைந்த அவள் பின்னழகுகளைப் பார்த்து பின்பு தன்னுணர்வுடன் விழிவிலக்கிக்கொண்டு "எப்போது எழுந்தீர்கள்? நீராடி அணிபுனைந்து சித்தமாக இருக்கிறீர்கள்?" என்றான்.

அவள் அடுமனைக்குள்ளிருந்து “நீங்கள் புலரிக்கு முன்னரே வந்துவிடுவீர்கள் என்று தெரியும்” என்றாள். “எப்படி?” என்று அவன் கேட்டான். அவள் தலையை நீட்டி சிரித்து “தெரியும்... அவ்வளவுதான்” என்றபின் மறைந்தாள். தன் உள்ளத்தின் ஓசையைக் கேட்டபடி மூச்சுத் திணறுவதை உணர்ந்து தசைகளை எளிதாக்கி இயல்புநிலைகொள்ள முயன்றபடி முக்தன் அமர்ந்திருந்தான்.

இரு உள்ளங்கால்களும் வியர்த்திருப்பதாகத் தோன்றியது. உள்ளங்கால்கள் வியர்க்குமா? முன்பெப்போதும் அதை உணர்ந்ததில்லை. குளிர் எஞ்சியிருந்த புலரியிலேயே இத்தனை வியர்வை! புரவியில் வந்ததனால்தான். ஆனால் புரவியை மிக மெல்லத்தான் செலுத்தினான். மூச்சிரைக்க வியர்வை மணத்துடன் வந்திறங்கலாகாதென்று எண்ணியிருந்தான். அறியாமல் குதிமுட்கள் புரவியை தூண்டியிருக்கலாம்.

புரவியென்பது ஓட்டுபவன் உள்ளம் பருவடிவு கொண்டது என்று அவனுக்கு போர்க்கலை கற்பித்த சுஷமரின் சொற்களை நினைவு கூர்ந்தான். “எதிரியின் விழிகளை நோக்குவது உன்னை அவன் நோக்கும் வாயில் திறப்பது. அவன் புரவியை நோக்கு, அது அனைத்தையும் கூறும். அவன் பதற்றத்தை, அச்சத்தை, வெறியை, விரைவை.”

உள்ளே அவள் கைபட்டு கலங்கள் மணியொலியும் சிலம்பலோசையும் எழுப்புவதை கேட்டான். ஓசையிலேயே அவள் முற்றிலும் காட்சியெனத் தெரிந்தாள். தன் அன்னையின் காலடி ஓசையை அவனால் அறிய முடிந்தது. புரவியின் குளம்போசையை அவன் அறிந்திருந்தான். ஒவ்வொரு ஓசையிலும் இவளை உணரமுடிகிறது.

நன்கு தேய்த்து பொன்னென ஆக்கப்பட்ட குவளையில் இன்கடுநீர் ஆவியெழ மரத்தாலத்தில் வைத்து ஏந்தியபடி அவள் நடந்து வந்தாள். ஒவ்வொரு அசைவும் ஆடல். நடையென்று ஒன்றை எப்போதும் அறிந்திருக்கமாட்டாள் என்பதுபோல. "என்ன பார்வை?" என்று புன்னகைத்தபடி கலத்தை நீட்டி "அருந்துக!" என்றாள். "ஆம்" என்றபடி அவன் அதை எடுத்துக்கொண்டான்.

தாலத்தை அப்பால் வைத்துவிட்டு எதிரிலிருந்த பீடத்தில் அமர்ந்து கால்களை அதன் மேல் மடித்துக்கொண்டாள். "அரண்மனையிலிருந்து தேர் வருமென்றார்கள் அல்லவா?" என்றாள். ஒரு மிடறு இன்நீர் குடித்துவிட்டு "ஆம். நீங்கள் செல்வது அரசிக்கு ஆசிரியராக அல்லவா?" என்றான். அவள் சிரித்து "அவளுக்கு நடனம் சொல்லிக்கொடுப்பது புரவிக்கு பறக்கக் கற்றுக்கொடுப்பதுபோல என்று முந்தைய ஆசிரியை என்னிடம் சொன்னாள்" என்றாள்.

அவன் சிரித்து "மெய்தான். நிஷத குடிகளில் எந்தப் பெண்ணுக்கும் ஆடல் அமைந்ததே இல்லை. இங்கு விறலியர் வந்து மேடையில் ஆடும்போதெல்லாம் ஒவ்வொருவரும் அதை உணர்வதுண்டு" என்றான். அவள் "ஆடலற்ற குடியென்று ஏதும் இல்லை" என்றாள். "ஆம், எங்களுக்கும் ஆடல்கள் உண்டு. விழவுகளிலும் குடிப்பண்டிகைகளிலும் நாங்கள் கூடி ஆடும் கலைநிகழ்வுகள் பல. ஆனால் அது தாளத்திற்கு உடலை ஒப்புக்கொடுப்பது மட்டுமே. அத்தாளத்தினூடாக ஒவ்வொருவரும் தாங்களெனும் உணர்வையிழந்து குடியென்று பெருக்கில் ஒழுகும் துளியாகிறார்கள். அதன் அலைகளில் தாங்களும் அசைகிறார்கள்" என்றான்.

அவள் சிரித்து “நடனமென்பதே அதுதான்” என்றாள். “ஆனால் இங்கு கலையென ஆடப்படும் நடனங்கள் அனைத்தும் ஒருவர் தன் உணர்வுகளினூடாகச் சென்று எங்கோ எதையோ எய்துவதுதான்” என்றான் முக்தன். அவள் தலைசரித்தபோது குழல்கற்றையில் சுருட்டிக் கட்டப்பட்டிருந்த முத்துச்சரம் சரிந்து கன்னத்தை தொட்டபடி ஆடியது. புன்னகையுடன் “நன்கு நோக்கி இருக்கிறீர்கள். கூர்ந்து எண்ணியும் இருக்கிறீர்கள்” என்றாள்.

அப்பாராட்டுரையால் அவன் முகம் சிவந்தது. விழிகளை விலக்கிக்கொண்டான். “இவ்வண்ணம் எண்ணி நோக்குங்கள்... அவ்வாறு தன்னை இழந்து தன் குலத்தின் அலைகளுக்கு உடலை ஒப்புக்கொடுத்த ஒருத்தி பின்னர் மெல்ல கனிந்து மேலும் முன்னெழுந்து வெறும் கற்பனையிலேயே அக்குலத்தை தன்னைச் சூழ உணர்ந்தாள் என்றால்? அவ்வாறு நிலையழிந்து பெருநிலை கொண்டாளென்றால்? அவளுக்கு அவ்வாறு தன்னிலையழிந்து பேருருக்கொள்ள குலமோ திரளோ தேவையில்லை என்றால்?” என்றாள்.

அவன் “ஆம், அது நிகழக்கூடுவதே” என்றான். “நடனமென்பது அதுவே... தன்னை தன் உடலை கற்பனையினூடாக பிறிது பலவாக ஆக்கி பெருக்கிக்கொள்ளுதல். தன் அன்னையாக, தந்தையாக, உடன்பிறப்பாக, சுற்றங்களாக, குடியாக, குலமாக... மேலும் விரிந்து மரக்கிளைகளாக, நீர்த்துளிகளாக, புகையாக, காற்றாக, கனலாக, வானாக” என்றாள் பிருகந்நளை. “அவ்வண்ணம் பிறிதாகி பெருகி முழுமை கொள்வதற்கு தடையென்றிருப்பது உடல் கொண்டிருக்கும் தன்னிலையே. ஒவ்வொரு உடலிலும் அவ்வுடலை உள்நின்று வடிவமைக்கும் தன்னுணர்வொன்று உள்ளது. பார்த்திவப் பரமாணு என

கருவறைக்குள் நுழைகையிலேயே அவ்வுணர்வு உருவாகிவிடுகிறது என்கிறார்கள்.”

“தானென்றும் பிறிதென்றும் உடல் கொள்ளும் இருமையும் விலக்கமுமே முதல் தன்னுணர்வு. தொப்புள்கொடியைப் பற்றி இது வேறு என விலக்குகிறது குழவி. கருவறைச் சுவர்களில் கால் வைத்து எம்புகிறது. தன் காலையும் கையையும் தானென்று எண்ணி முத்தமிடுகிறது. பின்பு பிறந்து வந்து காற்றையும் ஒளியையும் நீரையும் உணரும்போது பிறிதெனும் தானெனும் விலக்கே புவி என்ற அறிவாகி அதற்குள் நிறைகிறது. அயல்விழி தொடுகையில் அயல்கை படுகையில் அது கொள்ளும் தன்னுணர்வு அச்சமும் எச்சரிக்கையும் ஆகி இங்கு வாழவும் வெல்லவும் அதற்கு தேவையாகிறது. தன் உடலும் தன்னவர் உடலும் தொடுகையில் அளிக்கும் இன்பமே இப்புவியில் மானுட உடலுக்கு முதன்மைக் கொடை. இவ்விரண்டையும் முற்றிலும் களைவதினூடாகவே மூன்றாவது பேரின்பமாகிய பிறவாதலை பெருகுதலை சென்றடைய முடியும்.”

“நோக்குக, ஒவ்வொரு குழவியும் அன்னையர் மடியில், கைகளில், இடையில் அமர்ந்து உடலசைவுகளை பயின்று எடுப்பதை. சிறுகால் வைத்து நடந்தும் விழுந்தும் உணவுக்கலத்தில் அள்ளியும் துழன்றும் தன் அசைவுகளை தீட்டிக்கொள்கிறது. பின்பு விளையாடல்கள், பலநூறு பயிற்சிகள், அவைநிற்றல்கள். களம்காணல்கள். மானுட உடலென்று திரள்வது தன்னைச் சூழ்ந்திருக்கும் பிற அனைத்திற்கும் உடலுள் வாழும் உளம் கொண்டிருக்கும் எதிர்வினை மட்டுமே. காட்டில் நின்றிருக்கும் ஒரு மரம் அக்காட்டிற்குள் அது தனக்கெனக் கண்டடைந்த வெளி என்பது போல.”

“உங்கள் விழிகள் ஒவ்வொரு கணமும் பிற விழிகளால் பந்தென விளையாடப்படுகின்றன. மரக்கிளைகளை காற்றுபோல சூழ்ந்திருக்கும் புறவுலகு உங்கள் கைகளை சுழல வைக்கிறது. பிற என எழுந்து சூழ்ந்த அனைத்திற்கும் விளையாட்டுப் பாவையென நம்மை நாம் அளித்திருக்கிறோம். நடனக்கலை என்பது நம் தன்னிலையை இங்கிருந்து விலக்கி பிறவெனச் சூழ்ந்துள்ளவையாக முற்றிலும் ஆக்கிக்கொள்ளுதலே. மேடையில் ஆடுவதல்ல அது. நடனத்தின் முழுமையென்பது தானன்றி எவருமே இல்லாத இடத்தில் ஆட்டன் அடையும் நிறைவு மட்டுமே.”

அவள் குரலும் கூறுமுறையும் பலநூறு மாணவர்களை பயிற்றுவித்த ஆசிரியர்களுக்குரியவை என முக்தன் எண்ணினான். “நோக்கற்கோ சுவைப்பதற்கோ அல்ல அது, பிரம்மம் புடவியை நிகழ்த்துவதுபோல ஆடற்கென நிகழும் ஆடல் அது. உடல் உருமாறி எழுந்து உடலின்மையை எய்தும் ஒரு கணம். ஏன் மேடையிலும் நிகழலாம் என்றால் அது தொடங்கும்போது சூழ்ந்திருக்கும் அனைத்தும் மறக்கப்பட்டுவிடுகின்றன என்பதனால்தான். ஆடல் எங்கு நிகழினும் ஆட்டன் முழுத்தனிமையில்தான் இருக்கிறான்” என்றாள்.

அவள் பேசப்பேச அவன் மகுடி ஒலியில் விழி கட்டடப்பட்டு மெல்ல உடன்அசையும் பாம்பென முன்னால் அமர்ந்திருந்தான். செவ்விய உதடுகள் சுருங்கி விரிந்து, சிறுவெண்பற்களைக் காட்டி மறைத்து, கன்னக்கோடுகள் இழுபட்டு விரிந்து, கண்கள் ஒளிகொண்டு, காது மடல்களில் ஆடிய குழைகள் கழுத்தைத் தொட்டும் விலகியும் ஆட, புரிகுழல் தன் நிழல்களுடன் நெளிந்து பறக்க, கழுத்து ஒசிந்தும், தோள் விலகியும், கை

நெகிழ்ந்தும் அவனை ஆட்கொண்டிருந்தது அவள் உடல். “உங்கள் விழிகளில் கனவைக் கண்டேன். ஆகவே உடன் சேர்த்தேன். இவ்வண்ணம் முழுக் கனவில் ஆழ்வீர்கள் என்று எண்ணவில்லை” என்றாள். அவன் விழித்துக்கொண்டு “இல்லை, நான் எண்ணிக்கொண்டிருக்கிறேன்” என்றான். “என்ன?” என்று அவள் கேட்டாள்.

“விறலியர் உடல்கள் இளமையிலேயே தன்னுணர்வைத் துறக்கும் பயிற்சி கொண்டிருக்கின்றன. சூதர்கள் தங்கள் பெண் குழந்தைகளை கொஞ்சி தோளிலும் நெஞ்சிலும் சூடி வளர்க்கிறார்கள். பிற குலமகள்களோ இரண்டு வயதில் இடைத்தாலி அணிவதுவரைதான் குழவிகளாக கருதப்படுகிறார்கள். பின்பு அன்னையரும் தோழியருமன்றி பிறர் அவர்களை தொட இயலாது. தந்தையர்கூட விழிகூர்ந்து நோக்க இயலாது. ஐம்படைத்தாலி அணிகையில் இற்செறிப்பு அளிக்கப்படுகிறது. பின்னர் விழிதொடுகையிலேயே உடல் சிலிர்க்கத் தொடங்குகிறார்கள். தன்னுடலுக்குள் அனைத்து வாயில்களையும் மூடி சிறைகொள்கிறார்கள். ஒவ்வொரு உடலசைவும் எண்ணி எண்ணி பயிற்றுவிக்கப்படுகிறது. அரசியரோ மேலும் பெரிய சங்கிலிகளால் தளைக்கப்படுகிறார்கள். அவைமுறைமைகள், குலச்சடங்குகள், குடிமுறைமைகள். ஒரு சொல்கூட உளம் தெளிந்து குமிழியென எழ இயலாது. ஓர் அசைவுகூட சித்தத்தால் தொட்டு அலையென எழுப்பப்பட முடியாது. அவர்கள் நடனம் கற்பதே ஒருபோதும் இயலாது” என்றான்.

பிருகந்நளை நகைத்து “கேட்கையில் அது மெய்தான் எனத் தோன்றும். ஆனால் என் அறிதல் வேறு. ஆம், விறலியர் உடலில் நெய்யில் அனலென ஆட்டம் பற்றிக்கொள்கிறது.

ஆனால் உலர்ந்திறுகிய அரணிக்கட்டையிலும் அனல் உறைகிறது. அத்தனை சிறைகளுக்கு உள்ளே பெண்கள் தனித்திருக்கிறார்கள். சிறையறைக்குள் நாம் அடையும் விடுதலை என ஒன்று உண்டு, வீரரே. அதை ஆண்கள் பலர் அறிந்திருக்கமாட்டார்கள். பிறர் நம்மை உள்ளே அடைத்து மூடுகையில் மறுபக்கம் நாம் நம்மை உள்வைத்து முற்றிலும் மூடிக்கொள்ள முடியும். எவருமறியாத தனிமையில் அனைத்தையும் எடுத்து நாமென்று அமரமுடியும். குலமகள்கள் அத்தனிமையில் பற்றிக்கொண்டு பெருந்தழலென எழுவதை நான் பலமுறை கண்டிருக்கிறேன்" என்றாள்.

"அவ்வண்ணம்தான் உத்தரை எழவிருக்கிறாரா?" என்றான் முக்தன். தன் குரலில் எழுந்த ஏளனத்தை வெல்லும் பொருட்டு "என்ன இருந்தாலும் அவர் இளவரசி" என்றான். பிருகந்நளை "முந்தைய ஆசிரியர் அவள் கற்றிருக்கும் இளவரசியின் உடலசைவுகளுக்கு மேல் கூடுதலாக நடனம் எனும் உடலசைவை கற்றுக்கொடுக்க முயன்றார். அவள் கற்ற ஒவ்வோர் அசைவும் இவர் கற்பித்த அசைவுகளுடன் முரண்பட்டன. பிடியானையின் துதிக்கைபோல கை தூக்கி வாழ்த்துகளை ஏற்கவேண்டுமென்று அரசமுறைமை கற்பிக்கிறது. மலைப்பாம்பு இரை நோக்கி இறங்குவதுபோல் அவைவணக்கம் அமையவேண்டுமென்று ஆட்ட நூல் சொல்கிறது. அவை ஒத்திசையவில்லை" என்றாள்.

"நான் அவளுக்கு உள்ளிருந்து பிறிதொன்றை எடுக்க கற்பிக்கப்போகிறேன். அரசியென அவள் இருக்கும்போது ஆடல் அவளுடன் உறையாது. அரசியல்லாதாகி அவளென்று எஞ்சும் தனியறைக்குள் ஆடல் மட்டும் அவளுடன் இருக்கும். அதை தடுக்கும் தன்னுணர்வொன்றும் அவளிடம் எஞ்சாது" என்றாள்.

அவன் நகைத்து “நன்று. அவைநடுவே அரியணை மேடையில் அவ்வாட்டம் எழாதிருக்கும்வரை அனைத்தும் நலமே” என்றான். அவள் நகைத்து “இரண்டாக பகுத்துக்கொள்வதைப்போல் பெருகும் வழி பிறிதொன்றில்லை. அவ்விரண்டில் ஒன்று பெருகி பிறிதொன்றை உண்ணுமென்றால் அமையும் முழுநிலைபோல் சிறந்த தவமும் இல்லை” என்றாள்.

உத்தரைக்கு பிருகந்நளை நடனம் கற்பிக்கும் இளவேனில் மண்டபம் அரண்மனைக்கு வடகிழக்காக அமைந்திருந்த அணிச்சோலைக்கு நடுவே இருந்தது. நீள்வட்ட வடிவமான அக்கூடத்திற்கு வெளியே இடைநாழியில் உடைவாளுடன் முக்தன் காவல்நின்றான். உள்ளே பெண்களின் சிரிப்பொலிகளும் அணியோசைகளும் நகையாடும் குரல்களும் கேட்டுக்கொண்டிருந்தன. அவன் அவற்றை ஒதுக்க முயன்றாலும் அவையன்றி எவையும் சித்தத்தில் நிலைகொள்ளவில்லை.

முதல்நாள் ஆடல் கற்க தன் ஏழு தோழியருடன் உத்தரை வந்தபோது அவன் கூடத்தின் விரிந்த திண்ணையில் இடையில் கை வைத்து இடை ஒசிய நின்று அவர்களை நோக்கிக்கொண்டிருந்த பிருகந்நளையிடம் “ஏழு பேருக்கும் கற்பிக்கப்போகிறீர்களா?” என்றான்.

அவள் திரும்பி “எந்தப் பெண்ணும் அறியா நிலையில் ஆடல்கற்க தனியாக வருவதில்லை. ஆடலை ஒரு விளையாட்டென்றே எண்ணுகிறார்கள். அதில் கூடி உவகை கொள்ள பிறருடன் வருவார்கள். எப்போது அவ்வாறு உடன்வருபவர்கள் வேண்டியதில்லை என்று அவளுக்குத் தோன்றுகிறதோ அப்போதே நடனம் அவளுக்குள் செல்லத் தொடங்குகிறது. இந்நகரின் அனைவரும் சூழ இருந்தாலும்

முற்றிலும் தனிமையிலிருப்பதாக தோன்றுகையில் நடனம் நிகழத் தொடங்குகிறது" என்றாள்.

பட்டாடை உலையும் ஒலியுடன், மெல்ல குலுங்கிய வளையோசை உடனிணைய, உத்தரை படியேறியபோது ஒரு தோழி அவள் காதில் ஏதோ சொல்ல அவள் திரும்பி அவள் கைகளை அடித்தாள். பிற பெண்கள் சேர்ந்து சிரிக்கும் ஓசை கேட்டது. அருகே வந்துநின்ற உத்தரை "வணங்குகிறேன், ஆசிரியையே" என்றாள். "அல்லது ஆசிரியர் என்று சொல்லவேண்டுமோ?" என்று இன்னொரு பெண் கேட்க அனைவரும் சிரித்தனர்.

"ஆசிரியர் எப்போதும் ஆண்பால்தான்" என்று பிருகந்நளை சொன்னாள். "ஏன்?" என்று உத்தரை புருவம் சுளிக்க கேட்டாள். "அன்னை எப்போதும் பெண்பால் என்பதுபோல" என்றாள் பிருகந்நளை. புரியாமல் தன் தோழியரைப் பார்த்தபின் "நன்று" என்று உத்தரை கைநீட்டினாள். ஒரு தோழி தாலத்தில் அணிகளும் பட்டும் பொன் நாணயங்களும் வைத்து அளிக்க அதை பிருகந்நளைக்கு தலைவணங்கி "என் எளிய குருகாணிக்கை. ஏற்று அருளல் வேண்டும். கலையளித்து வாழ்த்துக!" என்று சொல்லி நீட்டினாள்.

பிருகந்நளை அதை வாங்கி அவனிடம் அளித்தபின் கைகூப்பி நின்றாள். உத்தரை முழந்தாளிட்டு அவள் கால்களைப் பணிய பிருகந்நளை அவள் தலையில் கைவைத்து "கலை தேர்க! கலையினூடாக பிற அனைத்தையும் தேர்க! அறிந்தவற்றினூடாக அறியவொண்ணாதவை அருகணைக! அதன் தொடுகை நிகழ்க! ஆம், அதன் தொடுகை நிகழ்க! ஆம், அவ்வாறே ஆகுக!" என்றாள்.

அவர்கள் ஆடற்களத்திற்குள் சென்றபோது வாயிலில் நின்றபடி அவன் அவர்களை பார்த்தான். அவர்கள் எவரும் ஆடலை ஒரு பொருட்டென எடுத்தவர்களல்ல என்பது ஒவ்வொரு முகத்திலுமிருந்த சிரிப்பிலும், விழிகள் ஒருவரோடோருவர் தொட்டுத் தொட்டு பேசிக்கொண்டதிலும் தெரிந்தது. பிருகந்நளை “அமர்க!” என்றாள். “நான் சலங்கையை கட்டிக்கொள்ளட்டுமா?” என்றாள் உத்தரை. “முதலில் ஆடலை நோக்குவதை பயில்க!” என்று சொன்னாள் பிருகந்நளை. “ஆடலை வழக்கமாக விழிகளால் நோக்குவோம்” என்று ஒரு தோழி சொன்னாள். பிருகந்நளை அவளை நோக்கி திரும்பி “ஆம், ஆனால் விழிகளுக்குப்பின் பிறிதொரு ஆடற்பெண் வந்து அமரவேண்டும். உடன் ஆடாது எந்த ஆடலையும் எவரும் அறிய முடியாது” என்றாள்.

உத்தரை அங்கிருந்த சிறு பீடமொன்றில் அமர்ந்து மடியில் கைகோத்தபடி “இப்போது நீங்கள் ஆடப்போகிறீர்களா?” என்றாள். “ஆம்” என்றபின் பிருகந்நளை திரும்பி அவனிடம் கை அசைத்தாள். அவ்வசைவின் அழகில் அவன் இளவரசியையும் தோழியரையும் மறந்து முகமலர்ந்து கள்ளுண்டவன்போல் அருகணைந்தான். “அச்சலங்கைகளை அணிவி” என்றபடி பிருகந்நளை தன் காலைத் தூக்கி சிறுபீடம் மீது வைத்தாள்.

அவள் சுட்டிக்காட்டிய சிறு சந்தனப்பேழையைத் திறந்து அதிலிருந்த வெள்ளிச் சலங்கையை எடுத்தான். அது பேழையின் சிவந்த பட்டுமெத்தையில் ஓர் அழகிய சிரிப்பு போலிருந்தது. கைகளில் எடுத்தபோது சிணுங்கியது. அதை அவள் கால்களில் அணிவித்தான். ஆணியை முறுக்கி இரு கால்களிலும் சலங்கை கட்டியதும் அவன் விலகிச்செல்லலாம் என்று அவள் கைகாட்டினாள். ஊதி பஞ்சென தன்னை அவள்

விலக்குவதாக உணர்ந்தான். எடையின்றி பறந்து சென்று அறைச்சுவர் அருகே மெல்ல படிந்தான்.

பிருகந்நளை இயல்பாக நடந்து சென்று கூடத்தின் நடுவே நின்றாள். உத்தரை “தாளமிடுவது யார்?” என்றாள். அவள் புன்னகைத்து “காற்றிலாடும் மரங்களுக்கோ நீர்பொழியும் அருவிக்கோ பிறிதொருவர் தாளமிடுவதில்லை” என்றாள். உத்தரை தன் தோழியரை நோக்கியபோது கண்களில் மெல்லிய நகைப்பிருப்பதை அவன் அறிந்தான்.

ஒரு கணத்தில் பிருகந்நளையின் உடலில் தாளத்தின் முதல் ஒலி எழுவதை அவன் கண்களால் பார்த்தான். அவ்வொலி அசைவின்மையின் கணம் என நிகழ்ந்தது. முழு உடலும் உறைந்து அக்கணம் திரைவிலக்கி வைக்கப்பட்ட சிற்பமென்றாகியது. பின்பு நுண்சிற்பங்கள் அவ்வுடலினூடாக ஒழுகத் தொடங்கின. அசைவென புறவுலகில் அவன் கண்ட அனைத்தும் தங்கள் தூயஉருவில் அவ்வுடலினூடாக நிகழ்ந்து சென்றன. அனலும், புனலும், மலர்மரமும், முகிலும். மானும் மயிலும் புரவியும் யானையும் சிம்மமும். குழந்தையும் கன்னியும் காளையும்.

மீண்டும் நிலைகொண்டு உடல் மீண்டாள். குனிந்து நிலம் தொட்டு வணங்கி இடையில் கைவைத்து நின்று உத்தரையிடம் “ஆடுவதென்றால் என்னவென்று அறிந்திருப்பாய்” என்றாள். “ஆம்” என்று அவள் கைகூப்பினாள். அங்கிருந்த ஒவ்வொருவரும் பிறிதெங்கிருந்தோ மீண்டு உடலில் வந்தமைந்தனர். கைநீட்டி “எழுக!” என்று பிருகந்நளை சொல்ல கூப்பிய கைகளுடன் எழுந்த உத்தரை “நான் உங்களுடன் ஆடினேன். உமை இறைவனுடன் ஆடுவதைப்போல” என்றாள் நடுங்கும் குரலில். “உங்கள் ஆட்டத்தின் ஒவ்வொரு

அசைவிலும் எஞ்சியிருந்த ஒரு சிறு பகுதியை நான் நிறைத்தேன்” என்றாள்.

குரல் தழுதழுக்க உடல் துவள வேறேதோ சொல்ல நாவெடுத்தபின் கால் மடித்து அமர்ந்து பிருகந்நளையின் கால்களில் தன் தலையை வைத்து “எனக்கு அருள்க, தேவா! ஒருகணமேனும் இவ்வுடலால் அவ்வாடலை ஆடமுடிந்தேன் என்றால் பிறவி கொண்டதன் பொருளை அடைவேன்” என்றாள். “நன்று! அது நிகழ்க!” என்றாள் பிருகந்நளை. பெண்டிர் ஒவ்வொருவராக எழுந்து வந்து அவள் அருகே நின்றனர்.

ஒருத்தி கைகூப்பி “பிழை பொறுக்கவேண்டும்” என்றாள். “ஏன்?” என்று பிருகந்நளை கேட்டாள். “தாங்கள் உமையொருபாகன். நாங்கள் அதை உணரும் விழிகளற்றிருந்தோம்” என்றாள். பிருகந்நளை குனிந்து உத்தரையைத் தூக்கி எழுப்பி அவள் விழிநீரைத் துடைத்து “நாம் நாளை முதல் தொடங்குவோம்” என்றாள். “அல்ல, இன்று இக்கணம் ஒருமுறையேனும் ஒரு சுவடேனும் நான் கற்றாக வேண்டும். இன்று இரவு அதை என் நெஞ்சில் வைத்து துயில்வேன்” என்று உத்தரை சொன்னாள்.

குழலை பின்னால் தள்ளி இனிய பறவையொலி ஒன்று எழ வாய்விட்டு நகைத்த பிருகந்நளை “நன்று! முதற்சுவடு என்னவென்று இன்று கற்பிக்கிறேன்” என்று அவள் தோளைத் தொட்டு அழைத்துச்சென்று களம் நடுவே நிறுத்தினாள். “முதல் பாடம் என்பது நிற்பதே. அரைமண்டியில் அல்ல அரைஅளைவோ மூன்றொசிவோ அல்ல. மலரமைவோ கிளைவளைவோ அல்ல. இயல்பாக, எளிதாக” என்றாள்.

உத்தரையின் விழிகளை நோக்கி அவளுக்கு மட்டுமே என பிருகந்நளை சொன்னாள் “ஒவ்வொரு உடலுக்கும் ஒவ்வொரு

நடையுண்டு என்று அறிந்திருப்போம். ஒவ்வொரு நிலை உண்டென்று அறிக! அது உங்கள் கால்கள் நிலத்தூன்றும் அமைப்பால், முழங்காலுக்கும் மூட்டுக்குமான தொலைவால், முழங்கால் வளைவால், தொடைகளின் பருமனால், பின்னழகின் குவிவால், முலைகளின் முழுப்புகளால், கைநீளத்தால் அமைக்கப்படுகிறது. உள்ளிருக்கும் தசைகளின் இழுவிசையால் இன்னும் நாம் அறியாத பலநூறு உடற்கூறுகளால் வழிவாகிறது. அத்துடன் ஒவ்வொரு தசையையும் இழுத்து இயக்கும் உள்ளத்தாலும் அது அமைக்கப்படுகிறது. நின்றிருக்கும் ஒருவனை பார்க்கையில் அவன் உடல் எண்ணங்களுக்கேற்ப மாறிக்கொண்டிருக்கும் என்பதை காணலாம். எப்போது உளம் கூர்கிறான், எப்போது கிளர்கிறான், எப்போது கருத்தழிகிறான் என்பதை தசைகள் காட்டும்.”

உத்தரை முலைகள் எழுந்தமைய பெருமூச்சுடன் “ஆம்” என்றாள். உத்தரையை மெல்ல அழைத்துவந்து அவள் நின்றிருந்த இடத்தில் நிலைகொள்ளச்செய்து “இங்கு நிற்கிறாய். உள்ளத்தின் பிடியிலிருந்து உடலை முழுமையாக விடுவிக்கிறாய்” என்றாள். உத்தரை இரு கைகளையும் கோத்து நின்றாள். பிருகந்நளை “உன் முலைகளை எண்ணி நாணுகிறாய், ஆகவே இவ்வசைவை அடைகிறாய்” என்றாள். “கன்னியாக உணர்கையிலேயே முலை குறித்த உணர்வை பெண்டிர் அடைகிறார்கள். அது நோக்கப்பட வேண்டுமென்று விழைகிறார்கள். நோக்கப்படுகையில் கூசுகிறார்கள். உந்தி முன் நிறுத்துகிறார்கள். தோள் வளைத்து பின் இழுக்கிறார்கள். அவற்றை முற்றிலும் மறந்துவிடுக! அவை மரக்கிளையில் வந்தமர்ந்த இரு அயல்பறவைகள். முற்றிலும் அவற்றை காற்றுக்கும் வெளிக்கும் விட்டுவிடு” என்றாள்.

உத்தரை தோள்களை மெல்ல தளர்த்தினாள். “இடையை ஒசிக்கிறாய். எங்கு நிற்கும்போதும் அங்கிலாதிருப்பதே இடைவளைவில் வெளிப்படுகிறது. இங்கிருக்கையில் உள்ளம் பிறிதெங்கோ பிடிகொண்டிருக்கிறது. அதை விடு. மரங்களைப்போல் நின்றிருக்கும் இடத்தில் முழுமையாக நில்!” உத்தரை அச்சொற்களுக்கு ஏற்ப அறியாது உடல்மாறுபட்டுக் கொண்டிருந்தாள். அவள் சொற்களின் காற்று பட்டு அசையும் சுடர்போல.

அவன் அச்சொற்களை கேட்டுக்கொண்டிருந்தான். மிக இயல்பாக பிருகந்நளையின் கைகள் உத்தரையின் உடல்மேல் தொட்டுச் சென்றன. அவளுக்கு மட்டுமேயான குரலில் உடலை விடுவித்து பிறிதொன்றாக்கி அங்கு நிறுத்துவதைக் குறித்து அவள் சொல்லிக்கொண்டிருந்தாள். முக்தன் விழிகளை விலக்கி வெளியே பார்த்தான். தன் உள்ளம் பதைப்பு கொண்டிருப்பதை உணர்ந்தான். எங்கோ அரிய பொருளொன்றை வைத்துவிட்டு நினைவு கூர்ந்ததுபோல். பேரிழப்பொன்று அணுகுவதை முன்னரே அறிந்தவன்போல்.

அவ்வுணர்வுடன் தனித்து நின்று அவன் போராடினான். அதை வெல்லவும் கடக்கவும் முயன்றான். அதன்பொருட்டு அதை கூர்ந்து நோக்கினான். அந்நோக்கு சென்று தொட்ட ஒன்றை முழுதுணர்ந்ததும் அஞ்சி உடல் விதிர்க்க பலநூறு காதம் பின்திரும்பி ஓடி மீண்டு வந்தான். உடலில் வியர்வை சூழ்ந்திருக்க மரக்கிளையின் காற்றசைவை உணர்ந்தபின் மூச்சிழுத்து நேர்விட்டு நிலைகொண்டு நேரே பார்த்தான்.

நடனக்கூடத்தில் உத்தரை நின்றிருக்க சற்று தள்ளி இடையில் கைவைத்து பிருகந்நளை நோக்கி நின்றாள். அங்கு நின்றிருந்த

உத்தரை முற்றிலும் பிறிதொருத்தியாக இருப்பதை அவன் கண்டான்.

# நீர்க்கோலம் - 28

## 27. இருளெழுகை

வரும்போது தொலைவில் தெரிந்த அவளுடைய முதல் அசைவிலேயே அந்த மாறுதலை அவனால் மெல்லிய உள்ளதிர்வுடன் கண்டடைய முடிந்தது. தோழியரிடமிருந்து அது அவளை முழுமையாக பிரித்துக்காட்டியது. அசைவுகளிலேயே அந்த வேறுபாடு தெரிந்தது. பறவைக்கூட்டம் நடுவே பிறிதொரு பறவை என. இடையில் கைவைத்து திண்ணையில் நின்றிருந்த பிருகந்நளையை பார்த்துவிட்டாள் என்று தெரிந்தது. அதன் பின் அவள் விழிதூக்கவே இல்லை. காற்று அலைத்து நகர்த்தி வரும் புகைச்சுருள்போல எடையின்றி மெல்ல அசைந்து வந்தாள். அவள் முகத்தில் உணர்வுகள் மாறிக்கொண்டிருந்தன. இடைநாழிச் சுவரில் பதிந்து வண்ணங்கள் மாறிக்கொண்டே இருக்கும் பித்தளைக் குமிழ்போல.

படிகளின்கீழ் வரும்வரை ஒருமுறைகூட விழிதூக்கி அவள் பிருகந்நளையை நோக்கவில்லை. அப்படியென்றால் அவள் பிருகந்நளை தன்னை நோக்குகிறாள் என்பதில் ஐயமற்றிருக்கிறாள். அருகணைந்து விழிதூக்காமலேயே பிருகந்நளையின் கால்களைத் தொட்டு சென்னிசூடி “வணங்குகிறேன், ஆசிரியரே” என்றாள். “வருக!” என்று அவள் சொன்னாள். “உனது நடை மாறியிருக்கிறது. அதைத்தான் பார்த்தேன்” என்றாள். “ஆம், நேற்றிரவு முழுக்க நின்றிருப்பது ஒன்றையே பயின்றேன்” என்றாள் உத்தரை. “எதை

கண்டடைந்தாய்?” என்றாள். “நான் அரசியல்ல. நிஷாத குலத்தவளல்ல. சபர குடியினளும் அல்ல. இவை அனைத்தும் என் மேல் சுமத்தப்பட்டவை. நான் பெண்” என்றாள். பிருகந்நளை உரக்க நகைத்து “நன்று! அவ்வுணர்வும் கலைய இன்னும் நெடுந்தொலைவு செல்லவேண்டும், பார்ப்போம்” என்றாள்.

அவர்கள் உள்ளே சென்று அமர்ந்தனர். சந்தனப் பேழைகளில் இருந்து எடுத்த சலங்கைகளை கட்டிக்கொண்டபடி அதன் கரந்த குலுங்கலுடன் இணைந்து மெல்லிய குரலில் பேசிக்கொண்டனர். பிருகந்நளையின் கை உத்தரையின் கைகளை பற்றியது. தோளில் தட்டியது. ஆடை திருத்தியது. அணிகளை சீரமைத்தது. குழலை சுருட்டி முடிந்தது. அவள் அத்தொடுகையால் குயவன் கை பசுங்கலம் என உருநெகிழ்ந்து உருக்கொண்டாள். அகன்று நின்று அவளை நோக்கி தலையசைத்து “நன்று” என்றாள் பிருகந்நளை. உத்தரை நாணத்துடன் புன்னகை செய்தாள்.

அவ்வசைவுகளை நோக்கி நின்ற அவன் ஒருகணத்தில் கூரிய ஊசியொன்று உடலில் பாய்ந்ததுபோல் ஓர் உணர்வை அடைந்தான். பிருகந்நளை என அங்கு நின்றிருந்தது பெண்ணோ இருபாலோ அல்ல. ஓர் ஆண். உடனிருந்த பெண் உடல் அதை அறிந்திருந்தது. மீண்டும் திரும்பி உள்ளே பார்த்தான். அவள் அசைவுகளில் எந்த மாற்றமும் இல்லை. பெண்ணழகின் முழுமை, அதை தானே அறிந்து கொண்டாடும் நடனம். எப்பெண்ணும் தன் கனவின் உச்சியில் நின்றிருக்கும் எழில் கொண்டிருந்த அசைவுகள். அவளைத் தொடும்போது மட்டும் ஆணாகிறாளா? அப்படியுமல்ல. தொடும் கை மட்டும்

ஆணுக்குரியதாகிறதா? இல்லை. அக்கணம் மட்டும் உடலிலாத ஓர் ஆண் அங்கு நிகழ்ந்து மறைகிறானா?

என்ன எண்ணிக்கொண்டிருக்கிறேன்! விழிதிருப்பி மீண்டும் இடைநாழியில் வந்து சுவர்சாய்ந்து நின்றான். அந்நடனப்பயிற்சியை நோக்கலாகாது என்று எண்ணினான். ஆனால் நோக்காமலும் தன்னால் இருக்க முடியாது. அவ்வோசையே நடனமென விழிகளுக்குள் விரிகிறது. அதில் பிருகந்நளை மட்டும் இருந்திருந்தால் பிறிதொரு உவகையில் உளம் விரிந்திருக்கும். ஆனால் ஒவ்வொரு காட்சியிலும் உத்தரையும் இருந்தாள். மிக அருகிலென உத்தரையை அவனால் பார்க்க முடிந்தது. உதடுகள் நீள, கன்னம் குழிய, முகம் விரிந்து. கண்களில் புறநோக்கு மங்கி கனவிலாழ்ந்து. செவ்வனலும் நீலஅனலும் என, ஒன்றென இரண்டென.

மீண்டும் அவன் தன்னுள் விழி திருப்பினான். அக்கணம் அவன் கண்டது ஓர் ஆணை. திடுக்கிட்டு பார்வையை விலக்கிக்கொண்டு என்ன நிகழ்கிறது எனக்குள் என்று கேட்டுக்கொண்டான். பின்னர் அவன் சித்தம் விரிந்தது. பிருகந்நளையுள் ஆணிருப்பதை ஏன் உளம் மறுக்க வேண்டும்? அந்த ஆண் அவ்வுடலில் ஒருகணம் வந்து மறைவது இயல்பல்லவா? என் விழிகளால் அதில் பெண்ணை மட்டும் வரைந்தெடுக்கிறேனா? நான் எடுத்தது போக எஞ்சும் ஆணை உத்தரை எடுத்துக்கொள்கிறாளா? அங்கிருந்து எழுந்து ஓடிவிடவேண்டும் என எண்ணி அங்கேயே அமர்ந்திருந்தான்.

பயிற்சி முடிந்து மூச்செறிதல் அமைந்து இயல்பான உரையாடல் தொடங்கியபோது பிருகந்நளை அவனை அழைத்தாள். அவன் சென்று மண்டியிட்டு அவள் கால்களில் இருந்து சலங்கையை அவிழ்த்தெடுத்தான். அவற்றை சிறு

சந்தனப்பேழைக்குள் வைத்து மூடி கையிலெடுத்துக்கொண்டான். அவனை நோக்காமல் உத்தரையிடம் சிறுசொல்லாடி சிரித்துக்கொண்டிருந்தாள் பிருகந்நளை. “அவளுக்கு என்ன பயிற்றுவிக்கிறீர்கள்?” என்றாள் ஒரு தோழி. “அவளை விடுவிக்கிறேன்” என்று பிருகந்நளை சொன்னாள். பிறிதொருத்தி “அவள் சிக்கிக் கொள்கிறாள் என்று தோன்றுகிறது” என்றாள். அவர்கள் நகைத்தனர்.

உத்தரையின் பின்பக்கம் ஆடைச்சுருக்கத்தை நீவி “சென்று வருக! இனி நாளை” என்றாள் பிருகந்நளை. அவர்கள் விலகிச் செல்ல அவனை நோக்கி திரும்பி “நாம் செல்வோம், வீரரே” என்றாள். இருவரும் தங்கள் சிறிய தேர் நோக்கி நடக்கையில் “என்ன?” என்று பிருகந்நளை கேட்டாள். “ஒன்றுமில்லை” என்றான். “உங்கள் முகம் மாறியிருக்கிறது” என்றாள். “இல்லையே” என்றான். “அம்மாற்றத்தை நன்கு அறிகிறேன்” என்றாள் பிருகந்நளை. “இளவரசியின் முகத்தை பார்க்கிறேன். உங்களை அவர் ஒரு ஆண் என எண்ணுகிறார் என்று தோன்றுகிறது” என்றான்.

“நன்று! நீங்கள் பெண்ணென எண்ணுவதுபோல” என்றாள் பிருகந்நளை. அவன் சலிப்புடன் “அதுவல்ல” என்றான். “பிறகென்ன?” என்றாள். “தெரியவில்லை... பெரிய துயரொன்றை நோக்கி அவர் செல்லப்போகிறார் என்று தோன்றுகிறது” என்றான். “இருக்கலாம்” என்று வேறெங்கோ நோக்கியபடி பிருகந்நளை சொன்னாள். “அத்துயரை நோக்கி நீங்கள் அவரை கொண்டு செல்கிறீர்கள்” என்று அவன் சொன்னான். பிருகந்நளை “நானா?” என்றாள். “நீங்களல்ல, உங்கள் உருவில் இங்கெழுந்த ஊழ்.” பிருகந்நளை “அது ஊழென்றால் நான் என்ன செய்ய முடியும்?” என்றாள்.

“நீங்கள் அளிப்பதையல்ல அவர் பெற்றுக்கொள்வது” என்று சினத்துடன் முக்தன் சொன்னான். “வீரரே, எந்த ஆசிரியர் அளிப்பதையும் மாணவர்கள் அவ்வண்ணமே பெற்றுக்கொள்வதில்லை. ஆசிரியர் விதைகளை அளிக்க முடியும், முளைப்பது அவரவர் ஈரம்.” அவன் சினத்துடன் “இச்சொற்களை நான் பலமுறை கேட்டிருக்கிறேன். நான் சொல்ல வருவது இதுவல்ல” என்றபின் “நன்று! நான் எதையும் சொல்லவில்லை” என்றான். “உங்கள் சஞ்சலம்தான் என்ன?” என்று சொல்லி அவள் திரும்பிப்பார்த்து நகைத்தாள். “என்னிலொரு ஆணை பார்க்க நீங்கள் விழையவில்லை. பிறிதொருவர் என்னில் ஒரு ஆணை பார்க்கும்போது நான் ஆண்தானோ என்ற ஐயம் கொள்கிறீர். அந்த ஐயம் உங்களை அலைக்கழிக்கிறது அல்லவா?”

அவன் சினத்துடன் “ஏன் அலைக்கழிக்க வேண்டும்? நான் அறிவேன், நீங்கள் ஆணிலி. அதை அறிந்துதான் உடன் வருகிறேன்” என்றான். “அவ்வண்ணமெனில் நன்று” என்று அவள் சொன்னாள். பின்னர் அவர்கள் ஒரு சொல்லும் பேசவில்லை. தேர்த்தட்டில் பிருகந்நளை அமர்ந்துகொள்ள வெளியே காவலனுக்குரிய இடத்தில் தூண் பற்றி அவன் நின்றுகொண்டான். தெரு ஓடிச்சென்றது. அவன் நன்கறிந்த கட்டடங்கள், தெருமுனைகள். முகங்களைக்கூட நன்கறிந்திருந்தான். ஆனால் முற்றிலும் புதிய சாலை ஒன்றில் சென்றுகொண்டிருந்தான்.

இல்லத்தை அடைந்து இறங்கியதும் “நான் நீராடி உணவருந்தி ஓய்வு கொள்ளவிருக்கிறேன். நீங்கள் இல்லம் சென்று மீளலாம்” என்றாள். “தாழ்வில்லை. நான் இங்கு இருக்கிறேன்” என்று அவன் சொன்னான். புன்னகையுடன் “அவ்வண்ணமே”

என்றபின் அவள் உள்ளே சென்றாள். தொடர்ந்து வரும்படி அவள் அழைக்காததால் அவன் வெளியே திண்ணையில் நின்றுகொண்டான். தன் கையிலிருந்த சலங்கைப் பேழையை மெல்ல வருடினான். அதன் மேலிருந்த அன்னப் பறவைகளை. வருடியதில் அவன் விரல்கள் நெகிழ்ந்தன. அதைத் திறந்து சலங்கைகளை பார்க்கவேண்டுமென்று தோன்றியது. மெல்லக் குலுக்கி அதன் ஓசையை கேட்டான். மிக ஆழத்திலிருந்து ஒரு இனிய சிரிப்புபோல அவன் உள்ளம் மலர்ந்தது.

"மாமன்னர் நளனை அன்னம் என்று சொல்வதுண்டு" என்றான் முக்தன். பிருகந்நளை திரும்பி "ஆண்களை அவ்வாறு சொல்லும் வழக்கமில்லை" என்றாள். "அவர் பெண்மை நிறைந்தவர் என்கிறார்கள். அவர் உடல் அன்னம்போல அனைத்தும் வளைவுகளால் ஆனது. ஆகவேதான் பிறர் எண்ணவும்முடியாத புரவித்திறன்களை அவர் எய்த முடிந்தது. அவரைக் குறித்த சூதர் பாடலொன்று வெண்புகையால் ஆன உடல் கொண்டவர் என்று சொல்கிறது" என்றான். அவர்கள் படிகளில் ஏறிக்கொண்டிருந்தனர். முக்தன் தன் உடலின் எடையை அந்த செங்குத்தான படிகளில் எப்போதும் உணர்வதுண்டு. உத்தரையும் மூச்சிரைத்தாள். பிருகந்நளை மிதந்து ஏறிச்செல்பவள் போலிருந்தாள்.

உத்தரை இடையில் கைவைத்து நின்று நீள்மூச்சிரைத்து "இங்கு எங்கு நோக்கினும் மாமன்னர் நளனைப்பற்றிய கதைகள்தான். அவர் தொலைவில் நின்று நோக்குவதற்கு பெண்ணென்றும் அணுகுந்தோறும் ஆணென்றும் தோன்றுவார் என்கிறார்கள்" என்றாள். அவள் உடல் வியர்வையில் இளவாழைக்குருத்துபோல் ஒளிகொண்டிருந்தது. "யாருக்கு? ஆண்களுக்கா?" என்று பிருகந்நளை கேட்டாள். "பெண்களுக்கு"

என்றாள் உத்தரை. பின்னர் நகைத்தபடி “ஆண்களுக்கு நேர்மாறாக தோன்றக்கூடும்” என்றாள்.

அவர்களின் நோக்குகள் தொட்டுக்கொண்டதை நகை பரிமாறிக்கொண்டதை அவன் கண்டான். அவற்றின் நடுவே சென்று சொல்லெடுக்கக் கூசி நடைதளர சில எட்டுகள் வைத்து பின்னடைந்தான். அவர்கள் பேசிக்கொண்ட ஒலி மட்டும் கேட்டது. மழுங்கிய சொற்களின் அறியா இனிமை. அவன் விலக்கத்தை உணர்ந்த பிருகந்நளை திரும்பி நோக்கி “இவ்வாலயம் புதியது அல்லவா?” என்றாள். முக்தன் “ஆம், கிரிப்பிரஸ்தத்தின் மீது இருந்த இந்திரனின் ஆலயம். இரண்டாம் கீசகரால் மீண்டும் எடுத்துக்கட்டப்பட்டது. மலைமேல் செல்லும் படிக்கட்டுகளையும் அவர் அமைத்தார்” என்றான். “இன்று பாரதவர்ஷத்திலுள்ள இரண்டாவது பெரிய இந்திரன் சிலை இது. முதற்பெரும்சிலை இருப்பது அஸ்தினபுரியில்.” உத்தரை “இந்திரப்பிரஸ்தத்தில்” என்றாள். “ஆம், அங்குதான்” என்றான்.

பிருகந்நளை மேலே நோக்கி “கரிய சிலை” என்றாள். முக்தன் “ஆம், இங்கு குன்றின் நடுவே எழுந்து நின்றிருந்த இந்திரனின் நெடுஞ்சிலை நீண்டகாலம் மழையிலும் வெயிலிலும் நின்று கறுத்து மானுட கைபடாமல் பாறையே தன்னை உன்னி எழுப்பிக்கொண்டதுபோல் தோன்றியது. தொலைவில் படகில் செல்கையில் தற்செயலாக விழிதிருப்பிப் பார்க்கையில் அதை ஒரு சிலையென்று உணர்வது கடினம். விந்தையானதோர் பாறை நீட்சி என்றுதான் விழி முதலில் சொல்லும். உடன்வரும் எவரோ ஒருவர் அது மாமன்னர் நளன் நிறுவிய சிலை என்பார். மின்படை ஏந்திய இந்திரன் என்று அவர் கூறுகையில் சித்தம் மின்னி அம்முகத்தை விழி பார்த்துவிடும்.

மறுகணமே நோக்கும் புன்னகையும் இதழில் எழுந்த சொல்லும் தெளியும்” என்றான்.

பிருகந்நளை திரும்பி “என்ன சொல்?” என்றாள். “மூன்று சொற்கள்” என்றான். “தத்த; தய; தம. இடியோசையில் எழுபவை.” பிருகந்நளை மேலே நோக்கியபின் “ஆம், நான் அவ்வண்ணமே எண்ணினேன்” என்றாள். “என் முதுதந்தை பலமுறை அந்த அருங்கணத்தை சொல்லியிருக்கிறார்” என்றான் முக்தன். “இன்றும் இது பாறையில் இயல்பாக உருவானது என்கிறார்கள் குடிகள். ஆகவே இதற்கு ஸ்வமுக்தம் என்று பெயர் உண்டு. சிலையை கந்தகத்தால் தூய்மை செய்யலாம் என்று கலிங்கச்சிற்பிகள் சொன்னபோது அரசர் மறுத்துவிட்டார்.” பிருகந்நளை “அது நன்று. இப்போது கருமுகில்களுடன் கலக்கும் நிறம் கொண்டிருக்கிறார் விண்ணரசர்” என்றாள்.

உத்தரை “நான் எண்ணுவதுண்டு, இந்திரனின் ஒரு கையில் தாமரை மலர் இருப்பது ஏன் என்று. மின்னல் அமைந்திருப்பதை புரிந்துகொள்கிறேன். இந்திரமலர் என்பது வேறு அல்லவா?” என்றாள். பிருகந்நளை “தொல்கதைகளே சிற்பவியலை அமைக்கின்றன. மின்னல் எருக்குழியில் பாய்ந்தால் புதையலென உள்ளே இருக்கும் என்றும் நூறாண்டுகளில் அதற்குள்ளிருந்து குளிர்ந்த மஞ்சள் ஒளிகொண்டு பொன்னென்றேயாகி வெளிவரும் என்றும் உழவர்கள் நம்புகிறார்கள். நீரில் விழுந்த மின்னல்தான் செந்தாமரையென மலர்ந்ததென்பது தொல்கவிஞர் கூற்று” என்றபின் “அது இனிய பொருள் கொண்டது. மின்னலில் நீண்டு திசைகள் தொட்டு நெளிவதே தாமரையில் வளைவுகளென சுழன்று மையம் கொண்டுள்ளது. மின்னலில் சுடுவது மலரில் குளிர்கிறது” என்றாள்.

படிகளில் ஏறி இந்திரனின் ஆலயத்தின் முகப்பை அடைந்தனர். ஓர் ஆள் உயரத்தில் செங்கல் அடுக்கி கட்டப்பட்டிருந்த சுற்றுச்சுவருக்குள் இந்திரன் சிலை கிழக்கு நோக்கி நின்றிருந்தது. உள் நுழைந்ததும் அதன் முழங்கால் உயரத்திற்கு மட்டும் கால்கள் விழிகளுக்குத் தெரிந்தன. பாறையில் பதிந்த இரு பாதங்களுக்கு நடுவே இருந்த பலிபீடத்தில் மலர்களும் கனிகளும் காய்களும் பூசெய்கைக்காக படைக்கப்பட்டிருந்தன. முன்னரே அங்கு வந்திருந்த வணிகன் அளித்த மலர்களை பூசகர்கள் வாங்கி இந்திரனின் கால்களுக்கு அணிவித்தார். இரு மைந்தருடன் வந்திருந்த அவ்வணிகன் மும்முறை குனிந்து வணங்கி அப்பால் சென்றான்.

திரும்பியதும் பூசகர் இளவரசியையும் பிருகந்நளையையும் பார்த்து முகம் மலர்ந்து கைகூப்பியபடி ஓடிவந்தார். “இளவரசி, தங்கள் வருகையை எவரும் அறிவிக்கவில்லை” என்றார். “ஆம், பேசிக்கொண்டிருக்கையில் இன்று இங்கு வரலாமென்று தோன்றியது. கிளம்பிவிட்டோம்” என்றாள் உத்தரை. “இளவரசி, இவர்தான் தங்கள் ஆசிரியை என்று எண்ணுகிறேன்” என்றார் பூசகர். “வருக!” என்று அழைத்துச் சென்றார். “இந்திரனுக்கு இருபாலர் உகந்தவர் என்று அறிந்திருப்பீர்கள், ஆசிரியரே. இந்திரன் பெண்ணுருவும் இருபாலுருவும் கொண்ட பல நிகழ்வுகள் தொல்கதைகளில் உள்ளன…” என்றபடி பூசகர் பூசெய்கை மேடைமேல் ஏறினார். “ஆம், வடக்கே பல ஊர்களில் இருபாலினத்தோரே இந்திரனுக்கு பூசகர்களாகவும் திகழ்கிறார்கள்” என்றாள் பிருகந்நளை. “இங்கு வந்து முதலில் நில்லுங்கள். அந்த வெண்தாமரை மலர் உங்கள் கைகளில் இருக்கட்டும்.” பூசகரின் உதவியாளன் பலிபீடத்திலிருந்த மலர்களையும் கனிகளையும் அகற்றினான். தோழியர்

கைகளிலிருந்து கனிக்கூடைகளை எடுத்து உத்தரை அவரிடம் கொடுத்தாள்.

பூசகர் பிருகந்நளையிடம் “இந்திரன்... நின்றகோலச் சிலை. பரசுராமரால் முதல் கீசகருக்கு அளிக்கப்பட்ட சிறிய சிலை இது. அவர் அதை இங்கு கொண்டு நாட்டி வழிபட்டார். நளமாமன்னரின் காலத்தில் இச்சிலைக்கு மாகேந்திர வேள்வி ஒன்று இயற்றப்பட்டது. அவ்வேள்வியின் அவி இங்கு படைக்கப்பட்டதும் சிலை வளரத்தொடங்கியது. இருபது அடி உயரத்தில் வளர்ந்த பின்னர் மேலும் வளர்வதை எண்ணி நகரத்து மக்கள் அச்சம் கொள்கையில் அமரேந்திர வேள்வி ஒன்று இயற்றி அந்நீரை இதற்கு முழுக்காட்டினர். வளர்ச்சி நின்றது” என்றார். “இந்திரன் விருத்திரனை கொல்வதன் பொருட்டு தவமியற்றுவதற்காக வந்து தங்கியிருந்ததனால் இந்த மலை கிரிப்பிரஸ்தம் என்று அழைக்கப்பட்டது. நளமாமன்னருக்குப் பிறகு இந்திரகிரியென்றும் பெயர் பெற்றது. அன்று இதைச் சூழ்ந்திருந்த காட்டுக்குள் நளமாமன்னரின் பெருநகராகிய இந்திரகிரி இருந்தது. அதன் இடிபாடுகள் இன்றும் புதர்களுக்குள்ளும் பூழிக்குள்ளும் மறைந்துகிடக்கின்றன.”

“மக்கள் குறைவாகவே இங்கு வருகின்றார்கள் போலும்” என்று பிருகந்நளை சொன்னாள். “இங்கு வருபவர்கள் பெரும்பாலும் வணிகக் குடிகளும் ஷத்ரியருமே. அனற்குலத்து அந்தணர்கள் இந்திரனைவிட தங்கள் இல்லங்களில் நிறுவப்பட்டிருக்கும் அனலோனையே வழிபடுகிறார்கள். வேள்வி என்றால் மட்டும் இங்கு வருகிறார்கள். நிஷதர்களின் பிற குடிகளுக்கு தென்மேற்குக் காட்டிலிருக்கும் கலியே முதல் தெய்வமென்கிறார்கள். இங்கு ஆண்டுக்கு மூன்று

அரசவிழாக்கள் நிகழ்கின்றன. அப்போது நகர் மக்கள் திரண்டு வந்து இந்த மலையை தலைகளால் ஆனதாக மாற்றுவார்கள். ஆண்டு முழுக்க அவர்கள் செல்வது கலியின் ஆலயத்திற்கே. குடி வழிபாடுகள் எளிதில் மாறுவதில்லையல்லவா?” என்றார் பூசகர்.

இந்திரனின் கால்களுக்கு நீர் தெளித்து மலரிட்டு சுடராட்டி அவர் வழிபாடு செய்ய அவர்கள் கைகூப்பி வணங்கினார்கள். தாமரை மலரும் சிந்தூரமும் அளித்து அவர் அவர்களை வாழ்த்த அவரை வணங்கி மறுவாயிலினூடாக வெளிவந்தனர். “நீங்கள் விரும்பினால் கலிதேவனின் ஆலயத்திற்கும் சென்று மீளலாம்” என்றாள் தோழி ஒருத்தி. பிருகந்நளை திரும்பி “நன்று! அதை பிறிதொரு தருணத்தில் வைத்துக்கொள்வோம்” என்றாள். “இருபாலினத்தோரை கலி அணுகுவதில்லை. எப்பாலினம் என்றறியாது குழம்புவான் என்று ஒரு சொல் உண்டு” என்றான் முக்தன். “ஆம், அதன்பொருட்டே பல ஊர்களில் இருபாலினத்தோரை வணிகர் வழிபடுகிறார்கள்” என்று பிருகந்நளை சொன்னாள்.

படியிறங்குகையில் “நளமாமன்னர் ஆட்சி செய்யும்போதே இங்கு இந்திரனும் கலியும் முரண் கொள்ளத்தொடங்கிவிட்டனர்” என்று முக்தன் சொன்னான். பிருகந்நளை திரும்பி “எவ்வாறு?” என்றாள். “நளனின் இளையோன் புஷ்கரன் காளகக் குடியை சேர்ந்தவர். ஒருநாள் அவர் கனவில் கலி காளைத்தலையுடன் எழுந்து தன்னை வழிபடுமாறு ஆணையிட்டான். மறுநாள் காய்ச்சலில் அவர் உடல் கொதித்தது. நிலை மறந்து ‘காளை! காளையுரு!’ என்றே சொல்லிக்கொண்டிருந்தார். மருத்துவர்கள் பன்னிரு நாட்கள் போராடி அவர் உடலை மீட்டனர். தோல் கருகி முகம் ஒடுங்கி

உலர்ந்த பிணமென்றாகி தன் குடிலுக்குள் கிடந்த அவர் எவர் அணுகினாலும் அவர் நிழலை நோக்கி ‘காளை, காளையுரு’ என்றே சொல்லிக்கொண்டிருந்தார்.”

“பின்னர்தான் நிமித்திகர்களை அழைத்து வந்து கவிடி பரப்பி களம் நிரத்தி காய் விரித்து நிமித்தம் நோக்க வைத்தனர். முதல் நிமித்திகர் சுந்தரர் அவர் கலியை கண்டுவிட்டதைக் கண்டு அறிவித்தார். அவர் உயிர்துறக்கக்கூடும் என்றும் அதைத் தடுக்க அவர் கலியை தன் முதற்றலைவனாக ஏற்கவேண்டும் என்றும் கூறினார். காளகக்குடி அவர்களின் இல்லத்தின் தென்மேற்கு மூலையில் கலியின் உருவை காளை வடிவில் நிறுவி ஊன்பலி அளித்து வழிபட்டனர். புஷ்கரன் உடல் தேறினார். முன்பை விட தோள்வலியும் உடல் ஒளியும் கொண்டவராக மாறினார்.”

“கலிதேவனுக்கு இங்கு நிஷாதகுடிகளில் அன்றுவரை பெருந்திரள் விழவென்று ஏதுமிருக்கவில்லை. ஆடிமாதம் முழுக்கருநிலவு நாளில் ஒரு பெரும் பலியாடலை காளகக் குடி அறிவித்தது. அதற்கு அவர்கள் அரசியிடம் ஒப்புதலேதும் பெறவில்லை. அரசி தமயந்தி இந்திரனை தன் முதல்தெய்வமாகக் கொண்டிருந்தவர். தன் இரு குழவிகளுக்கும் இந்திரசேனை என்றும் இந்திரசேனன் என்றும் பெயரிட்டிருந்தார் என்று அறிந்திருப்பீர்கள்” என்றான் முக்தன். “ஆம்” என்றாள் பிருகந்நளை. “முடிவு செய்து அறிவித்த பின்னரே அவர்கள் அவையில் அதை சொன்னார்கள். காளகக் குடியின் மூன்று மூத்தவர்கள் அவையில் எழுந்து கலி தங்கள் கனவில் வந்து விழவு கொள்ளுமாறு அறிவுறுத்தியதாகவும் அரச ஒப்புதல் தேவையென்றும் கேட்டனர்.”

அரசவை அதை எதிர்பார்த்திருந்தது. அரசி சொல்லப்போவதை எதிர்நோக்கி அவர்கள் திகைப்புடன் அமைதியாக காத்திருந்தனர். அரசியின் விழிகளில் வந்த மாறுதலை அவைமூத்தவர் நன்கறிந்தனர். ஆனால் அமைதி விலகாத குரலில் "அவையீரே, ஒரு நகருக்கு முதன்மைத்தெய்வம் என ஒன்றே இருக்க இயலும். பிற தெய்வம் முதல் தெய்வத்தின் கோலுக்கு அறைகூவல் ஆகும்" என தமயந்தி அறிவித்தார்.

அவர்கள் கலைந்து எழுந்து உரத்த குரலில் "எங்கள் தெய்வத்தின் ஆணையை நாங்கள் மீற இயலாது" என்றனர். "அவ்வண்ணமென்றால் அதை உங்கள் குடிவிழவாக நடத்துங்கள். நகர் மக்கள் அதில் பங்கெடுக்க வேண்டியதில்லை" என்று தமயந்தி கூறினார். "பெருவிழவுகொள்ளும் தெய்வம் முதன்மைத்தெய்வத்திற்கு எதிர்நிற்கிறது. அதை ஒப்பினால் நகர் என்றேனும் இரண்டெனப் பிரியும். நாம் வென்று செல்லும் காலம் இது. இப்பிரிவை நம் எதிரிகள் பயன்படுத்திக்கொண்டால் நாம் அழிவோம்" என்றார்.

அவர்கள் அதை ஏற்கவில்லை. "இந்திரனின் வழிபாடு பாரதவர்ஷத்திற்கு ஒரு செய்தி சொல்கிறது. இந்நகரம் ஆரியநெறி நிலவுவது, எனவே வணிகத்திற்கு உகந்தது என்று. கலிவழிபாடு நேரெதிர் செய்தியை அளிப்பது. ஏனென்றால் அவ்வழிபாட்டை நாம் கொண்டிருந்த காலத்தில் வணிகர்களை கொள்ளையடித்தோம்" என்றார் அரசி. அது மெய்யென்றாலும் அவையில் இருந்த நிஷாதகுடிகள் அனைவரையும் புண்படச் செய்தது. அவர்களில் காளகர்கள் மட்டும் எழுந்து இது குடிச்சிறுமை செய்யும் சொல். இதை ஏற்க மாட்டோம் என்றனர். குடித்தலைவர் சீர்ஷர் எழுந்து "அரசி எண்ணிக்கொள்ள வேண்டியதொன்று உண்டு. நிஷாதர்

விதர்ப்பத்தை படைவென்று நின்றவர்கள். கொடைகொண்டவர்கள் அல்ல” என்றார். அரசி சினமெழ சொல்லற்று அமர்ந்திருந்தாள்.

அப்போது நள மாமன்னர் ராஜகிருகத்தில் மகதஅரசின் புறக்குடிகளை ஒடுக்கும் போரொன்றில் இருந்தார். அன்று அவர் களத்திலிருந்து களத்திற்கு சென்றுகொண்டிருந்தார். அரசியின் விருப்பத்தை ஆராயாமலேயே அவை விட்டு எழுந்து வெளியேறிய காளகக் குடிகள் கலிக்கு விழவு என ஊர் அறிவிப்பு விடுத்தன. அமைச்சர்கள் வந்து அது பொதுவிழவென நிகழக்கூடாது என்ற அரசியின் ஆணையை சொன்னபோது அது குடிவிழவே என்றனர். ஆகவே அரசி படைகளுக்கு அதை நிறுத்தும்படி ஆணையிடவில்லை.

சினம்கொண்டிருந்த அரசியிடம் “அரசி, அது காளகக்குடியின் விழவு என்றால் அவ்வாறே நிகழட்டும். அவர்களுக்கு நாம் ஒரு வாய்ப்பை அளிப்போம். அவர்கள் எங்கெங்கோ அடைந்து எவ்வண்ணமோ நினைவில்கொண்டுள்ள சிறுமைகள் அனைத்தையும் இவ்விழவில் நிமிர்ந்து நிகர்செய்துகொள்ளட்டும்” என்றார் அமைச்சர் கருணாகரர். “இத்தகைய சிறிய மீறல்களுக்கு இடமளித்தே பெரிய எதிர்ப்புகளை நாம் கலைக்க முடியும்.”

“ஆனால் அதை குடிவிழாவாக அவர்கள் நடத்தவில்லை. அவ்விழா குறித்த செய்திகளை தங்கள் குடியினர் வழியாக பிறரறியாது பிறகுடிகள் அனைவரிடமும் பரப்பினர். சபரர்களிடம் ஐயுற்று அவர்களிடம் மட்டும் இச்செய்தியை தெரிவிக்கவில்லை. கருநிலவு நாளின் முதல் புலரியில் விழவு தொடங்கி காளகக்குடிகளின் முரசுகள் முழங்கத் தொடங்கியதுமே நகரெங்கிலுமிருந்து மக்கள் கலிதேவனுக்கு

பூசனைப்பொருட்களும் பலிகளும் கொண்டு தெருக்களில் பெருகி தென்மேற்கு ஆலயத்தை நோக்கி செல்லத்தொடங்கினர்.

செய்தி அறிந்ததும் சபர குடிகளும் அங்கு திரண்டனர். அனைவரிடமும் தமயந்திமீது கசப்பு கரந்திருந்தது. விதர்ப்பம் மறைமுகமாக இந்திரபுரியை ஆள்கிறது என்னும் பரப்புரைக்கு அவர்கள் உளம் அளித்திருந்தனர். தெருக்களில் விதர்ப்பப் படையினருக்கும் பேரரசிக்கும் எதிராக சில குரல்கள் எழுந்தாலும் பெரியவர்களின் அடக்குதலால் அது மேலெழுந்து ஒலிக்கவில்லை. ஆனால் அவ்வெண்ணத்தாலேயே திரள் முன்னெடுக்கப்பட்டது.

இந்திரவிழவுக்குத் திரள்வதைப்போல மும்மடங்கு மக்கள் கலிதேவனின் ஆலயத்தை சூழ்ந்தனர். முந்தைய நாளே மலை ஆழங்களில் இருந்து கிளம்பிவந்து நகரைச் சுற்றிய புதர்வெளிகளில் தங்கியிருந்த மக்கள் பல்லாயிரக்கணக்கில் முரசொலி கேட்டு எழுந்து வந்துகொண்டே இருந்தனர். இணைமுரசொலி கேட்டு விழவு தொடங்கிவிட்டதை அறிந்த தமயந்தி சினத்துடன் அமைச்சரை அழைத்து "குடிவிழவுக்கு இணைப்பெருமுரசு எப்படி ஒலிக்கலாம்? எவர் அளித்த ஒப்புதல் அது?" என்றார். அமைச்சர் கருணாகரர் "அரசி அவர்கள் எதற்கும் ஒப்புதல் கோரவில்லை. நகர்த்தெருக்களனைத்தும் கலிவழிபாட்டிற்குச் செல்லும் மக்களால் நிறைந்துள்ளன" என்றார்.

அரசி தமயந்தி சினம் பெருக கைவீசி பழிச்சொல் உரைத்தபடி உப்பரிகைக்கு வந்து நோக்கியபோது அனைத்து தெருக்களும் பெருவெள்ளம்போல் மக்கள் தலைகளால் நிறைந்திருப்பதை கண்டார். வண்ணத்தலைப்பாகைகளும் ஆடைகளும் கொண்டு

மலர் பெருக்கிச் செல்லும் மழைக்கால நதிபோல் இருந்தது அரச வீதி. “எவரது ஆணை இது?” என்று அவர் கூவினார். “இனி எந்த ஆணையையும் அவர்களுக்கு தெரிவிக்க முடியாது” என்றார் கருணாகரர். “அவர்களை தண்டியுங்கள். யார் இதற்கு பொறுப்போ அவர்களை இழுத்து வாருங்கள்” என்றார் அரசி.

“பேரரரசி, இத்தனை பெருக்கென மக்கள் எழுந்தபின் உங்கள் சொல் அதற்குரிய மதிப்பை பெறாது. ஒருவேளை அது எதிர்ப்பை பெறக்கூடும். எதிர்ப்பை பெறுமென்றால் அது ஒரு தொடக்கம் என்றாகும்” என்றார் கருணாகரர். அதை நன்குணர்ந்த அரசி முலைகள் எழுந்தமைய உடல் பதற கைகள் அலைபாய அங்கு நின்று நோக்கிக்கொண்டிருந்தார். அத்திரளெழுச்சியின் பொருளென்ன என்று அவருக்கு நன்றாகவே தெரிந்தது.

அன்று உச்சிப்பொழுதில் அவரை விதர்ப்பநாட்டு ஷத்ரியப்படைகளின் தலைவன் மகாபாகு வந்து சந்தித்து படைகளில் நிலவும் பிளவைப்பற்றி சொன்னான். நிஷாதகுடிகள் அனைத்தும் கலிவழிபாட்டை கொண்டாடுவதாகவும் அவர்கள் நாவில் புஷ்கரனின் பெயர் திகழ்வதாகவும் கூறி “நெடுநாட்களாகவே இந்தக் கசப்பு ஊறிக்கொண்டிருக்கிறது, பேரரசி. நம்நாட்டுப் படைகள் இங்கே தெருக்களிலும் களங்களிலும் அயலோராகவே பார்க்கப்படுகிறார்கள். மதுக்கடைகளில்கூட சிறுமைசெய்யப்படுகிறார்கள்” என்றான்.

“எங்களுக்கு நீங்கள் எவ்வகை தனியிடமும் மிகையுதவிகளும் அளித்ததில்லை. நிஷாதர்களின் அடிமைகளென அவர்களின் நாட்டைக் காக்கும்பொருட்டு நாம் ஏன் இங்கிருக்கவேண்டும் என்றே விதர்ப்பப் படைகள் முணுமுணுத்துக்கொள்கின்றன. ஆனால் எங்களை நீங்கள் பேணி வளர்ப்பதாகவும்

நிஷாதர்களுக்கு அவர்களின் நிலத்தில் இரண்டாமிடமே உள்ளது என்றும் இங்கே அத்தனை நிஷாதப் போர்வீரர்களும் எண்ணுகிறார்கள்” என்றான் மகாபாகு. “அந்த எண்ணம் அயல்நாட்டு ஒற்றர்களால் வளர்க்கப்படுவதா என்றே ஐயுறுகிறேன்.”

தமயந்தி அதற்குள் அனைத்தையும் கணித்து அமைதியடைந்துவிட்டிருந்தார். அவனை அனுப்பிவிட்டு அமைச்சர் கருணாகரரை அழைத்து “கலிவிழவுக்கு பேரரசி முறைமைப்படி சென்று பூசனைசெய்யவேண்டும். ஆவன செய்க!” என்றார். “அதையே நானும் எண்ணினேன். நல்ல நடவடிக்கை அது, அரசி” என்றார் கருணாகரர். அரசியின் வருகையை அறிவித்தபோது காளகக்குடியின் தலைவர்கள் ஐயுற்று குழம்பினர். ஆனால் அவள் வரவிருப்பதை கூடியிருந்த மக்களிடம் அறிவிக்கவும் செய்தனர். அவர்களில் சபரர்கள் தங்கள் ஆடைகளை வானில் வீசி எம்பிக்குதித்து வாழ்த்துரைகூவி அரசியை வரவேற்றனர். மெல்ல அவ்வாழ்த்தொலி அனைவரிடமும் பரவியது.

“வேறுவழியில்லை. அரசி வரட்டும். அவர் வந்ததையே நாம் அடைந்த வெற்றி என்று சொல்லிக்கொள்வோம்” என்றார் காளகக் குடியின் தலைவர் சீர்ஷர். “இவ்வெழுச்சியை அவள் வென்றெடுப்பாள்” என்றார் புஷ்கரன். “இல்லை மைந்தா, ஒருமுறை எழுந்த காழ்ப்பு வளர்ந்தே தீரும். பிற முயற்சி இல்லையேல் அன்பு தளரும் காழ்ப்பு வளரும் என்பதே மானுடநெறி” என்றார் சீர்ஷர்.

அன்று மாலை தன் வெள்ளித்தேரில் தமயந்தி மைந்தருடன் கலிவழிபாட்டுக்கு வந்தார். மக்கள் கூடி வாழ்த்தொலி எழுப்பி கொந்தளித்து அவரை வரவேற்றனர். புஷ்கரனும் சீர்ஷரும்

குடித்தலைவர்களும் அவரை எதிர்கொண்டு கோல்தாழ்த்தி வரவேற்று அழைத்துச்சென்றனர். சிற்றாலயத்தின் உள்ளே இருட்டில் இருளுருவென்று விழிமின்ன அமர்ந்திருந்த கலிதேவனை அரசி கூர்ந்து நோக்கினார். அவன் கண்கள் வெண்பட்டால் கட்டப்பட்டிருந்தன. ஆயினும் நோக்கை உணரமுடிந்தது அவரால். அந்த முகத்தில் புன்னகை விரிவதுபோல் தோன்ற அவர் விழிதாழ்த்தி தன் குடலையில் இருந்த நீலமலர்களை கலியின் காலடியில் வைத்து வணங்கிவிட்டு விலகிச்சென்றார்.

"அதுவே தொடக்கம் என்கிறார்கள் தொல்கதைகளில்" என்றான் முக்தன். "அங்கிருந்தே நிஷதப்பேரரசு மெல்ல சரியத் தொடங்கியது." பிருகந்நளை "ஆம், மானுடரின் வளர்ச்சிக்கு உச்சமென ஓர் அறியாப்புள்ளி உள்ளது. அது தெய்வங்களின் வேடிக்கை" என்றாள்.

# நீர்க்கோலம் - 29

## 28. அன்னநிறைவு

அடுமனை வாயிலில் பீமன் சென்று நின்றதுமே அடையாளம் கண்டுகொண்டனர். மடைப்பள்ளியர் இருவர் அவனை நோக்க ஒருவன் "உணவா?" என்றான். பீமன் "ஆம்" என்றான். "வருக!" என்று அவன் அழைத்துச்சென்று அடுமனை முற்றத்தில் அமரச்செய்தான். அரிசியும் காயும் அரிந்திட விரிக்கப்பட்ட பழைய ஈச்சம்பாயை எடுத்துவந்து அவன் முன் விரித்ததும் மேலும் இருவர் புன்னகையுடன் அவனை நோக்கினர். பீமன் கால்மடித்து அமர்ந்து அவர்கள் கலங்களில் அன்னமும் அப்பமும் சுட்ட கிழங்குகளும் கொண்டுவருவதை

நோக்கினான். அவர்கள் உணவை கொண்டுவந்து அவன் முன் குவித்தனர்.

“குவிக்காதீர்... உண்ண உண்ண அளிப்போம்” என்றார் முதிய மடைப்பள்ளியரான பூர்ணர். “குவித்திட்ட உணவை ஒருவர் உண்ணக் காணும் இன்பத்தை ஏன் இழக்கவேண்டும்? அருள்கொண்ட வயிறு. அனலோன் குடியிருக்க தேர்ந்த ஆலயம்” என்றார் பிறிதொரு மடைப்பள்ளியரான சாலர். மெல்ல அவனைச் சூழ்ந்து அங்கிருந்த அனைவரும் வந்து அமர்ந்துகொண்டனர். “உங்கள் கைகள் காட்டுகின்றன நீங்கள் உணவுண்ணும் ஆற்றல்கொண்டவர் என்பதை” என்றார் சாலர். “அத்துடன் உங்கள் இறுகிய வயிறு காட்டுகிறது நாவில் சுவைகொண்டவர் என்று. உந்தி திரண்ட வயிற்றுக்குள் அனலால் உண்ணப்படாத கொழுப்பு எஞ்சுகிறதென்று பொருள். அது நாச்சுவையை மழுங்கச்செய்யும்.”

ஒவ்வொருவராக சென்று அங்கிருந்த மிகச் சிறந்த உணவுகளை கொண்டுவந்தனர். உச்சியுணவுப்பொழுது முடிந்துவிட்டிருந்தமையால் அப்பால் பந்திக்கூடத்தில் எவருமிருக்கவில்லை. எஞ்சிய உணவு சீறிக்கொண்டிருந்த அனலடுப்பில் கொதித்துக்கொண்டிருந்தது. “பருப்புக்குழம்பு... அதோ அந்தப் பெரிய அண்டாவில்” என்றார் பூர்ணர். “வறுத்தஊன் சற்று ஆறிவிட்டிருக்கிறது. அதை மீண்டும் ஒருமுறை அனலில் காட்டி கொண்டுவாருங்கள்” என்றார் சங்கதர். “சில உணவுகள் தீர்ந்துவிட்டன. நீர் சற்று முன் வந்திருக்கலாம்” என்றார் வச்சர்.

அனைவர் முகங்களும் அவன் உண்ண உண்ண மலர்ந்தபடியே சென்றன. ஒவ்வொருவரும் அவர்கள் சமைத்த மிகச் சிறந்த உணவை அவனுக்கென கொண்டுவந்தனர். “வீரரே, இது என்

கைத்திறன். உப்புநோக்கி பாரும்” என்றார் சம்பவர். “இந்தக் கறியை முற்றிலும் புளியே இல்லாமல் சமைத்தேன். தயிர் மட்டுமே” என்றார் உரகர். பீமன் ஒவ்வொரு சுவைக்கும் தலையசைத்தான். அவன் உடலே நாவென்றாகி சுவையில் திளைத்தது. காரக்கறியை பரிமாறிய சுமரிடம் “காந்தார மிளகு!” என்றான். அவர் “ஆம், அதன் மணமெழலாகாதென்று ஒன்று செய்தேன்” என்றார். “மோரில் காய்ச்சி கறியில் விட்டிருக்கிறீர்” என்றான் பீமன்.

அவர் முகம் மலர்ந்து “நீர் அடுமனையாளரா?” என்றார். “அவர் உண்பதைக் கண்டாலே தெரியவில்லையா?” என்றார் சம்பவர். அவன் உண்டபடியே இருந்தான். “இதற்கு நிகராக உண்பவர் இங்குள்ள இளவரசர் கீசகர் மட்டுமே” என்றார் சுமர். “ஆனால் அவருக்கு இத்தனை சுவை தெரியாது. உணவை வென்று கடந்துசெல்ல முயல்பவர் போலிருப்பார்.” அவர்கள் விழி நீர்மைகொள்ள உளம் நெகிழ்ந்திருந்தனர். “தெய்வம் வந்து பலிகொள்வதைப்போல உண்கிறீர், வீரரே. நீர் எவரென்றாலும் சரி, அன்னத்தை ஆளும் தெய்வங்கள் உம்முடன் இருக்கும்” என்றார் சிருங்கர். “அன்னமிட்டு காய்த்த கைகளால் உம்மைத் தழுவி வாழ்த்தவேண்டும் போலிருக்கிறது. உண்பவரைப்போல் சமைப்பவருக்கு இனியவர் வேறில்லை.”

பீமன் “சற்று சோறு” என்று கேட்டான். அங்கிருந்த அனைவரும் வெடித்து நகைத்தனர். இருவர் “இதோ” என்று ஓடினர். சோறு அவன் முன் சரிக்கப்பட்டதும் பீமன் “அந்த ஊன்கறி... அது நல்ல ஆடு” என்றான். “இங்கு ஆடுகள் சுவையுடன் உள்ளன. இந்த ஆட்டின் தோல் மாந்தளிரென ஒளிவிட்டுக்கொண்டிருந்திருக்கும். இரு முன்னங்கால்களுக்கு நடுவே முழைதொங்கியிருக்கும். தொடை பெருத்து நடையில்

ததும்பும். குழம்பில் மிதக்கும் கொழுப்பு அதை காட்டுகிறது.” அவர்கள் வியப்புடன் “ஆம், மெய்” என்றார்கள். “ஆடு மிகுதியாக உண்ணும் தழையின் மணத்தையே ஊனில் அறிந்துவிடமுடியும்” என்றான் பீமன். “இது இளங்கீரைகளை உண்ட ஆடு.”

கர்த்தகர் “இன்னும் சற்று கொண்டுவாரும்” என்றார். “நம் உணவுக்காக எடுத்துவைத்தேன்” என்றான் இளைய அடுமனையாளனாகிய சித்ரன். “மூடா, நாம் உண்பதா இப்போது பெரிது? உண்பதற்கென்று தெய்வங்களால் அருளப்பட்டவர் இவர்… கொண்டுவருக!” பீமன் அன்னத்தை குழம்புடன் உருட்டியபடி “இத்தனை சுவையான ஆடுகள் கூர்ஜரத்திலும் சிபிநாட்டிலும் உண்ணக்கிடைத்துள்ளன” என்றான். “கங்கைக்கரைகளில் மழை மிகுதி. ஆடுகளின் தோலில் முடியுதிர்கிறது. அந்த மணம் ஊனிலும் ஊடுருவுகிறது.”

சூரர் “சௌவீரத்தில் ஆட்டு ஊன் எப்படி?” என்றார். பீமன் “அங்குள்ளவை செம்மறியாடுகள். அவற்றின் ஊன் வேறுவகை மணம் கொண்டது. நார்களென நீள்வாட்டில் பிரியும். அவற்றை எண்ணை கலக்காது சுடவேண்டும்” என்றான். “ஆடு மிகுதியாக நடந்திருக்கக்கூடாது. ஆனால் அனைத்துவகை தழைகளையும் நாச்சுவையால் தேடி உண்டிருக்கவேண்டும். சுவையாக உண்ட ஆடு சுவையானது என்பது நெறி.” கூர்மர் உரக்க நகைத்து “பாரதவர்ஷத்தையே நக்கி நோக்கியிருக்கிறீர், வீரரே” என்றார்.

“இந்தக் குழம்பை நான் சமைத்தேன்” என்று மேலும் இரு அப்பங்களை வைத்து கரிய குழம்பை ஊற்றினார் சூரர். “ஆம், அவரைப்பருப்பை கருக்க வறுத்து அரைத்து சற்று பாலும் ஊற்றி ஊன்துண்டுகளுடன் சேர்த்து சமைத்திருக்கிறீர்” என்றான் பீமன். சூரர் நகைத்து “இதை எங்கு உண்டீர்கள் முன்பு?”

என்றார். பீமன் “இப்போதுதான் உண்கிறேன். மணத்தால் அறிந்தேன்” என்றான். சூரர் “குழம்புமணத்திலிருந்து அதில் சமைத்துக் கலக்கப்பட்ட அனைத்தையும் அறிவீரோ?” என்றார். பீமன் “ஆம், இதுவரை பிறழ்ந்ததில்லை” என்றான்.

கூர்மர் “இதை உண்டு சொல்லும் பார்ப்போம்” என்று ஒரு வெண்ணிறக்குழம்பை கொண்டுவந்தார். “பச்சைமொச்சையை அரைத்த பாலில் சமைத்த முயலின் ஊன்” என்றான் பீமன் தொலைவிலேயே. “வீரரே, நீர் மூக்கால் முதலில் உண்கிறீர்” என்றார் சூரர். சங்கர் “அதற்கு முன் விழிகளால். அதற்கும் முன் ஆன்மாவால்” என்றார். அவர்கள் சிரித்து கூவினர். “உணவை உண்ணவேண்டியது உணவின் மறுவடிவமான உடல்” என்றார் பூர்ணர். “அன்னம் அன்னத்தை அறிவதே சுவை என்பது என்பார்கள்.”

பீமன் கையை நக்கியபடி அமர்ந்திருக்க பூர்ணர் “மேலும் அன்னமா?” என்றார். பீமன் நாணத்துடன் தலையசைத்தான். திகைப்புடன் “மேலுமா? அய்யோ!” என்றார்கள் அடுமடையர்கள். பூர்ணர் “முகக்குறி நோக்கத் தெரியவேண்டும் அடுதொழிலருக்கு... கொண்டுவருக!” என்றார். அன்னம் கொண்டுவந்து குவிக்கப்பட்டது. “மீண்டும் ஊன்கறியா?” என்றார் பூர்ணர். பீமன் தலையசைத்தான். “பச்சைப்பயிறுடன் சேர்த்து சமைத்த கறி இருக்கிறதா? அதை இவர் இதுவரை உண்ணவில்லை” என்றார் பூர்ணர். “அது உச்சிப்பொழுதிலேயே தீர்ந்துவிட்டது” என்றான் ஒருவன். “பொறுத்தருள்க, வீரரே, நாளை நானே அதை சமைத்து அளிக்கிறேன்” என்றார் பூர்ணர்.

மெல்ல அவர்களின் பேச்சு அடங்கியது. அவன் உண்ணும் ஒலிமட்டும் காட்டில் புலி நடக்கும் ஓசையென உட்செவி மட்டும் அறியும்படி ஒலித்தது. அவன் உண்பதை அவர்கள்

விழிநிலைக்க நோக்கி நின்றனர். கை உணவை அள்ளுவதும் உருட்டுவதும் வாய்க்கு கொண்டுசெல்வதும் ஓர் அழகிய நடனம்போலிருந்தன. இதழ்பிரியாது மென்றான். நாவொலி கேட்காமல் விழுங்கினான். ஒவ்வொன்றுடனும் உகந்ததை மட்டுமே சேர்த்துக்கொண்டான். ஊனையும் கிழங்குகளையும் கலக்கவில்லை. காய்கறிகளுடன் ஊனை சேர்க்கவில்லை. வேள்விச்செயலின் ஒத்திசைவு கூடியிருந்தது அவனிடத்தில்.

விரித்த பாயில் பருக்கையும் எஞ்சாமல் உண்டபின் அவன் மெல்ல ஏப்பம் விட்டான். அவ்வோசை அவர்களனைவரையும் உடல்நெகிழ்ந்து அசைவுகொள்ளச் செய்தது. பூர்ணர் கைகூப்பி "எழுந்தருளிய தேவனே, நிறைவுகொண்டு நீர் அளித்த வாழ்த்தை பெற்றோம். எங்கள் குடியும் மைந்தரும் பொலிக!" என்றார். பீமன் கையூன்றாமல் எழுந்து சென்று அருகே இருந்த தொட்டி நீரில் கைகழுவினான். வாய்கழுவி ஓசையில்லாமல் துப்பிவிட்டு மரவுரியால் முகம் துடைத்தபடி வந்தான். பூர்ணர் "யானைபோல் உண்ணவேண்டும் என்பார் என் ஆசிரியர். அவர் சொன்னதை இன்றுதான் கண்டேன்" என்றார்.

பீமன் "நல்லுணவு மூத்தவர்களே, வணங்குகிறேன்" என்றான். "சுக்குநீர் அருந்துக!" என்று கூர்மர் பெரிய சுரைக்குடுவையை கொண்டுவந்து நீட்டினார். அதை வாங்கி உதடுதொடாமல் ஒருதுளியும் சிந்தாமல் அருந்தி முடித்து ஒழிந்த குடுவையை திருப்பி அளித்தான். "அமர்க!" என்ற பூர்ணர் "வெற்றிலையும் நறும்பாக்கும்" என்றார். சம்பவர் கொண்டுவந்த வெற்றிலைச்சுருளை வாங்கி அவன் மென்றான். "கிராம்பு வேண்டுமா?" என்றார் சுமர். "ஆம்" என்றான் அவன். அவர் எடுத்துத் தந்த கிராம்பை கையில் வைத்திருந்தான்.

“வெற்றிலை மணமறிந்தவர் அது உமிழ்நீருடன் கலந்து மூப்படைந்த பின்னரே கிராம்பு சேர்ப்பார்கள்” என்றார் சம்பவர்.

பூர்ணர் “வீரரே, உமது ஊர் எது? பதியும் குடியும் பெயரும் எவை?” என்றார். “என் பெயர் வலவன். பிறப்பால் ஷத்ரியனாயினும் சூதன் என்று வாழ்வை மேற்கொண்டேன். அடுதொழிலன். மல்லன். சிராவக குடியில் பால்ஹிக நாட்டில் பிறந்தேன்” என்றான் பீமன். “ஆம், உமது மஞ்சள் நிறத்தைப் பார்த்தபோதே நீர் பால்ஹிகர் எனத் தோன்றியது” என்றார் சம்பவர். “நீர் அடுதொழில் மேற்கொண்டது ஏன்?” என்றார் பூர்ணர். “அதை நான் நாளை இங்கு சமைக்கையில் அறிவீர்கள். நாரதர் ஏன் இசை தேர்ந்தாரோ நந்தி ஏன் முழவு தேர்ந்தாரோ அதே காரணத்தால் நான் அடுதொழில் கொண்டேன்.”

பூர்ணர் நகைத்து “நல்ல மறுமொழி... சொல்லெண்ணி உரைக்கப்பட்டது” என்றார். “எங்கள் மாமன்னர் நளன் அடுதொழிலராகவே இறுதிவரை இருந்தார். அறிவீரா?” என்றார் பூர்ணர். “ஆம், அவர் யாத்த நளபாகம், நளரசனா, நளபதார்த்தமாலிகா என்னும் மூன்று அடுகலைநூல்களையும் உளப்பதிவாக கற்றுள்ளேன். ஒவ்வொன்றையும் ஏழுமுறை செய்தும் நோக்கியிருக்கிறேன்” என்றான் பீமன்.

“அவருடைய அடுகலையைப்பற்றி நீர் என்ன எண்ணுகிறீர்?” என்று பூர்ணர் கேட்டார். “சமையலைப்பற்றி அவர் சொல்லும் அத்தனை செய்திகளையும் மிகச் சிறிய அளவுகளில் எடுத்துக்கொண்டு விளக்குகிறார். நளபாகம் என்பதே குறைவாக சமைப்பதன் நுட்பம்தான். அச்சமையலை பல மடங்காக்கலாம். ஆயினும் அது குறைவான அளவுகளால் கற்பனை செய்யப்பட்டதே” என்றான் பீமன்.

“மூத்தவரே, கைப்பிடி அளவு பருப்பு வேகும்போது எழும் மணமல்ல ஒரு மூட்டை பருப்பு வேகும்போது எழுவது. சிறிதளவு பருப்பு வேகும் மணத்தை உணர்ந்து மகிழ்பவர் பெருமளவு பருப்பு வேகும் மணம் கொண்டு வாயுமிழக்கூடும்” என்று அவன் தொடர்ந்தான். “மணமென்பது சுவையே. சமையலில் பொருட்களின் இயல்பு, கலவை, வேகும்முறை, வேகும் நேரம், கிளறும்முறை, கிளறும் நேரம், ஆறும்முறை, ஆறும் நேரம் என எட்டு முதன்மைநெறிகளும் கலத்தின் இயல்பு, நீரின் இயல்பு, அடுப்பின் இயல்பு என மூன்று இரண்டாம்நெறிகளும் கடைக்கொள்ளப்படுகின்றன. அவற்றுக்கு நிகரான முதன்மைநெறி பொருளின் அளவு. அது சுவையிலும் மணத்திலும் வண்ணத்திலும் பெரிய மாற்றங்களை உருவாக்கும்.”

“விந்தை… இப்படி ஒருவர் சொல்லி இதுவரை கேட்டதே இல்லை” என்றார் பூர்ணர். “ஆனால் பருப்பைப் பற்றி நீர் சொன்னதை நான் ஏற்கிறேன்.” பீமன் “நளபாகத்தில் சொல்லப்பட்ட அதே உணவுகள் சிலவற்றை பீமபாகத்தில் நான் சமைத்துக்காட்டுகிறேன். உண்டபின் கூறுக, சுவையிலென்ன வேறுபாடு என்று” என்றான். “ஆம், நாளை சமையுங்கள் வீரரே. நாளை நாங்களும் சிலவற்றை கற்றுக்கொள்கிறோம்” என்றார் சுமர். சூழ்ந்து நின்றிருந்த அடுமனையாளர்கள் “ஆம்! நாளை!” என்று உவகைக்குரலெழுப்பினர்.

✿மறுநாள் முதற்புலரியிலேயே பீமன் அடுமனைக்கு வந்தான். அப்போது சங்கதர் அடுமனையைத் திறந்து கலங்களை எடுத்துவைத்துக்கொண்டிருந்தார். குளித்து நீர் சொட்டும் குழலுடன் வந்த பீமனை புன்னையெண்ணை ஒளியில் பார்த்த சங்கதர் முதலில் ஏதோ தெய்வ உருவமென்றே எண்ணி

மெய்ப்பு கொண்டார். பின்னர் “ஒருகணம் அஞ்சிவிட்டேன். இந்த முன்காலையில் இத்தனை பேருருவுடன் வந்து நிற்கிறீர்கள்...” என்றார். “நெடுநாட்களுக்குப்பின் இன்று பெருஞ்சமையல் செய்யவிருக்கிறேன்” என்றான் பீமன். அவர் புன்னகை செய்து “அதற்கு இத்தனை முற்பொழுதில் வரவேண்டியதில்லை. நம்மவர் எழுந்து வர இன்னும் பிந்தும்” என்றார்.

“நானே அனைத்தையும் செய்யவேண்டும் என்பதே என் விழைவு” என்றபடி பீமன் உள்ளே வந்தான். இடையில் கைவைத்து சுற்றிலும் பலவகையில் கவிழ்க்கப்பட்டிருந்த கலங்களை பார்த்தான். வாய்திறந்த அண்டாக்களும் சருவங்களும் நிலவாய்களும் அவன் பேசும்போது ரீங்கரித்தன. “சில தருணங்களில் இவை உணவுக்கு வாய்திறந்த குழவிகளென தோன்றும். சில சமயங்களில் அன்னைக் கருவறைகள் என” என்றான். “ஆனால் நன்கு கழுவிய கலங்களை நோக்குவதை நான் எப்போதும் விரும்புவேன். நானே கலங்களை கழுவி வைப்பதையும்.”

சங்கதர் புன்னகையுடன் “நான் பிற பணியாளர்களை அவ்வப்போது நோக்கி எண்ணுவதுண்டு, அவர்களுக்கு எப்படி அத்தொழில் சலிக்காமலிருக்கிறது என்று. அடுமனைத்தொழில்போல ஒவ்வொருநாளும் தெய்வமெழும் தொழிலை அவர்களுக்கு அறிய அருளில்லையே என வருந்துவேன்” என்றார். “ஆம், சிற்பத்தொழிலும் கலம்வனைதலும் கலைத்திறன்கள். புரவிபேணுதலும் ஆபுரத்தலும் உயிர்த்தன்மை கொண்டவை. அவை இனியவைதான். ஆனால் அடுமனைத்தொழிலில்

அவ்விரண்டும் நிகரென கலந்துள்ளன. இது இணையற்றது" என்றான் பீமன்.

கோட்டையடுப்பு நிரையின் தெற்கு ஓரத்திலிருந்த சிறிய அடுப்பருகே சென்று சுள்ளிவிறகுகளை எடுத்து ஒன்றன்மேல் ஒன்றென வைத்தான். செம்புக்கலத்தில் நீர் அள்ளிவந்து கிழக்குநோக்கி நின்று "ஓம்..." என்றபடி அதை அடுப்பின்மேல் வைத்தான். அனற்கற்களை எடுத்து கைகளில் வைத்தபடி கண்மூடி ஊழ்கத்திலமைந்து அதை உரசினான். அனலெழுந்து மென்பஞ்சில் பற்றிக்கொள்ள அதை விறகுக்கு அடியில் வைத்தான். அடுமனையின் கதவு எவரோ உள்ளே நுழைவதுபோல மெல்ல முனக சங்கதர் திரும்பி நோக்கினார். இளங்காற்று ஒன்று வந்து சுழன்று சென்றது. அனல் மேலெழுந்து சிவந்த இதழ்களாக விரிந்தது.

ரிக்வேதத்தின் அன்னசூக்தத்தை தாழ்ந்த குரலில் பீமன் பாடினான். முழவை சுட்டுவிரலால் மீட்டுவதுபோன்ற அனுஷ்டுப்பு சந்தம். சொல் கேட்டு அன்னத்தின் தேவதை அங்கு வந்து நிற்பதாக சங்கதர் உணர்ந்தார். அறியா நெடுங்காலத்தில் பருப்பொருள் உடலும் உயிரும் எண்ணமும் ஞானமும் ஆக மாறும் பெருவிந்தையை எண்ணிய மூதாதையரின் நெஞ்சிலெழுந்த வரிகள். தொட்டு எடுக்கத்தக்க, உண்டு சுவைக்கத்தக்க, எரித்து எழத்தக்க பிரம்மம். "அளிக்காதவன் அடைவதெல்லாம் வீணே" என மையவரியை ஏழுமுறை சொல்லி கைகூப்பியபின் பீமன் எழுந்தான்.

மடைப்பள்ளி ஊழியர்கள் ஒவ்வொருவராக நீராடி ஈர ஆடையுடன் வரத்தொடங்கினர். சிறிய குழுக்களாக உரக்கப் பேசிச் சிரித்தபடி வந்தவர்கள் மடைப்பள்ளியில் சமையல்பணிகள் தொடங்கிவிட்டிருப்பதை கண்டார்கள். பீமன்

ஏழு அடுப்புகளை பற்றவைத்து பெருங்கலங்களை ஏற்றியிருந்தான். “யார் ஏற்றியது பெரிய உருளியை?” என்றார் சூரர். “அவரே ஏற்றினார்... தோள்வலிமை மட்டுமல்ல உடனிணையும் சித்தக்கூரும் கொண்டவர்” என்றார் சங்கதர். “பெருங்கலங்களை எடுத்து உருட்டிச்சென்று உரிய இடத்தில் நிமிரச்செய்யலாம். மிக எளிது” என்றான் பீமன். “யானைகளுக்கு எளியது ஆடுகளுக்கு அல்ல” என்று சங்கதர் நகைத்தார்.

“இதென்ன, இத்தனை பருப்பு?” என்றார் கர்த்தகர். “இன்று ஊருக்கே உணவிடுவோம். அரண்மனை அடுமனையில் உணவுக்கா வறுதி?” என்றான் பீமன். “ஆம், இப்போதே ஊட்டுமணியை ஒலிக்கச் சொல்லுங்கள். இன்று எவரும் நகரில் அடுப்பு மூட்டவேண்டியதில்லை” என்றார் சங்கதர். “எதற்கென்று சொல்வது?” என்றார் கர்த்தகர். சங்கதர் சிரித்து “நேற்று இளவரசர் திருவிடத்தின் மாமல்லன் ஒருவனை வென்றார் அல்லவா? அதன்பொருட்டு...” என்றார். “ஆம், நாம் நிறைவடையச் செய்யவேண்டியது அவரை மட்டுமே. அவருக்காக என்றால் அரண்மனையையே பொளித்து விற்றாலும் ஒன்றும் சொல்லமாட்டார்” என்றார் சூரர். அடுமனையாளர்கள் கூச்சலிட்டு நகைத்துக்கொண்டு வேலைகளில் பரவினர்.

சற்றுநேரத்தில் அங்கே நூற்றுக்கணக்கான கைகள் வேலை செய்யத்தொடங்கின. ஓரக்கண்ணால் திரும்பி அக்கைகளை மட்டும் பார்க்கையில் புறாக்கூட்டங்கள்போல அவை குறுகியும் உறுமியும் சிறகுசரித்தும் தத்திநடந்தும் எழுந்தமர்ந்தும் சிறகடித்துப் பறந்து சுழன்றமைந்தும் அங்கே நிறைந்திருப்பதாகத் தோன்றியது. கிழங்குகளை தோல்சீவினர். காய்களை நறுக்கினர். தேங்காய்களை துருவினர். கீரைகளை

ஆய்ந்தனர். பருப்பிலும் அரிசியிலும் கல்களைந்தனர். அப்பால் சிறுசகடமுள்ள வெண்கலத் தள்ளுவண்டிகளில் கொண்டுவந்து இறக்கப்பட்ட உரிக்கப்பட்ட ஊனை மரக்கட்டைகளில் வைத்து வெட்டினர். வேலை தொடக்கத்தில் பேச்சுக்கள் இருந்தன. பின்பு அவை மறைந்து பொருட்கள் தம்மைத்தாமே உணவென்று உருமாற்றிக்கொள்வதுபோன்ற ஒலி மட்டுமே அங்கு நிறைந்திருந்தது.

பூர்ணர் வந்து "அன்னமணி அடித்துவிட்டோம். பன்னிரு நகர்மையங்களில் அதை ஏற்று அடித்துக்கொண்டிருக்கிறார்கள். நகரொலியிலேயே அதை அறியலாம்" என்றார். சங்கதர் "ஆம், முரசுக்கார்வைபோல ஒலிக்கிறது நகர்" என்றார். "உணவுக்கு மட்டுமே இந்த ஓசை எழுகிறது. விழவுக்கும் களியாட்டுக்கும் எழும் ஓசை அலையலையென்று எழும்" என்றார் பூர்ணர். "ஏன்?" ஓர் இளைஞன் கேட்டான். "அது உண்மையான உவகை அல்ல. ஆகவே காற்றில் பறக்கும் பட்டம்போல அது இறங்குகிறது. மீண்டும் உளவிசையால் அதை மேலேற்றுகிறார்கள். மீண்டும் இறங்குகிறது. அன்னம் அப்படியல்ல. அது அனைவரையும் நாவென்றே ஆக்கிவிடுகிறது."

பீமன் முற்றிலும் சொல்லிழந்து சமையல்பணியில் ஈடுபட்டிருந்தான். "தவமுனிவரின் முகம் கொண்டிருக்கிறார்" என்றார் சங்கதர். "யார் இவர்? அன்னத்திற்குரிய தேவர்களில் எவரேனும் மாற்றுரு கொண்டு வந்திருக்கிறார்களா?" பூர்ணர் புன்னகையுடன் "ஏன் கேட்கிறீர்?" என்றார். "பூர்ணரே, அவர் பொருட்களை எடுப்பதை பார்க்கிறேன். விழியாலேயே அளந்துவிடுகிறார். எதையும் பிறிதொருமுறை நோக்குவதில்லை. சரிபார்ப்பதே இல்லை. ஒவ்வொன்றையும்

முன்னரே அறிந்திருக்கிறார்." பூர்ணர் புன்னகையுடன் "இங்கு எங்கோ நுண்வடிவில் நளமன்னர் வந்து நின்று நோக்கிக்கொண்டிருக்கிறார் என நினைக்கிறேன்" என்றார்.

வெளியே ஓசைகளெழுந்தன. "கீசகர் அணைகிறார்" என்றார் சங்கதர். "இவ்வேளையில் இங்கு ஏன் வருகிறார்?" என்று பூர்ணர் சலிப்புடன் கேட்டார். வாழ்த்தொலிகள் எழுந்து ஒலித்தன. "அடுமனைக்கு வருகையிலும் வாழ்த்தொலி…" என்றார் சிருங்கர் சிரிப்புடன். "அவர் என்ன போர்க்களத்திற்கா செல்கிறார்? அவர் அடைந்த வெற்றிகளில் பெரிதும் இங்குதானே?" என்றான் ஓர் இளைஞன். "மூடா, உன் நாவை கட்டு. அது உன்னை கழுவிலமரச்செய்ய சூழ்ச்சி செய்கிறது" என்றார் பூர்ணர். "அங்கே நீங்கள் மென்குரலில் சொன்னதை நான் கேட்டேன்" என்றான் இளைஞன். "அடுமனையாளனாக வந்தபின் நான் கற்ற முதற்கலை உதடுகளை கூர்ந்து நோக்குவதுதான்." பூர்ணர் நகைத்தார்.

இரு வீரர்கள் உள்ளே வந்தனர். முதலில் வந்தவன் ஒரு சங்கை ஊத தொடர்ந்து வந்தவன் "விராடபுரியின் பெரும்படைத்தலைவர், அரசமைந்தர் கீசகர்" என்று கூவினான். அடுமனையாளர்கள் எழுந்து கைவணங்கி நின்றனர். ஓங்கிய பேருடலுடன் கீசகன் உள்ளே வந்தான். இறுகிய தசைக்கோளங்களால் ஆன அவன் உடல் கரிய பாறைக்கூட்டம் போலிருந்தது. உடல் பெருத்திருந்தமையால் தலை மிகச்சிறிதாகத் தோன்றியது. தாடை தடித்து முகவாய் சற்றே முன்நீண்டு ஒரு குரங்குத்தன்மை அவனிடமிருந்தது. நெற்றி உந்தி வளைந்து முடிப்பரப்பு மேலேறியிருந்தது. சிறிய கண்கள் முதலைகளுக்குரியவைபோல மெல்லிய வெண்படலம் மூடி துயிலில் இருப்பவை போலிருந்தன.

வெண்பட்டாடை அணிந்து பொன்னூல் இழைத்த கச்சையில் அருமணிகள் மின்னும் கைப்பிடிகொண்ட குத்துவாளை செருகியிருந்தான். பெண்களின் முலைபோல புடைத்த மார்புகளின்மேல் நீர்த்துளிபோல் மணிமாலை நலுங்கியது. தோள்வளைகளும் கங்கணங்களும் கழல்களும் மணிபதித்த கிளிச்சிறைப் பசும்பொன்னாலானவை. கைகளைத் தூக்கி வாழ்த்துக்களை ஏற்றுக்கொண்டபோது யானையின் துதிக்கை என தசை இறுகி நெகிழ்ந்தது. முதலில் அவன் விழிகள் பீமனைத்தான் நோக்கின. ஆனால் அவனை நோக்காதவன்போல விழிவிலக்கி சங்கதரிடம் "இன்று விழவென்று எவர் ஆணையிட்டார்கள்?" என்றான்.

"எவரும் ஆணையிடவில்லை. நேற்று நானே வந்து தங்கள் கைகளில் மலைப்பாம்பால் வெள்ளாடு என திருவிடத்துப் பெருமல்லன் நொறுங்குவதை கண்டேன். திரும்பிவந்தபோது ஏதேனும் செய்யவேண்டும் என்று தோன்றியது. மூத்தவரிடம் கேட்டேன். அவர் நம்மால் செய்யக்கூடுவது அன்னமளிப்பது மட்டுமே என்றார்" என்றார். பூர்ணர் "ஆம், மேலும் கொள்ளப்பட்ட உணவுப்பொருட்கள் நிறைய குவிந்துள்ளன. வீணாகக்கூடாதென்று தோன்றியது" என்றார். சிருங்கர் "அத்துடன் அன்னம் வழியாகவே மக்களின் உள்ளங்களுக்கு செல்லமுடியும் என்றும் எண்ணினோம். தங்கள் பெயரை அல்லவா இன்று பல்லாயிரம் பேர் பந்தியிலமர்ந்து உண்ணவிருக்கிறார்கள்?" என்றார்.

முகம் மலர்ந்ததை மறைக்க கீசகனால் இயலவில்லை. ஆனால் உடனே சிரிப்பை மறைத்து பீமனை நோக்கி "அடேய் தடியா, வா இங்கே!" என்றான். பீமன் வந்து வணங்கி நிற்க "எந்த ஊர் உனக்கு?" என்றான். அவன் விழிகள் பீமனின் இறுகிய

வயிற்றைத்தான் நோக்கின. “நான் பால்ஹிகன். வலவன் என்று என் பெயர். பயணத்தான். வழியில் இங்கு தங்கினேன்” என்றான் பீமன். “அடுதொழில் அறிவாயா?” என்றான் கீசகன். “நன்கறிந்திருக்கிறார்” என்றார் கர்த்தகர். “என்ன அறிந்திருப்பான்? அடேய், இது அடுதொழிலில் மெய்கண்ட நளமாமன்னர் வாழ்ந்த நிலம். அவர் சொல்வாழும் குடி” என்றான் கீசகன். “ஆம், அறிவேன்” என்றான் பீமன்.

கீசகன் பூர்ணரிடம் “நன்று. உணவு சிறக்கவேண்டும். ஒரு குறையும் இருக்கலாகாது. அரசகுடியினருக்கான உணவு முன்பு எப்போதுமில்லாததாக அமையவேண்டும்” என்றபின் திரும்பிச்சென்றான். இயல்பாக நின்றதுபோல் தயங்கி “நீ மற்போரிடுவாயா?” என்றான். பீமன் “ஆம், ஆனால் அதில் தேர்ச்சி என ஏதுமில்லை” என்றான். “அல்ல, உன் தோள்கள் பெரியவை… அவை போர் பயின்றவை” என்றான் கீசகன். “கற்று மறந்தவை” என்றான் பீமன். “நாம் ஒருமுறை தோள்கோக்கவேண்டும்…” என்று கீசகன் சொன்னான். “அது என் நற்பேறு” என்றான் பீமன். கீசகன் தலையை அசைத்தபின் வெளியே சென்றான்.

பூர்ணர் “மற்போரிடுவதிலேயே வாழ்கிறார்” என்றார். “பாரதவர்ஷத்தில் பலராமர், துரியோதனர், பீமன் ஆகிய மூவர் மட்டிலுமே அவரை வெல்லும் தகைமை கொண்டவர்கள் என்கிறார்கள் சூதர்கள். இடும்பனும், பகனும், ஜராசந்தனும் நிகரானவர்கள் என்று பேச்சிருந்தது. அவர்கள் பீமனால் கொல்லப்பட்டார்கள்.” பீமன் “இம்மூவரையும் மிக எளிதாக வெல்பவரும் இருப்பர்” என்றான். “மூவரையும் வெல்பவர் எவர்?” என்றார் சங்கதர். “அங்கநாட்டரசன் கர்ணன்…” என்றான் பீமன். சிலகணங்கள் அமைதி நிலவியது. “அவனை சிபிநாட்டு

பால்ஹிகர் வெல்லக்கூடும். அஸ்தினபுரியின் பீஷ்மர் பால்ஹிகரை வென்றவர்” என்றான் பீமன்.

“ஆம்” என்று பெருமூச்சுடன் பூர்ணர் சொன்னார். “பால்ஹிகரை ஒற்றைக்கையால் வென்றார் பலாஹாஸ்வ முனிவர்” என்றான் பீமன். “அது அப்படியே சென்றுகொண்டிருக்கும் போலும்” என்றான் இளைய அடுமனையாளன் ஒருவன். பீமன் “ஆம்” என்று புன்னகைத்தான். “வீரரே, பலாஹாஸ்வரின் மைந்தனே பீமன் என்கிறார்களே, அது உண்மையா?” என்றான். பீமன் “அதை ஒருவரே சொல்லமுடியும். அவர் சொல்லப்போவதில்லை. பிறர் சொல்லெல்லாம் வீணே” என்றான். “ஆம், அதை விடுவோம். பலாஹாஸ்வரை வெல்லக்கூடுபவர் எவர்?” என்றார் சங்கதர்.

பீமன் எண்ணம்சூழ்ந்தபின் “போர் நிகழ்ந்தால் துவாரகையின் இளைய யாதவன்” என்றான். “அவனா? அத்தனை பெரிய தோள்கள் கொண்டவனா?” என்றார் சம்பவர். “அல்ல. ஆனால் அவன் கைகள் அரவைவிட ஏழுமடங்கு விரைவுகொண்டவை” என்றான் பீமன். “சிறுகுழந்தைகள் தங்கள் கைகளுடன் ஒப்புநோக்க மிகப்பெரிய எடைகளை எடுப்பதை கண்டிருக்கிறீர்களா? ஒருவயதுக் குழந்தை செங்கல்லை தூக்குகிறது. என் கையுடன் ஒப்பிட அதற்கு நிகராக வேண்டுமென்றால் நான் ஓர் எருமையை ஒற்றைக்கையால் தூக்கவேண்டும்.” அவர்கள் “ஆம்” என்று வியப்பொலி எழுப்பினர். “ஏனென்றால் குழந்தை விளையாடுகிறது. இளைய யாதவனும் அவ்வாறே, அவன் தீராத விளையாட்டுப்பிள்ளை.”

அவர்கள் பெருமூச்சுவிட்டனர். பூர்ணர் “அவனை ஒரு நோக்கு காண வாய்க்குமோ என எண்ணிக்கொண்டதுண்டு” என்றார். “கண்டால் அவன் காலடியில் விழுந்து விழிநீர் உகுப்பதையே நம்மால் செய்யமுடியும்” என்றார் சங்கதர். “அவன் யார்?

மானுடனேதானா? ஆழிசங்குகதையுடன் அலகிலியில் நிறைந்திருப்பவனே வந்து பிறந்தான் என்கிறார்களே?” என்றார் சம்பவர். “வீரரே, அவரையும் வெல்பவன் உண்டா?” என்றான் இளைஞன். “மூடா, மண்ணில் அவரை எவன் வெல்ல முடியும்?” என்றார் சங்கதர். “வென்றதுண்டு” என்றான் பீமன். அவர்கள் திகைப்புடன் திரும்பினர். “யார்?” என்றார் பூர்ணர்.

“அருகநெறியர்களின் மெய்ப்படிவரான நேமிநாதர். முன்வாழ்வில் அவரை அரிஷ்டநேமி என்றழைத்தனர்” என்று பீமன் சொன்னான். “அது எவ்வண்ணம்?” என்றார் பூர்ணர். “நம்ப முடியவில்லை.” பீமன் “அன்று நான் துவாரகையில் இருந்தேன். அப்போரை என் விழிகளால் கண்டேன்” என்றான். “எப்படி? அந்த வெற்றி நிகழ்ந்தது எவ்வாறு?” என்றார் சங்கதர். “விளையாடுபவன் வெற்றிகொள்வது ஏனென்றால் அப்போது அவன் முற்றிலும் அச்செயலில் இருக்கிறான் என்பதனால்தான். அவனை எதிர்கொண்ட அரிஷ்டநேமியோ முற்றிலும் அச்செயலுக்கு அப்பாலிருந்தார். நமது மெய்யுலகு அவருக்கு கனவென்றிருந்தது. கனவில் நம் ஆற்றல் எல்லையற்றது.”

“பெருந்தோளர் என்று அவரை அருகமுறைமையர் வழிபடுகிறார்கள்” என்றார் சம்பவர். “ஆம், அவர்களின் முழுமெய் உணர்ந்த படிவர்கள் அனைவருமே பெருந்தோளர்கள்தான்” என்றான் பீமன். “ஏனென்றால் உடல்முழுமையே உடலுறுவதன் முழுமை.” அங்கே ஆழ்ந்த அமைதி நிலவியது. சொல்லாடியபடி அவர்கள் விறகுதூண்டி எரிபேணியும் கொதிக்கும் குழம்புகளை கிளறியும் பணியாற்றிக்கொண்டிருந்தனர். “ஆற்றலின் முழுமையைச் சென்றடைந்தார் அருகமெய்யர். அதையே முடிவிலாப் பெருங்கருணை என்கிறார்கள் அவர்கள்” என்றான் பீமன்.

“ஆம், அடுநெறியில் ஒரு சொல் உண்டு. ஆற்றலாகும் உணவு நிறைவடைகிறது. அறிவென்றாகும் உணவு மேன்மையடைகிறது. கருணையென்றாகும் உணவே முழுமைகொள்கிறது” என்றார் பூர்ணர். மூடிதிறந்து முதல்பருப்புக்குழம்பு ஆவி உமிழ்ந்தது. வெந்த கறியின் நறுமணம் எழத்தொடங்கியது. கைகூப்பி “தெய்வங்களே, இங்கு எழுக!” என்றார் பூர்ணர்.

# நீர்க்கோலம் - 30

**29. சுவைத்தருணம்**

பீமன் ஒவ்வொரு அடுகலமாக நடந்து ஒருகணம் நின்று மணம் பெற்று அவற்றின் சுவையை கணித்து தலையாட்டி சரி என்றான். மிகச்சிலவற்றில் மேலும் சற்று அனலெரிய வேண்டும் என்றான். சிலவற்றை சற்று கிளறும்படி கைகாட்டினான். சிலவற்றில் உடனடியாக எரியணைத்து கனலை பின்னிழுக்கும்படி ஆணையிட்டான். ஒரு சொல்லும் எழவில்லை. சொல் அவன் உள்ளை கலைக்குமென்பதுபோல. கனவில் என அவன் முகம் வேறெங்கிருந்தோ உணர்வுகளை பெற்றுக்கொண்டிருந்தது. உடலெங்கும் மெல்லிய மயிர்ப்பு பரவியிருப்பது பிறர் விழிகளுக்கே தெரிந்தது. அஞ்சி ஓடுவதற்கு முந்தைய கணத்திலிருக்கும் புரவிபோல ஒரு விதிர்ப்புக்கு முந்தைய உணர்வுநிலை.

அனைத்துக் கலங்களையும் பார்த்து முடித்து அவன் திரும்பி வந்தான். அவன் உடலிலிருந்து அதுவரை இருந்த ஒரு தேவன் விலகிச்செல்வதை பூர்ணர் கண்டார். நீள்மூச்சுடன் அவன் மீண்டு அவரை நோக்கியபோது விழிகள் நெடுநேரம் நீராடி

எழுந்ததுபோல் சிவந்திருந்தன. புன்னகையுடன் “நன்று! இன்று உணவுகள் அனைத்தும் அமைந்துவிட்டன” என்றான்.

பூர்ணர் புன்னகையுடன் “எப்போதாவது அது அமையாது சென்றிருக்கிறதா, வீரரே?” என்றார். “எண்ணியதை எய்தாமல் இருந்த தருணங்கள் பல. என் உணவு சுவையற்றதென்று எவரும் சொல்லி இதுவரை நான் கேட்டதில்லை. ஆனால் நான் சமைப்பது ஒவ்வொரு முறையும் அதுவரை சென்றிராத ஓர் இடத்தை அடையும் பொருட்டே. இன்று ஒரு கணு மேலேறியிருக்கிறேன்” என்றான் பீமன்.

அப்பாலிருந்த ஒருவன் “இன்னும் சில கணுக்களுக்கு அப்பால் தேவர்கள் குனிந்து நோக்கி ஆவலுடன் நின்றிருக்கிறார்கள். அவர்களின் நாச்சொட்டு கீழே உதிர்கிறது” என்றான். பீமன் புன்னகைத்தபின் “இதில் என் திறன் உள்ளதென்பதை மறுக்கவில்லை. அதைவிட இத்தருணத்தின் ஒருமை உள்ளது. மூத்தவரே, இங்கு நாம் புவியின் பல்வேறு பகுதிகளில் முளைத்தெழுந்து விளைந்து கனிந்த மாறுபட்ட உயிர்ப்பொருட்களிலிருந்து எடுத்தவற்றை ஒன்று கலக்கிறோம். ஒவ்வொன்றும் ஓர் இயல்பு கொண்டது. அவ்வியல்பு ஒவ்வொரு முறையும் மாறுபடுவது. ஒவ்வொரு தருணத்திலும் வளர்ந்து கொண்டிருப்பது. ஆகவே ஒவ்வொரு முறை சமைக்கையிலும் முன்பொருபோதும் இப்புவியில் நிகழ்ந்திராத ஒன்று உருவாகி வருகிறது. பின்பொருமுறையும் நிகழாதபடி எப்போதைக்குமாக மறைந்து போகிறது. சமையல் இப்புவி நிகழும் அதே விந்தையை தானும் கொண்டுள்ளது. ஒருமுறை உருவான சுவை மீண்டும் இங்கு எழுவதேயில்லை” என்றான்.

வெளியே இருந்த சம்பவர் உள்ளே வந்து “அடுமனை பொலிந்துவிட்டதா? வெளியே உணவுதேடி மக்கள் வந்து

குழுமத்தொடங்கிவிட்டனர்” என்றார். குரல் தாழ்த்தி “விந்தை என்னவென்றால் இம்முறை இளவரசர் முன்னரே வந்துவிட்டார்” என்றார். பூர்ணர் “என்ன இது? உச்சிப்பொழுது உணவுக்கு இன்னும் இரு நாழிகை இருக்கிறதே?” என்றார். “ஆம், ஆனால் அடுமனைப்புகை அனைவரையும் அறைகூவிவிட்டது. நமது பதாகைபோல் இக்கூரைக்கு மேல் அது நின்றிருக்கிறது” என்றார் சம்பவர். “தாழ்வில்லை. முதற்பந்தியை அறிவித்துவிடலாம். நம்மவர்கள் பந்தி விளம்ப சித்தமாக இருக்கிறார்களா என்று மட்டும் ஒருமுறை பார்த்துவிடுங்கள்” என்றான் பீமன். பூர்ணர் “இங்கு பந்தி விளம்புபவர்கள் வேறு. சமைப்பவர்கள் விளம்பலாகாது என்பது நளன் அளித்த நெறிகளில் ஒன்று” என்றார். “ஏன்?” என்று பீமன் கேட்டான்.

“சமைப்பவன் தான் அடைந்துவிட்டேன் என்னும் பெருமிதத்திலிருப்பான். உண்பவன் அதை அறியவேண்டுமென்பதில்லை. அவன் தன் பசியாலும் சுவையாலும் இயக்கப்படுபவன். அவை ஆளுக்கொரு வகை. தருணத்திற்கொரு தன்மை. ஒருவேளை தன் நுண்மைகளை உணராது உண்பவனை நோக்கி சமைப்பவன் சினம் கொள்ளக்கூடும். அச்சினம் தகுதியானதே எனினும் விளம்புகையில் முகம் கோண எவருக்கும் உரிமையில்லை” என்றார்.

சூரர் “அதைவிட ஒன்று தோன்றுகிறது. சமைப்பவர் உணவுப்பொருட்களில் ஏதேனும் சிலவற்றை அவரே சமைத்திருப்பார். அனைத்தையும் சமைப்பவர் எவருமில்லை. பால்ஹிக பெருவீரரும் கூட இங்கு சிலவற்றை சமைக்கவில்லை. தான் சமைத்தவற்றுக்கு முன்கை அளிக்க

பரிமாறுபவர் முயலக்கூடும். பரிமாறுபவன் அனைத்தையும் தான் சமைத்ததென்றே எண்ணி பரிமாற முடியும்” என்றார். “அவரது சுவை அங்கே வெளிப்படத்தான் செய்யும். ஆனால் அது பரிவென்று நிகழ்ந்தால் நன்றே” என்றார் பூர்ணர்.

சம்பவர் பூர்ணரிடம் “மூத்தவரே, விளம்புபவர்கள் நீராடி வந்துவிட்டனர். பந்தி அமர்த்தலாம் என்று நான் சென்று சொல்கிறேன். தாங்கள் ஒருமுறை பந்திக்கூடத்தை எட்டிப்பார்த்துவிடுங்கள்” என்றார். பூர்ணர் கைநீட்ட சூரர் அவர் கைபற்றி மெல்ல எழுப்பினார். முதிய எலும்புகள் நீர்த்துளிகள் உடைவதுபோல மெல்ல ஓசையிட அவர் நடந்து சென்று சிறு சாளரத்தினூடாக பந்தி மண்டபத்தை பார்த்தார். பதினாறு நீண்ட நிரைகளாக மணைப்பலகைகள் இடப்பட்டு இலைகளும் தொன்னைகளும் விரிக்கப்பட்டிருந்தன.

“முதலமர்வில் ஆயிரம் பேர். பத்து அமர்வுகள் தேவைப்படும்” என்றார் சம்பவர். “ஆம், ஒருவேளை இந்நகரில் இதுவரை அளிக்கப்பட்ட பெருவிருந்தாக இருக்கக்கூடும்” என்றார் சூரர். “நீர் சென்று ஊணறிவிப்பை எழுப்பும்” என்று பூர்ணர் சொன்னார். “தொன்னைகளில் நீரும் எளிய தொடுகறிகளும் மட்டும் முதலில் பரிமாறப்பட்டால் போதும். இம்முறை பொரித்தவற்றை ஊணோர் அமர்ந்தபின் வைக்கலாம்” என்றார்.

முதுமையில் ஒடிந்ததுபோல வளைந்த இடையைப்பற்றி நிமிர்த்தியபடி மெல்ல அவர் திரும்பி வந்தபோது கொல்லையில் நின்றிருந்த அத்திமரத்தின் கிளையினூடாக முதிர்ந்த பெரிய குரங்கொன்று இறங்கி வருவதை பார்த்தார். ஒருகணம் திகைத்து அதை நோக்கி நின்றபின் வியப்பொலி எழுப்பி பின்னால் வந்தார். சூரர் “என்ன? என்ன?” என்றார். “குரங்கு” என்றார் பூர்ணர். “குரங்கா? இங்கா?” என சூரர்

வேறெங்கோ பார்த்தார். “ஆம், குரங்கு. இதுவரை இங்கு குரங்குகள் வந்ததே இல்லையே” என்றார் சம்பவர். அச்சத்துடன் “பெருங்குரங்கு” என்ற சிருங்கர் “அதோ பிறிதொன்று” என்றார்.

இடையில் சிவந்த முடிகொண்ட தளிர்மகவை அணைத்தபடி முலைக்கொத்து வெளுத்துத் தொங்கிய பெருத்த அன்னைக்குரங்கொன்று இறங்கிவந்தது. அதற்குப் பின்னால் மேலும் ஒரு குட்டி சிலிர்த்த மென்தலையும் சிவந்த நீர்த்துளி விழிகளும் ஆவலுடன் நெளியும் அழகிய நீண்ட வாலுமாக வந்தது. சூரர் உள்ளே நோக்கி “ஒரு குரங்குக் குடும்பம்! எப்படி வந்ததென்று தெரியவில்லை” என்றார்.

பீமன் உள்ளிருந்து பெரிய மரத்தாலமொன்றை இரு கைகளாலும் தூக்கிக்கொண்டு வெளியே வந்தான். அங்கு சமைக்கப்பட்ட அனைத்து உணவுகளும் அதில் சிறிது பரிமாறப்பட்டிருந்தன. அப்பமும் அன்னமும் காய்களும் கனிகளும் மிகுதியாக இருந்தன. “குரங்குக்கா?” என்றார் பூர்ணர். “ஆம், இது என் வழக்கம்” என்று பீமன் சொன்னான். “முதல் உணவை தெய்வங்களுக்கு படைப்பதுதானே முறை?” என்றார் பூர்ணர். “நான் குரங்குகளை தெய்வமென எண்ணுபவன்” என்றபடி பீமன் பணிந்து அவ்வுணவை வைத்தான்.

“முன்னரே எடுத்து ஆறவைத்திருந்தீர்களா?” என்றார் சூரர். “ஆம்” என்றான் பீமன். “இவை வருமென்று உங்களுக்கு எப்படி தெரியும்?” என்று பூர்ணர் கேட்டார். அவன் திரும்பி “இதுவரை ஒருமுறையேனும் வராமல் இருந்ததில்லை” என்றான். இயல்பாக அவன் விழிகளை சந்தித்த பூர்ணர் மெல்லிய சிலிர்ப்பொன்றை அடைந்து “தெய்வங்களே” என்றார். அறியாது கைகூப்பி “தாங்களா?” என்று முணுமுணுத்தார். பீமன் விழிகளை திருப்பிக்கொண்டான். “என்ன சொல்கிறீர்?” என்றார்

சூரர். “ஒன்றுமில்லை” என்றார் பூர்ணர். கூப்பிய கைகள் நடுங்கிக்கொண்டிருக்க கால் தளர்ந்து கைதுழாவி சுவரைத் தொட்டு அப்படியே கால் மடித்து நிலத்தில் அமர்ந்தார்.

தந்தைக்குரங்கு உணவை நோக்கியபின் குனிந்து மோப்பம் பிடித்தது. பீமனை நோக்கியபோது அதன் கண்கள் மின்னி மின்னி மூடித்திறந்தன. பின்னர் அது அன்னைக்குரங்கை நோக்கி கைகாட்ட அன்னை அவ்வுணவுகளனைத்தையும் மெல்ல தொட்டு நோக்கி இறுதியாக இருந்த இன்சோறை ஒரு பிடி அள்ளி தன் வாயிலிட்டது. சுவையை உறுதி செய்த பின் பிறிதொரு வாயள்ளி தன் குட்டியின் வாயில் வைக்கப் போனது. அதற்குள் குட்டி பாய்ந்து அன்னையின் தோள்மேல் கால் வைத்து எம்பி அதன் வாயை இரு கைகளாலும் பற்றித் திறந்து அன்னை தன்வாய்க்குள் மென்று கொண்டிருந்த இன்சோறை தன் சிறுகைகளால் தோண்டி எடுத்து தன் வாயிலிட்டு சப்பி சுவையில் முகம் விரிய கண் சிமிட்டி வாலை நெளித்தது.

அன்னை அதன் தலையை மெல்ல வருடியபின் தான் அள்ளிய உணவை அதற்கு ஊட்டியது. அவ்வுணவை இரு கைகளாலும் அன்னையின் கையைப்பற்றியபடி குனிந்து உண்டு இரு கடைவாய்களிலும் சிதற துப்பி ர்ர் என்றது குட்டி. பின்னர் கீழே பாய்ந்து உணவுக்கு முன் அமர்ந்து இரு கைகளால் இருவேறு உணவுகளை அள்ளி எடுத்தது. மாறி மாறி வாயில் வைத்தபின் ரீக் என ஒலி எழுப்பி அதை உதறிவிட்டு அன்னை மடியில் தாவி ஏறி சூழ நின்றவர்களை முறைத்து நோக்கி சிறிய வெண்பற்களைக் காட்டியது. சங்குபுஷ்பம் போன்ற செவி ஒளி ஊடுருவ தெரிந்தது. கையை விரித்து சிறிய நாக்கை நீட்டி

நக்கியபின் அன்னையை தழுவிக்கொண்டு ஏதோ சொன்னது. அன்னை முனகலாக மறுமொழி உரைத்தது.

தந்தையின் அருகே சென்ற மூத்த மைந்தன் அதன் தோளை ஒட்டி நின்று உணவை கைநீட்டி எடுக்க முயன்றது. தந்தை இன்னுணவை அள்ளி அதன் கைகளில் வைக்க அது தன் வாய்க்குள் கொண்டு போவதற்குள் சிறுகுட்டி பாய்ந்து அந்தக் கையைப்பற்றி இழுத்து மலர்த்தி அதிலிருந்ததை தான் உண்ண முயன்றது. பெரிய குட்டி கிரீச் என்ற ஒலி எழுப்பி அதை உந்திவிட்டது. அன்னை சிறுகுட்டியின் வாலைப்பற்றி இழுத்து தன் மடியில் அமரவைத்து மீண்டும் அள்ளி ஊட்டியது. மூத்தவன் மறுபக்கம் வந்து தந்தையின் தொடை மேலேறி அமர்ந்தபின் உணவை எடுத்து இரு கைகளாலும் வாயிலிட்டு உண்ணத்தொடங்கியது. தந்தை அதன் பின்னரே பெரிய கவளம் ஒன்றை எடுத்து உண்ணலாயிற்று. சுவையில் அதன் முகம் மலர பீமனை நோக்கி ர்ர்ர் என்றது.

அடுமனையாளர் அனைவரும் வெளியே வந்து குரங்குகள் உண்பதை பார்த்து நின்றனர். எவரோ “இவை இங்கு இதற்குமுன் வந்ததே இல்லை” என்றார். “அடுமனைப்புகையை மணம் கொண்டிருக்கின்றன” என்றார் பிறிதொருவர். “இனிய குடும்பம்” என்று இளைஞனொருவன் சொன்னான். “சிவபார்வதி எழுந்தருளியதுபோல.” குரங்குகள் சுவைத்து தலையசைத்து மென்றன. அவற்றின் வால்நெளிவில் சுவை தெரிந்தது. சுவைக்கென அவ்வப்போது நிறுத்தி விழிமூடி மயங்கி பின் மீண்டும் உண்டன.

குட்டிகள் தாவி தாலத்தின் வெவ்வேறு பகுதிகளில் அமர்ந்து கைகளால் அள்ளி வாயிலிட்டு மென்றும் இரு கைகளையும் ஊன்றி வாயால் கவ்வி உறிஞ்சியும் உண்டன. சிறிய குட்டி

ஆர்வமிழந்து உணவைக்கடந்து தாவி வந்து பீமனைப்பார்த்து எழுந்து நின்றது. பீமன் அதை நோக்கி புன்னகைத்ததும் க்ரீச் என்ற ஒலியெழுப்பி துள்ளி திரும்பிச் சென்று தன் அன்னையின் மடியில் அமர்ந்து அவனை பார்த்தது. இருமுறை கண்களை சிமிட்டியபின் திரும்பி அன்னையின் முலைக்கண்ணை தன் வாயில் வைத்து சப்பியது. 'நான் சின்னக்குழந்தை' என்று அது பீமனிடம் சொல்வதுபோலிருந்தது.

முலையில் பால் ஏதும் வரவில்லை என தெரிந்தது. ஓரக்கண்ணால் பீமனையே நோக்கிக்கொண்டு சப்பியபின் மீண்டும் இறங்கி வந்து ஒரு அப்பத்தை எடுத்து நுனியை கரம்பி உண்டது. மீண்டும் அருகே வந்து பீமனைப் பார்த்தபின் எழுந்து நின்று அப்பத்தை அவனுக்காக நீட்டியது. அவன் கைநீட்டியதும் அப்படியே போட்டுவிட்டு திரும்ப ஓடி அன்னை மடியில் ஏறி அமர்ந்து அன்னையின் முகத்தைப் பற்றி திருப்பி அதனிடம் ஏதோ சொன்னது. அன்னை பீமனைப் பார்த்து பற்களைக் காட்டியபின் மீண்டும் அப்பம் ஒன்றை எடுத்து தின்னத் துவங்கியது.

"அவர்கள் தங்களை நன்கறிந்திருக்கிறார்கள், வீரரே" என்றார் சூரர். பீமன் "ஆம்" என்றான். "புலரியில் நீங்கள் அனல் எழுப்பியபோது மென்காற்றென வந்ததும் இவர்களே என்றொரு எண்ணம் எனக்கெழுகிறது" என்றார் சங்கதர். பீமன் அதை கேட்டதாகத் தோன்றவில்லை. ஊண்மணியின் ஓசை முழங்கத் தொடங்கியது. கூடி நின்ற மக்களிடமிருந்து எழுந்த முழக்கம் பரவி நெடுந்தொலைவுக்குச் செல்வது தெரிந்தது.

சிருங்கர் "அமரத் தொடங்குகிறார்கள்" என்றார். "இங்குள்ள முறைப்படி பரிமாறுங்கள்" என்று பீமன் சொன்னான். உணவுக்கான அழைப்புகள் சிறு கொம்பொலிகளாக எழுந்தன.

அவை ஒவ்வொரு குலத்தையும் குடியையும் முறைப்படி தனித்தனியாக அழைத்தன. உணவு சமைக்கப்பட்டு எடுத்து வைக்கப்பட்ட கலவறையின் பதினாறு வாயில்களும் திறந்தன. பரிமாறுபவர்களின் தலைவனான சுப்ரதன் உள்ளே வந்து கைகூப்பி அன்னத்தை வணங்கும் அவர்களின் குலவாழ்த்தை சொன்னான். பின்னர் ஒரு பிடி அன்னத்தை எடுத்து உருட்டி பிள்ளையாராக ஆக்கி ஈசானமூலையில் இலைவிரித்து அதில் நிறுவினான். இன்னொரு பிடி அன்னத்தை உருட்டி அதற்குப் படைத்து வணங்கினான். "எழுக... அன்னம் நாம் அளிக்க அளிக்க பெருகுக!" என ஆணையிட்டான்.

சிறு சாளரத்தினூடாக அப்பால் உணவுக்கூடத்தில் பந்தி நிரைகள் நிறைந்து கொண்டிருப்பதை பீமன் நோக்கிக்கொண்டிருந்தான். மடை திறந்து நீர் புகுந்து கழனி நிறைவதுபோல் மக்கள் வந்து இறுதி மணையிலிருந்து அமர்ந்து கூடத்தை முழுமித்தனர். அவர்கள் முன் பரிமாறப்பட்டிருந்த சிறு தொடுகறிகளைக் கண்டு ஒவ்வொன்றையும் அது என்ன என்று விழிகளால் தொட்டறிந்தனர். ஒருவரோடொருவர் சிறுசொற்களில் பேசி பரிமாறுபவர்கள் வரும் திசையை அவ்வப்போது ஓரக்கண்ணால் நோக்கி காத்திருந்தனர்.

ஒற்றைச் சகடங்கள் கொண்ட சிறிய பித்தளை வண்டிகளில் உணவுக்கலங்களை ஏற்றி வைத்து ஒருவர் தள்ளி வர பிறிதொருவர் அதை பற்றிக்கொண்டு மறு கையால் அகப்பையை ஏந்தி இலைகள்தோறும் பரிமாறிக்கொண்டு வந்தார். கொட்டாங்கச்சிகளாலும் பனங்கொட்டைகளாலும் சுரைக்குடுவைகளாலும் செய்யப்பட்ட புதிய அகப்பைகள்.

ஒவ்வொரு உணவுக்கும் ஒவ்வொரு வகை அளவும் அமைப்பும் கொண்டவை.

உணவு பரிமாறி முடித்ததும் அவர்கள் அனைவரும் விலக குறைவனவற்றை நிறைக்கும் அடுத்த நிரை விளம்பர்கள் சிறு கலங்களில் உணவுடன் தோன்றினர். ஒவ்வொரு கறியும் அப்பமும் கனியும் முறையே பரிமாறப்பட இலைநிரை தூரிகை வண்ணம் தொட்டுத் தொட்டு வைக்க விரிந்தெழும் ஓவியப்பரப்பென தோற்றம் மாறிக்கொண்டே இருந்தது.

பரிமாறி முடிந்ததும் மூத்த விளம்பன் கைகளைக்கூப்பி அன்ன சூக்தத்தின் முதல் ஏழு வரிகளை உரக்க சொன்னான். "ஓம் ஓம் ஓம்" என்று அமர்ந்திருந்தவர்கள் ஒலியெழுப்பினார்கள். பின்னர் பரபரப்பின்றி உண்ணலாயினர். முறைப்படி முதலில் உப்பை தொட்டு நாவில் வைத்தனர். பின்னர் கசப்பையும் அதன் பின் இனிப்பையும் நாவுணர்ந்தபின் அப்பங்களையும் பருப்பையும் குழைத்து உண்ணத்தொடங்கினர். மெல்லும் ஓசைகள் காட்டுக்கிளைகளிலிருந்து பனித்துளிகள் சருகுமேல் உதிரும் ஒலிபோல கேட்டன.

ஒவ்வொரு பந்தியமர்வாக மாற்றமிலாது நிகழ்ந்து கொண்டிருந்தது. மீண்டும் அதே உணவுப்பந்தி அதே முகங்கள் என தோன்றியது. ஆனால் ஒவ்வொரு பந்தியும் ஒருவகையில் உண்டது. அந்தணர் பந்திகளில் மெல்லிய சலிப்போசையும் ஒருவரோடொருவர் நகையாடிக்கொண்ட பேச்சும் கலந்தொலித்தது. வைசியர் பொருள் நிறுத்து விற்பவர்கள் போலவும் அரும்பொருள் எதையோ விலை பேசி வாங்குபவர்கள் போலவும் முகம் கொண்டிருந்தனர். ஷத்ரியர் பிறிதெங்கோ உளம் நிலைத்திருப்பவர்கள் போன்ற அமைதியுடன் உண்டனர். வேளிர் குடிகளும் ஆயர்களும்

கைவினைஞர்களும் சிரித்தும் சுவைத்தும் சுவைகுறித்து பிறிதொருவரிடம் சொல்லியும் உணவை களியாட்டென மாற்றிக்கொண்டனர்.

ஒவ்வொரு முகமும் ஒருவகையில் சுவையை அறிந்தது. முற்றிலும் சுவைக்கு தன்னை அளித்தவர்கள் இளங்குழவிகள் மட்டுமே. சுவையை நினைவென மீட்டினர் முதியோர். சுவைப்பரப்பில் தன் நாவுக்குப் பிடித்த சுவையை மீண்டும் மீண்டும் உண்டனர் இளையோர். பெண்கள் இனிப்பை நாட காரத்தை நோக்கி நீண்டன ஆண்களின் கைகள். விழிகள் மேலேறி உடல் சுவையில் மெல்ல தளர ஒருவர். விழி சுழல தனக்குத்தானே ஆமென தலையாட்டும் ஒருவர். விரல்கள் வாயில் பட நா வந்து தொட்டுச்செல்ல தான் என மட்டுமே அமர்ந்து உண்ணும் ஒருவர்.

உண்ணும் ஒவ்வொரு சுவையையும் தன்னருகே அமர்ந்திருக்கும் சுற்றத்திற்கு அளிக்கவேண்டும் என்று இருபுறமும் திரும்பி எடுத்தளித்தும் அள்ளி ஊட்டியும் உண்டனர் அன்னையர் சிலர். ஒவ்வொரு உணவை உண்ணும்போதும் அடுத்த உணவின் சுவையை எண்ணி தாவிக்கொண்டே இருந்தனர் சிலர். சுவையை உணர பொறுமையின்றி அனைத்தையும் மாறிமாறி எடுத்தனர் சிலர்.

பீமன் இறுதிநிரை உண்டெழுவதுவரை அச்சாளரத்திலிருந்து அசையவில்லை. அவனருகே வந்து நின்ற சூரர் "மூத்தவர் தங்களை அழைக்கிறார், வீரரே" என்றார். "ஆம்" என்று விழித்துக்கொண்டு கைதூக்கி சோம்பல் முறித்தபடி அவன் பூர்ணரை நோக்கி வந்தான். அடுமனையின் பின்புறத்திலிருந்த தாழ்ந்த ஈச்சையோலை கூரையிடப்பட்ட சிறு கொட்டகையில் இனிய காற்று வீசிக்கொண்டிருக்க சிறுபீடத்தில் சாய்ந்து

அமர்ந்து சுரைக் குவளையில் அன்னநீர் அருந்திக்கொண்டிருந்த பூர்ணர் “வருக, வீரரே!” என்றார்.

பீமன் “பந்தி முடியவிருக்கிறது. இனி அரண்மனை ஏவலர் மட்டுமே” என்றான். “ஆம், அவர்கள் நல்லுணவுக்கு சலித்தவர்கள். தாங்கள் உண்பதை ஒருபொருட்டென எண்ணவில்லை என தங்களுக்கே காட்டிக்கொள்ள விழைபவர்கள்” என்றார் சங்கதர். “தாங்கள் சொன்னது மெய், வீரரே. பெருமளவில் சமைக்கையில் ஒவ்வொன்றும் பிறிதொன்றாகின்றன” என்றார் பூர்ணர். சம்பவர் “அவ்வேறுபாட்டை நானும் உணர்ந்தேன். அதை எங்ஙனம் சொல்வதென்று தெரியவில்லை” என்றார். பூர்ணர் பற்கள் உதிர்ந்த வாயைத் திறந்து சிறு குழவிபோல் முகம் இழுபட்டு சுருங்க சிரித்தபடி “நான் சொல்கிறேன்” என்றார். “மானுடனால் காதலிக்கப்படும் கன்னிக்கும் தெய்வத்தால் காதலிக்கப்படும் கன்னிக்கும் உள்ள வேறுபாடு.”

“ஆம், மெய்” என்று சூரர் நகைக்க சூழ்ந்திருந்த அடுமனையாளர்கள் சேர்ந்துகொண்டனர். சிறிய நாணத்துடன் பீமன் “அனைத்தும் ஆசிரியர்களின் அருள்” என்று சொன்னான். “உமது ஆசிரியர் யார்?” என்று பூர்ணர் கேட்டார். “இளமையில் அடுதொழில் பயிற்றுவித்தவர் கச்சர். உணவென்பது வேள்வியென்றும் சமைப்பது யோகமென்றும் எனக்கு கற்பித்தவர் மந்தரர்” என்று பீமன் சொன்னான். “நூற்றியிருபதாண்டுகாலம் வாழ்ந்து மறைந்தவர். என் நோக்கில் மாமுனிவர் என்பவர் அவரே. நான் ஞானநோக்கில் அவருடைய குருமுறையில் வந்தவன்.”

“ஆம், அவர் முழுமையடைந்திருப்பார். அத்திசை நோக்கி வணங்குகிறேன்” என்றார் பூர்ணர். அவர் திரும்பிப்பார்க்க

அன்னநீரை மேலும் சற்று ஊற்றினான் இளைய அடுமனையாளன். “தாங்கள் உணவருந்தலாமே? பொழுது பிந்திவிட்டதே?” என்று பீமன் சொன்னான். “அனைத்துப் பந்தியும் முடிந்த பிறகன்றி அடுமனையாளர் எவரும் இங்கு உணவருந்தும் வழக்கம் இல்லை” என்றார் பூர்ணர். “நளன் வகுத்த நெறிகளில் இதுவும் ஒன்று. உணவருந்திவிட்டால் உணவிலிருந்து நாம் விலகிவிடுவோம். விலக்கம் மெல்லிய வெறுப்பையும் உருவாக்கிவிடும். அடுமனையாளருக்கும் அதில் விலக்கில்லை. உணவு அனைவருக்கும் சென்றாகவேண்டும் என்பதற்காக விலங்குகளின் உள்ளத்தை அவ்வாறு அமைத்திருக்கின்றன தெய்வங்கள். இன்று இத்தனை பேச்சுக்கு நடுவிலும் நம் அனைவர் செவிகளும் அப்பால் ஒலிக்கும் பந்தியில்தான் உள்ளன. நாம் உணவுண்டுவிட்டிருந்தால் அவ்வினிய ஓசை ஒவ்வாதொலிக்கும்.”

புன்னகையுடன் மெல்ல அசைந்தமர்ந்து “ஆனால் முதுமை பசி தாள முடியாமல் செய்கிறது. சற்றே அன்னம் கலந்த நீரை சிறிதளவாக அருந்திக்கொண்டிருந்தால் என்னால் காத்திருக்க முடியும்” என்றார் பூர்ணர். “அமர்க!” என்றார் சிருங்கர். பீமன் பிறிதொரு பீடத்தில் அமர்ந்து கால்களை நீட்டிக்கொண்டான். “புலரியில் அடுப்பு மூட்டியபோது தாங்கள் நிற்கத்தொடங்கினீர்கள். இப்போதுதான் அமர்கிறீர்கள்” என்றார் சூரர். “அடுமனையில் அமர்வது வேள்வியில் நிற்பதற்கு நிகர் என்பார் எனது ஆசிரியர்” என்றான் பீமன். “ஆம், மிகச் சரியான சொல்லாட்சி” என்றார் சிருங்கர்.

பூர்ணர் “ஒன்று நோக்கியிருக்கிறீர்களா? எத்துறையிலாயினும் அதில் பெருந்திறன் கொண்டவர்கள் சரியான மொழியாளுமையும் கொண்டவர்களாகவே இருப்பார்கள்.

தங்கள் அகம் அடைவதையும் கை வனைவதையும் மொழியில் காட்ட அவர்களால் இயலும்” என்றார். பீமன் “தங்கள் செயலை அவர்கள் உள்ளத்தால் கூர்ந்து நோக்கிக்கொண்டிருப்பார்கள். தங்களுக்கே என பல நூறு முறை வகுத்துரைத்திருப்பார்கள்” என்றான்.

சூரர் “இங்கிருந்து அதற்குள் இளவரசருக்கு செய்தி போயிருக்கிறது. முதலுணவு குரங்குகளுக்கு வைக்கப்பட்டதென்று” என்றார். “குரங்கு உண்ட மிச்சிலை இளவரசருக்கு அளித்துவிட்டார்கள் என்று அமைச்சர் கலிகர் தூண்டிப்பேசினார். கீசகர் சினந்தார். அச்சினத்தை வெளிக்காட்டினால் அடுமனையில் சமைத்த அனைத்து உணவுகளும் வீணாகிவிடும் என்று அமைச்சர் சொன்னதனால் அடங்கினார். இவர்கள் அனைவரும் உண்டு முடித்த பின் உங்களை அழைத்து ஏன் என்று கேட்கக்கூடும்.”

பீமன் “நன்று! நானே சென்று அதை சொல்கிறேன்” என்றான். “பந்தியிலும் படுகளத்திலும் மட்டுமே மானுடர் உயிர் உச்சம்கொள்ள மோதிக்கொள்கிறார்கள்” என்று பூர்ணர் சொன்னார். “புரிந்துகொள்ள முடியாததொரு விந்தை இது. இங்கல்ல, பாரதவர்ஷம் முழுக்கவே பெரும் பூசல்கள் உணவைச் சான்றாக்கியே நிகழ்ந்துள்ளன. உண்மையில் மானுடர் உளம் நெகிழ்ந்திருக்கிறார்கள். உண்டு நிறைந்தவன் உளமுவந்து பிறருக்கு உணவளிப்பான். ஆனால் ஏன் குருதிப்போர்கள் உணவுக்கூடத்தில் நிகழ்கின்றன? எந்த தெய்வங்கள் இங்கு வந்திறங்குகின்றன?”

பீமன் “அது இயல்பே. போர்க்களத்திலும் உணவுக்களத்திலும்தான் மானுடர் விலங்குகள் போலிருக்கிறார்கள். கற்றவையும் பயின்றவையும் விலக

தாங்கள் எதுவோ அதுவாக எஞ்சுகிறார்கள்” என்றான். “உண்மை” என்றார் பூர்ணர். “உணவுக்களத்தில் சிலசமயம் உணவு எஞ்சாதுபோய்விடும் என பேரரசர்கள் பதறுவதை நுட்பமாக உணர்ந்திருக்கிறேன்.” சூரர் நகைத்து “ஒருவருக்கு உணவளித்து இன்னொருவருக்கு அளிக்கையில் அதை தன் உணவுடன் ஓரக்கண்ணால் நோக்கி ஒப்பிடாதவர்களாக மிகச் சிலரையே கண்டிருக்கிறேன்” என்றார்.

அடுமனையாளர்கள் எழுந்து நின்ற அசைவுகளைக் கண்டு பீமன் திரும்பியபோது வாயிலில் கீசகன் வந்து நிற்பதை கண்டான். அவன் உடலால் வாயில் முழுமையாக மூடி அறை இருண்டது. அவனுக்குப் பின்னால் அமைச்சர் கலிகரின் தலை தெரிந்தது. பீமன் எழுந்து கைகட்டி பணிந்து நிற்க சூரரால் எழுப்பப்பட்ட பூர்ணர் “வணங்குகிறேன் இளவரசே, அடுமனையாளர் கொட்டிலுக்கு தங்கள் வருகை நிகழும் பேறு பெற்றோம். என்றும் இத்தருணத்தை எண்ணியிருப்போம்” என்றார். கீசகன் பீமனையே கூர்ந்து நோக்கிக்கொண்டிருந்தான். பீமன் அவன் விழிகளை சந்திக்கவில்லை.

“நீர்தான் இன்று சமைத்தீரோ?” என்றான் கீசகன். “ஆம், எனக்கு அவ்வாய்ப்பு அளிக்கப்பட்டது.” கீசகன் “நல்லுணவு” என்றான். பீமன் “என் நல்லூழ் இச்சொற்களை நான் கேட்க அமைந்தது” என்றான். “முதலுணவை குரங்குகளுக்குப் படைத்தீர் என அறிந்தேன்” என்றான் கீசகன். “ஆம், என் குலதெய்வம் காற்று வடிவான குரங்கு. நான் அவற்றுக்குப் படைக்காமல் எதையும் மானுடருக்கு அளித்ததில்லை.” சினத்துடன் “எதிர்த்தா பேசுகிறீர்?” என்றான். அமைச்சர் கலிகர் கீசகனுக்குப் பின்னால் நின்று “குரங்கு எச்சிலை உண்ண குறைந்துவிடவில்லை நிஷாத இளவரசர்” என்றார்.

“கன்றின் எச்சிலும் ஈயின் எச்சிலும் அமுதென கருதப்படுகின்றன” என்றான் பீமன். “வீண்சொல் எடுக்கிறாயா? என்னுடன் விளையாடுகிறாயா?” என்றான் கீசகன். இரு கைகளையும் சேர்த்து அவன் விசையுடன் அறைந்த ஓசை அங்கிருந்த அனைவரையும் திடுக்கிடச் செய்தது. நண்டுக்கொடுக்குகள்போல கைகளை விரித்தபடி பீமனை அணுகி “கிழித்து இரு துண்டுகளாக போட்டுவிடுவேன்…” என்றான்.

அஞ்சாமல் ஏறிட்டு நோக்கிய பீமன் “அதை பிறிதொரு தருணத்தில் செய்வோம், இளவரசே. நான் சமைத்த உணவு அவ்வுடலில் இப்போது ஓடுகிறது” என்றான். சிலகணங்கள் நோக்கு நிலைக்க அசைவிழந்த கீசகன் கைகள் மெல்ல தளர்ந்து தாழ “ஆம்” என்றான். பின்னர் முகம் மலர்ந்து “நல்லுணவு… நான் இப்படியொரு சுவையுணவை இதுவரை உண்டதில்லை” என்றான். இரு கைகளையும் கோத்து தசைகள் இறுகிநெளிய முறுக்கியபடி “அச்சுவைக்காக நான் உமக்கு கடன்பட்டிருக்கிறேன். உண்கையில் நான் மகிழ்ந்த அத்தருணங்கள் என்னுள் இருக்கையில் நான் உம்மை வெறுக்கமுடியாது” என்றான்.

“அது என் குருவருள்” என்றான் பீமன். “அருகே வருக! நாம் தோள்தழுவிக்கொள்வோம்…” என்றான் கீசகன். பீமன் “நான் சூதன்” என்றான். “நீர் மல்லர். அடுதொழில் வல்லுநர். அதையன்றி வேறெதையும் இத்தருணத்தில் நான் உணரவில்லை… வருக!” என்றான் கீசகன். பீமன் அருகே செல்ல அவன் தன் கைகளை விரித்து பீமனை அணைத்துக்கொண்டான். பீமனும் தயக்கம் கொண்ட கைகளுடன் அவனை தழுவினான்.

“நாம் மீண்டும் தோள்தழுவ வேண்டும். மற்களத்தில்” என்றான் கீசகன். “நீர் மாமல்லர். உம் தோள்களே சொல்கின்றன.” பீமன் “ஆம், அது நிகழ்க!” என்றான். “இப்புவியில் நாம் இருவரும் ஒருவரை ஒருவர் அறிவதுபோல எவரும் அறியமுடியாது” என்றான் கீசகன். “நாம் வாழும் உலகங்கள் வேறு. நம்மை ஆள்வன வேறு தெய்வங்கள்.” பீமன் புன்னகைத்து “ஆம்” என்றான். “எனக்கு உகந்த சுவையுணவை நீர் அனுப்பி வையும். எனக்கு எது சுவை என நீர் அன்றி எவரும் உணர முடியாது. நான்கூட” என்றான் கீசகன். “பொழுதமைகையில் நீர் என் அரண்மனைக்கு வரலாம். நாம் களிப்போர் செய்யலாம்.” பீமன் “வருகிறேன்” என்றான்.

கீசகன் பூர்ணரிடம் “இவர் தெரிவுசெய்திருப்பது அடுமனை. ஆகவே அடுமனையிலிருக்கிறார். ஆனால் இங்கிருப்பவர் என் உடன்பிறந்தார் என்று கொள்க! இவர் சொற்கள் என் ஆணைகள் என்றே திகழ்க!” என்றான். பூர்ணர் “அவ்வாறே” என்றார். கீசகன் பீமனிடம் “மீண்டும் சுவையே என்னை உவகை கொள்ளச்செய்கிறது. நா அறிந்த சுவையை உள்ளம் பெருக்கிக்கொண்டு மீண்டும் மீண்டும் சுவைப்பதை இப்போதுதான் அறிகிறேன். உம் கைகளில் குடிகொள்ளும் தெய்வங்களை வணங்குகிறேன்” என்று பீமனின் கைகளை எடுத்து தன் தலையில் வைத்தான்.

அவன் பின்னால் நின்றிருந்த அமைச்சர் கலிகர் “செல்வோம் அரசே, அவைப் பணிகள் பல உள்ளன” என்றார். “ஆம். மீண்டும் பார்ப்போம், வலவரே” என்ற பின் கீசகன் திரும்பிச்சென்றான். அவன் வெளியேறியதுமே அடுமனையாளர்கள் உவகைக் குரலுடன் பீமனை சூழ்ந்துகொண்டனர். சங்கதர் பீமனின் கைகளை பற்றிக்கொண்டு “செங்கோலுக்கும் மேல் செல்லும்

அடுமனைக்கரண்டி என இன்று கண்டேன், வீரரே” என்றார். “அதற்கு அது வேள்விக்கரண்டி என்றாகவேண்டும்” என்றார் பூர்ணர்.

# நீர்க்கோலம் - 31

## 30. முதற்களம்

✿“தாங்கள் அறிந்திருப்பீர்கள், நெடுநாட்களுக்கு முன் இங்கு நளமாமன்னருக்கும் அவரது தம்பிக்குமான பூசல் ஓர் உணவுக்களத்தில்தான் வெடித்தது. எந்தப் பூசலும் பின்திரும்ப முடியாத ஒரு புள்ளியில் உச்சம்கொண்டு அடுத்த கட்டத்திற்கு செல்லும். அப்புள்ளி ஒரு சொல்லாக, ஒரு செயலாக இருக்கலாம். ஆனால் ஒரு துளிக் குருதி முற்றிலும் வேறானது. குருதி ஒருபோதும் நினைவிலிருந்து அகல்வதில்லை” என்றார் பூர்ணர்.

“குருதியிடம் எச்சரிக்கையாக இருங்கள் என்று மூத்தவர் சொல்வது அதனால்தான். அது நம் உடலில் ஓடலாம். ஆனால் அது நம்முடையது அல்ல. அது தெய்வங்களால் நேரடியாக கையாளப்படுவது. ஆகவேதான் குருதி தெய்வங்களுக்குரிய பலியுணவு எனப்படுகிறது. சமையலில் முற்றிலும் குருதிநீக்கம் செய்யப்பட்டு நன்கு கழுவிய உணவையே சமைக்கவேண்டும் என நளபாகநூல் சொல்கிறது. குருதியை பொரித்து உண்ணும் வழக்கம் முன்பு நிஷாதர்களிடமிருந்தது. அதை நளமாமன்னர் முற்றிலும் தடைசெய்தார். குருதியை உண்பவன் அவ்விலங்கின் ஆன்மாவில் குடிகொள்ளும் தெய்வங்களை அறைகூவுகிறான் என்பது அவரது சொல்” என்றார் சங்கதர்.

“அன்று என்ன நிகழ்ந்தது என்பது வரலாறு. ஆகவே அது முழுதுணரமுடியாதபடி மிகுதியாக சொல்லப்பட்டுவிட்டது. அத்தருணத்தை வெவ்வேறு வகையில் எழுதியிருக்கிறார்கள் கவிஞர்கள். சூதர்கள் பாடியிருக்கிறார்கள். தங்கள் குலச்சார்பின்படி மூத்தோர் விளக்கியிருக்கிறார்கள்” என்றார் பூர்ணர். பீமன் “கதைகளென சில கேட்டிருக்கிறேன்” என்றான். பூர்ணர் “நிகழ்ந்தவற்றை இன்று நம்மைக்கொண்டு நாம் உணரலாம். நமக்காக நாம் புனைந்துகொள்ளலாம்” என்று தொடர்ந்தார்.

மூத்தவனுக்கும் இளையவனுக்கும் இடையே முன்னரே மோதலும் பிளவும் இருந்து வந்தது. இளையவன் நிஷாதரின் குலதெய்வமான கலியை முதன்மை தெய்வமாக முன்னெடுக்கலானான். மூத்தவன் இந்திரனை தெய்வமென நாட்டியவன். அவன் துணைவி இந்திர வழிபாட்டை தலைமுறைமரபெனக் கொண்ட ஷத்ரியகுடிப்பெண். ஒருகுடை நாட்டி பாரதத்தை ஆள அமர்ந்த சக்ரவர்த்தினி அவள். நிஷதகுடிகளில் பெரும்பாலானவர்கள் தங்கள் குடி வாழ வந்த மூதாதை வடிவமென நளனை எண்ணியவர்களே. அவன் விண்ணுலகு சென்று வென்று வந்த திருமகளென்று தமயந்தியை வழிபட்டவர்களும்கூட. ஆனால் அவர்கள் உள்ளத்தின் ஆழத்தில் கலி முதல் தெய்வமென வாழ்ந்தது. அவர்களின் தொல்குடி மூதாதை வேனனிடமிருந்து அந்த நம்பிக்கை தொடங்குகிறது.

கலி வழிபாட்டை முன்னெடுத்ததுமே குடிகளில் பெரும்பாலானவர்கள் இளவரசன் புஷ்கரனின் ஆதரவாளராக மாறிவிட்டிருந்தனர். தமயந்தி கலி வழிபாட்டுக்கு வந்தது அவர்களின் உள்ளங்களை சற்றே குளிரச்செய்தது. ஆனால்

படைகொண்டுசென்றபின் நகர் மீண்ட நளன் கலி வழிபாட்டுக்கு ஆலயத்திற்கு வரவில்லை. அச்செய்தியை புஷ்கரனின் அணுக்கர் குடிகள் நடுவே வாய்ச்செவி வழக்கென பரப்பினர். நளனையும் தமயந்தியையும் வணங்கிய மக்களின் உள்ளம் எளிதில் மாறவில்லை. ஆனால் அவர்கள் அதை உள்ளொதுக்கியமையாலேயே உள்ளிருளில் வாழ்ந்த தெய்வங்கள் அவற்றை பற்றிக்கொண்டன. அவ்வெண்ணங்களை அவியென உண்டு அவை அங்கே வளர்ந்து பேருரு கொண்டன.

நாள்தோறும் ஐயமும் கசப்பும் வளர்ந்தாலும் அவர்கள் எதையும் வெளிக்காட்டிக்கொள்ளவில்லை. உண்மையில் தங்களுக்கேகூட தங்கள் உள்ளம் மாறிவிட்டதை அவர்கள் காட்டவில்லை. பகலில் அரசிக்கு அணுக்கமும் பணிவும் கொண்டவர்களாக மெய்யாகவே திகழ்ந்தனர். இரவின் இருண்ட தனிமையில் கலியின் குடிகளென மாறினர். புஷ்கரன் கலிதேவனுக்கென நாள்பூசனைகளை தொடங்கினான். நிஷத குடிகள் ஒவ்வொன்றிலுமிருந்தும் பூசகர்களை கொண்டுவந்து அங்கு புலரி முதல் நள்ளிரவு வரை பூசனைகளுக்கு ஒருங்கு செய்தான். நள்ளிரவுக்குப்பின் கருக்கிருட்டு வரை அபிசாரபூசனைகள் அங்கே நிகழ்ந்தன. கூகைக்குழறல் என அங்கே கைமுழவு ஒலிப்பதை பந்தவெளிச்சம் நீண்டு சுழல்வதை நகர்மக்கள் அறிந்தனர்.

முன்பெல்லாம் பிறர் அறியாமல் கலியின் ஆலயத்திற்கு சென்று வருவதே கிரிப்பிரஸ்த குடிகளின் வழக்கமாக இருந்தது. அஞ்சியவர்கள் அனைவரும் தங்கள் எண்ணிக்கை மிகுந்ததும் முகம் தெரிய செல்லலானார்கள். பின்னர் அது ஒரு மீறலாக, ஆண்மையாக மாறியது. இறுதியிலொரு களியாட்டாக

நிலைகொண்டது. முப்பொழுதும் கலியின் ஆலயம் தேன்கூடுபோல நிஷாதர்களால் மொய்க்கப்பட்டிருந்தது. இந்திரன் ஆலயத்திற்கு செல்பவர் முன்னரே மிகச் சிலர்தான். செல்பவரை பிறர் களியாடத் தொடங்கியதும் அவர்களும் குறைந்தனர். அரச காவலரும் அரண்மனை மகளிரும் அன்றி மலையேறி எவரும் அங்கு செல்லாமலாயினர். விதர்ப்பத்திலிருந்து வந்த ஷத்ரியர்கள் மட்டும் அங்கு சென்று வணங்கலாயினர்.

படைகளில் இருந்த விதர்ப்ப வீரர்களின் எண்ணிக்கை ஒப்புநோக்க சிறிது. அவர்களுக்கே படைநடத்தும் பயிற்சி இருந்தது. அவர்களால் படையென நடத்தப்படுவது நிஷாதர்களுக்கு மேலும் உளவிலக்கை அளித்தது. ஓரிரு மாதங்களுக்குள் நிஷாதர்கள் இந்திரனை வெறுக்கலானார்கள். இல்லங்கள் அனைத்திலுமிருந்து இந்திர வழிபாட்டின் அடையாளங்களான மஞ்சள்பட்டு சுற்றிய வெண்கலச்செம்பும் மயில்தோகையும் அகன்றன. பிளவுகள் உருவாகி வளர்வதுபோல இப்புவியில் வியப்பூட்டுவது பிறிதொன்றில்லை.

அந்நாளில் இளவரசன் புஷ்கரனின் திருமணப் பேச்சுக்கள் தொடர்ந்து நடந்துகொண்டிருந்தன. அவனுக்கு பாரதவர்ஷத்தின் முதன்மை ஷத்ரிய குலங்களில் எதிலிருந்தாவது இளவரசியை கொள்ளவேண்டுமென்று பேரரசி தமயந்தி விரும்பினாள். ஆரியவர்த்தத்தின் அரசகுடிகள் அனைத்திற்கும் தூதர்கள் ஓலைகளுடன் சென்றனர். பல ஷத்ரிய குடிகளுக்கும் பேரரசியின் உறவில் மணம்கொள்ள உள்விழைவு இருந்தது. இந்திரபுரியுடனான மணத்தொடர்பு அவர்களை பிற இணைமன்னர்களுக்குமேல் வல்லமை கொண்டவர்களாக

ஆக்கும் என்று அவர்கள் அறிந்திருந்தனர். ஆனால் ஒருவர் அவ்வாறு மணம்கொள்ள முன்வந்தால் பிறர் அவர்களை இழிவுசெய்து ஒதுக்கி தங்கள் சினத்தை காட்டுவார்கள் என்று அனைவரும் அறிந்திருந்தனர்.

உண்மையில் அவ்வாறு மணம்கொண்டு படையாற்றல் பெற்ற ஓர் அரசரை எதிர்கொள்ளும் சிறந்த வழியென்பது அவரை இழிசினன் என அறிவித்து அதனடிப்படையில் பிற அரசர்கள் ஒருங்குதிரள்வதே ஆகும். ஷத்ரியர் எப்போதும் அம்முறையையே கைக்கொள்கிறார்கள். ஷத்ரிய அரசர்களில் எவரேனும் ஒருவர் அம்மணத்தூதை ஒப்புக்கொண்டு அடுத்த கட்ட பேச்சுக்கு முன்வருவாரென்றால் உலுக்கப்பட்ட கிளையிலிருந்து கனிகள் உதிர்வதுபோல பிற அனைவருமே தூதுஏற்பு செய்துவிடுவார்கள் என்று தமயந்தி அறிந்திருந்தாள். ஆகவே அந்த முதல் நகர்வுக்காக அவள் காத்திருந்தாள். துலாவின் இரு தட்டுகளும் அசைவற்று காலமில்லாது நின்றிருந்தன.

அந்நாளில் நிஷாதகுலத்தின் ஒற்றன் ஒருவன் கலிங்கத்திலிருந்து வந்து புஷ்கரனை சந்தித்தான். கலிங்க அரசர் பானுதேவரின் மகள் மாலினிதேவி புஷ்கரனை தன் உளத்துணைவனாக எண்ணி அவன் ஓவியத்திற்கு மாலையிட்டிருப்பதாக அவன் சொன்னான். இளவரசி கொடுத்தனுப்பிய கணையாழியையும் திருமுகத்தையும் அளித்தான். பானுதேவர் தாம்ரலிப்தியை ஆண்ட அர்க்கதேவரின் இளையவர். அர்க்கதேவரை வென்றபின் கலிங்கத்தை நளன் இரண்டாகப் பிரித்து ஒரு பகுதியை பானுதேவருக்கு அளித்திருந்தான். தண்டபுரத்தை தலைநகராகக்கொண்டு அவர் ஆண்டுவந்தார்.

உண்மையில் அது ஓர் அரசியல் சூழ்ச்சி. மாலினிதேவி அச்செய்தியை அனுப்பவில்லை. மகதனும் மாளவனும் கூர்ஜரனும் சேர்ந்து இயற்றியது அது. பிறிதொரு தருணத்தில் என்றால் ஷத்ரிய இளவரசி ஒருத்தி தன்னை அவ்வாறு தேர்ந்தெடுத்திருக்கிறாள் என்னும் செய்தியை புஷ்கரன் நம்பியிருக்கமாட்டான். ஆனால் அப்போது அவன் நளனுக்கு எதிராக எழுந்து நின்றிருந்தான். எண்ணி எண்ணி தன்னை பெருக்கிக்கொண்டு மெல்ல அவ்வெண்ணத்தை தானே நம்பத் தொடங்கியிருந்தான். அவ்வண்ணமொரு வாய்ப்பு வராதா என்ற ஏக்கம் அவனுக்குள் எங்கோ இருந்தது. விழைந்த ஒன்று எதிர்வரும்போது அதன்மேல் ஐயம் கொள்ள மானுடரால் இயல்வதில்லை.

மேலும் கலிங்கம் நிஷத நாட்டுக்கு கப்பம் கட்டும் சிற்றரசாக இருந்தது. அதன் வணிகம் முழுக்க நிஷாதர்களின் நிலங்களில் இருந்து கோதாவரியினூடாக வரும் பொருட்களால் ஆனது. கீழ்நிலங்கள் புஷ்கரனின் ஆளுகையில் இருந்தன. எனவே அவ்வுறவு எவ்வகையிலும் கலிங்கத்துக்கு நன்றே என்று அரசியல் அறிந்த எவரும் உரைக்கும் நிலை. விரைவில் அவளை மணம்கொள்ள வருவதாக மாலினிதேவிக்கு செய்தி அனுப்பினான் புஷ்கரன். உடன் தன் குறுவாள் ஒன்றையும் கன்யாசுல்கமென கொடுத்தனுப்பினான்.

செய்தி வந்ததை அவன் தன் குடியின் மூத்தாரிடம் மட்டும்தான் சொன்னான். அவர்கள் அதை மகிழ்ச்சியுடன் கொண்டாடினர். எவரும் ஐயம் கொள்ளவில்லை. ஒவ்வொரு நாளும் காளகக்குடியின் ஆற்றல் பெருகுவதாக அவர்கள் எண்ணிக்கொண்டிருந்தனர். கலியின் பூசகர்கள் அது கலியின் ஆணை என நாளும் நற்சொல் உரைத்துக்கொண்டிருந்தார்கள்.

அந்நம்பிக்கையை அச்செய்தி உறுதி செய்தது. அத்தகைய முதன்மை அரசமுடிவை அரசியிடம் கேளாது, அவைமுன் வைக்காது புஷ்கரன் எடுத்திருக்கக் கூடாது. அதை அவனோ அவன் குடியோ உணரவில்லை. அவர்களின் உள்ளம் எதிர்நிலையால் திரிபுகொண்டிருந்தது.

மறுதூதனுப்பி அதற்கு மாலினிதேவி அனுப்பிய மாற்றோலையையும் அவளுடைய காதணியின் ஒரு மணியையும் பெற்ற பின்னரே அச்செய்தியை அவனே இந்திரபுரியின் பேரவையில் எழுந்து தமயந்தியிடம் சொன்னான். உண்மையில் அவன் அரசியையோ தன் மூத்தவனையோ தனியறையில் கண்டு அதை சொல்லியிருக்கவேண்டும். அல்லது அமைச்சர் கருணாகரரைக் கண்டு உரைத்திருக்கலாம். பேரவையில் சபரர்களும் காளகர்களும் பிற குடித்தலைவர்களும் பெருவணிகர்களும் அந்தணர்களும் நிறைந்திருந்தனர். மாமன்னன் நளன் காட்டுப்புரவிக்குட்டிகளை பிடிக்கும்பொருட்டு சென்றிருந்தான். அவை நிகழ்வுகள் முடிந்து தமயந்தி எழுந்து செல்லவிருந்த தருணம் அது. கைதூக்கி எழுந்த புஷ்கரன் "அவைக்கும் அரசிக்கும் ஒரு நற்செய்தி!" என்றான்.

அவ்வாறு எழுந்தமையே முறைமீறல். அதிலிருந்த ஆணவம் உறுத்துவது. தமயந்தியின் இடதுவிழி சற்று சுருங்கியது. ஆனால் புன்னகையுடன் "நற்செய்தி கேட்க விழைவுடன் உள்ளேன், இளவரசே" என்றாள். காளகக்குடிகளின் தலைவரான சீர்ஷர் "நம் குடிக்கு புதிய அரசி ஒருவர் வரவிருக்கிறார்" என்றார். தமயந்தியின் விழிகள் சென்று கருணாகரரைத் தொட்டு மீண்டன. "சொல்க!" என்றாள். புஷ்கரன் நிகழ்ந்ததை மிகமிகச் செயற்கையான அணிச்சொற்களால் சுழற்றிச்

சுழற்றிச் சொல்லி முடிக்க நெடுநேரமாயிற்று. அதற்குள் காளகக்குடிகள் எழுந்து கைக்கோல்களைத் தூக்கி வாழ்த்தொலி எழுப்பலாயினர். பிறர் என்ன என்றறியாமல் நோக்கி அமர்ந்திருந்தனர்.

அதைக் கேட்டதுமே அது ஓர் அரசியல் சூழ்ச்சி என்று தமயந்தி அறிந்துகொண்டாள். ஒற்றர் மூலம் ஓரிரு நாட்களிலேயே அதை அவளால் உறுதி செய்துகொள்ள முடியும் என்றும் உணர்ந்திருந்தாள். ஆனால் அந்த அவையில் அதைச் சொல்வது புஷ்கரனை இழிவுபடுத்துவதாகும் என்று தோன்றியது அவளுக்கு. கலிங்கத்து இளவரசி ஒருத்தி அவனை விரும்புவது நிகழ வாய்ப்பில்லை என்பதுபோல அது பொருள்கொள்ளப்படலாம். அவனுக்கு அத்தகுதியில்லை என்று அவன் குடியில் சிலரால் திரிபொருள் கொள்ளப்படவும்கூடும். அவள் அதை அவையிலிருந்து எவ்வகையிலேனும் வெளியே கொண்டுசெல்ல விழைந்தாள். அப்போது அதை சிடுக்கில்லாது முடித்துவைக்க வேண்டுமென்று வழிதேடினாள். ஆனால் புஷ்கரன் பேசிக்கொண்டே சென்றான்.

புஷ்கரன் உரைத்த சொற்களிலேயே பல உள்மடிப்புகள் இருந்தன. அரசியை வணங்கி பலவகையிலும் முகமன் கூறிய பின்னர் “பேரரசிக்கு வணக்கம். பேரரசி அறிந்த கதை ஒன்றை நினைவுறுத்த விரும்புகிறேன். நெடுங்காலத்துக்கு முன் விதர்ப்ப நாட்டின் ஷத்ரிய இளவரசி பெருந்திறல் வீரனாகிய நிஷத அரசனை விரும்பினார். அவர் புரவித்திறனையும் மேனியழகையும் கண்டு தன்னை இழந்தார். அன்னப்பறவை ஒன்றை தன் தூதென்றனுப்பி தன்னை ஏற்குமாறு கோரினார். இன்று காவியம் கற்ற அனைவரும் அறிந்த கதை அது. நிஷதஅரசனின் இளையோனுக்கும் அதுவே நிகழ்கிறது”

என்றான். அதற்குள் காளகர்கள் கூவி ஆர்ப்பரிக்கத் தொடங்கினர். சீர்ஷர் எழுந்து நின்று கைகளைத் தூக்கி மெல்ல நடனமிட்டபடி "காளகக்குடியின் வெற்றி! நிஷதர்களின் வெற்றி!" என்று கூவினார்.

அவர்களை முகமலர்ச்சியுடன் கைகாட்டி அமர்த்திவிட்டு "இம்முறை கலிங்கத்திலிருந்து அச்செய்தி வந்துள்ளது. இரு கால்கள் எழுந்து நடக்கும் அந்த அன்னத்தின் பெயர் சலஃபன். கலிங்கத்தில் இருக்கும் நமது தலைமைஒற்றன்" என்றார். காளகக்குடியினர் சிரித்து உவகையொலி எழுப்பி புஷ்கரனை வாழ்த்தினர். "என் ஓவியத்திற்கு மாலையிட்டிருக்கிறாள் கலிங்கத்தின் இளவரசி. அவளுக்கு நிஷதகுடிகளில் மூத்ததான காளகக்குடியின் மரபுப்படி தாமரை மாலையை அணிவிக்கவேண்டியது என் கடன். அதை அறிவித்து என் குறுவாளை அனுப்பியிருக்கிறேன்" என்றான். அவையின் பிற குடிகளும் எழுந்து கோல்களைத் தூக்கி வாழ்த்து முழக்கமிட்டனர்.

காளகக்குடித்தலைவர் சீர்ஷர் கைகளைத் தூக்கி "எங்களுக்கு எவர் ஒப்புதலும் தேவையில்லை. கலிங்கத்தின் இளவரசி எங்கள் இளவரசரை விரும்பினால் அவர்களை சேர்க்கும்பொருட்டு ஆயிரம் தலைகளை மண்ணிலிட நாங்கள் சித்தமாக உள்ளோம்" என்று கூவினார். "அதற்கு இங்கு என்ன நடந்தது? எவர் உங்களுக்கு எதிர்ப்பு தெரிவித்தார்கள்?" என்றார் கருணாகரர். "எதிர்ப்பு தெரிவியுங்கள் பார்ப்போம். இனி எந்த எதிர்ப்பையும் நாங்கள் அஞ்சப்போவதில்லை" என்றார் சீர்ஷர். "சொல்லமையுங்கள், சீர்ஷரே. அரசி இன்னும் தன் சொல்லை முன்வைக்கவில்லை" என்றார் நாகசேனர்.

தமயந்தி பெருநகையை முகத்தில் காட்டி "நன்று! நாம் எதிர்பார்த்திருந்த செய்தி இது. மிக நன்று. இனி பிறிதொன்றும் எண்ணுவதற்கில்லை. நமது அமைச்சரும் பிறரும் சென்று பானுதேவரிடம் நிஷதகுடியின்பொருட்டு இளவரசியின் வளைக்கையை கோரட்டும். கலிங்க இளவரசி வந்து இங்கு இளைய அரசியென அமர்வது நம் மூதன்னையரை மகிழ்விக்கும். குலமூத்தோரை பெருமிதம் கொள்ள வைக்கும். நம் அரசு ஆற்றல் கொண்டு சிறக்கும்" என்றாள். புஷ்கரரை வாழ்த்தி அனைத்து குடிகளும் முரசென குரல் எழுப்பினர். பலமுறை கையமர்த்தி குரலெழ இடைவெளி தேடவேண்டியிருந்தது. "நாளையே தலைமை அமைச்சர் கிளம்பிச்செல்லட்டும். இதுவரை பாரதவர்ஷத்தில் எந்த மணக்கோரிக்கையுடனும் செல்லாத அளவுக்கு பரிசில்கள் அவரை தொடரட்டும்" என்று தமயந்தி ஆணையிட்டாள்.

✿கருணாகரர் நான்கு துணையமைச்சர்களுடன் பன்னிரு வண்டிகளில் பட்டும் பொன்னும் அருமணிகளும் அரிய கலைப்பரிசில்களுமாக கீழ்க்கலிங்கத்திற்கு சென்றார். அவர் செல்லும் செய்தியை முன்னரே தூதர்கள் வழியாக தண்டபுரத்திற்கு அறிவித்திருந்தார். அவர்களை நகரின் கோட்டை முகப்பிற்கே வந்து பேரரசி வழியனுப்பி வைத்தாள். அச்செய்தி நகரெங்கும் பரவியது. காளகக்குடிகளில் ஒவ்வொரு நாளும் களிவெறி மிகுந்து வந்தது. அவர்கள் எண்ணுவதன் எல்லையைக்கடந்து எண்ணினர். நளனுக்குப்பின் நிஷதப்பேரரசின் பெருமன்னரென புஷ்கரன் அமைவதைப்பற்றி புஷ்கரனினூடாக காளகக்குடி பாரதவர்ஷத்தின் தலைமை கொள்வதைப்பற்றி விழைவுகள் கணமெனப் பெருகி நிறைந்தன.

கருணாகரர் கலிங்கத்திற்கு சென்றுசேர்ந்த செய்தி தமயந்தியை வந்தடைந்தது. பதற்றத்துடன் என்ன நிகழ்கிறதென்று அவள் பறவைச்செய்திகளை பார்த்திருந்தாள். கலிங்க இளவரசி புஷ்கரனுக்கு அளித்த செய்தியைக் கேட்டு அவள் சினங்கொண்டு மறுப்பாள் என்று அச்சூழ்ச்சியை செய்தவர்கள் எதிர்பார்க்கிறார்கள் என்று அவள் நினைத்தாள். ஏனெனில் அவள் மகததனோ மாளவனோ கூர்ஜரனோ புஷ்கரனுக்கு மகள்கொடை அளிக்கவேண்டுமென்று எதிர்பார்த்திருந்தாள். கீழ்க்கலிங்கம் மிகச் சிறிய அரசு. அவர்கள் அளிக்கும் படைத்துணையென பெரிதாக ஏதுமில்லை. அவர்களின் துறைநகருக்கு பொருள்கொண்டு அளிக்கும் பேரியாற்றை முழுமையாக ஆளும் நிஷதத்தை ஒரு நிலையிலும் அவர்களால் மீறிச்செல்ல முடியாது. கலிங்கத் தூதை அவள் மறுக்கையில் புஷ்கரனுக்கும் அவளுக்குமான பூசல் முதிருமென்று அவர்கள் கருதுகிறார்கள் என்று கணித்தாள். ஆகவேதான் அதை ஒப்புக்கொண்டு அவர்கள் மறுஎண்ணம் எடுப்பதற்குள் பெரும்பரிசில்களுடன் அமைச்சரையே அனுப்பினாள்.

அத்திருமணம் நிகழ்ந்து புஷ்கரன் உளம் குளிர்ந்தால் சிறிது காலத்திற்கேனும் அவனுள் எழுந்த ஐயமும் விலக்கமும் அகலும் என்று எண்ணினாள். காளகக்குடிகள் தாங்களும் ஒரு வெற்றியை பெற்றுவிட்டோம் என்று எண்ணக்கூடும். அவர்களின் தாழ்வுணர்ச்சியை கடக்க அது வழியமைக்கலாம். தென் எல்லையில் தான் வென்ற விஜயபுரியை புஷ்கரனுக்கு அளித்து அவனை தனியரசென்றாக்கி நளனுக்கு இளையோனாகவோ தொடர்பு மட்டும் உள்ள இணைநாடாகவோ அமைத்தால் காளகக்குடிகளிலிருந்து எழுந்த

அந்த அரசுமறுப்பை கடந்துவிடலாமென்று அவள் கருதியிருந்தாள்.

ஆனால் நிகழ்ந்தது மற்றொன்று. கருணாகரரை வரவேற்று உரிய முறைமைகளுடன் அவையமரச் செய்தார் பானுதேவர். அங்கு குலத்தாரும் குடிமூத்தாரும் அந்தணரும் கூடிய அவையில் அவர் எழுந்து தன் தூதுச்செய்தியை சொல்ல வைத்தார். முறைமைகளும் வரிசையுரைகளும் முடிந்தபின் கருணாகரர் கலிங்கத்து இளவரசி புஷ்கரனுக்கு அனுப்பிய ஓலையையும் கணையாழியையும் காட்டி அந்த விழைவை பேரரசி தமயந்தி ஏற்றுக்கொள்வதாகவும் அதன்பொருட்டு மணஉறுதி அளிக்க தூதென வந்திருப்பதாகவும் சொன்னார். அவை எந்த விதமான எதிர்வினையுமில்லாமல் அமர்ந்திருந்தது. வாழ்த்தொலிகள் எழாதது கண்டு கருணாகரர் அரசரை நோக்கினார். பானுதேவர் தன் நரையோடிய தாடியைத் தடவியபடி ஏளனமும் கசப்பும் நிறைந்த கண்களுடன் அவரை நோக்கிக்கொண்டிருந்தார்.

கருணாகரர் அந்தத் தூது கலிங்க இளவரசியின் விழைவை ஒட்டியே என அழுத்த விரும்பினார். “எங்கள் அரசி முன்பு தன் கொழுநர் நளமாமன்னருக்கு அனுப்பிய அன்னத்தூது இன்று காவியமென பாடப்படுகிறது. அதற்கு நிகரான காவியமாக கலிங்கத்து இளவரசி மாலினிதேவி அளித்த இக்கணையாழித்தூதும் அமையுமென எண்ணுகிறோம். தன்னுள்ளத்தைப் போலவே இளவரசியின் உள்ளத்தையும் உணர்ந்தமையால் நிகரற்ற பரிசுகளுடன் என்னை அனுப்பியிருக்கிறார் பேரரசி” என்றார்.

தான் உன்னுவதை எல்லாம் ஊன்றிவிட சொல்லெடுத்து “கலிங்கம் நிஷதப்பேரரசின் ஒரு பகுதியே என்றாலும்

இம்மணம்கோள் நிகழ்வு இரு நாடுகளுக்கிடையே குருதித் தழுவலாக ஆகும். தென்திசையின் இரு தொல்குடிகளின் இணைவால் ஆயிரமாண்டுகளுக்கு வெல்ல முடியாத அரசென்று எழும். மலைமுடிபோல் இப்பெருநிலத்தை நோக்கியபடி காலம் கடந்து நின்றிருக்கும் அது" என்றார் கருணாகரர். தன் சொற்கள் அமைதியான அவையில் அறுந்த மணிமாலையின் மணிகள் என ஒவ்வொன்றாக ஓசையுடன் உதிர்ந்து பரவுவதை உணர்ந்தார்.

பானுதேவர் தன் அமைச்சர் ஸ்ரீகரரை நோக்கி "இவ்வண்ணம் ஒரு செய்தியை நான் எதிர்பார்க்கவில்லை. நமது இளவரசி புஷ்கரருக்கு கணையாழியும் திருமுகமும் அனுப்பியிருப்பதாக சொல்கிறார்கள். தாங்கள் நோக்கி இதை மதிப்புறுத்த வேண்டும், அமைச்சரே" என்றார். அமைச்சர் ஸ்ரீகரர் எழுந்து வணங்கி "நிஷதப்பேரரசின் அமைச்சர் வந்து அளித்த இச்செய்தியால் இந்த அவை பெருமைகொள்கிறது. அந்தக் கணையாழியையும் ஓலையையும் இந்த அவையின் பொருட்டு நான் பார்க்க விழைகிறேன். அது எங்கள் இளவரசியின் செய்தி என்றால் அதைப்போல் இனியதொரு நோக்கு எனக்கு இனிமேல் அமையப்போவதில்லை" என்றார்.

கருணாகரர் கைகாட்ட துணையமைச்சர் அந்தத் திருமுகமும் கணையாழியும் அமைந்த பொற்பேழையை ஸ்ரீகரரிடம் அளித்தார். அதை வாங்கித் திறந்து கணையாழியை எடுத்து கூர்ந்து நோக்கியதுமே அவர் முகம் மாறியது. ஐயத்துடன் ஓலையை இருமுறை படித்தபின் அரசரிடம் தலைவணங்கி "சினம் கொள்ளலாகாது, அரசே. இது எவரோ இழைத்த சூழ்ச்சி. இது நம் இளவரசியின் கணையாழி அல்ல. இந்தத் திருமுகமும் பொய்யானது" என்றார். பானுதேவர் சினந்து

அரியணைக்கையை அறைந்தபடி எழுந்து “என்ன சொல்கிறீர்?” என்றார்.

“ஆம் அரசே, இவை பொய்யானவை” என்றார் ஸ்ரீகரர். “அரசகுடிக்குரிய கணையாழிகளின் எந்த அமைப்பும் இதில் இல்லை. இதிலுள்ள அருமணிகள் மெய்யானவை. அவை அமைந்திருக்கும் முறை பிழையானது. இவ்வோலையின் முத்திரை உண்மையானது, ஆனால் கணையாழி பொய்யென்பதால் இதன் சொற்களையும் ஐயுற வேண்டியிருக்கிறது.” பானுதேவர் உரக்க “எவருடைய சூழ்ச்சி இது?” என்றார். கருணாகரர் “சூழ்ச்சி இங்குதான் அரங்கேறுகிறது. கலிங்க அரசமுத்திரை எவரிடம் இருக்கமுடியும்?” என்றார்.

ஸ்ரீகரர் “சினம்கொள்ள வேண்டாம், அமைச்சரே. தங்களுக்கு ஐயம் இருப்பின் இளவரசியை இந்த அவைக்கு கொண்டு வருவோம். இந்த ஓலையும் கணையாழியும் அவர் அளித்ததென்று அவர் சொல்வாரேயானால் அனைத்தும் சீரமைகின்றன. அல்ல என்றால் இது சூழ்ச்சி என்று கொள்வோம்” என்றார். பானுதேவர் “ஆம், அதை செய்வோம். பிறகென்ன?” என்றபின் திரும்பி ஏவலனிடம் “இளவரசியை அழைத்துவருக!” என்று ஆணையிட்டார்.

கருணாகரருக்கு அனைத்தும் தெளிவாகிவிட்டது. அவர் அரசரின் முகத்தை சிலகணங்கள் கூர்ந்து நோக்கியபின் உடல் தளர்ந்து தன் பீடத்தில் அமர்ந்தார். ஸ்ரீகரர் நிலையழிந்த உடலுடன் இருவரையும் பார்த்தபடி அவையில் நின்றார். அச்சூழ்ச்சியை அவரும் அறிந்திருக்கவில்லை என்பதை கருணாகரர் உணர்ந்தார். இளவரசி அவை புகுந்தபோது திரும்பி அவர் முகத்தை பார்த்ததும் சூழ்ச்சியை இளவரசியும்

அறிந்திருக்கவில்லை என்று தெளிவுற்றார். அவை மேடை வந்துநின்ற இளவரசியை நோக்கி பானுதேவர் “மாலினிதேவி, கீழ்க்கலிங்கத்தின் இளவரசியாகிய நீ இந்த அவையில் ஒரு சான்று கூற அழைக்கப்பட்டிருக்கிறாய். உன் பெயரில் ஒரு திருமுகமும் கணையாழியும் நிஷத இளவரசராகிய புஷ்கரருக்கு அளிக்கப்பட்டுள்ளது. அவர் ஓவியத்திற்கு நீ மாலையிட்டு கணவனாக ஏற்றுக்கொண்டதாக அத்தூது சொல்கிறது. அது நீ அனுப்பியதா?” என்றார்.

அவர் முதலில் அச்சொற்களை செவிகொள்ளவே இல்லை. ஆனால் ஏதோ ஒன்று புரிய திகைத்து கருணாகரரையும் அமைச்சரையும் பார்த்தபின் வாயை மட்டும் திறந்தார். அரசி மீண்டும் அவ்வினாவை கேட்டார். “தூதா? நானா?” என்றார். பின்பு உரக்க “இல்லை, நான் எவருக்கும் தூதனுப்பவில்லை. இளவரசர் புஷ்கரரின் பெயரையே இப்போதுதான் அறிகிறேன்” என்றார். “பிறகென்ன தேவை, கருணாகரரே?” என்று பானுதேவர் கேட்டார். கருணாகரர் எழுந்து வணங்கி “இளவரசி என்னை பொறுத்தருள வேண்டும். நிஷதப் பேரரசி தமயந்தியின் பெயரால் இந்த விண்ணப்பத்தை வைக்கிறேன். இந்நிகழ்வை மறந்துவிடுக! சூழ்ச்சியொன்றை மெய்யென்று நம்பி இங்கு வந்தோம்” என்றார்.

ஸ்ரீகரர் நடுவே புகுந்து “சூழ்ச்சியே ஆனாலும் நன்று ஒன்று நடந்துள்ளது. விதர்ப்பப் பேரரசியின் மணத்தூது இங்கு வந்தது ஒரு நல்லூழே. நிஷத இளவரசருக்கு நிகரான மணமகன் இளவரசிக்கு அமைவது அரிது. இந்த மணத்தூதை நமது அரசர் ஏற்பதே நன்றென்பது என் எண்ணம்” என்றார். சினத்துடன் எழுந்த பானுதேவர் “ஆம் ஏற்றிருக்கலாம், உரிய முறையில் இத்தூது வந்திருந்தால். இச்சூழ்ச்சி எவருடையதென்று

உங்களுக்குத் தெரியவில்லையா? என் மகளைக் கோரி தூதனுப்பும்போது தான் ஒரு படி கீழிறங்குவதாக நிஷதப் பேரரசி எண்ணுகிறார். ஆகவேதான் பொய்யாக ஓர் ஓலையும் கணையாழியும் சமைத்து என் மகளே அவ்விளவரசனை களவுமணம் கோரியதாக ஒரு கதையை சமைக்கிறார். நாளை இது சூதர்நாவில் வளர வேண்டுமென்று விழைகிறார்" என்றார்.

அவர் மேற்கொண்டு சொல்லெடுப்பதற்குள் கருணாகரர் "தங்கள் சொற்களை எண்ணிச்சூழ்வது நன்று, அரசே" என்றார். பானுதேவர் உரக்க "ஆம், எண்ணிச் சொல்கிறேன். இது கலிங்கத்தை கால்கீழிட்டு மிதித்து மணம்கோர நிஷதர் செய்யும் சூழ்ச்சி. அருமணி பொறிக்கப்பட்ட கணையாழிகளை பேரரசுகள் மட்டுமே உருவாக்க முடியும். இதிலுள்ள அருமணிகள் பேரரசர்களின் கருவூலங்களுக்குரியவை. அவை மெய்யான அருமணிகள் என்பதனால்தான் நானும் ஒரு கணம் நம்பினேன். இது தமயந்தியின் சூழ்ச்சியேதான். ஒருவேளை அமைச்சருக்கு இது தெரியாமல் இருக்கலாம்" என்றார்.

தன் நிலையை குவித்து தொகுத்து சீரான குரலில் கருணாகரர் சொன்னார் "அத்தகைய எளிய சூழ்ச்சிகளினூடாக உங்கள் மகளைக் கொள்ளும் இடத்தில் பேரரசி இல்லை என்று அறிக!" பானுதேவர் சினத்தால் உடைந்த குரலுடன் "நிஷத இளைஞனுக்கு தூதனுப்பும் இடத்தில் தொல்குடி ஷத்ரியப் பெண்ணாகிய என் மகளும் இல்லை" என்றார். கருணாகரர் "சொல்தடிக்க வேண்டியதில்லை. நா காக்க. இல்லையேல் கோல் காக்க இயலாது போகும்" என்றார்.

அவை மறந்து கொதிப்பு கொண்ட பானுதேவர் கைநீட்டி "இனியென்ன காப்பதற்கு? இந்த அவையில் என் மகளை இழிவுபடுத்திவிட்டார்கள். இந்த மணத்தை நான் ஏற்றால் அதன்

பொருளென்ன? இவர்கள் இப்படி மணத்தூதுடன் வரவேண்டுமென்பதற்காக இவ்வோலையையும் கணையாழியையும் நான் சமைத்தளித்திருப்பதாகத்தானே உலகோர் எண்ணுவர்? எனக்கு இழிவு. ஓர் இழிவு போதும், பிறிதொன்றையும் சூட நான் சித்தமாக இல்லை” என்றார். “போதும்! வெளியேறுங்கள்! எனக்கு இழிவு நிகழ்த்தப்பட்டமைக்கு நிகர் இழிவை அந்தணராகிய உம் மேல் சுமத்த நான் விரும்பவில்லை.”

அத்தருணத்தில் ஸ்ரீகரரும் அனைத்தையும் உணர்ந்துகொண்டார். அது அவரறியாத பெருஞ்சூழ்ச்சி வலையென்று. கருணாகரர் “நன்று! இனியொன்றே எஞ்சியுள்ளது. நான் சென்று அரசியிடம் சொல்லவேண்டிய சொற்களெவை? அதை சொல்க!” என்றார். “இருங்கள், அமைச்சரே. இந்த அவையில் நாம் எதையும் இறுதி முடிவென எடுக்கவேண்டாம். நாளை இன்னொரு சிற்றவையில் அனைத்தையும் பேசுவோம்” என்றார் ஸ்ரீகரர். “இனியொரு அவையில் நான் இதை பேச விரும்பவில்லை. என் சொற்களை இதோ சொல்கிறேன்” என்றார் பானுதேவர். “அரசே, அரசியல் சொற்களை எழுத்தில் அளிப்பதே மரபு” என்றார் ஸ்ரீகரர். “இது அரசச்சொல் அல்ல. என் நெஞ்சின் சொல்” என்றார் பானுதேவர்.

சிவந்த முகமும் இரைக்கும் மூச்சுமாக “இவ்வாறு சொல்லுங்கள், அமைச்சரே. இச்சொற்களையே சொல்லுங்கள்” என பானுதேவர் கூவினார். “நிஷதப் பேரரசி நானும் ஒரு அரசனென்று எண்ணி என்னை நிகரென்றோ மேலென்றோ கருதி இம்மணத்தூதை அனுப்பியிருந்தால் ஒருவேளை ஏற்றிருப்பேன். எவரோ வகுத்தளித்த இழிந்த சூழ்ச்சியொன்றால்

எனது மகளை சிறுமை செய்தார். அதற்கு அடிபணிவேன் என்று எதிர்பார்த்ததனால் என்னை சிறுமை செய்கிறார். ஆகவே இந்த மணத்தூதை நான் புறக்கணிக்கிறேன். நிஷத அரசுக்கு முறைப்படி மகள்கொடை மறுக்கிறேன்.”

“போரில் தோற்றமையால் கலிங்கம் நிஷதத்திற்கு கப்பம் கட்டலாம். ஆனால் நிஷதகுடிகள் சமைத்துண்ணத் தொடங்குவதற்கு முன்னரே சூரியனின் முதற்கதிர் இறங்கும் மண்ணென கலிங்கம் பொலிந்திருக்கிறது. நூற்றெட்டு அரச குடிகள் இங்கு ஆண்டு அறம் வாழச்செய்திருக்கிறார்கள். என் கடன் என் மூதாதையரிடம் மட்டுமே. என் செயல்களினூடாக என் கொடிவழியினருக்கு நான் கடன்பட்டிருக்கிறேன். இன்று சிறுத்து மண்ணில் படிந்திருக்கலாம் எனது குடி. நாளை அது எழும். அந்த வாய்ப்பைப் பேணுவது மட்டுமே இத்தருணத்தில் நான் செய்யக்கூடுவது” என்றார் பானுதேவர். பின்னர் மூச்சுவாங்க அரியணையில் அமர்ந்தார்.

“நன்று! இச்சொற்களையே அரசியிடம் உரைக்கிறேன்” என்று சொல்லி தலைவணங்கிய கருணாகரர் “இச்சொற்களை இளவரசி ஏற்கிறாரா என்று மட்டும் கேட்க விழைகிறேன்” என்றார். மாலினிதேவி “ஆம், அவை என் சொற்கள்” என்றார். “நன்று, உங்கள் அவைக்கும் கோலுக்கும் நிஷத அரசின் வாழ்த்துக்கள்! நன்றே தொடர்க!” என வணங்கி கருணாகரர் அவை நீங்கினார்.

# நீர்க்கோலம் - 32

**31. நிழற்கொடி**

பறவைத்தூது வழியாக கலிங்கத்தில் நிகழ்ந்ததென்ன என்று அன்றே தமயந்தி அறிந்தாள். என்ன சூழ்ச்சி என்று அவளால் கணிக்கக் கூடவில்லை. பேரரசி என்றாலும் அவள் சூழ்ச்சியறியாதவளாக இருந்தாள். களம்நின்று எதிர்கொள்ள எவராலும் இயலாத நிஷதப்புரவிப்படைகளால் வென்றவள். எவரையும் விழிநோக்கிப் பேசுபவள். பானுதேவரை மூன்று முறை மட்டுமே அவள் பார்த்திருந்தாள். அவருக்கு கீழ்க்கலிங்கத்தில் முடிசூட்டி வைத்ததே அவள் கைகளால்தான். அன்று தன்முன் நன்றியும் பணிவுமாக கைகட்டி நின்றவனின் முகமே அவள் நெஞ்சில் இருந்தது. ஆகவே அச்சூழ்ச்சி பானுதேவருக்கு எட்டாமல் பிறிதெவராலோ நிகழ்த்தப்படுகிறதென்று அவள் எண்ணினாள்.

அவள் இயல்புப்படி செய்வதற்கொன்றே இருந்தது. அனைத்தையும் உடைத்துச்சொல்லி அடுத்தது சூழ்வது. ஆகவே புஷ்கரனை தன் தனியறைக்கு அழைத்து நிகழ்ந்த அனைத்தையும் கருணாகரர் அனுப்பிய ஓலையைக் காட்டி விளக்கினாள். அந்தத் தனி அவையில் நாகசேனரும் சிம்மவக்த்ரனும் உடனிருந்தனர். செய்தி கேட்டதும் முதலில் அதிர்ந்து சொல்லிழந்து நோக்கி நின்ற புஷ்கரன் பின்னர் உடல் தளர்ந்து பின்னிருந்த பீடத்தில் அமர்ந்துகொண்டான். அவன் கைகள் நடுங்கிக்கொண்டிருக்க விரல்களைக் கோத்து நெஞ்சோடு சேர்த்தான். விழிதாழ்த்தி நிலம்நோக்கி இருந்தான்.

"புரிந்துகொள்ளுங்கள் இளவரசே, நிஷதகுடி இன்று பாரதவர்ஷத்தை ஆள்கிறது. இரு தலைமுறைகளுக்கு முன்பு கூட இழிசினர் என்று கருதப்பட்டது இக்குலம். இன்று இதன் கொடியை மகதம் முதல் திருவிடம் வரை பறக்க வைத்திருக்கிறோம். இதற்கெதிராக ஆயிரம் குரல்கள்

ஒவ்வொரு கணமும் எங்கெங்கோ குமுறிக்கொண்டிருக்கின்றன. பல்லாயிரம் உள்ளங்களில் சினம் நொதிக்கிறது. பலநூறு கரவறைகளில் சூழ்ச்சிகள் இயற்றப்படுகின்றன. தொல்குடிகளுக்குரிய உளஎல்லையை நமது பேரரசரின் சுவைத்திறனால், புரவி நுட்பத்தால் வென்று கடந்தோம். படைதிரட்டி ஷத்ரிய குடிகளை அடக்கினோம். இவர்களின் சூழ்ச்சியை வெல்ல வேண்டியது மூன்றாவது படி. இதிலும் ஏறிவிட்டால் மட்டுமே நமது கொடிவழிகள் இங்கு வாழும்" என்றாள்.

புஷ்கரன் மின்னும் விழிகளுடன் அவளையே நோக்கிக்கொண்டிருந்தான். "இச்சூழ்ச்சி உங்களையும் பேரரசரையும் பிரிக்கும் நோக்கம் கொண்டது. இதை அரசர்களே ஆற்றமுடியும். அருமணிகள் பெருங்கருவூலத்திற்குரியவை. உறுதியாக இதில் மகதனின் கை உள்ளது" என்றார் நாகசேனர். புஷ்கரன் எவர் விழிகளையும் நோக்காமல் மெல்லிய குரலில் "அவள் மறுத்தாளா? அவைக்கு வந்து சொல்லிறுத்தாளா?" என்றான். "ஆம், கருணாகரரின் சொற்களில் நாம் ஐயங்கொள்வதற்கு ஏதுமில்லை. நாளையோ மறுநாளோ அவர் இங்கு வந்துவிடுவார். முழுமையாக அனைத்தையுமே அவரிடம் கேட்டு தெரிந்துகொள்வோம். இச்சூழ்ச்சி ஏன் இயற்றப்பட்டது, இதன் விரிவுகளென்ன என்பதை பார்ப்போம்" என்றாள் தமயந்தி.

புஷ்கரன் பெருமூச்சுவிட்டுக்கொண்டு பேசாமலிருந்தான். "அவளை நாம் வென்று கைபற்றுவோம். அது மிக எளிது. ஆனால் நம் இலக்கு அதுவல்ல. நாம் கொள்ளவேண்டியது வடக்கே விரிவடையும் நிலம் கொண்ட அரசொன்றின் இளவரசியை. மகதமோ கூர்ஜரமோ அயோத்தியோ

கோசலமோ. நாம் தெற்கே இனி செல்வதற்கு தொலைவில்லை. கிருஷ்ணையை இன்னும் சின்னாட்களில் சென்றடைவோம். அதன்பின் நம் படைகள் விரியவேண்டிய திசை இமயம் நோக்கியே" என்றாள் தமயந்தி. "நாம் முதன்மை ஷத்ரியகுடியின் இளவரசி ஒருத்தியை கொள்வோம். அதன்பின் இந்த கலிங்கச் சிறுநாட்டின் இளவரசியை அடைவோம். அவள் முடியிலா அரசியாக இருக்கட்டும்" என்றார் நாகசேனர்.

சினத்துடன் எழுந்த புஷ்கரன் "நான் மாலினியை மட்டுமே மணம்செய்வதாக இருக்கிறேன். அவளுக்கு என் குறுவாளை அனுப்பியிருக்கிறேன்" என்றான். "இளவரசே, அது சூழ்ச்சி. அக்குறுவாளை அவள் கண்டிருக்கவே வாய்ப்பில்லை" என்றாள் தமயந்தி. "இல்லை, சூழ்ச்சிகள் தெளிவாகி வரட்டும். நான் இன்னும்கூட அவள் சொல்லை நம்புகிறேன்" என்றான் புஷ்கரன். "இளவரசே..." என சிம்மவக்த்ரன் சொல்லத் தொடங்க "போதும்" என்று கைகாட்டியபின் அவன் எழுந்து வெளியே சென்றான். அவனது சீற்றம் மிக்க காலடியோசை இடைநாழியின் மரத்தரையில் நெடுநேரம் ஒலித்துக்கொண்டிருந்தது.

நீள்மூச்சுடன் "அவர் புரிந்துகொள்வார் என எண்ணுகிறேன். ஏனென்றால் இந்நாட்டின் வாழ்வு அவர் வாழ்வேயாகும்" என்றாள் தமயந்தி. நாகசேனர் "அவ்வாறு எண்ணவேண்டியதில்லை, பேரரசி. இதுவரை உலகில் நிகழ்ந்த பேரழிவுகள் பலவும் மானுட இனங்கள் ஐயத்தால், சிறுமையால், பிரிவுப்போக்கால், தங்களைத் தாங்களே அழித்துக்கொண்டமையால் எழுந்தவையே" என்றார். அரசி திடுக்கிட்டதுபோல அவரை நோக்கிக்கொண்டிருந்தாள். பின்னர்

“நான் மீண்டும் அவரிடம் பேசுகிறேன்” என்றாள். “ஆம், அது ஒன்றே நாம் செய்யவேண்டியது” என்றார் நாகசேனர்.

ஒருநாள் கடந்து கருணாகரர் இந்திரபுரியை வந்தடைந்தார். அவரை தனியவையில் தமயந்தி சந்தித்தாள். முறைமைச் சொல்லுக்குப்பின் “பேரரசி, நிகழ்வது ஓர் அரசியல்சூழ்ச்சி. அது கலிங்கன் மட்டும் நிகழ்த்துவதல்ல. அவன் அதில் ஒரு தரப்பு மட்டுமே. நோக்கம் இளவரசரை நம்மிடமிருந்து பிரிப்பது” என்றார். “ஆனால் இப்போது அனைத்தும் தெளிவாகிவிட்டனவே? கலிங்க இளவரசி புஷ்கரரை விரும்பவில்லை என அவையெழுந்து சொல்லிவிட்டாள். அவர் கலிங்கன்மேல் கடுஞ்சினம் கொண்டிருக்கிறார்…” என்றார் நாகசேனர். “எனக்கும் என்ன இது என புரியவில்லை. ஆனால் இதை இவ்வண்ணமே விட்டு நாம் காத்திருப்பது சரியல்ல என உள்ளுணர்வு சொல்கிறது” என்றார் கருணாகரர்.

“என்ன செய்யலாம்?” என்றாள் தமயந்தி. கருணாகரர் “அரசி, இளவரசர் ஒரு போருக்கு செல்லட்டும்” என்றார். “போருக்கா? எவருடன்?” என்றாள் தமயந்தி. “சதகர்ணிகளிடம்… விஜயபுரிக்கு அப்பால் ரேணுநாடுக்கு அவர்கள் பின்வாங்கியிருக்கிறார்கள். தென்னகக் காடுகளில் அவர்களின் குருதியுறவுகொண்டுள்ள தொல்குடிகள் உள்ளனர். அவர்களை திரட்டிக்கொண்டிருக்கிறார்கள்” என்று கருணாகரர் சொன்னார். “ஆம், எப்படியும் அவர்களை எதிர்கொண்டே ஆகவேண்டும். அப்போர் இப்போது நிகழ்க!” தமயந்தி “ஆனால்…” என சொல்லெடுக்க கருணாகரர் புரிந்துகொண்டு “சதகர்ணிகளாக நம் படைகளே கிளர்ந்தெழுந்து விஜயபுரியை தாக்கும். மாமன்னர் நளன் வடக்கே இருக்கிறார். விஜயபுரியின் காவலர் புஷ்கரரே. ஆகவே அவர் களமிறங்கியாகவேண்டும்” என்றார்.

“அவர் தயங்க முடியாது. களம்நிற்கையில் பிற உணர்வுகளனைத்தும் விலகி உள்ளம் கூர்கொள்ளும். அவர் சதகர்ணிகளை வென்றுவந்தால் அவரது ஆணவம் நிறைவடையும். அவருக்கே விஜயபுரியை அளிப்போம்” என்றார் நாகசேனர். “அவ்வெண்ணம் முன்னரே என்னிடமிருந்தது” என்றாள் தமயந்தி. “ஆனால் அவருக்கு தனிநிலம் என்பது காளகக்குடிகளை நம்மிடமிருந்து பிரிக்கும். அவர்கள் மெல்லமெல்ல அந்நிலம் நோக்கிச் சென்று அங்கே குவிவார்கள். அவர்களுக்கு ஒரு நாடு உருவாவது நம்முடனுள்ள பிறகுடிகளை காலப்போக்கில் நம்மிடமிருந்து அகற்றும் ஆசைகாட்டலாக ஆகக்கூடும்.”
சிலகணங்களுக்குப்பின் “இப்போது இதை நாம் வெல்வோம். பின்னர் நிகழ்வதை அப்போது பார்ப்போம்” என்றாள்.

அன்று மாலையே ஒற்றனிடமிருந்து புஷ்கரன் நகரிலிருந்து கிளம்பிச்சென்றுவிட்டதாக செய்தி வந்தது. தன் அறையில் ஒற்றனை சந்தித்த தமயந்தி திகைப்புடன் “எங்கே?” என்றாள். “அதை அறிந்துவர ஒற்றர்களை அனுப்பியிருக்கிறோம், பேரரசி. உச்சிப்பொழுதில் வழக்கமாக துயில்கொள்ளும் கொட்டகைக்கு சென்றிருக்கிறார். கொட்டகைக்கு வெளியே விசிறியாட்டும் ஏவலனாக அமர்ந்திருந்த ஒற்றன் அவர் பின்பக்கம் அமைக்கப்பட்ட புதிய வாயிலினூடாக வெளியேறியதை பார்க்கவில்லை. அவர் கோட்டைவாயில் வழியாக வெளியே செல்லவில்லை. தெற்குச் சிறுவாயில் வழியாக மயானங்களுக்குச் சென்று அங்கிருந்து காட்டுப்பாதையில் நுழைந்திருக்கிறார்.”

“தனியாகவா?” என்றாள் தமயந்தி. “இல்லை, உடன் பத்து தேர்ந்த வீரர்கள் இருந்திருக்கிறார்கள். அவர்கள் காட்டிலிருந்து

பெருவழிக்கு வந்தபோது வணிகனாக சாலையில் சென்ற நம் ஒற்றனால் பார்க்கப்பட்டனர். புஷ்கரர் உருமாற்றம் கொண்டிருந்தாலும் அவன் அடையாளம் பெற்றான்" என்றான் ஒற்றன். "அவர்கள் எங்கு செல்கிறார்கள் என்பதை எனக்கு சொல்லுங்கள். அவர்கள் பெரும்பாலும் விஜயபுரிக்கே செல்லக்கூடும்" என்றாள் தமயந்தி. விஜயபுரிக்கான பாதையில் முழுக்காவலையும் முடுக்குவதாகச் சொல்லி ஒற்றன் சென்றான்.

"ஆனால் அவர்கள் கலிங்கத்திற்கு செல்லக்கூடும்" என்றார் கருணாகரர். "அவர் நாம் சொல்வதை நம்பவில்லை. இளவரசியை நேரில் கண்டு கேட்க சென்றிருக்கிறார். அவரைப்போன்ற முதிரா இளைஞரின் உள்ளம் அப்படித்தான் இயங்கும்." தமயந்தி "அதுவும் நன்றே. அங்கு சென்று உண்மையை உணரட்டும்" என்றாள். ஆனால் கலிங்கம் செல்லும் பாதைகள் எதிலும் புஷ்கரன் தென்படவில்லை. அவன் எங்கு சென்றான் என்பதை ஒவ்வொரு நாழிகைக்கும் வந்தபடி இருந்த ஒற்றுச்செய்திகள் வழியாக அவள் உய்த்தறிய முயன்றபடியே இருந்தாள். இரண்டு நாட்கள் எச்செய்தியும் வரவில்லை. "அவர் கலிங்கத்திற்கு செல்லவில்லை. கலிங்கத்தின் நமது ஒற்றர்கள் அவரை பார்க்கவில்லை" என்றார் ஒற்றர்தலைவர் சமரர்.

புஷ்கரன் விஜயபுரியை சென்றடைந்துவிட்டான் என்ற செய்தியுடன் தமயந்தியை புலரியில் நாகசேனர் எழுப்பினார். "விஜயபுரியிலா இருக்கிறார்?" என்றபோது தமயந்தி ஆறுதல்கொண்டாள். "ஆம், அரசி. ஆனால் அவருடன் கலிங்க இளவரசி மாலினியும் இருக்கிறாள்" என்றார் நாகசேனர். தமயந்தி "அவளை சிறையெடுத்து வந்துவிட்டாரா?" என்றாள்.

பின்னர் புன்னகைத்து “அவ்வண்ணம் நிகழ்ந்தாலும் நன்றே” என்றாள். “இல்லை, பேரரசி. அவருக்கு கலிங்க இளவரசி அனுப்பிய தூதுச்செய்தி அவர் இங்கிருக்கையிலேயே வந்திருக்கிறது. அவள் அவர்மேல் கொண்ட காதல் மெய் என்றும் அவருடன் கலிங்கத்தை விட்டு வர ஒப்புதலே என்றும் சொல்லியிருந்தாளாம். அவள் அழைப்பின்பொருட்டே இங்கிருந்து சென்றிருக்கிறார்.”

தமயந்தி ஒன்றும் புரியாமல் நோக்கி நிற்க கருணாகரர் “அவர் அங்கே சென்றதும் கலிங்கத்தின் ஒற்றர்கள் அவரை எதிர்கொண்டிருக்கிறார்கள். இளவரசியை அரண்மனையை அடுத்த மலர்த்தோட்டத்தில் சந்தித்திருக்கிறார். அவருடன் வர இளவரசி ஒப்பினாள். அவளை அங்கிருந்தே அழைத்துக்கொண்டு விஜயபுரிக்கு சென்றுவிட்டார்” என்றார். “விஜயபுரியில் காளகக்குடிகள் இப்போது பெரும்கொண்டாட்டத்தில் இருக்கிறார்கள். இளவரசரின் மணநிகழ்வை எட்டுநாள் விழாவாக அங்கே எடுக்கவிருப்பதாகவும் இரவலருக்கும் சூதருக்கும் கவிஞருக்கும் வைதிகருக்கும் இல்லை எனாது வழங்கவிருப்பதாகவும் முரசறைவிக்கப்பட்டிருக்கிறது.”

✿அமைச்சு அவையைக் கூட்டி வந்து அமரும்போதே முழுச்செய்தியும் வந்துசேர்ந்துவிட்டதென தமயந்திக்கு புரிந்தது. நிகழ்ந்ததை கருணாகரர் தெளிவாக சுருக்கி சொன்னார். “அரசி, சூழ்ச்சியின் முழுவடிவும் இப்போது தெளிவாகிவிட்டது. நான் அங்கிருக்கையிலேயே கலிங்கனின் தூதன் இங்கு வந்துவிட்டான். இளவரசரிடம் அவன் சொன்னதென்ன என்று நம் தூதரிடம் இளவரசரே தன் வாயால் சொல்லி அனுப்பியிருக்கிறார்” என்றார். தமயந்தி

தலையசைத்தாள். “இளவரசர் சொன்னதை அப்படியே சொல்கிறேன். கலிங்க இளவரசி புஷ்கரருக்கு அனுப்பிய தூது முற்றிலும் மெய். அவள் அவரை உளமணம் புரிந்து கன்யாசுல்கத்துடன் அவர் வருவதற்காக காத்திருந்தாள். அவருடைய குறுவாளும் செய்தியும் அவளுக்கு கிடைத்தது. அதை நெஞ்சோடணைத்தபடி அவள் அவருக்காக காத்திருந்தாள். ஆனால் அந்த மணஉறவு நிகழலாகாதென்று நீங்கள் விரும்பினீர்கள். ஆகவே என்னை தூதனுப்பினீர்கள்.”

தமயந்தி அனைத்தையும் புரிந்துகொண்டு சலிப்புடன் பீடத்தில் சாய்ந்தமர்ந்தாள். கருணாகரர் தொடர்ந்தார் “நான் அங்கு சென்று சொன்னதாக நீங்கள் புஷ்கரரிடம் சொன்னவை முற்றிலும் பொய். நான் அங்கே சென்று கலிங்க இளவரசியை மணக்க புஷ்கரருக்கு விருப்பமில்லை என்றும் நிஷதத்தின் காலடியில் கிடக்கும் கலிங்கம் எப்படி அந்த மணவுறவை விரும்பலாம் என்றும்தான் கேட்டேன். அவையிலிருந்த இளவரசி எழுந்து புஷ்கரரை அவள் முன்னரே உளமணம் புரிந்துவிட்டாள் என்று சொன்னபோது அவள் விரும்பினால் இளவரசருக்கு உரிமைப்பெண்ணாக திகழலாம் என்று நான் சொன்னேன். அவள் சீற்றத்துடன் புஷ்கரன் அவளுக்கு அளித்த குறுவாளைக் காட்டியபோது அந்த வாள் அவளை புஷ்கரன் அரண்மனை மகளிரில் ஒருவராக ஏற்கவே உறுதியளிக்கிறது என்று நான் சொன்னேன்.”

“என்ன இது?” என்று தமயந்தி கூவினாள். உடல் பதற எழுந்து “அரசுசூழ்தலில் இத்தனை கீழ்மை உண்டா என்ன? அங்கே அவைப்பெரியவர்கள் இல்லையா? அந்தணர் எவருமில்லையா?” என்றாள். “அவையிலிருந்த அந்தணர் ஸ்ரீகரரை காசிக்கு அனுப்பிவிட்டனர். பிறர் வாய்திறக்கப்போவதில்லை” என்றார்

கருணாகரர். “இப்படி அவைநிகழ்வை மாற்றி சொல்லமுடியுமா? ஒரு சான்றுக்கூற்று கூடவா எழாது?” என்றாள் தமயந்தி. “பேரரசி, அந்த அவையே திட்டமிட்டுக் கூட்டப்பட்டது. அதில் அந்தணர் ஒருவர் இருந்தால் மட்டுமே நான் நம்புவேன் என்பதற்காக ஸ்ரீகரர் மட்டும் அங்கு நிறுத்தப்பட்டார்” என்றார் கருணாகரர்.

“புஷ்கரர் இவையனைத்தையும் நம்புகிறாரா?” என்றாள் தமயந்தி ஏமாற்றத்துடன். “ஆம், அவர் நம்ப விழைவது இது” என்றார் கருணாகரர். “அத்துடன் இச்சூழ்ச்சியின் கண்சுழியாக விளங்கியவரே இப்போது அவருடைய துணைவியென்றிருக்கிறார். அவர் எண்ண விழைவதை இனி கலிங்க இளவரசியே முடிவுசெய்வார்.” தமயந்தி நெடுநேரம் ஒன்றும் சொல்லவில்லை. பின்னர் “ஆக, இப்போது நான் இளவரசருக்கு ஒரு ஷத்ரிய மனைவி அமைவதை தடுத்தவள். அவர் குலமேன்மை கொள்வதை அஞ்சுபவள்” என்றாள். அவை மறுமொழி சொல்லவில்லை. “அவர் ஐயம்கொள்ள விழைகிறார். வெறுக்க முயல்கிறார். இனி அவர் நாடுவதே விழிகளில் விழும். பிறிதொன்றை நோக்கி அவர் திரும்பவேண்டும் என்றால் அவர் வாழும் முழு உலகே உடைந்து சிதறவேண்டும்... அது எப்போதும் அனைத்தும் கைவிட்டுப்போன பின்னரே நிகழ்கிறது.”

சிம்மவக்த்ரன் “இனி ஒன்றும் செய்வதற்கில்லை. நாம் மீண்டும் உடன்பட்டே ஆகவேண்டும்” என்றான். “கலிங்க இளவரசிக்கும் புஷ்கரருக்குமான மணநிகழ்வை இங்கேயே சிறப்புற நிகழ்த்துவோம். அதில் தாங்களும் பேரரசரும் கலந்துகொண்டு வாழ்த்துங்கள். குடிகளிடையே பரவிக்கொண்டிருக்கும் ஐயமும் சினமும் ஓர் அறிவிப்பிலேயே விலகும்” என்றான். நாகசேனர்

“கூடவே புஷ்கரரை விஜயபுரியின் அரசர் என அறிவிப்போம். காளகக்குடிகளின் எதிர்ப்பு அடங்கிவிடும்” என்றார்.

தமயந்தி “இல்லை, அமைச்சரே. அது நிகழலாகாது” என்றாள். “என் கொடையாக புஷ்கரர் விஜயபுரியின் முடியைப் பெற்று நான் அளித்த கோலை ஏந்தி அமர்வது வேறு. இப்போது வஞ்சத்தால் அவரை வீழ்த்த எண்ணிய என்னை வென்று அதை அவர் அடைந்ததாகவே அவரது குலம் எண்ணும். இன்று அவர்களிடமிருக்கும் ஐயமும் வஞ்சமும் எஞ்சும் வரை அவர்கள் ஒருங்கிணையவும் நிலைகொள்ளவும் நான் வாய்ப்பளிக்கப் போவதில்லை.” நாகசேனர் “ஆனால்...” என்று சொல்ல நாவெடுக்க அவரை அடக்கி “நான் முடிவுகளை எடுத்துவிட்டேன்” என்றாள் தமயந்தி.

தாழ்ந்த உறுதியான குரலில் “புஷ்கரரின் மணநிகழ்வு இங்கே அமையும். அது அரசப்பெருவிழவென்றே ஒருங்கிணைக்கப்படும். அவள் கையைப்பற்றி அவர் கைகளில் என் கொழுநரே கொடுப்பார். விஜயபுரியின் மணிமுடியை அவ்விழவிலேயே அவர் தலையில் நான் சூட்டுவேன். ஆனால் விஜயபுரியின் படையினர் அனைவருமே விதர்ப்ப நாட்டவராகவே இருப்பார்கள். என் ஆணைகொள்ளும் சிம்மவக்த்ரரே அங்கிருந்து அனைத்தையும் இயற்றுவார்” என்றாள் தமயந்தி. “ஒருபோதும் அவர் படைகுவிக்க ஒப்பேன். காளகக்குடிகள் இனி ஒருதலைமுறைக்காலம் ஓரிடத்தில் ஒருங்கிணைய முடியாமல் செய்வேன்.”

“ஆணை, அரசி” என்றார் கருணாகரர். பிறர் தலைவணங்கி “ஆம்” என்றனர். “அரசருக்கு செய்தி செல்லட்டும். விழவுக்கான நாளை நிமித்திகருடன் சூழ்ந்து அறிவியுங்கள்” என்றாள் தமயந்தி. “தலைமையமைச்சரே நேரில் சென்று இங்கு

இளவரசரின் மணவிழவை அவரது தமையன் நின்று நடத்திவைக்க விழைவதாகச் சொல்லி அழைத்துவாருங்கள். அவர் வருவார். அவ்விழவை எனக்கெதிரான ஒரு வெற்றிக் களியாட்டாக மாற்றிக்காட்டமுடியும் என எண்ணுவார். அதற்கு நாமும் அவருக்கு ஒரு வாய்ப்பு அளிப்போம்.”

❀நளன் இந்திரபுரிக்குத் திரும்பியபோது அவனிடம் அனைத்தையும் கருணாகரர் சொன்னார். ஆனால் சொல்லத்தொடங்கிய சற்றுநேரத்திலேயே நளனின் சித்தம் அதிலிருந்து விலகிவிட்டதை அவர் உணர்ந்தார். இறுதியில் மணவிழவு குறித்த செய்தியைச் சொன்னதும் அவன் முகம் மலர்ந்தது. “பெரிய விருந்தொன்றை நிகழ்த்தவேண்டுமென நானும் எண்ணியிருந்தேன். வடபுலத்தில் முற்றிலும் புதிய உணவுகள் சிலவற்றை கற்றேன். பலவற்றை நானே வடிவமைத்தேன். என் மாணவர்கள் என பதினெண்மர் உடனிருக்கிறார்கள். இவ்விழவின் அடுதொழிலை நானே முன்னின்று நடத்துகிறேன்” என்றான். கருணாகரர் பெருமூச்சுடன் “ஆம், அது ஒரு நற்பேறு” என்றார்.

தமயந்தி அதை கேட்டதும் புன்னகைத்து “ஆம், அவரது சித்தம் இப்போது அடுதொழிலில் மட்டுமே அமைந்துள்ளது. அதுவும் நன்றே. இச்சிறுமைகளை அவர் அறியவேண்டியதில்லை” என்றாள். கருணாகரர் குழப்பத்துடன் “இல்லை, பேரரசி. அவர் ஆர்வம் கொள்ளவில்லை. ஆனால் ஒரு தருணத்தில் அனைத்தையும் உணர்ந்தார் என்றால் அதிர்ச்சி அடைவார். நிலைபிறழக்கூடும்” என்றார். “அதை நாம் பின்னர் நோக்குவோம். பிற அனைத்தையும் நீங்களே ஒருங்கிணையுங்கள். பேரரசர் அடுமனையில் ஈடுபட்டிருக்கட்டும். அரியணையமர்வதற்கு மட்டும் அவர்

வந்தால் போதும்” என்றாள் தமயந்தி. கருணாகரர் தலை வணங்கினார்.

இந்திரபுரியின் மிகப் பெரிய விழவுகளில் ஒன்றாக இருந்தது புஷ்கரனின் மணப்பேறு. நகரம் பன்னிரு நாட்களுக்கு முன்னரே அணிகொண்டது. கோட்டைமுகப்பிலிருந்து நிஷதபுரியின் எல்லைவரை சாலையை தோரணவளைவுகளால் அழகுசெய்தனர். கோட்டைமுகப்பிலிருந்து அரண்மனைவரை மலர்விரிக்கப்பட்ட சாலை அமைக்கப்பட்டது. நகர்மக்கள் அனைவரும் வந்தமரும் அளவுக்கு பெரிய ஏழுநிலை அணிப்பந்தல் செண்டுமுற்றத்தில் கட்டப்பட்டது. அதன் மேலெழுந்த கொடி அரண்மனை மாடத்துக் கொடிக்கு நிகராகப் பறந்தது. மணமேடையை அரியணைகள் அமையும்படி கட்டியிருந்தனர். அவையில் புஷ்கரன் விஜயபுரியின் மணிமுடியை சூடுவான் என்ற செய்தியை காளகக்குடிகளிடமிருந்து பிறர் அறிந்திருந்தனர். அது இயல்பாக நிகழவேண்டியது என்பதே அனைவரும் எண்ணுவதாக இருந்தது.

நளன் முழுநேரமும் அடுமனையிலும் கலவறையிலும் இருந்தான். அடுமனையாளர்கள் அவனால் எண்ணி எண்ணி சேர்க்கப்பட்டனர். ஒவ்வொருவருக்குமான ஆணைகள் அவனாலேயே முகச்சொல்லாக அளிக்கப்பட்டன. சமையலுக்கான பொருட்கள் ஒவ்வொன்றும் நளனால் நோக்கி தெரிந்து உறுதிசெய்யப்பட்டன. செம்புத் துருவலென அரிசியும் பொன்மணிகளென கோதுமையும் வெள்ளித்தூள் என வஜ்ரதானியமும் வந்து நிறைந்தன. கனிகளும் காய்களும் அவற்றின் மிகச் சிறந்த தோற்றத்தில் இருந்தன. முத்தெனச் சொட்டியது தேன். பொன்விழுதென அமைந்திருந்தது நெய்.

கலவறை நிறைந்திருப்பதை நோக்கியபடி நின்றிருந்த நளன் திரும்பி தன்னருகே நின்றிருந்த அடுமனைத்தலைவர் கீரரிடம் "கலவறைப் பொருட்களில் திருமகள் அமைந்தால் போதும். பந்தியில் கலைமகள் சுவையென எழுவாள்" என்றான்.

அன்றைய சமையலை இந்திரபுரியில் நிகழ்ந்தவற்றில் பெரிய வேள்வி என்றனர் கவிஞர். நூறு உருவம் கொண்டு எங்கும் நிறைந்திருந்தான் நளன். அவனது ஆணைகள் ஒவ்வொருவர் காதிலும் தனித்தனியாக ஒலித்தன. பலநூறு கைகளால் கண்களால் அவனே அங்கு நிறைந்திருந்து அச்சமையலை நிகழ்த்தினான். ஒவ்வொன்றும் பிறிதொன்றாக உருமாறின. வேறொரு உலகில் அவை ஒன்றென இருந்தன என ஒன்றை ஒன்று கண்டடைந்தன. உப்பில் நிறைவுற்றது புளிக்காய். புளியில் கரைந்தது இஞ்சி. ஒவ்வொரு பொருளிலும் எழுந்து முரண்கொண்டு நின்றது ஒரு சுவை. அது தன் எதிர்ச்சுவையைக் கண்டு தழுவிக்கொண்டதும் நிறைவடைந்தது. அறியா விரல்களால் பின்னிப்பின்னி நெய்யப்படும் கம்பளம்போல சுவைகளை முடைந்து முடைந்து சென்றது ஒரு விசை. விரிந்தெழுந்தது சுவை என்னும் ஒற்றைப்பரப்பு.

திருமகள் கலைமகளாகிய கணம் எழுந்தது. அடுமனைக்குமேல் நறுமணப்புகையின் அன்னக்கொடி ஏறியது. ஊண்முரசு ஒலிக்கத் தொடங்கியதும் மக்கள் ஆர்ப்பொலியும் சிரிப்பொலியுமாக அன்னநிலை நோக்கி வந்து குழுமினர். பேரரசரின் கையால் உண்பதென்பது அவர்கள் நாள் எண்ணிக் காத்திருப்பது. அவன் படைகொண்டு அயல்நாடுகளில் சென்றமையத் தொடங்கியபின் அது பல்லாண்டுகளுக்கொருமுறை நிகழ்வதென்றாகியது.

ஒவ்வொரு மூத்தவரும் அறிந்த சுவைகளை சொல்லிச் சொல்லி இளையோர் உள்ளத்தில் அதை பெருக்கினர். சுவையை மானுடரால் நினைவுகூர இயலாதென்பதனாலேயே அதற்கு நிகரென்று பிறிதொன்றை சொன்னார்கள். பிறிதொன்றுக்கு நிகரெனச் சொல்லப்படுவது அதை எட்டும்பொருட்டு எழுந்து எழுந்து வளர்கிறது. அவர்கள் ஒவ்வொருவரும் எண்ணியிருந்த விருந்து விண்ணவர் அமுதுக்கு நிகரானது. ஆனால் முன்பு அவ்வாறு எதிர்பார்த்துச் சென்றபோதெல்லாம் அதைக் கடந்து நின்றது அவன் கை அளித்த சுவை.

ஊட்டு மண்டபத்தில் எடுத்து வைக்கப்பட்ட உணவுநிரைகளை நோக்கி நின்றிருந்த நளனை அணுகிய கருணாகரர் “அரசே, மணநிகழ்வுக்கு அவை ஒருங்குகிறது. தாங்கள் அணிகொண்டு எழுந்தருள வேண்டும்” என்றார். “ஆம், இதோ” என்றான் நளன். மீண்டும் ஆணைகளை இட்டபடி சுற்றிவந்தான். அந்த உணவுக்குவைமுன் இருந்து அகல அவன் உள்ளம் கூடவில்லை என உணர்ந்த கருணாகரர் “இளவரசர் நகர்புகுந்துவிட்டார், அரசே. அவர் அரண்மனைக்குள் நுழைவதற்கு முன் தாங்கள் அணிகொண்டாகவேண்டும்” என்றார். “இதோ” என்று நளன் சொன்னான். நினைத்துக்கொண்டு “பழத்துண்டுகள்... இவ்வன்னத்துடன் விரல்நீளத்தில் வெட்டப்பட்ட பழத்துண்டுகள் அளிக்கப்படவேண்டும் என்றேனே?” என்றான். “அவை இதோ உள்ளன, அரசே” என்றார் அடுமனையாளர் ஒருவர்.

கருணாகரர் மீண்டும் “அரசே...” என்றார். “இதோ” என்றான் நளன். கருணாகரர் “இளவரசரை எதிர்கொள்ளவேண்டிய புரவிகள் ஒருங்கியுள்ளன. தாங்கள் வந்து உரியனவற்றை

தெரிவுசெய்யவேண்டும்” என்றார். “ஆம், நான் சிம்மவக்த்ரனிடம் சொல்லியிருந்தேன்... இதோ...” என மேலும் சில ஆணைகளை இட்டுவிட்டு அவருடன் சென்றான். ஏழு வெண்புரவிகள் அரண்மனை முற்றத்தில் ஒருங்கி நின்றிருந்தன. அவை நளனின் மணத்தை நெடுந்தொலைவிலேயே உணர்ந்து கால்களால் கல்தரையை உதைத்தும் தலைகுனித்து பிடரி உலைய சீறியும் மெல்ல கனைத்தும் வரவேற்றன. அவற்றை அணுகி ஒவ்வொன்றாக கழுத்திலும் தலையிலும் தொட்டு சீராட்டி சிறுசொல் உசாவினான். “ஆம், இவைதான். நான் உரைத்தவாறே அமைந்துள்ளன” என்றான்.



“அரசே, கிளம்புக! அணிகொள்ள நேரமில்லை” என்றார் கருணாகரர். “ஆம், இதோ” என மீண்டும் புரவிகளை கொஞ்சிவிட்டு அவருடன் சென்றான். வெந்நீர் ஏனத்திற்குள் படுத்துக்கொண்டே ஏவலரை அழைத்து அடுமனைக்கான ஆணைகளை விடுத்துக்கொண்டிருந்தான். முந்தையநாள் அந்தியிலேயே புஷ்கரனும் காளகக்குடியின் மூத்தவர்களும் வந்து இந்திரபுரிக்கு வெளியே அமைக்கப்பட்டிருந்த பாடிவீட்டில் தங்கியிருந்தனர். பிறிதொரு அணியாக காளகக்குடிப் பெண்டிருடன் கலிங்க இளவரசி வந்து சோலைக்குடிலில்

தங்கியிருந்தாள். அவர்கள் நகர் நுழைவதற்காக நிமித்திகர் வகுத்த பொழுது அணுகிக்கொண்டிருந்தது. நகர்மக்கள் சாலைகளின் இரு பக்கமும் உப்பரிகைகளின் மீது செறிந்து கைகளில் மஞ்சள்பொடியும் மங்கல அரிசியும் மலரிதழ்களும் நிறைந்த தாலங்களுடன் காத்திருந்தார்கள்.

அணியறைக்குள் ஓடிவந்த கருணாகரர் “அரசே, அரசி கிளம்பி அவைக்கு சென்றுவிட்டார்கள். தாங்கள் கிளம்பும்பொழுதைக் கேட்டு ஏவலன் வந்துள்ளான்” என்றார். “உடனே கிளம்புகிறேன். அங்கே கோட்டைவாயிலில் எதிர்கொள்பவர் எவர்?” என்றான். “நாகசேனரும் சிம்மவக்த்ரரும் சென்றுள்ளனர். அவர்கள் அரண்மனை முற்றத்திற்கு வருகையில் நான் இளவரசர் இந்திரசேனருடன் அவர்களை எதிர்கொண்டழைத்து அவைக்கு கொண்டுவந்து சேர்ப்பேன். அவையில் அவருடைய மணநிகழ்வை அரசி முறைப்படி அறிவித்த பின்னர் மங்கல இசைஞரும் அணிச்சேடியரும் சூழ நிஷதர்களின் கொடியுடன் அவர் மணவறைக்குள் செல்வார்.”

நளன் எழுந்தபோது அணிஏவலன் அவன் கால்களின் கழலை திருத்தியமைத்தான். “அடுமனைப்பணி முடித்து பரிமாறும்போது உப்பு குறித்த ஐயம் எழாத அடுமனையாளனே இல்லை” என்றான் நளன் சிரித்தபடி. “இவர்களும் பிறிதொரு நெறியில் இல்லை.” கருணாகரர் புன்னகைத்து “கலைஞர்கள்” என்றார். நளன் சால்வையை எடுத்து அணிந்தபடி கிளம்பினான். கருணாகரர் உடன் வந்தபடி மெல்லிய குரலில் “ஒரு செய்தியை நான் தங்களிடம் சொல்லியாகவேண்டும். அதை இன்னமும் அரசியிடம் சொல்லவில்லை” என்றார். “சொல்க!” என்றான் நளன். “இளவரசர் காகக்கொடியுடன் வந்துகொண்டிருக்கிறார்.”

நளன் புருவங்கள் சுருங்க நின்றான். “நிஷதகுலங்களின் கொடி. அதை நாம் கலிதேவனுக்கான விழவுகளில் அன்றி ஏற்றுவதில்லை இப்போது” என்றார் கருணாகரர். நளனில் எந்த உணர்வும் நிகழாமை கண்டு மேலும் அழுத்தி “இந்திரனின் மின்கதிர்கொடியே நம் அடையாளமென்றாகி நெடுங்காலமாகிறது” என்றார். நளன் அவரையே ஏதும் புரியாதவன்போல நோக்கியபின் புன்னகைத்து “சரி, அதிலென்ன? மூத்தவன் இந்திரனின் அடியவன். இளையவன் கலியின் பணியன். இரு தெய்வங்களாலும் புரக்கப்படுக நம் நகர்” என்றான்.

“இல்லை…” என கருணாகரர் மேலும் சொல்ல “இதையெல்லாம் எண்ணி நம் உள்ளத்தை ஏன் இருள்கொள்ளச் செய்யவேண்டும்? நிகரற்ற விருந்தை இன்று சமைத்துள்ளேன். நானே அதை அவனுக்கு விளம்புகிறேன். சுவையிலாடி தேவர்களைப்போன்று ஆன நம் குடியினர் நம்மை சூழ்ந்திருப்பார்கள். நம்புக அமைச்சரே, இன்று இனியவை அன்றி பிறிது நிகழ வாய்ப்பே இல்லை. இன்றுடன் அத்தனை கசப்புகளும் கரைந்து மறையும். மலர்ந்தும் கனிந்தும் விளைந்தும் கலம்நிறைந்துள்ளது அமுது. அமுதுக்கு மானுடரை தேவர்களாக்கும் ஆற்றலுண்டு” என்றான். கருணாகரர் இதழ்கோட புன்னகை செய்தார். “வருக!” என அவரை அழைத்தபடி நளன் அவைநோக்கி சென்றான்.

# நீர்க்கோலம் - 33

32. மின்னலும் காகமும்

❀காகக்கொடியை அதுவரை புஷ்கரன் தேர்முனையில் சூடியிருக்கவில்லை. இந்திரபுரியின் மின்கதிர்கொடியே அவன் தேரிலும் முகப்பு வீரனின் கையிலிருந்த வெள்ளிக்கோலிலும் பறந்தது. விஜயபுரியிலிருந்து கிளம்பும்போது அவனுடன் குடித்தலைவர் சீர்ஷரும் மூத்தோர் எழுபதுபேரும் அகம்படியினரும் அணிப்படையினரும் வந்தனர். கிளம்பும்போதே எவரெவர் வரவேண்டும் என்று அங்கே சிறிய பூசல்கள் நிகழ்ந்தன. “இது ஒரு அரசச் சடங்கு. இதை நாம் மறுக்க இயலாது. ஆனால் இதை நாம் பெரிதாக எண்ணவில்லை என்றும் அவர்களுக்கு தெரிந்தாகவேண்டும். எண்ணி அழைக்கப்பட்ட எழுவர் மட்டிலும் பங்கெடுத்தால் போதும்” என்றார் சீர்ஷர்.

“ஆம்” என்று சொன்னாலும் குடிமூத்தார் அனைவருமே வரவிழைந்தார்கள். எவரை விடுவது என்று புஷ்கரனால் முடிவெடுக்க இயலவில்லை. அதை அவன் சீர்ஷரிடமே விட்டான். அவர் தன் குடும்பத்தினரிலேயே அறுவரை தெரிவுசெய்து உடன் சேர்த்துக்கொண்டார். அதை குடிமூத்தாராகிய சம்புகர் வந்து புஷ்கரனிடம் சொல்லி “அரசநிகழ்ச்சியை மட்டுமல்ல அதன்பின் இங்கு நிகழவிருக்கும் மணநிகழ்வையே நாங்கள் புறக்கணிக்கவிருக்கிறோம்” என்றார். பதறிப்போய் அவர் விரும்பும் அனைவரையும் சேர்த்துக்கொள்ள அவன் ஒப்புதலளித்தார். அன்றுமாலைக்குள் பன்னிரு மூத்தார் வந்து அவனெ சந்தித்தனர். இரவுக்குள் நாற்பதுபேர் கிளம்புவதாக ஒருங்கு செய்யப்பட்டது. புலரியில் எழுபதுபேர் வந்து முற்றத்தில் நின்றிருந்தனர்.

புலித்தோலும் கரடித்தோலும் போர்த்தி, தலையில் குடிக்குறியான இறகுகளுடன், குடிமுத்திரை கொண்ட

கோல்களை வலக்கையில் ஏந்தியபடி நின்றிருந்த காளகர்களை அவன் திகைப்புடன் நோக்கினான். இவர்களைக்கொண்டு ஒரு தென்னிலத்துப் பேரரசை உருவாக்க கனவு காண்பதன் பொருளின்மை அவனை வந்தறைய சோர்வு கொண்டான். அவனுடைய சோர்வை உணராத சீர்ஷர் “நல்ல திரள்... நாம் சென்றுசேரும்போது இன்னமும் பெருகும். அவர்கள் அஞ்சவேண்டும்” என்றார். அவர்தான் திரள்தேவையில்லை என்று சொல்லியிருந்தார் என்பதையே மறந்துவிட்டிருந்தார்.

புரவியில் சென்ற கொடிவீரனையும் அறிவிப்பு முரசுமேடை அமைந்த தேரையும் தொடர்ந்து இசைச்சூதரும் அணிப்பரத்தையரும் சென்றனர். அதைத் தொடர்ந்து குடிமூத்தார் தேர்களிலும் வண்டிகளிலும் செல்ல அவனுடைய தேர் தொடர்ந்தது. அவனுடன் ஏறிக்கொண்ட சீர்ஷர் “நாம் விஜயபுரியை வென்றதும் முதலில் வெள்ளிக் காப்பிடப்பட்ட தேர் ஒன்றை செய்தாகவேண்டும். இந்தத் தேர் அரசர்களுக்குரியதல்ல. நம் குருதியை கையாளும் அந்த ஷத்ரியப்பெண் வெள்ளித் தேரில் செல்கையில் நாம் இப்படி செல்வதே இழிவு” என்றார். அவர் சற்றுநேரம் பேசாமல் வந்தால் நன்று என்று புஷ்கரன் எண்ணினான்.

ஆனால் அனைத்தையும் தானே நிகழ்த்துவதாக சீர்ஷர் எண்ணிக்கொண்டிருந்தார். தேரை அவ்வப்போது நிறுத்தி வீரர்களுக்கு ஆணைகளை பிறப்பித்தார். திரும்பி அவனிடம் “நான் எப்போதும் கூர்நோக்குடன் இருப்பவன். இப்போது விஜயபுரியில் நாம் இல்லை. எதிரிகள் படைகொண்டுவந்தால் என்ன செய்வது?” என்றார். புஷ்கரன் எரிச்சலுடன் “இருந்தால் மட்டும் என்ன? நானாவது போர்க்களம் புகுந்திருக்கிறேன். நீங்கள் என்ன செய்தீர்கள்?” என்றான். அவர் வாய்திறந்து

சிலகணங்கள் நோக்கிவிட்டு “இல்லை… ஆனால் அரசுசூழ்தல்… அல்ல, படைக்கள வரைவு…” என்றார்.

புஷ்கரன் ஏளனத்துடன் “நமக்கு எதுவும் தெரியாது. என்னால் எந்தக் களத்திலும் நிற்க முடிந்ததில்லை. இந்த நகரம் மூத்தவரால் பயிற்றுவிக்கப்பட்ட புரவிப்படையாலும் அவற்றை நடத்தும் விதர்ப்ப நாட்டு படைத்தலைவர்களாலும் கைப்பற்றப்பட்டது. அவர்களால் ஆளப்படுகிறது இந்நிலம்” என்றான். அவர் திகைத்து வாயை சிலமுறை அசைத்தார். பின்னர் நடுநடுங்கியபடி “என்ன சொல்கிறாய்? நீ எவரென நினைத்தாய்? நான் உன் தாதனையே பார்த்தவன். அவர் காட்டில் அரக்கு தேடிச்சேர்த்து தலையில் எடுத்துக்கொண்டு சென்று சந்தையில் விற்கையில் கண்களால் கண்டு அருகே நின்றவன். இப்போது நீ இளவரசனாகிவிடுவாயா?” என்று கூவினார்.

அனைத்து தோற்றங்களையும் களைந்து வெறும் கானகனாக மாறி நெஞ்சில் ஓங்கி அறைந்து கூச்சலிட்டார். “மூடா. நான் உன்னை இளவரசன் என்று எண்ணுவது ஒரு சடங்காகத்தான். நீ என்னை சிறுமைசெய்து பேசினால் கைகட்டி நிற்பேன் என எண்ணினாயா?” அவருடைய வாயோரம் எச்சில் நுரைத்தது. “உன் தந்தையின் ஆண்குறி சிறிதாக இருக்கையிலேயே பார்த்தவன் நான். என்னிடம் பேசும்போது சொல்லெண்ணிப் பேசு… ஆமாம்… என்னிடம் எண்ணிப் பேசவேண்டும் நீ.”

புஷ்கரன் “அவருடைய குறியை பார்க்கையில் நீங்களும் அதேபோலத்தான் சிறிய குறி கொண்டிருந்தீர்கள்” என்றான். அவர் விம்மலுடன் ஏதோ சொல்லவந்து சொல்லெழாமல் தவித்து “நிறுத்து! தேரை நிறுத்து! நான் செல்கிறேன்” என்றார். அவன் பேசாமல் நிற்க “நான் இல்லாமல் நீ இந்நகரத்தை

ஆள்வாயா? அதையும் பார்க்கிறேன். கீழ்மகனே, நீ யார்? காட்டில் கல்பொறுக்கி அலையவேண்டிய சிறுவன். ஒரு ஷத்ரியப்பெண் உன்னை மணந்தால் நீ ஷத்ரியனாகிவிடுவாயா? அவள் யார்? அவள் உண்மையான ஷத்ரியப்பெண் அல்ல. உண்மையான ஷத்ரியப்பெண் காட்டுக்குலத்தானை மணப்பாளா? அவள் அன்னை சூதப்பெண். அவள் குருதி சூதக்குருதி. அவளுடன் சேர்ந்து நீயும் குதிரைச்சாணி அள்ளிக்கொட்டு. போ!" என்று உடைந்த குரலில் இரைந்தார்.

புஷ்கரன் "இறங்குவதாக இருந்தால் இறங்குங்கள்" என்றான். அவர் இறங்கி கையிலிருந்த கோலை தூக்கி சூழவந்த காளகக்குடிகளை நோக்கி கூச்சலிட்டார். "என்னை சிறுமை செய்தான். காளகக்குடிகளை இழிவுறப் பேசினான். ஒரு ஷத்ரியப்பெண் வந்ததும் குருதியை மறந்துவிட்டான். மூடன்... அடேய், அந்த ஷத்ரியப்பெண் ஒருபோதும் உன் குழவியரை பெறமாட்டாள். அவளுக்கு வெண்குருதி அளிக்க அவள் குலத்தான் இருளில் வருவான்... தூ!"

மூத்தவர் இருவர் அவரை வந்து அழைத்துச்சென்றனர். "விடுங்கள் என்னை. நான் இவனுக்கு படைத்துணையாக வந்தவன். இந்தக் கீழ்மகனின் அன்னத்தை உண்டுவாழவேண்டிய தேவையில்லை எனக்கு" என்று அவர் திமிறினார். "மறந்துவிடுங்கள், மூத்தவரே. இது என்ன சிறிய பூசல்... வாருங்கள்" என்றார் ஒருவர். "இன்கள் இருக்கிறது" என அவர் செவியில் சொன்னார். அவர் விழிகள் மாறின. "காட்டுப்பன்றி ஊனும்" என்றார். அவர் "என்னால் இதை தாங்கிக்கொள்ள முடியாது. என்ன என்று நினைத்தான் என்னை? நான் காளகக்குடிகளின் முதற்தலைவன். இன்னமும் இந்தக் கோல் என் கைகளில்தான் உள்ளது" என்றார்.

“வருக... நாம் நாளை பேசுவோம்” என்று அவர்கள் இழுத்துச்சென்றார்கள். அவர் “இவனை என் மைந்தனைப்போல வளர்த்தேன். கோழை. இவன் செய்த அருஞ்செயல் என்ன, போருக்குப் போனபோதெல்லாம் புண்பட்டு விழுந்ததல்லாமல்? இவன் தொடையில் பாய்ந்தது எவருடைய வேல்? அறிவீரா? இவனே வைத்திருந்த வேல் அது. அதன் முனைமேல் தவறி விழுந்தான். சிறுமதியோன்” என்றார். அவர்கள் “போதும். அதை பிறகு பேசுவோம்” என அவரை பொத்தி அப்பால் அழைத்துச்சென்றார்கள்.

புஷ்கரன் தன் முகத்தில் ஒரு புன்னகை இருப்பதை அதன் பின்னரே உணர்ந்தான். அவரை புண்படுத்தி எதை அடைந்தேன்? அவரை சிறுமை செய்வதனூடாக எதையோ நிகர்செய்கிறேன். அவ்வெண்ணம் மீண்டும் எரிச்சலை கிளப்ப அவன் முகம் மாறுபட்டது. என்னவென்றறியாத அந்த எரிச்சலுடனும் கசப்புடனும்தான் அப்பகலை கடந்தான். விஜயபுரியில் இருந்து இந்திரபுரிக்கு தேர்ச்சாலை போடப்பட்டிருந்தது. பல இடங்களில் சிற்றோடைகளுக்குமேல் மரப்பாலங்கள் இருந்தன. இரு இடங்களில் பெருநதிகளுக்குமேல் மிதக்கும்பாலங்கள் அமைக்கப்பட்டிருந்தன. நிஷதர்களின் புரவிகள் மட்டுமே அந்த அலைபாயும் பாலங்களில் நடக்க பயின்றிருந்தன.

அவர்கள் இரவில் தங்கிய வழிமாளிகைக்கு அப்பால் படையினர் அமைத்த பாடிவீட்டில் கலிங்க இளவரசி மாலினிதேவியும் அவளுடன் வந்த நிஷதநாட்டுப் பெண்களும் தங்கியிருந்தனர். மாளிகையின் உப்பரிகையில் நின்றபடி அந்தக் கட்டடத்தை அவனால் பார்க்க முடிந்தது. அதைச் சூழ்ந்து நிஷதப்படைவீரர்கள் காவல் நின்றனர். அதன் முற்றத்தில் கலிங்க இளவரசியின் பட்டுத்திரைகொண்ட தேரும் அவள்

தோழிகளின் தேர்களும் நின்றன. கலிங்கத்தின் சிம்மக்கொடி பறந்துகொண்டிருந்தது.

அவன் தன்னுள் உள்ள எரிச்சல் ஏன் என்று அப்போதுதான் உணர்ந்தான். அவள் ஓலையை ஏற்று கலிங்கத்திற்கு மாற்றுரு கொண்டு சென்று இரவில் கோட்டைக்குள் நுழைந்து அணித்தோட்டத்தின் கொடிமண்டபத்தில் அவளை கண்டபோதெல்லாம் அவன் நெஞ்சு எகிறி துடித்துக்கொண்டிருந்தது. சூதர்கள் பாடப்போகும் ஒரு பெருநிகழ்வு. வாள்கொண்டு போரிட நேரிடலாம். குருதி வீழலாம். அவளை சிறைகொண்டு தேரில் மேலாடை பறக்க விரையலாம். அவர்கள் வேல்கள் ஏந்தி துரத்தி வரலாம். அம்புகள் அவர்களை கடந்து செல்லலாம்.

அவளை நேரில் கண்டதும் அவனுடைய பரபரப்பு அணைந்தது. அத்தனை எதிர்பார்த்திருந்தமையால், அவ்வெதிர்பார்ப்பு ஏமாற்றமும் நம்பிக்கையும் ஐயமும் அச்சமும் விழைவும் ஏக்கமும் என நாளுக்குநாள் உச்ச உணர்வுகள் கொண்டு வளர்ந்தமையால் அவளும் வளர்ந்து பெரிதாகிவிட்டிருந்தாள். காவியங்களின் தலைவியருக்குரிய அழகும் நிமிர்வும் கொண்டவள். எண்ணி எடுத்து ஏட்டில் பொறிக்கும்படி பேசுபவள். எதிர்வரும் எவரும் தலைவணங்கும் நடையினள்.

ஆனால் அவள் மிக எளிய தோற்றம் கொண்டிருந்தாள். சற்று ஒடுங்கி முன்வளைந்த தோள்களும், புடைத்த கழுத்தெலும்புகளும், முட்டுகளில் எலும்பு புடைத்த மெலிந்த கைகளும் கொண்ட உலர்ந்த மாநிற உடல். நீள்வட்ட முகத்தில் சிறிய விழிகள் நிலையற்று அலைந்தன. அனைத்தையும் ஐயத்துடன் நோக்குபவள் போலிருந்தாள். அடுத்த கணம் கசப்புடன் எதையோ சொல்லப்போகிறவள் என தோன்றினாள்.

அவள் கன்னத்திலிருந்த கரிய மருவில் அவளுடைய முகநிகழ்வுகள் அனைத்தும் மையம்கொண்டன. பிற எதையும் நோக்கமுடியவில்லை.

அவள் தாழ்ந்த குரலில் "நான்தான்... இங்கே உங்களுக்காக காத்திருந்தேன். என் காவலர்கள்தான் உங்களை அழைத்துவந்தவர்கள்" என்றாள். அவன் அக்குரலின் தாழ்ந்த ஓசையை வெறுத்தான். இரவின் இருளில் அவ்வாறுதான் பேசக்கூடும் என தோன்றினாலும் அக்குரல் அவனை சிறுமை செய்வதாகத் தோன்றியது. அவன் "நான் எவருமறியாமல் வந்தேன்" என்றான். என்ன சொல்லவேண்டும்? காவியங்களில் என்ன சொல்லிக்கொள்வார்கள்? "நீங்கள் எதையும் அஞ்சவேண்டியதில்லை. இங்கிருப்பவர்கள் அனைவரும் என் வீரர்கள்." அவன் உளம் சுருங்கினான். "அஞ்சுவதா? நானா?" ஆனால் அச்சொற்களை அவன் சொல்லவில்லை. அவள் முகத்திலிருந்த சூழ்ச்சியை எச்சரிக்கையை விளக்கமுடியாத சிறுமை ஒன்றை மட்டுமே உணர்ந்துகொண்டிருந்தான்.

"நாம் கிளம்புவோம். எந்தையின் ஒற்றர்கள் எக்கணத்திலும் உங்களை கண்டுகொள்ளக்கூடும்" என்றாள். "உடனேயா?" என்றான். "அஞ்சவேண்டியதில்லை. நானே அனைத்தையும் ஒருங்கு செய்துள்ளேன். நமக்காக விரைவுத்தேர் ஒன்று வெளியே காத்து நிற்கிறது. எனக்கு உடல்நிலை சரியில்லை என்றே என் தோழி அன்னையிடம் சொல்வாள். நாம் எல்லையை கடந்த பின்னரே கலிங்கம் நான் கிளம்பிச்சென்றதை அறியும்." அவனுக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. உண்மையில் அப்போது அவையனைத்தும் கனவென்றாகி மீண்டும் இந்திரபுரியில் விழித்தெழ விழைந்தான்.

“நேராக விஜயபுரிக்கே செல்வோம். நம்மை இணையவிடாது தடுக்க விழைபவர் கலிங்கத்திலும் இந்திரபுரியிலும் உள்ளனர். அவர்களை வெல்வோம்” என்றாள். “நன்று” என்று அவன் சொன்னான். அவள் “ரிஷபரே” என்று அழைக்க அருகே புதருக்குள் இருந்து இளைய கலிங்க வீரன் ஒருவன் வந்து தலைவணங்கினான். “கிளம்புவோம். அனைத்தும் சித்தமாக உள்ளன அல்லவா?” அவன் தலைவணங்கி “ஆணைப்படியே, இளவரசி” என்றான். “ரிஷபர் என் ஆணையை தலைசூடிய ஒற்றர்” என்றாள். அவன்தான் அவர்களை கோட்டைக்கு வெளியே வந்து எதிர்கொண்டவன். சுருள்முடி தோள்கள் மேல் சரிந்த கூர்மீசை கொண்ட இளைஞன். சற்று ஓரக்கண் கோணல் கொண்டிருந்தமையால் அவனுடைய கரிய முகம் அதன் அமைப்பின் அழகனைத்தையும் இழந்திருந்தது.

அவன் சென்றதும் “இங்கே அருகிலேயே நின்றிருந்தானா இவன்?” என்றான். “ஆம். ரிஷபர் எப்போதும் மிகமிக எச்சரிக்கையானவர்” என்றாள். அவன் மேலும் ஏதோ சொல்ல எண்ணி நிறுத்திக்கொண்டான். அவர்களை ரிஷபன் புதர்களினூடாக அழைத்துச்சென்றான். தெற்குச் சிறுவாயில் வழியாக மயானங்களுக்குள் சென்று அப்பாலிருந்த குறுங்காட்டுக்குள் நுழைந்தனர். உள்ளே அவர்களுக்கான விரைவுத்தேரும் புரவிகளும் நின்றிருந்தன. அவன் அவளுடன் தேரில் ஏறிக்கொண்டதும் அவனுடன் வந்தவர்கள் புரவிகளில் ஏறிக்கொண்டனர். “பெருநடை போதும். குளம்போசை எழலாகாது” என்றான் ரிஷபன்.

அவர்களை அவனே வழிநடத்தி அழைத்துச்சென்றான். இருளிலேயே அவர்கள் மையச்சாலையை அடைந்தனர். வழியில் எதிர்கொண்ட வணிகக்குழுக்கள் எதிரீடு தவிர்த்து

அவர்களுக்கு இடைவிட்டன. விடிகையில் அவர்கள் ஒரு குறுங்காட்டுக்குள் நுழைந்து ஓய்வுகொண்டார்கள். பின்னர் காடுவழியாகவே சென்று மாலையில் பிறிதொரு காட்டில் தங்கினர். மறுநாள் காலையில் கலிங்க எல்லையைக் கடந்து விஜயபுரியின் எல்லைக்குள் நுழைந்தனர். பெரும்பாலான பொழுதுகளில் மாலினி அவனிடம் ஏதும் பேசாமல் பாதையை பார்த்துக்கொண்டிருந்தாள். ரிஷபனை அழைத்துச்சென்று தனியாக நின்று ஆணைகளை பிறப்பித்தாள். அவளிடம் அச்சமில்லை என்பதை அவன் கண்டான். அவர்கள் துரத்திவரமாட்டார்கள் என அறிந்திருக்கிறாளா?

அவளிடம் அதைப்பற்றி கேட்கமுடியாது என்று தோன்றியது. அவள் பேசும்போது அவன் மறுசொல் எடுக்கக்கூடும் என்று எதிர்பாராதவளாக தோன்றினாள். அவள் உள்ளம் முழுக்க தமயந்தியே இருந்தாள். “அவள் அன்னைச்சிலந்தி. நச்சுக் கொடுக்கினள். அங்கிருந்து இழைநீட்டி பின்னிக்கொண்டிருக்கிறாள். நிஷதநாடு என்பது அவள் பின்னும் வலையால் மூடப்பட்டுள்ளது” என்றாள். “அவளை ஒருமுறை ஏமாற்றினோம் என்றால் அறைகூவல் ஒன்றை விடுக்கிறோம் என்றே பொருள். அவள் வாளாவிருக்கமாட்டாள்.”

நிஷதநாடென்பதே தமயந்தியால் உருவாக்கப்பட்டது என அவள் எண்ணுவதுபோல் தோன்றியது. மேலும் உற்றுநோக்கியபோது ஷத்ரியர்களால் நிஷதர்களைக்கொண்டு அமைக்கப்பட்டது இந்திரபுரி என அவள் கருதுவது உறுதியாகத் தெரிந்தது. அதை மறுக்கவேண்டும் என விழைந்தான். தமயந்தி வருவதற்கு முன்னரே தென்னகத்தில் பெருநிலப்பரப்பை நளனின் படைகள் வென்றுவிட்டன என்றும் அவள் அடைந்த அனைத்து வெற்றிகளும் நளன் பயிற்றுவித்த

புரவிப்படைகளால்தான் என்றும் அவன் தனக்குள்ளேயே சொல்லாடிக்கொண்டான்.

அவள் ஒர் உரையாடலுக்கு வருவாள் என்றால் அவற்றை சொல்லமுடியும். ஆனால் அவள் செவிகொண்டவளாகத் தெரியவில்லை. அவனுக்கும் சேர்த்து முடிவுகளை எடுத்தாள். ஆற்றவேண்டியவற்றை ஆணைகளாக முன்வைத்தாள். “நாம் இன்றிரவே இந்திரபுரிக்கு முறைப்படி செய்தியை அறிவித்துவிடுவோம். அவர்களை நாம் சிறுமை செய்தோமென அவர்கள் சொல்ல வாய்ப்பளிக்கலாகாது. ஆனால் உங்கள் குடிகள் அவர்கள் உங்களை சிறுமை செய்தார்கள் என்பதை அறியவேண்டும். தொல்குடிகள் அவர்களுக்கு உரிய மதிப்பு கிடைக்கிறதா என்பதையே எப்போதும் கண்காணித்துக்கொண்டிருப்பார்கள். மதிப்பு மறுக்கப்பட்டதென்பதை பெருஞ்சினத்துடன் எதிர்கொள்வார்கள். அவர்களின் நிலையா உணர்வுகளை நாம் கூர்ந்து கையாளவேண்டும்” என்றாள்.

சற்றே கோடிய புன்னகையுடன் “தொல்குடிகள் நுரைபோன்றவர்கள் என்பார்கள். அவர்களை எண்ணி ஒரு படையை அமைக்கவியலாது என்றும் போர்க்களத்தில் அவர்களை சிறுசிறு குழுக்களாக்கி ஒருவரோடொருவர் காணாதபடி நிறுத்தவேண்டும் என்றும் நெறிநூல்கள் சொல்கின்றன” என்றவள் சிரித்து “அவர்களில் ஒருவர் அஞ்சி ஓடினால் ஏரி கரை உடைவதுபோல மொத்தப் படையினரும் உடன் ஓடத்தொடங்குவார்கள்” என்றாள். அச்சிரிப்பு அவனை எரியச் செய்தது. “ஆனால் அவர்களை உரிய முறையில் கையாளும் அரசுகள் ஆற்றல்கொண்டவையாக நீடிக்கின்றன.

உண்மையில் அங்கமும் வங்கமும்கூட தொன்மையான கானகக்குடிகளே.”

அவன் “அதே வரலாறுதானே உங்களுக்கும்? தீர்க்கதமஸின் குருதி கலந்த பழங்குடிகளில் முளைத்தெழுந்தவைதானே உங்கள் அரசுகள் அனைத்தும்?” என்றான். அவள் முகம் சிறுத்தது. கண்களில் வந்த வெறுப்பு அவனை அஞ்சவைத்தது. “எவர் கற்பித்த பாடம் அது?” என்றாள். பேசியபோது சீறும் நாயென பற்கள் தெரிந்தன. “கலிங்கம் சூரியனின் கால்கள் முதலில் படும் நிலம். இருண்டிருந்த பாரதவர்ஷத்தில் முதலில் ஒளிகொண்ட பரப்பு.” அவன் “நான் சொன்னது பராசரரின் புராணமாலிகையில் உள்ள கதை. தீர்க்கதமஸ்...” என்று தொடங்க “அந்தக் கதை பொய்யானது. தீர்க்கதமஸின் குருதியிலெழுந்தவை அங்கம் வங்கம் பௌண்டரம் சேதி என்னும் நான்கு நாடுகள் மட்டுமே” என்றாள்.

அவன் அவளிடம் பேசமுடியாது என கற்றுக்கொண்டான். அவள் மீண்டும் இயல்புநிலைக்குத் திரும்பி “உங்களை வருத்த எண்ணவில்லை. தொல்குடியினர் உரிய தலைமை இருந்தால் வெல்லமுடியும் என்பதற்குச் சான்றே இந்திரபுரி அல்லவா?” என்றாள். அவன் “ஆம்” என்றான். “அவளுக்குத் தெரியும் உங்கள் குடியின் உணர்வுநிலைகள் அனைத்தும். அந்த நாற்களத்தில் மறுபக்கம் நான் அமர்ந்து ஆடவேண்டும். அதைப்பற்றித்தான் நான் பேசிக்கொண்டிருக்கிறேன்.”

அவன் சோர்வுடன் தேர்த்தட்டில் சாய்ந்தான். கண்களை மூடிக்கொண்டு நீள்மூச்செறிந்தான். “ஆம், உங்கள் சோர்வை அறிகிறேன். உங்கள் உள்ளம் எளிதில் சோர்வுறுவது. அரசுசூழ்வதென்பது உண்மையில் உள்ளத்தின் ஆற்றலுக்கான தேர்வு மட்டுமே. அதை நான் பார்த்துக்கொள்கிறேன்.” அவன்

தன் உளச்சோர்வு எதனால் என அறிந்தான். அவளை அவன் தமயந்தியைப்போன்ற ஒருபெண் என எண்ணிக்கொண்டான். அவையில் அவன் அவளைப்பற்றி தமயந்தியிடம் சொல்லும்போதுகூட அதைத்தான் சொன்னான். அவன் சலிப்புடன் தலையை அசைத்தான்.

அவள் அவனை நோக்கவில்லை. சாலையின் இரு மருங்கையும் நோக்கியபடியே வந்தாள். விஜயபுரியை அடைந்ததும் அதன் கோட்டையை ஏறிட்டு நோக்கியபடி "மிகச் சிறிய கோட்டை. எதிரிகளின் தாக்குதலை ஒரு வாரம்கூட தாங்கி நிற்காது" என்றாள். பெரிய போர்த்திறனர் என தன்னைக் காட்டுகிறாள் என்று அவன் கசப்புடன் எண்ணிக்கொண்டான். "உன் நகரம் எதிர்கொண்ட போர்கள் என்னென்ன? உன் தந்தை எந்தப் போரில் வாளேந்தினார்?" என்று கேட்க எண்ணி நாவசையாமல் நின்றான். "ஆம், நாம் இந்நகர் வரை எதிரிகளை வரவிடப்போவதில்லை. ஆயினும் அனைத்துக்கும் சித்தமாக இருக்கவேண்டும் அல்லவா? சரி, இதை எடுத்துக் கட்டிவிடுவோம்" என்றாள்.

நகருக்குள் நுழைந்ததும் அவர்களை காளகக்குடிகள் மலரள்ளி வீசியும் வாழ்த்துக்கூச்சலெழுப்பியும் வரவேற்றனர். தலைப்பாகைகளை அவிழ்த்து வானில் சுழற்றி வீசினர். வீரர்கள் தேரின் பின்னால் கூவியபடி ஓடிவந்தனர். "வாழ்த்துரைப்பது நன்று. ஆனால் அது கட்டற்றதாக இருக்கக்கூடாது. வாழ்த்தொலிகளை முன்னரே நாம் அளிக்கவேண்டும். அதைமட்டுமே அவர்கள் கூவவேண்டும்... இன்னும் இவர்களை பயிற்றுவிக்க வேண்டியிருக்கிறது" என்றாள்.

அவள் அரண்மனையைப்பற்றி என்ன சொல்வாள் என அவன் எண்ணினாரோ அதையே சொன்னாள். “இதுவா அரண்மனை? காவலர்கோட்டம்போல் இருக்கிறதே?” அவன் புன்னகையுடன் “காவலர்கோட்டமேதான்” என்றான். அவளுக்கு அவன் புன்னகை புரியவில்லை. முதல்முறையாக அவள் அதை பார்ப்பதனால் குழப்பம் கொண்டு விழிவிலக்கிக்கொண்டாள். “இடித்துக் கட்டுவோம்” என்றான். அவன் தன்னை ஏளனம் செய்கிறானா என அவள் ஓரவிழிகளால் நோக்கினாள்.

காலையில் கிளம்பும்போது சீர்ஷர் வந்து அவனிடம் முந்தையநாள் நடந்த எதையுமே நினையாதவர்போல பேசலானார். “இளவரசி கலிங்கக் கொடியை ஏந்தி முன்செல்ல ஒரு கரும்புரவியை கோரினாள். கலிங்க வீரன் ஒருவன் அக்கொடியுடன் முன்னால் செல்வான் என்றாள்.” அவன் “யார்? ரிஷபனா?” என்றான். அவர் விழிகளுள் ஒரு ஒளி அசைந்து மறைந்தது. “அல்ல, அவன் இளவரசியின் படைத்தலைவன் அல்லவா? ஷத்ரியக்குருதி கொண்டவர்கள் கொடியேந்திச் செல்லமாட்டார்கள். அதற்கு கலிங்க வீரன் ஒருவனை தெரிவுசெய்திருக்கிறாள்” என்றார். “உயரமானவன். அத்தனை உயரமானவர்கள் நம் குடியில் இல்லை.”

“அதனாலென்ன?” என்று அவன் கேட்டான். “தெரியாமல் பேசுகிறீர்கள், இளவரசே. நான் பார்த்துக்கொள்கிறேன். என்னிடம் விடுங்கள்” என்றார் அவர். புஷ்கரன் மேலும் ஏதோ பேசத்தொடங்க “நானே இதை கையாள்கிறேன். இது மிகவும் நுட்பமானது” என்றார். மேலும் பேச அஞ்சி தலைதிருப்பிக்கொண்டான் புஷ்கரன். அவர் கண்களில் தெரிந்த அந்த ஒளி அவனை அச்சுறுத்தியது. அறிவற்ற முதியவர் என்று தோன்றினாலும் சிலவற்றை அந்த அறிவின்மையின்

கூர்மையாலேயே உணர்ந்துகொள்கிறார், அவர் உள்ளே நுழைந்து தீண்டும் நாகம் எது என்று. அவர் முந்தையநாள் சொன்ன சொற்றொடர் ஒன்றை சென்றடைந்து அஞ்சி பின்னடைந்தது அவன் நினைவு.

அவர்கள் அன்றுமாலை சுகிர்தபாகம் என்னும் காவலூரை சென்றடைந்தனர். அங்கே அவர்களை எதிர்பார்த்து காளகக்குடிகள் தங்கள் குடிமுத்திரை கொண்ட தோல்பட்டங்களை ஏந்தி வந்து தங்கியிருந்தார்கள். காவலர்தலைவன் அவர்களை எதிர்கொண்டழைத்துச் சென்று அவனுடைய மாளிகையில் தங்கச்செய்தான். காளகக்குடிகள் அவனுக்கு பரிசில்கள் அளித்து உவகை கொண்டாடினர். "நாம் முடிசூடும் நாள் அணுகுகிறது என்கின்றன தெய்வங்கள். நேற்றுகூட எங்கள் பூசகரில் காகதேவர் எழுந்தருளி நற்சொல் உரைத்தார்" என்றாள் விழுதுகளாக சடைதொங்கிய மூதாட்டி ஒருத்தி. "நம் குலம் பெருகி இம்மண்ணை ஆளும். ஐயமே இல்லை. அது தெய்வச்சொல்" என்றார் மூத்தார் ஒருவர்.

வணிகர்தலைவரின் பெரிய இல்லத்தில் மாலினிதேவி தங்கினாள். அங்கே அவளுக்கு மஞ்சமும் நீராட்டறையும் உகந்ததாக இல்லை என்று காவலன் வந்து சொன்னான். வணிகர்தலைவரின் மனைவியை அதன்பொருட்டு அவள் கடுஞ்சொல் சொன்னாள் என்றான் காவலன். அருகே நின்றிருந்த சீர்ஷர் "அவள் இளவரசி அல்ல. இளவரசியர் இத்தனை சிறுமை கொள்வதில்லை" என்றார். புஷ்கரன் அவரை திரும்பியே பார்க்கவில்லை. அவன் கேட்கவேண்டும் என்று "அவளை இப்போதே நாம் உரிய இடத்தில் வைத்தாகவேண்டும். காளகக்குடியின் நெறிகளை அவள் அறியவேண்டும். காளகக்குடி இப்புவியின் முதல்குடி. நாளை

உலகாளவிருப்பது. அதை அறியாமல் எங்கள் குடியின் முத்திரை கொண்ட தாலியை அவள் அணியக்கூடாது" என்றார் சீர்ஷர்.

"என்ன நடந்தது?" என அவன் எரிச்சலுடன் கேட்டான். "அவள் என் அரசி அல்ல. அவள் ஆணையை ஏற்குமிடத்திலும் நான் இல்லை" என்றார் சீர்ஷர். "அவள் உங்களிடம் ஆணையிட்டாளா?" என்றான். "ஆணையிட்டால் அவள் நாவை பிழுதெடுப்பேன். என் ஆணையை அவள் மதிக்கவில்லை. மதிக்கவேண்டும் என அவளிடம் சொல்." புஷ்கரன் "நான் இப்போது எச்சொல்லும் உரைக்கும் நிலையில் இல்லை" என்றான். "அதுதான் இடர். நீ அவளுக்கு அடிமையாகிவிட்டாய். அவள் காலடியை தலைசூடுகிறாய். அவள் காளகக்குடியின் தலைமேல் கால்வைத்து அமர விரும்புகிறாள்" என்றார் சீர்ஷர்.

மறுநாள் அவர்கள் கிளம்பும்போது காளகக்குடிகளின் பல குழுக்கள் வந்து அவர்களுடன் இணைந்துகொண்டன. செல்லச் செல்ல அப்பெருக்கு வளர்ந்தபடியே சென்றது. அவர்கள் இந்திரபுரியின் எல்லையை அடைந்தபோது இரு முனைகளும் ஒன்றையொன்று பார்க்கமுடியாதபடி அது நீண்டு கிடந்தது. தேர்த்தட்டில் நின்று அவன் நோக்கியபோது அதுவரை இருந்த சோர்வு அகன்று உள்ளம் உவகையில் எழுந்தது. அருகே நின்றிருந்த சீர்ஷர் "ஆம், நம் குடி. நாளை உலகாளப்போகும் கூட்டம்" என்றார். அவன் புன்னகையுடன் "அதை மீளமீள கூவிச் சொல்லவேண்டியதில்லை" என்றான்.

"அதை தெய்வங்கள் சொல்லிவிட்டன. தெரியுமல்லவா?" என்றார் சீர்ஷர். "நாளை நாம் நகர்நுழையும்போது பார்ப்பீர்கள், இளவரசே. காளகக்குடி மட்டுமல்ல சபரர்களும் மூஷிகர்களும் சுவனர்களும் பாரவர்களும் பரிதர்களும் என நிஷாதகுடிகள்

அனைத்தும் திரண்டு வந்து அவர்களின் மெய்யான அரசர் எவர் என அறைகூவுவதை கேட்பீர்கள். நாளை அனைத்தும் முடிவாகிவிடும்.” அவன் இனிய சலிப்புடன் “பேசாமலிருங்கள், மூத்தவரே” என்றான். “நாம் இன்று வெளியே தங்கும்படி ஒழுங்கு செய்திருக்கிறார்கள். நாளை முதற்புலரியில் நகர்நுழைகிறோம். அதுவும் நன்றே. பயணக்களைப்புடன் நுழையக்கூடாது. எழுகதிர்போல நகர்மேல் தோன்றவேண்டும்” என்றார். “இன்றிரவு எனக்கு துயில் இல்லை. ஆகவேண்டிய பணிகள் பல உள்ளன.”

அன்றிரவு முழுக்க அவன் பாடிவீட்டுக்கு வெளியே பெருமழை சூழ்ந்ததுபோல காளகக்குடிகளின் ஓசையை கேட்டுக்கொண்டிருந்தான். நெடுநேரம் துயில் மறந்து புரண்டுப்புரண்டு படுத்தபின் விழிமயங்கினான். அக்கனவில் அவனருகே காளைமுகத்துடன் பேருருவம் ஒன்று அமர்ந்திருந்தது. காளைவிழிகள் அவனை நோக்கின. அவ்விழிகளிலேயே அது சொல்வதை அவன் கேட்டான். அவன் “ஆம் ஆம் ஆம்” என்றான். விழித்துக்கொண்டபோது வெளியே ஓசை அதேபோல ஒலித்துக்கொண்டிருந்தது. ஆகவே துயிலவே இல்லை என எண்ணிக்கொண்டான். ஆனால் அவன் உடலசைவைக் கண்ட காவலன் வந்து தலைவணங்கி “விடிவெள்ளி தோன்றிவிட்டது, இளவரசே” என்றான்.

அவன் எழுந்து அமர்ந்தபோது நெஞ்சு அச்சம் கொண்டதுபோல அடித்துக்கொண்டிருந்ததை உணர்ந்தான். அந்த அறைக்குள் பிற இருப்பு ஒன்று திகழ்வதுபோல. அறைமூலைகளின் இருட்டை நோக்கும் உளத்துணிவு அவனுக்கு எழவில்லை. வெளியே சீர்ஷரின் குரல் ஒலித்தது. அவர் உரக்க கூவியபடி அறைக்குள் வந்தார். “கிளம்புவோம். எழுக! அணிகொள்க!” அவன் “ஏன்

கூச்சலிடுகிறீர்கள்?” என்றான். சீர்ஷர் “இது உவகைக்குரல், இளையோனே. அங்கே நகருக்குள் மக்கள் கொப்பளித்துக்கொண்டிருக்கிறார்கள். நாம் உள்ளே நுழைந்ததும் நகரம் அதிரப்போகிறது. நான் சில ஏற்பாடுகளை செய்துள்ளேன்” என்றார்.

“என்ன?” என்றான். “அவள் மிகப்பெரிய சிம்மக் கொடியை கொண்டுவந்திருக்கும் செய்தியை நள்ளிரவில்தான் அறிந்தேன். பட்டுத்துணியாலான கொடி. ஒருவர் படுத்துறங்குமளவுக்கு பெரியது. ஆகவே நான் உடனடியாக நமக்கு ஒரு கொடியை உருவாக்கினேன். நம் குடியின் கொடி. காக முத்திரை கொண்டது.” அவன் “என்ன சொல்கிறீர்கள்? நான் இந்திரபுரியின் படைத்தலைவன். என் கொடி” என தொடங்க “அதெல்லாம் முன்பு. இப்போது நாம் நகரை வெல்லப்போகும் தொல்குடி. நம் தொல்குடியின் அடையாளம் காகம். நாம் வணங்கும் கலிதேவனின் முத்திரை அது.. அக்கொடியுடன் நாம் உள்ளே நுழைவோம். நம்மைக் கண்டதுமே நகரம் புயல்பட்ட கடல் என்றாவதை காண்பீர்கள்” என்றார் சீர்ஷர்.

“வேண்டாம்... இப்போது இதை செய்யக்கூடாது” என்றான் புஷ்கரன். “நான் நம் குடியினர் அனைவரிடமும் காட்டிவிட்டேன். கொடியை நாற்பதடி உயரமான மூங்கிலில் கட்டிவிட்டோம். அந்த மூங்கிலை ஒரு தேரில் நட்டு அதை நாற்புறமும் கயிறுகட்டி இழுத்து நிற்கச்செய்தபடி நகர்புகவிருக்கிறோம். அனைவரும் அங்கே திரண்டிருக்கிறார்கள்” என்றார் சீர்ஷர். “கிளம்புங்கள், இளவரசே. வரலாறு வந்து வாயிலில் முட்டி அழைக்கிறது. ஆண்மை இருந்தால் அதை எதிர்கொள்க! அறிக, மாமன்னர்கள் இவ்வாறு

தங்களை வந்து ஏற்றிக்கொண்ட பேரலைகளின்மேல் துணிந்து அமர்ந்திருந்தவர்கள் மட்டும்தான்!”

# நீர்க்கோலம் - 34

### 33. குருதிச்சோறு

முழங்கும் பெருமுரசின் அருகே நின்றிருப்பதுபோல் பேரோசை வந்து செவிகளை அறைந்து மூடி சித்தத்தின் சொற்களனைத்தையும் அழித்தது. கண்களுக்குள்ளேயே அவ்வோசையை அலைகளென காணமுடிந்தது. நளன் கருணாகரரிடம் “என்ன ஓசை அது?” என்றான். “இளவரசர் நகர்புகுகிறார்” என்றார் கருணாகரர். புன்னகையுடன் “இத்தனை பெரிய வரவேற்பா அவனுக்கு?” என்றான். “எங்கெங்கோ தேங்கி நின்றிருந்த பல விசைகள் அங்கு சென்று சேர்கின்றன, அரசே” என்றார் கருணாகரர்.

அம்முகத்திலிருந்த கவலையை திரும்பிப்பார்த்து “அதற்கென்ன? ஒரு நாட்டின் படைத்தலைவன் மக்களால் வாழ்த்தப்படுவதென்பது வெற்றிக்கு இன்றியமையாததுதான் அல்லவா?” என்றான் நளன். “அதுவல்ல. நீங்கள் எதையுமே கூர்ந்து நோக்காமலாகி நெடுங்காலமாகிறது, அரசே” என்று கருணாகரர் சொன்னார். “இங்கு இந்திரனின் சிலை நிறுவப்பட்ட நாள்முதலே அடக்கப்பட்ட கசப்பொன்று நமது குடிகளுக்கிடையே இருந்தது. ஷத்ரிய அரசி வந்து நமது அரியணையில் அமர்ந்தது பிறிதொரு கசப்பென வளர்ந்தது. நமது படைகள் அனைத்திற்கும் படைத்தலைவர்களாக விதர்ப்ப நாட்டவர் இருப்பது ஒவ்வொரு நாளும் அதை வளர்க்கிறது. இன்று இளவரசர் காகக்கொடியுடன் நகர்புகும்போது இத்தனை

எழுச்சியுடன் நமது மக்கள் எதிர்கொள்கிறார்களென்றால் அவர்கள் தங்களிடமிருந்தும் பேரரசியிடமிருந்தும் பெரிதும் விலகிச்சென்றிருக்கிறார்கள் என்றுதான் பொருள். அது நமக்கு நற்செய்தி அல்ல.”

நளன் “எண்ணி அஞ்சி ஒடுங்கியிருக்கும் காலத்தை நான் கடந்துவிட்டேன், அமைச்சரே. இன்னும் என் இளையோனாகவே அவன் இருப்பான். இக்கணம்வரை பிறிதொன்று நிகழும் என்பதற்கான எந்தக் குறிப்பையும் நான் காணவில்லை. அவனுக்கு நான் அடைந்த வெற்றிகளும் புகழும் சிறிய உளக்குறையை அளித்திருக்கின்றன என்று எனக்கு தெரியும். இன்று நமது மக்கள் அளிக்கும் இப்பெரிய வரவேற்பும் கொண்டாட்டமும் அதையும் இல்லாமலாக்கும்” என்றான். “மேலும் அவனுக்கென்று தனியாக அரசொன்றை அளிக்கவே தமயந்தி எண்ணியிருக்கிறாள். நேற்று முன்தினம் என்னிடம் அதைப்பற்றி பேசினாள். விஜயபுரியை தலைநகராகக்கொண்டு அவன் ஒரு அரசை நிறுவி தென்னகத்தில் விரிந்து செல்வானென்றால் நிஷத குடிகள் அதன்பொருட்டு பெருமைப்படலாம்.”

கருணாகரர் மேற்கொண்டு சொல்லெடுக்கத் தயங்கி அவனுடன் சென்றார். குடிப்பேரவை கூடி அரசனின் வருகைக்காக காத்திருந்ததை வெளியே பறந்த கொடிகள் காட்டின. அரசவையை ஒட்டிய சிறிய துணை அறையில் முழுதணிக்கோலத்தில் தமயந்தி காத்திருந்தாள். நளன் உள்ளே நுழைந்ததும் எழுந்து தலைவணங்கி “அரசருக்கு நல்வரவு” என்றாள்.

பத்து கால்விரல்களிலும் அருமணிகள் பதித்த மெட்டிகள். அனல் வளையம்போல் செம்மணிகள் சுடர்விட்ட சிலம்புகள்.

பொன்னலைகளென உலைந்த தொடைச்செறியும் கொன்றை மலர்க்கதிரென மேகலையும். பொன்னருவிகளென மணியாரங்களும் மாலைகளும் சரங்களும் பரவிய யானைமருப்பு மார்பு. பொற்பறவையின் இரு இறகுகளெழுந்த தோள்மலரும் சுற்றிய நாகமென தோள்வளையும். முழங்கை வரை செறிந்திருந்தன சிறுவளைகளும் மணிவளைகளும் செதுக்குவளையலும் நெளிவளைகளும். பத்து விரல்களிலும் கல்மணி கணையாழிகளும் கன்னங்களில் அனற்செம்மையைப் பாய்ச்சிய செம்மணிக்குழைகளும் நெற்றியில் துளித்துதிரா பனி என நின்ற நீலமணிச் சுட்டியும். கூந்தல் முழுக்க பொன்வரிகளாகப்பரவிய குழற்சரங்கள். நீண்ட பின்னலை அணிசெய்தன செவிமலர்கள்.

அணிகள் அவளை மண்ணிலிருந்து அகற்றி கண்ணுக்குத் தெரியா திரையொன்றில் வரையப்பட்ட ஓவியமென மாற்றின. ஒருகணம் அவளை முன்பொருபோதும் கண்டதில்லையென்ற உளமயக்கை நளன் அடைந்தான். பின்னர் புன்னகையுடன் “ஓவியம் போல…” என்றான். அவளும் சிரித்து “ஆம், ஆடியில் நோக்கியபோது தொன்மையானதோர் சிற்பத்திற்குள் நுழைந்து அதை தூக்கிக்கொண்டு நின்றிருப்பதுபோல் தோன்றியது” என்றாள். “நன்று. அவை நிறைந்திருக்கும் விழிகளுக்கு முன்னால் நாம் உரைக்கும் ஒவ்வொரு சொல்லையும் இந்த அணிகளும் முடியும் செங்கோலுமே ஆணைகளென்றாக்குகின்றன” என்றான் நளன்.

கருணாகரர் அவைக்குச் சென்று நோக்கிவிட்டு திரும்பி வந்து “அனைத்தும் சித்தமாக உள்ளன, அரசி” என்றார். தமயந்தி தன்னருகே நின்ற சேடியிடம் விழி காட்ட அவள் தமயந்தியின் ஆடையின் சற்று கலைந்திருந்த மடிப்புகளை சீரமைத்தாள்.

கருணாகரர் வெளியே மெல்லிய குரலில் ஆணையிட மங்கல இசைக்கலங்கள் பெருகியொலித்தன. நகரெங்கும் ஒலித்துக்கொண்டிருந்த வாழ்த்தொலிகளுக்குள் அவ்விசை நதிநீர்ப்பெருக்கில் விழுந்த சிறு செந்தூரத்துளிபோல கரைந்து உருவழிந்தது.

நளனும் தமயந்தியும் இணைத்தோள் கொண்டு நடந்து இடைநாழியினூடாக அரசப்பேரவைக்குள் நுழைந்தனர். நீள்வட்ட வடிவமான அந்த அவையில் இருக்கைகள் அனைத்தையும் நிறைத்திருந்த வேதியரும் சான்றோரும் வணிகரும் குடித்தலைவர்களும் அயல்வருகையாளரும் எழுந்து உரத்த குரலில் “பேரரசர் வாழ்க! இடம் அமர்ந்த அரசி வாழ்க! இந்திரபுரி வெல்க! எழுக மின்கதிர்க்கொடி!” என்று வாழ்த்துரைத்தனர். இரு கைகளையும் கூப்பி மலர்ந்த புன்னகையுடன் நளனும் தமயந்தியும் சென்று அரியணையை அணுகி அதை தொட்டு சென்னி சூடியபின் அகம்படியர் ஆடை ஒதுக்க அமர்ந்தனர். அவர்கள் அமர்ந்தபின் குடிகள் வாழ்த்தொலி எழுப்பி கைகூப்பியபடி தங்கள் இருக்கைகளில் அமர்ந்தனர்.

ஏழு வைதிகர்கள் அரசமேடைமேல் ஏறி கங்கை நீர் தெளித்து அவர்களை முடித்தூய்மை செய்து வேதச்சொல் உரைத்து வாழ்த்தி மீண்டனர். குடிமூத்தார் மூவர் பொற்தாலத்தில் நிஷத அரசின் மணிமுடியைக்கொண்டு வந்து நீட்ட சபர குடித்தலைவர் அம்மணிமுடியை எடுத்து நளன் தலையில் வைத்தார். காளகக்குடி மூத்தவர் ஒருவர் இரு ஏவலர்கள் கொண்டு வந்த செங்கோலை அவனிடம் அளித்தார். மூதன்னையர் மூவர் கொண்டு வந்த மணிமுடியை மூதாட்டி ஒருத்தி எடுத்து தமயந்தியின் தலையில் அணிவித்தாள்.

அவர்களுக்குப் பின்னால் மூன்று வீரர்கள் பெரிய வெண்குடை ஏந்தி அதன் விளிம்புகளில் தொங்கிய முத்துச் சரங்கள் மெல்ல பறக்கும்படி சுழற்றினர்.

மங்கல இசையும் அணிச்சேடியரின் குரவையொலியும் உரக்க ஒலித்தன. நளன் கையசைத்து நிமித்திகரை அழைத்து "அவை நிகழ்வுகள் தொடங்குவதற்கு முன்பு இளையவனுக்கும் இந்த அவை வாழ்த்து தெரிவிக்கட்டும்" என்றான். விழிகள் விரிந்து பின் அணைய பணிந்து "அது முறையல்ல" என்றார் நிமித்திகர். "நிகழ்க!" என்றான் நளன். அவர் தலையசைத்தபின் அறிவிப்பு மேடைமேல் ஏறி தன் வெள்ளிக்கோலை மும்முறை சுழற்ற அவை செவிகூர்ந்தது ஆனால் அவர் கூவியறிவித்ததை அவையினர் கேட்கவில்லை. மும்முறை நிஷத இளவரசருக்கு வாழ்த்துரைத்த நிமித்திகர் தன் குரல் கரைந்து மறைந்ததைக்கண்டு திரும்பி நளனை பார்த்தார். நளன் சிரித்தபடி "இன்று இந்த அவையில் ஒன்றும் நிகழ முடியாது. இளையோன் வரட்டும். நாம் காத்திருப்போம்" என்றான்.

தமயந்தி நளன் அருகே குனிந்து "இளையவர் காகக்கொடியுடன் நகர் நுழைகிறார்" என்றாள். "அறிவேன்" என்று அவன் சொன்னான். தமயந்தி "அது ஓர் அறைகூவல்" என்றாள். "நான் அவ்வாறு எண்ணவில்லை. தனக்கென தனி அடையாளம் கொள்ளும் எளிய முயற்சி அது. முதிரா அகவையில் அனைவருக்கும் அத்தகைய விழைவுகள் உண்டு." தமயந்தி சிலகணங்களுக்குப்பின் "கலிங்க இளவரசியைப்பற்றி உசாவினேன். அவள் இயல்பு குறித்து நல்ல செய்தி எதுவும் என் செவிக்கு எட்டவில்லை" என்றாள். நளன் புன்னகைத்து "பிறிதொரு வழியில் அமைய வாய்ப்பில்லை" என்றான். புருவம் சுருங்க "என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டாள்

தமயந்தி. “அவள் நிஷத குடியில் உனக்கு இணையாக அல்லவா வருகிறாள்?” என்றான். தமயந்தி “நன்று” என்றபின் இயல்பாக முகம் திருப்பிக்கொண்டாள்.

நளன் சிரித்து “சினம் கொள்ளவேண்டாம். உன்னை சீண்டுவதற்காக சொன்னேன்” என்றான். “எனக்குள் எழும் உள்ளுணர்வுகள் எவையும் நன்று அல்ல” என்றாள் தமயந்தி. நளன் “அவ்வுள்ளுணர்வுகள் ஏன் எழுகின்றன என்று எண்ணிப் பார்” என்றான். தமயந்தி “ஏன்?” என்றாள். நளன் “நமது அரசு விரிந்துகொண்டு செல்கிறது. வடக்கே நாம் வெல்ல இனி சில நாடுகளே எஞ்சியுள்ளன. அவ்வாறு விரிவடைகையில் இரு உணர்வுகள் எழும். தெய்வங்களுக்கு அறைகூவல் விடுக்கிறோம் எனும் ஆணவம். தெய்வங்களின் வாயில் சென்று முட்டுகிறோமோ என்னும் தயக்கம். உனக்கிருப்பது இரண்டாவது உணர்வு. அது நன்று. முதல் உணர்வு எழுமென்றால் தெய்வங்களால் வீழ்த்தப்படுவோம். அசுரர்களென்று ஆவோம்” என்றான். தமயந்தி புன்னகைத்து தலையை மட்டும் அசைத்தாள்.

அவைக்குள் நுழைந்த மூன்று நிமித்திகர்கள் தலைவணங்கி சொல்காத்தனர். நளன் கையசைக்க அவர்களில் ஒருவன் நளனுக்கும் அவைக்குமாக உரத்த குரலில் “நிஷத இளவரசர், காளகக்குடித் தோன்றல், கலியருள் கொண்ட மைந்தர் புஷ்கரர் அவை நுழைகிறார்” என்றான். நளன் “நன்று. இந்த அவை இளவரசரை உவகையுடன் வரவுகொள்கிறது” என்றான். கையில் தன் குடிக்கோலை ஏந்தி, காளகக்குடிக்குரிய காகச்சிறகு சூடிய கரும்பட்டுத் தலையணியுடன் இரு மூத்தகுடியினர் சூழ சீர்ஷர் அவைக்குள் நுழைந்தார். நளனையும் தமயந்தியையும் வெறுமனே வணங்கிவிட்டு அவையை நோக்கி இடைவளைத்து

வணங்கினார். அவருக்கான இருக்கையில் சென்று அமர்ந்து செருக்குடன் தலை நிமிர்ந்து ஏளனமோ என தோன்றிய புன்னகையுடன் அவையை ஏறிட்டார்.

வெளியே மங்கல ஓசைகள் எழுந்தன. வலம்புரிச் சங்கை முழக்கியபடி இசைச்சூதர் ஒருவர் அவைக்குள் நுழைந்தார். தொடர்ந்து காகக்கொடியை ஏந்தியபடி கவச உடையுடன் நிஷத வீரனொருவன் நுழைந்து அக்கொடியுடன் அரச மேடைக்கருகே வந்து நின்றான். அதைத் தொடர்ந்து மங்கல இசைக்கலங்களுடன் சூதர்கள் பன்னிருவர் வந்து இசைத்தபடியே சென்று முன்னரே அவையில் இடதுமூலையில் நின்றிருந்த இசைச்சூதர்களுடன் சேர்ந்துகொண்டனர். பொலிதாலங்களுடன் தொடர்ந்து வந்த அணிப்பரத்தையர் பன்னிருவர் அவைக்கு வந்து மங்கலம் காட்டி நின்று தலைவணங்கி பின் நகர்ந்து அங்கு முன்னரே நின்றிருந்த பரத்தையருடன் இணைந்துகொண்டனர்.

அமைச்சர் கருணாகரரால் வழி நடத்தப்பட்டு புஷ்கரன் அவைக்குள் நுழைந்தான். காளகக்குடிகளுக்குரிய காகஇறகு சூடிய பட்டுத்தலையணியை அணிந்திருந்தான். அதில் அருமணிகள் கோத்த மாலைகள் சுற்றப்பட்டிருந்தன. அவன் அணிந்திருந்த ஆடை நளன் அணிந்திருந்தது போலவே உருவாக்கப்பட்டிருந்தது. கங்கணங்களும், தோள்சிறகும், பொற்கச்சையும், அதில் அணிந்த குத்துவாளின் நுண்தொழிற் செதுக்குகள் கொண்ட கைப்பிடியும், கழுத்திலணிந்திருந்த ஆரங்களும், மகரகுண்டலங்களும் முழுக்க நிஷத அரசகுடித் தலைவருக்குரியவையாக இருந்தன. அரசவையினர் எழுந்து நின்று அவனுக்கு வாழ்த்துரைத்தனர். கைகளை தலைக்குமேல் தூக்கி அவ்வாழ்த்தை அவன் ஏற்றுக்கொண்டான்.

கருணாகரர் அவன் காதருகே குனிந்து “இரு கைகளையும் கூப்பி தலைகுனிந்து அவ்வாழ்த்தை ஏற்கவேண்டும், இளவரசே” என்றார். உதடசைவிலிருந்து அவர் சொல்வதென்ன என்பதை புரிந்துகொண்ட நளன் இடக்கையால் மீசையை நீவியபடி புன்னகைத்தான். புஷ்கரன் அக்கூற்றை புறக்கணித்து மூன்றடி எடுத்து வைத்து நளனின் முன் வந்து நின்று சற்றே தலைவணங்கி “மூத்தவருக்கு தலைவணங்குகிறேன். நான் கலிங்க இளவரசியை மணம்கொள்ளும் சூழலொன்று உருவாகியுள்ளது. இளவரசி என்னை விரும்புகிறாள் என்று செய்தி அனுப்பப்பட்டது. வீரர்களுக்குரிய முறையில் அதை நானும் ஏற்றுக்கொண்டேன். எனது ஓவியத்திற்கு மாலையிட்டு உளம்கொண்ட அவளை உடைவாள் அனுப்பி நானும் உளம்கொண்டேன்” என்றான். அவன் அச்சொல் அவைக்கு முழுக்க கேட்கவேண்டுமென எண்ணியது தெரிந்தது.

கருணாகரரை நோக்கியபின் “நமது தூதர்களின் நாப் பிழையால் கலிங்கர் நமது மணத்தூதை ஏற்கவில்லை. இளவரசி பிறரை ஏற்க இயலாதென்றும் நான் சென்று அவளை கொள்ளவில்லையென்றால் வாளில் குதித்து உயிர் துறப்பதாகவும் எனக்கு செய்தி அனுப்பினாள். ஆகவே நானே சென்று அவளை கவர்ந்து விஜயபுரிக்கு கொண்டு சென்றேன். நமது குலமுறைப்படி அவளை மணக்க விரும்புகிறேன். அதற்கு தங்கள் ஒப்புதலை கோருகிறேன்” என்றான். நளன் நகைத்தபடி எழுந்து அவன் தோளில் கைவைத்து “நன்று. நிஷதபுரிக்கு பெருமை சேர்ப்பதே உன் செயல்” என்றான். புஷ்கரன் “நம் குடிவீரத்தை ஒருபோதும் நாம் இழப்பதில்லை, மூத்தவரே” என்றான்.

தமயந்தியை அவன் வணங்கி முறைமைச்சொல் சொல்லவேண்டுமென அவர்கள் காத்திருக்க புஷ்கரன் அவை நோக்கி திரும்பி “இந்த அவைக்கும் செய்தியை அறிவிக்கிறேன். நற்சொல் நாடுகிறேன்” என்றான். தமயந்தி முகத்தில் எந்த மாற்றமும் இல்லாமல் எழுந்து “நிஷதகுடி மகிழ்வு கொள்ளும் மணஉறவு இது, இளையவரே. ஆகவேதான் இந்திரபுரி இதுவரை அறிந்தவற்றில் மிகப் பெரிய விழவென இதை நிகழ்த்தவேண்டுமென்று நான் ஆணையிட்டேன்” என்றாள். அவளை நோக்கி விழிதிருப்பாமல், மறுமொழி உரைக்காமல் புஷ்கரன் பொதுவாக தலைவணங்கினான்.

சீர்ஷர் எழுந்து “இந்த மணவிழவு காளகக்குடியின் மூத்தோரால் விஜயபுரியில் நிகழ்த்தப்படவிருந்தது. பேரரசி கேட்டுக்கொண்டதற்கேற்ப நாங்கள் இங்கு வந்தோம்” என்றார். அவைமுறைமை அனைத்தையும் மீறி அவர் எழுந்ததும் பொருந்தாக் குரலில் உரக்க பேசியதும் அவையெங்கும் ஒவ்வாமை நிறைந்த அசைவுகளை உருவாக்கியது. கருணாகரர் அவரை நோக்கி மெல்லிய குரலில் “நன்று மூத்தவரே! அமர்க! நிகழ்வுகள் தொடங்கட்டும்” என்றார். “ஆம், இங்கு அவை நிகழ்வுகள் நடக்கட்டும்” என்றார் சீர்ஷர், ஒப்புதல் அளிக்கும் அரசரின் கையசைவுகளுடன். நளன் அவையினரை நோக்கி “நிஷதகுடியின் அவையினரே, எனது இளையோன் கலிங்க இளவரசியை மணப்பது இந்த அவைக்கு முற்றொப்புதல் என்று எண்ணுகிறேன்” என்றான். அவையினர் எழுந்து தங்கள் குலக்குறி பொறித்த கோல்களைத் தூக்கி “ஆம், ஒப்புதலே” என்று குரல் எழுப்பினர்.

தலைவணங்கிய நளன் “குலமுறைப்படி நான் எனது அமைச்சரையும் குடிமூத்தாரையும் அனுப்பி நகருக்கு வெளியே

தங்கியிருக்கும் கலிங்கத்து இளவரசியை அழைத்து வர ஆணையிடுகிறேன். இளவரசிக்கும் என் இளையோனுக்குமான மணவிழா நம் குடிகள் நிறைந்து அமர்ந்திருக்கும் செண்டு வெளிப்பந்தலில் இன்று இரவு நிகழும்" என்றான். அவை "இளைய நிஷாதர் வாழ்க! காளகர் புஷ்கரர் வாழ்க! விஜயபுரிக்காவலர் வாழ்க!" என்று வாழ்த்தொலி எழுப்பியது. நளன் "இந்த மணநிகழ்வுக்குரிய அரசு அறிவிப்புகள் அனைத்தையும் அமைச்சர் அவையில் அறிவிப்பார்" என்றபின் கைகூப்பி மீண்டும் அரியணையில் அமர்ந்தான்.

கருணாகரர் தலைவணங்கி புஷ்கரனை அழைத்துச்சென்று அவனுடைய பீடத்தில் அமரவைத்தபின் மேடைக்கு வந்து முகமனுரைத்துவிட்டு "அவையீரே, இம்மண நிகழ்வை ஒட்டி பன்னிரு அறிவிப்புகள் உள்ளன" என தொடங்கினார். "கலிங்க அரசரிடம் அவருடைய மகளை எல்லை மீறிச்சென்று கவர்ந்து வந்ததற்காக பொறுத்தருளக்கோரி மாமன்னர் நளன் விடுக்கும் வணக்க அறிவிப்பு முதன்மையானது. இவ்விழவு முடிந்தபின் கலிங்க அரசர் விரும்பினால் குருதியுறவுகொண்ட அரசென்ற முறையில் அவர்கள் கட்ட வேண்டிய கப்பத்தை முழுமையாகவே நிறுத்துவதற்கும், இந்நகர் புகுந்து நளமாமன்னருக்கு இணையாக அமர்ந்து அவை முறைமைகளை ஏற்பதற்கும் அவர்களுக்கு விடுக்கும் அழைப்பு இரண்டாவது."

"மாமன்னர் நளனின் இளையோனாகிய புஷ்கரரை விஜயபுரியின் அரசரென முடியணிவிக்கும் அறிவிப்பு மூன்றாவதாகும்" என்றார் கருணாகரர். அவையிலிருந்த காளகக்குடிகள் அனைவரும் எழுந்து தங்கள் கோல்களைத் தூக்கி வாழ்த்தொலி எழுப்பினர். அவ்வொலி அடங்குவதற்காக

காத்திருந்த கருணாகரர் மீண்டும் “விஜயபுரியின் அரசர் இந்திரபுரிக்கு இணையரசராகவும் அரசுமுறை உறவுகள் அனைத்தையும் பேணுபவராகவும் திகழ்வார். இரு நாடுகளுக்கும் ஒரே கொடியும் ஒரே அரச அடையாளமும் திகழும்” என்றார். அவை கலைவோசையுடன் அமைதியடைந்தது. கருணாகரர் “விஜயபுரியின் படைத்தலைவராக சிம்மவக்த்ரரை பேரரசி தமயந்தி அறிவிக்கிறார். விஜயபுரியை சூழ்ந்துள்ள சதகர்ணிகள், திருவிடத்தவர் அனைவரையும் எதிர்கொண்டு காக்க அவரால் இயலும்” என்றார். அவையில் ஆழ்ந்த அமைதி நிலவியது. எவரோ இருமும் ஒலி உரக்கக் கேட்டது.

“விஜயபுரியின் அரசர் என முடிசூட்டிக்கொண்ட புஷ்கரர் கலிங்க இளவரசியை முறைப்படி மணம்கொள்வதற்கான ஆணை இத்துடன் அமைகிறது. காளகக்குடிகளுக்கு அளிக்கப்படும் சிறப்பும் விருதுகளும் குறித்த அறிவிப்புகள் தொடரும். அதற்குப்பின்…” என்று கருணாகரர் தொடர சீர்ஷர் எழுந்து தன் கோலைத் தூக்கி “காளகக்குடிகளுக்கு எவரும் கொடையளிக்க வேண்டியதில்லை. நாங்கள் ஆளும் மண்ணை எங்கள் உடைமையென கொள்ளவும் காக்கவும் எங்களால் இயலும்” என்றார். அவர் அருகே சென்று “அமர்க! அறிவிப்புகள் முடியட்டும்” என்று நாகசேனர் சொன்னார். “நீ துணையமைச்சன். உன் சொல்கேட்டு நான் அமரவேண்டியதில்லை” என்றார் சீர்ஷர்.

பொறுமையுடன் “அமர்க, குடித்தலைவரே!” என்றார் நாகசேனர். சீர்ஷர் “நீ அந்தணன் என்பதனால்…” என்றபின் அமர்ந்து உரக்க “இங்கு நிகழும் சூழ்ச்சியென்ன என்று எங்களுக்கு புரியாமல் இல்லை” என்றார். கருணாகரர் அவரை நோக்காமல் “நமது

எல்லைகள் மிகுந்துள்ளன. இந்த மணம்கொள்ளலை கலிங்கர் விரும்பவில்லையென்றால் அவர் மகதனுடனும் மாளவனுடனும் கூர்ஜரனுடனும் கூட்டுச் சூழ்ச்சியில் ஈடுபடக்கூடும். ஒருவேளை எல்லைகளில் படைநகர்வு நடக்கலாம். அதை எதிர்கொள்ளும்பொருட்டு நமது எல்லைகள் அனைத்திலும் படைகளை நிறுத்த வேண்டியுள்ளது. அப்படைநகர்வுக்கான ஆணைகள் இங்கு இவ்வவையில் பிறப்பிக்கப்படும்" என்றார்.

மீண்டும் கைதூக்கி எழுந்த சீர்ஷர் "அந்த ஆணையின் உள்ளடக்கமென்ன என்று இப்போது என்னால் சொல்ல முடியும். காளகக்குடிகளை பல குழுக்களாகப் பிரித்து எல்லைகளுக்கு அனுப்பப்போகிறீர்கள். விஜயபுரியின் அரசருக்கு விதர்ப்பப் படைத்தலைவன் சிம்மவக்த்ரன் காவலனா? அன்றி சிறைக்காப்பாளனா?" என்றார். நளன் ஏதோ சொல்வதற்குள் நாகசேனர் "இந்த அவை மங்கல அவை. அரசுசூழ்தலை நாம் தனியவையில் பேசலாம்" என்றார். "இந்த அவையில்தான் இவ்வறிவிப்புகள் வெளியிடப்படுகின்றன" என்றார் சீர்ஷர். "ஆம், அறிவிப்புகளில் உடன்பாடு இல்லையென்றால் மறுபரிசீலனை செய்ய முடியும். இந்த அவையில் அயல்நாட்டு வருகையாளர் பலர் உள்ளனர்" என்றார் நாகசேனர்.

நளன் எழுந்து "பொறுத்தருள்க, மூத்தவரே. இவ்வறிவிப்புகளில் பலவற்றை நானே இப்போதுதான் கேட்கிறேன். தங்களுக்கு உடன்பாடில்லாத அனைத்தையுமே குறித்துக்கொள்ளுங்கள். தனியவையில் நாம் அவற்றை பேசுவோம். உங்கள் ஒப்புதல் இல்லாமல் எந்த ஆணையும் இங்கு நிறைவேற்றப்படாது. இதை நான் உறுதியளிக்கிறேன்" என்றான். சீர்ஷர் "எவரும் எங்களுக்கு கொடையளிக்க வேண்டியதில்லை. இந்நகரே

இன்று அரசனென ஒருவனை ஏற்றுக்கொண்டுள்ளது. பிறிதெவரையும் அது ஏற்றுக்கொள்ளவில்லை. உண்மையை உணர்வதற்கு அறிவுகூடத் தேவையில்லை, விழிகூர்ந்தால் போதும். ஏன், இங்கமர்ந்து செவிகூர்ந்தாலே போதும்" என்றார். "நன்று, நாம் அனைத்தையும் பிறகு பேசுவோம். அவை நிறைவுகொள்ளட்டும்" என்று நளன் சொன்னான்.

அவைமங்கலத்தை நிமித்திகர் அறிவித்து தலைவணங்கியதும் இசை முழங்கியது. நளன் எழுந்து அவையை மும்முறை வணங்கினான். அவன் முடியையும் கோலையும் ஏவலர் பெற்றுக்கொண்டனர். வலப்பக்கம் திரும்பி வெளியேறும் வழியில் சீரடி வைத்து நடந்தான். முடியை அளித்தபின் தமயந்தியும் எழுந்து அவனை தொடர்ந்தாள். அவள் ஆடைதாங்கிய சேடிகள் பின்னால் சென்றனர். அவர்களின் அருகே வந்த கருணாகரர் தாழ்ந்த குரலில் "முதலில் இந்த மணநிகழ்வு நிறைவடையட்டும், அரசே. பிற ஆணைகள் அனைத்தையுமே ஒரு மாதம் கடந்தபின் நாம் கூடி முடிவெடுப்போம்" என்றார். தமயந்தி "ஆணைகளை மாற்றிக்கொள்ளும் வழக்கம் எனக்கில்லை, அமைச்சரே" என்றாள்.

கருணாகரர் "ஆம், அதை நான் அறிவேன். ஆனால் சீர்ஷர் உளநிலை பெரிதும் திரிபடைந்திருக்கிறது. நகர்மக்கள் புஷ்கரருக்கு அளித்த வரவேற்பு அவரது ஆணவத்தை தூண்டிவிட்டிருக்கிறது" என்றார். தமயந்தி "வெறும் ஆணவங்களாலோ கனவுகளாலோ அரசுகள் கைப்பற்றப்படுவதில்லை, ஆளப்படுவதுமில்லை. படைவல்லமையே இறுதி" என்றாள். "அதைக் கண்டபின்னரே அவர்களுக்குப் புரியும் என்றால் அதன் முதற்குறிப்பை

அவர்களுக்குக் காட்டவும் நான் சித்தமாக இருக்கிறேன்." நளன் எரிச்சலுடன் "இது என்ன பேச்சு? அவன் என் இளையோன். எதையும் அவனிடம் நேரடியாக சொல்லுமிடத்தில்தான் என்றும் நான் இருக்கிறேன்" என்றான்.

கருணாகரரிடம் "அமைச்சரே, அவனை உணவுக்கூடத்துக்கு வரச்சொல்லுங்கள். அங்கு அனைவரும் அமர்ந்து உண்போம். அமுதின் முன் உள்ளங்கள் கனியும். எளிய ஆணவங்களும் காழ்ப்புகளும் கரைந்து மறையும். அங்கு பேசுவோம்" என்றான். "ஆம், அது நன்று" என்றார் கருணாகரர். தமயந்தி "எனக்கு சற்று தலைநோவு உள்ளது. என் அறைக்குச் சென்று ஓய்வெடுத்துவிட்டு குடியவைக்கு வருகிறேன்" என்றாள். "இல்லை. இன்று என் சமையல். வெளியே குடிகளுக்கும் அதுவே. நாம் சேர்ந்தமர்ந்துண்ணவேண்டும்" என்று நளன் சொன்னான். தமயந்தி சிலகணங்கள் எண்ணம் கூர்ந்தபின் "அவ்வாறே" என்றாள்.

குடியினருக்கான உணவுக்கூடங்களை ஒட்டியே அரசகுடிகளுக்கான உணவுக்கூடம் இருந்தது. நளனும் தமயந்தியும் அவைக்கோலம் களைந்து கைகால் தூய்மை செய்து அங்கு சென்றபோது முன்னரே கால்குறைந்த நூற்றெட்டு ஊண்பீடங்கள் போடப்பட்டு அவற்றில் தளிர்வாழை இலைகள் விரிக்கப்பட்டிருந்தன. ஊண்கூடத்தின் செயலகர் வந்து வணங்கி "அமர்ந்தருள்க, அரசே!" என்றார். நளன் தமயந்தியிடம் "முதலில் நீ சென்று அமர்ந்துகொள்" என்றான். தமயந்தி "அரசர் முதலில் அமரவேண்டுமென்பது நெறி" என்றாள். "இல்லை, இங்கு நான் உணவை பரிமாற நிற்கிறேன்" என்றான். தமயந்தி முகம் சுளித்து "விளையாடுகிறீர்களா?" என்றாள். நளன் சிரித்து "முடி கழற்றிவிட்டேன்.

வேண்டுமென்றால் இந்த அணிகளையும் கழற்றிவிடுகிறேன். அடுமனையாளனாக நிற்கும்போது நான் அடையும் உவகை எப்போதும் பெற்றதில்லை” என்றான்.

தமயந்தி ஏதோ சொல்ல வாயெடுத்தபின் “சரி” என்றாள். அரசிக்குரிய உலையா நடையில் சென்று தந்தத்தால் குறுங்கால்கள் அமைக்கப்பட்ட பீடத்தின் மேல் அமர்ந்தாள். அவளைத் தொடர்ந்து இந்திரசேனையும் இந்திரசேனனும் அமர்ந்தனர். நளன் “குடித்தலைவர்கள் வருக!” என்றான். தங்கள் கோல்களை வைத்துவிட்டு உள்ளே வந்த குடித்தலைவர்கள் ஒவ்வொருவரையாக அவனே அழைத்து வந்து மணைகளில் அமரவைத்தான்.

காளகக்குடி மூத்தவர்கள் அவரிடம் வந்ததும் முகம் மலர்ந்து “இனிய உணவு, அரசே. அந்த மணமே அது என்ன என்பதை காட்டுகிறது. நீண்ட நாள் ஆயிற்று, தங்கள் கையால் உணவுண்டு” என்றனர். “இன்று இரவும் நானே அடுமனை புகலாம் என்று நினைக்கிறேன்” என்றான் நளன். கருணாகரர் “இரவு தாங்கள் குடியவையில் அமரவேண்டும்” என்றார். “ஆம். என்ன செய்ய வேண்டுமென்று ஆணைகளை கொடுத்துவிட்டு வருகிறேன். இரவு உணவுக்கும் இந்நகரத்தவர் எனது சமையலையே உண்ணவேண்டும்” என்றான் நளன். கருணாகரர் “நான் சென்று இளவரசரையும் பிறரையும் அழைத்து வருகிறேன்” என்றார். நளன் அடுமனையாளர்களுக்கு ஆணைகளை இட்டு உணவுக்கலங்களை கொண்டுவரச் செய்தான்.

ஊண்கூடம் நிறைந்துகொண்டிருந்தது. கருணாகரர் புஷ்கரனுடன் வந்தார். புஷ்கரன் நளன் அருகே வந்து “நான் புலரியில் எழுந்ததனால் சற்று தலைசுற்றலாக இருக்கிறது.

நல்லுணவுகூட எனக்கு சுவைக்குமென்று தோன்றவில்லை” என்றான். நளன் சிரித்து “எந்நிலையிலும் எவருக்கும் சுவைக்கும் உணவு இது, இளையோனே. அமர்க!” என்று அவன் தோளைத் தழுவி அழைத்துச்சென்று அவனுக்கான பீடத்தில் அமரவைத்தான். அடுமனை உதவியாளன் ஒருவன் ஓடிவந்து நளனிடம் “கன்னல் சுவையுணவு ஒன்று உள்ளது, அரசே. அது தொடக்கவுணவா, நிறைவுணவா?” என்றான். “தேன் கலந்ததா?” என்றான் நளன்.

இரு குலத்தலைவர்களுடன் நடந்து வந்த சீர்ஷர் நளன் தன்னை வரவேற்பதற்காக காத்து நின்றார். நளன் “இரு, நானே காட்டுகிறேன். அது மகதநாட்டு உணவு” என்றபடி .உள்ளே சென்றான். மேலும் சற்று நோக்கிவிட்டு சீர்ஷர் உள்ளே சென்றபோது அவருக்கான இருக்கை மட்டும் ஒழிந்துகிடந்தது. அதை நோக்கி ஓர் எட்டு வைத்தபின் அவர் நின்று “காளகக்குடிகளுக்கு முதன்மை இடம் இங்கு இல்லையா?” என்றார். கருணாகரர் “அமர்க காளகரே… அனைத்தும் முறைப்படியே நிகழ்கிறது” என்றார். அவர் அமர்ந்துகொண்டு தலையை நிமிர்த்தி சுற்றி நோக்கினார். இலைகளில் சிறிய தொடுகறிகள் முன்னரே விளம்பப்பட்டிருந்தன. அடுமனையாளர்கள் தேனமுதையும் தோயமுதையும் புட்டமுதையும் கனியமுதையும் பாலமுதையும் சீராக விளம்பிவந்தனர். ஐந்தமுதுக்குப் பின் அன்னமும் அப்பமும் பரிமாறப்பட்டன.

இடைவலி கொண்டவர்போல நெளிந்தும் திரும்பியும் அமர்ந்திருந்த சீர்ஷர் உரத்த குரலில் “இந்த உணவு இந்திரனுக்கு படைக்கப்பட்டதா?” என்றார். உள்ளிருந்து வணங்கியபடி விரைந்து வந்த நளன் “ஆம், இங்கு

அடுமனைகளில் சமைக்கப்படும் அனைத்து உணவுகளும் முதலில் நகராளும் விண்தேவனுக்கு படைக்கப்படுகின்றன. அதுவே நெடுநாள் முறைமை” என்றான். சீர்ஷர் “அப்படியென்றால் இந்திரன் உண்ட மிச்சிலா இங்கு கலியின் குடிகளுக்கு அளிக்கப்படுகிறது? காளகர் அமர்ந்து நக்கி உண்ணப்போவது அதையா?” என்றார். காளகக்குடியினர் திகைப்புடன் நோக்க “கலியின் குடிகளே, நீங்கள் உண்பது எதை?” என்று அவர் கைவிரித்து கூச்சலிட்டார்.

நளன் முகம் சுருங்க “உணவு எப்போதுமே தேவர்களின் மிச்சில்தான், மூத்தவரே. தேனீக்களும் வண்ணத்துப்பூச்சிகளும் வண்டுகளும் என அவர்கள் வந்து உண்ட மிச்சத்தை மட்டுமே உயிர்க்குலங்கள் உண்ணமுடியும்” என்றான். சீர்ஷர் வெறுப்பில் சுளித்த முகத்துடன் “நான் இங்கு நெறிநூல் பேச வரவில்லை. நாங்கள் கலியின் குடிகள். எங்கள் தெய்வத்தை இழித்து தென்னகக்காட்டுக்குத் துரத்திய பிற தெய்வம் அதோ அக்குன்றின் மேல் எழுந்து நிற்கிறது. அதற்கு படைக்கப்பட்ட மிச்சிலை உண்ணும் நிலை உங்களுக்கு இருக்கலாம், காளகருக்கு இல்லை” என்றார்.

காளகக் குடித்தலைவர்கள் இருவர் அவர் தோளைத்தொட்டு ஏதோ சொல்ல அதைத் தட்டி விலக்கியபடி அவர் பாய்ந்து எழுந்தார். “ஆண்மையற்று சோற்றுக்காக வந்தமர்ந்து காளகக்குடியையே இழிவுபடுத்துகிறீர்கள், மூடர்களே…” என்றார். “எழுக… இந்த உணவு நமக்குத் தேவையில்லை.” நளன் குரல் சற்றே மாற அழுத்தமாக “உண்ணுங்கள், மூத்தவரே” என்றான். “எனக்கு ஆணையிடுகிறாயா?” என்றபடி சீர்ஷர் அவனை நோக்கி கை நீட்டினார். “நான் காளகப்பெருங்குடியின் தலைவன். அதை மறக்காதே!” நளன். “ஆம், நான் உங்களுக்காக

சமைத்த உணவு இது, மூத்தவரே” என குரல் தழைய சொன்னான். “சீ” என்று சீறிய சீர்ஷர் தன் இடதுகாலால் ஊண்பீடத்தில் இலையில் பரிமாறப்பட்டிருந்த உணவை மிதித்து எறிந்தார். அன்னம் கூடம்முழுக்க சிதறியது. சிலம்பிய குரலில் “இது எனக்கு நாய் வாய்வைத்த இழிவுணவு... கீழ்மகன் கைபட்ட நஞ்சு!” என்றார். நளன் உடல் பதற “மூத்தவரே...” என்றான். “எழுங்கள், மூடர்களே!” என்ற சீர்ஷர் மீண்டும் ஒருமுறை அன்னத்தை காலால் எற்றினார். “இந்த மிச்சிலை உதைத்தெறிந்துவிட்டு கிளம்புங்கள்! நாம் யாரென்று காட்டுங்கள்!” காளகக்குடி மூத்தவர் அனைவரும் எழுந்தனர்.

சிறியதொரு சிட்டின் குரலென நளனின் உடைவாள் உறையிலிருந்து வெளிக்கிளம்பும் ஒலி எழுந்தது. மின்னலொன்று அறைக்குள் வெட்டி ஒடுங்கியதுபோல வாள் சுழன்றமைந்தது. சீர்ஷரின் தலை குருதி சுழன்று சிதறி மாலையென நீர்க்கலம் விழும் ஒலியுடன் நிலத்தில் விழுந்து உருண்டு தமயந்தியின் காலடியில் சென்று அமைந்தது. கொதிக்கும் கலமென சிறுகொப்புளங்கள் ஓசையுடன் வெடிக்க சீர்ஷரின் உடல் பின்னால் சரிந்து சுவரில் மோதி நின்று கைகால்கள் உதறிக்கொள்ள அனல்பட்டதென சிலமுறை துடித்து விதிர்த்து மெல்ல சரிந்து விழுந்தது.

குருதி வழியும் வாளை ஆட்டி தாழ்ந்த குரலில் நளன் சொன்னான் "அமுதைப் புறக்கணித்து இந்த அவையிலிருந்து எழும் எவரும் தலையுடன் வெளிச்செல்ல ஒப்பமாட்டேன்... உண்ணுங்கள்!" காளகக்குடியினர் தங்கள் இலைகளில் அமர்ந்தனர். அவர்களின் உடல்கள் உருளைக்கல் தேரில் அமர்ந்திருப்பவர்கள்போல நடுங்கித் துள்ளின. உணவை அள்ள முடியாமல் கைகள் ஆடின. புஷ்கரன் இரு கைகளாலும் தலையை பற்றிக்கொண்டு உடல் பதற குனிந்தமர்ந்திருந்தான். "உண்ணுங்கள்!" என்று நளன் ஆணையிட்டான். அனைவரும் திடுக்கிட்டு பதறிய கைகளால் அன்னத்தை அள்ளி உண்ணத் தொடங்கினர்.

# நீர்க்கோலம் - 35

### 34. பெருங்கைவேழம்

நிஷத நாட்டு எல்லைக்குள் நுழையும் பாதையின் தொடக்கத்திலேயே திரௌபதி தருமனிடமிருந்து சிறுதலையசைவால் விடைபெற்றுக்கொண்டாள். "சென்று வருகிறேன்" என்று சொல்ல அவள் நெஞ்செழுந்தும்கூட உதடுகளில் நிகழவில்லை. தருமன் திரும்ப தலையசைத்தார். அவள் சிறு பாதையில் ஒன்றைத் தொடர்ந்து ஒன்றென விழுந்த தன் காலடிகளை நோக்கியபடி நடந்தாள். ஒருபோதும் அவ்வாறு தன் காலடிகளை தான் நோக்கியதில்லை என்பதை இரு நாட்களுக்கு முன்னரே அறிந்தாள். கிளம்பிச்செல்லவிருந்த பீமனை "நீங்கள் அடுமனையிலும் புழக்கடைகளிலும் புழங்கியிருக்கிறீர்கள், இளையவரே. நான் எதையும் நோக்கியதில்லை. ஏவற்பெண்டுகளின் இயல்புகளில்

முதன்மையானதென்ன?" என்றாள். "தலைகுனிந்து நிலம் நோக்கி நடப்பது" என்று பீமன் சொன்னான்.

அக்கணமே அவள் தானறிந்த ஏவற்பெண்டுகளின் நடைகள் அனைத்தையும் சித்தத்திற்குள் ஒழுங்குபடுத்தி நோக்கிவிட்டாள். "ஆம், அவர்கள் அனைவரும் அவ்வாறுதான் நடக்கிறார்கள்" என்று சொன்னாள். பின்னர் "ஏன்?" என்று பீமனிடம் கேட்டாள். பீமன் நகைத்து "அவர்கள் செல்லும் வழியெல்லாம் படுகுழிகள் காத்திருக்கின்றனவோ என்னவோ?" என்றான். "விளையாடாதீர்கள்" என்றாள். "விழி தணிவதை பணிவென்று மானுடர் கொள்கிறார்கள். விழியோடு விழி நோக்குவது நிகரென்று அறிவித்தல். நிகரென்று கூறுதல் எப்போதுமே அறைகூவல். குரங்குகளும் நாய்களும்கூட அவ்வாறே கொள்கின்றன" என்று பீமன் சொன்னான். "ஏவற்பெண்டு இவ்வுலகில் உள்ள அனைவரிடமும் விழிதணிந்தவள். ஏவலர் ஏவற்பெண்டுகள் முன் விழிதூக்குபவர்."

"விழிதணித்துச் சென்றால் எங்கிருக்கிறோம் என்றும் எப்படி செல்கிறோம் என்றும் எப்படி தெரியும்?" என்று திரௌபதி கேட்டாள். பீமன் "ஏவற்பெண்டு அதை அறியவேண்டியதில்லை. அவள் இருக்குமிடம் பிறரால் அளிக்கப்படுகிறது. செல்லும் வழி முன்னரே வகுக்கப்பட்டிருக்கிறது. பின் தொடர்வதற்கு விழி தேவையில்லை. செவி ஒன்றே போதும்" என்றான். அவள் பெருமூச்சுடன் "நான் அதை பயில வேண்டும்" என்றாள். "பயில்வதல்ல, அதில் அமையவேண்டும். உனது தோள்களும் விழியும் ஒடுங்க வேண்டும்." அவள் நிமிர்ந்து அவன் விழிகளை சிலகணங்கள் நோக்கிவிட்டு "என்னால் அது இயலும் என்று எண்ணுகிறீர்களா?" என்றாள். அவன் "உண்மையை

சொல்வதென்றால் ஒருகணமும் உன்னால் அது இயலாதென்றே தோன்றுகிறது” என்றான்.

“சைரந்திரியாக நான் எப்படி அவ்வரண்மனையில் இருப்பேன்? என்னால் எண்ணவே கூடவில்லை” என்று விழிதிருப்பி அப்பால் இருந்த காட்டை நோக்கியபடி திரௌபதி சொன்னாள். “ஆனால் அது நிகழ்ந்துவிடுமென்றும் தோன்றுகிறது” என்றான் பீமன். அவள் அவனை ஐயத்துடன் நோக்கி “எவ்வாறு?” என்றாள். “உன்னில் எழவிருக்கும் சைரந்திரி யார் என்று நமக்குத் தெரியாது. இச்சிக்கல்கள் அனைத்தையுமே புரிந்துகொண்டு தன்னை உருமாற்றி நேற்றிலாத ஒருத்தியென எழக்கூடும் அவள்” என்றான் பீமன். புரியாமல் “ஆனால்…” என்றபின் புரிந்துகொண்டு “அவ்வாறே நிகழ்க” என்று தலையசைத்து திரௌபதி பேசாமலிருந்தாள்.

மறுநாள் காலை விழித்தெழுகையில் குடிலில் பீமன் இருக்கவில்லை. அத்திடுக்கிடல் படபடப்பென உடலில் நெடுநேரம் நீடித்தது. பின்னர் எழுந்து சென்று நோக்கினாள். நீராடி வந்து ஈரக்குழலைத் தோளில் பரப்பி மடியில் கைவைத்து கிழக்கு நோக்கி ஊழ்கத்தில் அமர்ந்திருந்த தருமனின் அருகே சென்று “கிளம்பிவிட்டார்” என்றாள். “ஆம்” என்று அவர் சொன்னார். மீண்டும் மெழுகு உறைவதுபோல் அவரில் ஊழ்கம் நிகழ திரும்பி வந்து பீமன் படுத்திருந்த இடத்தை பார்த்தாள். பீமன் எடுத்துக்கொண்டிருந்த இடம் என்னவென்பது அப்போதுதான் தெரிந்தது. நிலையழிந்தவளாக குடிலுக்கு வெளியே வந்து சூழ்ந்திருந்த வறண்ட குறுங்காட்டில் சுற்றிவந்தாள்.

விடிந்த பின்னரே அவளால் காட்டுக்குள் செல்ல முடிந்தது. சுனைக்குச் சென்று நீராடி மீள்கையில் தன்னுள்

இருந்துகொண்டே இருந்த அச்சத்தையும் பதற்றத்தையும் உணர்ந்தபோது ஓர் எண்ணம் எழுந்தது. பீமன் இல்லாதபோது தான் அரசி அல்ல. இக்காடுகளை, விலங்குகளை, மானுடரை, விண்ணோரை, ஒருகணமும் அஞ்சியதில்லை. அடுத்த பொழுது உணவென்ன என்று எண்ணியதில்லை. விரும்பிய ஒன்று கைப்படாதிருக்கக்கூடுமென்று ஐயம் கொண்டதே இல்லை. அங்கு இந்திரப்பிரஸ்தம் என்றும் அஸ்தினபுரியென்றும் காம்பில்யமென்றும் எழுந்துள்ள பெருநகரங்களல்ல. அறமுணர்ந்தவனோ வில்லெடுத்தவனோ இணைத்தம்பியரோ அல்ல. தந்தையோ உடன் பிறந்தவனோ அல்ல. பீமன் ஒருவனால் மட்டுமே பேரரசியென்று இப்புவியில் நிலை நிறுத்தப்பட்டேன்.

அவ்வெண்ணம் எழுந்ததும் கால் தளர சிறிய ஒரு பாறை மேல் அமர்ந்து உளம் உருகி கண்ணீர்விட்டாள். விழிநீர் வழிய தனித்து அமர்ந்திருக்க தன்னால் இயல்வதை விட்டு எழுந்தபோதுதான் உணர்ந்தாள். அது அவளுக்கு அறியா இனிமை ஒன்றை அளித்தது. ஒரு பெண்ணென முற்றுணர்வது ஆண் ஒருவனுக்காக தனித்திருந்து விழிநனைகையில்தான் போலும். அவன் ஒருவனுக்காக அன்றி தன் உள்ளம் நீர்மை கொள்ளப்போவதில்லை. அவள் தன் பொதிக்குள் இருந்த சிறு மரச்சிமிழில் இறுக மூடப்பட்டிருந்த கல்யாணசௌகந்திக மலரை நினைவுகூர்ந்தாள். புன்னகைத்துக்கொண்டபின் அதை எவரேனும் பார்க்கிறார்களா என்று சுற்றும் நோக்கினாள்.



உலர்ந்த விழி நீர்த்தடத்தை கைகளால் துடைத்தபின் புன்னகை எஞ்சிய உதடுகளை இழுத்துக்குவித்து அவள் திரும்பிவந்தாள். சைரந்திரி என நடிப்பது இனி மிக எளிது. முடியுடன் குடியும் குலமும் அகன்று சென்றுவிட்டது. எஞ்சியிருப்பது கைகளும் கால்களும் மட்டுமே. இப்புவியில் வாழ மானுடர் கற்று அடைந்திருக்கும் திறன்கள் எதுவும் இல்லாதவை அவை. அன்று முழுக்க அத்தன்னுணர்விலேயே அலைந்தாள். இங்கிருந்து தருமனும் கிளம்பிச்சென்றுவிட்டால் இக்காட்டில் எதை உண்டு வாழ்வேன்? எப்படி என்னை காத்துக்கொள்வேன்?

அவ்வெண்ணமே அவளை உருமாற்றியது. அவள் நடையும் நோக்கும் மாறிக்கொண்டிருந்தன.

அன்றிரவு துயில்கையில் வாழ்வில் முதல் முறையாக ஒவ்வொரு சிறு ஒலிக்கும் அஞ்சி உடல் விதிர்த்தாள். வெளியே தொலைவில் காட்டு யானைக்கூட்டம் ஒன்று கிளையொடியும் ஒலியுடன் கடந்து சென்றதைக்கேட்டு எழுந்தமர்ந்து நெஞ்சில் கைவைத்து சூழ்ந்திருந்த இருளை நோக்கி நெட்டுயிர்த்தாள். துயிலின் அடுக்குகளுக்குள் அணிப்பெண்டு என்றும் காவல்மகள் என்றும் அடுமனையாள் என்றும் ஆகி விழித்து புரண்டு படுத்தாள். புலர்ந்தபோது சைரந்திரி என உருமாறியிருப்பதை உணர்ந்தாள். அடிமேல் விழி வைத்து நடப்பதென்பது எம்முயற்சியுமின்றி அவளுக்கு வந்தது. அதுவே காப்பென்று தோன்றியது.

பெருஞ்சாலையை அடைந்தபோது தன் உடலைத் தொட்டு வருடிச்செல்லும் விழிகளை ஒவ்வொரு கணமும் உணர்ந்துகொண்டிருந்தாள். பிறந்த நாள்முதல் விழிகளை உணர்ந்திருந்தாள். ஆனால் அவையனைத்தும் அவள் காலடி நோக்கி தலை தாழ்த்தப்படும் வேல்முனைகளின் கூர்கொண்டவை. இவ்விழிகள் வில்லில் இறுகி குறிநோக்கும் வேடனின் அம்புமுனைகள். இவ்விழிகளை புறக்கணித்து செல்வதற்குரிய ஒரே வழி தன் உடலை ஒரு கவசமென்றாக்கி உள்ளே ஒடுங்கி ஒளிந்துகொள்வது. அந்நோக்குகளெதையும் நோக்காமல் விழிகளை நிலம் நோக்கி வைத்துக்கொள்வது.

எல்லைகளை குறுக்கும்தோறும் இருப்பு எளிதாகிறது. இந்தக் காலடிகளில் பட்டுச் செல்லும் மண், இவ்வுடல் அமரும் இடம், இவ்வுள்ளம் சென்று திரும்பும் எல்லை அனைத்தும் குறுகியவை. ஆணையிடப்படும் செயல்களன்றி பிறிதொரு

உலகு இனி எனக்கில்லை. ஆழத்திலெங்கோ மெல்லிய புன்னகை ஒன்று எழுந்தது. உலகை வெல்ல எழுந்தவளென்று பிறந்த குழவியை கையிலேந்தி உள்ளங்காலில் விரிந்த ஆழியையும் சங்கையும் நோக்கி வருகுறி உரைத்த நிமித்திகர் இத்தருணத்தை எங்கேனும் உணர்ந்திருப்பாரா என்ன?

❀நிஷதபுரிக்குச் சென்ற நெடுஞ்சாலையில் வண்டிகளின் சகட ஒலிப்பெருக்கை காட்டுக்கு அப்பால் அவள் கேட்டாள். அனைத்து காலடிப்பாதைகளும் சிறு சாலைகளாக மாறி அப்பெருஞ்சாலை நோக்கி சென்றுகொண்டிருந்தன. இளைப்பாறும் பொருட்டு சற்று அமர்ந்த சாலமரத்தடியில் பறவைகள் எழுந்து சென்ற ஒலி கேட்டு நோக்கியபோது ஒற்றை மாட்டுவண்டி ஒன்றை தொடர்ந்து சென்ற சூதர் குழு ஒன்றை அவள் கண்டாள். வண்டிக்குள் கருவுற்ற பெண்கள் இருவரும் நான்கு குழந்தைகளும் இருந்தனர். ஓரிரு மூங்கில் பெட்டிகளும் இருந்தன. வண்டிக்கு இருபுறமும் குத்துக்கட்டைகளில் பொதிகளும் பைகளும் தொங்கவிடப்பட்டிருந்தன. வண்டியோட்டி நுகத்தில் அமராமல் கயிறுகளைப் பற்றியபடி வண்டியுடன் நடந்துகொண்டிருந்தான்.

வண்டிக்குப் பின்னால் அதன் பின்கட்டையைப் பற்றியபடி எட்டு சிறுவர்கள் ஒருவரோடொருவர் பேசி பூசலிட்டவாறு நடக்க தலையில் பொதிகளும் கலங்களும் பெட்டிகளுமாக சூதர் பெண்களும் அவர்களைச் சூழ்ந்து இளைஞர்களும் நடந்தனர். முதியவர்கள் தோளில் பைகளுடன், வெற்றிலை மென்ற வாயுடன் மூச்சிரைக்க நடந்தனர். அவர்கள் வளம்நோக்கி இடம்பெயர்பவர்கள் என்பது தெரிந்தது. வண்டியின் சகட ஒலியும் கலங்கள் முட்டும் ஒலியும் காளையின் கழுத்துமணியொலியும் இணைந்து ஒலித்தன.

அவர்கள் அருகே வந்தபோது திரௌபதி எழுந்து நின்றாள். கையில் தோளுக்குமேல் உயர்ந்த குடிக்கோல் ஏந்தியிருந்த அவர்களின் தலைவர் அவளை கூர்ந்து நோக்கியபின் “எக்குலம்?” என்றார். திரௌபதி “விறலி” என்றாள். “பெயர் சைரந்திரி. அரசியருக்கு அணுக்கப்பணிகள் செய்வேன்.” அவர் கூர்ந்து நோக்கிவிட்டு “நகருக்கா செல்கிறாய்?” என்றார். “ஆம்” என்றாள். “தனித்தா…?” என்று ஒரு பெண் கேட்டாள். “ஆம், நான் தனியள்” என்றாள் திரௌபதி. “வருக!” என்று இன்னொரு முதிய பெண் அவளை நோக்கி கைநீட்டினாள். அவள் சென்று உடன் இணைந்துகொண்டதும் “ஒரு நோக்கில் எவரும் சூதப்பெண் என உன்னை உரைத்துவிடமாட்டார்கள். அரசிக்குரிய நிமிர்வும் நோக்கும் கொண்டிருக்கிறாய்” என்றாள். “நான் பாஞ்சாலத்தை சேர்ந்தவள். எங்கள் அரசியும் நெடுந்தோற்றம் கொண்டவர்” என்றாள் திரௌபதி.

முதியவள் அவள் தோளில் கைவைத்து “எனக்கு உன்னைப்போல் மகள் ஒருத்தி இருந்தாள். முதற்பேற்றிலேயே மண்மறைந்தாள். வண்டிக்குள் துயில்வது அவள் மகன்தான்” என்றாள். திரௌபதி புன்னகைத்து வண்டிக்குள் எட்டிப்பார்த்து இரு வெண்ணிற பாதங்களைக்கண்டு “அந்தப் பாதங்கள்தானே?” என்றாள். “எப்படி தெரிந்துகொண்டாய்?” என்று அவள் மீண்டும் திரௌபதியின் கைகளைப் பற்றியபடி கேட்டாள். “தாங்கள் இதை சொன்ன கணத்திலேயே அன்னையென்றானேன். மைந்தனை கண்டுகொண்டேன்” என்றாள். உள்ளிருந்து பிறிதொரு குழந்தை உரக்க கை நீட்டி “உயரமான அத்தையை நான்தான் முதலில் பார்த்தேன்” என்றான். இன்னொரு குழந்தை அவனை உந்தியபடி எட்டிப் பார்த்து “உயரமான அத்தை! உன்னை நான்தான் முதலில் பார்த்தேன்” என்றாள். “போடி”

என்று அவன் சொல்ல மாறி மாறி பூசலிட்டு இரு குழந்தைகளும் முடியை பற்றிக்கொண்டன.

“என்ன அங்கே சத்தம்? கையை எடு… நீலிமை, கையை எடு என்று சொன்னேன்” என்றாள் அவர்களின் அன்னை. “இவன்தான் என் முடியை பற்றினான்” என்றாள் நீலிமை. “இவள்தான்! இவள்தான்!” என்று சிறுவன் கூவினான். “நான் உயரமான அத்தையை மரத்தடியிலேயே பார்த்தேன்” என்று நீலிமை அழுகையுடன் சொன்னாள். “மரத்தடியிலே நான் பார்த்தேன்” என்று சிறுவன் கூவினான். அன்னை திரௌபதியிடம் “எப்போதும் பூசல்… ஒரு நாழிகை இவர்களுடன் இருந்தால் பித்து பெருகிவிடும்” என்றாள்.

“இரட்டையரா?” என்றாள் திரௌபதி. “இல்லை. ஓராண்டு வேறுபாடு. ஆனால் மூத்தவள் பிறந்தபோது எங்களூரில் கடுமையான வறுதி. அன்னைப்பாலுக்காகவே நான் வீடு வீடாக அலைந்த காலம். இளையவன் பிறந்தபோது ஊரைவிட்டு கிளம்பிவிட்டோம். பிறிதொரு ஊர். அங்கு அவ்வப்போது ஊன் வேட்டையாடி கொண்டுவர இயன்றது. இருவர் வளர்ச்சியும் அவ்வாறுதான் இணையாக ஆயிற்று” என்றாள். “என் பெயர் கோகிலம். நான் அடுமனைப்பெண்.” திரௌபதி “என் பெயர் சைரந்திரி” என்றாள். “ஊரைச் சொல்ல விரும்பவில்லை என்றால் நான் கேட்கவில்லை” என்றாள் கோகிலம். அவளுக்குப் பின்னால் நின்றிருந்த இளம்பெண்ணொருத்தி “ஊர் துறந்து வருபவர்கள்தான் தனியாக கிளம்பியிருப்பார்கள்” என்றாள். பிறிதொருத்தி “ஊரென்றால் பெண்களுக்கு ஆண்கள்தான். ஆணிலாதவள் ஊரிழந்தவளே” என்றாள்.

அவர்களே தனக்குரிய வரலாறொன்றை ஓரிரு கணங்களுக்குள் சமைத்துவிட்டதை திரௌபதி உணர்ந்தாள். அவ்வாறு

உடனடியாகத் தோன்றுவதனாலேயே அதுவே இயல்பானதென்று தோன்றியது. “ஆம், இந்த ஆலமரத்தடியில் அமர்ந்திருந்த கணத்திற்கு முன்னால் எனக்கு வாழ்க்கையென்று ஏதுமில்லை” என்றாள். “நன்று, அவ்வண்ணமே இரு. பெண்கள் விழைந்ததுபோல் வாழ்க்கை அமைவது மிக அரிது. விரும்பாத வாழ்க்கையை எண்ணத்திலிருந்து முற்றிலும் வெட்டி விலக்கிக்கொள்ளும் பெண்ணே மகிழ்ச்சியுடன் வாழலாகும். அக்கணத்துக்கு முன்னால் உனக்கு என்ன நிகழ்ந்திருந்தாலும் அவையனைத்தும் இப்போது இல்லை. இனி நிகழ்வனவே உன் வாழ்க்கை. அது இனிதென்றாகுக!” என்று கோகிலம் சொன்னாள்.

“என் பெயர் மலையஜை” என்று சொன்ன இளையவள் “நீ உணவருந்தியிருக்க வாய்ப்பில்லை” என்றாள். “ஆம்” என்றாள் திரௌபதி. “உணவுக்காக இன்னும் சற்று நேரத்தில் வண்டிகளை நிறுத்துவோம். அங்கு நீ எங்களுடன் உணவருந்தலாம். நிஷதத்தின் எல்லைக்குள் நுழைந்ததுமுதல் உணவுக்கு எக்குறையுமில்லாதிருக்கிறது. பேரரசி தமயந்தியின் ஆட்சிக்காலத்தில் அவர்கள் அமைத்த மூவாயிரம் அன்னநிலைகள் இப்பகுதியெங்கும் உள்ளன. இடையில் இங்கு அரசின்மை நிலவியபோதுகூட அருகநெறியினர் அவற்றை குறைவிலாது ஓம்பினர். ஓர் அன்னநிலையில் பெற்ற உணவை உண்டு பசியெழுவதற்குள் அடுத்த அன்னநிலைக்கு சென்றுவிடலாம்” என்றாள் மலையஜை.

திரௌபதி “இன்னும் எத்தனை தொலைவு நிஷதபுரிக்கு?” என்றாள் “விராடநகரி இங்கிருந்து எட்டு அன்ன சத்திரங்களின் தொலைவில் உள்ளது. களிற்றுயானை நிரைபோல கரிய

கோட்டை கொண்டது. கவந்தனின் வாய்போல அருகணைபவரெல்லாம் அதன் வாயிலினூடாக உள்ளே சென்று மறைகிறார்கள். எத்தனை நீர் பெய்தாலும் நிறையாத கலம்போல ஒவ்வொரு நாளும் உள்ளே நுழைந்துகொண்டிருக்கும் எங்களைப் போன்ற அயலவருக்கு அங்கு இடமிருக்கிறது. அடுமனைகளிலும் அகத்தளங்களிலும் இன்னும் பலமடங்கு சூதர்கள் சென்று அமையமுடியுமென்றார்கள்" என்றார் குடித்தலைவர். "என் பெயர் விகிர்தன். நான் அங்கு சென்று நோக்கிய பின்னரே என் குடியை அழைத்துச்செல்ல முடிவெடுத்தேன்."

"நீ படைக்கலப்பயிற்சி பெற்றிருக்கிறாயா?" என்று ஒரு குள்ளமான முதியவள் திரௌபதியின் கைகளை தொட்டுப்பார்த்தபின் விழிகளைச் சுருக்கியபடி கேட்டாள். அக்குழுவில் இணைந்த தருணம் முதல் அவள் தன்னை கூர்ந்து நோக்கிக்கொண்டிருப்பதை திரௌபதி உணர்ந்திருந்தாள். திரும்பிப் பார்த்து "ஆம். எங்களூரில் புரவிப்பயிற்சியும் படைக்கலப்பயிற்சியும் பெண்களுக்கு அளிப்பதுண்டு. நாங்கள் புரவிச் சூதர்களின் குலம்" என்றாள். மலையஜை "அவள் பெயர் மிருகி. எப்போதும் ஐயம் கொண்டவள்" என திரௌபதியிடம் சொல்லிவிட்டு "புரவிச் சூதர்களுக்கு படைக்கலப்பயிற்சி அளிக்கும் பழக்கம் மகதத்திலும் அயோத்தியிலும் உண்டு என்பதை அறியமாட்டாயா?" என்றாள். "ஆம். தேவையென்றால் அவர்கள் போர்களில் ஈடுபடவும் வேண்டும். ஆனால் பெண்களுக்கு அப்பயிற்சிகள் அளிக்கப்படுவதை இப்போதுதான் அறிகிறேன்" என்றார் விகிர்தர். "அத்தனை பெண்களுக்கும் அளிக்கப்படுவதில்லை. இளவயதிலேயே எனது தோள்கள் போருக்குரியவை என்று என் தந்தை கருதினார். ஆகவே அப்பயிற்சியை எனக்களித்தார்" என்று திரௌபதி சொன்னாள்.

மிருகியின் விழிகளில் ஐயம் எஞ்சியிருந்தது. ஆனால் “ஆம், உனது உடல் உனக்கு என்றும் பெரிய இடரே. எவ்விழியும் வந்து இறுதியாக நிலைக்கும் தோற்றம் உனக்கு அமைந்துள்ளது. அரசகுடியினர் உன்னை விரும்புவர். அவர்கள் விரும்புவதனாலேயே இடர்களுக்குள்ளாவாய். தோள்களை குறுக்கிக்கொள். குரலெழாது பேசு. ஒருபோதும் அரசகுலத்து ஆண்கள் சொல்லும் சொற்களை நம்பாதே” என்றாள். திரௌபதி “இனி நம்புவதில்லை” என்றாள். மிருகி விழிகளில் ஐயம் அகல நகைத்தபடி “ஆம், நீ சொல்லவருவது எனக்கு புரிகிறது. இனி அனைத்தும் நன்றாகவே நடக்கட்டும்” என்றாள்.

✿அவர்கள் தழைத்து கிளைவிரித்து நின்றிருந்த அரசமரத்தடி ஒன்றை அணுகினர். சூதர்கள் இருவரும் முன்னால் சென்று அந்த இடத்தை நன்கு நோக்கிவிட்டு கைகாட்ட வண்டியை ஓட்டியவர் கயிற்றை இழுத்து அதை நிறுத்தினார். கட்டைகள் உரச சகடங்கள் நிலைத்து வண்டி நின்றதும் சூதப்பெண்கள் உள்ளிருந்து குழந்தைகளைத் தூக்கி கீழே விட்டனர். அவை குதித்துக் கூச்சலிட்டபடி அரசமரத்தை நோக்கி ஓடின. கருவுற்றிருந்த பெண்களை கைபற்றி மெல்ல கீழே இறக்கினர். அவர்களில் ஒருத்தி குருதி இல்லாமல் வெளுத்திருந்த உதடுகளுடன் அவளை நோக்கி புன்னகைத்து “இக்குழுவில் ஆண்களின் தலைக்கு மேல் எழுந்து தெரிகிறது உங்கள் தலை” என்றாள். “ஆம், அதை மட்டும் நான் ஒன்றும் செய்வதற்கில்லை” என்று திரௌபதி சொன்னாள். “ஏன் தலைதணிக்க வேண்டும்? நிமிர்ந்து நடவுங்கள். சூதர்களில் ஒருவர் தலைநிமிர்ந்து நடந்தாரென்று நாங்கள் எண்ணிக்கொள்கிறோம்” என்றாள் அவள்.

அவள் கைகளை பற்றிக்கொண்டு “எத்தனை மாதம்?” என்று திரௌபதி கேட்டாள். “ஏழு” என்றபின் கையை இடையில் வைத்து மெல்ல நெளித்து “இந்த வண்டியில் அமர்ந்து வருவதற்கு நடந்தே செல்லலாம். நடனமிட்டபடி செல்வதுபோல் உள்ளது” என்றாள். “என் பெயர் சிம்ஹி. அதோ, அவர்தான் என் கணவர்.” அவள் சுட்டிக்காட்டிய இளைஞன் பெரிய பற்களைக் காட்டி புன்னகைத்தான். “அவர் பெயர் அஸ்வகர். நளமன்னர் இயற்றிய அடுதொழில் நூலை உளப்பாடமாக கற்றவர் எங்களுள் அவர் ஒருவரே.”

சிம்ஹிக்குப் பின்னால் இறங்கிய கருவுற்ற பெண் பதினெட்டு வயதுகூட அடையாதவள். சிறுமியருக்குரிய கண்களும் சிறிய பருக்கள் பரவிய கன்னங்களும் கொண்டிருந்தாள். அவளும் உதடுகள் வெளுத்து கண்கள் வறண்டு தோல் பசலைபடர்ந்து வண்ணமிழந்த பழைய துணிபோலிருந்தாள். “உனக்கு எத்தனை மாதம்?” என்று திரௌபதி கேட்டாள். “ஆறு” என்று அவள் சொன்னாள். பின்னர் விழிகளைத் திருப்பி வேறெங்கோ நோக்கினாள். சிம்ஹி “அவள் பெயர் சவிதை. அவளிடம் பேசவே முடியாது” என்றாள். “ஏன்?” என்று திரௌபதி கேட்டாள். “இப்புவியே அவளுக்கு தீங்கிழைக்கிறது என்று எண்ணிக்கொண்டிருக்கிறாள். அவள் கணவன் அவளைக் கொல்லும் நஞ்சொன்றையே கருவாக அவள் உடலில் செலுத்தியிருப்பதாக நேற்று சொன்னாள். அக்கரு வளர்ந்து தன்னை கிழித்துக்கொண்டுதான் வெளியே வரும் என்று ஒவ்வொரு நாளும் கனவில் காண்கிறாள்.” திரௌபதி சவிதையின் கைகளை பற்றிக்கொண்டு “என்ன கனவு அது?” என்றாள்.

அவள் கைகள் குளிர்ந்து இறந்த மீன்கள் போலிருந்தன. கையை உருவ முயன்றபடி “ஒன்றுமில்லை” என்று சொன்னாள். “அத்தகைய கனவுகள் வராத கருவுற்ற பெண்கள் எவருமில்லை” என்றாள் திரௌபதி. “ஆம், எனக்குத் தெரியும்” என்றாள் அவள். “சரி, நான் சொல்கிறேன். நீ இக்கருவால் உயிர் துறக்கப்போவதில்லை. அறுபதாண்டு வாழ்ந்து உன் மூன்றாம் கொடிவழியினரைக் கண்ட பின்னரே இங்கிருந்து செல்வாய். போதுமா?” என்றாள் திரௌபதி. அவள் விழிகளையும் சொல்லுறுதியையும் கண்ட கோகிலம் “தெய்வச்சொல் கேட்டதுபோல் உள்ளது, அம்மா” என்றாள்.

சவிதை சினத்துடன் “அதைச் சொல்ல நீங்கள் யார்?” என்று கேட்டாள். சுளித்த உதடுகளுக்குள் அவள் பற்கள் தெரிந்தன. “சொல்வதற்கு எனக்கு ஆற்றலுண்டு என்றே கொள்” என்றாள் திரௌபதி. சவிதை முகம் திருப்பிக்கொண்டாள். அரசமரத்தடியில் பெண்கள் ஒவ்வொருவராக அமர்ந்துகொண்டனர். ஆண்கள் வண்டியிலிருந்து பொதிகளையும் பெட்டிகளையும் கலங்களையும் இறக்கி வைத்தனர். பொதி சுமந்துவந்த பெண்கள் முதுகை நிலம்பதிய வைத்து மல்லாந்து படுத்தனர். கலங்களில் இருந்து இன்கடுங்கள்ளை மூங்கில் குவளைகளில் ஊற்றி ஆண்கள் கைகளில் எடுத்துக்கொண்டனர். பெண்கள் துணிப்பொதிகளை அவிழ்த்து உள்ளே வாழையிலையில் பொதிந்து தீயில் சுட்டெடுத்த அரிசி அப்பங்களை எடுத்து குழந்தைகளுக்கு அளித்தனர். ஒருவரோடொருவர் பூசலிட்டு கூவிச்சிரித்தபடி குழந்தைகள் அவற்றை வாங்கிக்கொண்டனர்.

தேங்காய் சேர்த்து பிசைந்து சுடப்பட்ட பச்சரிசி அப்பம் அந்த வழிநடைப் பசிக்கு மிக சுவையாக இருப்பதாக அவளுக்குத்

தோன்றியது. மிருகி “நான் ஊனுணவு மிகுதியாக உண்ணவேண்டும் என்கிறார்கள். நான்கு மாதம் எதை உண்டாலும் வெளியே வந்துகொண்டிருந்தது. உண்மையில் இப்போது ஓரிரு மாதங்களாகத்தான் வயிறு நிறைய உண்கிறேன். ஆயினும் முன்பு வாயுமிழ்ந்த நினைவு எழும்போது மேற்கொண்டு உண்ண முடியவில்லை” என்றாள். “அதற்கு எளிய வழி உன் வயிறு ஒரு சிறு குருவிக்கூடு, அதிலுள்ள குஞ்சு ஒன்று சிவந்த அலகைப் பிளந்து சிறு சிறகுகளை அடித்தபடி எம்பி எம்பி இந்த உணவுக்காக குதிக்கிறது என்று எண்ணிக்கொள்வதே. ஒரு துண்டுகூட வீணாகாமல் உண்பாய்” என்றாள் திரௌபதி. அவள் முகம் மலர்ந்து “ஆம், அதை கேட்கையிலேயே மெய் விதிர்ப்பு கொள்கிறது” என்றபடி திரௌபதியின் கைகளை தொட்டாள்.

கோகிலம் “நன்றாக பேசுகிறாய். கதை சொல்வாயா?” என்றாள். “நிறைய கதை கேட்டிருக்கிறேன் எதையும் இதுவரை சொன்னதில்லை” என்றாள் திரௌபதி. “நீ எதில் தேர்ந்தவள்?” என்றாள் மிருகி. “அணிச்சேடி வேலையை செய்ய முடியுமென்று எண்ணுகின்றேன். காவல்பெண்டாகவும் அமைவேன்” என்றாள் திரௌபதி. “அதை அடுமனைகளில் செய்ய முடியுமா என்ன? அதற்கு அரண்மனைப்பழக்கம் இருக்க வேண்டுமே?” என்றாள் கோகிலம். “அவளை பார்த்தாலே தெரியவில்லையா அவள் அடுமனைப்பெண் அல்ல என்று? அரண்மனைகளில் வளர்ந்தவள் அவள்” என்றாள் மிருகி. திரௌபதி “எப்படி தெரியும்?” என்றாள். “உன் கால்களைப் பார் அவை நெடுந்தூரம் வழி நடந்தவை ஆயினும் எங்களைப்போல இளமையிலிருந்தே மண்ணை அறிந்தவையல்ல. கடுநடையில் வளர்ந்த கால்களில் விரல்கள் விலகியிருக்கும். பாதங்கள் இணையாக நிலம் பதியாது.”

திரௌபதி புன்னகையுடன் "மெய்தான். நான் அரண்மனையில் வளர்ந்தேன்" என்றாள். "நீ சொல்ல மறுக்கும் அனைத்தும் அரண்மனைகளில் நிகழ்ந்தவை" என்றாள் மிருகி. அவளை கூர்ந்து நோக்கியபடி "அழகிய சூதப்பெண்கள் அனைவருக்கும் ஒரு பெருங்கலத்தை நிறைக்கும் அளவுக்கு நஞ்சும் கசப்பும் நெஞ்சில் இருக்கும்" என்றாள். திரௌபதி "கடுங்கசப்பு" என்றாள். கோகிலம் "ஆம், உன் புன்னகை அனைத்திலும் அது உள்ளது. நீ சிறுமை செய்யப்பட்டாயா?" என்றாள். "ஆம்" என்றாள் திரௌபதி. "எங்கு?" என்றாள் சிம்ஹி. "அவை முன்பு" என்றாள் திரௌபதி. "அவை முன்பா?" என்றபடி இரு பெண்கள் எழுந்து அருகே வந்தனர். "அவையிலா?" என்றனர். "ஆம்" என்று குனிந்து அப்பத்தை தின்றபடி திரௌபதி சொன்னாள்.

கோகிலம் "பெண்களுக்கு சிறுமையெல்லாம் தனியறையில்தான். அவை முன்பிலென்றால்...?" என்றாள். மிருகி சீற்றத்துடன் "சிறுமையில் பெரிதென்ன சிறிதென்ன? தன்மேல் மதிப்பில்லாத ஆண் ஒருவனால் வெறும் உடலென கைப்பற்றி புணரப்படும் சிறுமைக்கு அப்பால் எவரும் பெண்ணுக்கு எச்சிறுமையையும் அளித்துவிட முடியாது" என்றாள். மூச்சு சீற "புணர்ச்சிச் செயலே அவ்வாறுதான் அமைந்துள்ளது. பற்றி ஆட்கொண்டு கசக்கி முகர்ந்து துய்த்து துறந்து செல்லுதல். எச்சில் இலையென பெண்ணை உணரச்செய்தல்" என்றாள். கோகிலம் "நாம் அதை ஏன் பேசவேண்டும்?" என்றாள். மிருகி "நீ அரண்மனைகளில் பணியாற்றியதில்லை" என்றாள். கோகிலம் "ஆம், அது என் நல்லூழ்" என்றாள். சிம்ஹி "உணவின்போது கசப்புகளை பேசவேண்டியதில்லை" என்றாள்.

“ஆயினும் அவை நடுவே என்றால்…” என்றாள் கோகிலம். “எண்ணவே முடியவில்லை.” மிருகி “கேளடி, இருண்ட அறையில் எவருமே இல்லாமல் கீழ்மைப்பட்டு தன்னுடலை அளிக்கும் ஒரு சூதப்பெண்கூட பல்லாயிரம் பேர் நோக்கும் அவை முன்புதான் அதற்கு ஆளாகிக் கொண்டிருக்கிறாள். இல்லையென்று சொல் பார்க்கலாம்” என்றாள். கோகிலம் “எனக்குத் தெரியவில்லை” என்றாள். “அப்போதும் பிறந்திருக்காத தலைமுறையினரும் அதை பார்க்கிறார்கள், அறிக!” என்றாள் மிருகி. சிம்ஹி பதற்றத்துடன் “நாம் இந்தப் பேச்சையே விட்டுவிடுவோமே…” என்றாள். கோகிலம் “ஆம், நாமிதை பேச வேண்டியதில்லை” என்றாள். மிருகி “பெண்ணுக்கு இழைக்கப்பட்ட சிறுமைக்கு குருதியை மட்டுமே நிகர் வைக்கமுடியும். அப்பெண்ணின் மைந்தன் அதை செய்யவேண்டும்… அக்குருதியை அவன் முலைப்பால் என அள்ளிக் குடிக்கவேண்டும்” என்றாள். “போதும்” என்றாள் சிம்ஹி.

விகிர்தர் அரைத்துயில் மயங்க அஸ்வகனும் இரு இளஞ்சூதர்களும் வெல்லமிட்ட கொதிக்கும் அன்னநீரை ஒரு கலத்தில் கொண்டுவந்தனர். மூங்கில் குவளைகளில் விட்டு அவர்களுக்கு அளித்தனர். அஸ்வகன் திரௌபதியிடம் நீட்டியபடி புன்னகையுடன் “இது கள்ளல்ல” என்றான். “நான் கள்ளருந்துபவள் என்று தோன்றுகிறதா?” என்றாள் அவள். “இல்லை. ஆனால் உங்கள் விழிகள் கள்ளிலூறியவை என்று தோன்றுகின்றன” என்று அவன் சிரித்தான். “எங்கள் குடியில் அடுமனைத்தொழிலில் முதன்மைத் திறனோன் இவன். நாங்கள் சிறுகுடி அடுமனையாளர். எளியோருக்கான உணவைச் சமைப்பவர். இவன் அரண்மனைச் சமையலை அறிந்தவன். சம்பவன் என்று பெயர்” என்றாள் கோகிலத்தின் இளையோள்.

“இவனுக்கு மூத்தவர் இருவர் முன்பே மறைந்துவிட்டனர். எனக்கென்று எஞ்சும் உடன்பிறந்தான் இவனே.”

சம்பவன் “அடுமனைத்திறன் அரண்மனையை கோருகிறது. நிஷதபுரியின் அரண்மனை இன்று நல்ல திறனுள்ள அடுமனையாளர்களுக்கான இடமென்றார்கள்” என்றான். திரௌபதி “அடுமனையாளர் எவரிடமாவது பயின்றிருக்கிறீர்களா?” என்றாள். “எந்தையிடம் அன்றி எவரிடமும் பயின்றதில்லை. அஸ்தினபுரியின் பீமசேனர் எனது ஆசிரியர். அவருக்கு மாணவனாக வேண்டும் என்பதற்காகவே நான் நளபாகத்தை பயில மறுத்தேன்” என்றான். திரௌபதி “அவரை பார்த்திருக்கிறீரா?” என்று கேட்டாள். சம்பவன் “பார்த்ததில்லை. ஆனால்…” என்றபின் தன் கச்சையை நெகிழ்த்து அதிலிருந்து சிறிய பட்டுத்துணி ஒன்றை எடுத்துக் காட்டினான். அதில் பீமனின் உருவம் வண்ண நூல்களால் வரையப்பட்டிருந்தது.

“இந்த ஓவியத்தை பதினான்கு ஆண்டுகளுக்கு முன்பு ஒரு திசைச்சூதரிடமிருந்து எட்டு பணம் கொடுத்து வாங்கினேன். என் கையில் தந்தை அணிவித்திருந்த பொற்கங்கணத்தை விற்று அப்பணத்தை ஈட்டினேன். ஒவ்வொரு நாளும் இது என்னுடன் இருக்கிறது. என் ஆசிரியர், என் இறைவடிவம். அவர் எங்கிருந்தோ என்னிடம் பேசிக்கொண்டிருக்கிறார். நான் கற்ற அடுமனைத்தொழிலனைத்தும் என் உள்ளத்தில் அறியாத குரலென ஒலித்து இவர் கற்பித்ததே” என்றான். குரல்நெகிழ “சொல்லுங்கள் அக்கா, ஆசிரியரின் அணுக்கம் இருந்தால்தான் கற்க முடியுமா?” என்று கேட்டான்.

திரௌபதி “இல்லை. தந்தை, ஆசிரியன், காதலன் என்னும் மூன்றும் உளஉருவகங்கள் மட்டுமே. ஆனால் மெய்யன்பு

என்றால், முழுப்பணிவு என்றால் காதலனும் ஆசிரியனும் தந்தையும் ஏதேனும் ஒரு தருணத்தில் அத்தவத்தை அறிந்து நம்மைத் தேடி வருவார்கள். யார் கண்டது, நீர் இப்போது சென்றுகொண்டிருப்பதே உமது ஆசிரியரின் காலடிகளை தேடித்தானோ என்னவோ?" என்றாள்.

சம்பவன் உள எழுச்சியுடன் அவள் அருகே வந்து மண்டியிட்டமர்ந்து அவள் கால்களைத் தொட்டு "இச்சொற்களுக்காகவே நான் உங்களுக்கு கடன்பட்டிருக்கிறேன், அக்கா. இச்சொற்கள் போதும் எனக்கு. என்றேனும் ஒரு நாள் அவரை நான் காண்பேன். இந்திரப்பிரஸ்தத்தின் பேரரசரின் இளையவர் அவர். எதிரிகள் எண்ணியே அஞ்சும் பெருவீரர். என்றேனும் ஒரு நாள் நேரில் கண்டால்கூட நெடுந்தொலைவில் நின்றபடிதான் கைகூப்புவேன். அவரது கால்தடங்கள் படிந்த மண்ணை எடுத்து என் தலையில் அணிந்துகொள்வேன். அந்த பிடிமண்ணைச் சூடும் வாய்ப்பு என் சென்னிக்கு கிடைக்குமென்றால்கூட என் மூதாதையர் என்மேல் பெருங்கருணை கொண்டிருக்கிறார்கள் என்றே கொள்வேன்" என்றான்.

திரௌபதி "ஆசிரியரின் பெருங்கருணைக்கு இணை நிற்பது தெய்வங்களின் கருணை மட்டுமே. நம் எளிமையை எண்ணி நாம் அஞ்ச வேண்டியதில்லை. நம்மில் ஆணவமும் சிறுமையும் மட்டும் இல்லாதிருக்கும்படி பார்த்துக்கொண்டால் போதும். சிறு கோழிக்குஞ்சை செம்பருந்து பற்றிச்செல்வதுபோல நம்மை இப்புவியிலிருந்து தேடி வந்து பற்றிச் சென்று மலைமுடியில் அமர்த்துவார்கள். அன்னைமடியில் என அவர் அருகே நாம் அமரலாம்" என்றாள். சம்பவன் கன்னங்களில் நீர்ச்சால்கள் வழிய விம்மி அழுதபடி

தலைகுனிந்து அமர்ந்திருந்தான். கோகிலம் “நற்சொற்கள் சொன்னாய், சைரந்திரி. உனது நா நிகழட்டும்” என்றாள். “நான் சொன்ன சொற்கள் எதுவும் நிகழாதிருந்ததில்லை” என்றாள் திரௌபதி.

பின்னாலிருந்து அவள் கையைத் தொட்ட சவிதை “அவ்வாறென்றால் நானும் பெற்றுப் பிழைப்பேனா, அக்கா?” என்றாள். “நீ பெருந்தோள் கொண்ட மாவீரனை பெறுவாய்” என்றாள் திரௌபதி. அவள் மெய்ப்புகொள்வது கழுத்தில் தெரிந்தது. “எப்படி?” என்று மூச்சொலியுடன் கேட்டாள். திரௌபதி “அடுமனைக்குச் செல். அங்கு உன்னைக் கண்டதுமே உனக்கு அருள்பவர் ஒருவர் வருவார். இப்புவி கண்டவற்றிலேயே பெருந்தோள் கொண்டவர். இளையவளே, யானை துதிக்கையை எண்ணுக! கருங்கால்வேங்கைப் பெருமரம் பறித்தெடுக்கும் ஆற்றல் கொண்டது அது. இதழ் கசங்காது மலர்கொய்யவும் அறிந்தது. உன்மேல் அக்கருணை பொழியும். ஆலமரத்தடியில் என அவர் காலடியில் அமைக! உன்னில் எழுவதும் பிறிதொரு பெருந்தோளனாகவே இருப்பான்” என்றாள். அவள் தலையில் கைவைத்து “தெய்வமெழும் சொல் இது, இளையவளே. நெடுந்தொலைவில் அவரைக் கண்டதுமே நீ அறிவாய், இப்புவியில் இனி அஞ்சவேண்டியதென்று எதுவுமே இல்லை என” என்றாள்.

துணி கிழிபடும் ஒலியில் விசும்பியபடி சவிதை தன் முட்டில் முகம் புதைத்து அழத்தொடங்கினாள். அவ்வொலியைக் கேட்டபடி விழிநீர் வழிய அப்பெண்கள் அமர்ந்திருந்தனர்.

# நீர்க்கோலம் - 36

## 35. வேழமருப்பு

சூதர்குழுவுடன் திரௌபதி விராடபுரியின் பெருங்கோட்டை வாயிலை அடைந்தபோது அந்தி கவியத் தொடங்கியிருந்தது. தொலைவிலேயே சூதர்குழுவின் தலைவர் விகிர்தர் “விரைந்து சென்றால் பெருவாயில் மூடுவதற்குள் நாம் நகருக்குள் நுழைந்துவிட முடியும். அந்திக்குப் பின் அயலவர்களை நகர்நுழைய ஒப்புவதில்லை. நாம் திறந்த வெளியில் தங்க வேண்டியிருக்கும்” என்றார். “நோக்குக, தென்மேற்கில் மின்னுகிறது. இப்பகுதிகளில் தென்மேற்கு முகிலூறினால் மழை உறுதி என்றே பொருள். திறந்த வெளியில் குழந்தைகளுடன் தங்குவதென்பது கடினம்.”

திரௌபதி “கோட்டைமுகப்பில் தங்கும் இடங்கள் இல்லையா?” என்றாள். “உண்டு. பெருவணிகர்களுக்கு நீள்விடுதிகள் அமைந்துள்ளன தொகைக்கொட்டகைளும் உண்டு. இப்பொழுதிற்குள் அங்கே பலர் சென்று இடம் பற்றியிருப்பார்கள். சூதர்களுக்கு தனியாக தங்குமிடங்கள் உண்டு. பலர் கூடாரங்கள் கட்டி தங்குவார்கள்” என்றார் விகிர்தர். “ஆனால் இது வைகாசி மாதம். தொகைச்சந்தை ஒன்று நாளை மறுநாள் கூடவிருக்கிறது. பன்னிரு நாட்கள் அச்சந்தை நீடிக்கும். நகருக்குள் பெருங்கூட்டம் நுழையும். அனைவருக்கும் கூரைகளில் இடமிருக்காது.” முதியவரான சுந்தரர் “அத்துடன் எங்கும் அடுமனைச்சூதர் ஒரு படி தாழ்ந்தவர்கள்தான். மாமன்னர் நளன் கோல்கொண்டு ஆண்ட தொல்நகரியான இந்திரபுரியிலும் அவ்வாறே இருந்திருக்கும்” என்றார். விகிர்தர் “விரைந்து செல்வோம்” என்றார்.

“இன்னும் சற்று விரைவு” என்று அஸ்வகன் கூவினான். வண்டியோட்டி சினத்துடன் திரும்பி நோக்கி “தரையை பார்த்தீர்களல்லவா? புழுதியில் ஆழ்கிறது சகடம். ஒற்றைக்காளை இதுவரை இழுத்து வந்ததே நமது நல்லூழ். இனிமேலும் அதை துரத்தினால் கால் மடித்து விழுந்துவிடக்கூடும் அதன் பின் இந்த சாலையோரத்து மரத்தடியில் இரவை கழிக்க வேண்டியிருக்கும், மழைக்கு வந்து ஒதுங்கும் காட்டு விலங்குகளுடன் சேர்ந்து” என்றான். விகிர்தர் “பூசல் வேண்டாம். முடிந்தவரை விரைந்து செல்வோம்” என்றார்.

ஆனால் அவர்கள் அனைவருமே களைத்திருந்தனர். விரைந்து நடக்க முனைந்தோர் எஞ்சியிருந்த தொலைவை கணக்கிட்டு உள்ளம் சோர்ந்தனர். முதிய பெண்டிர் இடையில் கைவைத்து அவ்வப்போது வானை நோக்கி “தெய்வங்களே” என்று ஏங்கினர். “எவராவது இருவர் விரைந்து முன்னால் சென்று கோட்டைக்கு வெளியே தங்குமிடம் ஒன்றை பிடித்து வைத்துக்கொண்டால் என்ன?” என்று திரௌபதி கேட்டாள். “பிடித்து வைத்துக்கொண்டால் கூட அதை அவர்கள் நமக்கு அளிக்க வேண்டுமென்பதில்லை. படைக்கலமேந்தியவர்களோ இசைக்கலம் ஏந்தியவர்களோ அல்ல நாம். எளியவர். அடுமனைக் கலங்கள் மட்டுமே அறிந்தவர்கள். மானுடரின் பசி தீர்க்கும்போது மட்டுமே நினைவுகூரப்படுபவர்கள்” என்றார் சுந்தரர்.

செல்லச் செல்ல அவர்களின் விரைவு குறைந்து வந்தது. எடை சுமந்த பெண்கள் நின்று “எங்களால் முடியவில்லை. இத்துயருக்கு நாங்கள் மழையிலேயே நின்றுகொள்வோம்” என்றனர். “மழைக்கு நம்மிடம் கூரையென ஏதுமில்லையா?”

என்றாள் திரௌபதி. விகிர்தர் அவளை நோக்கி புன்னகைத்து "நாங்கள் நாடோடிகளாக வாழ்பவர்களல்ல. நல்ல அடுமனை ஒன்றை அடைந்தால் அங்கிருந்து தெய்வங்களால் மட்டுமே எங்களை கிளப்ப முடியும். அங்கு மச்சர் நாட்டில் அடுமனைப் பணியாளர்கள் தேவைக்குமேல் மிகுந்துவிட்டனர். வாய் வளரும் குழந்தைகளுடன் அங்கு வாழ முடியாததனால்தான் கிளம்பினோம். அது தோற்ற நாடு. இது வென்ற நாடு. இங்கு நாள்தோறும் மனிதர்கள் பெருகுகிறார்கள். கருவூலம் பெருகுகிறது. அடுமனை கொழிக்கிறது" என்றார்.

சூரியன் கோட்டைச்சுவருக்கு அப்பால் முழுதடங்குவதை தொலைவிலேயே அவர்கள் கண்டனர். "அவ்வட்டம் விளிம்புக்கு கீழே இறங்குவதுதான் கணக்கு. அந்தி முரசொலிக்கத் தொடங்கிவிட்டால் காவல் யானைகள் சகடங்களை இழுக்கத் தொடங்கிவிடும்" என்று விகிர்தர் சொன்னார். "இங்குள்ள அடுமனையை நோக்கி உறுதி செய்வதற்காக சென்றமுறை நான் வந்தேன். அது ஆடி மாதம். தொலைவிலேயே அந்திக்கதிர் இறங்குவதை கண்டேன். முழுஇரவும் மெல்லிய மழையில் நனைந்தபடி மரவுரியை தலையிலிட்டு உடல் குறுக்கி கோட்டை முகமுற்றத்தில் அமர்ந்திருந்தேன். மறுநாள் காலையில் காய்ச்சலில் என் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது. கண்களிலும் வாயிலும் அனல் எழுந்தது. தள்ளாடி நடந்து கோட்டையை அடைந்தால் நோயுடன் உள்ளே செல்ல ஒப்புதல் இல்லை என்றார் காவலர்."

"கண்ணீருடன் கால்களைத் தொட்டு சென்னிசூடி நான் எளிய அடுமனையாளன் என்று மன்றாடினேன். நோய்கொண்டு நகருக்குள் நுழைய முடியாது என்றனர். நேற்றிரவு இந்த மழையில் அமர்ந்திருந்த நோயென்று சொல்லியும்

கேட்கவில்லை. மீண்டும் வந்து முற்றத்திலேயே அமர்ந்திருந்தேன். கோட்டைக்குமேல் கதிரெழுந்தபோது வெயில் என்னுடலை உயிர்கொள்ளச் செய்தது. அருகநெறியைச் சேர்ந்த பெருவணிகர் ஒருவர் கோட்டை முன் அமர்ந்திருப்பவர்களுக்காக ஏழு இடங்களில் அன்னநிலைகளை அமர்த்தியிருந்தார். அங்கு சென்று இன்கூழ் வாங்கி அருந்தினேன். அதன் பின்னரே உடல் எழமுடிந்தது."

"மீண்டும் சென்று கோட்டை வாயிலை அடைந்தபோது பெருந்திரளாக மக்கள் உள்ளே சென்றுகொண்டிருந்தார்கள். எவரையும் கூர்ந்து நோக்க காவலர்களுக்கு பொழுதிடை அமையவில்லை. அவ்வெள்ளத்தால் அள்ளி உள்ளே கொண்டுசெல்லப்பட்டேன்" என்று விகிர்தர் சொன்னார். "இந்நகரம் பெரிது. சிறியவர் எவரையும் பிறர் கூர்ந்து நோக்குவதில்லை. எவரும் நமக்கு இரக்கம் காட்டுவதில்லை. ஆனால் எவரும் நம்மை தேடிவந்து அழிப்பதும் இல்லை. பிறர் அறியாமல் வாழ ஓர் இடம் கிடைத்தால் அதுவே நமது இன்னுலகம்." சுந்தரர் உரக்க நகைத்தபடி "ஆம், நாமெல்லாம் அடுமனைப் பாத்திரங்களின் மடிப்புக்குள் பற்றியிருக்கும் ஈரப்பாசிபோல. எவரும் பார்க்காதவரை மட்டுமே தழைத்து வளரமுடியும்" என்றார்.

கோட்டைக்குப்பின் சூரியன் இறங்கி மறைந்ததும் அவர்கள் அனைவருமே விரைவழிந்து நின்றுவிட்டனர். "இனி விரைந்து பயனில்லை. காளை சற்று ஓய்வெடுக்கட்டும்" என்றார் மூத்த சூதரான தப்தர். வாயில் இருந்து நுரைக்குழாய் இறங்கி மண்ணில் துளியாகிச் சொட்ட, மூச்சு சீறியபடி தலையை நன்கு தாழ்த்தி, கால்களை அகற்றி வைத்து நின்றது ஒற்றைக்காளை. வண்டிக்குள் இருந்த சிம்ஹி தலையை நீட்டி "காளையை

பார்க்கையில் உளம்தாங்க முடியவில்லை. நாங்கள் நடந்தே வருகிறோம். இன்னும் சற்று தொலைவுதானே” என்றாள். “வேண்டியதில்லை. சற்று ஓய்வெடுத்தபின் அது மீண்டும் கிளம்பும்” என்றார் விகிர்தர்.

“இனிமேலும் இவ்வெளிய உயிர்மேல் ஊர எங்களால் இயலாது” என்று சொல்லி அவள் கையூன்றி மெல்ல இறங்கினாள். “அது என்னை இழுத்துச் செல்லும்போது வயிற்றுக்குள் என் குழவியை நான் இழுத்துச் செல்வதுபோல தோன்றியது. சுமை இழுப்பதென்றால் என்னவென்று அதைப்போலவே நானும் அறிவேன்” என்றாள். “நாம் எளிய அடுமனையாளர்கள், அயல்நாட்டவரல்ல என்று சொல்லிப்பார்த்தால் என்ன?” என்று அஸ்வகன் கேட்டான். “நம்மை பார்த்தாலே தெரியும்” என்றார் குடித்தலைவர். “நம்மிடம் எந்த அயல்நாட்டு அடையாளங்களும் இல்லை” என்றான் அவன். “எந்த நாட்டு அடையாளமும் நம்மிடமில்லை. செல்லும் ஊரே நமது ஊர்” என்று சுந்தரர் சொன்னார். “ஆனால் நம்மைப் பார்ப்பவர்கள் ஒவ்வொருவரும் அவர்களுக்கு ஒவ்வாத ஊரைச் சேர்ந்தவர்களாகவே நம்மை அடையாளப்படுத்துவார்கள். ஏனெனில் நாம் அவர்களுக்கு எதுவும் அளிக்க முடியாத ஏழைகள்.”

“சென்று பார்ப்போம். அங்கிருக்கும் காவலர்களில் எளியோரைப்பார்த்து உளமழியும் ஒருவராவது இருக்கலாம். கருவுற்ற பெண்களையும் குழவிகளையும் முன்னிறுத்துவோம். வெளியே எங்களுக்கு தங்குமிடமில்லை. நகர்நுழைந்தால் அடுமனையை அடைந்து அதன் விளிம்புகளில் எங்காவது அமர்ந்து மழையை தவிர்ப்போம். நாளை எங்கள் கைகளால் அவர்களுக்கு உணவளித்து கடன் தீர்ப்போமென சொல்வோம்”

என்றான் அஸ்வகன். "வீண் முயற்சி அது. நமக்காக எந்த நெறிகளும் தடம் பிறழ்வதில்லை" என்றார் விகிர்தர். சுந்தரர் நகைத்து "அது இளமையின் விழைவு. சில இடங்களில் இழிவுபடுத்தப்பட்டு ஓரிரு இடங்களில் தாக்கப்படும்போது எங்கிருக்கிறோம் எந்த அளவு இருக்கிறோம் என்பதை அவர்கள் புரிந்துகொள்வார்கள். அப்படி புரிந்துகொள்ள வாய்ப்பு கொடுப்போமே" என்றார்.

அவர்கள் மீண்டும் கிளம்பி கோட்டைமுகப்பை அடைந்தபோது காவல்மாடங்கள் அனைத்திலும் மீன்நெய்ப்பந்தங்கள் தழலாடத் தொடங்கிவிட்டிருந்தன. அதன் அருகே நின்றவர்களின் கையிலிருந்த படைக்கலங்கள் தழல்துளிகளை சூடியிருந்தன. எண்ணியது போலவே கோட்டைமுகப்பில் அனைத்து விடுதிகளும் பெருவணிகர்களாலும் அவர்களின் சுமைதூக்கிகளாலும் காவலர்களாலும் நிறைந்திருந்தன. பொதி சுமந்த அத்திரிகளும் கழுதைகளும் வண்டிக்காளைகளும் கட்டுத்தறிகளில் கட்டப்பட்டு கழுத்து மணி ஓசையுடன் கால்மாற்றி நின்று மூச்சு சீறி உலர்புல் மென்றுகொண்டிருந்தன. புரவிகளுக்குமேல் தேன்மெழுகு பூசப்பட்ட ஈச்சம்பாய்களை வயிற்றில் சரடு இழுத்துக் கட்டியிருந்தனர்.

சூதர்குழுத் தலைவர் விகிர்தர் திரௌபதியிடம் "மழை வருமென்று நன்கு அறிந்திருக்கிறார்கள். புரவிகள் நனையாமலிருக்கும்" என்றார். திரௌபதி அதை பார்த்தபின் "இப்படி ஒன்றை இதற்குமுன் பார்த்ததில்லை. வேண்டுமென்றால் இரவில் சென்று ஒன்றிரண்டை எடுத்துவந்து குழந்தைகளையும் பெண்களையும் மட்டும் மழையிலிருந்து காத்துக்கொள்ளலாம்" என்றாள். விகிர்தர்

“புரவிகளை நெருங்கவே நம்மால் முடியாது. படைக்கலத்துடன் ஒரு காவல்வீரனாவது விழித்திருப்பான். வேல் நுனியால் முதுகு கிழிபட்டு குருதி வழிந்து இங்கு கிடப்போம்” என்றார். திரௌபதி “எங்கும் எதிலும் அச்சத்தையே காண்கிறீர்கள்” என்றாள். அவர் கோணலான புன்னகையுடன் “என் தந்தை அஞ்சுவதெப்படி என்று எனக்கு கற்பித்தார். அஞ்சத்தெரிந்ததனால்தான் இதுநாள் வரை வாழ்ந்தேன். அச்சத்தை கற்பித்ததனால்தான் என் குடியை இன்று வரை காத்தேன்” என்றார்.

அவர்கள் முற்றத்தில் நின்றிருக்க இளைஞர்கள் இரு திசைக்கும் சென்றபின் திரும்பி வந்து “எங்கும் இடமில்லை, மூத்தவரே. குழந்தைகளும் கருவுற்ற பெண்டிரும் இருக்கிறார்கள் என்றேன். எவரும் எங்கள் சொற்களை செவிகொள்ளவில்லை. ஷத்ரியர் விடுதிகளில் காவலர் குதிரைச்சவுக்குடன் எழுந்து தாக்க வருகிறார்கள். சூதர்கொட்டகைகளில் ஒருவர் இங்கு திறந்தவெளியில் தங்கியிருப்பவர் அனைவருமே உங்களைப் போன்றவர்கள்தான். ஒருநாள் மழை தாங்கமுடியவில்லை என்றால் நீங்கள் எதைத்தான் தாங்குவீர்கள் என்றார்” என்றான் அஸ்வகன்.

சம்பவன் “ஒரு ஷத்ரியர் பதினைந்து நாட்கள் பெருமழையில் திறந்த வெளியில் தங்கி திருவிடத்தில் தாங்கள் போரிட்டதாக சொன்னார். நாம் அத்தகைய இடர்களையோ இறப்பையோ எதிர்கொள்ளவில்லை அல்லவா?” என்றான். சுந்தரர் “என்றோ ஒருநாள் எதிர்கொள்ளப்போகும் இறப்பின் பொருட்டு முந்தைய வாழ்நாள் முழுக்க பிறரது குருதியை உண்டு வாழ தங்களுக்கு உரிமையுண்டென்று நம்புகிறவர்கள் ஷத்ரியர்” என்றார்.

“நாம் சென்று காவலரிடம் கேட்டுப் பார்ப்போம்” என்றான் அஸ்வகன். “காவலனிடமா? நான் வரப்போவதில்லை. வேண்டிய இழிசொற்களையும் சவுக்கடிகளையும் வேல்முனைக்கீறல்களையும் இளமையிலேயே பெற்றுவிட்டேன்” என்றார் விகிர்தர். “நாங்கள் சென்று கேட்கிறோம். நீங்கள் நோயுற்றவர்போல் வண்டிக்குப்பின் நின்றால் போதும்” என்றான் சம்பவன். மிருகி “வேண்டாம். காவலர்கள் எந்த உளநிலையிலிருப்பார்கள் என்று நமக்குத் தெரியாது” என்றாள். “தாழ்வில்லை. ஒருமுறை கேட்டுப் பார்ப்போம்” என்று சொல்லி சம்பவனும் அஸ்வகனும் வண்டியோட்டியிடம் “வருக!” என்றனர்.

அவர்கள் கோட்டைமுகப்பை நோக்கி செல்வதை ஆங்காங்கே வெட்டவெளியில் வண்டிகளை அவிழ்த்துவிட்டு பொதிகளை இறக்கி அமர்ந்தும் படுத்தும் ஓய்வெடுத்துக்கொண்டிருந்தவர்கள் விந்தையாக நோக்கினார்கள். கோட்டையின் முகப்பில் பெருவாயில் மூடியிருக்க திட்டிவாயிலினூடாக காவல்புரவிகள் மட்டும் உள்ளே சென்றன. புரவிவீரர்கள் நன்றாகக் குனிந்து எறும்பு புற்றுக்குள் நுழைவதுபோல் அதை கடந்தனர். அவர்களின் வண்டி காவல்முகப்பில் வந்து நிற்க கோட்டத்திலிருந்து கையில் வேலுடன் வெளியே வந்த காவலன் சினத்தால் சுளித்த முகத்துடன் “யாரது? ஏய் அறிவிலி, கோட்டை மூடியிருப்பது உன் விழிகளுக்கு தெரியவில்லையா? உன் வண்டியுடன் திட்டிவாயிலுக்குள் நுழையப்போகிறாயா, கீழ்பிறப்பே?” என்றான்.

“நாங்கள் அயலூர் சூதர். அடுமனையாளர்” என்றபடி சம்பவன் கைகூப்பி முன்னால் சென்றான். “இங்கு எங்கள் குழந்தைகளுடன் திறந்தவெளியில் தங்கமுடியாது. மழை

பெய்யுமென்றால் அவர்கள் நனைந்துவிடுவார்கள். நீர்காக்கும் பாய்கூட எங்களிடமில்லை” என்றான் அஸ்வகன். “எவரையும் அந்திக்குப்பின் உள்ளே விடமுடியாது” என்றபின் காவலன் திரும்பியபோது இயல்பாக விழி சென்றுதொட முகம் உயிர்கொண்டு திரௌபதியை நோக்கி “அவர்கள் யார்?” என்றான். அஸ்வகன் திரும்பி அவளை பார்த்தபின் “அவர்தான் எங்கள் குழுத்தலைவி. அரசஅழைப்பின் பேரில் அரண்மனைக்குச் செல்கிறார். எங்களையும் அழைத்துச்செல்கிறார்” என்றான்.

“அவர்கள் பெயரென்ன?” என்று காவலன் கேட்டான். அஸ்வகன் தயங்காமல் “கிருஷ்ணை...” என்றான். திரௌபதி அவர்களின் உரையாடலை மிக மழுங்கிய சொற்களாகவே கேட்டாள். விழிகூர்ந்து அவர்களின் உதட்டசைவிலிருந்து அவர்கள் பேச்சை ஊகித்தறிய முயன்றாள். அதை உணர்ந்த அஸ்வகன் உதடுகளை சரியாக அசைக்காமலேயே பேசினான். “அவர்கள் வங்க அரசகுடியை சேர்ந்தவர்கள். விராட அரசகுடியின் தனியழைப்பை ஏற்று வந்திருக்கிறார்கள். நாங்கள் நேராக அரண்மனைக்குத்தான் செல்கிறோம். கீசகரை நேரில் சந்திக்கும்படி ஆணை” என்றான்.

காவலன் குழப்பத்துடன் அவளை நோக்கிவிட்டு காவலர்தலைவன் இருந்த சிற்றறையை நோக்கினான். பின்னர் “அவர்களிடம் அரச இலச்சினை ஏதாவது இருக்கிறதா?” என்று உள்ளிருந்து வந்த பிறிதொரு காவலன் கேட்டான். “இல்லை. அவர்களைப் பார்த்தாலே தெரிகிறதல்லவா? சூதர் வடிவிலேயே எங்களுடன் நடந்து வந்திருக்கிறார். பிறர் அறியாமல் நகருக்குள் நுழைந்து அரசரைக் காணும்படி அவருக்கு ஆணை.

இதை நான் சொல்வதுகூட அவர்களுக்குத் தெரியாமல்தான்" என்றான் அஸ்வகன்.

முதுகாவலன் ஒருவன் வெளியே வந்து திரௌபதியைப் பார்த்தபின் "கணவனை இழந்தவரா?" என்றான். "கூந்தல் அவிழ்த்திட்டிருக்கிறார்களே?" "ஆம், உடன்கட்டை ஏற மறுத்து நிலம்நீங்கியவர்" என்றான் அஸ்வகன். உள்ளிருந்து ஓர் இளம்காவலன் "கீசகர் அவருக்கு உகந்த பெண்ணை கண்டுவிட்டார்போல. அவர் தோள்களை பாருங்கள். களம் நின்று மற்போரிடவும் அவரால் இயலும்" என்றான். முதுகாவலன் அவனை நோக்கி சீற்றத்துடன் "எவராயினும் அரசகுடியினரைப்பற்றி சொல்லெடுக்கையில் ஒவ்வொரு சொல்லையும் உன் சித்தம் மும்முறை தொட்டுப்பார்த்திருக்க வேண்டும். ஒரு சொல்லின் பொருட்டு கழுவேறியவர்கள் பல்லாயிரம் பேர் இந்நகரில் அலைகிறார்கள்" என்றான். அவன் திகைத்து "நான் நமக்குள் வேடிக்கையாக சொன்னேன்" என்றான்.

அஸ்வகன் சினத்துடன் "ஆம். இச்சொல் எங்கள் தலைவியை இழிவுபடுத்துவது. இதை அவர்களிடம் சொல்லாமலிருப்பது எனக்கு கடமைமீறல்" என்றான். முதுகாவலன் கைநீட்டி "பொறுங்கள், சூதரே! இதை அவர்களிடம் ஏன் சொல்லவேண்டும்? புரிந்துகொள்ளுங்கள், இந்தக் காவல்பணி என்பது திரும்பத் திரும்ப ஒன்றையே செய்து ஒரே இடத்தில் அமர்ந்திருப்பது. நாவால் துழைந்துதான் இச்சலிப்பை போக்க வேண்டியிருக்கிறது. பொறுத்தருள்க!" என்றான். "அரசகுடியினரைப்பற்றி இழிசொல்லை எப்படி அவர் சொல்லலாம்? மேலும் அச்சொல் கீசகர் மீதும் இழிவு சுமத்தியது" என்றான் அஸ்வகன்.

“பொறுத்தருள்க! இதை உங்கள் தலைவி அறியவேண்டியதில்லை. இங்கு எதுவும் நிகழவில்லை என்று நினைத்துக்கொள்ளுங்கள். நீங்கள் உள்ளே செல்லலாம். கோட்டைவாயிலை சற்று திறந்து வண்டியை உள்ளே விடச்சொல்கிறேன்” என்றபின் முதுகாவலன் எழுந்து உள்ளே சென்று சிறு கயிறொன்றை இழுத்தான். அப்பால் எங்கோ மணியோசை ஒலிக்க சகடங்கள் முனகி எழுந்து பின் அலற கோட்டைவாயில் மெல்ல விலகி திறந்துத் வழிவிட்டது.

அஸ்வகன் ஓடிச்சென்று விகிர்தரிடம் “உள்ளே செல்ல ஒப்புதல் அளித்துவிட்டார்கள். கதவு அகல்கிறது” என்றான். “மெய்யாகவா? இதில் சூழ்ச்சி ஏதும் இல்லையே? இதன் பொருட்டு உள்ளே சென்று நாம் தலைகொடுக்க வேண்டியதில்லை அல்லவா?” என்றார் விகிர்தர். “இல்லை, வாருங்கள் உள்ளே செல்வோம்” என்று அஸ்வகன் சொன்னான்.

திறந்த வாயிலினூடாக அவர்கள் உள்ளே செல்லும்போது திரௌபதி திரும்பி காவல்மாடத்தை பார்த்தாள். காவலர்கள் அனைவரும் தலைவணங்கினார்கள். அவள் திரும்பி அஸ்வகனை பார்த்தாள். தாழ்ந்த குரலில் “அவர்களிடம் என்ன சொன்னீர்?” என்றாள். “நான் எதுவும் சொல்லவில்லை” என்றான். “சொல்க! என்ன சொன்னீர்?” என்றாள். அவன் தயங்கி “அவர்கள்தான் கேட்டார்கள், தாங்கள் அரசகுடியா என்று. ஆம் என்றேன்” என்றான். திரௌபதி “அரசகுடியினள் என்றா?” என்றாள். “ஆம். அவர்கள் கேட்டபோது நானும் திரும்பிப்பார்த்தேன். அந்தத் தொலைவில் நிழலுருவில் பேரரசுகளை ஆளும் சக்ரவர்த்தினிகளுக்குரிய நிமிர்வுடன் தோற்றமளித்தீர்கள். நீங்கள் அரசகுடியேதான். அதை எங்கும் உங்களால் மறைக்க முடியாது” என்றான் அஸ்வகன்.

“வெறுமனே நடக்கையிலும் வேழமருப்பில் அமர்ந்த அசைவுகள் உங்களில் உள்ளன.”

சம்பவன் “நீங்கள் யாரென்று நான் கேட்கவில்லை. அந்த இடத்தில் நாங்கள் இல்லை” என்றான். திரௌபதி பெருமூச்சுவிட்டாள். “கீசகரைப் பார்க்க நீங்கள் செல்வதாக சொன்னேன்” என்றான் அஸ்வகன். அவர்களுக்குப் பின்னால் கோட்டைவாயில் திரும்ப மூடிக்கொண்டது. “அடுமனைக்கு செல்லும் வழி உசாவுக!” என்று சுந்தரர் சொன்னார். அவர்கள் உள்முற்றத்திலிருந்து பிரிந்த அரசத் தெருவை விலக்கி அங்காடித் தெருக்களில் ஒன்றில் நுழைந்தார்கள்.

❀விராடபுரியின் தெருக்களில் ஒளியொடு ஒளி சென்று தொடும் தொலைவில் நிரையாக கல் விளக்குத்தூண்கள் நடப்பட்டு அவற்றின்மேல் பன்னிரு சுடர்கள் எரியும் மீன்நெய் விளக்குகள் ஏற்றப்பட்டிருந்தன. இருபுறமும் நிரைவகுத்த மாளிகைகளின் முகப்புகளிலெல்லாம் வேங்கைமலர்க்கொத்துபோல தொகைச்சுடர் நெய்விளக்குகள் எரிய அவற்றுக்குப் பின்னால் ஒளியை குவித்துப்பரப்பும் சிப்பி வளைவுகளும் பளிங்கு வளைவுகளும் அமைக்கப்பட்டிருந்தன. பகல் முழுக்க கடும் வெயில் எரிந்தமையால் இல்லங்களுக்குள் முடங்கியிருந்த மக்கள் வெயில் தாழ்ந்த பின்னர் வெளியே இறங்கி அங்காடித் தெருக்களிலும் ஆலய வீதிகளிலும் நிறைந்து தோளொடு தோள் முட்டி உவகைக் குரல்களுடன் ததும்பிக்கொண்டிருந்தனர்.

வண்டியை செலுத்திய சூதர் இடக்கையில் மணி எடுத்து குலுக்கி ஓசையெழுப்பி சிறிது சிறிதாக வழி கண்டுபிடித்து கூலவாணிகத் தெருவிலிருந்து நறுஞ்சுண்ணத் தெருவில் நுழைந்து மையச்சாலையில் ஏறினார். வண்டி செல்லும்

இடைவெளியில் அதைத் தொடர்ந்து சூதர் குழு சென்றது. அந்தி மயங்கியபின் நகருக்குள் வண்டிகள் நுழைவதில்லை என்பதால் அதை வியப்புடன் திரும்பிப்பார்த்த மக்கள் அனைவருமே திரௌபதியை திகைப்புடன் நோக்குவதையும் ஒருவரோடொருவர் அவள் எவளென்று பேசிக்கொள்வதையும் அஸ்வகன் கண்டான். பின்னர் அவர்கள் அனைவருமே அவளையன்றி வேறெதையும் நோக்காதவர்களானார்கள்.

அந்நோக்குகளால் எச்சரிக்கையுற்ற அவள் தன் நீண்ட குழலை உடலை சுற்றிக்கட்டிய ஒற்றையாடையால் மறைத்து முகத்தையும் பாதி மூடிக்கொண்டு தலை குனிந்து நடந்தாள். ஆயினும் அவள் உயரமும் தோள் விரிவும் அவளை தனித்துக் காட்டின. விளக்குத்தூண்களை கடந்து செல்கையில் சுடரொளியில் எழுந்து அருகிலிருந்த சுவர்களில் விழுந்த அவள் நிழலுருவம் பேருருக்கொண்ட கொற்றவைச் சிலையென தோற்றமளித்தது.

அவளை திரும்பித் திரும்பி நோக்கிய சம்பவனிடம் விகிர்தர் “நகர்மக்கள் அனைவரும் அவளையேதான் நோக்குகிறார்கள். நீயும் நோக்கி காலிடற வேண்டியதில்லை” என்றார். “பொறுத்தருள்க!” என்றபடி அவன் முன்னால் சென்றான். வழிகேட்டு சென்ற அஸ்வகன் திரும்பி வந்து “வலப்பக்கமாக செல்லும் சிறிய பாதை பொதுமக்களுக்கான அடுமனைகளை அடைகிறது. நாம் செல்ல வேண்டியது அங்குதான்” என்றான்.

திரௌபதி தாழ்ந்த குரலில் “நான் விடைகொள்கிறேன்” என்றாள். விகிர்தர் “எங்கு?” என்றார். “அரண்மனைக்கு. வேறெங்கும் நான் வாழவியலாது” என்றாள். விகிர்தர் ஒருகணம் நோக்கிவிட்டு “ஆம்” என்றார். அஸ்வகனிடம் “நீயும் உடன் செல்க!” என்றார். “வேண்டியதில்லை” என்றாள்

திரௌபதி. “தங்களை தனியாக அனுப்ப முடியாது. நீங்கள் சென்று அரண்மனையை அடைந்தபின் அவன் திரும்பி வந்து என்னிடம் செய்தி சொல்லவேண்டும்” என்றார் விகிர்தர். அவள் அவரை பார்க்காமலே “அவ்வண்ணமே” என்றபின் அஸ்வகனிடம் “செல்வோம்” என்றாள்.

அஸ்வகன் அவள் அருகே வந்து “நான் தங்களுக்காக எந்தப் பணியும் ஆற்ற சித்தமாக இருக்கிறேன்” என்றான். “வேண்டியதில்லை. என் உடன் வந்தாலே போதும்” என்றாள் திரௌபதி. “உயிர் கொடுப்பதென்றாலும் கூட” என்றான் அஸ்வகன். திரௌபதி புன்னகைத்தாள். அரண்மனையை அணுக அணுக மக்கள் திரள் குறையத்தொடங்கியது. படைத்தலைவர்களின் இல்லங்களும் அமைச்சர்களின் இல்லங்களும் இரு மருங்கிலும் தழலாடும் பெரிய விளக்குத்தூண்கள் சூழப்பரப்பிய செவ்வொளியில் செம்பட்டுத் திரைச்சீலையில் வரைந்த ஓவியங்கள்போல மெல்ல நெளிந்துகொண்டிருந்தன. குருதி சிந்தியதுபோல் ஒளி விழுந்துகிடந்த பாதையில் தேர்ச்சகடங்களும் குளம்புகளும் சென்ற தடங்கள் தசை வடுக்கள்போல் பதிந்திருந்தன.

அவர்களை நோக்கி வந்த காவலன் ஒருவன் “யார் நீங்கள்? எங்கு செல்கிறீர்கள்?” என்றான். திரௌபதி அவனிடம் “அரண்மனைக்கு வழி இதுதானே?” என்றாள். அவன் அவள் கண்களை பார்த்தபின் தலைவணங்கி “அரச ஆணை உள்ளதா?” என்றான். “ஆம்” என்றாள் அவள். “அவ்வழி” என்று அவன் பணிந்து கைகாட்டினான். மாளிகை உப்பரிகையில் இருந்து எட்டிப்பார்த்த இருவர் அவளை கைசுட்டி ஏதோ கேட்க ஓர் ஏவல்பெண்டு அருகே வந்து “தாங்கள் யாரென்று அறியலாமா?” என்றாள். திரௌபதி “பேரரசியைப் பார்க்க

சென்றுகொண்டிருக்கிறேன்” என்றாள். பிறிதொருத்தி மேலும் அருகே வந்து “அரசி இப்போது கொற்றவை ஆலயத்தின் பூசனை முடித்து அரண்மனைக்கு திரும்பியிருக்கிறார்கள். அரண்மனைக்குச் சென்று அவர்களை பார்க்கவேண்டும் என்றால் இவளைத் தொடர்ந்து செல்க” என்றாள்.

திரௌபதி அச்சேடியைத் தொடர்ந்து நடந்தபோது இருபுறமும் இருந்த அனைத்து இல்லங்களிலும் உப்பரிகைகளிலும் திண்ணைகளிலும் ஆண்களும் பெண்களும் வந்து குழுமி அவளை பார்த்தனர். அஸ்வகன் அவள் அருகே வந்து தணிகுரலில் “தாங்கள் எங்கும் மறைந்துகொள்ள முடியாது. அனலை உமியால் மூடமுடியாது என்பது அடுமனைச்சூதர் சொல்” என்றான். அவள் புன்னகை புரிந்தாள். “உண்மையில் இந்த அழுக்கு ஒற்றையாடையே தங்களை அரசியென காட்டுகிறது” என்று அஸ்வகன் சொன்னான். திரௌபதி திரும்பிப் பார்க்காமல் நடந்தாள்.

ஏழு அடுக்குகளாக எழுந்து நூற்றுக்கணக்கான சாளரங்களும் வாயில்களும் நெய்விளக்கொளியில் செவ்வந்தித் துண்டுகள் என இருள்வானில் தெரிந்த அரண்மனைத்தொகையின் முதற்கோட்டை வாயிலில் அவள் சென்று நின்றபோது காவலர் எழுந்துவந்து தலைவணங்கி தாழ்குரலில் அஸ்வகனிடம் உசாவினர். “அரசபணியின் பொருட்டு பேரரசியைப் பார்க்க செல்கிறார்கள்” என்று அவன் சொன்னான். பிறிதொரு வினாவும் இன்றி காவலர்தலைவர் ஒரு காவலனை அழைத்து அவளை பேரரசியிடம் அழைத்துச் செல்லும்படி கேளாச் சொற்களால் ஆணையிட்டார்.

அரண்மனை முற்றத்தில் அந்தணர்களின் மஞ்சல்களும், அரசகுடியினரின் வளைமூங்கில் பல்லக்குகளும், வணிகர்களின்

தொங்குபல்லக்குகளும் ஒருபுறம் நின்றன. நடுவே அரசரின் வெள்ளிப்பல்லக்கு சுடரொளிகள் அணிந்து எரிவதுபோல நின்றது. புரவிகள் அவிழ்க்கப்பட்ட தேர்கள் மறுபுறம் நிரைகொண்டிருந்தன. கட்டுத்தறிகளில் வரிசையாகக் கட்டப்பட்ட புரவிகள் வாயில் கட்டப்பட்ட பைகளிலிருந்து கொள்ளு மென்றபடி தலைசிலுப்பி வால் சுழற்றிக்கொண்டிருந்தன. வால் நிழல்கள் தரையில் அலையடித்தன. அரண்மனைக்குள் ஏதோ ஆடல் நிகழ்கிறது என்பது அங்கிருந்து சிந்திவந்த சிற்றிசையிலிருந்து தெரிந்தது.

அரண்மனை முற்றத்தின் வலப்பக்கமாகச் சென்று கூரையிடப்பட்ட இடைநாழி ஒன்றில் நுழைந்து அவர்கள் நடந்தனர். எதிர்கொண்ட சேடிப்பெண்களும் காவலரும் திரௌபதியை நோக்கி வழிவிட்டு விழிதாழ்த்தி நின்றனர். அவள் தலைநிமிர்ந்து விழிதொடாமல் கடந்து சென்றாள். மகளிர் மாளிகையின் முற்றத்தை அடைந்ததும் காவலன் “அரசி மேலே இசைக்கூடத்தில் இருக்கிறார். விறலியரின் இசை நிகழ்கிறது. தாங்கள் எவரென்று தெரிவித்தால் தங்கள் வருகையை நான் அறிவிப்பேன்” என்றான். “வடக்கிலிருந்து சைரந்திரி ஒருத்தி வந்துள்ளேன் என்று சொல்லும்” என்றாள். அவன் ஒருகணம் தயங்கியபின் “அவ்வாறே” என்று சொல்லி உள்ளே நுழைந்தான்.

மகளிர் மாளிகையின் முற்றத்தில் மூன்று களிறுகள் நின்றிருந்தன. நடுவே வெண்படகுகள் போன்ற பெரிய தந்தங்களும் பூத்த கொன்றை மரமென துதிக்கையில் எழுந்து செவிகளில் பரவிய செம்மலர்த் தேமலும் கொண்ட பட்டத்து யானை, மணிகள் அசைவில் ஒலிக்க, இருளுக்குள் இருளசைவென உடல் உலைய நின்றிருந்தது. அதன் துதிக்கை

எழுந்து வளைந்து திரௌபதியை மோப்பம் பிடித்து மூச்சு சீறி இருமுறை நெளிந்து மீண்டது. மீண்டும் நீட்டி சுருட்டிய துதிக்கையை தந்தங்களில் இழிந்திறங்க விட்டு வயிறுக்குள் பெருங்கலத்தை இழுத்ததுபோல் ஓர் ஓசையை எழுப்பியது. அது செவி நிலைத்ததும் உப்பரிகையில் இரு சேடியருடன் தோன்றிய கேகயத்து அரசி சுதேஷ்ணை குனிந்து அவளைப் பார்த்து "யாரது?" என்றாள்.

"வடக்கிலிருந்து வருகிறேன். கேகயத்து அரசி சுதேஷ்ணையை பார்க்க" என்றாள் திரௌபதி. தன் பெயரை அவள் நாத்தயங்காமல் சொன்னதைக் கேட்டு அரசி முகம் சுளித்து "எதன் பொருட்டு?" என்றாள். "நான் காவல்பெண்டாகவும் அவைத்தோழியாகவும் அணிசெய்பவளாகவும் பணியாற்றும் சைரந்திரி. கேகயத்தில் தங்களைப்பற்றி கேட்டேன். தங்களைப் பார்க்கும் பொருட்டு இங்கு வந்தேன்" என்றாள்.

சலிப்புடன் கைவீசி "இங்கு உன்னைப்போல் பலர் இருக்கிறார்கள்" என்றாள் சுதேஷ்ணை. திரௌபதி "அரசி, என்னைப்போன்ற பிறிதொருத்தியை நீங்கள் பார்க்கப்போவதில்லை. நான் அரசகுடிப் பிறந்தவள். ஐந்து கந்தர்வர்களை கணவர்களாகப் பெற்றவள். இப்புவியில் நான் ஆற்ற முடியாததென்று எதுவுமில்லை. கண்ணுக்குத் தெரியாத ஆற்றல்களாக என்னைச் சூழ்ந்து அவர்கள் இருந்துகொண்டிருக்கிறார்கள்" என்றாள்.

"என்ன சொல்கிறாய்?" என்றாள் சுதேஷ்ணை. "நோக்குக!" என்றபின் அவள் திரும்பி பட்டத்துயானையை நோக்கி கை நீட்டினாள். அது துதிக்கையைச் சுழற்றி தலைமேல் வைத்து உரக்க சின்னம் விளித்தது. பின்பு கால்களை மடித்து தரையில் படுத்தது. பிற யானைகளையும் நோக்கி அவள் கைநீட்ட

அவையும் அவ்வாறே தரையில் படுத்தன. சுதேஷ்ணை திகைப்புடன் “மதங்க நூல் அறிவாயா?” என்றாள். “நான் அறியாத நூலென ஏதுமில்லை” என்றாள் திரௌபதி. பட்டத்துயானையின் கால்மடிப்பில் கால்வைத்து ஏறி அதன் மத்தகத்தில் அமர்ந்தாள். அது அவளுடன் எழ அவள் அதன் மருப்புமுழையில் வலக்கால் எடுத்து வைத்து நின்றாள்.

திரௌபதி விழிகாட்ட அஸ்வகன் யானையின் கால்களை கட்டியிருந்த சங்கிலியை அவிழ்த்தான். அது உப்பரிகை நோக்கி சென்றது. சுதேஷ்ணைக்கு நிகராக தலை எழுந்து தோன்ற சரிந்த ஒற்றைஆடை முனையின் உள்ளிருந்து குழல்கற்றைகள் பொழிந்து புறம் நிறைக்க நின்றாள். சுதேஷ்ணை தன் இருபக்கமும் நின்ற காவல்பெண்டுகளை நோக்கி ஏதோ சொல்ல வாயசைத்தபின் அடைத்த தொண்டையை அசைத்து ஒலி கூட்டி “உள்ளே வருக, தேவி!” என்றாள்.

# நீர்க்கோலம் - 37

**36. புற்றமை நாகம்**

❀அணிச்சேடியர் இருவரும் சற்று விலகி தலைவணங்கி முடிந்துவிட்டதென்று அறிவிக்க சுதேஷ்ணை மீண்டும் ஒரு முறை ஆடியில் தன்னை பார்த்துவிட்டு எழுந்தாள். அவளுக்கு வலப்பக்கமாக நின்றிருந்த திரௌபதி “சற்று பொறுங்கள்!” என்று அவள் ஆடையின் மடிப்பொன்றை சீரமைக்கும்பொருட்டு சற்றே குனிந்து கையெடுத்தாள். “வேண்டாம்” என்று அவளை விலக்கிய சுதேஷ்ணை சுட்டுவிரலைக்காட்டி அணிச்சேடியிடம் அந்த மடிப்பை சீரமைக்க ஆணையிட்டாள். அவள் வந்து

மண்டியிட்டு அந்தப் பனையோலைக்குருத்துபோன்ற மடிப்பை அடுக்கி அதில் சிறிய ஊசியொன்றை குத்தினாள்.

அணிச்சேடியர் செல்லலாம் என்று கையசைத்து ஆணையிட்டு அவர்கள் சென்று கதவு மூடுவதற்காக காத்து பின் திரும்பி திரௌபதியிடம் "நீ இத்தொழில்களை செய்யலாகாது. எனக்கு அணுக்கத் தோழியென்றும் காவற்பெண்டு என்றும் மட்டும் திகழ்ந்தால் போதும். இவர்கள் எவரும் தங்களுக்கு நிகரானவள் என்று உன்னை ஒருபோதும் எண்ணிவிடலாகாது" என்றாள் சுதேஷ்ணை. திரௌபதி புன்னகைத்து "ஆம், ஆனால் ஒரு குறைகாணுமிடத்து கை நீளாமல் இருப்பதில்லை. பிறிதொருவர் அணிபூணுகையில் நோக்கி நிற்கும் நாம் நம்மை சேடியர் என்றோ ஏவற்பெண்டென்றோ உணர்வதில்லை. ஓவியமொன்றை வரைந்து குறைதீர்க்கும் உணர்வுதான் ஏற்படுகிறது" என்றாள்.

சுதேஷ்ணை அவள் சொன்னதை புரிந்துகொள்ளாமல் ஆமென்பதுபோல் தலையசைத்து பிறிதெங்கோ சென்ற தன் எண்ணங்களை சற்றுநேரம் தொடர்ந்தபின் "உண்மையில் இன்று அவை நுழையவே எனக்கு உளம் கூடவில்லை. இந்த அவையமர்தல் சொல்லுசாவுதலெல்லாம் வெறும் அவல நடிப்புகளன்றி பிறிதொன்றுமில்லை. இங்கு என்ன நிகழ்கிறது என்று இதற்குள் நீயே உய்த்துணர்ந்திருப்பாய்" என்றாள். திரௌபதி ஆமென்றோ இல்லையென்றோ சொல்லவில்லை.

"நீ என்ன அறிந்தாய் என்று தெரியவில்லை. நானே கூறிவிடுகிறேன். நான் கேகயத்து இளவரசி. தொல்குடி ஷத்ரியப்பெண். கீசகன் என் உடன்பிறந்தான் ஆயினும் ஷத்ரியனோ கேகயத்தானோ அல்ல. அவன் சர்மாவதிக்கரையில் அமைந்த மச்சர்நாட்டில் ஓர் அன்னைக்கு

பிறந்தவன். உண்மையில் அவன் அன்னை எந்த குலத்தைச் சார்ந்தவள் என்பதே உறுதியற்றுதான் இருக்கிறது. அவள் நிஷாதர்களுடன் தொடர்புடைய மச்சர்குலத்தைச் சார்ந்தவளென்றும் இந்த விராட நிஷாத கூட்டமைப்பின் முதற்குடி அவர்களே என்றும் அவைச்சூதர்களும் குடிமுறை நூல்களை ஏற்று புலவர்களும் சொல்லிச் சொல்லி நிறுவிவிட்டிருக்கின்றனர். பிறிதொன்றை இனி சொல்லவோ நூல்பொறிக்கவோ எவராலும் இயலாது.”

“எந்தைக்கு மைந்தர் இல்லாதிருந்த காலம் அது. நீர்முதலைகளை வேட்டையாடும்பொருட்டு கங்கை வழியாக சர்மாவதிக்குச் சென்றபோது மச்சர்களின் சிற்றூரொன்றில் அவர் தங்கினார் என்றும் அங்கு கீசகனின் அன்னையை மணந்துகொண்டாரென்றும் சொல்லப்படுகிறது. பின்னர்தான் அவர் காசிநாட்டு இளவரசி கிருஷையை மணந்து என் அடுத்த இளையவனை பெற்றார். இன்று கேகய நாட்டை ஆள்பவன் அவனே” என்றாள்.

“பிறந்தபோது அவனுக்கு சுப்ரதன் என்று பெயர். திருஷ்டகேது என்ற பெயருடன் இன்று அவன்
கேகயத்தை ஆட்சி செய்கிறான். அவனுக்கும்
அரசி சுருதகீர்த்திக்கும் மகளாகப் பிறந்தவளே இளைய யாதவனால் மணம் கொள்ளப்பட்ட பத்ரை. கைகேயி என்ற பெயரில் இன்று அவள் துவாரகையில் அவை வீற்றிருக்கிறாள்”என்றாள் சுதேஷ்ணை.

அப்போதே கேகய மணிமுடிக்காக கீசகனின் தரப்பில் பேச மச்சகுடி மூத்தார் எந்தையை சந்தித்தனர். மச்சர்குலத்து அரசரின் மகள் அவன் அன்னை என்றும், கேகய முடி அவனுக்களிக்கப்படுமென்றால் நிஷதகுடிகளின் ஒருமித்த

ஆதரவு கேகயத்துக்கு இருக்குமென்றும் கோசலமும் மகதமும் பாஞ்சாலமும் அளிக்கும் அனைத்து அச்சுறுத்தல்களையும் வென்று கேகயம் பெருநாடென எழமுடியுமென்றும் சொன்னார்கள்.

எந்தை சற்றே ஏளனத்துடன் பேசி அவர்களை திருப்பி அனுப்பிவிட்டார். அவையில் அன்று நான் இருந்தேன். மச்சர்களின் குலத்தலைவர்கள் பேசி முடித்ததும் எந்தை பெருந்துயர் கொண்டவர்போல கைகளைக்கூப்பி வேதம் எழுந்த முன்னாளில் நுண்சொல் தொல்முனிவர் ஆரியவர்த்தத்தை பதினாறு ஜனபதங்களாக பிரித்ததைப்பற்றி சொல்லத் தொடங்கினார். "அப்பதினாறில் ஒன்றென இருப்பதின் துயரென்ன என்றால் நூறு கட்டுத்தறிகளில் நான்கு பக்கமும் இழுத்துக்கட்டப்பட்ட களிறு போன்றமைதல். நூல்நெறிகளும் குலநெறிகளும் குடிமுறைமைகளும் அவர்களது ஒவ்வொரு சொல்லையும் செயலையும் கட்டுப்படுத்துகின்றன. மச்சர்களோ பறவைகளைப்போல் விட்டு விடுதலையானவர்கள். அவர்கள் எக்கிளையிலும் அமரலாம், எவ்வுணவையும் உண்ணலாம், எதுவும் தீட்டு அல்ல, எதனாலும் அவர்கள் தூய்மை கெடுவதில்லை" என்றார்.

"அவர் தங்களை ஏளனம் செய்கிறார் என்பதை அவர்கள் புரிந்துகொள்ளவில்லை. தங்கள் நாடுகளுக்குத் திரும்பி அச்சொற்களை எண்ணத்தில் மீட்டுகையிலே அதிலிருந்த ஆணவத்தையும் நஞ்சையும் அவர்களால் புரிந்துகொள்ள முடியும்" கசப்புடன் கையசைத்து சுதேஷ்ணை சொன்னாள். "அன்று அவர் சொன்னதில் ஓர் உண்மை உள்ளது. பதினாறு தொல்குலங்களில் ஒன்றாக பூர்வஷத்ரியராக இருப்பதென்பது பெரிய சிறை. மீள மீளச் சொல்லப்படும் சொற்கள்

பொருளிழந்து குருட்டுவிசை கொண்டு அவர்களிடையே வாழ்ந்தன, நாள்பட்ட அனைத்தும் நஞ்சே என்று மருத்துவர் சொல்வதுபோல."

எங்கள் அவையில் அமர்ந்து அங்கு நிகழும் சொல்லாடல்களை செவி கூர்ந்திருக்கிறேன். சொல்லிச் சொல்லி தீட்டப்பட்ட முறைமைக் கூற்றுக்கள். முள்முனையை முள்முனையால் தொடும் நுண்மைகள். பூமுள்ளெனப் பதிந்து நஞ்சு ஊறச்செய்யும் வஞ்சங்கள். இன்று எண்ணுகையில் அங்கு அமர்ந்து நான் மகிழ்ந்த ஒவ்வொன்றுக்காகவும் நாணுகிறேன்.

எந்தை நன்கறிந்திருந்தார், அந்த ஏளனம் தங்கள் அரசுக்கு எதிராக திரும்புமென்று. மச்சர்கள் தன் நாட்டை தாக்கினால் உடனெழுந்த ஜனபதங்களில் எந்த அரசரும் தனக்கென ஒரு வாள்முனையைக்கூட தூக்கமாட்டாரென்று. ஆயிரம் ஆண்டுகளாக ஒருவரை ஒருவர் முற்றழிப்பதைப்பற்றி எண்ணி கனவுகண்டு வாழ்பவர்கள் அவர்கள். அவ்வாறே நிகழ்ந்தது. கோசலத்தின் எல்லைகளை மச்சர்கள் தாக்கத்தொடங்கினர். கோசலத்தின் படகுகள் எதுவும் கங்கையில் செல்ல முடியாதாயிற்று. வணிகர்கள் வரவு நின்றது. ஒவ்வொரு நாளுமென நாட்டின் செல்வம் மறைந்துகொண்டிருந்தது.

ஆயினும் பதினாறில் ஒரு குடி. நாள்தோறுமென நாடெங்கும் நிகழும் வேள்விகள் எதிலும் ஒரு கிண்ணம் நெய்யைக்கூட எங்களால் குறைக்க முடியவில்லை. அரச விருந்துகளில் பொற்கோப்பைகளில் யவன மது ஒழியாதிருக்க வேண்டும். எத்தனை எளியதென்றாலும் எத்தனை நூறுமுறை சொல்லப்பட்டதென்றாலும் பொய்ப் புகழ்மொழியொன்றைச் சொல்லி அவையிலெழுந்து நிற்கும் புலவருக்கு பத்து விரலும்

பட பொன்னள்ளிக் கொடுத்தாகவேண்டும். கண்ணெதிரிலேயே ஓட்டைக் கலத்தில் நீர் என என் நகர் ஒழிவதைக் கண்டேன்.

அப்போதுதான் இங்கு விராடபுரியிலிருந்து இளவரசர் தீர்க்கபாகுவுக்காக மணத்தூது வந்தது. அவர் விராடநிஷதசம்யோகத்தின் அடுத்த மகாவிராடராக பட்டம் கட்டப்பட்டிருந்தார். இவர்களின் தூதன் கலிங்கத்திற்கும் வங்கத்திற்கும் சேதிக்கும் அங்கத்திற்குமெல்லாம் சென்றிருக்கிறான். செல்லுமிடங்களிலெல்லாம் ஏளனமும் சிறுமையுமே இவர்களுக்கு அளிக்கப்பட்டது. அச்செய்தி ஒவ்வொருநாளும் சூதர் நாவுக்கு மகற்கொடை மறுத்த மன்னர்களாலேயே அளிக்கப்பட்டது. அவர்கள் மகற்கொடை மறுப்பதன் வழியாகவே தங்கள் குலமேன்மையை நிலைநிறுத்துபவர்கள். விராட மன்னர் சுபாகுவோ சலிக்காது மணத்தூது அனுப்பிக்கொண்டிருந்தார்.

நிஷாதர்களுக்குத் தெரியும் ஷத்ரியர் என்று இக்கங்கைவெளி முழுக்க வென்றிருக்கும் அரசர்களில் பலர் வெளியேற வழியின்றி கல்லிடுக்குகளில் மாட்டிக்கொண்ட தேரை போன்று வாழ்பவர்கள் என்று. பல அரண்மனைகளில் ஒரு மாதம் மழை நின்றுபெய்தால் இடும்பை வந்து அமையும் என்று. ஒருவர் துணிந்தால்கூட விராடபுரி தேடிக்கொண்டிருக்கும் ஷத்ரியக்குருதி கிடைக்கும் என்றும் அது உறுதியாக நிகழும் என்றும் தெளிந்திருந்தனர்.

எங்கள் அரசவைக்கு நிஷதமன்னர் தீர்க்கபாகுவின் மணச்செய்தி வந்திருப்பதை முதல்நாள்தான் நான் அறிந்தேன். மறுநாள் அவையில் அத்தூதை அறிவிக்கும்படி எந்தை விராடரின் தூதரிடம் சொல்லியிருந்தார். ஏனெனில் அவையில் அதை உரிய ஏளனத்துடன் மறுக்க அவர் விழைந்தார்.

அதற்குரிய நுண்ணிய நஞ்சு நிரம்பிய சொற்களை அவர் கவிஞர்களோடு அமர்ந்து யாத்து உளம் கொண்டிருந்தார். ஆனால் நான் முடிவு செய்திருந்தேன். அவையில் மணத்தூதை முதலமைச்சர் ஆபர் உரைத்து கைகூப்பி அமர்ந்ததுமே நான் எழுந்து விராட இளவரசரை நான் முன்னரே என் கணவரென உளம் கொண்டிருக்கிறேன் என்றேன். எனது வேண்டுதலை காற்றுகளை ஆளும் பன்னிரு மாருதர்களுக்கும் நான் உரைத்ததனால் அது சென்று விராட இளவரசரின் செவியில் விழுந்தது என்றேன். அதனாலே இந்த மணத்தூது அமைந்தது என்றும் கேகயத்தின் நல்லூழ் அது என்றும் சொன்னேன்.

எந்தை அரியணையில் கைதளர்ந்து அமர்ந்துவிட்டார். கேகயத்தின் பேரவை சொல் திகைத்து வெறும் விழிகளென மாறி என்னைச் சூழ்ந்திருந்தது. முகம் மலர்ந்த ஆபர் எழுந்து கைகூப்பி "விராடநகரியின் பேரரசியாக தாங்கள் அமைவது எங்கள் நல்லூழ். இது இவ்வாறே நிகழவேண்டுமென்று தெய்வங்கள் வகுத்திருக்கின்றன போலும்" என்றார். எந்தை மணத்தூதை மறுக்க அப்போதும் ஒரு வாய்ப்பிருந்தது. கன்யாசுல்கம் கேட்டு பெற்றுக்கொள்வது அவருடைய உரிமை. கொடுக்கவே முடியாத கன்யாசுல்கமொன்றை கேட்கலாம். அதைச் சொல்ல எங்கள் அமைச்சர் ஸ்மிதர் எழுந்து எந்தையை நோக்கி வருவதை ஆபர் கண்டார். எந்தையோ அவையோ மறுசொல் எடுப்பதற்குள் முன்னால் எட்டுவைத்து அங்கிருந்த மங்கலத் தாலத்தில் இருந்த மஞ்சளரிசியை எடுத்து மணமகளை வாழ்த்துவதற்குரிய வேதச்சொல்லை உரைத்தபடி என் தலையில் இட்டார்.

"நிஷாதகுலத்து சபரகுடிப்பிறந்த சுபாகுவின் மைந்தர் தீர்க்கபாகுவின் மணமகளே, அவளைச் சூழ்ந்திருக்கும்

கந்தர்வர்களே, தேவர்களே, உங்களை வாழ்த்துகிறேன்! இக்குலமகள் அவள் கணவனின் கருவைத் தாங்கி மாவீரர்களைப் பெறுக! மாதரசியரை அடைக! அவர்கள் பேரரசர்களாகவும் அரசியராகவும் அரியணை அமர்க! அவர்களின் கொடிவழி நீள்க! ஆம், அவ்வாறே ஆகுக! வேதம்திகழும் அந்தணனின் இச்சொல் என்றும் அழியாது திகழ்க!" என எங்கள் இருவரையும் வாழ்த்தினார். பாரதவர்ஷத்தில் எங்கும் அந்தணர்சொல் பொய்யென்றாகக் கூடாதென்பது தொல்நெறி. ஸ்மிதர் மஞ்சளரிசி எடுத்து என் மேல் வீசி இரு கைகளையும் தூக்கி "பொய்யாமொழி அந்தணர்சொல் திகழ்க! ஆம், அவ்வாறே ஆகுக!" என்றார்.

எந்தைக்கு அதன்பின் வேறு வழி ஏதுமில்லை. உதடுகளை இழுத்து நீட்டி முகத்தை மலரச்செய்து எழுந்து கைகூப்பி "ஆம், இது எங்கள் குலதெய்வத்தின் ஆணை என்றே கொள்கிறோம். இந்த மணஉறவால் இரு நாடுகளும் பகை கடந்து வளம் கொழிக்கட்டும். இருகுடிக் குருதிகளின் கலப்பால் மைந்தர் பிறந்து கொடிவழிகள் பெருகட்டும்" என்றார். அவை எழுந்து கைகளைத் தூக்கி வாழ்த்துரைத்தது. அத்தனை பேரும் உளமின்றி ஒற்றை நடிப்பை வழங்குவதைக் கண்டு என்னுள் கசப்புடன் புன்னகைத்துக்கொண்டேன். உண்மையில் முதற்கணத்தில் எழுந்த திகைப்புக்குப்பின் ஒவ்வொருவரும் உள்ளூர ஆறுதல் கொள்வதையே நான் பார்த்துக்கொண்டிருந்தேன். இனி மச்சர்களை வெல்ல முடியும். கேகயத்தின் களஞ்சியங்களில் நெல்லும் கருவூலங்களில் பொன்னும் வரத்தொடங்கும்.

அவர்கள் ஒவ்வொருவரும் கையொழியாது வாழக் கற்றவர்கள். தொல்பெருமை சொல்லி சோம்பி அமர மட்டுமே

அறிந்தவர்கள். இல்லையென்று சென்று நிற்பதை தங்கள் மூதாதையருக்கான இழிவென்று எண்ணுபவர்கள். கேகயத்து அந்தணர் பாரதவர்ஷத்தின் மூத்த குருமரபினர். முதல் குருமரபினர் என்று அவர்கள் சொல்லிக்கொண்டனர். தொல்வேதம் மூன்றையும் தாங்களே அமர்ந்தெழுதியவர்கள்போல் தோற்றமளிப்பவர்கள். பதி பெயர்ந்து கிளம்பிச் செல்வார்கள் என்றால் பிற நாடுகளில் அங்குள்ள அந்தணர்களுக்கு இரண்டாமிடத்தில் சென்று அமைய வேண்டியிருக்கும். முதற்பெருமை மீளாது.

அந்தணர் தங்கள் உவகையை வெளிக்காட்டாமல் இறுகிய நெஞ்சுடன் அவ்வாழ்த்தை ஏற்றுரைப்பதுபோல் நடித்தனர். ஆனால் அவர்களின் உடலில் இருந்தே அவ்வுவகையை உணர்ந்த மற்ற குடிகள் நிறைவுகொண்டு தாங்களும் எழுந்து எங்களை வாழ்த்தின. அவை முறைமைகள் ஒவ்வொன்றாக முடிந்து ஓசையில்லாத நடையுடன் கலைந்து செல்கையில் அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டபோது அவ்விழிகளில் தெரிந்த மெய்யான களிப்பை தொலைவிலிருந்து நிறைவுடனும் அறியாச் சிறு கசப்புடனும் பார்த்துக்கொண்டிருந்தேன்.

✿விராடபுரியின் அரசியாக வந்து அமர்வதுவரை இங்குள்ள அரசியல் என்னவென்றே எனக்கு தெரிந்திருக்கவில்லை. மாமன்னர் நளனுக்குப்பின் சிதறிப்போன நிஷதகுடிகளின் பெருங்கூட்டே இது. இரண்டாம் கீசகரால் இவ்வாறு ஒருங்கிணைக்கப்பட்டது. இந்த விராடநிஷாதசம்யோகத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவரே அரசர் எனப்படுகிறார். கோல் கைக்கொண்டு முடிசூடி அரியணை அமர்ந்துகொள்ள அவருக்கு உரிமை உண்டு. ஆனால் அவரது ஆணைகளை பிறர் ஏற்க

வேண்டுமென்ற எந்த மாறாநெறியும் இல்லை. நடைமுறையில் பெரும்பாலான ஆணைகள் ஏற்கப்படுவதில்லை. ஆங்காங்கே அக்குடிகளின் தலைவராலும் அவர்களை ஆளும் மூத்தோரவையாலும் முடிவுகள் எடுக்கப்பட்டன.

முதலாம் மகாகீசகர் நிஷதகுடிகளை ஒற்றைப் படையென திரட்டுவதற்குரிய நெறிமுறைகளை வகுத்திருந்தார். அதில் ஒவ்வொருவருக்கும் என்னென்ன பணி என்றும் உரிமை என்றும் நிறுவப்பட்டிருந்தது. அதை அக்குடிகளின் தெய்வங்களே வெறியாட்டென பூசகரில் எழுந்து ஆணையிட்டிருந்தன. எதன்பொருட்டும் அஞ்சும் வழக்கமில்லாத தொல்குடிகள் இவர்கள். இவர்களின் புரவித்தேர்ச்சி நிகரற்றது. ஆகவே நிஷதர்கள் போர்முனைகளில் எப்போதும் வெற்றிகொள்பவராக இருந்தார்கள். சூழ்ந்திருந்த ஷத்ரிய அரசர்கள் அனைவரும் இவர்களை அஞ்சுகின்றனர். ஆனால் வெளியே இருந்து நோக்குபவர்கள் காணும் ஒற்றைப் பெரும்கோட்டை அல்ல இந்நகரென்று உள்ளே நுழைந்த சில நாட்களிலேயே எவரும் அறியலாம்.

அரசர் சுபாகு நோயுற்று படுக்கையில் இருந்தமையால் என்னை மணந்த அன்றே தீர்க்கபாகு விராடபுரியின் அரசர் என முடி சூடினார். மூதரசர் சில நாட்களிலேயே இறந்தார். அரசியென்று அரியணையில் அமர்ந்து நான் ஓர் ஆணையிட்டால் மறுநாள் பிறிதொரு எளிய குடித்தலைவி இடும் ஆணை அதை மறுக்கமுடியும் என அறிந்தேன். நானும் ஓர் எளிய நிஷத குலத்தலைவி மட்டுமே என்று புரிந்துகொண்டேன். விராடநிஷதக் கூட்டின் பெரிய குலம் சபரர்கள். ஆகவே தீர்க்கபாகு அரசரானார். குடிக்கூட்டம் நினைத்தால் எப்போது

வேண்டுமென்றாலும் அவரை விலக்கி பிறிதொருவரை அரசர் என்றாக்க முடியும். அன்று நான் உத்தரனை கருவுற்றிருந்தேன். ஆனால் என் வயிற்றில் பிறக்கும் அம்மைந்தன் அரசனாவான் என்பதற்கு எந்த உறுதியுமில்லை. அதை எண்ணி நான் சில அரசியல்சூழ்ச்சிகளை வகுக்கலானேன்.

அந்நாளில் என் இளையோனாகிய கீசகன் அவன் பிறந்த மச்சர்குடியை ஒரு சிறு தனிநாடு என நிலம்வளைத்து நகர் அமைத்து உருவாக்கிக்கொண்டிருந்தான். மச்சர் குடிகள் எழுவர் அவன் தலைமையில் ஒன்றாயினர். கங்கையில் செல்லும் கலங்களை மறித்து சுங்கம் கொள்ளத்தொடங்கினர். உண்மையில் நீர்க்கொள்ளையர்களாகவே அவர்கள் அங்கு இருந்தனர். மகதமோ காசியோ அஸ்தினபுரியோ அவனை தனித்து அறிந்து முற்றொழிக்க வேண்டுமென்று எண்ணும் தருணம் வரைதான் அவன் அங்கு திகழ முடியும் என்று கீசகன் அறிந்திருந்தான். மகதப்பேரரசர் ஜராசந்தரின் ஒரு படகுப்படை போதும் மச்சர் குலத்தையே அழித்து அவன் தலையை வெட்டிக்கொண்டு செல்வதற்கு.

அவர்களின் படை எழுவதற்கு முன்னரே போதிய செல்வம் சேர்த்து நகரொன்றை அமைத்து சூழ்ந்து கோட்டையையும் கட்டிவிடவேண்டுமென்று அவன் எண்ணினான். அதை வெல்ல படையிழப்பு தேவைப்படும் என்றால் ஷத்ரிய மன்னர்கள் தயங்குவார்கள். மகதத்திற்கோ காசிக்கோ கப்பம் கொடுத்து தனிக்கோலையும் முடியையும் பெற்றுவிட்டால் பிற மச்சநாடுகளை வென்று மச்சர்கூட்டமைப்பு ஒன்றை உருவாக்க முடியும். அவன் உள்ளத்திலிருந்தவர் விராடநிஷதக் கூட்டமைப்பை உருவாக்கிய இரண்டாவது மகாகீசகர். ஆனால் அதற்கு அவன் கொள்ளையடித்தாக வேண்டியிருந்தது.

கொள்ளையடிக்குந்தோறும் மகதத்தின் வாள் அவனை கண்ணுக்குத் தெரியாமல் அணுகியது.

அந்த இக்கட்டுநிலையில் நான் அவனை அழைத்துக்கொண்டால் அவனுக்கு வேறுவழியில்லை என கணித்தேன். அவன் எனக்கு படைக்கலமாக இருப்பானென்று எண்ணினேன். என் தூதர்களை அனுப்பி அவனை வரச்சொல்லி இந்நகருக்கு வெளியே சோலையொன்றில் நிஷதகுடிகள் எவரும் அறியாமல் சந்தித்தேன். தன்னை விராட நாட்டின் முதற்படைத்தலைவனாக ஆக்கவேண்டும் என்று அவன் கோரினான். எந்நிலையிலும் எனக்கோ மைந்தருக்கோ மாறுகொள்வதில்லை என்று வாள்தொட்டு ஆணையிட்டான்.

சில நாட்களுக்குப் பின் எனக்கு உத்தரன் பிறந்தான். கேகயத்தில் இருந்து என் இளையோன் சத்ருக்னன் பரிசில்களுடன் அணியூர்வலமாக விராடபுரிக்கு வந்து என்னை வாழ்த்தினான். அதை வெல்லும் வரிசைகளும் பரிசில்களுமாக கீசகன் இந்நகருக்கு வந்தான். விராடருக்கு அவன் அளித்த பரிசில்களும் அவர் முன் வாள்தாழ்த்தி பணிந்து நின்றதும் அவரை மகிழ வைத்தது. அவனுடைய பெருந்தோள்களைக் கண்டு நிஷாதர்கள் விழிகளுக்கு அப்பால் அஞ்சுவதை நான் கண்டேன். அவனை என் இளையோனாக இங்கேயே சில நாட்கள் தங்க வைத்தேன்.

அப்போது தெற்கே வாகட குலம் எங்களுக்கு எதிராக கிளர்ந்திருந்தது. ஒரு படைநீக்கம் நிகழவிருந்தது. அதற்கு உதவும்படி ஆணையிட்டேன். நிஷாதர்களுக்குரிய படைக்கலங்களை கலிங்கத்திலிருந்து கொண்டுவரும் பணியை அவனிடம் அளித்தேன். நிஷாதர்களுக்கு பொருட்களை வாங்கவோ விலைபேசவோ தெரியாதென்பதனால் மூன்றில்

ஒன்றே தேறும் என்ற நிலையே இங்கிருந்தது. கீசகன் அதை மிகத் திறமையாக செய்தான். அவன் தெரிவுசெய்த படைக்கலங்களில் ஒன்றுகூட பழுதென்றிருக்கவில்லை. அவன் அளித்த பணத்திற்கு நிஷாதர்கள் எவரும் அவற்றை பெற்றிருக்க முடியாது.

சதகர்ணிகளின் உடல் சிதைந்த உதிரி அரசுகளாகத் திகழ்ந்த வாகடர்களும் பல்லவர்களும் இணைந்து படைதிரட்டினர். அவர்களுக்கு அமைந்த ராஜமகேந்திரபுரித் துறைநகரமே அவர்களை ஆற்றல்கொண்டவர்களாக ஆக்கியது. அங்கிருந்து பீதர்நாட்டுப் படைக்கலங்களை பெற்றுக்கொண்டார்கள். திருவிடத்திலிருந்து வில்லவர்களைத் திரட்டி ஒரு படையை அமைத்தனர். தெற்குப்புயல்கள் என அவர்களை நம் அமைச்சர்கள் அழைத்தனர். அவர்கள் நமது தென்னெல்லைகளை தாக்கினார்கள். அவர்களின் இலக்கு கிருஷ்ணையை முழுமையாக தங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருப்பது. அதை எய்திவிட்டார்கள் என்றால் ஒரு தலைமுறைக்குள்ளாகவே வெல்லமுடியாதவர்களாக ஆகிவிடுவார்கள் என நாங்கள் அறிந்திருந்தோம்.

எங்கள் குடித்தலைவர்கள் படைஎழுச்சிக்கு நாள் குறித்த அன்று அடுத்த செய்தி வந்தது. மகாகீசகரால் சிதறடிக்கப்பட்டு தெற்கே கிஷ்கிந்தைக்கும் ரேணுநகரிக்கும் பின்வாங்கிச் சென்றிருந்த சதகர்ணிகள் படைதிரட்டிக்கொண்டு வந்து திருமலைத்துவாரத்தை கைப்பற்றி அதை மையமென வலுவாக்கிக் கொண்டனர். நல்லமலையும் பல்கொண்டா மலையும் கோட்டைச்சுவர்கள் என காக்கும் அந்நகரை படைகொண்டு வெல்வது அரிது. சதகர்ணிகளுக்கும்

பல்லவர்களுக்கும் வாகடர்களுக்கும் இடையே படைக்கூட்டு ஒன்று கைச்சாத்தாகியது.

அத்தனை பெரிய படைக்கூட்டை எதிர்கொள்ளும் ஆற்றல் அன்று விராட அரசுக்கு இருக்கவில்லை என அனைவரும் அறிந்திருந்தனர். வடக்கே ஷத்ரியர்களின் வஞ்சமிருந்தது. அன்று மகதத்திற்கும் அஸ்தினபுரிக்குமிடையே போரென விளைய வாய்ப்புள்ள பூசல் நடந்து கொண்டிருந்ததால் மட்டுமே நாங்கள் ஆறுதல் கொண்டு ஒதுங்கியிருந்தோம். தெற்கில் எங்கள் படைமுனைகள் சற்று ஆற்றல் இழந்தாலும்கூட வடக்கிலிருந்து கலிங்கனும் வங்கனும் சேதிநாட்டானும் படைகொண்டு வரக்கூடுமென அறிந்திருந்தோம். ஆனால் வேறுவழியில்லை, அஞ்சி வாளாவிருந்தால் அதுவே அழைப்பென்றாகிவிடும். தென்னக முக்கூட்டு எங்கள்மேல் நேரடியாக படைகொண்டுவந்தால் நாங்கள் அழிவோம்.

யார் போர்முகம் நிற்பது என்ற கேள்வி எழுந்தபோது ஒவ்வொரு போருக்கும் நான் நான் என்று முந்தி வந்து நிற்கும் குலத்தலைவர்கள் அனைவரும் தயங்கி பின்வாங்கினார்கள். அப்போர் தோல்வியில்தான் முடியும் என்றும் அதன் பழியை தங்கள் குலங்கள் சுமக்க வேண்டியிருக்கும் என்றும் நிஷதகுடியின் அழிவுக்கான தொடக்கமாக அது அமையுமென்றும் ஒவ்வொருவரும் எண்ணினர். “எவர் படைகொண்டு எழுவது?” என்றார் விராடர். அவர் அன்றே படைத்திறனில்லாதவர் என்றும் மதுக்களியில் அரண்மனையில் அமைவதற்கு மட்டுமே அறிந்தவர் என்றும் அறியப்பட்டிருந்தார். அந்தப் போரையே பிறருடைய பணி என்று அவர் எண்ணினார். அப்பொறுப்பை எவரிடமேனும்

அளித்து அவையை முடித்துவிட்டு அகத்தளத்திற்கு செல்வதைப்பற்றியே எண்ணிக்கொண்டிருந்தார்.

“எவர் படைமுகம்கொள்வது? கூறுக!” என்று நான் அவையிடம் கேட்டேன். அவை அவ்வினாவின் முன் பாவைநிரை என அமைதியாக இருந்தது. நான் “குடிமூத்தார் ஒப்புக்கொண்டால் என் இளையோன் கீசகன் படைநடத்துவான்” என்றேன். திகைப்புடன் அனைவரும் கீசகனை நோக்கி திரும்ப அவன் எழுந்து கைகூப்பி “குடிப்பெரியோரின் நல்வாழ்த்து அமையும் என்றால் வாகடர்களையும் பல்லவர்களையும் கொன்று தலைகொண்டு மீள்வேன்” என்றான். “சதகர்ணிகளை மீண்டும் ரேணுநகரிக்கே துரத்திவிட்டுத்தான் இந்நகர் புகுவேன், ஆணை!” என்று வாளைத் தூக்கி வஞ்சினம் உரைத்தான்.

அவை அப்போதும் அமைதியாக இருந்தது. என்ன முடிவெடுப்பதென்று அவர்கள் அறியவில்லை. ஆனால் அவர்களுக்குள் ஆறுதல் எழுவது தோள்கள் தளர்வதில் தெரிந்தது. “என்னுடன் பன்னிரண்டு மச்சர்குலங்களின் படைகள் உள்ளன. நிஷதர்களுக்காக படைஎதிர்கொண்டு நிற்பதில் பெருமை கொள்பவர்கள் அவர்கள்” என்றான் கீசகன். மூத்த குடித்தலைவரான பீடகர் எழுந்து “இத்தருணத்தில் மகாகீசகரின் பெயர்கொண்ட ஒருவர் இந்த அவையில் இருப்பதும், இப்பொறுப்பை ஏற்பதும் நம் தெய்வங்களின் ஆணை போலும். அவ்வாறே ஆகுக!” என்றார். அவை உயிர்கொண்டு “ஆம், அவ்வாறே ஆகுக!” என குரலெழுப்பியது.

தலைமை அமைச்சர் ஆபர் எழுந்து “இந்த அவை மாற்று ஒன்றும் சொல்லாதபோது அதை ஒப்புகிறது என்றே கொள்ளலாம்” என்றார். விராடர் அவையில் என்ன ஒலிக்கிறதோ அந்த திசை நோக்கி தலையாட்டுவதையே

ஆட்சி என்று நெடுங்காலமாக எண்ணி வருபவர். “ஆம், அரசாணையென அதை வெளியிடுக!” என்றார். கீசகன் என்னை ஒருகணம் நோக்கிவிட்டு “அவ்வாணையை தலைசூடுகிறேன்” என்றான். அவையினர் எழுந்து கீசகனை வாழ்த்தி குரலெழுப்பினர்.

குடித்தலைவர்கள் எழுவர் எழுந்து சென்று தனியறையில் சொல் சூழ்ந்தபின் திரும்பி வந்து கீசகனை விராடநிஷதக்கூட்டமைப்பின் முழுமுதல்படைத்தலைவனாக அமர்த்துவதாக அறிவித்தனர். பல போர்க்களங்களில் மகாகீசகர் ஏந்தி படைமுகம் நின்ற அவருடைய பெரிய உடைவாளை கொண்டுவந்து அவையிலேயே கீசகனிடம் அளித்தனர். அவன் மண்டியிட்டு அமர்ந்து அதை பெற்றுக்கொண்டு அவைக்குமுன் நின்று தலைக்குமேல் தூக்கி மும்முறை ஆட்டி “வென்றுவருவேன்! உயிர் வைத்தாடுவேன்! ஒருபோதும் பணியேன்!” என வஞ்சினம் உரைத்தான். அதுவரை இருந்த தயக்கங்கள் விலக நிஷாதர்களின் பேரவை எழுந்து கைகளை விரித்து அவனை வாழ்த்தி பெருமுழக்கமிட்டது.

“நான் விரும்பியதே நிகழ்ந்தது. கீசகன் அப்போரில் வெல்வது எளிதல்ல என்றாலும் எவரேனும் வெல்லக்கூடுமென்றால் அவனே என அறிந்திருந்தேன். ஆனால் உள்ளிருந்து முட்டை ஓடை குத்தி உடைக்கும் சிறகுகொண்ட குஞ்சு என என் உள்ளத்தில் அறியாத அச்சம் ஒன்று சிறகடித்துக்கொண்டே இருந்தது” என்றாள் சுதேஷ்ணை. “நான் அன்று அஞ்சியது என்ன என்பதை நெடுங்காலம் கழித்தே புரிந்துகொண்டேன், அவனுடைய பெயரை. கீசகன் என்னும் பெயரை அவனுக்கு இட்ட அந்த அன்னையின் விழைவை நான் அப்போது கணிக்கத் தவறிவிட்டேன்.”

# நீர்க்கோலம் - 38

**37. குருதிகொளல்**

"சபரர்களின் போர்த்தெய்வமான அசனிதேவனின் ஆலயம் கிரிப்பிரஸ்த மலைக்கு வடக்காக இருந்த தீர்க்கப்பிரஸ்தம் என்னும் குன்றின்மேல் இருந்தது. இடியையும் மின்னலையும் படைக்கலமாகக் கொண்ட தொல்தெய்வம் அது. வலக்கையில் இடியை உடுக்கின் வடிவிலும் இடக்கையில் மின்னலை துள்ளும் மானின் வடிவிலும் ஏந்தியிருக்கும். திரையம்பகன் என்று அதை சொல்வார்கள். அதன் நெற்றிக்கண் எப்போதும் அரக்கு கலந்த மண்பூச்சால் மூடப்பட்டு அதன்மேல் மலர் அணிவிக்கப்பட்டிருக்கும். நிஷதகுடிகள் போருக்கு எழும்போது மட்டும் அசனிதேவனுக்கு மோட்டெருமையை பலி கொடுத்து அக்குருதியைக்கொண்டு முழுக்காட்டு நிகழ்த்துவார்கள்" என்று சுதேஷ்ணை சொன்னாள்.

நூற்றெட்டு பந்தங்கள் எரியும் நள்ளிரவில் பூசகர் அந்த மலர்ச்சாத்தை அகற்றி அரக்குப் பூச்சை விலக்கி அசனிதேவனின் விழிகளை திறப்பார். ஆலயத்தை சூழ்ந்திருக்கும் ஏழு முரசுமேடைகளில் இருக்கும் பெருமுரசுகளை பாரதவர்ஷத்திலேயே மிகப் பெரியவை என்பார்கள். அவற்றை அசைக்கமுடியாது. பிற நாட்களில் வறண்ட குளம் போன்றிருக்கும் அவற்றுக்குள் சருகுகள் குவிந்து கிடக்கும். யானைத்தோலை இழுத்துக்கட்டி முழைத்தடியால் அவற்றை முழக்கி இடியோசையை எழுப்புவர். தீப்பந்தங்களை நீள்சரடில் சுற்றிக்கட்டி விரைந்து சுழற்றி மின்னல்களை உருவாக்குவார்கள். அவ்வாறு

அனல்சுழற்றுவதற்கான பயிற்சி சபரர் குலத்தின் பூசகர்கள் குலமுறையாக கற்று அடைவது.

போர் குறித்தபின் படைகிளம்பும் நாள்வரை மன்னரின் உடைவாளும் மகாகீசகரின் உடைவாளும் அசனிதேவனின் முன் செம்பட்டு சுற்றப்பட்டு செம்மலர் மாலை அணிவிக்கப்பட்டு வழிபாட்டில் அமைந்திருக்கும். கிளம்புவதற்கு முந்தையநாள் இரவு குடித்தலைவர்களும் அரசரும் படைத்தலைவர்களும் மட்டும் சென்று அசனிதேவனை வணங்கி அந்த வாள்களை எடுத்துக்கொள்வார்கள். வாள்களை பூசகர் எருமைக்குருதியில் நீராட்டி எடுத்து அளிப்பார்கள். அதை மும்முறை அசனிதேவன் முன் தாழ்த்தி வஞ்சினம் உரைத்தபின் தன் கையை அறுத்து மூன்று துளிக் குருதியை அப்பலிபீடத்தில் சொட்டி வணங்குவர்.

அக்குருதியை சோற்றில் கலந்து ஏழு கைப்பிடிகளாக உருட்டி முதல் உருளையை துந்துபகுடிகளின் தெய்வமாகிய தாபையை மணந்த சபரகுடியின் தெய்வமான மாகனுக்கு படைத்தனர். காளகக்குடிகளின் தெய்வமான கரிவீரனுக்கு அடுத்த உருளை. சிபிரகுடிகளின் யானைத் தெய்வமான காளகேதுவின்மேல் ஏறிய அஸ்வககுடிகளின் மூதாதையான தாமஸனுக்கு அடுத்த உருளை. எஞ்சிய குருதியன்னத்தை அன்னக்குவையுடன் கலந்து அத்தனை குடிதெய்வங்களுக்கும் படைத்தனர். போருக்கு எழும் அனைவரும் அதில் ஒரு வாய் உண்ணவேண்டுமென்பது நெறி. ஆகவே அன்னம் மேலும் பெரிய குவையுடன் கலந்து விரிவாக்கப்பட்டது. அதை அன்னம்பெருக்குதல் என இங்கு கூறுகிறார்கள்.

படை எழுந்தது. அதன் முன் மகாகீசகரின் உடைவாளுடன் கீசகன் யானைமேல் அமர்ந்து கிளம்பினான். குருதிசூடிய

உடைவாளை ஏந்தி விராடர் கோட்டைமுகப்புவரை சென்று அவர்களை வாழ்த்தி குருதிப்பொட்டு இட்டு வழியனுப்பி வைத்தார். அவருடைய உடைவாள் படைகள் திரும்பும்வரை அரண்மனையின் படைக்கலநிலையில் செம்பட்டு சுற்றப்பட்டு பூசெய்கைக்கு வைக்கப்பட்டது.

அப்பொழுது கீசகனின் நல்லூழ் திரண்டிருந்த காலம். அன்றுதான் அஸ்தினபுரியின் பீமன் மகதநாட்டுக்குள் புகுந்து ஜராசந்தனை கொன்றான். யமுனைக்கரையில் பாண்டவர்கள் அமைத்த இந்திரப்பிரஸ்தம் பெருவல்லமையுடன் எழத்தொடங்கியிருந்தது. வடமேற்கே யாதவர்களின் துவாரகாபுரியும் செல்வமும் படையும் கொண்டு வளர்ந்தது. அப்படைக்கூட்டை அன்று அத்தனை தொல்குடி ஷத்ரியர்களும் அஞ்சினர். வடக்கே ஒவ்வொருவரும் பிறிதொருவருக்கு எதிராக கச்சை முறுக்கி நின்றிருந்தார்கள். கீசகன் தெற்கே நோக்கிக்கொண்டிருந்த மற்ற நிஷாதர்களைப்போலன்றி கங்கைக்கரை அரசியலை எப்போதும் கூர்ந்து நோக்கிவந்தவன். அச்சூழலை நன்குணர்ந்த அவன் வடக்கிலிருந்த மொத்தப் படைகளையும் எவருமறியாமல் விராடபுரிக்கு கொண்டுவந்தான்.

அந்தப் படைசூழ்கையில் இருந்த துணிச்சலும் திட்டமிடலும் கீசகனை முதன்மையானவனாக ஆக்கின. தன் படைகளை அவன் நேராக விராடபுரிக்கு கொண்டுவரவில்லை. அவர்களை காடுகளினூடாக கரவுப்பாதையில் வரச்செய்து செல்லும் வழியெங்கும் தன்னுடன் இணையச்செய்தான். வழக்கமாக படகுப்பாலம் அமைத்து கோதாவரியைக் கடந்து விரிந்த சதுப்பு நிலத்தினூடாக தெற்கே படைகொண்டு போவது நமது வழக்கம். கோதாவரியில் படகுப்பாலம் அமைக்கையிலேயே

செய்தி தென்னிலத்து அரசர்களுக்கு சென்றுவிடும். அவர்கள் விரும்பிய இடத்தில் நமது படைகள் சதுப்பில் சகடங்களும் கால்களும் புதைந்திருக்க அவர்களை எதிர்கொள்ளும். நமது புரவித்திறனாலும் நமது படைகளின் விற்திறனாலும் பெரும்பாலும் வென்றோம். ஆனால் அனைத்து போர்களிலும் பேரிழப்புகள் நமக்கே ஏற்பட்டன.

மச்சர்கள் மென்மரம் குடைந்தமைத்த எடையற்ற விரைவுப் படகுகளைக் கொண்டு மீன்கொள்ளும் வழக்கம் கொண்டவர்கள். அதில் பாய்மரம் நட்டு கொள்ளைக்கும் போருக்குமென பறக்கச்செய்ய முடியும் என கீசகன் அவர்களுக்கு கற்பித்திருந்தான். மரமுதலைகள் என அழைக்கப்பட்ட அப்படகுகளை வண்டிகளிலேற்றி காடுகளினூடாகவும், சிறு ஆறுகளினூடாகவும் கொண்டுவந்து கோதாவரியில் இறக்கினான். கோதாவரியின் பரப்பே முதலைகளால் நிறைந்தது. கலிங்கத்திலிருந்து வாங்கிக்கொண்டுவந்த பெரும்படகுகளில் யானைகளையும் தேர்களையும் ஏற்றிக்கொண்டனர். மொத்தப் படையையும் படகுகளில் ஏற்றிக்கொண்டு இரண்டே நாளில் கலிங்கத்தின் தண்டபுரத்தை அடைந்தார்கள்.

கீசகன் படை வரவை அறியாமல் விழவுகொண்டாடிக்கொண்டிருந்த கலிங்கனை ஓரிரவில் வென்றான். கலிங்கத்தின் கலங்களையும் தண்டபுரத்திலிருந்த அத்தனை வணிகப்படகுகளையும் கைப்பற்றிக்கொண்டான். நிஷதப்படைகள் அனைத்தையும் படகுகளில் ஏற்றிக்கொண்டு கடல் வழியாகச் சென்று வாகடர்களின் ராஜமகேந்திரபுரியை தாக்கி வென்றான். அங்கிருந்து கிருஷ்ணைக்குள் நுழைந்து தென்னிலம் மீது பரவினான். அங்கிருந்து அனைத்து

நகர்களுக்கும் செல்வதற்கு சிறந்த வண்டிப்பாதைகளை அவர்களே அமைத்திருந்தனர். பல்லவர்கள் தோற்றுவிழ பன்னிரண்டு நாட்களாயின.

இரு வெற்றிகளால் அஞ்சி குழம்பியிருந்தபோது மிக எளிதாக வாகடர்களை வென்றான். சதகர்ணிகளை சிதறடித்து மீண்டும் ரேணுநாட்டுக்கு துரத்தினான். பல்லவனையும் வாகடனையும் பிடித்து அவர்களின் தலைகளை வெட்டி காவடியாகக் கட்டி தானே தோளில் ஏற்றிக்கொண்டு வந்து விராடபுரிக்குள் நுழைந்தான். அன்று நிஷதகுடிகள் அனைவரும் நகர்த்தெருக்களில் திரண்டு அவனுக்கு வாழ்த்து கூறினர். அவன் பெயரின் முழுப்பொருளும் அப்போதுதான் அவர்களுக்குப் புரிந்தது. ஒவ்வொரு நாவிலும் அப்பெயர் ஒலித்தது. ஒவ்வொரு பாடலிலும் அது மட்டும் பொன்னொளிகொண்டு தெரிந்தது.

விராடர் அரண்மனை முற்றத்தில் உடைவாளை ஏந்தியபடி அவனை எதிர்கொண்டார். அவன் அந்தத் தலைகளை அவர் காலடியில் வைத்து வாள்தாழ்த்தி வணங்க சூழ்ந்திருந்த விராடப்படைகள் வெடிப்பொலி எழுப்பி வாழ்த்தின. குலமூத்தார் ஒவ்வொருவராக அவனை அணுகி தோள்தழுவினர். அதன்பின் பிறிதொருவர் இந்நாட்டுப் படைகளுக்கு தலைமை தாங்கவேண்டுமென்ற எண்ணமே எழுந்ததில்லை. விராடபுரி தென்னகத்தின் வெல்லமுடியாத பேரரசென்று நிறுவப்பட்டது. அதன்பின் எப்படி என்று அறியாமலேயே இப்பேரரசின் முதன்மைச் சொல் கீசகனுடையதாக மாறியது.

✿அதன் பின்னரே நான் கீசகனின் அன்னையைப்பற்றி அறிந்துவர ஒற்றர்களை அனுப்பினேன். அவன் அன்னை எதன்

பொருட்டு அப்பெயரை அவனுக்கிட்டாள் என்பதை அறியவிரும்பினேன். அவள் உள்ளத்தில் ஒரு கனவு இருந்திருக்கிறது. பெரும்பாலும் அன்னையின் அத்தகைய நுண்கனவுகளே கீசகனைப்போல பேருருக்கொண்டு எழுந்து நிற்கின்றன. அவன் அன்னையின் பெயர் சுகதை. அவள் மச்சர்குலத்து சிற்றரசர் தப்தனின் முதல் மகள். அவர்கள் மூன்று தலைமுறைக்கு முன்புவரை சர்மாவதியில் மீன் வேட்டையாடிய சிறுகுடியே. சர்மாவதியின் தோல்படகுகளில் சுங்கம் கொள்ளத் தொடங்கியபின்னர்தான் புற்குடிலை இல்லமாக ஆக்கிக்கொண்டவர்கள்.

அவன் அன்னையின் குடியை மேலும் முற்சென்று ஆராய்ந்தேன். அவள் யமுனைக்கரையின் தொன்மையான மச்சர்குடியான களிந்தகுடியில் பிறந்தவள். அதில்தான் முன்பு சிற்றரசர் சத்யவானுக்கு மகளாக அஸ்தினபுரியின் பேரரசி சத்யவதி பிறந்தார். அக்குடியின் கிளைகளில் ஒன்றில்தான் சூரியனுக்கும் சரண்யுவுக்கும் மகளாக இளைய யாதவனின் அரசியான காளிந்தி தோன்றினாள். கனகை என்ற பெயர்கொண்ட அவள் இன்று துவாரகையில் என் மருமகளுக்கு நிகராக அவையமர்ந்திருக்கிறாள். கீசகனின் அன்னையின் கனவு என்ன என்று தெரிந்ததும் நான் சென்று சிக்கியிருக்கும் வலை என்ன என்று தெளிவுகொண்டேன்.

அதுவரை கீசகனின் வெற்றியை முதலில் நான் என் வெற்றியாகவே நினைத்தேன். எனது சொல் இந்நகர்மேல் நிற்பதற்கு படைக்கலமாக அவன் அமைவான் என்று கருதினேன். அந்நம்பிக்கையில்தான் உத்தரன் பிறந்த அன்று நான் உவகையில் சில பிழைகளை ஆற்றினேன். பேற்றறையின் குருதி மணத்தில் மடியில் குழந்தையை படுக்க

வைத்து அமர்ந்திருக்கையில் உள்ளே வந்த கீசகனை நோக்கி "இதோ, உனது மருமகன். நீ அரியணை தாங்க அமரவிருக்கும் பேரரசன். தென்னகத்தை ஆளும் மணிமுடிக்குரியவன்" என்றேன்.

ஒரு கணம் கீசகனின் முகம் சுருங்கி கண்களில் நானறியாத ஒளியொன்று தோன்றி மறைந்தது. புன்னகையுடன் "ஆம், விராடபுரி என்றும் காத்திருந்த இளவரசன் இவன்" என்றான். குழந்தையை கையில் வாங்கி அதன் கால்களில் மும்முறை முத்தமிட்டு என்னிடம் திருப்பி அளித்தான். அன்று முறைமைப்படி அக்கால்களை அவன் சென்னியில் சூடவில்லை என்பதை நான் உணர்ந்ததே ஐந்தாண்டுகளுக்கு பின்னர்தான். மச்சநாட்டிலிருந்து அவன் கொண்டுவந்திருந்த அருமணிகள் பதித்த இரு கால்தண்டைகளை மைந்தனுக்கு அணிவித்தான். "என் வாளும் சொல்லும் என்றும் இவனுக்கு துணைநிற்கும், மூத்தவளே" என்றான். நான் விழிநீர் பரவி தோற்றம் மறைய "நீ இருப்பதுவரை நான் வெல்லப்படமுடியாதவள்" என்றேன்.

ஆனால் அவன் கண்களில் வந்து சென்ற அந்த ஒளியை என் உள்ளே வாழும் ஏதோ ஒன்று பதிவு செய்துகொண்டது. இருப்பினும் நான் அப்போது அதை உணரவில்லை. மாமன் பெருங்கைகளில் மருமகன் அவனுக்கிணையான வீரனாக வளர்வான் என்று எண்ணினேன். விராடர் அரண்மனைக்குள்ளேயே வாழ்ந்து பழகியவர். பகல் ஒளி எழுகையிலேயே குடிக்கத் தொடங்கிவிடுவார். எப்பொழுதும் அவருடைய அவைக்கூடத்தில் விறலியரும் சூதாடிகளும் நிறைந்திருப்பார்கள். பேரரசி என நிஷாதர்களின் அத்தனை குலதெய்வங்களையும் நாள்தோறும் நான்

வணங்கியாகவேண்டும். என் ஒரு நாளின் பெரும்பகுதிப்பொழுது இத்தெய்வங்களை வணங்கும் சடங்குகளுக்காகவே சென்றுவிடும். ஆகவே குழந்தையை முற்றிலும் செவிலியர்களிடம் ஒப்படைத்தேன். அவன் கால்திருந்தி எழுந்து குதலைகொள்ளத் தொடங்கியபோது கீசகன் அவனை தன் கையிலெடுத்துக்கொண்டான்.

ஆலமரத்தடியில் சிறுசெடி என என் மைந்தன் வளர்ந்தான். இன்று என் மைந்தன் இப்படி இருப்பதற்கு பொறுப்பு என் இளையவனே என்று சொன்னால் சிலர் சிரிக்கக்கூடும். ஆனால் நீ அறிவாய் நிகழ்ந்தது என்ன என்று. ஒழுக்கை எதிர்த்து நீந்துவதற்கு குஞ்சுகளுக்கு கற்றுக்கொடுக்கிறது அன்னைமீன். குருதிமணம் கொள்ள குருளையை பயிற்றுவிக்கிறது வேங்கை. மத்தகத்தால் வேங்கைமரத்தை உலுக்க வேழம் தன் மைந்தனுக்கு கற்றுக்கொடுக்கிறது. கீசகன் என் மைந்தனுக்கு அவன் விரும்பியதை மட்டுமே அளித்தான். மைந்தர் இயல்பாக விரும்புவது பெண்களைத்தான். அன்னையை முழுதும் அடையாத என் மகன் பெண்களின் கைகளில் திளைத்தான். செவிலியரும் சேடியருமே அவன் உலகென்றாயினர்.

அதை கீசகன் திட்டமிட்டு உருவாக்கினான் என இன்று அறிகிறேன். சுற்றியிருந்து விறலியர் அவனை புகழ்ந்துகொண்டே இருந்தனர். படைக்கலப் பயிற்சியோ புரவிப்பயிற்சியோ அளிக்கையில் முதல் சில நாட்களிலேயே பெரும்புண்கள் அவனுக்கு நிகழும்படி செய்தான். அவ்வச்சத்தை அவன் உள்ளத்தில் பெருக்கினான். என் மைந்தன் இயல்பில் கோழை அல்ல. அச்சமற்ற நிஷதகுடியினன். தொல்குடியாகிய கேகயத்தினன். இன்று நிஷதபுரியே அவனை எண்ணி ஏளனம் கொள்கிறது. என் சொல் அவ்வேளனத்தை மேலும் பெருக்கும்.

ஆனால் அன்னையென்றல்ல, வெறும் பெண்ணென்று நின்று அவனை எண்ணுகையில் என் உள்ளம் அவன் வெறுங்கோழை அல்ல என்றே உணர்கிறது. அவனுள் வாழ்கிறது அனல். தன்னை உணரவோ தன் தோள்களில் சித்தத்தை நிலைக்கச் செய்யவோ அவனுக்கு வாய்ப்பளிக்கப்படவில்லை. அவன் சிறுமை செய்யப்பட்டான். சிறுமைசெய்யப்படுபவர்கள் அதை எதிர்கொள்ள முடியாமலிருக்கையில் சிறுத்துக் குறுகி அமைவதை கண்டிருப்பாய்.

இன்று இந்த நகரம் கீசகனின் கையில் உள்ளது. என்னையும் அரசனையும் சுட்டுவிரல் அசைவால் சிறையிலிட்டு மணிமுடியை கைப்பற்ற அவனால் இயலும். அவ்வாறு அவன் கைப்பற்றுவானென்றால் இந்நகரின் குடிகளில் எவர் எதிர்ப்பாரென்று அவனால் இன்று சொல்லமுடியவில்லை. எவரும் எதிர்க்கமாட்டார்கள் என்பதே மெய். நான் அறிந்த இந்த உண்மை இன்னமும் அவனுக்கு உறுதியாகத் தெரியாது. அந்த அச்சம்தான் முடிசூடிக்கொள்ள முடியாமல் அவனை தடுக்கிறது. அத்தயக்கம் இன்னும் எத்தனை நாட்கள் நீடிக்கும் என்று தெரியவில்லை. ஒவ்வொரு நாளும் அந்தி இறங்குகையில் நன்று இன்றொரு நாள் நீட்டிக்கப்பட்டதென்றே என்னுள்ளம் ஆறுதல் அடைகிறது. ஒவ்வொரு நாள் காலையில் இன்றென்ன நிகழும் என்ற பதற்றம் ஓங்குகிறது.

"ஒருபுறம் மதுக்களியாட்டன்றி பிறிதொன்றறியாத அரசர்... இன்னொரு பக்கம் பொய்யுணர்வுகளில் தடுமாறி வீணனென்றே வாழும் மைந்தன். கன்னியுள்ளத்தின் கனவுகளில் திளைத்து இங்கிலாதிருக்கும் மகள். நான் ஒருத்தி இவ்வனைத்தையும் தொட்டுத் தொட்டுத் தவித்தபடி இவ்வரண்மனையில் அமர்ந்திருக்கிறேன்" என்றாள் சுதேஷ்ணை. "நேற்றுமுன்தினம்

நீ என் அரண்மனைக்கு வந்த அன்று பின்னுச்சிப்பொழுதில் எனக்கொரு செய்தி வந்தது. நிஷதப்படைகளின் தலைமையில் கீசகனுக்கு மாற்றென்றும் நிகரென்றும் சிலரால் கருதப்பட்ட எஞ்சியிருந்த மூவரையும் கீசகன் படைத்தலைமையிலிருந்து அகற்றிவிட்டான் என்று.”

“அவ்வாறு கருதப்பட்ட ஒவ்வொருவரும் போர்க்களங்களில் கொல்லப்பட்டிருக்கிறார்கள். அறியா நோயுற்று இறந்திருக்கிறார்கள். எஞ்சிய இம்மூவருமே எனது நம்பிக்கைக்கு உரியவர்களாக இருந்தார்கள். கீசகன் மலைஉச்சியில் உருண்டு இந்நகர்மேல் உருளக் காத்திருக்கும் பெரும்பாறையென்றால் மூன்று தடைக்கற்கள் அவர்கள். அவர்களை அகற்றிவிட்டான். இனி அவனுக்குத் தடையொன்றுமில்லை. இன்னும் எத்தனை நாள் என்று எண்ணியிருக்கையிலேயே உன்னை பார்த்தேன். ஒரு கணத்தில் நீ எனக்குக் காப்பு என்று தோன்றியது. ஏன் என்று தெரியவில்லை. கேகயத்தில் பதினாறு கைகளிலும் படைக்கலங்களுடன் கோயில்கொண்டிருக்கும் அன்னை கொற்றவையே யானைமேல் எழுந்ததுபோல் தோன்றினாய்.”

“நான் என் உயிரை அஞ்சுகிறேனா என்றால் ஆமென்றே சொல்ல முடியும். என்ன நிகழ்கிறதென்பதை உணர்ந்தவள் நான் மட்டுமே. என் மைந்தனிடமும் கணவரிடமும் இதைச் சொல்லி மன்றாடும் வாய்ப்புள்ளவள். கீசகன் முடிசூட்டிக்கொண்டான் என்றால் அவையில் எழுந்து மாற்றுக் குரலெழுப்பும் இறுதி நா என்னுடைது. இங்கு என்ன வேண்டுமானாலும் நிகழலாம். என்னை சூழ்ந்திருக்கும் இந்தக் காவற்பெண்டுகளில் ஒருத்தி கூட என்மேல் அன்புள்ளவள் என்றோ எனக்கெதிராக வாளோ நஞ்சோ எடுக்காதவளென்றோ

என்னால் சொல்ல முடியவில்லை. தேவி, உன்னைச் சூழ்ந்திருக்கும் அந்த ஐந்து கந்தர்வர் அன்றி இனி எனக்கு நம்பிக்கைக்குரிய எவரும் இல்லை” என்று சுதேஷ்ணை அவள் கைகளை பற்றிக்கொண்டாள். அவள் கண்களில் நீர் வழிந்து அடிவிழியின் சுருக்கங்களில் பரவியது.

திரௌபதி அவள் கைகளை தானும் பற்றியபடி “இரு சொல்லுறுதிகளை நான் அளிக்கிறேன், பேரரசி. என் கந்தர்வர்களால் இந்நகர் முற்றிலும் காக்கப்பட்டுள்ளது. நீங்களும். காவல்கொண்டுள்ளீர்கள். இந்நிலத்தை உங்கள் மைந்தன் உத்தரன் மட்டுமே ஆள்வான். அவனது கொடிவழியினர் இங்கு கோல்கொண்டு திகழ்வர்” என்றாள். அக்கைகளைப் பற்றி தன் இரு கண்களில் ஒற்றியபடி “நீ யார் என்று அறியேன். ஷத்ரியப்பெண் என்கிறாய். சேடி என்று வந்திருக்கிறாய். பேரரசிகளுக்குரிய சொற்களை சொல்கிறாய். என்னை அரசியென்று எண்ணவேண்டாம். உன் அன்னை என்று கருதுக! உன் கால்களை சென்னி சூடும் எளிய அடியவள் என்றே எண்ணுக! உன் அருளால் நான் இங்கு வாழவேண்டும். என் குடி விளங்கவேண்டும்” என்றாள் சுதேஷ்ணை. “நன்று நிகழும்” என்றாள் திரௌபதி.

முகம் மலர்ந்து அரசி “சின்னாட்களுக்கு முன் அவையில் அருகநெறிக் கணியன் ஒருவன் வந்தான். என் மகள் குருதியில் பேரரசர்கள் பிறப்பார்கள். பாரதவர்ஷத்தை ஒரு முடியும் கோலும் கொண்டு ஆள்வார்கள் என்றான். அன்று அவை கொண்ட திகைப்பை நான் இன்று நினைவுகூர்கிறேன். சில சொற்கள் காலமே முகம்கொண்டு வந்தவைபோல ஒலிக்குமல்லவா? அப்படி எழுந்தது அவன் கூற்று. அதை மறுத்து ஓர் எண்ணம் கொள்ள எளிய மனிதர்கள் எவராலும்

இயலாது. அன்று கீசகன் அங்கில்லை. அச்செய்தியை அறிந்து இரவெல்லாம் நிலைகுலைந்து தன் அறைக்குள் உலவிக்கொண்டிருந்தான் என்றார்கள். அவனுக்கு விலங்குகளுக்குரிய உள்ளுணர்வு உண்டு. இன்று அவையில் உன்னைப் பார்க்கையில் அவன் அனைத்தையும் தெரிந்துகொள்வான். உன் நிமிர்ந்த தலையும் தோள்களும் போதும், ஒரு சொல் எழவேண்டியதில்லை” என்றாள்.

சுதேஷ்ணையும் திரௌபதியும் தலைமைச் சேடியால் வழிநடத்தப்பட்டு இடைநாழிக்குள் நுழைந்தனர். இடைநாழியின் எல்லையில் அவர்களின் வருகையை நோக்கி நின்றிருந்த இசைச்சூதர் கையை அசைக்க கேகயத்தின் கொடியை ஏந்திய படைவீரன் முன்னால் சென்றான். மங்கல இசை முழக்கியபடி சூதர் குழு முன்னால் சென்றது. எண்மங்கலம் கொண்ட தாலங்களுடன் அணிப்பரத்தையரின் நிரை தொடர்ந்தது.

சுதேஷ்ணை பெருமூச்சுடன் “உண்மையில் இதை நான் எவரிடமும் பகிர்ந்துகொண்டதில்லை. இங்கு எவர் ஒற்றர் என்று கண்டுபிடிப்பது எளிதல்ல” என்றாள். திரௌபதி “இவற்றை நீங்கள் முற்றிலும் மறந்துவிட்டு அவை நுழையலாம்” என்றாள். “நாம் பேசுவது எவர் காதிலும் விழாது” என்றாள் அரசி. “இல்லை. பேசும் சொற்களின் உணர்ச்சிகள் உங்கள் முகத்தில் இருக்கும். தொலைவில் இருந்தே நீங்கள் எதைப்பற்றி என்னிடம் சொல்கிறீர்கள் என்பதை உங்களை அறிந்தவர்கள் உணர்ந்துகொள்ளமுடியும்” என்று திரௌபதி சொன்னாள். “மெய்யாகவா?” என்று கேட்டு சுற்றிலும் பார்த்தபின் “தெரியவில்லை. ஆனால் நீ சொன்னால் நான் பேசவில்லை” என்றாள் சுதேஷ்ணை.

அரசவைக்குச் செல்லும்பொருட்டு மகளிர்மாளிகையின் முதன்மைக்கூடத்தில் கூடி நின்றவர்களுடன் அவர்கள் சென்று சேர்ந்தபோது அங்கு வாழ்த்தொலிகள் எழுந்தன. சேடியர் நடுவே உத்தரன் இருப்பதை திரௌபதி பார்த்தாள். முதற்கணத்தில் பெண்களின் நடுவே அவன் இருப்பதை விழி தனித்தறியாததை எண்ணி இதழ்களுக்குள் அவள் புன்னகைத்துக்கொண்டாள். கண்களால் தேடி தன் சேடியருடன் முழுதணிக்கோலத்தில் நின்றிருந்த உத்தரையை கண்டாள். உத்தரன் அன்னையைப் பார்த்ததும் இரு கைகளையும் விரித்து "பாரதவர்ஷத்தை ஆளும் பேரரசி எவ்வண்ணம் இருக்கவேண்டுமோ அப்படி இருக்கிறீர்கள், அன்னையே" என்றான்.

சுதேஷ்ணை ஆர்வமில்லாமல் உத்தரையைப் பார்த்து "இன்று காலைகூட நடனப்பயிற்சிக்கு சென்றாய் என்றார்கள்" என்றாள். "ஆம், ஒவ்வொரு நாளும் செல்ல வேண்டுமென்று ஆசிரியரின் ஆணை" என்றாள். உத்தரன் சினத்துடன் திரும்பி "ஆணையா? நிஷத அரசகுமாரிக்கு ஆணையிடுவதற்கு அந்த ஆணிலிக்கு என்ன உரிமை? அவள் பணிந்து உன்னிடம் பேசவேண்டும். மாறாக ஒரு சொல் எடுத்தாளென்றால் என்னிடம் சொல். அவளுக்கு முறைமை என்ன, நெறி என்ன என்று நான் கற்பிக்கிறேன்" என்றான்.

உத்தரை அவனை திரும்பிக்கூட பார்க்காமல் அன்னையிடம் "இப்போதுதான் எனக்கு ஆடலில் மெய்யான ஆர்வம் வந்திருக்கிறது. ஒருநாள் செல்லாமலிருப்பது எனக்கும் கடினமானது" என்றாள். "அவையில் நீ ஏழெட்டு நாழிகை அமர்ந்திருக்கவேண்டும். அங்கு சென்று இரு நாழிகைப்பொழுது துள்ளிவிட்டு வந்தால் அவையில் அமர்ந்து அரைத்துயில்

கொள்வாய். முன்னரே இங்கு எவரும் அவை நிகழ்வுகளை நோக்குவதில்லை என்பது நகருக்குள் இளிவரலாக சுற்றிவருகிறது” என்றாள் சுதேஷ்ணை. உத்தரை “அவைநிகழ்வுகளை நோக்கி என்ன பயன்? யாரோ எதையோ செய்கிறார்கள். நாம் கொலுப்பாவைகள்போல் அமர்ந்திருக்கிறோம். இதற்கு நாம் செல்ல வேண்டிய தேவையே இல்லை. நம் வடிவில் ஓவியத்திரைச்சீலைகளை வரைந்துகொண்டு சென்று தொங்கவிட்டாலே போதும்” என்றாள்.

“என்ன சொல்கிறாய்? நீ நிஷத அரசகுமாரி” என்று உத்தரன் சொன்னான். “உனது சொற்கள் பாரதவர்ஷத்தின் ஐந்திலொரு பங்கு பகுதியை ஆள்கின்றன என்பதை மறக்காதே.” அரசி “நீ முதலில் உன்னை இளவரசி என நினை. நாம் எவரென்று உணராதிருக்கையில்தான் இத்தகைய சொற்கள் எழுகின்றன” என்றாள். திரௌபதி தாழ்ந்த குரலில் “இவை சேடியர் முன்வைத்து பேச வேண்டியவை அல்ல, அரசி” என்றாள். “ஆம். ஆனால் இவர்களை தனியாக நான் சந்திப்பதே இல்லை. தனியாக சந்திப்பதற்கு அழைத்தால் இருவருமே வருவதில்லை” என்றாள் அரசி. உத்தரை “வந்தாலென்ன? மீண்டும் மீண்டும் ஒன்றையேதான் சொல்வீர்கள். அதனால் எந்தப் பயனும் இல்லை என சொல்லும் நீங்களும் கேட்கும் நானும் அறிந்திருப்போம்” என்றாள்.

உத்தரன் உத்தரையிடம் “அன்னையிடம் முறைமை மீறி பேசவேண்டியதில்லை. உனக்கு உளக்குறை ஏதிருந்தாலும் என்னிடம் சொல்லலாம்” என்றான். உத்தரை “என்ன செய்வீர்கள்?” என்றாள் புருவத்தை தூக்கி. “கீசகரை அழைத்து ஆவன செய்யும்படி ஆணையிடுவேன். இங்கு நமது

ஆணைகளை நிறைவேற்றுவதற்காகவே அவர் பொறுப்பேற்றிருக்கிறார்" என்றான். "சென்று ஆணையிடுங்கள்" என்றாள் உத்தரை. "என்ன ஆணை?" என்று அவன் கேட்டான். அவள் வெறுப்பு தெரியும் முகத்துடன் "அவையிலிருக்கும் எவரேனும் ஒருவரை தலைகொய்ய ஆணையிடுங்கள் பார்ப்போம்" என்றாள்.

அவன் திடுக்கிட்டு "எவரேனும் ஒருவரையா? அது அறமல்ல" என்றான். அவள் "நன்று. எவரேனும் ஒருவர் அவையின் பின்நிரையிலிருந்து முன்நிரையில் வந்து அமரட்டும். அதற்கு ஆணையிடுங்கள்" என்றாள். "முறைமீறுவது அவையின் ஒழுங்கை கலைப்பது" என்று உத்தரன் சொன்னான். அவள் "சரி, அவையிலிருக்கும் அணிபடாம்களில் எதையேனும் ஒன்றைக் கழற்றி அப்பால் மாற்றுவதற்கு ஆணையிடுங்கள்" என்றாள். உத்தரன் "அணிபடாமை கழற்றுவதென்றால்..." என்றபின் "அதன் அரசியல் உட்பொருட்கள் என்ன என்பதை அமைச்சரிடம் உசாவிய பின்னர் அந்த ஆணையை இடுவேன். இன்றல்ல நாளை" என்றான். உத்தரை உதடுகள் கோண திரும்பிக்கொண்டாள்.

கோல்காரன் அறைவிளிம்பில் வந்து நின்று "அவைகூடிவிட்டது, பேரரசி. பேரரசர் அவை நுழையப்போகிறார். தங்களை அழைத்துவரும்படி படைத்தலைவரின் ஆணை" என்றான். உத்தரை "அதற்கும் படைத்தலைவர் ஆணை வேண்டுமா என்ன?" என்றாள். உத்தரன் குரல் தாழ்த்தி "நேரடியாக அவரைப்பற்றி எதுவும் இங்கு பேசவேண்டியதில்லை" என்றபின் சேடியரைப் பார்த்து "இவர்களில் எவர் ஒற்றரென்று நமக்குத் தெரியாது" என்றான். "அதையும் அவர்களை வைத்துக்கொண்டே சொல்லுங்கள்.

நன்று” என்று தலையை சிலுப்பியபடி உத்தரை தன் அணுக்கச்சேடியை நோக்கி மேலாடைக்காக கைநீட்டினாள்.

பொன்னூல் பணி நிறைந்த பீதர்நாட்டு இளஞ்செந்நிறப் பட்டாடையை சேடி அவள் கைகளிலும் தோள்களிலுமாக சுற்றி அணிவித்தாள். இன்னொரு அணிச்சேடி அவள் கழுத்திலிட்டிருந்த மணிமாலைகளை சீரமைத்தாள். அதை பார்த்தபின் உத்தரன் தன்னருகே நின்ற இன்னொரு சேடியிடம் மெல்ல “நான் உனக்களித்த கல்மணி மாலை எங்கே?” என்று கேட்டான். “பேழையிலிருக்கிறது” என்று அவள் மெதுவாக சொன்னாள். “அணிந்திருக்கலாமே?” என்றான் உத்தரன். சுதேஷ்ணையின் காதில் அவ்வுரையாடல் விழுந்தாலும்கூட அவள் அதை கேளாதவள்போல கோல்காரன் அருகே சென்று “செல்வோம்” என்றாள்.

வெள்ளிக்கோலை தூக்கியபடி கோல்காரன் “கேகயத்து அரசி, விராடப் பேரரசி, வருகை” என கூவியபடி முன்னால் செல்ல கேகயத்தின் கொடியுடன் கவசவீரன் தொடர்ந்தான். இசைச்சூதரும் அணிச்சேடியரும் அவர்களுக்குப் பின்னால் செல்ல, வலப்பக்கம் அரசியின் நீளாடையின் முனையை கையிலேந்தியபடி திரௌபதி தொடர, சுதேஷ்ணை அவை நோக்கி சென்றாள்.

# நீர்க்கோலம் - 39

### 38. முகில்பகடை

அரசவைக்கு அருகே இருந்த சிற்றறையில் விராடரும் அவருடைய அகம்படியினரும் அரசிக்காக காத்துநின்றிருந்தனர்.

பேரரசி வருவதைப் பார்த்து விராடரின் கோல்காரன் கையசைத்தான். அப்பால் பேரவையில் மங்கலஇசையும் வாழ்த்தொலிகளும் முழங்கின. அங்கிருந்த அமைச்சர் அழைக்க கோல்காரன் சீரடி வைத்து முன்னே சென்று அவைக்குள் புகுந்து அறிவிப்புமேடைமேல் வெள்ளிக்கோலைச் சுழற்றி "நிஷாதகுடிகளின் விராடக்கூட்டமைப்பின் தலைவர், நிஷதப் பேரரசர் மாமன்னர் மகாகீசகரின் வழித்தோன்றல், தீர்க்கபாகு அவை புகுகிறார்" என்று அறிவித்தான். வாழ்த்தொலிகளின் நடுவே இரு கைகளைக் கூப்பியபடி விராடர் நடந்து சென்று அரியணை அருகே நின்று இருபுறமும் நோக்கி வணங்கினார். இரு குடித்தலைவர்கள் வந்து அவரை வழிநடத்தி அரியணை அமரவைத்தனர்.

சுதேஷ்ணையின் கோல்காரன் அவை புகுந்து அவள் வரவை அறிவித்தான். "கேகயத்து அரசி, விராடபுரியின் பேரரசி, சுதேஷ்ணை அவைபுகுகிறார்" என்று அவன் கூவ அவை வாழ்த்தொலிகளை சீரான அலைகளாக எழுப்பியது. சுதேஷ்ணை அவைபுகுந்து வணங்கி அவை மேடையில் ஏற இரு மூத்தகுடி பெண்டிர் அவளை கைபற்றி அழைத்துச் சென்று அரியணையில் அமரவைத்தனர். அவளுடன் சீர்நடையிட்டுச் சென்ற திரௌபதி அரியணையின் பின்பக்கம் நின்றாள்.

ஏவலர் பொற்தாலத்தில் கொண்டு வந்த மணிமுடியை குடிமூத்தார் இருவர் விராடருக்கு அணிவித்தனர். மங்கல மூதன்னையர் இருவர் அரசியருக்குரிய மணிமுடியை சுதேஷ்ணைக்கு அணிவித்தனர். கருவூலத்திலிருந்து வந்த செங்கோலை மூத்த குடிமக்கள் இருவர் எடுத்தளிக்க விராடர் வாங்கி வலக்கையில் பற்றி ஊன்றிக்கொண்டார். அந்தணர் எழுவர் வந்து கங்கைநீர் தெளித்து விராடரையும் அரசியையும்

வாழ்த்தி வேதம் ஓதினர். அவர் கைகூப்பி அவ்வாழ்த்தை ஏற்று அமர்ந்திருந்தார்.

வாழ்த்தொலிகள் பெண்டிரின் குரவையொலிகளுடன் கலந்தொலித்துக்கொண்டிருக்க கோல்காரன் வந்து உத்தரனின் அவை நுழைவை அறிவித்தான். உத்தரன் சற்று அப்பால் அவையினர் அனைவரும் நோக்கும்படியாக நின்று தன் ஆடை மடிப்புகளை சீரமைத்துக்கொண்டிருந்தான். கழுத்தில் அணிந்திருந்த சரப்பொளி அவன் திரும்பித் திரும்பி சேடியரிடம் பேசுகையில் அடுக்கு குலைந்திருந்தது. அவன் பெயர் அறிவிக்கப்பட்டபோது ஒரு சேடி அதை சுட்டிக்காட்ட அவன் பதற்றத்துடன் அதை சீர் செய்யத்தொடங்கினான். அவன் பெயர் அறிவிக்கப்பட்டு முடிந்த பின்னரும் அவன் அதை அறியவில்லை.

இரு சேடியர் அவனைத் தொட்டு “இளவரசே, தங்கள் பெயர்” என்றனர். “என்ன?” என்று அவன் கேட்டான். ஒருத்தி உரக்க “அவை புகுங்கள்” என்றதும் துரத்தப்பட்டவன்போல பாய்ந்து அவைக்குள் புகுந்து விரைந்து வந்துவிட்டோமோ என்ற தன்னுணர்வை அடைந்து நின்று மிக மெல்ல நடந்து அரச மேடைக்கருகே வந்து கைகூப்பி வணங்கினான். அது நன்கு பயிலாத நடனம்போல் தோன்றியது. அவையின் பின்பகுதிகளில் சிரிப்பொலி எழுந்தது. அது தனக்குரிய பாராட்டென்று எடுத்துக்கொண்டு மீண்டும் ஒருமுறை வணங்கி அவன் நடந்து அன்னையருகே சென்று நின்றான்.

அங்கு நின்றிருந்த மூதன்னையர் கைகாட்டி “மறுபுறம்” என்றனர். “என்ன?” என்று அவன் கேட்டான். “தங்கள் இடம் மறுபுறம், இளவரசே” என்றாள் மூதன்னை. அவையே அக்குழப்பத்தை நோக்கி சிரித்துக்கொண்டிருந்தது. உத்தரன்

அரியணையை பின்பக்கமாக சுற்றி வந்து தந்தை அருகே நின்றான். தன் கழுத்திலணிந்திருந்த அணிகளை சீரமைத்து ஆடைமடிப்புகளை நீவிக்கொண்டான்.

உத்தரையின் கோல்காரன் அவை புகுந்து அவள் வரவை அறிவித்தான். "விராடபுரியின் இளவரசி உத்தரை அவை புகுகிறார்." உத்தரன் அவையினர் பேரொலி எழுப்பி அவளை வரவேற்பதை பார்த்தான். பின்பு திரும்பி அவள் அவை புகுவதை நோக்கினான். அவளை அவர்கள் மதிப்பது அவ்வொலியில் அவனுக்குத் தெரிந்தது. அது அவனுக்கு உவகையை அளித்தது. உத்தரையின் மேலாடை சற்றே சரிந்து பின்னால் இழுபட்டது. தொடர்ந்து வந்த சேடியிடம் உத்தரன் கையால் சுட்டி "மேலாடை, மேலாடை!" என்று காட்டினான். அவள் புருவம் தூக்கி "என்ன?" என்றாள். "மேலாடை" என்றான் அவன்.

அவனருகே நின்றிருந்த காவலன் "இளவரசே, அசையாமல் நில்லுங்கள்" என்றான். "ஏன்?" என்று அவனிடம் கேட்டான். காவலன் பல்லை கடிக்க அவன் திரும்பி சேடியிடம் "மேலாடையை பற்று, கால் தடுக்கப்போகிறது" என்று மீண்டும் சொன்னான். சேடி குனிந்து மேலாடையைப்பற்றி எடுக்க புன்னகையுடன் "ஆம்" என்று தலையசைத்தான். பின்னர் காவலனிடம் "என்ன சொன்னாய்?" என்றான். காவலன் பெருமூச்சுடன் தலைவணங்கினான்.

உத்தரை அவைபுகுந்து அனைவரையும் வணங்கி அரசமேடையில் ஏறி தன் அன்னையை நோக்கி செல்ல அவள் பின்னால் சென்ற அச்சேடியிடம் அவளுடைய ஆடை நீட்சியை மேலும் சற்று தூக்கிக்கொள்ளும்படி உத்தரன் கைகாட்டினான். அவள் இதழ்கோட புன்னகைத்து அப்பால் சென்றாள். உத்தரை

சென்று நின்று மீண்டும் ஒருமுறை வணங்கியதும் வாழ்த்தொலிகள் உச்சமடைந்து மறைந்தன. உத்தரன் தன் உடைவாள்மேல் கைவைத்து அதை மெல்ல அசைத்தான். அது எழுப்பிய ஓசை கேட்டு விராடர் திரும்பிப்பார்த்தார். காவலன் “வாள்மேல் கைவைக்க வேண்டாம், இளவரசே” என்றான். “ஏன்?” என்று அவன் கேட்டான். “அது முறைமை அல்ல” என்று அவன் சொன்னான். “நன்று” என்று அவன் கையை எடுத்தான். அந்தக் கையை எங்கு வைப்பது என்று தெரியவில்லை. ஆகவே மார்பில் கட்டிக்கொண்டான்.

அவை அமைதியடைந்திருந்தது. அது சோர்வின் அமைதி என அவர்கள் அமர்ந்திருந்தமை காட்டியது. எவரும் எதையும் செவிகொடுக்கவில்லை. நிமித்திகன் மேடையேறி விராட அரசகுடியின் கொடிவழியினர் பெயர்களை ஒவ்வொன்றாக அறிவித்துக்கொண்டிருந்தான். மகாகீசகரிலிருந்து தொடங்கிய இருபத்திஎட்டு அரசர்களின் பெயர்கள் சொல்லி முடிக்கப்படுகையில் வெளியே வாழ்த்தொலியும் சங்கொலியும் எழுந்தன. அனைவரும் உயிரசைவுகொண்டு திரும்பி நோக்கினர். நிமித்திகன் ஒருவன் உள்ளே வந்து அரசரை வணங்கி “மச்சர்குலத்து இளவரசர், பெரும்படைத்தலைவர் கீசகன் வருகிறார்” என அறிவித்தான்.

அவ்வாறு அவையறிவிப்பு அரசகுடியினருக்கு மட்டுமே அமைந்தது. ஆகவே அரசரிடம் கூறும் தன்மையில் திரும்பி ஆனால் அறிவிப்பின் குரலில் அதை அவன் சொன்னான். விராடர் கைகாட்டினார். அவர் ஏற்கெனவே அரைத்துயிலில் ஆழ்ந்திருந்தார். மங்கிய கண்களுக்கு கீழே தசைவளையங்கள் தளர்ந்து தொங்கின. வாய் சற்றே திறந்திருக்க அவ்வப்போது குறட்டைபோல் ஓர் ஓசை எழுந்தது. அரசி வாயிலை சுருங்கிய

விழிகளுடன் உற்று நோக்கிக்கொண்டிருந்தாள். உத்தரன் தன் ஆடையை சீரமைத்தபோது காவலன்மேல் கைபட அவனை நோக்கி புன்னகை செய்தான்.

தோளில் வெண்பட்டுச் சால்வை நழுவி தரையிழைய கங்கணம் அணிந்த பெரிய கைகளைக் கூப்பியபடி கீசகன் அவைக்குள் நுழைந்தான். உத்தரன் கீசகன் நுழைவதை பார்க்கவில்லை. சலிப்புடன் அவை முறைமையை கேட்டுக்கொண்டு எழுந்த கோட்டுவாயை அடக்கிக்கொண்டிருந்தவன் அவை பெருமுழக்கமிடுவதைக் கண்டு திடுக்கிட்டு வாயிலைப் பார்த்து கீசகன் நுழைந்ததைக் கண்டான். முழுதணிக்கோலத்தில் மெல்ல நடந்து அவைக்குள் வந்த கீசகன் விராடர் முன்வந்து முறைப்படி தலைவணங்கி முகமனுரைத்தான். "நிஷதப்பேரரசின் அரசருக்கு தலைவணங்குகிறேன். வெற்றியும் சிறப்பும் சூழ்க! திருமகள் மடியமர்க! படைநிரைகளை பார்வையிடச் சென்றிருந்தேன், வருவதற்கு சற்று பிந்திவிட்டது. பொறுத்தருளவேண்டும்."

சலிப்புடன் "நன்று" என்று விராடர் சொன்னார். கீசகன் சீர்நடையிட்டுச் சென்று அவனுக்குரிய பீடத்தில் அமர்ந்தான். அவன் அன்னச்சிறகு வடிவில் தோள்வளைகள் அணிந்திருந்தான். மார்பில் இடைவரை வந்த பெரிய சரப்பொளி நலுங்கியது. காதுகளில் மச்சக்குழைகளில் அருமணிகள் ஒளிசிதறின. இடையில் பொற்கச்சையை இறுக்கி அதில் செவ்வைரங்கள் அனலென சுடர்ந்த பொற்செதுக்குப்பிடி கொண்ட குத்துவாளை அணிந்திருந்தான். அவன் அமர்ந்தபோது அணிகள் பலநூறு இமைப்புகள் கொண்டன.

கீசகனுக்குரிய பீடம் பிற பீடங்களிலிருந்து தனித்து சற்று உயரத்தில் போடப்பட்டிருந்தது. மற்ற பீடங்களைவிட

மும்மடங்கு பெரிதாக, அவனுடலுக்கு உரியதாக வடிவமைக்கப்பட்டிருந்தது. அது பிறிதொரு அரியணை என்பதை அவையோர் அறிந்திருந்தனர். அவன் அப்பீடத்தில் சரிந்தமர்வதுவரை அவை வெடிப்பொலியுடன் வாழ்த்துரைத்தபடியே இருந்தது. அவன் அமர்ந்து அவையை நோக்கி தலையசைத்து வணங்கியதும் வாழ்த்தொலிகள் மெல்ல அமைந்து அவையினர் தங்கள் பீடங்களில் மீண்டும் அமர்ந்தனர். அவன் உடலை எளிதாக்கி கால்களை நீட்டிக்கொண்டு கைகளை மார்பில் கட்டிக் கொண்டான்.

உத்தரன் அவனுடைய பேருடலையே பார்த்துக்கொண்டிருந்தான். இரு கைகளும் இரு தனிமனிதர்களைப்போல் பீடத்தின் கைப்பிடியில் அமைந்திருந்தன. இரு தோள்களும் இருபக்கமும் விரிந்து எழுந்திருக்க அவன் தலை படகில் அமர்ந்திருக்கும் மனிதனைப்போல அவனுக்குத் தோன்றியது. அதை எவரிடமாவது சொல்ல விரும்பி திரும்பி காவலனைப் பார்த்துவிட்டு அவன் கண்களால் உளம் அடங்கப்பெற்றான். அவன் தொடைகளும் இரு மல்லர்களின் பெருவயிறுபோலத் தோன்றின. ஆனால் கணுக்கால்களும் பாதங்களும் மிகச் சிறியவை. அவன் அதை எவரிடமாவது சொல்ல விரும்பினான். ஆனால் காவலனுக்கு அப்பால் மறுபக்கம்தான் சேடியர் நின்றிருந்தனர்.

மீண்டும் நோக்கை விலக்கி கீசகனின் தோளிலிருந்து இறங்கி புயத்தின் தசையில் பாறைமேல் விழுதென வளைந்து படிந்து முழங்கையில் கிளைபிரிந்திருந்த நரம்பை உத்தரன் பார்த்தான். இளவயதில் அவன் மடியில் அமர்ந்து அந்நரம்புகளை அழுத்தி விளையாடும் வழக்கம் அவனுக்கு இருந்தது. “அது என்ன?”

என்று அவன் கீசகனிடம் ஒவ்வொரு முறையும் கேட்பான். “குருதிக்குழாய்” என்று அவன் சொல்வான். “அதற்குள் என்ன ஓடுகிறது?” என்று அவன் கேட்பான். “யவனமது, சற்று குருதி” என்று கீசகன் மீசையை சுட்டுவிரலால் சுழற்றியபடி சொல்ல அவன் தன் கையை நீட்டி அதில் மெல்லிய நீல நரம்பைக் காட்டி “இதில் என்ன ஓடுகிறது?” என்பான். “அதில் ஓடுவது அச்சம்” என்று சொல்லி தன்னைச் சூழ்ந்திருந்த அணுக்கர்களைப் பார்த்து நகைப்பான். அவன் வேடிக்கை சொல்லும்போது உடன் நகைப்பதையே தொழிலெனக்கொண்ட அவர்கள் நகைத்து கூச்சலிட்டு அறையை நிறைப்பார். உத்தரன் அவர்களை மாறிமாறி நோக்கியபின் தானும் நகைப்பான்.

கீசகனின் நோக்கு இயல்பாக அவையைத் துழாவி திரௌபதியைத் தொட்டு திகைத்து விலகி மீண்டும் அவளை வந்தடைந்து நிலைகொண்டது. அவள் அவன் விழிகளை நேருக்கு நேராக நோக்கியபின் இயல்பாக திரும்பிக்கொண்டாள். அந்நோக்கிலிருந்த இயல்புத்தன்மையால் சீண்டப்பட்டவன்போல அவன் மெல்ல அசைந்தான். மின்மினிகள் பரவிய மரத்தடிபோல அவன் உடலில் நகைமணிகள் ஒளியசைவுகொண்டன. வளைந்த மீசையை சுட்டுவிரலால் சுழற்றியபடி அவளையே நோக்கிக்கொண்டிருந்தான்.

உத்தரன் கீசகன் திரௌபதியை நோக்குவதை அப்போதுதான் பார்த்தான். திரும்பி திரௌபதியைப் பார்த்து அவள் தோள்களும் எத்தனை பெரியவை என்ற எண்ணத்தை அடைந்தான். பெண்களுக்கு அத்தனை பெரிய தோள்கள் அமைந்திருப்பதை அவன் முன்னர் கண்டதில்லை. முற்றிலும் நிகர்நிலைகொண்ட தோள்கள். எடைதூக்கும் துலா நடுவே நின்றிருக்கும் அச்சு என

தலை. நன்கு தீட்டி மெல்லிய எண்ணெய்ப் பூச்சு அளிக்கப்பட்ட கற்சிலை போன்று மின்னும் உடல். சுவரில் வரையப்பட்ட கொற்றவைப் பாவைகளில் விரிந்து எழுந்தவை போன்ற நீள்விழிகள். அலையலையென இறங்கி தொடை வரை வந்த நெளிகூந்தல். விரிந்த தோள்களுக்கும் திரண்ட பின்பகுதிக்கும் நடுவே இறுகிய இடை.

பெண்டிர் நிற்கையில் ஒரு காலை சற்று முன்நகர்த்தி இடையொசித்து தோள்சரித்து நிற்பதைத்தான் அவன் அதற்குமுன் பார்த்திருந்தான். பேராலயத்தில் எட்டு கைகளிலும் படைக்கலமேந்தி நின்றிருக்கும் கொற்றவையின் நிகர்நிலையில் அவள் நின்றமை அவனுக்கு அச்சத்தை அளித்தது. விழிகளை விலக்கிக்கொண்டான். அவளை எதிர்கொள்ள தன்னால் முடியாது எனத் தோன்றியது. மீண்டும் ஓரக்கண்ணால் அவளை பார்த்தான். மூக்கு வளைவு, சிறிய உதடுகள் அனைத்தும் சிற்பச்செதுக்கென கூர்மைகொண்டிருந்தன. அவன் பெருமூச்சுவிட்டான்.

அவன் அவையைப் பார்த்தபோது அங்கிருந்த அனைவரும் அவளைத்தான் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள் என்று உணர்ந்தான். அவைநிகழ்வுகள் வழக்கம்போல சென்றுகொண்டிருந்தன. பொதிவண்டியின் காளைகளின் கழுத்து மணியோசைபோல அவ்வுரையாடல் என்று அவனுக்குத் தோன்றியது. கூர்ந்து கேட்டால் வெவ்வேறு வகையான ஓசைகளும் தாளமும் தெரியும். பொதுவாகக் கேட்டால் ஒரே ஓசை மீண்டும் மீண்டும் எழுந்து கொண்டிருப்பதுபோல் தோன்றும். நிமித்திகர் அறிவிப்புகளை முடித்து இறங்கிச் சென்றதும் அமைச்சர் அவை மேடையில் ஏறி அன்று நிகழவேண்டிய அலுவல்களைப்பற்றி கூறினார். ஏடு

ஒன்றிலிருந்து ஆணைகளை அவர் படிக்க அருகே நின்றிருந்த சிற்றமைச்சர்கள் உரக்க “மறுப்புகள் உண்டா?” என்றனர். அவை சோர்ந்த கலைந்த குரலில் “இல்லை” என்றது. முரசில் ஒருமுறை முட்டி “ஆணை எழுந்தது!” என நிமித்திகன் அறிவித்தான்.

குடிமூத்தார் ஒருவர் எழுந்து சூலகக்குடியின் மேய்ச்சல்புறங்களில் சற்று வறட்சி இருப்பதையும் ஆநிரைகள் போதிய உணவில்லாமல் மெலிவதையும் கூறினார். அப்பகுதிக்கு மேலதிக உலர்புல் வந்து சேரும்படி வணிகர்களுக்கும் ஆணையிட வேண்டும் என்றார். விராடர் அவ்வண்ணமே என்று தலையசைக்க கீசகன் எழுந்து “எந்தக் குடிக்கும் அவர்களின் அன்றாடச் செயல்களை நிகழ்த்துவதற்கு அரசர் உதவலாகாதென்பது அரசநூல் வகுக்கும் நெறிகளில் ஒன்று. அவ்வாறு அரசு உதவத் தொடங்கினால் அது முடிவின்றி நீளும். இப்பகுதி ஆண்டில் ஒருமுறை மழையைப் பெறுவது என்பது உங்களுக்குத் தெரியும் ஆநிரைகளை அதையொட்டி பெருக்குவது உங்கள் பொறுப்பு. ஆநிரைகள் உண்பதற்கான உலர்புல்லை முன்னரே சேர்த்து வைக்காதது உங்கள் பிழை. உங்கள் பிழைகள் எதற்கும் அரசு நிகர் செய்யாது” என்றான்.

“ஆனால்...” என்று அவர் சொல்லத் தொடங்க “இது அரசநெறி. அதை மீற வேண்டுமென்று அரசர் ஆணையிட்டால் அவ்வண்ணமே” என்றான் கீசகன். விராடர் குறுஏப்பம் விட்டு “ஆம், அவர் சொல்வது சரியானதே. நாளை இதே கோரிக்கையுடன் பிறிதொருவர் வந்தால் நாம் என்ன செய்வோம்?” என்றார். அவர் உரக்க “சென்ற பதினாறு வருடங்களில் இம்முறைபோல ஒருமுறையும் மழை

பொய்த்ததில்லை. அதிலும் விராட நாடெங்கும் மழை பொழிந்தபோது எங்கள் மலைப்பகுதியில் மட்டும் மழை பொய்த்துள்ளது. இதை நிமித்திகர் உரைக்கவில்லை. கணியரும் கூறவில்லை. நாங்கள் எப்படி இதை முன் உணர்ந்திருக்க முடியும்?" என்றார்.

அவையை நோக்கித் திரும்பி "கேளுங்கள், எங்கள் மலைப்பகுதிக்கு முறையான வண்டிப்பாதை இல்லை. எனவே உலர்புல் வர இயலாதென்று வணிகர்கள் சொல்கிறார்கள். கழுதைகளிலும் அத்திரிகளிலும் புல்லை ஏற்றிக்கொண்டு வரலாம். அச்செலவை எங்களால் ஏற்க இயலாது. அதைத்தான் இந்த அவையில் நான் சொன்னேன்" என்றார். "நாங்கள் மரப்பட்டைகளையும் கற்றாழைகளையும் வெட்டி மாடுகளுக்கு உணவளிக்கிறோம். கோல்கொண்டமர்ந்த அரசனின் கீழ் கன்றுகள் உணவில்லாமல் இறந்தால் அந்தப் பழி எங்களுக்கில்லை..."

கீசகன் தாழ்ந்த குரலில் "நீங்கள் அரசுக்கு ஆணையிடுகிறீர்கள்" என்றான். அவர் அவனுடைய சிறிய கண்களைப் பார்த்து குரல் தணித்து நோக்கு விலக்கி "இல்லை, மன்றாடுகிறோம்" என்றார். "ஒன்றுமட்டும்தான் தடை இதில். இத்தருணம் மீண்டும் எக்குடிக்கும் நிகழலாம். ஒவ்வொரு முறையும் அரசு தன் கருவூலத்திலிருந்து கொடையளிக்க இயலாது. இத்தருணத்தை நீங்களே எதிர்கொள்ளவேண்டும். அதை பிற குடியினர் முன்மாதிரியாகக் கொள்ளவேண்டும். பிறிதொரு வழியில்லை" என்றான் கீசகன்.

உத்தரன் சலிப்புடன் திரும்பி பெருமூச்சுவிட்டான். விராடர் திரும்பி நோக்க சேடி ஒருத்தி வெற்றிலைத் தாலத்தை நீட்டினாள். அதில் ஒரு சுருளை எடுத்து வாயிலிட்டார் அரசர்.

அவள் மெல்ல பின்னகர உத்தரன் அவளிடம் “நான் எப்போது அமரமுடியும்?” என்று கேட்டான். “சற்று நேரத்தில்” என்று அவள் உதடசைவால் சொன்னாள். “கால் கடுக்கிறது” என்று அவன் சொன்னான். தன் விழிகளால் சுட்டிக்காட்டி ‘தரையில் அமருங்கள்’ என்றாள் அவள். உதடசைவிலிருந்து அவள் என்ன சொல்கிறாளென்பதை புரிந்துகொண்டு ‘உன்னை நான் பிறகு சந்திக்கிறேன்’ என்று அவன் விழிகாட்டினான். அவர்கள் விழிகளால் பேசிக்கொள்வதைக் கண்ட முதுமகளொருத்தி இளஞ்சேடியிடம் விழிகளால் ‘பின்னால் போ’ என்றாள். அவள் தலைதாழ்த்தி பின்னால் சென்றாள்.

உத்தரன் விழிகளை விலக்கிக்கொண்டு அவையை பார்த்தான். அனைவரும் சோர்ந்ததுபோல் இருந்தனர். சொல்லைப்போல் சோர்வுறச் செய்வது பிறிதில்லை என்று அவன் எண்ணினான். பிறிதொரு குடித்தலைவர் எழுந்து ஏதோ ஒரு கோரிக்கையை சொல்ல அனைவரும் கீசகனை பார்த்தனர். கீசகன் “அரசாணை குடிமுறைப்படி நிகழட்டும்” என்றான். “ஆம் அமைச்சரே, அரசாணை எழுக!” என்றார் விராடர். அமைச்சர் “இது சார்ந்து முன்னரே படைத்தலைவரின் செயலாணை ஒன்றுள்ளது. அதையே மீண்டும் பிறப்பிக்கலாம்” என்றார். “அவ்வண்ணமே” என்றார் விராடர். முரசு முழங்க ஆணை அறிவிக்கப்பட்டது.

❀வெளியே இருந்து காவலன் ஒருவன் எட்டிப்பார்த்துவிட்டு வெளியே செல்லப்போக விராடர் அவனை நோக்கி “வருக” என்றார். அவன் வந்து வணங்கி முகமன் உரைத்து “அரசரை சந்திக்க காந்தார நாட்டிலிருந்து நூல்கற்ற பேரறிஞர் ஒருவர் வந்துள்ளார். அவைபுக ஒப்புதல் உண்டா என்று வினவுகிறார்” என்றான். விராடர் அவைநிகழ்வுகளால் சலிப்புற்றவர் போன்றிருந்தார். ஆர்வத்துடன் “காந்தார நாட்டிலிருந்தா?

இத்தனை தொலைவுக்கு ஏன் வந்தார்?" என்றார். கீசகன் "அவர் ஷத்ரியர் அல்ல என்றால் அவைபுகலாம்" என்றான். "ஆம், ஷத்ரியர் அல்ல என்றால் அவரை சந்திக்க விரும்புகிறேன்" என்றார் விராடர். காவலன் வணங்கி வெளியே சென்றான்.

விராடர் கீசகனிடம் "நமது அவையில் நூல் கற்றோர் சிலரே. மேலும் சிலர் இருப்பது இந்நகரை ஆள்வதற்கு உதவும்" என்றார். கீசகன் இகழ்ச்சியுடன் "பதினாறு ஆண்டுகளாக இங்கு நகராள்கிறேன். இன்றுவரை நாம் செவிகொள்ளும் ஒரு சிறந்த கருத்தை எந்த நூலறிஞரும் சொன்னதில்லை. நாம் ஆணையிடுவதை இயற்றுவதற்கேகூட நாமே கற்றுக்கொடுக்க வேண்டியுள்ளது. இங்குள்ள அமைச்சர்கள் கண்டறிவதெல்லாம் அவற்றை இயற்றாமல் இருக்கும் குறுக்கு வழிகளை மட்டுமே" என்றான். விராடர் நகைத்து "ஆம், மெய்தான்" என்றார்.

சுதேஷ்ணை எரிச்சலை மறைக்கும்பொருட்டு சிரித்துக்கொண்டு "ஆனால் அறிஞர்கள் மிகுந்தோறும் அவைத்திறன் மேம்படுகிறது அல்லவா? நமது அரசு இப்போது வணிகத்திலும் அயலுறவிலும் விரிந்து வருகிறது. அவை பெருகுவது தேவைதான்" என்றாள். "அவை என்பது படை போன்றது. படைத்தலைவனின் எண்ணமே படையென பரு வடிவாகிறது. ஆள்பவனின் அறிவே அவையென அவன் முன் திரள்கிறது" என்று கீசகன் சொன்னான். "நாம் பார்ப்போம். காந்தாரத்திலிருந்து ஒருவர் வரும்போது புதிய சிலவற்றை நம்மால் எதிர்பார்க்க முடியுமல்லவா?" என்றாள் சுதேஷ்ணை. "ஐயமே தேவையில்லை. எந்த வினாவுக்கும் ஏதேனும் ஒரு நூல் வரியை மேற்கோள் காட்டும் பிறிதொரு கற்ற மூடராகவே அவர் இருப்பார். ஊன்றிக் கேட்டால் முதல்

மேற்கோளுக்கு முற்றிலும் மாறான பிறிதொன்றை சொல்வார்” என்று கீசகன் சொன்னான். அவன் அணுக்கர்கள் நகைத்தனர்.

காவலன் அவைக்குள் நுழைந்தபோது அத்தனை விழிகளும் அத்திசை நோக்கி திரும்பின. இரு புரியாக தாடியை முறுக்கி முடிச்சிட்டு, தலையில் கரிய துணியொன்றை பாகையாகக் கட்டி, மரவுரி அணிந்து, தோல்கச்சை சுற்றி கையில் சுவடிக்கூடையுடன் தருமன் அவை நுழைந்தார். அவையை வணங்கிவிட்டு மன்னரை நோக்கி இடைவரை குனிந்து வணங்கினார். “என் பெயர் குங்கன். காந்தார நாட்டவன். உவச்சர் குலத்தில் பிறந்து நிமித்தநூல் கற்றேன். கணிகனாகத் தேர்ந்தேன். எட்டு குருநிலைகளில் அரசுசூழ்தலையும் நெறிநூல்களையும் பயின்றேன். இன்று விராடப் பேரரசரின் அவை புகும் பேறு பெற்றேன். பேரரசியின் கருணையை அடைவேன் என்றால் நிறைவுறுவேன்” என்றபின் திரும்பி “ஆனால் இந்த அவையில் நான் மட்டுமே சொல்லும் சொல் என ஏதும் எழ வாய்ப்பில்லை. உள்ளே நுழைந்ததுமே அவ்வெளிமையுணர்வை அடைந்தேன். கருணையினால் என்னை அவையமர்த்துக! தகுதியினால் அல்ல” என்றார்.

விராடர் நகைத்து “ஏன்?” என்றார். “உள்நுழையும்போதே பெரும்படைத்தலைவரை பார்த்தேன். நான் முகக்குறிநூல் கற்றவன். எட்டுமுறை சொல்சூழ்ந்து உட்பொருள் அறியும் நுண்திறன் கொண்டவர் என்பதை காட்டுகிறது அவர் விழி. அவர் விழைந்தால் அவர் விழையும் சொல்லை கோத்து அளிப்பவனாக இருப்பேன்” என்றார். கீசகன் முகம் மலர்ந்ததை உத்தரன் பார்த்தான். சிறிய கண்களில் மெல்லிய நகைப்புடன் “எவரிடம் முகப்புகழ் உரைக்க வேண்டுமென்று அறிந்திருக்கிறீர்கள்” என்றான். “ஆம், தங்களிடம் புகழ்மொழிகள்

கரும்பாறையில் ஏவப்பட்ட அம்புகளென முட்டி பயனற்று உதிருமென்றும் உணர்ந்திருக்கிறேன்” என்றார் தருமன்.

உரக்க நகைத்தபடி கீசகன் “நன்று. சொல்தேர்ந்தவர் நீர்” என்றான். “அப்பால் நிமித்த குறியும் தேர்ந்தவன். அது என்னவென இந்த அவையில் என்னால் கூற முடியாது. ஆனால் மச்சஇளவரசருக்கு அது தெரியும் என அறிவேன்” என்றார் தருமன். கீசகன் கண்கள் ஒரு கணம் மாறின. அவன் விழிகளைத் தவிர்த்து மீண்டும் விராடரை வணங்கிய தருமன் “விராடபுரி பெருவெற்றியை அடையப்போகிறது. தென்னகம் முழுக்க இக்கொடி பறக்க இருக்கிறது. பாரதவர்ஷத்தின் அரசியல் நெறிகளை அமர்ந்து ஆய்ந்து அதை அறிந்த பின்னரே இங்கு வரத் தலைப்பட்டேன். இங்கு அவையமர்ந்திருக்கையில் இமயமலைமுடியில் அமர்ந்து சூழ்ந்த நிலவிரிவை பார்க்கும் முழுமை நோக்கை நான் அடைய முடியும். ஆகவேதான் நெடுந்தொலைவு நடந்து ஓராண்டு கடந்து இங்கு வந்து சேர்ந்தேன்” என்றார்.

மீசையைச் சுழற்றியபடி “என்னை நீர் முன்னறிந்திருக்கிறீரா?” என்று கீசகன் கேட்டான். “நேர்ச்சொல்லெடுத்து உரைக்கவேண்டும் என்றால் இளவரசே, நான் தங்களை மட்டுமே அறிந்தேன். இந்நகருக்குள் புகுந்த பின்னரே தாங்கள் அரசரல்ல படைத்தலைவரென்று அறிந்தேன்” என்றார் தருமன். “நன்று குங்கரே, நீர் இந்த அவையில் அமரலாம். விழைந்த இடத்தை விளையும் செயல் மூலம் அடையலாம்” என்று கீசகன் சொன்னான். சுதேஷ்ணை “குங்கரே, தாங்கள் இங்கு அவை நுழைகையில் இங்கொரு சொல்லாடல் முடிந்திருந்தது. அதை அமைச்சர் உரைப்பார். உம் கருத்து என்ன என்று

சொல்லும்” என்றாள். தருமன் “ஆணை, அரசி” என தலைவணங்கினார்.

அமைச்சர் சொல்லி முடித்ததும் தருமன் கீசகரை நோக்கி “தாங்கள் உரைத்தவற்றிலிருந்து மாறுபட்டு நான் உரைக்கிறேன் என்றால் பொறுத்தருள்க, இளவரசே. என் சொல் மாறுபடுமென்றால் என் அறிதல் பிழையானதென்பதை முன்னரே ஒப்புக்கொள்கிறேன்” என்றபின் “ஒரு குடி அடையும் இழப்புகளுக்கு ஒருபோதும் அரசு நிகர் செய்யலாகாது. அது வரும் நாளில் வரவிருக்கும் அனைத்து இழப்புகளுக்கும் அத்தனை குடிகளும் அரசிடம் இழப்புக்கொடை கேட்க வாய்ப்பளிக்கும். அரசின் செயல் ஒரு தனிநிகழ்வு அல்ல, முடிவிலாது நீண்டு எழப்போகும் அனைத்து செயல்களுக்கும் முற்கோளும் கூட. எந்த முடிவும் இது இனி வரும் காலங்களில் எப்படி தொடரும் என்று எண்ணாமல் எடுக்கப்படலாகாது” என்றார்.

“அத்தருணத்தில் உரிய முடிவை எடுப்பவர்கள் எண்ணிச் சூழ்பவர்கள். வரும் தருணத்தையும் எண்ணி அம்முடிவை எடுப்பவர்களே பேரரசுகளை உருவாக்குபவர்கள். அவர்களால்தான் பெருநிலங்களை ஆளமுடியும்” என்றார் தருமன். “ஓர் அவையில் அத்தகைய ஒருவர் மிக அரிதாகவே அமையமுடியும், மலைகள் நடுவே உச்சிமுடிபோல. அத்தகையோரை புரிந்துகொள்ள முயலக்கூடாது. அடிபணிந்தாகவேண்டும்.”

மீசையை சுட்டுவிரலால் நீவியபடி புன்னகையுடன் தருமனையே பார்த்துக்கொண்டிருந்தான் கீசகன். தருமன் தலைவணங்கி “நான் தங்கள் சொல்லுக்கு மாற்றென எதுவும் சொல்லவில்லை என்று எண்ணுகின்றேன்” என்றார். இல்லை

என்பதுபோல் கீசகன் கைகாட்டினான். “அப்படியானால் எந்தக் கொடையும் அளிக்கவேண்டியதில்லை அல்லவா?” என்று விராடர் கேட்டார். “இல்லை அரசே, ஒரு குடியை கைவிடுவதும் முற்கோளென்றாகுமே? வருங்காலத்தில் இடருறும் குடிகளை அரசு காக்காதென்பது ஒரு சொல்லென்று நிலைபெறுமே? ஆகவே அதை தவிர்த்தே ஆகவேண்டும்” என்று தருமன் சொன்னார்.

கீசகன் விழிகள் சற்று சுருங்க கூர்ந்து பார்த்தான். “இந்நாட்டில் எங்கு வழக்கத்திற்கு மிகுதியாக மழை பெய்துள்ளதென்று பார்ப்போம். பொய்த்த மழையின் முகில்கள் அங்கு சென்று பெய்திருக்கின்றன என்றே அதற்குப் பொருள். அந்த மழையைப் பெற்றவர்கள் இம்முறை சென்ற முறையைவிட மிகுதியாக அளிக்கவிருக்கும் வரியை மழைபொய்த்த குடியினருக்கு அளிக்கட்டும். பின்னாளில் இவர்கள் மண்ணில் மழை பொழியும்போது அதை கருவூலத்திற்கு அளிக்கட்டும். எவரும் கைவிடப்படவும் இல்லை. எவருக்கும் அரசுக் கருவூலம் கொடையளிக்கவும் இல்லை என்றாகும்” என்றார் தருமன்.

சில கணங்கள் அவை அமைதியாக இருந்தது. அது கீசகனின் சொல்லுக்காக காத்திருந்தது. கீசகன் எழுந்து “உரிய சொல், உரிய முறையில் உரைக்கப்பட்டது. நன்று” என்றான். “ஆம், அறிஞனின் சொல்! நெறியையும் நெறிக்கு அப்பால் செல்லும் உள்ளுணர்வையும் வெளிப்படுத்துவது. நாம் நமது அவையில் முதன்மை அறிஞர் ஒருவரை பெற்றிருக்கிறோம்” என்று விராடர் சொன்னார். அவை வாழ்த்துக்குரலெழுப்பியது. தருமன் அவைநோக்கி தலைவணங்கினார். “இந்த அவையில் முதன்மை அறிஞராக தாங்கள் வீற்றிருக்கவேண்டும், குங்கரே” என்று விராடர் சொன்னார்.

“பெரும்படைத்தலைவர் அவ்வாறே ஆணையிடுவாரென்றால் அது என் நல்லூழ்” என்றார் தருமன். “நாம் உம்மை அவ்வாறு பணிக்கிறோம்” என்று கீசகன் சொன்னான். கீசகனை நோக்கி மீண்டும் ஒருமுறை தலைவணங்கினார் தருமன். உத்தரன் நீள்மூச்சுவிட்டு அசைந்து நின்றான். அவனிடம் காவலன் “இனி தாங்கள் அமரலாம், இளவரசே” என்றான். “இனி நூலாய்வுதான்.” உத்தரன் “அவை முடியப்போகிறது. இனி அமர்ந்தால் என்ன, இல்லையேல் என்ன?” என்று முணுமுணுத்தபடி தனக்கு அளிக்கப்பட்ட பீடத்தில் அமர்ந்தான்.

# நீர்க்கோலம் - 40

## 39. நிலைக்கல்

“ஒவ்வொரு தருணத்திலும் வாள்முனையில் குருதித்துளி என வரலாறு ததும்பி திரண்டு காத்திருக்கிறது. ஓர் அசைவு, ஒரு காற்று போதும்” என்று விறலி சொன்னாள். “அவ்வாறு நிகழ்ந்தது அந்த ஊண்மனைக் கொலை. நளன் வாள்தாழ்த்திய பின்னரே என்ன நிகழ்ந்தது என உணர்ந்துகொண்டார். மேலும் முன்னகர்வதே வழி என அவர் வாள் அவரிடம் சொன்னது. அவர் ஆணைக்கேற்ப காளகக்குடியினர் உணவை அள்ளி வாயிலிட்டு உண்ணத் தொடங்கினர். பெரும்பாலானவர்களுக்கு அன்னம் இறங்கவில்லை. மூச்சு திணறினர், இருமினர். நீரை எடுத்துக் குடித்து அதையும் விழுங்க முடியாது குமட்டல் கொண்டனர்.”

அகத்தளத்தின் சிற்றவையிலமர்ந்து சுதேஷ்ணையும் திரௌபதியும் விறலியின் கதையை கேட்டுக்கொண்டிருந்தனர். “அன்று பந்தியிலிருந்து எழுந்து சென்றவர்கள் பலரும்

நடக்கமுடியாமல் படிகளில் கால்தளர்ந்து அமர்ந்தனர். சிலர் வெளியே வாயுமிழ்ந்தனர். சிலர் தேரிலேறி அமர்ந்ததும் கண்கலங்கி அழத்தொடங்கினர். செய்தி நகரெங்கும் பரவியதும் குடிகள் அனைவருமே நளனுக்கும் தமயந்திக்கும் எதிராகத் திரும்பினர். ஆனால் படைகளின் வாள்நிழலில் சொல்லெடுக்க எவராலும் இயலவில்லை. குடிக்கூடல்களில் முணுமுணுப்புகளாக, உறுமல்களாக எதிர்ப்புகள் எழுந்தன" என்றாள் விறலி.

புஷ்கரன் தன் அரண்மனைக்குச் சென்றதுமே கருணாகரர் சென்று அவனை வயப்படுத்த முயன்றார். மூத்தவனுக்கும் இளையவனுக்குமான பூசலை முடிந்தவரை சீரமைக்க எண்ணினார். ஆனால் புஷ்கரன் எவ்வகையிலும் செவிகொடுக்க சித்தமாக இருக்கவில்லை. குடித்தலைவரின் இறப்பு நிகழ்ந்த அந்நாளில் மணமங்கலம் நிகழமுடியாது என்று அவன் சொன்னான். காளகக்குடி மூத்தவர் எழுவர் சென்று தன் அகத்தளத்து அவையில் அவர்களை சந்தித்த தமயந்தியிடம் சீர்ஷரின் உடலை தங்களிடம் ஒப்படைக்கவேண்டும் என்று கோரினர். அவள் அவரை அரசமுறைப்படி சிதையேற்ற தானும் உடன் வருவதாக சொன்னாள். அவர்கள் அதற்கு ஒப்பாமல் அந்த உடலை தாங்களே தங்கள் குலமுறைப்படி சிதையேற்றுவதாக சொன்னார்கள். அவர்கள் ஒருவரோடொருவர் விழிதொட்டுக்கொள்ளவே இல்லை.

"அவர் குடித்தலைவர். அவருடைய உடல் அரசச்செங்கோல் தாழாமல் சிதையேற முடியாது" என்றாள் அரசி. "இங்கே தெற்கு மயானத்தில் அவரை சிதையேற்றுவோம். அனைத்து ஏற்பாடுகளும் செய்யவேண்டும் என்று நான் கருணாகரருக்கு ஆணையிடுகிறேன். அரசியென நான் வந்து சிதைமுன்

முடிதாழ்த்துகிறேன்.” அவர்கள் சொல்லில்லா முகத்துடன் நின்றனர். “குடியவை கூடுக! அரசுமேல் எத்தகைய பழிநிகரை அவர்கள் ஆணையிட்டாலும் அதை ஏற்கிறேன்” என்றாள். அவர்கள் ஒருவரை ஒருவர் நோக்கிக்கொண்டார்கள். கருணாகரர் “ஏதேனும் ஒரு வழியை நாம் கண்டடைந்தே ஆகவேண்டும், குடித்தலைவர்களே” என்றார். “அதன்பொருட்டு எதற்கும் நான் ஒருக்கமே” என்று தமயந்தி சொன்னாள்.

அவர்களில் மூத்தவரான சுநீதர் “அதை நாங்கள் கூடிப் பேசி முடிவெடுத்து சொல்கிறோம். அதற்குமுன் சீர்ஷரின் உடலை எங்களிடம் அளிக்க ஆணையிடுக! அவரை நாங்கள் எங்கள் குடிமண்டபத்திற்கு கொண்டுசென்று வைத்து பிழைநிகர் செய்யவேண்டும். அதற்கு பன்னிரண்டு நிலை சடங்குகள் உள்ளன என்கிறார்கள். அதன் பின்னர் நாளை புலரியில் சிதையேற்றம் நிகழட்டும்” என்றார். “ஆம், உங்கள் குடியவை கூடி ஆவன செய்யட்டும். அது ஆணையிடும் எச்செயலுக்கும் அரசு ஒருக்கமாகவே உள்ளது” என்றாள் தமயந்தி. அவர்கள் அதை ஏற்று பிறவற்றை பின்னர் உரைப்பதாக உறுதியளித்து திரும்பிச்சென்றார்கள்.

சீர்ஷரின் உடலில் வெட்டுண்ட தலையை சேர்த்துப்பொருத்தி தையலிட்டனர் மருத்துவர். அதை கஸ்தூரியும் புனுகும் சவ்வாதும் பூசி சந்தனப்பேழையில் நிறைத்த நறுமணநீற்றில் வைத்து ஏற்றி காளகக்குடிகளின் குடிமண்டபத்திற்கு அனுப்பி வைத்தார்கள். அரசின் சார்பில் நளனின் உடைவாளை ஏந்தி சிம்மவக்த்ரன் செல்ல மணிமுடியின் இறகொன்றை தன் தலையில் சூடியபடி நாகசேனர் உடன் சென்றார். சீர்ஷரின் உடல் அரண்மனை வளைவை விட்டு பெருஞ்சாலையை அடைந்ததும் அங்கு கூடியிருந்த மக்கள் குறுமுழவுகளையும்

துடிகளையும் முழக்கி பெருங்குரலில் வாழ்த்தொலி எழுப்பினர். காளகக்குடியினர் நெஞ்சில் அறைந்து அழுதபடி தேருக்குப் பின்னால் ஓடினர்.

கருணாகரரை அழைத்த அரசி “அங்கே குடியவை கூடட்டும். அதற்கு நானே மணிமுடியும் செங்கோலுமாகச் சென்று அவை நிற்கிறேன். அவர்கள் என்னை எச்சொல்லால் பழித்தாலும் ஏற்றுக்கொள்கிறேன். இத்தருணத்தை நாம் கடந்துசென்றே ஆகவேண்டும், அமைச்சரே” என்றாள். “ஆம், ஆனால் உடல் அங்கு சென்றதும் குடிகளின் உணர்ச்சிப்பெருக்கு சற்று நேரம் அலையடிக்கும். அது சற்று அடங்கட்டும். மூத்தார் அவையமர்ந்துவிட்டார்கள் என்ற செய்தி வந்ததும் தாங்கள் கிளம்பலாம்” என்றார்.

“அவர்கள் அரசர் வந்து பிழைபொறுக்கக் கோரவேண்டுமென விரும்புவார்கள். அரசரிடம் பேசி அழைத்துவருகிறோம் என்போம். அதற்கு நமக்கு இரண்டு நாட்கள் பொழுது கிடைத்தால் போதும். இப்போதுள்ள உணர்வெழுச்சிகள் இரண்டு நாட்களுக்குள் நுரையடங்குமென நினைக்கிறேன்.” தமயந்தி பெருமூச்சுவிட்டு “எண்ணிப் பார்க்கையில் அச்சம் சூழ்கிறது. நாமறியா ஏதோ தீயூழ் சூழ்வதுபோல” என்றாள். கருணாகரர் வெறுமனே தலைவணங்கினார்.

ஆனால் சீர்ஷரின் உடலை அவர்கள் குடிமண்டபத்தில் மக்கள் முன் வைக்கவில்லை. அரசப்படைகளிடமிருந்து அதை பெற்றுக்கொண்டு அப்படியே தட்டுத்தேர் ஒன்றில் ஏற்றிக்கொண்டு நகரைவிட்டு வெளியேறினர். அவர்களுடன் காளகக்குடிகளின் பெருந்திரள் சூழ்ந்து வெறிக்கூச்சலும் போர்விளியும் முழக்கியபடி சென்றது. சிம்மவக்த்ரன் புரவியில் திரும்பி வந்து தன் அறையில் நிலையழிந்து காத்திருந்த

தமயந்தியிடம் செய்தியை சொன்னான். கருணாகரர் “மிகச் சிறந்த சூழ்ச்சி. அவ்வுடலுடன் அவர்கள் விஜயபுரிக்கு திரும்பிச் செல்வார்கள் என்றால் செல்லும் வழியெங்கும் காளகர் அவர்களுக்குப்பின் திரள்வார்கள். பிற குடியினரும் அவர்களுடன் இணைவதற்கான வாய்ப்புகளே தென்படுகின்றன. இறந்த உடல்போல மிகச் சிறந்த படைக்கொடி பிறிதில்லை” என்றார். “அவர்களை தடுத்து நிறுத்துவோம்” என்றார் நாகசேனர். “இல்லை, இத்தனை பெருங்கூட்டம் உடன்செல்கையில் அதை செய்ய முடியாது” என்றான் சிம்மவக்த்ரன்.

நாகசேனர் “இந்த எண்ணம் எவர் உள்ளத்தில் எழுந்தது? இத்தனை தெளிவாக திட்டமிட அங்கு எவருமில்லையே?” என்றார். “அது கலிங்க இளவரசியின் திட்டம்” என்றார் கருணாகரர். “அவளை கலிங்க அரசவையில் நான் முதலில் கண்டபோது அந்தச் சூழ்ச்சி எதையும் உணரமுடியாத மெல்லியள் என்று எண்ணினேன். அவள் அவையில் எழுந்து நின்று நீர்படர்ந்த விழிகளுடன் புஷ்கரரை அவளுக்குத் தெரியாது என்று சொன்னபோது பிறிதொன்றாக அது இருக்கவியலாதென்றே எண்ணினேன். பதினேழு அகவை முடிந்ததும் எந்தை என்னை அமைச்சுப்பணிக்குள் கொண்டுவந்தார். இங்கே அமைச்சனாக ஆகி நாற்பதாண்டுகள் கடந்துவிட்டன. இத்தனை ஆண்டுகளில் நான் கண்ட முகங்கள் பல ஆயிரம். என் கணிப்பு முற்றிலும் பிழையானது இவளிடம்தான்.”

தமயந்தி கசப்பான புன்னகையுடன் “அவள் இதை வகுக்கவில்லை, அமைச்சரே” என்றாள். கருணாகரர் “அரசி, அவள்…” என சொல்லத்தொடங்க “அவளால் சிறிய அடுமனை

சூழ்ச்சிகளை மட்டுமே எண்ண முடியும். இத்தனை விரிவாக அரசசூழ்ச்சிகளை வகுக்க முடியாது. அதற்கு நிஷதகுடிகளின் அடுக்குகளை, அவர்களின் உணர்வுகளை, இங்குள்ள அரசியல் தருணத்தை நன்கறிந்திருக்கவேண்டும். அவளுக்கு நூலாயும் வழக்கமே இல்லை" என்றாள் தமயந்தி. "அவளுடன் பிறிதொருவன் இருக்கிறான். ரிஷபன் என்பது அவன் பெயர். அவன் வகுத்தது இது." கருணாகரர் தயக்கத்துடன் "அவனா? அவனைப்பற்றி..." என்றார். "ஒற்றர்செய்திகள் எனக்கும் வந்தன. அவளுடைய கரவுக்காதலன். ஆனால் அது மட்டுமல்ல அவன் பணி. அவன் அவளை அருகிருந்து இயக்குகிறான்" என்று தமயந்தி சொன்னாள்.

"அவ்வண்ணமென்றால் நாம் இனிமேல் அவனுடன்தான் கருநீக்கி களமாடவிருக்கிறோம்" என்றார் நாகசேனர். "யாரென்று அறியாத ஒருவனுடன். அவன் எதற்கு இதை செய்யவேண்டும்? மாலினிதேவியின் கொழுநனாக அவனால் முடிசூட்டிக்கொள்ளமுடியுமா என்ன? அவனை காளகர் ஏற்பார்களா?" தமயந்தி "அவளை ஏற்கலாமே? புஷ்கரன் போரில் இறந்தார் என்றால் முதிராமைந்தன் ஒருவனை முடிசூட வைத்து அவள் அரசாளலாமே?" என்றாள்.

கருணாகரர் "அவன் கலிங்க மன்னர் சூரியதேவருக்கு அவருடைய முதிய அகவையில் நாகர்குலத்து இளவரசி ஒருத்தியில் பிறந்த மைந்தன் என்கிறார்கள் ஒற்றர். அவன் பானுதேவரிடம் அணுக்கனாக இளமையிலேயே வந்து சேர்ந்துகொண்டிருக்கிறான். அரண்மனையில் அவருடைய மைந்தன் போலவே வளர்ந்திருக்கிறான். அப்போதுதான் அவனுக்கும் மாலினிதேவிக்கும் உறவு அமைந்திருக்கிறது. அது உடன்பிறந்தார் உறவு என்றே அரண்மனையினர்கூட

எண்ணுகிறார்கள். பானுதேவருக்கே அதை குறித்து சரியாகத் தெரியுமா என்று தெரியவில்லை. ஆனால் அங்கே அவருடைய அரசின் முதன்மை அரசுசூழ்வோனாக அவனே திகழ்ந்தான்" என்றார்.

"புஷ்கரனை வென்றெடுக்கும் சூழ்ச்சியேகூட அவனிடமிருந்து தொடங்கியிருக்கலாம் என்கின்றனர் நம் ஒற்றர். அவனுக்கு மகதம், வங்கம், அவந்தி, மாளவம் என அனைத்து அரசர்களுடனும் நேரடித்தொடர்பு உள்ளது. அவர்களின் ஒற்றர்களை அவன் நாள்தோறும் சந்தித்துக்கொண்டிருந்தான் எனத் தெரிகிறது" என்று கருணாகரர் சொன்னார். தமயந்தி "அவனைப் பற்றிய அனைத்து செய்திகளையும் அறிந்துவர ஒற்றர்களை அனுப்பியிருக்கிறேன். அந்த நாககுலத்து அரசி என்பவர் யார் என்று அறிந்துவர தலைமை ஒற்றர் சமதரே சென்றிருக்கிறார்" என்றாள்.

செல்லும் வழியெங்கும் சீர்ஷரின் உடல் மன்றுவைக்கப்பட்டு காளகக்குடிகளால் அரிசியிடப்பட்டு வணங்கப்பட்டது. செல்லச்செல்ல அனைத்து நிஷதகுடிகளும் திரளலாயின. அவருடைய இறப்பைப்பற்றிய கதைகள் ஒன்றிலிருந்து ஒன்றெனக் கிளைத்து வளர்ந்தன. அனைத்து கதைகளிலும் எதிரியாக தமயந்தியே இருந்தாள். அவர் ஊண்நிரையில் தமயந்தியால் உரிய பீடம் அளிக்கப்படாது சிறுமைப்படுத்தப்பட்டார் என்றும் அதை எதிர்த்துப் பேசியபோது நளனால் கழுத்து வெட்டப்பட்டார் என்றும் எளிய கதையே முதலில் சொல்லப்பட்டது. அவர் கலிக்கு ஒரு பிடி அன்னம் எடுத்துப் படைத்து வணங்கியபின் உண்டதைக் கண்டு தமயந்தி சினந்து எழுந்து அவர் தலையை வெட்ட ஆணையிட்டாள் என்று அக்கதை உருமாறியது.

உணவுக்குமுன் அனைவரும் இந்திரனை வணங்கி அவன் மிச்சில் என எண்ணி அன்னத்தை எடுக்கவேண்டும் என்று புஷ்கரன் அறிவித்தபோது சீர்ஷர் மட்டும் வாளாவிருந்ததாகவும், அதைக் கண்ட புஷ்கரன் அவர் ஏன் இந்திரனை வணங்கவில்லை என்று கேட்டபோது கலியின் காலடிகளை அன்றி பிறிதொரு தெய்வத்தை அவர் வணங்குவதில்லை என்று அறிவித்ததாகவும், இந்திரனை அவர் வணங்கியாகவேண்டும் அது அரசாணை என புஷ்கரன் சொன்னதாகவும் ஒரு கதை சொன்னது. “என் தெய்வம் கரிநிறக் கலி. என் கொடி காகம். பிறிதொரு தெய்வமும் இல்லை. தலைக்குமேல் மற்றொரு கொடியும் இல்லை” என்று சீர்ஷர் சொன்னார். சினந்தெழுந்த தமயந்தி அவர் இந்திரனை வணங்காவிட்டால் அவர் தலை அப்போதே வெட்டி உருட்டப்படும் என அறிவித்தாள்.

“என் தலை உருளும், வணங்காது” என்றார் சீர்ஷர். அவருடைய தலையை வெட்ட அரசி ஆணையிட்டாள். வீரர்கள் எவரும் வாள் உருவவில்லை. நளனிடம் வெட்டும்படி சொன்னாள். அவன் திகைத்து நின்றான். “நீர் என் குழந்தைக்குத் தந்தை என்றால் வெட்டுக” என்று அரசி தன் மகன் தலைமேல் கைவைத்து ஆணையிட்டாள். “இல்லையேல் இக்கணமே இவனுக்கு நீர் தந்தை அல்ல என்று சொல்லிடுவேன்” என்றாள். நளன் வாளை உருவி சீர்ஷரை வெட்டினான். அவர் முகத்திலிருந்த புன்னகை வெட்டுண்ட தலையிலும் இருந்தது. அவர் உடல் அசையாமல் அப்படியே நின்றது.

அரசி அதை உதைத்துத் தள்ளும்படி நளனிடம் சொன்னாள். நளன் ஏழு முறை உதைத்த பின்னரே உடல் நிலத்தில் விழுந்தது. நளன் தலையை எடுத்து அரசியின் காலடியில்

வைத்தான். அவள் அதை தன் கால்களால் தொட்டு உருட்ட அவள் பாதங்கள் குருதியால் சிவந்தன. “இந்திரனை வணங்கி அனைவரும் அன்னம் கொள்க!” என்று அரசி ஆணையிட்டாள். ஆனால் காளகக்குடித் தலைவர்கள் அனைவரும் ஒரே குரலில் “கலிதேவனே வாழ்க” என்று உரைத்து அவ்வுணவை எடுத்து உண்டார்கள். அதைக் கண்டு அரசி சினத்துடன் கூச்சலிட்டபடி எழுந்தாள். ஆனால் பிற குடிகளும் அதைப்போல கலியை வணங்கியபடி உண்ணத்தொடங்க அவளால் அங்கே நிற்கமுடியவில்லை. வெறிகொண்டு தன் ஆடையை கிழித்துவீசியபடி, அலறிக்கூச்சலிட்டபடி அவள் வெளியே ஓடினாள்.

அரண்மனை இடைநாழிக்கு ஓடி அவள் அங்கிருந்த வீரர்களிடம் “கலியை வணங்கும் அனைவரையும் கொல்லுங்கள்! அவர்களின் தலைகளை கொண்டுவாருங்கள்!” என்றாள். சிம்மவக்த்ரன் “கொல்லுங்கள். கலிவழிபாடு செய்பவர்களை கொன்று குவியுங்கள்” என வாளை உருவி ஆணையிட்டான். ஆனால் நிஷதவீரர்கள் அனைவரும் அசையாமல் நோக்கி நின்றனர். அரசி ஓசை கேட்டு ஓடிச்சென்று சாளரம் வழியாக நோக்கினாள். நகரில் உணவுண்ணக் குவிந்திருந்த பல்லாயிரம் குடிகள் ஒரே குரலில் “எங்கள் குலமாளும் தேவா, காகக்கொடி கொண்டவனே, கலிவீரனே வாழ்க!” என முழங்கி அன்னம் எடுத்து உண்ட ஓசை பெருமுரசுகளின் முழக்கமென எழுந்து அவளை சூழ்ந்தது.

தன் தலைமயிரைப் பிடித்து இழுத்து அவள் கூச்சலிட்டாள். தூண்களை ஓங்கி ஓங்கி உதைத்தாள். “எவரையும் விடப்போவதில்லை. கலிவணக்கம் செய்பவர் அனைவரையும்

வேருடன் அழிப்பேன்” எனக் கூவினாள். அப்போது அவள் நிழலாக பின்பக்கச் சுவரில் ஒரு பேருருவம் எழுந்தது. அதைக் கண்டு அஞ்சி அவள் திரும்பி ஓடினாள். படிகளில் ஏறமுடியாமல் மயங்கி விழுந்தாள். “அவளை தூக்கிச்சென்றவர்கள் அந்த நிழல் சுவரில் அப்படியே ஓர் ஓவியமெனப் பதிந்து நின்றிருப்பதைக் கண்டு அஞ்சி ஓலமிட்டனர்” என்றாள் அக்கதையைச் சொன்ன முதிய விறலி. அதைக் கேட்டு நின்றவர்கள் கைகளைத் தூக்கி ஒரே குரலில் “குடிகாக்கும் கலிதேவனே, வாழ்க!” என கூவி வாழ்த்தினர்.

விஜயபுரிக்கான வழியில் சரபபதம் என்னும் ஊரில் சீர்ஷரின் உடல் வைக்கப்பட்டபோது வெறியாட்டு கொண்டெழுந்த முதிய பூசகர் ஒருவரில் சீர்ஷர் தோன்றினார். “என் குடி இந்நாநிலத்தை ஆளும். அதன்பொருட்டு முதற்பலியாவதற்காகவே நான் மண்ணில் எழுந்தேன். என் கடனை நான் விரும்பிச்சென்று முடித்தேன். என் குடிகளே, அஞ்சற்க! ஒருங்கு கூடுக! இனி நம் மூதாதையருக்கு மலரும் நீரும் தேவையில்லை. இனி படைக்கலமே உங்கள் வழிபாட்டுப்பொருளென்றாகுக! இனி நீங்கள் படைக்கும் அன்னம் எதிரிகளின் குருதி கலந்ததாக அமைக! இனி நிகழும் அத்தனை களத்திலும் என் குருதி உங்கள் காவல்தெய்வமென நின்றிருக்கும்” என்றார்.

நெஞ்சிலறைந்து அழுதனர் பெண்கள். ஆண்கள் வாள்களையும் வேல்களையும் தலைக்குமேல் தூக்கி போர்க்கூச்சலிட்டனர். அவை நடுவே நின்றிருந்த புஷ்கரன் தன் வாளை மும்முறை தலைக்குமேல் தூக்கி ஆட்ட அங்கிருந்த அத்தனை குடிகளும் கைகளையும் படைக்கலங்களையும் தூக்கி “நிஷதகுடி வெல்க! கலி வெல்க!” என்று முழக்கமிட்டனர். “இனி போர்! போர்

மட்டுமே” என்றான் புஷ்கரன். “ஆம் ஆம் ஆம்” என்று அக்கூட்டம் அலைக்கொந்தளிப்பு கொண்டது. சீர்ஷருக்குப்பின் கோல்கொண்ட சுநீதர் தன் கைகளைத் தூக்கி “நம் குடி வெல்லும்! முதற்பலியைக் கொண்டது நம் குலதெய்வமே” என்றார்.

❀பன்னிரண்டாம்நாள் சீர்ஷரின் உடல் விஜயபுரியை சென்றடைந்தது. அதை மலைத்தேனிலிட்டு பதம் செய்து கொண்டுசென்றனர். அங்கே தெற்குக் காட்டில் அமைக்கப்பட்ட சிதையில் அவர் உடலை வைத்து நிஷதகுடிகளின் அத்தனை தலைவர்களும் வந்து வணங்கி கோல்தாழ்த்தினர். சுநீதர் தலைமையில் காளகக்குடியின் ஏழு முதியவர்கள் அவருக்கு நீரும் மலருமிட்டு வணங்க புஷ்கரனே அவர் மைந்தன் என்று அமைந்து அரிசியிட்டு அடிமலர் அணிவித்து துளைப்பானையால் சூழ்நீரூற்றி சடங்குகள் செய்தான். முடிமழித்து நீராடி வந்து எரியூட்டினான். எரியெழுந்ததை புகையினூடாகவே அறியும் அளவுக்கு நகரின் திறந்த வெளியெங்கும் நிஷதகுடிகள் செறிந்திருந்தார்கள். அவர்கள் எழுப்பிய வாழ்த்தொலி நெடுநேரம் எழுந்து அடங்கி அலையெனச் சூழ்ந்துகொண்டிருந்தது.

சீர்ஷரின் இறப்பு பதினாறுநாள் துயராட்டாக விஜயபுரியில் நிகழ்ந்தது. பெண்கள் வண்ண ஆடையும் அணியும் ஒழிந்து மலர்முடியாது ஒரு பொழுதுண்டு நோன்பிருந்தனர். ஆண்கள் முதற்புலரியில் எழுந்து நீராடி மலர் கொண்டுசென்று சீர்ஷரின் எரிகுழியிலிட்டு வணங்கினர். அவரைப் பற்றிய கதைகளும் பாடல்களும் பகலெல்லாம் அங்காடிமுனைகளிலும் தெருக்களிலும் திண்ணைகளிலும் அகத்தளங்களிலும் ஒலித்தன. அவற்றைக் கேட்டு அவர்கள் கண்கலங்கி

நெஞ்சுபற்றி விம்மியழுதனர். சில தருணங்களில் அவர்களின் முதுபெண்டிரில் மூதன்னையர் வெறிகொண்டெழுந்து “குருதி! குருதி அளித்து தொழுக! கொடுஞ்சினம் கொண்டிருக்கிறோம்! குருதிவிடாய் கொண்டிருக்கிறோம்! குலமூத்தாரை பழி கொண்டவர்களின் குருதியுடன் எழுக நம் குலங்கள்!” என்று நின்றாடினர்.

ஒவ்வொரு நாளும் விஜயபுரியைச் சூழ்ந்திருந்த நிஷாதர்களின் ஊர்களிலிருந்தெல்லாம் மக்கள் நிரைநிரையாக கிளம்பி வந்து நகரின் அனைத்து வெளிகளையும் நிறைத்தனர். முன்னரே வந்தவர்கள் கோட்டைக்கு வெளியே மலையடிவாரம் வரை விரிந்திருந்த புதர்க்காடுகளை அழித்து குடிலமைத்து தங்க, அங்கே ஒரு நகரமே உருவாகிவந்தது. அந்நகரம் பெருகிச்சென்று மலைச்சரிவை தொட்டது. பகலில் கோட்டைமேல் நின்று நோக்குகையில் அங்கே ஒரு பெரும்படை பாடிவீடமைத்திருப்பதுபோலத் தோன்றியது. இரவில் காட்டுத்தீ பற்றி சூழ்ந்திருப்பதுபோல விழிமயக்கியது. இரவும் பகலும் அதன் அவியா முழக்கம் கோட்டை அலையாழியால் சூழப்பட்டிருப்பதுபோல் எண்ணச் செய்தது. அவர்களுக்குரிய உணவுப்பொருட்களுடன் வந்த வண்டிகள் ஒவ்வொருநாளும் இருமடங்காயின. அவற்றை விற்கும் சந்தைகள் உருவாயின. அவர்கள் வழிபட சிற்றாலயங்கள் எழுந்தன. அன்னநிலைகளும் அறச்சாவடிகளும் அமைந்தன. அந்த மக்கள்திரள் நகரமென்றே ஆகி அவ்வாறே நிலைகொள்ளுமென விழியுண்மையாகத் தெரிந்தது.

பதினாறாம் நாள் சீர்ஷரின் எலும்புகளை ஈமச்சடங்கு செய்யும் பூசகர் வழிகாட்ட புஷ்கரன் எடுத்து பசும்பாலில் கழுவி சிறு கலத்திலிட்டு அரண்மனையின் தென்மேற்கு மூலையில்

அமைக்கப்பட்ட சிறு பீடத்தில் கொண்டுவந்து வைத்தான். அதன் அருகே அணையா விளக்கு பொருத்தப்பட்டது. நகரை நிறைத்திருந்த நிஷதகுடிகளிலிருந்து பெண்கள் தாலங்களில் அரிசியும் மலரும் நெய்விளக்கும் ஏந்தி பலநூறு நிரைகளாக அரண்மனை முற்றம் நோக்கி வந்தனர். அவர்கள் அரிமலரிட்டு வணங்கி மீள்வதற்காக நூற்றெட்டு பீடங்கள் அமைக்கப்பட்டன. மீண்டும் மீண்டும் அங்கே நிஷாதர்களின் குடித்தெய்வங்கள் வெறியாட்டென எழுந்தன. "போர்! போர்!" என அவை அறைகூவின.

நாற்பத்தோராம் நாள் புஷ்கரன் சுநீதர் வழிகாட்ட, குடிப்பூசகர் உடன் வர நீராடி உடலில் ஈரம் சொட்ட வெண்ணிற ஆடை அணிந்து சீர்ஷரின் எலும்புகள் அமைந்த கலத்தை தலைமேல் ஏந்தியபடி பத்ரை நதிக்கு நடந்துசென்றான். அவனைச் சூழ்ந்து வெண்ணிறத் துணியை சுவரெனப் பற்றியபடி பூசகர்கள் சென்றனர். முழவுகளை இசைத்தபடி சாவுச்சூதர் உடன்செல்ல காவல்நிலைகள் அனைத்திலும் அரசமுரசுகளும் கொம்புகளும் முழக்கமிட்டன. செல்லும் வழியெங்கும் அவன் கால் தரையில் படாமல் துணிகளால் வழிப்பாவாடை விரித்தனர். அவன் செல்வதை இருமருங்கும் திரண்டு நின்று நோக்கிய நிஷதகுடிகள் நெஞ்சிலறைந்து அழுதனர். "எந்தையே! மூதாதையே! விண்நிகழ்பவரே!" என குரல்கள் எழுந்தன. அவன் கோட்டைக்கு வெளியே சென்றபோது அவனுக்குப்பின் அக்கோட்டை இடியோசை எழுப்பி முழங்கியது.

சீர்ஷரின் எலும்புகளை புஷ்கரன் பத்ரையின் பெருக்கில் இறங்கி நின்று மூழ்கி கரைக்கையில் அதன் இரு கரைகளும் மானுடர்களால் ஆன மலைகள் போலிருந்தன. அவர்கள் எழுப்பிய வாழ்த்தொலிகள் நீரில் அலைகளை எழுப்பின என்று

தோன்றியது. புதுக் கலத்தில் பத்ரையின் நீரை அள்ளி தலையில் வைத்து ஆடையிலும் குழலிலும் நீர் சொட்ட எழுந்து கரைமீண்ட புஷ்கரன் “எந்தையே, சென்றுவருக! உங்கள் குருதி முளைத்தெழுக!” என்றபோது நெடுநேரம் ஐம்புலன்களையும் மூடி கண்களுக்கு நடுவே ஒளியலைகளை எழுப்பிய ஒலிக்கொந்தளிப்பு அங்கே நிலவியது. தலையில் பத்ரையில் அள்ளிய நீருடன் நகருக்குள் நுழைந்தபோது நகரம் அன்னையை கன்றென ஓலமிட்டு அவனை எதிரேற்றது.

புஷ்கரன் காளகக்குடி மூத்தாரும், பூசகரும், அமைச்சரும், அகம்படியினரும் சூழ தலையில் நீர்க்கலத்துடன் தென்றிசை மயானக்காட்டுக்குள் சென்றான். சுநீதர் குடிக்கோல் ஏந்தி முன்னால் நடந்தார். பூசகர் சீர்ஷர் எரிந்த சிதைக்குழியை பத்ரையின் நீரை ஊற்றி மலரும் அரிசியும் இட்டு மூடினர். அதன்மேல் சிறிய மேடென மண்குவிக்கப்பட்டு கனிமரம் ஒன்று நடப்பட்டது. அருகே ஓர் ஆள் ஆழத்தில் தோண்டப்பட்ட குழியில் குடிமூத்தவர்களுக்குரிய நிலைக்கல்லை பன்னிரு பணியாளர்கள் இழுத்துவந்து அழுத்தி நட்டனர். நீரூற்றி இறுக்கி கல்லிட்டு நிறுத்தப்பட்ட நிலைக்கல்லுக்கு சிவப்பு ஆடை கட்டி மஞ்சளும் செந்தூரமும் பூசி மலர்மாலை சூட்டினர். அதன்முன் விரிக்கப்பட்ட காம்புடன் கூடிய முழு வாழையிலையில் பச்சை ஊனும், அப்பங்களும், நுரைக்கும் கள்ளும் படைக்கப்பட்டன. குடிமூத்தாரும் புஷ்கரனும் மலரும் நீரும் படைத்து நடுகல்லை வணங்கினர்.

அப்போது நகர் முழுக்க அனைத்து மணிகளும் முழக்கப்பட்டன. இல்லங்களில் இருந்த கைமணிகளையும் தட்டுமணிகளையும் தெருக்களில் கொண்டுவந்து ஒலித்தனர். நகரம் மணியோசையின் சரடால் நூறாயிரம் முறை என சுற்றிக்

கட்டப்பட்டது. ஓசை அவிந்த பின்னரும் நெடுநேரம் அந்த மீட்டல் அவர்களின் செவிகளில் எஞ்சியிருந்தது. அன்றிரவு நகரில் எவரும் உணவுண்ணலாகாதென்று நெறி இருந்தது. அன்று நகரிலுள்ள அத்தனை விளக்குகளும் அணைக்கப்பட்டன. கரிய இருள் வந்து நகரை முழுமையாக மூடியது. இல்லையென்றே ஆகி இரவில் புதைந்தன கோட்டைகளும் காவல்கோட்டங்களும் மாளிகைகளும் மரங்களும். விழியென ஏதுமில்லை முகத்தில் என மயங்கிய சிறுவர் அழுதபடி அன்னையரை அணைத்துக்கொண்டனர். இருளுக்குள் அந்த மணியோசையின் கார்வை அலைகளாக எஞ்சியிருந்தது. தலைக்குள் தேனீ சுழல்வதுபோல ஓயாதொலித்தது. புலரிக்கதிர் எழுவதுவரை அவர்களனைவரையும் கரிய பட்டுநூலால் ஒன்றெனக் கட்டி வைத்திருந்தது.

நாற்பத்தொன்றாம்நாள் இரவு முழுத் துயில்நீப்புக்குப்பின் மறுநாள் புலரியில் ஏழு வகை இனிப்புகளும் ஐவகை கனிகளும் மூன்று வகை ஊனுமாக திரள்விருந்து நிகழ்ந்தது. மூன்று நாட்களாகவே அவ்விருந்தை ரிஷபனின் தலைமையில் விஜயபுரியின் அமைச்சர்களும் படைத்தலைவர்களும் ஒருங்கமைத்துவந்தனர். அன்றுவரை இருந்த துயரை அழுக்கு ஆடையை என கழற்றி வீசிவிட்டு உண்டாட்டில் திளைத்தனர் நிஷாதர். கூச்சலிட்டும் ஆர்ப்பரித்தும் ஒருவருக்கொருவர் உணவுப்பொருட்களை எடுத்து வீசியும் உண்டனர். உண்ணுதல் உணவின் மிகையால் ஊண்விளையாட்டென்று ஆகியது. உணவை அள்ளி ஒருவர்மேல் ஒருவர் வீசினர். உணவிலாடி உணவில் வழுக்கி விழுந்து உணவில் புரண்டனர். நகரம் புழு நிறைந்த உணவுக்கலம்போல மானுட உடல்களால் அலைநெளிபட்டது.

பின்னர் கள்மயக்கிலும் ஊண்மயக்கிலும் கால்தளர்ந்து கண்சரிந்த இடங்களிலேயே விழுந்து துயின்றனர். மறுநாள் முதலிருளில் அவர்களுக்குமேல் மென்மழைச் சாரல் ஒன்று பொழிந்தது. அதை குளிர்ந்த பட்டாடை ஒன்றின் வருடல் என, இறகுகளால் மூடும் பெரிய அன்னைப்பறவை என கனவுக்குள் கண்டு திகைத்து விழித்தெழுந்தனர். பின்னர் இடமும் காலமும் தெளிவுற களைத்துத் துவண்ட கால்களுடன் சென்று தங்கள் இல்லங்களுக்குள் படுத்துக்கொண்டனர். மறுநாள் பொழுது விடியவேயில்லை. வானைமூடி செறிந்த கருமுகில்களில் இருந்து தடித்த பட்டுச்சரடுகள்போல இறங்கிய மழை விழுதுகளென மண்ணில் ஊன்றி அசையாமல் நின்றது.

மழைபெருகி தெருக்கள் ஆறுகளென்றாயின. நகரெங்கும் குவிந்திருந்த மிச்சிலும் குப்பையும் கழுவிக்கொண்டுசெல்லப்பட்டன. அடுமனைக் கலங்கள் அனைத்தும் ஊறி தாங்களே தங்களை கழுவிக்கொண்டன. கூரைவிளிம்புகள் வெள்ளித் திரைகளென நின்று பொழிந்த நீர்ப்பரப்பை சூடியிருந்தன. தலைக்குமேல் மழையின் நில்லா பேரொலி. நீர்ப்பரப்பென்றான வானுக்குள் இடி மின்னி நீரை அனலென்றாக்கி அணைந்துகொண்டிருந்தது. இல்லங்களுக்குள் மரவுரிகளாலும் கம்பளிகளாலும் உடல்போர்த்தி அமர்ந்து விழிகள் மட்டுமே உயிருடன் எஞ்சியவர்கள்போல மழையை நோக்கிக்கொண்டிருக்கையில் அவர்கள் முன்பு நிகழ்ந்த அனைத்தையும் முற்றிலும் மறந்தவர்கள்போலத் தோன்றினர்.

# நீர்க்கோலம் - 41

**40 குருதிமை**

மூன்றாம்நாள் மழைவிட்டு துளிச்சொட்டலும் நீர்ப்பிசிறுக் காற்றுமாக நகரம் விம்மிக்கொண்டிருக்கையில் அரண்மனை முரசுகள் முழங்கின. அவ்வோசையை அவர்கள் இடியொலியாகவே கேட்டனர். நீர்த்திரை அதை ஈரத்துணிபோல மூடியிருந்தமையால் மிக மெல்ல அப்பாலெங்கோ என ஒலித்தது. பின்னர்தான் அது முரசெனத் தெளிந்தனர். 'நோக்குக! நோக்குக! நோக்குக!' என முழங்கியது முரசு. நிமித்திகன் உரத்த குரலில் அன்று அந்தியில் கலிதேவனுக்கான பூசனை நிகழப்போவதை அறிவித்தான். "நம் மூத்தவர் விண்புகுந்தார். மழைவிழுந்து நகர் தூய்மைகொண்டது. நாம் அளித்த பலிகளில் முதன்மையானதை நம் குடிகளுக்கிறைவன் ஏற்றுக்கொண்டார். வருக, இறையடி பணிக! அருள்பெறுக!"

நீர்க்காற்று நகரைச் சூழ்ந்து வீசிக்கொண்டிருக்க மரங்களின் இலைகளும் கூரைகளும் பளிங்குக் கற்களென சொட்டிக்கொண்டிருந்தன. பகல் முழுக்க நகரம் ஓசையடங்கி நனைந்த துணிபோல அசைவிலா அலைகளாக கிடந்தது. உச்சிப்பொழுதுக்குப் பின்னர் மெல்ல விழித்தெழுந்தபோதுகூட தோல்நனைந்த முரசின் ஓசையென்றே முழங்கியது. மூன்றுநாள் மழை அனைவருக்கும் உடலோய்ந்த உள்வாழ்க்கை ஒன்றை அளித்திருந்தது. விழிகள் ஒளிக்கு கூசின. புறவுலகை மறுத்தது உள்ளம். அவர்கள் நினைவுகளில் கனவுகளில் தனிமையில் திளைக்க விரும்பினர். தனிமை துயர் கொண்டது. அதன் இனிமை எஞ்சியிருந்த அவர்களின் உள்ளம் களியாட்டை வெறுத்தது. அவர்கள் அகத்தில் இனிய சிறு மின்னல்கள் எழுந்தமைந்துகொண்டிருக்க அவ்வப்போது மெய்ப்புகொண்டனர். விழியமைந்து மென்துயிலில் மூழ்கியபோது கரிய அலைகளின்மேல் நின்று ததும்பிய செந்தாமரையைக் கண்டனர். வெண்ணிற முகில் கரைந்தும்

திரண்டும் யானை வடிவுகொண்டு வானில் மிதந்தது. அதை ஊடுருவிய ஒளி பாலென பளிங்கென கண்களை நிறைத்தது.

அன்று கதிர்முகம் தெளியவேயில்லை என்பதனால் பொழுதடைவதை உணரமுடியவில்லை. அரண்மனையில் அந்திமுரசு முழங்கியதும் பிற முரசுகளும் ஒலிக்கத் தொடங்கின. புற்றுவாய் திறந்து ஈசல்கள் எழுவதுபோல மக்கள் தங்கள் இல்ல வாயில்களில் இருந்தும் தெருமுனைத் திறப்புகளில் இருந்தும் எழுந்து சாலைகளை அடைந்தனர். துளிசேர்ந்து பெருக்காகி கரைதொட்டு நிரப்பியபடி நகர்மையத்தில் அமைந்த கலிதேவனின் ஆலயத்தை நோக்கி சென்றார்கள். அவர்கள் அணிந்திருந்த வண்ண ஆடைகளும் தலைப்பாகைகளும் கலந்த கொப்பளிப்பின்மேல் தெருமுனை மீன்நெய்ப் பந்தங்களின் தழலொளி அலையடித்தது.

சூழ்ந்திருந்த கூட்டம் அவர்களை தனிமையின் இனிய துயரிலிருந்து விடுவித்தது. பேச்சொலிகளும் முழவொலிகளும் கலந்த முழக்கம் அவர்களின் உள்ளே ஓடிக்கொண்டிருந்த மெல்லிய தன்மொழியை அணையச்செய்து அகத்தை கூச்சலாக ஆக்கியது. ஓசைமிகுதல் என்பது வெறி, களிப்பு, கொண்டாட்டம். தளர்வுடன் இருந்த அவர்களின் தோள்கள் நிமிர்ந்தன. தாழ்ந்து நிலம்நோக்கிய தலைகள் விரைத்தெழுந்தன. அடிநோக்கி அமைந்த சீர்நடை துள்ளலென்றாகியது. அப்பெருங்கூட்டத்தை அவர்கள் அறியாது அகநடனமிடச் செய்தது முரசின் தாளம். மேலிருந்து நோக்கிய காவலர்கள் அத்திரளில் நடனம் சிறிய அலைகளாக எழுந்து கொண்டிருப்பதை கண்டார்கள்.

நகரின் தென்மேற்கு மூலையில் இருந்த கலியின் சிற்றாலயத்தில் இருந்து பிடிமண் எடுத்துவந்து நகர்நடுவே

அமைக்கப்பட்ட ஏழடுக்கு ஆலயம் அது. சுற்றிலும் மிக விரிவான செண்டுவெளி இருந்தது. அதிலிருந்து பதினெட்டு பெரிய படிகள் ஏறிச்சென்று கலியின் ஆலயச் சுற்றுக்கட்டை அடைந்தன. நூற்றெட்டு தூண்களால் தாங்கப்பட்ட கோபுரத்திற்குக் கீழே கருவறைக்குள் கலி கருநாகங்களும் காகங்களும் பொறிக்கப்பட்ட பீடத்தின்மேல் அமர்ந்திருந்தான். கோபுரத்தின்மேல் காகக்கொடி காற்றில் பறந்தது. அத்தனை தூண்களிலும் காகமுகம் கொண்ட விளக்குமகளிர் சிலைகளின் கைகளில் நெய்யகல்கள் பீதர்நாட்டுக் கண்ணாடியாலும் தீட்டப்பட்டச் சிப்பியாலுமான காற்றுமறைப்புக்குள் சுடர்கொண்டிருந்தன.

நான்கு எல்லையும் திறந்துகிடந்த செண்டுவெளிக்குள் பதினெட்டு சாலைகளிலிருந்து மக்கள் வந்து பெருகி நிறைந்தார்கள். அதன் நான்கு திசைகளிலும் அமைந்திருந்த முரசுமேடைகளில் பெருமுரசுகள் துள்ளுநடையில் துடித்துத்துடித்தொலிக்க கொம்புகளும் முழவுகளும் இணைந்துகொண்டன. உடுக்கோசையில் எழுந்துவரும் காட்டுத்தெய்வங்கள்போல விழிகளில் மதமும் வெறியும் தெரிய மக்கள் தோன்றினர். கைகளை விரித்து தொண்டை நரம்புகள் புடைக்க கூச்சலிட்டனர். அவிழ்குழல்கற்றைகளைக் சுழற்றியபடி வெறிகொண்டு ஆடினர் முதுபெண்டிர். சிலம்புகளும் கழல்களும் ஒலிக்க கால்கள் மண்ணை மிதித்து மிதித்து நடனமிட்டன.

நிஷதகுடிகளின் தலைவர்கள் அனைவரும் தங்கள் தொல்முறைப்படி இடைவளைத்து தோள்சுற்றிச் சென்ற ஒற்றைமான்தோலாடையும், தழல்வரிப்புலித்தோலாடையும், இருளலையும் கரடித்தோலாடையும் அணிந்து கழுகிறகும்

காக்கையிறகும் காட்டுச்சேவல்இறகும் கொண்ட மரக்கொந்தைகளை தலையில் சூடி கைகளில் குடிக்கோல்களுடன் வந்து கலிதேவனின் ஆலயத்தின் முகமண்டபத்தில் நிரைகொண்டு நின்றிருந்தார்கள். உள்ளே பூசகர்கள் கலிவழிபாட்டுக்கென நீலமலர்களையும் காட்டுச்சுனையில் ஊறிய நூற்றெட்டு குடம் நீரையும் கொண்டுவைத்தனர். அடுமனைப்பூசகர் நுரைக்கும் கள்ளையும் இலையப்பங்களையும் பனையோலைச் சுருளப்பங்களையும் சுட்ட அப்பங்களையும் கொண்டு வைத்தனர்.

காளகக்குடிகளின் ஏழு மூத்தவர்களால் வழிநடத்தப்பட்டு புஷ்கரன் முழுதணிக்கோலத்தில் ஆலயமுகப்பிற்கு தேரில் வந்து இறங்கியபோது பெருமுரசுகளும் கொம்புகளும் முழங்கின. செண்டுவெளியை நிறைத்திருந்த குடிகள் வாழ்த்தொலி எழுப்பினர். இசைச்சூதர் மங்கல இசைமுழக்கி சூழ்ந்திருந்த காற்றை அக்காட்சிகள் அனைத்தும் வரையப்பட்ட ஓவியத்திரைச்சீலை என்றாக்கினர். புஷ்கரனுடன் உடனுறைத் துணைவனாக ரிஷபன் அணிச்செதுக்குப் பிடிகொண்ட உடைவாள் ஏந்தி வலப்பக்கம் நடந்து வந்தான். வாழ்த்தொலிகளும் குரவையோசையும் சூழ அவர்கள் வந்து கலிதேவனின் கருவறைக்கு முன்னால் பலிபீடத்திற்கு வலப்பக்கமாக நின்றனர்.

செந்திரைகள் அலைய அரசபல்லக்கு வந்து நிலம் அமைந்தது. அதனருகே மரப்பீடம் கொண்டுபோடப்பட்டது. திரைவிலக்கி கைகூப்பியபடி இறங்கிய மாலினிதேவி இடையிலும் தோளிலும் காளகக்குடிப் பெண்களுக்குரிய முழங்கால்வரை வரும் ஒற்றை மான்தோலாடை சுற்றியிருந்தாள் கல்மாலைகளும் கல்குழைகளும் அணிந்து புலித்தோல் கச்சை

கட்டி தலையில் காகஇறகுகள் கொண்ட முடிவளை சூடியிருந்தாள். காளகக்குடியினரான ஏழு சேடியரால் சூழ்ந்து வழிநடத்தி அழைத்துவரப்பட்டு ஆலய முகப்பை அவள் அடைவதுவரை குடிகளின் வாழ்த்துக்களே அவளை ஏந்தி வந்தன.

காளகக்குடியின் மூத்த பெண்டிர் பன்னிருவர் நிறைநீர்க்குடங்களும் அகல்சுடர்களும் ஏந்தி உடன்வர புஷ்கரனின் அன்னை சம்புகை கலிங்க இளவரசியை எதிர்கொண்டு கல், மண், நீர், மலர், கனி என்னும் ஐந்து கான்மங்கலங்கள் கொண்ட தாலத்தை அளித்து நெற்றியில் பலிவிலங்கின் குருதி உலர்ந்த கருஞ்சாந்தால் பொட்டிட்டு வாழ்த்தினாள். அவள் குனிந்து அன்னையின் கால்தொட்டு சென்னி சூடினாள். அன்னையர் அவளை அழைத்துவந்து கலிதேவன் முன்னால் நிறுத்தினார்கள். பூசகக்குலத்து மூதன்னையர் எழுவர் செங்குருதி நிறைந்த குவளைகொண்ட கரித்தாலத்தை உழிந்து காட்டி கண்ணேறு கழித்தனர். கலியின் காலடியில் எழுபத்திரண்டு நாள் வைத்து வழிபட்டு எடுத்த கருந்தாலியை பூசகி எடுத்து நீட்ட புஷ்கரனின் அன்னை அதை மாலினியின் இடக்கையில் காப்பெனக் கட்டினாள். பிறிதொரு மூதன்னை அளித்த நெய்விளக்குடன் அவள் சென்று கலிதேவனின் கருவறை முகப்பில் பலிபீடத்தின் இடப்பக்கம் நின்றாள்.

சுநீதர் கைகாட்ட கலிதேவனின் தலைப்பூசகர் வழிபடுமுறைமைகளை தொடங்கினார். நூற்றெட்டு கலம் நீரால் கரியதேவன் முழுக்காட்டப்பட்டான். அதன்பின் பலிஎருமையின் செங்குருதி முழுக்கு. பின்னர் பால்முழுக்கு. தேன்முழுக்கு, நீறுமுழுக்கு. ஐம்முழுக்குகளுக்குப்பின் மீண்டும்

பதினெட்டு கலம் நீரால் முழுக்காட்டு. கரிய ஆடையும், காகச்சிறகு மணிமுடியும், நீலமணிக் கழல்களும் கச்சையும் ஆரங்களும் வளையல்களும் பூட்டப்பட்டபின் நீலமலர்க்காப்பு அணிவிக்கப்பட்டது. பெண்டிரின் குரவை எழுந்து சூழ்ந்தது. கலிதேவனுக்குரிய குறுமுழவான உறுமி தோற்பரப்பில் பிரம்புக்கோல் வருட சினந்த புலி என ஓசையிட்டுக்கொண்டிருந்தது. அவர்கள் அனைவருக்குள்ளும் வாழ்ந்த தொல்குடி நினைவு ஒன்று பதறி கிளைநுனியில் தவித்து நின்றிருந்தது.

சிவந்த வெறிவிழிகளும் தோள்களில் படர்ந்த சடைவிழுதுகளும் ஏழு திரிகளாக நெஞ்சில் விழுந்த சடைத்தாடியும் கலிதெய்வத்தின் காகச்சிறகு சூட்டுத்தழும்பாக வரையப்பட்ட விரிந்த மார்பும் கொண்டிருந்த முதன்மைப்பூசகர் கையில் பொசுங்கி வெடித்து நீலச்சுடரசைய எரியும் நெய்ப்பந்தத்துடன் வீரிட்டலறி விதிர்த்த உடலுடன் கருவறையிலிருந்து வெளியே பாய்ந்து வந்தார். தன் கையிலிருந்த சாம்பலை மாலினிதேவியின் முகத்தின்மேல் ஊதியபின் அறியா விலங்கொன்றின் அமறல்போல் ஒலித்த குரலில் "பெண்ணே, இது கலிதேவனின் வினா. நீ நிஷதகுடிகளில் முதன்மையானதான காளகக்குடியின் வருமகள் என கற்குழையும் கருகமணியும் அணிந்து அமர ஒப்புகிறாயா?" என்றார்.

அவள் திகைக்க அருகே நின்ற முதுமகள் "ஆம் என்று சொல்க!" என்றாள். அவள் உதடுகள் மெல்ல அசைந்தன. இடத்தோள் விதிர்த்தது. "சொல், சொல்" என்றாள். அவள் மூக்குத் துளைகள் விரிந்து சுருங்கின. முலைகள் எழுந்தமைந்தன. "சொல், ஒப்புகிறாயா?" என்றார் பூசகர். "சொல்"

என்றாள் மூதன்னை. அவள் தொண்டையை செருமினாள். “மூன்றாம்முறை இது... சொல்க!” என்றார் பூசகர். அவள் “ஆம், ஒப்புகிறேன்” என்றாள். “ஒப்புகிறாயா?” என அவர் மீண்டும் இருமுறை கேட்க “ஆம், ஒப்புகிறேன்” என அவள் தாழ்ந்த குரலில் விழிதாழ்த்தி மறுமொழி உரைத்தாள். அவள் இடத்தொடை ஆடியபடியே இருந்தது.

அதே வெறியுடன் புஷ்கரனை நோக்கித் திரும்பி அலறலுடன் அவன் முகத்தில் நீறை ஊதிய பூசகர் “கேள், மகனே. கலியின் சொல் இது. கேள்... இதோ நின்றிருக்கும் இச்சிறுமகளை மணம்கொண்டு மைந்தரை ஈன்று குடிசிறக்க ஒப்புகிறாயா?” என்றார். அவன் சுநீதரை நோக்கிவிட்டு “ஆம், ஒப்புகிறேன்” என்றான். அவர் மீண்டும் கேட்க அவன் மும்முறை அதை சொன்னான். பூசகர் இரு கைகளையும் விரித்து முழவுக்குரலில் “சொல், இவளுடன் அரியணை அமர்ந்து நிஷதகுடிகளை முழுதாள ஒப்புகிறாயா? என் தேவனென எழுந்தருளிய கலிதெய்வத்தை முழுமுதலோன் என்று இக்குடிகளுக்குமேல் நிறுத்த ஒப்புகிறாயா?” என்று கேட்டார். புஷ்கரன் கூப்பிய கைகள் நடுங்க உதடுகள் இறுகி அசைய தள்ளாடுபவன்போல நின்றான். “சொல்! ஒப்புகிறாயா?” என்றார் பூசகர். “ஆம், ஒப்புகிறேன்” என்று புஷ்கரன் முணுமுணுத்தான்.

“அருளினோம்! அருளினோம்! அருளினோம்!” என்று கூவியபடி பூசகர் கருவறைக்குள் ஓடினார். அவர் உடல் விதிர்த்து துள்ளியது. கருவறையில் கருங்கல்லில் செதுக்கப்பட்டு நெடுங்காலம் எண்ணை பூசப்பட்டமையால் முடியின் கருமையொளி கொண்டிருந்த கலிதேவனின் சிலையின் இரு பக்கமும் நின்றிருந்த காவல்தேவர்களின் வளைகோட்டுவாய் திறந்த முகங்களில் வெள்ளிவிழிகள் பதிக்கப்பட்டிருந்தன.

தழல் நெளிந்த பந்தங்களின் வெளிச்சத்தில் அவை சினந்த நோக்குகொண்டு அசைந்துகொண்டிருந்தன. கலியின் கண்கள் நீலப்பட்டால் மூடிக் கட்டப்பட்டிருக்க திறந்த செந்நிற வாயில் வெண்பற்கள் தெரிந்தன. தொங்கிக் கிடந்த நீள்நாக்கில் தொட்டு வைக்கப்பட்ட குருதி வழிந்து துளித்து நின்றது.

சிலையின் காலடியில் இரு உயிருள்ள முதிய காகங்கள் சிறகு கோட்டி தோளுக்குள் தலைபுதைத்து அமர்ந்திருந்தன. அவற்றின் விழிகள் சோர்ந்து தழைந்து மீண்டும் விழித்தன. அவை எப்போதும் அங்கே இருந்துகொண்டிருப்பவை. இறகுகள் பாதி உதிர்ந்த காகம் பல ஆண்டுகளாக அங்கிருக்கிறது என குடியினர் அறிந்திருந்தனர். பூசகர் "எந்தையே, இறையே, சொல்க! உலகாளும் கருமையே சொல்க! வருநெறி சொல்க! எழுமுலகு என்னவென்று நற்சொல் தருக!" என்று கூவினார். காகங்களில் ஒன்று நீர் விழுந்ததுபோல சிலிர்த்து விழிப்புகொண்டு தலையைத் தூக்கி விழிகளை உருட்டி சுடர்களை நோக்கியபின் "காவ்!" என்றது. அடிவயிற்றில் வேல்குத்து பட்டதுபோல துடித்த பூசகர் "ஆ!" என அலறி இரு கைகளையும் விரித்தார். பிடரி சிலிர்த்து சடைவிரிந்து பறக்க சுழன்று ஆடினார்.

ஆட்டவிசையில் கலியின் காலடியிலிருந்த பள்ளிவாளை எடுத்து சுழற்றி மும்முறை துள்ளி நடனமிட்டுச் சுழன்று தன் நெற்றியில் ஓங்கி ஓங்கி வெட்டினார் பூசகர். உடற்தசைகள் இழுபட்டு அதிர விலங்குபோல ஊளையிட்டபடி சுழன்றார். பசுங்குருதியின் மணம் எழுந்தது. அவர் முகமும் நெஞ்சும் தோள்களும் குருதியால் செந்நிறம் கொண்டன. "அருளினேன்! குருதியருளினேன்! செங்குருதி! கொழுங்குருதி! வஞ்சக்கனல் எரியும் குருதி!" என்று கூவியபடி வெளியே வந்து கையை

அவர்கள்மேல் உதறினார். குருதித்துளிகள் அவர்கள் இருவர் தலையிலும் முகத்திலும் தெறித்து துளிவழிவாகி இறங்கின. புருவங்களில் குருதி தொங்கி நோக்கு மறைக்க புஷ்கரன் கருவறையில் அமர்ந்திருந்த கரிய உருவத்தின் கண்களையும் திறந்த சிவந்த வாயையும் நோக்கினான்.

“நிகழ்க! கலிதேவனின் ஆணை இது! நிகழ்க!” என்று பூசகர் கூவினார். காளகக்குடி மூத்தார் திரும்பி “தாலி! தாலி எங்கே?” என்றனர். அன்று உச்சிப்பொழுதில் அவர்களின் குடியவை கூடி அமர்ந்து பனையோலையில் புஷ்கரனின் குடிநிரையும் பெயரும் குறியும் பொறித்து இறுகச்சுருட்டி எண்ணைக்கரி பூசி கருஞ்சரடில் கட்டி கொண்டுவந்திருந்த தாலி ஒரு கரிய கொப்பரையில் கட்டப்பட்டிருந்தது. அதை தாலத்தில் செம்மலர்களும் வெண்ணீறும் இட்டு வைத்திருந்தனர். தலைகளுக்கு மேலாக அது பறப்பதுபோல வந்தது. அதை சுநீதர் வாங்கி தாலத்துடன் துணைப்பூசகர் கையில் அளித்தார். கலியின் காலடியில் அதை வைத்து ஒரு துளிக் குருதியும் ஒரு மலரிதழும் வைத்து வணங்கி திருப்பியளித்தார் பூசகர்.

அதை வாங்கி சுநீதர் புஷ்கரனிடம் நீட்டி “அவள் கழுத்தில் இதை கட்டு. அவள் நம் குலக்கொடியென்றமைக!” என்றார். அவன் அதை எடுத்து முன்னகர மூதன்னையர் மாலினிதேவியை முன்னால் செலுத்தினர். அவள் கழுத்தும் தோள்களும் மெய்ப்புகொண்டு மயிர்நிரைகளாக தெரிந்தன. அவளை மூதன்னையர் விழாமல் தாங்கிப்பிடித்திருந்தார்கள். புஷ்கரன் கருந்தாலியுடன் அவளை நோக்கியபடி நின்றான். பெண்டிரின் குரவையோசையும் உறுமியின் அமறலும் இணைந்து சூழ்ந்தன. “கட்டுக!” என்றார் சுநீதர். அவன் கைநீட்ட அவள் விழிதூக்கி அவனை நோக்கினாள். திடுக்கிட்டு அவன்

கைகளை பின்னிழுத்துக்கொண்டான். “கட்டுக, இளவரசே!” என்றார் சுநீதர். அவன் நெஞ்சு துடித்தது. ஒருகணம் அவன் தன் வலப்பக்கம் ரிஷபனின் உடல் வெம்மையை உணர்ந்தான். “கட்டுங்கள்” என்றான் ரிஷபன்.

புஷ்கரன் அந்தத் தாலியை அவள் கழுத்திலிட்டு முதல் முடிச்சை கட்டினான். இரண்டாவது முடிச்சை அவன் அன்னை கட்டினாள். மூன்றாம் முடிச்சை குலமூதாட்டி ஒருத்தி கட்டினாள். நான்காம் முடிச்சை ஆலயத்தின் பூசகி கட்ட ஐந்தாம் முடிச்சை அவர்களின் அணுக்ககுலத்தைச் சேர்ந்த மூதன்னை ஒருத்தி கட்டினாள். ஆறாவது முடிச்சை மலைத்தெய்வங்களின் பொருட்டு சிறுமி ஒருத்தி கட்ட ஏழாவது முடிச்சை மாலினியே கட்டிக்கொண்டாள். சுநீதர் “இளவரசே, உங்கள் உடைவாளை உருவி கலிதேவனின் காலடியில் தாழ்த்திவிட்டு வான்நோக்கித் தூக்கி மும்முறை ஆட்டுங்கள்” என்றார். ஒரு முதியவர் “அந்த மரபு இல்லையே?” என்றார். “அம்மரபு உருவாகட்டும்” என்றார் சுநீதர். “ஆனால்…” என அவர் முனக “இனி நமக்கு புஷ்கரரே அரசர்! புஷ்கரர் மட்டுமே அரசர்!” என்றார் சுநீதர்.

“ஆம்!” என்று ஒரு குலமூத்தார் கூவினார். “நம் அரசர் இவர் மட்டுமே. நாம் வெல்வோம். நம் குடிகள் நம் நிலத்தை முழுதாளும்.” குடிமூத்தார் அனைவரும் கோல்களைத் தூக்கி “ஆம் ஆம் ஆம்” என கூவினர். புஷ்கரன் திகைத்தவன்போல நின்றான். “வாளை உருவுக, இளவரசே” என்றார் சுநீதர். புஷ்கரன் தன் இடைவாளை உருவி கலியின் காலடிநோக்கி நீட்டினான். அது பாம்புநாக்கென நடுங்கியது. அதன்மேல் தன் கையில் வழிந்த குருதித்துளிகளைச் சொட்டி மலர் ஒன்றை இட்டு “பழிகொள்க! வெற்றிசூடுக!” என்று பூசகர் வாழ்த்தினார். அவன்

வாளைச் சுழற்றித் தூக்கி தலைமேல் எழுப்பினான். “அமைதி… அமைதி” என்றார் சுநீதர். புஷ்கரன் கைகள் நடுங்க உடல் மெய்ப்புகொண்டது. “வஞ்சினம் உரையுங்கள், இளவரசே” என்றார் சுநீதர். “அது நம் தெய்வத்தின் ஆணை” என்றார் இன்னொருவர்.

அவன் மூச்சுவாங்கினான். வாள் கையில் காற்றுபட்ட கொடி என படபடப்பதாகத் தோன்றியது. “உம்” என்றார் சுநீதர். அவன் வாளை ஆட்டினான். வெளியே முரசுகள் முழங்க பல்லாயிரம் குரல்கள் வெடித்தெழுந்து “காளகக்குடி வெல்க! கலிமைந்தர் வெல்க! புஷ்கரர் வெல்க!” என ஓசையிட்டன. அவன் கண்கள் கசியும்படி மெய்விதிர்ப்புகொண்டான். “குருதியால் கழுவுவேன்! குருதி ஒன்றை மட்டுமே நிகர்வைப்பேன்! ஆணை! ஆணை! ஆணை!” என்றான். “ஆம், ஆணை! ஆணை! ஆணை!” என்றனர் சூழ்ந்திருந்த குடித்தலைவர்கள். வாளைத் தாழ்த்தியபின் உடலில் நுரைத்த ஆற்றல் அனைத்தும் ஒழுகி மறைய தலைசுற்றுவதுபோல உணர்ந்தான். பெருமூச்சுவிட்டபடி தோள்தளர்ந்தான்.

“மங்கலம் கொள்க!” என்றார் பூசகர். கலிக்குப் படைத்த அப்பம், மலர், சிறு பனைகொட்டையில் கள் மூன்றையும் ஒரு தாலத்தில் வைத்து அவனுக்கு அளித்தார். “இருவரும் ஓருடல் கைகளென கொள்க அதை” என்றார் சுநீதர். புஷ்கரனும் மாலினியும் கைநீட்டி அத்தாலத்தை வாங்கிக்கொண்டனர். பூசகர் பலிக்குருதி மையைத் தொட்டு இருவருக்கும் பொட்டு அணிவித்தார். “தெய்வம் துணைகொள்ளும். எதற்கும் அஞ்சேல். எங்கும் தளரேல். எந்நிலையிலும் பின்நோக்கேல். ஆம், அவ்வாறே ஆகுக!” என்றார் பூசகர். அவர்கள் இருவரும் அவரை வணங்கி விலகினர்.

❀சுநீதர் பெருமூச்சுடன் உடல் இயல்பாகி முகம் மலர்ந்து “மணவினை முடிந்தது. கலிங்க இளவரசி நம் குடிக்கு தலைவியென்றானாள். நிஷதகுலம் என்றும் இந்நாளை கொண்டாடட்டும். இத்தருணம் நம் கொடிவழிகளின் நினைவில் வாழட்டும்” என்றார். அனைவரும் ஒருவரை ஒருவர் தழுவிக்கொண்டு சிரித்து முகமன் பரிமாறிக்கொண்டார்கள். “செல்வோம்” என்று சுநீதர் புஷ்கரனை தொட்டார். எரிச்சல் கொண்டவன்போல, எதையோ எண்ணி தடுமாறுபவன்போல கைவிரல்களால் காற்றில் எதையோ சுழற்றியபடி புஷ்கரன் அவருடன் நடந்தான். ரிஷபன் வாளேந்தி உடன் வந்தான். சுநீதர் “நாம் அரண்மனைக்கு செல்கிறோம். ஊருண்டாட்டு ஒருங்கமைந்துள்ளது. அடுமனைப் புகையின் மணம் எழுகிறது” என்றார். ரிஷபன் “நம் தேர் மறுபக்கம் சென்று நின்றுள்ளது, அரசே” என்றான். புஷ்கரன் சினத்துடன் அவனை நோக்கி “தெரியும்” என்றான்.

“இருவரும் இணைந்து மக்கள் நடுவே செல்லவேண்டும். அவர்களின் நல்வாழ்த்துக்கள் பொழியட்டும்” என்றார் சுநீதர். புஷ்கரனின் இடப்பக்கம் மாலினிதேவி வந்து நின்றாள். அவர்களின் ஆடைமுனைகளை மூதன்னையர் சேர்த்துக்கட்டினர். வாழ்த்தொலி எழுப்பியபடி மக்கள் அரிசியையும் மலரையும் அவர்கள்மேல் தூவினர். மாலினியின் சுட்டுவிரலை தன் சுட்டுவிரலால் பற்றியபடி புஷ்கரன் மக்கள் நடுவே உருவான ஆழ்நெடும்பாதையில் நடந்தான். வாளுடன் ரிஷபன் உடன் வந்தான். மலர்களும் அரிசியும் உடல்மேல் விழுவது அவனுக்கு உளப்புரட்டலை அளித்தது. தலையில் தொங்கிநின்ற மலர்களை தட்டிவிட விரும்பினான். சூழ தெரிந்த பல்விரிந்த முகங்கள் கெடுகனவிலென இளித்தன.

கண்கள் ஒவ்வொன்றிலும் வெறிப்பு. கொன்று உண்ணும் கான்விலங்கின் அறியாமை கலந்த உவகை.

தேர் வந்து நின்றது. சுநீதர் “அரண்மனைக்குச் செல்லுங்கள், இளவரசே. அரசஆடையில் உண்டாட்டுக்கு எழுந்தருளுங்கள். அரசியும் ஆடைமாற்றி வந்து சேரட்டும். அதற்குள் இங்குள்ள மக்கள் வழிபாடு முடிந்து ஊண்கூடங்களுக்கு வந்துவிடுவார்கள்…” என்றார். அவன் “நன்று” என்றபின் படிகளில் கால்வைத்து மேலேறினான். ரிஷபன் வாள் தாழ்த்தி வணங்கி மூன்று எட்டுவைத்து பின்னடைந்தான். மாலினிதேவி அவனுக்குப் பின்னால் படியிலேறி அவனருகே அமர்ந்தாள். தேர் மெல்லிய உலுக்கலுடன் உயிர்கொண்டது. புரவி ஒன்று சீறி மூச்சுவிட்டது. வெளியே அரசர் கிளம்புவதை அறிவிக்கும் முரசொலியும் கொம்பொலியும் எழுந்தன. தேர் நகர்ந்து உலுக்கி மெல்ல சாலையை அடைந்து விரைவுகொண்டது. குளிர்ந்த காற்று திரைச்சீலைகளை அசைத்தபடி உள்ளே பெருகிவந்தது.

அவன் மீண்டும் புரவியின் சீறலோசையை கேட்டான். ஆனால் அது அருகிலென சித்தம் உணர்ந்ததும் திரும்பிப் பார்த்தான். மேலாடையால் முகத்தை மூடியபடி மாலினிதேவி அழுதுகொண்டிருந்தாள். சில கணங்கள் அவன் அவளையே நோக்கினான். இருமுறை வாயும் கையும் அசைந்தன. சொல்லெடுக்காமல் திரும்பி கண்களை மூடிக்கொண்டான். சகடஒலியின் நேர்த்தியான தாளம் அவனை ஆறுதல்படுத்துவதாகத் தோன்றியது.

# நீர்க்கோலம் - 42

**41. தனிநகை**

விராடபுரியின் அரண்மனையில் திரௌபதிக்கு தனியறை ஒன்று ஒதுக்கப்பட்டது. அரசி சுதேஷ்ணையின் ஆணைப்படி அவ்வறையை அவளுக்குக் காட்டுவதற்கு அவளை அழைத்துச் சென்ற தலைமைச்சேடி பிரீதை அவளிடம் “இங்கு இளம்சேடியர் எவருக்கும் தனியறைகள் ஒதுக்கப்படுவதில்லை. அவர்கள் பொதுக்கூடங்களில்தான் அந்தியுறங்க வேண்டுமென்பது ஆணை” என்றாள். திரௌபதி திரும்பி அவளை பார்க்கவில்லை. அவள் மெல்லிய சிரிப்பொலியுடன் “எவள் எங்கு எவருடன் சென்றிருக்கிறாளென்ற கணக்கை தலைமைச்சேடி எடுக்கவேண்டுமல்லவா? அதற்கு உகந்த வழி அதுவே அன்றி, தனியறைகள்தோறும் சென்று கதவைத் தட்டவா முடியும்?” என்றாள்.

திரௌபதி அவளை நோக்காமலேயே நடந்தாள். எதையோ மிதித்து குழப்புவதுபோன்ற காலடிகளுடன் ததும்பும் தடித்த வெண்ணிற உடலை உந்தி உந்தி நடந்தாள் பிரீதை. உருண்ட முகமும் மின்னும் சிறிய கண்களும் கொண்ட பிரீதை முன்பொரு காலத்தில் அழகியெனக்கூட தோன்றியிருக்கக்கூடும். வாழ்வினூடாக ஊறி அவள் முகத்தில் தேங்கியிருந்த அறியமுடியாத நஞ்சு ஒன்று பார்த்த முதற்கணமே எரிச்சலையும் வெறுப்பையும் உருவாக்குவதாக இருந்தது. மூச்சிரைத்தபடி வியர்வை வாடை எழ அவள் நடந்தாள். அவள் மூச்சில் வெந்த ஊனின் கெடுமணம் இருந்தது.

“இந்த அறையில் முன்பு நான்தான் தங்கியிருந்தேன். என்னை அடுமனைக்கூடத்தின் தலைவியாக அமர்த்தியபோது இங்கிருந்து ஒழிந்து சென்றேன். அதிலிருந்து இங்கு எவரும் தங்குவதில்லை. உள்ளே பெட்டிகள்தான் இருந்தன. அரசி

ஆணையிட்டதனால் இதை தூய்மை செய்யச் சொன்னேன்” என்று சொல்லி அவள் நீண்ட மூவெட்டுத் தாழ்க்கோலால் அதன் பூட்டை திறந்தாள். மும்முறை சுழற்றி உள்ளே தாழ்விலகும் ஒலியை கேட்டபின் கதவை தள்ளித்திறந்து “குனிந்து வரவேண்டும். தலை மேலே முட்டக்கூடும்” என்று சொல்லி உள்ளே சென்றாள்.

திரௌபதி மிகவும் குனியவேண்டியிருந்தது. மிகச் சிறிய அறை. இரு கைகளையும் விரித்தால் இரு சுவர்களையும் தொடமுடியுமென்று தோன்றியது. சிறிய ஒரு சாளரம் மட்டுமே இருந்தது. கைகளை தூக்கினால் மச்சுப்பலகை முட்டியது. முழங்காலளவு உயரம் கொண்ட சிறிய மஞ்சம் ஒன்று அறையில் போடப்பட்டிருந்தது. அந்த மஞ்சம் அளவுக்கே இடம் எஞ்சியிருந்தது. “இங்கு ஒரு பெரிய மரப்பெட்டி உள்ளது. உங்கள் பொருட்களை வைத்துக்கொள்ளலாம். அதை மூடி தரையில் அமர்ந்து பெட்டி மேல் ஓலைகளை வைத்து எழுதவும் செய்யலாம்” என்று பிரீதை சொன்னாள். “நீங்கள் ஓலைகளில் எழுதுவதை விரும்புவீர்களென்று அரசி என்னிடம் சொன்னார்.”

மீண்டும் அந்தச் சிரிப்பு. அது வெறும் ஒலியாகவே அவளிடமிருந்து எழுந்தது. முகத்திலும் கண்களிலும் அச்சிரிப்பு தெரியவில்லை. “மலரையோ கணையாழியையோ அனுப்புவதைவிட ஓர் ஓலையில் இரண்டு வரி எழுதி அனுப்பினால் ஆண்கள் பெரிதும் மகிழ்கிறார்கள். நூல் பயிலாதவர்களுக்குக்கூட கற்ற பெண்ணொருத்தியுடன் கூடுவது பெருமிதத்தை அளிக்கிறது” என்றாள்.
“அடுமனைச்சேடியரில்கூட எழுத்து தெரிந்தவளுக்கு மதிப்பு மிகுதி. இங்கே அனிதை என்று ஒருத்தி இருந்தாள். காவியம்

கற்றவள் என்பார்கள். புரவிச்சூதன் ஒருவனுடன் சென்றாள். அவன் அவளை அயலூர் விடுதியில் கைவிட்டுவிட்டுச் சென்றான் என்றார்கள்.”

திரௌபதி அவளை நோக்கி திரும்பி “என்னுடைய மரவுரிகளும் தலையணைகளும் எங்கே?” என்றாள். அவள் தடுமாறி “அங்கே வெளியே” என்றாள். நேருக்கு நேர் விழிநோக்கிப் பேசுவது அவளை நிலைகுலைய வைக்கிறது என்பதை திரௌபதி முன்னரே கண்டிருந்தாள். பிறரில் அவள் எழுப்பும் வெறுப்பும் கசப்பும் அவள் தனக்குச் சுற்றும் போட்டுக்கொண்டிருக்கும் அரண். “அவற்றை எடுத்துக்கொண்டு வந்து இந்த மஞ்சத்தில் வை” என்று திரௌபதி ஆணையிட்டாள். அறியாது “அவ்வாறே” என்றபின் பிரீதை சட்டென்று முகம் சிவந்து விழிகள் எரிய “சேடியர் தங்கள் பணிகளை தாங்களேதான் செய்துகொள்ளவேண்டும்” என்றாள்.

“நன்று! இப்பணிகளைச் செய்ய பிறிதொரு சேடியை அனுப்பும்படி நான் அரசியிடம் சொல்கிறேன்” என்றாள் திரௌபதி. பிரீதை தடுமாறி “இல்லை, நான் அவ்வாறு சொல்லவில்லை. இதோ எடுத்துக்கொண்டு வருகிறேன்” என்று சொல்லி வெளியே சென்றாள். அங்கு அவள் பிறிதொரு சேடியை நோக்கி “யாரடி? அங்கு என்ன செய்கிறாய்? இந்த மரவுரிகளையும் தலையணைகளையும் எடுத்து உள்ளே வைக்கவேண்டுமென்று உன்னிடம் பலமுறை சொல்லியிருந்தேனல்லவா? எழுதித் தந்தால்தான் செய்வீர்களோ? சவுக்கின் சுவை என்ன என்று உங்கள் தோல்களுக்கு இன்னும் தெரியவில்லை. நான் எப்போதும் இதேபோல பொறுமையாக இருக்க மாட்டேன்” என்று கூச்சலிட்டது கேட்டது.

மாநிற உடலும் நீண்ட முகமும் பெரிய கண்களும் கொண்ட சேடிப்பெண் ஒருத்தி மரவுரிகளையும் தலையணையையும் உள்ளே எடுத்துக்கொண்டு வந்து மரவுரிகளை சீராக விரித்து அவற்றில் தலையணையை வைத்தாள். திரௌபதி மரப்பெட்டிமேல் அமர்ந்து சாளரம் வழியாக வெளியே பார்த்துக்கொண்டிருந்தாள். முதற்கணம் மிகச் சிறிதென்று தோன்றிய அவ்வறை விரிந்துகொண்டிருந்தது. அவளுக்கு மட்டுமேயான ஒரு சிறிய இடம். அலைவிரிவில் ஓர் ஓடம்போல.

மரவுரிகளை விரித்து முடித்து நிமிர்ந்து நின்ற இளம்சேடி தாழ்ந்த குரலில் “பிறிதேதாவது...?” என்றாள். திரௌபதி திரும்பிப்பார்த்து “உன் பெயரென்ன?” என்றாள். அவள் முகம் சிவந்து விழி தாழ்த்தி மெல்லிய குரலில் “சுபாஷிணி” என்றாள். “நான் சூதப்பெண். இங்குதான் பிறந்து வளர்ந்தேன்.” திரௌபதி “இசை கற்றிருக்கிறாயா?” என்று கேட்டாள். “இல்லை, நாங்கள் அடுமனையாளர்கள்” என்று அவள் சொன்னாள். “என் அன்னை இங்குதான் பணியாற்றினாள். சென்ற ஆண்டு வயிற்றுச் சூலை நோயால் உயிர் துறந்தாள். தந்தை எவரென்று அவள் என்னிடம் சொன்னதில்லை.”

திரௌபதி “உன் குரல் நன்று, நீ பாட்டு கற்றிருக்கலாம்” என்றாள். “இங்கு அதற்கெல்லாம் பொழுதே இல்லை” என்றாள் சுபாஷிணி. அவள் செல்லலாம் என திரௌபதி விழிகாட்டி சாளரத்தை நோக்கினாள். அவள் அங்கேயே நிற்பதை விழிமுனையால் கண்டு புருவத்தை தூக்கினாள். அவள் தயங்கி “ஒன்று சொல்லவா?” என்றாள். “சொல்” என்றாள் திரௌபதி புன்னகையுடன். “தாங்கள் சூதப்பெண் அல்ல, ஷத்ரியப்பெண். சூதப்பெண்களுக்கு இவ்வாறு ஆணையிட முடியாது. தாங்கள்

எங்கோ அரசொன்றை ஆண்டவர். அரியணை அமர்ந்தவர். அதை இங்கு அனைவருமே பேசிக்கொண்டிருக்கிறார்கள்” என்றாள்.

“நன்று” என்று திரௌபதி புன்னகைத்தாள். “தாங்கள் யாரென்று நான் கேட்கப்போவதில்லை. கேட்கக்கூடாதென்று பேரரசியின் ஆணை என்றார்கள்” என்று சுபாஷிணி சொன்னாள். “ஆனால்...” என்றபின் சொல்நிறுத்தி திரும்பிச் செல்ல முயன்றாள். “சொல், என்ன?” என்றாள் திரௌபதி. “ஒன்றுமில்லை” என்றாள் அவள். “சொல்! என்ன சொல்ல வந்தாய்?” என்றாள் திரௌபதி. “தாங்கள் ஏதோ மாற்றுருகொண்டு இங்கு வந்திருக்கிறீர்கள். மாற்றுருவேயானாலும் எங்கள் கூட்டத்தில் ஒருவர் இவ்வண்ணம் பேரரசியரின் தோற்றத்துடனும் நிமிர்வுடனும் இருப்பது மிகப்பெரிய உவகையளிக்கிறது” என்றாள்.

“ஏன்?” என்றாள் திரௌபதி. நாணப் புன்னகையுடன் “தனியறையில் அமர்ந்து பகற்கனவு காணும்போது தங்களைப்போல நானும் ஆவதாக கற்பனை செய்துகொள்ளலாம் அல்லவா?” என்று அவள் சொன்னாள். அவ்விளமையின் தூய சிரிப்பு திரௌபதியை மலரவைத்தது. “அருகே வா!” என்றாள். அவள் கால் உழற்றி தயங்கி சிறுமியைப்போல அருகே சென்றதும் அவள் கைகளைப்பற்றி இழுத்து அருகணைத்து “உனக்கு என்ன வயதாகிறது?” என்றாள் திரௌபதி. “பதினாறு” என்றாள் சுபாஷிணி.

“கனவுகள் காணும் வயது. கனவு காண்பதில் பிழையொன்றுமில்லை. குற்றவுணர்வோ நாணமோ கொண்டு அதை கட்டுப்படுத்த வேண்டியதில்லை. உன் வயதில் நானும் மிகப்பெரிய கனவுகளைக் கண்டேன். இன்று எண்ணுகையில் அக்கனவுகளுக்கு நடைமுறைப் பொருளென்று ஏதுமில்லை

என்று தோன்றுகிறது. அக்கனவுகள் அளித்த இன்பம் மட்டுமே அவற்றின் பயன்” என்றாள் திரௌபதி. அவள் “தாங்கள் கண்ட கனவுகள் எதுவும் நிறைவேறவில்லையா?” என்றாள்.

திரௌபதி புன்னகையுடன் “கனவுகள் முழுக்க நிறைவேறும் வாழ்க்கை தேவர்களுக்கும் அமைவதில்லை. என் கனவுகளில் ஒரு பகுதி நிறைவேறியது. ஆகவே எஞ்சியவற்றை அடைந்துவிடலாமென்று எண்ணினேன். இப்போது கனவுகளைத் துரத்துவதைப்போல வாழ்க்கையை வீணடிப்பது பிறிதொன்றில்லை என்று தோன்றுகிறது. கனவுகளில் அமர்ந்து திளைத்து மகிழ்ந்து அவற்றிலேயே மூழ்கி மறைய முடியுமென்றால் அதுவே பெருங்கொடை” என்றாள்.

“நீங்கள் நூல்கற்ற விறலியைப்போல் பேசுகிறீர்கள்” என்றாள் சுபாஷிணி. “நான் நூல்கற்றிருக்கிறேன்” என்றாள் திரௌபதி. வெளியே பிரீதை “ஏய் சுண்டெலி, அங்கு என்ன செய்கிறாய்? உன்னிடம் நான் சொன்னதென்ன?” என்று குரலெழுப்பினாள். “அய்யோ... நான் செல்லவேண்டும்” என்ற சுபாஷிணி புன்னகையுடன் “சுண்டெலி என்பது நான்தான். என் முகம் கூரியது என்கிறார்கள்” என்றாள். சிறிய வாயிலுக்கப்பால் பிரீதை தோன்றினாள். திரௌபதியின் கைகளை உதறி பின்னால் நகர்ந்த சுபாஷிணி “நான் இவர்களிடம்...” என்று ஏதோ சொல்லத் தொடங்க அவள் “உன் தோலை உரிக்காமல் இன்று விடப்போவதில்லை. ஒரு நாழிகையாக ஒரு வேலையை செய்கிறாயா? வா, வாடி” என்றாள்.

திரௌபதி பிரீதையிடம் “உள்ளே வா” என்றாள். “யாரிடம் சொல்கிறாய்? என்னிடமா?” என்றாள் அவள். “உன்னிடம்தான். உள்ளே வா” என்றாள் திரௌபதி. அவள் முகம் சிவக்க மூச்சு சீற “நான் இங்கே சேடியர்தலைவி... நான்...” என பேசத்தொடங்க

“உள்ளே வா” என்றாள் திரௌபதி. அவள் கண்ணறியா சரடொன்றால் இழுக்கப்பட்டதுபோல உள்ளே வந்ததும் “உன்னிடம் ஒரு சொல் தனியாக நான் சொல்லவேண்டும்” என்றாள் திரௌபதி. “என்ன சொல்லப்போகிறாய்?” என்று பிரீதை படபடப்புடன் கேட்டாள். அவள் உடலே சிவந்து வியர்வை பொடித்தது. “என்ன சொல்லப்போகிறாய்? நான் யார் என்று அறிவாயா?” என்றாள்.

“அறிந்த பின்தான் இதை சொல்கிறேன். இனி எனக்கெதிராகவோ எனக்கு வேண்டியவர்களுக்கு எதிராகவோ ஓர் எண்ணம் உன் உள்ளத்தில் எழுந்ததென்று நானறிந்தால் உன் கழுத்தில் குறுவாளைப் பாய்ச்ச தயங்கமாட்டேன். என்னால் அது மிக எளிதாக இயலும் என்பதை நான் சொல்ல வேண்டியதில்லை” என்றாள் திரௌபதி. பிரீதை இரு கைகளும் தளர்ந்து தொடைமேல் உரசி விழ தொங்கிய முலைச்சுமைகள் எழுந்தமைய “நான் இங்கு...” என்று தடுமாறினாள். “இனி இந்த அகத்தளம் முழுவதும் என் ஆணைகள் மட்டுமே செல்லும். மறுசொல் எடுக்கவோ எண்ணவோ எவருக்கும் ஒப்புதல் இல்லை. அவ்வாறு என் சொல் கடந்து செல்லும் எவரும் இங்கு உயிர் வாழமாட்டார்கள்” என்றாள் திரௌபதி.

அவள் விழிகளை கூர்ந்து நோக்கி “ஏனெனில் ஐந்து கந்தர்வர்களால் காக்கப்படும் பெண் நான். உனது அத்தனை கரவுச் செயல்களையும் நன்கறிந்தவள். இனி அறியவேண்டுவதும் ஏதேனும் இருந்தால் ஓரிரவுக்குள் என்னால் அறியவும் இயலும்” என்றாள் திரௌபதி. அவள் கால் தளர்ந்து கைநீட்டி சுவரை பற்றிக்கொண்டு “கரவு என்று எதை சொல்கிறீர்கள்? நான் ஏதுமறியேன்” என்றாள். திரௌபதி “இவ்வரண்மனையிலிருந்து கீசகருக்கு செய்திகளை கொண்டு

செல்லும் சிலரில் ஒருத்தி நீ. இங்கு நான் வந்த முதல்நாள் நானும் அரசியும் தனித்திருந்து பேசுகையில் அவ்வறைக்கு வெளியே நீ நின்றிருந்தாய். அரசி பேசுவது உனக்கு காதில் விழவில்லை. ஆனால் அரசியிடம் நான் எத்தனை பொழுது பேசினேன் என்பதை உடனடியாக கீசகரிடம் சென்று சொன்னாய்” என்றாள்.

கையசைத்து முகம் பதறி “இல்லை...” என்று சொல்லத் தொடங்கிய பிரீதை “நான் என்ன செய்வேன்? சொல்லும்படி எனக்கு ஆணையிட்டால் அதை செய்துதானே ஆகவேண்டும்? கீசகரின் ஆணையை மீறும் ஆற்றல் கொண்ட எவரும் இந்த நகரில் இல்லை” என்றாள். திரௌபதி “ஆம், நீ சொல்லக்கூடாதென்று நான் ஆணையிடவில்லை. நீ சொல்வது எனக்குத் தெரியும் என்று மட்டும்தான் சொன்னேன். செல்க!” என்றாள். அவள் கைநீட்டி “நான் எளியவள். நினைவறிந்த நாள்முதலாய் இங்கு அண்டிப்பிழைப்பவள். எவருக்கும் உளமறிந்து எந்தத் தீங்கும் செய்ததில்லை. வாழ்வதின் பொருட்டு எதையோ செய்கிறேன்” என்றாள். “ஆம், எந்தத் தீங்கும் செய்யாமலிருக்கும் வரை உனக்கும் எத்தீங்கும் நிகழாது” என்று திரௌபதி சொன்னாள். கைகூப்பியபின் கண்ணீரைத் துடைத்தபடி பிரீதை வெளியேறினாள்.

சுபாஷிணி அவள் செல்வதைப் பார்த்தபின் நெஞ்சில் கை வைத்து “ஐயோ” என்றாள். “என்ன?” என்றாள் திரௌபதி. “அவள் யார் தெரியுமா? அவளுக்கு நாவில் நஞ்சு. கண்களில் அதைவிடக் கொடிய நஞ்சு. இங்கு அவளை அஞ்சாத பெண்கள் எவருமே இல்லை” என்றாள். “இனி அஞ்ச வேண்டியதில்லை” என்றாள் திரௌபதி. “ஆம், நான் உங்கள் கண்களில் பட்டுவிட்டேன். இனி எதையும் நான் அஞ்சவேண்டியதில்லை”

என்று சுபாஷிணி சொன்னாள். பிறகு தாழ்ந்த குரலில் “மெய்யாகவா?” என்றாள்.

“என்ன?” என்றாள் திரௌபதி. “ஐந்து கந்தர்வர்கள் இருக்கிறார்களா?” என்றாள். “ஆம், ஐந்துபேர். நான் ஐந்து கந்தர்வர்களை மணந்தவள்” என்றாள். அவள் மேலும் குரல்தாழ “எங்கிருக்கிறார்கள்?” என்றாள். கண்களில் சிரிப்புடன் “இங்கு” என்றாள் திரௌபதி. அவள் கழுத்திலும் தோளிலும் மெய்ப்பு எழுந்தது. அழுவதுபோன்ற குரலில் “இங்கென்றால்...” என்றாள். “இந்த அறைக்குள்” என்றாள் திரௌபதி. “இந்த அறைக்குள்ளா?” என்று அவள் அறியாது பின்னடைந்தாள். “அஞ்ச வேண்டியதில்லை. அவர்கள் உன்னை பார்ப்பார்கள். உன்னால் அவர்களை பார்க்க இயலாது” என்றாள் திரௌபதி.

அவள் நீள்மூச்சுவிட்டாள். பிறகு “பொய்தானே?” என்றாள். “மெய்” என்று திரௌபதி சொன்னாள். “நான் யானைமேல் ஏறியதை நீ சாளரத்தின் அருகே நின்று பார்த்தாய் அல்லவா?” அவள் “அய்யோ, இல்லை” என்றாள். “நீ ஒரு தூணை பற்றிக்கொண்டு நின்று பார்த்தாய். நான் பிரீதையுடன் வரும்போது எங்களுக்குப் பின்னால் வந்தாய். வரும்போது ஓசை கேட்காமலிருக்க சிலம்புகளைக் கழற்றி மடியில் கட்டிக்கொண்டாய். இப்போது அவை மடியில் உள்ளன. வெண்கலச் சிலம்புகள். உன் அன்னைக்குரியவை.”

அவள் “அய்யோ!’ என கன்னத்தில் கைவைத்து வியந்தாள். மடியில் இருந்து சிலம்புகளை எடுத்துக்காட்டி “என் அன்னையிடமிருந்த ஒரே அணி இதுதான். அன்னை இறக்கும்போது இதை எனக்கு அளித்தாள்” என்றாள். பித்தளையாலான பழைய சிலம்பின் செதுக்குகளில் களிம்பு படிந்திருந்தது. திரௌபதி “உனக்கு நேர்பின்னால் என்

கந்தர்வன் ஒருவன் வந்துகொண்டிருந்தான்” என்றாள். “அவன் பெயர் என்ன?” என்றாள் சுபாஷிணி. “ஃபால்குனன். பெண்களை விரும்புபவன்” என்றாள் திரௌபதி. “யானைமேல் எப்படி ஏறினீர்கள்?” என்றாள். “விருகோதரன் என்ற கந்தர்வனின் ஆணைக்கு யானை பணிந்தது” என்றாள்.

“புரவிகளுக்கு?” என்றாள் சுபாஷிணி “புரவிகளை மாத்ரன் என்ற கந்தர்வனைக் கொண்டு ஆள்கிறேன்” என்றாள் திரௌபதி. அவள் பெருமூச்சுவிட்டாள். “வருவது உரைக்க நேமிகன் என்னும் கந்தர்வன் உதவுவான். நான் விரும்பிய நூலில் உள்ள வரிகளை எடுத்து அளிப்பவன் யமன் என்னும் கந்தர்வன்.” அவள் “உங்கள் ஆணைப்படி அவர்கள் நடப்பார்களா?” என்றாள். “ஆம், ஆணையிடவே வேண்டியதில்லை. எண்ணினால் போதும். அதை நிகழ்த்துவார்கள்.”

சில கணங்களுக்குப் பிறகு “அப்படியென்றால் உங்களை அவர்கள் ஏன் ஒரு பேரரசியென்று ஆக்கக்கூடாது?” என்று சுபாஷிணி கேட்டாள். “பாரதவர்ஷத்தின் சக்ரவர்த்தினியென்றே அவர்களால் என்னை ஆக்க முடியும். அதை நான் இப்போது விழையவில்லை” என்று திரௌபதி சொன்னாள். சிலகணங்கள் அவளை நோக்கி நின்றுவிட்டு “நீங்கள் மானுடப்பெண்ணே அல்ல. நீங்களும் ஒரு கந்தர்வப்பெண்ணோ என்று தோன்றுகிறது” என்றாள். திரௌபதி வெறுமனே சிரித்தாள். அவள் நெஞ்சில் கைவைத்து “சிரிக்கையில் மிக அண்மையில் வந்துவிட்டீர்கள். உங்களால் இப்படி சிரிக்க முடியுமென்றே என்னால் எண்ணமுடியவில்லை. கொற்றவைபோல தோன்றினீர்கள். சிரிக்கையில் திருமகள்போல ஆகிவிட்டீர்கள்” என்றாள்.

திரௌபதி புன்னகைத்து “உன்னிடம் எப்போதும் சிரித்துதான் பேசுவேன், சரியா?” என்றாள். “அய்யோ… நெடுநேரமாயிற்று, என்னை தேடுவார்கள். நான் வருகிறேன். பணிகள் உள்ளன” என்று சுபாஷிணி வெளியே சென்றாள்.

அரசியின் அறையிலிருந்து திரௌபதி நள்ளிரவில்தான் தன் அறைக்கு திரும்பிவருவது வழக்கம். அந்த அறை அவளுக்கு மிக அணுக்கமானதாக ஆகிவிட்டிருந்தது. அதற்குள் தனிமையில் அரையிருளில் சாளரம் வழியாகத் தெரியும் விண்மீன்களை நோக்கியபடி அவள் விழித்திருப்பாள். அறியாது துயிலில் ஆழ்கையில் கனவுக்குள் எப்போதும் ஒரு விண்மீனாவது எஞ்சியிருக்கும். அந்த அறை சிறிதாக இருப்பதனாலேயே அத்தனை அணுக்கம் கொள்கிறது என்று தோன்றியது. அவள் அணிந்த ஆடைபோன்றிருந்தது அது. கரவுத்தோற்றம் போல.

புலரியில் எழுந்து நீராடி ஆடையணிந்து அரசியின் அறைவாயிலை அடைவாள். அரசி துயிலெழுந்து அணிச்சேடியருக்காக காத்திருக்கும் பொழுது அது. அவளைக் கண்டதும் அரசி உடல் எளிதாகி பெருமூச்சுவிடுவாள். “வந்துவிட்டாயா?” என்பதுதான் எப்போதும் அவள் கேட்கும் முதல் வினா. திரௌபதி புன்னகைத்து “நன்றாகத் துயின்றீர்களா?” என்று கேட்பாள். “ஆம், நான் எப்போதுமே துயில்கிறேன். பகலில் சற்று ஓய்வெடுப்பதற்குக்கூட என்னால் முடிவதில்லை” என்று அரசி சொல்வாள்.

பின் எப்போதுமுள்ள அந்த வினா “நீ ஏனடி என்னுடன் இரவு தங்குவதில்லை? காவல்பெண்டு என்றால் இரவுதானே உடனிருக்கவேண்டும்?” அவள் புன்னகையுடன் “நான் என்

கந்தர்வர்களை காணும்பொழுது இரவுதானே?” என்பாள். “நீ விளையாடுகிறாயா என்றே தெரியவில்லை” என்று அரசி சலிப்புடன் சொல்வாள். “இங்கு நான் உங்களுக்கு அமைத்துள்ள காவலர்கள் என்னால் தெரிவுசெய்யப்பட்டவர்கள். அவர்களை நீங்கள் என்னைப்போலவே நம்பலாம்” என்பாள் திரௌபதி. “இந்த அரண்மனையில் எவரையுமே நம்பமாட்டேன்” என்பாள் சுதேஷ்ணை.

ஆனால் பகலெல்லாம் நீளும் தொடர் அலுவல்களில் இருந்து முழுமையாக தன்னை விலக்கிக்கொள்ளும் ஒரு தருணம் அவளுக்கு வேண்டியிருந்தது. அவள் அரசியுடன் அவை அமரும்போதும் ஆலயங்களுக்குச் செல்லும்போதும் குடிக்கூடல்களில் நின்றிருக்கும்போதும் அரசியருகே வாளேந்தி நின்றிருந்தாள். அரசிக்குரிய நேரடிச் சிற்றேவல்களை செய்தாள். அரசியின் காவல்பணிகளை ஒருங்கிணைத்தாள். அவற்றைவிட முதன்மையாக ஓயாமல் புலம்பிக்கொண்டே இருந்த சுதேஷ்ணையின் சொற்களுக்கு செவியளித்துக்கொண்டே இருந்தாள். திரும்பத்திரும்ப கேட்டவை என்றாலும் அவளால் உளமளிக்காமலிருக்க இயலவில்லை. அவள் உளமளிக்கிறாள் என்பதனாலேயே மீண்டும் விரித்துரைத்தாள் சுதேஷ்ணை. “நான் அரசி அல்ல. கைவிடப்பட்ட அன்னை. எனக்கு எவருமே இல்லை” என்று அவள் திரௌபதியின் கைகளை பற்றிக்கொண்டு சொல்லும்போது கண்களில் நீர்ப்படலம் வந்து ஒளிரத்தொடங்கிவிடும்.

அவள் மக்கள் இருவருமே அவள் சொல்வனவற்றை எவ்வகையிலும் பொருட்படுத்தவில்லை. உத்தரை நீர்த்தாமரைபோல ஒளியுடன் ததும்பிக்கொண்டிருந்தாள். ஆகவே அன்னையின் எளிய சொற்களைக்கூட

எரிச்சலுடன்தான் எதிர்கொண்டாள். சினந்து கூச்சலிட்டாள். தன் தனிமைக்குள் அவள் அன்னையை விடவேயில்லை. உத்தரன் ஏற்கனவே அனைத்தையும் உணர்ந்து கனிந்தவனாக தோற்றம் சூடியிருந்தான். அன்னை பேசத்தொடங்கும்போதே குழவியின் குதலைப்பேச்சை கேட்கும் தந்தையின் முகத்தை சூடிக்கொண்டான். எளிய நகையாட்டுடனும் இனிய அணைப்புடனும் அவள் சொல்வதை கேட்டபின் அதை அக்கணமே தவிர்த்துவிட்டுச் சென்றான். அரசி அரசரை சந்திப்பதே மிக அரிதாக இருந்தது. ஆகவே அவள் எப்போதும் திரௌபதியிடம்தான் பேசிக்கொண்டே இருந்தாள்.

“அந்த ஆணிலியிடம் ஏதோ ஒரு மாயம் இருக்கிறது, சைரந்திரி. என்னால் அது என்ன என்று சொல்லக்கூடவில்லை. அவளை தொலைவில் பார்க்கையில் நிமிர்வுள்ள ஆண்மகன் என்றே தோன்றுகிறது. அணுகிவருந்தோறும் பெண் என்றாகி பேரழகியாக மாறி நிற்கிறாள். அவள் நடனமாடுவதை ஒருநாள் அவளறியாமல் நோக்கினேன். என்னதான் கற்பிக்கிறாள் என்று பார்க்கவேண்டுமே? என்னை அழைத்துச் செல் என்று உத்தரையின் அணிச்சேடியிடம் சொன்னேன். பக்கத்து அறையிலிருந்து சாளரம் வழியாக நோக்கினேன். சொல்லாமலிருக்க முடியவில்லை. நான் எல்லாவற்றையும் மறந்துவிட்டேன். கேகயத்தில் வாழ்ந்த என் கன்னிநாட்களுக்கே சென்றுவிட்டேன். என் உளம்நிறைந்த ஆண் ஒருவனுடன் இளங்காட்டில் நடனமிட்டுக்கொண்டிருந்தேன்.”

நீள்மூச்சுடன் “ஆம், எனக்கு அவ்வண்ணம் ஆண்கள் இருந்தனர். நானும் எத்தனை கதைகளை கேட்டுவளர்ந்தவள்! அவனுக்கு முகமோ உடலோ இல்லை. அவன் இறுதிவரை ஓர் உடலென என் முன் வரவேயில்லை. ஆனால் ஒருபோதும் என்னுள்

இருந்து அவன் விலகியதுமில்லை” என்றாள் சுதேஷ்ணை. “இந்த ஆணிலி அக்கனவுகளை எழுப்புகிறாள். தன்னைச் சூழ்ந்திருந்த அனைத்தையும் உடன் நடனமிடச்செய்கிறாள். மானுடர் மட்டுமல்ல, தூண்களும்கூட அவளுடன் ஆடுவதை கண்டேன். அவ்வாறு ஆட எளிய மானுடரால் இயலாது. அவள் உடல் புல்நுனியில் நின்றிருக்கும் பனித்துளியில் வானம் என நிலைகொண்டு பெருகியிருக்கிறது என்று ஒரு விறலி என்னிடம் சொன்னாள். மெய்.”

“அவள் எதை கற்பிக்கிறாள் என்று நான் கேட்டேன். அதற்கு இவ்வுலகத்திலுள்ள அனைத்தையும்தான் என்கிறாள் உத்தரை. சினம்கொண்டு இவ்வுலகிலுள்ள அனைத்தையும் என்றால் அரசு சூழ்தலையுமா என்று நான் கேட்டேன். ஆம் அன்னையே அதையும்தான் என்றாள். அது மெய்யென்று நானே தெரிந்துகொண்டேன். உத்தரை புரவியேறுவதும் யானையேறுவதும் முழுமையாக மாறிவிட்டன. முன்பெல்லாம் இருவர் புரவிக்கடிவாளத்தையும் சேணத்தையும் பற்றிக்கொள்ள இருமுறை துள்ளி மூன்றாம்முறை கால்தூக்கி வைப்பாள். சென்ற நாளில் பார்த்தேன், பட்டாம்பூச்சி எழுந்து மலர்மேல் அமர்வதுபோல புரவிஏறினாள். யானைமேல் அமர்ந்திருக்கையில் முகிலில் ஊர்பவள் போலிருக்கிறாள்.”

“அவள் வாளேந்திச் சுழற்றுவதைப்பற்றி சேடி சொன்னாள் என்று சென்று பார்த்தேன். வாள் அவள் கையில் வெள்ளிமின்னல்போல ஒளிச்சுழிபோல வெண்ணிறமலர்போல இருந்தது. என்னால் விழிகளை நம்பவே முடியவில்லை. ஒற்றைக்கையால் நாணிழுத்து மூன்று அம்புகளை எடுத்துத் தொடுத்து மூன்று இலக்குகள்மேல் எய்தாள். கந்தர்வர்கள் எவரேனும் அவளுருவில் அங்கு வந்துவிட்டார்களோ என்றே

ஐயுற்றேன். அவ்வித்தைகளை அவளுக்கு பிருகந்நளை எங்கே கற்றுக்கொடுத்தாள் என்று கேட்டேன். விந்தை, அவள் நடனமன்றி எதையுமே கற்றுக்கொடுக்கவில்லை. நடனத்தினூடாக இவையனைத்தையும் இவள் கற்றுக்கொண்டிருக்கிறாள்.”

“அவள் நிற்பும் நோக்கும் மாறிவிட்டன. தோள்கள் நிமிர்ந்து இடை நேராக அசைய இட்டகாலடிமேல் எடுத்தகாலை வைத்து நடக்கிறாள். ஆழ்ந்த குரலில் ஆணையிடுகிறாள். சொற்கள் ஒவ்வொன்றும் மும்முறை எண்ணி எடுத்தவைபோல் உள்ளன” என்றாள் சுதேஷ்ணை. “அது நல்லதுதானே? அவள் பேரரசியாவாள் என்றல்லவா நிமித்திகர் சொல்லியிருக்கிறார்கள்?” என்றாள் திரௌபதி. “நிமித்திகர் சொல்லவில்லை. சோலைக்கு வந்துள்ள அருகநெறிக் கணியர் சொன்னார். அதுதான் என் நம்பிக்கை. பேரரசர்களின் மைந்தர்கள் எவருக்கேனும் மகள்கொடை கேட்டு வருவார்கள் என்று நம்பிக்கொண்டிருக்கிறேன். இவள் செய்வதென்ன? இந்த ஆணிலியிடம்…”

திரௌபதி “ஆணிலிதானே?” என்று புன்னகையுடன் சொன்னாள். “அதுதான் எனக்கு ஐயமாக இருக்கிறது” என்றாள் சுதேஷ்ணை. “ஆனால் அதைவிட நான் அஞ்சுவது அந்த அரைமுனிவனை. அவன் யார்? முனிவன்போல மாற்றுருகொண்டவன். அறிஞன். ஆனால் அவன் கூர்வாளை பட்டில் சுற்றிவைத்திருப்பதைப்போலத் தோன்றுகிறான். வந்த முதல்கணமே அவன் கீசகனை வென்றதை நீ பார்த்தாய் அல்லவா? கீசகனைப்போன்ற அரசியல்சூழ்ச்சி தேர்ந்தவனே அவனை தன் அணுக்கனாக வைத்திருக்கிறான் என்றால் அவன் எப்படிப்பட்டவன்? நூல் தேர்ந்தவன் என்கிறார்கள். அவன் கற்ற

நூல்களில் சூது கொடிய பிழை என்று இல்லையா என்ன? கீசகனுக்கு அரசியல் அறிவிக்காத பொழுதெல்லாம் அரசருடன் அகத்தளத்தில் அமர்ந்து சூதாடிக்கொண்டிருக்கிறான்.”

“அரசர் இப்போது பெண்களை மறந்துவிட்டார். குடியும் கூட குறைந்துவிட்டது. எழுந்ததுமே முதல் வினா குங்கன் எங்கே என்றுதான். குங்கன் கீசகனுடன் சென்றிருக்கிறான் என்றால் பதைபதைப்புடன் உலவியபடி அடிக்கொருமுறை வருகிறானா என்று பார்க்கிறார். வந்ததுமே காதலியைக் கண்ட இளையோன்போல கண்கள் சிரிக்க பாய்ந்துசெல்கிறார். தழுவிக்கொள்கிறார். பின்னர் ஒரு கணமும் பிந்துவதில்லை. சூதுக்களம் பரப்பியாகவேண்டும். அமர்ந்து பகடையுருட்டத் தொடங்கவேண்டும். உயிர்காக்கும் மருந்தை அள்ளி அருந்துவதுபோல. தெய்வங்களுக்கு பூசெய்கை இயற்றுவதுபோல.”

“அவன் உண்மையில் பகடையென வைத்தாடுவது அவரைத்தான். இன்று அவன் என்ன சொன்னாலும் அவர் செய்வார் என்ற நிலை. அதன் மாயம் என்ன என்று நான் ஒற்றர்களிடம் கேட்டேன். அரசருக்கு ஏன் இன்றுவரை சூதில் பித்து எழவில்லை என்றால் அவர் வெல்வது மிக அரிதென்பதனால்தான். அவரால் உளம்நிறுத்த முடியாது. தொடர்ச்சி பேணமுடியாது. குடியால் நனைந்து ஊறிய சித்தம். அதை நீருக்குள் மூழ்கி நுரையெழுப்பும் பெருவாய்த் தவளை என்று அவைச்சூதர் காமர் சொன்னார் ஒருமுறை. அவனுடன் ஆடத்தொடங்கிய அன்றே ஒருமுறை அவர் வென்றார். அது அவன் விட்டுக்கொடுத்து வென்றதும் அல்ல. மிகத் தற்செயலாக கூரிய நகர்வொன்றை அவர் நடத்தினார். அத்தருணத்தை பயன்படுத்திக்கொண்டான் அவன். அவரை

வெல்லவிட்டான். தன்னால் மிகக் கூரிய நகர்வை நடத்த முடியும் என அவரை நம்பவைத்தான். பற்றிக்கொண்டுவிட்டார்.”

“அதன்பின் வெற்றி எப்போதும் அவர் அருகே இருக்கும்படி பார்த்துக்கொள்கிறான். எளிதில் அதை அளிப்பதில்லை. ஆனால் அது கையெட்டினால் தொட்டுவிடக்கூடியதென்றும் காட்டிக்கொண்டிருக்கிறான். பறவைகளின் ஆடல் அது. அருகே நின்றிருக்கும். பற்ற முயன்றால் பறக்கும். விழி விலக்கினால் வந்து தோளில் அமரும். பெண்களின் வித்தையும் அதுதானே? அவரை அவன் பித்தனாக்கி தன் ஆட்டக்களத்தில் நிறுத்தியிருக்கிறான்” என்ற சுதேஷ்ணை பெருமூச்சுடன் “நான் உத்தரனிடம்தான் சொல்லிக்கொண்டிருந்தேன் இதையெல்லாம். அவன் சொன்னான் பிருகந்நளையை அவன் பொறுப்பேற்று நோக்கிக்கொள்வதாக” என்றாள்.

“யார்?” என்றாள் திரௌபதி. அதிலிருந்த நகைப்பை உணர்ந்த அரசி “உத்தரனால் இதையெல்லாம் செய்ய முடியும். சிறந்த ஒற்றன் வழியாக அவன் பிருகந்நளையை வேவுபார்த்து அவளுடைய கரவு என்ன என்பதை நோக்கி என்னிடம் சொல்வான். அவள் மாற்றுருகொண்டு வந்தவளா? தீயதெய்வங்கள் எவற்றையேனும் வழிபட்டு உடன்கொண்டிருக்கிறாளா? அதை அறியாமல் எனக்கு ஆறுதல் இல்லை” என்றாள். திரௌபதி “ஆம், அதை உத்தரர் அறிந்து சொல்லக்கூடும்” என்றாள். “அதன்பின்னர்தான் குங்கனையும் வேவுபார்க்கவேண்டும்” என்றாள் அரசி.

ஒவ்வொருநாளும் சலித்து களைத்து அவள் அந்த அறைக்குள் திரும்பினாள். உள்ளே நுழைந்து கதவை சாத்திக்கொண்டு ஆடைகளை கழற்றத் தொடங்கும்போது நிகழ்ந்த அனைத்தும்

மீண்டும் அவள் உள்ளத்தில் ஓடத்தொடங்கும். புன்னகை வந்து இதழ்களில் அமையும். பின்னர் அவ்வறைக்குள் எப்போதும் அப்புன்னகை வந்தது. அறைக்குள் அப்புன்னகையை விட்டுவிட்டு காலையில் கிளம்பிச்சென்றாள். அதன் கதவை திறக்கையில் அப்புன்னகை தாவி வந்து அவளை தழுவிக்கொண்டது.

# நீர்க்கோலம் - 43

**42. சூரணங்கு**

✿முக்தன் அரண்மனை வாயிலை அடைந்ததும் அங்கே அவனுக்காகக் காத்திருந்த உத்தரனின் அகத்தளக் காவலன் கஜன் ஓடி அருகே வந்து “மூத்தவரே, உங்களை உடனே அழைத்து வரும்படி இளவரசரின் ஆணை” என்றான். “என்னையா?” என்று திகைப்புடன் கேட்டபடி புரவியிலிருந்து இறங்கினான் முக்தன். “உங்களைத்தான்” என்றான். “ஆனால் உங்கள் இல்லம் எனக்கு தெரியவில்லை. அதை எளியவனாகிய நான் தேடிக் கண்டுபிடிப்பதும் இயல்வதல்ல. எப்படியும் தாங்கள் இங்கு வருவீர்கள் என்று காத்திருக்கிறேன். நல்லவேளை வந்துவிட்டீர்கள்” என்றான்.

“ஏன் ஒற்றர்களை வைத்து கண்டுபிடிப்பதற்கென்ன?” என்றான் முக்தன். “ஒற்றர்களையா? ஒற்றர்கள் யார் இவர் சொன்னால் கேட்கிறார்கள்? நானேகூட உங்கள் இல்லத்தை கண்டுபிடிக்க முடியவில்லையென்றால் அப்படியே சென்று இளவரசர் ஆணையிட்டார் என்று ஏதேனும் படைப்பிரிவுக்குள் நுழைந்துகொள்ளலாமா என்று பார்த்தேன்” என்றான். சிரித்தபடி “தேடமாட்டாரா?” என்றான் முக்தன். “தேடமாட்டார். இரண்டு

நாட்களுக்குப் பின்னால் நான் வந்து அவர் முன் நின்றால்கூட என் முகம் அவர் நினைவில் நிற்காது. உடனடியாக நிறைவேற்றியாகவேண்டிய பிறிதேதேனும் ஆணை ஒன்றை எனக்களிப்பார். உங்களுக்குத் தெரியாது, எங்களது இளவரசரைப்போல விந்தையான ஒருவரைக் காண்பது மிக அரிது.”

அவன் அருகே வந்து புரவியின் கடிவாளத்தை பிடித்துக்கொண்டு “ஆனால் கருணை கொண்டவர் இளவரசர். எளியோர் எவராயினும் அவர் அருகே சென்று நின்று கண்ணீர் உகுக்க முடிந்தால் அதை அவரால் புரிந்துகொள்ள முடியும்” என்றான் கஜன். புரவியை கொண்டுசென்று தளையில் கட்டியபின் “வருக!” என்றபடி அவன் முன்னால் நடந்தான். முக்தன் பின்னால் சென்றபடி “என்னை எதன்பொருட்டு அழைத்துவர ஆணையிட்டார் என்று உனக்குத் தோன்றுகிறது?” என்றான். “நீங்கள் எங்கள் அரண்மனைச் சேடியர் எவருக்கேனும் காதல்பரிசுகள் அளித்திருக்கலாம்” என்றான் கஜன்.

“நானா?” என்றான் முக்தன் திகைப்புடன். “அல்லது நீங்கள் அவர்கள் எவரையாவது மிரட்டியிருக்கலாம்” என்றான் கஜன். “என்ன சொல்கிறாய்?” என்று முக்தன் எரிச்சலுடன் கேட்டான். “அரண்மனைப் பெண்டுகள் தவிர பிற எதன் பொருட்டேனும் அவர் எதையேனும் செய்து எப்போதும் பார்த்ததில்லை” என்றான் கஜன். முக்தன் எரிச்சலுடன் “அரண்மனைப் பெண்டுகளுக்கும் எனக்கும் எந்தத் தொடர்பும் இல்லை” என்றான். “ஒருவேளை அரண்மனைப் பெண்கள் எவரேனும் உங்களைப் பார்த்து காதல் கொண்டிருக்கலாமோ?” என்றான் கஜன். “உளறாதே” என்றான் முக்தன். “அதற்கு வாய்ப்புள்ளது,

மூத்தவரே. நீங்கள் சற்று முன் புரவியில் வந்து இறங்குவதைப் பார்த்தபோது நானேகூட ஓர் இளவரசரென்று எண்ணிவிட்டேன்" என்றான். "பேசாமல் வா" என்றபடி முக்தன் நடந்தான்.

மைய அரண்மனையின் வலப்பக்கம் கையணைப்பாக இருந்த உத்தரனின் அரண்மனையை இடைநாழிகளினூடாக அணுகியபோது கஜன் அருகே வந்து "சற்றுமுன் பேசும்போது இந்த எண்ணம் எனக்கு வந்தது, மூத்தவரே. உண்மையிலேயே நீங்கள் இளவரசரைப்போல் இருக்கிறீர்கள். இத்தோற்றத்தில் நீங்கள் இளவரசர் முன் சென்றால் அவர் அதை விரும்பப்போவதில்லை" என்றான். முக்தன் "அதற்கு நான் என்ன செய்வது?" என்றான். "உங்கள் உடலை மாற்றிக்கொள்ளுங்கள். கைகளை மார்பில் கட்டி தோள்களைக் குறுக்கி குனிந்து நின்று பேசுங்கள். நேருக்கு நேர் நின்று இளவரசரின் விழிகளை சந்திக்கவே வேண்டாம்" என்றான்.

முக்தன் உதடுகளை கோணினான். கஜன் "இதை நான் நோக்கியிருக்கிறேன். எவரேனும் அவரது விழிக்கு விழி நோக்கி பேசினால் அவருக்குள் ஏதோ உளஅசைவு உருவாகிறது. சீறத் தொடங்கிவிடுகிறார்" என்றான். முக்தன் "அது நாய்களின் குணம்" என்றான். கஜன் நகைத்து "ஆமாம். நானும் அவ்வாறே எண்ணினேன். நாய்கள் தங்களை எவரேனும் தாக்கிவிடக்கூடும் என்று அஞ்சிக்கொண்டிருக்கின்றன. விழிகளுக்குள் பார்த்தால் அவை தங்கள் அச்சத்தால் நம்மை கடிக்க வருகின்றன" என்றான். "நான் பார்த்துக்கொள்கிறேன், வா" என்றபடி முக்தன் அரண்மனைக்குள் நுழைந்தான்.

கஜன் இடைநாழிக்குள் நுழைந்து அங்கிருந்த முதிய காவலனிடம் "இளவரசரின் ஆணைப்படி புரவிக்காரரை

அழைத்து வந்திருக்கிறேன்” என்றான். பழுத்த சிறிய கண்களில் துயில் எஞ்சியிருக்க வழிந்திருந்த வாயை கையால் துடைத்தபடி “புரவிக்காரரையா? எதற்கு? இப்போது யாரையும் பார்க்க முடியாது” என்றார் முதிய காவலன். “இளவரசரே சொல்லித்தான் நான் வந்தேன்” என்றான் முக்தன். “எவர் சொன்னாலும் பார்க்க முடியாது” என்றபின் கஜனிடம் “என்னிடம் சொல்லிவிட்டுச் சென்றாயா? என் ஆணை இல்லாமல் எவரும் இந்த அரண்மனைக்குள் நுழைய நான் விடப்போவதில்லை. நான் யாரென்று நினைத்தாய்? இந்த அரண்மனை என்னுடைய கட்டுப்பாட்டிலிருக்கிறது” என்றார் கிழவர். “இளவரசர்...” என்று முக்தன் தொடங்க “இளவரசரே வந்து சொன்னாலும் நான் ஒப்பப்போவதில்லை” என்றார்.

“நன்று” என்றபின் கஜன் திரும்பிப்பார்த்து “வருக!” என்று அழைத்தபடி முன்னால் சென்றான். “காவலர் தலைவர்...” என்று முக்தன் தயங்க “அவர் இங்கிருந்து ஓசையிடுவார். நீங்கள் வாருங்கள்” என்றான் கஜன். முக்தன் “அவ்வாறு வருவது...” என்று தொடங்க கஜன் “வருக” என்று கையை பற்றி இழுத்து உள்ளே இட்டுச் சென்றான். அவர்களுக்குப் பின்னால் “ஏய்! என்ன இது? நில்லுங்கள்! எங்கே செல்கிறீர்கள்? என்னைக் கடந்து எவரும் செல்ல நான் ஒப்பப்போவதில்லை. நான் என்ன செய்வேன் தெரியுமா? நான் யார் என்றால்...” என்று முதியவர் கூச்சலிடுவது கேட்டது. “அவர் காவலர் தலைவர் அல்லவா?” என்றான் முக்தன். “வாயில் ஒரு பல்கூட இல்லாத முதியவரை காவலர் தலைவராக அமர வைத்திருக்கிறார்களென்றால், அதன் நோக்கம்தான் என்ன?” என்று கஜன் கேட்டான். “ஆம்” என்றபின் திரும்பிப் பார்த்த முக்தன் “மிகவும் முதியவர்” என்றான். “அரசரையே சிறுவனாக பார்த்தவர்” என்றான் கஜன்.

“எழாமலேயே கூச்சலிடுகிறார்” என்றான் முக்தன். “ஏனென்றால் எழுந்து பின்னால் வர அவரால் முடியாது.” முக்தன் “ஆனால் அவர் எங்காவது நம்மைப்பற்றி சொல்லி முறையிடமுடியும்” என்றான். “எங்கு முறையிடுவார்? இளவரசரிடம்தானே? உடனடியாக என் தலையை வெட்டி தாலத்தில் கொண்டு வரும்படி ஆணையிடுவார். அந்த ஆணையை அருகிலிருக்கும் சேடி கேட்டு சிணுங்கவேண்டுமென்று விரும்புவார். அவள் நகைத்தால் இவரும் சேர்ந்து நகைப்பார். ஆணையைப் பெற்ற வீரன் அவ்வாறே என்று சொல்லி வணங்கி வெளியே வந்து வாளால் முதுகை சொறிந்துகொண்டு திரும்பிப்போய் தன் பழைய பணியில் ஈடுபடத் தொடங்கிவிடுவான். அரை நாழிகைக்குப் பிறகு என்னை அழைத்து நறுமணப் பாக்கும் இன்கடுநீரும் கொண்டுவரும்படி ஆணையிடுவார். இங்கு நடப்பதையெல்லாம் நான் உங்களிடம் சொன்னால் நீங்கள் முழுமையாக நம்பவே போவதில்லை” என்றான்.

பெண்களின் சிரிப்பொலிகள் கேட்டன. “என்ன செய்கிறார்கள்?” என்று முக்தன் கேட்டான். “தாயம் உருட்டி விளையாடுகிறார்கள்” என்றான் கஜன். முக்தன் “தாயம் உருட்டியா? அது என்ன விளையாட்டு?” என்று கேட்டான். கஜன் “இது உயிருள்ள தாயம்” என்றான். “உயிருள்ள தாயமென்றால்...” என்று முக்தன் கேட்க “இரண்டு கைகளும் இரண்டு கால்களும் கொண்டது. பெண்கள் அதை உருட்டி விளையாடுவது அதற்கு மிகவும் பிடிக்கும். கிளுகிளுவென்று சிரித்துக்கொண்டே இருக்கும்” என்றான். “உன் வாயில் மீறல் நிறைய வருகிறது” என்றான் முக்தன். “இந்த மாளிகையிலேயே குறைவாக மீறுபவன் நான்” என்றான் கஜன்.

முக்தன் புன்னகைத்து அவனைப் பார்த்து "நீ விரைவில் வேறெங்கோ செல்வாய் என்று நினைக்கிறேன்" என்றான். அவன் "உண்மையாகவா, மூத்தவரே? என்னை படைப்பிரிவுகளுக்கு அனுப்பிவிடுவார்களா? இங்கே இந்த இளிவரலாடலில் உளம் சலித்துள்ளேன்" என்றான். "யார் கண்டது? ஒருவேளை கழுமேடைக்குக்கூட அனுப்பலாம்" என்றபின் "என் வரவை உள்ளே சென்று சொல்" என்றான் முக்தன். முறைத்து நோக்கியபின் "சொல்கிறேன்" என்று சொல்லி கஜன் கதவைத் தட்டாமல் நேராக உள்ளே சென்றான்.

உத்தரன் அவனைப் பார்த்ததும் உரத்த குரலில் கூச்சலிடுவது திறந்த கதவினூடாக கேட்டது. "யார் நீ? எதற்காக உள்ளே வந்தாய்? நான் அரசுசூழ்தலில் ஈடுபட்டிருக்கும்போது வாயிலில் நின்று உத்தரவு பெறாது உள்ளே வரக்கூடாதென்று அறியாதவனா நீ?" கஜன் "இளவரசே..." என்று சொல்ல அவனை சொல்மறித்து "யாரங்கே? உடனே இந்தச் சிறுவனைப் பிடித்து கைகால் கட்டி சிறையிலிடுங்கள். மாலை என் அவைக்கு இவனை இழுத்து வாருங்கள்" என்று உத்தரன் கூவினான். "அரசே, நான்..." என்று கஜன் சொல்ல "பேசாதே" என்று உத்தரன் கூச்சலிட்டான். "இல்லையேல் என் வாளால் உன் தலையை வெட்டுவேன்."

முக்தன் உள்ளே சென்று தலைவணங்கி "தங்கள் ஆணை நிறைவேற்றப்படும், இளவரசே" என்று சொன்னான். "உடனடியாக..." என்று உத்தரன் கைநீட்டி ஆணையிட்டான். அவனைச் சூழ்ந்திருந்த பெண்கள் அனைவரும் முக்தனைப் பார்த்து புன்னகைத்தனர். அவர்களின் நோக்கை தன் உடலில் இலைகள் வருடுவதுபோல உணர்ந்தபடி "தங்கள் ஆணைப்படி இந்த வீணனின் தலையை வெட்டுகிறேன், இளவரசே" என்றபின்

கஜனிடம் “வா” என்றான் முக்தன். பதற்றத்துடன் “என்ன இது?” என்றான் கஜன். “நீ சொன்னதை நன்றாகவே நான் புரிந்துகொண்டுவிட்டேன்” என்றபடி அவனை இழுத்து வெளியே கொண்டுவந்த முக்தன் சிரித்தபடி “நீயே அஞ்சிவிட்டாயே” என்றான்.

“மூத்தவரே, நீங்கள் அனைத்தையும் அரைநாழிகையில் புரிந்துகொண்டுவிட்டீர்கள்” என்றான் கஜன். “நேராகக் கிளம்பி காவல்பிரிவுகளுக்குச் சென்றுவிடு” என்றான். கஜன் ஆவலுடன் “காவல்பிரிவுகளுக்கா?” என்றான். முக்தன் “ஆம், காவல்பிரிவில் தீர்க்கன் என்று ஒருவன் இருப்பான். அவனிடம் சென்று நான் உன்னை அனுப்பினேன் என்றும் அது இளவரசரின் ஆணை என்றும் சொல். உனக்கு காவல் பணி கிடைக்கும்” என்றான். “எங்கு காவல் பணி? கோட்டை முகப்பிலா?” என்றான் கஜன். சலிப்புடன் “கோட்டை முகப்பில் போர்க்கலை தெரிந்த வீரர்களைத்தான் வைப்பார்கள்” என்றான் முக்தன். கஜன் “அவ்வாறென்றால் கருவூலத்திலா…?” என்றான்.

எரிச்சலுடன் தலையை அசைத்தபின் “அல்ல, பேரரசரின் முதன்மை மெய்க்காவலராக உன்னை நிறுத்தப்போகிறார்கள்” என்றான். பாய்ந்து அவன் கைகளைப் பற்றியபடி கஜன் “மூத்தவரே, இந்த நன்றியை நான் எப்போதும் மறக்க மாட்டேன். எந்தை நான் பணிக்குச் சேரும்போது படிப்படியாக உயர்ந்து நீ பேரரசரின் வேளக்காரப்படை வரை செல்ல வேண்டும் என்றுதான் சொன்னார். இத்தனை விரைவாக அது நிகழுமென்று நான் எண்ணவே இல்லை” என்றான். “இளவரசரைவிட அறிவுடன் இருக்கிறாய். உண்மையில் நீ இங்குதான் இருக்கவேண்டும். உகந்த பணியாள் பிறிதொருவர் அவருக்கு அமையப்போவதில்லை” என்று முக்தன் சொன்னான்.

“என்ன சொல்கிறீர்கள்? நான்... நீங்கள்... இப்போது...” என்று அவன் ஆவலும் பதற்றமுமாக சொல்தடுக்கி பேசத்தொடங்க அவன் கையை விட்டுவிட்டு “இரு, நான் வருகிறேன்” என்றபின் மீண்டும் உள்ளே சென்ற முக்தன் உத்தரன் முன் தலைவணங்கி “தங்கள் ஆணை நிறைவேற்றப்பட்டது” என்றான். ஐயத்துடன் அவனை நோக்கியபின் சேடியரை நோக்கி மெல்லிய மீசையை நீவியபடி “நன்று” என்றான் உத்தரன். “தங்கள் பணிக்காக வந்துள்ளேன்” என்றான் முக்தன். உத்தரன் “ஆனால் நீயும் ஆணை பெறாதுதான் உள்ளே வந்தாய்” என்றான். “ஆம், ஆனால் நான் தங்களுடைய ஒற்றன். ஆணை பெறாது உள்ளே வரலாமென்று என்னிடம் சொல்லியிருக்கிறீர்கள்” என்றான் முக்தன். “யார்? நானா?” என்றான் உத்தரன். “ஆம், நான் உங்கள் தனி ஒற்றனல்லவா?” என்றான் முக்தன்.

“ஆம், தனி ஒற்றன்” என்றபின் “உன் பெயர் என்ன?” என்றான் உத்தரன். “சேடியர் முன் என் பெயரை நான் உரைக்கலாகாது” என்றான் முக்தன். சேடியர் ஓரிருவர் சிரிக்குமொலி கேட்டது. “ஆம், உரைக்கலாகாது” என்று உத்தரன் குழப்பமாக அவர்களை நோக்கியபின் சொன்னான். “உண்மையில் நான் தங்கள் பெயரையே சேடியரிடம் உரைப்பதில்லை” என்றான் முக்தன். சேடியர் சிரிக்க உத்தரன் அவனை சற்று குழப்பத்துடன் ஓரக்கண்ணால் பார்த்து “ஆம், சேடியரிடம் சொல்லெண்ணிப் பேசவேண்டும்” என்றபின் நிமிர்ந்து அமர்ந்து “சரி, நீ உளவறிந்த செய்திகளை சொல்!” என்றான். “இளவரசே, இச்சேடியர் நடுவே அதை சொல்ல முடியாது. அவர்களை சற்று விலகி அமரும்படி ஆணையிடுங்கள்” என்றான் முக்தன்.

உத்தரன் கைநீட்டி “ஆம், அனைவரும் இணைவறைக்குச் சென்று காத்திருங்கள். இந்த அரசுசூழ்தலை முடித்து ஆணைகளை பிறப்பித்துவிட்டு வந்துவிடுகிறேன்” என்றான். அவர்கள் எழுந்து ஆடைகளைத் திருத்தி அணிகள் ஓசையிட மெல்லிய குரலில் பேசிக்கொண்டு தோள்கோத்தும் கைகளை பற்றிக்கொண்டும் விலகிச்சென்றனர். “இவர்களில் சிலர் மச்ச இளவரசரின் ஒற்றர்களாக இருக்கலாம்” என்று முக்தன் சொன்னான். “இவர்களா? இவர்கள் அனைவரும் எனது காதலிகள். என் பொருட்டு உயிரைக் கொடுக்கவும் சித்தமானவர்கள்” என்று உத்தரன் சொன்னான். “ஆம், அது அவர்களின் கண்களிலேயே தெரிகிறது. பெருங்காதல். அவர்கள் உங்கள் பொருட்டு முதலைகள் நிறைந்த அகழிகளில் குதிப்பார்கள். அனலெரியும் காட்டிற்குள் புகுவார்கள்.”

உத்தரன் நகைத்து “பெண்களை புரிந்துகொள்வது கடினம் என்கிறார்கள். அது மிக எளிது” என்றான். “பெண்களின் காதல் ஆண்களுக்கு தெய்வம் அளித்த நற்கொடை. ஆனால் அது அத்தனை ஆண்களுக்கும் அளிக்கப்படுவதில்லை. செல்வமும் குடிப்பிறப்பும் வீரமும் தகுதியும் கொண்டவர்களுக்கு மட்டுமே வாய்க்கிறது அது” என்று முக்தன் சொன்னான். “உண்மைதான்” என்று சொன்னபின் ஐயங்கொண்டவன் போல முக்தனை பார்த்துக்கொண்டிருந்தான் உத்தரன்.

“என்னை தாங்கள் இப்போது வரச்சொன்னது ஏனென்று அறிந்துகொள்ளலாமா?” என்றான் முக்தன். உத்தரன் “நான் வரச் சொன்னேனா?” என்றான். “காலையில் உங்கள் சொல்லுடன் ஓர் இளையவன் வந்தான்” என்றான் முக்தன். “ஆம், நான் காலையில் உன்னைப்பற்றி எண்ணிக்கொண்டேன்” என்றபின் ஓரக்கண்ணால் அவனை ஒருமுறை பார்த்துவிட்டு

“ஆனால் அது எதற்கென்று நினைவுகூர முடியவில்லை” என்றான் உத்தரன். பின்னர் எதையோ எண்ணிக்கொண்டு “நான் உன்னை வரச் சொல்லவில்லை, புரவிப் பணியாளன் கிரந்திகனைத்தான் வரச் சொன்னேன்” என்றான். உடையை அள்ளி அணிந்து எழுந்து “நான் உடனே அவனை பார்க்கவேண்டும்” என்றபின் “நீயும் என்னுடன் வா” என்றான்.

உத்தரன் தன் தேரில் ஏறிக்கொண்டு “நீ என்னுடன் வா” என்றான். முக்தன் தன் புரவியில் ஏறி தேரைத் தொடர்ந்தான். தேர் சென்று புரவிக்கொட்டிலை அடைந்தது. உத்தரன் அதிலிருந்து இறங்கி கண்களுக்குமேல் கைகளை வைத்து “ஏன் இத்தனை வெயில்?” என்றான். “அதை நம்மால் கட்டுப்படுத்த முடியாது, இளவரசே” என்றான் முக்தன். “ஆம், நம்மால் அனைத்து இடங்களிலும் கொட்டகை போட முடியாது” என்றான் உத்தரன். “நான் உன்னை ஏன் அழைத்தேன்?” என்று முக்தனிடம் கேட்டான். “உளவறியும்பொருட்டு” என்றான் முக்தன். “ஆம், உளவறியும்பொருட்டு” என்ற உத்தரன் “இப்போது நினைவுகூர்கிறேன். நீ என் இளையவளுக்கு நடனம் கற்பிப்பவனின் அணுக்கன் அல்லவா?” என்றான். “உன் பெயர் முக்தன் என்றார்கள்.”

“ஆம், அந்தப் பெயரில்தான் நான் உளவறிகிறேன்” என்றான் முக்தன். “யாருக்காக உளவறிகிறாய்?” என்றான் உத்தரன். “தங்களுக்காகத்தான், தங்கள் ஆணைப்படி” என்றான் முக்தன். “ஆம், எனது ஆணைப்படிதான். இப்போது நினைவு வருகிறது” என்றபின் மேலும் குழப்பமடைந்து கொட்டிலை பார்த்தான் உத்தரன். அங்கே காதரன் வாயில் ஒரு புல்சரடுடன் வந்து வேடிக்கை பார்த்தது. உத்தரனைக் கண்டு ஆர்வத்துடன் ‘ர்ர்ர்’ என்றபின் தலையை ஆட்டி ஆட்டி புல்லை வாய்க்குள் இழுக்க

முயன்றது. புல் அதன் வாயில் இருந்து எச்சில்கோழையுடன் வழிந்தது. உத்தரன் ஓரக்கண்ணால் முக்தனை பார்த்துவிட்டு “உத்தரை எவ்வாறு உணர்கிறாள்?” என்றான்.

“எவ்வாறு என்றால்…?” என்றான் முக்தன். “அவள் பிருகந்நளையை பற்றி என்ன நினைக்கிறாள்?” என்றான் உத்தரன். “ஆசிரியர் என்று” என்றான் முக்தன். “மூடா, அதை நான் அறியமாட்டேனா? அதற்கு எனக்கு ஒற்றன் தேவையா?” என உத்தரன் கூவினான். “இளவரசிக்கு அந்த ஆணிலியோடு என்ன உறவு? அதை கேட்டேன்.” பணிவுடன் “உறவு என்றால்…?” என்றான் முக்தன். “மூடா, அவள் அவனை காதலிக்கிறாள் என்று என் சேடியரில் ஒருத்தி சொன்னாள்” என்றான் உத்தரன். முக்தன் நகைத்து “காதலா? இருவரும் தோழியர் என்றல்லவா தோன்றுகிறது?” என்றான். “ஏன், தோழியை காதலிக்கக்கூடாதா?” என்றான் உத்தரன். தாழ்ந்த குரலில் “அரண்மனை அகத்தளங்களில் அவ்வழக்கம் உண்டென்று கேட்டிருக்கிறேன்” என்று முக்தன் சொன்னன். உத்தரன் திடுக்கிட்டு “இல்லையில்லை, நான் அப்பொருளில் சொல்லவில்லை” என்றான்.

“தாங்கள் என்ன சொல்கிறீர்கள் என்று எனக்கு புரியவில்லை” என்றான் முக்தன். “அவள் இயல்பே மாறிவிட்டதென்று அகத்தளங்களில் சேடியர் பேசிக்கொள்கிறார்கள். காதல்கொண்டவள்போல கண்மயங்கி அலைகிறாளாம். நானே பார்த்தேன், தனக்குத் தானே பேசிக்கொள்கிறாள், பாடிக்கொள்கிறாள், தனித்திருந்து சிரிக்கிறாள். ஒவ்வொரு நாளும் ஓர் ஓவியத்தை வரைபவள்போல் தன்னை அணி செய்துகொள்கிறாள். நடையில் துள்ளலும் கையசைவில் சுழற்சியும் வந்துவிட்டது. அவள் அந்த ஆணிலியை

காதலிக்கவில்லையென்றால் வேறு யாராவது காதலர்கள் அவளுக்கு இருக்கிறார்களா? அதை நான் அறிந்தாகவேண்டும்” என்றான்.

முக்தன் “இளவரசியர் காதல் கொள்வது இயல்புதானே? காட்டில் மழை பெய்தால் ஊருக்குள் ஆறு பெருகிவருவதுபோல உடனே நமக்கு தெரிந்துவிடும். ஆவன செய்யவேண்டியது அரசரின் பொறுப்பு” என்றான். “நான் சொல்ல வருவது அது அல்ல. அவள் இப்பேரரசின் இளவரசி. அவளுக்கு பாரதவர்ஷத்தின் ஷத்ரிய அரசர்கள் எவரேனும் கன்யாசுல்கம் அளித்து மணத்தூது அனுப்பவேண்டுமென்று நாங்கள் எண்ணியிருக்கிறோம். மகதமும் கலிங்கமும் வங்கமும் மாளவமும் அவந்தியும் என தொன்மையான ஷத்ரிய நாடுகள் எதிலிருந்து மணச்செய்தி வந்தாலும் அதை ஏற்க காத்திருக்கிறோம்” என்றான் உத்தரன்.

“இயல்புதானே...?” என்றான் முக்தன். “நாம் ஷத்ரிய அரசரிடம் மணஉறவை ஏற்படுத்திக்கொண்டால் நமது அண்டை நாடுகள் நமது முன் படைநிற்க இயலாதாகும். விதர்ப்பமும் சதகர்ணிகளும் இப்போது தயங்கி அஞ்சி நிற்கிறார்கள். ஆனால் ஒருநாள் நம்மை வென்றுவிடவேண்டுமென்ற விழைவும் அவர்களிடம் இருக்கிறது. ஷத்ரிய மணஉறவொன்று அமையுமென்றால் அதன் பின் அவர்கள் நம்மை களத்தில் எதிர்க்க முடியாது. இது மிக நுட்பமான அரசியல் சூழ்ச்சி. எளிதில் புரிந்து கொள்ளமுடியாது” என்றான் உத்தரன். “ஆம், எனக்கு ஓரளவே புரிகிறது” என்று முக்தன் சொன்னான்.

“உன்னிடம் அதை விளக்கமாக நான் சொல்லமுடியாது” என்றான் உத்தரன். “ஆகவே இந்தப் பகையரசர் எவரேனும் பெண்டிர் உளம் மயக்கும் கலை பயின்ற மாயாவி ஒருவனை

ஆணிலி தோற்றத்தில் இங்கு அனுப்பியிருக்கக்கூடுமோ என்று சேடியரில் ஒருத்தி கேட்டாள்.” முக்தன் “ஆம், இருக்கக்கூடும்” என்றான். “அவன் அவள் உள்ளத்தை கைப்பற்றி வைத்திருக்கிறான். அவளை பிச்சியும் பேதையும் ஆக்கிவிட்டிருக்கிறான். அவன் அதில் முழு வெற்றி அடைவதற்குள் அவனை பிடித்தாகவேண்டும். இச்செய்தியை உடனடியாக தந்தையிடம் தெரிவிக்கவேண்டும். அதற்கு போதிய சான்று தேவை” என்றான் உத்தரன்.

“இதற்கெல்லாம் என்ன சான்று அளிக்க முடியும்? இளவரசியை கொண்டு நிறுத்தி அவர் உளம் மாறியிருப்பதை காட்டவேண்டியதுதான்” என்றான் முக்தன். உத்தரன் “அல்ல. நீ அந்த மாயாவியை கூர்ந்து நோக்கு. அவன் எங்காவது மந்தணப் பூசனைகள் செய்கிறானா, நுண்சடங்குகள் எதையாவது ஆற்றுகிறானா, தனிமையில் இருக்கையில் கந்தர்வர்கள் எவரேனும் அவனை தேடி வருகிறார்களா என்று அறிந்து சொல். இவையனைத்தையும் நீ என்னிடம் வந்து சொன்னபின்னர் நான் முடிவெடுக்கிறேன்” என்றான்.

“அவ்வாறு மந்தணச் சடங்குகள்…” என்று முக்தன் தொடங்க “மந்தணச் சடங்குகளினால் மட்டுமே இளவரசியின் மனம் கொய்ய முடியுமென்பதை நீ அறிந்திருக்கமாட்டாய். உன்னைப்போன்ற எளியவர்களுக்கு அதை புரியவைப்பது கடினம். உளங்கவர் வித்தைகள் பலநூறு உள்ளன. சான்றாக அன்ன தந்திரம். மாமன்னர் நளன் தமயந்தியை அதைக் கொண்டுதான் கவர்ந்தார். அன்னத்தின் தூவியால் ஆற்றப்படவேண்டியது அது” என்றான்.

உத்தரன் தொடர்ந்தான் “இளம்அன்னத்தின் தூவியை எடுத்து அதை ஒரு துளி பாதரசம் சேர்த்து நன்றாக அரைத்து,

தென்கிழக்காகச் செல்லும் தென்னைமரத்தின் வேரின் சாற்றைக் கலந்து, கவர எண்ணும் பெண்ணின் தலைமுடியில் ஒரு சுருளை எரித்து, அக்கரியை அதனுடன் குழைத்து புருவத்தில் தேய்த்தபடி அவளை நோக்கினால் அவள் விழி நம்மை சந்தித்ததுமே அடிமையாகிவிடுவாள். ஆடிப்பாவைபோல் நாம் கைகால் தூக்க அவளும் தூக்குவாள். பூதம்போல நமக்கு ஏவல் புரிவாள்.”

“இப்போது புரிகிறது” என்று முக்தன் சொன்னான். “என்ன?” என்றான் உத்தரன். “இத்தனை பெண்கள் இங்கு பித்திகளைப்போல் எப்படி கிடக்கிறார்கள் என்று” என்றான் முக்தன். சிறிய பதற்றத்துடன் “அதாவது நான்...” என்று உத்தரன் தொடங்க “தாங்கள் எந்த மாயத்தையும் செய்பவரல்ல. ஆனால் தாங்கள் அனைத்தும் அறிந்த இளவரசர். சுட்டு விரலசைத்தால் தங்களுக்குத் தேவையான மையும் மாயப்பொருளுமாக எத்தனையோ மாயாவிகள் இங்கு வந்து நிற்பார்கள். யார் கண்டது? இவ்வரண்மனை முழுக்க உங்களுக்கு ஏவல் செய்யும் கந்தர்வர்கள் காணா வடிவில் இருக்கக்கூடும். இப்போதுகூட உங்களைச் சுற்றி பலர் இருக்கும் உணர்வு எனக்கு ஏற்படுகிறது” என்றான்.

உத்தரன் தலையை அசைத்து “ஆம், பிறரறியாத பல ஆற்றல்கள் எனக்குண்டு” என்றான். “உண்மையில் தங்களைப் பார்க்கவே நான் அஞ்சுகிறேன்” என்றான் முக்தன். “நன்று, நீ என் ஒற்றன். இளவரசியையும் அந்த ஆணிலியையும் கூர்ந்து நோக்கு. அவள் உளம்மாற்றம் என்ன என்பதை என்னிடம் சொல்” என்றான். முக்தன் “சொல்கிறேன்” என்றான். “வரும் முழுநிலவில் அரண்மனை மகளிருடன் அந்த ஆணிலி கரவுக்காட்டுக்கு செல்லவிருக்கிறான். அங்கு இரவெல்லாம்

இசையும் நடனமும் உணவும் மதுவும் என களியாட்டு நிகழும் என்றார்கள்” என்றான் உத்தரன். “நானும் என் தோழியருடன் அங்கே செல்லவிருக்கிறேன். எவருமறியாமல் நீ அங்கிருக்கவேண்டும்.”

“ஆணை” என்றான் முக்தன். “இப்போது ஏன் அந்த கரவுக்காட்டுக்கு நிலவாடலுக்குச் செல்கிறான்? அதில் ஏதோ சூழ்ச்சி உள்ளது. ஆகவேதான் நானும் உடன்செல்கிறேன். ஆனால் என்னால் அவர்களுடன் சேரமுடியாது. நீ அவர்களை காட்டுக்குள் இருந்து கூர்ந்து நோக்கு. பிருகந்நளையின் மாயம் என்ன என்று கண்டு என்னிடம் சொல்” என்றான் உத்தரன்.

உள்ளிருந்து நாமர் வந்து வணங்கி “வருக, இளவரசே!” என்றார். “கிரந்திகன் எங்கே? அந்த அறிவிலியை நான் அரண்மனைக்கு வரச் சொல்லியிருந்தேனே?” நாமர் “அவர் காரகனை பழக்கிக் கொண்டிருக்கிறார்” என்றார். “இனி என்ன பழக்குவது? நான் அதை நன்றாகவே பழக்கிவிட்டேனே?” என்றான். திரும்பி காதரனைப் பார்த்து “இது என்ன இவ்வளவு வளர்ந்துவிட்டது?” என்றான். “நான்கு மாதங்களாகின்றன அல்லவா? ஓராண்டில் முழு வளர்ச்சி அடைந்துவிடும்” என்றார் நாமர். “அதன் தமக்கை ஒருத்தி உடன் வருவாளே?” என்றான் உத்தரன். “பத்மையா? அவளை நேற்றுமுதல் பயிற்சிக்கு கொண்டுசெல்கிறார்கள்…”

காரகன் தொலைவில் தெரிந்தது. பெருகி அணுகி குளம்போசை நிலத்தை அதிரச்செய்ய வந்து நின்றது. முக்தனின் தலையளவு உயரமிருந்தது அதன் முதுகு. அது தன் எடைமிக்க தலையை குனித்து அவன்மேல் நீராவி நிறைந்த மூச்சை விட்டது. உத்தரன் அதன் மேலிருந்த கிரந்திகனிடம் “மூடா, அதை மிகையாக ஓடவிடாதே என்று உன்னிடம் சொல்லியிருக்கிறேன். குளம்புகள் விரிந்துவிட்டால் அதன்

நடை மாறிவிடும்” என்றான். கிரந்திகன் இறகு உதிர்வதுபோல இறங்கி நின்று வணங்கி “ஆம், இளவரசே. நினைவிருக்கிறது. தாங்கள் இன்று வர பிந்தியமையால் நான் சற்று பயிற்சி அளித்தேன்” என்றான்.

உத்தரன் “களைத்துவிட்டான் என் மைந்தன்” என்று சொல்லி காரகனின் விலா நோக்கி கையை கொண்டு செல்ல அது கனைத்தபடி விலா விதிர்க்க துள்ளி விலகியது. திடுக்கிட்டு கையை இழுத்துக்கொண்டு பின்னால் விலகிய உத்தரன் “களைப்பு… என்னை அது தெரிந்துகொள்ளவில்லை” என்றான். “ஆம், தாங்கள் ஒருமுறை சுற்றிவரலாம்” என்றான் கிரந்திகன். “இல்லை… நான் நாளைக்கு வருகிறேன். இன்றைக்கு களைத்துவிட்டிருக்கிறான்” என்றான் உத்தரன். “இல்லை, இளவரசே… அவனே உங்களை கொண்டு செல்வான்…” உத்தரன் அலறலாக “வேண்டாம்…” என்றான். “நானே செல்கிறேன்… நானே செல்கிறேன்…”

கிரந்திகன் முக்தனை நோக்கி புன்னகைத்து “இளவரசருக்குரிய தனிப்புரவி. அவரைத்தவிர என்னை மட்டுமே ஏற்கும்” என்றான். உத்தரன் “ஆம், இதன்மேல் ஏறித்தான் நான் கரவுக்காட்டுக்கு செல்லவிருக்கிறேன்” என்றபின் “நான் அதை சொல்லத்தான் வந்தேன். கரவுக்காட்டுக்கு என்னுடன் நீயும் வரவேண்டும்” என்றான். “நான் எதற்கு?” என்றான் கிரந்திகன். “மூடா, நான் களியாட்டுக்குச் செல்லும்போது புரவியை பார்த்துக்கொள்ள வேண்டாமா?” என்றான் உத்தரன். காதரன் அருகே வந்து கிரந்திகனின் உடலில் தன் உடலைத் தேய்த்தது. நாமர் “தமக்கை இல்லாமல் மிகத் தனிமையாக உணர்கிறது” என்றார். “அது நன்று. களிற்றுப் புரவிகளின் மீது இனிமேல்தான் ஆர்வம் வரும்” என்றான் கிரந்திகன்.

உத்தரன் காரகனை தொடப்போக அது திரும்பி ‘ர்ர்ர்’ என சீறியது. அவன் கையை பின்னுக்கிழுத்துக்கொண்டு “ஏன் சினம் கொள்கிறது?” என்றான். “சினமல்ல, அன்புதான்” என்ற கிரந்திகன் காரகனைத் தட்டி “ஏறிக்கொள்ளுங்கள், இளவரசே” என்றான். “இன்றைக்கு வேண்டுமா?” என்று உத்தரன் தயங்க “ஏறுங்கள்” என்றான் கிரந்திகன். “நானும் களைத்திருக்கிறேன்” என்று சொல்லி ஒருகணம் காத்திருந்தபின் உத்தரன் கால்வளையத்தில் மிதித்து உடலை உந்தினான். கிரந்திகன் அவன் பின்பக்கத்தை தூக்கிவிட கால்சுழற்றி புரவிமேல் அமர்ந்தான். “மெதுவாக” என்றான். கிரந்திகன் புரவியிடம் மெல்லிய ஒலியில் ஏதோ சொல்ல அது காதுகளை பின் கோட்டி அச்சொற்களை கேட்டது. பின்னர் பெருநடையாக விரைந்தது. அது கிளம்பியதும் நிலைதடுமாறி “ஆ” என்று கூவிய உத்தரன் அந்த ஓசையையே அதைச் செலுத்தும் ஒலியாக மாற்றி “ஆ ஆ” என்றான். நாமர் முக்தனை நோக்கி புன்னகை செய்தார்.

# நீர்க்கோலம் - 44

### 43. காகச்சிறகுகள்

திரௌபதி தன் அறைக்குள் ஆடை மாற்றிக்கொண்டிருந்தபோது வெளியே கதவை மெல்ல தட்டி “தேவி” என்று பிரீதை அழைப்பது கேட்டது. அவள் சேலையை வயிற்றில் செருகிவிட்டு “உள்ளே வருக!” என்றாள். உள்ளே வந்த பிரீதை சுவரோரமாக தயங்கி நின்றாள். காதோரம் குழலை பின்னால் தள்ளி குத்தியிருந்த ஊசிகளை எடுத்தபடி “சொல்!” என்றாள் திரௌபதி. “என்னிடம் மீண்டும் கேட்டுவரச் சொன்னார்” என்றாள். “நான் இந்த வாரம் முழுக்க அரசியுடன்

கொற்றவை பூசனைகளில் ஈடுபடவேண்டும்” என்றாள் திரௌபதி.

“அப்படியென்றால் அடுத்த வாரம் என்று சொல்லவா?” என்றாள். திரௌபதி “அடுத்த வாரம் குடியவைகள் தொடங்கிவிடுகின்றன. அதன்பின் மழைநோன்பு வருகிறது” என்றாள். பிரீதை பேசாமல் நின்றாள். “என்ன?” என்றாள் திரௌபதி. “நான் என்ன சொல்வது?” திரௌபதி ஊசிகளை அடுக்கி சிறிய பேழையிலிட்டபின் மஞ்சத்தில் அமர்ந்து “நான் சொன்னதையே சென்று சொல்” என்றாள். பிரீதை அசையாமல் அங்கேயே நின்றாள். “என்ன?” கழுத்தைச் சரித்து கூந்தலிழைகளை கைகளால் நீவியபடி திரௌபதி கேட்டாள். இல்லை என அவள் தலையசைத்தாள். “போ” என்றாள் திரௌபதி. “என்மேல் சினம் கொள்கிறார், தேவி” என்றாள் பிரீதை. திரௌபதி புன்னகைத்து “என்னை குறைசொல்லி அதன்பின் நான் சொன்னதை சொல்” என்றாள்.

மேலும் சில கணங்கள் நின்று திரௌபதி குழல்நீவுவதை நோக்கியபின் நீள்மூச்சுடன் பிரீதை வெளியே சென்றாள். அதுவரை இருந்த பொருட்டின்மை முகம் மாற சலிப்புடன் அவள் வெளியே செல்வதை திரௌபதி நோக்கினாள். நான்கு வாரம் முன்பு ஒருநாள் பிரீதை படிகளில் பாய்ந்து ஏறி மூச்சிரைக்க உடல் வியர்வை பரவ ஓடிவந்து அவள் கதவை தட்டாமலேயே உள்ளே நுழைந்து “பெரும்படைத்தலைவர் உன்னை உடனே கிளம்பி அவர் அரண்மனைக்கு செல்லும்படி சொன்னார்” என்றாள். நள்ளிரவில் அதற்கு சற்றுமுன்னர்தான் திரௌபதி திரும்பி வந்திருந்தாள். சுவடி நோக்கிக்கொண்டிருந்தவள் புருவம் சுளிக்க “என்னையா? அவரா? எதற்கு?” என்றபடி எழுந்தாள்.

சிரித்தபடி “எதற்கா? நல்ல வினா” என்றாள் பிரீதை. “மற்போருக்கு” என்றபோது அவள் முகம் சிவந்தது. “ஆம், அவர் அழைப்புக்குச் சென்று மீளும் பல பெண்கள் ஒரு வாரம் எழுந்து அமரமுடியாது...” மேலும் உரக்க நகைத்து “சென்ற மாதம் அணிச்சேடி சப்தையை அழைத்துச்சென்றார். சொல்லப்போனால் தூக்கிச்சென்றார். அவள் அங்கே நீராழியில் குளித்துக்கொண்டிருந்தாள். படைத்தலைவரின் தெற்கு உப்பரிகையில் நின்றால் நீராழியில் நீராடுபவர்களை நன்றாக பார்க்கமுடியும். அங்கிருந்து அவரே நேரடியாக இறங்கிவந்து அவளை நீரிலிருந்து இழுத்து எடுத்து தோளில் போட்டுக்கொண்டு சென்றார். நல்ல மதுமயக்கு. யானைபோல பிளிறிக்கொண்டே சென்றார். அவள் பாவம் சிறுமி. இன்னும் மருத்துவநிலையில் இருந்து எழவில்லை...” என்றாள்.

பிரீதை அவளை கூர்ந்து நோக்கி “ஆனால் நீ நிகராக மற்போரிட முடியும் என நினைக்கிறேன்” என்றாள். திரௌபதி உதடைச் சுழித்தபடி மீண்டும் சுவடியை எடுத்தாள். “கிளம்பு” என்றாள் பிரீதை. அவளை நோக்காமல் “எனக்கு இன்று சோர்வாக இருக்கிறது” என்றாள் திரௌபதி. “சோர்வா? என்ன சொல்கிறாய்? வந்திருப்பது எவ்வளவு பெரிய வாய்ப்பு என அறிவாயா? அவருக்கு உன்மேல் விருப்பம் நீடித்தால் நீ மாளிகையில் வாழலாம்.” திரௌபதி “என்னால் செல்லமுடியாது” என்றாள். “ஏன்? மறுக்கும் உரிமை சூதப்பெண்களுக்கும் சேடியருக்கும் இல்லை, அறிவாயா?” என்றாள். “என்னால் மூன்று நாட்களுக்கு செல்லமுடியாது” என்றாள் திரௌபதி.

அவள் சோர்ந்து “ஓ” என்றாள். பின்னர் “சரி, நான் இதை சொல்கிறேன். அவர் காத்திருப்பார்” என்றாள். பின் குரலைத்

தாழ்த்தி “வழக்கமாக ஆணையிடுவார். இம்முறை கனிந்து சொன்னார். உன்மேல் காதல்கொண்டிருக்கிறார். ஐயமே இல்லை. நீ அவர் நெஞ்சில் குடிகொள்கிறாய். உன் தெய்வங்கள் உன்மேல் கனிந்துள்ளன” என்றாள். திரௌபதி ஒன்றும் சொல்லாமல் சுவடியை நோக்கிக்கொண்டிருந்தாள். “சுவடியில் நீ கற்றதை எல்லாம் அவரிடம் சொல்லாதே. அவருக்கு படிப்பவர்களை பிடிக்காது” என்றாள் பிரீதை. மேலும் திரௌபதி பேசாமலிருக்கவே “அவரிடம் என்னைப்பற்றி சொல். நான் உனக்கு இப்போது மிக அணுக்கமாகவே இருக்கிறேன்” என்றாள்.

மீண்டும் வந்தபோது அவள் முகம் மாறிவிட்டிருந்தது. “என்ன சொல்கிறாய்? இன்று நீ வருவாய் என நான் அவரிடம் சொல்லிவிட்டேனே?” என்றாள். அவள் அப்போது அரசியுடன் கலைக்கூடத்துக்குக் கிளம்ப அணிசெய்துகொண்டிருந்தாள். “அலுவல் உள்ளது, சொன்னேனே?” என்றாள். “அலுவலா? படைத்தலைவர் ஆணையிட்டால் அரசரே அவையலுவல்களை விட்டுவிட்டு கிளம்பிச்செல்வார்” என்றாள் பிரீதை. “ஆம், ஆனால் நான் ஆணையின்றி கிளம்ப முடியாது” என்றபின் திரௌபதி வெளியே சென்றாள். “நான் அரசியிடம் சொல்லச் சொல்கிறேன்” என்றபடி பிரீதை பின்னால் வந்தாள்.

மெல்ல மெல்ல பிரீதையின் குரல் மாறியது. “உன்னை அழைத்துவராவிட்டால் என்னை சவுக்காலடிப்பார். என்னை சவுக்கடி படவைப்பதுதான் உன் நோக்கமா?” என்றாள். சீற்றத்துடன் “நான் அப்படி எளிதாக தோற்றுச்செல்பவள் அல்ல. நீ அவரிடம் செல்லாவிட்டால் உன்னை முச்சந்தியில் கழுவேற்ற வைப்பேன்” என்றாள். “நீ என்னதான் எண்ணுகிறாய்? நீ ஒன்றும் இளவரசி அல்ல. அழகிதான். ஆனால் நடு அகவை

கடந்தவள். இன்னும் எத்தனை நாள் உன் அழகு நீடிக்குமென நினைக்கிறாய்? கனிந்திருக்க கொய்யப்படாத பழம் உதிர்ந்து அழுகும் என்று அறிக!” என்றாள். “சொன்னால் புரிந்துகொள், அவர் இந்நாட்டை மெய்யாகவே ஆள்பவர். சினம்கொண்டால் காட்டுவேழம் போன்றவர்.”

ஒரு கட்டத்தில் அவள் தணியத் தொடங்கினாள். “நீ இத்தனை மிஞ்சியும் அவர் கெஞ்சுகிறார் என்றால் உன்மேல் அத்தனை காதல்கொண்டிருக்கிறார் என்று பொருள். அதை நீ இழுக்கலாம், அறுத்துவிடக்கூடாது” என்றாள். “நீ விழைவதென்ன? அதைமட்டும் சொல். அதை நான் குறிப்புணர்த்தினாலே போதும், அவர் பெருகி எழுவார்.” திரௌபதி சலிப்புடன் “நான் அதை எண்ணவில்லை. என் சிக்கல்களை சொல்லிவிட்டேன். இப்போது விழாக்காலம். இது முடியட்டும்” என்றாள். பிரீதை எரிச்சலுடன் “விழா முடிந்ததும் மழைக்காலம்” என்றாள். “ஆம்” என்றாள் திரௌபதி சினத்துடன். “நான் சொல்கிறேன், இந்த ஆணவத்தின்பொருட்டு நீ கழுவில் அமர்வாய். அன்று என் சொற்களின் பொருள் உனக்குப் புரியும்” என்றாள்.

தயங்கிய காலடிகள் சுபாஷிணி வருவதை காட்டின. இருமுறை கதவை கையால் சுண்டிவிட்டு உள்ளே வந்தாள். புன்னகையுடன் “என்ன சொல்லிவிட்டுச் செல்கிறாள் அண்டா?” என்றாள். திரௌபதி புன்னகைத்தாள். “அண்டா இப்போதெல்லாம் ஒழிந்துகிடக்கிறது” என்றபடி அவளருகே அமர்ந்த சுபாஷிணி “நீங்கள் சென்றிருக்கவேண்டும், அக்கா. சென்று அந்த தசைக்குன்றின் கன்னத்தில் நான்கு அறை வைத்திருக்கவேண்டும்” என்றாள். “மற்போரா?” என்றாள் திரௌபதி சிரித்தபடி. “உண்மையைச் சொன்னால் மற்போரில் அவன் உங்களை வெல்ல முடியாது. அவன் கைகள் வெறும்

மலைப்பாம்புகள். உங்கள் கைகள் அரசநாகம்” என்றாள் சுபாஷிணி. திரௌபதி “என்ன, இன்று அலுவல்கள் முடிந்துவிட்டனவா?” என்றாள்.

“அலுவலுக்கு முடிவேது? நான் அப்படியே விழிகளில் இருந்து மறைந்துவிடுவேன். என்னிடம் கேட்பார்கள், எங்கே சென்றாய் என்று. நான் இங்கேதான் இருந்தேன் என்பேன். அவர்களால் ஒன்றும் சொல்லமுடியாது.” அவள் சிரித்து “நேற்று என்ன சொன்னேன் தெரியுமா? நான் கந்தர்வன் ஒருவனுடன் இருந்தேன் என்று” என்றாள். திரௌபதி அவள் கையை பற்றி “கந்தர்வர்கள் எவரேனும் வந்துவிடப்போகிறார்கள்” என்றாள். “வந்தால் நான் உங்களை முதலில் சந்திக்கும்படி சொல்வேன்” என்றாள் சுபாஷிணி. “நேற்று என்னிடம் சந்திரை சொன்னாள், நான் உங்களைப்போல நடப்பதாக. சேடியரைப்போல நிலம்நோக்கி நட என்று என்னிடம் அவள் சொன்னாள். நான் விழிதூக்கி நடக்கிறேன் என்று எனக்கே தெரியாது. நான் அப்படி நடந்ததே இல்லை.”

“நான் அப்படி நடக்க முயன்றேன்” என்றாள் சுபாஷிணி. “ஆனால் அப்படி நடந்தாலும் வேறுபாடு தெரியவில்லை. உடலில் வெளிப்படுவது உள்ளே வாழ்வதுதான்.” அவள் மேலும் நெருங்கி அவளருகே அமர்ந்து “என் உடலுக்குள் என்ன வாழ்கிறது?” என்றாள். “சின்னஞ்சிறிய சிட்டுக்குருவி ஒன்று” என்றாள் திரௌபதி. அவள் முகம் மலர்ந்து “ஆம், உண்மை. நான் சிட்டுக்குருவிகளை கனவில் காண்பேன்” என்றாள். பின்னர் “நீங்கள் கரவுக்காட்டுக்கு செல்கிறீர்கள் அல்லவா?” என்றாள். “எவர் சொன்னது?” என்றாள் திரௌபதி. “பேசிக்கொண்டார்கள். அரசி செல்கிறார்கள். காவலுக்கு

நீங்களும் செல்கிறீர்கள்.” மேலும் குரலைத் தழைத்து “என்னையும் உடனழைத்துச் செல்லுங்கள்” என்றாள்.

“நீ எதற்கு?” என்றாள் திரௌபதி. “நான் இதுவரை இந்த அரண்மனையைவிட்டு வெளியே சென்றதே இல்லை. ஒரு காட்டை பார்த்துவிட்டால் அதன்பின் நான் திரும்பிவரவே மாட்டேன். அங்கேயே பறந்து பறந்து அலைவேன்.” திரௌபதி “நீ வந்து என்ன செய்யப்போகிறாய் என்று சொல்ல?” என்றாள். “உங்களுக்கு உதவியாக” என்றாள் சுபாஷிணி. “நன்று, இதுவரை சேடியருக்கு சேடியர் அமைந்ததில்லை உலகில்” என்றாள் திரௌபதி. சுபாஷிணி முகம் கூம்பி “உங்களுக்கு பிடிக்கவில்லை என்றால் வேண்டாம்” என்றாள். திரௌபதி “அழைத்துச் செல்கிறேன்...” என்றதும் எழுந்து “மெய்யாகவா?” என்றாள். “நீ வருகிறாய்” என்றாள் திரௌபதி.

அவள் “அய்யோ” என்று கூவியபின் நின்று நாக்கைக் கடித்து ஐயத்துடன் “சந்திரை என்ன சொல்வாள்?” என்றாள் சுபாஷிணி. “நான் ஆணையிடுகிறேன்.” அவள் நெஞ்சில் கைவைத்து “அய்யோ!” என ஏங்கினாள். பின்னர் குதித்தபடி “நான் இதை உடனே ஆதிரையிடமும் சாமையிடமும் சொல்லவேண்டும்...” என்றாள். ஓடி வெளியே போய் உடனே திரும்பி வந்து “நான் எவரிடமும் இப்போது சொல்லமாட்டேன்” என்றபின் மீண்டும் ஓடிச்சென்றாள். புன்னகையுடன் மீண்டும் சுவடியை படிக்க முயன்றபின் திரும்ப கட்டிவைத்துவிட்டு திரௌபதி மஞ்சத்தில் படுத்துக்கொண்டாள்.

❀காலையில் திரௌபதி அரசியின் அறைக்கு சென்றபோது சற்று பிந்திவிட்டிருந்தது. அவள் முந்தையநாள் இரவு சரியாக துயிலவில்லை. நெடுநேரம் எண்ணங்களில் உழன்றுகொண்டிருந்தாள். எண்ணங்கள் ஒருபோதும் அத்தனை

பொருளற்றதாக, முன்பின் உறவற்றவையாக இருந்ததில்லை. துயிலுக்குள் அவள் கரு உந்தி குருதி ஒழுகிக்கொண்டிருந்த ஒரு பெண்ணுக்கு மருத்துவம் பார்த்தாள். குழந்தை வெளிவந்து குருதியில் நனைந்த துணி எனக் கிடந்தது. அதை எடுத்துப்பார்த்தாள். அதன் விழிகள் இறந்து திறந்திருந்தன. ஓர் அசைவை உணர்ந்து அவள் திடுக்கிட்டாள். அதன் தொப்புள்கொடி நாகமென நெளிந்தது. நாகமேதான். குருதி நனைந்த நாகம் அந்தத் தொப்புளை கவ்வியிருந்தது.

இடைநாழியின் மறுஎல்லையில் அவள் கீசகனின் பேருருவை கண்டுவிட்டாள். நடையை சீராக்கி தன் கால்களை மட்டுமே நோக்கி நடந்தாள். கால்கள் ஒன்றன்மேல் ஒன்றென அமைந்து முன்செல்ல தொலைவென்பதே இல்லாமல் ஆகியது. அவள் அவன் குரலை கேட்டாள். “தேவி, நில்!” அவள் நின்று தன் கால்களை நோக்கிக்கொண்டிருந்தாள். “நான் அனுப்பிய செய்திகள் வந்தனவா?” என்றான். “ஆம்” என்றாள். “அவள் மூடப்பெண். நான் சொன்னவற்றை சரியாகச் சொல்லியிருப்பாளா என்னும் ஐயம் எழுந்தது. ஆகவேதான் நானே நேரில் வந்தேன்” என்றான்.

அவள் “அவள் அனைத்தையும் சொன்னாள்” என்றாள். “பெண் எனக்கு புதிதல்ல. ஆனால் உன்னைக் கண்டதுமே நான் உணர்ந்தேன், பிறிதொரு பெண்ணை நான் எண்ணியும் பார்க்கமுடியாது என. நம் இருவரையும் அருகருகே நோக்கும் எவரும் அதை உணரமுடியும், நீயும் நானும் இணையானவர்கள் என்று” என்றான். “நான் எளிய புரவிகளில் ஊர முடியாது. நான் ஏகும் யானையே இந்நகரில் மிகப் பெரியது… நான் இப்புவியில் மிகப் பெரிய உடல்கொண்டவன். எனக்கு நிகரானவன் பாண்டவனாகிய பீமன். அவன் இறந்துவிட்டான்” என்றான்

கீசகன். “நீ இப்புவியிலேயே பெரியவள்… ஐயமே இல்லை. உன்னைக் கண்ட நம் நிமித்திகன் ஒருவன் இதை சொன்னான்.”

திரௌபதி “நான் செல்லவேண்டும்” என்றாள். “உனக்காக காலையிலேயே எழுந்து வந்து காத்திருக்கிறேன். உனக்கு என்ன வேண்டும், சொல்! பொன்னா? மணியா? கருவூலச்செல்வமா? அரசமாளிகையா? என்னை நீ புறக்கணிப்பது ஏன்? அதை சொல்!” அவள் “நான் புறக்கணிக்கவில்லை” என்றாள். “நீ சூதர்மகள் அல்ல என நான் அறிவேன். நீ யாரென்று நான் கேட்கவில்லை. எனக்கு உன் அருள் வேண்டும். நீ இல்லாமல் என்னால் வாழமுடியாது… அதை ஒவ்வொரு கணமும் உணர்கிறேன்” என்றான் கீசகன். “ஒரு பெண்ணின்பொருட்டு நான் முழு இரவும் துயில்நீப்பேன் என சென்ற ஆண்டு நிமித்திகன் சொல்லியிருந்தால் அவன் தலையை வெட்ட ஆணையிட்டிருப்பேன். ஆனால் நான் துயின்று பல நாட்களாகின்றன.”

“உண்மை” என்று கீசகன் சொன்னான். “உன் எண்ணம் மட்டுமே என் உள்ளே ஓடிக்கொண்டிருக்கிறது. எந்தப் பெண்ணும் முதலசைவில் உன்னை போலிருக்கிறாள். எப்போதும் போர்க்களத்திற்குச் செல்வதற்கு முந்தைய கணத்தின் பதற்றமும் இனிய கிளர்ச்சியும் என் உடலில் இருந்துகொண்டே இருக்கின்றன… துயில்வது இருக்கட்டும், என்னால் எங்கேனும் நிலையாக அமரக்கூட முடியவில்லை.”

திரௌபதி “நீங்கள் அரசமகளிரை மணக்கவிருப்பதாக சொன்னார்கள்” என்றாள். அவன் “ஆம், ஷத்ரிய அரசகுலத்தில் பெண்கொள்வது என் அரசியல் எண்ணங்களுக்கு உகந்தது. ஆகவேதான் இதுவரை நான் எப்பெண்ணையும் மணக்கவில்லை” என்றான். உடனே உணர்ந்துகொண்டு “ஆம்,

நான் உன்னை அரசியாக்க இயலாது. நான் அரசனாகும்போது நீ அரியணை அமர்வதென்றால்...” என்று தடுமாறினான். அவள் ஆடையை பற்றிக்கொண்டு “நேரமாகிறது. அரசி எனக்காக காத்திருப்பார்கள். நான் செல்கிறேன்” என்றாள். அவன் “நில், நீ விழைந்தால் உன்னை மணம்கொள்கிறேன். பட்டத்தரசியாகவே அமரச்செய்கிறேன்” என்றான்.

திரௌபதி “எனக்கு நடு அகவை கடந்துவிட்டதே?” என்றாள். “இல்லை, நீ மாறாத கன்னி. உன்னைப் பார்த்த நிமித்திகன் சொன்னான், நீ அனல்போல என்றும் புதியவள் என்று. உன்னில் எதுவும் ஆகுதியாகுமே ஒழிய கலக்கவியலாதென்று. உன் ஒரு மயிரிழையை கொண்டுசென்று விழியிழந்த முதுநிமித்திகர் சுக்ரரிடம் அளித்தேன். தொட்டு நெறிநோக்கியதுமே இவள் அனல்மகள் என்றார். இவள் உடல் பிழையற்ற முழுமைகொண்டது, இவள் கை பற்றி உடனமர்வோன் பாரதவர்ஷத்தை ஆள்வான் என்றார்.”

திரௌபதி புன்னகையுடன் அவனை நோக்கி “அதுவா உங்கள் இலக்கு?” என்றாள். “ஆம், நீ பாரதத்தை ஆள்வாய் என்கிறார் சுக்ரர். ஐயமே வேண்டியதில்லை, இது கோல்தாங்கும் கை என்கிறார். நீ இன்று குடியோ படையோ இன்றி தனியளாக இருக்கிறாய். நான் உன் படைக்கலமாக ஆவேன். என்னைப்போன்ற வீரன் உதவியுடனேயே நீ நாடாள முடியும்” என்றான் கீசகன். “நான் உன்மேல் பித்துகொண்டிருக்கிறேன் என்று அறியமாட்டாயா? உன் காலடியில் கிடப்பேன். உன் சொல்லை தலைக்கொள்வேன்.” திரௌபதி “மச்சகுலத்து இளவரசர் பேசும் பேச்சா இது?” என்றாள். “பித்தன் என்றே கொள். என்னால் தாளமுடியவில்லை... வேறேதும் எண்ண

முடியவில்லை. உன்னை இழந்தால் நான் அனைத்தையும் இழந்தவனாக ஆவேன்” என்றான் கீசகன்.

“நான் என் நிலையை சொல்லிவிடுகிறேன், இளவரசே” என்றாள் திரௌபதி. “நான் ஐந்து கந்தர்வர்களுக்கு கட்டுப்பட்டவள். அவர்களை மீறி எதையும் எண்ணமுடியாதவள்” என்றாள். “கந்தர்வர்களா? ஆனால் அத்தனை பெண்களும் கந்தர்வர்களுக்கு கட்டுப்பட்டவர்கள் அல்லவா? மணவினை என்பதே கந்தர்வர்களை விட்டு பெண்ணை விடுவிப்பதுதானே?” என்றான் கீசகன். “இவர்கள் வேறுவகை கந்தர்வர்கள். பிறர் பெண்ணை அந்தந்த பருவங்களுக்கு மட்டும் உரிமைகொள்பவர்கள். இவர்கள் என்னை இறப்புவரை விடமாட்டார்கள். ஏனென்றால் இவர்கள் இங்கே இருக்கவேண்டுமென்றால் என்னை பற்றிக்கொள்ளவேண்டும். ஒவ்வொருநாளும் நான் இவர்களுக்கு அளிக்கும் மலரும் நீரும்தான் இவர்களின் அன்னம்” என்றாள் திரௌபதி. “இன்றுவரை என்னை அணுகிய அத்தனை மானுடரையும் இந்த கந்தர்வர்கள் கொன்றிருக்கிறார்கள். ஆகவேதான் நான் அஞ்சுகிறேன்.”

“கந்தர்வர்களே அஞ்சும் தெய்வம் ஒன்றின் அடியவன் நான்” என்றான் கீசகன். “பிறர் அறியாத ஒன்று அது. இன்று இந்நகரில் அனைவரும் வழிபடும் தெய்வம் மலைநின்ற இந்திரன். நானும் அவனை வழிபடுவதுண்டு. ஆனால் உளம்கொண்டிருப்பது தென்மேற்குக் காட்டில் உறையும் கலிதேவனை. அனலுறங்கும் விழியன், இருள் என பேருரு கொண்டவன். அவன் பெயரைச் சொன்னால் அஞ்சாத தேவர்கள் இல்லை. நான் சனிதோறும் கலிக்கு குருதிபலியிட்டு பூசனை செய்கிறேன். என் படைக்கலங்களை அவன் காலடியில்

வைத்து வணங்கியே கையிலெடுக்கிறேன். ஆகவேதான் இன்றுவரை நான் எந்தப் போரிலும் தோற்றதில்லை.”

“என் உடலில் எப்போதும் அவனருள் இருந்துகொண்டிருக்கிறது” என்று கீசகன் தன் மணிக்கட்டிலிருந்த கரிய சரடை காட்டினான். “அவன் காலடியில் வைத்தெடுத்த கருங்காப்பு. என்னுடன் வா, அவன் காலடி பணிந்தெழு, உன் கைகளிலும் ஒன்றை கட்டுகிறேன். கந்தர்வர்கள் மட்டுமல்ல, அவர்களின் பேரரசனாகிய இந்திரனே அஞ்சி விலகிச்செல்வான்.” திரௌபதி “எங்குள்ளது அந்த ஆலயம்?” என்றாள்.

“மாமன்னர் நளன் மீண்டும் அரசுகொண்டபோது அவ்வாலயம் ஆதரவிழந்தது. ஆண்டுக்கொருமுறை மட்டுமே பூசனை பெறுவதாக மாறியது. பின்னர் காட்டுக்குள் இடிந்து கற்குவியலாக புதர்மூடிக் கிடந்தது. நிமித்திகர் ஒருவர் நூல்நோக்கி சொல்ல இங்கு கலியின் ஆலயமிருப்பதை அறிந்தேன். நானே தேடிக் கண்டடைந்தேன். அதை எடுத்துக்கட்டி நாள்பூசனைக்கும் ஒழுங்கு செய்தேன்” என்றான் கீசகன்.

திரௌபதி “என்னை ஆள்பவர்களில் முதல்வர் காற்றின் மைந்தர். கலி அவரை எண்ணினாலே அஞ்சுவான்” என்றாள். “எவர் சொன்னது?” என்று கீசகன் இரு கைகளையும் ஓங்கி அறைந்தபடி கூவினான். தன் மேலாடையை விலக்கி நெஞ்சைக் காட்டியபடி முன்னால் வந்தான். அதில் காகக்குறியும் சூலமும் பச்சை குத்தப்பட்டிருந்தன. இரு தோள்களிலும் காகச்சிறகுகளை பச்சை குத்தியிருந்தான், அவன் கைவிரிக்கும்போது அவை பறப்பதுபோல் தோன்றுவதாக. “பார், நான் அவன் அடியவன். அவன் குறியை நெஞ்சில் தாங்குபவன். அவனே நான். உன் கந்தர்வனுக்கு ஆண்மையிருந்தால் வந்து

என்னை எதிர்கொள்ளச் சொல்… ஆம், நான் அவனை அறைகூவுகிறேன் என்றே சொல்.”

அவள் அதை நோக்கியபின் விழிவிலக்கி “இதை இங்கு எவரும் பார்த்ததில்லையா?” என்றாள். “இது என் குடிக்குறி என நினைக்கிறார்கள். நான் எவர் என்பதை அறிந்தவள் உன் அரசி மட்டுமே” என்றான் கீசகன். “நீ அஞ்சவேண்டியதில்லை. இப்புவியிலுள்ளோர் அனைவரும் எண்ணி அஞ்சும் ஒருவன் உன் அன்பைக் கோருகிறேன்.” திரௌபதி “நான் என் கந்தர்வனிடம் சொல்கிறேன். அவன் உங்களை எதிர்கொள்ள அஞ்சுவான் என்றால் மாற்று எண்ணுகிறேன்” என்றாள். “சொல், அவனை என்னிடம் வரச்சொல்” என்றான் கீசகன். “எனக்கு பொழுதாகிறது” என்றபடி அவள் முன்னால் சென்றாள்.

❀அரசி அறைக்குள் எரிச்சலுடன் நின்றிருந்தாள். திரௌபதி உள்ளே வந்ததுமே “எங்கே சென்றாய்? உனக்காக நான் காத்திருக்கவேண்டுமா?” என்றாள் சுதேஷ்ணை. “வழியில் உங்கள் இளையோனை கண்டேன்” என்றாள் திரௌபதி. முன்னரே கீசகனின் காதல் கோரிக்கையை அவள் அரசியிடம் சொல்லியிருந்தாள். அவள் முகம் மாறியது. “என்ன சொன்னான்? மிரட்டினானா? இன்று இவ்வரசே அவன் கையில் இருக்கிறது” என்றாள். “அதை முன்னரே அந்தச் சேடியிடம் சொல்லி அனுப்பியிருந்தார். விரும்பாதது நிகழுமென்றால் என் கத்தியால் கழுத்து நரம்பை அறுத்துக்கொள்வேன் என்று அவளிடம் சொல்லி அனுப்பினேன்” என்றாள் திரௌபதி.

“விலங்கு… காமம் கொண்டால் மதயானை கற்பாறையில் மத்தகத்தை முட்டிக்கொள்ளும் என கேட்டிருக்கிறேன்” என்றாள் அரசி. “அவரது எண்ணம் பிறிதொன்று. என்னை மணப்பவன் பாரதவர்ஷத்தின் தலைவனாவான் என நிமித்திகன்

சொல்லியிருக்கிறான்” என்றாள். அரசி வாயைப் பொத்தி ஒருகணம் அமைந்தபின் “இருக்கும்… உன்னைப் பார்த்தால் எனக்கே அப்படி தோன்றுகிறது” என்றாள். பின்னர் “நீ அவனை எதன்பொருட்டும் ஏற்றுக்கொள்ளாதே” என்றாள். “என் கந்தர்வர்கள் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள்” என்றாள் திரௌபதி.

“ஆம், அவர்கள் உனக்கு காப்பு. உன் காற்றுமைந்தனிடம் சொல், இந்தக் கீழ்மகனின் நெஞ்சை பிளக்கவேண்டும் என்று” என்றாள் சுதேஷ்ணை. “கீசகர் மாருதரை அறைகூவியிருக்கிறார்” என்று திரௌபதி சொன்னாள். “இப்போது எனக்கு எழும் ஐயம் வேறு. இந்த ஊன்குன்று ஒருவேளை உன் மாருதனையும் வென்றுவிடக்கூடும்.” திரௌபதி புன்னகைத்து “அவரை வெல்ல அவரது மூத்தவராகிய ஹனுமானால் மட்டுமே முடியும், அரசி. அச்சம் வேண்டாம்” என்றாள்.

பெருமூச்சுடன் அரசி தணிந்தாள். “இன்று ஏழு பூசனைகள், நான்கு அயல்நாட்டார் சந்திப்பு… அரசியாக நடித்து சலித்துவிட்டேன். எங்காவது எளிய ஷத்ரியனுக்கு மனைவியாகி அடுமனை வேலையும் அகத்தள வம்புமாக வாழ்ந்திருந்தால் மகிழ்ச்சியாக இருந்திருப்பேன்” என்றாள். திரௌபதி புன்னகை செய்தாள். “கரவுக்காட்டுக்கு உத்தரன் கரிய புரவியில் வருகிறான். அதன் பெயர் காரகன். அவனே என்னிடம் வந்து சொல்லிவிட்டுச் சென்றான், தெரியுமா?” என்றாள் அரசி. “அவன் அந்த ஆணிலியை வேவுபார்க்கவும் அனைத்து ஒருக்கங்களையும் செய்துவிட்டான். நான் சொன்னால் அதை அரசாணையாகக் கொள்பவன் அவன் மட்டுமே. அவனை இங்கே பிற அனைவரும் இளக்காரமாகவே பார்க்கிறார்கள்.”

திரௌபதி மீண்டும் புன்னகைத்தபின் அறைக்குள் இருந்த சுவடிகளை அடுக்கி வைக்கத்தொடங்கினாள். சுதேஷ்ணை அருகே வந்து "அவனுக்கு அவன் விரும்பும்படி கலிங்க இளவரசி மணமகளாக அமைந்துவிட்டாள் என்றால் இளவரசுப்பட்டம் கட்டவேண்டும் என்று அரசரிடம் கோருவேன். அவர் இன்றிருக்கும் நிலையில் அந்தக் கிழநரி குங்கன் சொல்லாமல் எதுவும் நடக்காது. நீ அந்த சூதாடியை சென்று கண்டு அவன் என்ன எண்ணுகிறான் என்று கேட்டுப் பார்" என்றாள். திரௌபதி "அவரை நான் எங்கே சந்திப்பது?" என்றாள். "அவனையும் கூட்டிக்கொண்டுதான் அரசர் கரவுக்காட்டுக்கு வருகிறார். அங்கே அமர்ந்து சூதாடுவார்கள். வேறென்ன தெரியும் அவர்களுக்கு?" என்றாள் அரசி.

திரௌபதி புன்னகையுடன் "கேட்டுப் பார்க்கிறேன்" என்றாள். "வெறுமனே கேட்காதே. அவனுக்கு என்ன தேவை என்று கேள். அதை நான் அளிப்பேன். தேவைப்பட்டால் மெல்ல அவன் உள்ளத்தில் கீசகன் பற்றிய அச்சத்தை உருவாக்கு. என்ன இருந்தாலும் கீசகன் தன்னை அரசுசூழ்பவன் என எண்ணிக்கொண்டிருப்பவன். பிறிதொருவன் தன்னை விஞ்சுவதை அவன் ஒப்பமாட்டான். என்றைக்கானாலும் குங்கனின் தலையை கீசகன் வெட்டுவது உறுதி. அந்த அச்சம் அவனுக்கே இருக்கும். அதை உறுதிசெய்வதுபோல உன் ஐயத்தை மட்டும் சொல். ஐயம் எழுந்துவிட்டால் போதும், அது வளர்ந்தே தீரும்" என்றாள்.

உடனே மேலும் சொற்கள் எழ குரல் தாழ்த்தி "ஆனால் என் மைந்தன் எளிய உள்ளத்தவன். அவன் அரசனென்றானால் குங்கன் அவனுக்கு முதன்மை அரசுமதியாளனாக உடனிருக்கலாம்" என்றாள். மேலும் குரல் தழைய

“உண்மையில் குங்கனே கோல்கொண்டு நாடாளலாம் என்று சொல். குங்கனைப் போன்றவர்கள் பொதுவாக எளியவர்களையே விழைவார்கள். அவர்களின் களத்தில் காயென அமைய அவர்களே உகந்தவர்கள்” என்றாள்.

திரௌபதி “ஏன் நாம் அவரை இப்படி வென்றெடுக்கவேண்டும்?” என்றாள். “உனக்கென்ன அறிவே இல்லையா? இன்று இந்நகரில் அறிவின் வல்லமை கொண்டவன் அவன் மட்டுமே. தீயவன் என்றாலும் ஆற்றல்மிக்கவன். அவன் நம் பக்கம் இருந்தால் நமக்கு பெரும்படைக்கலம். கீசகனை வீழ்த்தி உத்தரனை அரசமர்த்த அவனே போதும்” என்றாள் அரசி. திரௌபதி “ஆம், மெய்தான்” என்றாள்.

# நீர்க்கோலம் - 45

### 44. நாத்தழல்

✿அடுமனையின் பின்பக்கம் நீள்வட்ட வடிவில் குளம் ஒன்று வெட்டப்பட்டிருந்தது. அடுமனையிலிருந்து அங்கு செல்வதற்குரிய சற்று சரிவான கல் பதிக்கப்பட்ட பாதையினூடாக உணவொழிந்த பெருங்கலங்களை அடுமனைப் பணியாளர்கள் உருட்டிக்கொண்டு வந்து நீருக்குள் இறக்கினர். சம்பவன் அடுமனைத் தோழனாகிய மேகனுடன் இணைந்து நிலவாய் ஒன்றை இரு காதுகளிலும் கயிறுகள் கட்டி தோளில் மாட்டி தூக்கிக்கொண்டு இறங்கினான்.

நீருக்குள் முதலைகள் போலவும் எருமைகள் போலவும் கரி படிந்த அடிக்குவைகள் தெரிய உருளிகளும் அண்டாக்களும் பாதி மூழ்கிக் கிடந்தன. குளத்தைச் சுற்றி கல்லடுக்கி எல்லா

பக்கமிருந்தும் இறங்கும்படியாக மிகச்சரிவாக கரை அமைக்கப்பட்டிருந்தது. கோதையின் கிளையாறாகிய சபரியிலிருந்து வெட்டிக் கொண்டுவரப்பட்ட கால்வாய் அதில் நீரை நிரப்பி மறுபக்கம் எழுந்து வழிந்து சென்று அங்கிருந்த காய்கறித் தோட்டத்துக்குள் மறைந்தது.

அடுமனையாளர்கள் உரத்த குரலில் ஒருவரை ஒருவர் அழைத்துப் பேசியும், ஆணைகளை இட்டும், சிரித்து நகையாடியும் பணியாற்றிக்கொண்டிருந்தனர். நிலவாயை நீருக்குள் இறக்கியபின் கைதூக்கி சோம்பல் முறித்து சம்பவன் மேகனிடம் “இனி அங்கிருப்பவையெல்லாம் சிறிய கலங்கள். அவற்றை அவர்களே கொண்டு வந்துவிடுவார்கள்” என்றான். மேகன் அங்கிருந்த வேர்ப்புடைப்பொன்றில் அமர்ந்து கைகளை விரித்து உடலை ஒடுக்கி “அடுமனைப்பணி ஒப்பு நோக்க எளிது. கலங்களைக் கழுவுவதுபோல் கடினமானது பிறிதில்லை” என்றான். சம்பவன் அவனுக்கெதிராக அமர்ந்து இடையில் அமைந்த பொதியிலிருந்து பாக்கொன்றை எடுத்தான். இயல்பாக மேகன் கைநீட்ட துணியை வைத்து அப்பாக்கை கடித்து இரண்டாக உடைத்து பாதியை அவனிடம் கொடுத்தான்.

அதை வாயில் போட்டு சற்று மென்று அதன் துவர்ப்பூறலை வாயில் நிறையவிட்டு எச்சில் வழியாதிருக்க வாயை சற்று தூக்கி இலக்கிலாமல் நோக்கியபடி சுவையுணர்ந்து அமர்ந்திருந்தான் மேகன். பாக்கு அவன் நரம்புகளில் ஊறி உடலில் பரவியிருந்த இறுக்கத்தை மெல்ல மெல்ல தணிக்கத் தொடங்கியது. துயில் வந்து மூடுவதைப்போல கண்கள் இமை சரிந்தன. சம்பவன் “இன்று கலங்கள் இருமடங்கு. உண்பவர்கள்

குறைவென்றாலும் வறுக்கும் உணவு மிகுதி என்றால் கலம் சேர்ந்துவிடுகிறது” என்றான்.

மேகன் இரு விரல்களை வாயில் அழுத்தி நீட்டி மரத்தடியில் துப்பிவிட்டு “இங்கு அடுமனைப்பணிக்கு வரும் எவருக்கும் முதலில் அளிக்கப்படுவது கலம் கழுவும் வேலைதான். தோள் வலிமை உடையவர்கள் செய்ய வேண்டியது. நான் வந்து இரண்டாண்டுகளாகி விட்டன. இதுவரை அடுமனைப்பணியில் பெரும்பாலும் நான் செய்தது இதுதான்” என்றான். “நானும் கலம் கழுவுவதிலேயே தொடங்கினேன்” என்று சம்பவன் சொன்னான். மேகன் “ஆனால் நீ அடுமனைத் தொழிலை கற்றுத் தேர்ந்தவன் என்றனர் உன் குடியினர். வலவர் கலம் கழுவுவதற்கு உன்னை அனுப்பியது விந்தையாகத் தோன்றியது. உனது ஆசிரியர் உனது திறனில் மதிப்பு கொள்ளவில்லை போலும்” என்றான்.

சம்பவன் புன்னகைத்து “அத்தனை எளிதாக ஒருவர்மேல் மதிப்பு கொள்ளும் ஒருவர் நான் இத்தனை தவமிருந்து தேடி அணுகும் தகுதியுடையவராக இருக்க வாய்ப்பில்லை அல்லவா?” என்றான். மேகன் சிரித்து “இது மானுட உள்ளங்களின் இயல்பு. ஒருவர்மேல் பற்று கொண்டுவிட்டால் பின்னர் குற்றமும் குறையும் கண்ணுக்குப் படுவதேயில்லை. சொல்பவர்மேல் சினம் வரும்” என்றான். சம்பவன் “அத்தகைய பெரும்பற்று இல்லாமல் காதல் கொள்ள முடியாது, மைந்தரை வளர்க்க இயலாது, எதையும் கற்றுக்கொள்வதும் நடவாது” என்றான். “அவர் நம்மேல் கனியவில்லை என்றால்? நம்மை அவர் அறிந்துகொள்ளவில்லை என்றால்?” சம்பவன் “நீ கேட்ட இரு வினாக்களிலும் உள்ள நான் என்னும் சொல் மிகப் பெரிய தடை, அன்பு கொள்வதக்கும் பணிவதற்கும். அச்சொல்லே

இல்லா நெஞ்சுடன் அணுகுபவர்களே அதை அடையமுடியும்” என்றான்.

“அங்கென்ன செய்கிறீர்கள்? கலங்கள் ஊறிக் காத்துக்கிடக்கின்றன. இன்று முழுக்க கழுவினாலும் பொழுது விடிவதற்குள் முடிக்க முடியாது போலிருக்கிறது” என்று கீழிருந்து அவர்களின் குழுத்தலைவனாகிய பிரமோதன் அழைத்தான். எழுந்து மீண்டும் துப்பிவிட்டு பாக்கை கன்னத்தில் அதக்கியபடி “வா” என்று மேகன் சரிவிலிறங்கி நடந்தான். இருவரும் இடையளவு நீரிலிறங்கி அங்கு ஊறி மூழ்கிக்கிடந்த பெரிய உருளியொன்றைத் தூக்கி கரைநோக்கி இழுத்தனர். எருமைக்கன்றுபோல அது நழுவி அடம்பிடித்தது. அதன் காதுகளைப்பற்றி இழுத்து கரை கொண்டுவந்து ஓரிடத்தில் அதன் விளிம்பை காலால் மிதித்து உள்ளிருந்த நீரை சரித்து, தரைக்கல்லில் வைத்து மும்முறை சுழற்றி கரையேற்றி வைத்தான் சம்பவன்.

மேகன் புன்னகையுடன் “இதிலும் ஒரு கலை உள்ளது. இத்தனை எளிதாக இப்பெருங்கலத்தை கரை ஏற்றும் ஒருவரை நான் பார்த்ததில்லை” என்றான். சம்பவன் “பணியென்று எதைச் செய்தாலும் அதில் நுட்பத்தை கண்டடைய முடியும் அந்நுட்பத்தை மட்டும் கையாள்பவன் அதை கலையென்றாக்குகிறான்” என்றான். “நீ நூல் கற்றிருக்கிறாய்” என்றான் மேகன். “இல்லை, நான் கற்றவை எல்லாம் என் ஆசிரியரின் சொற்களௌன என்னை வந்தடைந்தவை மட்டுமே” என்றான் சம்பவன். “உன் ஆசிரியர் பாண்டவராகிய பீமசேனர். அவர் இறந்துவிட்டார் என்கிறார்கள்” என்று மேகன் சொன்னான். “அவர் இறக்கவில்லை. வலவன் அவரே” என்றான் சம்பவன். “என்ன சொல்கிறாய்?” என்றான் மேகன். “மெய்யறிந்தோர்

தங்கள் வழித்தோன்றல்களில் வாழ்கிறார்கள். வலவன் அவருடைய வடிவம் என்றே எனக்குத் தெரிகிறார்." மேகன் "ஆம், அவருடைய தோள்கள் கீசகரின் தோள்களைவிடப் பெரியவை" என்றான்.

"இத்தனை தொழில் கற்ற பின்னரும் உன்னை இப்பணிக்கு அனுப்பிய வலவரை எண்ணி வியக்கிறேன். உன் கையில் அன்று நீ கற்றவை வெளிப்படவில்லையா என்ன?" என்றான் மேகன். "முதல்நாள் அவர் கேட்டபோது நான் காய்ச்சிய புளிக்காய்ச்சலை நீ உண்டாயல்லவா? நீ என்ன நினைக்கிறாய்?" என்றான் சம்பவன். "உண்மையாகவே சொல்கிறேன் சற்று முன்வரை இந்த அடுமனையில் நான் உண்ட உணவுகளில் மிகச் சிறந்த ஒன்று அந்தப் புளிக்காய்ச்சல். இந்த அடுமனையில் இன்று வலவர் அன்றி எவரும் அதற்கிணையான ஒரு புளிக்காய்ச்சலை செய்துவிட முடியாது. உன்னை அப்படியே அள்ளி எடுத்து மார்போடு அணைத்துக்கொள்வார் என்று எண்ணினேன். அவர் ஒரு சொல்லும் உரைக்காமல் இங்கனுப்பியது பெருவிந்தையென எனக்குத் தோன்றியது. எனக்கு எண்ண எண்ண ஆறாமலிருப்பதும் அதனால்தான்" என்றான். சம்பவன் புன்னகை செய்தான்.

✿விராடபுரியில் நுழைந்த முதல்நாள் அந்தி இருளில் அவர்களின் குழு அடுமனையை நோக்கி வந்தபோது எதிரே இரு உதவியாளர்கள் தொடர்ந்து வர பெருந்தோள் மல்லர் ஒருவர் வருவதைக் கண்டு விகிர்தர் கைகூப்பி நின்றுவிட்டார். சம்பவன் முதலில் பின்னால் அடுமனை முகப்பில் எரிந்த பந்த ஒளியில் ஒரு மனிதனின் நிழல் விரிந்த தோற்றம் என்றே எண்ணினான். அருகணைந்தபோது அம்மனிதன்

மார்புக்கூட்டுக்குள் தன் மொத்த உடலும் ஒடுங்கிவிடும் என உணர்ந்தான். இரு கைகளும் இரு துணைவர் என மருங்கமைந்தன. விகிர்தர் இரு கைகளையும் தலைமேல் கூப்பியபடி அணுகி “அடுமனைத் தொழில் அறிந்தவர் நாங்கள். கலிங்கத்துச் சூதர். இங்கு அத்தொழிலுக்கு சூதர்கள் தேவை என்பதை அறிந்து வந்துள்ளோம்” என்றார்.

தோள்மேல் விரிந்த குழலும் அடர்வற்ற கூர்மீசையும் மென்புல்போல் தாடியும் கொண்டிருந்த அகன்ற மஞ்சள் முகத்தில் விரிந்த புன்னகை சிறுவனுக்குரியது என சம்பவன் நினைத்தான். அப்பெருமானுடன் அவர்களை ஒருகணம் ஒருமுறை நோக்கியபின் “வந்து அமர்ந்து உணவருந்துங்கள். பிற அனைத்தும் பின்னர்... வருக!” என்றான். “நாங்கள் பணி கோரி வந்தோம்” என்றார் விகிர்தர். “இனி எதற்கும் அஞ்சவேண்டியதில்லை. உணவருந்தலாம்” என்று சொல்லி அவன் தன் பெரிய கையை சம்பவனின் தோளில் வைத்து “நீ அடுமனையாளனா?” என்றான். “ஆம், தொழில் கற்றிருக்கிறேன்” என்று சம்பவன் சொன்னான். “எவரிடம்?” என்று பேருடலன் கேட்டான்.

“நானே கற்றேன். நான் இளைய பாண்டவர் பீமனை என் ஆசிரியனாகக் கொண்டேன். அவரைக் குறித்த செய்திகள் வழியாக என்னை வளர்த்துக்கொண்டேன்” என்றான். புன்னகையுடன் “நன்று! அடுமனைத் தொழிலை கைப்பழக்கமாகவே செய்ய முடியும். ஒருபோதும் குறையாத சுவையொன்றை அது அளிக்கும். அடுதொழில் செய்பவர்களில் பல்லாயிரத்தில் ஒருவரே அதற்கு உளம் அளிப்பவர்கள். அகம் அளிக்கத் தொடங்கினால் அது முடிவிலாது விரிவடைவதை

அறிவாய். எந்த மெய்யறிவையும்போல அதுவும் மானுடனை பிரம்மத்திடம் இட்டுச் செல்லும்” என்றான்.

வலவனின் கைகளின் எடையால் முதுகு வளைந்து எலும்புகள் வலிக்க தோள் தொய்ய “ஆம், அடுமனைத் தொழிலை கலையென்று பயிலவும் யோகமென்று இயற்றவும் நான் விழைகிறேன்” என்றான். “வருக” என்று புன்னகையுடன் சொன்னபடி அவர்களை ஊண்கூடம் நோக்கி அழைத்துச் சென்றான். அவன் நீராடியிருந்தாலும் பேருடலர்களுக்குரிய மெல்லிய வியர்வைமணம் இருந்தது. நீணாள் முன் உயிர்நீத்த தந்தையின் நினைவை அது சம்பவன் உள்ளத்தில் எழுப்பியது. முதிய சூதர் சுந்தரர் “நாங்கள் நெடுந்தொலைவு பயணம் செய்து வந்திருக்கிறோம். இன்னும் நீராடவில்லை” என்றார். அவன் உரத்த குரலில் “நீராடாமல் உணவுண்ணும்படி நான் ஆணையிடுகிறேன்” என்றான்.

அவர் “நாங்கள்…” என்று தொடங்க “ஆணைகளை மீறுவதை நான் விரும்புவதில்லை” என்றான் வலவன். “அவ்வாறே” என்று சுந்தரர் சொன்னார். “என் பெயர் வலவன். நான் ஷத்ரியன். இந்த அடுமனையில் முதன்மைப் பொறுப்பில் இருக்கிறேன்” என்றான். மிருகி “நீ எங்கள் வயிற்றை முதலில் பார்த்தாய், மைந்தா. பசித்து நடைதளர்ந்திருக்கிறோம்” என்றாள். வலவன் புன்னகையுடன் “பசி நல்லது. அடுமனையாளர்கள் போற்றும் தெய்வம் அது” என்றான். “நாங்கள் அங்கு சென்று தாங்கள் சொன்னதாகச் சொல்லி உணவுண்கிறோம்” என்றார் குடித்தலைவர். “வேண்டாம். முதல் உணவை என் கைகளாலேயே விளம்புகிறேன். முட்டப்பசித்தவருக்கு அன்னம் பரிமாறும் பேரின்பத்தை ஒருபோதும் நான் இழப்பதில்லை” என்று வலவன் சொன்னான்.

உணவுக்கூடத்தின் முன் அவர்கள் அனைவரும் பெட்டிகளையும் பொதிகளையும் வைத்துவிட்டு கைகளை உதறி மூச்சுவிட்டு இளைப்பாறினர். சிறுவர்களும் சிறுமியரும் அவனைப் பார்த்ததுமே சொல்லடங்கி விழிகள் கனவிலென வெறிக்க நடந்தனர். பெரிய மரத்தொட்டியிலிருந்த நீரைச்சுட்டி "கைகால் கழுவிவிட்டு வந்தமருங்கள்" என்றான் வலவன். "இது இடைப்பொழுது. இரவுணவுக்கான பந்திகள் தொடங்க நெடுநேரமாகும் அல்லவா?" என்று சம்பவன் கேட்டான். "ஆம், இன்னும் நான்கு நாழிகை உள்ளது" என்று சொல்லி வலவன் உள்ளே சென்றான். அவனைத் தொடர்ந்து சென்ற சம்பவன் "விளம்புவதற்கு நானும் உதவுகிறேன்" என்றான். "நீ சென்று அமர்ந்து உண். பசித்திருக்கிறாய்" என்றான் வலவன்.

சிறுவர்கள் ஒருவரை ஒருவர் பிடித்துத் தள்ளியபடி ஓடிச்சென்று அமர்ந்தனர். அவர்கள் சூதர்களுக்குரிய முறையில் கால்களை நிலைமடித்து அரைவட்டமாக அப்பெருங்கூடத்தின் மூலையில் அமர்ந்துகொண்டனர். பெண்கள் ஒருகால் நீட்டி மறுகால் நிலைமடித்து அமர்ந்தனர். வலவனும் உதவியாளர்களும் தலைவாழை இலைகளை கொண்டுவந்து அவர்கள் முன் பரப்பினர். சம்பவனின் அருகே இருந்த சுந்தரர் "உச்சிப்பொழுது உணவு எஞ்சியதைத்தான் அளிக்கப்போகிறார்கள். அதற்கு தலைவாழை இலை எதற்கு?" என்றார். விகிர்தர் "மிஞ்சியிருக்கும்" என்றார். அதற்குள் அடுமனைக்குள்ளிருந்து புதிய உணவின் நறுமணம் எழுந்தது. "அடுமனையில் புதிய உணவு ஒருங்குகிறது. சற்று பசிபொறுத்திருந்தால் அதையே உண்டிருக்கலாம்" என்றார்.

வலவன் இரு கைகளிலும் பிடிகலங்களில் உணவை எடுத்துக்கொண்டு வந்தான். அவனுக்குப் பின்னால் ஏவலர்கள்

அப்பங்களும் குழம்புகளும் கனிச்சாறுகளும் கொண்டு வந்தனர். "புதிய உணவு இன்னும் எவரும் உண்டிருக்க வாய்ப்பில்லை" என்றான் அஸ்வகன். உணவை வைத்து திரும்பிய வலவன் கருவுற்ற வயிற்றை தரையமையச் சரித்து கால் மடித்து அமர்ந்திருந்த சவிதையை பார்த்தான். அவளருகே சென்று "சற்று விலகிச்சென்று அங்கு அமர்ந்துகொள்" என்றான். அவள் வியர்வைபூத்த மேலுதடுகளும் வெளுத்த கண்களுமாக மேலே நோக்கி "நான் களைத்திருக்கிறேன்... என் உடல்..." என்று சொல்ல அவன் ஒருகையால் அவள் வலத்தோளையும் பிறிதொரு கையால் அவள் இடக்காலையும் பற்றி குழவியைப்போல தூக்கி மறுபக்கம் சுவர் சாய்ந்து அமரவைத்தான்.

அவளுக்கு முன் முதலில் இலையிட்டு ஊன்கொழுப்பில் வெந்த அப்பத்தை வைத்தான். அவள் கைநீட்டித் தடுத்து "என்னால் உணவுண்ண முடியவில்லை, மூத்தவரே..." என்றாள். "நீ உண்பாய். அதற்கு முன் உனக்கு நான் ஒரு மருந்து தருகிறேன்" என்று சொன்ன வலவன் எழுந்து அடுமனைக்குள் சென்று இரு கைகளிலும் எதையோ எடுத்து வந்தான். அவர்கள் அதில் இஞ்சியும் கிராம்பும் வெந்தயமும் மணப்பதை உணர்ந்தனர். "வாயை திற!" என்றான். சவிதை வாயை திறக்க ஒரு கையால் அதை நன்கு பிழிந்து அச்சாற்றை அவள் வாயிலிட்டான். "விழுங்கு" என்றான். அவள் விழுங்கி உடல் உலுக்கினாள் மறுகையிலிருந்த பொருட்களைக் கசக்கி "வாய் திற" என்று சொல்லி அச்சாற்றை அவள் வாயில் விட்டான். எரியும் பச்சிலை மணம் எழுந்தது.

அவள் உடல் கசப்பில் உலுக்கிக் கொண்டது. "விழுங்கு" என்றான். இருமுறை குமட்டியபின் அதையும் விழுங்கினாள்.

“வெந்நீர் சிறிது அருந்து. உன் முன் இலையிலிருக்கும் இந்த ஊன்சோற்றைப் பார்த்தபடி இவர்கள் உணவுண்டு முடிப்பதுவரை அமர்ந்திரு. அதன் பிறகு நான் அளிக்க அளிக்க நீ உண்ண முடியும்” என்றான். கடுங்கசப்பில் விழிகள் நிறைய அவள் தலையசைத்தாள். “உன்னுள் ஓநாய் ஒன்று எழுவதை நீயே உணர்வாய்” என்றபின் மலையஜையை நோக்கி “நீயே உண்பாய் அல்லவா?” என்றான். அவள் “ஆம்” என்றாள். அவன் கையசைத்து ஆணையிட்டுவிட்டு பிறருக்கு பரிமாறலானான்.

சிறுவர்களும் சிறுமியரும் அதுவரை விழிவிரித்து வலவனை நோக்கிக்கொண்டிருந்தனர். “உண்க!” என்று அவன் சொன்னதும் தயங்கியபடி கைநீட்டி உணவை எடுத்து வாயில் வைத்தனர். சுவை அவர்களை முற்றிலும் உணவை மட்டுமே உணர்பவர்களாக ஆக்கியது. அவர்களின் விழிகள் சுவையில் கூர்ந்தன. உடல் நீர்ப்புழு என சுவையில் திளைக்கலாயிற்று. விகிர்தர் “வலவரே, இது இரவு விருந்துக்கான புதிய உணவு என்று தோன்றுகிறது” என்றார். “ஆம், இன்னும் அடுப்பிலிருந்து இறங்கவில்லை” என்றான் வலவன். “அதை முதலில் சூதர்களுக்கு அளிப்பதென்றால்...” என்றார். “இங்கு என் சொல்லுக்கு மாற்றுச்சொல் எவரும் எடுப்பதில்லை” என்றான் வலவன். “பசித்திருப்போர் உண்டு நிறைந்து வாழ்த்திய உணவு அவிமிச்சம் போன்றது. தேவர்களால் தூய்மைப்படுத்தப்பட்டது. உண்ணுக!” என்றான்.

அவர்கள் தயங்கி மெல்ல ஒருவரை ஒருவர் நோக்கினர். மிருகி ஆவலுடன் அள்ளி உண்ண பிறரும் உண்ணத்தொடங்கினர். பதற்றத்தில் அள்ளி உண்டு பசியை காட்டிக்கொள்ளகூடாதென்று ஒவ்வொருவரும் முன்னரே முடிவு செய்திருந்தனர். ஆனால் சுவை மிக விரைவில்

அனைத்தையும் மறக்க வைத்தது. சூழல், தருணம் அனைத்தையும் கடந்தவர்களாக ஒவ்வொன்றையும் எடுத்து எடுத்து சுவைத்தனர். வாயூற, உளம் நிலைமறக்க, முகம் மலர்ந்திருக்க அள்ளி அள்ளி உண்டனர். உறிஞ்சினர், மென்றனர், தலையாட்டினர், மெய்மறந்து சிலகணங்கள் அமைந்தனர். மீண்டும் கைநீட்டி "மேலும்..." என்றனர். அவற்றை கொண்டுவருவதற்குள் "இங்கு! இங்கு!" என்று தவித்தனர்.

அங்கு அவர்கள் அனைவர் உடலையும் விறகென ஆக்கி எரித்து எழுந்தது தொன்மையான வேள்வித்தீ ஒன்று. மூவெரி முன் அமர்ந்தவர்கள் என விரைவுடனும் பணிவுடனும் அள்ளி அள்ளி விளம்பினர் வலவனும் அவன் உதவியாளரும். மெல்ல தீ அணைந்து உடல் தளர்ந்து அவர்கள் நிறைந்தனர். ஒவ்வொரு உறுப்பும் உணவை நிறைத்துக்கொண்டதுபோல் எடை மிகுந்து நிலம்படிந்தது. "போதும்" என்று ஒருவர் சொன்னபோதுதான் அவ்வண்ணம் ஒரு சொல்லிருப்பதை பிறர் உணர்ந்தனர். "போதும்! நிறைந்தோம்! முழுமை அடைந்தோம்" என்று பரிமாற வந்தவர்களை கைநீட்டி மறுத்தனர். "இன்னும் சிறிது... இன்னும் ஒரு வாய்" என்று அவர்கள் வற்புறுத்த "போதும்... இதற்குமேல் உண்டால் உணவுச்சுவையை மறந்துவிடுவோம்" என்றார் விகிர்தர்.

சம்பவன் உண்டு முடித்து இலையை மடிக்காமல் ஊழ்கத்திலென அமர்ந்திருந்தான். முதிய சூதரான சுந்தரர் "உண்டு முடித்தோர் எழுக!" என்று கைகாட்டினார். அனைவரும் ஓரிரு அசைவுகளுடன் எழுந்தனர். ஒரு சொல்கூட பேசிக்கொள்ளாமல் நடந்து நீர்த்தொட்டி அருகே சென்று கை கழுவினர். எவர் உள்ளத்திலும் சொல்லென ஏதும் இருக்கவில்லை. அதுவரை சுவை என்று அறியப்பட்ட ஒன்று

அப்போது நிறைவு என்ற முற்றிலும் பிறிதொன்றாக மாறிவிட்டிருந்தது. எந்தத் தருணத்தில் அந்த மாறுதல் நிகழ்ந்ததென்று உணரமுடியவில்லை.

அவர்கள் திரும்பி வந்தபோது சவிதையின் அருகே வலவன் குறுபீடம் ஒன்றை இட்டு அமர்ந்து “நான் அளிக்கிறேன். உண்ணமுடியுமா என்று பார்” என்றான். சவிதை நாவால் உதட்டை வருடியபடி “ஆம், இதுவரை அறியாத பசி என்னுள் எழுகிறது” என்றாள். “உன் உதடுகளே சொல்கின்றன. அவை முன்பு உலர்ந்திருந்தன” என்றான் வலவன். “உன்னுள் வளரும் அந்த மாமல்லனுக்கு என் பசியில் ஒரு பகுதியை அளித்திருக்கிறேன். இனி நீ அவனுக்காகவே உண்ணவேண்டும்” என்றான்.

அவள் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது. அடக்க முயன்று மீறி வந்த விம்மல்களுடன் தலைகுனிந்து மேலாடையால் முகத்தை மூடிக்கொண்டாள். வலவன் அவள் தோள்களில் கைவைத்து “என்ன?” என்றான். “இல்லை” என்றாள். “சொல்” என்றான். “வழியில் ஓர் அன்னை என்னிடம் சொன்னாள், என்னை காக்கும் தெய்வத்தை நான் இங்கு காண்பேன் என்று” என்றாள். அவளால் பேசமுடியவில்லை. நெஞ்சு உலைய தோள்கள் அதிர்ந்தன. அவன் அவள் தலையை வருடி “உண். இனி எதைப்பற்றியும் அச்சம் கொள்ளாமலிரு” என்றான்.

“இல்லை, இனி நான் அஞ்சுவதற்கு ஏதுமில்லை” என்றாள் அவள். “நிழலுருவாக தாங்கள் வந்தபோது நான் கண்டது என்ன தெரியுமா?” “என்ன?” என்று வலவன் கேட்டான். “மாமல்லரே, விண்ணளாவிய உருவம்கொண்டு அஞ்சனைமைந்தர் ஹனுமான் வந்ததுபோல நான் கண்டேன். விழிமாயம் அல்ல, நான் அத்தனை தெளிவாக கண்டேன். இரு கைகளையும் கூப்பி

என் தேவா உன் கால்பொடி என் தலையில் விழவேண்டும். ஒருபோதும் அச்சமெனும் நோய் இனி என்னை பற்றலாகாது என்று வேண்டினேன். அப்போதுதான் யாரோ ஏதோ கேட்டதற்கு தாங்கள் ஆம் என்றீர்கள். இப்பிறவியில் எனக்கு அச்சொல் ஒன்று போதும். பிறிதொரு தெய்வம் வேண்டியதில்லை" என்றாள்.

வலவன் அவள் தலையை தன் கையால் உருட்டினான். அவன் ஐந்துவிரல் விரிவுக்கு உள்ளே அடங்குமளவுக்கு இருந்தது அவள் தலை. அவள் செவிகளைப்பற்றி மெல்ல உலுக்கி "இந்த விழிநீர் இனி எப்போதும் விழலாகாது. உணவுக்குமுன் முகம் மலரவேண்டும். பிறிதொரு உணர்வை பார்க்க அன்னத்தை ஆளும் அன்னைதெய்வங்கள் விரும்புவதில்லை" என்றான். "ஆம்" என்றாள். "உண்க!" என்றபின் அவன் அந்த ஊன்அப்பங்களில் ஒரு துண்டைப் பிய்த்து அவள் வாயில் வைத்து "இது என் கொடை உனக்கு" என்றான். அவள் அதை வாயால் வாங்கி புன்னகையும் நாணமும் விழிநீருமாக மென்றாள்.

அப்பால் நோக்கி நின்றிருந்த சூதர்குழுவினர் அனைவருமே விழிநீர் உகுத்துக்கொண்டிருந்தனர். விசும்பல்களும் அடக்கிய விம்மல்களுமாக தன்னைச் சூழ்ந்திருப்பதை சம்பவன் உணர்ந்தான். தொட்டபோது அவன் கண்களிலும் விழிநீர் நிறைந்திருந்தது. வலவன் எழுந்து அவர்கள் அருகே வந்தபோது ஒவ்வொருவரும் தங்கள் கண்களை துடைத்தபின் தலைகுனிந்து விழிகள் நோக்கு விலக நின்றனர். வலவன் அவர்களை அணுகி "நீங்கள் இங்கு தங்கலாம். உங்கள் விழைவுக்கும் தகுதிக்கும் தக்க பணிகள் இங்குள்ளன" என்றான்.

அறியாது எழுந்த ஓர் உந்துதலால் சம்பவன் முழந்தாளிட்டு அவன் காலடியில் அமர்ந்து தலையை அக்காலடிகளில் வைத்து “நல்லாசிரியரே, தாங்கள் யாரென்று நான் அறிந்தேன். அவ்வெளிய பெண் பார்த்ததை என் ஆணவத்தால் இத்தனை பொழுதுகடந்து நான் உணர்கிறேன். என்னை ஆட்கொள்ளுங்கள். சுவையென எழுந்த தெய்வங்களுக்கு முன் படையலுடன் நிற்கும் எளியவனாக என்னை ஆக்குங்கள்” என்றான். வலவன் குனிந்து அவனை இரு தோள்களைப்பற்றி தூக்கிநிறுத்தி “நன்று. நீ என்னுடன் பரிமாற வந்ததே உன்னை காட்டியது” என்றான்.

“நான் நன்கு சமைப்பேன்…” என்றான் சம்பவன். வலவன் புன்னகையுடன் “சரி, உன் அடுமனைத் திறனை காட்டு” என்றான். “என்ன சமைக்க வேண்டும்? ஆணையிடுங்கள், இப்போதே செய்கிறேன்” என்றான். “மிக எளிது என ஒன்றை செய்” என்றபின் அவன் தோளைத் தட்டி “ஒரு புளியுப்புக் கரைசல் காய்ச்சு” என்றான். “இதோ…” என்றான் சம்பவன். “புளிக்காய்களும் உப்பும் அங்குள்ளன.” சம்பவனின் கைகள் பரபரத்தன. சில கணங்கள் என்ன செய்வதென்றே தெரியவில்லை. சிட்டுக்குருவிபோல அங்குமிங்கும் உடல் பரபரத்தது. பின்னர் பாய்ந்து சென்று உப்பை எடுத்தான். திகைத்து அதை போட்டுவிட்டு மூச்சிரைத்தான்.

தன்னை திரட்டிக்கொண்டான். சில கணங்கள் விழிமூடி அத்தருணத்தில் தன்னை குவித்து பின் திறந்தபோது உடல் அமைதிகொண்டிருந்தது. உள்ளம் அந்த அமைதியை வாங்கி அலையவிந்தது. சிறிய மண்கலத்தில் புளிக்காய்களை எடுத்து உடைத்து உப்பும் மிளகும் சேர்த்து நீர் ஊற்றாமல் அடுப்பில் வைத்தான். கலம் சூடாகி புளியின் பச்சைமணம் எழுந்தது.

மெல்ல ஓசை எழுந்து புளி வேகும் மணம் வந்தபோது எடுத்து இறக்கிவைத்து ஒரு கரண்டி நல்லெண்ணையை அதில் ஊற்றி மூடிவைத்தான். அடுப்புநெருப்பை அணைத்துவிட்டு “நோக்குக, ஆசிரியரே” என்றான்.

வலவன் “திற” என்றான். அவன் மூடியைத் திறந்தபோது அங்கிருந்த அனைவரையும் வாயூறச்செய்யும் புளிக்காய்ச்சலின் மணம் எழுந்தது. வலவன் உதவியாளனிடம் “நோக்குக!” என்றான். அவன் “மணம் சுவை நிகழ்ந்ததை காட்டுகிறது” என்றபடி குனிந்து அதில் ஒரு சொட்டு எடுத்து நாக்கில் விட்டு “இனி ஒரு புளிக்காய்ச்சலைச் செய்ய தங்களால் மட்டுமே முடியும், வலவரே” என்றான். வலவன் புன்னகையுடன் “கொடு” என்றான். சம்பவன் மரக்கரண்டியில் புளிக்காய்ச்சலில் சிறிது எடுத்து நீட்டினான். அதை நாவில் விட்டபின் “நன்று” என்றான் வலவன். சம்பவன் கைகூப்பினான்.

“நீ என்னுடன் இரு. என்ன செய்யவேண்டும் என்று இவனிடம் சொல்கிறேன்” என்றபின் வலவன் சிறுவர்களைப் பார்த்து கைவிரித்து கண்சிமிட்டினான். அதுவரை அவனை அச்சத்துடன் பார்த்துக்கொண்டிருந்த அவர்கள் முகம் மலர்ந்து ஒருவரை ஒருவர் நோக்கினர். இளையவன் பாய்ந்து சென்று தாவி அவன் மேல் தொற்றிக்கொள்ள மற்ற குழந்தைகளும் கூச்சலிட்டபடி அவன் உடலில் சென்று விழுந்து பற்றி மேலேறின. தோள்களிலும் தலையிலும் இடையிலும் குழந்தைகளுடன் அவன் சிரித்தபடி உள்ளே சென்றான்.

# நீர்க்கோலம் - 46

**45. நீர்ப் பசுஞ்சோலை**

✿சோலைத்தழைப்புக்கு மேல் எழுந்துநின்ற தேவதாருவின் உச்சிக்கவட்டில் கட்டப்பட்டிருந்த காவல்மாடத்தில் மடியில் வில்லையும் இடக்கையருகே அம்புத்தூளியையும் வைத்துக்கொண்டு கஜன் பின்உச்சிவெயில் நிறம் மாறுவதை பார்த்துக்கொண்டிருந்தான். காற்றில் அக்காவல்மாடம் மெல்ல ஆடியது. அவன் அங்கு அமர்ந்த முதல் நாள் காடு கோதையில் செல்லும் பெருங்கலம்போல் மெல்ல அசைவதாகத் தோன்றி உளநடுக்கு கொண்டான். எழுந்து நின்று கண்கள் சுழல தலை நிலையழிய இருமுறை குமட்டினான். அவன் அருகே நின்றிருந்த தீர்க்கன் தன் பெரிய கைகளால் அவன் புயங்களைப்பற்றி "எதையாவது பற்றிக்கொள். காட்டிலிருக்கும் ஏதேனும் ஒரு புள்ளியை கூர்ந்து நோக்கு" என்றான்.

அப்பால் தெரிந்த பிறிதொரு தேவதாருவை கூர்ந்து பார்த்தபோது தன்னுடைய காவல்மாடம் அசைவதாகத் தெரிந்தது. அக்கணமே அவன் உடலுக்குள் இருந்த நீர்த்துளிகள் உணர்ந்த நிலையழிவு சீரமைந்தது. சற்று நோக்கியபின் ஒவ்வொன்றும் அவன் சித்தத்திற்கு தெளிவாயின. "அமர்ந்துகொள்" என்று தீர்க்கன் சொன்னான். அவன் அமர்ந்தபின் புன்னகைத்து "விந்தை" என்றான். "நாம் வெளியே பார்க்கும் ஒவ்வொன்றையும் இப்படித்தான் ஒப்பீடுகளாக அறிந்துகொண்டிருக்கிறோம் என்று சொல்வார்கள்" என்று தீர்க்கன் சொன்னான்.

கஜன் "இங்கிருந்து கைகளை விரித்தால் பறவையாக மாறி இந்த பச்சை அலைகளுக்கு மேல் பறந்து போய்விட முடியுமென்று தோன்றுகிறது" என்றான். "அதுவும் இங்கு வரும் பெரும்பாலானவர்க்கு தோன்றுவதே. முன்பு ஓரிருவர் அவ்வாறு பாய்ந்து உயிர் துறந்ததுண்டு" என்றான் தீர்க்கன்.

கஜன் தன் அடிவயிற்றில் ஒரு அதிர்வை உணர்ந்து காவல்மாடத்தின் மூங்கில் விளிம்பிலிருந்து சற்று உள்ளே நகர்ந்துகொண்டான். “அந்த அச்சம் இருக்கும்வரை நீ பாய்ந்துவிடமாட்டாய். அல்லது இவர்களிடமிருந்து அகிபீனா வாங்கி இழுத்தால் அது நிகழலாம்” என்றான்.

கஜன் “அகிபீனாவா? இவர்களா?” என்றான். “அகிபீனா உண்டு, சிவமூலியும் உண்டு” என்றான் தீர்க்கன். அவன் “காவலர்கள் அதையெல்லாம் இழுக்கலாமா?” என்று கேட்டான். “கூடாது. ஆனால் இப்புவியில் ஒப்புக்கொள்ளப்பட்ட செயல்கள் மட்டும்தான் நிகழ்கின்றனவா என்ன? அவ்வாறென்றால் இப்புவி எத்தனை சலிப்பூட்டுவதாக இருக்கும்? இத்தனை மீறல்களுக்குப் பிறகும் இங்கு பெரிதாக செய்வதற்கொன்றுமில்லை” என்று தீர்க்கன் சொன்னான். “ஏன் இவர்கள் உளம்மயக்குப் பொருட்களை நுகர்கிறார்கள்?” என்று கஜன் கேட்டான். தீர்க்கன் இதழ்கள் கோட “சின்னாள் இங்கு இரு, அப்போது தெரியும்” என்றான்.

“ஏன்? இங்கு அச்சமூட்டும் ஏதேனும் உண்டா?” என்று கஜன் கேட்டான். “அச்சமூட்டும் ஏதேனும் இருந்திருந்தால் இவர்களுக்கு இந்த உளமயக்குகள் தேவைப்பட்டிருக்காது. இங்கு எதுவுமே இல்லை” என்றான் தீர்க்கன். “வானம். கீழே இந்தப் பசுமை. ஒவ்வொரு நாளும் கதிரெழுதல், கதிரமைதல். மாதங்களில் பாதி நாள் நிலவு. எஞ்சிய நாட்கள் விண்மீன். எப்போதும் காற்று. பிறகென்ன வேண்டும்?” என்று கஜன் கேட்டான். தீர்க்கன் “இளையவனே, இவையனைத்தும் ஒவ்வொரு மானுடருக்கும் அளிக்கப்பட்டுள்ளது. எந்த மானுடனாவது இவற்றில் நிறைவடைந்திருக்கிறானா? இவற்றை பொருட்படுத்துபவர்கள் மிகச் சிலரே. பிறருக்கு

வேறேதோ தேவைப்படுகிறது. காமம், செல்வம், வெற்றி, புகழ். வாளில்லாமல் வாழத்தெரிந்தவர்கள் இங்கு மிக அரிது” என்றபின் “கையிலோ உள்ளத்திலோ” என்று முனகிக்கொண்டன்.

“ஆனால் எனக்கு இந்த இடம் பிடித்திருக்கிறது” என்றான் கஜன். பெருமூச்சுடன் “அது நன்று” என்று தீர்க்கன் சொன்னான். “அந்த உவகை எஞ்சியிருக்கும்வரை இங்கிரு. அதில் ஒரு துளி குறையத்தொடங்கினாலும் உடனே கிளம்பிவிடு.” குழப்பத்துடன் “எங்கு?” என்று கஜன் கேட்டான். “எங்கு மறுகணம் உன் தலையை எவரேனும் வெட்டிவிட வாய்ப்பிருக்குமோ, எங்கு சற்று தேடினால் ஒரு பெரும்புதையல் கிடைக்கும் வாய்ப்புள்ளதோ அங்கு. குறைந்தது அங்கு ஒவ்வொரு நாளும் முந்தைய நாள் நிகழாத ஒன்று நிகழும் வாய்ப்பிருக்க வேண்டும். அங்கு. அங்கு மட்டும்தான் மானுடர் மகிழ்ச்சியாக வாழமுடியும்” என்றான் தீர்க்கன்.

கஜன் திரும்பி பச்சை இலைகளின்மேல் காற்று செல்லும் ஒழுக்கை நோக்கியபின் திரும்பி “ஏன் இவற்றைப் பார்த்தபடி வாழ்ந்துவிட முடியாதா என்ன?” என்றான். “முடியும்... கவிஞர்களால், முனிவர்களால் முடியும் என்று சொல்லப்படுகிறது. அப்படி எவரையும் நான் பார்த்ததில்லை” என்றபின் தீர்க்கன் எழுந்து சோம்பல்முறித்து “நான் சென்று ஓய்வெடுக்கிறேன். நீ இங்கிரு” என்றான். “நானா?” என்றான் கஜன். “ஏன்?” என்று தீர்க்கன் கேட்டான். “நான் இப்போதுதான் வந்திருக்கிறேன்.” கஜன் தோளில் தட்டி “நீயே மிகை இங்கு” என்றபின் தீர்க்கன் இறங்கிச்சென்றான்.

அன்றுமுதல் கஜன் அங்கே அமர்ந்திருக்கலானான். அவனுக்கு காவல்பரணில் அமர்ந்திருப்பது பிடித்திருக்கிறது எனத்

தெரிந்ததும் அவனை ஒவ்வொருவரும் விரும்பி அழைத்து அமரச்செய்தார்கள். அவனுக்கு நல்லுணவு கொண்டுவந்து அளித்தனர். அவன் கீழே இறங்கவே விரும்பவில்லை. கொட்டகைகளில் துயில்கையிலும் உச்சிமாடத்தையே கனவு கண்டான். புலரியையும் அந்தியையும் ஒருபோதும் தவறவிடவில்லை.

அன்று அந்தி முதல் அங்கு அரசகுடிகளின் நிலவாடல் நிகழுமென்று பத்து நாட்களுக்கு முன் காவலர்தலைவர் சொன்னபோதுதான் அவன் அறிந்தான். அப்போது அவனுக்கு அது பெரிதாகத் தோன்றவில்லை. ஆணைகளை பிறப்பித்துக்கொண்டிருந்த அவர் ஒருகணம் அவனை கூர்ந்து பின்னர் "உனக்கு அளிக்கப்பட்ட காவல்மாடம் எது?" என்றார். "மூன்றாவது காவல்மாடம்" என்று அவன் சொன்னான். "நன்று, அங்கிரு. பிறிதொருவர் வந்து உன்னை விடுவிக்கும்வரை மாடத்திலிருந்து எதன்பொருட்டும் கீழிறங்காதே" என்றபின் அவர் திரும்பிக்கொண்டார்.

திரும்பிச் செல்லும்போது தீர்க்கனிடம் "நிலவு நாட்களில் இங்கு அரசியும் இளவரசியும் வருவதுண்டா?" என்று கேட்டான். தீர்க்கன் "இங்கா?" என்றபின் அவன் என்ன கேட்கிறான் என்று புரிந்துகொண்டு சிரித்தான். "இளையவனே, இந்தக் காவல்மாடம் அமைக்கப்பட்டபின் மிக அரிதாகவே எவரேனும் இதற்குள் நுழைந்திருக்கிறார்கள். நான் அறிந்து இருமுறை மச்ச இளவரசர் உள்ளே வந்திருக்கிறார். இளவரசர் உத்தரர் அவருடைய கனவுகளில் இங்குதான் இருக்கிறார் என்று நினைக்கிறேன். சென்ற முறை இளவரசி இங்கு வந்து பாம்பால் கடிபட்டார் என அறிந்திருப்பாய். அதன்பின் இனி எவருமே இங்கு வரமாட்டார்கள் என்றுதான் நினைத்தேன். மீண்டுமொரு

களியாட்டு இங்கு இத்தனை விரைவில் ஒருங்கு செய்யப்படுமென்று எண்ணவில்லை” என்றான்.

உடன்வந்த கீரகன் “நாமறியாத ஏதோ விந்தை இதற்குள் உள்ளது” என்றான். “இது அந்த ஆணிலியின் ஏதோ சூழ்ச்சி என ஐயுறுகிறேன்” என்றான் தீர்க்கன். காமிகன் கஜனின் தோளைத் தட்டி “நீ நல்லூழ் கொண்டவன். நீ வந்த உடனே இப்படி ஒரு வாய்ப்பு அமைகிறது. வழக்கமாக இங்கு காவல் பணி என்று படைக்கலம் தூக்கி வரும் இளைஞர்கள் விழி விரித்து வெறுமையைப் பார்த்து சலித்து எதைப் பார்த்தாலும் எதுவும் சித்தத்தில் பதியாதவர்களாக மாறி அகிபீனாவுக்குப் பழகி நடக்கும் பிணமென்று மாறி இங்கிருந்து செல்வார்கள். உனக்கு சொல்வதற்கு ஒரு நிகழ்வாவது வாழ்க்கையில் எஞ்சுகிறது” என்றான்.

“என்ன நிகழும்?” என்று கஜன் கேட்டான். “கொலை” என்று அவன் சொன்னான். கஜன் அவன் கையை பற்றி ஆர்வத்துடன் “கொலையா?” என்றான். அவன் நகைத்து தீர்க்கனின் தோளில் முட்டி “கறந்தபால்போல வெண்மையாக இருக்கிறானே இவன்?” என்றபின் அவனிடம் “இளையவனே, இங்கு நிகழவிருப்பது ஒன்றே ஒன்றுதான். இங்குள்ள அத்தனை உயிர்களும் அன்றாடம் செய்துகொண்டிருப்பது. அவர்கள் அளவுக்கு உளம் உவந்து உடல் விடுதலைகொண்டு அதைச் செய்ய மனிதரால் இயலாது. நகரங்களில் அறவே இயலாது என்று அறிந்திருக்கிறார்கள். ஆகவே காட்டில் அதை முயலலாமே என்று நினைக்கிறார்கள். ஆனால் நகரங்களில் இருக்கையில் அவர்கள் அகம் காடாக இருக்கிறது. இங்கு காட்டிலிருக்கையில் அவர்கள் அகம் நகரமாக இருக்கும்போலும்” என்றான்.

ஒவ்வொரு நாளும் முழுநிலவை கஜன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். நோக்கி நோக்கியே நிலவை முழுமைப்படுத்திவிடமுடியும் என்பதைப்போல. தீர்க்கனிடம் “இன்னும் எத்தனை நாட்கள்?” என்று கேட்டான். “நிலவை வைத்தே கணக்கிடு” என்று தீர்க்கன் சொன்னான். “நிலவில் இந்தக் காடு எப்படி இருக்குமென்று எண்ணிப்பார்க்க விந்தையாக இருக்கிறது. நிலவில் நாம் நன்கறிந்த முற்றத்து மரம்கூட ஆழமான அறியமுடியாமை ஒன்றை சூடிக்கொள்கிறது. அறியமுடியாமையால் ஆனது இக்காடு…” பின்னர் தனக்குள் என “ஒருவேளை தன்னை இது அப்போது ஒவ்வொரு இதழாக விரித்துக்கொள்ளத் தொடங்கிவிடுமோ?” என்றான். தீர்க்கன் “கனவுகாண முடிந்தால் கரும்பாறையையே ஊடுருவி உள்ளே சென்றுவிடலாம். அதற்குரிய அகவை உனக்கு” என்றான்.

முழுநிலவு நாளன்று அவன் காலையில் விழிப்புணர்ந்ததே உள்ளத்தில் எழுந்த முரசொலியுடன்தான். “ஆம்!” என்று அவன் சொல்லிக்கொண்டான். பாய்ந்து எழுந்து கொட்டகையைவிட்டு வெளியே சென்று முகம் கழுவிக்கொண்டிருந்த சக்ரரிடம் “இன்று முழுநிலவு” என்றான். “ஆம், அதற்கென்ன?” என்றார். “இன்று அரசகுலத்தார் கானாட வருகிறார்கள்” என்றான். “ஆம், நமக்கு சற்று பணி மிகுதி… எவருக்கும் இன்று துயில் இல்லை என்று சொல்லிவிட்டார்கள்” என்றபடி அவர் கொப்பரையுடன் சென்றார். சூனரிடம் “இன்று அரசர் வருவாரா?” என்று அவன் கேட்டான். “அவர் எப்போதும் கள்நிறைந்த காட்டில் வாழ்பவர்” என்ற சூனர். “எவர் வந்தால் நமக்கு என்ன? சவுக்கடி படாமல் ஒழிந்து இந்நாளை கடந்தோம் என்றால் நாளை வழக்கம்போலத்தான்” என்றார்.

எவரும் அவன் உணர்வுகளை பகிர்ந்துகொள்ளவில்லை. ஆண்டுக்கணக்கில் எதுவும் நிகழாமல் சலிப்படைந்திருந்தவர்கள் அது நிகழ்ந்தபோது பதற்றமும் எரிச்சலும் கொண்டார்கள். அதை எவ்வகையிலேனும் கடந்துசெல்ல விழைந்தார்கள். அவர்கள் அந்த செயலின்மைக்கு பழகிவிட்டிருந்தனர். அவர்களின் உடல்கள் இறந்த மரத்தில் முளைத்த காளான்கள்போல வெளுத்திருந்தன. “அந்த ஆணிலி ஏதோ செய்கிறான். அவன் எவருமறியாமல் இரவுகளில் இக்காட்டுக்குள் உலவுகிறான் என்கிறார்கள்” என்றார் தப்தர். “யார்? அவளா?” என்றான் கஜன். “இக்காட்டுக்குள் அவள் ஆணென்றாகிவிடுவதாக சொல்கிறார்கள். அவள் இங்கே அரசநாகத்தின் விரைவுகொண்ட கைகளுடன் நாணலையே அம்புகளாக்கி வேட்டையாடுவதை கண்டிருக்கிறார்கள்.”

தாழ்ந்த குரலில் சூரர் “அது மானுடப்பிறவி அல்ல. ஏதோ கந்தர்வன். அவர்களால் மட்டுமே ஆணென்றும் பெண்ணென்றும் ஆகமுடியும்” என்றார். அனைவரும் அமைதிகொண்டனர். கஜன் “அது ஏன் நம் நகர்புகுந்திருக்கிறது?” என்றான். “நம் இளவரசியை அது கைப்பற்றிவிட்டது. இங்கு இத்தனை காவலுக்குப் பின்னும் இளவரசியை கடித்த நாகம் எப்படி வந்தது? இங்கே காட்டின் ஆழத்திலிருந்து அந்த கந்தர்வன் எப்படி தோன்றினான்?” கஜன் “இளவரசி அவனுக்கு எதற்கு?” என்றான். நாமர் சிரித்து “மூடா, கந்தர்வர்களுக்கு மானுடப்பெண்கள்மேல் காமம் உண்டு. ஒருநாள் பருந்து கோழிக்குஞ்சை என இளவரசியை கவ்விக்கொண்டு அவன் சிறகுவிரிப்பான்...” என்றார்.

அன்று பரண்மேல் ஏறியபோது கஜனின் கால்கள் நடுங்கி வழுக்கின. இருமுறை அவன் சறுக்கி கீழே வந்தான்.

அவனைக் கண்டதும் சலிப்புடன் எழுந்து உடல்வளைத்து கோட்டுவாயிட்ட தீர்க்கன் “முன்னரே வந்துவிட்டாயா? நன்று” என்றபடி வில்லை ஒப்படைத்தான். கஜன் தயங்கியபடி “இன்று பகல் முழுக்க எனக்கு இங்கே காவல்பணி உள்ளது. அந்தியில் என்னை விடுவிப்பார்கள். அந்திக்குப்பின் நான் காட்டுக்குள் செல்ல முடியுமா?” என்று கேட்டான். “காட்டுக்குள் செல்ல உனக்கு அரசக் காவலர்களின் ஒப்புதல்குறி தேவை. அது இல்லாது காட்டில் செல்லும் எவரையும் வெட்டி வீழ்த்துவதற்கு ஆணை உள்ளது” என்றான். கஜன் “நான் கேட்டுப்பார்க்கலாமா?” என்றான்.

“நம் காவலர்கள் எவரையும் வெட்டப்போவதில்லை. அவர்கள் படைக்கலத்தை முதுகு சொறிவதற்கு மட்டுமே நெடுங்காலமாக பயன்படுத்தி வருகிறார்கள். ஆனால் வருபவர்கள் அப்படி அல்ல. இந்த நாட்டில் எவருக்கேனும் இன்னமும் படைவீரர்களுக்குரிய சீற்றமும் இறுக்கமும் உண்டென்றால் அது அரச மெய்க்காவலர்களுக்குத்தான். கீசகருடன் வரும் மெய்க்காவலர்களை எதன்பொருட்டும் அணுகாதே. அவர்கள் ஒவ்வொருவரும் குருதி அளித்து பயிற்றுவிக்கப்பட்ட புலிகளைப்போல” என்றான் தீர்க்கன். கஜன் தலையசைத்து பேசாமல் இருந்தான். “இதற்குள் என்ன நிகழ்ந்தால் உனக்கென்ன? பேசாமல் கொட்டகைக்குச் சென்று மரவுரியை இழுத்து தலைக்குமேல் போர்த்திக்கொண்டு படுத்து துயில். கனவில் இதைவிட அடர்ந்த காடொன்றை காண்பாய்” என்றான் தீர்க்கன். இதழ்கள் வளைய நகைத்து “வெளியே சொல்ல முடியாத அளவுக்கு இனிய நிகழ்வுகள் அங்கு நிகழும்” என்றபின் அகிபீனா சுருட்டிய இலை ஒன்றை பந்தத்தின் கங்கில் பற்றவைத்து புகையை இழுத்தான்.

கஜன் அவனிடமிருந்து நோக்கை விலக்கி காட்டை பார்த்தான். இத்தனை அழகிய காட்டின் மடியில் இந்த அளவுக்கு உளம் கசந்தவர்களாக மானுடர்கள் மாறுவதேன் என்று எண்ணிக்கொண்டான். பின்னர் தோன்றியது, அது சமைத்துக் குவிக்கப்பட்ட அறுசுவை உணவின்முன்பு அமர்ந்து ஒரு துளியேனும் எடுத்து அருந்துவதற்கு ஒப்புதலில்லாமல் வாழ்வதன் வஞ்சம் என. ஒருபோதும் மீட்பில்லாமல் சங்கிலியால் பிணைக்கப்பட்ட ஒருவன் வெறியனோ பேதையோதான் ஆகமுடியும்.

கஜன் அப்போதே முடிவெடுத்துவிட்டான், காட்டிற்குள் சென்று பார்ப்பது என. அடுத்த கணம் தலை போகும் வாழ்க்கை என்று தீர்க்கன் அவனிடம் சொன்ன சொல் எண்ணத்தில் எழுந்தது. அதை இந்தக் காட்டிலேயே நான் அடையப்போகிறேன். அவ்வெண்ணம் வந்ததுமே அவன் முகம் மலர்ந்துவிட்டது.

அதை பார்த்த தீர்க்கன் “அழகிய இளம்பெண்ணொருத்தியை நான் இப்போது பார்க்கிறேன்” என்றான். கஜன் “எங்கே?” என்றான். “உன் உள்ளத்தில் நீருக்கடியில் கிடக்கும் பொன்நாணயம்போல தெரிகிறாள்” என்றான். கஜன் முகத்தை விலக்கிக்கொண்டு சிரிப்பை அடக்கினான். “அது நன்று. உண்மையில் பெண்களை அடைவதைவிட இவ்வாறு எண்ணிஎண்ணி மகிழ்வது இனிது. என்னிடம் பிரம்மன் கேட்டிருந்தால் ஊனுடலுடன் பெண்ணை படைத்திருக்க வேண்டாம். ஆண்களுக்கு எழும் வெறும் கனவாகவே அவர்களை விட்டிருக்கலாமென்று சொல்லியிருப்பேன். இன்னும் பல நூறுமடங்கு காவியங்களும் பாடல்களும் எழுதப்பட்டிருக்கும்” என்றபின் தீர்க்கன் சரடில் தொற்றி இறங்கினான்.

✿தொலைவில் முரசு ஒலியும் கொம்பின் ஒலியும் எழுவதை கஜன் கேட்டான். வில்லை கையிலெடுத்துக்கொண்டு மூங்கில் விளிம்பைப் பற்றியபடி நோக்கினான். முதல் காவல்மாடத்திலிருந்த காவலன் தன்னுடைய கொம்பை எடுத்து ஊதி இளவரசர் உத்தரர் வருவதை அறிவித்தான். அவன் திரும்பி மேற்கு வானை பார்த்தான். வான் வளைவில் நீலத்தாலம்போல விளிம்புகளில் வெண்சுடர் அதிர சூரியன் தெரிந்தது. அந்தியிறங்க இன்னும் நெடுநேரம் ஆகும். அதற்குள்ளாகவே இளவரசர் வந்துவிட்டாரா அல்லது அவரது வருகையை அறிவிக்கிறார்களா? ஆனால் தொலைவில் அவன் உத்தரனின் கொடியை பார்த்தான். முதற்கணம் அங்கிருந்து எங்காவது ஒளிந்துகொள்ள வேண்டுமென்று தோன்றியது. பின்னர் நேருக்கு நேர் நின்று முகம் காட்டினால்கூட உத்தரன் தன்னை அடையாளம் கண்டுகொள்ளப் போவதில்லை என்று எண்ணிக்கொண்டான்.

உத்தரனின் கொடியுடன் குதிரை வீரனொருவன் முன்னால் வர தொடர்ந்து கொம்பூதியும் முரசறிவிப்பாளனும் இரு புரவிகளில் வந்தனர். பெரிய கரிய புரவியொன்றில் உத்தரன் அமர்ந்து வந்தான். முதலில் கஜனால் அதை விழி ஏற்க முடியவில்லை. உத்தரனின் கால்களை கீழே புரவியுடன் சேர்த்துக் கட்டியிருக்கிறார்களா என்றுதான் அவன் பார்த்தான். உத்தரனின் கால்கள் புரவி பயின்றவனின் கால்கள்போல அதன் விலாவை கவ்வியிருக்கவில்லை. வலது கால் கலைந்த காக்கைச்சிறகில் ஒற்றைஇறகுபோல பிசிறி நீட்டி அவ்வழியிலிருந்த இலைகளிலும் புதர்களின் கிளைநீட்சிகளிலும் முட்டிக்கொண்டு வந்தது. கடிவாளத்தையும் மணிக்கட்டில் இருமுறை சுழற்றி வைத்திருந்தான். புரவியின் அசைவுக்கும் அவன் உடல் அசைவுக்கும் தொடர்பே

இருக்கவில்லை. ஆனால் அந்தப் பெரும்புரவி அவனை ஆய்ச்சியர் தலையில் பாற்குடம் என மிக இயல்பாக ஏந்திக்கொண்டு வந்தது.

அதற்குப் பின்னால் ஒரு கபிலநிறப் புரவியில் தோள்வரை குழல் சரிந்த கரிய உடல்கொண்ட ஒருவன் வந்தான். தொலைவிலேயே அவன் சிற்பங்களுக்குரிய, நன்கு செதுக்கி அமைக்கப்பட்ட முகம் கொண்டிருப்பதை கஜன் கண்டான். அவன் முகத்திலிருந்தும் தோள்களிலிருந்தும் விழிகளை விலக்க முடியவில்லை. அணுக அணுக மேலும் அழகுகொண்டு திருமகள் ஆலயங்களில் முகமண்டபத்தில் செதுக்கி வைக்கப்பட்டிருக்கும் உருவெனத் தோன்றினான். அவர்களுக்குப் பின்னால் மேலும் எட்டு புரவிகளில் காவல் வீரர்கள் வந்தனர். அவர்கள் நாண் இழுத்து அம்பு தொடுக்கப்பட்ட விற்களையும் நீண்ட வேல்களையும் ஏந்தியிருந்தனர். தொடர்ந்து ஏவலர்கள் எளிய புரவிகளில் மூட்டைகளும் பொதிகளுமாக வந்தனர்.

உத்தரன் காட்டின் முகப்பு முற்றத்தை அடைந்ததும் கடிவாளத்தைப் பிடித்து இழுத்து உரத்த குரலில் “ஹேய் ஹேய்” என்று கூச்சலிட்டு அதை நிறுத்தினான். தவறாக இழுக்கப்பட்டமையால் தலைவளைத்து மெல்லச் சுழன்று இருமுறை பொய்யாக காலெடுத்து வைத்து உடலை ஊசலாட்டியபின் புரவி நின்றது. இருமுறை தும்மி பிடரிகுலைத்தபின் தலைதூக்கி விழிகளை உருட்டி அச்சூழலை நோக்கியது. பின்னால் வந்த அழகன் குதித்து ஓடி வந்து கரிய பெரும்புரவியின் பின்பக்கத்தை மெல்லத் தட்டி ஏதோ சொன்னான். புரவி இரு கால்களையும் சற்று அகற்றி உடலை தாழ்த்தியது. காலை தூக்கிச் சுழற்றி இறங்கிய உத்தரன்

நிலையழிந்து விழப்போனான். அவனை அவ்வழகன் பற்றிக்கொண்டான்.

நெடுந்தொலைவு புரவியில் அமர்ந்து வந்தமையால் இரு கால்களும் உளைச்சலெடுக்க உத்தரன் அவற்றை நன்கு அகற்றி வைத்து தவளை எழுந்து நடப்பதுபோல நடந்து அருகிலிருந்த சாலமரத்தின் வேர்ப்புடைப்பை நோக்கி சென்றான். இரு புரவிகளையும் அவ்வழகன் கொண்டுசென்று வேரில் கட்டி அவற்றின் கழுத்தையும் காதுகளையும் கைகளால் நீவி சீராட்டினான். அவை திரும்பி அவனை தங்கள் வாழைமடல்போன்ற நாக்குகளால் நக்கின. ஏவலர் புரவிகளிலிருந்து இறங்கி ஓடிச்சென்று உத்தரன் அருகே பணிந்து நிற்க அவன் கையசைத்து ஆணைகளை இடத் தொடங்கினான்.

மரப்படிகள் ஒலிக்க மேலே ஏறி வந்த தீர்க்கன் “அதற்குள் வந்துவிட்டார்” என்றான். “ஆம், இன்னும் மாலையொளியே மங்கவில்லை” என்று கஜன் சொன்னான். “இங்கே இப்போது என்ன செய்யப்போகிறார்?” என்றான் தீர்க்கன். கஜன் சிரித்து “அந்தியில் கிளம்பினால் அங்காடிகள் வழியாக வரமுடியாது. அந்தக் கரிய புரவியில் அவர் ஏறிச் செல்வதை நகர் மக்கள் அனைவரும் பார்க்கவேண்டும் என்பதற்காக உச்சிப்பொழுதிலேயே கிளம்பியிருப்பார். பெரும்பாலும் நகரத்தின் அனைத்து தெருக்கள் வழியாகவும் சுற்றித்தான் இங்கு வந்திருப்பார்” என்றான். தீர்க்கன் புன்னகைத்து “அவர் அமர்ந்திருப்பதைப் பார்த்தாலே தெரிகிறது” என்றான்.

“இன்று நகர் முழுக்க இதைப் பற்றித்தான் பேசிச் சிரித்துக்கொண்டிருப்பார்கள்” என்றான் கஜன். தீர்க்கன் அவன் வில்லை வாங்கிக்கொண்டான். “நான் கிளம்பலாமா?” என்று

கஜன் கேட்டான். “ஆம், கிளம்பு” என்றபின் “அங்கு சென்று அரசகுலத்தோர் வருவதை வேடிக்கை பார்க்கவேண்டியதில்லை. கொட்டகைக்குள் சென்று உணவருந்திவிட்டு உறங்கு. எவரும் பார்க்கமாட்டார்கள். உன் மூத்தவனாக இதை சொல்கிறேன்” என்றான். கஜன் சரி என்று தலையசைத்துவிட்டு முடிச்சுகளில் கால்வைத்து கயிற்றினூடாக கீழிறங்கி தரையை அடைந்தான். தரையில் ஒரு மெல்லிய ஆட்டம் இருப்பதை உணர்ந்ததும் உடல் தரையை அறிந்து காவல்மாடத்தின் ஆட்டத்தை உதறி நிலைகொண்டது.

காட்டின் காவல்முற்றத்தை அடைந்தபோது அங்கு பணியாளர்கள் பொதிகளையும் மூங்கில்பெட்டிகளையும் இறக்கி வைத்துக்கொண்டிருந்தார்கள். அவன் நேராக உத்தரன் அருகே சென்று வணங்கி “நிஷத இளவரசருக்கு அடியவனின் வணக்கம்” என்றான். உத்தரன் புருவம் சுருக்கி அவனைப் பார்த்து “இந்தக் காட்டிற்குள் யானைகள் உண்டா?” என்றான். கஜன் “இல்லை. இங்கு கொலைவிலங்குகள் எதுவும் இல்லை” என்றான். இதழ்களை வளைத்த உத்தரன் “கொலைவிலங்கில்லாத காடு காடல்ல, வெறும் சோலை. காடு ஒரு கண்ணென்றால் யானை அதன் கருவிழி. புரிகிறதா?” என்றான்.

கஜன் “ஒரு காட்டிற்கு ஒரு யானை போதுமென்கிறீர்களா?” என்றான். உத்தரன் கையை ஓங்கி “எதிர் சொல்லெடுக்கிறாயா? கவிச்சொல்லை புரிந்துகொள்ளும் அறிவில்லாத மூடா, விலகிச்செல்” என்றான். அதற்குள் அப்பால் நின்ற அந்தக் கரிய அழகன் அவனை கைகாட்டி அழைத்து “புரவிக்கான புல் இங்கு எங்கே இருக்கிறது?” என்றான். “இங்கு புல்லை வெட்டி

வைக்கும் வழக்கமில்லை. இந்தக் காடு முழுக்க புல்தான். புரவியை அவிழ்த்துவிட்டால் அது மேயுமல்லவா?” என்றான். “இரவில் அறியா நிலத்தில் புரவிகள் புல் மேய்வது அரிது” என்றான் அக்கரியவன். “நான் புல் அரிந்துகொண்டு வந்து போடுகிறேன்” என்று கஜன் சொன்னான். “நான் பிறரிடம் சொல்லிக்கொள்கிறேன், நீர் என்னுடன் இரும்” என்றான் கரியவன். “என் பெயர் கிரந்திகன். புரவிச்சூதன்.” கஜன் தன்னை அறிமுகம் செய்துகொண்டான்.

“இந்தக் காட்டில் எத்தனை காலமாக பணியாற்றுகிறீர்?” என்று கிரந்திகன் கேட்டான். “நானா?” என்றபின் “நெடுங்காலமாக” என்றான். “உம்மைப் பார்த்தால் நெடுங்காலமாக இப்புவியில் வாழ்பவர் போலவே தோன்றவில்லையே?” என்று கிரந்திகன் சொன்னான். பின்னாலிருந்த புரவியிலிருந்து இறங்கி அருகே வந்த முக்தன் “இங்கு வந்துவிட்டாயா? தீர்க்கன் எங்கிருக்கிறான்?” என்றான். முகம் மாறி சிறிய பதற்றத்துடன் “அவர் மேலே, காவல்மாடத்தில்” என்று திக்கினான் கஜன். “சென்ற வாரம்வரை இளவரசரிடம் ஊழியனாக இருந்தான். அங்கு இருந்து பித்துப்பிடிக்கிறது என்று சொன்னதனால் இவனை இங்கு பணிக்கு அனுப்பினேன்” என்றான். “நெடுங்காலம் என்றால் ஒரு வாரம் என்று பொருளா?” என்றான் கிரந்திகன். முக்தன் சிரித்து “இங்கமர்ந்திருந்தால் ஒவ்வொரு நாளும் ஒரு ஆண்டுக்கு நிகர்” என்றான்.

# நீர்க்கோலம் - 47

**46. கான்நுழைவு**

இரண்டு ஒற்றைக்காளை வண்டிகளிலாக நூறு பேருக்கு சமைப்பதற்குரிய பொருட்கள் ஏற்றப்பட்டிருந்தன. அடுமனைக் கருவூலத்திலிருந்து அவற்றை ஏவலர் சிறிய இருசகட வண்டிகளில் கொண்டுவந்து முற்றத்தில் வைக்க சம்பவனும் அடுமனையாளர் நால்வரும் அவற்றை எடுத்து அடுக்கினர். அரிசியும் வெல்லமும் கிழங்குகளும் முதலிலும் காய்கறிகள் இறுதியிலுமாக அடுக்கப்பட்டன. நெய்க்குடங்களை வைப்பதற்கு முன் அவற்றின் மூடி தேன்மெழுகால் இறுக பொருத்தப்பட்டிருக்கிறதா என்று பார்த்தான். தேன் நிறைந்த குடுவைகளையும் யவன மது நிறைக்கப்பட்ட பீதர்நாட்டு வெண்களிமண் கலங்களையும் கொண்டு வந்து வண்டிகளில் ஏற்றிக்கொண்டிருந்தான் அஸ்வகன். அவர்கள் உரக்கக் கூவி ஆணையிட்டு சிரித்து அத்தருணத்தை கொண்டாடிக்கொண்டிருந்தார்கள். சம்பவன் அடுமனைக்குள் வாழ்பவர்களுக்கு எந்தப் பயணமும் கேளிக்கைதான் என நினைத்துக்கொண்டான்.

மதுக்கலங்கள் இறுக மூடப்பட்டிருந்தாலும்கூட ஒவ்வொன்றிலிருந்தும் மெல்லிய மணம் கமழ்ந்துகொண்டிருந்தது. அந்த மணங்கள் ஒன்றுடன் ஒன்று கலந்து இனிய புதிய மணம் ஒன்றை உருவாக்கின. அவை அத்தனை மென்மையாக இருப்பதனால்தான் இயல்பாக ஒன்றுகலக்க முடிகிறது என்று எண்ணிக்கொண்டான். குறைவாக இருப்பதன் பெயர் மணம். மிகையே கெடுமணம் என்ற வரி நினைவிலெழுந்தது. யவன மது நிறைக்கப்பட்டு தேன்மெழுகாலும் அரக்காலும் நன்கு மூடப்பட்ட களிமண் கலத்திற்குள் இருந்து எப்படி அந்த மணம் எழுகிறதென்பதை தன் மூக்கை வைத்து பார்த்தான். மூக்கை அதன் மேல் வைக்கும்போது அந்த மணமே ஒரு உளமயக்குதானோ என்று

தோன்றியது. அதில் யவன மது இருப்பது தெரியாவிட்டால் அந்த மணம் சித்தத்திற்கு தெரியாதோ? ஆனால் அப்படி அல்ல என்று மீண்டும் அவன் மூக்கு சொன்னது. மிகத் தொலைவில் கேட்கும் குரல்போல மிக மெல்ல வந்து காற்றில் தொட்டு மறையும் குழலிசைபோல அந்த மணம்.

அவன் முகர்ந்து பார்ப்பதைக் கண்ட விகிர்தர் புன்னகையுடன் “மது அருந்தியவர்களைப்போலவே கலங்களாலும் அதன் மணத்தை மறைக்கமுடியாது” என்றார். “உள்ளிருக்கும் எந்த மணமும் வெளிவந்தே தீரும். மணத்திற்கு பல்லாயிரம் வாயில்கள்” என்றார் சுந்தரர். அவன் யவன மதுவை ஒரே ஒருமுறை ஒரு சிமிழ் அளவுக்கு நாவில் விட்டு சுவைத்திருந்தான். பெருவணிகன் ஒருவன் சுவைத்து விட்டுச்சென்ற கோப்பையில் எஞ்சியது அது. அதற்குமுன் பலமுறை கலிங்க மதுவை அருந்தியதுண்டு. அது வாள் என எண்ணங்களுக்குள் பாய்ந்து பலநூறு துண்டுகளென அதை வெட்டிச் சிதறடித்தது. அலையில் நீர்ப்பாவை என சித்தம் நெளிந்தது.

ஆனால் யவன மது, மது கலக்கப்பட்ட பழச்சாறென்றே தோன்றியது. நாவில் அது கடிக்கவில்லை. தொண்டையை கரிக்கவும் இல்லை. உடலுக்குள் சென்றதும் நீர்த்துளி விழுந்த கொதிக்கும் எண்ணைபோல உடல் உலுக்கி எதிர்வினையாற்றவில்லை. அந்த மணம் தன் வாயில் எஞ்சியிருப்பதற்காக பிறிதெதையும் உண்ணாமல் மூச்சை மூக்கு வழியாக வெளிவிட்டுக்கொண்டிருந்தான். தனக்குள் என்ன நிகழ்கிறதென்று பார்த்தான். எதுவுமே நிகழவில்லை. நோக்கிச் சலித்தபின் சூழ்ந்திருந்த பிற அடுமனையாளர்களையும் மிக அப்பால் கேட்டுக்கொண்டிருந்த

விறலியின் குரலையும் நோக்கி சித்தத்தை திருப்பினான். விறலி தேவயானியின் கதையை சொல்லிக்கொண்டிருந்தாள். கசன் தேவயானியை பார்க்கும்பொருட்டு கையில் தாமரை மலருடன் சுக்ரரின் குடிலுக்குள் நுழையும் காட்சி.

பாய்ந்து வந்த புலிகளை ஒரு கையால் அடித்து வீழ்த்தி மறுகையில் இருந்த தாமரை இதழ்குலையாமல் உள்ளே சென்றான். இதழ்குலையாத தாமரை என்று அவள் பாடினாள். ‘அந்தத் தாமரை இதழ்குலைந்ததே இல்லை. இதழ்குலையாத தாமரை கொண்டவர்களுக்கு துயரமில்லை. துயரற்றவர்களுக்கு காதலும் இல்லை.’ நெடுநேரம் அவள் பாடிக்கொண்டிருப்பதாகத் தோன்றியது. உடலில் மெல்லிய அலுப்பும் தசைகளில் தளர்வும் எழுந்தது. அவள் மிகமிக இனிமையாக பாடிக்கொண்டே இருந்தாள். பல நாட்களாகிவிட்டன. மரங்கள் வளர்ந்து இலைதழைத்தன. வெளியே மழை பெய்து வெயில் எழுந்து இருண்டு மீண்டும் புலர்ந்தது. அவள் முகம் மிக அருகே வந்துவிட்டதாகத் தோன்றியது. பிறகு அது அந்த மதுமயக்கால்தான் என்று உணர்ந்து, அவ்வுணர்வை அடைந்ததுமே தன்னை விடுவித்துக்கொண்டான்.

மீண்டும் அந்த இனிய உணர்வை அடையவேண்டுமென முயன்றபோது சித்தம் முற்றிலும் விழித்துக்கொண்டது. மது குருதியில் சிறிய குமிழிகளாக மிதந்து அலைந்து ஒவ்வொன்றாக வெடித்து மெல்லிய வெம்மையுடன் கலந்து மறைந்தது. பின்னர் யவன மதுவின் மெல்லிய மணம் அவனுக்கு இதழ்நலுங்காத தாமரை என்ற சொல்லாகவே நினைவில் நின்றது. அது அலைபாயும் துலாத்தட்டுகளுக்கு நடுவே அசையாமல் நின்றிருக்கும் முள் போலும்.

வலவன் இரு கைகளிலும் இரு பெரிய மதுக்கலங்களை தூக்கிக்கொண்டு வந்து வண்டியின் பின்பக்கம் வைத்துத் தள்ளி உள்ளே செலுத்தியபின் அவனை நோக்கி "முதல் வண்டியில் நீ ஏறிக்கொள்" என்றான். மதுக்கலங்களின் எடையை அறிந்திருந்த சம்பவனுக்கு அந்தக் காட்சியே தசைகளை இழுபட்டுத் தெறிக்கச் செய்தது. "ஏறு" என்றான் வலவன். விழித்துக்கொண்டு "நானா?" என்று சம்பவன் கேட்டான். "ஆம், அங்கு இன்று சமைக்கவேண்டுமல்லவா?" என்றான். சம்பவன் "என்னை தாங்கள் சரியாக நினைவுகூரவில்லையென்று நினைக்கிறேன்" என்றான். "மூடா, நீ கலிங்க நாட்டுச் சம்பவன்... அதற்குமேல் உன்னிடம் நினைவுகூர என்ன உள்ளது?" என்றான் வலவன்.

மேலும் தயங்கி "ஆசிரியரே, நான் அடுமனையாளன். ஆனால் என்னை கலங்களைக் கழுவும்படி ஆணையிட்டீர்களல்லவா?" என்றான். வலவன் முகம் மலர்ந்தது. "ஆம், எந்த அடுமனைக்குச் சென்றாலும் முதலில் அங்குள்ள கலங்களைக் கழுவுவதே அடுதிறவோன் செய்யவேண்டியது. அப்போதுதான் அந்த அடுமனையின் இயங்குமுறையென்ன என்று உனக்குத் தெரியும். சொல், இங்கு மிகுதியும் எந்தக் கலத்தில் உணவு சமைக்கப்படுகிறது?" சம்பவன் "செம்புக் கலங்கள்" என்றான். "அரிதாக பித்தளைக் கலங்கள். சிறிய சமையல்களுக்கு மண் கலங்கள். வெம்மைநின்று வற்றியாறவேண்டிய உணவுகளுக்கு கல்லுருளிகள். இரும்புக் கலங்களும் ஓரிரண்டு உள்ளன."

வலவன் எடைமிக்க கலங்களை எடுத்து உள்ளே வைத்தபடி அவனை நோக்காமல் "எந்தக் கலம் அதிகமாக அடிப்பற்று கொண்டுள்ளது? எது கருக்குகிறது?" என்றான். மலர்ந்த முகத்துடன் அருகே சென்று ஒரு குடுவையை எடுத்துவைத்த

சம்பவன் “ஆம், நான் அவற்றை உற்று நோக்கினேன். இங்கே அடிப்பற்று மிகுதி. இரும்புக் கலங்களின் வெளிவட்டத்தில் எப்போதும் உணவு கருகியிருக்கிறது. செம்புக்கலங்களின் அடிவட்டத்தில் பற்று படிந்துள்ளது…” என்று சொல்லத்தொடங்க வலவன் குறுக்கிட்டு “இந்த அறிதல் உனக்குள் இருந்தால் மட்டுமே அடுதொழில் கைவரும்” என்றான். “ஆம்” என்றான் சம்பவன். “ஏன் இங்கே அடிப்பற்று மிகுதி?” என்றான் வலவன். “இங்கே உள்ள விறகுகள் எளிதில் எரியும் தைல மரங்களுடையவை. அனல்நிற்கும் செறிமர விறகுகள் தேவை. அல்லது நல்ல கரி” என்றான் சம்பவன்.

“நன்று!” என புன்னகைத்த வலவன் கயிறு சுற்றப்பட்ட யவன மதுப்புட்டிகளை பெட்டியில் அடுக்கி “இவை கீசகருக்கானவை. ஈரப்பஞ்சால் பொதியப்பட்டுள்ளன. சென்றதுமே குளிர்நீரோடைக்குள் இறக்கி வைக்கவேண்டும்” என்றான். சம்பவன் “எனது சமையல் தங்களுக்கு உகக்கவில்லையோ என்று தோன்றியது, ஆசிரியரே” என்றான். தன் பெரிய கையை அவன் தோளில் வைத்து இழுத்து மார்புடன் அணைத்து வலவன் சொன்னான் “அடுதொழில் என்பது ஒன்றிற்கொன்று மாறுபட்ட சுவைகள்கொண்ட பொருட்களை உகந்த முறையில் கலப்பதுதான். உப்பையும் புளியையும் காரத்தையும் கலக்கத் தெரிவது மொழியின் இலக்கணத்தை கற்றுக்கொள்வதுபோல. அதன்பின் சிறிய நுட்பங்கள் மட்டுமே உள்ளன. ஆனால் அவை முடிவிலாமல் கற்கத் தகுந்தவை. உன் கைக்கலவை நன்று.”

சம்பவன் முகம் மலர்ந்தான். “நான் அங்கிருந்தோரின் சுவையறிதலைத்தான் பார்த்தேன். என் நாவைவிட உண்டு நிறைந்த அவர்களின் நாக்கு கூறுவதே மேலும் சரியானது” என்றான் வலவன். “ஆகவேதான் புளிக்காய்ச்சல்

செய்யச்சொன்னேன். நிறைந்த வயிறுகொண்டவர்களின் நாக்குக்கு வேறெந்த சுவையும் உறைக்காது.” சம்பவன் கண்கலங்கிவிட்டான். “அவ்வளவுதான் என நினைக்கிறேன். ஒருமுறை அனைத்தையும் பார்த்துவிடு” என வலவன் உள்ளே சென்றான். சம்பவன் மறுபக்கம் நோக்கித் திரும்பி கண்களை விரல்களால் அழுத்தித் துடைத்தான்.

சுபாஷிணி கால்சிலம்புகள் ஒலிக்க இடைநாழியில் ஓடிவந்து பாவாடைமுனையை பிடித்தபடி படிகளில் துள்ளி இறங்கினாள். அப்போது தன்னை எவரும் பார்த்துவிடக்கூடாதென்ற எச்சரிக்கையும் பல்லாயிரம்பேர் பார்க்கவேண்டும் என்ற விழைவும் அவளிடமிருந்தது. சிலம்பு ஒலிக்க ஆடை சரசரக்க அப்படி இறங்கவேண்டும் என்பது அவள் இளமைமுதலே எண்ணிவந்த விழைவு. இறுதிப்படிக்கு சென்றபின் மீண்டும் மேலே வந்தாள். மேலாடையை சீரமைத்தபின் மீண்டும் உடலை நெளித்து தோள்களை அசைத்து நடந்துவந்து வேறு ஒருமுறையில் ஆடைநுனி பற்றி படிகளில் இறங்கினாள். அவளே மகிழ்ந்து சிரித்துக்கொண்டு மீண்டும் படி ஏறலாமா என எண்ணியபோது பிரீதையை கண்டாள். அவள் அப்பால் கண்களைச் சுருக்கி நோக்கியபடி நின்றிருந்தாள்.

சுபாஷிணி தலைகுனிந்து நின்றபின் திரும்பிவிடலாமா என மேலே பார்த்தாள். பிரீதை “என்ன செய்கிறாய்?” என்றாள். அப்போது அவளை சிறுக்க வைக்கும் வினா அதுவே என அவள் நன்கறிந்திருந்தாள். ஆனால் அந்த வினா அவளை பொருந்தாத எவரோ தொட்டதுபோல சினந்து சீறச்செய்தது. பிரீதையின் விழிகளை நோக்கியதுமே அவளை சிறுக்க வைப்பதென்ன என்று தெரிந்தது. “தேவி என்னிடம் அவர்களுக்குரிய பொருட்கள் எல்லாம் எடுத்து

வைக்கப்பட்டுவிட்டனவா என்று பார்த்துவரச் சொன்னார்” என்றாள். பிரீதையின் விழிகளில் சினம் வந்து மறைந்தது. “இளவரசியா? அவர்கள் இங்கிருந்தா கிளம்புகிறார்கள்?” என்றாள்.

அந்த நச்சுமுள்ளை உணர்ந்தாலும் அதை அறியாதவள்போல “இல்லை, சைரந்திரி தேவி” என்றாள் சுபாஷிணி. “பேரரசியுடன் அவர்கள் பல்லக்கில் செல்லவிருக்கிறார்கள் அல்லவா? அனைத்தும் உடனிருக்கவேண்டுமே?” பிரீதையின் விழிகளில் மீண்டும் சினம் வந்து அணைந்தது. விராடபுரியின் வரலாற்றில் பேரரசியுடன் எவரும் பல்லக்கில் ஏறியதில்லை. சேடியரைச் சுமக்க சூதர்குலத்து போகிகள் ஒப்புக்கொண்டதில்லை. அவளுடைய உள்ளம் தயங்குவதை உணர்ந்ததுமே மேலும் முன்னேறி “தேவியும் இன்று அருமணி நகைகளும் பீதர்நாட்டுப் பட்டாடைகளும் அணிந்திருக்கிறார்கள். ஆகவே அவர்கள் பல்லக்கில் ஏறுவதுவரை நானும் ஆடைபற்றி பின்செல்லவேண்டும்…” என்றாள்.

“சேடிக்கு ஒரு சேடி. நன்று” என்று தனக்குள் என முனகிக்கொண்ட பிரீதை “சென்று பார்! எல்லாவற்றையும் எடுத்து வைத்துவிட்டேன்” என்றாள். “எனக்கென்ன தெரியும்…? வந்து காட்டுங்கள்” என்றபின் அவளை நோக்காமல் பாவாடையை சற்றே தூக்கிப்பிடித்தபடி தலைதூக்கி சுபாஷிணி முன்னால் சென்றாள். இடையை அசைத்தபோது அது ஓரிரு முறைக்குப்பின் மறந்துபோய்விட இயல்பாக தாவிச்சென்றாள். தன் இடை இன்னும் சற்று பெரிதாக இருந்திருக்கலாமோ என எண்ணிக்கொண்டாள். பிரீதை அவளுக்குப் பின்னால் வருவதை காலடியோசையாக கேட்கமுடிந்தது.

அவளருகே வந்த பிரீதை “வெள்ளிச் சிலம்புகளை சேடியர் அணிய இங்கே நெறி இல்லை” என்றாள். “பட்டுப்பாவாடை

அணிய மட்டும் ஒப்புதல் உண்டோ?” என்றாள் சுபாஷிணி. பிரீதை வாயை அழுத்திக்கொண்டாள். “இதோ, தோடு அணிந்துள்ளேன். மணிமாலை, இடையில் சரமேகலை. இதெல்லாம் சேடியர் அணியலாமா?” பிரீதை தலையை திருப்பிக்கொள்ள “எனக்கு இதை அளித்தவர் தேவி... நீங்கள் அவர்களிடமே கேட்கலாம்” என்றாள் சுபாஷிணி. பிரீதை கடுகடுப்புடன் “பார், அரசிக்குரிய அனைத்தும் சித்தமாக உள்ளன. செல்லும் வழியில் அருந்துவதற்குரிய இன்னீர், பழங்கள். ஆடைகள் அந்தப் பிரம்புக்கூடையில் உள்ளன... கலங்கள் அனைத்தும் தொடர்ந்துவரும் வண்டிகளில் ஏற்றப்பட்டுள்ளன...” என்றாள். சுபாஷிணி “ஒவ்வொன்றாக சொல்லுங்கள், நான் சரிபார்க்கிறேன்” என்றாள்.

ஒன்றுக்கு இருமுறையாக அவள் பொருட்களை சரிபார்த்தாள். “நான் செல்லலாமா? எனக்கு அங்கே பணிகள் மிகுதி” என்றாள் பிரீதை. புன்னகையுடன் முகத்தை அவளுக்குக் காட்டாமல் நின்றிருந்த சுபாஷிணி வாயை இறுக்கியபடி திரும்பி “தேவி தன் அறையிலிருந்து அரசியின் அகத்தளத்திற்கு சென்றுவிட்டார்கள். அங்கிருந்து அவர்கள் இருவரும் வருவார்கள். அவர்கள் வந்தபின் நீங்கள் செல்லலாம். ஏதேனும் கேட்டாலும் கேட்கக்கூடும் அல்லவா?” என்றாள். பிரீதை தலையசைத்தபின் நோக்கை விலக்கிக்கொண்டாள்.

உள்ளிருந்து அரசியின் அகம்படிச் சேடியர் வெளியே வந்தனர். அவர்கள் கொண்டுசெல்லவேண்டிய கூடைகளையும் தோல்பொதிகளையும் கையில் எடுத்துக்கொண்டு ஓரமாக நிரைவகுத்து நின்றனர். ஒருவருக்கொருவர் மெல்லிய குரலில் பேசிக்கொண்டும் அவ்வப்போது ஓசையெழாது சிரித்துக்கொண்டும் இருந்தனர். வண்ண ஆடைகளும்

பொன்னணிகளும் அணிந்து பெரிய வலம்சரிவுக் கொண்டையில் மலர்ச்சுருள் சூடியிருந்தனர். அவர்களில் பலர் தன்னை நோக்குவதை விழியசைவால் உணர்ந்த சுபாஷிணி கொண்டையை சீரமைத்து தலையைத் தூக்கி நின்றாள். ஆனால் சற்றுநேரத்திலேயே இடை வலித்தது. எங்காவது சாய்ந்து ஒசிந்து நின்றுதான் தனக்குப் பழக்கம் என அவள் எண்ணிக்கொண்டாள்.

அரண்மனைக்குள் கொம்பு முழங்கியது. உடன் சங்கோசையும் மணிமுழக்கமும் கலந்தன. அணிச்சேடியர் உடலசைந்து ஒழுங்கமைந்தனர். அப்பால் விலகி உடல்சேர்ந்து நின்றிருந்த பல்லக்குத்தூக்கிகள் வந்து இரு நிரைகளாக நின்றனர். அவர்களை அப்போதுதான் அவள் பார்த்தாள். வெளியே செல்லும் பாதையில் காவலர்தலைவன் உரத்த குரலில் ஆணை முழக்க காவல்வீரர்கள் வலக்கையில் வேல்களுடனும் விற்களுடனும் தங்கள் புரவிகளின் கடிவாளங்களை இடக்கையால் பற்றியபடி சீரமைந்தனர். அந்த முற்றமே கல்விழுந்த குளமென அலைகொள்வதை அவள் வியப்புடன் நோக்கினாள். அங்கு வந்தபின் பெண்களை அன்றி எதையுமே தான் பார்க்கவில்லை என்பதை அதன்பின் நினைவுகொண்டாள்.

கேகயத்தின் எருதுக்கொடியுடன் இரும்புக்கவசம் அணிந்த காவல்வீரன் குறடுகள் மரத்தரையில் ஒலியெழுப்ப சீர்நடையிட்டு வந்தான். தொடர்ந்து சூதர்கள் கொம்புகளும் முழவுகளும் மணியும் சங்கும் முழக்கியபடி நடந்து வந்தார்கள். வாழ்த்தொலிகளும் குரவையொலிகளும் எழுந்தன. அரசியின் சேடியர் மூவர் மங்கலத் தாலங்களுடன் வருவதைக் கண்டதும் சுபாஷிணி ஓடிச்சென்று வாயிலருகே நின்றாள். அரசி வருவது தெரிந்தது. அவள் கவலைகொண்டு எதையோ

பேசிவந்து சற்றுமுன் நிறுத்திக்கொண்டவள்போலத் தோன்றினாள். வாயைச் சூழ்ந்து சுருக்கங்களும் கோடுகளும் இருந்தன. கண்களுக்குக் கீழே கருகிய மென்தசை வளையங்களாக இழுபட்டிருந்தது. காதோரத்திலும் முன்நெற்றியிலும் முடி நரைத்திருக்க கன்னத்தில் மென்மயிர்ப்பரவல் பொன்னிறமாகத் தெரிந்தது. முதிய பெண்களுக்கு ஏன் உதடுகள் அப்படி சற்று தொங்குகின்றன என சுபாஷிணி எண்ணிக்கொண்டாள்.

அரசிக்குப் பின்னால் இடையில் நீண்ட உடைவாளுடன் சைரந்திரி வந்தாள். அவள் விழிகள் சுபாஷிணியை வந்து தொட்டு என் பின்னால் வா என ஆணையிட்டன. ஆம் என விழியுணர்த்திய சுபாஷிணி அவர்கள் தன்னை கடந்துசென்றபோது வணங்கி நின்று பின்னர் சைரந்திரியின் பின்னால் சென்றாள். அவள் நீளாடை நெகிழ்ந்து கிடக்க அதைப் பற்றி தூக்கிக்கொண்டாள். அவர்கள் முற்றத்திற்குச் சென்றதும் காவலர்தலைவன் நீள்நடையிட்டு அருகணைந்து உருவிய வாளைத் தாழ்த்தி அரசியை வணங்கினான். பல்லக்குதூக்கிகளை நடத்தும் முதியவராகிய நிலைச்செயலர் வணங்கி “கேகயத்து மாதரசிக்கு வணக்கம். தங்கள் பல்லக்கு காத்திருக்கின்றது” என்றார். அரசி சைரந்திரியிடம் “வாடி” என்று சொன்னபின் ஏறிக்கொண்டாள்.

சுபாஷிணியிடம் திரும்பி சைரந்திரி “நீ வண்டியில் வா… அங்கே காட்டுமுற்றத்தில் என்னுடன் வந்து சேர்ந்துகொள்” என்றபின் பல்லக்கில் நுழைந்தாள். பல்லக்கு மெல்ல எழுந்து தோள்களில் மிதந்தது. பின்னர் காற்றால் கொண்டுசெல்லப்படுவதுபோல ஒழுகியது. சுபாஷிணி ஓடிச்சென்று பின்னால் நின்றிருந்த அணிச்சேடியருடன் இணைந்துகொண்டாள். “நீ அரசியின்

சேடியா?” என்றாள் ஒருத்தி. “ஆம், என் பெயர் சுபாஷிணி...” என்றாள் சுபாஷிணி. “இந்த அணிகளை அரசி அளித்தார்களா?” என்றாள் இன்னொருத்தி. “ஆம்” என்றாள் சுபாஷிணி. “நன்று, விரைவிலேயே அரச மஞ்சத்துக்குச் சென்றுவிடுவாய்.” சுபாஷிணியின் உடல் குளிரில் என சிலிர்த்தது. “பலியாட்டுக்கு அரளிமாலை அணிவித்துவிட்டார்கள்” என்று ஒருத்தி சொல்ல அவர்கள் சேர்ந்து நகைத்தனர்.

அவர்கள் செல்வதற்கு மூடுதிரையிட்ட வண்டி வந்தது. ஒற்றைப்புரவி இழுத்த அவ்வண்டியில் உடல்பிதுங்கி நெரிய அமரவேண்டியிருந்தது. அப்பெண்களின் வியர்வையும் அவர்கள் அணிந்த மலர்களும் நறுமணச்சாந்தும் குழலில் இட்ட அகிலும் சேர்ந்து கெடுமணமாக ஆகி காற்றில் நிறைந்து குமட்டலெடுக்கச் செய்தன. அவள் திரைச்சீலையை சற்று விலக்கி வெளியே பார்த்தாள். மணியோசையுடன் வண்டி கிளம்பியபோது சற்று காற்று உள்ளே வந்தது. அப்பெண்கள் எவரும் வெளியே பார்க்கவில்லை. இடைவெளியே இல்லாமல் அவர்கள் பேசிக்கொண்டிருந்தனர். ஆண்களின் மஞ்சத்தை அன்றி பிறிதெதையும் அவர்கள் அறிந்திருக்கவில்லை என்று சுபாஷிணி உணர்ந்தாள். அவர்களின் செய்திகளும் வம்புகளும் நகையாட்டும் அனைத்தும் அதைப்பற்றி மட்டுமே அமைந்திருந்தன. நகையாடல் இழிவுகொள்ளும்தோறும் அவர்கள் மகிழ்ந்து சிரித்தனர்.

அவர்களிடமிருந்து எழுந்த அந்தக் கெடுமணம் அவர்களின் சொற்களிலும் இருந்தது. அவர்களுடன் ஒருத்தியாக அங்கிருப்பதை எண்ணி அவள் கூசினாள். அதை எவரும் அறியலாகாது. ஆனால் அவள் அந்த வண்டியில் இருந்து அவர்களுடன் சேர்ந்துதான் இறங்கவேண்டும். அதை

எத்தனைபேர் பார்ப்பார்கள்? வழியிலேயே ஏதேனும் சொல்லி இறங்கிவிடமுடியுமா? வேறேதாவது வண்டியில் படைவீரர்களுடன் ஏறிக்கொள்ளமுடியுமா? அது இயலாதென்று அறிந்திருந்தாள். அது அவளை நீள்மூச்செறியச் செய்தது. வேறுவழியில்லை என்றானதும் வெளியே தெரிந்த நகர்க்காட்சிகளை நோக்கலானாள். பெருந்தெருவும் அங்காடிச்சாலையும் கோட்டைமுகப்பும் புறக்கோட்டை பெருமுற்றத்தின் வணிகர்கொட்டகைகளும் இருபுறமும் சோலைக்காடு செறிந்த பெருஞ்சாலையும் அவளை ஈர்த்துக்கொண்டன.

காடு அவளை மெல்ல விடுவித்தது. உடல் இயல்பாகத் தளர அரைத்துயிலில் என உள்ளம் அமைதிகொண்டது. காட்டில் தனித்தனியாக மரங்களைப் பார்ப்பதில் பொருளில்லை. காடு என்பது ஒற்றைப்பெரும் பரப்பு. ஒரு சூழ்கை. ஓர் அமைதி. அலைகளின் அசைவின்மை. அவள் நெடுநேரம் கழித்து தன்னை உணர்ந்தபோது உள்ளம் துயிலெழுந்த இனிய அமைதியால் நிறைந்திருந்தது. அவர்கள் அப்போதும் ஆண்களைப்பற்றித்தான் பேசிக்கொண்டிருந்தனர். ஆனால் அப்போது முதலில் எழுந்த அருவருப்பு தோன்றவில்லை. அவர்கள் ஆண்களை ஒரு சில உறுப்புகளாக, மிகச் சில அசைவுகளாக ஆக்கிக்கொண்டனர். குடிப்பெருமை, செல்வம், அரசிருப்பு அனைத்தையும் களைந்து ஆண்மையையும் அகற்றி வெறும் அசையும் தசைகள் என்றாக்கி எடுத்து அடுக்கினர். அவளுக்கு அச்சொல்லாடல் மெல்லிய உவகை ஒன்றையே அளித்தது.

கரவுக்காட்டுக்கு முன்னால் இருந்த முற்றத்தில் அவர்களின் வண்டி நின்றது. காவலர்களின் அறிவிப்புகளும் முரசுகளும்

கொம்புகளும் இணைந்து எழுந்த பேரோசையுமாக வெளியுலகம் அவளை அடைந்தது. அரசியை வாழ்த்தி காவலர்கள் குரலெழுப்பினர். ஒரு காவலன் அவர்களின் வண்டிக்கு அருகே வந்து “நிலைகோள்!” என்று கூவினான். திரைவிலக்கி மூத்த சேடி இறங்கினாள். தொடர்ந்து ஆடைதிருத்தியபடி ஒவ்வொருவராக இறங்கினர். தரையில் நின்று குழலையும் அணிகளையும் சீரமைத்தனர். அவள் இறங்கியதும் நேராக சைரந்திரியை நோக்கி சென்றாள். அரசிக்குப் பின்னால் நின்றிருந்த சைரந்திரி அவளிடம் “என்னுடன் வா” என்றாள்.

முன்னரே உத்தரையும் அகம்படியினரும் வந்து அங்கே ஓய்வெடுத்துக்கொண்டிருந்தனர். அவர்களுடன் வந்த காவலர்கள் புரவிகளை அவிழ்த்துக் கட்டி காட்டுக்காவலர்கள் தலைச்சுமையாக கொண்டுவந்த புல்கட்டுகளை அவிழ்த்து புரவிகளுக்கு முன்னால் குவித்தனர். கழுத்துமணி ஓசையுடன் அவை புல் தின்றன. அவற்றின் வால்கள் அசைவது காற்றில் புதர்மலர்கள் ஆடுவதுபோலத் தெரிந்தது. உத்தரை அரசியைக் கண்டதும் எழுந்து அருகே வந்தாள். அவளுடன் அவளுடைய அணுக்கச்சேடியும் வந்து அப்பால் நின்றாள். உத்தரை முகமன் சொல்லி தாயை வணங்கினாள்.

அரசி முகம் சுளித்து “முன்னரே வந்துவிட்டாயா?” என்றாள். “சற்றுமுன்” என்றாள் உத்தரை. அன்னையும் மகளும் விழிதொட்டுக்கொள்ளவில்லை. உத்தரையின் நிற்பிலும் முகத்திலும் அன்னையை புறக்கணிக்கும் அசைவுகள் இருந்தன. “உத்தரன் முன்னரே வந்துவிட்டதாகச் சொன்னார்கள்” என்றாள் அரசி. “ஆம், காட்டுக்குள் சென்றுவிட்டார்” என்றாள் உத்தரை. “இளையவன்

வந்துகொண்டிருப்பதாக அறிந்தேன்” என்ற அரசி இயல்பாகக் கேட்பதுபோல “உன் ஆசிரியர் எங்கே?” என்றாள். அந்த வினா உத்தரையின் உடலை புகையைக் காற்று என மெல்ல உலையச்செய்தாலும் அவள் அது ஒருபொருட்டே அல்ல என்பதுபோல “அவர்கள் எப்போது வருவார்கள் என்று தெரியாது… நேற்று மாலையே அரண்மனையை விட்டு கிளம்பிவிட்டார்கள் என்று அறிந்தேன்” என்றாள்.

மேலும் ஏதோ பேச உடல்தவித்தபின் பெருமூச்சுடன் அமைந்த அரசி சைரந்திரியிடம் “நாம் உள்ளே செல்வோமே” என்றாள். “இங்கே ஓய்வெடுத்துவிட்டுச் செல்லலாம் என்றார்கள்” என்றாள் சைரந்திரி. “வேண்டாம்… காட்டுக்குள் குடில்கள் மேலும் சிறப்பானவை… நான் சற்றுநேரம் படுக்கவேண்டும்” என்றாள் சுதேஷ்ணை. சைரந்திரி சுபாஷிணியை நோக்கி “நீ இளவரசியுடன் இருந்துகொள்…” என்றாள். உத்தரை திடுக்கிட்டுத் திரும்பி சுபாஷிணியை பார்க்க “இளையவள். உங்களுக்கு உகந்த துணையாக இருப்பாள்” என்றாள் சைரந்திரி. அவள் விழிகளை ஒருகணம் நோக்கியபின் உத்தரை சரி என தலையசைத்தாள். அவள் உள்ளூர நிலைகொள்ளாமலிருப்பதை சுபாஷிணி உணர்ந்தாள். ஓடும் வண்டிக்குள் இருக்கும் குடுவைக்குள் நீர் குலுங்குவதுபோல என எண்ணிக்கொண்டாள். அவளருகே வண்டியில் ஒரு நீர்க்குடுவை இருந்ததை நினைவுகூர்ந்தாள்.

காவலர்தலைவன் வந்து அப்பால் நின்று தலைவணங்கினான் உத்தரை திரும்பி நோக்க “இளவரசி விழைந்தால் காட்டுக்குள் செல்லலாம்” என்றான். “செல்வோம்” என்று சொல்லி உத்தரை அன்னைக்கு மீண்டும் தலைவணங்கி முன்னால் செல்ல

விழிகளால் சைரந்திரியிடம் விடைபெற்று சுபாஷிணி அவளுக்குப் பின்னால் சென்றாள்.

உத்தரை தன்னந்தனியாக நடப்பவள்போல செல்ல அவள் அகம்படியினரும் சேடியரும் உடன் நடந்தனர். அவர்கள் சொல்வனவற்றை அவள் இரண்டாவது முறைதான் கேட்டாள். ஒற்றைச் சொல்லில் மறுமொழி உரைத்தாள். அவள் முகம் சிடுசிடுப்புடன் இருந்தது, எவரிடமோ எரிச்சல் கொண்டவள்போல. ஒவ்வாத நினைவொன்றை சுமப்பவள்போல. தன்னை அவள் ஒருமுறைகூட ஏறிட்டுப் பார்க்கவில்லை என்பதை சுபாஷிணி உணர்ந்தாள். அவளுக்கு தன் முகம் நினைவில் நிற்கவே வாய்ப்பில்லை. ஏன் அவளை எண்ணிக்கொண்டிருக்கிறேன், நான் வந்தது காட்டைப் பார்க்க என்று அவள் தன்னை திருப்பிக்கொண்டாள். அந்தி இருண்டுகொண்டிருக்க காட்டுக்குள் இருள் நிறைந்திருந்தது. சீவிடுகளின் ஒலி வலுத்து அத்தனை ஒலிகளையும் ஒரு சரடெனக் கோத்து சூழ்ந்திருந்தது.

உத்தரை எதிரே வேலுடன் வந்து வணங்கி அப்பால் வழிவிலகி நின்ற இளம்காவலனிடம் “நீ இங்குள்ள காவலனா?” என்றாள். அவன் தலைவணங்கி “ஆம், இளவரசி” என்றான். அவனுக்கு மீசைகூட அரும்பவில்லை என்பதை சுபாஷிணி நோக்கினாள். மெல்லிய பாசிப்படர்வுபோல மேலுதடு கருமைகொண்டிருந்தது. கண்களில் எப்போதுமென ஒரு நகைப்பின் ஒளி. “உன் பெயரென்ன?” என்று உத்தரை கேட்டாள். அவன் பணிந்து “கஜன், மூன்றாம் காவல்மாடத்தவன்” என்றான். “இங்கே நேற்று எவரேனும் வந்தார்களா?” என்றாள் உத்தரை. “இல்லை, இளவரசி. இக்காட்டுக்குள் எவரும் நுழையமுடியாது, கடுமையான காவல் உள்ளது” என்றான் கஜன்.

உத்தரை உதட்டைச் சுழித்தபின் “இரவில் எவரேனும் நுழைந்தால்?” என்றாள். “இரவிலும் காவலுண்டு… அத்துடன் இது நிலவுப்பொழுது” என்றான். உத்தரை “நீங்கள் அறியாமல் எவரேனும் உள்ளே நுழைந்தால் புள்ளொலியோ பூச்சியொலியோ மாறி அதை காட்டித்தருமா?” என்றாள். அவன் “அறியேன், இளவரசி… ஆனால்…” என்று சொல்ல அவள் செல்க என கையசைத்தபின் முன்னால் சென்றாள். அவன் வணங்கி விலகி நிற்க அவர்கள் அவனைக் கடந்து சென்றனர். அவன் விழிகளை சந்தித்த சுபாஷிணி திடுக்கிட்டு விலகிக்கொண்டாள். பின் நெடுநேரம் அவள் உள்ளம் படபடத்துக்கொண்டே இருந்தது.

# நீர்க்கோலம் - 48

### 47. நிலவெழுகை

❀காட்டுமுகப்பில் நின்ற வண்டியில் இருந்து பொதிகளை இறக்கிக்கொண்டிருக்கும்போது தொலைவில் கொம்பொலி எழுவதை முக்தன் கேட்டான். இரு பெரிய பித்தளை அண்டாக்களை ஒன்றுக்குள் ஒன்றெனப்போட்டு தோளிலேற்றி கொண்டு சென்று அடுமனைக்கென அமைக்கப்பட்டிருந்த கொட்டகைக்குள் வைத்துவிட்டு திரும்பி வந்துகொண்டிருந்த வலவன் நின்று இரு கைகளையும் இடையில் வைத்தபடி அத்திசையை நோக்கினான். கையில் எடுத்த கலத்துடன் என்ன செய்வது என்று அறியாமல் சம்பவன் முன்னும் பின்னுமெனத் ததும்பினான். கொம்போசை மீண்டும் எழ காவல் மாடங்கள் அனைத்திலும் கொம்புகள் ஏற்று ஒலித்தன. முரசுகள் இணைந்துகொண்டன. மாபெரு யானைத்திரள் ஒன்று மிரண்டு ஓடிவந்து அப்பகுதியைச் சூழ்ந்துகொண்டதுபோலிருந்தது.

நான்கு முழுத்த ஆண் புரவிகள் முழு விரைவில் குளம்படி தாளத்துடன் வந்து முற்றத்தை அடைந்து அரைவட்டமாகச் சுழன்று நிற்க அங்கே நின்றிருந்த பிற புரவிகள் அனைத்தும் குளம்புகள் மாற்றிவைத்து நின்று கழுத்தைத் திருப்பி விழியுருட்டி நோக்கின. ஓரிரு பெண்புரவிகள் கனைத்தன. முதற்புரவிமேல் இருந்த தோற்கவச வீரன் தன் கையிலிருந்த நீண்ட வேலால் அங்கு நின்றிருந்த அடுமனையாளன் ஒருவனை தோளில் குத்தி "வண்டிகளனைத்தும் விலகவேண்டும். இக்கணமே... எந்த வண்டியும் இங்கு நிற்கக்கூடாது. எந்தப் பொருளும் இந்த முற்றத்தில் இருக்கக்கூடாது. விலகுக... விரைவில்!" என்றான். அவன் கைகூப்பி வாய்திறந்து நின்று நடுங்கினான்.

வலவன் அங்கிருந்து ஓடிவந்து "வண்டிகள் அனைத்திலும் பொருட்கள் இருக்கின்றன, வீரரே. அவற்றை இறக்கி வைக்காமல் வண்டிகளை அப்பால் கொண்டு செல்ல இயலாது" என்றான். "இயலாதா? யாரிடம் சொல்கிறாய்? இழிமகனே, எடுடா வண்டியை" என்றான் அவ்வீரன். "வண்டிக்காளைகளை அவிழ்த்துவிட்டோம். மீண்டும் அவற்றை கொண்டுவந்து கட்டி வண்டிகளை அகற்ற பொழுதில்லை" என்றான் வலவன். "பேச்செடுக்கிறாயா? அடுமடையா, எடுடா வண்டியை... இக்கணம் வண்டிகள் இங்கிருந்து அகலவில்லை என்றால் உங்கள் தலைகள் உருளும்" என்றான் வீரன். இன்னொருவன் சவுக்கைச் சுழற்றி வீசி படீர் என ஓசையெழுப்பினான்.

"நான் வேண்டுமென்றால் வண்டியை சற்று நகர்த்தி ஓரமாக வைக்கிறேன், வேறுவழியில்லை" என்றான் வலவன். "பேசாதே... எடு வண்டியை" என்றான் ஒரு வீரன். இன்னொருவன் "அனைவரும் சேர்ந்து இழுங்கள் வண்டியை..." என்று

கூவினான். “வேண்டியதில்லை” என்றபின் வலவன் குனிந்து வண்டியின் நுகத்தை இரு கைகளாலும் தூக்கி ஒரே உந்தலில் சகடத்தை அசையச்செய்து இழுத்துச் சென்று ஓரமாக நிறுத்தினான். அவன் தசைகள் புடைத்து இறுகியெழுந்தது பாய்மரம் காற்று கொள்வதைப்போலத் தோன்றியது. தரையில் இறக்கிப் போடப்பட்டிருந்த கலங்களையும் உருளிகளையும் சிறு விளையாட்டுப்பொருட்களை என ஒற்றைக்கையால் எடுத்து அடுக்கி வைத்தான். புரவிக்காவலர்களும் அடுமனையாளர்களும் ஏவலர்களும் திகைப்புடன் அவனைப் பார்த்து நின்றனர்.

காவலர்தலைவன் குரல்மீள சற்று பொழுதாகியது. ஒருவன் “இவன் யார்?” என மூச்சுக்குள் சொன்னான். காவலர்தலைவன் கைசுட்டி வலவனை அருகே அழைத்து “வா இங்கு… நீ யார்? சூதனா?” என்றான். “இல்லை, நான் ஷத்ரியன். ஆனால் அடுமனைத் தொழில் செய்கிறேன்” என்றான் வலவன். “ஷத்ரியன் ஏன் அடுமனைத் தொழில் செய்யவேண்டும்?” வலவன் “நான் குலவிலக்கு செய்யப்பட்டேன்” என்றான். காவலன் அவன் கைகளைப் பார்த்து “நீ கதாயுதம் பயின்றிருக்கிறாய்” என்றான். “ஆம். ஆனால் போர்த்தொழிலில் இறங்குவதில்லையென்று என் குடித்தெய்வத்திடம் ஆணையிட்டிருக்கிறேன்” என்றான். “ஏன்?” என்றான் அவன். “உணவு சமைத்து என் கைகளால் ஒவ்வொருவருக்கும் உயிரூட்டிக்கொண்டிருக்கிறேன். ஆகவே எவரையும் கொல்ல என்னால் இயலாது.”

வீரன் நகைத்து “இந்த ஈட்டியால் நான் இப்போது உன்னைக் கொன்றால் நீ என்ன செய்வாய்?” என்றான். பீமன் “ஒவ்வொரு நாளும் பல ஆடுகளையும் பன்றிகளையும் உணவுக்காக

கொல்கிறேன்” என்றான். அவன் சொல்வதை காவலர்தலைவன் புரிந்துகொள்ளவில்லை. பின்னால் நின்ற துணைவன் சிரித்தபோதுதான் அதன் பொருள் புரிந்தது. வெறிகொண்டு இரும்பாலான வேலைச் சுழற்றி வலவனை அடித்தான். மிக எளிதாக இடக்கையால் அதைப்பற்றி சற்று திருப்பி காவலர்தலைவனை நிலையழியச் செய்து நாணல் ஒன்றை கொய்வதுபோல அவன் கையிலிருந்து அதைப் பிடுங்கி ஒற்றைக்கையால் நிலத்தில் ஊன்றி கொடியை என வளைத்து அப்பால் தூக்கிப்போட்டான். உலோக ஓசையுடன் சென்று விழுந்தது வேல்தண்டு.

விலங்கெனக் கூச்சலெழுப்பியபடி காவலர்தலைவன் வாளை உருவினான். அவனை திரும்பிக்கூட நோக்காமல் “செல்லுங்கள், வீரரே. ஓர் அடி தாங்குமளவுக்குக்கூட உங்கள் உடம்போ புரவியோ இல்லை” என்று வலவன் சொன்னான். குதிரையிலிருந்த அனைவருமே மெல்லிய விதிர்ப்பு கொள்வதை சம்பவன் பார்த்தான். “ம்ம்” என்றான் வலவன். அவன் தோள்தசை விழித்தெழும் மலைப்பாம்புபோல மெல்ல அசைந்தது. அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துவிட்டு புரவிகளைத் தட்டி விலகிச்சென்றனர்.

இரண்டாவது காவலர் அணி “விலகுங்கள், விலகுங்கள், இளவரசர் வருகிறார்…” என்று கூவியபடி வந்தது. அவர்கள் புரவிகளை வலையென விரித்து அக்காவல்முற்றத்தின் விளிம்புகளென்றாகி வேலுடன் வேல் தொட்டு வேலி அமைத்தனர். அடுமனையாளர்களும் காவலர்களும் வணங்கி உடல்வளைத்து நிற்க அடுத்த குழு பெருகிப்பெய்யும் குளம்போசையுடன் வந்து நின்றது. “என்ன செய்கிறீர்கள்

இங்கே? இளவரசர் வந்துகொண்டிருக்கிறார்” என்றான் அதன் தலைவன்.

மச்சநாட்டின் துள்ளும்மீன் பொறிக்கப்பட்ட கொடியுடன் கரிய புரவியொன்று வந்தது. கொடியை ஏந்தியிருந்த புரவி வீரனுக்குப் பின்னால் வந்தவன் உருவிய வாளுடன் “விலகுங்கள், விலகுங்கள்” என்று கூவிக்கொண்டிருந்தான். கொடிப்புரவி வந்து முற்றத்தின் நடுவே நிற்க அதைத் தொடர்ந்து வந்த புரவிகளில் கொம்புகளும் முரசுகளும் ஏந்தியவர்கள் வந்தனர். கொம்பூதி முற்றத்திற்கு வந்து மும்முறை முழங்க காவல் மாடங்கள் அனைத்திலிருந்தும் மறு பிளிறல் எழுந்தது.

“யாருடைய பல்லக்கு அது? இங்கே பல்லக்கை நிறுத்தியது யார்?” என்று காவலர்தலைவன் கூவினான். “யாருடைய புரவி அது?” என்று பல குரல்கள் எழுந்தன. “அது இளவரசர் உத்தரர் ஏறி வந்த புரவி” என்றான் அங்கிருந்த கானகக் காவலர்தலைவன். “உத்தரர் அந்தப் புரவியில் ஏறி வந்தாரா?” என்றான் காவலர்தலைவன். “ஆம், அதில்தான் வந்தார்” என்றான் கானகக் காவலர்தலைவன். அதை நோக்கியபின் “அந்தப் புரவியிலா?” என்று அவன் மீண்டும் கேட்டான். “ஆம்” என்றபின் “அப்புரவியைப் பழக்கும் ஒருவன் வந்திருக்கிறான். கிரந்திகன் என்னும் சூதன். அவன் சொல்லுக்கு அது குழவியென கட்டுப்படுகிறது” என்றான். “கடிவாளத்தை அவன் பற்றியிருந்தானா?” என்றான் இன்னொரு காவலன். இரு வீரர்கள் நகைத்தனர்.

அவர்கள் பேசிக்கொண்டிருக்கையிலேயே எட்டு வேலேந்திய வீரர்களும் எட்டு வில்தொடுத்த வீரர்களும் புரவிகளில் முன்னால் வர தொடர்ந்து கீசகனின் புரவி வந்தது.

யவனநாட்டைச் சேர்ந்த எடைமிக்க பெரிய புரவியின் காலடி ஓசை தனியாகவே ஒலித்தது. அதன் குளம்புகள் கொல்லன் உலைக்களத்து கூடம்போலிருந்தன. கணுக்கால்களில் காகச்சிறகுபோல மயிர்க்கொத்து கொண்டிருந்தது. பிடரிமயிர் வளர்ந்து நாணல்பூபோல தழைந்திருந்தது. அவனுக்கு இருபுறமும் இரும்புக் கவசமணிந்த இரு வீரர்கள் நீண்ட வேல்களுடன் யவனப் பெரும்புரவிகளில் வந்தனர். காவல் வீரர்கள் விரிந்து இரு நண்டுக்கொடுக்குள்போல் ஆகி விலக மார்பில் ஆடிவளைவென மின்னிய இரும்புக்கவசமும் கைகளிலும் கால்களிலும் தோற்கவசங்களும் அணிந்து தன் புரவியிலிருந்து கால் சுழற்றி இறங்கினான். அவனது எடை மண்ணைத் தொடும் ஓசை அனைவருக்கும் கேட்டது.

வலவன் உடல் பணிந்து காவல்நிரைக்குப் பின்னால் மறைந்தவனாக நின்றான். கீசகனின் சிறிய கண்கள் உணவு வண்டியை பார்த்தன. “இதை அப்பால் கொண்டு சென்று நிறுத்த முடியாதா உங்களால்?” என்றான். காவலர்தலைவன் “இங்கு முற்றம் இவ்வளவுதான், படைத்தலைவரே” என்றான். கீசகன் விழிகள் உலவிச்சென்று வலவனை பார்த்தன. காவலர்தலைவன் அதை உணர்ந்து “அவன் ஷத்ரியன். ஆனால் அடுமனைத் தொழில் செய்கிறான்” என்றான். “ஆம், நான் அவனை அறிவேன்” என்றான் கீசகன். “தனியொருவனாக இந்த வண்டியை இவனே அப்பால் நகர்த்தி வைத்தான்” என்றான் காவலர்தலைவன்.

கீசகன் திகைப்புடன் இடையில் கைவைத்து வலவனை சற்று நேரம் நோக்கி நின்றான். பின்னர் மெல்ல புன்னகைத்து “இந்த வண்டியையா?” என்றான். “ஆம், இளவரசே.” கீசகன் மீண்டும்

வலவனை நோக்கிவிட்டு ஒன்றும் சொல்லாமல் உள்ளே சென்றான்.

❀முதிய காவலர்தலைவர் புஷ்பர் கையசைத்து உரத்த குரலில் “மூடா, என்ன அங்கே செய்கிறாய்? என்னடா செய்கிறாய்? அறிவிலியே” என்றார். முக்தன் அவரை நோக்கி ஓடி “வணங்குகிறேன், தலைவரே” என்றான். “செவிட்டில் அறைவேன்... கீழ்பிறப்பே. என்ன செய்கிறாய் நீ? நீ நின்று காற்று நுகர்வதற்கா இங்கே அணிக்காடு அமைந்துள்ளது?” என்று அவர் மூச்சிரைத்தார். “அரசருக்குரிய குடிலில் தூபக்கலங்களில் ஒன்று குறைகிறது... ஓடிச்சென்று பொருள்நாயகத்திடம் கேட்டு அதை உடனே கொண்டு வைக்கச்செய்.” முக்தன் “நான் உடனே...” என்று தொடங்க “பேசாதே... பேசினால் உன் நாவை அரிவேன்” என்றார் அவர்.

அவன் தலைவணங்கி மூச்சிரைக்க ஓடினான். அவனிடம் உத்தரையின் ஆடைப்பெட்டிகளில் ஒன்று சென்று சேரவில்லை என்று சொல்லப்பட்டிருந்தது. ஆடைகளுடன் வந்த ஏவலர்கள் முன்னரே அவற்றை இறக்கி மறுதிசைக்கு கொண்டுசென்றுவிட்டிருந்தனர். ஒவ்வொருவருக்கும் காட்டில் ஒவ்வொரு மூலையில் குடில்கள் அமைக்கப்பட்டிருந்தன. அரசிக்கு தென்மேற்கு. உத்தரைக்கு தென்கிழக்கு. வடமேற்கு உத்தரனுக்கு. வடகிழக்கு அரசருக்கு. மையப்பகுதி முழுக்க கீசகனுக்கு. அடுமனையாளர்கள் காட்டின் நுழைவாயிலில் தெற்கேயும் ஏவலர்கள் மேற்கேயும் கொட்டகை அமைத்திருந்தனர். காட்டுமுகப்பில் இருந்த பெருமுற்றம் வண்டிகளாலும் காவலர்களாலும் நிறைந்து அலைநிறைச்சுனை என வண்ணம் சுழித்தது.

எதிரே ஓடிவந்த இளைஞனை எங்கோ கண்டிருந்தான். “நில்!” என்றான். அவன் நின்றதும்தான் பெயர் நினைவுக்கு வந்தது. “நீ கஜன் அல்லவா?” என்றான். “ஆம், மூத்தவரே” என்ற கஜன் அதன் பின்னர்தான் முக்தனை அடையாளம் கண்டுகொண்டு “தாங்களா?” என்றான். கஜன் வண்ணத்தலைப்பாகையும் மேலாடையும் அணிந்திருந்தான். “பொறுத்தருள்க, மூத்தவரே, இருளில் அடையாளம் தெரியவில்லை.” முக்தன் “எங்கிருந்து பெற்றாய் இந்தத் தலைப்பாகையையும் அணியையும்?” என்றான். “இங்கே அத்தனை அரச காவலரும் வண்ணத்தலைப்பாகை அணிந்திருக்கிறார்கள். ஆகவே தலைப்பாகை இல்லாமல் உள்ளே வரமுடியாதென்று தோன்றியது. உத்தரரின் சால்வை ஒன்றை வண்டியில் இருந்து எடுத்து தலைப்பாகையாக ஆக்கிக்கொண்டேன். இன்னொன்றை மேலாடையாக… நன்றாக உள்ளதா?”

“இதன்பொருட்டு நீ கொலைக்களம் போவாய்” என்றான் முக்தன். “அவர் இதை அளித்தாரே?” என்றான் கஜன். “அப்படி சொன்னால் பிறர் மறுக்கமுடியாது. அவர் எதையுமே மறுக்கமுடியாது.” முக்தன் சிரித்து “நான் உடனே அரசரின் ஏவலரை நோக்கி செல்லவேண்டும். நீ இளவரசி உத்தரையின் ஆடைப்பெட்டிகளை வைத்திருக்கும் ஏவலரைக் கண்டு பெட்டிகள் அனைத்தும் சென்று சேரவில்லை என்று சொல். மேலாடைப்பெட்டி ஒன்று குறைகிறது” என்றான். “உடனே செல்… வழியில் ஏதும் வேடிக்கை பார்க்காதே.” கஜன் “வேலை இல்லாமலேயே காட்டுக்குள் ஓடிக்கொண்டிருக்கிறேன். வேலை இருந்தால் ஓடமாட்டேனா?” என்றான்.

அவனுக்கு மறுமொழி சொல்லாமல் முக்தன் ஓடி வெளியே சென்றான். அரசரின் பெரிய வெள்ளிப் பல்லக்கு வந்து

நின்றிருந்தது. அதன் போகிகள் பதினெண்மர் அப்பால் கரிய தசைத்திரள்கள் ததும்ப ஒருவருக்கொருவர் மெல்லிய குரலில் பேசியபடி நின்றிருந்தார்கள். அரசரை அவன் விழிகள் தேடி ஆலமரத்தடியில் கண்டுகொண்டன. அவர் பலகை ஒன்றில் விரிக்கப்பட்ட மரவுரியில் மல்லாந்து படுத்து துயில்கொண்டிருந்தார். அருகே ஆற்றை நோக்கியபடி ஒரு வேர்ப்புடைப்பில் குங்கன் அமர்ந்திருந்தான். அவன் தாடியில் அந்தியின் செவ்வொளி சுடர்வதை முக்தன் கண்டான். சற்றுநேரம் நோக்குநிலைக்க உளமழிந்து நின்றான்.

ஏதோ அருகே விழும் ஒலி கேட்டு திடுக்கிட்டு திரும்பினான். வண்டியில் இருந்து ஒரு பொதி கீழே விழுந்தது. "அப்பால் சென்று நில்... தலையில் விழுந்தால் உடலை இழுத்துப்போடக்கூட இங்கே எவருக்கும் பொழுதில்லை" என்றான் பொதியை தள்ளியவன். "நான் அரசரின் பொருள்நாயகத்தை தேடிவந்தேன்... அவருக்கான தூபங்களில் ஒன்று குறைகிறது" என்றான் முக்தன். "அங்கே சென்று அந்தப் பொன்னிறத் தலைப்பாகைக்காரரிடம் கேள். அவர்தான் பொருள்களவுநாயகம்... சிறந்தவர்." முக்தன் திரும்பியபோது இன்னொரு பொதியை தள்ளிவிட்டு நிமிர்ந்த அவன் "பொருள்நாயகத்தைக் காணவந்தவன் எதற்கு சூதுநாயகத்தைப் பார்த்து நின்றாய்? கூர்ந்து நோக்காதே. அவன் கலிவடிவன்..." என்றான். முக்தன் "இல்லை..." என்று தயங்க "அவனை சாவின் தெய்வங்கள் சூழ்ந்துள்ளன. அரசரை எட்டு கைகளால் கவ்வி அணைத்துவிட்டான் என்கிறார்கள்" என்றான்.

"மாகரே, சொல் காக்க. தலைகாப்பதன் முதல் படி அது" என்றான் பின்னால் நின்றவன். "நான் இனி இந்தத் தலையைக் காத்து என்ன செய்ய? நா அதன்பாட்டில் நெளியட்டும்" என்றான்

மாகன். முக்தன் பொருள்நாயகத்திடம் சென்று “அரசரின் குடிலில் ஒரு தூபம் குறைகிறது” என்றான். “அங்கே எதற்கு தூபம்? இவர் புகைக்கும் அகிபீனாவில் கொசுக்கள் மயங்கி உதிருமே” என்றார் பொருள்நாயகம். அருகிருந்தவர்கள் உரக்கச் சிரிக்க இடம்கொடுத்தபின் “இதோடு ஏழுபேர் வந்து சொல்லிவிட்டார்கள். அனுப்பிவிட்டேன். செல். சென்று அந்தக் கிழவனிடம் மேலும் ஆட்களை அனுப்பவேண்டாம் என்று சொல்” என்றார். கொசுவை அடித்தபடி “அவன் பெயர் என்ன?” என்றார். முக்தன் “புஷ்பர்” என்றான். “அவருக்கு க்ஷணர் என்று பெயர் இட்டிருக்கலாம்... முந்தைய கணத்தை மறந்து அக்கணத்தில் வாழ்கிறார் மனிதர்” என்றார் பொருள்நாயகம். சூழ சிரிப்பொலி. அவர்கள் அதன்பொருட்டே அமர்த்தப்பட்டிருக்கிறார்கள் போலும்.

முக்தன் செல்வதற்காக திரும்பினான். பொருள்நாயகம் “கிழவர்களை வீட்டுக்கு அனுப்புவதேயில்லை இந்த அரசில். அவர்கள் வேலோடு சாக இங்கே போரும் நிகழ்வதில்லை. ஆகவே அரண்மனையிலும் அலுவல்நிலையிலும் எச்சில் ஒழுகும் பொக்கைவாய்களே நிறைந்துள்ளன” என்றார். மீண்டும் சிரிப்பு. ஒருவன் மூச்சிரைக்க ஓடிவந்து “பொருள்நாயகரே, அரசருக்குரிய தூபக்கலங்களில் ஒன்று குறைகிறது... உடனே” என்றான். பொருள்நாயகம் முக்தனிடம் “நீ செல்லும் வழியில் எதிரே வரும் அத்தனை பேரிடமும் தூபக்கலம் சென்றுவிட்டது என்று சொல்லிக்கொண்டே ஓடு... போ” என்றார். அவரைச்சூழ்ந்திருந்தவர்கள் பேரொலி எழுப்பி நகைத்தனர்.

காட்டுக்குள் செல்கையில் முக்தன் குங்கனைப்பற்றி எண்ணிக்கொண்டான். அவனை தீமையின் உருவென்றும் சூழ்ச்சியில் திளைப்பவன் என்றும்தான் அனைவரும்

சொன்னார்கள். ஆனால் அந்தக் கோணத்தில் உருகும் பொன்னால் ஆன சிலை என்றிருந்தான். அது உருவின் அழகு மட்டும் அல்ல. இளவெயில் பட்டால் அனைவரும் அப்படி பேரழகு கொள்வதில்லை. அவர் ஒரு முனிவர், ஏதோ நோக்கத்துடன் இங்கு வந்து கலியுரு கொண்டுள்ளார் என அவன் சொல்லிக்கொண்டான். ஆம், அல்லது அவர் ஒரு கந்தர்வர். அவனுக்கு ஏனோ கிரந்திகன் நினைவு வந்தது. அவனும் சூதனைப்போல் மாற்றுரு கொண்டு வந்தவனாகவே தோன்றினான். ஆழ்ந்தும் உயர்ந்தும் சென்றவர்கள் உடலை பொருந்தா உருவென்று சூடியிருக்கிறார்களா என்ன?

அவன் ஒரு பெண் துள்ளித்துள்ளி ஓடுவதைக் கண்டான். “ஏய் நில்... யார் நீ?” என்றான். அவள் நின்று மிடுக்குடன் திரும்பி “நீ யார்?” என்றாள். “உனக்கு சொல்முறைமை தெரியாதா?” என்றான். “நீ முதலில் என்னிடம் பேசும் முறையை பேணிக்கொள்.” அவன் அவள் அரசகுடிப்பெண்ணோ என்று தயங்கினான். ஆனால் அல்ல என்றே உறுதியாகத் தோன்றியது. முதல் தோற்றங்கள் பெரும்பாலும் பிழையாவதில்லை. சேடியருக்கு மட்டுமே அமையும் தோள்கள் இவை. கன்னங்களில் உயர்குடியினருக்குரிய பளபளப்பு இல்லை. கண்களில் இயல்பான அச்சமின்மை இல்லை. “நீங்கள் யார்?” என்றான். “நான் அரசியின் அணுக்கப்பெண். என் பெயர் சுபாஷிணி. உனக்கு என்ன வேண்டும்?”

அவன் புன்னகையுடன் அப்படியா என உள்ளூர எண்ணிக்கொண்டான். “வணங்குகிறேன், சுபாஷிணியாரே. தாங்கள் இங்கே இப்படி மான்போல தாவுவது ஏன்?” என்றான். அவள் நாணத்துடன் புன்னகைத்து “வெறுமனே...” என்றாள். “வெறுமனே என்றால்...?” என அவன் அவள் விழிகளுக்குள்

நோக்கினான். "இப்படியே..." என்றபின் அவள் நோக்கை விலக்கிக்கொண்டாள். "இப்படி தாவுவார்கள் என கவிதைகளில் கேட்டீர்கள் இல்லையா?" அவள் "இல்லை" என முகம் சிவந்தாள்.

அவள் நாணியது அவனை ஆண் என ஆக்க "நீங்கள் அந்தச் சிற்றாடையை விரித்துத் தாவுகையில் தோகைமயில் எனத் தோன்றுகிறீர்கள்" என்றான். அவள் அவனை நீரில் மீனெழுவதுபோன்ற விழியசைவால் நோக்கிவிட்டு "இப்படி நீங்கள் என்னிடம் சொன்னீர்கள் என்பதை அரசியிடம் சொல்லட்டுமா?" என்றாள். "அய்யோ..." என்று அவன் மெய்யாகவே பதற அவள் சிரித்தாள். அவன் ஆறுதல் கொண்டு "அஞ்சிவிட்டேன்" என்றான். அவள் "சூதர்களிடம் எதையாவது கேட்டு அதை அப்படியே பெண்களிடம் சொல்லிவிடுவது, என்ன?" என்றாள். "நான் இதுவரை பெண்களிடம் பேசியதே இல்லை" என்றான். "பெண்களிடமா?" என்றாள். "அதாவது, உங்களைப்போன்ற பெண்களிடம்" என்றான். அவள் விழிசரித்து "பேசும்போது இதைச் சொல்லலாம் என தெரிந்து எடுத்து வைத்திருந்தீர்களா?" என்றாள்.

அவன் சிரித்தபின் "முதலில் பார்த்தபோது இப்படி பேசக்கூடியவர் நீங்கள் என தோன்றவில்லை" என்றான். "ஓ, பார்த்ததுமே பெண்களை மதிப்பிட்டுவிடுவீர்கள் அல்லவா?" என்றாள். "இல்லை, அம்மணி. விடுங்கள். எனக்கு பேசத் தெரியவில்லை. போதுமா?" அவள் சிரித்தபின் "நான் செல்லவேண்டும். அரசியின் தேவியுடன் வந்தேன்" என்றாள். "சைரந்திரி என்றார்களே, அவர்களுடனா?" என்றான். "ஆம், நான் வருகிறேன்" என்றாள். "இப்படி காட்டில் சுற்றி அலையக்கூடாது.

அதைச் சொல்லவே அழைத்தேன்” என்றான். அவள் அருகிருந்த கொடியின் நுனியைப் பற்றியபடி “ஏன்?” என்றாள்.

“இன்று தங்களைப்போன்ற பெண்கள் இங்கே உலவக்கூடாது, அறிவீர்களா?” என்றான். அவள் “ஏன்?” என்றாள். புருவங்கள் சுளிக்க அவள் முகம் குழந்தையுடையதாகியது. “இன்றிரவு இங்கே விண்ணிலிருந்து கந்தர்வர்களும் கின்னரர்களும் வித்யாதரர்களும் இறங்கி வருவார்கள். அரசகுடியினர் அவர்களுடன்தான் கானாடுவார்கள்.” அவள் அவனை பொருள்விளங்கா விழிகளுடன் நோக்கி “மெய்யாகவா?” என்றாள். பேச்சில் துடுக்கு இருந்தாலும் அவள் சற்று அறிவுகுறைவானவள் என அவன் எண்ணிக்கொண்டான். ஆனால் அவ்வெண்ணம் அவளை மேலும் இனியவளாகவே உணரச்செய்தது.

“நீங்கள் கேட்டதே இல்லையா?” என்றான். “சொன்னார்கள்…” என அவள் இழுத்தாள். “மேலே நிலவு எழுந்ததும் அவர்கள் முகில்களிலிருந்து சிலந்திவலைபோன்ற மெல்லிய ஒளிச்சரடு வழியாக வழுக்கி இறங்கி வருவார்கள். கந்தர்வர்கள் பொன்வண்டுகளாகவும் கின்னரர் தும்பிகளாகவும் வித்யாதரர் வண்ணத்துப்பூச்சிகளாகவும் மாறி இக்காட்டுக்குள் பறப்பார்கள். அழகிய பெண்களைக் கண்டால் கந்தர்வர்கள் மானுட உருவம் கொள்வார்கள்.”

அவள் “அய்யோ” என்றாள். “அஞ்சவேண்டியதில்லை. அவர்கள் அப்பெண்ணுக்கு மிகமிகப் பிடித்த ஒருவரின் தோற்றம் கொள்வார்கள்.” அவள் “அவர்களுக்குத் தெரியுமோ?” என்றாள். “ஆம், உண்மையில் நமக்குத் தெரியாததேகூட அவர்களுக்கு தெரியும். நாம் கனவில் விரும்புவதை அவர்கள் நனவில் காட்டுவார்கள்.” அவள் தலைசரித்து “மெய்யா?” என்றாள். “ஆம்,

கந்தர்வர்களால் அடையப்பட்ட பெண் கனவில் இருப்பதுபோல இங்கிருப்பாள். அதன்பின் அவள் உள்ளம் பிறழ்ந்துவிடும். கந்தர்வனை மட்டுமே எண்ணிக்கொண்டிருப்பாள். பிற ஆண்களை பொருட்படுத்த மாட்டாள்."

"கந்தர்வன்?" என்றாள். "அவர்கள் வேறு பெண்களைத் தேடிச் சென்றுவிடுவார்கள்." அவள் இமைசரித்து மெல்ல தளர்ந்தாள். சிறிய முலைகள் எழுந்தமைந்தன. பின்னர் இமைவிரிய முகத்தை சற்று தூக்கி "அப்படியென்றால் அரசகுடிப் பெண்கள்?" என்றாள். "அவர்களுக்கு அரசர் என்ற காப்பு உள்ளது… அவர்கள் கந்தர்வனுடன் களியாடிவிட்டு அப்படியே மறந்து இங்கிருந்து சென்றுவிடுவார்கள். இது ஒரு கனவாக அவர்களிடம் எஞ்சும். எப்போதாவது துயிலில் எழுந்துவரும். மற்றவர்கள் கனவிலிருந்து மீளமுடியாது."

அவள் பெருமூச்சுவிட்டாள். அவள் கன்னத்தில் சிறிய ஒரு பரு சிவந்து திரண்டிருந்தது. அவள் முகம் கொள்ளும் அத்தனை உணர்ச்சிகளும் அப்புள்ளியில் மையம் கொண்டன. வாய்நீர் விழுங்கியபோது மெலிந்த நீள்கழுத்து மெல்ல அசைந்தது. தலைதிருப்பி காட்டை பார்த்தாள். "ஆகவே தனியாக செல்லவேண்டாம்…" என்றான். அவள் அடைத்த குரலை தீட்டியபின் "ஆண்களுக்கு?" என்றாள். "என்ன?" என்றான். "ஆண்களுக்கு கந்தர்வ கன்னிகள் வருவார்களா?" அவன் "ஆம்" என்றான். "அப்படியென்றால் நீங்கள்?" என்றாள். "என்ன?" என்றான்.

அவள் சிரித்து "அப்படியென்றால் உங்களுக்கு அச்சமில்லையா?" என்றாள். "என்ன அச்சம்? கந்தர்வ கன்னி வந்தால் நல்லதுதானே?" என்றான். "ஏன்?" என்றாள். "வெளியே என்ன வாழ்க்கை இருக்கிறது காவலனுக்கு? பொருளற்ற

நாளிரவுகள்தானே? அதில் சென்று தேய்ந்து அழிவதற்கு இங்கே கனவில் சுடர்ந்து மறைவது மேல்தானே?” அவள் கன்னங்களில் நீள்வாட்டில் குழி விழுந்தது. “ஆம்” என்றபின் “எனக்கும் அப்படித்தான்” என்றாள். “என்ன?” என்றான். “கந்தர்வர்கள் வரட்டுமே” என்றபின் “அரசியின் குரல் கேட்கிறது!” என்று கூறி விரைந்து புதர்களுக்குள் சென்று மறைந்தாள்.

அவள் சென்றபோது அசைந்த புதரிலைகளை நோக்கியபடி அவன் புன்னகையுடன் சற்றுநேரம் நின்றான். செறிந்த மரங்களுக்குள் இருள் நிறைந்திருந்தது. தொலைவில் எங்கோ இறுதிச் செங்கதிர் ஒரு மரம் விழுந்த இடைவெளி வழியாக சரிந்து விழுந்திருக்க அங்கிருந்த அத்தனை இலைப்பரப்புகளும் செந்நிறம் வழிய அசைந்தன. அவன் நோக்கி நிற்கவே அது திரிதாழ்த்தப்பட்ட அகலின் ஒளி அவிவதுபோல மறைந்தது. அது மறைந்த அக்கணம் இலைகளுக்குள் இருந்த பல பறவைகள் ஒரே ஒலியாக கலைந்தொலித்தன. குரங்கு ஒன்று கிளைவழியாகத் தாவி மேலே செல்ல மான்கூட்டம் ஒன்று செவியடித்து கனைப்பொலி எழுப்பியது. அவையனைத்தும் அந்தப் பொன்னொளியில் மயங்கி நின்றிருந்தன என்று தோன்றியது.

அவன் அந்நாளின் கதிரமைவை காண விரும்பினான். அருகே நின்றிருந்த நெடிய மரத்தில் அடிமரம் பற்றி தொற்றி மேலேறிச் சென்றான். முதல் இலைத்தழைப்புத் தொகையைக் கடந்ததும் தன்னைச் சூழ்ந்து விழியறிந்ததோ உளமுணர்ந்ததோ என மயங்கச் செய்யும் ஒரு மென்மிளிர்வு பரவியிருப்பதை கண்டான். இலைகள் ஒன்றுடனொன்று இணைந்து ஒற்றைப்பரப்பெனத் தெரிய சிலந்தியிழைகள் மட்டும் செந்நிறக் கம்பிபோல ஒளிவிட்டன. அடுத்த இலைப்பரப்பை அடைந்ததும்

தொலைவுத் தீயின் எதிரொளிப்பு என இலைநுனிகள் கூர்கொண்டிருப்பதை, மரவளைவுகள் சிவந்திருப்பதை கண்டான். மேலும் கடந்து நுனிக்கிளையை அடைந்தபோது கண்கள் கூச வானம் வந்து நிறைந்தது.

கிளைக்கவர்மேல் காலிட்டு அமர்ந்தபடி கண்ணீர் வழிந்த கண்களை கைகளால் மூடிக்கொண்டான். மெல்ல திறந்தபோது மேற்குப்புறம் சிவந்து எரிய கிழக்கில் கருகியணைந்த முகில்குவைகள் பரந்த வானம் தலைக்குமேல் வளைந்து நின்றிருக்கக் கண்டான். அதில் நீந்திச் சென்றுகொண்டிருந்தன நாரைகள். வானத்தின் அலகின்மை அவை ஒரே புள்ளியில் சிறகசைப்பதாக எண்ணச்செய்தது. அப்போதும் தாவித்தாவி பூச்சிகளை வேட்டையாடின எய்பறவைகள். காட்டுக்கு அப்பால் தொலைவில் எழும் இடியோசை என முரசுகள் முழங்கின. அறியா பறவைகள்போல கொம்புகள் அழைத்தன.

தொலைவில் மேலைவளைவில் சூரியவட்டத்தின் மேல்விளிம்பு தெரிந்தது. அனலும் கரிக்குவை நடுவே தழல் என. திரும்பி நிலவை பார்த்தான். ஒளியற்ற முழுவட்டம் வானில் மிகவும் மேலேறியிருந்தது. அதைச் சூழ்ந்திருந்த முகில்கள் இருண்டிருந்தமையால்தான் வானில் அதை காணவே முடிந்தது. அதைச் சூழ்ந்திருந்த முகில்கள் அதை அறியவே இல்லை என எண்ணிக்கொண்டான். நிலவுக்குள் தெரிந்த கருநிழல் அதன் விடவுகள் வழியாகத் தெரியும் அப்பால் இருக்கும் வானெமெனத் தோன்றியது. நிலவை மறித்தபடி வெளவால்கூட்டம் ஒன்று சுழன்று பறந்துகொண்டிருந்தது.

ஒவ்வொன்றும் மெல்ல அடங்கி அமைதிநோக்கிச் செல்வதாகத் தோன்றியது. ஆனால் கூர்ந்தபோது ஓசைகள்

பெருகிக்கொண்டே இருப்பதாகவும் பட்டது. அவன் பெருமூச்சுவிட்டுக்கொண்டான். ஏன் இந்த மரத்தின்மேல் ஏறினேன்? இந்தக் காடு நான் நோக்கிச் சலித்த ஒன்று. ஒருமுறைகூட காவல்மாடத்தின்மேல் நின்று நிலவை முழுமையாக நோக்கியதில்லை. அந்தியெழுகையில் படைஎடுக்கும் கொசுத்திரளைப் பற்றிய எச்சரிக்கையே எப்போதும் எண்ணத்திலிருக்கும். காவல்மாடத்தில் அந்திக்கு முன்னரே வேப்பிலையிட்ட தூபச்சட்டி புகையத் தொடங்கிவிடவேண்டும். கொசுக்கள் வந்துவிட்டால் புகை காற்றில் விலகும்போதே வந்து படர்ந்துவிடும். இன்று எனக்கு ஏதோ ஆகிவிட்டது. அவன் புன்னகைத்தான். அங்கே எவரேனும் அதை பார்க்கிறார்களா என்பதுபோல சுற்றிலும் பார்த்துக்கொண்டான்.

கதிர்வட்டம் மெல்ல அமிழ்ந்தது. அங்கே நீர் அலையடிப்பதுபோலவும் அது அசைந்தசைந்து மூழ்குவதுபோலவும் தோன்றியது. எக்கணம் அது மறையும் என எண்ணியிருந்தபோது அது மறைந்தது. வில்லில் இருந்து அம்பு என ஒரு பறவை விண்ணில் செங்குத்தாக எழுந்து சுழன்று ரீக் என ஓசையிட்டது. தொடர்ந்து பல்வேறு பறவைகளின் ஒலி எழுந்தது. ஓசைகள் பெருகிச்செல்வதைப்போல தோன்றிக்கொண்டிருந்தபோதே அவை அணையலாயின. முகில்களின் சிவப்பு அழுத்திப் பிழியப்பட்டதுபோல வழிந்து மறைய அவை கருமைகொண்டன. விழிநோக்கு மறைவதைப்போல் தோன்றியது. குனிந்து இருண்ட காட்டை நோக்கிவிட்டு மேலே பார்த்தபோது வானில் ஒளி தெரிந்தது.

இறங்கிவிடலாம் என எண்ணி அவன் எழுந்தான். தன் நிழல் முன்னால் இலைத்தழைப்பின் திரையில் நீண்டுசரிந்திருப்பதைக் கண்டு வியந்து திரும்பி நோக்கினான். நிலவு வெண்ணிற ஒளி கொண்டிருந்தது. அதன் விளிம்புவட்டம் மெல்ல அதிர்வதாகவும் அது முகில்களை கூர்வளைவால் கிழித்தபடி எழுவதாகவும் தோன்றியது. இலைகள் அனைத்தும் தளிர்களாகிவிட்டன என விழிமயக்கம் கொண்டான். மரக்கிளைகளின் பட்டைப்பொருக்குகள் முழுத்து எழுந்திருந்தன. கிளைபற்றி இறங்குகையில் காட்டுக்குள் நிலவொளியின் வெண்குழல்கள் இறங்கியிருப்பதைக் கண்டான்.

தொலைவில் நிலவிரவின் தொடக்கத்தை அறிவித்து கொம்புகளும் முழவுகளும் முழக்கமிட்டு ஓய்ந்தன. அவன் உள்ளம் திடுக்கிட்டது. அவ்வறிவிப்புக்குப்பின் அரசகுலத்தாரும் சேடியரும் அரசக் கணையாழி அளிக்கப்பட்ட அணுக்கரும் அன்றி காட்டுக்குள் இருக்கும் எவருக்கும் இறப்புத்தண்டனை ஆணையிடப்பட்டுள்ளது. மேலே இருந்தபோது கேட்ட முரசொலிகளும் கொம்போசைகளும் அதைத்தான் ஆணையிட்டனபோலும். கீழே இறங்கிச் செல்வதென்பது சாவை எதிர்கொள்வது. அவன் கிளையிலேயே அமர்ந்தான். இவ்விரவை இக்கிளையில் கழிக்கவேண்டியதுதான்.

நிலவு ஒளிகொண்டு வருகிறது, மேலே சென்று தழைப்புக்குள் பதுங்கிக்கொண்டால் மட்டுமே விழிகளிலிருந்து ஒழிய முடியும். நிலவிரவில் பந்தங்களோ விளக்குகளோ ஏற்றமாட்டார்கள். ஆனால் குரங்குகளும் பறவைகளும் காட்டிக்கொடுத்துவிடக்கூடாது. அவன் மேலேறி மரக்கிளையின் நுனிக்குச் சென்று நன்றாக ஒளிந்துகொண்டான். கொற்றவையின் ஆலயத்தில் ஆயிரம்விளக்கு

வழிபாட்டின்போது ஏற்றப்படும் அகல்கள் என அவனைச் சூழ்ந்து இலைகள் ஒவ்வொன்றாக சுடர்கொண்டபடியே வந்தன.

# நீர்க்கோலம் - 49

### 48. பொற்சுழி

கஜன் ஒரு மரத்தின் கிளைக்கவருக்குள் அமர்ந்திருந்தான். முரசொலிகள் அமைவதற்குள்ளாகவே காட்டுக்குள் இருந்து அத்தனை ஏவலர்களும் வெளியேறிவிட்டிருந்தார்கள். இறுதியாக கீசகனின் காவலர்கள் பதற்றமில்லாமல் மெல்லிய குரலில் பேசியபடி வெளியே சென்றனர். கிரந்திகன் கையில் புரவிச்சவுக்குடன் தலைகுனிந்து தனக்குள் ஆழ்ந்தவனாக அவர்களை தொடர்ந்து சென்றான். காட்டுக்குள் ஆண்கள் என அரசரும் கீசகனும் குங்கனும் உத்தரனும் மட்டுமே இருக்கிறார்கள். வேறு எவரேனும் உண்டா என மீண்டும் கணக்கிட்டுக்கொண்டபின் புன்னகையுடன் ‘நானும்’ என்று சொல்லிக்கொண்டான்.

நிலவின் ஒளி பெருகிக்கொண்டே வந்தது. அது விழிகளுக்குள் புகுந்து அங்கிருந்த அத்தனை காட்சிநினைவுகளையும் உருமாற்றியது. கடந்தவைகூட நிலவின் தளிரொளியில் வண்ணமிழந்தவையாகவே எழுந்தன. பின்னர் இலைகளின் பூமுட்களைக்கூட நோக்குமளவுக்கு விழிக்கூர் அமைந்தது. தரையில் கிடந்த ஒவ்வொரு சிறு மணற்பருவையும் தனித்து நோக்கமுடிந்தது. அவன் பெருமூச்சுகளாக விட்டுக்கொண்டு நின்றிருந்தான். அவன் அறிந்த எதுவும் அங்கில்லை. மலர்கள், இலைகள், கிளைகள், அடிமரங்கள், உருளைப்பாறைகள், பூழிப்பரப்பு அனைத்தும் அப்போது பிறிதெங்கிருந்தோ

கொண்டுவந்து பரப்பப்பட்டவை. முன்பு எவ்விழியாலும் நோக்கப்படாதவை.

ஓசைகள் முற்றிலும் மாறிவிட்டிருந்தன. சிள்வண்டுகளின் ஓசையின் வெள்ளிக்கொடிச்சரடில் கட்டப்பட்ட வண்ணத்தோரணங்கள் என ஒலிகள். பொன்னிறப் பறவைச் சிணுங்கல்கள், நீலநிறத்தில் காற்றைத் துழாவும் சிறகோசைகள், கருநீல கூகைக்குழறல்கள், செம்பெருக்காக ஓடைநீரொலிகள். எதிர்பாராதபடி ஒரு பறவை ரீக் ரீக் ரிப் என்றது. எங்கோ ஒரு குரல் ர்ர்ர்ர்ர்ச் என்றது. காட்டு ஆடு, அல்லது மான். அவன் மான்விழிகளை கண்டான். அவனுக்கு மிக அருகே இரு நீர்த்துளி மின்னல்களென விழிசூடிய இருள்வரைவு. பின் கொம்புகள், காதசைவுகள், கழுத்து வளைவு. பின் மென்மயிர்ப்பிசிறு, வாலாட்டல். அதற்குப் பின்னால் மேலும் மான்கள். மேலும் மேலும் மான்கள். அவை செவிகூர்ந்து அவனை நோக்கின. விலாவும் பிடரியும் சிலிர்த்தன. அவற்றை பிறர் நோக்கக்கூடும். அவர்கள் அவனை நோக்கக்கூடும்.

அப்போதுதான் அவன் அங்கிருந்து இங்குள்ள தன்னை நோக்கினான். வண்ணத் தலைப்பாகையும் மேலாடையும் நிலவொளியில் பொந்தித்தெரிந்தன. அவன் அவற்றை உருவிச் சுருட்டி அந்த மரத்தின் மேலேயே வைத்தான். மேலும் மேலேறிச்சென்று காட்டை பார்க்கவேண்டுமென்று தோன்றியது. இலைகளை கலைக்காமல் கிளைகளில் கால்வைத்து அரணைபோல மேலேறிச்சென்றான். கிளைகளுக்குள் இலைகள் காற்றில் உலைந்துகொண்டிருந்தன. அணிப்பெண்டிரின் ஆடை நலுங்கலென ஓசை. ஆனால் காற்றே இல்லை.
திகைப்புக்கணம் கடந்ததும் அவன் காகங்களை பார்த்தான்.

கிளைகளின் இலைத்தழைப்புக்குள் அவை சிறகுகள் ஒலிக்க சுற்றிப் பறந்துகொண்டிருந்தன.

விழிமயக்கா என ஐயுற்றவனாக அவன் பார்த்துக்கொண்டே இருந்தான். காகங்களின் விழிகளைக்கூட நோக்க முடிந்தது. அவை வெறிகொண்டிருந்தன. அல்லது காகக் கண்கள் எப்போதும் அப்படித்தானா? எத்தனை காகங்கள்! அவன் நோக்க நோக்க அவை பெருகின. மேலும் எழுந்து இலைத்தழைப்புக்குள் நோக்கியபோது இலைகளுக்கு நிகராக சிறகுகள் என உள்ளம் மலைத்தது. பல்லாயிரம், பல இலக்கம் காகங்கள். அத்தனை காகங்கள் இக்காட்டில் இருந்தனவா? அவை முன்னர் ஏன் விழிகளுக்கு படவில்லை?

சூழ்ந்திருந்த இலைகள் மிளிர்ந்து அணைந்தன. மெல்லிய கனைப்பொலிபோல் ஓர் இடியோசை எழுந்தது. முரசில் தவறாக கோல் விழுந்ததுபோல. இடியோசையா? அவன் மேலேறிச் சென்று உச்சிக்கிளையில் அமர்ந்து வானை நோக்கினான். உப்புப்பரலைப் பரப்பியதுபோல விண்மீன்கள் இடைவெளியில்லாமல் செறிந்த கீழ்வானம். அதன் நடுவே நிலா. அத்தனை பெரிய நிலவை அவன் கண்டதே இல்லை. முதல் நோக்கில் அது செந்தாமரைநிறம் என்று தோன்றியது. எரிசூழ் அனல். நோக்குகையில் பொன்மஞ்சளென்றாகியது. வெண்ணிறமோ என உளம் தயங்கியதும் அப்படியே மாறியது. சுழல்கிறதா, விளிம்புகள் அலைபாய்கின்றனவா, மெல்ல எழுகிறதா, அவ்வண்ணமே நிலைகொள்கிறதா? சூழ்ந்திருந்த முகில்தீற்றல்களின் விளிம்புகள் வாள்முனைகள்போல் ஒளிகொண்டிருந்தன. அருகே நின்றிருந்த தாரை சொட்டிவிடும் துளியென ததும்பியது.

மேலைச்சரிவில் மின்னல் ஒன்று துடித்தது. நெருப்புத் துளி ஒன்றை சுழற்றி இழுத்ததுபோல. எத்தனை நூறு கிளைகள்! ஒரு கணத்தில் வானிலெழுந்தமைந்த விரிசல். காடு முழுக்க இடியோசை பெருகிப் பரவி அமைய சீவிடுகளின் ஒலி நின்றுவிட்டிருப்பதை கண்டான். முகில்திரளில் எங்கோ மெல்லிய சிம்மக்குரல் என இடியின் ஒலியெச்சம். காகங்கள் மறைந்துவிட்டிருந்தன. மெய்யாகவா? எங்கே சென்றன? கீழிறங்கி வந்து கிளைகளுக்குள் விழியூடுருவினான். அவை தென்படவில்லை. இருளை கூர்ந்து நோக்க நோக்க இலைகளின் நெளிவிளிம்புகள்கூட தெரிந்தன. காகங்கள் இல்லை.

அவன் சிறகசைவை கண்டான். முதற்கண விதிர்ப்புக்குப்பின் அவை நிலத்தில் படபடப்பதை உணர்ந்தான். மெல்ல இறங்கியபடி நிலத்தையே நோக்கினான். நிலவொளியில் இலைநிழல்கள் பரவி உயிர்கொண்டு நெளிந்து அலையடித்துக்கொண்டிருந்தது மண். இலையசைவுகளின் ஊடாக காகச் சிறகுகளும் ஓசையில்லாமல் வீசிச் சுழன்றுகொண்டிருந்தன. அவன் நீள்மூச்சுவிட்டு கண்களை மூடிக்கொண்டான். அவன் அறிந்த உலகின் அனைத்து நெறிகளும் பிறழத் தொடங்கிவிட்டன என்று உள்ளுணர்வு சொன்னது. வானையும் மண்ணையும் மெய்யாகவே ஆளும் வல்லமைகள் எழுந்து உருசூடி போர்முகம் கொண்டுவிட்டன.

அப்போது அவன் வெளியேறிச் சென்றுவிட விரும்பினான். இறங்கி புதர்களினூடாகச் சென்று காவல்முற்றத்தை அடைந்துவிடலாம். ஆனால் கரவுக்காட்டைச் சூழ்ந்து அசோகமரங்களை நெருக்கமாக நட்டு ஊடே முள்மரங்கள் வளர்த்து சேர்த்து முட்கொடிகளால் கட்டி புகமுடியா வேலி

அமைத்திருந்தார்கள். பல தலைமுறைகளாக வளர்ந்து அடர்ந்த உயிருள்ள பெருங்கோட்டையென வேல்முனைகளும் அம்புமுனைகளும் செறிந்து நின்றிருந்தது. அதற்கு அப்பால் திறந்த வெற்றிடம். வேலியைக் கடக்க எவ்வுயிராலும் இயலாது. கடந்து அவ்வெற்றிடத்தை அடைந்தால் காவல்மாடத்தில் இருப்பவனுக்கு நன்றாகவே தெரியும். முதலில் நஞ்சூட்டப்பட்ட சிற்றம்புதான் பறந்து வரும்.

அவன் பெருமூச்சுடன் மீண்டும் கிளையிலேயே அமர்ந்துகொண்டான். இன்றிரவை இங்கே கழித்தாகவேண்டும். வேறு வழியே இல்லை. இன்றிரவுக்குப்பின் நான் பிறிதொருவனாக ஆகிவிடுவேன். காணும் உலகல்ல நிகழும் உலகென்று அறிந்தவனாக மாறிவிட்டிருப்பேன். காலற்ற பாம்பின் உடலுக்குள் நூறுகால்கள் அசைவதை கண்டவன்.

அடுமனை அமைக்கும் பணிகள் மிக விரைவாகவே முடிந்துவிட்டன. கொட்டகையின் நான்குபக்கமும் திறந்திருந்தமையால் அங்கே சமைப்பது கடினம் என சம்பவன் முதலில் எண்ணினான். ஏவலனை அழைத்து “இதென்ன கூரைமட்டும் இருக்கிறது? இங்கே எப்படி சமைப்பது?” என்றான். அவன் “மழைபெய்ய வாய்ப்பே இல்லை, அடுமனையாளரே” என்றான். “மழை அல்ல, எங்களுக்கு காற்றுதான் முதல் இடர். அது அடுப்புத்தழலை வெம்மைகொள்ளச் செய்யாது.” அவன் “நான் என்ன செய்ய? வேண்டுமென்றால் தட்டிகளால் சுவர்களை அமைக்கிறேன். சற்று பொழுதாகும்” என்றான்.

சம்பவன் “இரு, நான் அவரிடம் கேட்டுச் சொல்கிறேன்” என வலவனை நோக்கி சென்றான். அவன் அருகணைந்ததுமே வலவன் திரும்பி நோக்கி “அடுமனைக் காற்றுதானே? அதை மறைக்கலாம்... ஒன்றும் சிக்கலில்லை” என்றான். சம்பவன்

மேலும் ஏதோ சொல்ல வர “பொருட்களை சீர் பிரித்து வைக்கச்சொல். அனைவரும் அங்கே இருந்தாகவேண்டும்… அரசகுடியினர் நிலவெழுந்ததுமே உண்ண விழைவார்கள்” என்றான். “ஆணை” என்றான் சம்பவன். முன்னரே அமைக்கப்பட்டிருந்த மண் அடுப்புகளுக்குமேல் அங்கே கிடந்த கற்பாறைகளை உருட்டிக்கொண்டுவந்து பெரிய அடுப்புகளை அமைத்தான் வலவன். சம்பவனிடம் “எரி எழுக!” என்றான்.

“நானா?” என்றான். வலவன் “ஆம், நீயேதான்… ஏன்?” என்றான். சம்பவனின் கைகள் நடுங்கத் தொடங்கின. அனலோனை வாழ்த்தும் வேதச்சொல்லை உரைத்தபடி மென்விறகை முதல் அடுப்பில் அடுக்கிவிட்டு சிக்கிமுக்கியை உரசி எரியெழச் செய்தான். எரி தயங்கியபடி கொழுந்தெழுந்து நின்றாட அதை நோக்கியபின் வலவன் ஒரு சிறிய பாளையை எடுத்து அப்பால் நாட்டினான். தீக்கொழுந்து காற்று இல்லாத அறைக்குள் என அசைவிலாது நின்று சுடர்கொண்டது. அடுத்த அடுப்பை அவன் பற்றவைத்தபோது வலவன் அத்தழலாட்டத்தை நோக்கி பிறிதொரு இடத்தில் ஒரு தட்டியை நிறுத்தினான், அந்தக் கணக்கு என்ன என்று அறிய சம்பவன் கூர்ந்து நோக்கினான். எவ்வகையிலும் அதை புரிந்துகொள்ள முடியவில்லை.

அனைத்து அடுப்புகளும் எரியத் தொடங்கியபோது அடுப்புக்கு ஒன்று என காற்றுத்தடுப்புகள் நின்றிருக்க தழல்கள் காற்றால் தொடப்படாமல் எரிந்தன. அவர்களின் ஆடைகளையும் குழல்களையும் கலைத்து அளைந்து சென்ற கானகக் காற்று அத்தழல்களை அறியவேயில்லை என்று தோன்றியது. சம்பவன் “முதல் அன்னம், ஆசிரியரே” என்றான். வலவன் வந்து முதல்பிடி அன்னத்தை எடுத்து நீரில் இட்டு வாய்க்குள் அன்னவாழ்த்தை சொன்னான். பின்னர் சம்பவனிடம் “உன்

கைத்திறன் திகழ்க!” என்றான். சம்பவன் தலைவணங்கி “ஆனால் தங்கள் உள்ளமும் உடனிருக்கவேண்டும்” என்றான். வலவன் தலையசைத்தான்.

அடுமனைப்பணி தொடங்கியதும் வலவன் அப்பால் சென்று ஒரு பாறைமேல் அமர்ந்து வானை நோக்கிக்கொண்டிருந்தான். நிலவு மேலெழுந்து வந்ததை கொட்டகைக்குள் நின்றபடியே சம்பவன் கண்டான். அதன்மேல் விழிநிலைக்க சிலையென வலவன் அமர்ந்திருந்தான். பின்னர் சம்பவன் அப்பால் சாலமரத்தின் அடிக்கிளையில் ஒரு பெருங்குரங்கு நிலவை நோக்கியபடி அமர்ந்திருப்பதை கண்டான். மீண்டும் விழிகூர்ந்தபோது இன்னொரு குரங்கு தெரிந்தது. பின்னர் ஏராளமான குரங்குகள் கிளைகள் முழுக்க அசைவிலாது அமர்ந்திருக்கக் கண்டான். அவற்றின் வால்மயிர்கள் நிலவொளியில் நாணல்பூக்களின் பிசிர் என ஒளிகொண்டிருந்தன. கன்னமயிர்களில் நிலவு சுடரலாயிற்று. குரங்குவாலை அசைவிலாது முன்பு கண்டதே இல்லை என அவன் நினைத்துக்கொண்டான்.

இது என் முதற்சமையல். அச்சொல் நெஞ்சிலெழுந்ததுமே கற்ற அனைத்தும் மறந்துபோய்விட்டன என்று தோன்றியது. சில கணங்கள் வெற்றுள்ளத்துடன் தழலாட்டத்தை வெறித்தபடி நின்றான். என்ன செய்கிறோம் என தோன்றியதும் படபடப்புடன் உடல் உதறிக்கொள்ள அங்குமிங்குமென நின்ற இடத்திலேயே தத்தளித்து ஓடிச்சென்று ஒரு பிடி உப்பை அள்ளினான். என்ன அது என வியந்து திரும்பப் போட்டுவிட்டு பெருமூச்சுடன் நின்றான். இரு கைகளாலும் தலையை பற்றிக்கொண்டான். “சம்பவா, முதலில் என்ன? வழக்கம்போல ஐங்கரனுக்கான

இனிப்பா?” என்றான் மேகன். “என்ன?” என்றபின் “ஆம்” என்றான். உடனே “பொறு” என்றான்.

இல்லை என்னால் இயலாது என்று தோன்றியது. மறுகணமே அலைவந்து அறைந்ததுபோல அவ்வுணர்ச்சி அவன் உடலை அதிரச்செய்ய தன்னிரக்கத்தால் விழிகசிந்து தொண்டை இறுகியது. அரசர் உண்ணப்போகும் உணவு. அன்றுவரை அவன் கையாக்கத்தை எளிய நூற்றுவன்கூட உண்டதில்லை. பிழையற்றிருக்கவேண்டும். பிழைக்காக கழுவேற நேரிடலாம். அத்துடன்... அவ்வெண்ணம் வந்ததுமே அவன் கால்கள் தளர பின்னகர்ந்து கவிழ்த்திட்ட மர உரலில் அமர்ந்துவிட்டான். அவன் சமையலை வலவன் சமையலென கொண்டு அரசர் முன் கொடுக்கப்போகிறார். கீசகனுக்குத் தெரியும் வலவனின் கைச்சுவை. எதை நம்பி இதை என்னிடம் அளித்தார்? எழுந்தோடி அவர் காலடியில் முகம் மண்பதிய விழுந்து “ஆசிரியரே, பொறுத்தருள்க! நான் எளியன். கைதிருந்தாதவன். இப்பெருஞ்சுமையை இழுக்கும் தோள்கள் எனக்கில்லை...” என்று கதறினான். ஆற்றொழுக்கில் உயிர்பதைக்க மூழ்கிச் செல்பவன் கரைவேரை என அந்தக்கால்களை கைநீட்டி பற்றிக்கொண்டான்.

அவன் உடல் மெய்ப்பு கொண்டது. அவன் வலவனின் கால்களை தன் கைகளில் மெய்யென்றே உணர்ந்தான். மிகச்சிறிய கால்கள் அவை. அப்பேருடலின் எடையை அவை தாங்குவதன் விந்தையை எண்ணி அவன் சித்தத்தின் ஆழ்மூலை ஒன்று வியந்தது. சற்றே விலகிய கட்டைவிரல்களின் நகங்கள் புலிவிழிகள்போல. மிகச்சீராக அடுக்கப்பட்ட விரல்களின் நகங்கள் இணைந்து மண்ணில் ஓர் அழகிய புன்னகை என்றாயின. உருக்குருளை என கணுக்கால்

குமிழ், மேற்கால் நரம்புக்கிளைகள். பெருஞ்சிற்பி ஒருவன் வாழ்நாள் தவமென இயற்றி வெண்கலத்தில் வார்த்த முழுமை. எத்தனை பிழையற்ற ஒழுங்கு! ஒழுங்கே இவற்றின் ஆற்றல். பெருந்தசைத்திரளின் எடையை தங்கள் ஒழுங்கினாலேயே இவை தாங்குகின்றன.

விரல் மெல்ல அசைந்தபோதுதான் அக்கால்களை தன் உள்ளமே பற்றிக்கொண்டிருக்கிறது என உணர்ந்து அவன் சூழல்மீண்டான். தன் முகம் மலர்ந்திருப்பதை தசைமாறுபாட்டினூடாக அவன் அறிந்தான். "ஆம் ஆம் ஆம்" என அவன் உள்ளம் எதையோ ஒப்புக்கொண்டது. அவன் எழுந்தபோது மிக அருகே ஒரு குட்டிக்குரங்கு வந்து நின்றிருந்தது. அவன் எழுந்த அசைவில் துள்ளித்தெறித்து தூணைப்பற்றி மேலேறி தொற்றி நின்று சுழன்று தலைகீழாகி கண்சிமிட்டி "சிப் சிப்" என்றது. அவன் புன்னகைத்தான். அது கண்களை சிமிட்டியபின் மெல்ல கீழிறங்கி வந்தது. "எனக்கு வெல்லம் வேண்டும்" என்றது.

அவன் திடுக்கிட்டு நெஞ்சதிரப்பெற்றான். அதன் குரலை மெய்யாகவே கேட்டதாக உளமயக்கு கொண்டான். அவன் "சரி" என்றபோது குட்டிக்குரங்கு "இரண்டு கைகளுக்கும் வெல்லம்" என்றது. அவன் உடல் மெய்ப்பு கொண்டது. உளமயக்கல்ல. குரங்கு அவனிடம் பேசிக்கொண்டிருந்தது. "வெல்லம் இல்லையே!" என அவன் சிரித்துக்கொண்டே சொன்னான். "நீ கெட்டவன்..." என்றது குட்டி. "நீ துயில்கையில் நானே சென்று எடுத்துக்கொள்வேன்..." கைகளை விரித்துக் காட்டி "பெரிய வெல்லம்" என்றது.

அவன் குனிந்து அதை நோக்கி "அவ்வளவு வெல்லம் தின்றால் உனக்கு வயிறு வலிக்குமே?" என்றான். அது முகம் சுளித்து

எண்ணிநோக்கியபின் “நான் நிறைய நீர் குடிப்பேன்” என்றது. பின்பக்கத்தை சொறிந்துகொண்டு அமர்ந்தது. “நீ எனக்கு வெல்லம் கொடுக்காவிட்டால் நான் அந்தக் கலத்தின்மேல் சிறுநீர் கழிப்பேன்.” அவன் வாய்விட்டு சிரித்து “சரி, சரி... வெல்லம்தானே?” என எழுந்து சென்று பிரம்புக்கூடையைத் திறந்து இரு வெல்ல உருண்டைகளை எடுத்தான். “இந்தா” என்றான். அது அருகே வந்து அவனை நோக்கி “நீ என்னை பிடிக்கக்கூடாது. பிடித்தால் நான் கடிப்பேன்” என்றது. “இல்லை, பிடிக்கமாட்டேன்.”

அது மேலும் அருகே வந்து வெல்ல உருளைகளை நோக்கி “பெரியவை...” என்றது. “ஆம், உன்னால் கொண்டுசெல்ல முடியாது.” அது திரும்பி ரீச் என ஒலியெழுப்பியது. அங்கிருந்து இன்னொரு குட்டிக்குரங்கு எட்டிப்பார்த்தது. “அவள் என் அக்கா. அவள்தான் இரண்டு வெல்லம் கேட்கச் சொன்னாள்.” சம்பவன் “அவள் ஏன் ஒளிந்து நிற்கிறாள்?” என்றான். “அவள் அப்படித்தான்... என்னிடம் சொல்லிவிட்டு ஒளிந்துகொள்வாள்.” “சரி இதை கொண்டுசென்று அவளிடம் கொடு.”

இரு கைகளாலும் ஒரு வெல்ல உருளையை கொண்டுசென்று அக்கையிடம் கொடுத்துவிட்டு திரும்பிவந்து இன்னொன்றை எடுத்துக்கொண்டு ஓடி நின்று திரும்பி “நீ நல்ல குரங்கு” என்றது. அவன் அக்கா “அங்கே என்ன பேச்சு? வா” என்று சீறியபின் வெல்லத்துடன் வாலைத் தூக்கியபடி ஓட குட்டியும் வாலை வளைத்துத் தூக்கியபடி துள்ளித்துள்ளி ஓடியது. இரு குரங்குகளும் காட்டின் முள்வேலிச்சூழ்கையை அடைந்து தாவியேறி மரங்களின்மேல் சென்று மறைந்தன. அங்கே சிறுகாற்று நுழைந்ததுபோல இருண்ட கிளைகள் கொப்பளித்தன.

அவன் புன்னகையுடன் திரும்பி “எட்டு நாழி உப்பு அள்ளு” என்றான். மேகன் வியப்புடன் “அவ்வளவு…” என்று தொடங்க சம்பவன் சென்று அதற்கேற்ற புளியுருளைகளை அள்ளினான். மேகன் “பீமபாகத்தை கற்றுவிட்டாய் போலிருக்கிறதே!” என்றான். சம்பவன் புன்னகைத்தான். “எனக்கென்னவோ இந்த வலவர் பீமனின் மாணவர் என்று தோன்றுகிறது” என்றான் மேகன். “அவர் மாருதியின் அருள்பெற்றவர்” என்றான் சம்பவன்.

ஒவ்வொன்றும் அவன் கைகளுக்கு முன்னரே ஐயமின்றி தெரிந்திருந்தது. அவன் தொட்ட இடத்தில் தேடிய பொருள் இருந்தது. அவன் எண்ணியவை அடுகலங்களில் நிகழ்ந்தன. அனலின் அசைவைக்கூட அவன் உள்ளம் ஆள்கிறதென்று தோன்றியது. “நீ இத்தனை ஆற்றலுடன் அடுமனையை ஆள்வாய் என அறிந்திருக்கவில்லை” என்றான் மேகன். “நான் அவரே” என்றான் சம்பவன். மேகன் திரும்பி நோக்கிவிட்டு “என்ன செய்கிறார் அங்கே? அமர்ந்து துயில்கிறாரா?” என்றான். “இல்லை, இங்கு அடுமனையை ஆள்கிறார்” என்றான் சம்பவன்.

முதல் மணம் எழுந்ததும் சம்பவன் உள்ளமெங்கும் படபடப்பை உணர்ந்தான். அறியாமல் கைகூப்பி அக்கலத்தை நோக்கியபடி நின்றான். அது புளிக்குழம்பின் மணம். ஆனால் முன்பு எங்கும் அவன் அறிந்தது அல்ல. அவன் கையில் இருந்து எழுந்தது. இனி அவனால் மட்டுமே நிகழ்த்தப்பெறுவது. அவன் அதை நீள்குழலும் அளிவிழிகளும் குறுநகையும் அமுதகலமும் அருள்கையும் என தோன்றிய தெய்வமென்றே கண்டான். “அரிய மணம்!” என்றபடி மேகன் அருகே வந்தான். “நிகழ்ந்துவிட்டது!” என அவன் தோளை தொட்டான். “ஆம்” என்றான் சம்பவன். பருப்புக்குழம்பிலிருந்து மணம் எழுந்தது. பின் பயறுக்குழம்பு. அதன்பின் வழுதுணங்காய் குழம்பு.

ஒவ்வொன்றும் ஒரு மணம். அவள் உடலில் சென்றமையும் ஓர் அணி.

விழித்துக்கொண்டு முனகிய வலவன் எழுந்து கைகளை விரித்து சோம்பல் முறித்தபின் நிழல் பெருகி அடுமனைக்கூரைமேல் கவிந்து நீள உள்ளே வந்தான். ஒவ்வொரு கலத்தின் அருகிலும் சென்று நின்று தலையசைத்தும் ஓரிரு சொற்களில் சில ஆணைகளை இட்டும் கடந்துசென்றான். “சிறிது நீர்” என்றும் “அனல் அவிக” என்றும்தான் அவன் சொன்னான். உப்புபுளியிணைவு குறித்து ஒரு சொல்லும் சொல்லவில்லை என உணர்ந்ததும் சம்பவன் முகம் மலர்ந்து அருகே சென்று நின்றான். அவன் தோளில் தன் எடைமிக்க கையை வைத்து “நன்று… உன் தெய்வம் உடனமைகிறது” என்றான் வலவன்.

“தங்கள் காலடியால் எனக்கு அருளினீர்கள், ஆசிரியரே. இவ்வண்ணம் நான் எப்போதுமே சமைத்ததில்லை” என்றான் சம்பவன். அதைச் சொல்லும்போதே அவன் குரல் தழைந்து விழிகளில் நீர் பரவியது. அவன் தோளை மெல்லத்தட்டி “இது ஒரு படி… வானேறும் பாதையில் ஓர் அடி. அதை உணர்ந்தவனுக்கு வெற்றி என்பது இங்கு நிகழ்வதல்ல என்னும் தெளிவு கைவரும்” என்றபின் “நான் சென்று ஓய்வெடுக்கிறேன். இனி இங்கு ஒன்றும் செய்வதற்கில்லை…” என்றான். “பரிமாறுவதற்கு ஏவலர் வருவார்களா?” என்றான் சம்பவன். “ஏவலர் உள்ளே நுழைய ஒப்புதல் இல்லை. உள்ளே சேடியரும் தாசியரும் மட்டுமே. அவர்கள் வருவார்கள்” என்றபின் வலவன் நடந்து சென்றான்.

அக்கால்கள் சந்தனம் ஒற்றும் பெண்ணின் கைகள்போல மெல்ல மெல்ல மண் தொட்டு நடந்துசெல்வதை நோக்கி

அவன் நின்றான். ஆம், யானைப்பாதத்தின் ஒலியைக்கூட அவன் கேட்டதே இல்லை என நினைவுகொண்டான்.

குடிலுக்குள் அரசி ஆடையணிந்துகொண்டிருக்க அருகே சைரந்திரி நின்றிருந்தாள். குடில்வாயிலில் சுபாஷிணி தயங்கி நின்றாள். சைரந்திரி தலைதிருப்பி நோக்கி "உணவுக்கலங்கள் வந்துவிட்டனவா?" என்றாள். "ஆம், தேவி. அங்கே சிறுமுற்றத்தில் கொண்டுவந்து வைத்திருக்கிறார்கள்" என்றாள் சுபாஷிணி. "சிறுமுற்றத்திலா? நிலவை கிளைநிழல்கள் பாதி மறைத்திருக்குமே" என்ற சைரந்திரி ஒருகணம் எண்ணியபின் "அப்பால் ஒரு வட்டப்பாறை இருக்கிறதல்லவா?" என்றாள். அரசி "ஆம், அது நல்ல இடம். ஆனால் ஏறுவது சற்று கடினம்... வழுக்கும்" என்றாள். "அதை நான் பார்த்துக்கொள்கிறேன், அரசி. அங்கே நிலவு முழுமையாகத் தெரியும்" என்றாள் சைரந்திரி. சுபாஷிணியிடம் "உணவுக்கலங்களை அங்கே கொண்டுசென்று வைக்கச்சொல்" என்றாள். "ஆணை" என தலைவணங்கி சுபாஷிணி வெளியே சென்றாள்.

அவளுக்கு இனிய சோர்வு ஒன்று உளம்நிறைய செறிந்திருந்தது. அங்கு வந்தபோதிருந்த உவகைத்துள்ளல் என்னவாயிற்று? அது அந்த இளைஞனைப் பார்த்ததுமே அகன்றுவிட்டதா என்ன? அவன் விழிகளை அவள் நினைவுகூர்ந்தாள். அவை அவளை எளிய சேடி என எண்ணின. பின் ஐயம் கொண்டன. அவள் நாணியதும் பெண் என அணுகின. அவள் தீப்பற்றிக்கொண்டதுபோல ஒரு படபடப்பை அடைந்தாள். அவளை முதலில் கண்ட கணம் அவன் அழகி என உணரவில்லை, எளிய சேடி என்றே உணர்ந்தான்.

கசப்புடன் அவள் உதடுகளை கடித்துக்கொண்டாள். மறுகணம் எண்ணங்கள் பொங்கி எழுந்தன. அவன் யார்? வேலேந்தி காவல்

நிற்கும் எளிய காவலன். அவள் அரசியிடம் நேரில் பேசும் இடத்தில் இருக்கிறாள். ஒரு சொல் உரைத்தால் அவள் அவனை கழுவில் அமரச்செய்ய முடியும். அதை முன்னரே உணர்ந்துதான் அவனை அச்சுறுத்தியிருக்கிறோம் என அப்போதுதான் புரிந்தது. அவனுடைய பதறிய முகத்தை எண்ணியபோது புன்னகை எழுந்தது.

அவள் தலைமைச்சேடியிடம் சென்று சைரந்திரியின் ஆணையை அறிவித்தாள். “இதை அரசி சொன்னாரா, இல்லை அந்த நெட்டைச்சிலை சொன்னாளா?” என்றாள் தலைமைச்சேடி. “அரசியின் ஆணை… யார் சொன்னால் என்ன?” என்றாள் சுபாஷிணி. “வர வர நீயும் பேசத்தொடங்கிவிட்டாய். பொழுதுகூடினால் நீர்ப்பாம்புக்கும் நச்சுப்பல் எழும்…” என்றாள் தலைமைச்சேடி. உணவுகள் அனைத்தும் பெரிய மரக்குடைவு குடுவைகளுக்குள் வெள்ளிக்கலங்களில் வைக்கப்பட்டிருந்தன. அவற்றைச் சுற்றி குருவிக்கூடால் ஆனதுபோன்ற நார்நுரை வைக்கப்பட்டு மரமூடியால் இறுக மூடப்பட்டிருந்தது.

குடுவைகளை தோளில் மாட்டுவதற்கு நீண்ட கயிறுகள் இருந்தன. சேடியர் அவற்றை சுமந்துகொண்டு கழிகளை ஊன்றி குனிந்து நடந்தனர். “நீ அந்தக் குடுவையை எடுத்துக்கொள்” என்றாள் தலைமைச்சேடி. “நானா?” என்றாள் சுபாஷிணி. “ஏன்? நீ என்ன அரசிளங்குமரியா?” சுபாஷிணி “இல்லை, தேவி அழைத்தார்கள் என்றால்…” என இழுக்க “செல்…” என்று அவள் கடுமையாக சொன்னாள். குடுவை எடைமிக்கதாக இருந்தது. அவளால் நடக்கமுடியவில்லை. தரையில் பின்னியிருந்த வேர்களில் கால்கள் தடுக்கின. விழுந்துவிடுவோம் எனத் தோன்றியது. மூச்சு செறிந்து குளிர்வடம்போல ஆகி மூக்குமுதல் நெஞ்சுவரை நிறைந்து நின்றிருந்தது.

வட்டப்பாறையைக் கண்டதும் அவள் அயர்ந்து நின்றுவிட்டாள். தொலைவில் அது அத்தனை உயரமற்றது எனத் தோன்றியது. அருகே சென்றபோதுதான் பனைமர உயரம் கொண்டதென்று தெளிவாகியது. அதில் ஏறிச்செல்ல ஒரே வழிதான். மேலிருந்து உருண்டு விழுந்த பாறைகள் பெரிய படிக்கட்டுபோல ஒன்றன் மேல் ஒன்றெனக் கிடந்தன. சேடியர் கழிகளை ஊன்றியபடி அதில் தொற்றி ஏறி மேலே சென்றார்கள். முதலில் சென்றவள் அங்கே நின்று ஏதோ சொன்னது குரல்விளக்கமில்லாது கேட்டது. காட்டுக்குள் ஆடு ஒன்று தும்மலோசை எழுப்பி குளம்புகள் சருகுச்சுள்ளிகளில் அழுந்தி ஒலியெழுப்ப நடந்து அகன்றது.

“செல்” என பின்னால் வந்த சேடி குரலெழுப்ப அவள் மூச்சைத் திரட்டி விசையாக்கி உடலை உந்தி முன்செலுத்தினாள். பின்னாலிருந்த குடுவையின் எடை அவளை முன்னால் தள்ளியது. விழாமலிருக்க கால்வைப்பதே நடப்பதென்றாகியது. தொடைகளிலும் கழுத்திலும் அந்த எடை தசைகளை கவ்வி கசக்கியது. அவள் மூச்சுவாங்க சற்று நின்றாள். பின்னால் வந்த ஏழு சேடியர் அவளைக் கடந்து சென்றனர். தானே இறுதியில் என உணர்ந்ததும் அவள் கிளம்புவதற்காக உடலை உந்தி முன்னெடுத்தாள். ஏதோ அசைவது விழிமுனையில் தெரிந்தது. உடனே உடல் சிலிர்த்து அசைவிழந்தது. அதன் பின்னரே அவள் அந்த நாகத்தை பார்த்தாள்.

அவள் கையளவு பெரிய நாகம். மெல்ல நெளிந்து இலைகளிலிருந்து நிலவொளி விழுந்த இடத்தைக் கடந்தபோது அதன் உடல் பொன்னிற ஒளி கொண்டது. விழிமயக்கா, அது நாகமேதானா என அவள் எண்ணி சற்று குனிந்து கூர்ந்து நோக்கினாள். வால்நுனி நெளிந்து இலைகளுக்குள் மறைந்தது.

நாகம்தான். அவள் உடலைக் கட்டியிருந்த சரடுகள் அறுபட்டதுபோல மெல்லிய துடிப்பு ஏற்பட்டது. அதை கூவிச்சொல்லவேண்டும் என எண்ணி உடனே இயல்பாக அடக்கிக்கொண்டாள். அதை எவரும் நம்பப்போவதில்லை. எடைசுமக்கச் சோம்பி அவள் சொல்லும் பொய் என்றே கொள்வார்கள்.

கால்களை எடுத்துவைக்கும் ஒவ்வொரு முறையும் உடல் நாகம் நாகம் என கூசியது. அதன் உடலின் ஒளியலைவு விழியில் எஞ்சியிருந்தது. பொன்னிறமான நாகம். பொன் காய்ச்சிய கலம் கவிழ்ந்து உருகல் வழிவதுபோல. பொன்னுடல் கொள்ளுதல். அது பொன்னிறமன்றி பிறிதொன்றாக இருக்கமுடியாது.

# நீர்க்கோலம் - 50

**49. மதுநிலவு**

முதலில் யவன மதுக்கலங்கள் காட்டுக்குள் சென்றன. கயிறு சுற்றி நீரோடைக்குள் குளிரப்போட்டிருந்த அவற்றை எடுத்து ஈரமரவுரிநார் செறிந்த நார்ப்பெட்டிகளில் அடுக்கிவைத்து சேடியரிடம் கொடுத்தனுப்பினார்கள் அடுமனையாளர்கள். அவற்றுக்கு மேலே மரக்கிளைகளில் குரங்குகள் எம்பி எம்பி குதித்து ஹுஹுஹு என ஓசையிட்டபடி உடன்சென்றன. மதுப்புட்டிகளும் உடன் உண்பதற்கான ஊன்துண்டுகளும் சென்று முடிந்ததுமே கீசகனின் ஏவற்பெண்டுகள் உணவுக்காக வந்துவிட்டனர். "உணவு எங்கே என்று கூவுகிறார். கையில் சவுக்குதான் உள்ளது என்பது ஆறுதல். வாள் என்றால் குருதி சிந்தியிருக்கும்" என்றாள் தலைமைச்சேடி.

அரசருக்கான உணவு செல்வதற்குள்ளாகவே கீசகனுக்கான உணவை அளிக்கலாமா என சம்பவன் குழம்பினான். "இங்கு அதுதான் வழக்கம், அனுப்பிவை. யானையை பகைக்கலாம், பாம்பை பகைக்க முடியாது" என்றான் மேகன். ஒவ்வொருவருக்கும் உரிய உணவுக்கலங்கள் தனித்தனியாக வெங்குடுவைகளில் வைக்கப்பட்டு காத்திருந்தன. அவற்றை ஏவற்பெண்டுகள் வாங்கி தோளிலும் தலையிலும் ஏற்றிக்கொண்டு சென்றார்கள். அவை அகன்றதும் அடுமனை முற்றம் ஒழிந்தது. சம்பவன் "காவலர்களுக்கான மதுவையும் உணவையும் விளம்புக" என்றான்.

மேகன் "அதற்கு மெய்க்காவல்நாயகமோ அரசக்காவல்நாயகமோ ஆணையிடவேண்டும் அல்லவா?"

என்றான். “வலவர் ஆணையிட்டார் என்று சொல்க. ஒன்றும் சொல்லமாட்டார்கள்” என்றான் சம்பவன். மேகன் தயங்கியபின் “சரி” என்றான். மதுக்கலங்கள் நுரைசிதற மணம்எழ முற்றத்திற்குச் சென்றபோது காவலர்கள் ஒரே குரலில் எழுப்பிய முழக்கம் மேகனை சிரிக்கச் செய்தது. கலங்கள் இறக்கப்பட்டு மூங்கில் குவளைகளில் மது பரிமாறப்பட்டது. காவல்கோட்டத்திலிருந்தவர்கள் சுரைக்காய் குடுவைகளை கொடுத்தனுப்பினர்.

காவலர்தலைவன் புரவியில் வந்து “எவரது ஆணை மதுவழங்க?” என்று கூவினான். “வலவர் ஆணையிட்டார்” என்றான் மேகன். காவலர்தலைவன் சில கணங்கள் சொல்லின்றி நோக்கிவிட்டு புரவியைத் திருப்பி அகன்றான். அவ்விழிகளில் வந்த அச்சத்தைக் கண்ட மேகன் புன்னகைத்தான். காவலர்தலைவன் தொலைவில் சென்றதும் காவலர்கள் உரக்க “ஓஓ” என்று கூவினர். “மேகரே, மதுவை ஊற்றும்... நிரம்பி வழியும் கோப்பையில் மதுவருந்தி நெடுநாட்கள் ஆகின்றன” என்றான் ஒரு முதிய காவலன்.

“ஊன்துண்டுகள்” என ஒரு குரல் எழுந்தது. “எண்ணையில் பொரித்தவை” என்று இன்னொருவன் சொன்னான். ஊன்துண்டை எடுத்து வாயிலிட்டு மென்றபடி ஒரு முதிய புரவிக்காவலன் “மூடா, ஊன் தன் நெய்யிலேயே வெந்திருக்கவேண்டும். ஆகவே சுட்ட ஊனே சுவை” என்றான். இன்னொருவன் “ஆம், அந்த மெல்லிய கரியின் சுவையே மெய்யான ஊன்சுவை” என்றான். “யவன மதுவுடன் எண்ணையில் பொரித்தவற்றை உண்ணலாகாது. உள்ளூர் கள்ளுக்கே அது பொருந்தும்” என்றான். “ஊன்! ஊன் எங்கே?”

என்று ஒருவன் கூவினான். அவர்கள் உண்டும் குடித்தும் இறுக்கங்கள் அவிழ மகிழ்வுகொள்ளலாயினர்.

“இங்கே கந்தர்வ கன்னியர் வருவார்களா?” என்று ஒருவன் கேட்டான். “விடியற்காலையில் வருவார்கள்... அரசர்களால் தொடவும் நீவவும் மட்டுமே முடியும் என்று உணர்ந்த பின்னர்.” சிரிப்பொலி. ஒருவன் “பார்த்து... நேராக குதிரைகளை நோக்கி சென்றுவிடப்போகிறார்கள்” என்றான். அவனை இன்னொருவன் ஓங்கி அறைய மீண்டும் வெடிச்சிரிப்பு. மேகனின் தோளைத்தொட்டு ஒருவன் “ஊனுணவு உண்டு அல்லவா?” என்றான். இன்னொருவன் “வலவர் கைச்சமையல்... மணமே சொல்கிறதே” என்றான். இன்னொருவன் “இன்று வலவர் வேறுவகையில் சமைத்துள்ளார்” என்றான்.

மேகன் “இன்று சமைத்தவர் எங்களவர், சம்பவர்” என்றான். முதியவன் “மெய்யாகவா? அடுமனைமேல் தெய்வம் கொலுகொண்டதுபோல் அல்லவா நறுமணம் நின்றது?” என்றான். “அவர் வலவரின் கால்தொட்டு சென்னிசூடும் மாணவர்” என்றான் மேகன். “ஆம், குருவருள் கூடியிருக்கிறது.” ஒருவன் “வலவர் என்ன செய்கிறார்?” என்றான். “அவர் மதுவருந்தி துயில்கிறார்” என்றான். “மெய்யாகவா?” என்றான் இன்னொருவன். “ஆம், அவர் இங்கு வந்தபின் பித்தர் போலிருக்கிறார்.”

அப்பால் ஒரு குரல் “உணவுக்கலங்கள்!” என ஓசையிட்டது. “ஆம், உணவு! ஊனுணவு!” என ஓசைகள் எழுந்தன. சிலர் தலைப்பாகைகளைக் கழற்றி வானோக்கி விட்டெறிந்தார்கள். சிலர் கைவிரித்து கூச்சலிட்டனர். இரு பக்கமும் கயிறிட்டு கட்டப்பட்ட பெருங்கலங்களை காவடிபோல தூக்கியபடி அடுமனையாளர்கள் வந்தார்கள். “ஊன்சோறு. வெண்சோறு,

இன்கூழ், ஊன்கூழ், நெய்யப்பம், கீரையப்பம், நுரைமாவுஅப்பம், ஊன்நெய் அப்பம், கிழங்குக்கூழ், ஊன்துருவல்” என்று அஸ்வகன் கூவ “ஆகுதியாகுக! ஆகுதியாகுக!” என இருவர் எதிர்க்குரலெழுப்பினர். சூழ்ந்திருந்தவர்கள் அனைவரும் கூச்சலிட்டு சிரித்தனர்.

“பருப்புக்கூட்டு, கிழங்குக்கூட்டு, அவரைக்கூட்டு, பயறுக்குழம்பு, பருப்புக்குழம்பு, புளிக்கறி, மோர்க்கறி” என்று அஸ்வகன் மீண்டும் கூவினான். “கீரைவடை இல்லையா?” என்று ஒருவன் கேட்டான். “பருப்புக்குழம்புடன் வெண்டைக்காய் விழுக்கு அல்லது வழுதுணங்காய் வாட்டு இருக்கவேண்டும்” என்றான் ஒருவன். கலங்கள் வந்தபடியே இருந்தன. “அது என்ன சுவை?” என்றான் ஒருவன். “பழச்சாற்றில் வேகவைத்த ஊன்” என்றான் அஸ்வகன். “என்ன சொல்கிறீர்?” என்றான் ஒரு வீரன். “அது பீதர்நாட்டு சமையல்முறை…”

பாளைகளிலும் பட்டைகளிலும் இலைகளிலும் கோட்டப்பட்ட தொன்னைகள் வந்து பரவின. உணவை கொதிக்கும் குமிழி தெறிக்க நீள்பிடிகொண்ட அகப்பைகளில் அள்ளி பரிமாறினர் அடுமனையாளர். அவர்கள் உண்ணத்தொடங்கினர். சற்றுநேரத்தில் உணவு உருகிய பாகு வழிந்து பரவுவதுபோல அப்பகுதியெங்கும் நிறைந்தது. அது அவர்கள் அனைவருக்குள்ளும் ஒற்றைத்தெய்வமென புகுந்துகொண்டது. ஓருடலென்றாக்கியது. நூறு கைகள் நூறுநூறு கால்கள் நூறாயிரம் விழிகள் கொண்ட பெருவிலங்கு. அதன் நாவுகள் தழலென்றாயின. உதடுகள் மென்றும் நக்கியும் உறிஞ்சியும் ஓர் அறியாமொழிச் சொற்களை பேசிக்கொண்டிருந்தன. உணவுக்குரிய தெய்வம் மட்டும் அறிந்த மொழி.

“உண்ணும் ஒலிக்கு இணையொன்றில்லை, அஸ்வகரே” என்றான் மேகன். அஸ்வகன் திரும்பி ஓடி அடுமனைக்குள் புகுந்து அங்கே கலங்கள் நடுவே உணவின் அளவை நோக்கிக்கொண்டிருந்த சம்பவனின் அருகே சென்று அவன் கையைப்பற்றி “வா” என்றான். “என்ன?” என்றான் சம்பவன். “இங்கே பணிகள் உள்ளன. உணவு போதுமா என...” அஸ்வகன் “வாடா!” என்று அவனை இழுத்துச்சென்றான். அவனைக் கண்டதுமே ஒரு வீரன் அடையாளம் அறிந்து “அதோ” என்று கைகூப்பினான். “வீரரே, இவன் எங்கள் குலத்தின் அடுதொழிலன். அஸ்தினபுரியின் பீமசேனருக்கும் விராடபுரியின் வலவருக்கும் மாணவன்” என்றான். அனைவரும் கைகளைத் தூக்கி வாழ்த்தோசையிட்டனர்.

ஒரு முதிய வீரன் கையில் உணவுத்தொன்னையுடன் எழுந்து “இத்தருணத்தில் எங்களுக்கு நீங்களே அரசர். நீங்களே மூதாதை. நீங்களே தெய்வம்” என்றான். “ஆம்! ஆம்! ஆம்!” என்று வீரர்கள் கூவினர். ஓர் இளைஞன் “அன்னை! நீங்கள் எங்களுக்கு அன்னை!” என்று உடைந்த குரலில் கூச்சலிட்டான். அனைவரும் “அன்னையே! தாயே” என்று கூவினர். நகையாட்டென எழுந்த அக்குரல் இரண்டாவது சொல்லில் கனிந்த அழைப்பென்றாகியது. பின் பல நூறு குழவிகளின் கண்ணீர் குரலென்று மாறியது.

சம்பவன் மெல்ல நடுங்கிக்கொண்டிருந்தான். “போதும்... நம் குலதெய்வங்களுக்கு குளிரக்குளிர அன்னமுழுக்கு செய்துவிட்டாய்” என்று கம்மிய குரலில் அஸ்வகன் சொன்னான். விம்மியபடி தலைகுனிந்து கண்களை கைகளால் மூடிக்கொண்டான் சம்பவன். “செல்க... சென்று ஓய்வெடு... இங்கு அனைத்தையும் நானே பார்த்துக்கொள்கிறேன்.” சம்பவன்

“இல்லை…” என்று சொல்ல அஸ்வகன் மேகனிடம் “சென்று படுக்க வை…” என்றான். மேகன் சம்பவன் கையைப் பற்றி “வருக, அடுமனைத் தலைவரே” என்றான். “என்னடா சொல்கிறாய்?” என்றான் சம்பவன். “இனி அவ்வண்ணமே அழைப்பேன்… இதற்குமேல் என்ன?” என்றான் மேகன்.

சம்பவன் கைநீட்டி “அங்கிருக்கிறார், உளம் கனிந்து தொட்டால் ஓடைநீரை இனிக்கச் செய்யும் யோகி… அவர் முன் நாமெல்லாம் நின்றிருக்கிறோம் என்று உணர்க!” என்றான். “ஆம், ஆனால் அவருக்கு நிகர் நீங்கள்… இல்லையென்றால் கேளுங்கள் இவர்களிடம்” என்றான் மேகன். “இல்லை, அதைத்தான் நான் உணர்ந்துகொண்டிருந்தேன். நறுமணம், நற்தோற்றம், நற்சுவை என நல்லுணவுக்குரிய மூன்றும் அமைந்துவிட்டன. ஆயினும் அவர் கை தொட்ட சமையல் அல்ல இது. குறைவது என்ன?” மேகன் “எனக்குப் புரியவில்லை” என்றான். “குறைகிறதா இல்லையா, அதை சொல்” என்றான் சம்பவன். மேகன் ஒன்றும் சொல்லவில்லை.

“ஆம், குறைகிறது. குறைவது ஒன்றே… அவருடைய பெருங்கருணை. அதை இப்போது இவர்கள் என்னை வாழ்த்தக் கேட்டபோது உணர்ந்தேன். என்னை அவர்கள் அன்னையென்றபோது உள்ளுருகியது. மெல்லும், சவைக்கும், மாந்தும், அருந்தும் ஒலிகளைக் கேட்டதும் என் முலைகள் பருத்துச் சுரப்பவைபோல விம்மின. பாலாழி ஒன்று அலைகொண்டெழுந்தது. அப்போது அறிந்தேன், அவர் உளம் விரிந்த பேரன்னை… நான் வென்றாகவேண்டும், நின்றாகவேண்டுமென்று விழைந்தேன். அஞ்சினேன். அடிபணிந்து ஆற்றல்கொண்டு என் கடனை ஆற்றி எழுந்தேன்.

அவருக்கு அடுமனைத் தொழில் என்பது அள்ளி எடுத்து முலைசேர்க்கும் அன்னையின் ஆதுரம் மட்டுமே…”

களைப்புகொண்டவன்போல நின்று “அது என்னில் கைகூடவேண்டும்” என்றான் சம்பவன். “அப்பெருங்கைகள்… அவை இவ்வுலகை தன் கருணையால் ஆளும் அக்கருங்குரங்குக்கு உரியவை அல்லவா? ராகவராமனும் அவனுக்கொரு சிறுமைந்தனே அல்லவா? அவன் தோளிலமர்ந்து செல்கையில் ஆழியும்சங்கும் கொண்டு எழுந்த விண்ணளந்தோனே ஆயினும் அவன் அவ்வாறு உணர்ந்திருக்க மாட்டானா?” சம்பவன் கண்ணீர் வழிய தனக்குள் என சொல்லிக்கொண்டே வந்தான். நடக்கமுடியாதவன்போல சில இடங்களில் கால்தெற்றினான். மேகன் அவனை பிடித்துக்கொண்டான்.

“நான் அவ்வாறு ஆகவேண்டும். அதற்குரிய வழி இக்கணமே இதை நான் சமைத்தேன் என்பதை முற்றுதறுவதுதான். என் தலையை அக்கால்களில் கொண்டுசென்று வைத்து எளியோன் சிறியோன் கடையோன் என சித்தம் அழிவதுவரை சொல்லிக்கொண்டிருப்பதுதான். எத்தனை கனிந்தால் அக்கைகள் அமுதூறத் தொடங்கியிருக்கும்! எத்தனை நெகிழ்ந்திருந்தால் நெஞ்சக்கருணையெல்லாம் அன்னமென்றாகியிருக்கும்! நான் அறிவிலி, இதோ இப்போது அதை உணர்ந்தேன்.”

“அத்தனை குரல்கள் என்னை வாழ்த்தி எழுந்தபோது நான் என என்னை உணர்ந்து தருக்கினேன்… நான் அதிலிருந்து விடுதலை கொள்ளவேண்டும்… சீழ்க்கட்டியை என அதை அறுத்து வீசவேண்டும்… அஞ்சனையின் பேருருவ மைந்தன்மேல் ஆணை. இனி உண்பவரின் வாழ்த்துக்களை ஏற்கச் செல்லமாட்டேன். இனி அடுமனைவிட்டு நீங்கமாட்டேன்.

அவியுண்ணும் தெய்வங்கள் என அவர்கள் கண் அறியாது அமைந்து என் சமையலை அறியட்டும்…”

மேகன் அவனை துயிலுக்கான சிறுகொட்டகைக்குள் கொண்டுசென்றான். அங்கே தரையிலிட்ட ஈச்சம்பாயில் பீமன் மல்லாந்து துயின்றுகொண்டிருந்தான். அவனைச் சுற்றி மதுக்குடங்கள் உருண்டு கிடந்தன. மூச்சு ஓடுவதே தெரியவில்லை. அகன்ற நெஞ்சின் குழியில் மட்டும் தவளைக்குழி என மெல்லிய அசைவு. “பழுதற்ற உடல்” என்று மேகன் சொன்னான். “மூச்சொலி எழாது துயில்பவரை இப்போதுதான் காண்கிறேன்.”

சம்பவன் கைகூப்பியபடி நின்றான். “அமர்க!” என்று மேகன் அவனை அமரச்செய்தபின் சென்று உருண்டுகிடந்த ஒரு யவன மதுக்குடத்தில் இருந்து எஞ்சிய மதுவை அங்கே கிடந்த குவளை ஒன்றில் ஊற்றி கொண்டுவந்தான். “அருந்துக!” சம்பவன் “அய்யோ” என்றான். மேகன் உரக்க “இது ஆசிரியரின் மிச்சில். அவருடைய அருட்கொடை எனக் கொள்க!” என்றான். சம்பவன் தயங்கியபடி அதை வாங்கிக்கொண்டான். “அருந்துக…” என்றான் மேகன். சம்பவன் முகர்ந்துநோக்கி “பல மதுவகைகளை கலந்திருக்கிறார்… முற்றிலும் புதிய மதுவென்று ஆக்கியிருக்கிறார்” என்றான்.

“ஆம், மதுவை கலப்பது ஒரு யவனக்கலை” என்றான் மேகன். “அவர்களின் குலங்களில் அதற்கென்றே திறனோர் உள்ளனர். வேள்விசெய்யும் அந்தணருக்கு நிகராக அவர்களை யவனர் வழிபடுகிறார்கள்.” சம்பவன் மீண்டும் முகர்ந்து “இதற்கு நிகரான ஒரு மதுவை நான் முகர்ந்ததில்லை… தெய்வமலர் ஒன்றில் ஊறியதுபோல” என்றான். “ஆம், அது தெய்வமலரில் உங்களுக்கென ஊறியது… அருந்துக!” என்றான் மேகன். சம்பவன்

அதை துளித்துளியாக உறிஞ்சி அருந்தினான். வாய்க்குள் அந்த நறுமண ஆவியை நிறுத்தி மெல்ல மூச்சால் விட்டபடி "இனிது" என்றான்.

"இன்னும் சிறிது" என பிறிதொரு கலத்திலிருந்து ஊற்றி கொண்டுவந்தான் மேகன். "நான் நிலையழிந்துவிடுவேன்" என்றான் சம்பவன் அதை வாங்கியபடி. "அருந்துக! மதுவை ஆளும் தெய்வங்கள் எழுக!" என்றான் மேகன். மெல்ல அருந்தியபடி "அத்தெய்வங்கள் காமத்தில் பிணைந்துள்ளன இக்கலவையில்" என்றான் சம்பவன். "இன்னும் சிறிது..." என மேகன் ஊற்றி எடுத்துவந்தான். "போதும்" என்றான் சம்பவன். ஆனால் கை இயல்பாக நீண்டது. "அருந்துங்கள், இப்போது உங்களுக்கு தேவைப்படுகிறது" என்றான் மேகன்.

சம்பவன் "இந்த மணத்தை முகரவே தகுதியற்றவன் என முன்பு நினைத்திருந்தேன்" என்றான். மேகன் "இன்று நீங்கள் அடுமனைத் தலைவர்... யவன மதுவில் நீராடவேண்டுமென்றாலும் தடையில்லை" என்றான். சம்பவன் பெருமூச்சுடன் "இனிய மணம்" என்றான். "இன்னும் சிறிது" என்றான் மேகன். "போதும்" என சம்பவன் சொன்னாலும் அவன் கோப்பையை மேகன் நிரப்பினான். "உங்கள் ஆசிரியர் அருகே படுத்துக்கொள்க!" என்றான் மேகன். "நான் துயில விரும்பவில்லை" என்றான் சம்பவன். "துயில்க... உங்களுக்குத் தேவையாகிறது." சம்பவன் "நான் உளறுகிறேனா?" என்றான். "ஆம்" என்றான் மேகன் புன்னகையுடன்.

அவன் சிரித்து தலையை அசைத்தான். "ஆம், உளறுகிறேன். ஆனால்..." சம்பவன் மெல்ல உடலை நீட்டி தரையில் இடப்பட்டிருந்த பாயில் படுத்தான். "குருதியில் படர்கிறது மது. உள்ளத்திலுள்ள சொற்கள் அனைத்தும் நனைந்து

எடைகொண்டுவிட்டன…” மேகன் “துயில்க!” என்றான். “அது ஒரு பெருங்குரங்கு…” என்றான் சம்பவன். “அது இங்குள்ள அனைத்து மானுடருக்கும் தந்தை. ஆகவே நிகரற்ற கருணை கொண்டது…”

சம்பவன் கண்களை மூடிக்கொண்டு ஒருமுறை விக்கினான். “பெருங்கரங்கள். மயிரடர்ந்தவை” என்றான். மேகன் மெல்ல காலடி வைத்து வெளியே சென்றான். “இப்புவியை சுவையென்றே அறிந்தவர்… மாபெரும் தேன்குவை இப்பெருவெளி. புவி அதில் ஒரு சொட்டு” என சம்பவன் சொன்னான். பின்னர் “ஆம், எத்தனை மென்மையான சிறுகால்கள்” என்றான். “கூம்பிய மலர்போன்றவை… நீள்விரல்கள். அவை கைகளும்கூட.”

✿சிட்டுக்குருவிகள் சிற்றடிவைத்து, சிறகுகுலைத்து அடுக்கி, குறுஞ்சில்பேசி மணிதேடிக் கொத்தி விழுங்கி எழுந்தமைந்துகொண்டிருப்பதுபோல அங்கே அரசியரும் சேடியரும் உணவுண்டுகொண்டிருந்தனர். விளம்பியவர்கள் கேட்கப்படுபவர்களுக்கு மட்டுமே செவிதொடும்படி மிக மெல்ல உசாவினர். அவர்கள் விழியசைவால், கைவீச்சால் மறுமொழி இறுத்தனர். யவன மது ஊற்றப்படும் ஒலி. அப்பங்கள் ஒன்றின்மேல் ஒன்று முட்டும் ஒலிகூட கேட்டது. எங்கு அமர்வது, எப்படி கால்மடிப்பது, எந்த விரல்களால் உண்பது, எதனுடன் எதைச் சேர்ப்பது என்பதெல்லாம் முன்னரே வகுக்கப்பட்டு முறையாக பயிலப்பட்டிருந்தன.

அப்பால் யவன மதுக்குடுவைகளுக்கு அருகே நின்று நோக்கிக்கொண்டிருந்த சுபாஷிணி அவர்கள் உணவுண்டது ஏதோ ஒரு காட்டுத்தெய்வத்திற்கு கரவுவழிபாடு நிகழ்வதுபோலிருப்பதாக எண்ணிக்கொண்டாள். யவன மதுவுடன் சுட்ட ஊனும், வறுத்த பருப்புகளும். அதன்பின்

ஊன்சோறுடன் பழத்துண்டுகள். நெய்யன்னத்துடன் கருமிளகிட்டு சமைக்கப்பட்ட ஆட்டுஊன்கறி. அப்பங்களுடன் பன்றிக்கறி. குழம்புகளை மிகையாகவும் குறைவாகவும் விடாமல் விளம்புவது பெரிய கலை என அவள் எண்ணினாள். ஒவ்வொரு உணவுக்கும் ஒரு தாலம். உண்ணப்பட்ட தாலங்களை கொண்டுசென்று ஒரு நார்ப்பெட்டியில் குவித்தனர் சேடியர் நால்வர்.

அரசி விரல்மடிப்புகளுக்குமேல் உணவு படாமல் எடுத்து இதழ்களைத் தொடாமல் வாயிலிட்டு வாய்குவிய மூடியபடி மெல்ல மென்றாள். தலையை மெல்ல அசைத்து நன்று என்றாள். பட்டுத் துவாலையால் இதழ்களை ஒற்றியபின் அடுத்த உணவுப்பொருளை எடுத்தாள். ஆனால் அவளருகே அமர்ந்து உண்ட சைரந்திரியின் இரு விரல்கள் மட்டுமே அப்பங்களை தொட்டன. இரு விரலால் எப்படி அப்பத்தை விள்ளமுடியும் என அவள் வியந்தபோதே ஒரு நடனம் நிகழ அன்னத்தின் அலகில் என அப்பம் அவள் வாயை அடைந்தது. அப்பம் அருகே சென்ற பின்னர்தான் அவள் வாய் திறந்தது.

சுபாஷிணி திரும்பி அரசியை பார்த்தாள். கையில் அப்பத்தை பற்றியபோதே அறியாது அவள் வாய் திறந்தது. அத்தனை சேடியரும் அவ்வாறே உண்டார்கள். சைரந்திரி மெல்லும்போது அவள் இதழ் குவிந்து இறுகவில்லை. இயல்பாக இளம்புன்னகையில் என விரிந்திருக்க தாடையின் அசைவு மட்டுமே அவள் மெல்வதை காட்டியது. மதுக் கோப்பையை மூக்கருகே சில கணங்கள் நிறுத்தி மும்முறை தாழ்த்தியபின் ஒருதுளிமட்டும் அருந்தினாள். சுட்டுவிரலை அசைத்து உணவுக்கு ஆணையிட்டாள்.

அரசி மிகையாகவே உண்டாள், ஆனால் அவள் உண்டதைவிட பல மடங்கு உணவை சைரந்திரி உண்டாள். நோக்கிக்கொண்டிருக்கையில் சைரந்திரி ஓர் அழகிய கைநடனத்தை மட்டும் நிகழ்த்துவதாகவும் உணவு ஏதும் வாய்க்குள் செல்லவில்லை என்றும் விழி மயங்கியது. அங்கிருந்த சேடியரிடம் சைரந்திரி எவ்வளவு உண்டாள் என்றால் அவள் ஒப்புக்கு கைநனைத்தாள் என்றே சொல்லக்கூடும். ஆனால் விழிகளை நோக்கியபோது அவ்வாறு தோன்றவில்லை. அவர்கள் அனைவருமே அவளை மட்டும்தான் நோக்குதெரியாமல் நோக்கிக்கொண்டிருந்தனர், அவளன்றி வேறு எவரும் அங்கிருக்கவில்லை என்பதுபோல. கேகயத்தின் அரசி அவள்முன் எளிய முதியவள் என்று தோன்றினாள்.

சுபாஷிணி சைரந்திரி உண்ணுவதை அனைத்தையும் மறந்து நோக்கி நின்றுவிட்டாள். அருகே நின்ற சேடி “உம்” என்றபோது திடுக்கிட்டு விழித்துக்கொண்டு “இதோ” என யவன மதுப்புட்டியை எடுத்து அளித்தாள். அது உருளையாக மேலே ஈரமென்மயிர் காப்புடன் முயல்போலத் தோன்றியது. அதை மூடியிருந்த மென்மர மூடியைத் திறந்தபோது குமிழி உடையும் ஒலியுடன் இனிய மணம் எழுந்தது. அவள் நாவூறியது. உடனே விழுங்கினால் தெரியும் என அப்படியே வாயை வைத்துக்கொண்டாள். சேடி திரும்பியதும் விழுங்கினாள். மதுவை உண்டதுபோல அவளுக்கு இனிய படபடப்பு ஒன்று ஏற்பட்டது.

அரசி பலமுறை மதுவை வாங்கி உண்டாள். அவளைவிட பலமடங்கு மதுவை சைரந்திரி உண்டாள். அவளைப் பார்க்கவே சுபாஷிணிக்கு அச்சமாக இருந்தது. கந்தர்வர்களின் தோழி.

அவர்கள் இங்கே விழிக்குத் தெரியாமல் சூழ்ந்திருக்கிறார்களா என்ன? அவள் அந்த பொன்னிற நாகத்தை நினைவுகூர்ந்தாள். அது கந்தர்வனா? ஆனால் கந்தர்வர்கள் பறப்பவர்கள். அது மண்ணின் ஆழங்களில் வாழும் நாகங்களில் ஒன்றாக இருக்கலாம். வாசுகியின் குடியினன். கார்க்கோடகனா? தட்சனா? அவள் உடல் மெய்ப்பு கொண்டது. கைகள் பதறி புட்டியை விட்டுவிடுவோம் என்று தோன்றியது.

எவ்வளவு உண்கிறாள், எவ்வளவு குடிக்கிறாள்! பெருந்தீனிப் பெண்கள் நான்குபேர் உண்பதை அவளே கொள்கிறாள். ஆகவேதான் அந்த விரிதோள்கள். களம்நின்று மல்லிடவும் கதைசுழற்றி தலையோட்டை உடைக்கவும் அவளால் இயலும். புரவிகளைப் பிடித்து நிறுத்தக்கூடும். யானை மத்தகங்களை அறையும் கைகள். அவளுக்கு கீசகனின் நினைவு வந்தது. இக்காட்டில்தான் அவனிருக்கிறான். இங்கே அவன் அவளைத் தேடி வராமலிருக்கமாட்டான். இந்தக் காட்டில் எதற்கும் தடையில்லை. அவள் பெருமூச்சுவிட்டாள்.

அரசியும் சைரந்திரியும் உணவை முடித்துக்கொண்டு எழுந்துசென்று அப்பால் விரிக்கப்பட்ட பட்டுக் கம்பளங்களில் எழுநிலவை நோக்கியபடி அமர்ந்தனர். தடித்த மரவுரிக்குமேல் விரிக்கப்பட்ட கம்பளங்களில் அவர்கள் மெல்ல உடல்சரித்து அமைய பட்டுத்தலையணை அணைவைத்தனர் சேடியர். அவர்களின் உடல்கள் அந்த மென்மையில் பதிவதைக் கண்டபோது தன் உள்ளமும் மென்மையை உணர்வதை சுபாஷிணி அறிந்தாள். ஏன் உடல் இப்படிச் சிலிர்த்துக்கொண்டே இருக்கிறது என்று எண்ணிக்கொண்டாள். நெஞ்சம் இனிமை என இருந்தது.

யாழுடனும் முழவுடனும் நான்கு விறலியர் சென்று அரசிக்கு முன்னால் அமர்ந்தனர். அவர்களின் தலைக்குமேல் முழுநிலவு பொன்னிறவட்டமாக நின்றிருந்தது. குழல்பிசிறுகள் மெல்லிய நீர்ச்சரடுகள்போல ஒளிகொண்டிருந்தன. கன்னங்கள் திரும்பும்போது பூனைமயிர்கள் பொடிப்பூச்சு என மிளிர்ந்தமைந்தன. யாழ் மெல்ல முனகியது. இனிமை என்றது. தண்ணுமை ஆம் இனிமை என்றது. ஒருத்தி குனிந்து இன்னொருத்தியிடம் ஏதோ சொன்னாள். அவள் தலையசைத்தபோது காதுமடல்களில் தொங்கிய குழைகள் நிழல் கழுத்தில் ஆடியது. கழுத்துத்தோல் வாழைப்பட்டையின் மென்மையுடன் ஒளிவிட்டது.

“உண்கிறாயா?” என்றாள் சேடி. அவள் “ஆம், இனிமை” என்றாள். “என்னடி? கனவா?” என்ற சேடி தாழ்ந்த குரலில் “யவன மது நிறைய எஞ்சியிருக்கிறது” என்றாள். “அய்யோ” என்றாள் சுபாஷிணி. “என்ன அய்யோ... மதுவருந்தாமல் இந்த இரவை வீணாக்கப்போகிறாயா?” அவள் “ஆனால்...” என்றாள். “இன்று எதுவுமே பிழை அல்ல... இந்தா.” அவள் அளித்த வெண்கலக் கிண்ணத்தில் இருந்த மது நிலவொளியில் நிறமற்றதுபோல் தோன்றியது. செண்பகமலர்போல எரி கலந்த மணம். “குமட்டுமா?” என்றாள். “குமட்டுவதும் ஒரு சுவை...”

அவள் அதை வாங்கி மூக்கருகே கொண்டுசென்றாள். அதற்குள் உடல் உலுக்கிக்கொண்டது. ஒருகணம் வேண்டாம் என தோன்றியது. அவ்வெண்ணத்தை வெல்லும்பொருட்டு அப்படியே தூக்கி அருந்தினாள். பெரிய எரிகுமிழி என அது தொண்டையைக் கடந்து உள்ளிறங்கியது. தொண்டை எரியத்தொடங்கியது. “அடிப்பாவி, அப்படியே அருந்தினாயா? இரு, இந்த அப்பத்தை மென்றுகொள்” என்றாள் சேடி. அவள்

அதை வாயிலிட்டு மென்றாள். “யவன மதுவை உணவுண்டபடியே அருந்தலாம். உணவுக்குப் பின்னரும் அருந்தலாம்” என்றாள் அப்பால் ஒரு சேடி.

அவர்கள் அனைவரும் மதுவருந்திக்கொண்டிருந்தனர். மதுவின் மணம் எழுந்து சுழன்று உடனே காற்றால் அள்ளிக்கொண்டுசெல்லப்பட்டது. தண்ணுமை இனிதினிதினிது என்றது. இனிமையல்லவா என்றது யாழ். விறலியின் குரல் எழத்தொடங்கியது...

“ஒன்பது பொன்னிற நாகங்கள்

அவை ஒன்பது பொன்னிற நாகங்கள்

நான்கு நாகங்கள் அவள் அரியணைக்கால்கள்

ஒன்று அவள் உடைவாள்

பிறிதொன்று அவள் இடைமேகலை

அறிக மேலுமொன்று அவள் முலைமேல் ஆரம்

ஒன்று அமைந்திருந்தது அவள் மணிமுடியென

கேளுங்கள் பேரரசி தமயந்தி மட்டுமே

அறிந்த ஒன்றே ஒன்பதாவது நாகம்!

“மேலும் சிறிது குடி” என ஊற்றினாள் சேடி. இனிய களைப்பொன்றை உணரத்தொடங்கினாள் சுபாஷிணி. அல்லது அது வெறும் உளமயக்கா என்றும் தோன்றியது. அவள் நெளியும் நாகங்களை அக்குரல்களினூடாக கண்டுகொண்டிருந்தாள்.

“ஒன்பது பொன்னிற நாகங்கள்

ஒன்பது நெளிவுகள்

ஒன்பது சொடுக்குகள்

ஒன்பது சுழிகள்

ஒன்பது இமையாவிழியிணைகள்

அங்கிருந்தன ஒன்பது நச்சுப்பற்கள்

அவள் விழிகள் மெல்ல தழைந்தன. விறலியின் குரல் நெடுநேரமாக கேட்டுக்கொண்டிருந்தது. விழித்தெழுந்து சூழலை பார்த்தாள். சேடியர் அனைவரும் கைகளில் கோப்பைகளுடன் பாடலை கேட்டுக்கொண்டிருந்தனர். அவள் விறலியின் தலைக்குப் பின்னால் பேருருக்கொண்டு எழுந்து நின்ற நிலவைக் கண்டு முதற்கணம் அது என்ன என்று திகைத்தாள். நிலவை அத்தனை பெரிதாக அவள் கண்டதே இல்லை. நான் மது உண்டிருக்கிறேன், அந்தக் களிமயக்கு. ஆனால் மதுவுண்டால் நிலவு பெருகுமா என்ன?

அவள் தன் அடிவயிற்றின் எடையை உணர்ந்தபின் மெல்ல திரும்பி பாறைச்சரிவில் இறங்கினாள். நினைத்த இடத்தில் காலடிகள் விழவில்லை. பாறையே சற்று சரிந்திருப்பதாகத் தோன்றியது. சில இடங்களில் பாறை மெத்தைபோல அழுந்தியது. “நஞ்சை அறியாத கன்னி உண்டா? சொல்க, நஞ்சை நாடாத காதலருண்டா?” அவள் அவ்வொலியை தனக்கு முன்னால் காட்டுக்குள் என கேட்டாள்.

பாறையிலிருந்து காட்டுக்குள் இறங்கி புதர்களினூடாக நடந்தாள். இடைவரை செறிந்த புதர்களுக்குள் சூழநோக்கிவிட்டு ஆடைவிலக்கி அமர்ந்தாள். எழப்போகும்போது பொன்னிற நாகம் என்னும் சொல் முதலில் எழ அதன்பின் அக்காட்சி விரிந்தது. திடுக்கிட்டு துள்ளி விலகி நின்று நடுங்கினாள். அவளைச் சூழ்ந்து அசைவுகள் தெரிந்தன. நாகநெளிவுகள். நிலவொளி எழுப்பும் விழிமாயமா அது?

அவள் மெல்ல முன்னகர்ந்து நோக்கினாள். அச்சத்தால் உடல் நடுங்கிக்கொண்டிருந்தாலும் அவளால் ஆர்வத்தை வெல்லமுடியவில்லை. மெல்லிய மணம் ஒன்று எழுந்தது. சற்று புளித்த அப்பம்போல. தேமல் படர்ந்த உடலின் வியர்வைபோல. முலைப்பால் புளித்த மேலாடைபோல. அவள் நாகங்களை கண்டாள். இலைகளுக்குள் நூற்றுக்கணக்கான நாகக்குழவிகள் நிலம்வந்த மீன்கள்போல துள்ளி நெளிந்துகொண்டிருந்தன.

# நீர்க்கோலம் - 51

### 50. பொன்னும் இரும்பும்

நிலையழிந்து கிளையிலிருந்து விழப்போய் அள்ளிப்பற்றிக்கொண்டு விழித்தெழுந்தபோதுதான் தான் துயின்றுவிட்டிருந்ததை கஜன் உணர்ந்தான். எப்படி துயின்றோம் என்றே அவனுக்குத் தெரியவில்லை. அத்தனை அச்சமூட்டும் காட்சிகளைக் கண்டு நடுங்கி உடலொடுக்கி ஒளிந்திருந்தபோதும் துயில் வந்து சூழ்ந்துகொண்டிருக்கிறது. காலைமுதல் கடுமையான உடற்பணி. முந்தைய நாள்

இரவுக்காவல். ஆனாலும் துயின்றதில் ஏதோ ஒரு விந்தை இருக்கிறதென்றே தோன்றியது.

உண்மையில் துயின்றானா? வேறெங்கோ இருந்தான். அங்கே இருண்ட வானில் மின்னல்கள் இடியோசையுடன் வெட்டி வெட்டி அதிர காகங்கள் ஓசையற்ற சிறகுகளுடன் மின்னும் விழிகளுடன் பறந்துகொண்டிருந்தன. ஒவ்வொரு காகமும் அவனை அறிந்திருந்தது. வாய் உலர்ந்திருந்தது. ஏதேனும் குடிக்கவேண்டும் என்று தோன்றியது. உதடுகள் தடித்து வீங்கி தொங்கியிருப்பவைபோலவும் முகம் வீங்கி பெரிய பூசணிக்காய்போல ஆகியிருப்பதாகவும் தோன்றியது.

கீழே இறங்கிச்செல்வது இறப்பை அழைப்பது. ஆனால் எண்ணிய கணம் முதல் விடாய் எரிந்து எழுந்து உடலெங்கும் பரவியது. உடல் பலமடங்கு பெரிதாக உப்பியிருந்தது. கால்கள் குளிர்ந்து நீர்நிறைந்த தோற்பைகள் என தொங்கின. அவன் இருமுறை குமட்டினான். மூக்கு எரிந்தது. என்ன ஆயிற்று? என்ன உண்டேன்? இல்லை ஏதேனும் பூச்சிகள் என்னை கடித்துவிட்டனவா? உடலுக்குள் நஞ்சு புகுந்துள்ளது என்ற எண்ணம் அழுத்தமாகவே எழுந்தது. ஆனால் எதையும் உண்ணவில்லையே என சித்தம் வழக்காடியது.

விடாயில் தசைகள் அதிரத்தொடங்கின. நீர் அருந்தாமல் இருக்கமுடியாது. விடாய் எழுந்ததுமே அருகே நீரோசையை கேட்டுவிட்டிருந்தான். வலப்பக்கமாக புதருக்குள் சிறிய காட்டு ஓடை பாறையில் முட்டி சுழித்துச்சென்றது. கிளையைப் பற்றியபடி மெல்ல காலிறக்கினான். அவன் கால் அரக்குவிழுதுபோல இழுபட்டு நீண்டு நிலத்தைத் தொட உடல் மேலேயே இருந்தது. என்ன இது என அவன் கைகளை விட்டான். நிலைக்கோள் பிறழ சற்று அசைந்து பின் ஒரு

மரத்தை பிடித்துக்கொண்டான். அவன் மரக்கிளைகள் அளவுக்கே உயரமாக இருந்தான். அந்த உயரத்தாலேயே தள்ளாடியபடி நடந்தான்.

அந்தி நிழல்போல நீளம். ஓடைநீரில் பாவை என அலைவு. என்ன ஆயிற்று என் உடலுக்கு? இரு கைகளையும் தூக்கிப் பார்த்தான். சாம்பல்பூசணம் படிந்திருந்தது. திரும்பி அந்த மரத்தை பார்த்தான். அதன் அடிமரத்திலும் பெருங்கிளையிலும் பூசணம் பரவியிருந்தது. அடுத்த மரங்கள் எவற்றிலும் அந்தப் பூசணம் இல்லை. அந்த மரம் மட்டும் பிறமரங்களுடன் சேராமல் தனித்து நின்றிருந்தது.

கானகக் காவலர்கள் ஒரு பூசணத்தை இலையால் சுரண்டிக்கொண்டுவந்து மூக்குச்சவ்வில் போட்டுக்கொள்வதை அவன் கண்டிருந்தான். கூகரிடம் “அது என்ன?” என்று அவன் கேட்டபோது “நஸ்யம்... மூக்கு சிவுசிவு என்று ஆகும். உள்ளே படிந்திருக்கும் ஒட்டடைகள் எல்லாம் அகலும். உடலின் எல்லா சாளரங்களையும் திறந்து புதிய குளிர்காற்று புகுந்து நிறையும். மிதக்கமுடியும்” என்றார். மெல்ல உடலை நிமிர்த்தி கால்களை நீட்டி “இந்தச் சுமை” என்றார்.

“எனக்கும் சிறிது கொடுங்கள்” என்றான். “இது காலம் கெட்டிப்பட்டு கருங்கல்லாக ஆனவர்களுக்கு மட்டும் உரியது” என்றார் கூகர். “உன் காலம் முகில்போல மிதக்கிறது... நான் இதை முகர்வதே உன்னைப்போல ஆவதற்காகத்தான்.” அவர் மீண்டும் ஒருமுறை அந்தச் சாம்பல்பொடியை மூக்கில் இழுத்தபின் மூக்கைப் பிடித்துக்கொண்டு கண்களை மூடி அசையாமல் அமர்ந்திருந்தார். பின்னர் விட்டுவிட்டு சிவந்த கண்களுடன் நோக்கி சிரித்தார்.

அவன் மீண்டும் அந்த மரத்தை அணுகி அதன் பூசணப்பூச்சை நோக்கினான். அதுதானா? அந்த மரத்தில் ஏறும்போது ஒரு மெல்லிய நினைவுத்தீற்றலாக கூகர் வந்துசென்றதை எண்ணிக்கொண்டான். அதை கையால் தொட்டுச் சுரண்டி முகர்ந்து பார்த்தான். பூசணத்தின் மணம். பிழையாக எண்ணுகிறேனா? இல்லை, அந்தப் பூசணமேதான். ஓர் இலையைப் பறித்து அதைச் சுரண்டி எடுத்து மடித்து மடியில் வைத்துக்கொண்டான்.

நீரோடையை அணுகி குனிந்தபோது மிகப் பெரிய மூங்கில்போல தன் உடல் வளைவதாகத் தோன்றியது. நீரோடை மிக ஆழத்தில் ஓட அதனருகே அவனுடைய கால்கள் பதிந்திருந்தன. கிணற்றுக்குள் என கைகளை நீட்டி நீரை அள்ளி மேலே மொண்டு வந்து குடித்தான். நீர் அவன் உடலுக்குள் ஆழத்தில் விழும் ஓசை கேட்டது. அப்பால் ர்ர்ர்ச் என்னும் ஒலி. ஒரு காட்டு ஆடு அங்கே நீர் அருந்தி நிமிர்ந்து நின்றது. அதன் தாடையிலிருந்து நீர் வழிந்தது. அவன் அதை நோக்கி புன்னகை செய்தான். அதனிடம் ஏதோ சொல்லவேண்டும் என்று எண்ணி கைநீட்டினான். அது செவிகளை அடித்துக்கொண்டு புதருக்குள் மறைந்தது.

அவன் மீண்டும் வந்தபோது அந்த மரத்தில் ஏராளமான குரங்குகள் மொய்த்திருப்பதை கண்டான். அவன் இறங்குவதற்காகக் காத்து அவை ஒளிந்து அமர்ந்திருந்திருக்கின்றன. அவை அந்தப் பூசணத்தை கைகளால் சுரண்டி வாய்க்குள் போட்டன. அவை அதை உண்ணவில்லை, ஈறுகளில் பூசிக்கொள்கின்றன என்பதை அவன் கண்டான். ஒரு குரங்கு மூக்கில் வைத்து இழுத்தது.

சில குரங்குகள் அதை தங்கள் கழிவுத்துளையில் பூசிக்கொண்டன.

ஒரு குரங்கு தேங்காய்போல நிலத்தில் உதிர்ந்தது. அப்படியே ஒருக்களித்து படுத்தபின் எழுந்து இரு கைகளையும் ஊன்றி நடந்து தள்ளாடி பக்கவாட்டில் விழுந்து நான்கு கால்களையும் மேலே தூக்கியது. அதனருகே இன்னொரு குரங்கு விழுந்தது. அது எழுந்து இளித்து இடையைச் சொறிந்தபின் பின்னால் மல்லாந்து விழுந்தது. பிறிதொரு குரங்கு அதனருகே உதிர்ந்தது. அவன் திரும்பி நடந்தபோது அவனுக்குப் பின்னால் இன்னொரு குரங்கு விழும் ஒலி கேட்டது. ஏனோ அந்த ஒலி அவனுக்கு சிரிப்பை மூட்டியது. திரும்பி விழுந்துகிடந்த குரங்குகளை நோக்கி கைசுட்டி சிரித்தான். சிரிப்பு அவனுக்குள் உவகையை நிறைத்தது. அச்சம் முழுமையாக அகன்றது.

சிரித்தபடியே அவன் காட்டுக்குள் நடந்தான். ஒரு மரம் வளைந்து அவனை நோக்கி வந்தபோது அதைச் சுட்டி சிரித்தான். அப்போதுதான் அவன் உடல் மிகச் சிறுத்து அந்த மரத்தின் வேர்ப்புடைப்பு அளவுக்கே இருப்பது தெரிந்தது. உடலை மேலே இழுக்கும் பொருட்டு அவன் எம்பி எம்பி குதித்தான். குதிக்கும்தோறும் சிறிதாகிக்கொண்டே சென்றான். அவனால் சிரிப்பை அடக்க முடியவில்லை. சிரித்தபடியே கைகளை விரித்துச் சுழன்று நடனமாடினான். அவனுக்குமேல் ஈஈ என ஓர் ஒலி எழுந்தது. அவன் நிமிர்ந்து நோக்கியபோது பொன்னிற உடல்கொண்ட பெரிய வண்டு ஒன்று பறந்துசெல்வதைக் கண்டான். அதைத் தொடர்ந்து இன்னொன்று. அவை ஒன்றையொன்று துரத்தியபடி சுழன்றன.

அவன் இலை ஒன்றின் மறைவுக்குள் சென்று அமர்ந்து அந்த வண்டுகளை நோக்கினான். அவை மானுட முகம்

கொண்டிருந்தன. ஆண்வண்டு நிலத்தை அணுகியதும் கால்கொண்டு மானுட உருவாகி நின்றது. அதன் சிறகு மெல்லிய ஆடையென்றாகி அவன் உடலில் படிந்தது. பொன்னொளிகொண்ட உடல். அவன் ஆணுறுப்பு எழுந்து நின்றது. அப்பால் அந்தப் பெண்வண்டு சிறகு மடித்து இறங்கினாள். பொன்மின்னும் முலைகள் எழுந்தமைய கைதூக்கி அனலென தோளில் விரிந்த குழல்கற்றைகளை அள்ளிக்கட்டினாள். அவன் அவளை துரத்த அவள் துள்ளி ஓடினாள். கைவிரித்து எழுந்தபோது சிறகு கொண்டாள். மண்ணில் தொட்டபோது கால்கள் பெற்றாள். தாவிச்சென்றபோது அவற்றில் மான்குளம்புகள் எழுந்தன. அவள் சிரிக்க அவன் உறுமியபடி அவளை துரத்தினான்.

கஜன் தனக்குப் பின்னால் இன்னொரு சிரிப்பொலியை கேட்டான். உடன் யாழும் குழலும் இணைந்ததுபோன்ற இசை. அது கொப்பளித்தது, சுழன்றது, குமிழிகளாக வெடித்தது. இளஞ்சிவப்பு நிறமான ஒருவன் இரு பக்கமும் தட்டாம்பூச்சியின் இரட்டைச்சிறகுகள் புகைப்படலமென அசைய வந்திறங்கினான். அவன் உடலுடன் அதேபோன்ற இன்னொருத்தி இணைந்திருந்தாள். அவர்கள் உதடுகள் சேர்த்து முத்தமிட்டனர். உடல்பிணைத்து கைகால்கள் நாகங்கள் என உரசித்தழுவி விலகி இழைந்து முறுகிப்பின்னி இறுகி மீண்டும் விலக ஆழ்மூச்சுகளுடன் நின்றுகொண்டே சுழன்றனர். இசை அவர்களை அள்ளிச்சுழற்றியது. இசையில் அத்தனை மரங்களும் உடல் நெகிழ இலைநுனிகள் அசைந்தன.

கஜன் “ஓ” என்னும் பெண்குரலைக் கேட்டுத் திரும்ப பொன்னிறத்தான் அவளை பிடித்துவிட்டிருப்பதை கண்டான். புலி மானை என அவன் அவளை தூக்கிச்சென்றான். அவளை

தன் உடலால் நின்றிருந்த வேங்கை மரத்தோடு மோதி அதே விசையில் அவளுக்குள் நுழைந்து உறவுகொண்டான். அவன் கைகளில் புலியுகிர்கள் எழுந்தன. வாயில் கோட்டெயிறுகள். நீண்ட சிம்மவால் எழுந்து சுழன்றது. அவள் அலறித்துடித்து அவனிடமிருந்து விடுபட முயன்றாள். அவள் கழுத்தை அவன் கவ்விக்கொண்டான். அவள் கைகளை உகிர்புதையப் பற்றினான். சிலந்தியிடம் சிக்கிய சிற்றுயிர் என அவள் அவன் புகுத்திய நஞ்சில் மெல்ல மயங்கித் துவள அவன் அவளைக் கடித்து குருதி தெறிக்க தசைகளை இழுத்து உண்டான்.

மறுபக்கம் அவர்கள் சுழற்சியில் இரு செந்நிற மலர்கள்போல ஆயினர். அவன் உடல் அல்லிவட்டமாக அவள் நடுவே புல்லிவட்டமென எழுந்திருந்தாள். இசை அவர்களைச் சூழ்ந்து இளநீலநிறச் சுழியாக இருந்தது. அதில் நீர்த்துளிகள் விழுந்து விழுந்து நீலமணிகளாக வெடித்தன. மலரிதழ் ஒன்று அலையிலாடியது. சிலந்திவலை காற்றில் ஆட சுழன்று சுழன்று ஒற்றைச்சிறுபுழு அதில் நெளிந்தேறியது. நீர் எழுந்து அலையாகி படமெடுத்து மணிவிழிகள்கொண்டு பறக்கும் நாக்கு எழ சீறியது. இசையென்று மாறியிருந்தன காட்டுமரங்கள். தாளமென்று ஆகியிருந்தது நிலம். மெல்லிய நறுமணம். உருகும் நெய். மெல்லக் கருகும் மயிர். மயிர் கருகும் மணம் ஏன் அத்தனை கிளர்ச்சியூட்டுகிறது? குருதியும் முலைப்பாலும் மணத்தன. இல்லை அது வாய்நீர் மணம். இல்லை பிறிதொன்று.

அப்பால் பச்சையொளி கொண்ட இருவர். அதற்கும் அப்பால் இருவர் இளநீல ஒளியுடன். வெண்ணிற ஒளியுடன் இருவர் தழுவிச்சீறி மெல்ல உடல் உருகி நீண்டு நாகமென்றாகி முறுகி ஒற்றைவடமென நெளிந்தனர். அவன் தன் விழிகள் மட்டும்

இரு மணிகளாக உந்தி நிற்க உடல் எறும்புபோல சிறிதாகிவிட்டதை உணர்ந்தான். எவரும் அவனை பார்க்கவில்லை. அவன் நோக்கிய திசையெல்லாம் உறவுகொண்டனர் சிறகோர். காட்டுமரங்களின் இடைவெளிகளில் எல்லாம் பிணைந்தன உடல்கள்.

வளைந்த பெருங்கொம்புகளுடன் காளைதலையும் புள்ளிருக்கை எழுந்த பிடரியும் கொண்ட ஒருவனுடன் இணைந்திருந்தவளுக்கு கலைமானின் கவர்கொம்புகள் இருந்தன. சிம்மப்பிடரி கொண்டிருந்தவன் மான் வடிவில் ஒருத்தியை கிழித்து உண்டான். மரங்களை மோதி நாணலென அலையெழுப்பியபடி களிறும் பிடியுமென இருவர் ஒருவரை ஒருவர் மத்தகம் முட்டி பிளிறினர். அருவியோசை என எங்கோ பேரிசை. குருதி ஆறு ஒன்று குமிழிவெடிக்கும் மணத்துடன் கண்காணாது ஓடியது.

மரங்களுக்கு அப்பால் முழவுகள் ஒலித்துக்கொண்டிருந்தன. உறுமி உறுமி கார்வையை நிரப்பியது முரசு. பொன்னிற நாகங்கள் புணர்ந்து சுருண்ட பந்துகள் காலடியில் உருண்டன. நாகவிழுதுப் பின்னல்கள் தொங்கி நெளிந்தன. நீரோடைகள் என இரு மலைப்பாம்புகள் பின்னி வழிந்தன. சிரிக்கும் வாய்களும் மணிவிழிகளும் அதிரும் சிறகுகளும் கொண்ட வண்டுகள் இணைந்து பறந்தன. ஒன்றன்மேல் ஒன்றென அமர்ந்து சுழன்றன பட்டாம்பூச்சிகள். அவன் கண்ட அனைத்து உயிர்களும் புணர்ந்துகொண்டிருந்தன. இலைநிழல் செறிவின் அனைத்து இடைவெளிகளிலும் அசையும் உடல்கள்.

புணர்வின் தாளம். புணர்வென அங்கு நிகழ்ந்த காற்றின் அலைவு. தன்னை உரித்து இட்டு தன்னிலிருந்து வெளியேறும் தவிப்பு. பிறிதொன்றாகி திரும்பிவரும் திகைப்பு. ஒளி

ஊடுருவும் உடல்கொண்டிருந்த இருவர் ஒருவருக்கொருவர் புகுந்துகொண்டனர். கூந்தல் சிறகெனப் பறக்க இரு பெண்கள் காற்றில் புகைச்சுருள்போல் அலைபாய்ந்து மிதந்து நின்றனர். இருளில் ஊறித்துளித்துச் சொட்டி நிலத்தில் விழுந்து எழுந்தனர் ஒளியுடல்கொண்ட இரு பெண்கள். அவர்களுக்குமேல் பாய்ந்தனர் பருந்துச்சிறகுகள் கொண்ட இருவர். அவர்களின் சிறகுகள் விரிந்து அனலென்றாயின. அவ்வனல் பற்றி எரிந்தன பசுந்தளிர்கள்.

கஜனின் விழிகள் ஒன்றுடன் ஒன்று இணைந்த இரு சிறுகருவண்டுகள் என்றாகி அப்புணர்ச்சிகளினூடாக சுற்றிப்பறந்தன. உடல்குளிர்ந்து பாறையென்றாகி மரத்தடியில் அவன் கிடந்தான். அவன்மேல் வழுக்கி ஊர்ந்துசென்றன நாகங்கள். அவன் நெஞ்சில் ஒற்றைக்குளம்பு உதைத்து தாவின மான்கள். அவன் இடையிலிருந்து எழுந்தது சிறிய முளை. செந்நிறக்குருத்து வளர்ந்து வாழைக்கன்றுக் கூம்பென்றாகியது. இலைவிரித்தது. மரமென்று எழுந்து கிளைபரப்பியது. அதன்மேல் காகங்கள் வந்து சிறகுமடித்து அமர்ந்தன. கரிய உடல்கள் காயெனச் செறிந்து கிளைகள் தொய்ந்தன. வானில் மின்னல்கள் கிழிபட்டுக்கொண்டே இருந்தன. கீழ்வானிலெங்கோ முரசொன்று ஒன்றையே சொல்லிக்கொண்டிருந்தது. தத்த தய தம! தத்த தய தம!

❀தேவி எழுந்து நின்று கையால் வாய்பொத்தி மெல்லிய ஏப்பம் விட்டு சுபாஷிணியை அருகே அழைத்தாள். அவள் அருகே சென்றதும் தாழ்ந்த குரலில் “உன்னை நான் உத்தரையிடம் செல்லச் சொன்னேன்” என்றாள். “ஆம், தேவி” என்றாள். “செல்க!” அவள் அரசியை நோக்கி “ஆனால்…” என்றாள். “ம்” என்றாள் தேவி. “ஆணை” என அவள்

தலைவணங்கினாள். விழிதாழ்த்திய அக்கணமே அவள் தேவியின் கண்களை உணர்ந்து ஏறிட்டு நோக்கினாள். அவை நாகவிழிகளாக மாறிவிட்டிருந்தன. “தேவி… நீங்கள்…” என்றாள். சீறும் குரலில் “ம்ம்ம்” என்றாள் தேவி. அவள் வாய்க்குள் இரு வளைந்த நச்சுப்பற்களை சுபாஷிணி கண்டாள்.

அச்சத்துடன் பின்னடைந்து கைகூப்பி “தேவி!” என்றாள். அவ்வொலி அவளுக்குள்ளேயே ஒலித்தது. திரும்பி அரசியை நோக்கினாள். அரசி அழுதுகொண்டிருந்தாள். அவள் அமர்ந்திருந்த பாறை உருகி அதில் அவள் இடைவரை புதைந்திருந்தாள். மேலும் மேலுமென அவள் உடல் உருகிக்கொண்டிருந்தது. வலதுகை கரைந்து வடிவிழந்து பதிந்து விரல்கள் மறைந்துகொண்டிருந்தன. சுபாஷிணி திகைப்புடன் வாய் திறந்து சேடியரை பார்த்தாள். அனைவருமே கற்சிலைகளாக மாறியிருந்தனர். அருகே இருந்தவளின் தலையில் அவள் கையை வைத்தாள். கல்லின் பருமை.

விறலியர் யாழிலும் முழவிலும் விரல்கள் ஓட இசைத்துக்கொண்டிருந்தனர்.

“பொன்னிற நாகம் அவள்.

அறிக, புவியாள்பவை நாகங்களே.

தட்சன் வாசுகி கார்க்கோடகன்

ஆயிரம் நாவுள்ள அனந்தன்

அவர்களை ஆள்பவர்கள் அன்னைநாகங்கள்

கத்ரு வினதை குரோதவசை!”

இன்னொரு விறலியின் குரல் வெறியாட்டுகொண்ட பூசகியின் வீரிடலென வந்து இணைந்துகொண்டது.

“புவியாள்பவள், சொல்மகளும் திருமகளும்

சினம்கொண்டு கொற்றவை என்றானவள்

நாகம் அவள் இடைக்கச்சை

நாகம் அவள் கங்கணம்

அறிக! நாகமே அவள் கால்களில் கழல்

விரல்கள் நாகக்குழவிகள்

நா ஒரு நெளியும் நாகக்குழவி

அவள் ஒரு பொன்னிற நாகம்!

ஆம், பொன்னிற நாகம்…”

விறலியருக்குப் பின்னால் அவர்களின் உடல்கள் நாகமென நீண்டு மெல்ல நெளிந்துகொண்டிருந்தன. அருகே இன்மையை உணர்ந்து அவள் திரும்பிப்பார்க்கையில் தேவி பாறைக்குக் கீழே சென்றுவிட்டிருந்தாள். “தேவி” என அழைத்துக்கொண்டு அவள் பின்னால் ஓடினாள். கால் நிலத்தில் பதிகின்றதா என அவளுக்குத் தெரியவில்லை. மிகத் தொலைவில் என இருந்தது அடிக்காடு. அங்கே அத்தனை மரங்களும் ஒளிகொண்டிருந்தன. காலடியில் நிழல் சூடியிருந்தன. தேவி மெல்ல உருக்குலைந்து நிழலும் ஒளியுமெனப் பரவி நெளிந்து அக்காட்டில் கரைந்தழிந்தாள்.

முதல் விறலி யாழ் மீட்டி சீர்நடையில் பாட முழவு மீட்டிய இன்னொரு விறலி வெறிகொண்டு வந்து அதை மோதி உடைத்துச்சிதறி நின்றுவெறியாட மெல்ல அமிழ்ந்த அமைதியிலிருந்து மீண்டும் இரண்டாவது விறலியின் ஓசை எழுந்தது.

"எளிய நிஷாதன். கரியவன், அழகன்

அவள் அகத்தளத்தை அறிந்திருந்தான்

அறிந்திருக்கவில்லை அவள் அகத்தை

காமத்தில் அனல்கொள்கையில்

அவள் உருகி நீண்டு நாகமென்றாவதை

ஒருநாள் கண்டான்

நஞ்சுகொண்டாள் நாபறந்தாள்

நதியெனச் சூழ்ந்தாள்

அஞ்சி எழுந்தோடினான்

தன் கைகளை நாகங்களென்று கண்டான்

தன் கால்களை நாகங்களென அறிந்தான்

தன்னுடலில் இருந்தே தப்பி

காடுகளுக்குள் புகுந்துகொண்டான்"

வெறிகொண்ட முழவு நின்று துடிக்க இரண்டாவது விறலியின் குரல் பீரிட்டு எழுந்து ஒலித்தது.

“பொன்னிற நாகம்! பொன்னிற நாகம்!

பொன்னென்பது நாகம்! பொன்னெல்லாம் நாகம்!

மின்னுவதெல்லாம் நாகம்

மின்னி நெளிகிறது நாகம்

இப்புவியாளும் பெருநாகம்!”

அவள் கீழே வந்துவிட்டிருந்தாள். அவளுடைய மேலாடை நுனி மட்டும் அவள் கிளம்பிய இடத்திலேயே பறந்துகொண்டிருந்தது. அவள் நடந்த வழிகளில் பாறை உருகி கால்தடம் பதிந்திருந்தது. காட்டிலிருந்து முழவும் யாழும் விம்மின. காட்டுக்குமேல் கவிந்த வானில் மாபெரும் பளிங்குமாளிகை ஒன்றின் கூரைக்குடைவுபோல நிலவு நின்றிருந்தது. அவள் அதை அண்ணாந்து நோக்கியபோது விரியத் தொடங்கியது. விளிம்புகள் வளர்ந்து அகன்று முழுவானமும் நிலவென்றாகியது. அதன் நிழல்கள் கருமுகில்கள் என்று மெல்ல பிரிந்தன.

“கிராதன், கரியவன், தனியன்

ஒருநாள் அவள் சாளரத்தில் நோக்கினான்

உள்ளே காருருவப் பெருநாகம் ஒன்று

அவளைப் புணர்ந்திருக்கக் கண்டான்

அதன் சீறலோசையில் நெளிந்தன சுவர்கள்

அவ்வனலில் கூரை உருகியது

இரும்புடன் இழைந்தது பொன்

இருளிலெழுந்த புலரியைப்போல"

அவள் தரையில் வந்து நின்று தன் ஆடையை இழுத்து எடுத்துக்கொண்டாள். அது நாகம்போல நெளிந்து வந்து அவள் உடலில் சுற்றி ஏறிக்கொண்டது. காடு முழுக்க மின்மினிபோல் உடல்சுடரும் பெரிய பூச்சிகள் மலரிதழ்ச் சிறகுகள் கொண்டு பறந்துகொண்டிருந்தன. அவற்றின் ரீங்காரமே ஒன்றுகலந்து இசையென்று பெருகிக்கொண்டிருந்தது.

"தன் கைகளை சவுக்கென்றாக்கி

மாறிமாறி அறைந்து ஓட்டி

காட்டுக்குள் ஓடி களைத்து வீழ்ந்தான்

அவன்முன் நூறுபடம் விரியும் தலைகளுடன்

நச்சுவேல்முனை என விழிகளுடன்

காட்டெரியென நாவனல்களுடன்

தோன்றிய காருருவன் சொன்னான்

நான் கார்க்கோடகன்

விழைவின் பேரரசன்

விண்சுமந்து விரிந்திருக்கும்

ஆழுலகை ஆள்பவன்

வெறிக்குரலெடுத்து பல்லாயிரம் மரங்கள் கைகளை விரித்து கூத்தாடின. “கார்க்கோடகன்! காரிருளின் அரசன்! கார்க்கோடகன்! காரிருளின் அரசன்!” இடியோசைபோல வானமும் அதையே முழங்கியது. தொலைவுகள் பெருகி நகைத்தன. “கார்க்கோடகன்! காரிருளின் அரசன்! கார்க்கோடகன் காணாதவற்றை ஆள்பவன்!”

அவள் காட்டுக்குள் சென்றுகொண்டிருந்தாள். அனைத்தும் நீர்ப்பாவை என நின்றாடின. தரையெங்கும் பொன்னிற நிலவொளி. அவற்றில் நெளியும் நிழல்களில் அவள் பொன்னிற நாகங்களை கருநாகங்கள் சுற்றிப்புணர்ந்து துவள்வதைக் கண்டாள். அப்பாலிருந்து அவளை அணுகிய ஒருவன் கரிய நிமிர்ந்த பேருடல் கொண்டிருந்தான். இரு கைகளும் இரு நெடுநாகங்கள். தோளில் சரிந்த சுரிகுழல். எதையும் நோக்காதவை என ஆழ்ந்திருந்த விழிகள். அவன் அவளை புகைப்படலத்தை என கடந்துசென்றான். அவனுடைய காலடியோசை காட்டுக்குள் ஆழ்ந்த தாளமென ஒலிப்பதை அவள் கேட்டாள்.

அவள் உடல் தித்தித்துக்கொண்டிருந்தது. தோள்களிலிருந்து தொடங்கிய அவ்வினிமை நெஞ்சில் பரவி முலைக்கண்களை கூர்கொள்ளச் செய்தது. இடை துவள மூச்செறிய இனிமை இனிமை என அவள் நடந்தாள். மூச்சும் உமிழ்நீரும் இனித்தன. உடலுக்குள் ஓடிய குருதியும் இனித்தது. இனிக்கும் அனல் அவள் உட்தசைகளை எரித்து உருகி வழியச் செய்தது. இரு குமிழிகளென முலைகள். இரு குமிழிகளென விழிகள். துயில் கலைந்து இமை விரிந்து நோக்குகொண்ட கருவிழி ஒன்று. கசிந்து ஆழ்நினைவு சூடியது நீள்விழி. தொலைவில் விம்மிக்கொண்டிருந்தது முரசு. மூங்கில்கள் உரசி பொறி

எழுந்தன. கொடிகள் மரங்களின்மேல் சுற்றி இறுகி நெட்டுயிர்த்தன. அலைகொண்ட வான்விளிம்பில் ஒரு விண்மீன் எனச் சிறுத்து உதிர்ந்தது நிலவு. யானைகள் மெல்லப் பறந்து திரும்பின. வெள்ளாட்டுச் செச்சை அசைவிழந்து வியந்தது. கவரிகள் உலைந்தன. நீள்பட்டு திசைதிசையென நெளிந்தது.

அவள் அப்புணர்ச்சியை கண்டாள். வால்வளைவை மண்ணிலூன்றி எழுந்து கரியகடலலை என எழுந்த படம் விரித்து நின்றிருந்த மாநாகம் ஒன்றின் உடற்சுருளுக்குள் மூழ்கித் திளைத்துக்கொண்டிருந்தாள் தேவி. வால்முனை ஆண்மைகொண்டு அவள் உடல்நுழைந்து துடிக்கவைக்க தழுவி வழுவி எழுந்து வெறிகொண்டு மீண்டும் தழுவி மூழ்கி மூச்சுக்கு வாய்திறந்து எழுந்து மீண்டும் அமிழ்ந்து அவள் தவிக்க குனிந்த நாகத்தின் செவ்விழிகள் எரிந்து நிலைத்திருந்தன. நாக்கதிர்கள் மின்னெனச் சுழன்றன. அவர்களைச் சூழ்ந்திருந்த காடு வெம்மைகொண்டு பொசுங்கிச் சுருண்டு புகைந்து எரியத்தொடங்கியது. அனலொளியில் நாகனின் உடல் மேலும் கருமை கொள்ள அவள் உருகும் பொன்னென சிவந்த வழிவென்றானாள்.

நோக்கி நோக்கி விதிர்த்த உடலுடன் மெல்ல நகர்ந்து பின்னிருந்த மரத்தில் முட்டி அவள் நின்றாள். மரத்தின் கைகள் தழைந்திறங்கி வந்து அவளை தழுவிக்கொண்டன. வலிய மெல்லிய கைகள் இரண்டு விரல்குவளைகொண்டு முலைக்குவைகளை அள்ளின. புறங்கழுத்தில் ஒரு ஈரஇதழ் பதித்த முத்தம் அழுந்தியது. அவள் மேலாடை பற்றிக்கொண்டது. கால்கள் உருகி மண்ணில் ஒட்டின. வெம்மையை அறிந்ததும் அவள் அப்பிடியை உதறித்

திரும்பினாள். அவள் குழல் அனல்கொழுந்தெனப் பறந்தது. ஆடை பொசுங்கி அருகணைந்தது. காட்டுக்குள் அவள் ஓடியபோது குழலென்றாகி தழல் படபடக்கும் ஓசையுடன் அவளைத் தொடர்ந்தது.

# நீர்க்கோலம் - 52

## 51. குருதிக்கடல்

சம்பவன் விழித்தெழுந்தபோது எங்கிருக்கிறான் என்பதை அறியாது ஒருகணம் திகைத்தான். புரண்டு கையூன்றியதும் அருகே ஒழிந்த ஈச்சம்பாயைக் கண்டு அனைத்தையும் உணர்ந்து எழுந்து நின்றான். "மேகரே... மேகரே" என்று அழைத்தான். மேகன் அஸ்வகனுடன் அப்பால் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தான். அவன் எழுந்து அருகே வந்து "அதற்குள் விழித்துக்கொண்டுவிட்டீர்களா?" என்றான்.

"ஆசிரியர் எங்கே?" என்றான் சம்பவன். "இங்கே..." என்றபின் நோக்கிய மேகன் "இல்லை... சென்றுவிட்டார்... நாங்கள் வெளியேதான் பேசிக்கொண்டிருந்தோம்" என்றான். சம்பவன் ஒழிந்த பாயை சிலகணங்கள் பார்த்துவிட்டு "அவர் குரங்குகளுடன் சென்றிருப்பார்" என்றான். "காட்டுக்குள்ளா?" என்றான் மேகன். "அவருக்கு எதுவும் தடையல்ல..." என்றான் சம்பவன். வெளியே சென்று நிலவொளியில் இலைசுடர நின்ற காட்டை பார்த்தான். மெல்லிய ஏப்பம் வந்தது. திரும்பி மேகனிடம் "அந்த யவன மது இருக்கிறதா?" என்றான். "ஆம், கொண்டுவரவா?" அவன் ஆம் என தலையசைத்தான்.

மேகன் மதுக்குடுவை ஒரு கையிலும் குவளை மற்றொரு கையிலுமாக ஓடிவந்தான். அப்பால் அஸ்வகன் வெடித்துச் சிரித்து “அவனுக்கு மோகினிப்பீடை... ஆம், மோகினி” என்றான். மேகன் “நாலைந்து குவளை அருந்திவிட்டார். இத்தனை பொழுதுவரை ஒரே பேச்சு... திரும்பத் திரும்ப” என்றான். சம்பவன் அருந்திமுடித்து குவளையை மீண்டும் நீட்டினான். மூன்றுமுறை குடித்தபோது ஏப்பம் வந்து மூச்சில் மதுவின் எரியும் இன்மணம் நிறைந்தது. செல்க என அவன் மேகனுக்கு கைகாட்டினான். “தாங்கள் வேண்டுமென்றால் வேறு குடிலில் துயிலலாம். நல்ல மரவுரிப் படுக்கைகள் உள்ளன...” அவன் கையசைத்துவிட்டு காட்டை நோக்கி நடந்தான்.

“சம்பவரே...” என மேகன் பின்னால் வந்தான். “என்ன செய்கிறீர்கள்? உள்ளே செல்வது கழுவிலேற்றப்படும் குற்றம்.” அவன் செல்க என்று கையசைத்தபடி நடந்துகொண்டே இருந்தான். “சம்பவரே, வேண்டாம்...” அவன் திரும்பி நோக்கி “என்னிடமும் குரங்குகள் பேசுகின்றன” என்றான். நெஞ்சில் கைவைத்து “அஞ்சனையின் மைந்தனால் காக்கப்படுபவன்... எங்களை வெல்ல இப்புவியில் எவருமில்லை” என்றான். அவன் உடலில் மது மெல்ல பரவிக்கொண்டிருந்தது. “ஏன்?” என்று அவன் மேகனிடம் கேட்டான். “ஏன்?” என அவன் திரும்பிக்கேட்டான்.

“ஏனென்றால் நாங்கள் இப்புவியையே அள்ளி அளக்கும் ஆற்றல்கொண்டவர்கள். எண்ணிய எதையும் அடைபவர்கள். ஆனால் எதையும் எடுத்துக்கொள்பவர்கள் அல்ல.” அவன் சுட்டுவிரலைக் காட்டி “அஞ்சனையின் மைந்தன் அளித்தான். ராகவனுக்கு, அவன் துணைவி சீதைக்கு, விபீஷணனுக்கு, அங்கதனுக்கு... இப்புவியிலுள்ளோர் அனைவருக்கும். வானளாவ

எழுபவன் எப்போதும் பணிந்திருந்தான். இங்கே…” அவனுக்கு சொற்கள் சிக்கவில்லை. கையால் காற்றைத் துழாவி “ஆம், இவர்…” என்றான். அவன் புன்னகைத்தான். “இவர் யார்? இவரைப்பற்றி நீ என்ன அறிவாய்?”

மேகன் தலையசைத்தான். சம்பவன் மந்தணம் சொல்லும் முகத்துடன் அவனை நோக்கி ஓர் அடி எடுத்துவைத்து “தனக்கென்று ஒன்றும் கோராதவனால்தான் அளவில்லாமல் கொடுக்க இயலும். அவன் கையில் விண்ணுருவன் உந்தியில் என உலகங்கள் ஊறிப்பெருகும்…” என்றான். தலையசைத்து அதை அவனே ஒப்புக்கொண்டு தனக்குள் என “ஆம்” என்றான். இன்னொருமுறை ஏப்பம் விட்டு “எங்கே மது?” என்றான். “முன்னரே நிறைய குடித்துவிட்டீர்கள், சம்பவரே” என்றான் மேகன். “வந்து படுங்கள்… துயில் தேவைப்படுகிறது உங்களுக்கு.” சம்பவன் “ஆம், துயிலவேண்டியதுதான். என் கால்கள் தளர்கின்றன” என்றபின் “நான் என்ன சொல்லிக்கொண்டிருந்தேன்?” என்றான்.

அவன் என்ன சொன்னான் என நினைவுகூர முடியாமல் மேகன் வெறுமனே நோக்கினான். “அந்த முட்டாள் ஏன் அப்படி நகைக்கிறான்? அறிவிலி” என்றபின் சம்பவன் “நான் என்ன சொன்னேன்? இவர் யார்? அதுதானே நீ கேட்டது? நான் சொல்லப்போவதில்லை. இவர் யார்? இவரைப் பார்த்தாலே தெரியாத மூடனிடம் என்னவென்று சொல்ல?” என்றான். அவன் நகைத்தான். கண்ணிமைகள் சரியத் தொடங்கின. சுட்டுவிரலை நீட்டி “இவர் உலகங்களை படைப்பவர். அஞ்சனையின் மைந்தருக்கு இளையவர். ஆம், உயிரையும் உடலையும் ஆத்மாவையும் அள்ளிச் சமைப்பவர். ஆயிரம்கோடி சுவைகளை ஆக்குபவர். பெருங்கருணையுடன் விளம்புபவர். அள்ளி ஊட்டி

விழிகனிந்து நோக்கி நின்றிருப்பவர். அன்னைப்பேருருவர். ஆகவே அவர் கொல்லலாம்" என்றான். அவன் கூர்ந்து நோக்கி "என்ன செய்யலாம்?" என்றான்.

"கொல்லலாம்" என்றான் மேகன். "ஆம், கொல்லலாம்... உன்னையும் என்னையும் தலையிலடித்து பிளக்கலாம். நெஞ்சை உடைத்து குருதியள்ளி குடிக்கலாம்... இனிய செம்மதுவைப்போல குருதியை அள்ளி..." அவன் திரும்பி அஸ்வகனைப் பார்த்து "அந்த மூடனிடம் சிரித்தால் அவனை நான் கொல்வேன் என்று சொல்" என்றான். "வந்து படுங்கள், சம்பவரே" என்றான் மேகன். "நான் படுக்கமாட்டேன்... ஏனென்றால்..." என்ற சம்பவன் காட்டை சுட்டிக்காட்டி "அங்கே..." என்றான். சிலகணங்கள் அக்கை நீண்டு நிற்க காட்டை நோக்கி அசைவில்லாது நின்றபின் சிரித்தபடி திரும்பினான்.

"அங்கே அவர் தன் பல்லாயிரம் உருவுடன் இறப்பற்றவராக பெருகியிருக்கிறார். விண்கனியைக் கவ்வியவர். மலைகளைச் சுமந்தவர். ஆழிகளைக் கடந்தவர். அவர் அங்கிருக்கிறார்." இரு விரல்களை கிள்ளிக்காட்டி "இத்தனை சிறிய அளவில்கூட. கருங்கால்வேங்கைப் பெருமரத்தில் சின்னஞ்சிறு மலர் எழுவது போல... குருதிநிற மலர்... அங்கே" என்றான். 'செல்க' என மேகனிடம் கைகாட்டிவிட்டு காட்டை நோக்கி சென்றான். "சம்பவரே..." என மேகன் அழைத்ததை அவன் கேட்டான். ஆனால் அது இறந்தகாலத்திலிருந்து நினைவில் எழுவதுபோலத் தோன்றியது.

நிறைய பேசிவிட்டோம் என அவன் உணர்ந்தான். ஆனால் என்ன பேசினோம்? எதை பேசியிருக்கமுடியும்? அடுமனையைப்பற்றித்தான். வேறென்ன? அடுமனையில் என்ன நிகழ்ந்தது? இன்று நான் சமைத்தேன். என் கையில் எழுந்தது

உபாசனைக்குரிய என் தெய்வம். என்னை ஆள்வது. என்னுடன் மண்புகுந்து விண்ணிலெழுவது. நான் சமைத்த சுவைகள் மரங்களாக செடிகளாக கொடிகளாகச் செறிந்த காட்டில் மலர்களாகவும் புட்களாகவும் நிறைவது. ஆனால் அதற்கு ஏன் அஸ்வகன் சிரித்தான்? ஆசிரியரை நான் தேடிச்செல்கிறேன். ஆம். ஆசிரியரைத்தான்.

காட்டின் நுழைவுப்பாதையில் இரு வீரர்கள் வேல்களுடன் துயின்றனர். அவன் உள்ளே நுழைந்ததும் ர்ரீச் என்று ஒரு குரல் கேட்டது. ஒரு குட்டிக்குரங்கு அவனுக்குமேல் வந்து கிளையில் ஊசலாடி "நீயா?" என்றது. "ஆம், நீ இங்கிருக்கிறாயா?" அது ஒற்றைக்கையில் தொங்கி வாலை நீட்டி நுனிநெளித்தபடி "என் காடு இது. என் பெயர் அப்லுதன்… நீதான் என் காட்டுக்கு வந்திருக்கிறாய்" என்றது. சம்பவன் "ஆம்" என்றான். "வெல்லத்தை உண்டுவிட்டாயா?" அப்லுதன் விலாவைச் சொறிந்து இருமுறை சுழன்று ஒரு கிளையில் சென்று அமர்ந்து "நான் அதற்குப் பின்னர் நான்குமுறை அந்த அறைக்குள் சென்று அந்த நார்ப்பெட்டியில் இருந்து வெல்லத்தை எடுத்துக்கொண்டு வந்தேனே" என்றது.

அவன் நின்று "அடப்பாவி" என்று சிரித்தான். "அத்தனைபேரும் வெல்லம் உண்டார்கள். அதன் பின்னர்தான் நான் வாழைப்பழங்களை எடுக்கத் தொடங்கினேன்" என்றது அப்லுதன். அவன் சிரித்து "அங்கே எவருமில்லையா?" என்றான். "ஒருவன் துயின்றுகொண்டிருந்தான். என் மூத்தவர் இருவர் கலங்களை ஆட்டி ஓசை எழுப்பினர்." சம்பவன் "ஏன்?" என்றான். அப்லுதன் "கலங்களின் ஓசைகேட்டால்தான் அவர்கள் நன்றாகத் துயில்கிறார்கள். எங்கள் கால்கள் பட்டு வேறுகலங்கள் புரண்டாலும் தெரிவதில்லை" என்றது.

அவன் “மற்றவர்களெல்லாம் எங்கே?” என்றான். “அத்தனை பேரும் மரச்சுரண்டலை நக்கினார்கள். சிறியவர்களிடம் வரக்கூடாது என்று சொல்லிவிட்டார்கள். முதியவர்கள் விழுந்துவிட்டார்கள். இளையவர்கள் உச்சிக்கிளைகளுக்குச் சென்று நிலவாடுகிறார்கள்” என்று சொன்ன அப்லுதன் கீழே வந்து அவனுக்கிணையாக புதர்கள்மேல் தாவியது.

அவன் “என்ன செய்வார்கள்?” என்றான். “கிளைகளில் தாவுவார்கள்.” சம்பவன் “அதை இங்கேயே செய்கிறார்களே?” என்றான். “உடல்புணர்ந்தபடி செய்வார்கள்... என் அக்காவைக்கூட நால்வர் தூக்கிச்சென்றுவிட்டார்கள். அவர்களில் மூவர் கீழே உதிர்ந்தனர்.” அவன் நடந்தபடி “நன்று” என்றான். அப்லுதன் தாவி கிளையில் ஏறி அவன் தலைக்குமேல் வந்தபடி “நான் பெரியவனாகும்போது நான்கு பெண்களை மேலே கொண்டுசெல்வேன்” என்றது. “ஏன் நான்கு?” அப்லுதன் தலைசரித்து கண்களைச் சிமிட்டி எண்ணிநோக்கியபின் “நான்கு கைகள்” என்றது. அவன் “வால்?” என்றான். அது அப்படியே அமர்ந்துவிட்டது. அவன் மேலும் செல்ல அது தலைக்குமேல் பாய்ந்து வந்து “வால் இல்லையேல் விழுந்துவிடுவேனே?” என்றது.

அவன் காற்றிலாத காட்டுக்குள் மரங்கள் அசைவற்று நிற்க நிலாநிழல்கள் ஆடுவதிலிருந்த விந்தையை அப்போதுதான் கண்டான். அக்கணமே அந்நிழல்களனைத்தும் உடல்களென்றாயின. மானுட உடல்களென ஏதும் அங்கிருக்கவில்லை. மானுடமில்லாத உடல்களும் இருக்கவில்லை. அனைவரும் இணைதழுவி உறுமியும் பிளிறியும் கூவியும் உடல்மயங்கினர். சிம்மத்தலைகொண்ட வியாக்ரர்கள், எருமைக்கொம்புகளுடன் மகிஷர்கள்,

பன்றிமூக்கும் செண்பக இலைக்காதுகளும் கொண்ட வராகர்கள், வெண்தந்தங்களும் சேம்பிலைக்காதுகளும் கொண்ட குஞ்சரர்கள். அவர்களுக்குமேல் குளம்போசையுடன் அஸ்வர்களும் குரகர்களும் பாய்ந்தனர். தழைந்த காதுகளுடன் அஜர்களும் திமில்பெருத்து எழுந்த ரிஷபர்களும் கருமயிர் சூழ்ந்த நீளுகிர் கைகளுடன் பாலுகர்களும் விழிதிருப்பும் திசையெல்லாம் நிறைந்திருந்தனர். அவர்களை நோக்கியபோது அவர்களின் குரலென்றும் விழிவிலக பெருகிச்சூழ்ந்த இசையொன்றின் துளியென்றும் செவிமயக்கியது அங்கு நிறைந்திருந்த ஓசை.

அவன் அப்பால் ஒருவன் தெளிநீர்ச்சுனையருகே குனிந்து அமர்ந்திருப்பதை கண்டான். அவன் பின்னுடலும் கால்களும் கரியபுரவியென்று தோன்றின. நீர் அருந்துபவன்போல குனிந்தான். நீருக்குள் வெண்புரவி ஒன்று தெரிந்தது. அவன் நீருக்குள் பாய்ந்து மூழ்கிய அக்கணம் நீருக்குள் இருந்து வெண்புரவி வெளியே பாய்ந்தது. நீரை உதறி உடல்சிலிர்த்தபோது அது மானுடமுகம் கொண்டது. நீருள் பாய்ந்தவனின் அதேமுகம் வெண்ணிறத்தில். நீருக்குள் இருந்து கரும்புரவியன் வெளியே பாய்ந்தபோது வெண்புரவியன் நீருக்குள் பாய்ந்தான். பின் இருவரும் முகமொடு முகம் நோக்கி மூக்கு நுனி தொட்டு பிடரிமயிர்சிலிர்க்க அசையாது நின்றனர். அவர்களின் உடல்தசைகள் சிலிர்த்தன. மூச்சுபட்டு நீர் அலைவளைந்தது.

“வந்ததுமுதல் இதையே செய்கிறான்” என்றது அப்லுதன். சம்பவன் அவனை நோக்கியபடி நின்று “அவனை எங்கோ கண்டிருக்கிறேன்” என்றான். “கரிய குதிரையுடன் வந்தவன்” என்றது அப்லுதன். “இங்கே வேறெவரேனும் வந்ததை நீ

பார்த்தாயா? பேருருவர். உங்களைப் போன்றவர்.” அப்லுதன் கண்கள் சிமிட்டி மின்ன தலைசரித்தபின் உவகையுடன் துள்ளி எழுந்து சுழன்றமைந்து “பெரியவர்?” என்றது. “ஆம்” என்றான் சம்பவன். “மிகப் பெரியவர்?” சம்பவன் “ஆம், அவரேதான்” என்றான். “அவரை நான் கூட்டிச்சென்றேன், காட்டுக்குள்.” சம்பவன் “எங்கே?” என்றான். “அங்கே, அங்கே ஓர் இடத்திற்கு…”

“வா” என்றபடி அப்லுதன் முன்னால் பாய்ந்துசெல்ல அவன் தொடர்ந்து ஓடினான். காட்டுக்குள் ஒளியின் அலைகள் கண்கூசச் செய்தன. “அங்கே” என்று அப்லுதன் சுட்டிக்காட்டியது. அங்கே ஒரு பெரிய குடிலுக்கு முன்னாலிருந்த முற்றத்தில் பட்டுக்கம்பளம் விரிக்கப்பட்டிருந்தது. உணவுக்குடுவைகளும் மதுக்கலங்களும் சிதறிக்கிடந்தன. பாம்புக்கொத்துபோல பெண்ணுடல்கள் நெளிய உள்ளே கீசகனின் உடல் தெரிந்தது. அப்பால் இருவர் தூபக்கலத்தில் அனலிட்டு புகையை விசிறிக்கொண்டிருந்தனர். “அவர் இங்குவரை வந்தார். என்னிடம் செல்க என்றார். நான் சென்றுவிட்டேன்” என்றது அப்லுதன்.

சில கணங்களுக்குள் அந்தக் காமக்குமிழிகளுக்கு விழிசலித்தது. காமம் என்பது பிறிதொன்றை எய்த மானுடன் உடலால் செய்யும் ஒரு வீண்முயற்சி போலும். வழுக்கில் மேலேறத் தவிக்கும் புழுவென நெளிந்து தவித்து துவண்டு எழுந்து தன் உடலின் அத்தனை குறைவுகளையும் அப்போது அவன் உணர்கிறான். உடலென்றிருப்பதன் தவிர்க்கமுடியாத குறைபாட்டை. உடலை உதறி உதறி எழுந்தமைதல். உடலினூடாக உடலை கடத்தலாகுமா? உடல் அல்லாத ஒன்றை உடலால் அறியலாகுமா? வெறுந்தவிப்புதான் இது. தவிப்பின் உச்சியில் தவிப்பு அறுபட்டு உதிர்வதன்

வெறுமையின் இன்பம் மட்டுமே. எனில் உடலில்லாமைகள் உடல்கொண்டு வந்து இங்கு அறிவது எதை?

மூச்சுக்களும் வியர்வை மிளிர்வுகளும் கூந்தல்கலைவுகளும் விழிசொக்கும் அரைத்துயில்களுமாக விலகிய பெண்களின் நடுவே எழுந்து நின்ற கீசகன் தன் பெரிய உடலை மண்ணை உதிர்க்கும் களிறு என உலுக்கிக் கொண்டான். தோள்தசைகள் புடைக்க இரு கைகளையும் விரித்து வெட்டவெளியில் எதையோ அள்ள விழைபவன்போல நின்றான். அவன் நிழல் சரிந்து விழுந்து கைவிரித்ததை ஓரக்கண்ணால் திரும்பிப்பார்த்தான். திடுக்கிட்டு விலகி பின்னர் சிலகணங்கள் நின்று வெளியேறி புதர்களினூடாக ஊடுருவிச்சென்றான்.

குடில்களின் முற்றத்தில் புகைக்கப்பட்ட தூபக்கலங்களில் எல்லாம் அகிபீனா கலந்திருந்தார்கள் என்று முக்தனுக்குத் தோன்றியது. அவன் உடல் இனிய தினவொன்றால் நிறைந்திருந்தது. எண்ணிய சொல் சொட்டாமல் சித்தமுனையில் துளித்து ஒளிர்ந்து அப்படியே நின்றிருந்தது. அதை உணர்ந்ததுமே 'அழகு' என்று சொட்டியது. எவர் என்றது சித்தம். 'இலைகள்' என பக்கவாட்டில் விரிந்தது. 'காகங்கள்' என பின்னோக்கிச் சென்றது. 'முகம்' என முன்னோக்கி எதிலோ சென்று முட்டிக்கொண்டது. 'என்ன இது?' என பிரிந்து நின்று வியந்துகொண்டது. 'ஆம்' என மீண்டும் விலகி நின்று ஒப்புக்கொண்டது. அப்பால் ஒரு சொல்லோடை 'இனி' என ஓடிக்கொண்டிருந்தது.

மின்னலில் இலைகள் பளபளத்து அசைந்தன. நூற்றுக்கணக்கான மின்மினிகள் ஒளிசூடி இலைகளுக்குள் பறந்தன. மிகப் பெரியவை. அவன் அதை உணர்ந்ததும் கூர்ந்து நோக்கினான். அவை இரட்டைமின் கொண்டிருந்தன. இரண்டு

மின்மினிகளின் இணைவுடல். செஞ்சிறகுகள் படபடக்க சென்றன பட்டாம்பூச்சிகள். அவற்றின் சிறகுகள் இருளுக்குள் அருமணி பதிக்கப்பட்ட செவிக்குழைகள் என மின்கொண்டிருந்தன. பொன்வண்டுகள், குருதிப்பூச்சிகள். மலர்களில் அமர்ந்தும் எழுந்தும் சுழன்ற தேனீக்களின் வெள்ளிச்சிறகுகளில் நிலவொளி.

இரவில் இத்தனை பூச்சிகளா? இது காடல்ல. இக்காடு வேறெங்கோ உள்ளது. இது அக்காட்டில் வாழும் உயிர்களின் கனவுக்காடு. அவை அக்காட்டில் இப்போது துயின்றுகொண்டிருக்கின்றன. அங்கு விழித்திருப்பவை மட்டுமே இப்போது இங்கு துயின்றுகொண்டிருக்கக்கூடும். யார் சொன்ன வரி இது? இது ஏதோ சூதர்பாடலில் கேட்டது. இக்காட்டின் ஒவ்வொரு மரபும் முன்பு ஏதேனும் ஒரு கவிஞனின் சொல்லில் இருந்திருக்கும். இவை ஒவ்வொன்றும் சொல்லில் இருந்து சிறகு கொண்டெழுந்தவை. சொல்லில் இவற்றை சந்திப்பது மிக எளிது. சேற்றுப்பாறைப்பரப்பில் படிந்த பறவைச்சிறகுக் கற்தடங்கள் அவை. பறப்பவை எனத் தோன்றினாலும் காலத்தில் அழுந்த நிலைத்தவை. இவை உயிர்கொண்டவை. சொல்லில் வாழ்பவை உயிர்கொண்டால் முதலில் அச்சொல்லையே உடைத்தெழுகின்றன. கூட்டை உடைக்கும் திறனே புழுவின் சிறகென்றாகிறது. இவை பறக்கின்றன. விழியிமைகள். பேசும் உதடுகள். கைமுத்திரைகள். சிலிர்ப்புகள், மெய்ப்புகள், விதிர்ப்புகள். கூசிச்சுருங்கி விரிந்து எழுகையில் உடலறிகிறது தான் பிறிதொன்று என. எரிந்தழிவதற்கான விருப்பில்லாத உயிர்ப்பொருள் இல்லை.

அவன் நிழல்குவையெனச் செறிந்த இலையடர்வுக்கு அப்பால் சென்றவனைக் கண்டு அசைவழிந்து நின்றான். நன்கறிந்தவன் என அவன் நிழலுருத் தோற்றமே சொன்னது. வெண்ணொளியில் எழுந்தபோது முற்றிலும் அறியாதவன் என்றிருந்தான். நாணிழுத்த வில்லென கரிய சிற்றுடல். கூரிய மீசை. தோளில் பரந்திருந்த காகச்சிறகுக் குழலில் ஓரிரு நரைக்கற்றைகள். இறுகிய சிறுதோள்களிலிருந்து இழிந்த கருநாகக் கைகள். அவன் முக்தனை காணவில்லை, அங்குள்ள எதையுமே நோக்கவில்லை. விட்டில் என விழுந்த மரங்கள் மேலும் சிறு பாறைகள் மேலும் இயல்பாக தொற்றிச் சென்றான்.

அவனைத் தொடர்ந்து சென்ற முக்தன் தொலைவில் வண்ண ஆடையின் அசைவைக் கண்டு நின்றான். உத்தரை இரு கைகளையும் விரித்தபோது சிறகு அகல ஒற்றைக்காலில் நிற்கும் செங்கால்சிறுநாரை எனத் தோன்றினாள். அவனை அவள் முன்பு அறிந்திருந்தாள். அவனுக்காகக் காத்திருந்து அவன் காலடியோசை கேட்டு எழுந்து வந்திருந்தாள். அப்பால் அவளுடைய குடில்முற்றத்தில் விறலியரின் பாடல் அப்போதும் கேட்டுக்கொண்டிருந்தது. “பூமுள் எந்த நாகத்தின் பல்? பூவிதழ் என எழுந்தது எந்த அரவத்தின் படம்? புல்லியெனச் சிலிர்த்தது எந்தப் பாம்பின் நா?”

அவர்கள் அணுகி தழுவிக்கொண்டனர். ஒருகணம் ஒருவரை ஒருவர் உணர்ந்து அசைவற்று நின்றபின்னர் விலகி சுழன்று இணைந்து நடமிடத் தொடங்கினர். இரு புகைச்சுருள்கள் என, இரு பொன்வண்டுகள் என. அவர்களின் கால்கள் காற்றில் எழுந்தன. இலைநுனிகளை மிதித்தபடி வானில் மிதந்தனர். ஆடைகள் விலகிய இரு உடல்களும் ஒன்றைப்பிறிதொன்றென

நிரப்பின. நிழலுருமேல் கவிந்தது பருவுரு. பருவுருவை ஒக்கலில் வைத்துச் சுழன்றது நிழல். அவன் அவர்களுக்குக் கீழே ஓடினான். சிறகு கொண்டவர்களாக அவர்கள் செல்ல நிழல் அவன் முன் விழுந்து விழுந்து சென்றது.

நீரில் விழுந்து கடந்த அவன் நிழலைக் கண்டு கூச்சலிட்டான். அக்கணமே நீரில் பாய்ந்து அவளை அள்ளி எடுக்கமுயன்றான். அவள் வண்ணமீனென நீந்தி அகல துரத்தி கைசோர்ந்தான். மறுகரையில் நீர் சொட்ட எழுந்தபோது மூச்சிரைத்துக்கொண்டிருந்தான். சேற்றில் கால்சிக்க எழுந்து நின்றான். அங்கிருந்த அத்தனை மரங்களும் பூத்திருந்தன. மரங்களுக்கு நடுவே மான்கள் உடலெங்கும் பலநூறு விழிகள் இமைக்க பூக்கள் விரிந்த கவைக்கொம்புகளுடன் அவனை அறியாமல் நின்றிருந்தன. வெண்முயல்கள் துள்ளி புதர்களுக்குள் மறைந்து வால் துடித்தன. அவன் எங்கு செல்கிறோம் என்றறியாமல் சென்றுகொண்டிருந்தான். எதிர்பாராக் கணத்தில் முன்னில் அவளை கண்டான்.

சுபாஷிணி அவனைக் கண்டு திகைத்து பின் நெஞ்சில் கைவைத்து “நீங்களா? நான் அஞ்சிவிட்டேன்” என்றாள். “எங்கு செல்கிறாய்?” என்றான். “இளவரசியிடம்... என்னை அங்கிருக்கும்படி தேவி ஆணையிட்டார்” என்றாள் சுபாஷிணி. “அங்கே அவர் இல்லை” என்றான் முக்தன். “ஏன்?” என்றாள். “அவர் ஒரு கந்தர்வனுடன் செல்வதை கண்டேன்.” அவள் அஞ்சி “நாகமா?” என்றாள். “ஏன்?” என்றான். “நான் தேவியை நாகத்துடன் ஆடக்கண்டேன்.” அவன் “நீ திரும்பிச்செல்... அரசியின் அருகிலேயே இரு” என்றான். “இங்கு என்ன நிகழ்கிறது?” என்றாள். “ஒன்றும் நிகழவில்லை. இங்கே காடெங்கும் அகிபீனா புகை... மதுக்களியாட்டு. அனைவரும்

துயின்றுகொண்டிருக்கிறார்கள்.” அவள் “நாம்?” என்றாள். “நாமும்தான்... இக்காடு நம் கனவு.” அவள் அவனை நோக்கி எண்ணி தயங்கி பின் “எவருடைய கனவு?” என்றாள்.

அவன் சிரித்து “நான் என் கனவில். நீ உன் கனவில். இக்காடு அனைவரின் கனவுகளையும் கலந்துவிடுகிறது” என்றான். அவள் பெருமூச்சுவிட்டாள். அவன் தன்னருகே பாம்பின் அசைவை உணர்ந்து திடுக்கிட்டு நோக்கி அது தன் கை என அறிந்தான். அது நீண்டு சென்று அவள் கையை பற்றியது. அவன் அதை இழுத்துக்கொள்ள எண்ணியது அதை அடையவில்லை. அவன் தொடுகையில் அவள் விழிகளில் மெல்லிய திகைப்பும் கூச்சமும் தோன்றின. ஆனால் அவள் உடல் குழைந்து அவன் கையை ஏற்றுக்கொண்டது. அவன் கை அவளை இழுத்து அவன் உடலுடன் சேர்த்துக்கொண்டது. அவள் நீள்மூச்சுடன் அவனுடன் ஒட்டிக்கொண்டாள்.

“நான் உங்களை அறிவேன்” என்று அவள் சொன்னாள். “எப்போது?” என்றான். “அறியேன்... மிகமிக இளமையிலிருந்தே. பிறந்ததுமுதல் எப்போதும் அறிந்திருந்தேன் என்று உணர்கிறேன்.” காமம் முன்பு அறிந்ததாக இருந்தது. அதிலிருந்த அத்தனை புதுமையும் மிகப் பழைமையானவை. தொன்மையான சடங்குகளைப்போல எவரும் எதையும் மாற்றிவிடமுடியாதவை. காமம் துணையளிப்பதில்லை, அது பெருந்தனிமையையே சூழப்பரப்புகிறது. காமத்தில் இருப்பது குருதி ஒன்றே. மண்ணைச் சூழ்ந்திருக்கிறது குருதி. கோடிக்கணக்கான உயிர்களின் உடல்களினூடாக பரவியிருக்கும் ஒற்றைப்பெருங்கடல். புயலெழுகிறது, அலைபுரள்கிறது, எல்லைகளில் அறைந்து வெறிக்கூச்சலிடுகிறது.

அவள் இதழ்கள் நடுங்கிக்கொண்டிருந்தன. சிறியமுலைக்கண்கள் விரைத்து எழுந்திருந்தன. "என் கால்கள் வியர்த்து வழுக்குகின்றன" என்றாள். தன் கைகளால் அவனை இறுக அணைத்துக்கொண்டாள். அவள் இதழ்களின் வெம்மையை நாவின் தவிப்பை மூச்சின் ஊன்மணத்தை நெஞ்சத்துடிப்பை குருதியின் ஓசையை அறிந்தான். அவள் குழல் நீண்டு பறந்துகொண்டிருந்தது. நெடுந்தொலைவுக்கு. "பொன்னிற நாகம், பொன்னென பூண் என எழுவது பெண்ணென எழுந்த நாகம்." யாரோ எங்கோ முழவுமீட்டி பாடிக்கொண்டிருந்தார்கள். அவள் உடலுக்குள் இருந்து அப்பாடல் எழுந்தது. அவள் உடல் நீண்டு நாகமென்றாகியது. கைகளில் வழுக்கி விலகுவதுபோலவும் முழுதுடலாலும் அவனைக் கவ்வி இறுக்கிக்கொள்வதுபோலவும்.

அவன் அவளை உடலால் இறுக்கியபடி கட்டைவிரலால் மண்ணை மிதித்தான். நீரில் மிதப்பதுபோல எளிதாக காற்றில் எழுந்துவிட்டான். சூழ வீசிய காற்றில் அவர்களின் உடல் ததும்பியது. அக்காற்றிலிருந்த ஓசைகளுக்கெல்லாம் அலைபாய்ந்தது. எழுந்து மேலே மிதந்தபடி கீழே பார்த்தபோது அந்தச் சிற்றோடை வெள்ளியொளியுடன் வளைந்து சென்றது. அதற்கு அப்பால் அவன் இருவரை கண்டான். பிருகந்நளையுடன் உடல்தழுவி திளைத்துக்கொண்டிருந்த இளைஞனை அவன் முன்னர் அறிந்திருந்தான். உத்தரனின் சாயல் அவனுக்கிருந்தது.

அவ்வியப்பு அவனை இரண்டென பிளக்கச் செய்தது. அவன் தோளுக்குப்பின் முளைத்த இரு விழிகள் அவர்களை அருகே சென்று நோக்கின. உடல்கள் ஒன்றென்று இணைந்து இழைந்து நெளிய பிருகந்நளையுடன் கூடியிருந்தவனை அவன்

அருகணைந்து கண்டான். பின்னர் கீழே அந்தப் பெருநதியின் வளைவில் கரையோரத்தில் பாறை ஒன்றில் தன்னந்தனிமையில் அமர்ந்து நிலவை நோக்கிக்கொண்டிருந்த உத்தரனையும் கண்டான். அவன் அங்கிருந்த எதையும் அறிந்திருக்கவில்லை என்று தெரிந்தது.

# நீர்க்கோலம் - 53

**52. நிறையாக் கானகம்**

கீசகன் ஒரு பெரிய கருமுகில்தொகைபோல ஒழுகிச்செல்வதை முக்தன் கண்டான். மரங்களினூடாக அவன் பிரிந்து பரவி கடந்து மீண்டும் தொகை கொண்டான். சரிவுகளில் கீற்றென அகன்று பொழிந்து நீண்டு பின் எழுந்தான். அவன் சென்ற பின்னரும் இலைநுனிகளில் அவன் சற்று எஞ்சியிருந்தான். எஞ்சியவை முக்தன் கடந்துசென்றபோது நாநீட்டி அவனைத் தொட எம்பின. தொலைவில் மரங்கள் ஒன்றோடொன்று அறைந்துகொள்ளும் ஓசை எழுந்தது. இரு பாறைகளின் மோதல் ஒலியா அது? ஒவ்வொரு அறைவோசைக்கும் காடு விதிர்ப்பு கொண்டது. அவ்வோசை கேட்டு கீசகன் நின்றான். தன்னை நான்கு பக்கமிருந்தும் இழுத்து திரட்டி பேருருக்கொண்டு ஒன்றன்மேல் ஒன்று ஏறிய ஏழு கரிய யானைகள் என நின்றான்.

அப்பால் மரங்களின் தழைப்பில் மறைந்தும் இடைவெளிகளில் தெரிந்தும் இரு அலைகள் கொப்பளிப்பதை முக்தன் கண்டான். விழிகூர்ந்தபோது அவை இரு மாநாகங்கள் எனத் தெளிந்தான். இரு நதிகளின் அலைகள் என அவை சுருண்டெழுந்து வந்து உடலால் அறைந்துகொண்டன. ஒன்றையொன்று கவ்வி தழுவி

இறுக்கி முறுகி அதிர்ந்து பின் ஒன்றையொன்று தூக்கி வீசி மண்ணில் சென்று வெட்டுண்ட பெருமரத்தடிகள் என விழுந்தன. மீண்டும் நிலமறைந்து எழுந்து படம் விரித்து ஊதுலைக்காற்றெனச் சீறி நா பறக்க செஞ்சின விழிகள் எரிய நோக்கி தவித்து ஒரே கணத்தில் ஒன்றன்மேல் ஒன்று பாய்ந்தன. நச்சுப்பற்களால் ஒன்றை ஒன்று கவ்விக்கொண்டன. ஒருவர் நஞ்சில் மற்றவர் உடல் கருகி சுருண்டு அதிர தளர்ந்து இரு பக்கமாக விழுந்தன. நெளிந்து தன்னுணர்ந்து சினம்பெருக மீண்டும் நிலத்தை உந்தி எழுந்து படம்கொண்டன. அப்போதும் அவற்றின் வால்நுனிகள் ஒன்றையொன்று கவ்வித்தழுவி பிணைந்திருந்தன.

கீசகன் தன் இரு தோள்களையும் ஓங்கி அறைந்து பிளிறலோசை எழுப்பியபடி அவர்களை நோக்கி சென்றான். அந்த ஓசை கேட்டதுமே இரு நாகங்களும் மேலிருந்து சரடறுந்து விழுபவைபோல மண்ணில் விழ முக்தனின் காலடிநிலம் அவ்வெடையில் அதிர்ந்தது. கரிய நாகம் திரும்பி அப்பேருருவிடம் பொருத்தமுடியாத விரைவில் காட்டுக்குள் புகுந்துகொண்டது. அது செல்லும் வழியில் புற்பரப்பென காட்டுமரச்செறிவு வளைந்து வழிவிட்டது. எங்கோ ஒரு பாறை அதன் உடல்பட்டு நிலைபெயர்ந்து உருண்ட ஓசை கேட்டது. மண்ணில் விழுந்த பொன்னிற நாகம் தளர்ந்ததுபோல நெளிந்தபடி கிடந்தது. கீசகன் அதை நோக்கி ஓடினான். அது வழிந்து புதர்களுக்குள் சென்றது. அதன் வால்நெளிவை முக்தன் கண்டான். அது சென்ற வழியை இலைத்தழைப்பின்மேல் ஒரு அலையென நோக்கமுடிந்தது. அதைத் தொடர்ந்து கீசகன் சின்னம் விளித்தபடி ஓடினான்.

ஒருகணம் அனைத்தும் தெளிவாகி கால்தளர்ந்து முக்தன் பின்னால் சரிந்து விழுந்தான். கரவுக்காட்டுக்குள் இருக்கிறேன், உள்ளே வந்தவரை பித்தர்களாக்கும் அறியாச்செறிவு. கந்தர்வர்களும் கின்னரர்களும் உலவும் வெளி. நான் கனவுகண்டுகொண்டிருக்கிறேன். கையை நிலத்தில் ஓங்கி ஓங்கி அறைந்தான். விழித்துக்கொள் விழித்துக்கொள் என தனக்குத்தானே ஆணையிட்டான். புரண்டுபடுத்தால் போதும், மெய்யுலகில் எழுந்துகொள்ளலாம். புரண்டு படுத்து விழிதிறந்தபோது தன்னைச் சூழ்ந்திருந்த காடு இளமஞ்சளாக அதிர்ந்துகொண்டிருப்பதை கண்டான். முத்தி முத்தி விரியும் செவ்வுதடுகளாக, மூடித்திறக்கும் இமையிணைகளாக, கருமின்நோக்குகொண்ட விழிகளாக, மென்மயிர்சூழ்ந்த மான்குளம்பல்குல்களாக, ஐவிரல் நடிக்கும் உள்ளங்கைகளாக, விதிர்க்கும் மான்செவிகளாக, வீசும் யானைமுறச்செவிகளாக, துடிக்கும் பூனைக்காதுகளாக, நீண்டு மறையும் தவளைநாவாக, சொட்டி நெளியும் நாய்நாவென. வண்ணத்துப்பூச்சிகள், அவை ஒன்றை ஒன்று துரத்திச் சுழன்றன. ஒன்றை ஒன்று கவ்வி காற்றுச் சேக்கைமேல் காமம் கொண்டன. இரண்டென மிதந்தன. பிரிந்து மீண்டு உடல்கவ்விக்கொண்டன. ஒளிநிறைந்த முகில்கள் கனவில் திறக்கும் இமைகளென மெல்ல பிரிந்தன. உருகும் நெய்யின் நுரை என கரைந்து மறைந்துகொண்டிருந்தன. காற்று இசையென்றாகி சூழ்ந்து பறந்தது. ஒவ்வொரு இலைநுனியும் ஒரு சொல்லில் துடித்துக்கொண்டிருந்தது.

அவன் எழுந்து நின்று சூழ நோக்கினான். புல்வெளியில் கால்தடம் தெரிய அதைத் தொடர்ந்து ஓடினான். மரங்கள் மிகக் குழைந்திருந்தமையால் மென்பஞ்சுத் தலையணைகளில் என அவற்றில் முட்டிக்கொண்டு சுழன்று சுழன்று சென்றான்.

யாழொலி குழைந்து குழைந்து ஒலிக்கக் கேட்டான். அத்திசையில் மெல்லிய பொன்னிற ஒளியில் இலைப்பரப்புகள் மின்னுவதைக் கண்டான். மரங்கள் நடுவே நின்றிருந்த சைரந்திரியை கண்டதும் அவளருகே கீசகனையும் கண்டான். கீசகன் வெண்முகில் என ஒளிகொண்டிருந்தான். அவன் இரு கைகளையும் விரித்தபோது விரல்களிலிருந்து அந்த யாழ் முரலும் இசை எழுந்தது. கைகளை நீட்டி அவளை தழுவச்சென்றான். அவள் அவன் கைகளைத் தட்டி அப்பால் ஓடினாள்.

தூங்கலோசை நடைமாறியது. ஏந்திசை, அகவலிசை, பிரிந்திசை என அது கரைந்தது. கீசகன் பொன்னிறம்கொண்டு மேலும் ஒளிர்ந்தான். இசை துளிசொட்டும் விரைவுகொண்டது. பொன்மணிகள் பொற்தாலத்தில் உதிர்வதுபோல துள்ளலோசை. அவள் கைவீசி அவனை அடிக்க முயன்றாள். கை காற்றில் சுழல சீறி ஏதோ சொல்லி அப்பால் சென்றாள். அங்கு நின்றிருந்த வேங்கைமரத்தடியில் அதன் கரிய வேர்க்குவைமேல் ஒட்டிக்கொண்டாள். கீசகன் சிவந்து அனலென்றானான். அவன் கைகள் எரிகொழுந்தென நெளிந்தன. மயிலகவல் என, மான்சினைப்பு என, மடப்பிடிக்குரல் என அகவியது அவன் குரல். அவள் விலகி அப்பால் செல்ல அவன் தளிர்ப்பசுமை கொண்டான். சிம்மக்குரலென அவன் ஓசை எழுந்தது. நெஞ்சில் ஓங்கி அறைந்து கூவியபடி நீலநிறத் தழலென எழுந்தான். அந்திமுகில் என அணைந்துகொண்டே சென்று கரிய உருவம் கொண்டான். செவிதுளைக்க முழங்கியபடி அவளை அள்ளிப்பற்றிக்கொண்டான். அவன் பிடியில் அவள் திமிறி துள்ளி குரலெழுப்பினாள். அத்தருணம் மரத்தின் மீதிருந்து பெரிய கருங்குரங்கு ஒன்று கீசகனின் தலைமயிரை பிடித்துக்கொண்டது. அவன் அவளை

விட்டுவிட்டு அதன் கையை பிடிக்க அவனை அப்படியே மரங்களின் மீது தூக்கிக்கொண்டு சென்றது அது.

கஜன் தன் முன் விழுந்த நிழலை முதலில் கண்டான். தலைநிமிர்ந்து நோக்கியபோது நெடுந்தொலைவுவரை அலையடித்துப் பறக்கும் நீண்டகுழலை சிறகு எனக்கொண்டு பறந்து வந்து மெல்ல தன்முன் அமர்ந்த அப்பெண்ணை கண்டான். அவள் விழிகள் நீலமணிகளென ஒளிவிட்டன. நீண்ட முகத்தில் மெல்லிய உதடுகளுக்குள் வெண்பற்கள் மின்ன அவனை நோக்கி சிரித்தாள். “யார் நீ?” என்றான். “என்னை மென்மொழி என்பார்கள்” என்றாள். அவன் அவள் கைகளை பார்த்தான். அவை பட்டுத்துணிச்சுருள்போல மென்மையாக குழைந்தன. “நீ கந்தர்வப் பெண்ணா?” என்றான். அவள் புன்னகைத்தாள். அவனுக்கு அப்புன்னகையின் பொருள் தெரியவில்லை.

“உன்னை நான் முன்னர் கண்டிருக்கிறேன்” என்றான். “ஆம்” என அவள் சொன்னாள். அவள் விழிகள் அவனை அருகே இழுத்துக்கொண்டிருந்தன. குளிர்ந்த காற்று ஒன்று அவனை பின்னின்று தள்ளி முன்செலுத்தியது. “ஆம், நீ அவள்... அரசியின் சேடியருடன் இருந்தாய்.” அவள் “ஆம்” என்றாள். உரக்க நகைத்து கைகளை விரித்து “அவளிலும் நான் இருந்தேன்” என்றாள். அவன் “நம் விழிகள் தொட்டுக்கொண்டன. ஒரு கணம்” என்றான். “ஆம், அதன்பொருட்டே இங்கு நாம் சந்திக்கிறோம்” என்றாள். அவன் கைகளை அவள் கைகள் பற்றின. அவை மீன்களைப்போல் குளிர்ந்திருந்தன. “நீ மானுடப்பெண் அல்ல.” அவள் “நான் அவ்வாறு சொல்லவில்லை” என்றாள். “உன் குருதி பனிபோன்றிருக்கிறது.” அவள் “அனல் விழிகளில் மட்டுமே” என்றாள்.

அவர்கள் தழுவிக்கொண்டார்கள். தழுவிக்கொள்வதற்கென்றே படைக்கப்பட்டது போன்றிருந்தது அவள் உடல். அவள் கைகளும் கால்களும் அவனை முதுமரத்தின் மேல் படர்ந்து படிந்த இளமரம்போல சுற்றிக்கொண்டன. அவன் அவள் கண்களை குனிந்து நோக்கினான். அவற்றில் நோக்கற்ற மணிவிழிப்பு ஒன்றிருந்தது. அவன் விலக விழைந்தான். அவ்வெண்ணத்தை உடலுக்கு அறிவிக்க இயலவில்லை. அவள் வாய் திறந்தபோது வளைந்த நச்சுப்பற்களை கண்டான். "நீ நாகினி" என்றான். சிரித்தபடி அவள் எம்பி அவன் உதடுகளை கவ்விக்கொண்டாள். நாகநஞ்சு இளவெம்மையுடன் இருந்தது. மயக்குறு மதுவென குருதியில் கலந்தது. உடற்தசைகள் அனைத்தும் நெய்த்திரிகளென பற்றிக்கொண்டன. உள்ளுறுப்புகள் அரக்கென உருகிச்சொட்டின.

அவள் அவனுடன் மேலே எழுந்தாள். கிளைகள் விரித்திருந்த இலைத்தழைப்புகளை கால்களால் உந்தி உதைத்து மேலேறினாள். நிலவொளி அலையடித்த வெளியில் அவனுடன் மிதக்கும்போது அவர்கள் இணைந்துகொண்டனர். "மேலும்! மேலும்! மேலும்!" என அவள் மூச்சு சீறினாள். "குருதியனைத்தும்!" என அவன் சொன்னான். "ஆம், குருதியனைத்தும். அனலனைத்தும். சொல்லனைத்தும்" என்று அவள் சொன்னாள். சுவைத்துண்ணும் நாவின் திளைப்பு. துளைத்து உட்புகும் புழுவின் தவிப்பு. வாலொன்றே உறுப்பென்றான தலைப்பிரட்டை. எரிந்து எரிந்து எரிந்து இருள்வெளியில் ஓடியது தழல்விண்மீன். இடியோசை எழுந்த வானில் எழுதிச்சென்றது ஒளி. தோன்றுவதும் மறைவதும் ஒருகணமென்றான ஓவியம். விழிகளில் அனல். சுடர் நின்றெரிந்த அகல். நோக்கும் தொலைவுகள் மடிந்து மடிந்து சூழ்ந்தன. இறுகி அணுவென்றாக்கி உண்டன. அப்பால் வெடித்து

இருட்பெருங்குழிச்சுழியலைப்பெருக்கென கரையறைந்து ஓலமிட்டன.

விலகி மூச்செறிந்து ஓய்ந்து மெல்ல அடங்கி காலமிழந்து மீண்டு கண்விழித்து மறுபடியும் அனல்பற்றிக்கொள்வதற்கு முன்பு அவன் கீழே பார்த்தான். அங்கே மலர்மரத்தடியில் புன்னகையுடன் நின்றிருந்த பெண்ணை முன்னரும் கண்டிருந்தான். அவன் எண்ணத்தை உணர்ந்தவளாக "அவரை சற்றுமுன் உதறி கீழே உதிர்த்தேன்" என்றாள். அவன் "யார்?" என்றான். "அவர் பெயர் முக்தன்… அத்தனை ஆடைகளுக்கும் அடுக்குகளுக்கும் அடியில் அவர் ஒரு பெண் என்று அறிந்தேன். அனைத்தையும் கழற்றி அவரை முற்றிலும் விடுவித்தேன்." அந்தப் பெண் இளங்கன்னி என மலர்களுக்கு நடுவே இடைவளைத்து ஓடினாள். தாவி கிளைமேல் ஏறி உலுக்கி மலர்பெய்கைக்குக் கீழே கைவிரித்து நின்று கூவிச்சிரித்து துள்ளினாள். "கன்னியென்று கண்விழித்திருக்கிறாள்" என்றாள் வெறியுடன் இழைந்து உயிர்த்த நாகினி.

முக்தன் மலர்ச்சோலையினூடாகச் சென்று அவர்களை நோக்கி திகைத்து நின்றான். இரு பேருருவர்கள் தோளுக்குத் தோள்நிகர் கொண்டு மற்போரிட்டனர். மத்தகங்கள் மோதிக்கொண்டன. அனலுடன் அறைபட்டன தசைகள். மலைப்பாறைகள் மண் வந்தவைபோல விழுந்து நிலம் அதிர உருண்டனர். கைகளும் கால்களும் தங்கள் வஞ்சப்பெருக்கை தாங்களே கண்டடைந்து சீறி எழுந்தன. பின்னி முறுகி அதிர்ந்து விலகி அறைந்து மீண்டும் முயங்கின. அவன் அவர்களை அடையாளம் கண்டு அலறி கைநீட்டியபடி முன்னால் ஓடினான்.

வலவன் கீசகனைத் தூக்கி மண்ணில் அடித்தான். அவனுடைய உதையை உருண்டு ஒழிந்து எழுந்த கீசகன் ஓங்கி அறைய

நிலைதடுமாறி பின்னால் சரிந்தான். அறைந்து எழுந்து மீண்டும் அறைந்து விழுந்து எழுந்தபோது கீசகன் ஓடை நீரில் விழுந்தான். சேறுடன் கலங்கி புரண்டு அவன் எழ அவன்மேல் வலவன் பாய்ந்தான். இருவரும் புழுக்களென நெளிந்து எழுந்து நாணல்புதர் உலைய மேலேறியபோது வலவன் பெருந்தோள்கொண்ட பெண் என்று மாறிவிட்டிருந்தான். உருள்மலைப்பாறை என பெருமுலைகள் இறுகியசைந்தன. களஞ்சியக் கலம் என இடை விரிந்திருக்க ஒசிந்தசைந்து வந்து புன்னகைத்தாள்.

கீசகன் திகைப்புடன் அவளை நோக்கி சில கணங்கள் நின்றான். பின்னர் கைவிரித்து அருகழைத்தபடி அணுகினான். இருவரும் தழுவிக்கொண்டார்கள். அக்கணம் வரை அங்கு நிகழ்ந்ததும் காதலே என்பதுபோல. அவ்வுடல்முயக்கை நோக்கி தன் உடலை உணர்ந்தபோதுதான் பெண்ணென்று அறிந்தான். மூச்சில் முலைகள் எழுந்தமைய கைகளால் கழுத்தை வருடியபடி நீர்க்கரையை நோக்கினான். மறுகரையில் பாறைமேல் அமர்ந்திருந்த தனியன் நிலவொளியில் முடியிழைகள் ஒளிர விழிசரித்திருந்தான். நீரில் பாய்ந்து மூழ்கி நீந்தி சொட்டும் உடலுடன் அவன் முன் அவள் எழுந்தாள்.

✿சம்பவன் மலர்ச்செண்பகத்தின் அடியில் அவளை கண்டான். தொலைவிலேயே அவள் விழிகள் நீலம் சுடர்வதைக் கண்டுதான் அருகணைந்தான். அவளை முகமறிந்திருந்தான். "யார் நீ?" என்றான். "என் பெயர் நறுமொழி" என்றாள். அவள் இடையில் ஒரு சிறுகுழவி இருந்தது. அரைத்துயிலில் அவள் தோளில் கன்னம்பதிய முகம்புதைத்து அவனை தன் கருவிழிநிறைந்த கண்களால் நோக்கிக்கொண்டிருந்தது.

“உன்னை நான் கண்டிருக்கிறேன்” என்றான். “ஆம்” என அவள் புன்னகை செய்தாள். “நீ...” என அவன் அவளை அடையாளம் கண்டுகொண்டான். “அவளில் நான் எழுந்தேன்” என்றாள் அவள்.

“இச்செண்பகத்திலும் நான் வாழ்கிறேன். இதன் விதை மண்ணில் பதிந்தபோது நானும் புதைந்தேன். இதனுடன் முளைவிட்டெழுந்தேன். நூறுமுறை பூத்து முற்றிலும் உதிர்ந்தொழிந்து மீண்டும் மீண்டும் நம்பிக்கை கொண்டு காத்திருக்கிறேன்” என்றாள். “என்னை இவர்கள் செண்பகக்குழல்மொழி என்கிறார்கள். ஆயிரம் முறை தொடுக்கப்பட்டும் எய்யப்படா இலக்கு என்பதனால் நான் அழியாக்கன்னி, அருளும் தெய்வம்.”

அவன் அக்குழவியைச் சுட்டி “அது உன் குழந்தையா?” என்றான். “இல்லை, என்னை வந்தடைந்தவர்களில் ஒருவன். என் மைந்தன் என்று இவனை ஒக்கலில் எடுத்தேன்” என்றாள். அவன் “அவ்விழிகள் என்னை நோக்குகின்றன” என்றான். “அவனை நான் துயிலச்செய்கிறேன்” என்றாள். அவள் கை அக்குழவியின் முதுகில் பட்டதும் அது விழிகளை மூடியது. அதை மெல்லத்தட்டி மூச்செழ துயில்கொள்ளச்செய்து அம்மரத்தடியில் கிடத்தினாள். அவனை நோக்கி திரும்பி “வருக!” என்றாள். அவன் “நான்...” என்றான். “நீங்கள் மாருதர்... மலர்மரங்கள் எவையும் விலக்கல்ல உங்களுக்கு.” அவன் தன் உடல் பெருகுவதை உணர்ந்தான். கைகள் மயிரடர்ந்து விரல்நீண்டு கருங்குரங்குகளுடையவை போலாயின. கால்கள் அகன்று பாதங்கள் கைகள்போல் மாறின.
மரங்களுக்கிணையாக பேருருக்கொண்டு எழுந்தான். நெஞ்சில் இரு கைகளாலும் அறைந்துகொண்டு பிளிறலோசை

எழுப்பினான். பாய்ந்து அவளைப்பற்றித் தூக்கிக்கொண்டு மரங்களுக்குமேல் எழுந்தான்.

குங்கன் தன் காயை நீக்கி வைத்து “மீண்டும் ஒருமுறை” என்றான். விராடர் காய்களை நோக்கியபடி விழித்து அமர்ந்திருந்தார். என்ன நிகழ்ந்தது என்றே அவர் அறியவில்லை. குங்கன் புன்னகையுடன் “நோக்குக, அரசே!” என்றான். ஆட்டத்தை அப்போதுதான் விராடர் புரிந்துகொண்டார். “ஓ” என்றபின் மெல்ல தளர்ந்து “அனைத்து ஆட்டங்களும் உங்களுடையவை மட்டுமே, குங்கரே. ஆட்டத்தில் திளைக்கும்பொருட்டு என்னை உடனழைத்துச் செல்கிறீர்கள். வெல்லவிடுகிறீர்கள்” என்றார். “அல்ல, மெய்யாகவே அல்ல. அரசே, எந்த ஆட்டத்திறனாளனையும் முன்அமர்ந்து எதிர்கொள்வது முடிவிலி. மூன்று தெய்வங்களையும் விட பெரியது அது. அதன் கைகள் உங்களுடையவை.”

புன்னகையுடன் தாடியை தடவியபடி “இங்கு இப்போது நான் வென்றேன். இதுவும் அதன் முடிவிலா தகவுகளில் ஒரு தருணம் மட்டுமே என்றுணர்ந்தால் வெற்றியும் தோல்வியும் நிகரென்று ஆகும்” என்றான். விராடர் “இதுபோல நான் ஆடியதில்லை. நிலவொளியில்...” என்றார். அந்த ஆட்டத்தை குங்கன்தான் வகுத்தான். மாறும் நிலவொளியில் ஒவ்வொரு கணமும் என ஆட்டக்களம் மாறிக்கொண்டிருந்தது. காய்களின் நிழல்கள் நீண்டு ஒன்றையொன்று தொட்டன. “இவ்வாட்டத்தில் நாம் முழுநிலவையும் சேர்த்துக்கொள்வோம்” என்றான் குங்கன். “காய்களின் நிழலை நீக்கிவைத்தும் களங்களின் வண்ணத்தை மாற்றியும் அது ஆடட்டும். காய்களின் நிழல் சென்று தொடுவதும் ஆட்டமே” என்றான்.

விழிமயக்கும் உளமயக்கும் ஒன்றெனக் கலந்தன. அருகிருந்து சேடியர் தேறலை ஊற்றி அளித்துக்கொண்டே இருந்தனர். ஆடுந்தோறும் மாறின ஆட்டநெறிகள். என்ன நிகழ்கிறதென்றே அறியமுடியவில்லை. கைகள் தங்கள் விருப்பப்படி ஆடின. உள்ளம் வேறெங்கோ வேறேதோ ஆடிக்கொண்டிருந்தது. “நான் வேறெங்கோ இருக்கிறேன், குங்கரே. பேருருக்கொண்ட குரங்கு ஒன்றை காண்கிறேன். அதனுடன் மற்போரிடுகிறேன். பெருகும் நதிக்கரையில் அமர்ந்திருக்கிறேன். பெண்ணென்றும் ஆணென்றும் உடலுரு மாறுகிறேன்.” குங்கன் “அவையனைத்தும் இங்கு இக்களத்தில் நிகழ்கின்றவையே. இதோ இது குரங்கு, அது மதகளிறு” என்றான். “ஆம்” என்றார் விராடர்.

“மீண்டுமொரு ஆடல்” என்று கரு நிரத்தலானான் குங்கன். “விடிவெள்ளி எழ இன்னும் சற்றுநேரமே உள்ளது, அரசே” என்றாள் சேடி. “அதுவரை ஆடுவோம்” என்றான் குங்கன். அந்த ஆடுகளம் நிலவொளியில் மின்னும்படி நவச்சாரமும் மயில்துத்தமும் காக்கைப்பொன்னும் கலந்த வேதிப்பசையால் வரையப்பட்டிருந்தது. இளநீலம் என்றும் மென்பச்சை என்றும் வெள்ளி என்றும் பொன் என்றும் ஒளிக்கோணம் மாறுகையில் வண்ணத்தோற்றம் கொண்டன அக்கோடுகள். மான்களும் வெள்ளாடுகளும் புரவிகளும் எருதுகளும் களத்தில் நிரந்தன. அப்பால் நான்கு கரடிகள். இரு புலிகள். ஒரு சிம்மம் மையத்தில் நின்றது. ஒவ்வொன்றுக்கும் பெண். பெண்சிம்மம் எதிரில் முகமொடு முகமென நின்றது. “உங்கள் கைகளுக்கு” என்றான் குங்கன்.

ஆட்டம் தொடங்கியது. எப்போது ஆடத் தொடங்கினோம்? குடியும் உணவும் முடிந்ததுமே பட்டுவிரிப்பில் களம்பரப்பி

அமர்ந்தோம். கரு நிரத்தினோம், நெறி உரைத்துக்கொண்டோம். மீண்டும் மீண்டும் ஆட்டம். அல்லது முடிவிலாத ஒரே ஆடல். ஒவ்வொரு விலங்கும் தன் நெறிக்கேற்ப செயல்கொண்டது. துரத்தியது, தப்பியோடியது. பணிந்தது, பற்றிக்கொண்டது. கொன்றது, வென்றபின்னர் விட்டுச்சென்றது. சேடி “விடிவெள்ளி” என்றாள். “ஆம்” என்றார் விராடர். ஒவ்வொன்றுக்கும் தங்கள் நெறி என்று ஒன்று உண்டு. அவை வெட்டிக்கொள்வதே இல்லை. ஒருமுறைகூட ஒரு ஈயின் விழிகள் கொசுவின் விழிகளை சந்தித்திருக்காது இப்புவியில்.

சுற்றிலும் ஒளி மாறிக்கொண்டே வந்தது. நிலவு மேற்குவளைவில் நின்றிருந்தது. புலரிப்பறவைகள் கூவவும் கரையவும் குழறவும் குமுறவும் தொடங்கின. கருக்கள் ஒவ்வொன்றும் இரட்டை நிழல்கள் கொள்ள ஆட்டநெறிகள் அனைத்தும் முழுமையாக கலைந்தன. காற்றுவெளியில் செம்மை கலந்தது. விண்விரிவில் முகில்கள் எரியத் தொடங்கின. நிலவு நீட்டிய நிழல் கரைந்து களத்தில் மறைந்தது. பறவைக்குரல்கள் பெருக காடு துயிலெழுந்தது. குங்கன் முழுமையாகவே ஆட்டத்தில் ஈடுபட்டிருந்தான். சூழ என்ன நிகழ்கிறதென்றே அறியாதவனாக. ஆட்டத்தில் இப்படி முழுதும் மூழ்கவேண்டுமென்றால் இது இங்கல்ல, அவனுள் நிகழவேண்டும். இங்கு நிகழ்பவை அங்கு விரிந்தால் அது முற்றிலும் பிறிதொன்று.

ஆட்டம் நிகழ்ந்துகொண்டிருக்கையிலேயே களம் மறையத் தொடங்கியது. அவர் குங்கனை நோக்கினார். அவர் பெண்சிம்மத்தை நீக்கிவைக்க அதன் காலடியில் களம் முற்றிலும் அழிந்துவிட்டிருப்பதை உணர்ந்து நிமிர்ந்து நோக்கினார். இலைகளினூடாக வந்த காலைக்கதிர்கள்

ஒளிர்வாள்கள் என மண்ணில் ஊன்றி சுடர்விட்டன. இலைகள் காற்றிலசைய நூற்றுக்கணக்கான வெள்ளிமுனை அம்புகள் தெறித்தன. சேடியிடம் காய்களை அள்ளி பெட்டிக்குள் வைக்க கையசைவால் ஆணையிட்டான் குங்கன்.

❀தீர்க்கன் காவல்மாடத்தின் மீது ஏறிவந்தபோது எதிர்வெயில் நன்றாக எழுந்து கண்கள் கூசின. நீர்வழியும் விழிகளை விரல்களால் அழுத்தியபடி முழைகயிற்றிலிருந்து மாடத்தின்மீது கால்வைத்து நின்று கைகளைத் தூக்கி சோம்பல்முறித்து "துயின்றுவிட்டீரா, மாலரே?" என்றான். மாலர் அவன் ஏறிவரும் ஓசையில் விழித்துக்கொண்டிருந்தாலும் எழவில்லை. மடியிலிருந்த வேலை அப்பால் வைத்துவிட்டு "இந்தக் காவல்மாடத்தில் கருக்கிருள்காலையில் கண்ணயராதோர் எவருமில்லை" என்றார். "நீங்கள் கண்ணயர்ந்தீர்களா என்றுதான் கேட்டேன்" என்றான் தீர்க்கன். அவர் எழுந்து சோம்பல்முறித்து "நான் துயின்றமையால்தான் நீ வெயிலெழுந்தபின் வர முடிகிறது" என்றார். "நான் படுக்கைக்குச் சென்றதே கருக்கிருள் செறியத் தொடங்கிய பின்னர்தான்" என்றான் தீர்க்கன்.

அவர் தன் பாளைப்பையை எடுத்து உள்ளிருந்து ஒரு பாக்குத்துண்டை வாயிலிட்டுக்கொண்டார். "என்ன நிகழ்ந்தது நேற்று?" என்றான் தீர்க்கன். "என்ன நிகழும்? நிலவு வந்தது, சென்றது. இதோ, சூரியன். இனி உச்சி, பின் அந்தி. வேறென்ன?" தீர்க்கன் "கந்தர்வர்கள்?" என்றான். அவர் சிரித்து "வந்திருப்பார்கள்... உள்ளே கூடைகூடையாக அகிபீனாவும் மதுக்குடங்களும் சென்றன. மூன்றுமுதல்தெய்வங்களும் வந்திறங்கியிருக்க வாய்ப்புண்டு" என்றார். அவன் திரும்பி காட்டை பார்த்தான். பச்சைச்செறிவின்மேல் பரந்த

இளவெயிலில் இலைமுனைகள் பசுஞ்சுடர்களாக எரிந்தன. செம்மலர்கள், பொன்மலர்கள், வெண்மலர்கள். நோக்கமுடியாதபடி கண்கள் கூசி கண்ணீர் மூடியது.

அப்பால் கொம்பு ஒன்று முழங்க காவல்மாடக் கொம்புகள் இணைந்துகொண்டன. தொடர்ந்து காவல்முற்றத்து முரசுகள் உறுமின. "அரசர் கிளம்புகிறார்" என்றார் மாலர். முரசோசையும் வாழ்த்தொலியும்கூட துயில்சோர்வுகொண்டிருந்தன. பல்லக்குகள் கிளம்பிச்செல்லும் ஓசைகள் கேட்டன. படைக்கலமுட்டல்கள், போகிகளின் எடைக்கூவல்கள், ஆணையோசைகள், ஒரு புரவியின் செருமல். மீண்டும் கொம்பு ஒலித்தது. "படைத்தலைவர்" என்றான் தீர்க்கன். மூங்கில்விளிம்பைப் பற்றி நின்றிருந்த மாலர் "இப்போது எவருக்கும் வேறுபாடில்லை. எல்லாம் வெறும் அரையுயிர்ச் சடலங்கள்" என்றார்.

அரசியின் நிரை அடுத்ததாக கிளம்பிச்சென்றது. அதன்பின் இளவரசியின் பல்லக்கும் அகம்படியினரும். எவரையுமே பார்க்கமுடியவில்லை. பல்லக்குத்திரைகள் மூடியிருந்தன. "பல்லக்குகளை காட்டு எல்லைக்குள் கொண்டுசென்று அவர்களை ஏற்றிக்கொள்கிறார்கள். அதுவரை தூக்கிக்கொண்டு வருகிறார்கள் போலும்" என்றார் மாலர். தீர்க்கன் "இன்னும் நான்குநாட்களாகும் அவர்கள் முழுமையாக விழித்தெழ" என்றான். கிரந்திகன் கரிய புரவி ஒன்றின் கடிவாளத்தைப்பற்றியபடி பிறிதொரு புரவியில் அமர்ந்து மெதுவாக சென்று மறைந்தான்.

"அடுமனையாளர்கள் கிளம்புகிறார்கள்" என்றார் மாலர். "அவர்களுக்கு கொண்டுபோக கலம் அன்றி பிறிதேதும் இருக்காது..." கலங்களை ஏற்றிய வண்டிகள் அசைந்து அசைந்து

சென்றன. தொடர்ந்து சிறிய மூட்டைகளை தோளிலிட்டபடி அடிபின்னும் கால்களுடன் அடுமனை ஏவலர் சென்றனர். காவலர்களின் இறுதிநிரையும் சென்றது. மாலர் "அந்த அடுமனைப் பேருடலன்… அடிபதறாமல் செல்பவன் அவன் மட்டுமே. யானை அடியென எண்ணி எடுத்தமைத்த கால்கள்… அவன் மானுடனே அல்ல. மண்ணிறங்கிய ஏதோ தேவன், நான் சொல்கிறேன்" என்றார். தீர்க்கன் எழுந்து வலவன் நிமிர்ந்த தலையும் வீசி அசையும் பெருங்கைகளுமாக சிறிய கால்களை எடுத்துவைத்துச் செல்வதை நோக்கி நின்றான்.

பின்னர் காவல்முற்றம் முற்றிலும் ஒழிந்தது. செல்வதற்கு முன் அதை அவர்கள் முற்றிலும் தூய்மை செய்திருந்தமையால் அங்கே ஏதேனும் நடந்ததா என்றே அறியமுடியாதபடி அது வெறித்துக்கிடந்தது. எழுகதிர் ஒளியில் ஆற்றின் அலைகள் ஒளிசிதறி நெளிந்தன. கரையோர மரங்கள் ஒளியலை சூடி நின்று நெளிந்தன. தீர்க்கன் திரும்பி கரவுக்காட்டை பார்த்தான். அவன் என்றும் பார்க்கும் தனிமை மூடிய காடு. அத்தனிமை கலைக்கப்படவேயில்லை என அவனுக்குத் தோன்றியது.

# நீர்க்கோலம் - 54

### 53. உடனுறை நஞ்சு

மீண்டும் ஒரு தோல்வி. ஆனால் விராடருக்கு அது உவகையளிப்பதாகவே இருந்தது. மீசையை நீவியபடி "தோல்வியை நான் முன்னரே உணர்ந்திருந்தேன், குங்கரே. ஆனால் இவ்வண்ணம் தோற்பேன் என நினைக்கவில்லை. இது ஒரு கல்வியே" என்றார். குங்கன் சிரித்து "தோல்விகளை

அவ்வாறு எண்ணிக்கொண்டால் துயரில்லை" என்றான். "நான் இந்த நாட்டில் எவரிடமும் சூதில் இனி தோற்கப்போவதில்லை. அது என் வெற்றி. நான் எத்தனை முயன்றாலும் உங்களை வெல்லப்போவதில்லை, ஆகவே அது தோல்வியும் அல்ல" என்றார் விராடர்.

ஏவலன் வந்து வணங்கி "அமைச்சர் ஆபர்" என்றான். விராடர் குங்கனைப் பார்க்க அவன் "வரச்சொல்" என்றான். ஏவலன் வணங்கி திரும்பிச்செல்ல "அவரைப் பார்த்தே நெடுநாட்களாகின்றன. கடந்த சில நாட்களாக நான் அரண்மனைவிட்டு அவைக்குச் செல்லவே இல்லை" என்றார் விராடர். "ஆம், அறிவேன்" என்றான் குங்கன். "எப்படி செல்ல? இங்கே நம் ஆட்டம் முடிவதற்கே விடியலாகிவிடுகிறது. அதன்பின் சற்று ஓய்வெடுத்தால் மற்றொருநாள்... நான் உத்தரையையும் உத்தரனையும் பார்த்து அதைவிட நாளாகின்றது" என்றார் விராடர். மீசையை நீவி அறைவாயிலை நோக்கி "எதற்காக வருகிறார்?" என்றார்.

"ஏதேனும் அவைச்செய்தி உரைத்து ஓலைச்சாத்து பெறவேண்டியிருக்கும்" என்றான் குங்கன். "ஓலைச்சாத்தே இப்போது தேவைப்படுவதில்லை. கீசகனிடமே முத்திரைக் கணையாழியை கொடுத்துவிட்டேன்" என்றார் விராடர். "அதற்கு அரசி என்னை வசைபாடினாள். அவள்தான் இளையவனை அங்கே அமர்த்தும்பொருட்டு சில ஆண்டுகளுக்கு முன் என்னிடம் இரவெல்லாம் பேசியவள். பெண்களின் உள்ளங்கள் எளிதில் மாறிவிடுகின்றன." குங்கன் "அவர்களின் மைந்தனை எண்ணி அஞ்சுகிறார்கள் போலும்" என்றான். "ஆம், ஆனால் அவனை என்ன செய்யமுடியும்? ஆணிலி" என்றார் விராடர்.

அமைச்சர் ஆபர் வந்து வணங்கி முகமனும் வாழ்த்தும் சொன்னார். அவரை அமரும்படி விராடர் கைகாட்டினார். அவர் அமர்ந்து களம்வரைந்த மென்பலகையை மடித்து அப்பால் வைத்து காய்களைத் திரட்டி சிறுபேழையில் வைத்துக்கொண்டிருந்த குங்கனைப் பார்த்தார். "அவர் இருக்கட்டும், அவரில்லாமல் நான் எதையும் எண்ணுவதே இல்லை" என்றார் அரசர். "இல்லை..." என அவர் தயங்க "சொல்லும், அமைச்சரே" என்றார். ஆபர் துணிவுகொண்டு "இதை அமைச்சர்கள் கூடி தங்களிடம் வந்து சொல்ல விழைந்தோம். ஆனால் அவ்வண்ணம் சொல்வது கீசகர் காதுகளுக்கு செல்லும் என்பதனால் என்னை மட்டும் அனுப்பினார்கள். நான் இதைச் சொல்ல பல நாட்கள் காத்திருந்தேன்" என்றார்.

ஆர்வமில்லாமல் ஏப்பம் விட்டு "என்ன?" என்றார் விராடர். "அரசே, தாங்கள் அவைமறந்து நெடுநாட்களாகின்றன." விராடர் "மறக்கவில்லை, இங்கே எனக்கு பொழுதில்லை. மேலும் அங்கு நிகழ்வன அனைத்தையும் நான் கீசகனிடம் ஒப்படைத்துள்ளேன்" என்றார். "அதைப்பற்றித்தான் பேசவந்தேன்" என்றார் ஆபர். "அரசே, நேற்றுமுன்னாள் நம் அரசவைக்கு கலிங்க அரசர் ருதாயுவிடம் இருந்து ஓர் ஓலை வந்தது. அதை தாங்கள் அறிவீர்களா?" விராடர் "நாள்தோறும் நூறு ஓலைகள் வருகின்றன. அவற்றையெல்லாம் நான் படித்துக்கொண்டிருக்க முடியுமா?" என்றார்.

"அரசே, இது முதன்மைச்செய்தி கொண்ட ஓலை. உங்கள் நேர்விழிக்கு மட்டும் என மேலரக்கு போடப்பட்டது." விராடர் "என்ன சொல்லவருகிறீர்? எல்லா ஓலைகளையும் கீசகனே நோக்கட்டும் என ஆணையிட்டவனே நான்தான்" என்றார். "அரசே, அந்த ஓலையின் கருத்தை நான் அறிவேன். இளவரசர்

உத்தரருக்கு கலிங்க இளவரசியை மணமுடித்து அளிக்க அவர்கள் விழைவதைச் சொன்னது அது.” விராடர் “அது முன்னரே பேசப்பட்டுக்கொண்டுதானே உள்ளது?” என்றார். “ஆம். முன்பு பேசப்பட்டது கலிங்க அரசர் ருதாயுவுக்கு நிஷாதகுலத்து அரசி சௌமினிதேவியில் பிறந்த மகள் பத்மினியை. அதனால் நமக்கு அரசியல் நேட்டம் ஏதுமில்லை. இப்போது அவர்கள் சொல்வது அரசருக்கு வங்கநாட்டு பட்டத்தரசி குசுமவதியில் பிறந்த மகள் சாலினியை. அது நம்மை அவர்கள் நிகரென்று அறிவிப்பது. நம் அரசுடன் அழியாத குருதியிணைப்பை அவர்கள் தொடங்குகிறார்கள்.”

“ஆனால் அவர்கள் இதுவரை நமக்கு செவிகொடுக்கவில்லை. நம் இளவரசர் கரியபுரவியில் நகர்வலம் வந்த செய்தியை ஒற்றர்வழி அறிந்து இம்முடிவை எடுத்துள்ளனர்.” விராடர் சிரித்து “அந்த குதிரைக்காரன், அவன் பெயர் என்ன…? கிரந்திகன், அவன் இருக்கும் வரைதான் இவன் புரவியூர்வான். அதை அவர்களுக்கு சொல்வதா வேண்டாமா?” என்றார். ஆபர் பொறுமையை இழக்காமல் “அரசே, அவர்களின் எண்ணம் பிறிதொன்று. கலிங்க இளவரசன் ஆதித்யதேவனுக்கு நம் இளவரசியை மணம்புரிந்து கொடுக்கவேண்டும். இரு மணங்களும் ஒரே வேள்விப்பந்தலில் நிகழவேண்டும்…” என்றார்.

விராடர் குங்கனை நோக்கிவிட்டு “அப்படியெல்லாம் சொன்னால்…” என்றார். ஆபர் “நமக்கு வேறு வழியே இல்லை… கலிங்கத்துடனான உறவு நம்மை வலுப்படுத்தும். நம் இளவரசரின் முடியுரிமை உறுதியாகும்” என்றார். “அப்படியென்றால் நிகழட்டுமே… ஓலை அனுப்ப கீசகனிடம் சொல்வோம்” என்றார் விராடர். “அந்த ஓலையை கீசகர் நேராக

இளவரசியிடம் அனுப்பி அவர் எண்ணத்தை கோரினார். அவர் சினந்து ஓலையைக் கிழித்துவீசி அதை கொண்டுசென்ற தூதனை அடிக்க கையோங்கினார்... கீசகர் நேரில் சென்று இளவரசியிடம் அவர் எண்ணத்தை கேட்டார். கலிங்க இளவரசனுக்கு துணைவியாவதைவிட உயிர்விடுவேன் என்று இளவரசி சொன்னார். தங்கள் விழைவைமீறி ஒன்றும் நிகழாது இளவரசி என்று சொல்லி இளவரசி உத்தரைக்கு கலிங்க இளவரசனை ஏற்பதில் ஒப்புதலில்லை என்று மறுமொழி அனுப்பிவிட்டார் படைத்தலைவர் கீசகர்."

விராடர் முகவாயின் மயிர்க்குச்சத்தை அளைந்தபின் குங்கனை ஒருமுறை நோக்கிவிட்டு "ஏன் அப்படி சொன்னாள்? கலிங்க இளவரசன் ஷத்ரியன், நாடாளவிருப்பவன்" என்றார். "அரசே, உங்களுக்கு இன்னமும் இச்செய்தி வந்துசேரவில்லை என்றால் நான் ஒன்றும் சொல்வதற்கில்லை. இளவரசி அந்த ஆணிலிமேல் காதல்கொண்டிருக்கிறார்." விராடர் சிரித்து "ஆணிலிமேல் காதலா? விந்தையாக இருக்கிறதே" என்றார். திரும்பி குங்கனிடம் "ஆணிலிமேல் பெண்கள் காதல்கொள்வதுண்டா? நீர் என்ன எண்ணுகிறீர், குங்கரே?" என்றார்.

குங்கன் "ஆணிலிகளை பெண்டிர் விரும்புவர். அது அவர்கள் விரும்பும்படி சமைக்கப்பட்ட உணவு" என்றார். விராடர் உரக்க நகைத்தார். ஆபர் பொறுமையிழந்து "நான் சொல்ல வந்தது என்னவென்றால்..." என்றார். "நீர் சொன்னதை முழுமையாகவே புரிந்துகொண்டேன். செல்க! நான் இதை குங்கரிடம் பேசி என்ன செய்யவேண்டுமென முடிவெடுக்கிறேன்" என்றார் விராடர். "அரசே..." என்று ஆபர் மேலும் சொல்லத் தொடங்க "செல்க"

என்றார் விராடர். குங்கனிடம் “நாம் இன்னொரு முறை அமர்வோம். இம்முறை நீங்கள் களிறு” என்றார்.

ஆபர் முகம் சிவக்க சில கணங்கள் அமர்ந்திருந்துவிட்டு “நான் செல்வதற்கு முன் ஒரு நீண்ட கதையைச் சொல்ல விரும்புகிறேன்” என்றார். “கதையா?” என்ற விராடரின் முகம் மாறியது. “என் ஆணையை மீறுகிறீரா?” என்றார். ஆபர் எழுந்து தன் தலைப்பாகையைக் கழற்றி அருகே வைத்தார். இடைக்கச்சையையும் கைகளில் இட்டிருந்த கங்கணத்தையும் கணையாழியையும் கழற்றி அதனருகே வைத்தார். “பொறுப்பு துறக்கிறீரா? கானேக எண்ணமா?” என்றார் விராடர் ஏளனத்துடன். “நான் உங்கள் ஆணையை மீற இனி தடையில்லை. நான் சொல்வதை நீங்கள் கேட்டாக வேண்டும்” என்றார் ஆபர். பொறுமையிழந்து எழுந்து “கேட்கவில்லை என்றால்? எனக்கு வேறு பணி உள்ளது. வெளியேறுக!” என்றார் விராடர்.

ஆபர் தாழ்ந்த குரலில் “தீர்க்கபாகு, அந்த இருக்கையில் அமர்க!” என்றார். விராடர் நடுங்கி “நான்...” என்றார். “அந்தணன் மொழி இது. பாரதவர்ஷத்தை ஆளும் வேதங்களின் சொல். அமர்க!” விராடர் உடல்நடுங்க அமர்ந்துகொண்டார். “நான் சொல்லப்போவது அறிவுரை. என் முன் மாணவன் நீ. எடு உன் தலைப்பாகையை. உன் கணையாழியையும் கச்சையையும் அகற்று!” விராடர் கணையாழியை உருவியபோது அது இறுகியிருந்தது. குங்கனை நோக்கி திரும்பி “அகற்று!” என்று ஆபர் உரத்த குரலில் சொன்னார். “இதோ” என்று சொன்ன குங்கன் ஒரு பட்டுத்துணியை அவர் விரல்மேல் போட்டு கணையாழியை அதனூடாக இழுத்து எடுத்தான். “நீ சூதனா?” என்றார் ஆபர். “ஆம்” என்றான் குங்கன். “என் காலடியில்

தரையில் அமர்ந்துகொள். இருவருக்குமான சொற்கள் இவை.” குங்கன் தரையில் அமர்ந்தான்.

“நளமாமன்னரின் கதையை நீங்கள் கேட்டிருப்பீர்கள்... அவர்கள் காடேகியதை உங்களுக்கு சொல்லப்போகிறேன்” என்றார் ஆபர். “நான் முன்னரே கேட்டிருக்கிறேன்” என்றார் விராடர். “நீ கேட்டிருப்பாய். இவன் முழுமையாக கேட்டிருக்கமாட்டான். இவன் கேட்டாகவேண்டிய கதை இது” என்ற ஆபர் குங்கனை கூர்ந்து நோக்கி “இப்புவியில் எக்கதையும் புதியதல்ல என்று அறிவாயா?” என்றார். அவன் ஆம் என தலையசைத்தான். “ஆகவே, எதுவும் மீண்டும் நிகழும் என்றறிக!” என்றார் ஆபர்.

கோதாவரிக்கும் கிருஷ்ணைக்கும் நடுவே விரிந்துள்ள பெருநிலத்தை வானில் கருமுகில் வடிவில் நின்று ஆண்டவள் பேரன்னை ஒருத்தி. அவளை அவர்களின் மூதாதையர் நூறு முலைக்காம்புகள் கொண்ட அடிவயிறும் செங்கனல் போன்ற விழிகளும் இரு பிறைநிலவுகள் போன்ற தேற்றைகளும் கொண்ட பெரும்பன்றி என்று வழிபட்டனர். காளி, கூளி, கராளி என்று நூறு பெயர்கள் அவளுக்கு இடப்பட்டன.

வானில் அவள் உறுமலோசை எழுந்தபோது அவர்கள் தங்கள் குழந்தைகளுடன் வந்து நின்று மேல்நோக்கி கைகூப்பி வாழ்த்தினர். மண்ணில் நெற்றிபட விழுந்து வணங்கினர். அன்னையின் நூறு முலைக்கண்களும் சுரந்து பெய்த அமுதை இரு கைகளாலும் அள்ளி தங்கள் மைந்தருக்கு ஊட்டி அருந்தினர். அன்னையின் கருணை அவர்களைச் சூழ்ந்து காடென்று பசுமைகொண்டது. ஓடைகளும் சுனைகளுமாயிற்று. காடுகளில் கனியும் ஊனும் விளைந்தன. நீரில் மீன்கள் பெருகின. அவர்கள் அன்னைக்கு மட்டுமே கடன்பட்டிருந்தனர்.

அன்னையின் குரலைக் கேட்ட காதுகள் கொண்டவர்கள் என்பதனால் அவர்கள் தங்களை கர்ணிகள் என்றனர். நூறு குலங்களாகப் பிரிந்து மலைச்சரிவுகளிலும் செறிகாடுகளிலும் பெருநீர்ச்சதுப்புகளிலும் மணல்வெளிகளிலும் கடலோரங்களிலும் அவர்கள் பரவினர். கடல் அலைமேல் ஏறிச்சென்று மீன்கொண்டனர். நதிகளில் படகுகள் ஓட்டினர். மண்திருத்தி விளைபெருக்கினர். நாளடைவில் நூறு குலங்களும் ஒருவருக்கொருவர் பூசலிடலாயினர். பொருள்கொண்டு செல்லும் படகுகளை வேட்டுவர் தாக்கி கொள்ளையிட்டனர். விளை அறுத்து களஞ்சியம்நிறைத்த கர்ணிகளை பாலைநிலத்தவர் வந்து சூறையாடிச் சென்றனர். ஒருவருக்கொருவர் போரிட்டழிந்த அவர்களை தெற்கில் திருவிடத்திலிருந்தும் வடக்கே தண்டகத்திலிருந்தும் அயலவர் படைகொண்டுவந்து வென்று கொள்ளையிட்டுச் சென்றனர்.

அள்ளிக்கொடுக்கும் அன்னைமுலைக்குக் கீழே பசியும் நோயும் கொண்டு அம்மக்கள் வருந்தினர். நூறாண்டுகாலம் அன்னையர் வீழ்த்திய கண்ணீரை விண்நிறைந்திருந்த அவர்களின் பேரன்னை கேட்டாள். அவள் கனிந்தமையால் அவர்களின் குடிகளில் ஒன்றில் சிஷுகன் பிறந்தான். தன் வீரத்தால் அவர்களில் முதல்வனானான். ஷத்ரிய குலங்களை வென்று குருதியாடியபடி பாரதவர்ஷத்தை அளந்துகொண்டிருந்த பரசுராமரைப்பற்றி அறிந்து அவரைத் தேடிச்சென்று அடிபணிந்தான். அவர் அவனை அனல்முன் நிறுத்தி அந்தணன் ஆக்கினார். சதகர்ணிகள் ஷத்ரியப் பெருங்குடிகளுக்கு எதிரான அந்தண அரசர்களாகத் திகழவேண்டும் என அவர் ஆணையிட்டார்.

தர்ப்பைப் புல்லில் அனலும் நாவில் வேதமுமாக வந்த அவனை அவன் குடியினர் முழுமையாக பணிந்து ஏற்றுக்கொண்டார்கள். தன் கருணையாலும் கருணையின்மையாலும் சிஷுகன் நூறு குலங்களை இணைத்தான். கர்ணிகளில் முதன்மையான குடியான பிரீதர்கள் வடக்கே இன்று மாளவத்தில் இருக்கும் பிரீதகிரி என்னும் குன்றின் அடிவாரத்தில் வாழ்ந்தவர்கள். பிரீதகிரியின் உச்சியில் அவர்களின் குடித்தெய்வமாகிய மாகாளையின் பெருஞ்சிற்பம் ஒன்றிருந்தது. பன்னிரு ஆண்டுகளுக்கொருமுறை அங்கே கர்ணிகள் கூடி தலையெண்ணிப் பலியிட்டு அக்காளையை வழிபடுவதுண்டு.

அங்கே ஒரு குலக்கூடலை சிஷுகன் ஒருங்கிணைத்தான். அதில் நூறு குலங்களின் தலைவர்கள் கூடி வாள் ஏந்தி அவனை தங்கள் அரசன் என்று தேர்ந்தெடுத்தனர். பன்னிரு ஆண்டுகளுக்கு ஒருமுறை அவர்கள் தங்கள் குடிக்கோல் தாழ்த்தி அரசனைத் தேர்ந்தெடுக்கும் முறை அவ்வாறு உருவானது. நூறு குலங்களின் தலைவனாகிய அவன் சதகர்ணி என அழைக்கப்பட்டான். அவ்வூரே சதகர்ணிகளின் முதல் தலைநகர் என்றானது. அதை பிரதிஷ்டானபுரி என்றழைத்தனர். சதகர்ணிகளின் குலமுத்திரையாக மாகாளைவடிவமே நிறுவப்பட்டது. அவர்களின் கொடியிலும் தேர்நெற்றியிலும் கால்மடித்தமர்ந்த மாகாளை பொறிக்கப்பட்டது.

சதகர்ணிகள் ஒருங்கிணைந்தபோது சூழ்ந்திருக்கும் நிலங்கள் அனைத்தும் அவர்களிடம் சென்றன. வடக்கே பரசுராமனால் அனல்குலத்து அந்தணர்கள் என்றாக்கப்பட்டு வத்ஸகுல்மத்தை ஆண்ட வாகடர்கள் முதல் தெற்கே வெண்கல்நாட்டை ஆண்ட பல்லவர்கள் வரை அவர்களுக்கு கப்பம் கட்டினார்கள்.

அஸ்மாகர்களும் சாளுக்கியர்களும் அவர்களிடம் பணிந்தனர். தான்யகடகமும் இந்திரகீலமும் ராஜமகேந்திரபுரியும் அவர்களுக்குரியதாயின. அந்நகர் முகப்புகளில் மாகாளையின் பேருருவச் சிலைகள் அமைக்கப்பட்டன. சிந்துகன், ஷிப்ரகன், செஸ்மாகன், சூத்ரகன், சுரகன் என தொடர்ந்த மாவீரர்களின் நிரையால் அவர்களின் கொடி கடல்முதல் கடல்வரை பறந்தது.

பின்னர் வடக்கே மகதமும் மேற்கே மாளவமும் கிழக்கே கலிங்கமும் ஆற்றல்கொண்டபோது சதகர்ணிகள் தெற்கே சென்றனர். அவர்களின் இரண்டாவது தலைநகராக இருந்த வெண்கல்நாட்டு அமராவதியை மையமாக்கினர். அவர்களின் அரசனான பதினெட்டாவது சிந்துகனை மாமன்னர் நளன் வென்றார். அவர்கள் அங்கிருந்து பின்வாங்கி தெற்கே ரேணுநாட்டுக்கு இடம்பெயர்ந்தனர். சிந்துகனின் மைந்தன் சுகர்ணன் ஏழுமுறை வாகடர்களையும் பல்லவர்களையும் திரட்டியபடி படைகொண்டுவந்தாலும் மீண்டும் மீண்டும் நளனின் புரவிப்படையால் தோற்கடிக்கப்பட்டான்.

சுகர்ணனின் பேரமைச்சர் சுசீலர் மறைந்தபோது அவர் மைந்தர் சுமத்ரர் கங்கணம் சூடினார். தென்னாட்டில் காஞ்சியில் பதினெட்டாண்டுகள் அரசநூலும் நெறிநூலும் காவியமும் கற்றுவந்த அவர் ஒவ்வொரு நாளுமென தென்னாட்டு அரசியலை கூர்நோக்கிக் கொண்டிருந்தார். “ஒவ்வொரு அரசுக்கும் வீழ்ச்சியின் தருணமொன்று உள்ளது, அரசே. அதை கண்டடைந்து அப்போது தாக்கினாலொழிய நாம் அவர்களை வெல்லமுடியாது” என்றார். “மிகப் பெரிய கட்டடங்கள் வீழ்வதெப்படி என்று சிற்பநூல்கள் சொல்கின்றன. கட்டி எழுப்பப்படும் அனைத்துக்குமே அந்நெறிகள் பொருந்தும்.”

“ஏழு நெறிகள் அவை” என்று சுமத்ரர் சொன்னார். “அடித்தளம் தாளாத மேற்கட்டு. அடித்தளம் இடும்போது எத்தனை பெரிதாக அக்கட்டு எழுமென்று எண்ணியிருப்பவர் சிலரே. ஏனென்றால் தங்கள் பெருவிழைவையும் ஆணவத்தையும் எவராலும் அளவிட்டுக்கொள்ள இயலாது. எங்கு நிறுத்தவேண்டும் என்று அறிதலும் எளிதல்ல. ஏனென்றால் விரிசல் எழுவதற்கு முந்தைய கணம்வரை ஆயிரமாண்டுகாலம் விந்தியமலைமுடிகள் என நிற்கும் அக்கட்டு என்றே தோன்றும்.”

“அதன் உடல்கட்டு அதன் பொருண்மையை தாளமுடியாது விள்ளலிடுவது இரண்டாவது” என்றார் சுமத்ரர். “இங்குள்ள ஒவ்வொரு பொருளையும் ஒன்றெனக் கட்டியுள்ளது அப்பொருளுக்குள் உறையும் விசைகளே. நீர்த்துளியை பாறைகளை மலைகளை. கல்லின்மேல் கல்லையும் சுவர்கள்மேல் கூரையையும் அவையே நிலைநிறுத்துகின்றன. அவ்விசைகள் எத்தனை எடைதாங்குமென்று எவராலும் அறியக்கூடுவதில்லை. ஏனென்றால் முதலில் ஒவ்வொரு முறையும் எண்ணியதைவிட கூடுதல் எடை தாங்குவது அது என்றுதான் தோன்றும். எடைமீறி அவ்விசைச்சரடு அறுபடும் கணம்வரை.”

“உள்ளிருந்து பிறிதொன்று எழுவதனால் கட்டமைவுகள் சிதையும் என்பது மூன்றாம் நெறி. அரசே, அரண்மனைகளையும் கோட்டைகளையும் மட்டுமல்ல பெரும்பாறைகளையும் சிதைக்கின்றன ஆலமர வேர்கள்” என்றார் சுமத்ரர். “அருகே பிறிதொன்று சரிவதன் அதிர்வால் கட்டமைவுகள் வீழும் என்பது நான்காம் நெறி. அக்கட்டடத்தை அமைத்த பொருட்களின் நிகரின்மையால் அவை சரியும் என்பது ஐந்தாம்

நெறி. அரசே அறிந்திருப்பீர்கள், கருங்கல் கட்டடத்தில் அமைந்த மணல்கல் எடைதாளாமல் உதிர்ந்தழியும். அக்கட்டடத்தை இழுத்துச்சரிக்கும்.”

“ஆறாவது நெறி கால உருவம்கொண்டு வரும் நீரும் காற்றும். எளிய நீர்த்துளி ஊறி ஆழ்ந்துசென்று தன் வழியை அமைக்கிறது. அவ்வழி பிளவென்று பெருகுகிறது” என்றார் சுமத்ரர். “ஏழாவது நெறியே முதன்மையானது. தன்மேல் எதையும் எப்போதைக்குமென சூடியிருக்க மண்மகள் விரும்புவதில்லை. பெருமலைகளே ஆயினும் எழுந்தவை அனைத்தும் சரிந்தே ஆகவேண்டும்.”

அவை அவர் சொல்லப்போவதைக் கேட்டு அமர்ந்திருந்தது. “நிஷாதர்களின் இவ்வரசின் ஆற்றல்குறைகள் எவை? இறுதிக்குறை எவருக்கும் உள்ளது. முதல்குறையே முதன்மையானது. அவையோரே, அதன் அடித்தளம் நிஷாதனாகிய நளனால் உருவாக்கப்பட்டது. அதன் மேற்கட்டு ஷத்ரிய அரசியால் எழுப்பப்படுகிறது. நிஷாதனுடையது விழைவு. ஷத்ரியர் பெருவிழைவால் ஆனவர்கள்.” அரசன் ‘ஆம்’ என்று தலையசைத்தான்.

“இரண்டாவது குறை எழுந்துகொண்டிருக்கிறது நிஷதபுரியில்” என்றார் சுமத்ரர். “குலங்களை ஒருங்கிணைத்துக்கொண்டுதான் பாரதவர்ஷத்தின் பேரரசுகள் அனைத்தும் தோன்றின. ஜனபதங்கள் என அவை அழைக்கப்பட்டன. குலசேகரர்கள் கோல்கொண்டு ஆளும் எந்நாடும் உறுதியுடன் அமைந்ததில்லை. குலப்பூசல்களை குலப்பூசலால் தீர்க்கும் முறையையே அங்கே ஆட்சி என்கிறார்கள். பாறைகளுக்கு மாறாக ஆமைகளை அடுக்கி கோட்டை எழுப்புவது அது.”

குலத்தலைவர்கள் சிலர் மெல்ல ஏதோ சொன்னார்கள். அதை செவிமடுக்காமல் சுமத்ரர் தொடர்ந்தார்.

“எந்த அரசு குலத்தலைவர்களால் நீக்கப்பட முடியாத அரசனை அடைகிறதோ அதுதான் பாரதவர்ஷத்தை வென்று ஆள்கிறது. மகதம், அஸ்தினபுரம், பாஞ்சாலம் அனைத்தும் அவ்வாறே. நிஷதபுரியின் அரசன் தன்னை முற்றரசன் என்று ஆக்கிக் கொள்ளாமல் நாட்டை விரிக்கிறான். அவையோரே, அந்நாட்டை கட்டிவைத்திருந்த விசைகள் எதிரிகள் மீதான அச்சம், குடிப்பெருமை, வெற்றியால் வந்துசேரும் செல்வம் ஆகிய மூன்றும். இன்று அந்த விசைகளை மீறிச்செல்கிறது நிஷதகுடிகளின் ஆணவம். அங்கே குடிப்பூசலெழுந்துள்ளது. அது நிஷதபுரியை பிளந்து சரியச்செய்யும்.”

அவை மெல்ல அசைந்தது. பெருமூச்சுகள் ஒலித்தன. “நாம் அதற்கு காத்திருக்கவேண்டுமா?” என்றான் அரசன். “ஆம். விரிசல்களுக்கு மாறா இயல்பென்று ஒன்று உண்டு, அவை வளர்ந்தேயாகவேண்டும். விரிசல் கண்டு அரசி அஞ்சுவாள். அதை சீரமைக்க முயல்வாள். அம்முயற்சிகளால் விரிசல் பிளவென்றாகும். நாம் நுழைய இடைவெளி திறக்கும்வரை பொறுத்திருப்போம்” என்றார் சுமத்ரர். “நிஷதமன்னன் நளன் செய்த பிழை தெற்கே நம்மை முற்றழிக்காமல் வடக்கே படைகொண்டு சென்றது. எதையும் முழுமையாக வெல்லாமல் எஞ்சவிடக்கூடாது . ஷத்ரியர்கள் நஞ்சையும் எரியையும் எஞ்சவிடுவதில்லை. நிஷாதர்களும் அசுரர்களும் அரக்கர்களும் விலங்குகளைப்போல. அவை புல்லையும் மரத்தையும் இரைவிலங்குகளையும் முற்றழிப்பதில்லை.”

“இன்று மாளவனும் மகதனும் கலிங்கனும் வங்கனும் அவனுக்கு எதிரிகளென்றாகி விட்டனர். அவர்களின்

சூழ்ச்சியால் புஷ்கரன் உளம்திரிந்துள்ளான். அவனுள் செலுத்தப்பட்ட நஞ்சு அரசி என்றும் அவைத்துணைவன் என்றும் உடனுறைகிறது" என்று சுமத்ரர் தொடர்ந்தார். "இனி தமயந்தி செய்வதற்கொன்றே உள்ளது. நளனை பேரரசன் என்று இந்திரபுரியில் கோல்கொண்டு அமரச்செய்யவேண்டும். நிஷதகுடிகள் அனைத்தும் அவனை முற்றரசன் என, மறுசொல்லற்ற மண்ணிறை என ஏற்கவைக்கவேண்டும்."

"அது எளிதா என்ன?" என்றான் அரசன். "ஆம், தொன்றுதொட்டு வரும் வழிமுறைகள் சில உள்ளன. அஸ்வமேதம் ஒன்றை முடிப்பது. அது குடிகளின் குலப்பெருமையைத் தூண்டும். ஒவ்வொருநாளும் புரவியின் வெற்றிச்செய்தி நகர்நுழையவேண்டும். தெருக்களில் வாகைவிழா நிகழ்ந்துகொண்டே இருக்கவேண்டும். செவிகளில் சூதர்பாடல்கள் ஓயலாகாது. குடிகளின் ஆணவம் பெருகிப்பெருகி உச்சத்தை அடையும்போது அஸ்வமேதம் முடிந்து ராஜசூயம் தொடங்கவேண்டும். அரசக் கருவூலம் திறந்து பொன்னும் பொருளும் மக்களைநோக்கி பாயவேண்டும். தற்பெருமையும் தன்னலமும் கலந்து மக்களை அரசனுக்கு அடிமைகளென்றாக்கும்."

"அதை அவள் செய்வாள், ஐயமே இல்லை" என்றான் அரசன். "ஆம், அஸ்வமேதம் குறித்து கருணாகரருடன் அவள் பேசினாள் என்பதை நான் அறிந்தேன். ஆனால் அவளால் சத்ரபதி என்று தானே அமரத்தான் முடியும்." அவையில் வியப்பொலி எழுந்தது. "ஆம், அவள் உள்ளத்தில் அவன் எளிய நிஷாதனே. அவளுள் ஓடும் ஷத்ரியக் குருதி அவன் சத்ரபதியென்று அமர்வதை ஏற்காது. எத்தனை சொற்களிட்டு அடுக்கெழுப்பி மூடினாலும் அவன் பரசுராமனின் ஷத்ரியக் குருதிபடிந்த

மழுவால் உருவாக்கப்பட்டவன் என்னும் மெய் அவளுக்குள் மறைந்துவிடாது.”

சில கணங்கள் அவையில் அமைதி நிலவியது. சுகர்ணன் பெருமூச்சுடன் எழுந்தமைந்து கால்களை நீட்டியபடி “அவள் பரிவேள்வியைத் தொடங்கும்போது புஷ்கரனின் தரப்பினர் எரிபற்றி எழுவர் என்கிறீர்களா?” என்றான். “ஐயமே தேவையில்லை. அவள் நிகழ்த்தும் வேள்வி பெருகும்தோறும் தன் அடித்தளம் கரைவதாக புஷ்கரன் எண்ணுவான். அச்சத்தைப்போல ஐயத்தையும் காழ்ப்பையும் பெருக்குவது பிறிதொன்றில்லை.”

சுகர்ணன் “ஆனால் அவனால் தமையனை எதிர்கொள்ள முடியாது. குலங்களில் பெரும்பகுதியினர் இன்று அவனைத்தான் ஆதரிக்கின்றனர். அவனுக்கு உள்ளூரத் தெரியும், நளனுக்கு முன் நான்கு நாழிகைகூட அவனால் களம்நிற்க இயலாது என்று” என்றான். “அவன் குடிகளுக்கும் அது தெரிந்திருக்கும். ஒரு களத்தில் புஷ்கரன் தோற்றால் அக்குடிகளே அவன் தலையை வெட்டிக்கொண்டுசென்று நளன் காலடியில் வைப்பார்கள்.” சுமத்ரர் “ஆம், ஆனால் புஷ்கரனை நாம் ஆற்றல்கொள்ளச் செய்யமுடியும்” என்றார்.

திகைப்புடன் “நாமா?” என்றான் சுகர்ணன். “ஆம், அவனுடன் இன்று கலிங்கனும் மாளவனும் மகதனும் வங்கனும் சேர்ந்திருக்கிறார்கள். நாமும் இணைந்துகொள்வோம். நம் ஆதரவு அவனுக்கு துணிவளிக்கும். தமையனுக்கு இளையோன் எதிர்நிற்கட்டும். கட்டடம் விண்டு சரிகையில் நாம் எழுவோம். நம் கொடியை குருதியால் நனைப்போம்” என்றார் சுமத்ரர். சில கணங்கள் அவை ஓசையற்றிருந்தது. பின் ஒற்றைக்குரலென

“நூறு செவிகளுக்கிறைவன் வாழ்க! தென்னகத்தின் தலைவன் வாழ்க!” என்று வாழ்த்தொலி எழுப்பியது.

# நீர்க்கோலம் - 55

### 54. பரிஎழுகை

❀சதகர்ணிகளின் அமைச்சர் சுமத்ரர் எண்ணியதுபோலவே அனைத்தும் முன்சென்றன. ஓரிரு நாட்களுக்குள்ளாகவே பேரரசி தமயந்தி அஸ்வமேதம் நிகழ்த்தவிருப்பதாக உளவுச் செய்தி வந்தது. நிஷதபுரியின் அவையில் அதைப்பற்றி அவள் பேசியபோது கருணாகரர் மட்டும் தயக்கத்துடன் “இன்றைய சூழலில் பிற அரசர்கள் அதற்கு ஒத்துழைப்பார்களா என்று தெரியவில்லை. அவர்கள் மோதவேண்டுமென எண்ணினால் நாம் எதிர்கொள்ளும் ஆற்றலுடன் இல்லை. நம் குலங்கள் பிரிந்துள்ளன. இளையவர் உள்ளமாறுபாடு கொண்டிருக்கிறார்” என்றார்.

தமயந்தி உறுதியுடன் “ஆம், அதை நான் எண்ணினேன். ஆனால் இப்போது நம்முன் உள்ளது இவ்வழி ஒன்றே” என்றாள். “நம் குலங்கள் உள்ளமாறுபாடு கொண்டுள்ளன. அவ்வண்ணம் திரிபு தொடங்கும்போதே மும்மடங்கு ஒற்றுமையை வெளிக்காட்டியாக வேண்டியதுதான் அரசியல் சூழ்ச்சி. நம் பிளவுகள் பிறருக்கு தெரியலாகாது, அதை நம் எதிரிகள் வளர்க்கலாகாது” என்றாள். “அஸ்வமேதம் தொடங்கும் செய்தியே நம் குடிகளை கிளர்ந்தெழச் செய்யும். நாம் நிஷாதர் என்னும் உணர்வை உருவாக்கும்.”

நாகசேனர் “உண்மை அரசி, துயர்கவ்வும்போது உவகைகொண்டவர்களாக நடிப்பது மெய்யாகவே உவகையை கொண்டுவரும். நாம் நாம் என இம்மக்கள் பேசத்தொடங்கிவிட்டாலே நாம் வென்றோம்” என்றார். முகம் மலர்ந்த தமயந்தி “அத்துடன் ஒரு சில போர்கள் நிகழ்வதும் நல்லது. முதலில் சில சிறுதோல்விகள். நம் படைகள் தோற்கிறார்கள் என்ற செய்தி வரும்போது இங்குள்ளவர்கள் பதற்றம் கொள்வார்கள். மேலும் சில தோல்விச் செய்திகள் வருமென்றால் அது வெறியென்றாகும். பொதுவெளியில் சில அயல்நாட்டு ஒற்றர்களை கழுவேற்றுவோம். போர்முரசும் கொலைக்காட்சிகளும் மக்களின் உள்ளங்களை மடைமாற்றும்” என்றாள்.

கருணாகரரிடம் “அமைச்சரே, மக்கள் மாறா சலிப்பில் வாழ்பவர்கள். சலிப்பை வெல்லும்பொருட்டே அவர்கள் தங்களை குலமென்றும் குடியென்றும் பிரித்துக்கொள்கிறார்கள். வஞ்சமும் காழ்ப்பும் வளர்த்துக்கொண்டு பூசலிடுகிறார்கள். விழவும் களியாட்டும் அவர்களின் சலிப்பை சில நாட்களுக்கே அகற்றுகின்றன. வெறுப்பும் வெறியும் கலையாமல் நீடிப்பவை, கணம்தோறும் வளர்பவை. நம் எதிரிகள் திரண்டு இருண்டு நம்மை சூழட்டும். நிஷதகுடிகள் அச்சத்தாலும் வெறுப்பாலும் ஒருங்கிணைவார்கள். ஒரு கட்டத்தில் அரசவஞ்சம் செய்தவர்கள் என சிலரை கழுவேற்றுவோம். மக்கள் திரண்டு அவர்களைச் சூழ்ந்து கூடி கற்களை விட்டெறிந்து ஆர்ப்பரிப்பதை காண்பீர்கள்” என்றாள் தமயந்தி.

“அதன்பின் முதல் வெற்றி. அது அவர்களை களிவெறி கொள்ளச்செய்யும். ஆனால் அடுத்த வெற்றிக்காக ஐயத்துடன் காத்திருப்பார்கள். மேலும் சில வெற்றிகள். மக்கள்

நிலைமறந்து பித்தெடுத்து துள்ளுவதை காண்பீர்கள். அவ்விசையில் அஸ்வமேத வேள்வி முடிந்து ராஜசூயத்தை அறிவிப்போம். சத்ராஜித் என நான் அமர்ந்திருப்பதை அவர்கள் தங்கள் குலங்களின் வெற்றி என்றே எண்ணுவார்கள். தாங்கள் ஒவ்வொருவரும் நிலையுயர்ந்துவிட்டதாக பொங்குவார்கள்.”

கருணாகரர் அவள் முகத்தின் தன்னம்பிக்கையை சற்று திகைப்புடன் நோக்கிக்கொண்டிருந்தார். “இன்றிருக்கும் உளப்பிளவை எளிதில் சீரமைக்கமுடியும். கலிதேவனுக்கு மாபெரும் குருதியாட்டு ஒன்றை நிகழ்த்திவிட்டு நம் படைகள் கிளம்பட்டும். கலிதேவனுக்கு இங்கே கோதையின் மறுகரையில் ஒரு பேராலயம் எழுப்புவோம். நான் சத்ராஜித் என அமர்கையில் அவ்வாலயமும் நடைதிறக்கட்டும்” என்றாள்.

கருணாகரர் தாழ்ந்த குரலில் “நாம் அரசரை சத்ராஜித் என்று அமரச்செய்வது நம் குலங்களை ஒருவேளை மேலும் மகிழ்விக்கக்கூடும்” என்றார். தமயந்தியின் விழிகள் ஒருகணம் சுருங்கி மீண்டன. “ஆம், அதுவே வைதிக முறைமை. ஆனால் அப்படி நளமாமன்னர் சக்ரவர்த்தியானால் அதைச் சொல்லியே ஷத்ரியர்கள் வடக்கிலுள்ள அத்தனை தொல்குடி ஷத்ரியர்களையும் ஒருங்குதிரட்டிவிடமுடியும்... அந்தப் படைப்பெருக்கை எதிர்கொள்ளும் ஆற்றல் நமக்கில்லை” என்றாள். நாகசேனர் “ஆம், அத்துடன் நம் படைகளில் இன்றுள்ள முதன்மைத் தலைவர்கள் அனைவருமே விதர்ப்பர்கள். அவர்களுக்கும் அது ஏற்புடையதாகாது” என்றார்.

தலையசைத்து அவரை ஆதரித்தபின் “அமைச்சரே, நான் சத்ராஜித்தாக முடிசூடியதுமே அத்தனை ஷத்ரிய அரசர்களுக்கும் இது ஒரு எளிய வைதிகச் சடங்குதான் என்று சொல்லி தூதனுப்புவேன். என் மைந்தன் இந்திரசேனன்

எனக்குப்பின் இங்கே சக்ரவர்த்தியாக அமர்வான் என்ற செய்தியை அதில் கூறுவேன். அதன்பொருள் அவனுக்கு அவர்கள் தங்கள் மகளிரை பட்டத்தரசியாக அளிக்கமுடியும் என்பதே. அவ்வழியாக நாளை நிஷாதர்களின் நாட்டுக்கும் அவர்களின் குருதியே அரசகுடியென்றாக முடியும் என அவர்கள் எண்ணுவார்கள். அந்த எதிர்பார்ப்பே அவர்களை அமைதிகொள்ளச்செய்துவிடும்” என்றாள் தமயந்தி.

கருணாகரர் “அரசி, அது சிறந்த சூழ்ச்சி என்பதில் ஐயமில்லை. ஆனால் பரசுராமரால் ஷத்ரியர்கள் என்றும் அந்தணர் என்றும் அனல் அளிக்கப்பட்ட எவரும் இன்றுவரை சத்ரபதி என்றானதில்லை. அவர்களில் ஒருவர் அவ்வண்ணம் வெண்குடையும் கோலும் கொள்வாரென்றால் அவர்கள் அனைவரின் படைத்துணையையும் கோரலாமே?” என்றார்.

“ஆம், அதையும் எண்ணினேன். ஆனால் அனல்குடி ஷத்ரியர்களின் மாபெரும் கூட்டமைப்பு ஒன்று உருவாகிறது என்ற எண்ணத்தை ஷத்ரியர் அடைவதற்கே அது வழிவகுக்கும். ஷத்ரியர்களைப்பற்றி நான் நன்கு அறிவேன், அமைச்சரே. அவர்கள் முதலைகளைப்போல, தங்கள் ஆணவம் என்னும் குட்டையிலிருந்து வெளியே வர இயலாதவர்கள். எவர் தலைமைகொள்வது என்ற பூசலினாலேயே அவர்கள் படையென இணைய முடிவதில்லை. ஆனால் அவர்களை இணைக்கும் அச்சம் ஒன்று உருவாகுமென்றால் எவரேனும் அவ்விணைப்பை நிகழ்த்திவிடக்கூடும். அது நிகழ நாம் இடமளித்துவிடக்கூடாது.”

கருணாகரர் தலையை அசைத்தார். அவர் முகத்தை நோக்கி புன்னகைத்து “சத்ரபதியென்று அமர்ந்து அரியணை நிலைகொண்டபின் நாம் ஷத்ரியர்களையும் முழுதாக

வெல்வோம். அதன்பின் பிறிதொரு அஸ்வமேதமும் ராஜசூயமும் நிகழ்த்தி அரசரை அதில் அமரச் செய்வோம்” என்றாள். கருணாகரர் அந்த எளிய ஆறுதலை தனக்காக அவள் சொன்னதன்பொருட்டு உளச்சிறுமைகொண்டார். முகம் சிவக்க விழிதிருப்பி “நன்று, அவ்வாறே நிகழட்டும்” என்றார்.

அஸ்வமேதத்தின் நெறிகளின்படி பாரதவர்ஷத்தின் நீர்வழிப் பிரிவுகளால் ஆன சாரஸ்வதம், காங்கேயம், சைந்தவம், பஞ்சதட்சிணம், மேருதீர்த்தம் என்னும் என்னும் ஐந்து நாடுகளில் மூன்றை வென்று புரவி கடந்தாகவேண்டும். அல்லது நிலம்சார் நாடுகளான ஹிமவம், கோவர்தனம், கௌடம், காமரூபம், வேசரம், நாகரம், திராவிடம் என்னும் ஏழில் நான்கை அது கடக்கவேண்டும். மகாநதி, கோதாவரி, கிருஷ்ணை, துங்கபத்ரை, காவேரி என்னும் ஐந்து பேராறுகள் ஓடும் பஞ்சதட்சிணம் முன்னரே தமயந்தியின் ஆட்சியின்கீழ் இருந்தது. வேசரமும் நாகரமும் திராவிடமும் அதில் அடங்கின. வங்கனை வென்று கௌடத்தையும் மாளவனை வென்று கோவர்த்தனத்தையும் கடக்கமுடிந்தால் சத்ராஜித் என முடிசூட்டிக்கொள்ள முடியும்.

கருணாகரரும் நாகசேனரும் இரு தூதுக்குழுக்களாக கிளம்பிச்சென்றனர். கருணாகரர் வங்கனையும் பௌண்டரனையும் அங்கனையும் சந்தித்து புரவி கடந்துசெல்ல அவர்களின் ஒப்புதலை பெற்றார். மாளவத்திற்கும் அவந்திக்கும் சேதிக்கும் சென்ற நாகசேனர் அவர்களிடமிருந்தும் ஒப்புதல் பெற்றார். சிம்மவக்த்ரன் நிஷதத்தின் அடிதொழு நாடுகள் என்றிருந்த கலிங்கத்திற்கும் மகதத்திற்கும் சென்று அவர்கள் நாடுகளின் வழியாக புரவி செல்லும் பாதையை வகுத்தளித்தான். நிஷதத்தின் படைப்பெருக்கை

அஞ்சிக்கொண்டிருந்த ஒவ்வொருவரும் மாற்றுச்சொல் உரைக்காமல் தலைவணங்கினர்.

அஸ்வமேதப் புரவியை வரவேற்கும் முறைகள் இரண்டு உண்டு என்றன நூல்கள். வாள்தாழ்த்தி முடிவளைத்து அதை வணங்கி அரண்மனைக்கு கொண்டுசெல்வது அடிபணிபவரின் வழி. மங்கல இசையுடன் வந்து எதிர்கொண்டு சென்று வேள்விச்சாலையில் நிறுத்தி அவிமிச்சம் ஊட்டி அந்தணர்களுடன் எல்லைவரை சென்று கடந்துபோகச் செய்வது நட்புளோரின் வழி. தங்களுக்கு நட்புநாடுகளின் இடம் அளிக்கப்பட்டதையே வெற்றி என வங்கனும் பௌண்டரனும் அங்கனும் மகதனும் எண்ணிக்கொண்டார்கள்.

❀நிஷதபுரியின் கொட்டிலில் பிறந்த இரண்டு வயதான வெண்ணிறப் பெண்புரவி கிரிஷையை பரிவேள்விக்காக நளமன்னரும் நிமித்திகர்களும் இணைந்து தேர்ந்தெடுத்தனர். ஐந்து நற்சுழிகளும் பதினாறு இலக்கணங்களும் முற்றமைந்த அப்புரவி செந்நிற மயிரடர்ந்த இமைகளும் நீலவிழிகளும் செந்நிற மூக்கும் பூமயிர் செறிந்த சிறிய இதழ்ச்செவிகளும் வாழைப்பூநிற நாக்கும் கொண்டிருந்தது. நீண்ட முகத்தில் மூக்குத்துளைகள் அகன்று திறந்திருக்க முள்மயிர்க்கீழ்த்தாடை சற்றே திறந்து வெண்கூழாங்கற்களின் நிரை என பற்களைக் காட்டி அது கனைத்தபோது அவ்வொலி கூரிய அகவலோசை கொண்டிருந்தது.

“புரவியுருக்கொண்ட வெண்நாகம்” என்று அதை சூதர்கள் பாடினர். வெண்ணிறக் குஞ்சிமயிர்க்கற்றைகள் சரிந்துகிடந்தன. நீள்கழுத்தைவிட உடல் இருமடங்கு மட்டுமே பெருத்திருந்தது. நரம்புகள் தெரியாத மென்மயிர் விலாவிலும் வயிற்றிலும் நூறுமுறை சுற்றிவந்த பின்னரே வியர்வை துளித்தது.

இளஞ்செந்நிற அடிவயிறு ஓசைகளுக்கெல்லாம் சிலிர்க்க ஈச்சங்குலையென வாலைக் குலைத்தபடி அது எப்போதும் எச்சரிக்கையுடனிருந்தது. மெல்லிய வெள்ளிக்கழிபோன்ற கால்களில் வெண்கல் போன்ற குளம்புகளின் இரு பிளவுகளும் ஒற்றைக்கூம்பென குவிந்திருந்தன. “பிழையற்றது, பிறிதொன்றில்லாதது” என்று நளன் அதை சுற்றிவந்து சொன்னான். அவனை திரும்பி நோக்கி நாக்கை நீட்டிய புரவியின் முதுகைத் தட்டியபடி “அச்சமே புரவிக்கு அழகு” என்றான்.

இலக்கணம் திகைந்த பெண்புரவிகளை சேணமிட்டுப் பழக்காமல், மானுடர் எவரும் மேலேறாமல் வளர்த்து மகவீனச் செய்வது வழக்கம் என்பதனால் கிரிஷை கடிவாளத்தையோ சவுக்கையோ அறியாமல் வளர்ந்திருந்தது. நற்பொழுதில் கொட்டில்பூசனையிட்டு அதை அழைத்துச்சென்றனர். ஐந்துமங்கலங்கள் கொண்ட தாலமேந்திய சேடியர் ஐவர் முன்னால் வர மங்கல இசையெழுப்பி சூதர் தொடர அன்று மலர்ந்த அல்லி என ஒளிகொண்ட கிரிஷையை பார்க்க அரண்மனை மகளிரும் வீரரும் இருமருங்கும் கூடியிருந்தனர். அதன் கழுத்திலணிவிக்கப்பட்டிருந்த செந்தாமரை மாலை உலைந்தது. குளம்புகள் மண்ணைத் தொட்டு எழுவது நான்கு புறாக்கள் விளையாடுவதுபோலத் தோன்றியது.

கூடியிருந்தவர்கள் வாழ்த்தொலி எழுப்பினர். பெண்டிர் குரவையிட்டனர். புதிய மணங்களுக்கு மிரண்ட கிரிஷை விழிகளை உருட்டி “ர்ர்ர்” என்றது. நளன் “ஒன்றுமில்லையடி, கண்ணே” என்றான். அரண்மனையின் முற்றத்தில் எழுந்த ஏழு மாட வேள்விப்பந்தலின் முன்னால் வைதிகர் நின்றிருந்தனர். அவர்கள் கங்கைநீர் தெளித்து வேதமோதி வாழ்த்த கிரிஷை

நீருக்கு பிடரி சிலிர்த்து தலையை உதறியபடி வேள்விச்சாலையை பார்த்தது. மெல்ல தும்மியபின் இருமுறை பொய்யடி வைத்து மெல்ல உடலூசலாட்டியது. பின் உள்ளே நுழைந்து அனல் குளங்களை சுற்றிக்கடந்து அரியணை அருகே சென்று நின்றது. அனைவரும் உவகைக்குரலெழுப்பினர். வாழ்த்தொலிகள் பெருகிச்சூழ்ந்தன.

விதர்ப்பத்திலிருந்து தமயந்தியின் தந்தை பீமகர் பட்டத்து இளவரசன் தமனுடனும் இளையவர்களான தண்டனுடனும் தமனனுடனும் வந்திருந்தார். விதர்ப்ப மணிமுடி சூடி அவர் வேள்விப்பந்தலில் அமர்ந்திருக்க இரு பக்கமும் மைந்தர் நின்றனர். நளன் அரசனுக்குரிய பீடத்தில் அமர்ந்திருக்க பட்டத்து இளவரசன் இந்திரசேனன் அருகே வாளேந்தி நின்றான். மறுபக்கம் படைத்தலைவன் சிம்மவக்த்ரன் கவச உடையுடன் வாள்சூடி நின்றான். அமைச்சர் கருணாகரர் வெண்ணிற ஆடையில் தன் இருக்கையில் அமர்ந்திருந்தார். வேள்வியை அமைப்பவரான நாகசேனர் மூச்சிரைக்க ஓடி ஆணைகளை இட்டும் திரும்பிவந்து கருணாகரரிடம் குனிந்து ஆணைபெற்றும் எங்கும் தெரிந்தார்.

நிமித்திகன் வெள்ளிக்கோல் சுழற்றி வந்து பேரரசி தமயந்தி வேள்விச்சாலைக்கு வருவதை அறிவித்தான். விதர்ப்பத்தின் கொடியுடன் முகப்புவீரன் வர தாலப்பெண்டிரும் இசைச்சூதரும் தொடர முழுதணிக்கோலத்தில் தமயந்தி நடந்துவந்தாள். செந்நிறப்பட்டு அணிந்து, செவ்வைரங்கள் பதித்த அணிகள் பூண்டு அனலென அவள் வந்தபோது எழுந்த வாழ்த்தொலிகளும் குரவையோசையும் காற்றென அவளைச் சூழ்ந்து கனல வைத்தன என்று தோன்றியது. அவளுக்குப் பின்னால் அரசணித்தோற்றத்தில் இளவரசி இந்திரசேனை

வந்தாள். அமைச்சர்களும் படைத்தலைவர்களும் அவளை எதிர்கொண்டு அழைத்துச்சென்றனர்.

அந்தணர் வேதமோதி கங்கைநீர் தெளித்து தூய்மை செய்த அரியணையில் குடிமூத்தார் எழுவர் அவளை வழிகாட்டி கொண்டுசென்று அமர்த்தினர். ஏவலர் கொண்டுவந்து அளித்த மணிமுடியை மூதன்னை ஒருத்தி அவளுக்கு சூட்டினாள். மூத்தவர் ஒருவர் செங்கோல் எடுத்துக்கொடுத்தார். நிமித்திகன் கோல்சுழற்றியதும் வாழ்த்தொலிகள் அடங்க அவன் பரிவேள்வி தொடங்குவதை அறிவித்தான். நிஷதகுடிகளின் முழுவெற்றியை வான்வாழும் மூத்தோருக்கு அறிவிக்கும்பொருட்டே அந்த வேள்வி என்று அவன் கூறினான். விண்முகில்களை ஆளும் இந்திரனின் அருளாலும் இருண்டகாடுகளை ஆளும் கலியின் கொடையாலும் அவ்வேள்வி முழுமைபெறவேண்டும் என அவன் சொன்னபோது நிஷதகுடிகள் வாழ்த்தொலி எழுப்பினர்.

வேள்வி தொடங்கியது. அதர்வணவேதம் தாமிரமணியோசைபோல, குறுமுழவோசைபோல, குட்டியானைப்பிளிறல்போல, குதிரைக்கனைப்போசைபோல, புலிமுரலல்போல எழுந்து அப்பந்தலை நிறைத்தது. வைதிகர் கிரிஷையை வேள்விப்புகை காட்டி தூய்மைப்படுத்தினர். அவிமிச்சத்தை முதலில் அரசிக்கு அளிக்க அவள் அதை இரண்டாகப் பகுத்து ஒரு பகுதியை கிரிஷைக்கு அளித்து எஞ்சியதை தான் உண்டாள். வாழ்த்தொலிகளுடன் குடிகள் வந்து கிரிஷையை தொட்டு வணங்கிச்சென்றனர். வெறியாட்டெழுந்த பூசகனின் நோக்கு அதன் விழிகளில் வந்துவிட்டிருந்தது. வேறெங்கிருந்தோ அறியாக் குரலாணை

ஒன்றை பெறுவதுபோல செவிகூர்த்து ஒற்றைக்குளம்பு சற்றே தூக்கி உடல்சிலிர்த்து வால்சுழற்றியபடி அது நின்றது.

நாளில் நான்குமுறை அதை பயிற்சிக்கு கொண்டுசென்றனர். தசைகளை ஏழுமுறை உருவிவிட்டனர். அளவிட்ட உணவு அளிக்கப்பட்டது. நகர்க்குடிகள் அனைவரும் வந்து அதை வணங்கி அருள்பெற்றனர். ஒவ்வொருநாளும் காலையில் மலைமேலிருந்த இந்திரனின் ஆலயத்திலும் மாலையில் கலியின் ஆலயத்திலும் அரசனும் அரசியும் தலைமைகொள்ள பரியின் நாளும் பெயரும் சொல்லி பூசனை நிகழ்த்தப்பட்டது. அந்த மலரும் நீரும் கொண்டுவந்து அதற்கு படைக்கப்பட்டன. வணங்கும்தோறும் அது தெய்வமாகியது. எக்கணமும் எழுந்து விண்ணில் பாய்ந்தேறி வான்புகுந்துவிடும் என உளம்மயங்கச் செய்தது.

விஜயபுரியிலிருந்து புஷ்கரனும் காளகக்குடித் தலைவர்களும் முதல்நாள் பரிதேர்வின்போதே வந்து வேள்வியில் அமர்வார்கள் என்று நகரில் பேச்சிருந்தது. பின்னர் ஒவ்வொருநாளும் அவர்கள் வந்துவிட்டார்களா என்பதே அனைவரும் கேட்டுக்கொள்வதாக அமைந்தது. “அவர் சிறுமைசெய்யப்பட்டார். உளம்திரிந்திருக்கிறார்” என்றார்கள். “ஆயினும் தமையனின் செயல். இத்தருணத்தில் அனைத்தையும் மறப்பதே பெரும்போக்கு” என்றனர் சிலர். “ஆம், ஆனால் குருதியை எவரும் கழுவிவிட இயலாது. சீர்ஷரின் சொல் புஷ்கரனை ஆள்கிறது” என்றார் காளகக்குடியினர் ஒருவர்.

பரிஎழுகை நாளன்று புஷ்கரனும் காளகக்குடித் தலைவர்களும் வருவார்கள் என்றனர் மூத்தோர். வரமாட்டார்கள் என்று அரசி அறிந்திருந்தாள். “பரிவேள்விக்கான அறிவிப்பையே தங்களுக்கு

எதிரான அறைகூவல் என்று அவர்கள் எண்ணுகிறார்கள், அரசி" என்றார் கருணாகரர். "நிஷாதர்களுக்குமேல் ஷத்ரியர்களின் சவுக்கோசை அது என்று சூதனொருவன் பாடுவதை ஒற்றன் கேட்டான். அவ்வாறு பலநூறு சூதர்கள் நாடெங்கும் பரவிக்கொண்டிருக்கிறார்கள்."

தமயந்தி "அதுவும் நன்றே... நாம் மேலெழுந்தோறும் மக்கள் இப்பெருநிகழ்வில் சிறுமையைச் சேர்க்கும் புஷ்கரன்மேல் கசப்பு கொள்வார்கள். மக்களின் களிப்பும் காழ்ப்பும் நம்முடன் இணைந்துள்ளதா என்று மட்டுமே நாம் பார்க்கவேண்டும். அவர்கள் நம்முடனிருந்தால் புஷ்கரனுக்கு வேறுவழியில்லை" என்றாள்.

பரிஎழுகையின்போதும் புஷ்கரன் வரப்போவதில்லை என்று செய்தி வந்தது. அவன் விஜயபுரியை புரவி சென்றடையும்போது படையுடன் வந்து உடன்சேர்ந்துகொள்வான் என்று கருணாகரர் நகரில் செய்தி பரப்பினார். ஆனால் மக்களின் ஐயம் வளர்ந்துகொண்டே இருந்தது. நாகங்களுக்கு உகந்த ஆவணி மாதம் ஆயில்யம் நாளில் பரிஎழுகை நிகழ்ந்தது. இந்திரபுரியின் குடிகளனைவரும் வேள்விச்சாலைமுதல் கோட்டைமுகப்புவரை இரு மருங்கும் மானுடமணல்கரை என பெருகிச்செறிந்திருந்தனர். புலரியிலேயே வேள்விப்புகை பந்தலுக்குமேல் எழுந்து நின்றது. வேதச்சொல் ஒலித்துக்கொண்டிருந்தது.

வேள்வி முடிந்ததும் அவிமிச்சத்தை தமயந்தி புரவிக்கு ஊட்டினாள். புரவி அரண்மனை முற்றத்திற்கு கொண்டுவரப்பட்டது. அதன் குளம்புகளில் இரும்பு லாடங்களுக்குமேல் பொற்கவசம் அணிவிக்கப்பட்டது. முழங்கால்களில் பொற்பூண்கள். விலாவில்

பொன்னூல்பின்னல் செய்த பட்டுப்படாம். கழுத்தில் அருஞ்செம்மணி பதிக்கப்பட்ட பதக்கம் தொங்கிய ஆரம். அலைநெளிவு மாலைக்குள் இலையடுக்கு மாலை. அதன் நடுவே சுழலடுக்கு மாலை. காதுகளில் நீர்மணிவைரங்கள் சுடர்ந்த மலரணிகள். நெற்றிச்சுட்டியில் அனலென சுடர்ந்தது விதர்ப்பநாட்டின் தொன்மையான அரசவைரமான அருணம்.

அந்த அணிகளனைத்தையும் அது அறிந்திருந்ததென்று தோன்றியது. கனவிலென அது நடந்தது. வழியில் தடை கண்டால் மூச்சால் ஊதிப்பறக்கவிடுவதுபோல உயிர்த்தது. கொம்புகளும் முழவுகளும் ஒலித்து அவிந்த அமைதியில் நிமித்திகன் வெள்ளிக்கோலுடன் அறிவிப்புமேடையில் எழுந்து நாளும் பொழுதும் சுட்டி புரவிஎழுகையை அறிவித்தான். அப்பரிவேள்வியின் நெறிகளை இன்னொரு நிமித்திகன் விளக்கினான்.

நளன் துணைவர அமைச்சர்களால் அழைத்துவரப்பட்ட தமயந்தி புரவியை அணுகி அதன் காதில் வைதிகர் உரைத்த சொற்களை ஏற்று சொன்னாள். "எழுக, என் புரவியே! என் வாள் நீ. என் குலத்தின் விழைவு நீ. என் மூதாதையரின் சொல் நீ. என் தெய்வங்களின் அருள் நீ. செல்க! விரிநிலத்தை வென்று மீள்க! உன்னைத் தடுப்பவர் எவராயினும் என் வாளுக்கு எதிரிகள். என் குலத்திற்கு எதிரிகள். என் கொடிவழியினரின் பழிகொள்பவர்கள். நீ கால்தொடும் நாடெல்லாம் என்னுடையதாகுக! என்னுடையவை எல்லாம் என் குலம்கொள் செல்வமாகுக! என் மூதாதையருக்கு படையலாகுக! என் தெய்வங்களுக்கு பலியென்றே ஆகுக! ஆம், அவ்வாறே ஆகுக!"

அந்தணப்பூசகர் இந்திரன் ஆலயத்திலிருந்து கொண்டுவரப்பட்ட மஞ்சள் களபத்தை புரவியின் நெற்றியில் மாவிலையால்

தொட்டு வெற்றிக்குறியிட்டார். கலியின் ஆலயத்தில் மோட்டெருமையை வெட்டி பலியளித்த குருதிச்சாந்தை குடிப்பூசகர் தன் கட்டைவிரலால் தொட்டு அதன் நெற்றியில் அணிவித்தார். சிம்மவக்த்ரன் முன்னால் வந்து பணிந்து அரசியிடமிருந்து அவள் உடைவாளை பெற்றுக்கொண்டான்.

“செல்க!” என அரசி அறிவித்ததும் புரவி நின்ற இடத்திலேயே ததும்பியது. நளன் அதன் பிடரியைத் தொட்டு மெல்ல பேசியதும் நடனமேடையேறும் விறலி என காலெடுத்துவைத்து முன்னால் சென்றது. இந்திரபுரியின் மக்கள் களிவெறிகொண்டு ஆடைகளையும் தலைப்பாகைகளையும் வானில் வீசி கைவிரித்து துள்ளிக்குதித்து வாழ்த்தொலி எழுப்பினர்.

கிரிஷை கோட்டைமுகப்புக்குச் சென்றபோது அங்கே முன்னரே கொண்டுவந்து தளையில் கட்டி வைக்கப்பட்டிருந்த சிறைப்பட்ட குற்றவாளர் எழுவரை கொலைதொழிலர் வெட்டி தலையுருட்டினர். பீரிட்ட குருதி செம்மண்புழுதியில் ஊறி சேறாகியது. கைகள் கட்டப்பட்ட உடல்கள் கால்களை உதைத்தபடி எழுந்தெழுந்து துள்ளிவிழுந்தன. தலைகள் விழித்த நோக்குடன் பற்கள் தெரிய புரண்டு கிடந்தன. புரவி அக்குருதியில் கால்வைத்து அப்பால் சென்றபோது கோட்டைமேல் எரியம்புகள் எழுந்து வெடித்தன. அக்குளம்புத் தடங்களைத் தொட்டு குருதியை தங்கள் வாள்களிலும் வேல்களிலும் தேய்த்துக்கொண்டு கூச்சலிட்டு வெறிநடனமிட்டனர் வீரர்கள்.

ஒரு வீரன் கைவிரித்து ஆர்ப்பரித்தபடி முன்னால் ஓடிவந்து ஒரு கையால் தன் நீள்முடியை தான்பற்றி இழுத்து மறுகையின் உடைவாளால் தன் கழுத்தை அரிந்து சுழன்று விழுந்து துடித்தான். அவனை ஒருபொருட்டென்றே கருதாமல்

அப்பால் காலெடுத்துவைத்துச் சென்றது புரவி. வீரர்கள் ஓடிவந்து தற்பலியானவனின் செங்குருதியைத் தொட்டு தங்கள் நெற்றியில் குறியணிந்தனர். குருதிதோய்ந்த வாள்களை உருவி வானில் ஆட்டி “வெற்றிவேல்! வீரவேல்! வெல்க இந்திரபுரி! வெல்க நிஷதகுடி! வெல்க பேரரசி” என்று முழக்கமிட்டனர்.

நிஷதர்களின் பதினெட்டு புரவிப்படைகள் கோட்டைக்கு வெளியே குறுங்காடுகளில் காத்து நின்றிருந்தன. முன்னால் நிஷதர்களின் மின்படைக்கொடியுடன் ஒரு வீரன் புரவியில் சென்றான். தொடர்ந்து காகக்கொடி ஏந்திய வீரன் சென்றான். முழங்கும் போர்முரசுகளுடன் தட்டுத்தேர் ஒன்று அதைத் தொடர்ந்து சென்றது. கொம்புகள் முழக்கியபடி நிமித்திகர்களின் தேர் அதன்பின் சென்றது. உருவிய வாள்களும் ஏந்திய வேல்களுமாக நூறு படைவீரர்கள் சீர்நடையிட்டுச் செல்ல தொடர்ந்து அரசியின் வாளேந்தி சிம்மவக்த்ரன் சென்றான். அவனுக்குப் பின்னால் வேள்விப்பரி சென்றது. புரவிக்குப் பின்னால் நிஷதர்களின் புரவிப்படை சென்றது.

அன்றே சிற்றமைச்சர் ஸ்ரீதரர் வழிகாட்ட நாலாயிரத்தலைவன் வஜ்ரகீர்த்தியின் தலைமையில் ஒரு நிஷதப்படை ராஜமகேந்திரபுரி நோக்கி சென்றது. அப்போரில் அப்படை தோற்று பின்வாங்கவேண்டும் என்றும் அதில் வஜ்ரகீர்த்தி களப்பலியாகவேண்டும் என்றும் ஸ்ரீதரருக்கு அரசி ஆணையிட்டிருந்தாள். வஜ்ரகீர்த்தியின் முதல் படைத்தலைமை அது. ஸ்ரீதரருக்கு இடப்பட்ட ஆணையை அவன் அறிந்திருக்கவில்லை. அப்போரில் வென்று அவைநின்று பரிசுகொள்வதைப்பற்றியும் பன்னிரண்டாயிரத்தலைவனாக ஆகி நகரில் மாளிகையும் அவையில் முதல்பீடமும் பெற்று

அமைவதைப்பற்றியும் அவன் எண்ணி மகிழ்ந்துகொண்டிருந்தான்.

பிறிதொரு நாலாயிரத்தவர் படை சிற்றமைச்சர் சூக்தர் வழிகாட்ட படைத்தலைவன் பகுஹஸ்தன் தலைமையில் வடக்கே கிராதர்நிலம் நோக்கி சென்றது. அதுவும் தோல்விச்செய்தியுடன் மீளவேண்டுமென ஆணையிடப்பட்டிருந்தது. சூக்தர் அவ்வாணையால் சோர்வுற்றிருந்தார். உள்ளம் கொப்பளிக்க பகுஹஸ்தன் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் ஒற்றைச் சொல்லில் அவர் மறுமொழி இறுத்தார். “தாங்கள் ஐயுறுகிறீர்களா, அமைச்சரே? நாம் வெல்வோம்!” என்று பகுஹஸ்தன் சொன்னான். “ஆம், வெல்வோம்” என்றார் சூக்தர். “ஏன் சோர்வுற்றிருக்கிறீர்கள்?” என்றான் அவன். “பகடையாடுபவர்கள் தாங்களும் பகடைக்காய்கள் என அறிந்திருப்பதில்லை” என்றார் சூக்தர். “என்ன சொல்கிறீர்கள்?” என்று அவன் கேட்டான். “எல்லா போர்களும் பகடையாட்டம் அல்லவா?” என்றார். அவர் சொல்வதை புரிந்துகொள்ளாமல் பகுஹஸ்தன் “ஆம், போர் என்றே பகடைக்களம் அமைக்கப்பட்டுள்ளது” என்றான்.

அன்று பகலுக்குள் பகுஹஸ்தன் நிகழவிருப்பதை புரிந்துகொண்டான். புரவியில் எண்ணங்கள் அலைபாய சென்றுகொண்டே இருக்கையில் அத்தனை கதவுகளையும் திறக்கும் சுழற்காற்றென அனைத்தையும் புரியவைத்தபடி அவ்வுண்மை உள்நுழைந்தது. “ஆம்” என உடல்நடுங்க சொன்னபடி அவன் விழிப்புகொண்டான். அவன் உடலில் அந்த அறைதலின் விசை நடுக்கமாக எஞ்சியிருந்தது. “ஆம் ஆம் ஆம்” என்றது உள்ளம். புரவியிலிருந்து விழுந்துவிடுவோம் என

அஞ்சி சேணத்தை காலால் கவ்விக்கொண்டான். நெடுநேரம் சொல்லற்ற ஒரு உளவிரிவாக அவ்வறிதல் அவனுடனிருந்தது.

கிராதர்களை முற்றழிக்க நாலாயிரம்பேர் போதாது. அவர்கள்மேல் போர்தொடுத்து வென்று கப்பச்சாத்து இடுவதில் பொருளில்லை. அத்தகைய நெறிகளெவையும் அவர்களை கட்டுப்படுத்துவதில்லை. அவர்களிடம் தோல்வியுறுவதென்பது அவர்களை மிகைநம்பிக்கை கொண்டவர்களாக ஆக்கும். அவர்களின் குலவழக்கப்படி வெல்லப்பட்டவர்களை முழுமையாகக் கொன்று அழிப்பார்கள். வெட்டித் துண்டுகளாக்கி காடுகளில் விலங்குகளுக்கு வீசுவார்கள். குருதியை கலங்களில் பிடித்து சேர்த்துக்கொண்டுசென்று தலையில் ஊற்றி நீராடுவார்கள். கலங்களில் ஏந்தி குடிப்பார்கள். எதிரித்தலைவனின் ஊனை சமைத்து உண்டு களியாடுவார்கள்.

அச்செயல்கள் செய்தியாக நிஷதபுரியை சென்றடையும். நிஷாதர் வெறிகொள்வார்கள். கிராதர்களை முற்றழிக்க, அவர்களின் ஊர்களை எரியூட்ட, அவர்களின் மைந்தர்களை அடிமைகளாக தளைத்துக்கொண்டுசென்று மரக்கலக்காரர்களுக்கு விற்க, அவர்களின் நிலங்களில் உப்பும் சுண்ணமும் பரப்ப அதுவே போதிய தூண்டுதலாக ஆகும். பன்னிரு ஆண்டுகளாக எல்லைகளை மீளமீளத் தாக்கி ஊர்களைச் சூறையாடி குடிகளைக் கொன்று ஆநிரைகளைக் கவர்ந்துவந்த கிராதர்களை அழிக்க அரசி உளம்கொண்டுவிட்டாள்.

பெரும்போர்களுக்கு முன்னால் வேண்டுமென்றே சிறு தோல்விகளை நிகழ்த்துவதுண்டு என அவன் அறிந்திருந்தான். அது வீரர்களின் ஆணவத்தைச் சீண்டி பழிவெறி கொள்ளச்செய்யும். அத்தோல்வி கடுமையாக இருக்கும்தோறும்

வெறிபெருகும். வேள்விப்பரி எழுந்தபோது கோட்டைமுகப்பில் எதிரே ஓடிவந்து தன் தலையை வெட்டிவிழுந்த தற்பலியனின் முகம் அவன் நினைவுக்கு வந்தது. அந்த விழிகளிலிருந்த வெறியை மிக அருகிலெனக் கண்டான். “ஆம்” என்ற சொல்லுடன் நிலைமீண்டான். புன்னகை செய்து “ஆம்” என்று தலையசைத்தான்.

வேள்விப்பரி நிஷதநாட்டின் தேர்ச்சாலை வழியாக தெற்கு நோக்கி சென்றது. காடுகளிலிருந்து படைப்பிரிவுகள் கிளம்பி வந்து சேர்ந்துகொண்டே இருக்க நிஷதபுரியின் எல்லையைக் கடக்கும்போது அது மறுமுனை தெரியாத பெருக்காக மாறிவிட்டிருந்தது. வழியெங்கும் சிற்றூர் மக்கள் மரங்களின்மேல் ஏறிச் செறிந்தமர்ந்து அவ்வொழுக்கை நோக்கினர்.

புலர்காலையில் தொலைவில் மின்கதிர்க்கொடி தெரிந்தபோது அவர்கள் வாழ்த்தொலி எழுப்பினர். புரவி கடந்துசென்ற பின்னர் அன்று பகலிலும் இரவிலும் மறுநாள் புலரியிலும்கூட படை சென்றுகொண்டே இருந்தது. இறுதியாக குதிரைத் தீவனமும் அடுமனைப் பொருட்களும் ஏந்திய வண்டிகள் சென்று முடிந்தபோது அன்று மாலை ஆகியது. படைசென்ற பாதையில் உறுதியான மண் மென்புழுதியாக மாறியிருந்தது.

# நீர்க்கோலம் - 56

## 55. ஆடியுடன் ஆடுதல்

தமயந்தியின் புரவி தடையேதுமில்லாமல் தண்டபுரத்தைக் கடந்து ராஜமகேந்திரபுரியை அடைந்தது. தான்யகடகத்தையும்

இந்திரகீலத்தையும் வென்றது. அஸ்மாகர்களும் வாகடர்களும் பல்லவர்களும் அதை வணங்கி வாள்தாழ்த்தினர். திருமலாபுரத்தை வென்றபின் அமராவதியை அது அடைந்தபோது சதகர்ணிகள் ரேணுநாட்டையும் கடந்து தென்காவேரிக் கரைகளுக்கு பின்வாங்கிச் சென்றனர். கிருஷ்ணையை அடைந்தபின் அது வடக்கே திரும்பியது.

“அதை இப்போது நாம் ஒன்றும் செய்யமுடியாது, அரசே” என்றார் சுமத்ரர். “புரவி கிளம்பும்போது விதர்ப்பினி ஐயத்துடன் இருப்பாள். நம்மை வென்று கடப்பதுவரை அவள் முழு விசையும் படைகளுடன் இருக்கும். தென்னகத்தை வென்றதுமே நம்மை முழுதும் அடக்கிவிட்டதாக எண்ணுவாள்.” சுகர்ணன் “அவளை அத்தனை எளிதாக எண்ணவேண்டாம்” என்றான். “ஆம், பாரதவர்ஷத்தின் மாபெரும் அரசியல்சூழ்ச்சியாளர் அவள். சுக்ரரின் மகள் தேவயானியின் மறுபிறப்பு என்கிறார்கள். ஆனால் ஆணவம் எவரையும் மழுங்கச்செய்யும். நம்மை எளிதில் வென்றமையாலேயே மீண்டும் எளிதில் வென்றுவிடலாம் என்னும் உளப்பதிவிலிருந்து தப்ப அவளால் இயலாது” என்றார் சுமத்ரர்.

“அவளுடைய வேள்விக்குதிரை வடக்கே மச்சர்களையும் கிராதர்களையும் வென்று மேலெழட்டும். அவந்தியையும் மாளவத்தையும் வெல்லட்டும். அதன்பின்னர்தான் நாம் தொடங்கவேண்டும்” என்று அவர் சொன்னபோது சதகர்ணியாகிய சுகர்ணன் “அப்போது அவள் பாரதத்தை பெருமளவு வென்றிருப்பாள்” என்றான். “ஆம், அவள் வெல்ல வெல்லத்தான் புஷ்கரனின் ஐயமும் வஞ்சமும் பெருகும்... அவள் சத்ராஜித் என அமர்ந்துவிடுவாள் என்றாகும்போது அவன் எரிகொள்வான்.”

சுகர்ணன் அவரை நோக்கியபடி மீசையை நீவிக்கொண்டு அமர்ந்திருந்தான். “ஐயம் கொள்கிறீர்கள், அரசே” என்றார் சுமத்ரர். “ஆம், இவையெல்லாம் உங்கள் விழைவுக்கற்பனைகளோ என்ற எண்ணம் எழுகிறது.” சுமத்ரர் சிரித்து “எட்டுபுறமும் எண்ணியே அனைத்தையும் சூழ்கிறேன். அரசே, தண்டபுரத்தின் கலிங்க அரசன் பானுதேவனிடமும் புஷ்கரனின் அணுக்கன் ரிஷபனிடமும் ஒவ்வொரு நாளும் தொடர்பிலிருக்கிறேன்.”

சுகர்ணன் “ரிஷபனைப்பற்றி சொல்லிக்கொண்டே இருக்கிறீர்கள். அவன் கலிங்க ஒற்றன், அப்பால் என்ன?” என்றான். “நானும் முதலில் அவ்வண்ணமே எண்ணினேன். ஆனால் அவனைப்பற்றி ஒற்றர்கள் சொன்ன செய்திகள் ஐயமூட்டின. அவன் கலிங்க அரசி மாலினிதேவிக்கே அணுக்கன்” என்றார். மீசையை நீவிக்கொண்டிருந்ததை நிறுத்தி கூர்ந்து நோக்கியபின் “அதுவும் அரண்மனைகளில் புதிதல்ல” என்றான். “ஆம், ஆனால் பெரும்பாலும் அவர்கள் ஏவலர்களாகவே இருப்பார்கள். ரிஷபன் அரசகுடியினன்” என்றார்.

விழிசுருங்க “எக்குடி?” என்றான் சுகர்ணன். “அவன் கலிங்க மன்னர் சூரியதேவருக்கு அவருடைய முதிய அகவையில் நாகர்குலத்து இளவரசி ஒருத்தியில் பிறந்த மைந்தன்” என்றார் சுமத்ரர். அவையிலிருந்த படைத்தலைவன் மகாபாகு “என்ன இது? அவர்களிடையே உறவு…” என சொல்ல முற்பட “அதுவும் அரண்மனையில் வழக்கமே” என்றான் சுகர்ணன். சற்றுநேரம் அமைதி நிலவியது. மகாபாகு மெல்ல அசைந்து பெருமூச்சுவிட்டதும் அது கலைந்தது. “அவன் வழிநடத்துகிறான் அனைத்தையும். அவனுடன் இணைந்தே நான் இவற்றை வகுத்துள்ளேன்” என்றார்.

சில நாட்களிலேயே தெற்கு நோக்கிச்சென்ற வஜ்ரகீர்த்தியின் படையை கிருஷ்ணை நதிக்கரையின் நாகர்குடிகள் எதிர்கொண்டு தோற்கடித்தார்கள் என்ற செய்தி வந்தது. வஜ்ரகீர்த்தியைக் கொன்று ஒரு மூங்கில் தெப்பத்தில் கட்டி அவர்கள் கிருஷ்ணையில் ஒழுக்கினார்கள். ஓரிரு நாட்களுக்குப்பின் வடக்கு நோக்கிச்சென்ற பகுஹஸ்தன் கிராதர்களால் கொல்லப்பட்டான் என்றும் அவனை நூறு துண்டுகளாக வெட்டி கழுகுகளுக்கு உணவாக்கினார்கள் என்றும் அவன் குருதியை தங்கள் குடித்தெய்வமான கூளிக்கு முழுக்காட்டி தாங்கள் நெற்றியில் பூசிக்கொண்டார்கள் என்றும் செய்தி வந்தது.

“தோல்விக்கு திட்டமிடுவதிலும் அரசியின் நுட்பம் வியக்கச் செய்கிறது!” என்றார் சுமத்ரர். “அரசர்களிடம் போரில் வேண்டுமென்றே தோற்றால்கூட அது இழிவு. அவர்கள் அதை கதைகளாக சூதர்நாவில் நிறுத்துவார்கள். அவர்களின் படைகள் நிஷதப்படைகள் வெல்லப்படக்கூடியவையே என்னும் உணர்வை அடைந்து அச்சமழியவும் வாய்ப்பாகும். ஆகவேதான் தொல்குடிகளிடம் தோற்க வைக்கிறாள். அவர்களுக்கு சொல்லில் வரலாற்றை நிறுத்தத் தெரியாது.” சுகர்ணன் “அதைவிட அவர்களை வேருடன் அழிக்க அவளுக்கு ஒரு அடிப்படை கிடைக்கிறது” என்றான்.

நிஷதபுரியின் படைகள் கிளம்பிச்சென்று நாகர்களையும் கிராதர்களையும் தோற்கடித்து அவர்களின் குலங்களை ஆண்வேர் இல்லாமல் அழித்து அவர்களின் ஊர்களை எரித்தன. அவர்களை மேலும் மேலும் காடுகளுக்குள் துரத்திவிட்டு மீண்ட அப்படைகளை இந்திரபுரியின் மக்கள் நாட்டின்

எல்லையிலேயே வந்து எதிர்கொண்டு சூழ்ந்து நடனமிட்டு வெற்றிக்களிப்புடன் நகருக்கு கொண்டுசென்றனர்.

ஏழு நாட்கள் நகரெங்கும் வெற்றிக்கொண்டாட்டம் நிகழ்ந்தது. நூற்றெட்டு எருமைகளை கலிதேவனுக்கு வெட்டி குருதியாட்டு நிகழ்த்தினர். நூற்றெட்டு அருமலர்களால் இந்திரனுக்கு பூசெய்கை நிகழ்ந்தது. நகர் மக்கள் கடந்தவை அனைத்தையும் மறந்தனர். ஒவ்வொருவரும் அவ்வெற்றிக்கு தாங்களும் உரியவர்களென எண்ணினர். காமமும் கள்ளும் நகரில் இரவுபகல் ஒழியாமல் கொப்பளித்தன. சூதர்கள் கதைகளைச் சுமந்தபடி நிஷாதர்களின் சிற்றூர்களெங்கும் சென்றனர்.

“அவள் ஒவ்வொன்றையும் எண்ணியிருப்பதிலுள்ள கூர் என்னை அச்சுறுத்துகிறது, அமைச்சரே” என்றான் சுகர்ணன். “அவள் ஏன் கிராதர்களையும் நாகர்களையும் தேர்ந்தெடுத்தாள்? அவர்களை குருதியும் தீயும் கொண்டு அழித்தாள். அதை ஷத்ரியர் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். நாளை அந்த வாள் உங்களுக்கும் வரும் என எச்சரிக்கிறாள். அதே சமயம் ஷத்ரியர்களிலோ பிற அரசர்களிலோ எவருக்கேனும் அவ்வண்ணம் அவள் செய்திருந்தால் அதுவே அவர்களை ஒருங்கிணைய வழிவகுத்திருக்கும். அதை தவிர்த்துவிட்டாள். இவளை வெல்லுதல் எளிதல்ல.”

சுமத்ரர் “ஆம், ஆனால் அவள் நகரில் எழும் அக்களிவெறியே அவளுக்கு எதிரானது…” என்றார். “அது எங்கே எல்லை மீறுமென சொல்லமுடியாது. உட்பூசல்கள் கொண்ட ஒரு குலம் கட்டற்ற விழவை பன்னிரு நாட்கள் நீட்டிக்கக்கூடாது.” ஆனால் ஒவ்வொருநாளும் நிஷாதர்களின் கொண்டாட்டம் மிகுந்துகொண்டிருப்பதையே செய்திகள் சொல்லின. களியாட்டு

சிற்றூர்களுக்கும் சென்று சேர்ந்தது. எங்கும் உண்டாட்டும் விழவுக்கூடலும் மூத்தோரூட்டும் தெய்வமாட்டும் நிகழ்ந்தன.

“மக்கள் வெற்றியை விழைகிறார்கள். ஏனென்றால் வெற்றி என தன் வாழ்க்கையிலிருந்து ஒன்றைச் சொல்ல அவர்களிடம் ஏதுமில்லை” என்றார் சுமத்ரர். “நான் என சொல்லத்தெரியாதவர்கள், நாம் என்று சொல்லி கொந்தளிக்கிறார்கள். ஆனால் ஒருபோதும் மறுக்கமுடியாத அரசக் குருதியால் அன்றி குடிகளை ஒருங்கிணைக்க முடியாது. சென்ற காலங்களில் நிஷதநாடுபோல் எழுந்துவந்த எத்தனை அரசுகள் இருந்திருக்கின்றன! அவையனைத்தும் மறைந்தன. அஸ்தினபுரியும் மகதமும் பாஞ்சாலமும் வங்கமும் கலிங்கமும் எத்தனை வீழ்ச்சிக்குப் பின்னரும் நீடிக்கின்றன. ஏனென்றால் அவர்களின் அரசகுடி தெய்வ ஆணை பெற்றது. மாற்றற்றது. அது கருவறைத்தெய்வம், அது இருக்கும் இடமே ஆலயமென்றாகும்.”

❀ஒவ்வொருநாளுமென வெற்றிச் செய்திகள் வந்துகொண்டிருந்தன. பின்னர் களியாட்டே நிஷாதர்களின் அன்றாட வாழ்க்கை என்றாயிற்று. வேள்விப்பரியாகிய கிரிஷை மகதத்திற்குள் நுழைந்து கங்கையை அடைந்தது. அதை கங்கைநீரில் நீராட்டினர். அதன் திசைச்செலவு நிறைவடைந்ததை அறிவிக்கும்பொருட்டு வைதிகர் பதினெட்டு பொற்கலங்களில் கொண்டுவந்திருந்த கிருஷ்ணை நதியின் நீரை கங்கைநீர்ப்பெருக்கில் கரைத்தனர்.

நிமித்திகன் வலம்புரிச்சங்கை ஊத முரசுகளும் கொம்புகளும் மணிகளும் பெருகி உடனெழுந்து வானை அறைந்தன. “பேரரசி தமயந்தி வாழ்க! நிஷதகுலத்தரசி வாழ்க! சத்ராஜித் என அமரும் விதர்ப்பினி வெல்க!” என வாழ்த்தொலிகள் எழுப்பினர்

கங்கைக்கரையை நிறைத்தபடி சூழ்ந்திருந்த நிஷதப்படைவீரர். கங்கைநீரை பதினெட்டு பொற்குடங்களில் அள்ளிக்கொண்டு வைதிகர்கள் கரையேறினர். மலரிட்ட பாதையில் நடந்து அவர்கள் முன்னே செல்ல வேள்விக்குதிரை அவர்களைத் தொடர்ந்து சென்றது.

புரவி திரும்பிவருவதை அறிந்ததும் தமயந்தி வேள்விநிறைவுக்கு ஆணையிட்டாள். ஆயிரத்தெட்டு வைதிகர்கள் கூடி வேள்விக்கு நாள்குறித்தனர். வேள்விக்குரிய பொருட்களை சேர்த்தனர். அரண்மனைமுகப்பில் பன்னிரு நிலைகொண்ட வேள்விப்பந்தல் அமைந்தது. சாரஸ்வதம், காங்கேயம், சைந்தவம், பஞ்சதட்சிணம், மேருதீர்த்தம் என்னும் ஐந்து நாடுகளிலும் இருந்து வந்துசேர்ந்த வைதிகர்கள் நகரில் அவர்களுக்கு அளிக்கப்பட்ட குடில்களில் நிறைந்தார்கள். எரிகுளங்கள் அமைக்கப்பட்டன. புரவி மகத எல்லையைக் கடந்ததும் வேள்வி தொடங்கியது. நாற்பத்தொன்றாம் நாள் அது நகருள் நுழைந்து வேள்விப்பந்தலை அடையும் என்று கணித்தனர்.

வேள்வி முழுமைக்குப்பின் தமயந்தி சத்ராஜித் என முடிசூட்டிக்கொள்ளவிருந்தாள். அவளுக்காக கலிங்கப் பொற்சிற்பியான ஜயந்தன் அமைத்த ஏழு அடுக்குகொண்ட பசுந்தளிர் மணிமுடி அரண்மனையில் குடித்தெய்வங்களான ஏழு மூதன்னையர் அமர்ந்த நிலவறைக்குள் பூசெய்கைக்கு வைக்கப்பட்டது. ஆயிரத்தெட்டு மரகதக் கற்கள் பதிக்கப்பட்ட அந்த முடி காலைக்கதிர்பட்ட தளிர்க்குலை என சுடர்விட்டது. நிஷதகுடியின் முதல் மாமன்னர் மகாகீசகர் சூடியிருந்த பச்சைக்கற்கள் பதிக்கப்பட்ட பிடி கொண்ட உடைவாளும் அன்னையர்முன் வைக்கப்பட்டது. ஒவ்வொருநாளும் குருதிபலி

கொடுத்து அதிலுறைந்த கொலைத்தெய்வங்கள் விடாய்நிறைவு செய்யப்பட்டன.

ஜயந்தனும் எட்டு உதவியாளர்களும் அரண்மனையை ஒட்டியிருந்த சப்தமாளிகையில் தங்கி எவருமறியாமல் ஹரிதமாயூரம் என்னும் அரியணை ஒன்றை வடித்துக்கொண்டிருந்தார்கள். பீதர்நாட்டிலிருந்து வரவழைக்கப்பட்ட ஆயிரம் தூய மரகதக் கற்கள் பதிக்கப்பட்ட அது மயில்கால்களும் தோகைவிரித்த சாய்விடமும் இருபுறமும் எழுந்த இறகுகளும் கொண்டிருந்தது. வேள்விநிறைவன்று அரசமண்டபத்தில் அரசி சத்ராஜித் என முடிசூடுவாள். அவளுக்கு மூன்றடுக்குள்ள வெண்குடை பிடிக்கப்படும். அது பாரதவர்ஷத்தில் அவளுக்கு மட்டுமே உரிய அடையாளமாகும்.

பாரதவர்ஷத்தின் ஐம்பத்தாறு ஷத்ரிய அரசர்களுக்கும் நூற்றெட்டு பிற அரசர்களுக்கும் முறைப்படி அழைப்புகள் அனுப்பப்பட்டன. முதன்மை அரசர்களை அமைச்சர்கள் நேரில் சென்று அழைத்தனர். பிறருக்கு தூதர்களும் சூதர்களும் செய்தி கொண்டுசென்றார்கள். அரசர்கள் வந்தால் தங்குவதற்காக இருநூறு புதிய மாளிகைகள் நகரைச்சுற்றிய சோலைகளுக்குள் எழுப்பப்பட்டன. அரசர்களுடன் வரும் அகம்படியினரும் ஏவலரும் காவல்படைகளும் தங்குவதற்காக மரத்தாலான ஈராயிரம் பாடிவீடுகள் இந்திரக்குன்றுக்கு கிழக்குச்சரிவில் காடு திருத்திய வெளியில் கட்டப்பட்டன.

நகரின் அனைத்துக் கட்டடங்களும் பழுதுநோக்கி புதுப்பிக்கப்பட்டன. தாழ்வாரங்களில் வண்ணக்கொடிகள் கட்டப்பட்டன. குவையுச்சிகளில் கொடிகள் அசைந்தன. சூழ்ந்திருப்பவற்றை செம்மை செய்கையில் உள்ளம்

செம்மைகொள்வதை உணர்ந்த பெண்கள் மேலும் மேலும் வெறிகொண்டு பணியாற்றினர். கலங்களெல்லாம் தேய்க்கப்பட்டு பொன்னும் அனலும் வெள்ளியும் மின்னின. கலவறையில் மறந்திட்டவற்றைக்கூட எடுத்து துலக்கி அடுக்கினர். காவல்நிலைகளும் கோட்டைகளும் வெள்ளையும் அரக்கும் பூசப்பட்டு அன்று கட்டப்பட்டவை என எழுந்தன. நகரம் ஒவ்வொருநாளும் உருமாறிக்கொண்டே இருந்தது. எவ்வளவு செய்த பின்னரும் பணிகள் எஞ்சியிருந்தன.

"வசந்தமெழுந்த ஆலமரம் இந்நகரம். இலையெல்லாம் தளிராக தளிரெல்லாம் மலராக பொலிந்தெழுகிறது" என்றான் நகர்மன்றில் பாடிய சூதன் ஒருவன். "மணநாளுக்கு முந்தைய இரவின் மணப்பெண் இந்நகரம். நாணிச் சிவக்கிறது. உடல்பொலிந்து ஒளிகொள்கிறது" என்றான் அவனருகே நின்ற சூதன். கூடிநின்ற நகர்மக்கள் கூவிச்சிரித்து வெள்ளி நாணயங்களை அவனுக்கு அளித்தனர். "பலிகொண்டு நிறைந்த தெய்வத்தின் அமைதி இந்நகர்மேல் பரவுகிறது. நிறைந்த பெருங்குளத்தின் மெல்லிய அலையோசை மட்டும் எழுந்துகொண்டிருக்கிறது."

ஒவ்வொன்றும் முன்னரே திட்டமிட்டு வகுக்கப்பட்டன. கருணாகரரும் நாகசேனரும் இரவும்பகலும் துயில்நீத்து அப்பணிகளை ஒருங்கிணைத்தார்கள். கலியின் ஆலயத்திலும் இந்திரனின் கோட்டத்திலும் வழிபட்டு வேள்விமாடத்திற்கு வந்தமர்வாள் பேரரசி. அங்கே வந்துசேர்ந்திருக்கும் வேள்விப்புரவிக்கு பூசனைகள் செய்வாள். கோல்கொண்டு அரியணை அமர்ந்து வேள்விக்காவல் செய்வாள். சடங்குகள் அனைத்தும் முடிந்தபின் வேள்வியிலமர்ந்த அந்தணர்களுக்கு

அடிவணக்கம் புரிந்து காணிக்கையளித்து வாழ்த்து பெறுவாள். குடிவாழ்த்து பெற்றபின் வாழ்த்தொலிகள் சூழ கிளம்புவாள்.

வேள்விப்பந்தலில் இருந்து பேரரசியை குடிமூத்தார் எழுவர் வழிநடத்தி அரண்மனைக்குள் அரசமண்டபத்திற்கு கொண்டுசெல்வார்கள். அங்கே வேள்வித்தலைவராகிய சுப்ரப கஸ்யபரும் ஐந்து நிலங்களைச்சேர்ந்த தலைமை வைதிகர்களான கௌதம பிரீதரும், சாண்டில்ய சப்தமரும், வசிஷ்ட சம்விரதரும், விஸ்வாமித்ர உபகுப்தரும், பார்க்கவ சுப்ரரும் சேர்ந்து அவளை எதிர்கொண்டழைத்து அரசமேடைக்கு கொண்டுசெல்வார்கள். கங்கைநீர் தெளித்து வேதம் சொல்லி தூய்மைசெய்யப்பட்ட அரியணையில் அவளை அமரச்செய்வார்கள். அரசநிரை சான்றாக, குடிப்பெருக்கு சூழ்ந்து வாழ்த்த அவள் முடிசூடிக்கொள்வாள்.

ஒன்றுமட்டும் அவர்களுக்கு ஐயத்தை அளித்துக்கொண்டே இருந்தது. புஷ்கரனும் காளகக்குடியினரும் பிற குலங்களில் புஷ்கரனை ஆதரிக்கும் குடித்தலைவர்களும் எவ்விழவிலும் கலந்துகொள்ளவில்லை. வேள்விப்புரவி விஜயபுரியை கடந்துசென்றபோது புஷ்கரன் தன் படைத்தலைவன் ஜம்புகன் தலைமையில் ஒரு படையை உடன் அனுப்பினான். வெற்றிகள் அனைத்துக்கும் விஜயபுரியிலிருந்து வாழ்த்துச்செய்தி வந்தது. ஆனால் வெற்றிக்குரிய செந்நிறக்கொடி விஜயபுரியில் பறக்கவிடப்படவில்லை.

புஷ்கரன் முடிச்சூட்டுவிழாவிற்கு வந்தாகவேண்டும் என்று தமயந்தி சொன்னாள். நாகசேனர் முதலில் சென்றழைத்தபோது உடனே வருவதாக புஷ்கரன் சொன்னான். அவன் வராதபோது கருணாகரர் நேரில் சென்றழைத்தார். “வேள்விதொடங்கும் நாளில் இளவரசர் அங்கிருப்பார். அவருக்கு இப்போது

உடல்நிலை நன்றல்ல. ஓய்விலிருக்கிறார்” என்றான் ரிஷபன். வேள்விதொடங்கிய அன்று “இளவரசர் மேலும் சில நாட்களில் அங்கே இருப்பார். விழாவன்று வாளேந்தி உடனிருப்பார்” என்று செய்தி வந்தது. ஒவ்வொருநாளும் என நிஷதபுரி புஷ்கரனுக்காக காத்திருந்தது.

புஷ்கரன் தனிமையில் தன் அறையில் இருந்தான். நெடுநாட்களாகவே அவன் தனிமையிலிருப்பதை பழகிவிட்டிருந்தான். உடனிருப்பவர் எவராக இருந்தாலும் சற்றுநேரத்திலேயே எரிச்சலூட்டி தாங்கமுடியாதவர்களாக ஆனார்கள். அவன் எப்போதும் சினமும் எரிச்சலுமாக பேசுவதை உணர்ந்து அமைச்சர்கள் உட்பட அனைவருமே அவனிடமிருந்து விலகிக்கொண்டார்கள். ஆனால் அணுக்கர்களிடமும் சேடிகளிடமும் அவன் சினம்கொண்டான். அவர்கள்மேல் எச்சில் துப்பினான். வசைபாடினான். சில தருணங்களில் அடிக்கப் பாய்ந்தான்.

மெல்ல தன் தனியறைக்குள்ளேயே பெரும்பாலும் அவன் நாளை கழித்தான். புலரியில் எழுந்து உடற்பயிற்சிக்காக களமுற்றத்திற்குச் சென்று, அங்கிருந்து நீராட்டு முடித்து கலிதேவனின் ஆலயத்திற்கும் சென்று, முதற்கதிரொளிக்கு முன்னரே அவன் தன் அறைக்குள் மீண்டான். பின்னர் அந்திசாய்ந்தபின் இருளில் தோட்டத்தில் தன்னந்தனிமையில் உலவிவந்தான். விண்மீன்களை நோக்கியபடி அங்குள்ள இருக்கை ஒன்றில் அமர்ந்திருந்தான். பகல் முழுக்க அறைக்குள் நூல்களை படித்துக்கொண்டிருந்தான்.

அவை அரசுசூழ்தலின் நெறிகளைக் குறித்த எளிய நூல்கள். அவற்றை அவன் உள்ளம் வாங்கிக்கொள்ளவில்லை. எனவே மீண்டும் மீண்டும் அவற்றை வாசித்தான். சொற்கள்மேல்

அவன் உள்ளம் தொடாமல் ஒழுகிச்சென்றுகொண்டிருக்க நெடுநேரம் அமர்ந்திருப்பான். அப்படியே துயில்கொண்டு மஞ்சத்தில் சரிவான். அவன் உணவருந்துவது மிகமிகக் குறைந்தது. மதுவருந்துவது மிகுந்து வந்தது. அரசியை அவன் எப்போதேனும் அவளே அவனைத் தேடிவந்தால் மட்டும் சந்தித்தான். அவள் பேசப்பேச அதை செவிகொள்ளாமல் அலையும் விழிகளுடன் அமர்ந்திருந்தான். அவள் அவனிடம் அரசுசூழ்தலின் புதிய திட்டங்களை சொன்னாள். தமயந்தியை இறுதியாக தளைப்பதற்குரிய வழிகளை ஒவ்வொருநாளும் புதிதாக சமைத்துக்கொண்டிருந்தாள்.

பல நாட்களில் சில கணங்களிலேயே அவள் சலிப்புற்று குரலெழுப்பத் தொடங்கினாள். "என் விழிகளைப் பார்த்து பேசுங்கள். நான் என்ன சொல்கிறேன் என்று தெரிகிறதா?" என்று கூவினாள். "ஆம், கேட்கிறேன். சொல்" என அவன் முனகினான். "சதகர்ணிகளிடம் இருக்கிறது இறுதிச்சொல்... அவர்கள் ஓர் உறுதி அளித்தால் நாம் வென்றோம்." அவன் அச்சொற்களை விழிகளால் நோக்கி அமர்ந்திருந்தான். "என்ன நினைக்கிறீர்கள்?" அவள் அதை பலமுறை கேட்டபின் அவன் விழித்துக்கொண்டு அவன் "யார் நானா?" என்றான். "இல்லை, இந்தத் தூண்" என்று அவள் பல்லைக் கடித்தபடி சொன்னாள். அவள் எழுந்துசெல்வதுவரை பதறும் உடலும் நடுங்கும் விரல்களுமாக அமர்ந்திருந்தான். பின் உடல்தளர்ந்து பெருமூச்சுவிட்டான்.

அவர்கள் சந்திப்பதே அரிதாயிற்று. ஒவ்வொருமுறையும் சலிப்புற்று அவள் எழுந்து விலகிச்சென்றாள். எப்போதேனும் அவள் அவனருகே அணுகி அவன் குழலை கைவிரல்களால் அளைந்து தலையை தன் முலைகளுடன் சேர்த்துக்கொண்டு "என்ன ஆயிற்று உங்களுக்கு? என்னை வெறுக்கிறீர்களா?"

என்றாள். “இல்லை” என்று அவன் சொன்னான். “பின் என்ன?” அவன் பெருமூச்சுவிட்டு “ஒன்றுமில்லை, நான் நலமாக இருக்கிறேன்” என்றான். “இல்லை, நீங்கள் இயல்பாக இல்லை. இந்த அறையிலேயே இருக்கிறீர்கள். அவைநுழைவதே இல்லை. வெளியே செல்வதில்லை.”

அவன் “நான் அவையை வெறுக்கிறேன். அங்கே மீண்டும் மீண்டும் ஒரே சொற்கள். சலிப்பூட்டும் சடங்குகள்” என்றான். “மனிதர்களை வெறுக்கிறீர்கள். எவரையும் விழிநோக்கிப் பேசுவதில்லை. விழிகள் தொட்டுக்கொண்டாலே சினம்கொண்டு கூச்சலிடத் தொடங்குகிறீர்கள் என்றார்கள்.” அவன் “எவர் சொன்னது இதையெல்லாம்? சுநீதரா? ரிஷபனா?” என்றான். “எவர் சொன்னால் என்ன? நீங்கள் இருக்கும் நிலை இயல்பல்ல. அரசர்கள் இப்படி அறைக்குள் முடங்கக்கூடாது.” அவன் “நான் இங்கே நூல் நவில்கிறேன்” என்றான். “என்ன நூல்கள்? ஆறு மாதங்களுக்கும் மேலாக இரண்டே நூல்கள்…” என்றாள். அவன் மெல்ல முனகினான்.

“எப்படி இருக்கிறீர்கள் தெரியுமா? நேற்று முன்னாள் அமைச்சர் ஓர் ஓலையை கொண்டுவந்தார். அதில் நீங்கள் கைச்சாத்திடவேண்டும். ஒவ்வொருநாளும் மும்முறை வந்து மன்றாடினார். கைச்சாத்திடுகிறேன் என்று சொன்னீர்கள். கண்ணெதிரே ஓலை இருந்தது. ஆனால் செய்யவே இல்லை. இறுதியில் அவர் உங்கள் கையில் ஓலையை எடுத்துக்கொடுத்து கணையாழியையும் அளித்தார். அதன்பின்னரே கைச்சாத்திட்டீர்கள்.” அவள் அவன் முகத்தை குனிந்து நோக்கி “நீங்கள் கைச்சாத்திட மறுத்திருந்தால் அது வேறு. உங்களால் அச்சிறிய செயலைச்செய்ய உளம்குவிக்க முடியவில்லை. அதுதான் சிக்கல்” என்றாள்.

அவன் “விடு என்னை” என்றபடி எழுந்தான். அவள் “நான் சொல்லிக்கொண்டே இருக்கிறேன். ஒரு சொல்லும் உங்களுக்குள் நுழையவில்லை” என்றாள். “நீயே சொல்லிக்கொண்டிருக்கிறாய். நீ என்னை பித்தன் என்றும் பயனற்றவன் என்றும் நிறுவ விழைகிறாய். நீ திட்டமிட்டு உருவாக்குவது இந்த சித்திரம்.” அவள் “என்ன சொல்கிறீர்கள்?” என்றாள். “போ இங்கிருந்து, நான் நூல் பயிலவேண்டும்.” அவள் சீற்றத்துடன் “நான் கேட்பதற்கு மறுமொழி சொல்லுங்கள்” என்றாள். “என்னை எரிச்சலூட்டாதே. செல்!” அவள் “நான் கேட்டதற்கு மறுமொழி சொல்லுங்கள்” என்றாள்.

அவன் அந்த நெருக்குதலால் சீற்றமுற்றுத் திரும்பி “உனக்கு என்ன வேண்டும்? நான் சாகவேண்டும், அவ்வளவுதானே? என்னைக் கொல்லத்தானே வந்தாய்? நான் சோர்ந்திருக்கிறேன் என்றால் நீதான் ஏதாவது செய்திருப்பாய். என் உணவை மருத்துவர்களிடம் காட்டவேண்டும். மென்நச்சு அதில் கலந்திருக்கும்... நீதான் அதை கலந்தாய்... ஆம், நீதான்” என்று கூச்சலிட்டான் அந்தக் கூச்சல் அவனுக்கு ஆற்றலையும் இலக்கையும் அளித்தது. “நான் என்னை பாதுகாத்துக்கொண்டிருக்கிறேன். இந்த அறைக்குள் என் உயிருக்கு அஞ்சி ஒளிந்திருக்கிறேன். நீ என்னை கொல்லமுடியாது.”

அவள் சினத்துடன் “வாயை மூடுங்கள்...” என்று கூவினாள். அவன் கைநீட்டி அருகணைந்து “நீ எவரிடம் பேசுகிறாய் என்று தெரிகிறதா? நிஷத இளவரசனிடம், உன் அணுக்கனிடம் அல்ல. வாளை உருவினால் உன் தலை விழும்” என்றான். “எங்கே உருவுங்கள் பார்ப்போம்... உருவுங்கள்” என அவள் அவனை நோக்கி வந்தாள். வெறுப்பில் அவள் முகம் இழுபட்டு

வஞ்சமும் கீழ்மையும் கொண்டதாக ஆகியது. வாய்க்குள் இருந்து பற்கள் வெளிவந்து ஓநாய்களின் சீறல் தோன்றியது. “கோழை… நீ ஆண் என்றால் எடு அந்த வாளை… வாள் உன் கையில் நிற்கிறதா என்று பார்க்கிறேன். எடு வாளை!”

அவன் கைகால்கள் வலிப்பு வந்ததுபோல உதறிக்கொள்ள “போ போ… போய்விடு” என்று கூச்சலிட்டான். எழுந்து அறையின் மறு எல்லைக்குச் சென்று “கொன்றுவிடுவேன்… செல்… சென்றுவிடு” என்று உடைந்த குரலில் வீரிட்டான். அணுக்கன் உள்ளே வந்து “அரசி” என்றான். அவள் இளிப்பதுபோல வாயை நீட்டி “இழிமகன்” என்றபின் குழலை அள்ளி பின்னாலிட்டு ஆடையை இழுத்து தோளில் அமைத்து திரும்பிச்சென்றாள். கால் தளர்ந்தவனாக அவன் மஞ்சத்தில் விழுந்தான்.

அவ்வறையை அவ்வாறு சொன்னது வாய்நிகழ்வுதான் என்றாலும் அது அவனுக்கு மெல்ல மெல்ல காப்பென்றும் கவசமென்றும் ஆகியது. அறைக்குள் கதவை உள்ளே தாழிட்டுக்கொண்டான். காற்றுக்காக சாளரத்தை திறந்து வைத்தாலும் அதனருகே செல்வதையே தவிர்த்தான். ஒருமுறை தன் ஆடிப்பாவையைக் கண்டு திகைத்தபின் ஆடிகள் அனைத்தையும் அகற்ற ஆணையிட்டான். பின்னர் பாவை தெரியும் உலோகக் கலங்களைக்கூட அறைக்குள் கொண்டுவரலாகாதென்று ஆணையிட்டான்.

ஆனால் அறைக்குள் உடனிருந்த அவன் நிழல் அவனுக்கு உவகையூட்டியது. அகல்விளக்கின் முன் நின்று தன் நிழல் எதிர்ச்சுவரில் பெருந்தோற்றமாக எழுவதை நோக்கிக்கொண்டிருந்தான். கைகால்களை வீசி அதன்முன் நடித்தான். அதனுடன் போரிட்டு நகைத்தான். விரல்களால் புலியையும் நரியையும் காகத்தையும் நிழலுருவெனக் காட்டி

விளையாடினான். பெரும்பாலான தருணங்களில் மஞ்சத்தில் படுத்தபடி சுவரிலும் கூரையிலும் உள்ள வெடிப்புகளையும் கறைவடிவங்களையும் நோக்கிக்கொண்டிருந்தான். அவை புலியென்றும் பன்றியென்றும் பறவைகளென்றும் உருக்கொண்டன. ஒவ்வொரு தடமும் நன்கறிந்தவையென்றாயின. ஒவ்வொன்றுக்கும் அவன் பெயரும் இயல்பும் அளித்தான். அவற்றுடன் உரையாடினான்.

எப்போதேனும் அமைச்சர் அல்லது குடித்தலைவர் சுநீதர் அவனைப் பார்க்க வந்தனர். நாளில் மும்முறை ஏவலர் வந்தனர். கதவு தட்டப்படும்போது அவன் விழித்துக்கொண்டான். கதவையே நோக்கிக்கொண்டு படுத்திருந்தான். எழுந்துசென்று கதவை திறக்கவேண்டுமென எண்ணினாலும் எழும்செயலென தன்னை ஆக்கிக்கொள்ளமுடியவில்லை. ஒருநாள் பலமுறை தட்டி பகலெல்லாம் காத்து பின்னர் அச்சம்கொண்டு கதவை உடைத்து உள்ளே வந்த சுநீதர் அதற்குப்பின் கதவுக்கு புதுத்தாழ் ஒன்றை அமைத்தார். அதை அவன் போட்டுக்கொள்ள முடியும். ஆனால் அதை வெளியே இருந்தும் திறக்கமுடியும்.

கதவை உடைத்து அவர்கள் உள்ளே சென்றபோது அவன் மஞ்சத்தில் வெறித்த விழிகளுடன் கிடந்தான். ஓசையில் அவன் உடல் விதிர்த்து நடுங்கிக்கொண்டிருந்தது. அவனை நோக்கிய மருத்துவர் அவனுக்கு நோய் என ஏதுமில்லை என்றனர். நிமித்திகர் அவனிடம் மூதேவி கூடியிருக்கலாம் என்றனர். “அக்கை நம்மை எப்போதும் நிழலுருவாகத் தொடர்பவள். நின்று சோர்ந்தால் நம்மை வந்து பற்றிக்கொள்பவள். கடமை, கல்வி, கலை, கனவு, காமம் என்னும் ஐந்தும் அவளிடமிருந்து நம்மைக் காக்கும் அமுதுகள். வஞ்சம், சினம் என்னும் இரண்டும் அவளிடமிருந்து நம்மை அகற்றும்

நஞ்சுகள். ஏழுமில்லாத நிலை ஒருகணம் அமைந்தாலும் அவளுக்கு அடிமையாகிவிடுவோம்.”

அவன் மென்மையான இனிய புதைசேற்றில் மூழ்கிக்கொண்டிருப்பதை அவனே அறிந்திருந்தான். எப்போதேனும் அத்தன்னுணர்வு வலுவாக எழும்போது உளம்பதறி எழுந்து நிற்பான். கதவைத்திறந்து வெளியே ஓடவேண்டும் என துடிப்பான். ஏவலரை அழைத்து புதிய ஆடைகள் கொண்டுவர ஆணையிடுவான். சமையப்பெண்டிரிடம் அணிசெய்ய பணிப்பான். முழுதணிக்கோலத்தில் எவரும் எதிர்பாராதபடி அவைக்கு வருவான். அரியணையில் அமர்ந்து அத்தனை செய்திகளும் உடனே தன் முன் வந்தாகவேண்டும் என கூச்சலிடுவான்.

அமைச்சர்களும் படைத்தலைவர்களும் வெந்நீர் விழுந்த எறும்புப்புற்று என தவித்து அங்குமிங்கும் ஓடுவார்கள். ஓலைகளும் தோற்சுருள்களும் வந்து அவன்முன் நிறையும். ஒரே நாளில் நூற்றுக்கணக்கான ஆணைகள் பிறப்பிக்கப்படும். மன்றாட்டுடன் அன்று வந்தவர்கள் அனைவரும் உசாவப்படுவார்கள். அன்று மாலை அறைமீள்கையில் உள்ளம் நிறைந்து உடல்தளர்ந்திருக்கும். “ஆம், மீண்டுவிட்டேன். மீட்சிதான் இது. மீள்வது இத்தனை எளிதுதான்” என்று சொல்லிக்கொள்வான்.

ஆனால் மறுநாள் காலையில் கைகால்கள் இனிய குடைச்சலுடன் சோர்ந்துகிடக்கும். கண்கள் ஒளியை நோக்க உளைச்சல்கொள்ளும். உள்ளம் மிகப் பெரிய புழு என தன்னுடலுக்குள் தானே அசைந்தபடி அங்கேயே கிடக்கும். உச்சிப்பொழுதுக்குப் பின்னரே எழுந்து உணவுண்பான். மேலும்

வெறியுடன் தமக்கை அவனை வந்து அணைத்து தன் இருண்ட குழிக்குள் கொண்டுசென்றிருப்பாள்.

ஆனால் அது அப்படி முடியாது என்றும் ஏதோ ஒன்று நிகழும் என்றும் அவன் எதிர்பார்த்திருந்தான். “ஒருவேளை அவர் தன் ஆழம் தயங்கும் எதையோ செய்யவிருக்கலாம். அத்திசை நோக்கி அவர் செல்வதை அவருள் வாழும் தெய்வங்கள் பின்னிழுக்கின்றன. ஆகவேதான் இந்தச் செயலின்மை” என்றார் நிமித்திகர். “என்ன ஆகும்?” என்று சுநீதர் கேட்டார். “தயங்கப்பட்ட நன்மை செய்யப்படுவதில்லை. தயங்கப்பட்ட தீமை தவிர்க்கப்பட்டதே இல்லை” என்று நிமித்திகர் சொன்னார்.

# நீர்க்கோலம் - 57

### 56. முள்விளையாடல்

அன்று காலையிலேயே அது அந்த நாள் என புஷ்கரனின் உள்ளாழம் அறிந்திருந்தது. அறியா பதற்றமொன்று அவனுடன் புலரியிலேயே இருந்தது. வழக்கத்துக்கு மாறாக அவன் கருக்கிருட்டிலேயே விழித்துக்கொண்டான். மஞ்சத்தில் படுத்திருக்கையில் ஏன் விழித்தோமென எண்ணி அக்கனவை சென்றடைந்தான். அவன் கண்டது ஒரு காளையை. அதன்மேல் கரிய காகம் அமர்ந்திருந்தது. காளை வாய் திறந்து கா கா என ஓசையிட்டது. காகத்தின் கண்கள் சிவந்திருந்தன. அவன் கையில் ஒரு வாள் இருந்தது. கல்லால் ஆன வாள். அதில் குருதி வழிந்தது. “இதை தூக்கமுடியவில்லை” என்று அவன் சொன்னான். “மிகுந்த எடை… தூக்கமுடியவில்லை.”

அவன் அக்கனவைப்பற்றி எண்ணிக்கொண்டே நெடுநேரம் படுத்திருந்தான். பின்னர் எழுந்து ஏவலனை அழைத்து நீராட்டறைக்குச் செல்லவேண்டும் என்றான். அவன் விழிகளில் வியப்பு தெரிந்தது. நீராட்டறை ஏவலரும் குழப்பம் கொண்டிருந்தனர். ஆடையணிந்துகொண்டு அவைக்குச் செல்லவேண்டுமா என எண்ணி அவன் பீடத்தில் அமர்ந்திருக்கையில் சுநீதர் வந்து வணங்கினார். அவன் சித்தமாகியிருப்பதைக் கண்டு அவர் விழிகளிலும் வியப்பு தெரிந்தது. அவரைக் கண்டதுமே அவன் உள்ளம் படபடக்கத் தொடங்கியது. அவன் அப்போது அத்தருணத்தை அப்படியே தவிர்த்து பின்னகர்ந்து மீண்டும் பழைய செயலின்மைக்கு சென்றுவிட விரும்பினான்.

“சதகர்ணிகளின் அமைச்சர் சுமத்ரரின் தூதன் வந்துள்ளான், இளவரசே” என்றார் சுநீதர். “நம்முடன் முழுமையான படைக்கூட்டுக்கு அவர்கள் ஒப்புகிறார்கள். சுகர்ணரின் சொல்லை ஓலையில் பொறித்து அனுப்பியிருக்கிறார்கள். நம் சொல்லை இன்றே அனுப்பிவிட்டால் ஐநூறாண்டுகளாக நிகழ்ந்துவரும் போர் முடிவுக்கு வருகிறது.” அவன் நடுங்கிக்கொண்டிருந்தான். “இதுவே தருணம். கலிங்கர் முன்னரே மகதரிடமும் வங்கரிடமும் மாளவரிடமும் பேசிவிட்டார். அவர்களும் நம் பக்கமே. வரலாற்றுமுனை நம்மை எதிர்கொள்கிறது.”

“என்ன செய்யவேண்டும் நான்?” என்று அவன் கேட்டான். “நிஷதகுடியின் மணிமுடிக்குரியவன் நீங்களே என்று அறிவியுங்கள். ஷத்ரியகுலத்தவளாகிய தமயந்தி சத்ராஜித்தாக நிஷதபுரியின் அரியணையில் அமர்வதை நிஷதகுடித்தலைவர்களின் துணையுடன் நீங்கள் எதிர்ப்பதாக

ஓலை அனுப்புங்கள்.” அவன் நெஞ்சு விம்ம தொண்டைமுழை அசைய பேசாமல் அமர்ந்திருந்தான்.

“உங்கள் தமையனை போருக்கழைப்பது அது. குடிப்போர். ஆனால் வேறுவழியில்லை. நம் குலத்தைப் பிடித்த அப்பீடையை ஒழிப்போம். படைபெருகிச்சென்று நம் தலைநகரை கைப்பற்றுவோம். அதன் உச்சியில் அமைந்துள்ள இந்திரனின் ஆலயத்தை இடித்து நம் குடித்தெய்வமாகிய கலியை அங்கே நிறுவுவோம்” என்று சுநீதர் சொன்னார். “இவ்வறிவிப்புகளை நாம் அவர்களுக்கு அனுப்பும்போதே நம் குடித்தலைவர்கள் அனைவருக்கும் தெரிவிப்போம். நம் ஓலை அங்கு செல்வதற்குள் நம் குடிகள் அனைவரும் எரி பற்றிக்கொள்வார்கள்.”

அவன் பெருமூச்சுடன் மெல்ல தளர்ந்து “ஆம், செய்யவேண்டியது அதுவே” என்றான். “நளனின் படைகள் நம் மீது எழுமென்றால் சதகர்ணிகளும் வாகடர்களும் பல்லவர்களும் நம்மை துணைப்பார்கள். அவர்களுக்கு அமராவதியையும் ராஜமகேந்திரபுரியையும் அளிக்கவேண்டும். கலிங்கத்துக்கு தண்டபுரத்தையும் தாம்ரலிப்தியையும் அளிக்கவேண்டும். வடக்கே மகதமும் அவந்தியும் மாளவமும் வங்கமும் இணைந்து எல்லைகளை தாக்குவார்கள். அவர்களுக்கு நாம் தன்னுரிமையை அளிக்கவேண்டும்.”

புஷ்கரன் “இறுதியில் நமக்கு எஞ்சுவது மூத்தவர் படைத்தலைமை கொள்வதற்கு முன்பு இருந்த எளிய நிஷதநாடு மட்டும்தான், இல்லையா?” என்றான். சுநீதர் சற்று குன்றி பின் மீண்டு “மெய். ஆனால் நம் தலைநகர் நம் கைகளுக்கு வருகிறது. நம் குலங்களனைத்தும் ஒன்றென நம்முடன் அணிவகுக்கின்றன. நம் குடி நிஷதர்களின்

தலைமைக் குடியென்றாகிறது. இது இனியொருபோதும் நிகழக்கூடும் என நான் எண்ணவில்லை” என்றார். “ஆம், இழப்புகள் உண்டு. ஆனால் அதை நாம் மீண்டும் வெல்லலாம். பாரதத்தை வென்ற நிஷதகுடிகளின் வீரம் நம்முடன்தான் இருக்கிறது. நாளை நம் கொடிவழிகள் வெல்லலாம்…”

புஷ்கரன் புன்னகைத்து “எப்படி வேண்டுமென்றாலும் விளக்கிக்கொள்ளலாம், மூத்தவரே. இதைவிடக் கடந்தும் நான் எண்ணி நோக்கிவிட்டேன்” என்றான். “அனைத்தும் முடிவுசெய்யப்பட்டுவிட்டன. தங்கள் ஒப்புதலுக்காக இளவரசி காத்திருக்கிறார். தாங்கள் தலையசைத்தால் சதகர்ணிகளுக்கும் காங்கேயத்து அரசர்களுக்கும் ஓலைகள் செல்லும். அவை சென்றுசேர்ந்து அவர்களின் ஒப்புதல் செய்தி வந்ததுமே நாம் போர்முரசு கொட்டுவோம்.” புஷ்கரன் “நடக்கட்டும்” என்றபடி எழுந்துகொண்டான்.

“நீங்கள் சோர்வுற்றிருக்கிறீர்கள். இளவரசே, எண்ணிப்பாருங்கள். மகாநதி முதல் கோதை வரையிலான நிலம் நம் முழுக் கட்டுப்பாட்டுக்குள் இருக்கிறது. கலிங்கம் நம் உறவுநாடு. பத்தாண்டுகாலம் சதகர்ணிகளுடன் நாம் போரை தவிர்த்தோமென்றால் நம் கருவூலம் நிறைந்து வழியும்.” புஷ்கரன் “ஆம், அதையும் நான் முன்னரே எண்ணிக்கொண்டேன்” என்றான்.

“நீங்கள் கொள்ளும் சோர்வு எனக்கு புரிகிறது. ஆம், இது மூத்தவருக்கு எதிரான போர். ஆகவே குருதிப்பழி. ஆனால் குருதிப்பழி இல்லாத அரசென ஏதும் உண்டா? பாரதவர்ஷத்தில் எத்தனைமுறை உடன்பிறந்தார் வஞ்சிக்கப்பட்டுள்ளனர் என்று நான் சொல்லவா?” புஷ்கரன் புன்னகையுடன் “வேண்டாம், அப்பட்டியலும் என்னிடம் உள்ளது” என்றான்.

“நான் எவரையும் வற்புறுத்தவில்லை. என் குடிக்கு நன்மை எதுவோ அதையே நான் செய்கிறேன்” என்று சுநீதர் சொன்னார். “இது உங்களுக்கான ஆறுதல்… நன்று” என்று சொன்ன புஷ்கரன் “ஆணைகள் செல்லட்டும்” என்று சொல்லி புன்னகை பூத்தான். அப்புன்னகையிலிருந்த கசப்பை அவர் செல்லும் வழியெல்லாம் எண்ணிக்கொண்டார். எவர் மீதான கசப்பு? ஒருகணம் அவர் எதையோ எண்ணி திடுக்கிட்டு நின்றார். அந்தக் கசப்பை அவர் முன்னர் எங்கோ கண்டிருந்தார். எங்கே எங்கே என தன் நினைவுக்குள் துழாவிக்கொண்டு நடந்தார்.

அன்று மாலை புஷ்கரனைத் தேடிவந்த மாலினி “உங்கள் மூத்தவர் நளன் நம்மிடம் போருக்கு வரமாட்டார் என்றே எண்ணுகிறேன்” என்றாள். “ஏனென்றால் நம் படைவல்லமை மிகப் பெரிதென அவர் அறிவார். சதகர்ணிகளுக்கும் வடக்கரசர்களுக்கும் நமக்குமிடையே நடந்த கைச்சாத்துக்களை நாமே அவருக்கு தெரிவிப்போம். இப்போரில் அவர் வெல்லாவிடில் அது பேரிழிவு. ஆகவே அவர் நம்மிடம் சொல்சூழ்வதற்கே வருவார்” என்றாள். “ஆனால் அதை அவர் அவளிடம் கலந்துகொள்ளமாட்டார். இது உங்கள் குருதிப்பூசல். குடிப்போர். அவள் மீது நீங்கள் கொண்ட கசப்பையும் அவர் அறிவார். ஆகவே அவளை வெளியே நிறுத்துவார். அது மிக நன்று.”

அவன் அவளிடம் “அனைத்தையும் எண்ணிச்சூழ்ந்திருப்பீர்கள் என அறிவேன்” என்றான். அவனிடம் கூடியிருந்த அந்தக் கசப்புச் சிரிப்பை அவள் விந்தையென நோக்கினாள். ஒருபோதும் அவனிடம் அதை அவள் கண்டதில்லை. அவனிடம் எப்போதுமிருந்த தயக்கத்தையும் அறியாமையையும் அகற்றி ஆழமும் கூர்மையும் கொண்டவனாக ஆக்கியது

அக்கசப்பு. அவள் அதை முன்னரே கண்டிருந்தாள். நன்கறிந்திருந்தாள். எங்கே எங்கே என அவள் தன் உள்ளத்துள் துழாவினாள். ஆகவே விழிகள் மங்கலடைய “ஆம், நோக்கித்தானே துணியவேண்டும்?” என்று பொதுவாக சொன்னாள். “சொல், மேலும் என்ன திட்டங்கள்?” என்றான்.

அவள் “அவர் உங்களிடம் நேருக்குநேர் பேசினால் அனைத்தும் சீரடைந்துவிடும் என நம்புவார். இங்கு வந்து உங்களிடம் பேசவேண்டுமென தூதனுப்புவார்” என்றாள். “அவ்வலையில் வீழாமலிருப்பது உங்கள் கையில் இருக்கிறது. மூத்தவரென உங்களுக்கு அவர் ஆணையிடலாம். வளர்த்தவர் என நயந்து பேசலாம். உடனாடியவர் என கனிவு கோரலாம். குலநன்மையையும் குடியொருமையையும் சொல்லி சொல்லடுக்கலாம். எதற்கும் வளையாமலிருக்கையிலேயே நீங்கள் உங்கள் குருதியில் எழவிருக்கும் மைந்தருக்கு நலன் செய்கிறீர்கள். உங்கள் குடிமூதாதையரை மகிழ்விக்கிறீர்கள்.”

புஷ்கரன் “நான் வளையமாட்டேன் என இப்போது சொல்கிறேன். ஆனால் தருணங்களை தெய்வங்கள் வடிவமைக்கின்றன” என்றான். “ஆம், அதை ரிஷபர் சொன்னார்.” அவன் எரிச்சலுடன் “என்ன சொன்னான்?” என்றான். “உங்களால் உறுதிகொள்ள முடியாது என. ஆகவே முடிந்தவரை உங்களையும் அவரையும் சந்திக்கவிடலாகாது என. அதுவே நன்று என நானும் எண்ணுகிறேன்.” சில கணங்களுக்குப்பின் அவன் “என்னைப்பற்றி என்னைவிட நன்றாக அவன் அறிந்திருக்கிறான்” என்றான்.

அச்சொல்லில் இருந்த நஞ்சை உணர்ந்தாலும் அவள் அதை புறந்தள்ளி “நாம் அவரை பேச அழைப்போம். ஆனால் அதற்கு முன் நாம் விழைவதை சொல்லிவிடுவோம். நிஷதகுலத்திற்கு

அந்த ஷத்ரியப்பெண் சத்ராஜித் என அமரக்கூடாது. காளகக்குடி முடிசூடவேண்டும். இந்திரபுரி தலைநகராக உங்களுக்கு அளிக்கப்படவேண்டும். மூத்தவர் நளனுக்கு வேண்டுமென்றால் வடக்கே உள்ள சோமகிரியையும் சூழ்ந்துள்ள ஊர்களையும் அளிப்போம். அவர் நிஷதர்களின் பேரரசுக்குக் கட்டுப்பட்ட சிற்றரசாக அங்கே ஆளட்டும்" என்றாள்.

புஷ்கரன் புன்னகையுடன் "அவர் அதற்கு ஒப்புக்கொள்வாரா?" என்றான். "மாட்டார். ஆனால் அவருக்கு வேறுவழியில்லை... போர் நிகழுமென்றால் நிஷதகுடிகள் ஒன்றுடனொன்று போரிட்டு அழியும். அவர்களை பிற அரசர் முற்றழிப்பார்கள்." புஷ்கரன் "நான் அதை செய்யவேண்டுமா என்ன?" என்றான். "அது நிகழாது. நிஷதகுடிகளின் அழிவை ஒருபோதும் நளன் ஒப்புக்கொள்ளமாட்டார். அதன்பொருட்டு தான் சிறுமைகொள்ளவும் தயங்கமாட்டார்." புஷ்கரன் "ஆம்" என்று பெருமூச்சுவிட்டான். "தான் முடிசூடி ஆள்வதற்காக குலத்தை அழிப்பதா என அவரை எண்ணச்செய்தால் மட்டும் போதும்" என்றாள் மாலினி. "அவர் அவ்வாறு மட்டுமே எண்ணுவார்" என்றான் புஷ்கரன்.

"அத்துடன் அவர் சின்னாட்களாகவே அரசு, நகர் எதிலும் ஆர்வமிழந்தவராக இருக்கிறார். வெறியுடன் படைகொண்டு தென்னகத்தையும் காங்கேயத்தையும் வென்ற பழைய நளன் இன்றில்லை" என்றாள் மாலினி. "நிகழ்க!" என்று சொல்லி அவன் தன் சால்வையை எடுத்தான். அவள் காமம் நிறைந்த சிரிப்புடன் அவன் கையைப்பற்றி "இது நன்னாள். இப்போதுகூட நாம் இனிதிருக்கலாகாதா?" என்றாள். நடிக்கப்படும் காமம்போல முகத்தை அழகிலாமலாக்குவது பிறிதில்லை. அவன் உள்ளம்

குமட்டல்கொண்டது. “எனக்கு உடல்நிலை நன்றாக இல்லை” என்றான்.

“ஏன்?” என அவள் கொஞ்சினாள். “என்ன செய்கிறது என் அரசருக்கு?” அவன் அவளை நோக்கி “குமட்டல்” என்றான். அவள் முகம் மாறி மீண்டும் சீரமைந்தது. உரக்க நகைத்து “சேடியை அனுப்புகிறேன். இஞ்சிநீர் அருந்துக!” என்றாள். அவன் தலையசைத்தபின் வெளியே சென்றான். அவள் அவனிடமிருந்த அக்கசப்பை மீண்டும் எண்ணிக்கொண்டாள். அது ரிஷபனிடமிருக்கும் கசப்புச் சிரிப்பு என திடுக்கிடலுடன் எண்ணிக்கொண்டாள். அதற்கு முன்னரும் அவள் அதை கண்டிருந்தாள் என வெளியே செல்லும்போது எண்ணிக்கொண்டாள். கலிங்கத்தின் சிறைக்கொட்டடியின் கொலைத்தொழிலரிடம் எப்போதும் அச்சிரிப்பு இருந்தது.

❀கருணாகரர் ஒற்றர்களின் ஓலைகளுடன் வந்து நளன் அறைக்குமுன் நின்றார். அறிவிப்பதற்கு முன் ஒருமுறை தயங்கினார். ஏவலன் அவரை நோக்கிக்கொண்டு நின்றான். அறிவிக்கும்படி அவர் தலையசைக்க அவன் உள்ளே சென்று ஒப்புதல் பெற்று வெளியே வந்தான். அவர் தன்னைத் திரட்டியபடி உள்ளே சென்று தலைவணங்கினார். நளன் “செய்தி வந்துவிட்டதா?” என்றான். “ஆம், ஒற்றர்கள் முன்னரே சொன்னார்கள். முறைப்படி இளவரசரின் ஓலையே வரட்டும் என்று காத்திருந்தேன். வந்துவிட்டது.” நளன் என்ன செய்தி என்று கேட்காமல் காத்திருந்தான்.

“அனைத்தும் அவருக்கு வேண்டும். நமக்கு ஓரிரு ஊர்களை ஒதுக்குவார்கள்” என்றபின் ஓலையை நீட்டினார் கருணாகரர். அவன் அதை வாங்கி ஒரே விழியோட்டலில் படித்துவிட்டு அருகே இருந்த பீடத்தில் வைத்தான். “நாம் எவ்வகையிலும்

ஒத்துப்போகலாகாது என நினைக்கிறார்கள்” என்றார் கருணாகரர். “ஆம், அவர்களுக்குரிய தருணம் இது” என்று நளன் சொன்னான். “சதகர்ணிகளின் ஆட்டம் இதற்குப் பின்னால் உள்ளது. சுமத்ரர் நாம் எதிர்கொள்பவர்களிலேயே மிகப் பெரிய எதிரி.” நளன் “எதிரிகளல்ல, எதிர்ச்சூழல்களே அஞ்சத்தக்கவை” என்றான். கைகளை மார்பில் கட்டியபடி தலைகுனிந்து எண்ணத்திலாழ்ந்தான்.

“என் கருத்து இதுவே. இத்தருணத்தில் நாம் என்ன செய்தாலும் முதலில் பேரரசியின் வேள்விநிறைவும் முக்குடைசூடலும் நின்றுவிடும். அவர்கள் விழைவதும் அதுவே. நாம் இவர்களை ஒருபொருட்டென்றே எண்ணக்கூடாது” என்றார் கருணாகரர். “உண்மையில் அது நல்ல போர்ச்சூழ்ச்சியும்கூட. நாம் என்ன எண்ணுகிறோம் என எண்ணி அவர்கள் குழப்பம் கொள்ளவேண்டும். அவர்கள் அறியாத படையாற்றலோ சூழ்ச்சியோ நம்மிடமிருக்கிறதா என்று தயங்கவேண்டும். அதற்குள் பேரரசி சத்ராஜித் என்று அமர்ந்துவிடுவார். அந்நிகழ்வுக்குப்பின் நம் குடிகள் நமக்கெதிராக திரும்பமாட்டார்கள். அது நிகழக்கூடாதென்று அஞ்சியே இவர்கள் இத்தருணத்தில் இச்சூழ்ச்சியை செய்கிறார்கள்.”

“அது ஒரு நல்ல முறை என்பதில் ஐயமில்லை” என்று நளன் சொன்னான். “ஆனால் அவர்களின் ஆற்றலை நாமும் அறியோம். என் இளையவனின் முதிர்ச்சியின்மையை நான் நன்கறிவேன். தன் படைவல்லமையை நம்பி அவன் போர்தொடுப்பான் என்றால் உடன்பிறந்தோர் படைமுகம்கொண்டு குருதி சிந்துவோம். நம் குடி உட்போரிட்டு அழியும். அதை நான் ஒப்ப முடியாது.” கருணாகரர் அதற்கு மறுமொழி சொல்ல முடியாமல் நோக்கி நின்றார். “உங்களுக்கே

தெரியும் புஷ்கரனை” என்றான் நளன். “மெய்தான்” என்றார் கருணாகரர்.

“ஒன்றே செய்வதற்குள்ளது. சென்று பேசுவோம்” என்றான் நளன். “நானே செல்கிறேன்” என்று கருணாகரர் சொன்னார். “நீங்கள் செல்வதனால் பயனில்லை. நான் செல்கிறேன். நான் செல்வதென்பது என் பிழைக்குப் பொறுப்பேற்று ஈடுசெய்ய தலைகுனிவதாகவும் பொருள்படும். என்னை வரவழைத்ததையே வெற்றி என அவர்கள் எண்ணக்கூடும்.” கருணாகரர் “அவர்கள் எளிதில் ஒப்பமாட்டார்கள் என்றே எண்ணுகிறேன். ஏனென்றால் இது இளவரசரின் எண்ணம் அல்ல. இதற்குப் பின் சதகர்ணிகள் இருக்கிறார்கள். வடவர் இருக்கிறார்கள். அனைத்துக்கும் மேலாக இம்முடிவுகளை எடுப்பவர்கள் கலிங்க அரசியும் அவள் அணுக்கனாகிய ரிஷபனும்தான். நாம் செய்யக்கூடுவது பொழுதை ஈட்டுவதே. அதற்கு நான் முதலில் செல்வதே நன்று” என்றார்.

“வேள்விநிறைவுநாள் வரை அவர்கள் பொறுத்துக்கொள்ள மாட்டார்கள். நான் சென்று பேசுகிறேன். அவன் விழைவதை அளிக்கிறேன். கூடவே அவனை எப்படி அவர்கள் கைப்பாவை என வைத்திருக்கிறார்கள் என விளக்குகிறேன். மெய்யான ஆற்றலின் மேல் ஏறியே அரசமரவேண்டும், மாற்றரசர் தோள்மேல் ஏறி அமர்ந்தால் அவர்களின் கைப்பாவை என்றே ஆக நேரிடும் என அவனுக்கு விளக்குகிறேன். என்ன இருந்தாலும் அவன் என் தோளில் வளர்ந்தவன். என்னை தந்தையென எண்ணுபவன்.” கருணாகரர் ஏதோ சொல்ல எண்ணியபின் தலையசைத்தார்.

“நேரில் நானே பேச வருகிறேன் என அவனிடம் சொல்லியனுப்புங்கள். நான் அவனிடம் தனியாகப் பேசினாலே

அனைத்தும் சீரமைந்துவிடும்.” கருணாகரர் “அவர்களிடம் தெரிவிக்கிறேன்” என்றார். “இச்செய்தி இங்கே எவருக்கும் தெரியவேண்டியதில்லை. அரசியின் ஒற்றர்களும் அறியாமல் நான் கிளம்பவேண்டும். இங்கு வேள்வியும் விழாக்களியாட்டும் தொடர்ந்து நிகழட்டும்” என்றான்.

“ஆனால் தாங்கள் கிளம்புவது...” என கருணாகரர் சொல்ல அவன் கையமர்த்தி “சில பயிலாப் புரவிகளுடன் காட்டுக்குச் செல்கிறேன். அதை எவரும் ஐயப்பட மாட்டார்கள்” என்றான். கருணாகரர் “நன்று” என நீள்மூச்செறிந்தார். “நாகசேனர் என்னுடன் வரட்டும். நீங்கள் இங்கே இருந்து பணிகளை நோக்குங்கள்” என்றான் நளன். “ஒருவேளை...” என்ற கருணாகரர் நிறுத்திக்கொண்டார். “என்னை அவன் சிறைபிடிப்பானா என்று எண்ணினீர்கள் அல்லவா? அவன் நிஷதகுடியினரின் சில நெறிகளை எந்நிலையிலும் மீறமுடியாது” என்றான் நளன்.

❀விஜயபுரிக்கு நளன் வந்த செய்தியை நகர்மக்கள் எவரும் அறியவில்லை. கருக்கிருட்டுக்குள் நளனும் நாகசேனரும் எட்டு காவல்படையினரும் கோட்டைக்குள் நுழைந்தார்கள். நளனை வரவேற்க கோட்டையில் கொடியேறவில்லை, வாழ்த்துமுரசும் எழவில்லை. அவனை எதிர்கொண்டழைத்த ரிஷபன் தலைவணங்கி வாழ்த்தும் முகமனும் உரைத்து “தாங்கள் அரண்மனையில் ஓய்வெடுக்கலாம், அரசே. காலையில் தங்களை இளவரசர் வந்து சந்திப்பார்” என்றான். நளன் அவனை கூர்ந்து நோக்கியபடி தலையசைத்தான்.

அவன் சற்று ஓய்வெடுத்து விழித்தபோது உள்ளம் மிகவும் அமைதியிழந்திருந்தது. கிளம்பும்போது மெல்லிய ஐயம் இருந்தது, அது கருணாகரரின் விழிகளில் இருந்து தொற்றிக்கொண்டது. பயணம் நீளநீள ஐயம் விலகி நம்பிக்கை

உருவானது. புஷ்கரனுடன் அண்மையில் ஒரு நேருக்குநேர் உரையாடலே நிகழ்ந்ததில்லை என்று அவன் நினைவுகூர்ந்தான். அவனிடம் சொல்லவேண்டியவற்றை கோத்துக்கொண்டான். சொல்லவேண்டியதே இல்லை, என்றுமே அவனுடைய தொடுகையே புஷ்கரனை நெகிழச் செய்திருக்கிறது. தோளில் மெல்ல தட்டினால், தலையை வருடினால் கண்கலங்கி தலைகுனிபவன் அவன். ஒருவேளை இந்தச் சிக்கல்கள் அனைத்துமே அவர்கள் ஒருவரை ஒருவர் அணுகியறியவேண்டும் என்பதற்காக இருக்கலாம்.

அவன் ஆணவம் சீண்டப்பட்டிருக்கலாம். அவன் குடி தன் விழைவை அவன்மேல் ஏற்றியிருக்கலாம். அவனுக்குத் தேவை ஓர் அரசு என்றால் விஜயபுரியை தலைமையாக்கி இரண்டாவது நிஷதப்பேரரசை அவனுக்காக அமைக்கலாம். தெற்கே காஞ்சி வரை அவன் நிலம் விரியமுடியும். அவன் கொடிவழியினர் முடிசூடி ஆளமுடியும். அதைச் சொன்னாலே போதும், அனைத்தும் முடிந்துவிடும். அந்நாட்டை காளகநாடு என்றே அழைக்கலாம். அதை அவையில் அறிவித்தால் காளகர் எழுந்து நின்று கோல்தூக்கி வாழ்த்தொலி எழுப்புவார்கள்.

உறுதியான நம்பிக்கையுடன், புன்னகை நிறைந்த முகத்துடன் அவன் நகர்புகுந்தான். படுக்கையில் உடல்நீட்டும்வரை அந்த நம்பிக்கை நீடித்தது. துயிலில் ஆழ்கையில் ஏதோ ஒன்று உள்ளே தைத்தது. எது என எண்ணியபடியே துயின்றான். விழித்தபோது ஆழம் அந்த முள்ளை நன்கறிந்திருந்தது. அதை சொல்லென்றாக்கத் தவிர்த்து வேறெங்கோ அலைந்தது உள்ளம். எழுந்து நீராடி அணிகொண்டான். தான் சித்தமாக இருப்பதை புஷ்கரனிடம் அறிவிக்கும்படி ஏவலனிடம்

சொன்னான். அதன்பின் அவன் வருகையை அறிவிக்கும் ஓசைகளுக்காக காத்திருந்தான்.

பின்காலை வரை புஷ்கரன் வரவில்லை என்று கண்டதும் ஏவலனை அழைத்து “என்ன நிகழ்கிறது? ஏதேனும் சிற்றமைச்சரை அழைத்து வா” என்றான். சிற்றமைச்சர் சம்புகர் வந்து பணிந்து “இளவரசர் அவையிலிருக்கிறார். தவிர்க்கமுடியாத சில பணிகள்... சந்திப்புகள் நடந்துகொண்டிருக்கின்றன” என்றார். அவன் சினம்கொண்டு சொல்லெடுக்க வாயசைத்தபின் அடக்கிக்கொண்டு “நான் காத்திருக்கிறேன் என்று சொல்க” என்றான்.

உச்சிப்பொழுதில்தான் ரிஷபன் அவனைப் பார்க்க வந்தான். பணிவுடன் முகமனுரைத்து “இளவரசர் தங்களை மாலையில் அவையில் சந்திப்பதாக சொன்னார், அரசே” என்றான். “அரசவையிலா? நான் அவனை நேரில் பார்க்க வந்தேன்” என்றான் நளன். “ஆம், ஆனால் தாங்கள் அரசமுறைப்படி வந்திருக்கிறீர்கள். அவையில் சந்திப்பதே முறை என்றார்கள் குடிமூத்தார்” என்றான் ரிஷபன். “இது எனக்கும் என் இளையோனுக்கும் இடையேயான சந்திப்பு. இதில் குடிமூத்தார் ஏன் உட்புகவேண்டும்?” என்றான் நளன்.

“நான் அறியேன். ஒருவேளை நேரில் தங்களை சந்திப்பது குடிமூத்தாரிடம் ஐயத்தை உருவாக்குமென அவர் எண்ணியிருக்கலாம்” என்றான் ரிஷபன். “ஐயமா? என்ன ஐயம்?” என்று நளன் கேட்டான். “நான் அணுக்கன். எதையும் நான் சொல்ல முடியாது. அரசவையில் சந்திப்பு நிகழுமென்று சொல்லப்பட்டது. அறிவிக்கவே வந்தேன்” என்று ரிஷபன் சொன்னான்.

நளன் அவனை கூர்ந்து பார்த்தான். அவனை முதலில் சந்தித்தபோதுதான் அந்த அமைதியின்மை உள்ளத்தில் குடியேறியது என நினைத்தான். அழகிய இளைஞன். ஆனால் ஏதோ ஒன்று அவனை அழகற்றவனாக ஆக்கியது. அவன் விழிகளின் கரவுநோக்கு. ஆம், அது காகக்கண். நளன் "நான் அரச உடையில் அவைபுகவேண்டுமா? நான் அணிகளை கொண்டுவரவில்லை. மேலும் முகப்புக் கொடியோ மங்கலச் சூதரோ அணிச் சேடியரோ இல்லாமல் நகர்புகுந்திருக்கிறேன்" என்றான்.

"தங்கள் விருப்பப்படி அவைநுழையலாம், அரசே" என ரிஷபன் வணங்கினான். இவன் காகம் என நளன் எண்ணிக்கொண்டான். ஒன்றை நோக்குவதாக விழிகாட்டுகையில் ஓராயிரத்தை நோக்கும் விழிகொண்டது காகம். பெருமூச்சுடன் "நன்று, நான் அவனை அவையில் சந்திக்கிறேன்" என்றான் நளன். "அவையில் அனைத்துக் குடித்தலைவர்களும் இருப்பார்கள் அல்லவா?" என்று அவன் கேட்க ரிஷபன் தலைவணங்கி "ஆம்" என்றான்.

தன் உடல்முழுக்க இருந்த சினத்தை நளன் உணர்ந்தான். நிலையழிந்து அறைக்குள் சுற்றிவந்தான். "அரசே, நாம் வந்ததே பிழை என எனக்குப் படுகிறது. நம்மை தனியாக சந்திக்க விழையவில்லை என்று இளவரசர் அறிவித்திருக்கிறார் என்பதே இதன்பொருள். இங்கு நிகழ்வன எவையும் இயல்பானவை அல்ல. நன்கு திட்டமிடப்பட்டவை" என்றார் நாகசேனர். "தாங்கள் இந்நிலத்தின் பேரரசர். முறைப்படி தாங்கள் விஜயபுரிக்கு வந்திருந்தால் புஷ்கரர் கோட்டைமுகப்புக்கு வந்திருக்கவேண்டும், குடித்தலைவர்கள் கோல்தாழ்த்தி வணங்கி வரவேற்றிருக்கவேண்டும். நகர்

விழாக்கோலம் பூண்டிருக்கவேண்டும். மக்கள் இரு மருங்கும் நின்று மலர்சொரிந்து வாழ்த்தியிருக்கவேண்டும். இப்போது எவராலும் வரவேற்கப்படாதவராக நகர்நுழைந்திருக்கிறீர்கள். ஓர் அயல்நகரியில் நீங்கள் நுழைந்தால் அளிக்கப்படும் வரவேற்புகூட இங்கில்லை. இதோ, அரசத்தோற்றம்கூட இல்லாமல் உங்களை அவைக்கு அழைக்கிறார்கள்... நாளை இவர்களின் சூதர்கள் பாடப்போவது என்ன?”

“நன்று, நிகழ்வதென்ன என்று பார்ப்போம்” என்று நளன் சொன்னான். “என்ன நிகழும்? அவையில் இளவரசர் எங்கு அமர்வார்? அரியணையிலா? நீங்கள் அவைப்பீடங்களில் ஒன்றிலா? அவருக்கு இந்நிலம் மேல் என்ன உரிமை? இந்நகருக்கு அரசரென எவர் அவருக்கு முடிசூட்டியது? தாங்கள் அவைபுகுந்தால் இவர்கள் செய்தவை அனைத்தையும் ஏற்றது போலாகும்” என்ற நாகசேனர் அணுகிவந்து “அரசே, நாம் செய்யவேண்டியது ஒன்றே. வந்ததுபோலவே இப்போதே நகர்நீங்கிவிடுவோம். நாம் வரவே இல்லை என ஆகட்டும். நமக்காக எதிர்பார்த்து அவர்கள் காத்திருப்பதனால் நாம் செல்வதை எதிர்பார்க்கமாட்டார்கள். நாம் இங்கு வந்தது இவர்கள் உருவாக்கிய பொய்க்கதை என்று சூதர்களைக்கொண்டு சொல்ல வைப்போம்” என்றார்.

“நாம் செய்யவேண்டியது அதுதான், ஐயமில்லை” என்று நளன் சொன்னான். “அவர்களின் நோக்கமும் புரிகிறது. ஓர் அயல்நாட்டிற்கு அவர்களின் அருள்கோரி வந்தவனாக என்னை ஆக்கிவிட்டார்கள். ஆனால் இதெல்லாம் புஷ்கரனின் சூழ்ச்சிகளல்ல. இது மாலினிதேவியின் திட்டம். அவளை ஆட்டுவிப்பவன் ரிஷபன்.” நாகசேனர் “தாங்கள் அவைக்குச் செல்வதாகவே முடிவெடுத்துவிட்டீர்களா?” என்றான். “ஆம், நான்

வந்தது என் இளையவனை விழியொடு விழி நோக்கிப் பேச. அவையில் பேசுவதென்றால் அவ்வாறே ஆகட்டும்.”

“அங்கே அமர்ந்திருப்பவர்களும் நேற்று என் குடியினராக அமைந்திருந்தவர்களே. அவர்களிடமும் நேருக்குநேர் பேசுகிறேன். அவர்களுக்கு உளப்புண் என்ன? சீர்ஷரின் இறப்புதானே? அதன்பொருட்டு பிழைநிகர் செய்வதாக அறிவிக்கிறேன். குருதிப்பிழை செய்வதாக இருந்தாலும் ஒப்புகிறேன்” என்று நளன் சொன்னான். நாகசேனர் “நாம் அஞ்சி வந்திருப்பதாக அவர்கள் எண்ணினால் இப்படி இறங்கிச்செல்வது அவர்களை மேலும் தருக்கி எழவே செய்யும்” என்றார்.

“இல்லை, என் ஆற்றலென்ன என்று அவர்கள் உள்ளூர அறிவார்கள். போரை அவர்களும் விரும்பமாட்டார்கள். எங்கோ ஓரிடத்தில் ஒப்புநிலை செய்துகொள்ளவேண்டுமென்றே எதிர்பார்ப்பார்கள்” என்றான் நளன். “இன்றே அவையில் அது முடிவாகட்டும். பேரரசி வேள்விநிறைவுசெய்து மும்முடி சூடுவதற்கு இவர்கள் ஒப்புக்கொண்டால் மட்டும் போதும். பிறவற்றை பின்னர் பார்த்துக்கொள்ளலாம்” என்றான். நாகசேனர் பெருமூச்சுடன் “நன்று நிகழ்க!” என்றார். “நாம் நம்மால் இயன்றதைச் செய்வோம், நாகசேனரே. நம் குடி வாழவேண்டும். நம் ஆணவம் அதற்கு தடையென்றாகக்கூடாது. அதுவே என் எண்ணம்” என்றான் நளன்.

# நீர்க்கோலம் - 58

**57. குருதி** **நாற்களம்**

❀அவைக்கு தன்னை கூட்டிச்செல்ல சுநீதர் வருவார் என்று நளன் எண்ணினான். மாலையிலேயே நீராடி ஆடையணிந்து காத்திருந்தான். சாளரம் வழியாக நோக்கிக்கொண்டிருந்த நாகசேனர் "அவை கூடிக்கொண்டிருக்கிறது, அரசே. குடித்தலைவர்கள் ஒவ்வொருவராக வந்து அவைக்கு சென்றுகொண்டிருக்கிறார்கள்" என்றார்.

நளன் "பார்ப்போம், முறைமைப்படி குடித்தலைவர் வருவார்" என்றான். "முறைமைப்படி குடித்தலைவர்கள் அனைவரும் வந்தாகவேண்டும். கோல்தாழ்த்தி அழைத்து அவைக்கு கொண்டுசெல்லவேண்டும். செல்லும் வழியில் படைத்தலைவர்கள் அனைவரும் நின்றிருக்கவேண்டும். அப்படைத்தலைவர்களில் ஒருவராக இளவரசர் வாள்தாழ்த்தி நிற்கவேண்டும்" என்றார்.

நளன் ஒன்றும் சொல்லவில்லை. "அரசே, அந்தணனாக நான் இதைச் சொல்ல கடமைப்பட்டுள்ளேன்" என்றார் நாகசேனர். "அன்னசாலையில் நீங்கள் வாளெடுத்தது அத்துமீறல். அது முதற்பிழை. அந்தக் குற்றவுணர்ச்சியால் இப்போது உங்கள் நிலைமீறி தணிகிறீர்கள். இது அதைவிடப் பெரும்பிழை. அரசர்கள் மீறல் செய்யலாகாது. செய்தால் அதற்கான பொறுப்பை ஏற்று தன் தெய்வத்தின் முன்பும் குலமூத்தார் முன்பும் பிழையீடு செய்யவேண்டும். ஒருபோதும் குடிகள் முன்பும் ஊழியர் முன்பும் எதிரிகள் முன்பும் ஆற்றலின்மையாக அதை வெளிப்படுத்தலாகாது."

நளன் "ஆம், ஆனால் நான் அவ்வாறு உணரவில்லை. இது என் கடமை. இத்தருணத்தில் சற்று பொறுமைகொள்ளலாம் என்று எண்ணுகிறேன்" என்றான். "இது பொறுமை அல்ல. நாம் இவர்களின் வலையில் வந்து சிக்கிக்கொண்டிருக்கிறோம்.

அரசுசூழ்தலில் செயல்களுக்கு இரு பொருள்கள் உண்டு. நேர்ப்பொருள் ஒளி என்றால் குறிப்பொருள் நிழல். நிழலே பெரிது. நாம் இன்று இங்கு செய்வதன் குறிப்பொருள் நாம் தோற்கிறோம் என்பதே" என்றார். "இதுவரை வந்துவிட்டோம். இந்த மாலையை கடந்துவிடுவோம். நாளை ஆவன எண்ணுவோம்" என்றான் நளன்.

அந்தி மயங்கியபோது அவனே பொறுமையிழந்தான். கூடத்தில் நிலையழிந்து உலவியவன் நின்று ஏவலனை அழைத்து "நீ சென்று அங்கு என்ன செய்கிறார்கள் என்று பார்த்து வா" என்றான். "வேண்டாம்" என்றார் நாகசேனர். "செல்லலாகாது. பொறுப்போம்." நளன் அவரை நோக்க "அரசே, அங்கே அவை கூடிவிட்டது. சொல்லுசாவல் நிகழ்கிறது" என்றார். நளன் "எப்படி தெரியும்?" என்றான். "அவைக்குச் செல்லும் ஏவலரின் உடல்மொழியைக் கொண்டு உணர்கிறேன்." நளன் "நான் செல்லாமல் எப்படி அவை கூடலாம்?" என்றான். "அவைக்கு நீங்கள் விருந்தினர்தான் என்றால் கூடலாம். அவையின் தலைவர்களில் ஒருவர் என்றால் கூடமுடியாது" என்றார் நாகசேனர். நளன் பெருமூச்சுடன் மீண்டும் வந்து பீடத்தில் அமர்ந்தான்.

அவனை அழைத்துச்செல்ல அவைச்செயலர் பிரவீரர் இரு ஏவலருடன் வந்தார். அவர் வருவதை சாளரத்தினூடாகக் கண்டதுமே நாகசேனர் "அவைச்செயலர் வருகிறார். அவர் அந்தணர்கூட அல்ல" என்றார். நளன் "இனி ஒன்றும் செய்வதற்கில்லை, கிளம்புவோம்" என்றான். "இப்போதுகூட நீங்கள் மறுத்துவிடலாம், அரசே. உங்களுக்கு உடல்நலமில்லை என்று சொல்லிவிடுகிறேன். இந்த அவைமுறைமையை ஏற்று

நான் செல்கிறேன். அங்கே சொல்லவேண்டியதை சொல்கிறேன்.”

நளன் “வேண்டாம். அது மோதலென்று பொருள்படும். இப்போது நான் வந்தது அமைதிக்காக” என்றான். “அது நிகழுமென நினைக்கிறீர்களா?” என்றார் நாகசேனர். “ஆம், நான் அவனை நேருக்குநேர் பார்த்தால் போதும். இளையோனே, உன்னிடம் நேரில் பேசவேண்டும். அவை கலையும்போது நாம் சேர்ந்து உணவருந்துவோம் என்று சொல்வேன். அதை அவன் மறுக்கவியலாது.” நாகசேனர் “தாய்மடம் என்று ஒன்றுண்டு. தந்தைமடம் அதைவிடப் பெரிது” என்றார்.

ஏவலன் பிரவீரர் வருகையை அறிவித்தான். மூன்று பணிப்பெண்கள் மங்கலத் தாலங்களுடன் வந்தனர். தொடர்ந்து மூன்று சூதர்கள் முழவும் கொம்பும் சங்குமாக வந்தனர். மங்கல இசை முழங்கி அமைந்தது. பிரவீரர் முறைப்படி வணங்கி “இந்திரபுரியின் அரசரை விஜயபுரியின் காவலர், கலியின் அடியவர், நிஷதகுடிகளின் தலைவர், புஷ்கரர் வரவேற்கிறார். அவரது அவைக்கு வந்து சிறப்பிக்க வேண்டுமென்று பணிந்து கோருகிறார்” என்றார். நளன் கண்கள் சினத்தால் எரிந்து அணைந்தன. மீசையை நீவியபடி “நன்று” என்றான்.

நாகசேனர் “விஜயபுரியின் படைத்தலைவரை சந்திக்க நிஷாதர்களின் பேரரசர் உளம் கனிகிறார்” என்றார். நளன் செல்வோம் என கைகாட்டி மேலாடையை எடுத்து அணிந்தபடி எழுந்தான். இசைச்சூதர் மங்கலம் முழங்கி முன்செல்ல நளன் நடந்தான். அவனுடன் நாகசேனர் நடந்தார். பிரவீரர் “இவ்வழி, அரசே” என்றார். இடைநாழிகளில் எவருமே இல்லை. வீரர்களை நிறுத்தியிருந்தால் அவர்கள் வாழ்த்துக்கூவவேண்டியிருக்கும்

என்று எண்ணி தவிர்க்கப்பட்டார்கள் என தெரிந்தது. அவைமுகப்பில் ஒற்றைக் காவலன் நின்றிருந்தான். பிரவீரர் “இந்திரபுரியின் அரசர் வருகை” என்றார். அவன் தலைவணங்கி உள்ளே அவையறிவிப்பு செய்தபின் வெளியே வந்து “அவைநுழைவொப்புதல்” என்றான்.

கதவு திறக்க நளன் உள்ளே சென்றான். அவையிலிருந்த காவலர்கள் மட்டும் வாள்தாழ்த்தி அவனை வணங்க அவைச்சூதரின் இசை முழங்கியது. அவையிலிருந்த எவரும் எழவில்லை. அரசமேடையில் அரியணையில் அமர்ந்திருந்த புஷ்கரன் அவனை நோக்காததுபோல அமர்ந்திருந்தான். அமைச்சர் பத்ரர் புஷ்கரனிடம் சென்று “இந்திரபுரியின் அரசர் நளன் அவை வருகை” என்றார். புஷ்கரன் திரும்பி நோக்கி மிகச் சிறிதாக தலைவணங்கி பீடத்தில் அமரும்படி கைகாட்டினான். நளன் அவையை ஒருமுறை நோக்கிவிட்டு சென்று தனக்கான பீடத்தில் அமர்ந்தான்.

அவனுக்கான இருக்கை அயல்நாட்டு வருகையாளர்களுக்கான நிரையில் போடப்பட்டிருந்தது. இந்திரபுரியின் மின்கதிர்க்கொடி அதற்குப் பின்னால் பறந்தாலும் எளிய மரப்பீடம் அது. தங்கள் இறகுத்தலையணிகளும் தோல்போர்வைகளும் குடிக்கோல்களுமாக அமர்ந்திருந்த குலத்தலைவர்கள் அனைவரும் அவனை நோக்காமல் இறுக்கமாக அமர்ந்திருந்தனர். சுநீதர் எழுந்துசென்று ரிஷபனிடம் ஏதோ சொன்னார். புஷ்கரன் தன்னருகே அமர்ந்திருந்த மாலினியிடம் சற்று சரிந்து மெல்ல பேசினான். அவை முழுக்க பேச்சொலிகள் இணைந்த மெல்லிய ரீங்காரம் பரவியிருந்தது.

அமைச்சர் கைகாட்ட நிமித்திகர் எழுந்து சென்று அறிவிப்புமேடையில் நின்று “அவையீரே, இன்று இந்த

அவையில் நம்மை சிறப்புறுத்தவும் நம் குடிகளை வாழ்த்தவும் நம் முடிகொண்ட தலைவர் புஷ்கரரின் மூத்தவரும், இந்திரபுரியின் அரசருமான நளன் வந்துள்ளார். அவரை இந்த அவை தலைவணங்கி வரவேற்கிறது” என்றார். அவையினர் கோல்களைத் தூக்கி ஒப்புகை ஒலியெழுப்பினர். “இந்த அவைக்கு அவர் உரைக்கும் நற்செய்திக்காக அரசரும் குலத்தலைவர்களும் பிறரும் காத்திருக்கிறார்கள். நன்று சூழ்க!” என்றபின் அவர் வணங்கி இறங்கினார்.

நளன் சில கணங்கள் அவையை நோக்கியபின் “விஜயபுரியின் படைத்தலைவருக்கும் குடிகளுக்கும் என் வணக்கம். நலம் சூழ்க!” என்றான். “இங்கே அவையறிவிப்பில் விஜயபுரியின் படைத்தலைவன் என்று என் இளையோனை கூறினர். இனி அவனை விஜயபுரியின் அரசன் என்று சொல்லவேண்டுமென்ற அறிவிப்பை இந்த அவையில் வெளியிடுகிறேன். என் வருகையின் முதல் நோக்கம் அதுவே” என்றான். அவை எந்த ஓசையையும் வெளிக்காட்டாமல் அமைதியாக அமர்ந்திருந்தது.

நளன் அதை எதிர்பாராததனால் சற்று திகைத்தான். “என் இளையோன் முடிசூடி அமரும் இந்நிலம் கிழக்கே காஞ்சிவரை பெருகும். அதற்கு என் படைவல்லமை உடனிருக்கும். இது இந்திரபுரிக்கு நட்புநாடாகவும் உறவுநிலமாகவும் என்றும் நீடிக்கும்” என்றான். அவையின் அமைதி அவனை படபடப்பு கொள்ளச்செய்தது. “இந்திரபுரியின் அஸ்வமேதநிறைவு விழவுக்கு என் இளவலாகவும் விஜயபுரியின் தனியரசனாகவும் புஷ்கரன் வரவேண்டும் என்று அழைக்கவும்தான் நான் வந்தேன்” என்றான். அவையில் மெல்லிய குரல்கள்தான் ஒலித்துக்கொண்டிருந்தன.

நளன் சினம் கொள்வது தெரிந்தது. நாகசேனர் அதை உணர்ந்ததும் எழுந்து "மாமன்னர் நளன் தன்னால் கைப்பற்றப்பட்டதும் தன் ஆட்சிக்குரியதுமான இந்நிலத்தை தன் இளவலுக்கு அளிக்கும் விழவையும் அஸ்வமேதநிறைவு நாளிலேயே நடத்தலாமென்று எண்ணுகிறார். அதற்கு இந்த அவையொப்புதலை எதிர்பார்க்கிறார்" என்றார். அவை புஷ்கரனை நோக்கியது. அவன் ரிஷபனை நோக்க அவன் தன் மேலாடையின் பொன்னூல் முடிச்சு ஒன்றை இழுத்து சீரமைத்துக்கொண்டிருந்தான்.

அவையின் அமைதியில் நளன் நிலையழிந்தான். உரத்த குரலில் "அவையோரே" என்றபடி எழுந்தான். ஆனால் அவர்களை திரும்பி நோக்கியதுமே அவன் குரல் தழைந்தது. "என் குடியினர் நீங்கள். என் குருதி. நான் உங்களிடம் அரசனாக வரவில்லை, உங்கள் குடியைச் சேர்ந்தவனாக மட்டுமே வந்துள்ளேன். ஆம், பெரும்பிழை ஒன்றை செய்துவிட்டேன்..." அவன் குரல் இடறியது. கைகூப்பி "என்னை இந்தக் குலப்பேரவை பொறுத்தருளவேண்டும். நான் இயற்றவேண்டிய பிழைநிகர் என்னவென்று உரைக்கவேண்டும். நான் சித்தமாக உள்ளேன்" என்றான்.

அவையில் ஒரு ததும்பல் உருவாவதை காணமுடிந்தது. அது ஒரு சொல்லென துளிக்கும் முன்னர் ரிஷபன் எழுந்தான். "சீர்ஷரின் இறப்புக்கு நிகர் என்ன என்பதை குடியவை முடிவுசெய்யட்டும். அதற்குமுன் முடிசூடுவது குறித்த செய்திக்கு அரசர் மறுமொழி சொல்வார்" என்றான். புஷ்கரன் பேசுவதற்குள் மாலினிதேவி உரத்த குரலில் "விஜயபுரி இப்போது உங்களிடம் இல்லை, இந்திரபுரிக்கரசே. இந்திரபுரி

உங்களிடம் இருக்குமா இல்லையா என்பதைப்பற்றித்தான் நாம் பேசவேண்டியுள்ளது” என்றாள்.

அந்த நேரடியான சிறுமைச்செயல் நளனை சொல்லிழக்கச் செய்தது. அவன் அறியாமல் நாகசேனரை நோக்க அவர் அமைதியாக “அரசி, விஜயபுரியை பேரரசர் நளன் படைகொண்டு வென்று சதகர்ணிகளிடமிருந்து கைப்பற்றி நெடுநாட்களாகின்றன. அப்போது தாங்கள் சிறுமியாக இருந்திருப்பீர்கள். விஜயபுரியை வென்றபின் மூன்றாண்டுகளுக்குப் பின்னர்தான் பேரரசர் கலிங்கத்தை வென்றார். தங்கள் தந்தை இந்திரபுரிக்கு வந்து பணிந்து கப்பம் அளித்தமையால் தண்டபுரம் அவருக்கு அளிக்கப்பட்டது. அதை நீங்கள் நினைவுறுவீர்கள் என நினைக்கிறேன்” என்றார். “இப்போது பரிவேள்வி முழுமையடைந்துள்ளது. பாரதவர்ஷத்தில் நளமாமன்னரின் புரவிப்படையால் வெல்லப்படாத அரசுகள் சிலவே.”

மாலினிதேவி முகம் சிவந்து திரும்பி பல்லைக் கடித்தபடி புஷ்கரனிடம் ஏதோ சொன்னாள். அவள் கண்கள் இடுங்கி பற்கள் வெளித்தெரிய முகம் சீறும் ஓநாயின் தோற்றம் கொண்டது. புஷ்கரன் ஒருமுறை கனைத்தபின் “நான் அரசுசூழ்தல் அறியாதவன். நேரடியாகவே சொல்கிறேன். விஜயபுரியில் இன்றிருக்கும் படைகளும் குலங்களும் என்னை அரசனாக ஏற்கின்றன. நான் இங்கே இன்னும் சில நாட்களில் முடிசூட்டிக்கொள்வதாக இருக்கிறேன். எவ்வகையிலும் விதர்ப்பினியின் செங்கோலை நிஷாதர்களாகிய நாங்கள் எங்கள்மேல் ஏற்றுக்கொள்ள முடியாது. அவள் எங்கள் அரசியாக பரிவேள்வி நிறைவுசெய்வதையும் ஒப்பமாட்டோம்.

அந்நிகழ்வு நடக்குமென்றால் படைகொண்டுவந்து இந்திரபுரியை தாக்குவோம்…” என்றான்.

நளன் “உன் சினம் புரிகிறது, இளையோனே. நாம் அதைப்பற்றி பேசுவோம். நான் உன்னுடன் சிறிது தனித்தமரவேண்டும். நீ விழைவதை சொல்” என்றான். “நாம் தனித்துப்பேச ஏதுமில்லை. நீங்கள் இங்கே என் பகையரசராகவே வந்திருக்கிறீர்கள். தூதராக வந்தமையால் அவ்வண்ணமே ஏற்று உங்களிடம் இதை சொல்கிறேன். அரசி தமயந்தி பதவி துறக்கவேண்டும். நிஷதகுடிகளின் அரசனாக நான் முடிசூடி அரியணை அமர்வேன். இது நிஷதகுடித்தலைவர்கள் குலதெய்வம் கலிமேல் தொட்டு எனக்கிட்ட ஆணை” என்றான்.

“நான் சொல்வதை கேள்” என்றான் நளன். “நீங்கள் மூத்தவராக பேசவேண்டியதில்லை. உங்களை நிஷதகுடியினரென்று இனிமேல் கருதுவதில்லை என மூத்தோர் முடிவெடுத்திருக்கிறார்கள். நீங்கள் எனக்கு அயலவர். அரசுமுறையாக ஏதேனும் சொல்வதற்கிருந்தால் சொல்க!” நாகசேனர் “அவ்வாறு முடிவெடுக்க எவர் இவர்களுக்கு உரிமை அளித்தது? அங்குமிருக்கிறார்கள் நிஷதகுடித்தலைவர்கள்” என்றார். “ஆம், அங்கிருக்கும் குலக்கேடர்களுக்கு நெறி கற்பிப்போம்” என்றார் சுநீதர். “சபரர்களுக்கு நிலம் தேவை என்றால் அவர்கள் அதை விதர்ப்பத்தின் அருகே எங்காவது அமைத்துக்கொள்ளட்டும். சபரர்களில் ஏழு குடிகள் எங்களுடன் உள்ளன, எஞ்சியவர்கள் இனி நிஷாதர்கள் அல்ல.”

“நீங்கள் குடிப்போர் ஒன்றுக்கு களமொருக்குகிறீர்கள். போர் நிகழுமென்றால் நம் குடியே அழியும். நம்மை சூழ்ந்திருக்கின்றன குருதிப்பசி கொண்ட நாடுகள். நம்மால் வேட்டையாடப்பட்டு அடிமைகொள்ளப்பட்டவை அவை” என்றார்

நாகசேனர். "இது குடிப்போரேதான். ஆனால் உறுதியாக நாங்கள் வெல்வோம். நிஷதகுடிகளில் ஆற்றல்மிக்கது காளகக்குடி. எங்கள்மேல் ஏறி சபரர்கள் அடைந்த வெற்றிகளை இதுகாறும் குடிப்பூசல் வேண்டாமென்று எண்ணியே தாங்கிவந்தோம். இனி அது நடக்காது. போர் நிகழட்டும். காளகர்களை எவர் வெல்வார் என்று பார்க்கிறோம்" என்றார் சுநீதர். காளகக்குடியினர் எழுந்து கோல்களைத் தூக்கி உரக்க உறுமலோசை எழுப்பினர்.

நாகசேனர் ஏதோ சொல்ல வாயெடுக்க அவரை கையமர்த்திவிட்டு நளன் உரத்தகுரலில் சொன்னான் "உங்களுக்கு நம்பிக்கையளிப்பது எதுவென்று அறிவேன். பகைநாட்டரசரின் உதவிகளை நம்பியிருக்கிறீர்கள். அவர்கள் நம் குலத்தை பிளக்கிறார்கள். பிளந்தபின் அவர்கள் நம்மை முற்றழிப்பார்கள். நாம் அவர்களிடம் சென்ற காலங்களில் இரக்கம் காட்டவில்லை என்று உணர்க! இந்த எளிய சூழ்ச்சியைக்கூட உணரமுடியாமல் உங்களைத் தவிர்ப்பது எது?" என்றான். ரிஷபன் "நட்பும் பகையும் அரசியலில் மாறுபடும். இப்போது நாங்கள் அவர்களுக்கும் அவர்கள் எங்களுக்கும் தேவைப்படுகிறார்கள்" என்றான்.

மாலினிதேவி "குலப்பூசலைத் தவிர்க்க எளியவழி உள்ளது, இந்திரபுரியின் அரசே. நீங்களும் உங்கள் விதர்ப்ப அரசியும் முடிதுறக்கலாம். நிஷத குடிகளால் ஏற்றுக்கொள்ளப்பட்ட இளையவரை அரசராக்கலாம். வாளேந்தி அவருக்கு படைத்துணை நிற்கலாம்" என்றாள். நளன் அனைத்துக் கட்டுப்பாடுகளையும் இழந்து "வாயைமூடு, இழிமகளே! இவையனைத்தும் உன் சூழ்ச்சி. உன் களவுத்துணைவனாகிய இவனுடைய திட்டம். இன்று நீ செய்வதற்காக உன்னை ஒருநாள் கழுவேற்றுவேன்" என்றான்.

அவள் சினவெறியுடன் நகைத்து "இதைத்தான் வெறுக்கிறது நிஷதகுடி. நீங்கள் தலைவெட்டி வீழ்த்திய சீர்ஷரின் குருதி இங்கே மணக்கிறது. இதோ இங்கே இருக்கிறது மூத்தவரின் மீளா உயிர். இந்திரபுரியை வென்று அங்கிருக்கும் இந்திரன் ஆலயத்தை இடித்து அங்கே கலிதேவனை மீட்டமரச் செய்த பின்னரே அவர் விண்ணேகுவார்... அவரே வெறியாட்டனில் எழுந்து சொன்னது இது..." என்றாள். எழுந்து அவை நோக்கி "சொல்லுங்கள்... உங்கள் குருதிப்பழி இது. இனி எந்த பேச்சுக்கும் இடமில்லை என்று சொல்லுங்கள். குருதியை நீரால் கழுவ முடியாதென்று இவர் அறியட்டும்" என்றாள்.

அவை முழுமையாக எழுந்து கைகளையும் கோல்களையும் நீட்டி கூச்சலிட்டது. முழக்கத்திற்குள் வசைச்சொற்களும் இருப்பதை நளன் கேட்டான். நாகசேனர் "கிளம்புவோம், அரசே" என்றார். சுநீதர் "நீ யாரென்று எண்ணினாய்? குடிமூத்தாரை தலைவெட்டி வீழ்த்திய உன் குருதியால் எங்கள் கலிதேவனின் பீடத்தை கழுவுவோம்..." என்று கூச்சலிட்டார். வெறிகொண்ட நீர்விழிகள். இளித்த பற்கள். புடைத்த தொண்டைநரம்புகள். நளன் வெறித்த விழிகளுடன் நோக்கி நின்றான்.

பின்னர் மீண்டு புஷ்கரனை நோக்கி "இளையோனே..." என்று கைநீட்டினான். புஷ்கரன் "இதோ அறிவிக்கிறேன், நாளையே படைகள் எழுக! சதகர்ணிகளும் கலிங்கர்களும் நம்முடன் வருவார்கள். நாம் இந்திரபுரியை தாக்கும் அதேநாள் வடக்கிலிருந்து மகதமும் வங்கமும் சேதியும் இணைந்து தாக்கும். மேற்கே அவந்தியும் மாளவமும் தாக்கும். விதர்ப்பினியின் ஆணவத்தை அழிப்போம். அவள் கட்டிய அந்த வேள்விப்பந்தலை எரியூட்டுவோம். அவள் வேள்விப்பரியை

கொன்று சமைத்து உண்டாட்டு நடத்துவோம். இது அரசாணை” என்றான்.

அவை வெறிக்கூச்சலிட்டது. சூழ்ந்திருந்த அத்தனை வீரர்களும் கூவி ஆர்ப்பரித்தனர். சிலர் ஏளனச் சிரிப்புடன் நளனை நோக்கி வந்தனர். நாகசேனர் “செல்வோம், அரசே” என்று கூவி அவரே முதலில் வெளியே நடந்தார். நளன் அவருக்குப் பின்னால் செல்ல ஊளைகளும் ஏளனக் கூச்சல்களும் வசைகளும் பின்னால் முழங்கின.

❀தன் அறைக்குள் நுழைந்ததுமே நளன் “ஆடைகளை எடுத்துக்கொள்ளுங்கள். புரவிகள் ஒருங்கட்டும்” என ஆணையிட்டான். “நாம் தெற்குவாயிலினூடாகச் செல்வோம். மையச்சாலையில் நகர்மக்கள் நடுவே சென்றால் நாம் இழிவுபடுத்தப்படுவோம்” என்று காவலர்தலைவன் சொன்னான். “அவைச்செய்திகள் நகரில் பரவிவிட்டன. தெருக்களெங்கும் மக்கள் கொந்தளிக்கிறார்கள். நள்ளிரவிலும் நகர் ஓயவில்லை.” நாகசேனர் “படைமுரசு கொட்டத் தொடங்கிவிட்டது, அரசே” என்றார். “உண்மையாகவே படையெழுச்சிக்கு ஆணையிட்டிருக்கிறார் இளவரசர்.”

நளன் காலோய்ந்து பீடத்தில் அமர்ந்தான். காவலர்தலைவன் “நாம் தெற்குவாயிலினூடாகச் செல்வோம் என்பதையும் வீரர் சிலர் உய்த்தறிந்துவிடக்கூடும். தெற்குவாயில் இருட்டாக இருக்கவும் வாய்ப்பில்லை. மூடுதேர் ஒன்றை கொண்டுவரச் சொல்கிறேன். அதை ஓட்டியபடி நான் மையச்சாலை வழியாக செல்கிறேன். அதை அவர்கள் சிறுமை செய்யட்டும். அப்பொழுதில் தாங்கள் தெற்குவாயில் வழியாக செல்லலாம்” என்றான். நாகசேனர் “இந்திரபுரியின் அரசர் அப்படி ஒளிந்து ஓடலாகாது. மையச்சாலை வழியாகவே செல்வோம்.

எத்தனையோ முறை குடிகளின் வாயால் வாழ்த்தும் அரிமலரும் பெற்றிருக்கிறார் அரசர். இதுவும் அவர்களின் கொடையே. இதையும் அவர் அறியட்டும்" என்றார்.

ஏவலன் வந்து வணங்கி "குடித்தலைவர்கள்" என்றான். நளன் வியப்புடன் நாகசேனரை நோக்க "வரச்சொல்" என்றார் அவர். நளனிடம் "ஏதேனும் மாற்றுவழி கண்டிருப்பார்கள். குடிப்பூசலை தவிர்ப்போம் என கலிதேவனின் முன் குருதிதொட்டு ஆணையிட்டுத்தான் அவர்கள் கோலெடுக்கிறார்கள்" என்றார். நளன் பெருமூச்சுவிட்டான். குடித்தலைவர்கள் எழுவர் தங்கள் அவைக்கோலத்திலேயே வந்திருந்தார்கள். முறைப்படி நளனை வணங்கி முகமன் உரைத்தனர்.

"நாங்கள் அவையில் நிலைமீறியது உண்மை. சீர்ஷரின் பெயர் அவ்வாறு எங்களை கொந்தளிக்கச் செய்தது" என்றார் சீரகுலத்தலைவராகிய பணிதர். "ஆனால் அவை முடிந்து வெளியே சென்றதுமே போர்முரசுக்கான ஆணைகளை படைத்தலைவர்கள் கொண்டுசெல்வதை கண்டோம். எங்கள் உள்ளம் அஞ்சிவிட்டது. பல நூறாண்டுகள் நிஷாதர்களாகிய நாம் ஒருவரோடொருவர் போரிட்டு அழிந்தோம். நம்மை அயவலர் அடிமைகளாக பிடித்துக்கொண்டுசென்று சந்தைகளில் விற்றனர். வயல்களில் நுகங்களில் கட்டி உழுதனர். துறைநகர்களில் சுமை எடுத்தோம். கலங்களில் துடுப்பு வலித்தோம். நம் குடியில் மகாகீசகர் தோன்றியமையால் நாம் எழுந்தோம். அது நம் குடித்தெய்வங்களின் அருள். அடிமைகளாக அழிந்த நம் மூதாதையரின் தவம்…"

நளன் "ஆம், அதை எண்ணியே நான் அஞ்சுகிறேன்" என்றான். "போர்முகத்தில் நான் கொன்றழிக்க வேண்டியவர்கள் என் குருதியினர், என் இளையோர், மூத்தோர்." சூரர்குடித்தலைவரான

இகடர் "அதை தவிர்த்தாகவேண்டும் என்று பேசிக்கொண்டோம். இளவரசரிடம் நேரில் சென்று போரைத் தவிர்ப்பதைப்பற்றி பேசலாமென முடிவெடுத்தோம். அவர் உணவருந்திக்கொண்டிருந்தபோது நேரில் சென்று கண்டோம். நாங்கள் பேசவே அவர் ஒப்பவில்லை. போருக்கு முடிவெடுத்துவிட்டதாக சொன்னார்" என்று பணிதர் தொடர்ந்தார்.

"அருகே அமர்ந்திருந்த மாலினிதேவி போர்முரசு கொட்டியபின் தயங்குவது அச்சமென்று பொருள்படும் என்றார். அரசர் வெறியுடன் உரக்க நகைத்தபடி எழுந்து போர் தொடங்கிவிட்டது. இனி பின்வாங்குதலே இல்லை என்றார். அவையில் வஞ்சினம் உரைத்தபின் போரை எண்ணித்தயங்க அவர் சித்தமாக இல்லை என்றும் சீர்ஷரின் குருதிதொட்டு உரைத்த அந்த வஞ்சினம் தெய்வங்கள் மேலிட்ட ஆணை என்றும் சொன்னார். எங்கள் சொல் செவியேறவேயில்லை."

நாகசேனர் "போர் வருமென்றால் ஒழியவேண்டியதில்லை. இருபதாண்டுகள் போரை நடத்தும் ஆற்றல் நிஷதபுரிக்கு உண்டு. மொத்த பாரதவர்ஷத்தையும் வெல்ல எங்கள் அரசரால் இயலும்" என்றார். "நிஷதர்களின் குருதி நிலத்தில் விழவேண்டுமென்பது ஊழ் என்றால் அவ்வாறே நிகழ்க!" நளன் "ஆம், அஞ்சவேண்டிய இடத்தில் நானோ என் படைகளோ இல்லை. இவர்கள் சூழ்ச்சி செய்கிறார்கள் என்பதே அஞ்சுகிறார்கள் என்பதற்கான சான்று" என்றான்.

"இல்லை அரசே, ஒரு வழி திறந்துள்ளது" என்றார் பிருங்க குலத்தவராகிய சுருதர். "நாங்கள் சோர்ந்து திரும்பிவந்தோம். குலப்பேரழிவை கண்களால் பார்க்கவிருக்கிறோம் என்று உறுதிகொண்டோம். அப்போதுதான் அமைச்சர் பத்ரர் எங்களை

நோக்கி வந்தார். என்ன நிகழ்ந்தது, என்ன சொன்னார் அரசர் என்று கேட்டார். போர் நிகழ்ந்தே ஆகவேண்டும் என்று அரசர் வெறிகொண்டிருக்கிறார் என்று நான் சொன்னேன். அவ்வாறென்றால் போர் நிகழட்டும், ஆனால் குருதிப்பொழிவு வேண்டாம் என்றார் பத்ரர்.”

நளன் புருவத்தை சுருக்க இகடர் “இத்தகைய சூழல்களுக்காக மூதாதையர் ஏதேனும் ஒரு வழி வைத்திருப்பார்களே என்று நூல்களில் தேடினேன், ஒரு வழி உள்ளது என்றார். நாங்கள் நம்பிக்கையுடன் நோக்க, நாற்கள ஆட்டம் என்றார்” என்றார். நளன் “சூதா?” என்றான். “ஆம், நாற்களம் என்பது நிகரிப்போர். நால்வகைப் படைகளும் எதிர்நின்றாடும் களம். குருதிப்போரைத் தவிர்க்க நிகரிப்போரை இரு சாராரும் ஏற்றுக்கொண்டால் நிகழ்த்தலாம் என்று பத்ரர் சொன்னார்.”

நளன் நாகசேனரை நோக்க அவர் “நிகரிப்போர் என்றால்…” என்று தொடங்க பணிதர் உரக்க “பாரதவர்ஷத்தில் குலப்போரும் குடிப்பூசலும் நிகழாத காலம் இல்லை. ஒருதாய்மைந்தரிடையே வஞ்சினம் உரைக்கப்பட்டால் நிகரிப்போரே தெய்வங்கள் விரும்பும் வழி என்று நூலுரை இருப்பதை பத்ரர் சொன்னார்” என்றார். இகடர் “இது ஒன்றே நாங்கள் காணும் வழி. நீங்கள் உங்கள் இளையோனுடன் அவைநடுவே நாற்களம் ஆடுங்கள். வென்றவர் முடிசூடட்டும்” என்றார். நளன் திகைத்தவன்போல அமர்ந்திருந்தான்.

நாகசேனர் “சூது பழிக்குரியது என்று சொல்லப்பட்டுள்ளது” என்றார். “ஆம், உடன்பிறந்தகுருதியை வீழ்த்துவது அதைவிடப் பெரும்பழிக்குரியது. வானிலுள்ளனர் முலையூட்டிய அன்னையர். நாம் மண் நீத்தால் சென்று அவர்கள் முன் நின்றாகவேண்டும். அதை மறக்கவேண்டியதில்லை” என்று

இகடர் சொன்னார். “அவன் என்ன சொன்னான்?” என்று நளன் கேட்டான். “அவரிடம் பேசி ஒப்புதல்கொள்ள வைக்கமுடியும். ஏனென்றால் அனைத்துக் குலத்தலைவர்களும் அஞ்சிக்கொண்டிருக்கிறார்கள். போருக்கு நாங்கள் ஒப்பினால் மட்டுமே அவர் படையெழுச்சி கொள்ளமுடியும்” என்றார் பணிதர். “நம் குருதியினர்தான் மறுநிரையிலும் இருப்பார்கள் என்பதை சற்று பொழுது செல்லும்தோறும் நம் படைவீரர் உணர்ந்துகொள்வார்கள்... அவர்கள் எதிர்ச்சொல் முழக்கத் தொடங்கினால் அது இளவரசருக்கே இழிவு. அதற்குள் நிகரிப்போரை அறிவித்துவிடலாம்.”

நளன் “அவன் ஒப்புக்கொண்டால் நான் சித்தமே” என்றான். இகடர் முகம் மலர்ந்து “போதும், எஞ்சியதை நான் பார்த்துக்கொள்கிறேன். இதோ இங்கிருந்தே அரசரை சந்திக்கச் செல்கிறோம். உடன் எங்கள் குடியின் படைத்தலைவர்களும் வருவார்கள். முடிவுசெய்துவிட்டோம். நிகரிப்போர்தான், குலப்போர் அல்ல” என்றார். பணிதர் “நாளையே நேரம் குறிப்போம்” என்றார். “அவன் தயங்கக்கூடும், அவன் சூதில் வல்லவன் அல்ல” என்றான் நளன். “அவருக்கு வேறுவழியில்லை. எங்கள் மைந்தரின் குருதிமேல் நடந்து அவர் முடிசூடமுடியாது” என்றபின் இகடர் எழுந்து “விடைகொள்கிறோம்” என்றார்.

அவர்கள் செல்வதை நளன் வெறித்து நோக்கி சற்றுநேரம் அமர்ந்திருந்தான். நாகசேனர் “வேறுவழியில்லை என்பது சித்தத்துக்கு உறைக்கிறது. ஆனால் உள்ளம் பதறிக்கொண்டே இருக்கிறது, அரசே” என்றார். “அவனால் சூதில் வெல்லமுடியாது. அவன் எப்படி ஒப்புவான்?” என்றான் நளன். “அவருக்கு வேறுவழியில்லை. இப்போது பார்த்தால் நாளை

மாலையே எல்லாம் இனிது முடியவேண்டும். ஆனால் நான் அஞ்சுவது அவனை” என்றார். யாரை என நளன் உணர்ந்திருந்தான். “அவன் கலிவடிவன்” என்றார் நாகசேனர்.

# நீர்க்கோலம் - 59

## 58. நிலைபேறு

சூதரங்கு மிக எளிமையாக அமைக்கப்பட்டிருந்தது. அரண்மனையிலிருந்த நீள்வட்டமான உணவுக்கூடத்தின் நடுவே சிறிய மரமேடை போடப்பட்டு அதில் சூதுக்களம் ஒருக்கப்பட்டிருந்தது. இரு பக்கமும் தாழ்வான இருக்கைகள். சூதுக்காய்களை வைப்பதற்கான பீடங்கள் வலக்கை அருகே. இடக்கையருகே ஆட்டத்துணைவனுக்கான பீடம். அதை நோக்குபவர்கள் அமர்வதற்காக வட்டமாக பீடங்கள் போடப்பட்டிருந்தன. நான்கு வாயில்களிலும் காவலர் நின்றனர்.

காலையிலேயே ஆட்டம் குறிக்கப்பட்டிருந்தது. அரண்மனைக்கு வெளியே களமுற்றத்தில் மிகப் பெரிய ஆட்டக்களம் ஒன்று உள்ளிருப்பதன் அதே வடிவில் உருவாக்கப்பட்டிருந்தது. அதில் யானை, குதிரை, தேர், காலாள் கருக்களைப்போல முகமூடி அணிந்த வீரர்கள் நிறுத்தப்பட்டனர். அக்களமுற்றத்திற்கு நேர் மேலே உயர்ந்த மேடையில் முரசுடன் நிமித்திகன் ஒருவன் அமர்ந்திருந்தான். உள்ளே சூதுக்களத்தை நன்கு நோக்கியபடி நிரைகளின் பின்னாலிருந்த மரமேடையில் அமர்ந்திருந்த நிமித்திகன் ஆட்டத்திற்கு ஏற்ப தன் குறுமுரசை முழக்கினான்.

அவ்வொலியைக் கேட்டு காய்நகர்வை புரிந்துகொண்டு வெளியே மேடையில் இருந்த நிமித்திகன் தன் முரசை

முழக்கினான். அதைக் கேட்டு நாற்களக் காய்கள் என நின்றிருந்த வீரர்கள் களங்களில் நகர்ந்தனர். உள்ளே நிகழும் ஆட்டம் வெளியே பேருருவில் தெரிந்தது. அதை நோக்க ஆயிரக்கணக்கானோர் திரண்டு வந்து சூழ்ந்திருந்தார்கள். அரண்மனை உப்பரிகைகளிலும் இடைநாழிமுகப்புகளிலும் பெண்கள் செறிந்து நின்று அந்த ஆட்டத்தை நோக்கினர். கோட்டையின் காவல்மாடங்களிலும் நடைபாதைகளிலும் நெருக்கி நின்று படைவீரர்கள் அந்த ஆடலைக் கண்டார்கள். அயல்நாட்டு வணிகரும் சூதர்களும் அக்களத்தை முகங்களால் வேலியிட்டு வளைத்திருந்தனர்.

நகரெங்கும் அவ்வாடல் ஒலியென சென்று சேர்ந்துகொண்டிருந்தது. திண்ணைகளில் கூடியிருந்த முதியவர்கள் தங்கள் முன் சுண்ணத்தாலும் கரியாலும் வரையப்பட்டிருந்த சிறிய நாற்களக் கட்டங்களில் கற்களையும் விதைகளையும் சோழிகளையும் பரப்பி வைத்து ஓசைக்கேற்ப காய்நகர்த்தி அந்த ஆடலை நிகழ்த்தினர். அடுமனைத்திண்ணைகளில், கொல்லைப்பக்க கொட்டில்களில், அகத்தளங்களில் பெண்கள் கூடியமர்ந்து அந்த ஆடலை தாங்கள் நிகழ்த்தினர். ஓசைகேட்டு தங்கள் உள்ளங்களை ஆடுகளமாக ஆக்கிக்கொண்டனர் பல்லாயிரவர்.

விஜயபுரி நகரமே தெரிவதும் தெரியாததுமான ஆடுகளங்களின் பெருந்தொகையாக ஆகியது. சுழியின் மையமென அச்சூதுகளத்தின் நடுவே மென்மரப்பட்டையில் பட்டுத்துணியை ஒட்டி அமைத்த அந்தச் சிறிய ஆடுகளம் அமைந்திருந்தது. அதைச் சூழ்ந்து இரவெல்லாம் காவலர் நின்றிருந்தனர். அதை அமைக்கும் சிற்பிகளின் ஓசை கேட்டுக்கொண்டிருந்தது. புலரியில்தான் பணி முடிந்தது.

முந்தைய இரவிலேயே நாற்களத்தில் நிகரிப்போர் நிகழ்த்த புஷ்கரன் ஒப்புக்கொண்ட செய்தியை குடித்தலைவர்கள் வந்து சொன்னார்கள். இகடர் அதைச் சொல்லும்போதே அழுதுவிட்டார். “இது நிகழுமென நான் எண்ணவில்லை. என் குடிகள் போரிட்டு அழியாமல் காத்தேன் என்று நான் என் மைந்தரிடம் சொல்லமுடியும். இனி என் குடிமூத்தாருக்கு அஞ்சாமல் கூசாமல் பலியளித்து வழிபடமுடியும்.” பணிதர் “உங்கள் இருவரில் எவர் வென்றாலும் நன்றே. இன்றைய பூசல் இப்போதே தீரும். பூசல் தீர்ந்த பின்னர் அனைத்தையும் அமர்ந்து பேசிக்கொள்ளமுடியும்” என்றார்.

மெல்ல மெல்ல நளன் முகம் தெளிந்தான். புன்னகையுடன் “ஆம், அவன் தேடுவது ஒரு களப்போரை என்றால் அது நிகழ்க!” என்றான். “நம் குடிகளுக்கும் போர் ஒன்று தேவையாகிறது. துலா இப்போதே ஆடி நிலைகொள்ளுமென்றால் நன்று.” நாகசேனர் மட்டும் ஐயமும் குழப்பமும் கொண்டவராக இருந்தார். குடித்தலைவர்கள் சென்றபின் நளன் “நீங்கள் அச்சம் கொள்கிறீர்கள், அல்லவா?” என்று நாகசேனரிடம் கேட்டான்.

“ஆம், அரசே. என் உள்ளம் நிலைகொள்ளவில்லை” என்றார் நாகசேனர். “எண்ணி நோக்கினால் போர் என்பது நேரடியானது. அதில் கரவு என ஏதுமில்லை. இப்புவியில் உள்ள அனைத்து உயிர்களும் போரிடுகின்றன. ஆகவே அது தெய்வங்கள் அமைத்தது. சூது அப்படி அல்ல. அது இப்புடவியை நோக்கி மானுடன் அமைத்தது. புடவியின் சிறு போலி அது. புடவிச்செயலின் முடிவிலாத தற்செயல்பெருக்கை இக்களத்திலும் நிகழ்த்தி அதனுடன் ஆடுகிறான் மானுடன்.

போரில் மானுடன் தன் எதிரியை அறைகூவுகிறான். சூதில் தெய்வங்களை அறைகூவுகிறான்."

நளன் "இப்படி எண்ணியபடியே செல்லமுடியும். ஆனால் உடன்பிறந்தார் குருதி பிழைத்தது என்பதைப்போல ஆறுதல் அளிப்பது பிறிதேதுமில்லை" என்றான். "ஆம், நான் அதையே எண்ணினேன். ஆனால் பராசரரின் புராணமாலிகையை, பலநூறு குடிக்கதைகளை இங்கே அமர்ந்து எண்ணிக்கொண்டேன். எந்தப் பூசலாவது சூதில் முழுமையாக தீர்வு காணப்பட்டுள்ளதா? இல்லை, அரசே. சூது எப்போதுமே பூசலை ஒத்திப்போடுகிறது. சூதில் நிகழ்ந்தவை அப்பூசலை பெருக்குகின்றன. சூது நிகழ்ந்த பூசல்கள் அனைத்துமே மேலும் பெரிய போரில்தான் முடிந்துள்ளன. ஒருமுறைகூட விலக்கில்லை. ஆகவே இது ஒரு மாறா நெறியென்றே தோன்றுகிறது."

நளன் புன்னகையுடன் "எதுவானாலும் இனிமேல் எண்ணிப் பயனில்லை. அனைத்தும் முடிவாகிவிட்டன. நாளை காலை கதிரெழுந்த இரண்டாம் ஜாமத்தில் ஆட்டம் நிகழ்கிறது. ஏழு களம் என முடிவாகியிருக்கிறது" என்றான். "இனி ஒன்றும் செய்யமுடியாதென்றில்லை. நான் இதை முறிக்கிறேன்... சிறுமை செய்யப்பட்டதாக சினம்கொண்டு வஞ்சினம் உரைத்து கிளம்பிச்செல்லுங்கள். ஒரு நேரடிப் போரே நிகழட்டும்."

"ஆம், சில ஆயிரம்பேர் இறப்பார்கள்" என்று நாகசேனர் தொடர்ந்தார். "அதில் பழுதில்லை. போர்களில் பல்லாயிரம் நிஷாதர் முன்னரும் இறந்துள்ளனர். போரில் வீரர் இறப்பது நன்று, வீரருக்குரிய விண்ணுலகை அவர்கள் அடைகிறார்கள். நேரடியான குருதிப்போரே நேர்மையானது. அப்போருடன் அனைத்தும் முற்றாக முடிவுக்கு வந்துவிடும்... அத்தனை

போர்களும் அதைவிட பெரிய போர் நிகழாமல் தடுப்பவைதான்.”

நளன் “இல்லை, இப்போது களம்முறித்து நான் சென்றால் என் உடன்பிறந்தானை நான் வேண்டுமென்றே கொன்றேன், என் குடியை அழித்தேன் என்னும் பழியே எஞ்சும். இக்களமாடலில் நானே வெல்வேன். ஐயமே வேண்டியதில்லை, நாகசேனரே. இது நமக்கு சற்று பொழுதிடை அளிக்கும். இந்திரபுரியின் வேள்விநிறைவும் முடிசூட்டும் நன்முறையில் நிறைவுறும். அதன்பின் நாம் புஷ்கரனை அழைத்து பேசுவோம். தோற்று நிற்பவனுக்கு விஜயபுரியை அளித்து இங்கு தனிமுடிசூடச் செய்வோம்” என்றான்.

நாகசேனர் “போரில் கொடைபோல முழுமடம் பிறிதில்லை. நல்லியல்பென்பது வெற்றிக்குமேல் நின்றிருக்காவிட்டால் சிறுமைபடுத்தப்படும். நேர்ப்போர், மாற்றில்லாத வெற்றி. வேறேதும் இங்கே பொருளுள்ளவை அல்ல” என்றார். நளன் “நான் முடிவுசெய்துவிட்டேன், நாகசேனரே” என்றபின் எழுந்து “பிந்திவிட்டது. துயில்கொள்ளவேண்டும். நாளை புதிதென கண் துலங்கவேண்டும்” என்றான். நாகசேனர் “நன்று நிகழ்க!” என்றார்.

அன்றிரவு நாகசேனர் துயிலவில்லை. நிகழ்வன குறித்து கருணாகரருக்கு நீண்ட ஓலைகள் இரண்டை அனுப்பிவிட்டு இரவெல்லாம் நிலையழிந்தவராக உலவிக்கொண்டிருந்தார். சூது அறிவிப்பை முழங்கிச்சொல்லும் முரசொலிகள் கேட்டன. நகர்மக்களின் ஒட்டுமொத்தமான பேச்சொலி எழுந்து கார்வையாக இருண்ட வானில் நெடுநேரம் நின்றது. பின்னிரவில் நகர் அமைதிகொண்டது. கூகைகளின் குழறல்கள் மட்டும் கேட்டுக்கொண்டிருந்தன. நாழிகை மணிகளின் ஓசை.

காவல்மாற்றத்தின் ஆணைகள். பின்னர் புலரிமுரசு. அவர் அவ்வோசையைக் கேட்டு திடுக்கிட்டார்.

எழுந்து சென்று விடிவெள்ளியை நோக்கவேண்டும் என விழைந்தார். ஆனால் சற்றுநேரம் அவ்வெண்ணங்களுடன் அமர்ந்திருந்துவிட்டு எழுந்து சென்று விடிவெள்ளியை நோக்கினார். கூரிய வேல்முனைபோல் அது மின்னிக்கொண்டிருந்தது. நகரம் உயிர்பெறத் தொடங்கி சற்று நேரத்திலேயே ஓசைகள் நிறைந்து அலைசூழ்ந்தன. அவர் பெருமூச்சுடன் விண்மீன்களை நோக்கிக்கொண்டிருந்தார். அவை எண்ணற்கரிய மாபெரும் சூதுக்களமொன்றின் காய்கள் என்ற பராசரரின் வரி நினைவிலெழுந்தது.

அக்கணமே அடுத்த வரி நினைவிலெழ அவர் துருவனை தேடிச்சென்று விழிதொட்டார், “நிலைபெயராமையே அந்தண அறம் எனப்படுகிறது. பிற எதன்பொருட்டும். தன்பொருட்டும். தன் மூதாதையர், தெய்வங்கள் பொருட்டும். நிலைக்கோளென அவனுடன் இருக்கவேண்டியவை வேதநெறிகள் மட்டுமே.” பன்னிரு அகவையில் அவர் வேதக்கல்வி முடித்து குருநிலையிலிருந்து கிளம்பும்போது ஆசிரியர் புராணமாலிகாவின் அந்த வரியை அவரிடம் சொன்னார்.

துருவனின் மின்னொளி மீண்டும் மீண்டும் ஒன்றையே சொல்வது போலிருந்தது. மொத்த வானமும் விண்மீன் பெருக்கும் அதை உந்தித்தள்ள அது அசைவில்லாமல் அமைந்திருந்தது. அனைத்து நுண்சொற்களுடனும் இயல்பாக சென்று இணையும் ஓங்காரம் அது. நோக்கிக்கொண்டிருக்கையில் மெல்ல உள்ளம் தெளிவுகொண்டது. நீள்மூச்சுடன் திரும்பி ஏவலனிடம் “அரசரை எழுப்புக!” என்றார்.

நளன் அணிகொண்டு ஒருங்கி வந்தபோது அவர் தலைவணங்கி “அழைப்பு வரும் என்றார்கள், அரசே. காத்திருப்போம்” என்றார். நளனின் முகம் தெளிவுகொண்டிருந்தது. “அனைத்தும் நன்றெனவே முடியும், அமைச்சரே” என்றான். “இக்காலை எனக்கு அதை தெளிவுறக் காட்டுகிறது.” நாகசேனர் “அனைத்தும் முடிவில் நன்றே” என்றார்.

அவர்களை அழைத்துச்செல்ல அவைச்செயலர் பிரவீரர் வந்தார். அவர் முகமனுரைத்ததும் வணங்கியதும் மிகையாக ஒத்திகைநோக்கப்பட்ட நாடகம்போல் இருந்தன. நளன் நாகசேனர் உடன்வர நடந்து இடைநாழிகளினூடாக சூதரங்கு நோக்கி சென்றான். திரும்பி நாகசேனரிடம் “முகத்தை அப்படி வைத்துக்கொள்ளவேண்டாம், அமைச்சரே. நாம் அஞ்சுகிறோம் என எண்ணுவார்கள்” என்றான். நாகசேனர் புன்னகை செய்தார்.

ஆனால் சூதரங்கின் வாயில் கண்ணுக்குப்பட்டதும் நளனின் உள்ளம் திடுக்கிட்டது. படபடப்பை மறைத்துக்கொள்ள முகத்தை அங்குமிங்கும் திருப்பி அச்சூழலை நோக்கினான். ஏன் அந்தப் பதற்றம் என அவனுக்கு புரியவில்லை. அங்கிருந்தவர்கள் அனைவருமே அவனைத்தான் நோக்கிக்கொண்டிருந்தனர். ஆனால் விழிகளை திருப்பிக்கொண்டு வேறு பேச்சுகளை நடித்தனர்.

அவனை எதிர்கொண்டழைத்த அமைச்சர் பத்ரர் தலைவணங்கி முகமன் உரைத்தார். “இந்திரபுரியின் அரசருக்கு விஜயபுரியின் சூதரங்குக்கு நல்வரவு” என நிமித்திகன் அவைமேடையில் அறிவித்ததும் மெல்லிய வாழ்த்தொலி முழக்கம் எழுந்தது. அவனை அழைத்துச்சென்று ஒரு பீடத்தில் அமரச்செய்தார் அமைச்சர். நளனருகே அமர்ந்த நாகசேனர் “இங்கே ஆட்டத்துணைவருக்கு என ஒரு பீடம் போடப்பட்டுள்ளது”

என்றார். “ஆம்” என்றான் நளன். “நம் காவலர்தலைவனை அழைத்துவரும்படி சொல்கிறேன். நான் அந்தணன், சூதாடக் கூடாது.” நளன் தலையசைத்தான். அவர் எழுந்து சென்றார்.

அவன் ஏற்பாடுகளை ஒவ்வொன்றாக நெஞ்சிடிப்புடன் நோக்கிக்கொண்டிருந்தான். களத்தை சீரமைத்தனர். காய்களை கொண்டுவந்து வைத்தனர். இருக்கைகளில் புலித்தோல் விரித்தனர். அவை முன்னரே நிறைந்திருந்தது. அனைவரும் ஒருவரோடொருவர் பேசியபடியும் மெல்ல சிரித்தபடியும் இருந்தனர். அவர்கள் அனைவருமே போர் தவிர்க்கப்பட்டதில் மகிழ்ச்சி கொண்டிருந்தனர். ஆகவே சூதில் மேலும் ஆர்வம் கொண்டவர்களாக தெரிந்தனர். ஏவலர் அவர்களுக்குரிய இன்கடுநீரும் வாய்மணங்கள் நிறைந்த தாலங்களுமாக நடுவே உலவினர்.

வெளியே மங்கல இசை ஒலித்தது. நிமித்திகன் அவைக்குள் நுழைந்து புஷ்கரன் அவை நுழைவதை அறிவித்தான். தொடர்ந்து காகக்கொடியுடன் கொடிவீரன் உள்ளே வந்தான். இசைச்சூதரும் தாலமேந்திய சேடியரும் நுழைய புஷ்கரன் அருகே ரிஷபன் தொடர அரசணிக்கோலத்தில் நடந்துவந்தான். புன்னகையுடன் அவையை வணங்கியபடி நுழைந்து தனக்கான பீடத்தில் அமர்ந்தான். நளனை நோக்கவோ வணங்கவோ இல்லை. நாகசேனர் காவலர்தலைவனை அழைத்துவந்தார். அவன் நளன் அருகே அமர்ந்தான். நாகசேனரின் முகம் தெளிவுகொண்டிருப்பதை நளன் கண்டான். அவர் எதை உணர்ந்தார் என வியந்துகொண்டான்.

நிமித்திகன் அவைமேடையேறி தன் சிறிய கொம்பை முழக்கினான். முகமனுரைகளும் வாழ்த்துக்களும் கூறியபின் அறிவிப்பை கூவினான். “விஜயபுரியின் தலைவரும்

காளகக்குடித் தோன்றலுமாகிய இளவரசர் புஷ்கரருக்கும் அவருடைய தமையனும் இந்திரபுரியின் அரசரும் சபரகுடிவழி வந்தவருமாகிய அரசர் நளனுக்குமிடையே குடிப்பூசல் எழுந்துள்ளது. முறைப்படி குடிமூத்தாரால் ஏற்கப்பட்ட தனக்கே நிஷதமண்ணின் ஆட்சியும் கொடியும் முடியும் உரிமைப்பட்டது என்றும் மூத்தவராகிய நளன் அரியணை ஒழியவேண்டும் என்றும் இளவரசர் புஷ்கரர் கோருகிறார். அதை மூத்தவர் எதிர்ப்பதனால் போர் அறைகூவப்பட்டது.”

“குடிப்பூசலில் உடன்பிறந்தோர் குருதி சிந்தலாகாதென்று எண்ணிய குலமூத்தார் எடுத்த முடிவை ஏற்று இப்பூசலை நிகரிப்போர் வழியாக தீர்த்துக்கொள்ள இரு சாராரும் ஒப்புதல்கொண்டுள்ளனர். நிகரிப்போருக்குரியது நாற்களம் என்பதனால் இன்று இந்த அவையில் இளவரசரும் மூத்தவரும் நேருக்கு நேர் களமாடி வெற்றிதோல்வியை எதிர்கொள்ளவிருக்கிறார்கள். இந்த அவை அதை ஏற்றருள வேண்டுமென்று அரசர் சார்பில் கோருகிறேன்.” அவை கோல்களைத் தூக்கி ஒப்புதல் ஒலி எழுப்பியது. “இளவரசரையும் மூத்தவரையும் ஆடுகளத்தில் அமரவேண்டுமென்று அழைக்கிறோம்” என்றான் நிமித்திகன்.

புஷ்கரன் வணங்கியபடி சென்று பீடத்தில் அமர்ந்தான். அமைச்சர் தலைவணங்கி அழைக்க நளன் எழுந்து அவையை வணங்கியபடி சென்று களத்தருகே இடப்பட்ட பீடத்தில் அமர்ந்தான். “ஆட்டத்துணைவர்கள் அமர்க!” என்றான் நிமித்திகன். புஷ்கரன் அருகே ரிஷபன் வந்து அமர்ந்தான். அவனை நோக்கிய முதற்கணம் நளன் நெஞ்சதிர்ந்து நோக்கை விலக்கிக்கொண்டான். அவனருகே காவலர்தலைவன் வந்து அமர்ந்தான். “தொல்நெறிகளின்படி இந்தக் களமாடல் நிகழும்.

இதில் வெல்பவர் போரில் வென்றதாக தோற்றவர் ஏற்றுக்கொள்ளவேண்டும். அதை இங்கு இருவரும் அனல்தொட்டு ஆணையுரைக்கட்டும்” என்றான் நிமித்திகன்.

இருவரிடமும் எரியும் அகல்விளக்கு கொண்டுவரப்பட்டது. தழல்மேல் கைநீட்டி “ஆம், நான் முழுதேற்கிறேன். ஆணை ஆணை ஆணை” என்றான் புஷ்கரன். நளனும் அவ்வாறே ஆணை ஏற்றான். “ஆட்டம் தொடங்கட்டும். ஆடல் காண வந்துள்ள தெய்வங்களும் மூதாதையரும் மகிழ்வு கொள்க!” என்றான் நிமித்திகன். ஆட்டம் தொடங்குவதை அறிவிக்கும் முகமாக நிமித்திகன் தன் இடையிலிருந்த கொம்பை மும்முறை முழங்கினான். முரசு முழங்க அதை ஏற்று வெளியே பெருமுரசுகள் ஒலித்தன.

“நீங்கள் முதலில், மூத்தவரே” என்றான் புஷ்கரன். தன் முதற்கருமேல் கை வைத்த நளன் திரும்பி ரிஷபனை பார்த்தான். முதற்கணத்தில் தலையில் இரு கொம்புகளுடன் எருதுமுகம் கொண்டு அவன் அமர்ந்திருப்பதாகத் தோன்றி மெய்ப்பு கொண்டான். அக்கணமே புஷ்கரனும் ரிஷபனை திரும்பி நோக்கினான். “காய் நகர்த்துக, அரசே” என்று ரிஷபன் சொன்னான்.

✿தமயந்தியின் அணியறைக்குள் சேடி வந்து வணங்கி “பேரமைச்சர் கருணாகரர்” என்றாள். தமயந்தி வியப்புடன் “இங்கா? நான் வேள்விச்சாலைக்கு சென்றுகொண்டிருக்கிறேன் என்று சொல்” என்றாள். அவள் “அவர் பதற்றத்துடனிருக்கிறார்” என்றாள். தமயந்தி புருவம் சுளித்து எண்ணிநோக்கியபின் “சரி, அவரை வரச்சொல். ஸ்ரீதரரிடம் சென்று நான் அவையேக சற்று பிந்தும், அதுவரை வேறேதேனும் சடங்குகள் நிகழவேண்டும்

என்று சொல்” என்றாள். சேடி சென்றதும் பிற அணிச்சேடியர் செல்லலாம் என கையசைத்தாள்.

கருணாகரர் உள்ளே வந்து வணங்கியதுமே அவளுக்கு தீயசெய்தி என்று தெரிந்துவிட்டது. அமர்க என்று அவள் கைகாட்ட அவர் அமர்ந்தார். “வேள்விநிகழ்வு முடிய இன்னும் பொழுதிருக்கிறது அல்லவா?” என்றாள். “ஆம், அரசி. உச்சிப்பொழுதுக்குள் முடிந்துவிடும். நீங்கள் சென்று அமர்ந்து முடித்துவைக்கவேண்டும். அந்தணர்கொடைகளை உங்கள் கைகளால் நிகழ்த்தவேண்டும். அதன்பின்னர் அவைநிகழ்வுகள்.” அவள் அவர் முகத்தை கூர்ந்து நோக்கிவிட்டு “அரசர் இன்னும் வந்துசேரவில்லை அல்லவா?” என்றாள்.

“நீங்கள் ஒற்றர்கள் வழியாக அறிந்திருப்பீர்கள், அரசி. அரசர் விஜயபுரிக்குத்தான் சென்றார்.” தமயந்தி “ஆம்” என்றாள். “சற்றுமுன் பறவைச்செய்தி வந்தது. அரசரும் இளவரசரும் பிறரும் வந்துகொண்டிருக்கிறார்கள்.” அவள் அவர் முகத்தை கூர்ந்து நோக்கி “நல்ல செய்தி அல்லவா?” என்றாள். “இல்லை, அரசி” என்றார் கருணாகரர். பின்னர் சொல்தேடித் தொகுத்து “ஊழின் ஆடலென்றே கொள்க! பிறிதொன்றும் சொல்வதற்கில்லை” என்றார். “சொல்க!” என்றாள்.

“நிகரிப்போர் என்று ஒரு சூதாட்டம் நிகழ்ந்தது. அரசரும் இளவரசரும் ஆடினர்” என்றார் கருணாகரர். “அதில் அரசர் தோற்றார்.” தமயந்தி சில கணங்கள் உறைந்தவளாக அமர்ந்திருந்தாள். பின் மெல்ல கலைந்து “அவ்வளவுதானே? அரசு இளவரசருக்கு. நான் முடிசூட முடியாது. வேறென்ன?” என்றாள். “இல்லை, அரசி. அரசர் முற்றாகவே தோற்றிருக்கிறார்” என்றார் கருணாகரர். அவள் “முற்றாக என்றால்?” என்றாள். “முழுமுற்றாக. அரசரென்றும்

நிஷதக்குடிமகன் என்றும் அவர் கொண்டுள்ள அனைத்தையும் துறந்திருக்கிறார்” என்றார் கருணாகரர்.

தமயந்தி அதை முழுக்க புரிந்துகொள்ளாததுபோலத் தோன்றியது. அவள் விழிகள் வெறுமையாக இருந்தன. கருணாகரர் “அரசி, இந்த ஆட்டத்தை முழுமையாகவே ரிஷபன் வழிநடத்தியிருக்கிறான். முதலில் நிஷதகுடியின் முடியுரிமையை வைத்து ஆடுவதாகவே இருந்தது. நாற்களம் முன் அமர்ந்த பின்னர் ரிஷபன் புஷ்கரர் தன் முடியுரிமையுடன் குடியுரிமையையும் வைத்து ஆடுவதாக அறிவித்தான். அரசர் என்ன எண்ணினாரென்று தெரியவில்லை. அவரும் அதை ஏற்றுக்கொண்டார்” என்றார். தமயந்தி அதே நோக்குடன் இருந்தாள். “அவருக்கும் வேறுவழியில்லை. அனைத்தும் முன்னரே திட்டமிடப்பட்டிருந்தன போலும். அவையில் அமர்வது வரைதான் அவர் முடிவெடுக்க முடியும்” என்றார் கருணாகரர்.

“முழுக்கத் தோற்பது என்றால்?” என்றாள் தமயந்தி. அதுவரை சொல்லப்பட்டவை அவள் உள்ளத்திற்குள் செல்லவில்லை என்று தோன்றியது. “அவருடைய அனைத்து உடைமைகளும் உரிமைகளும் இல்லாமலாகும்” என்றார் கருணாகரர். “அவருக்கு நிஷதகுடியின் ஆதரவோ அரசுகளின் காப்போ இனி இல்லை.” தமயந்தி பொருளில்லாமல் தலையசைத்தாள். அவள் தான் சொல்வதை புரிந்துகொண்டிருக்கிறாளா என்று ஐயம்கொண்ட கருணாகரர் “அரசி, நிஷதபுரியில் உங்களை அரசி என நிலைநிறுத்தியது பேரரசர் நளன் கொண்ட உரிமைகளே. அவையனைத்தும் இல்லாமலாகிவிட்டன” என்றார்.

அவள் தொடப்பட்ட நீர்ப்பாவை என அலைவுகொண்டு விழித்து “இனி நான் அரசி அல்ல, அல்லவா?” என்றாள். “ஆம்” என்றார்

கருணாகரர். “பேரரசர் அரசிழக்கையிலேயே நீங்களும் அதை இழந்துவிடுகிறீர்கள். அவர் நிஷதர் என்னும் நிலையை இழக்கிறார். குடியிழந்தவர்கள் நான்கு வர்ணங்களிலிருந்தும் விலகி ஐந்தாவது நிலைக்கு சென்று சேர்கிறார்கள்.” அவள் அப்போதுதான் சினம்கொண்டாள். முகம் சிவக்க மூச்சு ஒலிக்க “இது எந்த நூல்நெறி?” என்றாள். “குடியுரிமையை எவரும் வைத்தாடுவதில்லை, அரசி” என்றார் கருணாகரர்.

“ஆனால் உங்கள் குடியுரிமையை நீங்கள் மீட்டுக்கொள்ளலாம்” என்று கருணாகரர் சொன்னார். “நளமன்னருக்குத் துணைவியாக நீங்கள் இருக்கும்வரை நீங்களும் உங்கள் மைந்தரும் ஐந்தாம் வர்ணத்தவரே. அந்த உறவை நீங்கள் வெட்டிக்கொள்ளலாம். மங்கலநாணையும் கணையாழியையும் கழற்றிவிட்டு அனல் சான்றாக்கி சான்றோர் எழுவர் முன் அந்தணர் வேதம் சொல்ல ஒழிந்தது உறவு என்றீர்கள் என்றால் நீங்கள் விதர்ப்ப அரசரின் மகளாக மீண்டுசெல்ல முடியும். இளவரசியென்றாக முடியும். ஷத்ரிய குடியினருக்கு மணவிலக்கும் மறுமணமும் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது என்று அறிவீர்கள்.”

“அம்முடிவை நான் எடுப்பேன் என நினைக்கிறீர்களா?” என்றாள் தமயந்தி. “அரசி, அம்முடிவை நீங்கள் எடுக்காவிட்டால் அனைத்து இழிவுகளுக்கும் ஆளாக நேரிடும். வர்ணமற்றவர் விலங்குகளைப்போல. ஆற்றலுள்ளோர் எவரும் அடிமைகொள்ளலாம். உடைமையென வைத்திருக்கலாம், விலைகூறி விற்கலாம். எவ்வகையிலும் தண்டிக்கலாம், கொல்லலாம். அவர்களுக்கு எவ்வகையான குடியுரிமைகளும் இல்லை. உடைமையுரிமையும் வாழ்வுரிமையும்கூட இல்லை.” தமயந்தி ஆம் என்று தலையசைத்தாள்.

“வேண்டுமென்றே உங்களை சிறுமை செய்ய புஷ்கரர் தயங்கமாட்டார். அவர் ஒழிந்தாலும் நம் பகையரசர்களும் அவர்களின் ஒற்றர்களும் உறுதியாக அதற்கு முன்வருவார்கள். அறிந்தே நம்மை நாம் இழிநரகத்திற்கு இட்டெறிவது அது. வேண்டியதில்லை… இது ஓர் அரசியல்சூழ்ச்சி என்றே இருக்கட்டும். இன்று இது அறப்பிழையெனப் படலாம். அலர் சில எழலாம். நாம் ஒருநாள் வெல்வோம். அதன்பின் இதற்குரிய நெறிநிலைகளை சொல்லி நிறுத்துவோம்” என்றார் கருணாகரர்.

அவர் முகம் மலர்ந்தது, குரல் வலுக்கொண்டது. “இங்கு வருகையிலேயே இதைத்தான் எண்ணிக்கொண்டு வந்தேன். ஒன்றும் தட்டுப்படவில்லை. பேசிவந்தபோது அறியாது இந்த வழி திறந்துகொண்டது. இவ்வெண்ணம் தோன்றியது தெய்வச்செயலே.” அவர் மேலும் ஊக்கம் கொண்டு “ஒன்று செய்யலாம். அரசரை நீங்கள் மணவிலக்கு செய்த மறுகணமே நீங்கள் விதர்ப்ப இளவரசி ஆகிறீர்கள். இங்குள்ள விதர்ப்ப வீரர்கள் உங்கள் கணையாழிக்கு கட்டுப்பட்டாகவேண்டும். அவர்களிடம் அரசரை அடிமையென பிடிக்கச் சொல்லுங்கள். உங்கள் அரசுக்குறி ஒன்றை அவர் கழுத்தில் அணிவியுங்கள். அக்கணமே அவர் உங்களுக்கு அடிமைப்பொருளென்றாவார். அதன்பின் பிறர் அவரை அடிமைகொள்ள வேண்டுமென்றால் உங்களிடம் பொருதியாகவேண்டும். அரசருக்கும் அதுவே காப்பு” என்றார்.

அவர் மேலும் உளவிரைவு கொண்டு எழுந்து கைகளை விரித்து “வர்ணமில்லாதவர்களை நான்காம் வர்ணத்தவர் பெண்கொடுத்தோ உடன்பிறப்பென குருதிச்சடங்கு ஆற்றியோ தங்கள் குடிக்குள் எடுத்துக்கொள்ளலாம். அவரை

விதர்ப்பத்துக்கு கொண்டுசென்று அங்குள்ள குடிகள் ஒன்றில் சேர்த்துக்கொள்ளுங்கள். அவர் அங்கே படைத்தலைமை கொள்ளமுடியும். ஒருநாள் படையுடன் வந்து இந்திரபுரியை வென்று மீண்டும் முடிசூடிக்கொள்ளவும் முடியும்… ஆம் அரசி, இது ஒன்றே வழி” என்று கூவினார்.

தமயந்தி “கருணாகரரே, அமைச்சர்கள் அரசனுக்கு நல்லாசிரியர்களும் வைதிகர்களும் ஆவர் என்பது தொல்நெறி. ஆசிரியராக நான் உங்களிடம் கேட்பது இது. ஒரு மனைவி எதன்பொருட்டு கணவனை உதறிச்செல்லலாம்?” என்றாள். கருணாகரர் “நான்…” என்று குரல் தடுமாறினார். “நான் அரசியலுரைக்கும் ஸ்மிருதிகளை கேட்கவில்லை, அதை நானே கற்றுள்ளேன். வேதம்திகழும் நா கொண்ட அந்தணர் உரைக்கவேண்டியது அழியா ஸ்ருதிகளின் சொல்லை” என்றாள் தமயந்தி.

கருணாகரர் விழிமூடி சற்றுநேரம் அமர்ந்திருந்தார். நெற்றியில் நரம்புகள் புடைத்து அசைந்தன. விழிதிறவாமலேயே எவருடனோ என மெல்லிய குரலில் சொன்னார் “தொல்நெறிகளின்படி வேதம்பழித்தல், மைந்தர்க்கு ஊறுசெய்தல், நீத்தாரைக் கைவிடுதல், மூத்தார் சொல்மீறல், குடிப்பழி கொள்ளுதல், அரசவஞ்சம் இழைத்தல், தன் கற்பை சான்றோரவையில் இகழ்தல் என்னும் ஏழு செயல்களின்பொருட்டு துணைவி கணவனை கைவிடலாம். அவற்றின் முதன்மை வரிசையும் அவ்வாறே. அவ்வாறு கைவிட்ட மனைவி இல்லப்பழி கொண்டவள் ஆகமாட்டாள். அவள் அவனில் பெற்ற மைந்தர் இயல்பாக அவனுக்கு நீர்க்கடன் கொண்டவர்கள். அவள் விழைந்தால் அதையும் மறுக்கலாம்” என்றார்.

“ஆனால் எதன்பொருட்டும் கணவனை கைவிடாதவளே கற்பரசி எனப்படுவாள்” என்றார் கருணாகரர். “தெய்வங்களே அஞ்சும் பெரும்பழி சூடியவன் ஆயினும் கணவனுடன் இருந்து அவனைக் காப்பதன்பொருட்டு அப்பெண் அத்தெய்வங்களாலேயே தூயோள் என வணங்கப்படுவாள். அவளுக்கு எப்பழியும் சூழாது. அவள் அவனுக்கு அன்னையென்றே அமையக் கடன்கொண்டவள். அன்னை மைந்தனை கைவிடும் தருணம் ஒன்றை தெய்வங்கள் படைக்கவில்லை.”

“அறிக, தெய்வமெழுந்து வந்து பலிகொண்ட அரக்கர்களும் அசுரர்களும் இறுதிக் கணம்வரை உடனிருந்த மனையாட்டியரையே கொண்டிருந்தனர். மண்டோதரி சீதைக்கு நிகரானவள் என்கின்றன தொல்கதைகள்... பெரும்பழிகொண்ட கணவர்களைக் கொன்ற தெய்வங்கள் அவர்களை வணங்கி விண்ணேற்றிக்கொண்டன” என்றார் கருணாகரர்.

“ஏனென்றால் மண்ணில் எந்த மானுடனும் முற்றிலும் துணையற்றவனாக ஆகிவிடக்கூடாது என்று எண்ணினர் மூதாதையர். பெண்ணுக்கு அவள் கருவிலெழும் மைந்தரின் துணை என்றும் உண்டு. தான் அளித்த முலைப்பாலாலேயே அவள் மண்ணில் வேர்கொள்வாள். நீத்தபின் விண்ணில் இடம் பெறுவாள். ஆணுக்கு பெண் இல்லையேல் இப்புவியில் ஏதுமில்லை, விண்ணேறும் வழிகளுமில்லை.”

கருணாகரர் கைகூப்பியபடி கண்விழித்தார். “அறம் இது. நாமறியாத வழிகொண்டது அது. அறிந்த முன்னோரின் சொற்களைப் பணிந்து ஒழுகினாலொழிய நாம் அறியவும் இயலாதது. முற்றறிய முழுதும் துறந்தவர்க்கே இயலும்” என்றார். “பெரும்பாவிகளிடமும் கருணைகொண்டு நெறிகளை

அமைத்தவர்களின் உளவிரிவை எண்ணும்போது தந்தையரே, தெய்வங்களே, இப்புவியில்தான் நீங்கள் பிறந்தீர்களா, இங்குதான் எளியேனும் வாழ்கிறேனா என நான் விழிநீர் உகுத்ததுண்டு. சென்றவர்களின் அடிகளை இத்தருணத்தில் சென்னி சூடுகிறேன்.”

தமயந்தி “நான் செய்யவேண்டியதென்ன என்று சொல்லிவிட்டீர், கருணாகரரே” என்றாள். “வேள்விச்சாலைக்குச் சென்று செய்தியைச் சொல்லி வேள்வி நிறுத்தத்தை அறிவியுங்கள். அவை கூட்டி அனைத்தையும் விளக்குங்கள். அரசர் எப்போது இங்கு வருகிறார்?” கருணாகரர் விழிகளைத் தாழ்த்தி “கிளம்பிவிட்டனர். நாளைமறுநாள் புலர்காலையில்” என்றார். தமயந்தி தலையசைத்தபின் எழுந்து கொண்டாள். இயல்பாக தன் ஆடையை அள்ளி சீரமைத்து குழல்நீவி அமைத்தபின் உள்ளறை நோக்கிசென்றாள்.

# நீர்க்கோலம் - 60

### 59. அரங்கொழிதல்

✿தமயந்தியின் அறைக்கதவை மெல்ல தட்டி சேடி “அரசி” என்றாள். அவள் கதவைத் திறந்ததும் “முரசுகள் ஒலிக்கின்றன. அவர்கள் அணுகிவிட்டார்கள்” என்றாள் சேடி. தமயந்தி “கருணாகரர் எங்கிருக்கிறார்?” என்றாள். “அவரும் சிற்றமைச்சர்களும் சிம்மவக்த்ரரும் படைத்தலைவர்களும் அனைவருமே கோட்டைவாயிலுக்கு சென்றுவிட்டார்கள்” என்றாள். தமயந்தி திரும்பி ஆடியில் தன்னை நோக்கியபின் “நான் முகம் கழுவிக்கொள்ளவேண்டும்” என்றாள். அவள் மிக எளிய ஆடையையே அணிந்திருந்தாள்.

அணிகொள்ளவேண்டுமல்லவா என்று நாவிலெழுந்த சொற்களை சேடி விழுங்கிக்கொண்டாள்.

சேடியுடன் சென்று முகம் கழுவி குழல் திருத்தியபின் தமயந்தி தலைமைச்சேடி சுபத்ரையிடம் “இந்திரசேனையை இங்கே வரச்சொல். இளவரசன் அமைச்சருடன் நிற்கவேண்டும் என்று சொல்லிவிடு” என்றாள். சுபத்ரையின் கண்கள் சிவந்திருந்தன. அவள் விழிகொடுக்காமல் “ஆணை” என்றாள். காவல்மாடத்தின் முரசுகள் ஒலிக்கத் தொடங்கின. அந்த ஓசை அணுகி வருவது போலிருந்தது. தமயந்தி சாளரத்தருகே சென்று வெளியே நோக்கியபடி நின்றாள். முதற்காலை ஒளியில் அரண்மனைமுற்றம் கண்கூசும்படி மின்னியது. கூரைச்சரிவுகள் நீர்ப்படலம்போல ஒளியடித்தன. அவள் பொருளில்லாமல் நோக்கியபடி நின்றாள்.

அகத்தளத்தில் சேடியர் விரைவுகொள்ளும் ஓசைகள் எழுந்தன. அழைப்புகள், ஆணைகள், மந்தணப்பேச்சுக்கள், காலடிகள், வளையொலிகள், உடைச்சரசரப்புகள். எவரோ “வந்துவிட்டார்களடி” என்றனர். “பேசாதே… அரசி” என்றது இன்னொரு குரல். அவர்கள் எவரும் துயருறுவதாகத் தெரியவில்லை. துயரை வெளிக்காட்ட வேண்டுமென்ற கட்டாயம்கூட முதுசேடியருக்கே இருந்தது. இளையோர் ஓசையை தாழ்த்திக்கொண்டாலும் கண்களில் ஆவலும் குறுகுறுப்பும்தான் தெரிந்தன. அவர்கள் எதையோ அடக்கிக்கொண்டதுபோல தோள்கள் இறுகி உடல் குறுகியிருக்க சிற்றடி வைத்து நடந்தார்கள்.

அவர்கள் எதிர்பாராத ஒரு நிகழ்வு, அது அளிக்கும் பரபரப்பின் உவகை என்றுதான் முதலில் தோன்றியது. மாறாதது என அவர்கள் எண்ணும் ஒன்று தலைகீழாக மாறுவது

அவர்களுக்குள் எப்போதுமிருக்கும் ஆழத்துக் கனவுகளை தூண்டிவிடுகிறதோ? சுபத்ரையிடம் மெல்லிய சிரிப்புடன் அதைப்பற்றி கேட்டாள். "அவர்களுக்குள் வாழும் கீழ்மை வெளிப்படும் தருணம் இது, அரசி" என்றாள் அவள். சிரித்தபடி "அனைவரிடமும்தான் அது உள்ளது" என்றாள் தமயந்தி.

சுபத்ரை சீற்றத்துடன் "கீழ்மைக்கும் எல்லையுண்டு. அவர்கள் உண்பது தாங்கள் அளித்த அன்னம். இங்கே உங்கள் முன் கண்கள் நீரோட நன்றி சொல்லி விதும்பாத எவருள்ளனர் இந்த அகத்தளத்தில்? உங்களை கண்முன் எழுந்த கொற்றவை என ஒருமுறையேனும் சொல்லி வணங்காதவர் உண்டா என்ன?" என்றாள். "ஆனால் இன்று மறுநிலை கொண்டுவிட்டனர். அவர்கள் குளக்கரையில் பேசுவதை நான் கேட்டேன். தூண்மறைவில் நான் நின்றமையால் என்னை அவர்கள் காணவில்லை. அனைவரும் இளம்சேடிகள்."

"பேரரசி ஐந்தாம்வர்ணத்தவள் ஆனால் என்ன வேலை பார்ப்பாள் என்று ஒருத்தி கேட்டாள். கன்றுத்தொழு கூட்டலாம். சாணிபொறுக்கி உலரவைத்து எரிவட்டு செய்யலாம் என்றாள் இன்னொருத்தி. அதைவிட தோலுரித்து பதப்படுத்தலாமே என்றாள் அப்பால் ஒருத்தி. அரசிக்கு அதெல்லாம் தெரியுமா என இளையவள் ஒருத்தி கேட்டாள். என்னடி சொல்கிறாய், அவர்கள் யார்? சத்ராஜித் அல்லவா? அவர்களுக்குத் தெரியாத ஒன்று உண்டா என்றாள் இன்னொருத்தி. அனைவரும் சேர்ந்து நகைத்தனர். ஏன் நகைக்கிறார்கள் என்று பிறர் கேட்டுக் கேட்டு அவர்களும் நகைத்தனர்."

"அங்கே நின்றிருந்த என் உடல் பற்றி எரிந்தது. என்னை அவர்கள் காணவில்லை. அப்படியே திரும்பி வந்துவிட்டேன். இந்த அரண்மனையில் பெண்டிரின் உணர்வுகள் இவைதான்,

அரசி” என்றாள் சுபத்திரை. “தாங்கள் சத்ராஜித் ஆனதற்காக எவரெல்லாம் பொறாமை கொண்டிருக்கக்கூடும் என எண்ணுகிறீர்கள்? மகதனும் அங்கனும் வங்கனும் மாளவனும் மட்டுமா? அல்ல அரசி, அதற்கிணையாகவே இங்கே அடுமனையில் கலம் கழுவும் சூதப்பெண்ணும் பொறாமை கொண்டிருக்கிறாள். மானுட உள்ளத்தை என்னால் புரிந்துகொள்ளவே முடியவில்லை.”

தமயந்தி “உள்ளூர எவர் எங்கிருக்கிறார் என நாம் எப்படி அறிவோம்?” என்று புன்னகை செய்தாள். “நான் தங்கள் முடிவை உசாவும் தகுதிகொண்டவள் அல்ல, அரசி. ஆனால் இவர்கள்முன் இப்படி இழிவுகொள்ளத்தான் வேண்டுமா என்றே என் உள்ளம் சொல்கிறது. விதர்ப்பத்தின் இளவரசியென நீங்கள் தலைநிமிர்ந்து தேரேறிச் சென்றிருந்தீர்கள் என்றால் நான் என் தெய்வங்கள் முன் சென்று விழுந்து தலையறைந்து நன்றி சொல்லியிருப்பேன்.”

தமயந்தி “இவை ஊழ் என்றால் அதனுடன் போரிடாமலிருப்பதே மேல்” என்றாள். “இவர்களுக்கும் ஒரு தருணத்தை அளிக்கவேண்டுமென்று தெய்வங்கள் எண்ணியிருந்தால் அவ்வாறே ஆகுக” என்றாள். சுபத்ரை பெருமூச்சுவிட்டு “தங்கள் நிலையை ஏன் என் மடிவளர்ந்த இளையோர் அடையவேண்டும்? அவர்கள் செய்த பிழை என்ன?” என்றாள். “தந்தையின் செல்வத்திற்கு உரிமையுள்ள மைந்தர்கள் பழிக்கும் பொறுப்பேற்றாக வேண்டும்” என்றாள் தமயந்தி.

சுபத்ரை திரும்ப வந்தபோது இந்திரசேனை அவளுடனிருந்தாள். அவள் புத்தாடை அணிந்து அணிபுனைந்திருந்தாள். தமயந்தி விழிதூக்க சுபத்ரை “ஆம், நானேதான் அணிபுனையச் செய்தேன்.

அங்கே குடிகள் முன் என் இளவரசி எளிய பெண்ணாகச் சென்று நிற்கவேண்டியதில்லை. தெய்வங்கள் அவ்வாறு எண்ணுமென்றால் அவ்விழிமகன் என் இளவரசியின் அணிகளை களையட்டும்” என்றாள்.

தமயந்தி மகளின் தலையைத் தொட்டு அருகழைத்து அணைத்துக்கொண்டாள். “இன்று என்ன நிகழவிருக்கிறது என்று அறிவாயா?” என்றாள். “ஆம்” என்று அவள் சொன்னாள். “அதில் உனக்கு துயர் உள்ளதா?” என்றாள். “ஆம், எனக்காக அல்ல. தந்தையின்பொருட்டு” என்று அவள் சொன்னாள். “இது அவர் ஆடிய ஆட்டத்தின் விளைவால் அல்லவா?” என்றாள் தமயந்தி. “அன்னையே, இதையே ஒரு சேடியும் என்னிடம் சொன்னாள். இந்த அரசும் அரண்மனையும்கூட அவர் ஆடிய ஆட்டத்தின் பெறுபயன்களே என்று நான் சொன்னேன்.” தமயந்தி முகம் மலர்ந்து “நன்று” என்றாள். சுபத்ரை “அவர்கள் சத்ராஜித் என அவையமர்ந்த அரசி தமயந்தியின் குருதி, பேரரசி. அதற்குரிய எண்ணமும் சொல்லுமே எழும்” என்றாள்.

முரசுகள் அரண்மனை வாயிலில் ஒலித்தன. தமயந்தி வெளியே எட்டிப்பார்த்தாள். காகக்கொடி பறக்க ஒரு தேர் முதலில் வந்தது. அதைத் தொடர்ந்து அணிச்சேடியர் ஏறிய திறந்த தேர் வந்தது. தொடர்ந்து மங்கல இசை எழுப்பியபடி சூதர் செறிந்த தேர். கவச உடையணிந்த வீரர்கள் ஏறிய காவல்புரவிகளின் நிரைக்குப்பின் புஷ்கரனின் அரசத்தேர் வந்தது. வாழ்த்தொலிகள் ஏதும் எழவில்லை. முரசொலி அடங்கியதும் சகட ஓசையும் குளம்போசைகளும் மட்டும் கேட்டன.

புஷ்கரனின் தேர் நின்றதும் காவலர் ஓடிச்சென்று படியை எடுத்து கீழே வைத்தார்கள். அவன் இறங்கியபோது அவனுடன்

வந்த வீரர்கள் மட்டும் வாழ்த்தொலி எழுப்பினர். அரண்மனை முற்றத்தைச் சூழ்ந்து நின்றிருந்த இந்திரபுரியின் காவலர்கள் விழிகள் திறந்திருக்க அசையாமல் நின்றனர்.

“எவரும் வாழ்த்தொலிக்கவில்லை” என்றாள் சுபத்ரை. தமயந்தி புன்னகைத்து “விஜயபுரியில் சூதில் பேரரசர் தோற்றுக்கொண்டிருந்தபோது வெளியே ஒவ்வொரு காய்நகர்த்தலுக்கும் நகர்மக்கள் உவகைக்கூச்சலிட்டு நடனமிட்டனர். அவர் முற்றிலும் தோற்றபோது அந்நகரமே கொந்தளித்துக்கொண்டிருந்தது. இன்றும் அவர்கள் விழா கொண்டாடிக் கொண்டிருக்கிறார்கள்” என்றாள். சுபத்ரை “ஆனால்...” என்று சொல்ல அவள் மேலும் புன்னகைத்து “அவர்களே இங்குள்ள குடிகளும்” என்றாள்.

புஷ்கரன் இடையில் கைவைத்து நின்று சுற்றிலும் நோக்கியபின் கையசைத்தான். அவனைத் தொடர்ந்து வந்த மூடுதிரையிட்ட தேர் முற்றத்தில் ஏறி நின்றது. அதிலிருந்து நளன் இறங்கினான். எளிய வெண்ணிற ஒற்றையாடை மட்டும் அணிந்திருந்தான். கண்கள் ஒளிக்குக் கூச சற்றே தலைகுனிந்து நின்றான். கூடிநின்ற வீரர்களிடமிருந்து எழுந்த மெல்லிய பேச்சொலியின் கார்வை தவிர வேறெந்த குரலும் எழவில்லை. தொடர்ந்து வந்த தேர்களில் இருந்து கருணாகரரும் பிறரும் இறங்கி நின்றார்கள்.

தமயந்தி “அவன் அரண்மனை முற்றத்தை அரங்கென்று ஆக்க விழைகிறான்” என்றாள். சுபத்ரை அவளை திகைப்புடன் நோக்கினாள். மூடுதிரைத் தேர் ஒன்று வந்து சற்று வளைந்து அப்பால் நின்றது. அதை நோக்கி இரு வீரர் ஓடி படியமைக்க உள்ளிருந்து திரைவிலக்கி வெளியே வந்த மாலினிதேவி அவளை வாழ்த்தி குரல்கள் எழுப்பப்படும் என

எண்ணியவள்போல சூழ நோக்கினாள். அங்கிருந்த அமைதியை அப்போதுதான் முழுதுணர்ந்து கைகளைக் கட்டியபடி விலகி நின்றாள். புஷ்கரனின் சிற்றமைச்சர் ஒருவர் பணிந்து ஏதோ சொல்ல கையசைத்து அவர் விலகிச்செல்ல ஆணையிட்டாள்.

தொடர்ந்து தேர்கள் வந்துகொண்டிருந்தன. சுநீதரும் ரிஷபனும் தேர்களில் இருந்து இறங்கி புஷ்கரன் அருகே வந்து சற்று விலகி நின்றனர். அவை ஒருங்குவதை தமயந்தி நோக்கி நின்றாள். அந்த இடத்தில் அது நிகழவேண்டுமென்ற திட்டம் எவருடையது? புன்னகையுடன் கைகட்டி நின்றிருக்கும் மாலினியிடமே முதல் விழி சென்றது. ஆனால் புஷ்கரனின் அருகே சற்று உடல் வளைத்து நின்றிருக்கும் ரிஷபனே அனைத்துக்கும் அடிப்படை என அரசுசூழ்தலறிந்தவர் உய்த்துவிட முடியும். அவன் நின்றிருப்பதிலேயே ஒரு பிழை இருந்தது. ஒரு கோணல். அவன் கால்கள் ஒன்றைவிட ஒன்று சிறிதாக இருக்கக்கூடும். அவன் உடலின் ஒரு பக்கம் இன்னொன்றைவிட சிறிதாக இருக்கலாம். அவன் உள்ளத்தின் இயல்பே உடலில் வெளிப்படக்கூடும்.

ஸ்ரீதரர் மேலேறிவந்து இடைநாழியின் மறுமுனையில் நின்று தலைவணங்கினார். அவள் ஏறிட்டு நோக்க “அரசி, தங்களை அரசர் அழைத்துவரும்படி ஆணையிட்டார்” என்றாள். அவள் எழுந்து இந்திரசேனையின் தலையைத் தொட்டு விழிகளால் வரும்படி சொல்லிவிட்டு முன்னால் சென்றாள். படிகளில் இறங்கி கூடத்தைக் கடந்தபோது அங்கே அரண்மனை ஊழியர்கள் தோள்முட்டிச் செறிந்திருப்பதை கண்டாள். அவர்கள் அமைதியாகப் பிரிந்து வழிவிட்டார்கள். அவள் அதனூடாக கடந்து சென்றபோது மெல்லிய பேச்சொலிகளின் முழக்கம் எழுந்தது.

முற்றத்தில் கண்கூசும் வெயில். அவள் முகத்தைச் சுளித்தபடி படிகளில் இறங்கியபோது அங்கே எழுந்த கலைவோசை முற்றத்தில் நின்று ஆடை சீரமைத்தபோது அவிந்தது. அமைதி எழுந்து சூழ அவள் விழிதூக்கி புஷ்கரனையும் அருகே நின்றிருந்த ரிஷபனையும் பார்த்தாள். புஷ்கரன் அவள் நோக்கை விலக்க ரிஷபன் எந்த உணர்வுமில்லாமல் வெறும் நோக்கை நிறுத்தினான். சுநீதர் கரவுப் புன்னகையுடன் புஷ்கரனிடம் ஏதோ சொன்னார். அவள் நளனை நோக்கினாள். அவன் ஒருகணம் விழிதொட்டபின் தலைகுனிந்தான். அமைச்சர்கள் கைகூப்பியபடி நின்றிருந்தனர். இந்திரசேனனை ஒரு காவலர்தலைவன் அழைத்துவந்து அருகே நிறுத்தியிருந்தான்.

இந்திரசேனை தமயந்தியின் மேலாடையைப் பற்றியபடி அவள் உடலில் பாதி மறைந்து நின்றாள். காலைவெயிலில் அனைவருமே வியர்வை வழிய முகம் சுளிக்க நின்றிருந்தனர். அந்த முகச்சுளிப்பே உள்ளத்தையும் சுளிக்க வைத்து அனைவரையும் எரிச்சல்கொண்டவர்களாக ஆக்கியது. சில சிற்றமைச்சர்களும் ஏவலர்களும் கண்ணீர் வழிய நின்றிருந்தார்கள். அமைதியில் எங்கோ ஒரு கலம் உருளும் ஓசை. ஆடை உரசும் ஒலியுடன் எவரோ அப்பால் நடந்தார்கள்.

“ரிஷபரே, சொல்லும்” என்றான் புஷ்கரன். ரிஷபன் “விதர்ப்ப அரசி, தாங்கள் அறிந்திருப்பீர்கள்” என்றான். தமயந்தி கைநீட்டி இடைமறித்து “நான் அறிந்தது இருக்கட்டும். நீ சொல்லவேண்டியதை முழுமையாக சொல்” என்றாள். அவன் “அவ்வண்ணமே” என எந்த உணர்வுமின்றி சொல்லி “நிஷதகுலத்தின் அரசராக சபரகுடிப் பிறந்த நளன் அமைந்து நாடாண்டது குடித்தலைவர்களின் கோலாணையின்படியே.

குடித்தலைவர்கள் சபரனாகிய நளன் மீது மூன்று குற்றச்சாட்டுக்களை சுமத்தினார்கள். நிஷாதர்களின் குலதெய்வமாகிய கலியை இடநீக்கம் செய்து அங்கே அயல்தெய்வமாகிய இந்திரனுக்கு ஆலயம் அமைத்தது முதற்பிழை.”

“அப்பிழை நிகழ்ந்த பின்னர் பதினெட்டுமுறை அக்குடித்தலைவர்கள் பேரரசர் முன் கோல்தாழ்த்தியிருக்கிறார்கள்” என்றாள் தமயந்தி. “நான் சொல்லாடவில்லை, அரசி. நான் எளிய ஊழியன். எனக்கிடப்பட்ட ஆணைப்படி குடித்தலைவர் சொற்களை சொல்லவிருக்கிறேன்” என்றான் ரிஷபன். “நிஷதகுடியின் தலைவராக நளனையே குடித்தலைவர் தேர்ந்தெடுத்தார்கள். அவர் ஷத்ரிய இளவரசியாகிய உங்களை பரிவேள்வி செய்ய வைத்ததும் நீங்கள் நிஷாதநகரியில் சத்ராஜித் என அமைவதும் இரண்டாவது பிழை.”

தமயந்தி “அதை படைமுகத்தில் மட்டுமே சொல்லியிருக்கவேண்டும். புரவியை கடந்துபோக விட்டது அவர்களின் பிழை” என்றாள். அவளை கேட்காதவன்போல ரிஷபன் “மூன்றாவது பெரும்பிழை, காளகக் குடித்தலைவராகிய சீர்ஷரை உணவுக்கூடத்தில் வெட்டி வீழ்த்தியது. அதன்பொருட்டு காளகக்குடி நளன் மீது வஞ்சம் கொண்டுள்ளது” என்றான். தமயந்தி அவனை நோக்கியபடி நின்றாள். “இப்பிழைகளின்பொருட்டு நளன் குடித்தலைவர்களால் தொல்முறைப்படி முடிநீக்கம் செய்யப்பட்டார். அவர்கள் கோலேந்தி அவை அமர்ந்து இளையவராகிய புஷ்கரரை அரசர் என தெரிவுசெய்தனர்.”

“ஆகவே இனி காளகக்குடித் தோன்றலும் வீரசேனரின் மைந்தருமாகிய புஷ்கரன்தான் நெறிகளின்படி நிஷாதர்களின் அரசர். அதை முறைப்படி சபரகுலத்து நளனுக்கு தெரிவித்தோம். அதை அவர் ஏற்காமல் முடிதுறக்க மறுத்தமையால் அவரை நிஷத அரசர் புஷ்கரன் போருக்கு அறைகூவினார். குடிப்போரைத் தவிர்க்கவேண்டும் என்று குலமூத்தார் விழைந்தமையால் அது நிகரிப்போராக நடக்கட்டும் என முடிவெடுக்கப்பட்டது. சென்ற சனிக்கிழமை விஜயபுரிநகரில் குலத்தலைவர்களும் குடிகளும் முன்னிலையாக, அனல் சான்றாக நடந்த நாற்களப் போரில் நளன் முழுத்தோல்வி அடைந்தார். தன் முடியுரிமையுடன் குடியுரிமையையும் வைத்து ஆடி இழந்தார்.”

அவன் சொல்லி முடித்ததை இரு நிமித்திகர்கள் ஏற்று கூவினர். அது எதிரொலி என மேலும் மேலும் நிமித்திகர்களால் சொல்லப்பட்டு பரவிச்சென்றது. நகரெங்கும் அச்செய்தி பரவ குடிகள் எழுப்பிய ஓசை முழங்கியது. முரசொலி எழுந்தபோது மீண்டும் அமைதி உருவானது. “முடியுரிமையை இழந்த நளனின் அரசு, அரியணையுரிமைகள், கருவூலம் அனைத்தும் ஒரு பிடி மண்ணோ, ஒரு மணி அரிசியோ, ஒரு கந்தலாடையோ எஞ்சாமல் அரசர் புஷ்கரருக்கு உரிமையானவை என்று அறிக!” என்றான் ரிஷபன்.

உணர்ச்சியற்ற குரலில் அவன் தொடர்ந்தான் “குடியுரிமையை இழந்த நளன் நால்வர்ணத்திற்கும் வெளியே வர்ணமற்றவராக இனி கருதப்படுவார். அவர் மணந்த தேவியும் மைந்தரும் அவரைப்போன்றே வர்ணமற்றவராக ஆவார்கள். அரசர் அரண்மனை புகுந்து நிஷத அரியணையில் அமர்வதற்கு முன் அவர்கள் தங்கள் உரிமைகளை ஒழித்து நீங்கவேண்டும் என்று

இதனால் ஆணையிடப்படுகிறது." தலைவணங்கி அவன் கைகூப்பினான்.

தமயந்தி அங்கே கூடி நின்றவர்களை பார்த்தாள். அனைவரும் உடலில் வலிகொண்டவர்களைப்போன்ற முகத்துடன் மெல்ல அசைந்தனர். சிலர் கைகளையோ மேலாடையையோ கூர்நோக்கி எதையோ சீரமைத்தனர். தமயந்தி "எங்கள் அரசர் அனல் தொட்டு அளித்த ஆணைக்கு முழுக்க கட்டுப்படுகிறோம். கிளம்புகிறோம்" என்றாள். மாலினி அங்கிருந்தே உரக்க "அவ்வண்ணமே கிளம்ப முடியாது, கீழ்மகளே. நீ அணிந்திருக்கும் அணிகள் இவ்வரசுக்குரியவை. அவற்றை கழற்றிவிட்டுச் செல்..." என்றாள். அவள் தன் வஞ்சத்தையும் எக்களிப்பையும் மறைக்கவில்லை.

தமயந்தி "அவ்வாறே, அரசி" என தலைவணங்கினாள். பற்கள் தெரிய நகைத்தபடி "இங்கிருந்து நீ ஆடையெதையும் கொண்டுசெல்லக்கூடாது. அடிமைக்கு நல்லாடையணிய உரிமையில்லை. உனக்கும் மகளுக்கும் மரவுரி அளிக்க ஆணையிடுகிறேன். பத்மை..." என்றாள். மாலினியுடன் வந்த சேடி பத்மை "அரசி" என தலைவணங்க "அவளுக்கு பழைய மரவுரிஆடை ஒன்றை அளி. அவளுடன் சென்று அவளும் அவள் மகளும் இடையிலோ உடற்கரவிலோ எதையேனும் ஒளித்துக்கொண்டு செல்கிறார்களா என்று தேடிப்பார்" என்றாள். பத்மை "ஆணை" என்றாள்.

புஷ்கரன் கைநீட்டி அவளைத் தடுத்து "நளனின் மைந்தனையும் மகளையும் நான் இந்த விலக்கிலிருந்து தவிர்க்கிறேன். இது அரசாணை" என்றான். மாலினி திகைத்து பின் சினம் பற்றிக்கொள்ள "என்ன சொல்கிறீர்கள்?" என்று கைநீட்டிக் கூச்சலிட்டபடி முன்னால் வந்தாள், அவள் இளவரசி

என்பதையே மறந்துவிட்டவள்போல. அருகே நின்றிருந்த சேடிப்பெண் “அரசி, இது முற்றம்” என்றதும் அவளை நோக்கித் திரும்பி “போடி” என சீறியபின் “எப்படி அவர்களை நீங்கள் விலக்க முடியும்? எந்த நெறிகளின்படி?” என்றாள்.

கருணாகரர் “அவர்கள் இருவரும் வர்ணமில்லாதவர்கள் ஆவதை எவரும் தடுக்கமுடியாது. ஆனால் அவர்களை அரசர் அடிமைகளாகக் கொள்ளமுடியும். அடிமைகளுக்கு விடுதலை அளிக்கவும் குடியுரிமை கொடுக்கவும் அரசருக்கு உரிமை உண்டு” என்றார். புஷ்கரன் “ஆம், இரு குழந்தைகளையும் நான் அடிமைகளெனக் கொண்டு விடுதலை அளித்துள்ளேன். அவர்களை இங்குள்ள விதர்ப்பநாட்டார் விதர்ப்பத்துக்கு அழைத்துச் செல்லட்டும். இங்கிருந்தே...” என்றான்.

சிம்மவக்த்ரன் தலைவணங்கி “அவ்வாறே” என்றான். “இல்லை, நான் ஒப்பமாட்டேன். அவர்கள் இங்கிருக்கவேண்டும். நம் அடிமைகளாக இருக்கவேண்டும்” என்றாள் மாலினிதேவி. “நாவடக்கு. இல்லையேல் உன் தலையை உருட்டுவேன்” என்றான் புஷ்கரன். அவள் திகைத்துப்போய் ரிஷபனை நோக்க அவன் விழிகளால் ஆணையிட்டான். அவள் பற்களைக் கடித்துக்கொண்டு பின்னடைந்தாள். பின் தரையில் காறித் துப்பினாள்.

புஷ்கரன் “விதர்ப்பநாட்டு அமைச்சர்களும் அரசுப்பணியாளரும் அனைத்துப் படைகளும் குடிகளனைவரும் இப்போதே கிளம்பி நகரிலிருந்து அகல வேண்டும். நாளைமாலை இந்நகருக்குள் இருக்கும் விதர்ப்பர் எவராக இருப்பினும் கொல்லப்படுவார்கள்” என்றான். சிம்மவக்த்ரன் ஒன்றும் சொல்லாமல் வந்து நளனின் அருகே நின்றிருந்த இந்திரசேனனிடம் “விதர்ப்ப இளவரசே,

வருக. நம் நாட்டுக்குச் செல்வோம்” என்றான். அவன் திகைத்த விழிகளுடன் நின்றான்.

தமயந்தி “செல்க. அங்கே நற்பொழுதொன்றில் காண்போம்” என்றாள். பின் இந்திரசேனையிடம் “செல்க!” என்று சொல்லி தலையை வருடினாள். சுபத்ரை கண்ணீர் வழிய “சென்றுவருகிறோம், அரசி” என்றாள். “மைந்தரை உன்னிடம் அளிக்கிறேன், சுபத்ரை” என்றாள் தமயந்தி. சுபத்ரை கண்ணீரை வலக்கையால் மறைத்துக்கொண்டு இடக்கையால் இந்திரசேனையை அணைத்து முன்னால் நடந்தாள். சிம்மவக்த்ரன் “வருக, இளவரசே!” என்றபடி இளவரசனின் தோளில் கைவைத்தான். அவன் ஓடிவந்து குனிந்து தமயந்தியின் கால்களைத் தொட்டு வணங்கினான். “நலம் சூழ்க!” என அவள் வாழ்த்தினாள்.

இந்திரசேனன் சிம்மவக்த்ரனுடன் பாதிவழி நடந்து பின் நின்று திரும்பி நளனை நோக்கி ஓடினான். அவன் நளனின் கால்களை நோக்கி குனிய அவன் மைந்தனை கைவிரித்து வாரி எடுத்து நெஞ்சோடு சேர்த்துக்கொண்டான். முகத்தை தந்தையின் மார்பில் புதைத்து இந்திரசேனன் மெல்ல விசும்பினான். “ஆண்மகன் என்றிரு. எதுவும் முடியவில்லை” என்றான் நளன். அவன் விடுவித்துக்கொண்டு குனிந்து நளனின் கால்களைத் தொட்டு வணங்கியபின் சிம்மவக்த்ரனுடன் சென்றுசேர்ந்துகொண்டான். அவர்களுடன் விதர்ப்ப வீரர்கள் அனைவரும் வாள்களையும் வேல்களையும் தாழ்த்தியவர்களாக சேர்ந்துகொண்டார்கள்.

தமயந்தி அவர்கள் செல்வதை மாற்றமில்லாத முகத்துடன் நோக்கி நின்றாள். பத்மை “வா” என்று அவள் தோளைத் தொட்டாள். அவள் திரும்பி பத்மையுடன் உள்ளே சென்றாள்.

புஷ்கரன் நளனிடம் “நீ அணிந்திருக்கும் ஆடையும் இவ்வரசுக்குரியது. இங்குள்ள எவரிடமேனும் ஒரு மரவுரியை இரந்து பெற்று அணியலாம்” என்றான். நளன் தலைவணங்கியபின் இரு கைகளையும் விரித்து நீட்டி நின்றான். கருணாகரர் அருகே நின்ற ஒருவனிடமிருந்து மரவுரியை வாங்கியபடி ஓடி அவனருகே சென்றார். பின்னர் தயங்கி சுற்றுமுற்றும் நோக்கி அங்கே நின்ற ஒரு படைவீரனிடம் அளித்து “அவரிடம் கொடு” என்றார்.

அவன் திகைத்து “நானா?” என்றான். “ஆம், அளி” என்றார் கருணாகரர். அவன் இடம்பொருள் புரியாமல் இளித்தபடி “இதோ” என அதை வாங்கி நளனிடம் அளித்தான். நளன் அதை அங்கே நின்றபடியே உடுத்துக்கொண்டான். தன் வெண்ணிற ஆடையைக் கழற்றி மடித்து நிலத்தில் வைத்தான். “பொன்னோ நாணயமோ உன்னிடம் இல்லை அல்லவா?” என்றான் புஷ்கரன். “இல்லை, அரசே” என்றான் நளன். ஒற்றை மரவுரி ஆடை அணிந்து தமயந்தி வெளியே வந்தாள். அவளுக்கு அவ்வாடை பழக்கமில்லாததனால் அதை மார்புடன் இரு கைகளாலும் அள்ளிப் பற்றியிருந்தாள். அவளுடைய குதிகால்கள் வரைதான் அந்த ஆடை இருந்தது.

புஷ்கரன் நளனிடம் “நீங்கள் இருவரும் கிளம்பலாம்... இந்த அரண்மனை வளாகத்திலிருந்து நீ செல்ல நான் ஒப்புகிறேன். அதன்பின் ஆற்றலுள்ள எவரும் உன்னை அடிமைகொள்ளலாம்” என்றான். நளன் தமயந்தியை நோக்க அவள் அவனருகே வந்து நின்றாள். அவன் அவளிடம் தலையசைத்துவிட்டு தலைகுனிந்து நடந்தான். கருணாகரர் கண்ணீருடன் அவர்களைத் தொடர்ந்து சென்றார். அவருக்குப் பின்னால் ஸ்ரீதரரும் நாகசேனரும் சென்றனர். நளன் “அந்தணரே, உங்கள்

கடமை அரசுடனோ அரசனிடமோ அல்ல. குடிகளிடமும் அறத்திடமும் வேதத்திடமும்தான். அது இங்கு தொடரட்டும்" என்றான். "ஆம்" என்றார் கருணாகரர். அவர்கள் கைகூப்பியபடி நின்றுவிட்டனர்.

நளன் அரண்மனை முற்றத்தை நடந்து கடப்பதை அனைவரும் ஓசையில்லாமல் நோக்கி நின்றனர். அவர்களின் காலடியோசை மட்டும் ஒலித்தது. மூச்சொலிகள், ஓரிரு தும்மல்கள். புரவி ஒன்று குளம்பு மாற்றியது. ஒருவர் இருமினார். இரு வாள்கள் முட்டிக்கொண்டன. அரண்மனைக்குள் ஒரு கலம் விழுந்து உருண்டது. காலைவெயில் வெம்மைகொண்டிருந்தமையால் அனைவரும் வியர்த்திருந்தனர். சிறுகாற்று வந்து சுழன்றபோது வியர்வை வாடையும் குதிரைச் சிறுநீர் வாடையும் கலந்து வீசியது.

அவர்கள் அரண்மனையின் கோட்டைவாயிலைக் கடந்ததும் பின்னாலிருந்த திரளில் ஒருவன் "சத்ராஜித் வெல்க!" என்று கூவினான். அந்த ஓசையிலிருந்த கேலி அனைவரையும் நகைக்கச் செய்தது. அக்கணம்வரை இருந்த இறுக்கம் அச்சிரிப்பால் அவிழ கூட்டம் உரக்க பேசிச் சிரிக்கத்தொடங்கியது. "அந்த வேள்விப்பரியையும் கூடவே அனுப்புங்கள்" என்று ஒருவன் கூவினான். "விரும்பினால் இந்திரன் சிலையையும் கொண்டுபோகட்டும்" என்றது ஒரு குரல். கூச்சலும் சிரிப்புகளும் எல்லா திசைகளிலிருந்தும் எழுந்தன.

உப்பரிகைகளில் நின்றிருந்த பெண்களில் ஒருத்தி "தொழுவப் பணிக்கு எனக்கு ஒரு விதர்ப்ப அடிமை தேவை" என்றாள். அங்கிருந்த பெண்கள் கூவிச்சிரித்தனர். ஒருத்தி தன் தலையிலிருந்த வாடிய மலர்மாலையை எடுத்து மலர்களை

உருவி அவர்கள் மேல் வீசி “அரசி ஊர்வலம்!” என்று சொன்னாள். மற்ற பெண்களும் அதையே செய்யத் தொடங்கினர். பின்னர் கூடிநின்றவர்கள் கையில் அகப்பட்டவற்றை எல்லாம் எடுத்து அவர்கள்மேல் வீசினர். பழைய துணிகள், இலைச்சருகுகள், தோரணங்கள் என அவர்கள்மேல் வந்து விழுந்தபடியே இருந்தன.

நளன் உடல்குவித்து குனிந்து நிலத்தை நோக்கியபடி நடந்தான். தமயந்தி தலைநிமிர்ந்து தன்னைப் பார்த்து இளிநகை புரிந்த கூட்டத்தினரை நேருக்குநேர் நோக்கியபடி உறுதியான காலடிகளுடன் சென்றாள். கூவிச்சிரித்தபடி எதையாவது அவள்மேல் வீச வந்தவர்களில் அவள் விழிகளை சந்தித்தவர்கள் திகைத்து கைதளர பின்வாங்கினர்.

அவர்கள் கோட்டைவாயிலை அடைவதற்குள் நகர்மக்களில் பெரும்பகுதியினர் சாலைமருங்குகளில் கூடிவிட்டனர். கூச்சலும் பழிப்பும் கலந்த முழக்கமாக நகரம் அறைந்துகொண்டிருந்தது. அவர்களுக்குப் பின்னால் “சக்ரவர்த்தி, நில்லுங்கள்”, “ஐந்தாம்வர்ண சத்ராஜித் இதோ” என்று கூவியபடி வீணர்கூட்டம் ஒன்று வந்தது. ஒருவன் “தொழுப்பணிக்கு வாடி” என்றான். இன்னொருவன் “தொழுவத்தில் இரவில் குளிருமே” என்றான். “இரவு என் படுக்கையறையில் படுத்துக்கொள்” என்றான் அவன். அவர்கள் கைகளை அறைந்து துள்ளிக்குதித்து சிரித்தனர்.

அங்காடிமுகப்பை அடைந்தபோது ஒருவன் கள்மொந்தை ஒன்றை வாங்கிக்கொண்டு ஓடிவந்து அதை அவர்கள்மேல் வீசினான். “இனிய கள்! கள்ளில் ஊறிய காட்டாளர்கள்”! என்று கூவினான். மேலும் சிலர் கள்ளை வாங்கிக் குடித்தபடியே வந்து எஞ்சியதை அவர்கள்மேல் வீசினர். நளன் கால்தடுக்கி

பலமுறை விழப்போனான். அவன் தோளை தமயந்தி தன் கைகளால் வலுவாகப் பற்றியிருந்தாள். தெருநாய்க் கூட்டம் எல்லையில் நிற்பதுபோல அவர்கள் அனைவரும் கோட்டைவாயிலில் நின்றுவிட்டனர். ஊளைகள் சிரிப்புகள் பின்னால் ஒலித்தன.

கோட்டைவாயிலைக் கடந்தபோது நளன் கால்தளர்ந்து அமரப்போனான். அவன் தோளை தமயந்தி பற்றிக்கொண்டாள். “செல்வோம், அமரக்கூடாது” என்றாள். “என்னால் நடக்கமுடியவில்லை” என்று அவன் சொன்னான். அவள் அவனை மெல்ல தாங்கிச் சென்றபடி “அருகேதான் காடு… அதற்குள் நுழைந்துவிடுவோம்” என்றாள். அவன் தழைந்த குரலில் “நான் உணவருந்தி மூன்று நாட்களாகின்றன” என்றான். “விடாய் என்னைக் கொல்கிறது” என்றபோது குரல் மேலும் தளர்ந்து அழுகையென்றே ஒலித்தது.

“காட்டுக்குள் உணவும் நீரும் உண்டு” என்று அவள் சொன்னாள். நிஷதபுரியின் அரசர் அரண்மனை புகுவதை அறிவிக்க கோட்டையின்மேல் காவல்மாடங்களில் பெருமுரசுகள் முழங்கத் தொடங்கின. நகர்மக்கள் எழுப்பிய வாழ்த்தொலி அவ்வோசையை மூழ்கடித்தபடி பெருகியெழுந்தது.

# நீர்க்கோலம் - 61

## 60. நிழலியல்கை

“சூதாடுவது வெறும் ஆடலல்ல, அது தெய்வங்களை அறைகூவுதல்” என்றார் ஆபர். “தற்செயல்களுடன் மானுடன் விளையாடலாகாது. தற்செயலென்னும் வடிவில்

எழுந்தருள்வதே தெய்வம்.” குங்கன் தாடியைத் தடவியபடி பெருமூச்செறிந்தான். விராடர் “ஆனால் தொன்றுதொட்டே இது ஆடப்படுகிறது, ஷத்ரியர்களுக்குரிய கலைகளில் ஒன்றாகக் கற்பிக்கப்படுகிறது” என்றார்.

“ஆம், கையருகே பேருருவம் கொண்டு நின்றிருக்கும் ஒன்றைத் தவிர்ப்பது அவ்வளவு எளிதல்ல” என்றார் ஆபர். “அத்துடன் ஊழ்வடிவமான தெய்வத்துடன் களமாடுவது ஷத்ரியனின் குலஅறமேயாகும். துணிவதும், துயர்களை எதிர்கொண்டு மீள்வதும் வேண்டியிருந்தால் தணியாமல் தன்னைக் கொடுப்பதும் அவன் கற்றுக்கொண்டாக வேண்டியவை. ஒவ்வொன்றும் ஒரு நூறாயிரத்துடன் பிணைந்துள்ளமையால் வைசியன் ஆடும் களமும் தெய்வங்களுக்குரியதே. ஆகவே ஷத்ரியனுக்கும் வைசியனுக்கும் மட்டும் சூது ஒப்பப்பட்டுள்ளது. அது மருந்து என, ஆசிரியர் அளித்த அளவுக்குள் மட்டும். துணிவைக் கற்றுக்கொள்ள துணியும் உளநிலையை நிலைநிறுத்த மட்டுமே சூது பயில்க என்கின்றன நூல்கள்.”

“தன்னைக் கடந்து சூதாடுபவனை நாற்களம் தன்னில் ஒரு காய் என அமர்த்திவிடுகிறது. அவன் ஆடுவதில்லை, ஆடப்படுகிறான் என அவன் அறிவதே இல்லை. புவியின் இருள்நிழல் ஊடாட்டங்களனைத்தையும் பரப்பிக் காட்டும் வல்லமை கொண்டிருப்பதனால் ஒருவன் வாழ்நாள் முழுமையையும் இக்களத்தை நோக்கிக் குனிந்தே கழித்துவிடமுடியும். அரசே, சூதில் மறந்து மீண்டெழுந்தவர் அரிதிலும் அரிது.”

“ஏனென்றால் சூது வெளியே நிகழ்வது மட்டும் அல்ல. விரிக்கப்பட்டிருக்கும் இக்களம் ஆடுபவனின் அகம். அகத்தை இப்படி ஏதேனும் புறப்பொருளில் ஏற்றிக்கொள்ளாமல் நம்மால்

பார்க்க முடியாது. அந்தணரின் வேள்விச்சாலையும், நிமித்திகர்களின் பன்னிருகளமும் வணிகர்களின் துலாக்கோலும் உழவர்களின் வயலும் உள்ளமே என்றறிக! நாற்களமென இருண்டும் ஒளிர்ந்தும் முடிவிலியை மடித்துச் சுருட்டிவைத்து இதோ பரவியிருப்பது உங்கள் இருவரின் உள்ளம். இக்காய்களை நகர்த்தி நகர்த்தி நீங்கள் கண்டுபிடிப்பது உங்களையேதான்."

"வாழ்க்கையின் நிகழ்வுகளை அறிய உள்ளத்தை நோக்குக! உள்ளே அறிந்ததைக்கொண்டு வெளியே வென்றடைக! உள்ளத்தை மட்டுமென உலகியலான் நோக்கலாகாது. அறியுந்தோறும் ஆழம் மிகும் அந்தக் கருஞ்சுனையில் இறங்க அறிதலையே வாழ்வெனக் கொண்டவர்களுக்கன்றி பிறருக்கு முன்னோர் ஒப்புதல் அளிக்கவில்லை" என்றார் ஆபர்.

"அக்களத்தின் முன் அமர்ந்த நளன் ஆடியது எதைக் கொண்டு? அரசே, ஒன்றறிக! சூதுக்களத்தில் எதுவும் திசைகளுக்கு அப்பாலிருந்து வருவதில்லை. கைவிரல்களென வந்தமைவது ஆடுபவனின் ஆழமே. அனைத்தும் அங்கிருந்தே எழுகின்றன. விழையப்படாத தோல்வியை எவரும் அடைவதில்லை" என்றார் ஆபர். "அவன் விழைந்தானா அரசை இழக்க? அரிய துணைவியுடன் இழிவுபட்டு கானேக?" என்றார் விராடர் சினத்துடன். "ஆம்" என்று ஆபர் சொன்னார். "ஏனென்று அறிய நளதமயந்தியின் கதையை மீண்டும் கேட்கவேண்டும்."

விராடர் கொந்தளிப்புடன் "வீணுரை. நீங்கள் அந்தணர் என்பதனால் நான் இதை பணிந்து கேட்டாகவேண்டும். ஏற்றுக்கொள்ளவேண்டும் என்பதில்லை" என்றார். இகழ்ச்சியுடன் "அந்தணருக்கு இருக்கும் உளச்சிக்கல் இது. அவர்கள் வாழ்வதில்லை. பெருக்கு நோக்கி கரையிலமர்ந்திருப்பவர்கள்.

நீந்துபவர்களின் கையசைவை கால்விசையைக் கண்டு கருத்துக்களை உருவாக்கிக் கொள்கிறார்கள்" என்று தொடர்ந்தார்.

ஆபர் புன்னகையுடன் "ஆம், அவர்களால்தான் கருத்துக்களை உருவாக்கிக்கொள்ள முடியும். ஏனென்றால் மூழ்கிச் சாவோம் என்னும் அச்சம் அவர்களுக்கில்லை. தன் நீச்சலை மட்டுமே கொண்டு அனைத்தையும் கணிக்கும் எல்லையும் கட்டுப்படுத்துவதில்லை" என்றார். விராடர் திரும்பி "குங்கரே, நீங்கள் சொல்லுங்கள். உங்கள் சொற்களை நான் நம்புகிறேன். சூதில் தான் தோற்கவேண்டுமென நளன் விரும்பினானா?" என்றார்.

குங்கன் தாடியைத் தடவியபடி தலைகுனிந்து அமர்ந்திருந்தான். "ஆம், அவரால் சொல்லமுடியும்" என்றார் ஆபர். குங்கன் நிமிர்ந்து ஆபரை நோக்கினான். இருவர் விழிகளும் சந்தித்தன. சில கணங்களுக்குப்பின் குங்கன் மீண்டும் பெருமூச்சுவிட்டான். "சொல்லுங்கள் குங்கரே, அவர் சொல்வது உண்மையா?" என்றார் விராடர். குங்கன் "ஆம்" என்றான்.

உச்சி உணவு உண்டு சுதேஷ்ணை துயில்கொண்டபின் திரௌபதி மெல்ல வெளியே வந்தாள். அரண்மனை அறைகளுக்குள் இருப்பது அவளுக்கு சலிப்பூட்டியது. வெளியே சென்றுவரவேண்டும் என்ற எண்ணம் எழுந்தபின்னர்தான் எப்போதும் அவள் அரசியல்ல, சேடி என்னும் தன்னுணர்வை அடைந்தாள். நீள்மூச்சுடன் இடைநாழியில் நடந்தாள். காவலர்கள் அவளைக் கண்டு நட்புடன் புன்னகைத்தனர். அரண்மனைத்தோட்டத்தில் நிழல் செறிந்து கிடந்தது. மரக்கூட்டங்களுக்குமேல் கதிர்வெளி பெருகியிருப்பதை கீழே நின்றிருக்கும் எவரும் உணரமுடியாது.

அவள் சோலைக்குள் சென்றாள். உதிர்ந்து கிடந்த மலர்களை மிதிக்காமல் நடப்பதற்காகப் போடப்பட்டிருந்த கற்களில் கால்வைத்து உள்ளே சென்றாள். மலர்கள் வெயிலில் வாடிய மணம் நிறைந்திருந்தது. காலையில் மலர்மணத்திலிருக்கும் புத்துணர்வுக்கு மாற்றாக இனிய சோர்வொன்றை அளித்தது அந்த மணம். பறவைகள் கிளைநிழல் செறிவுகளுக்குள் புகுந்து சிறகோய்ந்து அமர்ந்திருந்தன. அவற்றில் சில பறவைகள் எழுந்து அமர்ந்து கலைந்து ஓசையிட்டன. மிகத் தாழ்வாக வந்து வளைந்து மேலேறியது ஒரு சிறிய குருவி.

அவள் அங்கிருந்த ஒரு கற்பீடத்தில் அமர்ந்தாள். கைகளை மார்பில் கட்டியபடி மரக்கிளைகளை அண்ணாந்து நோக்கிக்கொண்டு வெறுமனே உள்ளத்தை ஓடவிட்டாள். தொலைவில் முதுவிறலியான சாலினி கூன்கொண்ட உடலுடன் முலைகள் தொங்க, இரு கைகளையும் நிலம் நோக்கி வீசி, நான்குகால் விலங்கென அங்கிருந்தே புன்னகைத்தபடி வருவது தெரிந்தது. அவள் தன்னை தேடித்தான் வருகிறாள் என்று தெரிந்ததும் அவள் சலிப்புடன் கால்களை நீட்டிக்கொண்டாள்.

சாலினி அருகே வந்து “நலமாக இருக்கிறீர்களா, தேவி?” என்றாள். திரௌபதி “ஆம், சேடியருக்குரிய நலம்” என்றாள். சாலினி அவளருகே நிலத்தில் அமர்ந்து அங்கிருந்த சிறிய பாறை ஒன்றில் சாய்ந்து முதுகை நிமிர்த்திக்கொண்டாள். “அன்னையே, தேவீ” என அலுப்பொலி எழுப்பியபின் “சேடியருக்கென்ன? மேலோர் அளி இருந்தால் அரண்மனை வானுலகு” என்றாள். அவள் ஏன் வந்திருக்கிறாள் என்று திரௌபதி புரிந்துகொண்டாள். சாலினி “நான் அகத்தளத்திற்குச்

சென்றேன். அங்கே அந்தச் சிறுமிக்கு மீண்டும் ஒரு சிறு தேவாட்டு பூசை நிகழ்த்தினேன்” என்றாள்.

“எப்படி இருக்கிறாள்?” என்றாள் திரௌபதி. சாலினி “நான் அப்போதே சொன்னேன், ஒன்றுமில்லை என்று. கன்னியர் இவ்வாறு கந்தர்வர்களால் கொள்ளப்படுவது எப்போதும் நிகழ்வதுதான். நான் என் நீண்ட வாழ்நாளில் எவ்வளவோ பெண்களை பார்த்துவிட்டேன்” என்றாள். “அவள் உள்ளம் நிலையழிந்திருப்பதுபோலத் தோன்றியது” என்றாள் திரௌபதி. “நான் ஒருமுறை நோக்கும்போது அழுதுகொண்டிருந்தாள். ஒருமுறை இருளில் உடலை ஒடுக்கி சுருண்டுகிடந்தாள். ஒருநாள் மாலையில் அணியும் ஆடையும் புனைந்து விழிபொங்கி நகைகொண்டிருந்தாள். அவள் பேசுவன எதுவும் இங்குள்ள சூழலுடன் பொருந்தவில்லை. இங்கில்லாத எவரையோ நோக்குபவள்போல விழிகொண்டிருக்கிறாள்.”

சாலினி கிளுகிளுப்புடன் நகைத்து “அனைத்தும் கந்தர்வர்களால் கொள்ளப்படுவதன் இலக்கணங்கள்” என்றாள். “தேவி, கந்தர்வர்களைக் கண்டதும் கூடியதும் அல்ல பெண்களை நிலையழியச் செய்வது. கந்தர்வர்கள் அப்பெண்ணின் உள்ளே விதைவடிவில் உறையும் கந்தர்வக் கன்னியை வெளியே எடுத்து அதனுடன்தான் கூடிக்களிக்கிறார்கள். தன்னை தானல்லாத ஒன்றென காணும் அதிர்ச்சியே பெண்களை உளம்சிதறச் செய்துவிடுகிறது. பெரும்பிழை இழைத்துவிட்டதாகவும், உடலும் உள்ளமும் கறை கொண்டுவிட்டதாகவும் உணர்கிறார்கள். இழிவுணர்வும் குற்றவுணர்வும் கொண்டு துவள்கிறார்கள். பின்னர் அக்கேளியை நினைவுகூர்ந்து மலர்ந்தெழுகிறார்கள்.”

குறுஞ்சிரிப்புடன் சாலினி தொடர்ந்தாள் “மெல்ல அவர்கள் உணர்வார்கள் அது பிறிதொருத்தி என. அப்பிறிதை ஒடுக்கி உள்ளே ஒளிக்கக் கற்றுக்கொள்வார்கள். தேவி, முற்றிலும் சீரானவர்கள் பிழையின்றி இரண்டாகப் பிரிந்தவர்கள்.” திரௌபதி அவளை நோக்கியபின் “நான் சுபாஷிணியை நன்கறிந்திருப்பதாக எண்ணியிருந்தேன்” என்றாள். “என்ன அறிந்திருந்தீர்கள்?” என்றாள் சாலினி. “எளிய பெண். இனியவள். கனவுகள் கொண்ட அகவையள். இன்னும் குழந்தைமை மாறாதவள்” என்றாள்.

“ஆம், ஆனால் அவள் விழிகளை நோக்கியிருந்தீர்கள் என்றால் அவை எப்போதும் பிறிதொன்றையும் நோக்கிக்கொண்டிருப்பதை அறிந்திருப்பீர்கள். நம்முடன் உரையாடுகையில் அவள் தன்னுடனும் உரையாடிக்கொண்டிருந்தாள், நம்மை நோக்குகையில் நம்மைக் கடந்தும் பார்வைகொண்டிருந்தாள். தேவி, அவள் ஏன் எளிதில் புண்படுபவளாக இருந்தாள்?” திரௌபதி சொல் என்பதுபோல நோக்கினாள்.

“அவள் மிகுந்த தன்முனைப்பு கொண்டிருந்தாள். இப்புவியையே தன்னை மையமாக்கி அறிந்தாள். அவளுக்குள் புவியாளும் சக்ரவர்த்தினிகளை விடவும் மேலான பீடத்தில் அவளே அமர்ந்திருந்தாள்.” சாலினி கண்களைச் சுருக்கி “அத்தகையோரே கந்தர்வர்களுக்கு விருப்பமானவர்கள். தேவி, குரங்குகள் தேடித்தேர்ந்த இளநீரை அவற்றை துரத்திவிட்டு பறித்துக்கொண்டுவருவார்கள். அவை சுவை மிக்கவையாக இருக்கும். கந்தர்வர்களால் சுவைக்கப்பட்ட பெண்ணே மானுடருக்கு மிகமிக இனியவள்” என்றாள்.

திரௌபதி புன்னகைத்தாள். “ஆம், தேவி. ஆணுக்கு ஒருபோதும் சலிக்காத பெண் எவள்? குன்றாத காமம் கொண்டவள். பெண்காமம் உடலில் மிக எளிதில் வற்றிக்கொண்டிருப்பது. குருதிவிலக்கின் சுழற்சிக்கு ஏற்ப. உடற்களைப்புக்கு ஏற்ப. சூழலின் உணர்வுநிலைகளுக்கு ஏற்ப. அத்துடன் அது தன்னைத்தானே பற்றவைத்துக்கொள்ள இயலாதது. கந்தர்வர்களுக்குரிய பெண்கள் தங்கள் குன்றாக் கற்பனையால் காமத்தை அணையாது காத்துக்கொள்பவர்கள். எரி என தான் தொட்ட ஆணை சூழ்ந்து அணைத்து உள்ளே அமைத்துக்கொள்ள அவர்களால் இயலும்.”

திரௌபதி “அத்தகைய பெண்களுக்கு ஏதேனும் உடற்கூறு சொல்லப்பட்டிருக்கிறதா உன் நூல்களில்?” என்றாள். “ஆம், அவர்களின் உதடுகள் எப்போதும் ஈரம் கொண்டிருக்கும். கண்களில் உலகை ஏளனம் செய்வதுபோன்ற நகைப்பிருக்கும்” என்றாள் சாலினி. “நகைக்கவும் நகையூட்டவும் தெரிந்தவர்கள் என்பதனால் தோழியர் சூழவே இருப்பார்கள். ஆனால் பிறர்குறித்த மன்றுபேசுதலில் ஆர்வம் கொள்ளமாட்டார்கள். காவியமும் இசையும் கற்றுத்தேரும் திறன்கொண்டிருப்பார்கள். ஆனால் மிக எளிதில் இவற்றிலிருந்து அகன்று வேறெங்கோ சென்று நின்றிருப்பதும் அவர்களின் இயல்பாக இருக்கும். சுவை நுண்மை கொண்டிருப்பர். அணிகொள்ள விழைவர். ஆனால் சுவையாலோ அணியாலோ ஆட்டுவிக்கப்படாதவர்களாக இருப்பர்.”

சாலினி தனக்கே என தலையசைத்து “சுருங்கச்சொல்லின் இங்குள்ள சிறந்ததை எய்த விழைவர். ஆனால் இங்குள்ள எதையும் இலக்கெனக் கொள்ளமாட்டார்கள்” என்றாள். திரௌபதி கைகளை மார்பில் கட்டியபடி விழிகள் தொலைவில்

தெரிந்த கொடிமுல்லையில் நிலைக்க அசைவிலாது அமர்ந்திருந்தாள். “நான் சொல்வது அவளைப்பற்றி மட்டும் அல்ல என்று அறிந்திருப்பீர்கள், தேவி” என்றாள் சாலினி. திரௌபதி “ஆம்” என்றாள். “அவளை மூன்று கந்தர்வர்கள் ஆண்டனர். ஐந்து கந்தர்வர்களை ஆள்பவர் நீங்கள்” என்றாள் சாலினி. “உச்சிக்கிளையில் பழுத்த கனி, அது வீரர்களுக்கு மட்டுமே உரியது.”

திரௌபதி “நீ கருதி வந்ததைச் சொல்” என்றாள். “என்னை கீசகர் அழைத்தார். மலைபோல் மேனியுடன் நான் கண்டிருந்த மாவீரர். கண் களைத்து தோள் சடைத்து சோர்வுற்றிருந்தார். அவளிடம் சொல், நான் உருகி அழிந்துகொண்டிருக்கிறேன் என என்று என்னிடம் சொல்லும்போது குரல் உடைந்து அழுதார். என்னிடம் அவள் வேண்டுவதென்ன என்று கேள் என்றார்.”

“நான் வேண்டுவதொன்றும் இல்லை, நான் என் வாழ்க்கையை கந்தர்வர்களுக்கு அளித்துவிட்டவள்” என்றாள் திரௌபதி. “ஆம், அதை நான் அவரிடம் சொன்னேன். அது மறு உலகம். அங்கே அவர் வரமுடியாது. அவர் அவ்வாறு பிறிதொரு கந்தர்வக் கன்னியை கண்டிருக்கிறார். அந்த உலகம் வேறு என அவர் உணர்ந்துமிருக்கிறார்” என்றாள் சாலினி. ”தேவி, அவர் அங்கு கண்ட அக்கந்தர்வப் பெண்ணும் உங்களைப்போலவே பெருந்தோள் கொண்டவள்.”

“அவருக்கு என்ன வேண்டும்? மற்போருக்கான மறுதரப்பா?” என்று திரௌபதி எரிச்சலுடன் கேட்டாள். “தேவி, நேரடியாகச் சொல்வதில் எத்தயக்கமும் இல்லை. ஆணையும் பெண்ணையும் இணைப்பது முதன்மையாக உடலே. வேறெந்த இயல்புகளையும் உணர்வுகளையும்விட உடற்பொருத்தமே மெய்க்காதலை உருவாக்கி நிலைநிறுத்துகிறது. உங்களை தன்

மறுபாதி என்று உணர்ந்து தவிப்பது கீசகர் அல்ல, அவரது உடல். உள்ளம் மொழிகொண்டது, கல்வியறிவது, நெறிகேட்பது. உடல் நாம் ஒருபோதும் அறியமுடியாத ஊர்தி. அது நம் கட்டுப்பாட்டுக்கு அப்பால்தான் எப்போதும் இருந்துகொண்டிருக்கிறது. நாம் அதை அறிவது அதை நாம் கட்டுப்படுத்த முயன்று தோற்கும்போது மட்டுமே."

"நான் அவரை ஏற்கமுடியாது. எந்நிலையிலும்" என்றாள் திரௌபதி. "நீ பெண் என்பதனால் அது ஏன் என்று கேட்கமாட்டாய் என நினைக்கிறேன். ஆண் உடலைவிட நுண்மைகொண்டது பெண் உடல். ஒருவரைக் கண்டதுமே ஒவ்வாதென நம் உடல் சொல்லிவிடுகிறது. அதற்குமேல் அதனிடம் நாம் எதையும் உசாவ முடியாது." சில கணங்கள் சாலினி அசைவிலாது அமர்ந்திருந்தாள். பின்னர் எழுந்துகொண்டு "ஆம், இதற்குமேல் சொல்ல ஒன்றுமில்லை" என்றாள். முதுகை நிமிர்த்தி "அன்னையே..." என முனகியபின் "ஆனால் தேவி, புறக்கணிக்கப்பட்ட காமமே புவியில் பெரும் நஞ்சு. எச்சரிக்கையுடன் இருங்கள்" என்றாள். திரௌபதி புன்னகைத்து "நான் கந்தர்வர்களால் காக்கப்படுகிறேன்" என்றாள்.

அடுமனைப் பணிகள் முடிந்து அனைத்தும் ஒழுங்கமைந்தபின் சம்பவன் ஈரக்கையுடன் சுற்றிலும் நோக்கினான். கலங்கள் அனைத்தும் ஈரம் வழிந்துலர சாய்ந்தும் சரிந்தும் வாய்திறந்து நின்றுகொண்டிருந்தன. அடுமனைத் தரையை நன்றாக கழுவித்துடைத்து பூச்சிகள் படியாமலிருக்க புல்தைலமிட்டிருந்தனர். அவன் புன்னகையுடன் நோக்கியபடி அடுமனையின் கூடத்தை சுற்றிவந்தான். அஸ்வகன் "நாம் படுத்துக்கொள்ளலாமா? இப்போதே பொழுது கடந்துவிட்டது.

காலையில் எழுந்து தொடங்கிய பணி. தசைகள் உடைந்துவிடப்போகின்றவைபோல் வலிகொண்டிருக்கின்றன” என்றான்.

“அடுதொழிலுக்கு இணையான உவகை அளிப்பது கழுவி நாள் களைந்து நாளைக்கென ஒருங்கியிருக்கும் அடுமனை” என்றான் சம்பவன். “கலங்களும் இரவுறங்கவேண்டும் என்று சொல்கிறது நூல். ஆகவே அடுமனை மிச்சிலுடன் எந்தக் கலத்தையும் இரவில் விட்டுவைக்கலாகாது. நாளின் எச்சம் இருக்கையில் அவை விழித்திருக்கும். துயில் நிறைந்து மறுநாள் விழித்தெழும் கலம் புன்னகைக்கும். அதில் சமைக்கையில்தான் அது உளம் நிறைந்து அமுது விளைவிக்கும்.”

அஸ்வகன் “நிசி கடந்தபின் தத்துவம் பேசுவது நல்லதல்ல. பேய்கள் வந்து அவற்றை கேட்கத்தொடங்கினால் அவை தத்துவத்திற்குள் புகுந்துவிடும்” என்றபின் “ஏற்கெனவே வேண்டிய பேய்கள் அங்கே உள்ளன” என்றான். அவர்கள் அடுமனைக் கதவை இழுத்துப் பூட்டியபின் வெளியே சென்றனர். விண்மீன்கள் செறிந்த வானத்தின் கீழே காற்றில் சருகுகள் அசைந்துகொண்டிருந்தன. குளிர்பட்டு பிடரி சிலிர்த்தது. “நல்ல குளிர்” என்றான் அஸ்வகன். “நான் இங்கேயே படுத்துக்கொள்கிறேன். அடுமனை வெப்பத்தை இக்குளிர் நிகர்செய்யும்” என்றான்.

“அதோ” என்றான் அஸ்வகன். அப்பால் ஒரு ஈச்சம்பாயை எடுத்து திண்ணையில் விரித்து வலவன் துயின்றுகொண்டிருந்தான். “மூச்சொலி இல்லை என்பதனால் அவர் துயிலுமிடமே தெரிவதில்லை” என்றான் சம்பவன். “அருகிலேயே நானும் படுத்துக்கொள்கிறேன். அவர் அருகே படுப்பதைப்போல நான் மகிழ்வுகொள்ளும் தருணம்

பிறிதில்லை.” அஸ்வகன் “தந்தையருகே படுக்க மைந்தர் விழைவதுண்டு” என்றான். “தந்தை நம்மை ஒரு பொழுதில் இறக்கி விட்டுவிடுகிறார். நாம் தந்தையிடமிருந்து அகன்றும் விடுகிறோம்” என்றான் சம்பவன்.

ஈச்சம்பாய் ஒன்றை விரித்து அவன் படுத்துக்கொண்டான். “நான் உள்ளே சென்று படுக்கிறேன்” என்று அஸ்வகன் சென்றான். திண்ணையில் மென்முருக்கு மரத்தாலான தலையணை இருந்தது. அதை எடுத்து வைத்துக்கொண்டு மல்லாந்து படுத்து நிலவை நோக்கியபடி மெல்ல விழிசொக்கினான். நிலவெழுந்த காடு திறந்துகொண்டது. மரங்களுக்குள் தேங்கிய நிலவொளி ஒரு பெண்ணென உருக்கொண்டு எழுந்து வந்தது. பாம்பென சீறிய மூச்சு. விழி மின்னொளி. அவன் அவளிடம் “எங்கு சென்றிருந்தாய்?” என்றான். அவள் “நான் வேறு என்கிறார்கள்” என்றாள். “யார்?” என்றான். “முதுமகள், என்னைப் பிளந்து இரண்டாக ஆகிவிடும்படி ஆணையிடுகிறாள்.”

மெல்லிய முழவோசை கேட்டு அவன் எழுந்தபோது முன்னரே வலவன் எழுந்து நின்றிருந்தான். இருளில் அடுமனை முற்றத்திற்கு அப்பால் நிழலுருவென சூதர் ஒருவர் நின்றிருந்தார். சடைத்தலையின் மயிர் மூன்றாம்பிறை ஒளியில் மெல்லப்பிசிறி பரவியிருந்தது. மரவுரி அணிந்த நீண்ட மேனி. தாடி நிழல் மார்பில் விழுந்திருந்தது. “நெடுந்தொலைவிலிருந்து வருகிறேன். இப்பின்னிரவில் இல்லங்களின் கதவைத் தட்டத் தோன்றவில்லை. அன்னசாலை என உசாவியபோது ஒருவன் இதை சுட்டிக்காட்டினான்.”

“வருக, உத்தமரே!” என்றான் வலவன். “உரிய இடத்திற்குத்தான் வந்துள்ளீர்.” “நான் மாகத சூதன், திரயம்பகன். பாடியலைபவன். நேற்று முன்னாள் உண்டேன். இந்நகரை தெற்கு மயானவாயில் வழியாக வந்தடைந்தேன்” என்றார். “எனக்கு உணவில் நெறியென ஏதுமில்லை. எவ்வுணவும் ஏற்பேன். கலத்தைச் சுரண்டிய வண்டலோ மிச்சிலோகூட உகந்ததே.” வலவன் “ஆனால் வந்து அமர்ந்தவருக்கு அளிக்கும் உணவு அமுதென்றிருக்கவேண்டும் என்பது எங்கள் கொள்கை” என்றான்.

சம்பவன் “நான் கலம்கழுவி வைத்துவிட்டேன், ஆசிரியரே” என்றான். “நன்று. இவருக்கு மிகச் சிறிதளவு உணவே போதும். நான் சமைக்கிறேன்” என்றான் வலவன். சம்பவன் “இல்லை, நீங்கள் அமருங்கள். நான் விரைவிலேயே சமைத்துவிடுவேன்” என்றான். வலவன் அவன் தோளை அழுத்தி புன்னகைத்தபின் உள்ளே சென்றான். “நான் கைகால்களை கழுவிக்கொள்கிறேன்” என்றார் திரயம்பகர்.

அவர் அமர்ந்துகொண்டு கண்களை மூடி சீராக மூச்செறிந்து துயில்பவர்போல அமைந்தார். தாலத்தில் மூன்றுவகையான உணவுடன் வலவன் வெளியே வந்தான். “உத்தமரே, அருந்துக!” என்றான். “நான் சுவையறிந்து உண்ணலாகாதென்ற நெறிகொண்டவன். இது எதற்கு?” என்றார் திரயம்பகர். “நான் சுவையை உருவாக்கியாகவேண்டும் என்னும் நெறிகொண்டவன்” என்றான். அவர் உணவை சீரான அசைவுகளுடன் உண்டார்.

கைகழுவி அவர் அமர்ந்ததும் வலவன் “துயில்கொள்க, உத்தமரே!” என்றான். அவர் “அடுமனையாளனின் அறம் உன்னில் வாழ்கிறது, பேருடலனே” என்றார். “உன் தோள்களைக்

கண்டால் நீ அஸ்தினபுரியின் பீமனுக்கும் விராடபுரியின் கீசகனுக்கும் நிகரானவன் என்று தோன்றுகிறது.” வலவன் “நான் விரும்பி உண்பவன், உத்தமரே” என்றான். அவர் அவனை நோக்கிக்கொண்டிருந்தார். வலவன் அவருக்கும் பாய் ஒன்றை விரித்துவிட்டு தான் படுத்துக்கொண்டான்.

அவர் தன் கையிலிருந்த முழவை மீட்டிக்கொண்டு கீற்றுநிலவை நோக்கிக்கொண்டிருந்தார். “எதை எண்ணிக்கொண்டிருக்கிறீர், சூதரே?” என்றான் வலவன். “பகை தேடிவரும் தோள்கள்” என்றார் சூதர். “இம்முறை அருகிலுள்ளது பகை. பெரும்பகை, ஆனால் மிக எளியது.” வலவன் “கீசகரை சொல்கிறீர்களா?” என்றான். “ஆம்” என்றார் சூதர்.

# நீர்க்கோலம் - 62

### 61. இளவேனில் வருகை

“குருதித் தூய்மையை சொல்லிக்கொள்ளும் எக்குலமும் தன் தொடக்கத்தை திரும்பிப்பார்ப்பதை விரும்புவதில்லை என்ற முன்வரியுடன் எந்த அரசகுலத்தையும் ஆய்வதே என் வழக்கம்” என்றார் திரயம்பகர். “தொன்மையான ஆரிய அரசகுடிகளில் ஒன்றான கேகயம் குலக்கலப்பால் பிறந்த ரதகாரர்களின் குருதிவழிகொண்டது என்று அறிக!” சம்பவன் எழுந்து அமர்ந்துவிட்டான். “மெய்யாகவா?” என்றான். “ஷத்ரியர்கள் ஏதேனும் பிற குடியிலிருந்துதானே வரமுடியும்?” என்றார் திரயம்பகர். “அதைச் சொல்வதனால்தான் நான் நள்ளிரவில் அன்னம் இரக்கிறேன்.”

குலங்களும் குடிகளுமென எண்ணிக்கையற்று பெருகிப்பரந்திருக்கும் இங்குள்ள மக்களை தொழில், இயல்பு இரண்டுக்கும் ஏற்ப நான்கெனப் பகுத்தனர் முன்னூலோர். அந்நான்கின் வர்ணங்கள் ஒன்றுடன் ஒன்று கலந்து உருவாகும் இடைவர்ணத்தை இரண்டெனப் பகுத்தனர். பிராமணரோ ஷத்ரியரோ சூத்திரர்களுடன் உறவுகொண்டு பிறக்கும் மைந்தர்கள் சூதர்கள் எனப்பட்டனர். பிராமணரோ ஷத்ரியரோ வைசியருடன் உறவுகொண்டு பிறக்கும் மைந்தர் ரதகாரர் என்றனர். சூதர் வைசியருக்குக் கீழானவர்கள். ரதகாரர்கள் வைசியருக்கு மேலானவர்கள்.

தேர்கள் உருவான காலம் அது. ஷத்ரியர் விளைவிக்கலாகாது, விலங்கு பேணலாகாது, துலாக்கோல் பற்றலாகாது என்பது நெறி. விளைவிப்பவன் அழிக்கமாட்டான், விலங்கைப் பேணுபவன் கொல்லத் தயங்குவான், வாளுடன் துலாக்கோல் பற்றியவன் கொள்ளையன் ஆவான். ஆகவே சூதர்கள் மட்டுமே புரவி பேணினர். அவர்கள் படைக்கலம் ஏந்தலாகாது. நூறுபேர்கொண்ட படையை ஒற்றைத்தேர் எதிர்கொள்ளும் என்றானபோது தேர்த்தொழிலறிந்தவன் நாடாளக்கூடும் என்னும் நிலை வந்தமைந்தது.

சூதர் நாடாளக்கூடுமென்றாயிற்று. சூதர் நாடாள்வது சூத்திரரை பணியச் செய்யாது. எனவே ரதகாரர் மட்டுமே தேர்வலர் ஆகவேண்டுமென்று தொல்நெறிநூல்கள் வகுத்தன. ரதகாரர்கள் தங்களுக்குள் பெண்கொள்வது தடைசெய்யப்பட்டது. அவர்களின் பெண்களை ஷத்ரியர்களோ பிராமணர்களோ மட்டுமே மணக்கவேண்டுமென்று வகுக்கப்பட்டது. ரதகாரர்கள் சூத்திரர் பெண்களை மணக்கலாம். அந்த மணம் கொடைமணம் எனப்பட்டது. மணப்பெண் தன் இல்லத்தை நீங்குவதில்லை.

கணவர்கள் வந்துசெல்வார்கள். மைந்தர்கள் அன்னையர் பெயருடன் அன்னையரின் குலமாக வளர்வார்கள். தந்தை என்பது ஒரு முகமும் பெயரும் மட்டுமே. தந்தைக்கு மைந்தர்மேல் பொறுப்பும் உரிமையும் இல்லை.

ரதகாரர்கள் எப்போதும் பத்தாக நூறாக பிரிக்கப்பட்டு ஊருக்குச் சிலராகவே அமையவேண்டுமென்று நிறுவப்பட்டது. ஆயினும் தொன்னாளில் நிகழ்ந்த பெரும்போர் ஒன்றில் தேர்களுடன் ஒன்றுகூடிய ரதகாரர்கள் படையென இணைந்து நாடொன்றை கைப்பற்றினர். அவர்களை ஒருங்கிணைத்து வழிநடத்தி நிலம் வென்றவன் கேகயன் என்னும் வீரன். அவன் அயோத்திநாட்டு இளவரசி ஒருத்திக்கு ரதகாரர்களில் பிறந்த மைந்தன். அவன் கைப்பற்றி ஆண்டநிலம் சூதர்நாடு என்று பெயர் கொண்டது.

அது அவன் பெயரால் பின்னர் கேகயமென்னும் நாடானது. தேர் நடத்தி களம் புகும் கேகயரை வெல்ல இயலாதென்பதை பதினெட்டு போர்களுக்குப்பின் உணர்ந்த ஷத்ரியர்கள் அவனை தங்களில் ஒருவன் என்று ஏற்றுக்கொண்டனர். வேள்விகள் செய்தும் ஷத்ரியகுலத்தில் மணமுடித்தும் அவன் தன்னை ஷத்ரியகுடியென்று ஆக்கிக்கொண்டான். தலைமுறைகள் கடந்தபின்னர் அவர்கள் எவரென்பது பெண்கோளின்போது மட்டுமே பேசப்படும் பொருளென்றாயிற்று.

கேகயனுக்கு மச்சர்குலமகளாகிய மாலவியில் பிறந்த மைந்தன் தொல்கீசகன். ரதகாரனாகிய கீசகன் தன் பன்னிரு தம்பியருடன் படைகொண்டு சென்று மச்சர் நாட்டை அமைத்தான். அவன் கொடிவழியில் வந்தவர்கள் அனைவரும் கீசகர்கள் என்றே அழைக்கப்பட்டனர். அக்குருதிமரபில் வந்த கீசகன் ஒருவனே தொன்னாளில் நிஷதமச்ச கூட்டமைப்பை உருவாக்கி விராட

அரசமரபை அமைத்தவன். அவனை மகாகீசகர் என்று வணங்குகிறது விராடம்.

மச்சர்குலத்துக் கீசகர்கள் ஷத்ரியர்களுக்கு அடிமை என நின்று கப்பம் கட்டினர். ஆனால் ஷத்ரியர்களிடையே ஒவ்வொருநாளும் போர் நிகழ்ந்தது. மாறிமாறி அவர்கள் மச்சர்களை கைப்பற்றி கப்பம் கோரினர். மச்சர்குலம் பெருகி பின்னகர்ந்து பல ஊர்களாகியது. எனவே மச்சர்கள் ஷத்ரியர்களுடன் மணம்கொள்வதை தவிர்த்தனர். சர்மாவதிக்கு அப்பால் காடுகளில் வாழ்ந்த காலகேயர்களென்னும் அசுரகுடியினருடன் அவர்கள் மணவுறவு கொள்ளலாயினர்.

நூறு கிளைகளாக பாரதவர்ஷம் முழுக்க பரவியிருந்த காலகேயர்கள் காசியபருக்கு திதியில் பிறந்த குலம் என தொல்மரபு கொண்டவர்கள். காலகேயர்களுடனான உறவு மச்சர்களை ஷத்ரியர்களிடமிருந்து முற்றாகப் பிரித்தது. காலம் செல்கையில் அவர்கள் நிஷாதர்களென்றாயினர். அவர்களை ஷத்ரியர்கள் நீர்முதலைகளை என நாளும் வேட்டையாடி ஒழித்தனர். கங்கையிலிருந்து பின்வாங்கி சர்மாவதிக்குச் சென்று அங்கிருந்தும் பின்வாங்கி சதுப்புநிலங்களுக்குள் புகுந்துகொண்டனர் அவர்கள்.

நாளடைவில் கீசகர்கள் என்னும் பெயர் அவர்களிடமிருந்து மறைந்தது. கேகயகுலத்தின் குருதித்தொடர்பு தொல்கதைகளிலும் வெறியாட்டில் பூசகன் நாவிலெழுந்துவரும் சொல்லிலும் மட்டுமே வாழ்ந்தது. காலகேய மச்சர் குடியில் பிறந்தவள் மாலவி. அன்றொருநாள் சர்மாவதியில் முதலைவேட்டைக்கு வந்த கேகயமன்னன் மச்சர்களின் சிற்றூர் ஒன்றில் தங்கினான். அவனுக்கு ஊனுணவு சமைத்துப் பரிமாறிய பெண்ணின் அழகில் மயங்கி அவள் பெயரை

கேட்டான். மாலவி என்றதும் திகைத்து அது கேகய அரசகுடியின் தொல்அன்னையின் பெயர் அல்லவா, மச்சர்கள் எப்படி அப்பெயரை சூட்டிக்கொள்ளலாம் என்று கேட்டான்.

அவளுக்கு அதற்கான விடை தெரிந்திருக்கவில்லை. அவள் சென்று தன் குடியின் முதுபூசகர் ஒருவரை அழைத்துவந்தாள். அவர்தான் கேகயத்தின் மெய்யான வரலாற்றை கேகயனுக்கு சொன்னார். கேகயன் தங்கள் குருதியினன் என்றும் அவனுக்கு மணவுறவுக்கு உரிமையுள்ளதே மச்சர்குடி என்றும் உரைத்தார். மச்சர்களை குடியெனப்பெருக்கி நாடுகளென அமைத்த சதகீசகர்கள் என்னும் நூறு கீசகர்களின் கதைகளை சொன்னார்.

கேகய அரசன் அறிந்திருந்த குலக்கதைகளின்படி கேகயநாட்டை அமைத்த முதற்கேகயர் வெண்புரவி ஒன்றின் வயிற்றில் பிறந்தவர். தவம் நிறைந்து விழிதிறந்த காசியப முனிவர் அத்தருணம் மைந்தன் பிறக்க உகந்தது என்று கண்டு விழிசெலுத்தி நோக்கியபோது அங்கு நின்றிருந்த வெண்புரவி ஒன்றை கண்டார். தான் ஓர் ஆண்புரவி என்றாகி அதை புணர்ந்தார். அப்புரவியின் வயிற்றில் பிறந்த மைந்தனை கேகயன் என்று பெயரிட்டு கங்கைக்கரை படகோட்டி ஒருவனிடம் அளித்தார்.

அவன் வளர்ந்து இளைஞனாக ஆனபோது தனக்குரிய துணைவியைத் தேடி கங்கைக்கரைக்கு வந்தான். தன் வேலைத் தூக்கி கங்கைமேல் வீசினான். அது சென்று விழுந்த இடம் குழிந்து சுழித்து அதில் ஒரு கன்னி எழுந்து வந்தாள். அவளே மாலவி. அவர்களிடமிருந்து பெருகியது கேகயப்பெருங்குலம். அயோத்தியின் தசரதனுக்கு மகள்கொடை அளித்து தொல்புகழ்கொண்டது அது.

மெய்வரலாற்றைக் கேட்டதுமே கேகயனுக்கு அது உண்மை என்று தெரிந்துவிட்டது. கீசகர்களின் குருதிவழி வந்த குடியில் பிறந்தவள் மாலவி என்று அறிந்ததும் அவளை தன் மனையாட்டியாக ஏற்றுக்கொண்டான். அவளில் பிறந்த மைந்தனை கேகயத்தின் அரசனாக ஆக்குவதாக அனல் தொட்டு வாக்களித்தான். மூன்றுமாத காலம் அவளுடன் காமத்திலாடி அங்கே வாழ்ந்தான்.

ஆனால் கேகயத்திற்குச் சென்று அங்கே தன் அமைச்சர்களிடம் பேசியதுமே அரசன் உளம் மாறினான். அன்று ஷத்ரிய அரசுகள் வடக்கே ஆற்றல்பெற்று வந்த காலகேயர்களுக்கு எதிராக ஓயாப் போரில் இருந்தனர். காலகேய மன்னன் பாலி அவர்கள் எண்ணி எண்ணி அஞ்சும் படைத்தலைமை கொண்டிருந்தான். காலகேயக் குருதிகொண்ட மச்சர்குலத்து மைந்தனை குடிச்சரடென அறிவித்தால் சிற்றரசான கேகயம் ஷத்ரியக்கூட்டமைவிலிருந்து அகலும். மறுகணமே அது பெருமன்னர்களால் அழிக்கப்படும் என்றனர் அமைச்சர்.

ஆகவே தன் குடிமூத்தாருக்கு ஒரு பிழையீட்டு பூசனை செய்தபின் மாலவிக்கு அளித்த வாக்கை முழுமையாகவே கைவிட்டான் அரசன். மச்சர்களின் குழு ஒன்று வந்து அவளை அவன் ஏற்கவேண்டுமென்று கோரியது. அமைச்சர்கள் அதை ஒப்ப மறுத்தனர். ஏழு நாட்கள் நடந்த அப்பூசலின் இறுதியில் மாலவியை முடியுரிமை இல்லா அரசியென்று ஏற்க அரசன் ஒப்பினான். அதற்கு மாலவி முற்றிலுமாக மறுத்துவிட்டாள். என் மைந்தன் அரசன், ரதகாரனாக ஒருபோதும் அரண்மனையை அண்டி வாழமாட்டான் என்றாள்.

கேகயனின் அமைச்சர்கள் அன்றே சென்று காசிநாட்டு இளவரசி கிருஷையை மணம்பேசி முடிக்க விழாவேதுமின்று அவளை

மணந்துகொண்டான். அவளுக்குப் பிறந்த சுப்ரதன் என்னும் மைந்தன் திருஷ்டகேது என்னும் அரியணைப் பெயர்கொண்டு இன்று கேகயத்தை ஆள்கிறான். அவன் மகளை பெரும்புகழ்கொண்ட யாதவ கிருஷ்ணன் மணந்துள்ளான்.

அரசனால் கைவிடப்பட்ட மாலவி தன் மகனுக்கு கீசகன் என்று பெயரிட்டாள். அவனுக்கு சதகீசகர்களின் தொல்கதையைச் சொல்லி வளர்த்தாள். அவள் வஞ்சமே அவனுடலில் முலைப்பாலென ஊறி பேருடலென எழச்செய்தது. வெறுங்கைகளால் மரக்கலங்களைத் தூக்கி ஆற்றிலிறக்குபவனாக அவன் இருந்தான். கங்கையின் அலை அவன் தோளில் குடிகொள்கின்றது என்றனர் பாடகர். அவன் இளையோனாக வளர்ந்தபோது அவனைச் சூழ்ந்து மச்சர்கள் குடியொருமை கொண்டனர். தொல்நாடுகளை மீட்டமைக்கவேண்டும் என்று எண்ணலாயினர். அவர்களின் குழு ஒன்று முடியுரிமை கோரி கேகயத்திற்குச் சென்றது. கேகயனால் எள்ளிநகையாடப்பட்டு திரும்பி வந்தது.

“வஞ்சம் கீசகனை மேலும் ஆற்றல்கொண்டவனாக ஆக்கியது. விராடனுடன் வந்தான். இன்று இந்நாட்டின் மணிமுடியை நோக்கி சென்றுகொண்டிருக்கிறான்” என்றார் திரயம்பகர். சம்பவன் “குருதி ஒன்றையொன்று சுற்றிக்கொண்டிருக்கிறது போலும்” என்று சொன்னான். “மச்சர்களென்பதனால் கீசகனை மறுத்த கேகயன் தொல்கீசகக் குருதிகொண்ட விராடனுக்கு மகளைக் கொடுக்க நேர்ந்தது விந்தை.” திரயம்பகர் நகைத்து “ஆம், குருதியை சலவைசெய்து சீரமைக்க ஏழு தலைமுறை ஆகும் என்கின்றன நூல்கள். இங்குள்ள அரசகுடிகளனைத்துமே அவ்வாறு வெண்மையாக்கப்பட்டவைதான். எத்தனைமுறை என்பதே குலவேறுபாடென்றாகிறது” என்றார்.

சற்றுநேரம் இருளுக்குள் சீவிடின் ஓசை கேட்டுக்கொண்டிருந்தது. வலவன் “கீசகன் இம்மணிமுடியை கைப்பற்றமுடியும், ஆனால் நாடாளமுடியுமா? ஷத்ரியர் அதை ஒப்புவார்களா என்ன?” என்றான். “ஆம், அதை எண்ணியே அவன் இன்றுவரை தயங்கினான். இனி தயக்கத்தை ஒழிக்கக்கூடும்” என்றார் திரயம்பகர். “இந்நகரில் புகுந்ததுமே அந்த மாற்றங்களைக் கண்டேன். இனி நாட்கள் சிலவே.” சற்றுநேரம் மீண்டும் அமைதி நிலவியது. அவரே மேலும் சொல்லட்டும் என அவர்கள் காத்திருந்தனர்.

“காலகேயர்களின் பெருங்குடி நூறு கிளைகள் கொண்டது. நூறையும் ஒருங்கிணைக்க காலகேயர்களின் மன்னர்களான விரோசனரும் அவர் மைந்தர் பாலியும் முயன்றனர். இன்று அவர்களின் மைந்தர் பாணர் அதில் வென்றிருக்கிறார். அவரை சதஹஸ்தி என்று அவர்கள் அழைக்கிறார்கள். அவர்கள் குடியில் தொல்கதைகளென வாழும் ஹிரண்யகசிபுவையும் ஹிரண்யாக்ஷனையும்போல அவரும் மாவலி கொண்ட அசுரர் என்று அவர்களின் குலப்பாடகர்கள் பாடுகிறார்கள். பாணாசுரன் என்னும் சொல்லே காலகேயர்களை கிளர்ந்தெழச் செய்கிறது இன்று.”

“இமயமலைச் சாரலில் விரோசனர் அமைத்த சோனபுரி என்னும் சிறுநகரம் இன்று கோட்டையும் அகழியுமென வளர்ந்து வெல்லற்கரிய ஆற்றலுடன் எழுந்து நின்றிருக்கிறது. கீசகன் பாணாசுரரின் துணையைப் பெறுவான் என்றால் அவன் விராடபுரியை ஆளமுடியும். இரு காலகேய நாடுகளென இவை இணையுமென்றால் ஷத்ரியர் அஞ்சியாகவேண்டும்” என்றார் திரயம்பகர்.

❀உத்தரன் உளக்கிளர்ச்சி கொண்டவனாக தேரில் எழுந்து நின்று “விரைவாக! மேலும் விரைவாக!” என்றான். நகர்மன்று நோக்கி அவ்வேளையில் நகர்மக்கள் அனைவருமே பெருகிச்செல்வதுபோலத் தோன்றியது. “அத்தனை பேரும் அங்குதான் செல்கிறார்களா?” என்றான். “ஆம் இளவரசே, அறிவிப்புகள் வருகின்றன அல்லவா? அழைப்புநடை ஒலித்ததுமே கூடிவிடுவார்கள்.” “உடனே செல்… அவர்களை பிளந்து செல்” என்றான். “இளவரசே, அரைநாழிகைநேரமாவது அழைப்புநடை ஒலிக்கும்.”

தேர் கோட்டைமுகப்பை அடைந்ததும் உத்தரன் “அனைவரும் காணும்படி சென்று நில்… நம் தேரை அனைவரும் காணவேண்டும்” என்றான். திரைகளை அவனே மேலே தூக்கிவிட்டுக்கொண்டு கைகளை மார்பில் கட்டியபடி நின்றான். “இளவரசே, அகம்படியினரில்லாமல் நீங்கள் இங்கே வருவது…” என சூதன் சொல்ல கையமர்த்தி “எனக்கு அத்தகைய வீண்முறைமைகளில் ஆர்வமில்லை. என்னை என் மக்கள் காணட்டும். அவர்களில் ஒருவனாகவே எண்ணட்டும். அவர்களின் அரசனாகப்போகிறவன் நான், ஆனால் அவர்களுக்கு என்றும் எளியவன்” என்றான்.

“ஆம், அவர்கள் அதை அறிவார்கள்” என்றான் சூதன். பின்னால் வந்த தேரிலிருந்து இறங்கிய ஏவலனை நோக்கி “அவர்களிடம் சொல், இளவரசர் உத்தரர் வந்திருக்கிறார் என்று” என்றான். “அவர்களே அறிவார்கள், இளவரசே” என்றான் அவன். “ஆனால் எவரும் என்னை நோக்கவில்லையே?” என்றான். “அச்சமிருக்கும் அல்லவா?” என்றான் ஏவலன். “எதற்கு அச்சம்? நான் மக்களிடம் கனிவுகொண்டவன்… அதை அவர்கள் இன்னும் அறியவில்லை” என்றான் உத்தரன்.

அனைவரும் முரசுமேடையை நோக்கிக்கொண்டிருந்தார்கள். முரசு நடைமாறி அமைந்தது. அறிவிப்புநிமித்திகன் எழுந்து தன் கோலைத்தூக்கிச் சுழற்ற அங்கிருந்தவர்கள் அனைவரும் மெல்ல அடங்கினர். அவன் “விராடநிஷதத்தின் குடிகளே, பெரும்புகழ்கொண்ட நளமாமன்னரின் கொடிவழியினரே, பேரரசி தமயந்தியால் பெரும்புகழ்கொண்டவர்களே, உங்களை வாழ்த்துகின்றனர் இக்காலையை நிறைத்திருக்கும் வானகத் தெய்வங்கள். உங்கள்மேல் பொழிகிறது விண்நிகழ்ந்த முன்னோர்களின் வாழ்த்து” என்றான். கூடியிருந்தவர்கள் “வாழ்க! வாழ்க!” என கைதூக்கினர்.

“விராட குலத்தோன்றல் காகக்கொடிகொண்ட நிஷதப் பெருந்தலைவர் தென்னகத்தை ஆளும் மாமன்னர் தீர்க்கபாகுவின் ஆணையால் மாதம் மூன்றுமழையும் ஆண்டில் இரு வசந்தங்களுமாகப் பொலிகிறது இந்நாடு. பேரரசி கைகேயியான சுதேஷ்ணையின் கனிவால் இங்குள்ள மகளிர் கலங்களில் அமுது ஒழியாமலிருக்கிறது. ஆம், என்றென்றும் அவ்வாறே ஆகுக!” கூடியிருந்தவர்கள் வாழ்த்தொலி எழுப்பினர்.

“என்ன இது, பேசிக்கொண்டே செல்கிறான்!” என்றான் உத்தரன். “இளவரசே, இது பொதுஅறிவிப்பு. முறைமைகளை சொல்லித்தான் ஆகவேண்டும்” என்றான் சூதன். “எனக்கு சலிப்பாக இருக்கிறது” என்றான் உத்தரன். அறிவிப்பாளன் “ஆகவே வரும் இளவேனிலை கொண்டாட இங்கே பெருவிழவு ஒன்றுக்கு நம் அரசர் ஆணையிட்டிருக்கிறார். வசந்தபஞ்சமியில் நம் இல்லங்கள் அணிகொள்ளட்டும். வண்ண ஆடைகள் நம்மை தேவர்களாக்கட்டும். அமுதென கள்ளுண்போம். கந்தர்வர்கள் என களியாடுவோம். நம்முடன் வந்து சேர்ந்துகொள்ளட்டும் அமராவதியில் இந்திரனுடன்

உறையும் கந்தர்வர்களும் கின்னரர்களும் கிம்புருடர்களும் வித்யாதரர்களும் யட்சர்களும். ஆம், அவ்வாறே ஆகுக!" என்றான்.

முரசொலி ஓய்ந்து அவன் இறங்கப்போனபோது உத்தரன் "என்ன இது, இறங்குகிறான்? அறிவிப்பு முடிந்துவிட்டதா? அடேய் அறிவிலி, போ. போய் சொல்!" என்று கூவினான். ஏவலன் ஓடிச்சென்று முரசு மேடைமேல் ஏறி அறிவிப்பாளனிடம் ஏதோ சொல்ல அவன் தலையசைத்து மறுத்தான். ஏவலன் உத்தரனை சுட்டிக்காட்டி வற்புறுத்தினான். அறிவிப்பாளன் மீண்டும் மேடையில் நின்று கைகாட்ட முரசு மீண்டும் முழங்கியது. கலைந்துகொண்டிருந்த குடிகள் திரும்பி நோக்கினர்.

அறிவிப்பாளன் "ஓர் அறிவிப்பு விடுபட்டுவிட்டது. இளவரசர் உத்தரர் எவரும் ஏறமுடியாத கரும்புரவியான காரகனில் பாய்ந்துசென்று புரவித்திறன்காட்டும் விளையாட்டுக்களில் ஈடுபடுவார்" என்றான். குடிகள் திரும்பி உத்தரனை பார்த்தனர். எவரும் எந்த உணர்ச்சியையும் காட்டவில்லை. அவர்கள் ஏற்கெனவே பேசிக்கொண்டிருந்ததை நிறுத்தவுமில்லை. "அவர்கள் வாழ்த்துரைக்கவில்லையே?" என்றான் உத்தரன். "அவர்கள் கிளர்ச்சியடைந்துவிட்டார்கள். புரவியைப்பற்றித்தான் பேசிக்கொள்கிறார்கள்" என்றான் சூதன். "எவரும் என்னை பார்க்கவில்லை" என்றான் உத்தரன். "அரசர்களை நேருக்குநேர் பார்ப்பது பிழை, இளவரசே" என்ற சூதன் "நாம் செல்வோம். தாங்கள் காரகனில் ஏறி பயிற்சி எடுத்து நெடுநாட்களாகின்றன. இன்னும் பிந்தினால் குதிரை நம்மை மறந்துவிடும்" என்றபடி புரவியைத் தட்டி தேரை திருப்பினான்.

"அவர்கள் எவ்வகையிலும் பொருட்படுத்தவில்லை" என்றான் உத்தரன். "இளவரசே, அவர்களுக்கு நீங்கள் காரகனில் ஊர்வது

இன்று ஒரு செய்தியே அல்ல. அதில் புதிய வித்தைகளை நீங்கள் காட்டுகையில்தான் கிளர்ந்தெழுவார்கள்... வருக!" என்றான் சூதன். தேர் நகர்த்தெருக்களினூடாகச் செல்லும்போது "பெண்டிருக்கு இன்னும் இச்செய்தி சென்றடையவில்லை" என்றான் உத்தரன். "ஆண்கள் சொல்லமாட்டார்கள். ஆனால் பெண்கள் எப்படியோ அறிந்துகொள்வார்கள்" என்று சூதன் சொன்னான்.

குதிரைப்பந்தியை அவர்கள் அடைந்தபோது வெயில் வெம்மைகொள்ளத் தொடங்கியிருந்தது. "வசந்தம் வரப்போகிறதென்கிறார்கள். இப்போது ஏன் வெயில்?" என்றான் உத்தரன். "இரவில் பனி உள்ளதல்லவா?" என்றான் சூதன். "நல்ல வெயில். இவ்வெயிலில் புரவிபயின்றால் அது எளிதில் களைத்துவிடும்" என்றான் உத்தரன். "நாம் நாளை புலரியில் வருவதே நல்லது." சூதன் "வந்து விட்டோம். புரவியை பார்த்துவிட்டுச் செல்லலாமே?" என்றான். "ஆம்" என்று உத்தரன் இறங்கினான். தன்னை நோக்கி ஓடிவந்த குதிரைப்பந்திக் காவலனிடம் "அடேய், கிரந்திகனை இங்கே வரச்சொல்" என்றான்.

அவன் செல்வதற்குள்ளாகவே நாமரும் கிரந்திகனும் அவனை நோக்கி ஓடிவந்தனர். கிரந்திகன் வணங்கி வாழ்த்துரைத்து "நானே அங்கே வருவதாக எண்ணியிருந்தேன், இளவரசே. தாங்கள் பயிற்சிக்கு வந்து மூன்று மாதங்களாகின்றன" என்றான். உத்தரன் "பயிற்சி என் கைகளிலும் கால்களிலும் உள்ளது. நான் எண்ணினாலும் அதை மறக்கமுடியாது" என்றான். "காரகன் எங்கே? நான் அவனை பார்த்துவிட்டுச் செல்லலாம் என்று வந்தேன்."

கிரந்திகனைத் தொடர்ந்து ஒரு வெண்ணிற இளம்புரவி வந்தது. "பால்நுரைபோல் உள்ளது. புதிய புரவியா?" என்றான் உத்தரன் "இளவரசே, இவன் இங்கே முன்பே இருந்தவன்தான். காதரன், வளர்ந்துவிட்டான்" என்றான். "ஆம், அப்படியே பால்நுரை எழுவதுபோல எழுந்துவிட்டான்" என்றபடி உத்தரன் கைநீட்டி அதன் விலாவை தொடப்போக அது ர்ர்ர்ர்ரீ என ஓசையிட்டபடி நாகம்போல சீறித்திரும்பி அவனை கடிக்க வந்தது. கிரந்திகன் குறுக்கே புகுந்து அதை தடுத்தான்.

"ஏன்? என்ன ஆயிற்று இதற்கு?" என்றான் உத்தரன். "குதிரைகளின் விலாவை நோக்கி கைநீட்டலாகாது, இளவரசே" என்றார் நாமர். "அதிலும் இளைய புரவிகள் ஆணவம் மிக்கவை. இவனுக்கு அக்கை ஒருத்தி இருக்கிறாள். இதற்குள் எட்டுபேரை கடித்துவிட்டாள். உதை வாங்காதவர் கிரந்திகர் மட்டுமே." உத்தரன் "அது தெரியாதா எனக்கு? மூடா, வெண்புரவி என்றால் விலாவை தொடுவதில் இடரில்லை, தெரிந்துகொள்" என்றான். கிரந்திகன் "ஆம், உண்மை. ஆனால் இது இன்று வெயிலில் சற்று களைத்திருக்கிறது. குதிரைப்பந்திக்கு வருக, இளவரசே. ஓய்வெடுத்தபின் பயிற்சிக்குச் செல்வோம்" என்றான்.

"பயிற்சியா? இன்று தேவையில்லை. இன்று நல்ல வெயில். கரிய புரவிகளுக்கு வெயில் ஒவ்வாது." கிரந்திகன் "அங்கே சோலையில் வெயிலே இல்லை. அங்கே செல்வோம்" என்றான். உத்தரன் சூதனை நோக்கியபின் "ஆனால் நான் உடனே செல்லவேண்டும். வசந்தபஞ்சமி விழா அறிவிக்கப்பட்டுள்ளது. பணிகள் உள்ளன" என்றான். "ஆம், ஆனால் அதற்கு இன்னமும் நாளிருக்கிறதே?" என்றான் கிரந்திகன். நாமர் "காலகேயர்கள் வரப்போகிறார்கள் என்று சொன்னார்களே, அந்த விழாவா?" என்றான்.

திகைப்புடன் உத்தரன் “காலகேயர்களா, இங்கா?” என்றான். “ஆம் இளவரசே, காலகேயநாட்டு மல்லர்கள் சிலரை அவ்விழாவில் கொண்டுவந்து நிறுத்தவிருக்கிறார் இளவரசர் கீசகர். அவர்கள் மாமலைபோன்றவர்கள். வெல்லவே முடியாதவர்கள். பகனுக்கும் இடும்பனுக்கும் நிகரானவர்கள்” என்று நாமர் சொன்னார். “ஆம், அவர்களை நான்தான் வரச்சொன்னேன். இங்கே நம் இளையோர் மற்போரில் ஈடுபாடில்லாதவர்களாக இருக்கிறார்கள். காலகேயர்கள் இங்கே வந்து களம்நின்று போரிடக் கண்டால் அவர்களும் ஊக்கம் பெறுவர் என்று மாமனிடம் சொன்னேன்.”

கிரந்திகன் “ஆம், நூறு மல்லர்கள் வரப்போவதாக அறிந்தேன்” என்றான். உத்தரன் “ஆம், மெய். நூறு மல்லர்கள்” என்றபின் “புரவியை நாளை பார்வையிடுகிறேன். நான் இப்போதே கிளம்பினால் நன்று” என்றான். நாமரிடம் “காரகனை ஒருக்குக!” என ஆணையிட்ட கிரந்திகன் திரும்பி சூதனிடம் விலகிச்செல்லும்படி விழிகளால் ஆணையிட்டான். அவன் அப்பால் சென்று நிற்க கிரந்திகன் உத்தரனை நோக்கி “இளவரசே, நான் சொல்வதை நன்றாக புரிந்துகொள்ளுங்கள். உங்கள் அரசுக்கும் உயிருக்கும்கூட இடர் நெருங்கி வருகிறது” என்றான்.

உத்தரன் “என்னை எவரும் ஒன்றும் செய்ய இயலாது. என்னைப்பற்றி அனைவருக்கும் தெரியும். நான் கிளம்புகிறேன்” என்றான். கிரந்திகன் ஆழ்ந்த குரலில் “சொல்வதை கேளுங்கள் இளவரசே, நீங்கள் எச்சரிக்கை கொள்ளவில்லை என்றால் இந்த வசந்தபஞ்சமிக்கு மறுநாள் அரசை கீசகர் கைப்பற்றுவார். உங்கள் தலை வெட்டி வீழ்த்தப்பட்டுவிடும்” என்றான். உத்தரன் அப்போதுதான் முழுமையாக புரிந்துகொண்டான். அவன் உடல்

நடுங்கத் தொடங்கியது. “என்ன சொல்கிறாய்? என்னை எதற்கு கொல்லவேண்டும்? நான் இந்த நாட்டின் இளவரசன்” என்று கூவினான். “ஓசையிட வேண்டாம்...” என்றான் கிரந்திகன். “அமைதி கொள்க... கீசகர் காலகேயர்களை உள்ளே கொண்டுவரும்பொருட்டே வசந்தபஞ்சமி விழாவுக்கு அறிவிப்பு விடுத்திருக்கிறார்.” உத்தரன் “இல்லையே, அறிவிப்பு அரசரால் அல்லவா விடப்பட்டது?” என்றான்.

“இல்லை, அது கீசகரின் திட்டம்” என்று கிரந்திகன் பொறுமையாக சொன்னான். “உங்கள் நகரை கீசகரின் கைகள் சுற்றி வளைத்துவிட்டன. வடக்கே பாணாசுரரின் படைகள் நகரைச் சூழ்ந்துள்ள காடுகளில் தனித்தனியாக வந்து குடியேறிக்கொண்டிருக்கின்றன. வசந்தபஞ்சமி உண்மையில் விழாவல்ல, ஒரு படையெடுப்பு.” உத்தரன் கண்ணீர் படர்ந்த கண்களுடன் நடுங்கும் உதடுகளுடன் “நான் என்ன செய்வது? கீசகரிடம் நானே சென்று சொல்லவா? நான் கலிங்க நாட்டுக்கு ஓடிவிடுகிறேன். எனக்கு கலிங்க இளவரசியை மணம்புரிந்து கொடுப்பதாகச் சொன்னார்கள்” என்றான்.

“உங்கள் அவையில் குங்கர் இருக்கிறார் அல்லவா?” உத்தரன் “ஆம், சூதாடிக்கொண்டிருக்கிறார். சிறுமதியர்” என்றான். “அவரிடம் சென்று அடைக்கலம் புகுங்கள். உங்கள் உயிரை அவரிடம் ஒப்படையுங்கள்.” உத்தரன் “அவரிடமா?” என்றான். “அவரால் எதுவும் செய்ய முடியும், அவர் அடைக்கலம் அளித்தால் மட்டுமே கீசகரிடமிருந்து நீங்கள் தப்பமுடியும்” என்றான் கிரந்திகன். “நான் மாற்றுரு கொண்டு தப்பி ஓடினால் என்ன?” என்றான் உத்தரன்.

“இளவரசே, எங்கு சென்றாலும் உங்களைத் தேடிவந்து கொலை செய்வார்கள். ஏனென்றால் நீங்கள் விராடரின் குருதிக்

கொடிவழி.” உத்தரன் “நான் என்ன செய்வேன்? நான் எவருக்கும் எத்தீங்கும் செய்ததில்லை... என்னை எதற்காக கொல்லவேண்டும்?” என்றான். கிரந்திகன் “வருக, புரவி பயிலலாம்!” என்றான். “இல்லை, என்னால் இயலாது” என்றான் உத்தரன். “புரவியிலமருங்கள். உங்கள் உள்ளம் உறுதிகொள்ளும்... வருக!” என அவன் கைகளைப்பற்றி கிரந்திகன் அழைத்துச்சென்றான்.

# நீர்க்கோலம் - 63

### 62. மற்களம்

❀ஆபர் குங்கனின் அறை முன் நின்று தொண்டையை செருமினார். குங்கன் எழுந்து வந்து கதவைத் திறந்து அவரைக் கண்டதும் தலைவணங்கி “தாங்களா? சொல் அனுப்பியிருந்தால் வந்திருப்பேனே?” என்றான். “இளவரசர் இங்கிருக்கிறாரா?” என்றார் ஆபர். “ஆம், சென்ற மூன்று நாட்களாகவே இங்குதான் இருக்கிறார். இங்கிருந்து அவரை ஐந்துமுறை வெளியே அனுப்பினேன். சென்ற விரைவிலேயே திரும்பிவிடுகிறார்” என்றபின் புன்னகைத்து “அஞ்சுகிறார்” என்றான்.

ஆபர் உள்ளே சென்று குங்கனின் மஞ்சத்தில் போர்வையால் முகத்தையும் மூடிக்கொண்டு படுத்திருந்த உத்தரனை பார்த்தார். “மதுவுண்டாரா?” என்றார். “இல்லை. சற்று சிவமூலிகை புகைக்கக் கொடுத்தேன். அச்சம் களைவதற்கு அது நன்று. ஆனால் அவரில் துயிலாகவே அது வெளிப்படுகிறது” என்றான் குங்கன். “இன்று வசந்தபஞ்சமி விழா. இளவரசர் தோன்றவேண்டிய எந்த அவையிலும் அவர்

தென்படவில்லை. நகர்மக்கள் கேட்கத் தொடங்கிவிட்டார்கள் என்று சிற்றமைச்சர்கள் வந்து சொன்னார்கள்.”

“மாலையில்தானே செண்டுவெளி நிகழ்வு? எழுப்பி கொண்டுவந்துவிடுகிறேன்” என்றான் குங்கன். ஆபர் அமர்ந்துகொண்டு நீள்மூச்சுவிட்டு “குங்கரே, தாங்கள் அறியாதது அல்ல. இங்கே நிகழவிருப்பது என்னவென்றால்…” என்றதும் “அறிவேன்” என்றான் குங்கன். “காலகேயர்கள் வந்திருப்பது உண்மையா என்று நானே சென்று நோக்கினேன். இந்நகரை வெல்வதற்கு அவர்கள் நூற்றுவரே போதும். பேருரு கொண்டவர்கள். அவர்களின் நெஞ்சக்குழி வரைதான் நம் நகரின் மல்லர்கள் இருக்கிறார்கள். கீசகரின் திட்டம் மிகத் தெளிவானது. வசந்தபஞ்சமிக்கு மறுநாள் மதுக்களியாட்டில் நகர்மக்கள் மூழ்கிக் கிடப்பார்கள்…”

குங்கன் தலையசைத்தான். “காலகேயர்களில் முதல்வன் ஜீமுதன் என்னும் மகாமல்லன். அத்தனை பெரிய மானுட உடலை நான் கண்டதே இல்லை. நேரில் கண்டிருக்காவிட்டால் நம்பியிருக்கவும் மாட்டேன்” என்றார் ஆபர். “அவனை எதன்பொருட்டு அழைத்து வந்திருக்கிறார் கீசகர் என்று அறிந்துவரும்படி ஆணையிட்டேன். ஒற்றர்களில் நுண்மை மிக்கவன் சபுத்ரன் என்னும் குள்ளன். மருத்துவ குலத்தில் பிறந்தவன். உழிச்சில்கலை தேர்ந்தவன். கீசகரின் தனிப்பட்ட மருத்துவன். அவனை கோரகோரனுக்கு தசையுழிய அனுப்பியிருக்கிறார் கீசகர். அவன் சொன்னது நம்பும்படி உள்ளது.”

குங்கன் தலையசைத்தான். “வசந்தபஞ்சமி விழவில் காலகேய மல்லர்களின் உடற்தசை விளக்கமும் மற்போரும் நிகழும். உச்சியில் ஜீமுதன் எழுந்து நமது மல்லர்களிடம் தன்னை

எதிர்க்க எவரேனும் உண்டா என்று கேட்பான். நம்மவர்கள் குருதியுறைந்து அமர்ந்திருப்பார்கள் என்பதில் ஐயமில்லை. குங்கரே, நாங்கள் நாடுகொண்டு அரசாண்டாலும் இன்றும் எங்கள் குலநெறிகள் நிஷாதர்களுடைய காடுகளில் எழுந்தவையே. தொல்முறைப்படி கலிதேவனை தெய்வமெனக் கொண்ட எவர் வேண்டுமென்றாலும் எங்கள் அவைபுகுந்து மற்போருக்கு அழைக்கலாம். அரசனோ அரசன் பொருட்டு பிறரோ அந்த அறைகூவலை ஏற்றுக்கொண்டாக வேண்டும்."

"அரசரின்பொருட்டு குடிகள் எவரும் எழவில்லை என்றால் அரசரே மல்லுக்கு களமெழுந்தாகவேண்டும். அரசரை வென்றவன் அவனே அரசனாவான். அவன் முன் கோல்தாழ்த்தி முடியளிக்க வேண்டும் நம் குடி. அது கலிதேவனுக்கு நம் குடிகள் அளித்த ஆணை. காலகேயர்கள் கலியை வழிபடுபவர்கள்." ஆபர் குங்கன் ஏதேனும் சொல்வான் என்று எதிர்பார்த்தார். பின்னர் "ஜீமுதன் அறைகூவினால் விராடபுரியில் அரசர் களமிறங்க வேண்டியிருக்கும். வேறுவழியே இல்லை" என்றார்.

"கீசகர் இறங்கலாமே?" என்றான் குங்கன். "அவர் மச்சர்குடிப் பிறந்தவர். அரசரின் உறவினன் என்ற நிலையிலேயே இங்கே அரசுப்பணி ஆற்றுகிறார். முறைப்படி அரசரின்பொருட்டு களமிறங்குபவர் அரசரின் மைந்தரோ குருதியுறவுகொண்டவரோ அரசரின் படையூழியரோ அடிமையோ ஆக இருந்தாகவேண்டும். ஜீமுதன் அதை மறுப்பான். ஒருவேளை நட்பென அரசர் கோரினாலும் கீசகர் அதை மறுக்கமுடியும். அவர் மறுத்தால் வேறுவழியில்லை, முடிவைத்து அவனிடம் பணியவேண்டும். அது குல இழிவு. எனவே உத்தரர் களமிறங்கியாக வேண்டும். பின்னர் அரசர்.

இருவரையும் அவன் களத்தில் கொல்வான். அவன் கையின் ஒரு அடியை வாங்கிக்கொள்ளும் ஆற்றல்கொண்ட எவரும் நம் குடிகளில் இல்லை.”

“குடிகளின் கண்ணெதிரே கொலை நிகழும். அரசரின் படைகள் சூழ்ந்து நின்றிருக்கும். ஆனால் அவர்கள் அதை கொண்டாடுவார்கள்… களத்தில் தலைசிதறிச் சாயும் அரசரின்பொருட்டு ஒரு துளி விழிநீர்கூட சிந்தப்படாது” என்றார் ஆபர். “இந்த நிஷதகுடிகளின் குருதியில் ஓடுவது மத்தகம் திரண்ட யானைகளின் காடு. மிக எளிதில் இவர்கள் கானகர்களாக ஆகிவிடுவார்கள். இந்நெறிக்கே மத்தகஜநியாயம் என்றுதான் இவர்களின் நூல்கள் பெயரிட்டிருக்கின்றன.”

“இவர்களின் நெறிப்படி படைக்கலத்தால் கொன்றால்தான் அது கொலை. படைக்கலங்கள் மீது ஆழ்ந்த வெறுப்பு இவர்களுக்கிருக்கிறது. வெறும் கை தெய்வங்களால் கட்டுப்படுத்தப்படுவது என்று நம்புகிறார்கள். ஆகவே மற்போர் இவர்களுக்கு வேள்விக்கு நிகரான தூய்மை கொண்டது. மூதாதையரை மகிழ்விக்கும் வழிபாடு அது” என்று ஆபர் தொடர்ந்தார்.

“ஜீமுதன் பெருந்தசை புடைக்க வந்து களம் நிற்கையிலேயே அவனுடன் இணைந்து கூவிக் கொப்பளிப்பார்கள். அவன் மல்லர்களின் தலைகளை உடைத்து கொல்லக் கொல்ல களிவெறிகொண்டு கொல் கொல் என்று கூச்சலிடுவார்கள். அரசரை அவன் கொல்லும்போது கிழித்தெறி, குருதியாடு என்றுதான் சூழ்ந்திருக்கும் நிஷாதர்கள் வெறியாட்டமிடுவார்கள்.”

“ஆம், ஒரு வினாவும் எழாமல் அரசரையும் இளவரசரையும் கொல்லும் வழி அதுவே” என்றான் குங்கன். “ஜீமுதன் அரசரை வென்று நின்று நெஞ்சறைந்து அறைகூவி மணிமுடியைக் கோரியதும் கீசகர் எழுந்து அவனை அறைகூவுவார்.” குங்கன் புன்னகைத்து “ஆம், அப்போது நிஷதகுடிகள் அவர் பெயரைச் சொல்லி ஆர்ப்பரிப்பார்கள். நெஞ்சில் அறைந்து கண்ணீர் விடுவார்கள். அவர் கோரகோரனை வென்றால் பலர் அங்கேயே சங்கரிந்து உயிர்க்கொடை கொடுக்கவும்கூடும்” என்றான்.

“அதுதான் நிகழவிருக்கிறது. குங்கரே, இன்று மாலை கீசகர் நம் அரசராக ஆவார். நம் குடிகள் கண்ணீரும் களிவெறியுமாக வாழ்த்துரைத்து ஆர்ப்பரிக்க குலத்தலைவர்கள் மணிமுடியை அவர் தலையில் சூட்டுவார்கள்.” ஆபர் குங்கனின் கைகளை பற்றிக்கொண்டார். “என் அரசரையும் இளவரசரையும் காப்பாற்றுங்கள். உங்கள் அடிபணிந்து கோரவும் சித்தமாக இருக்கிறேன்.” குங்கன் தாடியை நீவியபடி “ஆம் என்னும் சொல்லுக்கு தடையாக உள்ளது ஒன்றே, அந்தணரே. உங்கள் அரசர் மிகமிகச் சிறுமைகொண்ட உள்ளத்தான்” என்றார்.

“ஆம், அதை நானும் அறிவேன். ஆனால் என் கடப்பாடு அவர் சூடிய மணிமுடிக்கும் கைக்கொண்ட கோலுக்கும்தான். அவற்றால் காக்கப்படும் குடிகள் நலனை அக்குடிகளை ஆளும் நெறிகளை அந்நெறிகளுக்கு அடிப்படையான வேதங்களை மட்டுமே நான் சென்னிசூட முடியும். அதன் பொருட்டு தலையளிக்கவும் நான் ஒருக்கமாகவேண்டும்.” குங்கன் “சிறியாருக்குச் செய்த உதவியின்பொருட்டு ஒருமுறையேனும் துயர் கொள்ளவேண்டியிருக்கும் என்கின்றன நூல்கள்” என்றான். “இவ்வுதவியை என்பொருட்டு செய்யுங்கள். நீங்கள் அறமுணர்ந்தவர்.”

“ஆம், உங்கள்பொருட்டு” என்றான் குங்கன். “காலையில் நிகழ்ந்த கலிபூசனைக்கும் அரண்மனைக்கொலுவுக்கும் களப்பொலிக்கும் இளவரசர் எழுந்தருளவில்லை. செண்டுவெளி ஒருங்கிவிட்டது. அரசர் இன்னும் சற்றுநேரத்தில் களம்புகுவார். அரசியும் இளவரசியும் ஒருங்கிக் கொண்டிருக்கிறார்கள்…” குங்கன் “ஆம், செண்டுவெளியின் குரல்முழக்கத்தை கேட்கிறேன்” என்றான். “இளவரசர் வந்தாகவேண்டும்…” என்றார் ஆபர்.

போர்வையை வீசியபடி எழுந்து “முடியாது… ஒருபோதும் முடியாது. தலை உடைந்து இறக்க நான் வரமாட்டேன்” என்று உத்தரன் கூவினான். உடல் பதற கைகளை அடிக்க வருபவர்களை தடுக்க முயல்வதுபோல நீட்டியபடி “என்னருகே வரவேண்டாம்… நான் போய்விடுகிறேன். நான் எங்காவது ஓடிவிடுகிறேன்” என்று அலறினான். கண்களிலிருந்து நீர்வழிய கழுத்தில் நீலநரம்புகள் புடைத்துத் தெரிய “கொல்லாதீர்கள் கொல்லாதீர்கள்” என்று உடைந்து அழுதான்.

குங்கன் “இளவரசே, உங்களை எவரும் கொல்லப் போவதில்லை” என்றான். “இல்லை, நான் கேட்டேன்… எல்லாவற்றையும் கேட்டேன்” என்றான். குங்கன் “முதல்மூன்று தேவர்களும் இறப்புக்குத் தலைவனாகிய அறத்தோனும் அன்றி எவரும் உங்களை கொல்லமுடியாது. இது என் சொல்” என்றான். அதிலிருந்த உறுதியால் மெல்ல இறுக்கம் தளர்ந்த உத்தரன் இமைகளில் கண்ணீருடன் “ஏன்?” என்றான். “இளவரசே, இப்புவியில் நான் விழைந்தால் அடையமுடியாத எதுவுமில்லை. நான் ஆணையிட்டால் நிகழாதவை என்றும் ஏதுமில்லை” என்றான்.

உத்தரன் வாய் திறந்திருக்க மாறிமாறி இருவரையும் நோக்கி “விளையாடுகிறீர்களா?” என்றான். “நான் பேராற்றல் மிக்க

இரண்டு தெய்வங்களால் காக்கப்படுகிறேன். அவர்களிடம் நான் எண்ணுவதை உரைத்தாலே போதும்.” உத்தரன் “கோரகோரனை வெல்லமுடியுமா?” என்றான். “யானை புறாமுட்டையை என அவன் தலையை உடைத்து களத்திலிடச் செய்கிறேன்” என்றான் குங்கன்.

உத்தரன் புன்னகை செய்தான். இரு கைகளாலும் கண்களை துடைத்துக்கொண்டு அருகே வந்து குங்கனின் கைகளைப் பற்றியபடி “அந்த தெய்வத்தை எவருமே வெல்லமுடியாதா?” என்றான். “முடியும், பிறிதொரு தெய்வத்தால். ஆனால் அத்தெய்வம் இதன் உடன்பிறந்தது. அவர்கள் போரிட்டுக்கொள்ள மாட்டார்கள்.” உத்தரன் கிளுகிளுத்துச் சிரித்து “பேருரு கொண்ட தெய்வமா?” என்றான். “மலைகளைத் தூக்குபவன்…” என்றான் குங்கன். “மருத்துமலையைத் தூக்கிய அஞ்சனைமைந்தனைப் போன்றவன்.”

உத்தரன் “ஆ!” என்று கூவியபடி பாய்ந்து குங்கனின் மறுகையையும் பற்றி தன் நெஞ்சில் வைத்தான். “ஆம், அவனை நான் கண்டேன். குரங்குவடிவம் கொண்டவன்… அவனை நான் கனவில் ஒருமுறை கண்டேன்.” குரல் தழைய “அவன் கீசகரை அறைந்து பிளப்பதைக் கண்டேன்” என்றான். ஆபர் “இதை வெளியே சொல்லவேண்டியதில்லை, இளவரசே” என்றார். உத்தரன் “ஆபரே, நான் களம்புக வேண்டியிருக்கிறது. கிரந்திகனிடம் என் கரிய புரவி சித்தமாகட்டும் என ஆணையிடுங்கள். அரசணி புனைந்து சற்றுநேரத்தில் நான் கீழே வருவேன். கரும்புரவியில் களம் நுழைவேன்” என்றான்.

உத்தரன் அரண்மனை முற்றத்தை அடைந்தபோது காரகன் அங்கே முழுதணிக்கோலத்தில் காத்திருந்தது. பொன்செதுக்கு பதித்த இரும்புக் கவசமும் செங்கழுகின் இறகுசூடிய

தலையணியும் இரும்புக் குறடுகளும் அணிந்து இடையில் நீண்ட வாளுடன் வந்த உத்தரன் படிகளில் இறங்கியபோது எழுந்த ஒலியைக் கேட்டு மகிழ்ச்சி அடைந்து முகம் மலர மெல்ல நடந்தான். அவனுடன் இரு கவசவீரர்கள் படைக்கலங்கள் ஏந்தி நடந்தனர். கூடத்தை அடைந்ததும் அங்கிருந்தோர் வாழ்த்தொலி எழுப்ப அவன் சற்று நின்றான். பின்னர் அவர்களை நோக்கி கைதூக்கி வாழ்த்தியபடி படியிறங்கி முற்றத்தை அடைந்தான்.

அங்கே நின்றிருந்த ஏவலனிடம் "அரசர் களம்புகுந்துவிட்டாரா?" என்றான். "அரசரும் அரசியும் இளவரசியும் களம்புகுந்து அரியணையில் அமர்ந்து ஒரு நாழிகை கடந்துவிட்டது, இளவரசே. களபூசனைகளும் முறைமைகளும் முடிந்து களமாடல் தொடங்கிவிட்டது. அரசரும் அரசியும் படைத்தலைவரும் நாலைந்துமுறை தங்களைப்பற்றி விசாரித்தனர்." உத்தரன் திகைப்புடன் நின்று "கீசகர் கேட்டாரா?" என்றான். "ஆம்" என்றான் ஏவலன். "என்ன கேட்டார்?" என்றான். "இளவரசர் இன்னுமா வரவில்லை என்றார்."

அவன் சில கணங்கள் நின்றபின் "குங்கர் எங்கிருக்கிறார்?" என்றான். "அவர் அரசருடன் சென்றுவிட்டார். அரியணை அருகே அமர்ந்திருக்கிறார்." உத்தரன் "ஆபர்?" என்றான். "அவரும் அருகிருக்கிறார்." உத்தரன் நீள்மூச்செறிந்து "என் பீடம் எங்கிருக்கும்? குங்கரின் அருகில் அல்லவா?" என்றான். "இல்லை இளவரசே, அதை தனியாகத்தான் போடுவார்கள். தாங்கள் களம்நிற்பவர் அல்லவா?" உத்தரன் உரக்க "மூடா, என்னிடம் கேட்டாயா? எங்கு போடுவதென்று என்னிடம் கேட்டாயா? என் இருக்கை குங்கருக்கும் ஆபருக்கும் நடுவே இருக்கவேண்டும். புரிகிறதா?" என்றான்.

கிரந்திகன் “இளவரசே, நான் அதற்கு ஒழுங்கு செய்கிறேன். வாருங்கள்… புரவி காத்திருக்கிறது” என்றான். உத்தரன் கவசத்தின் எடையுடன் நடந்தபடி “மூடர்கள்!” என்றான். கிரந்திகன் “குங்கரிடம் பேசினீர்களா?” என்றான். “அவருக்கு நான் ஆணையிட்டேன், என் காப்புக்கு அவரே பொறுப்பு என்று” என்றான். “என்ன சொன்னார்?” என்றான் கிரந்திகன். “அவர் இரு தெய்வங்களால் காக்கப்படுபவர் என்றார். கோரகோரனை புறாமுட்டை என உடைப்பதாகச் சொன்னார்.”

கிரந்திகன் சிரித்து “நன்று, அவருக்கும் தோள் தினவு தீரும்” என்றான். “எவருக்கு?” என்றான் உத்தரன். “அந்த மல்லன்தெய்வத்திற்கு… தெய்வமே என்றாலும் அதற்கும் அவ்வப்போது விளையாட்டுக்கள் தேவையாகின்றன அல்லவா?” உத்தரன் ஐயத்துடன் நோக்கியபின் “அந்தக் குங்கனை வேவுபார்க்க நான் ஆணையிடவேண்டும். நீ அவனை எனக்காக வேவுபார்த்து சொல். அவனிடம் ஏதோ மாய வித்தைகள் உள்ளன என எண்ணுகிறேன்” என்றான்.

காரகன் உத்தரனை தொலைவில் கண்டதுமே ‘ர்ர்ர்ரீப்’ என்று ஓசையிட்டு முன்னங்காலால் தரையைத் தட்டியது. அதன் சிறுசெவிகள் பின்னால் சரிய விழிகள் உருட்டி விழிக்க மூச்சு சீறியது. உத்தரன் நின்று “ஏன் அது என்னைக் கண்டாலே சீறுகிறது?” என்றான். கிரந்திகன் அதன் தோளில் தொட்டதும் அமைதியாகியது. “இளவரசே, அது புரவிகளின் இயல்பு. அது களம் காண விழைகிறது” என்றான் கிரந்திகன். “ஏறிக்கொள்ளுங்கள்!”

உத்தரன் காலைச் சுழற்றிவீசி மேலேறி நிலையழிந்தான். கிரந்திகன் பிடித்துக்கொள்ள கிரந்திகனின் தலையை கையால் பிடித்தபடி சேணத்தில் கால்நுழைத்தான். “இந்தப் புரவி

இன்னமும் நன்கு பழகவில்லை என்பது விந்தைதான்” என்றபடி கடிவாளத்தை பிடித்தான். “இழுக்காதீர்கள், தளர்வாக பிடித்துக்கொள்ளுங்கள். காலால் புரவியின் விலாவை அணைத்துக் கொள்ளுங்கள்.” கிரந்திகனை சினத்துடன் நோக்கி “நானறியாத புரவியா? நீ எனக்கு கற்றுத்தருகிறாயா?” என்றான் உத்தரன். “இல்லை, தாங்கள் அறியாதது அல்ல” என்றான் கிரந்திகன்.

காரகனின் காதில் அவன் மெல்ல பேச அது காதுகளைக் கூர்ந்து விழிதாழ்த்தியது. பின்னர் பிடரியை சிலிர்த்துக்கொண்டு வால்சுழல குளம்படி தூக்கி வைத்து கிளம்பியது. கிரந்திகன் ஓடிச்சென்று தன் புரவிமேல் ஏறிக்கொண்டான். இரு புரவிகளும் இணையாக ஓட ஏவலர்களின் புரவிகள் தொடர்ந்து வந்தன. குளம்படியோசை சுவர்களில் எதிரொலித்து முழங்க அவர்கள் அரசவீதியில் விரைந்தார்கள். “மெல்ல மெல்ல…” என்று உத்தரன் சொன்னான். “அவ்வண்ணமே” என்று கிரந்திகன் குதிரையிடம் எதையோ சொல்ல அது மேலும் விரைவுடன் பாய்ந்தது. “அய்யோ அய்யோ” என்றான் உத்தரன். புரவி அவனை உள்ளங்கைப் பந்தென தூக்கி விளையாடியபடி சென்றது.

அவர்கள் செண்டுவெளிக்குள் பீரிட்டு நுழைந்ததை உண்மையில் உத்தரன் உணரவேயில்லை. அவன் கண்களை இறுகமூடி பற்களைக் கடித்து உடலை இறுக்கி அமர்ந்திருந்தான். உள்ளே புரவியாட்டு நடந்துகொண்டிருந்தது. ஏழு பரித்திறனர் வெண்புரவிகளில் காற்றிலெனப் பாய்ந்து வெண்ணிற அலைகளை உருவாக்கிக் கொண்டிருந்தனர். உள்ளே நுழைந்த காரகன் உறுமியபடி தாவி முதற்புரவியின்மேல் எழுந்து முதுகை மிதித்துப் பறந்து

அப்பால் சென்று நிலத்தில் காலூன்றி சுழன்று வந்தது. கூட்டத்தினர் கூச்சலிடுவதையும் வாழ்த்துரைப்பதையும் உத்தரன் கேட்டான். எங்கிருக்கிறோம் என்றே அவன் உணரவில்லை.

காரகன் சுழன்று பாய்ந்து காற்றில் நின்ற இரு மூங்கில்களை தாவிக்கடந்தது. அதன் வியர்வைமணம் அறிந்த பெண்புரவிகள் மூக்குவிடைத்து கனைத்தன. காரகன் பாய்ந்து செண்டுவெளியைச் சுற்றி கட்டப்பட்டிருந்த மூங்கில் வேலி வழியாகவே ஓடிச் சுழன்று வந்து நிலத்திலிறங்கியது. ஏழுமுறை செண்டுவெளியை சுற்றிவிட்டு அரசமேடை முன் சென்று பொய்யடி வைத்து ஊசலாடி நின்றது. அதனருகே வந்து நின்ற கிரந்திகன் தன் புரவியிலிருந்து இறங்கி “இளவரசே, இறங்குக!” என்றான். உத்தரன் கண்விழித்து “என்ன? என்ன?” என்றான். “இறங்குங்கள்!”

உத்தரன் மெல்ல காலைத் தூக்கிவைத்து கிரந்திகனின் தலையைப் பிடித்தபடி இறங்கினான். அவன் இரு கால்பொருத்துக்களும் எலும்பு உடைந்தவைபோல வலித்தன. அவன் தள்ளாடினான். கண்கள் இருட்டி செவிகள் அடைத்திருந்தன. “அரசமேடைக்கு செல்க!” என்றான் கிரந்திகன். அவன் வாழ்த்தொலிகளை கேட்டான். “விராட நிஷதகுடியின் இளவரசர் வாழ்க! உத்தரர் வாழ்க!”

அவன் உடல் மெய்ப்பு கொண்டது. மெய்யாகவே வாழ்த்து! இதுவரை அவன் கேட்டறிந்த வாழ்த்துக்களில் இருந்த கேலி இதில் இல்லை. அவன் கண்கள் நீர்கொண்டன. கைகளை வீசியபடி நடந்து படிகளில் ஏறி அரசமேடைக்குச் சென்றான். அங்கே அமர்ந்தபின்னர்தான் எதிர்மேடையில் அரசரும் குங்கரும் அமைச்சரும் அமர்ந்திருப்பதைக் கண்டான்.

கிரந்திகனை நோக்கி கூவ முயன்றபோதுதான் அவன் சென்றுவிட்டதை உணர்ந்தான். வாழ்த்தொலிகள் மெல்ல அவிந்தன. அவன் அப்பால் தனி மேடையில் அமர்ந்திருந்த கீசகனை அரைக்கணம் நோக்கி உடல் விதிர்க்க கண்விலக்கிக் கொண்டான். அவன் உடல் வியர்வையுடன் சேர்ந்து குளிர்ந்து சிலிர்த்தது.

புரவியாட்டுக்கள் முடிந்த பின்னர் வில்வித்தை விளையாட்டு. அதன்பின் வேல் எறிதல். நுண்ணிய இலக்குகளை வீழ்த்தினர் விராட வீரர்கள். அவன் சிறுமேடையில் பிருகந்நளையும் முக்தனும் இருப்பதைக் கண்டான். பெருமூச்சுவிட்டபடி உடலை தளர்த்திக்கொண்டான். இங்குதான் இருக்கிறார்கள் குங்கனின் தெய்வங்கள். அவன் தலையை அவர்கள்தான் காக்கவேண்டும். மீண்டும் பெருமூச்சு விட்டுக்கொண்டான். என்ன நிகழ்ந்தது? காரகன் அவனைத் தூக்கியபடி எங்கெங்கோ சென்றது. பெருவெள்ளத்தில் மரத்தடியைப் பற்றியபடி செல்பவன்போல அவன் அமர்ந்திருந்தான்.

வாய்வழிய அவன் துயில்கொண்டிருப்பதை பேரொலி கேட்டு விழித்தபோதுதான் உணர்ந்தான். “காலகேயர்கள்! காலகேயர்கள்!” என்ற குரல் ஒலித்தது. அவன் அங்குமிங்கும் நோக்கிவிட்டு அவர்களைக் கண்டதும் அறியாது எழுந்து உடனே அமர்ந்தான். இருபது பெருமல்லர்கள் தோள்புடைக்க கைகளை விரித்தபடி அரங்குக்குள் நுழைந்தனர். அவர்களில் ஏழுவர் கரிய உடல் கொண்டிருந்தார்கள். பன்னிருவர் வெண்ணிறம். ஒருவர் மஞ்சள் நிறம். முன்னால் வந்த காலகேயன் கையில் காகக்கொடியை பிடித்திருந்தான். சூழ்ந்திருந்த நிஷாதர்கள் கூச்சலிட்டு ஆர்ப்பரித்தனர்.

“காகக்கொடியா?” என்று அவன் ஏவலனிடம் கேட்டான். “ஆம் அரசே, அவர்களுக்கும் கலிதான் தெய்வம்.” அவர்களின் கொடியில் இரட்டைக்காகங்கள் இருந்தன. “இவர்களுடன் யார் மற்போரிடுவது?” என்றான் உத்தரன். “அவர்களே போரிட்டுக்கொள்ள வேண்டியதுதான்... நம்மவர் அருகே செல்லவே முடியாது” என்றான் ஏவலன். முரசுகள் முழங்கின. கொம்புகள் பிளிறி அடங்கியதும் அறிவிப்புநிமித்திகன் காலகேயர்கள் தங்கள் மல்திறனைக் காட்டப்போவதாக அறிவித்தான்.

அவர்கள் இரண்டிரண்டு பேராக மற்போரிட்டனர். மண்ணில் கைகளை உரசிக்கொண்டு ஒருவரோடொருவர் மோதி அறைந்து பின்னி இறுகி அதிர்ந்து விலகி தூக்கி அறைந்து கைவிரித்து வெற்றிக்கூச்சலிட்டனர். தசைகள் அலையடிப்பதுபோலத் தோன்றியது. “கொல்! கொல்! கொல்!” என்று நிஷாதர்கள் கூச்சலிட்டு எம்பிக்குதித்தனர். கோல்களைத் தூக்கி வீசிப்பிடித்தனர். நெஞ்சிலறைந்து தொண்டை புடைக்க ஆர்ப்பரித்தனர்.

முரசொலி எழுந்தது. காலகேயர்கள் தலைவணங்கி நிரைவகுத்து பின்னால் சென்று இரு பிரிவாக அகல நடுவே ஜீமுதன் தோன்றினான். காலகேயர்கள் நிஷாதர்களைவிட இருமடங்கு பெரிதாக இருந்தனர். ஜீமுதன் அவர்களைவிட தலை ஓங்கியிருந்தான். “அரக்கன்!” என்றான் உத்தரன். “ஆம் அரசே, மானுடரில் இவனுக்கிணையான உருவம் தோன்றியதில்லை என்கிறார்கள்” என்றான் ஏவலன்.

காலகேயனாகிய ஜீமுதன் கன்னங்கரிய உருவம் கொண்டிருந்தான். அவன் உடலுக்கு நோக்க பாதங்களும் கால்களும் சிறியவை. இடையும் நெஞ்சுடன் ஒப்பிட

சிறிதாகவே இருந்தது. தோள்கள் தசைகள் புடைத்து பெருத்து அகன்றிருந்தன. தோளெலும்புகள் மாபெரும் எருமை ஒன்றின் கொம்புகளென விரிந்திருக்க நடுவே மூச்சுக்குழி கரிய பளபளப்புடன் அசைந்தது. காளைத்திமில் என புயத்தசை புடைத்த கைகள். நரம்புகள் முடிச்சுக்களுடன் பருத்துப்பரவியிருந்த கழுத்துக்குமேல் தலை சிறிதாக இருந்தது. முடியே இல்லை. மூக்கு பரந்து சிறிய உதடுகளுக்குமேல் இரு துளைகளாக தெரிந்தது. கண்கள் பன்றிகளைப்போல சிறிதாக கொழுப்புக்குள் புதைந்து தெரிந்தன.

அவன் அசைவுகளும் தலைசரித்த நோக்கும் பார்வையற்றவன் என எண்ணச்செய்தன. “பார்வைக் குறைவுண்டா?” என்றான் உத்தரன். “இல்லை இளவரசே, அது ஒருவகை குருட்டுத்தனம். நினைவறிந்த நாள்முதலே உண்பதும் உடல்வளர்ப்பதும் கொல்வதும் மட்டுமே அவனறிந்தவை எனத் தோன்றுகிறது. கொலைவிலங்கு அது.” உத்தரன் அத்தனை அச்சங்களும் விலக உள்ளக்கிளர்ச்சியுடன் அவன் தசைகளை நோக்கி இருக்கை முனையில் அமர்ந்திருந்தான். “ஆக, இப்படியும் மானுட உடல் அமைய முடியும். இவ்வண்ணமும் ஒருவன் எழுந்து பிரம்மனை ஏறிட்டு நோக்கமுடியும்.”

ஜீமுதன் தன் தோள்களை அறைந்துகொண்ட ஓசை களம் முழுக்க கேட்டது. ஒவ்வொருவரும் அந்த அறையின் ஓசையில் திடுக்கிட்டவர்களாக குரலொடுங்க அவனுடைய காலடியோசைகளே ஒலிக்குமளவுக்கு அமைதி உருவானது. யானையின் உறுமலோசையை எழுப்பியபடி அவன் களத்தை சுற்றிவந்தான். அங்கே கிடந்த பெரிய கல் ஒன்றைத் தூக்கி அப்பால் வீசினான். அது நிலத்தை அறைந்த அதிர்வை உத்தரன் உணர்ந்தான். இரு கைகளையும் அறைந்துகொண்டபடி சென்று

அரசமேடையை அணுகி ஒரே உதையில் மூங்கில் தடுப்பை வீழ்த்தி மறுபக்கம் சென்று அங்கே இடநிலைக்காப்பென நின்ற அரசத்தேரை தூக்கி தலைக்குமேல் சுழற்றி வீசினான். அருகே நின்ற புரவி திகைத்துச் சுற்றிவர பாய்ந்து அதன் இரு கால்களைப்பற்றித் தூக்கி தோளிலிட்டுச் சுழற்றி அப்பால் வீசினான். களத்தில் வந்து விழுந்த புரவி கனைத்தபடி எழுந்து திகைத்து வால்சுழற்றி சுற்றி ஓடியது. அதன் சிறுநீரும் சாணியும் கலந்து தெறித்த மணம் எழுந்தது.

"நான் அறைகூவுகிறேன். கலியின் குடியாகிய நான் காகக்கொடி கொண்டவனாகிய நான் இந்த அரசகுடிகளையும் அரசனையும் நோக்கி முடியறைகூவல் விடுக்கிறேன்" என்று ஜீமுதன் கூவினான். அந்த ஓசையால் திரளோர் மெய்ப்பு கொள்வதை மெல்லிய அசைவே காட்டியது. "எழுக! என்னுடன் மோதுவோர் களம்புகுக! இல்லையேல் அரசரும் அவர் குருதியினரும் எழுக!" என்று ஜீமுதன் நெஞ்சறைந்து முழக்கமிட்டான். "இல்லையென்றால் இக்களத்திலேயே முடி கழற்றி வைத்துவிட்டு விலகிச் செல்க! என் அடிபணிந்து உயிர்க்கொடை பெறுக!"

உத்தரன் அந்த அறைகூவல் தனக்குரியதென்பதை அப்போது முற்றாக மறந்துவிட்டிருந்தான். அந்தத் தருணத்திலிருந்த விசை அவனை உளம்கொந்தளிக்கச் செய்தது. கதைகளில் அறிந்த ஒன்று வாழ்க்கையில் கண்முன் நிகழ்கிறது, அவன் அதை நோக்கிக்கொண்டிருக்கிறான். ஒருகணம் அவன் தன் கற்பனையில் "நான் எதிர்கொள்கிறேன் உன்னை! உன் தலையை உடைத்து களத்தை குருதியாட்டுகிறேன்" என்று கூவியபடி எழுந்தான். அந்த ஊன்குன்றிடம் மற்போரிட்டு அவனை தூக்கிச் சுழற்றி மண்ணில் அறைந்தான். சூழ்ந்திருந்த

நிஷாதர்களின் வெறிகொண்ட வெற்றி முழக்கத்தை நோக்கி கைவிரித்து நின்றான். அவர்கள் கண்களின் நீரொளியை, பற்களின் வெண்சரடுகளை, கையசைவுகளின் அலையை கண்டான். அந்தக் கற்பனையின் எழுச்சியில் அவன் மெய்ப்புகொண்டு கண்ணீர் மல்கினான்.

விராடர் மதுமயக்கில் இருந்தார் என்பதை அவன் உணர்ந்தான். ஆகவே என்ன நிகழ்கிறதென்பதை அவர் உணரவில்லை. மகளிர் மேடையில் அரசியும் இளவரசியும் எழுந்து நின்றுவிட்டனர். விராடர் அமைச்சரிடம் ஏதோ கேட்க அவர் விளக்கினார். "அஞ்சுகிறீர்களா? இன்னொருமுறை... மூன்றுமுறை அறைகூவியபின் நானே அரசமேடைமேல் ஏறி உங்கள் மணிமுடியை எடுத்துக்கொள்வேன்!" என்றான் ஜீமுதன். விராடர் திடீரென்று புரிந்துகொண்டு அறியாமல் எழுந்துவிட்டார்.

"ஆ! அரசரே எழுந்துவிட்டார்! அரசரே மல்லுக்கு வருகிறார்" என்றான் ஜீமுதன். "கீழ்மகனே, உன்னிடம் அரசன் தோள்கோக்க வேண்டியதில்லை. உன்னை எதிர்கொள்ள இங்கே வீரர்கள் உண்டு" என்று விராடர் சொன்னார். "எங்கே நம் மல்லர்கள்? நம் மல்லர்கள் எழட்டும்!" மல்லர்நிரைகளில் எந்த அசைவும் எழவில்லை. "நம் மல்லர்களில் எவருமில்லையா?" என்று விராடர் கூவ நிஷாதர்களில் பலர் சிரிக்கத் தொடங்கினர். "நான் ஆணையிடுகிறேன்... அடேய் சக்ரா, சக்ரா, செல்! சென்று இவனிடம் மோது!" என்றார் விராடர்.

முதன்மை மல்லனாகிய சக்ரன் மெல்ல அசைந்து களத்திற்கு வந்தான். ஜீமுதன் "வா வா" என்று கையசைத்து வெண்பற்களைக் காட்டிச் சிரித்தபடி அவனை நோக்கி சென்றான். சக்ரனின் விழிகளின் நீர்ப்படலத்தை காணமுடிந்தது.

அவன் தரையில் கையை உரசிக்கொண்டு கிருத நிலையில் கைகளை நீட்டியபடி நின்றான். ஜீமுதன் இளித்தபடியே இயல்பாக அணுகி ஒற்றைக்கையை நீட்டி சக்ரனின் கையைப் பிடித்து இழுத்து காற்றில் சுழற்றி தன் தொடைமேல் வைத்து அறைந்து முதுகெலும்பை முறித்தான். எலும்பு ஒடியும் ஒலி கேட்டு உத்தரன் கூசி காதுகளை பொத்திக்கொண்டான். சக்ரன் இருமுறை துடித்து கைகால்கள் இழுத்துக்கொண்டான். அவனை நிலத்திலிட்டுவிட்டு அரசரை நோக்கி இளித்தபடி “அடுத்து எவர்? அடுத்த மல்லர் எவர்?” என்றான். “உங்களுக்கு ஒரு வாய்ப்பளிக்கிறேன். இருவராக வருக… வேண்டாம் மூவர். வேண்டாம்… எத்தனைபேர் வேண்டுமென்றாலும் சேர்ந்து வருக… ஆம், உங்கள் மல்லர்கூட்டமே சேர்ந்து வரட்டும்…” என்றான் ஜீமுதன். விராடர் “கொல்லுங்கள்… அவனை என் கண்ணெதிரே கொன்று போடுங்கள்” என்று கூவினார். மல்லர்கள் தயங்கி நிற்க “களமிறங்காத மல்லர்களை கழுவிலேற்றுவேன். அவர்களின் குடும்பங்களுக்கான அரசகொடைகளை நிறுத்துவேன்” என்று கூச்சலிட்டபடி படிகளில் இறங்கினார். பன்னிரு மல்லர்கள் பாய்ந்து களத்தில் இறங்கினர். அவர்களின் ஊழ் அங்கிருந்த அனைவருக்குமே தெரிந்திருந்தது.

அவர்கள் வராகோத்தூதம் அஸ்வோத்தூதம் கஜோத்தூதம் சிம்ஹோத்தூதம் போன்ற நிலைகளில் கைகளை நீட்டியபடி அவனை அணுகினர். அவர்களில் ஒருவன் “உம்” என்றதும் ஒரே கணத்தில் அவனை நோக்கி பாய்ந்தனர். யானைமேல் காகங்கள் மொய்ப்பதுபோலிருந்தது அக்காட்சி.

ஜீமுதன் மிக எளிதாக அவர்களைப் பிடித்து கொன்றான். ஒரே அடியில் ஒருவனின் மண்டையோட்டை உடைத்து

மூக்குவழியாகவும் செவிகள் வழியாகவும் வெண்மூளை வழியச்செய்தான். ஒருவனைத் தூக்கி நிலத்திலிட்டு ஓங்கி வயிற்றில் உதைத்தபோது வாய்வழியாகவும் குதத்தினூடாகவும் குடல் பிதுங்கி வந்தது. ஒற்றைக்கைகளையோ கால்களையோ பிடித்துச் சுழற்றி மண்ணில் அறைந்தான். இரு தலைகளைச் சேர்த்து அறைந்து உடைத்தான். ஒருவனை இரண்டாகக் கிழித்தெறிந்தான். பின்னர் திரும்பி விராடரை நோக்கி இரு கைகளையும் விரித்து வெறிக்கூச்சலிட்டான்.

# நீர்க்கோலம் - 64

### 63. களம்நிறைத்தல்

காலகேயனாகிய ஜீமுதன் சந்தனமரம் பிணைந்த வேங்கைமரத்தடிபோல நரம்புகளும் தசைநார்களும் முறுகிப்பின்னி புடைத்த இரு கைகளையும் தூக்கி காற்றில் அசைத்து, தொண்டை நரம்புகள் புடைத்து முடிச்செழ பேரொலி எழுப்பியபடி சுழன்று கூடி நின்றிருந்த மக்களை பார்த்தான். அவனைச் சுற்றி நிலத்தில் தலையுடைந்தும் இடுப்பு ஒடிந்தும் இறந்துகொண்டிருந்த மல்லர்களின் உடல்கள் துடித்துக்கொண்டிருந்தன. கூட்டம் திறந்த வாய்களும் விழித்த கண்களும் அசைவிழந்த கைகளுமாக திரைச்சீலையில் வரையப்பட்ட அலைஓவியம்போல் நின்றிருந்தது. தன் வலக்காலால் நிலத்தை ஓங்கி மிதித்து அவன் மீண்டும் பெருங்குரல் எழுப்பினான்.

காட்டில் மதம் கொண்டெழுந்து மண் கிளைத்து மரம் புழக்கி பாறையில் முட்டிக்கொள்ளும் ஒற்றைக்களிறென

செய்வதென்ன என்றில்லாமல் ததும்பினான். எரியில் எழும் கரிப்புகை என அவன் கரிய உடலின் தசைகள் முகிழ்த்து பொங்கி அலையலையென எழுந்தன. மீண்டும் ஒருமுறை அவன் அறைவொலி எழுப்பியபோது கூடி நின்ற நிஷாதர்கள் அனைவரும் வெடித்தெழுந்து வாழ்த்தொலி எழுப்பினர். மொழியென்றும் சொல்லென்றும் திருந்தாத விலங்குக் குரல்களின் தொகையாக இருந்தது அது. ஒவ்வொருவரும் யானைகள்போல கரடிகள்போல மாறிவிட்டனரென்று தோன்றியது. நெஞ்சில் அறைந்தபடியும் கைகளை அசைத்தபடியும் மண்ணில் இருந்து எம்பி குதித்தபடியும் அவர்கள் வீரிட்டனர்.

புடைத்த தொண்டை நரம்புகளும் பிதுங்கி வெளிவருவதுபோல் வெறித்த விழிகளும் திறந்த வாய்களுக்குள் வெண்பற்களுமாக அலையடித்த அந்தத் திரளை அரசமேடை அருகே நின்ற விராடர் திகைப்புடன் பார்த்தார். அறியாது படிகளில் காலெடுத்து வைத்து மேலேறி அரியணைப் பக்கம் வந்தார். கால் தளர்ந்தவர்போல அரியணையின் பிடியை பற்றிக்கொண்டார். அவர் கால்கள் நடுங்கின. வாய் தளர்ந்து விழ முகத்தில் தசைகள் அனைத்தும் உருகி வழியும் மெழுகென தொய்வடைந்தன.

நெஞ்சில் மாறி மாறி அறைந்தபடி தன்னைச் சூழ்ந்து திரையெழுந்த நிஷாதர்களை நோக்கி பிளிறியபடியே இருந்தான் ஜீமுதன். அழுகையென நெளிந்த முகம் கணத்தில் சினம்பற்றிச் சீறியெழ கையை ஓங்கி அரியணையில் அறைந்தபடி விராடர் அரசமேடையின் விளிம்புக்குச் சென்று அப்பால் தனி மேடையில் இருந்த கீசகனைப் பார்த்து “கீசகா! என்ன செய்கிறாய் அங்கே? இனியும் இந்த அரக்கனை இங்கு

விட்டு வைக்கலாமா? கொல்! அவனை இக்கணமே கொல்!” என்றார்.

ஜீமுதன் திரும்பி ஏளனம் தெரியும் இளிப்புடன் “குலநெறிகளின்படி உங்கள் குடிமுத்திரையை தோளில் பொறித்துக்கொண்ட அடிமையோ நிஷதகுடியின் குருதிகொண்டவனோ மட்டுமே என்னை எதிர்கொள்ள முடியும். வேறெங்கிலுமிருந்து கூட்டிவந்து நிறுத்தும் ஒருவனைக் கொண்டு உங்கள் முடி காக்கப்பட வேண்டுமென்றால் அந்த முடியை இதோ என் காலால் எத்தி வீழ்த்துகிறேன்” என்றான்.

“அவன் என் உறவினன். என் மனைவியின் உடன்பிறந்தான்” என்று விராடர் கூவினார். “விராடரே, குருதி என்றால் உங்கள் நிஷதகுடியின் குருதி என்று பொருள். மணம்கொண்ட பெண்ணின் உறவுகள் உங்கள் குருதி உறவுகள் அல்ல” என்றான் ஜீமுதன். “இந்தப் பேச்சை இனி நான் கேட்க விரும்பவில்லை. கீசகா, கொல்! இக்கணமே இவன் குருதியை எனக்குக் காட்டு” என்று விராடர் கைகள் நடுங்கித்தெறிக்க வாய்நுரை எழ கூச்சலிட்டார். தன் தொடைகளை அறைந்தபடி பற்களை நெரித்து கீசகனிடம் “கொல் இவனை! இவன் தலையை உடைத்து குருதியை வீழ்த்து” என்றார். அரியணையும் முடியும் கோலும் அகன்று வெறும் நிஷாதனாக அந்த மேடையில் நின்றார்.

கீசகன் எழுந்து பணிவுடன் “இவனைக் கொல்வதொன்றும் அரிதல்ல, அரசே. ஆனால் இவனைக் கொல்வதனால் இவன் விடுத்த அறைகூவல் மறைவதில்லை. இவனை உங்கள் குருதியினரோ படைவீரரோ குடியினரோ எதிர்கொள்ளாதவரைக்கும் இவன் வென்றதாகவே கருதப்படுவான். விராடபுரியை வென்ற மன்னனை நான்

கொன்றதாகவே காலகேயர்கள் எடுத்துக்கொள்வார்கள். தாங்கள் அறிவீர்கள், இன்று வடபுலத்தில் பாணாசுரர் காலகேயர்களை திரட்டி அமைத்திருக்கும் பெரும்படையை. தெற்கே நிஷாதர்களின் குடிகள் பல அவர்களுடன் இணைந்து கொண்டுள்ளன. மச்சர்களின் நாடுகள் அவர்களுக்கு உடன் சாத்திட்டிருக்கின்றன. இந்த ஏது ஒன்று போதும் அவர்கள் நம்மீது படைகொண்டு வருவதற்கு" என்றான்.

"பேசாதே. அரசியல்சூழ்ச்சிக்கான இடமல்ல இது. இக்கணமே இவனைக் கொன்று இவன் குருதியை எனக்குக் காட்டு. இல்லையேல் நான் இறங்கி இங்கு உயிர் துறப்பேன்" என்றார் விராடர். கீசகன் தயங்கி "அரசே, இவ்வண்ணம் ஒன்று நிகழுமென்று நான் எண்ணவில்லை. இன்று காலகேயர்கள் நம்மீது படைகொண்டு வருவதற்கு ஒரு தொடக்கத்தை நாடியிருக்கிறார்கள். அதன்பொருட்டே இவனை அனுப்பியிருக்கிறார்கள் என உய்த்து அறிகிறேன்... நிஷதகுடிகள் அவர்களுடன் சேரத் தயங்கிக்கொண்டிருப்பது நாம் குலநெறி நின்று அரசுசூழ்கிறோம் என்பதனால்தான். நாம் நெறி தவறினோம் என்றால் அவர்கள் அனைவரும் அங்கு செல்வார்கள். அதன் பிறகு இந்த நாடு எஞ்சாது" என்றான்.

"பிறகென்ன செய்ய வேண்டுமென்கிறாய்? சொல்!" என்றார் விராடர். "இவனை நம்மால் எதிர்கொள்ள முடியாது. இத்தருணத்தில் ஓர் அரசியல்சூழ்ச்சியென நாம் முடி துறப்போம். இவன் அரியணை அமரட்டும். அதன்பின் நம் படைகளால் இவனை வென்று இந்நகரை கைப்பற்றுவோம். அது முற்றிலும் நெறிநின்று ஆற்றும் செயலே" என்றான் கீசகன். "இது என் சொல், தங்களுக்காகப் படை நடத்தி இவனை வெல்வது என் பொறுப்பு."

விராடர் காறி தரையில் துப்பினார். சினவெறியுடன் தன் மேலாடையை எடுத்து அரியணைமேல் வீசி தலைப்பாகையைக் கழற்றி அதன் மேலிட்டார். “முடி துறப்பதா? அதைவிட இவன் முன் களம்நின்று உயிர் துறப்பேன். இது எந்தை எனக்களித்த முடி. களம்பட்டு இதைத் துறந்தால் விண்சென்று அவர் முன் நிற்க எனக்குத் தயக்கமிருக்காது... முடி துறந்து செல்வேன் என்றால் என் மூதன்னை என் முகத்தில் உமிழ்வாள்” என்றபின் திரும்பி உத்தரனைப் பார்த்து “உத்தரா, மூடா, எழு! அணிகளைக் கழற்று. இது நம் நிலம், இதன்பொருட்டு இக்கணத்தில் மோதி இறப்போம். அது நம் குடிக்கு பெருமை” என்றார்.

உத்தரன் அக்குரல்களை தனக்குப் பின்னாலிருந்து எவரோ சொல்வதுபோல் கேட்டான். ஒரு கணத்தில் தந்தையின் முகம் மிக அருகே வந்து அவரது கண்களுக்குக் கீழ் சுருக்கங்களும் பற்களின் கறையும் தெரியும்படியாக விரிந்தது. மதுப் பழக்கத்தால் பழுத்த நீரோடிய விழிகள் சினத்துடன் எரிந்தன. “எழு! இவன் முன் தலையுடைந்து இறப்பதே நம் கடமை இப்போது.” உத்தரனின் இரு கால்களும் ஒன்றுடன் ஒன்று தொடர்பற்றவைபோல் நடுங்கிக் கொண்டிருந்தன. கைகளால் தன் பீடத்தின் பிடியைப் பற்றியபடி பற்கள் உரசிக்கொள்ளும் ஓசையைக் கேட்டு எங்கிருக்கிறோம் என்றே உணராதவனாக அமர்ந்திருந்தான்.

குங்கன் எழுவதையும் அரசரின் தோளைத் தொட்டு மெல்லிய குரலில் ஏதோ சொல்வதையும் அவன் கண்டான். குங்கனின் இதழ்கள் மிக அருகிலெனத் தெரிந்தன. குங்கன் சொன்னது புரியாததுபோல் விராடரின் முகம் நெரிந்தது. புருவங்கள் சுருங்கி கண்கள் துடித்தன. இருமுறை திரும்பிப் பார்த்து

மேலும் குழம்பி உதிரிச் சொற்கள் ஏதோ சொன்னார். ஒரு கணத்தில் அவருக்கு குங்கன் சொன்னது புரிய அவன் கைகளை பற்றிக்கொண்டார். பின்னர் திரும்பியபோது அவர் முகம் வெறியும் சினமும் கொண்டு இளித்திருந்தது. “அடுமனையாளன் வலவன் எங்கே? வலவன் எழுக! இப்போதே களம் புகுக!” என்றார்.

விராட குடிகள் அனைவரும் திரும்பி ஒருவரை ஒருவர் பார்க்க நிமித்திகர் அச்சொற்களை ஏற்றுக்கூவினர். சூதர்களும் புரவிக்காரர்களும் கூடி நின்ற திரளிலிருந்து உடல்களை ஒதுக்கியபடி, காட்டுத்தழைப்பிலிருந்து மத்தகமெழும் யானை என வந்த வலவன் வேலியை கையூன்றித் தாவி களத்தில் நின்று தலைவணங்கினான். “நீ விராடபுரியின் அடிமையல்லவா?” என்றார் விராடர். “ஆம், அரசே” என்றான் வலவன். “உங்கள் குடிமுத்திரையை தோளில் பச்சை குத்திக்கொண்டவன். உங்கள் மிச்சிலுண்டு வாழ்பவன்.” விராடரின் கண்கள் அவன் தோள்களை நோக்கி அலைபாய்ந்தன. “என்பொருட்டு இவ்வரக்கனை எதிர்கொள்ள உன்னால் இயலுமா?” வலவன் தலைவணங்கி “நான் போர்க்கலை பயின்றவனல்ல. விளையாட்டுக்கு மற்போரிடுவதுண்டு. தாங்கள் ஆணையிட்டால் இவனை நான் கொல்கிறேன்” என்றான்.

அச்சொல் ஜீமுதனின் உடலில் சருகு விழுந்த நீர்ப்பரப்பென ஓர் அதிர்வை உருவாக்கியது. வலவன் எழுந்து வந்தபோதே ஜீமுதனின் முகமும் உடலும் மாறுபடுவதை சூழ்ந்திருந்த நிஷாதர்கள் அனைவரும் கண்டனர். உடலில் பெருகி கைகளில் ததும்பி விரல்களை அதிரவைத்த உள்விசையுடன் ஒவ்வொருவரும் முன்னகர்ந்தனர். “கொல் இவனை! இவனை

நீ கொன்றால் நீ விழைவதை நான் அளிப்பேன். இது என் மூதாதையர் மேல் ஆணை!” என்றார் விராடர். அவனை திரும்பிப் பார்த்து “தங்கள் ஆணை. எவ்வண்ணம் கொல்லவேண்டும் என்று சொல்லுங்கள், அரசே” என்றான் வலவன். விராடரே சற்று திகைத்தார். பின் “நெஞ்சைப் பிள... அவன் சங்கை எடுத்து எனக்குக் காட்டு” என்றார். “ஆணை” என அவன் தலைவணங்கினான்.

வலவன் தன் இடையில் கட்டிய துணியை அவிழ்த்து அப்பால் வீசினான். அதற்கு அடியில் தோலாடை அணிந்திருந்தான். அதை முறுக்கிக் கட்டினான். சம்பவன் கூட்டத்திற்குள்ளிருந்து பாய்ந்து வந்து அளித்த தோற்கச்சையை அதற்குமேல் இறுக்கிக்கட்டி உடற்தசைகளை நெகிழ்த்தி இறுக்கி தோள்களை குவித்தான். இரு கைகளையும் விரித்து பின் விரல்சேர்த்து எலும்புகள் ஒலிக்க நீட்டி நிமிர்த்தியபின் “உன் பெயரென்ன?” என்று ஜீமுதனிடம் கேட்டான். ஜீமுதன் முகத்தில் அறியாமை நிறைந்த மந்தத் தன்மையொன்று வந்திருந்தது. “காலகேய ஜீமுதன்” என்றான். “நான் சூதனாகிய வலவன். உன்னைக் கொல்ல நான் விரும்பவில்லை. உன் பேருடலை நானும் மகிழ்ந்து பார்த்துக்கொண்டிருந்தேன். அடிபணிந்து விலகிச் செல்!” என்றான் வலவன்.

ஜீமுதன் இரு கைகளையும் விரித்து தேள்போல காலெடுத்து வைத்து மெல்ல அணுகி “இல்லை. எந்தக் களத்திலும் நான் பின்னடைந்ததில்லை” என்றான். “இக்களத்தில் நீ வெறும் கரு. உயிர் துறப்பதற்குரிய அடிப்படையேதும் இங்கு இல்லை. செல்க!” என்றான் வலவன். மேலும் அணுகி வலவனுக்கு நிகராக நின்றான் ஜீமுதன். வலவனின் தலை அவன் மார்பளவுக்கு இருந்தது. ஆனால் இரு கைகளையும் அவன்

விரித்தபோது ஜீமுதனின் தோள்களைவிடப் பெரியவை வலவனின் தோள்கள் என்று தெரிந்தது. அப்போதே போர் எவ்வகையில் முடியுமென்று நிஷாதர்களில் பெரும்பாலோர் அறிந்துவிட்டிருந்தனர். மெல்லிய முணுமுணுப்புகள் கலந்த முழக்கம் களத்தைச் சுற்றி ஒலித்தது.

ஜீமுதன் மேலும் அருகே வந்தான். வலவனும் அவனும் மிக நெருக்கமாக முகத்தை வைத்துக்கொண்டனர். ஜீமுதனின் முகத்திலும் உடலிலும் வரும் மாறுதலை திகைப்புடன் உத்தரன் பார்த்தான். ஜீமுதன் இரு கைகளையும் விரித்து ஹஸ்தலம்பனத்திற்கு காட்டினான். வலவன் தன் இரு கைகளையும் அவன் கைகளுடன் கோத்துக்கொண்டான். ஒருவரையொருவர் உந்தி உச்ச விசையில் அசைவிழந்தனர்.

வலவன் உதடுகள் எதையோ சொல்வதை, அதைக் கேட்டு ஜீமுதனின் முகம் மாறுபடுவதை உத்தரன் கண்டான். "என்ன சொல்கிறார்?" என்று ஏவலனிடம் கேட்டான். "மற்போரில் மாற்றுரு கொண்டு எவரும் போரிடலாகாது. மறுதோள் மல்லன் அறியாத மந்தணம் எதையும் உளம் கொண்டிருக்கலாகாது. வலவன் நாம் எவரும் அறியாத எதையோ ஜீமுதனிடம் சொல்கிறான்" என்றான் ஏவலன். ஜீமுதனின் முகம் மாறுபட்டது. துயர்போல பின் பணிவுபோல. பின்னர் அவன் தெய்வத்தின் முன் நிற்கும் பூசகன்போல் ஆனான்.

"நான் சொல்கிறேன், அவன் என்ன சொல்கிறானென்று" என்றபடி உத்தரன் பாய்ந்து எழுந்தான். "நான் அடுமனையாளன் அல்ல, காட்டிலிருந்து கிளம்பி வந்த தெய்வம். கந்தர்வன்! அதைத்தான் சொல்கிறான்" என்றான். ஏவலன் "ஆம், அத்தகைய எதையோ

ஒன்றைத்தான் சொல்லியிருக்கிறான். காலகேயனின் உடலும் முகமும் முற்றிலும் மாறிவிட்டன” என்றான்.

❀கீசகன் ஜீமுதனின் மாற்றத்தை கூர்ந்து நோக்கிக்கொண்டிருந்தான். அவன் உடலில் எழுந்த பணிவை அதன்பின் மெல்ல எழுந்த பெருமிதத்தை. அவர்கள் தோள்விலகி களத்தில் முகத்தொடு முகம் நோக்கி நின்றனர். இரு கைகளையும் நீட்டியபடி மெல்ல சுற்றிவந்தனர். கால்கள் தழுவும் நாகங்களின் படமெடுத்த உடல்போல ஒன்றை ஒன்று உரசியபடி நடக்க எச்சரிக்கை கொண்ட முயல்கள் என பாதங்கள் மண்ணில் பதிந்து செல்ல வலவன் ஜீமுதனின் தோள்களில் விழி ஊன்றி சுற்றிவந்தான். அவனுடைய பேருருவ நிழல் என ஜீமுதன் மறு எல்லையில் சுற்றி நடந்தான்.

வலவன் வெல்வான் என்று கீசகன் நன்குணர்ந்துவிட்டிருந்தான். இரு தோள்களும் தொட்டு கோத்துக்கொண்டபோதே உயரமும் எடையும் குறைவென்றாலும் வலவனின் தோள்கள் பெரிது எனத் தெரிந்தது. ஜீமுதனின் எடை மட்டுமே வலவனை வெல்லும் கூறு, அவ்வெடையை எப்படி வலவன் எதிர்கொள்வான் என்பது மட்டுமே தெரிந்துகொள்ள வேண்டியது. அடிஒழியவும் நிலைபெயராதிருக்கவும் தெரிந்தவன் வலவன் என்றால் அனைத்தும் முடிவாகிவிட்டன. இவன் தோள்களை நான் இதுவரை எண்ணியதே இல்லையா? இவனைத் தவிர்த்து இத்திட்டத்தை எப்படி வரைந்தேன்?

இவனை பார்த்திருக்கிறேன். ஒவ்வொரு முறையும் இவன் தோள்களை நோக்குவதை தவிர்த்தேன். இவனைத் தொட்ட என் விழிகள் அக்கணமே விலகிக்கொண்டன. நான் இவனை அஞ்சுகிறேனா? அஞ்சுவதா? நானா? ஆனால் அஞ்சுகிறேன்.

இவனை அல்ல. இவன் வடிவாக வந்துள்ள பிறிதொன்றை. அது என் இறப்பு அல்ல. இறப்பை நான் அஞ்சவில்லை. என் ஏழு வயதில் காலைக் கவ்விய முதலை ஒன்றை வாய் கீண்டு வென்றேன். அன்று நான் வென்றது என்னுள் உறையும் சாவச்சத்தை. நான் அஞ்சுவது பிறிதொன்றை. அல்லது, அது அச்சமே அல்ல. அது பிறிதொன்று. அவன் மெல்லிய மயிர்ப்பு ஒன்றை அடைந்தான். இவனை நான் நன்கறிவேன். இவன் தோள்களை தழுவியிருக்கிறேன். இவனுடன் காற்றிலாடி சேற்றில்புரண்டு எழுந்திருக்கிறேன்...

கூட்டத்திலிருந்து "ஹோ" என்னும் பேரொலி எழுந்தது. இரு மல்லர்களும் யானைமருப்புகள் என தலை முட்டிக்கொள்ள கைகளால் ஒருவரை ஒருவர் அள்ளி கவ்விக்கொண்டனர். கால்கள் பின்னிக்கொண்டு மண்ணைக் கிளறியபடி மண்ணை மிதித்துச் சுற்றின. தசைகளையே கீசகன் நோக்கிக்கொண்டிருந்தான். வலவன் ஜீமுதனின் பிடியிலிருந்து உருவிக்கொண்டு தரையில் அமர்ந்து அவ்விசையிலேயே விலகிக்கொண்டு துள்ளி எழுந்து தன் கையை வீசி வெடிப்போசையுடன் ஜீமுதனின் வலது காதின் மீது அறைந்தான். ஜீமுதன் தள்ளாடி நிலைமீண்டதைக் கண்டதுமே கீசகன் அவன் செவிப்பறை கிழிந்துவிட்டதை புரிந்துகொண்டான். ஜீமுதன் இரு கைகளையும் விரித்து தன்னை காத்துக்கொண்டபடி விழிகளை மூடித்திறந்தான். அவனால் இனி கூர்ந்து கேட்கவியலாது. உடலின் நிகர்நிலையைப் பேணமுடியாது. இனி நிகழப்போவது ஒரு கொலைதான்.

கீசகன் திரும்பி குங்கனை நோக்கினான். அடுமனையில் இப்படி ஒருவனிருப்பதை இவன் எப்படி அறிந்தான்? எளிய சூதாடி.

ஆனால் சூதாடுபவர்கள் அச்சூதுக்களத்தின் பெருவிரிவாக வெளியுலகை நோக்கிக்கொண்டிருக்கிறார்களா என்ன? அவன் விழிதிருப்பியபோது வேறெங்கோ நோக்கியவன்போல் அமர்ந்திருந்த கிரந்திகனைக் கண்டான். அவன் எங்கு நோக்குகிறான் என்று பார்த்தபின் மீண்டும் அவனை நோக்கினான். அப்போது அவன் நோக்கு வந்து தன்னை தொட்டுச்செல்வதை கண்டான். அவன் நோக்கியது யாரை என உணர்ந்து அங்கே நோக்கினான். பிருகந்நளை அந்தப் போரில் எந்த வித அக்கறையும் இல்லாமல் அமர்ந்திருந்தாள்.

இவர்கள் மட்டும்தான் இப்போருக்கு சற்றும் உளம் அளிக்காமல் அமர்ந்திருக்கிறார்கள். யார் இவர்கள்? அவன் திரும்பி சைரந்திரியை பார்த்தான். பக்கவாட்டில் அவள் முகத்தின் கோட்டுத்தோற்றம் தெரிந்தது. ஒருகணத்தில், ஒருகணத்தின் நூற்றிலொன்றில், வரையப்பட்ட கோட்டுக்கு மட்டுமே அந்த வளைவு இயலும். நெற்றி, மூக்கு, இதழ்கள், முகவாய், கழுத்து, முலையெழுச்சி... எப்போது அவளைப் பார்த்தாலும் அவன் அடையும் படபடப்பு அது. அவள் முழுமையாகவே அந்தத் தசைப்பூசலில் ஈடுபட்டிருந்தாள். அவளே ஈருரு கொண்டு ஒன்றுடன் ஒன்று மோதிக்கொண்டிருப்பதுபோல.

கிருதங்களும் பிரதிகிருதங்களும். ஹஸ்தக்கிருதத்திற்கு ஹஸ்தக்கிருதம். பாதக்கிருதம் பாதக்கிருதத்திற்கு. அர்த்தகிருதமென்றால் அதுவே. மற்போர் ஒருவனின் ஓர் அசைவை பிறிதொருவன் நிகர் செய்வது. ஓர் உரையாடல். மிகமிகத் தொன்மையானது. ஒருவனின் நிழலென பிறிதொருவன் ஆவது. இருவரும் கவ்விக்கொள்கிறார்கள். ஒருவனை ஒருவன் தூக்கிச்சுழற்ற முயன்று நின்று அதிர்கிறார்கள். சந்நிபாதத்தில் ஒரு மாத்திரைதான்

வெற்றிதோல்வியை முடிவாக்குகிறது. இதோ வலவன் ஜீமுதனைச் சுழற்றி மண்ணில் வீழ்த்துகிறான். அவன்மேல் பாய்ந்து கால்களால் அவன் கால்களைக் கவ்வி மண்ணுடன் பற்றிக்கொள்கிறான். அவதூதம் என்பது மண்ணிலிருத்தல். மண் எனும் பெருமல்ல அன்னையின் மடியில் தவழ்தல். பிரமாதம் என்பது அதில் திளைத்தல். எழுந்து மாறிமாறி அறைந்துகொண்டார்கள். உன்மதனம்.

கீசகன் முதலில் வலவனாக நின்று ஜீமுதனிடம் போரிட்டுக்கொண்டிருந்தான். எப்போதென்று அறியாமல் ஜீமுதனாக மாறியிருந்தான். இருவரும் உருண்டு புரள்கையில் ஒருகணம் அவனாகவும் மறுகணம் இவனாகவும் உருமாறி ஒன்றில் சென்று நிலைத்தான். ஒவ்வொரு கணம் என வலவன் ஆற்றல்கொண்டபடியே சென்றான். ஜீமுதனின் உடலில் இருந்தே அந்த ஆற்றலை பெற்றுக்கொண்டவன்போல. ஒரு துளி, பிறிதொரு துளி. ஆனால் அந்த ஒவ்வொரு துளியையும் நோக்க முடிந்தது. இந்தக் கணம், இதோ இக்கணம், இனி மறுகணம், இதோ மீண்டுமொரு கணம் என அத்தருணம் விலகிச்சென்றது.

ஆனால் அது நிகழ்ந்தபோது அவன் அதை காணவில்லை. ஜீமுதனை வலவன் தன் தோளின்மேல் தூக்கி மண்ணில் ஓங்கி அறைந்தான். தன் எடையாலேயே ஜீமுதன் அந்த அடியை பலமடங்கு விசையுடன் பெற்றான். சில கணங்கள் ஜீமுதன் நினைவழிந்து படுத்திருக்க அவன்மேல் எழுந்து தன் முழங்கைக் கிண்ணத்தால் அவன் மூச்சுக்குழியில் ஓங்கி குழித்தடித்தான். ஜீமுதன் உடலின் தலையும் கால்களும் திடுக்குற்று உள்வளைந்து பின் நெளிந்துகொள்ள அவன் கைகளும் கால்களும் இழுபட்டுத் துடித்தன. மீண்டும்

இருமுறை அவன் மூச்சுக்குழியை அடித்துக் குழித்து அவ்வாறே அழுத்தியபின் அவன் கழுத்தை தன் கைகளால் வளைத்துப் பற்றிக்கொண்டான்.

அங்கிருந்து நோக்கியபோது வலவனின் முகம் தெரிந்தது. இனிய காதலணைப்பில் கண்மயங்கி செயலழிந்ததுபோல. உவகையா அருளா என்றறியாத தோய்வில். இறுக்கி உடல்செறிக்கும் மலைப்பாம்பின் முகமும் இப்படித்தான் இருக்கின்றது. அவன் கைகளை கோத்தபடி நோக்கி அமர்ந்திருந்தான். விரல்நுனிகளில் மட்டும் குருதி வந்து முட்டுவதன் மெல்லுறுத்தல். இறுதி உந்தலாக ஜீமுதன் வலக்காலை ஓங்கி மண்ணில் அறைந்து எம்பிப்புரண்டான். வலவன் அவனுக்கு அடியிலானான். ஆயினும் பிடியை விடவில்லை. ஜீமுதனின் முகம் தெரிந்தபோது அதிலும் அதே இனிய துயில்மயக்கே தெரிந்தது. நற்கனவுக்குள் மூழ்கிக்கொண்டிருப்பவன்போல.

சூழ்ந்திருந்த கூட்டம் ஆழ்ந்த அமைதியில் உறைந்திருந்தது. இலைநுனிகளும் ஆடைகளும்கூட அசைவழிந்தன என்று தோன்றியது. இருவரும் இங்கிருந்து மூழ்கி பிறிதொரு உலகில் அமைந்துவிட்டதுபோல. நீரடியில் பளிங்குச் சிலைகள் என பதிந்துவிட்டதுபோல. இருவரும் இறந்துவிட்டனர் என்னும் எண்ணம் அவனுக்கு வந்ததும் உள்ளம் அதிர்ந்தது. எவர்பொருட்டு அந்த அச்சம்? எத்துணை பொழுது! இப்படியே அந்தியாகலாம். இரவு எழலாம். புலரி வெளுத்து பிறிதொரு நாளாகலாம். மாதங்கள், ஆண்டுகள், யுகங்கள், மகாயுங்கள், மன்வந்தரங்கள். வேறெங்கோ இது முடிவிலாது நிகழ்ந்துகொண்டிருக்கிறது.

வலவன் ஜீமுதனை புரட்டிப்போட்டு எழுந்தான். ஜீமுதன் இரு கைகளும் விரிந்து மல்லாந்திருக்க தலை அண்ணாந்து வானைப் பார்க்க சற்றே திறந்த வாய்க்குள் குதிரையுடையவைபோன்ற கப்பைப் பற்கள் தெரிய கிடந்தான். வலவன் விராடரை நோக்கி தலைவணங்கி “ஆணைப்படி இவன் சங்கைப் பிடுங்கி அளிக்கிறேன், அரசே” என்றான். விராடர் அரியணையில் கால் தளர்ந்து படிந்து அமர்ந்திருந்தார். “என்ன? என்ன?” என்றார். வலவன் “இவன் சங்குக்குலையை பிழுதெடுக்க வேண்டும் என்றீர்கள்” என்றான். அவர் பதறி எழுந்து கைநீட்டி “வேண்டாம்… வேண்டாம்…” என்றார். “அவன் தெய்வப் பேருரு. அவன் பிழை ஏதும் செய்யவில்லை. பிழைசெய்தவன் நான். தோள்வலிமையில்லாதிருப்பதுபோல அரசனுக்கு குலப்பழி பிறிதில்லை” என்றார்.

அவர் குரல் உடைந்தது. விழிநீரை கைகளால் ஒற்றிக்கொண்டு ஒருகணம் தன்னை கட்டுப்படுத்திக்கொண்டார். பின் கைகளை விரித்து “நம் மண்ணுக்கு வந்த இம்மாவீரன் இங்கு என்றென்றும் நினைவுகூரப்பட வேண்டும். களம்பட்ட முதல் வீரனுக்குரிய அனைத்துச் சடங்குகளுடனும் இவன் உடல் எரியூட்டப்படுக! குடிமூத்தாருக்கு அளிக்கப்படும் முழுஇரவும் உண்ணாவிழிப்பு நோன்பும் பதினாறுநாள் துயர்காப்பும் இவனுக்கு உரித்தாகுக! இவன் நடுகல் நம் மூதாதையர் வாழும் தென்னிலத்திலேயே அமைக! இந்நாளில் இவனுக்குரிய படுக்கையும் கொடையும் இங்கு நிகழ்க! நம் மைந்தர் மற்போரிடும் களங்களில் எல்லாம் ஒரு கல் என இவனும் நின்றிருப்பதாக. நம் போர்ப்பூசனைகளில் எல்லாம் அன்னக்கொடைகளில் ஒரு கைப்பிடி இவனுக்கும் அளிக்கப்படுவதாகுக!” என்றார்.

சூழ்ந்திருந்த பெருந்திரள் கைகளையும் கோல்களையும் தூக்கி “ஆம், அவ்வாறே ஆகுக!” என்று கூவியது. நிமித்திகன் கைகாட்ட களமுதல்வன் மண்பட்டதை அறிவித்தபடி பெருமுரசுகள் முழங்கத் தொடங்கின. “மண்வந்த மாவீரன் வெல்க! விண்சென்ற முதல்வோன் வாழ்க! பெருந்தோளன் வாழ்க!” என வாழ்த்தொலிகள் எழுந்து கரும்பாறை அடுக்கை நதிப்பெருக்கு என முரசொலியை மூடின. கொம்புகள் பிளிறி “விண்நிறைந்தவனே, எங்களுக்கு அருள்க! எங்கள் குருதியில் நீ மீண்டும் நிகழ்க!” என இறைஞ்சின.

வலவன் குனிந்து ஜீமுதன் கால்களைத் தொட்டு சென்னிசூடி வணங்கினான். அவன் அரசமேடை அருகே சென்று நின்று தலைவணங்கியபோது “நீ விழைந்ததை கேள்” என்றார் விராடர். கையசைவிலேயே அவர் சொற்களை உணரமுடிந்தது. அவர் விழிகள் சுருங்கி வலவனை பகை என நோக்கின. ஒரே கணத்தில் அங்கிருந்த அனைவராலும் உள்ளாழத்தில் வெறுக்கப்படுபவனாக அவன் ஆன விந்தையை கீசகன் எண்ணிக்கொண்டான். வென்ற மல்லன் சிறந்தவன், இறந்த மல்லன் மிகச் சிறந்தவன் என அவன் இளிவரலுடன் எண்ணி இதழ்வளைய புன்னகை செய்தான். வலவன் ஏதோ சொல்லி தலைவணங்கி வெளியேறினான். திகைத்தவர்போல விராடர் அவனை நோக்கி நின்றார்.

நிஷாத வீரர்களும் ஏழு நிமித்திகர்களும் வந்து மண்ணில் கிடந்த ஜீமுதனின் உடலின்மேல் செம்பட்டு ஒன்றை போர்த்தினர். களத்தில் பரவிய வீரர்கள் உடல்களை அகற்றத் தொடங்கினர். இறந்த எறும்புகளை எடுத்துச்செல்லும் எறும்புக்கூட்டங்கள். அரசர் எழுந்து அவையை தலைவணங்கிவிட்டு திரும்பிச்செல்ல அவர் அவை நீங்குவதை

அறிவிக்கும் கொம்புகளும் முழவுகளும் ஒலித்தன. சூழ்ந்திருந்த மக்கள் அறுபடாது வாழ்த்தொலி முழக்கிக்கொண்டே இருந்தனர். அரசியும் இளவரசியும் அவை நீங்கினர். கீசகன் தன்னருகே வந்து வணங்கிய முதுநிமித்திகனிடம் “அவன் என்ன சொன்னான்?” என்றான்.

உதடசைவை சொல்லென்றாக்கும் நெறிகற்ற நிமித்திகன் அரசர் சொன்னதை சொன்னான். “வலவன் சொன்ன மறுமொழியை சொல்க!” என்றான் கீசகன் பொறுமையிழந்தவனாக. “வெற்றிக்கு அப்பால் விழைவதும் பெறுவதும் இல்லை அரசே என்றான்.” கீசகன் தலையசைத்தான். அவன் திரும்பியதும் நிமித்திகன் “ஆனால் விலகிச்செல்கையில் அவன் தனக்கென்று சொல்லிக்கொண்டதையும் இதழசைவைக்கொண்டு படித்தறிந்தேன்” என்றான். சொல்க என்பதுபோல கீசகன் திரும்பிப்பார்த்தான். “வெற்றி என்பதுதான் என்ன என்று அவன் சொல்லிக்கொண்டான், படைத்தலைவரே” என்றான் நிமித்திகன்.

# நீர்க்கோலம் - 65

## 64. மாநாகத்தழுவல்

அரண்மனை அகத்தளத்தின் அனைத்துச் சுவர்களிலும் தண்ணுமையின் மென்மையான தாளம் எதிரொலியென அதிர்ந்துகொண்டிருந்தது. அத்தனை அறைகளும் மூடியிருந்தன. இடைநாழிகள் அனைத்தும் ஆளொழிந்து கிடந்தன. சாளரங்கள் அனைத்தும் திறந்திருக்க வெளியே எரிந்த பல்லாயிரம் கொத்துவிளக்குகளும் தூண்விளக்குகளும் நெய்ப்பந்தங்களும் பெருக்கிப் பரப்பிய செவ்வொளி நீள்சதுரவடிவ செம்பட்டுக் கம்பளங்களாக விழுந்து கிடந்தது. சிலம்புகள் மெல்ல சிணுங்க

திரௌபதி நடந்தபோது அவள் ஆடை எரிகொண்டு அணைந்து மீண்டும் கனலானது.

படிகளில் அவள் இறங்கியபோது கீழே சுபாஷிணி அமர்ந்திருப்பதை கண்டாள். அவள் குழல் அவிழ்ந்து நீண்டு படிகளில் வளைந்து கிடந்தது. ஒரு காலை நீட்டி பிறிதொன்றை மடித்து அதில் கை ஊன்றி முகவாய் சேர்த்து அமர்ந்திருந்தாள். திரௌபதி வரும் காலடியோசையை அவள் கேட்டதாகத் தெரியவில்லை. அவளருகே வந்து நின்று குனிந்து அவள் தலையை திரௌபதி தொட்டபோதுதான் திடுக்கிட்டு எழுந்து ஆடையை அள்ளி இடையுடன் அழுத்தியபடி நின்றாள். “இசை நிகழ்வுக்கு செல்லவில்லையா?” என்றாள்.

சுபாஷிணி ஏதோ சொன்னாள். அது சரியாகக் கேட்கவில்லை. “என்ன? ஏன் இங்கே தனியாக இருக்கிறாய்?” என்றாள் திரௌபதி. அவள் தொண்டையைச் செருமி “இங்கே எல்லாம் கேட்கிறது” என்றாள். “ஆம், ஆனால் அங்கே தோழிகளுடன் அமர்ந்திருக்கலாம் அல்லவா?” அவள் கண்களைத் தாழ்த்தி “ஆம்” என்றாள். “வா” என அவள் கையை பற்றிக்கொண்டு திரௌபதி நடந்தாள். அவள் பெருமூச்சுவிடுவதைக் கேட்டு திரும்பி நோக்கி “என்ன?” என்றாள். “எனக்கு அச்சமாக இருக்கிறது” என்றாள் சுபாஷிணி. “என்ன அச்சம்?” என்றாள் திரௌபதி. “நான் பிச்சி ஆகிவிடுவேனா?” என்றாள் சுபாஷிணி.

“ஆனால் என்ன? அனைத்தும் மூடியிருப்பதைவிட ஒன்றிரண்டு வாயில்கள் திறந்திருப்பது நன்றுதானே?” அவள் “இல்லை, எனக்கு ஏதேதோ எண்ணங்கள்” என்றாள். திரௌபதி “எல்லா கரவெண்ணங்களும் நன்று. அவை இருக்கும்வரைதான் வாழ்க்கை” என்றாள். “உங்களுக்கு இவை உண்டா?” திரௌபதி அவள் தோளைத்தட்டி “மும்மடங்கு” என்றாள். “அவற்றால்தான்

நான் ஆற்றல்கொள்கிறேன்.” சுபாஷிணி சில கணங்கள் தலைகுனிந்தபடி வந்தபின் “தேவி” என்றாள். “சொல்” என்றாள் திரௌபதி. “நாம் இறுதியில் உடலைத்தான் விழைகிறோமா? நாம் பிறிதெவருமல்லவா?” திரௌபதி அவள் தோளைப்பற்றி உலுக்கி “உடலை அல்ல ஆற்றலை” என்றாள்.

சுபாஷிணி “ஆம்” என பெருமூச்சுவிட்டாள். பின்னர் “ஆற்றல் மட்டுமே என்றால்...” என்றாள். “ஆற்றல் நம்மை அள்ளிச் செல்லவேண்டும்... நாம் அடைவது பிளவுண்டிருக்கலாகாது. முழுமையாக நம்மை வந்தடைய வேண்டும்.” சுபாஷிணி முகம் மலர்ந்து “ஆம்” என்றாள். திரௌபதி அவள் காதருகே குனிந்து “கரவுக்காட்டுக்குள் எதுவுமே பிழையல்ல” என்றாள். அவள் “ஏன்?” என்றாள். “அங்கு நாம் செல்வதில்லையே... நம்மிலுறையும் தெய்வங்கள் அல்லவா அங்கே உருக்கொண்டு எழுகின்றன. அவற்றை நாம் எப்படி ஆளமுடியும்?” சுபாஷிணி “ஆம்” என்றாள்.

அவர்கள் கூத்தம்பலத்தை கடந்தார்கள். சகஸ்ரதேஜஸ் என்று அந்த நீள்வட்ட மண்டபத்திற்குப் பெயரிட்டிருப்பது ஏன் என்று திரௌபதி அப்போதுதான் உணர்ந்தாள். சுவர்கள் முழுக்க விளக்குகள் ஏற்றப்பட்டு பற்றி எரியும் புதர்க்காடென அது தெரிந்தது. உள்ளே நடனநிகழ்ச்சியின் சலங்கையோசையுடன் தண்ணுமையும் பேரியாழும் முயங்கும் இசை ஒலித்தது. “இளவரசி உள்ளே இருக்கிறார்” என்றாள் திரௌபதி. “பிருகந்நளை ஒருக்கிய நடனம் இது. பதினெட்டு விறலியர் ஆடுகிறார்கள்.”

அவர்கள் உள்ளே சென்றபோது அரங்கு நிறைந்திருந்தது. தரையில் விரிக்கப்பட்ட கம்பளங்களில் பெண்கள் அமர்ந்திருக்க பிறர் சுவரோரமாக மானுடக்கரை என சூழ்ந்திருந்தனர்.

அரங்கில் நிறைந்திருந்த சுடரொளி தாளத்தில் அதிர்வதுபோலத் தோன்றியது. அனைத்து நிழல்களும் ஒளியால் கரைக்கப்பட்டிருந்தமையால் அரங்கு மாபெரும் சுவரோவியம் போன்றிருந்தது. அவர்கள் உள்ளே நுழைந்ததை எவரும் அறியவில்லை. மேடையில் அனைத்துப் பகுதிகளிலிருந்தும் மெல்லிய வெளிச்சம் சிப்பிக்குவைகளாலும் பளிங்குப்பரப்புகளாலும் எதிரொளித்து பரப்பப்பட்டிருந்தது. அதில் நடுவே பிருகந்நளை பெண்ணுருவில் ஆடிக்கொண்டிருந்தாள். கொண்டையை மீறி வழிந்த நீள்குழலும் அதிலணிந்த செம்மலர்களும் கழுத்திலணிந்த செம்மலர் மாலையும் அசுரகுலத்திற்குரிய நெற்றிக்குறியும் அவளை தேவயானி என்று காட்டின. கசன் உருவில் அவளருகே நின்றிருந்த விறலி நெற்றியில் மூன்றாம் விழி ஒன்றை வரைந்து புலித்தோலாடை அணிந்திருந்தாள்.

கசன் வலக்கையில் வெண்தாமரை மலர்களை வைத்திருந்தான். அவர்கள் வளைந்தும் நெளிந்தும் பிரிந்தும் இணைந்தும் ஆடியபோது அவர்கள் நடுவே அந்த வெண்தாமரை மலர்கள் வந்துசென்றன. ஒருமுறைகூட அவை எங்கும் படவோ இதழுலையவோ இல்லை. அவர்கள் ஆடுவதை அறியாமல் பிறிதொரு விழியறியா நீர்ச்சுழலில் அந்தத் தாமரைகள் சுழன்றுகொண்டிருந்தன. ஆட்டம் விசைகொண்டு கைகளும் கால்களும் விழிதொடமுடியாத விரைவை அடைந்து உச்சத்தில் அவர்கள் சிவசக்தி லயநிலையில் உறைந்தபோது கசன் தலைமேல் வெண்தாமரை அப்போது மலர்ந்ததுபோல் இதழ் விரித்திருந்தது. வலக்கையால் அவன் அஞ்சல் குறி காட்ட இடக்கையால் அவள் அருளல்குறி காட்டினாள்.

கூடியிருந்தவர்கள் “உமாசிவம்! உமாசிவம்!” என்று கூவி வாழ்த்தினர். கரவெழினி இமையென மெல்ல சரிந்து வந்து மேடையை மூடியது. எங்கும் அசைவுகள் பரவ சேடியர் அவைமுகப்பிலிருந்த இளவரசிக்கும் பிற பெருங்குடிப் பெண்டிருக்கும் வாய்மணமும், இன்னீரும் கொண்டு குனிந்து நிரைகள் நடுவே பரவினர். “அரசி இங்கில்லையா?” என்றாள் திரௌபதி. “இல்லை, அவர் அப்பால் சிற்றம்பலத்தில் பாட்டு கேட்கிறார்.” திரௌபதி “நாம் அங்கே செல்வோம்” என்றாள். “இங்கே இன்னும் எட்டு பாதங்களாக இந்த ஆடல் நிகழும்” என்றாள் சுபாஷிணி. “அங்கே செல்வோம்” என திரௌபதி நடந்தாள்.

தொலைவில் கூத்துமுற்றத்தில் ஆண்களுக்கான கொடுகொட்டி நிகழ்ந்துகொண்டிருந்தது. சூழ்ந்திருந்த பந்தங்களின் ஒளி ஆட்டர்களின் நிழல்களைப் பெருக்கி வானோக்கிச் செலுத்த அங்கே இருள்வடிவ தேவர்களின் நடனம் தெரிவதுபோலிருந்தது. “நகரில் பன்னிரு இடங்களில் இப்போது கூத்து நிகழ்கிறது, தேவி” என்றாள் சுபாஷிணி. “கோட்டைமுகப்பில் நிகழும் கூடியாட்டமே சிறந்தது என்று சொல்லி பிரீதையும் அவள் குழுவும் சென்றிருக்கிறார்கள். சூதத்தெருவில் பீதர்நாட்டு நடனம் ஒன்று நிகழ்கிறது. அதற்கு சிலர் சென்றிருக்கிறார்கள்.”

அவர்கள் முற்றத்தை வளைத்துச்சென்ற கல்பரப்பிய பாதையில் நடந்தனர். செவ்வொளியில் கருங்கல் ஈரமாக இருப்பதுபோலத் தோன்றியது. சிற்றம்பலத்திற்கு வெளியே இரு ஆளுயர தூண்விளக்குக் கற்கள் உடலெங்கும் சுடர்சூடி பூத்த வேங்கை என நின்றிருந்தன. “அங்காடியில் கலிங்கக் கழைக்கூத்தாடிகள் விருத்திர வதம் என்னும் நாடகத்தை

நடத்துகிறார்கள் என்று சூத்ரி சொன்னாள். மொத்த நாடகமும் வானிலேயே நிகழுமாம். கீழே நின்று அண்ணாந்துதான் பார்க்கவேண்டும். அனைவரும் கழிகளிலும் கயிறுகளிலும் தொங்கியபடி அதை ஆடுவர் என்றாள்” என்றாள் சுபாஷிணி.

“இங்கே என்ன கதைப்பாடல்?” என்றாள் திரௌபதி. “அறியேன். இங்கே தென்னகத்தின் நாகநாட்டிலிருந்து வந்த முதிய விறலி பாடுகிறாள். அவள் பெயர் சூலி. அவள் குரலும் நன்றாக இல்லை. கடுங்குளிரில் பாடுவதுபோல ஒரு நடுக்கம். ஆனால் அரசி அவள் பாடிக் கேட்க முடிவுசெய்தார்…” அவர்கள் உள்ளே நுழைந்தபோது ஒற்றைவிரல் முழவின் சீரான தாளம் கேட்டுக்கொண்டிருந்தது. “மரங்கொத்தியின் ஒலிபோலக் கேட்கிறது. இப்படியா முழவை தட்டுவார்கள்?” என்றாள் சுபாஷிணி.

அது இருபதுபேர் அமரும் சிறிய நீள்வட்டக் கூடம். தரையிலிட்ட மரவுரிக் கம்பளத்தில் அரசி அமர்ந்திருக்க சேடியர் எழுவர் சூழ்ந்திருந்தனர். ஏழு திரியிடப்பட்ட நிலைவிளக்கு சுடரசையாமல் எரிந்தது. அதில் முழவுடன் அமர்ந்திருந்த முதுவிறலியின் பெருநிழல் எழுந்து வளைவுக்கூரையில் மடிந்து நின்றது. அவள் கைகளின் அசைவு இரு பக்கச் சுவர்களிலும் பெருகித் ததும்பியது. மெல்லிய கிழக்குரல் ஒலித்துக்கொண்டிருந்தது. முதலில் அது என்ன மொழி என்றே திரௌபதிக்குத் தெரியவில்லை. பின்னர்தான் சொற்கள் முகம் காட்டத் தொடங்கின.

அவள் நுழைந்து பின்னிரையில் அமர்வதை அரசி நோக்கி தன்னருகே வந்து அமரும்படி கைகாட்டினாள். திரௌபதி சென்று அருகே அமர்ந்துகொண்டாள். நாகவிறலியின் விழிகள் வெண்சோழிகள் போலிருந்தன. திரௌபதி முதலில்

விந்தைகொண்டது அவள் கைவிரல்களை நோக்கித்தான். அவை குட்டிப் பாம்புகளின் அடுக்கெனத் தோன்றின. பிறர் விரல்களைவிட இருமடங்கு நீளம். எண்ணமுடியாத கோணங்களிலெல்லாம் வளைந்து நெளிந்தன. அவள் ஒரு சிறு அமைதியின்மையை உணர்ந்து ஆடை திருத்திவிட்டு நோக்கியபோது நாகவிறலியின் விழிகள் தன்னை நோக்கி நிலைத்திருப்பதைக் கண்டாள். ஆனால் அவள் நோக்கவுமில்லை. அருகே இருந்த அரசியையும் சேடியரையும் நோக்கினாள். அவர்களும் அவள் விழிகளில் நோக்கி அமர்ந்திருந்தனர். ஒவ்வொருவரையும் அவள் விழிகள் உற்றுநோக்குகின்றனவா?

“கரியன், கனல்விழியன், நீளுடலன், ஆராவனல் கொண்ட பல்லன், அரவிலி, அறிந்தோன், அகலான். அவன் வாழ்க!” என்று நாகவிறலி பாடினாள். அங்கு நுழைந்தபோது அவள் மாநாகக் குலத்தின் பிறவிக்காதையை சொல்லிக்கொண்டிருந்தாள் என்று திரௌபதி நினைவுகூர்ந்தாள். “கிழக்கே, காமரூபத்திற்கும் மணிபூரகத்திற்கும் அப்பால் உள்ளது தொல்நாகநாடு. அதற்கு கார்க்கோடகம் என்று பெயர். அங்கே ஓடுகிறது சீதோதை என்னும் பெருநதி. நாகநதி. விண்ணிலொரு நாகமெனப் பிறந்தவள். மண்ணில் நீர்ப்பெருக்கென்று உடல்கொண்டாள். நூறுநூறாயிரம் நாகக்குழவிகளைப் பெற்று இழுத்து தன்னில் அணைத்துக்கொண்டு ஒழுகினாள்.”

“கேளுங்கள் இதை. அது கன்னங்கரிய நதி. கரும்புகையென அருவியாவது. இருள்விரிவென விரிநிலம் பரவி நிறைவது. அலைவளைவுகளில் கருமை ஒளியென்றாவது. கடுங்குளிர் நீர்ப்பெருக்கு கொண்டதனால் சீதோதை என்றழைக்கப்பட்டது. தொட்ட விரல் அக்கணமே கல்லாகும் குளிர் கொண்டது.

விழுந்த இலை தகடென்றாகும் அழுத்தம் கொண்டது. வெண்பளிங்கு மீன்கள் விழிமின்ன வால்சுழிக்கும் பெருக்கு அது” என்றாள் நாகவிறலி. “நாகங்கள் அப்பெருக்கில் இறங்கியதுமே உடல்கரைந்து இருத்தலின் நெளிவுமட்டுமே என்றாயின. அம்புகள் நேரெனச் சென்றடையா இலக்குகளை நோக்கி நெளிந்து நெளிந்து சென்றடையும் நாகங்கள் வெல்க!”

“அந்நிலமே கார்க்கோடகம், நாகர்களன்றி பிறர் அணுகமுடியாத மண். அங்கு வாழும் ஆயிரம்கோடி கருநாகங்கள் வாழ்க! ஆயிரம்கோடி பொன்னிற நாகங்கள் வாழ்க! ஆயிரம்கோடி வெண்ணிற நாகங்கள் நீடுவாழ்க!” என்று நாகவிறலி சொன்னாள். “தொல்பிரஜாபதியாகிய காசியபருக்கு கத்ரு என்னும் நாகத்தாயில் பிறந்த ஆயிரத்தெட்டு மைந்தரில் ஆற்றல்மிக்கவன் கார்க்கோடகன். அன்னை அவனை ஒரு சிறிய கரியவேர் என்றாக்கினாள். அதை கிழக்குநிலத்தில் சீதோதையின் குளிர்க்கரையில் நட்டாள். அவன் அங்கே மரமென முளைத்தெழுந்தான். வேரென்றும் விழுதென்றும் விதையென்றும் பெருகினான். கார்க்கோடகத்தின் அத்தனை மரங்களும் நாகங்களே என்றறிக!”

“மாற்றுரு கொண்டு உலகறியக் கிளம்புவது இறப்பற்ற கார்க்கோடகனின் வழக்கம். சிறுபாம்பென பொந்துகளினூடாக சென்று இல்லங்களுக்கு அடியில் வாழ்வதுண்டு. துயில்பவர்களின் கனவுக்குள் நுழைந்தேறி நெளிநெளிந்து அவர்களை புன்னகை செய்ய வைப்பான். பத்திவிரித்து அவர்களை அஞ்சி முகம்பதறச் செய்வான். நா நீட்டிச் சீறும்போது அவர்கள் அலறி விழித்தெழுந்து உடல்நடுங்குவர். அப்போது அறைமூலையில் நெளிந்தமையும் கணநேரக் கருநிழல் அவனே என அவர்கள் அறிவதில்லை.

இலையசைவாக திரையுலைவாக தூண்நிழலாட்டமாக அதை அவர்களின் விழிகாணச் செய்வதும் அவன் மாயமேயாகும்.”

❀அன்றொருநாள் வரதை என்னும் ஆற்றில் அவன் நீர்ப்பாம்பென அலையிலாடும் மரங்களின் நிழல்பாவைகளுடன் கலந்து நெளிந்து சென்றுகொண்டிருக்கையில் உடன் நீந்திச்சென்ற சிறுமியொருத்தியை கண்டான். அவளுடன் சேர்ந்து அவன் நீந்தியபோது அவள் தன் கைகளும் கால்களும் எண்ணியிராதபடி எளிதாகி விசைகொள்வதை அறிந்தாள். அவை அப்போது நெளிவென்பதை நன்கறிந்திருந்தன. அதுவரை நீரலைகளை முறித்தும் கலைத்தும் அசைந்து விசை வீணாக்கின. அப்போது அவை அலைகளில் முற்றிலும் இயைந்து வான்பருந்துச் சிறகுகள் காற்றில் என அவளை நலுங்காமல் கொண்டுசென்றன.

வரதாவில் புதுப்புனல் பெருகிச்சென்ற முதல் மழைக்காலம். அவளுடன் புனலாடிய தோழிகள் குரல் மயங்கி மிகத் தொலைவில் அகன்றனர். நீர் தனிமையென ஓசையின்மை என அவளைச் சூழ்ந்தது. கலங்கிய மலைமழைநீரில் தங்கத்தாலானவை என ஒளியுடன் திரும்பின இலைகள். மெல்ல உருண்டுசென்றன மலைமரத்தடிகள். மீன்கள் துள்ளி வெள்ளி மின்னி பொன்னென்று மூழ்கின. வாய்திறந்து வாங்கி மூடிக்கொண்டது நீர்ப்பரப்பு. அவள் நிலமென்று ஒன்றிருப்பதை மறந்தாள். மீன் என அப்பெருக்கில் பிறந்து வளர்ந்தவளென்று சித்தம் மயங்க அங்கே திளைத்தாள்.

அவளை கார்க்கோடகன் நீரென்றாகி இடைசுற்றி இழுத்துச் சென்றான். பெருஞ்சுழி என்று உடல்வளைத்து அதன் நடுவே அவளை ஆழ்த்தினான். தன்னைச் சூழ்ந்து நீர் வளைந்தோடுவதை அவள் நோக்கிக்கொண்டிருந்தாள். பின்னர்

அவள் தலைகீழாக நீருக்குள் சென்றாள். அவளுக்குக் கீழே திரைகள் என நீர்ப்படலங்கள் விலகி விலகி உள்ளிழுத்துக்கொண்டன. தலைக்குமேல் நீராலான வானம் மெல்லொளியுடன் குமிழிகள் கொப்பளித்துச் சுழல விரிந்திருந்தது. அவள் ஆடை விலகி சிறகுகொண்டதுபோல் எழுந்து மேலே சென்று நீண்டு நிறத்தீற்றலாகி மறைந்தது. அவள் குழல் சிறகு என விரிந்து மெல்ல திரையடித்தது.

ஒளியென்றிலங்கிய நீர் இருளென்றாகியது. மேலும் மேலும் இருண்டு இன்மையென்று எடைகொண்டு அவளை பல்லாயிரம் கைகளால் ஒவ்வொரு தசையிலும் அழுத்திப் பற்றிக்கொண்டது. அழுத்தம் மிகுந்தோறும் அவள் உடல் சுருங்கிச் சுருங்கி அணுவென்றாகியது. சிறு துகளென நீரில் நின்றுலைந்தாள். தத்தளித்துச் சுழன்றுசென்று பெருங்குமிழி ஒன்றில் ஒட்டிக்கொண்டாள். அதன் பளிங்கு வளைவுக்கு அப்பால் அவள் ஒரு பெருநகரைக் கண்டாள். ஒளிரும் பொன்னிறக் குமிழ்க்கூரைகள் கொண்ட மாடநிரைகள். கொடிகள் பறக்கும் காவல்மாடங்கள். பெருவீதிகள். படையணிகள்.

அவளை நீருள் வீசப்பட்ட கொக்கியால் தொடுத்தெடுத்து மேலே தூக்கிய தோணிக்காரர்கள் அவள் விழிகள் திறந்து முகம் மலர்ந்திருப்பதையும் இதழ்கள் ஏதோ சொல்லிக்கொண்டிருப்பதையும் கண்டனர். அதன்பின் பன்னிரு நாட்கள் தொடர்ந்த கடும் காய்ச்சலின்போது அவள் அச்சொற்களை சொல்லிக்கொண்டே இருந்தாள். அவள் உதடுகளருகே செவி வைத்தும் சேடியரால் அவற்றை உய்த்தறிய முடியவில்லை. நிமித்திகர் வந்து நோக்கி “கார்க்கோடகன் என்று அவள் சொல்கிறாள்!” என்றார்.

அரண்மனை பதற்றம் கொண்டது. விதர்ப்பத்தின் அரசர் அந்தணரையும் நிமித்திகர்களையும் அழைத்துவந்து இடர்தீர் வேள்விகளையும் பிழைநிகர் சடங்குகளையும் செய்தார். நாகப்பற்று நிகழ்ந்துள்ளது என்றனர் நிமித்திகர். “எளிய பூசனைகளில் விலகும் தெய்வம் அல்ல மாநாகம். இது காருருக்கொண்டு நிழலெனப் பெருகுவது. கீழ்த்திசையிலிருந்து வந்தது. நீரென நெளிந்து சூழ்ந்தது.”

நாகசூதர் எழுவர் தங்கள் விறலியருடன் வரவழைக்கப்பட்டனர். அவர்கள் அரண்மனைமுற்றத்தில் நூற்றெட்டு சுழல்களாக மடிந்து நிறைந்த கருநாகக் களம் வரைந்தனர். அதன் எட்டு மூலைகளிலும் எட்டு நாகப்புற்றுக்கள் அமைக்கப்பட்டு அதில் கமுகப்பூக்குலை நாட்டப்பட்டது. தென்கிழக்கு மூலையில் பாய்விரித்து நிறைபறைகளில் பொன்னெல்லுடன் மா, பலா, வாழை, அத்தி, மாதுளம், இலந்தையுடன் கடுந்துவர்ப்புள்ள எட்டி என ஏழுவகைக் கனிகளும் அரளி, தெச்சி, காந்தள், முருக்கு, தாமரை என ஐந்துவகை செம்மலர்களும், கஸ்தூரி, கோரோசனை, புனுகு என மூன்றுவகை நறுமணங்களும் படைத்து பூசனை செய்தனர்.

பெருங்களம் முதிர்கையில் வெறியாட்டெழுந்த நாகவிறலி தன் குழல்கற்றையை விரித்துச் சுழற்றி வீசி மூன்று வண்ணப்பொடியால் வரையப்பட்ட நாகபடத்தை அழித்தாள். வண்ணங்கள் கலந்த வெளியில் புரண்டெழுந்த அவள் வாய்க்குள் இரு நச்சுப்பற்கள் எழுந்திருந்தன. விழிகள் நாகமென மணிநிலை கொண்டன. சீறும் ஒலியில் அவள் சொன்னாள் “இவள் என்னவள். இவளுடனிருப்பேன் என்றும். இவள் இப்புவியின்மேல் தன் இடக்கால் வைத்து எழுந்தமர்ந்து

முக்குடை சூடுவாள். இவள் மணிமுடியின் ஒளியை விண்ணிலிருக்கும் இந்திரன் காண்பான்! ஆம்! ஆம்! ஆம்!”

“அது நற்குறியென்றே எண்ணுகிறேன், அரசே” என்றார் நிமித்திகர். “ஷாத்ர வல்லமை அரசகுலத்திற்கு அழகு. ஷாத்ர வல்லமைகளில் முதன்மையானது மாநாக நஞ்சு. இளவரசியிடம் அந்த ஆற்றல் நிறையட்டும். நம் குடி பெருகும்.” வைதிகர்தலைவர் சம்புநாதர் மட்டும் “நஞ்சு நன்று. ஆனால் நாகமன்றி எவர் நஞ்சுகொண்டாலும் தன்னை கருக்காதொழியமாட்டார்” என்றார்.
“வேண்டுமென்றால் தென்னகத்திலிருந்து நாகபூசகரை வரவழைப்போம். அந்நாகத்தை ஒழிய வைப்போம், உங்கள் விழைவு அது” என்றார் நிமித்திகர். முகவாயை நீவியபடி அரியணையில் அமர்ந்திருந்த அரசர் பின் நீள்மூச்சுடன் “இவளால் நம் குடிபெருகுமென்றால் அது நிகழ்க! அதன்பொருட்டு இவள் துயருறுவாளென்றால் அதுவும் ஆகுக! அது களப்பலிக்கு நிகர்” என்றார்.

“ஆம் அரசே, இன்னும் நாம் இந்த நதிக்கரைச் சேற்றில் சிறுநகர் என்று வாழக்கூடாது. இங்கிருந்து கிளைவிரித்து பாரதம் மீது எழவேண்டும்” என்றார் பெரும்படைத்தலைவர். மூதமைச்சர் “இளவரசியின் கையில் புவியாளும் பேரரசிக்குரிய குறிகள் உள்ளன என்று பிறவிநூலர் சொன்னார்கள் அல்லவா?” என்றார். “நீ என்ன எண்ணுகிறாய், அரசி?” என விதர்ப்பர் தன் துணைவியிடம் கேட்டார். “ஆம், அதுவே நிகழ்க!” என்றாள் அரசி. ஆனால் விழிநீர் பெருக மேலாடையால் முகம் மறைத்துக்கொண்டாள்.

தோள்திரண்டு உடற்கருமையில் ஒளி நிறைந்து கன்னியென தமயந்தி வளர்ந்தபோது அவளை பாரதத்தை ஆளும் பேரரசி

என்றே அவள் சுற்றமும் அகம்படியும் நம்பினர். பிறிதொன்றை அவளும் எண்ணியிருக்கவில்லை. அன்னைக்கும் தந்தைக்கும் அவள் ஆணைகளையே இட்டாள். விழியசைவால் ஏவல்களை நிகழ்த்தினாள். ஒவ்வொருநாளும் சென்று தன் படைப்பிரிவுகளை நோக்கிவந்தாள். சிற்பியருடன் அமர்ந்து கோட்டைகளையும் மாடமாளிகைகளையும் வரைந்துகொண்டாள். சொல்தாழ்ந்து தலைநிமிர்ந்தாள். அடியெண்ணி என நடந்தாள். காற்றிலென படியிறங்கினாள்.

அந்திமங்கலின் ஒளியில் அவள் நிழலென எழுந்து கூரைவளைவில் படிந்து படமெடுத்து வளைந்த மாநாகத்தை பலரும் கண்டிருந்தனர். அவள் துயிலும் அறையிலிருந்து எழும் காற்றுச்சீறல் ஓசையை, அவள் நீராடும் ஆற்றின் ஆழத்தில் நெளியும் பேருடலை சேடியர் கண்டு தங்களுக்குள் சிறுகுரலில் சொல்லிக்கொண்டனர். அவள் அழகொளியைக் கண்ட சூதர் "பிறிதொன்றில் ஆழம் அமையாமல் இப்புவியில் எவரும் மேலெழ இயலாதென்றறிக! அவள் அழகு இங்குள்ளதல்ல. வேறெங்கோ அது சமைக்கப்படுகிறது" என்றனர்.

பின்னிரவில் அகலொளியில் அவள் ஆழ்ந்து துயில்கையில் சாளரம் வழியாக நோக்கிய முதிய சேடி ஒருத்தி பிறிதொருத்தியை அழைத்துச் சுட்டி சொன்னாள் "நோக்குக, அவள் கண் அறியா எவரையோ முயங்குகிறாள்." அவள் திகைப்புடன் "என்ன சொல்கிறாய்?" என்றாள். "நோக்கு" என்றாள் முதல் சேடி. நோக்கிய மற்றவள் ஒரு கணத்தில் அவள் கைகளும் கால்களும் உடலும் தழுவிய இடைவெளியை எண்ணத்தால் நிறைத்து அதை கண்டுகொண்டாள். "ஆ! அது

ஒரு மாநாகம்” என்றாள். சொல்லாதே என முதல் சேடி வாய்மேல் விரல் வைத்தாள்.

நளன் அவளை மணந்த முதல்நாளிரவில் கோதைக்கரையிலமைந்த வசந்த மண்டபத்தில் அவளிடம் கேட்டான் “நான் அனுப்பிய அன்னம் உன்னிடம் சொன்னதென்ன?” அவள் புன்னகைத்து “அதனிடம் நான் சொல்லி அனுப்பியதென்ன என்று சொல்லுங்கள், நான் கேட்டதை சொல்கிறேன்” என்றாள். அவன் சொல்ல வாயெடுத்தபின் “நான் சொல்வதும் நீ சொல்லியனுப்பியதும் வேறுபட்டிருந்தது என்றால் என்ன செய்வோம்?” என்றான். அவள் “அதையே நானும் கேட்கிறேன், நான் சொல்வது நீங்கள் சொன்னதல்ல என்றால் நம் உறவை என்ன செய்வோம்?” என்றாள்.

இருவரும் ஒருவரை ஒருவர் நோக்கி புன்னகை செய்துகொண்டார்கள். அவள் தன் காதிலிருந்த குழையைக் கழற்றி அதை உள்ளங்கையில் வைத்து “சொல்வதா வேண்டாமா? ஆம் என்றால் மேலே, இன்றெனில் கீழே” என்றாள். “இதென்ன விளையாட்டு?” என அவன் சிரித்தான். “இளமையில் இதைத்தான் வினாக்களுக்கு விடைதேட ஆடுவோம்.” அவன் உரக்க நகைத்தபடி “நன்று” என்றான். அவள் அதை சுண்டி மேலே வீசி இரு கைகளாலும் பொத்திப்பிடித்து கையை விரித்தாள். “வேண்டாம் என்கின்றது குழை” என்றாள். அவன் “நம் உறவு நீடிக்கவேண்டும் என்கிறதா?” என்றான். “இன்னொருமுறை” என்று அவள் சுண்டிப் பிடித்தாள். “மீண்டும் அதுவே, சொல்லவேண்டியதில்லை.” அவன் “நம் உறவில் ஒரு சொல்லப்படாத இடம் நீடிக்கட்டும் என்கின்றதா?” என்றான்.

“மீண்டும் ஒருமுறை?” என்றாள் தமயந்தி. “வேண்டுமா?” என்றான். “ஒன்றில்லையேல் மூன்று என்பதே நெறி” என்றாள். “நன்று” என்றான். மீண்டும் அன்று என்றது குழை. “நம் உறவில் ஒரு பிரிவுண்டு என்று சொல்கிறது” என்றான். “எப்படி சொல்கிறீர்கள்?” என்றாள் புருவம் சுருங்க. “ஒன்றின் நீட்சியே மூன்று” என்றான். அவள் சில கணங்கள் நோக்கியபின் சிரித்துக்கொண்டாள். “குழையை அணிந்துகொள்” என்றான். “போதுமா?” என்றாள். “ஆம்” என்றான். அவள் குழையை காதிலணியத் தொடங்க அவன் அவள் அசைவுகளை நோக்கிக்கொண்டிருந்தான்.

புருவங்களால் என்ன என்றாள். இல்லை என்று தலையசைத்தான். “என்ன?” என்று சிணுங்கினாள். “ஒன்றுமில்லை” என்றான். “என்ன பார்க்கிறீர்கள்?” அவன் சிரித்து “உன்னை” என்றான். குழை நழுவியது. “கை நிலைகொள்ளவில்லை… என் கையில் குழை நழுவியதே இல்லை.” அவன் அவளிடமிருந்து அதை வாங்கி “நான் போடுகிறேன்” என்றான். “வலிக்கலாகாது” என்றாள். “இல்லை, வலிக்காது” என்றான். குழையை காதின் துளையிலிட்டு திருகியை மறுபக்கம் பொருத்தியபோது அவள் முகத்தை மிக அருகே நோக்கினான். வியர்த்த மேலுதடு மெல்ல எழுந்துவளைந்திருக்க ஈரத்துடன் மலர்ந்த கீழுதடு. மூக்குமுனையின் பனிப்பு. கண்ணிமை கன்றிய மென்மை. கீழிமைக்குக் கீழ் மெல்லிய தசைமடிப்புக்கள். வலக்கன்னத்திலொரு சிறிய பரு.

குழை நழுவியது. அவள் சிரித்து “என்ன?” என்றாள். “இல்லை” என்றான். “உங்களுக்கும் கை நழுவுகிறது…” அவன் மெல்ல “உன்னை அண்மையில் பார்த்தமையால்” என்றான். அவள்

விழிதாழ்த்தி “உம்” என்றாள். அவன் இன்னொரு காதின் குழையில் கை வைக்க “இந்தக் காது” என்றாள். “இதையும் கழற்றிவிடுகிறேன்” என்றான். அவள் “ஆ” என்று திடுக்கிட்டவள்போல் ஓசையிட்டு பின்னகர அவளை அணைத்துக்கொண்டான். “உன்னை அண்மையில் நோக்கியபோது என்ன எண்ணினேன் தெரியுமா?” என்றான். அவள் அக்குரலை தன்னுள்ளிருந்து ஒலிப்பதுபோல் கேட்டாள். “என்ன?” அவன் “உனக்கு மெல்லிய மீசை இருக்கிறது” என்றான். அவள் சீறி அவன் தோளை அறைந்தாள். சிரித்தபடி அவன் அவளை இறுக்கிக்கொண்டான்.

பின்னிரவின் குளிரில் அவள் விழித்துக்கொண்டபோது எதிர்ச்சுவரில் நிழலென நின்றிருந்தது மாநாகம். இரு வெள்ளிகள் என மின்னிய விழிகள். மூச்சுச்சீறல் அவள் குழலை அசையச்செய்தது. “நான்தான் அது.” அவள் வெறுமனே நோக்கியிருந்தாள். “உடல்பெற்றேன், அறிந்திருப்பாய்.” அவள் முலைக்குமிழிகள் எழுந்தமைய மூச்செறிந்தாள். “என் விசை. என் நஞ்சு. பிறிதழியும் என் முழுத்தழுவல்.” அவள் விழிதாழ்த்திப் புன்னகைத்து “ஆம்” என்றாள்.

அவன் கை என நாகம் எழுந்து அவளைத் தொட்டது. அவள் அவன் முகத்தை நோக்கினாள். ஆழ்மூச்சொலியுடன் அவன் துயின்றுகொண்டிருந்தான். கை நெளிந்து அவள் உடல்மேல் பரவி இடைவளைத்து இறுக்கியது. அதன் முகம் முலைகள் மேல் பதிந்தது. “நீ இனியவள்” என்றது. “சொல், நீ விழைவதுதான் என்ன?” அவள் மூச்சிழுத்தாள். “சொல், நீ வேண்டுவது என்ன?” அவள் மெல்லிய குரலில் “தேவயானியின் மணிமுடி” என்றாள். “பாரதவர்ஷத்திற்குமேல் என் இடக்கால்.” நாகம் சீறியபோது அவள் முகத்தில் வெம்மைநிறைந்த

நச்சுக்காற்று பரவிச்சென்றது. அவள் இதழ்களில் மும்முறை தலைசொடுக்கி முத்தமிட்டது. “ஆம்! ஆம்! ஆம்!” என்றது.

# நீர்க்கோலம் - 66

### 65. துயிலரசி

அரச நெடும்பாதையின் ஓரத்தில் காட்டுக்குள் நுழையும் முதல் ஊடுவழி கண்ணுக்குப் பட்டதுமே தமயந்தி நளனை கைதொட்டு அழைத்தபடி அதற்குள் நுழைந்துவிட்டாள். மரங்களுக்கு ஊடாக நிஷதபுரியின் கோட்டைக் காவல் மாடங்களின் முகடுகள் தெரிந்தன. கோட்டையைச் சூழ்ந்துள்ள ஆயர்பாடிகளில் இருந்து காளைகளை காட்டிற்குள் கொண்டு செல்லும் பாதை அது என குளம்படிச் சுவடுகளும், உலர்ந்தும் பசியதாயும் சேற்றுடன் சேர்ந்து மிதிபட்டுக் குழம்பியதுமான சாணியும் காட்டின. தொலைவில் கோட்டையிலிருந்து கொம்பொலி எழுந்தது. ஒரு பறவை சிறகடித்தெழுந்து இலைகளுக்குள்ளேயே பறந்தகன்றது.

காட்டிற்குள் நுழைந்து பச்சைத் திரையால் மூடப்பட்டதுமே நளன் சற்று நிலை மீண்டான். இரு கைகளையும் இடையில் வைத்து நிலைமீண்டு சுற்றிலும் அலையடித்த இலைகளைப் பார்த்தபின் நீள்மூச்சுவிட்டு காற்றை உள்ளிழுத்தான். உயரமற்ற மரங்களின் குறுங்காட்டுக்குள் ஆங்காங்கே பின்னுச்சிப்பொழுதின் வெயில் இறங்கி மண்ணில் பரவியிருந்தது. அதை நோக்கிய விழிகளுக்கு உள்காடு இருண்டு தெரிந்தது. “செல்வோம்” என தமயந்தி அவன் தோளை தொட்டாள். “குறுங்காடு” என அவன் பொருளில்லாமல் சொன்னான். “ஆம்” என்று அவள் சொல்லி “செல்க!” என்றாள்.

அவன் சுற்றிலும் இருந்த காட்டை திரும்பித் திரும்பிப் பார்த்தபடி வந்தான். அவள் அவனை கைபற்றி அன்னையென கொண்டுசென்றதனாலேயே வழிதவறி நிலம் குழம்பிப்போன சிறுவனைப்போல தன்னை ஆக்கிக்கொண்டான். அறியாமையின் திகைப்பும் ஆர்வமும் கலந்த விழிகளுடன் ஒவ்வொன்றையும் நோக்கினான்.

வெயில் இலைத்தழைப்புக்குமேல் விரிந்திருந்தது. தழைமணமும் நீராவியும் உள்ளே நிறைந்து மூச்சுத் திணறச்செய்தன. எங்கோ மரங்கொத்தியின் தாளம். கிளைச்செறிவுக்குள் சேக்கேறி ஓய்வெடுத்த பறவைகளின் கலைவோசை. நீரோடை ஒன்று துள்ளிச்செல்லும் ஒலி. தமயந்தி அவனிடம் "இனிய காற்று" என்றாள். அவன் தலையசைத்தபின் "எப்போதும் இதை உற்றறிந்திருக்கிறேன். வெளிக்காற்றை உள்ளிழுத்து நிறைத்துக்கொள்வது உளச்சுமையை குறைக்கிறது" என்றாள். "வெளிநோக்கி விழிவிரிப்பதே நம் துயரை குறைத்துவிடும். இங்கு சூழ்ந்திருக்கும் உயிர்வெளியில் நாம் சிறு துளி என்ற உணர்வு எப்போதேனும் வருமென்றால் அதைவிட உளமாற்றுவது பிறிதொன்றுமில்லை" என்றாள்.

அவன் தலையை அசைத்தான். பின்னர் தனக்கே என புன்னகைத்தான். அவள் அவன் கையைப்பற்றி "என்ன?" என்றாள். "தத்துவம்" என்று சிரித்தான். "நான் எந்த நூலிலும் படித்ததை சொல்லவில்லை" என்று அவள் மென்சினத்துடன் சொன்னாள். அவன் அவள் கையைப்பற்றி "சினம் கொள்ளாதே. நீ சொல்வதைக் கேட்கவே என் உளம் விழைகிறது. ஆறுதல் கொண்டாக வேண்டுமென்று என் அகம் முடிவு செய்திருக்கிறது போலும். ஆகவே அதற்குரிய சொற்களை நாடுகிறேன். அதை

பிறிதொருவர் உருவாக்கி அளிப்பாரென்றால் நன்றுதானே?” என்றான்.

பின்னர் முகம் மாறி “என்னுள் சொற்கள் குவிந்து கொப்பளிக்கின்றன. பொருளின்மையின் கொந்தளிப்பு” என்றான். “ஆனால் விஜயபுரியிலிருந்து வந்து நகர்முற்றத்தில் நின்று அணியாடை களைவதுவரை நெஞ்சில் ஒரு சொல் இல்லை. வெறும் திகைப்பு. அனைத்தும் அப்படியே உறைய வெறுமனே வெளிக்காட்சிகளை நோக்கியபடி வந்தேன்… ஒவ்வொரு சிறிய பொருளையும் கூர்ந்து அறிந்தது என் அகம். பலவற்றை வாழ்க்கையிலேயே முதல்முறையாக நோக்கி அறிந்தேன்.”

தமயந்தி அவன் கையை மெல்ல விலக்கி “இந்த மரத்தடியில் அமருங்கள். நான் சென்று நீர் எடுத்து வருகிறேன். சற்று அப்பால் ஓடையொன்று செல்லும் ஒலி கேட்கிறது” என்றாள். “ஆம்” என்றபடி அவன் வேர்க்குவையொன்றில் உடல் பொருத்தி கால்நீட்டி சாய்ந்துகொண்டான். அவள் நீரொலி கேட்டு காட்டிற்குள் சென்று பகன்றையின் பேரிலையைப் பறித்து தொன்னை முடைந்து அதில் நீரள்ளி எடுத்து வந்தாள். தொலைவிலேயே அவன் கைகளை மார்பில் கட்டியபடி முகவாயை நெஞ்சில் ஊன்றி துயின்றுகொண்டிருப்பதை கண்டாள். அவள் அணுகும் காலடி ஓசையை அவன் கேட்கவில்லை. சீரான மூச்சும் எழுந்தமையும் நெஞ்சும் ஆழ்துயிலென காட்டின.

கையில் துளி சொட்டும் தொன்னையுடன் அவள் அவனை நோக்கி நின்றாள். இத்தனை விரைவில் எப்படி துயில்கொள்ள முடிகிறது என்று வியந்தாள். விரைந்து நீர் கொண்டுவரவேண்டுமென்பதற்காக அவள் தன் முகத்தையும் கைகளையும் கூட கழுவிக்கொண்டிருக்கவில்லை.

எழுப்பலாமா என்று தயங்கினாள். ஆனால் அத்துயிலுக்குள் அவன் விடாய் கொண்டு அலைந்து கொண்டிருப்பான் என்று தோன்றியது. அவள் தொன்னையை மெல்ல நீட்டியபோது சொட்டிய துளி அவன் காலில் பட "நீர்" என்றபடி விழித்துக்கொண்டான். "மழை" என்றான். பின்னர் அவளைப் பார்த்து "நீயா? நீ எங்கு இங்கே?" என்றான். "நீர் அருந்துங்கள்" என்றாள்.

துயிலால் அவன் சித்தம் தொகுக்கப்பட்டு விழிகள் பொருள் கொண்டிருந்தன."ஆம், விடாய் கொண்டிருக்கிறேன்" என்றபடி கையை ஊன்றி எழுந்து அத்தொன்னையை இரு கைகளாலும் வாங்கிக்கொண்டான். விளிம்பில் உதடுகளைப் பொருத்தி உறிஞ்சி உடல் நிறைத்துக் குடித்தான். மீசையிலும் மெல்லிய தாடியிலும் நீர்த்துளிகள் பரவியிருக்க அவளை நோக்கி "எத்தனை விடாய் கொண்டிருக்கிறேன் என்று இப்போதுதான் புரிந்தது. சற்றுமுன் மழை பொய்த்த வறுநிலத்தில் தனிமையில் அலைந்துகொண்டிருந்தேன்" என்றான். "நான் எண்ணினேன்" என்று அவள் சொன்னாள். புன்னகைத்து "விடாய் உங்கள் உடலில் தெரிந்தது" என்றாள். அவன் புருவம் சுளித்து நோக்க "துயில்கையில் உங்கள் உதடுகள் அசைந்து கொண்டிருந்தன" என்றாள். "அனைத்தையும் நன்கறிந்திருக்கிறாய்" என்றான். அவள் வாய்விட்டுச் சிரித்து "அனைத்தையுமல்ல, உங்களை" என்றாள். "இருங்கள். நான் சென்று கைகால் கழுவி வருகிறேன்" என்று திரும்பினாள்.

ஓடையில் முழங்கால் வரை இறங்கி முகமும் கைகால்களும் கழுவி ஈரக்கைகளை உதறியபடி கரைக்கு வந்தபோது அவள் முகத்தில் இயல்பான புன்னகை வந்திருந்தது. விழிகளை ஓட்டி சுற்றிலும் இருந்த குறுங்காட்டின் தாழ்ந்த மரக்கிளைகளில்

ஆடிய மலர்க்கொத்துகளையும் உதிர்ந்து தரையில் கம்பளமென விரிந்துகிடந்த மலர்களையும் சருகுப் பரப்பின்மீது விழுந்துகிடந்த வாடிய காய்களையும் பார்த்தாள். கழுத்தைத் துடைத்தபடி அண்ணாந்து மரக்கிளைகளினூடாக ஒளியாக இறங்கிக்கொண்டிருந்த வானை நோக்கினாள். ஒவ்வொன்றும் அப்போது புதிதாக எழுந்து வந்தனவென்று தோன்றியது. அத்தருணத்திற்கு முன் வாழ்வென ஏதுமில்லை என்பதுபோல.

திரும்பி நடக்கும்போது எத்தனை எளிதாக அனைத்தையும் உதறிவிட முடிகிறது என்று அவளே வியந்துகொண்டாள். அதுவரை எய்திய அனைத்தையும் உதறி முற்றிலும் புதியவற்றிற்காக செல்ல அங்கு வந்திருந்தாள் என்று உளமயக்கு கொண்டாள். சென்றவை ஒவ்வொன்றும் முற்றிலும் பொருளிழந்திருந்தன. குடியும், குலமும், நாடும், கொடியும். மேலும் செல்ல வழி ஒன்றுள்ளது என்று தோன்றுகையிலேயே உள்ளம் எண்ணி எண்ணி துயருறுகிறது. வெருண்ட நாகமென முட்டி மோதி இடைவெளி தேடுகிறது. கரும்பாறையை கண்டுவிட்டதென்றால் துயரை அங்கேயே உதிர்த்து முற்றிலும் எதிர்த் திசை நோக்கி திரும்பிவிடுகிறது. அதற்கான உணர்வுகள், அவற்றுக்கு வெளிப்பாடாக சொற்கள், சொற்களால் இயக்கப்படும் செயல்கள் என அனைத்தும் ஒருங்கி விடுகின்றன.

உள்ளே நிகழும் எண்ணங்கள் அனைத்தும் இங்கு வாழ்ந்தாக வேண்டும் வென்றாக வேண்டும் என்பதற்காக மட்டுமே எழுபவையா என்ன? பின்னர் அவள் தனக்குத் தானே சிரித்தபடி எதுவானால் என்ன என விலகிக்கொண்டாள். இதோ, என் மேல் அழுந்திய எடைகளனைத்தையும் இறக்கிவிட்டு இறகு கொண்டிருக்கிறேன். என்னைச் சூழ்ந்திருக்கும் காற்றுக்கு

உடலை அளித்திருக்கிறேன். இத்தருணம் போதும். இது மண்ணில் முளைத்திருந்தாலென்ன, வானிலிருந்து உதிர்ந்ததென்றால்தான் என்ன? இது வளருமென்று என் அகம் சொல்கிறது. மீண்டும் பிறந்தெழுந்ததுபோல் உணர்கிறேன். இதை எண்ணி எண்ணிக் கலைத்துக்கொள்ள ஏன் முயல்கிறேன்? நடக்கும் பாலத்தை உலுக்கி உறுதி செய்கிறேனா?

தொலைவில் அவள் நளன் மீண்டும் துயின்றுகொண்டிருப்பதைக் கண்டாள். மூடிய இமைகளுக்குள் விழி உருளும் அசைவு தெரிந்தது. ஆனால் நெஞ்சு ஏறி இறங்கிக்கொண்டிருந்தது. அத்தனை உடற்களைப்பு. விஜயபுரியிலிருந்து தேரில் வந்தபோது உள்ளமும் களைத்திருக்க வேண்டும். ஓசையின்றி அருகே வந்து மரவுரியை இடக்கைகளால் பற்றியபடி மெல்ல அமர்ந்துகொண்டாள். அவனுடைய சீரான மூச்சொலியைக் கேட்டபடி தானும் உடல் சரித்து கண்மூடி படுத்துக்கொண்டாள். சீரான மூச்சு எத்தனை ஆறுதலூட்டுவது என்று எண்ணிக்கொண்டாள். எந்த மூச்சும். விலங்குகளின் மூச்சும்கூட.

முன்பு அவள் தந்தையின் அன்னை பேரரசி கிருஷ்ணை நோயுற்றிருந்தபோது மருத்துவர் மஞ்சத்தறைக்குள் நாய் ஒன்றை துயில வைக்கலாம் என்றார். அவ்வழக்கம் வேடர்களுக்குரியது என்பதால் அமைச்சர்கள் எதிர்த்தனர். “நாய் துயிலும் மூச்சோசை அவர்களை ஆற்றுப்படுத்தும், அரசே” என்றார் மருத்துவர். “துயிலோசையின்போது நாம் உடலெனும் ஒழுங்கை உணர்கிறோம். நித்ராதேவி கருணை மிக்கவள். வலிகளையும் நோய்களையும் ஆற்றுபவள். இப்புவியில்

காலத்தை வெல்லும் ஆற்றல் கொண்டவள் அவள் ஒருத்தியே. அரசியின் அறைக்குள் துயில் தெய்வம் திகழட்டும்” என்றார்.

எரிச்சலுடன் “ஏன் சேடியர் துயின்றால் போதாதா?” என்றார் அமைச்சர். “அவர்கள் கனவுகளுடன் துயில்வார்கள். உள்நிறைந்த அச்சம் அவர்களை தட்டி விழிக்க வைத்துக்கொண்டே இருக்கும். குழந்தைகள் துயிலலாம். ஆனால் நோயறையில் துயில்வது அவர்களுக்கு நன்றல்ல. நாய் குழந்தைமையிலேயே தங்கிவிட்டது. விலங்குகளுக்கு உளமுதுமை என்பதில்லை.” அரசர் “ஆம், நம் வேட்டைநாய் குரன் இங்கே தங்கட்டும்” என்றார்.

பதினெட்டு நாட்கள் மூதரசியின் அறைக்குள் குரன் துயின்றது. விழித்திருக்கையில் அவள் மஞ்சத்திற்கு அருகே இரு கால் மடித்து முன்னங்கால் ஊன்றி செவி முன்கோட்டி ஈரமூக்கை நீட்டி தீரா ஆர்வமும் கனிவும் கொண்ட விழிகளால் நோக்கியது. நோய் மயக்கிலிருந்து அவள் விழித்தெழுந்ததும் எழுந்து வாலாட்டியபடி சென்று அவள் கைகளை முத்தமிட்டது. இரவில் அவள் விழித்துக்கொள்ளும்போதெல்லாம் அறைக்குள் ஒலித்த மூச்சொலி அவளை கருக்குழவியென்றாக்கி அன்னை வயிற்றுக்குள் குருதி வெம்மையில் அமைத்தது. அன்னை மூச்சொலி முதுமகளை தாலாட்டியது. அவள் இறக்கும்போது முகத்தில் இனிய புன்னகையொன்று நிறைந்திருந்தது.

நளன் ஏதோ சொல்லி அவ்வொலியிலேயே விழித்துக்கொண்டான். அவன் உடலசைவு அவளை எழுப்பியது. அவன் முகம் தெளிவடைந்திருப்பதை அவள் கண்டாள். “இருவருமே துயின்றுவிட்டோம் போலும்” என்றான். “ஆம்” என்று சொல்லி அவள் ஆடை திருத்தி

எழுந்தாள். நளன் “என் நெஞ்சு தெளிந்திருக்கிறது. அனைத்தும் மிக எளிதென்று தோன்றுகிறது” என்றான். “துயில் தெய்வம்போல மானுடருக்குத் துணையாவது பிறிதில்லை என்பார்கள்” என்றாள் தமயந்தி. “துயிலி சாவன்னையின் தங்கை” என்றான் நளன். தமயந்தி “சிறிய சாவும் நீள்துயிலும்” என்றாள். “செல்வோம். அந்திக்குள் இரவு துயிலும் ஒரு இடத்தை நாம் கண்டடைய வேண்டும்” என்று நளன் சொன்னான். அவன் கை நீட்ட அவள் அந்தக் கை பற்றி எழுந்துகொண்டாள்.

தூண்டில் சரடு நீரில் மூழ்கி ஆழ்வதுபோல் பசும்காட்டுப் பரப்புக்குள் ஊடுருவியது ஒற்றையடிப் பாதை. காட்டின் இருளும் சீவிடின் ஓசையும் அவர்களைச் சூழ்ந்தன. எங்கோ மரங்கொத்திகள் தாளமிட்டன. காற்று கடந்து செல்கையில் தலைக்குமேல் எழுந்த இலைத்தழைப்பின் முழக்கமும் ஓரிரு மரங்களில் கொடிகள் அறைந்துகொள்ளும் ஓசையும் கிளைகள் உரசும் முனகல்களும் இனிய தனிமை உணர்ச்சியை அளித்தன. அதைக் கலைத்தபடி சருகுகளின் மீது சிற்றுயிர்கள் ஓடின. மெல்லிய சருகு நொறுங்கும் ஒலி எழ மூன்று மான்கள் இலைத்தழைப்புக்குள்ளிருந்து வந்து கழுத்து திருப்பி செவி முன்கோட்டி ஈரமூக்கை நீட்டி நீலம் தெளிந்த விழிகளால் அவர்களை நோக்கின.

அவள் திரும்பி “அழகிய விழிகள்!” என்றாள். “ஆம்” என்றான். அவள் முதல்முறையாக மான்களைப் பார்ப்பதுபோல உணர்ந்தாள். அரண்மனைத் தோட்டத்தில் வளரும் மான்களின் விழிகளில் இத்தனை அறியாமை இல்லையோ என்று தோன்றியது. காற்று வீச மேலாடை சரிய அவள் அதைப் பற்றிய அசைவில் மூன்று மான்களும் ஒரே கணம் திடுக்கிட்டு

கழுத்து சொடுக்கி பின் கால்கள் காற்றில் தாவ எழுந்து குறும்புதர் ஒன்றைக் கடந்து அப்பால் மறைந்தன. அவ்வசைவின் அழகின் கூர்மை அவளை மெய்ப்புகொள்ள வைத்தது. கையால் நெஞ்சைப் பற்றியபடி கண்கள் நீர்மைகொள்ள பெருமூச்சுவிட்டாள்.

“செல்வோம்” என்று அவன் அவள் தோளில் தொட்டபோது உடல் விதிர்த்தாள். “என்ன?” என்று அவன் கேட்டான். “முதல்முறையாக காட்டை பார்க்கிறேன் என்று தோன்றுகிறது” என்றாள். “ஆம், இது வேறு காடு” என்று நளன் சொன்னான். அவள் புருவம் சுருக்கி “ஏன்?” என்றாள். “அவன் திரும்பிச்செல்ல இடமின்றி இதற்கு முன் நாம் காட்டிற்குள் வந்திருக்கமாட்டோம்” என்றான். அவள் வாய்விட்டு நகைத்து “ஆம்” என்றபின் திரும்பி அந்த மான்கள் சென்ற வழியை பார்த்தாள். “அவற்றைப்போல இனி நாமும் இக்காடுகளுக்குள் வாழப்போகிறோமா?” என்றாள். “அவை காட்டில் பிறந்தவை” என்றான். தமயந்தி “அவற்றிடம் கற்றுக்கொள்வோம்” என்றாள். பொருளற்ற சிறுபேச்சென அறிந்திருந்தார்கள். ஆனால் அதைப்போல பெருந்தருணங்களில் உகந்தது பிறிதில்லை என்று தோன்றியது.

நளன் “முழு விடுதலை. ஆனால் அதை உணர்ந்ததுமே அது எவ்வாறு இயலும் என்று எண்ணி என் உள்ளம் வியக்கிறது. நானே என் உள்ளத்தைச் செலுத்தி சென்ற நிகழ்வுகளின் துயரங்கள் அனைத்தையும் இழுத்து என்னில் நிறைத்துக்கொள்ள முயல்கிறேன். அவை பிறிதெவருடையவோ துயர்கள் என்று தோன்றுகின்றன” என்றான். தமயந்தி “துயில்தேவியின் மாயம்” என்றாள். “போர்க்களத்தில் புண்பட்டவர்கள்மேல் ஆழ்துயில் பரவி இனிய

கனவுகளை நிறைப்பதை கண்டிருக்கிறேன்” என்றான் நளன். மீண்டும் மீண்டும் அவன் அந்தத் துயிலைப் பற்றி பேச விரும்பினான். அவள் கேட்டுக்கொண்டு உடன்நடந்தாள்.

தமயந்தி எங்கு செல்கிறோம் என்று ஆழ்வினா ஒன்றை அடைந்தாள். ஆனால் அதை சொல்லென்றாக்கி நாவிற்குக் கொண்டுவருவதை தவிர்த்தாள். அந்த வினாவைத் தவிர்க்கவே அத்தருணத்தின் அத்தனை உணர்வெழுச்சிகளும் நிகழ்ந்துகொண்டிருக்கின்றனவா என்று எண்ணிக்கொண்டாள்.

❀அன்று பகல் முழுக்க அவர்களிருவரும் முதிரா சிறுவர்கள்போல கானாடினர். மரக்கிளைகளை தாவிப்பற்றி உலுக்கி அவள்மேல் மலர்மழை பொழிய வைத்தான். சிற்றோடையில் இறங்கி காலால் நீரைத் தெறித்து அவனை நனைத்தாள். ஆடையை உதறி முகத்தை துடைத்தபின் அவன் அவளைப் பிடிக்க வர சிரித்தபடி கிளைகளுக்கிடையே ஓடினாள். தரையில் ஓடிய பாம்பொன்றை கழுத்தைப்பற்றிப் பிடித்து அதை தூக்கிக் காட்டியபடி அவளை துரத்தி வந்தான். மரக்கிளையைப்பற்றி மேலேறி நுனிக்குச் சென்று நின்று ஊசலாடினர். அத்தி மரத்திலும் நாவல் மரத்திலும் மேலேறி கிளையுதறி பழமுதிர்க்கச் செய்தனர். சுனைக்கரையொன்றில் அமர்ந்து கனிகளை உண்டனர். கூரிய கிளையொன்றால் அகழ்ந்து அவன் கொண்டு வந்த இனிக்கும் கிழங்குகளை அவள் கல்லுரசி சருகு பற்றவைத்து சுட்டு இலையில் வைத்து கையால் அறைந்து பிளந்து அவனுக்கு அளித்தாள். வெந்த கிழங்கின் இனிய மாவை முதல் வாய் அவளுக்கு ஊட்டி அடுத்த வாயை அவன் உண்டான்.

பின்னர் களைத்து விளையாட்டின் இனிமை புன்னகையாகத் திகழ்ந்த முகத்துடன் இருவரும் நடந்தனர். அவள் “ஆ” என்று

காலைத் தூக்க அவன் “என்ன?” என்றான். “முள்!” என்றாள். அவன் “இரு” என குனிந்து அவள் காலைப்பற்றி “பெரிய முள்... ஆழமாகச் சென்றிருக்கிறது...” என்றபின் முள்ளைப் பிடித்து இழுத்தான். அதன் முனையை நோக்கி “உடைந்துவிட்டது” என்றபின் சுற்றிலும் பார்த்து பிறிதொரு முள்ளை எடுத்து அந்த செங்குருதிப் புள்ளியில் குத்தினான். “ஆ” என அவள் அலற “இரு” என்று அதட்டி முள்ளை அகழ்ந்தெடுத்தான். குருதி வழியத் தொடங்கியது. அவன் அருகே நின்றிருந்த தொட்டாற்சிணுங்கி இலையைப் பறித்து வாயிலிட்டு மென்று அந்த சாற்றை காயத்தில் விட்டான்.

அவள் காலில் மேலும் முள்தடங்கள் இருந்தன. அவன் விரலால் தடவி முட்களை எடுத்தான். “இத்தனை முட்களா?” என்றான். “உங்கள் கால்களில் முட்கள் தைக்கவில்லையா?” அவன் “நான் படைக்கலம் பயில்பவன்... என் காலின் தோல் காய்ப்பேறியது” என்றான். அவள் சிரித்து “கைகளும்” என்றாள். “காட்டு” என அவன் அவள் மறுகாலைப் பிடித்து நோக்கினான். “நிறைய முட்கள்... அனைத்தையும் எடுக்கவேண்டும்...” அவள் “நாம் அந்திக்குள் படுக்க இடம் நோக்கவேண்டும். நிழல் கரைந்து வருகிறது” என்றாள். “ஆம்” என அவன் எழுந்துகொண்டான்.

அதன்பின் அவர்கள் பேசாமல் தங்கள் எண்ணங்களை சுழற்றிக்கொண்டு நடந்தனர். அவள் நடை மாறியிருப்பதைக் கண்டு “வலிக்கிறதா?” என்றான். “சற்று” என்றாள். “நீ நெடுங்காலம் அரண்மனையிலேயே வாழ்ந்துவிட்டாய்” என்றான். அவள் ஒன்றும் சொல்லவில்லை. மரக்கிளைகளுக்கு நடுவே விழுந்துகிடந்த ஒளிவட்டங்கள் சிவந்து அணைந்தன.

பறவைக்குரல்கள் செறிவுகொண்டன. கடந்து சென்ற ஓடை நீரில் இருள் கரைந்திருந்தது.

அரசமரம் ஒன்றைக் கண்டு அவன் நின்றான். “பெரிய மரம். மழை பெய்யுமென்றால் எழுந்து அதன் பொந்திற்குள் சென்று ஒடுங்க முடியும்” என்றான். அவள் அண்ணாந்து பார்த்தாள். பெரிய செண்டுபோல நின்றது அந்த மரம். “இது கனிமரமல்ல. ஆகவே பறவைகள் கூடணையாது. குரங்குகளும் அரசமரத்தில் அமர்வதில்லை. இதனடியில் இரவு தங்குவது உகந்தது” என்றான் நளன். அவள் தலையசைத்தாள். நளன் அவர்கள் இருவரும் படுப்பதற்கான இடத்தை தெரிவு செய்தான். அங்கிருந்த கற்களை பொறுக்கி வீசி நிலத்தை சீரமைத்தான். இரு பக்கங்களிலும் வளர்ந்து நின்றிருந்த புதர்களிலிருந்த இலைகளை ஒடித்துக்கொண்டு வந்து மெத்தை அமைத்தான். பிறகு அவளிடம் “படுத்துக்கொள். இனிய சேக்கை. மிதப்பது போலிருக்கும்” என்றான்.

அவள் அருகே சென்று குனிந்து இலைகளை கையால் அழுத்தியபின் அமர்ந்தாள். “ஆம், மென்மையாக உள்ளது” என்றாள். “நெடுந்தொலைவு நடந்து வந்துள்ளோம். நன்கு துயில முடியும்” என்றான் நளன். அவள் காலை நீட்டி மரவுரியை மடித்து இரு தொடைகளுக்குள்ளும் சொருகி ஒருக்களித்து படுத்தாள். குழலை பின்னால் தூக்கி நீட்டி அமைத்தாள். அவளுடைய பணைத்தோளை, சரிந்து இடையென குறுகி மீண்டும் ஓங்கி வளைந்து கால்களில் ஒடுங்கிய அரையை, ஒன்றன்மேல் ஒன்றென அமைந்த குவைமுலைகளை நோக்கினான். அவள் அவன் நோக்கை சந்தித்து “நீங்களும் படுத்துக்கொள்ளலாமே” என்றாள்.

“இல்லை, நீ துயில்கொள். நான் காவலிருக்கிறேன்” என்றான். “காவல் எதற்கு?” என்று அவள் கேட்டாள். “இது காடு. நாம் அயலவர். இங்கு எங்கேனும் ஒரு குடில் கட்டிக்கொள்ளும்வரை நமக்கு இரவில் நற்துயில் அமையாது” என்றான். அவள் “கட்டிக்கொள்வோம்... நம் கானேகல் முதுமைக்கு முன்னரே தொடங்கிவிட்டதென்று கொள்வோம்” என்றாள். “ஆம்” என்றான் அவன்.

“உங்கள் முகம் மாறிவிட்டது” என்று அவள் சொன்னாள். “இல்லையே” என்றான். “இல்லை, நான் பார்த்தேன். உங்கள் முகத்தில் ஒரு கணத்தில் துயர் வந்து சேர்ந்துகொண்டது” என்றாள். “ஆம், குடில் என்ற சொல் ஓர் அதிர்வை உருவாக்கியது” என்றான். “ஏன்?” என்றாள். “குடில் என்றால் மீண்டுமொரு தொடக்கம். ஒவ்வொன்றையும் இங்கிருந்து கட்டி எழுப்பவேண்டும்” என்றபின் “அது எண்ணுவதுபோல் எளிதல்ல, தேவி” என்றான். “ஏன்? எத்தனையோ முனிவர்கள் காட்டுக்குள் வந்து குடிலமைத்திருக்கிறார்கள்” என்றாள். “அரசியாகிய துணையுடன் வந்த முனிவர் எவருமில்லை” என்று அவன் சொன்னான். “நான் அரசியல்ல, உங்கள் துணைவி மட்டுமே” என்றாள்.

அவன் கைகளைக் கட்டியபடி அவளையே நோக்கிக்கொண்டிருந்தான். “என்ன?” என்றாள். “நீ என்னை மணவிலக்கு செய்திருக்கலாமே?” என்றான். அவள் சீற்றத்துடன் “இதைச் சொல்லவா இத்தனை எண்ணம்?” என்றாள். “ஆம், அது மிக எளிய வழி. அனைவருக்கும் நலம் பயப்பது” என்றான். “இந்தக் காட்டில் உன்னால் வாழமுடியாது.

இங்குள்ள இடர்களுக்கு நீ பழகப்போவதில்லை. நோய் வருமென்றால் நமக்கு எவரும் உதவியில்லை” என்றான்.

அவள் சிறுமியைப்போல “ஏன், இன்று பகல் முழுவதும் களியாடினோம் அல்லவா?” என்றாள். “ஆம், இந்தக் காட்டில் நமக்கு துயரும் இடரும் மட்டுமே உள்ளது. அதை நம் ஆழம் நன்கு அறிந்திருக்கிறது. அதனால்தான் இந்தக் களியாட்டு. இது நமக்கு நாமே நடித்துக்கொண்டது” என்றான். அவள் எரிச்சலுடன் “இந்தச் சொல்லாடலை எல்லாம் விட்டுவிட்டுதான் இக்காட்டுக்குள் வரவேண்டும் போலும். இது மூவேளை உணவுண்டு பட்டு மஞ்சத்தில் சாய்ந்திருக்கும் அமைச்சர்களின் நூலாய்வு” என்று சொன்னாள். “இல்லை. நாம் வெறும் கற்பனைகளைக் கொண்டு எதையும் உருவாக்கிக்கொள்ள வேண்டாம். அது நுரையை ஊதியெழுப்பி மகிழ்வது போலத்தான். நம் முன் இருக்கும் ஒரே வழி நீ என்னை உதறிவிடுவதுதான்.” அவள் “உதறிவிட்டு?” என்று சீற்றத்துடன் கேட்டாள். “உன் தந்தையிடம் செல். அங்கு அரசியென்று அமை. நம் மைந்தருக்கு அன்னையுமாக இரு.”

அவள் இல்லை என்பதுபோல் தலையசைத்தாள். “நான் சொல்வதை கேள். நீ என்னுடன் இருந்தால் ஒரு கணமும் மகிழ்வுடன் இருக்கமாட்டாய். அதைவிட ஒவ்வொரு கணமும் எனக்கும் துயர் தருவாய். உன்னை இவ்விடர்களுக்கெல்லாம் இட்டுவந்தது நானே என்று தோன்றும். அவ்வெண்ணத்திலிருந்து ஒருபோதும் என்னால் விடுதலை கொள்ளமுடியாது. இந்தப் பகலின் களியாட்டு உன் காலில் தைத்த முள்ளை நான் எடுத்தபோது முடிவுற்றது. முதல் முள் அது. இனி எஞ்சியிருப்பவை பல்லாயிரம் முட்கள்” என்றான்.

அவள் கையூன்றி எழுந்தமர்ந்து "இரண்டு வழிகள் உண்டு. ஒன்று உங்களுடன் நானும் வருவது. உங்கள் துயர்கள் அனைத்தையும் பகிர்ந்து கொள்வது. அல்லது எரிபுகுந்து மறைவது. நீங்கள் விடுதலை கொள்ளலாம்" என்றாள். "என்ன பேச்சு இது?" என்று அவன் அவள் கையை தொட்டான். அவள் தன் கையை இழுத்துக்கொண்டு "என்னிடம் இதை சொல்லலாகாது என்றுகூட நீங்கள் அறிந்திருக்கவில்லை" என்றாள். அவள் மூச்சு எழுந்தமைந்தது. சீறும் குரலில் "நான் உங்களை விட்டு விலகியிருக்கலாம், ராகவராமனின் சீதை அவனை விட்டிருந்தால்..." என்றாள்.

"பதினான்கு ஆண்டு காட்டிலும் அரக்கர் சிறையிலும் அவள் வாழ்ந்தாள். அதனூடாக இப்பெருநிலத்தின் பெண்டிர் பிறிதொன்றை எண்ணலாகாதென்று அறிவுறுத்திச் சென்றாள்..." என்றபோது அவள் முகம் எரிகொண்டு உருகும் உலோகச்சிலை போலிருந்தது. நளன் பெருமூச்சுவிட்டான். "இப்பேச்சு இனி வேண்டியதில்லை. எண்ணத்தினாலும் உங்களை விட்டுப்பிரிய இனி நான் ஒப்ப மாட்டேன்" என்றாள். அவன் தலையசைத்தான். பெருமூச்சுடன் "துயில் கொள்க, தேவி" என்றான்.

உறுதிபட தன் உணர்வுகளை சொல்லிவிட்டதனாலேயே அவள் அவற்றிலிருந்து விடுதலை கொண்டாள். தெளிந்த முகத்துடன் "எண்ணிக் குழம்பி துயில் களைய வேண்டாம். என் செவிகள் கூரியவை. நீங்கள் துயிலுங்கள். சிற்றொலி எழுந்தாலும் நான் உங்களை எழுப்புகிறேன்" என்றாள். அவன் புன்னகைத்து "நான் நிஷாதன். என் முன்னோர் இக்காடுகளை விட்டு வந்து ஓரிரு தலைமுறைகளே ஆகின்றன" என்றான். அவள் சிரித்து "நன்று! பிறகென்ன? மீண்டு வந்திருக்கிறோம்" என்றாள். தன் கூந்தலை

மீண்டும் அகற்றி நீட்டிவிட்டு உடலை இலைப்படுக்கையில் சேர்த்து கைகால்களை தளர்த்திக்கொண்டாள்.

அவன் அவள் முகத்தையே நோக்கிக்கொண்டு அமர்ந்திருந்தான். இறுதியாகச் சொன்ன சொல்லின் புன்னகை இதழ்களிலும் முகத் தசைகளிலும் எஞ்ச, மெல்ல தசைகள் தளர்ந்து இதழ்கள் மலரிதழ்கள் பிரிவதுபோல் பிரிந்து வெண்பற்களின் கீழ்நுனி தெரிய, கழுத்துக் குழி எழுந்தசைய அவள் சீர்மூச்சு கொண்டாள். நிலைநீச்சலிடும் இணையன்னங்கள் என முலைகள் சீராக அசைந்தன. அவன் அவள் நெற்றியை, மூடிய விழிகளின் பெரிய இமைக்குவைகளை, கூரிய மூக்கை, மென்மயிர் நிரைகொண்ட மேலுதடை, குவிந்த கீழுதடை, குமிழ்த்த முகவாயை, மூன்று வரிகள் கொண்ட கழுத்தை, மணற்கோடுகளின் மின் கொண்ட தோள்களை, பச்சை நரம்போடிய கைகளை, ஒற்றை மயிர்க்கோடு சென்றிறங்கிய உந்தியை, பேற்றுத் தழும்புகள் மழைநீர் தடங்களெனப் படிந்த அடிவயிற்றை நோக்கிக்கொண்டிருந்தான்.

பின் ஓசையின்றி எழுந்து அவள் கால்களை நோக்கினான். முள் பட்ட தடம் குருதி உலர்ந்திருந்தது. மேலும் பல இடங்களில் முள் குத்திய சிறுபுண்கள் இருந்தன. அவன் அக்கால்களையே நோக்கிக்கொண்டிருந்தான். பின்னர் தன் இடையணிந்த மரவுரியை இறுக்கிக் கட்டிக்கொண்டான். திரும்பி நோக்காமல் நடந்து காட்டில் மெல்ல உலைந்துகொண்டிருந்த புதர்களுக்குள் நுழைந்து மறைந்தான்.

# நீர்க்கோலம் - 67

## 66. அரவுக்காடு

✿திரும்பிப் பார்க்கவேண்டுமென்ற விழைவு உள்ளிருந்து ஊறி எழுந்து உடலெங்கும் மெல்லிய அதிர்வாக, விரல்களில் துடிப்பாக, கால்களில் எடையாக நளனை ஆட்கொண்டது. ஒவ்வொரு அடிக்கும் தன்னைப் பற்றி பின்னிழுக்கும் கண் அறியாத பலநூறு கைகளை பிடுங்கிப் பிடுங்கி விலக்கி முன்னகர்ந்தான். ஏன் திரும்பி நோக்கினால் என்ன என்றது ஓர் அகம். அவள் கிடக்கும் கோலத்தைப் பார்த்தபின் செல்ல முடியாது போகலாம். சென்றாலும் அக்காட்சியாகவே அவள் நினைவில் எஞ்சலாம். திரும்பிப் பார்க்காமல் சென்றுவிட முடியுமா?

யோகிகள் அவ்வாறு சென்றவர்களே. எய்திய அனைவருமே பின் நோக்காது துறக்கத் தெரிந்தவர்களே. ஆனால் என்னால் இயலாது. இப்போது நான் துறந்து செல்லவில்லை. ஒழிந்து செல்கிறேன். நினைவறிந்த நாள் முதல் இடர்கள் அனைத்தையும் தவிர்க்கவே என் உளம் எழுந்துள்ளது. துணிவினால் துறக்கவில்லை. கோழையென்றாகி அகல்கிறேன். நான் திரும்பிப் பார்க்காமல் செல்ல இயலாது என்கிறது என்னை நன்கறிந்த நான் ஒன்று. இதோ திரும்பிப் பார்க்கப்போகிறேன். இந்த அடி. மீண்டும் ஒரு காலடி. இதோ அந்த அடியில் மூன்று அடிகளை எடுத்து வைத்துவிட்டேன். இப்போது புதர்கள் அவளை மறைத்திருக்கும். திரும்பி நோக்கினால் அவள் தெரியாமலாகக்கூடும்.

தெரியாவிட்டால் என்ன? நான் திரும்பி நோக்கியவனாவேன். முன்னால் செல். காலெடுத்து வை. மறுகாலெடுத்து வை. எண்ணாதே, எதையும் எண்ணாதே. திசை நோக்கி

விழுந்துகொண்டிரு. உடல் எடையால், பலநூறு மடங்கு கொண்ட உள்ளத்து எடையால் விழு. நோக்கு. ஒவ்வொரு மானுடரையும் பிற அனைவரிடமிருந்தும் பிடுங்கி அகற்றி திசைவெளியில் வீசும் அப்பெருவல்லமையை நீ அறிந்திருக்கிறாய் அல்லவா? விலகுவது மிக எளிது. அவ்விசைக்கு உன்னை நீ ஒப்பளித்தால் மட்டும் போதும். அது உன்னை கொண்டு செல்க. அத்தனை கனிகளும் மண்ணில் உதிர்ந்தாக வேண்டும். அவற்றின் முதல் காம்பு இற்றுக்கொண்டிருக்கிறது. அத்தனை பறவைகளும் மண்ணிறங்கியாகவேண்டும். விண்ணில் அவை துழாவும் சிறகுகள் அனைத்தும் மண்ணுக்கே இறுதியில் கொண்டுவருகின்றன.

இன்னொரு அடி. மேலும் ஓர் அடி. அவ்வளவுதான், தொலைந்துவிட்டேன். வந்துவிட்டேன். என்னால் இயன்றிருக்கிறது. கடக்க முடிந்திருக்கிறது. இனி ஒரு போதும் இல்லை. என்ன நிகழ்ந்ததென்று அறிவதற்குள் அவன் திரும்பி தமயந்தியை பார்த்தான். மெல்ல புரண்டு ஒரு கையை தலைக்குமேல் வைத்து இடதுகையால் மரவுரி ஆடையை தொடையிடுக்குடன் அழுத்தியபடி ஒருக்களித்து அவள் துயின்றுகொண்டிருந்தாள். நெடுந்தூரம் வந்ததுபோல் தோன்றியது உளமயக்கா? அத்தனை பெருந்தொலைவு இத்தனை எட்டுகள்தானா?

அவள் உதடுகள் உலர்ந்து மெல்ல பிரிந்திருப்பதை, கழுத்தின் மென்மடிப்புகளில் மெல்லிய வியர்வை கோடிட்டிருப்பதை, ஒன்றின்மேல் ஒன்றென அமைந்த முலையிடுக்குகளில் மூச்சு அதிர்வதை, இடைத்தசை மடிப்பின் வியர்வை மினுமினுப்பதை பார்க்க முடிந்தது. திரும்பி காலெடுத்து வைத்து அவளை

நோக்கி சென்றுவிட்ட பின்னரே உடல் அவ்வாறு செல்லவில்லையென்று உணர்ந்தான். விழிகள் அவள் கால்களை பார்த்தன. அந்த முள் தைத்த புண்ணை மிக அருகிலென கண்டான். இரு கைகளையும் விரல் முறுக்கி இறுக்கிக்கொண்டு பற்கள் நெரிபட கண்களை மூடி தன்னை அக்காலத்தின், இடத்தின், எண்ணத்தின் புள்ளியில் இறுக்கி நிறுத்திக்கொண்டான். “ஆம்! ஆம்! ஆம்!” என்று அவன் உள்ளம் முழங்கியது. பின்னர் பாய்ந்து ஓடலானான்.

இருபுறமும் இலைகள் அவனை ஓங்கி அறைந்து வளைந்தெழுந்து நின்றாடின. மேலும் மேலுமென கிளைகள் வந்து அறைந்துகொண்டிருந்தன. கால்கள் பட்டு நெற்றுகளும் சுள்ளிகளும் கூழாங்கற்களும் நெரிந்தன. உடலெங்கும் வியர்வை அனலுடன் பெருகி தோளிலும் நெஞ்சிலும் வழிந்தது. வாயால் மூச்சுவிட்டபடி மெல்ல விசை தளர்ந்து நின்றான். இரு கைகளையும் முட்டுகளில் ஊன்றி உடல் வளைத்து நின்று இழுத்திழுத்து காற்றை உண்டான். கண்களில் இருந்து குருதி வெம்மை மெல்ல வடிந்ததும் நிலை மீண்டு தள்ளாடி நடந்து சென்று அங்கிருந்த பெரிய மரத்தடி ஒன்றில் உடல் சரித்தான். விடாயுடன் நாவால் உதடுகளை வருடிக்கொண்டான்.

கைகளைத் தூக்கிப் பார்த்தபோது குருதி தெரிந்தது. குருதியா என முழங்கையை பார்த்தான். பின்னர் எழுந்து தன் உடலை தானே நோக்கி திகைத்தான். புதர்முட்களால் இடைவெளியின்றி கீறப்பட்டிருந்தது அவன் உடல். அவற்றிலிருந்து மென்குருதி கசிந்து ஒன்றுடன் ஒன்று கலந்து விலாவிலும் தொடையிலும் வயிற்றிலும் வழிந்தது. கண்களை மூடியபோது உடலெங்கும் அக்கீறல்களின் எரிச்சலை உணர்ந்தான். பற்களைக் கடித்தபடி

கால் முதல் முகம் வரை அந்த எரிச்சலை துளித்துளியாக உணர்ந்தான். அதற்குள் பிழிந்து ஊற்றவேண்டிய மூலிகை என்னவென்று தேடி புதர்களை துழாவிச் சென்ற உள்ளத்தை பற்றி நிறுத்தினான். இது இவ்வாறே என்னில் நின்று எரியவேண்டும். இந்த ஒவ்வொரு கீறலும் ஒரு பெரும்வலையின் நுண்சரடு. என் உடலுக்குமேல் படர்ந்து என்னை இறுக்கி பிறிதெவற்றிலிருந்தோ இழுத்துச் செல்கிறது.

எழுந்து நின்று தொலைவானை பார்த்தான். விடிவெள்ளி எழ நெடுநேரம் இருந்தாலும் வானில் அறியாத ஒளியொன்றிருந்தது. அது கடலில் மூழ்கிய சூரியனின் ஒளியென்பாள் அவன் செவிலியன்னை. அடிவான் கோடு வானொளிக்கு எல்லை அமைத்திருந்தது. அருகே என ஒருகணமும் அணுகமுடியாமை என மறுகணமும் காட்டியது. நெடுந்தொலைவு. அச்சொல்போல் அப்போது இனிதாவது பிறிதொன்றுமில்லையென்று தோன்றியது. நெடுந்தொலைவு என்றால் செல்வதற்கு முடிவிலா வழி. சென்றுகொண்டே இருக்கையில் சுமையில்லை. அமர்ந்த இடத்தில்தான் பின்தொடர்பவை வந்து பற்றிக்கொள்கின்றன. சென்றுகொண்டே இருப்பதை தூசியும் பாசியும் பற்றுவதில்லை.

யோகியரும் சூதரும் அலைந்து திரிகிறார்கள். துயருற்றோரும் தனித்தோரும் அலைகிறார்கள். பித்தர்கள் அலைகிறார்கள். எங்கென்று இலாது சென்றுகொண்டிருப்பவர் எந்தத் துயரத்தையும் எடுத்துச் செல்ல முடியாது. எதையும் எண்ணி அஞ்சுவதும் இயலாது. அன்றன்று அந்தந்த கணங்களில் நிகழ்ந்துகொண்டே செல்லும் இருப்பின் துளிகளைக் கோத்த பெரும்சரடு என வாழ்க்கை. அதை அவன் நான் என்கிறான்.

என்னால் இயலுமா? அந்தத் தொடுவான் வரை செல்லமுடியுமா?

முடிவிலி என்பதன் இழுவிசையை அப்போது உணர்ந்தான். ஆழங்களுக்கு இருக்கும் அச்சுறுத்தும் ஈர்ப்பை அவன் முன்பு அறிந்திருந்தான். ஆயிரம் மடங்கு விசை கொண்டிருந்தது எங்கென்றில்லாமை. அவனறிந்த அனைத்தையுமே சுருக்கி துளியென்றாக்கி தூசென்றாக்கி ஊதிப் பறக்கவிட்டு பேருருக் கொண்டு நின்றிருந்தது. முடிவிலா ஆழம்! எத்தனை ஆயிரம் ஆண்டுகளாக மானுடர் அதில் சென்று விழுந்து மறைந்துகொண்டிருக்கிறார்கள்! உயிர்க்குலங்கள் அனைத்துமே அங்கு சென்று விழுகின்றன. சென்றடைய எதற்கும் பிறிதொரு இடமில்லை. அதை அஞ்சியே எதையேனும் பற்றிக்கொண்டிருக்கின்றன அனைத்தும். தெள்ளுப்பூச்சிகள் யானையுடலை என மானுடர் புவியை. அப்புவியே விழுந்துகொண்டிருக்கிறது அதை நோக்கி. ஒவ்வொன்றும் பற்றுச்சரடே, உறவுகள், உறைவிடம், நம்பிக்கைகள்.

அவன் தளர்ந்த காலடிகளுடன் அதை நோக்கி நடக்கத் தொடங்கினான். மாபெரும் சிலந்தியொன்றின் வலையில் சிக்கிக்கொண்ட சிறுபூச்சி. அங்கிருந்து அது தன் விழியின் விசையாலேயே இழுத்து அருகணைத்துக் கொண்டிருந்தது.

உடல் அறிந்த வெறுமை உள்ளே சென்று தொட்டு உலுக்க திடுக்கிட்டவளாக தமயந்தி எழுந்து அமர்ந்தாள். அக்கணத்திலேயே அருகிலெங்கும் நளன் இல்லை என்பதை தெரிந்துகொண்டுவிட்டாள். படபடக்கும் நெஞ்சுடன் விழியில் சித்தம் துலங்கி சுற்றிலும் ஓட்டி நோக்கினாள். பின்னர் எழுந்து ஆடை திருத்தி நின்று உரக்க “எங்கிருக்கிறீர்கள், அரசே?” என்று கூவினாள். “அரசே, எங்கிருக்கிறீர்கள்? அரசே...”

அக்குரலின் பொருளின்மையை உணர்ந்திருந்தாலும்கூட அவளால் அழைக்காமலிருக்க முடியவில்லை. அரசமரத்தின் கிளைவட்டம் அமைத்த சருகுமுற்றத்தின் எல்லையாகச் சூழ்ந்திருந்த புதர் விளிம்பு வரை சென்று கருக்கிருள் நிறைந்திருந்த ஆழத்தை நோக்கி மீண்டும் மீண்டும் அவள் அழைத்தாள். இருட்டு அவள் குரலை வாங்கி தன்னுள் அமைத்துக்கொண்டது. ஆழத்தில் அரசே அரசே என அது முனகியது. ஏதோ பறவை துயிலெழுந்து "ராக்?" என்றது. இருட்டு அனைத்தையும் தன்னுள் அடக்கக் கற்றது. ஆகவே எந்த மறுமொழியும் அளிக்காமலிருக்கும் உறுதிகொண்டது.

திரும்பி வந்தபோது காலில் முள் தைத்திருந்த இடம் சரள் கற்களில் பட்டு வலிக்க முகம் சுளித்து மேற்காலெடுத்து நடந்து வந்து வேரில் அமர்ந்தாள். இருளுக்குப் பழகிய விழிகள் அச்சூழலை தெளிவுறக் கண்டன. அங்கிருந்து புரவியின் உடலில் சேணச்சரடு கட்டி உருவான வடுபோல இரு ஒற்றையடிப் பாதைகள் விலகிச் சென்றன. அருகே விலங்குகளின் காலடிகள் ஏதேனும் உள்ளனவா என்று பார்த்தாள். மான்களின் குளம்புத்தடங்கள் நடுவே நளனின் காலடிச் சுவடுகள் தெரிந்தன.

அவள் எழுந்து அச்சுவடுகளை கலைக்காமல் கூர்ந்து நோக்கியபடி நடந்தாள். புதருக்குள் சென்றதும் அக்கால்கள் தயங்கி நின்றதை நேரிலென கண்டுவிட்டாள். அறியாது ஏளனப் புன்னகையில் அவள் உதடுகள் வளைந்தன. அவன் நின்ற இடத்தருகே நின்று, இடையில் கைவைத்தபடி தொடர்ந்து செல்லவா என்று எண்ணினாள். பின்னர் தனக்குத் தானே அதை மறுத்துக்கொண்டு திரும்பி வந்து மீண்டும் வேர்க்குவையில் அமர்ந்தாள். தொலைவில்

சிற்றோடையொன்று ஓடும் ஓசை கேட்டுக்கொண்டிருந்தது. அதில் செவி நிலைக்கவைத்து அதையொட்டி சித்தத்தை ஒழுகவிட்டு அத்தருணம் அளித்த இன்னதென்றறியாத கொந்தளிப்பிலிருந்து மீண்டு வந்தாள்.

விடியும் வரை அங்கு காத்திருப்பதன்றி வேறொன்றும் செய்வதற்கில்லை என்றறிந்திருந்தாள். அவன் அமைத்துக் கொடுத்திருந்த இலைச்சேக்கை அவள் படுத்த தடம் கலையாது அருகே இருந்தது. மீண்டும் அதில் படுக்கலாமென உளமெழுந்தபோது மறுகணமே பிறிதொரு உளம் அதை கூசி விலகியது. எழுந்து சற்று அப்பால் சென்று புதர்க்குவையொன்றில் உடல் பொருத்தி கால் நீட்டி அமர்ந்தாள். கண்களை மூடிக்கொண்டு சூழ்ந்திருந்த காட்டின் ஓசையை கேட்டாள். புலரிப் பறவைகள் எவையும் துயிலெழவில்லை. துயில் கலைந்த சிறுபுட்களின் சிணுங்கல்கள். வௌவால்களின் சிறகோசையும், காற்று இலைகளை உலைத்தபடி செல்லும் பெருக்கோசையும் தலைக்குமேல் நிறைந்திருந்தன. சூழ்ந்திருந்த சருகுப்பரப்பில் காலடிகள் ஒலிக்க மான்களும் காட்டு ஆடுகளும் கடந்து சென்றன. சிற்றுயிர்கள் சலசலத்தோடின. சீவிடு ரீங்காரத்தால் காடு தன்னை ஒன்றென தொகுத்துக்கொண்டிருந்தது.

அவள் எம்முயற்சியும் இல்லாமலேயே காட்டினூடாக துரத்தப்படுபவன்போல ஓடிய நளனை கண்டாள். விழுந்து எழுந்து மீண்டும் ஓடும் அவனை புலிநகம் போன்ற முள்முனைகளால் அறைந்து அறைந்து பற்ற முயன்றது காடு. நெடுந்தொலைவு சென்று இருளில் முட்டிக்கொண்டவன்போல அவன் நின்று தள்ளாடினான். பின்னர் விலகி விலகி சிறிதாகியபடியே சென்றான். விந்தையொன்றை உணர்ந்து சில

கணங்களுக்குப் பின்னரே அது என்ன என்று அறிந்தாள். அவன் அவளை நோக்கியபடி பின்னோக்கிச் சென்று கொண்டிருந்தான். இருளுக்குள் இரு நீர்த்துளிகள் என அவன் விழிகள் சுடர்ந்தன. மிகமிக அகன்று முற்றிலும் அவன் உடல் மறைந்த பின்னரும்கூட அந்த இரு நோக்குகளும் கலையாது நிலைத்திருந்தன.

அவள் விழித்துக்கொண்டபோது காலடியில் அரசநாகம் ஒன்று உடல் மின்ன உடல் சுருட்டிக்கொண்டிருந்தது. அவள் அசைந்ததை உணர்ந்து தலை சொடுக்கி எழுந்தது. இடையளவு உயரத்தில் படம் விரித்து பூனைச்செவிக்குரிய நுண்விசையுடன் திரும்பியபடி நின்றது. அதன் வால் நுனி துடித்துக்கொண்டிருப்பதை அவள் கண்டாள். அதன் இமையா விழிகளை நோக்கியபடி அவள் அசையாது அமர்ந்திருந்தாள். மெல்ல நாகம் படம் தணித்து தலை இறக்கி உடற்சுருளுக்குள் பதுங்கிக்கொண்டது. அதற்குள்ளிருந்து தலை எழுந்து அஞ்சும் விரல்போல் தயங்கியபடி நீண்டு அவள் காலை அடைந்தது.

விலக்கிக்கொள்ளாமல் விழி நிலைக்க அவள் நோக்கிக்கொண்டிருந்தாள். அவள் கட்டைவிரலை அதன் நோக்கு முனை தொட்டது. மேலெழுந்து வந்து பாதங்களின்மேல் எடையுடன் பதிந்து இழுபட்டதுபோல் கடந்து மரத்தின் மடிப்புகளுக்கிடையே மடிந்திருந்த பொந்தொன்றுக்குள் சென்றது. அந்தப் பொந்து நாக வாயென்றாக அதில் நாவென அதன் வால் நுனி துடித்தபடி தெரிந்தது. அவள் மெல்ல அசைந்து நோக்கியபோது பொந்துக்குள் பாம்பின் விழிமணிகளை கண்டாள். அவ்விழிகளை நோக்கியபடி அவள் நச்சுப்பல் பதிந்த மான் என மெய்ப்பு கொண்டபடி அசையாமல் அமர்ந்திருந்தாள்.

பறவைகளின் ஓசை மாறுபட்டிருப்பதை அப்போதுதான் உணர்ந்தாள். எழுந்து அப்பால் தெரிந்த வானத்தில் சிதறிக் கிடந்த விண்மீன்களை பார்த்தாள். அவற்றைக்கொண்டு புலரி அணுகிவிட்டதை கணித்தாள். நீரோடையின் ஓசையை இலக்காக்கி காட்டுக்குள் சென்று அதை அடைந்தாள். நீர் எங்கிருந்தோ ஒளியை பெற்றுக்கொண்டிருந்தது. பாறைகளில் எழுந்து விழுந்த வளைவுகளில் குருத்து மென்மை மின்னியது. அருகில் நின்ற வேம்புக்குச்சி ஒன்றை ஒடித்து பல்துலக்கி முகம் கழுவி அவள் மீண்டு வந்தாள்.

மீண்டும் அந்த வேர்ப்புடைப்பில் அமர்ந்தபடி விழிமூடி, கட்டைவிரலால் பிற விரல்களை தொட்டுத் தொட்டு எண்ணி புலரிவழிபாட்டுக்கான நுண்சொற்களை உரைத்தபடி தன்னுள் ஆழ்ந்தாள். தன்னுணர்வு கொண்டு அவள் விழித்தபோது எதிரே மலைவேடன் ஒருவன் நின்றிருந்தான். முந்தைய நாள் மாலையில் அவன் அமைத்துச்சென்ற கண்ணிப் பொறிகளில் சிக்கிய சிறுவிலங்குகளையும் பறவைகளையும் எடுத்துப்போக வந்திருந்தான் என்று தெரிந்தது. இலைகளுக்கு அப்பால் வானம் மெல்லிய ஒளி கொண்டிருந்தது. குளிர்க்காற்றில் குழல்கள் ஆட அவள் ஊழ்க மயக்கம் விலகாத விழிகளால் அவனை நோக்கினாள்.

“யார் நீ?” என்று அவன் கேட்டான். அவள் எழுந்துகொண்டு “நான்…” என்றபின் தயங்கி “வழிச் செல்பவள்… இங்கே அருகே எவ்வூர் உள்ளது?” என்றாள். “என் ஊர், அதில் என் குடி” என அவன் பெரிய பற்களைக் காட்டி இளித்தான். “இனிய ஊன், புளித்த கள்…” அவன் விழிகள் வெறிகொண்டவை போலிருந்தன. “புல்பாய் விரித்த மஞ்சம்…” என்றபின் மூச்சின்

ஒலியில் "நான் உன்னைப்போல் ஓர் அழகியை இதற்கு முன் கண்டதில்லை" என்றான்.

அவள் சீற்றத்துடன் "விலகு, மூடா. நான் எவரென்று அறிவாயா?" என்றாள். "ஆடை கண்டால் அறியமுடியாதா என்ன? நீ குடியிலி. உன்னை முன்னரே எவரும் உரிமைகொள்ளவில்லை என்றால் எனக்குரியவள்" என்றான். தன் தோளிலிருந்த கூடையை கீழே வைத்துவிட்டு வலக்கையிலிருந்த அம்பை இடக்கைக்கு மாற்றி "அவ்வாறு எவரேனும் உரிமைகொண்டிருந்தால் அவனை நான் போருக்கழைக்கிறேன்... என் நச்சு அம்புகளால் அவனைக் கொன்று உன்னை அடைகிறேன்" என்றான்.

மெல்ல பின்காலெடுத்து வைத்து அரசமரத்தில் சாய்ந்தபடி தமயந்தி சுற்றிலும் நோக்கினாள். "விலகு... விலகிச் செல்!" என்று மூச்சென சொன்னபடி படைக்கலமாகும் பொருளேதேனும் அருகே உள்ளதா என்று நோக்கினாள். "நீ என் உடைமை... இக்காட்டில் வேட்டையாட உரிமைகொண்டவன் நான். நீ என் வேட்டைப்பொருள்..." என்றபடி அவன் கைநீட்டி அவளை பற்ற வந்தான். அவள் அருகே கிடந்த கூரிய கல்லொன்றைக் கண்டாள். அவன் பாய்ந்தால் அப்படியே நிலத்திலமர்ந்து அந்தக் கல்லை எடுத்துக்கொள்ளவேண்டும் என எண்ணி மேலும் ஒரு அடியெடுத்து பின்னால் வைத்தாள்.

"எங்கு செல்வாய்?" என்றபடி அவன் பாய்ந்தான். அவள் ஒரு கையால் அவனைத் தடுத்து விலக்கி குனிந்து அந்தக் கல்லை மறுகையால் எடுத்துக்கொண்டு நிமிர்ந்தபோது அவன் திகைத்து நிற்பதைக் கண்டாள். அதன் பின்னரே அருகே படமெடுத்து நின்ற அரசநாகத்தைக் கண்டாள். அவன் உடல் மெய்ப்பு கொண்டிருந்தது. மூச்சுக்குழி மட்டும் அசைந்தது. அவள்

கல்லை பற்றியபடி மேலும் பின்னடைந்தாள். அவன் மூச்சிழுத்துவிட்டு மிக மெல்ல காலெடுத்து வைத்து பின்னகர்ந்தான். அவன் அசைவுகள் ஆடிப்பாவையிலென நாகத்தில் நிகழ்ந்தன. மேலும் ஓர் அடிவைத்து உடனே உடல்விதிர்க்க விசைகொள்ளப்போகும் தருணத்தில் நாகம் பாய்ந்து அவன் தொடையில் தலைசொடுக்கி கொத்தியது.

நீரில் கல் விழும் ஒலி ஒன்றை எழுப்பியபடி அவன் நிலைதடுமாறி பின்னால் விழுந்தான். கையூன்றிப் புரண்டு எழ முயன்றான். ஊன்றிய கை வழுக்கியதுபோல இருமுறை தவறி விலா மண்ணிலறைய விழுந்தான். நீரிலிருந்து பிடித்திட்ட மீன் என வாய் திறந்துமூடியது. காற்று காற்று காற்று என அவன் வாய் தவிப்பதை கண்டாள். பின்னர் உதடுகள் வலப்பக்கமாக கோணலாகி அதிர கழுத்துத் தசைகள் அதிர்ந்து இழுபட வலக்கை வலிப்புகொண்டு துவள அவன் எழுந்து எழுந்து விழுந்தான். வாயில் நுரை எழுந்து வழிந்தது. மண்ணில் பதிந்து உடலெங்கும் மெல்லிய அதிர்வுகள் மட்டும் எஞ்சியிருக்க அசையாமல் கிடந்தான். கால்விரல்கள் இழுத்துக்கொண்டு பாதம் வெளிவளைந்து நடுங்கியது. கைவிரல்கள் ஒவ்வொன்றாக விடுபட்டு விரிந்தன.

அவள் அருகே எழுந்து நின்ற நாகத்தை நோக்கினாள். நா பறக்க மணிவிழிகள் மலைத்திருக்க அது அக்கணம் முளைத்தெழுந்த பெருமரமொன்றின் தளிர்ச்செடி என நின்றது. பொற்காசுகளை அடுக்கியதுபோன்ற அதன் செதில்களில் புலரியொளி ஈரமெனத் தெரிந்தது. படம் சுருக்கி தணிந்து தலையை மண்ணில் வைத்து ஒருகணம் அதிர்வு செவிகொண்டு மெல்ல நீண்டு மீண்டும் பொந்துநோக்கிச்

சென்றது. அவள் திரும்பிப் பார்த்தபோது வேடனின் கண்கள் நிலைத்திருந்தன.

நாகவிறலியின் கையிலிருந்த குறுமுழவு மெல்லிய குரலில் விம்மிக்கொண்டிருந்தது. அதிலிருந்து பிரிக்கமுடியாதபடி கலந்து அவள் குரல் ஒலித்தது. “நாகத்துணை கொண்டிருந்தாள் தமயந்தி. அடர்காட்டுக்குள் அவள் உணவையும் நீரையும் கண்டுகொண்டாள். மரத்தடிகளில் இளைப்பாறினாள். நாகநோக்கை எப்போதும் தன் உடலில் உணர்ந்தாள். நிழல்களனைத்தும் நாகங்களென நெளியும் வெளியில் அவள் தானுமொரு நாகமென்றானாள். நாகத்தின் ஓசையற்ற விரைவு அவள் உடலில் கூடியது. நாகம்போல் மூச்சன்றி குரலற்றவளானாள். நாள் செல்லச் செல்ல அவள் உடலில் நாகத்தின் ஒளி கூடியது. விழிகள் இமையா மணிகளாயின.”

வந்த இடத்தையும் செல்திசையையும் முற்றிலும் மறந்தவளாக காட்டில் திளைத்து வாழ்ந்தாள் தமயந்தி. அந்தக் காட்டின் மறுதிசையில் ஓடிய மனோதாரா என்னும் சிற்றாற்றின் கரையில் அமைந்த குடிலில் தவம் செய்த முனிவர்கள் எழுவர் அவர்களில் ஒருவருக்கு வந்த நோய்க்கு மருந்தாக மூலிகை தேடி அடர்காட்டுக்குள் வந்தபோது அவளை கண்டனர். அவர்களில் ஒருவர் ஈட்டிமுனையின் தொடுகையென கூரிய நோக்குணர்வை முதலில் அடைந்தார். விழி ஓட்டிவந்தபோது புதர்களுக்குள் இரு நாகவிழிகளைக் கண்டு அவர் அலற அவர்கள் திகைத்து நோக்கினர். அவர் கைசுட்டிய திசையில் அவள் இலைமறைத்த உடலுடன் நின்றிருந்தாள்.

அவர்கள் அவளை மீண்டுமொருமுறை நோக்குவதற்குள் அவள் மறைந்தாள். “அவள் நாகினி” என்றார் கிரீஷ்மர். “இல்லை, மானுடப்பெண். அவளை நான் எங்கோ கண்டிருக்கிறேன்”

என்றார் பரர். “நாம் அவளை தேடிச்செல்வோம். அவள் யாரென அவளிடமே கேட்போம். ஊழ்க நுண்சொல் நெஞ்சிலிருக்கையில் அஞ்சவேண்டியதென்ன?” என்றார் இளையவரான குசுமர். அவர்கள் அவள் சென்ற பாதையில் ஓசையிலாது காலெடுத்துவைத்துச் சென்றனர். “அது ஒரு மாயக்காட்சி. அவள் கானணங்கு… அவள் சென்ற விரைவில் நாகமும் செல்லாது” என்றார் கிரீஷ்மர். “அவள் ஷத்ரியப் பெண்… ஐயமே இல்லை. அவள் கைகள் படைக்கலம் பயின்றவை” என்றார் பரர்.

அவர்கள் இருண்ட காட்டில் வழி நிலைத்து நின்றனர். “இதற்கப்பால் நாம் செல்வது இயலாது. திரும்பிவிடுவதே நன்று” என்று கிரீஷ்மர் சொன்னார். குசுமர் “எடுத்த செயலை முடிக்கவேண்டாமா?” என்றார். குனிந்து சருகுகளை நோக்கி “கால்தடமே இல்லை. எப்படி மானுடப்பெண் இப்படி செல்லமுடியும்?” என்றார் கிரீஷ்மர். அப்போது அவள் இலைத்தழைப்புக்குள் இருந்து தோன்றினாள். மிக அருகேதான் அவள் நின்றிருந்தாள். கிரீஷ்மர் அஞ்சி பின்னடைய பரர் “யார் நீ? அணங்கா, அரவுமகளா?” என்றார். அவள் இமையா விழிகளால் அவர்களை நோக்கிக்கொண்டிருந்தாள். “சொல், யார் நீ?” என்றார் குசுமர்.

அவள் அவர்களின் சொற்களைக் கேளாமல் எங்கோ இருந்தாள். குசுமர் “உளமயக்கில் இருக்கிறாள். ஊடுருவும் நுண்சொல் ஒன்றை எய்து அவளை எழுப்புகிறேன்” என்றார். அவர் அவள் விழிகளை உற்று நோக்கியபடி அச்சொல்லை உரைத்துக்கொண்டே இருக்க அவள் உடல் மெல்ல மெய்ப்பு கொண்டது. உதடுகள் அசைய கருவிழிகள் உருளத்தொடங்கின.

எவரோ பிடித்துத் தள்ளியதுபோல அவள் பின்னால் விழுந்தாள். பரர் பாய்ந்து அவளை பிடித்துக்கொண்டார்.

அவர்கள் அவளை தூக்கி ஓடைக்கரை ஒன்றுக்கு கொண்டுவந்தனர். அவள் முகத்தில் நீரை அள்ளி விடுவதற்காக தேக்கிலை பறிக்க திரும்பிய பரர் எதிரில் இடையளவு உயரத்தில் எழுந்து நின்ற அரசநாகத்தைக் கண்டார். அது படம் சுருங்கி விரிந்து அசைய நா பறக்க மெல்ல ஆடியது. அவர் கையை நீட்டி அதன் நெறியைக் கட்டும் நுண்சொல்லை உரைத்தார். ஏழுமுறை அவர் அதை உரைத்ததும் நாகம் ஓங்கி தரையை ஒருமுறை கொத்திவிட்டு படம் தணித்து நிலத்திலமைந்தது. பின்னர் தன்னை நுரை சுருங்குவதுபோல புதர்ச்செறிவுக்குள் இழுத்துக்கொண்டது.

நீர் முகத்தில் பட்டபோது தமயந்தி விழித்துக்கொண்டாள். ஆடவரைக் கண்டதும் ஆடை திருத்தி எழுந்தமர்ந்தாள். "யார்?" என்று அவள் கேட்டதுமே பரர் முகம் மலர்ந்து "ஆம், நீங்கள் நிஷாத அரசி தமயந்தி. உங்களை நான் வேதமாணவனாக வேள்வியவையில் கண்டிருக்கிறேன்" என்றார். தமயந்தி "நீங்கள் யார்?" என்றாள். "நாங்கள் இங்கு அருகிருக்கும் குடிலில் முதிய ஆசிரியர் பாஸ்கரருடன் தங்கியிருப்பவர்கள். வேதப்பொருள் பயில்கிறோம். வருக இளவரசி, எங்கள் குடிலில் இளைப்பாறுவோம்" என்றார் குசுமர்.

தமயந்தி எழுந்ததுமே தலைசுற்றி உடல் வியர்க்க விழி சோர்ந்து மீண்டும் அமர்ந்துகொண்டாள். மூச்சு எழுந்தமைந்தது. "என்னால் எழ முடியவில்லை" என்றாள். "நாகநஞ்சு உடலில் நிறைந்திருக்கிறது, அரசி" என்றார் பரர். "எங்கள் குடிலில் மருந்துகொள்ளுங்கள். நஞ்சு நீங்கி உங்கள் உடல்மீள சற்று நாளாகும்." மீண்டும் எழுந்தபோது அவள் தலை தாழ உடல்

உலுக்கி வாயுமிழ்ந்தாள். "மஞ்சள் நஞ்சு" என்றார் பரர். "மெல்ல எழுந்து உடன் வந்துவிடுங்கள். நாகங்களை நாங்கள் ஒரு நாழிகைப்பொழுது மட்டுமே நெறியில் கட்ட முடியும்" என்று அவள் கையைப்பற்றி தூக்கினார் குசுமர்.

# நீர்க்கோலம் - 68

**67. வாழும்**நஞ்சு**

❀தமயந்தியின் உடலிலிருந்து நாகநஞ்சு முற்றிலும் அகல பதினான்கு நாட்களாயின. பாஸ்கரரின் தவச்சாலையின் பின்பக்கம் சிறிய தனிக்குடிலில் மரப்பட்டைப் பலகையில் விரிக்கப்பட்ட கமுகுப்பாளைப் பாயில் அவள் கிடந்தாள். பாஸ்கரரின் மாணவர் பரர் அருகிருந்த சிற்றூருக்குச் சென்று அழைத்து வந்த நச்சுமுறி மருத்துவர் மூர்த்தர் காட்டிலிருந்து பறித்து வந்த நாகஹஸ்தி, விரலிமஞ்சள், காசித்தும்பை, அருகந்தளிர், சிரியாநங்கை ஆகிய பச்சிலைகளை கட்டிச் செந்நாரம், துரிசம் ஆகியவற்றுடன் கலந்து வாழைப்பட்டை பிழிந்து எடுத்த சாற்றில் கலந்து அவள் வாயிலும் மூக்கிலும் செவிகளிலும் ஊற்றினார்.

அவருடன் வந்த முதுசெவிலி காலகை தமயந்தியின் உடல் முழுக்க அச்சாற்றைப் பூசி மெல்லிய ஆடையால் மூடி ஒளிபடாது அரையிருள் நிறைந்த குடிலுக்குள் அவளை பேணி வந்தாள். மூலிகைச்சாறு கலந்த பாலுணவே அவளுக்கு அளிக்கப்பட்டது. முதல்நாள் பச்சிலைச்சாறு பூசப்பட்டதும் அமிலம் பட்டதுபோல அவள் உடல் சிவந்து கன்றியது. மறுநாள் தோல் சுருங்கி வழன்றது. வாயில் கெடுமணம் எழுந்தது. விழிவெள்ளையும் நகங்களும் நாவும் நீலம்

பாரித்தன. பாஸ்கரர் அஞ்சி “என்ன நிகழ்கிறது, மூர்த்தரே?” என்று கேட்டார். “முந்தைய நிலையுடன் நோக்கினால் நன்றே நிகழ்கிறது. மூலிகைக்கு உடல் மறுவினை செய்கிறது. நாகநஞ்சை தசைகள் உமிழத் தொடங்குகின்றன” என்றார்.

ஓரிரு நாட்களில் அவள் உடல் நிலைமீளத் தொடங்கியது. தோல் மீண்டும் உயிரொளி கொண்டது. விழிகளிலும் நாவிலும் நகங்களிலும் இருந்து நீலம் கரைந்தகன்றது. ஆனால் எங்கிருக்கிறோம் என்றும் என்ன நிகழ்கிறதென்றும் அவள் அறிந்திருக்கவில்லை. உணவூட்டவும் மருந்து அளிக்கவும் காலகை அவளைத் தொடும்போதெல்லாம் திடுக்கிட்டு விழித்து சிவந்த விழிகளால் நோக்கி உதடுகள் மெல்ல அசைய “யார்?” என்றாள். காலகை “அன்னை” என்றாள். “ஆம்” என்று சொல்லி அவள் காலகையின் நரம்புகள் எழுந்து நெளிந்த முதிய கைகளை இறுகப் பற்றிக்கொண்டு மீண்டும் விழிமயங்கினாள்.

குடிலுக்குள் இருந்து வெளியேவந்து அங்கே காத்து நின்ற பாஸ்கரரிடம் “நலம் தெளிகிறது. விரைவில் தேற்றம் அடைந்துவிடுவார்” என்றார் மூர்த்தர். “இவர் யார் என்று நான் உங்களிடம் கேட்கவில்லை. நீங்கள் உரைப்பதுவரை அறிய முயலவும் மாட்டேன். ஆனால் ஷத்ரிய குலத்தில் பிறந்தவர் என்றும் அரசகுடியினராக இருக்கவும்கூடும் என்றும் உய்த்தறிகிறேன். இவர் உடல் முந்நிகர் கொள்ள இன்னும் நெடுநாளாகும். அரண்மனை மீண்டு முறையான மருத்துவம் செய்துகொள்வதே மேல்.” பாஸ்கரர் “அவள் யாரென்று நானறிவேன். இன்று அதை பிறர் அறிவது நலம் பயப்பதல்ல” என்றார். மூர்த்தர் ஒன்றும் சொல்லாமல் தலையசைத்தார். “அவள் நினைவு மீளட்டும், விழைவதென்ன என்று அவளே முடிவெடுக்கட்டும்” என்றார் பாஸ்கரர்.

பதினான்காவது நாள் தமயந்தி முற்றிலும் மீண்டு வந்தாள். உச்சிப்பொழுதில் குடிலுக்கு வெளியே வெயில் நின்றிறங்கிக் கொண்டிருக்க பறவைகளின் ஒலிகள் அடங்கி காற்று இலைகளை உழக்கியபடி செல்லும் ஓசை மட்டும் கேட்டுக்கொண்டிருந்தது. நெடுந்தொலைவிலெங்கோ அணுவெனச் சுருங்கி இன்மைக்கு அருகிலிருந்த அவள் தான் என்று உணர்ந்து, ஆமென்று பெருகி, இங்கென்றும் இவையென்றும் இனியென்றும் பேருருக் கொண்டு அங்கு மீண்டாள். விழி திறந்து அருகே தரையில் மேலாடையை விரித்து துயின்றுகொண்டிருந்த காலகையை பார்த்தாள்.

மஞ்சத்தில் அவள் எழுந்தமர்ந்த ஒலிகேட்டு காலகை எழுந்து கைகூப்பி "தேவி" என்றாள். "எங்கிருக்கிறேன்? இது எந்த இடம்?" என்றாள் தமயந்தி. "இது வேத முனிவராகிய பாஸ்கரரின் குடில். தாங்கள் நாகநஞ்சு உடலில் ஏறி நோயுற்றிருந்தீர்கள். இன்றோடு பதினான்கு நாட்களாகின்றன. இவ்வினாவிலிருந்து நீங்கள் மீண்டுவிட்டீர்கள் என்று அறிகிறேன்" என்றாள் காலகை. "ஆம்" என்றபின் தமயந்தி தன் குழலை அள்ளி சுருட்டிக்கட்டினாள். கை தொட்டபோதே தன் குழல் நான்கிலொன்றாக குறைந்திருப்பதை உணர்ந்தாள். அதைக் கண்ட காலகை "கூந்தல் உதிர்ந்துகொண்டே இருக்கிறது, தேவி. நஞ்சு உடலைக் குறுகச் செய்கிறது" என்றாள்.

அவள் "என் உடலெங்கும் களைப்பு நிறைந்திருக்கிறது. எடை மிக்க நீருக்கு அடியில் இருப்பதுபோல் உணர்கிறேன்" என்றாள். "ஆம், உயிராற்றல் குறைந்துள்ளது. மண் விசைகொண்டு இழுக்கிறது. இறுதி விழைவையும் கொண்டு நஞ்சுடன் போராடியிருக்கிறீர்கள்" என்றாள் காலகை. "மூர்த்தர் தேர்ந்த மருத்துவர். அதனால் மட்டுமே மீண்டு வந்திருக்கிறீர்கள்."

தமயந்தி தன் கைகளை கண்முன் தூக்கி நோக்கினாள். “இத்தனை நஞ்சு எவ்வண்ணம் என் உடலில் ஏறியது? என்னை நாகம் கடித்ததா என்ன?” என்றாள். காலகை “நாகம் கடித்தால் நஞ்சு மிகுந்து அப்போதே உயிர் பிரியும், தேவி” என்றாள்.

அவள் என்ன சொல்கிறாள் என்று புரியாமல் தமயந்தி வெறுமனே பார்த்தாள். “நாகம் சினந்து நஞ்சு செலுத்தப்படவில்லை. கனிந்து உங்கள் உடலால் உண்ணப்பட்டுள்ளது” என்றாள் காலகை. “எவ்வாறு? யார் அளித்தது?” என்று அவள் கேட்டாள். சில கணங்களுக்குப்பின் காலகை விழிகளை விலக்கி “தங்கள் கனவுகளில் நாகம் வந்திருக்கக்கூடும்” என்றாள். ஒருகணம் தமயந்தியின் விழிகள் மாறுபட்டன. “ஆம்” என்றாள். இருவரும் மேலும் சொல்லாடாது அமர்ந்திருந்தனர். வெளியே காற்று சுழிக்கும் ஓசை கேட்டது. தொலைவில் எங்கோ ஒரு காவல் நாய் குரைத்துக்கொண்டிருந்தது.

தமயந்தி பெருமூச்சுடன் கலைந்து “இங்கு நான் படுத்திருப்பதையும் கனவிலேயே அறிந்தேன்” என்றாள். “அலைக்கழிக்கும் கனவுகள். வெறும்பித்து. அவற்றில் நான் சூழ்ந்தெழுந்த மலைகளிடமும், மலர்களிடமும், புற்களிடமும், பூச்சிகளிடமும் மன்றாடி அழுதபடி காட்டுக்குள் சுற்றிவருகிறேன். தெய்வங்களை அழைத்து நெஞ்சில் அறைந்து கூவுகிறேன். என் அரசர் எங்கே சொல்லுங்கள், நீங்கள் அறிவீர்கள் என்று கதறுகிறேன்” என்றாள் தமயந்தி. “காவியத் தலைவியரைப்போல” என்றாள் காலகை. “ஆம், என்னை நான் சீதை என்றும் சாவித்ரி என்றும் உணர்ந்தேன்” என்றாள் தமயந்தி. காலகை புன்னகைத்தாள்.

“அறியாச் சிறுமியாக முற்றிலும் கைவிடப்பட்டவளாக அங்கே நின்றேன்” என்று தமயந்தி சொன்னாள். “இப்பிறவி முழுக்க சித்தத்தால் நான் அணைகட்டி உள்தேக்கி நிறுத்தியிருந்த கண்ணீர் அனைத்தையும் கொட்டி முடித்துவிட்டேன். இனி எண்ணி அழ ஏதுமில்லை எனக்கு.” காலகை “ஆம், நானும் பார்த்துக்கொண்டிருந்தேன். தேர்ச்சகடம் ஏறிச்சென்ற நாகம்போல் இரவும் பகலும் இந்த மஞ்சத்தில் நெளிந்துகொண்டிருந்தீர்கள். நீங்கள் உற்ற துயரென்ன என்று அறியக்கூடவில்லை. மொழியென எதுவும் உங்கள் இதழில் எழவில்லை. ஆனால் பெரும்பாறைகளை சுமப்பவர்போல, ஆறாப்புண் கொண்டவர்போல முனகினீர்கள். இந்தப் பதினான்கு நாட்களும் உங்கள் விழிகளிலிருந்து நீர் வழியாத தருணமே இல்லை” என்றாள்.

தமயந்தி “அன்னையே, பெண் என்றால் அழுது தீர்க்கத்தான் வேண்டுமா?” என்றாள். காலகை புன்னகைத்து “எங்கோ ஓரிடத்தில் அழுது முடிப்பது நன்றல்லவா?” என்றாள். தமயந்தி “அத்தனைக்கும் அடியில் பெண் ஆற்றலற்றவள்தானா? கைவிடப்பட்டவள்தானா?” என்றாள். காலகை நகைத்து “இதற்கு நான் என்ன மறுமொழி சொல்ல? உங்களுக்கும் எண்பது ஆண்டு அகவை நிறையட்டும் என்று வாழ்த்துவதன்றி” என்றாள்.

❀பாஸ்கரரின் அழைப்புடன் பரர் வந்துநின்ற ஒலியை தமயந்தி கேட்கவில்லை. ஓடையின் ஓசையை உளஓட்டத்துடன் இணைத்தபடி அங்கிலாதவளாக இருந்தாள். இருமுறை அவர் தேவி என்றழைத்ததும் கலைந்து எழுந்து அவரை நோக்கி விழிகளால் என்ன என்றாள். அவர் செய்தியை அறிவித்ததும் கையசைவால் செல்க நான் வருகிறேன் என்றாள். அவர்

செல்வதை பொருளின்றி சற்று நேரம் நோக்கியபின் ஓடையில் இறங்கி நீரை அள்ளி முகத்தையும் கைகளையும் கழுவிக்கொண்டாள்.

கிளம்பும் பொழுது வந்துவிட்டதென்பதை அவள் உள்ளம் உணர்ந்திருந்தது. குடிலுக்குள் சென்று முகத்தையும் கைகளையும் துடைத்து மரசீப்பால் குழல்கோதி முடிந்து ஆடை திருத்தினாள். குடிலுக்கு வெளியே சிறுதிண்ணையில் உடலொடுக்கி அமர்ந்து விழி சொக்கியிருந்த காலகையை நோக்கி “அன்னையே” என்றாள். அவள் திடுக்கிட்டு விழித்து வாயைத் துடைத்தபின் “எங்கு கிளம்பிவிட்டீர்கள்? நீங்கள் இவ்வெயிலில் நடமாடக்கூடாது” என்றாள். தமயந்தி புன்னகைத்து “நோய் புரக்கும் எல்லா செவிலியரும் உளம் கனிந்து அதில் ஈடுபட்டு அந்நோய் முற்றாக நீங்கலாகாதென்று விழையத்தொடங்குவார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன், அன்னையே” என்றாள்.

“நலம் கொண்டு நூறாண்டு வாழ்க... நான் பிறிதென்ன விழைவேன்?” என்றாள் காலகை. “ஆசிரியர் அழைக்கிறார். நான் இங்கிருந்து கிளம்புவதைப்பற்றி சொல்லப்போகிறார் என்று தோன்றுகிறது” என்றாள். “ஏன் கிளம்ப வேண்டும்? உங்கள் உடல்நிலை இன்னும் முற்றிலும் சீரமையவில்லை. இங்கே தங்கி உடல் தேற்றிக்கொள்ளலாமே?” என்றாள் காலகை. தமயந்தி புன்னகைத்து “இது காமஒறுப்பு நோன்புகொண்டவர்களின் குருநிலை. இங்கு பெண்கள் இருக்கவியலாது” என்றாள். காலகை பல்லில்லாத வாய் திறந்து சிரித்து “ஆம், இங்குள்ள அனைவரின் விழிகளும் மாறிவிட்டன. உங்களை இங்கு அழைத்து வந்ததன் பொறுப்பு எவருக்கென்பதில் பூசலும் தொடங்கிவிட்டது” என்றாள்.

மறுமொழி சொல்லாமல் புன்னகையுடன் தமயந்தி மையக்குடிலுக்கு சென்றாள். வெளியே பாஸ்கரரின் மாணவர்கள் நின்றிருந்தார்கள். முகப்பறைக்குள் தலைப்பாகையை அவிழ்த்து மடியில் வைத்தபடி வணிகர் மூவர் பாஸ்கரரின் முன் தடுக்குப் பாய்களில் அமர்ந்திருப்பதை வாயிலினூடாகக் கண்டாள். படிகளில் நின்று மெல்ல காலடியோசை எழுப்பினாள். பாஸ்கரர் அவளை நோக்கி உள்ளே வந்து அமரும்படி கைகாட்டினார். அவள் உள்ளே சென்று அக்குடிலறையின் மூலையில் நின்றுகொண்டாள்.

“அமரலாம், தேவி. உங்களைப்பற்றி இவர்களிடம் ஓரளவு சொல்லியுள்ளேன். நீங்கள் யாரென்றும் இந்நிலை எதனால் என்றும் அவர்களுக்குத் தெரியாது. அதை அவர்கள் கேட்டுக்கொள்ளவும் மாட்டார்கள் நீங்கள் விழையுமிடத்திற்கு உங்களை அழைத்துச் செல்வார்கள்” என்றார் பாஸ்கரர். தமயந்தி விழிகளைத் தாழ்த்தியபடி கைகளைக் கோத்து மடியில் வைத்து அமர்ந்திருந்தாள். பாஸ்கரர் முதன்மை வணிகரைச் சுட்டி “இவர் பூமிகர். பிற இருவரும் இவருடைய துணைவர்கள், தாயாதிகள். சங்கரர், காலவர். கலிங்கத்திலிருந்து பொருள் கொண்டு அவந்திக்கும் மாளவத்திற்கும் செல்லும் வணிகர்கள். இவர்களுடன் நீங்கள் செல்வீர்கள் என்றால் எவ்வினாவும் எழாது. வணிகர்கள் எந்த ஊருக்கும் அயலவரே” என்றார்.

பூமிகர் “ஆசிரியரின் ஆணையை ஏற்றுக்கொள்ளும் நல்வாய்ப்பு எங்களுக்கு அமைந்துள்ளது, தேவி” என்றார். தமயந்தி அவரை நோக்கி “நான் எங்கு செல்வதென்று இப்போது உரைக்க இயலாது. இந்நாட்டின் எல்லையைக் கடந்ததும் அதை கூறுகிறேன்” என்றாள். “அவ்வாறே” என்றார் பூமிகர். பாஸ்கரர்

அவளை நோக்கி “நன்று சூழ்க, தேவி. துயர்கள் அனைத்திலிருந்தும் ஒரு சொல்லேனும் மெய்மையென நாம் பெற்றுக்கொள்வோமென்றால் ஊழென்பது பொருளிலா விளையாட்டல்ல” என்றார்.

பூமிகர் எழுந்து “இன்று மாலையே நாங்கள் கிளம்பவிருக்கிறோம். எங்கள் குழுவினருடன் குறுங்காட்டுக்குள் சிறுகுடில்கள் அமைத்துத் தங்கியிருக்கிறோம். தாங்கள் தங்கள் உடைமைகளை எடுத்துக்கொண்டு விடைபெற்று அங்கு வந்து சேருங்கள்” என்றார். அவர்கள் சென்றதும் பாஸ்கரரின் மாணவர்கள் உள்ளே வந்து அவளை சூழ்ந்துகொண்டனர். குசுமர் “தாங்கள் தங்கள் தந்தையிடமே திரும்பிச் செல்லவேண்டும், தேவி. படைகொண்டெழ வேண்டும். இழந்தவற்றை மீட்டெடுக்க வேண்டும். மீண்டும் பாரதவர்ஷத்தின்மேல் உங்கள் சிலம்பு அமையவேண்டும்” என்றார். அவள் புன்னகை செய்தாள்.

தன் சிறுமூட்டையுடன் வந்து அவள் பாஸ்கரரின் கால்தொட்டு தலைசூடினாள். “உங்கள் தந்தை உங்களை ஏற்க அஞ்சுவார். சூழ்ந்திருக்கும் நாடுகளின் பகை வந்து சேரும். நிஷதபுரியின் வீணன் படைகொண்டுவரவும் கூடும். அனைத்தையும் எதிர்கொள்ளும் ஆற்றலை இந்தக் காட்டுப் பயணத்தினூடாக அடைந்திருப்பீர்கள். அன்னையர் ஒருபோதும் தோற்கலாகாது” என்றார் பாஸ்கரர். “வென்றெழுங்கள். உங்களுக்காக மட்டுமல்ல. நன்று எந்நிலையிலும் வெல்லும் என்று கூறும் நூல்களுக்கு மானுடர் கடன்பட்டிருக்கிறார்கள். குருதியாலும் கண்ணீராலும் அவர்கள் அதை நிறுவிக்கொண்டே இருக்க வேண்டும்.”

“எளிய உயிர்வாழ்தலுக்கு அப்பால் இங்கிருந்து எதையேனும் பெற்றவர்களின் பொறுப்பு பிறர் நோக்கி தலைக்கொள்ளும்படி வாழ்வதே” என பாஸ்கரர் தொடர்ந்தார். “மாமனிதர்கள் நெறிநூல்களிலிருந்து தோன்றுகிறார்கள். மீண்டும் அங்கு சென்று சேர்கிறார்கள்.” தமயந்தி புன்னகையுடன் “நான் கற்றது ஒன்றே. ஊழின் பெருக்கில் கலம் கவிழாது சுக்கான் பிடிப்பதொன்றே மானுடர் செய்யக்கூடியது” என்றபின் பெருமூச்சுடன் “நான் வெல்வது நெறியின் விழைவென்றால் அவ்விசையில் ஏறிக்கொள்வதொன்றே செய்ய வேண்டியது” என்றாள்.

அவர்கள் அவளுக்கு உலர் உணவும் மான் தோலாடைகளும் பரிசாக அளித்தனர். காலகை தேனில் ஊறவைத்து வெயிலில் உலரவைத்த நெல்லிக்காய்களை பெரிய குடுவையொன்றில் நிரப்பி அவளிடம் அளித்தாள். “இந்தக் காட்டில் அரிதென்று அளிக்க இதுவே உள்ளது, தேவி. எளியவளுக்கு இனி இந்நாட்களின் நினைவே வாழ்வை நிறைவுசெய்யப் போதுமானது. இக்கொடைக்காக நான் கடமைப்பட்டுள்ளேன்” என்றாள். “கொடைபெற்றவள் நான், அன்னையே” என்றாள் தமயந்தி. “அத்தனை அன்னையரும் மைந்தருக்கு கடன்பட்டவர்கள். குழவியரிடமிருந்து அமுதுண்பவள் அன்னையே” என்றாள் காலகை.

காலகையின் கால்களைத் தொட்டு சென்னிசூடினாள் தமயந்தி. விழிகள் நிறைந்து வழிய உதடுகளை இறுக்கியபடி நடுங்கும் கைகளால் அவள் தலையைத் தொட்டு சொல்லின்றி வாழ்த்தினாள். குசுமர் துணை வர வணிகர்களின் தங்குமிடம் நோக்கி சென்றாள்.

❀வணிகர் குழுவில் பூமிகரின் ஆணை அனைவருக்கும் அளிக்கப்பட்டிருந்தது. எனவே தமயந்தி அக்குழுவுடன் வந்து சேர்ந்தபோது எவரும் அவளை வெளிப்படையாக திரும்பிப் பார்க்கவில்லை. பூமிகர் அவளை நோக்கி "உங்கள் பொருட்களை அந்த ஒற்றைக்காளை வண்டியில் வைத்துக்கொள்ளுங்கள், தேவி" என்றார். உடன்வந்த குசுமரிடம் "நன்று. நான் தலைவணங்கினேன் என்று ஆசிரியரிடம் சொல்லுங்கள்" என்றாள் தமயந்தி.

ஒற்றைக்காளை வண்டியில் தனது தோல்மூட்டையை வைத்துவிட்டு அதன் அருகே அமர்ந்திருந்த மூன்று பெண்களுடன் சென்று அமர்ந்துகொண்டாள். மூவருமே அடுமனைப் பெண்டிர் என்பது அவர்களின் ஆடைகளிலிருந்தும் அணிகளிலிருந்தும் தெரிந்தது. நெடுந்தூரம் நடந்து களைத்து சற்றே ஓய்வுக்குப்பின் மீண்டிருந்தார்கள். வாழ்நாளெலாம் நடந்த களைப்பு அவர்களின் விழிகளில் இருந்தது. எதையும் விந்தையென நோக்காது வெறும் ஒளியென ஆனவை. எங்கும் வேர்கொள்ளாமல் சென்றுகொண்டே இருப்பவர்களை மண் கைவிடுகிறது என அவள் எண்ணிக்கொண்டாள். உதிர்ந்தவர்கள் சென்றடையும் அகத்தனிமையிலிருந்து எழும் எண்ணிக்கோத்த சொற்களும் எப்போதுமுள்ள முகமன்களும்.

தமயந்தி அவர்களிடம் தானும் அவர்களுடன் பயணம் செய்யவிருப்பதாக சொன்னாள். பாஸ்கரரின் அடுமனைப் பெண் என்று தன்னை அறிமுகம் செய்துகொண்டாள். அவர்களில் மூத்தவளாகிய சலஃபை "நன்று, நாம் சற்று நேரம் கடந்ததும் கிளம்பவேண்டும். நிமித்திகர் குறித்த நற்பொழுதுக்காக பூமிகர் காத்திருக்கிறார்" என்றாள். மருத்துவரான சுதீரர் அவளை வந்துநோக்கி "நஞ்சுகோள் கொண்டவர் என்றார்கள்.

நடக்கையில் மூச்சு சற்று எடை கொள்ளும். ஆனால் மூச்சு உட்சென்று மீள்வது நச்சை வெளித்தள்ளும்” என்றார்.

தமயந்தி அந்த வணிகக் குழுவை பார்த்தாள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு வேலையில் முழுமையாக ஈடுபட்டிருந்தனர். பொதிகளை வண்டிகளில் அடுக்கி தேன்மெழுகு பூசப்பட்ட ஈச்சம்பாய்களால் மூடிக் கட்டினார்கள். அடுமனைக் கலங்களையும் பிறவற்றையும் வண்டிகளுக்குள் சீராக அடுக்கினார்கள். இலைகளைக்கொண்டு புரவிகளை தசை உரும்மிக் கொண்டிருந்தனர் நால்வர். மேயும்பொருட்டு விட்டிருந்த காளைகளை சிலர் அழைத்துக்கொண்டு வந்து நுகங்களில் கட்டினார்கள். பூமிகரின் தோழர்கள் ஆடைகளைத் திருத்தி கச்சைகளை இறுக்கிக்கொண்டிருந்தனர். உப்பு தொட்டு சூளுரைத்து கூலிக்காவலுக்கு வந்திருந்த ஷத்ரியர்கள் நீண்ட வேல்களை மடியில் வைத்தபடி அமர்ந்திருந்தனர். சிலர் அம்புகளை கிளியோசை எழ கருங்கல்லில் கூர் தீட்டி தூளியில் அடுக்கி தோளில் மாட்டிக்கொண்டனர்.

மணற்கடிகையை நோக்கியபடி முதுநிமித்திகர் ஒருவர் அமர்ந்திருக்க அவர் அருகே அவருடைய மாணவன் கையில் சங்குடன் நின்றிருந்தான். பூமிகர் எரிச்சல் முகத் தசையின் அமைவாகவே பதிந்துவிட்ட முகத்துடன் உரத்த குரலில் ஒவ்வொருவருக்கும் ஆணைகளை பிறப்பித்தார். ஏவலரிடம் வசையின் மொழியில் பேசினார். தன் தோழர்களிடம் சலிப்புடன் ஓரிரு சொற்களில் ஆகவேண்டியதை உரைத்தார். ஷத்ரியக் காவலர்களிடம் மன்றாட்டெனப பணிந்த குரலில் பேசினார். அவர் நோக்கும்போது மட்டும் தெரியும் குறைகள் எங்குமிருந்தன. நுகம் ஒன்று கட்டப்படவில்லை. வண்டியில்

மெழுகுப்பாயில் இடைவெளி இருந்தது. ஒரு சிறிய செம்புக் கலம் மறக்கப்பட்டிருந்தது.

நிமித்திகர் கையைத் தூக்கி அசைக்க அவர் மாணவன் வாயில் சங்கை வைத்து மும்முறை ஊதினான். ஷத்ரியர்கள் வேல்களுடன் எழுந்துகொண்டனர். ஏவலர்கள் புரவிகளைக் கொண்டுவந்து பூமிகருக்கும் அவர் தோழர்களுக்கும் அருகே நிறுத்தினர். நுகங்கள் அசைய, மணிகள் குலுங்க காளைகள் மூக்குக்கயிறு இழுபட தலைகுலுக்கின. பூமிகர் செல்வோம் என்று கையசைத்ததும் இடக்கையில் அவ்வணிகக் குழுவின் கொடியும் வலக்கையில் சங்குமாக காவலன் ஒருவன் முன்னால் நடந்தான். குபேரன் உரு ஒருபுறமும் கலிங்கத்தின் சிம்ம முத்திரை மறுபுறமும் பொறிக்கப்பட்ட கொடி காட்டிலிருந்து நிலச்சரிவு நோக்கி வீசிய காற்றில் படபடத்தது.

கொடிவீரனைத் தொடர்ந்து நான்கு காவலர் வேல்களுடன் சென்றனர். அவர்களுக்கு இருபுறமும் நால்வர் நாண் முறுக்கப்பட்ட வில்லும் தூளிகளில் குலுங்கும் அம்புகளுமாக சென்றனர். தோளில் தங்கள் தோல்பொதிகளுடன் பூமிகரும் அவரது தோழர்களும் தொடர பன்னிரண்டு பொதிவண்டிகள் சகட ஒலியும் காளைகளின் கழுத்தொலியும் இணைய தொடர்ந்து சென்றன. அவற்றுக்குப் பின்னால் அடுமனை வண்டிகளும் குடில் தட்டிகளை ஏற்றிய வண்டிகளும் சென்றன. அவ்வண்டிகளைப் பற்றியபடி பெண்களும் ஏவலரும் நடக்க அவர்களுக்குப் பின்னால் வில்லேந்திய காவலர்கள் சென்றனர். செம்மண் பரப்பில் வண்டித்தடங்கள் பதிந்து கிடந்த பாதையில் ஒலி ஒழுக்கென வணிகர்களின் நிரை ஊர்ந்தது.

✿மாலைவெயில் மறையத் தொடங்கும்போதே அவர்கள் அன்றைய இரவுக்குறியை சென்றடைந்துவிட்டிருந்தனர்.

முன்னரே அவர்கள் நன்கறிந்திருந்த இடம் அது. முதலில் சென்று சேர்ந்த ஏவலர் நீண்ட வாட்களால் அப்பகுதியில் எழுந்து நின்றிருந்த புதர்களை வெட்டி நிலம் சீரமைத்தனர். வண்டிகளை ஒன்றுடன் ஒன்றெனச் சேர்த்து நிறுத்தி அவற்றின் சகட ஆரங்களுக்கிடையே மூங்கில்களைச் செலுத்தி சேர்த்துக் கட்டினர்.

நுகத்திலிருந்து அவிழ்க்கப்பட்ட காளைகளையும் வியர்த்து மூச்சுவிட்டுக் கொண்டிருந்த புரவிகளையும் ஏவலர் அருகே சரிந்து சென்ற நிலம் அணைந்த ஓடைக்கு அழைத்துச்சென்றனர். அங்கே நீர் தேங்கிச் சுழன்று செல்லும்பொருட்டு குழி ஒன்று வெட்டப்பட்டு கற்களால் கரையமைக்கப்பட்டிருந்தது. நீரைக் கண்டதும் குளம்புகள் சேற்றில் ஆழ விரைந்துசென்ற புரவிகள் மூக்கு மூழ்க நீர் அள்ளி உண்டு நிமிர்ந்து பிடரி சிலிர்க்க விலா விதிர்த்தன. காளைகள் மூச்சுக்காக நிமிர்ந்தபோது முகவாய் முடிமுட்களிலிருந்து நீர்ச்சரடுகள் நீண்டன.

சற்று அப்பால் ஓடை வளைந்து உருவான மணல்மேட்டில் சுனைதோண்டி முதல் சேற்றுநீரை இறைத்து பின்னர் ஊறிய நன்னீரை சுரைக்குடுவைகளில் மொண்டு கொண்டுவந்து அனைவருக்கும் குடிப்பதற்காக அளித்தனர். மரக்குடைவுக் கலங்களில் காவடி கட்டி கொண்டுவரப்பட்ட நீரை அடுதொழிலுக்காக வைத்தனர். விலங்குகள் கழுத்துக் கயிறுகள் ஒன்றுடனொன்று சேர்த்துப் பிணைக்கப்பட்டு தறிகளிலும் வேர்களிலுமாக கட்டப்பட்டன. அவற்றுக்கு உலர்புல்லுணவை பிரித்துக் குவித்தனர். அவை தலையாட்டி உண்ணும் மணியோசை எழுந்து சூழ்ந்தது. அப்பால் ஷத்ரியர்கள் எந்தப்

பணியிலும் ஈடுபடாமல் தனியாக தங்களுக்குள் பேசியபடி அமர்ந்திருந்தார்கள்.

வண்டிகளிலிருந்து குடில் தட்டிகள் இறக்கி பிரிக்கப்பட்டன. குழி தோண்டி மையத்தூணை நாட்டி அதைச்சுற்றி தேன்மெழுகு பூசப்பட்ட ஈச்சையோலைத் தட்டிகளை சேர்த்து நிறுத்தி மேலே கூரைச்சரிவு கட்டி இடையளவே உயரம் கொண்ட துயில்குடில்களை எழுப்பினர். ஏழு குடில்கள் விழிவிலக்குவதற்குள்ளாகவே நுரைக்குமிழிகள்போல உருவாகி வந்தன. தறிகளிலும் வேர்களிலும் சரடுகளால் அவற்றை இழுத்துக்கட்டி காற்றுக்கு உறுதிப்படுத்தினர். உள்ளே மென்மரப்பட்டைகளை விரித்து அதன்மேல் மாட்டுத்தோல் சேக்கை பரப்பினர்.

அடுகலங்களும் துயில்கொள்வதற்கான மரவுரிகளும் இறக்கப்பட்டன. அடுமனைப் பெண்டிர் ஓடைக்குச் சென்று கைகால்களைக் கழுவியபின் வந்து பணி தொடங்கினர். தமயந்தி அவர்களுடன் வேலைகளை பகிர விழைந்தாள். ஆனால் அவர்கள் நன்குதேர்ந்த செயலோட்டம் ஒன்றை கொண்டிருந்தனர். அதற்குள் நுழைய இடைவெளியை அவளால் கண்டடைய முடியவில்லை.

அவர்கள் அவளிருப்பதை அறிந்திருப்பதாகவே காட்டவில்லை. மண்ணைக் குழித்து கல்லடுக்கி அடுப்பு கூட்டினர். ஏவலர் சுள்ளிகளையும் விறகுகளையும் கொண்டுவந்து போட அவற்றை எடுத்து அடுப்பில் அடுக்கி சிறிய அரக்குத்துண்டைப் போட்டு அனற்கற்களை உரசி எரிமூட்டினர். நீலச்சுடர் எழுந்ததும் “பொலிக! பொலிக!” என்று சொல்லி கைதொழுதபின் அதன்மேல் நீர் நிறைத்த கலங்களை வைத்தனர். வண்டிக்குள்ளிருந்து அரிசியும் கோதுமை மாவும்

கொண்டுவரப்பட்டன. அடுமனைப் பெண்டிர் வெற்றிலையில் அடைக்காயும் மஞ்சள்துண்டும் வைத்து உலைமங்கலம் செய்து அரிசியிட்டனர்.

ஏவலர் காட்டுக்குள் சென்று காய்கறிகளையும் கிழங்குகளையும் சேர்த்துவந்தனர். தமயந்தி கோதுமை மாவை உருட்டிப்பரப்பி அப்பம் செய்ய தொடங்கியபோது அவர்களுடன் சேர்ந்துகொண்டாள். அவளுக்கு அடுமனைப் பணி கைபழகியிருக்கவில்லை. காய்கறிகளை நறுக்க அவள் கத்தியை எடுத்தபோது ஒருத்தி தலையசைத்து வேண்டாம் என்றாள். ஆணைகளிடாமலேயே ஒவ்வொருவரும் அவரவர் பணிகளை செய்துமுடிக்க நெடுங்காலமாகவே அங்கிருந்ததுபோல ஒரு சிறுகுடியிருப்பு அங்கு அமைந்தது.

பூமிகரும் தோழர்களும் மரக்குடைவுத் தோண்டிகளுடன் சென்று ஓடைநீரை அள்ளி நீராடிவிட்டு வந்தனர். ஈர உடையுடன் அவர்கள் தென்மேற்கு மூலையில் அமர்ந்தனர். வண்டிகளிலிருந்து செங்கற்களைக் கொண்டுவந்து எரிகுளம் அமைத்தனர். வேதச்சொற்களை சேர்ந்து முழக்கியபடி எரிகுளத்தில் வன்னி மரத்துண்டுகளை அடுக்கி அரணிக்கட்டை கடைந்து அனல் எழுப்பி பற்றவைத்தனர். குடிநிறையெரி இதழிலிருந்து இதழ்பெற்று மேலெழுந்தது. அதில் நெய்யும் உலர்ந்த பச்சரிசி அப்பங்களுமிட்டு வேதச்சொல் ஓதி வேள்விக்கொடை முடித்தனர்.

கைகூப்பி பூமிகர் எழுந்தபோது அவர் முகம் பிறிதொன்றாக இருந்தது. அவள் நோக்குவதைக் கண்ட சலஃபை “ஆண்டுக்கு இருமுறை ஐந்தாயிரம் பேருக்கு அன்னமிடுவார். அப்போதுதான் இந்த முகம் அவருக்கு அமையும்” என்றாள். இன்னொருத்தி “ஈட்டுவதில் பாதியை ஈவது வணிகர் கடன்”

என்றாள். ஏவலர் பீதர்நாட்டு அணையா விளக்குகளை ஏற்றினர். எண்ணை எரியும் மணம் சூழ்ந்தது. அவர்களின் குடியிருப்புக்கு நான்கு முனைகளிலும் நடப்பட்ட தூண்களில் மீன்நெய்ப்பந்தங்களைக் கட்டி எரியவைத்தனர். ஒவ்வொரு பந்தத்தின் அருகிலும் அவ்வெளிச்சம் தன்மேல் படாதவாறு, ஆனால் அவ்வெளிச்சத்தால் நன்கு நோக்கும்படியாக இரு வில்லவர்கள் அமர்ந்துகொண்டார்கள்.

குடில்களுக்கு நடுவே கல்லால் கரை அமைத்த குழியில் காட்டுவிறகுகளை அடுக்கி அனல்மூட்டி அதைச் சூழ்ந்து பூமிகரும் தோழரும் அமர்ந்தனர். காளைகளின் கண்களில் அனல் தெரிந்தது. புரவியுடல்களின் வழவழப்பில் செந்தழல் நீர்மை கொண்டது. மணியோசை ஒலித்துக்கொண்டே இருக்க அவர்கள் தாழ்ந்த குரலில் பேசிக்கொண்டனர்.

சலஃபை நீண்ட கம்பியில் அப்பங்களை குத்தி எடுத்து செவ்வனலில் காட்டிச் சுட்டு அருகிருந்த கூடைக்குள் போட்டாள். பிறிதொரு அடுமனைப் பெண் வழுதுணங்காய்களை கம்பியில் குத்தி அனலில் சுட்டு மரக்குடுவையிலிட்டு சிற்றுலக்கையால் நசுக்கிக் கூழாக்கி புளிச்சாறும் உப்பும் மிளகாயும் சேர்த்து தொடுகறி சமைத்தாள். மற்றொருத்தி உலர்ந்த ஊன்துண்டுகளை கம்பியால் இடுக்கி அனலில் காட்டி சுட்டாள். உப்புடன் உருகிய ஊன்நெய் சருகு எரியும் ஒலியுடன் குமிழிவிட்டு பொரிந்தது.

தொடுகறியையும் பொரியூனையும் அப்பங்களையும் அன்னத்தையும் வாழையிலைகளில் கொண்டுசென்று பூமிகருக்கும் தோழர்களுக்கும் படைத்தனர். பின்னர் அனைவரும் உண்ணத் தொடங்கினர். அவர்கள் உண்ண உண்ண அடுதொழிற் பெண்டிர் சூடு பறக்க சமைத்திட்டபடியே

இருந்தனர். அவர்கள் பேசிக்கொள்ளவே இல்லை என்பதை தமயந்தி நோக்கினாள். மெல்லும் ஒலிகள் மட்டும் எழுந்தன. பகல் முழுக்க பாதையில் குளம்புகளும் சகடங்களும் காலணிகளும் எழுப்பிய ஓசை மட்டுமே இருந்தது என்பதை அவள் நினைவுகூர்ந்தாள்.

# நீர்க்கோலம் - 69

**68. நெளிநீர்ப்பாவை**

✿முதலிருள் செறிவுகொள்ளத் தொடங்கியதுமே உணவு முடித்து அனைவரும் துயிலுக்கு படுத்துவிட்டிருந்தனர். ஷத்ரியக் காவலர்கள் நால்வர் மட்டும் விழித்திருந்தனர். அடுமனைப் பெண்டிர் விரித்த ஈச்சம்பாயில் தன் தோல்பொதியை தலையணையாக வைத்து தமயந்தி படுத்தாள். ஆலமரத்தின் மேலிருந்து சருகுகள் சுழன்று அவள்மேல் உதிர்ந்துகொண்டிருந்தன. காட்டின் கனவுக்குழறல் என ஒலித்த பறவைக் குரல்களையும் காற்றின் ஓசையையும் கேட்டுக்கொண்டு எதனுடனும் தொடுத்துக்கொள்ளாமல் சிதறிப் பரவிய எண்ணங்களை வேறெங்கிருந்தோ நோக்கிக்கொண்டிருந்தாள்.

பின்னர் அவள் விதர்ப்ப அரண்மனையிலிருந்தாள். இடைநாழியினூடாக சலங்கைகள் ஒலிக்க அரையில் கிண்கிணி குலுங்க ஓடிச்சென்றபோது குறுக்காக அவிழ்ந்த தலைப்பாகை என ஒன்று கிடப்பதை கண்டாள். மிக அருகே சென்றபோதுதான் அது உடல் மின்னும் நாகம் என்று அறிந்தாள். பின்னடி எடுத்து வைக்கவோ கூக்குரலிடவோ தோன்றவில்லை. விழிவிலக்க முடியாத ஈர்ப்புடன் நெஞ்சில்

கை சேர்த்து அங்கேயே நின்றாள். நாகத்தின் உடலுக்குள் அதன் உள்ளம் என ஒன்று உருள்வது போலிருந்தது. நீர்ச்சுழியின் வளைவசைவின் மெல்லொளி. வால் மட்டும் வேறொரு உயிருடையதென அதன் உடலின் விரைவற்ற வழிவிற்கு மாற்றாக துடித்தது.

உடல் சுருட்டி அதன் நடுவே தன்னை எழுப்பிக்கொண்டது. மேலிருந்து கண்காணா சரடொன்று அதை கட்டி மெல்ல ஆட்டுவதுபோல அவளுக்குத் தோன்றியது. அதன் இமையா விழிகளை நோக்கியபின் கை நீட்டி அதன் நாய்க்குட்டி மூக்கை தொடமுயன்றாள். பின்பக்கம் சேடி ஒருத்தியின் அலறல் கேட்டது. காலடி ஓசைகள் முழங்க அவள் ஓடிவந்து அவளைப் பற்றித் தூக்கி காற்றில் சுழற்றி இடையில் வைத்துக்கொண்டு அப்பால் விலகிச்சென்றாள். அவ்வோசையில் விதிர்த்துச் சீறி எழுந்த நாகம் மறுகணமே வாழைத்தண்டு விழும் ஒலியில் நிலத்தில் படமறைய விழுந்து விரைந்தோடி சாளரத்தில் ஏறி மறுபுறம் சென்று மறைந்தது.

காவலர்கள் ஈட்டிகளும் வாள்களுமாக ஓடிவந்தபோது அவளைப் பற்றி உடலோடு அணைத்திருந்த சேடி சாளரத்தை சுட்டிக்காட்டி "அங்கே! அங்கே!" என்று கூவினாள். அவள் அச்சாளரத்தையே வெறித்து நோக்கியபடி அசைவின்றி இடையில் அமர்ந்திருந்தாள். பின்னர் அச்சாளரமே நாகவிழி நோக்கு கொண்டது. ஒளியுடன் கனவுகளில் அது திறந்துகொண்டது. அதன் அருகே சென்று வெளியே நோக்கி கனவிலாழ்ந்து நிற்பது அவள் வழக்கமாகியது.

தன்னருகே எவரோ அமர்ந்திருப்பதை உணர்ந்து விழித்தெழுந்தாள். கரிய பேருடலன் ஒருவன் மின்னும் கண்களுடன் அவளை நோக்கிக்கொண்டிருந்தான். இரு

பக்கமும் யானை மருப்பென திரண்டெழுந்து வளைந்து நரம்புக் கிளைபரவி தசையிறுகி நீண்டிருந்த கைகள் அவளை தொட்டுக்கொண்டிருந்தன. அவள் இருமுறை உதடுகளை அசைத்தபின் மூச்சை இழுத்து துடிக்கும் நெஞ்சை இரு கைகளாலும் பற்றிக்கொண்டு “என்ன?” என்றாள். “உன்னை பார்க்க வந்தேன்” என்றான். “என்னையா? இங்கா?” என்று அவள் கேட்டு திரும்பி தன்னைச் சுற்றி துயின்றுகொண்டிருந்தவர்களை பார்த்தாள்.

“அவர்கள் விழிக்கமாட்டார்கள்” என்றான். “ஏன்?” என்று அவள் கேட்டாள். “இது வேறு இடம், வேறு வெளி, முற்றிலும் வேறு காலம்” என்றான். அவன் விழிகள் இரு பச்சைக் கற்கள்போல உள்ளொளியுடன் அவளை நோக்கி இமையாது நிலைத்திருந்தன. “ஏன் வந்தாய்?” என்று அவள் கேட்டாள். “இன்றோடு நீ காட்டின் எல்லை கடக்கிறாய். நான் ஆளும் சோலையைத் துறந்து நீ செல்லவிருக்கிறாய்” என்றான். “ஆம், நான் சென்றாக வேண்டும்” என்று அவள் சொன்னாள். “நான் அன்னை, துணைவி, அரசி.”

“என்னுடன் வா” என்றான். “எங்கே?” அவன் “அங்கே நாமிருந்த நிலத்திற்கு” என்றான். அவள் “இல்லை, நான் அறிவேன். அது நோய், நஞ்சு, இறப்பு” என்றாள். அவன் விழிகள் அவள் உள்ளத்தைப் பற்றி அசைவழித்து நிறுத்தின. செவிக்குள் அவன் சொற்கள் ஒலித்தன. “இல்லை தேவி, அது இன்பம், அமுது, அழிவின்மை.” அவள் இல்லை என தலையசைத்தாள். “இங்கிருந்து பார்க்கையில் பிறிதொன்றென தோன்றும், நீ அறிவாய். அங்கிருந்து பார்க்கையில் இவை நோயென்றும் நஞ்சென்றும் இறப்பென்றும் தோன்றவில்லையா?”

அவள் தலையசைத்து எடையுடன் எங்கோ கிடந்த சொற்களை மீட்டெடுத்து “என்னை விட்டுவிடு” என்றாள். “நான் எவரையும் பற்றிக்கொள்வதில்லை. விழையாதவரை அணுகும் ஆற்றல் மறுக்கப்பட்டவன் நான்” என்றான் அவன். “இக்கணம்கூட நீ விழைந்தால் என்னை விட்டுவிடலாம். ஆனால் துளி விருப்பு எஞ்சியிருக்குமென்றால்கூட நான் உன்னுடன்தான் இருப்பேன்.” அவள் தலைகுனிந்து “வேண்டாம், செல்க!” என்றாள். “எதை தெரிவு செய்யப்போகிறாய்? இருப்பெனும் நோய், விழைவெனும் நஞ்சு, அகவையெனும் சாகாடு கொண்ட இதையா? மெய்யிலாமையும் காமமும் முடிவின்மையும் கொண்டு திளைக்கும் அதையா?”

“இல்லை, சென்றுவிடு” என்றாள் அவள். “என் விழிகளை நோக்கி அதை நீ சொல்லவேண்டும். உன் விழிகளும் சான்றாகவேண்டும்” என்றான். அவள் விழிகளைத் தூக்காமல் அழுகைநோக்கி தணிந்த குரலில் “சென்றுவிடு சென்றுவிடு” என்றாள். “நான் அறிந்ததுபோல் எவர் அறிந்திருக்கிறார்கள் உன்னை? உன்னுள் நுழைந்து நீயென்றாகி அனைத்தையும் நடித்திருக்கிறேன்.” அவள் விம்மியழுதபடி “சென்றுவிடு... அளிகூர்ந்து என்னை விட்டுவிடு” என்றாள்.

அவன் அவள் கைகளைப்பற்றி இறுக்கி பிறிதொரு கையால் அவள் கன்னத்தைத் தொட்டு முகத்தை திருப்பினான். அவன் கைகள் குளிர்ந்து ஈரம் கொண்டிருந்தன. “என்னை நோக்கு. பிறிது எதையேனும் நீ இத்தனை உளமகிழ்வுடன் கொண்டாடி இருக்கிறாயா? வேறெங்கும் பிளவுறாது இருந்திருக்கிறாயா?” அவள் “வேண்டாம்” என்று விம்மினாள். “ஏன்?” என்றான். “நான் அஞ்சுகிறேன்.” அவன் “எதை?” என்றான். அவள் விழிதூக்கி “பழியை” என்றாள். “எவர் மீதான பழி?” என்றான். “இது பிழை.”

“என்ன பிழை? அறிவிழந்து சொல்லெடுக்காதே. இவை நிகழும் சூழ்வெளி பிறிதொன்று. இங்கு நாமிருவர் மட்டுமே.”

“இது வேட்கையின் வெளி, தேவி. ஆகவே இங்கே பிறன் என்றும் பிறிதென்றும் எதுவுமில்லை. இங்கு நான்கு திசைகளும் முற்றிலும் திறந்து முடிவிலாதுள்ளன. விண்ணில் தேவர்களோ மண்ணுக்கு அடியில் இருள் தெய்வங்களோ இங்கில்லை.” அவள் சினத்துடன் பற்களைக் கடித்தபடி “நான் என்ன செய்யவேண்டும்? சொல், நான் என்ன செய்யவேண்டும்?” என்று உரக்க கேட்டாள். “என் கணவரின் நெஞ்சில் நச்சு வாளை செலுத்தவேண்டுமா? என் மைந்தரை மறக்கவேண்டுமா? பாலூட்டிய முலைகளை அறுத்தெறியவேண்டுமா?”

“எதை நீ உண்மையிலேயே விரும்புகிறாயோ அதை செய்க! பிறிதொன்று எஞ்சாது எதில் முழுதமைவாயோ அதில் இறங்கு. மற்றொன்றை நான் சொல்வதற்கில்லை” என்றான். “விந்தை! ஏன் மானுடர் எப்போதும் ஒன்றின் பொருட்டு பிறிதை செய்கிறார்கள்? மகிழ்வதற்கு அஞ்சும் விலங்கு ஒன்றே இப்புவியில்.” அவள் “பிளவுண்ட நாக்கின் சொற்கள். விலகு” என்று கூவினாள். “நீ அறிந்த நிலம் அது. அங்கு நிலவு தேய்வதில்லை. மலர்கள் உதிர்வதில்லை விழியொளிர் விலங்குகளும் ஒளிச்சிறைப் புட்களும் கொண்ட பெருங்களியாட்டப் பரப்பு அது” என்றான்.

அவள் “வெறும் சொற்கள்!” என்று கூவினாள். “நானறிவேன், இச்சொற்களை எங்கெங்கோ கற்றிருக்கிறேன். நூல்களிலிருந்து இவற்றைத் தொகுத்து என்னுள் பூழ்த்தி வைத்திருக்கிறேன்.” அவன் சிரித்து “ஆம், இவையனைத்தும் நீ அறிந்தவையே. மண்ணில் வற்றும் நீர் ஆழ்பாறைக்குள் தேங்குவதுபோல, நீ எண்ணியவை, கேட்டவை, கற்றவை.” அவள் எழுந்த வெறியுடன்

அவனை அறைந்தாள். பூனைக்கை என அவன் தோள்களிலும் நெஞ்சிலும் அவள் நகங்கள் கோடிழுத்தன. “சென்றுவிடு! சென்றுவிடு!” என்று அவள் கூச்சலிட்டாள்.

“இவ்வினாவுக்கு மட்டும் மறுமொழி சொல். ஏன் மானுடர் விடுதலையை கனவு கண்டபடி தளைகளை பூட்டிக்கொள்கிறார்கள்?” அவன் சொற்களை கேட்காதிருக்கும்பொருட்டு தலையை விசையுடன் ஆட்டியபடி “சென்றுவிடு! செல்! சென்றுவிடு!” என அவள் கூவியபடியே இருந்தாள். “இரு… பொறு” என அவன் அவள் கைகளைப் பற்ற அவனை பிடித்துத் தள்ளமுயன்றாள். மண்ணில் நிலைத்த பாறைபோல் இருந்தது. தசைகள் கரிய இரும்பென இறுகிய அவன் கைகள் நீண்டு வந்து அவள் இடையை வளைத்தன. “வேண்டாம்!” என்று அவள் கூவினாள். குரல் தழைய “வேண்டாம்” என்றாள்.

“உள்ளம் சொல்லவேண்டும் அவ்வாறு” என்றபடி அவன் அவளை தன்னுடன் சேர்த்துக்கொண்டான். விழிகள் சொக்கி மூட, இதழ்கள் மெல்ல அசைய, தனக்கே என “வேண்டாம் வேண்டாம்” என்று அவள் சொல்லிக்கொண்டிருந்தாள். உடல் வெம்மைகொள்ள, உள்ளங்கால்கள் இழுத்துக்கொண்டு நீள உடல் இனிய தளர்வில் அத்தனை முடிச்சுகளையும் அவிழ்த்துக்கொண்டது. மேலுதட்டில் வியர்வைத் துளிகள் அரும்பின. மூச்சுலைவில் முலைக்குவைகள் எழுந்தமைந்தன. அவன் அவள் உதடுகளை தன் உதடுகளால் கவ்விக்கொண்டான். அவன் கைகள் அவள் உடலைச் சுற்றி வளைத்து இறுக்கி அவள் உடலென்றே ஆயின.

இருண்ட பெருமாளிகையின் உள்ளறை ஒன்றில் எஞ்சிய ஒற்றை அகல்சுடரென மிக ஆழத்திலெங்கோ நானென்னும்

தன்னுணர்வு மட்டும் இருக்கக்கண்டாள். காற்றில் அது அசைந்தது. இதோ அணையப்போகிறதென்று தோன்ற மீண்டும் எழுந்து அமைந்தது. மீண்டும் அதை ஊதி அணைக்கத் துடித்தது காற்று. எழுந்து காற்றில் நின்று மீண்டும் திரியுடன் வந்து பொருந்திக்கொண்டது சுடர். மெல்ல குறுகி சிறுசெம்மணியென்றாகி இதோ மறையப்போகிறேன் என்று உணர்த்தி மீண்டும் நீண்டெழுந்தது.

அவள் தன் இடக்கையை மட்டும் தன்னால் இயக்க முடியுமென்று உணர்ந்தாள். கை நீட்டி தான் படுத்திருந்த தரையை துழாவினாள். வேறொன்று பற்றக் கிடைத்தது. ஐந்து விரல்களாலும் அதை இறுகப் பற்றிக்கொண்டாள். பெருவிசையுடன் இழுத்துச்செல்லும் ஆற்றில் இருந்து தப்ப விழைவதுபோல அதை பற்றிக்கொண்டாள். அவள் தசைகள் இறுகித் துடித்தன. கை அறுந்து உடல் அகன்றுவிடும்போல இருந்தது. மூச்சனைத்தையும் திரட்டி தன்னுணர்வு அனைத்தையும் குவித்து அந்தக் கையால் தன்னை உந்தி மேலெழுப்பிக்கொண்டாள்.

❀வெளியே அலறலொன்று கேட்டது. திடுக்கிட்டு எழுந்து கையூன்றி உடல் குறுக்கி அமர்ந்து நடுங்கினாள். அவள் வலக்காலின் கட்டைவிரலை கவ்வியிருந்த நாகம் ஓடும் நீரில் வளைந்தாடும் சரப்பாசிபோல் உடல் நெளித்தது. “பாம்பு! பாம்பு!” என்று அடுமனைப் பெண்கள் கூவினர். ஒருத்தி சுற்றும்முற்றும் பார்த்து அருகிலிருந்த தடி ஒன்றை எடுத்து அதை அடித்தாள். அது உடலை விலக்கிக்கொள்ள நிலத்தில் விழுந்தது அடி. பாம்பு அவள் விரலை விட்டுவிட்டு பின்னகர்ந்து தலைசொடுக்கி எழுந்து படம் காட்டியது. பின்னர் வளைந்து

விரைந்து அப்பரப்பெங்கும் நெளிந்துகொண்டிருந்த நிழல்களில் ஒன்றென ஆகியது.

ஓசை கேட்டு காவலர் பந்தங்களுடன் ஓடிவர அனல் நெளிவில் அங்கிருந்த அனைத்து விழுதுகளும் நாகங்களென நெளிந்தன. ஒருவன் குனிந்து அவள் காலை பார்த்தான். “கடித்துவிட்டது. ஆழமாக பல் பதிந்துவிட்டது” என்றாள் அடுமனைப் பெண். பூமிகர் தன் சிறுகுடிலில் இருந்து தவழ்ந்து வெளியே வந்து என்ன என்ன என்றார். “புதிய அடுமனைப் பெண்ணை பாம்பு கடித்துவிட்டது” என்று கூவினாள் அடுமனைப் பெண். “நச்சுமுறி இருக்கிறதல்லவா? சுதீரரை அழை…” என்று பூமிகர் கூவினார்.

இரு ஏவலர்கள் தலைவழியாக ஆடையைப் போர்த்து துயின்றுகொண்டிருந்த முதிய மருத்துவர் சுதீரரை தட்டி எழுப்பினர். “என்ன?” என்று அவர் கேட்டார். “பாம்பு கடித்துவிட்டது. எழுங்கள்… வந்து பாருங்கள்.” அவர் எழுந்து இடையாடையை முறுக்கி உடுத்து “எங்கே? யாரை?” என்றார். “வருக! புதிய அடுமனைப் பெண்ணை பாம்பு கடித்துவிட்டது, கட்டைவிரலில்…” அவர் கூன் விழுந்த உடல் நடுங்க கைகளை காற்றில் துழாவியபடி அருகணைந்தார். தொலைவிலேயே அவளை நோக்கிவிட்டார். “தெய்வங்களே, அரசநாகம் அல்லவா?” என்றார்.

தமயந்தி தன் உடலெங்கும் நஞ்சின் வெம்மை ஓடி பரவி நிறைவதை உணர்ந்தாள். காது மடல்களும் உதடுகளும் எரியத் தொடங்கின. கண்ணிமைகள், கழுத்து, முலை மொட்டுகள் என அந்த இனிய எரிச்சல் பரவியது. சுதீரர் குனிந்து அவள் கால்களை பார்த்தார். “ஆழக் கடித்திருக்கிறது” என்றபடி நிமிர்ந்து அவளைப் பார்த்து “நெடுநேரமாக கடித்துக்கொண்டிருந்திருக்கிறது. என்ன செய்தார்கள்? நாகத்தை

மிதித்துவிட்டார்களா?” என்றார். “ஏதேனும் செய்யுங்கள்” என்றார் பூமிகர். “துயில்கையில் அதன் தலையை மிதித்து அழுத்தியிருக்கிறார்கள். நஞ்சு உடலில் நிறைந்துவிட்டது” என்றார். பூமிகர் “உடனே மருந்து அளியுங்கள், அவர் வெறும் அடுமனைப் பெண் அல்ல” என்றார்.

“இத்தனை நஞ்சுக்கு என் மருந்து ஆற்றுமா என்றறியேன். அளித்துப் பார்க்கிறேன்” என்றார் சுதீரர். அவர் தன் மரப்பெட்டியைத் திறந்து அதற்குள்ளிருந்து ஒன்பது சிறிய சிமிழ்களை எடுத்து உள்ளிருந்த வெவ்வேறு நிறம்கொண்ட வேதிப்பொருட்களை எடுத்து சிறிய கலுவமொன்றில் போட்டு சிறிய குழவியால் கலக்கத் தொடங்கினார். “என்ன செய்கிறீர்கள்?” என்றார் பூமிகர். “இது பாஷாண மருத்துவம். இவை அனைத்தும் நஞ்சுகள். பெருநஞ்சை சிறுநஞ்சுகளின் தொகையால் எதிர்க்கும் பீதர்நாட்டு முறை. இந்நஞ்சுகள் சற்று அளவு மிகுந்தாலும் இவையே உயிர்குடிப்பவையாக ஆகிவிடும்” என்றார்.

தமயந்தியின் உடலில் தசைநார்கள் இழுபட்டு உடல் பிழையாக நாணேறிய வில்லென கிடந்தது. நவபாஷாணத்தை கலுவத்தில் எடுத்தபடி அருகணைந்த சுதீரர் சிறிய ஊசியால் அதைத் தொட்டு அவள் கழுத்துநரம்புகளிலும் கைநரம்புகளிலும் குத்தினார். அதன்பின் அவள் வாயை சிறிய மர ஆப்பால் நெம்பித் திறந்து நாவில் ஒரு துளியை விட்டார். கலுவத்தை தன்னருகே நின்ற இளைஞனிடம் அளித்து “ஏழு அடி குழிதோண்டி இப்படியே புதைத்துவிடு…” என்றார். அவன் அதை வாங்கிக்கொண்டு சென்றான். பூமிகரிடம் “எனக்கு பெரிய நம்பிக்கை இல்லை. பார்ப்போம்” என்றார் சுதீரர்.

அன்று இரவு முழுக்க வணிகர் குழுவில் எவரும் துயிலவில்லை. அரைநாழிகைக்குப்பின் சுதீரர் தமயந்தியின் கைகளிலும் கால்களிலும் நீலநரம்புகளில் ஐந்து இடங்களில் கிழித்து குருதியை வெளியே பெருகச் செய்தார். அவள் உள்ளங்கையைப் போழ்ந்து குருதி எழுந்த காயத்தில் மேலும் சில மருந்துகளை வைத்து சேர்த்து கட்டினார். அவ்வப்போது வலிப்பு கொண்டு அதிர்ந்து பின் ஓய்ந்தது அன்றி அவள் உடலில் எந்த மாற்றமும் நிகழவில்லை. இமைகளை விரலால் திறந்து நோக்கியபோது கருவிழிகள் உள்ளே மறைந்திருக்கக் கண்டார். கண் பரப்பு குருதிப் புண்போல் சிவந்திருந்தது.

எவரும் படுக்கத் துணியவில்லை. "அந்த நாகம் இங்கெங்காவது பதுங்கியிருக்கக்கூடும்" என்றார் பூமிகர். காவலர்கள் பந்தங்களுடன் அனைத்து வேர்மடிப்புகளையும் கிளைப்பொந்துகளையும் நோக்கினர். இலைபறித்து புகையிட்டு தரையெங்கும் பரப்பினர். பூமிகர் மருத்துவரிடம் "கடந்துவிட்டார்களா?" என்றார். "இறப்பென்றால் எப்போதோ நிகழ்ந்திருக்கும். உடல் போரிடுகிறதென்பதனால் இன்னும் நம்பிக்கை இருக்கிறது" என்று அவர் சொன்னார். அச்சமும் பரபரப்பும் அவர்களை நெடுநேரம் அமரவிடவில்லை. பின்னர் அதனாலேயே களைத்து ஆங்காங்கே குழு சேர்ந்தமர்ந்தனர். சொல்லில்லாமல் விழிவிரிய அமர்ந்திருந்தனர்.

பூமிகர் உடல் அதிர்ந்து இழுபட்டுக்கொண்டிருந்த தமயந்தியை நோக்கியபடி "விழிப்பதென்றாலும் இதற்குள் நடந்திருக்க வேண்டுமே?" என்றார். "ஆம், அதை எண்ணித்தான் நானும் அஞ்சிக்கொண்டிருக்கிறேன். அவர்கள் முழுக்க நலமடைவதற்கு வாய்ப்பில்லை" என்றார் சுதீரர். பெருமூச்சுடன் "நற்செய்தியை வந்து சொல்லுங்கள், மருத்துவரே" என்றபின் மீண்டும் உதறிக்

கட்டப்பட்ட தன் சிறுகுடிலுக்குள் நுழைந்து தோல்படுக்கையில் படுத்துக்கொண்டார் பூமிகர்.

அவள் பிழைக்கமாட்டாளென்ற எண்ணம் ஒவ்வொருவரிலும் உருவாகியது. சொல்லப்படாமலேயே அது பகிரப்பட்டது. எதிர்பார்க்க ஏதுமில்லை என்பது அத்தருணத்தின் பதற்றத்தை முடிவுக்கு கொண்டு வந்தது. அவர்கள் மெல்ல சரிந்து புரண்டு நீள்மூச்செறிந்து குறட்டையென்றாகி துயில்கொள்ளத் தொடங்கினர். மருத்துவர் தன் இளவலிடம் “நானும் சற்று ஓய்வெடுக்கிறேன். முதிர்ந்த உடல் எனக்கு” என்றார். சிறு சம்புடத்தை நீட்டி “ஒவ்வொரு முறையும் இவ்வலிப்பு வந்தவுடன் இம்மருந்தை இவர்கள் நாவுக்குள் விடு. பார்ப்போம்” என்றார். அவன் தலையசைத்து மருந்தை வாங்கிக்கொண்டான். அருகிலேயே தழைப் படுக்கை அமைத்து அதில் தன் கூன் உடலை நீட்டி அலுப்போசையுடன் படுத்துக்கொண்டார் சுதீரர்.

காலையில் கருங்குரங்கொன்றின் ஓலம் கேட்டு பூமிகர்தான் முதலில் விழித்துக்கொண்டார். சில கணங்களுக்குப்பின் முந்தைய இரவின் நிகழ்வுகள் அனைத்தும் நெஞ்சில் எழ குடில் விட்டு வெளிவந்து எழுந்து நின்றார். தொலைவில் நாணேற்றிய விற்களுடன் நான்கு காவலர்கள் நின்றிருந்தனர். அவர்களில் ஒருவன் அவரைப் பார்த்து தலைவணங்கினான். விடிவெளிச்சம் நன்கு எழுந்து மண் வெளுத்திருந்தது. அவர் தன்னைச் சுற்றி துயின்றுகொண்டிருந்த ஏவலர்களையும் அடுமனைப் பெண்களையும் பார்த்தபடி நடந்து தமயந்தி கிடந்த இடத்திற்கு வந்தார்.

அங்கெங்கும் தமயந்தியை காணவில்லை என்பதை உணர்ந்து எங்கு சென்றிருப்பாளென்று புதர்ப்பரப்பை பார்த்தார். பின்னர்

குனிந்து துயின்றுகொண்டிருந்த மருத்துவரை காலைத் தட்டி அழைத்தார். சுதீரர் எழுந்து வாயைத் துடைத்தபின் "பூமிகரே?" என்றார். "நாகம் என் கனவில் வந்தது. புன்னகைத்தது. அவர்கள் பிழைத்துக்கொள்வார்கள்." பூமிகர் "அவர்கள் எங்கே?" என்றார். சுதீரர் ஆடையை நன்கு கட்டியபடி எழுந்து "யார்?" என்றார். "பாம்பு தீண்டிய அடுமனைப் பெண். இங்குதானே இருந்தார்?" என்றார் பூமிகர்.

சுதீரர் நான்கு பக்கமும் நோக்கியபின் "எழுந்து சென்றுவிட்டார்களா?" என்று தனக்குத்தானே கேட்டபடி தலையை வருடினார். துயின்று கொண்டிருந்த அடுமனைப் பெண்ணொருத்தியை தட்டியெழுப்பி "நாகம் தீண்டியவள் எங்கே?" என்றார். அதற்குள் அமர்ந்தபடியே துயின்ற அவர் இளவல் எழுந்து "இங்குதானே இருந்தார்கள்? சற்று முன்புகூட..." என்று சொல்லி திரும்பினான். அக்கணமே உரக்க அலறியபடி எழுந்துவிட்டான். "என்னடா, மூடா?" என்றார் பூமிகர். "இதோ... இதோ" என அவன் கைநீட்டி கூச்சலிட்டான்.

அக்கணத்தில் அனைத்தும் புரிய பூமிகரும் வியப்பொலி எழுப்பினார். தமயந்தி இலைப்படுக்கையில் முற்றிலும் பிறிதொருத்தியாகி படுத்திருந்தாள். அவள் உடற்தசைகள் பலவாறாக இழுத்து இறுகிநிற்க கைகளும் கால்களும் கோணலாகி நின்றிருந்தன. கைவிரல்கள் ஒன்றுடன் ஒன்று ஏறி முறுகியிருந்தன. முகம் வலப்பக்கமாக இழுபட்டு கோணல் கொண்டிருந்தது. அது உடல் முழுக்க இருந்த கோணலின் விளைவு எனத் தெரிந்தது. கண்களும் மூக்கும் வாயும் வலப்பக்கமாக இழுபட்டு உருமாறியிருந்தன. தோல் பல்லாண்டு முதுமை கொண்டதுபோல் ஒளியிழந்து சுருக்கங்கள் அடர்ந்திருந்தது.

“முற்றிலும் மாறிவிட்டார்கள்” என்றார் பூமிகர். “மானுட முகத்தோற்றம் என்பதே வலப்பக்கமும் இடப்பக்கமும் கொள்ளும் பொருத்தம்தான். அது மாறினால் அனைத்தும் மாறிவிடும்” என்றார் சுதீரர். அவள் கைபற்றி நாடியை நோக்கியபின் “குதிரைநடை... இறப்பு அகன்றுவிட்டது என்பது உறுதி” என்றார்.

✿மறுநாளே தமயந்தி எழுந்துவிட்டாள். ஒற்றைக்காளை வண்டியில் சென்றுகொண்டிருக்கையில் அவள் நினைவு மீண்டாள். முனகலோசை கேட்டு அருகணைந்த அடுமனைப் பெண்களிடம் முதுமகளின் தளர்குரலில் “என்ன ஆயிற்று?” என்றாள். “நாகம் பற்றியது. நச்சு ஏறி நோயிலிருந்தீர்கள். இப்போது மீண்டுவிட்டீர்கள்” என்றாள் சலஃபை. அவள் எழுந்தமர்ந்து “நான் முன்னரும் நஞ்சுப் பீடிப்பு கொண்டிருந்தேனே” என்றாள். அவளருகே வந்த சுதீரர் “ஆம், அதனால்தான் இந்த நச்சுப் பீடிப்பிலிருந்து தப்பினீர்கள். அது நட்பு நஞ்சு. இது பகை நஞ்சு” என்றார்.

அவள் விழிகளை நோக்கி எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர் அவர்கள். அவள் “என் குரல் ஏன் இப்படி இருக்கிறது?” என்றாள். அவர்கள் விழிகளில் வந்த மாறுபாட்டை அறிந்ததும் தன் கைகளை நோக்கி “என்ன?” என்றாள். சுதீரர் “தேவி, நாக நஞ்சால் நீங்கள் உருமாறு கொண்டுவிட்டீர்கள்” என்றார். “உருமாறு என்றால்...?” என்றாள் தமயந்தி. “பிறர் அறிய முடியாதபடி...” அவள் திகைப்புடன் சில கணங்கள் நோக்கிவிட்டு அருகிருந்த தாலம் ஒன்றை எடுத்து தன் முகத்தை நோக்கினாள். அவள் தலை நடுங்கியது. நீள்மூச்சுக்கள் எழுந்தமைந்தன. பின்னர் தலையசைத்து “நன்று” என்றாள்.

“நாளடைவில்...” என தொடங்கிய சுதீரரிடம் “இப்போதைக்கு இது நன்று, மருத்துவரே. நான் என் உடலுக்குள் ஒளிந்துகொண்டதைப்போல் உணர்கிறேன்” என்றாள் தமயந்தி. சுதீரர் தலைவணங்கினார். அவள் அத்தனை எளிதாக அதை ஏற்றுக்கொண்டது அடுமனைப் பெண்களுக்கு உகக்கவில்லை. சலஃபை “உங்கள் அழகிய முகம்...” என்று தொடங்க “ஆம், அதைத்தான் இன்றுவரை சுமந்துகொண்டிருந்தேன். இனி நோக்குகள் எனைச் சூழாது. இந்த விடுதலையை நான் எப்போதும் கனவு கண்டிருந்தேன்” என்றாள்.

மறுநாள் அவள் உடலின் நோய் முற்றிலும் அகன்றது. எழுந்து அடுமனைப் பணிகளில் ஈடுபடலானாள். அங்கிருந்த அனைவரும் அவளை நன்கறிந்திருந்தபோதிலும்கூட அவள் உடல் மீண்டும் மீண்டும் அவர்கள் விழிமுன் தோன்றி தானே அவள் என நிறுவிக்கொண்டது. சலஃபையும் பிற அடுமனைப் பெண்களும் அவளை அதட்டி வேலை வாங்கினர். பூமிகர் ஏவலரிடமென அவளிடம் எரிச்சல் காட்டினார். அவள் ஓரிரு நாட்களே உடலுக்குள் பொருந்தாமல் பிறிதென்றிருந்தாள். பின்னர் அவள் அகம் உடலை கற்றுக்கொள்ளத் தொடங்கியது. சிற்றடி வைத்து குனிந்து நடப்பதும், நிற்கும்போது இடையில் கைவைத்து அலுப்பொலி எழுப்புவதும் அமர்ந்ததும் கால்நீட்டி நீவிக்கொள்வதும் தானே என அவள் அகம் ஆகியது.

உடலறிந்த எல்லைகளும் உடலை நோக்கிய விழிகளும் அவளை முழுமையாக வரையறுத்தன. எழுபது நாட்களில் அவள் முற்றிலும் முதுமகளென்றானாள். எங்கோ கடந்த இளமை என அவள் அதை உணர்ந்தாள். அவள் இளமையுடனிருந்ததை பார்த்தவர்களே கூட அதை முற்றிலும் மறந்தனர். வணிகக் குழுவில் இடைவெளியில்லாத

பணிகளிருந்தன. அமையுமிடம் சென்றதுமே அடுமனைப் பணி தொடங்கி அடுகலங்களை எடுத்து அடுக்குவதுவரை நீடித்தது. விட்டுவரும் இடத்துடன் அந்நாளையும் உதறிவிட்டு முன்சென்றமையால் காலமென்பது அந்நாள் மட்டுமே என நிகழ்ந்தது.

விழிநோக்கு மங்கலானமையால் வண்ணங்களை அவள் இழந்தாள். செவிக்கூர் மழுங்க ஓசைகளும் பொருளற்றதாயின. நினைவுகள் இணையாமையால் மணங்கள் வெறும் மூக்கறிவுகளாகவே வந்து சேர்ந்தன. உடலென அவள் உணர்ந்தது களைப்பையும் வலியையும் மட்டுமே. காமம் என்று ஒன்றை அவ்வுடல் அறிந்திருந்தது, உள்ளம் ஓயாது அளைந்திருந்தது என்பதே எப்போதேனும் வாள்வீச்சென அவளைப் போழ்ந்து அதிரச்செய்து மறையும் கூரிய குறுங்கனவுகள் வழியாகவே அவளுக்குத் தெரிந்தது.

எஞ்சியிருந்தது புலன் சுவை மட்டுமே என்பதனால் அவள் எப்போதும் நாவில் வாழ்ந்தாள். அனைத்துச் சுவைகளும் அவளை கிளரச்செய்தன. சுட்ட ஊன், எஞ்சிய அன்னம், ஆறிய அப்பம், காய்கள், கிழங்குகள். ஒன்றுமில்லையென்றால் புளிக்காயையும் உப்பையும் சேர்த்து வாயிலிட்டு எச்சிலுடன் மென்றாள். பருப்பையும் அரிசியையும் மடியில் கட்டிவைத்து வாயிலிட்டு குதப்பிக்கொண்டே இருந்தாள். அடுமனைப் பெண்டிர் விலக்கி அதட்டினால் அவர்களை நோக்கி மூக்கு வளைந்த சுருங்கிய முகம் இழுபட புன்னகைத்தாள். எந்த வசைக்கும் அவள் கூசவில்லை. எதையும் சிறுமையென்று எண்ணவில்லை.

முதலில் அவளை விலக்கி அதட்டியவர்கள் பின்னர் சிறுகுழவியென்று அவளை நடத்தலாயினர். அவளுடைய

துடிக்கும் நாவே அவளை குழந்தையாக்கியது. அடுகலங்களை கழுவும்போது விளிம்புவட்டத்தில் படிந்திருந்தவற்றைச் சுரண்டி அவள் வாயிலிடுவதைக் கண்டு "என்ன அது? என்ன? துப்பு... துப்பு அதை" என்று சலஃபை கூவினாள். ஓடிவந்து கையை ஓங்கி "துப்பு... துப்பச் சொன்னேன்" என்றாள். அவள் துப்பிவிட்டு தலைகுனிந்து நின்றாள். "எது கிடைத்தாலும் வாயில் போடு. நோயுற்றால் எவர் பார்ப்பது?" என்றாள் சலஃபை. ஆனால் அன்று படுக்கும்போது அவள் கையால் மென்மண்ணை அள்ளி ஊதி வாயிலிடுவதைக் கண்டு தலையிலடித்துக்கொண்டாள்.

அப்பால் நின்ற சுதீரர் சிரித்தபடி "வாய்வெறுமை முதுமைக்குரிய இயல்பு. பாக்கு பழகச் சொல்" என்றார். வெற்றிலைச் சுருக்கை அவளிடம் அளித்து "இதோ வைத்துக்கொள்... இனி இதை வாயிலிடு" என்றாள். அவள் பாக்கை எடுத்து வாயிலிட்டு ஊறவைத்து அதன் துவர்ப்பை உணர்ந்து முகம் சுருங்கி விழி மூடினாள். பின்னர் எப்போதும் அவள் வாயில் பாக்கு இருந்தது. சற்று இடைநேரம் அமையும்போதெல்லாம் ஓரமாகச் சென்றமர்ந்து பாக்கை வாயிலிட்டு கண்மூடி அரைத்துயில் கொள்ளலானாள். "அசைபோடும்போது அனைவரும் விலங்குகளே" என்றார் சுதீரர்.

அவர்கள் சேதி நாட்டு எல்லையில் வணிகவிடுதி ஒன்றில் தங்கியிருந்தனர். தாழ்ந்த கூரையிட்ட கொட்டகையில் பெண்களுக்கான மூலையில் தரையில் இட்ட பாயில் அமர்ந்து அவள் பாக்குப் பொதியை அவிழ்த்தபோது அப்பால் ஒரு சூதர் நிஷதநாட்டு நளனும் தமயந்தியும் கலியின் சினத்தால் அழிந்த கதையை சொல்லிக்கொண்டிருந்தார். "தமயந்தியை காமுற்றான் கலி. அவளைக் கொள்ள நளனை வெல்லவேண்டுமென்று அவன் உணர்ந்தான். தக்கம் நோக்கி

நிழலென நளனுக்குப் பின்னால் சென்றுகொண்டிருந்தான். எப்போதும் அரசனுடன் இரு நிழல் இருந்ததை எவரும் நோக்கவில்லை.”

“வேள்விக்கு அந்தணர் அழைத்தபோது அவன் புரவியுடன் இருந்தான். மூன்றாம் முறை அமைச்சரே வந்து அழைத்தபோது விரைந்தெழுந்து கைகால்களை கழுவிக்கொண்டான். அமைச்சர் அவனிடம் அரசே வேள்விக்கு தூய உள்ளத்துடன் செல்லவேண்டும். கைகால் கழுவி புரவிமணம் களையுங்கள். உள்ளத்தில் புரவி விழைவை ஒழியுங்கள் என்றார். ஆம் ஒழிந்தேன் என்று சொல்லி அவன் கைகழுவி முடித்து அமைச்சருடன் சென்றான். அந்தப் பதற்றத்தில் அவன் தன் இடக்காலின் குதிமுனையை கழுவத் தவறிவிட்டிருந்தான். அதனூடாக கலி அவன் உடலுக்குள் புகுந்தான்.”

திகைத்தவளாக சலஃபை திரும்பி முதுமகளை நோக்கினாள். அவளுக்கு படபடப்பாக இருந்தது. இரு கைகளையும் நெஞ்சோடு சேர்த்துக்கொண்டாள். “அவனிலமர்ந்த கலி இளையோனை சூதுக்கு அறைகூவினான். சூதுமேடையில் இளையோன் அருகே காளை வடிவில் அமர்ந்த கலியின் தூதன் அவனுக்கு வழிகாட்டினான். பகடையில் புகுந்துகொண்டார்கள் கலியின் மூன்று துணைவர்கள்.” சலஃபை முதுமகளை மீண்டும் நோக்கினாள். அச்சொற்கள் அவள் காதில் விழுகின்றன என்று தெரிந்தது. ஆனால் அவை அவளுக்கு எவ்வகையிலும் பொருளாகவில்லை. பாக்கு ஊறத்தொடங்கிய சுவையே அவளை நிறைத்திருந்தது.

# நீர்க்கோலம் - 70

## 69. ஏழரை இருள்

✿சிறு கூத்தம்பலத்தின் வாயிலில் பிரீதை வந்துநின்று மும்முறை தலைவணங்கினாள். அவள் நிழல் தன் முன் சுவரில் அசையக் கண்டு திரும்பிப் பார்த்த திரௌபதி விழியுயர்த்தி என்ன என்றாள். கைகளால் அரசியை சந்திக்கவேண்டும் என்றாள் பிரீதை. முழவும் தண்ணுமையும் யாழும் நிறைந்திருந்த அவையில் பிறிதொன்றை நோக்கி உள்ளத்தை கொண்டுசெல்வது எதிர்காற்றில் உந்திச்செல்வது போலிருந்தது. திரௌபதி விரலால் சுதேஷ்ணையை தொட்டாள். காய்ச்சல் கொண்டதுபோல் மயங்கியிருந்த விழிகளுடன் திரும்பிய சுதேஷ்ணை புருவங்களால் என்ன என்றாள்.

பிரீதையை அவள் சுட்டிக்காட்டியபோது உளம் மீண்டு அவளை அடையாளம் காண அரசிக்கு நெடுநேரமாயிற்று. பின்னர் அருகே வரும்படி கைகாட்டினாள். சுவரினூடாக ஒதுங்கி வந்து அரசியின் அருகே முழந்தாளிட்ட பிரீதை அவள் காதில் தான் கொண்டுவந்த செய்தியை ஓரிரு சொற்களில் சொன்னாள். வலி கொண்டவள்போல அரசியின் முகம் மாறியது. பின்னர் பிரீதையை செல்லும்படி கைகாட்டிவிட்டு உடலை அசைத்து அமர்ந்து நாகவிறலியின் சொற்களை மீண்டும் சென்றடைந்தாள். அவள் முகம் கனவில் நெகிழ்ந்தது.

செய்தி சொல்லப்பட்டவுடன் அரசியின் முகத்தில் ஒரு கணத்தில் வந்த மாறுதலிலிருந்தே அச்செய்தி தன்னைப் பற்றியது என்பதை திரௌபதி உணர்ந்தாள். உள்ளம் முள்முனையாகி அச்செய்தியின் முனையை சென்று தொட்டது. எதுவானாலும் ஆகட்டும் என்று பிறிதொரு உள்ளம் அதை உதறியது. நாகவிறலியின் கைவிரல்கள் குறுமுழவின்

மீது நடமிட்டன. சூழ்ந்திருந்த சுடர்களின் ஒளியில் அவ்விரல்களின் நிழல்கள் தலைக்குமேல் எழுந்து சுவர்களிலும் கூரையிலுமாக அதே தாளத்தை காற்றில் மீட்டின. அக்கூத்தம்பலமே தாளத்துடன் கூத்திடுவதாகத் தோன்றியது.

நாகவிறலி தமயந்தி சேதிநாட்டுக்குப் போன கதையை சொல்லிக்கொண்டிருந்தாள். கலிங்கத்திலிருந்து சேதிக்கும் அவந்திக்கும் மாளவத்திற்கும் செல்லும் வணிகப்பாதைகள் நெடுங்காலமாகவே அரசர்களால் பேணப்பட்டன. ஐநூறாண்டுகளுக்கு முன் சேதிநாட்டரசர் உபரிசிரவசு சூழ்ந்திருந்த பிற நாடுகளின் அரசர்கள் அனைவரையும் தன் தலைநகர் சூக்திமதியில் கூட்டி அப்பாதைகளைப் பேணுவதற்கான பொதுக்காவல் அமைப்பொன்றை உருவாக்கினார். அது ஷோடசபத சம்யுக்தம் என்று அழைக்கப்பட்டது. அரசர்கள் அதற்கு ஒரு படையை அளித்து அப்படைக்குரிய செலவுகளையும் அளித்தனர்.

சேதி காலப்போக்கில் சிறு நாடாக ஆகியபோது அந்தக் காவல் அமைப்பு நிலமில்லாத நிகர்அரசாக நீடித்தது. அதற்கென்று பன்னிரு காவற்படைகளும் படைத்தலைவர்களும் அவர்களை ஆளும் மையக்குழுவும் அதற்குரிய நெறிகளும் உருவாயின. பதினாறு நெடும்பாதைகளில் நூற்றெட்டு இடங்களில் அவர்கள் வணிகரிடம் திரை கொண்டனர். காட்டு விலங்குகளும் கள்வரும் அணுகாது பாதைகளை அவர்கள் காத்தனர். அப்பாதைகளில் அமைந்த சிற்றூர்கள் சிறு புரவிப்படைகளை அதற்கென்று நிறுத்தி வைத்திருந்தன. அக்காவல் அமைப்பின் கொடி ஒருபுறம் கழுகும் மறுபுறம் நாகமும் கொண்டிருந்தது. அக்கொடி பறக்கும் பாதைகளூடாக மட்டுமே வணிகர்கள் செல்ல வேண்டுமென்று அறிவுறுத்தப்பட்டது.

விந்தியமலை கடந்து சேதியை அடைவதென்பது காட்டாறுபோல பள்ளத்தாக்குகளில் மலைகளை வளைத்து நெளிந்து செல்லும் பாதைகளில் நாளும் பொழுதுமென்றிலாது சென்றுகொண்டே இருப்பதுதான். முதற்கோடையிலேயே வணிகக் குழுக்கள் செல்லத் தொடங்கும். முதல் மழை வரை அப்பெருக்கு ஓயாது. சகடங்கள் சென்று சென்று சாலையின் மண் குங்கும விழுதென்றாகியது. அங்கு செல்பவர் அனைவரும் சுடுமண் சிலைகள் என்றானார்கள். உச்சிக்கோடையின் வெயிலில் செம்மை கரைந்து வழியும் வியர்வை குருதித்துளிகளென பூழிமண்ணில் சொட்டி சிறு முத்துகளென உருளும். தொலைவில் மலைச்சரிவில் செல்லும் வணிகக் குழுக்களை செம்முகில் ஒன்று ஏந்திச்செல்வதுபோலத் தோன்றும். காற்றில் காட்டெரி என செம்புழுதி எழுந்து சுழித்து மேலேறி அசையும்.

தமயந்தி பூமிகரின் குழுவினருடன் சென்றபோது கோடை முதிர்ந்திருந்தது. பேரொலியுடன் வெடித்துவிடப்போவன போல அனல் கொண்டிருந்தன உச்சிப்பாறைகள். மலைச்சரிவெங்கும் புதர்கள் கருகி செம்மண் புழுதி மூடி அனல் எரிவது போன்ற ஓசையை எழுப்பியபடி காற்றில் அதிர்ந்து கொண்டிருந்தன. மரங்கள் இலைகளை உதிர்த்து கிளை முனைகளில் மட்டும் சற்றே தளிரிலை சூடி சோர்ந்து நின்றிருந்தன. உச்சிப்பொழுதணைந்து வெயில் நிறம் மாறத் தொடங்கிய பின்னரே பறவைகள் எழுந்தன. செல்லும் வழியெங்கும் பாறைகளில் முன்பு சென்றவர்கள் ஊற்றுகளும் விடுதிகளும் எத்தனை தொலைவில் என்று சுண்ணத்தால் எழுதி வைத்திருந்த குழூஉக்குறிகள் இருந்தன. ஒரு சுனையிலிருந்து மறுசுனை நோக்கி உயிரை துளித்துளியாகச் செலவிட்டுச் சென்றடைவதே பயணமென்று இருந்தது.

வியர்வை என குருதி உருமாறிச் சொட்டி ஒழிந்து உடல் வெறுமைகொள்ள முள்ளடர்ந்த சாமிமரத்தின் நிழலில் சற்றே இளைப்பாறியபோது முதுநிமித்திகர் வான்குறிகளை நோக்கினார். அவர் சொல்லச் சொல்ல அருகே நின்ற இளம்மாணவன் அதை தரையில் சிறு குச்சியால் எழுதினான். அவர் குனிந்து அதை கூட்டி நோக்கி பூமிகரிடம் "இன்னும் இரண்டு நாட்கள். அதற்குள் பெருமழை உறுதி" என்று சொன்னார். "இரண்டு நாட்கள் அல்லவா?" என்று பூமிகர் கேட்டார். "இரண்டு நாள் மிகுதி. நாளையே வானம் கிழிபட்டாலும் வியக்கமாட்டேன்" என்றார் நிமித்திகர்.

"மழையில் இச்செம்பூழிப் பாதையில் செல்வதென்பது களிச்சேறு நிறைந்த வயலில் உழுவதைவிடக் கடினமானது. காளைகளின் லாடங்களும் தேய்ந்துவிட்டன" என்றார் பூமிகரின் இளையோனும் பங்கினனுமாகிய சுசி. "கிளம்புங்கள். மழைக்கு முன் நாம் சூக்திமதியை சென்றடைந்தாக வேண்டும்" என்றார் பூமிகர். "ஒரு கணமும் வீணாக்கலாகாது. இனி துயிலில்லை அடுமனைத் தொழிலும் இல்லை. உலருணவும் நீரும் மட்டுமே. கணமும் கால் நிலைக்காது முன் செல்க!" சுசி ஆணைகளை பிறப்பித்தபடி கைமுழவை ஒலிக்க வைத்தார்.

ஆனால் அவர்கள் நெடுந்தூரம் வந்து களைத்துவிட்டிருந்தனர். சகடங்கள்கூட தேய்ந்து கனவிலென ஓசையற்று ஓடின. அவ்வப்போது உடலின் ஆற்றல் ஓய எருதுகள் தலை தாழ்த்தி நுரை கக்கி நின்றன. அவற்றின் வாயைத் திறந்து மூங்கில் குழாயால் வெல்லம் கலந்த நீரை ஊட்டியபின் சாட்டையால் அடித்து மீண்டும் கிளப்பினர். அந்தியிருண்டு வந்தபோது காவலன் ஒருவன் பூமிகரிடம் "நிலவிலாத இரவு, வணிகரே. இப்பாதையில் செல்வது பொருளுடையதல்ல" என்றான்.

“நாளை உச்சிக்குள் நாம் சேதிநாட்டின் எல்லை கடந்து தலைநகரை சென்றடைந்தாக வேண்டும். இன்றிரவு மட்டும்தான் நம்மிடமுள்ளது” என்றார் பூமிகர்.

“ஆனால் இது வறண்ட காட்டுப்பாதை. இருண்டது” என்றான் காவலன். “பந்தங்களேற்ற மீனெண்ணெய் இருக்கிறதல்லவா?” என்றார் பூமிகர். ஏவலன் “ஆம், அரக்கும் உள்ளது” என்றான். “பிறகென்ன? வண்டிகள் செல்லட்டும்” என்றார் பூமிகர். மறுமொழி கூறாமல் காவலர் தலைவணங்கி விலகினர்.

அந்தியிருளுக்குமுன் சற்றே அமர்ந்து நீரருந்தி இளைப்பாறிவிட்டு மீண்டும் அவர்கள் கிளம்பினர். வானை நோக்கிய நிமித்திகர் “தென்கிழக்குச் சரிவில் விண்மீன்கள் எழவில்லை, வணிகரே. முகில் நிரை அங்கு கூடுகிறதென்று தோன்றுகிறது. நாளை உச்சிக்குள் மழை உறுதி” என்றார். பூமிகர் “நாம் நாளை பின்காலையில் சூக்திமதியில் இருப்போம். கோட்டைப்புறத்திற்கு சென்றுவிட்டாலும்கூட பழுதில்லை. ஏன், அரசப் பெருஞ்சாலையை அடைந்துவிட்டாலேகூட அஞ்சுவதற்கேதுமில்லை” என்றார். “செல்க! செல்க!” என்று ஏவலர் ஒலியெழுப்பினர்.

சலஃபை “வழியில் எவரேனும் விழுந்து இறந்தால்கூட கவலைப்படப் போவதில்லை பெருவணிகர்” என்றாள். “வணிகர்களும் போர்வீரர்களே. வெற்றியன்றி பிறிதொன்றையும் அவர்கள் பொருட்டாக எடுப்பதில்லை” என்றார் மருத்துவர் சுதீரர். “இவர்களுக்கு எதிரி யார்?” என்று சலஃபை கேட்டாள். “வேறு எவர்? இவர்களிடம் பொருள் வாங்கிப் பிழைக்கும் எளிய மக்கள்தான்” என்று சுதீரர் சிரித்தார். “பேச்சு தேவையில்லை, விரைக!” என்று பூமிகர் சொன்னார்.

இருளுக்கு விழி பழக அவர்கள் குனிந்து தரையைப் பார்த்தபடி சீரான காலடியுடன் நடந்து கொண்டிருந்தனர். காளைகளுக்கும் புரவிகளுக்கும் நீருடன் சிறிது மதுவும் கலக்கி ஊட்டப்பட்டிருந்தமையால் அவை களைப்பு ஒழிந்து விசை கொண்டன. சகடங்களின் ஒலிகள் இருளெனச் சூழ்ந்திருந்த பாறைகளில் எதிரொலித்து எங்கெங்கோ சென்று மீண்டு வந்தன. வெந்த மண்ணின் மணம் காற்றில் வீசிக்கொண்டிருந்தது.

சாலையருகே பாறைப் பரப்புகளில் எழுதப்பட்டிருந்த குழூஉக்குறிகளை பந்த ஒளி காட்டிப் படித்தபடி வந்த ஏவலன் "இன்னும் அரைநாழிகைப் பொழுதில் ஊற்று ஒன்று இருக்கிறது" என்றான். "நம்மிடம் நீர் எஞ்சியுள்ளதா?" என்றார் பூமிகர். "சிறிதே உள்ளது. ஆனால் நீரை நிறைத்துக்கொண்டு புரவிகளுக்கும் காட்டியபின் செல்வதே நன்று. இனி வருவது மலைச்சரிவு. சகடக் கட்டையை மிதித்தபடியே வண்டிகள் செல்ல முடியும். காளைகள் விசையழிந்து நலியும்" என்று முதிய ஏவலன் சொன்னான்.

ஊற்றை அறிவிக்கும் குழூஉக்குறியொன்று சாலையோரத்துப் பெருமரமொன்றில் தொங்கிய மரப்பலகையில் இருந்தது. அதை நோக்கியபின் "அருகேதான்" என்று ஏவலன் சொன்னான். பந்தம் எழுந்து சுழன்று ஆணையிட்டதும் வண்டிகள் கடிவாளம் இழுக்கப்பட்டு நிறுத்தப்பட்டன. புரவிகளிலிருந்து இறங்கிய காவலர் அவற்றை பிடித்துக்கொண்டு நீர்காட்ட கொண்டுசென்றனர். காளைகளை அவிழ்த்தபோது அவை களைப்புடன் கால்களை உதறி பெருமூச்சுவிட்டன. "மது அருந்தியதால் அவற்றுக்கு மேலும் நீர் தேவைப்படுகிறது" என்று சுதீரர் சொன்னார். "அப்படியே இங்கு அனைவருக்கும்

சிறிது மது அளித்திருந்தால் இத்தனை நடை அலுப்பு தோன்றியிருக்காது” என்றாள் சலஃபை.

தமயந்தி சிற்றடி எடுத்துவைத்து சென்று வேர்க்குவையொன்றில் அமர்ந்து கால்களை நீட்டி விரல்களால் மூட்டுகளை நீவிவிடத் தொடங்கினாள். பின்னர் தன் இடையிலிருந்து பாக்கை எடுத்து வாயிலிட்டு மென்றபடி முடிந்த குழலை அவிழ்த்து விரித்து அலுப்பொலியுடன் கூன்முதுகை நிமிர்த்தி படுத்தாள். அக்கணமே துயில் வந்து மூட, வாய் திறந்து உதடுகள் அதிர நீள்மூச்சுவிடலானாள்.

தோல்பைகளில் ஊற்று நீரை ஏவலன் நிறைத்தான். புரவிகளும் காளைகளும் நீரருந்தி கால்களை உதறியபடியும் மூச்செறிந்தபடியும் மேலேறின. நீர் நிறைந்த வயிற்றின் எடை தாளாதவைபோல காளைகள் ஆங்காங்கே படுத்துவிட்டன. புரவிகள் மூன்று காலில் நின்று தலை தாழ்ந்து தொங்க அரைத்துயிலில் ஆழ்ந்தன. பூமிகர் நீரருந்தியபின் வெறும் தரையிலேயே கால்நீட்டி படுத்துக்கொண்டார். ஆங்காங்கே ஒவ்வொருவராக அமர்ந்தும் படுத்தும் ஓய்வெடுக்கத் தொடங்கிய சற்று நேரத்திலேயே மூச்சொலிகள் கேட்கத்தொடங்கின.

முதிய ஏவலன் மூக்கைச்சுளித்து மணம் கொண்டபின் பூமிகரிடம் வந்து “இது உகந்த இடமல்ல என்று எண்ணுகிறேன், பெருவணிகரே” என்றான். “ஏன்?” என்றார் அவர். “யானைச்சாணியின் மணம். இந்தப் பகுதியில் பிறிதொரு ஊற்றே இல்லை. இங்கு காட்டு யானைகள் நீரருந்த வரக்கூடும்” என்றான். சுசி “காட்டு யானை இங்கு வாழமுடியுமா என்ன? கண்ணுக்கு எட்டிய தொலைவில் பச்சையே இல்லை” என்றார். “ஆம், அதைத்தான் நானும்

சொல்ல வந்தேன். இலை இல்லாதபோது வறுநிலத்து யானை மரப்பட்டைகளை உண்ணும். அதனால் மிகுவிடாய் கொண்டிருக்கும். விடாய் மிகுந்த யானை பெருஞ்சினம் நிறைந்தது.”

பூமிகர் சில கணங்கள் அவனைப் பார்த்தபின் “இங்கே எங்காவது இது குறித்து எச்சரிக்கை பொறிக்கப்பட்டுள்ளதா?” என்றார். “இங்கு எவரும் இவ்வாறு இரவு தங்குவதுபோல் தெரியவில்லை” என்றான் ஏவலன். “நாமும் தங்கப்போவதில்லை, இதோ கிளம்புகிறோம்” என்றார் பூமிகர். பிறகு அமர்ந்தபடியே உடலை நிமிர்த்தி நிமித்திகரிடம் “சங்கு முழங்கட்டும். நாம் கிளம்பவிருக்கிறோம்” என்றார்.

நிமித்திகர் படுத்தபடியே தன் இளவலைப் பார்த்து கையசைத்தார். அவன் அரைத்துயிலில் தன் தோல் பையிலிருந்த சங்கை எடுத்து வாயில் வைத்தான். “எழுந்து நின்று ஒலியெழுப்பு, மூடா” என்றார் நிமித்திகர். அவன் எழுந்து நின்று சங்கை வாயில் வைத்தபின் சுற்றிலும் துயின்றுகொண்டிருந்தவர்களை பார்த்தான். பூமிகரும் அமர்ந்தபடியே சற்று துயின்றவர்போல் இருந்தார். அவன் சங்கை மீண்டும் பையில் வைத்தபின் கீழே அமர்ந்தான். சில கணங்களில் சங்கை முழக்கிக்கொண்டிருப்பது போன்ற கனவு உள்ளே நிகழ துயின்றுவிட்டான்.

பொழுதாகிவிட்டது என்று கனவுக்குள் அவன் துடித்தெழுந்து சங்கை எடுத்து வாயில் வைத்து மும்முறை ஓசையெழுப்பினான். அப்பகுதியின் அத்தனை பாறைகளும் எதிரொலிக்கும் பேரொலியாக மீண்டும் மீண்டும் அவன் சங்கு அதை முழக்கிக்கொண்டிருந்தது. துயின்றுகொண்டிருந்தவர்கள் எல்லாம் பாய்ந்து எழுந்தனர். அவர்களின் அலறல் குரல்களை

அவன் கேட்டான். விழிதிறந்து பார்க்கையில் தன்னை மிதித்தபடி அங்குமிங்கும் ஓடுபவர்களின் நிழல் கொந்தளிப்பே அவனுக்குத் தெரிந்தது. பின்னர் யானைகளின் பிளிறலோசையே சங்கென ஒலித்தது என உணர்ந்தான்.

“யானைக் கூட்டம்! யானைக் கூட்டம்!” என்று யாரோ கத்தினர். யானைகள் அவர்களை சூழ்ந்துவிட்டிருந்தன. மூன்று திசைகளிலிருந்தும் இருளிலிருந்து ஊறிப்பெருகி உருவெடுத்தவைபோல் அவை வந்துகொண்டே இருந்தன. வண்டிகளை அவை அறைந்து சிதறடித்தன. புரவிகள் கனைத்தபடி காட்டுக்குள் சிதறி ஓட எருதுகளை அவை மிதித்து கீழே தள்ளின. கொம்புகளால் குத்தி தூக்கி அப்பாலிட்டன. அம்புகளும் வில்லுமாக எதிர்கொண்ட ஏவலர்களையும் காவலர்களையும் தூக்கி மண்ணில் அறைந்தும் கால்களால் மிதித்தும் கொன்றன. குருதிவீச்சம் எழுந்தது. பந்தங்கள் ஒவ்வொன்றாக மண்ணில் விழுந்து அணைய இருட்டு செறிந்தது.

எரிசுட்டதென எழுந்த வெறியில் அவன் ஓடிய விசை கண்டு அவனை அறிந்த கொம்பன் யானை ஒன்று அவனைத் துரத்தியது. அவன் கால்தடுக்கி கீழே விழுந்து புரண்டு எழுவதற்குள் அவனை இடைசுற்றி பிடித்தது. அவனைத் தூக்கி தன் வலக்காலில் ஓங்கி அறைந்தது. யானையின் துதிக்கையின் எடையையும் கல்லென நெஞ்சில் நிறையும் பேரச்சத்தையும் அவன் இறுதியாக உணர்ந்தான்.

தமயந்தி காலைஒளி நன்கு எழுந்த பிறகே விழித்துக்கொண்டாள். முந்தைய நாளிரவு வேர்க்குவை ஒன்றில் உடல்பொருத்தி படுத்தவள் பின் தன் உடல் வளைவிற்கேற்ப அதனுடன் ஒண்டிக்கொண்டாள். கனவில்

அவள் கரிய நீள்உடலும் திரண்ட தோள்களும் கொண்ட அரசியென பட்டத்து யானைமேல் அமர்ந்து அரசப் பெருவீதியில் அணியூர்வலம் சென்று கொண்டிருந்தாள். அவளைச் சூழ்ந்து வாழ்த்தொலிகளும் குரவையொலிகளும் மங்கலப் பேரிசையும் முழங்கின. வானிலிருந்து பெருமழை இறங்கியதுபோல் மலரும் மஞ்சள்அரிசியும் பொழிந்தன.

அவள் ஏறிச்சென்ற பட்டத்து யானை கரிய மாநாகம் ஒன்றின் படம் என்று அவள் பின்னர் உணர்ந்தாள். அதன் படவளைவு மட்டுமே யானை என மண்ணுக்கு மேலிருந்தது. மண்ணுக்கு அடியில் அதன் உடல் கரிய ஆழ்நதி என வளைந்து நெளிந்துகொண்டிருந்தது. ஒளிவிடும் கற்கள் பதிக்கப்பட்ட அரியணையில் அமர்ந்து அவை முழக்கத்தை அவள் கேட்டுக்கொண்டிருந்தாள். அவர்கள் அவளை நோக்கி முறையிட்டனர், மன்றாடினர், முகமன் உரைத்தனர். கோல் தாழ்த்தி தலைவணங்கினர். அவள் கையிலிருந்த செங்கோலை அவர்கள் அச்சத்துடன் நோக்கி பின் விழிவிலக்கிக் கொண்டிருந்தனர். அது பொன்னிறமான நாகம். அதன் படம் விரிந்து நாக்கு பறந்துகொண்டிருந்தது. தரையில் அதன் வால் நெளிந்து சுழித்தது.

பின்னர் அவள் காட்டுக்குள் வேர்க்குவையொன்றில் அமர்ந்திருந்தாள். அவள் அருகே பொந்துக்குள் நாகம் ஒன்றின் விழிகள் மின்னித் தெரிந்தன. நான்கு திசைகளிலும் பிளிறலோசைகள் எழுந்தன. இருளுக்குள் நெளிந்து பறந்தபடி கரிய நாகங்கள் வந்தன. அவை மண்ணில் விழுந்து எழுந்த அறைவோசையில் மரங்கள் அதிர்ந்தன. அலறியபடி அங்கிருந்த அனைவரும் சிதறி ஓடினர். வண்டிகள் நொறுங்கித் தெறித்தன. இறப்புக் கூச்சல்கள். பசுங்குருதியின் எரிமணம். அவள்

நாகங்களின் கண்களை மிக அருகிலென பார்த்துக்கொண்டிருந்தாள். கருவண்டுகள்போல மின்னுபவை.

பின்னர் அவை மறைந்தன. முனகல்களும் அழுகைகளும் மட்டும் எஞ்சியிருந்தன. அவையும் கரைந்தபின் இருளுக்குள் அவளை மிக அருகே நின்று நோக்கிக்கொண்டிருக்கும் இரு நாகவிழிகள் மட்டும் எஞ்சின. ஓநாய் என அந்த நாகம் ஊளையிட்டது. பல ஊளைகள் சேர்ந்து ஒலித்தன. விழிகளுக்குள் வண்ணமாக வெயிலை உணர்ந்த பின்னர்தான் அவள் விழித்தெழுந்தாள். எழுந்தமர்ந்தபோது அது எந்த இடம் என்றே அவளுக்குத் தெரியவில்லை. வேர்ப்புடைப்பைப் பற்றியபடி எழுந்து நின்றாள். அதன் பின்னரே அக்காட்சி முப்புடைப்பு கொண்டது.

அவளைச் சூழ்ந்து அடுமனைப் பெண்டிரும் ஏவலரும் வணிகர்களும் இறந்து சிதறிக் கிடந்தனர். குருதி மண்ணில் வழிந்து வற்றி கருமைகொண்டு உலர்ந்திருந்தது. அப்பால் வெண்குவியல்களாக காளைகள் இறந்து கிடந்தன. அவற்றை செந்நாய்கள் சில கடித்து இழுத்துக்கொண்டிருந்தன. அவள் அசைவைக் கண்டு ஒரு செந்நாய் மெல்ல உறுமியது. பிற செந்நாய்கள் அவளை பொருட்படுத்தவில்லை. வண்டிகளில் இருந்த துணிகளும் படைக்கலங்களும் வெண்கல ஏனங்களும் செம்புக் கலங்களும் பாவைகளும் பீதர்நாட்டு வெண்களிமண் தட்டுகளும் அப்பகுதியெங்கும் சிதறிப்பறந்து கிடந்தன.

அவள் அப்பகுதியைச் சூழ நோக்கியபின் உரக்க “சலஃபை! சலஃபை! எங்கிருக்கிறாய்?” என்று கூவினாள். பின்னர்தான் தன் காலடியிலேயே சலஃபை மண்ணில் முகம் புதைத்து குருதி மூடி சிதைந்து கிடப்பதைக் கண்டாள். “பூமிகரே! பூமிகரே!” என்று அவள் கூவினாள். பின்னர் விழுந்துகிடந்த

உடல்களினூடாக தென்னி பதறும் கால்களுடன் நடந்து பூமிகரின் உடலையும் கண்டடைந்தாள். அவரது தலை முழுமையாக முதுகு நோக்கித் திரும்பியிருந்தது. அவளுக்கு வேறு எவர் பெயரும் நினைவுக்கு வரவில்லை.

அவ்வுடல்களினூடாக அவள் சுற்றி வந்தாள். செந்நாய்கள் உடல்களின் குடல்களை கடித்து இழுத்துக்கொண்டிருந்தன. பற்களைக் காட்டி சீறி உடல் வெருண்டன. அவள் இறந்து கிடந்த ஒவ்வொருவரையாக உலுக்கி எழுப்ப முயன்றாள். பின்னர் தளர்ந்து அமர்ந்தாள். பசித்தபோது அடுமனை வண்டியின் உடைவுகளுக்குள் கிடந்த அரிசியையும் பருப்பையும் எடுத்து உண்டாள். ஓடையில் இறங்கி நீரள்ளிக் குடித்துவிட்டு மீண்டும் தானிருந்த வேர்க்குவைக்குள்ளேயே வந்து ஒண்டினாள்.

உடலெங்கும் இருந்த பரபரப்பு அவளை அமரமுடியாமல் செய்தது. மீண்டும் எழுந்து சுற்றிவந்தபோது பாக்குப் பொதி ஒன்றை கண்டாள். முகம் மலர்ந்து உவகைக்குரல் எழுப்பி ஓடிச்சென்று அதை எடுத்து திறந்தாள். பாக்கை அள்ளி வாயிலிட்டு குதப்பியபடி அப்பையை நெஞ்சோடணைத்துக்கொண்டு வந்து வேர்க்குவையில் மீண்டும் அமர்ந்தாள். வாயில் ஊறி நெஞ்சில் இறங்கி குருதியில் கலந்த பாக்கு அவள் தசைகள் அனைத்தையும் தளர வைத்தது. கண்கள் மூடிக்கொண்டபோது முகம் சற்று மலர்ந்தது. வேர்க்குவைக்குள்ளேயே நன்றாக உடலை ஒடுக்கிக்கொண்டு துயிலத் தொடங்கினாள்.

❀இரண்டு நாட்கள் அங்கேயே அவள் அமர்ந்திருந்தாள். விழிக்கும்போதெல்லாம் அப்பகுதியை புதிதாகவே கண்டடைந்தாள். உடல் மட்கத் தொடங்கியிருந்த பூமிகரையும்

பிறரையும் கைகால்களைப் பற்றி அசைத்து அழைத்தாள். காட்டிலிருந்து கூட்டம் கூட்டமாக நரிகளும் செந்நாய்களும் வந்து அவ்வுடல்களை கடித்து உண்ணத்தொடங்கின. இரவெல்லாம் கனவுக்குள் அவள் எரிமின்னும் விழிகளுடன் ஊளையிடும் நாகங்களை பார்த்துக்கொண்டிருந்தாள் பகலில் அவ்வுடல்கள் கிழிக்கப்பட்டு குடலுருவப்பட்டு சிதறிப் பரந்திருப்பதை கண்டாள்.

மறுநாள் பின்னிரவில் அவளுடன் இருந்த நாகம் "வா, நாம் நீராடுவோம்" என்றது. அவர்களைச் சூழ்ந்து பல நூறு நாகங்கள் ஊளையிட்டுக்கொண்டிருந்தன. குரைத்தபடி சீறியபடி ஒன்றுடன் ஒன்று பூசலிட்டன. அவற்றின் வெண்ணிறப் பற்களையும் எழுந்து பரந்த நாவுகளையும் கண்டாள். "எங்கு?" என்றாள். "இதோ, அருகில்தான் மலையருவி உள்ளது" என்றான். மலையருவியின் ஓசையை அவள் கேட்கத் தொடங்கினாள். "ஆம், மிக அருகில்" என்றாள். மரங்களுக்குமேல் அருவி வானிலிருந்தென பொழியும் நீர் முழக்கத்தை கேட்டாள். "வா" என்று அவன் அவள் கையை பற்றினான். ஈரத்துளிப் பிசிறுகள் அவள்மேல் மென்மையாகப் படிந்து பளிங்குத் துருவல்கள் என ஒளியுடன் மயிர்முனைகளில் அமர்ந்தன. இலை நுனிகள் அனைத்திலிருந்தும் நீர் வியர்த்து வழிந்து சொட்டிக்கொண்டிருந்தது.

மரங்களின் தழைப்புக்கு அப்பால் வெண்ணுரைப் பொழிவென அப்பேரருவியை அவள் கண்டாள். அச்சம் கொண்டு காலெடுத்து பின்னடைய அவன் அவள் கைகளை பற்றிஇழுத்தபடி சென்றான். சிரித்தபடி அவள் அருகே செல்லாமல் பின் காலெடுத்து வைக்க அவன் அவளை அள்ளித்தூக்கிச் சுழற்றி எடுத்துக்கொண்டான். கைகளையும்

கால்களையும் உதறியபடி அவள் சிரித்துக் கூவினாள். அவளை கொண்டுசென்று அருவிக்குக் கீழே நிறுத்தினான். நீர்ப்பெருக்கு அவளை அறைந்து மூடியது. உடல் குளிர்ந்து நடுங்கத் தொடங்கியது. "போதும்! போதும்!" என்று அவள் அவனிடம் சொன்னாள். அவனை அறைந்தாள். நீரிலிருந்து விலகி ஓட முயன்றாள். அவன் அவள் கைகளை இறுகப் பற்றியிருந்தான். பற்கள் நடுங்கி அடித்துக்கொண்டன. கைவிரல்கள் குளிரில் ஒன்றுடன் ஒன்று முறுகிக்கொள்ள தசைகள் உளையத் தொடங்கின. பின்னர் அவள் காட்டை மூடிப் பொழிந்துகொண்டிருந்த பெருமழைக்குள் கண்விழித்தாள்.

❀தமயந்தி நான்கு நாட்கள் சேறுகுழம்பிய சாலையில் தன்னந்தனியாக நடந்தாள். மழைநீரை அருந்தினாள். சாலையோரத்தில் கிடைத்த காய்களை எல்லாம் பறித்துத் தின்றாள். சூக்திமதிக்குள் நுழைந்தபோது அவள் உடலில் நைந்த மரவுரிக் கந்தல் மட்டும் இருந்தது. கூந்தலில் சேறும் சருகுகளும் செறிந்திருந்தன. எங்கிருக்கிறோம் என்னும் உணர்வே இல்லாமல் அவள் நகரில் அலைந்தாள். எதிர்ப்படுபவர்கள் அனைவரிடமும் கையேந்தி உணவுக்கு இரந்தாள். கிடைத்தவை அனைத்தையும் உண்டுவிட்டு சாலையோரங்களின் சிறு கூரைநீட்சிகளுக்கு அடியில் ஒண்டிக்கொண்டு துயின்றாள்.

பூமிகரின் வணிகக் குழுவில் எஞ்சிய சுசி தன் மூன்று துணைவர்களுடன் தப்பி காட்டுக்குள் ஓடி சிற்றூர் ஒன்றில் நோயில்கிடந்து உயிர்தேறி உடைந்த கைகளுடன் சூக்திமதிக்கு வந்துசேர்ந்தார். வணிகர் குழுவினரை அணுகி இழப்பைச் சொல்லி உதவும்படி கோரினார். அங்காடி மையத்தில் அமைந்த குபேரனின் ஆலயத்தில் அவரை அவர்கள் தங்க

வைத்திருந்தனர். அவருக்காக வணிகர்கள் ஆளுக்கொரு வெள்ளிநாணயம் ஈந்து ஈட்டுச்செல்வம் திரட்டினர். அதை அவருக்கு அளிப்பதற்காக அந்த ஆலயத்தில் கூடியிருந்தபோது சுசி வெளியே வந்துநின்ற தமயந்தியைக் கண்டார்.

பித்தேறிய வெறிச் சிரிப்புடன் "உணவு! உணவு!" என கூச்சலிட்டாள் தமயந்தி. மழை பெய்துகொண்டிருந்தமையால் அவள்மேல் நீர் சரிந்திறங்கிக்கொண்டிருந்தது. அஞ்சி நடுங்கி உடலொடுங்கி சற்றுநேரம் நின்ற சுசி பின்னர் வெறிகொண்டு அருகிருந்த பொருட்களை எடுத்து அவள்மேல் வீசியபடி கூச்சலிட்டார். "இவள்தான் எங்களை அழித்தவள். கூட்டரே, இவள் பெண்ணல்ல. அழகிய பெண்ணாக எங்களுடன் வந்துசேர்ந்தாள். ஒரே நாளில் முதுமகளென்றானாள். இவள் ஏதோ கொடுங்காட்டணங்கு... நோயையும் இறப்பையும் அளிக்கும் தீயோள்..."

அவரை அவர்கள் பிடித்து தடுத்தனர். இன்னொருவன் "ஆம், நானே அதை கண்டேன். தோழர்களே, இவள் இரவில் கனவிலென எழுந்து நடக்கிறாள். அப்போது உடலில் கூன் இல்லை. தன்னை அரசி என்கிறாள். அரண்மனையில் உலவும் நிமிர்வு கொண்டிருக்கிறாள். ஆணையிடும் குரலில் பேசுகிறாள். இவளில் வாழ்வது மானுடர்களுடன் விளையாடும் தீயணங்கு. ஐயமே இல்லை" என்றான். அவர்கள் அச்சத்தால் உறைந்து நின்றனர். பின்னர் அவளை கற்களால் அடித்து துரத்தினர். அவள் அச்சத்தால் நடுங்கினாள். ஆனால் நிலையழிந்த உள்ளம் கொண்டிருந்தமையால் முகத்தில் சிரிப்பே வெளிப்பட்டது.

அதன்பின் அவளை அங்காடியில் வாழ வணிகர்கள் விடவில்லை. நோக்குமிடமெல்லாம் கல்லால் அறைந்து துரத்தியடித்தனர். அங்காடிச் சிறுவர்கள் மண்ணையும்

கற்களையும் அள்ளி வீசி நகையாடினர். நாய்கள் குரைத்தபடி அவளை தங்கள் எல்லைவரை விரட்டிச்சென்றன. தனக்குத்தானே பேசிக்கொள்பவளும் தானே உடைந்து அழுது பின் தேறி சிரிப்பவளுமாகி அவள் விலகிச்சென்றாள். சடையான குழலும் நோய்க்கிழவி முகமும் கொண்டிருந்த அவளை நோய் கொண்டுவரும் கொடுந்தெய்வம் என எண்ணிய சூதரும் ஆயரும் வேளிரும் தங்கள் தெருக்களில் நுழையவிடவில்லை.

அனைவராலும் தாக்கப்பட்டபோது அவள் எங்கும் பதுங்கிக் கொள்பவளானாள். மிகச் சிறிய இடுக்குகளிலேயே ஒடுங்கி விழிகளிலிருந்து மறையும் திறனை உள்ளம் அறியாமலேயே அவள் உடல் கற்றுக்கொண்டது. அவ்வாறு அவள் மறைவது அவர்களின் அச்சத்தை மேலும் பெருக்கியது. பகலில் எலிபோல எங்கேனும் முற்றிலும் பதுங்கியிருந்து இரவில் மட்டும் வெளியே வந்தாள். குப்பைகளிலிருந்து தன் உணவை தேடி உண்டாள். அவளை நாய்கள் தங்களவள் என ஏற்றுக்கொண்டன. ஆகவே ஒலியில்லாமல் நிழலுருவென நகரில் அலைந்தாள்.

# நீர்க்கோலம் - 71

**70. நாற்கள அவை**

❀நிழலுரு கொண்டிருந்த தமயந்தி ஒருநாள் உணவின் மணத்தால் ஈர்க்கப்பட்டு காவலர் எவரும் அறியாமல் அரண்மனை வளைவுக்குள் நுழைந்தாள். அங்கே அடுமனைப் புழக்கடையில் குவிந்திருந்த எஞ்சிய அன்னத்தை அள்ளி அள்ளி உண்டாள். புழுபோல அன்னத்தில் உடல் மூழ்க

திளைத்தாள். அங்கேயே இடம் மறந்து படுத்துத் துயின்றாள். கனவில் எழுந்து நடந்து அரண்மனையின் அகத்தளத்திற்குள் நுழைந்தாள்.

பந்த ஒளியில் நிமிர்ந்த தலையுடன் வீசும் கைகளுடன் பேரரசியின் விழிகளுடன் சென்ற அவளை எதிர்கண்ட காவலன் ஒருவன் அரண்மனையெங்கும் கோயில்கொண்டிருக்கும் அறுகொலைத் தெய்வங்களில் ஒன்றென்றே எண்ணினான். அஞ்சி வேல் தழைத்து தலைவணங்கினான். பின்னர் அவள் மறைந்திருப்பதை கண்டான். நெஞ்சு அறைய கைகள் கூப்பியபடி இருக்க அவன் அங்கேயே நின்றான்.

சேதிநாட்டரசன் சுபாகுவின் அன்னை காந்திமதி அப்போது நோயுற்றிருந்தாள். அவளை அரண்மனை தரைத்தளத்தில் தனியறையில் வைத்து நோய்நோக்கினர் சேடியர். பின்னிரவில் அவர்கள் அனைவரும் களைத்து துயில மூச்சுகள் ஒலிக்கும் அறையில் காந்திமதி துயிலெழுந்தாள். கனவில் அவள் யானைமேல் அமர்ந்த கொற்றவையை கண்டாள். நீல வைரங்கள் ஒளிவிடும் குழலெடையும் குருதிமலர் மாலையும் அணிந்த அன்னையின் காதுகளில் பொன்னிற நாகங்கள் குண்டலங்களாக நெளிந்தன. “அன்னையே!” என அவள் தலைவணங்கினாள். அப்போது வெளியே பட்டத்து யானையின் உறுமலோசை கேட்டது.

மூதரசி எழுந்து சென்று வெளியே பார்த்தாள். அங்கே சடைத்திரியாக முடி தோளில் விழுந்திருக்க மிடுக்குடன் நடந்துவந்த பேய்வடிவினளைக் கண்டு உடல்நடுங்க தூணை பற்றிக்கொண்டாள். கால்கள் நடுங்கி விழப்போனாள். கனவா என்று உள்ளம் பதைக்க “யார்?” என்றாள். அவள் நிமிர்ந்து மூதரசியை நோக்கினாள். விழிகள் அவளை பாராமல்

வெறிமிக்க கனவொன்றில் விழித்திருந்தன. அங்கே நின்ற பட்டத்து யானை மெல்ல பிளிறியது. “நான் தமயந்தி. மாமன்னர் நளனின் துணைவி” என்று அவள் சொன்னாள்.

நாகவிறலியின் கைகள் ஓய்ந்தன. பாடல் நின்றது. பெருமூச்சுடன் அவள் கைகூப்பினாள். அவள் பின்னால் அமர்ந்திருந்த முழவுக்காரி “நிஷதப் பேரரசி தமயந்தியை ஆண்ட பெருநாகத்தின் கதையாகிய கார்க்கோடகத்தின் முதல் பாதம் நிறைவுற்றது” என்றாள். விறலி “எஞ்சிய கதையை சுருக்கிச் சொல்கிறேன். சுபாகுவின் அன்னை காந்திமதியின் ஆணைப்படி தமயந்தி சேதிநாட்டு அரண்மனையில் ஈராண்டு காலம் தங்கினாள். அவளை தூய்மை செய்து புண்களுக்கு மருந்திட்டு நோய்மீட்டனர். காந்திமதி தன் மகளும் வேந்தனின் தங்கையுமான சுனந்தைக்கு அவளை அணுக்கியாக நிறுத்தினாள். மூதரசியன்றி எவரும் அவளை எவரென்று அறிந்திருக்கவில்லை. அவளும் தன்னை அறிந்திருக்கவில்லை.”

“அன்று விதர்ப்பநாட்டில் உடன்பிறந்தாரிடையே பூசல் எழுந்திருந்தது. விதர்ப்பத்தின் வடகிழக்கு எல்லையான மேக்கலகிரியின் மலைக்குடிகளான ஃபீலர்களின் குலத்தலைவர் மகளில் பீமகர் பெற்ற ஏழு மைந்தர்களில் மூத்தவனாகிய தண்டன் பீமத்துவஜன் என்ற பெயரில் போஜகடகத்தை ஆண்டான். சேதிநிலத்தைச் சேர்ந்த பைகர் குலத்தலைவரின் மகளில் பீமகர் பெற்ற பன்னிரு மைந்தரில் மூத்தவனாகிய தமன் பீமபலன் என்ற பெயரில் குண்டினபுரியை ஆண்டான். தமயந்தி நளனின் படைவல்லமையுடன் நிஷதபுரியில் ஆளும்வரை பீமத்துவஜன் இரண்டாமிடத்தில் போஜகடகத்தில் இருந்தான். அவள் அரசுநீங்கிய செய்தி வந்ததும் அவன்

படைகொண்டுவந்து குண்டினபுரியை சூழ்ந்தான். இரண்டு வாரங்களில் பீமபலன் இளையவனிடம் தோற்று மாளவம் நோக்கி படைகளுடன் பின்வாங்கிச் சென்றான்.

பீமத்துவஜன் குண்டினபுரியில் முடிசூட்டிக்கொள்ள பைகர்களும் ஃபீலர்களும் நாடெங்கிலும் போரிட்டனர். ஒவ்வொரு சிற்றூரிலும் பூசல்கள் நிகழ்ந்துகொண்டிருந்தன. பீமகர் குண்டினபுரியின் அரண்மனையில் சிறையிலென மதுவுண்டு மீளாத சித்தத்துடன் வாழ்ந்தார். பீமத்துவஜனை வெல்ல தமயந்தி படைகொண்டெழுவாள் என பைகர் குடியினர் நம்பினர். ஆகவே தமயந்தியை கொன்றொழிப்பதே விதர்ப்பத்தின்மேல் முற்றரசு கொள்ள ஒரே வழி என எண்ணிய பீமத்துவஜன் நாடுகள்தோறும் ஒற்றர்களை அனுப்பி தமயந்தியை தேடிக்கொண்டிருந்தான். தமயந்தி உடல்மாறியதும் நன்றே என்று பேரரசி எண்ணினார்.

தன் மைந்தன் சுபாகுவை வென்ற அன்றே கொன்று சேதியின் மணிமுடியை தன் காலடியில் வைத்திருக்க முடியும் என்ற நிலையிலும் அவனை மைந்தனென்றே நடத்தி முடியளித்து வாழ்த்திச்சென்ற தமயந்திக்கு கடன்பட்டிருப்பதாகவே காந்திமதி எண்ணினார். தன் நோய்க்குறியும் வருகுறியும் ஆய்வதுபோல மருத்துவர்களையும் நிமித்திகர்களையும் வரச்செய்து எவருமறியாது தமயந்தியை நோக்கச் செய்தார்.

“இது உருமாற்றம் மட்டுமே. உடலில் ஏறிய நஞ்சு ஒவ்வொரு நாளுமென உருவழிந்து வெளியேறிக் கொண்டிருக்கிறது, பேரரசி. உடல் ஏழு அனல்கள் எரியும் எரிகுளம். காமமும் பசியும் மூச்சும் எண்ணமும் சொல்லும் ஞானமும் என வெம்மைகொண்ட ஆறனல்களும் மெய் எனும் தண்ணனலும் கொண்டது அது. உடல்புகுந்த அனைத்தையும் அவை எரிக்கும்.

உடலையும் எரிக்கும். அன்னை உடலில் இன்று நஞ்சை நெய்யென உண்டு அவை எரிகின்றன. நஞ்சு வற்றும்போது பிசுக்கு அகன்று ஆடிப்பாவை தெளிவதைப்போல அவர் மீள்வார்" என்றார் மருத்துவர்.

"குறிகள் தெளிவுறச் சொல்வது ஒன்றே. இது நிலவை நாகம் கவ்விய காலம் மட்டுமே. அரசி வெளியே வருகையில் முன்னிலும் ஒளிகொண்டிருப்பார்" என்றார் நிமித்திகர். "கலிசினம் கவ்வியிருக்கிறது அரசியையும் அவர் அரசையும். கலி தெய்வமல்ல. ஊழை வகுக்கும் ஆற்றல் அவனுக்கு அளிக்கப்படவில்லை. ஏழரை ஆண்டு காலம் மட்டுமே அவனால் மானுடரை ஆளமுடியும். இன்னும் ஏழாண்டு காலம் எஞ்சியிருக்கிறது... தன் காலம் முடிந்ததும் அவன் தலைவணங்கி நிலைமீளவேண்டும். அப்போது தான் கவர்ந்த அனைத்தையும் எண்ணி கணக்கு சொல்லி திருப்பியளிக்கவும் வேண்டும்."

பேரரசி "அவ்வாறே ஆகுக!" என்றார். "அதுவரை அவள் இங்கே இருக்கட்டும். அங்கே விதர்ப்பத்தில் ஒவ்வொன்றும் பிறிதுடன் மோதி தன் நிலைக்கு மீளட்டும்."

❀சுதேஷ்ணை எழ முயன்றபோது கால் மரத்திருந்தது. திரௌபதி அவள் தோள்களை பற்றிக்கொள்ள எழுந்துநின்று நீள்மூச்செறிந்து திரும்பிப் பார்த்தாள். இரு சேடியர் கொண்டுவந்த தாலத்தில் ஆடைகளும் பொன் நாணயங்களும் இனிப்புகளும் கனிகளும் மலர்களும் இருந்தன. நாகவிறலி அருகே வந்து வணங்கி நின்றாள். தாலத்தை அரசி நீட்ட அவள் அதை பெற்றுக்கொண்டாள். "சொல்லினூடாகச் சென்று எங்கோ வாழ்ந்து மீண்டேன்" என்றாள் சுதேஷ்ணை.

நாகவிறலி “எல்லா வாழ்வும் சொல்லிலேயே நிகழ்கிறது” என்றாள். “ஆம்” என்றாள் சுதேஷ்ணை. “எண்ணிப்பார்க்க இயலவில்லை, அவள் அடைந்த துயர்களை. சீதை அடைந்த துயருக்கு எவ்வகையிலும் இதுவும் நிகரே” என்றாள். “துயர்மிக்கவர்கள்தான் கதையில் இடம்பெறுகிறார்கள்” என்று சொல்லி நாகவிறலி புன்னகை செய்தாள். “நாளை எஞ்சிய கதையை கேட்கிறேன்” என்றாள் சுதேஷ்ணை. “நாளை அரசரின் அவையில் நளமாமன்னரின் கதையை சொல்லலாம் என்று எனக்கு ஆணை வந்துள்ளது, அரசி” என்றாள் விறலி.

அவர்கள் சென்றபின் சுதேஷ்ணை திரும்பி திரௌபதியிடம் இயல்பான குரலில் “நீ சென்று கீசகனிடம் நான் சொல்லும் ஒரு செய்தியை உரைத்து வா” என்றாள். திரௌபதி அவ்விழிகளில் வந்துசென்றதை உடனே உணர்ந்து “அவரிடமா?” என்றாள். “இது அரசமந்தணம். சேடியரை அனுப்பவியலாது” என்றாள். திரௌபதி “நேரடியாகவே சொல்லுங்கள், அரசி. சற்றுமுன் வந்த செய்தி அவரிடமிருந்துதானே?” என்றாள். சுதேஷ்ணை தலைகுனிந்து “ஆம்” என்றாள். “அவரை நான் எதற்கு சந்திக்கவேண்டும்?” என்றாள்.

“அதை நீ அறிவாய்” என்றாள் சுதேஷ்ணை. “அதற்கு நீ உடன்பட்டாகவேண்டும் என்று நான் சொல்லமாட்டேன். எளிதில் உடன்படுபவள் அல்ல நீ என்றும் அறிவேன். ஆனால் நான் இனி உன்னை அனுப்பாமலிருக்கவியலாது.” திரௌபதி ஒன்றும் சொல்லாமல் அரசியுடன் நடந்தாள். “நான் உன்னை அனுப்ப மறுக்கிறேன் என அவன் எண்ணுகிறான். பலமுறை உன்னை அனுப்பும்படி கோரிவிட்டான். நான் ஒவ்வொன்றாகச் சொல்லி தட்டிக்கழித்தேன். இவ்விழாவில் எவரும் எவரையும்

நோக்குவதில்லை. இது காமனுக்குரிய இரவு. இன்று நீ சென்றே ஆகவேண்டும் என்று அவன் சொல்கிறான்.”

“நான் மறுத்தால்?” என்றாள் திரௌபதி. “நீ மறுப்பாய் என நான் அறிவேன். எனக்கு வேறுவழி இல்லை. சற்றுமுன் அவள் கொண்டுவந்த செய்தி ஒன்றே. உத்தரனை எண்ணிக்கொள்க என்று கீசகன் சொல்லியனுப்பியிருக்கிறான். இன்று நான் இதற்கு ஒப்பவில்லை என்றால் அவன் என் மைந்தனை கொன்றுவிடுவான்.” திரௌபதி “வெறும் அச்சுறுத்தல்” என்றாள்.

“அல்ல, அவன் சீற்றம் கொண்டிருக்கிறான். இதுவரை அவனிடமிருந்த அத்தனை கணக்குகளும் நுட்பங்களும் விலகி வெறும் விலங்கென்று ஆகிவிட்டிருக்கிறான். ஜீமுதனின் இறப்பு அவனுள் அச்சத்தை நிறைத்துவிட்டிருக்கிறது. நேரடியாகவே அவன் அரசர்மேல் படைகொண்டெழக்கூடும் என நான் ஐயுறுகிறேன்… நீ செல்வதனால் கொதிகலம் குளிர்வதுபோல அவன் சற்று அமைவான் என்றால் என் வழி அது மட்டுமே.”

“அரசி, நீங்கள் அஞ்சுவதுபோல் ஒன்றும் நிகழப்போவதில்லை. ஜீமுதனைக் கொன்றவன் இங்குதான் உள்ளான்” என்றாள் திரௌபதி. “அவன் வெறும் அடுமனை அடிமை. இன்றிரவே அவனை கொன்றுவிடுவான் கீசகன். ஒளியம்போ நச்சுணவோ. பிடித்து கழுவேற்றவும்கூடும்… என் உள்ளம் சொல்கிறது, அனைத்தும் உச்சம்கொண்டுவிட்டன. இனி இந்த ஆடல் நீடிக்காது…” அவள் திரௌபதியின் கைகளை பற்றிக்கொண்டாள். “எனக்கு வேறுவழியில்லை. அவனிடம் செல். அவனை சற்று தணிவித்துவிட்டு வா. நீ எவரென்று நான் அறியேன். ஆனால் உன்னால் அதை செய்யமுடியும்.”

திரௌபதி சொல்லெடுப்பதற்குள் “நீ மறுத்தால் படைகளை அழைப்பேன். ஆம், எனக்கு என் மைந்தனே முதன்மை. வேறுவழியில்லை” என்று அரசி கூவினாள். திரௌபதி “செல்கிறேன்” என்றாள். “நான் சொல்வதை கேள்… நான்…” என அரசி தொடர “நான் செல்கிறேன் என்றேனே” என்றாள். “என்னை முனியாதே. நான் வெறும் அன்னை” என்றாள் சுதேஷ்ணை. “ஆம், எல்லா அன்னையரும் வெறும் அன்னையரே” என்றாள் திரௌபதி.

கையில் கொற்றவைக்குப் படையலிட்ட அன்னம் கொண்ட தாலத்துடன் புத்தாடை அணிந்து நீள்குழல் அலையடிக்க திரௌபதி கீசகனின் அரண்மனைக்கு சென்றாள். இடைநாழிகள் அனைத்தும் ஒழிந்துகிடந்தன. எதிர்ப்பட்ட அத்தனை காவலர்களும் மதுமயக்கில் இருந்தனர். ஒருவன் அவளைப் பார்த்து “ஜீமுதனை நீயே கொன்றிருக்கலாமே, பெருந்தோளழகி?” என்றான். அருகே நின்ற ஒருவன் ஹிஹிஹி என இளித்தான். அவள் “விலகு” என கைகாட்ட “ஆணை” என அறியாது சொல்லி அவர்கள் விலகிக்கொண்டார்கள். அவள் கடந்து சென்றதும் பின்னால் “கீசகரை கொல்லப்போகிறாயா?” என்றான். மற்றவன் ஹிஹிஹிஹி என நகைத்தான்.

கீசகனின் அறைவாயிலில் காவலர் எவருமிருக்கவில்லை. உள்ளே அவன் குழறிய குரலில் எதையோ சொல்வது கேட்டது. எதிரே நின்றிருந்த ஏவலன் மழுங்கிய ஒலியில் அதற்கு மறுமொழி சொன்னான். வாயிலில் சென்று நின்றதுமே திரௌபதி அங்கு அவள் எண்ணி வந்தது நிறைவேறாது என்று புரிந்துகொண்டாள். ஏவலனின் விழி திரும்பியதைக் கண்டு கீசகன் திரும்பிப் பார்த்தான். “ஆ!” என வியப்பொலி

எழுப்பியபடி எழுந்துநின்று கால் நிலைகொள்ளாமல் மீண்டும் பீடத்திலேயே சரிந்தான்.

ஏவலன் அப்படியே மறுபக்கம் விலகிச் சென்று கதவை மூடி வெளியேறினான். “நான் எதிர்பார்த்தேன்! ஆம், நான் எதிர்பார்த்தேன். எனக்குத் தெரியும் நீ என்னுடன் விளையாடுகிறாய் என்று!” என்றான் கீசகன். மீண்டும் எழ முயன்று தள்ளாடி ஏப்பம் விட்டான். “நான் உன்னை நினைத்து மதுவருந்தினேன். உன்னை நினைக்க நினைக்க அருந்தாமல் இருக்க முடியவில்லை.” அவள் பெருமூச்சுடன் “நான் அரசியின் ஆணைப்படி வந்தேன். இந்தத் தாலத்தை இங்கே அளித்துவிட்டுப் போக பணிக்கப்பட்டிருக்கிறேன்” என்றாள்.

“தாலமா? என்ன அது? கொற்றவை படையலுணவா? நான் கொற்றவையையே படையலாகக் கேட்கிறேன்.” அவன் அச்சொல்லாட்சியில் மகிழ்ந்து “ஆம், எனக்கு கொற்றவை... நான் என்ன சொன்னேன்?” என்றான். அவன் இமைகள் பாதி மூடியிருந்தன. அடிக்கடி விக்கல் வந்தது. அவனிடமிருந்து மதுவும் வியர்வையும் நாறின. திரௌபதி “நான் செல்லவேண்டும்” என்றபடி தாலத்தை பீடத்தில் வைக்கப்போனாள். அவன் எட்டி அவள் கைகளை பிடித்துக்கொண்டான். அவள் கைகளை உதற தாலம் நிலத்தில் விழுந்து உருண்டது. சிறிய கண்கள் இடுங்க நகைத்தபடி அவன் எழுந்து “நன்று... ஒரு நல்ல பூசலை நானும் எண்ணியிருந்தேன்” என்றான்.

“விடு என்னை... நான் சொல்வதை கேள்...” என்றாள் திரௌபதி. “நான் வந்தது உன்னிடம் இதை சொல்வதற்காகவே. ஜீமுதன் நெஞ்சுபிளந்த வலவன் யார் என அறிவாயா?” ஆனால் கீசகன் வேறெங்கோ இருந்தான். இதழ்கோண நகைத்தபடி “ஆம், ஏன்

பிறரைப் பற்றி பேசவேண்டும்? நாம் பேசுவதற்கும் செய்வதற்கும் பல உள்ளன" என்றான். அவள் அவன் தொடையில் எட்டி உதைத்தாள். அவன் நிலைதடுமாறி மல்லாந்து பீடத்தின்மேல் விழ அது அவன் எடையால் முறிந்தது.

அவனிலிருந்த மல்லன் விழித்துக்கொள்ள கீசகன் கையூன்றி கணத்தில் எழுந்து அவள் கைகளை பற்றிக்கொண்டான். "விடு என்னை... இதன்பொருட்டு நீ நெஞ்சுபிளந்து சாவாய்... நான் யாரென நினைத்தாய்?" என்று அவள் மூச்சிரைக்க சொன்னாள். அவன் பாய்ந்து அவள் மறுகையையும் பிடித்து தன்னை நோக்கி இழுத்தான். "நிகர்வல்லமைகொண்ட தோள். பெண்டிரில் இத்தனை ஆற்றலை நான் கண்டதில்லை. நான் விழைந்தது இதையே" என்றான் கீசகன். அவள் அவன் பிடியை விலக்கி அவனை தூக்கிச் சுழற்றி அப்பால் வீசினாள். அவன் சுவரில் கையூன்றி திரும்பி மீண்டும் அவளை பற்றிக்கொண்டான்.

"நீ நகர்நுழைந்தபோதே எனக்குரிய இணை வந்துவிட்டதென காவலர் வந்து சொன்னார்கள்..." என்றபடி அவன் அவளை இறுக்கினான். "நீ அரசியாவாய்... என் தெய்வங்கள்மேல் ஆணை. உன்னை பாரதவர்ஷத்தின் சக்ரவர்த்தினி ஆக்குகிறேன். உன் காலடியில் என் மணிமுடியை வைக்கிறேன்." அவள் அவன் மூக்கில் தன் தலையால் ஓங்கி முட்டினாள். அவன் அதை எதிர்பாராமல் தடுமாற அவன் காதில் பிறிதொருமுறை தலையால் முட்டி காலைத் தூக்கி அவன் இடையை உதைத்து விலக்கினாள். அவன் பாய்ந்து பிடிப்பதற்குள் வெளியே ஓடினாள்.

“சீ, இழிமகளே. நில்... பிடித்தால் உன் சங்கை நெரிப்பேன்... நில்!” என்று கூவியபடி கீசகன் அவளை துரத்தி வந்தான். அவள் இடைநாழி வழியாக ஓட கீசகன் “பிடியுங்கள் அவளை... பிடியுங்கள்” என்று கூவியபடி எடைமிக்க கால்கள் ஓசையிட தொடர்ந்தோடினான். காவலர்கள் அதை விளையாட்டு என எண்ணி இளித்தபடி நின்றனர். திரௌபதி இடைநாழியிலிருந்து பாய்ந்து அப்பாலிருந்த சிறிய முற்றத்தை அடைந்து அதற்கும் அப்பால் விளக்கொளியில் செந்நிறத் திரைச்சீலைபோலத் தெரிந்த வாயிலை நோக்கி ஓடினாள்.

“நில்... அவளை பிடியுங்கள்... பிடியுங்கள்!” என்று கூவியபடி இடைநாழியில் குதித்த கீசகன் கால்தடுக்கி விழுந்து கையூன்றி எழுந்தான். விழுந்த அதிர்வில் குமட்டல் எழ ஓங்கரித்து துப்பியபடி ஓடி வந்தான். அறைவாயிலில் நின்றிருந்த காவலன் உள்ளே நிகழ்வதை நோக்கிக்கொண்டிருந்தான். இன்னொருவன் கீழே அமர்ந்திருந்தான். திரௌபதி பாய்ந்து உள்ளே செல்ல அவன் “ஏய்! என்ன இது? யார்? இது அரசர் அவை” என கூவினான். தொடர்ந்து வந்த கீசகன் அவனைப் பிடித்து விலக்கிவிட்டு உள்ளே வந்தான்.

உள்ளே விராடரும் குங்கனும் பகடையாடிக்கொண்டிருந்தனர். களத்தில் பரப்பப்பட்டிருந்த காய்களை முகவாயை கையால் தாங்கியபடி நோக்கிக்கொண்டிருந்த விராடர் திரும்பி நோக்கி “யாரது? சேடிப்பெண்ணா? அவளுக்கு என்ன வேலை இங்கே?” என்றார். திரௌபதி “அரசே, என்னை காப்பாற்றுங்கள். உங்கள் படைத்தலைவரால் நான் பெண்ணிழிவு செய்யப்படுகிறேன்” என்று கூவினாள். “யார்? கீசகா, என்ன இது?” என்றார் விராடர்.

கீசகன் “அரசே, என்ன நடந்ததென்று கேளுங்கள். இவ்விழிமகள் என் அரண்மனைக்குள் புகுந்து என் கணையாழியை

திருடினாள். தாலத்துடன் இவள் அறைக்குள் நுழைவதைக் கண்டேன். கள்மயக்கில் இவளுக்கு விழிகொடுக்கவில்லை. திருடுவதை தற்செயலாகக் கண்டு இவள் கையை பற்றினேன். உதறிவிட்டு ஓடினாள். துரத்தி வந்தேன்…” என்றான். “பொய்… வேண்டுமென்றே சொல்லப்படும் பொய். அரசி அனுப்பியே நான் அங்கே சென்றேன்…” என்று திரௌபதி கூவினாள். “நான் திருடினேன் என்றால் அந்தக் கணையாழி எங்கே? சொல்லச் சொல்லுங்கள்!”

கீசகன் “அதை வீசிவிட்டு ஓடினாள், அரசே” என்றான். “அப்படியென்றால் அவர் கையில் இருக்கும் கணையாழி எது?” என்றாள் திரௌபதி. “வாயை மூடு, கீழ்மகளே. எதிர்த்தா பேசுகிறாய்?” என கீசகன் பாய்ந்து அவளை அறைந்தான். அவள் கீழே விழுந்ததும் எட்டி அவளை உதைத்தான். “உன்னை இழுத்துச்சென்று தலையை வெட்டியிருக்க வேண்டும். அரசர் முன்னிலை என்பதனால் சொல்லாட விட்டேன்…” அவள் குழலைப் பிடித்துத் தூக்கி “வா… உன்னை என்ன செய்வதென்று நான் முடிவெடுக்கிறேன்” என்றான்.

அவன் கையைப் பற்றியபடி திரௌபதி கூவினாள் “நான் அரசரிடம் அறம் கேட்கிறேன்… இங்கே நெறியென்று ஏதுமில்லையா? ஒரு பெண்ணை உதைப்பதற்கும் இழுத்துச் செல்வதற்கும் எக்குலமுறை ஒப்புகிறது? அரசரென அமர்ந்திருப்பவர் முன்னிலையில் நிகழலாமா இந்தக் கீழ்ச்செயல்?” விராடர் “என்ன இது, கீசகா? நாளை இது நமக்கு இழிவென்று ஆகுமல்லவா? விடு அவளை” என்றார். “அவள் கள்ளி. அவளுக்குரியது கைகால்மாறு தண்டனை. நெறியுசாவல் அல்ல” என்று அவளை கீசகன் தரையில் இழுத்தான்.

“குற்றம் சாட்டியவரே தண்டனையையும் அளிப்பதா? எந்த நெறி இது? இங்கு அறமுசாவ அவையென ஏதுமில்லையா?” என்றாள் திரௌபதி. “அது அவைநிற்கும் தகுதிகொண்டோருக்கு. அகத்தளப் பெண்ணுக்கல்ல...” என அவளை தூக்கினான் கீசகன். விராடர் “என்ன இது? கீசகா...” என்றார். “எதன்பொருட்டென்றாலும் பெண்ணை உதைக்க இவருக்கு என்ன உரிமை? இதை தெய்வங்கள் பொறுக்குமா?” என்று திரௌபதி கேட்டாள். “குங்கரே” என்றார் விராடர்.

“இருவர் சொல்வதும் பொய்யாகவும் உண்மையாகவும் இருக்கலாம். நாம் இரண்டையும் அறியோம்” என்று குங்கன் சொன்னான். “அதைப்பற்றி இப்போது நாம் சொல்வதற்கொன்றுமில்லை. நாம் உறுதியாக அறிந்தது ஒன்றே. இவள் சேடி, அவர் அரசகுடியினர். பொய்யும் மெய்யும் மறமும் அறமும் குடியால் இயல்வதேயாகும்.” விராடர் “ஆம், அது மெய். சேடியர் அவைநிற்க எங்கும் ஒப்புதலில்லை” என்றார். “ஆனால் பெண்டிர் நாளை நம்மை குறை சொல்லலாகாது. ஆகவே இதை இளவரசியே நோக்கி முடிவு சொல்லட்டும்... அடேய், மறுஅறையில் இளவரசி உத்தரை இருக்கிறார். அவரை அவைபுகும்படி நான் ஆணையிட்டதாக சொல்” என்றான் குங்கன்.

“அவள் இங்கெதற்கு?” என்ற கீசகன் திரௌபதியின் கூந்தலை விட்டுவிட்டான். அவள் ஆடையைத் திருத்தியபடி கண்ணீர் வழிய நின்றிருக்க ஏவலர் இருவரும் ஓடி உத்தரையை அழைத்துவரச் சென்றனர். அதற்குள் தன் மேலாடையை எடுத்தணிந்த விராடர் “இந்தப் பூசல் இப்போதே முடியட்டும். எவர் செய்தது பிழை என்பதை நாளை அவைகூடி முடிவெடுப்போம். நீ செல்க!” என்று திரௌபதியிடம் சொன்னார்.

“இளவரசி வரட்டும். அவைநடுவே பெண்ணை இழுத்திட்டு உதைப்பதன் நெறியென்ன என அவர் சொல்லட்டும்” என்றாள் திரௌபதி.

“அவள் சிறுமி... அவள் இங்கே எதற்கு?” என்றார் விராடர். “அவளுக்கு நான் அஞ்சுவேன் என எண்ணுகிறீர்களா? அவள் வரட்டும். அவள் கண்முன் இழுத்துச் செல்கிறேன் இவளை. இதோ, நானே சொல்கிறேன். இவள் திருடவில்லை. என் மஞ்சத்திற்குத்தான் வந்தாள். என்னுடன் மஞ்சத்தில் இன்றிரவை கழிக்கப் போகிறாள். எவர் தடுக்கப் போகிறீர்கள்? சொல்லுங்கள் எவர்?” ஆனால் அவன் மீண்டும் திரௌபதியை பிடிக்கவில்லை.

ஏவலர் பின்னால் ஓடிவர உள்ளே வந்த உத்தரை “என்ன நடக்கிறது இங்கே? பெண்ணை அவையில் பற்றி இழுக்க இந்தக் கீழ்மகனுக்கு இடம்கொடுத்தவர் எவர்? தந்தையே, நீங்களா?” என்றாள். “எண்ணிப் பேசு சொற்களை” என்று கையோங்கியபடி கீசகன் அவளை அணுக அவள் தன் குறுவாளை எடுத்து தன் கழுத்தில் வைத்துக்கொண்டாள். “தந்தையே, நம் குடித்தெய்வம்மேல் ஆணை. இப்போதே இந்தச் சிறுமகன் அவை நீங்கவேண்டும். நம் குடியவையில் இவன் செய்தவற்றுக்கு ஈடு சொல்லவேண்டும். உங்கள் ஆணை இக்கணமே எழவேண்டும். இல்லையேல் இங்கேயே சங்கறுத்து விழுவேன்.”

விராடர் கைகால்கள் பதற எழுந்து நின்று “என்ன இது? வேண்டாம். கத்தியை தாழ்த்து... கீசகா, இது என் ஆணை! விலகிச்செல். நாளை மறுநாள், விழவு முடிந்தபின் கூடும் பெருங்குடியவையில் வந்து நிற்பதுவரை நீ இந்தப் பெண்ணை அணுகலாகாது...” கீசகன் ஏதோ சொல்ல வாயெடுக்க “என்

ஆணை இது. என் முழுப் படைகளையும் ஆளும் சொல். இதற்கு மாற்றில்லை...” என்று அவர் கூவினார். தொண்டை நரம்புகள் புடைக்க உடல் பதற நின்று உடல் உலைந்தார். “வெளியே செல்... மறுசொல் கேட்டால் உன் தலைகொய்ய ஆணையிடுவேன்.” கீசகன் மெல்ல தன்னை கட்டுப்படுத்திக்கொண்டான். பின்னர் “நன்று, நாளை பார்ப்போம்” என்றபின் வெளியே சென்றான். உத்தரை கத்தியை கீழே போட்டுவிட்டு வந்து திரௌபதியை தழுவிக்கொண்டாள்.

விராடர் “என்னம்மா இது? என்ன செய்யப் போனாய்? என் உடல் நடுக்கம் இன்னும் விலகவில்லை” என்றார். “அந்த நச்சுப்பாம்பை வளர்த்துவிட்டது உங்கள் சொல்விளங்காமையும் அன்னையின் மிகைவிழைவும். இனியாவது அதன் தலையை நசுக்காவிட்டால் இக்குடி அழியும்” என்றாள் உத்தரை. “மெல்லப் பேசு... நான் எப்படி அவனுக்கு ஆணையிட்டேன் என எனக்கே தெரியவில்லை. இப்போது அவனை நினைத்து அஞ்சுகிறேன். இந்நாடும் படைகளும் அவன் ஆணையிலேயே உள்ளன. அவன் ஒரு சொல் எடுத்தால் நம்மை கொன்றுகுவிக்க வாளுடன் வருவார்கள் விராடப் படையினர்” என்றார் விராடர்.

“நீங்கள் ஒரு சொல் உரையுங்கள், தந்தையே. விழிநோக்குவதை விட விரைவாக அவனை வீழ்த்திக் காட்டுகிறேன்” என்றாள் உத்தரை. “என்ன பேசுகிறாய்? உன்னிடம் என்ன கந்தர்வ வித்தையா இருக்கிறது?” என்றார் விராடர். “ஆம், கந்தர்வன் ஒருவன் என் சொல்லுக்கு கட்டுப்பட்டிருக்கிறான்” என்ற உத்தரை “வருக!” என திரௌபதியின் கைகளைப் பற்றி அழைத்துச்சென்றாள். “அரசர் இருக்கும் இடமே அரசவை. அதை நம்பி நான் வந்தேன்” என்றாள் திரௌபதி.

தருமன் எரிச்சலுடன் “நாளை அவையில் வந்து உன் சொற்களை விரி. இப்போது எங்கள் ஆட்டம் பாதியில் நிற்கிறது. செல்” என்றார். திரௌபதி அவரை சில கணங்கள் நோக்கியபின் நீள்மூச்சுடன் உத்தரையுடன் சென்றாள். விராடர் பெருமூச்சுடன் அமர்ந்து “மெய்யாகவே அச்சத்தால் என் உள்ளம் உறைந்திருக்கிறது, குங்கரே. பார்த்தீர்களா விரல்கள் நடுங்குவதை. கீசகன் நாளை என் தலையை வெட்டக்கூடும் என்றே எண்ணுகிறேன்... உத்தரையை நான் அறிவேன். சொன்னதைச் செய்பவள் என்பதனால் நிலைமீறிவிட்டேன்” என்றார்.

தருமன் காய்களை நோக்கியபின் கைகளை உரசியபடி “இனி உங்கள் நகர்வு” என்றார். “கீசகன் என்ன செய்வான் என்கிறீர்?” என்றார் விராடர். “இந்த ஆட்டத்தை முதலில் முடிப்போம். அந்த ஆட்டத்தில் நாம் அறியாத பல காய்கள் களத்தில் உள்ளன” என்றார் தருமன்.

# நீர்க்கோலம் - 72

### 71. அறக்கூற்று

❀திரௌபதி சுதேஷ்ணையின் அரண்மனை முகப்புக்கு வந்தபோது அவளை அதுவரை அழைத்து வந்த உத்தரையின் சேடி சாந்தை அவள் கைகளை பற்றிக்கொண்டு “அஞ்சவேண்டாம். இவ்வரண்மனையில் இளவரசி மட்டும் வேறானவள். என்றோ ஒருநாள் பாரதவர்ஷத்தை தழுவியமையும் பேரரசொன்றுக்கு தலைவியாக மணிமுடி சூடி அவள் அமர்வாள் என்று நிமித்திகர்கள் சொன்னது வீணல்ல.

அவள் அருள் உன்னுடன் உள்ளபோது இங்கு உனக்கு எதிரிகள் எவருமில்லை” என்றாள்.

திரௌபதி ஆம் என தலையசைத்தாள். “அவள் அரசாற்றல் அற்றவள் என்று நீ எண்ணலாம். ஆனால் தான் நம்பும் அறத்தின்பொருட்டு பிற அனைத்தையும் இழக்க சித்தமானவர்கள்தான் பேரரசர்களும் பேரரசிகளும் ஆகிறார்கள். இளவரசி உத்தரை அத்தகையவள். அதை இங்குள்ளோர் அனைவரும் அறிவர். ஆகவே அவள் சொல்லுக்கு அப்பால் இந்நகரத்தில் மறுசொல் ஏதுமில்லை. அதை இங்கு அரசுசூழ்வோர் உணர்ந்துள்ளனர். அதை மறைக்கவே அவளை எளிய விளையாட்டுப்பெண் என்று தங்களுக்கும் பிறருக்கும் காட்டிக்கொள்கிறார்கள்” என்றாள் சாந்தை.

“கீசகர் இன்று அரசர் முன்னிருந்து அடிபட்ட நாகம் என தலைகுனிந்து சென்றது ஏன் என்று எண்ணுகிறாய்? இளவரசியின் சொல் என்று அறிந்தபின் விராடநகரியின் எந்தக் குடிமகனும் எப்படைவீரனும் மாற்று ஒன்றை எண்ணமாட்டான்” என்றாள் சாந்தை. “உனக்கு இந்த நகரின் காவல் தெய்வமே அடைக்கலம் அளித்ததென்று எண்ணிக்கொள். அஞ்சாதே.”

திரௌபதி புன்னகையுடன் “ஆம், அரசரின் அவையில் கொற்றவை சிம்மம் மேல் எழுந்ததுபோல இளவரசி வந்து நின்றபோது அதை நான் நன்குணர்ந்தேன். அவர் அப்போது நடனம் கற்று மலர்க்காடுகளில் விளையாடித் திரியும் எளிய பெண்ணல்ல, ஒரு சொல்லால் பெரும்படைகளை கிளர்ந்தெழ வைக்கும் பேரரசி” என்றாள்.

சாந்தை முகம் மலர்ந்து “ஆம், அவள் அனல்பற்றி கொழுந்தாடி எழுவதை முன்னரும் நான் கண்டிருக்கிறேன். தேவி, இளம்மகளாக அவளை என் தோள் சுமந்து அலைந்திருக்கிறேன். என் நெஞ்சின்மேல் குப்புறப் படுக்கவைத்து முதுகில் மெல்ல தட்டி உறக்குவேன். மெல்லிய காதை மெல்ல பற்றி இழுத்துக்கொண்டிருந்தால் அப்போதே விழி சொக்கி துயிலத் தொடங்கிவிடுவாள். இப்பிறவியில் நான் அடைந்த பெரும் பேறென்பது அவளுக்கு செவிலித் தாயாக அமைந்தது” என்றாள்.

திரௌபதி அவள் கைகளைப்பற்றி “என்றும் அவர் நினைவில் நீங்கள் வாழ்வீர்கள், செவிலியே” என்றாள். “ஆம், அவ்வப்போது நான் அதை எண்ணிக்கொள்கிறேன். பேரரசியரின் பெயர்கள் காலத்தில் அழியாமல் வாழும். எங்களைப்போன்ற எளிய சேடியரும் செவிலியரும் மறக்கப்படுவார்கள். ஆனால் தெய்வங்கள் அறியுமல்லவா, எங்கள் கனவுகளும் குருதியும்தான் அவர்களை உருவாக்கியதென்று” அவள் குரல் இடறியது. என்ன சொல்வதென்று அறியாமல் கைகளைப்பற்றி திரௌபதி அழுத்தினாள்.

“இனிமேல்தான் நீ உறுதி கொள்ளவேண்டும்” என்றாள் சாந்தை. “இந்த விராடபுரியைப்பற்றி நீ இன்னமும் நன்கு அறிந்திருக்க மாட்டாய். மகாகீசகரின் காலத்தில் நிஷாதர்கள் குடிமன்று கூடி அரசனைத் தேர்ந்தெடுத்து இக்கொடிவழியை அமைத்தனர். இத்தனை தலைமுறைகள் ஆகியும் கூட இவர்களின் குருதி இன்னமும் எளிய நிஷாதர்களுக்குரியதே. நிஷதகுடியின் குலநெறிகள் எவற்றையும் இவர்கள் எந்நிலையிலும் மீறமாட்டார்கள்.”

“நாளை பின்னுச்சிப் பொழுதில் குடியவை கூடும்போது கீசகர் அவை முன் வந்து நின்றாகவேண்டும். அரசமன்றில் பெண்ணை சிறுமை செய்ததும் காலால் எட்டி உதைத்ததும் குழல் பற்றி இழுத்ததும் பெரும்பிழை. ஒருபோதும் குடிக்கோல் கொண்டு மன்று நின்றிருக்கும் குலமூத்தார் அதை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். அதை கீசகர் நன்கறிவார். ஆகவே உன்னை அச்சுறுத்துவார். பொன்னும் பொருளும் அரசநிலையும் அளிப்பேன் என்று ஆசை காட்டலாம். சூழ்ந்திருப்போரின் விழிநீரை கொண்டுவந்து காட்டி உளம் உருகச் செய்யலாம். நீ இரங்கலாகாது.”

“விழைவையும் அச்சத்தையும் எதிர்நிற்பது மிகக் கடினம் என்றறிவேன். அனலை காத்துக்கொள்வது மேலும் கடினம். பெண்டிர் உள்ளியல்பிலேயே அன்னையர். அக்கணத்தில் எழுந்த பெரும் சினத்தால் எதைச்சொல்லியிருந்தாலும் மிக விரைவிலேயே நாம் பொறுத்தருளத் தொடங்குவோம். நேரில் வந்து நின்று மைந்தனைப்போல் நடித்தால் அக்கணமே கனிந்து அவனுக்கு நற்சொல் உரைப்போம். எப்பிழையையும் பொறுத்துக்கொள்ளும் பெண்களின் கனிவின் மேல்தான் ஆண்களின் ஆணவமும் அடங்காமையும் அறப்பிழையும் நின்று கொண்டிருக்கின்றன.”

“அறிக தேவி, இன்று நீ உனக்காக நெறி கோரவில்லை. இவ்வரண்மனையில் வாழும் அத்தனை சேடியர் பொருட்டும் உன் சொல் அங்கு எழுந்திருக்கிறது. எங்கள் அத்தனை பேரின் கண்ணீரையும் சினத்தையும் படைக்கலமென கைக்கொண்டு நீ நாளை அவையில் எழுந்து நிற்கவேண்டும். எத்தனை பெண்கள் இவ்வரண்மனையின் இருண்ட அகத்தளங்களில் ஒடுங்கி கண்ணீர் உகுத்தார்கள்! எத்தனை பெண்கள் மண்ணுக்குள்

மடியும் புழுக்களைப்போல இருந்ததே அறியாமல் அழிந்தார்கள்!”

“அவர்களும் குரலெழுப்பியிருப்பார்கள். இந்த இருண்ட அறைகளில் அவை காற்றலைகளாக எழுந்ததுமே மறைந்திருக்கும். அவையில் எழுந்து நெறி கோருவதற்கான சொல்லோ துணிவோ அவர்களுக்கு இருந்ததில்லை. தேவி, நாளை குல அவையில் பெண்ணை சிறுமை செய்ததன்பொருட்டு கீசகர் தண்டிக்கப்படுவார் என்றால் விராடபுரியில் அல்ல பாரதவர்ஷத்திலேயே பல்லாயிரம் சேடியர் உன்னை குலதெய்வமெனக் கருதுவார்கள். உனது தழல் தாழாதிருக்கட்டும். எங்களுக்காக.”

திரௌபதி மேலும் ஏதோ சொல்வதற்குள் அவள் கைகளை இறுகப்பற்றிய பின் சாந்தை சென்று மறைந்தாள். அவள் கண்ணீரை முகம்பொத்தி அழுத்தியபடி தோள்குறுக்கிக்கொண்டு சிற்றடி வைத்து ஓடுவதை திரௌபதி நோக்கி நின்றாள்.

❀அரண்மனைக்குள் திரௌபதி நுழைந்ததுமே சுதேஷ்ணையின் சேடி பூர்ணை அவளைத் தேடி வந்தாள். “அரசி உங்களை பார்க்க வேண்டுமென்றார். உடனே வரும்படி ஆணையிட்டார்” என்றாள். திரௌபதி “நான் சற்று ஓய்வெடுக்க விரும்புகிறேன். எனக்கு உடல் நலமில்லையென்று அவர்களிடம் சொல்” என்று உள்ளே சென்றாள். பூர்ணை திகைப்புடன் பின்னால் வந்து “ஆனால் அரசியின் ஆணை…” என தொடங்க “இப்போது வரவியலாதென்று சென்று சொல்” என்றாள் திரௌபதி.

அறை நோக்கி அவள் நடக்கையில் அவளுக்குப் பின்னால் ஓடிவந்த சுபாஷிணி “என்ன நிகழ்ந்தது, தேவி? இங்கே அகத்தளத்தில் ஆளுக்கொன்றாக பேசிக்கொள்கிறார்கள்.

உங்களை கீசகர் குழல் பற்றி தன் மஞ்சத்தறைக்கு கொண்டு சென்றார் என்றார்கள்” என்றாள். திரௌபதி “கொண்டு செல்லவில்லை” என்று சொன்னாள். சுபாஷிணி மூச்சிரைக்க முகம் சிறுக்க “உங்கள் கந்தர்வர்களை அழைக்கவேண்டியதுதானே? அவ்விழிமகனின் நெஞ்சைப் பிளந்து குருதி பருகி அவர்கள் கூத்தாட வேண்டாமா?” என்றாள்.

திரௌபதி புன்னகையுடன் “அதுவே நிகழவிருக்கிறது” என்றாள். சுபாஷிணி அவள் தோளைத் தொட்டு “மெய்யாகவா? மெய்யாகவா?” என்றாள். “எப்போது?” என்று குரல் தாழ கேட்டாள். “இன்றிரவு” என்றாள் திரௌபதி. “இன்றிரவா?” என்று அவள் மலைத்து நின்றுவிட்டாள். “ஆம், இன்றிரவு” என்று சொல்லி திரௌபதி தன் அறைக்குள் சென்றாள்.

சுபாஷிணி அவள் பின்னால் ஓடிவந்து “உங்கள் உடலில் காயங்கள் இருக்கின்றன, தேவி. மருத்துவச்சியை அழைத்து வரவா?” என்றாள். “ஆம், நான் நீராடி மாற்றுடை அணியவும் வேண்டும்” என்றாள் திரௌபதி. சுபாஷிணி “மெய்யாகவா சொன்னீர்கள், தேவி? இன்றிரவு அவன் கொல்லப்படுவானா?” என்றாள். அவள் விழிகளை நோக்கி “ஐயமே வேண்டியதில்லை, அவன் நெஞ்சு பிளக்கப்படும்” என்றாள் திரௌபதி.

மாற்றாடையை எடுத்துக்கொண்டு அவள் நீராட்டறைக்குச் சென்றபோது சுபாஷிணியும் பின்னால் ஓடிவந்தாள். “என்னால் நிற்க முடியவில்லை. கால்கள் பதறிக்கொண்டே இருக்கின்றன” என்றாள். திரௌபதி அவள் தோளை தட்டினாள். “இது நிகழ்ந்தாகவேண்டும், தேவி. நிகழவில்லையென்றால் என்னைப்போன்றவர்கள் உயிர் வாழவே வேண்டியதில்லை என்று தோன்றிவிடும். உங்களாலேயே வெல்லமுடியாத

இக்களத்தில் வெறும் புழுக்கள்போல நெளிவதே எங்கள் ஊழ் என்று எண்ண ஆரம்பிப்போம்” என்றாள்.

அவள் கண்கள் நீர்கொள்ள முகம் சிவந்திருந்தது. “எங்களில் ஒருத்தியாக அங்கே அவையில் நீங்கள் நின்றிருந்தீர்கள். ஒருவேளை ஒரு களத்திலும் நாங்கள் எதிர்த்து நிற்கமுடியாமல் போகலாம். ஆனால் உங்களைப்போல மாறி எங்கள் கற்பனையில் ஒரு வாழ்க்கையை நடித்துக் கொண்டிருக்கிறோம். இங்கிருக்கும் இத்தனை இழிவுக்கும் சிறுமைக்கும் மாற்றென்று அது எங்களுக்குள் ஒளியுடனிருக்கிறது. நீங்கள் தோற்றால் அதையும் இழந்துவிட்டிருப்போம். பிறகு இப்புவியில் பற்றுக்கோடென்று எதுவுமில்லை. பெண்ணென்று உயிர் வாழ்வதற்கு பொருளேதுமில்லை. வெறும் விலங்கு வாழ்க்கை” என்றாள்.

திரௌபதி அவளை நோக்கி புன்னகைத்து “என்னில் ஒரு துளியை உனக்குத் தருகிறேன். போதுமா?” என்றாள். “போதும். அது விண்ணில் இருந்து ஆகாய கங்கை என் மேல் இறங்குவதுபோல. என்னை அது அடித்துக்கொண்டு சென்றுவிடலாம். என்னை நொறுக்கி வீசலாம். ஆனால் எனக்கு அது வேண்டும்” என்றாள் சுபாஷிணி. “இன்று அதை நூறுமுறை எனக்கு நானே சொல்லிக்கொண்டேன். இங்கிருப்பவர்கள் எப்படிப்பட்ட புழுக்கள் என்று இன்று அறிந்தேன்.”

ஆடைகளைக் களைந்தபடி “என்ன?” என்றாள் திரௌபதி. “பாருங்கள் தேவி, அவ்விழிமகனின் மஞ்சத்திற்குச் சென்று உடல் சிதைந்து உளம் சிறுமைப்பட்டு வராத பெண்கள் இங்கு மிகக் குறைவு. அவனை அவை முன் இழுத்து நிறுத்திய உங்களை அவர்கள் கொண்டாடத்தானே வேண்டும்? ஆனால் நீங்கள் எதிர்த்து வென்று மீண்டதை எண்ணி இவர்கள்

பொறாமை கொள்கிறார்கள். நீங்களும் அவனிடம் சென்று சிறுமைகொண்டு சிதைந்திருக்க வேண்டுமென்று விரும்புகிறார்கள். இன்று அவர்களின் பேச்சுக்களைக் கேட்டு குருதிக்கொந்தளிப்படைந்தேன். ஒருத்தியின் சங்கையாவது கடித்து குருதியுண்டு கூத்தாடவேண்டுமென்று எண்ணினேன்."

"கொற்றவை ஆக விழைகிறாயா?" என்றாள் திரௌபதி. "ஆம், பெண்ணெனப் பிறந்தவள் ஒரு முறையாவது கொற்றவை என்றாக வேண்டும்... இல்லையேல் அவள் வெறும் உடலீனும் உடல்" என்றாள் சுபாஷிணி. "இந்தப் பெண்கள் ஒவ்வொருவரின் முகத்தையாக பார்க்கையில் ஒன்றை உணர்ந்தேன். சிறுமை நோக்கி செல்வது வரைதான் அது சிறுமையென்று நமக்கு தெரிந்திருக்கும். அதில் விழுந்து அதை உண்டு அதில் திளைக்கத் தொடங்கும்போது அது அமுதென்றாகிவிடுகிறது. அதுவன்றி பிறிதேதும் தெரியாமல் ஆகிவிடுகிறது. இங்கிருக்கும் பெண்கள் இழிவுபடுத்தப்பட்டவர்கள். அதனூடாக தாங்களும் இழிந்தவர்களாக ஆகிவிட்டவர்கள்."

திரௌபதி நீராட்டறைத் தொட்டிகளில் நிறைந்த குளிர்ந்த நீரை அள்ளி தன் உடல்மேல் விட்டுக்கொண்டாள். சுபாஷிணி "நான் உங்களுக்கு நீராட்டி விடவா? என்றாள். "வேண்டியதில்லை. என்பொருட்டு நீ ஒரு தூது செல்ல வேண்டும்" என்றாள் திரௌபதி. அவள் "எவரிடம்?" என்றாள். "அடுமனைக்குச் செல்" என்றாள் திரௌபதி. அவள் பாய்ந்து திரௌபதியின் கைகளை பற்றிக்கொண்டு "வலவரிடம்தானே ?" என்றாள். "எப்படி தெரியும் உனக்கு?" என்றாள் திரௌபதி. "நான் உய்த்தறிந்துவிட்டிருந்தேன். அவரேதான். ஏனெனில் அவரால் மட்டும்தான் இயலும்."

திரௌபதி “அவர்தான்” என்றாள். சுபாஷிணி புன்னகைத்து “அவர்தான் கந்தர்வர்களில் முதன்மையானவரா?” என்றாள். திரௌபதி சிரித்தாள். “இன்றிரவு பெரிய மலர்த்தோட்டத்தின் கொடிமண்டபத்தில் நான் கீசகனை சந்திக்கவிருக்கிறேன். அதை மட்டும் வலவரிடம் சொல்” என்றாள். சுபாஷிணி முகம் சிவந்து “ஆம்” என்றாள். அவள் கண்களை கூர்ந்து நோக்கி “அடுமனையில்தான் சம்பவனும் இருப்பார். அவர் வலவர் ததும்பிச் சொட்டிய ஒரு துளி” என்றாள்.

சுபாஷிணி முகம் சிவந்து உடல் குறுகி இரு கைகளைக் கூப்பி அதன்மேல் மூக்கை வைத்து குனிந்தபடி அசையாமல் நின்றாள். அவள் கழுத்தும் தோள்களும் மயிர்ப்பு கொண்டன. “செல்க!” என்றபடி திரௌபதி நீராடத் தொடங்கினாள்.

தன் அறையில் சிறிய ஆடியை நோக்கி திரௌபதி அணிபுனைந்துகொண்டிருக்கையில் சுதேஷ்ணை வந்து அவள் அறை வாயிலில் நின்றாள். யாரோ சேடி என்று எண்ணி இயல்பாகத் திரும்பிய திரௌபதி அரசியைக் கண்டதும் எழுந்து நின்றாள். “நான் அங்கு வந்திருப்பேனே, அரசி?” என்றாள். “நீ வரமாட்டாய் என்று எனக்குத் தெரியும். உன்னிடம் நான் ஓரிரு சொற்கள் சொல்லவேண்டியிருக்கிறது. ஆகவேதான் வந்தேன்” என்றாள். “உள்ளே வாருங்கள்” என்று திரௌபதி அழைத்தாள். உள்ளே வந்து கதவை சாத்தியபின் சிறு பீடத்தில் சுதேஷ்ணை அமர்ந்துகொண்டாள்.

“உன்னை கீசகனிடம் அனுப்பியவள் நான் என்று இவ்வரண்மனைச் சேடியர் அனைவரும் அறிந்துவிட்டனர். என் அறையிலிருந்து இங்கு நடந்து வருவதற்குள்ளேயே இங்குள்ள அத்தனை கண்களிலும் வெறுப்பையும் ஏளனத்தையுமே

கண்டேன். மூன்று முறை அரசரின் அணுக்கன் வந்து என்னை அவர் சந்திக்க விரும்புவதாக சொன்னான். சென்று பார்த்தால் என் முகத்தை நோக்கி அவர் என்ன கேட்கப்போகிறார் என்று நான் நன்கறிவேன். அச்சொற்களை அஞ்சித்தான் என் அறைக்குள் சுருண்டு கொண்டிருக்கிறேன்" என்றாள்.

கைகளைக் கட்டி சுவரில் சாய்ந்து நின்றபடி திரௌபதி அவள் பேச்சை கேட்டாள். "நான் பேச விழைவது உண்மையில் உன்னிடமல்ல, உத்தரையிடம். இனி இப்பிறவியில் அவள் முகம் நோக்கி என்னால் உரையாட முடியாதோ என்று ஐயுறுகிறேன். அது என் இறப்பு, மீளா நரகம். உன்னிடம் பேசிவிட முடிந்தால் ஒருவேளை அவளிடம் பேசும் துணிவு எனக்கு கிடைக்கலாம். நீயேகூட என்னைப் பற்றி ஓரிரு சொற்கள் சொல்லவும் கூடும். அதன்பொருட்டே உன்னை சந்திக்க வந்தேன்."

திரௌபதி ஒன்றும் சொல்லாமல் சற்றே தலைசாய்ந்து கேட்டு நின்றாள். "ஆம், உன்னை நான் அங்கு அனுப்பினேன். ஆனால் அவனுடைய மஞ்சத்திற்கு அல்ல. அவன் காமத்திற்கு நீ ஆட்பட மாட்டாய் என்று நன்கறிந்திருந்தேன். அவனிடம் அவன் எல்லை என்னவென்று நீ சொல்வாய் என்றும் அவனை அடக்கி மீள்வாய் என்றும்தான் எண்ணினேன். நீயே அறிவாய், நீ செல்கையில் அதை சொல்லித்தான் உன்னை அனுப்பினேன்" என்றாள் அரசி. "எனக்கு வேறு வழி தெரியவில்லை. உத்தரையின்பொருட்டே நான் இதை செய்தேன். நீ அதை உத்தரையிடம் சொல்ல வேண்டும்."

திரௌபதி "நீங்களே அவரிடம் சென்று உளமிச்சமில்லாமல் திறந்து நிற்பதொன்றே வழி. எண்ணிச் சூழ்ந்து சொல்லப்படும் எச்சொற்களும் அவர் உள்ளத்தை கரைக்காதென்று

தோன்றுகிறது” என்றாள். “நான் எண்ணிச் சூழவில்லை. என் உளம் திறந்தே சொல்கிறேன். எந்த சூழ்ச்சியும் இன்றித்தான் நான் உன்னை அனுப்பினேன். மதுவருந்தி தளர்ந்திருக்கும் அவனுக்கு உன்னை வெல்ல முடியாதென்று அறிந்திருந்தேன்” என்றாள் சுதேஷ்ணை.

திரௌபதி அவள் விழிகளை நோக்கி “அல்ல” என்றாள். அவள் முகம் மாறி “என்ன சொல்கிறாய்? என்னை பொய்யள் என்கிறாயா?” என்றாள். “இப்போது நீங்கள் சொல்வது உண்மையென்றால் இந்த அகத்தளத்தின் அத்தனை சேடியரும் அவன் மஞ்சத்திற்குச் சென்று அவ்விழிமகனின் பெருங்கைகளுக்குச் சிக்கி உடல் சிதைந்து, ஆன்மாவில் சிறுமை நிறைத்து மீண்டு வருவதை அறிந்தும் அறியாதவர்போல் இருந்திருக்க மாட்டீர்கள்” என்றாள் திரௌபதி.

முகம் இழுபட்டு, வாய் திறந்து, பற்கள் தெரிய “நான் என்ன செய்ய முடியும்? இந்த அரண்மனையே அவன் ஆட்சியில் இருக்கிறது” என்றாள் சுதேஷ்ணை. “அப்படியென்றால் இன்று ஏன் கீசகன் அவையிலிருந்து விலகிச் சென்றான்?” என்றாள் திரௌபதி. சுதேஷ்ணை “ஏனெனில் அங்கு உத்தரை வந்தாள். அவளை நம் குலதெய்வத்தின் உருவென்று நிஷதகுடிகள் எண்ணுகின்றன. அவள் அங்கு குருதி சிந்தியிருந்தால் நம் குடியினர் ஒருபோதும் கீசகனை விட்டுவைக்க மாட்டார்கள்” என்றாள்.

“அரசி, நான் கேட்பது இதைத்தான். ஏன் உத்தரைபோல் நீங்கள் எழுந்து நின்றிருக்கக்கூடாது?” அந்த வினாவை அத்தனை அருகே எதிர்கொள்ள முடியாமல் சுதேஷ்ணையின் வாய் மெல்ல திறந்தது. இருமுறை சொல்லெடுக்க முயன்று

உதடுகள் வெறுமனே அசைந்தன. “அறமிலாதது என்று தான் உணர்ந்ததன் முன் அக்கணமே உயிர்கொடுக்கத் துணிந்து அவர் நின்றார். அத்துணிவு உங்களுக்கு இருந்திருந்தால் இத்தனை ஆண்டுகள் இவ்விழிவில் நீந்தியிருக்கமாட்டீர்கள்” என்றாள் திரௌபதி.

சுதேஷ்ணை வலிகொண்டவள்போல் பல்லை கடித்தாள். “சற்று முன் ஒரு சேடிச்சிறுமி சொன்னாள். இழிவில் திளைப்பவர்கள் அதில் மகிழத் தொடங்கிவிடுகிறார்கள் என்று” என்றாள் திரௌபதி. “நீ என்னை வேண்டுமென்றே சிறுமை செய்கிறாய். என்னை பழி வாங்க நினைக்கிறாய்” என்று மூச்சொலியுடன் சுதேஷ்ணை சொன்னாள்.

“இல்லை, உங்கள் முன் ஒரு சிறு ஆடியை காட்டுகிறேன்” என்றாள் திரௌபதி. “உங்கள் காவலுக்கென்று என்னை ஏற்றுக்கொண்டீர்கள். உங்கள் உயிரை என்னிடம் ஒப்படைத்தீர்கள். ஆனால் மெல்ல மெல்ல என்னைக் கண்டு பொறாமை கொள்ளத் தொடங்கினீர்கள்.” சுதேஷ்ணை மிகையான இளக்காரத்துடன் நகைத்து “உன்னைக் கண்டா? உன்னைக் கண்டு நான் ஏன் பொறாமை கொள்ளவேண்டும்? நான் கேகயனின் மகள். இத்தேசத்தின் பேரரசி” என்றாள்.

“இதை இப்படி உங்களுக்கே நீங்களே பல நூறுமுறை சொல்லிக்கொள்ள வேண்டியிருக்கிறது. அதனால்தான் இயல்பாக இவ்வரியணையில் அமர உங்களால் இயலவில்லை” என்று திரௌபதி சொன்னாள். “உங்கள் விழிகள் மாறிவருவதை நான் பார்த்தேன். அது இவ்வரண்மனையில் ஒவ்வொருவரும் என்மேல் தொடுக்கும் விழிகள் மாறுவதை நீங்கள் பார்த்தமையால் என அறிந்தேன். நாம் இருவரும் நடந்து செல்கையில் எதிர்வருபவர்கள் தலைவணங்கினால்

அவர்கள் எனக்காகத்தான் வணங்குகிறார்களா என்ற கணநேர எண்ணம் உங்கள் உள்ளத்தில் ஓடிச்சென்றது.”

“மூடு வாயை” என்றபடி அரசி எழுந்தாள். “உங்கள் கனவுகளில் என்ன நடந்தது என்று நான் சொல்லவா?” என்றாள் திரௌபதி. “உன்னுடன் நான் பேச விரும்பவில்லை. என்னை இழிவுபடுத்துவது எப்படி என்று நன்கறிந்திருக்கிறாய். இத்தனை நாள் என்னுடன் இருந்து என் உப்பைத் தின்று நீ கற்றது இதுதான் போலும்” என்றபடி சுதேஷ்ணை எழுந்து வாயிலை நோக்கி சென்றாள்.

“என்னை வெறும் சேடியென்றாக்குவதற்கு எளிய வழி கீசகனின் மஞ்சத்திற்கு அனுப்புவதுதான் என்று முடிவெடுத்தீர்கள், அரசி. அது நீங்கள் என்மீது கொள்ளும் முழுமையான வெற்றியாக அமையும் என்று எண்ணினீர்கள். நாகசூதப் பெண் தமயந்தி சேதிநாட்டு அரண்மனையில் சேடியாக வாழ்வதைப்பற்றி சொல்லிக்கொண்டிருந்தபோது நீங்கள் எண்ணியது என்னைப் பற்றித்தான். என்னை எளிய சேடியென்றாக்குவது எப்படி என்று மட்டும்தான்.”

“நீ யார்? பிறர் உள்ளம் அறிந்த மாயாவியா? நீ எண்ணுவதை எல்லாம் பிறர் மேல் சுமத்துகிறாய். அதனூடாக நீ தூயவள் என்றும் ஆற்றல் மிக்கவள் என்றும் ஆக முடியுமென்று எண்ணுகிறாய். இது வெறும் ஆணவம்” என்று சுதேஷ்ணை கூவினாள். “ஆம், உன்னை நான் வெறுத்தேன். உன்மேல் கசப்பு திரண்டது என்னுள். அது உன்மேல் நான் கொண்ட பொறாமையால் அல்ல. உன்னிடம் இருக்கும் இந்தக் கீழ்மை நிறைந்த ஆணவத்தால்தான்.”

“ஆணவம் அற்றோர் அறத்தில் நிற்பதில்லை. நான் அறத்தோள் என்று உணரும் ஆணவமே தெய்வங்களுக்கு உகந்த உணர்வு” என்றாள் திரௌபதி. “அரசி, தலை எழுந்து நிற்பதற்குத் தேவையானது முதுகெலும்பு. இந்த ஆணவத்தில் ஒரு துளியேனும் உங்களிடம் இருந்திருந்தால் இந்நகர்மேல் கீசகனின் நிழல் இப்படி கவிந்திருக்காது.”

கதவைப் பற்றியிருந்த சுதேஷ்ணையின் கைகள் நடுங்கின. அனலருகே நின்றவள் என அவள் முகம் சிவந்து வியர்த்திருக்க கண்களிலிருந்து நீர் வழிந்தது. “பேரரசி, ஒன்று அறிக! கீசகன் வேறு யாருமல்ல, உங்கள் மறுவடிவம்தான். அச்சத்தாலோ தன்னலத்தாலோ நீங்கள் அவனை இங்கு கொண்டு நிறுத்தவில்லை. அவன் வடிவாக இந்நகரை ஆளும்பொருட்டே அதை செய்தீர்கள்” என்றாள் திரௌபதி. “அவன் மீது நீங்கள் கொண்ட அச்சம் உங்கள்மேல் நீங்கள் கொண்ட அச்சமேதான்.”

சுதேஷ்ணை கதவைத் திறந்து வெளியேறிச்சென்று துரத்தப்பட்டவள்போல் இடைநாழியில் விரைந்தாள். திரௌபதி பின்னால் வந்து கதவைப் பற்றியபடி நின்று அவள் விரைந்து செல்வதை பார்த்தாள். அப்பால் நின்றிருந்த காவல் சேடி பேரரசியைத் தொடர்ந்து ஓடுவதா வேண்டாமா என்று திகைத்தாள். திரௌபதி அவளிடம் அருகே வரும்படி தலையசைத்தாள். அவள் அருகே வந்ததும் “பிரீதையை வரச்சொல்” என்றாள்.

# நீர்க்கோலம் - 73

**72. ஆடியிலெழுபவன்**

✿கீசகன் அணிபுனைந்துகொண்டிருந்தபோது பிரீதை வந்திருப்பதை காவலன் அறிவித்தான். அவன் கைகாட்ட அணியரும் ஏவலரும் தலைவணங்கி வெளியே சென்றனர். உள்ளே வந்து வணங்கிய பிரீதை “அவளும் அணிபுனைந்துகொண்டிருக்கிறாள்” என்றாள். கீசகன் புன்னகையுடன் “நன்று” என்றான். “அவள் கோரிய அனைத்தும் அளிக்கப்படும் என்று மீண்டும் நான் சொன்னதாக சொல்…” பிரீதை பேசாமல் நின்றாள். “என்ன?” என்றான் கீசகன். “அவள் கோருவன எளியவை அல்ல. தாங்கள் அவற்றை உய்த்துணர்ந்திருக்கிறீர்களா என ஐயுறுகிறேன்.”

கீசகன் உரக்க நகைத்து “அவள் அத்தனை எதிர்வு காட்டியபோதே நான் அவள் கோருவன பெரியவை என புரிந்துகொண்டேன். நான் எண்ணியதைவிடவும் நுண்மையும் ஆற்றலும் கொண்டவள். மிக எளிதாக என்னை அரசரவைக்கு கொண்டுசென்று குடிநெறிமுன் சிக்க வைத்துவிட்டாள். பொறியில் கால் சிக்கிய யானைபோல நான் நின்றிருக்கையில் என்னிடம் அவள் நிலைபேசத் தொடங்குகிறாள். இன்று எனக்கு வேறுவழியே இல்லை…” என்றான்.

“உண்மையில் நான் அவளையும் பிற பெண்டிரைப்போல நுகர்ந்து வீசவே எண்ணியிருந்தேன். இங்கு எவளையும் மணமுடிக்கும் எண்ணம் எனக்கில்லை. விராடத்தின் முடிசூடியபின் முதன்மை ஷத்ரியகுலம் ஒன்றில் இருந்து மகட்கோள் என்பதே என் திட்டம். அது கிழக்கே காமரூபமோ வடக்கே திரிகர்த்தர்களோ… ஷத்ரியக் குருதியாக இருக்கவேண்டும். இல்லையேல் என் கொடிவழியினர் இந்த அரியணையில் நீடிக்க முடியாது” என்றான் கீசகன். “ஆனால்

இவள் இயற்றிய இந்தப் பெருஞ்சூழ்ச்சியை காண்கையில் இவளை நான் துறக்கமுடியாதென்று உணர்கிறேன்.”

“என்னிடமில்லாதது சூழ்ச்சித்திறனே. அதனால்தான் இத்தனை காலம் இங்கே அடங்கியிருக்கிறேன். இவள் என் அரசியானால் தோளாற்றலுடன் மதியாற்றலும் இணையும். ஆகவே அந்தக் கோரிக்கையை நான் உண்மையாகவே ஏற்றுக்கொண்டிருக்கிறேன்” என்று கீசகன் சொன்னான். பிரீதை “பட்டத்தரசியாகவா?” என்றாள். “அதை அவளிடமே பேசிக்கொள்கிறேன். அவளே இந்நகரை முழுதாளும் அரசியாக இருப்பாள். நான் ஷத்ரிய அரசகுலத்தில் பெண்கொண்டு அவளை பட்டத்தரசியாக்கினாலும் அவள் இவளுக்கு அடங்கியிருப்பாள். பட்டத்தரசி பெறும் மைந்தர் விராடபுரியை ஆள்வார்கள். ஆனால் இவள் பெறும் மைந்தருக்கும் நிலம் வென்று தனியரசு அமைத்துக்கொடுப்பேன். அவர்களும் கோல்கொண்டு அரியணை அமர்வார்கள்.”

பிரீதை “இது அவள் கோரியதை விட மிகுதி” என்றாள். “ஆம், இனி சைரந்திரியிடம் சொல்சூழ்வதில் பொருளில்லை. அவள் கழுகு என பறக்கையில் நான் நிலத்தில் ஊர்ந்துகொண்டிருக்கிறேன். எல்லாவற்றையும் அவளிடம் திறந்து வைத்து நிற்பேன். அவளே என்னையும் கொண்டுசெல்லட்டும். இந்நாட்டை நான் வெல்வது இனி அவளுடைய வெற்றி. அவளுக்குப் பிறக்கவிருக்கும் மைந்தரின் நலன்.”

பிரீதை சில கணங்கள் பேசாமல் நின்றுவிட்டு “ஆனால் அவளை முறைப்படி மணம்கொள்வதை நாளை குடியவையில் நீங்களே அறிவிக்கவேண்டும் என்பது…” என தொடர அவன் கையமர்த்தி “அதை அவள் கோராமலிருக்கமாட்டாள்.

அவளுடைய சூழ்ச்சியின் உச்சம் அது. அவள் என் தனிச்சொல்லை நம்பவில்லை. அரசியலறிந்தோர் ஒருபோதும் தனிச்சொற்களை ஏற்கமாட்டார்கள். குடியவையில் அறிவித்த பின்பு நான் பின்னடி வைக்கமுடியாது. குடியவையில் நான் முதலிலேயே எழுந்து அவளை நான் முறைப்படி மணந்துவிட்டதாக அறிவித்தால் அவள் அதை ஏற்று தன் சொல்லை உரைப்பாள். சற்று தயங்கினால்கூட நான் அவளை பெண்சிறுமை செய்ததாகச் சொல்லி என்னை குடிவிலக்கு நோக்கி கொண்டுசெல்வாள்" என்றான்.

பிரீதை பெருமூச்சுடன் "அவள் யார்? இத்தனை நுண்சூழ்ச்சிகளைச் செய்ய எங்கே பயின்றாள்?" என்றாள். "அவள் எவரென ஒருபோதும் நான் கேட்கக்கூடாது, அறிந்தாலும் அதை உளம் கொள்ளக்கூடாது. அதன்பொருட்டு அவள் முடிநீக்கம் செய்யப்படக்கூடாது என்பது அடுத்த கோரிக்கை. அதுவே அவள் யார் என்று காட்டுகிறது. அவள் உடன்கட்டை ஏறுவதைத் தவிர்த்து தப்பி வந்த அரசகுலமகள். சிதையேற ஒப்புக்கொண்டு சந்தனமும் மாலையும் அணிந்து சுடலைவரை சென்றபின் அஞ்சித்திரும்பும் பெண்ணை அக்குடி தேடிச்சென்று கொன்றொழிப்பது வழக்கம். ஏனென்றால் தெய்வங்கள் அவளை பலியாக ஏற்றுக்கொண்டுவிட்டன. பலிவிலங்கு தப்பிச்சென்றால் தெய்வங்கள் சினம் கொள்கின்றன. அவற்றின் பழியை அக்குடி தவிர்க்கவே முடியாது" என்றான் கீசகன்.

புன்னகையுடன் "அவள் தன் குழலை முடிவதோ மலர்சூடுவதோ இல்லை, அதை நீ நோக்கியிருப்பாய்" என்றான். பிரீதை "ஆம்" என்றாள். "அது கைம்பெண்களுக்கான நெறி. அவள் என்னை மணந்த பின்னரே முடிசுற்றிக்கட்டி

மலர்சூடுவாள்" என்றான் கீசகன். "அவள் இங்கே முடிசூட்டிக்கொண்டாளென்றால் உடனே அவள் எவரெனத் தெரிந்து அந்த அரசகுடி அவளை ஒப்படைக்க வேண்டுமென நம்மிடம் கோரும். போருக்கும் எழக்கூடும். நம் குடிகளில் சிலரும் அவளுக்கு எதிராகத் திரும்பலாம். ஆகவேதான் முன்னரே அதற்கும் என்னிடம் சொல்லுறுதி கோருகிறாள்."

பிரீதை மீண்டும் நீள்மூச்சுவிட்டு "நான் சென்று அவளை அழைத்துக்கொண்டு கொடிமண்டபத்திற்கு வருகிறேன்" என்றாள். "கொடிமண்டபத்தைச் சுற்றி நான் என் காவல்படையினரை நச்சு அம்புகளுடன் நிறுத்தியிருக்கிறேன். கால்தவறிக்கூட எவரும் அங்கே வந்துவிடக்கூடாது" என்று கீசகன் சொன்னான். "ஆம், நான் சேடியரிடம் இன்று கொடிமண்டபத்தில் கன்னிப்பூசனை நிகழவிருப்பதாகவும் அதிலீடுபடும் அரசகுடி ஆண்கள் அன்றி எவரும் அங்கே செல்லக்கூடாதென்றும் சொல்லிவிட்டேன்."

கீசகன் அவள் தோளைத்தட்டி "நன்று" என்றான். அவள் விசும்பி அழும் ஒலிகேட்டு குனிந்து நோக்கி "என்ன? ஏன் அழுகிறாய்? என்ன நிகழ்ந்தது?" என்றான். "ஒன்றுமில்லை" என்றாள் பிரீதை. "சொல், என்ன நிகழ்ந்தது? ஏன்?" என்றான் கீசகன். "நான் உங்களுக்கு அடிமையானது பதினாறாண்டுகளுக்கு முன்பு... அன்றுமுதல்..." என்று விம்மி அவள் முகத்தை மூடிக்கொண்டாள். "அதனாலென்ன? நீ என்றும் என் அணுக்கியே." அவள் "இனி அப்படி அல்ல. என்னை அவள் அணுகவிடமாட்டாள். அவள் என்னை நடத்தும்முறை..." என்று மீண்டும் சொல்முறிய விசும்பினாள்.

கீசகன் புன்னகைத்து "இவ்வளவுதானா? இதற்காகவா?" என்றான். "நீ விழைவதென்ன? உன் இடம், அவ்வளவுதானே? நான்

முடிசூடிக்கொண்டால் எல்லைப்புற கோட்டைச்சிறுநகர் ஒன்றை உனக்கென்றே அளிக்கிறேன். அங்கே நீ என் அரசியரில் ஒருத்தியாக தலைமை கொண்டு அமரலாம். மைந்தரையும் பெற்றுக்கொள்ளலாம். உன் மைந்தர் அங்கே காவல்படைத் தலைவர்களாக ஆவார்கள்.” அவள் திடுக்கிட்டு அவனை பார்த்தாள். அவள் தலை நடுங்கியது. உதடுகள் அழுகையென நெளிந்தன. “மெய்யாகவா?” என்றாள்.

“ஆம், மெய்யாக. என் குலதெய்வங்கள்மேல் ஆணையாக!” அவள் நீர் நிறைந்த கண்களால் அவனை நோக்கிக்கொண்டிருந்தாள். “நம்பு, நான் அளிக்கும் அன்புக்கொடை இது. நீ அவள் முன் வரவே வேண்டாம். எல்லையில் நான் வரும்போது மட்டும் சந்திப்போம். விலகிச் சென்றால் அவள் உன்னை மறந்தும் விடுவாள்.” பிரீதை மெல்ல இளகி இதழ்கள் வளைய கசப்புடன் சிரித்து “அவளைப்போல நான் உங்கள் சொல்லுக்கு பிறிதொரு பூட்டும் போட்டுக்கொள்ளமுடியாது” என்றாள். “இது என் சொல்... அவளுக்கு என்னைத் தெரியாது” என்றான் கீசகன்.

“எனக்குத் தெரியும்” என்று அவள் சொன்னாள். “என்ன சொல்கிறாய்?” என்றான் கீசகன் சினத்துடன். “என்ன வேண்டுமென்றாலும் ஆகுக! நீங்கள் இதை எனக்கு சொன்னீர்கள் என்பதே எனக்குப் போதும். அறியா அகவையில் உங்களுக்கு ஆட்பட்டது என் நெஞ்சம். பிறிதொன்றில்லாமல் இதுவரை வந்துவிட்டேன். என் படையலுக்கு மாற்றாக இதுவரை எதுவும் பெற்றதில்லை. இச்சொல்லையே நீங்கள் அளிக்கும் அருள் எனக் கொள்கிறேன்” என்றாள். “இதோ பார்...” என அவன் பேசத்தொடங்க அவள் தலைவணங்கி விலகிச்சென்றாள்.

மீண்டும் அணியரும் ஏவலரும் வந்து அவனை ஒருக்கத் தொடங்கினார்கள். அவன் ஆடியில் தன் உருவம் மறைந்து அங்கு ஒரு அணிச்சிலை எழுவதை நோக்கிக்கொண்டிருந்தான். தன் பெருந்தோள்களை நோக்குவது எப்போதுமே அவனுக்கு பிடிக்கும். தசைகளை உருட்டி உருட்டி நாளெல்லாம் நோக்கிக்கொண்டிருப்பான். ஆனால் ஆடி நோக்குவது குறைந்து நெடுநாட்களாகின்றன என அப்போது அறிந்தான். ஏன் என்றும் அவன் அறிந்திருந்தான். ஆடியில் நோக்கும்போதெல்லாம் தன் உடலின் குறைகள் அவனுக்கு தெரியத் தொடங்கின. அவன் தோள்கள் பெருத்திருந்தாலும் கழுத்துடன் இணைக்கும் தசை பொங்கி மேலெழுந்திருக்கவில்லை. நெஞ்சுக்குழிக்குக் கீழே வயிறு புடைத்து மேலே எழுந்திருந்தது. தொடைத்தசைகள் இறுக்கத்தைவிட எடையே கொண்டிருந்தன.

அக்குறைகளெல்லாம் வலவனுடன் தன் உடலை ஒப்பிட்டுக் கொள்வதனால் தெரிபவை என அவன் அறிந்த பின்பு ஆடியே கசப்பை அளித்தது. வெறியுடன் உடல்பயிலத் தொடங்கினாலும் உணவை ஒழிக்கவும் அந்தியில் மதுவிலாடாமலிருக்கவும் அவனால் இயலவில்லை. “மதுவுடன் நீங்கள் உண்ணும் இனிப்புகளும் கொழுப்புகளுமே உங்களை எடைகொள்ளச் செய்கின்றன, படைத்தலைவரே” என்றார் படைப்பயிற்சியாளரான சிம்மர். “ஊனுணவை மட்டும் உண்ணுங்கள். வேகவைத்த ஊன் எத்தனை உண்டாலும் உடல் பெருக்காது.” அவன் ஆம் என தலையசைத்தாலும் ஒவ்வொருநாளும் அவன் ஆணையில் நிற்காமல் நழுவிச் சென்றுகொண்டிருந்தது.

ஆடிப்பாவையை திரும்பித் திரும்பி பார்த்தான். அருகே நின்றிருந்த சமையன் “யட்சர் போலிருக்கிறீர்கள்,

படைத்தலைவரே” என்றான். “அணி முடிந்தபின் முகமனும் உரைக்கவேண்டும்போலும்” என்றான் கீசகன் நச்சு கலந்த சிரிப்புடன். “இல்லை, மெய்யாகவே சொல்கிறேன். இத்தனை பேருடல் மானுடருக்கு அரிதாகவே அமைந்துள்ளது.” கீசகன் “அரிதாக என்றால்?” என்றான். சமையன் “மிகச் சிலருக்கு” என்றான். “எவருக்கு?” என்றான் கீசகன். “நான் நேரிலறிந்தவர்கள் மகதமன்னர் ஜராசந்தரும் வங்கரான பகதத்தரும் மட்டுமே.” கீசகன் “பிற எவரெல்லாம்?” என்றான். சமையன் தயங்கினான். “சொல்” என்றான் கீசகன்.

“நீங்கள் அறிந்தவர்கள்தான் அனைவரும். அஸ்தினபுரியின் பீமசேனர்.” கீசகன் தன் உள்ளே ஒரு முரசதிர்வை கேட்டான். “ம்” என்றான். “அவர் குடியில் முன்னுருவென இருப்பவர் சிபிநாட்டு பால்ஹிகர்” என்றான் சமையன். “சொல்” என்றான் கீசகன். “சூதமன்னர் கர்ணனும் பெருந்தோளன் என்கிறார்கள்.” கீசகன் “ம்” என்றான். நீண்ட அமைதி ஒலிக்கவே திரும்பி நோக்கி “சொல்” என்றான். சமையன் “இது சமையனின் நாவால் சொல்லப்படுவது. அடுமனையாளன் வலவன்” என்றான். “ம்” என்றான் கீசகன். பின்னர் அவன் செல்லலாம் என கைகாட்டினான். தனிமையில் தன் உருவை ஆடியில் நோக்கியபடி நின்றான். ஆடிப்பாவை அவனை நோக்கிக்கொண்டிருந்தது, குழப்பத்துடன் எவரிடமென்றில்லாத சினத்துடன். ஒருகணம் அவன் ஓர் அச்சத்தை உணர்ந்தான். அவன் அங்கே இல்லை, ஆடிப்பாவை மட்டுமே இருந்தது.

பிரீதை வந்து வாயிலில் நின்றாள். அவ்வசைவு அவனை மீண்டும் திடுக்கிடச் செய்தது. “அவள் கொடிமண்டபத்திற்கு சென்றுவிட்டாள்” என்றாள். “நான் சொன்னதுபோலவே வெண்நீலப் பட்டாடைதானே?” என்றான் கீசகன். “ஆம்,

படைத்தலைவரே” என்றாள் பிரீதை. “நான் கொடுத்தனுப்பிய முத்தாரமும் மணிக்குழையும்?” என்று அவன் கேட்டான். அவள் எரிச்சலை மறைக்காமல் “நீங்கள் அனுப்பிய அணிச்சேடியரே அவளை ஒருக்கினர். நான் கைபற்றி கொண்டுசென்று கொடிமண்டபத்தில் அமரவைத்துவிட்டு வந்தேன். ஆணைப்படி அகல்விளக்கை எடுத்துச் சுழற்றி காவலருக்கு குறியளித்தேன். இனி எவரும் சோலைக்குள் நுழைய முடியாது” என்றாள்.

“நன்று” என்றான் கீசகன். அவள் தோளைத் தட்டி “இதன்பொருட்டு நான் உன்னிடம் மேலும் கனிவு கொள்கிறேன்” என்றான். அவள் மிக மெல்லிய ஓர் அசைவால் அவன் கையை விலக்கினாள். உண்மையில் அவ்வசைவு அவள் உடலில் வெளிப்படவே இல்லை. அவளுக்குள் எண்ணமென்றே நிகழ்ந்தது. ஆனால் அவன் கையில் அது தெரிந்தது. அவள் முகம் கூட மாறவில்லை என்பதை அவன் விந்தையுடன் எண்ணிக்கொண்டான். “நீ இங்கிரு... நான் காலைக்குள் வருவேன்” என்றபின் வெளியே சென்றான். அவள் செல்வாழ்த்தென ஏதும் சொல்லவில்லை என்பதை இடைநாழியில் நடக்கையில் உணர்ந்தான்.

இடைநாழி மிக நீண்டு செல்வதாக அவனுக்குத் தோன்றியது. அவன் கால்குறடுகளின் ஒலி சுவர்களிலும் தூண்களிலும் எதிரொலித்தது. நகரமெங்கும் பந்தங்களின் செவ்வொளி எழுந்து புழுதியிலும் புகையிலும் பட்டு ஒளிமீள்வு கொள்ள அந்தியென மாயம் காட்டியது வானம். அவ்வப்போது கொம்புகளும் முரசுகளும் முழங்க கூடவே மக்களின் பெருந்திரள் கூச்சல் எழுந்து திசைகளை அறைந்து ஒலியெதிர்வுகளை திரட்டிக்கொண்டது. கூத்தம்பலங்கள் அனைத்திலுமிருந்து

இசைச்சிதறல்கள் சாளரங்களினூடாக செவ்வொளியுடன் வெளிவந்து இருளில் நீண்டுநின்று அதிர்ந்தன.

அவன் மலர்க்காட்டுக்குச் செல்லும் வழியில் நின்றிருந்த கவச உடையணிந்த காவலனை நோக்கி மெல்ல தலையசைத்துவிட்டு கடந்து சென்றான். வேறெங்கும் காவலர் கண்களுக்குப் படவில்லை. ஆனால் தூண்களுக்குப் பின்னாலும் கூரைமடிப்புகளிலும் மரத்தழைப்புக்கு உள்ளேயும் அவர்கள் அமர்ந்திருக்கிறார்கள் என அவன் நுண்புலன் காட்டியது. மலர்க்காட்டுக்குள் ஒளியேதும் இருக்கவில்லை. அதுவரை விழிகளை நிறைத்திருந்த ஒளி மறைந்தபோது அனைத்தும் உருவிலியிருளாகத் தெரிந்தன. கண்களை விழித்து காலடிகளை மட்டும் நோக்கியபடி நடந்தான்.

மெல்ல விழிகள் புறஒளியை மறந்து உள்ளிருந்து எண்ணங்களின் ஒளியை கொண்டுவந்து நிறைத்துக்கொண்டன. வெளியே இருள்வடிவெனத் தெரிந்த ஒவ்வொன்றின் மேலும் நினைவுகளிலிருந்து உருவங்களைத் தேடி எடுத்து கொண்டுவந்து பொருத்தி காட்சியுலகொன்றை உருவாக்கிக் கொண்டன. அதில் அவன் கனவிலென நடந்தான். அது கனவென்று தோன்றுவதற்கு அந்த இருள்தான் ஏதுவா என எண்ணிக்கொண்டான். கூர்ந்து நோக்கும்தோறும் காட்சிகள் மங்கலாயின. ஆனால் கால்களும் கைகளும் அனைத்தையும் அறிந்திருந்தன.

மரமல்லிகளின் வெண்மலர்கள் இருட்டு பூத்தது என செண்டாகத் தெரிந்தன. வானொளியின் விளிம்பென இலைக்கூர்மைகள். அருகிருந்த இலைகள் மறைந்திருக்க அவற்றின் ஒளிமிளிர்வுகள் மட்டும் தெரிந்தன. இந்த இரவை நான் ஒருபோதும் மறக்கப்போவதில்லை என

எண்ணிக்கொண்டான். இவ்விரவுக்கென சற்றுமுன் எழுந்தவன் நான். ஒருபோதும் அறியாத ஒருவன். ஆயிரம் செவிகளும் ஆயிரம் கண்களும் ஆயிரம் மூக்குகளும் கொண்டவன். உடலே புலனென்றானவன். சிதறாத சீருளம் கொண்டவன். இது நான் அல்ல. ஆடியிலிருந்து எழுந்த யட்சன். அங்கே பாவை மறைந்த ஆடியை நோக்கியபடி நான் திகைத்து அமர்ந்திருக்கிறேன்.

அவன் தொலைவிலேயே கொடிமண்டபத்தில் அமர்ந்திருந்த சைரந்திரியை பார்த்துவிட்டான். தன் நெஞ்சின் ஓசையைக் கேட்டபடி அவன் அசைவிலாது நின்றான். ஒருகணத்தில் ஆவியாகி மறைந்து மீண்டும் படிந்து குளிர்ந்து ஈரமும் உயிர்ப்புமாக உடல்சூடியதுபோல் உணர்ந்தான். பெருமூச்சுவிட்டு தன்னை ஆற்றிக்கொண்டான். “பொறு, பொறு... இக்கணத்தில் இரு” என தன் உள்ளத்தை திரட்டிக்கொண்டான். ஏன் இப்படி பதறுகிறேன்? இவள்மேல் இத்தனை காமம் கொண்டிருக்கிறேனா? இது காமம்தானா? எனில் இதுவரை கொண்டது காமமே அல்ல. இது பிறிதொன்று. விடாய்போல பசிபோல உடல் தன்னை நிறைத்துக்கொள்வது. உடலென தன்னை உணரும் உள்ளம் கொள்ளும் எழுச்சி இது. இது நான் முழுமைகொள்வது. என் இடைவெளிகள் அனைத்தும் நிறைவது.

அவன் கீழே உதிர்ந்துகிடந்த மலர்களைக் கண்டான். அவற்றை குறடுகளால் மிதிக்கக் கூசி அவற்றை கழற்றிவிட்டு நுனிக்கால் எடுத்துவைத்து கொடிமண்டபம் நோக்கி சென்றான். மலர்கள் பட்டபோது உள்ளங்கால்கள் சிலிர்ப்படைந்தன. உடலைத் தொட்ட இலைநுனிகள் பூனைமூக்குகள்போல நாய்நாக்குகள்போல விதிர்ப்படையச் செய்தன. இத்தனை

நுண்ணுணர்வு கொண்டுவிட்டேனா? இப்போது ஒரு சிறுதென்றல் என்னைத் தூக்கி கொண்டுசெல்லக்கூடும். முகிலென நான் உருவழிந்து கீற்றுகளென்றாகி இந்த மரங்களிடையே பரவக்கூடும். இலைகளில் தண்பனிப்பாக பரவிவிடக்கூடும்.

கொடிமண்டபத்தின் படிகளில் ஏறி அவன் அவளை நோக்கியபடி நின்றான். வெண்நீல ஆடையை இருளில் தெரிவதற்காகவே அவன் தெரிவு செய்திருப்பதை அப்போதுதான் உணர்ந்தான். வெண்முத்தாரமும் வைரக் குழைகளும் ஆடையுடன் இணைந்து இருளில் எழுந்து தெரிந்தன. ஆடையால் முகம் மறைத்து ஒருக்களித்து மரப்பீடத்தில் அமர்ந்திருந்தாள். கொடிமுல்லை அவளருகே நீண்டிருக்க ஒரு கிளையை கையால் பற்றியிருந்தாள். அவன் அதுவரை தன்னுள் பெருகிய சொற்கள் எங்கு சென்றன என்று திகைத்தான். மூச்சு மட்டும் குளிராக உடலை மெய்ப்புகொள்ளச் செய்தபடி வந்துகொண்டிருந்தது.

பேசவேண்டும், பேசியாகவேண்டும். பேசு பேசு பேசு. அவன் “தேவி” என்றான். ஒலி எழவில்லை என உணர்ந்து மீண்டும் அழைத்தான். அது தொண்டையொலியாக வெளிப்பட்டது. “தேவி” என அழைத்தபோது அவ்வொலி அவனை திடுக்கிடச் செய்தது. அவள் உடலும் மெல்லசைவு கொண்டது. குரல் தாழ “நான்...” என்றபின் “என் வாழ்க்கையில் முழுமை என ஒன்று உண்டெனில் அது இன்று நிகழும்” என்றான். “ஆம்” என்றாள் அவள். “உன்னை பார்ப்பதற்குள்ளாகவே நீ என்னவள் என உணர்ந்துவிட்டேன். நீ அரண்மனைக்குள் நுழைந்தபோதே உன்னைப்பற்றி கோட்டைக்காவலர் என்னிடம் சொன்னார்கள். நீ என்னைத் தேடி வருவதாக உன் அணுக்கன் ஒருவன்

கோட்டைமுகப்பில் சொன்னான் என அறிந்தேன். அப்போதே உன் உள்ளத்தையும் அறிந்துகொண்டேன்.”

அவள் “ம்” என்றாள். “ஆனால் நாம் இணைய இத்தனை காலமாகியிருக்கிறது. இந்த விளையாட்டு சற்று கடுமையானதே. ஆனாலும் இது நன்று. நம் இருவரின் மதிப்பையும் ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டது இதனால்தான். நான் நீயில்லாமல் ஓயமாட்டேன் என்றும் நீ உன் இடத்திலன்றி அமையமாட்டாய் என்றும் தெளிந்தது இப்போது” என்றான் கீசகன். “ஏன் பேசாமலிருக்கிறாய்?” அவள் நீள்மூச்செறிந்தாள். “உன்னை பிரீதை இங்கு கொண்டுவந்துவிட்டாள் என அறிந்த பின்னரே இது மெய்யாகவே நிகழ்கிறது என என் உள்ளம் ஏற்றுக்கொண்டது.”

அவள் ஒன்றும் சொல்லவில்லை. “அவளைப் பற்றிய பேச்சு உனக்குப் பிடிக்கவில்லை அல்லவா?” என்றான் கீசகன். “நான் உன்னை வென்றாகவேண்டும் என்று என்னிடம் சொல்லிக்கொண்டே இருந்தவள் அவள்தான். எளிய வீட்டுவிலங்கு போன்றவள். காலடியை சுற்றி வருபவள். அவளை நீ ஒரு பொருட்டாகவே எண்ணவேண்டியதில்லை. அவள் எனக்கு தன்னை படைத்திருக்கிறாள். அதனூடாக தன் வாழ்க்கையை அமைத்துக்கொண்டிருக்கிறாள். ஆகவே சற்று பொறாமை கொள்கிறாள். அவளை நீக்கிவிடுகிறேன். நீ ஆணையிட்டால் இவ்வுலகிலிருந்தே.” அவன் நகைத்து “மலைத்தெய்வங்கள் முதற்பலியென பூசகனையே கொள்கின்றன என்பார்கள்” என்றான். அவளும் மெல்ல நகைத்தாள்.

“பிறகென்ன?” என்றபடி கீசகன் அருகே சென்றான். “உன் கோரிக்கைகளுடன் பிரீதை வந்தபோது நான் ஒருகணம்

வியந்தேன். அதை நம்பாமல் குழம்பினேன். அவற்றிலிருந்த உள்மடிப்புகளை விரிக்க விரிக்க அனைத்தும் தெளிவாகியது. நான் விரித்த வலையில் நீ சிக்கவில்லை. நீ விரித்த வலையில்தான் நான் சிக்கியிருக்கிறேன். ஆனால் மிக மகிழ்ச்சியுடன் இதில் இருக்கிறேன். இந்த வலையிலேயே என்னை வைத்திரு. இதுவே என் அரியணை, அரண்மனை" என்றான் கீசகன். "எனக்கே விந்தையாக இருக்கிறது. நான் இத்தனை அழகாகப் பேசுவேன் என எண்ணியதே இல்லை. உன் அறிவில் சில திவலைகள் எனக்கும் வந்துவிட்டனபோலும்."

அவள் கூந்தல் தரைவரை வழிந்து கிடந்தது. அவன் மெல்ல அதை தொட்டான். "உன்னிடம் நான் பித்து கொண்டதே இக்கூந்தலழகைக் கண்டுதான். இதை கவிதையாக்குக என என் அவைச்சூதரிடம் சொன்னேன். தேவகன்னி ஏறிய கருமுகில் என்றான் ஒருவன். பொருந்தவில்லை என்றேன். எரிதழல் கொற்றவை ஏறிய மதகரி என்றான் இன்னொருவன். ஆம் என்று கூறி அவனுக்கு ஏழு கழஞ்சு பொன் கொடுத்தேன். நான் பொன் கொடுப்பதே அரிது. உனக்காகக் கொடுத்தது அது."

அவன் அக்குழல்கற்றைகளை தன் முகத்தில் வைத்துக்கொண்டான். "செண்பக மணம்!" என்றான். "உன் குழலுக்கு வேறெந்த மலரும் பொருந்தாது. மற்ற மலர்மணங்களில் எல்லாம் மண்ணும் நீரும் காற்றுமே உள்ளன. செண்பகத்தில் மட்டும் அனல்" என்றான். "அல்லது நாகலிங்கம். அதிலுள்ளது நஞ்சு." மெல்ல சிரித்து "என்ன பேசிக்கொண்டிருக்கிறேன்? பித்தன்போல. நீ ஒரு சொல்லும் சொல்லவில்லை" என்றான். அவள் நீள்மூச்செறிந்தாள்.

“உன் முன் என்னை முழுமையாகத் திறந்துவைக்கிறேன். உன் உடல்கண்டு காமம் கொண்டேன். பின் உன்னை வெல்லவேண்டும் என விழைந்தேன். உன் சூழ்திறன் கண்டபின் நீ உடனிருக்க வேண்டுமென கருதினேன். ஆனால் இந்த மலர்ச்சோலைக்குள் நுழைந்தபோது அவையெல்லாம் பொய் என உணர்ந்தேன். நான் உன்னால் மட்டுமே நிறைவடைய முடியும். அவ்வளவுதான்” என்றான் கீசகன். “என் கனவுகளில் நீயே நிறைந்திருக்கிறாய்.” அவள் “ம்?” என்றாள். அவன் ஒரு கணம் தயங்கி “ஆம், உன்னளவே அந்த அடுமனையாளனும் என்னுள் இருக்கிறான்” என்றான்.

அவ்வெண்ணத்தால் அதுவரை இருந்த அத்தனை உணர்வெழுச்சிகளையும் இழந்து எரிச்சல் கொண்டான். “ஏன் நாம் பேசிக்கொண்டே இருக்கிறோம்?” என்றபடி அவள் தோளில் கைவைத்தான். மீண்டும் அவன் உள்ளம் கிளர்ந்தெழுந்தது. “உன்னிடம் நான் வெறிகொள்வதே இப்பெருந்தோள்களினால்தான்” என்றபடி அவளை வளைத்துக்கொண்டான். அக்கணமே அவன் அனைத்தையும் உணர்ந்தான்.

❀முதல்புள் ஒலி எழுவதுவரை பிரீதை கீசகனின் அறையில் காத்திருந்தாள். புள்ளொலி மீண்டும் ஒலித்ததும் எழுந்து சென்று வெளியே பார்த்தாள். விடிவெள்ளியைக் கண்டதும் அவள் நெஞ்சு படபடக்கத் தொடங்கியது. அறியா உள்ளுணர்வால் அவள் கீசகன் உயிருடனில்லை என்பதை உணர்ந்தாள். அவ்வெண்ணத்தை அது எழுந்ததுமே தள்ளி விலக்கினாள். மீண்டும் அறைக்குள் வந்து கைகளால் முகவாயைத் தாங்கியபடி அமர்ந்திருந்தாள்.

அவ்விரவில் பலமுறை விழித்து விழித்து அமர்ந்து அவள் கண்ட கனவுகளை எண்ணித் தொகுக்க முயன்றாள். எப்போதும் அவள் அடையும் கனவு மீண்டும் மீண்டும் வந்தது. கீசகனுடன் அவள் புணரும்போது அவன் கைகள் இரு பெரும்பாம்புகளென்றாகி அவளைச் சுற்றி இறுக்கி நெரிக்கத் தொடங்கும். நதிச்சுழியில் என அவள் மூழ்கி மூச்சுத்திணறி இறுதிக் கணத்தில் விழித்துக்கொள்வாள். அன்று அக்கனவில் அவள் கீசகனின் விழிகளை தெளிவாகக் கண்டாள். ஒருகணம், அல்லது அதற்கும் குறைவு. அவளை உடல்விதிர்க்கச் செய்தது அந்த நோக்கு.

அதை மீண்டும் நினைவிலோட்டியபோது அதுவரை இருந்த அத்தனை திரைகளையும் விலக்கி அவனை அவள் நன்கறிந்தாள். அவ்வறிதல் அவளை தளரச்செய்தது. நீள்மூச்சுடன் உடலை அசைத்து அசைத்து அமர்ந்தாள். பெரிய பொருளொன்றை மூட்டைக்குள் செலுத்துவதுபோல அவ்வசைவால் அந்த அறிதலை தன்னுள் அமைத்துக்கொள்ள முயன்றாள். பின்னர் மெல்லிய நிறைவும் அதன் விளைவான இன்மையுணர்வும் ஏற்பட்டது. அனைத்துப் பதற்றங்களும் மறைய உடல் எடையிழக்க அவள் ஆழ்ந்து துயிலத் தொடங்கினாள்.

பின்னர் விழித்துக்கொண்டபோது அறைக்குள் காலைவெயிலின் வெளிச்சம் நிறைந்திருப்பதை கண்டாள். திடுக்கிட்டு எழுந்து ஆடையை அள்ளிப்பற்றியபடி சாளரத்தை பார்த்தாள். வெளியே ஓடிச்சென்று காவலனிடம் “படைத்தலைவர் எங்கே?” என்றாள். அவன் “அறியேன்” என்றான். “இன்னும் அவர் வரவில்லையா?” என்றாள். அவனிடம் கேட்பதில் பொருளில்லை என உணர்ந்து இடைநாழி வழியாக ஓடினாள். கீசகனுக்கு அணுக்கமான

எவரிடமாவது கேட்கவேண்டும். ஆனால் அவனுக்கு அணுக்கமாக எவரும் இல்லை என்று உடனே தெரிந்தது.

மலர்ச்சோலை முகப்பில் நின்றிருந்த காவலனிடம் “படைத்தலைவர் எப்போது வெளியே சென்றார்?” என்றாள். “வெளியே செல்லவில்லை” என்றான் அவன். “வேறு எவர் வெளியே சென்றார்கள்?” என்றாள். “எவரும் செல்லவில்லை” என்றான். அவள் உள்ளே சென்றபோது மரங்களுக்கிடையே இருந்து மெல்லிய சீழ்க்கை ஒலி கேட்டது. அவள் தன் கணையாழியை காட்டியதும் புதருக்குள் இருந்து வெளிவந்த கரவுக்காவலன் தலைவணங்கினான். “படைத்தலைவர் எங்கே?” என்றாள். “உள்ளே இருக்கிறார்” என அவன் கையை காட்டினான்.

அவள் கால்கள் தடுமாற உள்ளே ஓடினாள். தொலைவிலேயே கொடிமண்டபத்தில் கீசகன் விழுந்து கிடப்பதை அவள் கண்டுவிட்டாள். அருகே செல்லச் செல்ல அவன் சடலமென்றாகிக்கொண்டே வந்தான். அருகணைந்து நின்றபோது அவள் நெஞ்சை பற்றிக்கொண்டாள். கீசகனின் கழுத்து முறிந்து தலை பின்பக்கமாகத் திரும்பியிருந்தது. நெஞ்சில் அறைந்து கதறியழுதபடி அவள் அவன் மேல் விழுந்தாள்.

# நீர்க்கோலம் - 74

### 73. தெய்வமெழுதல்

தருமன் வருவதற்குள்ளாகவே விராடர் கிளம்பிவிட்டிருந்தார். ஏவலன் “அரசர் சென்றுவிட்டார்” என்று சொன்னான்.

“தங்களுக்காக காத்திருந்தார். பொழுதாகிறது என்றதும் கிளம்பினார். சற்றுமுன்னர்தான்.” தருமன் விரைந்து முற்றத்தை அடைந்தபோது விராடர் தேர் அருகே நின்றிருந்தார். அருகே நின்ற உத்தரனிடம் ஏதோ கையசைத்து சொல்லிக்கொண்டிருந்தார். அவரைக் கண்டதும் திரும்பி நோக்கியபின் பேச்சை தொடர்ந்தார். அவர் தனக்காகக் காத்திருக்கிறார் என உணர்ந்த தருமன் அருகே சென்று தலைவணங்கினார்.

“சூதர் சொல்லை நாம் ஒன்றும் செய்யமுடியாது. சூதர்சொல்லின் இயல்பு என்னவென்றால் அச்சொற்களை அவர்களின் பிற சொற்களே அழிக்கும் என்பதுதான். அதுவரை நாம் காத்திருப்போம்” என்றார் விராடர். பின்னர் தருமனை நோக்கியபின் தேரிலேறிக்கொண்டார். தருமன் ஏறி அவர் அருகே அமர்ந்ததும் தேர் கிளம்பியது. விராடர் இயல்பாக சாய்ந்துகொண்டு “நகரில் உலவும் கதைகளை வந்து சொல்கிறான் மூடன். நகரில் அப்படி எத்தனை கதைகள் அலையும்! நாம் அதை என்ன செய்யமுடியும்?” என்றார்.

உத்தரன் தன் தேரில் ஏறிக்கொள்வதை தருமன் நோக்கினார். விராடர் “கீசகனை நாம் நஞ்சூட்டி கொன்றுவிட்டோம் என்கிறார்கள். நாம் அமைத்த ஒற்றர்கள் அவனை ஒளிந்திருந்து தாக்கியதாக இன்னொரு கதை” என்றார். “அவனுக்கும் இங்கே அணுக்கப்படைகள் இருந்தன. இத்தனை ஆண்டுகள் இந்நகரை ஆண்டிருக்கிறான். அவர்கள் சொல்லத்தான் செய்வார்கள்.” தருமன் “அவர் வெல்லப்பட முடியாதவர் என இவர்கள் எண்ணியிருந்தனர். அவர்மேல் என்னென்ன காழ்ப்பும் கசப்பும் இருந்தாலும் அவர் நிஷாதர்களின் பெருமிதம். இத்தனை

எளிதாக அவர் கொல்லப்பட்டது அவர்களால் ஏற்றுக்கொள்ளக்கூடியதாக இல்லை” என்றார்.

“ஆம், அதேதான். அவன் இறந்ததுமே வீரனென்றாகிவிட்டான். அவனை எரியூட்டியபோது எழுந்த துயரை நோக்கியிருப்பீர்கள். நகரமே நெஞ்சறைந்து கதறியபடி இடுகாட்டைச் சூழ்ந்து கூடியது.” தருமன் “ஆம், எரி ஏறியபோது வீரமுரசுகள் முழங்கவில்லையே என நான் எண்ணினேன். வாழ்த்தொலிகளில் அவ்வோசை மூழ்கிவிட்டதை சற்று கழித்தே உணர்ந்துகொண்டேன்” என்றார். “அவன் இறந்ததுமே மீண்டும் பிறந்தான். அவனைப்பற்றி நாளும் கதைகள் எழுந்துவந்தன. அவனுடைய வீரம், கொடைத்திறன், அளி, பெருமிதம். இவ்வழி சென்றால் இன்னும் சில மாதங்களில் அவன் இறைவடிவாகிவிடுவான்.”

“அக்கதைகளில் பெரும்பாலானவை உண்மையானவை” என்று தருமன் சொன்னார். விராடர் வியப்புடன் திரும்பி நோக்கினார். “நாம் உயிருடனிருப்பவரை நம் தேவைக்கும் உணர்வுகளுக்கும் ஏற்பவே நோக்குகிறோம். அதற்கப்பால் அவருக்கு என இயல்புகள் பல இருக்கலாம். கீசகர் மாபெரும் படைத்தலைவன். பெருமல்லன். படைவீரர்களை மைந்தர்களென நடத்தாதவன் களம்வெல்ல முடியாது. மல்லர்கள் மானுடரை உடலால் அறிபவர்கள். அன்னையரைப்போல.” விராடர் “எனக்கு ஒன்றும் புரியவில்லை. அவன் நல்லவன் என்றால் இங்கே தீயவர் எவர்? நானா?” என்றார்.

தருமன் “உயிரோடிருத்தல் குற்றவுணர்வை உருவாக்குகிறது. இறந்தவர்பால் உளநெகிழ்வுகள் பெருக அதுவே ஏதுவாகிறது” என்றார். விராடர் பெருமூச்சுவிட்டு “நடுகல் நாட்டி வீரவழிபாடு

செய்தாகவேண்டும் என்றார்கள். அது தேவையில்லை என்பது அமைச்சர் ஆபரின் கூற்று. காலப்போக்கில் அதை ஒரு பள்ளிப்படை ஆக்குவார்கள். அரசுக்கு எதிரான உணர்வுகள் எப்போதும் எவ்வரசிலும் இருக்கும். அவை அடையாளம் தேடி அலையும். அவ்வாலயம் அவர்களுக்குரிய மையமாக ஆகிவிடக்கூடும் என்றார்."

தருமன் சிரித்து "அப்படி ஓர் அடையாளத்தை அவர்களுக்கு அளிப்பதே நல்லரசன் செய்யவேண்டியது" என்றார். விராடர் நோக்க "அவர்களின் உணர்வுகள் அவ்வழி வழிந்து செல்லட்டும். அரசே, கீசகரின் குரல் உங்கள் குலத்திற்கிணையாகவே பெரிதென்றால் மட்டுமே நாம் பிறிது எண்ணவேண்டும்" என்றார். விராடர் "ஒவ்வொன்றுக்கும் ஒரு மாற்றுச்சொல் கொண்டிருக்கிறீர்" என்றார். "இதுவும் நாற்களமே" என்றார் தருமன் சிரித்தபடி. "அரசியின் மாற்றமே என்னை அச்சுறுத்துகிறது. அவள் தன் உடன்பிறந்தவனை தெய்வமாக ஆக்கிவிட்டாள். அரண்மனையில் அவனுக்கு ஒவ்வொருநாளும் பலிகொடையும் பூசனைகளும் நிகழ்கின்றன. சூதர்கள் வந்து அவன் புகழை பாடிக்கொண்டிருக்கிறார்கள். காவியங்களே பிறந்துவிடும் போலிருக்கிறது" என்றார்.

"நீங்கள் எதை அஞ்சுகிறீர்கள், அரசே?" என்றார் தருமன். "இந்தக் கதைகளுக்குப் பின்னால் உள்ள உண்மையை" என்றார் விராடர். "அவனை நான் கொல்லவில்லை. ஆனால் நான் கொல்ல விழைந்தேன். கொல்லப்பட்டது என்பொருட்டே." தருமன் "அதை அஞ்சவேண்டாம். கீசகர் கொல்லப்பட்டது குறித்த கதைகளில் நிலைக்கப்போவது ஒன்றே" என்றார். விராடர் நோக்க புன்னகையுடன் "அவரை கந்தர்வன் ஒருவன் கொன்றான் என்பது" என்றார் தருமன். "ஏன்?" என்றார் விராடர். "ஏனென்றால்

அதுதான் முற்றிலும் நம்பமுடியாததாக உள்ளது” என தருமன் நகைத்தார்.

“விளையாடாதீர், குங்கரே” என்றார் விராடர். “ஆம், அதுவே உண்மை. எண்ணிப் பாருங்கள். கீசகரின் கதையை இன்னும் ஓராண்டுக்குப்பின் எண்ணிக்கொள்பவர்கள் யார்? எவர் எவரிடம் சொல்லப்போகிறார்கள்? சிறுவர்களுக்கு முதியோர் சொல்லும் கதைகளாக மட்டுமே அவர் நினைவு நீடிக்கும். அக்கதைகளில் அவரை வீரரில் வீரர் என சொல்லி பெருக்குவார்கள். அத்தகைய மாவீரனை வஞ்சமோ நஞ்சோ கொன்றதென்றால் அது சிறிதாகத் தெரியும். கந்தர்வன் கொன்றான் என்பதே கதையென முழுமைகொண்டிருக்கும்.”

“இப்புவிவில் வாழும் செய்திகளில் பெரும்பாலானவை அவை உண்மை என்பதனால் வாழவில்லை, அழகானவை என்பதனால் வாழ்கின்றன” என்று சொல்லி தாடியை நீவியபடி வெளியே நோக்கத் தொடங்கினார் தருமன். விராடர் அவரையே நோக்கிக்கொண்டிருந்தார். பின்னர் “நன்று, உம்மிடம் பேசிப்பேசி எது விந்தையானதோ அதுவே உண்மை என நம்புவதற்குப் பழகிவிட்டேன்” என்றார் விராடர். இருவரும் சேர்ந்து நகைத்தனர்.

கீசகனின் நடுகல்லிடத்தில் முன்னரே காவலர்கள் சூழ்ந்திருந்தனர். நிஷாதகுடித் தலைவர்களும் குலமூத்தார்களும் அமைச்சர்களும் அகம்படியினரும் திரண்டிருந்தார்கள். அரசத்தேர் அணுகியதும் கொம்புகளும் முரசுகளும் முழங்கின. தேர் நின்றதும் விராடர் கைகளைக் கூப்பியபடி இறங்க வாழ்த்தொலிகள் எழுந்தன. தரையில் விரிக்கப்பட்ட நடைபாவாடையில் கூப்புகையுடன் நடந்த விராடருக்குப் பின்னால் தருமன் தலைகுனிந்து நடந்தார்.

சிற்றமைச்சர்கள் வந்து அரசரை எதிர்கொண்டு அழைத்துச்சென்றனர். இடுகாட்டின் நடுவே கீசகனின் ஆளுயர நடுகல் செம்பட்டு சுற்றப்பட்டு செங்காந்தள் மாலை சூடி நின்றிருந்தது. அவனருகே கிடைக்கல்லாக பிரீதையின் தாய்க்கல் மலருடன் அமைந்திருந்தது. குலப்பூசகர் எழுவர் அங்கே செம்பட்டுக் கச்சை சுற்றி மலர்மாலை அணிந்து நின்றிருந்தார்கள். அரசருக்குரிய மேடையில் விராடர் சென்று நின்றதும் வாழ்த்தொலிகள் அமைந்தன. அரசர் கைகாட்ட சடங்குகள் தொடங்கின.

உறுமி மட்டும் பொங்கிப் பொங்கி ஒலித்துக்கொண்டிருந்தது. நடுகல்லுக்கு மஞ்சள்குங்கும செவ்விழுதை அள்ளிப் பூசினர். மஞ்சள்பொடியும் அரிசிப்பொடியும் கொண்டு முழுக்காட்டினர். பெரிய உருளியில் ஆவிபறக்க கொண்டுவரப்பட்ட அன்னம் நடுகல்லின் முன்னால் விரிக்கப்பட்ட ஈச்சைப்பாயில் கொட்டப்பட்டு ஏழு பகுதிகளாக பிரிக்கப்பட்டது. அதன்மேல் செவ்வரளி, தெச்சி, செண்பகம், செந்தாமரை, காந்தள் மலர்களைப் போட்டு கமுகுபூக் குலையை நட்டனர்.

கரிய ஆட்டுக்கிடாக்கள் மூன்றை பூசகர் இழுத்து வந்தனர். அவற்றின் கழுத்தை வளைத்து குருதிக்குழாயை சிறு கத்தியால் வெட்டி பீறிட்ட குருதியை அந்த அன்னத்தின்மேல் வீழ்த்தினர். விடப்பட்ட ஆடு கால்பதற ஓடிச் சுழன்று விழுந்து துள்ளத் தொடங்கியது. அடுத்த இரு ஆடுகளின் குருதியை பெரிய மரக்குடுவையில் பிடித்து நடுகல்லுக்கு முழுக்காட்டு செய்தனர். கூடி நின்றிருந்தவர்கள் “மாவீரர் வெல்க! வீரப்பலி நிறைவுறுக! மூதாதையர் மகிழ்க! குலதெய்வங்கள் அருள்க!” என வாழ்த்தொலி எழுப்பினர். அலையலையாக இறங்கிய

செங்குருதி மாவையும் மஞ்சளையும் கரைத்து குழம்பென்றாகி மண்ணில் ஊறிப் பரவியது.

குருதியில் சில துளிகள் பிரீதையின் தாய்க்கல்மீதும் வீழ்த்தப்பட்டன. “திருமாபத்தினி வாழ்க! மூதன்னையர் அடிசேர்க!” என்று வாழ்த்தியது திரள். குருதியன்னத்தில் ஏழு பிடி எடுத்து பிரீதைக்கு படைத்தார் பூசகர். நெய்ப்பந்தம் ஏற்றப்பட்டு இரு நடுகற்களுக்கும் அனலாட்டு செய்யப்பட்டது. படைப்பன்னத்தின் ஏழு பகுதிகளில் ஒன்றை மட்டும் எடுத்து வாழையிலையில் பரப்பி அதில் முதல்பிடியை அள்ளி அரசருக்கு அளித்தார் முதுபூசகர். மற்றவர்களுக்கும் அன்னம் பகிர்ந்தளிக்கப்பட்டது.

பூசனை முடிந்ததும் விராடர் திரும்பி நோக்காமல் நடந்தார். அவரைத் தொடர்ந்து அங்கிருந்த அனைவரும் நடந்தனர். “திரும்பி நோக்கலாகாது” என எவரோ சொல்லும் மெல்லொலி கேட்டது. உத்தரன் பின்னால் வந்து குனிந்து தருமனிடம் “குங்கரே, பிரீதையின் குடியினர் இங்கே அவளுக்கு பத்தினி வழிபாடு செய்ய ஒப்புதல் கோரினர்” என்றான். “அதிலென்ன?” என்றார் தருமன். “அவள் முறைப்படி மணம்புரியவில்லை. ஆகவே உடன்கட்டை ஏறினாலும் கீசகரின் துணைவியல்ல என்றார்கள் சிலர். பூசல் மிகுந்தபோது ஆபரிடம் சென்று கேட்டோம். இதில் அவர் சொல்ல ஏதுமில்லை என்றார்.”

தருமன் “ஆம், ஆணும் பெண்ணும் எவ்வகையில் இணைவதென்று எவர் சொல்வது? கீசகர் ஷத்ரியன், அவர் காந்தர்வ மணம் செய்வதற்கு நெறியொப்புதல் உண்டு” என்றார். “ஆம், அதையே நானும் சொன்னேன்…” என்றான் உத்தரன். “இளவரசே, அவள் அவருடன் விண்ணேகுவாள் என்பதில் எந்த ஐயமும் இல்லை. அவள் பத்தினி அல்ல என்றால் வேறு

எவர்?” உத்தரன் “மிக எளிய அரசியல் கணக்குகள்தான். அவள் சூதப்பெண். சூதர்களில் இன்றுவரை எவரும் உடன்கட்டை ஏறி பத்தினித் தெய்வமாக ஆனதில்லை” என்றான்.

“ஆவதற்கு தடையுண்டா என்ன?” என்றார் தருமன். “இல்லை, ஆனால் வீரக்கல்லும் பத்தினிக்கல்லும் அமைவதென்பது அக்குலத்திற்கு பெருமையும் முதன்மையும் சேர்க்கிறது. அதை பிறர் விரும்புவதில்லை” என்றான் உத்தரன். தருமன் “அதை முடிவெடுக்க வேண்டியவர் அரசர்” என்றார். “ஆம், ஆனால் அவர் முடிவெடுப்பதற்கு முன்னரே நகர்மக்கள் முடிவெடுத்துவிட்டனர். நகரமெங்கும் பெண்கள் அவளைப்பற்றித்தான் பேசிக்கொண்டிருக்கிறார்கள். ஆண்கள் அவளைப்பற்றி பேசுவதை தவிர்க்கும்தோறும் அவர்கள் மேலும் பேசுகிறார்கள்.”

உத்தரன் பேசிக்கொண்டே சென்றான். நகரின் நிகழ்வுகள் அவனுடைய அன்றாட வாழ்க்கையின் அலுப்பை நீக்கி கிளர்ச்சிகொள்ளச் செய்திருப்பது தெரிந்தது. “கீசகரின் உடல் சிதையில் வைக்கப்பட்டபோது புதர்களுக்குள் இருந்து அவள் ஓடிவந்ததை நான்தான் முதலில் கண்டேன். முதலில் என்ன நிகழ்கிறதென்றே புரிந்துகொள்ளவில்லை. இடுகாட்டில் பெண்டிர் வரும் வழக்கமில்லை என்பதுகூட என் எண்ணத்தில் உறைக்கவில்லை. அமைச்சர்கள் இவள் எங்கே வந்தாள் என்று கூவினர். அப்போதுதான் நான் எல்லாவற்றையும் உணர்ந்தேன்.”

“அத்தனை காட்சிகளையும் பலமுறை கனவில் கண்டுவிட்டேன்” என உத்தரன் தொடர்ந்தான். “கீழே கிடந்த செவ்வரளி மாலையை எடுத்து கழுத்திலணிந்துகொண்டு எரிந்தெழுந்த சிதையில் ஏறி கீசகரை அணைத்தபடி அவள் படுத்துக்கொண்டபோது என் உடல் பதறியது. கண் பார்வையே

மங்கலானது. அவள் உடன்கட்டை ஏறுவதற்காகவே வந்திருந்தாள். புத்தாடை அணிந்திருந்தாள். அது கீசகர் அவளுக்கு முன்பெப்போதோ அளித்த இளநீலப் பட்டாடை. அது அவரால் அவளுக்கு முதன்முதலாக அளிக்கப்பட்டது என்றும் அதை அவள் மணவுடை என கொண்டிருந்தாள் என்றும் சொல்கிறார்கள்.”

“அவள் நீராடி ஈரத்துடன் வந்திருந்தாள். ஆனால் பட்டாடை அன்னச்சிறகுபோல பொசுங்குவதை கண்டேன். அவள் உடல் துள்ளித்துள்ளிப் புரண்டது. ஆனால் கீசகர் உடலை கைகளாலும் கால்களாலும் இறுகப் பற்றியிருந்தாள். அவள் தசைகள் வெந்து உருகுவதைக் கண்டேன். கூந்தல் பொசுங்கும் வாடையை இப்போதுகூட உணர்கிறேன்.” உத்தரன் தலையை உலுக்கிக் கொண்டான். “அவள் உடன்கட்டை ஏறியதை யாரோ ஒருவன் எரியேறிய பத்தினி வெல்க என்று கூவியபோதுதான் புரிந்துகொண்டேன். அதற்குள் கூட்டம் வெறிகொண்டு கூச்சலிடத் தொடங்கியது. எரியூட்டல் முடிந்து நகருக்குள் நுழைகையில் நகரமே அதை முழங்கிக்கொண்டிருந்தது.”

“நான் அப்போதெல்லாம் உங்கள் அருகேதான் இருந்தேன். இவையனைத்தையும் நானும் கண்டேன்” என்றார் தருமன். “ஆம், ஆகவேதான் நான் இதை உங்களிடம் சொல்கிறேன். என்னால் இப்போது எண்ணினால்கூட...” என உத்தரன் தொடர்ந்தான். விராடர் தேர் அருகே நின்று “செல்வோம்” என்றார். உத்தரன் “நான் எஞ்சியதை நாளை நேரில் வந்து சொல்கிறேன், குங்கரே. அதற்குள் நகருக்குள் ஒரு சுற்று உலவி என்ன பேசிக்கொள்கிறார்கள் என்று அறிந்துவிட்டு வருகிறேன்” என்றான்.

❀உத்தரை தன்னுடன் நடந்த பிருகந்நளையிடம் "நான் இப்பூசனையைத் தவிர்க்கவே எண்ணினேன். பலவாறாகச் சொன்னாலும் அன்னை ஏற்கவில்லை. கீசகர் எனக்கு குருதிமுறையில் தாய்மாமன். மச்சர்களில் அது தந்தைக்கு நிகரான உறவு. அவரும் எனக்கு அவ்வாறே இருந்திருக்கிறார். இப்போது எண்ணிப்பார்க்கையில் அவர் என்னை கனிந்த விழிகளால் அன்றி நோக்கியதில்லை என்றும் என் எண்ணம் எதையும் விலக்கியதில்லை என்றும் தோன்றுகிறது" என்றாள். பிருகந்நளை "இறப்பு என்பது அனல். அதிலிட்டுத் துலக்கினால் துருவும் களிம்பும் அகன்று ஒளி மீள்கிறது" என்றாள்.

உத்தரை "எதையும் தத்துவமாக ஆக்கவேண்டியதில்லை" என்றாள். பிருகந்நளை சிரித்தாள். "இன்று நகரில் கீசகர் ஒரு வீரத்திருவாக ஆகிவிட்டிருக்கிறார். இந்த நாளில் இதே பொழுதில் நூறு இடங்களிலாவது அவருக்கு அன்னக்கொடையும் குருதிக்கொடையும் நிகழ்ந்துகொண்டிருக்கிறது" என்றாள். "அது அவரால் இயன்றது அல்ல. அந்தப் பெண், அவள் பெயரென்ன?" உத்தரை "பிரீதை" என்றாள். "ஆம், காதல்கொண்டவள் என்று பொருள். கீசகர் பொருட்டு அவள் உடன்கட்டை ஏறியதனால் உருவான உள எழுச்சி அது."

"அவளை நான் அறிவேன். ஒருபோதும் நல்லியல்புள்ளவளாக அவள் எனக்குத் தெரிந்ததில்லை" என்றாள். "கணவனின் நல்லியல்பும் அல்லியல்பும் பெண்டிரில் ஆடியென எதிரொளிக்கின்றன" என்றாள் பிருகந்நளை. "நல்ல பெண்ணாக இருந்திருக்கலாம். அவளுக்குள் என்னென்ன உணர்வுகள் இருந்தன என்று எவரும் அறிந்திருக்கவில்லை. இனியும்

அறியப்போவதில்லை. நேற்று வரை அவள் உடல் மறைத்தது அவளை. இனி அவள் புகழ் மறைக்கும்.”

அவர்கள் அரண்மனை முகப்புக்குச் சென்றதும் சுபாஷிணி ஓடிவந்து அவர்களை எதிர்கொண்டாள். “பேரரசி மூன்றுமுறை கேட்டார்கள், இளவரசி. வந்ததும் அழைத்துவரச் சொன்னார்கள்.” உத்தரை “பூசனை தொடங்கிவிட்டதா?” என்றாள். “நடந்துகொண்டிருக்கிறது. கொடைகள் காலையிலேயே தொடங்கிவிட்டன. இரவுதான் கொட்டிப்பாடல் நிகழ்வு. கீசகரைப்பற்றி விஸ்ருதர் எழுதிய பாடலை நான்கு சூதர்கள் பாடப்போகிறார்கள்.”

“சைரந்திரி எங்கே?” என்று உத்தரை கேட்டாள். “அவர்கள் உடல்நலமில்லாமல் தன் அறைக்குள் படுத்திருக்கிறார்கள். பூசெய்கைக்கு சேடியர் அனைவரும் வந்தாகவேண்டும் என்று அரசி ஆணையிட்டார். அதை நான் சென்று சொன்னபோது வர மறுத்துவிட்டார்கள்.” உத்தரை சிரித்து “அதை அன்னையிடம் சொன்னாயா?” என்றாள். “இல்லை. ஆனால் சொல்லாமலேயே அரசி அதை அறிந்துகொண்டார்கள். அவர் முகம் சினத்தால் சுருங்குவதை உணர்ந்தேன்” என்றாள் சுபாஷிணி.

அரண்மனைக்குள் மணியோசை கேட்டது. விரிந்த கூடத்தில் அரண்மனை மகளிர் அமர்ந்திருந்தனர். அவர்களைக் கண்டதும் சுதேஷ்ணை திரும்பிப்பார்த்து முன்நிரைக்கு வரும்படி கைகாட்டினாள். உத்தரை முன்னால் சென்று அரசியின் அருகே அமர்ந்தாள். பிருகந்நளை பின்நிரையில் அமர்ந்தாள். அவளருகே இருந்த பெண்கள் சற்று விலகிக்கொண்டார்கள். சுதேஷ்ணை அவளிடம் “பூசெய்கைக்கு வருவதென்பது அரசகடமை. இது மகளிர் மட்டுமே கூடுமிடம்” என்றாள். “அவர்

பெண்ணும்தானே?” என்றாள் உத்தரை. “நீ சொல் மிஞ்சிச் சென்றுகொண்டிருக்கிறாய்” என்றாள் சுதேஷ்ணை.

“சைரந்திரி எங்கே?” என்றாள் உத்தரை. “அவள் தன்னை அரசி என எண்ணிக்கொண்டிருக்கிறாள். இவை அனைத்தும் முடிந்த பின்னர் அவளுக்கு அவள் யாரென்று கற்பிக்கிறேன்” என்றாள் சுதேஷ்ணை. “வேண்டாம், அன்னையே. அவள் கந்தர்வர்களால் காக்கப்படுபவள்” என்றாள் உத்தரை. “நோக்குக, அவளைத் தொட்டதற்காக கழுத்தொடிக்கப்பட்டார் உங்கள் உடன்பிறந்தார்.” சுதேஷ்ணை “வாயை மூடு!” என்றாள். உத்தரை புன்னகையுடன் வேறுபக்கம் நோக்கை திருப்பினாள்.

அறை நடுவே செம்பட்டு விரிக்கப்பட்ட மேடையில் கீசகனின் உடைவாளும் பிரீதையின் வெண்கலச் சிலம்பும் வைக்கப்பட்டிருந்தன. அவற்றுக்கு வெண்மலர் மாலைசூட்டி பொரியும் வெல்லமும் படைத்திருந்தனர். எண்மங்கலங்கள் கொண்ட ஏழு தாலங்கள் முன்னால் இருந்தன. ஒரு முதிய விறலி கைமுழவை முழக்கிக்கொண்டிருந்தாள். வெளியே சங்கொலி கேட்டது. அனைவரும் எழுந்து நின்றனர். சங்கு முழக்கியபடி சேடி ஒருத்தி முன்னால் வர ஏழு சேடியர் தொடர்ந்தனர். அனைவரும் தங்கள் கைகளில் சிறிய வெண்கலக் கலங்களில் வெண்பட்டு மூடிய அன்னத்தை வைத்திருந்தனர்.

பெண்கள் குரவையிட்டனர். பூசகியாக நின்ற முதிய சேடி கையசைத்து அவர்களை அழைக்க அவர்கள் அந்த அன்னக் கலங்களை கொண்டுவந்து பீடத்தின் முன் வைத்து துணிகளை விலக்கினர். மங்கல இசை எழுந்தது. முதுபூசகி “விண்புகுந்தவளே, கொண்டவனைக் காத்து குலம் காத்து கொடிவழி காத்து நில்! அங்கு நின்று இங்குள்ளோருக்கு

அருள்பொழி! உன் அடிபணிகிறோம், அன்னையே” என்று கூவினாள். பெண்கள் குரவையிட்டபடியே இருந்தனர். “விண்புகுந்த வீரனே, மண்ணில் உன் பெருமைகள் வாழ்க! விண்ணில் நீ ஒளி கொள்க!”

உத்தரை சூழ்ந்து நின்ற பெண்களை பார்த்தாள். அனைவர் விழிகளிலும் நீர் நிறைந்திருந்தது. சிலர் குனிந்து விசும்பினர். அது மெய்யான கண்ணீர் என்றே அவளுக்குத் தோன்றியது. அந்தச் சூழலா பிரீதையின் உயிர்க்கொடையா எது அந்த விழிநீரை உருவாக்குகிறது? உண்மையில் விழிநீர் பெரும்பாலும் ஒருவகை உளப்பயிற்சியின் விளைவு என அவள் அறிந்திருந்தாள். பெண்கள் விழிநீர் விடும் தருணம் அது என்றால் அதை அறியாமலேயே செய்துவிடுகிறார்கள். மீண்டும் அவர்களை பார்த்தாள். முகங்கள் அனைத்தும் உருகிக்கொண்டிருந்தன. அவர்கள் நடிக்கிறார்கள் என்று தோன்றியது.

எளிய பெண்கள் தமக்கென்று எண்ணமோ உள்ளமோ இல்லாதவர்கள். நீரோடையின் நிறம்போன்று அருகிருப்பவையே அவர்கள். அதைச் சொன்னது பிருகந்நளை. அவள் திரும்பி பின்நிரையில் நின்றிருந்த அவளை நோக்கினாள். கூரிய விழிகள் ஒவ்வொன்றையும் உட்புகுந்து அறிந்து ஆனால் சற்றும் பொருட்படுத்தாமல் கடந்துசெல்பவை. அமர்ந்தெழுந்து செல்லும் கிளைகளை குனிந்து ஒருகணம் மட்டுமே நோக்கும் பறவை. இவர்கள் நடிக்கிறார்களா? ஆம், இப்போது இவர்கள் பிரீதையாக நடிக்கிறார்கள்.

முதுவிறலி சுடராட்டு காட்டினாள். மணிகளும் சங்குகளும் முழங்கின. குரவையோசைகள் உடனிழைந்து சூழ்ந்தன. ஊடே புகுந்த அலறலோசையைக் கேட்டு அவள் திரும்பி

நோக்கினாள். அனைவரும் நோக்கும் திசைக்குத் திரும்பியபோது வாயிலில் நின்றிருந்த சுபாஷிணியை கண்டாள். அவள் இரு கைகளையும் தலைக்குமேல் தூக்கி விரிந்த குழல் தோளில் இழைய வெறித்த விழிகளுடன் உள்ளே வந்தாள். மீண்டும் ஓர் அலறல். பெண்குரல் அல்ல. காட்டுவிலங்குபோல. நெருப்பு பற்றி எரிபவளின் இறப்பொலி போல.

அனைத்து ஓசைகளும் அடங்கின. முதுவிறலி "யார் நீ? சொல்! நீ யார்?" என்றாள். மீண்டும் ஒருமுறை அலறி கைகளைத் தூக்கினாள் சுபாஷிணி. மெல்லிய கைகள் மேலும் முறுகி வடம்போலாயின. எலும்புகள் நெரியும் ஒலி கேட்டது. பற்கள் உரசிக்கொள்வதைக்கூட கேட்க முடிந்தது. கழுத்திலும் கன்னங்களிலும் நெற்றியிலும் நீலநரம்புகள் எழுந்தன. "யார் நீ? இங்கே ஏன் எழுந்தாய்? சொல்! யார் நீ?" என்றாள் முதுவிறலி. அன்னை தன் தோளைப் பற்றியபடி நடுங்குவதை உத்தரை உணர்ந்தாள்.

சுபாஷிணி "என் பெயர் கன்யாகவசன். விண்வாழும் கந்தர்வன்" என்றாள். எடைமிக்க ஆண்மகன் ஒருவனின் கடுங்குரல். "இவ்விழிமகனை சங்குநெரித்துக் கொன்றேன். அவன் உயிரை என் வாயால் உறிஞ்சிக்கொண்டேன். என் நெஞ்சில் உள்ளது அவன் ஆவி..." சுபாஷிணி உடல் மெய்ப்பு கொள்ள இரு கைகளையும் நெஞ்சில் சேர்த்துக்கொண்டாள். "ஏன் கொன்றாய்? சொல்! ஏன் கொன்றாய்?" என்றாள் முதுவிறலி. "நான் கன்னியருக்குக் காவலாக அமைபவன். இவ்விழிமகன் பெண்ணொருத்தியின் பொற்பை சிறுமை செய்தான். அவைநடுவே அவளை மிதித்தான். அவள் என்னை அழைத்தாள். அவள் ஆணையை ஏற்று இவனை துயிலில்

தூக்கிக்கொண்டு மலர்க்காட்டுக்குச் சென்றேன். மண்கலத்தை என இவன் நெஞ்சுடைத்துக் கொன்றேன்.”

சுபாஷிணியின் சொற்கள் நெரிபட்டு கல்லுரசுவதென ஒலித்த பற்களின் ஒலிக்கிடையே எழுந்தன. “எங்குமிருப்பேன். பொற்புடைப் பெண்டிர் நலன் காக்க நூறு கைகளுடன் எழுவேன். ஆயிரம் நச்சுக்கூருகிர் கொண்டிருப்பேன். ஆம்!” அவள் இரு கால்களின் கட்டைவிரல்களை மட்டும் ஊன்றியிருந்தாள். சேடியரில் எவரோ “தேவா! எங்களை காத்தருள்க!” என்று கூவினாள். மறுகணமே அங்கிருந்த அனைவரும் “இறையே, விண்ணவனே, நூறுகரத்தனே, காத்தருள்க!” என்று கூவத் தொடங்கினர். சிலர் கதறியழுதபடி முன்னால் வர பிறர் அவர்களை பற்றிக்கொண்டனர். உளம்தளர்ந்து சிலர் நிலத்தில் விழுந்தனர். தரையுடன் முகம் பதித்து கைகளால் அறைந்தபடி அழுதனர்.

சில கணங்களுக்குள் அந்த அறை ஒரு பித்தர் மாளிகை என ஆகிவிட்டதை உத்தரை கண்டாள். சுற்றிச்சுற்றி நோக்கி உடல்பதற நின்றாள். பின்னர்தான் தானும் கண்ணீர் வழிய அழுதுகொண்டிருப்பதை உணர்ந்தாள். “சொல், நாங்கள் என்ன செய்யவேண்டும்? எங்கள் குலத்தோன் விண்ணேற நாங்கள் ஆற்றவேண்டியதென்ன? பலியா? கொடையா? பிழைநிகர் பூசனைகளா? நீ வேண்டுவதென்ன?” என்று முதுபூசகி கேட்டாள். “இவனை நான் நூறாண்டுகள் என் வாய்க்குள் வைத்திருப்பேன். அதன் பின்னரே வெளியே விடுவேன். அதுவரை இவனுக்கு வீரவழிபாடு நிகழக்கூடாது. நீர்க்கொடையும் அன்னப்பலியும் நிகழலாகாது.”

“இவனை விண்ணேற்றுபவள் இப்பெரும் பத்தினி. இவனுக்குரியவை அனைத்தும் அவளுக்கே

அளிக்கப்படவேண்டும் இக்குடியின் சேடியருக்குக் காப்பென அவள் நின்றிருப்பாள். நெறி மீறுபவர்களை கொன்று குருதியாடுவாள்... ஆணை! ஆணை! ஆணை!” சுபாஷிணி ஓங்கி தரையில் அறைந்தாள். அந்த மெல்லிய கைகளில் இருந்து அந்த ஓசை எப்படி வந்தது என உத்தரை எண்ணினாள். ஒருக்களித்து விழுந்து கைகால்கள் இழுபட துடித்தாள் சுபாஷிணி. வாயோரம் நுரை வழிந்தது.

முதுசெவிலி குங்குமத்தையும் மலர்களையும் எடுத்து “விலகுக... விலகுக... விலகுக!” என கூவி அவள்மேல் அறைந்தாள். மெல்ல அவள் கைவிரல்கள் விடுபட்டன. கைகள் வானோக்கி மலர்ந்தன. வாய் திறந்து பற்கள் தெரிந்தன. முதுசெவிலி அவள் கன்னத்தைத் தட்டி அழைத்தாள். கண்ணிமைகளை விரித்துப் பார்த்தாள். உள்ளே கருவிழிகள் மறைந்திருந்தன. “நீர்” என்றாள் முதுசெவிலி.

இரு சேடியர் ஓடிச்சென்று கொண்டுவந்த நீர்ச்செம்பை வாங்கி சுபாஷிணியின் வாயில் வைத்தாள். அவள் விழித்துக்கொண்டு எழுந்தமர்ந்து இரு கைகளாலும் நீரை வாங்கி ஓசையெழக் குடித்தாள். “நீர்” என்று மூச்சொலித்தாள். மூன்று நிறைசெம்பு நீரை அருந்தியபின் மீண்டும் படுத்து கண்களை மூடிக்கொண்டாள். மெல்ல நீள்மூச்சொலி எழுந்தது. சிறுமுலைக்குவைகள் அசைந்தன. அவள் இமைகள் சோழிகள் போல சற்றே விரிசலிட்டு வெள்விழி காட்டின. ஆழ்ந்த துயிலுக்குள் செல்லச்செல்ல அவள் கைகால்கள் முற்றிலும் தளர்ந்து நிலத்தில் படிந்தன.

உத்தரை தன்னைச் சூழ்ந்து சேடியர் அழுதுகொண்டு படுத்திருப்பதை நெஞ்சைப் பற்றியபடி கண்ணீருடன்

நின்றிருப்பதை பார்த்தாள். விழிகள் சென்று தொட்டபோது பிருகந்நளை புன்னகை செய்தாள்.

# நீர்க்கோலம் - 75

**74. நச்சாடல்**

ஆபர் அறைக்குள் நுழைந்ததும் விராடர் பணிவுடன் எழுந்து வணங்கி “வருக அமைச்சரே, அமர்க!” என்றார். ஆபர் தலைவணங்கி முகமன் உரைத்து பீடத்தில் அமர்ந்தார். பின்னர் “அரசே, நீங்கள் இந்நாட்டின் அரசர். நான் உங்கள் ஊழியன். நான் உங்களை பணியவேண்டும். உங்களை வாழ்த்தவேண்டும். அதுவே இந்நாடகத்தின் நெறி. இனி இது மீறப்பட்டால் நான் துறவுகொண்டு கிளம்பிச்செல்வேன்” என்றார். “இல்லை…” என்றார் விராடர் பதற்றத்துடன். “என் தந்தை எனக்களித்த பொறுப்பு இது. இதை முழுமையாக ஆக்கிவிட்டே நான் என் மைந்தனுக்கு இத்தலைப்பாகையை அளிக்கவேண்டும். அதுவரை நான் உங்கள் அடி தொழுபவனே” என்றார் ஆபர். விராடர் தலைதாழ்த்தினார்.

சில கணங்கள் அமைதி நிலவியது. ஆபர் தன் கையிலிருந்த ஓலைகளை சீரமைத்துவிட்டு “செய்திகள் பல உள்ளன, அரசே. அவையில் அவற்றை முன்வைப்பதற்கு முன் தங்களிடம் சொல்லாட வேண்டுமென்று தோன்றியது” என்றார். விராடர் “குங்கரையும் வரச்சொன்னேன். அவரும் உடனிருப்பதில் தங்களுக்கு மறு எண்ணம் இல்லையல்லவா?” என்றார். “இல்லை, அவரை நான் இங்கு எதிர்பார்த்தேன்” என்றார் ஆபர். “அவர் இங்கிருப்பதே இந்நாட்டின் எதிர்காலம் மீது எனக்கு நம்பிக்கையை அளிக்கிறது.” விராடர் “அவர் சூதாடி, கெடுமதியர்

என்கிறார்கள்” என்றார். “அதுவும் உண்மையே” என ஆபர் புன்னகை செய்தார்.

வாயிற்காவலன் உள்ளே வந்து தலைவணங்கி “குங்கன்” என்றான். “வரச்சொல்க!” என்று விராடர் சொன்னதும் அவன் வெளியே சென்று குங்கனை உள்ளே அனுப்பினான். குங்கன் உள்ளே வந்து தலைவணங்கி முகமன் உரைத்தபின் சுவரோரமாக இருந்த சிறிய பீடத்தில் அமர்ந்தான். கைகளால் தாடியை வருடியபடி இருவரையும் மாறி மாறி நோக்கிக்கொண்டிருந்தான். “அரசுசூழ்தலில் சில புதிய முடிச்சுகள் நிகழ்வதை ஆபர் சொன்னார். அவற்றை விளக்கும்பொருட்டு இங்கு வந்திருக்கிறார்” என்றார் விராடர். குங்கன் தலையசைத்தான்.

ஆபர் “கீசகரின் இறப்பு நமது படைகளின் தன்னம்பிக்கையை பெரிதும் தளர்த்தியிருக்கிறது. இங்குள்ள எவரும் இனி விராடபுரியின் படைகளை நடத்திச்செல்ல முடியாதென்று பரவலாகவே பேச்சிருக்கிறது. தாங்கள் அறிவீர்கள் அரசே, உத்தரரைப்பற்றி நமது குடியும் படையும் என்ன நினைக்கிறது என்று” என்றார். விராடர் தலையசைத்தார். “தங்களைப்பற்றியும் உயர்வான எண்ணமில்லை” என்றார் ஆபர். விராடர் அதற்கும் தலையசைத்தார்.

“நமது படைகளின் நம்பிக்கையிழப்பு ஓரிரு நாட்களுக்குள்ளேயே சூழ்ந்திருக்கும் அனைத்து நாடுகளுக்கும் சென்றுவிட்டது. எல்லைப்புற ஊர்கள் பலவற்றில் விதர்ப்பமும் சதகர்ணிகளும் படைநகர்வு செய்திருக்கிறார்கள். நதிமுகங்களும் நீர்நிலைகளும் அவர்களிடம் சென்றுகொண்டிருக்கின்றன. பூசலைத் தவிர்க்கும்படி ஆணையிட்டிருக்கிறேன். அவர்கள் எவரேனும் நம்மீது படை

கொண்டுவருவதற்கான வாய்ப்பும் உள்ளது. நீர்ப்பூசலை அதன்பொருட்டேகூட அவர்கள் உருவாக்கக்கூடும்” என்றார் ஆபர்.

“நான் அதை எதிர்பார்த்தேன்” என்றார் விராடர். “விதர்ப்பமும் சதகர்ணிகளும் தங்களுக்குள் படைக்கூட்டுக்கு ஏதேனும் கைச்சாத்திடுவார்கள் என்றால் நாம் தப்ப முடியாது” என்றார் ஆபர். “விதர்ப்பன் துவாரகையின் இளைய யாதவன்மேல் தீரா வஞ்சம் கொண்டிருக்கிறான். அவனை வெல்ல படைதிரட்டுகிறான். அவன் வடமேற்கே செல்லவேண்டும் என்றால் தென்பகுதி அமைதியாக இருக்கவேண்டும். ஆகவே அவன் சதகர்ணிகளுடன் உடன்சாத்திட்டு நம்மை வென்று நிலம் பகிர்ந்துகொண்டு மேலே செல்லக்கூடும்.”

விராடர் குங்கனை நோக்கி “தாங்கள் என்ன எண்ணுகிறீர்கள், குங்கரே?” என்றார். “படைகள் தங்கள் நெறிகளில் மாறாது நின்றால் போதும். படைநடத்துவதற்குரியவர்கள் வந்தமைவார்கள்” என்றான் குங்கன். “நம்பிக்கையிழக்கும்போது படைகள் பயிற்சியை கைவிடுகின்றன. மானுடத்திரளை படையென நிறுத்துவது பயிற்சியே. நம்பிக்கையும் இழப்பும் அல்ல, பயிற்சியே போரில் ஆற்றலென்றாகிறது. போர் தொடங்கியபின் அங்கே செயல்படுவது பயின்ற உடல் மட்டுமே. உள்ளம் விழிநிலைக்கனவு ஒன்றுக்கு சென்றுவிடுகிறது.”

ஆபர் “யார் படைநடத்துவது, உத்தரரா?” என்றார். “உத்தரரேகூட படைநடத்த முடியும்” என்றான் குங்கன். “என்ன செய்யவேண்டுமென்கிறீர்கள்?” என்று விராடர் கேட்டார். “படைகள் உளத்தளர்வு அடையும்போது மும்மடங்கு பயிற்சி அளிக்கவேண்டும். கடுமையான பயிற்சிகள் படைகளின்

ஊக்கத்தை மிகைப்படுத்துகின்றன. அமர்ந்திருந்து எண்ணவும் சொல்லாடவும் அவர்களுக்கு வாய்ப்பளிக்கலாகாது" என்றான் குங்கன்.

விராடர் "பயிற்சி அளிப்பதென்றால்கூட யார் அவற்றை ஒருங்கிணைப்பது? போருக்குமட்டும் அல்ல பயிற்சிக்கும் படைத்தலைவர் தேவை" என்றார். குங்கன் "அதற்குரியவர்களை நான் சொல்கிறேன். உத்தரையும் உத்தரரும்கூட அப்பொறுப்பேற்கலாம்" என்றான். விராடர் "என்ன சொல்கிறீர்கள்?" என சொல்ல வர இடைபுகுந்த ஆபர் "அவர்களுக்கு எவரேனும் துணை புரியவேண்டும்" என்றார். "ஆம், உத்தரைக்கு பிருகந்நளையும் உத்தரருக்கு கிரந்திகனும் துணை புரியட்டும்."

"என்ன துணையிருந்தாலும் அவர்கள் என்ன செய்ய இயலும்? இருவருக்குமே படைநகர்வுப் பயிற்சி இல்லையே?" என்று விராடர் கேட்டார். "அவர்களிருவருக்கும் வாய்ப்பளிப்போமே... என்ன நிகழ்கிறது என்று பார்ப்போம்" என்று குங்கன் சொன்னான். விராடர் நம்பிக்கையின்றி தலையசைத்தபின் "நமக்கு வேறு வழியில்லை. எதையாவது ஒன்றை செய்துதான் ஆகவேண்டும்" என்றார்.

ஆபர் "நற்செய்தி ஒன்றுள்ளது" என்றார். "முன்பு கலிங்கர் உத்தரருக்கு நாம் மகட்கொடை கோரியபோது தயங்கிக்கொண்டிருந்தார். ஏனெனில் அப்போது உத்தரர் விராடபுரியின் மணிமுடியை ஏற்பதற்கு எந்தவித வாய்ப்பும் இல்லை என்று எண்ணப்பட்டது. இப்போது கீசகரின் இறப்பு தடைகளை களைந்திருக்கிறது. கலிங்கம் நமது தூதிற்கு ஒப்புதல் தெரிவித்துள்ளது" என்றார்.

விராடர் “இத்தருணத்தில் ஒரு மணநிகழ்வென்றால்...” என்றார். குங்கன் “அந்த மணம் நிகழட்டும். அது விராடபுரிக்கு நன்றே” என்றான். விராடர் “கலிங்கம் வலுவான நாடு. மணக்கூட்டு நமக்கு ஆற்றல் சேர்ப்பதே. ஆனால் என் மைந்தன்மேல் எனக்கு இப்போதும் நம்பிக்கையில்லை. அவர்கள் அவனை ஒரு கைப்பாவை என்றாக்கிக்கொண்டு விராடபுரியை எடுத்துக்கொள்ள முயலமாட்டார்கள் என்று எப்படி சொல்லமுடியும்?” என்றார்.

குங்கன் “உத்தரர் நாம் எண்ணுவதுபோல் எளியவர் அல்ல. தனக்குள்ளிருந்து பிறிதொன்றை முளைத்தெழ வைக்க அவரால் இயலும்” என்றான். விராடர் கசப்புடன் சிரித்து “உத்தரன்மேல் இத்தனை நம்பிக்கை கொண்டுள்ள பிறிதொருவர் விராடபுரியில் இருக்க வாய்ப்பில்லை, அவன் அன்னையேகூட” என்றார். “அவரை நான் கரவுக்காட்டில் பார்த்தேன்” என்றான் குங்கன். அவன் என்ன சொல்கிறான் என புரியாமல் நோக்கியபின் விராடர் போகட்டும் என்பதுபோல கையசைத்தார்.

ஆபர் “மூன்றாவது செய்தி இது. நன்றா தீதா என்று எனக்கு சொல்லத்தெரியவில்லை. இன்றும் நேற்றுமாக ஏழு மணத்தூதுகள் வந்துள்ளன, உத்தரைக்கு” என்றார். விராடர் “எவரிடமிருந்து?” என்றார். “சேதி நாட்டிலிருந்து, மகதத்திலிருந்து, மாளவத்திலிருந்து. அவந்தி, கூர்ஜரம், வங்கத்திலிருந்தும். அங்கநாட்டரசன் கர்ணனிடமிருந்தும் ஒன்று வந்துள்ளது.” விராடர் “அத்தனை பேரரசர்களும் ஓலையனுப்பியிருக்கிறார்கள் என்றால் என்ன பொருள்?” என்றார்.

“எவரோ ஒருவர் அவரை மணமுடிக்க விரும்பி ஓலையனுப்புவதை பிறர் அறிந்துவிட்டனர். உடனே அவர்களும் இந்த ஓலைகளை அனுப்பியிருக்கிறார்கள்” என்றார் ஆபர். “இதில் நன்றென்ன, தீதென்ன?” என்றார் விராடர். “இளவரசி பேரரசர் ஒருவரை மணப்பது நன்று” என்றார் ஆபர். “ஆம், அவள் பிறவிநூல் அவ்வாறு சொல்கிறது” என்றார் விராடர். “தீதெனத் தோன்றுவது இப்பேரரசர்கள் கொள்ளும் விழைவு” என்றார் ஆபர். “ஏன்?” என்று விராடர் கேட்டார். “அது உத்தரர்மேல் கொண்ட எதிர்பார்ப்பு” என்றர் ஆபர்.

விராடர் மீசையை விரலால் சுழற்றியபடி “புரிகிறது” என்றார். “உத்தரர் இந்நாட்டை முழுதாள முடியாதென்றும் உத்தரையை மணக்கும் இளவரசன் எளிதில் இந்நாட்டை கைப்பற்றிவிட முடியும் என்றும் கணக்கிடுகிறார்கள். இப்பேரரசர்கள் அனைவரும் தங்கள் இரண்டாவது மைந்தனுக்கே உத்தரையை கோரியிருக்கிறார்கள். தங்கள் இரண்டாம் தலைநகராக விராடபுரி ஒருநாள் ஆகுமென எண்ணுகிறார்கள்.”

விராடர் நெற்றியை நீவியபடி “மகட்கொடை மறுப்பது அவ்வளவு எளிதல்ல. இன்று ஷத்ரியர்களின் நோக்கில் அது போருக்கான அறைகூவலேயாகும்” என்றார். ஆபர் “ஒருவரின் மணக்கோரிக்கையை ஏற்பதும் பிறிதுள்ளவர்களை பகைவர்களாக்குவதில் சென்று முடியும். நம்மைப்போன்ற தனியரசுகள் அனைத்தும் எப்போதும் எதிர்கொள்ளும் இடர் இது” என்றார். “என்ன செய்வது?” என்று விராடர் கேட்டார்.

குங்கன் மெல்ல அசைந்தமைந்து தாழ்ந்த குரலில் “மணத்தன்னேற்பு நிகழ்த்துவதுதான், வேறென்ன?” என்றான். ஆபர் “ஒரு பெண்கோளும் ஒரு மணத்தன்னேற்பும் ஒரே தருணத்தில்” என்றார். “ஏன், நிகழ்ந்தால் என்ன?” என்று குங்கன்

கேட்டான். “அதை எப்படி நிறைவேற்றுவது என்பதுதான்...” என்றார் ஆபர். குங்கன் “பெண்கோள் முதலில் நிகழட்டும். உத்தரன் கலிங்க இளவரசியை மணந்து மணிமுடி சூடி அமரட்டும். உத்தரனின் ஆணைப்படி இங்கு மணத்தன்னேற்பு நிகழட்டும். அதற்கு வேண்டிய பொழுதை நாம் எடுத்துக்கொள்ளலாம்” என்றான்.

ஆபர் குங்கனையே நோக்கிக்கொண்டிருந்தார். “பொழுது கடத்துவதே இப்போது நமக்குத் தேவை. நடுவில் இரு மாதங்கள் மழைக்காலம் வருகிறது. வேனிலில் பெருவிழவுகளை வைப்பதே நமது வழக்கம். உத்தரையின் மணத்தன்னேற்பு வரும் இளவேனில் தொடக்கத்தில் நிகழுமென்று இப்போதே அறிவித்துவிடலாம். பெண்கேட்டு செய்தி அனுப்பிய அத்தனை அரசர்களுக்கும் முறைப்படி அழைப்பு அனுப்புவோம்” என்றான் குங்கன். விராடர் “ஆம், இது ஒன்றே வழி. பிறிதொன்றும் இப்போது எண்ணுவதற்கில்லை” என்றார்.

ஆபர் புன்னகையுடன் “அப்போது தாங்கள் இங்கு இருப்பீர்களா, குங்கரே?” என்றார். குங்கன் விழிகள் சுருங்க “ஏன்?” என்றான். “தாங்கள் வந்து ஓராண்டு நிறைவடைந்திருக்கும் அப்போது.” குங்கன் நகைத்து “ஆம், ஓராண்டுக்குப்பின் இங்கிருந்து கிளம்பவே என் எண்ணம்” என்றான். “எங்கே?” என்று விராடர் கேட்டார். “அதை பிறகு பார்ப்போம். ஓராண்டுக்கு மேல் ஓரிடத்தில் இருந்தால் உள்ளம் தேங்கிவிடுகிறது” என்றான்.

“நான் எழுகிறேன். வேறு ஏதும் இல்லை, அரசே. இவையே தங்களது ஆணையென்றால் இவற்றை ஓலைகளில் பொறித்தபடி இன்று அவைக்கு வருகிறேன்” என்றார் ஆபர். “அமருங்கள், ஆபரே” என்று விராடர் சொன்னார். “நான்

தங்களிடம் கேட்க விரும்புவது பிறிதொன்று உள்ளது.” ஆபர் “சொல்லுங்கள்” என்றார். “எனது மூதாதை நளன் எப்படி நாற்களத்தில் தோற்று ஐந்தாம் குடியென்றாகி காடு புகுந்தார் என்று சொன்னீர்கள். அந்த அரசியற்களம் என்ன ஆகியது? இக்கதை சொல்லும் காவியங்கள் பாடல்கள் எதிலும் அது இல்லை. உங்கள் குடி வழக்கென புழங்கும் கதைகளில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது?”

ஆபர் புன்னகைத்தபடி “ஆம், காவியங்களிலும் சூதர்பாடல்களிலும் இல்லாத அரசுசூழ்தல்கள் எங்கள் செவிவழிக் கதைகளில் உள்ளன. அதை அந்தணரன்றி பிறர் அறியலாகாதென்றும் தேவையென்றால் மட்டும் அரசகுடிப் பிறந்து கோல்கொண்டமைந்த ஷத்ரியரிடம் சொல்ல வேண்டுமென்றும் நெறியுள்ளது” என்றார். விராடர் குங்கனை திரும்பிப்பார்த்து “இவர் இருப்பதில் பிழையுள்ளதா?” என்றார். ஆபர் சிரித்து “அவரையும் அரசகுடியென்றே கொள்கிறேன்” என்றார். “சொல்லுங்கள்” என்று விராடர் சொல்லி கால்களை நீட்டிக்கொண்டார்.

❀நளனும் தமயந்தியும் நிஷதபுரியைவிட்டு நீங்கிய அன்று மாலையிலேயே இந்திரகிரியின் உச்சியிலிருந்த ஆலயத்தில் நின்ற இந்திரன் சிலையை அகற்றவும் கலியின் சிலையை அங்கு கொண்டு நிறுவவும் புஷ்கரன் ஆணையிட்டான். அம்முடிவை அவன் தன் தனியறையில் வெளியிட்டபோது சுநீதர் “அரசே, முறையாக இவ்வறிவிப்பை அரசவையில் தாங்களே விடுப்பது நன்று. குலமூத்தார் கோல் தூக்கி அதை வாழ்த்தட்டும். நாளை சூதர்கள் பாடி காலத்தில் நிறுத்தப்போகும் செய்தி இது” என்றார்.

புஷ்கரன் புன்னகையுடன் “இது பிந்தவேண்டிய செயலல்ல” என்றான். “அத்துடன் இவ்வாணையை நான் பிறப்பித்தேன் என்றே இருக்கவேண்டும்.” சுநீதர் “ஆனால் நீங்கள் இன்னமும் நிஷதபுரியின் முடிபுனையவில்லை” என்றார். “ஆம், ஆகவேதான் நான் இதை செய்யவில்லை. மக்கள் செய்யலாமென ஆணையிடவிருக்கிறேன்” என்றான் புஷ்கரன். உரக்க நகைத்தபடி “சுநீதரே, இன்று நளன் தன் துணைவியுடன் நகர் நீங்கினான். இப்போது சிரித்துக் களியாடி கீழ்மையில் திளைக்கும் இதே மக்கள் தங்கள் இல்லங்களுக்கு திரும்புவார்கள். தனிமையில் இருளில் துயிலுக்கு முந்தைய கணத்தில் அவர்களுக்குள் வாழும் குலதெய்வங்கள் எழுந்து வரும். குற்றவுணர்வை உருவாக்கி அவர்களின் துயில் களையும். ஓர் இரவு அவர்கள் விழித்துக்கொண்டிருந்தார்கள் என்றால் நாளை காலை என்மேல் பழி சுமத்தி சினம் கொள்வார்கள்” என்றான்.

அமைச்சர் பத்ரர் “ஆம், அது மெய்யே” என்றார். புஷ்கரன் “இன்று நிகழ்ந்தவற்றில் இங்குள்ள குடிகள் ஒவ்வொருவரும் பங்களிப்பாற்றியிருக்கிறார்கள். ஒரு சொல் இளிவரல் உரைக்காத, ஒரு கைப்பிடி மண்ணள்ளி வீசாத எவரேனும் இந்நகரில் உள்ளனரா என்பதே ஐயத்திற்குரியது. அக்குற்றவுணர்வினால் அவர்கள் மேலும் நெகிழ்வார்கள். அதிலிருந்து தப்ப அனைத்துப் பழியையும் என்மேல் சுமத்துவார்கள். இரண்டு நாள் நான் வீணே இருந்தேனென்றால் மூன்றாவது நாள் இப்புவியின் கீழ்மகன்களில் நானே தலைவன் என்று இங்குள்ள ஒவ்வொருவரும் சொல்லத் தொடங்குவார்கள்” என்றான்.

“நான் இவர்களை அறிவேன். கீழ்மையில் மகிழ்ச்சியை கண்டடைபவர்கள். ஏனென்றால் மேன்மையில் ஏறி மகிழ்ச்சிகொள்வது கடினமானது. உளப்பயிற்சியும் ஒழுங்கும் தேவையாவது. கீழ்மையின் உவகை அதுவே தேடிவந்து பற்றிக்கொள்ளும். அலையென அடித்துச்செல்லும். ஆனால் அது அளிக்கும் இழிவுணர்வால் எப்போதேனும் மேன்மையை கொடியென தாங்கி கூச்சலிடுவார்கள் இவர்கள்” என்றான். “ஆகவே அவர்களுக்கு கீழ்மையின் இன்பத்தையும் அதை மறைக்கும் மேன்மையின் திரையையும் ஒருங்கே அளிக்கவேண்டும். இன்றிரவே கலிபூசனை தொடங்கட்டும்.”

“நாளை விடியலில் கலிதேவன் ஆலயத்தில் கூட்டுப் பெரும்பூசனை நிகழவேண்டும். இன்றிரவு இவர்கள் துயில் நீப்பார்கள், குற்ற உணர்வால் அல்ல களியாட்டினால்” என புஷ்கரன் தொடர்ந்தான். “களியாட்டு நன்று. அது அனைத்தையும் மறக்க வைக்கிறது. நேற்றும் நாளையும் இல்லாதாக்கி இன்றில் திளைக்கச் செய்கிறது. மக்களை வெல்ல வேண்டுமென்றால் இடைவெளி இல்லாமல் அவர்களுக்கு களியாட்டை அளித்துக்கொண்டிருக்க வேண்டுமென்பது அரசியல் சூழ்ச்சி.”

சுநீதர் புன்னகையுடன் “இதையெல்லாம் எங்கு கற்றீர்கள், அரசே?” என்றார். “என்னால் படைமுகம் நிற்க முடியாதென்று எப்போது தோன்றியதோ அன்று முதல் அரசுசூழ்கையை கற்கத் தொடங்கினேன்” என்றான் புஷ்கரன். “அல்ல, தங்களுக்கு கலியின் பேரருள் வந்து சேர்ந்துள்ளது. கலியால் கையாளப்படும் படைக்கலம் நீங்கள்” என்றார் சுநீதர். புஷ்கரன் புன்னகைத்தான்.

அன்று மாலையே நகரின் பதினெட்டு மையங்களில் கொடிப்பட்டம் தாங்கிய யானைகள் வந்து நின்றன. அவற்றின்மேல் ஏற்றப்பட்ட பெருமுரசுகளை முழைக்கோலர் அறைந்து பேரொலி எழுப்பினர். அம்பாரிமேல் எழுந்து நின்ற நிமித்திகன் மறுநாள் காலை கலிபூசனை தொடங்குமென்றும் நிஷாதர்களின் அனைத்துக் குடிகளும் அங்கு வந்து கலியருள் கொள்ள வேண்டுமென்றும் அறிவித்தான்.

நிஷதகுடியின் மக்கள் தங்கள் கைகளாலேயே இந்திர மலைமேல் இருக்கும் இந்திரனை சரித்து உடைக்கவேண்டுமென்று அரசர் ஆணையிட்டதாக அவன் அறிவித்தபோது கூடிநின்ற நிஷதகுடிகள் வெறிக்கூச்சலிட்டபடி தலைப்பாகைகளையும் கைக்கோல்களையும் மேலாடைகளையும் எடுத்து வீசி துள்ளி ஆர்ப்பரித்தனர். ஒவ்வொரு கணமும் வெறியெழுந்துகொண்டே சென்றது. தெருக்களெங்கும் கள்வெறி கொண்டவர்கள்போல் நிஷாதர்கள் முட்டித் ததும்பினர், கூச்சலிட்டு குரல் இழந்தனர். கையில் சிக்கிய அனைத்தையும் எடுத்து வானில் வீசினர். ஓரிரு நாழிகைகளில் நகரமே குப்பைகளால் நிறைந்தது. சேற்றில் புழுக்களென மானுடர் அதில் கொப்பளித்தனர்.

பெண்டிர் பூசனைக்கான ஒருக்கங்களை தொடங்கினர். ஊர்மன்றுகளில் எழுந்த காளகக்குடித் தலைவர்களும் பூசகர்களும் நிமித்திகர்களும் கைக்கோல்களைத் தூக்கி கண்ணீருடன் கூவினர். “தோற்பதில்லை கலி! மானுடன் ஒருபோதும் வென்றதில்லை தெய்வங்களை என்று அறிக! இதோ எழுகிறது நம் குலதெய்வம்! இருண்ட காட்டிலிருந்து மலை உச்சி நோக்கி உயர்கிறது காகக் கருங்கொடி! நமது மாடங்களின்மேல் கலிக்கொடி ஏறுக! நமது நெற்றிகளில்

கலிக்குறி விளங்குக! நமது குடிகளின்மேல் அவன் அருள் என்றும் நிலைக்கட்டும்! நமது கொடிவழிகள் அவன் பேர் சொல்லி வாழட்டும்!” “ஆம்! ஆம்! ஆம்!” என்று கூவினர் மக்கள்.

இரவெல்லாம் நகரம் ஓசையுடன் முழங்கிக்கொண்டிருந்தது. மக்கள் கொண்ட வெறியுடன் குதிரைகளும் யானைகளும் கூட இணைந்துகொள்ள அவற்றின் ஓசையும் முழங்கியது. புஷ்கரன் சுநீதரிடம் “நான் நாளை புலரியில்தான் கலியின் ஆலயத்திற்கு வருவேன். இன்றிரவு ஆற்றவேண்டிய பணி ஒன்றுள்ளது” என்றான். சுநீதர் “என்ன?” என்றார். “நான் காட்டிற்குச் சென்றிருக்கிறேன் என்று சொல்லுங்கள். எவரும் அறியவேண்டாம்” என்று ஆணையிட்டுவிட்டு ஏழு படைவீரர்களுடன் நகரைவிட்டுச் சென்றான்.

அவன் சென்ற செய்தியை சுநீதர் அமைச்சர் பத்ரருடன் மட்டும் பகிர்ந்துகொண்டார். “எங்கு செல்கிறார்?” என்றார் உடனிருந்த அவைச்செயலர் பிரவீரர். “தன் மூத்தவனை வேட்டையாடச் செல்கிறார், ஐயமே இல்லை. நஞ்சையும் நெருப்பையும் எதிரியையும் எஞ்சவிடலாகாதென்று அறிந்திருக்கிறார். இன்று நிஷதபுரிக்குத் தேவை இம்மியும் நெகிழாத இவரைப்போன்ற அரசர்தான். தொல்குடியை ஒருங்கிணைத்த மகாகீசகர் இவரைப் போன்றிருந்தார் என்கிறார்கள்” என்றார்.

நகரம் ஒருவர் பிறிதொருவரை அறியாதபடி கள்ளும் களிப்புமென சித்தம் புளித்து நுரைத்தெழ மயங்கித் திளைத்துக் கொண்டிருந்தபோது பின்னிரவில் புஷ்கரன் தன் வீரர்களுடன் அரண்மனைக்கு திரும்பி வந்தான். அரண்மனைக்கோட்டை வாயிலில் அவன் வந்து நின்றபோதுதான் காவலர் அவனை அறிந்தனர். அவன் இறங்கி புரவியை ஏவலனிடம் அளித்துவிட்டு காவலர்களிடம் “சுநீதரை அரண்மனை

அகத்தளத்திற்கு வரச்சொல்க! நமது அமைச்சர்களும் குலமூத்தார் அனைவரும் அகத்தளத்திற்கு இன்னும் சற்று நேரத்தில் வந்து சேரவேண்டுமென்று ஆணையிடுகிறேன்” என்றான்.

செல்லும் வழியிலேயே படைத்தலைவர்களையும் சிற்றமைச்சர்களையும் தன்னுடன் வரும்படி கையசைத்து அழைத்துக்கொண்டான். பிரவீரர் “எங்கு செல்கிறோம், அரசே?” என்றபோது அவன் சிவந்த விழிகளால் வெறித்தான். மகளிர் மாளிகையின் வாயிலில் அவனைக் கண்டதும் திகைத்து தன் கையிலிருந்த சிறு கொம்பை எடுக்க முயன்ற காவலனை அக்கை உயர்வதற்கு முன்னரே வெட்டி வீழ்த்தினான். அவனைச் சூழ்ந்த திரள் விழிதெறிக்க உடல்பதறிக்கொண்டிருந்தது. உள்ளறைக்குச் சென்று அரசியின் அறைவாயிலை அடைந்தான். அங்கு நின்ற காவலன் அதற்குள் கூச்சலிடத் தொடங்கியிருந்தான். புஷ்கரனின் இரு வீரர்கள் அவனை உடல் போழ்ந்திட்டனர்.

அறைக்கதவைத் தட்டும்படி புஷ்கரன் ஆணையிட்டான். உள்ளே ஓசைகளும் பேச்சொலிகளும் கசங்கின. அகத்தளத்திலிருந்த சேடியரும் பெண்டிரும் வந்து அத்தனை சாளரங்களிலும் கூடிநின்று நோக்கினர். கதவு திறந்து ரிஷபன் வெளியே வந்தான். அவன் தன்னை தொகுத்துக்கொள்ளவும் நிலைபதறாதிருக்கவும் முயன்றாலும் கைகள் பதறிக்கொண்டிருந்தன. அவன் முதற்சொல்லெடுப்பதற்குள் “இவனைப் பிடித்துக் கட்டுங்கள்” என்று புஷ்கரன் ஆணையிட்டான்.

ரிஷபன் “பொறுங்கள், நான் விளக்குகிறேன். நான் ஒற்றன். முதன்மைச் செய்தியுடன்…” என்று சொல்வதற்குள் புஷ்கரன்

கைநீட்டி அவன் நாவைப்பற்றி இழுத்து தன் வாளால் அறுத்து வெளியே வீசினான். இரு கைகளாலும் வாயைப் பொத்தி விரல்களிடையே குருதி வழிய முழந்தாளிட்டு அமர்ந்தான் ரிஷபன். அவன் தலைமயிரை பற்றித் தூக்கி இரு கைகளையும் முறுக்கி தன் மேலாடையாலேயே பின்னால் கட்டினான். ரிஷபன் முனகியபடி உடலதிர்ந்தான்.

உள்ளிருந்து கலைந்த ஆடையுடன் ஓடிவந்த மாலினிதேவி "யாரது? என்ன நிகழ்கிறது இங்கே?" என்று கூவினாள். அந்தக் குரலில் இருந்த மெய்யான சினம் புஷ்கரனையும் அவன் வீரர்களையும் ஒருகணம் தயங்கச் செய்தது. அவள் கைநீட்டி "நான் கலிங்க அரசனின் மகள். என் அகத்தளத்திற்குள் நுழைந்த எவரையும் விட்டுவைக்கப் போவதில்லை" என்றாள். அந்த நீண்ட சொற்றொடரில் அவள் அச்சமும் உளக்கரவும் வெளிப்பட புஷ்கரன் துணிவும் வஞ்சமும் கொண்டு மீண்டான். அவன் உடலில் வெளிப்பட்ட அந்த மாற்றம் அவன் வீரர்களையும் மீளச் செய்தது.

புஷ்கரன் இளிநகையுடன் "உன் தந்தைக்கு செய்தி சொல்லி அனுப்பிய பிறகுதான் உன்னை கழுவிலேற்றப் போகிறேன்" என்றான். "கழுவிலா? யாரிடம் பேசுகிறாய் என்று தெரியுமா? இழிமகனே, ஷத்ரிய பெண்ணின் முகம் நோக்கி இதைச் சொல்ல உனக்கென்ன ஆணவம், நிஷதப் பிறவியே!" என்று கூவியபடி அவள் வெளியே வந்தாள். அவள் ஆடை கலைந்து சரிந்தது. குழல்கற்றைகள் தோளிலும் மார்பிலும் விழுந்தாடின. அப்போது எழுந்த முகச்சுளிப்பால் அவள் மிக அழகற்றவளாகத் தோன்றினாள். வெளித்தெரிந்த ஓநாய்ப் பற்கள் அவள் விழிகளை மொழியற்ற விலங்கு என காட்டின.

அவன் அச்செயலை செய்யத் தேவையான சினம் தன்னுள் ஊறுவதற்காகவே முள்முனையில் தயங்கிக்கொண்டிருந்தான் என்பதை அவள் அறியவில்லை. முதற்கணத்தில் அவர்களிடம் எழுந்த தயக்கத்தை தன் சினத்தால் அச்சமென்றாக்கிவிடலாமென்ற அவள் எண்ணம் பிழையாகியது. அவள் உரைத்த இழிசொற்களால் அவனும் பிறரும் சித்தம் எரிந்தெழும் பெருஞ்சினத்தை அடைந்து எதையும் செய்யத் துணிபவர்களானார்கள். எப்போதும் அவர்களை கொதிக்கச் செய்வது குல வசையே. அவர்கள் நாடென, அரசென எழுந்ததே அச்சொற்களுக்கு எதிராகத்தான். அதை உள்ளூர அவள் அறிந்திருந்தமையால் அவளையறியாமலேயே அச்சொற்கள் அவள் நாவிலெழுந்தன.

புஷ்கரன் தன் வாளின் பின்பகுதியால் ஓங்கி அவளை அறைந்து வீழ்த்தினான். தலை உடைய இரு கைகளாலும் பற்றிக்கொண்டு பீறிட்ட குருதியுடன் தரையில் விழுந்து துடித்தாள். வெறும் முனகல் மட்டும் அவளிலிருந்து எழுந்தது. குருதிமணம் வீரர்களின் விழிகளை ஒளிரச் செய்தது. “எழுந்து நட, நாயே” என்றபடி படைத்தலைவன் அவள் தலைமேல் ஓங்கி மிதித்தான். ரிஷபன் சினத்துடன் ஏறிட அவன் முகத்தில் உமிழ்ந்த இன்னொருவன் “என்னடா பார்க்கிறாய், ஷத்ரியக் கீழ்மகனே?” என்றபடி அவன் கன்னத்தில் ஓங்கி அறைந்தான்.

“இருவரையும் இழுத்து வந்து செண்டுவெளி முற்றத்தில் நிறுத்துங்கள்” என்று புஷ்கரன் ஆணையிட்டான். அதற்குள் சுநீதரும் குடிமூத்தார் பன்னிருவரும் பத்ரரும் பிற அமைச்சர்களும் அகத்தளத்திற்கு வந்துவிட்டிருந்தனர். சுநீதர் உரக்க “என்ன நிகழ்ந்தது? என்ன நிகழ்ந்தது, அரசே?” என்றார். “காவலரிடம் கேட்டுக்கொள்ளுங்கள். இங்கே நூறு

விழிகளேனும் சான்று உள்ளன” என்றபின் அவன் குருதி படிந்த தன் வாளைத் தூக்கி அதை நோக்கினான். அவன் வாய் சிறிய புன்னகையில் கோணலாகியது.

# நீர்க்கோலம் - 76

### 75. காகத்தின் நகர்

அரண்மனையை அடைந்ததும் தன்னைத் தொடர்ந்து பதற்றத்துடன் ஓடிவந்த பத்ரரிடம் புஷ்கரன் “புலரியில் நான் கலி ஆலயத்திற்குச் செல்லவேண்டும். அதற்குள் சற்று ஓய்வெடுக்கிறேன்” என்றான். அவனுடைய அந்த சீர்நடையும் நிகர்நிலையும் அவரை மேலும் பதறச் செய்தது. “செண்டுவெளிக்கு கொண்டுசெல்ல வேண்டுமா என்ன?” என்றார். அவன் மறுமொழி சொல்லாமல் தன் அறைக்கு சென்றான். ஏவலன் அவன் ஆடையைக் களைந்து இரவுக்குரிய மெல்லிய ஆடையை அணிவித்தான்.

மஞ்சத்தில் அமர்ந்தபடி அவன் சேடியிடம் மது கொண்டுவரச் சொன்னான். மூன்று கோப்பை யவன மதுவை அருந்திவிட்டு தன்னை எளிதாக்கிக்கொண்டான். அப்போதுதான் குருதி உலர்ந்து கருத்த தன் உடைவாளை கண்டான். அதை எடுத்து கண்ணெதிரே தூக்கி பார்த்தான். நெஞ்சு படபடத்தது. அதன் செதுக்குகளுக்குள் உறைந்திருந்த கருங்குருதியை நகத்தால் நீவி எடுத்தான். எண்ணியிராக் கணத்தில் பெரும் உளக்கிளர்ச்சி ஒன்று ஏற்பட்டது. முதுகுத்தண்டு சிலிர்க்க கண்கள் மங்க தலைக்குள் குளிர் பரவ காலமில்லாதாகி மீண்டான். புன்னகையுடன் கண்களிலிருந்து வழிந்த நீரை துடைத்துக்கொண்டான்.

கையில் வாளுடன் படுக்கையில் படுத்து முகடுப்பலகையை நோக்கிக்கொண்டிருந்தான். மெல்ல அவன் துயில வாள் நழுவி கீழே விழுந்தது. அவ்வொலியை அவன் கனவில் ஒரு மணியோசையென கேட்டான். அந்த வாள் ஒரு பாம்பென்று மாறி உடலெங்கும் குருதி வழிய கட்டிலின் கால்மேல் சுழன்றேறி அவன் காலை அடைந்தது. உடல்வழிந்து மார்பின்மேல் சுருண்டு படம் எடுத்தது. கரிய நாகம். அவன் அதன் விழிகளையே பார்த்துக்கொண்டிருந்தான். காற்றில் சுடரென அதன் படம் அசைந்தது.

“நீயா?” என்றான். பாம்பு சீறல் ஒலியெழுப்பியது. அவ்வொலியே சொல்லாக பேசத்தொடங்கியது. “இது கடன்தான்” என்றது. “என்ன சொல்கிறாய்?” அது “இது கடன்தான்” என்றது மீண்டும். “எதுவரை?” என்றான். அது சீறியது. “சொல், எதுவரை?” அதன் விழிகள் பொருளிலா மணிகள். “சொல், எதுவரை? எதுவரை?” அதன் ஆட்டம் பொருளிலா நெகிழ்வு. “சொல், எதுவரை? எதுவரை? சொல்!” அவன் அதைப் பிடித்து நெரித்தான். “நீ என்னுடனிருப்பாய்... நான் விடமாட்டேன்.” அது சுருங்கி அவன் பிடியிலிருந்து நழுவி தன்னை உருவிக்கொண்டது. “சொல், எதுவரை? எதுவரை உடனிருப்பாய்?”

தன் குரலைக் கேட்டே அவன் விழித்துக்கொண்டான். கையில் அவன் உடைவாள் இருந்தது. அதன் கூர்முனையை இறுகப்பற்றியிருந்தான். விரலிடுக்குகளில் செங்குருதி ஊறி படுக்கைமேல் சொட்டியது. கையை விடவேண்டுமென எண்ணினாலும் முடியாமல் இருளையே நோக்கிக்கொண்டிருந்தான். வெளியே நகரின் ஓசைகள் பெருகி அனைத்துச் சாளரங்களூடாகவும் அரண்மனைக்குள் நிறைந்து சுவர்களில் எதிரொலித்துக் கொண்டிருந்தன. யானைகளின்

பிளிறல்கள், முரசொலிகள், மனிதக்குரல் திரண்டெழுந்த அலை முழக்கம்.

ஏன் இக்குரல்கள் இப்படி அலையடிக்கின்றன என்று எண்ணிக்கொண்டான். அது உளமயக்கா? இல்லை, அவை மெய்யாகவே அலையடித்துக் கொண்டிருந்தன. அத்தனை குரல்களும் இணைந்து மேலெழுந்து இறங்குகின்றனவா? காட்டில் சீவிடின் ஒலிபோல. அத்தனை உள்ளங்களும் ஒன்றென்று ஆகிவிட்டனவா? அவன் அறைக்குள் வந்து தலைவணங்கிய ஏவலன் “புலரி அணுகுகிறது, அரசே. விடிவெள்ளி எழுந்துவிட்டது” என்றான். “நன்று” என்றபின் அவன் எழுந்து நீராட்டறைக்குச் சென்றான்.

ஏவலர் இளவெந்நீரில் அவனை நீராட்டினர். குருதி உடலெங்கும் வெம்மைகொண்டு ஓட சித்தம் மெல்ல மயங்கியபோது நிறைவு மட்டுமே அளிக்கும் மயக்கத்தை உணர்ந்தான். இங்கிருக்கிறேன் என்று ஒற்றைச்சொல்லாக அவன் உள்ளம் இருந்தது. அதன் பொருளென்ன என்று அவன் உணர்ந்தபோது அத்தருணத்தை கடந்து வந்திருந்தான். எழுந்து ஈரம் வழிய ஆடி முன் நின்றான். ஏவலர் அவன் உடலைத் துடைத்து மலர்ச்சுண்ணப்பொடி பூசினர். ஆடியில் அவன் தன்னை நோக்கிக்கொண்டே நின்றான். அப்போது அவனுக்கு ஒன்று தெரிந்தது, அதுவே அவன் வாழ்வின் உச்சம். அந்த மலைமுடியிலிருந்து மறுபுறம் இறங்குவதே அதற்குமேல் எஞ்சியிருந்தது.

நிஷதபுரியில் பன்னிரண்டு நாட்கள் கலிப்பதிட்டைப் பெருவிழவு நடந்தது. நகரெங்கிலுமிருந்து மக்கள் பெருகி திரைதள்ளி ஒழுகி கலியின் சிற்றாலயம் அமைந்த காட்டை தலைகளென நிரப்பினர். வெறியாட்டெழுந்த நூற்றெட்டு

நிஷதகுடிப் பூசகர்கள் வேல் சுழற்றி அலறி நடனமிட்டபடி நகரத்திலிருந்து கிளம்பி கலியின் ஆலயத்திற்கு வந்தனர். அவர்களைச் சூழ்ந்து கை முழவும் துடியும் கிணையும் பறையும் முழக்கியபடி நிஷாதர்கள் கட்டிலா நடனமிட்டு கூவி ஆர்ப்பரித்தபடி வந்தனர்.

ஒவ்வொருவராக அவர்கள் ஆலயத்தை வந்தணைய அவர்களை வாழ்த்தியும் கலிக்கு வெற்றி கூவியும் நிஷாதர்கள் ஆர்ப்பரித்தனர். "எழுக காகம்! எழுக கருமை! எழுக நிகரிலாதோன் நகர்! எழுக நிஷதக்குருதிப் பேரலை!" என எழுந்த கூவல்கள் ஒன்றுடன் ஒன்று கலந்து சொல்லிலா கார்வையென்றாயின. ஆனால் அக்கார்வை அச்சொற்களை செவிகேட்கவும் செய்தது.

நகரெங்கும் அமைந்த சிறிய கலிப்பதிட்டைகளுக்கு முன் எருமைகளை கழுத்தறுத்து பலி கொடுத்தனர். அந்தக் குருதியால் கலியை முழுக்காட்டினர். வழிந்து மடையில் கொட்டிய குருதியை கொப்பரைகளில் அள்ளி தெருக்களில் கொந்தளித்த மக்கள்திரள்மேல் வீசினர். அதை குடித்தனர், கொப்பளித்து துப்பினர். குழந்தைகளை அதில் முழுக்காட்டி தூக்கி காற்றில் வீசிப்பிடித்தனர். நிஷாதர் அனைவரும் குருதியாடினர். வியர்வை வழிந்து குருதியுடன் கலந்து அவர்களை போர்க்களத்திலிருந்து எழுந்துவந்த குறையுடல்களென மயங்கச் செய்தது.

கலிதேவனின் ஆலயப்பெருமுகப்பில் அரசனின் தேர் வந்தபோது "காளகக்குடி மைந்தர் புஷ்கரன் வெல்க! நிஷதக்குடி மன்னர் வெல்க! கலிமைந்தர் என்றென்றும் வெல்க!" என்று வாழ்த்தொலிகள் எழுந்தன. நாற்புறமும் திறந்த தேர்த்தட்டில் இரு கைகளையும் கூப்பியபடி நின்று மக்கள் வீசிய அரிமலர்

மழையில் நனைந்து ஆலயத்தை வந்தடைந்தான் புஷ்கரன். வீரர் அமைத்த படிகளில் இறங்கி இருபுறமும் மனிதத்திரள் கொப்பளிக்க வேல்கொண்டு விலக்கி வீரர்கள் உருவாக்கிய சிறுபாதையினூடாக நடந்து ஆலயத்தை சென்றடைந்தான்.

அவன் வருகையை முரசுகள் முழங்கி அறிவித்தன. பூசகர்கள் எழுவர் வந்து அவனை வேல்தாழ்த்தி வரவேற்று கொண்டுசென்று கலிமுன் நிறுத்தினர். விழி கட்டப்பட்ட சிலையை நோக்கியபடி அவன் கைகூப்பி நின்றான். அவன் உடல் மெய்ப்புகொண்டபடியே இருந்தது. பூசகர் ஒருவர் வெறியாட்டு கொண்டு அலறி வேல்சுழற்றி ஆடினார். சூழநின்ற பூசகர்கள் ஒவ்வொருவராக வெறியாட்டு கொண்டனர். அது ஒருவரிலிருந்து ஒருவர் என கடந்து செல்ல அப்பகுதியில் நின்ற அனைவருமே வெறியாட்டெழ கூவி துள்ளியாடினர். நரம்புகள் புடைத்த கழுத்துகளும் துறித்த விழிகளும் தொங்கியாடிய நாக்குகளுமாக துள்ளுமீன் என கூட்டத்திலிருந்து எழுந்து காற்றில் பறந்தமைந்தனர்.

வெறிக்கூச்சலுடன் ஒருவன் ஓடிவந்து கலிமுன் நின்று தன் குழலை இடக்கையால் பற்றி வலக்கையில் ஏந்திய வாளால் தலை அரிந்து குருதி பெருக கீழே விழுந்தான். அவன்மேல் என இன்னொருவன் வந்து தலையரிந்து விழுந்தான். மேலும் மேலுமென ஏழு நிஷாதர் தலைகொடுத்து விழுந்தனர். பூசகர் அவர்களின் குருதியை மரக்குடைவுக் கலங்களில் பிடித்து சேர்த்தனர். கால்கள் பின்னித் துடிக்க கைகள் மண்ணள்ளி அதிர விழித்த கண்களும் இளித்த பற்களுமாக அவர்கள் உயிரடங்கினர்.

தற்பலி கொடுத்துக்கொண்ட நிஷாத வீரர்களின் உடல்களைத் தூக்கி அகற்றினர் பூசகர். பன்னிரு குடங்களில் பிடித்துச்

சேர்க்கப்பட்ட அவர்களின் கொழுங்குருதியை கலியின் சிலைமேல் ஊற்றி முழுக்காட்டினர். முழவும் பறையும் உறுமியும் சங்கும் மணியும் கொண்ட ஐந்தொகைக் கருவிகள் முழங்கிக்கொண்டே இருந்தன. மலராட்டும் சுடராட்டும் முடிவது வரை அந்த இசையாலேயே அப்பகுதியின் அத்தனை காட்சிகளும் சமைக்கப்பட்டிருந்தன. “பஞ்சவாத்தியம் அமைக!” என பூசகர் கைகாட்டியதும் அவை ஓய்ந்து அமைதி எழுந்தது.

அமைதியும் பெருகி அகன்று சென்றது. சூழ்ந்திருந்த முற்றமும் காடும் ஓசையடங்கின. பூசகர் கலிக்கு படையலிட்டு அக்குருதி அன்னத்தை அவனுக்கு அளித்தார். அதில் ஒரு பருக்கையை எடுத்து உண்டு வணங்கி கலியின் காலில் இருந்த குருதிக்குழம்பை எடுத்து நெற்றியில் குறிதொட்டு அவன் வெளியே வந்தான். தேரில் ஏறி நாற்புறமும் நோக்கித் தொழுதபின் உரத்த குரலில் “இனி தடையேதும் இல்லை. நம் தெய்வம் அது வீற்றிருக்கும் இடம் என நமது முன்னோர் வகுத்த மலையுச்சிக்கே செல்லட்டும். நம் தெய்வத்தை நம் சென்னிமேல் அமர்த்துவது நமது கடன். அவ்வாறே ஆகுக!” என்றான்.

அவன் கூறியதை பல நூறு நிமித்திகர்கள் மீண்டும் மீண்டும் கூவ நிஷாதர்கள் வெறிக்கூச்சலிட்டனர். நெஞ்சிலும் தலையிலும் அறைந்தபடி சிலர் அழுதனர். கொம்பும் முரசும் முழங்க வாழ்த்தொலி கூவியபடி பூசகர்கள் கலியின் விழிக்கட்டை அவிழ்த்தனர். விழி திறந்த தெய்வத்தை கற்பீடத்திலிருந்து பெயர்த்தெடுத்து மரப்பீடத்தில் வைத்தனர். ஆறு மரச்சட்டங்களின்மேல் அமைந்த அந்தப் பீடத்தை கழிக்கு ஐவர் என முப்பது மல்லர்கள் தூக்கிக்கொண்டார்கள்.

ஆர்ப்பரிக்கும் நிஷாதர்களை நோக்கியபடி கலி வெளிவந்து பகலொளியில் நின்றது.

கொப்பளிக்கும் பெருவெள்ளத்தில் மிதப்பதுபோல கலியின் சிலை மக்கள்திரள்மேல் அலைபாய்ந்ததை புஷ்கரன் நோக்கி நின்றான். “மேலேறிச் செல்லும் வெள்ளம்” என்றார் பத்ரர். எறும்புப்பெருக்கு என அவன் எண்ணினான். அப்பால் நின்றிருந்த சுநீதர் “எரிந்தெழுந்து மலையை உண்ணும் தழல்” என்றார். ஒன்றை ஒன்று உந்தி மேலேற்றும் சிறிய அலைகளாக மக்கள்திரள் இந்திரகிரிக்கு மேலேறிச் சென்றது.

தேர்த்தட்டில் இடையில் கைவைத்து நின்று அவன் பார்த்துக்கொண்டிருக்கையில் இந்திரகிரி முற்றிலும் மனிதர்களால் ஆனதாக மாறியது. அவன் அருகே நின்ற சுநீதர் “மலையே மறைந்துவிட்டது, அரசே” என்றார். அவன் தலையசைத்தான். அமைச்சர் பத்ரர் “மானுட மலை” என்றார். அவனுக்கு மண்ணில் நிறைந்திருக்கும் மானுடப்பரப்பில் ஒரு குமிழி என்று தோன்றியது. மேலே இந்திரனின் சிலை அசைவதை அவன் கண்டான். அங்கிருந்து எழுந்த ஓலம் மிக மெல்லிய செவித்தீற்றலாகவே கேட்டது.

சிலை அசைவது அதற்குப் பின்னிருந்த முகில் நகர்வாலா என்று ஐயம் ஏற்பட்டது. மீண்டும் மீண்டும் அது நடுங்கி அதிர்ந்து அசைந்தபோதுதான் உண்மை அது என்ற திண்ணம் வந்தது. சிலை வலப்பக்கமாக சரியத் தொடங்கியது. சுநீதர் “சிலை சரிகிறது. அங்கு நின்றவர்கள் விலகி ஓடவில்லை எனில் பலர் நசுங்குவது உறுதி” என்றார். அமைச்சர் பத்ரர் “அனைவரும் அவ்வாறு விலக்கிக்கொள்ள இயலாது. மலையில் எங்கும் இடமே இல்லையே” என்றார். சுநீதர் “ஆம்,

கலி விழி திறந்தால் திரள்பலி இன்றி அமையமாட்டான்” என்றார்.

காற்றில் கரிய இறகு ஒன்று விழுந்து நிலத்தில் அமைவதுபோல சிலை சென்று அறைந்தது. ஓசையே இல்லாது அது நிகழ்ந்தமை புஷ்கரனுக்குள் ஒரு துணுக்குறலை உருவாக்கியது. அங்கு எழுந்த அலறல்களும் கூச்சல்களும் தொலைவிலிருந்து பார்க்கையில் மிகச் சிறிய பறவைக்கலைவொலிபோல தோன்றியது. சற்று நேரத்தில் சிலைமேல் மனிதத்திரள் ஏறி முழுமையாகவே மூடியது. கூர்ந்து நோக்கியபோது மனித உடல்கள் போர்வையென மூடியிருக்க ஒரு முழுப்புருவாக சிலையை காணமுடிந்தது.

“கலிதேவனின் சிலையை இப்போதே அங்கு நிறுவிவிடுவார்கள். பதிட்டைப் பூசனைகள் பகல் முழுக்க நிகழும். அந்தியில் முழுக்காட்டும் விழிதிறப்பும்” என்றார் சுநீதர். “நாம் அரண்மனைக்கே மீண்டு ஓய்வெடுத்துவிட்டு அங்கே செல்வோம்.” புஷ்கரன் தலையசைத்து தேரைத் திருப்பும்படி ஆணையிட்டான். தேர் ஒழிந்த நகர்த்தெருக்களினூடாகச் செல்லும்போது “கலிங்க அரசியையும் அவள் காதலனையும் இக்குடிகளே தண்டிக்கட்டும் என்று நான் ஆணையிடுகிறேன்” என்றான்.

பத்ரர் திடுக்கிட்டு “அரசே, குடியவையில் அவர்களை நிறுத்தி நெறியுசாவ வேண்டியது நம் கடன்” என்றார். புஷ்கரன் “மேலும் ஒரு நாள் கடத்தினால் அவளை நம்மால் தொடமுடியாது. ஏனெனில் அவள் ஷத்ரியப் பெண். ஒருபோதும் ஷத்ரியர் நிஷாதர்முன் ஷத்ரியப் பெண் மன்றுநிற்க ஒப்பமாட்டார்கள். இத்தருணத்தில் இங்கேயே இவ்வலையிலேயே அது நிகழ்ந்தாக வேண்டும்” என்றான். பத்ரர் “ஆணை” என்றார்.

“நிஷதபுரியின் புஷ்கரன் ஒவ்வொன்றையும் எண்ணிஎண்ணிச் செய்து ஏணியில் ஏறிக்கொண்டே இருந்தான். அந்த ஏணி உண்மையில் கீழ்நோக்கிச் சரிந்து ஆழத்திற்கிறங்கியது என்பதை அவன் உணர்ந்தும் இருந்தான்” என்றார் ஆபர். விராடர் “ஆம், கண் மூடினாலும் எழுவதையும் விழுவதையும் உணரும் ஒரு புலன் நம்முள் உள்ளது” என்றார்.

“கலிக்கொண்டாட்டத்தின் நாளிலேயே பெருகிவந்து செண்டுவெளியைச் சூழ்ந்த நிஷாதர்கள் ரிஷபனையும் மாலினியையும் கல்லால் அடித்து கிழித்தெறிந்தனர். அவர்கள் ஒவ்வொருவரும் குருதியிலாடியிருந்தனர். மேலும் மேலும் குருதி என அவர்களுள் வாழ்ந்த இருண்ட தெய்வம் விடாய் மிக்க நாவை நீட்டியது. ரிஷபனும் மாலினியும் எரிப்பெருக்கிலிட்ட வெண்ணைக்கட்டிகள்போல கண்ணெதிரிலேயே கணங்களுக்குள் உருவழிந்தனர். அவர்களின் ஊனில் ஒரு துண்டுக்காக நிஷாதர் முண்டியடித்தனர். ஒரு நகம் மட்டும் கிடைத்த ஒருவன் வெறிகொண்டு நகைத்தபடி எழுந்து குதிக்க அவன்மேல் பாய்ந்து பிறர் அவனையே கிழித்தெறிந்தனர்” என்றார் ஆபர்.

தண்டபுரத்தின் கலிங்க அரசன் பானுதேவன் செய்தியறிந்தபோது சினம்கொண்டு தொடையை அறைந்தபடி எழுந்தான். “எழுக நம் படைகள்” என அவன் ஆணையிட்டான். “அரசே, பொறுங்கள். நம்முடன் நின்றிருக்கும் படைகள் எவை என நாம் அறியவேண்டும். அவனுடன் நிற்பவர் எவரென்றும் தெளியவேண்டும்” என்றார் அமைச்சர் ஸ்ரீகரர். “நம்முடன் அத்தனை ஷத்ரியர்களும் நிற்பார்கள். உடனே நிகழ்ந்ததென்ன என்று அரசர்களுக்கு செய்தியறிவியுங்கள்” என்றான்

பானுதேவன். “அதை அறிந்த பின்னர் போதும் நம் படைநீக்கம்” என்றார் அமைச்சர்.

அதற்குள்ளாகவே புஷ்கரன் படைகொண்டு தண்டபுரத்தின்மேல் எழுந்திருக்கும் செய்தி வந்தது. அவனுடன் சதகர்ணிகளின் படைகளும் வழியில் இணைந்துகொண்டன. “இப்பெருவஞ்சனையை நான் எதிர்பார்க்கவில்லை. வஞ்சனையாலேயே இந்த ஆடல் நிகழுமென நான் அறிந்திருந்தேன். ஆயினும் இது எண்ணற்கரியது” என்று பானுதேவன் குமுறினான். “சதகர்ணிகளை புஷ்கரனுடன் இணைத்ததே நான்தான்… என்னிடமே முதல் வஞ்சனையை நிகழ்த்தியிருக்கிறார்கள்.”

“அதுவே நிகழும். ஏனென்றால் வஞ்சனைத்திறனால் நீங்கள் ஆற்றல்கொள்கிறீர்கள் என அவர்கள் அறிவார்கள். படைவல்லமை கண்ணுக்குத் தெரியும். சூழ்ச்சியை உய்த்தறிய இயலாது. சூழ்ச்சித்திறன் கொண்டவனை அவன் வளர்வதற்குள் அழிக்கவேண்டும் என்றுதான் அரசநூல்கள் சொல்கின்றன” என்றார் அமைச்சர் ஸ்ரீகரர். பானுதேவன் சினம்கொண்டு தொடைமேல் ஓங்கி அறைந்தான். “நம் சூழ்ச்சியின் வெற்றியை இவர்கள் அறுவடை செய்கிறார்கள். இதை ஒப்ப முடியாது. ஷத்ரியர் எவர் நம்முடன் திரள்வார்கள் என்று இன்றே அறிக!” என்றான்.

ஷத்ரிய நாடுகள் எதிலிருந்தும் மறுமொழி வரவில்லை. நான்கு நாட்கள் காத்திருந்த பின் பானுதேவன் பொறுமையிழந்தான். “அவர்களுடன் வேறேதோ உடன்படிக்கை நிகழ்ந்துள்ளது, அரசே” என்றார் ஸ்ரீகரர். “வேறுவழியில்லை. நாம் நம் பங்காளிகளிடம் சென்று சேரவேண்டியதுதான். நம் தூதர்கள் தாம்ரலிப்திக்கு செல்லட்டும். கலிங்கம் ஒன்றாக நம்முடன் நின்றாலே நாம்

எளிதில் விழமாட்டோம்" என்றான் பானுதேவன். ஆனால் மறுநாள் செய்தி வந்தது. தாம்ரலிப்தியின் கலிங்க மன்னன் சூரியதேவனின் மகள் சாயாதேவியை புஷ்கரன் மணம் செய்துகொள்வதாக உறுதி செய்யப்பட்டுள்ளது என்று. அதற்கு ஈடாக தண்டபுரத்தை தாம்ரலிப்திக்கு அளித்து ஒருங்கிணைந்த கலிங்கம் உருவாக புஷ்கரன் உதவுவதாக சொல்லப்பட்டுள்ளது என்றான் ஒற்றன்.

உளமுடைந்து அரியணையில் அமர்ந்த பானுதேவன் உதடுகளை இறுகக் கடித்து கைகளை முறுக்கியபடி தன்னை கட்டுப்படுத்திக்கொள்ள முயன்றான். அவ்வெல்லை மீற வெடித்து அழத்தொடங்கினான். அவை அவன் அழுவதை திகைப்புடன் நோக்கி அமர்ந்திருந்தது. தன் அழுகையை உணர்ந்து சீற்றம் கொண்டு எழுந்த பானுதேவன் "நாம் கிளம்புவோம்... வடக்கே செல்வோம்" என்றான். "நகரை கைவிட்டுவிட்டா? அது அறமல்ல" என்றார் அமைச்சர் ஸ்ரீகரர். "அறம் பேசும் பொழுதல்ல இது. அவன் என்னை விட்டுவைக்கமாட்டான்" என்றான் பானுதேவன்.

"உயிர்தப்பி ஓடுவதை விட..." என அமைச்சர் சொல்லத் தொடங்க "நீர் காவல்படையுடன் இங்கிரும். புஷ்கரனிடம் பேசி நம் குடிகளின் உயிர்களை காத்துக்கொள்ளும். நான் கிளம்புகிறேன்" என்றான் அரசன். அவையினர் தயங்கியபடி எழுந்தனர். "படைகள் ஒருங்குக! நான் இன்று மாலையே கிளம்பவேண்டும்" என்று ஆணையிட்டபடி அவன் அவையிலிருந்து விலகிச் சென்றான்.

அன்று மாலையே பானுதேவன் தன் படையுடன் பின்வாங்கி வடக்கே சென்றான். ஆனால் அவன் சென்ற பாதையை முன்னரே புஷ்கரனின் படைகள் மறித்துவிட்டிருந்தன.

தொலைவில் நிஷாதர்களின் காகக்கொடியை பார்த்ததுமே பானுதேவன் உளமுடைந்து மீண்டும் அழத்தொடங்கினான். அவனுடைய படைத்தலைவன் உக்ரவீரியன் புஷ்கரனுக்கு முழுப் படையும் அடிபணிவதாக செய்தி அனுப்பினான். அதற்கு மறுமொழி வரவில்லை. படைத்தலைவர்கள் அமர்ந்து சொல்சூழ்ந்தார்கள். “முழுப் பணிதலுக்கு செய்தியனுப்பியும் மறுமொழி இல்லை என்பதன் பொருள் ஒன்றே” என்றான் உக்ரவீரியன். அவன் துணைவர் அவன் விழிகளையே நோக்கினர். “என்னுடன் நில்லுங்கள்” என்று அவன் சொல்ல அவர்கள் விழிகளால் ஆம் என்றனர்.

அன்றிரவு தன் பாடிவீட்டில் மதுவுண்டு வாய்வழிய துயின்றுகொண்டிருந்த பானுதேவனை உள்ளே நுழைந்த உக்ரவீரியன் வெட்டிக் கொன்றான். அவன் பாடிவீட்டிற்குள் வாளுடன் புகுந்தபோது அரசனுடன் இருந்த சேடி அலறினாள். ஒலி கேட்டு விழித்துக்கொண்ட பானுதேவன் “உக்ரரே!” என கைநீட்டினான். அத்தருணத்தை வெல்ல தன் கீழ்மையை முழுமையாக திரட்டிக்கொள்ளவேண்டும் என உணர்ந்த உக்ரவீரியன் அவன் நெஞ்சில் ஓங்கி உதைத்தான். அவன் மல்லாந்து விழ குழல்பற்றி தலையைத் தூக்கி கழுத்தை வெட்டினான். துண்டான தலையுடன் அவன் வெளிவந்தபோது படைத்துணைவர்கள் அங்கே திரண்டு நின்றிருந்தனர். தலையை முடிபற்றி தூக்கிக் காட்டினான் உக்ரவீரியன். கைகளைத் தூக்கி “ஆம்” என்றனர்.

பானுதேவனின் தலையுடன் கலிங்கப்படை சென்று புஷ்கரனின் படைகளுடன் சேர்ந்துகொண்டது. அவர்கள் கலிங்கக்கொடியை கீழேயும் காகக்கொடியை மேலேயும் கட்டிய கம்பங்களுடன் புஷ்கரனை வாழ்த்தி ஒலியெழுப்பியபடி திரளாக நிஷதப்படை

நோக்கி சென்றனர். அவர்களைக் கண்டதும் நிஷாதர்கள் உரக்கக் கூச்சலிட்டு வரவேற்றனர். புஷ்கரன் முன்னிலையில் அவர்கள் தலைமழித்து நெற்றியில் காகக்குறி பொறித்து நிஷதகுடியின் அடிமைகளாக ஆயினர்.

புஷ்கரன் தண்டபுரத்தை அடைந்தபோது கையில் கங்கைநீர் கொண்ட நிறைகுடத்துடன் நூற்றெட்டு அந்தணர் உடன்வர கோட்டைவாயிலுக்கே வந்து ஸ்ரீகரர் அவனை எதிர்கொண்டார். தண்டபுரத்தின் அவையைக் கூட்டி அரியணையில் அமர்ந்து முடிசூடிய புஷ்கரன் நகர்மையத்தில் இருந்த சூரியன் ஆலயத்தின் கிழக்குச் சுவரில் தன் வெற்றியை கல்வெட்டாகப் பொறித்தபின் நகர்மீண்டான். தண்டபுரத்தை கன்யாசுல்கமாக அளித்து தாம்ரலிப்தியின் அரசன் சூரியதேவனின் மகள் சாயாதேவியை மணந்துகொண்டான்.

ஆபர் கைகுவித்து வணங்கி “குருதியில் வேர்விட்டே அரசுகள் எழுகின்றன. ஆனால் ஷத்ரியக் குருதி சூரியன் சான்றாகவே விழவேண்டும் என்கின்றன நூல்கள். இருளில் சிந்தப்படும் குருதியை உண்ண வருபவை இருளை நிறைத்துள்ள தெய்வங்கள். அவை சுவைகண்ட பின் அடங்குவதில்லை. முழுக்க நக்கித் துவட்டிய பின்னரே அகல்கின்றன” என்றார்.

விராடர் பெருமூச்சுடன் “ஆம், ஒருமுறைகூட வரலாறு பிறிதொன்றை சொன்னதில்லை. ஆனால் இது நிகழாமலும் இருந்ததில்லை” என்றார். “மீண்டும் மீண்டும் இந்நிலத்தில் உடன்பிறந்தார் நிலத்திற்கென பூசலிட்டிருக்கிறார்கள். பின்னர் விண்ணேகி அங்கே ஒருவரை ஒருவர் தழுவிக்கொண்டு கண்ணீர்விட்டிருக்கிறார்கள். ஆயினும் குருதிப் பூசலும் அடங்கவில்லை” என்றார் ஆபர்.

குங்கன் எழுந்தமைந்து மெல்ல முனகிய பின் “போருக்கெழுபவர்கள் நூல் நோக்குவதில்லை” என்றான். விராடர் “எனக்கு ஒன்று தோன்றுவதுண்டு, குங்கரே. இப்போது நீங்கள் அசைந்து ஒலியெழுப்புகையில் உறுதிப்பட்டது. உங்கள் அசைவுகளை மட்டும் கண்டால் நீங்கள் புண்பட்டு உடற்குறை கொண்ட ஒருவர் எனத் தோன்றும்” என்றார். குங்கன் “என்ன?” என்றான் வியப்புடன். “ஆம், உங்கள் இடக்காலில் புண் எழுந்து முடமானதுபோல. அதை நீங்கள் மாளா வலியுடன் அசைத்து வைப்பதாகவே தோன்றும்” என்றார். குங்கன் புன்னகைத்து “நாம் அதை அறியவோ பகுக்கவோ இயலாது” என்றான்.

பின்னர் ஆபரிடம் “கானேகிய நளன் என்ன ஆனார்?” என்றான். “பல நூறு கதை வடிவுகள் இங்குள்ளன. நான் நாலைந்தை கேட்டுவிட்டேன். நான் கேட்க விழைவது அரசுசூழும் அந்தணர் எழுதி வைத்திருக்கும் வரலாற்றை.” ஆபர் “இதுவும் கதையே. சென்றவரைப் பற்றி இருப்பவர் கதையாக அன்றி எதையுமே சொல்லிவிட முடியாது” என்றார். விராடர் “மெய் வரலாறென்பதே இல்லையா?” என்றார். “இல்லை. மெய்வரலாறு ஒன்று இருந்தால் அது பாறைகளைப்போல. அதைக் கொண்டு நிகழ்காலத்தை விரும்பிய வண்ணம் புனைந்துகொள்ள முடியாது” என்றார் ஆபர்.

“சொல்க!” என்றான் குங்கன். ஆபர் நீள்மூச்சுவிட்டு “புஷ்கரனை பற்றிக்கொண்ட நாகம் நளனை கைவிட்டது என்கின்றன நூல்கள்” எனத் தொடங்கினார். “அன்றுதான் இந்திரகிரியின் உச்சியில் நளன் நிறுவிய பெருஞ்சிலை மண்ணறைந்து விழுந்து நாற்பத்தாறுபேரை பலி கொண்டது. கலி விழி திறந்து எழுந்து தன் குடிகளின்மேல் அனலெனப் பரவி ஆட்கொண்டது.

குருதியிலாடி குருதியை உண்டு வெறிகொண்டாடியது நிஷதபுரி.”

# நீர்க்கோலம் - 77

### 76. கைகளானவன்

காட்டின் கைகள் நீண்டு ஒவ்வொன்றாக அவனிடமிருந்து கழற்றி எடுத்துக்கொண்டிருந்தன. ஆடைகளை முதலில். சென்றகால நினைவுகளை பின்னர். சூழுணர்வை, செல்திசையை. இறுதியாக தன்னுணர்வை. எத்தனை நாட்களாயின என அவன் உணரவில்லை. பசியும் துயிலும் இயல்பாக வந்துசென்றன. பசித்தபோது உணவு விழிகளுக்குத் தெரிந்தது. துயிலெழுந்தபோது நிரப்பை கண்டடைந்தான். துயின்றெழுந்ததுமே கால்கள் நடக்கத் தொடங்கின.

வன்னிமரத்தடியில் துயில்கையில் அவன் கனவில் ஒரு நாகக்குழவியை கண்டான். மிகச் சிறிது, மாந்தளிர் நிறத்தில் மண்ணகழ்ந்தெடுத்த தளிர்வேர்போல வளைந்து கிடந்தது. அவன் குனிந்து அதன் நெளியும் வாலை நோக்கினான். குனிந்து அதை மெல்ல தொட்டான். சீறி மேலெழுந்தது. சிறிய படம் மெல்ல ஆடியது. அது நாகமல்ல, சிறுதழலென அறிந்தான். அதன் உடல்பட்டு சுள்ளிகள் நொறுங்கிக் கருகி எரிந்தன. அனலெழுந்து பெருகி அவன் தலைக்குமேல் சென்றது. அவன் அத்தழல் காட்டை சூழ்வதை, பெருமரங்கள் அனலால் தழுவப்பட்டு துடித்துப் பொசுங்குவதை, தளிருடன் இலைத்தழைப்புகள் வெந்து சுருண்டு கருகி பொழிவதை கண்டான். அவன் உடல் அந்த வெக்கையை அறிந்தது. அவனை நோக்கி நான்குபுறமிருந்தும் தீ எழுந்து வந்தது.

செந்நிறமும் பொன்னிறமும் நீலநிறமும் கொண்ட மூவனல். அவன் தலைமுடி பொசுங்கி கெடுமணம் எழுந்தது.

அவன் எழுந்துகொண்டபோது தன்னைச் சூழ்ந்து வரும் காட்டெரியை கண்டான். தீ உறுமும் என்றும் ஓலமிடும் என்றும் அன்றுதான் அறிந்தான். செந்தழல் அலைகளாக எழுந்து அறைந்து பெருகி வந்தது. அனலுக்கு நுரையுண்டு, துமியுண்டு என்று கண்டான். ஓடு ஓடு என்று உள்ளம் கூவியபோதிலும் அச்செந்நிறக் கொந்தளிப்பை விட்டு விழிவிலக்க இயலவில்லை. அதற்குள் சிறுசுழிகள். கரிய நிழலுருக்கள். வெடித்து வெடித்து எழும் வண்ணங்கள்.

அவன் காலடியை அனல் நெருங்கியபோதுதான் பின்னால் விலகினான். வெடித்த விதையொன்று அவன்மேல் தெறிக்க துள்ளி மேலும் விலகியபோது விழுந்து கிடந்த மரமொன்றின் பட்டைக்குள் இருந்து எழுந்து நெளிந்த சிறிய பாம்புக்குழவியை கண்டான். குழந்தையின் கைவிரல்போல சிவந்த மென்மையான உடல் அனல்வெம்மையில் நெளிந்து துடித்தது. அந்த மரம் ஈரம் மிக்கதாக இருந்தமையால் எளிதில் எரியவில்லை. ஆயினும் அதன் பட்டை கருகி புகையெழ எரிநோக்கி சென்றுகொண்டே இருந்தது. சுண்டிச் சுண்டி அவனை அழைத்தது அந்த விரல்.

எதுவும் எண்ணாமல் அவன் எரிக்குள் பாய்ந்தான். எரியாமல் கிடந்த மரங்கள் மேல் மிதித்துச்சென்று அந்த மரத்தடியை அடைந்து பட்டையை உதைத்துப் பிளந்தான். அதில் உடல் சிக்கியிருந்த நாகக்குழவி பாய்ந்து நெளிந்து ஓடிவந்து அவன் காலில் தொற்றிக்கொண்டது. அதை நோக்கி கையை நீட்டியதும் கையில் துள்ளி ஏறியது. அவன் அங்கிருந்து இரு மரத்தடிகள்மேல் மிதித்து தீயை விட்டு வெளியே வந்தான்.

ஓடி அகன்று அப்பால் தெரிந்த நீரோடை நோக்கி சென்றான். அவன் தோளிலேறிய நாகத்தைப் பிடித்து நீரில் வீச முயன்றான். அது அவன் விரலை உடலால் சுற்றிக்கொண்டு மறுத்தது. இன்னொரு கையால் பற்றி வீச முயன்றபோது அவன் கைவிரலைக் கவ்வியது.

எறும்பு கடித்ததுபோல் உணர்ந்தான். கையை உதறியபோது தெறித்து நீரில் விழுந்து நெளிந்து நீந்தி மறுபக்கம் சென்று தழைத்த புல்லுக்குள் நுழைந்தது. அதன் வால்நுனியின் இறுதித் துடிப்பை அவன் நோக்கினான். அவ்வசைவு விழிகளில் எஞ்சியிருக்க தன் கைவிரலை தூக்கிப்பார்த்தான். சிவந்த இரு புள்ளிகள். அதை வாயில் வைத்துக் கடித்து உறிஞ்சி வாயில் ஊறிவந்த சிலதுளிக் குருதியை துப்பிவிட்டு நடந்தான்.

இரு கைகளை விரித்ததுபோல எரிந்தெழுந்து வந்த தீயிலிருந்து தெறித்த காய்கள் விழுந்து வெடித்து பற்றிக்கொண்டு இஞ்சிப்புற்பரப்பு எரிகொண்டது. தன் முன் எரி எழுவதைக் கண்டு அவன் திகைத்து திரும்பிப்பார்த்தான். சுழித்தெழுந்து அணைந்தது தழல். முடிந்தது என்ற சொல்லாக தன் அகத்தை உணர்ந்தான். இத்தனை எளிதாகவா? இத்தனை பொருளில்லாமலா? எவரேனும் என்னை கண்டடைவார்களா? வெள்ளெலும்புகள் எஞ்சுமா? எந்தக் கதையில் இது சொல்லப்படும்? கதை முடிவு அங்கே நிஷதபுரியின் அரண்மனைமுற்றத்துடன் நின்றுவிடுமா? ஏன் அச்சமெழவில்லை? ஏன் இந்நிலையிலும் நான் நான் என துள்ளுகிறது என் உள்ளம்?

இஞ்சிப்புல் விரைவில் எரிந்தழிய அந்தக் கரிய பரப்பிலிருந்து நீரில் கரித்தூள் கரைவதுபோல நீலப் புகைச்சுருள்கள் எழுந்துகொண்டிருந்தன. அவன் அந்த சாம்பல்பரப்பில் சென்று

நின்றான். அணுகிவந்த செந்தழல் தயங்கியது. மாபெரும் பசு ஒன்றின் வாய் மேய்ந்தபடி வந்து புல் தீர்ந்துவிடக்கண்டு நின்று மேலெழுந்தது. நுரை வற்றுவதுபோல தீ அணைவதை அவன் கண்டான். பின்னர் அவனைச் சூழ்ந்து கரியநிலம் புகைமூடி ஆங்காங்கே எரியும் உதிரி மரத்தடிகளுடன் விரிந்துகிடந்தது. மேலெழுந்த கரிச்சுருள்கள் மழையென பெய்யத் தொடங்கின. அவன் உடலில் வியர்வை வழிய அதில் கரி கரைந்து கோடுகளாக வழிந்தது.

அவன் பெருமூச்சுடன் சூழ நோக்கினான். சற்றுமுன் அங்கே பேருருக்கொண்டு நின்றிருந்த ஒன்று இல்லையென்றாகிவிட்டிருந்தது. சினம் ஒன்று பெருகி தணிந்ததுபோல. வெந்த காடு வேறொரு மணம் கொண்டிருந்தது. அந்த மணங்கள் அங்குதான் இருந்தன. காடு நீருக்கு ஒரு மணத்தை அளிக்கிறது. நெருப்புக்கு பிறிதொன்றை. ஓடையில் சுழித்துச்சென்ற நீரில் கரிப்பொடிகள் மிதந்தன. அள்ளி உண்டபோது புகைமணம் இருந்தது.

காட்டுக்குள் சென்றபோது அவன் உடலெங்கும் களைப்பை உணர்ந்தான். மரத்தடி ஒன்று தெரிய அங்கே சென்று இலைப்படுக்கை அமைக்க முயலாமல் அப்படியே படுத்துக்கொண்டான். பாலாடை படிவதுபோல் உடல் நிலத்தில் படிந்தது. ஒவ்வொரு கூழாங்கல் மேலும் உடல் உருகி வழிந்துவிட்டதாகத் தோன்றியது. கைகால்கள் எடைகொண்டன. சித்தம் எடைகொண்டு அசைவிழந்தது. அவன் தன் குறட்டையொலியை தானே கேட்டான்.

அவனருகே கரிய பேருருவன் ஒருவன் வந்து அமர்ந்தான். அவன் நடந்து வருவதை அவன் காணவில்லை. அருகே அமர்கையில் ஓசையும் எழவில்லை. உடலுணர்வால் அவனை

அறிந்து எழ முயன்றான். “துயில்க… நான் சற்று ஓய்வெடுக்கிறேன்” என்றான். “இக்காட்டில் வாழ்பவன் நான். நீங்கள் எவரென்று அறியலாமா?” என்றான். “நான் காட்டில் வாழ முயல்பவன்” என்றான் நளன். “நீங்கள் காட்டிலிருந்து வெளியேறியவர். மீளமுடியாதவர்” என்றான். “ஆம்” என்றான் நளன். “நீங்கள் நிஷதபுரியின் நளன் அல்லவா?” “என்னை அறிவீர்களா?” என்றான். “ஆம்” என்றான் அவன்.

சில கணங்களுக்குப் பின் “எங்கு செல்கிறீர்கள்?” என்றான். “அறியேன். சென்றுகொண்டே இருக்கிறேன்.” அவன் சிரித்து “இலக்கில்லாதவர்கள் எத்தனை விரைந்தாலும் எங்கும் செல்வதில்லை” என்றான். “ஆம்” என நளன் சொன்னான். “முற்றிலுமறியாத ஒருவனிடம் நீங்கள் அனைத்தையும் சொல்லலாம் என்று நூல்கூற்று உள்ளது, அரசே” என்றான் கரியவன். அவன் பெருந்தோள்களை நளன் நோக்கிக்கொண்டிருந்தான். அத்தனை பெரிய தோள்கள் மானுடருக்கு அமையக்கூடுமா? அவன் கைகள் மிக நீளமானவை. இறுகிய தசைகளும் புடைத்த நரம்புகளுமாக முதுவேங்கைமரத்தடி போல.

“சொல்லுங்கள்” என்றான் கரியோன். “எனக்கு நிகழ்ந்ததை நீங்கள் அறிவீர்களா?” என்றான் நளன். “கதைகளினூடாக” என்றான் அவன். “எல்லா கதைகளும் மெய்யென்றே கொள்க” என்றான் நளன். “நான் சூதாட்டத்தில் ஏன் தோற்றேன்? நான் அறிய விழைவது அதையே.” அவன் குனிந்து நளன் விழிகளை நோக்கியபடி “சூதாட்டத்தை நெடுநாட்களுக்கு முன்னரே தொடங்கிவிட்டீர்கள், நிஷாதரே” என்றான். நளன் “என்ன?” என்றான். “நெடுநாட்களுக்கு முன்” என்றான். “நாற்களத்திற்காக

குதிரைகளை அமைத்தீர்கள். பின் முதல் காய்நகர்வு. அது கலியை நீக்கி இந்திரனை முன்வைத்தது.”

அவன் என்ன சொல்கிறான் என நளனுக்குப் புரியவில்லை. “பின் அரசியின் வரவு, பின்னர்…” நளன் எரிச்சலுடன் “போதும்” என்றான். “எல்லா சூதாட்டங்களும் பிறிதொரு பெருஞ்சூதாட்டத்திற்குள் நிகழ்கின்றன. ஒன்றின் நெறியை அது அமைந்திருக்கும் பிறிதின் நெறி கட்டுப்படுத்துகிறது. சூதிற்குள் சூதிற்குள் சூதென்று செல்லும் ஆயிரம் பல்லாயிரம் அடுக்குகள். நீங்கள் ஆடியது ஒன்றில். அதன் உச்சமென பிறிதொன்றில்.” நளன் புரிந்தும் புரியாமலும் கேட்டுக்கொண்டிருந்தான்.

“சூதில் வெல்வதற்கே அனைவரும் ஆடுகிறார்கள். ஆனால் அனைவரின் ஆழங்களும் வெல்லத்தான் விழைகின்றன என்று கூறமுடியாது” என்றான் கரியவன். “தோற்கவும் விழையக்கூடும் நாமென்றாகி நடிக்கும் நாமறியா அது.” நளன் எழப்போனான். “நான் விழைவதையே சொல்லவேண்டுமா என்ன?” நளன் “இல்லை, நீர் என்னுடன் விளையாடுகிறீர்” என்றான். “ஆம்” என அவன் நகைக்க அதிலிருந்த கேலி நளனை மீண்டும் படுக்க வைத்தது. “நான் துயில்கொள்ள விரும்புகிறேன்…” என்றான். “நன்று” என அவன் சொன்னான்.

நளன் கண்களை மூடிக்கொண்டான். ஆனால் அவன் அருகே இருக்கும் உணர்வு நோக்காதானதும் பெரிதாகியது. “எதை அஞ்சி தப்பி ஓடுகிறோமோ அதை வெல்ல எளிய வழி ஒன்றே. அதை நோக்கி திரும்புவது. அதுவாவது. அதில் திளைப்பது.” நளன் விழி திறந்து சினத்துடன் “என்ன உளறுகிறாய்?” என்றான். “எதிலும் முடிவிலாது திளைக்கவியலாது என்பதனால் அதை கடந்தாகவேண்டும். அதன்பின் அது

இல்லை.” நளன் “என்ன சொல்கிறாய்?” என்றான். “இதோ, இது என்னவென்று தெரிகிறதா?” நளன் அதை பார்த்தான். வெண்ணிறப் பட்டாடை. பொன்னூல்களால் கரைப்பின்னல் செய்யப்பட்டிருந்தது. அன்னங்கள் ஒன்றுடன் ஒன்று கழுத்து பிணைத்து மாலையென்றாகியிருந்தது. மேலும் விழிகூர்ந்தபோது அன்னங்களின் தூவிகள் அனைத்துமே மிகச் சிறிய அன்னங்களால் ஆனதென்று தெரிந்தது.

அவன் அதை நினைவுகூர்ந்தான். “இது என்னுடையது. நான் மணிமுடி சூடிக்கொண்டபோது பீதர்நாட்டு வணிகக்குழுவொன்றால் அளிக்கப்பட்டது.” அவன் “ஆம், விலைமதிப்பற்றது. அன்று இதைக் கண்டு பெருவிழைவு கொண்டீர்கள். ஆனால் இதை அணியத் தோன்றவில்லை. உங்கள் கருவூலத்தில் கொண்டுவைக்க ஆணையிட்டீர்கள்” என்றான். நளன் “ஆம்” என்றான். “அதன்பின் இதை மறந்துவிட்டீர்கள்.” நளன் தலையசைத்தான். “ஆனால் ஒருமுறை இது கனவில் வந்தது.” நளன் “இதெல்லாம் எப்படி தெரியும் உங்களுக்கு?” என்றான். “இதோ, உங்கள் உள்ளத்திலிருந்தே படித்தறிகிறேன்.”

நளன் “நீர் மானுடரல்ல” என்றான். “கந்தர்வர், யட்சர், தேவர்... ஆம்.” கரியவன் நகைத்து “நாகனாக இருக்கக்கூடாதா?” என்றான். அவன் கண்களைப் பார்த்து நளன் திடுக்கிட்டான். “ஆம்!” என்றான். “இது உங்கள் கனவில் வந்த நாள் எது எனத் தெரிகிறதா?” அவன் விழிகள் நாகவிழிகளாக நிலைகொண்டிருந்தன. “ஆம்” என்றான். “அவள் சத்ராஜித் ஆக முடிசூட முடிவெடுத்த நாள். வெண்புரவி நகர்மீண்ட அன்றிரவு.” நளன் அவன் விழிகளை நோக்கிக்கொண்டிருந்தான்.

“இதை இந்தப் பொந்தில் வைக்கிறேன்” என்று அவன் அந்த வெண்பட்டை ஒரு தோல்பையால் பொதிந்து அவர்கள் படுத்திருந்த நெடுமரத்தின் பொந்தில் கொண்டுசென்று வைத்தான். “இங்கிருக்கிறது இது” என்றான். “இது எப்படி உங்கள் கையில் கிடைத்தது?” என்றான் நளன்.

திடுக்கிட்டவனாக விழிப்படைந்தான். அவன் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது. எழுந்து அமர்ந்தபோது தன் உடல் காந்துவதை உணர்ந்தான். உதடுகள் உலர்ந்து ஒட்டியிருந்தன. கண்கள் கனன்று நீர் வழிந்தது. எழுந்து நிற்க முயன்றபோது உடல் ஒரு பக்கமாக சரிந்தது. மரத்தைப் பற்றிக்கொண்டு நிலைகொண்டான். கண்களை மூடியபோது நிலம் நழுவ திசை சுழல காலமின்மையில் இருந்தான். மீண்டும் விழி திறந்தபோது வியர்வை பூத்திருந்தது. விடாயை உணர்ந்தான்.

ஓரவிழியில் ஏதோ தெரிய திகைத்து தன் கைகளை தூக்கிப் பார்த்தான். அவை குழந்தைக் கைகள்போல மெத்தென்று வீங்கியிருந்தன, விரல்கள் உருண்டு மேல்கையில் குழிகளுடன் மணிக்கட்டுகளில் மடிப்பு வளையங்களுடன். கால்களும் வீங்கி பன்றிக்குட்டிகள் போலிருந்தன. சுட்டுவிரலை தூக்கி நோக்கினான். அந்த நாகம் கடித்த தழும்பு இரு கரிய புள்ளிகளாகத் தெரிந்தது.

அருகே எங்காவது மானுடர் இருப்பார்களா என்ற எண்ணமே அவனுக்கு முதலில் வந்தது. அவ்வெண்ணம் வந்ததுமே விழிகள் அதற்கான தடயங்களை கண்டடைந்தன. அங்கே எங்கோ நீரோடையின் ஓசை கேட்டது. அது ஆற்றைத்தான் சென்றடையும். ஆற்றிலிருந்து கரையேறும் பாதைகள் இல்லாமலிருக்காது. அவன் திரும்பியபோது அந்த மரப்பொந்தை பார்த்தான். ஒரு கணம் அசையாமல் நின்றான்.

பின்னர் அதை அணுகி உள்ளே நோக்கினான். உள்ளே மான்தோல்பொதி ஒன்று கிடந்தது.

அதை உள்ளே போட்டு நெடுங்காலமாகியிருந்தமையால் சருகுகள் விழுந்து மட்கி மூடி சிலந்திவலை அடர்ந்து பரவி எளிதில் என்னவென்று தெரியவில்லை. கனவில் அதை பார்த்திருக்கவில்லை என்றால் அதை அடையாளம் கண்டிருக்க முடியாது. இல்லை, நான் முன்னரே கண்டுவிட்டேன், ஆகவேதான் கனவு. அவன் உள்ளே கைவிட்டு அதை எடுக்கப்போய் பின் ஒரு கணம் தயங்கி சுற்றிலும் பார்த்தான். அங்கே கிடந்த ஒரு குச்சியை எடுத்துக்கொண்டுவந்து உள்ளே விட்டு சுழற்றினான். சீறியபடி அரசநாகம் ஒன்று பத்தி விரித்தது. அவன் திடுக்கிட்டு பின்வாங்கி பின் குச்சியால் அதன் முன் தட்டினான். அது மூச்சொலிக்க சினந்து அக்குச்சியை இருமுறை கொத்தியது. பின்னர் உள்ளே உடலை இழுத்துக்கொண்டு மெல்ல மறைந்தது.

அவன் அந்தக் குச்சியாலேயே தோல்பொதியை மெல்ல சுழற்றி வெளியே எடுத்தான். அரசநாகம் உண்டு எஞ்சிய எலும்புகளும் மட்கிய இறகுகளும் பலவகையான சருகுச் செத்தைகளுமாக அந்தப் பொதி வந்து நிலத்தில் விழுந்தது. கழியால் அதை தட்டித்தட்டி அதிலிருந்த சிற்றுயிர்களை விலக்கினான். கழியாலேயே அதை எடுத்து அருகே கொண்டுவந்து பிரித்து நோக்கினான். வெண்பட்டு. விரித்துப் பார்த்தான். அன்னப்பறவை மாலை கொண்ட அணிக்கரை. அதை உதறி மடித்து மீண்டும் அந்தப் பொதியில் வைத்துக் கட்டி எடுத்துக்கொண்டான்.

ஒவ்வொரு அடிக்கும் அவன் உடல் தள்ளாடியது. புற்களையும் புதர்களையும் கடந்து மரங்களை பற்றுகோடாகப்

பிடித்துக்கொண்டு நின்று இளைப்பாறி ஓடையை சென்றடைந்தான். அங்கே சேற்றில் பாதி புதைந்தபடி மட்கிய ஆடை அணிந்த எலும்புக்கூடு ஒன்று கிடந்தது. கால்களில் இரும்புத் தண்டையும் கைகளில் இரும்பு வளையும் அணிந்திருந்தது. அருகே சேற்றில் அதன் தலைப்பாகை கிடந்தது. சேற்றில் மூழ்கிய வாளுறை.

அவன் அதை நோக்கியபின் நீருள் இறங்கி நீர்வழியாகவே சென்றான். நீரோடை மேலும் பெரிய ஓடை ஒன்றை சென்றடைந்தது. அன்று உச்சிப்பொழுதுக்குள் அவன் காட்டாறொன்றை அடைந்தான் அதன் கரைவழியாக நடந்து சென்றபோது குடைவுப்படகு ஒன்று ஒரு மரத்தில் கட்டப்பட்டிருப்பதை கண்டான். அது வரைக்கும் செல்ல தன் உடலில் எஞ்சிய சித்தத்தை துளித்துளியாக செலவழித்தான். அது மிகத் தொலைவில் நீரிலாடிக்கொண்டே இருந்தது.

காட்டில் மூலிகை தேடிவந்த மருத்துவரான அர்ச்சர் நளனை கண்டடைந்தார். அவன் நஞ்சு முழுத்து உடல் வீங்கி கடும்காய்ச்சலில் நினைவிழந்திருந்தான். அவர் அவனை படகிலேற்றி காடோரம் அமைந்த தன் ஆய்வுக்குடிலுக்கு கொண்டுவந்தார். அங்கே நாற்பத்தெட்டு மாணவர்களும் நூறு நோயாளிகளும் அவருடன் இருந்தனர். பதினெட்டு நாள் நளன் அவருடைய ஆதுரசாலையில் நினைவில்லாமல் படுத்துக்கிடந்தான். அவன் சொன்ன ஓரிரு சொற்களிலிருந்தே அவர் அவன் யாரென்று புரிந்துகொண்டார். அவனை தனிக் குடிலில் எவருமறியாது வைத்து மருத்துவம் செய்தார்.

அர்ச்சர் தென்னகத்துக்குச் சென்று முக்கடல் முனையருகே ஓங்கி நின்றிருக்கும் மகேந்திர மலையில் அமர்ந்த அகத்தியர்மரபைச் சேர்ந்த சித்தரான குரகரிடம்

மருத்துவமுறை கற்றவர். அவர் அவனுக்கு சாதிலிங்கம், மனோசிலை, ருத்ரகாந்தம், எரிகாரம், கந்தகம், பூரம், வெள்ளை பாஷாணம், கௌரி பாஷாணம், தொட்டிப் பாஷாணம் ஆகியவை கலந்து புடமிட்டு எடுக்கப்பட்ட நவபாஷாண மருந்தை ஊசிமுனையால் தொட்டு நாவிலோடிய நரம்பில் குத்தி உடலில் செலுத்தினார்.

ஒன்பது நச்சுக்கள் பழகிய யானைகள் காட்டுயானையை என நாகநஞ்சை சூழ்ந்துகொண்டன. அவை அந்நச்சை அவன் உட்குலைகளில் இருந்தும் குடலில் இருந்தும் துரத்தி ஒதுக்கி தோலிலும் தசைகளிலும் கொண்டுசென்று ஒடுக்கி வைத்தன. அந்தப் போரில் அவன் உடல் கடும்சுரம் கொண்டது. ஆகவே அவனை ஆதுரசாலைக்கு அருகே ஓடிய சிற்றோடைக்குள் உடல் அமிழும்படி வைத்தனர். மலைத்தேன் மட்டுமே அவனுக்கு உணவென்று அளிக்கப்பட்டது.

நாளுமென அவன் உடல் வற்றி உலர்ந்தது. முகம் உருகி வடிவிழந்தது. தோல் வெந்து பின் உரிந்து உலர்ந்த சருகுபோல் ஆகியது. பதினெட்டு நாட்களுக்குப் பின் அவன் விழித்துக்கொண்டபோது அவனருகே அமர்ந்த அர்ச்சர் அவன் கைகளை பிடித்துக்கொண்டு விழிகளை நோக்கி தணிந்த குரலில் “நீங்கள் இதுவரை நீங்களென எண்ணிய உடலை இழந்துவிட்டீர்கள். இப்போதிருப்பது பிறிதொரு தோற்றம். உங்கள் உளம் அதை உணர்ந்து தெளிந்த பின் நீரில் உரு நோக்குங்கள். இனி இதுவே நான் என எண்ணிக்கொள்ளுங்கள். அதை உள்ளம் ஏற்கச் செய்யுங்கள்” என்றார்.

“மிக எளிது அது. மானுட உடல் ஒவ்வொருநாளும் உருமாறிக்கொண்டுதான் இருக்கிறது. அத்தனை மாற்றத்தையும் மானுடர் ஏற்றுக்கொள்ளத்தான் செய்கிறார்கள். ஏனென்றால்

அனைவருக்கும் அவரவர் உடல் இனிதானது. இவ்வுடலையும் நீங்கள் விரும்பத் தொடங்குவீர்கள். இன்னும் சிலகாலம் கடக்கையில் இம்முகத்தை ஆடியில் நோக்கி நோக்கி மகிழவும்கூடும்" என்றார் அர்ச்சர். "இது ஏன் இவ்வாறு அமைந்தது என்று எண்ணினேன். ஊழ் விடைகள் அற்றது. ஆனால் இதற்கென உங்கள் ஆழத்தில் நீங்கள் விழைந்திருக்கவும் கூடும் என்றும் பட்டது."

"அவ்வண்ணமெனில் இந்த அரங்கிலும் ஆடுங்கள். இதைக் கடந்து எழுங்கள். இறை துணை நிற்கட்டும்" என்றார் அர்ச்சர். நளன் கைகூப்பி "எவ்வண்ணமாயினும் உயிருடன் எழுகிறேன். அதன்பொருட்டு நான் கடன்பட்டுள்ளேன், மருத்துவரே" என்றான். "நோய் வருவது உடலுக்கு மட்டும் அல்ல. அந்நஞ்சு உங்களுள் வாழும் கலியிருளையே பற்றியதென்றால் அது அருமருந்தென்றே பொருள்" என்றார் அர்ச்சர். "அவ்வாறே ஆகட்டும்" என்றான் நளன்.

நாற்பத்தோராம் நாள் பிறிதொருவனாக நளன் எழுந்தான். உடல் சிறுத்து சிறுவனைப்போல் ஆகிவிட்டிருந்தான். கால்கள் இரு பக்கமும் வளைந்திருந்தமையால் மேலும் உயரம் குறைந்தான். வளைந்த கைகளை வீசி நண்டுபோல நடந்தான். குறுகிய தொண்டையிலிருந்து கிளிக்குரல் எழுந்தது. முதலில் அவன் உணர்ந்தது தன் உடலின் எடையின்மையை. அதுவரை சுமந்திருந்த உடலின் எடைக்குப் பழகிவிட்டிருந்த உள்ளம் அதை பெரும்விடுதலையென கொண்டாடியது. விட்டில்போலத் தாவினான். தொற்றிக்கொண்டான். பற்றி மேலேறினான்.

அந்த விடுதலை அவன் விழிகளிலும் சிரிப்பிலும் வெளிப்பட்டது. எப்போதும் சிரித்துக்கொண்டிருக்கும் குள்ளனை அங்கிருந்தோர் அனைவரும் விரும்பினர். அவர்கள் அவன்

சிற்றுருவால் அவனை சிறுவனென்று நடத்தினர். அவர்களால் அவனும் சிறுவனென்று தன்னை உருவகித்துக்கொண்டான். சிறுவர்களுக்குரிய ஓயா விளையாட்டும் புதியது நாடும் ஆர்வமும் கொப்பளிக்கும் உவகையும் கொண்டவனாக ஆனான்.

புதிய இடம் புதிய சுவை என தேடிக்கொண்டே இருந்தான். அவன் உடலுக்கு கைகள் பெரிதாக இருந்தன. அவற்றை காலென ஊன்றி அவனால் தலைகீழாக நடக்க முடிந்தது. மெல்லிய கொடிகளை பற்றிக்கொண்டு பூச்சிபோல மேலேறிச்செல்ல இயன்றது. கைகளால் ஆனவனை பாகுகன் என்று அழைத்தார் அர்ச்சர். அதுவே அவன் பெயரானது.

அருகிருந்த காட்டுக்குள் சென்று காட்டுப்புரவி ஒன்றைப் பிடித்து கொடிகளால் கட்டி அழைத்து வந்தான். பதினைந்து நாட்களில் அதைப் பழக்கி அதன்மேல் அமர்ந்து மலைச்சரிவில் பாய்ந்து சுழன்று வந்தான். அவன் காட்டுப்புரவியுடன் வந்தபோது அஞ்சி கூச்சலிட்ட மாணவர்கள் அவன் ஆணைக்கு அது பணிவதைக் கண்டு திகைத்தனர். அவன் அவர்களுக்கு புரவியேறக் கற்பித்தான். மேலும் மேலுமென புரவிகளை காட்டிலிருந்து கொண்டுவந்து புரவித்திரள் ஒன்றை அமைத்தான். ஆதுரசாலையின் பணிகள் அனைத்தும் எளிதாயின. தொலைவுகள் சுருங்கின.

அவ்வழி சென்ற மலைவணிகர் குழு ஒன்றுக்கு அவர்கள் ஏழு புரவிகளை விற்றனர். அவை அக்காட்டில் பிடித்துப் பழக்கப்பட்டவை என்பதை அறிந்த வணிகர்தலைவர் கனகர் அவனைப் பார்க்க விழைந்தார். அவனுடைய சிற்றுடலைக் கண்டதும் முதல் கணம் திகைத்த அவர் “ஆம், இப்படி ஏதோ ஒரு பிறிதின்மை இவரிடம் இருந்தாகவேண்டும். இல்லையேல்

இது நிகழாது” என்றார். “வருகிறீரா, பாகுகரே? நகரில் நீங்கள் பார்ப்பதற்கும் ஆற்றுவதற்கும் ஏராளமாக உள்ளன” என்றார்.

“நீங்கள் எங்கு செல்கிறீர்கள்?” என்றான் பாகுகன். “நாங்கள் அயோத்திக்குச் செல்கிறோம். அயோத்தி அரசர் ரிதுபர்ணரின் அன்னைக்கு மருத்துவம் நோக்குபவர்கள் கோரிய அரிய மலைப்பொருட்கள் சிலவற்றை வாங்கவே இங்கே வந்தோம்” என்றார் கனகர். “நான் வருகிறேன். இப்போதே செல்வோம்” என்று பாகுகன் சொன்னான். “அங்கே சென்று என்ன செய்யவிருக்கிறீர், பாகுகரே?” என முரண்பட்ட தன் மாணவனை நோக்கி அர்ச்சர் “அவர் செல்லட்டும். அங்கே அவருக்கான உலகம் காத்திருக்கிறது” என்றார்.

கனகரின் வணிகக் குழுவுடன் பாகுகன் கிளம்பியபோது அவனுடைய தோல்பொதியை அவனிடம் அளித்த அர்ச்சர் “உங்களுடையது இது, பாகுகரே” என்றார். அவர் விழிகளை விழிதொட்டபின் குனிந்து கால்தொட்டு தலைசூடி “வாழ்த்துங்கள், அர்ச்சரே” என்றான் பாகுகன். “நோய்கள் விலகுக!” என அர்ச்சர் வாழ்த்தினார்.

# நீர்க்கோலம் - 78

### 77. எழுபுரவி

கோசலத்தின் தலைநகர் அயோத்தியின் அத்தனை மாளிகைகளும் இருநூறாண்டு தொன்மையானவை. தெருக்கள் ஐநூறாண்டு தொன்மை கொண்டவை. நினைப்பெட்டா தொல்காலத்தில் சரயுவுக்குச் செல்லும் மழையோடைகளையே பாதையென்றாக்கி உருவானவை. ஆகவே மழைக்காலத்தில்

தெருக்களில் நீர் சுழித்து கொப்பளித்தோடும். வெயிற்காலத்தில் செம்புழுதி பறக்கும். எடைமிக்க மரங்களை ஆழமாக நட்டு எழுப்பப்பட்ட வீடுகள் இடுங்கலான இடைநாழிகளும் இருள் பரவிய சிறிய அறைகளும் ஐவருக்கு மேல் அமரமுடியாத திண்ணைகளும் கொண்டவை.

நகர்ச்சதுக்கத்தில் ஆயிரம்பேர் நிற்கமுடியாது. நகரை சுற்றிச்சென்ற கோட்டை அடித்தளம் கல்லாலும் மேலே சரயுவில் வந்த உருளைக்கற்களாலும் கட்டப்பட்டது. இரண்டு ஆள் உயரம்கூட இல்லாதது. மரத்தாலான காவல்மாடத்தின் மீதிருந்த பெருமுரசுகள்கூட நூறாண்டுக்குமேல் பழைமைகொண்டவை. அயோத்தி மக்கள் பழைமையை விரும்பினார்கள். புதிய எதையும் அஞ்சி விலக்கினார்கள். திலீபனும் ரகுவும் தசரதனும் ராமனும் ஆண்ட நிலத்திற்குரியவர்கள் என்பதை ஒவ்வொரு அசைவிலும் சொல்லிலும் வெளிக்காட்டினார்கள்.

அங்கே தொழிலும் வணிகமும் செழிக்கவில்லை. அந்நகரின் உலோக வார்ப்பாளர்களின் கைத்திறனே நகரின் வருவாயாக இருந்தது. அவர்கள் வடிப்பும் வாள்பிடிகளும் அழகுக்கலங்களும் பாரதவர்ஷமெங்கும் விரும்பப்பட்டன. புலரியில் மூசாரிகளின் உலைகள் மட்டுமே அங்கே விழித்திருந்தன. பீதர்களின் சிம்மநாகம் என அவை எரியுமிழ்ந்து சீறிக்கொண்டிருந்தன. பிற பகுதிகள் எங்கும் ஆழ்ந்த அமைதி நிலவியது. காற்றில் கொடிகள் படபடக்கும் ஓசை மட்டுமே நகரை உயிருடையதென்று காட்டியது.

பரிமுற்றத்தில் புலரியின் மெல்லிய பனித்திரை மூடியிருந்தது. அதற்குள் எரிந்த மீன்நெய் விளக்குகளின் வெளிச்சம் நீருக்குள் பரவிய செவ்வண்ணமென கரைந்து தெரிந்தது.

போர்த்தப்பட்டவைபோல் மழுங்கி ஒலித்தன பறவைக் குரல்கள். அரண்மனையின் விளிம்பு தேய்ந்த குறுகிய மரப்படிகளில் ஏவலர் தொடர மெல்ல இறங்கிவந்த ரிதுபர்ணன் பரிமுற்றத்தின் முகப்பில் வந்து நின்றபோது அவனுக்காகக் காத்திருந்த ருத்ரனும் புரவிப்பயிற்சியாளர் துருமனும் வாழ்த்தி தலைவணங்கினர். அவன் கண்கள் வீங்கி வளையங்கள் கொண்டிருந்தன. எடைமிக்க உடல் படியிறங்கியதனாலேயே வியர்த்தது.

அவன் அங்கிருந்த சிறிய பீடத்தில் அமர்ந்ததும் இரு ஏவலர் அவன் காலடியில் அமர்ந்து அவன் அணிந்திருந்த வெள்ளிக்குறடுகளைக் கழற்றிவிட்டு தோலால் ஆன காலணிகளை அணிவித்து இறுக்கினர். அவன் பட்டுக்கச்சையை அவிழ்த்து புரவிப்பயிற்சிக்குரிய தோல் சுற்றுப்பட்டையை கட்டினார்கள். “இன்று சற்று பிந்திவிட்டது, அரசே” என்றான் ருத்ரன். “ஆம், நேற்றிரவு துயில்வதற்கும் பிந்திவிட்டது” என்றான் ரிதுபர்ணன். துருமன் புன்னகைத்து “முன்பனிக் காலம் காதலுக்கு உகந்தது” என்றான்.

அவனை எரிச்சலுடன் ஏறிட்டுப் பார்த்த ரிதுபர்ணன் “அரசர்கள் என்றால் காமத்திலும் குடியிலும் திளைப்பவர்கள் என்று சூதர்கள் பாடிப்பாடி நிறுவிவிட்டிருக்கிறார்கள். இந்த அரண்மனையில் உளநிறைவுடன் நான் துயிலச்சென்ற நாட்கள் குறைவு. புத்துணர்வுடன் எழுந்த நாட்கள் அதைவிடக் குறைவு. சென்று உசாவினால் பாரதவர்ஷத்தின் அத்தனை அரசர்களும் இதையே சொல்வார்கள்” என்றான். பின்னர் மெல்லிய ஏப்பத்துடன் எழுந்துகொண்டு “ஆம், மது அருந்துகிறோம். அதன் மயக்கினால் புலரியில் எழப் பிந்துகிறோம். மிகுதியாக உண்டு உடல் கொழுக்கிறோம். காமத்திலாடுவதும் உண்டு.

இவையனைத்தும் அரியணை அமர்ந்திருப்பதின் சலிப்பையும் கொந்தளிப்பையும் கடந்து செல்வதற்கான வழிமுறைகள் மட்டுமே” என்றான்.

“நேற்று வந்த செய்திகள் உகந்தவையல்லதான்” என்றான் ருத்ரன். “இதுவரை நமக்கு அப்படி உகந்த செய்திகள் என என்னென்ன வந்துள்ளன? சொல்லும்!” ரிதுபர்ணன் அவனை நோக்கித் திரும்பினான். ருத்ரன் “ஆம், செய்திகள் அனைத்தும் கவலைக்குரியவைதான்” என்றான். “நாம் ஆற்றலற்றவர்கள். நம் பெருமை முழுக்க சென்ற காலத்தில் உள்ளது. இறந்த மூதாதையர் ஓலை அனுப்பினால் மட்டுமே நமக்கு நற்செய்திகள் வரமுடியும்” என்றான் ரிதுபர்ணன். அவனே மேற்கொண்டு பேசட்டும் என்று இருவரும் அமைதியாக நடந்தனர். அவன் சலிப்புடன் தலையை அசைத்துக்கொண்டு நடந்தான்.

பரிமுற்றத்தை அடைந்ததும் ஏவலன் ஒருவனிடமிருந்து சிறுசவுக்கை கையில் வாங்கி இருமுறை காற்றில் வீசி ஓசையெழுப்பிய பின் “நிஷத நாடு ஒரு பெரும்பிளவை நோயென்று மாறிக்கொண்டிருக்கிறது. அறுத்து வீசாவிட்டால் பாரதவர்ஷமெங்கும் அது நச்சு பரப்பும். நேற்று மாளவனிடமிருந்து வந்த ஓலை அதைத்தான் சொல்கிறது” என்றான். ருத்ரன் “முறைமீறி முடிசூடுபவர்கள் ஒருபோதும் அறத்தில் நின்றதில்லை. முதற்பிழை தொடர்பிழையேதான்” என்றான். ரிதுபர்ணன் “புஷ்கரனை ஆட்டிவைப்பது எது என்று எவராலும் அறியக்கூடவில்லை. அவனை அவ்வரியணையில் கொண்டுசென்று அமர்த்தியவர்களையே ஒவ்வொரு நாளும் பலிகொண்டு வருகிறான். அவனுடைய அவைமுதல்வர் சுநீதர் சென்ற வாரம் கழுவேற்றப்பட்டிருக்கிறார்” என்றான்.

“சுநீதரா?” என்று துருமன் கேட்டான். “ஏன், அவர் கழுவில் ஏற்றப்பட முடியாதவரா? அவருக்கு உடலில் துளைகள் இல்லையா?” என்றான் ரிதுபர்ணன். “இல்லை, அவர் காளகக் குடியின் மூத்தவர். குடித்தலைவரும்கூட” என்றான் துருமன். “ஆம், ஆகவேதான் கழுவிலேற்றப்பட்டிருக்கிறார். அதுவும் அரண்மனை முகப்பில். மூன்று நாட்கள் அவரது உடல் கழுவிலமர்ந்து அழுகியிருக்கிறது.” ருத்ரன் “அவனது நோக்கம் என்ன?” என்றான். ரிதுபர்ணன் “எல்லைகளைக் கடப்பது, வேறென்ன? தன் எல்லைகளை, தன் குடியின் எல்லைகளை. மானுடத்தின் எல்லைகளை. எல்லைகளை கடக்குந்தோறும் ஆற்றல்மிக்கவனாக ஆகிறான்” என்றான்.

“ஓரெல்லையைக் கடந்ததும் பிறிதொன்று தென்படுகிறது. ஒருபோதும் இதை இவன் கடக்கமாட்டான் என்று பிறர் எண்ணுவதை அறிகிறான். அதை கடந்தே ஆகவேண்டும் என்று துடிப்பெழுகிறது” என்றான் ரிதுபர்ணன். “ஏன்? எனக்குப் புரியவில்லை” என்றான் துருமன். “அவன் அமர்ந்திருக்கும் அரியணை அவனைவிட மிகப் பெரியது என்று அவன் அறிவான். அது நிலையற்றது என்று அவனைச் சூழ்ந்துள்ளோரும் அறிவார்கள். ஒவ்வொரு நாளும் தன்னைப் பார்ப்பவரின் விழிகளில் புஷ்கரன் காண்பது ஒரு செய்தியை. எண்ணிக்கொள் உன் நாட்களை என்னும் சொல்லை. அதை வெல்ல அவனுக்கிருக்கும் ஒரே வழி அச்சத்தை வளர்ப்பதுதான்” என்றான் ரிதுபர்ணன்.

“நிஷதநாடே இன்று அவனை எண்ணி நடுங்குகிறது. ஒவ்வொரு நாளும் தங்கள் இல்லம் இரவில் தட்டப்படுமென்று அஞ்சி துயிலிழந்துதான் இரவை கழிக்கிறார்கள் அங்குள்ளவர்கள்” என்றான் ரிதுபர்ணன். துருமன் “ஆனால்

இதை எத்தனை நாள் செய்ய முடியும்?" என்றான். "எதை செய்யத் தொடங்கினாலும் மிக விரைவில் அதற்கென்று ஓர் அமைப்பு உருவாகி வருவதை பார்க்கலாம். அச்சத்தைப் பெருக்கவும் அறமிலாதவை ஆற்றவும் கீழ்மையில் திளைக்கவும் தனித்திறன் கொண்டவர்கள் எங்குமிருப்பார்கள். அறமும் நெறிகளும் அவர்களை அடக்கி ஆண்டு கொண்டிருக்கின்றன. அச்சரடுகளை புஷ்கரன் விடுவித்திருப்பான்" என்று ரிதுபர்ணன் தொடர்ந்தான்.

"இன்று அவனைச் சூழ்ந்து குருதியில் திளைக்கும் பெரும்கைவிடுபடைப் பொறி ஒன்று உருவாகிவிட்டிருக்கிறது. அதற்கு பலநூறு கைகள். பல்லாயிரம் படைக்கலங்கள். இனி அவன் ஒன்றும் செய்யவேண்டியதில்லை. அதன் முகப்பில் அமர்ந்திருந்தால் போதும். அதுவே அவனை கொண்டு செல்லும்" என்றான் ரிதுபர்ணன். "ருத்ரரே, நேற்று வந்த ஒற்றனின் கணக்குப்படி இந்த ஆறு மாதங்களுக்குள் இருபதாயிரம் குடிகளை புஷ்கரன் கொன்றொழித்திருக்கிறான். நிஷதநாட்டின் அத்தனை ஊர்களிலும் எவரேனும் கழுவேற்றப்படாத ஓர் அந்திகூட அணைவதில்லை. ஐயத்திற்குரியவர்கள் எனத் தோன்றும் அனைவரையும் வெட்டி வீழ்த்துகிறார்கள். உடனே கொல்லப்பட்டவர்களின் உறவினர்கள்மேல் ஐயம் எழுகிறது. ஆகவே கொல்லும்தோறும் ஐயத்திற்குரியவர்கள் பெருகுகிறார்கள்."

"அந்த வீணன் ஒரு நாள் நிஷத குலத்தையே முற்றழிப்பான்" என்றான் துருமன். ருத்ரன் "வெறும் காட்டுக் குடிகள். அங்கிருந்து ஏதோ தெய்வ ஆணை பெற்றவர்கள்போல் எழுந்து வந்தார்கள். இப்போது எண்ணிப்பார்த்தால் விந்தையென்று தோன்றுகிறது. ஆறு மாதங்களுக்கு முன்னால்தான்

பாரதவர்ஷத்தின் சக்ரவர்த்தினியென அவர்களின் பட்டத்தரசி முடிசூடப்போனாள். இன்று குருதி மூடிக் கிடக்கிறது அந்நிலம்” என்றான். ரிதுபர்ணன் உரக்க நகைத்து “பாரதவர்ஷத்தின் வரலாற்றை எடுத்துப்பார்த்தால் மீண்டும் மீண்டும் இது நிகழ்ந்திருப்பதை காணலாம். வெற்றியும் புகழும் மேன்மையும் ஒழுங்கும் மக்களுக்கு சலித்துப் போய்விடுகிறது. எங்கோ ஓரிடத்தில் அவர்கள் அழிவையும் கீழ்மையையும் விரும்பத்தொடங்குகிறார்கள்” என்றான்.

அவ்வெண்ணத்தைச் சொல்லி தானே ஒப்புக்கொண்டு தலையாட்டி புன்னகைத்து “பெருகி எழுந்து உச்சம் கண்ட அத்தனை அரசுகளிலும் இது நிகழ்ந்திருக்கிறது. தங்களுக்குள் பூசலிடுவார்கள். தங்கள் கீழ்மையைப் பெருக்கி அதை முன்னிறுத்துவர்கள். தாங்கள் அடைந்த அத்தனை சிறப்பியல்புகளையும் பித்துப்பிடித்தவர்கள்போல தெருக்களில் வீசி உடைத்து வெறியாடுவார்கள். பறவைகள் தற்கொலை செய்வதை கண்டிருப்போம். நாடுகளும் தற்கொலைவிழைவு கொள்வதுண்டு” என்றான்.

“அவ்வுணர்வு எழுந்ததுமே அதை கையாள தலைவன் ஒருவன் உருவாகி வருவான். இயற்கையின் நெறியாக இருக்கலாம். பிறிதொன்றால் அழிக்க முடியாதது தன்னைத்தானே அழித்துக்கொள்ள வேண்டுமென்று தெய்வங்கள் கருதியிருக்கலாம்” என்று ரிதுபர்ணன் சொன்னான். ருத்ரன் “ஆம், நிஷதப் பேரரசை உருவாக்கிய மாமன்னன் நளனையும் அதன் விரிநிலத்தை நெறிமீறாது ஆண்ட தமயந்தியையும் துரத்திவிட்டு இவ்வீணனை அக்குடிகள் தேர்ந்தெடுத்தார்கள் என்றால் பிறிதொரு விளக்கமும் அதற்குப் பொருந்துவதில்லை” என்றான். துருமன் “அம்மக்கள் அவனை

எப்படி இன்னமும் பொறுத்துக்கொள்கிறார்கள்? மத்தகத்தின்மேல் பாகன் அமர்ந்திருப்பது யானையின் ஒப்புதலுடன்தான் என்பார்கள்” என்றான்.

ரிதுபர்ணன் “இது மதுவுண்டு சித்தம் மயங்கிய யானை. மிக எளிதாக மக்களை பிளவுபடுத்திவிடுவார்கள் ஆட்சியாளர். அங்குள்ள ஒரு சாராருக்கு பொறுப்பும் செல்வமும் அளிக்கப்படும். அவர்களைப்போல் தாங்கள் ஆகவேண்டுமென்பதற்காக அக்குடியினர் ஒவ்வொருவரும் ஒருவரை ஒருவர் காட்டிக்கொடுப்பார்கள். பிறிதொருவரை காட்டிக்கொடுப்பவர் தான் ஐயத்திற்கு அப்பாற்பட்டவராகிறார். ஆகவே காட்டிக்கொடுப்பதொன்றே முன்னேறும் வழியென்றாகிறது. அது ஒரு பெருஞ்சுழல். அதை இப்போது புஷ்கரன் எண்ணினலும் நிறுத்த முடியாது” என்றான்.

“அவன் எப்படி துயில்கிறான்?” என்றான் துருமன். ரிதுபர்ணன் உரக்க நகைத்து அவர்களைப் போன்றவர்களே எளிதில் உறங்குவார்கள். புலரியில் உளம் நிறைய வெறுமையுடன் எழுவார்கள். அவ்வெறுமையை வெல்ல பகல் முழுக்க ஒவ்வொன்றையும் பற்றிஎரிய வைப்பார்கள். புஷ்கரன் ஒவ்வொரு நாளும் காலையில் கள முற்றத்திற்கு வந்து காலையொளி வெப்பம்கொள்வது வரை அமர்ந்து கொலைத்தண்டனைகளை நேரில் பார்க்கிறான் என்கிறார்கள். அதன் பின் சிறைக்குச் சென்று அங்கு கொடுந்துயர் உறுபவர்களை காண்கிறான். நரம்புகளைப் பதறவைக்கும் உச்சகட்ட கொடுஞ்செயல்கள் மட்டுமே அவனை கவர்ந்து அக்கணத்தில் நிலைகொள்ளச் செய்கின்றன” என்றான்.

“ஒவ்வொரு நாளும் அவனுக்கு புதிய கிளர்ச்சி தேவைப்படுகிறது. அங்கு சிறையில் நிகழ்பவற்றை

ஒற்றர்களின் கடிதங்கள் வழியாகப் பார்க்கையில் திகைப்பு ஏற்படுகிறது. நகத்தைப் பிடுங்குவதும் பற்களைப் பிடுங்குவதும் பழைய முறைகள். உயிருள்ள பாம்பை பின்துளை வழியாக குடலுக்குள் ஏற்றுகிறார்கள்.” துருமன் அலறலாக “போதும்!” என்றான். ரிதுபர்ணன் அவனை நோக்கித்திரும்பி “அஞ்சுகிறீர்களா?” என்றான். “ஆம், போதும்” என்றான் துருமன். “நாம் இங்கே நிலவறைச் சுடர் என பாதுகாப்பாக இருக்கிறோம்” என்றான் ரிதுபர்ணன்.

“புஷ்கரன் அத்தனை உச்சங்களுக்கும் பகலெல்லாம் உளம் செலவழித்த பின்னர் அனைத்து ஆற்றலும் வழிந்தோட வெற்று உடலுடன் படுக்கைக்கு வருவான் என்று நினைக்கிறேன்” என ரிதுபர்ணன் தொடர்ந்தான். “ஒரு கிண்ணம் மதுவருந்திவிட்டு படுத்தால் புலரிவரை ஆழ்ந்துறங்குவான். இன்று புஷ்கரன் தன் வாழ்வில் அறியும் ஒரே உவகை அந்தத் துயில் மட்டுமே எனத் தோன்றுகிறது. ஒருவேளை கனவில் அவன் தன் குடிகளால் வாழ்த்தப்படும் அரசனாக இருக்கலாம். தந்தையென்று அவர்களைக் காத்து அன்னையென்று அள்ளிவழங்கி தெய்வமென்று அவர்களால் வழிபடப்படலாம். இறந்து நடுகல்லாக அவர்களுடைய குன்றுகளுக்குமேல் நின்றிருக்கலாம். கொடிவழியினர் வந்து பலியிட்டு வணங்க விண்ணின்று அருள் புரியலாம்.”

ருத்ரன் நகைத்து “இதை ஏதேனும் சூதர்கள் நம் அவையில் பாடியிருப்பார்கள் என்று தோன்றுகிறது” என்றான். ரிதுபர்ணன் “ஆம், இது ஹிரண்யவதம் பாடலில் உள்ள வரி” என்றான். துருமன் “நிஷதகுடிகள் அனைவரும் ஒருங்கிணைந்து தங்கள் தலைமேல் தூக்கிக்கொண்டல்லவா அவனை அரியணை அமர்த்தினார்கள்? ஏன் அவன் இப்படி திரும்பினான்?” என்றான்.

ரிதுபர்ணன் “அத்தகைய பெரும்கிளர்ச்சியின் உச்சியில் எழுந்துவருவது மிக இடர்மிக்கது. ஒவ்வொருவரும் அவனிலிருந்து ஒரு மகாகீசகனை எதிர்பார்க்கிறார்கள். அவனோ எளிய புஷ்கரன் மட்டுமே. அத்தனை விழிகளும் அவனை நோக்கிக்கொண்டிருக்கையில் பிறிதொன்றாக அவனால் ஆகவும் இயலாது. மிக விரைவிலேயே அவ்வெதிர்பார்ப்புகள் ஏமாற்றங்களாகின்றன. வெறுப்பும் நகைப்புமாகத் திரிகின்றன. இளிவரல்கள் பெருகுகின்றன” என்றான்.

“ஏளனங்களுக்கு ஒரு தனிப் பண்புண்டு. அவை எங்கிருந்தாலும் எவ்வழியிலோ அவற்றுக்குரியவனை சென்று சேர்ந்துவிடுகின்றன. புஷ்கரன் என்றும் ஏளனத்திற்கு உரியவனாக இருந்தவன். அவ்வேளனத்தை வெல்லும்பொருட்டே தன்னை வஞ்சகனாகவும் மண்வெறியனாகவும் ஆக்கிக்கொண்டவன். பல்லாயிரம் மடங்கு பெருகிச்சூழும் ஏளனத்தை எதிர்கொள்ள அவன் என்ன செய்யமுடியும்? வெற்றியால், ஆளும்திறனால், அளியால் அவன் பெருக முடியாது. ஆகவே மறத்தால், நெறிமீறலால், அளியின்மையால் பெருகுகிறான். அதற்கு பாரதவர்ஷத்தில் எத்தனை முன்காட்டுகள், ஹிரண்யகசிபு முதல்!”

“அச்சம் நுரைபோலப் பெருகுவது. ஒரு துளியை மலையென்று ஆக்கமுடியும். ஏளனம் நிறைந்த விழிகள் அனைத்திலும் அச்சம் குடியேறுவதைக் காணும்போது அவன் நான் நான் என்று உணர்ந்திருக்கிறான். அச்சத்தால் அன்றி வேறெவ்வகையிலும் அக்குடிகளை வெல்ல இயலாதென்று உறுதி கொண்டிருக்கிறான்” என்றான் ரிதுபர்ணன். “அவ்வாறு அச்சத்தால் ஆட்சி செய்த அத்தனை பேரும்

அழிந்திருக்கிறார்கள்” என்று துருமன் சொன்னான். “அது கதைகளில். விண்ணிலிருந்து விண்ணளந்த பெருமான் இறங்கிவருவது இன்று நிகழுமா என்ன?” என்று ரிதுபர்ணன் நகைத்தான்.

துருமன் சினத்துடன் “மண்ணிலும் வருவார்கள். இங்கு வாழவேண்டுமென்று தெய்வங்கள் எண்ணுமென்றால் இப்போதும் வந்தாக வேண்டும். மறம் ஒருபோதும் வெல்லமுடியாது. அது தன்னைத்தானே தோற்கடித்தாக வேண்டும்” என்றான். ரிதுபர்ணன் “பார்ப்போம்” என்றபின் எழுந்தான். “நம்மால் வெறுமனே பார்க்க மட்டும்தான் முடியும், துருமரே” என நகைத்தான்.

ரிதுபர்ணன் எழுந்ததும் அப்பால் காத்திருந்த ஜீவலனும் ருத்ரனும் தங்கள் புரவிகளுடன் அருகே வந்து தலைவணங்கினர். எடைமிக்க உடலை சற்று அகற்றிய கால்களால் தாங்கி நின்று சவுக்கைச் சுழற்றியபடி இரு புரவிகளையும் மாறி மாறி பார்த்த ரிதுபர்ணன் “நிதை எங்கே?” என்றான். “நேற்று அவள் குளம்புகளுக்கிடையே சிறிய விரிசல் ஒன்று இருந்தது. இரும்புப்பூண் அணிவிப்பதற்காக கொண்டுசென்றிருக்கிறார்கள். இரு நாட்களாகும் அவள் களம் மீள. தங்களுக்கு பெண் புரவிகள் உவப்பானவை என்பதனால் இவர்கள் இருவரையும் கொண்டுவந்தோம்” என்றான் ஜீவலன்.

துருமன் “இவள் ஸ்வேதை, அவள் ஊர்ணை. இருவரும் முற்றிலும் பயிற்சி பெற்ற புரவிகள். அனைத்து இலக்கணங்களும் அமைந்தவர்கள்” என்றான். ரிதுபர்ணன் இரு புரவிகளையும் மாறி மாறி பார்த்த பின் ஸ்வேதையின் அருகே சென்று அதன் கடிவாளத்தைப்பற்றி அடிக்கழுத்தில் மெல்ல கைவைத்து வருடினான். அதை ஏற்று தலைசரித்து

விழியுருட்டி மெல்ல உறுமியது புரவி. “மிகையாக உடல் சிலிர்க்கிறாள். இன்னும் வெளி பழகவில்லையா?” என்று ரிதுபர்ணன் கேட்டான். “செண்டுவெளியிலும் புரவிக்களத்திலும் நிறைய சுற்றி வந்துவிட்டாள். தெருக்களுக்குத்தான் இன்னும் கூட்டிச் செல்லவில்லை” என்றான் ஜீவலன்.

ரிதுபர்ணன் அதன் கடிவாளத்தை இழுத்து வாயைத் திறந்து பற்களை பார்த்தான். “மிக இளையவள்” என்றான். “ஆம்” என்றான் ஜீவலன். “ஆகவே குருதி மிகுதி. சினமும் மிகுதி. சவுக்கை அளந்தே பயன்படுத்தவேண்டும்” என்று ருத்ரன் சொன்னான். துருமன் “இப்போதே வெயில் வெப்பம் கொண்டுவிட்டது. இன்று ஓரிரு சுற்றுகள் மட்டும் போதும் என்று எண்ணுகிறேன், அரசே” என்றான். “இல்லை, புலரியில் இந்தப் புரவியேற்றம்தான் என்னை உச்சிப்பொழுது வரை அரியணையில் அமரவைக்கிறது. இரவு அருந்திய மதுவை வியர்வையாக வெளியே தள்ளாமல் இவ்வொரு நாளை என்னால் கடக்க இயலாது” என்றபின் சேணத்தில் கால் வைத்து உடலைத்தூக்கி கால்சுழற்றி அமர்ந்து கடிவாளத்தை இழுத்தான்.

அவன் அமர்ந்த எடையைத் தாளாததுபோல் ஸ்வேதை இரு கால்களை முன்னால் எடுத்துவைத்து மெல்ல கனைத்தது. குதிமுள்ளால் மெல்ல தொட்டபோது மூச்சு சீறியபடி விரைந்து காலடி எடுத்துவைத்து தலைதூக்கி கனைத்தபடி பாய்ந்து ஓடத்தொடங்கியது. முதலில் தன் எடையை அது தாளாது என்று ரிதுபர்ணன் எண்ணினான். புரவிகள் எடை தாங்குவது அவற்றின் உடலின் நிகர்நிலையினால்தான் என்று பயிற்சியாளர்கள் சொல்வதை நினைவுகூர்ந்தான். இப்புரவியின் ஒரு கால் சற்று ஏறக்குறைவாக இருந்தால் உடலில் சிறு

கோணல் இருந்தால் என் எடை முழுக்க அப்பிழை நோக்கி அழுந்தும். அதை சீர் செய்வதற்காக தன் உடல்விசையால் இழுத்தபடி அது ஓடவேண்டியிருக்கும். விரைவிலேயே கால் தளர்ந்து மூச்சிளைத்து அது நின்றுவிடும்.

ஸ்வேதை தொடுக்கப்பட்ட அம்புபோல காற்றைக் கிழித்துச் சென்றது. ஒவ்வொரு குளம்படிக்கும் பிறழாத கணக்கிருந்தது. அதன் தாளம் முற்றிலும் சீராக ஒலித்தது. அரண்மனை மாளிகைகளின் இடைவெளியினூடாக சரிந்து வந்த காலை ஒளி புரவிமுற்றத்தின் செம்மண் பரப்பில் நீள் சதுரங்களாக விழுந்து கிடந்தது. பட்டுத்துணி இழுத்துக் கட்டப்பட்டதுபோல அவ்வொளிக்குள் நுண்ணிய தூசுகள் சுழன்று பறந்தன. அனலென ஒளிர்ந்து அதைக் கடந்து அணைந்து அவன் சுற்றிவந்தான். மும்முறை சுற்றியபின் மூச்சிரைக்க பட்டு மேலாடை உடலில் ஒட்டிக்கொள்ள அவன் வந்து நின்றபோது ஜீவலனும் ருத்ரனும் ஓடிவந்து பட்டுத்துணியை தர அதை வாங்கி தன் முடியற்ற தலையையும் இடுங்கிய கழுத்தையும் கொழுவிய கன்னங்களையும் துடைத்தபின் திருப்பியளித்தான்.

“மீண்டும் ஒரு சுற்று செல்வோம், அரசே” என்றான் ருத்ரன். “ஆம், நன்று” என்றபின் புரவியை மெல்ல தட்டினான். இம்முறை அவன் ஆணையை முன்னரே எதிர்பார்த்திருந்த ஸ்வேதை கைவிடுபசுங்கழையென பாய்ந்து முன்னெழுந்தது. அதன் சிறுசெவிகள் பின் மடிந்திருந்தன. தலை முன்னால் நீள வால் பின்னால் சுழல இரு கால்களும் தரையைத் தொட்டனவா என்றறியாது முன் செல்ல காற்றில் அது பாய்ந்து சென்றது. தலையை அதன் கழுத்தளவு சாய்த்து காலை பின்நீட்டி குப்புறப் படுத்தவன்போல் அதன் உடல்மேல்

அமர்ந்திருந்தான். அவன் புரவியை மேலும் மேலுமென ஊக்கினான்.

மறுமுனை சென்று வளைந்து திசை திரும்பிய அக்கணத்தில் அரண்மனைச் சாளரம் ஒன்று திறக்க அதன் மறுபக்கமிருந்து வந்த செங்கதிரொளி ஒன்று ஸ்வேதையின் கண்ணில் விழுந்து அது நோக்கிழந்தது. அதே கணம் அரண்மனை தெற்கு மூலையில் மூதாதையரின் ஆலயங்களில் புலரிப்பூசனைக்காக சென்றுவிட்டு திரும்பிக்கொண்டிருந்த களிறு ஒன்று உரக்க பிளிறியது. உடல் விதிர்க்க திடுக்கிட்ட ஸ்வேதை ஓடிய விசையிலேயே சுழன்று தன்னைத் தானே வட்டமிட்டு களமுற்றத்தின் மையத்தை நோக்கி சென்றது.

"ஹோய் ஹோய்" என்று குரலெழுப்பி அதன் கழுத்தை மெல்ல தட்டி கடிவாளத்தை அசைத்து அதை ஆறுதல்படுத்த முயன்றான் ரிதுபர்ணன். நின்று காதுகளை விடைத்து கண்களை உருட்டி எங்கிருக்கிறோம் என்பதுபோல் பார்த்த ஸ்வேதை கனைத்தபடி திரும்பி புரவிமுற்றத்தை குறுக்காகக் கடந்து அப்பாலிருந்த காவல் மாடத்தை நோக்கி சென்றது. "அரசே!" என்று அழைத்தபடி ருத்ரன் தன் புரவியில் பின்னால் வந்தான். காவல் மாடத்தில் நின்றவர்கள் வாயிலை மூடுவதா வேண்டாமா என்று திகைப்பதற்குள் அங்கிருந்த சிறிய மூங்கில் தடுப்பை தாவிக்கடந்து புரவி குளம்புகள் அறைய நிலத்தில் தொட்டு குறுகிய தெருவினூடாக பாய்ந்து சென்று வணிக வீதியை அடைந்தது.

அதன் கடிவாளத்தைப் பற்றி இழுத்து அதை நிறுத்த ரிதுபர்ணன் முயன்றபோது மூக்கு வானோக்க தலையைத் தூக்கி கழுத்தை வளைத்து விரைவை சற்றும் அழிக்காமலேயே தன்னை தான் ஒரு வட்டமடித்து மீண்டும் பாய்ந்தது. கீழே

தடுமாறி விழப்போய் கால்களால் அதன் விலாவை அணைத்து தன்னை நிறுத்திக்கொண்ட ரிதுபர்ணன் கடிவாளத்தைப் பிடித்து அதை நிறுத்த முயல்வது உகந்ததல்ல என்று புரிந்துகொண்டான். மரச்சுவர்களினூடாக எதிரொலி பெருக அங்காடித் தெருவின் சிறிய சந்துகளினூடாக விரைந்தோடியது.

தரையில் படுத்திருந்த தெருநாய் ஒன்று எழுந்து குரைத்தபடி அதன் அருகே வந்து அதன் விரைவை கணிக்க முடியாது குளம்புகளுக்கிடையே சிக்கிக்கொண்டது. மிதிபட்டுத் தெறித்து அப்பால் விழுந்த நாய் எழுப்பிய வலிமிகுந்த ஊளையை அவன் கேட்டான். முழுக்க கேட்பதற்குள் அடுத்த தெருவுக்குள் திரும்பி நெடுந்தொலைவு சென்றுவிட்டிருந்தது. தொடர்ந்து வந்த ருத்ரன் அடிபட்ட நாயை நோக்கி பாய்ந்து வந்த பிற நாய்களைக் கண்டு கடிவாளத்தை இழுத்து தன் புரவியை நிறுத்தினான்.

ஸ்வேதை அதுவே களைத்து ஆற்றலிழந்து நிற்பது வரை அதை நிறுத்த இயலாதென்று அறிந்தான் ரிதுபர்ணன். கடிவாளத்தை சீராகப் பற்றியபின் புரவியிலிருந்து கீழே விழாமல் உடலை நன்கு தாழ்த்தினான். குறுகிய சாலைகளுக்குக் குறுக்காக வணிகர்கள் இழுத்துக்கட்டிய தோல் கூடாரங்களோ கயிறுகளோ தன்னை தட்டி கீழே தள்ளிவிடாதிருக்க வேண்டுமென்று மட்டும் எண்ணிக்கொண்டான். வணிகப்பாதையில் பதிக்கப்பட்டிருந்த பலகைக்கற்கள் மீது இரும்புப் பூணிட்ட குளம்புகள் அறைந்து தாளமிட்டுச் சென்றன. அவனுக்கு இருபுறமும் அனைத்துக் காட்சிகளும் ஒன்றுடன் ஒன்று கரைந்து வண்ண ஒழுக்காகத் தெரிந்தது. வியர்வை வழிந்து புருவத்தில் தேங்கி கண்ணுக்குள் சொட்டி வாயில் உப்புக் கரித்தது.

அங்காடித் தெரு ஒன்றில் திரும்பும்போது மூன்று சிறுவணிகர்கள் குள்ளன் ஒருவனை துரத்தி வருவதைக் கண்டான். சிரித்தபடி ஓடிவந்த குள்ளன் தன் புரவியின் கால்களில் விழுவது உறுதி என்று ரிதுபர்ணன் எண்ணுவதற்குள் அவன் அருகே நின்ற சிறிய தூணொன்றில் தொற்றி மேலேறினான். என்ன நிகழ்கிறதென்று புரிந்துகொள்வதற்குள் விட்டில்போலப் பாய்ந்து புரவிக்கு மேலேறிக்கொண்டான். தன் மடியிலென அமர்ந்திருந்த குள்ளனைக் கண்டு திகைத்து ரிதுபர்ணன் கடிவாளத்தை விட்டுவிட்டான். அவற்றை அவன் இரு கைகளாலும் பற்றி மெல்ல அழுத்தி புரவியின் காதில் ஏதோ சொன்னான். தாளம் குறைந்துவந்த காலடிகள் ஓய விரைவழிந்து மெல்ல திரும்பி நின்று வாயில் நுரை வழிய தலைதாழ்த்தி மூச்சிரைத்தது புரவி.

குள்ளன் கையை ஊன்றித் தாவி கீழே இறங்கி கடிவாளத்தைப்பற்றி புரவியின் முகத்தை தாழ்த்தி அதன் முகவாயில் புடைத்திருந்த நரம்புகளை மெல்ல அழுத்தியபடி அதனிடம் ஏதோ பேசத்தொடங்கினான். காதுகளை முன்கோட்டி அவன் சொற்களைக் கேட்டபடி விலாவிதிர்த்து நின்றது புரவி. கைகளை புரவியின் முதுகில் ஊன்றி தாவி இறங்கிய ரிதுபர்ணன் “யார் நீ? எப்படி இந்தப் புரவியை நிறுத்தினாய்?” என்று கேட்டான். “நான் தேர்வலன், அடுமனையாளன், சூதன். என் பெயர் பாகுகன்” என்று குள்ளன் சொன்னான். வளைந்து விரிந்த கைகளை விரித்துக்காட்டி “கைகளால் பறப்பவன்” என்றான்.

“இங்கென்ன செய்கிறாய்?” என்றான் ரிதுபர்ணன். “இங்கு வணிகர்களுக்கு அடுமனையாளனாகவும் புரவி தேர்பவனாகவும்

இருக்கிறேன்” என்றான் அவன். “எங்கு புரவிக்கலை கற்றாய்?” அவன் “நான் நிஷதநாட்டு நளனின் கொட்டிலில் பணியாற்றியவன். இது அங்கு கற்ற கலை” என்றான். அவனை சில கணங்கள் கூர்ந்து நோக்கியபின் “நீ என்னுடன் இரு. எனக்கு புரவி தேர்ந்தவர்கள் தேவை” என்றான் ரிதுபர்ணன். “அடுமனைப் பொறுப்பும் கிடைத்தால் நன்று. நிறைவுடன் சமைத்து நீணாள் ஆகிறது. வணிகர்களுக்கு உணவென்பது உயிருடன் இருப்பதற்கான வழி மட்டுமே.” ரிதுபர்ணன் நகைத்து “நன்று, மூன்று வேளையும் நீ எண்ணியதையெல்லாம் சமைக்க என் அடுமனையில் இடமுண்டு” என்றான்.

# நீர்க்கோலம் - 79

### 78. காட்டுக்குதிரை

ரிதுபர்ணன் அரியணையில் அமர்ந்திருக்க அவை நடந்துகொண்டிருந்தது. தன் மீசையை நீவியபடி அவன் அவைநிகழ்வுகளை கேட்டுக்கொண்டிருந்தான். சற்றுநேரத்திலேயே அவன் உள்ளம் முழுமையாக அதிலிருந்து விலகிவிட்டது. அவை தொடங்கியபோது அவன் ஆர்வத்துடன் உளம்கொண்ட செய்திகள்தான் அவை. ஒரு கட்டத்தில் அதில் என்ன இயலும் என்ன இயலாதென்பது தெளிவானதுமே அவன் விலகிக்கொண்டான். ஆனால் அவையினர் அதன் பின்னரே பேசத்தொடங்கினார்கள்.

விதர்ப்பத்தில் குண்டினபுரியை கைப்பற்றிய ஃபீலர்களின் அரசனான பீமத்துவஜன் தந்தை பீமகரை சிறை வைத்திருந்தான். முறைப்படி முடிசூடிய பைகர் குலத்து

பீமபலன் மாளவத்தின் எல்லையில் சுஃபலம் என்னும் கோட்டையில் தன் படைகளுடன் ஒளிந்திருந்தான். எட்டு நாட்களுக்கு முன்னர் பீமகர் குண்டினபுரியிலிருந்து தப்பி ஓடிவிட்டதாக செய்தி வந்தது. பீமத்துவஜன் தந்தையை நாடெங்கிலும் ஒற்றர்களையும் படைவீரர்களையும் அனுப்பி தேடிக்கொண்டிருந்தான். செய்தியை அறிவித்த ஒற்றன் "பீமத்துவஜன் நிலைகுலைந்திருக்கிறான். ஃபீலர்கள் வெறிகொண்டு அலைகிறார்கள்" என்றான்.

அச்செய்தியைக் கேட்டதும் அது பீமத்துவஜனின் ஒரு சூழ்ச்சி என்றே அவையினர் ஐயப்பட்டனர். "அவன் தந்தையை கொன்றிருப்பான். ஐயமே இல்லை. அவர் அவனை ஏற்கவில்லை என்பது அவன் குடிகளனைவருக்கும் தெரியும். ஏற்க வைக்க முயன்றிருப்பான். முடியாதென்றானபோது கொன்றிருப்பான்" என்றார் சிற்றமைச்சர் பிரதீபர். ஆனால் முந்தையநாள் பீமகர் தன் முதல் மைந்தன் பீமபலனுடன் சென்று சேர்ந்துவிட்டதாக செய்தி வந்தது.

பிரதீபர் "இது நான் எதிர்பாராதது. இதை யார் நிகழ்த்தினார்கள் என்று தெரியவில்லை. எவராக இருந்தாலும் போர் முடிவுற்றது. இன்னும் சில மாதங்களுக்குள் குண்டினபுரியை பீமபலன் வெல்வான்" என்றார். ரிதுபர்ணன் "ஆனால் இப்போது அவனிடம் படை என பெரிதாக ஏதுமில்லை. விதர்ப்பம் ஆற்றல்கொண்டு மீள்வதை பிற நாடுகள் ஒப்பவும் போவதில்லை" என்றான். பிரதீபர் "ஆம், ஆனால் மக்களின் ஆற்றலே இறுதியாக வெல்லும். பீமத்துவஜன் சிறிதுகாலம் நின்று போராடுவான். ஆனால் அவனால் ஒருபோதும் அரியணையில் நிலைக்க முடியாது" என்றார்.

அதை படைத்தலைவன் ருத்ரன் மறுத்துரைத்தான். பிரதீபர் கிளர்ந்தெழுந்து மக்கள் வல்லமையை வலியுறுத்த ருத்ரன் வாளின் ஆற்றலென்ன என்று விளக்கினான். இரு சாராரும் அவையை பங்கிட்டுக்கொள்ள ரிதுபர்ணன் இயல்பாக பாகுகனைப்பற்றி எண்ணலானான். அவனுடைய சிரிப்பும் துள்ளலும் நினைவிலெழ அவன் முகம் புன்னகையில் விரிந்தது. சுருங்கிய முகத்தில் பெரிதாகத் தெரிந்த பற்கள் எப்போதுமே சிரிப்பவை போலிருந்தன. கைகளையும் கால்களையும் ஆட்டி அவன் நடப்பதைக் கண்டால் அனைவர் முகமும் சிரிப்பில் விரிந்தது. அச்சிரிப்பை அவனும் எடுத்துக்கொண்டான். நாளடைவில் சிரிக்க வைப்பதற்காகவே நடந்தான்.

குதிரைக்கொல்லையில் அன்று புலரியில் அவனை பார்த்தபோது சின்னஞ்சிறிய மலர்கள் மண்டிய புல்வெளியில் பறந்த சிறிய வண்ணத்துப்பூச்சிகளைப் பிடிக்க துரத்தி ஓடிக்கொண்டிருந்தான். அவனுடைய சிரிப்பொலி கேட்டுன் அவன் திரும்பிப்பார்த்தான். அருகே நின்றிருந்த வார்ஷ்ணேயன் "சிறுவனைப் போன்றவன். நேற்று ஒவ்வொரு கவளம் உணவையும் அள்ளி மேலே எறிந்து வாயால் அள்ளிப்பற்றி உண்டான். என்ன செய்கிறாய் என்று கேட்டேன். இப்படி உண்டு பார், சுவை மிகுந்து தெரியும் என்கிறான்" என்றான்.

ரிதுபர்ணன் புன்னகையுடன் "அவனை அழைத்து வா" என்றான். ஜீவலன் ஓடிச்சென்று பாகுகனை அழைத்துவந்தான். "என்ன செய்கிறாய்?" என்றான். "வண்ணத்துப்பூச்சிகளை பிடிக்கிறேன்" என்றான். "எதற்கு?" என்றான். "வெறுமனே..." என்றான் பாகுகன். "அதற்கென்ன இத்தனை ஓட்டம்?" என்றான் ரிதுபர்ணன். "நான் அவற்றை விரல்களால் பிடிக்க முயலவில்லை. அவற்றை

அவ்வாறு பிடித்ததுமே அவை இறகுதிர்ந்து மீண்டும் புழுக்களாகிவிடுகின்றன. அவையே உளம்கொண்டு என் கைகளில் வந்து அமரவேண்டும். அதற்காக முயல்கிறேன்” என்றான்.

ரிதுபர்ணனின் புன்னகையைக் கண்ட அமைச்சரும் அவையினரும் அவர்கள் பேசியதை அவன் மிகவும் விரும்புவதாக எண்ணி ஊக்கம் கொண்டார்கள். “நாம் செய்யவேண்டியது ஒன்றே. இப்போதே படைகொண்டுசென்று பீமகரை ஆதரிப்போம். குண்டினபுரியை அவர் கைப்பற்ற உதவுவோம். மாற்றாக பெருஞ்செல்வத்தையும் வணிக உரிமைகளையும் பெற்றுக்கொள்ள முடியும்” என்றான் ருத்ரன். “அது எளிதல்ல. அதற்கு முன் நாம் பிற ஷத்ரிய அரசர்களின் ஒப்புதலை பெறவேண்டும்” என்றார் பிரதீபர். “ஆம், ஆனால் அது அவர்கள் கையில் நாம் பகடையாவதாக ஆகிவிடக்கூடாது.”

அவன் அதை வேறேதோ உள்ளத்தால் கேட்டுக்கொண்டிருந்தான். பின்னர் ஏன் இந்த எளிய சூதனை இத்தனை தொலைவுக்கு நினைவில்கொண்டிருக்கிறோம் என வியந்துகொண்டான். அந்த எண்ணம் எழுந்ததுமே உண்மையில் ஓராண்டாக பெரும்பாலான தருணங்களில் அவனைப் பற்றித்தான் எண்ணிக்கொண்டிருக்கிறோம் என்று தெரிந்தது. காலையில் எழுந்த சற்றுநேரத்திலேயே அவனைப்பற்றி ஏதேனும் ஓர் எண்ணம் வந்துவிடும். இரவில் ஒவ்வொன்றாக உளம்துழாவிச் சலித்து துயிலில் ஆழ்கையில் அவன் நினைவு ஒன்று எங்கேயோ எஞ்சியிருக்கும்.

பேச்சு ஓர் எல்லையை அடைந்தபோது அரைத்துயிலில் தாடை தளர்ந்து விழுந்து பல்லில்லாத வாய் திறந்திருக்க அமர்ந்திருந்த பேரமைச்சர் முகுந்தர் விழித்துக்கொண்டு

வாயைத் துடைத்தபின் “எண்ணவேண்டிய கருத்துக்கள் முன்வைக்கப்பட்டன. ஆனால் நாம் அரசரின் கருத்தையும் அறிய வேண்டியிருக்கிறது” என்றார். அனைவரும் அவனை நோக்க அந்த அமைதியைக் கேட்டு அவன் விழித்துக்கொண்டு “இப்போது நாம் எம்முடிவையும் எடுக்கமுடியாது என்றே நினைக்கிறேன். ஏனென்றால் விதர்ப்பத்துடன் நாம் இணைந்தால் நிஷதபுரியை ஆளும் புஷ்கரன் அதை அவனுக்கெதிரான போர் என்று கொள்ள வாய்ப்புள்ளது. இன்றைய சூழலில் அவனுடைய சினத்தை எதிர்கொள்ளும் ஆற்றலுள்ள நாடல்ல கோசலம்” என்றான்.

ருத்ரன் “ரகுவும் திலீபனும் ஆண்ட மண். தசரதனும் ராமனும் கோல்கொண்டு அமர்ந்த அரியணை இது…” என தொடங்க “இவ்வகையான சொற்களை நான் பிறந்தபோதிருந்தே கேட்டுவருகிறேன். இவற்றுக்கு எந்தப் பொருளும் இல்லை. அன்று கங்கையே பெருவழி. இன்று கடல் திறந்துவிட்டிருக்கிறது. நாம் அன்னைமுலையில் தொங்கிக்கிடந்து உண்ணும் பன்றிக்குட்டிபோல கங்கையை ஒட்டி வாழும் சிறுநாடு. அன்னை குட்டிகளை பெருக்கிக்கொண்டே இருக்கிறாள்” என்றான். அவை அமைதியடைந்தது. ரிதுபர்ணனின் கசப்புநகை அனைவரும் அறிந்தது.

“அங்கே அனைத்தும் கலங்கித் தெளியட்டும். புஷ்கரனுக்கும் சதகர்ணிகளுக்கும் இடையே பூசல் தொடங்கவிருக்கிறதென்கிறார்கள் ஒற்றர்கள். புஷ்கரனை அவர்கள் அழித்தால் நாம் விதர்ப்பத்தை அணைத்துக்கொள்வோம்” என்றான். “மேலும் விதர்ப்பத்துக்கும் நமக்கும் நடுவே பல நாடுகள் உள்ளன. மகதமும், அங்கமும்,

சேதியும் நம்மைவிட வலுவான நாடுகள். நாம் அவற்றுடனும் நட்புடன் இருக்கவேண்டியிருக்கிறது.” ருத்ரன் “ஆம், மெய்” என்றான். “மச்சர்களும் நிஷாதர்களும் ஒருங்கிணைந்து வருகிறார்கள். பாணாசுரனின் ஆதரவு அவர்களுக்கு உள்ளது” என்றான் ரிதுபர்ணன். அவை “ஆம்” என்றது.

அவை கலைய ரிதுபர்ணன் கைகாட்டினான். சங்கொலியும் கொம்போசையும் எழுந்தன. ரிதுபர்ணன் எழுந்தபோது அவன் இடை வலித்தது. கைகால்கள் குருதிகட்டி எடைகொண்டிருந்தன. நீட்டி நீட்டி நடந்தான். அவன் இடைநாழியை அடைந்தபோது முகுந்தர் உடன் வந்துசேர்ந்துகொண்டார். “உச்சிக்குமேல் என்ன நிகழ்ச்சி?” என்றான். “அவந்தியின் தூதுக்குழு ஒன்று வந்துள்ளது. காமரூபத்து வணிகர்கள் எழுவர் சந்திக்க விழைகிறார்கள்.” ரிதுபர்ணன் “அவர்களை நாளை பார்க்கிறேன்” என்றான்.

“ஆணை” என்றார் முகுந்தர். ரிதுபர்ணன் சலிப்புடன் “இது என்ன என்றே எனக்கு புரியவில்லை. பேசுவதெல்லாம் பொய் என உணர்ந்தும் எப்படி பேசிக்கொண்டிருக்கிறார்கள்?” என்றான். “அவர்கள் நடிக்கிறார்கள். கோசலம் ஒரு சிறுநாடு, செய்வதற்கேதும் இல்லாதது. அதை இவர்களனைவரும் அறிவார்கள். அவர்கள் ஏதேனும் செய்தாகவேண்டும். மெய் சொல்லவேண்டுமென்றால் இங்குள்ள அரசே ஒரு நடிப்புதான்” என்றார். ரிதுபர்ணன் நகைத்து “ஆம், அதை நானும் அறிவேன். எனக்கு அலுத்துவிட்டது” என்றான்.

முகுந்தர் புன்னகைத்து “ஆனால் பெரும்பாலான அரசுகளும் அரசவைகளும் அரசநிகழ்வுகளும் விழாக்களும் பொருளிலா நடிப்புகளே என நாம் ஆறுதல் கொள்ளலாம்” என்றார். “நான் அவைநிகழ்வுகளின்போது பாகுகனைத்தான்

நினைத்துக்கொண்டிருந்தேன்” என்றான். “நான் ஏன் அவனை நினைத்துக்கொண்டிருக்கிறேன்? அதை எண்ணியபோதுதான் வியப்பாக இருந்தது.” முகுந்தர் “அது இயல்பு. நீங்கள் அவனாக மாறி நடிக்கிறீர்கள்” என்றார்.

ரிதுபர்ணன் நின்று “நானா?” என்றான். “அரசர்கள் அவ்வாறு செய்வதுண்டு. அவர்கள் கொண்டிருக்கும் சூடியிருக்கும் எதுவுமே இல்லாமல் வெறுமனே நின்றிருக்கும் கடையனில் கடையன் ஒருவனைக் கண்டு அவனாக மாறிக்கொள்வார்கள். அது அவர்களுக்கு அனைத்திலிருந்தும் கற்பனையில் ஒரு விடுதலையை அளிக்கிறது.” ரிதுபர்ணன் அவர் சொல்வதை எண்ணியபடி நடந்தான். “பாகுகனுக்கு உடலென்றும் ஒன்றில்லை. தன்னிடம் இல்லாதவற்றைப் பற்றிய எண்ணமும் இல்லை. எனவே முழு விடுதலையில் அவன் திளைக்கிறான்” என்றார் முகுந்தர்.

“ஆம், நான் அவனுடைய அந்த விடுதலையைத்தான் எண்ணிக்கொண்டிருக்கிறேன். புரவிகளுடன் வாழ்கிறான். அடுமனையில் சுவைகளை உருவாக்குகிறான். தான் இயற்றுகிறோம் என்னும் உணர்வோ வெல்லவேண்டும் என்னும் முனைப்போ இன்றி தன்னியல்பாலேயே செயலாற்றுகிறான்” என்றான் ரிதுபர்ணன். “அனைத்தையும் விளையாட்டாகவே செய்பவனை எதுவும் பற்றிக்கொள்வதில்லை என்று தோன்றுகிறது.”

அன்று மாலை அவன் புரவி பயிலச் சென்றபோது வார்ஷ்ணேயனும் ஜீவலனும் இளம்புரவி ஒன்றை பழக்கிக் கொண்டிருந்தார்கள். அவனைக் கண்டதும் வந்து பணிந்த ஜீவலனிடம் “பாகுகன் எங்கே?” என்று ரிதுபர்ணன் கேட்டான். “அடுமனையில் இருக்கிறான். இன்று கொற்றவை

பூசனைக்கான சிறப்புச் சமையல்” என்றான் ஜீவலன். “அழைத்து வருக!” என்று அவன் ஆணையிட்டான். காலணிகள் அணிந்து சவுக்குடன் அவன் தேவிகை என்னும் புரவியை அணுகி அதில் ஏறப்போனபோது பாகுகன் ஓடிவந்தான். தொலைவிலேயே அவனுடைய சிரிப்புதான் தெரிந்தது. அகலில் சுடர்போல அவன் சிரிப்பு என்று ஜீவலன் ஒருமுறை சொன்னதை நினைவுகூர்ந்தான்.

பாகுகன் வந்து வணங்கி “அரசே, தாங்கள் மாலையில் வருவீர்கள் என்று சொல்லப்படவில்லை” என்றான். “உன்னைப் பார்க்கத்தான் வந்தேன்” என்றான் ரிதுபர்ணன். பாகுகன் அதற்கு மகிழ்ந்து சிரித்து “இந்தப் புரவி இன்னும் பழகவில்லை. பழகிய பின்னர் இதுவே இங்கே மிகச் சிறந்ததாக இருக்கும்” என்று வார்ஷ்ணேயன் பிடித்திருந்த புரவியின் முதுகை தட்டினான். “ஏறிக்கொள்” என்றான் ரிதுபர்ணன். “இன்னும் அது பழகவில்லை” என்று ஜீவலன் சொல்வதற்குள் பாகுகன் அதில் ஏறிக்கொண்டான். ரிதுபர்ணன் புரவியைத் தட்டி அதை விரைந்தோடச் செய்தான். பாகுகன் உடன் தாவிவந்தான். புரவியின் கழுத்தளவே அவன் உயரமிருந்தான்.

“நீ எடையற்றவன்” என்றான் ரிதுபர்ணன். “புரவிகள் எடையை விழைபவை” என்று பாகுகன் சொன்னான். நிழல் ஒன்று உடன்வருவதுபோல பாகுகன் புரவியில் அவனைத் தொடர்ந்து வந்தான். எத்தனை சரியாக அவன் உடல் புரவியில் அமைந்திருக்கிறது! எந்த ஆணையுமில்லாமல் எண்ணத்தாலேயே புரவியை ஆள்கிறான். ரிதுபர்ணன் தன் குதிமுள்ளால் குத்தி புரவியின் விரைவை எண்ணியிராமல் கூட்டினான். அவன் புரவியுடன் மிகச் சரியாக உடன் பாய்ந்தது

பாகுகனின் புரவி. அவன் கடிவாளத்தை இழுத்து நிறுத்தியபோது மிகச் சரியாக நின்றது.

அவனை ஓரக்கண்ணால் பார்த்தபடியே ரிதுபர்ணன் சென்றான். மிகச் சரியாக எப்படி அவனால் தொடர முடிகிறது, தன் புரவியையும் அவனே ஓட்டுவதுபோல. அருகே அமர்ந்திருப்பவன்போல தோளருகே தெரிந்தது அவன் முகம். “இன்று ஒரு புதிய அப்பம் செய்தேன். இலவங்கத்தின் இலையில் சுருட்டி ஆவியில் வேகவைக்கும் இனிப்பு. அந்தத் தைலமணத்துடன் வெல்லம் இணைகையில் அருஞ்சுவை. சிவசக்தி லயம் என்றார் சூதரான சாமர்” என்றான். அவன் மீண்டும் குதிமுள்ளால் புரவியைக் குத்தி பாயவிட்டான். அவனுடன் பாய்ந்து காற்றில் எழுந்துகொண்டே “ஆனால் தெற்கே இதில் தேங்காய் சேர்க்கிறார்கள். நான் பால்விழுதில் மாவை உருட்டினேன்” என்றான் பாகுகன்.

அவன் தன் எண்ணங்களை அறிந்ததுபோலவே தெரியவில்லை. இயல்பாக உடன் வருகிறான். அது எப்படி இயலும்? விளையாடுகிறானா? மிகத் திறமையாக நடிக்கிறானா? விழிகளில் சிறுவனுக்குரிய உவகை. அது ஒரு திரை. அவன் சிறுவனல்ல. நடு அகவையன். அச்சிரிப்புக்கும் குற்றுடலுக்கும் அப்பால் அவன் என்னை நோக்கிக் கொண்டிருக்கிறான். அவனை நோக்கி ஏளனம் செய்பவர்களை எல்லாம் அங்கு மறைந்திருந்து நோக்கி சிரிக்கிறான்.

ஏன் இத்தனை கசப்பு? இவனையே நான் எண்ணிக்கொண்டிருக்கிறேன் என இன்று உணர்ந்தபோதே இது தொடங்கிவிட்டது. இவனைப் பார்க்க இன்று வரலாகாதென்று எண்ணினேன். மீண்டும் மீண்டும் மதுவுண்டேன். ஆனால் அறியாமல் கிளம்பி வந்துவிட்டேன். மணிமுடியும்

செங்கோலும் அரியணையும் பொன்னும் மணியும் குலமும் பெருமையும் இருந்தும் இவனிடம் தோற்றுக்கொண்டிருக்கிறேன்.

என்ன நிகழ்ந்ததென்று அவன் அறிவதற்குள்ளாகவே அவன் கால் நீண்டு பாகுகனின் புரவியின் வலதுமுன்னங்காலைத் தட்டி விலக்கியது. பயிலாப் புரவி துள்ளிக் கனைத்தபடி விழுந்து உருண்டு எழுந்து நின்று காலை உதறிக்கொண்டது. அது விழுவதற்கு ஒருகணம் முன்னரே அதன் மேலிருந்து குதித்து நிலத்தில் நான்கு காலடி வைத்து ஓடி அது எழுந்த அதே விரைவில் அதன் மேல் ஏறி அதை மீண்டும் செலுத்தி அவனருகே வந்தான் பாகுகன். “இன்னும் பழகாத புரவி… கால் தடுக்கிவிட்டது” என்றான்.

ரிதுபர்ணன் அவனை நோக்குவதை விலக்கினான். நெஞ்சு செவிகளிலும் வயிற்றிலும் அதிர்ந்து கொண்டிருந்தது. மூச்சை சீராக விட்டுக்கொண்டபோது மெல்ல மீண்டு வந்தான். ஒன்றும் நடவாததுபோல அவனுடன் இணைந்து வந்துகொண்டிருந்த பாகுகன் “ஆனால் இனிப்பு பொதுவாக ஆண்களுக்கு பிடிப்பதில்லை. நறும்பாக்கும் மதுவும் சுவையறியாதவர்களாக ஆக்கிவிட்டிருக்கின்றன. குழந்தைகள் இனிப்பை மட்டுமே விரும்புகின்றன. நல்ல சமையலை இளையோனும் கன்னியருமே அறிந்து சொல்லமுடியும், அரசே” என்றான்.

ரிதுபர்ணன் தன் புரவியை பீறிட்டுச் செல்லவைத்தான். அவன் காதுகளில் காற்று ஓசையிட்டது. குதிரையின் பிடரிமயிர் துடித்துலைந்தது. அதன் குளம்போசை அவன் நெஞ்சத் துடிப்புடன் இணைந்தது. இயல்பாக உடன் வந்துகொண்டே இருந்தான் பாகுகன். ஒரு கணத்தில் அவன் உடலெங்கும் சினமெழுந்து பெருகியது. கைவிரல்கள் நடுங்கி கடிவாளத்தை

விட்டுவிடுவான் என்று தோன்றியது. புரவி அவனை விட்டுவிட்டு உருவிச்சென்றுவிட்டதென்றே எண்ணினான். உடன்வரும் அவனை விலக்கவேண்டும் என்று தோன்றியதுமே அவ்வெண்ணம் பெருகி ஒரு கணமும் அவனைத் தாளமுடியாதென்று தோன்றியது. நரம்புகள் இறுகி இறுகி உடைவதுபோல் விம்மின.

அவன் நிலத்தில் உடலறைய விழுந்தபோதுதான் அதை உணர்ந்தான். அகன்று செல்லும் அவன் குதிரையின் குளம்புகளின் அடிப்பூண்கள் தெரிந்தன. பாகுகன் தன் புரவியில் இருந்து இயல்பாக குதித்து அவனை நோக்கி வந்து “அரசே” என கைநீட்டினான். இரு புரவிகளும் அப்பால் விரைவழிந்து நின்று கழுத்தை வளைத்து திரும்பி நோக்கின.

“நாயே! நாயே!’ என்று கூவியபடி எழுந்த ரிதுபர்ணன் சவுக்கால் பாகுகனை மாறிமாறி அடிக்கத் தொடங்கினான். “அடிக்காதீர்கள்... அடிக்காதீர்கள்... அரசே! அரசே! நான் ஒன்றும் செய்யவில்லை... அரசே!” என கூவியபடி பாகுகன் அடிகளை கையால் தடுத்தான். ரிதுபர்ணன் வார்ஷ்ணேயனை நோக்கி “டேய், இவனைப் பிடித்துக் கட்டுங்கள்” என்றான். அவன் “அரசே, அவன் ஒன்றுமறியாதவன், பேதை” என்றான். “உன்னை கழுவிலேற்றுவேன். இது என் ஆணை!” என்றான் ரிதுபர்ணன்.

வார்ஷ்ணேயனும் ஜீவலனும் சேர்ந்து பாகுகனை பிடித்தனர். அவன் விசும்பி அழுதபடி “நான் ஒன்றும் செய்யவில்லை... நான் ஒன்றும் செய்யவில்லை” என்று கைகூப்பி நின்றான். அவர்கள் அவன் கையை பின்னால் பிடித்துக் கட்டினர். “அவனை அந்தத் தறியில் கட்டுங்கள்...” என்றான் ரிதுபர்ணன். அவர்கள் அவனை கட்டப்போக “திருப்பிக் கட்டுங்கள். அவன் முதுகு எனக்குத் தேவை” என்றான் ரிதுபர்ணன்.

அவர்கள் அவனைக் கட்டியதும் ரிதுபர்ணன் சவுக்கால் வெறியுடன் அடிக்கலானான். அடிக்க அடிக்க வெறி ஏறிவந்தது. அவனுள் இருந்து வெளிவந்து நின்று எக்களித்தது அவன் அறியாத பிறிதொன்று. சவுக்கு முதுகுத்தோலில் விழுந்து நக்கிச் சுருள்வதை, குருதி ஊறிக் கசிந்து வழிவதை கண்டான். குருதிமணம் எழுந்ததும் மூச்சிரைக்க சவுக்கை வீசினான். “டேய், அவனை அவிழ்த்துவிடுங்கள்” என்றான். அவர்கள் சென்று அவன் கட்டை அவிழ்த்தனர். கதறியழுது ஒலியடங்கி உடல் நடுங்கிக்கொண்டிருந்தான் பாகுகன்.

“நாயே, உன் ஆணவத்தை என்னிடம் காட்டுகிறாயா? நீ என்ன குதிரைத் தெய்வமா?” என்று ரிதுபர்ணன் உறுமினான். “வந்து என் காலை நக்கு. நீ நாய்... என் காலணியை நக்கி புழுதியை களை...” இரு கைகளையும் ஊன்றி அருகே வந்த பாகுகன் அவன் காலணியை நாக்கை நீட்டி நக்கினான். அவன் கண்ணீர் வழிய நக்குவதை குனிந்து நோக்கிக்கொண்டு ரிதுபர்ணன் அசையாமல் நின்றான். நாக்கு அவன் உடலில் படவில்லை. ஆனால் ஒருகணம் சிவப்பாக அது தெரிந்து மறைந்தபோது அவன் முதுகுத்தண்டு குளிர்ந்தது.

தலையைத் திருப்பிக்கொண்டு கைவீசி “போ” என்று ரிதுபர்ணன் சொன்னான். பாகுகன் கண்ணீர் கோடு விழுந்த கன்னங்களுடன் நிமிர்ந்து புன்னகை செய்து “போகலாமா?” என்றான். “போடா” என்று ரிதுபர்ணன் கூவினான். பாகுகன் துள்ளி எழுந்து ஓடி ஜீவலன் அருகே சென்று அவன் பின்னால் ஒளிந்துகொண்டான். அந்த அசைவு ரிதுபர்ணனை புன்னகைக்கச் செய்தது. ஜீவலனும் கண்ணீர் நிறைந்த கண்களுடன் புன்னகை செய்தான்.

“ஆம், அது நிஷாதர்களின் இயல்பு” என்றார் முகுந்தர். “அவன் சூதனல்ல. சூதர்கள் அவ்வாறு முற்றடிமையென்று ஆகமாட்டார்கள். கான்மக்கள் விலங்குகளைப் போன்றவர்கள். நேற்றும் நாளையுமில்லாமல் இன்றில் வாழ அவர்களால் இயலும். அரசே, விலங்குகளால் தங்கள் இயல்புகளில் இருந்து தாங்களே விடுவித்துக்கொள்ள இயலாது.” அவன் குடித்த மது எதுக்களித்து வாயில் வந்தது. அதை தென்னாட்டு கம்பளம் விரிக்கப்பட்ட தரையில் துப்பினான்.

“அரசன் தன் செயலுக்காக வருந்தலாகாது. எதுவாக இருந்தாலும்” என்றார் முகுந்தர். “ஏனென்றால் பின்னர் வருந்த நேருமோ என அஞ்சி கடுஞ்செயல் புரியாதொழிவான். அறம் காக்கும் அவன் வாள் கூர்மழுங்கும்.” “நான் வருந்துவது நான் ஏன் அதை செய்தேன் என்று எண்ணியே” என்றான் ரிதுபர்ணன். “நீங்கள் உங்கள்மேல் வீசிய சவுக்கு அது” என்றார் முகுந்தர். அவரையே கூர்ந்து நோக்கினான். பின் கள்மயக்கில் சிரித்து “அந்தணரின் வழிமுறை இது. ஒவ்வொன்றையும் தத்துவமாக ஆக்கிக்கொள்வார்கள். அதன்பின் ஏட்டில் எழுதிவிட்டு விலகிச் செல்வார்கள்” என்றான். முகுந்தர் புன்னகைத்து “எங்கள் பணியும் அதுவே” என்றார்.

“அவன் ஏன் அப்படி இருக்கிறான்? கீழிறங்கிக் கீழிறங்கி விலங்கென்றே ஆகிவிட்டிருக்கிறான்” என்றான் ரிதுபர்ணன். அவன் அதையே சொல்லிக்கொண்டிருப்பதை உணர்ந்த முகுந்தர் எழுந்துகொண்டு “நான் வருகிறேன். எனக்கு நாளை நிறைய பணியிருக்கிறது” என்றார். “அமைச்சரே, நான் கேட்பது ஒன்றே. ஒரு மனிதன் இத்தனை கீழிறங்க முடியுமா? தன்முனைப்பை ஒழியலாம். தன்மதிப்பைக்கூடவா முற்றொழிய இயலும்?” முகுந்தர் “அவ்வாறு இருப்பது

அவனுக்கு எளிதாக இருக்கிறதுபோலும். சற்றேனும் தன்மதிப்பிருந்தால் அந்த உடலுக்காக அவன் நாணம் கொள்வான். நகைப்போர்மேல் வஞ்சம் திரட்டிக்கொள்வான். இன்றிருக்கும் உவகையை முழுமையாக இழந்து கசந்து கொந்தளித்துக்கொண்டே இருப்பான்" என்றார். "நான் வருகிறேன்" என்று தலைவணங்கி வெளியேறினார்.

ரிதுபர்ணன் அவர் செல்வதை நோக்கியபடி தலை ஆடிக்கொண்டிருக்க அமர்ந்திருந்தான். "அவர் சென்றுவிட்டார். அவருக்குப் புரியாது" என்றான். எதுக்களித்த மதுவை துப்பிவிட்டு "அவன் எவ்வளவு தொலைவுக்கு செல்வான்? புழுவென்றாகி மண்ணில் நெளிவானா?" என்றான். சேடியை கைதட்டி அழைத்து மீண்டும் மது கொண்டுவரச் சொன்னான். அவள் தயங்க "ஆணை இது, இழிமகளே!" என்று கூவினான். அவள் தலைவணங்கி மீண்டும் கொண்டுவந்த மதுவை வாங்கி ஒரே மிடறில் குடித்தான்.

சற்றுநேரம் சுவரை நோக்கியபடி அமர்ந்திருந்தான். எதை எண்ணிக்கொண்டிருந்தேன்? ஆம், அவன் எதுவரை செல்வான்? யார்? அவன் உடல் வலப்பக்கமாக இழுபட்டது. வலத்தோள் இரும்பாலானதாக ஆகிவிட்டதுபோல. இருமுறை ஆடியபின் சரிந்து கையை ஊன்றி அமர்ந்து "ஆம், அவன் நெடுந்தொலைவு செல்ல முடியாது" என்றான். மீண்டும் ஏதோ சொல்லியபடி படுத்து துயின்றான். ஆனால் விழிகள் முழுமையாக மூடாததனால் அவன் கண்களுக்குள் புகுந்த ஒளி உள்ளே வெயிலைப் பரப்பியது. அவன் எரிவேனிலில் விடாய் தவிக்க சென்றுகொண்டிருந்தான். சூழ்ந்து மலைச்சரிவுகள் கொதித்துக்கொண்டிருந்தன.

விழித்துக்கொண்டு எழுந்து வாயை துடைத்தான். விடாயை உணர்ந்ததும் கையூன்றி எழுந்து நீர்க்குடுவையை இழுத்து எடுத்து குடித்தான். நீர் உடலில் நிறைந்தாலும் விடாய் அவ்வாறே இருப்பதுபோலிருந்தது. ஆனால் தலையின் எடை குறைந்திருந்தது. சுவரைப் பற்றியபடி நின்று ஆடையை சீரமைத்துக்கொண்டான். அவன் வெளியே சென்றபோது காவலன் தலைவணங்கினான். சுவரைப் பிடிக்காமலேயே நடக்கமுடிந்தது. காற்று வீச உடல் எடையில்லாமல் ததும்புவது போலிருந்தது.

அவனுக்குப் பின்னால் காவலர் இருவர் ஓசையில்லாமல் வந்ததை அவன் அறிந்தான். இடைநாழியில் நடந்து படியிறங்கி அரண்மனை முற்றத்தை அடைந்தான். குளிர்ந்த இரவுக்காற்று அவன் சித்தத்திலும் பட்டது. உடலெங்கும் பரவியிருந்த வெம்மை குறைவது போலிருந்தது. அடுமனை நோக்கி சென்றான். அவ்வேளையில் அங்கே எவருமே விழித்திருக்கவில்லை. அடுமனையை ஒட்டிய திறந்த கொட்டகையில் அடுமனைச் சூதர் துயின்றுகொண்டிருந்தனர். அவன் படிகளில் ஏறிய ஒலி கேட்டு வார்ஷ்ணேயன் விழித்துக்கொண்டான். ஓசையின்றி தலைவணங்கி விலகி நின்றான்.

தரையில் குப்புறப்படுத்து பாகுகன் துயின்றுகொண்டிருந்தான். ரிதுபர்ணன் அவனை நோக்கியபடி நின்றான். குனிய முயன்றபோது அவன் பருத்த உடல் கீழே இழுத்தது. ஜீவலன் எழுந்து பாகுகனை உலுக்கினான். பாகுகன் புரண்டு ஜீவலனை நோக்கியபோது ரிதுபர்ணனை பார்த்துவிட்டான். முகம் மலர பாய்ந்து எழுந்து “அரசே!” என்றான். “நான் உங்களை கனவு கண்டேன். நாம் இருவரும் காட்டில் ஒரு சிறிய

புரவிக்குட்டியை பார்க்கிறோம். வெண்குதிரை. குருத்துப்பாளை போன்றது.” அவன் கைகளை மேலே தூக்கி “அது சிவந்த கண்கள் கொண்டது…” என்றான்.

ரிதுபர்ணன் “நான் ஏன் உன்னை அடித்தேன் என்று தெரியவில்லை” என்றான். ஆனால் அவன் சொல்ல விழைந்தது அதுவல்ல. “ஆம், அடித்தீர்கள். ஆனால் இந்தக் குதிரைக்குட்டி மிக விரைவானது. அதை நாம் பொறி வைத்தே பிடிக்கமுடியும்” என்று பாகுகன் சொன்னான். ரிதுபர்ணன் தன் விழிகளை அழுத்தி கண்ணீரை நிறுத்தியபின் “ஆம், நாம் நாளை கானாடச் செல்வோம். புரவியை பிடிப்போம்” என்றான். “நாளை காலையே செல்வோம்… வெண்புரவி அங்கே நிற்கிறது. ஐயமே இல்லை” என்றான்.

# நீர்க்கோலம் - 80

### **79. நச்சின் எல்லை**

பாகுகன் பெரும்பாலான பொழுதுகளில் ரிதுபர்ணனுடனேயே இருந்தான். அவன் தனியறைக்குள் பீடத்திற்குக் கீழே வளைந்த கால்களை நீட்டியபடி அமர்ந்து பெரிய பற்கள் ஒளிவிட உரத்த குரலில் பேசிக்கொண்டிருப்பான். அறைக்குள்ளேயே உடல் ததும்ப முட்டிமோதுவான். எண்ணமெழுந்ததும் பாய்ந்தெழுந்து சாளரம் வழியாக வெளியேறி மரங்களினூடாகவே குதிரைக்கொட்டில் நோக்கிச் செல்வான். அவனுடன் நகையாடிக்கொண்டிருக்கும் ரிதுபர்ணன் “ஏய், நில்… எங்கே செல்கிறாய்?” என்று கூவியபடி எடைமிக்க காலடிகள் ஓசையிட இடைநாழிகள் வழியாக ஓடுவான். விந்தையும்

ஒவ்வாமையுமாக அதை நோக்கி விழிகூர்ந்து நிற்பார்கள் காவலர்கள்.

குதிரைக்கொட்டிலிலும் அடுமனையிலும் அரசன் வந்து அமர்ந்திருப்பது ஏவலர்களுக்கு முதலில் குழப்பமும் எரிச்சலும் அளிப்பதாக இருந்தது. அதை எப்படி எதிர்கொள்வது என்று அவர்களுக்குத் தெரியவில்லை. ஏனென்றால் அரசன் முன் காட்டவேண்டிய பணிவென்பது செயலின்மைதான். அடுமனை வேலைகள் அவன் வந்ததுமே நிலைத்தன. ஆனால் அவர்களை அவன் ஒரு பொருட்டாகவும் எண்ணவில்லை. பாகுகனுடன் மட்டுமே அவன் பேசிக்கொண்டிருந்தான். அவன் செல்லுமிடமெல்லாம் சென்று அவன் செய்வதனைத்தையும் கண்டு நகைத்துக்கொண்டிருந்தான்.

பாகுகன் அவனை அரசே என்று அழைத்தாலும் தோழனென்றே நடத்தினான். அடுமனையில் முதன்முதலாக சிக்கிமுக்கிக் கல்லை உரசி எரியெழுப்பியபோது ரிதுபர்ணன் உடலெங்கும் பரவிய ஆழ்ந்த உவகை ஒன்றை அடைந்தான். விறகடுக்கவும் உப்புபுளி கரைக்கவும் பேரார்வத்துடன் கற்றான். அவனே சமைத்த முதல் புளிக்கரைசலை உண்டு அடுமனையாளர் முகம் மலர்ந்தபோது உரக்க நகைத்தான். அவன் சொல்லை புரிந்துகொண்டு முதுபுரவியாகிய சாரதை முதன்முறையாக செவிதிருப்பி தலையசைத்தபோது இரு கைகளையும் விரித்து கூச்சலிட்டு துள்ளிக்குதித்தான்.

அடுமனைத் தொழிலும் புரவிபயிற்றலும் அவனை உளம் மாற்றின. எதை நோக்குகிறோமோ அதுவென்றாகும் உள்ளம் அவனை அடுமனையில் அனைத்தையும் தொகுத்து அனைத்திலும் இருந்து எழுவதொன்றை நோக்கி கொண்டுசென்றது. புரவியுடன் எழுந்து திசை திசை என

விரிந்தது. அடுமனையாளர் அவனிடம் இயல்பாகப் பேசி களியாடலாயினர். அவன் வருகையை முன்னரே அறிந்து புரவிகள் செவிதிருப்பி கால்மாற்றி மெல்ல கனைத்தன. ஒவ்வொரு நாளும் அவன் அன்று செய்யவேண்டிய ஒன்றை எண்ணியபடி விழித்தெழுந்தான். விழி அயர்வது வரை அன்று செய்தவற்றைப்பற்றியே சொல்லிக்கொண்டிருந்தான்.

அமைச்சரிடம் “ஒவ்வொரு நாளும் எய்துவதற்கு ஒரு வெற்றி தேவை மானுடனுக்கு. அதை இத்தனை காலம்கடந்த பின்னரே உணர்ந்தேன், அமைச்சரே” என்றான். “என்றோ வரும் வெற்றிக்காக ஒவ்வொரு நாளையும் செலவிடுபவன் துயரிலிருக்கிறான். இறந்தபின் பேசப்படுவதற்காக வாழ்பவன் வீணாக அழிகிறான்.” முகுந்தர் “விடை இதைவிடவும் மிக எளியது, அரசே. தன் கைகள் வழியாக எதையேனும் உருவாக்காதவன் வாழ்வதில்லை” என்றார். அவன் வெடித்துச் சிரித்து “உண்மை” என்றான்.

முகுந்தர் புன்னகைத்து “உங்கள் விழிகள் மாறிவிட்டன, அரசே” என்றார். “கண்களுக்குக் கீழே இருந்த வளையங்கள் அகன்றுவிட்டன. மூச்சிரைக்காது நடக்கிறீர்கள்.” அவன் “அது தன் மகாசூர்ணத்தின் வெற்றி என உளமகிழ்கிறார் மருத்துவர் குந்தலர். நான் அதை கலைப்பதுமில்லை. உண்மையில் நான் இப்போது அரிதாகவே மதுவருந்துகிறேன். பகடி செய்யாமலும் உளம் மயங்காமலும் சலிப்பை வெல்பவனே வாழ்வின் உவகையை அறிந்தவன் என்று நேற்று எண்ணிக்கொண்டேன்” என்றான்.

அவையினருக்கு அவனிடம் வந்த மாறுதல் முதலில் ஒவ்வாமையை அளித்தாலும் அவனிடம் எப்போதுமிருந்த கசப்பும் எரிச்சலும் அகன்றதைக் கண்டு அவர்களும் உவகை

அடைந்தனர். “இப்போது நாம் சொல்வதை செவிகொள்கிறார். மறுமொழிகளில் பொருளிருக்கிறது. எவரால் வந்தது என்றால் என்ன, இந்த மாற்றம் நன்றே” என்றான் படைத்தலைவன் ருத்ரன். துருமன் “நான் எப்போதும் சொல்வதுதான். புரவி பயிலும் பொழுது கூடக்கூட ஆண்மகன் நிமிர்வடைகிறான். இன்றுதான் அதை கற்றுக்கொண்டிருக்கிறார்” என்றான்.

சிற்றமைச்சர் பிரதீபர் மட்டும் முகம் சுளித்து “அரசனின் ஆர்வம் நெறி நிறுத்துவதிலும் வளம் பெருக்குவதிலும் பகை கடிவதிலும் மட்டுமே நிற்கவேண்டும் என்கின்றன நூல்கள். அடுமனைத் தொழில் அடிமைக்குரியது. புரவிபேணுதல் அண்டிவாழ்வோர்க்குரியது. ஆயிரமாண்டுகளாக அவர்கள் செய்துசெய்து அத்தொழிலின் ஒவ்வொரு அசைவிலும் சொல்லிலும் அப்பண்புகள் குடியேறியிருக்கும். அதைச் செய்யும் அரசன் அவனை அறியாமலேயே அப்பண்புகளை தான் பெற்றுக்கொள்கிறான்” என்றார்.

பேரமைச்சர் புன்னகைத்து “பாரதவர்ஷத்தில் பாதியை வென்ற நளன் அடுமனையாளன், புரவிபேணுநன்” என்றார். “ஆம், ஆனால் அவன் நிஷாதன்” என்றார் பிரதீபர். “நிஷாதன் அல்லவா அச்செயல்களின் தீய பண்புகளைப் பற்றி மேலும் அஞ்சவேண்டியவன்? ஷத்ரியர்களுக்கு குலக்குருதியின் காப்பு உள்ளது” என்றார் முகுந்தர். பிரதீபர் “நளன் நாட்டை பேணிக்கொள்ளவுமில்லை. அவன் தமயந்தியை இழந்ததும் நாடுதுறக்க நேரிட்டதும்கூட புரவியும் அடுப்பும் அளித்த தீயபண்புகளால்தானோ, எவர் சொல்லமுடியும்?” என்றார். “தொழிலே வர்ணங்களை ஆக்குகிறதென்பதனால் தொழில்மாற்றம் வர்ணங்களை அழிக்கும்.”

“நான் சொல்லாட விழையவில்லை. அது என் வழி அல்ல” என்றார் முகுந்தர். “ஆனால் அரசியலை நேரடியாக அரசியல் வழியாக எவரும் கற்றுக்கொள்ள முடியாது. ஏனென்றால் அது மிகமிக விரிந்தது. அதன் அலகுகளும் கிளைகளும் எண்ணற்றவை. அதில் ஒரு நெறியைக் கண்டடைய பல காலம் ஆகும். அரசியலை ஒரு கையால் ஆற்றியபடி பிறிதொரு கையால் ஏதேனும் தொழிலையோ கலையையோ ஆற்றுபவர்கள்தான் அரசியல்நெறிகளை எளிதில் கற்றுக்கொள்கிறார்கள்.” பிரதீபர் வியப்புடன் தலையை ஆட்டினார். அவரால் சொல்லெடுக்க முடியவில்லை.

“மருத்துவமும் விற்தொழிலும் வானியலும் துணைவேதங்கள் என்பதை எண்ணுக! அவை சிற்றுருக் கொண்டு வந்த வேதங்கள் என்றே நூலோர் உரைப்பார்கள். வேதம் அளிப்பதை துணைவேதம் அளிக்கமுடியும்” என்றார் முகுந்தர். “ராகவராமன் வில்லால் அரசியலை அறிந்தான். அவன் எதிர்நின்ற ராவணப்பிரபுவோ வீணையால் அதை அறிந்தான்.” பிரதீபர் மீண்டும் தலையசைத்துவிட்டு “அடுமனையில்...” எனத் தொடங்க “நளன் களத்தை புரவியாலும் அவையை அடுமனையாலும் அறிந்தான் என்கிறார்கள்” என்றார் முகுந்தர்.

பிரதீபர் சினத்துடன் “அடுதொழில் துணைவேதமா?” என்றார். “எந்தக் கலையும் வேதம்துளித்து உருவானதே. எச்செயலும் முழுமையை நோக்கி தவமெனச் செல்லுமென்றால் கலையே” என்றார் முகுந்தர். “இது முதுமையின் மெத்தனம். அதை நிகர்நோக்கும் கனிவு என விளக்கிக் கொள்கிறீர்கள்” என்றபடி எழுந்து சென்றார் பிரதீபர். “நானும் இவ்வாறு எழுந்து சென்றவனே” என்று முகுந்தர் சிரித்துக்கொண்டே சொன்னார்.

அடுமனையாளனாகவும் கொட்டில்சூதனைப்போலவும் மாறிக்கொண்டே சென்ற ரிதுபர்ணன் ஓர் இடத்தில் அதன் எல்லையொன்றைக் கண்டதும் திரும்பி சினந்து பாகுகன்மேல் பாய்ந்தான். அவனை அறைந்தான், வசைபாடினான். அவன்மேல் உமிழ்ந்து எட்டி உதைத்தான். அடுமனையாளரும் சூதரும் அதை எப்போதும் அஞ்சியிருந்தனர். அவ்வச்சத்தாலேயே அவனை அவர்கள் அணுகவில்லை. பாகுகன் அதை ஒரு பொருட்டாகவே எண்ணவில்லை. நாலைந்துநாள் ரிதுபர்ணன் அவனை வெறுத்து ஒதுக்குவான். காணும்போதெல்லாம் இழிவு செய்வான். கட்டு அறுந்து அவன் பாகுகனை தேடிச்சென்று மீண்டும் இணைகையில் அதுவரை நிகழ்ந்த தடமே பாகுகனில் எஞ்சியிருக்காது.

“இவனுடைய இந்த முழுப்பணிவுதான் எனக்குத் தேவையாக இருக்கிறதா? அவ்வாறென்றால் நான் ஆணவம்கொழுத்த கீழ்மகனா?” என்றான் ரிதுபர்ணன். முகுந்தர் “அல்ல, அரசே. நீங்கள் அனைவரையும் அவ்வாறு நடத்துவதில்லை. அவன் உங்கள் மறு எல்லை” என்றார். ரிதுபர்ணன் அவரை களைத்த விழிகளுடன் நோக்கினான். “அரசே, நீங்கள் மரபும் குலமும் நாடும் கொண்டு பிறந்தவர். கோல்கொண்டு அரியணை அமர்ந்து நாடாள்பவர். முழுமையான அரசர். நோக்குக, ஆணெனப் பிறந்த அனைவருமே சற்றேனும் அரசர்கள்தான். பணியாளரிடம், மனைவியிடம், மைந்தரிடம். குறைந்தது எளிய இரவலனிடமோ வளர்ப்புவிலங்குகளிடமோ அவன் சற்று அரசனாகி மீளமுடியும். பாகுகன் முற்றிலும் அரசனல்லன். உங்கள் ஈர்ப்பும் கசப்பும் அதனாலேயே” என்றார் முகுந்தர்.

“இவ்விளக்கங்கள் சலிப்பை அளிக்கின்றன. இது விளக்கப்படாமலேயே இருக்கட்டுமெனத் தோன்றுகிறது”

என்றான் ரிதுபர்ணன். “அப்படியென்றால் நீங்கள் வினவவும்கூடாது” என்றபடி முகுந்தர் எழுந்துகொண்டார். ரிதுபர்ணன் எழுந்து அவருக்கு விடைகொடுக்கையில் “அது அவன் கையின் சமையல். அந்த மணம் பிறிதெவராலும் உருவாக்கப்பட இயலாதது” என்றான். அவரை முற்றிலுமாக மறந்து பீடத்தில் கிடந்த சால்வையை எடுத்தணிந்துகொண்டு நடந்தான். அவர் அவன் செல்வதை புன்னகையுடன் நோக்கி நின்றார்.

ரிதுபர்ணன் புரவிக்களத்திற்குச் சென்றபோது வார்ஷ்ணேயன் புரவியுடன் அவனுக்காக காத்திருந்தான். அவன் சவுக்கை கையில் எடுத்துக்கொண்டு சுற்றிலும் நோக்கி “பாகுகன் எங்கே?” என்றான். “அவனுக்கு இன்று காலைமுதல் காய்ச்சல் கண்டிருக்கிறது. எழ முடியவில்லை. ஜீவலன் உடனிருக்கிறான்” என்றான் வார்ஷ்ணேயன். “மருத்துவர்கள் நோக்கிவிட்டனரா?” என்று ரிதுபர்ணன் கேட்டான். “மருத்துவரிடம் சொல்லவே துருமர் சென்றிருக்கிறார்” என்றான் வார்ஷ்ணேயன்.

இரண்டு சுற்று புரவியோட்டி மீண்டபோது துருமன் வந்திருந்தான். அவன் புரவியிலிருந்து இறங்கும்போதே “ஒன்றுமில்லை, காய்ச்சல்தான். மருத்துவர் வந்துபார்த்து மூலிகைப்பொடி அளித்திருக்கிறார். வாற்றுச்சாறு அடுமனையில் கொதிக்கிறது” என்றான் துருமன். “காய்ச்சலுக்கு என்ன ஏது இருக்கமுடியும்?” என்று ரிதுபர்ணன் கேட்டான். துருமன் சிரித்து “அவனும் மானுடனே என்று காட்டுவதற்காக இருக்கலாம்” என்றான்.

மேலும் புரவி பயில அவனால் இயலவில்லை. அடுமனைக் கொட்டகையில் நார்க்கட்டிலில் கிடந்த பாகுகனை

சென்றுநோக்கினான். விழிகள் சற்று வீங்கியிருந்தன. வாய் உலர்ந்து ஒட்டியிருந்தது. மூச்சில் நெஞ்சுக்குழி பதைத்தது. “நோக்குங்கள்…” என துருமனிடம் ஆணையிட்டுவிட்டு அவன் அரண்மனைக்கு சென்றான்.

அன்று அவையில் அவன் உளம் சொல்கொள்ளவில்லை. தன் அறையில் சென்றமர்ந்து தன்னுடன் பகடையாடினான். ஆட்டம் அகம் புகவில்லை. நிலையழிந்து அறையிலும் இடைநாழியிலும் சோலையிலும் சுற்றிவந்தான். ஏவலனை அனுப்பி காய்ச்சல் எப்படி இருக்கிறது என்று கேட்டுவரச் சொன்னான். “ஒருநாள் ஆகும் என்று மருத்துவர் சொன்னார். மருந்து அளிக்கப்படுகிறது” என்றான் ஏவலன். அன்றிரவு உறங்கப்படுத்தவன் மெல்லிய மயக்கத்திற்குப்பின் எழுந்துகொண்டு மீண்டும் மதுவருந்தினான்.

காலையில் ஒளியுணர்ந்து எழுந்தான். உடனே வாயிற்காவலனை அனுப்பி பாகுகன் எப்படி இருக்கிறான் என்று பார்த்துவரச் சொன்னான். எக்கணமும் பாகுகனே வந்துவிடக்கூடும் என அவன் எதிர்பார்த்தான். ஏவலன் திரும்பி வந்து “காய்ச்சல் அவ்வண்ணமே இருக்கிறது, அரசே. மருத்துவர்கள் வந்திருக்கிறார்கள்” என்றான். காலைப் பூசனைகளும் உணவும் முடிந்ததும் அவன் பாகுகனை பார்க்கச் சென்றான். முந்தையநாள் படுத்திருந்த அதே கோலத்தில் அவன் கிடந்தான். “ஏனென்று தெரியவில்லை, அரசே. மருந்தை உடல் வாங்கிக்கொள்ளவில்லை. கடுமருந்து அளிக்கவிருக்கிறோம்” என்றார் மருத்துவர்.

அவை நிகழ்ச்சிகள் முடிந்தபின் அவன் வந்து பாகுகனின் அருகில் நெடுநேரம் இருந்தான். அன்றிரவும் காய்ச்சல் நீடித்தது. மறுநாள் அவன் அனைத்தும்

நலமடைந்துவிட்டிருக்குமென நம்ப விரும்பினான். உள்ளாழத்தில் அவ்வாறல்ல என்றது ஒரு மெல்லிய குரல். “மருந்துகள் என ஏதும் இனி அளிப்பதற்கில்லை, அரசே. உடல் முடிவெடுக்கக் காத்திருப்பதன்றி வேறுவழியில்லை” என்றார் மருத்துவர்.

“என்ன நோய்?” என்று அவன் கேட்டான். “நம்பமுடியாத அளவுக்கு வாதம் ஏறிநின்றிருக்கும் உடல் அவனுடையது. கபமும் பித்தமும் உடலில் உள்ளனவா என்றே ஐயமெழுவதுண்டு. முதல்முறை இவன் நாடியைப் பற்றியபோது நான் திடுக்கிட்டு எழுந்துவிட்டேன். மானுடவடிவில் எழுந்த ஏதோ காட்டுத்தெய்வமென்றே எண்ணினேன். வாதம் ஏழுமுறை முறுக்கப்பட்ட யாழ்நரம்புபோல் அதிர்ந்தது. இப்போது பித்தம் விழித்துக்கொண்டு பெருகி வாதத்தை எதிர்கொள்கிறது. கபம் தவித்துச் சுழிக்கிறது” என்றார் மருத்துவர்.

“இவ்வுடலில் என்ன நிகழ்கிறதென்று எங்களுக்கு புரியவில்லை. இது உயிர்துறக்க முடிவெடுக்கவில்லை என்று தெரிகிறது. அதுவே ஒரே ஆறுதல்” என்றார் பிறிதொரு மருத்துவர். அவன் “எதையாவது செய்யுங்கள். அயலக மருத்துவர்களுக்கு ஏதேனும் தெரியுமா என அறிந்துவர தூதர்களை அனுப்புங்கள். எத்தனை மருத்துவர்கள் வந்தாலும் நன்றே” என்றான்.

பன்னிரு நாட்கள் பாகுகன் கடும்காய்ச்சலிலேயே இருந்தான். அவனை நோக்கி நிற்கையில் அவன் உடல்வளைவுகள் சற்றே சீரமைவதுபோலத் தோன்றியது. மருத்துவர்கள் நம்பிக்கையிழந்தனர். “அனைத்து வாயில்களையும் மூடிக்கொண்டுவிட்டிருக்கிறது உடல். நாங்கள் தட்டித்தட்டி

தளர்ந்துவிட்டோம்” என்றனர். அயலகத்து மருத்துவர்கள் வந்துகொண்டே இருந்தனர். அவன் உடலைக் கீறி நஞ்சுகளை செலுத்தினர். நாவில் பச்சிலைச்சாற்றைப் பூசினர். மூக்கிலும் பின் வாயிலும் மருந்துகளை செலுத்தினர்.

திரிகர்த்த நாட்டிலிருந்த ஒற்றனாகிய காகளன் அங்கே காளாமுகநெறியினரான மருத்துவர் ஒருவர் இருப்பதாகவும் அவரால் இயலக்கூடும் என்றும் பறவைச்செய்தியனுப்பினான். “அவர் இதற்கு நிகராக நோயுற்றிருந்த சிலரை எழுப்பியிருக்கிறார். அவரிடம் பேசினேன். காளாமுகர்களுக்கு கங்கையின் கரையில் ஒரு காட்டை அளித்து அங்கு பிற நெறியினர் நுழைவதை தடைசெய்தால் வருவதாக சொல்கிறார். அங்கு அவர்கள் கட்டும் ஆலயத்திற்கும் அவர்கள் அங்காற்றும் வழிபடுநெறிகளுக்கும் அயோத்தி காவலாகவேண்டும் என்கிறார்” என்றான். “அவ்வாறே ஆணை. அவர் வரட்டும்” என்றான் ரிதுபர்ணன்.

மேலும் பதினெட்டு நாட்களுக்குப்பின் வந்துசேர்ந்த காளாமுகர் இடைவரை விழுந்தலைந்த நீண்ட சடைத்திரிகளும் எரிவிழிகளும் கொண்டிருந்தார். புலித்தோலாடை அணிந்து உடலெங்கும் வெண்ணீறு பூசி நெற்றியில் மூவிழி வரைந்திருந்தார். இரு கைகளிலும் மணிகள் கட்டிய நீண்ட முப்புரிவேலும் மண்டையோட்டு இரவுக்கலமுமாக வந்து அரண்மனை முற்றத்தில் நின்றார். அவரை அழைத்துவந்த ஒற்றன் “அவர் கூரைகளுக்குக் கீழே நுழைவதில்லை. மண்ணிலன்றி படுப்பதில்லை” என்றான். பிரதீபர் பதற்றத்துடன் ஓடிச்சென்று முகுந்தரிடம் சொல்ல அவர் கைகூப்பியபடி வந்தார். சுடலையரின் காலடிகளைத் தொட்டு சென்னிசூடி

“தங்கள் கால்களால் ராமனின் நகர் தூய்மையுறட்டும், சிவனே” என்றார்.

அவர் பாகுகனை நாடி நோக்கிக்கொண்டிருந்தபோது ரிதுபர்ணன் வந்தான். அவர் நோக்கி முடித்து எழுந்துகொண்டு “மூன்று நாட்களில் எழுவான்” என்றார். “என்ன நோய் என்று தெரியவில்லை என்றார்கள்” என்றான் ரிதுபர்ணன். காளாமுகர் “நாகநஞ்சு உடலில் ஏறியிருக்கிறது. அதை உடல் எதிர்கொள்கிறது” என்றார். “நஞ்சுண்டனின் மருத்துவம் எங்களுடையது. விரைவில் இவன் அதை கடக்கச்செய்வேன். என் கோரிக்கைகளை நிறைவேற்றுக!” ரிதுபர்ணன் தலைவணங்கி “அது என் சொல்” என்றான்.

காளாமுகரின் மருத்துவம் என்னவென்று பிற மருத்துவர்களால் கண்டடைய முடியவில்லை. அவை பெரும்பாலும் உலர்மூலிகைகள், வேர்கள், பூஞ்சைப்பொடிகள். அரிதாக சில வேதிப்பொருட்கள். முன்னிரவில் காட்டுக்குள் சென்று சில மருந்துகளை கொண்டுவந்தார். அவற்றை தீயிலிட்டு புகைஎழுப்பி பாகுகன் முகரச்செய்தார். அவன் அதில் மயங்கி ஆழ்மூச்சிழுக்கத் தொடங்கியபின் அவன் இடக்கையைப் பற்றியபடி அருகே அமர்ந்து அவனிடம் மெல்லிய குரலில் பேசிக்கொண்டிருந்தார். அவர் சொல்வன எதையும் அவன் கேட்டதாகத் தெரியவில்லை. அப்பாலுள்ள அறைகளில் இரவுறங்கியவர்கள் விழிக்கும்போதெல்லாம் அவர் சொல்லிக்கொண்டிருந்த ஒலியை கேட்டனர். தவளைக்குழறல்போல அவர் ஒரே சொல்லையே சொல்லிக் கொண்டிருப்பதாகத் தோன்றியது. புலரியில் அவர் கிளம்பிச்சென்று மீண்டும் இரவில் திரும்பிவந்தார்.

ஏழு நாட்களுக்குப் பின் பாகுகன் கண்விழித்தான். சிவந்த கண்கள் கலங்கி நீர்வழிய உதடுகள் பொருளில்லாமல் ஏதோ சொல்லை கூறிக்கொண்டிருக்க அவன் இரு கைகளையும் விரித்து வானிலிருந்து விழுந்தவன்போல படுத்திருந்தான். அவன் விழித்துக்கொண்ட செய்தியைக் கேட்டு ஓடிவந்த ரிதுபர்ணன் அவன் தன்னை அடையாளம் காணவில்லை என்பதைக் கண்டு திகைத்தான். அவனுடைய முகமும் உடலும் அவற்றுள்ளிருந்த சிறுவனை களைந்துவிட்டிருந்தன. அவன் சொல்லிக்கொண்டிருப்பதென்ன என உதடுகளைக்கொண்டு உய்த்தறிய ரிதுபர்ணன் முயன்றான். அது ஒரு பெயரோ எனத் தோன்றியது.

மேலும் இரண்டு நாட்களில் அவன் எழுந்தமர்ந்தான். இன்னொருநாள் கடந்தபோது பழைய பாகுகன் திரும்பிவந்தான். ஆனால் அவன் துள்ளலிலும் சிரிப்பிலும் ஏதோ ஒன்று குறைவதாக ரிதுபர்ணன் எண்ணினான். அவ்வெண்ணம் ஓரிரு நாட்களிலேயே மறைய அனைத்தும் முன்பிருந்ததுபோல் ஆயின. அவன் பாகுகனுடன் புரவியாடவும் அடுமனைகூடவும் தொடங்கினான். அவன் நோயுற்றிருந்த நாட்களில் தான் எண்ணி அஞ்சியது எதை என அவன் ஒருமுறை நினைவுதுழாவினான். அரிதெனக் கிடைத்த ஒன்றை இழப்பதைப்பற்றி மட்டுமே அவன் எண்ணியதாகத் தோன்றியது.

அரசனின் ஆணைப்படி கங்கைக்கரையிலிருந்த மோதவனம் என்னும் காடு காளாமுகர்களுக்கு அளிக்கப்பட்டது. கங்கை வழியாக ஒவ்வொருநாளும் அங்கே காளாமுகர்கள் வரலானார்கள். அங்கே ஆவுடை அற்ற சிவக்குறி ஆளுயரத் தூண்வடிவில் நிறுவப்பட்டுள்ளது என்றும் ஒவ்வொருநாளும் அங்கே பலிபூசனை நிகழ்வதாகவும் ஒற்றர்கள் சொன்னார்கள்.

தலைக்கொடைப் பூசனையும் நிகழ்வதாகச் சொன்ன ஒற்றன் "தலைகொடுப்பதற்கென்றே நோன்புநோற்று காந்தள் மாலைசூடி வந்துசேர்கிறார்கள் கருமையெதிர்வோர்" என்றான்.

மூன்று மாதங்களுக்குப்பின் அவன் கங்கைக்கரையில் வேட்டைக்குச் சென்றிருக்கையில் அங்கே தன் மாணவர்களுடன் அமர்ந்திருந்த காளாமுகரை கண்டான். சென்று அவர் கால்தொட்டு வணங்கினான். அவனை சிதைச்சாம்பலிட்டு வாழ்த்திய அவர் "நஞ்சுகொண்டோன் எவ்வண்ணம் இருக்கிறான்?" என்றார். "முன்பிருந்ததுபோலவே" என்றான் ரிதுபர்ணன். அவர் புன்னகைத்து "மாற்றுரு கொண்டவர் அதைத் துறப்பதற்குத் தயங்குவர்" என்றார். "ஏனென்றால் துறக்கையில் அவர்கள் ஒரு வாழ்க்கையை இழக்கிறார்கள்."

"மாற்றுருவா?" என்றான் ரிதுபர்ணன். "ஆம், அவன் உடல் நாகநஞ்சால் அவ்வண்ணம் ஆகியிருக்கிறது. அந்த நஞ்சை முற்றிலும் நீக்கும் மருந்தை அவனிடம் அளித்தேன். சிறுபளிங்குச் சிமிழிலிருக்கும் அது தசபாஷாணம். அவனை நாற்பத்தொரு நாட்களில் முன்பிருந்த வடிவில் ஆக்கும்" என்றார் காளாமுகர். "அவன் அதை உண்ணவில்லையா?" என்று ரிதுபர்ணன் கேட்டான். "அது தனக்கு வேண்டாம் என்றும் இன்றிருக்கும் உருவும் இயல்புமே தனக்கு இனியவை என்றும் சொன்னான்" என்றார் அவர்.

"அவன் முன்செல்ல அஞ்சி நின்றுசுழலும் ஓடைபோல. அவன் உடலில் இருக்கும் குறுகலும் வளைவும் அதனாலேயே. முடிவின்றிச் சுழிக்க இயலும், மண்துளைத்து பாதாளங்களுக்குச் செல்லமுடியும். என்றால், இவன் யோகி அல்ல" என்றார் காளாமுகர். ரிதுபர்ணன் "இன்று அவன் எளிய விலங்கென்றும்

அறியாச் சிறுவனென்றும் இருக்கிறான்” என்றான். “ஆம், நான் அவனிடம் சொன்னேன். எப்போது அதன் எல்லையை காண்கிறானோ அப்போது அந்த மருந்தை உண்ணுக என்று அளித்தேன்.”

ரிதுபர்ணன் சற்றுநேரம் அத்தருணத்தை தன் எண்ணத்தில் ஓட்டிவிட்டு “அவன் உங்களிடம் என்ன சொன்னான்?” என்றான். காளாமுகர் நகைத்து “அன்றன்று இருத்தல் என்பதற்கப்பால் வாழ்வதற்கென ஏதேனும் பொருள் இருக்க இயலுமா என்றான். இறப்பை அணுகுதல் என்றல்லாமல் இளமை முதிர்வதற்கு என்ன இலக்கு என்றான். நான் அவனிடம் உனக்கான விடையை நீ கண்டடைக. அத்தருணம் அமைக என வாழ்த்தி விடைகொண்டேன்” என்றார்.

ரிதுபர்ணன் பெருமூச்சுடன் எழுந்துகொண்டான். “விந்தை! அவன் எதை கண்டடையக்கூடும்?” என்றான். காளாமுகர் மீண்டும் உரக்க நகைத்தார்.

ஆபர் எழுந்துகொண்டு வணங்கி “நளமகாசயப் பிரபாவம் என்னும் நூலில் உள்ள செய்தி இது. இக்கதைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு கோணத்தில் திறந்துகொள்பவை” என்றார். “ஆம், ஆகவேதான் இக்கதைகளை நான் மீளமீளக் கேட்கிறேன்” என்று குங்கன் சொன்னான். “ஒருமுறை சொல்லப்பட்ட கதை மீண்டும் வருவதில்லை.” ஆபர் “சொல்பவர் எவர், அவருடைய மரபு எது என்பதே கதையை அமைக்கிறது” என்றார்.

விராடர் “கார்க்கோடகனால் நஞ்சூட்டப்பட்ட நளன் உருக்குறைகொண்டு பாகுகன் என்ற பேரில் ஆண்டுக்கு நூறு பொன் பெற்றுக்கொண்டு ரிதுபர்ணனின் அரண்மனைக்

கொட்டிலில் புரவிப்பேணுநனாகவும் அடுமனையாளனாகவும் சேர்ந்தார் என்றுதான் நான் கேட்டிருக்கிறேன்” என்றார். “அங்கு அவர் எவரிடமும் விழிகொடுத்து உரையாடவில்லை. விழிதாழ்த்தி நிலம்நோக்கியபடி எப்போதும் தனியாக அமர்ந்திருந்தார். தனித்து இருள்மூலைகளில் துயின்றார். கொட்டிலில் புரவிகளுடன் மட்டும் தாழ்ந்த குரலில் பேசிக்கொண்டிருந்தார். அடுமனையில் விழிசரித்து அடுப்பில் கொழுந்தாடும் அனலையே நோக்கிக்கொண்டிருந்தார்.”

ஆபர் “ஆம், அதுவே பொதுவாகப் பேசப்படும் கதை” என்றார். விராடர் “அவர் உடல் பலமடங்கு எடைகொண்டுவிட்டதைப் போலிருந்தது என்பார்கள். அது அவர் உடலில் நிழலெனக் கூடியிருந்த கலியின் எடை. அவர் நடந்த இடத்தில் காலடித் தடங்கள் ஆழ்ந்திறங்கியிருந்தன. அவர் ஒருமுறை இரும்புக் கலமொன்றை உதைத்தபோது அது நசுங்கியது. புரவிப்பயிற்றுநன் ஆயினும் அவர் புரவியூர்வதே இல்லை. அவர் உடலெடையை அவற்றால் தாளமுடியாது” என்றார். ஆபர் நகைத்து “ஆம், அவர் உடலில் இருந்து எழுந்த நிழல் தனியசைவுகள் கொண்டிருந்தது. அவர் துயில்கையில் அவர் உடலில் இருந்து எழுந்து வளர்ந்து கூரைமேல் படர்ந்து கரிய ஆலமரமென விழுதுபரப்பி விண்தூடி நின்றிருந்தது என்கின்றன அக்கதைகள்” என்றார்.

“அவர் எச்சொற்களையும் செவிகொள்வதில்லை என்றாலும் விதர்ப்பநாட்டு இளவரசி தமயந்தியைப்பற்றிய செய்திகள் பேசப்படும்போது மட்டும் அவர் உடலசைவுகள் மாறுபடுவதை அவர்கள் கண்டடைந்தனர். அவர் கையில் சட்டுவம் விரைவழியும். கலம் ஒலியெழுப்பும். பெருமூச்சுடன் அவர் அங்கிருந்து விலகிச்செல்வார். தேடிச்சென்றால் தன்

வழக்கமான அறைமூலையில் இருளில் முழங்கால்களில் முகம் பதித்து அவர் அமர்ந்திருப்பதைக் காணமுடியும்” என விராடர் குங்கனிடம் சொன்னார்.

கதை அவர் முகத்தை மலரச் செய்தது. ஆர்வத்துடன் எழுந்து “அவர் எப்போதும் உதடுகள் மட்டும் அசைய ஒரு சொற்றொடரை சொல்லிக்கொண்டிருப்பதை அவர் தோழர்களான வார்ஷ்ணேயனும் ஜீவலனும் கண்டனர். அது என்ன என்று அறிய அவர்கள் முயன்றனர். அவரை அணுகுவதே கடினமாக இருந்தது” என்றார். “ஒருநாள் அயலகச்சூதன் ஒருவன் உணவுக்கூடத்தில் பேசுகையில் விதர்ப்பநாட்டு தமயந்தியை காட்டில் இருந்து பாஸ்கரரின் மாணவர் பரர் அழைத்து வந்ததைப்பற்றி சொல்லிக்கொண்டிருந்தான். அன்றுதான் பாகுகன் உளமுடைந்து அழுததை அவர்கள் கண்டார்கள். ”

“தமயந்தி காட்டில் வழிதவறி சித்தம்சிதைந்து அழுதுகொண்டும் சிரித்துக்கொண்டும் இருந்தார். தன்னை நாகங்கள் வழிதவறச் செய்வதாகச் சொன்னார். பாஸ்கரர் அவரை தன் தவச்சாலையில் தங்கவைத்தார். சில நாட்களில் அவர் சித்தம் தெளிந்து புன்னகைக்கத் தொடங்கினார். பாஸ்கரரிடம் மட்டும் தான் யார் என்று அவர் சொன்னார். அவரை அவர் கலிங்க வணிகர் பூமிகரிடம் ஒப்படைத்து விதர்ப்பத்திற்கு அனுப்பிவைத்தார். ஆனால் செல்லும் வழியிலேயே யானைக்கூட்டம் ஒன்றால் அந்த வணிகக்குழு சூறையாடப்பட்டது. அதிலிருந்த எவரும் எஞ்சவில்லை. நாய்கள் உண்ட வெள்ளெலும்பு மிச்சத்தையே காவலர் கண்டடைந்தனர்.”

“தமயந்தியும் அவ்வெலும்புகளில் ஒன்றெனக் கிடந்தார். பாஸ்கரர் தன் மாணவர் பரரை அனுப்பி அவருக்கு மட்டும் அருகிருந்த ஓடையில் நீர்க்கடன் செய்து விண்ணேற்றும்படி ஆணையிட்டார்” என்றார் விராடர். “அன்றிரவு அடுமனையாளர் மெல்லிய குரலில் எழுந்த ஒரு பாடலைக் கேட்டனர். அவர்கள் வெளியே சென்று நோக்கியபோது நிழல்களாடிய முற்றத்தில் இருளில் மறைந்தவனாக அமர்ந்து பாகுகன் பாடிக்கொண்டிருந்தான். அந்தப் பாடலை இளமையில் நான் பாடுவதுண்டு.”

விராடர் தலையைத் தட்டி நினைவுகூர முயன்றபின் சிரித்து “மறந்துவிட்டேன். கலியின் ஆற்றலைப்பற்றிய பாடல் அது” என்றார். ஆபர் “இக்கதை கலிதேவமகாத்மியம் என்னும் குறுங்காவியத்தில் இருந்து செவித்தொடராக மாறி நம் குடிகளிடம் வாழ்கிறது. அனைத்தும் கலியாலேயே என்பது அதன் விளக்கம்” என்றார். “அந்தக் கதை சொல்வது இதுதான். பெண்டிர் நீராடும்போதும் தனியறையில் ஆடைமாற்றும்போதும் கணவரே ஆனாலும் ஆண்கள் அவர்களை நோக்கக் கூடாது. நளன் காமமிகுதியால் ஒருநாள் தமயந்தி ஆடைமாற்றும்போது சாளரவிரிசலினூடாக பார்த்தார். பகலில் காகங்களாகவும் இரவில் வௌவால்களாகவும் வானில் பறந்துகொண்டிருக்கும் கலி அப்போது அவரை பார்த்தான். அவருடன் நிழலென சேர்ந்துகொண்டான்.”

“தமயந்தியின் அறைக்குள் நளன் பார்த்த காட்சி அவளுடையதல்ல, கலியால் காட்டப்பட்டது. அந்தக் கணத்தில் இருந்து ஏழரை ஆண்டுகள் கலி அவருடன் வாழ்ந்தது” என்றார் ஆபர். விராடர் “ஏழரை ஆண்டுகளில் கலி நீங்க முகிலில் இருந்து கதிரவன் என அவர் மீண்டார்” என்றார். ஆபர்

எழுந்துகொண்டு “ஆனால் கதைகள் ஒன்றுக்கொன்று பின்னிக்கொள்கின்றன. நளமகாசயப் பிரபாவத்தில் நளன் தன் கனவுகளில் எடைமிக்க தனித்த துயருற்ற மனிதனாக இருக்கிறார்” என்றார்.

குங்கன் நகைத்து “கலிமகாத்மியத்தில் அவர் தன் கனவில் எடையற்ற தும்பியென பறந்தலைந்திருக்கலாம்” என்றான். ஆபர் உடன் நகைக்க இருவரையும் மாறிமாறி நோக்கினார். “வருகிறேன், அரசே” என்று ஆபர் விடைகொண்டார்.

# நீர்க்கோலம் - 81

### 80. உள்ளொலிகள்

✿உத்தரை அவ்வேளையில் அங்கு வருவாள் என்று முக்தன் எதிர்பார்க்கவில்லை. பிருகந்நளையின் குடில் வாயிலில் மரநிழலில் இடைக்குக் குறுக்காக வேலை வைத்துக்கொண்டு கையை தலைக்குமேல் கட்டி வானை நோக்கியபடி விழியுளம் மயங்கிக்கொண்டிருந்தான். அவள் வரும் ஓசையைக் கேட்டு இயல்பாக தலை திருப்பி நோக்கியவன் இளவரசி என அடையாளம் கண்டதும் திடுக்கிட்டு எழுந்து நின்றான். வேல் அவன் உடலிலிருந்து உருண்டு கீழே விழுந்தது.

உத்தரை அருகே வந்து “ஆசிரியர் உள்ளே இருக்கிறாரா?” என்றாள். “ஆம், இளவரசி. ஓய்வெடுக்கிறார்” என்று முக்தன் சொன்னான். குனிந்து வேலை எடுக்க வேண்டுமா என்ற எண்ணம் வந்து அதைத் தவிர்த்து அக்குழப்பம் உடலில் ஒரு சிறு தத்தளிப்பாக வெளிப்பட “ஓய்வெடுக்கையில் அவர் எவரையும் பார்க்க ஒப்புவதில்லை” என்றான். “நான்

வந்திருப்பதாக சென்று சொல்லுங்கள்” என்று சொன்னாள் உத்தரை. “அவர் பொதுவாக...” என்று முக்தன் சொல்லத்தொடங்கவும் கைகாட்டி “செல்க!” என்று கூர்கொண்ட விழிகளுடன் அவள் சொன்னாள்.

அவன் பணிந்து “இதோ” என்று குடிலின் படிகளில் ஏறி மூடியிருந்த மரக்கதவை மும்முறை தட்டி “ஆசிரியரே!” என்று அழைத்தான். இரண்டு முறை அழைத்த பின்னர்தான் உள்ளே ஒலி கேட்டது. “யார்?” என்று பிருகந்நளை கேட்டாள். “இளவரசி தங்களை பார்க்கும்பொருட்டு வந்திருக்கிறார்” என்றான். எப்போதுமே பிருகந்நளை கதவைத் திறக்க நெடுநேரம் எடுத்துக்கொள்வதுண்டு. அப்போது மறுமொழிக்கே அவன் காத்து நிற்கவேண்டியிருந்தது. “நான் ஆடை மாற்றிக்கொள்கிறேன். அதன் பிறகு உள்ளே அனுப்புக” என்றாள். “ஆணை” என்று தலைவணங்கியபின் வெளிவந்து “ஆடை மாற்றிக்கொள்கிறார். சற்று பொறுங்கள்” என்று முக்தன் சொன்னான்.

அவள் சற்று அப்பால் மரநிழலில் மார்பில் கைகளைக் கட்டியபடி நின்றாள். அவள் முகத்தை ஓரவிழியால் பார்த்தபோது அதில் கவலையும் பதற்றமும் தெரிவதைக் கண்டான். அவள் எதையோ முறையிடும்பொருட்டு வந்திருக்கிறாள் என்று தோன்றியது. அது என்னவாக இருக்கும் என்று எண்ணினான். வெறும் காவலனாக அவன் அதை எண்ணக்கூடாது என்பதே படைப் பயிற்றுவிப்பில் அவன் கற்றது. ஆனால் எண்ணாமலிருக்கவும் கூடவில்லை. ஏனெனில் அவள் அவனுக்கு இளவரசியல்ல. பிறிதொருத்தி. அவ்வெண்ணம் அவனை திடுக்கிடச் செய்தது.

அவளுக்கும் தனக்குமான உறவு எத்தகையது என்று அவனால் கணிக்க முடியவில்லை. ஒவ்வொரு நாளும் அவள் பிருகந்நளையிடம் நடனம் கற்றுக்கொள்கையில் கூடத்திற்கு வெளியே அவன் காவல் நின்றிருப்பான். அவனைக் கடந்துதான் அவள் நடனக்கூடத்திற்கு செல்வாள். தொலைவிலேயே அவனை அவள் பார்த்துவிடுவாள் என்று அவனுக்குத் தெரியும். அவனைக் கண்ட முதற்கணமே அவள் உடல் மாறுபடும். மிடுக்குடன் தலைதூக்கி கைகளை சற்று மிகையாகவே வீசி இடையை நெளித்து நடந்து வருவாள். குரல் மிகுந்து ஒலிக்கும்.

பெரும்பாலும் அவ்வாறு மிகையொலி கொண்ட குரல் கேட்டுதான் அவன் அவளை பார்ப்பான். அருகணைந்ததும் தலைவணங்கி முகமன் உரைப்பான். ஒருமுறைகூட அவள் அவனை நோக்கி திரும்பியதோ அவன் உரைக்கும் முகமனுக்கு மறுமொழி சொன்னதோ எதிர்வினை காட்டியதோ இல்லை. ஓரிரு நாட்களுக்குள் அவன் புரிந்துகொண்டான், அவள் தன்னை வேண்டுமென்றே தவிர்க்கிறாள் என்று. அது இளவரசி எளிய காவலன்மேல் கொண்டுள்ள புறக்கணிப்பு அல்ல என்று அவனுக்குத் தெரிந்திருந்தது.

அதை நோக்கி செல்வதைத் தவிர்த்து மேலும் பணிவு கொண்டவனாக தன்னை காட்டிக்கொண்டான். அவளைக் காணும்போதெல்லாம் பதற்றத்துடன் எழுந்து இடைவரை வணங்கி உரத்த குரலில் முகமன் உரைத்தான். சில தருணங்களில் அது அவளுடன் வந்த தோழியருக்கு நகைப்பூட்டுவதாகவும் இருந்தது. அவள் உள்ளே சென்று பிருகந்நளையிடம் பேசும்போது மட்டும் குரல் மிகத் தாழ்ந்து ஒரு சொல்லும் புரியாதபடி மாறும். அத்தனை சிலம்பல்களில்

அவள் கால் சதங்கையை மட்டும் அவன் தனித்தறிவான். அவ்வோசையிலிருந்தே உள்ளே அவள் என்ன செய்கிறாள் என்பதை அவனால் பார்க்க முடியும்.

நெடுநேரம் சலங்கையொலி கேட்காதிருக்கையில் அந்த ஒலியின்மையை ஒவ்வொரு கணமாக கேட்டபடி செவிகளே உடலாக அவன் அமர்ந்திருப்பான். பின்னர் உரக்க நகைத்தபடி கைவளைகளும் சதங்கைகளும் குலுங்க அவள் வெளியே செல்வாள். அவன் தலைவணங்குவதை கிளையசைவோ நிழலாட்டமோ என கடந்துசென்று இடைநாழியின் முனையில் வண்ணம் கரைந்தழிவதுபோல் மறைவாள். அதன் பின் அவன் நிமிர்கையில் எரிச்சலும் கசப்பும் உருவாகும்.

பிருகந்நளைக்கும் உத்தரைக்குமான உறவைப்பற்றி அவள் சேடியர் என்ன சொல்லிக்கொள்கிறார்களென்று உதிரிச் சொற்களினூடாகவே அவன் அறிந்திருந்தான். “மெல்ல இளவரசி ஆணாக வேண்டியதுதான். இருவரும் ஏதோ ஒரு புள்ளியில் சந்தித்துக்கொள்ள முடியும்” என்றொருத்தி சொன்னாள். பிறர் சிரிக்க அவன் விழிகளை விலக்கி உடலை இறுக்கிக்கொண்டு நின்றான். அவர்கள் தாழ்ந்த குரலில் தங்களுக்குள் பேசி கிளுகிளுத்துச் சிரித்தனர். ஒருத்தி மேலும் தாழ்ந்த குரலில் ஏதோ சொல்ல அனைவரும் பேரொலியுடன் வெடித்துச் சிரித்து கண்ணீர் மல்க உடல் துவண்டனர். இருவர் எழுந்து வயிற்றைப் பற்றியபடி அப்பால் ஓடினர். அங்கு நின்றிருக்க முடியாமல் அவன் மெல்ல விலகிக்கொண்டான்.

கதவு திறந்து பிருகந்நளை வெளியே வந்து “வருக, இளவரசி!” என்றாள். இளவரசி அவளை நோக்கி சென்று “தங்களை தனியாக சந்திப்பதற்காக வந்தேன், ஆசிரியரே” என்றாள். பிருகந்நளை சுற்றும் நோக்க “சேடியருக்குத் தெரியாது”

என்றாள் உத்தரை. “வருக!” என்று உத்தரையை பிருகந்நளை உள்ளே அழைத்துச் சென்றாள். முக்தனிடம் “இளவரசி அருந்துவதற்கு குளிர்நீர்” என்றாள். “வேண்டியதில்லை” என்று உத்தரை சொன்னாள். “என் குடிலுக்கு முதல் முறையாக வந்திருக்கிறீர்கள்” என்றாள். “வருக!”

இருவரும் உள்ளே சென்று அமர்வதை திறந்த வாயிலினூடாக முக்தன் பார்த்தான். பிருகந்நளை சுவரோரமாக மரத்தாலான மணையில் ஒரு காலை கிடைமடித்து இன்னொரு காலை நிலைமடித்து அதன் மேல் கைகளை வைத்துக்கொண்டு அமர்ந்தாள். அவளுக்கெதிராக இரு கால் மடித்து அமர்ந்து மடியில் கைகளை வைத்துக்கொண்டு தாழ்ந்த குரலில் பேசத்தொடங்கினாள் உத்தரை. முகமனோ தயக்கமோ இல்லை. அவள் அச்சொற்களை நீரை கைகளில் அள்ளிக்கொண்டுவருவதுபோல கொணர்ந்திருக்கவேண்டும்.

பிருகந்நளைக்கு உணவு சமைக்கும் சிறுகுடில் அதே சோலையில் சற்று அப்பால் இருந்தது. அங்கு சென்று குளிர்நீரும் பாக்கும் ஒரு தட்டில் வைத்து எடுத்துக்கொண்டு முக்தன் திரும்பி வந்தான். அவற்றை அவர்கள் இருவருக்கும் நடுவே வைத்தான். அதுவரை பேசிக்கொண்டிருந்த உத்தரை இறுதியாகச் சொன்ன சொல் கண்களிலும் முகத்திலும் உறைந்து நின்றிருக்க அவனை பார்த்தாள். அவள் கண்கள் சற்று கலங்கியிருப்பதுபோல முக்தனுக்குத் தோன்றியது. பிருகந்நளையின் முகத்தில் எந்த மாறுதலும் தெரியவில்லை.

தலைவணங்கி அவன் வாயிலை நோக்கி செல்ல பிருகந்நளை “இளவரசியின் மணத்தன்னேற்புக்கு நாள் குறிக்கப்போவதாக கேள்விப்பட்டேன்” என்றாள். முக்தன் அவர்கள் இருவர் முகத்தையும் மாறி மாறி நோக்கியபின் “ஆம், அது நகரில்

அனைவரும் அறிந்ததே” என்றான். “இளவேனில் தொடக்கத்தில் அல்லவா?” என்றாள் பிருகந்நளை. “ஆம், ஆசிரியரே” என்றான் முக்தன். அதை ஏன் அவர்கள் தன்னிடம் சொல்கிறார்கள் என்று அவனுக்குப் புரியவில்லை. எதன்பொருட்டு தன்னை உள்ளிழுக்க முயல்கிறார்கள்?

“மணத்தன்னேற்பு நன்று. அது எவ்வகையிலோ அவ்விளவரசியை முதன்மைப்படுத்துகிறது. அவளை பாரதவர்ஷம் திரும்பி நோக்குகிறது. பேரரசியென்று அவள் கொழுநன் நகர்புகுவாள். அரியணை சிறக்கவும் புகழ் நிலைக்கவும் மணத்தன்னேற்பு ஒரு நல்ல தொடக்கம். பாரதவர்ஷத்தில் அத்தனை பேரரசியரும் மணத்தன்னேற்பினூடாகவே அறியப்பட்டார்கள். தமயந்தியும்கூட” என்றாள் பிருகந்நளை. “ஆம், ஆசிரியரே” என்று முக்தன் சொன்னான். அப்போதும் அவ்வுரையாடல் எதற்காக என்று அவனுக்கு புரியவில்லை. உத்தரை எதுவுமே சொல்லவில்லை.

முக்தன் அங்கு நின்றிருப்பதா விலகிச் செல்வதா என்று அறியாமல் உடல் திகைத்தான். பிருகந்நளை “எப்படியென்றாலும் பெண் தன்னை உடலென முன்வைத்தே ஆகவேண்டும். அவள் உடல் அதன்பொருட்டே மலர்வு கொண்டுள்ளது. வெறும் உடலாக முன்வைப்பதுதான் பிற குடிகளின் வழக்கம். கொடியும் முடியும் அகம்படியுமாக அவற்றைச் சூடிய ஆணவமுமாக தன்னை முன்வைப்பதென்பது ஓர் அருங்கொடை” என்றாள் பிருகந்நளை.

எதிர்பாராதபடி உத்தரை உரத்த குரலில் அவனிடம் “இங்கென்ன செய்கிறாய்? வெளியே போ!” என்றாள். அந்தக் கடுங்குரல் அவனை திகைக்க வைத்தது. “பொறுத்தருள்க, இளவரசி” என்று

அவன் சொன்னான். “வெளியே போ” என்று அவள் கைநீட்டி மூச்சிரைக்க கூவினாள். “இதோ” என்று அவன் தலைவணங்கி புறங்காட்டாது வெளியே சென்றான். “கதவை மூடு!” என்று அவள் ஆணையிட்டாள். அவன் கதவை மூடிவிட்டு வெளியே நின்று கொண்டான்.

உள்ளே அவர்கள் என்ன பேசிக்கொள்கிறார்கள் என்பதை செவி கொடுத்து உளம் ஏற்றக்கூடாது என்று முடிவெடுத்தான். மரத்தடியில் நின்றபோது மெல்லிய குரல் கேட்டது. அழுகையோ மன்றாட்டோ என உத்தரை பேசிக்கொண்டிருந்தாள். அவன் மேலும் நடந்து மகிழ மரத்தடியில் சென்று நின்றான். அங்கு முற்றிலும் குரல் கேட்கவில்லை. ஆயினும் கேளாக் குரலை உள்ளம் நடித்துக்கொண்டிருந்தது. கண் மூடினாலும் எஞ்சும் விழித்தோற்றம்போல. அவன் தன் வேலை மடியில் வைத்து மகிழ மரத்தடியில் அமர்ந்தான். அங்கு வெயில் அவன் கால்களில் விழுந்து வெம்மை காட்டியது.

எண்ணியிராதபடி குடிலுக்குள் உரத்த குரலில் உத்தரை “இறப்பதொன்றே வழி” என்று கூவுவதை கேட்டான். மீண்டும் தாழ்ந்த குரலில் அவர்கள் பேசிக்கொள்ள உத்தரை மீண்டும் உரத்த குரலில் “நான் இறந்தேன் என்றால் என்ன செய்வீர்கள்? நான் கேட்பது அதுதான். என் இறப்பை ஒரு பொருட்டாகக் கருதுவீர்களா?” என்றாள். முக்தன் மூடிய கதவையே பார்த்துக்கொண்டு நின்றான். அந்தக் கதவு அழுகையை அடக்க முயலும் இதழ்போல விம்முவதாகத் தோன்றியது. நீர் நிறைந்த ஏரியின் மதகுபோல உள்ளிருந்து அழுத்தம் அதை முட்டியது.

அவன் ஒவ்வொரு கணமாக கடந்து சென்றான். தன் உடலில் அனைத்து தசைகளும் இறுகி நின்றிருப்பதை உணர்ந்தான்.

பின்னர் கதவு வெடிப்போசையுடன் திறந்து சுவரில் அறைந்தது. உத்தரை வெளியே வந்து படிகளில் இறங்கி ஓடி அவனை நோக்கி வந்தாள். அவன் தலைவணங்குவதை நோக்காமல் அவனைக் கடந்து அரண்மனையை நோக்கி ஓடினாள்.

பிருகந்நளை குடிலிலிருந்து வெளியே வந்து மரப்படிகளில் கைகளைக் கட்டியபடி நின்றாள். இளங்காற்றில் அவள் ஆடை தழலென உலைந்தாடிக் கொண்டிருந்தது. முக்தன் பிருகந்நளையை நோக்கி சென்று தலைவணங்கி நின்றான். அவனை சில கணங்கள் கூர்ந்து நோக்கியபின் "அரண்மனைக்கு செல்க! இளவரசியின் தோழியரிடம் அவள் எங்கும் தனியாகச் செல்லவேண்டியதில்லை என்று நான் ஆணையிட்டதாகக் கூறுக!" என்றாள். முக்தன் "ஆணை" என்று தலைவணங்கினான். "நீரும் இங்கிருக்க வேண்டியதில்லை. இளவரசி மாளிகைக்கு அருகிலேயே இரும்" என்றாள். "ஆனால் என் பணி..." என்று அவன் சொல்ல "இதுவும் என் ஆணை என்று சொல்க!" என்றாள் பிருகந்நளை. தலைவணங்கி "அவ்வாறே" என்றான் முக்தன்.

✿முக்தன் உத்தரையின் அரண்மனை அகத்தளத்தின் புறவாயிலில் வேலுடன் நின்றிருந்தான். அங்கு முன்னரே நின்றிருந்த நான்கு காவல் வீரர்களும் அவன் யாரென்றே அறியாதவர்கள்போல் இருந்தனர். முதல் நாள் அங்கு அவன் வந்தபோது அவனை அங்கு நிற்க ஒப்பவில்லை. "இளவரசியுடன் நான் இருக்க வேண்டுமென்பது ஆசிரியரின் ஆணை" என்று அவன் சொன்னான். "எங்களுக்கு அரசகுலத்தாரன்றி பிறர் ஆணை பிறப்பிக்க முடியாது" என்றார்கள்.

அவர்களுடன் நிற்காமல் பெருந்தூண் அருகே பாதி உடல் மறைத்து நின்றிருந்தான். நீராட்டறைக்குச் செல்வதற்காக தோழியருடன் இளவரசி வந்தபோது அவன் தலைவணங்கி அவர்களுக்குப் பின்னால் சென்றான். அவள் நின்று திரும்பி அவனை நோக்கி புருவங்களை தூக்கினாள். "தங்களுடன் நானிருக்க வேண்டுமென்பது ஆசிரியரின் ஆணை, இளவரசி" என்றான். அவள் ஒன்றும் சொல்லாமல் திரும்பிக்கொண்டாள்.

அதையே ஆணை என்று எடுத்து அவன் அவளை தொடர்ந்து சென்றான். அவள் நீராட்டறைக்குள் சென்ற பின்னர் இடைநாழியில் வேலுடன் நின்றான். மீண்டும் அவளுடன் திரும்பி வருகையில் வாயிற்காவலர் அவனை நோக்கிய விழிகள் மாறியிருந்தன. இளவரசி உள்ளே சென்றபின் அவன் அவர்களிடம் "இளவரசியின் ஆணை வேண்டுமென்றால் அவர்களிடமே சொல்கிறேன்" என்றான். அவர்கள் ஒன்றும் சொல்லாமல் விழிகளை விலக்கிக்கொண்டனர். பின்னர் அவனிடம் ஒரு சொல்லும் உரையாடவில்லை.

பகல் முழுக்க அவன் அங்கேயே வேலுடன் நின்றிருந்தான். அந்தியில் முறை மாற்றம் நிகழ்ந்து புதிய வீரர்கள் வந்தனர். அவர்களிடம் பழைய வீரர்கள் தாழ்ந்த ஓரிரு சொற்களில் அவன் யாரென்று சொல்லிச் சென்றனர். சேடி ஒருத்தி அவனிடம் வந்து "நீங்கள் உணவருந்தி வரலாம், வீரரே" என்றாள். அவன் தயங்கி "இல்லை..." என்று சொல்லத்தொடங்க "இளவரசி தாங்கள் உணவருந்தினீர்களா என்று கேட்கச் சொன்னார்" என்றாள். "இல்லை, உணவருந்தி வருகிறேன்" என்று மடைப்பள்ளிக்கு சென்றான். உணவருந்தி முகம் கழுவி மீண்டும் வந்து அங்கு காவல் நின்றான். உத்தரையின் முகம் அவனுள் மாறிவிட்டிருந்தது.

அந்தி எழுந்தபோது இளவரசி ஆலய வழிபாட்டிற்குரிய வெண்பட்டாடை அணிந்து கையில் பூசைத் தாலத்துடன் தோழியர் சூழ வெளிவந்தாள். இடைவெளி விட்டு அவன் அவளைத் தொடர்ந்து சென்றான். துர்க்கை ஆலயத்திலும் ஏழு மூதன்னையர் ஆலயத்திலும் பூசனைகள் முடித்து இருளெழுந்த பின்னர் அவள் திரும்பி வந்தாள். மீண்டும் வெளிவந்து இடைநாழியில் நடந்தபோது மெல்லிய ஒற்றை ஆடை அணிந்திருந்தாள். கழுத்தில் ஒரு முத்தாரம் மட்டும் சுடர்ந்தது.

தண்ணுமையின் கூரொலி கேட்டது. அவள் கதை கேட்கச் செல்கிறாள் என புரிந்துகொண்டான். உத்தரை சிற்றம்பலத்திற்குள் நுழைந்து அங்கே முன்னரே வந்திருந்த பேரரசி சுதேஷ்ணையுடன் சேர்ந்து அமர்ந்தாள். சுதேஷ்ணையின் பின்னால் சைரந்திரி அமர்ந்திருப்பதை அவன் கண்டான். சற்று அப்பால் அரைவட்ட வடிவில் அகத்தளப் பெண்டிர் அமர்ந்திருந்தனர். முன்னரே கதை நிகழ்ந்துகொண்டிருந்தது. தண்ணுமையும் யாழும் சிறுமுழவுடன் இணைந்த இசை மெல்ல துள்ளிக்கொண்டிருந்தது.

முக்தன் கூத்தம்பலத்தின் வாயிலில் தன் நிழல் உள்ளே விழாதவாறு ஒதுங்கி வேலை சுவரில் சாய்த்து வைத்து கைகட்டி நின்றான். மரவுரி விரிக்கப்பட்ட மேடையில் கன்னங்கரிய உடலும் நீண்ட விழிகளும் கொண்ட விறலி குறுமுழவுடன் அமர்ந்திருந்தாள். அவள் விழிகளில் சிரிப்பு வெள்ளி தீற்றியதுபோல அழியாமல் இருந்தது. விரல்கள் துடிப்பதும் வாய் கதை சொல்வதும் அவற்றுக்குத் தெரியாதென்பதைப்போல.

அந்தக் கதை எதைப் பற்றியதென்பது வெகுநேரம் அவனுக்கு புரியவில்லை. விதர்ப்ப நாட்டின் முடியுரிமைக்கான பூசல் என்று மெதுவாக தெரிந்துகொண்டான். விதர்ப்ப அரசர் பீமகர் தன் இரு மைந்தர்களுகிடையேயான முடிப்பூசலில் மூத்தவனை ஆதரித்தார். அவரை இளையவன் சிறையிட அவர் தப்பி ஓடி மூத்தவனுடன் சேர்ந்துகொண்டார். அவரை தேடிப்பிடித்துக் கொல்வதற்காக இளையவன் பீமத்துவஜன் படைகளை அனுப்பினான். ஆனால் மூத்தவன் பீமபலன் தன் குடிகள் அனைவரிடமிருந்தும் முடியொப்புதலை பெற்றான். ஒவ்வொரு குடியிலிருந்தும் சிறிய படையை அவனுக்கு அனுப்பத் தொடங்கினர். மெல்ல அவனுடைய படை பெருகியது. எல்லைப்புறச் சிற்றூர்களை ஒவ்வொன்றாக அவன் பிடித்தான். காட்டெரி படர்ந்து வருவதுபோல இரு கைகளையும் விரித்து திசைகளைச் சூழ்ந்து குண்டினபுரியை நோக்கி வந்தான்.

அவன் எவ்வகையிலும் விரைவை காட்டவில்லை. ஏனெனில் குண்டினபுரியை ஆண்ட பீமத்துவஜன் தன் குடியின் படையுடன் அருகிருந்த சிறு நாடுகளிலிருந்து திரட்டிய படையையும் வைத்திருந்தான். குடிப்போர் நிகழ்ந்து விதர்ப்ப வீரர்கள் ஒருவரோடொருவர் மோதினால் விதர்ப்பமே ஆற்றல் குன்றி அழியும் என்று பீமகர் தன் மூத்த மைந்தனுக்கு அறிவுறுத்தினார். எனவே போர் நிகழாமலேயே ஊர்கள் ஒவ்வொன்றையாக கைப்பற்றி முழு நாட்டையும் தன் ஆட்சிக்குக்கீழ் கொண்டுவந்தபடி இருந்தான் பீமபலன். மூழ்கும் படகென குண்டினபுரியின் நேரடி ஆளுகைக்குக் கீழிருந்த பகுதிகள் சுருங்கி வந்தன. தான் வெல்வது உறுதி எனும் எண்ணத்தை தன் குடிகள் நடுவே உருவாக்குவதில் பீமபலன் வெற்றி பெற்றான். சிற்றூர்கள் அவனுடன் சென்று சேர சேர

மேலும் சிற்றூர்கள் அவனுடன் சென்று சேர்வது விரைவு மிகுந்தது.

பின்னர் குண்டினபுரியும் அதைச் சூழ்ந்த நான்கு கோட்டைகளுமன்றி பிற நிலங்கள் அனைத்தும் பீமபலனிடம் சென்று சேர்ந்தன. குண்டினபுரியில் தன் படையுடன் சிறைப்பட்டவன் போலிருந்த பீமத்துவஜன் ஒவ்வொரு நாளும் பொறுமையிழந்தான். சினம் கொண்டு படைத்தலைவரிடமும் குலத்தலைவரிடமும் கூச்சலிட்டான். எளிய வீரர்களை தூக்கிலிட்டும் கழுவிலேற்றியும் வெறி தணித்தான். அவனைச் சூழ்ந்திருந்த ஒவ்வொருவரும் அவன் முன்னரே தோற்றுவிட்டான் என்று உணர்ந்தனர்.

தன் படைகள் அனைத்தையும் திரட்டி பீமபலனைத் தாக்கி வெல்லவேண்டுமென்று ஈராண்டுகளுக்கு மேலாக திட்டமிட்டுக்கொண்டிருந்தான் பீமத்துவஜன். ஆனால் படைகள் குண்டினபுரியைவிட்டுக் கிளம்பியதுமே குண்டினபுரியின் மக்கள் கிளர்ந்து நகரை கைப்பற்றிவிடக்கூடும் என்ற அச்சம் அவனைத் தடுத்தது. காலப்போக்கில் தன் ஆணைக்குக் கட்டுப்பட்டு தன் படைகள் எழுமா என்ற ஐயமே அவனுக்கு ஏற்பட்டது. ஆணை பிறப்பிக்கப்பட்டு அதை படைவீரர்கள் மறுத்துவிட்டால் அனைத்தும் அன்றே முடிந்துவிடும் என்பதனால் அந்த ஆணையை பிறப்பிக்காமலேயே காலம் கடத்தினான். ஆனால் போர் முடிந்துவிட்டதென்று அவனுக்கு நன்றாகத் தெரிந்தது. அவனுடைய காவல் கோட்டைகளும் பீமபலனால் கைப்பற்றப்பட்டன. குண்டினபுரியின் கோட்டை முகப்பிலிருந்த காவல் மாடத்தில் ஏறி நின்று நோக்கினால் தெரியும் தொலைவுக்கு பீமபலனின் படைகள் வந்து நின்றிருந்தன.

முக்தன் தன்னையறியாமலேயே அந்த அரசியல் களத்தில் உளம் ஈடுபட்டான். முற்றிலும் உள்ளத்திலேயே நிகழ்ந்து முடியும் ஒரு போர். ஒருமுறைகூட வாள் உருவப்படவில்லை. ஓர் அம்புகூட எழவில்லை. போர் முரசுகளின் மீது முழைக்கோல் ஒவ்வொரு கணமும் காத்திருந்தது. சித்தம் பேதலித்து கண்கள் பதறி தொடர்பற்ற சொற்களைப் பேசி அழுகையும் சிரிப்பும் என கொந்தளித்து தன் அரண்மனைக்குள்ளேயே சுற்றிவந்தான் பீமத்துவஜன். பீமபலனின் தூதர்கள் அவனுடைய குலத்தலைவர்களை எவரும் அறியாது வந்து பார்த்தனர். பீமகரின் சொல்லுறுதி பெற்றபின் ஃபீலர்களின் குலம் முழுமையாகவே அடிபணிந்தது.

ஒருநாள் புலரியில் பீமபலனின் படைகள் விதர்ப்பத்தின் கொடி பறக்க வெற்றி முரசு கொட்டியபடி குண்டினபுரியை அணுகின. குண்டினபுரியின் மேலிருந்து ஃபீலர்களின் கொடி தாழ்ந்து குண்டினபுரியின் கொடி ஏறியது. கோட்டைக்காவலர்கள் அனைவரும் படைக்கலங்கள் தாழ்த்தி பீமபலனின் படைகளிடம் பணிந்து அவர்களுடன் சேர்ந்து கொண்டனர். நன்கு ஒத்திகை பார்க்கப்பட்ட ஒரு படை விளையாட்டுபோல குண்டினபுரியை பீமபலன் மீண்டும் கைப்பற்றினான்.

ஏழு படைவீரர்கள் பீமத்துவஜனின் அறைக்கதவைத் தட்டி அவனை அழைத்தபோது அவன் உடல் நடுங்கியபடி மஞ்சத்தின்மேல் அமர்ந்திருந்தான். கதவைத் திறந்த அவன் பட்டத்தரசி சுதேவை கண்ணீர்விட்டு அழுதபடி தன் மைந்தர்களை இடையுடன் அணைத்திருந்தாள். படைத்தலைவன் "இளவரசே, வருக" என்று அழைத்தான். பாய்ந்தெழுந்த பீமத்துவஜன் தன் குறுவாளை எடுத்து கழுத்தில் வைக்கப்போனபோது இருவர் பாய்ந்து அக்கைகளை

பற்றிக்கொண்டனர். அவனை கைகள் பற்றி அரசவைக்கு கொண்டு சென்றனர்.

பீமபலன் குண்டினபுரியின் அரியணையில் அமர்ந்திருந்தான். ஃபீலர்குடித் தலைவர்களும் பைலர்குடித் தலைவர்களும் இணைந்து எடுத்தளித்த மணிமுடியையும் செங்கோலையும் சூடியிருந்தான். குடிகள் அவனை வாழ்த்தும் முழக்கம் அவை நிறைத்திருந்தது. வீரர்களால் அழைத்துவரப்பட்ட பீமத்துவஜன் அவையில் நுழைந்தபோது அமைதி ஏற்பட்டது. பேரரசர் பீமகர் தனது இருக்கையில் நெஞ்சுடன் கைகட்டி தலை குனிந்து அவனை நோக்காது அமர்ந்திருந்தார். பீமத்துவஜன் கலங்கிய கண்களும் பதறி முட்டிக்கொண்ட கால்களும் நிலையழிந்து தத்தளித்த உடலுமாக அவை நடுவே வந்துநின்றான். அவனால் நடக்க முடியவில்லை. இரு வீரர்கள் அவன் இரு தோள்களையும் பற்றி மெல்ல தள்ளிக்கொண்டு வந்தனர்.

பீமத்துவஜனின் பட்டத்தரசியும் நான்கு மனைவியரும் ஆணிலி வீரர்களால் அவைக்கு கொண்டுவந்து நிறுத்தப்பட்டனர். பீமபலன் அவையினரிடம் "குடித்தலைவர்களே, சான்றோரே, மணிமுடி மறுசொல்லின்றி இருக்கையில் மட்டுமே ஆற்றல் கொண்டதாகிறது, மறுக்கப்பட்ட மறுகணமே அரியணை தன் ஆற்றலில் பாதிப் பங்கை இழந்துவிடுகிறது என்கிறார்கள் அரசுநூலோர். ஆகவே மணிமுடியை மறுக்கும் எவருக்கும் இறப்பே தண்டனை என்று முன்னோர் வகுத்துள்ளனர். பாரதவர்ஷத்தில் எங்கும் எப்போதும் அம்முறை மீறப்பட்டதில்லை" என்றான். அவை அசைவற்று அமர்ந்திருந்தது.

"எந்தையின் சொல்லை கேட்க விழைகிறேன்" என்றான் பீமபலன். பீமகர் எழுந்து ஓங்கிய குரலில் "வருங்காலத்திலும்

குண்டினபுரியின் மணிமுடி உறுதியாக நின்றாக வேண்டும். அதை இவன் குருதி நிறுவட்டும்” என்றார். பீமபலன் “ஆம், இறப்பே தண்டனை. ஆனால் இளையோனாகிய இவனை முடிசூட்டி போஜகடகத்தில் அமர்த்தியது எனது தமக்கை தமயந்தி. இவனை தண்டிக்கவும் பொறுக்கவும் உரிமை படைத்தவர் அவரே. அவர் இல்லாத இவ்வவையில் அம்முடிவை நான் எடுக்க இயலாது” என்றான். அமைச்சர்களிடம் “நான் என்ன செய்ய வேண்டும், அமைச்சரே?” என்றான்.

முதிய அமைச்சர் விஸ்ருதர் எழுந்து வணங்கி “நூல்நெறிப்படி இறப்புகள் பல உண்டு. பீமத்துவஜர் தன் பெயரையும் குலத்தையும் துறந்தால் இறந்தவர் என்றே கருதப்படுவார். வரதாவில் மும்முறை மூழ்கி ஆடை களைந்து கரையேறட்டும். அவரது மைந்தன் அவருக்கு அன்னம் வைத்து நீர்க்கடன் செய்து முடிக்கட்டும். வேறு ஒரு பெயருடன் வேறொரு மனிதராக அவர் இங்கு வாழ்வதில் தடையேதுமில்லை” என்றார். பீமகர் ஏதோ சொல்வதற்குள் பீமபலன் “ஆம், அதுவே எனது ஆணை. இளையோனே, பிறிதொருவனாக என்னுடன் இரு” என்றான்.

கால்கள் தளர்ந்த பீமத்துவஜன் தன்னைத் தாங்கியிருந்தவர்களின் கைகளில் தொங்கியவன் போலிருந்தான். அவர்கள் அவனை மெல்ல அமரவைத்தனர். “இளையவனே, உன் இறப்பு நிகழ்வதற்குமுன் இந்த அரியணையையும் செங்கோலையும் முழுதேற்பதாக மும்முறை நிலம் தொட்டு ஆணையிடு. உன்னையும் என்னையும் இங்கமர்த்திய நமது மூத்தவர் திரும்பி வருகையில் நம்மைக் குறித்து அவர் நிறைவையே

அடையவேண்டும்” என்றான் பீமபலன். இரு கைகளையும் நெஞ்சோடு சேர்த்து தலைமுடி முகத்தில் பரவியிருக்க தாடை மார்பில் பதிய தலைகுனிந்து அமர்ந்திருந்தன் பீமத்துவஜன்.

பீமகர் உரத்த குரலில் “ஆணையிடு, மூடா! நீ ஆற்றிய பிழையெல்லாம் போதும்” என்றார். பீமத்துவஜனின் அரசி “அவர்பொருட்டு நான் ஆணையிடுகிறேன். என் மைந்தரின் தலை தொட்டு ஆணையிடுகிறேன்” என்றாள். பீமத்துவஜனை சற்று நேரம் நின்று நோக்கிய பீமபலன் “நீ ஆணையிடவில்லையென்றால்கூட எனது தீர்ப்பில் மாற்றமில்லை, இளையோனே. நீ செல்லலாம்” என்றான்.

பீமத்துவஜன் முழந்தாளிட்டு உடல் நிமிர்த்தி எழுந்தான். தலை தூக்கி பீமபலனைப் பார்த்து “இக்கணம்வரை இவ்வரியணை எனக்குரியது என்றே எண்ணியிருந்தேன். எனக்குரியதை இழந்தேன் என்றே வருந்தினேன். மூத்தவரே, இக்கணம் அறிகிறேன், இது தாங்கள் அமரவேண்டிய அரியணை. இதிலமரும் அறச்செல்வர்கள் இந்நாட்டை புகழ்பெறச் செய்யவேண்டும்” என்றபின் “இக்கொடிக்கும் இம்முடிக்குமென ஒருநாள் எங்கோ ஒரு களத்தில் குருதி சிந்தி விழுவேன். நான் ஆற்றிய அனைத்திற்கும் அவ்வண்ணம் ஈடு செய்வேன். ஆணை! ஆணை! ஆணை!” என்றான்.

அவையிலிருந்த அனைவரும் விழிநீர் சிந்திக்கொண்டிருந்தனர். பீமபலன் “நன்று இளையோனே, நாளை பிறிதொரு உடன்குருதியினன் எனக்குக் கிடைக்கையில் அவனை நெஞ்சோடு தழுவி எஞ்சியதை சொல்ல விழைகிறேன்” என்றான். பீமத்துவஜன் எழுந்து மீண்டும் நிற்க முடியாமல் தள்ளாடி இரு வீரர்கள் அவனை பற்றிக்கொள்ள நிமிர்ந்த

தலையுடன் அவையை ஒரு முறை நோக்கிவிட்டு வெளியேறினான்.

பீமபலன் “போஜகடகம் இரண்டாவது தலைநகராகவே நீடிக்கட்டும். என் இளையோனின் அரசி அங்கிருந்து ஆளட்டும். அவள் மைந்தனுக்கு இப்போது பதினான்கு வயதாகிறது. பதினெட்டு வயதுக்குப்பின் அவனே அங்கு முடி சூடட்டும்” என்றான். அவை வாழ்த்துரைத்து முழக்கமிட்டது.

விறலி கதையை சொல்லி முடித்தபின் மெல்ல தலைதிருப்பி அவையை பார்த்தான் முக்தன். பெண்டிர் அனைவரும் விழிநீர் கொண்டிருப்பதைக் கண்டான். அத்தனை தொலைவிலிருந்துகூட விழிநீர் மட்டும் எத்தனை தெளிவாகத் தெரிகிறது என்று எண்ணிக்கொண்டான். தன் இமைகளிலும் நீர் இருப்பதை உணர்ந்தான். பெருமூச்சுடன் மீண்டும் இருளுக்குள் உடலை இழுத்துக்கொண்டான். கண்களைத் துடைத்தபோது மலர்ந்த முகத்தில் விழிநீர் எழுவதுதான் மனித உணர்ச்சியின் உச்சமா என்ற எண்ணம் அவனுக்கு எழுந்தது.

# நீர்க்கோலம் - 82

### 81. முகம்பரிமாறல்

✿சேடியர் இன்னீரும் வாய்மணமும் விளம்பியபடி குனிந்து சுற்றிவந்தனர். அரசி உத்தரையிடம் தலையை அசைத்து விரல்காட்டி ஏதோ சொன்னாள். உத்தரை தலைகுனிந்து விழிகளை கம்பளத்தில் நிறுத்தி அமர்ந்திருந்தாள். அரசி மேலும் கடுமைகொண்ட முகத்துடன் உதடுகளை நீட்டி கழுத்துத் தசை அதிர இளவரசியை கண்டித்தாள்.

ஒருகணத்தில் முக்தன் அவள் வசையுரைப்பது சைரந்திரியைத்தான் என்று புரிந்துகொண்டான். சைரந்திரி அரசியை நோக்காமல் இயல்பாக மேடையில் விழிகொண்டிருந்தாள்.

விறலி நீர் அருந்தி வாயில் மிளகுகளை போட்டுக்கொண்டாள். அவளுடனிருந்தவள் முழவின் பட்டைகளை இழுத்து கட்டைகளை சிறுசுத்தியலால் தட்டி இறுக்கினாள். இன்னொருத்தி யாழ் தந்திகளை முறுக்கி விரல்களை ஓட்டி சுதி நோக்கினாள். அதுவரை பாடிக்கொண்டிருந்த அவை குழந்தைகளென்றாகி சிணுங்குவதாக முக்தன் நினைத்தான். சைரந்திரியின் பக்கவாட்டு முகத்தில் தெரிந்த மென்னகையை நோக்கியபோது அவன் ஒன்றை உணர்ந்தான், அவளுக்கு அவன் நோக்குவதும் தெரியும்.

உளஅதிர்வுடன் அவன் விழியோட்டி எதிர்ப்பக்கத்தின் வெண்கலக் கதவுமுழையில் தெரிந்த ஒளித்துளியை கண்டான். பின்னகர்ந்து சுவரில் சாய்ந்துகொண்டான். இவள் ஷத்ரிய குலத்தவள். போர்க்கலை பயின்று உடலை விழியாக்கியவள். ஏன் இங்கு வந்திருக்கிறாள்? மீண்டும் அரசியை பார்த்தான். அவள் பற்களைக் கடித்தபடி பேசிக்கொண்டிருந்தாள். அவனுக்கு அவளை எண்ணி ஏளனமும் இரக்கமும் எழுந்தன. உடனுறைந்தும் சைரந்திரியை அரசி உணர்ந்திருக்கவில்லை. தான் பேசும் சொற்களால் அவளை அச்சுறுத்தவோ துயருறுத்தவோ முயல்கிறாள். அவன் புன்னகையுடன் வேலை கைமாற்றிக்கொண்டான்.

விறலி மீண்டும் வந்து மேடைமணையில் அமர்ந்தாள். அவள் தோழியர் இரு பக்கமும் அமர்ந்து யாழையும் தண்ணுமையையும் மடியில் வைத்துக்கொண்டனர். அவள்

குறுமுழவை எடுத்து விரலோட்ட அது மெல்ல விம்மியது. அவ்வொலியில் பேசிக்கொண்டும் வேறுபக்கம் நோக்கிக்கொண்டும் இருந்த சேடியர் அனைவரும் அசைவுகொண்டு ஒருங்கமைந்தனர். அரசி இறுதியாக உத்தரையிடம் சில சொல்லிவிட்டு பெருமூச்சுடன் மேடையை நோக்கினாள்.

சைரந்திரி மேடையை நோக்கிக்கொண்டிருப்பதை ஓரவிழியால் கண்டு அவள் அமைதியிழப்பது தெரிந்தது. சைரந்திரி அறியாமல் அவளைப் பார்க்கவேண்டும் என விரும்பி அவள் மெல்ல திரும்பி நோக்க சரியாக அத்தருணத்தில் திரும்பிய சைரந்திரி அரசியை நோக்கி புன்னகையுடன் தலைதாழ்த்தினாள். அரசி திடுக்கிட்டு விழிவிலக்கிக்கொண்டாள். அவள் முகத்தில் தெரிந்த பதற்றத்தைக் கண்ட முக்தன் சிரிப்பை அடக்கியபடி முகம் திருப்பிக்கொண்டான்.

விறலி மீண்டும் தமயந்தியின் கதையை சொல்லத் தொடங்கினாள். “குண்டினபுரியில் முடிசூட்டிக்கொண்ட பீமபலன் தன் தமக்கையைத் தேடி நூற்றெட்டு வைதிகர்களை பாரதவர்ஷமெங்கும் அனுப்பினான். ஆயிரத்தெட்டு ஒற்றர்களை அனைத்து சாலைகளையும் உளவு நோக்க அனுப்பினான். தன் அக்கையைக் குறித்த செய்தி கொண்டுவருபவர்களுக்கு ஆயிரம் பொன்னும் ஆயிரம் பசுக்களும் பரிசளிப்பதாக முரசறிவித்தான். ஆற்றில் விழுந்த வைரக் கணையாழியை வலையிட்டுத் தேடுவதுபோல அந்தணரும் வணிகரும் ஒற்றரும் சூதரும் தமயந்தியை பாரதவர்ஷமெங்கும் தேடலானார்கள்.”

பாஸ்கரரின் தவச்சாலையிலிருந்து கலிங்கப் பெருவணிகர் குழுவுடன் வடக்கே சென்ற தமயந்தி வழியில் அவ்வணிகர்

குழு காட்டு யானைகளால் தாக்கப்பட்டு சிதறடிக்கப்பட தான் மட்டும் காட்டு மரம் ஒன்றில் ஏறி உயிர் தப்பினாள். அங்கிருந்து தன்னந்தனியாக நடந்துசென்று சேதிநாட்டை அடைந்தாள். நெடுவழி நடந்து அவள் உடல் கன்றி பொலிவிழந்தது. நீள்குழல் உதிர்ந்த தேம்பியது. உணவின்றி மெலிந்து நோயுற்று நலிந்து சூக்திமதி நகருக்குள் நுழைந்தாள்.

அரசியென அமர்ந்திருந்தவளுக்கு தொழிலென்றும் புழக்கமுறையென்றும் ஏதும் தெரிந்திருக்கவில்லை. யானையிலும் பல்லக்கிலும் அமர்ந்தே அவள் நகரை கண்டிருந்தாள். மண்ணில் நடந்தறிந்த நகர் பிறிதொன்றாக இருந்தது. அங்கே எவரும் எவரையும் நோக்கவில்லை. எவரிடமும் பிறர் கனியவில்லை. பட்டி ஆடுகள் என மானுடர் தோள்முட்டி சினைத்தபடி எல்லைக்குள் ததும்பிக்கொண்டே இருந்தனர். அவள் அறிந்த ஆட்டநெறிகள் ஏதும் செயல்படாத பெருங்களம். அறியமுயன்று முட்டி மோதி ஏதோ கணத்தில் அவள் அகப்பதற்றம் ஒன்றை அடைந்தாள். அக்கணமே அனைத்தும் மேலும் சிதறிவிரிந்து முற்றிலும் அறியமுடியாதவை என்றாயின. பகைகொண்டு சூழ்ந்தன.

நீண்ட வழித்தனிமையில் தன்னுள் பேசிப்பேசி மொழியை இழந்துவிட்டிருந்தாள். சூக்திமதியின் தெருக்களில் அலைந்து எவரேனும் அளித்திடும் உணவை உண்டு தெருக்களில் உறங்கினாள். அவளை பிச்சி என்றெண்ணிய அங்காடிச் சிறுவர்கள் கற்களை வீசித் துரத்தினர். அவர்களிடமிருந்து தப்ப தெருவில் ஓடிக்கொண்டிருந்த அவளை ஆலயவழிபாடு முடித்து பல்லக்கில் வந்துகொண்டிருந்த சேதிநாட்டு அரசனின் அன்னை கண்டாள். நடையிலிருந்தே அவள் அரசகுலத்தாள் என்று அறிந்து தன்னுடன் அழைத்துச்சென்றாள்.

சேதிநாட்டு அரண்மனையில் தமயந்தி அரசனின் தங்கை சுனந்தையின் சேடியென்றும் தோழி என்றும் வாழ்ந்தாள். அரசிக்கு அணுக்கி என அமையும் ஷத்ரியப் பெண்ணையே சைரந்திரி என்பர். மிகச்சில நாட்களிலேயே சைரந்திரி மீண்டும் தன் உயிர்த்துடிப்பை பெற்றாள். அரசுநூலும் காவியமும் கலைகளும் அறிந்த அவளை சுனந்தை ஒருகணமும் பிரியாதவளானாள். அவள் சொல் பெற்றே எதையும் செய்தாள். இளவரசிக்கு அவள் ஒவ்வொரு நாளும் பாடம் சொன்னாள். களிக்காட்டில் வேட்டைக்கு அழைத்துச்சென்றாள். புரவி ஊரவும் யானையை மெருக்கவும் கற்றுக்கொடுத்தாள்.

தமயந்தி ஒருபோதும் குன்றாத ஊக்கம் புன்னகை என விளங்கும் முகம் கொண்டிருந்தாள். அரண்மனை அகத்தளத்தில் சுடரேற்றப்பட்டதுபோல அவள் விளங்குவதாக சேடியர் சொன்னார்கள். “சிறுமியருக்குரிய துள்ளலும் கன்னியருக்குரிய சிரிப்பும் அன்னையருக்குரிய கனிவும் கொண்டவள்” என்று அரசி சுகிர்தை சொன்னாள். மூதரசி அவளை நகைகளாலும் ஆடைகளாலும் அணிசெய்தாள். தன்னருகே நிகரென அமர்த்தி உணவளித்தாள். “மங்கலையே, நீ யார்? உன் முகத்தை எங்கோ நான் கண்டிருக்கிறேனே?” என்று அவள் கேட்டாள். “அதை மட்டும் நான் உரைக்கப் போவதில்லை, அரசி. காலம் வருகையில் அது தெளியட்டும்” என்று தமயந்தி சொன்னாள்.

அவ்வினாவைக் கேட்டதுமே அவள் முகம் மங்குவதைக்கண்டு அதை தவிர்த்தனர். பின்னர் அவள் எவரென்பது வெளிப்பட்டால் அங்கிருந்து சென்றுவிடுவாள் என அஞ்சி அவ்வெண்ணத்தையே அவர்கள் ஒழித்தனர். தமயந்தி அவர்களுடன் அவைமன்றுக்குச் செல்வதில்லை.

நகர்த்தெருக்களிலோ ஆலயத்திலோ பொதுவிழிகள் முன் தோன்றுவதையும் தவிர்த்தாள். விறலியர் பாடும் அவைகளில் பின்நிரையில் அரையிருளிலேயே அமர்ந்தாள். ஆனால் பிறர் அறியாமல் அவள் குண்டினபுரியில் என்ன நிகழ்கிறதென்று அறிந்துகொண்டிருந்தாள்.

அந்நாளில் சுனந்தைக்கு மணத்தூதுடன் அந்தணராகிய சுதேவர் சூக்திமதிக்கு வந்தார். பத்மாவதி நகரை ஆண்ட பார்ஷிவ நாகர்குலத்தின் அரசனான விருஷசேனன் தன் மைந்தன் விருஷநாகனுக்காக அவளை கேட்டிருந்தான். அவையில் அச்செய்தி முன்வைக்கப்பட்டபோது முரண்பட்ட குரல்கள் எழுந்தன. “அவர்கள் நாகர்களில் இருந்து உருவான ஷத்ரியர். பரசுராமரால் அனலளிக்கப்பட்டவர்கள்” என்று அமைச்சர் தப்தர் சொன்னார். “குலப்பெருமை இல்லையென்றாலும் வளர்ந்துவரும் படைவல்லமையும் வாய்ப்பான வணிகமும் கொண்டவர்கள். சேதிக்கு நலம் சேர்க்கும் படைக்கூட்டாகவும் அமையும் இவ்வுறவு.”

ஆனால் அரசி சுகிர்தை “அரசனுக்கு பதினெட்டு மைந்தர்கள். அவர்கள் பூசலிட்டால் அம்மணிமுடி ஒருகணமும் நிலைகொள்ளாது” என்றாள். முதலில் அமைச்சர் சொன்னதை ஏற்றுக்கொண்ட அவை மெல்ல அரசியை நோக்கி சென்றது. இளவரசியின் ஒப்புதலைப் பெற்றபின் முடிவெடுக்கலாம் என்று கலைந்தது. அரசி சொல்வதையே இளவரசி சுனந்தை சொல்வாள் என அவையோர் எண்ணினர். ஆனால் மறுநாள் அவையில் இளவரசி தன் மணஒப்புதலை அறிவித்துவிட்டாள் என்றாள் முதுசெவிலி. அவை அதை வாழ்த்துரைத்து ஏற்றுக்கொண்டது.

சுதேவர் அரசியைச் சந்தித்து விடைபெறும்போது எப்படி அம்முடிவு எட்டப்பட்டது என இயல்பாக வினவினார். “அது இளவரசியின் அணுக்கியான சைரந்திரியின் சொல். பதினெட்டு இளவரசர்கள் என்பதே ஒற்றுமையை உருவாக்கும் என்று அவள் எண்ணுகிறாள்” என்றாள் அரசி. “பதினெட்டில் ஓரிருவர் முரண்பட்டால் பிறர் இணைந்து அவர்களை எளிதில் வெல்லமுடியும். நிகரென ஒருவன் எழுந்து உரிமைகோர இயலாது என்றாள். அது மெய்யென்றே தோன்றியது.”

சுதேவர் நகைத்து “மெய், அரசியல் வரலாறு காட்டுவது அதையே” என்றார். “அத்துடன் ஒற்றரை அழைத்து விருஷநாகரின் இளையோர் அவரிடம் எப்படி நடந்துகொள்கிறார்கள் என்று உசாவினாள் சைரந்திரி. அவர்கள் அவரிடம் எதையும் கேட்பதில்லை. தாங்கள் எண்ணியதைச் செய்கிறார்கள் என்றான் தலைமை ஒற்றன். நான் அதெப்படி என சினம்கொள்ள சைரந்திரி அது நன்று என்றாள். ஒவ்வொன்றுக்கும் மூத்தவரை நம்பினார்கள் என்றால் அவர்களுக்கு தன்னெண்ணம் இல்லை என பொருள். அவர்களை பிறர் வழிதவறச் செய்யக்கூடும். எங்கோ ஓரிடத்தில் அவர்கள் ஆணவம் புண்படலாம். அன்று அவர்கள் மீறிச்செல்லலாம் என்றாள்” என்றாள் அரசி.

சுதேவர் வியப்புடன் “மிகக்கூரிய நோக்கு, அரசி. அவர்களை நான்கூட இத்தனை தெளிவாக புரிந்துகொண்டதில்லை” என்றார். அரசி ஊக்கமடைந்து “தானென நிற்பவர்களே சிறந்தோர், அவர்கள் சித்தத் தெளிவுடன் மூத்தானுடன் நிற்பார்கள் என்றாள். அத்துடன் மூத்தவனின் உள்ளமென்ன என்று இளையோர் நன்கறிந்திருப்பதையும் அது காட்டுகிறது

என்று விளக்கினாள். எனக்கு மாற்று எண்ணம் எழவேயில்லை” என்றாள்.

சுதேவர் “நான் அவளை காணலாமா?” என்றார். “அழைக்கிறேன்” என்றாள் அரசி. “வேண்டாம். அவள் அவைக்கு வரமறுக்கிறாள் என்றால் இங்கும் வரமாட்டாள். நானே சென்று அவளை பார்க்கிறேன். எங்கிருக்கிறாள் என்று மட்டும் சொல்க!” என்றார். “அங்கே கல்விச்சாலையில் இருக்கிறாள். உடன்அமர்ந்து இளவரசி காவியம் பயில்கிறாள்” என்றாள் அரசி. சுதேவர் சேடியொருத்தியுடன் கல்விநிலைக்குள் நுழைந்தபோதே தமயந்தியை கண்டுகொண்டார். அவர் நோக்கைக் கண்டு எழுந்து நின்றதுமே தமயந்தியும் அவர் தன்னை அறிந்ததை உணர்ந்துகொண்டாள்.

“அரசி, தங்களுக்காக பாரதவர்ஷமெங்கும் தேடிக்கொண்டிருக்கிறார்கள் விதர்ப்பத்தினர்” என்று சுதேவர் சொன்னார். “ஆம், நான் அதை அறிவேன். ஆனால் அவர்கள் என்னைக் கண்டடைந்து அழைத்துச் செல்லவேண்டும். அதுவே முறை. அதற்காகக் காத்திருந்தேன். வருந்தியழைக்காமல், வாயில்வந்து வரவேற்காமல் நான் குண்டினபுரிக்குள் நுழையமாட்டேன். அது என் கணவனுக்கும் நான் புகுந்த இல்லத்திற்கும் பெருமையல்ல” என்றாள் தமயந்தி. “நான் சென்று விதர்ப்பத்திற்கு செய்தியை அறிவிக்கிறேன். அரசவரிசையுடன் இளவரசர்களில் ஒருவர் நேரில் வந்து தங்களை அழைத்துச்செல்வார்” என்றார் சுதேவர்.

சுனந்தையும் அரசியும் அவள் தமயந்தி என்றறிந்ததும் திகைத்தனர். பின் உணர்வுக் கொந்தளிப்புடன் அவளை தழுவிக்கொண்டனர். அவள் அடைந்த துயர்களைக் கேட்டு விழிநீர் விட்டனர். ஆனால் மூதரசி அவளை அழைத்து

தலைதொட்டு வாழ்த்தி "நான் அதை முன்னரே அறிந்துவிட்டிருந்தேன், மகளே. தசார்ணநாட்டு அரசர் சுதாமரின் இரு மகள்களில் நான் இளையவள். உன் மூதன்னை வாஹினி மூத்தவள். உன்னில் நான் கண்டது என் அக்கையின் இளமை முகத்தை. நளன் கதையை விறலி ஒருத்தி சொல்லக்கேட்டு உன் விழி மாறியதைக் கண்டதும் புரிந்துகொண்டேன். முடிந்தவரை நீ என்னுடன் இருக்கட்டும் என என் உள்ளம் விழைந்தது" என்றாள்.

அப்போதே பேரரசி தமயந்தி நகரில் உறைவதை அறிவிக்கும்பொருட்டு நிஷதநாட்டின் மின்கதிர்க் கொடியும் விதர்ப்பத்தின் கொடியும் சேதிநாட்டுக் கோட்டைமுகப்பில் ஏற்றப்பட்டன. பேரரசியை வாழ்த்தி நகரெங்கும் பெருமுரசுகள் முழங்கின. செய்தி பரவ நகரம் கொந்தளித்தெழுந்தது. அன்று மாலை அவள் கொற்றவை ஆலயத்திற்கும் இந்திரகோட்டத்திற்கும் சென்றபோது கொடியேந்தி வீரன் முன்செல்ல மங்கலச்சேடியரும் இசைச்சூதரும் வழியமைத்தனர். அரசஅகம்படி உடன் சென்றது. முதன்மை முறைமை அளித்தனர் பூசகர். சூக்திமதியின் அரசவையில் அவளை அழைத்து பொற்தால எதிரேற்பளித்தனர். அவள் அவைபுகுந்தபோது செங்கோல் தாழ்த்தி அரசன் வரவேற்றான். வாழ்த்துரைத்தது குடியவை.

விதர்ப்பத்திலிருந்து ஏழு இளவரசர்கள் நூற்றெட்டு வண்டிகளில் பரிசில்களும் வரிசைகளுமாக சேதிநாட்டுக்கு வந்தனர். அவையை வணங்கி தமயந்தியை அழைத்துச்செல்ல ஒப்புதல் கோரினர். பேரரசிக்கு அளிக்கப்படும் அவைமுறைமைகளுடன் தமயந்தியை சேதிநாடு வழியனுப்பியது. நகரம் அணிகொண்டது. தெருக்களில் கூடிய மக்கள் வாழ்த்தொலித்து

அரிமலர் தூவினர். பெருமுரசங்கள் முழங்கி விடையளித்தன. படையூர்வலமாக தமயந்தி விதர்ப்பத்திற்கு சென்றாள். அவளை வரவேற்க நாட்டு எல்லை முதல் சாலையெங்கும் மக்கள் காத்து நின்றிருந்தனர். கோட்டைமுகப்பில் பீமபலனும் இளையோரும் வந்து நின்றனர். பீமபலன் தன் வாளை உருவி அவள் காலடியில் தாழ்த்தி எதிரேற்றான்.

பொன்முகபடாம் சூடிய பட்டத்து யானைமேல் அமர்ந்து தமயந்தி குண்டினபுரிக்குள் நுழைந்தாள். பேரரசி நகர்புகுவதை அறிவித்து முரசுகள் முழங்க கோட்டைமுகப்பில் மின்கதிர்க்கொடி எழுந்தது. நகரம் களிவெறிகொண்டு வாழ்த்து கூவியது. வீரர்கள் வாள்களையும் வேல்களையும் வீசி கூச்சலிட்டனர். பெண்கள் நெஞ்சைப் பற்றியபடி விம்மினர். அவளை நோக்கி நோக்கி தங்கள் நினைவுகளிலிருந்து வரைந்தெடுத்துக்கொண்டனர். பின்னர் அக்கணம் எழுந்தவள்போல அவள் தெரியலானாள். அவள் அரண்மனையை நெருங்கியபோது வாழ்த்தொலிகள் முற்றாக அமைந்து நகரம் அமைதியாக அழுதுகொண்டிருந்தது.

அரண்மனை முகப்பில் காத்திருந்த அவள் அன்னையும் அரசியரும் விழிநீர் விட்டபடி அவளை தழுவிக்கொண்டனர். அன்னை நிலைமயங்கி கீழே சரிய சேடியர் தாங்கிக்கொண்டார்கள். அங்கே செவிலியருடன் நின்றிருந்த இந்திரசேனன் அவள் கால்தொட்டு வணங்க அவனை தலைதொட்டு வாழ்த்தினாள். இந்திரசேனையை நெஞ்சோடு அணைத்துக்கொண்டபோதுமட்டும் அவள் விழிநீர் கொண்டாள். மைந்தருக்கும் விழிநீரன்றி ஒரு சொல்லும் இருக்கவில்லை. அன்னையின் தொடுகையிலேயே அவர்கள் இறுக்கிச் செறித்து

உள்ளடக்கியிருந்த துயரை உணர்ந்தனர். இந்திரசேனையை செவிலி அணைத்து கீழே விழாமல் கொண்டுசென்றாள்.

வலக்கால் வைத்து தமயந்தி அரண்மனை புகுந்தாள். அவளை அரசன் அழைத்துச்சென்று தன் அரியணையில் அமரச்செய்து செங்கோலை அவள் கையில் அளித்தான். அவள் தலையில் விதர்ப்பத்தின் முடியை குலமூத்தோர் அணிவித்தனர். அந்தணர் அவளை வாழ்த்தினர். குடிகளும் சான்றோரும் அவளை வணங்கினர். "என்றும் என் மூத்தவள் சொல்லுக்கு அப்பால் இந்நாட்டில் நெறியென ஒன்றில்லை. அவள் நோக்கில் இந்நகர் வெல்லும். அவள் அளியால் இது செழிக்கும்" என்றான் பீமபலன். அவையினர் "ஆம்! ஆம் !ஆம்!" எனக்கூவி ஆர்ப்பரித்தனர்.

தமயந்தி தன் இளையவன் பீமத்துவஜனை அவைக்கு அழைத்து தோளுடன் அணைத்து அருகமர்த்திக்கொண்டாள். பீமபாகு என பெயர் மாற்றம் செய்யப்பட்டிருந்த அவன் அவள் கால்களைத் தொட்டு வணங்கி அவள் அணைப்பில் விழிநீர் மல்கி தலைகுனிந்து அமர்ந்திருந்தான். குடியினர் ஒவ்வொருவராக வந்து அவளை வணங்கி கண்ணீர் பெருக குரல் உடைய அன்புரைத்தனர். அன்று நிகழ்ந்த உண்டாட்டில் பீமகர் மதுவுண்டு அனைத்து தன்கரைகளையும் மீறி அழுதுகொண்டே இருந்தார். தன் இளையோரின் மைந்தருடனும் தன் மைந்தருடனும் மலர்ச்சோலையில் இரவெல்லாம் விளையாடிய தமயந்தி புலரி எழுந்தபோதுதான் படுக்கைக்கு சென்றாள். தனிமையில் அவள் நளனை எண்ணி விழிநிறைந்தாள்.

✿விறலி முழவைத் தாழ்த்தி வணங்கியபோது சூழ்ந்திருந்தவர்கள் பாராட்டு ஒலிகளுடன் எழுந்தனர். முக்தன்

அவர்களின் நோக்கு படாமல் விலகிக்கொண்டான். உள்ளே கலைந்த குரல்கள் கேட்டுக்கொண்டே இருந்தன. பின்னர் அரசி கிளம்புவதை அறிவிக்கும்பொருட்டு முதற்சேடி தன் கையிலிருந்த வலம்புரிச் சங்கை முழக்கினாள். வாழ்த்தொலிகள் எழுந்தன. கொடியுடன் ஒருத்தி முன்னால் செல்ல அரசி தொடர்ந்து சென்றாள். அவளுக்குப் பின்னால் சைரந்திரி நடந்தாள்.

அவர்கள் சென்றபின் உத்தரை வெளியே வந்தாள். அவளுடன் இருந்த சேடியர் அவனை நோக்கினர். அவள் முன்னால் நடக்க முக்தன் பின்தொடர்ந்தான். அவள் இடைநாழியை அடைந்தபோது நின்று திரும்பி அவனிடம் “உமது பெயர் முக்தன் அல்லவா?” என்றாள். “ஆம், இளவரசி” என்றான். “உம்மிடம் ஆசிரியர் சொன்னதென்ன?” என்றாள். “உங்களுடன் இருக்க.” அவள் புன்னகைத்து “எனக்குக் காவலாகவா?” என்றாள். “ஆம்” என்றான். அவள் சிரித்து “அவர் உம்மை விலக்கியிருக்கிறார். இப்போது சென்றால் குடிலில் அவர் இருக்கமாட்டார்” என்றாள்.

முக்தன் ஒன்றும் சொல்லவில்லை. “அவர் பூனையைப்போல என என் தோழிகள் சொல்கிறார்கள். இங்கிருப்பதான தோற்றத்தை உருவாக்குகிறார். ஆனால் எங்கெங்கோ சென்று மீள்கிறார். அவருடைய தடம் இங்கு எவருக்கும் தெரிவதில்லை.” முக்தன் “ஆனால் காவலர்…” என சொல்லத்தொடங்க “காவலர் கண்மறைவது அவருக்கு ஒரு பொருட்டா என்ன?” என்றாள். முக்தன் “ஆம்” என்றான். “ஏன் உம்மை விலக்கினார் என எண்ணுகிறீர்?” என்றாள். அவனால் ஒன்றும் சொல்லக்கூடவில்லை.

“அவருக்கும் இங்கிருக்கும் சிலருக்கும் நாம் அறியாத உறவு உள்ளதென்று தோன்றவில்லையா உமக்கு?” என்றாள். அவன் அதற்கும் மறுமொழி சொல்லவில்லை. “ஏறத்தாழ இரண்டுமாத காலத்திற்குள் இங்கே அறுவர் வந்துசேர்ந்தனர். அறுவரும் எளிய மானுடர் அல்ல. இங்கே நிகழ்வன ஒவ்வொன்றும் தேவர்கள் நிகழ்த்துவது போலுள்ளது. அதில் உச்சம் கீசகரின் மறைவு” என்றாள் உத்தரை. “அதை பாரதவர்ஷமே அறிந்துவிட்டது என்றான் ஒற்றன். ஏனென்றால் வெல்லப்பட முடியாதவர் என்னும் தோற்றம் கீசகருக்கு இருந்தது.”

“அவரை கந்தர்வர்கள்…” என்று முக்தன் சொல்லத்தொடங்க அவள் கைவீசி அதைத் தடுத்து “வலவன் கந்தர்வன் அல்ல” என்றாள். அவன் நின்றுவிட்டான். அவள் திரும்பிநோக்கி “என்ன?” என்றாள். “அவரா?” என்றான். “ஐயமுண்டா?” என்றாள். “நான் அவ்வண்ணம் எண்ணவே இல்லை, இளவரசி” என்றான். அவள் புன்னகை செய்தாள். பின்னர் “ஏதோ நம்மைச் சூழ்ந்து நிகழ்கிறது. இவ்வரண்மனையில் என்னைத் தவிர அரசகுடியினர் எவரும் அதை உணர்ந்ததாகத் தெரியவில்லை. ஆபரை நம்பி இந்நாடு இயங்குகிறது” என்றாள்.

அவள் இதையெல்லாம் தன்னிடம் ஏன் சொல்கிறாள் என அவன் எண்ணிக்கொண்டான். ஆனால் அரசகுடியினர் அவ்வாறு மிக எளியவர்களிடம் அணுக்கம் காட்டுவதும் மறுமுறை பார்க்கையில் முகமே அவர்களுக்குத் தெரிந்திருக்காது என்பதும் அவன் அறிந்தவையே. “நீர் இன்று கேட்ட கதையைப்பற்றி என்ன நினைக்கிறீர்?” என்றாள் உத்தரை. “அரசி தமயந்தியின் கதை… நன்று” என்றான். “நான் இக்கதையை இதுவரை பதினைந்து வடிவங்களில் கேட்டிருக்கிறேன். இங்கே நாகவிறலி சொன்ன கதையில் அவள் கார்க்கோடகனின் நஞ்சு

படர்ந்து முதுமகளானாள். ஆகவேதான் அவளை சேதிநாட்டில் எவரும் அடையாளம் காணவில்லை” என்றாள் உத்தரை.

“ஆம், அதுவே பொருத்தமாகத் தெரிகிறது” என்றான் முக்தன். உத்தரை “அது நாகர்களின் கதை” என்றாள். “பீமகர் நாடுகளெங்கும் தேடியும் அவளை கண்டடைய முடியவில்லை. இறுதியில் தென்னகத்துக் கணியர் ஒருவரை அழைத்துவரச் செய்து அவள் பிறவிநூலை ஆராய்ந்தார். அவளுக்கு நாகக்குறை இருப்பதை அவர் கணித்துச் சொன்னார். அவள் ஆவணி மாதம் ஆயில்யம் மீன்பொழுதில் பிறந்தவள்.” முக்தன் “ஆம்” என்றான். “அவளை நாகம் கவ்வியிருப்பதை அவர் கண்டறிந்து சொன்னார். நாக கிரகணம் விலக பீமகர் விதர்ப்பத்தில் பெருவேள்வி ஒன்றை நிகழ்த்தினார். அதில் ஆயிரம் நாகங்கள் வந்து நிலம்கொத்தி ஆணையிட்டுச் சென்றன. இறுதியாக நிழலுருவாக வந்த கார்க்கோடகன் அவளைக் கொத்தியது தானே என்று ஒத்துக்கொண்டான்.”

சேடிகள் அப்பால் விலகி குரல் கேட்காத தொலைவில் நடக்க அவன் அவளுடன் தனியாக பேசிக்கொண்டு சென்றான். அது அவனுக்கு பதற்றத்தை அளித்தது. அதை ஒரு நூற்றுவர்தலைவன் நோக்கினால்கூட அவன் முற்றெதிரியாகிவிடுவான். அவனிடமிருந்து அரசகுடியினர் தன்னை காக்கவும் போவதில்லை. அவள் “கார்க்கோடகன் அவளிடமிருக்கும் தன் நஞ்சு அவளால் செரிக்கப்படுவதாகவும் அது முற்றிலும் மறையும்போது அவள் விடுபடுவாள் என்றும் சொன்னான். அப்போது அவள் தன்னுரு தெளியும், அவளை பிறர் எவரென்று அறிவர் என்றான். பீமகர் அதற்காக காத்திருந்தார்.”

“தமயந்தியின் உடல் மாறிக்கொண்டே இருப்பதை அகத்தளப் பெண்டிர் அனைவரும் அறிந்திருந்தனர். அவள் தோலின் சுருக்கங்கள் மறைந்தன. கூன் நிமிர்ந்துவந்தது. தளர்ந்த முகத் தசைகள் இறுகின. அவள் நாள்தோறும் இளமைகொண்டாள். புகைவிலகி சுடர் எழுவதுபோல அவளைப் பீடித்திருந்த ஒன்று அகன்றது. ஒருநாள் அவள் தன் படுக்கையில் துயின்றுகொண்டிருக்கையில் ஏதோ சொல்லக்கேட்டு உடன் துயின்ற சேடி எழுந்து நோக்கினாள். அவள் மலர்ந்த முகத்துடன் குரல் கனிந்து ஏதோ உரைத்தாள். அவள் கச்சு நனைய முலைப்பால் ஊறியிருந்ததை சேடி கண்டாள்.”

முக்தன் “ஆம் இளவரசி, இக்கதையை நான் இளமையில் கேட்டிருக்கிறேன்” என்றான். ஆனால் அக்கதையை அவன் அப்போதுதான் அறிந்தான். உத்தரை உளம் குலைந்துவிட்டாளோ என்னும் ஐயம் அவனுக்கு ஏற்பட்டது. “அப்போது அவள் முகத்தை நோக்கிய சேடி அவளை எங்கோ பார்த்திருப்பதை உணர்ந்தாள். மறுநாள் அவள் எழுந்தபோது மிக இளமையாக இருந்தாள். அரசி அவள் தமயந்தி என்பதை உடனே கண்டுகொண்டாள். அவள் முடிசூட்டு விழாவுக்கு அரசருடன் அவளும் சென்றிருந்தாள். தமயந்தி நிகழ்ந்த அனைத்தையும் உரைத்தாள். விதர்ப்பத்திற்கு செய்தியனுப்பப்பட்டது. அவளுடைய ஏழு இளவல்கள் பரிசில்களும் வரிசைகளுமாக வந்து அவளை அழைத்துச் சென்றனர். அவளைப் பற்றியிருந்த அரவுக்குறை முற்றிலும் விலக அவள் முன்னிருந்த எழிலை அடைந்தாள்.”

“ஆம்” என்றான் முக்தன். “முக்தரே, நானும் அரவுக்குறை கொண்டவள்தான், அறிந்திருப்பீர்” என்றாள் உத்தரை. அவள் அங்கே வந்துசேர்வதற்காகவே அதை சொல்லியிருக்கிறாள்

என்று முக்தன் உணர்ந்தான். அவன் தலையசைத்தான். “அதை ஆசிரியரிடம் சென்று சொல்லும். விதர்ப்பினியாகிய தமயந்திக்கு இணையாகவே குருவின் அருளுமிருந்தது. என்னுடையது முற்றான அரவுக்குறை. நான் மீள்வது கடினம்.” முக்தன் என்ன சொல்வதென்று அறியாமல் “இளவரசி…” என்றான். “இதை இவ்வண்ணமே சென்று சொல்க!” என்றாள் உத்தரை. “ஆணை” என்றான் முக்தன்.

அவர்கள் படிகளை அடைந்தனர். “நீர் உடன்வரவேண்டியதில்லை. அவர் குடிலருகே காவலிரும். அவர் வரும்போது நான் சொன்னவற்றை அப்படியே சொல்லும்” என்றாள் உத்தரை படிகளில் ஏறியபடி. “அவரை நீர் அறிவீர்” என்று அவனை நோக்காமல் சொன்னாள். அவன் “இல்லை, இளவரசி” என்றான். “என்னைப்போலவே நீங்களும் அவரை உற்றுநோக்கிக் கொண்டிருப்பவர். நான் பார்ப்பதன் மறுபக்கத்திலிருந்து.” அவன் நெஞ்சு படபடக்க “காவலனாக என் பணியை…” என்றான். அவள் இடைமறித்து “நான் அவரில் அகழ்ந்தெடுத்த உருவம் ஒன்று உண்டு. நீங்களும் அவ்வாறு ஒன்றை அகழ்ந்தெடுத்திருப்பீர்கள்” என்றாள்.

அவன் மூச்சை இழுத்துவிட்டு மறுமொழி சொல்லாமல் நின்றான். “ஆம், எப்போதும் மேலே தெரிவது இனியது. ஆழ்ந்திருப்பது ஒவ்வாதது” என்று உத்தரை சொன்னாள். அவன் அப்போதும் மறுமொழி சொல்லவில்லை. அவள் திரும்பி “சொல்க!” என்றாள். முக்தன் தொண்டையைச் செருமி குரலை திரட்டிக்கொண்டான். “இளவரசி, அது நீங்களும் உள்ளூர அறிந்ததே” என்று கூறியபோது அவன் சொற்கள் உருக்கொண்டன. “அந்த ஆழுருவமும் அவரால் நமக்கு அளிக்கப்படுவதே. அதுவும் பொய்யே.” அவள் உடலில் ஒரு

விதிர்ப்பை அவன் கண்டான். மாடிப்படியின் கைப்பிடியைப் பற்றியிருந்த கைகள் இறுகின.

“அவர் நம்முடன் விளையாடுகிறார். நாம் விரும்பவும் வெறுக்கவும் இரு தோற்றங்களை பூண்கிறார். அவற்றுக்கு அப்பால் அவர் யார்? அதை நம்மால் அறியவே முடியாது. எங்கோ எவரோ ஒருவரிடம் மட்டுமே முற்றிலும் திறந்துகொள்கிறார். அவ்வாறு திறந்துகொள்வது அவருக்கு தான் அளிக்கும் காணிக்கை என்று எண்ணுவதனால் பிறர் எவருக்கும் அதை அளிக்க மறுக்கிறார்.” அவள் திரும்பி நோக்கியபோது முகம் சீற்றம்கொண்டிருந்தது. மூச்சில் கழுத்துக்குழிகள் எழுந்தமைந்தன. “யார் அவள்?” என்றாள்.

“அது பெண்ணல்ல” என்றான் முக்தன். “அவர் ஓர் ஆண். அவரிடம் இவர் கொள்ளும் காதலே இவரில் பெண்மையென வெளிப்படுகிறது.” அவள் கலங்கிய கண்களுடன் அவனையே நோக்கிக்கொண்டிருந்தாள். “இந்த ஓராண்டும் நான் அவரையன்றி பிறிதொன்றை எண்ணவே இல்லை. என் தவம் இது” என்றான் முக்தன். “நீங்களும் அதையே செய்தீர்கள். ஆகவே நாமிருவரும் அவர் எவரென்று உள்ளூர அறிவோம்.” அவள் நீள்மூச்சுடன் ஒன்றும் சொல்லாமல் படிகளில் ஏறிச்சென்றாள்.

# நீர்க்கோலம் - 83

## 82. இருளூர்கை

கஜன் அரண்மனை அகத்தளத்தின் காவல் முகப்பை அடைந்து புரவியிலிருந்து இறங்கி அதன் கடிவாளத்தை

கையில் பற்றியபடி காவல் மாடம் நோக்கி சென்றான். அங்கு அமர்ந்திருந்த ஆணிலி காவலர்களில் ஒருத்தி எழுந்து வந்து "தங்கள் ஆணையோலை" என்றாள். "ஆணையோலை அளிக்கப்படவில்லை. இளவரசர் உத்தரர் இங்கு வந்து தன்னைப் பார்க்கும்படி என்னிடம் சொன்னார்" என்றான். அவள் விழிகள் குழப்பத்துடன் அலைந்தன. திரும்பி காவல் மாடத்திற்குள் இருந்த பிற ஆணிலிகளை நோக்கினாள். "என் பெயர் கஜன். வேண்டுமென்றால் உங்களில் எவரும் உள்ளே சென்று இளவரசர் உத்தரரிடம் அவர் என்னை வரச்சொன்னாரா என்று கேட்டு வரலாம். அதுவரை நான் இங்கு காத்திருக்கிறேன்" என்றான்.

காவல் மாடத்திலிருந்து எழுந்து வந்த இன்னொரு ஆணிலி "ஆம், சென்று கேட்டு வருவோம். இவரை திருப்பி அனுப்பினால் வந்து நம்மிடம் பூசலிடுவார்" என்றாள். முதலில் வந்த ஆணிலி "இங்கு நின்றிருங்கள். நான் சென்று உசாவி வருகிறேன்" என்றபின் வேலை கையிலெடுத்துக்கொண்டு அரண்மனை அகத்தளத்திற்குள் புகுந்து மறைந்தாள். கைகளை மார்பில் கட்டியபடி இடைநாழிகளையும் உப்பரிகைகளையும் கூர்ந்து நோக்கி கஜன் நின்றான். சற்று நேரத்தில் அவள் வெளியே வந்து அவனை நோக்கி நடந்து வந்தாள். அவ்வருகையிலேயே உத்தரன் என்ன சொல்லியிருப்பான் என்பதை உணர்ந்து தன்னையறியாமல் கஜன் புன்னகைத்தான்.

ஆணிலி அவனை வணங்கி "மூன்றாவது தளத்தில் சேடியர்கள் கூடத்தில் அமர்ந்திருக்கிறார். அங்கு செல்லும்படி ஆணை" என்றாள். கஜன் "நன்று" என்றபின் புரவிக் கடிவாளத்தை அவளிடம் ஒப்படைத்துவிட்டு செங்கல் பரப்பிய முற்றத்தில் விரைவிலாது நடந்தான். தன் பின்னால் ஆணிலிக் காவலரின்

நோக்கு பதிந்திருப்பதை அவனால் உணர முடிந்தது. படிகளிலேறி அகத்தளத்திற்குள் நுழைந்ததும் அவ்வுணர்விலிருந்து விடுபட்டான். உடலை எளிதாக்கி விழிகளை ஓட்டி அந்தக் கூடத்து அமைப்பை பார்த்தான். வலப்பக்கமிருந்த படிக்கட்டு வளைந்தேறி முதல் தளத்திலிருந்த உப்பரிகையை நோக்கி சென்றது. அதில் ஏறி மேலே சென்றதும் அதன் இருபக்கமும் வளைந்து சென்ற இடைநாழிகளை பார்த்தான். எந்தத் திசை நோக்கி செல்வது என்று குழம்பி அங்கு நின்றான்.

கையில் தாலங்களுடன் எதிரே வந்த நடுஅகவைச் சேடி அவனைக் கண்டதும் விழிகள் சுருங்க நடைவிரைவு தாழ அருகே வந்து "யார்? இங்கு எப்படி வந்தீர்?" என்றாள். "நான் இளவரசியின் ஆசிரியர் பிருகந்நளையின் அணுக்கன். அவரது ஆணை பெற்று இங்கு வந்தேன்" என்றான். அவள் "யாரை பார்க்கவேண்டும்?" என்றாள். அவள் ஐயம் விலகவில்லை என்று தெரிந்தது. "இங்கு அரண்மனைச் சேடியாக உள்ள ஒருத்தியை. அவள் அரசியின் சைரந்திரியின் துணைவி. அவளுடன் கரவுக்காட்டிற்கு வந்திருந்தாள்" என்றான். "அவள் பெயர் தெரியாதா?" என்றாள். "ஆசிரியருக்கே அவள் பெயர் தெரியாது. இங்கு பொறுப்புள்ள ஏதேனும் பெண்மணியிடம் அவளைப்பற்றி விசாரிக்கச் சொன்னார். பெயர் தெரிந்திருந்தால் அவளை வரச்சொல்லும்படி ஓலையனுப்பியிருப்பாரே?" என்றான் கஜன்.

அவள் விழிகளில் மேலும் ஐயம் கூடியது. "கரவுக்காட்டிற்கு பலர் வந்தனர்" என்றாள். "ஆம், ஆனால் அரசியும் சைரந்திரியும் வந்த அதே தேரில் இவளும் இருந்தாள். அப்போது நான் ஆசிரியரின் அருகே இருந்தேன்" என்றபின் "மாநிறமானவள்.

நீளமுகம், மெல்லிய உடல், சுருள்கொண்ட நீண்ட கூந்தல்” என்றான். அவள் முகம் புன்னகையில் மலர்ந்தது. “துணிந்து பொய்யுரைத்து இத்தனை தொலைவு வந்திருக்கிறீர். இன்னும் சற்று அழகிய விவரணைகள் அளிக்கலாமே? காவியங்கள் படிப்பதில்லையோ?” என்றாள். “பொய்யல்ல” என்று அவன் சொன்னான். “வீரரே, என்னால் கண்களில் காதலை பார்க்க முடிகிறது” என்றாள் அவள்.

அவன் புன்னகைத்து “அக்கா, உன்னை நம்பி வந்தேன்” என்றான். “ஏன், என்னை உனக்கு முன்னால் தெரியுமா?” என்றாள். “இப்போது தெரிந்துகொண்டேன். ஆனால் என்மேல் அன்புகொண்ட அக்கையொருத்தி இங்கிருப்பாள் என என் உள்ளாழத்தில் தோன்றியிருந்தது” என்றான். அவள் மீண்டும் நகைத்து “உனக்கு பேசத் தெரிகிறது. எவர் பெயரைச் சொல்லி உள்ளே நுழைந்தாய்? பிருகந்நளை பெயரை சொல்லமுடியாது” என்றாள். “உத்தரர் பெயரை” என்றான். “நம்பமாட்டார்களே?” என்றாள். “என் பெயரைச் சொல்லி சென்று அவரிடமே கேட்டுப் பாருங்கள் என்றேன். கேட்டுப் பார்த்தபோது அவரே உள்ளே வரும்படி ஆணையிட்டார்.”

அவள் புருவம் சுருங்க அவனை நோக்கினாள். “எவர் எந்தப் பெயரைச் சொல்லி எதைச் சொன்னாலும் ஆம் நான் சொன்னேன் என்றுதான் அவர் சொல்வார். முந்தைய கணத்தை முற்றிலும் மறப்பது அவரது இயல்பு” என்றான். அவள் வாய்விட்டு நகைத்து “நன்று. இனி நானும் அதை பயன்படுத்திக்கொள்கிறேன்” என்றாள். “அவள் பெயர் என்ன, அக்கையே? உங்களுக்குத் தெரியும்” என்றான். “நீ சொல்லத் தொடங்கியபோதே தெரியும்” என்று அவள் சொன்னாள். “நீங்கள்

கூர்மையானவர்கள். கூர்மையான பெண்கள் அழகிகளாக இருப்பதில்லை. அதற்கும் விதிவிலக்கு” என்றான்.

“இதோ பார், பெண்களுக்கு புகழ்ச்சி பிடிக்கும். ஆனால் சற்று நுண்ணுணர்வோடு அதை செய்யவேண்டும்” என்றாள். “நான் என்ன பிழை செய்தேன்?” என்றான். “முதலில் என் பெயரை கேட்டிருக்கவேண்டும் அல்லவா? அக்கை என்றாய். பெயர்கூடத் தெரிய வேண்டாமா?” என்றாள். “ஆம், உங்கள் பெயர் என்ன?” என்றான். “மீண்டும் நாம் சந்திக்கும்போது என் பெயரை நினைவில் கொள்ளமாட்டாய்” என்றாள். “அதெப்படி அக்கா? மீண்டும் நாம் நாளையே சந்திப்போம் அல்லவா?” என்றான். அவள் திகைத்து “நாளையா? எங்கே?” என்றாள். “இங்குதான்” என்றான் அவன். “இங்கா?” என்றாள் குழப்பத்துடன். “நீங்கள் வரச்சொன்னீர்கள் என்று உள்ளே வந்துவிடுவேனல்லவா?” என்றான்.

அவள் நகைத்து “அடப்பாவி, தலைக்கு தீங்கு கொண்டுவந்துவிடுவாய் போலிருக்கிறதே!” என்றாள். “என் பெயர் முரளிகை” என்றாள். “நல்ல பெயர். காட்டு மூங்கிலின் இசையொன்றை நினைவில் எழுப்புகிறது.” முரளிகை சிரித்து “அவள் பெயர் சுபாஷிணி” என்றாள். “ஆம், இனிய குரலுள்ளவள்” என்றான். “அவளுக்கு தண்மொழி என்றே என் உள்ளத்தில் பெயரிட்டிருந்தேன்.” அவள் “இதற்குமேல் நீ வருவது நன்றல்ல. அரசகுடியினரல்லாத ஆண்கள் உள்ளே நுழையலாகாது. இச்சிறுகூடத்தில் இரு. அவளை வரச்சொல்கிறேன்” என்றாள். “அவள் சற்று நோயுற்றிருந்தாள். ஓரிரு நாட்களாக தேறி வந்திருக்கிறாள்.”

“நோயுற்றா?” என்று அவன் கேட்டான். “மூதன்னையர் அவள் உடலில் வந்துகொண்டே இருந்தார்கள். உணவும் நீருமின்றி

அலைபாய்ந்த சித்தத்துடன் இருந்தாள். உன்னைக் கண்டபின் அவள் நிலைகொள்ளக்கூடும்” என்றபின் “அமர்க, வருகிறேன்” என்று சொல்லி உள்ளே சென்றாள். அவன் அந்தச் சிற்றறையின் உயரமற்ற பீடத்தில் அமர்ந்தான். சற்று நேரத்தில் வெளியே சிலம்பின் ஒலி கேட்டது. உள்ளம் படபடக்க அவன் எழுந்து பின் அமர்ந்தான். பதற்றத்துடன் மீண்டும் எழுந்தான்.

கதவு திறந்து சுபாஷிணி நுழைந்தபோது திகைத்தவனாக ஒரு அடி பின்னால் வந்து பீடத்தில் கால்தட்ட மீண்டும் அமர்ந்துகொண்டான். அவள் உள்ளே வந்து விழிகளை ஓட்டி பின் அவனைப் பார்த்து ஒருகணத்திற்குப்பின் அடையாளம் கண்டுகொண்டு “நீங்களா?” என்றாள். “ஆம், உன்னை பார்ப்பதற்காகத்தான் வந்தேன்” என்றபடி எழுந்துகொண்டான். அவள் முகத்தைப் பார்த்து “உனக்கு என்ன செய்கிறது?” என்றான். “இல்லையே, நான் நன்றாகத்தான் இருக்கிறேன்” என்றாள். “இல்லை, நோயுற்றிருக்கிறாய். உன் முகத்தின் ஒளி பெரிதும் குறைந்துவிட்டது. உன் கண்கள் அலைபாய்கின்றன.”

அவள் விழிகளில் நீர் நிறைய தலைகுனிந்து “அறியேன். என்னால் நன்றாகத் துயில முடியவில்லை” என்றாள். அவன் அவளை நோக்கியபடி சில கணங்கள் நின்றான். அவள் உடல் வண்ணத்துப்பூச்சி இறகுபோல அதிர்ந்து கொண்டிருப்பதாகத் தோன்றியது. அவன் ஒன்றும் சொல்லாததைக் கண்டு அவள் விழிதூக்கி “தாங்கள் என்னைப் பார்க்க வந்தீர்கள் என்று அக்கை சொன்னாள்” என்றாள். “ஆம், உன்னைப் பார்க்கும்பொருட்டே இத்தனை தொலைவு வந்தேன்” என்றான். “ஏன்?” என்றாள். “நீ கேட்ட முதல் வினாவிலேயே நான் சொல்ல வந்ததை சொல்லலாகாது என்ற முடிவுக்கு வந்தேன்” என்றான். அவள் கண்கள் திகைக்க “நான் என்ன கேட்டேன்?”

என்றாள். “நீங்களா என்றாய்.” அவள் தலையசைத்தாள். “அவ்வாறென்றால் நீ பிறிதொருவரை எதிர்பார்த்திருந்தாய்.” அவள் “அய்யோ, இல்லை” என்றாள். “ஆம், பிறிதொருவரை… நீ அறியாமல் அவனைக் காத்திருந்தாய்.”

அவள் திரும்பி கதவை பார்த்துவிட்டு “இல்லை” என்றாள். அவன் “சொல், யார் அவர்?” என்றான். “நான் செல்கிறேனே” என்று அவள் மெல்ல அசைந்தாள். “நீ பிறிதொருவரை எதிர்பார்த்தாய்” என்றான். “இல்லை” என்று அவள் மூச்சுத் திணறினாள். “உன்னிடம் அக்கை என்ன சொன்னாள்?” அவள் “என்னைப் பார்க்க காதலுடன் ஒருவர் வந்திருப்பதாக” என்று தாழ்ந்த குரலில் தரையைப் பார்த்தபடி சொன்னாள். “யார் அப்படி காதலுடன் வரவேண்டுமென்பது உன் கனவு?” என்று கஜன் கேட்டான். அவள் இல்லை என்று தலையசைத்தாள். “அஞ்சாதே. என் விழிகளைப் பார்த்து சொல். அது எவராக இருந்தாலும் நானே அவரிடம் சென்று சொல்கிறேன்.”

அவள் நிமிர்ந்து பார்த்து “நான் அச்சம் கொள்ளும்போதெல்லாம் அவர் என் கனவில் வருகிறார்” என்றாள். “யார்?” என்றான். “அடுமனைச் சூதர் சம்பவர்.” அவன் உடல் முழுக்க ஓர் அதிர்வை உணர்ந்தான். கைகளை என்ன செய்வது என்று அறியாததுபோல் மார்மேல் கட்டிக்கொண்டான். நெஞ்சக்கூட்டை உள்ளிருந்து அறைந்த இதயத்தின் ஒலியை அவ்வாறு அழுத்திக்கொள்ள முடிந்தது. ஓரிரு கணங்கள்தான். ஆனால் நெடுந்தொலைவைக் கடந்து அங்கு மீண்டும் வந்தான். “ஆம், அவர்தான் உனக்குப் பொருத்தமானவர். அவரிடம் நான் சொல்கிறேன்” என்றான். “இல்லை, அப்படியெல்லாம் இல்லை” என்று அவள் சொன்னாள்.

“அஞ்சாதே, எப்படி சொல்ல வேண்டுமென்று எனக்குத் தெரியும். உன்பொருட்டு என்னால் அதை சொல்லவும் முடியும்” என்றான் கஜன். “நான் மிகவும் அஞ்சுகிறேன். என்னால் இங்கு இருக்க முடியாது. என்னை இங்கிருந்து அழைத்துச் செல்வாரென்றால்…” என்று அவள் தழுதழுத்த குரலில் சொல்ல அவன் புன்னகையுடன் “நீ இருக்கவேண்டிய இடம் அவரது இல்லம். ஒவ்வொரு நாளும் உடலுழைப்பு நிகழும் சூழல். கைகளால் உணவை உருவாக்கி குவிப்பாய். அள்ளி அள்ளி பரிமாறி பசி போக்குவாய். நீ கொள்ளும் துயரனைத்தும் மறையும்” என்றான்.

அவள் “உம்” என்றாள். “இனிய மைந்தர். மிகப் பெரிய குடும்பம்… அங்குதான் நிறைவடைவாய். பெற்றுப்பெருகி பேரன்னையென்று முதிர்ந்து கனிவாய்” என்றான். அவள் விழிகள் நிறைந்தன. “நான் அவரிடம் சொல்கிறேன்” என்றான். “வேண்டாம். நான் என்ன சொல்கிறேன் என்றே அவருக்குத் தெரியாமல் போகலாம்” என்றாள். “அவருக்கும் தெரியும்” என்று அவன் சொன்னான். அவள் நிமிர்ந்து பெரிய விழிகளுடன் அவனை பார்த்தாள். “அவருக்குத் தெரியும் என்று எனக்குத் தெரியும்” என்றான். “எப்படி?” என்றாள். “அடுமனையாளர் சம்பவன் என்று சொன்னதுமே அதை நான் வியப்பின்றி எதிர்கொண்டேனல்லவா அவ்வாறுதான்” என்றான் கஜன். பின்னர் “அஞ்சாதே, ஓரிரு நாட்கள் மட்டுமே” என்றபின் திரும்பி நடந்தான்.

படிகளில் இறங்குகையில் ஒவ்வொரு காலடிக்கும் அவன் தளர்ந்துகொண்டிருந்தான். ஓடி வெளியே சென்று தன் புரவியை எடுத்துக்கொண்டு நகரத் தெருக்களில் வெறி பிடித்தவன்போல பாயவேண்டுமென்று தோன்றியது.

அவ்வெண்ணம் எழுந்ததுமே அவ்வாறு நகரத் தெருக்களில் வெறிகொண்டு சீறிச்செல்லும் தன் புரவியை அவன் கண்ணால் கண்டுவிட்டான். அதன் பின் உடலை உந்தி எடுத்து வைத்த ஒவ்வொரு காலடியும் நூறு கைகளால் அழுத்தப்பட்டிருந்ததாக எடை கொண்டிருந்தது. மூச்சு இழுத்துவிட்டும் இமைகளைக் கொட்டியும் தன் கணங்களை ஒன்றன்மேல் ஒன்றென அடுக்கி காலத்தை உருவாக்கியபடி அவன் நடந்தான்.

கஜன் படிகளில் இறங்கி வெளியே வந்தபோது அரண்மனை முகப்பில் புரவிகள் நின்றிருக்க அருகே உத்தரன் நான்கு ஏவலருடன் நின்றிருப்பதை கண்டான். இயல்பாகத் திரும்பி நோக்கிய உத்தரன் கஜனைக் கண்டு "நீ யார்?" என்றான். அத்தனை காவலரும் அவனை நோக்கினர். கஜன் அவனருகே சென்று தலைவணங்கி "தங்கள் ஆணைப்படிதான் இங்கு வந்தேன்" என்றான். "ஆம், நான் உன்னை ஒரு முதன்மையான செயலுக்காகவே அழைத்தேன். வருக!" என்றபின் உத்தரன் தன் புரவியை நோக்கி சென்றான். "என் புரவி வெளியே நிற்கிறது, அரசே. நான் தங்களைத் தொடர்ந்து..." என்று அவன் சொல்லத்தொடங்க "அது அங்கு நிற்கட்டும். நீ இந்தப் புரவியில் ஏறிக்கொள்" என்று இன்னொரு புரவியைக் காட்டியபடி உத்தரன் தன் புரவிமேல் ஏறிக்கொண்டான்.

இருவரும் பெருஞ்சாலைக்கு வந்தனர். உத்தரன் "நாம் எங்கு செல்கிறோம் என்று தெரியுமா?" என்றான். அவன் உவகை பொங்கும் நிலையிலிருப்பதை கஜன் புரிந்துகொண்டான். "தாங்கள் இன்று உவகையுடன் இருக்கிறீர்கள், இளவரசே" என்றான் "ஆம். இன்றல்ல, சென்ற பல நாட்களாகவே நான் உவகையில் நிறைந்திருக்கிறேன். ஏனெனில் ஒவ்வொன்றும் எழுந்து தானாகவே அமைந்து என்னை அரியணை நோக்கி

கொண்டு செல்கின்றன” என்றான் உத்தரன். கையை நீட்டி “மூடா! நீ என்னைப்பற்றி என்ன நினைத்தாய்? எண்ணிக்கொள், ஒருநாள் இதே நகரியில் நான் ராஜசூயப் பெருவேள்வி நடத்துவேன். சத்ராஜித் என்று என்னை பேரரசர்கள் மணிமுடி தாழ்த்தி வணங்குவார்கள்” என்றான்.

கஜன் “அதிலென்ன வியப்பிருக்கிறது? நான் சிறுவனாக இருக்கும்போதே இதை கேள்விப்பட்டிருக்கிறேன்” என்றான். “எதை?” என்றான் உத்தரன் ஐயத்துடன். “தாங்கள் சத்ராஜித்தாக மணிமுடி சூட்டிக்கொள்வதற்கென்றே பிறந்தவர் என்று நிமித்திகர்களும் சூதர்களும் பாடுவதுண்டு. அவ்வாறு நிகழாது போனால்தான் அது வருத்தத்துக்குரியது” என்றான் கஜன். ஒருமுறை அவனை ஓரக்கண்ணால் பார்த்தபின் உத்தரன் சாலையைப் பார்த்து “ஆம், ஒவ்வொன்றும் அமைந்து வருகிறது. இன்று கலிங்கத்திலிருந்து அரசக்குழு ஒன்று வருகிறது. அறிந்திருக்கிறாயா?” என்றான். கஜன் “இல்லை. நான் எளிய காவலன்” என்றான். “ஆம், இது அரசவைக்கு மட்டும் தெரிந்தது. உனக்கு நான் சொல்கிறேன்” என்றான் உத்தரன். “ஆம், என்னை தங்கள் நல்லியல்பால் மதித்து இவ்வரிய செய்தியை சொல்கிறீர்கள்” என்றான் கஜன்.

உத்தரன் உரக்க நகைத்து “ஆம், நான் எப்போதுமே அப்படித்தான். பெரியோர் சிறியோர் என்னும் வேறுபாடு என் உள்ளத்தில் இல்லை. தகுதி உடையவர்களை அணுக்கர்களாகக் கொள்வேன்” என்றான். “அதை அறியாத எவரும் இந்த நகரில் இல்லையே” என்றான் கஜன். “தூதுக்குழு எதன்பொருட்டு வருகிறது தெரியுமா?” என்று உத்தரன் மீண்டும் கேட்டான். “தங்களை சந்திக்கும்பொருட்டு” என்றான் கஜன். “ஆம், என்னையும் அவர்கள் சந்திக்கிறார்கள். ஆனால் என்பொருட்டே

அவர்கள் இன்று வருகிறார்கள். கலிங்க இளவரசியின் உடன்பிறந்த இளவரசர் மூவர் தலைமை அமைச்சருடன் வருகிறார்கள். இன்றே அவையில் அவர்கள் தங்கள் மணஏற்பை அறிவிப்பார்கள். மங்கலப் பேச்சுக்குரிய வரிசையும் பரிசிலும் கொண்டு அவர்கள் வருகிறார்கள். அவர்களின் மணஏற்பை தந்தை ஏற்று மணநாள் முடிவை அறிவிப்பார். அவர்களுக்கு நாங்கள் பரிசும் வரிசையும் செய்வோம்" என்றான் உத்தரன்.

"இன்றுடன் நான் கலிங்க இளவரசியை மணக்கவிருக்கும் செய்தி உறுதிப்படுத்தப்படும். நாளைமறுநாள் அனைத்து ஷத்ரிய அரசர்களுக்கும் மண அறிவிப்பு ஓலைகள் சென்று சேரும். ஒவ்வொருவரும் அந்த ஓலையை கையில் வைத்துக்கொண்டு என்ன எண்ணுவார்கள் என்று கற்பனை செய்து பார்த்தேன்." புரவியை கடிவாளத்தை இழுத்து நிறுத்தி அவன் உரக்க நகைத்தான். "எத்தனை முகங்கள் சுருங்கும். எவரெவரெல்லாம் நெஞ்சில் அறைந்துகொண்டு விம்முவார்கள்... எண்ணவே உளம் கிளர்கிறது" என்றான். "ஏன்?" என்றான் கஜன். "மூடா, கலிங்கமும் விராடமும் ஒன்று சேர்ந்தால் இப்பகுதியில் எவர் என் எழுச்சியை தடுத்து நிறுத்த முடியும்? விராடம் பேரரசாவதை ஊழை ஆளும் தெய்வம் முடிவுசெய்துவிட்டதென்றே பொருள்."

"இளவரசே, இது தங்கள் பெருந்தன்மையால் தாங்கள் சொல்லிக்கொள்வது. எங்களைப்போல விராடகுடிகளுக்குத் தெரியும், பாரதவர்ஷத்தின் பிற நாடுகள் அனைத்தும் ஒன்று திரண்டு எதிர்த்தாலும் தாங்கள் முன்நின்று களம்கண்டால் விராடப் படைகள் சுழல்காற்று சருகுகளை என அவற்றை வெல்லும் என்று" என்றான் கஜன். "தாங்கள் பேரரசராக

மணிமுடி சூடி அமர்வதென்பது தங்கள் பிறப்புக்கு முன்னரே ஊழ் முடிவெடுத்த ஒன்று. அதை கலிங்கமோ சதகர்ணிகளோ எவரும் மாற்ற முடியாது.” உத்தரன் தலைதிருப்பிக்கொண்டு இயல்பாக “ஆம், அதுவும் உண்மைதான்” என்றான்.

கஜன் “ஆனால் எப்படியென்றாலும் தங்கள் தகுதிக்குரிய பேரரசி இங்கு வருகிறார்கள் என்பது எங்களுக்கு நிறைவூட்டுகிறது. நாளை தாங்கள் மணிமுடி சூடி அமர்கையில் தங்கள் அருகே அமரும் அழகும் நிமிர்வும் அவருக்கும் இருக்கவேண்டுமல்லவா?” என்றான். “ஆம், நான் அதில்தான் குறிப்பாக இருந்தேன். ஏராளமான மணத்தூதுகள் வந்தன. எதையும் நான் ஏற்கவில்லை. பாரதவர்ஷத்தின் ஐம்பத்தாறு முதன்மை அரசுகளில் ஓர் அரசின் இளவரசி மட்டுமே என்னால் ஏற்கப்படுபவள் என்று தெளிவாகவே தந்தையிடம் தெரிவித்துவிட்டேன்” என்றான் உத்தரன். “காலமுதல்வர் தங்கள் பணியென்ன என்று அறிந்தவர்” என்றான் கஜன்.

அவர்கள் புறக்கோட்டை காவல் மாடம் ஒன்றை கடந்தனர். அதில் பெருமுரசு முழங்கிக்கொண்டிருந்தது. வெவ்வேறு இடங்களில் முரசுகள் எதிரொலித்தொடர் என முழங்கின. ஏழு காவல் வீரர்கள் புரவிகளில் கொக்குக் கூட்டம்போல மிதந்து கடந்து சென்றனர். தெற்குப் பெருவீதியின் இருபுறமும் மாளிகைகள் மலர்களாலும் தளிர்த்தோரணங்களாலும் அணி செய்யப்பட்டிருந்தன. சாலைகள் முழுக்க தோரண வளைவுகள் அமைக்கப்பட்டு அவற்றின்மேல் கலிங்கத்தின் சிம்மக்கொடியும் விராடபுரியின் காகக்கொடியும் பறந்தன. மலர்த்தூண்களும் அவற்றிலாடிய பட்டுத் திரைச்சீலைகளும் அணிப்பாவட்டாக்களும் மலர்க்காடு என விழிமயங்க வைத்தன.

உத்தரன் “கலிங்கத் தூதுக்குழுவினருக்கான வரவேற்பு அணிச்செய்கைகள்” என்றான். “மூன்று நாள் முன்னதாகவே நகரில் முரசறைந்து அனைவருக்கும் செய்தியை அறிவித்துவிட்டிருக்கிறோம். இன்று நகரமே பொலிந்து தூதுக்குழுவை வரவேற்க ஒன்றுகூடும். அந்தியில் குடியவையில் அத்தனை குடித்தலைவர்களும் வந்து அமர்வார்கள். அவர்களின் அரசியின் பெயரை அவர்கள் அறியும் முதற்தருணம் அது. வரலாற்றின் ஒரு பகுதியாக இருப்பதற்கான வாய்ப்பு என்பதை அவர்கள் அறிவார்கள்.” கஜன் “அந்த வாய்ப்பு எனக்கும் கிடைத்திருக்கிறது” என்றான்.

குதிரைக்கொட்டிலை நோக்கிச்செல்லும் பாதையை நோக்கி திரும்பிய உத்தரன் “நான் இங்கு எதற்காக வந்திருக்கிறேன் தெரியுமா?” என்றான். “புரவிப்பயிற்சிக்காக” என்றான் கஜன். “தாங்கள் பயில வேண்டியது ஒன்றுமில்லையென்றாலும் எப்போதும் பயிற்சியை விட்டுவிடுபவரல்ல. அஸ்தினபுரியின் வில்விஜயன் ஒவ்வொரு நாளும் புலரியில் வில்தொட்டு பயிற்சி எடுப்பான் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்.” உத்தரன் “ஆம், பயிற்சியை நான் தவறவிடுவதில்லை” என்று சொன்னான். “ஆனால் இன்று வெறும் பயிற்சிக்காக நான் வரவில்லை. காரகனில் ஏறிக்கொண்டு நகர் வீதிகளில் சுற்றிவர எண்ணுகிறேன்.”

“ஆனால் காரகன்…” என்று கஜன் சற்று தயங்க உத்தரன் “இன்று அவன் கன்றுக்குட்டிபோல என் கைக்கு அடங்குகிறான். கலிங்கத் தூதுக்குழு கோட்டைவாயிலுக்குள் நுழைந்து மங்கல இசையுடனும் குரவையொலியுடனும் அரண்மனை நோக்கி சென்று கொண்டிருக்கும்போது அவர்களை மின்னல்போலக் கடந்து ஒரு கரும்புரவி செல்லும். அவர்கள் திகைப்புடன்

ஒருவரை ஒருவர் நோக்க அமைச்சர்கள் அதுதான் முடிசூடி நாட்டை ஆளப்போகும் இளவரசர் உத்தரர் என்பார்கள். பயிற்சி முடிந்து விரைந்து அரண்மனைக்குச் செல்கிறார். நாம் அங்கு செல்வதற்குள் நீராடி ஆடை மாற்றி அரசணிக்கோலத்தில் அவைக்குச் சென்றுவிடுவார். நாம் அவையில் அவரைப் பார்க்கும்போது அப்போது வரைந்து முடிக்கப்பட்ட அணிஓவியம்போல் இருப்பார் என்பார்கள்" என்றான்.

"ஆம், மாவீரர்கள் ஒன்றுக்கு மேற்பட்ட முகங்கள் கொண்டவர்கள்" என்றான் கஜன். "மூடா! மூடா!" என உத்தரன் நகைத்தான். "உண்மையை சொல்கிறாய். காரகனைப்போன்ற ஒரு புரவியை அவர்கள் பார்த்திருக்கமாட்டார்கள். அப்பெரும்புரவிமேல் ஏறிச்செல்கையில் நான் யாரென்பதை பிறிதெவ்வகையிலும் அறிவிக்க வேண்டியதில்லை அல்லவா?" என்றான். "ஆம், உண்மை" என்று கஜன் சொன்னான். "இணையான புரவியில் கிரந்திகன் தங்களைத் தொடர்ந்து வருவான். தங்கள் ஏவலரும் எத்தனை ஆற்றல் மிக்கவர்கள் என்பதை அவர்கள் அறியட்டும்." அவனை திரும்பி நோக்கியபின் "ஆம்" என்று உத்தரன் சொன்னான்.

குதிரைக்கொட்டிலின் முற்றத்தில் அவர்கள் சென்றிறங்கியபோது எவரும் இருக்கவில்லை. அவர்களை வரவேற்க சற்று பொழுது கழிந்தே உள்ளிருந்து நாமர் ஓடி வந்தார். "எங்கே குதிரைக்காரர்கள் அனைவரும்?" என்றான் உத்தரன் இறங்கியபடி. "புரவிப்பயிற்சிக்காக காட்டுக்கு சென்றிருக்கிறார்கள். இன்று கலிங்கத் தூதுக்குழு வருவதனால் தாங்கள் வர வாய்ப்பில்லையென்று சொல்லப்பட்டது" என்றார் நாமர். "யார் சொன்னது? நான் சொல்லாமல் யார் சொன்னது?" என்று உத்தரன் கேட்டான். "இளவரசே, தங்கள் அரண்மனையில்

தாங்களேதான் சொன்னீர்கள்” என்றார் நாமர். “நானா? நான் சொன்னேனா?” என்றான் உத்தரன். “ஆம், இளவரசே. என்னிடம் சொன்னீர்கள்” என்றார் நாமர்.

கஜன் கண்காட்ட அதை புரிந்துகொண்டு நாமர் “ஆனால் வரக்கூடும் என்றும் சொல்லப்பட்டது. நான் பிழையாக புரிந்துகொண்டேன்” என்றார். “என் நினைவு பிறழ்வதில்லை…” என்று உத்தரன் சொன்னான். “சரி, கிரந்திகனை அழைத்து வா. காரகன் உடனே ஒருங்கட்டும். நான் இப்போதே கிளம்பவேண்டும்.” நாமர் “கிரந்திகன் இங்கே இல்லை. அவர்தான் புரவிகளுடன் காட்டுக்கு சென்றிருக்கிறார்” என்றார். “அவன் எதற்கு காட்டுக்கு செல்லவேண்டும்?” என்றான் உத்தரன். “குதிரைகளுடன்…” என்று நாமர் சொல்ல இடைமறித்து “அவனை உடனே காட்டிலிருந்து அழைத்துவர ஆணையிடுகிறேன்” என்றான் உத்தரன். “இளவரசே, காடு இங்கிருந்து தொலைவில் இருக்கிறது. அவர்களை அழைத்து வருவதென்றால் பத்து நாழிகையாவது ஆகும்” என்றார் நாமர்.

உத்தரன் பொறுமையை இழந்து “காரகனை பூட்டி அழைத்து வாருங்கள்… உடனே” என்றான். “காரகனை…” என அவர் தயங்க “சொன்னதை செய்… செல்!” என்று உத்தரன் கூவினான். நாமர் உள்ளே செல்ல கஜன் உடன்சென்றான். நாமர் “என்ன சொல்கிறார்? காரகன் இவரை கடித்தே கொன்றுவிடும்” என்றான். “இல்லை, நான் ஒரு வழி வைத்திருக்கிறேன்” என்றான் கஜன். “வருக, சொல்கிறேன்.”

காரகன் அவர்கள் தன்னை நெருங்குவதை முன்னரே உணர்ந்து செவிகளை பின்னால் கோட்டி முன்னங்காலால் கற்தரையைத் தட்டி மூச்சு சீறியது. அதன் உடலில் தசைகள் விதிர்த்து அசைந்தன. கஜன் அதனருகே சென்று அதன் கீழ்க்கழுத்தை

வருடினான். அது கழுத்தை வளைத்து தலையைத் திருப்பி அவன் தோளை நக்கியது. அவன் “சேணத்தை கொண்டுவாருங்கள்” என்றான். நாமர் “சேணத்தையா? இந்த மூடன் விழுந்து செத்துவிடுவான்… இதை என்னவென்று எண்ணினாய்? குதிரையல்ல, சிம்மம் இது” என்றார்.

“அவர் ஏறப்போவதில்லை… நான் ஒரு சூழ்ச்சி செய்யவிருக்கிறேன்” என்றான் கஜன். நாமர் சேணத்தை எடுத்துவந்து புரவிமேல் போட்டார். அதன் நாடாக்களை அவர் இழுத்துக் கட்டியபோது முதல் நாடாவை எடுத்து காரகனின் முன்வலக்காலைச் சுற்றி கட்டினான் கஜன். “என்ன செய்கிறாய்?” என்றார் நாமர். “அது நடக்கையில் சற்று நொண்டும்” என்றான் கஜன். நாமர் முகம் மலர்ந்து “ஆம், அது நன்று. அவரிடம் காட்டுவோம்” என்றார்.

அவர்கள் புரவியுடன் கொட்டில் முகப்புக்கு வந்தனர். நாமர் “உண்மையில் இவரைப் பார்க்கும்போதுதான் வாழ்க்கைமேல் நம்பிக்கையே வருகிறது. எக்குலத்தில் பிறந்தாலும் மூடன் மூடனே…” என்றார். காரகன் முன்னங்காலை இழுத்து இழுத்து வைத்து நடந்து வந்தது. “அதற்கு என்ன நிகழ்கிறது என்று புரியவில்லை” என்றார் நாமர்.

உத்தரன் உரத்த குரலில் “மூடர்களே, அங்கே என்ன செய்கிறீர்கள்? விரைந்து வருக!” என்றான். கஜன் “அரசே, காரகனைக் காட்டவே கொண்டுவந்தோம். அதன் குளம்பு ஒன்று விரிந்துள்ளது. கமுக்கட்டில் வலி இருக்குமென நினைக்கிறேன். இன்று அது ஊர்வதற்கு உகந்தது அல்ல” என்றான். நாமர் “சந்திரிகை என்னும் அழகிய வெண்புரவி உள்ளது. விரைவானவள். தாங்கள் ஆணையிட்டால் அவளை இப்போதே ஒருக்கிக் கொண்டுவருவேன்” என்றார்.

ஒருகணம் தயங்கி காரகனின் கால்களை நோக்கிய உத்தரன் “இதுவே போதும்…” என்றான். “இது ஓடவியலாது, இளவரசே” என்றான் கஜன். “கால் சற்று நொண்டுவதும் நன்றே… கிரந்திகன் இல்லை என்பதனால்…” என்ற உத்தரன் “நான் நகருக்குள் செல்கிறேன். அவன் இருந்தால் எதிரே வருபவர்களை எச்சரிக்க முடியும்” என்றான். நாமர் “கோழை” என்று மெல்ல சொன்னார். “சேணமிட்டுவிட்டீர்களா? நன்று…” என்று உத்தரன் வந்து நாமரின் கையில் இருந்து சவுக்கை வாங்கிக்கொண்டான்.

காரகன் இருமுறை கால்களை உதறியது. பின்னர் குனிந்து நோக்கி உறுமியது. அது காலில் தோல்பட்டை தடுக்குவதை புரிந்துகொண்டுவிட்டது என்று கஜனுக்குப் புரிந்தது. காலை இருமுறை உதறிவிட்டு ஒடிப்பதுபோல முழங்காலை மடித்து அதேபொழுதில் வயிற்றை எக்கி உடலைக் குறுக்கி நாடாவினூடாக காலை வெளியே எடுத்துவிட்டது. இருமுறை உதறிவிட்டு தலையை நிமிர்த்தி பிடரி உலைய ஒருமுறை காலெடுத்து வைத்து நின்றது.

உத்தரன் “நான் விரும்புவது இதன் இந்த நிமிர்வைத்தான்…” என்றபடி அதன் விலாவை தொட்டான். காரகன் அசைவில்லாமல் நின்றது. அதன் காதுகள் மட்டும் பின் மடிந்தன. கஜன் அதன் கடிவாளத்தைப் பற்றி அதன் காதில் “அளிகூர்க… வேந்தே, அளிகூர்க” என்றான். “என்ன செய்கிறாய்? கொடு கடிவாளத்தை” என்று உத்தரன் கைநீட்டினான். கடிவாளத்தை அளித்துவிட்டு “வேந்தே, எளியமானுடர். வேந்தே, தங்களை வணங்குகிறோம்… அளிகூர்க, அரசே” என்றான் கஜன். “செல்வோம்… அங்கே என்ன செய்கிறாய்?” என்றான் உத்தரன். கஜன் தன் புரவியில் ஏறிக்கொண்டான். நாமரின் விழிகளை முழுமையாக தவிர்த்தான்.

“செல்வோம்” என்றபடி உத்தரன் புரவியை குதிமுள்ளால் தொட அது கணை என எழுந்து விரைந்தது. அதனுடன் விரைந்தபடி கஜன் “இளவரசே, சவுக்கை சொடுக்கவேண்டாம். அதன் ஒலியே எழலாகாது. காரகன் அதை விரும்புவதில்லை” என்றான். “ஆம், நான் அறிவேன்” என்றான் உத்தரன். அவர்கள் சிறிய சாலை வழியாக விரைந்தனர். காரகனின் குளம்படிகளின் எடையை ஓசைகள் வழியாக கஜன் உணர்ந்தான். முதுகிலேயே அதன் அதிர்வு விழுவதுபோலிருந்தது. எவ்வளவு பெரிய புரவி என எண்ணிக்கொண்டான். பிடரிமயிர் காற்றில் அலைபாய்ந்தது. கரிய சிம்மம், முரசுமேல் விழும் முழைத்தடிகள்போல. அதன் குளம்புகளை நோக்கியபடியே சென்றான்.

அரசப்பெருவீதியை அடைந்தபோது தரையெங்கும் அரிமலர் பெய்து பரவியிருப்பதைக் கண்டான். உப்பரிகைகளிலும் முகமண்டபங்களிலும் சாளரங்களிலும் கலைந்துகொண்டிருந்த பெண்கள் ஓடிவந்து அவர்களை நோக்கினர். சாலையோரங்களில் நின்றவர்கள் ஓசைகேட்டு பதறி விலகினர். தொலைவில் முரசுகளும் மங்கலப் பேரிசையும் முழங்கிக்கொண்டிருந்தது. வாழ்த்தொலிகளும் குரவையொலிகளும் அதனுடன் கலந்தன. உத்தரன் “கடந்து சென்றுவிட்டனர்” என்றான். “ஆம்” என்றான் கஜன்.

அவன் அறியாமல் எண்ணியது அப்பொழுதே நிகழ்ந்தது. “ஏய்! ஏய்!” என உவகைப்பெருக்குடன் கூவிய உத்தரன் காரகனை சவுக்கால் ஓங்கி அறைந்தான். கனைத்தபடி முன்னிரு கால்களை காற்றில் தூக்கி எழுந்த காரகன் சீறியபடி ஒரு அணித்தூணை தட்டித்தெறிக்கவிட்டு சாலையில் பாய்ந்தது. “இளவரசே! இளவரசே!” என்று கூவியபடி கஜன் தொடர்ந்தான். தன் புரவியை மேலும் மேலுமென ஊக்கினான். அதற்குள்

நெடுந்தொலைவு சென்றிருந்தது காரகன். அதன்மேல் உடலால் அதை அள்ளிப்பற்றியபடி உத்தரன் அமர்ந்திருந்தான்.

முன்னால் சென்றுகொண்டிருந்த அணியூர்வலத்தை கஜன் கண்டான். அதைக் கண்டு காரகன் சற்றே விரைவழியுமென அவன் எண்ணினான். ஆனால் அந்நிரையைச் சிதறடித்தபடி அது உள்ளே புகுந்தது. சொல்லற்ற ஓலமாக உத்தரன் அலறுவது அக்கூச்சல்களுக்கு நடுவிலும் கேட்டது. காரகன் முன்னால் சென்ற வண்டியை ஒதுங்கிக் கடந்து இரு புரவிகளை இடித்து இருபக்கம் தள்ளிவிட்டு முன்னால் பாய்ந்தது. உத்தரனின் கால் ஒரு தூணில் முட்டிக்கொள்ள அவன் அலறியபடி நிலத்தில் ஒருக்களித்து விழுந்து உருண்டு துடித்தான். தொலைவிலிருந்து பார்க்க ஓர் ஆடை விழுந்து காற்றிலாடுவது போலிருந்தது.

கடிவாளங்கள் இழுக்கப்பட்ட தேர்ப்புரவிகள் தலைகளைத் திருப்பி வாய்தூக்கி கனைத்தன. குளம்புகள் ஒன்றுடனொன்று முட்ட அங்குமிங்கும் திரும்பிக்கொண்டு நின்றன. பின்மரங்கள் உரசி ஒலிக்க, அச்சாணிகள் முனக தேர்ச்சகடங்கள் நிலைத்தன. தேர்களிலிருந்து இறங்கி ஓடிய கலிங்க இளவரசர்கள் உத்தரனை பற்றி தூக்கினர். அடிபட்ட கால் நீண்டிருக்க தொங்கும் தலையுடன் அவன் நினைவிழந்திருந்தான். “இளவரசர்! இளவரசர் உத்தரர்!” என்று விராடநாட்டுக் காவலர் கூவினார்கள். அனைத்து திசைகளிலிருந்தும் காவலரும் பிறரும் உத்தரனை நோக்கி கூடினர். கூச்சல்களும் ஆணைகளும் உரக்க எழுந்தன. கஜன் சோர்வுடன் புரவியை கடிவாளம் பற்றி நிறுத்திவிட்டு மெல்ல நிலத்தில் இறங்கி தலைகுனிந்து நின்றான்.

# நீர்க்கோலம் - 84

## 83. படைமுகம்

❀விராடர் தன் அருகே இருந்த பீடத்தை கையால் அறைந்து “சூக்தா, மூடா, உள்ளே வா” என்றார். கதவைத் திறந்து உள்ளே வந்த காவலனிடம் “சாளரக் கதவுகளை திறந்து வைக்கவேண்டுமென்று உன்னிடம் சொன்னேன் அல்லவா? யார் மூடியது கதவுகளை? என்னை இங்கே சிறையா வைத்திருக்கிறீர்கள்? மூடர்கள், அறிவிலிகள்” என்றார். வீரன் திகைப்புடன் திரும்பிப் பார்த்தபோது அறையின் நான்கு சாளரங்களின் இரு கதவுகளில் ஒன்று மூடியிருப்பதை கண்டான். காற்று வீசி அது மூடியிருக்கிறதென்று தெரிந்துகொண்டு பணிவுடன் “திறந்துவைக்கிறேன், அரசே” என்றபின் அதை திறந்து வைத்தான். கட்டையைச் சுழற்றி அது மீண்டும் மூடாமல் அமைத்தபின் வெளியே சென்றான்.

“மூடர்கள்... சொல்லறியா வீணர்கள்” என்றபின் விராடர் எழுந்து அறைக்குள் நடந்தார். மீண்டும் பீடத்தை கையால் தட்டி “உள்ளே வா... மூடா... இழிமகனே” என்றார். வீரன் உள்ளே வந்து தலைவணங்கினான். “உன்னை வரச்சொல்லவில்லை. சேடியர் எவருமில்லையா அங்கு?” என்றார். “சேடி சற்று அப்பால் இருக்கிறார். அழைக்கிறேன்” என்றான். “சேடி அங்கே என்ன செய்கிறாள்? அவள் தலையை வெட்டிவீச ஆணையிடுவேன்... ஆணவக்காரர்கள்... கீழ்மக்கள்” என்று விராடர் கூச்சலிட்டார். “முதலில் உன்னை அழைத்தேனா என்று தெரிந்துகொண்டு வா.” அவன் தலைவணங்க “போ!” என்றார். அவன் மீண்டும் தலைவணங்கி வெளியே சென்றான்.

சற்று பொறுத்து வந்த சேடி கதவருகே நின்று தலைவணங்கினாள். “அழைத்தால் வரமாட்டாயா? வேறென்ன வேலை பார்க்கிறாய் இங்கு? பிள்ளைபெற்றுப் பெருக்கவா இங்கே இருக்கிறாய்? நீ என்ன பன்றியா? கீழ்மகளே” என்றார். அவள் தலைகுனிந்து நிற்க “மது கொண்டு வா... போ” என்றார். அவர் அருகே அமர்ந்திருந்த ஆபர் மெல்ல அசைந்தார். அவர் இருப்பதை அப்போது உணர்ந்து “மது வேண்டியதில்லை. இன்நீர் கொண்டு வா. சூடாக இருக்கவேண்டும்” என்றார். அவள் தலைவணங்கி வெளியே சென்று கதவை மூடினாள்.

ஆபர் “பதற்றம் கொள்ள ஏதுமில்லை, அரசே. இதை நாம் உரிய முறையில் முடித்துக்கொள்ள முடியும். அதற்கான வாய்ப்புகள் உள்ளன” என்றார். “என்ன வாய்ப்புகள்? இதுவரை கங்கைக்கரை ஷத்ரியர்களிடம் எந்தப் பூசலுமில்லாமல் சென்றுகொண்டிருந்தது நமது அரசியல், நாம் இருப்பதே அவர்களுக்குத் தெரியாததுபோல. அத்துடன் நமது படைகளை வழிநடத்த கீசகன் இருந்தான். அவனது ஆற்றல் இங்கு அனைவருக்கும் தெரியும்” என்றார் விராடர். “ஆம், கீசகர் திறன்மிகுந்த படைத்தலைவர்தான். ஒருமுறை சதகர்ணிகளை அவர் வென்றதை இன்னமும் சூதர்கள் பாடிக்கொண்டிருக்கிறார்கள்” என்றார் ஆபர்.

அதிலிருந்த உட்குறிப்பை உணர்ந்து விராடர் மேலும் சினம்கொண்டார். “ஆம், அவன் அடைந்தது ஒரேயொரு படைவெற்றியைத்தான். ஆனால் அது போதும் அவன் யாரென்று காட்ட. விராடநாடு தொல்புகழ் கொண்டதல்ல. ஒருங்கிணைந்த படைவல்லமை அதற்கில்லை சதகர்ணிகளைப்போல. அவ்வளவு பெரிய படைக்கூட்டுகளை வென்று வருவதென்றால் அது எளிய நிகழ்வு அல்ல” என்றார்.

தணிவாக “நான் மறுக்கவில்லை” என்றார் ஆபர். “ஆனால் அவரை எண்ணி எத்தனைபேர் அஞ்சினர் என்பதே ஐயமாக இருக்கிறது.” விராடர் “அஞ்சவில்லை. ஆனால் ஒரே படைவெற்றிதான் நம் கணக்கில் உள்ளது. அது அவனுடையது. அதற்குப்பின் இங்கே போர் நிகழவேயில்லை” என்றார். ஆபர் “அது உண்மை” என்றார்.

வீரன் கதவைத் திறந்து உள்ளே வந்து தலைவணங்கினான். “என்ன?” என்றார். “குங்கர்” என்றான். வரச்சொல்லும்படி கைகாட்டிவிட்டு திரும்பிச்சென்று சாளரத்தருகே நின்றுகொண்டார் விராடர். குங்கன் உள்ளே வந்து அமைச்சருக்கும் அரசருக்கும் தலைவணங்கியபின் அங்கிருந்த சிறுபீடத்தில் அமர்ந்தான். ஆபர் “செய்தியை அறிந்திருப்பீர்கள்” என்றார். “முழு வடிவில் அறிய விருப்பம்” என்றான் குங்கன். “அஸ்தினபுரியின் படைகள் விராடபுரி நோக்கி வந்துகொண்டிருக்கின்றன” என்றார். “ஆம்” என்று குங்கன் சொன்னான். “இன்னும் இரண்டு நாட்களில் நமது எல்லைகளை அவர்கள் கடப்பார்கள்” என்றார் ஆபர்.

குங்கன் “அதற்கு முன்னரேகூட வந்துவிடக்கூடும்” என்றான். “நாம் ஒரு போருக்கு சித்தமாக இருக்கிறோமா? நமது படைகளை யார் வழிநடத்துவது?” என்றபின் ஆபர் அரசரை விழிசுட்டி “நிலைகுலைந்திருக்கிறார்” என்றார். குங்கன் அவரைப் பார்த்தபின் “அஞ்சுவதற்கேதுமில்லை” என்றான். விராடர் திரும்பி “அஞ்சாமல் இருக்க இயலாது. நான் படைநடத்துவதா அல்லது என் மைந்தன் என்று சொல்லிக்கொள்ளும் அந்த மூடனை அனுப்புவதா? விராடபுரியின் படைகள் போரைக் கண்டு பதினான்கு ஆண்டுகளாகிவிட்டன. வேலை எப்படி பற்றுவது என்றுகூட

பலர் மறந்துவிட்டிருப்பார்கள். இன்றிருக்கும் படைகளில் புதிய தலைமுறையினர் எவரும் களம் கண்டவர்கள் அல்ல” என்றார்.

குங்கன் “உண்மை. ஆனால் வருபவை அஸ்தினபுரியின் முறையான படைகள் அல்ல. கங்கைக்கரை மச்சர்நாட்டு பகுதிகளில் கர்ணனும் துரியோதனனும் முதலைகளை வேட்டையாடும்பொருட்டு வந்திருக்கிறார்கள். அங்குள்ள மச்சர்களையும் சில சிறு நட்புப் படைகளையும் திரட்டிக்கொண்டு இப்படையெடுப்பை நிகழ்த்துகிறார்கள். இது வெல்வதற்கான போர் அல்ல. நம்மை அச்சுறுத்துவதற்கானது மட்டுமே” என்றான். விராடர் “எதற்காக நம்மை அச்சுறுத்தவேண்டும்?” என்றார். “அச்சத்தில் இங்கிருந்து சில உண்மைகள் வெளிப்படக்கூடும் என எண்ணுகிறார்கள்” என்றான் குங்கன். விராடர் ஐயத்துடன் நோக்க “அதை பின்னர் விளக்குகிறேன். ஆனால் அவர்கள் நம்மை மிகக் குறைவாக மதிப்பிட்டிருக்கிறார்கள். வருவது மிகச் சிறிய படை. நம்மால் எளிதில் அதை வென்றுவிட முடியும்” என்றான்.

விராடர் அவனைப் பார்த்தபின் “சிறிய படை என்று உம்மிடம் யார் சொன்னது?” என்றார். “சிறிய படை ஒன்றையே மச்சர்களிடமிருந்து திரட்ட முடியும். அத்துடன் வருபவர்களுக்கு இந்தப் பகுதியின் நிலமோ பாதைகளோ தெரியாது. கர்ணனும் துரியோதனனும் விந்தியப் பகுதிகளுக்கு படைகொண்டு வந்தவர்களல்லர்” என்றான். ஆபர் “ஆம், அப்படி சில வாய்ப்புகள் நமக்குள்ளன” என்றார். விராடர் உரக்க “என்ன வாய்ப்பு? வருபவை எலிகள் என்றாலும் சிம்மங்களால் தலைமை தாங்கப்படுகின்றன. கர்ணனைப்பற்றி தெரியாதவர் பாரதவர்ஷத்தில் எவர்?” என்றார்.

குங்கன் “அவன் இப்போது பழைய கர்ணன் அல்ல. நான் அறிந்தவரை பாண்டவர்கள் காடேகியபின் கர்ணன் பெரும் குடிப்பழக்கத்திற்கு ஆளாகி உடல் நலிந்திருக்கிறான். பகலும் இரவும் தன் அரண்மனையில் மது மயக்கத்திலேயே அவன் இருக்கிறான் என்கிறார்கள். பதினான்காண்டுகளில் அவன் அஸ்தினபுரிக்குச் சென்றதோ அவையில் அமர்ந்ததோ இல்லை. அங்கநாட்டில் ஏரி வெட்டுவதையும் கால்வாய் திருத்துவதையும் மட்டும் செய்துகொண்டிருக்கிறான். அவன் படைக்கலம் தொட்டு பதினான்காண்டுகளாகின்றன என்கிறார்கள் ஒற்றர்கள்” என்றான்.

“ஒற்றர்களா? உமக்கா?” என்றார் விராடர். “சரி, சூதர்கள்” என குங்கன் புன்னகைத்தான். “பெருங்கொடையாளி என அவன் ஈட்டிய அத்தனை நற்பெயரும் அவைநடுவே நிகழ்ந்த பெண்ணிழிவாலும் பாண்டவர்களின் காடேகலாலும் அகன்றுவிட்டது. செல்லுமிடமெல்லாம் அவன் செவிகேட்க மக்கள் பழிச்சொல் உரைக்கிறார்கள். அவன் கையால் கொடை பெறமாட்டோம் என சூதர்கள் முடிவெடுத்துள்ளனர். அவன் தங்கள் குழந்தைகளை தொடக்கூடாது என அவன் நாட்டின் அன்னையரே எண்ணுகிறார்கள். குடியால் அவன் உடல் நலிந்துள்ளது, உள்ளம் மேலும் நலிந்துள்ளது. ஒரு பயிலாப் படைத்திரளை அழைத்துக்கொண்டு தெரியாத நிலத்தில் படைசூழ்கை அமைக்கும் அளவுக்கு இன்று அவனுக்கு ஆற்றல் இருக்காது.”

விராடர் “இப்படியெல்லாம் நாம் எதையும் குறைத்து பேசிவிட வேண்டியதில்லை. விராடபுரி அஸ்தினபுரியின் பெருவீரர்களை எதிர்க்க முடியுமா முடியாதா என்பதுதான் நமது வினா” என்றார். “முடியும், வாய்ப்புள்ளது” என்றான் குங்கன். விராடர்

குங்கனை நோக்கி “உமது இந்த உறுதி வியப்பளிக்கிறது” என்றார். ஆபர் “நாம் செய்வதற்கொன்றுமில்லை. அவரிடம் இதை ஒப்படைப்போம். முழுப் பொறுப்பையும் அவரே ஏற்று செய்யட்டும்” என்றார். “நம் இக்கட்டு ஒன்றே, நமக்கு படைத்தலைமை ஏற்க எவருமில்லை” என்றார் விராடர். ஆபர் “அதையும் அவரிடமே விடுவோம். எவர் தலைமை தாங்கவேண்டுமென்பதை அவர் முடிவெடுக்கட்டும்” என்றார்.

குங்கன் “உத்தரர் படைத்தலைமை ஏற்கட்டும்” என்றான். திடுக்கிட்டு “அவனா?” என்றார் விராடர். “அவரால் முடியும்” என்றான் குங்கன். “விளையாடதீர், குங்கரே” என்றார் விராடர். “அவரது தேரை பிருகந்நளை ஓட்டிச்செல்லட்டும்” என்றான் குங்கன். “அந்த ஆணிலியா? நடனம் கற்பிக்க வந்தவள் அவள்” என்றார் விராடர். “அவள் தேர்த்தொழிலில் தேர்ந்தவள். விற்தொழிலும் தெரியுமென்று அவள் கைகள் காட்டுகின்றன” என்றான் குங்கன். விராடர் நம்பிக்கையில்லாமல் தலையசைத்து “அவள் என்ன செய்யமுடியும்?” என்றார். “அவர்கள் என்ன செய்யவேண்டுமென்பதை இங்கிருந்து நான் வகுத்தளிக்கிறேன். அவர்கள் வென்று வருவார்கள்” என்றான் குங்கன்.

ஆபர் “இதற்கு முன்னரும் குங்கனை நம்பியிருக்கிறோம். அது நிகழ்ந்துள்ளது, அரசே” என்றார். விராடர் சலிப்புடன் தலையசைத்து “என்ன நிகழ்கிறது என்றே புரியவில்லை. நமக்கும் அஸ்தினபுரிக்கும் என்ன பூசல்? ஒரு எச்சரிக்கை செய்திகூட அவர்கள் அனுப்பவில்லை” என்றார். “அது குங்கருக்குத் தெரிந்திருக்கலாம்” என்றார் ஆபர். குங்கன் “அவர்களுக்கு பொழுதில்லை. இன்னும் ஒன்பது நாட்களுக்குள் அவர்கள் விராடபுரிக்குள் ஊடுருவ வேண்டும். பத்தாவது நாள்

வந்தால்கூட பயனில்லை” என்றான். விராடர் “என்ன சொல்கிறீர்?” என்றார். “இது பின்னர் உங்களுக்கு புரியும்” என்றான் குங்கன்.

விராடர் களைப்புடன் பீடத்தில் அமர்ந்து “முற்றிலும் புரியவில்லை. குடித்துக் குடித்து மதி மழுங்கிவிட்டது. சூதாடிப் பழகியதனால் நாற்களத்துக்கு அப்பால் எந்த ஆடலும் பிடி கிடைக்கவில்லை” என்றார். தலையை பிடித்துக்கொண்டு “ஆனால் எவரோ எங்கோ ஆடும் ஆட்டத்திற்கு நடுவே சிக்கிக்கொண்டிருக்கிறோம் என்று மட்டும் புரிகிறது” என்றார். ஆபர் “பொறுத்திருங்கள், அரசே. நாம் எவருக்கும் எப்பிழையும் ஆற்றவில்லை. ஆகவே நாம் பாதுகாக்கப்படுவோம்” என்றார்.

சீற்றத்துடன் தலைதூக்கி “இச்சொற்களுக்கு என்ன பொருள், அமைச்சரே?” என்றார் விராடர். “வரலாறெங்கும் இங்கே அழித்தொழிக்கப்பட்ட அசுரர்களும் நிஷாதர்களும் பிழை செய்தமைக்கான தண்டனையையா பெற்றார்கள்? அரசியலில் ஆற்றலின்மையே பெரும்பிழை. அதன்பொருட்டே நாடுகளும் குலங்களும் முற்றழிகின்றன. நாம் ஆற்றலற்றவர்கள். பேரரசர் நளனின் காலத்திலிருந்து நிஷாதர்கள் தொடர்வீழ்ச்சியை மட்டுமே அறிந்திருக்கிறார்கள். ஆம், நாம் அறிந்த ஒரே வெற்றி கீசகன் சதகர்ணிகளை வென்றதுதான். அது ஒரு தற்செயல் என்பதை நானும் அறிவேன். ஆனால் அதை சொல்லிச் சொல்லி நிலைநிறுத்திதான் இத்தனை காலம் இங்கு தனிநாடென வாழ்ந்தோம்.”

“இனியும் தனி நாடென வாழ்வீர்கள். உங்கள் மைந்தர் இந்நாட்டை முடிசூடி முழுதாள்வார். அவரது கொடிவழிகள் இங்கு வாழும். இது என் சொல்” என்றான் குங்கன். ஆபர் புன்னகைத்து “அவரது சொல்லை நாம் நம்பலாம், அரசே”

என்றார். “எப்படி? பாரதவர்ஷத்தின் சக்ரவர்த்திகள் சொல்லவேண்டிய சொற்கள் அவை” என்றார் விராடர். ஆபர் நகைத்து “இப்போது அவ்வண்ணமே கொள்வோம்” என்றார். “நகைக்கிறீர்களா? நான் மச்சர்கள் முன் கைச்சங்கிலியுடன் நிற்பதை எண்ணி நீறிக்கொண்டிருக்கிறேன்” என்றார் விராடர்.

ஆபர் “பிறிதொரு செய்தி சற்று முன்புதான் அவைக்கு வந்தது. சிற்றமைச்சர் அதை என்னிடம் கொண்டுவந்தார்” என்றபின் ஓலையை எடுத்து பீடத்தின்மேல் வைத்தார். விராடர் அதை ஐயத்துடன் பார்த்தபடி “கலிங்க நாட்டு ஓலை. என்ன சொல்கிறார்கள்? அவர்களும் நம்மைப்போல் எவர் கண்ணுக்கும் படாமல் வாழும் கூட்டம்” என்றார். “அவர்கள் தங்கள் இளவரசியை உத்தரருக்குக் கொடுப்பதற்கு ஒப்பவில்லை” என்றார் ஆபர். திகைப்புடன் “அதை அவர்கள் இங்கு சொல்லவில்லையே? இங்கு நம் வரிசைகளையும் பரிசுகளையும் பெற்றுக்கொண்டு அல்லவா சென்றார்கள்?” என்றார் விராடர்.

“தூதுக்குழுவென வந்து நம் நகர்புகுந்த பிறகு அவையெழுந்து அதை எப்படி அவர்களால் சொல்ல முடியும்? அன்று அவையிலேயே அவர்கள் நடத்தை அனைத்தையும் சொல்லிவிட்டது. மணஉறுதி அறிவிப்பை வெளியிடவோ மணநிகழ்வுகளின் அடுத்த கட்டத்தைப்பற்றி ஏதேனும் கூறவோ அவர்கள் முற்படவில்லை. கொண்டு வந்த பரிசுகளை நமக்கு அளித்தார்கள். பயின்று வந்த முறைமைச்சொற்களை உரைத்தார்கள். நம் விருந்தை உண்டு நாம் அளித்த பரிசுகளை பெற்று மீண்டார்கள். அனைத்தையும் அங்கு சென்றபின் முறைப்படி அறிவிப்போம் என்று மட்டுமே அவர்களால்

சொல்ல முடிந்தது. அப்போதே இதை எதிர்பார்த்தேன்” என்றார் ஆபர்.

சலிப்புடன் மீண்டும் தலையசைத்து எழுந்து சென்று சாளரம் வழியாக காற்று அலையடித்த தோட்டத்தை பார்த்து நின்றார் விராடர். “அவர்களை சொல்வதிலும் பிழையில்லை” என்றான் குங்கன். அவனை நோக்கி திரும்பாமல் விராடர் “இந்த மூடன் அவர்களின் காலடியில் சென்று உருண்டு விழுந்திருக்கிறான். மூடர்கள் பலரை அறிந்திருக்கிறேன். ஒவ்வொரு செயலாலும் தான் மூடன் என்று அறிவித்துக்கொண்டிருக்கும் ஒருவனை பிறிது கண்டதில்லை” என்றார். “அவன் என் குருதியில் உள்ள ஒரு குமிழி மைந்தன் என எழுந்தது. அவனை காண்கையில் எல்லாம் என்னை வெறுக்கிறேன்.”

குங்கன் “அதை பிறகு பார்ப்போம். முதலில் நாம் எதிர்கொள்ளும் இந்தப் போரை வெல்வோம்” என்றான். “உத்தரர் இப்போரை வென்றாரென்றால் கலிங்கர்கள் உளம் மாறவும் கூடும்.” விராடர் சிரித்து “நன்று. பகற்கனவுகளுக்கு உள்ள இனிமை அரியது” என்றார். ஆபர் “இவையெதையும் இப்போது குடியவையில் பேசவேண்டியதில்லை. படைப்புறப்பாடுக்கான அறிவிப்பை மட்டும் தாங்கள் அவையில் வெளியிட்டால் போதும். படைசூழ்கையை குங்கர் அமைக்கட்டும். உத்தரர் படை நடத்தட்டும்” என்றார். விராடர் “எப்போதும் தாங்கள் சொல்பவற்றை ஆணையென பிறப்பிப்பது மட்டுமே என் பணியாக இருந்துள்ளது. அவ்வாறே ஆகட்டும்” என்றார்.

குங்கனுடன் வெளியே நடக்கையில் ஆபர் “நான் செய்யவேண்டியவை என்ன?” என்றார். “தெரிவுசெய்யப்பட்ட புரவிகள். அவை மிக நன்கு பழக்கப்பட்டவையாக இருக்கவேண்டும்.” ஆபர் “கிரந்திகன் புரவிகளை

பழக்கியிருக்கிறார். அவரிடமே சொல்கிறேன்” என்றார். “ஆம், விராடர்களின் ஆற்றல் புரவிகளில்தான். அவர்கள் நாம் எங்கு சென்று சந்திக்கக்கூடும் என எண்ணுகிறார்களோ அதற்கு முன்னரே அவர்களை நம் புரவிகள் சந்திக்கவேண்டும்” என்றான் குங்கன். “மச்சர்களுக்கு புரவிகள் பழக்கமில்லை. அவர்களின் ஆற்றல் கைத்தோணிகளை செலுத்துவதில்தான். அவர்களை காடுகள் வழியாக நடத்திக்கொண்டு வருகிறார்கள்.”

ஆபர் “ஆம்” என்றார். “வேனில் எழுகிறது. இப்பகுதியின் காடுகளில் தைலப்புற்கள் காய்ந்து எரி காத்துள்ளன.” ஆபர் நின்றுவிட்டார். “எரியம்புகள் தொடுக்கும் கலையை பிருகந்நளை அறிவாள்.” ஆபர் “ஆம்” என்றார். “நிஷாதர்கள் பரசுராமரால் அனல் அளித்து அரசகுடியாக்கப்பட்டவர்கள். பிருகுவின் ஏவலன் அனலோன். அவன் உதவி விராடர்களுக்கும் இருக்கும் அல்லவா?” ஆபர் புன்னகைத்தார். “சொல்லுங்கள்” என்றான் குங்கன். “போரை மட்டும் அல்ல, போருக்குப் பிந்தைய சூதர்பாடலையும் எழுதிவிட்டீர்” என்றார் ஆபர். குங்கன் புன்னகைத்தான்.

“அரிஷ்டநேமியிடம் ஓர் அமைச்சர் சென்று கிளம்புவதற்குரிய பொழுதை கணித்துக்கொண்டு வரவேண்டும்” என்றான் குங்கன். “வலவரிடமும் செய்தியறிவிக்கிறேன்” என்றார் ஆபர். அவரை திரும்பி நோக்கிவிட்டு “ஆம், ஆனால் அவன் களமிறங்கும் அளவுக்கு இப்போர் பெரியது அல்ல” என்றான் குங்கன். இருவரும் சொல்லில்லாமல் நடந்தனர். ஆபர் மெல்ல கனைத்தார். குங்கன் திரும்பிப் பார்த்தான். “இது போருக்குப்பின் நிகழவேண்டியது” என்றார் ஆபர். “இளவரசியின் மணத்தன்னேற்பு.” குங்கன் “ஆம்” என்றான். “ஆனால்...” என்றபின்

“அவர்களிடையே என்ன உறவு என்பது எவருக்கும் தெரியவில்லை” என்றார்.

குங்கன் நின்று ஆபரை நோக்கினான். தாடியை நீவியபடி விழிதாழ்த்தியபின் “ஆம்” என்றான். “கரவுக்காட்டில் அவர்களை கண்டிருக்கிறார்கள்” என்றார் ஆபர். குங்கன் ஒன்றும் சொல்லாமல் நடக்க உடன்நடந்தபடி “அறப்பிழை நிகழலாகாது. நீங்களே இருவரிடமும் பேசலாம்” என்றார். “இல்லை, நான் பேசவியலாது” என்ற குங்கன் “சைரந்திரி பேசட்டும்” என்றான். ஆபர் முகம் தெளிந்து “ஆம், அது நன்று” என்றார்.

ஆபர் தன் அமைச்சு அறையை அடைந்தபோது துணையமைச்சர்களும் படைத்லைவர்களும் காத்து நின்றிருந்தனர். அவர் உள்ளே நுழைந்ததும் அவர்கள் உடன்வந்தனர். “என்ன செய்தி?” என்றார் ஆபர். “மச்சர்படை மிக அணுகிவிட்டது. நினைத்ததைவிட விரைவு. எங்கும் ஓய்வில்லாமல் வருகிறார்கள். நாளையே நம்மை அவர்கள் அடைந்துவிடக்கூடும்.” ஆபர் “ஆம், விரைவார்கள்” என்றார். பின்னர் “அங்கர் எப்படி இருக்கிறார்? ஒற்றர்கள் சொல்வதென்ன?” என்றார்.

“அவர் படைசூழ்கையை அமைக்கவில்லை. சொல்லப்போனால் அவர் வெளியே வரவே இல்லை. படைசூழ்கையை அமைப்பவர் இளைய கௌரவரான துச்சாதனர்தான்.” ஆபர் “நோயுற்றிருக்கிறாரா?” என்றார். “இல்லை” என தயங்கிய அமைச்சர் “குடியில் மூழ்கியிருக்கிறார். வில்லெடுக்கவே கை நடுங்குகிறது என்கிறார்கள்” என்றார். “உளச்சான்றெனும் நோய்” என்றார் ஆபர். “பெண்பழி என்கிறார்கள். பாஞ்சாலியான திரௌபதி காட்டில் மானசாக்னி என்னும் சுனையில் இறங்கி உயிர் மாய்த்துக்கொள்வதற்கு முன் தீச்சொல்லிட்டதாகவும்

அதன்பின் கர்ணனின் கைகள் முதுமைகொண்டு நடுங்கத் தொடங்கின என்றும் கதைகள் சொல்கின்றன.”

“நாம் நாளை காலை படைஎழுகிறோம்” என்றார் ஆபர். “நாளையா? நாளை…” என தயங்கிய படைத்தலைவன் “படைத்தலைமை எவர்?” என்றான். “உத்தரர்” என்றார் ஆபர். அனைவரும் அமைதியடைந்தனர். படைத்தலைவன் “நன்று… எவரானாலும் போர் நம் கடமை” என்றான். “அவருடைய தேரை பிருகந்நளை செலுத்தட்டும் என்கிறார் குங்கர்.” படைத்தலைவர்களின் முகங்கள் மலர்ந்தன. “அவர் வந்தால் வேறெவரும் வேண்டாம்” என்றான் முதன்மைப் படைத்தலைவன் சங்காரகன். “ஏன்?” என்றார். “அமைச்சரே, தேர்ந்த வில்லவனின் கைகள் வில்லென்றே ஆகிவிட்டவை” என்றான் சங்காரகன்.

# நீர்க்கோலம் - 85

### 84. நீர்ப்பாவை நடனம்

சுபாஷிணி சைரந்திரியின் சிற்றறைக் கதவை மெல்ல தட்டி “தேவி… தேவி…” என்று அழைத்தாள். சில கணங்களுக்குப்பின் தாழ் விலக புறப்படுவதற்கு சித்தமாக ஆடையணிந்து சைரந்திரி தோன்றினாள். அவள் தோளில் கைவைத்து புன்னகைத்து “செல்வோம்” என்றாள். இடைநாழியினூடாக நடக்கையில் “என்னடி சோர்வு?” என்று சைரந்திரி கேட்டாள். சுபாஷிணி தலையசைத்தாள். “உன் கண்களில் துயிலின்மை தெரிகிறது. சில நாட்களாக நன்கு மெலிந்துவிட்டாய். கழுத்தெல்லாம் வரி வரியாக இருக்கிறது” என்றாள் சைரந்திரி. சுபாஷிணி தலைகுனிந்து நடந்து வந்தாள். அவள் தோளில்

கைவைத்து “சொல், என்ன?” என்றாள் சைரந்திரி. “ஒன்றுமில்லை” என்றாள் சுபாஷிணி. அவள் தொண்டை அடைத்திருந்தது.

“என்னவென்று எனக்குத் தெரியும்” என்றாள் சைரந்திரி. சுபாஷிணி விழிகளைத் தூக்க “பெண்ணென்றால் பொறுத்திருந்துதான் ஆகவேண்டும். கனி மடியில் உதிர்வதற்காகக் காத்திருப்பதே காதலில் அவளுக்கு வகுக்கப்பட்டுள்ள இடம்” என்றாள். சுபாஷிணி “ஐயோ, அதில்லை” என்று பதற்றத்துடன் சொல்லத் தொடங்க அவள் தோளை மெல்ல தட்டி சிரித்தாள் சைரந்திரி. சுபாஷிணி தலைகுனிந்தாள். ஏனென்று தெரியாமல் அவளுக்கு கண்ணீர் வந்தது.

இருவரும் படிகளில் இறங்கியபோது அங்கே இரு சேடியர் காத்து நின்றிருந்தனர். ஒருத்தி சைரந்திரியிடம் “அரசி கிளம்பிவிட்டார். தங்களை அங்கு வரச்சொன்னார்” என்றாள். “அங்கா?” என்றபின் ஒருகணம் எண்ணி “நன்று, அங்கு செல்வோம்” என்றாள். அவர்கள் நடக்கையில் சுபாஷிணி மெல்ல “எங்கு செல்கிறோம்?” என்றாள். “மருத்துவநிலையில் இளவரசர் உத்தரர் இருக்கிறார். அவரைப் பார்க்க அரசி செல்கிறார்கள். இளவரசியும் அங்கு வரக்கூடும் என்றார்கள்” என்றாள் சைரந்திரி. சுபாஷிணி “கலிங்க நாட்டுச் செய்தி வந்துள்ளது என்று அறிந்தேன்” என்றாள். சைரந்திரி “ஆம், இங்கு அனைவரும் எதிர்பார்த்திருந்ததுதான்” என்றாள்.

“இளவரசர் துயருற்றிருப்பார் என்று நினைக்கிறேன். எப்போதும் அதையே சொல்லிக்கொண்டிருந்தார்.” சைரந்திரி சுபாஷிணியைப் பார்த்து புன்னகைத்து “துயரை வெல்வதற்கு அவர் தனக்குரிய வழியை கற்றுக்கொண்டிருக்கிறார்.

இங்கிலாத உலகில் வாழ்பவர்களுக்கு இங்குள்ள துயர்கள் சென்று சேர்வதில்லை” என்றாள். “இன்று இளவரசரின் பிறந்தநாள் என்று சேடி சொன்னாள்” என்றாள் சுபாஷிணி. அந்த உரையாடல் அவள் உள்ளத்தை எளிதாக்கவே அவள் தொடர்ந்து பேச விரும்பினாள். “வழக்கமான குலதெய்வப் பூசனைகள் வேண்டியதில்லை என்று அரசர் ஆணையிட்டுவிட்டதாக சொன்னார்கள்.”

“ஆம்” என்றாள் சைரந்திரி. சுபாஷிணி “போர் முரசு முழங்கிவிட்டதால் எந்த விழவும் கொண்டாட வேண்டாமென்பது அமைச்சரின் ஆணை. ஆகவே சென்ற ஆண்டு போலன்றி இந்த ஆண்டு இளவரசரின் பிறந்த நாள் எளிதாக கடந்து செல்கிறது. பேரரசி புலரியிலேயே கொற்றவை ஆலயத்திலும் மூதன்னையர் ஆலயத்திலும் வழிபட்டு முடித்து மலர் கொண்டுவந்திருக்கிறார். இளவரசியும் ஆலயங்களில் இளவரசருக்காக வணக்கமும் வேண்டுதலும் செய்திருப்பார் என்றாள் தலைமைச்சேடி சுதார்யை” என்றாள். சைரந்திரி புன்னகையுடன் “நாமும் ஏதாவது வேண்டுதல் செய்ய வேண்டுமல்லவா?” என்றாள்.

சுபாஷிணி சிரித்து “நாமா? நாம் எதற்கு? செய்வதென்றால்கூட அதற்கு இப்போது பொழுதில்லையே?” என்றாள். சைரந்திரி சுற்றும்முற்றும் பார்த்தபின் அங்கு தூணில் தொங்கிய மலர்த்தோரணத்தைப் பார்த்து “அந்த மலர் மாலையை எடு” என்றாள். “இதையா? இது சற்று வாடியிருக்கிறதே?” என்றாள். “தாழ்வில்லை, எடு” என்றாள் சைரந்திரி. “ஒரு தாலம் கொண்டு வா.” சுபாஷிணி சிரித்து “அய்யோ” என்றாள். “கொண்டு வாடி.” சுபாஷிணி அப்பால் ஒரு அறைக்குள் இருந்த தாலத்தை பார்த்தபின் சிரித்தபடி ஓடிச்சென்று அதை எடுத்து வந்தாள்.

அதில் அந்த மலர் மாலையை சுழற்றி வைத்து “இது போதும்” என்றாள் சைரந்திரி. “பார்த்ததுமே தெரிந்துவிடும்” என்றாள் சுபாஷிணி. “அவருக்குத் தெரியாது” என்றாள் சைரந்திரி. உடன்வந்த சேடியர் சிரித்துக்கொண்டிருந்தனர். “சிரிக்கவேண்டாம்” என்றாள் சைரந்திரி.

அவர்கள் மருத்துவநிலைக்குச் சென்றபோது இடைநாழியில் காவல் பெண்டுகள் நின்றிருந்தனர். சைரந்திரியைக் கண்டதும் தலைவணங்கி உள்ளே ஆற்றுப்படுத்தினர். சைரந்திரியும் சுபாஷிணியும் உடன்சென்ற சேடியரும் மருத்துவசாலைக்குள் நுழைந்து அதன் இடைநாழியில் நடந்தார்கள். அவர்களை எதிர்கொண்ட மருத்துவ உதவியாளன் “இளவரசர் முதன்மை அறையிலிருக்கிறார்” என்றான். சைரந்திரி தலையசைக்க அவன் “நானே அழைத்துச்செல்கிறேன்” என்றான். அவன் முகமே காமத்தின் மடமை வெளிப்படும் சிரிப்பு கொண்டிருந்தது. “மருத்துவ உத்தரர்” என்றாள் சுபாஷிணி. சேடியர் சிரிக்க அவன் திரும்பி “என்ன சொன்னீர்கள்?” என்றான். “உத்தரரின் மருத்துவர் நீங்கள் என்றேன்.” அவன் “ஆம், நான் அவரை இரவில் பார்த்துக்கொள்கிறேன்” என்றான்.

அறைக்குள் நுழையும்போது சைரந்திரி உத்தரனின் உரத்த குரலை கேட்டாள். “அவர்களுக்கு ஏன் துணிவு வந்தது என்று தெரியும். அழிவு துணிவைத்தான் முதலில் கொண்டுவருகிறது என்பார்கள். விராடபுரியுடன் எதிர்த்து எவர் வெல்ல முடியும்? மாமன்னர் நளன் பயிற்றுவித்த புரவிகள் நம்மிடம் உள்ளன. நமது வல்லமை எதுவென்று நாமறியாவிட்டாலும் நம்மிடம் தோற்று அஞ்சி ஒடுங்கியிருக்கும் ஷத்ரியர் அனைவருக்கும் தெரியும்” என்றான் உத்தரன். “இதுவும் நன்றே. நமக்கு நம் ஆற்றலை மேலும் உறுதிப்படுத்திக்கொள்ள ஒரு வாய்ப்பு

அமைகிறது. உண்மையை சொல்லபோனால் ஒவ்வொரு தலைமுறைக்கும் ஒரு பெரும்போர் நிகழ்ந்தாகவேண்டும். இல்லையேல் படைகளின் உள ஆற்றலும் நம்பிக்கையும் குறையும். படைப்பயிற்சியென்பது வெறும் விளையாட்டெனஎண்ணிக்கொள்வார்கள்.”

“இன்றைய மெய்ப்பாடு வீரம் போலிருக்கிறது” என்றாள் சுபாஷிணி. “நேற்று முழுக்க காவியத் துயரம்.” சேடியர் சிரித்தனர். “இப்போரை நமது தெய்வங்கள் நமக்கு அளித்தன என்று கொள்வோம். இதில் நாம் வெற்றி பெறுவோம் என்பதில் எந்த ஐயமும் எனக்கில்லை. விராடம் அதன் மூதன்னையரால் மூதாதையரால் குலதெய்வங்களால் மும்முறை வாழ்த்தப்பட்டது.” அவர்கள் உள்ளே நுழைகையில் சுபாஷிணி தாழ்ந்த குரலில் “எங்கோ உளப்பாடம் செய்திருக்கிறார் போலும்” என்றாள். விழிகளால் குரல் எடுத்துப் பேசாதே என்பதுபோல் அவளை அடக்கிவிட்டு சைரந்திரி உள்ளே நுழைந்தாள்.

உத்தரனைச் சுற்றி பெண்கள் அமர்ந்திருந்தனர். காலடியில் சிலர் அமர்ந்திருக்க சிலர் சுவர் சாய்ந்து நின்றிருந்தனர். உத்தரன் “கீசகன் கொல்லப்பட்டதால் அஸ்தினபுரி ஊக்கமடைந்திருக்கிறது. ஆனால் விராடபுரியின் ஒவ்வொரு நிஷாதனும் ஒரு கீசகன் என்பதை அவர்கள் மறந்துவிட்டார்கள். அதை அவர்களுக்கு இந்தப் போர் கற்பிக்கும்” என்றான். சைரந்திரியைப் பார்த்ததும் புன்னகைத்து “வருக!” என்றபின் “நான் அணுகிவரும் போரைப்பற்றி பேசிக்கொண்டிருக்கிறேன்” என்றான்.

சைரந்திரி “தங்களுக்காக வேண்டிக்கொண்டேன், இளவரசே” என்றபின் மலர்த்தாலத்தை நீட்டினாள். உத்தரன் அதை வாங்கி

கண்களில் ஒற்றி அப்பால் வைத்துவிட்டு செல்லச் சலிப்புடன் “காலையிலிருந்து எனக்கான வேண்டுதல்கள் வந்துகொண்டே இருக்கின்றன. ஒருகணமும் ஓயாது பெண்டிரின் வேண்டுதல்கள் நம் மூதாதையரிடம் சென்று கொண்டிருப்பதைக் கண்டால் அவர்கள் எரிச்சலுற்று என்னை மேலும் சில நாட்கள் இங்கே படுக்க வைத்துவிடுவார்கள் என்று தோன்றுகிறது” என்றான். “தங்கள் கால்வலி குறைந்திருக்கிறதா?” என்றாள் சைரந்திரி. உத்தரன் “வலி இருக்கிறது. காரகனைப்போன்ற புரவியில் ஊர்வதென்பது சினம்கொண்ட சிம்மத்தின்மேல் செல்வது. நான் விழுந்ததை அவன் எதிர்பார்க்கவில்லை. கொட்டிலில் வருந்தியபடி உடல் சிலிர்த்து கால்மாற்றி துயருற்று நின்றிருக்கிறான் என்றார்கள். சற்று நடக்க கால் ஒப்பும்போது சென்று பார்த்து அவனை ஆறுதல்படுத்த வேண்டும்” என்றான்.

சைரந்திரி அவன் காலருகே நின்றாள். “நான் என்ன சொல்லிக்கொண்டிருந்தேன்? போர்! ஆம், இந்தப் போரில் நிஷாதர்கள் யாரென்பது ஷத்ரியர்களுக்கு தெரியவரும். அது அவர்கள் ஒருநாளும் மறக்காத பாடமாக அமையும்.” சைரந்திரி “போருக்கு யார் படைத்தலைமை ஏற்பது என்பதுதான் பேச்சாக இருக்கிறது” என்றாள். “யார் படைத்தலைமை ஏற்றால் என்ன? ஒவ்வொரு நிஷாதனும் ஒரு படைத்தலைவன் போலத்தான்” என்றான் உத்தரன். சுபாஷிணி “இளைய விராடர் படைத்தலைமை ஏற்கக்கூடுமென்று ஒரு பேச்சிருக்கிறது” என்றாள். உத்தரன் முகம் மலர்ந்து அவளை நோக்கி “ஆம், நான்தான் இயல்பாகவே விராடத்தின் படைத்தலைவன்” என்றான்.

“காலையிலிருந்தே அமைச்சரும் படைத்தலைவரும் வந்து என்னிடம் இதை சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். அவர்களின் எதிர்பார்ப்பு எனக்குப் புரிகிறது. உண்மையை சொல்லப்போனால் நான் உடல் தேறி வரவேண்டுமென்று வேண்டுதல் எழுவதற்கு ஏதுவாக அமைவது அந்த எதிர்பார்ப்புதான். என் கால் சற்றே நலம்கொண்டுவிட்டிருந்தால் இந்நேரம் கோட்டை முகப்பில் படைகளை சூழ்கைக்காக நிரைப்படுத்திக்கொண்டிருப்பேன். நாளை புலரியில் படைகளுக்கு முன்னால் எனது கரும்புரவியில் தலைமை தாங்கி சென்றுகொண்டிருப்பேன்” என்றான் உத்தரன். “என்ன செய்வது? இது ஊழ்.”

“கால்வலி இருந்தாலும் தேரில் அமர்ந்து செல்லலாமே?” என்றாள் சைரந்திரி. “ஆம், தேரில் செல்வதற்கு இப்போது எந்தத் தடையும் இல்லை. ஆனால் யார் தேர் ஓட்டுவது? நான் இரு கைகளாலும் அம்பு விடுபவன். பாரதவர்ஷத்தில் அஸ்தினபுரியின் விஜயனுக்குப் பிறகு சவ்யசாஜி நானே என்று சூதர் பாடிய பாடலை நினைவுறுகிறாயா?” என்றான். சேடி ஒருத்தி “பிரஃபூதர் எழுதிய காவியம்” என்றாள். “ஆம், பிரஃபூதர் எழுதிய காவியம்” என்று அவன் சைரந்திரியிடம் சொன்னான். சுபாஷிணி “அவரா? அவர் கவிதையெழுதுவாரா? அடைப்பக்காரர் அல்லவா?” என்றாள். உத்தரன் சினத்துடன் “அவர் அடைப்பக்காரர் மட்டும் அல்ல” என்றபின் “என்னை வைத்து திறம்பட ஓட்டும் தேரோட்டிகளே இங்கில்லை. இதுதான் உண்மை” என்றான். “மெய்” என்றாள் சைரந்திரி.

உத்தரன் மேலும் ஊக்கம் கொண்டு “உண்மையை சொல்லப்போனால் அஸ்தினபுரியின் அர்ஜுனனைப் போன்ற ஒரு தேரோட்டி எனக்குத் தேவை. அவர் எனக்கு

தேரோட்டுவார் என்றால் எனக்கு படைத்துணையே தேவையில்லை. தனியொருவனாகச் சென்று மச்சர்களின் அந்த எலிக்கூட்டத்தை சிதறடித்து மீள்வேன்” என்றான். “அவர்தான் இப்போது இல்லையே” என்றாள் சுபாஷிணி. “ஆம், அதைத்தான் சொல்ல வருகிறேன். அவர் இல்லை. அவருக்கு நிகரானவர்களும் இல்லை. தேரோட்ட ஆளில்லாமல் இதோ இங்கு நான் படுத்திருக்கிறேன்.” சுபாஷிணி “ஆனால் அனைத்து இடர்களையும் கடந்து சென்று வெல்வதுதானே வீரர்களின் கடமை?” என்றாள்.

“ஆம். அதைத்தான் எண்ணிக்கொண்டிருக்கிறேன். புரவியில் நான் செல்ல இயலாது, தேரோட்ட ஆளில்லை. அப்படியென்றால் எப்படி இந்தப் போரை நான் நடத்த முடியும்?” என்றான். “எப்படி?” என்றாள் சுபாஷிணி. “முடியும்” என்று அவன் புன்னகைத்தான். “படைக்கலங்களால் செய்யப்படுவதல்ல போர்” என்றான். சுபாஷிணி “விலங்குகளால் செய்யப்படுவதோ?” என்றாள். சேடிகள் சிரிக்க “அறிவிலாது பேசலாகாது. போரென்பது அறிவை படைக்கலமாகக் கொண்டது. படைக்கலமேந்தி களம் நின்று போராடுவது இரண்டாம் கட்டம். படைசூழ்கையை வகுப்பதில் உள்ளது படைத்தலைவரின் திறன்” என்றான்.

“ஆம், அதற்கு படைத்தலைவர்கள் வேண்டுமே?” என்றாள் சுபாஷிணி. “நான் இருக்கிறேன். படைகளை நான் நடத்துவேன். அதைத்தான் சொல்ல வந்தேன்” என்றான் உத்தரன். இன்று மாலையே போருக்கான அறிவிப்பு வந்துவிடுமென்றார்கள்” என்றாள் சைரந்திரி. “ஆம், போர்முரசுதான் கொட்டிவிட்டதே? உச்சிப்பொழுதுக்குள் படை ஒத்திகை முடிந்துவிடும்” என்று உத்தரன் சொன்னான். “நாளை புலரியில் படைகள்

கிளம்புகின்றன. அரசாணையை அந்தியில் கொற்றவை பூசனைக்குப் பிறகு அவையில் வெளியிடலாம் என்று ஆபர் என்னிடம் சொன்னார். படை ஒத்திகை முடிந்தவுடனே அதை வெளியிடுவதுதான் சிறந்தது என்றேன். ஏன்?”

“ஏன்?” என்றாள் சைரந்திரி. “கேள், சொல்கிறேன். வீரர்கள் தங்கள் இல்லம் திரும்பி குழந்தைகளிடமும் மனைவியிடமும் விடைபெற்று அந்திக்குள் படைமுகாம்களை வந்தடைந்துவிடலாம். இன்று முன்னிரவிலேயே அவர்கள் படுத்து நன்கு துயின்றார்கள் என்றால்தான் நாளை காலையில் புத்துணர்வுடன் கிளம்பமுடியும். ஆபர் நான் சொன்னதை ஏற்றுக்கொண்டார். திறமையானவர்தான். ஆனால் படைகளின் உள்ளம் அவருக்குத் தெரியாது. அதை பிறிதொரு படைவீரனால்தான் புரிந்துகொள்ள முடியும்.”

அரசியும் இளவரசியும் வருவதை ஏவலன் வந்து அறிவித்தான். சைரந்திரி எழுந்து நின்றாள். வலம்புரிச்சங்கின் ஒலி கேட்டது. சுதேஷ்ணை கையில் தாலத்துடன் வந்தாள். தொடர்ந்து உத்தரை வந்தாள். அவர்கள் தாலங்களை அவனுக்கு அளிக்க அவன் வாங்கி கண்களில் ஒற்றிக்கொண்டு அப்பால் வைத்தான். கொற்றவையின் குங்குமத்தை அவன் நெற்றியில் வைத்து “நூறாண்டு வாழவேண்டும்” என்றாள் சுதேஷ்ணை. “தங்கள் வாழ்த்துக்கள் நலம் கொணரட்டும், அன்னையே” என்றான் உத்தரன். உத்தரையும் அவனுக்கு செந்தூரமிட்டு வாழ்த்தினாள்.

“படைப் புறப்பாட்டைப்பற்றி பேசிக்கொண்டிருந்தோம்” என்றான் உத்தரன். “இன்று விராடத்தின் மிகப் பெரிய இக்கட்டே என் உடல்நிலைதான். படைகளை தலைமைதாங்க ஆளில்லை. என்ன செய்வது? நான் இங்கிருந்தே படைசூழ்கையை

அமைக்கலாமென்று சொல்லிக்கொண்டிருந்தேன்.” உத்தரை “தாங்கள் முதற்படைத்தளபதியாக முன்செல்வதாக அரசாணை” என்றாள். “நானா? என்னால் எழுந்து அமரவே முடியாதே? தவறான செய்தி” என்றான். உத்தரை “அல்ல” என்றாள். “அரசாணையை படித்து நோக்கியபின்புதான் வருகிறேன்.”

உத்தரன் படபடப்புடன் எழுந்தமர்ந்து “என்ன சொல்கிறாய்?” என்றான். “தாங்கள்தான் படைநடத்தி செல்லப்போகிறீர்கள், மூத்தவரே” என்றாள். “நானா? நான் எப்படி? என்னால் வலியை தாங்கமுடியாமல் படுத்திருக்கிறேன். நேற்றிரவெல்லாம் இறந்துவிடுவேன் என்றே ஐயுற்றேன்” என்றான். “வேண்டுமென்றால் மருத்துவரிடம் கேள். உண்மையில் என்னால் இப்போதுகூட அசையமுடியவில்லை. எலும்புகள் உடைந்து நொறுங்கியுள்ளன.”

“எப்படியாயினும் அரசகுடியைச் சேர்ந்த ஒருவர்தான் படைநடத்திச் செல்லமுடியும். தாங்கள் முன்னால் சென்றால்தான் படைவீரர்கள் ஊக்கம் கொள்வார்கள். அரசகுடி அரண்மனையில் அமர்ந்துகொண்டு படைகளை மட்டும் அனுப்பினால் அது இழிசொல்லுக்கு இடமாகும். அதை எண்ணியே தாங்கள் படைநடத்துவதாக அறிவிக்கப்பட்டுள்ளது” என்றாள் சைரந்திரி. “என்னை கேட்காமல் எப்படி அறிவிக்கலாம்? என்னிடம் எவருமே எதையும் சொல்லவில்லையே? இதென்ன அறமின்மை? இதை தட்டிக்கேட்க ஆளில்லையா?” என்று உத்தரன் கூச்சலிட்டான்.

“இல்லையே, ஆபர் வந்து தங்களிடம் சொன்னார் என்றார்களே?” என்றாள் சைரந்திரி. “ஆம், ஆபர் சொன்னார். ஆனால் என்னால் இயலாது. என் கால் இன்னும் சீரடையவில்லை என்று நான் சொன்னேன். மருத்துவரை அழைத்து அவரிடம்

விளக்கச்சொன்னேன். மருத்துவரே அவரிடம் விரிவாக விளக்கினார்.” சைரந்திரி “யார், வெளியே நின்றிருக்கிறாரே, அவரா?” என்றாள். “ஆம், சுக்ரன் என்று பெயர். திறன்கொண்டவன்.” சைரந்திரி “தெரிகிறது” என்றாள். சுபாஷிணி “தாங்கள் தேரில்தான் செல்லப்போகிறீர்கள்” என்றாள். “தேரில் செல்லலாம், ஆனால் தேரை யார் ஓட்டுவது? பயிலாத ஓட்டுநர் ஓட்டினால் படைக்களத்தில் நான் எப்படி போர்புரிய முடியும்? என் திறனுக்கு நிகரான பாகன் வேண்டாமா?”

உத்தரை “எனது ஆசிரியர் பிருகந்நளை தேரை ஓட்டுவார்” என்றாள். சுதேஷ்ணை “அவளா? அவள் ஆணிலி அல்லவா?” என்றாள். “ஆம்! ஒரு ஆணிலி என் தேரை ஓட்டலாகாது. அது எனக்கு இழுக்கு. நாளை நூல்களில் ஆணிலியை முன்னிறுத்தி போர்புரிந்தான் என்று என்னைப்பற்றி சொல்வார்கள்” என்றான். “அவர் ஆண் உரு தாங்கி வருவார். அவரென்று எவருக்கும் தெரியாது” என்றாள் உத்தரை. “எனக்குத் தெரியுமே? அந்த இழிவை என்னால் தாங்க முடியாது. அவள் வேண்டியதில்லை. நான் மறுக்கிறேன்… உயிர்போனாலும் அவள் ஓட்டும் தேரில் நான் ஏறமாட்டேன்” என்றான் உத்தரன்.

சுதேஷ்ணை “ஆம், அவனுக்கு உவப்பில்லாத ஒருவர் தேரை ஓட்டினால் அவனால் போரிட முடியாது” என்றாள். உத்தரை சினத்துடன் அன்னையை நோக்கி “அன்னையே, தாங்கள் சற்று வாயை மூடிக்கொண்டிருங்கள். உங்கள் மைந்தனை இவ்வண்ணம் ஆக்கியதே உங்கள் அறியாமைதான்” என்றாள். ஒருகணம் அறியாமல் சைரந்திரியை திரும்பி நோக்கியபின் முகம் சிவந்து எழுந்த சுதேஷ்ணை “என்னடி பேசுகிறாய்? யாரிடம் பேசுகிறாய் என்று தெரிகிறதா?” என்றாள். “விராடரின் மனைவியிடம், விராடபுரி அரசியிடம் பேசுகிறேன். அரசிபோல

பேசும்படி கோருகிறேன். அகத்தளத்துப் பெண்டிரின் குரலில் பேசுவது அரசிக்கு எந்த வகையிலும் உகந்ததல்ல” என்றாள் உத்தரை.

அரசி உடல்பதற மீண்டும் சைரந்திரியை பார்த்துவிட்டு “இதெல்லாம் யார் சொல்லி எழும் சொற்களென்று எனக்குத் தெரியும். நான் பார்க்கிறேன்” என்றாள். பிறகு மூச்சு ஏறி இறங்க கைகள் பதைக்க சொல்லுக்காக தத்தளித்தபின் “என் மைந்தனை ஆணிலி கொண்டுசெல்லவேண்டாம்” என்றாள். “ஆணிலியாக இருப்பதைவிட அது ஒன்றும் இழிவில்லை” என்றாள் உத்தரை. “என்னடி சொல்கிறாய்?” என்று சுதேஷ்ணை கூவினாள். “ஆம், இவர் ஒரு போருக்காவது சென்றால் விராடத்தின் இழந்த மதிப்பு சற்றாவது மீளும்.”

“என் மைந்தன் போர்முனையில் சாக நான் விடமாட்டேன். அனைவரும் அறிவார்கள் அவனுக்கு போர் தெரியாதென்று. எவரோ வஞ்சம்கொண்டு அவனை வேண்டுமென்றே படைமுகப்புக்கு அனுப்புகிறார்கள்” என்றாள் சுதேஷ்ணை. உத்தரன் “ஆம், அன்னையே. இதில் ஏதோ சூழ்ச்சி இருக்கிறது. என்னை கொல்ல நினைக்கிறார்கள்…” என்றான். “என் மைந்தன் உயிர் பிரிந்தால் இந்த நாடு வேறு சிலர் கைகளுக்கு செல்லும். பெண்கொள்ள வருபவர்கள் இந்நாட்டை கைப்பற்றுவார்கள்…” என்றபின் அவள் சீற்றத்துடன் உத்தரையை நோக்கி “அதுதான் இச்சூழ்ச்சியின் பின்னால் உள்ள எண்ணம்” என்றாள்.

உத்தரன் உத்தரையை நோக்கி “நீதான் தந்தையிடம் சொன்னாயா, நான் படைநடத்திச் செல்லவேண்டுமென்று?” என்றான். உத்தரை ஏளனத்துடன் உதடு வளைய “எவர் சொன்னாலும் சொல்லாவிடினும் தாங்கள்தான் படைமுகம் செல்லவேண்டும். அது அரசாணை” என்றபடி எழுந்தாள். “நான்

செல்லப்போவதில்லை. நான் எவர் ஆணையிட்டாலும் செல்லப்போவதில்லை” என்றான் உத்தரன். “நீ செல்ல வேண்டியதில்லை. நான் உன் தந்தையிடம் பேசிக்கொள்கிறேன்” என்றபின் சுதேஷ்ணை மீண்டும் சைரந்திரியை பார்த்தபின் திரும்பிக்கொண்டு “நான் இந்த நாட்டின் அரசி. இங்கு அரசருக்குப்பின் என் சொல்லே நெறியென்றாகும். நானே ஆணையிடுகிறேன்” என்று மூச்சிரைக்க சொன்னாள். கால்கள் அதிர்வொலி எழுப்ப திரும்பிச் சென்றாள். அவளுடன் சேடிகளும் சென்றனர்.

சைரந்திரி “அரசி சொன்னதை தாங்கள் ஏற்கிறீர்களா? தங்களைப்போன்ற பெருவீரர் படைமுகப்பில் இறந்துவிடுவார்கள் என்கிறார்களே?” என்றாள். உத்தரன் கண்களில் நீர் தளும்ப குரல் தழுதழுக்க “அவர் சொன்னதுதான் உண்மை. என்னால் போர்புரிய முடியாது” என்றான். “சவ்யசாஜி என்றீர்கள்?” என்றாள் சுபாஷிணி. “அதெல்லாம் நான் வெறுமனே சொல்லிக்கொள்வது. மெய்யாகவே இதுவரை நான் ஒருமுறைகூட இலக்கில் அம்பை எய்ததில்லை. படைமுகம் சென்றால் எழும் முதல் அம்பிலேயே தேர்த்தட்டில் இறந்துவிழுவேன்” என்றான்.

சைரந்திரியின் கைகளைப்பற்றியபடி “சைரந்திரி, உன் சொற்களை அரசர் கேட்பார். நீ சென்று சொல், என்னை இழந்துவிடவேண்டாம் என்று” என்றான். அவன் கண்ணீர் கன்னங்களில் வழிந்தது. மூக்கை உறிஞ்சி மேலாடையால் துடைத்தபடி “இளவரசனாகப் பிறந்ததனால் நான் களம் சென்று சாக வேண்டுமா என்ன? இளவரசுப் பதவியை துறக்கிறேன். எங்காவது ஓடிச்சென்று எளிய குதிரைக்காரனாக வாழ்ந்துகொள்கிறேன்” என்றான். உத்தரை எழுந்து ஏளனத்துடன்

“குதிரைக்காரனாக வாழவேண்டுமென்றால் குதிரை ஏறத் தெரியவேண்டுமல்லவா? அது தெரிந்தால் எப்படி இப்படி விழுந்து கால் ஒடிந்து கிடப்பீர்கள்?” என்றாள்.

உத்தரன் வெறிகொண்டு “நீதான் என்னை கொல்லப்பார்க்கிறாய்! நான் செத்தால் என் நாடு உனக்கென்று திட்டமிடுகிறாய்” என்று கூவினான். நரம்புகள் புடைக்க பற்களைக் கடித்து கைநீட்டியபடி “கலிங்கத்து இளவரசி என்னை மணக்கமாட்டாளென்று சொன்னதே உன்னால்தான். உனது ஒற்றர்கள் என்னைப்பற்றி பிழையான செய்திகளை அவர்களிடம் சொல்லியிருக்கிறார்கள்” என்றான். உத்தரை சினத்துடன் சிரித்து “என்ன பிழையான செய்திகள்? புரவியிலிருந்து உருண்டு அவர்கள் காலடியில் விழுந்து கிடந்ததா? அதை நான் சொல்லித்தான் அவர்கள் அறிந்தாக வேண்டுமா?” என்றாள்.

“அது விபத்து. அது அவர்களுக்கும் தெரியும். என்னைப்பற்றி நீ என்ன சொன்னாய் என்று நான் விசாரித்து தெரிந்துகொள்ளத்தான் போகிறேன்” என்றான். உத்தரை “அதெல்லாம் பிறகு. நாளை புலரியில் நீங்கள் தேர் ஏறி போருக்குச் செல்கிறீர்கள்... இது உறுதி” என்றாள். “செல்லப்போவதில்லை. மாட்டேன்... எவர் சொன்னாலும் உடன்பட மாட்டேன்” என்றான். அவள் எழுந்துகொண்டு திரும்ப “என்னை வற்புறுத்தினால் நான் உயிர்துறப்பேன்” என்று கூவினான். “நன்று! களம்சென்று உயிர்துறவுங்கள்...” என்றபடி உத்தரை தன் தோழிகளிடம் வரும்படி தலையாட்டிவிட்டு நடந்து சென்றாள்.

உத்தரன் “நான் என்ன செய்வேன்? அனைவரும் சேர்ந்து என்னை கொல்லப்பார்க்கிறார்கள்” என்றபின் உரத்த குரலில் விசும்பி அழத்தொடங்கினான். சுபாஷிணி சிரிப்பை

அடக்குவதற்காக உதடுகளைக் கடித்தபடி சாளரத்தை பார்த்தாள். சைரந்திரி உத்தரனின் தலையை கையால் தொட்டு “இளவரசே, எனது சொற்களை நம்புகிறீர்களா?” என்றாள். “உன்னை நம்புகிறேன். இந்த இக்கட்டிலிருந்து என்னை நீ காப்பாற்ற முடியும்” என்றான் உத்தரன். “அப்படியானால் இது என் சொல். இந்தப் போரில் நீங்கள் இறக்கப்போவதில்லை. வென்று மீளப்போகிறீர்கள். இந்த நகரம் உங்கள்மேல் அரிமலர் வீசி வாழ்த்தி கொண்டாடப்போகிறது. பெருவீரர் என்ற பெருமை உங்களுக்கு இந்தப் போரால் அமையும். நீங்கள் இழந்த கலிங்கத்து இளவரசி உங்களை நாடி வருவாள். நம்புங்கள்” என்றாள்.

“அது எப்படி? உண்மையில் எனக்கு ஒன்றுமே தெரியாது. என் எதிரே ஒருவர் வாளை உருவினாலேயே என் நெஞ்சு திடுக்கிடுகிறது” என்றான் உத்தரன். “உங்களை பிருகந்நளை அழைத்துச் செல்வாள் அல்லவா, அவளை நம்புங்கள்” என்றாள் சைரந்திரி. “அந்த ஆணிலியை...” என்று அவன் தொடங்க “அவளுக்கு விஜயன் என்னும் கந்தர்வனின் துணை உண்டு. அவன் போரை நிகழ்த்துவான்” என்றாள் சைரந்திரி. “கந்தர்வனா? அதை எப்படி நம்புவது?” என்றான் உத்தரன். “நம்புங்கள்... அவளிலிருந்து அந்த கந்தர்வன் வெளிப்படுவான். பாரதவர்ஷத்தின் எந்தப் பெருவீரனும் அவள் முன் நிற்க முடியாது” என்றாள்.

உத்தரன் கேவலோசை எழுப்பினான். “அவள் முன் நிற்கும் தகுதி படைத்தவர் ஒருவரே. அங்கநாட்டார் கர்ணன். அவர் இப்போது உகந்த உள நிலையில் இல்லை. மச்சர் படைகள் அவர்கள் சொல்லுக்கு கட்டுப்பட்டவையும் அல்ல. தாங்கள் வென்று மீள்வீர்கள்” என்றாள் சைரந்திரி. “என்னால் நம்ப

இயலவில்லை” என்றான் உத்தரன். “என் சொற்களை நம்புங்கள். பிருகந்நளையை நம்புங்கள்” என்றாள் சைரந்திரி. உத்தரன் மஞ்சத்தில் குப்புறக் கவிழ்ந்து தலையணையில் முகம் புதைத்து தோள்கள் குலுங்க அழுதுகொண்டிருந்தான். அவன் தலையை மெல்ல தொட்டபின் செல்வோம் என்று விழிகாட்டினாள் சைரந்திரி.

வெளியே செல்லும்போது சுபாஷிணி “அரசரிடம் இளவரசரை எப்படியாவது தவிர்த்துவிடச் சொல்லுங்கள், தேவி” என்றாள். “ஏன்?” என்றாள் சைரந்திரி. “அவர் அழுவதைக் காணும்போது உளம் நெகிழ்கிறது” என்றாள் சுபாஷிணி. சைரந்திரி புன்னகையுடன் “பார்ப்போம்” என்றாள்.

# நீர்க்கோலம் - 86

## 85. தொலைமீன்ஒளிகள்

குடில் வாயில் திறந்து பிருகந்நளை வெளியே வந்தபோது முக்தன் வேல்தாழ்த்தி வணங்கினான். இரும்புக் கம்பிகளால் முடையப்பட்ட மார்புக் கவசமும் இரு கைகளில் காப்புக் கவசங்களும் தோளில் சிறகென எழுந்திருந்த இலைக் கவசங்களும் அணிந்து இரும்புக்குடம் போன்ற தலைக் கவசத்தை இடையோடு அணைத்தபடி இரும்புக் குறடுகள் எடையுடன் ஒலிக்க படிகளில் இறங்கி அவனை நோக்கி கையசைத்துவிட்டு பிருகந்நளை தன் புரவியை நோக்கி சென்றாள். அவள் விழிகள் மாறிவிட்டிருந்தன. அவள் ஏறி அமர்ந்த பின்னர் தன் புரவியிலேறி அமர்ந்து அவளைத் தொடர்ந்தான் முக்தன். அணிக்காட்டை சீரான குளம்படித் தாளத்துடன் கடந்து சாலைக்கு வந்தனர்.

விடிவெள்ளி தோன்றியிருக்கவில்லை. வானம் விண்மீன் பெருக்கென கிழக்கு நோக்கி சென்றுகொண்டிருந்தது. அது ஒரு ஓட்டம் என ஒவ்வொரு முறையும் ஏன் தனக்குத் தோன்றுகிறது என அவன் வியந்துகொண்டான். விழிதூக்கி வானத்தைப் பார்க்கையில் அவ்வசைவுக்கு சற்று முன்னர்தான் விண்மீன்கள் அவ்வாறு தங்களை அமைத்துக்கொண்டன என்று அவனுக்குத் தோன்றுவதுண்டு. கரவுக்காட்டின் காவல் மாடத்திலிருந்து அவன் இரவெலாம் கூர்ந்தும் துயில்மயங்கி கனவுக்குள்ளும் விழித்தெழுந்து அரையுள்ளத்துடனும் நோக்கிய விண்மீன்களை எண்ணிக்கொண்டான்.

இளவயதில் விண்மீன்களை நோக்கும்போது கண்ணீர் துளிர்க்கச்செய்யும் உள எழுச்சி ஒன்றை அடைவான். இங்கிருக்கிறேன் இங்கிருக்கிறேன் என்று நெஞ்சில் அறைந்து வான் நோக்கி கூவவேண்டும்போல தோன்றும். மண்ணில் நிகழ்ந்த தன் பிறப்பிற்கு அறியாத பெரும் பொருளொன்று உண்டு என்றும் ஆற்றவேண்டிய பெருஞ்செயல்களின் நிரையொன்று எதிர்காலமாக தன் முன் எழுந்து அகன்றிருப்பதாகவும் உள்ளம் பொங்கி எழும். பின்னர் வான்பரப்பு சோர்வு தரக்கூடியதாக மாறியது. அங்கிருக்கும் அச்சிமிட்டல்களுக்கு எப்பொருளும் இல்லை. இருக்கலாம், மானுடன் அறியக்கூடுவதொன்றுமில்லை. மண்ணில் சிமிட்டும் மின்மினிகள் அறிந்திருக்கலாம். பின்னர் இங்கிருக்கிறேன் என்பது ஒரு மன்றாட்டாக, ஒரு தனிமை மூச்சாக மாறியது. எப்போதேனும் ஒரு வலிமுனகலாக. பின்னர் அவன் விண்மீன்களை நோக்குவதையே தவிர்த்தான். ஒருமுறைகூட வானை நோக்காமல் முழு இரவும் காவல் மாடத்தில் அவன் அமர்ந்திருந்தான்.

சிவமூலியை இழுத்தபடி முதுகாவலர் காமிகர் சொல்வதுண்டு "வானை பார்க்கலாகாது, இளையவனே. யோகிகளன்றி எவரும் வானை பார்க்கலாகாது. உலகியலில் உழல நமக்கெல்லாம் மண்ணும் கூழாங்கற்களும்தான் அளிக்கப்பட்டுள்ளன. மண்ணை பார், கால்களை மண்ணில் நன்றாக ஊன்றிக்கொள். விண்ணை பார்த்த உலகியலாளன் வாழ்ந்ததில்லை." பின்னர் ஆழ்ந்து சிவமூலிப் புகையை இழுத்து மூச்சை நிறைத்து மூக்கினூடாக மெல்லவிட்டபடி "இதோ நான் இழுத்து உள்ளே நிரப்புவது வானில் நிறைந்திருக்கும் அம்முகிலின் ஒரு துளியை. ஏதோ ஒரு பிழையால் எப்போதோ வானை பார்க்கத் தொடங்கினேன். நான் கொண்டிருந்த அனைத்தையும் வானம் உறிஞ்சிவிட்டது" என்றார்.

அவன் அவருடைய மெலிந்த மார்பு அதிர்வதை நோக்கிக்கொண்டிருந்தான். வெறி மின்னும் விழிகளுடன் அவர் கையூன்றி அவன் அருகே வந்தார். "பார், இந்தப் புவியிலுள்ள அனைத்தையும் வானெனும் கடுவெளி ஒவ்வொரு கணமும் உறிஞ்சிக்கொண்டிருப்பது தெரியும். பெருங்கடல்களை, ஏரிகளை, இலைநுனி நீர்த்துளிகளை. மூடா, இங்குள்ள அத்தனை மூச்சுகளையும் அது உறிஞ்சிக்கொண்டிருக்கிறது. அத்தனை சொற்களையும் இழுத்துக்கொள்கிறது. அது வெறும் இருள். அவ்வளவுதான். பிறிதொன்றுமில்லை." மீண்டும் சிவமூலியை ஆழ இழுத்து இருமினார்.

"விண்மீன்களை பார்க்கிறாயா? அவை அந்த இருள் காட்டும் மாயத்தோற்றம் மட்டுமே. இதோ இந்த ஒவ்வொரு விண்மீனும் ஒரு தூண்டில் முனை. ஏதோ ஒன்றில் உன் தொண்டை சிக்கிக்கொண்டால் அவ்வளவுதான், சுண்டி மேலிழுத்துவிடும். அங்கே கிடந்து துள்ளித்துள்ளி மூச்சு மூச்சு என ஏங்குவாய்.

நான் பார்த்திருக்கிறேன். நேற்றுகூட முதுகாவலர் பூராடர் இறப்பதை சென்று பார்த்தேன். வாய் திறந்து நெஞ்சு உந்தி உந்தி எழ… பின்னர் வெறும் குளிர்ந்த உடல். அர்த்தமில்லாத ஒரு குப்பை.” அவர் உரக்க இருமினார். அவன் அவரது விழிகளை நோக்கினான். சிவமூலி இழுப்பவர்களின் விழிகளில் ஏன் அந்த கடந்தநோக்கு உருவாகிறது?

“பல்லாயிரம் ஆண்டுகளாக மனிதன் இங்கே வேள்வியில் அவி சொரிந்து விண்ணுக்கு அனுப்பிக்கொண்டிருக்கிறான். விண்ணில் எவரோ அதை வாங்கிக்கொள்கிறார்கள் என்று நம்புகிறான். ஆம், வாங்கிக்கொள்கிறது. ஆனால் அம்முடிவிலிக்கு நீ இடும் அவியும் சொல்லும் எவ்வகையில் பொருள்படும்? மூடா, பெருங்கடல்களே அதற்கு ஒரு துமி அல்லவா? வெறும் இருள். ஒவ்வொன்றும் இருளுக்குள் சென்று விழுந்துகொண்டே இருக்கின்றது. விண்மீன்களை பார்ப்பவன் ஒளியை பார்ப்பதில்லை. இளைஞனே, உண்மையில் அவன் இருளைத்தான் பார்க்கிறான்.”

பிருகந்நளை அரண்மனையின் முற்றத்தில் புரவியை இழுத்து நிறுத்தி “இங்குதானே இளவரசர் இருக்கிறார்?” என்றாள். “நேற்றிரவு இருந்தார்” என்றான் முக்தன். பிருகந்நளை புன்னகைத்து “அவரை அழைத்துச் செல்வோம்” என்றாள். “போருக்கா? அவர் தலைமை தாங்குவது உண்மையா?” என்றான். புரவியிலிருந்து இருவரும் இறங்க காவலர் வந்து கடிவாளத்தை பற்றிக்கொண்டனர். பிருகந்நளையைக் கண்டதும் காவல்வீரர்கள் வேல்தாழ்த்தி வணங்கினர். முக்தன் “இளவரசர் இருக்கிறாரா?” என்றான். “துயின்றுகொண்டிருக்கிறார்” என்றான் காவலன்.

மருத்துவநிலையை அடைந்து அதன் வாயிலில் நின்ற இளம்மருத்துவரிடம் “இளவரசரின் அறையை காட்டுக!” என்றான். “அவர் உடல்நலமின்றி…” என அவன் சொல்லத் தொடங்க முக்தன் “அதை கேட்கவில்லை…” என்றான். “அவர் கால்கள் உடைந்து…” என அவன் மீண்டும் தொடங்க முக்தன் வாள்மேல் கையை வைத்தான். “அவரால் நடக்கமுடியும்… இதோ, நானே அழைக்கிறேன். முதல் பேரறைதான்” என்று அவன் உடன்வந்தான். “நானே செல்கிறேன்” என்றான் முக்தன். அவர்கள் படிகளில் ஏறி மேலே இடைநாழியை அடைந்து அறைகளை நோக்கி சென்றார்கள்.

கதவருகே பிறிதொரு இளம்மருத்துவன் அமர்ந்தபடி வாய்வழிய துயில்கொண்டிருந்தான். காலடி ஓசை கேட்டு அவன் எழுந்து வாயை துடைத்தபடி “இளவரசர் துயில்கிறார். எவர் வந்தாலும் தன்னை எழுப்ப வேண்டாம் என்று சொன்னார்” என்றான். “எழுப்பு” என்று பிருகந்நளை ஆண்குரலில் சொன்னாள். அவன் தலைவணங்கி “ஆணை” என்றபின் கதவைத் தட்டி “இளவரசே! இளவரசே!” என்றான். கதவு உள்ளே மூடப்பட்டிருந்தது. “இளவரசே! கதவை திறவுங்கள், இளவரசே!” என்று பலமுறை அழைத்தான். பிருகந்நளை இரண்டு அடிகள் பின்னால் வைத்து கதவை ஓங்கி மிதித்தாள். தாழ் உடைந்து திறந்த கதவு இரு சுவர்களை அறைந்து அதிர்ந்தது.

உள்ளே மஞ்சம் ஒழிந்து கிடந்தது. பிருகந்நளை உள்ளே சென்று நாற்புறமும் பார்த்து சாளரத்தை நோக்கி சென்றாள். சாளரக்கதவு திறந்து கிடக்க அப்பால் போர்வை ஒன்று கதவுச்சட்டத்தில் கட்டப்பட்டு கீழே தொங்கியது. “தப்பிவிட்டார்” என்றான் முக்தன். பிருகந்நளை சாளரத்தில் ஏறி மறுபுறம் குதித்தாள். முக்தன் சாளரத்தில் ஏறி அதன் ஆழத்தைக் கண்டு

திகைத்தான். பின்னர் போர்வையைப் பற்றியபடி மெல்ல தொங்கியபடி கீழே சென்று பாதிக்குமேல் கீழே குதித்தான். அதற்குள் பிருகந்நளை கீழே தெரிந்த காலடிச் சுவடுகளைப் பார்த்தபடி அணிச்சோலைக்குள் சென்றுவிட்டிருந்தாள்.

முக்தன் அவள் காலடிகளை நோக்கி பின்னால் சென்றான். புதர்களுக்குள்ளிருந்து உத்தரன் அலறும் ஒலி கேட்டது. “என்னை விடு! நான் வரப்போவதில்லை. என்னை விடு. நான் தப்பி ஓடிவிட்டேன் என்று சொல். நீ கேட்பதை அளிக்கிறேன்... என்ன வேண்டுமென்று கேள்” என்று உத்தரன் கதறினான். பிருகந்நளை அவனை இரு கைகளையும் பற்றி இழுத்து வந்தாள். “நான் வரமாட்டேன். உயிர் துறப்பேன்” என்று உத்தரன் கூவினான். பிருகந்நளை தன் கையை அவன் கழுத்தில் வைத்து “நீங்கள் வருகிறீர்கள். கவச உடைகளை அணிந்து என்னுடன் கிளம்புகிறீர்கள். அதை மறுப்பதென்பது இக்கணமே இங்கு கழுத்து முறிந்து இறந்து விழுவதுதான்” என்றாள்.

“என்ன சொல்கிறாய்? நான் விராடபுரியின்...” என்று சொல்லத் தொடங்க “கழுத்து முறிந்தால் கீழே விழுந்து இறந்ததாக மட்டுமே பொருள்” என்ற பிருகந்நளை போர்வையை சுட்டிக்காட்டி “சான்றை நீங்களே உருவாக்கிக்கொண்டிருக்கிறீர்கள்” என்றாள். உத்தரன் உதடுகளை அழுத்திக்கொண்டு விம்மினான். “இளவரசே, இரு வாய்ப்புகள் உங்களுக்கு உள்ளன. போர்க்களம் வந்தீர்களென்றால் உங்களைக் காக்கும் பொறுப்பை நான் ஏற்றுக்கொள்கிறேன். வரவில்லையென்றால் இங்கேயே உங்களை கொன்றுவிட்டு செல்வேன்” என்றாள் பிருகந்நளை.

“வருகிறேன், வருகிறேன்” என்று அவள் கைகளை பற்றினான். “வருக!” என்றாள் பிருகந்நளை. அவனை அழைத்து

மறுவழியினூடாக உள்ளே வந்தாள். அவன் அடிபட்ட நாய்போல ஒரு கையை வளைத்து தூக்கிக்கொண்டு விசும்பி அழுதபடி வந்தான். வீரர்கள் அவனைப் பார்த்ததுமே சிரிப்பை அடக்கி விழிவிலக்கிக்கொண்டார்கள். பிருகந்நளை வீரர்களிடம் "இளவரசருக்கு கவசங்களை அணிவியுங்கள்" என்றாள். உத்தரன் "நான் அணியறைக்குச் சென்று கவசங்களை அணிந்தபின்…" என்று தொடங்கினான். "கவசங்களை இங்கேயே அணியலாம்" என்றாள் பிருகந்நளை.

உத்தரனுக்கு வீரர்கள் கவசங்களை அணிவிக்கத் தொடங்கினர். அவன் இரு கைகளாலும் முகத்தை மூடி அசையாமல் நின்றான். "கையை விரியுங்கள், இளவரசே " என்று வீரர்கள் அதட்ட இரு கைகளையும் பறவைபோல் விரித்தான். அவர்கள் அவன் ஆடைக்குமேல் இரும்புக் கவசங்களை அணிவித்தனர். "நான் கொற்றவை ஆலயத்திற்குச் சென்று…" என அவன் தொடங்க "நீங்கள் எங்கும் செல்லவில்லை" என்றாள் பிருகந்நளை. அவன் "ஆனால்…" என்றான். "சொல் எழக்கூடாது" என்றாள். அவன் உதடுகளை அழுத்தியபடி விழிநீர் கன்னங்களில் உருள அழுதான்.

பிருகந்நளை முக்தனிடம் "படைகள் கோட்டை வாயிலில் அணிவகுத்துவிட்டன என்றார்கள். இன்னும் சற்று நேரத்தில் இளவரசர் படைமுகம் வருவார். செய்தியை படைத்தலைவர்களுக்கு அறிவித்துவிடு" என்றாள். "ஆணை" என்று சொல்லி முக்தன் கிளம்பிச் சென்றான். அவனுக்குப் பின்னால் உத்தரன் "நான் அன்னையை ஒருமுறை பார்க்கவேண்டும்" என்று சொல்ல ஒரு படைவீரனே "பேசாமலிருங்கள், இளவரசே" என அதட்டுவது கேட்டது.

முன்புலரியில் நகரம் ஆள் ஒழிந்து கிடந்தது. படைப்புறப்பாட்டின்போது எவரும் இல்லங்களை விட்டு வெளியே வரலாகாது என்ற ஆணை இருந்தது. விளக்குத் தூண்கள் அனைத்திலும் மீன் எண்ணெய் விளக்குகள் செவ்வொளி பரப்பிக்கொண்டிருந்தன. சிவந்த பூழிமண் இரவெல்லாம் சென்ற யானைக் காலடிகளும், குளம்புத் தடங்களும், சகடத் தடங்களும் பதிந்து குழம்பி உழுதவயலெனத் தோன்றியது. மரவுரி மெத்தைமேல் செல்வதுபோல முக்தனின் புரவிக் குளம்போசை அழுந்திக் கேட்டது. குளம்புகளின் ஓசை நகரத்தின் இருளின் மூலைகளில் எதிரொலி எழுப்பியது. அவன் உள்ளம் ஓய்ந்து கிடந்தது. எழுச்சியும் சோர்வுமென அலைக்கழித்த அனைத்தும் அவிந்தடங்கிவிட்டிருந்தன. அத்தனை அமைதியை அதற்குமுன் அவன் அறிந்திருக்கவேயில்லை.

கோட்டை முகப்பை அவன் அடைந்தபோது அங்கே நின்றிருந்த படையின் மெல்லிய முழக்கத்தை கேட்டான், காற்று இலைகளுக்குள் ஒழுகுவதுபோல. பல்லாயிரம் பேர் மெல்லிய குரலில் பேசி மூச்சுவிடும் ஒலியும், படைக்கலங்களும் கவசங்களும் முட்டிக்கொள்ளும் ஒலியும் நிறைந்த கார்வை. கோட்டைவாயிலைக் கடந்து ஒரே விழியகல்வில் படைவிரிவைப் பார்த்தபோது அவன் கடிவாளத்தை இழுத்து ஒருகணம் அசையாமல் நின்றான். கண் அழியும் இருளில் நீர்நிலையொன்றை பார்ப்பதுபோல் இருந்தது. விழிதொடும் தொலைவு வரை வேல்களும் வாள்களும் கவசங்களும் மெல்லிய பளபளப்புடன் அலையொளியெனத் தெரிந்தன.

தொலைவில் மறுமுனையில் படை முகப்பில் மட்டும் ஒரே ஒரு நெய்ப்பந்தம் எரிந்தது. அதனருகே நின்றிருந்த

படைத்தலைவர்கள் தலைப்பாகைகளும் ஒளிகொண்ட தாடிகளுமாக செந்நிறப் பட்டுத் திரைச்சீலை ஓவியம் ஒன்றை தொங்கவிட்டதுபோல் தெரிந்தனர். அவன் சீரான குளம்படி ஓசையுடன் படைவிளிம்பை அடைந்தான். அங்கு நின்றிருந்த காவல்வீரன் ஒருவன் அவனுக்குக் குறுக்காக வேலைத் தாழ்த்தி "தங்கள் முத்திரை?" என்றான். அவன் ஓலையைக் காட்டியதும் திரும்பி இன்னொரு வீரனிடம் "படைத்தலைவரிடம் அழைத்துச் செல்" என்றான்.

படை நடுவே அமைந்த பாதை நேர்கோடாக அந்தப் பந்த வெளிச்சத்தை நோக்கி சென்றது. இருபுறமும் இருளுக்குள் பல்லாயிரம் பேர் இருப்பதை அவன் புலன்கள் நம்ப மறுத்தன. மானுட உடல்களின் வேலி. மானுட அலை. விழி துலங்கி தெரிந்த இடங்கள் அனைத்திலும் இருளுக்குள் நீர்மை மின்னிய கவசங்களும் தலையணிகளும் அணிந்து வேலேந்தி நின்ற வீரர்களின் முகங்கள். அத்தனை முகங்களும் ஒன்றுபோல் ஆகிவிட்டிருந்தன. போர்க்களத்தில் எவருக்கும் தனிமுகமென ஒன்று இருக்க வாய்ப்பில்லை என்று தோன்றியது. ஏனெனில் தனி உணர்ச்சி என்று ஏதுமில்லை. பல்லாயிரம் கைகளும் கால்களும் கொண்டு ஒற்றை உயிரென படை தன்னை மாற்றிக்கொள்கிறது.

கிளர்ச்சியால் தன் உடல் விதிர்த்துக் கொண்டிருந்ததை உணர்ந்தான். அவ்வப்போது ஏதோ நினைவுக்கு வந்ததுபோல் அடிவயிறு முரசொலியின் கார்வையை உணர்ந்தது. படைத்தலைவரின் அருகே சென்று தலைவணங்கி பிருகந்நளையின் ஆணைகளை போர்முனைக்குரிய சுருக்கமான சொற்களில் சொன்னான். படைத்தலைவன் "உத்தரர் படைத்தலைமை ஏற்க வரப்போகிறார்" என்று

அருகிலிருந்த படைத்தலைவனிடம் சொன்னான். அவன் புன்னகைத்து “ஆம், இளவரசர் நம்மை வெற்றி நோக்கி கொண்டு செல்லப்போகிறார்” என்றான்.

முக்தன் “வெற்றி பற்றிய எந்த ஐயமும் தேவையில்லை, படைத்தலைவரே” என்றான். “ஏன்?” என்றான் படைத்தலைவன் ஏளனத்துடன். “உத்தரர் இந்திரனின் படையுதவி பெற்றிருக்கிறாரா என்ன?” முக்தன் “ஆம், இந்திரனின் மைந்தரால் இப்படை நடத்தப்படும் என்றார்கள்” என்றான். படைத்தலைவனின் கண்கள் சுருங்கின. துணைப்படைத்தலைவன் அவனருகே வந்து “என்ன சொன்னாய்?” என்றான். முக்தன் “நாம் இந்திரனின் மைந்தரால் நடத்தப்படுகிறோம்” என்றான். இருவர் விழிகளும் மாறின. “அது உண்மையா?” என்றான். முக்தன் “ஆம்” என்றான்.

படைத்தலைவன் முகம் மலர்ந்து “இப்போதே வெற்றி விழாவுக்கும் உண்டாட்டிற்குமான ஆணைகளை பிறப்பித்துவிட்டுச் செல்லலாம் போலிருக்கிறதே” என்றான். “ஆம், அதற்கும் ஆணைகள் பிறப்பிக்கப்பட்டுவிட்டன. வலவர் அடுமனை ஒருக்கங்களை துவங்கிவிட்டார்” என்றான் முக்தன். துணைப்படைத்தலைவன் உரக்க நகைத்து “வலவரா?” என்றான். இன்னொருவன் “புரவிகளுடன் கிரந்திகனும் நம்முடன் வருகிறாரல்லவா?” என்றான். முக்தன் புன்னகைத்தான்.

கஜன் மெல்ல உடலை அசைத்து நின்றான். அருகே நின்றிருந்த சற்று முதிய வீரன் திரும்பிப்பார்த்து புன்னகைத்தான். அப்புன்னகை அவனுக்கு எரிச்சலூட்டியது. வேலுடன் அவன் படைநிரைக்கு வந்தபோதே அப்புன்னகைகள் சூழ எழுந்துவிட்டன. இவருக்கு நாற்பது அகவையிருக்கும். அப்படியென்றால் கீசகருடன் படைசென்றிருக்கக்கூடும்.

பெரும்பாலும் எங்காவது ஓரமாக தங்கிவிட்டு மீண்டிருப்பார். முகத்திலோ தோளிலோ புண்வடு எதையும் காணமுடியவில்லை. ஆனால் போர்கண்டு சலித்து கனிந்த முகத்தை சூடிக்கொண்டிருக்கிறார். அடுத்த போரில் இந்த முகத்தை தானும் சூடிக்கொள்ளமுடியும் என எண்ணியபோது அவனுக்கு புன்னகை எழுந்தது.

அவன் முந்தையநாள் இரவு துயிலவில்லை. அன்னையிடமும் தந்தையிடமும் விடைபெற்றுக்கொண்டு அந்தியிலேயே கிளம்பினான். “நன்கு துயில்க, மைந்தா…” என்றார் தந்தை. அவன் தலையசைக்க “துயில் வராது என எண்ணாதே… நல்ல துயில் வரும். போர்சென்ற அனைவருமே அதை சொல்லியிருக்கிறார்கள்” என்றார். அவன் நேராக அடுமனைக்குத்தான் சென்றான். அங்கே அவனைக் கண்டதும் ஒருவன் வந்து “உலர் உணவுகள் ஒருங்கிக்கொண்டிருக்கின்றன. இன்னும் சற்றுநேரத்தில் நேராக படைமுனைக்கே சென்றுவிடும், வீரரே” என்றான். “நான் அதன்பொருட்டு வரவில்லை” என்றான்.

அவன் சிரித்து “ஒளிய வந்தீரோ? ஆனால் உமது உடலுடன் நீர் அடுமனையாளனாக இங்கே அமையமுடியாதே” என்றான். கஜன் சினத்துடன் நோக்க “சினம் வேண்டாம். உம்மைக் கண்டாலே தெரிகிறது வீரர் என்று. நான் களியாட்டு சொன்னேன்” என்றான். “என் பெயர் அஸ்வகன்…” என்று அறிமுகம் சொன்னான். கஜன் தன் பெயரை சொல்லிவிட்டு “நான் சம்பவர் என்பவரை சந்திக்கவேண்டும்” என்றான். “எதற்கு?” என்றான் அஸ்வகன். “நான் அவருக்குச் சிறிது பணம் கொடுக்கவேண்டியிருக்கிறது. கடனுடன் படைசெல்லக்கூடாதே”

என்றான். “ஆம், அடுமனையாளர்களை சற்றும் நம்பக்கூடாது. நரகத்திற்குக்கூட தேடிவந்து பணத்தைக் கேட்பார்கள்.”

கஜன் புன்னகைத்து “அவர் எங்கே?” என்றான். “அவனா? இருங்கள், கேட்டு வருகிறேன்” என்று உள்ளே சென்ற அஸ்வகன் திரும்பிவந்து “அவன் யானைகளுக்கான கவளத்துடன் மேற்குவாயிலுக்கு சென்றான் என்கிறார்கள்” என்றான். கஜன் அவனிடம் விடைபெற்று மேற்குவாயிலுக்கு சென்றான். அங்கே அவனிடம் பேசிய முதிய யானைப்பாகனாகிய சீதளன் “இங்கே உச்சிப்பொழுதில்தான் வந்தார். கவளமூட்டு முடிந்ததுமே சென்றுவிட்டார்... எங்கே சென்றார் என்று தெரியாது... ஒருவேளை கிழக்குவாயிலில் இருக்கலாம்...” என்றார்.

கிழக்குவாயிலுக்கு அவன் செல்லும்போது வழியில் ஒரு குரல் உரக்க அழைத்தது. “அடேய், என்ன செய்கிறாய்? ஒளிந்து அலைகிறாயா? என்ன படைப்பிரிவு நீ?” அவன் தடுமாறி நிற்க தீர்க்கன் அவன் தோளை பிடித்துக்கொண்டான். “வா” என்றான். “நான் இளவரசர்...” என அவன் பேசத்தொடங்க “வா... எந்த மறுசொல்லையும் நான் கேட்க சித்தமாக இல்லை” என்றான் தீர்க்கன். அவன் “அரசாணைப்படி செல்கிறேன்... இப்போது...” என்று திமிறினான். அவ்வழியாக புரவியில் சென்ற அவனுடைய ஆயிரத்தவர்தலைவன் அவன் குரலைக் கேட்டு “நீ கஜன் அல்லவா?” என்றான். “ஆம், நான் இப்போது...” என்று கஜன் சொல்லத்தொடங்க “இதோ, இந்த ஓலையை படைத்தலைவரிடம் கொடு. நீயும் அங்கேயே இரு... நான் சற்றுநேரத்தில் அங்கே வருகிறேன்” என்றான்.

கஜன் தலைவணங்கி ஓலையை வாங்கிக்கொண்டான். அதன்பின் ஏதும் செய்வதற்கில்லை என்று தெளிவாகவே

தெரிந்தது. அவன் பெருமூச்சுவிட்டான். சம்பவனிடம் சொல்லியிருந்தால் அவன் ஒரு பணியை முடித்துவிட்டதாக இருக்கும். சுபாஷிணியிடம் சொன்ன சொல். ஆனால் அது அவ்வளவு பெரியதல்ல என்றும் அப்போது தோன்றியது. ஆணும் பெண்ணும் இணையவேண்டுமென ஊழிருந்தால் இணைவார்கள். அவர்களை வைத்து ஆடும் கைகள் அதை முடிவு செய்யட்டும். அப்படியென்றால் தன்னை வைத்து ஆடும் கை எது? இப்போரில் அவன் இறந்துவிடுவான் என்னும் எண்ணம் அப்போது எழுந்தது. தொடக்கத்திலிருந்தே அனைத்தையும் எண்ணித் தொகுத்தபோது அந்த ஒழுங்கு அங்கேதான் கொண்டுசென்றது.

அவன் அளித்த ஓலையை வாங்கியபின் படைத்தலைவன் “அணிகளில் சென்று நில்... நீ கடைநிலையன் அல்லவா? எப்படி ஆயிரத்தவர் உன்னை பார்த்தார்? சாலையில் அலைந்தாயா?” என்றான். அவன் “ஆணைகளை...” என தொடங்க “சென்று நில்” என்றபின் அவன் திரும்பிக்கொண்டான். கஜன் அணிகளில் அவன் நிரையை சென்றடைந்தான். அங்கே அனைவரும் வெறுந்தரையில் படுத்து துயின்றுகொண்டிருந்தனர். உண்மையிலேயே பெரும்பாலானவர்கள் ஆழ்ந்த துயிலில் இருந்தனர். அவன் அவர்களை நோக்கியபின் தன் உடலை மண்ணில் நீட்டிக்கொண்டான். ஒருவர் படுக்கும் அளவுக்கே இடமிருந்தது. தோளோடு தோள் முட்டிக்கொண்டு மல்லாந்து படுத்து விண்மீன்களை நோக்கிக்கொண்டிருந்தான்.

அவள் தன்னை நினைப்பாளா என எண்ணிக்கொண்டான். பெண்கள் அப்படி எல்லாம் எண்ணுவார்களா என்ன? “அவர்களுக்கு குழந்தை பெற்றபின் ஆண்கள் தேவையில்லை” என்ற வரி நினைவிலெழுந்தது. புரண்டுபடுத்து கண்களை

மூடினான். கண்களுக்குள் விண்மீன்கள் தெரிந்தன. அவள் நினைவுடன் இந்த நிறைவேற்றப்படாத சொல்லுடன் இறக்கப்போகிறேன். ஆனால் இறப்பு என்னும் சொல் அச்சமூட்டவில்லை. இயல்பான ஒரு முடிவாகவே தோன்றியது. மீண்டும் விண்மீன்களை நோக்கி விழிதிறந்து கிடந்தான்.

புலரியை அறிவிக்கும் கொம்பு முழங்கியது. வீரர்கள் பாய்ந்தெழுந்தனர். சில கணங்களுக்குள் முழுப் படையும் பல சிறுகூறுகளாக சிதறுண்டது. கீழே தட்டப்படும் தாலத்தின் அதிர்வில் விலகும் நெல்மணிகள்போல வீரர்கள் அகன்றனர். அவர்கள் காலைக்கடன்கள் கழிக்கும் இடங்கள் படைநிலைக்கு அப்பால் குறுங்காட்டுக்குள் இடையளவு உயரமான மறைப்புத் தட்டிகளால் அமைக்கப்பட்டிருந்தன. கரையேற்றப்பட்ட தோணிகளில் குளிர்நீர் நிறைக்கப்பட்டிருந்தது. பந்தங்களின் நிழலொளிக்குள் புகுந்து சுரைக்கொப்பரையில் நீர் அள்ளி கால்கழுவி பல்தேய்த்து தலைப்பாகையை அவிழ்த்து உதறி அணிந்து கச்சை இறுக்கி படைப் பைகளை தோள்களில் மாட்டிக்கொண்டு கால்களில் தோல்குறடுகளை முறுக்கியபின் அவன் மீண்டும் படைநிரைக்கு வந்தான்.

அதற்குள் அணிவகுப்புக்கான கொம்பு முழங்கியது. அவன் நிரையில் அவனே இறுதியாக வந்தான். அவன் நிலைகொண்டதும் அருகே நின்றிருந்த முதிய வீரன் “வேலை சற்று தளர்வாகவே பற்றவேண்டும். நாம் நெடுநேரம் அதை வைத்திருக்க வேண்டியிருக்கும்” என்றான். நிரைகளின் முனைகளிலிருந்து பெரிய கடவங்களை ஏந்திய அடுமனையாளர்களும் ஏவலர்களும் வந்துகொண்டிருந்தார்கள். முதிய வீரன் “நீர்ப் பை எங்கே?” என்றான். அவன் தோளுக்குப்

பின்னால் தொங்கிய நீர்ப் பையை முன்னால் இழுத்து விட்டான். “அது எப்போதும் விலாவில் தொங்கவேண்டும். நிரை செல்கையில் இன்னொருவர்மேல் இடிக்கலாகாது” என்றான். கஜன் அவனை எரிச்சலுடன் பார்த்தபின் திரும்பிக்கொண்டான்.

ஏவலர் ஆளுக்கு எட்டு உணவுருளைகளை அளித்தபடி வந்தனர். வெல்லம் கலந்த நீரை குடுவைகளில் அள்ளி பைகளில் நிறைத்தபடி அடுத்த ஏவலர்குழு வந்தது. ஓர் உருளை உரித்த தேங்காய் அளவு இருந்தது. “அது என்ன?” என்று அவன் முதிய வீரனிடம் கேட்டான். கேட்டிருக்கக் கூடாதோ என உடனே ஐயுற்றான். “உலர்மீனும் வறுத்த அரிசியும் இடித்து ஊன்நெய்யுடன் சேர்த்து உருட்டப்பட்ட கவளம். சுவையானது. ஒருநாளுக்கு ஒரு கவளம் மட்டுமே” என்றான் அவன். “உண்மையில் அதுவே போதுமானதாகவும் இருக்கும்… போர் முன்னரே முடிந்தது என்றால் வீட்டுக்குக் கொண்டுசென்று குழந்தைகளுக்குக் கூட கொடுக்கலாம். அவை விரும்பி உண்ணும்.”

அவனுக்கு அளிக்கப்பட்ட எட்டு கவளங்களையும் தோளில் தொங்கிய தோல்பைக்குள் சுற்றிக்கட்டினான் அவை சற்று கெடுமணம் வீசுவதாகத் தோன்றியது. அவன் கையை முகர்வதைக் கண்டு முதிய வீரன் “பழைய மீன். களஞ்சியத்தில் சேமிக்கப்பட்டிருக்கும் அது. இத்தனை பேருக்கான மீன் புதியதாக இருக்கமுடியாது” என்றான். “ஆனால் படைநகர்வில் சென்றால் வெறியுடன் பசிக்கும். அப்போது இக்கெடுமணம் அமுதென தோன்றும்.” கஜன் தன்னருகே வந்துநின்ற முகத்தைக் கண்டு திடுக்கிட்டான். உள்ளம் அதிர்வது செவிகளில் முழங்கியது. அதன் பின்னரே அவனை அடையாளம் அறிந்தான். “நீங்கள் சம்பவர் அல்லவா?”

என்றான். “ஆம், நீங்கள்?” என்றபின் சம்பவன் அவனை அடையாளம் கண்டுகொண்டான்.

“உங்களிடம் ஒன்று சொல்லவேண்டும். உங்களைத் தேடி அடுமனைக்கு சென்றிருந்தேன்...” அவன் சிரித்து “நீங்களா அது? எவரோ பணத்துடன் வந்ததாக கேள்விப்பட்டேன்” என்றான். “சூதரே, அது நான் சொன்ன பொய். நான் வந்தது உங்கள்மேல் ஒரு பெண் காதல் கொண்டிருக்கிறாள் என்று சொல்வதற்காக. அவள் பெயர் சுபாஷிணி. அரண்மனைச் சேடி” என்றான். சம்பவன் அதற்குள் நகர்ந்துவிட்டிருந்தான். அவன் விழிகள் மாறின. அவனால் ஒன்றும் சொல்லமுடியவில்லை. எடை அகன்ற உணர்வுகொண்டு கஜன் புன்னகை செய்தான். அப்பால் சென்றபின் சம்பவனும் அவனை ப்பார்த்து புன்னகைதான்.

கொம்பொலி எழுந்தது. ஒவ்வொரு இருநிரையின் நடுவிலும் புரவிகள் சீர்நடையிட்டு வந்தன. அவை சேணம் பூட்டப்பட்டு கடிவாளம் முதுகின்மேல் போடப்பட்டு வந்தன. சவுக்கு அவற்றின் கழுத்துப் பட்டையில் செருகப்பட்டிருந்தது. ஒவ்வொரு வீரன் அருகிலும் ஒரு புரவி வந்து நின்றது. வலப்பக்கம் நின்ற புரவியை கஜன் பற்றிக்கொண்டான். அது மெல்ல தும்மியது. மீண்டும் ஒருமுறை கொம்பு ஊதியதும் படையில் ஓர் அலை எழுந்து அகன்றுசென்றதுபோல அனைவரும் புரவிகள்மேல் ஏறிக்கொண்டனர்.

விடிவெள்ளியை அப்போதுதான் கஜன் கண்டான். பெருமூச்சுடன் அதை நோக்கி பின் ஏன் உள்ளம் எண்ணங்களற்று அசைவிழந்திருக்கிறது என்று எண்ணிக்கொண்டு புன்னகைத்தான். முகத்தசைகள் இழுபட்டன. மீண்டும் ஒரு கொம்பொலி எழுந்தது. படைகள் நடுவே உத்தரனின் களத்தேர் கொடிபறக்க பறக்கும் யானை என

அணைந்தது. அதன் பீடத்தின்மேல் அவன் கையில் பெரிய வில்லுடன் நின்றிருந்தான். படையினர் அவனை திகைப்புடன் நோக்கினர். வாழ்த்தொலிகள் ஏதும் எழவில்லை. அவன் அணிந்த கவசத்தில் பந்தங்களின் ஒளி எதிரொளிக்க பற்றி எரியத் தொடங்குபவன் போலிருந்தான்.

கொம்பு முழங்கி அமைந்ததும் கோட்டைக்கு மேலிருந்த போர்முரசுகள் அதிரத்தொடங்கின. இடியோசைத்தொடர் என அவை படைநிரைகளை முழுமையாக மூடிக்கொண்டன. கஜன் தன் உடல் அதிர்ந்துகொண்டிருப்பதை உணர்ந்தான். உடலுக்குள் விசைகொண்ட விலங்குகள் புகுந்துகொண்டதைப்போல. அவை தோல்கிழித்துப் பீறிட்டு வெளிவரத் துடிப்பதுபோல. அவன் உடலில் இருந்து அவ்விசையை அடைந்த புரவி காலெடுத்து வைத்து காற்றேற்ற படகுப்பாய் என உடல் விம்மியது. முரசொலி சுழல்காற்றென்றாகி அனைவரையும் மண்ணிலிருந்து பறந்தெழச் செய்வதுபோல விசைகொண்டது.

தேர்த்தட்டில் எழுந்து நின்ற உத்தரன் உரத்த குரலில் “வீரர்களே” என்றான். அவன் குரல் எழவில்லை. கைகளை மேலும் அசைத்து “வீரர்களே!” என்றான். “நாம் நம் எதிரிகளை சந்திக்கச் செல்கிறோம்.” படைகள் “ஆம்! ஆம்! வெற்றிவேல்!” என முழங்கின. அவன் உடல் மேலும் எழுந்ததுபோலத் தோன்றியது. “நம் எல்லைகளை நாம் வகுக்கலாகாது, ஊழ் வகுக்கவேண்டும்!” என்றான் உத்தரன். கஜன் மெய்ப்புகொண்டான். “தெய்வங்கள் அமைத்த எல்லையில் சென்று தலையால் முட்டுவோம். அவ்வேலியை உடைத்து அப்பால் செல்வோம். எண்ணுக, தன்னை நோக்கி அறைகூவுபவனை விரும்புகின்றன தெய்வங்கள். தன்னைக்

கடந்தவனே யோகி. தன்னைக் கடந்தவனே ஞானி. வீரர்களே, தன்னைக் கடத்தலே வீரம்.”

கஜன் தன் கண்கள் பொங்கி கன்னங்களில் வழிவதை உணர்ந்தான். “நாம் செல்வது எதிரிகளிடம் போரிடுவதற்காக அல்ல. எதிரிகளை நாம் ஏற்கெனவே வென்றுவிட்டோம். நாம் வெல்லவேண்டியது நம்மை… எழுக நம் படைக்கலங்கள்! எழுக நம் தசைத்திரள்! வீரர்களே, எழுக நம் உள்ளம்!” “வெற்றிவேல் வீரவேல்!” படைகள் எழுப்பிய பேரோசை உடலின் ஒவ்வொரு வியர்வைத்துளை வழியாகவும் உடலுக்குள் புகுந்து நிறைந்தது. படைஎழுவதற்கான முரசுகள் முழங்க மடைஉடைத்த வெள்ளமென விராடப்படை கிளம்பியது.

# நீர்க்கோலம் - 87

## 86. அனலும் குருதியும்

✿இரவும்பகலும் படைகள் விரைவழியாத சீர்நடையுடன் சென்றுகொண்டிருந்தன. வழியில் மூன்றுமுறை சிற்றோய்வுக்கும் கால்மாற்றுதலுக்கும் மட்டும் பொழுதளிக்கப்பட்டது. புரவிகளுக்கு கடுமையான மது அளிக்கப்பட்டு அவை தலைதளர்ந்து விழிசரித்தபோது கால்களை கட்டி வீழ்த்தி தசைகளை மரவுரியால் அழுத்தி உருவினர் ஏவலர். அவை அரைத்துயிலில் எச்சில்குழாய்கள் வழிய முனகிக்கொண்டிருந்தன. ஒரு நாழிகைப்பொழுது அவை ஓய்வெடுத்ததும் வெல்லம் கரைக்கப்பட்ட நீரை மூங்கில் குழாய்கள் வழியாக அவற்றின் வாய்க்குள் செலுத்தி குடிக்கச் செய்தனர். இனிப்பால் ஊக்கம்கொண்ட புரவிகள் எழுந்து காலுதறிக்கொண்டதும் மீண்டும் பயணம் தொடங்கியது.

வழியின் சிற்றோய்வுக்குள் முக்தன் ஒரு கனவுக்குள் சென்றுமீண்டான். விழித்துக்கொண்டபோது உள்ளம் உவகையால் நிறைந்திருந்தது. அவன் கரவுக்காட்டுக்குள் இருந்தான். அங்கே அவனுடைய இல்லம் அமைந்திருந்தது. தோளில் வேட்டை மானுடன் அவன் முற்றத்திற்கு வந்தபோது உள்ளிருந்து நான்கு குழந்தைகள் ஓடிவந்து அவனை சுற்றிக்கொண்டு கூச்சலிட்டன. அவற்றை அதட்டியபடி கூடையுடன் அவள் வெளியே வந்தாள். அக்குடிலுக்குள் இருந்து ஒரு புரவி எட்டிப் பார்த்தது. அது எழுப்பிய ஒலியில் அவன் விழித்துக்கொண்டான். அவனருகே அவன் புரவி தலைதாழ்த்தி நாக்கை நீட்டியது.

புன்னகையுடன் அவன் படையில் சென்றான். இரவெல்லாம் விண்மீன்களை நோக்கிக்கொண்டிருந்தான். அத்தனை அணுக்கமாக அவன் அவற்றை நோக்கியதே இல்லை. அவை உதிரப்போகும் முனையில் நின்று தத்தளிப்பதாகத் தோன்றியது. அத்தனை விண்மீன்களையும் அவன் முன்னரே அறிந்திருந்தான். ஒவ்வொன்றையும் தொட்டு அடையாளப்படுத்த முடியும் என்று தோன்றியது. விடிவெள்ளியை அத்தனை விழிகளுடன் முழுப் படையும் ஓருடலெனக் கண்டது. ஒரே குரலில் முழங்கியது.

விண்மீன்களை நோக்கிக்கொண்டே வந்தமையால் அவனால் படைகள் செல்லும் திசையை நன்றாகவே கணிக்கமுடிந்தது. தொடர்ந்து கணித்துக்கொண்டே இருந்தமையால் ஒரு தருணத்தில் மீன்கணக்கு மறந்து அவன் எண்ணத்தாலேயே அப்பயணத்திசையை அறியலானான். அஸ்தினபுரியின் படைகள் வந்துகொண்டிருந்த திசைநோக்கி தாங்கள் செல்லவில்லை என்பதை அறிந்ததும் அவனுக்கு வியப்பு

ஏற்பட்டது. ஆனால் வழிதவறிச் செல்லவில்லை என்று உறுதியாகவே உணர்ந்தான். அது என்ன கணக்கு என்று எண்ணி நோக்கி பின் அதை ஒழிந்தான்.

நெடுந்தொலைவு சுற்றியபின் மலையேறத் தொடங்கியபோதுதான் படைசூழ்கையின் வரைவு அவனுக்குள் அமைந்தது. அவன் எண்ணியதுபோலவே முதல்புலரிக்கு முன்னால் அவர்கள் ஒரு மலைவிளிம்பில் நின்றிருந்தனர். நெடுந்தொலைவிலேயே பந்தங்களை அணைத்துவிடவும் வாளுறைகளுக்கும் உடலுக்கும் நடுவே நீர்ப்பையை அமைத்து ஒலியெழாது செய்யவும் ஆணை வந்திருந்தது. இருளுக்குள் காற்று ஒழுகுவதுபோல விராடப்படை சென்றது. மலைக்குக் கீழே குற்றோய்வு அளிக்கப்பட்டது. சீரான சரிவில் ஒரே விசையில் புரவிகள் ஏறிச்சென்று நின்றன. குரலில் இருந்து குரலுக்கெனச் சென்ற ஆணை அவர்களின் படையை அரைப்பிறை வடிவில் விரித்தமைத்தது.

கீழே இரு மலைகளுக்கு நடுவே இருந்த பள்ளத்தாக்கில் அஸ்தினபுரியின் படை எரி அணைந்து கனல்களாக எஞ்சிய காடுபோல பந்தங்களின் ஒளியுடன் தெரிந்தது. சில பந்தங்கள் நீரில் என அலைபாய்ந்தபடி அங்குமிங்கும் அசைந்தன. ஒரு புரவியின் உரத்த கனைப்பொலி மெல்லிய ஓசையாகக் கேட்டது. சற்று பெரியபடைதான் அது என நன்றாகத் தெரிந்தது. ஆனால் எந்தப் படைசூழ்கையும் இல்லாமல் வழிந்துபரந்ததுபோல அது கிடந்தது.

அவனருகே நின்ற காவலன் "மலையுருண்டு இறங்குவதுபோல அவர்கள்மேல் பாயவேண்டியதுதான்" என்றான். முக்தன் "ஆம்" என்றான். "முதற்புலரியில் முரசு கொட்டும் என நினைக்கிறேன். இதைவிடச் சிறந்த படைசூழ்கை

அமைவதற்கில்லை” என்றான் அவன். “இளவரசர் உத்தரர் நாம் எண்ணுவதுபோன்றவர் அல்ல. இந்நிலத்தை எவ்வளவு அறிந்திருந்தால் இத்தனை பிழையிலாது இங்கே வந்துசேர்ந்திருக்கமுடியும்!” முக்தன் புன்னகை செய்தான்.

துயில் கொள்ளலாம் என சொல்பரவல் ஆணை வந்தது. புரவிகள்மேல் இருந்து இறங்கி அருகே அமர்ந்து முழங்கால்மேல் தலைவைத்து விராடப்படையினர் அரைத்துயில்கொண்டனர். புரவிகளும் தலைகளை நன்றாகத் தாழ்த்தி கடிவாள வாய்திறந்து துயின்றன. மூச்சொலிகள் தன்னைச் சூழ ஒலித்ததைக் கேட்டு அமர்ந்திருந்த முக்தன் மீண்டும் கரவுக்காட்டுக்குள் சென்றான். சிற்றாறொன்றில் நீராடிக்கொண்டிருந்தாள் சுபாஷிணி. அருகே கரையில் அமர்ந்து அவன் கூடைக்காக மூங்கில் பிளந்துகொண்டிருந்தான். அப்பால் குழந்தைகளின் குரல்கள். அவனுக்கு நன்கு அகவை முதிர்ந்திருந்தது. அவள் இளமகளாகவே இருந்தாள்.

கொம்பொலி எழுந்ததும் அவன் திடுக்கிட்டு வாயைத் துடைத்தபடி எழுந்தான். இரண்டாவது கொம்பொலியில் கச்சைகளை முறுக்கிக் கொண்டார்கள். மூன்றாவது கொம்பொலியில் புரவிகள்மேல் ஏறினார்கள். அடுத்த கொம்பொலியில் வில்லவர்படை மட்டும் முன்னால் சென்றது. கிழே பந்தங்கள் பெருகிவிட்டிருந்தன. படையின் கலைவோசை மிக அருகிலெனக் கேட்டது. அவர்கள் விராடப்படையினரை உணர்ந்துவிட்டிருந்தனர். படைசூழ்கை அமைக்கப்படுகிறதென்பது நன்றாகத் தெரிந்தது.

சற்றுநேரத்திலேயே அவர்களால் தேர்ந்த படைகளைப்போல சீராக நிலையமைவு கொள்ள முடியவில்லை என்று தெரிந்தது. மீண்டும் மீண்டும் ஏதேனும் ஒரு பகுதி கலைந்துகொண்டே

இருந்தது. முக்தன் தன் வலப்பக்கம் கீழ்வான் செம்மைகொள்வதை கண்டான். அருகே இருந்த கரிய பாறைகள் முழுப்பு கொண்டு எழுந்துவந்து விழிநிறைத்தன. வறண்ட செம்மண்நிலத்திலிருந்த உருளைக்கற்களின் வளைவுகள் துலங்கின. கிளை சோர்ந்து நின்ற குட்டைமரங்களின் இலைவிளிம்புகள் வான்புலத்தில் கூர்கொண்டன. நோக்க நோக்க காற்று ஒளிபெற்றுக்கொண்டே இருந்தது.

“இதுதான் பொழுது… நேராகச் சென்று தாக்கவேண்டியதுதான். அங்கே படைசூழ்கையே அமையவில்லை. மந்தைபோல கலைகிறார்கள்” என்றான் அவனருகே நின்றிருந்த முதிய வீரன். முக்தன் பெருமூச்சுவிட்டான். படையினர் அனைவரும் அந்த எண்ணத்தையே கொண்டிருப்பார்கள் என்று தோன்றியது. படை ஒன்றென்றே உளம்கொண்டிருக்கும். “ஏன் பொறுத்திருக்கிறோம்? அஞ்சுகிறோமா?” முக்தன் அவனை நோக்கி திரும்பவில்லை. “ஏன் பொறுமை? கடலொளி எழுகிறது… இன்னும் சற்றுநேரத்தில் கதிர்களே எழும்.”

மச்சர்படைகள் மெல்லமெல்ல ஒழுங்கமைந்தன. நண்டு சூழ்கையின் இரு கைகளாக விரைவுப் புரவிகளில் வில்லவர்கள். நடுவே தரையிலமர்ந்த வேலவர். பின்னால் நிலைவில்லவர். “திறனுள்ளவர்கள்… இத்தனை விரைவில் சூழ்கை அமையுமென்றே எண்ணவில்லை… நாம் பொழுதை வீணடித்துவிட்டோம்” என்றான் முதிய வீரன். ஒளி முகில்களைக் கிழித்தபடி வந்து சரிந்தது. இடைவரை உயரத்தில் காய்ந்து நின்றிருந்த இஞ்சிப்புல்வெளி பொன்னிறமாக சுடர்கொண்டது. புல்தாள்கள் எரிதழல்களாக

நெளிந்தாடின. “எதை நோக்குகிறோம்?” என்று எவரோ எங்கோ கூவினர்.

கணம்கணமென பொழுது சென்றுகொண்டிருந்தது. கீழே அவர்களும் காத்து நின்றிருந்தனர். இரு பெருவிலங்குகள் பிடரிமயிர் சிலிர்த்தன. மூச்செறிந்தன. நோக்குபின்னி நிலைத்திருந்தன. படைகளுக்குப் பின்னால் காற்றின் ஓலத்தை முக்தன் கேட்டான். அக்கணமே என்ன நிகழவிருக்கிறதென்று புரிந்துகொண்டான். அவர்களின் ஆடைகளை துடிதுடித்துப் பறக்கச்செய்தபடி காற்று வந்து மோதி படைகளின் இடைவெளிகளில் கிழிபட்டுப் பறந்து கடந்துசென்று மலைச்சரிவில் இறங்கியது. அதிலிருந்த புழுதியும் சருகுகளும் அலையலையாக இறங்கிச்சென்றன. செம்மண் கலங்கிய நீர்ப்பரப்புபோல புல்வெளி கொந்தளித்தது. மேலும் காற்று விசைகொள்ள புரவிகளின் பிடரி மயிர் அலையடித்தது.

கொம்போசை எழுந்ததும் முன்னால் நின்றிருந்த விற்புரவி வீரர்களில் இருந்து நூற்றுக்கும் மேற்பட்ட எரியம்புகள் எழுந்து வானில் வளைந்து சென்று புல்வெளியில் விழுந்தன. அக்கணமே புல்வெளி பற்றிக்கொண்டது. அனல் புரவியில் என காற்றின்மேல் தாவி ஏறிக்கொண்டது. செஞ்சிறகுகள் விரித்து காற்றில் பறந்து கீழிறங்கிச் சென்றது. நெருப்பு அருவிபோல வழிந்திறங்கிச் செல்வதை முக்தன் கண்டான். புரிந்துகொண்ட விராடப்படையினர் “வெற்றிவேல்! வீரவேல்!” என குரலெழுப்பினர்.

எரி கடந்துசென்ற இடத்தில் நிலம்கருகி புகைச்சுருள்கள் எழுந்துகொண்டிருந்தன. இன்னொரு முறை கொம்பு முழங்கியது. வில்புரவி வீரர்கள் போர்க்குரலெழுப்பியபடி முழு விரைவில் பாய்ந்து மலைச்சரிவில் இறங்கினர். மேலும்

மேலுமென விராடப்படை கீழ்நோக்கி பொழியத்தொடங்கியது. அவர்களுக்கு முன்னால் செம்புரவிப்படை என அனல் சென்றது. அனலை நெருங்கியதும் கொம்புகள் ஆணையிட புரவிகளில் சென்றபடியே அம்புகளை தொடுக்கத்தொடங்கினர். வானில் புள்நிரை என எழுந்த அம்புகள் அனல்சுவருக்கு மேலே எழுந்து கரும்புகையைக் கடந்து அப்பால் சென்று மச்சர்களின் படைகள்மேல் விழுந்தன.

அனல் அஸ்தினபுரியின் படையை முழுமையாகச் சூழ்ந்துகொண்டது. அனைத்து அணியமைவுகளும் சிதைய அவர்கள் அஞ்சிக் கலைந்து கூச்சலிட்டு முட்டிக் குழம்பும் வெறும்கூட்டமென்று ஆயினர். அவர்கள்மேல் பொழிந்த அம்புகள் வஞ்சம்கொண்ட பறவைகள் போலிருந்தன. அவற்றின் அலகுகள் கொத்த அவர்கள் அலறி மண்ணில் விழுந்து மிதிபட்டு மேலும் விழுபவர்களால் மூடப்பட்டனர். ஒரு நாழிகைக்குள் மச்சர்படைகளின் பாதிப்பங்கு அழிக்கப்பட்டுவிட்டது.

கொம்புகள் ஆணையிட முக்தனின் படைப்பிரிவு நீண்ட வேல்களுடன் அணைந்துகொண்டிருந்த அனல் திரையை தாவிக்கடந்து மறுபக்கம் சென்றது. அங்கே ஒருவர்மேல் ஒருவரென முட்டித் ததும்பிய மச்சர்களை குத்திச் சாய்த்தது. கூரிய குறுகியகால படகுப்போருக்கு மட்டுமே பழகியிருந்த அவர்கள் போர் என எண்ணிய எதுவுமே அங்கே நிகழவில்லை. தீயைக் கண்டு அவர்கள் திகைத்து பின்னால் நகர பின்னாலிருந்த வண்டிகள் அதற்குத் தடையென்றாக அவர்கள் சித்தமழிந்து வெறும் தசைத்திரளென்றாயினர். பெரும்பாலானவர்கள் படைக்கலங்களை கீழே விட்டுவிட்டிருந்தனர்.

வேட்டையின்போது சிலசமயம் ஆடுகளை அவ்வாறு மலைச்சந்துகளில் திரட்டி குத்திக் கொல்வதுண்டு. ஒவ்வொரு முறை கழுத்துக்குழியில் வேலால் குத்தி உருவும்போதும் முக்தன் உணர்வுகள் அலைக்கழிக்கப்பட்டான். முதலில் இரக்கம், பின்னர் அது அருவருப்பாகியது. பின்னர் வெறுப்பு. வெறுப்பை உடல்முழுக்க நிறைத்துக்கொண்டபோது எவ்வளவு விரைவில் அவர்களை கொன்றழிக்கமுடியுமோ அவ்வளவு விசையுடன் செய்யவேண்டுமென்று தோன்றியது. உள்ளம் கசந்துவழிய அவர்களின் விழிகளை முற்றாகத் தவிர்த்து குத்தவேண்டிய கழுத்துக்குழியை மட்டுமே நோக்கினான்.

அவன் உடலெங்கும் குருதி தெறித்து வியர்வையில் வழிந்தது. புருவங்களில் சொட்டி நோக்கை மறைத்தது. நாக்கில் உப்பென சுவைத்தது வியர்வையா குருதியா என்றறியாமல் துப்பிக்கொண்டே இருந்தான். பொழுது சிலந்திவலைபோல சுழன்று சிக்கி ததும்பிக்கொண்டிருந்தது. அப்பால் அவன் நாணொலியை கேட்டான். திரும்பி நோக்கியபோது தன் சிறிய தேரில் கர்ணன் வில்லேந்தியபடி வருவதை கண்டான். செங்கழுகு பறந்தணைவதைப்போல அவன் தேர் காற்றில் வந்தது.

கர்ணனின் அம்புகள் அனல்பொறிகள்போல தெறித்துப் பரவ விராடர் வீழ்ந்துகொண்டே இருந்தனர். அவன் விழிகள் மலர்ந்து நோக்கிக்கொண்டிருந்தான். மெல்லிய உதை ஒன்றை நெஞ்சில் உணர்ந்தான். குருதி வெம்மையுடன் வழியும் உணர்வு. மூச்சு சிக்கிக்கொள்ள இருமியபோது வாயிலும் மூக்கிலும் கொழுங்குருதி தெறித்தது. மீண்டும் ஒருமுறை இருமியபடி நெஞ்சை பார்த்தான். தோற்கவசத்தைத் துளைத்தபடி அம்பு உள்ளிறங்கியிருந்தது. அவன் உடல் பக்கவாட்டில் இழுபட்டது.

நிலம் அவனை நோக்கி வந்தது. அங்கே குத்துண்டு துடித்துக்கொண்டிருந்த மச்சன்மேல் அவன் விழுந்தான். அவ்விசையில் அம்பு மேலும் உள்ளே நுழைய அவன் மீண்டும் இருமினான். உள்ளுடல் துண்டுகளாகத் தெறிப்பதுபோல நிணக்குருதி சிதறியது. அவன் வானை நோக்கினான். கண்கள் கூச விழிநீருடன் மூடிக்கொண்டான்.

❀ஒரு கணம் சூழ நோக்கியபோது கஜன் கண்டது வெறும் உடல்களின் அலைக்கொந்தளிப்பை. கைகள், தோள்கள், முகங்கள், புரவிகள். அவனை அவை நெட்டித் தள்ளின, எற்றி விளையாடின. முன்னால் தள்ளிக்கொண்டு சென்றன. பின்னுக்கு இழுத்து வந்தன. எங்கிருக்கிறோம் என்றும் என்ன நிகழ்கிறதென்றும் உணராமலிருந்தாலும் அவன் வாயும் வெற்றிவேல் வீரவேல் என்று கூவிக்கொண்டிருந்தது. அவன் உடலெங்கும் பசுங்குருதி தெறித்து வழிந்தது. மிகப் பெரிய கருவறை ஒன்றுக்குள் நூற்றுக்கணக்கான குழந்தைகள் நிணக்குருதியில் முட்டிமோதிக்கொள்கின்றன அல்லது ஊனில் நெளியும் புழுக்கள்.

அவன் நாணொலி கேட்டு திரும்பியபோது உத்தரனும் துரியோதனனும் எதிர்நின்றுகொண்டிருந்தனர். துரியோதனன் வில்லை வளைத்து வெறியுடன் கூவியபடி அம்புகளை செலுத்தினான். இவர்தான் அஸ்தினபுரியின் பேரரசன். ஆனால் அவனும் மானுடன்போலவே இருந்தான். கீசகனை நினைவுறுத்தும் பெருந்தோள்கள். பெரிய விரல்களில் அம்புமுனை குருவியலகுபோல தெரிந்தது. அம்பு நடுங்கி விம்மி காற்றிலெழுந்து வந்து உத்தரனின் தேரில் தைத்தது. மீண்டும் ஓர் அம்பு, மீண்டும்.

உத்தரனின் தேர் அலைகளில் சுழலும் தக்கைபோல அங்குமிங்கும் அலைபாய்ந்தது. ஆகவே ஓர் அம்புகூட அவன்மேல் படவில்லை. இரும்புக் கவசமொன்றை தன் முன்னால் நட்டு அதற்குப் பின்னால் உடலை ஒடுக்கி அமர்ந்தபடி பிருகந்நளை புரவிகளை செலுத்தினாள். இரு கால்களாலும் பற்களாலும் குதிரைகளின் கடிவாளங்களை பற்றியிருந்தாள். ஒவ்வொரு கடிவாளத்தையும் ஒவ்வொரு வகையில் இழுத்து புரவிகளை தனித்தனியாக செலுத்தினாள். இரு கைகளாலும் அம்புகளையும் விட்டுக்கொண்டிருந்தாள். மிகச் சிறிய வில் அது. அதன் அம்புகளும் சிறியவை. ஆனால் அவை எவையும் வீணாகவில்லை. பெரும்பாலானவை கழுத்துமுனைகளில் தைத்து மச்சர்களை வீழ்த்தின.

துரியோதனனின் புரவியின் கழுத்தில் அம்பு தைக்க அது அலறியபடி திரும்பிய கணத்தில் உத்தரனின் அம்பு அவன் தோளில் தைத்தது. உத்தரன் உரக்கக் கூச்சலிட்டு நகைத்தபடி மீண்டும் மீண்டும் அம்புகளை செலுத்தினான். துரியோதனனின் தலைப்பாகை அம்புடன் தெறித்தபோது களிப்பு வெறியென்றாக “முன்னால் செல்க! முன்னால் செல்க!” என்று உத்தரன் கூவினான். மீண்டும் ஓர் அம்பால் துரியோதனனின் இன்னொரு புரவியை வீழ்த்தினாள் பிருகந்நளை. துரியோதனனின் இடையில் உத்தரன் அம்பு புதைந்தது. நொண்டியபடி தூணில் சாய்ந்த துரியோதனன் பின்னால் செல்ல ஆணையிட அவன் தேரை ஓட்டிய சூதன் அதை திருப்பி அலையடித்த உடற்பெருக்குக்கு அப்பால் கொண்டுசென்றான்.

“செல்க! செல்க!” என்று உத்தரன் கூவினான். தன் வில்லை காலால் மிதித்து இழுத்து நாணிறுக்கி நீண்ட அம்பால்

துரியோதனனைக்காத்து பின்னால் சென்ற துச்சாதனனை அடித்தான். துச்சாதனன் திரும்பி தொடுத்த அம்பு இலக்கு விலக அவன்மேல் உத்தரனின் அம்பு பட்டது. "கொல்வேன்... அவனை கொல்வேன்... விடாதே... செல்க!" என உத்தரன் கைநீட்டி கூவியபடி எம்பிக் குதித்தான். கஜன் தன்னைச் சூழ்ந்திருந்த அத்தனை விராடர்களும் வேல்தாழ்த்தி உத்தரனையே நோக்கிக்கொண்டிருப்பதை கண்டான். மச்சர்களில் பெரும்பாலானவர்கள் வீழ்ந்தோ புறமிட்டோடியோ அகன்றிருக்க தேர்கள் மட்டுமே களத்தில் எழுந்து தெரிந்தன.

நாணொலி கேட்டு அவன் கர்ணனை நோக்கினான். அவன் அம்பு வந்து உத்தரன் தோளைத் தைத்தது. ஆனால் உத்தரன் வெறியுடன் காலால் தேர்த்தட்டை உதைத்து "கொல்வேன்... அவனை கொல்வேன்... அன்றி இங்கேயே சாவேன்... கொண்டு செல்க... அவன் முன் என்னை கொண்டுசெல்க!" என்று கூவினான். கர்ணனின் அம்புகள் மிரண்ட யானை என சுழன்று கொண்டிருந்த தேரின் மகுடத்திலும் தூண்களிலும் தைத்து நிற்க உத்தரன் எய்த அம்பு கர்ணனின் கவசம்மேல் பதிந்தது. கர்ணனின் இரு புரவிகளின் உடலிலும் அம்புகள் தைத்தன. அவை நிலையழிந்து சுழலத்தொடங்க அவன் விலாவில் உத்தரனின் அம்பு சென்று பட்டது.

அப்பால் படைகள் பின்வாங்குவதற்கான கொம்புகள் முழங்கின. கர்ணன் திரும்பி நோக்கி கைநீட்டியபடி கூவினான். மீண்டும் மீண்டும் கொம்பு ஆணையிட்டது. எஞ்சிய மச்சர்படைகள் அலைநுரை என பின்வாங்கிச்செல்ல கர்ணன் திரும்பி உத்தரனை நோக்கியபின் திரும்ப "அவனை துரத்திச் செல்... அவனை விடாதே!" என்று உத்தரன் கூவினான். கர்ணன் இதழ்கள் கோணலாக புன்னகைத்து தோள்தூக்கி எய்த அம்பு

உத்தரன் நெஞ்சில் தைத்தது. அவன் தேர்த்தட்டில் விழுந்ததும் தேர் திரும்பி பின்னடைந்தது. பேரோசையுடன் கஜனைச் சூழ்ந்திருந்தவர்கள் பின்வாங்கிச்செல்லும் மச்சர்களை துரத்திச்செல்லத் தொடங்கினர்.

கஜன் அவர்களுடன் நெடுந்தொலைவு சென்றான். மச்சர்கள் முழுமையாகவே சிதறி காடுகளுக்குள் புகுந்து மறைந்துவிட்டிருந்தனர். புழுதிக்கு அப்பால் துரியோதனனின் நாகக்கொடியும் கர்ணனின் யானைச்சங்கிலிக்கொடியும் அகன்று செல்வதை கண்டான். நிலைகொள்ளும்பொருட்டு விராடர்களின் கொம்புகள் முழங்கின. போர்முரசு ஓய்ந்தது. அதுவரை அது போர் போர் என பரிநடைத் தாளத்தில் முழங்கிக்கொண்டிருந்ததை அப்போதுதான் உணர்ந்தான். அந்தத் தாளத்திலேயே எண்ணங்கள் அமைந்திருந்தன. அதுவே எண்ணங்களை சுமந்துகொண்டிருந்தது. அந்த ஓசையடங்கியபோது உள்ளிருந்து எழுந்த அதன் மாற்றொலி செவிப்பறைகளை முட்டியது. கீழே விழுந்துகொண்டிருப்பதுபோன்ற உணர்வு ஏற்பட்டது.

கரிநடை தாளத்தில் வெற்றிமுரசு முழங்கத் தொடங்கியது. விராடபுரி வீரர்கள் “வெற்றிவேல்! வீரவேல்!” என்று கூவி தங்கள் விற்களையும் வாள்களையும் வேல்களையும் தலைக்குமேல் தூக்கி ஆட்டினர். தோள்களில் மிதித்து ஏறி கைகளை விரித்து ஒருவன் “வெற்றி! விராடபுரிக்கு வெற்றி! உத்தரருக்கு வெற்றி! காகக்கொடிக்கு வெற்றி!” என்று கூவ கூட்டம் வெறிகொண்டு ஆர்ப்பரித்தது. கஜன் தன் இடையைப் பார்த்தபோதுதான் கவசத்தைக் கிழித்தபடி அம்பு உள்ளே சென்றிருப்பதை உணர்ந்தான். அதை தொட்டபோது தீயால் சுட்டதுபோல வலி எழுந்தது. கவசத்தை கழற்றினான். ஆனால்

அது அம்பால் உடலுடன் சேர்த்து தைக்கப்பட்டிருந்தது. ஆகவே மீண்டும் அணிந்துகொண்டான்.

அவனருகே நின்றிருந்த முதிய வீரன் “அதை மருத்துவர் கழற்றுவார்கள். குருதி நிறுத்தி கட்டுபோட முடியாத நிலையில் அம்புமுனையை அகற்றலாகாது” என்றான். கஜன் புன்னகைத்தான். “களம் கண்டுவிட்டாய்… இனி எதையும் அஞ்சவேண்டியதில்லை” என்றான் அதே முதிய வீரன். கஜன் தான் எவரையுமே கொல்லவில்லை என்பதை எண்ணிக்கொண்டான். அதை எவரும் அறியப்போவதில்லை என்று தோன்றியது. அவன் கையிலிருந்த குருதியறியாத வேலை முன்னரே வீசிவிட்டிருந்தான். ஆம், எவரும் காணப்போவதில்லை. அதன்பின் அவன் ஆறுதலாக உணர்ந்தான்.

உச்சிவெயில் ஏறிக்கொண்டிருந்தது. உத்தரனுடன் அவன் தேர் விலகிச் சென்றுவிட்டிருந்தது. காயமடையாத புரவிவீரர்கள் வலப்பக்கமாக ஒதுங்கும்படியும் காயமடைந்தவர்கள் இடப்பக்கமாக ஒதுங்கும்படியும் கொம்புகள் ஆணையிட்டன. நடுவே உருவான இடைவெளியில் நீண்ட வேல்களுடன் புறக்களப் படையினர் சீர்நடையிட்டு புகுந்து வலைபோல பிரிந்து களத்தில் பரவினர். எழுந்து நடக்கும் நிலையிலிருந்தவர்கள் அனைவரும் உடலை உந்தி தரையில் கையூன்றி எழுந்தனர். பிறர் தோளைப் பற்றியபடி தள்ளாடியும் தளர்ந்து விழப்போய் மீண்டும் எழுந்தும் நடந்தனர்.

ஓர் இளம்வீரன் கஜனை நோக்கி கைநீட்டினான். கஜன் அவனைப் பிடித்து எழுப்ப அவன் உடலுக்குள் இருந்து குடல் நழுவி சரிவதைக் கண்டான். ஆடையைப் பற்றி இழுப்பதுபோல அவன் அதை பிடித்தான். அவனருகே நின்ற வீரன் “தானே

எழாதவர்களை எழுப்பக்கூடாது என்பது களநெறி. இவன் உயிர் பிழைக்கமுடியாது... வருக!” என அவன் தோளைப்பற்றி அழைத்துச்சென்றான். நெஞ்சிலும் தோளிலும் அம்பு தைத்தவர்கள். கை குறைந்தவர்கள். கால் முடமானவர்கள். இளைய வீரன் “அண்ணா, அண்ணா” என அவனை நோக்கி கைநீட்டினான். “வருக... நோக்கலாகாது” என்றான் இன்னொரு வீரன்.

“இவர்களை என்ன செய்வார்கள்?” என்றான் கஜன். “அங்கே பார்” என்று இன்னொருவன் சுட்டிக்காட்டினான். நீண்டவேல்களுடன் வந்த புறக்களப் படையினர் எழமுடியாதபடி புண்பட்டுக் கிடந்தவர்களின் கழுத்துக்குழியில் ஆழமாகக் குத்தி ஒருமுறை சுழற்றி மூச்சை நிறுத்திவிட்டு அடுத்தவரை நோக்கி சென்றார்கள். பெரும்பாலான வீரர்கள் தன்னினைவிலாது அரற்றியபடி துடித்துக்கொண்டிருந்தனர். நினைவிருந்தவர்கள் அணுகிவரும் வேல்களைக் கண்டதும் கண்களை மூடி கைகூப்பினர். கஜன் “கொல்கிறார்களா? நம்மவர்களையுமா?” என்றான். “ஆம், அவர்கள் வாழமுடியாது. முன்னரே இறத்தலே நற்பேறு” என்றான் ஒருவன். அந்த இளம்வீரனை ஒரு புறக்களத்தான் குத்திக்கொல்வதை கஜன் கண்டு நோக்கை விலக்கிக்கொண்டான்.

அவர்களின் நிரை மலைச்சரிவின் அருகே இருந்த சிறிய சோலைக்குள் சென்று பரவியது. அங்கே மரங்களின் அடியில் மருத்துவர்களும் ஏவலர்களும் அமர்ந்திருந்தனர். புண்பட்டவர்களை இலைப்படுக்கையில் படுக்கவைத்து அகிபீனாவும் சிவமூலியும் அளித்தனர். அவர்கள் ஆவலுடன் அதை வாங்கி புகையிழுத்தனர். இளைஞருக்கு மது வழங்கப்பட்டது. கஜன் தனக்கு அளிக்கப்பட்ட எரிமதுவை

நான்கே மிடறில் விழுங்கினான். “படுத்துக்கொள்” என்றான் இளம்மருத்துவன். அவன் படுத்ததும் தயக்கமே இல்லாமல் அம்புமுனையைப்பற்றி இழுத்துப் பிடுங்கினான். தீச்சுட்ட வலியுடன் அவன் அலற அந்தப் புண்மேல் அருகிருந்த ஏனத்தில் இளஞ்சூடான பச்சிலை எண்ணையில் ஊறிமிதந்த பஞ்சை எடுத்து அழுத்திப் பிடித்துக்கொண்டான்.

வலியில் உடல் அதிர பற்களை இறுகக் கடித்து முனகினான் கஜன். பஞ்சின்மேல் வாட்டிய இலையை வைத்து காய்ந்த வாழைப்பட்டையால் சுற்றிக்கட்டினான். அதன்மேல் உருகிய தேன்மெழுகைப் பூசி கட்டை இறுக்கினான். “மூன்று நாட்கள் கட்டு அசையக்கூடாது. புரவியில் செல்லும்போது அதை உளம் கொள்க!” என்றான். கஜன் பல்லைக் கடித்தபடி தலையசைத்தான். நெடுநேரம் வலி சீரான தாளத்துடன் அதிர்ந்துகொண்டிருந்தது. மெல்ல அதன் தாளத்தின் ஒழுங்கே அதை எண்ணத்திலிருந்து விலக்கியது. இடத்தொடை தொடர்பே இல்லாமல் துடித்துக்கொண்டிருக்க அவன் இயல்பானான்.

அப்பால் மலைச்சரிவின் விளிம்பினூடாக மாட்டுவண்டிகள் சென்றுகொண்டிருந்தன. பொதிவண்டிகள் அல்ல என்று சில கணங்கள் கழித்தே அறிந்தான். அவற்றில் மானுட உடல்கள் ஒன்றன்மேல் ஒன்றென அடுக்கப்பட்டிருந்தன. கால்களின் திரள் வாழைத்தண்டுகள்போல வெளியே நீட்டி நின்றது. அவன் நோக்குவதைக் கண்ட அருகே இருந்த வீரன் “சடலங்கள்” என்றான். “நம்மவரா?” என்றான் கஜன். “போர் முடிவதுவரைதான் அந்தப் பிரிவினை. சடலங்கள் வெறும் சடலங்கள் மட்டுமே” என்றான் வீரன். சிவமூலியை ஆழ இழுத்து மூக்கு வழியாக விட்டான். “வென்றவர்களே

பிணங்களை அடக்கம் செய்யவேண்டும் என்பது நெறி. ஆகவே அள்ளிக்குவித்து கொண்டுசெல்வார்கள். எவரென்று நோக்குவதில்லை.”

கஜன் “எரிப்பார்களா?” என்றான். “ஈரமண் இருந்தால் புதைப்பார்கள். இங்கே விறகுக்கு பஞ்சமில்லையே” என்றான் அவன். வண்டிகளின் சகட ஓசைகளை கேட்கமுடியும் என்று கஜன் எண்ணிக்கொண்டான். முனகல்போல அவை ஒலித்தன. “இறந்த புரவிகளை மட்டும் தனியாக விலக்கிக்கொள்வார்கள். அவற்றை இழிசினர் கொண்டுசெல்வார்கள். ஏனென்றால் அவற்றின் தோல் நமக்குப் பயனுள்ளது. ஊன் அவர்களுக்குப் பயனுள்ளது” என்றான் அப்பால் படுத்திருந்த இன்னொருவன். “மானுடத் தோலால் எப்பயனும் இல்லை. இருந்திருந்தால் நாம் நகர்களில் தோலுக்காக மானுடரை வளர்க்கத் தொடங்கியிருப்போம்” என்றான் முதல் வீரன். சூழ்ந்திருந்த சிலர் நகைத்தனர். ஒருவர் இன்னொருவரிடம் கேட்டுக்கொள்ள சிரிப்பு பரவிச்சென்றது.

# நீர்க்கோலம் - 88

### 87. கோட்டை நுழைவு

பீடத்தை ஓங்கித் தட்டிய விராடர் “மூடர்களே... இழிமக்களே...” என்று கூவினார். ஏவலர் உள்ளே வந்து வணங்க “எங்கே? தூதுச்செய்திகள் என்னென்ன? எங்கே ஒற்றர்கள்?” என்றார். “அரசே, சற்றுமுன்னர் வந்த செய்திதான் இறுதியானது...” என்றான் காவலன். “அது வந்து இரண்டு நாழிகை கடந்துவிட்டது. கீழ்மக்களே... ஒற்றர்கள் என்ன செய்கிறார்கள்? இப்போதே எனக்கு அடுத்தகட்டச் செய்தி

வந்தாகவேண்டும். இக்கணமே…” என்று கூவினார். காவலன் “அமைச்சரிடம் அறிவிக்கிறேன், அரசே” என்று தலைவணங்கி வெளியே சென்றான்.

குங்கன் புன்னகையுடன் “அஞ்சவேண்டியதில்லை அரசே, நல்லசெய்தி வரும்” என்றான். “எதை நம்பி இருப்பது இங்கே? அந்த மூடன் ஒளிந்துகொண்டிருக்கிறான். அவனை கொல்வதாக மிரட்டி இழுத்துச்சென்றிருக்கிறாள் ஆணிலி. இரு ஆணிலிகளும்…” கையை வீசி “பிழைசெய்துவிட்டேன். நான் சென்றிருக்கவேண்டும். நான் அங்கே இறந்திருந்தால்கூட பெருமைதான் அதில்” என்றார் விராடர். குங்கன் “நாம் இனி செய்வதற்கொன்றுமில்லை, பொறுத்திருப்பதைத் தவிர” என்றான்.

காவலன் உள்ளே வந்து வணங்க “என்ன செய்தி? எங்கே ஓலை?” என்றார் விராடர். “அரசியும் சைரந்திரியும்” என்றான் காவலன். “அவர்களை யார் இங்கே அழைத்தது?” என்று விராடர் சீற “தாங்கள் விடுத்த ஆணைப்படிதான்…” என்றான் காவலன். “வரச்சொல்” என்றபடி அவர் சென்று பீடத்தில் அமர்தார். சுதேஷ்ணை உள்ளே வந்து “என்ன செய்தி?” என்றாள். “உன் மைந்தன் கௌரவர் படையை ஓடஓட துரத்தி வெற்றிசூடி வருகிறான். போதுமா?” சுதேஷ்ணை முகம் மலர்ந்து “மெய்யாகவா?” என்றாள். “அறிவிலி… அறிவிலிகளில் முதல்வி” என்றார் விராடர்.

முகம் சிவக்க “அவன் வெல்வான், நான் அறிவேன்” என்றாள் சுதேஷ்ணை. “வாயை மூடு… உன்னை இங்கே அழைத்தது யார்?” என்று விராடர் கூவியபடி எழுந்தார். “நீங்கள்தான்… அழைக்காமல் வர நான் ஒன்றும் முறைமை தெரியாத காட்டினம் அல்ல. தொல்குடி ஷத்ரியர்கள் முறைமையில்

வாழ்பவர்கள்.” விராடர் “உன் மகன் அங்கே முறைமைப்படி போரிட்டுக்கொண்டிருக்கிறான்... நீயும் செல்! அவனுக்கு முறைமைப்படி வாய்க்கரிசி போடு” என்றார். அவர் முகம் சுளித்து பற்கள் தெரிந்தது சிரிப்பதுபோல காட்டியது. “எண்ணிப் பேசவேண்டும்... அரசன் முறைமீறிப் பேசினால் மாற்றுச்சொல்லும் அதேபோல எழும்” என்றாள் சுதேஷ்ணை. “எங்கே பேசு பார்ப்போம்” என்று விராடர் கையை ஓங்கினார்.

சைரந்திரி தாழ்ந்த குரலில் “அரசி, வேண்டாம்” என்றாள். விராடர் “நீ எப்படி உள்ளே வந்தாய்? சேடியர் எப்படி அவைக்குள் நுழையமுடியும்? போ வெளியே!” என்றார். சைரந்திரி “சென்று பீடத்திலமர்க!” என்றாள். விராடர் “என்ன?” என்று சொல்ல “படைகண்டு நடுங்கி அமர்ந்தது உத்தரர் மட்டுமல்ல” என்றாள். விராடர் படபடப்புடன் ஏதோ சொல்ல வாயெடுத்தார். “படைமுகம் கண்டதும் உத்தரர் நிமிர்ந்து எழுந்தார். இன்று அவர் உரைத்த சொற்களைத்தான் நகர் பேசிக்கொண்டிருக்கிறது” என்றாள் சைரந்திரி. “அவை அரசர் பேசியிருக்கவேண்டியவை.”

அவர் இருமுறை கையை அசைத்தபின் சென்று பீடத்திலமர்ந்தார். “தன்னை எண்ணி நாணுபவர்களின் மிகைச்சினம். அதை பிறர் எளிதில் உணரவும் முடியும்” என்றாள். விராடர் வலிகொண்டவர்போல தலையை அசைத்தார். ஏதோ சொல்லவந்தபின் கண்களை மூடிக்கொண்டு பெருமூச்சுவிட்டார். சைரந்திரி சுவர் சாய்ந்து நிற்க குங்கன் தலைகுனிந்து அமர்ந்திருந்தான். பெருமூச்சுடன் அசைந்த விராடர் “என்ன செய்தி என்றே தெரியவில்லை” என்றார்.

சுதேஷ்ணை “செய்தி இன்னும் சற்றுநேரத்தில் வரும்” என பீடத்தில் அமர்ந்தாள். துடித்து எழுந்து “நீ ஏன் இங்கிருக்கிறாய்?

போ” என்று விராடர் உரக்க கூவினார். “என் மைந்தனின் வெற்றிச்செய்தியை இங்கே அமர்ந்து நான் கேட்கவேண்டும். உங்கள் விழிகளை நோக்கிவிட்டுச் செல்லவேண்டும்... அதற்காகவே வந்தேன்” என்றாள் சுதேஷ்ணை. “செல்... வெட்டி வீழ்த்திவிடுவேன்... விலகிச்செல்!” என்று விராடர் கூச்சலிட்டார். “வெட்டுங்கள் பார்ப்போம்” என்றாள் சுதேஷ்ணை. “இப்போது நான் விழிகாட்டினால் இவள் உங்களை கைகள் பிணைத்து இழுத்துச்செல்வாள்... வாளேந்தத் தெரிந்த கைகள் இவை” என்றாள்.

விராடர் சைரந்திரியை நோக்கிவிட்டு “என்னை அச்சுறுத்துகிறீர்களா?” என்றார். குங்கன் “அரசே, இதெல்லாம் வீணாக முட்களால் குத்திக்கொண்டு நாம் ஆடுவது. நாம் செய்வதற்கொன்றுமில்லை. செய்திக்காக காத்திருப்போம்” என்றான். “ஆம்” என்றார் விராடர். தன் கைகளைக் கோத்தபடி பீடத்தில் உடல்குறுக்கி அமர்ந்தார். அறைக்குள் அமைதி நிலவியது. அரண்மனைச் சாளரங்கள் காற்றில் இறுகிநெகிழ்ந்து ஒலிக்கும் ஓசைமட்டும் கேட்டுக்கொண்டிருந்தது.

விராடர் எழுந்து “வீண்பொழுது... என்ன செய்வதென்றே தெரியவில்லை. நாம் சற்று ஆடுவோம்” என்றார். குங்கன் அசையாமல் அமர்ந்திருந்தான். “குங்கரே, உம்மிடம் நான் ஆணையிட்டேன். சூதுப்பலகையை எடும்” என்றார் விராடர். குங்கன் “இல்லை, நான் இனி சூதாடப்போவதில்லை” என்றான். “ஏன்?” என்றார் விராடர். “இதோ, சற்றுமுன் புலரியின் நான்காம் நாழிகையுடன் ஒரு காலகட்டம் முடிந்தது” என்றான் குங்கன். “என்ன சொல்கிறீர்? என்று விராடர் உரக்க கேட்டார். “இனி கையால் சூதுக்காய்களை தொடுவதில்லை என்று சூளுரைத்திருந்தேன். ஆழத்திலுறைந்த பிறிதொருவன்

அவ்விழைவை மிச்சம் வைத்திருந்தான். இன்று அவனும் ஆடி நிறைந்துவிட்டான்.” விராடர் “என்ன உளறிக்கொண்டிருக்கிறீர்? இது என் ஆணை. எடும் சூதுப்பலகையை!” என்றார்.

“உயிரிழந்தாலும் அதைத் தொடுவதில்லை” என்றான் குங்கன். விராடர் “ஏய்… அமைச்சரை அழைத்து வா… இப்போதே…” என்றார். சைரந்திரி “இனி எந்த ஆணையையும் நான் ஏற்றுக்கொள்வதில்லை” என்றாள். “அவர் சொன்ன அதே பொழுதுநிறைவு எனக்கும்தான்.” விராடர் “உங்களுக்கென்ன பித்துப் பிடித்திருக்கிறதா? என்னிடம் விளையாடுகிறீர்களா?” என்றார். “உங்கள் இருவரையும் கழுவிலேற்றுகிறேன். இந்நகரை ஆள்பவன் எவன் என்று காட்டுகிறேன்… இழிமக்களே…” அரசியை நோக்கி “நீ அளித்த இடம் இது… என்னை இழிவு செய்வதற்காகவே இவளை பேணுகிறாய்” என்று இரைந்தார்.

அவர் கதவில் கைவைக்க அது திறந்து அங்கே காவலன் நின்றிருந்தான். தலைவணங்கி “பேரமைச்சர் ஆபர்” என்றான். அதற்குள் ஆபர் உரத்த குரலில் “செய்தி வந்துள்ளது, அரசே. நம் இளவரசர் வென்றிருக்கிறார். கௌரவர்களை ஓட ஓட துரத்திவிட்டார். மச்சர்களின் குருதி தோய்ந்த வாளுடன் வந்துகொண்டிருக்கிறார்” என்று கூவினார். சுதேஷ்ணை பாய்ந்தெழுந்து “ஆம். நான் அதை நன்கறிவேன். நான் அவன் வருவதையே என் உள்ளத்தால் கண்டுவிட்டிருந்தேன். அவன் என் மகன். தொல்குடி ஷத்ரியரின் குருதியிலெழுந்தவன் அவன். தெய்வங்களே… மூதாதையரே…” என்று கண்ணீர் வழிய நெஞ்சை அழுத்தியபடி கூவினாள்.

விராடர் தயங்கிய குரலில் “அது உறுதிப்படுத்தப்பட்ட செய்திதானா? எவராவது…” என முனகினார். ஆபர் “ஏழு

செய்திகள் வந்துள்ளன. எப்படி போர் நிகழ்ந்ததென்றே விரிவாக எழுதியிருக்கிறான் ஓர் ஒற்றன். அனலை துணைகொண்டு வென்றிருக்கிறார்கள். நம் இளவரசர் களத்தில் பொருபுலி என நின்றிருக்கிறார்...” என்றார். விராடர் சில கணங்கள் விழிமலைக்க நோக்கி நின்றார். பின்னர் கையை நீட்டி தன் அரசியின் தோளை பற்றிக்கொண்டார். அவள் அவர் கைகளைப் பற்றியபடி “நம் மைந்தன்... அரசே, நமது மைந்தன் அவன்” என்றாள். “ஆம், நான் அவனைப்பற்றி பிழையாக எண்ணிவிட்டேன். கசந்தும் எள்ளியும் கடுஞ்சொல்லாடிவிட்டேன்.” அவர் நிற்கமுடியாமல் தள்ளாட அரசி அவரைப்பற்றி பீடத்தில் அமரச்செய்தாள்.

“சூசீமுக மலைக்குமேல் படையுடன் சென்றிருக்கிறார்கள். அங்கிருந்து மலையிறங்கும் சுழல்காற்றுபோல மச்சர்கள்மேல் பாய்ந்திருக்கிறார்கள். தலைநின்று தேரில்சென்று வில்லேந்தி களம் நிறைத்திருக்கிறார் உத்தரர்...” காவலன் வந்து தலைவணங்கினான். அவன் அளித்த ஓலைகளை வாங்கிய ஆபர் “அனைத்தும் ஒரே செய்திகளையே அளிக்கின்றன. நம் இளவரசர் வென்று வருகிறார்!” என்றார்.

விராடர் “நான் அவனை இழித்துரைத்தேன்... எத்தனை சொற்கள்!” என்றார். அவர் தொண்டை ஏறியிறங்கியது. குரல் அடைத்தது. “அவனை பழிக்காத ஒருநாளை கடந்ததில்லை நான்” என்றார். சுதேஷ்ணை “தாழ்வில்லை, நீங்கள் அவன் தந்தை அல்லவா?” என்றாள். “தந்தையரால் பழிக்கப்படாத மைந்தர் எங்குள்ளனர்?” குங்கன் “அரசே, தந்தையர் மைந்தரை பழித்துரைப்பதெல்லாம் மானுடரோ தெய்வங்களோ சினந்து அதற்கு எதிர்மொழி ஒன்றை சொல்லிவிடமாட்டார்களா என்ற ஆவலினால்தான்” என்றான்.

ஆபர் “இனி இந்நாட்டின் வெற்றியையும் வாழ்வையும் பற்றிய கவலையே தேவையில்லை, அரசே” என்றார். “நாடு எப்படிப் போனால் என்ன, என் மைந்தன் வாழ்வான். என் மைந்தன் வெல்வான்” என்றார் விராடர். “இக்கணம் இங்கிருந்தே கானேகவும் நான் ஒருக்கமே. இனி இப்புவியில் நான் அடைய ஏதுமில்லை... நிறைவுற்றேன். மூதாதையர் முன் சென்று நின்று முகம் நோக்குவேன்.” சுதேஷ்ணையின் தோளை வளைத்துப்பிடித்து “ஆம், நான் எளியவனே. ஒருகளம்கூட வெல்லாதவனே. என்னை வென்றுகடந்திருக்கிறான் என் மைந்தன். கௌரவப் படை கடந்தவன். நாளை இப்பாரதவர்ஷத்தின் மாமன்னன் என அறியப்படுவான். அவன் தந்தை என்று என் பெயரும் இலங்கும்...” என்றார்.

சுதேஷ்ணை “செய்திகளை விரிவாகப் படியுங்கள், அமைச்சரே” என்றாள். அவள் கண்களிலிருந்து நீர் வழிந்தது. முகம் சிரிப்பில் விரிந்திருந்தது. ஆபர் “இங்கே கோட்டைமுகப்பில் வஞ்சினம் உரைத்துவிட்டு தேரேறிச் சென்றதுமுதல் இளவரசர் ஒவ்வொரு கணமும் படைகளை வழிநடத்திக்கொண்டிருந்தார். ‘நாம் வெல்வோம், ஐயமே வேண்டாம்’ என்று அவர் சொன்னார். தன் வெற்றியை நன்கறிந்திருந்தார். ஆனால் சூசீமுக முனையைச் சென்றடைந்ததும்தான் நம் வீரர்களுக்கு அவர் என்ன சொல்கிறார் என்று புரிந்தது” என்றார்.

குங்கனை நோக்கி திரும்பிய விராடர் “குங்கரே, உங்களுக்கு எப்படி தெரிந்தது என் மைந்தன் வெல்வான் என?” என்றார். “அவருடன் பிருகந்நளை சென்றதனால்” என்றான் குங்கன். “அவளா? அந்த ஆணிலி என்ன செய்திருப்பாள்?” என்று விராடர் கேட்டார். “தேர் தெளித்து உத்தரரை வெற்றிக்கு அவள் கொண்டுசெல்வாள் என அறிந்திருந்தேன்.” விராடர் சினத்துடன்

“என்ன சொல்கிறீர்? என் மைந்தன் திறனற்றவன், அவன் வெற்றி அந்த ஆணிலியால்தான் என்கிறீரா?” என்றார். “அரசே, நான் சொல்வது...” என்று குங்கன் சொல்லெடுப்பதற்குள் சுதேஷ்ணை “என் மைந்தன் வென்று மீள்கிறான். அப்புகழை ஊரறியா பேடிக்கு அளிக்க எண்ணுகிறீரா?” என்றாள்.

“அரசி, சிக்கிமுக்கிக் கற்களில் கனலுள்ளது. எழுப்புவதற்கு கைகள் வேண்டும்” என்றான் குங்கன். விராடர் “இழிமகனே, உன் சிறுமதியை காட்டிவிட்டாய். என்ன சொல்கிறாய்? விராடகுலத்துப் பிறந்த இளவரசன் செயலற்றவன் என்றா? அவனை இயக்கியவள் அந்தக் கீழ்பிறப்பு என்றா?” என்று கூவியபடி எழுந்தார். “உண்மை அது” என்று குங்கன் சொல்வதற்குள் விராடர் “சூதப்பிறப்பே” என கூச்சலிட்டபடி நடுவே குறும்பீடத்திலிருந்த பனையோலை விசிறியை எடுத்து குங்கனை அடிக்கத்தொடங்கினார். தோளிலும் முகத்திலும் அடிகள் விழ குங்கன் தலையை குனித்துக்கொண்டான். ஆனால் கையெடுத்து தடுக்கவில்லை.

ஆபர் எழுந்து வந்து “அரசே, நிறுத்துங்கள்! நிறுத்துங்கள், அரசே!” என்று கூவினார். விராடர் வெறிகொண்டிருந்தமையால் ஆபரை ஒரு கையால் விலக்கி மறுகையால் குங்கனை மீண்டும் மீண்டும் அடித்தார். ஆபர் உரக்க “அரசே, நிறுத்துக! இது அந்தணன் ஆணை!” என்றார். விராடர் கையில் விசிறியுடன் திகைத்து மூச்சிரைக்க “இவர் இவர் என் மைந்தனை...” என்றபின் விசிறியை வீசிவிட்டு அழத்தொடங்கினார். “அவன் மீண்டெழுந்தாலும் இவர்கள் விடமாட்டார்கள். அவனை சொல்லிச்சொல்லியே வீணனாக்கிவிடுவார்கள். தெய்வங்களின் கொடையைக்கூட கைநீட்டி புகுந்து தடுக்கிறார்கள்” என்றார்.

தலையில் அறைந்தபடி “என் மைந்தன் வென்றான். அவன் கௌரவர்களை வென்றான்” என்று கூவினார்.

ஆபர் ஏதோ சொல்ல முன்னெடுக்க குங்கன் கைகூப்பி விழியசைத்து வேண்டாம் என்றான். அரசரை நோக்கி திரும்பி “இல்லை அரசே, உத்தரரே வென்றார். எளியோன் சொல்லை பொறுத்தருள்க. வென்றவர் இளவரசர் உத்தரர். அவர் புகழ் என்றும் வாழும்” என்றான். அச்சொற்களைக் கேட்காதவர்போல விராடர் தலைகுனிந்து அமர்ந்திருந்தார். பின்னர் மெல்ல விம்மினார். சைரந்திரி நிலைத்த விழிகளால் குங்கனை நோக்கிக்கொண்டிருந்தாள். ஆபர் “முகம் கிழிந்துள்ளது, குங்கரே… குருதி வருகிறது” என்றார். கையால் தன் கன்னத்தை தொட்டபின் “சிறிய புண்தான்” என்றான் குங்கன்.

உத்தரனின் தேர் நகரெல்லைக்குள் நுழைவதற்குள்ளாகவே விராடபுரி வாழ்த்துக் கூச்சல்களால் கொந்தளிக்கத் தொடங்கிவிட்டிருந்தது. அரசநெடுஞ்சாலையில் விராடப்படையின் வேளக்காரர்கள் சூழ அவனுடைய தேர் நுழைந்ததும் முதல் காவல்மாடம் முரசொலி எழுப்பியது. அதைக் கேட்டு தலையானை ஒலிகேட்ட யானைக்கூட்டமென அத்தனை மாடங்களும் முழங்கின. கோட்டைமுகப்பில் உத்தரனின் காகக்கொடி மேலெழுந்தது. நகர்மக்கள் அனைவரும் சாலையின் இரு பக்கங்களிலும் செறிந்தனர். உப்பரிகைகளிலும் இல்லத்திண்ணைகளிலும் பெண்முகங்கள் அடர்ந்தன.

நகர்க்காவல் வீரர்களில் ஒரு திரள் வாழ்த்தொலி எழுப்பியபடி புரவிகளில் அவனை எதிரேற்கச் சென்றது. செல்லச்செல்ல அது பெருகி ஒரு படையென்றே ஆகியது. படைக்கலங்களையும் தலைப்பாகையையும் எறிந்து பிடித்துக்கொண்டு புரவிமேல்

எம்பி எம்பி வெறிக்கூச்சலிட்டபடி அவர்கள் சென்றனர். தொடர்ந்து காலாள்படையினர் கூவி ஆர்த்தபடி ஓடினர். “விராடபுரிக்கு வெற்றி! மாவீரர் உத்தரருக்கு வெற்றி! காகக்கொடிக்கு வெற்றி!” என்று அவர்கள் கூவினர். சிலர் நெஞ்சில் அறைந்துகொண்டு அழுதனர்.

ஓசைகேட்டு தேர்த்தட்டில் அரைமயக்கத்திலிருந்த உத்தரன் எழுந்து கையூன்றி அமர்ந்தான். தேரை ஓட்டிக்கொண்டிருந்த பிருகந்நளையைக் கண்ட பின்னரே அவன் நிகழ்வதென்ன என்று உணர்ந்து “எங்கு வந்துள்ளோம்? என்ன ஓசை அது?” என்றான். “விராடபுரி அணுகிவிட்டது” என்றாள் பிருகந்நளை. “மக்கள் வாழ்த்தொலி எழுப்புகிறார்கள்.” உத்தரன் “வாழ்த்தொலியா?” என்றான். “ஏன்?” என்றாள் பிருகந்நளை. “நான் கனவில் போர்க்கூச்சலென எண்ணினேன்.” பிருகந்நளை புன்னகை புரிந்தாள். “போர் என எண்ணி என் உள்ளம் பொங்கியது என்றால் ஐயுறமாட்டீர்கள் என எண்ணுகிறேன். வாழ்த்துக்கூச்சல் என்று அறிந்தபோது சிறு ஏமாற்றமே எழுந்தது.”

“வாழ்த்துக் கூச்சல்கள் சலிப்பூட்டுபவை” என்றாள் பிருகந்நளை. “ஆம், நீங்கள் அறியாததா?” என்றான் உத்தரன். பிருகந்நளை மறுமொழி சொல்லவில்லை. “நான் எப்படி போரிலிறங்கினேன்? என்னுள் இருந்த வேறு எவரோ எழுந்து வந்து போராடியதுபோல. நானே அகன்று நின்று அவனைக் கண்டு வியப்பதுபோல... இப்போது எண்ணினால் கனவென்றே தோன்றுகிறது” என்றான் உத்தரன். கைதூக்கி சோம்பல்முறித்தபோது வலியை உணர்ந்தான். திரும்பாமலேயே அதை உணர்ந்து “பெரிய புண் அல்ல”

என்றாள் பிருகந்நளை. “ஆனால் ஆறுவதற்கு சில நாட்களாகும்.”

“என் கனவில் எத்தனைமுறை கண்டது இது! விழுப்புண் பெற்று மீளுதல். குடியினரால் வாழ்த்துரைக்கப்படுதல். மலர்மழை நடுவே நகருலா… இன்று அனைத்தும் மிகச் சிறியவை எனத் தோன்றுகிறது” என்றான் உத்தரன். “இப்புவியில் முதன்மையான இன்பம் என்பது தன்னையறிதலே. தன் ஆற்றலை மட்டும் அல்ல எல்லைகளை அறிதலும் இனியதே.” பிருகந்நளை “போரும் தவமும்தான் தன்னையறிவதற்கான இரு வழிகள் என்பார்கள்” என்றாள். “ஆம், என்றாவது ஒருநாள் தவமும் செய்யவேண்டும்” என்றான் உத்தரன்.

திரும்பி நோக்கி புன்னகையுடன் “எப்போது நீங்கள் உங்களை அறியத்தொடங்கினீர்கள் என்று நான் கூறவா?” என்றாள் பிருகந்நளை. “படைநிரைகள் முன் தேரில் வந்து நின்றபோது.” உத்தரன் சிரித்து “ஆம், முதற்கணம் என்மேல் ஓர் எடைமிக்க பொருள் வீசப்பட்டது போலிருந்தது. கால்கள் நடுங்கலாயின. எண்ணங்களில்லாமல் நெஞ்சு நிலைத்திருந்தது. பின்னர் நிலம் வில்லென்றாகி என்னை வானோக்கி எய்தது” என்றான். “நான் அணிவகுத்து படைக்கலம் ஏந்தி நின்றிருக்கும் போர்ப்படைத்திரளை அதுவரைக்கும் கண்டதில்லை… அது வெறும் காட்சி அல்ல… எப்படி சொல்வேன்? நான் அறியவேண்டிய ஒரு முதல் நூலின் பக்கங்கள் முழுமையாகத் திறந்துகிடப்பதுபோல. ஒரே கணத்தில் நான் அதை வாசித்துவிட்டதுபோல.”

அவனுக்கு மூச்சிரைத்தது. சொல்ல வந்ததை சொல்ல முடியவில்லை என உணர்ந்தவன்போல “எப்படி

சொல்வதென்று தெரியவில்லை... நாகத்தைக் கண்டால் புரவி சிலிர்க்குமே அதைப்போல ஒரு பதற்றம்... அப்போது விதையிலிருந்து கீறி எழுந்து ஒரே கணத்தில் மரமாக ஆனேன்” என்றவன் புன்னகைத்து “இந்த ஒப்புமையைக்கூட எங்கிருந்தோ எடுத்துக்கொண்டிருக்கிறேன். என்னிடம் சொற்கள் இல்லை” என்றான். பிருகந்நளை “உங்கள் குருதி அறிந்திருக்கிறது” என்றாள்.

“ஆம், என் மூதாதையரின் குருதி இது. மாமன்னர் நளன் என என்னை நான் உணர்ந்தேன் களத்தில்” என்றான் உத்தரன். “என் கைகள் வில்லம்பை முன்னரே அறிந்திருந்தன என்று தோன்றியது. எனக்குத் தெரியாததை என் கைகள் அறிந்திருந்தன. இன்னும் சற்று பயின்றால் நீங்கள் இல்லாமலேயே என்னால் கர்ணனை எதிர்கொண்டிருக்க முடியும்.” பிருகந்நளை “உங்கள் விழிகளை நோக்கியிருக்கிறேன். அவை படைக்கலப் பயிற்சியை ஒருகணமும் தவறவிட்டதில்லை. உள்ளிருந்து பிறிதொருவர் அதை நோக்கி பயின்றுகொண்டிருந்திருக்கிறார்” என்றாள்.

“இப்போது உங்களுக்கு பிழைத்த அம்புகளைவிட தொட்ட அம்புகள் மிகை. ஆனால் பயிற்சிக்களத்தில் நின்று அம்பெய்யத் தொடங்கும்போது மேலும் இலக்குகள் பிழைப்பதை உணர்வீர்கள்” என்றாள். “ஏன்?” என்றான் உத்தரன். “இளவரசே, களத்தில் நின்றிருப்பது மற்றொன்று. உள்ளமும் கைகளும் விழிகளும் புலன் ஒன்றென்று ஆகி அக்கணத்தில் மட்டுமென நிலைகொள்வது அது. அது உங்களுக்கு இயல்பாகவே கைவருகிறது. முதல் அம்பை விட்டதுமே அங்கு சென்று நின்றுவிட்டீர்கள். சிம்மம் குருதி வாடையை தன் குருதியால் அறிகிறது” என்றாள் பிருகந்நளை. “ஆனால் விற்பயிற்சி என்பது

முற்றிலும் வேறு. சினமின்றியும் போர்முனையின் உச்சநிலை இன்றியும் அம்பும் அகமும் ஒன்றென்றாவது அது. அதை பயில்க!”

“ஆம்” என்றான் உத்தரன். “இன்னமும் ஓராண்டு. மிகையென்றால் ஈராண்டு. வில்லுடன் உங்கள் முன் வந்து நிற்பேன்.” பிருகந்நளை புன்னகைத்தாள். “இது முதல் போர். இங்கே அத்தருணத்தின் தெய்வமெழுதல் உங்களை நிற்கச்செய்தது. அடுத்த போர் இப்போரின் நினைவுகளால் ஆனது. அந்நினைவே உங்களை தன்னை மறக்கவிடாது. எனவே தெய்வம் எழாது. இவ்வெற்றி ஆணவமாகச் சமைந்தது என்றால் தெய்வங்கள் எதிரணியில் சென்று சேரவும்கூடும். இனி உங்கள் போர்களை வெல்லப்போவது நீங்கள் மட்டுமே. அதற்கு பயிற்சி ஒன்றே கைகொடுக்கும். போரில் முற்றிலும் விலகி நின்று வெறும் பயிற்சியொன்றாலேயே ஈடுபடுகையிலேயே எப்போதும் எங்கும் வெல்லும் வீரர் என்றாகிறீர்கள்” என்றாள்.

“இனி போர்களை உங்கள் கைகளே நிகழ்த்தட்டும். உள்ளம் போரை முழுமையாகக் காணும் தொலைவொன்றில் ஊழ்கத்தில் அமையட்டும்.” உத்தரன் சில கணங்களுக்குப்பின் “நீங்கள் நான் எண்ணுபவர்தானா?” என்றான். பிருகந்நளை ஒன்றும் சொல்லாமல் புரவியை சவுக்கால் தட்டினாள். “பிறிதொருவராக இருக்க முடியாது” என்றான் உத்தரன். “உள்ளத்தில் இசையோகிக்கு எப்பொருளும் இசைக்கலமே என்பார்கள். நான் உங்கள் கைகளில் வெறும் கிளிஞ்சல்.” பிருகந்நளை புன்னகைத்து திரும்பிக்கொண்டாள். அவள் மறுமொழி சொல்லப்போவதில்லை என்றுணர்ந்து உத்தரன் மீண்டும் அமைதியடைந்தான்.

புயல் பெருகிவந்து சூழ்ந்துகொள்வதுபோல விராடபுரியின் மக்கள்திரள் அவன் தேரை தன்மேல் எடுத்துக்கொண்டது. அவன் அந்த முகங்களை பார்த்தான். அந்த மெய்ப்பாடுகளை களிவெறி என்றும் கொலைவெறி என்றும் கடுந்துயர் என்றும் தாளாவலி என்றும் தெய்வமெழுந்ததென்றும் பேயுருக்களென்றும் எப்படி வேண்டுமென்றாலும் சொல்லலாம் என்று தோன்றியது. இதோ இக்கிழவன் சிரிக்கிறானா அழுகிறானா? இவன் என்னை வாழ்த்துகிறானா நெஞ்சிலறைந்து தீச்சொல்லிடுகிறானா? இவன் என்மேல் மலர் வீசுகிறானா வாள் எறிகிறானா? உச்சங்களனைத்தும் ஒன்றேதானா? உச்சங்களைத்தான் தெய்வம் என்றார்களா? அங்கு செல்ல அஞ்சித்தான் மானுடர் இங்கு எளிதென வாழ்கிறார்களா?

அவர்கள் அத்தனைபேரும் தன்னை ஏளனம் செய்தவர்கள் என்பதை அவன் அப்போது உணர்ந்தான். அவன் நோக்காதொழிந்த அத்தனை விழிகளையும் நோக்கி கணக்கு வைத்திருந்த ஒருவன் அவனுள் இருந்து எழுந்தான். அவர்களின் ஏளனத்தை வெல்லும்பொருட்டே அறிவின்மையொன்றை அணிந்துகொண்டிருந்தேன். கொடிய தந்தையின் உள்ளத்தைக் கவர ஆடைதுறந்து வந்து நிற்கும் இளமைந்தன் போலிருந்தேன். என்னை ஏளனம் செய்ய வைப்பதனூடாக அவர்கள் என்னை வெறுக்காமல் பார்த்துக்கொண்டேன். அவர்கள் உள்ளத்தின் ஆழத்தில் அறியாச் சிறுவனாக வாழ்ந்தேன்.

சூழ்ந்து அலையடித்த வாழ்த்தொலிகளுக்கு நடுவே இடையறாது பெய்த மலர்மழையில் கைகூப்பி நின்றபடி அவன் கணம்கணமாக வாழ்ந்து வந்துகொண்டிருந்தான். பெண்கள் சூழ இருந்த தருணங்களை கண் முன் என நோக்கினான்.

அவர்களுக்குள் உறையும் அன்னையரையே எனக்குச் சூழ அமர்த்திக்கொண்டிருந்தேன். அவர்கள் மடியில் தவழும் மகவென்றிருந்தேன். என்னை இகழ்கையில் இவர்கள் குற்றவுணர்வு கொண்டிருந்தார்களா? தங்கள் எண்ணங்கள் தோற்கடிக்கப்படுவதை இவர்கள் ஏன் கொண்டாடுகிறார்கள்?

குளிர்காற்றுபோல வந்து அறைந்த நடுக்கம் ஒன்றால் அவன் விழப்போனான். தூணைப் பற்றியபடி நிலைப்படுத்திக்கொண்டு அவர்களை நோக்கினான். இவர்கள் எல்லா எதிர்பாராமைகளையும் கொண்டாடுவார்கள். இன்று இவர்கள் அறிந்தவை அனைத்தும் பொய்யென்று நாளை சொல்லப்பட்டால் அதனுடன் சென்று சேர்ந்துகொள்வார்கள். அங்கு நின்று கூத்தாடுவார்கள். அத்தருணத்தில் வாளை உருவிக்கொண்டு அக்கூட்டத்தின் நடுவே பாய்ந்து முகம் விழிநோக்காது வெட்டி வீழ்த்தவேண்டும் என்னும் வெறியே மீறியெழுந்தது. அவர்களின் குருதியிலாடவேண்டும். அள்ளிப்பருகவேண்டும். காய்ச்சல்கண்டவன்போல நடுங்கியபடி அவன் நின்றிருந்தான். விழிநோக்கு மறைந்து வெறும் வண்ணக்கொப்பளிப்புகளே எஞ்சின.

நெடுநேரம் கடந்து வியர்வை குளிர விடாய் எழ அவன் சூழ்விழிப்பு கொண்டபோது எண்ணங்கள் அடங்கிவிட்டிருந்தன. நீள்மூச்சுக்கள் எழுந்துகொண்டே இருந்தன. புன்னகையுடன் “அரண்மனை வந்துவிட்டதா?” என்றான். பிருகந்நளை “ஆம், முகப்பு தெரிகிறது” என்றாள். “அங்கே அரசவரவேற்பு இருக்கும்… கவிஞர்கள் பாடலியற்றத் தொடங்கிவிட்டிருப்பார்கள்” என்றான். “ஆம், நாளைமுதல் நீங்கள் யார் என்பதை சூதர்கள் முடிவுசெய்வார்கள்” என்றாள் பிருகந்நளை.

# நீர்க்கோலம் - 89

**88. அரியணையமைதல்**

❀உத்தரன் அரண்மனைக்குள் நுழைந்து தன் அறைக்குச் சென்றதுமே "நான் சற்று இளைப்பாறவேண்டும்" என்றான். அவனுடன் வந்த படைத்தலைவன் சங்காரகன் "இளவரசே, நமக்கு பொழுதில்லை. குடியவை கூடிவிட்டிருக்கிறது. சாளரங்கள் வழியாக நம் மக்கள் கொந்தளிக்கும் ஓசை கேட்கிறது. இன்னும் சற்றுநேரத்தில் நீங்கள் அணியாடை புனைந்து அரசவைக்கு வந்தாகவேண்டும்" என்றான். "வெறும் அவைநிகழ்வுதானே? சற்று ஓய்வெடுத்தபின் வருகிறேன். என் புண்ணை அவிழ்த்துக் கட்டவேண்டும்" என்றான் உத்தரன். "இது வெறும் அவையல்ல. அரசர் தங்களுக்கு மகாகீசகரின் உடைவாளை அளிக்கவிருக்கிறார்" என்றான் சங்காரகன். உத்தரன் "அது எதற்கு?" என்றான் சலிப்புடன்.

சங்காரகன் சற்று வியந்து அதை மறைத்தபின் "மகாகீசகரின் உடைவாளை இரண்டு தலைமுறையாக எவரும் ஏந்தியதில்லை, இளவரசே. களம்வென்று அவையமரும் அரசகுடியினருக்குரிய சடங்கு, அதை உருவி மூதாதையர் முன் தாழ்த்தி உறுதிமொழி உரைப்பது. சதகர்ணிகளை வென்று மீண்டபோது கீசகர் அதை இடையணிய விரும்பினார். குலநெறி ஒப்பவில்லை. அவர் கொண்டிருந்த பெருங்கனவே அதுதான்" என்றான். உத்தரன் "ஆம், அறிவேன். ஆனால் இச்சடங்குகள் எதற்கும் ஆழ்பொருளெதையும் நான் காணவில்லை" என்றான். பின்னர் "நன்று, நான் வந்துவிடுகிறேன்" என்றான். சங்காரகன் வணங்கி விடைபெற்றான்.

ஏவலன் அவன் ஆடைகளை கழற்றினான். புண்ணைக் கட்டியிருந்த துணியின்மேல் குருதி ஊறிக் கசிந்துகொண்டிருந்தது. “புண்வாய் திறந்துவிட்டிருக்கிறது. நெடும்பயணம்” என்றார் முதிய ஏவலர் சாரதர். “கோட்டைக்குப்பின் அரசப்பெருவீதியைக் கடப்பதே கடினமாக இருந்தது. அதன் பின் அரண்மனை வாயிலில் வரவேற்புச் சடங்குகள்... ஒவ்வொருவரையாக குனிந்து வணங்கி முறைமைச்சொல் உரைத்தேன். உள்ளே கசியும் புண்ணுடன் முகம் மலர்ந்திருப்பது எப்படி என்று கண்டுகொண்டேன்...” சாரதர் சிரித்து “அரசப் பொறுப்பு என்பது முடிவிலாத ஒரு கூத்தில் நடிப்பதே என்பார்கள்” என்றார்.

அவன் மஞ்சத்தில் படுத்துக்கொண்டான். கால்களை நன்றாக நீட்டவேண்டும் என எண்ணிக்கொண்டிருக்கையிலேயே துயிலில் ஆழ்ந்தான். கரவுக்காட்டில் நிலவொளி அலையடித்த சிற்றாற்றின் கரையினூடாக நடந்துகொண்டிருந்தான். ஆற்றின் மறுகரையில் நீள்குழல் அலையலையாக சரிந்த பெண் ஒருத்தியை கண்டான். திரண்ட பெருந்தோள்கள். கரிய கற்சிலைமுகம். நீள்விழிகள். பிழையற்ற வளைவுகொண்ட மூக்கும் முகிழிதழ்களும். அவள் அவனை நோக்கவில்லை. அவன் நீர்வெளியில் அவள் நிழலையே நோக்கிக்கொண்டிருந்தான். ஆறு பெருகி ஓடிக்கொண்டே இருக்க அவள் அங்கே நின்றுகொண்டிருந்தாள். ஏதோ தோன்ற விழிதூக்கி நோக்கினான். அவள் அங்கே இல்லை. அவளுடைய நீர்ப்பாவை மட்டும் அங்கேயே இருந்தது.

கலம் ஒலித்த ஓசையை மணியொலியென கேட்டு விழித்துக்கொண்டான். குறுகிய துயிலில் அவன் உள்ளம் நீராடி எழுந்ததுபோல் புத்துணர்வு கொண்டிருந்தது. வெண்கலக்

கிண்ணத்தை பீடத்தில் வைத்த மருத்துவர் நாசிகர் “கட்டு அவிழ்த்துக் கட்டவேண்டும், இளவரசே” என்றார். “சிவமூலி கொண்டுவந்துள்ளோம்… ஆனால் உடனே அவைநிகழ்வுகள் உள்ளன என்றனர். சற்று குறைவாக…” என்றார்.
“தேவையில்லை” என்றான் உத்தரன். “சற்று வலி இருக்கட்டும். தேடி அடைந்த நகை போன்றது இந்தப் புண். அதை முழுமையாக அறியவேண்டும் அல்லவா?”

நாசிகர் அவனை திகைப்புடன் நோக்கிவிட்டு தன் உதவியாளனை பார்த்தார். அவனும் திகைப்பு கொண்டிருந்தான். நாசிகர் உத்தரனின் கட்டை சிறிய கத்தியால் வெட்டி விலக்கினார். குருதியுடன் சேர்ந்து ஒட்டி சேறு உலர்ந்ததுபோலிருந்தது. அவர் அதை பிடித்துக்கொண்டு அவன் விழிகளை நோக்க அவன் புன்னகைத்தான். அவர் அதை விரைந்து இழுத்து கிழித்தெடுத்தார். அவன் பற்களைக் கடித்து கழுத்தை இறுக்கினான். ஆனால் புன்னகை அவ்வாறே இருந்தது. புண்ணிலிருந்து பஞ்சு கருஞ்செம்மை நிறப் பொருக்கென விலகியது. குருதி வழிய அதன்மேல் பஞ்சை வைத்து அழுத்தித் துடைத்தார் நாசிகர்.

அவர் கட்டு போட்டு எழுவதுவரை அவன் ஓசையேதுமின்றி அமர்ந்திருந்தான். அவர் கைகளை நீரில் கழுவியபோது “முடிந்ததா?” என்றான். அவன் விழிகள் சிவந்திருந்தன. “ஆம்” என்றார் நாசிகர். அவன் எழுந்துகொண்டான். “நீராடலாகாது. உடலை மென்பஞ்சு நீரால் துடைக்கலாம். என் உதவியாளர்களே செய்வார்கள்” என்றார் நாசிகர். உத்தரன் தலையசைத்தான். அவர் வணங்கி விலகிச்செல்ல அவருடைய உதவியாளன் “சற்றுநேரம் ஓய்வெடுத்தபின்…” என்றான்.
“தேவையில்லை” என்றான் உத்தரன்.

அவன் நீராட்டறைக்குச் சென்று நறுநீர்ப் பஞ்சால் உடலைத் துடைத்துவிட்டு மீண்டான். அணியர் அவனுக்கு அரச ஆடையும் அணிகளும் சூட்டினர். ஆடியிலெழுந்த தன் உருவை நோக்கிக்கொண்டிருந்தான். அவனறியாத அயலான். அணியன் அஞ்சியபடி "முடிந்துவிட்டது, இளவரசே" என்றான். "நன்று" என அவன் திரும்பிக்கொண்டான். "பிழையேதும் இருந்தால்..." என அவன் சொல்ல விலகும்படி கைகாட்டிவிட்டு அவன் நடந்தான். அணியன் பின்னால் வந்து அவன் இடையாடையின் ஊசி ஒன்றை சீரமைக்க முயல "விடு" என்று அவனை விலக்கினான்.

அவனுக்காக ஏவலரும் அகம்படியினரும் காவல்வீரர்களும் காத்து நின்றிருந்தனர். அவன் படிக்கட்டின்மேல் தோன்றியதும் மங்கல இசையும் வாழ்த்தொலிகளும் எழுந்தன. பெண்டிர் குரவையிட்டனர். அவன் படிகளில் இறங்கி வந்து அங்கே நின்றிருந்த சிற்றமைச்சரிடம் "அரசர் அவைபுகுந்துவிட்டாரா?" என்றான். "இல்லை இளவரசே, படைத்தலைவர் சங்காரகர் போர் நிகழ்ந்ததை விரித்துரைக்கிறார். அரசர் தங்களுக்காக சிற்றறையில் காத்திருக்கிறார்..."

சிற்றமைச்சர் குரல் தாழ்த்தி "நெடுநேரமாகிறது. தங்களுக்காகக் காத்திருப்பதாகச் சொல்லவில்லை. ஆனால் அதற்காகவே என அனைவருக்கும் தெரிந்திருக்கிறது. வாயிலை எட்டிப்பார்த்துக்கொண்டும் எரிச்சலுற்று அனைவரையும் கடிந்துகொண்டும் இருக்கிறார்" என்றார். உத்தரன் புன்னகைத்து நடக்கையில் சாளரம் வழியாக எரியம்புகள் வானிலெழுவதை நோக்கினான். "என்ன அது?" என்றபடி நின்றான். "நாடெங்கும் பன்னிருநாள் போர்க்களியாட்டுக்கும் உண்டாட்டுக்கும் அரசர் ஆணையிட்டிருக்கிறார்" என்றார் சிற்றமைச்சர்.

உத்தரன் எரிச்சலுடன் “போர் என்பது களியாட்டல்ல. நேற்றுவரை நம்முடன் இருந்த எண்ணூற்றிப்பதினேழு வீரர்கள் இன்றில்லை” என்றான். சிற்றமைச்சர் “போர்ப்பலி என்பது உயிர்வேள்வி. அவர்களின் நினைவைப் போற்றவும்...” என்று சொல்லத்தொடங்க உத்தரன் கைகாட்டி அமர்த்தி “எல்லா இறப்பும் இறப்பு மட்டுமே. அப்பாலுள்ள அனைத்தும் சூதர்பாடல்களின் அளவுக்கே பொருள்கொண்டவை” என்றான். “இக்களியாட்டுக்கள் அவர்களை நினைவுகூர்வதற்காக அல்ல, மறந்துவிடுவதற்காகவே. சென்று கேட்டுப்பாருங்கள், அங்கே கள்ளுண்டு கூத்தாடுபவர்களில் எவருக்காவது எத்தனைபேர் பலியாயினர் எனத்தெரியுமா என்று?”

அவன் கசப்புடன் இதழ்வளையப் புன்னகைத்து முன் நடக்க சிற்றமைச்சர் பின்னால் வந்தார். “அவர்கள் இல்லை, நாங்கள் இருக்கிறோம். இதோ, எழும் களிக்கூச்சலின் பொருள் அது ஒன்றே” என்றான் உத்தரன். சிற்றமைச்சர் ஒன்றும் சொல்லவில்லை. இடைநாழிகளினூடாக வாழ்த்தொலிகள் சூழ உத்தரன் நடந்தான். எதிர்ப்படும் ஒவ்வொரு விழியும் பிறிதொன்றாக இருந்தது. ஒவ்வொரு உடல்மொழியிலும் தெரிந்த மாறுதல் அவர்கள் நோக்குவது தன்னையல்ல என அவனை எண்ணச்செய்தது.

நிமித்திகன் வரவறிவித்து முன்செல்ல கொடிக்காரனைத் தொடர்ந்து அணிச்சேடியரும் மங்கலச்சூதரும் நிரைவகுக்க அவன் நடந்தான். அகம்படியினர் பின்னால் வந்தனர். சிற்றறை வாயிலில் அரசரின் கொடியினனும் சேடியரும் அகம்படியினரும் நின்றிருந்தனர். அவன் அன்னையும் உத்தரையும் அவன் மீண்டுவந்தபோது அரண்மனை முற்றத்திற்கு வந்து வரவேற்றார்கள். நெறிகளின்படி அரசரை

அவன் அவையில்தான் சந்திக்கவேண்டும். அவன் அவரிடம் சொல்லும் சொற்கள் சூதர்களிடம் பாடலாகும். நூலாகும். கொடிவழியினர் கதையென கேட்பார்கள். அவன் சொல்வதற்கும் அதற்கும் ஒருவேளை எந்தத் தொடர்பும் இருக்காது. ஆனால் அவன் அதை தொடங்கிவைக்கவேண்டும்.

அவன் வரவை அறிவித்த ஏவலன் தலைவணங்க ஒருகணம் தயங்கிவிட்டு உள்ளே நுழைந்தான். விராடர் புலிக்கால் பீடத்தில் நிமிர்ந்து அமர்ந்திருந்தார். அவன் வருவதை அறியாதவர்போல மறுபக்கமாக முகம் திருப்பி அங்கே நின்றிருந்த சேடியிடம் வாய்மணம் கொண்டுவரும்படி விரல்சுட்டி ஆணையிட்டார். அவள் தாலத்தைக் கொண்டுவந்து நீட்ட அதில் ஒரு நறும்பாக்குத் துண்டை எடுத்து வாயிலிட்டு மென்றபடி அவனைப் பார்த்தார். அவன் தலைவணங்கி “தங்கள் பெயருக்கு பெருமைசேர்த்துவிட்டேன், தந்தையே” என்றான். விராடர் அவன் விழிகளை சந்திக்காமல் வெறுமனே தலையசைத்தபின் “அவையில் என்ன பேசவேண்டும் என்பதை ஆபர் எழுதி அளிப்பார். அதை இருமுறை படித்துவிடு. வாயில் வந்ததை உளறி அங்கே நகைப்புக்கிடமாக வேண்டாம்” என்றார். உத்தரன் “ஆணை” என்றான்.

விராடர் மிகையான சலிப்புடன் “உன் அன்னை ஏதோ காட்டுக்கலி ஆலயத்திற்குச் சென்று பூசெய்கை நிகழ்த்தவேண்டும் என்று சொல்லிக்கொண்டிருந்தாள். என்னால் அங்கெல்லாம் வரமுடியாது. இங்கு பல நிகழ்வுகள் உள்ளன” என்றார். உத்தரன் “நானே சென்றுவருகிறேன்” என்றான். வெளியே கொம்புகளும் முரசுகளும் முழங்கின. “உன் அன்னையும் உத்தரையும் அவைபுகுகிறார்கள்போலும்… இந்த முறைமைகள் எதையும் விடமாட்டார்கள்” என்றார் விராடர்.

சலிப்பு நிலைகொண்ட முகத்துடன் எழுந்துகொண்டு “அந்த மூடன் அவன் போர்முகத்தில் ஆற்றியதைப்பற்றிய பொய்களை எல்லாம் முடித்துவிட்டான் என்றால் நாம் அவைபுகலாம்” என்றார். உத்தரன் அருகே நின்ற சேடியின் விழிகளை நோக்கியபின் திரும்பிக்கொண்டான்.

சிற்றமைச்சர் உள்ளே வந்து வணங்கி “கிளம்பலாம், அரசே” என்றார். உத்தரன் “குங்கர் எங்கே?” என்றான். “இங்குதானிருந்தார்... எங்கே அவர்?” என்றார் விராடர். “இடைநாழியில் நிற்கிறார்” என்றாள் சேடி. விராடர் மெல்லிய ஏப்பம்விட்டு “விரைவில் அவையை முடிக்கவேண்டும். என்னால் நெடுநேரம் அமர்ந்திருக்க இயலாது. உன் பெருமைகளை கொஞ்சம் குறைத்தே சொல்லச்சொல் சூதரிடம். வாய்ப்பு கிடைத்தால் காவியங்களை பாடத் தொடங்கிவிடுவார்கள்” என்றார். “சொல்கிறேன்” என்றான் உத்தரன்.

விராடர் ஏவலர் ஆடைதிருத்துவதற்காக நின்றார். அவருடைய ஆடையின் சுருக்கங்களை அவர்கள் நீவிச் சீரமைத்து ஊசிகளை மீண்டும் குத்தினர். “போர்வெற்றி என்பது பெரும்பாலும் தற்செயல். ஒரு வெற்றி வந்ததும் நானே பரசுராமன் என எண்ணிக்கொள்வது மடமை” என்றார் விராடர். “இவ்வெற்றி நம் கையில் ஒரு வீசப்படாத வேலாக இருக்கவேண்டும்.” சிற்றமைச்சர் தலைவணங்க விராடர் வெளியே சென்றார். அங்கே வாழ்த்தொலிகள் பெருகி எழுந்தன. இசையும் குரவையும் சூழ்ந்தன.

விராடர் “ஆபர் எங்கே?” என்றார். சிற்றமைச்சர் தயங்கி “அவர் அவையிலிருக்கிறார்” என்றார். “ஏன்?” என்றார் விராடர். அவர் பேசாமல் நின்றார். உத்தரன் கிளம்பும்பொருட்டு தன்

அகம்படியினரை நோக்கி விழிதிருப்பும்போது தூணருகே நின்ற குங்கனை தன்னியல்பாக விழிதொட்டான். முகம் மலர்ந்து அருகே சென்று தலைவணங்கி "அருள்க, குங்கரே! களம்வென்று மீண்டுள்ளேன்" என்றான். குங்கன் "வெற்றிமகள் வலமுறைக! திருமகள் இடமுறைக!" என்று வாழ்த்தினான். உத்தரன் அவன் முகத்தை கண்கள் சுருங்க நோக்கி "என்ன புண்?" என்றான். குங்கன் "விசிறி பட்டுவிட்டது... பெரிதாக ஒன்றுமில்லை" என்றான். "எப்படி பட்டது? இருட்டில் நடந்தீர்களா?" என்றான் உத்தரன். குங்கன் விராடர் அப்பால் அவைநுழைவதை நோக்கிவிட்டு "அரசர் அவை நுழைந்துவிட்டார், இளவரசே" என்றபின் தன் மேலாடையை அள்ளி சுற்றிக்கொண்டு முன்னால் சென்றார்.

உத்தரன் "செல்வோம்" என்றபடி தன் அகம்படியினரை நோக்கித் திரும்பியபோது சிற்றமைச்சரின் விழிகளை ஒருகணம் பார்த்தான். விரைந்த நோக்கு மட்டுமே தொட்டெடுக்கும் ஒன்றை அறிந்து அவன் உள்ளம் கூர்கொண்டது. "என்ன நிகழ்ந்தது?" என்றான். அவன் குரலிலிருந்த மாறுபாட்டை உணர்ந்ததும் அவர் அச்சத்துடன் பின்னடைந்து "எங்கே இளவரசே?" என்றார். "அவர் முகத்தில் என்ன புண்?" சிற்றமைச்சர் "ஒன்றுமில்லை, இளவரசே" என்று சொல்லி மேலும் ஓர் அடி பின்னால் எடுத்துவைத்தார்.

உத்தரன் தாழ்ந்த குரலில் "இது என் ஆணை!" என்றான். அமைச்சர் தயங்கிய குரலில் "அரசர்தான்" என்றார். "என்ன நிகழ்ந்தது?" என்றான் உத்தரன் மேலும் தாழ்ந்த குரலில். "நான் அப்போது அரசரின் அறைக்குள் இல்லை. நான் அறிந்ததுதான். தாங்கள் அடைந்த வெற்றியை எண்ணி அரசர் விழிநீர் உகுத்தார். உவகை கொண்டாடினார்." உத்தரன் "சொல்க!"

என்றான். "அவரிடம் குங்கர் அவ்வெற்றி பிருகந்நளையால்தான் என்று சொன்னாராம். அரசர் உளம்பொறாமல் சினம்மீதூற விசிறியால்..." உத்தரன் இடையில் கைவைத்து சில கணங்கள் நின்றான். பின்னர் நடக்கலானான். நிமித்திகன் சங்கூதி முன் செல்ல கொடிக்காரனும் அணிச்சேடியரும் சூதரும் தொடர்ந்தனர்.

"இளவரசே, இவை பிழையாக இருக்கலாம். அமைச்சு அவையில் பேசப்பட்ட சொற்கள். நான் என் சொற்களென ஏதும் சொல்லவில்லை" என்றபடி அவன் பின்னால் வந்தார் சிற்றமைச்சர். உத்தரன் அவர் அஞ்சவேண்டியதில்லை என கை காட்டியபின் அவைக்குள் நுழைந்தான்.

❀நிறைந்து விளிம்புகளில் நுரையலை எழும் ஏரிபோலிருந்த குடியவைக்குள் உத்தரன் நுழைந்ததும் வாழ்த்தொலி எழுந்து அவன் மேல் அறைந்தது. குடிமுதல்வர்களும் படைத்தலைவர்களும் பெருவணிகரும் அமைச்சர்களும் எழுந்து கைகளைத் தூக்கி அவன்மேல் அரிமலர் தூவி வாழ்த்தினர். கைகளைக் கூப்பி அவையை வணங்கியபின் அவன் சென்று அவையிலமர்ந்திருந்த குங்கனை தாள்தொட்டு வணங்கினான். "பேரரசர்கள் தந்தையென்றும் தெய்வமென்றும் நிலைகொள்பவர்கள். தங்கள் நல்வாழ்த்துக்களை என்றும் கோருகிறேன்" என்றான்.

விராடர் திடுக்கிட்டு எழுந்துவிட்டார். கைநீட்டி ஏதோ சொல்லவந்தாலும் அவரால் உளம்கூட்ட முடியவில்லை. ஆபர் எழுந்து கைகூப்பியபடி நிற்க உத்தரன் "அமைச்சரே, பேரரசரை நம் அரியணையில் அமரச்செய்க!" என்றான். விராடர் "என்ன சொல்கிறாய்? ஒரு சூதனை..." என்று சொல்லத்தொடங்க ஆபர் "அரசே, அவர் பெயர் யுதிஷ்டிரர். பாரதவர்ஷத்தின் தலைவர்"

என்றார். “யார்?” என்றார் விராடர். அவர் கைகள் நடுங்கத்தொடங்கின. “அவர்தான்... ஓராண்டு இங்கே நம்முடன் மாற்றுருக்காலத்தை கழித்தனர். நேற்றுடன் அது முடிந்தது. இன்று அவர் குங்கன் அல்ல, தருமராகிய யுதிஷ்டிரர்.”

விராடர் தள்ளாடும் காலடி எடுத்து வைத்து குங்கரை நோக்கி வந்து “பேரரசே” என்றார். கைகூப்பி “எளியவன்... என் ஆணவத்தால்...” என்று திணறினார். குங்கர் அவர் அருகே வந்து தோளில் கைசுற்றி மெல்லத் தழுவி “ஓராண்டில் மிக அணுக்கமான பல தருணங்கள் நம்மிடையே அமைந்துள்ளன. பிறந்ததுமுதல் கண்காணா மணிமுடி ஒன்றைச் சூடியிருந்தமையால் நட்பென்று எதையும் நான் அறிந்ததில்லை. இங்கே என் குடியும் அரசும் இன்றி வெறும் மனிதனாக இருந்தேன். அவ்வண்ணம் பெற்ற நட்பு உங்களுடையது. இதுவே உண்மையில் நான் ஈட்டியது” என்றார்.

விராடர் தலைகுனிந்து கண்ணீர்விட்டார். “விராடரே, என்றும் என் முதன்மைத்தோழர் நீங்களே. உங்களுக்கு மட்டும் என்றும் குங்கன் என்றே அமைய விழைகிறேன். இன்றுவரை எவ்வண்ணம் என்னிடமிருந்தீர்களோ அப்படியே இருக்கவேண்டுமென கோருகிறேன்” என்றார் குங்கர். விராடர் ஓசையில்லாது விம்மிக்கொண்டிருந்தார். குங்கர் அவர் கைகளைப் பற்றி “நாம் ஆடும் களங்கள் பல இன்னுமுள்ளன, விராடரே” என்றார். அவையினர் அப்போதுதான் என்ன நிகழ்கிறதென்பதை புரிந்துகொண்டனர். கலைந்த ஒலியென அவையின் உணர்வு எழுந்து கார்வைகொண்டு சூழ்ந்தது.

குங்கர் திரும்பி அவையை நோக்கி “இளையோரே” என்று அழைத்தார். ஏவலர்நிரையில் இருந்து வலவனும் கிரந்திகனும்

எழுந்து வந்தனர். சேடியர் அருகிலிருந்து பிருகந்நளை எழுந்து வந்தாள். “எங்கே இளையவன்?” என்றார் குங்கர். “அவன் வரவில்லை. தவச்சோலைவிட்டு நீங்க உளமெழாதிருக்கிறான்” என்றான் அருகணைந்த கிரந்திகன். “அவனை நானே சென்று அழைக்கிறேன்” என்றார் குங்கர். “அழைப்பதா? அப்படியே தூக்கிக்கொண்டு செல்லவேண்டியதுதான். இங்கிருந்து விண்ணுக்குச் செல்லமுடியுமா என்று பார்க்கிறான் மூடன்” என்றான் வலவன்.

“இளையோரே, இவர் என் தோழர். இனி என் இடத்தில் என்றும் இருக்கப்போகிறவர்” என்றார் குங்கர். வலவன் வந்து விராடரின் கால்களைப் பணிந்து “வாழ்த்துக, மூத்தவரே!” என்றான். விராடர் நடுங்கும் கைகளால் அவன் தலையைத் தொட்டு “வெற்றியும் புகழும் சேர்க!” என்றார். பிருகந்நளையும் கிரந்திகனும் அவர் கால்களைத் தொட்டு வணங்கினர். குங்கர் “இங்கே சைரந்திரியாக இருந்தவள் என் அரசி திரௌபதி” என்றார். சுதேஷ்ணையின் அருகே நின்றிருந்த சைரந்திரி தலைவணங்கினாள்.

சுதேஷ்ணை உரத்த குரலில் “ஆம், நான் எண்ணினேன். இவ்வாறு நான் பலமுறை எண்ணினேன்... வடபுலத்துச் சூதர் அமூர்த்தர் அஸ்தினபுரியின் அரசி குழலவிழ்த்திட்டு கானகம் சென்ற கதையைச் சொன்னபோது இவர்கள்தானோ என்று என் சேடியிடம் கேட்டேன். கேட்டுப்பாருங்கள்” என்றாள். சைரந்திரியின் கையை பற்றிக்கொண்டு “என் அரண்மனையில் இருந்திருக்கிறீர்கள், பேரரசி. எங்களால் பேணப்பட்டிருக்கிறீர்கள். இனி தலைமுறைதோறும் இது இங்கே கவிஞர்களால் பாடப்படும்... நற்பேறுகொண்டவர்களானோம்...” என்றாள். திரும்பி

உத்தரையிடம் “வணங்குக… பேரரசியின் வாழ்த்தைப்போல உன்னை வாழச்செய்வது பிறிதில்லை” என்றாள்.

உத்தரை சைரந்திரியின் கால்களைத் தொட்டு வணங்க அவள் தலைமேல் கைவைத்து “இல்லம் நிறைக! கொடிவழிகள் பெருகுக!” என சைரந்திரி வாழ்த்தினாள். அவள் தோளை மெல்ல அணைத்துக்கொண்டு “நீ அறிவாய் என எனக்குத் தெரியும்” என்றாள். “முக்தன் என்னும் வீரர் சொன்னார்” என்றாள் உத்தரை. அவள் முகம் துயர்கொண்டதுபோலிருந்தது. சுதேஷ்ணை “என்ன முகத்தை அப்படி வைத்திருக்கிறாய்? நீ பாரதவர்ஷமே கொண்டாடும் மாவீரரிடம் பயின்றிருக்கிறாய்… எத்தனை கதைகளில் கேட்டிருக்கிறோம். கதைகளெல்லாம் இப்படித்தான் நிகழ்கின்றன போலும்” என்றாள்.

உத்தரை மேலும் துயர்கொண்டு தலைதழைத்தாள். விழிப்பீலிகளில் நீர்ப்பிசிறுகள் தெரிந்தன. சுதேஷ்ணை “ஏன் அழுகிறாய்?” என்றபின் சைரந்திரியிடம் “உவகைக்கண்ணீர். அவளுக்கு இதெல்லாம் உள்ளம்தாங்காதபடி பெரியவை” என்றாள். “ஆம்” என்றாள் சைரந்திரி. “வருக!” என உத்தரையின் தோளைப்பற்ற அவளிடம் மெல்லிய திமிறல் ஒன்று வெளிப்பட்டது. உடலில் நிகழாது உள்ளத்தின் அசைவாகவே கைகளுக்கு அது வந்துசேர்ந்தது என்று தோன்ற அவள் உத்தரையின் விழிகளை பார்த்தாள். உத்தரை அவள் நோக்கை சந்திக்காமல் தன் மேலாடையை ஒரு கையால் பற்றிக்கொண்டு தலைநிமிர்ந்து அரியணையை நோக்கினாள். சைரந்திரி புன்னகையுடன் அவள் தோளில் அழுத்தமாகக் கையை வைத்து “வருக!” என்று மீண்டும் சொன்னாள்.

விராடர் கைகூப்பியபடி அவையிடம் “இன்று விராடபுரி பேரரசாகியது. இனி என்றும் அது இந்திரப்பிரஸ்தத்தின்

பகுதியென்றே இருக்கும். நானும் என் கொடிவழியினரும் அம்மணிமுடியால் ஆளப்படுவோம். ஆம், அவ்வாறே ஆகுக!" என்றார். அவையினர் எழுந்து நின்று வாழ்த்தொலி எழுப்பினர். "தொல்புகழ்கொண்ட விராட அரியணையையும் மணிமுடியையும் இந்திரப்பிரஸ்தத்தின் பேரரசருக்கு அளிக்கிறோம். அவர் இதை தனது என்று கொண்டு நம்மை வாழ்த்துக!" என்றார் விராடர். அவையினர் வாழ்த்தொலி எழுப்ப அவைக்கு வெளியே அச்செய்தி பரவி அங்கிருந்தும் முழக்கமாக வாழ்த்தொலி மேலெழுந்தது.

விராடரும் உத்தரனும் இரு பக்கங்களிலாக நின்று குங்கரை அரியணைக்கு அழைத்துச்சென்றார்கள். ஆபர் அரியணையில் அமரும்படி முறைச்சொல் உரைத்து அழைக்க குங்கர் அதில் அமர்ந்தார். மங்கல இசையும் குரவையொலிகளும் பெருகின. சுதேஷ்ணை சைரந்திரியை கைபற்றி அழைத்துச்சென்று குங்கரின் அருகே அரியணையில் அமரச்செய்தாள். ஆபர் ஆணையிட நிஷதகுலத் தலைவர்கள் எழுவர் விராடபுரியின் மணிமுடியை கொண்டுவந்து அளிக்க அதை விராடரும் உத்தரனும் எடுத்து குங்கருக்கு அணிவித்தனர். செங்கோலை ஆபரிடமிருந்து குங்கர் பெற்றுக்கொண்டார்.

வேதியர் பதினெண்மர் மேடையேறி தொல்மொழி ஓதி நீர் தெளித்து வாழ்த்தினர். நிஷதகுலத் தலைவர்கள் நிரையாக வந்து அரிமலரிட்டு வணங்கினர். செங்கோலும் முடியுமாக அமர்ந்த குங்கரின் இரு பக்கங்களிலும் விராடரும் உத்தரனும் நிற்க சைரந்திரிக்குப் பின்னால் சுதேஷ்ணையும் உத்தரையும் நின்றனர். வாழ்த்துச் சடங்குகள் ஒவ்வொன்றாக நிகழ்ந்து முடிந்ததும் நிமித்திகன் அவைமேடை ஏறி இந்திரப்பிரஸ்தத்தின் பேரரசரின் சிறப்புக்காக பன்னிரு நாட்கள்

விழவும் உண்டாட்டும் நிகழும் என அரசாணையை அறிவித்தான். அதை ஏற்று முரசுகள் முழங்கின.

சடங்குகளினூடாக விராடர் நிலைமீண்டு முகம் மலர்ந்திருந்தார். நிமித்திகனை விலகும்படி கைகாட்டிவிட்டு அவரே அறிவிப்புமேடையில் ஏறி "அவையோரே, குடிகளே, நாளைப் புலரியிலேயே இந்திரப்பிரஸ்தத்தின் பேரரசரும் பேரரசியும் இளவரசர்களும் விராடபுரியிலிருந்து கிளம்புகிறார்கள். அவர்கள் இங்கிருந்த பெருமை என்றும் நம்முடன் இருக்கும். நமது வாழ்த்துக்களையும் வணக்கங்களையும் அவர்கள் உடன்கொண்டு செல்லட்டும்" என்றார். அவை கைதூக்கி ஆரவாரம் செய்தது. "விராடபுரியின் கருவூலமே அவர்களுடையது. அவர்கள் விழைகையில் இதன் இறுதிச்செல்வம் வரை அவர்களின் காலடியில் வைக்கப்படும். ஆயினும் இங்கிருந்து அவர்கள் தங்கள் நகர்மீள்கையில் நாம் என்றும் குறையாச் செல்வமொன்றை பரிசாக அளிக்கவேண்டும்."

அவர் சொல்லப்போவதைக் காத்து அவை அமைதிகொள்ள சிலர் புன்னகைத்தனர். "நாம் அனைவரும் எவ்வாறோ சற்று அறிந்த ஒன்று. அதை அவையிலறிவிக்கிறேன். இந்திரப்பிரஸ்தத்தின் இளவரசரும் மாமன்னர் பாண்டுவின் மைந்தரும் வில்யோகியுமான அர்ஜுனர் என் மகள் உத்தரைக்கு ஆசிரியராக அமைந்து இங்கே ஓராண்டு உடனுறைந்தார். அவர் தானறிந்தவற்றை எல்லாம் அவளுக்கு மேலும் கற்பிக்கட்டும்." அவை சிரிக்கத் தொடங்கியது. "நம் இளவரசியை பாண்டவரின் குலமகளாக ஏற்றருளவேண்டும் என நான் அர்ஜுனரையும் அவர் தந்தைவடிவமாக அமைந்த

பேரரசரையும் வேண்டிக்கொள்கிறேன்” என்று விராடர் வணங்கினார்.

அவை எழுந்து நின்று உவகைக் கூச்சலிட்டது. அச்செய்தி வெளியே பரவ விராடபுரியின் தெருக்களிலும் இல்ல முகப்புகளிலும் கூடிநின்றவர்கள் அனைவரும் வாழ்த்துக் கூச்சலிட்டனர். நகரம் அமைந்தும் எழுந்தும் முழங்கிக்கொண்டே இருந்தது. விராடர் கையமர்த்தி அவையை அமரச்செய்ததும் எங்கிருந்தோ மீண்டும் வாழ்த்தொலி எழுந்தது. உத்தரை தன் குழலாடையால் முகம் மறைத்து மெல்ல விம்மிக்கொண்டிருந்தாள். அவள் தோளை சுதேஷ்ணை பற்றியிருந்தாள்.

கைகூப்பியபடி அர்ஜுனன் எழுந்ததும் அவை அமைதியடைந்தது. ஆனால் நகரிலிருந்து எழுந்த முழக்கம் அவர்களை செவியும் நாவுமில்லாதவர்களாக ஆக்கியது. வெளியே முரசுகள் முழங்கின. கலைந்து சிதறிய பசுக்களை வேட்டைநாய்கள் என முரசொலி அவ்வோசையை ஒன்றுசேர்த்து அமைதியடையச் செய்தது. பின் செவிகள் முழங்கும் அமைதி எழுந்தது.

அர்ஜுனன் அவையை வணங்கியபின் விராடரிடம் “அரசே, தங்கள் மகளுக்கு நான் ஆசிரியனாகவே இருந்தேன். பிறிதொன்றுமாக அல்ல” என்றான். விராடர் திகைப்புடன் உத்தரையை நோக்கினார். “இந்தக் கான்வாழ்வில் எந்தையின் நகர்வரை சென்று இன்பங்களில் மானுடன் அறியக்கூடுவதனைத்தையும் அறிந்து மீண்டிருக்கிறேன். அரசே, மண்ணில் மானுடன் அடையும் இன்பங்கள் அனைத்தும் அறியுமின்பங்களே. அறிவதற்கேதுமில்லாதவற்றில் இன்பம்

என ஏதுமில்லை. இனி இங்கு நான் அடைவதற்கேதுமில்லை” என்றான்.

“நான் அறியவேண்டியவை இனி என்னை உரித்திட்டுக் கடந்துசென்று அறியவேண்டியவை. அனலாடி உருமாறிச் செல்லவேண்டிய பாதைகள் அவை. அது நிகழக்கூடும்” என்றான் அர்ஜுனன். விராடர் மறுமொழி சொல்வதற்குள் “ஆனால் அவையிலெழுந்து நீங்கள் சொன்ன சொல் நிலைகொள்ளவேண்டும். உங்கள் மகள் பாண்டவரின் குலக்கொடியாவாள். அவளை நான் ஏற்றுக்கொள்கிறேன், என் மகன் அபிமன்யூவுக்குத் துணைவியாக” என்றான்.

விராடர் முகம் மலர்ந்து “ஆம், அவ்வாறே ஆகுக!” என்றபின் நிமித்திகனை நோக்கி கை தூக்கினார். அவன் அறிவிப்பு மேடையில் ஏறி “அவை அறிக! நுண்வடிவில் வந்த மூதாதையர் அறிக! என்றும் சூழ்ந்திருக்கும் தெய்வங்கள் அறிக! விராட இளவரசி உத்தரையை பாண்டவர்குலத்து இளவல் அபிமன்யூவுக்கு அறத்துணைவியென அளிக்க விராடபுரியின் அரியணையமர்ந்த அரசர் தீர்க்கபாகு ஒப்புதல் அளிக்கிறார்” என்று கூவினான். அவை எழுந்து வாழ்த்துக்கூவ மீண்டும் நகரம் ஒலிவடிவென்று எழுந்து வானை அறைந்தது.

உத்தரன் உத்தரையை நோக்கினான். முகத்தை மூடிய ஆடைக்குள் அவள் உணர்வுகள் ஏதும் தெரியவில்லை. ஆனால் தோள்கள் இறுகி முன்குறுகியிருந்தன. சுதேஷ்ணை கண்ணீர் விட்டுக்கொண்டிருந்தாள். அவன் சைரந்திரியின் விழிகளை நோக்கியபின் திரும்பிக்கொண்டான். தன் முன் அலையடித்துக்கொண்டிருந்த பேரவையை முற்றிலும் புரிந்துகொள்ளமுடியாத ஒன்றை என நோக்கினான். வானம்போல மலைகளைப்போல கடலைப்போல கண்முன்

எழுந்து நின்றிருக்கும் பேருரு. அறிந்த வரை இது என்று ஒரு பெயரும் அடையாளமும் இட்டு உள்ளத்தில் வைத்துக்கொள்ளலாம். கைக்குச் சிக்கியது வரை பயன்படுத்தி ஆளலாம். அப்பால் அது பிறிதொன்று. அறியப்படவே இயலாதது.

விராடர் கண்ணீருடன் ஆபரின் கைகளை பற்றிக்கொண்டார். பின்னர் குங்கரின் அருகே வந்து கைகூப்பினார். குங்கர் அவரிடம் ஏதோ சொல்ல விழிநீருடன் சிரித்தார். ஒவ்வொன்றும் நிகழ அவன் வேறெங்கிருந்தோ நோக்கிக்கொண்டிருந்தான். அந்த விலக்கத்தை போர்க்களத்திலும் உணர்ந்ததை நினைவுகூர்ந்தான்.

# நீர்க்கோலம் - 90

### 89. அடுமனைசேர்தல்

❀சுபாஷிணி தன் பெயரைச் சொல்லி அழைக்கும் பல்வேறு குரல்களை கேட்டுக்கொண்டிருந்தாள். பலமுறை எழுந்து மறுமொழி கூறியதாகவே உணர்ந்தாலும் அவள் உடல் உடைந்த பொருட்களைப் போட்டுவைக்கும் இருண்ட சிற்றறைக்குள் மூலையில் போடப்பட்ட ஒரு கால் உடைந்த நிலைப்பீடத்தின் அடியில் முதுகு வளைத்து முகம் முழங்கால்களுடன் சேர்த்து ஒடுங்கியிருந்தது. அங்கிருந்தபோது அவ்வரண்மனை முழுக்க அலைந்த காலடிகளை மெல்லிய துடிப்புகளாக கேட்கமுடிந்தது. பெருவிலங்கொன்றின் கருவறைக்குள் இருப்பதுபோல உணர்ந்தாள். நோவெடுத்து தலை தாழ்த்துகிறது. நீள்மூச்சு விடுகிறது. குளம்பு மாற்றிக்கொள்கிறது. குருதித் துடிப்புகளின்

ஒலி கேட்கிறது. எக்கணமும் அது தன்னை வெளியே உமிழ்ந்துவிடக்கூடும்.

அவள் மேல்மூச்சுடன் மீண்டும் உடலை ஒடுக்கிக்கொண்டாள். ஒலிகள் ஓய்ந்தன. மிக அருகே இறுதியாக அவள் பெயரை அழைத்துக்கொண்டு கடந்து சென்ற முதுசெவிலியின் காலடி தேய்ந்து மறைந்தபோது அவள் மெல்ல உடலை தளர்த்தினாள். கால்களை நீட்டி முகத்தில் படிந்த ஒட்டடைகளை அகற்றியபின் கைகளை மார்பில் கட்டிக்கொண்டாள். எங்கோ எவரோ ஏதோ பேசிக்கொண்டிருந்தார்கள். மொழி முற்றிலும் புரியாததாக இருந்தது. மொழி புரிவது அணுக்கத்தால்தான். அகலங்களில் பொருளிழக்கிறது அது. மொழி முற்றிலுமாகப் புரிவதற்கு எத்தனை அணுக்கம் தேவை? உடலோடு உடல் ஒட்ட வேண்டும். உடலுக்குள் புகுந்துவிட வேண்டும். உள்ளத்துக்குள் இணைய வேண்டும்.

அவள் மீண்டும் பெருமூச்சுவிட்டாள். அழவேண்டும்போல் இருந்தது. ஆனால் எத்தனை முயன்றும் உள்ளே செறிந்திருந்ததை அழுகையாக ஆக்க முடியவில்லை. இடைநாழியில் முதுசேடி நடந்துசென்றாள். “முற்றத்தில் அனைவரும் சென்று நிற்க வேண்டியதில்லை. சிலர் இங்கே அறைகளுக்குள்ளும் இருக்கவேண்டும். எந்நிலையிலும் அரண்மனையை முற்றொழிந்து சென்றுவிடக்கூடாது. முற்றொழிந்த அறைகளில் மூத்தவள் குடியேறுகிறாள்” என்றாள். யாரோ “விளக்குகளை கொண்டுசென்றுவிட்டீர்களா?” என்றார்கள். தன் கைகளைத் தாழ்த்திய பின்னர்தான் வளையலோசையைக் குறித்து சுபாஷிணி எண்ணினாள். “என்ன ஓசை அது?” என்றாள் முதுசெவிலி. எவரோ “எங்கே?” என்று

கேட்டார்கள். “இங்கே இந்த சிற்றறைக்குள்” என்றபடி முதுசேடி அருகே வந்தாள். “ஓர் அகல்விளக்கைக் கொடு” என்றாள்.

சுபாஷிணிக்கு நெஞ்சு படபடத்தது. அங்கு ஒளிந்திருந்ததை தெரியப்படுத்துவதற்கு தன்னுள் வாழ்ந்த பிறிதொன்று விழைந்திருக்கிறது என்று அவளுக்குத் தோன்றியது. கதவு மெல்ல திறந்து கைவிளக்குடன் சிவந்து எரிந்த முதுசெவிலியின் முகம் தோன்றியது. அவள் நிழல் பெருகி எழுந்து கூரைமேல் படிந்து வளைந்து அவர்கள் இருவரையும் பார்த்தது. “இங்கிருக்கிறாயா?” என்றாள். சுபாஷிணி ஒன்றும் சொல்லவில்லை. “எழு! உன்னை பார்க்கவேண்டும் என்று பேரரசி கேட்டார்கள்.”

சுபாஷிணி “இல்லை நான்…” என்று சொல்ல. “என்ன இல்லை? இப்போது அவர்கள் இங்கு சைரந்திரி அல்ல. நம் அரசிக்கே ஆணையிடும் பேரரசி. பாரதவர்ஷத்தின் தெய்வங்கள்கூட அவர்களை மறுத்துப்பேச முடியாது என்கிறார்கள். எழு!” என்றாள் முதுசெவிலி. சுபாஷிணி கையை ஊன்றி எழுந்து நின்றாள். முழங்கால்கள் வலித்தன. “அவர்கள் கிளம்பிக்கொண்டிருக்கிறார்கள். உன்னை தோட்டத்தில் தேடுவதற்கு சேடியரை அனுப்பியிருக்கிறேன். நீ இங்கு அமர்ந்திருக்கிறாய்” என்றபின் “நீ எங்கோ ஒளிந்திருக்கிறாய் என்று எனக்குத் தோன்றியது. நான் ஒளிந்திருக்க வாய்ப்புள்ள இடங்களை தேடியிருக்கலாம்… முதலில் இங்கு வந்திருப்பேன். உன் அகவையிலிருந்து உள்ளமும் விலகிவிட்டது. வா!” என்று அவள் தோளைப் பிடித்து வெளியே கொண்டுசென்றாள்.

“நாசிகை… வா இங்கே!” என்று அப்பால் கைவிளக்கோடு சென்ற இன்னொரு சேடியை அழைத்தாள். அவள் நின்று நோக்க “இவளை நீராட்டி நல்லாடை அணிவித்து முற்றத்திற்கு கூட்டி

வா! பேரரசி கிளம்பிக்கொண்டிருக்கிறார். அதற்குள் வந்தாகவேண்டும்" என்றாள். நாசிகை "என்ன நல்லாடை? இளவரசி என்று அணி செய்யலாமா?" என்றாள். முதுசெவிலி நகைத்து "இவளும் ஏதேனும் நாட்டு இளவரசியோ என்னவோ? யார் கண்டது? இத்தனை நாள் நம்முடன் இருந்தவள் பேரரசி என்று நாம் அறிந்தோமா என்ன?" என்றபின் திரும்பிச் சென்றாள். நாசிகை அவளிடம் "விரைந்து நீராடு. பேரரசி முதற்புலரிக்குள் கிளம்பிவிடுவார்" என்றாள்.

சுபாஷிணி மறுமொழி ஏதும் சொல்லாமல் அவளுடன் சென்றாள். அகத்தளத்தின் சிறிய குளத்தில் ஏற்கெனவே ஏழெட்டு பெண்கள் நீராடிக்கொண்டிருந்தனர். அவள் படிகளில் இறங்கியபோது ஒருத்தி "இன்னமும் ஒருத்தி நீராடாமல் இருக்கிறாளா? பேரரசி கிளம்புகையில் அணிபுனையாமல் எவரும் இருக்கக்கூடாதென்று ஆணை. எங்கள் வேலை முடிவதற்கு இவ்வளவு பொழுதாகிவிட்டது" என்றாள். அவர்களின் முகங்களைப் பார்க்காமல் சுபாஷிணி அணிந்திருந்த ஆடைகளுடன் நீரிலிறங்கினாள். "யாரிவள்? ஆடை மாற்றாமல் நீராடுகிறாள்?" என்று ஒருத்தி கேட்டாள். இன்னொருத்தி தாழ்ந்த குரலில் ஏதோ சொன்னாள்.

நீரில் மூழ்கி எழுந்து கூந்தலை பின்னால் அள்ளிச் சரித்தபோது அவள் என்ன சொன்னாள் என்பதை அவள் மனம் எடுத்து வைத்திருந்தது. அடுமனையின் பிச்சி. அவள் புன்னகைத்தாள். குளிர்ந்த நீரில் மூழ்கி எழுந்தபோது அதுவரை இருந்த உள்ளச்சுமை அகன்றுவிட்டிருந்தது. நீந்திக் கரையேறி ஆடைகள் உடலில் ஒட்டிக்கொள்ள காலடியில் நீர் சொட்ட நின்றபோது தான் புன்னகைத்துக்கொண்டிருப்பதை அவள் உணர்ந்தாள். இருளுக்குள் அவர்கள் எவரும் அறியாமல்

ஒளிந்திருக்கும் உவகை. அவர்கள் அத்தனை பேரும் தன் முகத்தை நோக்கிக்கொண்டிருக்கையில்கூட ஒளிந்துதான் இருக்கிறோம் என எண்ணினாள்.

படிகளில் ஏறி உடை மாற்றும் இடத்திற்குச் சென்றாள். நாசிகை வெண்ணிற கீழாடையையும் இளஞ்செந்நிறப் பட்டு மேலாடையையும் அவளிடம் கொடுத்தாள். “இதை அணிந்து வரும்படி பேரரசியின் ஆணை. உனக்கென எடுத்து வைத்திருந்திருக்கிறார்” என்றாள். அவள் அந்தப் பட்டாடையைத் தொட்டு “இதையா?” என்றாள். நாசிகை “அணியுங்கள், இளவரசி” என்றாள். சுபாஷிணி சில கணங்கள் அதை நோக்கிக்கொண்டு நின்றபின் தலையசைத்தாள். ஆடை மாற்றி நுனி சொட்டிய கூந்தலை கைகளால் பற்றி நன்கு உதறி தோளுக்குப்பின் விரித்திட்டபடி அவள் இடைநாழிக்கு வந்தாள்.

அகத்தளத்தின் இடைநாழிகளும் அறைகளும் ஒழிந்துகிடந்தன. மிக அப்பால் ஓர் அறையிலிருந்து முதிய சேடி ஒருத்தி கைவிளக்குடன் அகன்று செல்ல அவள் நிழல் தூண்களை நெளிந்தாடச் செய்து தானும் உடன் ஆடியபடி மறைந்தது. சிலம்பு ஒலிக்க அவள் படிகளில் இறங்கினாள். தன் சிலம்பொலியைக் கேட்டு திடுக்கிட்டவள்போல திரும்பி படிகளைப் பார்த்தாள். முகப்புக் கூடத்தில் எவரும் இல்லை. முற்றத்தின் ஒளிப்பெருக்கு சாளரங்களின் ஊடாக வந்து செந்நிறக் கம்பளங்களென விழுந்து கிடந்தது. அவ்வொளியில் தூண்களின் வளைவுகள் மிளிர்வு கொண்டிருந்தன. படிகளின் அருகே அவள் தயங்கி நின்று மீண்டும் திரும்பிவிடலாமா என்ற எண்ணம் கொண்டபோது அப்பால் பிறிதொரு அறையிலிருந்து கைவிளக்குடன் வெளிப்பட்ட முதுசேடி

“இங்கென்ன செய்கிறாய்? முற்றத்திற்குப் போ! உன்னைத்தான் தேடிக்கொண்டிருக்கிறார்கள்” என்றாள்.

தலையசைப்பால் ஆம் என்றபடி அவள் மெல்ல முற்றத்திற்குச் சென்றாள். படிகளில் இறங்கி பெருந்தூண் ஒன்றின் அருகே சென்று அதைப் பற்றியபடி தலையைமட்டும் நீட்டி பார்த்தாள். சுதேஷ்ணையும் உத்தரையும் அரசணிக்கோலத்தில் அகம்படியினரும் அணிச்சேடியரும் சூழ நின்றுகொண்டிருந்தனர். சைரந்திரி வெண்பட்டாடை அணிந்து அணிகளேதும் இன்றி குழலை விரித்து இடைவரை அலைசரிய விட்டிருந்தாள். அங்கிருந்த அனைவருக்கும்மேல் அவள் தலையும் தோளும் தெரிந்தன. நெய்ப்பந்தங்கள் எரிந்தாடிக்கொண்டிருந்த ஒளியில் முற்றம் ஓவியச்சீலையென அலைபாய்ந்தது. சுபாஷிணியின் அருகே வந்து நின்ற முதுசேடி “விராடபுரியின் இளவரசி இத்தனை எளிதாக நாடு நீங்குகிறார். ஊழ் ஒன்று வகுத்தால் ஓராயிரம் கைகளினூடாக அங்கே கொண்டுசென்று சேர்த்துவிடுகிறது” என்றாள்.

இன்னொரு சேடி “மணச்சடங்குகளேதும் பெரிதாகச் செய்ய வேண்டியதில்லையென்று சொல்லிவிட்டார்கள். அவர்கள் இன்னும்கூட முடியும் நகருமில்லாத ஊரோடிகளாகவே இருக்கிறார்கள். இளவரசியை இங்கு விட்டுவிட்டுச் செல்லலாம் என்றுகூட பேரரசர் யுதிஷ்டிரர் சொன்னார். இல்லை அவர்களுடன் கிளம்பியே தீருவேன் என்று இளவரசி சொல்லிவிட்டார். ஆகவே இருளிலேயே கட்டுச்சோறு கொடுத்தனுப்புவதுபோல இளவரசியை கையளிக்கிறார்கள்” என்றாள். சுபாஷிணி அச்சேடியை பார்த்தாள். அந்த முகத்தை பலமுறை பார்த்திருந்தும்கூட அவள் பெயரோ அவள் இயல்போ தெரிந்திருக்கவில்லை.

“ஒவ்வொருவருக்கும் அவரவர் பாதை வகுக்கப்பட்டுள்ளது. நாம் என்ன சொல்ல முடியும், இல்லையா?” என்றாள் மற்றொரு சேடி. சுபாஷிணி தலையசைத்தாள். முன்னரே சடங்குகள் அனைத்தும் நடந்துவிட்டிருந்தன எனத் தெரிந்தது. உத்தரை சுதேஷ்ணையின் கால்களைத் தொட்டு சென்னிசூடியபின் சூழ்ந்திருந்த செவிலியரிடமும் சேடியரிடமும் நன்மொழி சொன்னாள். சைரந்திரி புன்னகையுடன் ஒவ்வொரு சேடியாகப் பார்த்து இன்மொழி உரைத்து சிலர் தோள்களைத் தட்டி சிலர் கைகளைப்பற்றி விடை கொண்டாள். சிலர் கண் கலங்கினர். சிலர் அவள் கால்களை தொடப்போனபோது அதைத் தடுத்து தழுவிக்கொண்டாள்.

அவள் தன்னை பார்க்கிறாளா என்று சுபாஷிணி நெஞ்சிடிப்புடன் காத்து நின்றாள். அவள் தன்னை பார்க்கலாகாதென்று ஓருள்ளமும் பார்க்கமாட்டாளா என்று பிறிதொரு உள்ளமும் தவித்தன. அவள் விழி தன்மேல் பட்டதும் அவள் பார்வை தவறாதென்று தான் நன்கறிந்திருந்ததை உணர்ந்தாள். அருகே வரும்படி சுபாஷிணியை நோக்கி சைரந்திரி கையசைத்தாள். அவள் தயங்கி காலெடுத்து வைத்து தலைகுனிந்து நிலத்தை நோக்கியபடி மெல்ல நடந்து சென்றாள். தன்னை அங்கிருந்த அத்தனை விழிகளும் நோக்குவதை உணர்ந்தாள்.

சுபாஷிணி அருகணைந்ததும் சைரந்திரி அவள் தோளைப்பற்றி தன்னுடன் சேர்த்துக்கொண்டாள். அவள் காதில் “உன் அடுமனையாளனுடன் ஒருநாள் நீ இந்திரப்பிரஸ்தத்துக்கு வரவேண்டும். அங்கு என்னுடன் இருப்பாய்” என்றாள். கண்ணீர் பெருக கால்கட்டைவிரலால் நிலத்தை அழுத்தியபடி தலைகுனிந்து தோள் குறுக்கி அவள் நின்றாள். சைரந்திரி “நன்மங்கலம் கொள்க! நிறை மைந்தர் பெருக, இல்லறம்

செழிக்க வாழ்க!” என்று அவள் தலைமேல் கைவைத்து வாழ்த்தினாள்.

சுதேஷ்ணை “எதுவும் பேரரசி அறியாததல்ல. என் மகள்…” எனத் தொடங்க அவள் கைகளைப்பற்றி “அறிவேன். தங்கள் மகள் பெறும் மைந்தன் பாண்டவர்களின் கொடிவழியில் முடிசூடுவான் என்று இளையவர் உரைத்த சொல் ஒருபோதும் பிழையாகாது” என்றபின் மீண்டும் ஒருமுறை வணங்கி நடந்து சென்றாள். உத்தரை அப்பால் அவளுக்காக காத்திருந்தாள். அவள் தோளைத்தட்டி தேரிலேறும்படி சொல்லி சைரந்திரி தானும் ஏறிக்கொண்டாள். புரவி தலையைச் சிலுப்பி மூச்சு சீறியது. பாகன் அதை மெல்ல தட்டியதும் சகடங்கள் உயிர்கொண்டன. மெல்ல குலுங்கியபடி அது சாலையில் ஏறி சிறுகோட்டைமுகப்பில் எரிந்த மீன் நெய் விளக்குகளின் ஒளியில் சுடர்கொண்டு அப்பால் இருந்த சாலைக்குள் நுழைந்து இருளில் புதைந்து மறைந்தது. இரு கைகளாலும் நெஞ்சை அழுத்தியபடி சுபாஷிணி நோக்கி நின்றாள்.

சுதேஷ்ணை அவளை நோக்கித் திரும்பி “உனக்காக மணமங்கலப் பரிசுகளை அளித்துச் சென்றிருக்கிறார் பேரரசி. உன் மணமகன் எவரென்று நீயே சொல்வாய் என்று ஆணையிட்டிருக்கிறார்” என்றாள். சுபாஷிணி பேசாமல் நின்றாள். “யாரவன்? பெயரை சொல்! அரண்மனை ஏவல்தலைவனை அனுப்பி அவனை வரச்சொல்கிறேன்” என்றாள் அரசி. அவள் தொண்டையில் இருந்து குரல் எழவில்லை. “உன் பெயரென்னடி?” என்றாள் அரசி. சூழ்ந்திருந்த பெண்களின் கண்கள் தொடுவதை உணர்ந்து உடல் மெய்ப்புகொள்ள தலைகுனிந்து நின்றாள். “சுபாஷிணி” என்று நிலம்நோக்கி சொன்னாள். “அவன் பெயரென்ன?” என்றாள் அரசி.

அவள் நிமிர்ந்து “நான் அவர் பெயரை சொல்லலாகாது. முதலில் என் பெயரை அவர் சொல்லவேண்டும்” என்றாள்.

சுதேஷ்ணை “ஏன்?” என்றாள். முதுசேடி “அரசி, அதுதான் முறை. பெண் கோரி ஆண் மறுக்கக்கூடாது என்பது நூல்கூற்று. அது அவளில் கருக்கொண்ட குழந்தைகளுக்கு உலகுமறுத்தலாக பொருள்படும்” என்றாள். சுதேஷ்ணை புரியாமல் நோக்கியபின் “சரி. அவனை வந்து முறைப்படி உன்னை பெண் கேட்கச் சொல்” என்றபின் திரும்பினாள். நிமித்திகன் சங்கு ஊதி அவள் அகல்வதை அறிவித்தான். கொடிவீரனுக்குப் பின்னால் தளர்ந்த காலடிகளுடன் செல்லும் பேரரசியை சுபாஷிணி நோக்கி நின்றாள். பின்னர் படிகளில் ஓடி ஏறி இடைநாழியை அடைந்தாள். மீண்டும் தன் இருண்ட அறைக்குள் சென்று ஒடுங்கிவிட வேண்டுமென்று அவளுக்குத் தோன்றியது. ஆனால் இடைநாழியில் நின்றபோது அங்கு செல்லத் தோன்றவில்லை. அவள் விழிகள் ஒளியை நாடின. வெளியே செறிந்திருந்த இருள்வானை, விண்மீன்களை நோக்கியபடி சாளரத்தருகே நின்றாள்.

சாளரத்தினூடாக சைரந்திரி ஏறிய தேர் நீங்கிய இடத்தையே பார்த்துக்கொண்டிருந்தாள் சுபாஷிணி. புலரிக்கு இன்னும் நெடுநேரம் இருக்கிறது என்று தோன்றினாலும்கூட அவளால் அந்த இடத்திலிருந்து விழிவிலக்க முடியவில்லை. ஒவ்வொரு நிகழ்வாக சைரந்திரியுடன் அங்கு வாழ்ந்த ஓராண்டையும் அவள் எண்ணிக்கொண்டிருந்தாள். ஒவ்வொன்றிலும் வாழ்வதாகவும் ஒவ்வொன்றையும் அருகிருந்து நோக்குவதாகவும் ஒவ்வொன்றையும் நெடுங்காலத்திற்கப்பாலென நினைவுகூர்வதாகவும் உள்ளம் பிரிந்து நடித்தது. சைரந்திரியின் அந்தத் தருணங்களின்

உணர்வுமுகங்களும் உடலசைவுகளும் சிறுவிழியசைவுகளும்கூட அத்தனை தெளிவாக தன்னுள் பதிந்திருப்பதை உணர்ந்தாள். வானிலிருந்து உதிரும் அருமணிகளை அள்ளிப்பொறுக்கிச் சேர்ப்பதுபோல் அவளுடன் இருந்த ஒவ்வொரு கணத்தையும் பெற்றுக்கொண்டிருந்திருக்கிறோம் என்று எண்ணிக்கொண்டாள்.

மாடிப்படிகளில் கால்கள் மெத்திட்டு ஏறிச்செல்லும் சைரந்திரியை கண்டாள். காலடியின் தசை வாழைப்பூ நிறத்திலிருந்தது. மரப்படிகளில் அது அழுந்தி எழுந்து செல்லும்போது கணுக்கால்களின் நரம்பொன்று மெல்ல அசைந்தது. இளம் சிப்பிகள் போன்ற நகங்கள். நின்றிருக்கையில் புன்னகையெனக் குவிபவை. நடக்கையில் நாகச்சுழல் ஆடுகளத்தின் சோழிகளென விரிந்து குவிபவை. அவள் சாளரத்தில் தலைசாய்த்து கண்ணீர் விடத்தொடங்கினாள். மெல்ல உடல்தளர துயின்று மீண்டும் விழித்துக்கொண்டாள். சற்று நிலைமாறி நின்று மீண்டும் சைரந்திரியையே சென்றடைந்தாள்.

அத்தனை உருண்ட முழங்கையை, அத்தனை இறுகிய மணிக்கட்டை அவள் கண்டதில்லை. விரல்கள் ஒவ்வொன்றும் கடையப்பட்டவைபோல முழுமையானவை. அவள் சுட்டுவிரலைப் பற்றியபடி “தேவி, நீங்கள் வில்லேந்துவீர்களா?” என்றாள். “என் கந்தர்வர்களில் ஒருவன் வில்லவன். அவனிடமிருந்து கற்றுக்கொண்டேன்” என்றாள். “மற்போர்?” அவள் சுபாஷிணியின் தலையை பற்றிச்சுழற்றி “சொன்னேனே, பிறிதொருவன் மல்லன்” என்றாள். சிரிக்கையில் உதடுகள் இழுபட கன்னம் இருபுறமும் ஒதுங்கும்போது விழிகளில் ஒளிநிறைந்தது. “நீங்கள் அறியாதது ஏதேனுமுண்டா, தேவி?”

என்றாள். அவள் சிரித்து “எல்லையற்றது இப்புவியின் வஞ்சம். அதை தெய்வங்களும் அறியமுடியாது” என்றாள்.

ஒவ்வொரு கணமும் உடன் இருந்திருக்கிறோம் என்ற உணர்வெழுந்ததுமே இனி இல்லை என்ற எண்ணம் எழுந்தது. அவள் சென்ற வழியைப் பார்த்து உடல் விம்மினாள். படியில் இறங்கி ஓடி முற்றத்தைக் கடந்து சாலையினூடாக தேரை பின்தொடர்ந்து ஓடவேண்டும் என்ற வெறி எழுந்தது. அவ்வாறு பிச்சியென கைவீசிக் கூச்சலிட்டபடி ஓடும் அவளை அவளே பார்த்து உடல் விதிர்த்து நின்றுகொண்டிருந்தாள்.
பிறிதொருவரை எண்ணியதே இல்லை. இப்புவியில்
பிறிதெவரும் என்னுள்ளம் நுழைந்ததில்லை, பேரரசி.
கதிரவனேதான் என நடிக்கும் நீர்த்துளி போன்றவள் நான்.
மீண்டும் இடைதளர தோள்களை சாளரத்தில்
சாய்த்துக்கொண்டு கைகளால் தலையைத் தாங்கி நெய்ப்பந்தம் அசைந்த கோட்டைமுகப்பை பார்த்தபடி நின்றாள்.

பிறிதொரு முறையும் தேவியைப் பார்க்க வாய்க்காதென்ற எண்ணம் எழுந்தது. ஒருவேளை பார்த்தால் தானறிந்த தேவி அல்லாமல் இருக்கலாம் அவள். ஆனால் இப்போது தன்னுள் நிறைந்திருப்பவள் எப்போதும் இருப்பாள். மீண்டும் அவள் துயில்கொண்டாள். மீண்டும் சைரந்திரியுடன் இருந்தாள். அவள் குழலை அள்ளி தன் மடியிலிட்டு விரல்களால் நீவியபடி “நீண்ட குழல் நல்லூழ் அளிப்பதில்லை என்கிறார்களே, தேவி?” என்றாள் சுபாஷிணி. “யார் சொன்னது?” என்றாள் சைரந்திரி. “என் குழலைத் தொட்டுச் சீவும்போதெல்லாம் பிற சேடிகள் சொல்கிறார்கள்” என்றாள். சில கணங்களுக்குப்பின் சைரந்திரி “அரிதென்றும் மேலென்றும் நாம் கொண்டிருக்கும் எதுவும் நல்லூழை கொண்டுவருவதில்லை, சிறியவளே” என்றாள்.

“நல்லூழ் கொண்டவர்கள் முற்றிலும் வெளிப்படாது இங்கு வாழ்ந்துமுடிப்பவர்கள்.”

“நல்லூழ் என்றால் எது?” என்றாள் சுபாஷிணி. சைரந்திரி நகைத்து “சொன்னதுமே அதைத்தான் நானும் எண்ணிக்கொண்டேன்” என்றாள். “எஞ்சுவதென ஏதுமின்றி செல்வோமென்றால் இருப்பதற்கு ஏது பொருள்? பொருளின்மையை உணர்ந்தபின் நிறைவென்று ஒன்று உண்டா? நிறைவளிக்காதது உவகை என்றாகுமா என்ன?” அவள் பேசியது சுபாஷிணிக்கு புரியவில்லை. “என் குழலை எண்ணி எனக்கும் அவ்வப்போது அச்சம் எழுவதுண்டு, தேவி” என்றாள். சைரந்திரி அவள் கையைப்பற்றி “உனக்கு நல்லூழ்தான். ஏனென்றால் நீ வெளியே நிகழ்வதேயில்லை. உனக்குள் பிறிதொருத்தியாகி உலகறியாது வாழ்ந்து நிறைவாய்” என்றாள். அவள் “ஆம்” என்று சொல்லி மெல்ல சிரித்தாள்.

“அது நன்று. பெண்கள் தங்கள் உடலை அதன் அருமை அறிந்து காக்கும் ஒருவனிடம் அளித்துவிட்டு உள்ளத்தை தங்களுக்கென வைத்துக்கொள்ள வேண்டும்” என்றாள் சைரந்திரி. “என்ன?” என்று அவள் கேட்டாள். பின்னர் சிரிக்கலானாள். அச்சிரிப்பொலியைக் கேட்டு சைரந்திரி திரும்பிப்பார்த்தாள். “தாங்கள் சொல்வதை நான் வேறு யாரிடமாவது சொன்னால் என்னைப்போலவே தாங்களும் பிச்சி என்று சொல்லிவிடுவார்கள்” என்றாள். சைரந்திரி உரக்க நகைத்து “என்னை பலர் பிச்சி என்று சொல்லியிருக்கிறார்கள்” என்றாள்.

தலை அசைந்து சரிய விழித்துக்கொண்டு வெளியே பார்த்தபோது புலரியின் மணிவெளிச்சம் நிறைந்திருப்பதை சுபாஷிணி உணர்ந்தாள். ஆடையை சீர்படுத்தி பெருமூச்சுடன்

செல்வதற்காகத் திரும்பியபோது கோட்டைமுகப்பில் சம்பவன் வந்து தொழுத கையுடன் நிற்பதைக் கண்டாள். அவனுக்குப் பின்னால் அவன் குலத்தவர் மூவர் கையில் மங்கலப்பொருட்கள் பரப்பிய தாலங்களுடன் நின்றிருந்தனர். அவள் பெருமூச்சுவிட்டாள். உவகையோ பதற்றமோ ஏற்படவில்லை. உள்ளமென்ற ஒன்றே உள்ளே இல்லை என்றுதான் தோன்றியது.

சுபாஷிணி அமர்ந்திருந்த சிற்றறையின் சாளரத்தினூடாக வெளியே இருந்த ஊண்கூடத்திலிருந்து இரு நிரைகளாக உணவருந்தி கைகழுவி வந்துகொண்டிருந்த முகங்களை பார்க்க முடிந்தது. ஊழ்கமாலையின் மணிகளென ஒவ்வொரு முகமாக அவள் முன் தோன்றி அப்பால் கடந்து சென்றது. அவர்களுக்கு முன்னால் பின்உச்சிப்பொழுதின் வெயில் இறங்கிய பசும்தோட்டத்திலிருந்து வந்த மெல்லொளி முகங்களை ஒளிபெறச் செய்தது. விண்ணளந்தோன் ஆலயத்தில் அவனைச் சூழ்ந்திருக்கும் அடியவரும் முனிவர்களும் தெய்வங்களும் கொண்டிருக்கும் முகவுணர்வு அது என்று அவளுக்குத் தோன்றியது.

அவள் தலை சரித்து நோக்கெல்லை வரை தெரிந்த முகங்கள் அனைத்தையும் நோக்கினாள். ஒருகணம் உளம் பொங்கி விழி நிறைந்தாள். எத்தனை எளியவர்கள்! வஞ்சமும் விழைவும் கரவுகளும் சினமும் இவர்கள்மேல் விழுந்து மறைந்து செல்லும் நிழல்கள் மட்டுமே. அத்தனை பேரையும் அன்னையர் பெற்றிருப்பார்கள். மடியிலிட்டு அமுதூட்டியிருப்பார்கள். தன் உடல் மெய்ப்பு கொள்வதை முலைகள் இறுகி காம்புகள் கூச்சம் கொண்டு விரைப்பதை உணர்ந்தாள்.

கதவு திறக்கும் ஓசை கேட்டு திடுக்கிட்டு நோக்கியபோது சவிதை அறைக்குள் வந்தாள். “என்ன செய்கிறாய் அங்கே? நீ ஆடை மாற்றிக்கொள்ள வேண்டும். சற்று நேரத்தில் அத்தனை பேரும் பந்தலில் அமர்வார்கள்” என்றாள். வியர்த்த முகத்தை முந்தானையால் துடைத்தபடி “எனக்கு ஒன்றுமே புரியவில்லை. பதற்றத்தில் உப்பை இனிப்பில் கலந்து தொலைக்கப்போகிறேன்” என்றவள் “இனி என்ன சடங்குகள்?” என்றாள். “இனிமேல்தான் சடங்கே. அக்காலத்தில் சடங்கு என இருந்தது இது மட்டுமே. மீதியெல்லாம் பிறகு வந்தவை” என்றாள். அவள் சொல்வதை புரிந்துகொண்டு சுபாஷிணி புன்னகைத்தாள். “நீ என்ன நாணமெல்லாம் அடைவதே இல்லையா? பூவாடை கொடுத்தபோதும் மலர்மாற்றிக்கொண்டபோதும்கூட உன்னிடம் நாணமே தெரியவில்லை. தாலிகட்டியபோது உன் தலையை நான்தான் பிடித்து குனித்துவைத்தேன்” என்றாள் சவிதை. “தெரியவில்லை, அக்கா” என்றாள் சுபாஷிணி.

“அடுமனைச்சூதரின் குலதெய்வங்கள் நூற்றுக்கும்மேல் உள்ளனர். அனைவரையும் சிறு கூழாங்கற்களாக செம்பட்டுக்கிழியில் பொதித்து எடுத்துக்கொண்டு செல்வோம். அனைவருக்கும் பலியும் கொடையும் உண்டு. இன்றிரவெல்லாம் சடங்குகள் இருக்கும்” என்றாள் சவிதை. சுபாஷிணி “உணவுண்டு செல்பவர்களை பார்த்துக்கொண்டிருந்தேன்” என்றாள். சவிதை வந்து அவள் அருகே நின்று வெளியே பார்த்து “ஆம், உண்டு செல்பவர்களை பார்ப்பதென்பது அடுமனையாளர்களுக்கு பேருவகை அளிப்பது. இப்புவியில் வாழ்வதற்கான பொருள் என்னவென்று தெரியும்” என்றாள்.

சுபாஷிணி “அடுமனையாளர் அவ்வாறு நோக்குவார்களா?” என்றாள். “ஏன்?” என்று அவள் கேட்டாள். “இல்லை நான் வெளியே இருப்பவள் என்பதனால் அடைந்த மெல்லுணர்வு இது என்று எண்ணினேன். அடுமனையாளருக்கு அது நாள்தொழில் என பழகியிருக்கும் அல்லவா?” என்றாள். சவிதை “இவ்வுள எழுச்சியை அடையாத அடுமனையாளர்களே கிடையாது” என்றாள். “போர்வீரர்கள் போருக்குப்பின் பெருங்கசப்பை அடைகிறார்கள். சிற்பிகள் தாங்கள் வடித்த சிற்பத்தின் குறைகளை மட்டுமே பார்க்கிறார்கள்” என்றாள் சுபாஷிணி.

சவிதை “ஆனால் சூதர்களிடம் கேட்டுப்பார். பாடி முடித்தபின் அவர்கள் குறையை உணர்வதுண்டா என்று” என்றாள். சுபாஷிணி “கேட்டிருக்கிறேன்” என்றாள். “அவர்கள் பாடி முடித்ததும் பாடலில் இருந்து மிகவும் கீழிறங்கி வந்துவிட்டதாக உணர்வார்கள்.” சவிதை “ஆம், பாடும்போது அவர்கள் நெடுந்தொலைவு சென்றுவிடுகிறார்கள்” என்றாள். பின்னர் சிரித்தபடி “அப்படியென்றால் அடுமனைத்தொழில் ஒன்றே ஆற்றிமுடித்த பின்னரும் நிறைவு தருவது” என்றாள் அவள். “விளையாட்டில்லை, மெய்யாகவே அதை உணர்கிறேன். அடுமனையாட்டி என்று வாழ்வதொன்றே முழு நிறைவு தருவது.” சவிதை “அய்யய்யோ! சொல்லிப் பரப்பிவிடாதே. தவம் மேற்கொள்ளச் செல்லும் முனிவர்களெல்லாம் இங்கு வந்துவிடப் போகிறார்கள்” என்றாள்.

வெளியே குழந்தையின் வீறிடல் கேட்டது. கோகிலமும் சிம்ஹியும் உள்ளே வந்தனர். சிம்ஹியின் இடையில் மென்தசைமடிப்புகள் கொண்ட தொடைகளும் புயங்களிலும் அக்குள்களிலும் தசைமடிந்த கைகளும் செல்லத்தொந்தியும்

கொண்டிருந்த ஆண்குழவி இருந்தது. அது கைகளை விரித்து கால்களை உதைத்து எம்பி சினத்துடன் கூச்சலிட்டுக்கொண்டிருந்தது. முகம் சிவந்து சுருங்கி கண்கள் இடுங்கியிருந்தன. “என்ன சொல்கிறான்?” என்றாள் சுபாஷிணி சவிதை “இப்போதுதான் வயிறு நிறைய ஊட்டி இவளிடம் கொடுத்துவிட்டு சற்று விலகினேன். அதற்குள் நினைவு வந்துவிட்டது” என்றாள்.

அவள் குரல் கேட்டு குழவி இரு கைகளையும் நீட்டி கால்களை உதைத்து அன்னையை நோக்கி எம்பியது. “என் அரசனல்லவா? என் தெய்வமல்லவா? என்ன அழுகை? அம்மா வருவேன் அல்லவா?” என்று சொன்னபடி சவிதை அக்குழந்தையை இரு கைகளாலும் வாங்கினாள். அவள் இரு கைகளும் குழவியின் எடையால் கீழிறங்க கழுத்து இழுபட்டு இறுகியது. உடலை உந்தி அதை சுழற்றித் தூக்கி தன் இடையில் வைத்துக்கொண்டாள். இரு கைகளாலும் அது அவள் மேலாடையை விலக்கி முலைகளை பற்றிக்கொண்டது. “எப்படித்தான் இவனைச் சுமந்து அலைகிறாளோ? இடைநாழியிலிருந்து இங்கு கொண்டுவருவதற்குள் என் இடை இற்றுவிட்டது” என்றாள் சிம்ஹி.

சவிதை சுபாஷிணியிடம் “இவனுக்காகவே உடல் வளர்த்தேன்” என்று சொன்னாள். “கருவிலிருக்கையில் என்னைப் பார்த்த ஒவ்வொருவரும் அஞ்சினார்கள். வயிற்றுக்குள் இரண்டு மூன்று குழந்தைகள் இருக்கும் என்றார்கள். எனக்குத் தெரியும் என் வயிற்றுக்குள் வாழ்பவன் பெருமல்லன் என்று. நான் இங்கு வந்த முதல்நாளே அதை வலவர் என்னிடம் சொன்னார். அன்றிரவே கனவில் நான் இவனை கண்டுவிட்டேன். இவ்வடிவில் அல்ல, பேருடலுடன் புடைத்தெழுந்த

தசைகளுடன் மல்லனென களம் நின்று தொடை தட்டி கைகளை உயர்த்தி கூச்சலிடுகிறான். உடலெங்கும் தசைகள் அலைகளென எழுகின்றன. அன்றிரவு விழித்துக்கொண்டு நெஞ்சைப்பற்றியபடி விம்மி அழுதேன். உண்மையில் அன்றிரவு அடைந்த பேருவகையை இவன் பிறந்தபோதுகூட அடையவில்லை.”

“ஆம், கருவுற்றிருக்கையில் வலவர் ஒவ்வொரு நாளும் இவளுக்கு மடியில் அமர்த்தி உணவூட்டினார்” என்றாள் சிம்ஹி. “நான் இங்கு வந்தபோது பழுத்த இலை போலிருந்தேன். பத்து நாட்களுக்குள் உடல் முழுக்க பொன் மின்னத்தொடங்கிவிட்டது. வலவருடன் சேர்ந்து பெருங்கலங்களை தூக்கிக்கொண்டு வருபவளாக மாறிவிட்டேன். இவன் பிறந்தபோது மூன்று மடங்கு எடையிருந்தான். வயிற்றிலிருந்து இவனை வெளியே எடுத்த வயற்றாட்டி அஞ்சி கூச்சலிட்டாள். அவளால் இரு கைகளாலும் தூக்கி மேலெடுக்க முடியவில்லை. இவன் அழுத குரல் கேட்டு வெளியே இருந்து வந்த பெண்கள் திகைத்துவிட்டனர். பிறந்த குழந்தை இத்தனை பெருங்குரலெடுத்து அழுமென்று அவர்கள் எண்ணியதே இல்லை.”

“என்னிடம் ஆண் குழந்தை என்றாள் வயற்றாட்டி. பொதுவாக குழந்தை வாய் வைத்து உறிஞ்சுகையில்தான் முலை சுரக்கும் என்பார்கள். நான் இவன் முகத்தை பார்த்த உடனேயே சுரக்கத் தொடங்கினேன். என் முலையாடைகளை விலக்கி இவன் வாயை கொண்டுவருவதற்குள் இரு காம்புகளிலிருந்தும் பால்சரடுகள் பீறிட்டு இவனை முழுமையாக நனைத்துவிட்டன. ஒரு முலையில் இவன் அருந்தும்போது பிறிதொரு முலை ஊறிப் பாய்ந்து இவனை முழுக்காட்டும். ஆகவே அதை ஒரு

கிண்ணத்தில் பிடித்து மீண்டும் ஊட்டுவேன். ஆனால் அதெல்லாம் ஒரு பதினைந்து நாட்கள்தான். அதற்குள் இரு முலைகளையும் ஒட்ட உறிஞ்சி உண்டுவிட்டு மேலும் பாலுக்கு அழத்தொடங்கிவிட்டான்" என்றாள் சவிதை.

"எத்தனை மாதமாகிறது?" என்றாள் சுபாஷிணி குழவியின் தண்டை அணிந்த சிறுகால்களைத் தொட்டு ஆட்டியபடி. "எட்டு மாதம்" என்றாள் சவிதை. ஏவற்பெண்டு "அதற்குள் ஊனுணவு உண்ணுகிறான், நம்ப மாட்டாய்" என்றாள். "ஊனா?" என்றாள் சுபாஷிணி திகைப்புடன். சவிதை "அவன் உண்பதே அன்னையின் முலையைத்தானே? பால் போதாமல் ஆகும்போது ஒருநாள் இதை கடித்துத் தின்றுவிடப்போகிறான் என்று தோன்றும்" என்றாள். "அன்றெல்லாம் ஊனை முதலில் சற்று மசியவைத்து ஊட்டுவேன். இப்போது அப்படி அல்ல, நேரடியாகவே கொடுத்துவிடலாம். அவனே ஈறுகளால் மென்று விழுங்கிவிடுவான்."

கோகிலம் "வயிற்றுக்குள் அனல் உறங்குகிறது. இன்று வரை எதுவும் செரிக்காமல் இருந்தது இல்லை" என்றாள். ஒரு முலையை உண்டு முடித்ததும் குழந்தை "ஆ!" என்று ஒலி எழுப்பி ஆணையிட்டது. "இதோ. இதோ, என் அரசே" என்றபின் இன்னொரு முலையை அதன் வாயில் வைத்தாள் சவிதை. அதன் தலையை வருடியபடி "உடலிலுள்ள கடைசி சொட்டு குருதியையும் உருக்கி அளித்துவிட வேண்டுமென்று தோன்றுகிறதடி. முலை உண்டு முடிக்கையில் எப்போதும் ஏமாற்றம்தான், அடுத்து மீண்டும் ஊட்ட இன்னும் எத்தனை பொழுதாகுமோ என. ஊறி நிறையவேண்டும் என்று வேண்டிக்கொள்வேன். விழித்திருக்கும் நேரமெல்லாம்

இவனுக்கு ஊட்டிக்கொண்டிருக்கிறேன். கனவுகளில் இவனைத்தான் காண்கிறேன்” என்றாள்.

குழந்தையின் இரு கால்களும் சுவைநாவென நெளிந்துகொண்டிருந்தன. அடிக்கால் மென்மையில் முத்தமிட்ட சுபாஷிணி “இவன் பெயரென்ன?” என்றாள். “மாருதன்” என்றாள் சவிதை. “குழந்தை பிறப்பதற்கு முன்னரே பெயரை வலவரே இட்டுவிட்டார்.” கோகிலம் “இங்கு ஒவ்வொருவரும் அவர் நினைவைத்தான் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். இன்னும் சில காலத்தில் ஆளுக்கு நூறு கதைகள் சொல்வதற்கு இருக்கும்” என்றாள்.

முதியவளான மிருகி உள்ளே வந்து “என்ன இங்கு நின்று பேசிக்கொண்டிருக்கிறீர்கள்? அணி செய்யவில்லையா? அங்கு குலமுதியோர் திரளத் தொடங்கிவிட்டனர்” என்றாள். “மூத்தவளாகிய அன்னை சினம்கொண்டுவிட்டாள்” என்று கோகிலம் சொன்னாள். “சீ, வாயை மூடு! நீ கிளம்புகிறாயா இல்லையா?” என்றாள் மிருகி. “இதோ” என்று சுபாஷிணி எழுந்தாள். சவிதை “நீ சென்று ஆடையணிந்துகொள். நான் இவனை சற்று வெந்நீராட்டி கொண்டுவருகிறேன்” என்றாள். “வெந்நீராட்டுவதற்குள் இன்னொருவர் உணவை ஒருக்கியிருக்க வேண்டும். நீராடுவதற்குமுன் என்ன உண்டிருந்தாலும் நீராடியபின் உடனடியாக அழத்தொடங்கிவிடுவான்.”

மீண்டும் ஒருமுறை குழவியின் இரு கால்களிலும் முத்தமிட்டுவிட்டு சுபாஷிணி அடுத்த அறைக்குள் சென்றாள். ஆடையை அங்கு சிறிய மூங்கில் பெட்டிகளில் வைத்திருந்தனர். சிறிய ஆடி அவள் உடலின் துளியையே காட்டியது. அவளுடன் வந்த சிம்ஹி “அரண்மனையில் பெரிய ஆடிகளில் முழு உடலை பார்த்திருப்பீர்கள். இங்கே கையளவு

ஆடிதான். எனக்கு பெரிய விழைவு முழுதாக என்னை பார்க்கவேண்டும் என்று” என்றாள். சுபாஷிணி அந்த ஆடியை கையிலெடுத்தபடி “எதற்கு முழுதாகப் பார்க்கவேண்டும்? தேவையான அளவு மட்டும் பார்த்தால் போதாதா?” என்றாள்.

# நீர்க்கோலம் - 91

## 90. அலைசூடிய மணி

✿சுபாஷிணி அறைக்குள் நுழைந்தபோது வெளியே பந்தலில் விறலி பாடத்தொடங்கியிருந்தாள். அந்தியாவதற்குள்ளாகவே அனைவரும் உணவருந்தி முடித்திருந்தனர். வாய்மணமும் பாக்கும் நிறைத்த தாலங்கள் வைக்கப்பட்டிருந்த ஈச்சையோலைப் பந்தலில் தரையில் ஈச்சம்பாய்கள் பரப்பப்பட்டிருந்தன. சிலர் முருக்குமரத் தலையணைகளையும் கையோடு எடுத்துக்கொண்டு செல்வதை கண்டாள். சிம்ஹி அவளிடம் “அவர்கள் கதை கேட்கையில் துயில்வார்கள். பலமுறை கேட்ட கதைகள் என்பதனால் துயிலுக்குள்ளும் விறலி சொல்லிக்கொண்டிருப்பாள்” என்றாள்.

சிம்ஹியும் கோகிலமும் அவளை அறைநோக்கி இட்டுச்சென்றனர். பிற பெண்கள் கதை கேட்கச் சென்றனர். சவிதை “நான் எங்கே செல்ல? நாழிகைக்கு ஒருமுறை இவனுக்கு உணவூட்டவேண்டுமே? பந்தலுக்குப் பின்னால் அடுமனை ஓரமாக நின்றுதான் கதை கேட்கவேண்டும்” என்றாள். சிம்ஹி “சம்பவரை நீங்கள்தான் முன்னர் பலமுறை பார்த்திருக்கிறீர்களே, பிறகென்ன?” என்றாள். “பலமுறை பார்த்ததில்லை” என்று சுபாஷிணி சொன்னாள். அவர்கள் அவளை உள்ளே செல்லும்படி சொன்னார்கள்.

தரையில் இரண்டுஅடுக்குள்ள ஈச்சம்பாய் விரிக்கப்பட்டு மரவுரித் தலையணைகள் இரண்டு போடப்பட்டிருந்தன. சிறிய எரிகலத்தில் மட்டிப்பால் தூபம் புகைந்து அறைக்குள் மெல்லிய முகில்திரையை பரப்பியிருந்தது. “பாயில் அமர்ந்துகொள்” என்றபடி அவர்கள் கதவை மூடினார்கள். அவள் அப்போதுதான் தண்ணுமையின் ஒலியை கேட்டாள். பின்னர் முழவும் குழலும் இணைந்துகொண்டன. விறலி நாவிறைவியின் புகழை பாடலானாள்.

கதவு மெல்ல திறந்து சம்பவன் உள்ளே வந்தான். மூச்சுத்திணறுபவன்போல நின்றான். அவள் எழுந்து சுவரில் சாய்ந்து நின்றாள். அவன் பெருமூச்சுவிட்டபின் புன்னகைத்து “கடுமையான பணி… அடுமனைப்பணி ஓய்வதே இல்லை” என்றான். “ஆம், அறிந்திருக்கிறேன்” என்றாள். அவன் அவள் குரலையும் புன்னகையையும் கண்டதும் எளிதாகி அருகே வந்தான். “இங்கே ஆசிரியர் இருந்தபோது அவரது கைகளால் உண்டு பழகியவர்கள். அவர் இல்லாத முதல் விருந்து இது. ஆகவே நானே செய்யவேண்டும் என்றார் விகிர்தர். என் கைச்சமையலை துப்பிவிட்டுப் போய்விடுவார்கள் என அஞ்சினேன். நல்லவேளை, அனைவருக்கும் பிடித்திருந்தது.” சுபாஷிணி “நீங்கள் அவரேதான்” என்றாள். அவன் மகிழ்ந்து “ஆம், அவரேதான். அவருடைய ஒரு துளி. ஒரு தொலைதூரப் பாவை. ஆனால் அவரேதான்” என்றான்.

பாயில் அமர்ந்துகொண்டு அவளிடம் “அமர்க!” என்றான். அவள் சற்று அப்பால் பாயின் ஓரமாக அமர்ந்தாள். “உண்மையை சொல்லப்போனால் உன் முகமே நினைவில் இல்லை. நீ என்னை விரும்புவதாக அந்தக் காவலர் சொன்னபோது எனக்கு அனல்தொட்டது போலிருந்தது. உன்னை அறிந்திருக்கிறேன்

என்றும் தோன்றியது. எண்ணி எண்ணி நோக்கியும் முகம் தெளியவில்லை. ஆனால் உன் நீண்டகுழலை எங்கேயோ பார்த்திருந்தேன்.” சிரித்து “எங்கே என்று சொல்லவா? கனவில்” என்றான். அவள் புன்னகை செய்தாள்.

“நான் ஆசிரியரிடம்தான் சொன்னேன். அவர் நீ அவளை கரவுக்காட்டில் கண்டிருப்பாய். அவள் உன்னை விரும்புகிறாள் என்றால் சென்று அவளை பெண் கேள் என்றார். நான் எளிய அடுமனையாளன் என்றேன். அவளை இங்கே புகையிலும் கரியிலும் கொண்டுவந்து வாழவைப்பது முறையல்ல என்றபோது அவர் மூடா அவள் அன்னமிடும் தொழிலை விழைந்தே இங்கே வரவிருக்கிறாள் என்றார். என்னால் அதை நம்ப முடியவில்லை. அவரது ஆணைப்படியே என்னுடன் விகிர்தரும் சுந்தரரும் வர ஒப்புக்கொண்டார்கள்.”

சுபாஷிணி “சரியாகவே சொல்லியிருக்கிறார். என் வாழ்க்கையை அன்னமிட்டே நிறைக்க விரும்புகிறேன்” என்றாள். “உண்டு செல்பவர்களின் முகம் நிறைவதை காண்பதைப்போல இனிது பிறிதில்லை.” சம்பவன் “அது என் கைச்சமையல்... விண்ணுலகை நாவில் காட்டிவிடுவேனே” என்றான். அவள் சிரித்து “தன்னம்பிக்கை நன்று” என்றாள். அவன் அவள் கையை தன் கைகளில் எடுத்துக்கொண்டு “நீ என்னை விரும்புகிறாய் என்று அறிந்த அன்றுதான் நான் என்னைப்பற்றி பெருமிதமாக உணர்ந்தேன். இனி வாழ்வில் நான் அடையும் வெற்றி என ஏதுமில்லை என்று தோன்றியது” என்றான். அவள் அருகே வந்து தோள்சாய்ந்து அமர்ந்துகொண்டாள்.

“உண்மையில் நீ இன்று என்னுடன் இருப்பதனால்தான் நான் இந்த வெறுமையை கடந்துசெல்கிறேன். என் ஆசிரியர் நேற்று

பிரிந்துசென்றார். அவரைப் பிரிவேன் என்று அறிந்திருந்தேன். ஆனால் அதற்கு என் உள்ளம் சித்தமாக இருக்கவில்லை. அவர் ஒவ்வொருவரிடமாக விடைபெற்றுக் கிளம்பினார். குண்டனை எடுத்து வானில் வீசிப்பிடித்து இவனும் காற்றின் மைந்தனே என்றார். இறுதியாக என்னிடம் வந்தார். நான் கால்தொட்டு சென்னிசூடினேன். அழுகையை அடக்கமுடியாமல் காலடியிலேயே விழுந்துவிட்டேன்" என்றான் சம்பவன்.

"அவர் என்னைத் தூக்கி நெஞ்சோடணைத்து உனக்கு நான் அடையாதவையும் கிடைக்கும் மைந்தா என்றார். உன் வடிவில் நானும் அதை அடைவேன் என்று சொல்லி என்னை உச்சியில் முத்தமிட்டார். ஆம், மெய்யாகவே. என்னை என் தந்தை முத்தமிட்டு அறியேன். என்னை எவருமே முத்தமிட்டதில்லை. என் ஆசிரியர் என்னை முத்தமிட்டார். என் உள்ளங்காலில் குளிர் ஏறியது. அந்தக் கணம் அப்படியே குளிர்ந்து நின்றுவிட்டது" என்று சம்பவன் தொடர்ந்தான்.

"என் செவியில் கொல்லாதே என்று மென்மையாக சொன்னார். சமைத்தூட்டுபவன் பெறுவதெல்லாம் கொல்பவனால் இழக்கப்படுகிறது மைந்தா. அரிசிப்புழுவும் காய்வண்டும்கூட உன்னால் காக்கப்படுக! விண்ணுலகிலிருந்து கைநீட்டி என்னை மேலேற்றிக்கொள்க என்றார். என்ன சொல்கிறார் என்றே எனக்குப் புரியவில்லை. நான் விசும்பி அழுதுகொண்டிருந்தேன். அவர் என்னை நிறுத்தி நாம் மீண்டும் பார்க்கமாட்டோம், என்றும் உன்னுடன் நான் இருப்பேன் என்று கொள் என்றபின் திரும்பி நடந்தார். மண்ணை மிதித்துச்செல்லும் சிறிய கால்களைப் பார்த்தபடி நான் தரையில் அமர்ந்தேன். பின் மண்ணுடன் முகம் சேர்த்து படுத்துக்கொண்டேன். அவர் காலடி பட்ட மண்ணை நோக்கிக்கொண்டிருந்தேன்."

“விடியும்போதுதான் சுந்தரர் வந்து உன்னை பெண்கேட்கச் செல்லவேண்டுமென்பது வலவரின் ஆணை என்றார். அதன் பின்னரே நான் எழுந்து நீராடச் சென்றேன்.” சுபாஷிணி புன்னகைத்து “அவர் சொன்னவை நினைவிலிருக்கட்டும். பிறிதொன்றும் நீங்கள் பெறுவதற்கில்லை” என்றாள். “ஆம்” என அவளை அவன் அணைத்துக்கொண்டான். அவளை நோக்கி குனிந்தான். அவள் அவன் விழிகளை கண்டாள். அதிலிருந்த நெகிழ்வை நோக்கியதும் மெய்ப்புகொண்டு விழிமூடிக்கொண்டாள். அவன் தோள்கள் அவளைச் சூழ்ந்தன, மலையாற்றின் வன்னீர்ச்சுழல்போல.

“ம்ம்” என்றாள். அவன் அவள் செவியில் “என்ன?” என்றான். “மரம்போலிருக்கின்றன கைகள்.” அவன் நகைத்து “அடுமனையாளனின் கைகள்” என்றான். அவள் அவன் தோளில் கையோட்டி “எத்தனை உறுதி!” என்றாள். புயங்களில் புடைத்திருந்த நரம்புகள் வழியாக விரலை ஓட்டி “யாழ்” என்றாள். “மீட்டு” என்று அவன் சொன்னான். அவள் அவன் காதுக்குள் மெல்ல சிரித்தாள்.

வெளியே விறலியின் குரல் கேட்டுக்கொண்டிருந்தது. “என்ன பாடுகிறாள்?” என்று அவள் அவன் செவியில் கேட்டாள். “கேட்டதில்லையா? விதர்ப்பினியாகிய தமயந்தியின் கதை அது.” அவள் “அதை ஏன் இங்கே பாடுகிறார்கள்?” என்றாள். “சமாகம பாதம் அக்காவியத்தின் இறுதிப்பகுதி. அதை மணநிகழ்வுகளின்போது சொல்லவைப்பது வழக்கம்” என்றான் சம்பவன். அவள் “நான் கேட்டிருக்கிறேன்” என்றாள். “அதை தேவி கேட்க விரும்புவாள். எப்போதும் விறலியிடம் அதைத்தான் பாடும்படி சொல்வாள்.” அவன் “அவர்கள் இப்போது நம் நாட்டு எல்லையை கடந்திருப்பார்கள்” என்றான்.

❀சுபாஷிணி மீண்டும் விறலியின் குரலைக் கேட்டபோது அவள் தமயந்தியின் நகருலாவை பாடிக்கொண்டிருந்தாள். மரத்திலிருந்து நீரில் உதிரும் சருகு ஆழத்திலிருந்து எழுந்து வருவதுபோல அருகே வந்து சொல் துலங்கியது அவள் பாடல். அணியானை மேல் முகிலில் எழுந்த இளங்கதிரவன் என அமர்ந்து தமயந்தி குண்டினபுரியின் அரசப்பெருவீதியில் சென்றாள். அவளை வாழ்த்தியபடி அவள் குடிகள் சாலையின் இரு பக்கங்களிலும் திரண்டிருந்தனர். அந்தணர்வீதியை அவள் கடக்கையில் உப்பரிகையில் தூண்மறைவில் நின்று அவளை நோக்கிய முதிய கைம்பெண் ஒருத்தியின் சொல் அவள் காதில் விழுந்தது. "யார்பொருட்டு அக்குங்குமம்? எவருடையது அந்தக் கருமணிமாலை?"

யானைமேல் அமர்ந்து அவள் நடுங்கினாள். அதன்பின் அவளால் சூழ்ந்திருந்த மக்களின் வாழ்த்தொலியை, மங்கல இசையை, மலர்மழையை உவக்க இயலவில்லை. அரண்மனை நோக்கிச் செல்லும் பாதையில் யானையின் ஒவ்வொரு காலடியும் வில்லில்லா தேரின் சகட அதிர்வென அவள் தலையில் விழுந்தது. அரண்மனையில் இறங்கி அகத்தளம் நோக்கி ஓடிச்சென்று தன் அன்னை மடியில் விழுந்தாள். "என் மங்கலங்கள் பொருளற்றவை என்னும் சொல்லை இன்று கேட்டேன். இன்றே நான் அறியவேண்டும் இவற்றின் பொருளென்ன என்று. நிமித்திகரும் வேதியரும் வருக!"

வேதியர் மூவர் அகத்தளம் வந்தனர். தென்னெரி எழுப்பி வேதமோதி அவியிட்டனர். "அரசி, உங்கள் கையால் ஒரு மலரிதழை எடுத்து இவ்வெரியில் இடுக!" என்றார் வைதிகர். அரசி எரியிலிட்ட தாமரை மலரிதழ் வாடாமல் பளிங்குச் சிமிழென ஒளியுடன் எரிக்குள் கிடந்தது. "அரசர்

உயிருடனிருக்கிறார், அரசி. உங்கள் மங்கலங்கள் பொருளுள்ளவையே” என்றார் வைதிகர். பன்னிரு களம் வரைந்து நோக்கிய நிமித்திகர் “நலமுடனிருக்கிறார். ஆனால் நாகக்குறை கொண்டிருக்கிறார்” என்றனர். “எங்கிருந்தாலும் தேடி கொண்டுவருக அவரை!” என்று பீமகர் ஆணையிட ஒற்றர்கள் நாடெங்கும் சென்றார்கள்.

பின்னொருநாள் கொற்றவை ஆலயத்திற்கு பூசெய்கைக்காகச் சென்று மீள்கையில் பல்லக்கினருகே நடந்துசென்ற பெண்களின் குரல்களில் ஒன்று “துறந்த கணவன் இறந்தவனே” என்று சொல்லிச் சென்றது. அவள் நெஞ்சைப் பற்றிக்கொண்டு உடலதிர அமர்ந்திருந்தாள். அரண்மனையை அடைந்ததும் ஓடிச்சென்று அன்னைமடியில் விழுந்து கதறி அழுதாள். “என் கொழுநனை கண்டுபிடித்து கொண்டுவருக! நூறு நாட்களுக்குள் அவரை என் முன் கொண்டுவரவில்லை என்றால் இந்த மங்கலங்களுடன் எரிபுகுவேன்” என்று சூளுரைத்தாள்.

பீமகர் அமைச்சர்களிடம் விழிநோக்கி உளமொழி கேட்கும் திறன்கொண்ட நூறு அதர்வவேத அந்தணர்களை அழைத்துவரச் சொன்னார். அவர்களுக்கு ஆளுக்கு நூறு பொன் கொடையளித்து நாடெங்கும் சென்று நளனைத் தேடிவரும்படி ஆணையிட்டார். அந்தணர்கள் கிளம்பும்பொருட்டு கூடி வேள்விநிகழ்த்தி எழுந்தபோது அவர்கள் நடுவே தோன்றிய தமயந்தி கைகூப்பியபடி “அந்தணர்களே, நீங்கள் செல்லும் நாடுகளில் அங்கிருக்கலாம் என் கணவர் என்று ஐயம் தோன்றுமிடங்களில் எல்லாம் இவ்வினாக்களை கேளுங்கள். அவற்றுக்கு அளிக்கப்பட்ட மறுமொழிகளை வந்து என்னிடம் சொல்லுங்கள்” என்றாள்.

அவள் சொன்ன மூன்று வினாக்கள் இவை. “மரம் உதிர்க்கவே முடியாத கனி எது? ஆற்றுப்பெருக்கு அடித்துச்செல்ல முடியாத கலம் எது? புரவித்திரள் சூடிய ஒரு மணி எது?” அவர்கள் அந்த வினாக்களுடன் கிளம்பி பாரதவர்ஷமெங்கும் சென்றனர். கிழக்கே காமரூபத்தைக் கடந்து மணிபூரகம் வரை சென்றது ஒரு குழு. மேற்கே காந்தாரத்தைக் கடந்து சென்றனர். வடமேற்கே உசிநாரத்தையும் வடக்கே திரிகர்த்தத்தையும் அடைந்தனர். தெற்கே திரிசாகரம் வரை சென்றனர். ஒவ்வொருவராக பறவைச்செய்திகளினூடாக தாங்கள் பெற்ற விடைகளை அனுப்பிக்கொண்டிருந்தனர். நாட்கள் குறைந்து வர தமயந்தி மேலும் மேலும் சொல்லிழந்து முகம் இறுகி மண்ணில் மெல்ல மூழ்கும் கற்சிலைபோல ஆனாள்.

அயோத்திக்குச் சென்று மீண்ட பர்ணாதர் என்னும் அந்தணர் அவளிடம் “நான் அயோத்தி அரசன் ரிதுபர்ணனின் அவைக்குச் சென்றேன், அரசி. அங்கு ஒருமுறை சென்று ஏதும் உணராமல் கடந்துசென்றேன். வடக்கே சௌவீரம் நோக்கிச் செல்லும்போது எதிரே வந்த வணிகனொருவன் புரவிகள் வாங்க அயோத்திக்குச் செல்வதாக சொன்னான். நான் என்ன விந்தை இது, காந்தாரமும் சௌவீரமும் புரவிக்குப் புகழ்மிக்கவை அல்லவா என்றேன். ஆம், எங்கள் புரவிக்குட்டிகளையே அயோத்தியினர் வாங்குகின்றனர். ஆனால் அவர்கள் பயிற்சியளித்த புரவிகள் எங்கள் புரவிகளைவிட ஏழுமடங்கு திறன்கொண்டவை. ஆகவே அவற்றை நாங்கள் திரும்ப வாங்குகிறோம் என்றான். அங்கே எனக்கு ஐயம் எழுந்தது” என்றார்.

“நான் மீண்டும் அயோத்திக்கு சென்றேன். அங்கே நகரில் உலவிய புரவிகளை தனி விழிகளுடன் நோக்கினேன். அரசி,

அங்கே புரவிக்கு ஆணையிடும் குரலே ஒலிக்கவில்லை. புரவிக்காரர் கைகளில் சவுக்குகளே இல்லை. புரவிகள் அவர்களின் உள்ளமறிந்து இயங்கின.” தமயந்தி உள எழுச்சியுடன் “ஆம், நிஷதபுரியின் புரவிகள் ஊர்பவரின் உள்ளத்தை பகிர்ந்துகொள்பவை” என்றாள். “ஆகவே மீண்டும் ரிதுபர்ணன் அவைக்குச் சென்றேன். அங்கே இம்மூன்று வினாக்களையும் சொன்னேன். ரிதுபர்ணன் அவற்றுக்கு மறுமொழி சொன்னார். அம்மறுமொழி ஒன்றே நான் கேட்டவற்றில் பொருத்தமானது. அம்மொழியில் அரசிக்கு ஏதேனும் விடை கிடைக்கக்கூடும் என்பதனால் நேராக இங்கே வந்தேன்.”

பர்ணாதர் அந்த மறுமொழியை சொன்னார். “அரசி, ரிதுபர்ணன் சொன்ன மறுமொழிகள் இவை. மரம் உதிர்க்கமுடியாத கனி நிலவு. ஆற்றுப்பெருக்கு அடித்துச் செல்லமுடியாத கலமும் நிலவே. புரவிகள் எனும் கடல்அலைகள் சூடியிருக்கும் ஒரு மணி முழுநிலவேதான்.” தமயந்தி வேறெங்கோ நோக்கியபடி “நல்ல மறுமொழி” என்றாள். “பிறர் சொன்ன மறுமொழிகள் எவையும் ஒன்றுடன் ஒன்று பொருந்தவில்லை, அரசி. நிலவை கனவு என்று சொல்லி ரிதுபர்ணன் உரைத்த மறுமொழியே அழகியது.”

தமயந்தி ஆர்வமிழந்து பெருமூச்சுடன் ஆடையை கையால் முறுக்கிக் கொண்டிருந்தாள். “அப்போது மெல்லிய விசும்பலோசையை கேட்டேன், அரசி. அரசனின் அருகே நின்றிருந்த கரிய குள்ளன் ஒருவன் கண்ணீர்விட்டவாறு திரும்பிக்கொண்டான். அவன் அழுவதை தோள்கள் காட்டின. உவகை நிறைந்திருந்த அவையில் அவன் ஏன் அழுகிறான் என்று தெரியாமல் நான் சற்று குழம்பினேன்…” என பர்ணாதர்

சொல்ல தமயந்தி உளவிசையுடன் கையூன்றி சற்றே எழுந்து "அழுதவன் யார்?" என்றாள்.

"அவன் பெயர் பாகுகன். குள்ளன், ஆனால் பெருங்கையன். சூதன். அவன் அங்கே புரவிபேணுதலும் அடுமனைத்தொழிலும் இயற்றுவதாகச் சொன்னார்கள். அயோத்தியின் புரவிகளை அவனே நுண்திறன்கொண்டவையாக ஆக்குகிறான் என அறிந்தேன்" என்றார் பர்ணாதர். தமயந்தி நீள்மூச்சுடன் மெல்ல உடல் தளர்ந்து பீடத்தில் சாய்ந்து கண்களை மூடிக்கொண்டாள். தனக்கே என "அவர்தான்" என்றாள்.

"அரசி, அவனை நான் நன்கு நோக்கினேன். குற்றுடல் கொண்ட கரியவன். உடலெங்கும் முதுமைச் சுருக்கங்கள். அவன் அரசர் அல்ல, நான் அவரை ஏழுமுறை நேரில் கண்டவன். என் விழிகள் பொய்க்கா" என்றார் பர்ணாதர். தமயந்தி "விழிகளுக்கு அப்பால் உறைவதெப்படி என்பதை நான் நன்கறிவேன். அவர் இங்கே வரவேண்டும்" என்றாள். "அவரை நேரில்கண்டு சொல்கிறேன்" என்றார் பர்ணாதர். "இல்லை, அவர் வரமாட்டார். நாம் அவரை அறிந்துளோம் என அவர் அறியக்கூடாது" என்று தமயந்தி சொன்னாள்.

அன்று மாலை தன் தந்தையுடனும் உடன்பிறந்தாருடனும் அமர்ந்து சொல்சூழ்ந்தாள். "தந்தையே, எனக்கு மறுமணத் தூதுக்கள் வந்துள்ளன என்று அன்னையிடம் சொன்னீர்கள் அல்லவா?" என்றாள். பீமகர் முகம் மலர்ந்து எழுந்தார். "ஆம், பாரதவர்ஷத்தின் தொல்குடி ஷத்ரியர் பன்னிருவர் தூதனுப்பியிருக்கிறார்கள்" என்றார். பீமபலன் உவகையுடன் "அக்கையே, நீங்கள் அம்முடிவை எடுப்பீர்கள் என்றால் அதுவே சிறந்தது. காங்கேய நிலத்து ஷத்ரிய நாடுகள் அனைத்துமே விதர்ப்பத்தை விழைகின்றன. தென்னிலத்திற்குள் நுழையவும்

தாம்ரலிப்தியையும் தண்டபுரத்தையும் நோக்கி வணிகவழிகள் திறக்கவும் விதர்ப்பமே மிகச் சிறந்த வழி என அவை அறிந்துள்ளன” என்றான்.

பீமபாகு “நமக்கு காங்கேயத்தின் ஷத்ரிய நாடுகளில் ஒன்றுடன் மணஉறவு பெரும்நன்மை பயக்கும். வடக்கே அசுரர் தலைவன் விரோசனன் ஆற்றல் பெற்றுவருகிறான். மச்சர்களும் நிஷாதர்களும் அவன் கொடிக்கீழ் ஒருங்கிணையக்கூடும். நாம் நிஷதநாட்டின்மேல் படைகொண்டு சென்றால் பெரும்எதிர்ப்பை சந்திப்போம். ஷத்ரியர்களின் கூட்டு நம்முடன் இருப்பின் நாம் வெல்லலாம்” என்றான். “அக்கையே, நிஷதநாட்டு அரியணை நம் இளவல் இந்திரசேனனுக்குரியது. எக்குருதிப்பெருக்கு எழுந்தாலும் அதை வென்று அவனுக்களிப்பது நம் கடமை” என்றான்.

தமயந்தி “இல்லை இளையோரே, நிஷதமன்னர் உயிருடன் இருக்கிறார். அவர் துறவுகொள்ளவுமில்லை” என்றாள். “அவரை இங்கு வரவழைக்க எண்ணுகிறேன். இங்கு விதர்ப்பத்தில் எனக்கு மறுமணத்தின்பொருட்டு மணத்தன்னேற்பு நிகழ்வதாக ஒரு செய்தியை அயோத்திக்கு அனுப்பவேண்டும்.” அவர்கள் விழிகள் மங்க மெல்ல அமர்ந்துகொள்ள பீமகர் “அயோத்திக்கு மட்டுமா?” என்றார். “ஆம், அங்கே செய்தி சென்று சேர்ந்த மறுநாள் அந்தியில் இங்கே மணத்தன்னேற்பு என்று சொல்லப்படவேண்டும்.” அவர்கள் உய்த்தறிந்துவிட்டிருந்தனர். பீமகர் “ஆம், அவர் தேரோட்டினால் மட்டுமே இங்கே ஒரே நாளில் வந்துசேரமுடியும்” என்றார்.

“சுதேவரையே அனுப்புவோம். அவர் சென்று பேச்சுவாக்கில் இங்கே மணத்தன்னேற்பு நிகழ்வதை சொல்லட்டும். ரிதுபர்ணன் வருவதை நான் எதிர்நோக்குவதாகவும் அதை நீங்கள்

விரும்பாததனால்தான் அவருக்கு முறையான செய்தி அனுப்பப்படவில்லை என்றும் அவர் சொல்லவேண்டும்” என்றாள் தமயந்தி. பீமகர் பெருமூச்சுவிட்டு “அவ்வாறே ஆகுக!” என்றார்.

பரிப்புரையில் வைக்கோல் மெத்தையில் விழிமூடிப் படுத்திருந்த பாகுகன் அருகே வந்த வார்ஷ்ணேயன் “உங்களை உடனே அழைத்துவரச் சொன்னர் அரசர்” என்றான். பாகுகன் எழுந்து அமர்ந்து “சற்றுமுன்புதானே சென்றார்?” என்றான். “அவர் அவைக்கு தென்புலத்து அந்தணர் ஒருவர் வந்திருக்கிறார். அவைச்சொல் நடுவே அவர் சொன்ன ஏதோ செய்தியால் அரசர் கிளர்ந்தெழுந்துவிட்டார். பாகுகனை அழைத்துவா என்று கூவினார். நான்கு ஏவலர் என்னை நோக்கி ஓடிவந்தனர். வரும் விரைவில் அவர்கள் என்னை கொன்றுவிடுவார்கள் என்று அஞ்சினேன்.”

பாகுகன் எழுந்து தன் மேலாடையை எடுத்து அணிந்துகொண்டான். அவன் முற்றிலுமாக மாறிவிட்டதை வார்ஷ்ணேயன் உணர்ந்திருந்தான். அவனுக்குள் இருந்த சிறுவன் அகன்று நாழிகைக்கொரு ஆண்டு என முதிர்ந்துவிட்டிருந்தான். “நான் உடன் வரவா?” என்றான். பாகுகன் வேண்டாம் என தலையசைத்து நடந்தான். வார்ஷ்ணேயன் நோக்கி நிற்க அருகே வந்த ஜீவலன் “அவன் முதிர்ந்துவிட்டான்” என்றான். “ஆம்” என்றான் வார்ஷ்ணேயன். “துயரற்றிருந்தான். துயரத்தால் முதிர்ந்துவிட்டான்” என்ற ஜீவலன் “துயரத்தைத்தான் வாழ்வென்றும் காலமென்றும் சொல்லிக்கொள்கிறோமா?” என்றான்.

அவர்கள் பேசுவதை அவன் கேட்டான். அச்சொற்றொடர்கள் அவனுடனேயே வந்தன, ரீங்கரித்துச் சூழும்

கொசுக்களைப்போல. அவன் அரண்மனை வாயிலை அடைவதற்குள்ளாகவே ரிதுபர்ணன் அவனை நோக்கி ஓடிவந்தான். உடல் குலுங்க மூச்சிரைக்க அவனருகே வந்து "எடு தேரை... தேரைப் பூட்டு! நாம் இக்கணமே இங்கிருந்தே கிளம்புகிறோம்" என்றான். அவனுடன் வந்த காவல்வீரர்கள் அப்பால் நின்று மூச்சுவாங்கினர். "நல்லவேளையாக அந்தணர் இங்கே வந்தார். பாடல் சொல்லிக்கொண்டிருந்தவர் பேச்சுவாக்கில் விதர்ப்பத்தில் நிகழ்வதென்ன என்று சொன்னார். அங்கே தமயந்திக்கு மணத்தன்னேற்பு நிகழவிருக்கிறது."

பாகுகன் வெறுமனே நோக்கினான். "என்ன பார்க்கிறாய்? நாளைக்கே. நாளை அந்தியில். நாம் இப்போது கிளம்பினால் சென்றுவிடமுடியுமா?" பாகுகன் "தங்களுக்கு அழைப்பில்லையா?" என்றான். "இல்லை. அவள் தனக்குகந்த ஆண்மகனை தேடித்தான் அந்தணர்களை அனுப்பியிருக்கிறாள். முன்பு இங்கு வந்த அந்தணராகிய பர்ணாதரை நினைவிருக்கிறதா? அவர் கேட்ட வினாக்களுக்கு நான் சொன்னதே உரிய விடை. அவ்வினாக்களில் இருந்தது ஓர் இளம்பெண்ணின் காதல். அதை நான் மட்டுமே தொட்டேன். அதைக் கேட்டதுமே என்னை உளமேற்றுக்கொண்டாளாம்."

"ஆனால் அவள் தந்தை மகதனோ கூர்ஜரனோ தன் மகளை மணக்கவேண்டுமென விழைகிறார். அதை அவள் ஏற்றுக்கொள்ளவில்லை. பூசலுக்குப்பின் இறுதியில் மணத்தன்னேற்பு நிகழ்த்துவதாக அவரும் உடன்பிறந்தாரும் ஒப்புக்கொண்டார்கள். ஆனால் எனக்கு மட்டும் ஓலையனுப்பாமல் விட்டுவிட்டார்கள். எனக்கு ஓலை அனுப்பப்பட்டுவிட்டதாகவே தமயந்தி எண்ணுகிறாள். நாளை மணத்தன்னேற்பு அவைக்குள் வந்து நிற்பதுவரை அவள் நான்

அங்கே நிற்பேன் என்றே எண்ணியிருப்பாள். நான் இல்லாதபோது திகைப்பாள். நான் அவளை மணம்கொள்ள விழையவில்லை என்று அவளிடம் சொல்லிவிடுவார்கள். அதன்பின் அவளுக்கு வேறுவழியில்லை. மணமாலையை கையிலேந்தினால் அதை எவருக்கேனும் அணிவித்தாகவேண்டும் என்பது நெறி.”

ரிதுபர்ணன் மூச்சிரைத்து “நான் விடப்போவதில்லை. பறந்தேனும் செல்வேன். அவள் முன் மணமகனாக நிற்பேன்… சொல், உன்னால் ஒருநாளில் செல்லமுடியுமா?” என்றான். பாகுகன் “பார்ப்போம்” என்றான். “முடிந்தாகவேண்டும்… வெறும்புரவியே அவ்வளவு விரைவாகச் செல்லாது என்கிறார்கள் அமைச்சர்கள். நான் உன்னை நம்புகிறேன். நீ புரவித்தொழிலறிந்தவன்… நீ செல்வாய்… சென்றாகவேண்டும்.” பாகுகன் “செல்வோம்” என்றான். “நன்று! நமக்கு வேறுவழியில்லை… அமைச்சர்களையும் பிறரையும் வரிசையும் பரிசில்களுமாக தொடர்ந்து வரச்சொல்லியிருக்கிறேன். நீ சென்று தேரைப் பூட்டி அழைத்து வா…” பாகுகன் “தாங்கள் அணிசெய்யவேண்டுமே?” என்றான். “அணிசெய்யவேண்டிய ஆடைகளை எடுத்துக்கொண்டேன்… தேர் வரட்டும். இங்கிருந்தே கிளம்புவேன்” என்றான் ரிதுபர்ணன்.

பாகுகன் ஓடி கொட்டிலுக்குச் செல்லும் வழியிலேயே கூவினான் “சுமையும் குசுமையும் சுபையும் சுதமையும் சுஷமையும் தேரில் பூட்டப்படட்டும். கருடத்தேர்.” வார்ஷ்ணேயன் “அவை…” என சொல்லத்தொடங்க “புரவிக்கொருவர் செல்க… அரசாணை” என்றான் பாகுகன். அவன் தேர்ப்பட்டைகளை எடுத்துக்கொண்டு வெளிவந்தபோது தேர் வெளியே வந்து நின்றிருந்தது. புரவிகளை

கட்டிக்கொண்டிருந்தார்கள். அவன் அச்சாணிகளை சீர்நோக்கினான். சகடங்களின் இரும்புப்பட்டைகளை கையால் வருடிநோக்கியபின் தேர்ப்பீடத்தில் ஏறிக்கொண்டான்.

புரவிகள் நுகங்களில் பூட்டப்பட்டதும் பொறுமையிழந்து காலடிவைத்து தலைநிமிர்ந்து பிடரிகுலைத்தன. அவன் சவுக்கை காற்றில் வீசியதும் அவை ஓடத்தொடங்கின. ரிதுபர்ணன் ஓடிவந்து படிகளில் ஏறி உள்ளே அமர்ந்து "தெற்குவாயில் வழியாக செல்... சரயுவின் கரையினூடாகச் செல்வோம்... இவ்வேளையில் அங்கே எவருமிருக்கமாட்டார்கள்" என்றான். "இல்லை... அங்கே கன்றுகள் இல்லம்திரும்பத் தொடங்கும். அவை வழியறியாதவை. நகரினூடாகச் செல்வோம். முரசுமுழக்கம் வழியாக மையச்சாலையில் வந்துகொண்டிருப்பவர்களிடம் வலம்விட்டு வழியொதுங்கும்படி ஆணையிடுங்கள்... நாம் செல்லும் வழியில் எங்கும் வலப்பாதையில் எவருமிருக்கலாகாது" என்றான் பாகுகன். "இதோ, அந்தக் காவல்மாடத்தில் ஆணையை சொல்கிறேன்" என்றான் ரிதுபர்ணன்.

தேர் அரண்மனை வளைவைக் கடந்து மையச்சாலையில் ஏறி இரு பக்கமும் காற்று கிழிந்து பின்பறக்க பக்கக் காட்சிகள் நிறக்கலவையென உருகியிணைந்தொழுக பாய்ந்தோடியது. "ஒவ்வொரு எட்டு நாழிகையிலும் சாவடிகளில் மாற்றுப் புரவிகள் ஒருங்கி நிற்கவேண்டும். புரவிகளின் இலக்கணங்களை வார்ஷ்ணேயனிடம் கேட்டறியச் சொல்லுங்கள்..." ரிதுபர்ணன் காவல்கோட்டத்தை அடைவதற்கு முன்னரே கையசைக்க காவலர் புரவியில் தேருடன் விரைந்து

வந்தனர். அவன் தேர்விரைவு குறையாமல் உடன்வந்த புரவிவீரர்களிடம் ஆணைகளை கூவினான்.

அவர்கள் கோட்டையை கடந்தபோது ஆணை முரசொலியாக முழங்கிக்கொண்டிருந்தது. “புறாக்கள் கிளம்பியிருக்கும்… செல்லும் வழியெங்கும் புரவிகள் ஒருங்கியிருக்கும்” என்றான் ரிதுபர்ணன். அவன் மேலாடை எழுந்து பறந்து விலகியது. அவன் திரும்பி நோக்கியபோது அது நோக்கிலிருந்து மறைந்தது. சாரைப்பாம்பென சாலை சென்று தொலைவில் நெளிந்து மறைந்தது. எதிரே அருவி என தேர் நோக்கிப் பெய்து அணுகிக்கொண்டிருந்தது.

மெல்ல விரைவுக்கு உளம் பழகியது. அவன் பீடத்தில் சாய்ந்தமர்ந்தான். அவன் உடல் தேர்விசையில் துள்ளிக்கொண்டிருந்தது. “அரசி என்னிடம் கேட்டனுப்பிய வினாக்களை நினைவுறுகிறாயா?” என்றான். “ஆம்” என்றான் பாகுகன். “அவற்றுக்கு நான் உரைத்த மறுமொழி பொருத்தம் அல்லவா?” பாகுகன் “ஆம், அரசே” என்றான். “அன்று நீ அழுதாய்… ஏன்?” என்றான். “நான் அவற்றுக்கு வேறு பொருள்கொண்டேன்” என்றான் பாகுகன். “என்ன பொருள்?” என்றான் ரிதுபர்ணன்.

“அரசே, மரம் உதிர்க்கமுடியாத கனி இனிமையும் மணமுமாக அதன் வேர்முதல் தளிர்வரை ஓடிக்கொண்டிருக்கும் சாறுதான்.” ரிதுபர்ணன் சற்று சோர்வுடன் “ஆம், உதிரும்கனி என்பது மரம்கொண்ட சுவையின் ஒரு துளியே” என்றான். “ஆற்றுப்பெருக்கு அடித்துச்செல்லாத கலம் என்பது அதிலெழும் சுழி” என்றான் பாகுகன். “ஆம்” என்றான் ரிதுபர்ணன். “புகை எனும் புரவிப்பெருந்திரள் சூடிய அருமணி அனல்” என்றான். நீண்ட இடைவேளைக்குப்பின் “ஆம், அதன் பொருளும்

புரிகிறது” என்றான் ரிதுபர்ணன். “ஆனால் அதன்பொருட்டு நீ ஏன் அழுதாய்?”

பாகுகன் அதற்கு மறுமொழி என ஏதும் சொல்லவில்லை. அவன் ஏதோ சொல்லப்போகிறான் என்று காத்திருந்த ரிதுபர்ணன் அவன் எதையும் சொல்லப்போவதில்லை என்று உணர்ந்தான்.

# நீர்க்கோலம் - 92

**91.**எஞ்சும்** நஞ்சு**

தமயந்தி விழித்துக்கொண்டபோது தன்னருகே வலுவான இருப்புணர்வை அடைந்தாள். அறைக்குள் நோக்கியபோது சாளரம் வழியாக வந்த மெல்லிய வான்வெளிச்சமும் அது உருவாக்கிய நிழல்களும் மட்டுமே தெரிந்தன. மீண்டும் விழிமூடிக்கொண்டு படுத்தாள். மெல்லிய அசைவொலி கேட்டது. வழிதலின் ஒலி. நெளிதலின் ஒலி. தன்னருகே அவள் அவனை கண்டாள். அவன் இடைக்குக் கீழே நாகமென நெளிந்து அறைச்சுவர்களை ஒட்டி வளைந்து நுனி அசைந்துகொண்டிருந்தது. ஊன்றிய கரியபெருந்தோள்கள் அவள் கண்முன் தெரிந்தன. அவன் விழிகளின் இமையா ஒளியை அவள் மிக அருகே கண்டாள். அவன் மூச்சுச்சீறல் அவள் முகத்தில் மயிற்பீலியென வருடிச்சென்றது.

அவன் ஒன்றும் சொல்லவில்லை. அவளும் ஏதும் கேட்கவில்லை. அவளையே அவன் நோக்கிக்கொண்டிருந்தான். அவன் உடலின் நெளிவே ஒரு மொழியென ஏதோ சொல்லிக்கொண்டிருந்தது. அவள் பெருமூச்சுடன் உடல்

எளிதானாள். “அவன் நகருக்குள் நுழைந்துவிட்டான், இன்றுகாலை” என்றான். “ஆம்” என்றாள் அவள். “நேற்றே ஒற்றர் சொன்னார்கள்.” அவன் புன்னகைத்தபோது பிளவுண்ட நா எழுந்து பறந்து அமைந்தது. “அவன் எவ்வுருவில் இருக்கிறான் என்று அறிவாயா?” அவள் விழிதாழ்த்தினாள். “உன்னுள் அவன் இருந்த உருவில்.” அவள் சீற்றத்துடன் இமைதூக்க “பின் எப்படி நீ உடனே அவனே என்றாய்?” என்றான்.

அவள் புன்னகைத்து “நான் உன் வழிப்படுவதாக இல்லை. உன் சொற்கள் எனக்கு ஒரு பொருட்டல்ல” என்றாள். “நான் பொய் சொல்வதில்லை.” அவள் ஏளனத்தால் வளைந்த இதழ்களுடன் “ஆம், ஆனால் அவை உண்மைகளும் அல்ல” என்றாள். “அவன் நடித்து முடித்துவிட்டான்.” அவள் அவனை நோக்கி “ஆம், நானும்” என்றாள். “இன்று உன்னை அவன் கண்டால் அவனுள் இருந்த தோற்றத்தில் இருப்பாய்.” அவள் “நீ சொல்லவேண்டியதை சொல்லிவிட்டுச் செல்லலாம்” என்றாள். “அவனிடம் எதை கண்டாய்?” என்று அவன் கேட்டான். “அறியேன். ஆனால் அவரில்லையென்றால் வாழ்வில்லை என உணர்கிறேன்.” அவன் நகைத்து “அத்தனை பத்தினியரும் சொல்வது. வெறும் பழக்கமா? முன்னோர் மரபா? சூழ்விழிகளின் அழுத்தமா?” என்றான்.

அவள் “அதை ஆராயவேண்டுமென்றால் இந்தப் பிடியை விட்டுவிடவேண்டும்” என்றாள். “என்றாவது விடுவேன் என்றால் அப்போது அவ்வினாவை எழுப்பிக்கொள்கிறேன்.” அவன் வஞ்சம் தெரியும் விழிகளுடன் புன்னகைத்து “பத்தினியர் ஒருபோதும் விடுவதில்லை” என்றான். அவள் உடல்மேல் அவன் எடை அழுந்தத் தொடங்கியது. “அது வினாவற்ற பற்று. பிறிதொன்றிலாதது” என்று அவள் காதில் மூச்சொலியுடன்

சொன்னான். “நான் விலக விழையவில்லை. நீ என்னை உன் கருகமணியாக சூடிக்கொள்ளலாம். உன்னை சிவை என்பார்கள்.” அவள் “விலகிச்செல்...” என்றாள். “கொற்றவை என்றாகலாம். நாகக்குழையென்றாவேன்.” அவள் தலையை அசைத்தாள். “நாகபடம் அணிந்த சாமுண்டி? நாகம் கச்சையாக்கிய பைரவி? நாகக் கணையாழிகொண்ட பிராமி?” அவள் “செல்க!” என்றாள். “உன் காலில் சிலம்பாவேன். உன் கால்விரலில் மெட்டியென்றாவேன்.” அவள் “செல்...” என்றாள். “எங்கும் நான் இல்லாத பத்தினி என எவருமில்லை.” அவள் “நான் உன்மேல் தீச்சொல்லிடுவதற்குள் விலகு!” என்றாள்.

அவன் தோள்கள் ஒடுங்கின. முகம் கூம்பி நாகபடமென்றாயிற்று. அவள் உதடுகளில் நாகம் முத்தமிட்டது. முலைக்கண்களை உந்திக்குழியை அல்குலை முத்தமிட்டுச்சென்றது. அதன் உடல் பொன்னிறம்கொண்டபடியே சென்றது. அவள் கால் கட்டைவிரலைக் கவ்வியபடி அது காற்றில் பறக்கும் கொடியென உடல் நெளிந்தது. அவள் திடுக்கிட்டு எழுந்து நோக்கியபோது காலைக் கவ்வியிருந்த நாகத்தை பார்த்தாள். அறியாமல் காலை உதற அது அப்பால் ஈரத்துணிமுறுக்கு என விழுந்து நெளிந்தோடி சுவர்மடிப்பினூடாக வழிந்து சாளரத்தில் தொற்றி ஏறி அப்பால் சென்றது. அவள் குனிந்து தன் காலை பார்த்தாள். கட்டைவிரல் நகம் கருமையாக இருந்தது. அதை கையால் தொட்டு வருடினாள். உலோகத்துண்டுபோல கருமையொளி கொண்டிருந்ததது.

“நாகநஞ்சு அரசியை முதுமகளென்றாக்கியது. இங்கிருந்து அமைச்சர்களும் மருத்துவர்களும் சூக்திமதிக்குச் சென்றபோது அங்கே அவர்கள் கண்டது உளம்கனிந்து தன் உடலன்றி

பிறிதொன்றுமறியாது தூய குழந்தைமையில் திளைத்துக்கொண்டிருந்தவரை” என்றார் சுநாகர். “சூக்திமதியில் எவருக்கும் அவர் எவரென்று தெரியவில்லை. பதினேழுமுறை குண்டினபுரியின் ஒற்றரும் தூதரும் அவரை கண்டிருந்தனர். எவரும் அடையாளம் கண்டுகொள்ளவில்லை. அந்தணராகிய சுதேவர் பெண்முகம்நோக்கா நோன்புகொண்டவர். அவர் அரசியின் கால்களை மட்டுமே கண்டிருந்தார். கால்களினூடகவே அவரை தேடிச்சென்றுகொண்டிருந்தார்.”

சூக்திமதியின் இளவரசி சுனந்தையுடன் வந்த சேடியரின் கால்களை நோக்கிய சுதேவர் ஒரு கட்டைவிரலை நோக்கியதுமே அவள் தமயந்தி என அறிந்துகொண்டார். மற்ற விரல்கள் அனைத்தும் கருமைகொண்டு நகம் சுருண்டு உருவழிந்திருந்தன. அக்கட்டைவிரல் நகம் மட்டும் புலியின் விழிமணிபோல பளிங்கொளி கொண்டிருந்தது. அம்முதுமகளை ஏறிட்டு நோக்கியபோது அவள் தமயந்தி அல்ல என்று அவர் விழி சொன்னது. குனிந்து கால்நகத்தை நோக்கியபோது பிறிதொருவர் அல்ல என்றது சித்தம். குழம்பியபடி தன் படுக்கையில் படுத்துக்கொண்டு அரைதுயிலில் ஆழ்ந்து ஒரு கனவிலெழுந்தார். அங்கே அவர் சிலம்புகள் ஒலிக்க படியிறங்கிவரும் அரசியின் காலடிகளைக் கண்டார். அந்நகத்தை மட்டும் நோக்கி “அரசி, தாங்களா?” என்று கூறியபடி விழித்துக்கொண்டார்.

சுதேவர் வந்து சொன்னதைக் கேட்டு அரசர் நடுங்கிவிட்டார். இளவரசர்கள் “அம்முதுமகளை எம் தமக்கையென எவ்வண்ணம் நம்புவது? அவளே தானென்று உணராத நிலையில் அந்தணரின் சொல்லை மட்டும் நம்பி அவளை எப்படி ஏற்பது?” என்றார்கள். முதிய அமைச்சர் விஸ்ருதர்

“அரசே, இங்கிருந்து அமைச்சர் குழு ஒன்று நிமித்திகர்களையும் மருத்துவர்களையும் அழைத்துக்கொண்டு சூக்திமதிக்கு செல்லட்டும். அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் முறைமைப்படி அவள் யார் என்று சொல்லட்டும்” என்றார். “அமைச்சர் குழுவை நானே வழிநடத்தி அழைத்துச்செல்கிறேன்.”

அமைச்சர் தலைமையில் சென்ற குழுவினர் முதலில் அவளைக் கண்டதும் அஞ்சிக் குழம்பினர். கரிய நீரோடையில் விழுந்துகிடக்கும் பொன்நாணயம்போல அவள் உடலில் ஒரு நகம் மட்டும் ஒளிகொண்டிருந்தது. நிமித்திகர்கள் அவள் தலைமுடியொன்றை எடுத்துவந்து நிமித்தநூல்படி ஆராய்ந்து அவள் தமயந்திதான் என உறுதிசெய்தனர். அந்த முடியை வைத்து களன் கணித்து அவள் அரவுச்சூழ்கை கொண்டிருப்பதை அறிந்தனர். அவள் உடலை முக்குறை தேர்ந்து முறைமைப்படி நோக்கிய மருத்துவர் அவள் உடலில் நாகநஞ்சு ஊறியிருப்பதை கண்டனர். ஏழுநிலை மருத்துவம் வழியாக அவளை மீட்டெடுக்க முடியும் என்றனர். ஆனால் மூதமைச்சர் விஸ்ருதர் “இந்நிலையில் இருந்து மீட்டு அவரை எங்கே கொண்டுசெல்கிறோம்? மீண்டும் துயரங்களுக்குத்தானே?” என்று ஐயுற்றார்.

அவருடன் சென்ற முதுநிமித்திகரான சௌகந்திகர் “அரசி அறியவேண்டியவையும் கடக்கவேண்டியவையும் இன்னும் உள்ளன. அவற்றைத் தொடாது தாண்டிச்செல்வது பிறவியெச்சமென்று நீடிக்கும். வாழ்வென்பது ஒன்றே. அதை தனி நிகழ்வுகளாக்குவதும் இன்பதுன்பமெனப் பிரிப்பதும் தன்னில் நின்று நோக்கும் அறியாமையும் தானே என்னும் ஆணவமும்தான். இன்பமென்று இன்றிருப்பது நாளை

துன்பமென்றாகலாம். துன்பமென்று இன்று சூழ்வது எண்ணுகையில் இனிப்பதாகலாம். நாம் அதை முடிவுசெய்யலாகாது” என்றார்.

மருத்துவர் அளித்த நச்சுமுறிகள் அவள் உடலில் இருந்த நஞ்சை மெல்ல வெளியேற்றின. பின் அந்நச்சுமுறிகளை வேறு மருந்துகள் கொண்டு வெளியேற்றினர். இறுதித்துளி நஞ்சு மட்டும் அவள் கால் நகத்தில் எஞ்சியது. கருங்குருவியின் அலகுபோல அவள் நகம் மின்னியது. “அதையும் தெளிவாக்க இயலாதா?” என்று அமைச்சர் விஸ்ருதர் கேட்டார். “கருவறையிலிருந்து வந்த பின்னரும் தொப்புள் எஞ்சுவதை கண்டிருப்பீர்கள், அமைச்சரே. எதுவும் எச்சமின்றி விலகுவதில்லை” என்றார் மருத்துவர்.

ஒவ்வொரு நாளாக அவள் இளமை மீண்டாள். இளமை மீளும்தோறும் நினைவுகள் கொண்டாள். தன் இழந்த அரசை, பிறந்த நகரை, பிரிந்த மைந்தரை எண்ணி விழிநீர் உகுத்தாள். தன் கணவனை அன்றி பிற எண்ணம் அற்றவளாக ஆனாள். விழிநீர் உகுத்துக்கொண்டிருந்த அவளைத்தான் குண்டினபுரியிலிருந்து சென்ற ஏழு இளவரசர்கள் கண்டனர். அவர்களைக் கண்டதும் அழுதபடி எழுந்தோடி வந்து அவள் “நிஷதரைப்பற்றிய செய்தியுடன் வந்தீர்களா?’’ என்றுதான் கேட்டாள். அவர்கள் “உங்களைப்பற்றிய செய்தி அறிந்துவந்தோம், மூத்தவளே” என்றனர். “நான் இருப்பது அவர் வாழ்வதைச் சார்ந்தே” என்று அவள் மறுமொழி சொன்னாள்.

சுநாகர் சொல்லி நிறுத்தி ஒரு பாக்கை போட்டுக்கொண்டதும் கதை கேட்டு அமர்ந்திருந்த அயலவர்களில் ஒருவர் “நிஷதர் எங்கே என்று இன்னும் தெரியவில்லையா என்ன?” என்றார். “அவரை ஏழு நிலங்களிலும் ஏழு கடல்களிலும் தேடிவிட்டனர்.

அதன் பின்னரே நிமித்திக அவை கூடியது. பன்னிரு களம் பரப்பி அவர் இன்றில்லை என்று அவர்கள் உறுதி செய்தனர். நாற்பத்தொருநாள் அரசி துயர் காத்தார். அதன் பின்னர் அவரிடம் மறுமணத்தைக் குறித்து அவர் அன்னை பேசினார். துயர்மீண்ட அரசி அதற்கு முதலில் ஒப்பவில்லை. அரசரும் உடன்பிறந்தாரும் அமைச்சரும் அவரிடம் பேசினர். அவர் அச்சொற்களைக் கேட்டு செவிபொத்திக்கொண்டு கண்ணீர்விட்டார்" என்றார் சுநாகர்.

"இறுதியாக அவரை அரசருக்கு ஆசிரியராகிய தமனரின் தவக்குடிலுக்கு அழைத்துச்சென்றனர். சொற்களிலிருந்து உள்ளத்தின் விடையை தேரமுடியாது அரசி. உன் கனவுகளிலிருந்து அதை தேடி எடு. சொல்லின்றி சிலநாள் இங்கே இரு என்றார் தமனர். அவர் சொன்னதன்படி அங்கே தன்னந்தனிமையில் ஏழு நாட்கள் அரசி தங்கியிருந்தார். ஏழாம்நாள் அவர் ஒரு கனவு கண்டார். அக்கனவில் அவர் கால்கட்டைவிரலை ஒரு நாகம் கவ்வி நெளிந்தது. அவர் விழித்துக்கொண்டு மறுமணம் புரிந்துகொள்ள ஒப்புவதாக சொன்னார்."

அடுமனையாளர்கள் பின்நிரையில் ஈச்சையோலைப் பாயில் படுத்தும் அமர்ந்தும் சுநாகரின் பேச்சை கேட்டுக்கொண்டிருந்தார்கள். அவர்களின் நடுவே சுவர்சாய்ந்து வேறெங்கோ நோக்கியதுபோலிருந்த பாகுகன் "அயோத்தியின் அரசரை வரச்சொன்னது அரசியேதானா?" என்றான். அனைவரும் அவனை நோக்கி திரும்பினர். "அடுமனையாளர்களுக்குத் தெரியாத அரசுமந்தணம் இல்லை என்பார்கள். நீ இப்படி கேட்கிறாய்?" என்றார் சுநாகர். "அவன் அயலூர் அடுமனையாளன். சற்றுமுன்னர்தான் நகர்

நுழைந்தான். உண்டு இளைப்பாற இங்கு வந்தான்” என்றான் இளைய அடுதொழிலன் ஒருவன்.

“குள்ளரே, அரசி அனுப்பிய வினாக்களுக்கு அயோத்தியின் அரசர் மட்டுமே சரியான மறுமொழியை சொன்னதாகச் சொல்கிறார்கள். அச்செய்தியை அறிந்ததும் பிற அரசர்கள் சினம்கொண்டுள்ளனர். அவர்கள் பெண்கோள்பூசலுக்கு படைகொண்டு வரக்கூடும் என அஞ்சுகிறார் அரசர். எனவே மகதமோ கலிங்கமோ கூர்ஜரமோ படைஎழுவதற்குள் மணம் முடிந்துவிடவேண்டும் என திட்டமிட்டுத்தான் அயோத்தியின் அரசரை உடனே வரும்படி சொல்லியிருக்கிறார்கள். செய்தி கிடைத்த அக்கணமே கிளம்பி ஒருநாளுக்குள் இங்கே வந்துசேர்ந்துவிட்டார் அயோத்தியின் அரசர்” என்றார் சுநாகர். அடுமனையாளன் ஒருவன் படுத்தபடி “அவருடைய தேர்வலனைப் பற்றி பேசிக்கொள்கிறார்கள். பேருடலன். ஒற்றைக்கையால் நான்கு புரவிகளைப் பிடித்து நிறுத்தும் ஆற்றல்கொண்டவன்” என்றான்.

“நாகமறியாத ஏதும் நிகழ்வதில்லை மண்ணில்…” என சுநாகர் மீண்டும் தொடங்கினார். “விண்ணாளும் சூரியனையும் சந்திரனையும் கவ்வி இருளச்செய்யும் ஆற்றல்கொண்டது நாகம். ஒவ்வொருவர் காலடியிலும் அவர்களுக்கான நாகம் வாழ்கிறது என்கின்றன நூல்கள்” என்றபின் பாகுகனிடம் “உமது பெயர் என்ன, குள்ளரே?” என்றார். “பாகுகன்” என்று அவன் சொன்னான். “அரிய பெயர். உமது பெயரின் கதையை சொல்கிறேன்” என சுநாகர் தொடங்கினார்.

“முற்காலத்தில் இப்புவி நாகங்களால் மட்டுமே நிறைந்திருந்தது. அன்றொருநாள் ஸ்தூனன் உபஸ்தூனன் என்னும் இரு நாகங்கள் பிரம்மனை அணுகி நாங்கள்

இணைந்து செயல்பட எண்ணியிருக்கிறோம். தனித்துச் செயல்படுவதைவிட எங்களால் இணைந்து விரைவும் ஆற்றலும் கொள்ளமுடிகிறது என்றனர். அவ்வாறே ஆகுக என்றார் பிரம்மன். பின்னர் ஸ்தூனர்கள் பாகுகன் உபபாகுகன் என்னும் வேறு இரு நாகங்களுடன் வந்தனர். நாங்கள் நால்வரும் இணைந்தால் மேலும் ஆற்றல்கொள்கின்றோம். எங்களுக்கு அதற்குரிய உருவை அளிக்கவேண்டும் என்றனர். அவ்வாறே ஆகுக என்றார் பிரம்மன். கால்களும் கைகளுமென எழுந்த நான்கு நாகங்களின் தொகையே மானுடனாக மண்ணில் பிறந்தது."

"இது என்ன புதிய கதை?" என அயல்வணிகர் ஒருவர் நகைத்தார். "இது குடிநாகர்களின் தொல்கதை. அறிந்திருப்பீர், நான் உரககுடியினன். நாகசூதர்களென நாடுகள்தோறும் அலைபவர்கள் நாங்கள். இமையா விழிகளால் இவ்வுலகை நோக்குபவர்கள். பிளவுண்ட நாவால் இருபால்முரண் கொண்ட கதைகளை சொல்பவர்கள்" என்றார் சுநாகர். "முன்பொரு காலத்தில் இந்தப் பெருநிலம் நாகர்களால் நிறைந்திருந்தது. அவர்களை வென்றும் கொன்றும் நிலம் கொண்டார்கள் மன்னர்கள். அவர்களின் கதைகளை வெல்ல அவர்களால் இயலவில்லை. இந்நிலத்தை சிலந்திவலையென மூடியிருக்கின்றன எங்கள் கதைகள். மண்ணுக்கடியில் வேர்கள் வந்து தொட்டு உறிஞ்சுவதெல்லாம் எங்கள் சொற்களே என்றுணர்க!"

முதற்புலரியில் அடுமனைக்குள் நுழைந்த பாகுகன் தயங்கி நின்றபின் "அனைவரையும் வணங்குகிறேன்" என்றான். அடுமனையாளர்கள் அப்போதுதான் கலங்களை உருட்டி உள்ளே கொண்டுவந்துகொண்டிருந்தனர். அனல் மூட்டப்பட்ட

அடுப்பில் தழல் தயங்கிக்கொண்டிருந்தது. முதிய அடுதொழிலர் உத்ஃபுதர் திரும்பிப்பார்த்து “யார் நீ?” என்றார். “நான் அயோத்தியிலிருந்து நேற்று இரவு வந்தவன். என் பெயர் பாகுகன். சூதன். பரிவலன், அடுதொழிலன்” என்றான். உத்ஃபுதர் அவனை கூர்ந்து நோக்கியபின் “உன் அகவை என்ன?” என்றார். “நாற்பது” என்றான் பாகுகன். “ஆம், எண்ணினேன். ஆனால் அசைவுகளில் சிறுவன்போலிருக்கிறாய். இது அரசர்களுக்குரிய அடுமனை. உனக்கு அடுதொழில் தெரியுமென்பதற்கு என்ன சான்று?” என்றார்.

பாகுகன் அருகிருந்த சட்டுவத்தின் முனையால் அங்கிருந்த அரிமாவில் சற்று எடுத்து அடுப்புத்தழலுக்குள் காட்டி வெளியே எடுத்து அவரிடம் நீட்டினான். உத்ஃபுதர் முகர்ந்து புன்னகைத்து “ஆம்” என்றார். “நீர் நிஷாத அடுதொழில் மரபைச் சேர்ந்தவர். நளமாமன்னரை கண்டிருக்கிறீரா?” பாகுகன் புன்னகைத்து “அறிவேன்” என்றான். உத்ஃபுதர் அந்த அரிசிமாவை அருகிருந்தவரிடம் காட்டி “ஒருகணம் பிந்தியிருந்தால் கரிந்திருக்கும். முந்தியிருந்தால் மாவு. இப்போது வறுமணம் எழும் பொன்பொரிவு” என்றார். “அறிக, அடுதொழில் என்பது அனலை வழிபடுவதே. இது எரி எழுந்த ஆலயம் என்கின்றன நூல்கள்.” திரும்பி பாகுகனிடம் “வருக, தங்கள் கைபடுமென்றால் இங்கு தண்ணீரும் சுவை கொள்ளும்” என்றார்.

இளைய அடுதொழிலர் பாகுகனை சூழ்ந்துகொண்டார்கள். அவன் “நாம் என்ன சமைக்கவிருக்கிறோம்?” என்றான். “இன்று ஒரு உண்டாட்டு உண்டு என்று எங்களுக்கு அறிவிக்கப்பட்டது. நம் அரசி தன் கொழுநனை அடையும் நாள் இது என்றார்கள். பெருமணநிகழ்வு பின்னர் வரலாம்” என்றார் அடுதொழிலர் ஒருவர். “ஆம், அதற்கென சமைப்போம்” என்று பாகுகன்

சொன்னான். சில கணங்களுக்குள் அங்குள்ளவர்கள் அவன் கைகளும் உள்ளமும் ஆனார்கள். "ஒற்றைத்துளி உப்பை ஊசிமுனையால் தொட்டு நாவிலிட்டால் சுவைதிகழ்கிறது. அது துளிச்சுவை. மொழிகளெல்லாம் ஒலித்துளிகளின் தொகுப்பே. இளையோரே, சுவைத்துளிகளை கோக்கத்தெரிந்தவனே அடுமனையாளன். ஒன்றில் கணக்கு நிற்கட்டும். ஒன்றுநூறென்று ஆயிரமென்று பெருகட்டும்…"

மணமும் சுவையுமாக உணவு எழுந்து அடுகலங்களை நிறைத்தது. "புதுச்சமையலின் மணம். உண்பவர் அரசரேனும் ஆகுக! இந்த மணம் அடுமனையாளனுக்கு மட்டுமே உரியது" என்றார் உத்ஃபுதர். பாகுகன் மணையில் அமர்ந்து கால்களை நீட்டிக்கொண்டு வெளியே இருந்து வந்த காற்றை உடலில் வாங்கி கண்களை மூடிக்கொண்டான். உத்ஃபுதர் பாக்குத்துண்டு ஒன்றை வாயிலிட்டு கண்களை மூடினார். வாயிலில் நிழலாடியது. பாகுகன் நிமிர்ந்து நோக்க "நான் அயோத்தியின் தேர்வலரை பார்க்க வந்துள்ளேன். அரசியின் அணுக்கி. என் பெயர் கேசினி" என்றாள். பாகுகன் "வணங்குகிறேன், தேவி. நான் பாகுகன்" என்றான்.

அவன் எழுந்து அருகிருந்த அறைக்குச் செல்ல கேசினி உடன்வந்தாள். "உங்கள் அரசரை ஒருநாளில் இத்தொலைவு கூட்டிவந்தீர்கள் என்று அரசி அறிந்தார். என்னை அனுப்பி அதன்பொருட்டு உங்களுக்கு நன்றி தெரிவிக்கும்படி சொன்னார்" என்றாள். பாகுகன் "அது என் கடமை" என்றான். "அரசி அயோத்தியின் அரசரை மணக்க விழைவுகொண்டிருக்கிறார். அது உங்களாலேயே நிறைவேறியது என்று உவகை சொன்னார்" என்ற கேசினி "உங்கள் அரசரிடம் அவர் கேட்ட மூன்று வினாக்களை அறிந்திருப்பீர். நீங்கள் அவருக்குத்

தகுதியான தேர்வலரா என்றறிய உங்களிடம் மூன்று வினாக்களை கேட்டுவரச் சொன்னார்” என்றாள். பாகுகன் “கேளுங்கள், தேவி” என்றான். “முதுமையே அணுகாமல் வாழ்பவர் யார்? இறப்பேயற்ற அன்னையை கொண்டவர் யார்? ஆடைகளில் மிகப் பெரியது எது?” என்றாள் கேசினி. “இப்புதிர்களுக்கு நீங்கள் மறுமொழி சொன்னால் உங்களுக்கு அரசி ஓர் அருமணியை பரிசளிப்பார்.”

பாகுகன் அவளையே நோக்கிக்கொண்டிருந்தான். “சொல்க!” என்று அவள் சிரித்தாள். பாகுகன் “உள்ளத்தால் முதுமைகொண்டவர் முதுமைகொள்வதே இல்லை” என்றான். “உள்ளத்தால் இளமையிலிருப்பவரின் அன்னை மறைவதே இல்லை.” அவள் “இது சரியான மறுமொழியா என்று அறியேன். சரி, மூன்றாவது மறுமொழி என்ன?” என்றாள். “மிகப் பெரிய ஆடை இருளே” என்றான் பாகுகன். அவள் நகைத்து “நன்று அரசியிடம் சொல்கிறேன்” என்றபின் “இன்றிரவே அயோத்தியின் அரசருக்கு அவைவரவேற்பு அளிக்கப்படும். அதில் மணக்கொடையை அரசரே அறிவிப்பார். நீங்களும் அவைநிற்கவேண்டும் என்று அரசி விழைகிறார்” என்றாள்.

பாகுகன் “எங்கள் அகம்படியினர் இன்று மாலைக்குள் வந்தணைந்துவிடுவார்கள். அமைச்சரும் படைத்தலைவரும். அவர்கள் அரசருக்கு அவைத்துணையாவர். நான் எளிய சூதன்” என்றான். “அரசியின் ஆணை இது” என்றபின் கேசினி தலைவணங்கி கிளம்பிச்சென்றாள். அவள் செல்வதை அவன் நோக்கிக்கொண்டு அமர்ந்திருந்தான். அவள் விழிமறைந்ததும் சென்றுகொண்டே இருந்த தேரிலிருந்து விழுந்து மண்ணிலறைபட்டவனாக அதிர்ந்து விழித்துக்கொண்டான். எழுந்து வெளியே அடுமனையாளர்களுடன் சென்று

சேர்ந்துகொள்ளவேண்டும் என எண்ணினான். ஆனால் தன் உடலை அவனால் தூக்கமுடியவில்லை.

அருகே கிடந்த நீண்டபிடிகொண்ட அகப்பையை எடுத்து அதைக் கொண்டு அறைக்கதவை மூடினான். ஒரு கலத்தை உருட்டி கதவை அணைகொடுத்து நிறுத்தினான். இருட்டு அறைக்குள் நிறைந்து மூடிக்கொண்டது. கண்களை மூடிக்கொண்டு அசைவில்லாமல் அமர்ந்திருந்தான். பின்னர் தன் முன்னால் அவனை உளவுருவாக சமைத்துக்கொண்டான். மீண்டும் மீண்டும் வெட்டவெளியில் அவ்வுருவை அவன் உள்ளம் வனைந்தது. “நீயா?” என்றான். மறுமொழி இல்லை என விழிதிறந்தபோது வெற்றிடத்தைக் கண்டு சலிப்புடன் மீண்டும் விழிமூடிக்கொண்டான். மூன்றுமுறை விழிதிறந்தபின் அந்த உளவிளையாட்டு சலித்துப்போய் கண்களை மூடிக்கொண்டு துயில முயன்றான். ஆனால் எச்சரிக்கையுணர்வு அவனை தூங்கவும் விடவில்லை. பெருமூச்சுடன் புரண்டு படுத்தான். வெளியே “பாகுகர் எங்கே?” என்ற குரல் கேட்டது.

பாகுகன் எழப்போனபோது மிக அருகே அவனை உணர்ந்தான். “அவள் உணர்ந்துவிட்டாள்” என்று அவன் சொன்னான். “ஆம்” என்றான் பாகுகன். “நீ என அவளுக்குத் தெரியும். நீ எதை உணர்கிறாய் என அறிய விழைகிறாள்.” பாகுகன் பெருமூச்சுவிட்டான். “நீ ஏன் எழுந்து ஓடி அவள் அரண்மனை வாயிலில் சென்று நிற்கவில்லை? ஏன் அவளை ஒருகணமும் மறந்ததில்லை என்று சொல்லவில்லை?” பாகுகன் சில கணங்கள் தலைகுனிந்து அமர்ந்தபின் “அவள் ஏன் இங்கே வரவில்லை? என் முன் வந்து நின்று கண்ணீர்விடவில்லை?” என்றான். “அவள் உன்னைப்போலவே எண்ணுவதனால்” என்றான்.

கசப்புடன் புன்னகைத்தபின் பாகுகன் எழப்போனான். அவன் “ஒருகணம் பொறு. நீ எளிதில் விடுபடமுடியும்” என்றான். “உன்னிடமே முறிமருந்து உள்ளது.” பாகுகன் பேசாமலிருந்தான். “நீ விழையவில்லையா?” பாகுகன் மறுமொழி சொல்லாதது கண்டு “சொல், நீ மீளவும் சேரவும் எண்ணவில்லையா?” என்றான். பாகுகன் “அவள் அரசி” என்றான். “நீயும் அரசனாக முடியும்.” பாகுகன் பெருமூச்சுவிட்டு “செல்க... என்னை அழைக்கிறார்கள்” என்றான். “நீ ஏன் தயங்குகிறாய்? அவள் முன் தணியக்கூடாது என்றா? அவள் உன்னைத் தேடிவந்து காலடியில் விழவேண்டுமென்றா?” பாகுகன் “நான் செல்லவேண்டும்” என்று எழுந்துகொண்டான்.

அவன் எழுந்து பாகுகனுக்குப் பின்னால் வந்தபடி “உதறிச்சென்றவன் நீ. திரும்பிச்செல்லவேண்டிய பொறுப்பு உனக்கே” என்றான். “நான் இதைப்பற்றி பேசவிரும்பவில்லை” என்றான் பாகுகன். “இத்தனை தொலைவு அலைந்து மீண்டுவிட்டு இந்த ஒருகணத்திற்கு இருபுறமும் நின்றிருப்பீர்களா என்ன?” பாகுகன் கதவைத் திறந்தான். வெளியே இருந்து ஒளி முகத்தில் பொழிய கண்கூசி விழிநிறைந்தான். “இங்கிருக்கிறீர்களா, பாகுகரே? உங்களை தேடிக்கொண்டிருந்தோம்” என்றான் அடுமனையாளன். பாகுகன் ஒன்றும் சொல்லாமல் முன்னால் நடந்தான்.

அடுமனையாளன் அறைக்குள் சென்று கமுகுப்பாளைத் தொன்னைகளின் கட்டை எடுத்துக்கொண்டு “நான் தொன்னையை எடுக்கத்தான் வந்தேன். எவர் பூட்டியது இவ்வறையை என வியந்தேன்” என்றான். பாகுகன் பெருமூச்சுவிட்டு “நான் உடனே கிளம்பவேண்டும்” என்றான். “கிளம்புகிறீர்களா? என்ன சொல்கிறீர்கள்?” என்றான்

அடுமனையாளன். “அரசரின் ஆணை. நான் உடனே அயோத்திக்குச் செல்லவேண்டும்... பெரியவரிடம் நான் சென்றுவிட்டதாகச் சொல்லிவிடு” என்று பாகுகன் சொன்னான். “ஒருநாள்கூட நீங்கள் இங்கே தங்கவில்லை. நீங்கள் சமைத்ததை எம்மனோர் உண்பதை பார்க்கவுமில்லை.” பாகுகன் புன்னகையுடன் “பிறிதொருமுறை வருகிறேன்” என்றான்.

# நீர்க்கோலம் - 93

**92. பொற்புடம்**

❀கேசினி சிறிய கிண்ணத்தை எடுத்து தமயந்தியின் முன்னால் வைத்து “அடுமனையிலிருந்து எடுத்துவந்தேன், அரசி. இது பாகுகரால் சமைக்கப்பட்ட ஊனுணவு” என்றாள். தமயந்தி அதை எடுத்தபோதே முகம் மலர்ந்து “கனிச்சாறிட்டு சமைக்கப்பட்டது. இது நிஷத அரசரின் கைமணமேதான்” என்றாள். கேசினி “அவர் சொன்ன மறுமொழிகளை சொல்கிறேன்” என்றாள். மரக்கரண்டியால் அவ்வூனுணவை அள்ளி உண்ணப்போனபின் தாழ்த்திய தமயந்தி “சொல்” என்றாள். அவள் சொன்னதும் ஒருகணம் உளம் விம்மி விழிநீர் துளித்து முகம் தாழ்த்தினாள்.

பின்னர் எழுந்துகொண்டு “இதை நான் அவர்களிடம்தான் முதலில் அளிக்கவேண்டும்” என எழுந்தாள். கண்ணீரை துடைத்துக்கொண்டு வெளியே சென்றாள். சேடியிடம் “இளவரசர் எங்கே?” என்றாள். “ஆசிரியர் வந்துள்ளார். வகுப்பு நடந்துகொண்டிருக்கிறது” என்றாள் சேடி. தமயந்தி வகுப்பு நிகழ்ந்த சிற்றறைக்கு வெளியே நின்று “வணங்குகிறேன், அந்தணரே” என்றாள். அவள் எண்ணத்தை உணர்ந்த ஆசிரியர்

“சென்று வருக!” என்று கைகாட்டினார். இந்திரசேனனும் இந்திரசேனையும் எழுந்து வந்தனர்.

பூமீசையும் குரல்வளைமுழையும் திரண்டதோள்களுமாக இருந்த இந்திரசேனன் விழிகளில் வினாவுடன் தலைவணங்கினான். இந்திரசேனை அவனுக்குப் பின்னால் வந்து பாதி மறைந்து ஒரு விழி காட்டி நின்றாள். தோள்கள் திரண்டு முலை முகிழ்த்து கன்னங்களில் சிறுபருக்களுடன் பெண்ணென்று உருக்கொள்ளத் தொடங்கியிருந்தாள். நளனால் அவர்களை அடையாளம் காணமுடியுமா என்ற ஐயம்தான் முதலில் அவளுக்கு ஏற்பட்டது. கையிலிருந்த கிண்ணத்தை நீட்டி “இவ்வுணவின் சுவை எதை நினைவூட்டுகிறது?” என்றாள்.

அவன் அதை வாங்கியதும் முகம் மாறினான். கைகள் நடுங்க அறியாது திரும்ப நீட்டினான். அதை இந்திரசேனை பற்றிக்கொண்டாள். “தந்தை” என்றான். “எங்கிருக்கிறார்? இங்கு வந்துவிட்டாரா?” என்று உரக்க கேட்டபடி அவள் தோள்களை பிடித்தான். “சொல்கிறேன்” என்றாள் தமயந்தி. “அகத்தளத்திற்கு வா!” இந்திரசேனை விம்மியழத் தொடங்கிவிட்டிருந்தாள். இருவருமே அந்த ஊனுணவை வாயிலிடவில்லை. அவள் நடந்தபோது உடன் சிலம்பொலிக்க இந்திரசேனை ஓடிவந்தாள். அவள் தோளைப்பற்றி நிறுத்திய இந்திரசேனன் “எங்கிருக்கிறார் தந்தை? நலமாக இருக்கிறாரா? அதைமட்டும் சொல்லுங்கள்” என்றான். “நலமாக இருக்கிறார் என்றே எண்ணுகிறேன்” என்றாள் தமயந்தி. “எங்கே இருக்கிறார்?” என்று அவன் தொண்டை உடைந்த இளங்குரலில் கூவினான்.

“அவர் எங்கிருக்கிறார் என்று தெரியவில்லை. நேற்று நம் அடுமனைக்கு புதிய சூதன் ஒருவன் வந்தான். பாகுகன் என்பது அவன் பெயர். அவன் சமைத்த ஊனுணவு இது…” இந்திரசேனன்

அவள் கைகளை பற்றிக்கொண்டு "அவர்தான் நம் தந்தை... அவர் மாற்றுரு கொண்டிருக்கிறார். ஐயமே இல்லை" என்றான். "ஆனால் நம் அரசர் அல்ல என்றே தோன்றுகிறது" என்று தமயந்தி சொன்னாள். "அவன் நம் அரசரை நன்கறிந்தவன். அவர் கைமணத்தை தான் கற்று அறிந்தவன். அவனுக்கு நம் அரசர் எங்கிருக்கிறார் என்று தெரியும் என்பது உறுதி."

"ஆம், இப்போதே அவனை சென்று பார்க்கிறேன். அவனிடம் கேட்கிறேன்" என்று இந்திரசேனன் கிளம்பினான். தமயந்தி "நீயும் செல்! அவன் ஒருவேளை சினம் கொள்ளக்கூடும். நாம் அவ்வடுமனையாளனை கெஞ்சியோ மிஞ்சியோ அரசர் இருக்குமிடத்தை அறிந்தாகவேண்டும்..." என்றாள். முன்னால் சென்றுவிட்டிருந்த இந்திரசேனன் திரும்பி "விரைந்து வா... அன்னம்போல் நடக்கும் பொழுதா இது?" என்று தங்கையை அதட்டிவிட்டு படியிறங்கிச் சென்றான்.

தமயந்தி பெருமூச்சுடன் சற்று அப்பால் வந்து நின்றிருந்த கேசினியிடம் "என் மேலாடையை எடு" என்றாள். "என்ன இது, அரசி? எனக்குப் புரியவில்லை" என்றாள் கேசினி. "மனைவியிடமிருக்கும் இறுதிப்படைக்கலம்" என்றாள் தமயந்தி. அவளும் படியிறங்கி மைந்தர் சென்ற பாதையில் நடந்தாள். பின் நின்று தன் சிலம்புகளையும் வளையல்களையும் கழற்றி கேசினியிடம் அளித்துவிட்டு மேலாடையை நன்கு செருகிக்கொண்டு ஓசையின்றி நடந்துசென்றாள்.

இரு இளையோரும் செல்லும்தோறும் விரைவு மிகுந்து ஓடலானார்கள். அவர்கள் அடுமனைக்குள் நுழைந்ததும் இந்திரசேனன் "பாகுகர் எங்கே? நேற்று வந்த புதிய அடுமனையாளர்?" என்றான். முதிய குரல் "அவன் இன்று கிளம்பிச் செல்கிறானே? மூட்டைகளை கட்டிக்கொண்டிருந்தான்.

கிளம்பியிருப்பான் என எண்ணுகிறேன்” என்றது. தமயந்தி உளம் திடுக்கிட நெஞ்சில் கைவைத்தாள். இந்திரசேனன் “அவரது அறை எங்கே?” என்றபின் உள்ளே ஓடினான். இந்திரசேனை உடன் ஓடும் ஒலி கேட்டது.

தமயந்தி அவர்களை ஒலியினூடாகவே தொடர்ந்தாள். சிற்றறைக்கு முன் அவர்கள் தயங்குவதைக் கண்டதுமே நெஞ்சு நிலைகொள்ள பெருமூச்சுடன் சுவர் மறைவில் நின்றாள். அவர்கள் உள்ளே இருந்த பாகுகனைக் கண்டதும் திகைத்து சொல்லிழந்தனர். “பாகுகன் என்பவர்?” என்று இந்திரசேனன் கேட்டான். உள்ளிருந்த குரல் “நான்தான்... தாங்கள் யார்?” என்றது. அதிலிருந்த நடுக்கமே அவர்களை அவன் அறிந்துவிட்டான் என்பதை காட்டியது. “நாங்கள் எம் தந்தையை தேடிவந்தோம்” என்றாள் இந்திரசேனை. இந்திரசேனன் அவளை திருத்தும் முகமாக “அவரைப்போலவே சமைக்கும் ஒருவர் இங்கிருப்பதை உணர்ந்தோம். நீங்கள் சமைத்தது என்பதை அறிந்தோம். ஆகவே நீங்கள் எந்தை இருக்குமிடத்தை அறிந்திருக்கக்கூடுமென எண்ணினோம்” என்றான்.

“ஆம், அறிவேன்” என்றான் பாகுகன். “அறிவீர்களா? எங்கே?” என்றான் இந்திரசேனன். “எங்கு இருள் கலையாமல் தேங்கியிருக்கிறதோ அங்கே. சில மீன்கள் ஒருபோதும் ஒளியை அறியாமல் ஏரிகளின் ஆழத்தில் சேற்றுக்குள் வாழ்கின்றன. அவற்றைப்போல” என்று பாகுகன் சொன்னான். “விலகாத இருளென்பது ஒருவன் தன்னுள் இருந்து எடுத்துக்கொள்வதே. நான் உங்கள் தந்தையைக் கண்டபோது அவர்மேல் இருள் கவிந்துகொண்டிருந்தது. நான்கு திசைகளிலிருந்தும் இருளை எடுத்து தன்னை மூடிக்கொள்ளத் தொடங்கியிருந்தார். பின்னர் இருள் முழுமையாக அவரை

மூடியது.” எரிச்சலுடன் இந்திரசேனன் “அவர் எங்கிருக்கிறார் என்று தெளிவாகச் சொல்லமுடியுமா?” என்றான்.

“அதை அறிந்து என்ன செய்யப்போகிறீர்கள்? செல்வம் திகழ்ந்த அரசை வைத்து சூதாடியவன். திருமகளும் கொற்றவையும் இணைந்தவள்போலிருந்த துணைவியை நடுக்காட்டில் விட்டுச்சென்றவன். மைந்தரை ஏதிலிகளாக்கியவன். தன்னைத் தானே ஒளித்துக்கொண்ட கோழை. அவனை மீட்டுக்கொண்டுவந்து என்ன செய்யவிருக்கிறீர்கள்?” இந்திரசேனன் தன் இடையிலிருந்த குறுவாளை உருவி நீட்டி “இழிமகனே, ஒரு சொல் எழுந்தால் அக்கணமே உன் கழுத்தை வெட்டுவேன். அரசர் பெருமையை அடுமடையரா அறிவர்?” என்றான். “என்னை வெட்டலாம். ஆனால் நான் ஒரு நா அல்ல. அவ்வினா எழுந்தபடியே இருக்கும் என்றும்” என்றான் பாகுகன்.

சினத்துடன் பற்களைக் கடித்தபடி இந்திரசேனன் சொன்னான் “மூடா, எளியோர் எதிர்கொள்ளும் இடர்களும் தடைகளும் எளியவை. பெரியோர் நூறென ஆயிரமென அவற்றை அடைகிறார்கள். அவற்றைக் கடப்பதினூடாகவே அவர்கள் மாமனிதர்களென தெய்வங்களுக்கு முன் நிற்கிறார்கள். தந்தை என்ன செய்தார் என்று உசாவுதல் மைந்தனின் பணி அல்ல. தன் செவிமுன் தந்தையைப் பழிப்பதை கேட்டிருப்பது அவன் நெறியும் அல்ல. அவர் அடைந்ததில் எஞ்சுவதை மட்டும் முன்னோர்கொடையெனக் கொள்வதே மைந்தரின் வழி. செல்வமும் புகழும் அறிவும் அவ்வாறே வந்தடையவேண்டும். கடனும் பழியும் இழிவும்கூட தந்தைக்கொடையென்றால் தலைவணங்கி ஏற்றாகவேண்டும்.”

“எந்தையை நான் அறிவேன். தன் எல்லைகள்மேல் தலையால் மோதிக்கொண்டிருந்தவர். நிஷாதர்களை பேரரசென்றாக்கியது

அவ்விசையே. அதுவே இன்று அவரை அலைக்கழிய வைக்கிறது. வென்று மீளலாம். மீளாது இருளில் மறையவும்கூடும். போரில் வெல்வதும் வீழ்வதும் ஷத்ரியர்களை விண்ணுலகுக்கே கொண்டுசெல்கிறது. தன்னுடன் போரிடுவதே வீரனின் முதன்மைப் பெருங்களம்" என்று இந்திரசேனன் சொன்னான். இந்திரசேனை கைகூப்பியபடி "பாகுகரே, தந்தையைப் பழிக்கக்கேட்டு மைந்தன் கொண்ட சினம் அது எனக்கொள்க! அருள்கூர்ந்து எங்கள் தந்தையின் இருப்பிடமேதென்று தெரிந்திருந்தால் சொல்க!" என்றாள். குரல் உடைய விம்மியழுதபடி "ஒருநாளும் அவரை எண்ணாமல் நான் துயில்கொண்டதில்லை. ஒருமுறையும் சுவையறிந்து உண்டதில்லை. அவரில்லாது புவியிலெனக்கு ஏதுமில்லை" என்றாள்.

பாகுகன் விம்மியழுதபடி இரு கைகளையும் விரித்தான். "தன் இடம் ஏதென்று தேடியவன் இப்போது கண்டடைந்தான்... தந்தையரின் நீங்கா உறைவிடம் மைந்தர் நெஞ்சமே" என்றான். நெஞ்சு வெடித்தெழுந்த குரலில் "என் குழந்தைகளே, பாகுகனாகிய நானே நளன். நாகநஞ்சால் உருத் திரிந்தேன்" என்றான். இந்திரசேனன் "உங்கள் உணர்வுகள் மெய்யானவை. ஆனால்..." என்றான். "என் செல்வமே வா!" என்றபடி பாகுகன் எழுந்து இந்திரசேனையின் கைகளை பற்றவந்தான். அவள் அறியாது பின்னடைந்தாள்.

ஆனால் அவன் அவள் கையை பற்றியதும் "தந்தையே!" என்று வீரிட்டாள். பாய்ந்து அவனை அணைத்துக்கொண்டு "தந்தையே தந்தையே" என்று அழுதாள். அவன் தலையை தன் நெஞ்சுடன் சேர்த்துக்கொண்டு "எங்கிருந்தீர் தந்தையே... எத்தனை துயரடைந்தீர்?" என்று விம்மினாள். அவன் அவள் மார்பில்

முகம் சேர்த்து கண்ணீர்விட்டு விசும்பினான். அருகணைந்து அவன் தோள்களைத் தொட்ட இந்திரசேனன் “இனி துயரில்லை, தந்தையே. எங்களுடன் இருங்கள்... இனி எங்களைப் பிரியாதீர்கள்” என்றான்.

சுவரோடு முகம் சேர்த்தபடி தமயந்தி விம்மி அழுதுகொண்டிருந்தாள். கேசினி அவள் தோளைத் தொட்டு “செல்க, அரசி! அவர் மீண்டு வந்துவிட்டார்” என்றாள். “இல்லை, அங்கு எனக்கும் இடமில்லை” என்றாள் தமயந்தி. கண்ணீருடன் சிரித்தபடி முகத்தைத் துடைத்து “அவர்களுக்குரிய பொழுது அது...” என்றாள். கேசினி அவள் குழலை மெல்ல நீவி “ஆம் அரசி, தொலைத்துக் கண்டடைந்தவர்கள் நற்பேறுடையோர். அவர்கள் பல மடங்காகப் பெறுகிறார்கள் என்று சூதர் சொல் உண்டு” என்றாள்.

❀நளன் குறுபீடத்தில் அமர்ந்திருக்க அவனை ஏவலர் அணிசெய்துகொண்டிருந்தனர். அவன் ஆடியையே நோக்கிக்கொண்டிருந்தான். வார்ஷ்ணேயன் அவனருகே நின்று ஆடியை நோக்கி “ஒரு திரையை உங்கள் மேலிருந்து தூக்கியதுபோல உள்ளது, அரசே. இத்தனை விரைவாக உடல்மீள்வீர்கள் என எண்ணவே இல்லை” என்றான். நளன் “நாற்பத்தொரு நாட்களுக்கு ஒருமுறை அனைத்து மானுடரும் முற்றாக இறந்து மீண்டும் பிறந்துவிடுகிறார்கள் என்பது உயிர்வேதத்தின் கூற்று. ஆகவேதான் அதை ஒரு மண்டலம் என்கிறார்கள்” என்றான்.

அவன் மீண்டு வந்துவிட்டதை குண்டினபுரிக்கு முறைப்படி அறிவித்திருந்தாலும் எந்த அவையிலும் அவன் தோன்றவில்லை. அவன் முழுமையாக உருமீண்டபின் எழுவதே மேல் என்றனர் அமைச்சர். “அரசனை தன்னைவிட

மேலானவன் என்று நம்ப விழைபவர் மக்கள். ஆகவே அரசன் என்பவன் முதன்மையாக புகழாலும் இரண்டாவதாக ஆற்றலாலும் மூன்றாவதாக தோற்றத்தாலும் முந்தியிருத்தல்வேண்டும்.” மருத்துவர் சூழ வரதையின் கரையிலமைந்திருந்த தனித்த சோலைக்கு கொண்டுசெல்லப்பட்டான். நச்சு நீக்க மருத்துவரான முதுநாகர் சர்ப்பர் தன் பதினெட்டு துணைமருத்துவர்களுடன் குண்டினபுரிக்கு வந்தார். அவரது குழு அவன் உடலை மீட்கும் பணியை தொடங்கியது.

அவன் அளித்த சிமிழில் இருந்த மருந்தை மருத்துவர்கள் ஆராய்ந்தனர். “அரசே, இது அண்டபாஷாணம் எனப்படுகிறது. கருமுட்டையென இருக்கும் நஞ்சு. இதை உங்கள் உடலிலேயே அடைகாத்து வளர்த்தெடுக்கவேண்டும். பின்னர் இது சிறகுவிரித்து உங்கள் உடலில் இருந்து பறந்தெழுந்து அகலவேண்டும். இது உங்கள் உடற்கூட்டில் இங்கிருக்கையில் தன் ஆறாப் பெரும்பசிக்கு உங்கள் உடலையே உண்ணும். உடலில் முந்தி நிற்பது நஞ்சென்பதனால் அதை முதலில் இரையாக்கும். உடலையும் சற்று அழிக்கும். நஞ்சு நீங்கி இம்மறுநஞ்சும் அகன்றால் உடல் மீளும். தான் மீள்வதை உடல் தானே அறிந்தால் மழைக்கால அருவியென கணந்தோறும் பெருகும். முன்னைவிட ஆற்றலும் அழகும் பெறுவீர்கள்” என்றார் சர்ப்பர்.

கோசஸ்புடம் என்னும் மருத்துவமுறைப்படி அவன் உடலில் ஒன்பது துளைகளினூடாகவும் நச்சுநீக்கு மருந்துகள் உட்செலுத்தப்பட்டன. பகல் முழுக்க மருந்து கலந்த களிமண்ணால் அவன் உடல் மூடப்பட்டது. இரவில் அதை அகற்றி எண்ணையில் ஊறிய துணியால் சுற்றிக்கட்டப்பட்டது.

ஒருதுளி ஒளிகூட நுழையாத சிறுகுடிலில் இருளில் அவன் நாற்பத்தொரு நாட்கள் வாழ்ந்தான். அவன் உடலின் அத்தனை அணுவறைக்குள்ளும் கரையான்புற்றில் நாகம் என நஞ்சு நுழைந்தது. அவன் உடலெங்கும் அனல்பற்றி எரிந்ததுபோல் துடித்தான். இரவும் பகலும் நினைவழியாது அரற்றிக்கொண்டிருந்தான். அவன் உடல் சிவந்து பழுத்து வீங்கியது. இமைகள் மடிப்பற்ற குமிழிகளாயின. முகம் பெரிய உருளையென்றாக குழவியுடல்போல சீர்த்தது.

நஞ்சு முழுமையாக அணுவறைகளில் நிறைந்ததும் தேன்நிறைந்த தட்டு என அவன் தசைகள் எடைகொண்டன. வலி அணைந்து உடலில் பெருப்புணர்வு மட்டும் எஞ்சியது. தன் உடலின் எப்பகுதியையும் அசைக்கமுடியாதவனாக அவன் விழிமலைத்து சித்தம் நிலைத்து இரவுபகல் நாள்பொழுதென்றில்லாமல் கிடந்தான். அவன் முடி முழுமையாக உதிர்ந்து முளைத்தது. நகங்களும் உதிர்ந்து மீண்டும் முளைத்தெழுந்தன. நாற்பத்தோராம் நாள்முதல் பதினெட்டு நாட்கள் காலையிலும் மாலையிலும் இளவெயிலில் அவன் உடல் காட்டப்பட்டது. மரப்பட்டைபோல பழைய தோல் உரிந்து அகல தளிர்த்தோல் வந்தது. தசைகள் இளகி பருத்துருண்டன.

அதுவரை அவன் தேனிலூறிய நெல்லிக்காயை மட்டுமே உண்டுகொண்டிருந்தான். பின்னர் பசியனல் எழ விழித்திருக்கும்போதெல்லாம் உண்டான். அறுபதாவது நாள் அவன் அரண்மனைக்கு மீண்டபோது தொலைவில் அவனைக் கண்ட தமயந்தி கூவியபடி எழுந்து பின் கால்தளர்ந்து அமர்ந்து கைகளில் முகம் புதைத்து தோள்குலுங்க விம்மினாள். மைந்தர் அவனை நோக்கி ஓடிவந்து கைகளை பற்றிக்கொண்டு

கண்ணீருடன் சிரித்தனர். “மீண்டும் முளைத்தெழுந்துவிட்டார், அரசி. இனி அகவை அறுபது எஞ்சியிருக்கிறது” என்றார் மருத்துவர்.

பீமகர் “நிஷதர் அவைபுகும் நாள் நோக்கி சொல்ல நிமித்திகரை அழைத்து வருக!” என ஆணையிட்டார். “நம் குடியவை தங்களை காணும்பொருட்டு ஒவ்வொரு நாளுமென காத்திருக்கிறது, நிஷாதரே” என்றார். நளன் பீமபலனை நோக்கி புன்னகைத்து “செல்வதும் மீள்வதும் எளியவையே என தெளிந்துவிட்டேன். இனி அஞ்ச ஏதுமில்லை” என்றான். பீமபலன் “மருத்துவரே, மானுட ஆளுமை என நாம் எண்ணுவது வெறும் தசைகளைத்தானா? அரசரின் நடையும் அசைவும் நகைப்பும் நோக்கும் முற்றிலும் மாறிவிட்டனவே?” என்றான். மருத்துவர் “அரசே, அருவனைத்தும் பருவிலேயே உருக்கொண்டாகவேண்டும் என்பது மருத்துவநூலின் முதல் சொல்” என்றார்.

குண்டினபுரியிலிருந்து மீள்கையில் ரிதுபர்ணன் நிகழ்ந்தவற்றை அறிந்து மகிழ்வுகொண்டிருந்தாலும் சிறிய உளச்சோர்வையும் கரந்திருந்தான். அவன் முன் பணிந்து நளன் சொன்னான் “உங்கள் உள்ளம் என்ன என்பதை தோழனாக நான் அறிவேன், அயோத்தியின் அரசே. நீங்கள் இழந்தவற்றுக்கு நிகராக ஒன்றை நான் அளிப்பேன். வார்ஷ்ணேயன் இங்கிருக்கட்டும். அவனுக்கு பரிநூலை முழுமையாகக் கற்பித்து அனுப்புவேன். நிஷதத்திற்கு இணையாக அந்த மெய்யறிவு அயோத்தியிலும் திகழட்டும். அது உங்களிடம் வாழும்வரை எவரும் உங்களை வெல்லமுடியாது.” ரிதுபர்ணன் முகம் மலர்ந்து அவன் தோளை தழுவிக்கொண்டான். “அது போதும். நாளை ஷத்ரியர் அவையில் என்னை எவரேனும் ஏளனம் செய்தால் பரிநூல்

பெறும்பொருட்டு நான் ஆடியதே இவையனைத்தும் என்று சொல்வேன்” என்று சிரித்தான். “இது இளிவரல் அல்ல. தொல்குடி ஷத்ரியரின் ஒரே இடர் என்பது பிற ஷத்ரியர்களின் ஏளனமே. அதை அஞ்சியே ஒவ்வொரு கணமும் வாழவேண்டியிருக்கிறது.”

வார்ஷ்ணேயன் “கண்களுக்குக் கீழே சுருக்கங்கள் எஞ்சியிருக்கின்றன, மருத்துவரே” என்றான். “நாங்கள் மூப்புக்கும் இறப்புக்கும் மருத்துவம் செய்வதில்லை” என்றார் அவர். நளன் நகைத்தபடி எழுந்துகொண்டு “செல்வோம்” என்றான். “அவைநுழைகையில் நான் எதற்கு துணைவனாக?” என வார்ஷ்ணேயன் சற்று தயங்கினான். “ஏன்?” என்று நளன் திரும்பிப்பார்த்தான். “நான் சூதன்” என்றான் வார்ஷ்ணேயன். “நிஷதனுக்கு சூதன் நற்துணையே” என்றான் நளன். வார்ஷ்ணேயன் தயக்கம் விலகாமல் புன்னகைத்து “அவை என்னை அச்சுறுத்துகிறது” என்றான்.

நளன் நகைத்து “அனைத்தையும் அறிவால் கடக்கலாம். பரிநூலில் தேர்ந்தபின் இதே அவையை எளிய மாணவர்திரள் என நோக்கமுடியும்” என்றான். “நான் இங்கு இன்னும் கற்கத் தொடங்கவில்லை” என்றான் வார்ஷ்ணேயன். “மெய்யான கல்வி என்பது ஆசிரியருடன் இருத்தலே...” என்றபடி நளன் திரும்பி “அணிகள் முழுமையடைந்தனவா?” என்றான். “ஆம், அரசே” என்றார் அணிச்சமையர். அவன் வார்ஷ்ணேயனிடம் “அந்தச் சிறுபேழையை எடும்!” என்றான்.

“இப்பேழையைத்தான் என்றும் உடன் வைத்திருந்தீர்கள். இதற்குள் என்ன இருக்கிறது என்று பேசிக்கொள்வோம். சில நாட்கள் நள்ளிரவில் நீங்கள் இதை திறந்து நோக்குவதை கண்டிருக்கிறோம்” என்றான் வார்ஷ்ணேயன். அதைத் திறந்து

உள்ளிருந்து வெண்ணிற பீதர்பட்டாடையை வெளியே எடுத்தான் நளன். “இது பீதர்பட்டாடை… பொன்னூல்பின்னல் கொண்டது.” நளன் “ஆம், பேரரசர்களுக்குரியது” என்றான்.

வெளியே ஏவலன் வந்து நின்று தலைவணங்கினான். அவனிடம் தலையசைத்தபடி நளன் நடக்க வார்ஷ்ணேயன் உடன் சென்றான். அவர்கள் படியிறங்கி முகப்புக்கூடத்தை அடைந்தபோது அங்கு திரண்டு நின்றிருந்த கவச உடையணிந்த அகம்படிக் காவலரும் ஏவலர்களும் வாழ்த்தொலி எழுப்பினர். அணிச்சேடியர் குரவையிட்டனர். அவனுக்காக பீமபலனும் பீமபாகுவும் காத்திருந்தார்கள். அவனைக் கண்டதும் முகம் மலர்ந்து வந்து கைகளை பற்றிக்கொண்ட பீமபலன் “தாங்கள் உடல்தேறிவிட்டீர்கள் என்று அறிந்தேன். இத்தனை ஒளிகொண்டிருப்பீர்கள் என எண்ணவே இல்லை” என்றான். பீமபாகு அவன் தோளைத்தொட்டு “மல்லர்போல் ஆகிவிட்டீர்கள், அரசே” என்றான்.

பீமபலன் நளன் கைகளைப் பற்றியபடி “அவைபுகுவதற்கு முன்பு சில சொற்களை நான் உங்களிடம் பேசவேண்டியிருக்கிறது” என்று அப்பால் அழைத்துச்சென்றான். அனைவரும் விலக இரு இளவரசர்களும் நளனின் இரு பக்கங்களிலும் அமர்ந்தனர். பீமபலன் “இனி நாம் காத்திருக்க வேண்டியதில்லை, அரசே. நம் படைகள் வில்நாணில் அம்பென ஒருங்கியிருக்கின்றன. இப்போதே அவையில் நிஷதபுரியின்மேல் படைஎழுச்சியை அறிவிப்போம்” என்றான்.

பீமபாகு “உண்மையில் இன்று நம் அவையினர் எதிர்பார்த்திருக்கும் செய்தியே அதுதான். நகரெங்கும் நாலைந்து நாட்களாக இதுவே பேச்சென புழங்குகிறது. நாளை காலையிலேயேகூட படைப்புறப்பாடு இருக்குமென

எண்ணுகிறார்கள்” என்றான். நளன் “ஆம், நிஷதபுரியை நான் கைப்பற்றியாகவேண்டும், அதற்குப் பிந்துவதில் பொருளில்லை” என்றான். “உங்களுக்காக கணம்தோறும் காத்திருப்பவர்கள் நிஷதர்களே. சென்ற சில ஆண்டுகளாக அங்கு நிகழ்வதென்ன என்று அறிந்திருப்பீர்கள்” என்றான் பீமபலன். நளன் தலையசைத்தான்.

“குருதியுண்ணும் பேய்த்தெய்வமென ஆகிவிட்டிருக்கிறான் உங்கள் இளவல். குலத்தலைவர்கள் அனைவரையும் கொன்றழித்துவிட்டான். கொன்றவனை அடுத்த குலத்தலைவன் என அறிவிக்கிறான் என்பதனால் குலத்தலைவர்களை அவர்களின் இளையோரே கொன்றுவிடுகிறார்கள். அரசருக்கு எதிராக செயல்பட்டார் என குற்றம்சாட்டி எவரும் எவரையும் கொல்லலாம் என்பது இன்று அங்குள்ள வழக்கம். ஆகவே கற்றோரை கல்லாதோர் கொல்கிறார்கள். மூத்தோரை இளையோர் கொல்கிறார்கள். அங்குள்ள குலத்தலைவர்களில் மூத்தவனுக்கே வெறும் முப்பது அகவைதான்” என்றான் பீமபலன். “வழிதோறும் வெட்டிவைக்கப்பட்ட தலைகளே இன்று நிஷதபுரியின் அடையாளம் என்கிறார்கள்.”

நளன் பெருமூச்சுடன் “கொல்வது பிழையல்ல என ஓர் அரசு அறிவித்தால் போதும், எந்தக் குமுகமும் தன்னைத்தானே கொன்றழித்துவிடும்” என்றான். “அங்கு நிகழ்வது அதுதான். எளிய மக்களுக்கு பொதுவாக அன்றாடப் பகையும் பூசலுமன்றி தனிப்பட்ட எதிரிகள் இருப்பதில்லை. ஆகவேதான் அவர்கள் அரசரைப்பற்றி வம்புரைக்கிறார்கள். அரண்மனைப்பூசல்களில் தாங்களும் ஈடுபடுகிறார்கள். ஆனால் இன்று நிஷதபுரியில் ஒவ்வொருவருக்கும் நூறு எதிரிகள். சற்று அடிபிறழ்ந்தால் தலையுருளும். ஆகவே ஒவ்வொரு கணமும் கூர்முனையில்

நின்றிருக்கிறார்கள். ஒவ்வொரு முகமும் வலியில் அச்சத்தில் ஐயத்தில் வஞ்சத்தில் உச்சம்கொண்டு பாதாள தெய்வங்களைப்போல தோற்றமளிக்கின்றது என்கிறார்கள் ஒற்றர்கள். இளஞ்சிறார் கண்கள்கூட ஓநாய்களைப்போல் தோன்றுகின்றன என்கிறார்கள்" என்று பீமபலன் சொன்னான்.

"மக்கள் தங்களைத் தாங்களே அழித்துக்கொள்ள விட்டுவிட்டு அரண்மனையில் அவன் கீழ்க்கேளிக்கைகளில் திளைக்கிறான்" என்று பீமபாகு சொன்னான். "ஒருநாள் தன் அவையை நோக்கிவிட்டு அவன் சொன்னானாம் அது வாழும்காடு என்று. காடு என்றும் இளமையானது, ஏனென்றால் அங்கே முதுமையும் நோயும் இளமையாலும் பசியாலும் அழிக்கப்படுகின்றன என்று அவன் சொன்னபோது அந்த அவை மகிழ்ந்து கூத்தாடியதாம்." வெறுப்புடன் உதட்டைச் சுழித்து "நிஷதர்கள் அப்படியே அழுகி அழியட்டும் என விட்டு சதகர்ணிகளும் பிறரும் காத்திருக்கிறார்கள். ஆனால் தாங்கள் இருப்பது அறிந்தால் நிஷதபுரியை கைப்பற்றிவிடுவார்கள். ஆகவே நாம் இன்னமும் பிந்துவது அறிவுடைமை அல்ல" என்றான்.

சிற்றமைச்சர் சாரதர் வந்து அவர்கள் அவைபுகலாமென்று அறிவித்தார். நளன் எழுந்துகொண்டு "செல்வோம்" என்றான். "சொல்க அரசே, இன்று படையறிவிப்பு உண்டா?" என்றான் பீமபலன். "நெறிகளின்படி எவருடைய படை நிலத்தை வெல்கிறதோ அவர்களுக்குரியது அந்நிலம். விதர்ப்பத்தின் படை நிஷதத்தை வெல்ல நிஷதனாகிய நானே அழைத்துச்செல்வது முறையல்ல. இன்று நான் வெல்லலாம், ஆனால் அது நிஷதகுலங்களின் உள்ளத்தில் வடுவென்று

எஞ்சும். என்றாவது வஞ்சமென்று எழவும்கூடும்” என்றான் நளன்.

பீமபலன் ஏதோ சொல்லவர “அதை கொடையெனப் பெறுவது எனக்கு இழுக்கு. அதை என் மைந்தருக்கு அளிக்கும் உரிமையையும் இழந்தவனாவேன்” என்றான் நளன். “எவ்வகையில் இழந்தேனோ அவ்வகையிலேயே அதை மீட்கிறேன். அதுவே முறை.” அவன் நடக்க அவர்கள் உடன் சென்றனர். நிஷதபுரியின் காகக்கொடியுடன் வீரன் முன்னால் செல்ல அணிச்சேடியர் மங்கலத்தாலங்களுடன் தொடர்ந்தனர். இசைச்சூதர் முழங்கியபடி அவர்களுக்குப் பின்னால் அணியமைத்தனர்.

நளன் கைகளைக் கூப்பியபடி அவைபுகுந்தபோது பெருங்குரலுடன் அவை எழுந்து வாழ்த்திக் கூச்சலிட்டது. குரவையொலிகளும் இசையும் முயங்கிய முழக்கம் அவையை நிறைத்திருந்தது. அரிமலர் மழையில் நடந்து அவன் அவை நடுவே வந்து நின்றான்.

# நீர்க்கோலம் - 94

### 93. கருந்துளி

புஷ்கரன் அணியறையிலிருந்து கிளம்புவதை கையசைவு வழியாகவே வீரர்கள் அறிவிக்க முற்றத்தில் நின்றிருந்த சிற்றமைச்சன் சுதீரன் பதற்றமடைந்து கையசைவுகளாலேயே ஆணைகளை பிறப்பித்தான். அவனுடைய கைகளுக்காக விழிகாத்திருந்த ஏவலர் விசைகொண்டனர். ஓசையில்லாமல் அவர்கள் கைகளால் பேசிக்கொண்டபடி அங்குமிங்கும்

விரைந்தனர். அரசன் செல்வதற்காக ஏழு புரவிகள் வாயிலில் கொண்டுவந்து நிறுத்தப்பட்டன. காவலர்கள் ஓசையில்லாமல் வேல்களை ஏந்தி விரைப்புகொண்டு நின்றனர்.

தலைமைப் படைத்தலைவன் ரணசூரனிடம் விழிகாட்டிவிட்டு சுதீரன் கிளைகளில் தாவும் குருவிபோல ஓசையிலாமல் படிகளில் தொற்றித்தொற்றி மேலே சென்றான். மூச்சிரைக்க, வாய்குவித்து காற்றை ஊதி அதை அடக்கியபடி காத்து நின்றான். புஷ்கரன் வெளிவந்ததும் அவனுக்காகக் காத்து நின்றிருந்த ஏவலர்கள் தலைவணங்கினர். அவன் சுதீரனிடம் “ம்?” என்றான். அவன் வாய்பொத்தி தலைதாழ்த்தி மிகத் தாழ்ந்த குரலில் “புரவிகள் சித்தமாக உள்ளன, அரசே. அமைச்சரும் படைத்தலைவரும் காத்திருக்கிறார்கள்” என்றான்.

அதை கேட்டதாகவே காட்டாமல் அவன் மெல்ல நடந்தான். அவனைச் சூழ்ந்து நடந்த வேளக்காரர்கள் மிகமெல்ல காலடிவைத்து ஓசையில்லாமல் நிழல்களைப்போல சென்றனர். படிகளில் அவர்கள் இறங்கியபோது எழுந்த நீர்வழிவதுபோன்ற மிகமெல்லிய ஒலியே அரண்மனை முழுக்க கேட்டது. அரண்மனை அச்சத்துடன் முணுமுணுப்பதுபோல அது ஒலித்தது.

புஷ்கரன் முற்றத்திற்குச் சென்றதும் அமைச்சரும் படைத்தலைவனும் தலைவணங்கினர். வேல்கள் ஒளியுடன் அலையசைவு என வளைந்து தாழ வீரர்கள் தலைவணங்கினர். அவர்களின் கவசங்களில் பந்தங்களின் ஒளிப்பாவை ஓசையின்றித் தழன்றது. புரவி ஒன்று சீறிய மெல்லிய ஒலி மட்டும் உரக்க கேட்டது. புஷ்கரன் இயல்பாக அத்திசை நோக்கித் திரும்ப பாகன் நடுங்கி அதன் விலாவைத் தட்டி ஆறுதல்படுத்தினான். அவன் சுதீரனை நோக்கி “கொட்டில்

ஒருக்கமா?” என்றான். சுதீரன் “ஆம், அரசே” என்றபின் புரவிகளை அருகே கொண்டுவரும்படி கைகாட்டினான்.

புஷ்கரன் களைத்து தசைவளையங்கள் விழுந்த பழுத்த விழிகளும், வெளிறிய உடலும் கொண்டிருந்தான். வாயைச் சுற்றி விழுந்திருந்த அழுத்தமான கோடுகளால் அவன் துயர் கொண்டவன்போல, எதையோ எண்ணிக்கொண்டு தன்னை இழந்தவன்போலத் தோன்றினான். சில ஆண்டுகளுக்கு முன் தொடங்கி வலுத்துவந்த நரம்புநோய் ஒன்றினால் அவன் கைகளும் தலையும் மெல்ல நடுங்கிக்கொண்டிருந்தன. முகத்தின் வலப்பகுதி சற்று இறங்கி வாய் இழுபட்டுக் கோணியிருந்தது. கன்னத்தசை நீண்டு வலக்கண் தாழ்ந்து அகவைக்கு மிஞ்சிய முதுமையை காட்டியது.

அவன் உதடுகளை நோக்கியபடி அனைவரும் காத்து நின்றிருந்தனர். புஷ்கரன் குரல் தாழ்ந்து செல்லத்தொடங்கி நெடுநாட்களாகிவிட்டிருந்தன. நாளுக்குநாள் அவன் குரல் தணிந்து பல தருணங்களில் உதடசைவினூடாகவே அவன் சொற்களை பெற்றுக்கொள்ள வேண்டியிருந்தது. அவனைச் சூழ்ந்திருந்த ஒவ்வொருவரும் அவன் உதடுகளிலேயே விழிகளையும் செவிகளையும் சித்தத்தையும் நிறுத்தியிருந்தமையால் மட்டுமே அவை பொருள்கொண்டன. சினம்கொள்கையில் அவன் முற்றிலும் சொல்லடங்கினான். விழியிலும் இழுபட்டு அசையும் முகத்தசைகளிலும் மட்டுமே அது வெளிப்பட்டது.

குரல் தாழத் தொடங்கியபோது அவன் சூழொலிகளுக்கு ஒவ்வாமை கொண்டான். பேச்சுகள், கலக் குலுங்கல்கள், காலடிகள் அனைத்தும் அவனை அதிரச் செய்தன. கைதவறி ஏதேனும் விழுந்தால் உடல் விதிர்த்துத் துள்ள வாய்

கோணலாக கழுத்துத்தசைகள் துடிக்க அவன் நிலையழிந்தான். அவ்வோசையை எழுப்பியவரை அக்கணமே காவலர் பிடித்துக் கொண்டுசென்று கொலைக்கூடத்திற்கு அனுப்பினர். ஓலைக்கட்டு ஒன்று அவன் கையிலிருந்து விழுந்த ஓசைக்கே இடக்கை இழுத்துக்கொள்ள வலிப்பு வந்து இறுகி பின் தளர்ந்தான்.

அவையில் அவன் உடலில் அவ்வலிப்பெழும்போது அவ்வண்ணம் ஒன்று நிகழாததுபோல் விழிசூடி நிற்க சூழ்ந்தோர் பயின்றிருந்தனர். விழிகளில் ஒரு சிறுமின்னலென ஏளனமோ ஆர்வமோ வந்து சென்றால்கூட அவன் அதை அறிந்தான். ஓரிரு நாட்களுக்குள் அவர்கள் கழுவிலேற்றப்பட்டனர். விழிகளில் இரக்கமோ பரிவோ வருமென்றால் அக்கணமே சீறிச் சினந்தெழுந்து ஏதேனும் பழிகூறி அவரை அங்கேயே வெட்டிவீழ்த்த ஆணையிட்டான்.

மாதத்திற்கு ஒருவராவது அவ்வண்ணம் அவன் அவையிலிருந்து காம்பிற்று இருளுக்குள் உதிர்ந்துகொண்டிருந்தனர். ஆயினும் அங்கு வந்துசேர கடுமையான போட்டி இருந்தது. ஏனென்றால் அங்கு வந்தவர்கள் நகர்மக்கள்மேல் தடையற்ற ஆதிக்கத்தை அடைந்தனர். நிஷதபுரியின் வரலாற்றில் அவ்வண்ணம் ஓர் ஆதிக்கத்தை எவரும் பெற்றிருந்ததில்லை. விழியசைவால் அவர்கள் எவரையும் கொலைமரத்திற்கு கொண்டுசெல்ல முடிந்தது. விரும்பிய செல்வத்தையும் பெண்ணையும் அடைய முடிந்தது. அனைத்துக்கும் அப்பால் பிறரை இழிவுசெய்வதன் பேருவகையில் இடைவிடாது திளைக்க முடிந்தது.

மேலிருப்பவர்களின் கோன்மை வலுப்பெற்றபடியே செல்ல கீழிருப்பவர்கள் புழுக்களென பாதங்களின் அளியால் உயிர்

நெளிந்தனர். ஆகவே அங்கிருப்போர் ஒவ்வொருவரும் மேலேறத் தவித்தனர். பிறர்மேல் ஏறியே அங்கு செல்லமுடியும் என்பதனால் அவர்கள் அனைவரும் பிறரை கண்காணித்தனர், ஒடுக்கினர், அழித்து தங்களை மேலெடுத்துக்கொண்டனர். மேலும் மேலுமென பொருத்துக்களில் பற்றி விரிசல்களில் காலூன்றி ஏறிக்கொண்டே இருந்தனர். ஏறிக்கொண்டிருக்காதவர்கள் அழிக்கப்பட்டனர்.

அரண்மனையில் மரத்தரைகளெங்கும் மெத்தைவிரிப்பு போடப்பட்டது. கதவுக்குடுமிகள் வெண்கலமாக்கப்பட்டன. ஒவ்வொருநாளும் அவற்றில் ஆமணக்கு உயவு ஊற்றப்பட்டது. அத்தனை கலங்களும் மரவுரிகளால் உறையிடப்பட்டன. மென்தோல் காலணிகளை ஏவலரும் அணிந்தனர். வாள்களும் வேல்களும் ஒன்றுடனொன்று முட்டாமல் எப்போதும் கைகளால் பற்றப்பட்டிருந்தன. பேச்சுக்கள் ஒலியடங்கின. அவ்வாறு உருவான அமைதி ஒவ்வொரு குரலையும் பெருக்கிக் காட்டியமையால் அவர்கள் மேலும் ஒலியவிந்தனர். பின்னர் மூச்சொலிகளும் எழாமல் முற்றமைதியில் அரண்மனை புதைந்தது.

நாளடைவில் சூழலின் அமைதி ஒவ்வொருவர் உள்ளத்திற்குள்ளும் நுழைந்தமையால் இயல்பாகவே எவரும் பேசாமலானார்கள். தங்கள் தனியறைகளிலும் தோட்டங்களிலும்கூட அரண்மனை ஏவலரும் வீரரும் சொல்லின்மையில் மரங்களும் செடிகளும்போல அமர்ந்திருந்தனர். கிளையசைவால் இலையுலைவால் பேசிக்கொண்டனர். எப்போதேனும் பேசநேர்கையில்கூட நெஞ்சுக்குள் இருந்து சொற்களை நாக்கில் கொண்டுவருவதற்கு

சித்தத்தால் உந்தவேண்டியிருந்தது. அவை உதிரிச் சொற்களாகவே எழுந்தன. சொற்கூட்டிப் பேசுவதையே பலர் முற்றிலும் மறந்துவிட்டனர்.

புஷ்கரன் மிக மெல்லிய குரலில் “அந்த வெண்புரவி” என்றான். சுதீரன் கைகாட்ட பாகன் அந்த வெண்புரவியை கொண்டுவந்து நிறுத்தினான். அதன் சேணத்தில் கால்வைத்து எழுந்து அமர்ந்து கடிவாளத்தைப் பற்றியபடி அவன் வானை நோக்கினான். “அங்கு செல்வதற்குள் விடிவெள்ளி எழுந்துவிடும், அரசே” என்றான் சுதீரன். அவன் அதை கேட்டதாக காட்டவில்லை. அவனிடம் பேசப்படும் சொற்களுக்கு அவன் எந்த எதிர்வினையையும் காட்டுவதில்லை. அது அவனுக்கு விளங்கிக் கொள்ளமுடியாத ஒரு அழுத்ததை அளித்தது. தெய்வங்களைப்போல.

அவர்கள் அவனுடைய அசைவுகளுக்காக விழியூன்றி காத்திருந்தனர். அவனிடம் அவ்வப்போது சிலைத்தன்மை ஒன்று கூடிவிடும். இமைகள்கூட அசையாமல் இருக்கும் அவனை நோக்குகையில் அவன் இப்புவியிலிருப்பவன் அல்ல, இங்கு வந்த ஏதோ அறியாத தெய்வம் என்ற உணர்வு மீண்டும் மீண்டும் வலிமைகொண்டது. இத்தனை குருதியை மானுடர் கோரமுடியாது. அன்னைமுலை உண்டவர் இத்தனை துயரங்களுக்குமேல் ஏதுமறியாமல் அமர்ந்திருக்க முடியாது.

அவன் புரவி கிளம்பியபோது பிற புரவிகளும் உடன்சென்றன. அவன் குரல் கேட்கும் தொலைவில் ஆனால் அவனுக்கு இணையென்றாகாத அகலத்தில் அவை சீர்நடையிட்டுச் சென்றன. கவசக்காவலர்களும் அகம்படியினரும் சூழ்ந்துவர முழுமையான தனிமையில் புஷ்கரன் சென்றான். புலரியின் குளிர்ந்த காற்று அவர்களைச் சூழ்ந்து வீசி சுழன்று சென்றது.

அவனைச் சூழ்ந்து எப்போதும் கடுங்குளிரே இருக்கிறது என சுதீரன் எண்ணிக்கொண்டான்.

நளன் கானேகியபோது முதன்மையமைச்சர் கருணாகரர் அவனுடைய தந்தை நாகசேனரை அமைச்சராக்கிவிட்டு கான்தவம் புகுந்து நாற்பத்தோராம் நாள் உயிர்துறந்தார். நாகசேனர் மூன்றாண்டுகள் அமைச்சராக இருந்தார். ஒருநாள் அவரை நெற்றியிலும் தோள்களிலும் இழிமங்கலக் குறிகள் பொறித்து நாடுகடத்த புஷ்கரன் ஆணையிட்டான். விழிநீருடன் தந்தையைத் தொடர்ந்த சுதீரனின் தோளில் கையை வைத்து நாகசேனர் “குலமுறைப்படி நீயே இங்கு அமைச்சன். அது நம் முன்னோர் நமக்களித்த கொடை. தவத்தின்பொருட்டு உலகு துறக்கையில் அன்றி வேறெவ்வகையிலும் அதை விலக்க நமக்கு உரிமையில்லை” என்றார்.

“ஆனால் இவ்விழிமகன்…” என அவன் சொல்லத்தொடங்க “இன்றும் அவர் உன் அரசர். நீ இந்நகரை இன்னமும் துறக்கவில்லை” என கூரிய சொற்களால் அவனை நிறுத்தினார் நாகசேனர். “உன் பணியை செய்! இது சுட்டுப்பழுத்த கலம். இதில் நீர் விட்டுக்கொண்டே இருப்பதே உன் அறம் என்றாகுக!” சுதீரன் “எத்தனை நாள், தந்தையே?” என்றான். “நெடுங்காலம் அல்ல. அறமன்றி ஏதும் மண்ணில் நிலைத்து வாழாது. ஏனென்றால் அது தெய்வங்களுக்கு உகந்தது அல்ல. அன்னையரால் ஏற்கப்படுவது அல்ல. வேதத்துடன் ஒப்புவது அல்ல” என்றார் நாகசேனர்.

பின்னர் சற்று உதடுகோடிய புன்னகையுடன் “அத்தனைக்கும் மேலாக அது உலகியல் நலனுக்கே உகந்ததும் அல்ல” என்றார். அவன் “மக்களை நான் நம்பவில்லை, தந்தையே… இன்றுவரை அவர்களின் அச்சமும் மிடிமையும் சிறுமதியும் மட்டுமே

வெளிப்பட்டுள்ளது” என்றான். “நம்பியாகவேண்டும். மானுடம் அறத்தில் அமைந்தது. இல்லையேல் இவர்களின் மொழியில் வேதம் எழுந்திருக்காது” என்றார் நாகசேனர். “ஒரு துளியென அறம் எஞ்சியிருக்கும். எங்கோ அதை நாம் அறியும் தருணம் அமையும். மைந்தா, அது விதையெனும் துளி. அச்சூழலின் அழுத்தத்தால் செறிவுகொண்டு வைரம் என்றானது. அதைக் கண்டடைக.” அவன் தலைமேல் கைவைத்து “வைரம் என்பது என்ன? தெய்வங்களின் ஒளியும் கூர்மையும் நஞ்சும் கொண்டெழுந்த கூழாங்கல்” என்றார்.

கசப்புடன் “இந்த நெறியின்மைகளுக்கு நான் துணைநின்றாக வேண்டுமா என்ன?” என்றான் சுதீரன். “ஆம், வந்து பிறக்கும் சூழலுக்கு நாம் எவ்வகையிலும் பொறுப்பல்ல. அது முன்வினை. அதை வெல்க, நிகழ்வினையை கடந்து நல்வினையை ஈட்டுவதொன்றே நாம் செய்யக்கூடுவது. இன்று விழித்துக் காத்திருப்பதே உன் கடன். தாக்குப்பிடித்து அங்கிரு. முடிந்தவரை உயிர்களைக் காப்பதே உன் நாள்பணி என்று கொள். அதன்பொருட்டு எதையும் செய்... தெய்வங்களும் மூதாதையரும் உடனிருக்கட்டும். வேதச்சொல் துணையாகட்டும். ஆம், அவ்வாறே ஆகுக!” என அவன் தலையில் கைவைத்து வாழ்த்திவிட்டு நடந்தகன்றார்.

அவன் மீண்டு வந்து தன் சிறிய இல்லத்தின் திண்ணையில் தோள்தளர்ந்து தலைகுனிந்து அமர்ந்திருந்தான். எதிர்த்திண்ணையில் நூற்றகவை முகிழ்ந்த முதியவரான சாந்தர் அமர்ந்திருந்தார். வெண்கூழாங்கல் விழிகளால் வெறும் நிழலாட்டமெனத் தெரிந்த தெருவை நோக்கிக் கொண்டிருந்தார். ஒரு காகம் வந்தமர்ந்து ஐயத்துடன் அவரை நோக்கியபின்

எழுந்தகன்றபோது முகம் மலர்ந்து தலையாட்டி நகைத்தார். அது மீண்டும் அருகணைந்தபோது கைவீசி “வா! வா!” என்றார்.

சுதீரன் எழுந்து தந்தையின் தூக்குபீடத்திற்கு அடியில் இருந்த சிறுபேழையில் இருந்து பனங்கற்கண்டுத் துண்டுகளை எடுத்துக்கொண்டு தெருவைக் கடந்து அவரை அடைந்தான். அவர் அவன் கையைத்தான் நோக்கினார். கற்கண்டுகளை அளித்ததும் இரு கைகளாலும் வாங்கி இரு கன்னங்களிலும் அதக்கிக்கொண்டு கண்களை மூடி அச்சுவையில் மெய்மறந்தார். அவர் கண்முனைகளில் இருந்த பீளையையும் வாய்விளிம்புகளில் இருந்த நுரைக்கோழையையும் அவன் துடைத்தான். பல்லில்லாத வாய் சுருங்கி விரிந்தது.

“தந்தையே, அந்தணன் தன் குலநெறியின்பொருட்டு மறத்திற்குத் துணை நின்றால் பழி சேருமா?” என்றான் சுதீரன். அவர் “ஏன்?” என்றார். அவன் நாலைந்துமுறை கேட்டபின்னர்தான் அவர் உள்ளம் அக்கேள்வியை உணர்ந்தது. கல்கண்டுகளை வாயில் இருந்து எடுத்து மேலாடையால் துடைத்து மடியில் வைத்துவிட்டு “ஆம், வேள்வியின் பொருட்டென்றாலும் தெய்வங்களின் ஆணைக்கிணங்க என்றாலும் அறமிலாதது பழி சேர்ப்பதே” என்றார்.

சுதீரன் பெருமூச்சுவிட்டு தன்னை எளிதாக்கிக் கொண்டான். மீண்டும் எதையாவது கேட்பதா என்று தயங்கியபின் “ஓர் உயிரைக் கொன்ற பழியை எத்தனை உயிரைக் காத்தால் நிகர்செய்ய முடியும்?” என்றான். அவர் “கற்கண்டு?” என்றார். அவன் அவர் மடியிலிருந்தே எடுத்து நீட்ட அவர் முகம் மலர்ந்து அதை பிடுங்குவதுபோல வாங்கி வாயிலிட்டு மென்றார். கண்கள் சொக்கின. அவன் அவர் தொடையைப் பிடித்து உலுக்கி “சொல்லுங்கள்” என மீண்டும் கேட்டான். அவர்

“ஆயிரம்கோடி உயிர்களைக் காத்தாலும் நிகர்செய்ய முடியாது. பசித்த ஒருவனின் அன்னத்தை தட்டிவிட்டவன் நூறுபிறவியில் அன்னக்கொடை செய்தாலும் நிகர்செய்தவனாக மாட்டான்” என்றார்.

அவன் எழப்போனான். அவர் கற்கண்டை எடுத்து கூர்ந்து நோக்கி பின்னர் வாய்க்குள்போட்டு “ஆற்றாது சொட்டிய ஒரு துளி விழிநீருக்கு மூன்று தெய்வங்களும் பொறுப்பேற்க வேண்டும்” என்றார். அவர் ஒரு ஓவியத் திரைச்சீலைபோலவும் அப்பாலிருந்து வேறெவரோ பேசுவதுபோலவும் தோன்றியது. நெடுநேரம் தயங்கியபின் “தந்தையே, எதன்பொருட்டு ஒருவன் தந்தையின் ஆணையை மீறலாம்?” என்றான். அவர் “எதன்பொருட்டும் அல்ல” என்றார்.

அவன் நெஞ்சு திடுக்கிட்டு பின் ஓசையுடன் உருண்டு சென்றது. மூச்சைத் திரட்டி “அதனால் பழி சேர்ந்தால்?” என்றான். “அது ஊழ். அப்பழியை தானே முழுதேற்றுக்கொள்ளவேண்டும். துறந்து கானேகி தவம்செய்து அதை வெல்லவேண்டும். அல்லது பிறந்து பிறந்து கரைக்கவேண்டும்” என்றபின் “கற்கண்டு?” என்றார். அவன் இன்னொரு கற்கண்டை அவர் மடியிலிருந்தே எடுத்து நீட்டியபின் எழுந்துகொண்டான். அவர் அதை வாங்கி கண்ணெதிரே கொண்டுசென்று கூர்ந்து நோக்கி தலையசைத்து புன்னகைத்தார். வாய்க்குள் போட்டுக்கொண்டு கண்களை மூடி மோனத்திலாழ்ந்தார். அவன் நெடுந்தொலைவென தெருவைக் கடந்து தன் திண்ணையை அடைந்தான்.

தலைப்பாகையுடன் மறுநாள் அவன் புஷ்கரன் முன் நின்றபோது தனியறையில் உணவருந்திக்கொண்டிருந்தவன் நிமிர்ந்து “தந்தையின் ஆணைப்படி வந்தீரா?” என்றான். “ஆம்

அரசே, இது குலநெறி” என்றான் சுதீரன். அவனை சிலகணங்கள் நோக்கி நின்றபின் “நீர் என்னை அழிப்பீர். இக்கணம் அதை நன்குணர்கிறேன். அந்தணன் எடுத்த வஞ்சினத்துடன் போரிட்டு வென்ற அரசர்கள் இல்லை” என்றான். சுதீரன் பேசாமல் நின்றான். “வேதத்தின்மேல் ஆணையாக சொல்லும்... நான் எண்ணுவது மெய் அல்லவா?” சுதீரன் “ஆம் அரசே, அறத்தின்பொருட்டு உங்களை அழிப்பேன்” என்றான்.

புஷ்கரன் குருவியின் ஓசையுடன் மிகமெல்ல நகைத்து “நன்று... எனக்கு அனைத்தும் சலித்துவிட்டது. நச்சு பூசிய அம்பையும் அரசநாகத்தையும் அருகே போட்டு துயில்வதைக்கூட செய்து பார்த்துவிட்டேன். நீர் என் அமைச்சராக இரும். உம்மை வென்றால் அதன்பின் நான் விண்ணளந்தோனை மட்டுமே அறைகூவவேண்டும்” என்றான். “ஆம் அரசே, இது ஓர் ஆடலென அமைக! ஒன்றுமட்டும் நான் உறுதி அளிக்கிறேன். வென்று வாழமாட்டேன், உங்களுடன் நானும் அழிவேன்” என்றான் சுதீரன். புஷ்கரன் திடுக்கிட்டவன்போல விழிதூக்கி நோக்கினான். முற்றிலும் அயலான ஒன்றை நோக்குவதுபோல விழிநிலைத்தான். பின்னர் கலைந்து பெருமூச்சுடன் உண்ணத்தொடங்கினான்.

அரண்மனைமுகப்பில் முந்தையநாள் கழுவேற்றப்பட்ட எழுவர் முகவாய் மார்பில் படிந்திருக்க முடி விழுந்து முகம் மறைக்க அமர்ந்திருந்தனர். வேலுடன் காவல் நின்றவர்கள் தலைவணங்கினர். கழுவர்களின் கால்களை மட்டும் சுதீரன் நோக்கினான். அவை தொங்குபவைபோல இழுபட்டு நீண்டு விரைத்திருந்தன. புஷ்கரன் அவர்களை அறிந்ததாகவே காட்டவில்லை. சாலையை அடைந்ததும் குளிர்காற்று சுழன்றடித்து ஆடையை பறக்கச் செய்தது. புழுதிமணம்

நிறைந்திருந்த காற்றுக்கு மேலாடையால் முகத்தை மூடிக்கொண்டான் சுதீரன்.

சாலைகளின் ஓரங்களில் நடப்பட்ட மூங்கில் தூண்களில் தூக்கிலிடப்பட்டவர்கள் கைகள் பிணைக்கப்பட்டு தொங்கி நின்றனர். தரையிலிருந்து அரையடி உயரத்தில் அவர்களின் கால்கள் நின்றிருக்கவேண்டும் என்பது புஷ்கரனின் ஆணை. சற்று அப்பாலிருந்து நோக்கினால் அங்கே ஒருவர் தலைகுனிந்து நிற்பதாகவே தோன்றும். வழிப்போக்கர் தோள்முட்டிக்கொள்ளவும் நேரும். திடுக்கிட்டு நோக்கினால் குனிந்து தங்களை நோக்கும் அசைவற்ற விழிகளையும் வலித்துச் சிரிக்கும் வாயின் பற்களையும் காண்பார்கள்.

தூக்கிலிடப்பட்டவர்களை கடந்து சென்றுகொண்டே இருந்தனர். அவர்கள் அனைவருமே தலைகுனிந்து நின்றனர், பெரும்பிழை ஒன்றைச் செய்தவர்கள்போல. பிழைசெய்யாத எவரேனும் இந்நகரில் இன்று உள்ளனரா என சுதீரன் எண்ணிக்கொண்டான். ஒவ்வொரு கழுவேற்றத்தின்போதும் தூக்கின்போதும் அந்த எண்ணம் எழுந்து வந்தது. ஒவ்வொருவரும் பிறரை காட்டிக்கொடுத்திருந்தனர், கழுவேற்றியிருந்தனர், வஞ்சமும் சூழ்ச்சியும் கொண்ட முகத்துடன் தன் இறப்பை மட்டுமே அஞ்சி இறுதிக் கணத்தில் நின்றிருந்தனர். இந்நகரில் கொலையாளிகளை கொலையாளிகள் கொல்கிறார்கள். கொலையாளிகள் நாளும் பெருகிக்கொண்டிருக்கிறார்கள்.

கொட்டில்முன் வந்து நின்றதும் ஏவலர் அருகே வருவதற்காக புஷ்கரன் காத்திருந்தான். ஒருவன் வந்து முதுகைக் காட்டியதும் அதை மிதித்து கீழிறங்கி திரும்பிப்பார்க்க சுதீரன் அருகே வந்து "ஒருங்கிவிட்டது என்று சொன்னார்கள், அரசே" என்றான். புஷ்கரன் கைநீட்ட பரிவலன்

அருகே வந்து சவுக்கை நீட்டினான். அவன் குறுபீடத்தில் அமர்ந்ததும் இருவர் காலணிகளை அணிவித்தனர். எழுந்து கைவிரிக்க இடைப்பட்டையை இறுக்கினர். அவன் களமுற்றத்தில் சென்று நின்றான்.

மறுமுனையிலிருந்து காரகனை இருவர் கடிவாளம் பற்றி அழைத்துவந்தனர். பரிவலரை சிறுவர்களென தோன்றச்செய்யுமளவுக்கு உயரம் கொண்டிருந்த கரிய புரவி இருளில் மென்முழுப்பாகவே உருத்தெரிந்தது. தலைதூக்கி பெரிய மூக்குத்துளைகள் நெளிய விழிகளை உருட்டியபடி தயங்கிய கால்களை எடுத்துவைத்து வந்தது. “இன்று எந்த உளநிலையில் இருக்கிறான்?” என்று புஷ்கரன் கேட்டான். பரிவலன் அதை கேட்கவில்லை. சுதீரன் “நேற்று மாலையில் மூவர் பயிற்சி அளித்திருக்கிறார்கள். பரிவலர் பதினெண்மர் மேலேறி சுற்றி வந்திருக்கிறார்கள். ஒவ்வொருமுறை சுற்றி வந்ததும் இன்னுணவு தரப்பட்டமையால் மகிழ்ந்து பிறர் ஏறும்பொருட்டு குரல் கொடுக்கிறது” என்றான்.

புஷ்கரன் முகத்தில் எந்த மாறுதலும் தெரியவில்லை. ரணசூரன் அருகே வந்து “நானே நேற்று மூன்றுமுறை சுற்றிவந்தேன், அரசே. அது மிக எளிதாகிவிட்டது” என்றான். பரிவலன் கார்த்தன் “என் மைந்தர் மூவரும் நேற்று இதன்மேல் சுற்றிவந்தனர். இளையவன் பரிப்பயிற்சி பெற்றவன்கூட அல்ல” என்றான். கொண்டுவரும்படி புஷ்கரன் கைகாட்டினான். காரகனை அவர்கள் அவனருகே கொண்டுவந்து நிறுத்தினர். அதன் பெரிய குளம்புகள் மண்ணில் விழும் ஓசை நின்றவர்களின் கால்களில் அதிர்வாகத் தெரிந்தது.

காரகனின் சேணமணிந்த முதுகு பரிவலனின் தலைக்குமேல் மேலும் இரண்டடி உயரத்திலிருந்தது. மேலும் மூன்றடி

உயரத்தில் அதன் தலை நிமிர்ந்து வானில் எனத் தெரிந்தது. தாடையிலிருந்து வளைந்து தொங்கிய கடிவாளம் விழுது போலிருந்தது. அதன் விலாவும் புட்டமும் சிலிர்த்துக்கொண்டிருந்தன. மூக்குவிரித்து புஷ்கரனின் மணத்தை அறிந்ததும் தலையைச் சிலுப்பி அசைத்து மெல்லிய குரலில் உறுமியது. பரிவலன் "தாங்கள் ஏறலாம், அரசே" என்றான்.

புஷ்கரன் அதை ஐயத்துடன் நோக்கியபடி சிலகணங்கள் நின்றான். பின்னர் சேணத்திலிருந்து தொங்கிய தோல்பட்டையை பிடித்துக்கொண்டு கால்வளையத்தில் மிதித்து மேலேற முயன்றான். காரகன் உறுமியபடி இரும்புக்கூடம்போன்ற குளம்புகளை எடுத்துவைத்து அவனை விலக்க முயன்றது. கடிவாளத்தை இருபுறமும் பற்றியிருந்த பரிவலர் அதை அசையாமல் நிறுத்தினர். அதன் விழிகள் உருண்டன. மூக்கு சுருங்கி விரிந்தது. குளம்புகளை பொறுமையிழந்து எடுத்து வைத்தது.
சேணத்தின்மேல் புஷ்கரன் அமர்ந்துகொண்டதும் கடிவாளத்தை அவனிடம் வீசினர். அவன் அதை பிடித்துக்கொண்டு புரவியின் கழுத்தை மெல்ல தொட்டான். அவன் தொட்ட இடங்கள் சிலிர்த்துக்கொண்டன. அதன் விழிகள் உருள்வதைக்கண்ட ரணசூரன் மெல்ல அசைந்தான்.

சுதீரன் திரும்பியதும் நோக்கை நிலைக்கச்செய்து உறைந்தான். பரிவலர் பிடி விட்டதும் காரகன் உரக்கக் கனைத்தபடி துள்ளிச் சுழலத் தொடங்கியது. சவுக்கால் அதை அறைந்தபடி புஷ்கரன் ஓசையிட்டான். முன்னங்கால்களைத் தூக்கி காற்றில்வீசி மண்ணில் அறைய ஊன்றி பின்னங்கால்களை உதறிக்கொண்டது. புஷ்கரன் தூக்கி வீசப்பட்டவனாக காற்றில்

எழுந்து மண்ணில் மல்லாந்து விழுந்தான். அவனை நோக்கி சீறியபடித் திரும்பிய காரகனை இரு பரிவலரும் தாவிப் பற்றிக்கொண்டார்கள். அவர்களைத் தூக்கியபடி அது சுழல அவர்கள் கால்கள் காற்றில் வீச சுற்றிவந்தனர். ரணசூரன் புஷ்கரனைப்பற்றி இழுத்து அப்பால் கொண்டுசென்றான். காவலர்கள் வேல்களுடன் புரவியை சூழ்ந்துகொண்டனர்.

காரகன் சிம்மம்போல முழங்கியபடி பரிவலரை தூக்கிச் சுழற்றியது. மேலும் மேலுமென பரிவலர் வந்து அதன் கடிவாளத்தையும் சேணத்தையும் பற்றிக்கொண்டனர். "பரிஅரசே, அடங்குக! பொறுத்தருள்க தேவே... பிழைபொறுத்தருள்க..." என பரிவலர் கூவினர். மெல்ல அது அடங்கி தலை தாழ்த்தியது. மூச்சு சீற கண்களை உருட்டியபடி உடல் விதிர்த்து நின்றது. அதன் கால்கள் மிதிபட்ட மண் பன்றிகிளறியிட்டதுபோலக் கிடந்தது.

புஷ்கரன் இரு வீரர்கள் பற்ற எழுந்துகொண்டு கைகளை நீட்டியபடி "கொல்லுங்கள் அதை... அதை வெட்டித் துண்டுகளாக்குங்கள்... அதன் ஊனைப் பொரித்து எனக்கு இன்று உணவென கொண்டுவாருங்கள்" என்று மூச்சொலியுடன் சொன்னான். இறுதிச் சொற்கள் வெறும் இளைப்பாகவே எழுந்தன. கோணல் முகமும் உடலும் துள்ளித்துடித்தன. வீரர்கள் வேல்களுடன் காரகனை நோக்கி பாய சுதீரன் புஷ்கரன் அருகே சென்று "அரசே, வேண்டாம். அதைக் கொல்வது நாமே ஒப்புக்கொள்வது" என்றான். புஷ்கரன் வீரர்களிடம் நிற்கும்படி கைகாட்டி புருவத்தால் ஏன் என்றான். "அரசே, யவனர்களிடமிருந்து இப்புரவியை நாம் வாங்கியதை ஷத்ரிய அரசர்கள்கூட இன்று அறிவார்கள். இதை நாம்

கொன்றால் இதை வெல்லமுடியவில்லை என்று நாமே அறிவிப்பதுபோல" என்றான் சுதீரன்.

புஷ்கரன் சில கணங்களுக்குப்பின் கையசைக்க புரவியை பரிவலர் கொண்டுசென்றார்கள். "இது நீங்கள் விழைந்து வாங்கியது. மூன்று ஆண்டுகளாக இங்கே வளர்கிறது. இன்னமும் இது தங்களை ஏற்றுக்கொள்ளவில்லை என்பது நாம் வெளியே தெரிவிக்கவேண்டிய செய்தி அல்ல" என்றான் சுதீரன். புஷ்கரன் தன் புரவியை கொண்டுவரும்படி கையசைத்தான். "இது இங்கிருக்கட்டும். இப்புரவிமேல் தாங்கள் செல்வதைப்பற்றிய பாடல்களை சூதர்கள் புனையட்டும். ஓவியர்கள் தாங்கள் இதன்மேல் இருப்பதைப்போல வரையட்டும்" என்றான் சுதீரன்.

"ஆனால் நாளை கலிபூசனை நிகழ்வு. நம் நகரின் முதன்மை அரசப்பெருவிழவு அது. குடிகள் முன் இப்புரவியில் தோன்றுவதைத்தான் திட்டமிட்டேன்" என்றான் புஷ்கரன். "ஆம், அது மிக எளிது. நீங்கள் யானைமேல் ஆலயத்திற்குச் செல்லுங்கள். புரவி அங்கே வரட்டும். நீங்கள் அதில் நகருலா செல்லக்கூடுமென அனைவரும் எண்ணட்டும்." புஷ்கரன் அவனை நோக்க "நகருலா செல்லமுடியாதபடி ஏதேனும் நிகழட்டும்" என்ற சுதீரன் "பின்னர் கலிபூசனை நிகழ்வை கவிதையாக்குபவர்கள் நீங்கள் அப்புரவியில் அரண்மனைக்கு மீண்டதாகவோ நகரில் ஓடி படைகளை நடத்தியதாகவோ எழுதட்டும்" என்றான்.

புஷ்கரன் விழிகளில் மிக மெல்லிய அசைவு ஒன்று வந்தது. அதை சுதீரன் புரிந்துகொண்டான். தன் புரவியில் புஷ்கரன் ஏறிக்கொள்ள அருகே வந்த ரணசூரன் மெல்லிய பதற்றத்துடன்

சுதீரனை நோக்கினான். சுதீரன் புன்னகையுடன் தலைவணங்க புஷ்கரன் நோக்கை விலக்கிக்கொண்டான்.

# நீர்க்கோலம் - 95

## 94. வீழ்நிலம்

தொலைவிலிருந்தே கையைத் தூக்கி மந்தண விரல்குறியைக் காட்டியபடி புஷ்கரனின் படுக்கையறையை நோக்கி சுதீரன் சென்றான். வாயிலில் நின்றிருந்த யவனக்காவலர் இருவர் அவனை அடையாளம் கண்டு தலைவணங்கினர். காப்பிரிக்காவலர் இருவர் தரையில் மடியில் வாளை வைத்துக்கொண்டு அமர்ந்திருந்தனர். சுருண்ட நுரைமுடியும் சோழிகள் போன்ற விழிகளும் பெரிய உதடுகளும் கொண்டவர்கள். யவனர்களில் செங்கல்நிறம் கொண்டவர்களும் சுண்ணக்கல் நிறம்கொண்டவர்களும் இருந்தனர்.

சுதீரன் மெல்லிய குரலில் மந்தணக்குறிமொழியில் அரசனை அழைத்துச்செல்ல வந்திருப்பதாக சொன்னான். காவலர் வாயிலில் இருந்த சிறிய துளை வழியாக உள்ளே சென்ற நூலை இழுத்து அசைத்தனர். உள்ளிருந்து ஒரு காவலன் துளைப்பொருத்தில் செவிசேர்க்க அவனிடம் மந்தண மொழியில் செய்தி உரைத்தனர். உள்ளே இருப்பவர்கள் பீதரும் சோனகரும் என்பதனால் அவர்களுக்கிடையே ஒற்றைச் சொற்களாலேயே உரையாடமுடியும். அவர்கள் பணிக்குச் சேரும்போது அந்த மொழி கற்பிக்கப்படும். அடுத்த அணிக்கு முற்றிலும் புதிய மந்தணமொழி உருவாக்கப்படும்.

சுதீரன் கைகளைக் கட்டியபடி காத்து நின்றான். உள்ளே எந்த ஓசையும் கேட்கவில்லை. புஷ்கரன் வழக்கமாக துயிலெழ மிகவும் பிந்தும். அவன் இரவு செறிவதற்குள்ளாகவே துயிலறைக்குச் சென்றுவிடுவான். அவன் துயில்வதற்கு இருபதுக்கும் மேற்பட்ட துயிலறைகள் கட்டப்பட்டிருந்தன. எங்கே அன்றைய துயில் என்பதை அவனே துயில்வதற்கு சற்று முன்னர் முடிவெடுப்பான். ஒவ்வொருநாளும் வெவ்வேறு காவலர் அவன் அறைக்கு வெளியேயும் உள்ளேயும் காவல் காத்தனர். பீதர், யவனர், சோனகர், காப்பிரியர் என அயலவர் மட்டுமே காவல்பணிக்கு அமர்த்தப்பட்டனர். அவர்களும் ஆறு மாதங்களுக்கொருமுறை முழுமையாக மாற்றப்பட்டனர்.

சிவமூலி இழுத்து மயங்கித் துயிலும் வழக்கம் முன்பு புஷ்கரனுக்கு இருந்தது. ஒவ்வொருநாளும் கால்தளர்ந்து தள்ளாடியபடியே அவன் படுக்கையறைக்குச் சென்றான். பின்னர் நரம்புகள் தளரத்தொடங்கியதும் எங்கும் எப்போதும் அமர்ந்த சற்றுநேரத்திலேயே ஆழ்ந்து துயிலத்தொடங்கினான். நரம்புத்தளர்வுக்கு மயக்குகள் ஒவ்வா என்று மருத்துவர் விலக்கிவிட்டமையால் மதுவும் சிவமூலியும் அகிஃபீனாவும் அவன் கொள்வதில்லை. அவன் படுக்கையில் படுத்ததும் அருகே நின்றிருக்கும் காவலர் சீரான தாளத்தில் மெல்ல பீடத்தை தட்டுவார்கள். அதைக் கேட்டபடி கண்தளர்வான். வெயிலெழுந்த பின்னரே விழிப்பான். நடுவே மஞ்சத்திலேயே சிறுநீர் கழிப்பான். இருமலிருந்தால் மலமும் செல்வதுண்டு. விழித்திருக்கையிலும் அவனால் சிறுநீரை அடக்கமுடியாதென்பதனால் அவனுடன் சிறுநீர்க்கலம் ஏந்திய ஏவலன் ஒருவன் எப்போதும் இருந்துகொண்டிருப்பான். பீதர்கள் உள்ளிருந்து செய்தி சொன்னதும் “விழித்துக்கொண்டார்” என்று யவனக்காவலன் சொன்னான்.

மீண்டும் நெடுநேரம் கடந்து கதவு திறந்தது. சுதீரன் தலைவணங்கி “பேரரசருக்கு தெய்வங்களின் அருள் நிறைக!” என வாழ்த்தினான். மெல்ல இருமிய புஷ்கரன் “மருத்துவர் எங்கே?” என்றான். புரவியிலிருந்து விழுந்ததன் வலி இருக்கிறதென உய்த்தறிந்த சுதீரன் “சித்தமாக இருக்கிறார். நாம் செல்ல காத்திருக்கிறார்” என்றான். புஷ்கரன் அவனை திரும்பி நோக்காமல் நடந்தான். திறந்த கதவு வழியாக கழிப்பறையின் கெடுமணம் எழுந்தது. ஏவலர் படுக்கையை சீரமைக்க உள்ளே நுழைந்தனர்.

சுதீரன் தொலைவில் அவனை நோக்கியபடி நின்ற சிற்றமைச்சன் சிபிரனிடம் கையசைவால் மருத்துவர் என ஆணையிட அவன் ஓசையின்றி பாய்ந்தோடினான். “நாம் இன்று காலை கலிதேவன் ஆலயத்திற்கு செல்கிறோம். அங்கே தங்கள் திருக்காட்சிக்காக குடிகள் புலரிக்கு முன்னரே பெருகிச் சூழ்ந்திருக்கிறார்கள்” என்றான். புஷ்கரன் பேசாமல் நடந்தான். நின்று இருமுறை இருமிவிட்டு மேலும் சென்றான்.

மருத்துவநிலையின் வாயிலில் மருத்துவர் சுவினீதரும் மாணவர்களும் அவர்களுக்காக காத்து நின்றிருந்தனர். சுவினீதர் தலைவணங்கி முகமன் உரைத்தார். புஷ்கரன் “படைத்தலைவன் எங்கே?” என்றான். “அவர் கலி ஆலயத்தில் இருக்கிறார். அவர் தலைமையில்தான் திரள் ஒழுங்கமைகிறது” என்றான் சுதீரன். “நான் முற்றத்திற்கு வருகிறேன்” என்றான் புஷ்கரன். “பட்டத்துயானை ஒருங்கி நிற்கிறது, அரசே” என்றான் சுதீரன். திரும்பி நோக்காமல் புஷ்கரன் உள்ளே சென்றான்.

சுதீரன் வாயிலுக்கு ஓடிவந்தபோது அங்கே பட்டத்துயானையுடன் முழுக் காவல்படையினரும் அகம்படியினரும் மங்கலநிரையினரும் காத்திருந்தனர். அவன்

வந்தது குளத்தில் கல் விழுந்ததுபோல ஓசையற்ற அலையசைவாக இறுதிவரை பரவிச்சென்றது. காத்திருக்கும்படி கையசைத்துவிட்டு அவன் முகப்பில் கைகட்டி நின்றான். அவனை நோக்கியபடி முற்றம் அசைவிழந்து விழிகளாக சூழ்ந்திருந்தது. புரவிகளின் மூச்சொலிகள், குளம்பு மிதிபடும் ஓசைகள், யானை அசைந்துகொண்டே இருக்கும் ஓசை. அவர்களுக்குப் பின்னால் ஓசையே இல்லாமல் குன்றுபோல நின்றிருந்தது அரண்மனை, உள்ளே நுழையமுடியாமல் திணிவுகொண்ட பெரும்குவை அன்றி வேறில்லை என.

விடிந்தபடியே வந்தது. ஒவ்வொன்றும் துலங்க பந்தங்கள் மட்டும் ஒளியிழந்தன. பந்தங்களை அணைத்து அப்பால் கொண்டுசென்றனர். அணைந்த பந்தங்களிலிருந்து எண்ணைக்கருகல் மணம் எழுந்து காற்றில் சுழன்று அப்பால் விலகியது. வண்ணங்களனைத்தும் கூர்கொண்டன. தொலைவில் நின்றிருந்த மரத்தின் ஒவ்வொரு இலையும் தெளிந்தெழுந்தது. அந்நகரில் ஒரு விழா நிகழ்கிறதென்று அயலவர் நம்பமுடியாது. மிக மெல்லிய கார்வைபோல மக்கள்திரளின் முழக்கம் கேட்டுக்கொண்டிருந்தது, செவியருகே ஒரு கலத்தை வைத்ததுபோல.

ஏவலன் அப்பால் வந்து நின்று வணங்கினான். அருகே வர அவன் கைகாட்ட நெருங்கிவந்து காதில் செய்திகளை சுருக்கமாக சொன்னான். கலி ஆலயத்தின்முன் மக்கள் நிரை பெருகி அலையடிக்கிறது. பூசனைகள் பெரும்பாலும் முடிந்துவிட்டன. அரசர் வந்தபின்னரே முடிக்கவேண்டும் என்பதற்காக சிலவற்றை மீண்டும் மீண்டும் செய்து பொழுது நீட்டிக்கிறார்கள். வந்துகொண்டிருக்கிறார் என்று சொல்லும்படி ஆணையிட்டு அனுப்பினான்.

கோட்டைமுகப்புக் காவல்மாடத்தின் நிழல் நீண்டு மாளிகைப்படிகளில் விழுந்தது. செவ்வொளிக் கற்றைகள் கட்டடங்களின் இடையே பீறிட்டு எழுந்து சரிந்தன. மேலே தோன்றிய ஏவலன் கைகாட்டினான். சுதீரன் முன்னால் சென்று படிகளின் அருகே காத்து நின்றான். புஷ்கரன் இறங்கிவரக் கண்டதும் அவன் கையசைக்க மங்கல இசை மட்டும் எழுந்தது. புஷ்கரன் தோன்றியதும் வாழ்த்தொலிகள் எழுந்தன.

புஷ்கரன் எவரையும் நோக்காமல் நேராகச் சென்று மரப்படிகளில் ஏறி யானை மேலிருந்த அம்பாரி மீது அமர்ந்தான். கைகளை கட்டிக்கொண்டு பீடத்தில் சாய்ந்தான். பாகன் யானையை மெல்ல தட்ட பொன்னுரை உருகி வழிந்ததுபோன்ற முகபடாத்துடன் அது ஆடியபடி திரும்பியது. அதன்மேல் போடப்பட்டிருந்த பட்டுக்கம்பளம் உலைந்தாடியது. சங்கிலிகள் ஒலிக்க அது நடக்க கவசமணிந்த கொடிவீரர் எழுவர் காகக்கொடியுடன் முன்னால் சென்றனர். மங்கல இசையுடன் சூதர்நிரை தொடர அவர்களுக்குப்பின் நூற்றெட்டு அணிச்சேடியர் பொலிதாலங்களுடன் சென்றனர்.

யானைக்கு இணையாக புரவியில் சுதீரன் சென்றான். நகர்த்தெருக்கள் தோரணங்களாலும் மலர்வளைவுகளாலும் பட்டுத்துணிகளாலும் அணிசெய்யப்பட்டிருந்தன. தெருக்களின் இருமருங்கிலும் கூடியிருந்த நிஷதகுடியின் பெண்களும் இளையோரும் மலர்தூவி அரசனை வாழ்த்தி குரலெழுப்பினர். அவன் ஒவ்வொரு முகமாக நோக்கிக்கொண்டு சென்றான். அத்தனை முகங்களும் ஒன்றுபோலிருந்தன. அத்தனை செயல்களும் நன்கு பயின்றவைபோல. புன்னகைகள், கைவீசல்கள்.

அரசப்பெருவீதியில் இருந்து பிரிந்தபோது கலியின் குன்று தோன்றியது. அது வெண்சிதல் மூடிய நெற்று என தெரிந்தது. அதன் பரப்பு முழுக்க இடைவெளியில்லாமல் மானுடத் தலைகள். மேலே செல்லும் பாதை மட்டும் அதில் சுற்றப்பட்ட மேலாடைபோல சுழன்று சரிந்திறங்கியது. குன்றின்மேல் ஏறத்தொடங்கியபோது சுதீரன் திரும்பி கீழே விரிந்திருந்த நகரை நோக்கினான். அங்கே அனைத்தும் வழக்கம்போலிருப்பதாகத் தோன்றியது. எறும்புப்புற்றை நோக்குவதுபோல. அனைத்து எறும்புக்கூடுகளும் ஒன்றைப்போல் பிறிதொன்று என உயிரியக்கம் கொண்டு கொப்பளிக்கின்றன.

குன்றின்மேல் கலியின் ஆலயத்தை அவர்கள் அடைந்தபோது பெருமுரசங்கள் முழங்கத் தொடங்கின. கூட்டம் அரசனை வாழ்த்திக் கூவியது. மங்கல இசையும் குரவையொலியும் இணைந்துகொண்டன. யானை செல்ல வழிவிட்டு இரு பக்கமும் எவரும் ஒதுக்காமலேயே உடல்களின் எல்லை ஒன்று உருவாகியது. பின்னாலிருந்தவர்களின் உந்துவிசையால் அது அலைவிளிம்பென நெளிந்தது.

கலியின் ஆலயத்தின் முன் யானை வந்து நின்றதும் கைகளால் ஆணைகளைப் பிறப்பித்தபடி நின்ற படைத்தலைவன் ரணசூரன் முழுக்கவச உடையுடன் வந்து வணங்கினான். ஏவலர் இருவர் மெல்லிய மூங்கில் படிக்கட்டை கொண்டுவந்து யானை அருகே வைத்தனர். புஷ்கரன் கைகளைக் கூப்பியபடி அதனூடாக இறங்கி வந்தான். ரணசூரன் வாழ்த்துரைத்து தலைவணங்கி “அனைத்தும் முறையாக நிகழ்கின்றன, அரசே” என்றான். அவனை நோக்கி புன்னகைத்து

“நன்று” என்றபின் முன்னால் சென்றான் புஷ்கரன். ரணசூரன் குழப்பத்துடன் சுதீரனை நோக்கினான்.

தலைமைப்பூசகர் மச்சர் கலிக்கு அணிவிக்கப்பட்ட கரிய பட்டாடையை அரசனின் தோளில் அணிவித்தார். காகஇறகு சூடிய குலக்கோலை காளகக் குடித்தலைவர் மூர்த்தர் அளித்தார். புஷ்கரன் அவர்களின் முறைமைகளை ஏற்று முன்னால் சென்றான். யானையை பாகன் மெல்ல தட்ட அது காலெடுத்து வைத்து விலகிச்சென்றது. அதே கணம் அப்பால் எரியம்பு ஒன்று எழ ஓர் யானை பிளிறியது. அதனருகே நின்றவர்கள் பாறைவிழுந்த நீர்ப்பரப்பென அதிர்ந்து அலைவட்டமெனப் பரவினர். அவ்விசையால் கூட்டத்தின் உடல்வேலி உடைந்து அங்கிருந்த சிலர் நிலைதடுமாறி விழுந்தனர். முதுமகள் ஒருத்தி கையிலிருந்த குழந்தையுடன் யானையின் காலடியில் விழ யானை திகைத்து பின்னால் காலடி வைத்தது. பின்னாலிருந்த புரவிமேல் முட்டிக்கொண்டு விதிர்த்து முன்னால் நடந்தது. அதன் இரு கால்களுக்கு நடுவே முதுமகளும் மைந்தனும் நசுங்கி உடல் உடைந்தனர்.

ஓலமும் கலைவும் கேட்டு புஷ்கரன் திரும்பி நோக்கினான். சினத்துடன் “என்ன? என்ன?” என்றான். ரணசூரன் பதற்றத்துடன் ஓடிவந்து “அரசே, நிலைதடுமாறி… ஏதோ குழப்பம்” என்று குழற புஷ்கரன் முகம் சிவக்க, கழுத்துத் தசைகள் இழுபட்டு அசைய அவன் கன்னத்தில் ஓங்கியறைந்தான். மேலாடையைச் சுழற்றியபடி யானைக் காலடியில் கிடந்து துடித்த முதுமகளைத் தூக்கிய ஏவலரை அகற்றி குனிந்து அவள் தலையை தொட்டான். அவள் உடல் ஒரு பக்கமாக இழுபட்டிருந்தது. இடைக்குக் கீழே குருதிக்குழம்பு

பரவியிருந்தது. இன்னொரு ஏவலன் குழந்தையை தூக்கினான். அதன் தலை நெஞ்சின்மேல் சரிந்திருந்தது.

புஷ்கரன் திரும்பி ரணசூரனை நோக்கி “மூடன்” என்றான். அவன் உடல் நடுங்கிக்கொண்டிருப்பதை சுதீரன் நோக்கினான். யானை முன்னால் சென்று அங்கிருந்த திரளைக் கண்டு பிளிறியதும் அவன் உடல் அதிர்ந்து துள்ளியது. அவன் வலக்கை அடிபட்ட நாகமெனத் துவள்வதை, நாக்கு வாயின் வலப்பக்கம் ஒட்டியிருப்பதை சுதீரன் கண்டான். புஷ்கரனின் வேளக்காரர்கள் அவன் ஆணைக்காகக் காத்திருந்தனர். சூழ்ந்திருந்த குடிகளும் ஓசையடங்கி தருண முனையில் நின்றிருந்தனர்.

ரணசூரன் புஷ்கரன் முன் முழந்தாளிட்டு கைகூப்பி “அரசே” என்று கூவினான். “அரசே, பொறுத்தருள்க! என் பிழையல்ல… என் பிழையல்ல, அரசே” என்றான். சுதீரன் தோள்தளர பெருமூச்சுடன் நோக்கை விலக்கிக்கொண்டான். புஷ்கரனின் முகம் சிவந்து வாய் இறுகியது. காவலர்தலைவனை நோக்கி கைகாட்டியபின் சுதீரனை நோக்கி திரும்பினான்.

காவலர்கள் ரணசூரனை சூழ்ந்துகொண்டனர். ஒருவன் ரணசூரனின் முதுகை ஓங்கி மிதிக்க அவன் உடல் மண்நோக்கி குனிந்த கணம் காவலர்தலைவனின் வாள் ஏறி இறங்கியது. ரணசூரன் தலை வெட்டுண்டு மெல்லிய ஓசையுடன் கீழே விழுந்தது. அதன் மேலேயே அவன் உடலும் விழுந்தது. உடைந்த கலத்திலிருந்தென வெங்குருதி பீறிட்டு மண்ணில் வழிந்தது. சூழ்ந்திருந்தவர்களிடமிருந்து ஓசையே எழவில்லை.

புஷ்கரன் சுதீரனை நோக்கி செல்வோம் என கைகாட்டிவிட்டு ரணசூரனின் உடலை சுற்றிக்கொண்டு ஆலயத்திற்குள்

நுழைந்தான். சூழ்ந்து நின்றிருந்தவர்கள் ஓசையே இல்லாமலிருப்பதைக் கண்டு சுதீரன் ஏறிட்டுப் பார்த்தான். அந்தப் பெருந்திரள் பாறையடுக்குகள் என அசைவும் ஒலியும் அற்று செறிந்திருந்தது. “மூடன், தன் தண்டனையை தானே வரவழைத்துக்கொண்டான்” என்றான் அருகே நின்றிருந்த சிற்றமைச்சன். அவனை திரும்பி நோக்கியபின் சுதீரன் உள்ளே செல்ல முயல அவனுக்குக் குறுக்காக ரணசூரனின் உடல் கிடந்தது.

ரணசூரனின் கால்கள் இழுத்துக்கொண்டிருக்க இருவர் அவனை கைபற்றி இழுத்து அப்பால் கொண்டுசென்றனர். கூட்டத்தில் எவரோ ஏதோ சொல்ல சிரிப்போசை எழுந்தது. சுதீரன் திரும்பி கூட்டத்தை நோக்கியபோது ஒருவன் ஏதோ இழிசெய்கை காட்டினான். அவன் முகம் தெளிவதற்குள் திரளில் புதைந்தான். அவன் திரும்பியபோது பின்னால் கூட்டத்தின் சிரிப்பொலி முழங்கியது. குருதிச்சேற்றை மிதிக்காமல் தாண்டிக்குதித்து சுதீரன் ஆலயத்திற்குள் நுழைந்தான்.

கருவறைக்குள் புஷ்கரன் கலிதேவனின் சிலை முன்னால் நின்றிருந்தான். அவனுடைய மெய்க்காவலர் இருபுறமும் நிற்க அவன் திரும்பி சுதீரனை நோக்கி அருகே வரும்படி கைகாட்டினான். சுதீரன் அருகே சென்று கைகூப்பியபடி நின்றான். வெண்பட்டால் கண்கள் மூடிக் கட்டப்பட்ட கலியின் முகம் அத்தனை கூரிய நோக்கு கொண்டிருப்பதை உணர்ந்து விழிதிருப்பிக்கொண்டான். அவ்வுணர்வு உடலில் நீடித்தது.

பூசெய்கையும் பலிக்கொடையும் படையலும் குலமுறைமைகளுடன் நிகழ்ந்தன. பூசகர்கள் மெல்லிய குரலில் சொன்னவற்றை புஷ்கரன் பாவை என செய்தான். சுதீரன் சூழ்ந்திருந்தவர்களின் முகங்களையே

நோக்கிக்கொண்டிருந்தான். அத்தனை முகங்களும் விழவுக்கான கிளர்ச்சியும் திரளென்றானதன் தன்னை மறந்த மிதப்பும் கொண்டு ஒன்றுபோலிருந்தன. தலைமைப்பூசகர் குருதிக்குழம்பு தொட்டு புஷ்கரனின் நெற்றியில் நீள்குறியிட்டு “கலியருள் சூழ்க! வெற்றியும் புகழும் நீள்க! என்றும் சொல் நின்றாள்க!” என வாழ்த்தினார்.

புஷ்கரன் திரும்பி நோக்க அருகே நின்ற ஏவலர் நீட்டிய தட்டிலிருந்து கரிய பட்டையும் பொன்னணியையும் எடுத்து முதுபூசகருக்கு அளித்தான். பிற பூசகர்களும் வந்து பரிசில் பெற்றுக்கொண்டனர். பரிசில் முடிந்ததும் புஷ்கரன் திரும்பி சுதீரனை நோக்கிவிட்டு மறுவாயிலினூடாக வெளியே சென்றான். முதலில் சென்ற மெய்க்காவலர் வேல் விரித்து வழி செய்ய புஷ்கரன் அவ்வாயிலில் தோன்றியதும் வாழ்த்தொலிகளும் குரவையும் மங்கல இசையும் முழங்கின. சூழ்ந்திருந்த காவல்மாடங்களில் இருந்து முரசொலி எழுந்தது.

புஷ்கரன் அப்பால் பலகையாலான பீடத்தில் காரகன் நிற்பதை கண்டான். வலது முன்னங்காலை சற்று தூக்கி தலைநிமிர்ந்து பிடரிமயிர்கள் காற்றில் உலைய ஓசைக்கேற்ப உடல் விதிர்த்தபடி நின்றிருந்தது. அதன் கடிவாளத்தை இரு பக்கமும் இரு பாகன்கள் பற்றியிருந்தனர். ஏவலனொருவன் வந்து பணிந்து “புரவி சித்தமாக உள்ளது, அரசே” என்றான். சுதீரன் தொலைவில் கட்டப்பட்டிருந்த சிறிய களிறை நோக்கினான். அதன்மேல் அமர்ந்திருந்த பாகன் அவன் கையசைவுக்காக காத்திருந்தான். புஷ்கரன் சுதீரனை நோக்கிவிட்டு நடக்கத் தொடங்க சுதீரன் திரும்பி பாகனை நோக்கினான். செய்கை காட்டத் தூக்கிய கையால் தலைப்பாகையை சீரமைத்தபடி

மெல்ல பின்னடி எடுத்துவைத்து ஆலய வாயிலிலேயே நின்றான்.

முன்னோக்கி நடந்த புஷ்கரன் திரும்பிப் பார்த்தான். அவன் நோக்கை சந்தித்த சுதீரனின் விழிகள் விலகவில்லை. திடுக்கிட்டவன்போல புஷ்கரன் நின்றுவிட்டான். அவனுடன் சென்ற வேளக்காரப் படையினரும் நிற்பதை உணர்ந்து மேலும் நடந்தான். அவன் காலடிகள் தளர்ந்தன. ஒருமுறை நிற்கப்போகிறவன்போலத் தோன்றினான். காரகனை அவன் அணுகியதும் பரிவலர் திகைப்புடன் ஒருவரை ஒருவர் நோக்கிக்கொண்டார்கள். புஷ்கரன் திரும்பி சுதீரனை விழிதொட்டு நோக்கினான். எவ்வுணர்வும் இல்லாமல் சுதீரன் நோக்கி நின்றான்.

மிக மெல்லிய புன்னகை ஒன்று புஷ்கரன் விழிகளில் தோன்றியது. கடிவாளத்தைத் தரும்படி பரிவலரிடம் சொன்னான். அவர்களில் ஒருவன் குனிந்து கால்வளையத்தை எடுத்துக் காட்ட அதில் கால்வைத்து எழுந்து புரவிமேல் ஏறிக்கொண்டான். செவி பின்கோட்டி விழியுருட்டி அது காற்றுபடும் சுனை என சிலிர்த்தபடி நின்றது. அவன் ஏறி அமர்ந்ததும் அதன் செவிகள் ஒன்றையொன்று தொடுவதுபோல கூர்கொண்டன. கனைத்தபடி நின்ற இடத்திலேயே முன்னங்கால் தூக்கி மேலே பாய்ந்து பின்னங்காலை உதறி மீண்டும் மேடையில் முன்னங்கால் ஊன்றி முன்புபோலவே நின்றது. கணநேரத்தில் நெய்விட்ட அனல் எழுந்து பின் அணைவது போலிருந்தது.

புஷ்கரன் தெறித்து காவலர் நடுவே விழுந்தான். அவர்கள் அறியாமல் விலகிக்கொள்ள மண்ணில் குப்புற உடலறைந்து பதிந்ததுபோல அசையாமல் கிடந்தான். சூழ்ந்திருந்தவர்கள்

அனைவரும் அவனை நோக்கிக்கொண்டிருந்தனர். அவன் கையை ஊன்றி புரண்டு எழுந்து மெல்ல துப்பியபடி அமர்ந்தான். அவன் அணிந்திருந்த பட்டுமணிமுடி அப்பால் கிடந்தது. முகத்தை கையால் துடைத்தபடி அவன் தன்னைச் சூழ்ந்திருந்தவர்களின் பார்வைகளை நோக்கினான். அப்பெருந்திரள் அவனை விழிகளாகச் சூழ்ந்திருந்தது.

புஷ்கரன் சினம் எரிந்தேற எழமுற்பட்டபோது ஆலயமுகப்பில் நின்றிருந்த பட்டத்துயானைமேல் இரு கைகளையும் விரித்து உரக்க “நிஷதகுடி வெல்க!” என்று கூவியபடி நளன் எழுந்தான். அவன் கைகளை விரித்ததும் அங்கிருந்த மொத்தக் கூட்டமும் வெடித்தெழுந்த பெருமுழக்கமாக “பேரரசர் நளன் வாழ்க! நிஷதத் தலைவர் வாழ்க!” என்று கூவியது.

புஷ்கரன் எழுந்து தன் ஆடையை இழுத்தபடி அருகே நின்ற வீரனிடம் மணிமுடியை எடுக்கும்படி சைகை காட்டினான். அவன் அறியாமல் குனிய கூட்டத்தில் நின்ற ஒரு முதுமகள் “தொடாதே அதை… தொட்டால் உன் குலத்தை வேருடன் அறுப்போம்” என்று கூவினாள். நூற்றுக்கணக்கான பெண்குரல்கள் “தொடாதே… கீழ்மகனே, விலகு!” என்று கூவின. புஷ்கரன் பதறித்துடித்த வலக்காலுடன் நிற்கமுடியாமல் தள்ளாடினான். யானைமேல் நின்றிருந்த நளனை நோக்கியபடி காலடி வைக்க அவிழ்ந்து கிடந்த தன் ஆடையில் கால்சிக்க தடுமாறி விழுந்தான்.

அவன் வலக்கை இழுத்துக்கொண்டது. வலது கால் நீண்டு துடித்தது. வாய் கோணலாகி முகம் வலிப்பில் அசைந்தது. அவன் இடக்கையை ஊன்றி எழமுயல அவனை நோக்கி கைநீட்டி வசைபாடிய திரளில் இருந்து பழுத்த கிழவி ஒருத்தி கூன்விழுந்த முதுகுடன் வந்து அவன் முகத்தில் எட்டி

உதைத்தாள். அவள் நரைகூந்தல் அவிழ்ந்து விழுந்தது. தடுமாறி நிலைகொண்டு அவன் முகத்தில் காறி உமிழ்ந்து “இழிமகனே... உன்னைப் பெற்ற வயிற்றுக்கும் கீழுலகே... சிறுமதியனே... புழுவே” என்று கூவினாள். அதற்குள் இன்னொரு முதுமகள் வந்து அவன் முகத்தில் உதைத்தாள். அவன் மல்லாந்து விழ வெறிகொண்டவள்போல அவனை உதைத்துக்கொண்டிருந்தாள். சூழ்ந்திருந்த பெண்கள் அனைவரும் வசைகூவ விழித்த கண்களுடன் படைக்கலமேந்திய வீரர்கள் நோக்கி நின்றனர்.

அச்செய்தி பரவ அப்பெருந்திரளிலிருந்த பெண்களனைவரும் வெறிக்கூச்சலிட்டபடி முட்டி அலைததும்பி அவனை நோக்கி வரத்தொடங்கினர். அவர்கள் வேலும் வாளுமேந்திய வீரர்களை அடித்தும் உதைத்தும் தள்ளினர். வீரர்கள் மெல்ல பின்வாங்கி ஒற்றைத்திரளாகி அகன்று செல்ல பெண்களின் பெருக்கு நடுவே சுழிமையமென புஷ்கரன் கிடந்தான். யானைமேலிருந்த நளன் “நிறுத்துங்கள். நிறுத்துங்கள்... இது அரசாணை!” என்றான். “அரசாணை!” என்று படைவீரன் ஒருவன் உரக்கக் கூவினான். அக்குரல் படைவீரர்களுக்கு அவர்கள் செய்யவேண்டுவதென்ன என்ற தெளிவை அளிக்க அவர்கள் “அரசாணை... நிறுத்துக!” என மீண்டும் மீண்டும் கூவினர். முன்னால் நின்றவர்கள் தயங்க பின்னால் நின்றவர்கள் உந்த கூட்டம் ததும்பி பக்கவாட்டில் விரிந்தது.

திரள் ததும்பியபடி வெறியுடன் கூச்சலிட்டுச் சூந்திருக்க வலக்கை நடுங்கித்துள்ள வலக்கால் செயலற்று இழுத்து நீண்டிருக்க மூக்கிலும் கடைவாயிலும் நீர் வழிய புஷ்கரன் அமர்ந்திருந்தான். யானைமேலிருந்து இறங்கிய நளன் அவன் அருகே வந்து “இளையவனே, உன்னிடமிருந்து எதையும் பறிக்க

விரும்பவில்லை. நீ வென்றதை அவ்வண்ணமே மீட்க எண்ணுகிறேன். நாம் சூதாடுவோம்... சென்றமுறை ஆடிய அதே முறைப்படி, அதே நெறிகளின்படி” என்றான். புஷ்கரன் பேசமுற்பட்டாலும் அவனால் குரலெழுப்ப முடியவில்லை. அவன் சுதீரனை நோக்கினான்.

சுதீரன் அருகே வந்து வணங்கி “நான் அவரது அமைச்சன், என் பெயர் சுதீரன்” என்றான். “அவர் உங்களுடன் சூதாடுவார்... எங்கே எப்போது என்று சொல்லுங்கள்” என்றான். நளன் வாயெடுப்பதற்குள் முதுமகள் ஒருத்தி தொண்டை புடைத்துத்தெரிய பற்கள் நெரிபட “இப்போதே... இக்களமுற்றத்திலேயே நிகழட்டும்... இவன் நச்சுப்பல் நாகம். அது பதுங்கி எழ வாய்ப்பளிக்க மாட்டோம்” என்று கூவினாள். “ஆம், இங்கேயே... இங்கேயே ஆடவேண்டும்” என்று பெண்கள் கூச்சலிட்டனர். மீண்டும் திரள் எல்லை உடைய “ஆம், இங்கேயே. விலகுக!” என்று நளன் கூவினான். அவன் ஆணையை வீரர்கள் மீண்டும் கூவினர்.

நளன் சுதீரனிடம் “இவன் ஆடைமாற்றி நீர் அருந்தி வரட்டும்... இந்த ஆலயமுற்றத்திலேயே களம் அமையட்டும்” என்றான். சுதீரன் “ஆம், அரசே” என்றபின் புஷ்கரனின் இடக்கையைப்பற்றித் தூக்கினான். புஷ்கரனின் எடையை அவனால் தாங்கமுடியாமல் தள்ளாடினான். சூழ்ந்திருந்த எந்த வீரனும் உதவ முன்வரவில்லை. சுதீரன் வலக்கையை பற்றிக்கொண்டு இழுத்தான். அது பாய்மரக் கயிறென அதிர்ந்தது. இடக்கையை ஊன்றி புஷ்கரன் எழுந்தான். சுதீரன் அவனை தோள்சுற்றிப்பற்றி தாங்கிக்கொண்டான்.

“வருக அரசே... ஆலயச் சிற்றறையில் ஓய்வெடுக்கலாம்” என்றான் சுதீரன். புஷ்கரன் “நீர்... விடாய்நீர்” என்றான். அவன்

உதடுகள் வீங்கியிருந்தன. நாக்கு வந்து வளைநாகம்போல் தலைகாட்டி மீண்டது. ஆலயச் சிற்றறையின் வாயிலில் நின்றிருந்த பூசகர் “பூசனைப்பொருள் வைப்பதற்குரிய அறை இது. இதற்குள் செல்லமுடியாது” என்றார். “ஒரு குறுபீடத்தை மட்டும் போடுங்கள்... அரசர் இளைப்பாறட்டும்” என்றான் சுதீரன். பூசகர் “இது இளைப்பாறுதற்குரிய இடமல்ல” என்று சொல்லிவிட்டு உள்ளே சென்று கதவை மூடிக்கொண்டார்.

“அமர்க, அரசே” என சுதீரன் அவனை படிகளில் அமரச்செய்தான். “நீர்... நீர்க்குடுவை” என்றான். வீரர்கள் வாள்களும் வேல்களுமாக எவரோ என நோக்கி நின்றனர். வீரர்களாலும் பெண்களாலும் சூழப்பட்டு நின்ற நளனை நோக்கி “அரசே, விடாய்நீர் கொடுக்க ஆணையிடுக!” என்றான் சுதீரன். நளன் “நீர் கொடுங்கள்” என்று சினத்துடன் சொல்லி அவனே வரப்போனான். “இருங்கள், அரசே” என ஒரு வீரன் இடையிலிருந்த நீர்க்குடுவையுடன் வந்து அதை சுதீரனிடம் தந்தான்.

வீங்கிய உதடுகளிலிருந்து வழிந்து நீர் மார்பெங்கும் நனைய தொண்டைமுழை ஏறி இறங்க மூச்சுவிட இடைவெளிவிட்டு புஷ்கரன் நீரை அருந்தி குடுவையை வைத்துவிட்டு தலைகுனிந்து அமர்ந்திருந்தான். சுதீரன் தன் மேலாடையை எடுத்து அவனிடம் அளித்து “துடைத்துக் கொள்ளுங்கள்” என்றான். அவன் முகத்தைத் துடைத்ததும் அதை வாங்கி அவன் முதுகையும் தோளையும் துடைத்தான். புஷ்கரன் தலைதூக்கி “அவர் வந்தது எப்போது உமக்குத் தெரியும்?” என்றான். “நேற்றுமுன்னாள்...” என்றான் சுதீரன். “இரு நாட்களாக இந்நகரில் சுற்றிக்கொண்டிருந்தார் என்றனர் என் ஒற்றர்.”

புஷ்கரன் வெறுமனே நோக்கினான். “இக்குடிகள்மேல் நம்பிக்கை கொள்ளாமலிருந்தார். திரும்பிச் சென்றுவிடுவதை குறித்துக்கூட எண்ணினார். ஆகவேதான் காரகனிலிருந்து உங்களை விழச்செய்தேன்” என்றான் சுதீரன். “அவர் புரவியை அறிந்தவர். கரிய வைரம் என அதை அழைக்கின்றனர் பரிவலர். அப்புரவி உங்களை ஏற்கவில்லை என்பது போதும் அவர் நம்பிக்கை கொள்ள..” புஷ்கரன் “இன்று குடிகள் நடுவே விழச்செய்து அவர்களுக்கும் அவர்களின் எண்ணத்தை காட்டிவிட்டீர்” என்றவன் புன்னகையுடன் இதழ்வளைய “நன்று, அந்தணரை வெல்லமுடியாதென்பது எந்தை கூற்று. அது பொருள்கொண்டது” என்றான். “என் கடன் இது” என்றான் சுதீரன்.

“நீர் என்ன நினைக்கிறீர்? நான் உயிர்வாழ்வதில் பொருளுண்டா?” சுதீரன் “ஆம், இப்போது இவ்வண்ணமே இறந்தால் ஏழுக்கு ஏழு பிறவி எடுத்துக் கழுவவேண்டியிருக்கும். கழுவினாலும் தீராமலும் ஆகும்” என்றான். புஷ்கரன் பெருமூச்சுவிட்டு தலைகுனிந்து அமர்ந்திருந்தான். பின்னர் சிவந்த விழிகளுடன் நிமிர்ந்து “அந்தணரே, இது அடிபணிந்து ஆசிரியனிடம் மாணாக்கன் கேட்பது. நான் செய்வதற்கேது உள்ளது?” என்றான்.

“அரசே, நீங்கள் இதுவரை ஈட்டியதில் நன்று ஒன்று உண்டு” என்றான் சுதீரன். “நீங்கள் ஆடியதில் எல்லை கண்டுவிட்டீர். இங்கினி ஏதுமில்லை. எனவே எச்சுமையும் இல்லாமல் பறந்து முழு விசையாலும் மறு எல்லைக்கு செல்லமுடியும். வான்மீகியும் விஸ்வாமித்திரரும் சென்ற தொலைவுக்கே.” புஷ்கரன் அவனை கூர்ந்து நோக்கினான். இருமுறை உதடுகள் அசைந்தன. “நன்றோ தீதோ எல்லைக்குள் நிற்பவர்கள் எந்த முழுமையையும் அடைவதில்லை. ஆடுகளங்களுக்கு

அப்பாலுள்ளதே மெய்மை. மீறிச்செல்வதே தவமெனப்படுவது. முற்றிலும் கடப்பதே வீடுபேறு" என்றான் சுதீரன். "என்னுடன் இரும், அந்தணரே" என்றான் புஷ்கரன். "ஆம், அது நான் அளித்த சொல்" என்றான் சுதீரன்.

# நீர்க்கோலம் - 96

## 95. நிலவொளிர்காடு

❀சுதீரனின் தோள்பற்றி புஷ்கரன் ஆலயமுகப்புக்கு வந்தபோது காரகன் நின்றிருந்த மேடையை தூக்கிவந்து போட்டு அதில் மரவுரி விரித்து நாற்களப் பலகையை விரித்திருந்தனர். அதனருகே காவலர் வேல்களுடன் நின்றனர். சிற்றமைச்சர்கள் நாற்களக் காய்களை பரப்பினர். கலியின் ஆலயச் சுவர்களின் மேலும் மரங்களின் கிளைகளிலும் எல்லாம் மக்கள் செறிந்திருந்தனர். அந்த மேடையைச் சுற்றி திரளுடல் கோட்டையென்றாகியிருந்தது.

அப்பால் நளன் கைகட்டி நின்றிருக்க அவனைச் சூழ்ந்து முதுபெண்கள் நின்று மூச்சிளைக்க கைகளை வீசி தலையை ஆட்டி அழுதும் கூச்சலிட்டும் பேசிக்கொண்டிருந்தனர். சிலர் நெஞ்சிலும் வயிற்றிலும் ஓங்கி அறைந்தபடி அலறி அழுதனர். சிலர் கால்தளர்ந்து நிலத்தில் அமர்ந்து தலையில் கைவைத்து கதறினர். சிலர் மண்ணில் முகம்புதைத்து ஓய்ந்து விழுந்து கிடந்தனர்.

புஷ்கரன் வருவதைக் கண்டதும் ஒரு முதுமகள் கைநீட்டி "பழிகாரா! இழிமகனே! கீழ்பிறப்பே!" என்று கூவினாள். அத்தனை பெண்களும் அவனை நோக்கி கைநீட்டி

கூச்சலிட்டனர். காறித் துப்பினர். மண்ணை அள்ளி வீசினர். அவர்களை நோக்கியபடி தானறியாத ஏதோ என புஷ்கரன் நின்றான். நளன் அவர்களை கைநீட்டி தடுத்தான். அவன் வீரர்கள் அவர்களை வேலால் தடுத்து பின்னால் தள்ளினர்.

கலியின் ஆலயப்பூசகர் மூவர் வந்து நாற்கள மேடை அருகே நின்று கைதூக்கி “அமைக... ஒலியமைக!” என்று கூவினர். முரசுகள் முழங்கி ஓய கூட்டம் அமைதியடைந்தது. முதன்மைப் பூசகர் கைகளைத் தூக்கி “ஆன்றோர் மூத்தோர் அறிக! விண்ணுறை நீத்தோரும் தெய்வங்களும் அறிக!” என்று உரத்த குரலில் கூவினார். “இங்கே நிஷதகுடியின் மூத்த இளவரசர் நளனுக்கும் அவர் இளவலும் அரசருமாகிய புஷ்கரனுக்கும் நாற்களமாடல் நிகழவிருக்கிறது. இது களமுற்றாடல் முறை. இதன் நெறிகள் தொன்றுதொட்டு வருபவை.”

“முதன்மையானவை இவை. ஆட்டம் இடைநிற்கலாகாது. நோயாலோ இறப்பாலோ வேறெந்த ஏதுவாலோ ஆட்டம் நின்றால் நிறுத்தியவரே தோற்றவர் எனக் கருதப்படுவார். நோயுற்றால் ஆடுபவர் தன்பொருட்டு ஆட்டத்துணைவரை அமர்த்தலாம். அவர் எவரென முன்னரே அறிவிக்கவேண்டும். பிறிதெவர் சொல்லும் கையும் ஆட்டத்தில் நுழைவது மீறல்பிழையென்றே கருதப்படும். ஆட்டத்தில் எந்த நெறிப்பிழை நிகழுமென்றாலும் அவர் தோற்றவர் எனக் கருதப்படுவார். வென்றவருக்கே ஆட்டத்தை முடிக்கும் உரிமை உண்டு. இவற்றை ஒப்புக்கொண்டால் இருவரும் தங்கள் படைக்கலம் மீது கைவைத்து கலியின்மேல் ஆணையிடுக!” முதலில் புஷ்கரன்தான் கைதூக்கி “ஆணை! ஆணை! ஆணை!” என்றான்.

புஷ்கரனின் பதற்றமில்லாமை சூழ்ந்திருந்த மக்களை திகைக்கச் செய்தது. மெல்லிய முணுமுணுப்புகள் பரவி முழக்கமாயின. ஒரு முதுமகள் “இந்த இழிந்தோன் மாயத்தெய்வங்களை துணைக்கொண்டு வென்றான். இம்முறையும் அத்தெய்வங்கள் இங்கே அவனுக்கு துணைநிற்கக்கூடும். கலிதெய்வத்தின் குருதியமுது கொண்டுவரப்பட்டு அதன்மேல் கைவைத்து இருவரும் ஆணையிடவேண்டும், எந்த இருட்தேவும் விழிமாயமும் இங்கு இல்லை என்று” என்றாள். “ஆம், ஆணையிடவேண்டும்… ஆணையிட்டே தீரவேண்டும்” என்று கூச்சல்கள் எழுந்தன.

பூசகர் “ஆம், அவைவிழைவு அதுவென்றால் அவ்வாறே” என்றார். கலியின் குருதிக்குழம்பு ஒரு மரச்சிமிழில் கொண்டுவரப்பட்டது. முதலில் அதன்மேல் கைவைத்து “ஆணை! ஆணை! ஆணை!” என்று புஷ்கரன் சொன்னான். கூட்டம் ஏமாற்றத்துடன் கலைவோசை எழுப்பியது. பின்னர் அதன் நிறைவின்மை முழக்கமாகச் சூழ்ந்தது. சிறிய குச்சியை நட்டு நிழல்நோக்கி பொழுது கணித்த கணியர் “நற்பொழுது” என்றார். பூசகர் “தொடங்கலாம்” என ஆணையிட்டார். புஷ்கரன் சுதீரனை சுட்டிக்காட்டி “இவர் என் ஆட்டத்துணைவர்” என்றான். நளன் தன்னருகே நின்றிருந்த பீமபாகுவை சுட்டிக்காட்டி “இவர் என் துணைவர்” என்றான்.

இருவரும் எதிரெதிரே அமர்ந்துகொண்டார்கள். துணைவர் இடக்கைப்பக்கம் அமர்ந்தனர். அவர்களுக்கு கலியின் காகச்சிறகுகள் அளிக்கப்பட அவற்றை தலையில் சூடிக்கொண்டனர். புஷ்கரனின் கைகள் நடுங்கிக்கொண்டிருந்தன. அவன் வலது விழிக்கீழ் தசைகள் திரைச்சீலை சுருக்கங்கள்போல மூன்று அலைவளையங்களாக

இறங்கி கன்னத்தசை ஆழ்ந்த மடிப்புடன் மிகக் கீழிறங்கி முகம் அனல்வெம்மையால் உருகிவழியும் மெழுகுப்பாவைபோலத் தோன்றியது. அவனருகே அமர்ந்திருக்கையில் காற்றினூடாகவே அந்த நடுக்கத்தை சுதீரனால் உணரமுடிந்தது.

பூசகர் நளனிடம் “அரசே, அறைகூவியவர் நீங்கள். முதல் நகர்வு உங்களுக்கு” என்றார். நளனின் படைவீரன் கொடியுடன் முதல் நகர்வை நிகழ்த்தினான். சுதீரன் பெருமூச்சுடன் உடலை எளிதாக்கிக்கொண்டான். என்ன நிகழுமென்று தெளிவாகிவிட்டது. புஷ்கரன் அதை உணர்ந்ததுபோல திரும்பி அரைக்கணம் சுதீரனை பார்த்தான். ஒன்றையொன்று நோக்கி நின்ற படையும் தலைமைகளும் சுதீரனுக்கு அச்சமூட்டின. நாற்களச் சூழ்கையை நோக்குவது ஊழை விழிமுன் பெறுவதுபோல என எங்கோ படித்ததை நினைவுகொண்டான்.

ஆட்டம் தொடங்கிய கணம் முதலே நளனின் நகர்வுகள் முன்பு ஆடி வென்ற ஆட்டமொன்றின் மறுநிகழ்வுபோல கூர்மையும் முழுமுடிவும் கொண்டிருந்தன. புஷ்கரன் ஒவ்வொன்றாக இழந்துகொண்டிருந்தான். முதலில் புஷ்கரன் ஏதோ செய்யப்போகிறான் என்று திரள் எண்ணியது. அவன் தோற்று பின்னகர்ந்தபடியே இருக்கையிலும்கூட அவர்கள் அவன் கண்களையும் கைகளையும் ஐயத்துடனும் அச்சத்துடனும் நோக்கிக்கொண்டிருந்தார்கள். பின்னர் மெல்ல எளிதானார்கள். சிரிப்பொலிகளும் கேலிச்சொற்களும் எழத்தொடங்கின.

புஷ்கரனின் கைகள் காய்களை நகர்த்தமுடியாதபடி நடுங்கின. அவன் கை களம் மீது காயுடன் அலைபாய்ந்தது. ஆகவே அவன் என்ன செய்யப்போகிறான் என்பது பதற்றத்தை உருவாக்கியது. பின் ஒவ்வொருமுறையும் அவன் தோற்கடிக்கப்பட்டபோது அதுவே ஏளனத்திற்குரியதாகியது.

அவன் காயை எடுத்ததுமே “அதோ அதோ… பருந்து சுற்றிப்பறக்கிறது… அதோ நிலம்பாய்கிறது” என்று கூச்சல்கள் எழுந்தன.

இறுதியாக அரசன் எஞ்ச நளனின் படை வலையென விரிந்து சூழ்ந்தது. அரசனை மேலும் பின்னகர்த்திய புஷ்கரன் மீண்டும் நகர்த்த கையெழாமல் தவித்தான். தேர் கடந்த நாகம் மரமேறத் தவிப்பதுபோல அவன் கை புளைந்தது. சுதீரன் “துணைவனாக நான் ஆடுகிறேன், அரசே” என்றான். “இன்னும் ஒரே நகர்வுதான் எஞ்சியிருக்கிறது” என்றார் பூசகர். “ஆம்” என்றான் சுதீரன். “ஆடுக!” என்று நளன் கைகாட்டினான்.

அரசன் மேல் கைவைத்த சுதீரன் நளன் விழிகளை நோக்கி “அரசே, நான் அந்தணன். சூதுக்காயை தொடுவதே குல இழுக்கு. ஆயினும் களவும் கற்றுமறந்தவன். இக்கணத்தில் தொடங்கி என்னால் உங்களை வெல்லக்கூடும் என்கிறேன். அதை மறுக்கிறீரா?” என்றான். அவன் விழிகளை நோக்கிய நளன் “இல்லை. நீர் நானறியா ஏதோ காய்சூழ்கையை எண்ணியிருக்கிறீர்” என்றான். “ஆம்” என்றான் சுதீரன். “அதை ஆடினால் எனக்கு பிறிதொரு எரிநரகம் ஒருங்கும்” என்றபின் “நான் அதை ஆடாதொழிவேன், நீங்கள் மூன்று சொல்லுறுதிகளை அளித்தால்” என்றான்.

அவன் என்ன பேசுகிறான் என்று அறியாமல் மக்கள்பெருக்கு கொந்தளித்தது. முரசு முழங்கி அமைதி அமைதி என ஆணையிட்டது. நளன் இருவரையும் மாறிமாறி நோக்கியபின் “அளிக்கிறேன்” என்றான். “என் அரசனின் உயிர் அளிக்கப்படவேண்டும். முதற்சொல் இது” என்றான் சுதீரன். நளன் பெருமூச்சுடன் “ஆம், அளித்தேன்” என்றான். “அவர் உங்கள் குடியென காக்கப்படவேண்டும். உங்கள் நகரில் அவர்

நுழையமாட்டார். கானிலிருப்பார். அங்கு உங்கள் கோல் அவருக்கு துணைநிற்கவேண்டும்.” நளன் “ஆம், அது என் கடமை” என்றான். சுதீரன் “உங்கள் நெஞ்சிலும் உங்கள் மைந்தர் நெஞ்சிலும் துளியேனும் வஞ்சமோ விலக்கோ இருக்குமென்றால் அவை இக்கணமே முற்றாக களையப்படவேண்டும். உங்களுக்குள் முன்பிருந்த இளையோன் என அவர் ஆகவேண்டும். அவர் மனைவியரும் மைந்தரும் அவ்வண்ணமே இங்கு திகழவேண்டும்” என்றான்.

நளன் உதடுகளை அழுத்தி தொண்டை ஏறியிறங்க சில கணங்கள் அமர்ந்திருந்தான். பின்னர் “மூன்றாவது சொல் அவனுக்கானது அல்ல அந்தணரே, என் மீட்புக்கானது” என்றான். “அளித்தேன்…” என்று கைகூப்பினான். சுதீரன் அரசனிலிருந்து கையை எடுக்காமல் “என் விழிகளை நோக்குக… அவை தொட்டுச்செல்லும் காய்களை எண்ணுக! நான் கருதிய சூழ்கை எதுவெனப் புரியும். அரசன் அதை அறிந்திருக்கவேண்டும். அவன் முன் எந்தப் படைக்கலமும் கரந்துறையலாகாது” என்றான். நளன் அவன் விழிகளையே நோக்கினான். பின்னர் “ஆம்” என்றான். பெருமூச்சுடன் கைகளை களத்திலிருந்து விலக்கிக்கொண்டான்.

கைகூப்பி வணங்கிய சுதீரன் புஷ்கரனிடம் “மூத்தவரை வணங்கி நற்சொல் பெறுக, அரசே” என்றான். அதற்குள் அச்செய்தி பரவ கூட்டம் கொந்தளிக்கத் தொடங்கியது. “கொல்லவேண்டும் அந்தக் கீழ்மகனை… அவன் குருதி வீழவேண்டும்” என ஒரு முதியவர் கூவினார். “கொல்க… கொல்க!” என கூட்டம் கூச்சலிட்டது. நளன் எழுந்து சினந்த விழிகளுடன் “மறுசொல் எடுப்போர் எவராயினும் அரசாணையை மீறுகிறார்கள்” என்றான். அச்சொல்லை முரசு

தாளம்பெருக உரைத்ததும் கூட்டம் அமைதிகொண்டது. அதன் முனகல்களும் ஓய்ந்தன.

புஷ்கரன் சுதீரனின் தோள்களை பற்றிக்கொண்டு எழுந்தான். அவன் கை துள்ளிக்கொண்டிருக்க வலக்கால் மரக்கட்டைபோல நீண்டு விரைத்திருந்தது. அதை இழுத்தபடி சென்று குனிந்து நளனின் கால்களைத் தொட்டான். நளன் அவனை தோள்சுற்றி இழுத்து நெஞ்சோடு அணைத்துக்கொண்டான். “இளையோனே, என்றும் நீ என் நெஞ்சின் மைந்தனே... என்னுடன் இரு. நீ விழைந்த நிலத்தை எடுத்துக்கொள்...” என்றான். புஷ்கரனின் கண்களில் எந்த உணர்வும் இருக்கவில்லை. “என்னுடன் இரு, இளையோனே” என்று நளன் உடைந்த குரலில் சொன்னான். “அவர் துறந்துவிட்டார், அரசே” என்றான் சுதீரன்.

புஷ்கரன் சுதீரனை நோக்க “ஆடை களைக... அணிகளும் மிதியடியும் எதுவும் எஞ்சலாகாது...” என்ற சுதீரன் புஷ்கரனின் கையிலிருந்த கங்கணங்களையும் அணிவளைகளையும் உருவினான். அருகே நின்றிருந்த வீரனிடம் புஷ்கரனின் கால்களில் இருந்து கழல்களை கழற்ற ஆணையிட்டான். காதுகளில் இருந்து குண்டலங்களையும் கழற்றி மேடையிலிருந்த நாற்களம் மீது வைத்தான். அவன் இறுதிச் சிற்றாடையுடன் நிற்க சுதீரன் பின்னர் திரும்பி அப்பால் நின்றிருந்த ஒரு முதியவரிடம் “மூத்தவரே, அந்த மரவுரியை இந்த இரவலனுக்கு அளியுங்கள்” என்றான். மரவுரியை தோளிலிட்டிருந்த அவர் “நானா?” என்றார். அவர் கைகால்கள் நடுங்கத் தொடங்கின. “ஆம், அந்த மரவுரி... முதல் நோக்கில் அதுவே விழியில் பட்டது. இல்லத்திலிருந்து கிளம்பி அது இதன்பொருட்டே இங்கு வந்துள்ளது” என்றான் சுதீரன்.

அவர் அளித்த மரவுரியை இடைசுற்றி நின்ற புஷ்கரனை நோக்கி “உங்கள் குடியை இறுதியாக வணங்கி விடைகொள்க, அரசே… இனி இவர் எவருமல்ல உங்களுக்கு” என்றான். அவன் மரவுரி அணியக் கண்டதும் சூழ்ந்திருந்த நிஷாதர்கள் முற்றமைதிகொண்டிருந்தனர். நளன் கண்களில் நீர்வழிய கைகூப்பி நின்றான். புஷ்கரன் தடுமாறும் கால்களுடன் மூன்றடி எடுத்து வைத்து கைகூப்பியபோது முன்னால் நின்றவர்களின் கண்களிலிருந்து நீர்வழியத் தொடங்கியது. சுதீரன் “மண்டியிட்டு சென்னி நிலம்தொட மும்முறை” என்றான்.

புஷ்கரன் இடக்கையை ஊன்றி இடக்காலை மடித்து மண்ணில் மண்டியிட்டான். அவன் வலக்கால் நீட்டி நின்று அதிர்ந்தது. மும்முறை அவன் நெற்றி நிலம்தொட வணங்கினான். நிஷாதர்களிலிருந்து விசும்பல்களும் விம்மல்களும் ஒலித்தன. சுதீரன் அவன் கையைப்பற்றி தூக்கினான். அவன் சுதீரன் தோளைப்பற்றியபடி நின்றான். பார்வையற்றவன் போலிருந்தன அவன் விழிகள். கூட்டத்திலிருந்து எவரோ “இளவரசே, செல்லவேண்டாம்” என்று கூவினர். காத்திருந்ததுபோல கூட்டம் “இளவரசே, வேண்டாம் இளவரசே” என்று கூச்சலிட்டது. அவ்வொலி திரண்டு முழக்கமெனச் சூழ்ந்தது.

சுதீரன் தன் தலைப்பாகையையும் குண்டலங்களையும் கச்சையையும் மேலாடையையும் கழற்றி மேடைமேல் வைத்தான். கணையாழிகளைக் கழற்றி வைத்துவிட்டு நிமிர்ந்து நளனிடம் புன்னகையுடன் “விடை கொடுங்கள், அரசே” என்றான். “நீங்கள்?” என்றான் நளன். “அவருடன் இறுதிவரை இருப்பேன் என்பது என் சொல்” என்றான் சுதீரன். “அந்தணரே, கைவிடப்பட்டோரிடம் காட்டும் கருணையின் வழியாகவே

தெய்வம் தன் இருப்பை அறிவிக்கிறது" என்றான் நளன். சொல்திணற தயங்கி பின் "நன்று, முற்றிழந்து கைவிரிப்பவனே அக்கொடையை பெறமுடியும் போலும்" என்றான்.

சுதீரன் புன்னகையுடன் மும்முறை வணங்கி "அரசே, என் தந்தையர் சொல்லால் வாழ்த்துகிறேன். உங்கள் கோல் சிறக்கட்டும். குடி பெருகட்டும். நாடு செழிக்கட்டும். ஆம், அவ்வாறே ஆகுக!" என்றபின் "வருக, துறந்தோரே" என புஷ்கரனின் தோளைப் பற்றினான். அவர்கள் நடக்க நீர்ப்பரப்பு கிழிபடுவதுபோல கூட்டம் பிளந்து வழிவிட்டது. அவர்கள் மெல்ல நடந்து குன்றிறங்க சூழ்ந்திருந்தோர் கைகூப்பி விழிநீருடன் நின்றனர். பின்னர் எங்கிருந்தோ "நிஷதகுலத்தரசர் புஷ்கரர் வாழ்க! தவத்தோர் வாழ்க!" என்னும் வாழ்த்தொலி எழுந்தது. பல்லாயிரம் முரசுகள் என அப்பெருந்திரள் அதை ஏற்று முழங்கியது.

அவர்கள் கலிதேவனின் ஆலயத்திலிருந்து நடந்தபோது வானில் ஓர் ஊளையோசை கேட்டது. மரக்கிளைகளில் இருந்து அத்தனை காகங்களும் கலைந்து பறந்தெழுந்து வானில் சுழன்றன. காட்டின் விளிம்பை அவர்கள் அடைந்தபோது எதிரே காட்டுக்குள் இருந்து கரிய காளை ஒன்று தோன்றியது. புஷ்கரன் அதைக் கண்டு கைகூப்பியபடி நின்றார். அது உறுமியபடி அருகணைந்தது. அதன் எடைமிக்க உடல் நடையில் ததும்ப புள்ளிருக்கை அதிர்ந்தது. வளைந்த கொம்புகளைத் தாழ்த்தி மதத்தில் புதைந்த விழிகளால் அவர்களை நோக்கி சுரைமாந்தி நின்றது.

சுதீரர் "புஷ்கரரே, இதை நீர் முன்னரே அறிவீரா?" என்றார். "ஆம், என்னை ஆளும் தெய்வம் இது" என்றார் புஷ்கரர். "அடிபணியுங்கள். அது கோருவது எதையோ அதை

கொடுங்கள்” என்றார் சுதீரர். புஷ்கரர் தலையை மண்ணில் சாய்த்து உடல் படிந்துவிழுந்தார். அவர் அருகே வந்து உறுமியபடி நின்றது எருது. அதன் மீசைமுட்கள் சிலிர்த்தன. பிடரியும் புட்டமும் விதிர்த்தன. பின்னர் அது பின்னடி வைத்து காட்டுக்குள் மறைந்தது.

புஷ்கரர் எழுந்து பெருமூச்சுவிட்டு “செல்வோம்” என்றார். அவர்கள் காட்டுக்குள் சென்றதும் “புஷ்கரரே, அது உரையாடியது என்ன?” என்று சுதீரர் கேட்டார். புஷ்கரர் “உனக்கு என்ன கொடை வேண்டும் என்றது. நான் எதையும் விழையவில்லை என்றேன். நீ இழந்த அனைத்தையும் மீட்டளிக்கிறேன், இது என் ஆணை என்றது. மீள்வதற்கேதும் இல்லை எனக்கு என்றேன். உன் உளம்நோக்கி மீண்டும் ஒருமுறை சொல், நீ விழைவதற்கு ஏதேனும் எஞ்சியிருக்கிறதா? இவ்வாய்ப்பு பிறிதொருமுறை அமையாது என்றது. நான் என் உள்ளத்தைத் துழாவி இல்லை தேவே, ஏதுமில்லேன் என்றேன்” என்றார்.

சுதீரர் புன்னகைத்தார். புஷ்கரர் தொடர்ந்தார் “நீ இனிமேல் விழைவது எது? ஓர் அழகிய குடில்? அருகே ஒரு ஆறு? நீ விழைந்தால் உன்னை தவத்தோன் என ஆக்குகிறேன். உன் குலமும் குடியும் குருதிவழியினரும் வந்து உன் அடிபணிவர். அவர்களின் ஆலயங்களில் நீ தெய்வமென அமர்ந்திருப்பாய் என்றது. மெய்யாகவே அப்படி எவ்விழைவும் என்னில் இல்லை என்றேன். உன்னுள் எழும் வினாக்களுக்கு விடை சொல்கிறேன். இவையெல்லாம் ஏன் என்று விளக்குகிறேன் என்றது. நீ தேடும் மெய்மையை நான் அளிக்கிறேன் என்று கூறியது. தேவே, என்னுள் எவ்வினாவும் இல்லை. நான் எதையும் தேடவில்லை. இக்கணத்திலிருந்து முன்னும்பின்னும் நான் செல்ல ஓர் அடியும் இல்லை என்றேன்.”

“பிறகு ஏன் இங்கே செல்கிறாய் என்று கேட்டது. வெறுமனே இருப்பதற்கு மட்டுமே என்றேன். விழியும் குரலும் கனிந்து நீ எனக்கு இனியவன். நான் வைத்த தேர்வைக் கடந்தவன். இரண்டின்மை என்றும் வீடுபேறு என்றும் சொல்லப்படுவதொன்றுண்டு. அடைதலும் ஆதலும் ஆன ஒன்று. அதை உனக்குப் பரிசளிப்பேன் என்றது. நான் சொன்ன சொல்லே என்னுள் எழுந்தது, இறைவடிவே. நான் விழைவதற்கொன்றும் இல்லை என்றேன். விலகி உருமாறி விலங்கென்றாகி மறைந்தது” என்றார் புஷ்கரர். சுதீரர் “அமருமிடம் தவச்சாலையென்றாகும் தகைமைகொண்டுவிட்டீர்” என்றார்.

“நிஷதநகரியை நளனும் தமயந்தியும் நெடுநாட்கள் ஆண்டனர். மீண்டும் இந்திரகிரியின் உச்சியில் இந்திரனுக்கு ஆலயம் அமைந்தது. ஆனால் கலிதேவன் அங்கிருந்து விலக்கப்படவில்லை. இந்திரன் ஆலயத்திற்குள்ளேயே வடகிழக்கு மூலையில் தனி ஆலயத்தில் கலிதேவன் நிலையமைக்கப்பட்டான். இன்றும் முதற்பூசனை கலிக்குரியது. அங்கே வணங்கிய பின்னரே நிஷதமன்னர்கள் இந்திரனை வணங்குவது வழக்கம்” என்றார் முதிய காவலராகிய கிரணர்.

கஜன் மார்பில் கைகளை கட்டிக்கொண்டு கரவுக்காட்டை நோக்கிக்கொண்டிருந்தான். மாலை வெயில் நிறம் மாறிக்கொண்டிருந்தது. “நளன் எதிரி நாடுகளையெல்லாம் இரண்டு ஆண்டுகளில் வென்றார் என்கிறார்கள். அது இயல்வதே. புஷ்கரனின் ஆட்சியில் நிஷதர்கள் இறப்பின் மீதான அச்சத்தை கடந்திருந்தனர். தன்னலமும் வஞ்சமும் எல்லை கண்டு மீண்டிருந்தனர். ஆகவே அவர்கள் ஓநாய்க் கூட்டம்போல ஒற்றையுடல்கொண்ட திரளாக இருந்தனர்.

மீண்டும் முடிசூடியபின் ஏழாவது ஆண்டில் தமயந்தி மீண்டும் பரிவேள்வியையும் அரசக்கொடைவேள்வியையும் நடத்தி சத்ராஜித் என அமர்ந்தார்” கிரணர் சொன்னார்.

“கணவனாலும் தம்பியராலும் மைந்தராலும் சூழப்பட்ட அவர் பேரன்னை எனத் திகழ்ந்தார். அறத்தின் வெம்மின்னலை ஒருகையிலும் அளியின் தண்மலரை மறுகையிலும் ஏந்தி அரசாண்ட அவரை இந்திரனின் பெண்வடிவம் என்று குடிகள் வணங்கினர். இன்று விராடபுரியின் தென்மேற்கு மூலையில் மூதன்னை வடிவில் அவரை நிறுவி வழிபடுகிறார்கள். இந்திரை என்றும் இந்திராணி என்றும் அவரை அழைக்கிறார்கள். பெண்குழந்தை பிறந்தால் நாற்பத்தொன்றாம்நாள் அங்கே கொண்டுசென்று நாவில் தேனும் வேம்பும் கலந்த துளியை தொட்டுவைத்து அவர் காலடியில் இட்டு வணங்கி எடுத்துக்கொள்ளும் வழக்கம் உள்ளது. ஓராண்டு நிறைவில் முதல் முடி களைதலையும் அங்குதான் இயற்றுவார்கள். படைக்கலப்பயிற்சி பெறும் ஷத்ரியப்பெண்கள் இரும்புதொட்டு எடுக்கும் நாளை அங்கு கொண்டாடுகிறார்கள்.”

காவலர்தலைவனாகிய நிகும்பன் “அன்னையின் சிலையை நீ பார்க்கவேண்டும். நூறு முதிர்ந்த முதுமகள். கன்னங்கள் வழிந்து, பல்லில்லா வாய் உள்ளொடுங்கி, மூக்கு வளைந்து கூனுடல் கொண்டு அமர்ந்திருக்கிறார். ஆனால் இரு நீல வைரங்கள் பதிக்கப்பட்ட விழிகள் முலையூட்டும் அன்னையுடையவை எனக் கனிந்தவை. நான்கு கைகளில் மலரும் மின்னலும் அஞ்சலும் அருளலும்” என்றான். தீர்க்கன் “ஆம், நாகர்களின் கதையில் அவர் சூக்திமதியில் நூறாண்டு கண்ட முதுமகளாக இருந்தார் என்று கேட்டேன்” என்றான்.

கிரணர் “அது எண்ணியது காட்டும் ஆடி. அவர் என்றும் அவ்வாறே இருந்தார்” என்றார். தீர்க்கன் “ஆனால் நளமாமன்னர் அனைத்து ஆலயங்களிலும் முதிரா இளைஞனாகவே புரவியுடன் நின்றிருக்கிறார்” என்றான்.

கஜன் “புஷ்கரரைப்பற்றி சொல்லிக்கொண்டிருந்தீர்கள்” என்றான். “ஆம், தடம் மாறிவிட்டேன். இந்தக் கரவுக்காட்டைப்பற்றி சொல்லிக்கொண்டிருந்தேன். புஷ்கரரும் சுதீரரும் வந்து சேர்ந்த இடமே இந்தக் கரவுக்காடு. அன்று இது தப்தைக்கும் ஊர்ணைக்கும் நடுவே இருந்த வெறும் புதர்க்காடு. இங்கு அரவுகள் மிகுதி என்பதனால் வேட்டைக்காரர்களும் மூலிகைநாடிகளும்கூட வருவதில்லை. இங்கே ஓர் ஆலமரத்தடியில் நாணலால் ஒரு குடில் கட்டி அதில் புஷ்கரரும் சுதீரரும் குடியேறினர். அவர்கள் இங்கே நாற்பத்தோராண்டு தவம் செய்ததாக சொல்கிறார்கள்” என்றார் கிரணர்.

“ஆண்டுக்கு ஒருமுறை அரசரும் அரசியும் மைந்தரும் வந்து அவர்களைப் பணிந்து படையலிட்டு மீள்வார்கள். மானுடர் எவரென்றே அறியாதபடி அவர்கள் இருவரும் அப்பாலெங்கோ விழிகொண்டிருந்தனர். அவர்கள் குடியிருந்த குடில்மேல் சரிந்த விழுதுகளே குடிலென்றாகிவிட்டிருந்தன. அதற்குள் சடைத்திரிகள் குழலென்றும் தாடியென்றுமாகி வழிந்து நிலம்தொட மெலிந்த உடலில் செதில்களென தோல் பரவியிருக்க அமர்ந்திருந்தனர். ஆடை மட்கி உதிர்ந்தபின் எவ்வண்ணமோ அவ்வண்ணம் எஞ்சினர்.”

“நாற்பத்தோராம் ஆண்டு அரசனும் அரசியும் வந்து நோக்கியபோது அவர்கள் அங்கில்லை. அவர்களை தேடிச்சென்றவர்கள் காட்டின் அடர்புதர்களில் வழிதவறி

மீண்டனர். நிமித்திகர் கணித்து அவர்களிருவரும் சித்திரை முழுநிலவில் விண்ணெழுந்துவிட்டார்கள் என்றனர். அவர்களுக்கு குருபூசனை நிகழ்த்தவோ கோயிலமைக்கவோ உடலென எச்சமென ஏதும் கிடைக்கவில்லை. ஆகவே இக்காட்டையே அவர்களின் ஆலயமென்றாக்கினர். தப்தைக்கும் ஊர்ணைக்கும் நடுவே ஓடைகளை வெட்டி இணைத்து நீர் வலை ஒன்றை நெய்தார் நளன். அதன்பின் காடு நுரையெனப் பெருகி வானிலெழுந்தது" கிரணர் சொன்னார்.

"இது தவத்தின் காடு என்றனர் நூலோர். எளியோர் இங்கு நுழையலாகாதென்பதனால் இதை கரவுக்காடு என வகுத்தனர். கரந்த இடங்களில் பெய்து நிறையும் தெய்வங்கள் இங்கு நிறைந்தன. இது கந்தர்வக் காடென்றும் யக்ஷ வனமென்றும் சொல்கொண்டது" என்று கிரணர் சொன்னார். "பேரரசி தமயந்தி நூறாண்டு அகவை நிறைந்ததும் தன் மைந்தன் இந்திரசேனனுக்கு முடியளித்துவிட்டு நளனுடன் இக்காட்டுக்குள் புகுந்து மறைந்தார். தப்தையின் அருகே தமயந்தியும் ஊர்ணையின் அருகே நளனும் இறுதி நிறைவை அடைந்தனர். அவர்களுக்கு அங்குதான் அறைக்கல்லும் நடுகல்லும் நிறுவப்பட்டுள்ளன."

"ஆண்டு பலிக்காகவும் பொதுமக்கள் வணங்குவதற்காகவும் நகருக்குள் வேறு ஆலயங்கள் அமைக்கப்பட்டன. இங்கே அரசகுடியினர் மட்டும் ஏழு ஆண்டுகளுக்கு ஒருமுறை வந்து முதிர்ந்தமைந்த பேரன்னைக்கும் மூவா இளமைகொண்ட தாதைக்கும் பலிகொடுத்து வணங்கி மீள்வதுண்டு" என்றார் கிரணர். "ஆனால் அம்முறைமைகள் எல்லாம் நிஷதகுலத்தின் வீழ்ச்சியுடன் நின்றுவிட்டன. இப்போது உத்தரர் அவற்றை மீண்டும் தொடங்கியிருக்கிறார்."

அந்திச் செம்மை பரவத் தொடங்கியது. தீர்க்கன் எழுந்துகொண்டு “கிரணரே, தாங்கள் ஓய்வெடுக்க வேண்டுமென்றால் வருக! நகரிலிருந்து சிறந்த பாக்கு கொண்டுவந்துள்ளேன்” என்றான். கிரணர் எழுந்துகொண்டு “ஆம், பகல் கடுமையானது” என்றார். நிகும்பன் “அந்தியில் அரசர் வருவார் என்றனர். ஆனால் அதற்குரிய எந்த ஏற்பாடுகளையும் காணமுடியவில்லை” என்று ஆடை திருத்தியபடி எழுந்தான். “இன்று முழுநிலவு. வானம் ஒளிகொண்ட பின்னர் வருவார்கள் போலும்” என்றார் கிரணர். “நாம் செய்யவேண்டியதொன்றும் இல்லை. நாம் இதன் எல்லைக் காவலர்கள் மட்டுமே” என்று தீர்க்கன் சொன்னான். “ஓய்வெடுக்க பொழுதிருக்கிறது.”

பேசியபடியே அவர்கள் இறங்கிச்சென்றனர். கஜன் காவல்மாடத்தின்மேல் தனித்தமர்ந்திருந்தான். காற்றில் காடு மெல்ல ஆடியது. மரக்கலம்போல. பெருந்திரைச்சீலைபோல. அவன் கால்களை நீட்டி வேலை மடியில் வைத்துக்கொண்டான். அவன் புண் ஆறிவிட்டிருந்தாலும் அசைவுகளில் இருப்புணர்த்தியது. அதை மெல்ல தொட்டபோது இனிய குறுகுறுப்புணர்வு ஏற்பட்டது. அதை அழுத்தி நோக்குவது ஓர் இசைக்கருவியை மீட்டுவதுபோல என்று எண்ணிக்கொண்டு அவனே புன்னகை செய்துகொண்டான்.

கீழே கொம்பு ஒலித்தது. அதைக் கேட்டதும் காவல் மாடங்களின் முரசுகள் முழங்கத் தொடங்கின. கஜன் எழுந்து நின்று கீழே நோக்கினான். காவலர்தலைவன் நிகும்பனும் கிரணரும் பிற காவலரும் ஓடிச்சென்று நிரைகொண்டு காத்துநின்றனர். அத்தனை விரைவில் எளிமையாக அரசவருகை நிகழுமென அவர்கள் எதிர்பார்க்கவில்லை எனத்

தெரிந்தது. கிரணர் நின்றுகொண்டே தன் தலைப்பாகையை சுற்றினார். தீர்க்கன் இடைக்கச்சையை கட்டினான்.

கொடிவீரன் ஒருவன் புரவியில் முன்னால் வர அவனுக்குப் பின்னால் காரகன்மேல் ஏறி உத்தரன் வந்துகொண்டிருந்தான். கடிவாளத்தை தளர்வாகப் பற்றி தன்னுள் ஆழ்ந்து விழி தாழ்த்தியிருந்தான். அவன் உள்ளத்தால் இயக்கப்பட்டதாக காரகன் வந்து முற்றத்தில் நின்றது. அவன் இறங்கி அதன் கழுத்தில் தட்டிவிட்டு நிகும்பனிடம் ஓரிரு சொற்கள் உரைத்தபின் கைகளை நீட்டி சோம்பல் முறித்தான். பின்னர் தனியாக கரவுக்காட்டுக்குள் புகுந்து மறைந்தான்.

காவலர் முகப்பு முற்றத்தில் காத்து நின்றிருந்தனர். காரகன் தலைதாழ்த்தி சிலைபோல அசையாமல் நின்றது. முகில்கள் ஒன்றிலிருந்து ஒன்றென ஒளிகொண்டன. அவன் அசையாமல் நின்று எழுநிலவை நோக்கிக்கொண்டிருந்தான். நிலவொளி அருவியெனப் பெய்ய அதில் நீராடுபவன்போல கைகளை விரித்து முகம் தூக்கி நின்றான். அவன் வழியாகப் பொழிந்து பெருகிப்பரவி வெண்நுரை எழுந்து கரவுக்காட்டை மூடியது. அவன் உடல் சிலிர்த்துக்கொண்டே இருந்தது.

உடல் குளிர்ந்து நடுக்கத்தை உணர்ந்தபோது அவன் தன்னிலை கொண்டான். நிலவு நன்கு மேலேறியிருந்தது. இலைகள் சுடர்களென ஒளிர நின்ற மரம் ஒன்று அவனருகே காற்றில் குலுங்கியது. அவனைத் தவிர எவரும் விழித்திருப்பதாகத் தோன்றவில்லை. அவன் சரடேணி வழியாக கீழிறங்கி நிலத்தில் நின்றான். காவல் மாடத்தின் ஆட்டத்தை வாங்கிக்கொண்டிருந்த உடல் அலைபாய்ந்து அவனை ஒரு பக்கமாகத் தள்ளியது. சிறிய மரம் ஒன்றைப் பற்றியபடி நின்று நிலைமீண்டான்.

அவன் முற்றத்தை அடைந்தபோது காட்டுக்குள் இருந்து உத்தரன் தனியாக நடந்துவருவதை கண்டான். தன்னுள் ஆழ்ந்த நடை. ஆனால் கால்கள் நிலத்தையும் உடல் சூழலையும் நன்கறிந்திருந்தது. அவன் மணம் கிடைத்ததும் தலையசைத்து பிடரி குலைத்து காரகன் உறுமியது. அதனருகே நின்றிருந்த நிகும்பனும் தீர்க்கனும் இரு காவலர்களும் தலைவணங்கினர்.

உத்தரன் நிகும்பனிடம் ஒரு சொல் உரைத்துவிட்டு புரவிமேல் சிறுகுருவிபோல் தொற்றி ஏறிக்கொண்டான். கொடிக்காரனும் அகம்படி வந்த இரு காவல்வீரர்களும் தங்கள் புரவிகளில் ஏறிக்கொண்டார்கள். உத்தரன் காரகனின் கழுத்தைத் தட்டி அதை செலுத்தினான். வால் சுழல பெரிய குளம்புகள் மண்ணை அதிரச்செய்ய அது பாய்ந்தோடி புதர்களுக்கு அப்பால் மறைந்தது. அப்புரவிகளின் ஓசை காட்டுக்குள் துடித்து அடங்கியது. அவற்றால் எழுப்பப்பட்ட பறவைகளும் மெல்ல அமரத் தொடங்கின.

மெல்லிய குரலில் பேசியபடி நிகும்பனும் தீர்க்கனும் செல்ல காவலர் வேல்களை தோளில் வைத்தபடி சலிப்புடன் நடந்துசென்றனர். அவன் மரத்திற்குப் பின்னால் மறைந்துகொண்டான். அவர்கள் கடந்துசென்ற பின்னர் வேலியிலிருந்த சிறிய இடைவெளியினூடாக கரவுக்காட்டுக்குள் புகுந்தான். இருமுறை பெருமூச்சுவிட்டு தன் உள்ளத்தை எளிதாக்கிக் கொண்டான். வெளியுலகை விலக்கிக்கொள்ளும் பொருட்டு அடிகளை எண்ணியபடி நடந்தான். மரங்களை எண்ணி மேலும் சற்று நடந்தான்.

நிலவொளியும் நிழல்களும் கலந்து காடு அலைததும்பிக் கொண்டிருந்தது. நிழலென்றும் ஒளியென்றும் உருமாறி உருகி

வழிந்து பரவி அவன் அதற்குள் சென்றுகொண்டிருந்தான். தரையில் குரங்குகள் விழுந்து கிடந்தன. பொன்னிற நாகங்கள் மிக மெல்ல வழிந்து சென்றன. தொலைவில் ஓடையின் ஓசை. தலைக்குமேல் காற்றோசை. அடிமரங்கள் மெல்லிய ஒளிமினுப்பு கொண்டன. ஒரு மரத்தைச் சூழ்ந்து குரங்குகள் உதிர்ந்த பலாப்பழங்கள் என கிடந்தன. அவன் அந்த அடிமரத்தில் கையை உரசினான். விரித்து நோக்கியபோது வெள்ளித்தூள் படிந்தது போலிருந்தது கை. அதை மூக்கில் வைத்து உறிஞ்சினான். மென்தசை அதிர்ந்தது. கண்களில் நீர் கோத்தது.

காற்றில் மிதந்து அவன் செல்ல அவன் உடல் உருகி நீண்டு இழுபட்டு எஞ்சிய பகுதிகள் நின்றிருந்த இடங்களில் எல்லாம் படிந்திருந்தன. சருகுகளில் கூழாங்கற்களில் வேர்களில் அவன் பரவியிருந்தான். அவன் உடலைத் தொட்ட இலைகளெல்லாம் அவன் துளித்துச் சொட்ட அசைந்தன. காற்றில் அவன் உடல் புகையென ஆடியது. மரங்களினூடாக மிதந்த நீண்ட செந்நிறப் புகைத்திரிகள் போன்ற கந்தர்வர்களை அவன் கண்டான். பிரிந்தும் கலந்தும் முகம்கொண்டு நகைத்தும் அவர்கள் சென்றனர். ஒளிரும் சிறகுகளுடன் யட்சர்கள் மலர்கள்மேல் அமர்ந்து ஆடினர்.

அவன் உடலே விழியென்றாகியது. மரங்கள் கைகள் கொண்டு நடமிட்டன. அருவியெனப் பெய்து எழுந்த வெள்ளியுடல் கந்தர்வன் ஒருவன் கைவிரித்துப் பெருகி ஐந்து கன்னியர் என்றும் ஆனான். அவர்களைத் தழுவியபடி மரங்களில் ஊடுருவிச் சென்றான். ஒளியெனப் பெருகிச்சென்ற தப்தையின் கரையில் அவன் ஒருவனை கண்டான். நடை அவன்

அறிந்திருந்தது என்பதனால் விழிகூர்ந்தான். அவன் இளஞ்செந்நிற ஒளி கொண்டிருந்தான்.

கஜன் அவன் பெயர் முக்தன் என நினைவுகூர்ந்தான். அல்லது வேறேதுமா? அந்த நடை பிருகந்நளைக்குரியதல்லவா? அதைத்தானே சற்றுமுன் உத்தரனிடம் கண்டேன்? முக்தனுடன் சென்ற பெண்ணை அவன் இலைகள் மறைய மறைய தெளிவற்று கண்டான். நிழலென்றும் ஒளியென்றும் உருக்கொண்டு மாறிக்கொண்டே சென்றாள். அவள் சுபாஷிணி என்று ஒரு நிலவுக்கீற்று காட்டியது. அல்ல என்றது இருள்கீற்று.

# நீர்க்கோலம் - 97

### 96. கைச்சிறுகோல்

✿உபப்பிலாவ்யத்தின் கோட்டையை பாண்டவர்களின் தேர் சென்றடைந்தபோது கோட்டை முகப்பிலேயே அதன் தலைவன் சார்த்தூலன் அவர்களுக்காக காத்து நின்றிருந்தான். அவனுடன் கங்கைநீருடன் அந்தணர் எழுவரும் அங்கிருந்த எண்வகைக் குடிகளின் தலைவர்களும் நின்றனர். உபப்பிலாவ்ய நகரியின் குருவிக்கொடியும் விராடநகரியின் காகக்கொடியும் இரு பக்கமும் பறக்க நடுவே இந்திரப்பிரஸ்தத்தின் மின்கதிர்க்கொடி ஏற்றப்பட்டிருந்தது.

தொலைவில் பாண்டவர்களின் மின்கதிர்க்கொடி எழுந்ததுமே கோட்டைமேல் முரசுகள் முழங்கத் தொடங்கின. நகரம் வாழ்த்தொலிகளால் முழங்கியது. முதலில் விராடபுரியின் கவசக் காவலர் பன்னிருவர் புரவிகளில் வந்தனர். தொடர்ந்து

நகுலனும் சகதேவனும் ஊர்ந்த சரபமும் அன்னமும் பொறித்த கொடி பறக்கும் தேர் அணுகியது. அர்ஜுனனும் பீமனும் வந்த தேரில் குரங்கும் சிம்மமும் தெரிந்தன. உத்தரையின் தேரில் காகம் பறந்தது.

ஒவ்வொரு கொடி தெரிகையிலும் முரசொலி அவர்களின் வருகையை அறிவிக்க அவர்களின் கொடி கோட்டைமேல் ஏறியது. தருமனின் நந்தமும் உபநந்தமும் பொறிக்கப்பட்ட கொடி தோன்றியதும் முரசுகள் உச்சமடைந்தன. அதில் திரௌபதியின் விற்கொடியும் பறந்தது. வாழ்த்தொலிகள் சூழ அவர்களின் தேர்கள் கோட்டை முகப்பில் வந்து நின்றன. அங்கே தாலப்பொலி ஏந்திய சேடியர் அவர்களை எதிர்கொண்டு அழைத்தனர். அவர்கள் மண்ணிலிறங்கி நின்றதும் வேதியர் நீர்தெளித்து அழியாமொழி சொல்லி வாழ்த்தினர்.

கோட்டைத்தலைவன் தலைவணங்கி “இந்திரப்பிரஸ்தத்தின் பேரரசருக்கும் அரசிக்கும் இளையோருக்கும் முன் இந்த நகர் அடிபணிகிறது. இங்கு தங்கள் வருகை நிகழ்ந்தமையாலேயே இந்நகர் என்றும் பேசப்படும். இதன் மூத்தோரும் நீத்தோரும் மகிழும் நாள் இன்று. எங்கள் குலதெய்வங்களின் அருள் உங்கள்மேல் பொழிவதாக!” என முகமனுரைத்தான். தன் கோலை தருமனின் காலடியில் தாழ்த்தினான். அவன் படைத்தலைவர் மூவர் வாள்களை தருமன் காலடியில் தாழ்த்தி வணங்கினர்.

நகருக்குள் நுழைகையில் வாழ்த்தொலிகள் எழுந்து அரிமலர்மழையுடன் இணைந்து அவர்கள்மேல் பெய்தன. இரு நிரையாக நின்ற மக்களின் மலர்ந்த முகங்களை நோக்கிக்கொண்டுவந்த திரௌபதியின் விழிகளிலிருந்து நீர்வழிந்து கரிய கன்னவளைவுகளில் நின்று தயங்கி

சொட்டியது. தருமன் அவள் தோளில் கைவைத்து “என்ன?” என்றார். “இல்லை” என அவள் தலையசைத்தாள். பெருமூச்சில் முலைகள் ஏறியிறங்க கண்களை மூடிக்கொண்டாள்.

அவள் முகம் மலர்ந்திருந்தது. தருமன் “வாழ்த்தொலி என ஒன்று செவியில் கேட்டு நெடுங்காலமாகிறது அல்லவா?” என்றார். அவள் “ஆம், முன்பு இவ்வொலி என் ஆணவத்தை நோக்கி ஒலித்தது. இன்று என் துயர்களையும் அதைக் கடக்கும் உறுதியையும் நான் என் நல்லியல்புமேல் கொண்டுள்ள நம்பிக்கையையும் நோக்கி ஒலிக்கிறது” என்றாள். தருமன் சிரித்து “மீண்டும் அரசிக்குரிய சொற்களை அடைந்துவிட்டாய்” என்றார்.

உபப்பிலாவ்ய நகரி பன்னிரு சுற்றுத்தெருக்களும் நடுவே வட்டமான முற்றமும் கொண்ட சிறிய நகரம். முற்றத்தை நோக்கியவாறு இரண்டு அடுக்குள்ள தாழ்வான அரண்மனை நின்றிருந்தது. அவர்களின் வருகைக்காக அது செப்பனிடப்பட்டு வண்ணம் பூசப்பட்டிருந்தது. கொடிகளும் தோரணங்களும் காற்றில் பறந்தன. அரண்மனைப்பெண்டிர் முற்றத்தில் அணிச்சேடியருடன் காத்து நின்றிருந்தனர். அவர்கள் இறங்கியதும் மங்கல இசையும் குரவையுமாக எதிர்கொண்டு அழைத்துச் சென்றனர்.

“அவை முறைமைகள் சில உள்ளன, அரசே…” என்று சார்த்தூலன் சொன்னான். “தாங்கள் இங்கிருப்பதுவரை இந்நகரியின் அரியணையும் கோலும் தங்களுக்குரியது… தங்கள் பெயரில் முதல் அரசாணையும் இன்று பிறப்பிக்கப்படவேண்டும்.” தருமன் புன்னகையுடன் “நன்று, கோலேந்தி அமர்வதென்பதையே மறந்து நெடுநாட்களாகின்றன”

என்றார். சார்த்தூலனும் ஏவலரும் அவர்களை அவைக்கு அழைத்துக்கொண்டு சென்றனர்.

ஐம்பதுபேர் அமர்வதற்குரிய பீடங்கள் இடப்பட்ட குறுகிய அவைக்கூடத்தின் மேற்கே கிழக்கு நோக்கி மேடை அமைந்திருந்தது. அதில் ஒரு பீடத்திற்கே இடமிருந்தது. சார்த்தூலன் தருமனை அழைத்துச்சென்று அந்தப் பீடத்தில் அமரச்செய்தான். அவர் இடப்பக்கம் திரௌபதியும் வலப்பக்கம் பீமனும் நிற்க அர்ஜுனனும் நகுலனும் சகதேவனும் பின்னால் நின்றனர். திரௌபதிக்குப் பின்னால் உத்தரை நின்றாள்.

குடிமூத்தவர் மூவர் தாலத்தில் வைக்கப்பட்ட பட்டுத் தலைப்பாகையை கொண்டுவந்து நீட்ட அதை வேதியர் மூவர் தொட்டு எடுத்து தருமனுக்கு சூட்டினர். பொன்னாலான சிறிய முத்திரை பொறிக்கப்பட்ட தலைப்பாகைக்குமேல் செம்பருந்தின் இறகு சூட்டப்பட்டிருந்தது. குடித்தலைவர் ஒருவர் வெள்ளிக்கோலை எடுத்து அவருக்களித்தார். பிறிதொருவர் உடைவாளை அளித்தார். அவர் அவற்றை அணிந்து அமர்ந்ததும், வேதியர் நீர் தெளித்து வேதமுரைத்து அவரை வாழ்த்தினர்.

அந்தணர் எழுவருக்கு பசுக்களையும் பொன்னையும் தருமன் அளித்தார். மணிவண்ணன் ஆலயத்திலிருந்து வழிப்போக்கருக்கு அன்னம் அளிப்பதற்கான ஆணையோலையை தன் முத்திரையிட்டு வெளியிட்டார். அவையின் பீடங்கள் அனைத்திலும் நகர்மூத்தோரும் வணிகரும் அமர்ந்திருந்தனர். சுவரோரமாக படைவீரர் நின்றிருந்தனர். அவை வாழ்த்து கூறி முழக்கமிட ஒவ்வொருவராக வந்து தருமனை வணங்கி வாழ்த்துரைத்தனர். அவர்கள் அளித்த பரிசில்களை அவர் பெற்றுக்கொண்டார்.

மிக விரைவிலேயே சடங்குகள் முடிந்தன. உபப்பிலாவ்யன் “தாங்கள் ஓய்வெடுக்கலாம், அரசே” என்றான். “இங்கே அரண்மனை ஏதுமில்லை. சிறிய இல்லங்கள்தான்… பெண்டிர் மாளிகை தனியாக உள்ளது.” தருமன் அவன் தோளில் கைவைத்து “நரிக் குகைக்குள் துயின்றிருக்கிறீரா?” என்றார். “இல்லை, அரசே” என்றான் உபப்பிலாவ்யன். “நாங்கள் துயின்றிருக்கிறோம்” என்றபின் புன்னகைத்து “செல்வோம்” என்றார். அவன் தோளை அணைத்தபடி நடக்கையில் “ஓரிரு நாட்களுக்குள் நான் தமனரின் தவக்குடிலுக்குச் செல்லவேண்டும். சௌபர்ணிகையில் மீண்டும் ஒருமுறை நீராடினால் இந்தக் காலகட்டம் நிறைவுறுகிறது” என்றார். “ஆணை, அரசே” என்றான் உபப்பிலாவ்யன்.

அவர்கள் அறைக்குள் செல்வதற்காக பிரியுமிடத்தில் பீமன் பின்னால் வந்து “ஆணைகளென ஏதேனும் உண்டா?” என்றான். “ஐந்து ஓலைகள் அனுப்பவேண்டும்” என்றார் தருமன். “முதல் ஓலை இளைய யாதவருக்கு, அவர் எங்கிருந்தாலும். இன்னொன்று விதுரருக்கு. பிறிதொன்று அன்னைக்கு. மற்றொன்று துருபதருக்கு. இறுதி ஓலை துரியோதனனுக்கு. எழுதவேண்டியது ஒன்றே, கான்வாழ்வும் மறைவாழ்வும் முடிந்துவிட்டன. எங்கள் நாடும் கொடியும் திரும்ப அளிக்கப்படவேண்டும். சிறியவனே…” சகதேவன் “அரசே” என்றான். “ஒவ்வொருவருக்கும் அவரவர்க்குரிய மொழியில் எழுதவேண்டும். எழுதுக!” சகதேவன் “ஆணை” என்றான். நகுலனும் சகதேவனும் விடைபெற்றனர்.

“நாங்கள் ஓய்வெடுக்கிறோம், மூத்தவரே. ஓலைகளை எழுதவேண்டும்” என்றான் சகதேவன். அர்ஜுனன் விடைகொடுத்தான். பீமன் “நானும் அடுமனைவரை

செல்கிறேன். இவர்களுக்கு சமைக்கத் தெரியும் எனத் தோன்றவில்லை” என்றான். அர்ஜுனன் “மூத்தவரே” என்று அழைத்தான். பீமன் நின்று “நம் பிற வாழ்வு முடிவுறுகிறது” என்றான். “ஆம்” என்றான் அர்ஜுனன். “அது தங்களுக்கு எவ்வுணர்வை உருவாக்குகிறது?” பீமன் “ஏதுமில்லை. இந்தப் பதின்மூன்றாண்டுகளும் ஓர் இடத்திலிருந்து பிறிதொன்றுக்கு இடம்பெயர்ந்துகொண்டே இருந்தோம். இதுவும் அப்படித்தான் தோன்றுகிறது” என்றான்.

அர்ஜுனன் “நம் நிலத்துக்கான பூசல் தொடங்குகிறது” என்றான். பீமன் “ஆம், ஆனால் அதுவும் எல்லாப் பூசல்களையும்போல ஒன்றே. நான் எவ்வேறுபாட்டையும் உணரவில்லை” என்றான். “நன்கு பசிக்கிறது... நீ ஊனுணவில் எதை விரும்புகிறாய்?” அர்ஜுனன் “எனக்கும் எந்த உணர்வுமாற்றமும் நிகழவில்லை. மூத்தவரிடமும் ஏதும் தெரியவில்லை. இளையோரை நோக்கினேன். அவர்களுக்கு நம் கடும்வாழ்க்கை முடிந்துவிட்டதென்ற செய்தியே தெரியவில்லை என்று தோன்றுகிறது. ஆகவேதான் உங்களிடம் கேட்டேன்” என்றான்.

“அரசியிடம் கேட்டுப்பார்... அவள் உரு மாறிவிட்டாள்” என்றான் பீமன். “ஆம்” என அர்ஜுனன் புன்னகைத்தான். “அவள் இங்குள்ள பெண்டிரை அழைத்துக்கொண்டு அவைகூடச் சென்றுவிட்டாள். அந்திக்குள் எப்படியும் ஐம்பது அரசாணைகள் வெளிவந்துவிடும்” என்றபின் “என்ன உண்கிறாய், சொல்?” என்றான் பீமன். “பன்றி... நல்ல பன்றியை நா மறந்துவிட்டது” என்றான் அர்ஜுனன். “நன்று, இன்று உண்பதை மறக்கமாட்டாய்” என்றபின் பீமன் சென்றான்.

அர்ஜுனன் நடக்கையில் சிற்றறை ஒன்றின் வாயிலில் ஒரு சிறுமி காவல் என நிற்பதைக்கண்டு தயங்கி “யார் உள்ளே?”

என்றான். “விராட இளவரசி” என்று அவள் சொன்னாள். அவன் “என் வரவை அறிவி” என்றான். அவள் நாணத்துடன் நெளிந்தபின் உள்ளே சென்றுவிட்டு வந்து “வரச்சொன்னார்கள்” என்றாள். அவன் உள்ளே நுழைந்தான்.

உத்தரை எளிய சிறுபீடத்தில் அமர்ந்து சாளரம் வழியாக வெளியே நோக்கிக்கொண்டிருந்தாள். “வணங்குகிறேன், தேவி” என்றான் அர்ஜுனன். அவள் திரும்பவில்லை. “இன்னும் ஒரு மாதத்திற்குள் இந்திரப்பிரஸ்தம் நம் கைக்கு வந்துவிடும். அங்கே அபிமன்யூவுக்கும் தங்களுக்குமான மணநிகழ்வை பெருவிழவாக கொண்டாடவேண்டும் என்று அரசர் எண்ணுகிறார்” என்றான். அவள் உடலில் அசைவே எழவில்லை. “அபிமன்யூவுக்கும் செய்தி அறிவிக்கப்பட்டுள்ளது. அவன் பெருமகிழ்வை அறிவித்துள்ளான்.”

அவள் உடலின் அசைவின்மை அவனை நிலையழியச் செய்தது. பின்னர் “அவனை நீங்கள் பார்க்கையில் உணர்வீர்கள்” என்றான். மெல்ல நகைத்து “தெய்வங்கள் வனைந்து வனைந்து மேம்படுத்திக்கொள்கின்றன என்பார்கள். அவன் பணிக்குறை தீர்ந்த பழுதற்ற அர்ஜுனன். இளையவன், நானே அஞ்சும் வில்திறலோன்” என்றான். அவள் தலைதூக்கி நிமிர்ந்து அவனை நோக்கினாள். அவன் நோக்கை விலக்கிக்கொண்டபின் “அனைத்தும் நன்மைக்கே. நம் குடி பெருகும்... இப்பெருநிலம் நம் கொடிவழியினரால் ஆளப்படும்” என்றான்.

அவன் மீண்டும் அவளை நோக்கியபோது அவள் விழி தன்மேல் ஊன்றியிருந்ததை கண்டான். விழிவிலக்கிக்கொண்டு “நன்று... எத்தேவை இருப்பினும் அறிவியுங்கள்... சில நாட்களுக்கே இச்சிறுநகரின் இடர்கள்” என்றபின் வெளியே

சென்றான். வெளிக்காற்றுக்கு வந்தபின் உடல் தளர்ந்து நீள்மூச்சுவிட்டான்.

[**நீர்க்கோலம்** **நிறைவு**]**